திருமூலர்
அருளிய

# திருமந்திரம்

மூலமும் உரையும்

தயாரிப்பு
சங்கர்

# 1. ஒன்றவன்தானே இரண்டவன் இன்னருள்

1. ஒன்றவன்தானே இரண்டவன் இன்னருள்
நின்றனன் மூன்றினுள் நான்குணர்ந் தான்ஐந்து
வென்றனன்ஆறு விரிந்தனன் ஏழும்பர்ச்
சென்றனன் தானிருந் தானுணர்ந் தெட்டே

(ப. இராமநாதன்)இத்திருமுறை முழுமுதற் சிவபெருமானின் எண்பெருங் குணங்களையும் முறையே குறிக்கும் அருங்குறிப்புமாகும். மேலும் சிவபெருமான் உலகப் பெரும் தோற்றத்துக்கு முன்னும், உலகப் பேரொடுக்கத்துக்குப் பின்னும், நிலைத்திருக்கும் அழிவிலா ஒருவன். அவன் இனிய அருள் 'சிவய நம' என்னும் திருவைந்தெழுத்திற் காணப்படும் வகரமும் நகரமும் ஆகிய இரண்டெழுத்துக்குரிய வனப்பு (பராசத்தி) நடப்பு (ஆதிசக்தி) என இரண்டாகும். அன்பு அறிவு ஆற்றல் என மூன்றாகும். இவற்றை இச்சை ஞானம் கிரியை எனவும் இசைப்பர். சிவசிவ எனப் பொருள்மறை நான்காகும். படைத்தல் காத்தல் துடைத்தல் மறைத்தல் அருளல் எனத் திருவருட்டொழில் ஐந்தாகும். அவன் திருவடியைச் சேர்ப்பிக்கும்படி முறை வழிகள் தொகை வகையால் ஆறாகும். எழுவகை யாற்றலுக்கும் அப்பாற்பட்டவன். எழுவகை ஆற்றல் தமிழாகம விரிவாகிய சிவஞான சித்தியாரில்அருளியபடி சத்தி, விந்துசத்தி, மனோன்மணி, மகேசை, உமை, திரு, வாணி என்பர். நிலம், நீர், நெருப்பு, உயிர் (காற்று) விசும்பு, நிலா, பகலோன், புலனாய மைந்தன்என எண்வகைப் பொதுவடிவங்களாகும்.

இன்னும் ஒருவகையாக நோக்கின், முழுமுதல் சிவன் ஒருவனே. அவன் அம்மையப்பரென இரண்டாக விளங்குவன். அவன், அவள், அது என மூன்றினுள் நின்றனன். சீலம் நோன்பு செறிவு அறிவு என நான்குணர்த்தினன். இவற்றைச் சரியை கிரியை யோகம் ஞானம் எனக் கூறுவர். மூவர் தேவாரம், முனிமொழியும் திருவாசகம் திருக்கோவையார், திருமூலர் சொல்லென்னும் ஐந்தால் வெல்லுவித்தனன். ஓர் அறிவுமுதல் ஆறறிவு ஈறாகவுள்ள அனைத்துயிர்க்கும் அறிவிக்க ஆறாய் விரிந்தனன். எழுவகைப் பிறப்பிற்கும் அப்பால்நின்று பிறப்பினை நல்கி இயக்கும் பிறப்பில் பெருமான். பேறுபெற்ற ஆருயிர்கள்பால் சிவபெருமானின் எண்பெருங் குணங்களும் பதிந்து விளங்கும். அங்ஙனம் விளங்க அச்சிவபெருமான் அவ் வெட்டினையும் உணர்தல்வேண்டும். மூன்று என்பதற்கு அருவம், அருவுருவம், உருவம் எனக் கூறுதலும் ஒன்று. இத்திருமறை பொருளியல் புரைக்கும் பொறற்பினது.

(அ. சிதம்பரம்)ஒன்றவன்றானே - அவன் தானே ஒன்று; அவன் தனிப்பட நிற்கும்போது ஒன்று. இது கடவுள் ஒன்று எனக் கூறியது ஆகும். இரண்டவனின்னருள் - அவன் இன்னருள் இரண்டு; கடவுள் தன் அருளுடன் கூடி இருக்கும்போது இரண்டு எனப்படுவான். நின்றனன் மூன்றினுள் - கடவுள் முக் குணங்களோடு (இராசதம், தாமதம், சாத்துவீகம்) கூடியிருக்கும்போது, மூன்று என்று சொல்லப்படுவான். நான்கு உணர்ந்தான் - நான்கு வேதங்களையும் (இருக்கு, சாமம், தலவகாரம், பவுடிகம்) உணர்ந்து வெளிப் படுத்தினான். ஐந்து வென்றனன் - பொறி வாயில் ஐந்து அவித்தனன். ஆறு விரிந்தனன் -

பதம், எழுத்து, மந்திரம், கலை, தத்துவம், புவனம் என்னும் ஆறு அத்துவாக்களாகப் பரந்துள்ளான். ஏழு உம்பர்ச் சென்றவன் - ஞாயிறு, திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி என்னும் ஏழு அண்டங்களையும் கடந்து நின்றவன். தான் எட்டு உணர்ந்து இருந்தான் - தான் எண் குணங்களையும் அறிந்து அவைகளுடன் உலகர் பொருட்டுச் சேர்ந்திருந்தான்.

# 2. போற்றிசைத் தின்னுயிர் மன்னும் புனிதனை

2. போற்றிசைத் தின்னுயிர் மன்னும் புனிதனை
நாற்றிசைக் கும்நல்ல மாதுக்கு நாதனை
மேற்றிசைக் குள்தென் திசைக்கொரு வேந்தனாங்
கூற்றுதைத் தானையான்கூறுகின் றேனே.

மேற்றிசை - நாற்றிசையொடும். பொருந்தி அப்பெயரை முற்கொண்டு திகழும் கோணத்திசை நான்கு. அவை முறையே தென்கிழக்கு தென்மேற்கு, வடமேற்கு, வடகிழக்கென்பன. இதன்கண் சேர்தல் செறிதல் செலுத்தல் என்னும் உயிர்க்குயிராம் சிவபெருமானின் முப்பண்புகள் குறிப்பால் விளக்கப்பட்டுள்ளன. அவை புனிதன், நாதன், தென்பால் நிறுவிய வேந்தன் ஆளாம் கூற்றுதைத்தான் என்னும் கூற்றுக்களால் விளங்கும். ஒப்பில் முழுமுதலாம் சிவபெருமான் ஒருவனே அனைத்துயிரின் போற்றுதற்கும் உரியவன். அத்தகையோன் அருளால் ஆம் தூயவுடம்பினையுடையவன். அனைத்துலகினுக்கும் இன்னருள் புரியும் நடப்பாற்றலாகிய ஆதிசத்திக்குத் தலைவன். உயர்ந்த திசை என்று சொல்லப்படும் வடதிசை தென்திசை என்ற இரண்டனுள்ளும் சிறந்ததாகிய தென்திசைக்கு வேந்து நிறுவிய ஒப்பில்லாத வேந்தன் சிவபெருமான். வேந்தன் என்பது ஆருயிர்கட்குப் போகமீன்ற புண்ணியன் என்பதாம். தொன்மைத் தமிழரே சிவபெருமானை வேந்தன் எனவும் வழிபட்டனர். அவ்வுண்மை ஒல்காப்பெரும் புகழ்த் தொல்காப்பியத்தின்கண் 'வேந்தன் மேய தீம்புனல்

உலகமும்' (தொல். பொருள் - 5) என்னும் நூற்பாவால் உணரலாம். இதன்கண் காணும் வேந்தன் என்பதற்கு இந்திரன் என்று பொருள் கொள்வது ஒருவாற்றானும் ஒவ்வாது. மேலும் 'தென்பாண்டி நாடே சிவலோகம்', 'பாண்டி நாடே பழம்பதி' என்பன மணிமொழியார் திருமொழி. 'முளைத்தானை யெல்லார்க்கு முன்னே தோன்றி' என்பது அப்பர் அருண்மொழி. அவன் ஒருவனே கூற்றுதைத்து ஆட்கொண்ட எண்குணவன். அவ்வுண்மை 'சிவத்தைப் பேணில் தவத்திற் கழகு' என்னும் ஔவையார் செம்மொழியால் உணரலாம். அத்தகைய அமிழ்தினும் இனிய தமிழ் முழுமுதலை அவன் விழுமிய அருளால் வழிமொழிகின்றேன்.

தென்றிசைக்கு ஒரு வேந்தன் - தென்திசையிலுள்ள யமபுரத்துக்கு ஒப்பற்ற அரசனாகிய யமனை. நாற்றிசை கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு. மேற்றிசை - நாற்றிசைகளிலும் உயர்ந்த (பரிசுத்தமான) திசை அல்லது மேலே சொல்லப்பட்ட நான்கு திசைகளுள்.

## 3. ஒக்கநின் றானை உலப்பிலி தேவர்கள்

3. ஒக்கநின் றானை உலப்பிலி தேவர்கள்
நக்கனென் றேத்திடு நாதனை நாள்தொறும்
பக்கநின் றார்அறி யாத பரமனைப்
புக்குநின் றுன்னியான் போற்றிசெய் வேனே.

சிவபெருமான் திருவருளோடும், அவ்வருளின் ஆணையுடனும், ஆருயிரோடும், மாயைகன்மங்களுடனும் கூடி இயக்குதற் பொருட்டு ஒப்பநின்றானை, பிறப்பு இறப்பு கேடு ஏதுமில்லாத கடவுளை, விண்ணவர், விண்ணவர்கோன் மூவர் முதலிய தேவர்களுக்கு உற்றுழி உதவ அருளால் வெளிப்பட்டுநின்று அருள்வோனை, பக்கமாய் உடனிற்பினும் அவனருளில்லாதாரால் அறியவொண்ணாத விழுப்பொருளை அவனருளால் அவனுட்புக்கு அவன் முன்நிற்ப நற்றவத்தால் நினைந்து போற்றிப் புகழ்வேன்.

நக்கன் - தத்துவங்களைக் கடந்தவன்; மலமில்லாதவன்; மாசில்லாதவன். உலப்பிலி தேவர் - பாவம் இல்லாத புண்ணிய பூமியாகிய தேவருலகத்தில் வசிக்கின்றவர்கள். ஒக்க நின்றானை - உயிர்களுடன் கூடவே நின்றவனை.

# 4. சிவனொடொக் குந்தெய்வந் தேடினும் இல்லை

4. சிவனொடொக் குந்தெய்வந் தேடினும் இல்லை
அவனொடொப் பார்இங்கு யாவரும் இல்லை
புவனங் கடந்தன்று பொன்னொளி மின்னுந்
தவனச் சடைமுடித்தாமரை யானே.

சிவனுடன் ஒப்பான ஒரு தெய்வத்தை ஆண்டுத் தேடினும் காண்டல் இல்லை. அவனுடன் ஒப்பாரை ஈண்டுங் காண்டல் இல்லை. எனவே, யாண்டும் யாவரும் அவனுக்குத் தாழ்ந்தவரே. அனைத்துலகங்களுக்கு அப்பாற்பட்டுப் பொன்போல் விளங்காநின்ற பின்னுதலையுடை தீவண்ணச் செஞ்சடையுடன் திகழ்கின்றான். மெய்யன்பர்களின் அன்பால் விளங்கும் நெஞ்சத் தாமரையைத் துய்ய வைப்பாகக் கொண்டு உறைகின்றனன் சிவன்.

தவனம் - தீ - (செந்நிறம்). புவனம் - அண்டங்கள். சிவன் - சீவனோடு சேர்ந்துள்ளவன்; மங்களகரமானவன்; செந்நிறத்தவன்.

## 5. அவனை ஒழிய அமரரும் இல்லை

5. அவனை ஒழிய அமரரும் இல்லை
அவனன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை
அவனன்றி மூவரால் ஆவதொன் றில்லை
அவனன்றி ஊர் புகு மாறறி யேனே.

அச் சிவபெருமான் திருவாணை ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கும் முத்திறப்புணர்ப்பானும் ஆருயிர்களைப் பொருந்தும். அங்ஙனம் பொருந்தாவிடின் அமரர். எவர்க்கும் வாழ்வில்லை. அவன் அருள் துணையின்றிச் செய்யப்படும் அருந்தவங்கள் ஏதும் இல்லை. அவனருள் இல்லாமல் அயன், அரி, அரன் என்னும் மூவரால் நடக்கக்கூடியது ஒன்றும் இல்லை. அவன் திருவருளில்லாமல் வானோர்க்கு உயர்ந்த உலகமாகிய பேரின்பத் திருவூர்புகும்வழி ஒருவராலும் உணரவொண்ணா தென்க.

அவன்: சேய்மைச் சுட்டு; பண்டறிசுட்டுமாம். சேய்மைச் சுட்டு உண்மையும், பண்டறிசுட்டுப் பொதுவுமாம்; பொது ஈண்டுச் சார்பு.

ஊர் - முத்தி நகர். மூவர் - அயன், அரி, அரண் (உருத்திரன்). அமரர் - மரியாதவர்கள்; இறவாதவர்கள்.

# 6. முன்னையொப் பாயுள்ள மூவர்க்கு மூத்தவன்

6. முன்னையொப் பாயுள்ள மூவர்க்கு மூத்தவன்
தன்னையொப் பாயொன்றும் இல்லாத் தலைமகன்
தன்னையப் பாஎனில் அப்பனு மாய்உளன்
பொன்னையொப்பாகின்ற போதகத் தானே.

ஒவ்வொரு தொழிலே உடைய அயன் அரி அரன் என்னும் மூவரும் அவ்வத் தொழில் ஒன்றேபற்றி தம்முள் ஒப்பாவர். அம் மூவர்க்கும் முழுமுதலாய்ச் சிறந்தோனாய் என்றும் காணப்படுபவன் சிவன். மூப்பு - சிறப்பு. அச் சிவன் தன்னை யொப்பாக ஒரு பொருளுமில்லாத தனிமுதல்வன். அவனை விட்டு நீங்காது ஒட்டியுறைவோன் என்னுங் கருத்தால் அப்பன் என்று அன்பாய்ச் கூறின், அப்பனுமாவன். அவன் ஆருயிர்களின் நெஞ்சத் தாமரையின் உன்னிடத்தான். அந்நெஞ்சத்தாமரையின்கண் பொன்னொத்துத் திகழ்கின்றனன். பொன் : பொதுப்பெயர்; அஃது இரும்பு, பொன் என்னும் இரண்டினையும் குறிக்கும் ஆருயிரின், நெஞ்சம் ஆணவச் சார்பால் இரும்பொக்கும்; அருட்சார்பால் பொன்னொக்கும்.

முன்னை - படைப்புக் காலத்துக்கு முன். போதகத்தான் - போது அகத்தான்; உள்ளமாகிய தாமரை மலர்மீது உள்ளவன். (6)

## 7. தீயினும் வெய்யன் புனலினுந் தண்ணியன்

7. தீயினும் வெய்யன் புனலினுந் தண்ணியன்
ஆயினும் ஈசன் அருளறி வார்இல்லை
சேயினும் நல்லன் அணியன்நல அன்பர்க்குத்
தாயினும் நல்லன் தாழ்சடை யோனே.

தீயைக் காட்டிலும் மிகவும் வெப்பம் உள்ளவன். இந்நிலை அறிவாய்த் தனியாய் நிற்கும் கழி நிலை. புனலைவிடக் குளிர்ந்தவன். இந்நிலை அருளுடன் கூடி அனைத்துயிரையும் இயக்கியாளும் வழிநிலை. ஆயினும் அவன்தன் அருள் நிலையினை உள்ளவாறு அறிவார் ஒருவரும் இலர். சுட்டுணர்வாலும் சிற்றுணர்வாலும் அறியப்படாத சேய்மையனாயினும் நல்லன்பர்களுக்கு அணியனாய் நின்று என்றும் நன்மை செய்பவன். பால் நினைந்தூட்டும் தாயினும் இனியன். தாழ்ந்த திருச்சடையை உடையவன். கழிநிலை - கடந்த நிலை.

சேயினும் - மனமாதிகளுக்கு எட்டாதவன் ஆயினும்.
அணியன் - அணுவாகிய உயிருடன் கலந்துள்ளவன். (7)

# 8. பொன்னாற் புரிந்திட்ட பொற்சடை யென்னப்

8. பொன்னாற் புரிந்திட்ட பொற்சடை யென்னப்
பின்னாற் பிறங்க இருந்தவன் பேர்நந்தி
என்னால் தொழப்படும் எம்இறை மற்றவன்
தன்னால் தொழப்படு வாரில்லை தானே.

பொன்னால் பின்னி அழகுற அமைக்கப்பட்ட திருச்சடையென்று வழுத்தும்படியாகப் பின்னால் விளங்கும் சடையுடன் வீற்றிருந்தருள்பவன். அவன் திருப்பேர் நந்தியங் கடவுள் என்று சொல்லப்படும். அடியேனால் தொழப்படும் எம் தலைவன். அத்தகைய சிவன் யாரையும் தொழுவானல்லன். எல்லாரும் அவனையே தொழுவர். அதனால் தன்னால் தொழப்படுவார் இல்லை யென்றருளினர். இதுபற்றியே 'சேர்ந்தறியாக் கையானை' என்னும் செந்தமிழ்ச் சிறப்புத் திருமறை முடிவும் (திருவாசகம்) அருளிற்றென்க.

நந்தி - நந்துதல் இல்லாதவன். பிறப்பு, இறப்பு இல்லாதவன். பொன்...இருந்தவன் - அருளாகிய கதிர்களால் சூழப்பட்டவன். (அக் கதிர்கள் ஒன்றோடொன்று பிணைந்திருப்பது சடை போன்ற காட்சியை அளிக்கின்றது.) (8)

# 9. அயலும் புடையும்எம் ஆதியை நோக்கில்

9. அயலும் புடையும்எம் ஆதியை நோக்கில்
இயலும் பெருந்தெய்வம் யாதுமொன் றில்லை
முயலும் முயலில் முடிவுமற் றாங்கே
பெயலும் மழைமுகிற் பேர்நந்தி தானே.

வேறிடத்தும் பக்கத்தும் யாவற்றிற்கும் காரணமாம் சிவ பெருமானை அவனருளால் ஆராயின் அவனுடன் ஒத்து விளங்கும் பெரிய முழுமுதல் தெய்வம் யாதொன்றும் இல்லை. அவன் திருவடியுணர்வு கொண்டு சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்னும் நன்னெறி நான்மையால் அடைய முயலும் முயற்சிக்கண் அவன் துணைபுரிந்து வெளிப்பட்டருள்வன்; முடிவிலும் அங்ஙனே திகழ்ந்தருள்வன்; அதனால் அவன் வேண்டுங்காலத்துப் பொய்யாது பெய்யும் அருண்மழை முகில் போல்வன். அவன் திருப்பேர் நந்தி என்ப.

பெயலு மழைமுகில் - மழை பெய்யும் முகில், அருண் மழையைப் பொழிகின்ற மேகம் போன்றவன். முயலின் முடியும் - அச்சாதனையின் பயனும் முயலும் - முத்தி சாதனையும். அயலும் புடையும் - புறத்தும் அகத்தும்.

## 10. பிதற்றுகின் றேன்என்றும் பேர்நந்தி தன்னை

10. பிதற்றுகின் றேன்என்றும் பேர்நந்தி தன்னை
இயற்றுவன் நெஞ்சத் திரவும் பகலும்
முயற்றுவன் ஓங்கொளி வண்ணன்எம் மானை
இயற்றிகழ் சோதி இறைவனு மாமே.

எந்நாளும் அவனருள் துணையால் நிகழும் பேரன்பால் நந்தியங் கடவுளைச் 'சிவ சிவ' என்று; இடையறாது ஏத்துகின்றேன்; இரவும் பகலும் நெஞ்சத்து அவனையே இடையறாது நினைதலாகிய பரவுதலைச் செய்கின்றேன்; அவன் திருவடியைப் பெறவே முயல்கின்றேன்; அவன் என்றும் அழியா அறிவொளியாய் எவற்றையும் ஒளிர்விக்கும் ஆற்றலொளியாய்த் திகழும் ஓங்கொளிவண்ணன்; எம் தலைவன்; இயல்பாக விளங்கும் உண்மையறிவின்பப் பேரொளி வண்ணன்; குறைவிலா நிறைவாய்க் கோதிலா அமிழ்தாய்த் திகழும் முறையுறும் முதல்வனாவன்.

இயற்றிகழ் - இயல்பாகவே பிரகாசிக்கின்ற உயற்றுவன் - உயிர் வாழ்வேன். இயற்றுவன் நெஞ்சத்து - நந்தி தன் திருவடியை நெஞ்சத்துள் பொறிப்பன். பிதற்றுகின்றேன் - ஓயாமல் உச்சரிக்கின்றேன்.

## 11. கண்ணுத லான்ஒரு காதலின் நிற்கவும்

11. கண்ணுத லான்ஒரு காதலின் நிற்கவும்
எண்ணிலி தேவர் இறந்தார் எனப்பலர்
மண்ணுறு வார்களும் வானுறு வார்களும்
அண்ணல் இவன்என் றறியகி லார்களே.

நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் அன்பு செய்யும் ஆருயிர்கட்கு அருள்புரிய வேண்டும் என்னும் ஒப்பில்லாத தனிப்பெருங் காதலுடன் என்றும் ஒருபடித்தாய் அழிவின்றி நிற்பன். அவன் அவ்வாறு நிற்கவும் அளவில்லாத தேவர்கள் என அவன் ஆணையால் சிறப்புப் பெற்ற ஆருயிர்கள் மலப்பிணிப்பால் வினைக்கீடாய் மாயாகாரிய உடம்புகளுடன் பிறந்திறந்து வருவதே தொழிலாய் ஒழிந்தனர். அங்ஙனமிருந்தும் மண்ணுலகத்தாரும் விண்ணுலகத்தாரும் என்றும் அழியா இயற்கைசேர் அண்ணல் சிவபெருமானே என்று அறியாது தடுமாறுகின்றனர்.

அண்ணல் - பெருமை பொருந்திய கடவுள். வானுறுவார்கள் - தேவர்கள். மண்ணுறுவார்கள் - மானிடர்கள்; தூல தேகத்தை உடையவர்கள்; தேவர் - திவ்விய (சூட்சும) தேகத்தையுடையவர். புதன், வியாழம், வெள்ளி, செவ்வாய் முதலிய அண்டங்களில் உள்ளவர்.

## 12. மண்ணளந் தான்மல ரோன்முதல் தேவர்கள்

12. மண்ணளந் தான்மல ரோன்முதல் தேவர்கள்
எண்ணளந் தின்னம் நினைக்கிலார் ஈசனை
விண்ணளந் தான்தன்னை மேல்அளந் தாரில்லை
கண்ணளந் தெங்குங் கடந்துநின் றானே.

மால் வஞ்சனையாற் சென்று மாவலிபால் மூன்றடி மண் வேண்டி அவன் புனலுடன் பூச்சொரிந்து தரப்பெற்றுத் தன் ஈரடியால் மண்ணும் விண்ணும் அளந்து மற்றோரடிக்கு அவன் தலையில் அடி வைத்து அழுத்தி அவனை அழித்தனர் என்ப. அத்தகைய மாலும் மலரோனாகிய நான்முகனும் ஏனைத் தேவர்களும் தங்கள் தங்கள் மனத்தாலும் கருதிச் சிவனை நினைக்கும் ஆற்றலில்லாதவராவர். அச் சிவன் ஆருயிர்களின் நெஞ்ச வெளியினையும் அளந்து அப்பாற்பட்டவன் ஆவன். தன் திருவுள்ளமாகிய கருத்தளவானே எல்லாவற்றையும் தந்தருளுதலாகிய அளத்தலைச் செய்து கலந்தும் கடந்தும் நிற்பவனும் அச் சிவனே. கண் - கருத்து.

கண்ணளந்து - எல்லா அண்டங்களையும் வரையறுத்து. விண்ணளந்தான் - ஆகாய தத்துவத்திற்கு அதிபதியாகிய சதாசிவன். எண் அளந்து - தங்களுக்குள்ள ஆயுட்காலத்தை எண்ணி. மலரோன் - அயன் என்னும்தேவர். மண்ணளந்தான் - மால் என்னும் தேவர்.

## 13. கடந்துநின் றான்கம லம்மல ராதி

13. கடந்துநின் றான்கம லம்மல ராதி
கடந்துநின் றான்கடல் வண்ணன்எம் மாயன்
கடந்துநின் றான்அவர்க் கப்புறம் ஈசன்
கடந்துநின் றான்எங்கும் கண்டுநின் றானே.

சிவவெருமான் மண்ணுலகைத் கடந்து நிற்கின்ற மலரோனாகிய ஆதியையும் கடந்து நின்றனன். அதுபோல் கடல் வண்ணனாகிய மாயனையும் கடந்து நின்றான். ஈசனாகிய அரனையும் கடந்து நின்றான். எல்லாவற்றையும் கடந்தும் நோக்கி நின்றருள்கின்றனன் அருளால்.

கமலம் மலராதி - பிரம உலகமாகிய வியாழ அண்டத்தையும்; கடல்வண்ணன் எம்மான் - விண்டு உலகமாகிய செவ்வாய் அண்டத்தையும்; அவர்க்கப்புறம் ஈசன் - அதற்குமேல் இருக்கப்பட்ட உருத்திரன் உலகமாகிய சுக்கிர அண்டத்தையும்; மகேசன் உலகமாகிய புதன் அண்டத்தையும்; எங்குங் கண்டு நின்றான் - எல்லாவற்றையும் கடந்து நின்றாலும் எல்லாவற்றிலும் நிறைந்து நிற்கின்றான்.

## 14. ஆதியு மாய்அர னாய்உட லுள்நின்ற

14. ஆதியு மாய்அர னாய்உட லுள்நின்ற
வேதியு மாய்விரிந் தார்ந்திருந் தான்அருட்
சோதியு மாய்ச்சுருங் காததோர் தன்மையுள்
நீதியு மாய்நித்த மாகிநின் றானே.

சிவபெருமான் எல்லாவற்றிற்கும் வினைமுதற் காரணமாய் நின்று தோற்றுவித்தலும், அரனாய் நின்று ஒடுக்குவித்தலும் செய்தருள்கின்றனன். ஆருயிர் உடலகத்து அவற்றின் நெஞ்சத் தாமரைகளைச் சிறந்த இருக்கையாகக் கொண்டு நிறைந்து அங்கங்கே நின்றனன். திருவருட் பேரொளிப் பிழம்பாய் யாண்டும் குவிதலில்லாத ஒரு தன்மையாய் நின்றனன். மேலும் அதன்கண் எவர்க்கும் முறை செய்தலிற்றப்பாத நீதியுமாய் என்றும் ஒரு பெற்றியனுமாய் நின்றனன்.

வேதியுமாய் - ஓமத்தானமாய் (Solar Plexus); இது உடலில் மணி பூரகத்தானம்; உந்திக் கமலத்து நேர். ஆதியுமாய் - உற்பத்திக்குக் காரணமாய். ஆர்ந்து இருந்தார் - உணர்ந்து, ஓமத்தானத்தினின்றும் கிளம்பும் ஒளியைக்கொண்டு பிரகாசிப்பவர்களுக்கு.

## 15. கோது குலாவிய கொன்றைக் குழற்சடை

15. கோது குலாவிய கொன்றைக் குழற்சடை
மாது குலாவிய வாள்நுதல் பாகனை
யாது குலாவி அமரருந் தேவருங்
கோது குலாவிக் குணம்பயில் வாரே.

சீராட்டுப் பொருந்திய கொன்றை மலர் மாலையணிந்த குழற் சடையினையுடைய சிவபெருமான் அழகு விளங்குகின்ற ஒளிசேர் நெற்றியினையுடைய உமையம்மையாரை ஒருபாகத்தே உள்ளவன். அமரர்களும் தேவர்களும் தங்களுக்கு யாது வேண்டுமானாலும் அச் சிவபிரானுடைய குணங்களைப் பரவி வழுத்துவார் என்க. கோதுகுலம் - சீராட்டு.

கோது குலாவிய கொன்றை - வண்டுகள் மொய்க்கின்ற கொன்றை. மாது - விருப்பம். மாது குலாவிய - கண்டார் விரும்புந் தன்மையையுடைய. யாது - துன்பம். கோது குலாவி - குற்றத்தை நீக்கி. கோது - குற்றம். குலாவு - வளை, நீக்கு.

## 16. காயம் இரண்டுங் கலந்து கொதிக்கினும்

16. காயம் இரண்டுங் கலந்து கொதிக்கினும்
ஆயங் கத்தூரி யதுமிகும் அவ்வழி
தேசங் கலந்தொரு தேவனென் றெண்ணினும்
ஈசன் உறவுக் கெதிரில்லை தானே.

காயம் இரண்டு ஆருயிர்கட்கு உள்ளன. ஒன்று விரும்பத் தகுந்து தூய மாயையினின்றும் தரப்படும் சிவவுலக அருவுடம்பு. இது வெங்காயம் எனப்படும். மற்றொன்று தூவா மாயையினின்றும் தரப்படும் உரு உடம்பு. இது பெருங்காயம் எனப்படும். இவ்விருவேறு மாறுபட்ட உடல்களும் கலந்திருப்பினும், கூட்டுப் பொருள்களோடாகிய கத்தூரி மணம் மிகுதல்போல் தூமாயை அருவுடம்பின் குணமாகிய மணம் மிக்குத் தோன்றும். அவ்விடத்துத் தேசங்களாகிய அனைத்துலகையும் கடந்து நின்றதொரு முழுமுதற் றெய்வம் சிவபெருமான் என்று எண்ணின் உண்டாம் அவன் உறவுக்கு ஒப்பில்லையாகும்.

காயம் இரண்டும் - வெங்காயம் பெருங்காயம் ஆக இரண்டும். மாயம் கத்தூரி - கறுத்த கத்தூரி.

## 17. அதிபதி செய்து அளகை வேந்தனை

17. அதிபதி செய்து அளகை வேந்தனை
நிதிபதி செய்த நிறைதவ நோக்கி
அதுபதி யாதரித் தாக்கம தாக்கின்
இதுபதி கொள்ளென்ற எம்பெரு மானே.

அளகை வேந்தனாகிய செல்வக் கிழவனை அந் நகர்க்குத் தலைவனாக்கி அருளினவன் சிவன். அச் செல்வக் கிழவனைச் சிவன் நோக்கி அளவில்லாத செல்வத்துக்கு உரியவனாகும்படி அருளினன். இதுவே உனக்குச் சிறந்த திருவூர் கொள்ளென வழங்கியருளினவன் சிவபெருமான்.

அதிபதி செய்து - கற்பாந்தரத்திலும் அளகை நகரை அழியாமற் செய்து.

## 18. இதுபதி ஏலங் கமழ்பொழில் ஏழும்

18. இதுபதி ஏலங் கமழ்பொழில் ஏழும்
முதுபதி செய்தவன் மூதறி வாளன்
விதுபதி செய்தவன் மெய்த்தவம் நோக்கி
அதுபதி யாக அமருகின் றானே.

மணங் கமழாநின்ற ஏழுலகமும் சிவபெருமானின் உடைமைப் பதியாகும். இவற்றினும் சிறப்பாகப் பேரொடுக்கக் காலத்துத் தோன்றும் சுடுகாடாகிய முதுபதியினையே தன் இருப்பிடமாக அமைத்துக் கொண்டவன், இயற்கையுணர்வும் முற்றுணர்வும் இயல்பாகவே அமைந்த மூதறிவுசேர் பேரறிவாளன் அவன்; ஆயினும் திருவருள் துணையால் திருவடியுணர்வால் தன் நெஞ்சினை அச் சிவனுக்கு இருப்பிடமாக அமைக்கும் நற்றவத்தோர் உள்ளமே உறைவிடமாகக் கொண்டு வீற்றிருந்தருளுகின்றனன்.

விதுபதி செய்தவன் - மதிக்கலையைப் பதியச் செய்வதாகிய யோகமார்க்கத்தை அநுட்டித்தவன்.

## 19. முடிவும் பிறப்பையும் முன்னே படைத்த

19. முடிவும் பிறப்பையும் முன்னே படைத்த
அடிகள் உறையும் அறநெறி நாடில்
இடியும் முழக்கமும் ஈசர் உருவங்
கடிமலர்க் குன்ற மலையது2 தானே.

(ப. இ..) ஆக்கப்பாடுகளாகிய மாயாகாரியப் பொருள்கள் அனைத்திற்கும் முடிவாகிய இறப்பினையும் தோற்றமாகிய பிறப்பினையும் முன்னுதலாகிய திருவுள்ளத்தானே படைத்தருளியவன் சிவபெருமான். அவனே அடிகள். அவன் உறையும் அறநெறியினை ஆராயின் அஞ்சத் தகுந்த இடியும் வேறு பல முழக்கமும் ஈசர் உருவும் தனக்கு அடக்கம் என்பதனைப் புலப்படுத்த ஆண்டும் உறைவன். மேலும் அவன் எங்கும் நிறைந்தவன். அதனால் எதுவும் அவனுக்கு விலக்கன்று. ஆருயிர்க்கு அருள் செய்தற் பொருட்டு அம்மையும் தானுமாய் எழுந்தருளி இருப்பது நறுமணம் கமழாநின்ற திருக்கயிலாய மலையதுவாகும். வெள்ளி - அறிவின் அடையாளம்.

முன்னே - முதற் படைப்பில். இடியும் முழக்கமும் - விந்துவும் நாதமும்.

## 20. மன்னிய வாய்மொழி யாலும் மதித்தவர்

20. மன்னிய வாய்மொழி யாலும் மதித்தவர்
இன்னிசை உள்ளே எழுகின்ற ஈசனைப்
பின்னை உலகம் படைத்த பிரமனும்
உன்னும் அவனை உணரலு மாமே.

நிலைபெற்ற வாய்மை மொழியாகிய திருவைந்தெழுத்தை இடையறாது கணிக்கும் எண்ணரிய சிறப்பாலும், சிவபெருமானின் பொருள்சேர் புகழை எப்பொழுதும் சொல்லும் எழிலாலும் மெய்யன்பராவர். அத்தகையோர் தூயவுள்ளத்து அவன் எழுந்தருள்கின்றனன். அத்தகைய முழுமுதல் விழுப்பொருளை அவன் திருவாணை பெற்று உலகத்தைப் படைக்கின்ற பிரமனாகிய அவனும் நினைப்பன் ஆயினும் அவனாலும் உணரவொண்ணா தென்க. மதித்தல் - தியானித்தல்; உள்ளந்தழுவல். உணரலுமாம் + ஏ - உணரலுமாமே. ஏகாரம் ஏதிர்மறை வினாப்பொருள். ஆதலால் உணர வொண்ணாதென்பதாம்.

மதித்தவர் - மதிக்கலையைப் பதியச் செய்தலாகிய யோகானுட்டிப்பால் தியானித்தவர். முன்னும் (பாடம்) பிரமாவிற்கு முந்தியவனாகிய விண்டுவும்.

## 21. வானப் பெருங்கொண்டல் மாலயன் வானவர்

21. வானப் பெருங்கொண்டல் மாலயன் வானவர்
ஊனப் பிறவி ஒழிக்கும் ஒருவனைக்
கானக் களிறு கதறப் பிளந்தஎங்
கோனைப் புகழுமின் கூடலு மாமே.

மழைக்கும் மழையருளும் வானப் பெருங்கொண்டல் சிவபெருமான். மால் அயன் வானவர்கோன் வானவர் முதலாயினார்தம் தூவாமாயையினாலாகிய இழிந்த பிறப்பாம் ஊனப் பிறவியை ஒழித்தருளும் ஒப்பில்லாத முழுமுதல். தேவதாரு வனத்துப் போலி முனிவர்கள் ஆணவச் செருக்கால் வேள்வியினைப் புரிந்தனர். விளைவும் ஆணவச் செருக்காகிய காட்டானை அதன்கண் தோன்றிற்று. அவ்வியானையைச் சிவபெருமான் உரித்துப் போர்த்து அடக்கினன். நாட்டானை நலம் பெறுவதும் காட்டானை பொலம் பெறுவதும் காண்க. யானை ஆணவச் சார்பாம் மாயை. இவ்வுண்மை 'தொண்டர் அஞ்சு களிறும் அடக்கி' என்பதனால் உணரலாம். எம் தலைவனாகிய அவனை மனமார நினைந்து வாயாரப் புகழுங்கள். அப்பொழுது அவனுடன் இரண்டறக் கலந்து பேரின்பம் நுகர்தலும் உண்டாம்.

வானப் பெருங் கொண்டல் மால் - கார்நிற வண்ணனாகிய திருமால் கானக்களிறு கதறப் பிளந்த எம்கோன் - யானையை உரித்த சிவபெருமான்.

## 22. மனத்தில் எழுகின்ற மாயநன் னாடன்

22. மனத்தில் எழுகின்ற மாயநன் னாடன்
நினைத்த தறிவ னெனில்தான் நினைக்கிலர்
எனக்கிறை அன்பிலன் என்பர் இறைவன்
பிழைக்கநின் றார்பக்கம் பேணிநின் றானே.

மாயை மாயையின் ஆக்கம் முதலிய உலகங்களை என்றும் உடைமையாகவுடையவன் சிவன். அதனால், அவன் மாய நல்நாடன் எனப்படுவன். அவன் அன்பர் மனத்துத் தோன்றுகின்றவன். உலகினர் அவன் பெருமையைத் தெளிவாக விளங்கக் கூறினும் செவி கொடார். அவன் நினைத்ததறியும் நீர்மையன் என்று கூறினும் நினைக்கிலர். தாங்கள் முயற்சி ஏதும் இன்றி இறைவன் எங்கள்பால் அன்பிலன் என்று குறை கூறுவர். அவன் பிறப்பற்றுச் சிறப்புற (பிழைக்க) முழுமனதுடன் வேண்டி நிற்பார் சார்பாய் அவரைச் சிறப்பாக ஆட்கொண்டருள்வன்.

மனத்திலெழுகின்ற மாய நன்னாடன் - ஒவ்வொருவர் மனத்திலும் எழுகின்ற எண்ணங்களை அறியும் ஒருவன். பிழைக்க நின்றார் - முத்திக் கரை சேர விரும்பி நின்றவர். (22)

## 23. வல்லவன் வன்னிக் கிறையிடை வாரணம்

23. வல்லவன் வன்னிக் கிறையிடை வாரணம்
நில்லென நிற்பித்த நீதியுள் ஈசனை
இல்லென வேண்டா இறையவர் தம்முதல்
அல்லும் பகலும் அருளுகின் றானே.

சிவனுக்கே உரிய எண்குணங்களுள் முடிவிலாற்றலு மொன்றாதலின் அவன் எல்லாம் நினைப்பளவானே எளிதின் முடிக்கத் தகுந்த வியத்தகு பேராற்றல்சேர் வல்லவன் - சிவன். தீக்கடவுளைக் கடலின் நடுவாகக் கடல்நீர் மிகுந்து மேலேறா வண்ணம் ஆணையும் ஆற்றலும் ஈந்து நிறுத்தி வைத்தனன். இதுவே அறமுறையாகும். அத்தகைய ஆண்டவனை அன்பிலார்க் கறிய வொண்ணாமை பற்றி இல்லை என வேண்டா. தேவர்கள் முதல் யாவர்களுக்கும் முதல்வன். அல்லும் பகலும் என்னும் வேறுபாடின்றி இடையீடின்றி எப்பொழுதும் அருள் செய்கின்றான். வாரணம் - கடல்.

வன்னிக்கிறையிடை வாரணம் - கடலினுள்ளே தீயை.

## 24. போற்றிசைத் தும்புகழ்ந் தும்புனி தன்னடி

24. போற்றிசைத் தும்புகழ்ந் தும்புனி தன்னடி
தேற்றுமின் என்றுஞ் சிவனடிக் கேசெல்வம்
மாற்றிய தென்று மயலுற்ற சிந்தையை
மாற்றிநின் றார்வழி மன்னிநின் றானே.

'தென்னா டுடைய சிவனே போற்றி', 'எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' என்று திருமுறைப் போற்றித் தொடர்புகன்று
சிவனடியைப் புனலொடு பூவால் வழிபட்டும், பொருள்சேர் புகழ்களை எடுத்துப் புகழ்ந்தும் தூயவுடம்பும் வாலறிவும் அருளும் முதலாகவுடைய புனிதனை அவனருளால் தெளியுங்கள். எந்நாளும் சிவபெருமான் திருவடிக்கே ஈட்டிய செல்வ முதலியன உரிய என்று அறம்பல புரியுங்கள். அவ்வறத்திறத்தால் மயலுற்ற சிந்தையை மாற்றுங்கள். அங்ஙனம் மாற்றி நின்றார் வழிச் சிவன் நிலைபெற்று நிற்பன்.

## 25. பிறப்பிலி பிஞ்ஞகன் பேரரு ளாளன்

25. பிறப்பிலி பிஞ்ஞகன் பேரரு ளாளன்
இறப்பிலி யாவர்க்கும் இன்பம் அருளும்
துறப்பிலி தன்னைத் தொழுமின் தொழுதால்
மறப்பிலி1 மாயா விருத்தமும் ஆமே.

சிவபெருமான் என்றும் பிறப்பில்லாதவன். பின்னற் சடையினையுடையவன். அளவிடப்படாத பேரருளாளன். என்றும் அழிவிலாதவன். யாவர்க்கும் குறைவிலா நிறையின்பம் அருளி அவரை விட்டு நீங்காதவன். அவனைத் தொழுங்கள். அங்ஙனம் தொழுதால் அவன் உங்களை ஒருபோதும் மறவான். மாயைக்கு மறுதலையாகிய இயற்கைப் பேரறிவினன். அன்னை அஞ்ஞை என்று வந்ததுபோல் பின்னல் பிஞ்ஞல் என்று வந்திருத்தல் அமையும்.

துறப்பிலி - தன்னை அடைந்தவர்களை நீக்காதவன்.
மறப்பிலி - தன்னைத் தொழுதவர்களை மறக்காதவன்.
மாயா விருத்தமும் ஆம் - மயக்கமும் ஒழியும்.

## 26. தொடர்ந்துநின் றானைத் தொழுமின் தொழுதால்

26. தொடர்ந்துநின் றானைத் தொழுமின் தொழுதால்
படர்ந்துநின் றான்பரி பாரக முற்றுங்
கடந்துநின் றான்கம லம்மலர் மேலே
உடந்திருந் தானடிப் புண்ணிய மாமே.

ஆருயிர்களைப் புறம்புறம் திரிந்து என்றும் தொடர்ந்து நிற்கின்றவன் சிவன். அச் சிவனை அன்புடன் திருமுறைவழித் தொழுங்கள். தொழுதால் இடையறாது யாண்டும் இணைந்து நிறைந்து நிற்பன் சிவன். அனைத்தையும் சுமக்கும் நிலமுதல் மெய்கள் எல்லாவற்றையும் கடந்து நிற்பவன் சிவன். ஆருயிரின் நெஞ்சத் தாமரைமேல் உடங்கிருந்தருளினன். அத்தகைய சிவபெருமான் திருவடியினைத் தொழுவதே அழிவில் சிவ புண்ணியமாகும். மெய்கள் - தத்துவங்கள்.

பரிபாரகமுற்றும் கடந்து நின்றான் - அண்டங்களை யெல்லாம் கடந்து நின்றவன். கமலம் மலர்மேலே உடந்திருந்தான் - மலர் மிசையேகினான்.

## 27. சந்தி எனத்தக்க தாமரை வாண்முகத்

27. சந்தி எனத்தக்க தாமரை வாண்முகத்
தந்தமில் ஈசன் அருள்நமக் கேயென்று
நந்தியை நாளும் வணங்கப் படுமவர்
புந்தியி னுள்ளே புகுந்துநின் றானே.

சந்தி எனப்படும் அந்தியின் நிறம் சிவப்பு. அந்நிறம் போலும் தாமரை செந்தாமரை. அம் மலர்போலும் ஒளியுடைத் திருமுகம் சிவபெருமான் முகம். அவனே ஆண்டவன். அவன் திருவருள் எந்நாளும் நமக்கேயாம். அவ்வருளை அளிப்பவன் அழிவில் செல்வத்தன் ஆகிய நந்தி. அந் நந்தியை நாளும் வணங்கும் நல்லன்பர்தம் பிறந்த அறிவினுள் சிவபெருமான் புகுந்து நின்றனன்.

சந்தியெனத்தக்க - அந்தியில் தோன்றும் செவ்வான நிறத்தையுடைய. வணங்கப்படுமவர் - தொழும் அவர்.

## 28. இணங்கிநின் றான்எங்கு மாகிநின் றானும்

28. இணங்கிநின் றான்எங்கு மாகிநின் றானும்
பிணங்கிநின் றான்பின்முன் னாகிநின் றானும்
உணங்கிநின் றான்அம ராபதி நாதன்
வணங்கிநின் றார்க்கே வழித்துணை1 யாமே.

எங்கும் இணக்கத்துடன் நிறைந்து நின்றவனும் அங்ஙனம் நிற்பினும் அருட்கண் பெறாதார்க்குத் தோன்றாது பிணங்கி மறைந்து நிற்பவனும் சிவனே. உலக ஒடுக்கத்துக்குப் பின்னும் உலகத் தோற்றத்திற்கு முன்னும் நிற்பவனும் சிவனே. உயிர்க்குயிராய் நுணுகுதலாகி உணக்கத்துடன் நிற்பவனும் சிவனே. அவன் துறக்க வுலகத்துக்கு முதல்வன். வணங்கி வழிபட்டு நிற்பார்க்கே வழித்துணை யாவன். துறக்கவுலகம் ஈண்டுக் கயிலாயம்.

பிணங்கி - பொருந்தியும் பொருத்தாமலும். பின்முன் - படைப்புக்கு முந்தியும், அழித்தலுக்குப் பிந்தியும். உணங்கி நின்றான் - மறைந்து நின்றவன்.

## 29. காணநில் லாயடி யேற்குற வாருளர்

29. காணநில் லாயடி யேற்குற வாருளர்
நாணநில் லேன்உன்னை நான்தழு விக்கொளக்
கோணநில் லாத குணத்தடி யார்மனத்
தாணிய னாகி அமர்ந்துநின் றானே.

சிவபெருமானே, அடியேன் காணுமாறு வெளிப்பட்டருளாய். அடியேனுக்கு உன்னையன்றி வேறு உறவாவார் யாருளர்? நீ வெளிப்படின், உன்னை யான் அகந்தழுவுவதுபோல் புறந்தழுவுவதிலும் நாணுற்றுப் பின்னில்லேன். மனக்கோட்டம் சிறிதுமில்லாத அருட்பண்பு பெரிதும் செறிந்த செந்நெறிக் குணத்தடியார் நல்லுளத்தில் உயிர்க்குயிராய் நிற்பவன் சிவன். ஆதலால் அவன் அச்சாணியன்னானாகி அமர்ந்தருளுகின்றனன்.

ஆணியனாகி - ஆழப் பதிந்தவனாகி. கோணலில்லாத குணத்து அடியார் - மனக்கோட்ட மின்றி நலம்செய் அடியார்.

## 30. வானின் றழைக்கும் மழைபோல் இறைவனுந்

30. வானின் றழைக்கும் மழைபோல் இறைவனுந்
தானின் றழைக்குங்கொல் என்று தயங்குவார்
ஆனின் றழைக்கு மதுபோல்என் நந்தியை
நானின் றழைப்பது ஞானங் கருதியே.

உலகை உய்விக்கும் மழை வானத்தினின்றும்ஒலிக்கின்றது. அதுபோல் இறைவனும் இந்நாள் நம்மைஅருளால் அழைப்பனோ என்று தயங்குவர். ஆன் கன்று தன்தாய்ப் பசுவை நினைந்துருகி அழைப்பது போல், யானும்என் நந்தியங் கடவுளை அன்பால் மனமுருகி ஓவாது அழைக்கின்றேன்.எது கருதியென்றால், அவன்றன் திருவடியுணர்வைப் பெறுதற்பொருட்டேயாம்.

வானின்றழைக்கும் மழை -உலகர் வேண்டாது தானே பெய்யும் மழை. ஆனின்றழைக்கும்- ஆன் கன்று தாய்ப்பசுவை அழைக்கும்.

## 31. மண்ணகத் தான்ஒக்கும்வானகத் தான்ஒக்கும்

31. மண்ணகத் தான்ஒக்கும்வானகத் தான்ஒக்கும்
விண்ணகத் தான்ஒக்கும் வேதகத் தான்ஒக்கும்
பண்ணகத் தின்னிசை பாடலுற் றானுக்கே
கண்ணகத் தேநின்று காதலித் தேனே.

மண்ணகத்தும் வானகத்தும்விண்ணகத்தும் முறையே வாழ்வார் மக்கள், தேவர் முதலியமூவர், அருளோன் முதலிய ஐவர் ஆவர். அவரவர்களுக்கு வேண்டுவனஅருளுவதால் அவரவர்களை ஒப்பவன்போல் தோன்றுவன்.ஆயினும் அவன் அவர்களனைவர்களையும் இரும்பைப்பொன்னாக்கும் குளிகையனைய வேதகத்தானாவன். அவன்செந்தமிழ்ப் பண்ணகத்து இன்னிசை போன்றுள்ளவன்.அப் பாடலினை ஏற்று அளவிலா மகிழ்வு பூப்பவன். அவன்என் அறிவின்கண்ணே நிறைந்து நிற்கின்றான். யானும்அவனருளால் அவ் வறிவின் கண்ணேயே காதலிக்கின்றேன்.மூவர்: அயன், அரி, அரன்; ஐவர்: ஆசான், ஆண்டான்,அருளோன், அன்னை, அத்தன்.

மண்ணகத்தான் - பூமியில்உள்ளவனாயினும். வானகத்தான் - இந்திர உலகத்துள்ளவனாயினும்.விண்ணகத்தான் - இந்திர உலகத்தைத் தவிர ஏனையபிரம, விண்டு, உருத்திர, மகேசுர, சதாசிவ உலகத்தானாயினும்.வேதகத்தான் - மண் - வான் விண்ணைத் தவிர்த்துநரக புவனங்களில் உள்ளவர்களாயினும். கண்ணகத்தேநின்று - ஞான வழிவாய் நின்று.

## 32. தேவர் பிரான்நம்பிரான்திசை பத்தையும்

32. தேவர் பிரான்நம்பிரான்திசை பத்தையும்
மேவு பிரான்விரி நீருல கேழையுந்
தாவு பிரான்தன்மை தானறி வாரில்லை
பாவு பிரான்அருட் பாடலு மாமே.

சிவபெருமான் தேவர்கட்கு முதல்வன்;எளியோமாகிய நமக்குத் தலைவன். பத்துப் புலங்களையும்கலப்பால் ஒன்றாய்ப் பொருந்தியிருக்கும் தலைவன்.கடலால் சூழப்பட்ட ஏழுலகையும் பொருட்டன்மையால்கடந்து நிற்கும் கடவுள். இத்தகைய அவன்றன் வியத்தகுதன்மையை உள்ளவாறு உணர்வாரில்லை. செலுத்துந் தன்மையால்எங்கும் நிறைந்து விளங்கும் அச் சிவனைச் செந்தமிழ்ப்பாடல் பாடித் தொழுவோமாக. புலம் - திசை.

## 33. பதிபல வாயது பண்டிவ் வுலகம்

33. பதிபல வாயது பண்டிவ் வுலகம்
விதிபல செய்தொன்று மெய்ம்மை உணரார்
துதிபல தோத்திரஞ் சொல்லவல் லாரும்
மதியிலர் நெஞ்சினுள் வாடுகின் றாரே.

வேற்றுப் புலத்தார் தெய்வங்களைத் தெளிவுணர்வின்மையால் பலவாகக் கொண்டு வழிபடுவர். இது தொடக்க காலத்து உலக மக்களின் செய்கை. வேள்வியென்னும் பெயரான் கொன்றாகும் கடைச்செயல் பலவும் புரிவர். அதற்குக் காரணம், அவர்கட்குப் பெறவேண்டிய மெய்யுணர்வு சிறிதும் இல்லாமையேயாம். முழுமுதற் சிவனையொழித்து, ஏனைய உயிரினங்களாகிய தேவர்களைப் போற்றிப் புகழ்ந்து பாடுவர். அப்பாட்டுப் பாடுவாரும் தெய்வவுணர்விலாதவராவர். அதனால் அவர்கட்குப் பிறப்பு இறப்பு நீங்காமையால் துன்புற்று உள்ளம் வாடுவர். விதி: ஆகுபெயராய் வேள்வியைக் குறித்தது. ஒன்றும் - சிறிதும்.

பதி பலவாவது - பல தேயங்களை உடையது. விதிபல செய்து - ஆரிய வேதங்களில் சொல்லப்பட்ட புன்னெறி யாகத்தைச் செய்து. துதிபல தோத்திரம் சொல்ல வல்லார் - முதல்வனைத் தவிர்த்துப் பல தேவர்களை வணங்கித் துதிப்பவர்.
(33)

## 34. சாந்து கமழுங் கவரியின் கந்தம்போல்

34. சாந்து கமழுங் கவரியின் கந்தம்போல்
வேந்தன் அமரர்க் கருளிய மெய்ந்நெறி
ஆர்ந்த சுடரன்ன ஆயிர நாமமும்
போந்தும் இருந்தும் புகழுகின் றேனே.

கலவை மணக் கூட்டுப் பூசப்பெற்ற தலையினிடமாக இருந்துவரும் நறுமணம் போன்று வேந்தனாகிய சிவபெருமான், தூய விண்ணவர்க்கருளிய மெய்ந்நெறி ஒன்றுண்டு. அச் சிவபெருமான்றன் நிறைந்த அறிவொளிப் பொருண்மறையான திருவைந்தெழுத்தை அளவின்றித் திருக்கோவில் முதலிய புறம்போந்தும், திருமடம் முதலிய அகமிருந்தும் போற்றிப் புகழ்ந்து புகல்கின்றேன். தூயவிண் - சிவவுலகம்.

சாந்து - கலவைச் சாந்து. கவுரி - உமையம்மையார். வேந்தன் - இறைவன்; மருதநிலத் தெய்வம்; முதல்வன்.
(34)

## 35. ஆற்றுகி லாவழி யாகும் இறைவனைப்

35. ஆற்றுகி லாவழி யாகும் இறைவனைப்
போற்றுமின் போற்றிப் புகழ்மின் புகழ்ந்திடில்
மேற்றிசைக் குங்கிழக் குத்திசை எட்டொடு
மாற்றுவன் அப்படி யாட்டவு மாமே.

முழுமுதற் சிவன் அருளால் ஆருயிர் உய்யத் தானே வகுத்த மெய்ந்நெறி சன்மார்க்கம் எனப்படும். அதுவே எவராலும் ஆற்றமுடியா அரும்பெரும் வழியாகும். அம் மெய்ந்நெறியே செந்நெறி எனவும் நன்னெறி எனவும் கூறப்படும். அந் நெறி நின்று பேரன்புடன் திருவைந்தெழுத்தோதிப்
போற்றுமின்; புகழ்மின். அங்ஙனம் புகழ்ந்தால், மேற்றிசை கீழ்த்திசை ஏனை எட்டுத்திசை ஆகப் பத்துத் திசைக்கும் அவனே முழுமுதல்வன். அவனே எங்கனும் மெய்ந்நெறியைப் பரப்புகின்றவன் ஆவன். அவன் ஆட்டும் அருள் வழியின்கண் நாம் ஆடின் திருவடிப் பேறு எய்துதல் உண்டு.

ஆற்றுவன் - சன்மார்க்க நெறியினுள் படச் செய்வன். ஆற்றுகிலா வழியாகும் - முன் மந்திரத்தில் கூறிய வண்ணம் போற்றாவிட்டால் வழிபாடு செய்யாததற்கு ஒப்பாகும். அப்படி ஆட்டவும் (ஆற்றவும்) ஆமே - அப்படிச் சன்மார்க்க நெறியில் சேரும்படி செய்தால் வீடுபேறு கைகூடும்.

## 36. அப்பனை நந்தியை ஆரா அமுதினை

36. அப்பனை நந்தியை ஆரா அமுதினை
ஒப்பிலி வள்ளலை ஊழி முதல்வனை
எப்பரி சாயினும் ஏத்துமின் ஏத்தினால்
அப்பரி சீசன் அருள்பெற லாமே.

அனைத்துயிர்க்கும் தந்தையொப்பானை, அழியாச் செல்வ நந்தியை, உண்ணத் தெவிட்டாப் பண்ணப்படாத இயற்கை அமுதனை, ஒப்பில்லாத பிழைபொறுத்தாளும் விழைதகு வள்ளலை, பேரூழிக் காலத்தும் ஒடுக்கமின்றி நின்று மீண்டும் உலகினைப் படைப்பிக்கும் முழுமுதல்வனை, எந்த வகையானும் - அருள் உந்தும் வழியில் தொழுங்கள். தொழுதால் அந்த வகையால் அச் சிவனும் வந்து அருள்புரிவன். வள்ளலென்றார், நஞ்சுண்டு காத்த நாயனார் என்பது பற்றி.

## 37. நானும்நின் றேத்துவன் நாள்தொறும் நந்தியைத்

37. நானும்நின் றேத்துவன் நாள்தொறும் நந்தியைத்
தானும்நின் றான்தழல் தானொக்கு மேனியன்
வானில்நின் றார்மதி போல்உடல் உள்ளுவந்
தூனில்நின் றாங்கே உயிர்க்கின்ற வாறே.

அவன் திருவருளால் அடியேனும் நாடொறும் நந்தியங் கடவுளைத் தொழுவேன். அவனும் விட்டுப் பிரிவின்றி உடன் நின்றனன். அவன் செந்தழலொக்கும் செம்மேனியன்; விண்ணிடை நிறைமதி போலும் தண்ணளி செய்து உடலுள் வந்து உவந்து நின்றனன். ஊனுள் நின்று உயிர்க்குமாறு செய்து செலுத்துகின்றனன். ஆர்மதி: கலைநிரம்பு திங்கள். இஃது ஆவிக்குத் திருவடி யுணர்வு படி முறையான் நிரம்புவதற்கு ஒப்பு. ஊன்: ஆணவவல்லிருள். உயிர்க்கின்றவாறு: அவ்விருளைத் துரத்தும் மெய்யுணர்வு தோன்றும் வழி.

## 38. பிதற்றொழி யேன்பெரி யான்அரி யானைப்

38. பிதற்றொழி யேன்பெரி யான்அரி யானைப்
பிதற்றொழி யேன்பிற வாஉரு வானைப்
பிதற்றொழி யேன்எங்கள் பேர்நந்தி தன்னைப்
பிதற்றொழி யேன்பெரு மைத்தவன் நானே.

அம்பலத்தாடும் ஐந்தொழிலருட் கூத்தனாம் பெரியானை மறவா நினைவுடன் அடிமைத் தொண்டு செய்து வழிபடலொழியேன். அலகில் ஒளிப்பிழம்பாய் அருவுருவக் காரணத் திருமேனியாய் எழுந்தருளும் சிவக்கொழுந்தாம் அரியானை மறவா நினைவுடன் மகன்மைத் தொண்டு செய்து வழிபடலொழியேன். நிலவாகிய திருவடியுணர்வு முற்றுப்பெற்ற ஆவியும், அவ் ஆவிக்கு உறுதுணையாக நிற்கும் வனப்பாற்றலாகிய மலிநீராம் திருவருளும் தலையன்பால் தங்க இடமருளி, ஆருயிர் உணர்வின்கண் தோன்றும் புறத்துப் பிறவா ஆற்றல் நிலைக்கள வேணியனாம் உணர்வுருவானை மறவா நினைவுடன் தோழன்மைத் தொண்டு செய்து வழிபடல் ஒழியேன். உலகெலாம் உணர்ந்து ஓதற்கரிய மெய்யுணர்வுசேர் வாலறிவனை, அவனருளால் புணர்ந்து நந்துதற்கு இடனளிக்கும் அச்சிவனை எஞ்ஞான்றும் வேறன்மையனாய் நின்று மறவா நினைவுடன் காதன்மைத் தொண்டு பூண்டு வழிபடலொழியேன். இவையே யான் பெற்ற இறப்பில் தவம். அதனால் யான் பெருமைத் தவமுடையேனாயினேன். இந் நான்கு நெறியினையும் முறையே சீலம், நோன்பு, செறிவு, அறிவெனக் கூறுவர்.

## 39. வாழ்த்தவல் லார்மனத் துள்ளுறு சோதியைத்

39. வாழ்த்தவல் லார்மனத் துள்ளுறு சோதியைத்
தீர்த்தனை அங்கே திளைக்கின்ற தேவனை
ஏத்தியும் எம்பெரு மான்என் றிறைஞ்சியும்
ஆத்தஞ்செய் தீசன் அருள்பெற லாமே.

சிவபெருமான் தன்னைத் திருவைந்தெழுத்தால் வாழ்த்தவல்ல நற்றவத்தாரின் தூய திருவுள்ளத்து மிக்க அறிவுப் பேரொளியாய்த் தோன்றுவன். அத்தகைய இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய தீர்த்தனை, மேலும் செவ்வி வாய்ந்த உயிர்கள்மாட்டு மகிழ்ந்து திளைக்கும் முழுமுதல் தெய்வத்தினைப் பலவாறாகப் பரவியும், எம் தலைவனே என்று வணங்கியும், அவனுக்கு முற்றும் உரிமையாய்த் தன்னை அறக்கொடுத்தவன் ஆப்தன் - நண்பன் எனப்படுவன். அந்நிலை எய்தியவர் அவன் திருவருள் பெறுவது எளிதாம். ஈசன் - ஆண்டவன்.

## 40. குறைந்தடைந் தீசன் குரைகழல் நாடும்

40. குறைந்தடைந் தீசன் குரைகழல் நாடும்
நிறைந்தடை செம்பொனின் நேரொளி ஒக்கும்
மறைந்தடஞ் செய்யாது வாழ்த்தவல் லார்க்குப்
புறஞ்சடஞ் செய்யான் புகுந்துநின் றானே.

சிவபெருமான் திருவடிக்கண் ஏக்கற்றவராய், அவன் திருவடியுணர்வால் தாழ்ந்தடைந்து அத் திருவடியை நாடுவாராக. அவன் நிறைந்த செம்பொனின் சிறந்த ஒளியை ஒப்பன். வஞ்சனையால் மறைந்து குறும்பு செய்யாது வாழ்த்தவல்ல மெய்யன்பர்களுடைய உடம்பினைப் புறக்கணியாது அதன்கண் புகுந்து நின்றனன். செய்யான்: முற்றெச்சம்.

குறைந்தடைந்து - மிகத் தாழ்ந்து வணங்கி. மறைஞ்சு அடம் செய்யாது - வஞ்சித்து மாறுசெயாது. புறம் சடம் செய்யான் - சடம் புறம் செய்யான் - சரீரத்தைப் புறக்கணிக்காது.

## 41. சினஞ்செய்த நஞ்சுண்ட தேவர் பிரானைப்

41. சினஞ்செய்த நஞ்சுண்ட தேவர் பிரானைப்
புனஞ்செய்த நெஞ்சிடை போற்றவல் லார்க்குற்
பனஞ்செய்த வாள்நுதல் பாகனும் அங்கே
இனஞ்செய்த மான்போல் இணங்கிநின் றானே.

சிவனை மறந்து நெடுநாள் வாழவேண்டுமென்னும் கெடு நினைவால் மாலுற்று மாலைத் தலைமையாகக் கொண்டு பாலுற்ற பிறவிக் கடலைக் கடைந்தனர் தேவர். அப்பொழுது சிவனை மறந்த பெரும் பிழை, பொருவருஞ் சினத்துப் பெருநஞ்சாக வெளிப்பட்டது. அதன் வெப்பம் பொறுக்காது தேவர்கள் மாலுள்ளிட்டாரனைவர்களும் ஓட்டம் எடுத்தனர். சிவன்பால் வந்து ஓலிட்டனர். சிவனும் பிழை பொறுக்கும் பெரியோனாதலின் பிழை பொறுத்து அந் நஞ்சினை உண்டு கண்டத்தடக்கினன். தேவர்கட்கு அமிழ்து ஈந்து காத்தனன். அத்தகைய முதல்வனைத் திருத்தப்பட்ட மனத்தின்கண் தொழுதற்கு வல்ல தொண்டர்க்கு, உலகுயிர் எல்லாம் படைத்து வளர்த்தருள் கன்னியாகிய அம்மையை ஒருபக்கத்தேயுடைய சிவபெருமான் அப்பொழுதே தன் இனத்தை நாடும் மான்போன்று அவர்களுடன் இணங்கி நின்றருளினன்.

புனம் செய்த - திருத்தப்பட்ட உற்பனம் செய்த வாணுதல் பாகன் - அகிலம் படைத்த ஆதிபகவன். இனம் செய்த மான்போல் - இனத்தோடு கூடிய பார்வை மானைப்போல.

## 42. போயரன் தன்னைப் புகழ்வார் பெறுவது

42. போயரன் தன்னைப் புகழ்வார் பெறுவது
நாயக னான்முடி செய்தது வேநல்கு
மாயகஞ் சூழ்ந்து வரவல்ல ராகிலும்
வேயன தோளிக்கு வேந் தொன்றுந் தானே.

பற்றற்றான் பற்றினைப் பற்றிப் பற்றுவிட்டுப்போய்ச் சிவபெருமானை மெய்யாகப் புகழ்கின்றவர்கள் பெறுவது நாயகனாகிய சிவபெருமானால் 'உரையிறந்த சுகமதுவே முடியாகும்' என்பதற்கிணங்க, எங்கும் இயல்பாகவே சிவமாய்க் காட்டுவித்துப் பேரின்பம் நல்கும் அவ்வருளினையேயாம். மாயாகாரியமாகிய உலகனைத்தும் சூழ்ந்துவர வல்லராகிலும், மூங்கில் போலுந் திருத்தோளையுடைய உமையம்மையார்க்கு மணாளனாகி, ஆருயிர்கட்குப் போகமீன்றருள் புண்ணியப் புனித வேந்தனாம் சிவபிரான் உடன்நில்லாது ஒழியின் பயனில்லை. எனவே அவன் உடனாய் நிற்பதே பெரும்பேறென்க.

## 43. அரனடி சொல்லி அரற்றி அழுது

43. அரனடி சொல்லி அரற்றி அழுது
பரனடி நாடியே பாவிப்ப நாளும்
உரனடி செய்தங் கொதுங்கவல் லார்க்கு
நிரனடி செய்து நிறைந்துநின் றானே.

அரன் திருவடிப் பெயராம் திருவைந்தெழுத்தைத் தூய மனத்துடன் இடையறாது வழுத்தி, ஆற்றாமை மீதூரப்பட்டுப் பெரு முழக்கிட்டு அழுது, அச் சிவபெருமான் திருவடியே நினைவாகக் கொண்டு நின்று, எந்நாளும் உறுதியான வீடுபேற்றைத் தரும் அத் திருவடிக்கண் அடங்கி நிற்க வல்லார்க்கு அவன் எங்குஞ் செறிந்த எல்லாம் நிரம்பிய திருவடியை அருளி, அந் நல்லாருடன் புணர்ப்பாய் வேறறநின்று நிறைந்தனன் என்க.

உரன் அடி செய்து - உறுதியான எண்ணத்துடன். ஒதுங்க வல்லார் - துதித்து அரற்றி, அழுது பரவ வல்லார்.

## 44. போற்றிஎன் பார்அம ரர்புனி தன்அடி

44. போற்றிஎன் பார்அம ரர்புனி தன்அடி
போற்றிஎன் பார்அசு ரர்புனி தன்அடி
போற்றிஎன் பார்மனி தர்புனி தன்அடி
போற்றிஎன் அன்புள் பொலியவைத் தேனே.

இன்ப வேட்கையராய அமரர்கள் அதன் பொருட்டுத் தூயோனாகிய சிவபெருமான் திருவடியைப் போற்றி செய்வர். பொருள் வேட்கையராகிய அசுரர்கள் அதன் பொருட்டு அவன் திருவடியைப் போற்றி செய்வர். அறத்தின் வேட்கையராகிய நன்மக்கள் அதன் பொருட்டுச் சிவனைப் போற்றியுரைத்துத் தங் கைகளால் மலர் தூவி வழிபடுவர். வீடுபேற்று வேட்கையனாகிய அடியேனும் திருமுறைப் போற்றித் தொடர் புகன்று வழிபட்டு என் அன்பினுள் திகழும்படி விளங்க வைத்துத் துளக்கின்றி நிற்கின்றேன்.

## 45. விதிவழி அல்லதிவ் வேலை உலகம்

45. விதிவழி அல்லதிவ் வேலை உலகம்
விதிவழி இன்பம் விருத்தமும் இல்லை
துதிவழி நித்தலுஞ் சோதிப் பிரானும்
பதிவழி காட்டும் பகலவ னாமே.

வகுத்தான் வகுத்த வகையாகிய விதிவழியல்லாமல் கடலாற் சூழப்பட்ட உலகம் நடைபெற மாட்டாது. வகுத்தான் - சிவபெருமான் அச் சிவன் விதித்தவாறே என்றும் இன்பம் பெருகும். அத் திருவாணைக்கு மாறுதலாகிய விருத்தமுமில்லை. நாடொறும் திருவைந்தெழுத்தெண்ணித் தொழுது நிற்பார்க்குப் பதிவழியாகிய திருவடிப் பேற்றினை உலகம்மைக்குத் தன் உடம்பில் ஒருபாகம் பகுந்து கொடுத்துப் பகலவன் என்னும் திருப்பெயர் பூண்டு நிற்கும் சிவன் அளித்தருள்வன்.

வேலை - கடல் சூழ்ந்த உலகம். பதிவழி - முத்திமார்க்கம்.

## 46. அந்திவண் ணாஅர னேசிவ னேஎன்று

46. அந்திவண் ணாஅர னேசிவ னேஎன்று
சிந்தைசெய் வண்ணந் திருந்தடி யார்தொழ
முந்திவண் ணாமுதல் வாபர னேஎன்று
வந்திவ் வண்ணன்எம் மனம்புகுந் தானே.

படைத்தற்பொருட்டு அந்திவண்ணனாய்ப் பொன்நிறங் கொண்டருள்பவனே, துடைத்தற்பொருட்டு அரனாய் நீலநிறங் கொண்டருள்பவனே, அருளுதற் பொருட்டுச் சிவனாய் வெண்ணிறங் கொண்டருள்பவனே என்று திருந்திய மெய்யடியார்கள் தொழுவர். உலகந்தோன்ற வேண்டும் எனச் சிவன் திருவுள்ளங் கொண்டதும் அதன் பொருட்டுத் திருவருளின்கண் முதற்கண் தோன்றிய நிறம் ஐந்து. இவ்வைந்தும் ஒருங்கு கூடியவனே முந்திவண்ணன். அவனே முழுமுதல்வன். இங்ஙனம் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி அடியேனும் வாழ்த்த, அந்திவண்ணனும் அருளால் வந்து அடியேன் அகம் புகுந்தருளினன். முதல்வன்- வினைமுதற் காரணன். பரன் - யாவர்க்கும் மேலானோன்.

முந்திவண்ணா - படைப்புக்கு இச்சை கொண்ட காலத்தில் முதல் முதல் வெளிப்பட்ட ஐந்நிறக் கதிர்களை உடையவனே.

## 47. மனையுள் இருந்தவர் மாதவர் ஒப்பர்

47. மனையுள் இருந்தவர் மாதவர் ஒப்பர்
நினைவுள் இருந்தவர் நேசத்துள் நிற்பர்
பனையுள் இருந்த பருந்தது1 போல
நினையா தவர்க்கில்லை நின்இன்பந் தானே.

சிவபெருமான் உயிர்க்குயிராய் உடம்பகத்துத் திருக்கோயில் கொண்டருளியிருக்கும் உண்மையுணர்ந்து, அதற்கேற்றவாறு செந்நெறியில் ஒழுகி உடலோம்புவார் பெருந்தவத்தராவர். அச் சிவன் நினைவுக் கருவியாகிய நெஞ்சத் தாமரையின்கண் எழுந்தருளியிருக்கும் விழுமிய தன்மையை அறிந்தவர், அவன் திருவடிக்குப் பேரன்பு பூண்டு ஒழுகும் நேயத்தராவர். அச் சிவபெருமானின் திருவடிப் பேரின்பம் திருவருள் துணையால் நினையாதவர்க்கு எஞ்ஞான்றும் எய்துதல் இல்லை. அதற்கு ஒப்பு பனைமரத்தின் மேலிருக்கும் பருந்து அப் பனம்பழத்தின் இயல்பினை அறியாமையால் அதனை யுண்ண நினையாது, இழிந்த பொருளை உண்ண நினைத்துப் பழியுடன் இருப்பதாகும்.

பனையுளிருந்த பருந்ததுபோல - பழத்தையுடைய பனை மரத்தின் மேல் பருந்து இருந்தாலும் பழத்தை நினைப்பதில்லை அது போல.

## 48. அடியார் பரவும் அமரர் பிரானை

48. அடியார் பரவும் அமரர் பிரானை
முடியால் வணங்கி முதல்வனை முன்னிப்
படியார் அருளும் பரம்பரன் எந்தை
விடியா விளக்கென்று மேவிநின் றேனே.

திருவடி யுணர்வு கைவந்த பொய்யடிமையில்லாத புலவராம் மெய்யடியார் பாடிப் பரவிப் பணிந்து அமரர்பிரானாகிய சிவபெருமானைத் தொழுவர். இவ்வுண்மை 'பாடிப் பரவிப் பணிதல் ஒருமூன்றும், ஈடிலுரை உள்ளமுடல் எண்' என்பதனான் உணரலாம். முத்தேவர் முதலிய ஆட்சியினர் முடியார் எனப்படுவர். அவர்களாலும் வணங்கப்படும் முழுமுதல்வன் சிவன். அவன் தன் மெய்யடியார்களைத் திருவுளங் கொண்டு சிறந்தபடியாகிய இவ்வுலகின்கண் வைத்தருள்வன். அவனே விழுமிய விழுப்பொருள். எமக்குத் தந்தையரும் ஆவன். என்றும் நின்று நிலைபெறும் அருட்பெரும் விளக்கும் அவனே. அவன் அடியேனுடன் புணர்ந்து நின்றனன்.
(அ. சி.) படியார் - (படியாருக்கு) பூமியில் உள்ளவர்களுக்கு. முடியார் - முடியுடை அரசர்கள். விடியா விளக்கு - அழிதல் இல்லாத அருட்பெருஞ்சோதி.

## 49. பரைபசு பாசத்து நாதனை உள்ளி

49. பரைபசு பாசத்து நாதனை உள்ளி
உரைபசு பாசத் தொருங்கவல் லார்க்குத்
திரைபசு பாவச் செழுங்கடல் நீந்திக்
கரைபசு பாசங் கடந்தெய்த லாமே.

நடப்பாற்றல், கிடப்புயிர், முடக்குமலம் முதலியவற்றை முக்காலத்தும் தொழிற்படுத்தும் முழுமுதல்வன் சிவன். அந் நாதனை அருளால் விடாது நினைந்து, அந் நினைவால் கிடப்புயிராம் பசுத்தன்மையும், முடக்குமலமாம் பாசத்தன்மையும் நீங்கப்பெற்றுப் புகழ்ந்து சொல்லப்படும் வனப்பாற்றலாகிய திருவருளால் திருவடிக்கண் அடங்கி நிற்கும் ஆற்றல் மிக்கார்க்குக் கரைமோதும் அலைபோல் வரும் யான் எனதென்னும் செருக்காகிய பிணிமையையும், அதனால் விளையும் பாவப் பெருங் கடலையும் நீந்துதல் கூடும். அம்மட்டோ? பசு பாசத் தன்மையையுங் கடந்து திருவடிப் பேறாம் இன்பக் கரை எய்துதலும் கைகூடும். பிணிமை - பசுத்தன்மை. கரை - இன்பக்கரை.

பரை - மனோன்மணி. நாதனை - சதாசிவத்தை.

# 50. சூடுவன் நெஞ்சிடை வைப்பன் பிரான்என்று

50. சூடுவன் நெஞ்சிடை வைப்பன் பிரான்என்று
பாடுவன் பன்மலர் தூவிப் பணிந்துநின்று
ஆடுவன் ஆடி அமரர்பி ரான்என்று
நாடுவன் நானின் றறிவது தானே.

திருவருள் துணையால் சிவபெருமானின் திருவடி மலரைத் தலையிற் சூடுவேன். அத் திருவடியுணர்வை மறவா நெஞ்சத்திடை வைப்பன். உயிர்க்குயிராம் செயிரறு பெருந்தலைவனே என்று செந்தமிழால் பாடுவன். போற்றித் தொடர்புகன்று கொல்லாமை முதலிய எண்பெருங்குணனும் எண்மையின் எய்தப் பல நறுமலர்களைக் கைகளால் தூவி அருச்சித்துப் பணிந்து நிற்பேன். மகிழ்ச்சி மேலீட்டால் ஆடுவேன். ஆடிச் சிவவுலகத்து வாழும் அமரர் தலைவனென்று நாடுதலாகிய சிந்தனையைச் செய்வேன். முதல்வன் சிவமாக்கி எனையாண்ட இக் காலத்து அவனருளால் என் உணர்விற்றோன்றி யான் அறிந்து பணி செய்வது இதுவேயாம்.

பிரான் - பெருமான்.

## 51. அளவில் இளமையும் அந்தமும் ஈறும்

51. அளவில் இளமையும் அந்தமும் ஈறும்
அளவியல் காலமும் நானும் உணரில்
தளர்விலன் சங்கரன் தன்னடி யார்சொல்
அளவில் பெருமை அரிஅயற் காமே.

என்றுங் குன்றா எவ்வளவையையும் கடந்த இளமையும், அழகும், பேரொடுக்கமாகிய ஈற்றினைச் செய்யும் பெருமையும், அளவில்லாத காலம் நானும் இருந்து உணர்ந்தாலும் முடிவு பெறாது. சங்கரனாகிய சிவனும் நம்முடைய ஆய்வுக்கு எட்டுவதாகிய தளர்வினை எய்தான். தன் அடியார் அருளால் கூறும் அளவில் பெருமை அனைத்தும் உடையன். அத்தகைய சிவபெருமான் பெருமையினை அரிஅயன் இருவராலும் சொல்லவொண்ணாதென்க.

அந்தம் - அழகு.

## 52. ஆதிப் பிரானும் அணிமணி வண்ணனும்

52. ஆதிப் பிரானும் அணிமணி வண்ணனும்
ஆதிக் கமலத் தலர்மிசை யானுஞ்
சோதிக்கில் மூன்றுந் தொடர்ச்சியில் ஒன்றெனார்
பேதித் துலகம் பிணங்குகின் றார்களே.

அனைத்துலகினுக்கும் அந்தத்தைச் செய்து பின் படைக்குங்கால் ஆதிப்பிரானாக நிற்கும் அரனும், அழகிய நீலமணி போலும் அரியும், உலகப் படைப்புக்குக் காரணனாகிய அயனும் என்று சொல்லப்படும் மூவரும் தொழில் பற்றி முறையே முப்பெயர் பெற்றனர். அஃதல்லாது பொருளால் மூவரல்லர். அருளால் ஆராய்ந்து நோக்கின் மூன்று நிலையும் ஒரு முழுமுதற் சிவனுக்கே யுரியன என்பது புலனாகும். இக் கருத்தமையத் தொடர்பினால் ஒன்றே முழுமுதல் என்று கூறாது, வேறு வேறு உலகோர் மாறுபடக் கூறித் தம்முள் பிணங்கி மயங்குகின்றார்கள்.

ஆதிப்பிரான் - உருத்திரன். மணி வண்ணன் - மால். அலர்மிசையான் - அயன். தொடர்ச்சியில் - தோற்றத்தில்.

# 53. ஈசன் இருக்கும் இருவினைக் கப்புறம்

53. ஈசன் இருக்கும் இருவினைக் கப்புறம்
பீசம் உலகிற் பெருந்தெய்வ மானது
ஈசன் அதுஇது என்பார் நினைப்பிலார்
தூசு பிடித்தவர் தூரறிந் தார்களே.

இருவினைகட்கு இருப்பிடமாகிய மாயைக்கு அப்புறம் இருப்பவன் வாராத்திருவும் பேராமுதன்மையும் ஒருங்கமைந்த சிவன். அவனே ஈசன் எனப்படுவன். உலகில் பெருந்தெய்வமாவது உருவின் நினைப்பிற்கும் அருவின் நினைப்பிற்கும் காரணமாயுள்ள அருவுருவமே யாகும். அதுவே அருளோன்; அதுவே சதாசிவன்; அதுவே சிவக்கொழுந்து. இவ்வுண்மை யுணர்ந்தவர் அது, இது என்று வேற்றுமைப்படக் கூறார். அங்ஙனமன்றி வேற்றுமைப்படக் கூறுவோர் உண்மை உணரும் நினைப்பிலராவர். அருளால் அகம் புறம் தூய்மை யானோர் உண்மையான முதன்மை மூலத்தை யுணர்ந்தவராவர். அகந்தூய்மை திருவைந்தெழுத்தாலும் புறந்தூய்மை திருவெண்ணீற்றாலும் அமைவன. அது இது: அதுவும் இதுவும் என வேறுபாடும், அதுவே இது என ஒற்றுமையும், அதுவாகிய இது என ஒற்றுமை வேற்றுமை ஆகிய இருமையும் குறியாமல் விளங்கும் பொதுமைப் புணர்ப்பு.

ஈசன் - மகேசன். இருவினை - கன்மம் - மாயை. பீசம் தாமரை மொக்கு (அருவுரு). தூசு பிடித்தவர் - தூய்மையாளர்.

## 54. சிவன்முதல் மூவரோ டைவர் சிறந்த

54. சிவன்முதல் மூவரோ டைவர் சிறந்த
அவைமுதல் ஆறிரண் டொன்றொடொன் றாகும்
அவைமுதல் விந்துவும் நாதமும் ஓங்கச்
சவைமுதற் சங்கரன் தன்பெயர் தானே.

அத்தன், அன்னை, ஓசை, ஒளி (சிவன், சத்தி, நாதம், விந்து) ஆகிய அருவம் நான்கும் சிவன் முதல் மூவர். அருளோன் (சதாசிவன்) அருவுருவம் ஒன்று. ஆண்டான், அரன், அரி, அயன் என்னும் நால்வரும் உருவத்தர். இவையெல்லாம் எண்ணுங்கால் ஒன்பது என்னும் எண்ணிலடங்கும். அதுவே ஆறு, இரண்டு, ஒன்று. இவை ஒன்பதும் நிலையால் வேறுபட்டதல்லாமல் பொருளால் ஒன்றே. அவற்றுள் விந்துவும் நாதமும் சிறப்புள்ளனவாகும். இக் குழுவினுக்கு முதன்மை சங்கரன்; அப்பெயரே சிறந்த பெயர்.

சிவன்...ஐவர் - சிவம் - சத்தி - விந்து - நாதம் - சதாசிவம் - மகேசன் - உருத்திரன் - மால் - அயன். சிவன் முதல் மூவர் - 4 + ஐவர் 5 ஆக 9. அவை ... ஆகும் - அவை ஒன்பதும் தோற்றத்தில் ஒன்றாகும். ஆறு + இரண்டு + ஒன்று - 9.

## 55. பயன்அறிந் தவ்வழி எண்ணும் அளவில்

55. பயன்அறிந் தவ்வழி எண்ணும் அளவில்
அயனொடு மால்நமக் கன்னியம் இல்லை
நயனங்கள் மூன்றுடை நந்தி தமராம்
வயனம் பெறுவீர்அவ் வானவ ராலே.

மேலோதிய முறையின் உண்மைப் பயனை அறிந்து எண்ணுமிடத்து, அயனுடன் மாலும் நாம் தொழும் தன்மையரேயன்றி நமக்கு வேறானவராகார். ஆனால் இவ்வயனும் மாலும் முதற்கண் சிவனே. பின்பு அவனருள் பெற்று முப்பத்திரண்டாம் நிலையாகிய ஆசான் (சுத்த வித்தை) மெய்க்கண் உறையும் வழிப்பேற்றுயிரினத்தவரேயாவர். இவர்களே இருபத்து நான்காம் தத்துவத்தில் உறைகின்ற கட்டுயிராகிய மும்மலத்தயன் மால் இருவரையுந் தொழிற்படுத்தும் முதன்மையினை அருள் ஆணையால் பெற்றவர். கீழுள்ள. அயனும் மாலும் ஆகிய இருவருமே அவர்தம் பேதைமை காரணமாகச் செந்நெறி முதல்வர்களால் புறக்கணிக்கப்பட்டவர்.
மூன்று திருக்கண்களையுடைய சிவபெருமான் தூமாயைக்கண் வைகும் அயன்மாலிருவரையும் தமரெனக் கொள்வர். இம் முறைமை அறிந்து அவரையும் தொழுக. அவரால் ஆம் நன்மையினையும் பெறுக.

வயன் - பயன் "வகரம் பகரமுமாகும்" என்ற சூத்திரப் படி. (உ-ம்: வலம் - பலம்.)

## 56. ஓலக்கஞ் சூழ்ந்த உலப்பிலி தேவர்கள்

56. ஓலக்கஞ் சூழ்ந்த உலப்பிலி தேவர்கள்
பாலொத்த மேனி பணிந்தடி யேன்தொழ
மாலுக்கும் ஆதிப் பிரமற்கும் ஒப்புநீ
ஞாலத்து நம்மடி நல்கிடென் றானே.

உலத்தலாகிய அழிவில்லாத சிவபெருமானைத் தேவர்கள் கூட்டமாகக் கூடிப் பாலொத்த மேனியனே என்று வழிபட்டனர். அடியேனும் தொழுது காக்கும் மாலுக்கும் படைக்கும் நான்முகனுக்கும் திருவாணை நல்கிப் பெயரொற்றுமையும் காட்டியருளியவன் நீயே என்று விண்ணப்பித்தேன். அச் சிவபெருமான் இம் மாநிலத்து நம் திருவடி யொன்றையுமே நீ விரும்புக என்றருளினன். நல்கிடு - விரும்பு.

உலப்பிலி - அழிவில்லாத சிவன்.

## 57. வானவர் என்றும் மனிதர்இவர் என்றும்

57. வானவர் என்றும் மனிதர்இவர் என்றும்
தேனமர் கொன்றைச் சிவனருள் அல்லது
தானமர்ந் தோருந் தனித்தெய்வம் மற்றில்லை
ஊனமர்ந் தோரை உணர்வது தானே.

தேன் நிறைந்துள்ள கொன்றைமாலை யணிந்த சிவபெருமான் காத்தளித்தருளும் உடம்பு வேறுபாட்டாலேயே அவர் வானவரென்றும் இவர் மனிதரென்றும் பெயர் பெறுவாராயினர். அது வல்லாமல் வேறொரு சிறப்பும் உயிர்வகையான் இல்லை. எல்லாராலும் விரும்பி நினைந்து துணியும் தனித்தெய்வம் ஒப்பில்லாத சிவபெருமான் ஒருவனே; வேறில்லை. உடலினை விரும்பி அதன்கண் பொருந்தி வாழ்வோர் ஐ என்று சொல்லப்படும் தலைமைப்பாடமைந்த சிவபெருமானை யுணர்வதே பிறவிப்பெரும்பேறாகும்.

## 58. சோதித்த பேரொளி மூன்றைந் தெனநின்ற

58. சோதித்த பேரொளி மூன்றைந் தெனநின்ற
ஆதிக்கண் ஆவ தறிகிலர் ஆதர்கள்
நீதிக்கண் ஈசன் நெடுமால் அயன்என்று
பேதித் தவரைப் பிதற்றுகின் றாரே.

(ப . இ.) சோதித்த - ஒளியருளுகின்ற சிவபெருமானின் பேரொளியாய்த் திகழ்வன அன்பு, அறிவு, ஆற்றல் (சத்தி, சிவம், விந்து) களாகிய மூன்றுமேயாம். அன்பின் இவ்வொளி பெற்றுப் பேரொளியாய் விளங்கும் நிலைகள் ஐந்து. அவை: அருளோன், ஆண்டான், அரன், அரி, அயன் என்னும் இவர்தம் நிலைகளாம். இவ் வேறுபாடுகள் அனைத்தும் நிலைவேறுபாடுகளே யன்றித் தலைமைப் பொருள் வேறுபாடுகளில்லை. இவை யனைத்தும் ஆதியாகிய திருவருளின்கண் அமைவன. இவ்வுண்மையினை உண்மையறிவில்லாத சில மூடர்கள் அறியார். முறைமைக்கண் ஒரு பொருளையே ஆண்டான், நெடுமால், அயன் என்று பேறுபடுத்திக் கூறுகின்றனர். அதற்கு மாறாக வெவ்வேறுளவென்று கூறுவது உண்மைக்கு மாறாகிய பிதற்றுரையே யன்றிப் பிறிதன்று.

(அ.சி.) பேரொளி மூன்று - சத்தி - சிவம் - விந்து. பேரொளி விந்து - சதாசிவம் - ஈசன் - அரன் - அரி - அயன்.

## 59. பரத்திலே ஒன்றாய்உள் ளாய்ப்புற மாகி

59. பரத்திலே ஒன்றாய்உள் ளாய்ப்புற மாகி
வரத்தினுள் மாயவ னாய்அய னாகித்
தரத்தினுள் தான்பல தன்மைய னாகிக்
கரத்தினுள் நின்று கழிவுசெய் தானே.

சிவபெருமான் கடந்த மேனிலையுள் ஒன்றேயாய் உள்ளும் புறம்புமாய் விரவி நின்றருள்வன். உயிர்கள் பிறப்பினுள் வருதலாகிய வரத்தின்கண் அயனாய் (காப்பின்கண்) மாயனாய் அம்முறைபோல் இன்னும் பலவாய்த் தோன்றியருள்வன். கரத்தலாகிய மறைப்பினுள் ஆண்டானாய் நின்று ஆருயிர்கட்கு வினைக்கழிவு செய்தருள்கின்றனன்.

(அ . சி.) வரத்து - படைப்பு. தரம் - முறை. கரத்து - அழித்தல்; மறைவு.

## 60. தானொரு கூறு சதாசிவன் எம்இறை

60. தானொரு கூறு சதாசிவன் எம்இறை
வானொரு கூறு மருவியும் அங்குளான்
கோனொரு கூறுடல் உள்நின் றுயிர்க்கின்ற
தானொரு கூறு சலமய னாமே.

சத்தியாகிய திருவருளாற்றலை ஒப்பில்லாத ஒரு கூற்றிலேயுடைய சிவபெருமான் சதாசிவன் எனப்படுவன். சத்தியோடு கூடிய சிவன் சதாசிவன். சதாசிவன் எனினும் அருளோன் எனினும் ஒன்றே. அவனே எம் கடவுள். அறிவுவெளியாகிய வனப்பாற்றலென்னும் பராசத்தியுடன் கூடியும் அங்குளன். அத் தலைவனுடன் கூடி ஒரு கூறாய் உயிர்க்குயிராய் உண்ணின்று உயிர்த்தலாகிய செலுத்தலைச் செய்வதும் திருவருளே. அத் திருவருள் குளிர்ச்சியாயிருத்தலின் அவனும் தண்ணளியன் ஆவன்.

வான் - பராசத்தி - பரை. கோன் - பதி. சலமயன் - தண்ணியன்.

# 61. வேதத்தை விட்ட அறம்இல்லை வேதத்தின்

61. வேதத்தை விட்ட அறம்இல்லை வேதத்தின்
ஓதத் தகும்அறம் எல்லாம் உளதர்க்க
வாதத்தை விட்டு மதிஞர் வளமுற்ற
வேதத்தை ஓதியே வீடுபெற் றார்களே.

'உலகியல் வேதநூல் ஒழுக்கமாதலின்' அவ் வேதத்திற்கு அறநூல் என்னும் சிறப்புப் பெயர் உண்டு. செந்தமிழ்ப் பொது அறநூல் திருவள்ளுவநாயனார் அருளிய திருக்குறளாகும். அக் காரணம் பற்றியே அதற்குப் பொதுமறை என்னும் திருப்பெயரும் வழங்குவதாயிற்று. வீட்டியல் அறநூல் செந்தமிழ்ச் சிறப்புமறை. அதுவே திருநான்மறை முடிவாம் மூவர் தமிழ். எனவே அம் மறையினை விட்டு வேறாக அறவொழுக்கம் இல்லை. அம் மறையின்கண் ஓதத்தகுந்த அற இயல்புகள் அனைத்தும் உள. வீண் அளவை முறையான் வழக்கிடும் வல்லாண்மையை விட்டுத் திருவடியுணர்வு கைவந்த நுண்மதி வாய்ந்த நல்லார் எல்லா முறைவளமும் நிரம்பப் பெற்ற 'செந்தமிழ்த் திருநான்மறையினை இடையறாது இனிது ஓதித் திருவடிப் பேறாகிய வீடு பெற்றார்களே.

வேதம் - தமிழ் வேதம். ஓதத் தகும் அறம் - அறம், பொருள், இன்பம், வீடு.

## 62. வேதம் உரைத்தானும் வேதிய னாகிலன்

62. வேதம் உரைத்தானும் வேதிய னாகிலன்
வேதம் உரைத்தானும் வேதா விளங்கிட
வேதம் உரைத்தானும் வேதியர் வேள்விக்காய்
வேதம் உரைத்தானும் மெய்ப்பொருள் காட்டவே.

உலகினைத் திருவாணை வழிநின்று படைக்கும் நான்முகனும் மறையினை உரைத்தருளியவன் ஆகான். அதனால் அவன் சிறப்பாக மறையினுக்கு உரியவனாகமாட்டான். சிறப்பாக வுரியவன் சிவபெருமானே. அம் மறையினை அருளிச் செய்தவன் 'மாற்றம் மனம் கழிய நின்ற மறையோன்.' மறைவல்லார் சிவபெருமானை முழுமுதலாகக் கொண்டு மறைமுறைப்படி வேள்வி செய்து உய்வதற்காகவும் மெய்ப்பொருளாகிய திருவடி நிலையினைக் காட்டிக் காணும் அழியா நிலைமை பிறப்பித்தற்காகவும் மறையுரைத்தனன். மெய்ப்பொருள்: இறை, உயிர், தளை ஆகிய அழியா முப்பொருள். காட்ட - உணர்த்த.

வேதமுரைத்தானும் - தமிழ் வேதம் உரைத்தவனும். வேதியன் ஆகிலன் - பிரமா அல்லன். வேதமுரைத்தானும் வேதா - ஆரிய வேதம் உரைத்தவன் பிரமா.

## 63. இருக்குரு வாம்எழில் வேதத்தி னுள்ளே

63. இருக்குரு வாம்எழில் வேதத்தி னுள்ளே
உருக்குணர் வாயுணர் வேதத்துள் ஓங்கி
வெருக்குரு வாகிய வேதியர் சொல்லுங்
கருக்குரு வாய்நின்ற கண்ணனு மாமே.

இருக்காகிய மந்திரங்களின் தொகுப்பு ஆதிமறை என்ப. அம் மறையினுள் உணர்வையுருக்கும் பொருள்சேர் புகழ்ப் பாடலால் சிறந்தனவற்றை விருப்புடன் சிவவேதியர் சொல்லுவர். கண்ணன் முதலிய தேவர்கட்கும் மூலகுருவாய் எழுந்தருளுபவன் சிவனே. கண்ணன் முக்கண்ணன் எனலுமாம்.

இருக்கு உருவாம் எழில் வேதம் - இருக்கு என்று சொல்லப்படுகின்ற சுலோகங்களையுடைய ஆரிய வேதம்.

## 64. இருக்கில் இருக்கும் எண்ணிலி கோடி

64. இருக்கில் இருக்கும் எண்ணிலி கோடி
அருக்கின்ற மூலத்துள் அங்கே இருக்கும்
அருக்கனுஞ் சோமனும் ஆரழல் வீச
உருக்கிய ரோமம் ஒளிவிடுந் தானே.

அளிவில்லாத மந்திரங்களில் சிவன் எழுந்தருள்வன். பொருந்தியுள்ள மூலத்திடத்தும் ஓம் என்னும் மூலமந்திரத்தினிடத்தும் இருப்பன். ஞாயிறும் திங்களும் ஒளி வீசும்படி ஆருயிர்களின் உடம்பகத்துக் காணும் மயிர்க்கால்தோறும் அருள்ஒளி தோன்றும். அதனால் அங்குச் சிவன் உறைந்தருள்வன். அருகுகின்ற என்பது அருக்கின்ற எனத் திரிந்து நின்றது: அருகுதல் - பொருந்துதல்.

## 65. திருநெறி யாவது சித்தசித் தன்றிப்

65. திருநெறி யாவது சித்தசித் தன்றிப்
பெருநெறி யாய பிரானை நினைந்து
குருநெறி யாஞ்சிவ மாநெறி கூடும்
ஒருநெறி ஒன்றாக வேதாந்தம் ஓதுமே.

திருநெறி என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது அறிவிக்க அறியும் சித்தும் அறிவித்தாலும் அறியுந்தன்மையாகிய அறிவில்லாத அசித்தும் அல்லாதவன் சிவன். இயல்பாகவே விளங்கும் பேரறிவினையுடையவன் அவன். சித்து - அறிவுடையது. அசித்து - அறிவில்லது. அவன் வகுத்தருளிய நன்னெறி பெருநெறி என வழங்கப்பெறும். அந் நெறியின் முதல்வனும் சிவபெருமானே. அப் பெருமானையே நினைக்கும் திருவடி யுணர்வை நல்கியருளும் சிவகுரு எழுந்தருள்வது குருநெறியாகிய சிவமாநெறிக்கண் என்று கொள்க. அதுவே திருவடியின்கண்கூடச் செய்யும் ஒப்பில்லாத் தனிநெறி. இவற்றை ஒருங்கு ஓதுவது மறைமுடிவாம் வேதாந்தம் எனப்படும். மூவர் தமிழ் மறையும், முனிவராம் மணிமொழியார் தமிழ் மறை முடிவுமென இஞ்ஞான்றும் கொண்டு ஒழுகுவதே செந்நெறிச் செல்வரின் சீரிய கடன்.

குருநெறி - சன்மார்க்கம்; நன்னெறி.

## 66. ஆறங்க மாய்வரு மாமறை ஓதியைக்1

66. ஆறங்க மாய்வரு மாமறை ஓதியைக்1
கூறங்க மாகக் குணம்பயில் வாரில்லை
வேறங்க மாக விளைவுசெய் தப்புறம்
பேறங்க மாகப் பெருக்குகின் றாரே.

(ப . இ.) அறுவகைச் சமயங்களையும் ஆறங்கங்களாகக் கொண்டு திகழும் தமிழ் மாமறையினை ஓதியருளிய சிவபெருமானை மண்ணகத்தார் உய்யப் பெண்ணொரு கூறாகத் திகழும் அவன்தன் பேரருட் குணத்தைத் திருவடியுணர்வோடு ஓதியுணர்வார் இல்லை. இவ்வுண்மை தொன்மையது, நன்மையது, மென்மையது, அழியாவிழுமியது, முழுமையது என உணராது அயன்மொழி அங்கங்களையும் வேதங்களையும் அவையே பேறெனக் கொண்டு பொய்ம்மையே பெருக்கிப் பொழுதினைச் சுருக்குகின்றார்கள்.

ஆறங்கமாய் வருமாமறை - ஆறு அங்கங்களோடு கூடிய தமிழ்மறை. கூறங்கமாக - மாதொருபாகனாக. மாட்டாதார் - தமிழ் வேதம் ஆரிய வேதங்களைப் பிரித்து அறிந்து கொள்ளமாட்டாதார்.

## 67. பாட்டும் ஒலியும் பரக்குங் கணிகையர்

67. பாட்டும் ஒலியும் பரக்குங் கணிகையர்
ஆட்டும் அறாத அவனியின் மாட்டாதார்
வேட்டு விருப்பார் விரதமில் லாதவர்
ஈட்டும் இடஞ்சென் றிகலலுற் றாரே.

செந்நெறிக்கண் பரந்து தென்னாடு எங்கணும் தொன்னாள் தொட்டுச் சிவவழிபாடாகச் செய்து வரும் செந்தமிழ்ப் பாட்டும், ஏனை இசையொலியும், இவற்றுடன் இணைந்த சிவகணிகையர் சிவபெருமானின் முழுமுதல் தன்மையை விளக்கிக் காட்டி ஆடும் ஆட்டமும் ஒருகாலமும் நீங்காத தமிழகத் தனிப்பண்புகளை ஏற்றுக்கொள்ள மாட்டாதார் புலை வேள்வி விருப்பினராய் ஒன்றாக நல்லது கொல்லாமை என்னும் சிறந்த நோன்பாகிய விரதமில்லாதாராய்க் கொலை வேள்வி செய்வர். அவ் வேள்விப்பயன் நுகரும் துறக்கவுலகத்துச் சென்று மாலும் அயனும் போல் ஒருவரோடொருவர் முரணிச் சண்டையிடுவாராயினர். ஈட்டுமிடம் - பயன் நுகருமிடம்.

## 68. அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தன்

68. அஞ்சன மேனி அரிவையோர் பாகத்தன்
அஞ்சொ டிருபத்து மூன்றுள ஆகமம்
எஞ்சலில் விஞ்ஞகர் இருபத் தெண்மரும்1
அஞ்சா முகத்தில் அரும்பொருள் கேட்டதே.

நீலமேனி வாலிழைபாகத்தனாகிய சிவபெருமான் இருபத்தெட்டுத் தமிழ்ச் சிவாகமங்களையும் அருளிச் செய்தனன். குறையாத திருவடியுணர்வு கைவந்த மேலோராகிய விஞ்ஞகர் என்னும் நல்லார் இருபத்தெண்மரும் அவற்றைக் கேட்டுணர்ந்தனர். இருபத்தெட்டு ஆகமங்களையும் சிவபெருமான் தனக்குரிய ஒப்பில்லாத் திருமுகங்கள் ஐந்தனுள் உச்சித் திருமுகத்தால் உரைத்தருளினன். அவற்றின்கண் கூறப்படுவதே அரும்பொருள் என்க. அரும்பொருள் - முப்பொருளுண்மை.

அஞ்சாமுகம் - ஈசானமுகம்.

## 69. அண்ணல் அருளால் அருளுஞ் சிவாகமம்

69. அண்ணல் அருளால் அருளுஞ் சிவாகமம்
எண்ணில் இருபத்தெண் கோடிநூ றாயிரம்
விண்ணவர் ஈசன் விழுப்பம் உரைத்தனர்
எண்ணிநின் றப்பொருள் ஏத்துவன் நானே.

(ப . இ.) தலைமைப்பாடுடைய சிவபெருமான் திருவருளால் அருளிச் செய்த இருபத்தெட்டு ஆகமங்களின் திருப்பாட்டுக்களின் தொகை இருபத்தெட்டுக்கோடி நூறாயிரமாகும். விண்ணவராகிய தூமாயையின்கண் வாழும் அருளோன் - சதாசிவப் பேற்றினர், சிவபெருமானின் விழுமிய மாண்பினை அவ்வாகம வழி உரைத்தருளினர். சிவன் திருவடியிணையினை ஓவாது அடியேனும் எண்ணி அவ்விழுப்பொருளை ஏத்துவன்.

நூறாயிரம் - இலக்கம் சூத்திரங்களையுடையன.

## 70. அண்ணல் அருளால் அருளும் சிவாகமம்

70. அண்ணல் அருளால் அருளும் சிவாகமம்
விண்ணில் அமரர் தமக்கும் விளங்கரிது
அண்ணல் அறைந்த அறிவறி யாவிடின்
எண்ணிலி கோடியும் நீர்மே லெழுத்தே.

சிவபெருமான் திருவருளால் அருளிச் செய்த சிவாகமம் அயன் மால் உள்ளிட்ட தேவர்களாலும் விளங்கிக்கொள்ள முடியாத அருமையானது. அச் சிவாகமங்களின்கண் சிவபெருமான் அருளிச்செய்த மெய்ப்பொருள் உண்மை கைவரச் செய்யும் சிவவுணர்வுச் சிறப்பினை அறியாவிட்டால் அளவில்லாத அவை முற்றும் நீர்மேல் எழுத்துப்போல் பயன்தாரா தொழியும்.

## 71. பரனாய்ப் பராபரங் காட்டி உலகின்

71. பரனாய்ப் பராபரங் காட்டி உலகின்
தரனாய்ச் சிவதன்மந் தானேசொல் காலத்து
அரனாய் அமரர்கள் அர்ச்சிக்கு நந்தி
உரனாகி ஆகமம் ஓங்கிநின் றானே.

சிவபெருமான் விழுமிய முழுமுதலாம் பரனாய் நின்று தன் திருவடியான் உணரப்படும் உவமையிலாக் கலைஞானமாகிய அபரமும் மெய்ஞ்ஞானமாகிய பரமும் முறையே சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானத்தார்க்கும், பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானத்தார்க்கும் நீங்காது உடனாய் நிறைந்து அருளிச் செய்தனன். அங்ஙனம் அருளிச் செய்து உலகினில் சிவபுண்ணியங்களுள் எல்லாம் மேலானது சிவ வழி பாடாகிய பூசையாகும். அச் சிவபுண்ணியத்தைத் தானே செய்து காட்டும் வழி காட்டியாய் முன்னின்று திருவிடைமருதூரில் தானே தன்னை வழிபட்டுங் காட்டியருளினன். அம் முறையான் சிவவுலகத்தவர் வழிபாடும் புரிவாராயினர். அவர்களால் வழிபடப்படும் நந்தியும் அவர்கட்கு உறுதியளித்தருளும்படி ஆகமமாக ஓங்கி நின்றருளினன். 'ஆகமம் ஆகிநின்றண்ணிப்பான் தாள்வாழ்க' என்பதும் இவ்வுண்மையை வலியுறுத்தும்.

தரன் - பரிபாலிப்பவன். உரனாகி - திண்மையுடையவனாகி.

## 72. சிவமாம் பரத்தினிற் சத்தி சதாசிவம்

72. சிவமாம் பரத்தினிற் சத்தி சதாசிவம்
உவமா மகேசர் உருத்திர தேவர்
தவமால் பிரமீசர் தம்மில்தாம் பெற்ற
நவஆ கமம்எங்கள் நந்திபெற் றானே.

சிவம் என்று சொல்லப்படும் மேலாம் பொருளினிடத்துத் திருவருளால் அன்னையாகிய சத்தியும், அச் சத்தியினிடத்திருந்து அருளோனாகிய சதாசிவனும், சதாசிவத்தினின்று ஆண்டானாகிய மகசேனும், அம் மகேசனினின்று ஆசானாகிய நந்தியங்கடவுளும், அரன், அரி, அயன் என்னும் இவர்கள் தங்களுக்குள்ளே பெற்ற சிவாகமங்கள் ஒன்பதும் என்ப. அவை முற்றும் எங்கள் ஆசானாம் நந்தியங்கடவுள் பெற்றனர் என்ப. உவமாமகேசர் - இரண்டு மகேசர். அவ்விருவரும் ஆண்டான் ஆசான் எனப்படுவர்.

## 73. பெற்றநல் ஆகமம் காரணங் காமிகம்

73. பெற்றநல் ஆகமம் காரணங் காமிகம்
உற்றநல் வீரம் உயர்சிந்தம் வாதுளம்
மற்றவ் வியாமள மாகுங்கா லோத்தரந்
துற்றநற் சுப்பிரஞ் சொல்லு மகுடமே.

மேலோதியவாறுள்ள சிவாகமங்கள் ஒன்பதின் திருப் பெயர்கள் வருமாறு: 1. காரணம், 2. காமிகம், 3. வீரம், 4. சிந்தம், 5. வாதுளம், 6. வியாமளம், 7. காலோத்தரம், 8. சுப்பிரம், 9, மகுடம் என்பன.

## 74. ஆகமம் ஒன்பான் அதிலான நாலேழு

74. ஆகமம் ஒன்பான் அதிலான நாலேழு
மோகமில் நாலேழு முப்பேத முற்றுடன்
வேகமில் வேதாந்த சித்தாந்த மெய்மையொன்று
ஆக முடிந்த அருஞ்சுத்த சைவமே.

மேல் (72) ஓதிய சிவன் முதலாகவுள்ள ஒன்பதின்மர் வழியாக வந்த சிவாகமங்கள் இருபத்தெட்டாகும். பிறப்பற்றுச் சிறப்புற்று வாழ வழிகாட்டுவதால் இவ்வாகமங்கள் ஏனைச் சமயத்தார் கூறும் வேதாகமங்கள் மயக்குவதுபோன்று மயக்குந் தன்மையன அல்ல. அதனால் இவை மோகமில் நூல்கள் என்று எல்லாரானும் பாராட்டப்படுவன. இவ்விருபத்தெட்டும் மூன்று பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவை திருக்கோவில், திருவுரு, நாள்விழா, சிறப்பு விழா முதலியன புரிய வேண்டிய முறைமைகளை வகுத்துக்கூறும் செய்கைப் பகுதியும், வழிபாட்டுப் பகுதியும், முப்பொருளுண்மை தப்பின்றித் தெளிக்கும் மெய்யுணர்வுப் பகுதியும் என மூன்றாம். இவை முறையே கரும காண்டம், உபாசனை காண்டம், ஞான காண்டம் எனப் பெயர் பெறும். கேடில்லாத வேதாந்த சித்தாந்த மெய்ம்மைகளாகிய முப்பொருள் முடிபுகள் ஒன்றாவனவே. ஆயின் இவை மூன்றும் முடிபிரண்டும் ஒன்றாக மேற்கொண்டு ஒழுகுவோர் சுத்த சைவர் எனப்படுவர். வேகம் - கேடு. கலப்பின்மை - தனிமை.

## 75. அந்தண ராவோர் அறுதொழில் பூண்டுளோர்

75. அந்தண ராவோர் அறுதொழில் பூண்டுளோர்
செந்தழல் ஓம்பிமுப் போதும் நியமஞ்செய்து
அந்தவ நற்கரு மத்துநின் றாங்கிட்டுச்
சந்தியும் ஓதிச் சடங்கறுப் போர்களே.

அந்தணர் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவோர் அறவோர். அவர் பிறப்பற முயலும் பெற்றியர். இறைபணி நிற்கும் முறையினர். அதனால் அவர் தம்முனைப்பற்று அருள் முனைப்பால் செய்யும் இருளில் தொழிலினர். அதனால் அத் தொழில் அறு தொழில் என வழங்கப்பட்டது. அறுதொழில் என்பது தொழிற்பயன் செய்தாரைச் சாராது அற்றதொழில் என்பதாம். இத் தொழிலினை ஏறுவினை என்பர். ஏறுவினை எனினும் ஆகாமியம் எனினும் ஒன்றே. இதற்கு அற்றதொழிலெனப் பொருள் கொள்ளாது, ஆறுவகைத் தொழிலெனக் கூறுதலுமுண்டு. அவை வருமாறு: ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஈவித்தல் என்பன. இவற்றுள் ஈவித்தலை விடுத்து ஏற்றல் எனக் கூறுவாரும் உளர். செய்ய வேண்டுங் காலங்களில் எல்லாம் செந்தழல் ஓம்பும் செம்மையர். உரிய காலங்கள் எல்லாம் என்பதே முப்போதும் என்பது. நியமம் செய்தல் என்பது இயம நியமம் எனக் கூறப்படும் எண்வகை யோகவுறுப்புக்களுள் ஒன்று. அதனை இயற்றல் என்பதாம். அல்லது தவறாது செய்வேமென மேற் கொண்ட செய்கை எனினுமாம். அவர்கள் குறிக்கோள் கொள்ளுதலாகிய

நியமத்தினைப் புரிந்து, சிவனை வழிபடும் அழகிய நற்றவத் தொண்டில் உறைத்து நின்று தங்களை அதற்கே ஒப்புவித்து ஓதவேண்டிய காலங்களிலெல்லாம் திருமுறைகள் ஓதிச் செய்யும் பணியில் முட்டின்றிச் செய்வா. சடங்கு - செய்யும் பணி, கரணம். அறுத்தல் - முட்டின்றிச் செய்தல்.

அந்தணர் - அறவோர். அறுதொழில் - ஓதல், ஓதுவித்தல், தவம், வேட்டல், ஈட்டல், ஈதல்.

## 76. காயத் திரியே கருதுசா வித்திரி

76. காயத் திரியே கருதுசா வித்திரி
ஆய்தற் குவப்பர் மந்திரமாங் குன்னி
நேயத் தேரேறி நினைவுற்று நேயத்தாய்
மாயத்துள் தோயா மறையோர்கள் தாமே.

காயத்திரியாகிய உமையம்மையாரையும், ஆராயப் பெறுகின்ற சாவித்திரியாகிய நாமகளையும் வழிபட்டுப் பயன் பெறுதற்குரிய வழிவகைகளை ஆராய்தற்கு உவப்பர். அவற்றிற்குரிய மந்திரங்களையும் தூய நெஞ்சிடத்து நினைப்பர். நினைத்துப் பேரன்பாகிய காதலாக இருந்து அம் மறையே நினைவாய் உறைத்து நிற்பதால் ஏனை மாயாகாரியப் பொருள்களைச் சிறிதும் பொருந்தார். அத்தகையோரே செந்தமிழ்ச் சிவமறையோர் எனப்படுவர்.

## 77. பெருநெறி யான பிரணவம் ஓர்ந்து

77. பெருநெறி யான பிரணவம் ஓர்ந்து
குருநெறி யாலுரை கூடிநால் வேதத்
திருநெறி யான கிரியை யிருந்து
சொருபம தானோர் துகளில்பார்ப் பாரே.

ஓமொழியானது ஏனை மந்திரங்களின் விரிவிற்கும் அவற்றின் ஒலிப்பிற்கும் தாயாய் அமைந்தது. அதனால் அம் மறை பெருநெறியெனப்படும். அதனை அருள் வலத்தால் ஓர்ந்து, சிவகுருவின் திருவருள் நெறியால் திருவைந்தெழுத்தின் அருமறை கேட்டு, அக் கேள்வியாகிய உபதேசத்தினால் திருநெறியான திருவருளைக் கை ஏற்று நடப்பர். அத்தகையோரைச் சிவவழிவினராக அம் மறை செய்யும். அங்ஙனம் சிவவழிவானோர் குற்றமற்ற சிவமறையோராவர். இவரே தமிழகத்துப் பார்ப்பாராவர். துகள் - குற்றம்.

பெருநெறி - முத்தி மார்க்கம். குருநெறி - சன்மார்க்கம்.

# 78. சத்திய முந்தவம் தான்அவன் ஆதலும்

78. சத்திய முந்தவம் தான்அவன் ஆதலும்
எய்த்தகும் இந்தியம் ஈட்டியே வாட்டலும்2
ஒத்த உயிர்கள் உண்டா யுணர்வுற்றுப்
பெத்தம் அறுத்தலு மாகும் பிரமமே.

முப்பொருள் உண்மை காண்டலாகிய திருவடியுணர்வும், சிவத்தைப் பேணுதலாகிய நற்றவமும் செந்நெறியொழுகுவார் தானவனாதலாகிய சிவவழிவிற்கு உறுப்புக்களாகும். அவ்வருந் தவத்தினை மேற்கொள்வார் ஐம்பொறியடக்குதலை முதற்கண் செய்தல் வேண்டும். அப்பொறிகள் தன்வழி மீளாத இடத்து அருள் துணையால் வாட்டி நல்வழிப்படுத்துதல் வேண்டும். கட்டும் உறுப்பும் கரணமும் கொண்டுள்ள உடம்பும் அவ்வுடம்பகத்து வினைக்கீடாகப் பொருந்திப் பிறந்து இறந்து உழலும் உயிரும் வெவ்வேறென்று கருதாது ஒன்றென்றே கருதிய மருளுணர்வு நீங்கப்பெற்று வெவ்வேறென்னும் உண்மை தோன்றிக் கட்டறுத்து நின்ற நிலையில் சிவ வடிவாகுவர்.

இந்தியம் ஈட்டி - புலன்களை அடக்கி. பெத்தமறுத்தல் - பாசம் நீங்குதல்.

# 79. வேதாந்தங் கேட்க விரும்பிய வேதியர்

79. வேதாந்தங் கேட்க விரும்பிய வேதியர்
வேதாந்தங் கேட்டுந்தம் வேட்கை ஒழிந்திலர்
வேதாந்த மாவது வேட்கை ஒழிந்திடம்
வேதாந்தங் கேட்டவர் வேட்கைவிட் டாரே.

முப்பொருள் நாட்டும் தமிழ்மறை முடிவாம் வேதாந்தங் கேட்க அயற்புல மாந்தராம் வேதியர் விரும்பினர். வேதாந்தத்தைக் கேட்டும் நெடுநாள் நிலையாகச் செய்துவரும் கொலைபுலை வேள்வியினை விட்டொழியார். உண்மை வேதாந்தமென்பது தன்னைச் சிவனுக்கு அடிமையெனக் கொண்டு அவன் அருள்வழி நிற்பதே வேட்கையாய்த் தனக்கென ஒரு சிறிதும் எவ்வகை வேட்கையும் இலனாயிருத்தல். வேட்கை அகன்ற இடமே வேதாந்தங் கேட்டுப் பயனடைதற்குரிய நயன்சேர் தகுதியிடமாகும். அந் நிலையில் வேதாந்தம் கேட்டவர் வேட்கைவிட்ட சிவநாட்டமுற்ற விழுமியோராவர். கொலைபுலை வேள்வியால் எய்தும் பயன் நிலையிலாச் சிறுபயனும் பாவவாயிலுமாகும்.

வேதாந்தம் - வேதத்தின் முடிவு.

## 80. நூலுஞ் சிகையும் நுவலிற் பிரமமோ

80. நூலுஞ் சிகையும் நுவலிற் பிரமமோ
நூலது கார்ப்பாச நுண்சிகை கேசமாம்
நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம்
நூலுடை அந்தணர் காணும் நுவலிலே.

பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும் ஆதலின் சிறப்பாகிய பெயர் பெறுவது தூய அகம்புற வொழுக்கத்தினாலேயாம். புறவடையாளங்கள் அகவொழுக்கத்தைக் காட்டும் அறிகுறியேயாம். அகவொழுக்கமில்லாமல் புறவொழுக்கமாகிய அடையாளம் மட்டும் கொள்வது தன்னையும் பிறரையும் வஞ்சிக்கும் பாவச் செயலேயாம். அம்முறையில் பேர்கொண்ட பார்ப்பார் பூணூலும் உச்சிக் குடுமியும் விடாது பற்றிக் கொண்டு தம்மைப் பார்ப்பார் என்பர். இவை பிரமத்தன்மையுணர்த்தும் உண்மையாகா. அக் குறிப்பே நுவலிற் பிரமமோ வென்பது. நூலென்பது கயிறு. சிகை என்பது மயிர்முடி. இவற்றின் அக அடையாளமாக நீங்கா உயிர் ஒழுக்கமாகவுள்ளன முறையே மறை முடிவும், அம் முடிபால் பெறப்படும் முப்பொருள் உண்மைத் திருவடியுணர்வுமேயாம். தெய்வ அருள் நூலுடை அந்தணரைக் காணின்,
இவை ஒவ்வொருவர்க்கும் செவ்விதிற் புலனாதல் வேண்டும்.

# 81. சத்தியம் இன்றித் தனிஞானந் தானின்றி

81. சத்தியம் இன்றித் தனிஞானந் தானின்றி
ஒத்த விடையம்விட் டோரும் உணர்வின்றிப்
பத்தியும் இன்றிப் பரன்உண்மை யின்றிப்
பித்தேறும் மூடர் பிராமணர் தாமன்றே.

உலகியல் ஒழுக்கவுண்மையும், அருளியல் ஆய்வாம் இறை, உயிர், தளை என்னும் முப்பொருள் உண்மையும் சத்தியம் எனப்படும். அத்தகைய சத்தியமின்றி, ஒப்பில்லாத சிவபெருமானே முழுமுதல் என்னும் தனி ஞானமாகிய திருவடி உணர்வின்றி, மனம் போனவாறே பொறிகளில் சென்று புலன்களை நுகர்வதாகிய வேட்கையினை விட்டுத் திருவடியினை யுணரும் உணர்வின்றி, இவற்றான் ஆருயிர்க்கொழுநனாம் சிவபெருமான் மாட்டு விளையும் அழியாக் காதலாம் பத்தியுமின்றி, மிக எளியவரும் நம்பியொழுகும் கடவுள் உண்மைக் கோளுமின்றி, ஐம்புலன் நுகர்விலே மருள் கொண்டு இருளுக்கு அடிமையாய், மெய்ப்பொருளை நாடாது திரியும் மூடர்கள் எங்ஙனம் பிராமணர்கள் ஆவார்கள்? ஒரு காலத்தும் பிராமணர் ஆகார்.

பிராமணர் - பிரமனை வணங்குகிறவர்கள். (விஷ்ணுவை வணங்குவோர் வைணவர்; உருத்திரனை வணங்குவோர் உருத்திர பல்கணத்தார்; மகேசனை வணங்குவோர் மாகேசுரர்.)

## 82. திருநெறி யாகிய சித்தசித் தின்றிக்

82. திருநெறி யாகிய சித்தசித் தின்றிக்
குருநெறி யாலே குருபதஞ் சேர்ந்து
கரும நியமாதி கைவிட்டுக் காணுந்
துரிய சமாதியாந் தூய்மறை யோர்க்கே.

ஆருயிர் சுட்டுணர்வோடும் சிற்றுணர்வோடும் கூடியுணர்வதாகிய சித்தும், இருள் மலத்துடன் கிடந்து ஏதும் அறியாததாகிய அசித்தும் முற்றுணர்வாகிய திருவடியுணர்வைச் சார்ந்த இடத்து இலவாயொழியும். அப் பேற்றினைக் கைவரச் செய்வது திருநெறியாகும். அதுவே குருநெறியென்றும் சொல்லப்படும். இந் நெறியாலே சிவகுருவின் திருவடியினைச் சேர்ந்து நாட்கடன் வழிபாடு முதலிய படிமுறைப் பயிற்சிகளெல்லாம் நிட்டையாகிய சமாதியின்கண் ஏற்படும் நாலாம் நிலையாம் பேருறக்கத்தின்கண் (துரியநிலை) தாமே பகல் விளக்குப்போல் அடங்கிவிடும். அந்நிலைக்கண் சிவவுணர்வாகவே இருப்பர். அத்தகையோரே தூய சிவமறையோராவர்.

திருநெறி - வேதத் திருநெறி, வேதமார்க்கம். குருநெறி சன்மார்க்கம்.

## 83. மறையோ ரவரே மறையவ ரானால்

83. மறையோ ரவரே மறையவ ரானால்
மறையோர்தம் வேதாந்த வாய்மையில் தூய்மை
குறையோர்தன் மற்றுள்ள கோலா கலமென்று
அறிவோர் மறைதெரிந் தந்தண ராமே.

சிவமறையின் மெய்ப்பொருளைச் சிவகுருவால் உணரும் அவரே சிவமறையவர். ஆனால் அவர்கட்குரிய மறைமுடிவால் பெறப்படும் வாய்மை தூய்மை இவற்றில் குறைவுடையோர் செய்யும் புறச் செயல்களனைத்தும் பிறர் மெச்சச் செய்யும் ஆகுல நீர என்று மெய்யறிவுடையோர் கூறுவர். அங்ஙனம் அஞ்சாது கூறும் வஞ்ச நெஞ்சமிலாரே சிவமறை தெரிந்த சிவ அந்தணராவர். குறையோர் என்பதற்கு அயன்மொழி நூல் வழி யொழுகுவோர் என்றலும் ஒன்று. கோலாகலம் - சந்தை கூட்டிரைச்சல்; ஆகுலம்.

## 84. அந்தண்மை பூண்ட அருமறை யந்தத்துச்

84. அந்தண்மை பூண்ட அருமறை யந்தத்துச்
சிந்தைசெய் அந்தணர் சேருஞ் செழும்புவி
நந்துதல் இல்லை நரபதி நன்றாகும்
அந்தியுஞ் சந்தியும் ஆகுதி பண்ணுமே.

சிவ வழிபாடு செய்யும் செந்நெறியினர் இயற்கை அந்தண்மையுடையோராவர். 'வேதாந்தத் தெளிவாம் சைவ சித்தாந்தம்' என்பதனாலும், 'சிவாகமங்கள் சித்தாந்தமாகும்' என்பதனாலும் அருமறையந்தத்துச் சிந்தைசெய் அந்தணர் ஆகமத்தராவர். அத்தகையோர் சிவனை மறவாத் திருவுடை நல்லோராவர். நல்லோர் - சிவஞானி. அத்தகையோர் சேரும் புண்ணியத் தென்புலம் எவ்வாற்றானும் கேடெய்துதல் இல்லை. மாந்தர் ஆட்சித் தலைவனாம் வேந்தனும் செந்நெறியொழுகி நன்றாகுவன். அந்தியும் சந்தியுமாகிய சிவவழிபாட்டுக் காலங்களில் தவறாது வழிபாடு புரிதலாகிய ஆகுதியினை அந்தணர் செய்வர். ஆகுதி - தூய ஆன்பால்.

## 85. வசையில் விழுப்பொருள் வானும் நிலனுந்

85. வசையில் விழுப்பொருள் வானும் நிலனுந்
திசையுந் திசைபெறு தேவர் குழாமும்
விசையம் பெருகிய வேத முதலாம்
அசைவிலா அந்தணர் ஆகுதி வேட்கிலே.

மலப்பிணிப்பும் அது காரணமாக நேரிடும் பிறப்பும், இறப்பும், இருவினையும், மருளும், வினைநுகர்வும் முதலிய உயிர்க் குற்றங்கள் வசை எனப்படும். அத்தகைய வசை ஏதுமில்லாத விழுப்பொருளாம் சிவபெருமானை, ('அருள் சேர்ந்த நெஞ்சினார்க்கு அல்லல் இல்லையாதலின்' அத்தகையோர் அசைவிலார் எனப்படுவர்.) அசைவிலா அந்தணர் பாலவியால் ஆகுதி வேட்பர். அவ் வேள்விப் பயனால் வானும் நிலனும் திசையும் மாறா வளம் பெற்றுச் செழிப்பினை எய்தும். அவ்வத்திசையின்கண் வாழும் தெய்வங்களும் அத் தெய்வ இனங்களாகிய கூட்டங்களும் உய்வினை எய்தும். தன்வழி யொழுகும் தக்காரனைவர்கட்கும் தீதொரீஇ நன்றின்பால் உய்க்கும் வழி காட்டுவதால் மறை வெற்றியைத் தரும் விழுமியதாயிற்று. எனவே வெற்றியினைப் பெருகச் செய்யும் வேதத்தை முதன்மையாக வைக்கப் பெற்றது. அதனை முதன்மையாகக் கொண்டு சிவ வேள்வி வேட்பதே தவலில் தவ வேள்வியாம்.

ஆகுதி வேட்டல் - ஆவின் நெய்யைப் பறப்பையில் விட்டு எரி வளர்த்து, எரியுருவராகிய சிவபெருமானை வணங்கல். பறப்பை - சிருக்கு - சிருவம்.

## 86. ஆகுதி வேட்கும் அருமறை அந்தணர்

86. ஆகுதி வேட்கும் அருமறை அந்தணர்
போகதி நாடிப் புறங்கொடுத் துண்ணுவர்
தாம்விதி வேண்டித் தலைப்படு மெய்ந்நெறி
தாமறி வாலே தலைப்பட்ட வாறே.

அருமறை வழியே நெய்சொரிந்து வேள்விவேட்கும் அந்தணர் திருவடியுணர்வால் மீளா நிலையாம் சிவப்பேற்றினை எண்ணி, பிறழா நிகழ்ச்சியாம் ஊழ்ப் பயனை உள்ளங் கொள்ளாது உடலூழாய் நுகர்வர் அவ்வந்தணர் ஏறு வினையாகிய ஆகாமியத்தை ஆண்டவன் ஏற்று விதியாக்கும்படி விரும்புவர். அதன் பொருட்டு மெய்ந்நெறியினைத் தலைப்படுவர். மேலும் திருவடியுணர்வால் சுட்டுணர்வும் சிற்றுணர்வும் நீங்கி முற்றுணர்வுள் தம்மறிவு அடங்கித் தாம் அவ்வறிவாகவே நிற்பர். அதனால் தாமறிவாலே அவ் வந்தணர் திருவடியைத் தலைப்பட்ட முறைமையாகும் என்றனர். தலைப்படல் - அன்புடன் சேர்தல்.

போகதி - முத்தி மார்க்கம்.

## 87. அணைதுணை அந்தணர் அங்கியுள் அங்கி

87. அணைதுணை அந்தணர் அங்கியுள் அங்கி
அணைதுணை வைத்ததின் உட்பொரு ளான
இணைதுணை யாமத் தியங்கும் பொழுது
துணையணை யாயதோர் தூய்நெறி யாமே.

செந்நெறிக்கண் பொருந்திய உலகிற்குத் துணையாகிய அவ் வந்தணர் வேள்வியுட் சிறந்த சிவ வேள்வியினை ஆருயிர்தோறும் அணைந்து வழித்துணையாக நிற்கும் சிவபெருமானை முதன்மையாக வைத்துப் புறத்தே புரிவர். அவர் அவ் வேள்வியினை யொத்து உயிர்ப்புப் பயிற்சியால் அகத்து வேள்வி செய்யும்போது, துணையாய்ப் பொருந்தும் சிவபெருமான் வெளிப்பட்டு விளங்கித் தோன்றுவன். அந் நிலையே தூநெறியாகிய நன்னெறி என்ப.

## 88. தானே விடும்பற் றிரண்டுந் தரித்திட

88. தானே விடும்பற் றிரண்டுந் தரித்திட
நானே விடப்படு மேதொன்றை நாடாது
பூமேவு நான்முகன் புண்ணிய போகனாய்
ஓமேவும் ஓரா குதிஅவி உண்ணவே.

செந்தாமரை மலரை இருக்கையாகக் கொண்ட நான்முகன் முதலாயினார்க்கும் புண்ணியப் போகனாயுள்ளவன் சிவன். அவன் திருவடியை அன்றி வேறொன்றினையும் எண்ணாது அதனையே எண்ணி ஓ மறைமொழிந்து ஆகுதி செய்யின், அவ்வாகுதிப்பயனால் யான் எனது என்னும் இருவகைப் பற்றும் தானே விடும். அங்ஙனமின்றி என்னால் விடப்படும் தன்மையதோ?

பற்று இரண்டு - யான், எனது என்னும் அகப்பற்று, புறப்பற்றுக்கள்.

## 89. நெய்நின் றெரியும் நெடுஞ்சுட ரேசென்று

89. நெய்நின் றெரியும் நெடுஞ்சுட ரேசென்று
மைநின் றெரியும் வகையறி வார்கட்கு
மைநின் றவிழ்தரு மத்தின மாம்என்றுஞ்
செய்நின்ற செல்வம் தீயது வாமே.

புறவிருளைப் போக்குதற்கு அகலும், நெய்யும், திரியும் தீயும் ஒன்றுகூடி எரியும் விளக்கைப்போல், அகத்தேயுள்ள மை போன்ற ஆணவ வல்லிருள் சிவனார் திருவடியுணர்வால் அகலும். அத்திருவடியுணர்வு திருவைந்தெழுத்தை இடையறாது எண்ணும் பொருள் மறையால் வாய்க்கும். அவ் வுண்மை உணர்வார்க்கு இருண்மலம் தானே அகலும். அத்தகைய நன்னாள் செய்தற்குரிய செந்நெறியில் நிற்கும் பொன்னாளாகும். அந் நெறியால் பெறப்படும் அழியாச் செல்வம் திருவடிப் பேறு. அது மலவிருளோட்டும் பேரறிவுச் சுடராம் தீயாகும்.

மை - மலம். நெய் - அறிவு, ஞானம்.

## 90. பாழி அகலும் எரியுந் திரிபோலிட்டு

90. பாழி அகலும் எரியுந் திரிபோலிட்டு
ஊழி அகலும் உறுவினை நோய்பல
வாழிசெய் தங்கி உதிக்க அவைவிழும்
வீழிசெய் தங்கி வினைசுடு மாமே.

பெரிய அகல்போல் காணப்படும் வேள்விக்குண்டமும், அதன்கண் காணப்படும் திரிபோன்ற ஆல் அத்தி முதலிய சுள்ளிகளும் அமைத்துச் சிவபெருமானை முழுமுதலாக் கொண்டு மாறா உறுதியுடன் வேள்வியினைப் புரிய, நெடுநாள் வாழ்தற்கு வேண்டிய கால எல்லையாகிய ஊழியும் பெருகும்; பொருந்த வேண்டிய துன்ப இன்பக் கூறுபாடாகிய இருவினையால் வரும் நோய்கள் பல விழுந்தழியும். அங்ஙனம் அவை விழுவதற்குக் காரணம், சிவ வேள்விப் பயனாக விளைந்த திருவருட்கண் கடைக்கணிக்கும் சூட்டினால் ஏற்படும் சுடுதலேயாம். விழி வீழியென நீண்டு நின்றது. விழுதலைச் செய்தல் என்னும் பொருள் தரும் தொழிற் பெயருமாம். சுள்ளி - பால்மரக்குச்சு.

பாழி - பள்ளம், குழி. வீழி செய்து - பார்த்து.

## 91. பெருஞ்செல்வங் கேடென்று முன்னே படைத்த

91. பெருஞ்செல்வங் கேடென்று முன்னே படைத்த
அருஞ் செல்வம் தந்த தலைவனை நாடும்
வருஞ்செல்வத் தின்பம் வரவிருந் தெண்ணிப்
பருஞ்செல்வத் தாகுதி வேட்கநின் றாரே.

பெருகும் செல்வமாகிய ஏறுவினை பிறவிக்கு வித்தாகிய கேட்டினைத் தருமென்று தன்முனைப்பற்ற அந்தணச் செல்வர்கள் தாங்களாக முற்பிறவிகளிற் செய்துகொண்ட எஞ்சுவினையாகிய சஞ்சிதத்தினின்றும் என்று கொள்ளப்பட்டு, மாறாத ஊழ்வினைச் செல்வம் தந்த தலைவனாகிய சிவனை நல்லார் பலரும் நாடுவர். அவனாலே வரும் திருவடிச் செல்வம், பேரின்பம் தருவதாகும். அது வரவிருந்த வள்ளலை எண்ணிப் புறப் பொருளாய் விளங்கும் பெரிய செல்வங்களைச் சிவஞானங் கிட்டுதற்கு வாயிலாகிய சிவவேள்வியின்பால் பற்றற ஆகுதி செய்வதே மெய் வேள்வி என்க. பருஞ்செல்வம் - தழல்.

பெரும்செல்வம் - பெருகும் செல்வம் - அதாவது ஆகாமியம். முன்னே படைத்த அரும் செல்வம் - ஊழ்வினை - வல்வினை. பருஞ் செல்வத் தாகுதி - முத்தி பயக்கும் ஆகுதி.

## 92. ஒண்சுட ரானை உலப்பிலி நாதனை

92. ஒண்சுட ரானை உலப்பிலி நாதனை
ஒண்சுட ராகிஎன் னுள்ளத் திருக்கின்ற
கண்சுட ரோன்உல கேழுங் கடந்தஅத்
தண்சுட ரோமத் தலைவனு மாமே.

அறவடிவாம் ஒளிமிக்க ஆனேற்றை ஊர்ந்து வரும் தலைமைப்பாடுடைய சிவபெருமானை, என்றும் பொன்றாமையாகிய எவர்க்குமில்லாத ஏர்மிக்க முதல்வனை, பேரறிவுப் பெருஞ்சுடராய் என் உள்ளத்தே. வீற்றிருந்தருளுகின்ற ஒளிப்பொருள்களுக்கு ஒளிகொடுத்தருளும் முச்சுடர்க் கண்ணோனை, முழுமுதல்வன் என்பர். அவன் ஏழு உலகங் களையும் கடந்த நிலையில் தண்சுடராக நின்றருள்வன். அத்தகைய தண்சுடரோனைச் சிவமறையோர் ஓமத் தலைவனாகக் கொள்வர். அவனே உண்மை ஓமத் தலைவனுமாவன்.

## 93. ஓமத்துள் அங்கியின் உள்ளுளன் எம்இறை

93. ஓமத்துள் அங்கியின் உள்ளுளன் எம்இறை
ஈமத்துள் அங்கி இரதங்கொள் வானுளன்
வேமத்துள் அங்கி விளைவு வினைக்கடல்
கோமத்துள் அங்கி குரைகடல் தானே.

அஞ்செழுத்தால் செய்யப்படும் ஓமத்துள் வளர்க்கின்ற சிவ வேள்வித் தீயும் சிவபெருமானே; அவனே நம் தலைவன். ஒவ்வொருவரின் இறுதிக் காலத்துச் செய்யப்படும் அந்தியேட்டியாகிய பெருமண வேள்வித் தீக்கண் விளங்குபவனும் அவனே. இரதங்கொள்வான்: அவ்வேள்வித் தீயினைத் தேராகக் கொண்டருள்பவன். இணரெரிதோய் வன்ன விளைவாய் வரும் வினைப்பயன் கடல் போன்றது. அவ் வினைக்கடலை அழித்தொழிப்பது மிக்க ஒளியோடு காணப்படும் ஒலிக்கின்ற கடல் போன்ற பெருவேள்வித் தீ என்க. (அதனால் பெறப்படும் திருவடியுணர்வே வேள்வித் தீ என்க.)

ஓமம் - பிரணவத்துடன் கூடிய மந்திரத்தால் செய்யும் அக்கினி காரியம். இது வடமொழியில் ஹோமம் என வழங்கப்படுகிறது. ஈமத்துள் அங்கி - சுடுகாட்டில் செய்யும் அக்கினி காரியம். அந்தியேட்டி - ஈமக்கடன்.

## 94. அங்கி நிறுத்தும் அருந்தவர் ஆரணத்து

94. அங்கி நிறுத்தும் அருந்தவர் ஆரணத்து
அங்கி இருக்கும் வகையருள் செய்தவர்
எங்கும் நிறுத்தி இளைப்பப் பெரும்பதி
பொங்கி நிறுத்தும் புகழது வாமே.

மெய்ப்பொருள் அடையாளமாகிய சிவச்சுடரே சிவவேள்வித் தீயாகும். அதை உலகின்கண் நிறுவினவன் அருந்தவனாகிய சிவ பெருமான். அவன் வழிப்பட்டு அவ் வேள்வியினை நடாத்தும் சிவமறையோரும் அருந்தவர் எனப்படுவர். அத் தவத்தோர் வாயிலாகவே அவ் வேள்வி முறையினை விளக்கும் செந்தமிழ்த் திருநான்மறை, முறையாகிய ஆகமம் அருளிச் செய்தவனும் சிவனே. அவ் விறைநூலின் வழி எங்கணும். வேள்வியினைச் செய்ய ஆருயிர் இளைப்பினை எய்தும். அவ்விளைப்பகலப் பெரும்பதியாகிய வழிப்பேறாம் சிவவுலகத்தினை எய்துவிப்பன். சிவபெருமானுக்கும் அவனை வழிபடும் சிவமறையோர்க்கும் மிகுந்து நிலைபெறும் பொன்றாப் புகழ் இதுவேயாம்.

ஆரணத் தங்கி - தமிழ் வேத ஆகமங்களில் கூறிய சிவாக்கினி.

## 95. கல்லா அரசனுங் காலனும் நேரொப்பர்

95. கல்லா அரசனுங் காலனும் நேரொப்பர்
கல்லா அரசனிற் காலன் மிகநல்லன்
கல்லா அரசன் அறம்ஓரான் கொல்லென்பான்
நல்லாரைக் காலன் நணுகநில் லானே.

அறமுறை கல்லாது, ஆண்டவன் நினைவினைக் கொள்ளாது, அருள்வழி நில்லாது, மருள்வழி யொழுகும் மன்னனே கல்லா அரசன் எனப்படுவன். உயிரையும் உடலையும் காலம் பார்த்துப் பிரிக்கும் கூற்றுவன் காலன் எனப்படுவன். இவ்விருவரும் துன்புறுத்தும் வன்செயலால் ஒருங்கொப்பர். ஆயினும் முறைமை வழுவிய பழி படுகல்லாவரசனைக் காட்டிலும் முறைமை வழுவாத காலன் மிக நல்லன். காலன் காலக்கணக்கை முறையாகக் கொண்டு நடப்பவன். அதுபற்றியே 'காலனும் காலம் பார்க்கும்' என்னும் கட்டுரையும் எழுந்தது.

நல்லொழுக்கங் கல்லாத அரசன், அறமாகிய மறைநூலினை ஆன்றோருடன் ஆய்ந்தறிந்து உளங்கொண்டு அதன்படி ஒழுகான். அதனால் எக்காரணமுமின்றி நல்லவர்களையும் நினைத்த நினைத்தபடி கொல்லச் சொல்லி அல்லலுறுத்துவன். திருவடியுணர்வு கைவரப் பெற்ற நல்லாராகிய சிவஞானிகளைக் காலன் நெருங்கான்: கூன்பாண்டியன் ஆளுடைய பிள்ளையார் திருமடத்தில் தீவைக்க இணங்கியது கல்லா அரசன் கொடுமைக்குக் காட்டாகும்.

கல்லா அரசன் - அரச நீதிகளைக் கல்லா அரசன். மனுநீதி கண்ட சோழன் செய்த நூல், திருக்குறள் முதலியன. மனுஸ்மிருதி அல்ல.

## 96. நாள்தோறும் மன்னவன் நாட்டில் தவநெறி

96. நாள்தோறும் மன்னவன் நாட்டில் தவநெறி
நாள்தோறும் நாடி யவன்நெறி நாடானேல்
நாள்தோறும் நாடு கெடுமூட நண்ணுமால்
நாள்தோறும் செல்வம் நரபதி குன்றுமே.

வேந்தனாம் சிவபெருமானின் மெய்த்துணை கொண்டு நாடாளும் மன்னவன் தன் நாட்டில் ஒவ்வொரு நாளும் பிறர்க்கென வாழும் பெரியோரின் தவநெறி செம்மையாக நிகழ்கின்றதா என்று கண்காணித்தல் வேண்டும். தவநெறி பிழைத்தாலும் அந்நெறிக்குப் பிறர் ஊறு இழைத்தாலும் நாட்டினுக்குப் போக்க முடியாத பொல்லாங்கு விளையும். அதனால் இன்றியமையாத கண்காணிப்பு முதற்கண் தவ நெறிக்கண் வேண்டும். அதன் பின்பு மன்னவன் தன்பால் ஏதும் குற்றம் உளதா, என்று ஆராய்தல் வேண்டும்; என்னை? 'தன்குற்றம் நீக்கிப் பிறர்குற்றம் காண்கிற்பின், என்குற்றமாகும் இறைக்கு' என்பது வாயுறை வாழ்த்தாகலான் என்க. வாழ்த்தாகலான் என்க. அம் முறையினை நாடாவிட்டாலும் ஒவ்வொரு நாளும் கேடும் உடன் தோன்றிக் கொண்டிருக்கும். மேலும் ஒவ்வொரு நாளும் பல்வகைச் செல்வமும் கெடும். மன்னனும் உறைகடுகி ஒல்லைக் கெடுவான்.

அவன் நெறி - அரச நீதி. செல்வ நரபதி - செல்வமும் அரசனும்.

## 97. வேடநெறி நில்லார் வேடம்பூண் டென்பயன்

97. வேடநெறி நில்லார் வேடம்பூண் டென்பயன்
வேடநெறி நிற்போர் வேடம்மெய் வேடமே
வேடநெறி நில்லார் தம்மை விறல்வேந்தன்
வேடநெறி செய்தால் வீடது வாகுமே.

தவக்கோலத்துக்குரிய தனிப்பெரு நெறியில் நிற்கும் ஆற்றல் இல்லாதவர், அத் தவக்கோலத்தினை மேற்கொண்டு கரவொழுக்கம் ஒழுகுவதால் உண்டாகும் பயன் யாது? தவக் கோலத்திற்குப் பொருந்தியவாறு செம்மையாக ஒழுகுவாரின் தவக்கோலம், உண்மைக் கோலமாய் வண்மைப் பயனை நாட்டிற்கும் பிறர்க்கும் எண்மையில் எய்துவிக்கும் திண்மைச் சிவக்கோலமாகும். உண்மைத் தவக்கோலத்தின் வழி ஒழுகாத தீப்பண்பாளரை, வெற்றி பொருந்திய வேந்தன் தவக்கோல நெறியில் நிற்பித்தல் வேண்டும். அங்ஙனம் செய்தால் அம்முறைமை நாட்டிற்கும் நற்றவத்தோர்க்கும் நல்லின்பந் தருவதாகும். வீடு - நல்லின்பம்.

## 98. மூடங் கெடாதோர் சிகைநூல் முதற்கொள்ளில்

98. மூடங் கெடாதோர் சிகைநூல் முதற்கொள்ளில்
வாடும் புவியும் பெருவாழ்வு மன்னனும்
பீடொன் றிலனாகும் ஆதலாற் பேர்த்துணர்ந்து
ஆடம் பரநூற் சிகையறுத் தால்நன்றே.

ஆருயிர்களின் அறிவை மூடித் தடை செய்துகொண்டிருக்கும் தொன்மலம் மூடம் எனப்படும். அதன் காரியம் யான் எனது என்னும் செருக்கை விளைவிக்கும் ஆணவம் ஆகும். அவ் வாணவம் கெடாதார் உயர்ந்தார்க்குரிய உச்சிக்குடுமியும் பூண்நூலும் பிறவும் பூண்டு உலகை ஏமாற்றுவதால் விளையும் நன்மை யாது? அதற்கு மாறாக விளையும் தின்மைக்கு அளவே இல்லை. அஃதாவது உலகமும் உயிர்களும் வாடி வதங்கும். பெருவாழ்வினையுடைய மன்னனும் பெருமை குன்றுவன். ஆதலால் அவர்தம் பொய்ம்மையை மெய்ம்மையாளரைக் கொண்டாராய்ந்து ஆடம்பரமாகக் கொண்டுள்ள உச்சிக் குடுமியையும், பூணூலையும் அறுப்பித்தால் நாட்டுக்கும் அப் பொய் வேடத்தார்க்கும் நன்மை பயப்பிப்பதாகும். நாட்டவர் அவரை மெய்த்தவரென்று நம்பித் தானஞ் செய்கின்றனர். அவ்வாறு செய்கின்றவர் பெரும் பாவத்தைப் பெறுகின்றனர். என்னை? அவர் ஈந்த பொருள் தீவழிச்சென்று பெருந் துன்பத்தை உலகினுக்குப் பலகாலும் பலவகையாலும் ஈந்தமையான் என்க. இப்பொருள் "நெஞ்சில் துறவார் துறந்தார் போல் வஞ்சித்து, வாழ்வாரின் வன்கணார் இல்" என்னும்

செந்தமிழ்ப் பொது
மறையால் நன்குணரலாம். மேலும் அப்பொய்க்கோலத்தவர் தம் புன்மையுணர்ந்து அதனையொழித்து நன்மைவழி யொழுகி நலமுறுவர்.

## 99. ஞானமி லாதார் சடைசிகை நூல்நண்ணி

99. ஞானமி லாதார் சடைசிகை நூல்நண்ணி
ஞானிகள் போல நடிக்கின்ற வர்தம்மை
ஞானிக ளாலே நரபதி சோதித்து
ஞானமுண் டாக்குதல் நலமாகும் நாட்டிற்கே.

திருவடியுணர்வாகிய சிவஞானமில்லாதார் சடையும், உச்சிக் குடுமியும், பூணூலும் மேற்கொண்டு மெய்யுணர்ந்தார் போல நடிப்பர். அங்ஙனம் நடிக்கும் புல்லியோரை நாடாளும் மன்னவன் ஆராய்தல் வேண்டும். அங்ஙனம் ஆராய்வது அத் துறைக்கண் திருவருளால் மேன்மையுற்ற சிவஞானிகளைக் கொண்டேயாம். அவர்கள் கட்டளையிட்டருளியவாறே புல்லியோரை வல்லவாறு தண்டித்து நல்லநெறியில் மன்னவன் நிறுத்துதல் வேண்டும். அங்ஙனஞ் செய்யின் அவர் தமக்கும் நாட்டிற்கும் அது பெருநன்மை செய்ததாகும்.

சடை - துறவறத்தார்களுக்கு உரியது. சிகை - நூல் இல்லறத்தார்களுக்கு உரியன.

## 100. ஆவையும் பாவையும் மற்றற வோரையுந்

100. ஆவையும் பாவையும் மற்றற வோரையுந்
தேவர்கள் போற்றுந் திருவேடத் தாரையுங்
காவலன் காப்பவன் காவா தொழிவனேல்
மேவும் மறுமைக்கு மீளா நரகமே.

'பிறந்தநாள் தொட்டுச் சிறந்ததம் தீம்பால் அறந்தரு நெஞ்சமொடு' அனைவர்க்கும் ஈயும் ஆவையும், உலகினை. வாய்மையும் தூய்மையும் மறவாது கைக்கொண்டு, செம்பொருட் சிவனே தம்பெரு முதலா வழிபாடு புரிதலும், ஐந்தெழுத்து வெண்ணீறு சிவமணி போற்றித் தொழுந் தொழுகையால் நன்னெறிப்படுத்தும் தாய்மை சிறந்த பாவையரையும், தாய்மை வழி தப்பாது நிற்கும் அறவோரையும், மண்ணுலகத்தாரே யன்றி விண்ணுலகத் தேவர்கள் போற்றும் சிவனடியார்களையும் சிறப்பாகக் காக்கும் கடமை காவலனுக்கு என்றும் உள்ளது. மேற்கூறிய மூன்றும் முறையே இன்பமும் பொருளும் அறமும் ஒருபுடையுணர்த்தும் குறிப்பாகும். அத்தகைய காவலன் காவாது ஒழிவானானால் அம் மன்னனுக்கு மீளா இருள் உலகத்துன்பம் எய்தும். திருவேடத்தார் - சிவனடியார். நரகம் - இருள் உலகம்.

## 101. திறந்தரு முத்தியுஞ் செல்வமும் வேண்டின்

101. திறந்தரு முத்தியுஞ் செல்வமும் வேண்டின்
மறந்தும் அறநெறி யேஆற்றல் வேண்டும்
சிறந்தநீர் ஞாலஞ் செய்தொழில் யாவையும்
அறைந்திடல் வேந்தனுக் காறிலொன் றாமே.

வழிப்பேறும் விழுப்பேறுமாகிய இருதிறமுத்தியும், இம்மை மறுமையாகிய இருபெரும் செல்வங்களும் ஒருவர் உள்ளன்புடன் கள்ளமின்றி விரும்புவாரானால், எள்ளலிலாது மறந்தும் அறநெறியையே புரிதல் வேண்டும். மறந்தும் புரிதல் என்பது பயிற்சி மேலீட்டால் பொறிகள் மனத் தொடர்பின்றியே நனவு கனவுகளில் முனமுறச் செய்வன. இவ்வுண்மை, "நற்றவாவுனை நான்மறக்கினும் சொல்லுநா நமச்சிவாயே" என்னும் திருமறையான் உணரலாம். சிறந்த கடலால் சூழப்பட்ட உலகோர் செய்தொழில் எல்லாவற்றினும் வரும் வருவாயில் ஆறில் ஒன்று வேந்தனுக்குரிய முறையான இறைப் பொருளாகும். ஏனைய ஐந்து கூறும் 'தென்புலத்தார் தெய்வம் விருந்து ஒக்கல் தானென்றாங்கு, ஐம்புலத்தாறு ஓம்பல் தலை' என்பதனாற் பெறப்படும் ஐவர்க்குமாம். தென்புலத்தார் - தெய்வத்தை நிலை நாட்டிச் சென்ற அழகிய திருவடியுணர்வுடைய நாயன்மார். விருந்து - தெய்வ நாட்டத்தை நிலைநாட்டி வருகின்ற நாயன்மார்.

## 102. வேந்தன் உலகை மிகநன்று காப்பது

102. வேந்தன் உலகை மிகநன்று காப்பது
வாய்ந்த மனிதர்கள் அவ்வழி யாநிற்பர்
பேர்ந்திவ் வுலகைப் பிறர்கொள்ளத் தாங்கொள்ளப்
பாய்ந்த புலியன்ன பாவகத் தானே.

வேந்தன் உலகை நலமுறக் காப்பது மிகச் சிறந்த சிவபுண்ணியமாகும். நன்னெறி வாய்ந்த உலகமாந்தர் அரசன் எவ்வழி அவ்வழி நடவாநிற்பர். என்னை? குடிகள் அன்புடையராய், வேந்தன் அருளுடையனாய் இணங்கி வாழும் குணத்தான் என்க. மாறுபட்டுத் தன்னடிக் கீழுள்ள உலகைப் பிறர்கொள்ள வந்தபொழுது காவாதவனும், தன் மாணாவுவகையான் செருக்குற்றுப் பகைவனினும் மிக்க கேட்டை யுண்டாக்குபவனும் காட்டில் வாழும் கொடுவிலங்காகிய பதுங்கிப் பாய்ந்து கொல்லும் புலியினும் மிகக் கொடியவனாவன். பாவகத்தான் - பாவமே எண்ணும் தீயவுள்ளத்தான்; கொடியன் என்று எல்லாரும் எண்ணி அஞ்சும் நினைப்பிற்கு உரியன். பாவகம் - நினைப்பு.

# 103. கால்கொண்டு கட்டிக் கனல்கொண்டு மேலேற்றிப்

103. கால்கொண்டு கட்டிக் கனல்கொண்டு மேலேற்றிப்
பால்கொண்டு சோமன் முகம்பற்றி உண்ணாதோர்
மால்கொண்டு தேறலை உண்ணும் மருளரை
மேல்கொண்டு தண்டஞ்செய் வேந்தன் கடனே.

உயிர்ப்பினை அகத்தவப் பயிற்சியான் உள்ளடக்கி மூலத் தீயினை நடுநாடி வழியாக மேலேற்றித் திங்கள் மண்டிலத்துக் காணப்படும் பால்போலும் தூய வெள்ளிய நிலவுப் பயனாம் அமிழ்தினை அத்திங்கள் வாயிலாக நாளும் உண்ணுமவர் உலகியல் தேறலாம் மெய்யறியாமையினைத் தரும் கள்ளினை யுண்ணார். இம்முறையில் அமிழ்துண்ணும் செம்மையிலாதார், அறிவழிவினைச் செய்யும் புறக்கள்ளினை மருள் கொண்டு உண்பர். அதனால் அவர்கள் தமக்கும் உலகுக்கும் பெருந் தீங்கை உண்டு பண்ணுவர். அத்தகையோரைத் தக்கவாறு தண்டஞ் செய்து நன்னெறிப் படுத்துதல் வேந்தன் கடமையாகும். செய் - செய்தல் : முதனிலைத் தொழிற்பெயர்.

கால்-பிராணவாயு, மூச்சு கனல் - மூலக்கனல், குண்டலினி. மேலேற்றி - வீணாத்தண்டின் மேலேற்றி. பால் - அமிழ்தம்.

## 104. தத்தஞ் சமயத் தகுதிநில் லாதாரை

104. தத்தஞ் சமயத் தகுதிநில் லாதாரை
அத்தன் சிவன்சொன்ன ஆகம நூல்நெறி
எத்தண் டமுஞ்செயும் அம்மையில் இம்மைக்கே
மெய்த்தண்டஞ் செய்வதவ் வேந்தன் கடனே.

அவரவர் மேற்கொண்டுள்ள உயிர்க் கொள்கையாம் சிறப்பினைச் சமயம் என்பர். உலகியற் கொள்கை அனைவர்களுக்கும் பொது. அவற்றின்கண் வேறுபாடு காண்டலில்லை. சமயக்கொள்கை அவரவர் மேற்கோண்ட வரம்பின்படி ஒழுகுதல் வேண்டும். ஒருவரோடொருவர் பிணங்கி வாழ்வது அறமாகாது. இணங்கி வாழ்வதே அறமாகும். சமயங்கள் அனைத்தும் மாந்தர் வளர்ச்சியும், பேரூர் வழியும், கல்லூரி வகுப்பும், ஏணிப்படியும் போன்று ஒன்றுக்கு ஒன்று துணையாவனவேயாம். அதனால் அவரவர் சமய நெறியில் அவரவர் நிற்றல் வேண்டும். அங்ஙனம் நில்லாதாரை நிறுத்த வேண்டுவது வேந்தன் கடமையாகும். அங்ஙனம் நில்லாதாரை முப்பத்தாறாம் மெய்யினை இயக்கும் அத்தனாகிய சிவன் தானருளிய சிவாகம நூல்வழி அம்மைக்கண் எல்லாத் தண்டமும் இயற்றுவிப்பன். இம்மைக்கண் பிறர் நல்வழிப் படுதற்கும், தவறியவர் திருந்திச் சிவமாம் வாழ்வு எய்துதற்கும் மெய்ம்மையான தண்டத்தை வேந்தன் செய்தல் வேண்டும். அஃது அவன் கடனாகும். அத்தன் சிவன் - தலைவனாகிய சிவன்: இருபெயரொட்டுப் பண்புத்தொகை. மாந்தர் வளர்ச்சியென்பது கருவுற்ற நாள்முதல் இருமுது குரவர் பெருநினைவும், பிறந்தநாள் தொட்டு அவர்தம் உறுதுணையும், வளருநாளில் உடன்பிறந்தார்

உறுதுணையும், ஆடற்காலத்துப் பக்கத்தார் உறுதுணையும், பொது அறிவில் உற்றார் உறுதுணையும் பெற்று வளர்வதாகும். அதுபோல ஆட்சித் தலைநகராம் பேரூர்க்கு எல்லாப் பக்கங்களிலுமிருந்து பல வழிகள் செல்லும். அதனை முன்னுணர்ந்து பயின்றார் பின்வருவார்க்கு உணர்த்தல் வேண்டும். கல்லூரி வகுப்புக்களில் எல்லா வகுப்புக்களும் என்றும் இன்றியமையாது வேண்டப்படுவனவே. அவைகளில் பயில்வாரும் பயின்றாரும் பின்வருவார்க்குத் துணைபுரிதல் வேண்டும். ஏணிப்படி அடிப்படைப்படி முடியுடைப்படிக்கு வழி காட்டியாகி அதைத் தாங்கியும் நிற்றல் வேண்டும் என்பதே வளர்ச்சி யென்பதற்குப் பொருளாவதுடன் வளர்ச்சியுற்றார் வளருவார்க்குத் துணைசெய்ய வேண்டும் கடமையும் உரிமையும் உடையார் என்பதும் பொருளாகும்.

## 105. அமுதூறு மாமழை நீரத னாலே

105. அமுதூறு மாமழை நீரத னாலே
அமுதூறும் பன்மரம் பார்மிசை தோற்றுங்
கமுகூறு தெங்கு கரும்பொடு வாழை
அமுதூறுங் காஞ்சிரை ஆங்கது வாமே.

பெருமழைநீர் ஊறும் அமுதமாகும். அதனால் நிலவுலகில் உயிர் வாழ்க்கைக்கு வேண்டும் நிலையான உணவு முதலிய பல்வகைப் பயன் தரும் மரங்கள் உண்டாகும். அவைகளும் அமுதூறுவனவேயாம். அவற்றுட் சில வருமாறு: பாக்குமரம், தென்னை, கரும்பு, வாழை முதலியன. இவைகள் அமுதூறுவனவேயாம். அத்தகைய மழையில்லையானால் உலகம் பெருந்துன்பம் எய்தும். அத் துன்பம் எல்லாரானும் வெறுக்கப்படுதலினானும் சாவினைத் தருதலினானும் அதனைக் காஞ்சிரங்காய் என்று ஓதினர்.

## 106. வரையிடை நின்றிழி வான்நீர் அருவி

106. வரையிடை நின்றிழி வான்நீர் அருவி
உரையில்லை உள்ளத் தகத்துநின் றூறு
நுரையில்லை மாசில்லை நுண்ணிய தெண்ணீர்க்
கரையில்லை எந்தை கழுமணி யாறே.

எந்தையாகிய சிவபெருமானுக்குத் திருமுழுக்காட்டுக்குரிய திருத்த நீரைத் தரும் யாறு கழுமணியாறு என்று சொல்லப்படும். கழுமணி என்பது இயல்பாகவே குற்றமில்லாத நீலமணி. இம் மணிபோன்று தெளிந்த நீரென்பது பொருள். இஃது இறவாத இன்பமாகிய திருமஞ்சனம். ஏனைய யாறுகள் ஓழிவரப் பெருமலைவேண்டும். அதுபோல் இந்த யாறு ஓழிவரும் பெருமலை வரை எனப்படும். அது, நன்னெறி நான்மையுள் சிறந்த காதன்மை வரையாகும். காதன்மை நெறி அறிவு நெறியாகும். அறிவுநெறி எனினும் உண்மைநெறி எனினும், சன்மார்க்க மெனினும், ஞானநெறி யெனினும் ஒன்றே. அஃது இவ்வெல்லையினின்றும் ஓழி வருவது. அது தூய அருவியாகும். இவ்வருவியின் பெருமை சொல்லுக்கு அடங்காதது. ஆருயிரின் அகத்துள் நின்று ஊறுவது. புறத்து யாறுபோல் இதற்கு நுரையில்லை; எவ்வகை மாசுமில்லை. ஏனைத் தெளிந்த நீர்களுக்கு அமைவதுபோன்று தோன்று மிடம், புகுமிடம், இரண்டு பக்கங்களிலுமுள்ள இருகரை முதலிய எல்லை எதுவும் இல்லை. மேலும் சிவபெருமானின் திருவடியின்பத்தினைக் கழுமணியாறாகக் கூறுதலுமொன்று. அதற்கேற்பக்

கூறுங்கால், அருளாகிய வரையிடைத் தோன்றி வாலறிவாகிய அருவியாகிச் சொல்லொண்ணாததாய் ஆருயிர் அகத்தே பெருகி இறவாத இன்ப ஊற்றெடுப்பதாகும். அதற்கு வேண்டுதல் வேண்டாமையாகிய நுரையில்லை. இருவினைக்கும் வித்தாம் இருளாகிய மாசில்லை. பேரின்ப வெள்ளமாகிய நுண்ணிய தெண்ணீர்க்கு எல்லை இல்லை என்பதாம்.

உரையில்லை - குற்றங் கூறப்படுவது இல்லை.

## 107. ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்

107. ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்னன்மின்
பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்
வேட்கை யுடையீர் விரைந்தொல்லை உண்ணன்மின்
காக்கை கரைந்துண்ணுங் காலம் அறிமினே.

கேளிர், கேளல் கேளிர், கேளலார், நாடு மொழி நன்னெறி, உயர்வு, தாழ்வு, வறுமை, செல்வம், இளமை, முதுமை முதலிய எவ்வகை வேறுபாடுமின்றி உடலினுக்கு உணவும் உயிரினுக்கு உணர்வும் வேண்டினார்க்கு ஈதல் உடையோர் கடனாகும். ஈண்டு உணவினை ஓதுகின்றனர். தக்காராய் வந்தார் யாவர்கட்கும் மிக்கவுவகையோடு இலனென்னும் எவ்வம் உரையாவகையாய்க் குறிப்பறிந்து இடுங்கள். அவர் இவர் என்று எவ்வகை வேறுபாடும் கூறாதீர்கள். செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருந்து உண்ணுங்கள். உண்ணத்தக்க காய்கனி கிழங்கு விதை இலை பூ முதலியவற்றை அவ்வாறே கொண்டும், ஏனையவற்றைத் தக்கவாறு சமைத்தும் உண்ணுதல் வேண்டும். அவ்வாறு உண்ணுங்கால், சிறுபொழுதும் நாள்களும் கழியவிட்டு அவை பழைமையாகி செவ்வியழிந்த பின் உண்ணுதல் தவறு. அதனால் பழம்பொருள் போற்றன்மின் என்றனர். தமிழகத்தாருண்ணும் பழஞ்சோறு கறி முதலியன இவ்வகையைச் சார்ந்தனவல்ல. அவை முறையே கழுநீர் வடிகஞ்சி வெந்நீர் சுக்கு கருவேப்பிலை முதலியன கூட்டிப் பதஞ்செய்து புதுப்பித்தலும் கறிவகைகள் பலவற்றையும்

பொருந்துமாறு கூட்டி மீண்டும் அடுப்பேற்றி மருந்தென அமைத்தலும் செய்தலின், அவை உண்ணத்தக்க புதுப் பொருளே யன்றிப் பழம்பொருள்கள் அல்ல. காரணம் பற்றியோ கிட்டாமையாலோ சில பகல் கழிந்து உண்ண நேரின் மிக்க வேட்கையுண்டாவதியல்பு. அங்ஙனம் நேரினும் படபடப்பாய்க் கழிவிரைவாய் உண்ணுதல் ஆகாது. ஆர அமர இருந்து நன்றாய் மென்று உடலொடு சார்ந்து திடம் பெறுமாறு உண்க. 'நுறுங்கத் தின்றார்க்கு அகவை நூறென்ப' என்பது பழமொழி. காக்கையானது வீட்டிலுள்ள பொருள்களைக் கவர்ந்து கள்ளமாய் உண்ணும்போது ஒரு சிறிதும் கரைவதில்லை. வீட்டிலுள்ளார் காக்கையைக் கூவியழைத்து அதற்கென வைத்த உணவினைக் கரையாது உண்பதும் இல்லை. இவ்விரு வேறு காலத்தன்மையான் ஏற்படும் நன்மை புன்மைகளை யறிந்து புன்மையை அகற்றி நன்மைக்கண் உறைத்து நின்று ஒழுகுதல் வேண்டும். இஃது ஒட்டணி. இதனால் பெறப்படுவது: ஆருயிர் அனைத்தும் சிவபெருமானுக்கு அடிமை. ஏனை உலகமும் உலகியற் பொருள்களும் அவன் உடைமை. அவன் திருவருள் ஒவ்வொருவரையும் பிறர்க்கு உதவி முதற்கண் அவர்களையுயர்த்தி அதன் வாயிலாகத் தாமும் உயருமாறு அறிவால், ஆற்றலால், ஆக்கத்தால், ஆண்மையால், ஊக்கத்தால், நோக்கத்தால், சீலத்தால், கோலத்தால், காலத்தால் உயர்த்துவிக்கின்றது. இவ்வுண்மை யுணர்ந்தோர் தம்பாலுள்ளவை ஆண்டவன் அருளென்னும் மறவாத்தெருளுடன் தம்மிலிருந்து தமது பாத்து ஏனையவற்றை ஈத்துவந்து உண்பர். ஏனையார்

1. புண்ணிய. 11. பட்டினத் திருவிடை மும்மணி 19.2. காக்கை. திருக்குறள், 527.

களவு கொண்டார் கைப்பொருள்போல் வளமறைத்து மருள்

உணர்வினராய் இருள் மனத்தராய்க் காக்கை கரையாது கவர்ந்துண்ப தொத்து உண்பர் என்பதாம்.

அவரிவர் உயர்ந்தோர், தாழ்ந்தோர், உறவினர், பகைவர், நண்பர் முதலியோர்.

## 108. தாமறி வாரண்ணல் தாள்பணி வாரவர்

108. தாமறி வாரண்ணல் தாள்பணி வாரவர்
தாமறி வாரறந் தாங்கிநின் றாரவர்
தாமறி வார்சிவ தத்துவ ராவர்கள்
தாமறி வார்க்குத் தமர்பர னாமே.

தேவர்க்கும் மூவர்க்கும் யாவர்க்கும் தலைமையராய்த் திகழ்வதை என்றும் இயல்பாக உடைய சிவபெருமான் அண்ணல் எனப்படுவன். அவன் தாள் பணியும் பேரன்பினர்தாம் ஆருயிர் அனைத்திற்கும் துன்பந்துடைத்து இன்பியற்றி இனிதுற வாழச் செய்யும் நிலைபேறாம் அறத்தினை அறிவர். அறிந்து மனமாசாம் அழுக்கா றவா வெகுளி இன்னாச் சொல் நான்கும் கழந்து தம் தூயவுள்ளத்து அவ்வறத்தினைத் தாங்கி நிற்பர். அவர்களே சிவபெருமானின் பிறவா இறவா இயற்கைப் பேருண்மையினை இனிதினுணர்வர். அதனால் அவர் சிவத்தின் உண்மை உணர்ந்த சிவ தத்துவராவர். இவ்வுண்மைகளை அருளால் உணர்ந்தவர்களுக்கு என்றும் யாண்டும் புகலிடமாம் உரிமையுடைய தமர் சிவபெருமானேயாவன். சிவதத்தும் - சிவத்தின் உண்மை.

அறம் தாங்கி, நின்றார் - அழுக்காறு, அவா, வெகுளி, இன்னாச் சொல் நான்கும் இல்லாதவர்.

## 109. யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை

109. யாவர்க்கு மாம்இறை வற்கொரு பச்சிலை
யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை
யாவர்க்கு மாம்உண்ணும் போதொரு கைப்பிடி
யாவர்க்கு மாம்பிறர்க் கின்னுரை தானே.

எந்நிலையிலுள்ளார்க்கும் இன்பக் கூறாம் சிவனை அன்புடன் பச்சியிலையிட்டு வழிபடுதல் கூடும். பச்சிலையே செம்பைப் பொன்னாக்கும். அதுபோல் சிவ வழிபாடே ஆருயிரைச் சிவமாக்கும். அது போல் எல்லாராலும் ஆன்களுக்கு வாயுறையாகிய புல் முதலியன கொடுத்தல் இயலும். இது பொருட்கூறு ஆகும். இவ்வாயுறை கொடுப்பதன்கண் இருவேறு தொண்டுகள் அடங்கியுள்ளன. ஒன்று நந்தன வனத்துக்குக் களையெடுத்தல். மற்றொன்று பசுவினுக்குப் புற்கொடுத்தல். அதுபோல் யாவர்களாலும் உண்ணும்போது ஒரு கைப்பிடி யுணவு உவகையுடன் பிறர்க்குக் கொடுத்தல் இனிதின் இயலும். இஃது அறத்தின் கூறாகும். 'இரப்பவர்க்கு ஈயவைத்தார், ஈபவர்க்கு அருளும் வைத்தார்' என்பதனால் மேலது விளங்கும். அனைவர்க்கும் எல்லா இடத்தும் எல்லாக் காலத்தும் எல்லாருடனும் உயிர் தளிர்ப்ப, உணர்வு திருவடியில் மூழ்கிக் குளிர்ப்பச், சொல்லானும் பொருளானும் இனிமை பயப்பதாய் அதுபோல் கேள்வியினும் வினையினும் இனியதாய் உள்ள நன்மொழிகளை ஆராய்ந்து பார்த்துக் கூறும் இன்னுரை இயலும் என்க. இது வீட்டின் கூறாகும். பச்சிலையின்

மாண்பு 'வில்லமறுகுக் கொவ்வா மென்மலர்கள்' என்னும் பிறகாலச் சான்றோர் மொழியானும் உணர்க.

## 110. அற்றுநின் றாருண்ணும் ஊணே அறனென்னுங்

110. அற்றுநின் றாருண்ணும் ஊணே அறனென்னுங்
கற்றன போதங் கமழ்பவர் மானிடர்
உற்றுநின் றாங்கொரு கூவற் குளத்தினிற்
பற்றிவந் துண்ணும் பயன்அறி யாரே.

பற்றற்றான் பற்றினைப் பற்றிப் பற்றுவிட்ட பண்பாளராம் தவத்தோர் உண்ணும் ஊணே அறப்பாங்காகும் என்று தமிழ்மறை மொழியும், திருவடியுணர்வைத் திருவருளால் பெற்றுச் சிவ வழிபாடு திருவைந்தெழுத்தாற் செய்யக் கற்பனவே கற்றனவாம். அவற்றால் விளைவனவே போதம். போதம் என்றாலும் சிவஞானம் என்றாலும் ஒன்றே. உணர்விற் கலந்து அகத்து வெளிப்படும் அப் போதம் புறத்துச் சிவமணமாகக் கமழும். அங்ஙனங் கமழும் அருள் திருமேனியுடையார் சிவஞானத்தேன் நிறைந்த கூவலினையும் குளத்தினையும் ஒப்பர். பிறப்பற்றுச் சிறப்புற்று வாழும் பேரின்பத் தேட்டமுடையார் அம்மெய்யடியாரைச் சார்ந்து உய்தல் வேண்டும். அங்ஙனம் அறியாவிட்டால் அவர் பிறவிப்பயன் அறியாப் பெரும் பேதையராவர். நீர் வேட்கை மிக்கார் அண்மையில் கூவல் குளங்களிருந்தும் அதன்பாற் சென்று இன்னீர் பருகி வேட்கை தணிந்து இன்புறாது, பயனறியாது வாளா இருந்து துன்புறுவாரன்றே? அத் துன்புறுவாரே இவர்கட்கு ஒப்பு ஆவர்.

அற்று நின்றார் - பற்று அற்று நின்றார்.

## 111. அழுக்கினை ஓட்டி அறிவை நிறையீர்

111. அழுக்கினை ஓட்டி அறிவை நிறையீர்
தழுக்கிய நாளில் தருமமுஞ் செய்யீர்
விழித்திருந் தென்செய்வீர் வெம்மை பரந்து
இழிக்கவன் றென்செய்வீர் ஏழைநெஞ் சீரே.

திருவருளால் ஆணவ அழுக்கினை அகற்றித் திருவடியுணர்வை நும் உணர்வில் நிறைத்துக் கொள்ளீர். சிறப்பாகத் தழுவப்பட்ட நன்னாட்களில் செய்யத் தகும் சிவ புண்ணியங்களையும் செம்மையுறச் செய்யீர். அப் புண்ணியம் செய்யாமையான் உலகியலில் விழித்திருந்தும் அருளியலில் ஏமாந்தவராகின்றீர். அதனால் நீர் என் செய்வீர். நீரும் நும் பாவக் கொடுவினை மிகுந்து துன்புறுவீர். அக்காலத்து அத்துன்பத்திருந்து என் செய்வீர். அன்பும் அறிவுமில்லாத ஏழை நெஞ்சுடையீர். தழுக்கிய: தழுவிய என்பதன் திரிபு. இழிக்க - துன்புற.

தழுக்கிய நாள் - கல்வி, செல்வம், இளமை ஆகியவை கூடி இருக்கும்போது. வெம்மை - சாக்காடு.

## 112. தன்னை அறியாது தான்நல்ல ரென்னாதிங்

112. தன்னை அறியாது தான்நல்ல ரென்னாதிங்
கின்மை யறியா திளையரென் றோராது
வன்மையில் வந்திடுங் கூற்றம் வருமுன்னந்
தன்மையின் நல்ல தவஞ்செய்யும் நீரே.

கால முடிவில் தவறாது கூற்றுவன் வருவன்; அவனை யாரும் அறிந்து கொள்ளுதல் முடியாது. வருகின்ற அவன் கொண்டு போகப் படுபவர் இருவினைப் பாங்காம் நல்லாரா? அல்லது பொல்லாரா? என்றும் நாடான்; மேலும் அக் குடும்பம் வறுமையால் வாடும் குடும்பமே என்றும் நினையான். ஆண்டில் மிகவும் இளைஞரே எனவும் வேண்டான். எவரும் மாற்ற முடியாதபடி மிக்க வன்மையுடன் வருவன். அக் கூற்றுவன் வருமுன் நீங்கள் சீல முதலியவற்றிற் பயிலும் தன்மை பெற்று அதனால் நற்றவஞ் செய்யுங்கள்.

## 113. துறந்தான் வழிமுதற் சுற்றமும் இல்லை

113. துறந்தான் வழிமுதற் சுற்றமும் இல்லை
இறந்தான் வழிமுதல் இன்பமும் இல்லை
மறந்தான் வழிமுதல் வந்திலன் ஈசன்
அறந்தான் அறியும் அளவறி வாரே.

பற்றற்ற பண்பினராம் துறந்தார்க்கு 'யாதும் ஊரே யாவரும் கேளிரே.' ஆதலால் தனிப்பட்ட வழிமுதற் சுற்றம் என்பது ஒன்றில்லை. சுட்டுணர்வும் சிற்றுணர்வுமாகிய உலகியல் தன்மையும் உயிர்த்தன்மையும் 'நாமங்கெடக் கெடுநோய்' என்பது போன்று திரு வடியுணர்வான் முற்றுங் கடந்தவன் உலகியலில் இறந்தவனாவன். அவன் முற்றுணர்வு கைவந்துற்றவனாதலால் அவன் திருவடிப் பேரின்பம் ஒருவாது நுகரும் அருந்தவன். அவன்பால் நிலையா உலகியற் சிற்றின்பம் இல்லை என்பதாம். சிவனை மறந்தார்பால் அச் சிவனும் வந்திடான். அறத்தின் பகுதியில் அறிய வேண்டிய எல்லையைக் கூடச் சிவனை மறந்தார் அறியார். அறிவாரே : ஏகாரம் எதிர்மறை; அறியார் என்பது பொருள்.

இறந்தான் - உலகில் செத்தாரைப் போலத் திரிகின்றவன். அதாவது, உலகை மறந்து சிவனை நினைந்தவன். மறந்தான் - ஈதலை மறந்தவன்.

## 114. தான்தவஞ் செய்வதாஞ் செய்தவத் தவ்வழி

114. தான்தவஞ் செய்வதாஞ் செய்தவத் தவ்வழி
மான்தெய்வ மாக மதிக்கும் மனிதர்கள்
ஊன்தெய்வ மாக உயிர்க்கின்ற பல்லுயிர்
நான்தெய்வம் என்று நமன்வரு வானே.

திருவடியுணர்வு கைவந்த சிவமாந்தன்மை பெற்ற சிவஞானிகள் பராவுசிவனார் எனப்படுவர். அந் நல்லாரை மதித்து அறவழி
யில் நிற்கும் மாந்தர்கள்தாம் தவம் செய்யும் மாந்தராவர். அத்தகையோர் சிவஞானிகளையே சிவமென வழிபடுபவர். ஏனையோர் யான் எனது என்னும் செருக்கால் தம் உடம்பினையே தெய்வமென மடம்பட்டு ஏனைய உயிர்போல் மூச்சுவிடுதல் ஒன்றே பற்றி உயிர்க்கின்றவராவர். அவ் வுயிர்கட்கு நமன் வருங்கால் 'இவன் மற்றென்னடியா னென்று' கூறும் சிவன் வெளிப்படாமையால் அந் நமனே தெய்வமாவன். (ஆக்கைக்கே இரைதேடி அலமந்து அறஞ்செய்யாது கழியும் அறிவிலார்க்கு மாற்றரிய கூற்றுவன் தெய்வம் எனத் தோற்றுவன்.)
(அ. சி) ஊன் தெய்வமாக - தேகத்தையே பெரிதாக எண்ணிக் காலங் கழிப்பவர். (8)

## 115. திளைக்கும் வினைக்கடல் தீர்வுறு தோணி

115. திளைக்கும் வினைக்கடல் தீர்வுறு தோணி
இளைப்பினை நீக்கும் இருவழி உண்டு
கிளைக்குந் தனக்கும்அக் கேடில் புகழோன்
விளைக்குந் தவம்அறம் மேற்றுணை யாமே.

ஒருவன் அறஞ்செய்யின், தனக்கும் தன் வழியினுள்ளார்க்கும் அழியாத பழியில் புகழ் நிறுவியவனாவன். அவ்வறம் மேற் சிவனடி கூடுதற்கு வாயிலாம் சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்னும் நற்றவம் புரிதற்குத் துணையுமாகும். வினையான் வரும் பிறவிக் கடலுள் அழுந்தும் ஆருயிர்கள் கரைசேரப் பற்றும் புணை இறைவன் அடித்தோணியே. அதுவே உயிர்களின் இளைப்பினை நீக்குவதாகும். அத்தோணியினைப் பெறுவிக்கும் வாயில் தவமும் அறமுமேயாம்.

திளைக் . . . . . யாமே - தவம், அறம் இரண்டுமே வினைக்கடல் கடக்க உயர்ந்த தோணிகள் போன்றன.

## 116. பற்றது வாய்நின்ற பற்றினைப் பார்மிசை

116. பற்றது வாய்நின்ற பற்றினைப் பார்மிசை
அற்றம் உரையான் அறநெறிக் கல்லது
உற்றுங்க ளால்ஒன்றும் ஈந்தது வேதுணை
மற்றண்ணல் வைத்த வழிகொள்ளு மாறே.

அனைத்துயிர்க்கும் பற்றுக்கோடாக நின்றருளும் சிவ பெருமானைப் பற்றிய மெய்யன்பர் நிலமிசை யார்மாட்டும் எவ்வகையான குற்றமும் புகலார். அறநெறியல்லாமல் பிறநெறியிற் செல்லார். பிறநெறி பாவநெறி. அறவழியில் ஈட்டிய பொருளை அறவோர்க்கு மனமுவந்து உங்களால் கொடுக்கப்படுவது ஒன்றுமே உங்கட்கு வழித்துணையாகும். அம்மட்டோ? சிவபெருமான் தன் திருவடியைச் சேருமாறு வகுத்தருளிய நேர் வாயிலாகிய நன்னெறியினையும் நண்ணுவிக்கும். இதுவே நல்வழியினைக் கைக் கொள்ளும் வழியாகும். பற்றினை - பற்றப்படும் மெய்ப்பொருளாகிய சிவபெருமானை.

பற்றது . . . பற்று - பொருள். அண்ணல். . . வழி - சன்மார்க்கம்.

## 117. எட்டி பழுத்த இருங்கனி வீழ்ந்தன

117. எட்டி பழுத்த இருங்கனி வீழ்ந்தன
ஒட்டிய நல்லறஞ் செய்யா தவர்செல்வம்
வட்டிகொண் டீட்டியே மண்ணின் முகந்திடும்
பட்டிப் பதகர் பயன்அறி யாரே.

'நச்சப்படாதவன் செல்வம் நடுவூருள் நச்சுமரம் பழுத்தற்று' என்பராகலின், எட்டி மரங்கள் பழுத்துப் பெரும் பெரும் பழங்கள் வீழ்ந்தன. ஆனால் அஃது பயன்படாமையினால் ஒருவராலும் தொடப் படுவதில்லை. அதுபோல் நல்லறஞ் செய்யாதார் செல்வமும் ஒருவர்க்கும் பயன்படுவதின்று. பொன்னாசையினால் கடும் வட்டி வாங்கி மிகுபொருள் ஈட்டியதோடமையாது வஞ்சனையால் பிறர்பொருள் கவரும் பாதகர், தாம் செய்ய வேண்டிய அறத்தினையுமுணரார். தவிர வேண்டிய பாவத்தையுமுணரார். அவற்றினான் விளையும் பயனையும் அறியார். பாதகர் என்பது பதகர் எனக் குறுகி நின்றது.

இருங்கனி - பெரும்பழம். ஒட்டிய - தானே நேர்ந்த. மண்ணின் முகந்திடும் - எட்டிப் பழம்போல் பயனின்றிக் கெடும். பட்டி - வஞ்சனை. பதகர் - பாதகர்.

## 118. ஒழிந்தன காலங்கள் ஊழியும் போயின

118. ஒழிந்தன காலங்கள் ஊழியும் போயின
கழிந்தன கற்பனை நாளுங் குறுகிப்
பிழிந்தன போலத்தம் பேரிடர் ஆக்கை
அழிந்தன கண்டும் அறம்அறி யாரே.

நாழிகை, சிறுபொழுது, நாள், திங்கள், பெரும்பொழுது, ஆண்டு முதலியவாகக் கணக்கிடப்படும் காலங்கள் பல நீங்கின. உலக முடிவாம் ஊழிகளும் பலவாயின என்ப. 'ஒருபொழுதும் வாழ்வதறியார் கருதுப, கோடியுமல்ல பல' என்பதுபோல அளவின்றி எண்ணிய வீண் எண்ணங்களும் அகன்றன. வரையறுத்த நாளும் நெருங்கி அது காரணமாகச் சாறு பிழிந்த நறுவிய கனி கரும்பு முதலியவற்றின் சக்கை போன்று யாக்கையும் பயனற்று அழிந்தன. இங்ஙனம் நிகழ்வன பலவும் கண்டும் அறம் செய்யவேண்டுமென்னும் அரும்பெரும் திறமறியா மாந்தர் பலராவர்.

கற்பனை - வீண் எண்ணங்கள். பிழிந் . . . அழிந்தன - இரசம் பிழியப்பட்ட கனிபோல் சத்துக் கெட்ட யாக்கை.

# 119. அறம்அறி யார்அண்ணல் பாதம் நினையுந்

119. அறம்அறி யார்அண்ணல் பாதம் நினையுந்
திறம்அறி யார்சிவ லோக நகர்க்குப்
புறம்அறி யார்பலர் பொய்ம்மொழி கேட்டு
மறம்அறி வார்பகை மன்னிநின் றாரே.

மறை வழியாம் உலகியல் அறம் அறியார் அண்ணலாகிய சிவபெருமானின் திருவடியினை ஆராக் காதலுடன் நினையும் தீராத் திறமறியார். அறம் அறியார் என்பது அறத்தினைக் கருதவோ கூறவோ ஒருப்படார் என்பதாம். சிவவுலகமாகிய நிலையினையும் அறியார். இதற்குப் புறமாகிய வழிப்பேறாம் பதமுத்திகளையும் அறியார். பற்பல நெறியினர் மருளாற் கூறும் பொய்ம்மொழி கேட்டு மறமாகிய பாவ வழியில் ஒழுகுவார். அவர்க்கு வினைப்பகையும் அதன் விளைவாம் பிறவியும் எல்லையின்றி நிலைபெற்றுண்டாம்.

சிவலோகம் - புதன் அண்டம். புறம் - இதர பத முத்திகள். மறம் - துன்மார்க்கம். வகை - பிறப்பு இறப்பு.

## 120. இருமலும் சோகையும் ஈளையும் வெப்புந்

120. இருமலும் சோகையும் ஈளையும் வெப்புந்
தருமஞ்செய் யாதவர் தம்பால தாகும்
உருமிடி நாக முரோணி கழலை
தருமஞ்செய் வார்பக்கல் தாழகி லாவே.

நீங்காத் துன்பத்தினைத் தரும் குத்திருமலும், குருதிக் குறைவாம் சோகையும், கோழையும், உடம்பெலாம் கொதிக்கும் உட்சூடும் இவை போன்ற பிறவும் நிலைபெற்ற நல்லறஞ் செய்யார்பால் நிகழ்வன. அச்சத்தைத் தரும் இடியும், கொடுநஞ்சுடைய நாகப்பாம்பும், உரோகிணி முதலிய விண்மீன்களும், பிளவைக் கட்டி முதலிய நோய்களும் நல்லறஞ் செய்வார்பால் வந்து சாரமாட்டா.

சோகை - இரத்தமின்மை. ஈளை - கோழை. வெப்பு - உட்சுரம்.

## 121. பரவப் படுவான் பரமனை ஏத்தார்

121. பரவப் படுவான் பரமனை ஏத்தார்
இரவலர்க் கீதலை யாயினும் ஈயார்
கரகத்தால் நீரட்டிக் காவை வளர்க்கார்
நரகத்தில் நிற்றிரோ நன்னெஞ்சி னீரே.

மண்ணவர் விண்ணவர் முத்தேவர் முதலிய யாவர்களாலும் தொழப்படுவான் சிவபெருமான் ஒருவனே. அச் சிவபெருமானைப் பாடிப் பரவிப் பணியவும் மாட்டார். அற்றாராய் உற்று இறந்தவர்க்கு ஈயின் தலை யளவு சிறுபொருளைக்கூட ஈயவும் செய்யார். நீர்க்குட முதலியவற்றான் நீர் முகந்து எல்லார்க்கும் நல்ல பல பயன் தரும் சோலைகளை வளர்க்கார். அத்தகையோர் பெறும்பயன் யாதெனின் இருளுலகத் துன்பமேயாம். நெஞ்சினீரே நீரும் இவ்வகை நல்லறம் புரியாது நரகத் திடை நிற்றிரோ? நாள் எஞ்சினீரே என்பதற்கு நல்லறம் புரியாது நாளை வீணாளாக்கிச் சாவை நெருங்கினீரே என்க.

## 122. வழிநடப் பாரின்றி வானோர் உலகங்

122. வழிநடப் பாரின்றி வானோர் உலகங்
கழிநடப் பார்நடந் தார்கரும் பாரும்
மழிநடக் கும்வினை மாசற வோட்டிட்டு
ஒழிநடப் பார்வினை ஓங்கிநின் றாரே.

அறவழியில் நடவாதார் வானோர் ஒளியுலகினை எய்தார். முறை கடந்து அரும்பாவம் புரியும் கழிநடப்பார் இருளுலகஞ் சென்று துன்புற்றுக் கழிவர். கரும்பார் - கரியவுலகம்; இருளுலகம். அழிவினை உண்டாக்கும் வினையினையும் அதற்குக் காரணமான மலமாசினையும் அருளால் அறவே ஓட்டிட்டு, தீமைகள் முற்றும் ஒழிந்த நன்னெறியின் ஒழுகுவார் ஒழி நடப்பார் எனப்படுவார். நல்வினையாகிய அறச் செயலான் மேம்பட்டு நின்றார் என்க. மழி: முதனிலைத் தொழிற்பெயர்; அழித்தல். ஒழி நடப்பார். தீமையொழித்து நல்வழியில் நடப்பார்.

கழி நடப்பார் - வரம்பிகந்து நடப்பவர். கரும்பார் - நரகம். ஒழி நடப்பார் - சன்மார்க்கர்.

## 123. கனிந்தவர் ஈசன் கழலடி காண்பர்

123. கனிந்தவர் ஈசன் கழலடி காண்பர்
துணிந்தவர் ஈசன் துறக்கம தாள்வர்
மலிந்தவர் மாளுந் துணையுமொன் றின்றி
மெலிந்த சினத்தினுள் வீழ்ந்தொழிந் தாரே.

உள்ளமுருகி ஈர நெஞ்சினராய் இரப்பவர்க்கு ஈயும் தாயனையார் சிவபெருமானின் திருவடியினைத் திருவருளால் அறிவுறக் காண்பர். திருவடியுணர்வு கைவந்த சிவனடியார்களைச் சிவனெனவே துணிந்து வழிபடுவோர் சிவவுலகினையடைவர். இவறன்மையுடையராய்ப் பொருட்பற்று மிக்கவர் நல்லறஞ் செய்யாமையால் வழித்துணை ஏதுமின்றி மாள்வர். சினத்தைப் பொருளென்று கொண்டு அச் சினத்தின்கண் மிக்குத் தீமை புரிந்தோர் துன்புற்று இருளுலகினில் வீழ்ந்தொழிந்தனர்.

கனிந்தவர் - ஈர நெஞ்சுடன் அறம் செய்தவர். துணிந்தவர் - துறந்தவர். மலிந்தவர் - ஆசை உள்ளவர்.

## 124. இன்பம் இடரென் றிரண்டுற வைத்தது

124. இன்பம் இடரென் றிரண்டுற வைத்தது
முன்பவர் செய்கையி னாலே முடிந்தது
இன்பம் அதுகண்டும் ஈகிலாப் பேதைகள்
அன்பிலார் சிந்தை அறம்அறி யாரே.

ஆருயிர்கட்கு இன்ப துன்பங்களென இருவேறு வகைப்பட இறைவன் அமைத்தது அவ்வுயிர்கள் முன்பு செய்த நல்வினை தீவினைகளானாகும். முன் செய்த நல்வினைப் பேற்றால் சிலவுயிர்கள் ஈண்டு இன்புறுதலைக் கண்டிருந்தும் சில அறிவிலாப் பேதைகள் அறத்தின் சிறப்பறியாராய் அதனால் தம் உள்ளத்தின்கண் பள்ளத்தை நோக்கிச் செல்லும் வெள்ளமனைய அன்பிலராய்க் கழிகின்றனர்.

## 125. கெடுவது மாவதுங் கேடில் புகழோன்

125. கெடுவது மாவதுங் கேடில் புகழோன்
நடுவல்ல செய்தின்ப நாடவும் ஒட்டான்
இடுவதும் ஈவதும் எண்ணுமின் இன்பம்
படுவது செய்யிற் பசுவது வாமே.

ஆவதும் அழிவதும் அவன் செயல் என்ப. அம்முறையால் என்றும் பொன்றா இரும்புகழையுடையவன் சிவபெருமான். அவன் அவரவர் வினைக்கீடாக ஆவதும் அழிவதும் செய்வன். அறமுறை நில்லாததுடன் கொடுமைகளை வடுவென்றும் பாராது வந்தவாறு செய்த ஒருவர்க்கு இன்பத்தினை எண்ணுவதற்கும் இடங்கொடான். அதனால் ஊணும் உடையும் பிறவும் முறையே வேண்டுவார்க்கு இடுவதும் ஈவதும் எண்ணுமின். அதுவே இன்பம். இன்பம் படுவது இன்பம் அழிவது. எனவே இன்பங் கெடவரும் துன்ப வினைகளை இயற்றினால், அவர்கள் மக்கட் பிறப்பினின்றும் தாழ்ந்து மாக்களாய், அவற்றினும் தாழ்ந்து மாவாய்ப் போவர். மாஎன்பது விலங்கு. அவ் விலங்கினுள்ளும் வீட்டினும் நாட்டினும் வாழும் நல்விலங்கன்றிக் காட்டில் வாழும் கொல் விலங்காய்க் கருதப்படுவர். அதுவே ஈண்டுப் பசுவதுவாமே என்று ஓதப்பட்டது.

இடுவது - அன்னம் இடுவது. இன்பம் படுவது - துன்பம் தருவது.

## 126. செல்வங் கருதிச் சிலர்பலர் வாழ்வெனும்

126. செல்வங் கருதிச் சிலர்பலர் வாழ்வெனும்
புல்லறி வாளரைப் போற்றிப் புலராமல்
இல்லங் கருதி இறைவனை ஏத்துமின்
வில்லி இலக்கெய்த விற்குறி யாமே.

நிலையா வாழ்வெனும் இவ்வுலக வாழ்வின் உண்மையை அறியாமை மட்டுமல்லாமல் நிலைக்குமென்று மாறுபடக் கொள்வோர் புல்லறிவாளராவர். அத்தகையோர் சிலரையேனும் பலரையேனும் கேடுறு செல்வங் கருதிப் பாடிப் பரவிப் பணிந்து போற்றி வாடுறுதல் வேண்டா. புக்கில்லாகிய வீடுபேற்றினைக் கருதி முழுமுதற் சிவனைத் தொழுங்கள். தொழுதால் இம்மை, உம்மை, அம்மை என்னும் முத்திறச் செல்வமும் முறையாகக் கைகூடும். அதற்கு ஒப்பு சிறந்த வில்லேருழவனாகிய வில்லி (வேடன்) எய்த விற்குறி தப்பாமல் கைகூடியதென்ப.

புலராமல் - வருந்தாமல். இல்லங் கருதி - முத்தி கருதி.

## 127. ஆரறி வார்எங்கள் அண்ணல் பெருமையை

127. ஆரறி வார்எங்கள் அண்ணல் பெருமையை
ஆரறி வார்இந்த அகலமும் நீளமும்
பேரறி யாத பெருஞ்சுடர் ஒன்றதின்
வேரறி யாமை விளம்புகின் றேனே.

ஒரு பொருளின் பெருமையைக் கூறுவார், அப்பொருளின் தன்மைகளை முற்றும் ஆராயும் அறிவு, ஆற்றல், ஆண்மை முதலியவற்றான் மிக்காராய்; ஒழுக்கம், வாய்மை, தூய்மை முதலியவற்றில் தக்காராய்க் கடவுள்நாட்டம் கைக்கொண்டொழுகும் சான்றோராயுள்ள உயர்ந்தாராவர். அனைத்துலகினுக்கும் அனைத்துயிர்கட்கும் முதன்மைக் காரணராயுள்ள முழுமுதற் சிவன் அண்ணல் எனப்படுவன். அவற்கு உயர்ந்தாரும் ஒத்தாரும் எவருமிலர். யாண்டும் தாழ்ந்தாரே உளர். கடல்நீர் முற்றும் கொள்ளத்தக்க பாசனம் - கலம் ஒன்றிருந்தாலன்றி அந்நீரின் பெருமையை அளத்தல் ஒண்ணாது. கடல்நீர் மூன்று மடங்கு பெரியது உலகத்தைவிட என உலகியலுணர்ந்தாருரைப்பர். ஆயின், அதனை அளக்கும் கருவி உலகத்தில் ஏதும் இன்று என்பது துணிபு. கடலுள்வாழ் உயிர்களும் மேற்செல்லும் கலன்களும் அக் கடலின் ஒருபுடை யடங்குவனவே. அதுபோல் ஆண்டவன் பெருநிறைவினனாதலின் எல்லாம் அவன்கண் அடங்குவனவே. ஆதலால் எங்கள் அண்ணல் பெருமையை யாரறிவார் என்றனர். ஒன்றின் பெருமையை அளந்தறிய உளங்கொள்வார் அதன் அகலம், நீளம், ஆழம், உயரம் முதலியவற்றை யன்றே அளப்பர். அங்ஙனம்

அளப்பின் அப்பொருள் ஓர் எல்லையில் அடங்கும். சிவபெருமான் 'மறையினால், அயனால், மாலால், மனத்தினால், வாக்கால் மற்றும், குறைவிலா அளவினாலும் கூற' வொண்ணாதவனாகலின் எல்லையிலான் எனப்பட்டான். ஆதலால் அவனது அகலமும் நீளமும் அறிவார் ஒருவரு மிலர். உலகத்தையும் உயிர்களையும் விட்டு நீங்காத ஒட்டியுறைகின்ற செம்பொருட் பெருஞ்சுடர் சிவன். அவன் ஒருவனாகிய ஒப்பில்லாதவனாய் இருக்கின்றான். அவனது வேராகிய அடிநிலைத் தன்மையைக்கூட அறிய முடியாத யான் அருள் உணர்த்தக் கடல்நீர் கொண்ட கலம்போல் உணர்த்துகின்றேன். பேரறியாத - பெயர்ந்தறியாத. அடிநிலைத் தன்மை: சிவனே உள்நின்று செய்தும் - செய்வித்தும் வருகின்ற ஆதிகாரணத் தன்மை. அதனை அவனருளால் உணர்வதன்றிச் சோதித்தல் வேண்டா என்பதனை வருந்திருமுறையான் உணர்க:

'ஏதுக்க ளாலு மெடுத்த மொழியாலு மிக்குச்
சோதிக்க வேண்டா சுடர்விட்டுள னெங்கள் சோதி
மாதுக்க நீங்க லுறுவீர் மனம்பற்றி வாழ்மின்
சாதுக்கண் மிக்கீ ரிறையே வந்து சார்மின்களே.'

(சம்பந்தர், 3. 54-5)

(1)

## 128. பாடவல் லார்நெறி பாட அறிகிலேன்

128. பாடவல் லார்நெறி பாட அறிகிலேன்
ஆடவல் லார்நெறி ஆட அறிகிலேன்
நாடவல் லார்நெறி நாட அறிகிலேன்
தேடவல் லார்நெறி தேடகில் லேனே.

பாடப்படுதற்குச் சிறந்தாராகிய அம்மையப்பரைப் பாடிப் பணியுநெறி நன்னெறியாகும். அந் நெறிமுறையான் பாடும் அறிவாற்றல் இல்லேன். அதுபோல் வழிபடப்படுதற்குரிய சிவனை வழிபடுதற்கும் அறியேன். அவ்வழிபாட்டின்பின் அச் சிவனை எண்ணத்தின்கண் நாடுமுறைமையும் அறியேன். வேட்கை மிகவினால் உணர்வின்கண் உணர்தலாகிய நிலைமை தேட்டம். தேடப்படுதற்குரிய பெருமையுடையானும் சிவனே. அவனை அம் முறையால் தேடவும் அறியேன். இத் திருமறையின்கண் குறிக்கப்படும் பாடல், ஆடல், நாடல், தேடல் என்னும் நான்கும் முறையே சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்னும் நன்னெறி நான்மைத் திருத்தொண்டின் குறிப்பாகும்.

இந்நான்மையினைக் குறிக்கும் திருமுறை வருமாறு :

'சீல மின்றி நோன்பின்றிச் செறிவே இன்றி அறிவின்றித்
தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன்று விழுந்து கிடப்பேனை
மாலுங் காட்டி வழிகாட்டி வாரா உலக நெறியேறக்
கோலங்காட்டி ஆண்டானைக் கொடியேன் என்றோ கூடுவதே,

(8. ஆனந்தமாலை, 3)

இந்நானெறித் தொண்டினை ஒருபுடை ஒப்பாக வைத்துப் பயிற்றுவித்த பண்பினைக் குறிக்கும் திருமுறை வருமாறு :

'நல்ல நந்தன வனப்பணி செய்பவர் நறுந்துணர் மலர்கொய்வோர்
புனைபவர் கொணர்திரு மஞ்சனப் பணிக்குள்ளோர்
அல்லு நன்பக லுந்திரு வலகிட்டுத் திருமெழுக் கமைப்போர்கள்
எல்லை யில்விளக் கெரிப்பவர் திருமுறை எழுதுவோர் வாசிப்போர்.
(12. கணநாதர், 3)

இதன்கண் திருமெழுக்கு அமைத்தல் ஈறாகச் சொல்லப்படும் ஐம்பெரும் தொண்டும் சீலமாகும் விளக்கெரித்தல் நோன்பாகும். திருமுறை எழுதுதல் செறிவாகும். திருமுறை வாசித்தல் அறிவாகும். இவ்வெண் பெருந்தொண்டினாலும் சிவபெருமானின் எண் பெருங்குணமும் எளிதின் எய்தும்.

## 129. நந்தி அருள்பெற்ற நாதரை நாடிடின்

129. நந்தி அருள்பெற்ற நாதரை நாடிடின்
நந்திகள் நால்வர் சிவயோக மாமுனி
மன்று தொழுத பதஞ்சலி வியாக்ரமர்
என்றிவர் என்னோ டெண்மரு மாமே.

நந்தியெம் பெருமான்பால் அவர்தம் திருவருட்டுணையால் பொருள்மறை கேட்டுப் போற்றி யொழுகும் மெய்கண்டார் நால்வராவர். மெய்கண்டார் - மாணவர். அவர் சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் என்ப. சிவயோக மாமுனிவர், பதஞ்சலியார் எனப்படும் பாம்புக்கால் முனிவர், வியாக்கிரபாதர் எனப்படும் புலிக்கால் முனிவர் ஆகிய மூவர். தன்னொடுங் கூட்டி எண்மர் என்றனர். நாதர் - செந்நெறிமுதல்வர்; சித்தாந்த ஆசிரியர்.

நந்திகள் நால்வர் - சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர். மன்று தொழுத பதஞ்சலி - தில்லையில் நடம் கண்ட பதஞ்சலி முனிவர்.

## 130. நந்தி அருளாலே நாதனாம் பேர்பெற்றோம்

130. நந்தி அருளாலே நாதனாம் பேர்பெற்றோம்
நந்தி அருளாலே மூலனை நாடினோம்
நந்தி அருளாவ தென்செயும் நாட்டினில்
நந்தி வழிகாட்ட நானிருந் தேனே.

தன்னை முழுமுதற் சிவனாம் தலைவற்கு அடிமையாக ஒப்புவித்தவர் அத் திருவருளால் நாதன் எனப்படுவர். அச் சிறப்புப் பெயரே பெயராக அழைக்கவும்படுவர். அந் நந்தியின் அருளாலே ஆ மேய்க்கும் மூலன் திருவுருவின்கண் புகுந்தேன். நந்தி அருளாவது நாட்டினில் என்செயுமெனின்? நந்தி வழிகாட்டவே நானிருந்து முந்திய தொண்டெலாம் முயல்கின்றேன். நந்தி - ஆலமர் செல்வன். வழிகாட்ட - சித்தாந்த நெறிகாட்ட. அடிமையாயினார்க்கு நந்தியருள் எல்லாம் இனிதினியற்றும் என்க.

நந்தி . . . நாடினேன் - நந்தியெம்பெருமான் திருவருள் இறந்த மூலனுடைய தேகத்தில் புகுந்தேன்.

## 131. நால்வரும் நாலு திசைக்கொன்று நாதர்கள்

131. நால்வரும் நாலு திசைக்கொன்று நாதர்கள்
நால்வரும் நானா விதப்பொருள் கைக்கொண்டு
நால்வரும் நான்பெற்ற தெல்லாம் பெறுகென
நால்வருந் தேவராய் நாதரார்களே.

நாற்புலத்து முள்ளார் உய்தற் பொருட்டு ஆங்காங்குப் பொருந்திய தலைவரானார்கள். அந் நால்வரும் பல்வேறு வகையான திருவருட் பொருளைக் கைக்கொண்டு அவர்கள் தாம் பெற்றதெலாம் இவ்வுலகம் பெறுக என, அந் நால்வரும் செம்பொருட் சிவத்தை அகந்தழுவியவராய் அதனால் சிவமானவராய்ச் சித்தாந்த முதல்வரானார்கள்.

## 132. மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்

132. மந்திரம் பெற்ற வழிமுறை மாலாங்கன்
இந்திரன் சோமன் பிரமன் உருத்திரன்
கந்துருக் காலாங்கி கஞ்ச மலையனோடு
இந்த எழுவரும் என்வழி யாமே.

திருவாவடுதுறையின்கண் திருமூல நாயனாருடன் இத் திருமந்திர நூலைக் கற்று மாணவர்களாக வீற்றிருந்த நற்றவமுனிவர்கள் எழுவராவர். அவர்கள் கந்துருவனைய நந்தா நிலையினர். அவர்கள் திருப்பெயர் வருமாறு. மாலாங்க முனிவர், இந்திர முனிவர், சோம முனிவர், பிரமமுனிவர், உருத்திர முனிவர், காலாக்கினி முனிவர், கஞ்சமலைய முனிவர் என்ப. இம் முனிவர்கள் எழுவர்களும் தன் வழி வந்தவர்களென இதன்கண் திருமூல நாயனார் அருளுகின்றனர். இஃது அகச்சான்றாகும்.

மாலங் . . . . . . . . . மலையன் - திருமூலருடைய ஏழு மாணவர்கள் ஆவடுதுறையில் உடனிருந்தவர்கள்.

## 133. மொழிந்தது மூவர்க்கும் நால்வர்க்கும் ஈசன்

133. மொழிந்தது மூவர்க்கும் நால்வர்க்கும் ஈசன்
ஒழிந்த பெருமை இறப்பும் பிறப்புஞ்
செழுஞ்சுடர் மூன்றொளி யாகிய தேவன்
கழிந்த பெருமையைக்1 காட்டகி லானே.

இறப்பும் பிறப்பும் இயல்பாகவே என்றும் நீங்கிய சிவபெருமான் மேலோதிய எழுவர்க்கும் என்னுள்ளிருந்து மொழிந்தருளினன். செழுமை மிக்க மாறா ஒளியுடைய அன்பு, அறிவு, ஆற்றல் மூன்றனையும் இயல்பாகவே யுடையவன் சிவன். அவன் தன் திருவடிக் காதலர் அல்லாதார்க்கு எல்லையில்லாத தன்பெருமையைக் காட்டுந் தன்மையன் அல்லன். அன்பு அறிவு ஆற்றல்: இச்சை, ஞானம், கிரியை. கழிந்த - எல்லையில்லாத. மூன்றொளி என்பதற்கு ஞாயிறு திங்கள் தீ எனலும் ஆம்.

## 134. தத்துவ ஞானம் உரைத்தது தாழ்வரை

134. தத்துவ ஞானம் உரைத்தது தாழ்வரை
முத்திக் கிருந்த முனிவருந் தேவரும்
ஒத்துடன் வேறா யிருந்து2 துதிசெயும்
பத்திமை யால்இப் பயனறி யாரே.

சிவபெருமான் திருவெள்ளிமலையின் திருத்தாழ்வரையில் பத்திப் பெருக்காம் பேரன்பால் பாடிப் பரவிப் பணிந்து வழிபட்டுக் கொண்டிருந்த முனிவர் தேவர் முதலாயினார் பொருட்டு முப்பொருளுண்மை செப்பும் மெய்யுணர்வு நூலினை உரைத்தருளினர். அவர்கள் வீடுபேற்றையே வேண்டி வழிபட்டனர். அவர்கள் ஒன்று கூடியும் தனித்து நின்றும் வழிபட்டனர். இத்கைய நூலின் சிறந்த பயனை ஏனையோர் எளிதின் உணரார். ஒத்துடன் வேறாய் என்பதற்குச் சிவபெருமான் ஒன்றாய்ச் சேர்ந்து உடனாய்ச் செலுத்தி வேறாய்ச் செறிந்து உயிர்க்குயிராய் நிற்பன் என்றலும் ஒன்று. சேர்தல் செறிதல் செலுத்தல் ஒரு மூன்று, ஓரின் உயிர்க்குயிரின் பண்பு. மெய்யுணர்வு நூல்களே மெய்கண்ட நூல்களென்ப.

## 135. நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு

135. நந்தி இணையடி நான்தலை மேற்கொண்டு
புந்தியின் உள்ளே புகப்பெய்து போற்றிசெய்து
அந்தி மதிபுனை அரனடி நாள்தொறுஞ்
சிந்தைசெய் தாகமஞ் செப்பலுற் றேனே.

ஆலமர் செல்வனாம் நந்தியெங் கடவுளின் திருவடியினைத் தலைமேற் கொண்டு, கொண்டவாறே இறுப்பு மெய்யாம் புத்தியின்கண் நிலைபெறச் செய்து செந்தமிழ்ப் போற்றித்தொடர் புகன்று வழிபட்டு வளரும் மதியினைப் புனைந்த திருச்சடையினை உடைய சிவபெருமானை நாடொறும் உள்ளத்தின்கண்ணே நாடி உயிர்க்கு உறுதி பயக்கும் செந்தமிழ்ச்சிவாகமம் மொழியலுற்றேன் என்பதாம். ஆகமம் - இறைவன் நூல். ஆவி நிறைவாம் முறைநூல் எனவும் படும். ஆ - ஆவி. கமம் - நிறைவு. புந்தி - அறிவு. சிந்தை செய்து - இடையறாது நாடி ஆகமம் - தமிழாகமம். ஆகமம்: ஆவியின் அறிவை நிறைவிக்கும் நூல்.

## 136. செப்புஞ் சிவாகமம் என்னும்அப் பேர்பெற்றும்

136. செப்புஞ் சிவாகமம் என்னும்அப் பேர்பெற்றும்
அப்படி நல்கும் அருள்நந்தி தாள்பெற்றுத்
தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின்
ஒப்பில் எழுகோடி யுகம்இருந் தேனே.

ஆருயிர்கள்மாட்டுச் சிவப்பண்பு நிறைவதற்காம் வழிவகை ஆக்கும் கருவிநூல் சிவாகமம் எனப்படும். அம்முறையானே அருளிச் செய்தவன் ஆலமர் செல்வனாகிய நந்தியெம் பெருமான். அவன் திருவடிப்புணை கொண்டு அப் பெயரே பெற்றுத் திகழுமாறு என்னைக் கொண்டும் இயற்றியருளினன். 'நள்ளிருளிலும் நட்டம் நாதன் பயின்றாடலின்' பொன்னம்பலமும் ஆருயிர்களின் நெஞ்சத் தாமரையும் தப்பிலாமன்று எனத் தமிழகச் செந்நெறிச் சான்றோர் திருவருளின் திறத்தால் தொன்மையே நன்மையாக மொழிந்தனர். அத் திருக் கூத்தினை அவனருளால் கண்டபின் ஒப்பில்லாத அளவிலா ஊழிகள் அமர்ந்திருந்தேன்.

யுகம் - ஆண்டு (சதுர்யுகக் கணக்குகள் எல்லாம் பாரத காலத்தில் வியாசரால் வகுக்கப்பட்டன). யுகாதி - வருடப்பிறப்பு என்பதை நோக்க.

## 137. இருந்தவக் காரணங் கேளிந் திரனே

137. இருந்தவக் காரணங் கேளிந் திரனே
பொருந்திய செல்வப் புவனா பதியாம்
அருந்தவச் செல்வியைச் சேவித் தடியேன்
பரிந்துடன் வந்தனன் பத்தியி னாலே.

செம்பொருளின் துணிவாம் சித்தாந்த முதன்மை மாணவர் எழுவருள் ஒருவனாம் இந்திரனே! என்னைச் சிவபெருமான் தென்னாட்டின்கண் இருத்தியருளிய காரணம் கூறுகின்றேன் கேட்பாயாக. எல்லாவுலகங்கட்கும் தூமாயைச் செல்வ உலகத்துக்கு முழு முதல்வியாம் உடையாள் அருந்தவச் செல்வி எனப்படுவள். அவள் அனைத்துயிரும் சிவ வழிபாட்டுத் தவத்தினைக் கை ஏற்றுப் புரிதற்பொருட்டுத் தானே தவக்கோலம் பூண்டு சிவவழிபாடியற்றி யுணர்த்தியருளினள். அதனால் அருந்தவச் செல்வி எனப் பெயர் பூண்டனள். அவள் திருவடியை அடியேன் நீங்காப் பெருங்காதல் ஓங்குதலான் வழிபட்டு இருந்து வந்தனன்.

புவனா. . . செல்வி - புவனேசுவரி.

## 138. மாலாங்க னேயிங்கு யான்வந்த காரணம்

138. மாலாங்க னேயிங்கு யான்வந்த காரணம்
நீலாங்க மேனியள் நேரிழை யாளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்பவந் தேனே.

திருமூல நாயனார் தம் மெய்கண்ட மாணவருள் ஒருவராகிய மாலாங்கரைப் பார்த்து அருளுகின்றனர். மாலாங்கரே! சிவவுலகை நீங்கி ஓங்கிய தென்தமிழ் நாட்டகத்துக்கு அருள் என்னைக் கொண்டுவந்த காரணம் கூறுகின்றேன் கேள். சிவபெருமான் திருமலைக்கண் அழகிய நீலவண்ணத் திருமேனியும், நேரிய பொன்மணி அணிகளும் பூண்ட அம்மையுடன் திருவைந்தெழுத்தே திருவுருவாகக் கொண்டு ஒலிமுடிவாம் நாதாந்தத்துச் செய்தருளும் திருக்கூத்தின் அடிப்படை யுண்மைக் காரணங்களை மொழிந்தருளினன். அத்தகைய அருளொழுக்கு நிறைந்த தமிழ்முறையினை வேதமெனவும் சிவாகமம் எனவும் கூறுப. அதைச் செப்புதற் பொருட்டே யான் வந்தேன். நீலாங்கம் - கரிய அழகிய. மூலாங்கம் - அடிப்படை யுண்மைக் காரணங்கள். சீலம் - ஒழுக்கம்.

நீலாங்க . . . . . வேதம் - தமிழ் நான்மறை. (அறம் - பொருள் - இன்பம் - வீடு.)

## 139. நேரிழை யாவாள் நிரதிச யானந்தப்

139. நேரிழை யாவாள் நிரதிச யானந்தப்
பேருடை யாளென் பிறப்பறுத் தாண்டவள்
சீருடை யாள்சிவ னாவடு தண்டுறை
சீருடை யாள்பதஞ் சேர்ந்திருந் தேனே.

திருவாவடுதுறைக்கண் சிறந்த அணிகலன் அணிந்து விளங்கும் திருவருளம்மை உயர்வற உயர்ந்த ஒருபேரின்பத் திருப்பெயரினள்; அடியேனுடைய பிறப்பினை அறுத்து ஆண்டவள் அவளே. சிவனுடன் விட்டு நீங்காது இடப்பாகத்து ஒட்டியுறையும் சிறப்பினையுடையவள். அத்தகைய எல்லாச் சிறப்பினையுமுடைய திருவருளம்மையின் திருவடியினைச் சேர்ந்திருந்தேன். சேர்ந்திருத்தல் - இடையறாது நினைந்திருத்தல்.

# 140. சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்

140. சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்
சேர்ந்திருந் தேன்சிவ னாவடு தண்டுறை
சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலிற்
சேர்ந்திருந் தேன்சிவன் நாமங்கள் ஓதியே.

சிவமங்கைதன் பங்கனாகிய சிவபெருமானைக் கூடியிருந்தேன். சிவனுக்குச் சிறப்பாக உடைய திருவாவடுதுறைக்கண் கூடியிருந்தேன். திருவாவடுதுறைத் திருக்கோவிலின்கண் மேல்பாலுள்ள திரு அரசமரத்து நிழலில் கூடியிருந்தேன். சிவன் திருநாமம் திருவைந்தெழுத்தென்ப. அது 'நந்திநாமம் நமச்சிவாயவே' என்பதனால் உணரலாம். பண்டையோர் மந்திர எழுத்துக்களை மாத்திரை கூட்டியும் குறைத்துங் கடைக்குறைத்தும் கையாண்டு வந்தனர். அதனாலேயும் அது மறை எனவும் பெயர் பெற்றது. இவ்வுண்மை 'அவ்வுடன்' என்று தொடங்கும் சிவஞானசித்தியார் (4-1-1) திருப்பாட்டின்கண் சிவஞான முனிவர் உரைத்தருளிய உரையான் உணரலாம். அது வருமாறு: 'பிரணவமாகலின் உள்ளவாறே வெளிப்படக் கூறாது ஒவ்வெனக் கடைக் குறைத்துக் குறுக்கல் விகாரமாக்கிக் கூறினார்.' எனவே 'நமசிவய' என்பதே நமசிவாய என நீட்டல் விகாரம் பெற்றது. சிவ நாமங்கள்: நமசிவய, சிவயநம, சிவயசிவ, சிவசிவ என்பனவாம். இவை நன்னெறி நான்மைக்கும் முறையே உரிய மேன்மை மந்திரங்களாம். இவற்றின் பெருமையை வருமாறு நினைவு கொள்க. விளக்கம்

முன்னுரைக்கண் காண்க. செவிலியொடு நற்றாய் சிவமணமே இன்பச், சுவையமுந்தல் நான்மை எழுத்தைந்து.

சிவபோதி - சிவன் கோவிலில் உள்ள அரசு.

## 141. அகலிடத் தார்மெய்யை அண்டத்து வித்தைப்

141. அகலிடத் தார்மெய்யை அண்டத்து வித்தைப்
புகலிடத் தெம்மெய்யைப்3 போதவிட் டானைப்
பகலிடத் தும்இர வும்பணிந் தேத்தி
இகலிடத் தேஇருள் நீங்கிநின் றேனே.

அனைத்துலகின்கண் வாழும் எல்லாவுயிர்கட்கும் உயிர்க்குயிராய் நிற்கும் மெய்ப்பொருளை, எல்லா அண்டங்களும் மாயா காரியமாக வெளிப்படுதற்கு வினைமுதற் காரணமாய் நிற்கும் வித்தை, என்றும் நின்று பொன்றாப் பேரின்பத்தினைத் தெவிட்டாதருளும் வீடு பேற்று நிலைக்களமான புகலிடத்தை, அவ்விடத்து அருளால் அடியேனைப் புகவிட்ட உண்மை யறிவின்ப வடிவினனைப் பகலும் இரவும் ஓவாது பணிந்து தொழுது பெரும்பாலும் மாறுபாட்டினைத் தரும் இவ்வுலகத்திடத்து அருளால் ஆணவவல்லிருளினின்றும் நீங்கி நின்றேன். இகல் - மாறுபாடு; உலகம் நிற்பனபோன்று நில்லா நிலைமைத்து. இருள் - கார் அறிவு; அறியாமை.

புகலி . . . . . டானை - மறைத்துவைத்த இடத்திலிருந்த என் உடம்பை மறையும்படி செய்தானை.

## 142. இருந்தேன்இக் காயத்தே எண்ணிலி கோடி

142. இருந்தேன்இக் காயத்தே எண்ணிலி கோடி
இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே
இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே
இருந்தேன் என்நந்தி இணையடிக் கீழே.

அருளால் தரப்பெற்று நடமாடுந் திருக்கோவிலாகிய இவ்வுடம்பகத்தே அளவிலாக் காலம் சிவன் இருக்கச் செய்ய இருந்தேன். வாடகை வீட்டிலிருப்பார் இருப்பு வீட்டுக்குடையவர் கட்டளைப்படியே முட்டின்றி முடியும் என்பது இதற்கு ஒப்பு. இராப் பகலற்ற இடமென்பது மறப்பு நினைப்பும் அற்று நெஞ்சம் வஞ்ச மின்றிச் சிவன் திருவடிக்கே இடமாக இருப்பது. எனவே மறவா நினைவுடன் இருந்தேன் என்பதாம். விண்ணாடவர் உற்ற போதெல்லாம் உண்ணாடித் தொழும்பதம் திருவடி அத் திருவடியே புகலிடமாக இருந்தேன். என்னையாட் கொண்டருளும் நந்தியெங் கடவுளின் திருவடிக்கீழ் தாடலைபோல் ஒடுங்கி இருந்தேன்.

## 143. ஞானத் தலைவிதன் நந்தி நகர்புக்கு

143. ஞானத் தலைவிதன் நந்தி நகர்புக்கு
ஊனமில் ஒன்பது கோடி யுகந்தனுள்
ஞானப்பா லாட்டி நாதனை அர்ச்சித்து
நானும் இருந்தேன்நற் போதியின் கீழே.

திருவடியுணர்வின் முதல்வியாக விளங்கும் திருவருளால் நந்திக்குரிய திருவாவடுதுறையின்கண் குற்றமற்ற ஒன்பது கோடி ஊழிகள் தவமிருந்தேன். திருமுறைச் செந்தமிழ்த் திருப்பாட்டுக்கள் ஓதிச் சிவபெருமானை வழிபாடாகிய அருச்சனையைப் புரிந்தேன். இத் திருமுறைகளே ஞானப்பால் என்க. அதனைச் சிவபெருமானுக்குச் சூட்டுதல் ஆட்டுதல். போதம விளைவிக்கும் நிலைக்களம் போதி. அஃது அரசமரம். அறிவுக் கூறாம் பிள்ளையார் அரச மரத்தடியில் எழுந்தருளியிருப்பதும் இதனை வலியுறுத்தும். அடியேனும் அத்தகைய நல்ல போதி மரத்தின் கீழ் இருந்தேன் என்க. எனவே உளப்பான்மைக்குத் தக்கவாறே உறைவிடமும் நாடுவர் நிறையருளினர் என்பது துணிபு.

நந்திநகர் - ஆவடுதுறை.

## 144. செல்கின்ற வாறறி சிவமுனி சித்தசன்

144. செல்கின்ற வாறறி சிவமுனி சித்தசன்
வெல்கின்ற ஞானத்து மிக்கோர் முனிவராய்ப்
பல்கின்ற தேவர் அசுரர் நரர்தம்பால்
ஒல்கின்ற வான்வழி யூடுவந் தேனே.

நன்னெறியில் ஒழுகும் ஒழுக்கத்தால் திருவடியுணர்வு கைவரப் பெறும். அவ்வுணர்வால் நினைப்பில் தோன்றும் சித்தசன் என்னும் கருவேளை முனிந்து வெல்லுதல் கூடும். அவர்களே மிக்கோராவர். அவர்கள் சிவ முனிவர்கள் என்று அழைக்கப்படுவர். முனிவர்களாகவும் தேவர்களாகவும் அசுரர்களாகவும் மக்களாகவும் நாளும் வளர்ந்து பெருகும் இத் திறத்தார்மாட்டு நுண்ணிய வான் வழியாக அருள்துணைக் கொண்டு வந்தனன். சிவமுனி - சிவமுன்னி: சிவனடியினை நினைந்து. சித்தசன் - மனத்தில் பிறப்பவன். ஒல்கின்ற - நுணுகுகின்ற.

## 145. சித்தத்தின் உள்ளே சிறக்கின்ற நூல்களில்

145. சித்தத்தின் உள்ளே சிறக்கின்ற நூல்களில்
உத்தம மாகவே ஓதிய வேதத்தின்
ஒத்த உடலையும் உள்நின்ற உற்பத்தி
அத்தன் எனக்கிங் கருளால் அளித்ததே.

சிவபெருமான் திருவருளால் திருவடியுணர்வு கைவரப்பெற்ற மெய்கண்ட மேலோர் உள்ளத்தில் அமையும் நூல்களில் தலைமையாக இறைவன் எழுப்ப முறையாக எழுந்து ஓதப்பெறும் ஒண்தமிழ் மறைமுறையாகிய முன்னை வேதாகமங்களை யொப்பச் சொல்லையும் பொருளையும் அடியேற்கு உள்நின்று அத்தன் அருளால் உணர்த்தியருளினன்.

உடல் - சொல் - உற்பத்தி - பொருள்.

## 146. நேர்ந்திடு மூல சரியை நெறியிதென்று

146. நேர்ந்திடு மூல சரியை நெறியிதென்று
ஆய்ந்திடுங் காலாங்கி கஞ்ச மலையமான்
ஓர்ந்திடுங் கந்துரு கேண்மின்கள் பூதலத்
தோர்ந்திடுஞ் சுத்த சைவத் துயிரதே.

திருவடிப் பேற்றிற்கு நேர்வழியாயுள்ள நான்கினுள் நேர்ந்திடும் அடிப்படைச் சீலம் என்னும் சரியை நெறி இத் தன்மைத்தென்று ஆய்ந்தவர் கந்துரு காலாங்கிமுனிவரும், கஞ்சமலையமான் முனிவரும் என்க. அவ்விருவர்களையும் நோக்கித் திருமூலர் அருளுகின்றனர். இச் சீலம் இந் நிலவுலகத்துத் தனி முதற் சிவனெறியாகிய சுத்த சைவத்துக்கு ஆராய்ந்து கடைப்பிடிக்கும் உயிராம் என்க. உயிர் - நானெறித்தொண்டு.

## 147. நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்

147. நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரந்
தான்பற்றப் பற்றத் தலைப்படுந் தானே.

திருவருளால் திருவடியுணர்வால் அடியேன் பெற்ற இறவாப் பேரின்பம் இவ்வையகம் பெற்று இன்புறுமாக. செந்நெறிச் செல்வர்களாகிய நற்றவத்தான் உயர்ந்தோர், இடையறாது பெருங் காதலால் பற்றி நின்ற விழுமிய முழுமுதற் சிவம் மறைப்பொருளாகும். அப்பொருளினை எய்தும் மெய்நெறி சொல்லிடின், ஊனாகிய நெஞ்சத்திடத்து ஓசை அருவாய் நிற்கும். அதன்பின் ஆருயிரின்கண் அவ்வோசை உணர்வுருவாய்த் திகழும். அம் மந்திரம் செந்தமிழ் நான்மறைச் 'சிவசிவ' இந்தத் தனிப்பெருந் தமிழ்மறையினை ஆருயிர் இடையறாது அழுந்த அழுந்தக் கணிக்கக் கணிக்கத் திருவடியில் தலைக்கூடும். ஊன் நெஞ்சம் - ஆகுபெயர். உருவால் வரி அருவாம் ஓசையுணர்வின், உருவால் உயிரின்பாம் ஓர்.

ஊன் பற்றி - தசைபொதி நாவைப் பற்றி.

## 148. பிறப்பிலி நாதனைப் பேர்நந்தி தன்னைச்

148. பிறப்பிலி நாதனைப் பேர்நந்தி தன்னைச்
சிறப்பொடு வானவர் சென்றுகை கூப்பி
மறுப்பிலர் நெஞ்சினுள் மந்திர மாலை
உறைப்பொடுங் கூழநின் றோதலு மாமே.

சிவன் பிறவா யாக்கைப் பெரியோனாதலின் பிறப்பிலி முதல்வன் எனப்படுவன். அவனை நந்தியென்னும் திருப்பெயரான் அழைப்பர். சிவவுலகத்தில் வாழும் வானவராகிய வழிப்பேற்றினர் சிறப்பொடு திருமுறையோதி வழிபடுவர். தம் நெஞ்சினுள் செந்தமிழ்த் திருமுறையாம் இத் திருமந்திரமாலையினைத் திருவடி உறைப்புடன் திருவருளுடன் கூழநின்று மறவா நினைவுடன். இடையறாது ஓதுதலும் இயல்பாம் என்ப. வழிப்பேறு - பதமுத்தி. ஓதுதல் - பாராயணம் செய்தல்.

உறைப்பு - உறுதி.

## 149. சதாசிவம் தத்துவம் முத்தமிழ் வேதம்

149. சதாசிவம் தத்துவம் முத்தமிழ் வேதம்
மிதாசனி யாதிருந் தேனின்ற காலம்
இதாசனி யாதிருந் தேன்மன நீங்கி
உதாசனி யாதுட னேஉணர்ந் தேமால்.

அருளோனாகிய சதாசிவக் கடவுள் அருளிச் செய்த என்றும் மாறா மெய்ம்மை மறை முப்பொருள் தேற்றும் தமிழ்மறை. ஒருபுடையாக முத்தமிழினை முறையே உயிர் உள்ளம் உடல் என உலகியலிற் கொள்ளலாம். முத்தமிழ்: இயல் இசை கூத்து. அவற்றையே வீட்டியலிற் கொள்ளுங்கால் இறை உயிர் தளை எனக் கொள்ளுதல் சாலும். இத்துணை நாளும் அளவாயுண்ணும் அமைவுடையவனாக விருந்தேன். முத்தமிழ் வேதத்துக்கு உறைவிடமாக உள்ளத்தினையே அமைத்தேன். அம் மறையினைப் புறக்கணிக்காது திருவருளுடன் கூடியுணர்ந்தோம். மிதாசனி - மித + அசனி: அளவாயுண்போன். இதாசனி - உள்ளத்தை உறைவிடமாக நல்கியோன்.

சதா . . . வேதம் - படைப்புக் காலத்தில் சதாசிவனுடைய தத்துவமாகிய சாதாக்கிய தத்துவத்தினின்றும் வெளிப்பட்ட தமிழ் வேதம்.

## 150. அங்கிமி காமைவைத் தானுடல் வைத்தான்

150. அங்கிமி காமைவைத் தானுடல் வைத்தான்
எங்குமி காமைவைத் தானுல கேழையும்
தங்கிமி காமைவைத் தான்தமிழ்ச் சாத்திரம்
பொங்கிமி காமைவைத் தான்பொருள் தானுமே.

ஆருயிரின் உடலகத்து உணவினைச் செரிக்கத் தக்கவாறு அகட்டுத் தீ அமைத்தனன். அத் தீ அவ்வளவுக்கு மேல் மிகாமலிருப்பதும் அவன் திருவாணையே. அதுபோல் கடலகத்தும் அது காலமல்லாக் காலத்தும் பொங்கி மிகுந்து, உலகத்தை அழித்துவிடாதபடி ஒரு தீயினை அமைத்தனன். அதனால் ஏழுலகமும் கேடின்றி நிலை பெறுவவாயின. அதுபோல உலகத்தின்கண் ஆணவவல்லிருள் மிகுந்து ஆருயிர்களின் அறிவைத் தடைப் படுத்திப் பிறப்புக்கு ஆளாக்கும் தன்மை மிகாமைப் பொருட்டுத் தமிழ்த் திருமறையும் திருமுறையும் முறையே புகழ்நூல் பொருள்நூல் வகையான் அமைத்தருளினன். திருமறை - நால்வர் முதலிகள் முதலாயினார் அருளிய பதினொரு திருமுறைகள். திருமுறை - திருமூலர் சொல்லாகிய தமிழாகமமும் மெய்கண்ட நூல்களும். இங்ஙனம் அமைத்தருளினவன் மெய்ப்பொருளாகிய சிவன் என்க.

தங்கி . . . சாத்திரம் - தமிழ் வேதாகமங்கள் இறந்து ஒழிந்தது திருவருளாலே.

## 151. பண்டித ராவார் பதினெட்டுப் பாடையுங்

151. பண்டித ராவார் பதினெட்டுப் பாடையுங்
கண்டவர் கூறுங் கருத்தறி வார்என்க
பண்டிதர் தங்கள் பதினெட்டுப் பாடையும்
அண்ட முதலான் அறஞ்சொன்ன வாறே.

கற்பன கற்றுத் திருவருள் துணையால் பொற்புற நிற்பார் புலவரெனப்படுவார். 'தம்மை ஐந்து புலனும் பின் செல்லும் தகைய'ராகிய நல்லொழுக்கினர் புலவர். அப் புலவரே பண்டிதர் எனப்படுவர். பண்டைக் காலத்து மொழிகளுள் துணையாந்தன்மை வாய்ந்த மொழி பதினெட்டு. பதினெட்டு மொழிக்கண்ணும் கூறப்படும் பொருட் கருத்தினை உள்ளவாறுணர்வார் பண்டிதரென்க. அப் பதினெட்டு மொழிகளையும் தக்கார் வாயிலாக அருளிச் செய்தவன் அனைத்தண்டங்கட்கும் முதல்வனாய் விளங்கும் அரன் என்னும் திருப் பெயரினையுடைய சிவபெருமான்.

## 152. பின்னைநின் றென்னே பிறவி பெறுவது

152. பின்னைநின் றென்னே பிறவி பெறுவது
முன்னைநன் றாக முயல்தவஞ் செய்கிலர்
என்னைநன் றாக இறைவன் படைத்தனன்
தன்னைநன் றாகத் தமிழ்செய்யு மாறே.

'அயல் வழக்கின் துறைவெல்லும் அசைவில் செந்தமிழ் வழக்கே' திருவடியுணர்வைக் கூட்டுவிக்கும் அருள் வழக்காகும். அத்தமிழ் வழங்கும் நாடே சிவனடி சேர்ப்பிக்கும் நற்றவம் புரிதற்கேற்ற பழ நாடாகும். இந் நாட்டகத்துத் தோன்றி முன்னமே நன்னெறி நான்மை நற்றவத்தினை முயன்று செய்கிலாதவர் பின்னும் பிறப்பெடுத்துத் துன்புறுவர். என்னே அவர்தம் பேதைமை. சிவபெருமான் என்னை நன்றாகப் படைத்தருளினன். தன்னை ஏனையார் திரிபின்றி உள்ளவாறு உணர்ந்து உய்தற்குக் கருவியாகிய செந்தமிழ்த் திருமுறையினை ஓதி வழிபடுதல் வேண்டும் எனத் திருவுள்ளங் கொண்டனன் சிவன். அத்தகைய தமிழ் அருள் நூலை அடியேனைக் கொண்டு பாடுவிக்கவும் எண்ணினன். அங்ஙனமே என்னைத் 'தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறு' இருத்தியருளினன். தமிழ் பரப்பியவர் ஆளுடைய பிள்ளையார்; தமிழ் உகந்தவர் சிவபெருமான்.

## 153. பெற்றமும் மானும் மழுவும் பிறிவற்ற

153. பெற்றமும் மானும் மழுவும் பிறிவற்ற
தற்பரன் கற்பனை யாகுஞ் சராசரத்து
அற்றமும் நல்கி அடியேன் சிரத்தினில்
நற்பத மும்அறித் தான்எங்கள் நந்தியே.

பெற்றமாகிய ஆனேறும் மானும் மழுவும் பூண்டது திருவருளோடும் ஆருயிரோடும் அனைத்துலகோடும் பிரிவற்றுப் பின்னலாய் நின்றருளும் சிவபெருமானின் திருவாணையாகும். தற்பரன் - தானே முழு முதலாய்நிற்கும் சிவன். கற்பனை - கட்டளை; திருவாணை. ஆனேறு, அறத்தின் குறிப்பாகும். மான், செந்தமிழ்மறை முறைகளின் குறிப்பாகும். மழு, திருவாணையின் குறிப்பாகும். இம் மூன்றும் ஒரு புடையாக உள்ளம் உரை உடல் எனக் கொள்ளலுமாம். மேலும் இவை திருவடிதலைக் கூட்டும் அறமும், அவ்வறத்தினை அறிவூட்டும் செறிதமிழ்மறை முறையாகிய மெய்ந்நூலும், அந் நூலின் வழி ஒழுகுவதற்கு உறுதுணையாகிய படைப்பு காப்பு துடைப்பு ஆகிய முத்தொழில் ஆணையும் குறிப்பனவாகும். மழுவாகிய முத்தலைவேல் மேற்குறித்த திருவாணைக் குறிப்பேயாகும். இதனால், அறத்தைச் செலுத்துபவனும், மறையின் ஒலிக்குள் ஒலியாய் நிற்பவனும், அயன் அரி அரன் என்னும் மூவர்க்கும் திருவாணை அருள்பவனும் சிவனே என்பது தெளிவாகும். இயங்குதிணை நிலத்திணை என்னும் இருவேறுயிர்களின் மெய்ம்மையினையும் உணர்த்தியருளினன். அடியேன் முடியின்மீது தன்

திருவடியினையும் சூட்டியருளினன். அவன் எங்கள் நந்திக் கடவுளாகிய சிவனே.

## 154. ஞேயத்தை ஞானத்தை ஞாதுரு வத்தினை

154. ஞேயத்தை ஞானத்தை ஞாதுரு வத்தினை
மாயத்தை மாமாயை தன்னில் வரும்பரை
ஆயத்தை யச்சிவன் தன்னை யகோசர
வீயத்தை முற்றும் விளக்கியிட் டேனே.

ஞேயமாகிய அறியப்படும் பொருளையும், ஞானமாகிய அறிவையும், ஞாதுருவாகிய அறிவோனையும், உணர்வு மெய்யாகிய தூவா மாயையும், உடல் மெய்யாகிய மூலப் பகுதி என்ற மாயத்தையும், உணர்த்து மெய்யாகிய தூமாயை மாமாயை ஆதலால் அம் மாமாயையையும், வனப்பாற்றலாகிய பரைத்தொகுதியையும், கடந்து, மாற்றம் மனம் கழிய நின்ற மறையோனாகிய அழிவில்லாத முழுமுதல் விழுப்பொருள் சிவன். அச் சிவனை அவனருளால் அவன் தாளுணர்த்த முழுதும் விளக்கியிட்டேன். இதன்கண் விளக்கப்பட்ட பொருள் எட்டு. அவை முறையே அறியப்படும் பொருள், அறிவு, அறிவோன், உடல் மெய், உணர்வு மெய், உணர்த்து மெய், வனப்பாற்றல், சிவன் என்ப. அறியப்படும் பொருள் நிலையிலாப் பொருள் நிலைப்பொருள் என இருவகைய. அவற்றுள் நிலையிலாப் பொருள் சுட்டுணர்வால் காணப்படும் உலகு உடல் முதலியன. நிலைப்பொருள் சுட்டுணர்வாலும் சிற்றுணர்வாலும் காணவொண்ணாத ஆனால் முற்றுணர்வால் காணவொண்ணும் இறை அருள் உயிர் முதலியன. அறிவு சுட்டறிவு, சிற்றறிவு, முற்றறிவு என மூவகைப்படும். சுட்டறிவு என்பது உயிர் மாயாகாரிய

அகப்புறக் கருவிகளைத் துணைக்கொண்டு மாயாகாரியப் பொருள்களை யுணர்தல். சிற்றறிவென்பது இக்கருவிகளைக் கொண்டு உணரும் நான் இக்கருவிகளுக்கு வேறான அறிவுப்பொருள் என்று உள்நின்று அருள் உணர்த்த உணர்தல். முற்றறிவென்பது சிவபெருமான் சிவகுருவாய் எழுந்தருளி வந்து சிவமாக்கி ஆட்கொண்டதும் திருவருளே கருவியாய்த் திருவடியை உணர்தல். அறிவோன் என்பது என்றும் அடிமையாய்ச் சார்ந்ததன் தன்மையாய் நின்று பயன்துய்க்கும் ஆருயிராகும். உடல்மெய்: இருபத்துநான்கு தத்துவங்களைக் கொண்டது. உணர்வுமெய்: ஏழு தத்துவங்களைக் கொண்டது. உணர்த்துமெய்: ஐந்து தத்துவங்களைக் கொண்டது. வனப்பாற்றல்: திருவருளாகிய உண்மை இயற்கைப் பேரறிவுப் பெரும்பொருள். சிவன்: அத் திருவருளை உடைய திருவடிப் பேரின்பத்தை ஆருயிர்க்குக் காட்டிக் கண்டு ஊட்டிவரும் ஒப்பில்லாத விழுமிய முழுமுதலாம் உண்மை அறிவு இன்ப எழிலுருவினன். தன்னில் வரும்பரை, சிவத்தினின்றும் பிரியாது தோன்றும் திருவருள். வீதல் - மலர்தல்; அழியாதிருத்தல்.

ஞேயம் - அறியப்படுபொருள். ஞானம் - அறிவு. ஞாதுரு - அறிபவன். பரை ஆயம் - சத்திகள் கூட்டம். வீயம் - பிறப்பிறல்லாச் சிவம்.

## 155. விளக்கிப் பரமாகும் மெய்ஞ்ஞானச் சோதி

155. விளக்கிப் பரமாகும் மெய்ஞ்ஞானச் சோதி
அளப்பில் பெருமையன் ஆனந்த நந்தி
துளக்கறும் ஆனந்தக் கூத்தன்சொற் போந்து
வளப்பில் கயிலை வழியில்வந் தேனே.

மேலோதியவற்றை விளக்கியருளியவன் மேலாகிய மெய்யுணர்வுப் பேரொளி. அவன் அளவில்லாத பெருமையையுடையவன். இன்பவடிவினனாகிய நந்தி. ஆருயிர்களை நடுங்கச் செய்யும் ஆணவ வல்லிருளை அவ்வுயிர்களாலேயே அடக்கும் அருட்பெருங் கூத்தன். அவன் செவியறிவுறுத்திய திருவைந்தெழுத்தினைச் சிறப்புற உணர்வில் பதித்து, அவன் திருவாணைவழி வளப்பம் மிக்க திருக்கயிலைமலையின்கணுள்ள நந்தி மரபில்யான் வந்தேன்.

சொற்போந்து - உபதேசம் பெற்று. கயிலைவழி - நந்தி பரம்பரை.

## 156. நந்திஅரு ளாலே மூலனை நாடிப்பின்

156. நந்திஅரு ளாலே மூலனை நாடிப்பின்
நந்திஅரு ளாலே சதாசிவ னாயினேன்
நந்திஅரு ளால்மெய்ஞ் ஞானத்துள் நண்ணினேன்
நந்திஅரு ளாலே நானிருந் தேனே.

நந்தியாகிய சிவபெருமான் திருவருளால் மூலன் உடம்பினுட் புகுந்தேன். பின்னும் அந் நந்தியருளாலேயே (149) 'சதாசிவம் தத்துவம் முத்தமிழ் வேத' மாகலின் இத் தமிழாகமத்தை ஓதினேன். என்னை? அருளோனாகிய சதாசிவ மெய்யினின்றும் நூல் வருதல் வாய்மையாகலினென்க. தமிழாகமம் ஓதுதலே சதாசிவனாதல். அவனருளாலேயே திருவடிப் பேற்றின்பமாகிய அம்மையினை இம்மையே பெற்றுள்ளேன். அந் நந்தியெங்கடவுள் திருவருளானே இவ் வுலகத் திருந்துள்ளேன். மூலன் - முதற் கடவுள் எனலுமாம்.

நந்தி . . . பின் - நந்தி யெம்பெருமான் திருவருளியக்க மூலனுடைய தேகத்தில் புக்குப் பின்.
பாயிரம் முற்றும்.

## 157. விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு

157. விண்ணின் றிழிந்து வினைக்கீடாய் மெய்கொண்டு
தண்ணின்ற தாளைத் தலைக்காவல் முன்வைத்து
உண்ணின் றுருக்கயொ ரொப்பிலா ஆனந்தக்
கண்ணின்று காட்டிக் களிம்பறுத் தானே.

ஆருயிர்களை ஆட்கொள்ள வேண்டிய அருள்வினைக் கீடாக சிவவுலகத்தினின்றும் நிலவுலகம் போந்து சிவகுருவாய்த் தோன்றியருளினன். மிகவும் குளிர்ச்சி பொருந்திய திருவடியைத் தொன்மை நன்மைக் காவலாய் முன்னமே அமைத்தருளினன். அவனே உள் நின்று நெகிழச்செய்து ஒப்பில்லாத பேரின்பக் கண்ணாகிய அகக்கண்ணைக் காட்டியருளிப் பழமலமாகிய களிம்பினை யறுத்தருளினன். களிம்பு, என்பது பெரும்பாலும் தூய வாய பொருள்களைத் தான் சார்ந்தமையான் தீயவாக்கும் நோயாகிய பகைப்பொருள். இது நாயனாரருளிய 'பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வம் நன்பால், கலந்தீமை யால்திரிந்தற்று.' என்னும் செந்தமிழ்ப் பொதுமறையான் உணரலாம்.

தலைக்காவல் - சிறந்த காவல். களிம்பு - ஆணவமலம்.

## 158. களிம்பறுத் தான்எங்கள் கண்ணுதல் நந்தி

158. களிம்பறுத் தான்எங்கள் கண்ணுதல் நந்தி
களிம்பறுத் தான்அருட் கண்விழிப் பித்துக்
களிம்பணு காத கதிரொளி காட்டிப்
பளிங்கிற் பவழம் பதித்தான் பதியே.

எல்லாரினும் உயர்ந்த முழுமுதலாகக் கருதப்படுவான் நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான். அவனே நந்தியங் கடவுள் என்று அழைக்கப் பெறுவான். அவன் ஆருயிர்களை அருளால் நன்னெறிப்படுத்தி இருவினையொப்பு, மலச்செவ்வி, திருவருள்வீழ்ச்சி வருவித்து களிம்பறுத் தருளினன். அகக் கண்ணாகிய அருட் கண்ணைத் திறப்பித்தருளினன். களிம்பாகிய மலம் எஞ்ஞான்றும் அணுக ஒண்ணாத இயற்கை உண்மை அறிவின்பப் பேரொளி சிவன். அவன் தன் திருவடியின் ஒளிக்கதிர் காட்டிச் சார்ந்ததன் வண்ணமாம் தன்மை வாய்ந்த பளிங்கினையொத்த ஆவியின்மாட்டு பவழம்போன்ற செம்மைத்தாகிய தன் திருவடியினைப் பதித்தருளினன். அவனே இறையாகிய சிவபெருமான். பவழம் - செம்மணியாகிய சிவன்.

களிம் . . . விழிப்பித்து - அன்பு முதிர்ச்சியினால் அருளை வளரச்செய்து ஆணவமலத்தை ஒழித்தான்.

## 159. பதிபசு பாசம் எனப்பகர் மூன்றிற்

159. பதிபசு பாசம் எனப்பகர் மூன்றிற்
பதியினைப் போற்பசு பாசம் அனாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாசம் நிலாவே.

தொன்மையிலுள்ள பதியாகிய இறையும், பசுவாகிய உயிரும், பாசமாகிய தளையும் என்று சொல்லப்படும் மூன்றினுள் இறையின் தொன்மையினை எல்லா நெறியினரும் சொல்லாலு.ம் பொருளாலும் ஐயந்திரிபின்றி மெய்க்காட்சியான் உடன்படுகின்றனர். அப் பதியினைப் போல் பசு பாசமும் தொன்மையே. பதியினைச் சென்று அணுகுந்தன்மையில்லாத உயிரியும் தளையும் பதி அருளால் எழுந்தருளிவரின் பசுத் தன்மையாகிய முனைப்பும் செயலும் மருளலும், இவற்றிற்கு முறையே வாயிலாகிய ஆணவம் கன்மம் மாயை என்னும் பாசமும் முனைத்து நில்லாது ஒடுங்கும். பசுத் தன்மை - தளையினுட்பட்ட தன்மை. இதனைத் தளையி எனலாம். நிலா - முனைத்து நில்லா; அடங்கியிருக்கும்.

## 160. வேயின் எழுங்கனல் போலேஇம் மெய்யெனும்

160. வேயின் எழுங்கனல் போலேஇம் மெய்யெனும்
கோயி லிருந்து குடிகொண்ட கோன்நந்தி
தாயினும் மும்மலம் மாற்றித் தயா என்னுந்
தோயம தாய்எழுஞ் சூரிய னாமே.

மூங்கிலினுள் ஒளியுடைத் தீ மறைந்து நிற்கின்றது. அதுபோல் ஆவியின் உடம்பகத்து உயிர்க்குயிராய்த் திருக்கோவில் கொண்டு விட்டுப் பிரியாக் குடியிருப்பாக உறைந்தருள்பவன் முழுமுதற்றலைவனாகிய நந்தியெம் பெருமான். அவன், பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிவுடையனாய் ஆருயிர்களின் மும்மை மலங்களையும் மாற்றியருள்வன். மேலும் தண்ணளியென்று சொல்லப்படும் தயாவுடையவன். அத் தயாவே திருவருள் வெள்ளமாய் எழும். அத் திருவருளையுடைய நந்தி சிவசூரியன் எனப்படுவன். சிவசூரியன்: அனைத்தொளிக்கும் ஒளியருளும் அறிவுப்பேரொளி.

## 161. சூரிய காந்தமுஞ் சூழ்பஞ்சும் போலவே

161. சூரிய காந்தமுஞ் சூழ்பஞ்சும் போலவே
சூரிய காந்தஞ் சூழ்பஞ்சைச் சுட்டிடா
சூரியன் சந்நிதி யிற்சுடு மாறுபோல்
ஆரியன் தோற்றமுன் அற்ற மலங்களே.

ஞாயிற்றின் கதிரை ஏற்றுப்புறத்தே விடும்கல் சூரிய காந்தக்கல் எனப்படும். அக்கல் சூரியன் முன்னன்றித் தன்னைச் சூழ்ந்துள்ள பஞ்சினைச் சுடமாட்டாது. அதற்குச் சுடும் ஆற்றலை நல்குவது ஞாயிறே. ஆயினும் அச் சூரியனும் இக்கல்லின் வாயிலாக அன்றிச் சுடான். அதுபோன்று சிவபெருமான் மும்மலத்தார் மலங்களை அகற்
றச் சிவகுருவாய் வெளிப்படுவன். வெளிப்பட்டுத் திருவைந் தெழுத்து ஓதியருள்வன். அங்ஙனம் ஆட்கொண்ட போதே ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களும் அற்றொழியும். இதுபோல் திருவைந்தெழுத்தும் நாட்டிலுள்ளார்க்கு ஏட்டிலுள்ளதேனும் ஆசான் கூட்டினாலல்லாமல் பயனெய்தாதென்க. ஏட்டிலுறும் ஐந்தெழுத்தும் எம்மான் அருட்குருசொற், கூட்டிலன்றிப் பேறின்றாம் கூறு. ஆரியன் : பேரறிவு நிறைந்தோன்; சிவன்; குரு மும்மலக் கட்டுடைய நம்மனோர்க்குச் சிவபெருமான் நம்முடன் போக்கும் வரவும் புணர்வுமிலாப் பின்னலாயிருப்பினும் அவன் கொள்ளும் குருஉருவின் வழியாகவே மலமகலும். அத்துவிதம்.

## 162. மலங்களைந் தாமென மாற்றி அருளித்

162. மலங்களைந் தாமென மாற்றி அருளித்
தலங்களைந் தானற் சதாசிவ மான
புலங்களைந் தானப் பொதுவினுள் நந்தி
நலங்களைந் தானுள் நயந்தான் அறிந்தே.

ஆணவம், கன்மம், மாயை, மாயாகாரியம், இவற்றை இயக்கும் நடப்பாற்றல் ஆகிய ஐந்தும் மலங்கள் என்று சொல்லப்படும். அருளோனாகிய சதாசிவன் சிவகுருவாய் எழுந்தருளிவந்து அவற்றை மாற்றியருளி, இவ்வுலக வாழ்வையும் சிவவுலக வாழ்வாகச் செய்தமைத்தனன். பொன்னம்பலத்து இன்பக் கூத்தினை இயற்றியருளும் நந்தியெங் கடவுள் ஆருயிரின் சிற்றறிவாகிய முனைப்புப் புலங்களை அகற்றினன். அதனால் இருள்சேர் இருவினையுள் விழையும் நல்வினையையும் நீக்கியருளினன். அதன்பின் ஆவியின் தூய்நிலை அறிந்தே நயந்து உள்ளெழுந்தருளினன்.

## 163. அறிவைம் புலனுட னேநான்ற தாகி

163. அறிவைம் புலனுட னேநான்ற தாகி
நெறியறி யாதுற்ற நீராழம் போல
அறிவறி வுள்ளே அழிந்தது போல
குறியறி விப்பான் குருபர னாமே.

(ப. இ.) ஆருயிரின் அறிவு ஐம்புலனுடன் கூடினதாகி எல்லை காண வொண்ணா ஆழத்தையுடைய நீர் நிலைகளில் இறங்கி ஏறும் துறையறியாது ஒருவர் செல்வதுபோலச் செல்லும். அச் சிற்றறிவு இயற்கைப்பேரறிவின் அடங்கியது போல் மயங்குவார்க்கும் மயக்ககற்றி நல்வழியை அறிவித்து நடத்துவிப்பான் சிவகுருவென்க.

நான்றதாகி - கூடினதாகி.

## 164. ஆமேவு பால்நீர் பிறிக்கின்ற அன்னம்போல்

164. ஆமேவு பால்நீர் பிறிக்கின்ற அன்னம்போல்
தாமே தனிமன்றில் தன்னந் தனிநித்தந்
தீமேவு பல்கர ணங்களுள் உற்றன
தாமேழ் பிறப்பெரி சார்ந்தவித் தாமே.

ஆவின் பாலுடன் கலந்த நீரினைப் பிரிக்கின்ற இயல்பு வாய்ந்த அன்னப்புள் போன்று ஒப்பில்லாத ஐவகை மன்றத்திலும், ஆருயிர் நெஞ்சத்திடத்தும் நீங்காதுறைகின்றனன் சிவன். அவன் மலங்களைப் பிரித்துத் தூய வெண்மை வாலறி வினைப்பதிவிக்கும் பொருட்டுத் தன்னந்தனியாகத் திருக்கூத்தியற்றுகின்றனன். அதனால் இருள்சேர் இருவினையையும் அதற்கீடாகிய பிறப்பினையும் தருவன். அதனால் தீமை பொருந்திய பல செயல்கள் பொருந்தின. கரணங்கள் - செயல்கள். அதனால் ஆருயிர்கட்கு ஏழுவகைப் பல்பிறப்புக்கள் எய்தும். அங்ஙனம் எய்துவிக்கும் வினைத்தொகுதி எஞ்சுவினை என்ப. எஞ்சுவினை எனினும் சஞ்சிதம் எனினும் ஒன்றே. அவ்வெஞ்சுவினை சிவகுருவின் திருக்கடைக் கண்ணோக்கத்தால் எரி சேர்ந்த வித்துப் போல் பயனற்று அழியும்.

தீமேவும் - தீமை பொருந்திய. எரி சேர்ந்த வித்து - மறுக்கப்பட்ட விதை.

## 165. வித்தைக் கெடுத்து வியாக்கிரத் தேமிகச்

165. வித்தைக் கெடுத்து வியாக்கிரத் தேமிகச்
சுத்தத் துரியம் பிறந்து துடக்கற
ஒத்துப் புலனுயிர் ஒன்றாய் உடம்பொடு
செத்திட் டிருப்பர் சிவயோகி யார்களே.

பிறவிக்கு வித்தாகிய ஆணவமலத்தினை அடக்கிச் செவி யறிவுறூஉவென்று சொல்லப்படும் திருவைந்தெழுத்தின் உபதேச முறைப்படி கணித்தலாகிய உருவேற்றுதலின் மிகுதியால் இயற்கை உண்மைப் பேருறக்கமாகிய சுத்தத் துரியம் பிறக்கும். பிறக்கவே பாசப்பிணிப்பாகிய தொடக்கு அறும். அத் தொடக்கறவே பொறிபுலன் கலன் உடம்பெல்லாம் முன்போலவே காணப்படினும் அவற்றுடன் தூய ஆவியும் ஒத்து உறையினும் சிவன் நினைவேயன்றி உலக நினைவு சிறிதுமில்லாதிருக்கும் அந்நிலையே நல்லாரின் நனிதிகழ் நிலையாம். இதுவே செத்திட்டிருக்கும் நிலை. இவர்களே சிவயோகியர் ஆவர்.

வியாக்கிரம் - உபதேசச்சொல். உடம்பொடு செத்திட்டிருப்பார் - உலகவாசனை அற்று இருப்பர்.

## 166. சிவயோக மாவது சித்தசித் தென்று

166. சிவயோக மாவது சித்தசித் தென்று
தவயோகத் துள்புக்குத் தன்னொளி தானாய்
அவயோகஞ் சாரா தவன்பதி போக
நவயோக நந்தி நமக்களித் தானே.

சிவன் நினைவாய்ச் சிவனுடன் கூடியிருக்கும் தவத்தோர் சிற்றறிவு அறிவில்லது என்று சொல்லப்பெறும் பசு பாசத் தன்மைகள் நீங்கப் பெறுவர். தவ - நீங்க, சிவயோகத்தே நிலைத்துத் தம்மறிவு சிவனறிவாய்த் திகழ்வர். பிறப்பினுக்கு வாயிலாகிய ஆணவகன்ம மாயைகள் சாரமாட்டா. அத்தகைய நற்றவத்தோர், சிவமாய் நிறையும் நிறைவினையுடையராவர். அப் பெருநிலையினை நவயோக நந்தி நமக்களித்தருளினன். சித்தசித்து - அறிவறியாமை. அவயோகம் - பிறப்பு இறப்புக்கு உட்படுதல். நவம் - புதுமை.

## 167. அளித்தான் உலகெங்குந் தானான உண்மை

167. அளித்தான் உலகெங்குந் தானான உண்மை
அளித்தான் அமரர் அறியா உலகம்
அளித்தான் திருமன்றுள் ஆடுந் திருத்தாள்
அளித்தான் பேரின்பத் தருள்வெளி தானே.

சிவபெருமான் உலகமே உருவமாக விளங்கும் கலப்பால் தானாம் உண்மையினை அருளினன். அமிழ்துண்டும் செத்துப் பிறக்கும் சிறு தெய்வங்களாம் அமரராறியாத சிவவுலகங்களை அளித்தருளினன். திருமன்றுகளில் திருக்கூத்தியற்றும் திருவடித் தாமரையினை அளித்தருளினன். பேரின்பப் பெருவாழ்வாம் அறிவுப் பெருவெளியினை அளித்தருளினன்.

## 168. வெளியில் வெளிபோய் விரவிய வாறும்

168. வெளியில் வெளிபோய் விரவிய வாறும்
அளியில் அளிபோய் அடங்கிய வாறும்
ஒளியில் ஒளிபோய் ஒடுங்கிய வாறும்
தெளியும் அவரே சிவசித்தர் தாமே.

திருவருள்வெளி சிவபெருமான்வெளியின்கண் சென்று ஒடுங்கிய முறைமையும், சிற்றுயிர்கள்மாட்டு வைக்கும் பேரன்பாகிய உயிரளி சிவபெருமான் பெரும்பேரின்ப அளியில் அடங்கியவாறும், திருவடியுணர்வு கைவந்த அருளொளி உயிர் சிவஒளியில் உள்ளொடுங்கியவாறும் திருவருளால் சிவஞானத்தால் தெளியுமவர்களே சிவ சித்தராவர். சிவசித்தர் : செம்பொருட்டுணிவினர். வெளி, மனவெளி எனலும் ஒன்று.

## 169. சித்தர் சிவலோகம் இங்கே தெரிசித்தோர்

169. சித்தர் சிவலோகம் இங்கே தெரிசித்தோர்
சத்தமுஞ் சத்த முடிவுந்தம் முள்கொண்டோர்
நித்தர் நிமலர் நிராமயர் நீள்பர
முத்தர்தம் முத்தி முதல்முப்பத் தாறே.

மேலோதிய சிவசித்தர் சிவவுலகினை இம்மையிலே இருக்குமிடத்தே கண்டு வழிபட்ட மாண்பினர். ஓசையும் அவ்வோசை ஒடுங்கும் தூமாயையும் திருவருளால் தம்முள் கண்ட தனித் தவத்தவராவர். அவர்கள் சிவத்துடன் கூடினமையால் பிறப்பு இறப்பு அற்றுச் சிறப்புற்று என்றும் ஒன்றுபோலிருப்பவர். மலமற்றவர். மலச்சார்பானிகழும் இருவினை மாசற்றவர். என்றும் அழியா விழுப்பேற்றினர். அவர் எய்தும் விழுப்பேறு ஏணிப்படிபோல் அமைந்த அருஞ்சைவர் தத்துவம் முப்பத்தாறினையும் கடந்த மாற்ற மனங்கழிய நின்ற தோற்றருநிலை.

## 170. முப்பதும் ஆறும் படிமுத்தி ஏணியாய்

170. முப்பதும் ஆறும் படிமுத்தி ஏணியாய்
ஒப்பிலா ஆனந்தத் துள்ளொளி புக்குச்
செப்ப அரிய சிவங்கண்டு தான்தெளிந்து
அப்பரி சாக அமர்ந்திருந் தாரே.

மண்முதல் சிவம் ஈறாகச் சொல்லப்படும் முப்பத்தாறு மெய்களும் ஏணி போன்று பல படிகளையுடைய வழிப்பேறாகிய பதமுத்திக்கு ஏறும் வழிகளாகும். அவ்வழியாக அருளால் கடந்து சென்று தனக்குத்தானே ஒப்பாய்த் தன்னிகரின்றி விளங்கும் இயற்கை உண்மை அறிவுப்பேரின்ப உள்ளொளியோடு அருளால் உள்புக்குச் சொல்ல ஒண்ணாத சிவபெருமானைக் கண்டு திருவடி உணர்வால் தெளிவடைந்து அச் சிவனாகவே என்றும் ஒன்றுபோல் அமர்ந்திருந்தனர். மெய் - தத்துவம். அமர்ந்திருத்தல் - சிவன் நிறைவு ஒன்றினையே உணர்ந்து அதன்கண் அழுந்தியிருத்தல்.

## 171. இருந்தார் சிவமாகி எங்குந்தா மாகி

171. இருந்தார் சிவமாகி எங்குந்தா மாகி
இருந்தார் சிவன்செயல் யாவையும் நோக்கி
இருந்தார் முக்காலத் தியல்பைக் குறித்தங்கு
இருந்தார் இழவுவந் தெய்திய சோம்பே.

மேலோதியவாறே சிவமாகியிருந்த மெய்யடியார் அச் சிவனிறைவில் சமநிறைவாய் நிற்றலினால் எங்குந் தாமாகி நின்றார். அச் சிவன் அருளிச் செய்யும் அருளிப் பாட்டினை அவனருளால் கண்டிருந்தனர். இறப்பு நிகழ்வு எதிர்வு என்னும் முக்காலமும் ஒருபுடையாகப் புலம்பு புணர்வு புரிவு என்னும் முந்நிலைகளாகவும் கூறுதல் பொருந்தும். அம்மூன்றன் இயல்புகளையும் நினைவுணர்விற் கண்டிருந்தனர். இருள் முனைப்பும் மருள்முனைப்பும் அறுதலாகிய இழவுவந்து அருள் முனைப்பால் தற்செயலறுதலாகிய சோம்பெய்தியிருப்பர். இருள் முனைப்பு - யான் என்னும் செருக்கு. மருள் முனைப்பு - எனதென்னும் செருக்கு. அருள் முனைப்பு - செருக்கறுதல். புலம்பு - கேவலம். புணர்வு - சகலம். புரிவு - சுத்தம்.

இழவு - ஒழிவு. சோம்பு - செயலற்றிருத்தல்.

## 172. சோம்பர் இருப்பது சுத்த வெளியிலே

172. சோம்பர் இருப்பது சுத்த வெளியிலே
சோம்பர் கிடப்பதுஞ் சுத்த வெளியிலே
சோம்பர் உணர்வு சுருதி முடிந்திடஞ்
சோம்பர்கண் டாரச் சுருதிக்கண் தூக்கமே.

தற்செயலற்றுச் சிவச் செயலாக இருப்பவர் சோம்பர் எனப்படுவர். அத்தகையார் தங்கியிருப்பது இயற்கை உண்மைத் தூவெளியாகிய சிவவெளியில். அவர் பேரின்பம் நுகர்ந்து கிடப்பதும் அச் சிவ வெளியிலேயேயாம். அவர் உணர்வு மறைக்கும் எட்டாத முடிவிடமாகிய சிவவெளியில் திருவடியுணர்வோடு ஒன்றி உழந்துணரும். அவர்கள் மறையாகிய சுருதிக்கண் நினைவறுதலையே கண்டனர். உழந்துணர்தல் - அனுபவித்தல். இதன்கண் இருப்பது கிடப்பது. உணர்வது என்னும் சொற்கிடக்கை முறையான் முறையே அன்பு ஆற்றல் அறிவென்னும் உயிர்ப் பண்பு மூன்றும் சிவத்தின் பால் ஒருங்கு
நிகழும் உண்மையினை ஒருபுடை யொப்பாக உணரலாம். தூக்கம் : மறை கடந்த இன்பத்துயில் என்றலுமாம். புலனாம் உடலுரையிற் போக்கற்றே யுள்ளம் நலனுணர்வில் போகுவர் சோம்பர்.

## 173. தூங்கிக்கண் டார்சிவ லோகமும் தம்உள்ளே

173. தூங்கிக்கண் டார்சிவ லோகமும் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்சிவ யோகமும் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்சிவ போகமும் தம்உள்ளே
தூங்கிக்கண் டார்நிலை சொல்வதெவ் வாறே.

தூங்காமல் தூங்கி அறிதுயிலாய் நிற்கும் மெய்யன்பர்கள் சிவவுலகமும் தம்முளே சிவனை நினைவதாலும் அவன் படைப்பாம் உலகினைத் தம் முனைப்பாக நினையாமையாலும் தம்முட் கண்டனர். உலகைக் காரிய வடிவமாகும் மாயை என்றுமட்டும் கருதாமல் அதனைப் படைத்தருளிய வினைமுதற் காரணனெனப்படும் சிவபெருமானின் திருவருட் பண்புகளையுந் தெருண்டு தம்முள் கண்டனர். அதுபோலவே சிவனை விட்டுப் பிரியாது ஒட்டிநிற்கும் சிவயோகமும் தம்முள்ளே கண்டனர். அதுபோல் சிவபோகமாகிய திருவடி நுகர்வினைத் தம்முள்ளே கொண்டனர். அதனால் நிலையா உலகை மறந்து நிலைக்கும் சிவனை உலையாவுணர்வில் உழந்துணர்ந்து நிற்பார் தூங்கிக் கண்டார். அவர் தம் திருவடிப் பேற்றின் பொருவரு நிலையினை ஒருவராலும் கூறவொண்ணா தென்க. தூங்கல்: தூங்காமல் தூங்கல்; அறிதுயில். இது புரிவு நிலையில் நான்காம் நிலை. புரிவுநிலையினைச் சுத்தாவத்தை என்பர். இதன்கண் துரியநிலை நிட்டையே தூங்காமல் தூங்கல்.

தூங்கி - செயலற்றிருந்து.

## 174. எவ்வாறு காண்பான் அறிவு தனக்கெல்லை

174. எவ்வாறு காண்பான் அறிவு தனக்கெல்லை
அவ்வா றருட்செய்வன் ஆதி யரன்தானும்
ஒவ்வாத மன்றுள் உமைகாண ஆடிடுஞ்
செவ்வானிற் செய்ய செழுஞ்சுடர்மா ணிக்கமே.

ஒப்பில்லாத ஐவகை மன்றத்தும் ஆருயிர் நெஞ்சத்தும் சிவகாமியம்மையார் ஆருயிர் உய்தற் பொருட்டுக் கண்டுகளிக்கச் சிவபெருமான் எப்போதும் திருக்கூத்தாடுகின்றனன். அவன் அறிவு வெளியாகிய செவ்வானிற் காணப்படும் இயற்கைச் செழுமைவாய்ந்த செஞ்சுடர் மாணிக்கமாவன். திருவருள் துணையால் விளக்க விளங்கும் ஆருயிரின் அறிவின் எல்லை சென்ற நிலையின் வண்ணம் ஆதியையுடைய அரன் அவ்வுயிர்கட்கு அருள் செய்வன்.

## 175. மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய்

175. மாணிக்கத் துள்ளே மரகதச் சோதியாய்
மாணிக்கத் துள்ளே மரகத மாடமாய்
ஆணிப்பொன் மன்றினில் ஆடுந் திருக்கூத்தைப்
பேணித் தொழுதென்ன பேறுபெற் றாரே.

உடையான் மாணிக்கச் செவ்வொளியாய், உடையாள் மரகதப் பச்சொளியாய்க் கலந்து விளங்குவர். அதனால் மாணிக்கத்தினுள்ளே மரகதச் சோதியாய் என்றனர். அம்மையே அப்பனுக்குத் திருமேனியாதலின் மரகத மாடத்துள்ளே மாணிக்கம் என்றனர். ஆருயிர்கட்கு அச்சுப்போல் தாங்கும் தாங்கியாய் நிற்றலின் ஆணிப்பொன் அம்பலத்து ஆடுந் திருக்கூத் தென்றனர். அத் திருக்கூத்தினை உள்ளத்தாற் பேணி, உரையால் வாழ்த்தி, உடம்பால் திருமுறை வழித்தொழுதவர் பெற்ற பெரும் பேற்றினை என்னென்று சொல்வது? இவ்வளவு என்று அளவிட்டுச் சொல்லொணா தென்க.

## 176. பெற்றார் உலகிற் பிரியாப் பெருநெறி

176. பெற்றார் உலகிற் பிரியாப் பெருநெறி
பெற்றார் உலகிற் பிறவாப் பெரும்பயன்
பெற்றார்அம் மன்றிற் பிரியாப் பெரும்பேறு
பெற்றார் உலகுடன் பேசாப் பெருமையே.

உலகிற் பிரியாப் பெருநெறி என்பது என்றும் இறவாத இன்ப அன்புநெறி. அதுவே சிவநெறி; செந்நெறி; நன்னெறி; திருநெறி; ஒளிநெறி; வீட்டுநெறி; பொதுநெறி என்க. திருவடியுணர்வு கைவந்த பெருமக்கள் அருளால் அந் நெறியினைப் பெற்றனர். அதன் பயனாக அவர்கள் பிறவாப் பெரும் பேறு பெற்றனர். திருவடியுணர்வே பொரு வருமன்றம். அம் மன்றிற் பிரியாப் பெரும்பேறே பேரின்பம். அதனையும் அவர்கள் பெற்றனர். அதனால் அவர்கள் உலகிறந்த ஒருவர் என்றும், உலகுடன் பேசாப் பெருமையரென்றும் உரைபெறுவாராயினர். உரை - புகழ். அம் மெய்யடியார்கள் தேனுண்ட வண்டெனச் சிவன் திருவடியில் நுகரும் இன்பம் உலகிற்குச் சொல்ல ஒண்ணாதென்க. பெருநெறி - திருவடியுணர்வு நெறி.

பிரியா . . . நெறி - முத்தி. பெற்றார் . . . பெருமையே மதுவுண்ட வண்டுகள்போல் தாம் கண்டு அனுபவிப்பதை விள்ளமுடியாத பெருமை.

## 177. பெருமை சிறுமை அறிந்தெம் பிரான்போல்

177. பெருமை சிறுமை அறிந்தெம் பிரான்போல்
அருமை எளிமை அறிந்தறி வாரார்
ஒருமையுள் ஆமைபோல உள்ளைந் தடக்கி
இருமையுங் கேட்டிருந் தார்புரை அற்றே.

ஒரு பிறப்பினுள் ஆமையினைப் போன்று தமக்கு இடர் வரும் நெறியில் ஐம்புலனையும் போக விடாது, இடரில் இன்பமே கடலெனப் பெருகும் நன்னெறியிற் போகச் செய்வதே புலனடக்கம் ஆகும். அங்ஙனம் புலனடக்கியவர்களே புலவோராவர். அவர்கள் எம்பிரான் அருளால் அடக்கப்பெருமையின் பயனாகக் கிடைத்தற்கு அரிய பிறவாச் சிறப்பினை எய்துவர். புலனடக்காப் புன்மையோர் அடங்காமையின் பயனாகச் சிறுமையுற்று எளியராய்ப் பிறப்பு இறப்புக்கு உட்படுவர். புரையாகிய ஐம்புலனடக்காக் குற்றமுடையார் பிறப்பும் சிறப்பும்

1. ஒருமையுள். திருக்குறள், 126.

2. ஒரு பிறப்பி. அப்பர், 6. 3 - 5.

ஆகிய இரண்டினையும்கேட்டுப் பிறப்புக்கே ஆளாகி வாளா இருப்பர். அக் குற்றமற்றவர் சிறப்புக்கு ஆளாகி அறப்பயன் சேர் பெரியராயிருப்பர். இருந்தார் : (குற்றமற்று) வாய்வாளா திருந்தார் என்றலும் ஒன்று. சிறப்பு - வீடுபேறு.

## 178. புரையற்ற பாலினுள் நெய்கலந் தாற்போல

178. புரையற்ற பாலினுள் நெய்கலந் தாற்போல
திரையற்ற சிந்தையுள் சிவனவன் செப்பும்
உரையற் றுணர்வோர் உடம்பிங் கொழிந்தால்
கரையற்ற சோதி கலந்தசத் தாமே.

அமிழ்து மோராகிய புரை கலவாத பாலினுள் நெய் மறைந்து வெளிப்படா திருப்பது போல் ஏனையார் உள்ளத்துள் ஒளிந்து நிற்கும் சிவபெருமான் பதைப்பாகிய அலையற்ற ஆருயிரின் தூய நெஞ்சத்தினுள் தயிரின் நெய்போல் வெளிப்பட்டருள்வன். அவன் சிவகுருவாய் வந்து அருளிச் செய்யும் திருவைந்தெழுத்தின் வழியே உரையற்று உணர்வோர் உடல் அருளால் இங்கு நீங்கும். நீங்கினால் எல்லையில்லாத திருவருள் ஒளியில் அவ்வுயிர் கலக்கும். கலந்து அழிந்து ஒன்றாகாமலும் கழிந்து இரண்டாகாமலும் உழந்துணர்ந்து அவ்வுண்மையோடு புணர்ந்து உண்மையாகவே நிற்கும். சத்து: நிலைத்தது; புக்கில்லாகிய திருவடிப் பேறு பெற்று வாழ்வது. உரை - பேச்சு. உணர்தல் - நினைதல்.

புரையற்ற பால் - புரை குத்தாத பால். உரையற்றுணர்வோர் - மவுன நிலையுற்றுச் சிவம் நினைவோர்.

## 179. சத்த முதல்ஐந்துந் தன்வழித் தான்சாரில்

179. சத்த முதல்ஐந்துந் தன்வழித் தான்சாரில்
சித்துக்குச் சித்தன்றிச் சேர்விடம் வேறுண்டோ
சுத்த வெளியிற் சுடரிற் சுடர்சேரும்
அத்தம் இதுகுறித் தாண்டுகொள் அப்பிலே.

சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் பூதமுதலாகிய தன்மாத்திரைகள் ஐந்தும் ஒடுங்கும் முறையில் ஒன்றனுள் ஒன்றாய் முப்பத்தாறு மெய்யும் ஒடுங்கும். இவற்றாலாகிய உடம்பு உலகங்களில் வாழ்ந்தவுயிர் அறிவுடைய உள்பொருள். அவ்வுள் பொருளுக்கு உடற்சார்பு நீங்கினால் அவ்வுயிர்க்கு என்றும் அறிவு விளக்கும் உயிர்ச் சார்பாம் சித்தாகிய பேரறிவுடைய சிவமே நிலைத்த சார்பாகும். அஃதல்லாமல் சேரும் இடம் வேறில்லை. திருவருள் வெளியில் விளக்க விளங்கும் அறிவொளியாகிய உயிரும் தானே விளங்கும் பேரறிவொளியாகிய சிவனும் ஓரினச் சுடராகலின் ஒன்று சேரும். அத்தமாகிய மெய்ப்பொருட் சிவன் அப்பாகிய அருளாலே இதனைத் திருவுளங் கொண்டு ஆண்டு கொள்வன். தன்வழி - தன்மாத்திரையின் இனவழியாகிய மாயையில்.

## 180. அப்பினிற் கூர்மை ஆதித்தன் வெம்மையால்

180. அப்பினிற் கூர்மை ஆதித்தன் வெம்மையால்
உப்பெனப் பேர்பெற் றுருச்செய்த அவ்வுரு
அப்பினிற் கூடிய தொன்றாகு மாறுபோற்
செப்பினிற் சீவன் சிவத்துள் அடங்குமே.

அப்பாகிய தண்ணீரில் அதன்கண் விரவி நுண்ணிதாகி அடங்கி நிற்கும் உப்பு கூர்மையெனப்படும். அக் கூர்மை ஞாயிற்றின் வெம்மையால் பிரிந்து உப்பெனப் பெயர் பெறும். அவ் வுப்பினால் ஓர் உருச்செய்து மீண்டும் அவ் வுருவினை அந் நீரினில் கரையவிட்டால் நீருடன் கலந்து வேறு தோன்றாது ஒன்றாய் அடங்கிநிற்கும். அதுபோல் சொல்லுமிடத்து ஆவி சிவத்துள் அடங்கும். இவ்வொப்புச் சிவஞான போதத்தின்கண் ஏழாம் நூற்பாவில் மூன்றாம் கூறில் 'மெய்ஞ்ஞானம்' என்னும் எடுத்துக்காட்டு வெண்பாவில் மலமும் உயிரும் கலந்த கலப்புக்குக் காட்டப்பட்டுள்ளது. எங்ஙனமாயினும் இருபொருள் ஒன்றாய்க் கலந்து ஒன்றினுள் ஒன்று அடங்கி இரண்டுங்கெடாது ஒன்றாய்த் தோன்றுதற்குப் பொருத்தமான ஒப்பு இதுவென்க.

கூர்மை - உப்புத்தன்மை.

## 181. அடங்குபே ரண்டத் தணுஅண்டஞ் சென்றங்

181. அடங்குபே ரண்டத் தணுஅண்டஞ் சென்றங்
கிடங்கொண்ட தில்லை இதுவன்றி வேறுண்டோ
கடந்தொறும் நின்ற உயிர்கரை காணில்
திடம்பெற நின்றான் திருவடி தானே.

எல்லாம் அடங்கும் இயல்பு வாய்ந்த பேரண்டத்தினுள் சிறிய அண்டங்கள் சென்று ஒன்றாய்ப் பின்னிக் கலந்து இடங்கொண்டதில்லை. இத்தன்மையன்றி மாயா காரிய அறிவில் பொருள்களுக்கு வேறொரு நிலையும் இல்லை. உடல் தொறும் நின்ற உயிர் திருவருளாற் சென்றுசார் கரையினை எண்ணும், எண்ணிக் காணுங்கால் மாறுதல் இன்றி ஏனைய உயிர்களும் தன்னைப்போல் உறுதிபெற உன்னும். உன்னி என்றும் ஒன்றுபோல் நிற்பதன் பொருட்டு நிலைபெற்று நின்ற சிவபெருமான் திருவடியே அளவிலாக் கரையாகும் என்னும் உண்மை கடைப்பிடிக்கும். அண்டஞ் சென்று - விண்ணிற் புகுந்து எனலுமாம். இடம் - வேறிடம். கரை - வீடுபேற்றெல்லை.

கடம் - உடம்பு.

## 182. திருவடி யேசிவ மாவது தேரில்

182. திருவடி யேசிவ மாவது தேரில்
திருவடி யேசிவ லோகஞ்சிந் திக்கில்
திருவடி யேசெல் கதியது செப்பில்
திருவடி யேதஞ்சம் உள்தெளி வார்க்கே.

திருவருள் உணர்த்த முப்பொருள் உண்மையினை நன்னெறி நான்மையான் வழிநின்று திருவைந்தெழுத்தின் வைத்து உணரும் உணர்வுத் தெளிவுடையார்க்குத் தேரில் திருவடியே சிவமாகும். தேரில் என்பது புறத்து ஆய்ந்துணரின் என்பதாகும். அகத்து நாடில் திருவடியே சிவவுலகம் ஆகும். உணர்ந்து உரைக்கில் திருவடியே செல்லு நிலையாகும். உணர்ந்து தெளியில் திருவடியே என்றும் பொன்றாப் புகலிடத் தஞ்சமாம் என்க. ஏகாரம் : பிரிநிலை; தேற்றம் எனினுமாம்.

## 183. தெளிவு குருவின் திருமேனி காண்டல்

183. தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமஞ் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுருச் சிந்தித்தல் தானே.

திருவருளால் திருவடித் தெளிவினை அருளும் சிவகுருவின் திருமேனி காண்டல் தெளிவினில் சீலமாகும். அவர்தம் திருப் பெயரினைத் திறம்பட நாளும் சொல்லுதல் தெளிவினில் நோன்பாகும். அச்சிவகுரு செவியறிவுறுத் தருளிய திருவைந்தெழுத்தைச் சிறப்புற உளங்கொளக் கேட்டல் தெளிவினில் செறிவாகும். அச் சிவகுருவின் உண்மை நிறைவாகிய திருவுருவினை உடன் கலந்து நாடல் தெளிவினில் அறிவாகும். தெளிவு-ஞானம். தெளிவினில் சீலம் என்பது ஞானத்தில் சரியை என்பதாம். இப்படியே மற்றவற்றையும் கூறிக் காண்க. காண்டல் செப்பல் என்னும் இரண்டும் புறமாகவும், கேட்டல் சிந்தித்தல் இரண்டும் அகமாகவும் கொள்க.

## 184. தானே புலன்ஐந்துந் தன்வச மாயிடும்

184. தானே புலன்ஐந்துந் தன்வச மாயிடும்
தானே புலன்ஐந்துந் தன்வசம் போயிடும்
தானே புலன்ஐந்துந் தன்னில் மடைமாறும்
தானே தனித்தெம் பிரான்தனைச் சந்தித்தே.

ஒப்பில்லாத நம் தலைவனாகிய சிவபெருமானைத் திருவருளால் திருவடியுணர்வு கொண்டு சந்திப்பதாகிய உணர்வினில் நேர்ந்தவிடத்து எளிதாக மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்புலனும் நம்வயமாயிடும். முன்பு அவ் வைம்புலன்களும் நம்மை அவற்றின் வயமாக்கி வினைக்கீடாக ஆட்டின. அவ் வாட்டுதல் இப்பொழுது அகன்றொழிந்தது. அவ் வைம் புலன்களும் முன்னர் இருள்வழி நின்று பிறப்புக்கு வித்தாம் நிலையாப் பொருள்களில் வேட்கை கொள்ளுவித்தது. அது மாறி இப்பொழுது அருள்வழி நின்று சிறப்புக்கு வித்தாம் நிலைத்த பொருளாம் திருவடியில் வேட்கையினை விளைவிக்கும் தனித்தென்பது : ஆருயிர் தன்னை அவ் வைம்புலன்களில் வேறு எனக் காண்ப தென்பதாகும். சந்தித்து - இறைவனைக் கண்டு.

## 185. சந்திப் பதுநந்தி தன்திருத் தாளிணை

185. சந்திப் பதுநந்தி தன்திருத் தாளிணை
சிந்திப் பதுநந்தி செய்ய திருமேனி
வந்திப் பதுநந்தி நாமம்என் வாய்மையால்
புந்திக்குள் நிற்பது நந்திபொற் போதமே.

நல்லார் இணக்கத்தால் நாளும் நாம் உளங்கொண்டு நேர்வது திருத்தாளிணையாகிய திருவருளே. அத் திருவருள் துணையால் உணர்வின்கண் ஓவாது நாடுவது சிவபெருமானின் திருமேனியாகிய திருவைந்தெழுத்தே வாயாரப் புகழ்வது நன்னெறி நான்மைக்கும் வாய்ப்ப அமைந்த திருவைந்தெழுத்தேயாம். நான்மை என்பது சீலம் நோன்பு செறிவு அறிவு என்பதாம். இவற்றிக்கு முறையே நமசிவய, சிவயநம, சிவயசிவ, சிவசிவ என்னும் திருவைந்தெழுத்துக்களேயாம். இத் திருவைந்தெழுத்தின் தெளிவாகிய சிவஞானபோதமே நந்தி பொற்போதமாகும். அப் போதமே நம் உணர்வுக்குள் உணர்வாய் நம் அறிவினுள் நிலைபெறுவதாகும்.

நந்திநாமம் - அஞ்செழுத்து. பொற்போதம் - பொன் போன்ற சிவஞானபோதச் சூத்திரங்கள் பன்னிரண்டுமே.

## 186. போதந் தரும்எங்கள் புண்ணிய நந்தியைப்

186. போதந் தரும்எங்கள் புண்ணிய நந்தியைப்
போதந் தனில்வைத்துப் புண்ணிய ராயினார்
நாதன் நடத்தால் நயனங் களிகூர
வேதந் துதித்திடப் போயடைந் தார்விண்ணே.

சிவஞான போதத்தைச் செந்தமிழால் அருள்செய் தளிக்க நிற்பவன் நம் தவப்பேறாகிய புண்ணிய நந்தி. அவனருளால் ஆருயிர் உணர்வில் அகந்தழீஇ வைத்த புண்ணியரராயினார். அனைத்துயிரானும் நத்தும் தன்மையராவர். அவர்கள் நாதன் என்னும் திருப்பெயர் பூண்டனர். அகம்புறம் காண்பார் காட்சிக் கண்கள் மிகவும் களிப்பினை எய்தச் செந்தமிழ்த் திருமறை போற்றினர். தூயவிண்ணாகிய சிவவுலகினை அடைந்தனர். வேதம் - இறைவன் நூல். இதன்கண் அடைந்தார் என்பதனால் உண்மையும், போதம் என்பதனால் அறிவும், களிகூர என்பதனால் இன்பமும் பெறப்படும். எனவே ஆவி எய்தும் 'உண்மை அறிவு இன்ப' உயர்வற உயர்ந்த ஒண்மை வண்மைச் சிவன்நிலை பெறப்படும்.

போத நந்தியை - தமிழ்ச் சிவஞானபோதப் பன்னிரண்டு சூத்திரங்களையும் உபதேசித்த நந்தியை. போதந்தனில் தெளிந்த சிந்தையினிடத்து.

## 187. மண்ணொன்று கண்டீர் இருவகைப் பாத்திரந்

187. மண்ணொன்று கண்டீர் இருவகைப் பாத்திரந்
திண்ணென் றிருந்தது தீவினை சேர்ந்தது
விண்ணின்று நீர்விழின் மீண்டுமண் ணானாற்போல்
எண்ணின்றி மாந்தர் இறக்கின்ற வாறே.

ஒருவகையான மண்ணே இருவகைக் கலமாகும் ஒன்று தீயினைச் சேர்ந்து வன்மையாக இருந்தது. மற்றொன்று தீயினைச் சாராது தன்னியல்பாய் பசுமண்ணாய் மென்மையாக இருந்தது. விண்ணில் நின்று மழைநீர் விழுந்தால் தீயினைச் சாராத பசுமட்கலம் அழிந்து மீண்டும் மண்ணாகும். தீயினைச் சார்ந்த கலம் அழியாது நிலைபெற்று நிற்கும். தீயினைச் சாராத கலம்போன்றது திருவருள் வழி நில்லாத உடம்பு. அது தன்னகத்துள்ள ஆவி உறுதிப்பயனாகிய சிவத்தன்மை எய்துதற்கு வாயிலாகாமல் மீண்டும் பிறப்பதற்கு வாயிலாகி அழிகின்றது. அவ் உடம்பினைக் கழித்து எண்ணிறந்த மாந்தர் இறந்தொழிகின்றனர். தீ - சிவபெருமான். நீர் - திருவருட் செல்வி. சிவபெருமான் திருவடி நினைவினையுடையார் மீண்டும் பிறவார். அந்நிலை மாறா உறுதியான திண்ணென்ற அருள்நிலை. அதற்கு வாயிலாகிய சிவனுடைமையாம் இவ் உடம்பும் ஏற்றுரையான் திண்ணென்றிருக்கும் எனப்பட்டது. ஏற்றுரை - உபசாரம்.

## 188. பண்டம்பெய் கூரை பழகி விழுந்தக்கால்

188. பண்டம்பெய் கூரை பழகி விழுந்தக்கால்
உண்டஅப் பெண்டிரும் மக்களும் பின்செலார்
கொண்ட விரதமும் ஞானமும் அல்லது
மண்டி அவருடன் வழிநட வாதே.

வினைநுகர்வுப் பண்டங்களைப் பெய்துவைத்து மேற் கூரையும் அமைத்து நன்மையும் வன்மையும் உள்ளனபோற் காணப்படும் இவ்வுடல் நாட்பட மூப்புப் பிணியுற்றுச் சாக்காட்டினை எய்தும். எய்தவே, இவ்வுடலாலும் உடலுழைப்பாற் பெற்ற உடைமையாலும் ஐம்புலன் நுகர்வு ஆரத்துய்த் தின்புற்ற பெண்டிரும் மக்களும் தத்தம் உடம்பினை நீக்கி அவ் ஆவியுடன் பின் செல்லார். ஆயின் செந்நெறியாகிய நன்னெறிக்கண் நின்று மேற்கொண்ட திருவருளால் எய்தும் சீலமும் திருவடியுணர்வுமே உடன் துணையாய் ஒத்து வழிநடக்கும். ஏனைய உலகியற் பொருள்களும் செயல்களும் நிலைத்த துணையாக அவ்வழியில் நடவாவென்க. சீலமும் அறிவும் சொல்லவே இனக்கோளாக நோன்பும் செறிவும் கூட்டிக் கூறிக்கொள்க.

பண்டம் . . . விழுதலால் - உயிர் நீங்கி உடல் கீழே விழுதலால். மண்டி - சேர்ந்து.

## 189. ஊரெலாங் கூடி ஒலிக்க அழுதிட்டுப்

189. ஊரெலாங் கூடி ஒலிக்க அழுதிட்டுப்
பேரினை நீக்கிப் பிணமென்று பேரிட்டுச்1
சூரையங் காட்டிடைக் கொண்டுபோய்ச் சுட்டிட்டு
நீரினில் மூழ்கி நினைப்பொழிந் தார்களே.

ஆவி நீங்கிய உடல் ஊர்முனி பண்டமாகும். ஆவி நீங்கியதும் அவ்வுடம்பினைச் சூழ்ந்திருந்து உறவோடு ஊரெலாம் ஒன்று கூடி யழுவர். முறைப்பெயர் சிறப்புப்பெயர் முதலிய பெயர்களை ஒழித்துப் பிணமென்று பெயரிடுவர். பெயரிட்டு முட்செடியாகிய சூரையடர்ந்த சுடுகாட்டிற்குக் 'காலைக் கரையிழையாற் கட்டித்தாங்கை யார்த்து, மாலை தலைக் கணிந்து மையெழுதி - மேலோர், பருக்கோடி மூடிப் பலரழ' எடுத்துச் செல்வர். சென்று அவ்வுடம்பினை ஈமத்தேற்றி வாய்க் கரிசியிட்டுக் குடமுடைத்துக் கொள்ளி வைத்து எரிகொளீஇச் சுடுவர். சுட்டபின் நீரின் மூழ்கி இறந்தவரைப்பற்றியேனும் இனி இறக்கப் போகும் தம்மைப் பற்றியேனும், இதற்கு வாயில்களாகவுள்ள நிலையாமை, மாயை, வினை, மலங்களைப் பற்றியேனும் ஒரு சிறிதும் நாடாது நினைப் பொழிந்திருப்பர்.

சூரை - ஒருவகைச் செடி.

## 190. காலும் இரண்டு முகட்டலக் கொன்றுள

190. காலும் இரண்டு முகட்டலக் கொன்றுள
பாலுள் பருங்கழி முப்பத் திரண்டுள
மேலுள கூரை பிரியும் பிரிந்தால்முன்
போலுயிர் மீளப் புகஅறி யாதே.

உடம்போடு கூடிய உயிர் உறையும் இல்லம்போல் இவ்வுடம்பினையும் ஓர் இல்லமாக உருவகிக்கின்றனர். காலிரண்டு, முகட்டுச் சட்டம் ஒன்று, பக்கத்திலுள்ள பெரிய கழிகள் முப்பத்திரண்டு, மேலுள்ள கூரை ஒன்று ஆகியவற்றோடு கூடிய உடம்பு ஓர் இல்லமாகும். இவ் வில்லத்தில் ஆவி நீங்குங்கால் உச்சித்துளை வாயிலாக வீங்கற் காற்று நீங்கப் பிரியும். பிரிந்தால் முன்போல் உயிர் அவ் வுடலகத்துப் புகும் வாயில் அறியாது. வீங்கற்காற்று - தனஞ்சயன். நம்முடைய கால் களிரண்டும் வீட்டின் முகட்டுச் சட்டம் அமைக்கும் இரண்டு கால்களை ஒக்கும். முதுகெலும்பு முகட்டுச் சட்டத்தினை ஒக்கும். கழிகள் முப்பத்திரண்டும் இருபக்கங்களிலும் முதுகெலும்புடன் பொருந்தி இணைக்கப்பட்ட முப்பத்திரண்டு எலும்புகளை ஒக்கும். மேலுள்ள கூரை தலைமயிரினை ஒக்கும்.

பாலுள் - பக்கங்களில், விலாவில்.

## 191. சீக்கை விளைந்தது செய்வினை மூட்டிற்ற

191. சீக்கை விளைந்தது செய்வினை மூட்டிற்ற
ஆக்கை பிரிந்த தலகு பழுத்தது
மூக்கினிற் கைவைத்து மூடிட்டுக் கொண்டுபோய்க்
காக்கைக் குப்பலி காட்டிய வாறே.

ஆவி ஆக்கையை விட்டு அகலுங்காலத்து ஐம்மேலுந்தும். ஐ - கோழை. அதுவே சீக்கை எனப்பட்டது. அக் கோழையும் மிகுந்தது. ஊழ்வினைமூட்டு இற்றது. அதனால் ஆக்கையாகிய உடம்பும் பிரிந்தது. பக்கங்களிலுள்ள முப்பத்திரண்டு பழுக்களும் பயனற்றுப் பழுத்தன. ஆவி அகத்ததோ புறத்ததோ என்று அறிதற் பொருட்டுக் கிடக்கும் உடம்பின் மூக்கின்மேல் கைவைத்து உயிர்ப்பு உளதா என்று பார்ப்பர். உயிர்ப்பு நின்று விட்டது கண்டதும் உடலினைத் தூய வெள்ளிய ஆடையினால் முற்றாக மூடிக்கொண்டு போய்ச் சுடுகாட்டிலிடுவர். ஆங்குச் செய் கரணங்களுள் காக்கைக்குப் பலியிடுதலும் ஒன்று. அதனையும் காட்டுவர். கரணம் - சடங்கு. உடம்பினை புறச் சமயத்தோர் சுடாது காக்கை முதலியவற்றிற்குப் பலியாக இடுவது போன்றதன்று இப்பலி. இது சோறு முதலியவற்றைக் காக்கைக் கிடுவது.

சீக்கை விளைந்தது - உயிர் உடலினின்றும் பிரியும் காலம் நேர்ந்தது. செய்வினை மூட்டிற்ற - ஊழ் கழிந்தது. மூக்கினில் கை வைத்து - உயிர் இருக்கிறதா? இல்லையா? என்று மூக்கினில் கை வைத்துப் பார்த்தல்.

காக்கைப் பலி - ஈமக்கடன் செய்யும்போது பிண்டமிட்டுக் காக்கைகளுக்குப் போடுதல்.

## 192. அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்

192. அடப்பண்ணி வைத்தார் அடிசிலை உண்டார்
மடக்கொடி யாரொடு மந்தணங் கொண்டார்
இடப்பக்க மேஇறை நொந்தது என்றார்
கிடக்கப் படுத்தார் கிடந்தொழிந் தாரே.

இன்னின்ன வகையான சுவையுணவு வேண்டுமென விழைந்து கூறிச் சமைப்பித்து, வைத்தனர். அவ்வுணவினை அமர்ந்து இல்லாள் ஊட்ட மகிழ்ந்து உண்டனர். அகத்துள்ள கற்பிற் சிறந்த பொற்புறு மனைவியாருடன் மறைமுறைச் சூழ்வினையைத் தம்பயன் நாடிச் சூழ்ந்தனர். அவ்வளவில் ஐயோ உயிர் நிலைக்களமாகிய நெஞ்சஞ் சேர் இடப்பக்கம் சிறிது நொந்ததே என்றனர். கைத்தாங்குதலாகக் கிடத்தப் படுத்தனர். ஒரே கிடப்பாய் அப்பொழுதே இறந்தொழிந்தனர். இறை - சிறிது. இஃது 'இறைகளோ டிசைந்த இன்பம்' என்பதன் கண்ணும் காண்க.

அடப்பண்ணி வைத்தார் - பலகாரம் செய்தார். மந்தணம் - மந்தனம் என்ற சொல்லின் திரிபு; மந்தனம் - ஆலோசனை.

## 193. மன்றத்தே நம்பி மாடம் எடுத்தது

193. மன்றத்தே நம்பி மாடம் எடுத்தது
மன்றத்தே நம்பி சிவிகை பெற் றேறினான்
மன்றத்தே நம்பி முக்கோடி வழங்கினான்
சென்றத்தா வென்னத் திரிந்திலன் தானே.

நம்பி திருமணத்தின் பின் மனையறம் புரக்கப் புதுமாடம் எடுத்தனன். திருமணம் பலர் நடுவே நிகழ்வதால் அதுமன்றம் என அழைக்கப் பெறும். பலர்க்கும் கல்வி கலியாணம் நில்லாவுலகம் நீங்கு மெல்லை ஆகிய மூவிடத்தும் கோடி வழங்கினன். கோடி - புதுஉடை. இறுதிக் காலத்து மக்கள் முதலாயினார் அன்பும் அழுகையும் துன்புமாய் நின்று அத்தா என்று அலறி அழைத்தனர். சிறிதும் புரண்டிலன். என்னென்றும் கூறிலன். பலர் நடுவே தெருவில் ஆட்சுமை யூர்தியாம் பல்லக்கேறி ஒல்லைச் சுடுகாடேகினன்.

அத்தா என்ன - அப்பா என்று கூப்பிட.

## 194. வாசந்தி பேசி மணம்புணர்ந் தப்பதி

194. வாசந்தி பேசி மணம்புணர்ந் தப்பதி
நேசந் தெவிட்டி நினைப்பொழி வார்பின்னை
ஆசந்தி மேல்வைத் தமைய அழுதிட்டுப்
பாசந்தீச் சுட்டுப் பலியட்டி னார்களே.

வாயினால் அழகிய இனிய உறுதி உரைகளைப் பேசி நல்லாரை மணந்தனர். பின்பு, மணந்தார் ஒருவரைஒருவர் அன்பு போதுமென அமைந்து அறவே நினைப்பொழிவர். நினைப்பொழிந்து மாளுதலும் சுற்றத்தார் கால்கழி கட்டிலாகிய ஆசந்தியில் வைத்தெடுத்து அழுதிட்டுச் சுடுகாட்டில் கொண்டு போய்த் தீயிட்டுச் சுடுவர். காக்கைக்குப் பலியிடுவர்.

வாசந்தி - வாய் சந்தி; வாய்க்கு இனிமையான. ஆசந்தி - பாடை. பாசந்தி - பாசம் தீ: சுற்றம் நெருப்பிட்டு.

## 195. கைவிட்டு நாடிக் கருத்தழிந் தச்சற

195. கைவிட்டு நாடிக் கருத்தழிந் தச்சற
நெய்யட்டிச் சோறுண்ணும் ஐவரும் போயினார்
மையிட்ட கண்ணாளும் மாடும் இருக்கவே
மெய்விட்டுப் போக விடைகொள்ளு மாறே.

மைதீட்டிய கண்ணையுடைய மனையாளும் மக்கள் முதலிய செல்வங்களும் தக்கவாறு இருக்க ஆவி உடம்பினை விட்டுப் போகுங்காலம் நிகழும் வழிவகைகள் எவ்வாறெனில்? வளிமுதலா எண்ணிச் சொல்லப்படும் வாத பித்த சிலேட்டுமம் என்னும் உடம்பாகிய வீட்டுக்குரிய நாடிகள் மூன்றும் கைவிடும். விடவே உயிரின் கருத்தழியும். உயிர் அச்சுறுதலாகிய. நீங்குதலைச் செய்யும். செய்யவே நெய்யாற் சமைத்த சோற்றை நாளும் உய்யலாமென்று விலாப்புடைக்க உண்டு வளர்ந்த உடம்பாகிய ஐம்பூதமும் பிரிந்து ஒழியும். ஐவர் என்பதற்கு ஐம்பூதங்களே யன்றி ஐங்காற்றுக்கள் என்றலுமொன்று. அவை, உயிர்க் காற்று, மலக்காற்று, தொழிற்காற்று, ஒலிக்காற்று, நிரவு காற்று என்பன. இவற்றைப் பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன் எனவுங் கூறுப.

அச்சு அற - உயிர் நீங்க. ஐவர் - ஐம்பூதங்கள்.

## 196. பந்தல் பிரிந்தது பண்டாரங் கட்டற்ற

196. பந்தல் பிரிந்தது பண்டாரங் கட்டற்ற
ஒன்பது வாசலும் ஒக்க அடைந்தன
துன்புறு காலந் துரிசுவர மேன்மேல்
அன்புடை யார்கள் அழுதகன் றார்களே.

உடம்பாகிய பந்தல் திடமொழிந்து நலிந்து மெலிந்து பிரிந்தது. உடம்பினை நடத்தும் பண்டாரமாகிய உயிர் அவ்வுடலுடன் பிணைந்து நிற்கும் கட்டற்று நின்றது. அவ்வுடம்பின்கண் காணப்படும் ஒன்பது வாயிலும் ஒருமிக்க அடைபட்டன. அனைவரும் துன்பம் எய்தும்படியான முடிவுகாலம் வர அன்புடையவர்கள், மேலும் மேலும் அழுது நீங்கினர். ஆவியும் பிரிந்தகன்றது.

பந்தல் பிரிந்தது - உடல் கட்டுக் குலைந்தது. பண்டாரம் - உயிர் நிலை. துரிசு - முடிவு.

## 197. நாட்டுக்கு நாயகன் நம்மூர்த் தலைமகன்

197. நாட்டுக்கு நாயகன் நம்மூர்த் தலைமகன்
காட்டுச் சிவிகை யொன் றேறிக் கடைமுறை
நாட்டார்கள் பின்செல்ல முன்னே பறைகொட்ட
நாட்டுக்கு நம்பி நடக்கின்ற வாறே.

பெருநிலம் ஆளும் பொருவில் வேந்தன். நம்பேரூராம் கோநகர்த் தலைவன். முன்னர்க் கரி பரி தேர் ஏறிச்செல்லும் அவனே இப்பொழுது சுடுகாட்டுக்கு எடுத்துச் செல்லும் ஆட்சுமை ஊர்தியாகிய சிவிகை என்னும் பாடையின் மேல் ஏறிச்சென்றனன். இறுதி முறையாக நாட்டவர்கள் பின் சென்றனர். முன்னே நெய்தற் பறை முதலிய வாழ்த்தியங்கள் கொட்டப்பட்டன. இதுவே நாட்டுக்கு நம்பி நானிலம் விட்டு மேனிலம் எய்தக் கூடுவிட்டுப் பாடுபட்டுப் போகும் முறையாகும்.

நாடு - தேகம் காட்டுச் சிவிகை - பாடை; சுடுகாட்டுக்குச் செல்லும் சிவிகை.

## 198. முப்பதும் முப்பதும் முப்பத் தறுவருந்

198. முப்பதும் முப்பதும் முப்பத் தறுவருஞ்
செப்ப மதிளுடைக் கோயிலுள் வாழ்பவர்
செப்ப மதிளுடைக் கோயில் சிதைந்தபின்
ஒப்ப அனைவரும் ஓட்டெடுத் தார்களே.

மூன்று முப்பது தொண்ணூறு அதனுடன் சேரும் ஆறு ஆகிய தொண்ணூற்றாறு மெய்களும் செம்மையாக அமைக்கப் பெற்ற மதில் முதுலியவற்றையுடைய கோட்டை போன்ற உடம்பினுள் வாழும். அச் சிறந்த உடம்பாகிய கோவில் சிதைவுற்றால் அப்பொழுதே அத் தொண்ணூற்றாறு மெய்களும் சார்பின்மையால் ஓட்டெடுக்கும் என்க.

முப்பது முப்பது முப்பத்தறுவரும் - 96 தத்துவங்களும்.
செப்பமதிளுடைக்கோயில் - தேகம்.

## 199. மதுவூர் குழலியும் மாடும் மனையும்

199. மதுவூர் குழலியும் மாடும் மனையும்
இதுவூர் ஒழிய இதணம தேறிப்
பொதுவூர் புறஞ்சுடு காடது நோக்கி
மதுவூர வாங்கியே வைத்தகன் றார்களே.

தாம் வாழ்ந்ததாகிய இவ்வூரகத்துக் குழலினும் யாழினும் மிக்க இனிமை வாய்ந்த சொல்லினையுடைய தம்மக்களும், வருந்தித் தேடிய பெரும் பொருளும், திருந்திய மனைவியும் அழுது வருந்தியொழிய விமானமாகக் காட்டுச் சிவிகையினை ஏறி ஊர்ப் பொதுவாயுள்ள புறங்காடு எனப்படும் சுடுகாடு நோக்கி இறந்தார் புறப்பட்டனர் ஊரவரும் சுடுகாடாகிய அவ்வூர் சென்று காட்டுச் சிவிகையாகிய பாடையினை இறக்கிவைத்து நீங்கினர்.

## 200. வைச்சகல் வுற்றது கண்டு மனிதர்கள்

200. வைச்சகல் வுற்றது கண்டு மனிதர்கள்
அச்சக லாதென நாடும் அரும்பொருள்
பிச்சது வாய்ப்பின் தொடர்வுறு மற்றவர்
எச்சக லாநின் றிளைக்கின்ற வாறே.

ஏனையார் உடம்பினை உலகத்தே வைத்துவிட்டு நீங்கிய நிலைமையை மாந்தர் கண் கூடாகக் கண்டிருந்தும், தம் உடம்பு மட்டும் நிலைகெடாது என நாடுவர். அங்ஙனம் அவர்களால் நாடப்படும் அவ்வுடம்பாகிய அரும்பொருள் (காலனால்) பறிக்கப்பட்டதாய் மற்றையார் உடம்பு போன்று அழியும். தாங்கள் நிலைக்குமென்று கருதிய உடம்பு எச்சமாகிய மேன்மை நீங்க நின்று அவர்கள் பிறந்து இறந்து இளைப்பர். பிச்சு - பிய்த்து; வௌவி - அபகரித்து. பிச்சு என்பது பிய்த்து என்பதன் போலி. எச்சு - மேன்மை.

அச்சு அகலாதென - உயிர் விரைவில் நீங்காதென்று.

## 201. ஆர்த்தெழு சுற்றமும் பெண்டிரும் மக்களும்

201. ஆர்த்தெழு சுற்றமும் பெண்டிரும் மக்களும்
ஊர்த்துறைக் காலேஒழிவர் ஒழிந்தபின்
வேர்த்தலை போக்கி விறகிட் டெரிமூட்டி
நீர்த்தலை மூழ்குவர் நீதியி லோரே.

உடம்புவிட்டு நீங்கிய உயிரினைச் சார்ந்த சுற்றத்தார் அலறியழுது கூடுவர். அவரும், உரிய பெண்டும், ஏனைமக்களும் ஊர்ப்பொதுவாகிய வாய்க்காலிற் சென்று செய்யும் சடங்கினைச் செய்து தீர்த்தநீர் கொண்டுவந்து முழுக்காட்டுவர். பின்பு அவ்வுடம்பினை எரியின்கண் இடுவதற்கு உண்டாகும் அச்ச முதலியவற்றை அகற்றி விறகடுக்கித் தீ மூட்டுவர். தீ மூட்டியபின் நீர்நிலையிற் சென்று மூழ்குவர். சிறிதும் முறைமையில்லாதவராவர். நீதி - முறைமை.

ஊர்த்துறைக்கால் - ஊர்ப் பொதுவாய்க்கால்.

## 202. வளத்திடை முற்றத்தோர் மாநிலம் முற்றுங்

202. வளத்திடை முற்றத்தோர் மாநிலம் முற்றுங்
குளத்தின் மண்கொண்டு குயவன் வனைந்தான்
குடமுடைந் தால்அவை ஓடென்று வைப்பர்
உடலுடைந் தால்இறைப் போதும்வை யாரே.

மாயா காரியமாகிய குடமும் உடலும் முறையே குயவனாலும் இறைவனாலும் செய்யப்படுவன. ஆனால் குடமுடைந்தால் வறையோடென்று அகத்தே வைப்பர். உயிர் நீங்கினால் அவ்வுடம்பினைக் கண்ணிமைக்கும் நேரம் வரையிற்கூட வீட்டில் வைத்திருக்கப் பொறார். குடம் செய்வதற்கு வளமான முற்றமும் வாய்ப்பான மண்ணும் வேண்டும். அம் மண் குளத்தினின்றும் பெரும்பாலும் எடுக்கப்பெறும்.
அதுபோல் உடம்புக்கு, தாய் வயிறு முற்றத்தை ஒக்கும். கருப்பை குளத்தினை ஒக்கும். மண் செந்நீரை யொக்கும். வினைமுதற் காரணனாகிய சிவன் குயவனை ஒப்பான்.

## 203. ஐந்து தலைப்பறி யாறு சடையுள

203. ஐந்து தலைப்பறி யாறு சடையுள
சந்தவை முப்பது சார்வு பதினெட்டுப்
பந்தலும் ஒன்பது பந்தி பதினைந்து
வெந்து கிடந்தது மேலறி யோமே.

ஐந்து தலையாகிய ஐம்பொறிகளும், ஆறு பறியாகிய மூலாதார முதலிய ஆறு ஆதாரங்களும், சடையாகிய இடைவெளியின் கண் உள்ள சந்துகள் முப்பதும் உள்ளன. நுண்ணுடம்பு எட்டு; வாயுக்கள் பத்து ஆகப் பதினெட்டு. ஒன்பது தொளைகள். பூதமைந்து, தொழிற் கருவி ஐந்து, உணவுடம்பு முதலிய உடம்பு ஐந்து ஆகப் பதினைந்து. இவையனைத்தும் வெந்து நீறாகிக் கிடந்தன. மேல் விளைவினை எவரும் உள்ளவாறு அறியார். உணவுடம்பு முதலிய ஐந்தும் வருமாறு; உணவுடம்பு, வளிவுடம்பு, மனவுடம்பு, அறிவுடம்பு, இன்பவுடம்பு என்பனவாம். இவற்றை முறையே அன்னமய கோசம், பிராண மயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம் என்பர்.

ஐந்துதலை - ஐம்பொறிகள். பறி ஆறு - ஆதாரங்கள் ஆறு. சடையுள சந்தவை - முதுகெலும்புகள். சார்பு - பொருத்து.

## 204. அத்திப் பழமும் அறைக்கீரை நல்வித்துங்

204. அத்திப் பழமும் அறைக்கீரை நல்வித்துங்
கொத்தி உலைப்பெய்து கூழட்டு வைத்தனர்
அத்திப் பழத்தை அறைக்கீரை வித்துண்ணக்
கத்தி எடுத்தவர் காடுபுக் காரே.

அத்திப்பழமாகிய உடலும் அறைக்கீரை வித்தாகிய உயிரும் இருவினைப் பயனாகிய இன்பத்துன்பக் கூறுபாடுகளை அவ்வுயிர்க்கு உணவாகிய ஊழாகச் சமைத்து உலகிடைப் பிறப்பித்தனன். அத்திப் பழமாகிய ஊழ்ப்பயனை அறைக்கீரை வித்தாகிய உயிர் உண்டு கழித்தது. எனவே உயிர் நீங்கிய உடம்பினைச் சுடத் துணிந்தனர். கத்துதலாகிய அழுகை யொலியுடன் சுடுகாட்டுக்குக் கொண்டு போயினர். உலைப்பெய்து - உலையிலிட்டுச் சமைத்து. கூழ் இட்டு - சோறுடன் பரிகலத்திலிட்டு. கத்தி - கத்திபோன்ற கூர்மையுடைய பல். இஃது உவமையாகு பெயர் எனினும் ஆம்.

அத்திப்பழம் - உடல். அறைக்கீரை நல் வித்து - உயிர். உலை - கருப்பாசயம். கூழ் - ஊழ்.

## 205. மேலும் முகடில்லை கீழும் வழம்பில்லை

205. மேலும் முகடில்லை கீழும் வழம்பில்லை
காலும் இரண்டு முகட்டலக் கொன்றுண்டு
ஓலையான் மேய்ந்தவ ரூடு வரியாமை
மேலையான் மேய்ந்ததோர் வெள்ளித் தளிகையே.

வீட்டை யொப்பாகிய உடம்பு ஆவிநீங்கிய காலத்து வீங்கற் காற்று மண்டையோட்டைப் பிளந்து கொண்டு செல்லும். அப்பொழுது மேலே மூடப்பட்டு முகடு இல்லாது இருக்கும். அதனால் மேலும் முகடில்லை என்றனர். அம் முகட்டின்கீழ் விளிம்பாகிய கரையுமில்லை. பயனில்லாத காலும் இரண்டுண்டு, மூடும் அலக்கும் ஒன்றுண்டு. ஓலையான் மேய்ந்தவர் ஊடுவரியாமை விட்டனர். இவற்றைக் கூட்டி அமைத்த படைப்போனால் செய்யப்பட்ட வெள்ளிக் கோயில் போன்றது உடம்பு. தளி - கோயில்.

## 206. கூடங் கிடந்தது கோலங்கள் இங்கில்லை

206. கூடங் கிடந்தது கோலங்கள் இங்கில்லை
ஆடும் இலையமும் அற்ற தறுதலும்
பாடுகின் றார்சிலர் பண்ணில் அழுதிட்டுத்
தேடிய தீயினில் தீயவைத் தார்களே.

ஆவி நீங்கிய உடம்பு இந்நிலத்தே கிடந்தது. ஆயினும் முன் அதன்கண் காணப்படும் இயற்கைப் பொலிவு முதலிய காட்சிக்குரிய ஒப்பனைகள் ஒன்றும் இல்லை. உண்டல் உழைத்தல் ஓடல் ஆடல் முதலிய இயக்கத்தொழில்களும் அற்றொழிந்தன. அவை அறுதலும் திருமறை முதலிய செழுந்தமிழ் அருட்பாடல்களைச் சிலர் பாடுகின்றனர். இசையொடு பொருந்த ஒப்பாரி வைத்து மாதர்நல்லார் பலர் காதலால் ஓதி அழுகின்றனர். ஏனையோர் அவ்வுடம்பினைச் சுடுகாட்டிற்கு வேண்டும் பொருள்களுடன் ஓடியெடுத்துச் சென்று தீயினில் எரித்துத் தீ எரித்தனர்.

கூடம் - உடல். கோலம் - சித்திரம்.

## 207. முட்டை பிறந்தது முந்நூறு நாளினில்

207. முட்டை பிறந்தது முந்நூறு நாளினில்
இட்டது தானிலை ஏதேனும் ஏழைகாள்
பட்டது பார்மணம் பன்னிரண் டாண்டினிற்
கெட்ட தெழுபதிற் கேடறி யீரே.

உயர் கருத்தோன்றுங் காலத்து மீன் முட்டை அளவான உடம்புடன் தோன்றும். அவ்வுடல் தாய் வயிற்றினில் முந்நூறு நாள்வரை தேடியமைத்த எய்ப்பில் வைப்புப் பொருளாய்த் தங்கியிருக்கும். பின்பு அருளால் வெளிவரும். வெளிவரும்போது இன்னவாறென்று கூறுவதற்கு ஏதேனும் இல்லை. உறுதிப்பாடான அறிவில்லாத ஏழைகளே! உலக மயக்கமாகிய பண்டைப் பயிற்சி பிறந்தநாள் தொட்டுச் சிறிது சிறிதாக வளர்ந்து பன்னிரண்டு ஆண்டில் நன்றாக நிரம்பும். அம் மயக்கம் எழுபதாண்டு அளவையினுள் முற்றுற்றுக் கேடெய்துவிக்கும். எனவே, எண்பத்திரண்டு ஆண்டில் உலகப் பசை தானாகவே விலகும் என்க.

முட்டை - உயிருடன் கூடின உடல். பார்மணம் - உலக வாசனை.

## 208. இடிஞ்சில் இருக்க விளக்கெரி கொண்டான்

208. இடிஞ்சில் இருக்க விளக்கெரி கொண்டான்
முடிஞ்ச தறியார் முழங்குவர் மூடர்
விடிஞ்சிரு ளாவ தறியா உலகம்
படிஞ்சு கிடந்து பதைக்கின்ற வாறே.

விளக்கில் நெய்விடும் பகுதி அகல் எனவும் இடிஞ்சில் எனவும் கூறப்படும். அவ்விடிஞ்சி லிருக்கவும் விளக்கு அணைவதென்றால் எவ்வளவு வியப்போ அவ்வளவு வியப்பு உடலிருக்கவும் உயிர் நீங்கும் தன்மை. அதுபோல் உடலழியாதிருக்கவும் உயிரினைக் கூற்றுவன் கைக்கொண்டகன்றான். உலகத்தார் தம்வாணாள் முடிந்தமையை முன்னறியார். பின்னுள்ளார் இறந்தவர் பொருட்டு அழுது புலம்புவர். இவ்வுண்மையைக் கொண்டு விடிதலாகிய பிறப்பையும் இருள்வதாகிய இறப்பையும் எவரும் உணர்தல் எளிது. அங்ஙனமிருந்தும் உலகவர் உணர்கின்றிலர். உலக மயக்கத்தில் ஈடுபட்டு அதில் உலகவர் படிந்து கிடக்கின்றனர். அதனால் பின்பு நடுங்கித் துன்புறுகின்றனர். முடிஞ்சது: முடிந்ததென்பதன் போலி.

இடிஞ்சில் - அகல். முடிஞ்சது - முடிந்தது. விடிஞ்சு இருளாவது - பிறந்து இறப்பது.

## 209. மடல்விரி கொன்றையன் மாயன் படைத்த

209. மடல்விரி கொன்றையன் மாயன் படைத்த
உடலும் உயிரும் உருவந் தொழாமல்
இடர்ப்படர்ந் தேழா நரகிற் கிடப்பர்
குடர்ப்பட வெந்தமர் கூப்பிடு மாறே.

சிவபெருமான் இதழ் விரிந்த கொன்றைமாலையைக் கண்ணியும் தாருமாகக் கொண்டவன். மாயையை உடைமையாகக் கொண்டவன். அதனால் சிவன் மாயன் என்று அழைக்கப்படுவன். ஆயின் 'மாயோன் மேய காடுறை யுலகம்' என்பதும் சிவனையே குறிக்கும் செந்தொடராவது உணர்க. அவன் தன் திருவாணையால் மாயையினின்றும் உலகினையும் உடலுறுப்புக்களையும் உண்பொருள்களையும் தோற்றுவித்து அவற்றோடு ஆருயிர்களைத் தனித்தனி புணர்ப்பித்தனன். இதுவே படைப்பாகும். அப் படைப்பினை எய்திய உயிர் அச் சிவபெருமானின் பொதுத் தன்மையாகிய இருநிலன் முதலாகச் சொல்லப்படும் எண்பேர் உருவங்களில் இயைந்த தொன்றைத் தொழுதல் வேண்டும். அங்ஙனம் தொழுதலைச் செய்யாதவர் எழுவகையாகச் சொல்லப்படும் இருள்உலகில் கிடந்து துன்புறுவர். இவ்வுலகிலும் இடர் உறுவர். பின் வினைக் கீடாகக் கருப்பையுள் புகுவர். மிகவும் விரும்பிய சுற்றத்தாரால் போற்றப்படுவர். மீண்டும் அவர்களால் கூப்பிட்டு அழுமாறு இறப்பர். எழுவகை இருளுலகமும் வருமாறு: பெருங்களிற்று வட்டம் பெருமணல் வட்டம், எரிபரல் வட்டம், அரிபடை வட்டம், புகையின் வட்டம்,

பெருங்கீழ் வட்டம், இருளின் வட்டமென எழுவகை நரகம்' (பிங்கலம். 412). அள்ளல், இரெளரவம், கும்பீபாகம், கூடசாலம், செந்துத்தானம், பூதி, மாபூதி எனலு மொன்று. குடர் - ஈண்டுக் கருப்பை. பிறப்பற்றுச் சிறப்புற்று வாழ விழையும் செந்நெறியினர்க்கு ஊர்வன, நீர்வாழ்வன, பறப்பன, நாற்காலின, நிலைத்திணையன, மக்கள், தேவர் ஆகிய எழுவகைப் பிறப்பும் துன்பமேயாம். அதனால் அவ் வேழினையும் அள்ளலெனக் கூறுதலுமொன்று.

மடல்விரி கொன்றையன் மாயன் - மாயையை உடைய சிவன். இடர் படர்ந்து - துன்பப்பட்டு. ஏழாநரகிற் கிடப்பர் - கருப்பத்தில் கிடப்பர்.

## 210. குடையுங் குதிரையுங் கொற்றவா ளுங்கொண்டு

210. குடையுங் குதிரையுங் கொற்றவா ளுங்கொண்டு
இடையுமக் காலம் இருந்து நடுவே
புடையு மனிதனார் போகும்அப் போதே
அடையும் இடம்வலம் ஆருயி ராமே.

வேந்தர் தமக்குச் சிறந்த அடையாளமாகிய கொற்றக்குடையும் நற்றிறப் பரியும், வெற்றிவாளுங் கொண்டு பலர்சூழச் சுற்றித் திரிவர். பலர்நடுவே வெற்றியுடன் வீற்றிருப்பர். அத்தகைய வேந்தராகிய மாந்தர் இறக்குங் காலத்து அவர்தம் உயிர்ப்பு இடம் வலம்மாறிச் செல்லும். குடையும் குதிரையும் கொற்றவாளும் ஒருபுடையொப்பாக முறையே குடிகளது இன்பமும் பொருளும் அறமும் ஆகும்.

ஆருயிர் - பிராண வாயு. இடம் வலம் அடையும் - இடமும் வலமும் மாறுதல் அடையும்.

## 211. காக்கை கவரிலென் கண்டார் பழிக்கிலென்

211. காக்கை கவரிலென் கண்டார் பழிக்கிலென்
பால்துளி பெய்யிலென் பல்லோர் பழிச்சிலென்
தோற்பையுள் நின்று தொழிலறச் செய்தூட்டுங்
கூத்தன் புறப்பட்டுப் போனஇக் கூட்டையே.

ஐம்பூதக் கூட்டரவாகிய உடலகத்தினின்று ஆருயிர் புடை பெயர்தலாகிய கூத்தினை வினைக்கீடாக நாளும் புரிகின்றன. அவ்வுயிர் உடம்பாகிய தோற்பையுள் நின்று செய்ய வேண்டிய தொழில்களை முற்றாகச் செய்து முடித்ததும் நீங்கிவிடும். நீங்கவே உண்டு நீக்கிய வாழை இலைபோன்று அவ் வுடலும் தூயதல்லாததாகிவிடும். அவ்வுடலைப் பல்லோர் புகழுமாறு பாராட்டுதல் முதலிய சிறப்பினைச் செய்து நல்லடக்கம் புரிந்தால்தான் என்ன? பலர் பழிக்கும்படி வாளா புறத்துப் போகட்டால்தான் என்ன? காக்கை கொத்தினால்தான் என்ன? அவ்வுடலை நல்லடக்கம் செய்வது நம்முடைய நனிநாகரிக நற்பண்பைக் காட்டும். செய்யாமல் விடுவது தீப்பண்பையே காட்டும். ஊட்டும் கூத்தன் வினைப் பயனை நுகர்வித்துக் காக்கும் உயிர்க்குயிராகிய இறைவன் என்றலும் ஒன்று.

தோற்பை - உடல். கூத்தன் - உயிருடன் கூடிய இறைவன்.

## 213. அருளும் அரசனும் ஆனையுந் தேரும்

213. அருளும் அரசனும் ஆனையுந் தேரும்
பொருளும் பிறர்கொள்ளப் போவதன் முன்னந்
தெருளும் உயிரொடுஞ் செல்வனைச் சேரின்
மருளும் பினையவன் மாதவ மன்றே.

வேந்தர் ஆனை தேர் முதலிய அரச உறுப்புக்களும் பெரும் பொருளும் பிறர் கொள்ளப் போவதன்முன் திருவருளால் தெளிவினை எய்தித் தம் உயிரொடும் சிவனடியைச் சேர்தல் வேண்டும். சேர்ந்தால் அஃது அருளிப் பாடாகிய அருந்தவம் ஆகும். அத் தவப் பேறு எய்தாவிட்டால் பின்பு அவ்வுயிர் மயக்கமெய்திப் பிறப்பினை எய்தும். பின்னை - பினை, பின்; ஐ: சாரியை.

## 213. இயக்குறு திங்கள் இருட்பிழம் பொக்குந்

213. இயக்குறு திங்கள் இருட்பிழம் பொக்குந்
துயக்குறு செல்வத்தைச் சொல்லவும் வேண்டா
மயக்கற நாடுமின் வானவர் கோனைப்
பெயற்கொண்டல் போலப் பெருஞ்செல்வ மாமே.

பொருட் செல்வத்தின் நிலைமை ஒரு படித்தாக இராது. பெரும்பாலும் குறைந்து கொண்டே வந்து முற்றும் இல்லாதாகிவிடும். அதற்கு ஒப்பு, திங்களின் தேய்வுபக்கமாகும். இயங்கும் திங்கள் சிறிது சிறிதாகக் குறைந்து தளர்ச்சியுற்று உவா நாளில் முழு இருட்டாவதைக் காண்கின்றோமன்றோ! அத்தகைய செல்வத்தை நிலையுடையதென்று கூறுதல் வேண்டா. வானவர்க்கும் மற்றும் யாவர்க்கும் முழுமுதல் தலைவனாக விளங்கும் சிவபெருமானை மயக்கம் நீங்கித் தெளிவு எய்தும் பொருட்டுப் பேரன்பால் இடையறாது எண்ணித் தொழுங்கள். அது வற்றாவூற்றாக வேண்டுங் காலத்துப் பொய்யாது பெய்து பெருஞ் செல்வமாக்கும் பெருமழைபோல் திருவடிப் பெருஞ் செல்வத்தை அளிக்கும்.

இயக்குறு... செல்வம் - இயங்குகின்ற திங்களின் இருட்பக்கத்தைப் போன்று குறைந்து கொண்டே போகின்ற.

## 214. தன்னது சாயை தனக்குத வாதுகண்டு

214. தன்னது சாயை தனக்குத வாதுகண்டு
என்னது மாடென் றிருப்பர்கள் ஏழைகள்
உன்னுயிர் போம்உடல் ஒக்கப் பிறந்தது
கண்ணது காணொளி கண்டுகொ ளீரே.

நம்முடைய நிழலென்று நாம் மிகுதிபடப் பேசுகின்றோம். அது நமக்கு எந்தக் காலத்தும் எவ்வகை உதவியும் தந்தது இல்லை.
அதனை நம்முடைய நிழல் என்பதைவிட அழிவிலா ஒளிவழித் தடையென்பதே அமைவுடைத்து. அதுபோல் செல்வமும் நம்முடைய கையில் இருப்பதால் நம்முடைய தென்று கூறுகின்றோம். உண்மை யான் நோக்கின் அது சிவனுடையதே. இவ்வுண்மை கண்டும் தம்முடைய தென்று அறிவிலார் பலர் எண்ணிக்கொண்டிருக்கின்றனர். உன்னுதலாகிய கருத்துக்குப் புலனாகும் உயிர் காலம் வந்தால் நீங்கிப் போகும். அது வரையும் உடல் உம்மிடமுள்ளது. பின்பு உம்மை விட்டு அகல்கின்றது. இவ்வுண்மையினை அகக் கண்ணாகிய அருளொளி கொண்டு கண்டு கொள்ளுங்கள்.

## 215. ஈட்டிய தேன்பூ மணங்கண் டிரதமும்

215. ஈட்டிய தேன்பூ மணங்கண் டிரதமும்
கூட்டிக் கொணர்ந்தொரு கொம்பிடை வைத்திடும்
ஓட்டித் துரந்திட் டதுவலி யார்கொளக்
காட்டிக் கொடுத்தது கைவிட்ட வாறே.

தேன்ஈ ஆனது பூவின் மணத்தினை இயற்கையாகக் கண்டு போய்த் தேனினைச் சிறிது சிறிதாக எடுத்துக் கூட்டி ஒரு மரக்கொம்பிற் கொண்டு சேர்க்கும். அவ் ஈக்கள் மனமாரப் பிறர்க்குக் கொடுக்காமையால் உடல்வலி யொன்றே யுடையார் அவ் ஈக்களைப் பலவகைச் சூழ்ச்சிகளான் விரட்டி விட்டுத் தங்கள் உடைமை போல் எடுத்துக்கொள்வர். அந்த ஈக்கள் அரும்பாடுபட்டு அணு அணுவாகச் சேர்த்த தேனைப் பிறர் கொள்ள வைத்திருந்தது போன்று ஆருயிர்களும் அரும்பாடுபட்டு வளர்த்த உடம்பினையும் தொகுத்த உடைமையினையும் நல்வழிப்படுத்தாது வாளா வைத்திருந்தன. அவ் வுயிர்களின் நோக்கம் தாமே பயன் பெறவேண்டுமென்பது. ஆனால் காலன் அவ்வுயிர்களின் எண்ணத்துக்கு மாறாக அவ்வுடலினின்றும் உயிரினைப் பிரித்துக் கொண்டு செல்கின்றனன். அவ்வுயிர்கள் உடம்பினையும் உடைமையினையும் காட்டிக் கொடுத்து நீங்குகின்றன. இரதமுங் கூட்டி என்பதற்கு தேன்ஈக்களின் வாயிலுள்ள உமிழ் நீரும் கூட்டி எனக் கூறலும் ஒன்று. தேன் - தேனீ. இரதம் - தேன்.

## 216. தேற்றத் தெளிமின் தெளிந்தீர் கலங்கன்மின்

216. தேற்றத் தெளிமின் தெளிந்தீர் கலங்கன்மின்
ஆற்றுப் பெருக்கிற் கலக்கி மலக்காதே
மாற்றிக் களைவீர் மறுத்துங்கள் செல்வத்தைக்
கூற்றன் வருங்கால் குதிக்கலு மாமே.

திருவடியுணர்வு கைவந்த நல்லோர் செல்வத்தின் உண்மையினைத் தெளிவிக்கத் தெளிந்து கொள்ளுங்கள். தெளிந்தபின் ஐயுற்றுக் கலங்காதீர்கள். 'செல்வம் ஆறிடும் மேடும் மடுவும் போலாம்' தன்மைத்து. அதனால் அச்செல்வத்தின்மாட்டுக் கலக்கங்கொண்டு மலங்குதல் வேண்டா. அச் செல்வத்தின்மாட்டு வைத்துள்ள கடும்பற்றினை மாற்றிக் களையுங்கள். அவ்வாறு களைந்து கொண்டால் கூற்றுவன் வருங்கால் செல்வப் பற்றின்றி அச் செல்வத்தினின்றும் நீங்கி மேனிலை எய்துதலும் கூடும். குதித்தல் - விட்டு நீங்கல்; பற்றறல்.

## 217. மகிழ்கின்ற செல்வமும் மாடும் உடனே

217. மகிழ்கின்ற செல்வமும் மாடும் உடனே
கவிழ்கின்ற நீர்மிசைச் செல்லுங் கலம்போல்
அவிழ்கின்ற ஆக்கைக்கோர் வீடுபே றாகச்
சிமிழொன்று வைத்தமை தேர்ந்தறி யாரே.

நாம் மகிழ்கின்ற செல்வ வாழ்வும் அச் செல்வத்தால் தேடும் மாடு முதலிய பல பொருள்களும் நீரில் செல்லும் கலம் இன்ன நேரத்தில் கவிழுமென்று எதிர்பாராத வகையாகத் திடும்மெனக் கவிழ்வதுபோல் அழிந்தொழியும். உயிரும் உடம்பும் சிலநாள்வரை வினைக்கீடாகப் பொருந்துமாறு சிமிழ்த்தலாகிய கட்டினள் உள்ளன. பின்பு அவ்வாக்கையின் கட்டினை விடுவித்து உயிரினைக் காலன் கொண்டு செல்கின்றனன். இங்ஙனம் கொண்டு செல்வதால் உடலுக்குரிய கட்டு அகற்றப் படுவதல்லாமல் உயிரினுக்குரிய கட்டு அகற்றப்படுவதில்லை. சிமிழ்ப்பு - கட்டு.

## 218. வாழ்வும் மனைவியும் மக்கள் உடன்பிறந்

218. வாழ்வும் மனைவியும் மக்கள் உடன்பிறந்
தாரு மளவே தெமக்கென்பர் ஒண்பொருள்
மேவு மதனை விரிவுசெய்வார்கட்குக்
கூவுந் துணையொன்று கூடலு மாமே.

ஒருவர் இறக்குந் தறுவாயில் அவருடன் பலவகையாலும் ஒத்துவாழ்ந்த மனைவியும், மக்களும், உடன் பிறந்தார்களும் தனித்தனியே எங்களுக்குச் சொத்து என்ன இருக்கின்ற தென்று வினவுவர். எவ்வளவு பொருள் இருந்தாலும் இந்த நிலைமைதான் ஏற்படும். அதனால் நன்மைக்கு ஆகும் சிறந்த பொருளை வழிக்குத் துணையாம் புண்ணியத்தில் செலவு செய்தல் வேண்டும். அப் புண்ணியப் பயனாய்ச் சிவபெருமான் அருளால் தோன்றுவன். தோன்றித் திருவைந்தெழுத்தைச் செவியறிவுறுத்துவன். அம் மறையினை முறையாகக் கணிப்பார்க்கு வழித்துணையாக அது கை கூடும்.

விரிவு செய்வார்க்கு - அறவழியில் செலவிடுவார்க்கு.
ஒன்று - சிவன் என்று.

## 219. வேட்கை மிகுத்தது மெய்கொள்வார் இங்கிலை

219. வேட்கை மிகுத்தது மெய்கொள்வார் இங்கிலை
பூட்டுந் தறியொன்று போம்வழி ஒன்பது
நாட்டிய தாய்தமர் வந்து வணங்கிப்பின்
காட்டிக் கொடுத்தவர் கைவிட்ட வாறே.

உடம்புடன் கூடிவாழ வேண்டு மென்னும் நீங்கா விருப்பமாகிய வேட்கை அளவின்றி மிகுந்தது. அதையொழித்து இறைவன் திருவடியைச் சேர வேண்டுமென்னும் உண்மையினை மேற்கொள்வார் ஒருவருமிலர். உயிர்ப்பாகிய பிராணவாயுவைப் போகவொட்டாது கட்டுந்தறி போன்று உடம்பகத்து அமைந்துள்ளது நடுநாடியாகிய சுழுமுனை. உயிர்ப்பு அதன் வழிச் செலுத்தும் பயிற்சியிலார்க்கு எவ்வகைத் தடையுமின்றிப் போகும் வழிகள் ஒன்பதுள்ளன. இறுதிக் காலத்து உடம்பினைப் பேணி வளர்த்துக் காப்பாற்றி நிலைப்பித்த தாய் தந்தை முதலிய உறவினர் சூழ்ந்து உயிரினை ஏதுஞ் செய்ய முடியாதபடி உடம்பினைக் காட்டிக் கொடுத்துக் கைவிட்டனர். வணங்கி - வளைந்து; சூழ்ந்து.

தறி - சுழுமுனை. போம்வழி - உயிர்போம் வழி. நாட்டிய - வளர்த்த.

# 220. உடம்பொ டுயிரிடை விட்டோடும் போது

220. உடம்பொ டுயிரிடை விட்டோடும் போது
அடும்பரி சொன்றில்லை அண்ணலை எண்ணும்
விடும்பரி சாய்நின்ற மெய்ந்நமன் தூதர்
சுடும்பரி சந்தையுஞ் சூழகி லாரே.

உயிரானது உடம்பினை விட்டு நீங்கிக் கூற்றுவன் வாயிலாக மேற் செல்லும் போது அக் கூற்றுவனைத் தடுக்கத் கூடிய ஆற்றல் தவமோ தானமோ வேள்வியோ பிறவோ ஒன்றுக்கும் இல்லை. ஆனால் அண்ணலாகிய சிவபெருமான் திருவைந்தெழுத்தை நன்னெறி நான்மை நலந்தோன்ற 'நவசிவய, சிவயநம, சிவயசிவ, சிவசிவ' எனப்படிமுறை யான் நான்காகப் பகுத்துள்ளனர். இவற்றில் ஏதாவதொன்றைத் திருவருள் வலத்தால் கைக்கொண்டு ஒழுகினால் அது கூற்றுவனை வெல்லும் ஆற்றல் வாய்ந்ததாக இருக்கும். அம் மறைவல்லார்பால் கூற்றுவன் தூதுவர் வர நினைக்கவும் அஞ்சுவர். சூழ்தல் - நினைத்தல். ஏனையார்பால் அத் தூதுவர் அஞ்சாது வந்து கைக்கொண்டு செல்லுவர். அவ்வுண்மை 'வெந்தூதுவரோ டிறப்பன்' என்னும் திருமுறையான் உணரலாம். இம்மைக்கண் செந்நெறிப் பயிற்சியிலாதார் சிவனை மறப்பினும் உம்மைக் கண் புக்கதும் கூற்றுத் தலைவனாம் நடுவன் அச்சிவனை நினைவுறுத்துவன். அது வருமாறு:

வெற்றிக் கடுந்தூதர் வேகத் துடன்வந்து
பற்றித்தம் வெங்குருவின் பாற்காட்ட - இற்றைக்கும்
இல்லையோ பாவி பிறவாமை யென்றெடுத்து
நல்லதோர் இன்சொல் நடுவாகச் - சொல்லியிவர்.

- போற்றிப்பஃறொடை: 81 - 4.
அண்ணலை - சிவனை. எண்ணும் - எண்ணச் செய்வன். இறப்பு சிவனை எண்ணச் செய்தற்கு ஒப்பு வருமாறு: பசி உணவினையும், நோய் மருந்தினையும், பருவம் தக்க உறையுளையும் நாடச் செய்வனவாம். உறையுள் - இல்லம், போர்வை, குடை முதலிய தற்காப்புக்கள். போற்றிப்பஃறொடை செந்தமிழ்ப் பொருள் நூல் பதினான்கனுள் ஒன்று. கடும் பரிசம் - மிகச் சிறந்த திருவடியுணர்வின் விளக்க ஊற்றுணர்வு.

அடும்பரிசு - வெல்லும் வகை. அண்ணலை ... லாரே - உயிர் போகும்போது சிவனை நினைந்தால் நமன் தூதுவர் நணுகமாட்டார்.

## 221. கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே

221. கிழக்கெழுந் தோடிய ஞாயிறு மேற்கே
விழக்கண்டுந் தேறார் விழியிலா மாந்தர்
குழக்கன்று மூத்தெரு தாய்ச்சில நாளில்
விழக்கண்டுந் தேறார் வியனுல கோரே.

நாள்தொறும் கிழக்கே தோன்கின்ற பகலவன் மெல்ல மெல்ல உச்சிக்கு ஏறிவந்து அதுபோலவே கீழிறங்கி மேற்கே மறைகின்றனன். இங்ஙனம் மறைவதை ஒவ்வொரு நாளும் பார்த்திருந்தும் அகக் கண்ணாகிய திருவடியுணர்விலார் தமக்கும் இந் நிலைமை வரும் என்று எண்ணார். இளங்கன்றானது ஆண்டுகள் செல்லச் செல்ல முதிர்ந்து சில ஆண்டுகளில் எருதாய் ஆகின்றது. பின் இறந்து படுகின்றது. அவர்கள் இவ்வுண்மையினையும் கண்டு தெளியார். இச் செய்யுள் ஒட்டணியாகும். பகலவன் நின்றாங்கு நிற்ப நில உருண்டை அப் பகலவனைச் சூழ்ந்து உருண்டு வருகின்றது. அதனால் பகலவன் எழுந்து மறைவதுபோல் காணப்படுகின்றது. கீழும் மேலுமாகச் சுழன்று வரும் இராட்டையில் நாம் ஏறியிருந்து ஒரு பக்கம் ஓரிடத்து ஒரு பொருளைக் குறிப்பாக வைப்பித்து அதனை நோக்கிக் கொண்டே வந்தால் நாம் மேலே இருக்கும் போது அது கீழிருப்பதாகத் தோன்றும். நாம் அதன் வழிக் கீழ் வர வர அப் பொருள் மேலெழுவதாய்த் தோன்றும். நாம் அதன் கீழ்ப்பக்கஞ் செல்ல அது முற்றாக மறைந்துவிடும். இவ்வொப்பினால்

அவ்வுண்மை அறியலாம். விழியிலா மாந்தர் - திருவடி யுணர்விலாத மக்கள்.

## 222. ஆண்டு பலவுங் கழிந்தன அப்பனைப்

222. ஆண்டு பலவுங் கழிந்தன அப்பனைப்
பூண்டுகொண் டாரும் புகுந்தறி வார்இல்லை
நீண்டன காலங்கள் நீண்டு கொடுக்கினுந்
தூண்டு விளக்கின் சுடரறி1 யாரே.

உலக மாந்தர் பிறந்து ஆண்டுகள் பலவுங் கடந்தன. அப்படியிருந்தும் அப்பனாகிய சிவபெருமானை அவனருளால் யாரும் இடையறாது நினைவதாகிய அகந்தழுவுதலைச் செய்திலர். அகந்தழுவுவாரே பூண்டு கொண்டாரெனப்படுவர். அவன் திருவடியுணர்வால் அவனுடன் புணர்ந்து அவனுள் அடங்கி அவன் திருவடிப் பேரின்பத்தினை நுகர்ந்தறிவாரும் இலர். சித்தி முதலியவற்றால் வாழ்வுக்குரிய காலங்கள் மிக நீண்டு கொடுத்தாலும் ஆருயிரின் அன்பறிவு ஆற்றல் மூன்றனையும் ஆண்டவனுடைய அன்பறி ஆற்றல்கள் மூன்றும் கலந்து தூண்டினாலன்றித் தொழிற்படா. அதனால் சிவபெருமான் தூண்டு விளக்கு எனப்படுகின்றனன். அத்தகைய தூண்டு விளக்கின் சுடரினை அச் சித்தர்களும் அறியார். நீண்டன காலங்கள்: நீண்டனவாகிய காலங்கள்; பண்புத் தொகை.

## 223. தேய்ந்தற் றொழிந்த இளமை கடைமுறை

223. தேய்ந்தற் றொழிந்த இளமை கடைமுறை
ஆய்ந்தற்ற பின்னை அரிய கருமங்கள்
பாய்ந்தற்ற கங்கைப் படர்சடை நந்தியை
ஓர்ந்துற்றுக் கொள்ளும் உயிருள்ள போதே.

இளமைப் பருவம் தேய்ந்து ஒழிந்தன. கடைசியாகப் பருவ முடிவில் செயற்கருஞ் செயல்கள் பலவும் ஆய்ந்து முடிந்தன வாயினும் அவை செய்வதற்கு அருமையாய் முடியாமல் கழியும். வான் புனலாகிய ஆகாயகங்கை மிக்க வேகமாகப் பாய்ந்து வந்து இறைவன் திருச்சடையில் அடங்கிற்று. அத்தகைய திருச்சடையினையுடைய சிவபெருமானை உடம்பகத்து உயிர் நல்ல நிலைமையிலுள்ளபோதே திருவருளால் ஓர்ந்து திருவடியுணர்வால் கலந்து கொள்ளுங்கள். அரிய: பலவின் பால் படர்க்கைக் குறிப்பு வினைமுற்று.

தேய்... பாய்ந்தற்ற - இளமை கழிந்தால் அரிய கருமங்கள் செய்ய முடியா. கங்கை. . . போதே - இளமை நடமாடும்போதே நந்தியை நினை.

## 224. விரும்புவர் முன்னென்னை மெல்லியன் மாதர்

224. விரும்புவர் முன்னென்னை மெல்லியன் மாதர்
கரும்பு தகர்த்துக் கடைக்கொண்ட நீர்போல்
அரும்பொத்த மென்முலை ஆயிழை யார்க்குக்
கரும்பொத்துக் காஞ்சிரங் காயும்ஒத் தேனே.

யான் கட்டிளமையாக இருக்கும்போது அழகிய மெல்லிய இயல்பினையுடைய பெண்கள் முறையாக மணந்து கொள்ள விரும்புவர். அவ் விருப்பம் கரும்பை யொடித்து நன்றாகச் சாறு பிழிந்தெடுத்த தூய கருப்பஞ் சாற்றை விரும்புவதனை யொக்கும். முதுமை வந்துற்றபோது கோங்கரும்பினை யொத்த மெல்லிய முலையினையும் ஆராய்ந்து அழகாக அமைக்கப்பெற்ற சிறந்த அணிகலன்களையும் பூண்டுள்ள பெண்களுக்கு முன்னம் கரும்பொத்துக் காணப்பட்ட யானே காஞ்சிரங்காயாகிய எட்டியினை ஒத்து வெறுப்புக்கிடனாகக் காணப்படுவன். இது பருவமாறுதலினால் அன்பகல ஏற்படும் மனமாறுபாடென்க.

முன் - இளமையில். காஞ்சிரங்காய் - எட்டிக்காய்.

## 225. பாலன் இளையன் விருத்தன் எனநின்ற

225. பாலன் இளையன் விருத்தன் எனநின்ற
காலங் கழிவன கண்டும் அறிகிலார்
ஞாலங் கடந்தண்டம் ஊடறுந் தானடி
மேலுங் கிடந்து விரும்புவன் நானே.

பாலன், கட்டிளைஞன், கோல்காலாம் முதியன் என்னும் பருவங்கள் முறை முறையாகக் கழிவனவற்றைக் கண்டிருந்தும் நன்
னெறிச் சென்று நலம் பெற வேண்டுமென்னும் உண்மையைப் பலர் அறிகிலர். அடியேன் ஞால முழுதினையுங் கடந்து அண்டமுகட்டினையும் ஊடறுத்து எங்கும் நிறைந்து நின்றருளும் சிவபெருமான் திருவடியினை அவனருளால் அவன்பணி செய்துகிடந்து மேலும் மேலும் விரும்புவன்.

## 226. காலை எழுந்தவர் நித்தலும் நித்தலும்

226. காலை எழுந்தவர் நித்தலும் நித்தலும்
மாலை படுவதும் வாணாள் கழிவதுஞ்
சாலும்அவ் வீசன் சலவிய னாகிலும்
ஏல நினைப்பவர்க் கின்பஞ்செய் தானே.

ஒவ்வொரு நாளும் காலையில் கிழக்கே எழும் பகலவன் மாலையில் மேற்கே சென்று மறைகின்றனன். அவ்வாறு மறைவதைக் கண்டு பலர் இன்பமுடன் பொழுது போகாநின்றதெனக் களித்து அந்நாளைக் கழிப்பர். ஆனால் உண்மையான் நோக்கினால் அப்பொழுது ஒவ்வொரு நாளும் அவருடைய வாழ்நாளின் ஒவ்வொரு கூறையும் அவர் மகிழும்படியாக அறுத்துக் கொண்டு செல்கின்றது. அங்ஙனம் இறைவன் செய்வதுதான் நடப்பாகிய ஆதியாற்றலின் மறைப்பருள். எல்லா நிறைவும் இயற்கையிலேயே ஒருங்கமைந்த அவ்விறைவன் நினையாதார்மாட்டு நினைப்பிக்கும்படி செய்தருள் முனிவுள்ளவன் போன்று காணப்படினும் தக்கவாறு நினைவார்மாட்டு இடையறா இன்பஞ் செய்யும் தடையிலாக் கனிவுள்ளவனாவன். சலவியன் - வழிவாராதார்மாட்டு முனிவுள்ளவன். ஏல - தகுந்த முறையால்.

# 227. கண்ணனுங் காய்கதி ரோனும் உலகினை

227. கண்ணனுங் காய்கதி ரோனும் உலகினை
உண்ணனின் றளக்கின்ற தொன்றும் அறிகிலார்
விண்ணுறு வாரையும் வினையுறு வாரையும்
எண்ணுறும் முப்பதில் ஈர்ந்தொழிந் தாரே.

ஒவ்வொருநாளும் காய் கதிரோன் காலை, நண்பகல், மலைமறைந் தொளித்தல் என்னும் மூன்று கூறாக, உலகத்துள் நின்று அளக்கின்றனன். அதுபோல் கண்ணனும் உடலுள் நின்று ஒருவனுடைய வாழ்நாள் முழுமையையும் கல்வி கற்றல், மனையறம் பேணல், இறைவன் பால் நினைவகலாமை என மூன்று கூறாக அளக்கின்றனன். அவன் பதினாறு ஆண்டுவரை கல்வியும், நாற்பத்தாறு ஆண்டுவரை மனையறம் பேணலும், அதற்கு மேல் நிறை வாழ்நாள் என்னும் நூற்றிருபது ஆண்டுவரை இறை நினைவு அகலாமையுமாக ஆருயிர்களைக் காத்து நிறுத்தலாகிய அளவையைச் செய்கின்றனன். இம் மூன்றனையும் ஒரு புடையாக இன்பம் பொருள் அறம் என்னும் முப்பகுதியின் சிறப்பியல்பு என்னலாம். எடுத்துக்காட்டாக மனையறம் பேணுதல் பொருளின் சிறப்பியல்பாயின் ஏனை இன்பமும் அறமும் அம் மனையறத்திற்குப் பொது இயல்பு என்க. அது போல் மற்றவற்றிற்குங் கொள்க. 'முப்ப
தாம் ஆண்டளவில் மூன்றற்று ஒரு பொருளைத் தப்பாமல் தன்னுட் பெறல்' வேண்டுமென்னும் நல்வழிக்கண் (39) தமிழ் மூதாட்டியர் நவின்றதும் இதனுடன் ஒத்துக் காண்க.

இதன்கண் குறிக்கப்பட்ட முப்பதாண்டென்பது செந்தமிழ்க் கற்பியல் திருமணம் அருளால் முடிந்தநாள் தொட்டுள்ள வரையறையாகும். இங்ஙனம் இருதிறத்தாரும் அளக்கும் அளவையின் உண்மையைப் பலர் அறிகின்றிலர். இவ் விருதிறத்தாராகிய கதிரவனும் கண்ணனும் சிவன் திருவாணையின் வழி நின்று விண்ணுறுவாரையும், வினைக்கீடாகப் பிறந்து மண்ணுறுவாரையும் எண்ணப்படும் முப்பதாண்டளவில் இன்பம் பொருள் என்னும் இரண்டினின்றும் ஈர்த்து அறத்தின்பால் நிறுத்துங் கடனுடையராவர். ஆயின் ஆருயிர்கள் அவ்வழி நிற்கும் கருத்துடையவாதல் வேண்டும். அங்ஙனமில்வழி மீண்டும் வினைக்கீடாகப் பிறப்பு இறப்பிற்பட்டு உழலும்.

## 228. எய்திய நாளில் இளமை கழியாமை

228. எய்திய நாளில் இளமை கழியாமை
எய்திய நாளில் இசையினால் ஏத்துமின்
எய்திய நாளில் எறிவ தறியாமல்
எய்திய நாளில் இருந்துகண் டேனே.

வினைக்கீடாக வரையறுக்கப்பட்ட இளமை கழிவதன் முன் உள்ளநாட்களில் பொருள்சேர் புகழால் திருமுறைவழி இடையறாது ஏத்துங்கள். ஒவ்வொருவரும் தங்களுக்கென வரையறுக்கப்பட்ட நாள்களில் அருள் துணையால் மாசறுத்துத் தூயராய் இறை நினைவுடன் வாழுதல் வேண்டும். இங்ஙனம் ஒழுகாமல் மனம்போல் ஒழுகி வழுக்குற்று இழுக்கடைவாரும் பலர். இதனைப் பொருந்திய நாள்களில் இருந்து கண்டேன் என்க. கண்டேன்: நன்றாற்றுதலாகிய நல்லறஞ் செய்யாது இளமை சிலர்க்குப் பயன் இன்றிக் கழியக் கண்டேன்.

இசையினால் - புகழக்கூடிய அறச்செய்கைகளினால். எய்தியநாள் - வரையறுக்கப்பட்ட ஆயுள். எறிவது - அழிவது.

## 229. தழைக்கின்ற செந்தளிர்த் தண்மலர்க் கொம்பில்

229. தழைக்கின்ற செந்தளிர்த் தண்மலர்க் கொம்பில்
இழைக்கின்ற தெல்லாம் இறக்கின்ற கண்டும்
பிழைப்பின்றி எம்பெரு மானடி ஏத்தார்
அழைக்கின்ற போதறி யாரவர் தாமே.

பலவாம் பயன் மரங்களுள் மரத்தையும், கிளைகளையும், குளிரும் நறுமணமு மிக்க மலர் முதலியவற்றையும் உண்டாக்குவனவாகிய செந்தளிர்கள் நன்றாய்த் தழைத்துச் செழித்துக் காட்சிக்கு இனியவாய் இருந்தனவற்றையுங் காண்கின்றோம். பின் பழுப்புற்று உதிர்ந்து மரத்தை விட்டுக் கழிகின்ற முறைமையையும் காண்கின்றோம். கண்டும் அம் முறைமைபோல் நம்முடம்புக்கும் அழிவுவரும் என்று என்னுவார் அரியர். உண்மையுணர்வார் தவறுதல் ஒரு சிறிதுமின்றி எப்பொழுதும் எம்பெருமான் அடியினையே ஏத்துதல் புரிவர். சிவனைத் தொழாதார் அனைவரையும் காலமுடிவில் காலன் வந்து உயிரினைக் கைக்கொண்டு செல்ல அழைப்பன்; அப்பொழுது அவர் என் செய்வதென்று அறியாது துன்புறுவர்.

இழைக்கின்ற - உண்டாக்கப்பட்ட. பிழைப்பு - தவறுதல். அழைக்கின்றபோது - இயமன் கூப்பிடுகிறபோது.

# 230. ஐவர்க் கொருசெய் விளைந்து கிடந்தது

230. ஐவர்க் கொருசெய் விளைந்து கிடந்தது
ஐவரும் அச்செய்யைக் காத்து வருவர்கள்
ஐவர்க்கு நாயகன் ஓலை வருதலால்
ஐவரும் அச்செய்யைக் காவல்விட் டாரே.

ஆருயிராகிய விளைநிலம் மெய் வாய் கண் மூக்கு செவியென்னும் ஐம்புலத்தார்க்கும் உரிமையாக விளைந்து கிடந்தது. அவ் ஐவரும் அவ்விளைநிலத்தினைத் தம்வழி இழுத்துக் காத்து நின்றனர். இவ் ஐவரும் சிவபெருமானின் திரு ஆணைவழி நடப்பவராவர். வழிக்கு வாராத மாவினங்களையும் மாக்களையும் வழிக்கு வரும்பொருட்டு அத்துறையில் வல்லார்பால் சில நாட்களுக்கு உரியவர்கள் விட்டுவைப்பார்களல்லவா? அதுபோல் ஆண்டவனும் தன்னை நினைப்பதாகிய நல்வழிக்கு ஆருயிர்கள் வருவதன் பொருட்டு 'ஊன்றிநின் றாரைவர்க்கு ஒற்றிவைத்தனன்.' அவ்வுயிர்கள் அருளால் அவனுக்கு அடிமையாகி விடின் அவன் அவ்வுயிர்களை 'ஏன்று கொண்டு ஒற்றியெல்லாம் சோன்று கொள்வன்.' அதுவரையும் அவ் ஐவரே காவலராவர். அவ் ஐவர்க்குந் தலைவன் சிவபெருமானே. அவனது ஆணைவழி ஆருயிர்களின் நாள் முடிவின்வழிக் கூற்றுவன் ஓலை தோற்றமுடன் வரும். அவ்வோலை கண்டதும் ஐவரும் ஆருயிராகிய அச் செய்யினைக் காவல் கைவிட்டகல்வர். சோன்று கொண்டாய் - சொந்தமாக்கிக் கொண்டாய்.

ஐவர்க்கு - ஐம்பொறிகளுக்கு. ஐவர்க்கு நாயகன் - உருத்திரன்.

## 231. மத்தளி ஒன்றுள தாளம்இ ரண்டுள

231. மத்தளி ஒன்றுள தாளம்இ ரண்டுள
அத்துள்ளே வாழும் அரசரும் அஞ்சுள்ள
அத்துள்ளே வாழும் அரசனும் அங்குளன்
மத்தளி மண்ணாய் மயங்கிய வாறே.

மண் + தளி = மண்டளி. இதுவே மட்டளி எனவும், மத்தளி எனவும் மருவிவரும். எனவே மண்ணாலாகிய நடமாடும் திருக்கோவில் - உடம்பு. அஃது ஈண்டு மத்தளி எனப்பட்டது. மத்தளியாகிய உடம்பு ஒன்று உள்ளது. அதன்கண் உயிர்ப்பினை விடுதலும் நிறுத்தலுமாகிய இடங்கள் இரண்டுள. அவ்வுடம்பினை எனதெனப் பற்றுக்கொண்டு ஆளும் அரசர்களாகிய ஆவிக்கருவிகளும் அங்குள்ளன. தூவாமாயையினின்றும் உணர்வுமெய்யாகத் தோன்றும் காலம், ஊழ், உழைப்பு, உணர்வு, விழைவு ஆகிய ஐம் போர்வையுடன் ஆருயிர் உடம்பகத்து நிற்றலான், ஏற்றுரையாக அரசர் ஐவர் எனக் கூறப்பட்டனர். அவ்வுயிர்களை இயக்கி, என்றும் பிரியாது நின்றருளும் சிவபெருமானாகிய அரசனும் அங்குளன். அவ்வரசன் புறப்பட்டால் அம் மத்தளியாகிய உடம்பு மண்ணொடு கலந்து மண்ணாய்ப் போகும் மாத்தளி என்பது, மத்தளி எனக் குறுகிற்று எனலும் ஒன்று. வாழும் அமைச்சரும் ஐந்துளர் எனவும் பாடம் என்ப. ஒன்றுள என்பது துவ்வீறுதொக்கு நின்றது. தளி - திருக்கோவில்.

மத்தளி - உடல். தாளம் - இரேசகம் - பூரகம். அரசன் - உயிர்.

## 232. வேங்கட நாதனை வேதாந்தக் கூத்தனை

232. வேங்கட நாதனை வேதாந்தக் கூத்தனை
வேங்கடத் துள்ளே விளையாடு நந்தியை
வேங்கடம் என்றே விரகறி யாதவர்
தாங்கவல் லாருயிர் தாமறி யாரே.

வெந்தொழியும் இயல்பு வாய்ந்த உடம்புக்குத் தலைவனாகிய உயிர்க்கு உயிரை, திருவருளால் திருவடியுணர்வு பெறுதலாகிய திருநான்மறை முடிவின்வழி நடப்பிக்கும் வேதாந்தக் கூத்தனை, ஊழிக்காலத்து அனைத்தும் ஒருங்கு வெந்தழியும் அறிவுப் பெரு வெளியாகிய சுடுகாட்டுள் ஆடும் சுடர்க் கொழுந்தாகிய நந்தியை இவ்வுடம்புள்ள போதே நன்குணர்ந்து ஒழுகுதல் தலை. இவ்வுடம்பு எரியுண்டழியும். அதனால் நிலையா உடம்பு நிலைத்துள்ள போதே நந்தியெங் கடவுளை அடையும் வழி வகைகளை அறிந்துணர்தல் வேண்டும். இவ்வுண்மையினை அறிந்து கொள்ளாதவர் தம்முயிர் அவ்வுடம்பினைத் தாங்கி நிற்கும் வன்மையால் உளதாம் பயன் இன்ன தென்றறியார். வேங்கடம்: எரிந்து கொண்டிருக்கும் சுடுகாடு. விரகு - வழிவகை; சூழ்ச்சி.

வேங்கடநாதனை - வேகும் இயல்புள்ள உடலுக்கு நாதனை. வேங்கடம் - உடல்.

## 233. சென்றுணர் வான்திசை பத்துந் திவாகரன்

233. சென்றுணர் வான்திசை பத்துந் திவாகரன்
அன்றுணர் வால்அளக் கின்ற தறிகிலர்
நின்றுண ரார்இந் நிலத்தின் மனிதர்கள்
பொன்றுணர் வாரிற் புணர்க்கின்ற மாயமே.

பத்துத் திசையினையும் ஊழ்மெய்யாகிய காலதத்துவம் ஞாயிற்றினைக் கருவியாகக் கொண்டு அளக்கின்றது. ஞாயிற்றினைத் திவாகரன் எனவும் கூறுவர். அத் திவாகரன் அளக்குந் தன்மை ஆருயிர்களின் வாழ்நாளை அளக்கின்ற தன்மை என உணரார். இந் நிலத்தின் வாழும் மனிதர்களே இவ்வுண்மையினையுணரும் இயல்பு வாய்ந்தவராவர். அத்தகையோரும் உணராது வீணாய்ப்பிறந்து இறந்து ஒழியும் மாக்கள் கூட்டத்தில் கலந்து விடுகின்றனர். இஃதென்னமாயம்!

திவாகரன் - சூரியன்.

# 234. மாறு திருத்தி வரம்பிட்ட பட்டிகை

234. மாறு திருத்தி வரம்பிட்ட பட்டிகை
பீறு மதனைப் பெரிதுணர்ந் தாரிலை
கூறுங் கருமயிர் வெண்மயி ராவது
ஈறும் பிறப்புமொ ராண்டெனும் நீரே.

பட்டிகையாகிய பட்டாடையின்கண் ஏற்படும் மாறுதல்களைச் செம்மைப்படுத்தி விலை வரம்பும், கரை வரம்பும் பிறவரம்பும் செய்தமைத்து நல்கிய அப் பட்டாடையும் 'நூற்றுப் பத்தாயிரம் பொன் பெறினும் நூற்சீலை, நாற்றிங்கள் நாளுக்குள் நைந்து விடும்' என்பது முதுமொழியாதலின், நாளாக நாளாகக் கிழிந்தொழியும். இவ்வுண்மை உடலும் நாளாக நாளாகத் தளர்ந்து மாயும் என்பதனையே குறிப்பதாகும். இவற்றைப் பலர் பெரிதும் உணர்ந்தாரல்லர். சிறப்பித்துச் சொல்லப்படும் நீலமணியின் மிக்க கருமை வாய்ந்த தலைமயிர், கொக்கின் தூவியன்ன வெண்மையாவதும் காண்கின்றனர். ஒவ்வொரு நாளும் ஞாயிறு தோன்றி மறைவதையும் காண்கின்றனர். அது தம்முடைய வாழ்நாளாகிய அகவையை ஆண்டெனும் பெயரால் ஈர்ந்து செல்லும் காலத்தன்மை என்று உணர்கிலர். இந்நிலைக்கு வருந்தாது மகிழ்ந்து கொண்டிருப்பது அறிவிலார் செயலாகும். அகவை - ஆண்டு; வயது. நீர் - தன்மை.

பட்டிகை - பட்டாடை.

## 235. துடுப்பிடு பானைக்கும் ஒன்றே அரிசி

235. துடுப்பிடு பானைக்கும் ஒன்றே அரிசி
அடுப்பிடு மூன்றிற்கும் அஞ்செரி கொள்ளி
அடுத்தெரி யாமற் கொடுமின் அரிசி
விடுத்தன நாள்களும் மேற்சென் றனவே.

உடலினைப் புறத்துப் பேணும் உணவு சமைத்தற்கு அடுப்பும், துடுப்பும், பானையும், அரிசியும், எரி கொள்ளியும், எரியும் வேண்டுவன. அதுபோன்று உடலகத்து அமிழ்த வுணவு சமைப்பதற்கும் அத்தனையும் வேண்டும். அம்முறையில் உடம்பு பானை; உயிர்ப்பு அரிசி; வலப்பால் இடப்பால் மூக்குகள் துடுப்பு; கொப்பூழ் அடுப்பு; ஞாயிறு திங்கள் எரி தீ; உயிர்க்காற்று, மலக்காற்று, தொழிற் காற்று, ஒலிக்காற்று நிரவுகாற்றென்னும் ஐந்தும் எரிகொள்ளி. ஏற்றி இறக்கி நிறுத்திச் செய்வதாகிய உயிர்ப்புப் பயிற்சியாம் சமையலினைச் செய்து புருவ நடுவின்கண் அமிழ்தத்தை ஆக்குங்கள். அதனால் உடல் நலமுற நீண்டு நிற்கும். ஏனையார்க்கு வீணாகக் காலங்கள் பல கழிந்து மேற்போயின. பயிற்சியுடையார்க்கு உடம்பு நெடுங்காலம் நிலைபெறும். வரையறுத்த அகவை கழியினும் மேலும் நெடுநாள் வரை செய்யப்படும். அரிசி - புருவ நடுவிலுள்ள அமிழ்து.

(அ. சி) துடுப்பு - இடைகலை பிங்கலை. அடுப்பு - நாபித்தானம். கொள்ளி - ஞானாக்கினி. பானை - உடல். அரிசி - உயிர்.

## 236. இன்புறு வண்டிங் கினமலர் மேற்போய்

236. இன்புறு வண்டிங் கினமலர் மேற்போய்
உண்பது வாச மதுபோல் உயிர்நிலை
இன்புற நாடி நினைக்கிலு மூன்றொளி
கண்புற நின்ற கருத்துள்நில் லானே.

இன்புறும் இயல்பு வாய்ந்த வண்டுகள் பூவின் நறுமணம் கண்டு அம் மணத்தின் வழியே சென்று பூவினகத்துள்ள மண நிறைந்த மதுவினையே நுகரும். அதுபோல் ஆருயிர்கள் நிலைத்த திருவடிப் பேரின்பத்தினை நுகர நினைக்கினும், ஞாயிறு திங்கள் தீ என்னும் மூன்று ஒளிப் பொருள்களைக் கண்களாகக் கொண்டு திகழும் சிவபெருமான் புறத்தே காணும்படி வேறாக நில்லான். உயிரொடு பின்னி அறிவிற்காணும்படி அகத்தே நிற்பன். கண்புறம் - புறக்கண்; சுட்டுணர்வு. நில்லான் - வேறாக விளங்கான்.

மூன்றொளி கண் - மூன்று கண் ஒளி; (சோமசூரிய அக்கினி வடிவான சிவன்). புறநின்ற - சேரமாட்டான்.

## 237. ஆம்விதி நாடி அறஞ்செய்மின் அந்நிலம்

237. ஆம்விதி நாடி அறஞ்செய்மின் அந்நிலம்
போம்விதி நாடிப் புனிதனைப் போற்றுமின்
நாம்விதி வேண்டும் தென்சொலின் மானிடர்
ஆம்விதி பெற்ற அருமைவல் லார்க்கே.

கூறுங்கால் எழுவகைப் பிறப்பினுட் சிறந்த மக்கட் பிறப்பை எடுக்கும் அருமைப் பாட்டினை அருளால் பெற்ற உரனுடை உள்ளத்தார்க்கு வேறு நாம் கூறவேண்டிய விதி யாதுளது. மனையறம் பேணும் பொருட்டு அறநூல் கூறும் விதியின்படி செய்தல் வேண்டும். திருவடிப் பேற்றினை அடைதற்கு அவனருள்தரும் தமிழாகம முறைப்படி தூயோனாகிய சிவபெருமானைப் பாடிப் பரவிப் பணியுங்கள். போம் விதி: வீடு பேற்றுநிலை. தென்சொல் - அழகிய இனிய என்றுமுள்ள இயற்கைத் தமிழ்மொழி.

ஆம் விதி - இல்லற துறவறங்களுக்கு உரித்தாம் விதி. அந்நிலம் - முத்தியுலகம்.

## 238. அவ்வியம் பேசி அறங்கெட நில்லன்மின்

238. அவ்வியம் பேசி அறங்கெட நில்லன்மின்
வெவ்விய னாகிப் பிறர்பொருள் வவ்வன்மின்
செவ்விய னாகிச் சிறந்துண்ணும் போதொரு
தவ்வி கொடுமின் தலைப்பட்ட போதே.

வஞ்சனை பொய் முதலிய பிறர்க்குத் துன்பம் விளைக்கும் தீச்சொற்களைச் சொல்லி அறமுறை கெடுமாறு நில்லாதீர். பேராசை கொண்டு மற்றவர் பொருளைச் சிறிதும் நடுநிலை திறம்பி விரும்பாதீர். எல்லா வகையானும் மேம்பட்ட நற்பண்புகளை உடையவர்களாகுங்கள். அதனால் சிறப் பெய்துங்கள். உண்ணும் போது ஒரு அகப்பை உணவு அற்றவராய் வந்து உற்றவர்க்கு அப்பொழுதே உதவுங்கள்.

வெவ்வியனாகி - பேராசை உடையவனாகி. தவ்வி - அகப்பை.

## 239. பற்றாய நற்குரு பூசைக்கும் பன்மலர்

239. பற்றாய நற்குரு பூசைக்கும் பன்மலர்
மற்றோர் அணுக்களைக் கொல்லாமை ஒண்மலர்
நற்றார் நடுக்கற்ற தீபமுஞ் சித்தமும்
உற்றாரும் ஆவி அமர்ந்திடம் உச்சியே.

திருவடிப் பேற்றைப் பற்றுதற்குரிய வாயில் சிவகுருவினைப் பற்றுதல். பற்றுதலென்பது அத்தகைய சிவ குருவினைப் பூசிப்பதாகும். அச்சிவ குரு பூசைக்கும், சிவபூசைக்கும் வேண்டத்தக்கன மணஞ்சேர் பல மலர்கள் புறத்துக்காண்கின்ற நற்பண்புக்கு ஒப்பாகிய துணைப் பூக்கள் மட்டுமன்றி அகத்துக் காணவேண்டிய 'கொல்லாமை ஐந்தடக்கல் கொள் பொறுமையோ டிரக்கம், நல்லறிவு மெய்தவம் அன்பெட்டு' என்னும் நற்பண்புகள் எட்டும் ஒண்மலராகும். ஒண் மலர்கள்: கொல்லாமை, ஐம்பொறியடக்கல், பொறுமை, இரக்கம், அறிவு, மெய், தவம், அன்பு என்பன. இவை எட்டும் முறையே சிவபெருமானின் எட்டுக் குணங்களும் நம்மாட்டுப் பதிதற்காம் இயைபுடைக் குறிப்பாகும். 'எட்டு நாண்மலர் கொண்டவன் சேவடி, மட்டலரிடு வார்வினை மாயுமால்' என்னும் அப்பர் அருமறையால் எட்டுப்பூக்கள் கொண்டு வழிபடும் எழில் பெறப்படுகின்றது காண்க. புறத்தே காணப்படும் துணைப்பூ என்பது பாற்கலனை ஒக்கும். அகத்தே காணப்படும் கொல்லாமை முதலிய எட்டும் பாலை ஒக்கும். இச்சிறந்த அகமலரால்

தொடுக்கப்படும் மாலை துளக்கமில் விளக்கனைய திருவடியுணர்வும், அத் திருவடியினையே நாடும் எண்ணமுமாகும். அவ்வுயிர் திருவடிக்கண் விரும்பி உறைந்த இடமே சிறந்த நிலைப்பான இன்பிடமாகும்.

அணு - உயிர்.

## 240. கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை

240. கொல்லிடு குத்தென்று கூறிய மாக்களை
வல்லடிக் காரர் வலிக்கயிற் றாற் கட்டிச்
செல்லிடு நில்லென்று தீவாய் நரகிடை
நில்லிடும் என்று நிறுத்துவர் தாமே.

கொல்லென்றும், எறிஎன்றும், குத்துஎன்றும், கூறி அங்ஙனமே செய்வித்தும் செய்தும்வரும் கொடியோர்களைக் கூற்றுவன் தன் ஏவலர்களாகிய வலிய இடிகாரர், வன்மையுள்ள கயிற்றினாற் கட்டி இடிமுழக்கம் போல் முழங்கி நில்லென்று கூறித் தீவாய் நரகிடை வீழ்த்துவர். ஆருயிர்கள் பருவுடம்பினின்று கருதவும் காணவும் கேட்கவும் ஒண்ணாத அஞ்சத்தக்க கொடுமைகளைச் செய்கின்றன. அவ்வுயிர்கள் எவ்வெவ்வாறு செய்தனவோ அவ்வவ்வாறே அவ்வுயிர்களைக் கூற்றுவனின் ஏவலாளர்கள் நுண்ணுடலில் வைத்து மாற்ற முடியாத துன்பத்தைச் செய்கின்றனர். அத்துன்பத்திற்கு மருந்தும் கிடையாது. துன்புறுவார்க்கு இரங்குவாரும் அங்குக் கிடையார். ஆகவே அத்துன்பம் பொறுக்க முடியாத பெருந்துன்பமாகும். இதனை மனங்கொண்டு பிறர்க்குத் துன்பஞ்செய்யாது இன்பஞ் செய்தல் நன்று.

இடு - எறி.

## 241. கொலையே களவுகட் காமம்பொய் கூறல்

241. கொலையே களவுகட் காமம்பொய் கூறல்
மலைவான பாதக மாம்அவை நீக்கித்
தலையாஞ் சிவனடி சார்ந்தின்பஞ் சார்ந்தோர்க்கு
இலையாம் இவைஞானா னந்தத் திருத்தலே.

கொலை, களவு, கள்ளுண்டல், அறந்திறம்பிய காமம், பொய் என்னும் ஐந்தும் மாறா மயக்கம் தரும் பெரும் பாவங்களாகும். இவ்வைந்தினையும் புரிவார் சிவனடி சார்தலின்றித் தீவாய் நரகிடை வீழ்ந்து மாறாத் துன்பத்தினை எய்துவர். இவற்றை அறவே ஒழித்துத் தலைமையும் இயற்கை உண்மையும் வாய்ந்த சிவபெருமான் திருவடியினைத் தலைப்பட்டு இறவாப் பேரின்பம் சார்ந்த நல்லார்க்கு நரகத் துன்பம் இல்லை. அழிவிலாத் திருவடி உணர்வின்பத்திருத்தலே என்றும் நிலைநின்ற மெய்ப்பொருளாகும். தலைப்படல் - சார்தல். மலைவான என்பதற்கு அப்பாவங்கள் தம்மைச் செய்தாருடன் பின் விளைவாய் வந்து போர் செய்யும் தன்மை வாய்ந்தன என்றலுமொன்று. கொலை களவு கள் காமம் பொய்யென்னும் ஐந்தும் அகல, முறையே அன்பு நாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மை என்னும் ஐந்தினையும் மேற்கொண்டு இடையறாது ஒழுகுதல் வேண்டும்.

## 242. பொல்லாப் புலாலை நுகரும் புலையரை

242. பொல்லாப் புலாலை நுகரும் புலையரை
எல்லாருங் காண இயமன்றன் தூதுவர்
செல்லாகப் பற்றித் தீவாய் நரகத்தில்
மல்லாக்கத் தள்ளி மறித்துவைப் பாரே.

உலகவராலும் உயர்ந்தோராலும் உண்பார்க்கமைந்த உறுப்புக்களாலும் ஏற்றுக் கொள்ளும் வாய்ப்பு அமையாதது பொல்லாப் புலால். அப் புலாலை விரும்பியுண்ணும் மக்கட் பிறப்பினை இழிவாம் கொடு விலங்கினும் இழிவாகப் பேசுவர். அப் புலையர்களை அத்தகையார் பலரும் காணும்படி இயமன் தூதுவர் கொண்டுபோவர். கொண்டுபோய் இடிபோல் முழங்கி அஞ்சும்படியாகப் பற்றி என்றும் நீங்காப் பெருந்துன்பம் தரும் கொடிய நரகத்தில் தள்ளுவர். தள்ளி மல்லாக்கக் கிடத்துவர். என்றும் துன்புறும்படி எங்கும் செல்லவொட்டாது தடுத்து நிறுத்துவர். அப் புலால் உண்பவர்க்கு இம்மையிலும் பொல்லாததேயாகும். என்னை? அவ்வூன் நல்ல உள்ளத்தைத் தாராதாகலான் என்க. இவ்வுண்மை உழைப்பால் உடலழகாம் ஊணாலாம் உள்ளம், மழை யொழுக்காலாம் உயிரின் மாண்பு என்பதனாலுணரலாம்.

## 243. கொன்றி லாரைக் கொலச்சொலிக் கூறினார்

243. கொன்றி லாரைக் கொலச்சொலிக் கூறினார்
தின்றி லாரைத் தினச்சொலித் தெண்டித்தார்
பன்றி யாப்படி யிற்பிறந் தேழ்நரகு
ஒன்றி வார்அரன் ஆணையி துண்மையே.

கொல்லும் கருத்தும் ஆற்றலும் இல்லாதாரைக் கொல்லும்படி சொல்லியும் துணைநின்றும் தூண்டியவரும், அவ்வூனைத் தின்னும் மனமில்லாது அருவருப்புக் கொண்டுள்ளோரை வற்புறுத்தித் தின்னச் செய்தவரும், அப்படியும் தின்னாதவரை ஒறுத்தவரும் இந்நிலத்துப் பன்றியாய்ப் பிறப்பர். பின்பு ஏழ்நரகிடை வீழ்ந்து ஆழ்ந்து துன்புறுவர். இங்ஙனம் அவர் துன்புறுவது அரன்திருவாணையே யாகும். இதுமாறா வுண்மையுமாகும். அயலார் வேள்வியிற் கொன்றுண்ணும் புலாலும் இத்தகையதே. அவ்வுண்மை வரும் செந்தமிழ்மறை முடிபாந்திருவாசகத்தான் உணர்க:

'சாவமுன் னாள்தக்கன் வேள்வித் தகர்தின்று நஞ்சமஞ்சி
ஆவஎந் தாயென் றவிதா விடுநம் மவரவரே
மூவரென் றேயெம் பிரானொடும் எண்ணிவிண்
ணாண்டுமண்மேல்
தேவரென் றேஇறு மாந்தென்ன பாவந் திரிதவரே. - 4.

## 244. ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே

244. ஆத்த மனையாள் அகத்தில் இருக்கவே
காத்த மனையாளைக் காமுறுங் காளையர்
காய்ச்ச பலாவின் கனியுண்ண மாட்டாமல்
ஈச்சம் பழத்துக் கிடருற்ற வாறே.

இம்மை வாழ்க்கையும், உம்மை வாழ்க்கையும், அம்மை வாழ்க்கையும் செம்மையுற அமைவதற்கு ஒருவனும் ஒருத்தியுமாய் அம்மையப்பர் அருளால் இம்மை வாழ்க்கைத் துணையாய் மனையறம் பேணுதலே தூய இல்வாழ்க்கையாகும். அதன் பொருட்டு ஊரார் உறவினர் உற்றார் பெற்றோர் சான்றோர் ஆசான் தெய்வம் சான்றாகப் பொற்றாலி புனைந்து கைக்கொண்ட மனையாளே ஆத்த மனையாளாவள். ஆத்த - புனைந்த; கட்டிய. அத்தகைய கற்பு நிறை ஆர்ந்த பொற்புறு மனையாள் மதிற்காவலும் வாயிற்காவலும் ஆகிய புறக் காவலமைந்த வீட்டகத்துத் தங்கியிருக்கவே, பிறரால் அப் புறக் காவலுடன் அகக் காவலாகிய நிறைக்காவலும் சேர்ந்து காக்கப்படும் பிறன் மனையாளைக் காமுறுவர் விளைவதறியாக் காளையர். முப்பழங்களுள் ஒன்றாய் இன்பப் பகுதியாய்க் காணப்பெறுவது பலாப்பழம். அது செவ்வியுறக் காய்ந்து நன்கு கனிந்தால் மிக்க இன்பந்தரும். அத்தகைய பலாமரத்தின் கனியை எவ்வகை அச்சமுமின்றிப் புகழும் புண்ணியமும் பெருகவும் நிலையாம் சிவனடி எய்தவும் நுகரலாம். அவ் இன்பத்தை உலைவின்றி நுகரமாட்டாத கொடியோரும் சிலராவர். அவர் எக்காலமும் நீங்கா

அச்சமும், பெருகும் பழியும் பாவமும், நரகிடை வீழ்தலும், இன்ப மின்மையும், துன்ப நீங்காமையும், பிறப்பினைத் தருதலும் ஆகிய நுகர்வல்நுகர்வை நுகர்வதற்கு முயல்வர். அஃது ஈச்சம் பழத்தினை உண்ண விரும்பிக் கிட்டாது இடருற்று எய்த்தலை ஒக்கும். வாழ்க்கைத் துணைவராயுள்ளார் உருவமாகிய உடலாலும், உருஅருவமாகிய உள்ளத்தாலும், அருவமாகிய உணர்வாலும், அப்பாலாகிய உயிராலும் ஒருவருக்கொருவர் துணைவராவர். உடலால் காத்தல் மதிலும் வாயிலும் அமைப்பதால் ஆகும். உள்ளத்தால் காத்தல் கற்புநிறை வழுவாதொழுகு தலாலாகும். உணர்வால் காத்தல் ஒத்த பண்புடையராய் நண்பகலாது நடத்தலாலாகும். உயிர்க் காவல் என்பது திருநீல நக்கநாயனாரும் அவர் தம் மனைவியாரும் அகத்தும் புறத்தும் நீங்காது அருளாலாற்றிய சிவ வழிபாட்டுத் தவ வாழ்க்கையாகும். இக் குறிப்பினை நினைவிற் கொள்ள வாய்ப்பாம் வெண்பா வருமாறு:

உருவமுட லாகும் உருவருவாம் உள்ளம்
அருவமுணர் வப்பா லுயிராம் - திருவருளால்
இல்லுறைவு கற்புநிறை ஏருணர்வு தெய்வவழிச்
செல்லுமியல் வாழ்க்கைத் துணை.

காத்த - பிறனால் காக்கப்பட்ட வாழை, அறப்பகுதியாகவும், மா பொருட் பகுதியாகவும் கொள்ப.

ஆத்த - தாலிகட்டின.

## 245. திருத்தி வளர்த்ததோர் தேமாங் கனியை

245. திருத்தி வளர்த்ததோர் தேமாங் கனியை
அருத்தமென் றெண்ணி அறையிற் புதைத்துப்
பொருத்தமி லாத புளிமாங்கொம் பேறிக்
கருத்தறி யாதவர் காலற்ற வாறே.

அறப்பகுதியாகிய சிவவழிபாடும், பொருட் பகுதியாகிய குடும்ப வாழ்க்கையும், இன்பப் பகுதியாகிய வேளாண்மையும், வீட்டுப் பகுதியாகிய திருவருள் நோக்கமும், பேறாகிய திருவடியும் இடையறாது ஆணும் பெண்ணும் எய்துமாறு குடிப்பிறப்பினர் நடந்து காட்டியும் நவின்று நாட்டியும் குடும்பத்தை வளர்ப்பர். அக் குறிப்புத் தோன்றவே உருவகமாகத் திருத்தி வளர்த்ததோர் தேமாங்கனி என்றனர். இதனால் பெறப்படுவது வாழ்க்கைத் துணையாம் கற்புறு மனைவியாகும். அக்கனியை வீட்டையும் குடும்பத்தையும் ஏட்டையும் காக்கும் வாட்டமில் கருவிப் பொருள் என்று எண்ணி வீட்டை விட்டு வெளியிற் போகாவாறு புதைத்த பொருள்போல் காவல் செய்து வைத்தனர். அத்தகைய பேதையார் காம மயக்கத்தால் பொருத்தமில்லாத புளியமரக் கொப்பிலேறிப் பயனும் எய்தாது கீழ் வீழ்ந்து காலொடிவர். இதன் குறிப்பு அழகிய தன் மனையாளைப் புறக்கணித்து அருவருக்கத்தக்க பிறன் மனையாளை விரும்பி அலைந்து இன்பமும் அடையாது துன்பம் எய்தி உயிர் துறப்பதாகும். கருத்தறியாதவர் என்பது 'ஈன்றாளுமாய் எனக்கு எந்தையுமாய் உடன் தோன்றினராய், மூன்றாய் உலகம் படைத்து உகந்தான்' திருவுள்ளக் கருத்தறியாதவர்

என்பதாகும். சிவன் திருவுள்ளம் 'ஒப்புடைய மாதரும் ஒண்பொருளும் நீ' என்பதற்கிணங்கக் குடும்பப் பொருளைக் கடவுட்பொருளாகக் கருதித் துணையென உலகம் உணர்ந்து உய்ய வேண்டும் என்பது. அஃதாவது, மாதரும் பொருளும் பிறவும் சிவனருளால் தரப்பட்ட தவத்திற்குரிய துணைப்பொருள்கள் எனவும் அவற்றை யன்றிப் பிறவற்றைக் கவர நினைப்பது சிவபெருமானுக்குச் செய்யும் உய்தியில் குற்றமாம் பெரும்பாவம் எனவும் எண்ணி அன்பும் அச்சமும் கொண்டு இன்புற ஒழுகல் என்பதாம். காலற்றவாறென்பது இரட்டுற மொழிதலால் பிறன்மனை விழைந்தார் தம் காலொழியும் என்பதோடு குடும்பமும் பாழாய் வழியற்றுப் போம் என்பதாம். கால் - குடும்ப வழி. ஈன்றார்க் குறவுமுறை எம்மான் உடைமைஉயிர் சான்றாம்கொற் றற்குமகன் சார்ந்து.

தேமா - மாமரம். புளிமா - புளியமரம்.

## 246. பொருள்கொண்ட கண்டனும் போதகை யாளும்

246. பொருள்கொண்ட கண்டனும் போதகை யாளும்
இருள்கொண்ட மின்வெளி கொண்டுநின் றோரும்
மருள்கொண்டு மாதர் மயலுறு வார்கள்
மருள்கொண்ட சிந்தையை மாற்றகில் லாரே.

அன்பும் அருளுமின்றி முறை கடந்து பொருள் அவாவினால் குடிகொன்று இறைகொள்ளும் கோமகனாகிய கண்டன் எனப்படும் மன்னனும் பிறன் மனைவிழைந்து அறந்திறம்பி மயலுற்று வாழ் வான். அதுபோல் மெய்யுணர்வு எழாவண்ணம் அறிவினை அடக்கி ஆணவ முனைப்பாம் இருளினூடே மின்னொளி போன்று தோன்றிய புல்லறிவாளரும் பிறன்மனைவேட்டு மயலுறுவர். அத்தகைய பெண்டிரும் கற்பழிந்து பழிசேர் இழிகுலத்தவராவர். அறந்திறம்பிய செல்வமும் சிற்றினச் சார்பாம் புல்லறிவும் மருள் கொள்ளவும் மாதர் மயலுறவும் செய்யும் கருவிகளாகும்; இத்தகையோர் தாமாகவே மருள்கொண்ட சிந்தையை மாற்றிக் கொள்ளும் வன்மையிலாதவராவர். தெருளுறு நல்லோர் ஒருநாளும் இம் மருள் கொள்ளார். மருளுறும் நெஞ்சுடைய அல்லோர் மாற்ற முடியாது கொண்டு இருளுறு நெஞ்சினராய் இடர்ப்படுவர். இத்தகைய பெண்டிரையே நல்லோர் பழிப்பர். என்னை? ஆண் பெண் இருவரும் ஒருவருக்கொருவர் சிறப்புறும் வழிக்குத் துணையாதல் வேண்டும். அதுவே இறைவன் திருவுள்ளம். அதற்கு மாறாகப் பிறப்புறும் பழிக்குத் துணையாவதாலென்க. இவ்வுண்மை, 'மதனெனும்

பாறைதாக்கி மறியும்' எனவும், 'கனியைநேர் துவர்வாயார் என்னுங்கால்' எனவும் முறையே அப்பர் பெருமானும் அருள்வாதவூரடிகளும் செப்பியருளினமையால் உணரலாம்.

கண்டன் - அரசன்.

## 247. இலைநல வாயினும் எட்டி பழுத்தால்

247. இலைநல வாயினும் எட்டி பழுத்தால்
குலைநல வாங்கனி கொண்டுண லாகா
முலைநலங் கொண்டு முறுவல்செய் வார்மேல்
விலகுறு நெஞ்சினை வெய்துகொள் வீரே.

இலை தளிர் பூ காய் முதலியவற்றால் அழகினை உடையனவாய் எட்டிமரம் பழுத்துக் குலைகளில் கண்ணைக் கவரும் வனப்பாகிய நலமுடன் கனி காணப்பட்டாலும் பின் விளையும் இறப்பினை எண்ணி அக் கனியை எவரும் உண்ணார். அதுபோன்று கண்ணைக் கவரும் அழகிய முலையினையும், எண்ணத்தை ஈர்த்து மனத்திண்மையை மாய்க்கும் வாய்ப்புன்முறுவலையுங் கொண்டு தம்மையும் பிறரையும் செம்மை நெறி செல்லவொட்டாது கெடுக்கும் பொய்ம்மை மாதர் மேல் செல்லும் எண்ணத்தைக் கொடிதெனக் கொண்டு நன்னெறிச் செல்வீராக.

இலைநலவாயினும் - பார்ப்பதற்கு இலையால் அழகுடையதேனும். விலகுறும் - செல்லும். வெய்து - கடிந்து.

## 248. மனைபுகு வார்கள் மனைவியை நாடில்

248. மனைபுகு வார்கள் மனைவியை நாடில்
சுனைபுகு நீர்போற் சுழித்துடன் வாங்குங்
கனவது போலக் கசிந்தெழும் இன்பம்
நனவது போலவும் நாடவொண் ணாதே.

கட்டிய மனைவிபால் முறையாக இன்பம் எய்துவார் நிலை சுனைநீர் மூழ்கி இன்புறுவாரோ டொக்கும். அவ் இன்பினைக் கனவிற் காணினும் நனவுபோல் நலன் பயப்பதாகும். தவறான மாதர்பால் கொள்ளும் இன்பம் சுனை நீரில் காணும் சுழியிற்பட்டுத் துன்புற்று ஆழ்வதுபோல் பிறப்பிற்பட்டுத் துன்புற்று ஆழ்வதற்கு வழியாகும். அப் பொய்ம்மை மாதர் காட்டும் பொய்யான கசிந்தெழுவது போன்று தோன்றும் அன்பு அப்பொழுதே கனவுபோல் நிலையாதழியும். நனவில் நினைத்தாலும் பெரும் துன்பந்தருவதாகும்.

## 249. இயலுறும் வாழ்க்கை இளம்பிடி மாதர்

249. இயலுறும் வாழ்க்கை இளம்பிடி மாதர்
புயலுறப் புல்லிப் புணர்ந்தவர் எய்தும்
மயலுறும் வானவர் சார்விது என்பார்
அயலுறப் பேசி அகன்றொழிந் தாரே.

சாயலும் அழகும் அமைந்த பெண்யானையை ஒத்த இளம் பெண்கள் மேகம் பொழியும் மழைபோல் உடலும் உயிரும் தளிர்ப்பத் தழுவிப் புணர்ந்தவரானாலும் அவர்மனம் பொருளின் பாலே செல்லும். புதுப் பொருளுடையாரைக் காணின் அவர் எல்லாவகையாலும் தாழ்ந்தோராயினும் வானவரே யென்று சொல்லித் தம் பெருமயலில் ஆழ்த்துவர். அவர் சார்பே எய்தற்கரிய தெனவுங்கூறுவர். பொருளற்றால் அவரை விலகும்படி கடுமையாகப் பேசியும் துன்புறுத்தியும் ஓட்டுவர்.

இயல் - அழகு.

## 250. வையகத் தேமட வாரொடுங் கூழியென்

250. வையகத் தேமட வாரொடுங் கூழியென்
மெய்யகத் தோருளம் வைத்த விதியது
கையகத் தேகரும் பாலையின் சாறுகொள்
மெய்யகத் தேபெறு வேம்பது வாமே.

வழித்துணையாகாமல் பழித்துணையாம் பெண்களைக் கூடுவதால் உண்டாகும் பயன் ஏதும் இல்லை. அதனால் மெய்யுணர்ந்தோருள்ளம் வெருவும். அப் பெண்கள் பொருளுடையார் பாலுள்ள கரும்பின் சாறனைய பொருள்களை அவர்கள் விரும்பி வலியக் கொடுத்து வணங்குமாறு செய்வர். அம்மட்டோ? மேலும் அப் பொருளுடையாரைப் பொருளற்ற காலத்துப் புறக்கணிப்பர். பொருளுடையார் மனம் வேம்பனைய கசப்பாகிய வெறுப்பினை எய்தும்படி நடப்பர். அவர்தம் புன்மை புறத்தும் காணப்படும் வடுப்போல் உடம்பெல்லாம் அருவருக்கத் தகுந்த தொழுநோய் முதலியன கொள்ளவும் வைப்பர்.

மெய்யகத்தோர் - உண்மை உணர்ந்தோர்.

# 251. கோழை ஒழுக்கங் குளமூடு பாசியில்

251. கோழை ஒழுக்கங் குளமூடு பாசியில்
ஆழ நடுவார் அளப்புறு வார்களைத்
தாழத் துடக்கித் தடுக்ககில் லாவிடில்
பூழை நுழைந்தவர் போகின்ற வாறே.

முறையாக மணந்து நாட்டுக்கும் வீட்டுக்கும் மொழிக்கும், நன்னெறிக்கும் துணைபுரியத்தக்க நன்மக்களைப் பெறுவதே இல்வாழ்க்கையாகிய நற்றவப் பயனாகும். அதற்கென அமைக்கப்பட்டதே விந்துவாகிய வித்து. அவ் விந்து கோழை எனப்படும். அவ்விந்துவை முறை கடந்த பெண்பால் தீ யொழுக்கமாகிய மாசு மூடிக் கிடக்கும் குளமாகிய கருக்குழியில் ஒழுக்கி நட்டு வாழ ஆராய்வார்களை நல்லோர் தடுத்து ஒறுத்து வழி நிறுத்துதல் வேண்டும். அங்ஙனம் தடுக்காவிட்டால் அத் தீயோர் பாவப்புகும்வழி நுழைந்து தமக்கும் பிறர்க்கும் வரவேண்டிய நற்பயனை இழப்பித்து மாள்வர். பாசி - மாசு. அளப்புறுவார் - ஆராய்வார். தாழ - தடைப்பட. பூழை - புகும்வழி.

கோழை - விந்து. குளம் - கருப்பை.

## 252. புடைவை கிழிந்தது போயிற்று வாழ்க்கை

252. புடைவை கிழிந்தது போயிற்று வாழ்க்கை
அடையப்பட் டார்களும் அன்பில ரானார்
கொடையில்லை கோளில்லை கொண்டாட்ட மில்லை
நடையில்லை நாட்டில் இயங்குகின் றார்கட்கே.

'உழப்பின் வாரா உறுதிகள் உளவோ' என்பதை நாடாது, 'கழப்பின் வாராக் கையறவுளவோ' என்பதற்குக் காட்டாக உழையாது வைத்து நல்குரவு எய்துவோர் வாழ்க்கை, முற்றுங்கிழிந்து அற்றம் மறைத்தற்கும் ஆகாப்புடைவை போல் மதிப்புறாது போய்க்கழியும். கழியவே தம்மைச் சார்ந்த நண்பர் உறவினர் முதலாயினாரும் அன்பற்று விலகுவர். எவர்க்கும் ஏதும் கொடுத்தலும் உண்டாகாது. அதனால் அவர்கள்பால் ஏதும் கொள்ளுதற்கும் இடன் இன்று. சிறப்பாகக் கொண்ட உயிர் நட்பும் பறந்தொழிந்தது. ஆனேறுபோல் தான் நிமிர்ந்து நடக்கும் பீடுநடையில்லை. நாட்டில் என்புதோல் போர்த்த உடம்புபோல் இன்பின்றித் திரிகின்றார்கள். கோள் - கொடுக்கல் வாங்கல்.

## 253. பொய்க்குழி தூர்ப்பான் புலரி புலருதென்று

253. பொய்க்குழி தூர்ப்பான் புலரி புலருதென்று
அக்குழி தூர்க்கும் அரும்பண்டம் தேடுவீர்
எக்குழி தூர்த்தும் இறைவனை ஏத்துமின்
அக்குழி தூரும் அழுக்கற்ற போதே.

ஐயோ! பொழுது விடிகின்றதே 'இன்றும் வருவது கொல்லோ நெருநலும், கொன்றது போலும் நிரப்பு' என்று நிலையிலாக் குழியாகிய வயிற்றினை நிரப்புதற் பொருட்டு மிக வருந்தி அக் குழி தூர்த்தற்கு வேண்டிய அரும் பொருள்களைத் தேடுவீர்! பசிக்குழி, நோய்க்குழி, வறுமைக்குழி, பிறவிக்குழியாகிய எக்குழி தூர்க்க வேண்டுமானாலும் எல்லாம் வல்ல இறைவனை முறையாகச் செந்தமிழ்ச் சொல்
லால் ஏத்துங்கள். ஏத்தவே, அகத்துக்கண் உள்ள அழுக்காறு, அவா வெகுளி, இன்னாச்சொல் ஆகிய நான்கும் அழுக்கும் அப்பொழுதே அறும். அறவே, அவ்வயிற்றுக்குழி அந்நொடியே தூரும். தூர்ப்பான் - நிரப்பும்படி அழுக்கு - மலம். தூர்ப்பான்: பானீற்று வினையெச்சம்.

பொய்க்குழி - வயிறு.

## 254. கற்குழி தூரக் கனகமுந் தேடுவர்

254. கற்குழி தூரக் கனகமுந் தேடுவர்
அக்குழி தூர்க்கை யாவர்க்கும் அரியது
அக்குழி தூர்க்கும் அறிவை அறிந்தபின்
அக்குழி தூரும் அழுக்கற்ற வாறே.

ஒன்றானும் ஒரு காலத்தும் தூர்க்க முடியாத குழியென்பார் 'கற்குழி' என்றனர். அஃதாவது வயிறு. அக் குழியைத் தூர்க்க வேண்டிப் பொன் முதலியவற்றைத் தேடுவர். எப்படிப்பட்டவர்க்கும் அருள் துணையின்றி அக் குழியைத் தூர்க்க முடியாது. அக் குழியினைத் தூர்க்கும் அறிவாகிய திருவடியுணர்வை உணர்ந்தபின் மலமாயைகன் மங்களாய அழுக்கறும்.. அழுக்கறவே அக் குழி தானே தூரும்.

## 255. தொடர்ந்தெழு சுற்றம் வினையினுந் தீய

255. தொடர்ந்தெழு சுற்றம் வினையினுந் தீய
கடந்ததோர் ஆவி கழிவதன் முன்னே
உடந்தொரு காலத் துணர்விளக் கேற்றித்
தொடர்ந்துநின் றவ்வழி தூரக்கலு மாமே.

ஒருயிரைத் தொடர்ந்து வருத்திக்கொண்டு வரும் சுற்றத்தார் வினையினும் கொடியர்: ஆவி உடம்பைவிட்டுக் கடந்து கழிவதன் முன்னே ஐம்புலன்கள் வழிச் செல்லாது மாறுபட்டு ஒரு காலத்துத் திருவடியுணர்வாகிய திருவிளக்கினைத் திருவருளால் ஏற்றுங்கள். அங்ஙனம் ஏற்றினால் எக்காலத்தும் மனமாசாகிய அழுக்கறும். பிறப்பறுவதாகிய குழியும் தூரும். கடந்தது என்பது கடந்து என்னும் வினையெச்சப் பொருள் தந்து நின்றது. உடந்து என்பது உடன்று என்பதன் திரிபு. உடன்று - மாறுபட்டு.

உடந்து - வருத்தப்பட்டு.

## 256. அறுத்தன ஆறினும் ஆனின மேவி

256. அறுத்தன ஆறினும் ஆனின மேவி
அறுத்தனர் ஐவரும் எண்ணிலி துன்பம்
ஒறுத்தன வல்வினை ஒன்றல்ல வாழ்வை
வெறுத்தனன் ஈசனை வேண்டிநின் றானே.

அறுசுவையினை மிகுதியும் விரும்பியுண்பான் கழிபேரிரையான் என்று கருதப்படுவான். அதனால் அவன் ஆனின முதலிய
விலங்கினத்தோடு ஒப்பன். அச்சுவைகளும் அவனைத் துன்பத்தில் ஆழ்த்தின. ஐம்புல வேடரும் அளவிலாத் துன்பத்தில் ஆழ்த்தினர். முற்செய்த வல்வினையும் கடுமையாகத் தண்டித்தன. இவற்றினின்றும் விலகி இன்புற வேண்டுமென்று அருளால் துணிந்த ஒருவன் சிவபெருமான் திருவடியினை வேண்டி நின்றான். அதனால் அவற்றை வெறுத்தனன். அறுத்தல்: துன்பத்திலாழ்த்தல்.

ஆறினும் - அறுசுவையினும்.

## 257. அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்

257. அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்
அன்பே சிவமாவ தாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே.

அன்பாகிய திருவருளும் இன்பாகிய சிவனும் மணியும் ஒளியும்போல் ஒன்றே. அவற்றை இருவேறு பொருள்கள் என்று கூறுவார் மெய்யுணர்வு கைவரப் பெறாதார். மெய்ம்மையான் நோக்கின் அன்பாகிய திருவருளே இன்பாகிய சிவனுக்குத் திருமேனியாகும். அம் முறையான் அன்பே சிவமாகும். இவ்வுண்மையினையும் எவரும் உணர்கிலர். அன்பே சிவம் என்னும் உண்மையினை அருளால் அனைவரும் அறிந்தபின் தாம் இடையறாது திருவடிக்கண் வைக்கும் அன்பாகிய வித்தே சிவமாய் விளைந்து இன்பாய்க் கனிந்து அவ்வன்புடையார்க்கு என்றும் பொன்றாப் பேரின்ப நுகர்வாகும். அவ்வுண்மை 'சிவமாய் அமர்ந்திருந்தார்' என்னும் இம்மறை மொழியான் உணரலாம்.

## 258. பொன்னைக் கடந்திலங் கும்புலித் தோலினன்

258. பொன்னைக் கடந்திலங் கும்புலித் தோலினன்
மின்னிக் கிடந்து மிளிரும் இளம்பிறை
துன்னிக் கிடந்த சுடுபொடி யாடிக்குப்
பின்னிக் கிடந்ததென் பேரன்பு தானே.

பொன்னையும் வென்று விளங்கும் புலித்தோலை ஆடையாகவுடையவன். மின்னொளிபோல் விளங்கும் ஆருயிராகிய இளம் பிறையினை நிறைமதியாக்கற்குச் சூடினன். அப் பிறை அழகுறப் பொருந்தியிருந்தது. அப் பிறை சிவனைச் சார்ந்தமையால் 'பதினெண் கணத்தவராலும் ஏத்தப்படுவதாயிற்று.' சிவபெருமான் திருவெண்ணீற்றுத் திருக்கோலத்தன். அதனால் சுடுபொடியான் என்றழைக்கப்

1. பெருமையால். 12. தடுத்தாட், 196.2. ஆரண, உருவருள். சிவஞானசித்தியார், 1. 2 - 18 - 19.3. மெய்ம்மையா. அப்பர், 4. 76 - 2.4. பொன்னார். ஆரூரர், 7. 24 - 1.

படுவன். அவன்மாட்டு என்னுடைய அளவிலாப் பேரன்பு பிரிவிலாக் கலப்பாகப் பின்னிக் கிடந்தது. மிளிரும்: விளங்குகின்ற. பின்னல் - கலப்பு; அத்துவிதம்.
அசைக்கும் புலித்தோல் அகன்ற வெகுளி, இசைக்கும் உருவகமாம் எண்.

சுடுபொடி - நீறு. பின்னிக் கிடந்தது - சேர்ந்திருந்தது.

# 259. என்பே விறகா இறைச்சி அறுத்திட்டுப்

259. என்பே விறகா இறைச்சி அறுத்திட்டுப்
பொன்போற் கனலிற் பொரிய வறுப்பினும்
அன்போ டுருகி அகங்குழை வார்க்கன்றி
என்போல் மணியினை2 எய்தவொண் ணாதே.

'விரதமே பரமாக வேதியரும், சரத மாகவே சாத்திரங் காட்டுவர்.' அவர் காட்டு மவ்விரதமும், 'நரிவிருத்தமதாக, எரி பெருக்கும் வேள்வியும்' ஈண்டு என்பே விறகாய் தன் இறைச்சியைத் தானே அறுத்திட்டுப் பொன்போற் கனலில் வறுப்பதெனக் கூறப்பட்டன. அவர்கள் தமக்கும் அன்பிலர், எவ்வுயிர்க்கும் அன்பிலர், அடியவர்க் கன்பிலர்; அம் முறையான் ஈசனுக்கும் அன்பிலாராவர். அன்பில்லாத அவர்கள் எத்துணை வல்வினை செய்யினும் இன்ப வழிவினனான சிவன் அவர்கள்முன் வெளிப்படான்; என்னைப்போல அன்போடுருகி அகங்குழைவார்க்கே வெளிப்பட்டருள்வன்; அடியேனுக்கும் வெளிப்பட்டருளினன்; அதனால் யான் எய்தியதுபோல் மனமணி இலிங்கமாகிய சிவபெருமானை ஆருயிர்கள் மாட்டுச் சிறிதும் அன்பிலாதாரால் பெற முடியாதென்க; ஆருயிர்கள் மாட்டு அன்புடையாரே இன்பமாகிய சிவனைப் பெறுவர். அவ் உண்மை வரும் தாயுமானச் செல்வர் திருமொழியான் உணர்க.

'அன்பர்பணி செய்யஎனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானேவந் தெய்தும் பராபரமே'

- தாயுமானார், 155.

மணி - சிவன். என்போல் - யான் அடைந்ததுபோல். குழைவு - பத்தி.

என்பொன்மணி - சிவம்.

## 260. ஆர்வம் உடையவர் காண்பர் அரன்தன்னை

260. ஆர்வம் உடையவர் காண்பர் அரன்தன்னை
ஈரம் உடையவர் காண்பார் இணையடி
பாரம் உடையவர் காண்பார் பவந்தன்னைக்
கோர நெருக்கொடு கோங்குபுக் காரே.

சிவக்கொழுந்தின்மாட்டு வைக்கும் அன்பாகிய தவம், சிவபெருமான் மாட்டுச் செல்லும் ஆர்வத்தினை விளைக்கும். அத்தகைய ஆர்வமுடையவர் சிவபெருமானை அருளால் காண்பர். அவ்வார்வ விளைவு ஈரமாகிய நண்பினைத் தரும். அத்தகைய நண்பினர் சிவபெருமான் இணையிலாத் திருவடியிணையினைக் காண்பர். உலகியற் பற்றால் குடும்பப் பாரமுடையவர் பிறப்பு இறப்புத் தடுமாற்றத்தைக் காண்பர். இவர்கள் எய்தும் கடும் துன்பத்தினை வாயினாலும் சொல்லொணா தென்க. மேலும் இருளுலகத் துன்பமும் எய்துவர். கோங்கு: மாறுபாடு எனக்கொண்டு அதனைத் திசைச்சொல் எனவுங் கூறுவர். அன்பு ஆர்வம் முதலியவற்றைக் கண்ணப்ப நாயனார் திருவரலாற்றிலே 'முன்பு செய்தவத்தி னீட்டம்' (103) எனவரும் திருப்பாட்டான் உணர்க. ஈரம் - உள்ளன்பு. நெருக்கு - துன்பம் சிவக்கொழுந்து - சிவலிங்கம்.

ஆர்வம் - அன்பிற்கு முதல். ஈரம் - இரக்கம். பாரம் - அன்பின்மை. கோரம் - துன்பம். கோங்கு - ஒருவித நரகம்.

## 261. என்னன் புருக்கி இறைவனை ஏத்துமின்

261. என்னன் புருக்கி இறைவனை ஏத்துமின்
முன்னன் புருக்கி முதல்வனை நாடுமின்
பின்னன் புருக்கிப் பெருந்தகை நந்தியுந்
தன்னன் பெனக்கே தலைநின்ற வாறே.

பலவாகப் பேசிப் பயன் என்? உள்ளன்பு உருக்கிக் கள்ள மொழிந்து தெள்ளத் தெளியச் செந்தமிழ்த் திருமுறையால் சிவனை இடையறாது ஏத்துங்கள். எப்பற்றும் அற்று முதன்மையான அன்பால் முடிவிலா முழுமுதல்வனின் விழுமிய அடியிணையினைத் திருவருட் கண்ணால் ஒருவாது நாடுங்கள். அவ்வாறு ஒழுகினால் பின்னுதலாகிய புணர்ப்பன்பு எய்துதற் பொருட்டுப் பெருந் தகுதிப்பாடுடைய நந்தியெம் பெருமான் தன்னையே நாடும் தனியன்பினை நமக்கே அருள்வன். தந்தருளி நம்மாட்டுத் தலைமைச் சிறப்பாய் வெளிப்பட்டு நின்றருள்வன். என்: வினாவிடைச் சொல்லாய் ஏதும் பயனின்று என்பதை உணர்த்திற்று. முன் அன்பு - முதன்மையான பத்தி. தலைநின்ற ஆறு - தோன்றியமுறை.

என் - பல கூறிப் பயன் யாது. தலை நின்றவாறு - தோன்றிய விதம்.

## 262. தானொரு காலஞ் சயம்புவென் றேத்தினும்

262. தானொரு காலஞ் சயம்புவென் றேத்தினும்
வானொரு காலம் வழித்துணை யாய்நிற்குந்
தேனொரு பால்திகழ் கொன்றை அணிசிவன்
தானொரு வண்ணம்என் அன்பில்நின் றானே.

சிவபெருமான் தன்னை அடியவர்க்கு அருளுதற் பொருட்டுத் திருவருளில் ஒரு காலத்துத் திருவுருக் கொள்ளுவன். அம்முறையில் தான் தோன்றியாகிய சயம்பு என்று பெறப்படுவன். அங்ஙனம் ஏத்துவார்க்குச் சிவவுலக வழித்துணையாய் அச் சிவன் என்றும் நின்றருள்வன். ஈண்டு ஒரு காலம் என்பது ஒப்பில்லாத எக்காலமும் என்பதாம். தேன் போலும் இனிய மொழியினையுடைய உமையம்மையாரை இடப்பால் கொண்ட கொன்றைமாலை அணிந்து விளங்குகின்ற சிவபெருமான் அடியேன் அன்பில் இன்னவண்ணம் என்று சொல்லவாராத அளவிலா வண்ணமாய் எழுந்தருளி நின்றனன்.

தேன் ஒரு பால் திகழ் - ஒரு பக்கத்தில் விளங்குகின்ற உமாதேவியை உடைய.

## 263. முன்படைத் தின்பம் படைத்த முதலிடை

263. முன்படைத் தின்பம் படைத்த முதலிடை
அன்படைத் தெம்பெரு மானை அறிகிலார்
வன்படைத் திந்த அகலிடம் வாழ்வினில்
அன்படைத் தான்தன் அகலிடத் தானே.

ஆருயிர்கள் உய்யும் பொருட்டுப் பேரருளால் உலகுடல் ஊண் முதலியவற்றைச் சிவபெருமான் தன் வைப்பாற்றலாகிய மாயையினின்றும் படைத்தனன். அதன்கண் அவ்வுயிர்க்குப் பற்றுவருமாறு மால் கொடுத்து அவ்வுயிரை அதில் அடைத்தனன். அதன் வாயிலாகச் சிறிது இன்பமும் வழங்கினன். அப்படிப் படைத்தருளிய முதல்வனிடத்து அன்பினை முழுதுமாக அடைத்து எம்பெருமானை அவனருளால் அறிகின்றிலர். பலவாக விரிந்த நிலையாத இந்தப் பெரிய உலக வாழ்வில் அவை நிலையுள்ளன எனக்கொண்டு மயங்குகின்றனர். அதன் மாட்டு மிகவும் உறுதிகொண்டு அன்பு கொள்ளுகின்றனர். இவையனைத்தும் சிவபெருமான் பெருநிறைவில் அருளால் நிகழ்வனவாகும்.

வன்பு அடைத்து - உறுதி செலுத்தி.

## 264. கருத்துறு செம்பொன்செய் காய்கதிர்ச் சோதி

264. கருத்துறு செம்பொன்செய் காய்கதிர்ச் சோதி
இருத்தியும் வைத்தும் இறைவனை ஏத்தியும்
அருத்தியுள் ஈசனை யாரருள் வேண்டில்
விருத்தி கொடுத்திடும் விண்ணவர் கோனே.

அன்பர் கருத்துக்குப் பொருந்துமாறு மாற்றுயர்ந்த செம்பொன்னா லமைக்கப்பெற்ற பொலிவு மிக்க இயற்கை உண்மைப் பேரொளிப் பிழம்பு சிவன். அப் பிழம்பை அருளால் இடையறா நினைவால் உள்ளத்து இருக்கச் செய்யுங்கள். அதுவே பொருளாக வைத்தும் முழு முதற் சிவனாம். இறைவனை ஏத்துங்கள். அச் சிவனைப் பேரன்பாம் காதலால் அருள்வேண்டித் தொழுங்கள். அங்ஙனம் தொழுதால் சிவவுலகத் தலைவனாகிய அவன் திருவடிப்பேற்றின்பமாகிய விருத்தியைக் கொடுத்தருள்வன்.

அருத்தி - அன்பு. விருத்தி - இன்பம்.

## 265. நித்தலுந் துஞ்சும் பிறப்பையும் செய்தவன்2

265. நித்தலுந் துஞ்சும் பிறப்பையும் செய்தவன்2
வைத்த பரிசறிந் தேயு மனிதர்கள்
இச்சையு ளேவைப்பர் எந்தை பிரான்என்று
நச்சியே அண்ணலை நாடுகி லாரே.

ஆருயிரின் வினைக்கீடாக அவற்றினுக்கு நாளும் இறப்பையும் பிறப்பையும் சிவபெருமான் அமைத்தருளினன். இவ்வுண்மையினை நன்குணர்ந்தும் மக்கள் தங்கள் விருப்பத்தை மீட்டும் உலகப் பற்றாகிய அப் பிறப்பு இறப்பிலே வைப்பர். யாவர்க்கும் எந்தையும் எமக்குத் தலைவனும் ஆகியவன் சிவன் என்று நினைந்து நிறைந்த அன்பினைச் செய்திலர். அவ் அண்ணலாகிய சிவபெருமானை நாடுகின்றிலர். துஞ்ச - சாதல்; முதனிலைத் தொழிற்பெயர். இச்சை உலகப்பற்று.

## 266. அன்பினுள் ளான்புறத் தானுட லாயுளான்

266. அன்பினுள் ளான்புறத் தானுட லாயுளான்
முன்பினுள் ளான்முனி வர்க்கும் பிரானவன்
அன்பினுள் ளாகி அமரும் அரும்பொருள்
அன்பினுள் ளார்க்கே அணைதுணை யாமே.

சிவபெருமான் இன்ப இயல்பினன். ஆதலின் அவன் அதுவரும் வாயிலாகிய அன்பினிடத்தான். அவ்வன்பினுக்குக் காவலாகப் புறத்துமுள்ளான். அவ்வன்பினுக்குப் புகலிடமாயிருப்பதால் அவன் உடலாகவுமுள்ளான். அன்பும் சிவமும் உடலுமுயிரும் போல் ஒன்றென்ற கருத்தால் அன்பே உடலாகவுள்ளான் எனினும் அமையும். உலகத் தோற்றத்துக்கு முன்னும் அதனுடைய மாற்றத்துக்குப் பின்னும் ஒன்றுபோல் என்றும் நின்று நிலவுபவன் சிவன். அவன் முற்றத் துறந்த முனிவர்க்கும் முதல்வன். வேறெதற்கும் அகப்படாதவன். அன்பினுள்ளாகி வீற்றிருந்தருள்வன். அவனே எய்தற்கரிய அரும் பொருளாயுள்ளவன். அவன் இறவாத இன்ப அன்புடையார்க்குத் தன் திருவடியிணையினை அணைப்பன். என்றும் நீங்காப் பெருந் துணையுமாவன். புறத்தான் - அன்பின் மேலுள்ளவன். உடலாயுள்ளான் - அன்பினையே உடலாகவுள்ளவன். அணை துணை - அணுகிய - நெருங்கிய துணை.

அன் ...யுளான் - அன்பே சிவம். முன்பினுள்ளான் - உலக உற்பத்திக்கு முன்னும் அதன் அழிவுக்குப் பின்னும் உள்ளவன்.

## 267. இகழ்ந்ததும் பெற்றதும் ஈசன் அறியும்

267. இகழ்ந்ததும் பெற்றதும் ஈசன் அறியும்
உகந்தருள் செய்திடும் உத்தம நாதன்
கொழுந்தன்பு செய்தருள் கூரவல் லார்க்கு
மகிழ்ந்தன்பு செய்யு மருளது வாமே.

அன்பினைப் பொருட்படுத்தாமல் வன்னெஞ்சினராய்த் திரிவாரையும், அவ்வன்பினைப் பெற்று மென்னெஞ்சினராய் மேவி வாழ்வாரையும் சிவன் அறிந்து அவரவர் செய்கைகட்கு ஏற்றவாறு முறையே துன்ப இன்பங்களை அளிப்பன். அத்தகைய உகப்புடன் அருள்செய்யும் தலைமைசேர் முதல்வன். ஆருயிர்கள் முதற்கண் தொடர்புடையார்மாட்டு அன்புடையராய், அப் பயிற்சி மேலீட்டால் அனைத்துயிர்கள் மாட்டும் அருளுடையராய் ஒழுகவல்லார்க்கு மகிழ்ந்தன்பு செய்வன். அதுவே அவன் திருவருளுமாகும். இகழ்ந்தது - அன்பினைப் புறக்கணித்தது. பெற்றது - மெய்யன்புற்றது.

கொழுந்தன்பு - வளரும் அன்பு.

## 268. இன்பப் பிறவிக் கியல்வது செய்தவன்

268. இன்பப் பிறவிக் கியல்வது செய்தவன்
துன்பப் பிறவித் தொழில்பல என்னினும்
அன்பிற் கலவிசெய் தாதிப் பிரான்வைத்த
முன்பிப் பிறவி முடிவது தானே.

இன்பப் பிறவி என்னும் பேரின்பத் தோற்றத்துக்கு வேண்டுவ அனைத்தினையும் அருளால் வகுத்தமைத்தவன். அப் பேரின்பத்தினை எய்துங் கருவியாகக் கொடுத்தருளிய இப்பிறவிக்கண் நேரும் துன்பம் பலவாகும். அதனைப் போக்குதற்குச் செய்யும் தொழிலும் பலவாகும். ஆயினும் அச் சிவபெருமான் திருவடிக்கண் நீங்கா அன்பு செய்து கலத்தல் வேண்டும். அங்ஙனம் கலப்பின் ஆதியாகிய அம்மையையுடைய சிவபெருமான் வைத்தளித்த திருவருள் வலிமையால் இப்பிறவியின்பமாக நிறைவெய்தும். இன்பப் பிறவி - பேரின்பத் தோற்றம் இயல்வது - தக்கது. முன்பு - வலிமை.

இன்பப் பிறவி - முத்தியின்பம்.

## 269. அன்புறு சிந்தையின் மேலெழும் அவ்வொளி

269. அன்புறு சிந்தையின் மேலெழும் அவ்வொளி
இன்புறு கண்ணியொ டேற்க இசைந்தன
துன்புறு கண்ணியைந் தாடுந் துடக்கற்று
நண்புறு சிந்தையை நாடுமின் நீரே.

சிவபெருமானிடத்து இடையறாது அன்பு செய்து அதனால் நிறைந்த உள்ளத்தின்கண் அவன் திருவருட் பேரொளி மேலெழுந்து விளங்கும் சிற்றின்பம் பேரின்பமாகிய இரண்டனையும் முறையான் அருளவல்ல திருக்கண்களையுடைய அம்மையாருடன் இசைந்தனன். அன்பு செய்வாரை ஏற்றருளவே அங்ஙனம் இசைந்தனன். துன்பத்தை மிகுவிக்கும் புட்சிமிழ்க்கும் கண்ணி போன்ற ஐம்புலன் ஆட்டும் ஆட்டத்தின்படி ஆடும் பிணிப்பினை அறுத்து, சிவபெருமான் மாட்டு நட்புக் கொள்ளும் பயன் நிறைந்தவுள்ளத்தை நீங்கள் நாடுங்கள். இன்புறுகண் சிற்றின்பம் பேரின்பங்களை அருளுகின்ற கண்களையுடைய இறைவி.

கண்ணி ஐந்து - ஐம்புலன்.

## 270. புணர்ச்சியுள் ஆயிழை மேல்அன்பு போல

270. புணர்ச்சியுள் ஆயிழை மேல்அன்பு போல
உணர்ச்சியுள் ஆங்கே ஒடுங்கவல் லாருக்கு
உணர்ச்சியில் லாது குலாவி உலாவி
அணைத்தலும் இன்பம் அதுவிது வாமே.

கருத்தொத்த காதலரிருவர் அன்புருகிக் கூடும்போது ஆடவர் மகளிர்மாட்டுச் செய்யும் இன்ப ஏதுவாகிய அன்பு அளவிறந்தது. அதுபோன்று, சிவபெருமான்மாட்டு வைக்கும் பேரன்பாகிய உணர்ச்சியும் அளவிறந்தது. அவ்வுணர்ச்சியே தாமாக அடங்கவல்லார்க்கு உலகப்பற்றாகிய உணர்ச்சி சிறிதும் தோன்றாதவாறு சிவபெருமான் செய்தருள்வன். அவ்வுயிருடன் இன்புறும் வண்ணம் குலாவிக் கலந்து தன்னுடன் அணைத்தருள்வன். அணைத்து இன்பமும் கொடுத்தருள்வன். அப்பொழுது 'அது' என்று சொல்லப்படும் சிவத்துள் ஒடுங்கினமையால் 'இது' என்னும் ஆவி முழுநீறு பூசிய முனிவர் போன்று சிவமாகவே காணப்படும். அணைத்தல் - தன்னொடு கூட்டல்.

உணர்ச்சியுள் - ஈசனை அறியும் அன்பினுள். உணர்ச்சி இல்லாது - உலக உணர்ச்சி இல்லாது.

## 271. உற்றுநின் றாரொடு மத்தகு சோதியைச்

271. உற்றுநின் றாரொடு மத்தகு சோதியைச்
சித்தர்கள் என்றுந் தெரிந்தறி வார்இல்லை
பத்திமை யாலே பணிந்தடி யார்தொழ
முத்தி கொடுத்தவர் முன்புநின் றானே.

மேலோதியவாறு அன்பினால் அது விதுவாகிய ஆவி ஆண்டவன் திருவடியைப் பொருந்தும் அங்ஙனம் பொருந்தினவருடன் தானும் பொருந்தி நிற்கும் பேரொளி சிவன். 'காமம் எனவொன்றோ கண்ணின்றுஎன் நெஞ்சத்தை, யாமத்தும் ஆளும் தொழில்' என்றவாறு கிடைத்தற்கரிய அச்சிவபெருமானின் வேறல்லாத திருவருளைத் தம் முனைப்பால் வேலை வாங்கும் நிலையினர் சித்தர்களாவர். அச்சித்தர்களாலும் சிவபெருமான் தேர்ந்துணரப்படுவானல்லன். ஆயினும் அளவிறந்த பத்திமையாலே பணிந்து அடிமைத் தன்மையால் அடியாராய்த் தொழுமவர்கட்குத் திருவடிப் பேரின்பப் பேறாகிய
முத்தியினைக் கொடுத்து அவர்கட்கு முன்நின்றருள்வன் சித்தர்கள் தன்முனைப்பு அறாதவர்கள். பத்தர்கள் - தன்முனைப்பு அற்றவர்கள். முன்புநிற்றல் - மேலோங்கி விளங்கல். அஃதாவது திருவெண்ணீறு அணிந்தார் திருமேனிக்கண் அத் திருவெண்ணீறு மேலோங்கி விளங்குவது போன்றாகும். சித்தர் : இவர் சித்தருள் ஒருவகையினர்.

## 272. கண்டேன் கமழ்தரு கொன்றையி னான்அடி

272. கண்டேன் கமழ்தரு கொன்றையி னான்அடி
கண்டேன் கரியுரி யான்றன் கழலிணை
கண்டேன் கமல மலர்உறை வானடி
கண்டேன் கழலதென் அன்பினுள் யானே.

மணங் கமழ்கின்ற கொன்றைமாலையினைக் கண்ணையும் தாருமாகக் கொண்டருளிய சிவபெருமான் திருவடியிணையினை நிறைந்த பேரன்பால் கண்டுகொண்டேன் ஆணவச் சார்பாம் மாயையின் மருள் யானை எனப்படும் அவ்வியானையினை ஈர்ந்து அதன் தோலினைப் போர்த்து அடக்கியருளியவன் சிவபெருமான். அவனுடைய கழலிணையைக் கண்டுகொண்டேன். அன்பர் நெஞ்சத் தாமரையின்கண் உறையும் அவன் திருவடியைக் கண்டுகொண்டேன். திருவடியுணர்வாம் அன்பினகத்து அவன் கழலிணையினைக் கண்டுகொண்டேன். இதன்கண் முறையே சீலம், நோன்பு, செறிவு அறிவென்னும் நானெறிப் பேறும் குறிக்கப் பெற்றவாறு காண்க.

கமலமலர் உறைவான் - மலர்மிசை ஏகினான்.

## 273. நம்பனை நானா விதப்பொரு ளாகுமென்று

273. நம்பனை நானா விதப்பொரு ளாகுமென்று
உம்பரில் வானவர் ஓதுந் தலைவனை
இன்பனை இன்பத் திடைநின் றிரதிக்கும்
அன்பனை யாரும் அறியகி லாரே.

நம்புவார்க்குப் புகலிடமாகிய நம்பனை, எல்லாமாய்க் கலந்திருக்குந் தன்மையால் பலவகையான பொருளும் ஆவன் என்று மேலிடத்துள்ள வானவர்களால் ஓதப்படும் முதல்வனை, இயற்கை உண்மை அறிவின்ப வடிவாயவனை, ஆருயிர்கட்கு அவ்வின்பத் திடமாக நின்று இனிப்பூட்டும் அன்புருவனை, அவன்மாட்டு அன்பு வைத்தார் அவனருளால் அறிவர். ஏனையார் அறியமாட்டார்.

இன்பனை - ஆனந்தமயனை. இரதிக்கும் - தித்திக்கும்.

## 274. முன்பு பிறப்பும் இறப்பும் அறியாதார்

274. முன்பு பிறப்பும் இறப்பும் அறியாதார்
அன்பில் இறைவனை யாம்அறி வோம்என்பர்
இன்பப் பிறப்பும் இறப்பும் இலான்நந்தி
அன்பி லவனை அறியகி லாரே.

தம் எதிரே நாளும் நடந்து கொண்டிருக்கும் பிறப்பும் இறப்பும் ஆகிய இரண்டின் உண்மையினை யறியாதார் அன்பினிடத்தும் காணப்படும் இன்ப வடிவினனாகிய இறைவனை
யாமறிவோ மென்பர் பிறப்பும் இறப்பும் இல்லாப் பெரும் பொருள் நந்தியெங் கடவுள். அவன் பாலுள்ள இன்பத்தினை அன்புவிளையுமிடத்தே வழிபட்டுப் பெறுதல் முடியும். அத்தகைய வழிபாட்டு அன்பில்லாதார் அவனைக் காணமாட்டார்.

## 275. ஈசன் அறியும் இராப்பக லுந்தன்னைப்

275. ஈசன் அறியும் இராப்பக லுந்தன்னைப்
பாசத்துள் வைத்துப் பரிவுசெய் வார்களைத்
தேசுற் றறிந்து செயலற் றிருந்திடில்
ஈசன்வந் தெம்மிடை ஈட்டிநின் றானே.

இரவு பகலாக இடையறாது மறப்பும் நினைப்புமின்றி மறவா நினைவாய்ச் சிவபெருமானைத் தொழுதல் வேண்டும். அவனைத் திருவைந்தெழுத்து முறையான் ஆருயிர்கள் பேரன்புக் காதலாகிய பாசத்துள் வைத்து நேசிப்பர். அங்ஙனம் நேசிப்பவர்களே பற்றுடையவர்கள் எனப்படும் பத்தியினராவர். இத்தகைய பத்திமையுடையாரை அச் சிவன் சிறப்பாக அறிந்தருள்கின்றனன். அவர் தேசுறுதலாகிய திருவடியுணர்வாம் சிவஞானத்தால் அச்சிவனுக்கு அடிமையாம் தம் நிலையுணர்ந்து தம்மாற் செய்யப்படும் செயலெல்லாம் சிவச் செயலென்றிருப்பர். அப்படிக்கு இருந்தால் அம் மெய்யடியாருடன் அச் சிவபெருமான் கலந்து பிரிப்பின்றி மேலோங்கி நின்றருள்வன். பாசம் - அன்பு. பரிவு - பத்தி; பற்று. ஈட்டி நின்றான் - கலந்து நின்றான்.

தேசு - சிவஞானம்.

# 276. விட்டுப் பிடிப்பதென் மேதகு சோதியைத்

276. விட்டுப் பிடிப்பதென் மேதகு சோதியைத்
தொட்டுத் தொடர்வன் தொலையாப் பெருமையை
எட்டுமென் னாருயி ராய்நின்ற ஈசனை
மட்டுக் கலப்பது மஞ்சன1 மாமே.

திருவாதிரை செவ்வொளியுள்ள நுண்மீன். அதுபோல் திருக்கார்த்திகையும் செவ்வொளியுடையதொரு செம்மீன். இவ் விரண்டு நாட்களும் சிவபெருமானின் தனிச்சிறப்பு நாட்களாகும். திருக்கார்த்திகைத் திருநாள் சிவபெருமான் பேரொளிப் பிழம்பாய்த் தேன்றியருளிய திருநாள். இப் பிழம்பே ஒருபுடை யொப்பாக உரு அருவத் திருமேனியைக் குறிக்கும். உருவத் திருமேனி கட்புலன் ஆவதுமட்டு மல்லாமல் கையால் தீண்டுவதற்கும் வாய்ப் புடையதாகும். அது நிலத்தையும் நீரையும் கண்ணாற் காண்பதுடன் கையால் தீண்டவும் செய்கின்றோம். ஆனால் நெருப்பினைக் காண்பதல்லாமல் கையால் தீண்ட முடியாது. தீண்ட முடியாமைபற்றி அருவுருவெனச் செப்பலுமாம். இவ்வரு உருவத் திருமேனியினின்று உருவாக முதற்கண் தோன்றிய திருவுரு கூத்தப் பெருமானார் திருவுருவே. அஃதொன்றே திருவருள் மேலீட்டால் இடையீடின்றி இயற்றியருளும் எழின்மிக்க திருத்தொழில்கள் ஐந்தினுக்கும் உரிய திருமேனியாகும். அத்திருமேனியைக் குறிக்குந் திருநாள் திருவாதிரையாகும். இந்நாளே உலகத் தோற்றத்தின் பொன்னாளாகும். இம்முறைமை கார்த்திகை மார்கழி என்ற மாதங்களிரண்டும் அடுத்தடுத்துத் தொடர்ந்து வழங்கப்படுகின்றமையானும்

உணர்க. சிவபெருமான் இயற்கை அருட்பெரும் சோதியாய்த் திகழ்கின்றான். சொல்லவும் கருதவும் ஒண்ணாத மேன்மைமிக்க அச்சோதியை இடையறாது எண்ணுதல் வேண்டும். அவ்வாறு நினையாது இடையிடையே நினைப்பது நன்றாகாது. அடியேன் அதனைத் தொடர்ந்து நினைந்து பின்பற்றுவேன். அளவிட முடியாததும் அழிவில்லதும் ஆகிய அத் திருவருட்சுடர்ப் பெருமையை அவனருள் துணையால் உணர்வின்கண் எட்டுவன். அத்தகைய உயிருடன் கலந்து உயிருக்குயிராய் நிற்கும் இறைவனும் அவனே. அவனைக் கூடிய அளவு பேரன்பினால் இடையறா நினைப்புடன் கலப்பதே திருமஞ்சனமாகிய வழிபாடாகும். மஞ்சனம் - திருமுழுக்கு. இச்சொல் இனம்பற்றி வழிபாட்டினையுங் குறிக்கும்.

மேதகு - பெருமையுள்ள. மட்டு - அன்பு.

## 277. குறிப்பறிந் தேனுடல் உயிரது கூடிச்

277. குறிப்பறிந் தேனுடல் உயிரது கூடிச்
செறிப்பறிந் தேன்மிகு தேவர் பிரானை
மறிப்பறி யாதுவந் துள்ளம் புகுந்தான்
கறிப்பறி யாமிகுங் கல்விகற் றேனே.

சிவபெருமான் ஆருயிர்கட்கு வினைக்கீடாக உடலினைப் படைத்து அளித்தனர். அதன்கண் அவ்வுயிரைக் கூட்டி உலகத்துக்கு வரச் செய்த குறிப்பினை அருளால் அறிந்தேன். அஃதாவது மாறா அன்பு செய்து அதன் ஆறாக அவன் திருவடியை அடைதல். அதன் பொருட்டுச் சிவபெருமானும் அவ்வுயிர்களுடன் பிரிப்பின்றிக் கலந்தியக்குகின்றான். அப் பேருண்மையினையும் அறிந்தேன். தேவர்கோவறியாத தேவ தேவனாய் மூவர் முதல்வனாய் யாவர்க்கும் இன்பனாய் விளங்கும் அவனை அடியேன் உள்ளத்துத் திருவைந்தெழுத்து எண்ணுமுறையால் அடைத்துள்ளேன். அவனும் மிக்க உவப்புடன் உள்ளம் புகுந்தருளினன். அவன் உள்ளத்தை விட்டுக் கள்ளம் பண்ணாது வெளிப்பட்டு நிற்கும் அருளினைப்புரிவிக்கும் திருவைந்தெழுத்தை நெஞ்சமுத்திப் பயின்றேன். இத்தகைய நன்னெறிக் கலையே மெய்யுணர்வுக் கல்வியாகும். அவனருளால் அக் கல்வியினை அடியேனும் கற்றுக்கொண்டேன்.

செறிப்பு - கலப்பு. மறிப்பு - மீட்சி. கறிப்பு - உள்ளிருக்கும் உணர்வு.

## 278. கற்றறி வாளர் கருதிய காலத்துக்

278. கற்றறி வாளர் கருதிய காலத்துக்
கற்றறி வாளர் கருத்திலோர் கண்ணுண்டு
கற்றறி வாளர் கருதி உரைசெய்யுங்
கற்றறி காட்டக் கயலுள வாக்குமே.

திருவருட் கல்வி கற்ற செந்நெறியாளர் அவ்வருளால் எண்ணிய காலத்து அவர்தம் அறிவெண்ணத்து ஓர் அகக்கண் உண்டாகும். கற்றறிவல்லார் அவற்றினைக் கருதி உரை செய்வர். அவர்கள் கற்றுள்ள அறிவு காட்டுந்தன்மை வாய்ந்த கண்ணாகும். அக்கண் பக்கத்தே உள்ளது. கற்றறி : கற்றறிவு என்பது ஈறுகெட்டு நின்றது. காட்டக் கயலுள : காட்டு + அக்கு + அயலுள - காட்டக் கயலுள. காட்டு - காட்டுந்தன்மை. அக்கு - கண். அயல் - பக்கம்.

## 279. நிற்கின்ற போதே நிலையுடை யான்கழல்

279. நிற்கின்ற போதே நிலையுடை யான்கழல்
கற்கின்ற செய்மின் கழிந்தறும் பாவங்கள்
சொற்குன்றல் இன்றித் தொழுமின் தொழுதபின்
மற்றொன் றிலாத மணிவிளக் காமே.

காலமுண்டாக என்பது போல் இளமைக் காலத்து அறிவு ஆற்றல் ஆள்வினையுடைமை முதலியன தளர்ச்சியின்றிக் கிளர்ச்சியாக விருக்கும். அதுவே தொழுதற்கு வாய்ப்புடைய காலம் என்றும் ஒருபடித்தாய் மாறா நிலையுடையனாய் நிற்பவன் சிவன். அவன் திருவடியினைச் சேர்ப்பிக்கும் மெய்யுணர்வுக் கல்வியினைக் காலம் போக்காது ஓவாது, விரைந்து கற்றலைச் செய்ம்மின். கற்றலென்பது கற்றபடி அவன் திருத் தொண்டினை அருளால் புரிவது. அத் திருத் தொண்டினால் பாவங்கள் அற்றொழியும். அச் சிவனைப் புகழ்ந்து பாடும் திருமுறைத் திருப்பாட்டுக்களை வழுவின்றிப் பொருளுணர்ந்து ஓதி அருள் நினைவுடன் தொழுங்கள். தொழுதபின் தனக்குத்தானே ஒப்பாய் வேறோர் உயர்வும் ஒப்புமில்லாத அழியா இயற்கை மணிவிளக்காம் சிவபெருமான் திருவருள் புரிவன். பொருளுணர்ந்து சொல்லவேண்டு மென்பதைச் 'சொல்லிய பாட்டின் பொருளுணர்ந்து சொல்லுவார், செல்வர்' என்னும் திருமறை முடிவான் உணர்க. சொற்குன்றலின்றி - சொல்லின்கண் வழுவில்லாமல்.

மற்று ஒன்று - வேறு ஒப்பு.

## 280. கல்வி யுடையார் கழிந்தோடிப் போகின்றார்

280. கல்வி யுடையார் கழிந்தோடிப் போகின்றார்
பல்லி யுடையார் பாம்பரிந் துண்கின்றார்
எல்லியுங் காலையும் ஏத்தும் இறைவனை
வல்லியுள் வாதித்த காயமு மாமே.

சிவபெருமானின் திருவடியுணர்வு கைவரப் பெற்றவரே உண்மைக் கல்வியுடையாராவர். அவர் திருவருளால் திருவடியை நாடி இவ்வுடம்பினையும் மிகை என்று உட்கொண்டு தொண்டின்கண் விழைந்தோடிச் செல்கின்றனர். தொடர்பாக ஒன்றன்பின் ஒன்று பல்குவதற்கு இடனாக இருப்பதால் உடலுக்குப் பல்லி என்று பெயர். பல்குவதையுடையது பல்லி. அத்தகையவுடம்பின்கண் பற்றுடையார் பாம்பாகிய குண்டலினியை அரிதலாகிய வருத்தத்தினைச் செய்து வாழ்கின்றார்.
இரவும் பகலும் யாவர்க்கும் இறைவனாம் சிவபெருமானைச் செந்தமிழ்த் திருமாமறை வழியாகத் தொழுங்கள். அங்ஙனம் தொழுதால் வல்லியாகிய திருவருளால் குளிகையால் செம்பு பொன்னாவதுபோல் தொழுவார் உடம்பும் பொன்னாகும். அஃதாவது, சண்டேசுரர் திருவுடம்புபோல் தொழுவார் உடம்பும் தூமாயை உடம்பாகத் திகழும். வல்லி - திருவருள். வாதித்த இரசவாதம் செய்த. அரிந்து - வருத்தி. காயம் - தூமாயை உடம்பு.

பல்லி - ஆதார நிராதார அறிவு. பாம்பு - குண்டலினி. எல்லி - மாலை. வல்லி - மாயையாகிய உலகம்.

## 281. துணையது வாய்வருந் தூயநற் சோதி

281. துணையது வாய்வருந் தூயநற் சோதி
துணையது வாய்வருந் தூயநற் சொல்லாந்
துணையது வாய்வருந் தூயநற் கந்தந்
துணையது வாய்வருந் தூயநற் கல்வியே.

இயற்கை உண்மை அறிவின்ப உருவாகிய சிவபெருமான் எந் நிலையினும் எவர்க்கும் எல்லாவற்றானும் விளக்கத் துணை நிற்கும் பேரொளிப் பிழம்பாவன். அவன் சிவகுருவாய் வந்து திருவைந்தெழுத்தைச் செவியறிவுறுத்துவன். அம் மந்திரத்தினையே ஆகுபெயராக ஈண்டுச் சொல்லென ஓதினர். அதற்குத் துணையாக இருப்பவனும் அவனே. அவன் மலர்மணம் போல் ஆருயிர்களைத் தன் திருவடிக் கண் அடக்கி இன்புறுத்தலின் 'தூயநற் கந்தந் துணை' யென்றனர். இத்தனையும் நிகழ்வதற்கு வாயிலாகிய கல்வித் துணையாக எழுந்தருள்பவனும் அவனே. அதனால் அச் சிவனைத் 'தூய நற்கல்வி' என்றனர்.

தூயநற்சோதி - ஞானம். தூயநற்சொல் - குரு உபதேசமொழி.

## 282. நூலொன்று பற்றி நுனியேற மாட்டாதார்

282. நூலொன்று பற்றி நுனியேற மாட்டாதார்
பாலொன்று பற்றினாற் பண்பின் பயன்கெடுங்
கோலொன்று பற்றினாற் கூடா பறவைகள்
மாலொன்று பற்றி மயங்குகின் றார்களே.

செந்தமிழ்த் திருமறையாகிய தேவார முதலிய புகழ் நூல்களும், திருமுறையாகிய மெய்கண்ட சித்தாந்த முதலிய பொருள் நூல்களும் இறைவனடி அடைவிக்கும் எழில் ஞான பூசைக்குரிய நிறை நூல்களாகும். அந் நிறைநூல்களைப் பற்றுக்கோடாகக் கொண்டு நுனி என்னும் அந்தத்தைச் செய்யும் சிவபெருமான் திருவடியில் தலைக்கூடுதல் வேண்டும். அங்ஙனம் கூடமாட்டாதார், அறுநான்கு வகையாம் கொள்கைகளுள் ஏதாவது ஒரு கொள்கையினைச் சார்ந்து அதன்கண் கடும்பற்றுக் கொண்டு நிற்பர். ஏனையாருடன் பிணங்குவர். எங்குமில்லாத இன்றமிழ்ப் பண்பின் பயன் மங்கிக்கெடும்படி கலாம் விளைப்பர். திருவைந்தெழுத்தாகிய செம்பொருட் செங்கோலைக் கைப்பற்றினால் ஐம்புலப் பறவைகள் தம்புலமற்று முனைத்துக் கூடா. எனவே அவை அடங்கும். அடங்கவே அவர் 'தம்மை ஐந்து புலனும் பின்செல்லும் தகையோ'ராவர். இந் நன்னெறிக்கு உய்க்கும் நிலையுடைக் கல்வியினை அறியாதார் உடல் உலக ஊண்களில் மயக்குற்றுப் பிறப்பு இறப்பாகிய தடுமாற்றத்தால் மயங்கித் துன்புறுகின்றார்கள்.

நூல் - வீட்டுநூல், அல்லது உச்சித்துளை. நுனி - உச்சியிடம் அல்லது வீடு. பண்பு - தலைக்குணம். கோல் - கழி; நடுநாடியாகிய பிரமதண்டம். பறவை - புலன்கள். மால் - மயக்க நூல்; பெரும்பற்று.

நூல் - தத்துவ ஏணி. பால் - சார்பு. கோல் - அஞ்செழுத்து. பறவைகள் - எண்ணங்கள்.

## 283. ஆய்ந்துகொள் வார்க்கரன் அங்கே வெளிப்படும்

283. ஆய்ந்துகொள் வார்க்கரன் அங்கே வெளிப்படும்
தோய்ந்த நெருப்பது தூய்மணி சிந்திடும்
ஏய்ந்த இளமதி எட்டவல் லார்கட்கு
வாய்ந்த மனமல்கு நூலேணி யாமே.

திருவருளால் திருவடியுணர்வு கொண்டு அகத்தே ஆராய்வார்க்கு அரனாகிய சிவபெருமான் அங்கு அப்பொழுதே வெளிப்பட்டருள்வன். அது கதிர்க்கல்லானது கதிரோன் முன்னிலையில் அக்கதிரை வெளியில் வரச் செய்யும் தன்மையினை யொக்கும். பொருந்திய கட்டிளந் திங்கள் புருவநடுவிற் காணப்படும் மதிமண்டலமாகும். அம்மண்டலத்தை அங்கண் நின்று கூடற்குரிய பயிற்சி வல்லார்க்கு அமைந்த மனம் மேலோங்கிப் போவதற்குரிய படி ஏணி ஆகும். கதிர்க்கல் - சூரிய காந்தக்கல்.

## 284. வழித்துணை யாய்மருந் தாயிருந் தார்முன்

284. வழித்துணை யாய்மருந் தாயிருந் தார்முன்
கழித்துணை யாங்கற் றிலாதவர் சிந்தை
ஒழித்துணை யாய்உம்ப ராய்உல கேழும்
வழித்துணை யாம்பெருந் தன்மைவல் லானே.

திருவழிக் கல்வி கற்றுணர்ந்தவர் செல்வன் கழலேத்துஞ் செல்வாய செல்வம் பெற்ற சிவனடியார் ஆவர். திருவருளால் யாவர்கட்கும் நன்னெறிக்கு உய்க்கும் வழித்துணையாவர். மேலும் மம்மர் அறுக்கும் மருந்துமாவர். அத்தகைத் திருவுடையார் முன்பு மேலோதிய கல்வியைக் கற்றிலாதவர் கழித்தொதுக்கும் பழித்துணையாவர். சிவபெருமான் மன மடங்கச் செய்தருளுவன்; ஆருயிரைத் தனதிடங் கருதுமாறு கருதும் துணையாவன். விண்ணவர் முதலாகச் சொல்லப்படுகின்ற ஏழுலகத்தார்க்கும் மும்மை நலமெய்தச் செம்மை வழித்துணையாயிருப்பவனும் சிவனே. இத்தகைய பெருந்தன்மை வாய்ந்த எல்லாம் வல்ல இயல்பினனும் சிவனே. கழித்துணை - நீக்கிவிடத்தக்க நிலையினர். சிந்தை யொழித்துணை - மனம் அடங்குதற்கு உரிய துணை. மும்மை இம்மை, உம்மை, அம்மை இவற்றை 'இம்மை எனல் இப் பிறப்பாம் உம்மை வருபிறப்பாம், அம்மை பிறவாச் சிறப்பாம் அங்கு' என விரித்துக் காண்க.

## 285. பற்றது பற்றிற் பரமனைப் பற்றுமின்

285. பற்றது பற்றிற் பரமனைப் பற்றுமின்
முற்றது எல்லா முதல்வன் அருள்பெறில்
கிற்ற விரகிற் கிளரொளி வானவர்
கற்றவர் பேரின்பம் உற்றுநின் றாரே.

தூயவுள்ளத்தால் ஒன்றனைப் பற்றவேண்டுமாயின் பெரும் பொருளாய்ச் செம்பொருளாய் அரும்பொருளாய் அன்பர் உள்ளத்து வரும் பொருளாய் வயங்கும் சிவபெருமான் திருவடியிணையினையே பற்றுங்கள். அம் முதல்வனின் திருவருள் கைவரப் பெற்றால் எல்லாம் எளிதின் இனிதாய் முற்றுறும் விழுப் பொருளாம் சிவபெருமான் திருவடிக்குத் தொழும்பராய் ஒழுகியுய்யுங்கள். அதற்குரிய வழிவகைகளாம் விரகினை உணர்ந்தவர் என்றும் பொன்றாச் சிவவுலகத்தவர். அவர் அவனருளால் அவன் திருவடிப் பெரும் பேற்றின்பத்தினை முற்றும் உற்று நுகர்ந்து நின்றனர். முற்றது : முற்றியதென்பதன் சிதைவு.

கிற்றவிரகு - தொழும்பனாம் உபாயம்.

## 286. கடலுடை யான்மலை யானைந்து பூதத்

286. கடலுடை யான்மலை யானைந்து பூதத்
துடலுடை யான்பல ஊழிதொ றூழி
அடல்விடை யேறும் அமரர்கள் நாதன்
இடமுடை5 யார்நெஞ்சத் தில்லிருந் தானே.

சிவபெருமான் உடைமைப் பொருளாகக் கடலையும் மலையையும் உடையன். நன்மையின் பேரெல்லையாகக் கடலையும், அடக்கத்தின் ஒக்கமாக மலையையும் நாயனார் நவின்றருளியதும் நாடுக. உலகமே உருவமாக உடைய அவன் 'நிலம் நீர் நெருப்பு உயிர் (காற்று) நீள் விசும்பு' ஆகிய ஐம்பெரும் பூதத்தையும் அப் பூதச் சேர்க்கையாகிய உலகத்தையும் உடலாகவுடையன். ஊழி ஊழியாகத் தான் அழியாது நின்று புண்ணிய வண்ணமாம் அடல் விடையினை ஏறியருளும் நாரி பாகன் சிவன். அடல் விடை என்பது பாவத்தை அடும் புண்ணிய ஆனேறாகும். அறப்பண்புமாகும். புண்ணியம் வளர எண்ணரிய பாவம் தேயும் என்பது உண்மை. அதற்கு ஒப்பு ஒளிவளர இருள் அடங்குவதாகும். அச்சிவனே அவன் திருவடியினை இடையறாது விரும்பும் அமரர்களாகிய சிவவுலகத்தார்க்கு முதல்வன். அமரர் - விருப்புடையோர். திருவடியுணர்வாம் இடமுடையார் புனித உள்ளத்தைச்சிவன் தனிப்பேரிடமாகக் கொள்வன். அது கருஇல்லாம் திருக்கோவில் முதலிடத்தினும் மிக்கது.

இடம் உடையார் - பேர் அறிஞர்.

## 287. அறங்கேட்டும் அந்தணர் வாய்மொழி கேட்டும்

287. அறங்கேட்டும் அந்தணர் வாய்மொழி கேட்டும்
மறங்கேட்டும் வானவர் மந்திரங் கேட்டும்
புறங்கேட்டும் பொன்னுரை மேனியெம் ஈசன்
திறங்கேட்டும் பெற்ற சிவகதி தானே.

மறைநூலை அறம் என்று கூறுவது ஆன்றோர் வழக்கு. எனவே அறங்கேட்டும் என்பது உலகியல் ஒழுக்கங்களை உள்ளவாறு கள்ளமில் உள்ளத்து நல்லார்பால் வல்லவாறு கேட்கும் என்பதாகும். சிவனடியார் அவ் வறத்தினை உலகோர் நலமொன்றே கருதி நெடுநுகத்துப் பகல் போன்று வடுவஞ்சி வாய்மொழிவர். அத்துடன் துய்மையராய்ச் சிவனடி நினைவும் தவ வாழ்க்கையும் பேரருளும் பூண்டு ஒழுகுவோர் அந்தணராவர். அவர் கூறும் மெய்யுணர்வுக்கு வாயிலாம் அறிவுரைகளைக் கேட்டும், அறமாகிய புண்ணியத்துக்கு மாறாகிய பாவங்களையுணர்ந்து விலகுதற் பொருட்டும் விலக்குதற் பொருட்டும் அமைதியுடன் இருந்து கேட்டும், சிவவுலகோர் கூறும் சிறப்புக்கு வாயிலாம் மறைமொழியாகிய மந்திரங் கேட்டும், பிறநூல் இயல்புகளைத் திறமுறக் கேட்டும், பொன்போலும் எனப் புகழ்ந்து சொல்லப்படும் திருமேனியையுடைய நம் ஆண்டவனுடைய திருவருள் திறங்களைப் பொருளுறக் கேட்டும் அவனருளால் பெற்றநிலை சிவநிலை ஆகும். மறம் - பாவத்தின் இயல்பு. புறம் - பிறர் நூல். திறம் - தன்மை. இதன்கண் கூறப்படும் கேட்டும் என்னும் வினை எச்சம் ஆறினானும் செருக்கு, சினம், சிறுமை, இவறல்,

மாண்பிறந்த மானம், மாணாவுவகை என்னும் ஆறு பகையும் அறுதல் பெறப்படும். சிவன் நினைவுடையார் 'இன்பம் விழையான் வினைவிழைவான் தன் கேளிர், துன்பம் துடைத் தூன்றும் தூண்' என்பதன் எடுத்துக் காட்டாய் நிற்பர். இதுவே சிவன் நிலை. இதுவே இருவினையொப்பு.

## 288. தேவர் பிரான்தனைத் திவ்விய மூர்த்தியை

288. தேவர் பிரான்தனைத் திவ்விய மூர்த்தியை
யாவர் ஒருவர் அறிவார் அறிந்தபின்
ஓதுமின் கேள்மின் உணர்மின் உணர்ந்தபின்
ஓதி உணர்ந்தவர் ஓங்கிநின் றாரே.

எத்தேவரும் என்றும் நத்தும் பெருமான் சிவன். சிறந்த திருவருளுருவன் சிவபெருமான். அவனை அவனருளால் யாவர் ஒருவர் அகத்துணர்வார், அவரே கேட்பித்தற்குரியார். ஆதலால் அங்ஙனம் உணர்ந்தபின் யாவரும் தீதின்றி உய்ந்து திருவடி சேர்தற்பொருட்டு ஓதுங்கள். சைவ மாண்புடையார் கூறக் கேளுங்கள். உணர்வதாகிய நாடுதலைச் செய்யுங்கள். அதன் பின்னும் இடையறாது ஓதியுணர்ந்தவர் செந்நெறிக்கண் ஓங்கி நின்றவராவர்.

## 289. மயன்பணி கேட்பது மாநந்தி வேண்டின்

289. மயன்பணி கேட்பது மாநந்தி வேண்டின்
அயன்பணி கேட்பது அரன்பணி யாலே
சிவன்பணி கேட்பவர் தேவரு மாவர்
பயன்பணி கேட்பது பற்றது வாமே.

மாநந்தி ஓதும் பொருள் நூலை ஆராய்ந்து கேளுங்கள். கேட்பின் அரனார் திருவாணையாலே மாயன் பணிகேட்டு ஒழுகுவதும் விளங்கும். அதுபோல் அயன்பணி கேட்பதும் விளங்கும். சிவன் பணியாகிய திருவடி வழிபாடு புரியும் முறையினைக் கேட்பவர் சிவவுலகக் கடவுளராவர். அதுவே பிறவிப் பெரும்பயன் எய்தும் திருப்பணி கேட்பதாகும். அக் கேள்வியே திருவடிப் பெரும்பேற்றுப் பற்றுமாகும். மயன்: மாயன் என்பதன் குறுக்கம். சிவன்பணி - சிவபூசை. பயன் பணி - திருவடிப் பேற்றினுக்குரிய நானெறித் தொண்டு. நானெறி : சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்பன.

மயன் - மாயன். அயன் - பிரமா.

## 290. பெருமான் இவனென்று பேசி யிருக்குந்

290. பெருமான் இவனென்று பேசி யிருக்குந்
திருமா னிடர்பின்னைத் தேவரு மாவர்
வருமா தவர்க்கு மகிழ்ந்தருள் செய்யும்
அருமா தவத் தெங்கள் ஆதிப் பிரானே.

முழுமுதற் சிவபெருமானே அழிவில் விழுப்பொருள் என்று தெளிவர். தெளிந்து வழி வழியாகப் புகழ்ந்து பேசுவர். அவரே நன்னெறியிலொழுகும் திருமுறைத்தொண்டர். திருமானிடர் எனச் சிறப்பித்துக் கூறப்படுபவரும் அவரே. இத் திருத்தொண்டின் பயனால் உம்மைக்கண் சிவவுலகக் கடவுளருமாவர். இருவினைஒப்பில் இறப்பில் தவமாம் நற்றவமுடையவர் அருமாதவராவர். அவ்வருமாதவத்தைப் புரியுமாறு உடனின்று உதவியருளுபவன் சிவன். அருமாதவப்படிமை கொண்டுணர்த்துபவன் அம்மையப்பனாகிய சிவன். மகிழ்ந்தருள் செய்வானும் அவனே. அருமாதவம்: நற்றவம்; சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்பன.

## 291. ஈசன் அருளும் இறப்பும் பிறப்பையும்

291. ஈசன் அருளும் இறப்பும் பிறப்பையும்
பேசி யிருந்து பிதற்றி மகிழ்வெய்தி
நேசமு மாகும் நிகழொளி யாய்நின்று
வாச மலர்க்கந்த மன்னிநின் றானே.

சிவபெருமானின் திருவருளையும் அவன் திருவாணையால் ஆருயிர்களின் இருவினைக்கீடாக வரும் இறப்பையும் பிறப்பையும் செம் பொருட்டுணிவினர் செப்புவர். அதுவே எப்போதுமுள்ள முப்பொருளுண்மை. இதனைத் திருவருளால் இடையறாது பேசி இருங்கள். அப் பொருள் வயப்பட்டு விடாது அறிவழிந்து குழறுவதாகிய பிதற்றினைச் செய்து பெருமகிழ்வுற்றிருங்கள். நீங்கா நேசமாகுங்கள். அறிவுக்கு அறிவாய் நின்று விளங்கும் சிவபெருமான் நறுமலர் நாற்றம்போல் உயிர்க்குயிராய் நிலைத்து நின்று இன்புறுத்தியருளினன். நிகழ் ஒளி - இயற்கை அறிவு. நேசமாகு என்பது ஆகுமின் என்பதன் கடைக்குறை. அல்லது ஆகு என்பதை முன்னிலை ஒருமை ஏவல் வினைமுற்றாகக் கொண்டு நீ நேசமாகுவாயாக என முடிக்க.

வாசமலர்க் கந்தம் - பூவின் மணம் போல.

## 292. விழுப்பமுங் கேள்வியும் மெய்நின்ற ஞானத்

292. விழுப்பமுங் கேள்வியும் மெய்நின்ற ஞானத்
தொழுக்கமுஞ் சிந்தை உணர்கின்ற போது
வழுக்கி விடாவிடில் வானவர் கோனும்
இழுக்கின்றி எண்ணிலி காலம் தாமே.

மேலோதியவாறு முப்பொருளுண்மையினைத் திருவைந்தெழுத்தின்கண் வைத்து உணர்ந்தொழுகும் விழுப்பமும் சிறந்தது. நல்லார், அல்லார் கண்டத்தன் அருளால் கூறும் பொருண் மொழிக் கேள்வியும் சிறந்தது. திருவடியுணர்வாம் மெய்ஞ்ஞானத்தொழுக்கமும் சிறந்தது. இவற்றின்கண் எண்ணம் இடையறாது நாடும்போது வழுக்குதலாகிய பொச்சாப்பு ஏற்படாதிருத்தல் வேண்டும். அங்ஙனம் வழுக்காதிருப்பின் தூய விண்ணாகிய சிவவுலகத்துச் சேர்வர். வேந்தனாகிய சிவபெருமான் தவறுதலின்றி அளவில்லாதவூழி உடனாய் நின்று அவ்வுயிரையும் நிலைப்பித்துத் திகழ்ந்தருள்வன்.

வழுக்கிவிடாவிடில் - தவறு இல்லையேல்.

## 293. சிறியார் மணற்சோற்றில் தேக்கிடு மாபோல்

293. சிறியார் மணற்சோற்றில் தேக்கிடு மாபோல்
செறிவால் அனுபோகஞ் சித்திக்கும் என்னில்
குறியாத தொன்றைக் குறியாதார் தம்மை
அறியா திருந்தார் அவராவர் அன்றே.

(ப. இ.) சிறுமகார் சிற்றிலிழைத்துச் சிறு சோறடுவர். உற்ற விருந்துடன் இருமுதுகுரவர்க்கும் ஈவர். தாமும் அருந்தி உண்மையின்பம் எய்தினார்போல் உள்ளம் நிறைவுறுவர். நிறைவுறுதல் - திருத்தியடைதல். திருத்தி - திருப்தி. அதனை உண்மையன்றென உணர்ந்த முதியோரும் அன்றெனக் கூறாது ஆமென்றே கூறுவர். என்னை? அதுவே அப்பருவத்துக்கண் கூறும் ஒப்புரையாகலான் என்க. அதுபோல் ஐம்பொறி நுகர்வால் செம்பொருட் சிவனை இம்பரில் காண்டும் என்றும் அது கைகூடுமென்றும் சிலர் கூறுவர். அங்ஙனம் கூறுவார் அச்சிவனையும் தம்மையும் அறியாதவராவர். அச் சிறுமகாரையும் ஒப்பாராவர். ஆயின், அச் சிவபெருமான் சுட்டுணர்வாலும் சிற்றுணர்வாலும் அறியப்படாதவன். அவ்வுண்மையினைக் குறியாததொன்று எனக்குறித்தனர் அச் சிவனை அவன் திருவருளால் அகக்கண் கொண்டு உணர்வினில் குறித்தல் வேண்டும். அகக்கண் - அறிவுக்கண். அவன் மாற்றம் மனம் கழிய நின்ற மறையோன். தேக்கிடுதல் - நிறைவுறுதல். செறிவால் - ஐம்புலத் தொடர்பால்.

குறியறியாதது ஒன்று - சுட்டி அறியப்படாத சிவம்.

## 294. உறுதுணை யாவ துயிரும் உடம்பும்

294. உறுதுணை யாவ துயிரும் உடம்பும்
உறுதுணை யாவ துலகுறு கேள்வி
செறிதுணை யாவது சிவனடிச் சிந்தை
பெறுதுணை கேட்கிற் பிறப்பில்லை தானே.

ஆருயிர் உய்வதற்கு நேரிய பெருந்துணையாவது மக்களுடம்பேயாம். மேலும் உயர்ந்தோர் எனக்கொள்ளப்படும் உலகோர் திருவடியுணர்வால் கூறும் ஒற்கத்தின் ஊற்றாந்துணையாகிய நற்கேள்வி உயிர்க்கு உறுதுணையாகும். நற்கேள்வி - சிவனடியே சிந்திக்கச் செய்யும் திருப்பெருகு சிவஞானம். நம்மைவிட்டகலாது ஒட்டியுறைவதாகிய செறிதுணை சிவனடி மறவாச் சிந்தையேயாம். அதனால் பெறப்படும் அளவில் பேற்றினைக் கேட்பின் பிறப்பற்றுச் சிறப்புற்று இறப்பில் பேரின்பம் உறப்பெற்று என்றும் ஒன்றுபோல் பிரிவின்றி நின்று வாழ்வதாம். 'உலகம் உயர்ந்தோர் மாட்டு' என்பதனை வரும் தொல்காப்பிய நூற்பாவான் உணர்க:

வழக்கெனப் படுவது உயர்ந்தோர் மேற்றே
நிகழ்ச்சி யவர்கட் டாக லான.
தொல். பொருள் - 647.

உலகுறுகேள்வி - உயர்ந்தோரிடம் கேட்டறியும் ஞானம்.

## 295. புகழநின் றார்க்கும் புராணன்எம் ஈசன்

295. புகழநின் றார்க்கும் புராணன்எம் ஈசன்
இகழநின் றார்க்கும் இடும்பைக் கிடமா
மகிழநின் றாதியை ஓதி உணராக்
கழியநின் றார்க்கொரு கற்பசு வாமே.

அறஞ்சொல்லும் நல்லார் புகழ அவரோடு உடனின்று அவரைத் திருவடியன்பிற் கலப்பித்து நிறைந்து நிற்கும் தொன்மைத் திருஅருட் செல்வன் சிவபெருமான். இவ்வுண்மை உணராது புறக்கணித்துச் சிலர் இகழ அவர் நல்வழிப்படுதற் பொருட்டு அவர்க்கு இடும்பைகளை நல்கி அவற்றோடு பிணிப்பிப்பவனும் நன்மைச் சிவனே.' 'ஈசன் பல்கணத் தெண்ணப்பட்டு இறுமாந்திருக்கும்' பெருமகிழ்வு கொண்டு திருவருளால் அச் சிவனை ஓதியுணரும் உண்மைநெறி நில்லாது அந் நெறிக்கு விலக்காகி நின்றார்க்குத் துன்பமே யன்றி இன்பம் உண் டாவதில்லை. அவர்கட்கு இன்ப வழிவினன் ஆன சிவன் கற்பசு - கல்லாலாகிய பசுப் போன்று காட்சியளிப்பன். கற்பசு பெயரும், உருவும், மடியும், பிறவும், பொலிவும் பசுப் போன்று தோற்றமளிக்கும். தோற்றத்தளவானும் கூடப் பாலுக்கு வாயில் ஏதும் இல்லை. அதுபோல் சிவனால் அடையப் பெறும் இன்பப் பயன் கழிய நின்றார்க்கு ஏதும் இல்லை. கற்பசு - கல்லா. மடி - பாற்காம்பு.

புராணன் - அநாதியாயுள்ளவன். கற்பசு - கல்லாலே செதுக்கப்பட்ட பசுவைப் போல.

## 296. வைத்துணர்ந் தான்மனத் தோடும்வாய் பேசி

296. வைத்துணர்ந் தான்மனத் தோடும்வாய் பேசி
ஒத்துணர்ந் தான்உரு ஒன்றொடொன் றொவ்வாது
அச்சுழன் றாணி கலங்கினும் ஆதியை
நச்சுணர்ந் தார்க்கே நாணுகலு மாமே.

ஒருடம்பிருவராகி என்றதனால் ஒருபால் பெண்ணும் ஒரு பால் ஆணும் ஆக ஒன்றோடொன்று ஒவ்வாத் திருக்கோலத் திருவுருவுடையவன் சிவன். அவனைத் திருவருளால் உள்ளத்தின்கண் வைத்துத் திருவடியுணர்வான் உணர்ந்து மனமார நினைத்து வாயாரப் புகழ்ந்து நன்னெறிக்கண் ஒழுகுவார்தம்மை அவனும் உடன் ஒத்து உணர்வன். அச்சாகிய உடம்பு தளர்ந்து உழன்ற காலத்து அதனை உரனுடன் நிறுத்தும் அச்சாணியாகிய மனம் திண்மை அழிந்து கலங்கும். அங்ஙனம் கலங்கிய இடத்தும் அந்தம் ஆதியாகிய சிவபெருமானை உள்ளன்புடன் உணர்க. அங்ஙனம் உணர்ந்தார்க்கு அவன் மிக நெருங்கி அஞ்சேலென்று அருள் செய்வன். நச்சுதல் - விரும்புதல். ஒன்றொடொன் றொவ்வாக்கோலம் என்பதற்கு வாழ்வுதரும் போகவடிவமும், தாழ்வுதரும் கோர வடிவமும், தவம் தரும் யோகவடிவமும் எனக் கூறுதலும் ஒன்று. அவ்வுண்மை வரும் திருப்பாட்டான் உணர்க:

ஒன்றொடொன் றொவ்வா வேடம் ஒருவனே தரித்துக் கொண்டு
நின்றலால் உலக நீங்கி நின்றன னென்றும் ஓரார்
அன்றியவ் வேட மெல்லா மருள்புரி தொழிலென் றோரார்
கொன்றது வினையைக் கொன்று நின்றவக் குணமென்

றோரார்.

- சிவஞானசித்தியார், 1 . 2 - 23.

அச்சு - தேகம். நச்சு - விருப்பம். ஆணி - மன உறுதி.

## 297. கல்லா தவருங் கருத்தறி காட்சியை

297. கல்லா தவருங் கருத்தறி காட்சியை
வல்லா ரெனில்அருட் கண்ணான் மதித்துளோர்
கல்லாதார் உண்மைபற் றாநிற்பர் கற்றோருங்
கல்லாதார் இன்பங் காணுகி லாரே.

எழுதப் படிக்கக் கல்லாதவரும் அருளால் அன்பு கொண்டு அறிவின்கண் அறிய வேண்டுமென்று முயன்றால் அவர்க்கு அறியப்படும் காட்சித் தன்மை உடையவன் சிவன். திருவடியுணர்வு கற்று வல்லாரெனில் அச் சிவனை அவன் திருவருளால் அறிவிற் கண்டு இன்புறுவர். அத் திருவடியுணர்வு அருளால் கல்லாதவர் அவ் வுண்மைச் சிவனை மேற்கொள்ளாது நிற்பர். அவர்கள் உலகியல் கற்றுளாராயினும் கல்லாதவரேயாவர். அவர்கள் திருவடியின்பங் காணாதவருமாவர். கருத்து - அறிவு. காட்சி - திருவருட் கண்ணால் காணப்படும் சிவன். அருட்கண் - மெய்யுணர்வுக்கண்.

## 298. வல்லார்கள் என்றும் வழியொன்றி வாழ்கின்றார்

298. வல்லார்கள் என்றும் வழியொன்றி வாழ்கின்றார்
அல்லா தவர்கள் அறிவு பலஎன்பார்
எல்லா இடத்தும் உளன்எங்கள் தம்இறை
கல்லா தவர்கள் கலப்பறி யாரே.

திருவருட் சிறப்புச்சேர் வல்லார்கள் எஞ்ஞான்றும் யாண்டும் இடையீடின்றித் திருவடியுணர்வு சேர்வர். அதனால் நன்னெறிக்கண் பொருந்தி நல்லாராய் வாழ்கின்றார். செந்நெறிக்கண் வாராத ஏனையார் மெய்யுணர்வு நூலாகிய ஞானநூல் பல என்பர். நம் இறையாகிய சிவபெருமான் எல்லா இடங்களிலும் நீக்கமற நிறைந்துளன். சிவனெறி கல்லாதவர் அவன் திருவடிச் சேர்வு கலவாதவராவர். அறிவுபல - அறிவு நூற்கள் பல.

வழி ஒன்றி - ஞான நெறியிற் பொருந்தி.

## 299. நில்லா நிலையை நிலையாக நெஞ்சத்து

299. நில்லா நிலையை நிலையாக நெஞ்சத்து
நில்லாக் குரம்பை நிலையென் றுணர்வீர்காள்
எல்லா வுயிர்க்கும் இறைவனே யாயினுங்
கல்லாதார் நெஞ்சத்துக் காணவொண் ணாதே.

உலகும் உலகத்துப் பொருளும் உடலும் நில்லாத தன்மையினை உடையன. அவற்றை நிலையாக நிற்கும் என நெஞ்சத்துக்
கொள்வார் புல்லறிவினர். நில்லாத உடம்பையும் நிலை என்று நீடு நினைக்கும் பீழிலாதவர்களே! விழுமிய முழுமுதற் சிவபெருமான் எல்லாவுயிர்க்கும் இயைந்தியக்கும் அறமுறை நீங்கா இறைவனாவன். ஆயினும் திருவடியுணர்வு கல்லாதார் உள்ளத்துத் ததிநெய்போல் விளங்கிக் காண வொண்ணாது பாலில் நெய்போல் மறைந்து நிற்பன். ததி - தயிர். நெய் - வெண்ணெய். குரம்பை - உடம்பு. கல்லாதார் - திருமுறை கல்லாதார்.

## 300. கில்லேன் வினைத்துய ராக்கு மயலானேன்

300. கில்லேன் வினைத்துய ராக்கு மயலானேன்
கல்லேன் அரனெறி அறியாத் தகைமையின்
வல்லேன் வழங்கும் பொருளே மனத்தினுட்
கல்லேன் கழியநின் றாடவல் லேனே.

திருவடியுணர்வு கற்றலினும் நன்னெறி நிற்கும் பற்றினிலும் பொருந்தும் ஆற்றல் இல்லேன். அதனால் எஞ்ஞான்றும் பிறப்பிற்கு வித்தாம் இருவினைத் துயரைப் பெருக்கும் இருள் மயக்கினுக்கு உட்பட்டேன். திருவடியைச் சேர்க்கும் சிவனெறியாகிய அரனெறியைப் புண்ணியப் பேறின்மையாற் கல்லேன். அதனால் நன்மை அறியாத் தன்மைசேர் புன்மையின்வல்லவனானேன். ஐம்புலன் நுகர்வில் அடங்கா அவாவும் அதற்கு வேண்டும் பொருள்களைக் கூட்டும் முயற்சியில் நாட்டமும் விடாது மனத்துள் அடைபட்டுக் கிடக்கின்றன. இவற்றை யகன்று நன்னெறி ஒழுகக் கல்லேன். நன்னெறிக்குச் சேயனாய் நின்று புன்னெறியில் ஒழுக வல்லேன். இனி வழங்கும் பொருளை மனத்தினுட் கல்லேன் எனக் கொண்டு 'கொடுத்தலும் துய்த்தலும்' என்னும் செந்தமிழ் முறைக்கு மாறாகப் பொருள்களைத் துய்த்தலே உய்வென்று ஓவாது கருதி வழங்குவதாகிய கொடுத்தலை மனத்துட் கல்லேன் எனலும் ஒன்று.

கில்லேன் - ஆற்றகில்லேன். வழங்கும்பொருள் - ஐம்புல வாயிலாய் அறியும் பொருள்.

## 301. நில்லாது சீவன் நிலையன் றெனவெண்ணி

301. நில்லாது சீவன் நிலையன் றெனவெண்ணி
வல்லார் அறத்துந் தவத்துளும் ஆயினார்
கல்லா மனித்தர் கயவர் உலகினில்
பொல்லா வினைத்துயர் போகஞ்செய் வாரே.

பிறப்பற முயலும் வல்லாராகிய அறவோர் ஆவி இவ்வுடலகத்து எந்நாளும் நிலையாக நில்லாது என்றும், இவ்வுடலும் இவ்வுலகத்து நிலையாக நில்லாதென்றும், இவ்வுலகமும் காரணத்தொடுங்குவதல்லது நிலையாக நில்லா தென்றும் வழியளவையான் உண்மை உணர்வர். உணர்ந்து இம்மை உம்மை வாழ்வுக்குத் துணையாம் அறத்தினையும், அம்மை வாழ்வுக்குத் துணையாம் சிவத்தைப் பேணுதலாகிய தவத்
தினையும் இடையறாது பயின்று அவையே தாமாக விளங்கினார். இவ்வுண்மையினைக் கல்லா மனிதரே கயவர் எனப்படுவர். அவர்கள் இறந்தும் பிறந்தும் இருவினைக் கீடாகத் திருவாணையால் வரும் வினைத்துயரினைத் துய்ப்பதாகிய போகத்து உழந்தவராவர். வல்லார் - பிறப்பற முயலும் அறவோர். வினைத்துயர் - வினை நுகர்வுத் துன்பம்.

## 302. விண்ணினின் உள்ளே விளைந்த விளங்கனி

302. விண்ணினின் உள்ளே விளைந்த விளங்கனி
கண்ணினின் உள்ளே கலந்தங் கிருந்தது
மண்ணினின் உள்ளே மதித்து மதித்துநின்று
எண்ணி எழுதி இளைத்துவிட் டாரே.

அருள் வெளியினுள்ளே விளைந்த பண்பால் விளாம் பழத்துடன் ஒருபுடை ஒப்புமை கூறற்கு ஏற்றவன் சிவபெருமான். அவன் புறக்கண்ணினுக்குச் சார்பு வாயிலாக அளிக்கும் பொதுக்காட்சியுடையன். அகக்கண்ணாகிய உணர்வினிடத்து இயற்கை உண்மை, அறிவு இன்ப வடிவாம் சார்பிலாத் தன் தன்மைவாயிலாக அளிக்கும் சிறப்புக் காட்சியும் உடையன். இவற்றை அளித்துக் கலந்திருந்தருள்வன். இவ் வுண்மையினை உள்ளவாறு அருளால் உணர்தல் வேண்டும். உணராதார் உலகத்தில் சுட்டி அறியப்படும் பொருள்களை நிலைக்குமென மாறுபடக் கொள்வர். மதித்து அதன் வாயிலாத் தம் அறிவு போனவாறு முன்னொடுபின் முரணாய்ப் பொருந்தா நூல்கள் பல செய்வர். செய்து கையும் கண்ணும் கருத்தும் இளைத்து ஏமங்காணாது வாளாபோயொழிந்தார் பலராவர். விளங்கனி என்பது பண்புவம ஆகுபெயராய்ச் சிவபெருமானைக் குறித்து நின்றது. வில்வம் கூவிளம் கிளுவை விளா, வன்னி ஆகிய ஐந்தும் சிவபெருமானுக்கு உவந்த ஐந்தளிர்கள் என்ப. அவற்றுள் வில்வப் பழமும் விளாம்பழமும் சிறந்த மருந்தாவதுடன் பித்தத்தை உடனே அகற்றும் மருந்துமாய்ப் பொருந்தும் உணவுமாய் விளங்குகின்றன. பித்தம்

அகன்றால் அறிவு விளங்கி நல்லவராவர். அத்தகைய விளங்கனி சிவனைத் தொழுவார் அறியாமை நீங்கிப் பேரறிவோங்கி நல்லவராதற்குப் பண்பால் ஒருபுடை யொப்பாகும். விண் - அருள்வெளி. எழுதி என்பதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது.

விளங்கனி - சிவம்.

## 303. கணக்கறிந் தார்க்கன்றிக் காணவொண் ணாது

303. கணக்கறிந் தார்க்கன்றிக் காணவொண் ணாது
கணக்கறிந் தார்க்கன்றிக் கைகூடா காட்சி
கணக்கறிந் துண்மையைக் கண்டண்ட நிற்குங்
கணக்கறிந் தார்கல்வி கற்றறிந் தாரே.

என்றுமுள்ள அழியாத் தொன்மையவாம் என்பது தொகை. இறை யுயிர் தளை என்பன வகை. சிறப்பு, வனப்பு, யாப்பு, நடப்பு, மறைப்பு என்பனவற்றைத் தனித்தனியே முதலெழுத்தாற் குறிக்கும் 'சிவயநம' என்பது விரி. இவ்வகையாகப் பொருளுண்மை களைக் கண்ணி அறிதல் கணக்கெனப்படும் திருவைந்தெழுத்தை எண்ணிக் கணித்து உருவேற்றலும் கணக்கெனப்படும். ஒன்றாதலாம் தொகை வேறாதலாம் வகை, நின்றவுடனாதல் விரிநேர் என்பதனை நினைவுகூர்க. இம்முறைசேர் கணக்கினை அருளால் அறிந்தவர் சிவபெருமான் திருவடியினைக் காண்பர். இக் கணக்கினை அறியார் அவ்வடியினைக் காணார். இஃது ஒருபுடைச் சிவவுருவமாகும். அதுபோல் கணக்கறிந்தார்க்கே சிவனுண்மைக்காட்சி புலனாம். சிவனுண்மைக் காட்சியென்பது திருவடிப் பேரின்பத் திளைப்பேயாம். இக் கணக்கினையறிந்து சிவமெய்ப்பொருளை எய்ப்பில் வைப்பென அறிதலால் அண்டுதலாகிய செறிவுநிலை ஏற்படும். இதுவே சிவயோகம். சிவயோகம் என்பது தன் இழப்பாகும். இக் கணக்கினை அறிந்தாரே திருவடிப் பேரின்பம் இம்மையே துய்ப்பவராவர். அவர் செயல்

அனைத்துஞ் சிவச் செயலேயாகும். இதுவே சிவபோகம். சிவபோகம் என்பது அருளுழப்பேயாம். இதன் விரிவை உண்மைநெறி விளக்கத்து உமாபதி சிவநாயனார் ஓதியருளியவாற்றானுணர்க. இத்தகைய கணக்கினைக் கற்றறிந்தாரையே செந்நெறிச் செல்வர் - செம்பொருட்டுணிவினர் கற்றறிந்தார் எனக் கருதுவர். காட்சி - திருவடியுணர்வு; சிவ ஞானம். அண்ட - சேர.

கணக்கறிந்தார் - அஞ்செழுத்தைக் கணிக்கும் வகை அறிந்தார்.

## 804. கல்லாத மூடரைக் காணவும் ஆகாது.

804. கல்லாத மூடரைக் காணவும் ஆகாது.
கல்லாத மூடர்சொல் கேட்கக் கடன்அன்று
கல்லாத மூடர்க்குக் கல்லாதார் நல்லராம்
கல்லாத மூடர் கருத்தறி யாரே.

சிவனறி கல்வியினைக் கல்லாதார் மூடர் எனப்படுவர். அவரே உண்மை அறிவிலாதவரும் ஆவர். அவ்வறிவிலாதவரை நல்லார் காணவும் அஞ்சுவர். அதனால் அம் மூடரைக் காணவொண்ணாது என்றனர். மூடர் : அறியாமையால் மூடப் பட்டவர். அவர்தம் ஒழுக்கமிலாத இழுக்குவாயால் வரும் வழுக்குமொழிகளைச் செவி கொடுத்துக் கேட்பது முறைமையாகாது. கடன் - முறைமை. கல்லாத மூடர்க்குத் திருமுறைக் கல்வி இல்லாதவரே நல்லாராவர். கல்லாதமூடர் ஆகுங் கருத்தினையும் அறியார்; ஆன்றோர் கருத்தினையும் அறியார்.

## 305. கற்றுஞ் சிவஞானம் இல்லாக் கலதிகள்

305. கற்றுஞ் சிவஞானம் இல்லாக் கலதிகள்
சுற்றமும் வீடார் துரிசறார் மூடர்கள்
மற்றும் பலதிசை காணார் மதியிலோர்
கற்றன்பில் நிற்போர் கணக்கறிந் தார்களே.

அளவில்லாத உலக நூற்களைக் கற்றும் அறிவுநூலாகிய சிவஞானம் கல்லாதவர் கலதிகளாகிய வீணர்களாவர். 'மறப்பித்துத் தம்மை மலங்களில் வீழ்க்கும், சிறப்பிலாதா'ராகிய தீய சுற்றத்தைவிட்டு நீங்கார். அதனால் மும்மலத் துரிசுமறார். இத்தகையார் மூடர்கள் எனப் படுவர். பல திசைகளிலும் திருவடியுணர்வு கைவந்த நல்லோர் மாண்பினைக் கண்டும் கேட்டும் தேறார். இவர்கள் உய்யும் அறிவிலராவர். திருவடியுணர்வுத் திருமுறை கற்றபின் அதன்படி ஓவாது ஒழுகிக் கண்ணுதலோன் அன்பினில் உறுதியாக நிற்போரே கணக்கறிந்தாராவர். வீடார் - விட்டு நீங்கார். கணக்கு - முறைமை.

கலதிகள் - வீணர்கள். துரிசு - களங்கம்.

## 306. ஆதிப் பிரான்அம ரர்க்கும் பரஞ்சுடர்

306. ஆதிப் பிரான்அம ரர்க்கும் பரஞ்சுடர்
சோதி அடியார் தொடரும் பெருந்தெய்வம்
ஓதி உணரவல் லோம்என்பர் உள்நின்ற
சோதி நடத்துந் தொடர்வறி யாரே.

யாவர்க்கும் யாவைக்கும் காரணமாய்த் திகழும் ஆதியையுடைய அப்பன் விழுப்பொருளாகிய பிரானாவன். அவனே விண்ணவர்க்கும் பண்ணமை அறிவுப் பேரொளி. திருவருள் ஒளியோடு என்றும் பொன்றாப் பொலிவுடன் விளங்குவர் மெய்யடியார். அவர் நன்று தொடரும் பெருந்தெய்வம் சிவபெருமானே. இவ்வுண்மைகளை அருளால் உணராதவர் தாமே ஓதியுணரவல்லோம் என்று செருக்குறுவர். அவர்கள் சிவபெருமான் உயிர்க்குயிராய் உள்நின்று நடத்தும் அருட்பெருஞ்சோதியாம் முறைமையினை அறியாதவராவர். சோதி அடியார்த் தொடரும் - திருவடியுணர்வுள்ள நாயன்மாரைத் தொடர்ந்து முன்நிற்கும், பெரும்பொருள் - சிவபெருமான். தொடர்வு - முறைமை. பெரும்பொருள் சிவபெருமான் என்பது நடு நின்று ஆய்வார் அனைவர்க்கும் என்றும் ஒப்ப முடிந்த தொன்று. அவன், கரும்பினுமினியான், கதிர்ச்சோதியான், கடலமுதன், இறப்புப்பிறப்பு இல்லான், பெரும்பொருட் கிளவியான், அரும்பொன் ஆக்குவோன் ஆவன் இதன் கண் காணப்படும் சிவனியல்பு ஆறும் அவன் பண்பு ஆறனையும் ஒரு புடையாகக் குறிக்கும். பண்பாறு: அழிவில் செல்வம், ஆண்மை, பொருட் புகழ், அருட்செல்வம், அடியுணர்வு அற்ற பற்று என்பன. இச்சிறப்பனைத்தும் ஒருங்குமைந்த செந்தமிழ்த் திருமறை

வருமாறு:

'கரும்பினு மினியான்றன்னைக் காய்கதிர்ச் சோதியானை
இருங்கட லமுதந் தன்னை யிறப்பொடு பிறப்பிலானைப்
பெரும் பொருட் கிளவியானைப் பெருந்தவ முனிவரேத்தும்
அரும்பொனை நினைந்த நெஞ்ச மழகிதா நினைந்தவாறே.'
- அப்பர், 4.74 - 3.

பெரும்பொருட் கிளவி - திருவைந்தெழுத்து.

# 307. நடுவுநின் றார்க்கன்றி ஞானமும் இல்லை

307. நடுவுநின் றார்க்கன்றி ஞானமும் இல்லை
நடுவுநின் றார்க்கு நரகமும் இல்லை
நடுவுநின் றார்நல்ல தேவரு மாவர்
நடுவுநின் றார்வழி நானும்நின் றேனே.

அடியார் நடுவுள் இருத்தலே நடுவுநிலையாகும். நடுவுள் இருத்தல் என்பது அடியார் நிறையுடைக் காவலில் நாம் என்றும் முறையுற நிற்கின்றோம் என்னும் மறவா நினைவுடன் ஒழுகுதல். இஃது உய்யும் மெய்யடியார்க்கு வேண்டும் செய்கையாகும். வேந்தர் முதலாயினார் நடுவுள் நிற்பதென்பது அறமுறையின் காவலில் அவர்கள் நிற்பதாக நினைப்பதாகும். அடியார் நடுவுள் நின்றாலன்றித் திருவடியுணர்வாகிய சிவஞானம் எய்துதல் இல்லை. நடுவுநின்றார் நன்னெறி ஒழுகுவராதலின் அவர்கட்கு நரகம் எய்துதலும் இல்லை. நடுவு நின்றார் சிவவுலகத்து வாழும் தேவருமாவர். அந் நடுவுநின்றார் வழியே அடியேனும் நின்றேன். மேலும் திருவைந்தெழுத்தாகிய 'சிவயசிவ' என்னும் பொருண்மறையுள் ஆவியினைக் குறிக்கும் 'ய' கரம் வகர சிகரங்கட்கு நடுவாக இருக்கும் நன்மைத் தன்மையினை நாடி அம் மறையினை இடையறாது கணித்தலும் நடுவு நிற்றலாகும். இதுவே 'வாசி' யிடை நிற்கை வழக்கு என்னும் முறைமையுமாகும். இங்ஙனம் கூறுதலும் ஒன்று.

## 308. நடுவுநின் றான்நல்ல கார்முகில் வண்ணன்

308. நடுவுநின் றான்நல்ல கார்முகில் வண்ணன்
நடுவுநின் றான்வல்ல நான்மறை யோதி
நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவோர்
நடுவுநின் றார்நல்ல நம்பனு மாமே.

கார்முகில் வண்ணனும் காக்குந் தன்மையால் நடுவுநின்றான் ஆவன். மறையோதியாகிய நான்முகனும் படைக்குந் தன்மையால் நடுவு நின்றவனாவன். சிவஞானிகளாவார் சிலரும் நடுவுநின்றனர். அம் முறையான் நடுவுநின்றார் நல்ல நம்பனாகிய சிவபெருமானாகித் திகழ்வர். நம்பனுமாம் - சிவமாம் பெருவாழ்வு எய்துதலுமாம்.

## 309. நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவர்

309. நடுவுநின் றார்சிலர் ஞானிக ளாவர்
நடுவுநின் றார்சிலர் தேவரு மாவர்
நடுவுநின் றார்சிலர் நம்பனு மாவர்
நடுவுநின் றாரொடு நானும்நின் றேனே.

நடுவு நிற்றலாகிய சிவனினைவு உடையார் சிவஞானிகளாவர். பின் சிவவுலகக் கடவுளருமாவர். சிவவுலகம் தூமாயைக்கண் உள்ளது. மேலும் அவர் சிவனாம் பெருவாழ்வும் எய்துவர். அவருடன் கூடி இணைந்து அடியேனும் நின்றேன்.

## 310. தோன்றிய எல்லாந் துடைப்பன் அவனன்றி

310. தோன்றிய எல்லாந் துடைப்பன் அவனன்றி
ஏன்றுநின் றாரென்றும் ஈசன் இணையடி
மூன்றுநின் றார்முதல் வன்திரு நாமத்தை
நான்றுநின் றார்நடு வாகிநின் றாரே.

எக்காலத்தும் யாண்டும் எல்லாவற்றையும் ஒருங்கு படைப்பவன் சிவன். அம் முறையான் அவன் அந்தத்தைச் செய்கின்றவன் ஆவன். அதனால் அவனை மெய்கண்ட நூல் அந்தம் என ஓதிற்று. பேரொடுக்கத்தைச் செய்பவன் சிவனே. அவனையன்றி வேறு யாரும் இலர். அவனே ஆண்டான். அவன் திருவடியை ஏன்று நின்றார் நடுவு நின்றாராவர். அவன் திருப் பெயராகிய 'சிவயநம' என்னும் செந்தமிழ்த் திருவைந்தெழுத்தினைத் திருவருளால் இடையறாது முயன்று உளங்கனிந்து ஓதினவரும், அவ் வைந்தெழுத்தினையே அறிவுறப்பற்றி நின்ற வரும் நடுவு நின்றாராவர். இத் திருமறை நடுவு நின்றார் தன்மையினை நவிலுகின்றது. அவனன்றி என்று என்பதனை அவன் நன்றி என்று எனப்பிரித்துச் சிவபெருமான்றன் நல்ல திருவருளை எய்தி என்றலும் ஒன்று. மூன்று : முயன்று என்பதன் திரிபு. நான்று - பற்றி.

நான்று - பற்றி.

## 311. கழுநீர்ப் பசுப்பெறிற் கயந்தொறும் தேரா

311. கழுநீர்ப் பசுப்பெறிற் கயந்தொறும் தேரா
கழுநீர் விடாய்த்துத்தங் காயஞ் சுருக்கும்
முழுநீர்க் கள்ளுண்போர் முறைமை அகன்றோர்
செழுநீர்ச் சிவன்றன் சிவானந்தத் தேறலே.

தூய பால்தரும் பசுவாகிய ஆன், செஞ்சாலி அரிசி கழுவிய நீராகிய கழுநீரை வயிறாரப் பருகப் பெற்றால் பின் விடாய் நீக்கு தற்பொருட்டுக் குளந்தொறும் சென்று வெறும் புனலை நாடாது. என்னை? மீண்டும் கழுநீரையே கருதிவரும் ஆகலான் என்க. கழுநீர் அனைய சுவைமிக்க தேறலாகிய இனியதேனைப் பருகுதற் பொருட்டு விழைவர் சிலர். அவ் வேட்கையுற்றவர் தங்கள் உடலையும் உணர்வையும் ஒருங்கு சுருக்கும் முழுமூடத் தன்மை வாய்ந்த இயற்கையும் செயற்கையுமாகிய மயல்சேர் கள்ளினை யுண்பர். அவர்கள் அறமுறையும் அருள் முறையும் அகன்று பாவநெறியிற் செல்வோராவர். செழுமை வாய்ந்த பழுதில் இன்பமும் விழுப்பொருளாம் சிவனடிப் பெருவாழ்வும் என்றுங் குன்றாது தரத்தக்கவன் சிவன். அவன்பாலே உள்ள சிவானந்தத் தேறலாகிய மதுவினையே நடுவு நின்றார் உண்பர். அத் தேறலே ஆருயிரின் அன்பறிவு ஆற்றல்களை விளக்கும் இறவாத இன்பத்தழுத்தும் அறவாழி அந்தணன்தாள் தலைக்கூட்டும். கள்ளினையுண் போன்களி காளைகள்ளுட்டுவோன், வள்ளல் சிவ நாட்டங்கள் வாழ்த்து என்பதை உளங்கொண்டு 'சிவ சிவ' என்னும்

செந்தமிழ் மறையினையே சிவானந்தத் தேறல் எனப் பருகுக. பருகுதல் - ஓவாது உணர்வின்கண் உணர்த்த உணர்தல்.

## 312. சித்தம் உருக்கிச் சிவமாஞ் சமாதியில்

312. சித்தம் உருக்கிச் சிவமாஞ் சமாதியில்
ஒத்த சிவானந்தத் தோவாத தேறலைச்
சுத்த மதுவுண்ணச் சுவானந்தம் விட்டிடா
நித்தல் இருத்தல் கிடத்தல்கீழ்க் காலே.

மேலோதியவாறுள்ள திருவடி இன்பத்தேறலைப் பருகினோர் சித்தம் சிவன்பாலே ஓவாது உருகும் காதலினராவர். ஒன்றியிருந்து நினைத்தலால் அறிவுக்கு அறிவாய் நுண்ணிதாகவுணரும் நொசிப்பு நிலையினை எய்துவர். நொசிப்பு நிலை: சமாதி நிலை. தனக்குத் தானே ஒப்பாகிய என்றும் வற்றாத திருவடியின்பத் தேறலைத் தூய உண்மை இயற்கைத் தேறல் என்பர். இத் தூய நிலையினை உயிர்ச் செயல் அற்று உடையானை விட்டுப் பிரிவிலா உடையாள் செயலினை உற்றுத் திகழும் நிலை என்ப. இதனையே சுத்தாவத்தை என்ப. இந்நிலையில் அத் தூய மதுவுண்டலால் சிவ இன்பமே தன்பால் திகழ்ந்து தான் அதன் வண்ணமாய்த் தனக்குரிய தணவா இன்பமாம்படி அன்பினில் சிறப்பர். இந்நிலை எய்தாது தம் நிலையினை மயக்கும் புறக் கள்ளினையுண்பார் அறிவு திரிதலின் கீழ்நிலையாகிய சகல கேவல நிலையினராவர். சகல கேவலம் என்பது ஒவ்வொரு நாளும் நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கலாகிய கீழ்நோக்கு நிலை. இந் நிலைபோன்று கள்ளுண் பாரும் நிற்றல் இருத்தல் கிடத்தல் செய்யினும் தம் நிலையினை இழந்து செய்தலின் அதனைக் கீழ்நிலை என்பர். இவ்வுண்மை நாயனாரருளிய:

'கையறி யாமை உடைத்தே பொருள்கொடுத்து
மெய்யறி யாமை கொளல்.'
- திருக்குறள், 925.

என்னும் செந்தமிழ்ப் பொதுமறையான் உணர்க. சகல கேவலம் - புணர்விற்புலம்பு; கருவிகள் தொழிற்படா நிலை.

கீழ்க்கால் - கீழால் அவத்தை.

## 313. காமமுங் கள்ளுங் கலதிகட் கேயாகும்

313. காமமுங் கள்ளுங் கலதிகட் கேயாகும்
மாமல முஞ்சம யத்துள் மயலுறும்
போமதி யாகும் புனிதன் இணையடி
ஓமய ஆனந்தத் தேறல் உணர்வுண்டே

இழிகாமமும் அழிகள்ளும் தீக்குணமுடைய கலதிகளாகிய கீழோர்கட்கு உரியன. தூய வெண்ணீற்றால் யாவரையும் தூய்மையாக்கும் புனிதனாகிய சிவபெருமானின் திருவடியிணையாகிய சிறந்த இயற்கைவடிவமைந்த இன்பத்தேறலை உண்ணுங்கள். அத்தேறல் திருவடியுணர்வினை உண்டாக்கும். தொன்மை மலத்தையும், சமயங்களிலுண்டாகும் பெரும் மயக்கத்தையும் போக்கக் கூடிய திருவருளுணர் வினையும் உண்டாக்கும். மேலும் இழிகாமும் அழிகள்ளும் தொன்மலத்தையும் சமய மயக்கத்தையும் உண்டாக்கும். நல்லறிவைப் போக்கும் எனவும் கொள்க. கலதி - தீக்குணமுடையார். இழிகாமம் - நல்லோரான் இழிக்கப்படும் காமம். அஃதாவது புறச் சூழலால் அறந்திறம்பி அகத்தெழும் காமம்; குறியாக் காமம் என்க. அழிகள் - ஒழுக்கமும் உணர்வும் ஒருங்கு அழிக்குங்கள். ஓ - சிறப்பு. மயம் - பெருமை. போம் மதியாகும் - கெட்டுப் போவதற்காம் காரறிவுண்டாம். மயவானந்தம் - ஆனந்த மயம்; அழிவில் பேரின்பம். காரறிவு - அறியாமை.

மாமலம் - மூலமலம்.

## 314. வாமத்தோர் தாமும் மதுவுண்டு மாள்பவர்

314. வாமத்தோர் தாமும் மதுவுண்டு மாள்பவர்
காமத்தோர் காமக்கள் ளுண்டே கலங்குவர்
ஓமத்தோர் உள்ளொளிக் குள்ளே உணர்வர்கள்
நாமத்தோர் அன்றே நணுகுவர் தாமே.

ஆற்றலாகிய சத்தியை வழிபடுவோர் வாமத்தோர் எனப்படுவர். இவர்கள் மயக்கநூல் வழிநின்று அறியாமையாற் கள்ளுண்பார்கள். அவர்கள் கள்ளுண்பது சத்திக்கு உவப்பைத் தருவதாகும் என்னும் தப்பு எண்ணமேயாகும். சத்திக்கு உவப்பைத் தருவது 'சிவானந்தத் தேறலே'யன்றி அறிவை மயக்கும் கள்ளன்று. இழிகாமமுடைய கீழோர் இணை விழைச்சு எனப்படும் உடனுறைவு அல்லது ஆண் பெண் இணக்கம் என்னும் உடலையும் உளத்தையும் உணர்வையும் தளரச் செய்யும் காமக் கள்ளுண்டு கலங்குவர். சிவ வழிபாட்டினுக்கு ஓமமும் ஒருங்கிய நினைவும் உறுப்புக்கள் எனப்படும் வழிபாடு உறுப்பி. ஓமம் தீ வளர்த்தல். ஒருங்கிய நினைவு தியானம். அவ்வகையான சிவ வழிபாட்டினர் உள்ளொளியாகிய சிவனடியுள் ஒடுங்கித் தம் உணர்வில் சிவ இன்பத் தேறலினை யுண்பர். நந்தி நாமமாகிய 'நமசிவய' என்னும் செந்தமிழ்த் திருவைந்தெழுத்தைத் திருவருளால் சிறப்புறக் கணிப்போர் அப்பொழுதே திருவடியுணர்வினை எய்துவர். காமத்தோர் - இன்ப நூலுடையார் வாமத்தோர்: சத்திக்குத் தனிப்பெரு முதன்மை கொடுக்கும் நெறியினர். இவர் சத்தியின் திரிபே உலகமும் உயிர்களும் எனக் கொள்ளும் ஒவ்வாக் கொள்கையினர்.

வாமத்தோர் - சத்தி பூசை யுடையோர். ஓமத்தோர் - சிவபூசை செய்பவர். நாமத்தோர் - அஞ்செழுத்தோபதுவார்.

## 315. உள்ளுண்மை ஓரார் உணரார் பசுபாசம்

315. உள்ளுண்மை ஓரார் உணரார் பசுபாசம்
வள்ளண்மை நாதன் அருளினின் வாழ்வுறார்
தெள்ளுண்மை ஞானச் சிவயோகஞ் சேர்வுறார்
கள்ளுண்ணும் மாந்தர் கருத்தறி யாரே.

உயிர்க்கு உயிராய் உணர்வளிக்கும் உள்ளுண்மையாகிய பதியினை ஓரார். அப் பதியினை உணராமையால் பசு பாசமாகிய உயிர்தளை என்னும் பொருள்களையும் உணரமாட்டார். 'வேண்டுவார்க்கு வேண்டுவதே' ஈயும் பெருவள்ளலாகிய சிவபெருமான் முழுமுதல்வன். அவன் திருவருளின் வழிநின்று வாழுதல் செய்யார். தெளிந்த உண்மையாகிய திருவடியுணர்வு சிவஞானம் எனப்படும். அச்சிவஞானத்தால் எய்தப்பெறுவது சிவயோகம். சிவயோகம் - சிவ இணக்கம். எண்ணல் இருத்தல் இயைதல் இயங்கல் நான்கும் முறையே. உருவ தரிசன யோக போகம் என்பர். இவற்றை எண்ணலிருத்தல் இயைதல் ஏற்றியங்கல் ஏருருவம், கண்காட்சி யோகபோகம் என்பதனால் நினைவு கூர்க. இச் சிறந்த சிவயோகத்தையும் சேரமாட்டார்; யாரென்றால்? அழிகள்ளுண்ணும் மாந்தர் என்க. இம் மாந்தர் சிவபெருமான் தங்களுக்குப் பிறப்பினைத் தந்தருளிய திருவுள்ளக் குறிப்பினையும் உணராதவராவர்.

உள் உண்மை - உள்ளத்தின்கண் இருக்கும் இயல்பு.
தெள் உண்மை - தெளிந்த.

## 316. மயக்குஞ் சமய மலமன்னு மூடர்

316. மயக்குஞ் சமய மலமன்னு மூடர்
மயக்கு மதுவுண்ணு மாமூடர் தேரார்
மயக்குறு மாமாயை மாயையின் வீடு
மயக்கில் தெளியின் மயக்குறும் அன்றே.

அறிவினைக் கெடுத்து அல்லற் படுத்தும் எதுவும் ஆன்றோரால் கள்ளென்றே கொள்ளப்படும். ஆதலால் தெளிவும் விரிவும் இல்லாத அறிவினர் மலம் நிறைந்த மூடராவர். அவர்கள் எரிவினால் ஏற்படுத்தும் சமயம் மயக்கந்தரும் வாய்மையில்லாத பொய்ச்சமயமாகும். இச் சமயப் புன்மையினையும் நன்மையினைப்போல் மேற்கொண்டு ஆயாது நிற்கும் தீயார் அறிவைக் கெடுக்கும் மதுவினையுண்ணும் மாமூடரோடொப்பர். அவர் தெளிவித்தாலும் தெளிந்து கொள்ளமாட்டார். சமயப் பொய்ப் பற்றும் ஒருவகை மதுவென்றே சொல்லப்படும். இத்தகைய பெரிய மயக்கங்களில் நின்று அருளால் தெளிந்தவர் தூவாமாயையினின்றும் விலகுவர். தூவாமாயையினை அசுத்த மாயை என்பர். இது நில முதல் மாயையீறாக முப்பத்தொரு தத்துவங்களையுடையது. இம் மாயை விலகுவதுபோன்று தெளிவுடையார்க்கு மாமாயை என்று சொல்லப்படும் தூமாயையும் விலகும். தூமாயை ஐந்து தத்துவங்களையுடையது. அஃது ஆசான் முதல் அத்தன் ஈறாகக் கூறப்படும். இதனைச் சுத்த வித்தை முதல் சிவம் ஈறாக எனவும் கூறுவர். மாயையின் தூவாமாயையைப் போல. இன்: ஐந்தன் உருபு ஒப்புப் பொருள். மாமாயை - தூமாயை. வீடும் - விலகும். சமய

மலமன்னும் மூடர்: மலத்தொடர்பான நெறியொழுகும் அறிவிலார்.

## 317. மயங்குந் தியங்குங்கள் வாய்மை அழிக்கும்

317. மயங்குந் தியங்குங்கள் வாய்மை அழிக்கும்
இயங்கும் மடவார்தம் இன்பமே எய்தி
முயங்கும் நயங்கொண்ட ஞானத்து முந்தார்
இயங்கும் இடையறா ஆனந்தம் எய்துமே.

மெய்ம்மையினையும் மெய்ப்பொருள் உண்மையினையும் அழித்தொழிக்கும் பழிபடு கள்ளினை யுண்பார் வழி குழி தெரியாது வீழ்ந்து மயங்குவர். தீராப் பெருந்துன்பம் எய்தித் தியங்குதலாகிய கலக்கமுற்றுக் கவலைகூர்வர். மேலும் அவர் பிறப்பு இறப்பு ஆகிய பெருந் துன்பத்துள் வீழ்த்தி இயக்கும் இழிகாமமும் கழிகாமமும் மாறாப் பெண்ணியலாரை நண்ணுவர். அம் மடவார் தரும் சிற்றின்பமே முற்றின்பமாகக் கொண்டு முயங்குவர். இறைவன் திருவடியுணர்வாகிய சிறந்த நயமிக்க சிவஞானஞ்சேர்ந்து முதன்மையடையார். இந் நிலையினால் பிறழா நிகழ்ச்சியாய் என்றும் நிகழும் இடையறா இன்புமாம். திருவடிப்பேற்றினைக் கள்ளுண்பான் எய்தான். எய்துமே : ஏகாரம் எதிர்மறை. முந்தார் முதன்மையடையார். இயங்கும் மடவார்: இயங்கும் பிறவினைப் பொருளில் வந்த தன்வினை; பிறப்பு இறப்புக்களில் உழலச் செய்து இயக்கும் பெண்ணியலார்.

# 318. இராப்பகல் அற்ற இடத்தே இருந்து

318. இராப்பகல் அற்ற இடத்தே இருந்து
பராக்கற ஆனந்தத் தேறல் பருகார்
இராப்பகல் அற்ற இறையடி இன்பத்து
இராப்பகல் மாயை இரண்டிடத் தேனே.

மறப்பும், நினைப்பும், இருளும், ஒளியும், புலம்பும், புணர்ப்பும், பாவமும், புண்ணியமும் இராப்பகல் என்று உருவகிக்கப்படும். இராப்பகல் அற்ற இடம் உள்ளுணர்வாய்த் திகழும் திருவருள் வெளிநிலையம். அவ்விடத்தே மறவா நினைவுடன் இருந்து பிற பொருள்களை எண்ணியுழலும் எண்ணமும் நீங்கத் திருவடிப்பேறாம் பேரின்பத் தேனினை மயக்கும் கள்ளுண்பார் ஒருஞான்றும் பருகார். சிவபெருமான் இரவு பகல் என்று கணிக்கப்படும் கால மெய்யினைக் கடந்தவன். அக் கால மெய்யினையும் நடத்துபவன். அதனால் அவன் கால காலன் எனச் சிறப்பித்து அழைக்கப்படுவன். அதனால் இரவு பகலற்ற இறை என ஓதினர். அவ்விறைவன் திருவடியின்பத்தினை அவன் திருவருளால் புணர்விற் புலம்பு புணர்விற் புணர்வு (சகல கேவலம் சகல சகலம்) என மாயைக்கண் நிகழும் ஈரிடத்தும் உழலும் யான் எய்தினேன். எய்தினேன் என்னும் ஒருசொல் சொல்லெச்சமாக வருவித்து முடிக்க. மெய் - தத்துவம்.

பராக்கு - வேறு ஞாபகம்.

## 319. சத்தியை வேண்டிச் சமயத்தோர் கள்ளுண்பர்

319. சத்தியை வேண்டிச் சமயத்தோர் கள்ளுண்பர்
சத்தி அழிந்தது தம்மை மறத்தலால்
சத்தி சிவஞானந் தன்னில் தலைப்பட்டுச்
சத்திய ஞானஆ னந்தத்திற் சார்தலே.

அன்னை மெய்யென்று சொல்லப்படும் சத்தி தத்துவத்திலுள்ள ஓர் ஆவியாற் செய்யப்பட்டது கலப்பிலாச் சத்தி நெறியாகிய

1. ஆலந். ஆரூரர். 7. 61 - 1.
" சுழலார். அப்பர், 4. 93 - 6.
2. சத்திதன். சிவஞான சித்தியார், 1. 3 - 2.

சுத்த சாத்தம். இந்நெறி ஓரும் அறிவில் பொருள் ஓங்கும் அறிவுயிர், சாரும் அருள் மாறல் சாத்தம் என்பதனால் உலகமும் உயிரும் சத்தியின் திரிபெனக் கூறும். அச் சத்தியின்கண் ஒடுங்குவதே வீடுபேறென்ப. இக் கருத்துடையார் சித்தர். இந் நெறியினர் வாம மதத்தர் எனவும் அழைக்கப்படுவர். இவர்கள் சத்தி வழிபாட்டிற்குக் கள்ளினை மேற் கொள்வர். இவர்கள் மயக்கும் கள்ளினையுண்டு தியக்கமுறலால் தம்மை மறக்கின்றனர். மறக்கவே சத்தியழிகின்றது அஃதழியவே கருதிய சத்தி வழிபாடும் உடன் அழிகின்றது. இம் மயக்கும் கள்ளினையுமுண்ணாது சத்தியைச் சிவனுக்கு வேறாகவும் கருதாது சத்தியருளால் சிவஞானம் கைவரப் பெற்றவர், இயற்கை உண்மை அறிவு இன்ப உணர்வுறுவாம் திருவடிப் பேற்றில் சாரும் சிறப்பினை எய்துவர். சத்தியே

சிவஞானம் என்றலும் ஒன்று. அது 'சத்தியின் வடிவே தென்னில் தடையிலா ஞானமாகும்' என்னும் தமிழாகமத்தா னுணர்க.

சமயத்தோர் - வாம மதத்தார்.

## 320. சத்தன் அருள்தரிற் சத்தி அருளுண்டாஞ்

320. சத்தன் அருள்தரிற் சத்தி அருளுண்டாஞ்
சத்தி அருள்தரிற் சத்தன அருளுண்டாஞ்
சத்தி சிவமாம் இரண்டுந்தன் னுள்வைக்கச்
சத்தியம் எண்சித்தித் தன்மையு மாமே.

சத்தனை அத்தன் என்றும் சத்தியை அன்னையென்றும் அழைப்பர். அத்தன் அன்னையைத் தன்னுள் பேரொடுக்கப் பேரூழியில் ஒடுக்கிக் கொள்வன். பின்பு உலகத் தோற்றமாம் மார்கழித் திருவாதிரையின்போது அவ்வன்னை வெளிப்படுத்தப்படுவள். இதுவே சத்தன் அருள்தரில் சத்தி அருளுண்டாம் என்பது. சத்தி அருள் என்பது வனப்பாற்றல் அல்லது பரை எனப்படும். இவ் வனப்பாற்றலாகிய சத்தி சிறந்த அருளைத் தரும் அவ்வருள் நடப்பாற்றல் எனப்படும். நடப்பாற்றல் ஆருயிர்களை வினைக்கீடாக உலகு உடல்களுடன் கூட்டிச் செந்நெறிக் கண் செலுத்துவது. செலுத்திச் சிறப்பாம் திருவடிப் பேற்றினை எய்துவிக்க நடத்துவிப்பிது. அப்படி நடத்துவிப்பித்துகொண்டு சென்றால் சத்தன் அருளாகிய திருவடிப்பேறுண்டாகும். சத்தி சிவமாகிய இரண்டும் ஆருயிர்களை ஆற்றல் அன்பு அறிவுகளாகிய தம்முள் அடக்கிக்கொள்ளும். அதனால் முடிவிலா நிலைபேறாம் வாய்மையும் எண்குணப் பேறாகிய சித்தியும் எண்மையின் எய்தும் என்க. நடப்பாற்றல்: மறைப்பாற்றல்; திரோதான சத்தி. 'சிவயநம' வ: வனப்பாற்றல். ந: நடப்பாற்றல். சத்தி எனினும் ஆற்றல் எனினும் திருவருள் எனினும் ஒன்றே. அத்திருவருள் அனைத்துயிர்க்கும் அருளிப்பாட்டினைச்

---

செய்ய வேண்டும் எனப் பொது வகையான் அறிந்தும் அறிவித்தும் நிற்கும்; அப்பொழுது அத்திருவருள் பேரறிவுப் பெருந்திரு எனப் பேசப்பெறும். இதுவே தடையிலாஞானம் எனப்படும். தடையின்மை தனித் தனி உயிர்கட்குச் செவ்வி வருவித்தற்பொருட்டு ஏதும் புரியாது எலலார்க்கும் அருள் புரிய வேண்டுமெனப் பொதுவகையால் திருவுள்ளங் கொள்ளுதல். இது, மருத்துவன் நோயாளிக்கு நோய் நீக்க வேண்டு மென வுள்ளங்கொள்ளுதலையும் மருந்தும் மருத்துவனையும் அமைப்பித்தலையும் ஒக்கும். உள்ளங்கொள்ளுதலை அறிந்தெனவும், அமைப்பித்தலை அறிவித்தெனவும் ஓதினர். பின்பு அவ்வுயிர்களுடன் விரவி அவ்வுயிர்களின் அன்பு அறிவு ஆற்றல்களைத் தனித்தனி விளக்கியருளத்திருவுள்ளங் கொண்டநிலை பேராற்றற் பெருந்திரு என்று பேசப்பெறும். இதனையே ஆதிசத்தி என்ப. திருவள்ளுவ நாயனார் ஓதியருளிய முதல் திருக்குறளில் பேசப்பெறும் ஆதியென்பதும் இதுவே. அவ்வாதி தனித்தனி ஆருயிர்களின் அறிவை இயைந்தியக்கி விளக்குங்கால் ஞானம் எனவும், அன்பை விளக்குங்கால் இச்சை எனவும், ஆற்றலை விளக்குங்கால் கிரியை எனவும் பேசப்பெறும். இம்முறையில் திருவருள் ஒன்றனையே பேரறிவுப் பெருந்திரு, பேராற்றற் பெருந்திரு, அறிவுப் பெருந்திரு, அன்புப்பெருந்திரு, ஆற்றற் பெருந்திரு என ஐவகையாக ஓதுகின்றோம். பேரறிவு பேராற்றல் அன்பறிவாற்றல்லுடனாச், சேரப் பெருந்திருவைந் தோது என்பதனை நினைவுகூர்க. இவற்றைமுறையே பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி எனக் கிளத்துவர். ஆருயிர்களின் அன்பறிவாற்றல்களை

விளக்கும் நிலை தனித்தனி நிலையாதலின் இந்நிலை தடை செய்ஞானம் எனப்பட்டது. அது கதிரொளி யாண்டும் ஒரு பெற்றித்தாய் விளக்கிச் செல்லுதலையும் பொருள்களின் மேற்சாய் வாய்ப்பட்டு நிழலாய் தடையுண்டு செல்லுவதனையும் ஒக்கும்.

தடையுண்ணும் நிலை மருத்துவன் 'நோய்நாடி நோய்முதல் நாடி அதுதணிக்கும், வாய்நாடி வாய்ப்பச் செயல்' (948) என்னும் செந்தமிழ்ப் பொதுமறையில் ஓதியாங்குத் தனித்தனித் துணைபுரியும் நிலையாகும். இதன்கண் ஓதப்பெறும் நாடுதல் மூன்றும் முறையே அன்பால் அறிவால் ஆற்றலால் கொள்ளும் ஆய்வாகவும், வாய்ப்பச் செயல் பேராற்றற் பெருந்திருவின் திருவுள்ளப் புரிவாகவும் ஒரு புடையாகக் கொள்க.

சத்தன் - சிவன்.

## 321. தத்துவம் நீக்கி மருள்நீக்கித் தானாகிப்

321. தத்துவம் நீக்கி மருள்நீக்கித் தானாகிப்
பொய்த்தவம் நீக்கிமெய்ப் போகத்துட் போகியே
மெய்த்த சகமுண்டு விட்டுப் பரானந்தச்
சித்திய தாக்குஞ் சிவானந்தத் தேறலே.

மாயாகாரிய மெய்யாகிய தத்துவம் முப்பத்தாறும், இம் மெய்யின் காரியமாகிய மெய்யாக்கம் என்று சொல்லப்படும் தாத்துவிகம் அறுபதும் ஆகிய தொண்ணூற்றாறு மெய்களின் தொடர்புண்மையினைத் திருவருளால் கண்டுணர்தல் தத்துவ நீக்கம் எனப்படும். அஃதாவது அத் தத்துவக் கூட்டம் ஆண்டவனால் தரப்பட்ட அவனது உடைமைப் பொருள். அவை ஆருயிர்கட்கு இரவல் பொருள். ஆனால் உயிர்கள் இவ்வுண்மையினை மறந்து தங்கட்கே உரிய உடைமைப் பொருள்கள் என்று பிழைபட எண்ணுகின்றன. அப் பிழையினைப் போக்கி விழைதக்க உண்மையினை நோக்கி ஒழுகுவதே தத்துவ நீக்கம் இவ்வுண்மை நாயனாரருளிய 'சுவையொளி ஊறோசை நாற்றமென் றைந்தின், வகை தெரிவான் கட்டே உலகு' (27) என்னும் செந்தமிழ்ப் பொதுமறை யான் உணரலாம். தத்துவ உண்மையினை உணர்வதால் காணப்படும் பொருள்கைனைத்தும் நிலைக்குமென இருட்சார்பால் எண்ணும் மருள் நீங்கும். நீங்கவே எனது எனப்படும் உலகுடற் பற்று அறும். அறவே ஆருயிர்கட்கு என்றும் புகலிடமாம் அருள் துணையால் தம் நிலை தோன்றும் தோன்றவே தானாகி நிற்கும். நிற்கவே

நிலையாப் பொருள்களை விரும்பிச் செய்யும் வேள்வி முதலிய பொய்த்தவம் நீக்கப்படும். அது நீங்கவே நிலையாத பொய்ப்போகமும் கழியும். திருவடியின்பமாகிய மெய்ப்போகத்துட் செல்லும் உண்மையான திருவடியுணர்வாம் திருவருள் நினைவில் தங்குதலே மெய்யுலக நுகர்வாம். அதனை நுகர்ந்து பேரின்பப் பெருவாழ்வினைக் கைகூடச் செய்யும் நிலை ஏற்படும். இவை அனைத்தும் சிவானந்தத் தேறல் பருகுவதால் ஏற்படுவன. உண்டுவிட்டு: தோன்றாமலடங்கச் செய்து என்பதும் ஒன்று.

தத்துவம் - 96 தத்துவங்கள்.

## 322. யோகிகள் கால்கட்டி ஒண்மதி ஆனந்தப்

322. யோகிகள் கால்கட்டி ஒண்மதி ஆனந்தப்
போத அமுதைப் பொசித்தவர் எண்சித்தி
மோகியர் கள்ளுண்டு மூடராய் மோகமுற்று
ஆகும் மதத்தால் அறிவழிந் தாரே.

அருளால் அகத்தவம் புரியும் யோகிகள் காலாகிய உயிர்ப்பினை நடுநாடி வழியாகச் செலுத்திப் புருவ நடுவாகிய மதிமண்டலத்திற்கு ஏற்றுவர். ஏற்றி ஆங்குத் தோன்றும் இயற்கை உண்மை அறிவு இன்பமாகிய திருவடியுணர்வமிழ்தை நுகர்வர். அங்ஙனம் நுகர்ந்தவர் சிவபெருமானது எண்குணச் சித்தியும் எய்துவர். எய்துவர் என்பது அவாய் நிலையான். வந்தது. அறிவழி கள்ளினை உண்டு பின்னும் உண்ணப் பெருவேட்கை கொண்டு உண்டுண்டு உழலும் மோகியர் மூடராவர். மோகம் பெருகிய மதத்தால் அறிவழிந்தவராவர்.

கால்கட்டி - பிராணவாயுவை அடக்கி. போத அமுது - ஞான அமுது. ஆறு மதத்தார் - அறு சமயத்தவர். முதல் தந்திரம் முற்றும்.

## 323. நடுவுநில் லாதிவ் வுலகஞ் சரிந்து

323. நடுவுநில் லாதிவ் வுலகஞ் சரிந்து
கெடுகின்ற தெம்பெரு மானென்ன ஈசன்
நடுவுள அங்கி அகத்திய நீபோய்
முடுகிய வையத்து முன்னிரென் றானே.

பெரும்பூதம் ஐந்தினும் நடுவாக வுள்ளது தீ. அத் தீயின் நடுவுள் அதற்கு ஒளியும் சூடும் ஈந்து விளங்கிக் கொண்டிருப்பவன் சிவபெருமான். அவன் 'அவ்வெரியினை உருவருக்கங்களில்' ஒன்றாகக் கொள்பவன். அதனால் விண்ணவர் ஒருங்கு திரண்டு சிவபெருமான்பாற் சென்று "தீயின் நடுவுள் விளங்கும் ஆண்டவனே! உலகம் தென்பாலுயர்ந்து வடபால் தாழ்ந்து நடுவிழந்து நிற்கின்றது, காத்தருள வேண்டும்," என்று வேண்டினர். சிவபெருமான் அவ் வேண்டுகோளைத் திருச்செவி ஏற்றுத் தக்க அகத்தியனை நோக்கி! அகத்தியனே "படிப்பினாலும் பண்பாட்டினாலும் உண்மை உயர்வைத் தென்னாடு எந்நாளும் எய்தி நிற்கின்றது. அத் தென்பால் நீ சென்று அவற்றை ஆய்ந்து கைக்கொண்டு முன்னுவாயாக" என்று அருளினன்.

இதற்கு வழங்கும் பழங்கதை வருமாறு: முன்னொரு காலத்துத் திருக்கைலாய மலையில் இறவாப் பிறவா நிலைசேர் சிவபெருமானுக்கும் அத்தகைய மலைமகளாரக்கும் திருமணம் நிகழ்ந்தது. அத் திருமணங்கண்டு பேறு பெறுதற்பொருட்டு விண்ணவரும் மண்ணவரும் ஒருங்கு கூடினர். அதனால் நிலவுலகம் தென்பால் உயர்ந்து வடபால் தாழ்ந்து தடுமாறலாயிற்று.

அதுகண்டு விண்ணவர் நடுங்கினர். சிவபெருமான் அவ்விண்ணவரை நோக்கித் தென்பால் என்னை ஒப்பான் ஒருவன் சென்றால் வடபாலுள்ள தாழ்வு தீரும் என்றருளி அகத்தியனை அழைத்துப் போகக் கட்டளையிட்டருளினன். அகத்தியனும் அச் சிவபெருமானைப் பணிந்து வணங்கி எம்பெருமானே! 'தென்பாண்டி நாடே சிவலோகம்' ஆதலின் ஆண்டு வாழ்வார் உண்மையான் உன்னையுணர்த்துவதும், என்றும் உனக்கு உவப்பாயுள்ளதும், இருவழக்கினும்நின்று நிலவுவதும், இனிமையும் சுருக்கமும் தெளிவும் சிறப்பும் இயற்கையும் நயனும் ஒருங்கமைந்ததும் ஆகிய கன்னிச் செந்தமிழ் மொழியின் மன்னியபுலமை என்ப. அவர்களுடன் அளவளாவி உறவு பூண்டு உறைவதற்கு அறந்தவறாத்திறம் அமைந்த அத் தண்டமிழ் மொழியின் அமைதியினை அடியேற்கு அருளுதல் வேண்டுமென விண்ணப்பித்தனர். சிவபெருமானும் முதன்மையும் முன்மையும் நன்மையும் இயல்பாக அமைந்த நற்றமிழ் அமைதியினை அறிவுறுத்தருளி நண்ணுவித்தனன். இவ்வுண்மை வரும் பரஞ்சோதியார் திருவிளையாடற் புராணச் செய்யுளான் உணர்க :

'விடைகொடு போவான் ஒன்றை வேண்டினான் ஏகும் தேயம்
தொடைபெறு தமிழ்நா டென்று சொல்லுப அந்த நாட்டின்
இடைபயில் மனித்த ரெல்லாம் இன்றமிழ் ஆய்ந்து கேள்வி
உடையவ ரென்ப கேட்டார்க் குத்தரம் உரைத்தல் வேண்டும்.'

'சித்தமா சகல வந்தச் செந்தமிழ் இயல்நூல் தன்னை
அத்தனே அருளிச் செய்தி என்றனன் அனையான் தேற
வைத்தனை முதனூல் தன்னை மற்றது தெளிந்த பின்னும்
நித்தனே அடியேன் என்று நின்னடி காண்பன் என்றான்.'

- திருவிளையாடல். கீரனுக்கு - 11, 12.
இப் பழங்கதை பெரியதோர் உண்மையினை நிலைநாட்டும் அரிய உருவகமாம். அது மும்மல காரியமாகிய முப்புர மெரித்தகதை உருவகம் போன்றாகும். திருமணக் காலத்தில் ஒன்று கூடினர் என்றமையால் வடபுலத்தார் ஐம்புலநுகர்வின் பொருட்டு ஒரோவழிச் சிவபெருமானை எண்ணுவது அவர்கள் இயல்பு என்பது புலனாகும். என்னை? திருமணம் ஒருவற்கு இடைவிடாது நிகழ்வது அன்மையான் என்க. மணம் என்பது மனம் பொருந்துவ தென்பதாகும். தென்பால் உயர்தல் என்பது என்றுமுள்ள தென்றமிழ்வாணர் 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும், நன்றே நினைமின்' என்னும் செந்தமிழ்த் திருமுறைநெறி வழுவாது ஒழுகும் செறிவினர். பிறவாயாக்கைப் பெரியோனாகிய சிவபெருமானையே முழுமுதற் கடவுளாகக் கொண்டு கனவினும் நனவினும் வழுவாது வழிபடுவோர். சிவமணி திருவெண்ணீறு திருவைந்தெழுத்து மூன்றினையும் முறையே உடை உடல் உயிராகப் பூண்டு ஒழுகுபவர். சிவபெருமானுக்குத் தம்மை முழுதும் ஒப்புவித்தவர். அதற்குத் துணையாகிய செந்தமிழ்த் திருமறை திருமுறையாகிய வேதாகமங்களை ஓதுபவர் 'எம்பெம்மாற்கு அற்றிலாதவரைக் கண்டால் அம்மநாம் அஞ்சுமாறே' என்று அஞ்சுபவர். இருள்முனைப்பு அற்றவர். அருள்முனைப்பு உற்றவர். பிறப்பற்றவர். சிறப்புற்றவர். பெருமையால் தம்மை ஒப்பவர். அனைத்துயிரையும் சிவத்தொடர்பால் பேணுதலால் சிவனைப் பெற்றவர். ஒருமை என்று சொல்லப்படும் சிவனினைவால் உலகை வென்றவர். வரும் பிறப்பற்றவர். அருமையாம் நிலையில் நிற்பவர். அன்பினால் இன்பமார்பவர். இம்மை உம்மையாகிய இருமையும் கடந்தவர். இவர்கள் உறையும் தென்திசை

'மாதவஞ் செய் தென்திசை' என்று சிறப்பித்துச் சொல்லப்படும். எங்கணும் சிவபெருமான் முதன்மைத் திருக்கோவிலே காணப்படும். அவனையே முழுமுதலாக உணர்த்தும் செந்தமிழ்த் திருமறை ஓதுதலே எங்கணும் காதில் விழுவதும் தீமையைக் காதுவதுமாகும். இன்னும் பல நலங்களும் உடையது தென்னாடு. அதனாலேயே 'தென்னாடுடைய சிவனே போற்றி' என்னும் செந்தமிழ் மறை முடிவும் எழுவதாயிற்று. அதனையடுத்து 'எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' என எழுந்தது அஃது அச் சிவபெருமானே எல்லா நாட்டவர்க்கும் இறைவன் என்னும் மாறா இயற்கை உண்மையை உணர்த்துகின்றது. 'சிவன்' என்பது இயற்கை உண்மை வண்மை இன்பச் சிறப்பு நிலையாகும். இறை என்பது அறமுறை செய்யும் சார்புப் பொது நிலையாகும். இதனால் தென்தமிழ்ச் சிவனெறியாளர் எல்லாவுலகினரையும் புறக்கணிக்காது சிறப்புச் செய்து இணைத்து ஒற்றுமை கொள்ளும் வெற்றியினர் என்பதும்

புலனாகும். இத்தகைய பண்பாட்டினர் வாழ்கின்றமையால் தென்திசை உயர்ந்தது என ஓதப்பட்டது. சிவபெருமானை அகத்தியர் ஒப்பார் என்பது, சிவனை நினைவுறுத்தும் திருவைந்தெழுத்து திருவெண்ணீறு சிவமணி என்னும் மூன்றினையும் முறையே உயிர் உடல் உடை எனக் கொண்டு ஒழுகுவதாலும், அவனையே முழுமுதலாகக் கொண்டு வழிபடுவதாலும், அனைத்துயிர்கள் மாட்டும் அன்புபூண்டு ஒழுகுவதாலும் பெறப்படும். இஃது இடத்துநிகழ் பொருளின் தொழில் இடத்தின் மேல் நிற்ப தொருமுறை. ஐந்தெழுத் தேயுயிர்வெண் ணீறுடலாம் ஆர்ந்தவுடை, முந்து சிவமணியாம்முன்.

வடபுலம் இவற்றிற்கு முற்றும் நேர்மாறானது. அவர்கள்

மேற்கொள்ளும் அருமறை பல கடவுள் உண்மை கூறுவது; சாதிமத வேறுபாடு சாதிப்பது. கொலைபுலை வேள்வியை நிலைநிறுத்துவது. செத்துப் பிறக்கும் தெய்வத்திற்கு முதன்மை கொடுப்பது. சிவனை மறப்பது. ஒரோ வழி மறப்பது. வேற்றுமை போற்றுவது. இவை போன்ற பல தீய ஒழுக்கங்களால் பண்பாடற்றது. பண்பாட்டில் தாழ்ந்ததனையே மக்கட்பழுவால் தாழ்ந்தது என்று மறைத்து ஓதப் பெற்றது. இதுவும் இடத்து நிகழ் பொருளின் தொழில் இடத்தின் மேல் நின்றது. தீப் பண்பினரே நிலம் பொறுக்கலாற்றாப் பழுவினராவர். இஃது 'அறனோக்கி ஆற்றங்கொல் வையம் புறனோக்கிப், புன்சொ லுரைப்பான் பொறை' என்னும் நாயனாரருளிய செந்தமிழ்ப் பொதுமறையான் உணர்க. அவ்வடபுலத்தாரை உயர்த்துதற் பொருட்டுச் செந்தமிழ்ப் பண்பாட்டினைக் கற்று ஒழுகி ஒழுகுவிக்கும் ஆற்றல் வாய்ந்த அகத்தியனாரைத் தென் திசைக்கு வரவிடுத்தனர். அவர் தென்பால். வந்து பண்பாட்டுடன் செந்தமிழைக் கற்றுத் திருவைந்தெழுத்தை ஓதிச் சிவவழிபாட்டை முற்றுறச் செய்து என்றுமுள தென்றமிழ் இயம்பி இசை கொண்டு வாழ்ந்தனர். தென்தமிழ்ப் பண்பாட்டினை. வடபால் பரப்பத் தம்முடைக் கேண்மையராம் திருமூலர் பரஞ்சோதியார் முதலிய தமிழ்ச் சான்றோரை விடுத்தனர். அவர்கள் வந்து வடபால் பரப்பினர். அதனாலேயே தமிழாகமங்கள் வடவெழுத்தால் பொறிக்கப்பட்டன என்னும் உண்மை நடுநின்று உய்த்துணர்வார்க்கு நன்கு விளங்கும். மேலும் அத்தொடர்பால் வடபாலுள்ள தென்தமிழ்ச் சான்றோர் தென்பால் பொதியமலை வந்து மீள்வதும் செய்கின்றனர். பண் பாடனைத்தும் ஏட்டுப்படிப்பால் எய்துவதில்லை; வீட்டுப் பழக்கத்தாலேயே எய்துவதாகும். வீட்டுப் பழக்கத்தால்

மேவும் பண்பாடதூஉம், ஏட்டுப் பழக்கத்தெய்தாது என நினைவு கொள்ளுங்கள் இதுகாறுங் கூறியவற்றை வரும் வெண்பாக்களால் நினைவு கூரத் தருகின்றாம்:

செந்தமிழின் மெய்யுணர்வு சேரா வடபுலத்தார்
தந்தமணப் பந்தர்க்கண் தாம்தாழ்ந்தார் - செந்தமிழைக்
கற்றுத் துலையொக்கக் கண்ணுதலோன் போக்குவித்தான்
தெற்ற அகத்தியனைத் தெற்கு.

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் எனநவில்வார்-என்றும்
வடவர்பா லில்லை மறையில்லை நூலோர்
கடன்மாந்தர் வேந்தறிவர் இல்

தென்னா டுடைய சிவனார் அகத்தியரைத்
தென்னாட்டுப் போக்கித் தெளிதமிழைப் - பன்னுவித்து
மெய்கண்டார் தம்மால் விரித்தார் வடபுலத்தம்
மெய்கண்டார் மீள்வர்தென் பால்.

## 324. அங்கி உதயம் வளர்க்கும் அகத்தியன்

324. அங்கி உதயம் வளர்க்கும் அகத்தியன்
அங்கி உதயஞ்செய் மேல்பா லவனொடு
மங்கி உதயஞ்செய் வடபால் தவமுனி
எங்கும் வளங்கொள் இலங்கொளி தானே.

நாள்தொறும் சிவபூசைக்கு உறுப்பாகிய அகம் புறத்தீகளைத் தவறாது திருவைந்தெழுத்தாகிய சிறந்த செந்தமிழ் மந்திரம் ஓதி நாடு வளம்பெற வளர்ப்பவன் அகத்தியன். உள்ளொளியாய்ப் பேரொளியாய் அறிவொளியாய் இயற்கை ஒளியாய் விளங்கிக் கொண்டிருக்கும் சிவபெருமான் வடபாலுள்ள திருவெள்ளி மலையில் அங்கியாய் வீற்றிருந்தருள்கின்றனர். அங்கு அவனை வழிபட்டுக்கொண்டு இருந்தவன் அகத்தியன். அவன் சிவபெருமான் திருவாணைப்படி தென்றல் தவழும் மேல்பால் மலை என்று சொல்லப்படும் மேற்குத் தொடர்ச்சி மலையில் தென்பால் விளங்கும் பொதியிலின்கண் வந்து உறைந்தனன். அவனொடும் எல்லா இடங்களிலும் வளங்கொழிக்க அருள்புரிவது சிவவேள்வியில் தோன்றும் இலங்கொளி என்க. மங்கி :மயங்கி - கலந்து.

அங்கி உதயம்செய் - சிவ பூசையில் உதயத்தில் அக்கினி காரியம் செய்கின்ற.

## 325. கருத்துறை அந்தகன் தன்போல் அசுரன்

325. கருத்துறை அந்தகன் தன்போல் அசுரன்
வரத்தின் உலகத் துயிர்களை யெல்லாம்
வருத்தஞ்செய் தானென்று வானவர் வேண்டக்
குருத்துயர் சூலங்கைக் கொண்டுகொன் றானே.

கூற்றுவனை ஒத்துக் கொடுமையே நிறைந்த கருத்துடைய அந்தகப் பெயர் சேர் அசுரன் சிவபெருமான்பால் பெற்ற வரப்பேற்றால் உலகத்துயிர்களை எல்லாம் வருத்துவானாயினன். நற்பண்பென்று சொல்லப்படும் வானவர் அக் கொடுமை பொறுக்கலாற்றாது இறைவன்பால் முறையிட்டு வேண்டினர். சிவபெருமானும் வெண்மையும் கூர்மையுமிக்க முத்தலை வேலாம் சூலங் கைக்கொண்டு கருத்தால் அடக்குதலாகிய கொலைத் தொழிலைச் செய்தருளினன்.

அந்தகன் - அந்தகாசுரன். குருத்து - கூர்மை.

## 326. கொலையிற் பிழைத்த பிரசா பதியைத்

326. கொலையிற் பிழைத்த பிரசா பதியைத்
தலையைத் தடிந்திட்டுத் தானங்கி யிட்டு
நிலையுல குக்கிவன் வேண்டுமென் றெண்ணித்
தலையை யரிந்திட்டுச் சந்திசெய் தானே.

நான்முகன் மகனாகிய தக்கன் என்னும் வானவன் சிவனைப் புறக்கணித்துச் செத்துப் பிறக்கும் திருமாலுக்கு முதன்மை ஈந்து வேள்வி செய்தனன். முதன்மையை மறுத்தலாகிய கொலைக்குற்றம் செய்த பிரசாபதியாகிய தக்கனைச் சிவனடியார்கள் சினந்தனர். அச் சினம் வாயிலாகச் சிவபெருமான் மற ஆற்றலால் அவன் தலையினைத் தடிந்தருளினன். அத் தலையினை அவன் வளர்த்த தீயினில் இட்டருளினன். பின்பு ஏனையாரும் இங்ஙனம் மருளாதிருத்தற் பொருட்டும், வேள்வியிற் கொல்லப்படும் விலங்கினங்களாக வேள்வி செய்வோர் பிறந்து கொல்லப்படுவர் என்பதை அறிவுறுத்தும் பொருட்டும் அத் தக்கன் உடலில் ஆட்டுத் தலையினைப் பொருத்தியருளினன்.

பிரசாபதி - தக்கன். சந்தி செய்தான் - பொறுக்கிறான்.

## 327. எங்கும் பரந்தும் இருநிலந் தாங்கியுந்

327. எங்கும் பரந்தும் இருநிலந் தாங்கியுந்
தங்கும் படித்தவன் தாளுணர் தேவர்கள்
பொங்கும் சினத்துள் அயன்தலை முன்னற
அங்(கு)அச் சுதனை உதிரங்கொண் டானே.

சிவபெருமான் திருவடி எங்கும் நிறைந்து பெரிய உலகங்களையும் நிலைபெறச் செய்தலாகிய தாங்குதலைச் செய்து நீக்கமற நிற்குந் தன்மைத்து. அதனையுணரும் சிவவுலகத் தேவர்கள் நான்முகன் கல்விச் செருக்கினைக் கண்டு சினங் கொண்டனர். அவர்தம் சினத்துக்கு உள்ளாகிய அயன் தலையை வைரவக் கடவுளால் அறுப்பித்தனன் சிவன் அதுபோல் செல்வச் செருக்குக் கொண்ட அயன் தந்தையாகிய அச்சுதன் எனப்படும் அரியின் குருதியினை அத்தலையில் ஏற்கச் செய்தனன்.

## 328. எங்கும் கலந்துமென் உள்ளத் தெழுகின்ற

328. எங்கும் கலந்துமென் உள்ளத் தெழுகின்ற
அங்க முதல்வன் அருமறை யோதிபாற்
பொங்குஞ் சலந்தரன் போர்செய்ய நீர்மையின்
அங்கு விரற்குறித் தாழிசெய் தானே.

சிவபெருமான் எல்லா இடங்களினும் எல்லா உயிர்களினும் கலப்பால் ஒன்றாய்க் கலந்தும் இருக்கின்றனன். என் உள்ளத்திலும் எழுந்தருளி யிருக்கின்றனன். அவன் அறுசமயங்களாகிய அங்கங்கட்கு முதல்வனாவன். நான்கு மறைகளை ஓதியருளிய நாதனாவன்.
அவன் முதன்மையை யுணராது வஞ்சனையே உருவாகிய சலந்தரன், அவனுடன் போர்க்கு வந்தனன். சிவபெருமான் எல்லாத் தொழில்களையும் கருவியின்றிக் கருத்தளவானே செய்வன். ஆதலால் சலந்தரன் உடல் தடிதற் பொருட்டு நிலத்தே திருவடி விரலால் ஆழியமைத்தனன். அவ் வாழியே சலந்தரன் உடலைத் தடிந்ததென்க. தடிதல் - கொல்லுதல். ஆழி - சக்கரப்படை.
(அவ்வாழிப்படையினையே திருமால் கண்ணிடந்து வழிபட்டுப் பெற்றனன் என்ப.)

# 329. அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்

329. அப்பணி செஞ்சடை ஆதி புராதனன்
முப்புரஞ் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புர மாவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யாரறி வாரே.

சலந்தாங்கு செஞ்சடையினையும், ஆதியாகிய அன்னையையும் உடைய முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம் பொருளாகிய தொல்லோன் சிவபெருமான். ஆருயிர் உய்தற் பொருட்டு அவ்வவ் வுயிர்களைச் சார்ந்த மும்மல காரியங்களை அவ் வுயிர்களால் செவ்வியுறச் செய்து அச் சிவபெருமான் திருவருள் நோக்கத்தால் சுட்டெரித்தருள்வன். இவ் வுண்மையினை எளியவர்கட்கு உணர்த்தும் பொருட்டு உருவகக் கதையாக உயர்ந்தோர் அமைத்து உருவகமெனவே கூறியுணர்த்தினர். பின்னுள்ளோர் அவ் வுண்மையினை மறந்து கதையை மெய்யாக்கிவிட்டனர். அத்தகையோர் அறியாமைக்கு இரங்கித் திருமூல நாயனார் அவர்களை மூடர்கள் எனக் கூறுகின்றனர். கூறி 'முப்புரமாவது மும்மல காரியம்' எனவும் ஓதுகின்றனர். அதனை மறுப்பாரை நோக்கிப் பின்னும் இரங்கி, 'அப்புரம் எரித்தமை யாரறிவாரே' என வினவுகின்றனர். ஏகாரம் எதிர்மறையாதலின் ஒருவரும் அறியாரென்பது பொருள். முப்புரம் - மூன்று கோட்டை அவை, இரும்பு வெள்ளி பொன்னாலாயவை. இவற்றின் நடுவுள்ளிருப்பது உயிர். அஃது அன்பறிவு ஆற்றல்களாகிய முப்பண்புகளோடு கூடியது. அம்முப்பண்புகளே உய்ந்த

மூவர் என்று குறிப்பிடப்பட்டுள்ளன; ஏனை மடிந்தவர்கள் அனைவர்களும் தீய பண்புகளாகும். இரும்பு என்பது ஆணவ காரியத்தையும், வெள்ளி என்பது மாயா காரியத்தை◌தையும், பொன் என்பது வினையின் காரியத்தையும் குறிப்பனவாம். இவையே உண்மை. இது போன்று ஏனையவற்றையும் உருவகப் பண்புகளாகக் கொள்ளுவதே ஏற்புடைத்து. அன்பு அறிவு ஆற்றல்களாகிய முப்பண்புகளுள் அன்பு பின்னின்று குடமுழா முழக்குதற்கும், அறிவு முன்னின்று வலப்பக்கங் காவற்கும், ஆற்றல் இடப்பக்கங் காவற்கும் இயைபுடைத்தா மென்க.

## 330. முத்தீக் கொளுவி முழங்கெரி வேள்வியுள்

330. முத்தீக் கொளுவி முழங்கெரி வேள்வியுள்
அத்தி யுரியர னாவ தறிகிலர்
சத்தி கருதிய தாம்பல தேவரும்
அத்தீயின் உள்ளெழுந் தன்று கொலையே.

காட்டுத் தீ வீட்டுத் தீ ஏட்டுத் தீ என்று சொல்லப்படும் ஆகவனீயம், காருகபத்தியம், தென்திசை அங்கியாகிய முத்தீயினையும் எழுப்பி வடபால் முனிவர்கள் தீ வேள்வி ஒன்று புரிந்தனர். அதன்கண் நின்று அவர்தம் செருக்குருவாம் யானை ஒன்று வந்தது, யானை என்பது யான் + ஐ எனப் பிரிந்து யானே தலைவன் என்று பொருள் தரும் ஐ - தலைவன். அத்தி - யானை. அந்த யானையைச் சிவபெருமான் உமையம்மையார் நடுங்க நகத்தால் உரித்துப் போர்த்தனர். இவ்வியானையின் அழிவு முன் ஓதிய தக்கன் வேள்வியில் வேள்வி உணவால் உடலுரம் "உண்டாமென வந்து புகுந்த தேவர்கள் பலரும் அழிந்தமையை ஒக்கும். உமையம்மையார் அஞ்சுவது செருக்குறும் உயிர்கள் துன்பப்படுகின்றதனை நோக்கியே அன்றித் தன்னை நோக்க அன்றென்க. முத்தீயினையும் முறையே கல்வி கற்பு கடவுட்காதல் எனவும் கூறலாம்.

முத்தீ. . .வேள்வி - நேமி வனத்தார் செய்த யாகம். நேமி வனத்தார் - ஆரியர்.

## 331. மூலத் துவாரத்து மூளும் ஒருவனை

331. மூலத் துவாரத்து மூளும் ஒருவனை
மேலைத் துவாரத்து மேலுற நோக்கிமுற்
காலுற்றுக் காலனைக் காய்ந் தங்கி யோகமாய்
ஞாலக் கடவூர் நலமாய் இருந்ததே.

மூலாதாரத்திலுள்ள நடுநாடி வழியாக உயிர்ப்பினை ஏற்றி மேலைத்துவாரமாகிய உச்சித்துளையிற் செலுத்துதல் அகவழிபாட்டின் அடிப்படை. அதன் பின்னரே புறவழிபாடு நிகழ்தல் வேண்டும். உச்சித் துளையிற் செலுத்தி நோக்கின் திருவருள் வெளியில் ஒப்பில் ஒருவனாம் சிவபெருமான் காட்சி கொடுத்தருள்வன் அங்ஙனம் வழிபட்ட மாணியின் ஆருயிரைக் கொள்ள வந்த காலனை உதைத்துக் காய்ந்தனன் சிவன். அங்கு 'அவனேதானே ஆகிய அந்நெறி, ஏகனாகி' நிற்கும் முறையால் சிவபெருமானாக மாணி நின்றனன். அக் குறிப்பு யோகமாய் என்பதனால் பெறப்படும். அவ்வருளிப்பாட்டினைச் செய்து நலமாய் எழுந்தருளியிருக்கும் திருவூர் கடவூர் என்ப. எவராலும் கடக்கவொண்ணாத காலனைக் கடப்பதற்கு நிலைக்களமான இடமாதலால் அவ்வூர் கடவூர் என்று பெயர் பெற்றது. கூற்றுவனை உதைத்தது, சிவனடியார்பால் அவன் அணுக நினைப்பதும் உய்தியில்லதோர் பெருங்குற்றம் என்பதனை உணர்த்துதற் பொருட்டு என்க.

## 332. இருந்த மனத்தை இசைய இருத்திப்

332. இருந்த மனத்தை இசைய இருத்திப்
பொருந்தி இலிங்க வழியது போக்கித்
திருந்திய காமன் செயலழித் தங்கண்
அருந்தவ யோகங் கொறுக்கை அமர்ந்ததே.

மால்மகனாகிய காமன் சிவபெருமான் அறம் போதிக்குங்கால் காமத்திறம் எழுப்ப உன்னினன். உன்னிவந்து பூங்கணை தொடுத் தனன். சிவபெருமான் நெற்றிக் கண்ணால் அவனை அடக்கினன். எவர்க்கும் காமத்திறம் புறச் சூழ்வால் விளைதல் கூடாது. புறச் சூழ்வால் விளைதல் என்பது வினைக்கு இடையூறாகப் புறப்பொருள்களைக் கண்ட காரணத்தால் மனைநோக்கம் எழுதல் என்பதாம். வினைமுடித்து மனை நோக்குவது அனைவர்க்கும் விழையத்தக்கது. அதற்கிடையே தோன்றும் காம நினைவை அறிவுக் கருத்தால் அகற்றுதல் வேண்டும். அவ்வுண்மையினைச் சிவபெருமான் காமனை உருவிலானாக்கி உணர்த்தியருளினன். நாமெல்லாம் எவ்வாறு காமத்தை அடக்குவதென்பதை ஓதுகின்றனர். எடுத்துக் கொண்ட வினை முடியுங்காறும் அவ்வினைமேல் வைத்த மனத்தை அதன் கண்ணே பொருந்த இருத்துதல் வேண்டும். அங்ஙனம் பொருந்திய உள்ளத்தைக் குறிக்கோளாகிய இலிங்க வழியே செலுத்துதல் வேண்டும். அங்ஙனம் செலுத்தினால் காமன் செயலை அடக்குதல் கூடும். சிவபெருமான் காமனை அடக்கி அருந்தவ யோகத்தமர்ந்தது கொறுக்கைத் திருவூர் என்ப. இறைவன்

செய்தருளிய ஆண்மைச் செயல்கள் எட்டினையும் குறிக்கும் பழம்பாடல் ஒன்று வருமாறு:

பூமன் சிரங்கண்டி அந்தகன் கோவல் புரமதிகை
மாமன் பறியல் சலந்தரன் விற்குடி மாவழுவூர்
காமன் கொறுக்கை யமன்கட வூரிந்தக் காசினியில்
தேமன்னு கொன்றையும் திங்களும் சூடிதன் சேவகமே.

மேலோதிய ஆண்மைச் செயல் எட்டினையும் ஒருபுடையாகக் கருதுங்கால் கீழ்வருமாறு கொள்ளலாம். அந்தகன் : உடலுறாது உயிர் மலத்துடன் மட்டும் ஒட்டியிருக்கும் தொல்புலம்பு. தக்கன்: ஆணவச் செருக்கு; இஃது உடலுடன் கூடிய பின் தோன்றுவது. அயன் அரி: யான் எனது என்னும் செருக்கு. சலந்தரன் : கொடுவினை தக்கன் ஆணவச் செருக்கினையும், அயன் அரி, யான் எனதென்னும் செருக்கினையும், சலந்தரன் கொடுவினையையும் குறிக்கும் குறிப்பாதலால், இவை முறையே ஆணவம் மாயை கன்மக் காரணமாகும். முப்புரம் : மும்மல காரியம். அத்தியாகிய யானை : மயக்கம். காலன் : வெகுளி காமன் : காமம். அவ் வெட்டினையும் நினைவூட்டும் வெண்பா வருமாறு :

தொல்புலம் பந்தகன் சொல்லா ணவம்தக்கன்
மல்யான் எனதயன்மால் வன்மைவினை - வல்ல
சலந்தரனாம் மும்மைபுரம் அத்திகாலம் காமன்
மலம்வெகுளி காமம்எண் வீறு.

மேலும் போர் இருவகைப்படும். அவை புறப்போர் அகப்போர் என்பன. புறப்போர் எதிரியுடன் பன்முறை பொருதுவெல்லல். இது திருவாணை பெற்ற கண்ணன் முதலாயினார் மாட்டுக் காண்க. அகப்போர் எதிர்ப்பும் பொருதலுமின்றி அறியாது வந்த பகைமை அடங்கி ஒடுங்கி அழிவது. அது முழுமுதற் சிவபெருமான்

காட்டியருளிய மேலோதிய 'பதிவலியில் வீரட்டம் எட்டு' என்னும் அருளிப் பட்டால் உணரலாம். புறப்போரை ஆற்றறப் போரென்றும், அகப்போரை அறிவுப் போரென்றும் கூறுப ஆற்றல்புறப் போரெதிர்ப்புண்டாமறிவுட் போரெதிர்ப்பில், ஆற்றுசிவ வீறெட்டகம். எதிர்ப்பிலாப்போரை 'இரும்புமுகம்' என்னும் புறநானூற்று (309)ப் பாட்டானுணர்க சிவனாராற்றியது எதிர்ப்பில் போரென்க. எதிர்ப்புள் போரைக் சிலப்பதிகாரத்து நீர்ப்படைக் காதையுள் வரும் குறிப்பானுணரலாம் :

## 5. "செறிகழல் வேந்தன் தென்றமி ழாற்றல்

5. "செறிகழல் வேந்தன் தென்றமி ழாற்றல்
அறியாது மலைந்த ஆரிய மன்னரைச்
செயிர்த்தொழில் முதியோன் செய்தொழில் பெருக
உயிர்த்தொகையுண்ட வொன்பதிற் றிரட்டியென்று
யாண்டும் மதியும் நாளும் கடிகையும்

# 333. அடிசேர்வன் என்னஎம் ஆதியை நோக்கி

333. அடிசேர்வன் என்னஎம் ஆதியை நோக்கி
முடிசேர் மலைமக னார்மக ளாகித்
திடமார் தவஞ்செய்து தேவர் அறியப்
படியார அர்ச்சித்துப் பத்திசெய் தாளே.

நிலவுலகமே சிவனார் திருவழிபாட்டுக்குச் சிறந்த இடமாகும். ஒரு செய்கையால் உலகுக்குப் பயன் ஏற்படுமானால் அது சிறந்த செய்கையாகும். நிலத்தே திருக்கோவிலில் சிவபூசை செய்தால் செய்வார்க்கும் அப் பூசையினைக் கண்டு வழிபட்டு உய்வார்க்கும் பயன் உண்டாகும். வானுலகத்தும் அவரவர் மனையகத்தும் பூசை செய்தால் பிறர்க்குப் பயன்படுவதில்லை. அதனாலேயே சிவபெருமான் பயனருளும் இடமாக நிலவுலகத்துத் திருக்கோவில்களைக் கொண்டருள்கின்றனன். இதனை 'வானிடத்தவரும் வந்து மண்மேல் அரன்றனை அருச்சிப்பர்' என்று தமிழாகமம் சாற்றுவதாயிற்று. தமிழாகமம் சிவஞான சித்தியார். அம் முறையில் திருவருளம்மை சிவபெருமான் திருவடியைச் செந்தமிழ்த் திருமுறையால் திருவைந்தெழுத்தால் அவன் அருவுருவத் திருமேனியில் வைத்து வழிபட்டுச் சார்வேன் என்று உன்னினள். உன்னி உலகத்திலேயே உயர்ந்த உச்சியினையுடைய வட எல்லையாகிய பனிமலையின் மகளாராய்த் தோன்றினர். தோன்றி அனைத்திற்கும் ஆதிகாரணமாக விருக்கும், எம் சிவனைநோக்கித் தவக்கோலம் பூண்டு மருதவளஞ்சேர் காஞ்சியை

அடைந்து திருவுரு அமைத்து விண்ணவரும் மண்ணவரும் கண்டுய்ய நிரம்ப அருச்சித்து வழிபட்டுக் காதன் முதிர்ச்சியாகிய பத்தியினைச் செய்தனள் என்க.

## 334. திரிகின்ற முப்புரஞ் செற்ற பிரானை

334. திரிகின்ற முப்புரஞ் செற்ற பிரானை
அரியனென் றெண்ணி அயர்வுற வேண்டா
புரிவுடை யாளர்க்குப் பொய்யலன் ஈசன்
பரிவொடு நின்று பரிசறி வானே.

உழன்று கொண்டு வரும் முப்புரங்களைச் செம்மை செய்யும் பொருட்டுச் சிரித்து எரித்தவன் சிவபெருமான். அவனை அணுகு
வதற்கு அருமையானவன் என்று நினைத்து யாரும் மனத்தளர்வு கொள்ளுதல் வேண்டா. பேரன்பாகிய காதல் உடையார்க்கு அவர் வேண்டியவாறு திருவுருக்கொண்டு வந்து அருளுதலில் ஒருஞான்றும் தவறுதலைச் செய்யான். அவனே அழியாச் செல்வநிறை ஆண்டவன். அவன் அன்புடன் உயிர்க்கு உயிராய் நின்று வேண்டுவன அறிந்து ஆங்காங்கு அவ்வப்பொழுதே அருள் செய்கின்றனன் திரிபுரம் - உடல்.

## 335. ஆழி வலங்கொண் டயன்மால் இருவரும்

335. ஆழி வலங்கொண் டயன்மால் இருவரும்
ஊழி வலஞ்செய்ய ஒண்சுட ராதியும்
ஆழி கொடுத்தனன் அச்சுதற் கவ்வழி
வாழி பிரமற்கும் வாள்கொடுத் தானே.

அறிவுப்பேரொளியாய் ஒளிக்குள் ஒளியாய் நின்றருளும் ஆதியாகிய சிவபெருமானை எல்லை காண வொண்ணாத கடல் போன்ற வெற்றியினையுடைய அயன் மால் ஆகிய. இருவரும் நெடுங்காலம் வலம் வந்து வழிபாடு செய்தனர். அச் சிவபெருமானும் அவ் வழிபாட்டை ஏற்றருளி அச்சுதனாகிய திருமாலுக்கு ஆழிப்படை அருளினன். ஆழி - சக்கரம். அது போல் பிரமனாகிய நான்முகனுக்கும் வாள் கொடுத்தருளினன் ஆழி ஆற்றற்கருவியாகவும் வாள் அறிவுக் கருவியாகவும் கொள்க.

## 336. தாங்கி இருபது தோளுந் தடவரை

336. தாங்கி இருபது தோளுந் தடவரை
ஓங்க எடுத்தவன் ஒப்பில் பெருவலி
ஆங்கு நெரித்தம ராவென் றழைத்தபின்
நீங்கா அருள்செய்தான் நின்மலன் தானே.

இயற்கைத் திருவெள்ளி மலைக்கண் செயற்கைக் கைலாய மலையை இருபது தோளுடைய இலங்கையர் வேந்தன் தாங்கி எடுக்கலுற்றனன். சிவபெருமான் விரல் நுதியால் சிறிது அழுத்தினன் அதனால் இராவணன் நைந்து குருதி கொப்புளிக்கப் பெரிதும் வருந்தினன். அவன் தன் கைந்நரம்பெடுத்து யாழமைத்துத் திருவைந்தெழுத்தை யோதிக் கீதம்பாடி வழிபட்டனன். அவ் வழிபாட்டிற்கு மகிழ்ந்து சிவபெருமான் அவனுக்கு நாளும் வாளும் கொடுத்தருளினன். அமரா - ஈறிலா இறையே.

## 337. உறுவ(து) அறிதண்டி ஒண்மணற் கூட்டி

337. உறுவ(து) அறிதண்டி ஒண்மணற் கூட்டி
அறுவகை ஆன்ஐந்தும் ஆட்டத்தன் தாதை
செறுவகை செய்து சிதைப்ப முனிந்து
மறுமழு வால்வெட்டி மாலைபெற் றானே

திருவருளால் மிக்கதும் தக்கதுமாகிய சிவபூசையினைத் தண்டேசுரர் முன் தொடர்பால் அறிந்தனர். மண்ணியாற்றிடைக் குறையை நண்ணினர். 'தழைத்ததோர் ஆத்தியின்கீழ் தாபரம் மணலாற் கூப்பினர்.' பிறப்பறும்வகை அங்கே ஆவினை அழைத்து ஐந்தும் நிரம்பிய பாலினைக் கறந்து சிவபெருமானுக்கு ஆட்டி, திருவைந்தெழுத்தோதி நற்றவமாகிய வழிபாட்டினைப் புரிந்தனர். அவர்தம் உடற்றந்தையாகிய எச்சதத்தன் தீ வேள்வியினைப் பெரிதென்று எண்ணும் எண்ணத்தன். அதனால் சினங்கொண்டு பகைத்துச் சிவ வழிபாட்டினைச் சிதைத்தனன். சிவனருளால் மாடு மேய்க்கும் கோல் மழுவாக மாறியது. அதனைக் கொண்டு தந்தையின் தாளைத் தந்தை செய்த திருவடிப்பாவம் அறும்படி வெட்டினர். சிவபெருமான் அவர்க்குத் தொண்டர் தலைமையும் மாலையும் கொடுத்து ஆட்கொண்டருளினன். மறுமழு: மாறுமழு: கோல் மழுவாக மாறியது; மாறு என்பது மறு எனச் செய்யுளால் குறுகி நின்றது.

உறுவது - சிவபூசையால் வருவது அறுவகை - பிறப்பு அறும்படி.செறுவகை - பகைமை.

# 338. ஓழிவந் தெல்லாம் ஒருங்கிய தேவர்கள்

338. ஓழிவந் தெல்லாம் ஒருங்கிய தேவர்கள்
வாடி முகமும் வருத்தத்துத் தாஞ்சென்று
நாடி இறைவா நமஎன்று கும்பிட
ஈடில் புகழோன் எழுகவென் றானே.

(ப. இ.) வெவ்வெறு காலங்களில் நஞ்சு முதலிய வெவ்வேறு துன்பங்கள் மால் முதலிய விண்ணவர்களுக்கு நேர்ந்தன. அவர்கள் அப்பொறுக்கலாற்றாத் துன்பத்தால் உயிருக்கு அஞ்சி வருந்தினர். காக்கும் முழுமுதலாம் சிவபெருமானிடம் ஒருங்கு கூடி வந்து ஓலமென்று மொழிந்து முறையிட்டனர். அத் தேவர்களது முகவாட்டங் கண்டு சிவபெருமான் இரங்கினன். ஒப்பில்லாத புகழையுடைய அவன் எழுக என்று அருளினன். அத் தேவர்கள் மீண்டும் இறைவாநம என்று கும்பிட்டனர். இத் தலைப்பின் கீழ் முறையே அம்மை, அன்பர், அயன்மால், இராவணன், தண்டேசுரர், அமரர்கள் ஆகிய அறுவரும் சிவபெருமானை வழிபடும் தவத்தால் நற்பேறு பெற்றனர். ஒருபுடையொப்பாக மேலோதிய அறுவர் நிகழ்ச்சியாலும் இறைவன்தன் ஆறு குணங்களையும் நினைவு கூர்க. அக்குணங்கள் வருமாறு: மெய்ப்பொருள். ஆண்மை, புகழ், திரு, ஞானம், பற்றறுதி. பற்றறுதி - வைராக்கியம் இக் குறிப்பை வரும் வெண்பாவால் நினைவு கூர்க: இவற்றை ஐசுவரியம், விரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம் எனவும் கூறுப.

மெய்ப்பொருளாம் அம்மை மிளிராண்மை மெய்யன்பர்
வெய்யபுகழ் மாலயன் மேவுதிரு - ஐந்நான்கு

தோளான் சிவஞானம் சண்டேசர் பற்றறுதி
மாளாமற் காக்கவிழை வான்.
வான் - வானவர்.

## 339. தந்தைபி ரான்வெகுண் டான்தக்கன் வேள்வியை

339. தந்தைபி ரான்வெகுண் டான்தக்கன் வேள்வியை
வெந்தழல் ஊடே புறப்பட விண்ணவர்
முந்திய பூசை முடியார் முறைகெட்டுச்
சிந்தினர் அண்ணல் சினஞ்செய்த போதே.

தக்கனின் தந்தையாகிய நான்முகனுக்கும் முதல்வன் சிவபெருமான். தக்கன் பிழைபடச் செய்த புலைவேள்வியினை யுன்னிமனத்திற் கொள்ளும் பொல்லாங்குச் சூடாகிய வெகுளியைச் சிவன் கொண்டனன். அவ் வெகுளி முகத்துத் தோன்றினால் சினம். அது சொல்லாக வெளிப்பட்டால் சீற்றம். செயலானால் செற்றம். மாறா திருந்தால் வன்மம் அண்ணலாகிய சிவபெருமான் சினங்கொண்டபோதே வேள்வித் தீயினைத் சூழவிருந்த விண்ணவர்கள் நடுங்கினர். முந்திய பூசையாகிய தகர் தின்னும் தொழில் முற்றும் முடியாதிருக்கும்போதே ஒருவர் போன இடம் ஒருவர்க்குத் தெரியாமலே ஓட்டெடுத்தனர்.

## 340. சந்தி செயக்கண் டெழுகின் றரிதானும்

340. சந்தி செயக்கண் டெழுகின் றரிதானும்
எந்தை யிவனல்ல யாமே உலகினிற்
பந்தஞ்செய் பாசத்து வீழ்ந்து தவஞ்செய்ய
அந்தமி லானும் அருள்புரிந் தானே.

(ப. இ.) வயனங்கள் மாறா வடுவாகிய தண்டனை பெற்றுத் துன்புறும் விண்ணவருள் தலைமைப் பாடமைந்த அரியாகிய மால் மன்னிப்பு வேண்டுதலாகிய சந்தி செய்வானாயினன். எந்தையாகிய சிவபெருமானே! இத் துன்பத்திற்குக் காரணம் புல்லறிவு படைத்த தக்கன் மட்டுமல்லன். யாங்களும் மலமயக்கால் உலகினில் பிணிப்புண்ணும் பாசத்தில் வீழ்ந்து (துன்புறுவோமாயினம்). எங்களைக் காத்தருள வேண்டுமென்று தவஞ் செய்தனர். என்றும் முடிவிலாது ஒன்றுபோல் நின்று நிலவும் சிவபெருமானும் அத்தவத்திற்கு இரங்கி அருள் புரிந்தனன். வீழ்ந்து - அழுந்தி.

# 341. அப்பரி சேயய னார்பதி வேள்வியுள்

341. அப்பரி சேயய னார்பதி வேள்வியுள்
அப்பரி சேயங்கி அதிசய மாகிலும்
அப்பரி சேயது நீர்மையை யுள்கலந்து
அப்பரி சேசிவன் ஆலிக்கின் றானே.

மேலோதியவாறு அயன் மகனும் தலைமைப்பாடும் உடைய தக்கன் செய்த தீ வேள்வியுள் வியக்கத் தகுந்ததாக விளங்கும் அங்கியாகிய தீயும் வேண்டிக்கொள்ளச் சிவபெருமான் அதனையும் ஏற்றுக் களித்து அருள் செய்தனன்.

## 342. அப்பரி சேஅயன் மால்முதல் தேவர்கள்

342. அப்பரி சேஅயன் மால்முதல் தேவர்கள்
அப்பரி சேயவ ராகிய காரணம்
அப்பரி சங்கி யுளநாளும் உள்ளிட்டு
அப்பரி சாகி அலர்ந்திருந் தானே.

மேலோதியவாறே மால் முதல் தேவர்கள் தனித்தனியே அக் கொலைவேள்விக்கண் வந்த தங்கள் அறியாமையைப் பொறுக்க வேண்டுமென்று மன்றாடிக் கேட்டுக்கொண்டனர். சிவபெருமானும் முகமலர்ந்தேற்று அருள் புரிந்தனன்.

கதுவ - தண்டிக்க.

## 343. அலர்ந்திருந் தானென் றமரர் துதிப்பக்

343. அலர்ந்திருந் தானென் றமரர் துதிப்பக்
குலந்தருங் கீழங்கி கோளுற நோக்கிச்
சிவந்த பரமிது சென்று கதுவ
உவந்த பெருவழி யோடிவந் தானே.

எல்லாப் பொருளோடும் விரவி நின்று இயக்கும் சிவபெருமான் முகமலர்ச்சியுடன் இருந்தருளினன் எனக் கண்டு வானவர் தொழுதனர். தூய்மை முதலிய அனைத்து வகையானும் மேம்பட்டு ஏனையவற்றையும் தூய்மைப்படுத்தும் தன்மையவாகிய உயர்ந்த குலமுடையது தீ. அது புன்மை வாய்ந்த தக்கன் சார்பாய்க் கீழ்மையாகிய குற்றத்தை அடைந்தது. அக் குற்றம் நீங்கும் பொருட்டுச் சிவபெருமான் சினந்து தண்டித்தனன். அத்தகைய சிவபெருமானைத் தீக் கடவுள் மன்னிப்பு வேண்டி அவன் திருவடிபற்றித் தொழுதனன். சிவபெருமான் அதற்கு உவந்தனன். சிவபெருமான் மாட்டு அன்பு வைப்பதே பெருவழி. அவனும் அப் பெருவழி வாயிலாக விரைந்தோடி வந்து அருள் புரிந்தனன். 'கீழங்கி' என்பதற்கு வேதத்துட் கருமகாண்டத்தின் 'விண்டுபரமன், அங்கி அவமன், அவ்விருவர்க்கும் இடையே எல்லாத் தேவரும்' எனச் சொல்லப்படுவதைக் கூறுதலும் ஒன்று. சிவந்த - சினந்த. பெருவழி - பெருமையுள்ள அன்பின் வழி.

## 344. அரிபிர மன்தக்கன் அருக்க னுடனே

344. அரிபிர மன்தக்கன் அருக்க னுடனே
வருமதி வாலை வன்னிநல் இந்திரன்
சிரமுக நாசி சிறந்தகை தோள்தான்
அரனருள் இன்றி அழிந்தநல் லோரே.

சிவனைப் புறக்கணித்து அவன் திருவருளினை இழந்து தக்கன் புலைவேள்வியில் உழந்தவர் மால், அயன், தக்கன், ஞாயிறு, திங்கள், வாலை, தீ, வானவர்கோன் முதலாயினார் ஆவர். சிவபெருமானிடத்துத் தோன்றிய சினம் தக்கன் வேள்வியினை அழித்தற்கு மிக்க வெவ்வுரு வாய்த் தோன்றிற்று. அவ்வுருவினையே வீரபத்திரக் கடவுள் என்ப. அவர் சென்று வேள்வியிற் கூடிய வானவர்களைத் தனித்தனியே தலை, முகம், மூக்கு, கை, தோள் முதலியவற்றை அறுத்து ஒறுத்தனர். சிவனார் அருளின்றி அவ்வானவர்கள் அனைவர்களும் அழிந்தொழிந்தனர். நல்லோர் என்பது குறிப்புமொழியாக அல்லோர் என்று பொருள்படும்.

வாலை என்பது தக்கன் மனைவியின் பெயர். இனம் பற்றி வேள்விக்கு வந்துள்ள ஏனைத் தேவ மாதரையும் குறிக்கும். வாலை - இளம் பெண். இவ்வொறுத்தல் முறை விளக்கத்தினை ஆளுடைய அடிகளருளிய திருவாசகத் திருவுந்தியாரின்கண் காண்க.

## 345. செவிமந் திரஞ்சொல்லுஞ் செய்தவத் தேவர்

345. செவிமந் திரஞ்சொல்லுஞ் செய்தவத் தேவர்
அவிமந் திரத்தின் அடுக்களை கோலிச்
செவிமந் திரஞ்செய்து தாமுற நோக்குங்
குவிமந் திரங்கொல் கொடியது வாமே.

செவித்தலாகிய உருவேற்றத்தக்க மந்திரத்தைச் சொல்லும் தவப்பேற்றினையுடைய தேவர், வேள்வியில் கொடுக்கும் அவிக்கு இடமாகிய அடுக்களை என்று சொல்லப்படும் குண்டத்தினை அமைத்தனர். வேள்விக்கண் செவிக்கும் வெவ்வேறு மந்திரங்கள் ஐம்புலன்களை விரியச் செய்யும் தன்மைய. அவற்றைவிடக் கணிப்பாரை அகமுகப்படுத்தி புலன்களை ஒடுக்குவித்து உயர்த்து மந்திரம் செந்தமிழ்த் திருவைந்தெழுத்து. அதுபோலாகா புலன்களை விரிவித்து நலன்களை இழப்பித்துப் பொலங்களில் உழப்பித்துத் துன்புறுத்தும் இயல்பு வாய்ந்த வேள்வியில் செவிக்கும் அக் கொடிய மந்திரங்கள். குவிமந்திரம் - மனம் ஒடுங்குதற்கு வாயிலாகிய மந்திரம். செவித்தல் - செபித்தல்.

தவி - தவ்வி; அகப்பை (சிருக்கு, சுருவம்); அவிசொரியும் பாத்திரம்.

# 346. நல்லார் நவகுண்டம் ஒன்பதும் இன்புறப்

346. நல்லார் நவகுண்டம் ஒன்பதும் இன்புறப்
பல்லார் அமரர் பரிந்தருள் செய்கென
வில்லாற் புரத்தை விளங்கெரி கோத்தவன்
பொல்லா அசுரர்கள் பொன்றும் படிக்கே.

நன்மை யமைந்த புதுமைமிக்க வேள்விக் குண்டம் ஒன்பதும் இடையூறின்றி யாங்கள் இயற்றி இன்புற வேண்டும். அதற்கு விடாது இடையூறிழைக்கும் முப்புரத்தாரை அகற்றி எங்களைக் காத்தருள வேண்டு மென்று மாலுள்ளிட்ட வானவர்களனைவரும் சிவபெருமானைத் தொழுது வேண்டினர். சிவபெருமானும் பொன் வில்லினால் அத் திரிபுரத்தைச் சிரித்து எரித்தனர். ஆங்குள்ள பொல்லாப் பண்பினராகிய அசுரர்கள் பொன்றினர். பொல்லாத பண்பனைத்தும் பொன்றப் புரமெரித்தார், நல்லார்க் கருள் செய்ய நாடென்பதே அதன் உள்ளுறையாகும். உள்ளுறை - தாற்பரியம். 'பெரியாரைப் பேணா தொழுகின் பெரியாரால், பேரா இடும்பை தரும், (892) என்னும் நாயனார் திருமறையும் ஈண்டு நினைவு கூர்க.

## 347. தெளிந்தார் கலங்கினும் நீகலங் காதே

347. தெளிந்தார் கலங்கினும் நீகலங் காதே
அளிந்தாங் கடைவதெம் ஆதிப் பிரானை
விளிந்தானத் தக்கன்அவ் வேள்வியை வீயச்
சுளிந்தாங் கருள்செய்த தூய்மொழி யாளே.

உடலும் உளமும் உணர்வும் உயிரும் திருவருளேயாதலின், அனைத்தும் எப்பொழுதும் தூய்மையேயாம். அத்தகைய உமையம்மையார் அருண்மொழி என்றும் தூய்மையும் வாய்மையும் நன்மையும் அமைந்ததாகும். அத்துணைச் சிறப்பு வாய்ந்த திருமொழியினையுடைய அம்மையே! நின்னால் தெளிவுபெற்று நின்னையடைந்த தெளிவினர் பயிற்சி வயத்தால் கலங்குவர். அதன் பொருட்டு நீயும் கலங்கற்க. ஆணவச் செருக்கால் தக்கன் செய்த புலைவேள்வியினைச் சினந்து அழித்து அவனையும் கொன்றனன் சிவன். அத்தகைய எம் ஆதிப்பிரானை ஆருயிர் அடைவதற்கு வழி கனிந்த அன்பேயாகும்.

அளிந்து - குழைந்து, சுளிந்தாங்கு - கோபித்து. தூய் மொழியாள் : உமை.

## 348. கருவரை மூடிக் கலந்தெழும் வெள்ளத்து

348. கருவரை மூடிக் கலந்தெழும் வெள்ளத்து
இருவருங் கோவென் றிகல இறைவன்
ஒருவனும் நீருற ஓங்கொளி யாகி
அருவரை யாய்நின் றருள்புரிந் தானே.

நீருழிக் காலத்துத் திருவாணையால் கடல் பொங்கிப் பெரிய மலையையும் மூடி எங்கணும் ஒரே வெள்ளமாய்ப் பெருகிற்று. அதனைக்கண்டு அயனும் அரியும் ஆகிய பெருந்தேவர் இருவரும் எனைச் சிறுதேவரோடொப்பக் கோவென்றலறினர். ஒப்பில்லாத சிவபெருமான் ஒருவனுமே அந் நீரின்மேல் பேரொளிப் பிழம்பாய்த் தோன்றினன். அளத்தற்கரிய பெரிய மலைபோல் நின்றனன். அவ் விருவரையும் நோக்கி அஞ்சற்க என்று அருள் செய்தனன். நீர் திருவருள் அம்மையைக் குறிப்பதாகும். தீ பெரும்பொருட் சிவபெருமானைக் குறிப்பதாகும். அம்முறையில் சிவபெருமான் திருவருளம்மையினையே திரு உடலாகக் கொண்டருளுகின்றனன். அதனால் 'சிவபெருமான் நீருற ஓங்கொளியாகி நின்றனன்' என்று ஓதினர்.

இருவர் - அயன், மால்.

## 349. அலைகடல் ஊடறுத் தண்டத்து வானோர்

349. அலைகடல் ஊடறுத் தண்டத்து வானோர்
தலைவன் எனும்பெயர் தான்றலை மேற்கொண்டு
உலகார் அழற்கண் டுள்வீழா தோடி
அலைவாயில் வீழாமல் அஞ்சலென் றானே.

ஊழியாகிய அலைகடலின் நடுவாக ஊடறுத்துத் சென்று அண்ட முதல்வன் தானே என்பதனை மேற்கொண்டுணர்த்தினன். உலகெங்கணும் நிறைந்து விளங்கும் தழற் பிழம்பினைக் கண்டு ஓடும் ஏனையாரை அக் கடலின் நடுவுள் நின்று வீழ்ந்து மாளாமல் அஞ்சல் என்று அருள் செய்தனன். அவன் யார் என்னில்? அவனே விழுமிய முழுமுதற் சிவபெருமான் என்க.

## 350. தண்கடல் விட்ட தமரருந் தேவரும்

350. தண்கடல் விட்ட தமரருந் தேவரும்
எண்கடல் சூழெம் பிரானென் றிறைஞ்சுவர்
விண்கடல் செய்தவர் மேலெழுந் தப்புறங்
கண்கடல் செய்யும் கருத்தறி யாரே.

சிவபெருமானின் திருவாணையால் விண்ணளவும் நண்ணி எல்லாரையும் அச்சுறுத்திய பெரு வெள்ளமாகிய குளிர்ந்த கடலும் அடங்கிற்று. வானவர்களாகிய அமரரும் தேவரும் அளவில்லாத கடல் போலும் அன்பர்தம் காதல் எண்ணங்களால் சூழப்பட்ட இன்பவடிவினனாகிய எம்பெருமானே என்று இறைஞ்சுவாராயினர். கடலின் பெருக்கினை விண்ணளவும் வரச் செய்த சிவபெருமான் அதன்மேல் பேரொளியாய் எழுந்தருளினன். அவன் ஆருயிர்கட்குத் திருவடியுணர்வாகிய சிவஞானத்தை அருள்புரிந்தனன். இத்தகைய அவன் திருவுள்ளத்தை யாரும் அறியார். கண்கடல் - கடல்போன்ற சிவஞானம். கருத்து - திருவுள்ளம்.

எண்கடல் - கடல்போன்ற எண்ணங்கள். விண்கடல் - விண்ணை எட்டும்படியான வெள்ளப் பெருக்கு. கண்கடல் - பெரிதாகிய ஞானக்கண்.

## 351. சமைக்கவல் லானைச் சயம்புவென் றேத்தி

351. சமைக்கவல் லானைச் சயம்புவென் றேத்தி
அமைக்கவல் லாரிவ் வுலகத்து ளாரே
திகைத்ததெண் ணீரிற் கடலொலி ஓசை
மிகைக்கொள அங்கி மிகாமைவைத் தானே.

எல்லாவற்றையும் திருவுள்ளத்தான் சமைக்கவல்லவன் சிவபெருமானே. அவனைத் தானே தன்னருளால் தோன்றியருளும் தனி முதலாகிய சயம்பு என்பர். சயம்பு - தான்தோன்றி. அச் சிவபெருமானை முன்னை நற்றவத்தாலன்றித் தனி முதலென்றேத்தித் தம் நெஞ்சத் தாமரையில் அமைக்கவல்லார் வேறு யாருளர். அனைவரும் கலக்கமெய்தி அஞ்சி ஓடும்படி ஊழிக்காலத்து மிக்கெழும் ஓவா தொலிக்கும் ஓசையோடு கூடிய கடலை ஏனைக் காலத்து மிக்கு எழாதிருக்கும்படி அக் கடலின் நடுவாக வடவைத் தீயைச் சிவபெருமான் அமைத்தருளினன். வடவைத்தீ - பெருந்தீ. வடம் - பெரிது. 'ஆழாழி கரையின்றி நிற்க இலையோ' என்பதும் திருவாணையின் சிறப்பேயாகும். 'நீரே அருளாகும் நீருள் ஒடுங்குந்தீச் சீரே சிவபெருமான் தேருங்கால் பாரேயும், ஆவிகளைக் காக்க அடங்குந்தீ ஆணையினால், மேவுமேல் போக்க விரைந்து.' என்பதனை நினைவு கூர்க.

சமைக்க வல்லான் - ஆக்கி அளித்துத் துடைக்கவல்லான். அமைக்கவல்லார் - மனத்தில் இருத்தித் துதிக்கவல்லார்.

## 352. பண்பழி செய்வழி பாடுசென் றப்புறங்

352. பண்பழி செய்வழி பாடுசென் றப்புறங்
கண்பழி யாத கமலத் திருக்கின்ற
நண்பழி யாளனை நாடிச்சென் றச்சிரம்
விண்பழி யாத விருத்திகொண் டானே.

வானவர்கள் தாம்வாழ வாழ்த்தும் பண்பினர். அதனால் அவர்கள் செய்யும் வழிபாடு ஆசைவழிபாடாகும்; அன்புவழிபாடாகாது. ஆதலால் நற்பண்பை அகற்றிய வழிபாடு என்று ஓதப்பட்டது. அத்தகைய வழிபாட்டைச் செய்து கண்ணுக்கு ஒப்பாகப் புகழ்ந்து கூறப்படும் செந்தாமரையில் இருக்கும் நான்முகன் உடனொத்த மாலுடன் நண்பு கொள்ளாது செருக்கால் நண்பைக் கெடுத்தவனுமாகின்றனன். இருவரும் திருவாணையின்வழிப் படைத்தல் காத்தல்களை முறையே செய்யும் பண்பினர். அதனால் உடனொத்தவராவர். அங்ஙனம் செருக்குக் கொண்ட நான்முகன் தலை ஒன்று அறுக்கப்பட்டது. தலையறுப்ப தென்பது தலைமை யறுப்பதென்பதாகும். அத் தலைமண்டையில் ஏனை விண்ணோரும் செருக்குற்று மாளாது பண்புற்று வாழும் வண்ணம் அவர்தம் குருதிப் பலியினை ஏற்றனன் சிவன்.

பண்பழிசெய் வழிபாடு - தகுதி அற்ற வணக்கம். நண்பழியாளன் - அயன். விருத்தி - ஐயம்.

## 353. மால்போ தகனென்னும் வண்மைக்கிங் காங்காரங்

353. மால்போ தகனென்னும் வண்மைக்கிங் காங்காரங்
கால்போதங் கையினோ டந்தரச் சக்கர
மேல்போக வெள்ளி மலைஅம ராபதி
பார்போக மேழும் படைத்துடை யானே

தூமாயையின்கண் வாழும் முக்குணம் கடந்த அரியும் அயனும் வேறாவர். மூலப்பகுதியிலுறையும் முக்குணம் அடர்ந்த அரியும் அயனும் வேறாவர். அரி அயனை முறையே மால் அயன் எனவுங் கூறுவர். முக்குணம் கடந்த மால் முக்குணம் அடர்ந்த மாலுக்கு முதல்வனாவன். பெயரொற்றுமையால் உலகோர் மயங்குவதன்றி அந்த மாலே மயங்கிச் செருக்குறுகின்றனன். சிவ வழிபாட்டினர் அருளோன் அனந்தன் மணிகண்டன் அம்மை, பொருட்சேய் அரி அயன்தாள் போற்றிச் சிவகுருவாகக் கொண்டு சிவபூசை புரிவர். முக்குணம் அடர்ந்த அம் மால் நம்மைப் போதக ஆசிரியனாக உலகங் கொள்கின்றது. இத்தகைய வண்மை வேறு யாவர்க்குளது? எனப் பிழைபட நினைத்தனன். இந் நினைப்பால் அம் மாலுக்குப் போக்கவொண்ணாச் செருக்கு மூடிவிட்டது. அச் செருக்குத் தலைக்கு மேலேறி விண்ணிலே பரந்தது. அதனால் அம்மாலின் சக்கரம் தானிருந்த அம் மாலின் கையோடு விண்ணிலே பறந்தது. 'சக்கர் நெறிநில்' லாதார் கையில் சக்கரம் எவ்வாறு இருக்கும்? சக்கரம் மறைந்ததும் திருமாலுக்குச் செருக்கும் மறைந்தது. மால் சிவபெருமானைத் தொழுது

வேண்டினன். திருவெள்ளிமலையில் வீற்றிருக்கும் ஆபதியாகிய பசுபதி ஏழுலகத்தாருக்கும் நல்வாழ்வு அருளினன். அவ்விடத்து மாலுக்கும் அவனிழந்த சக்கரத்தை யருளினன். கால்போது - மேலிட்ட காலத்து. காலுதல் - வளிவருதல். ஆபதி என்பதற்கு ஆனேற்றை ஊர்கின்ற சிவன் எனலும் ஒன்று. சிவபூசையிற் கொள்ளும் மாலும் அயனும் தூமாயையிலுள்ளவர்.

போதகன் - குரு ஏழு குருக்களில் ஒருவர் மால். ஏனையோர் :- சதாசிவன் - அநந்தன் - நீலகண்டன் - அம்பிகை கந்தன் - அயன்.

## 354. சக்கரம் பெற்றுநல் தாமோ தரன்தானும்

354. சக்கரம் பெற்றுநல் தாமோ தரன்தானும்
ஈக்கரந் தன்னைத் தரிக்கவொண் ணாமையால்
மிக்கரன் தன்னை விருப்புடன் அர்ச்சிக்கத்
தக்கநற் சத்தியைத் தான்கூறு செய்ததே.

சிவபெருமான் திருவருளால் மாலின் கையில் சக்கரம் வந்தமர்ந்தது. அச் சக்கரத்தைத் தாங்கும் வலிமை திருமாலுக்கு இல்லை அதனால் யாவர்க்கும் மிக்கானாகிய தக்க சிவபெருமானை வலிமை வேண்டி மால் அன்புடன் பூசித்தனன். தாங்கும் வலிமையையும் உதவியருளினன் சிவன். அச் சத்தி சிவனின் வேறல்லாத் திருவருளே. தக்க நற்சத்தி - தனக்குரிய வலிமையை. கூறு செய்தது - பகுந்து கொடுத்தது. தாமோதரன் - கடைக்குணம் நிரம்பிய வயிற்றினன்.

## 355. கூறது வாகக் குறித்துநற் சக்கரங்

355. கூறது வாகக் குறித்துநற் சக்கரங்
கூறது செய்து கொடுத்தனன் மாலுக்குக்
கூறது செய்து கொடுத்தனன் சத்திக்குக்
கூறது செய்து தரித்தனன் கோலமே.

சிவபெருமான் தனது ஆற்றலின் கூறாகச் சக்கரத்தைப் படைத்தருளினன். கூறு - அமிசம். அச் சக்கரத்தை மாலுக்கு உரிமை செய்து கொடுத்தருளினன். கூறு - பங்கு. தன் திருவருள் ஆற்றலுக்குத் தன்னையே கூறுசெய்தளித் தருளினன் சிவன். அத் திருவருளையே தனக்குப் படைக்கலமும் திருவுருவுமாகக் கொண்டருளினன். சிவபெருமான் தன் திருமேனியில் ஒருகூறு திருவருளுக்குக் கொடுத்தருளினன் என்றலும் ஒன்று. கோலம், படை எனக் கூறுதலும் ஒன்று.

## 356. தக்கன்றன் வேள்வி தகர்த்தநல் வீரர்பால்

356. தக்கன்றன் வேள்வி தகர்த்தநல் வீரர்பால்
தக்கன்றன் வேள்வியில் தாமோ தரன்தானுஞ்
சக்கரந் தன்னைச் சசிமுடி மேல்விட
அக்கி உமிழ்ந்தது வாயுக் கரத்திலே.

செருக்குற்றுப் புலைவேள்வி செய்த தக்கன் வேள்வியை அழித்தொழித்த வாட்கைவீரர் வீரபத்திரர் என்ப. அவ் வாட்கை
வீரர் சிவபெருமானின் படையாள் ஆதலின், சிவபெருமானின் அடையாளம் முற்றும் அவருக்கு ஏற்றிக் கூறுவர். தக்கன்வேள்வியில் தலைமையாகச் செருக்குடனிருந்த மால் வாட்கைவீரர் பிறைமுடி மேல் சக்கரத்தினை வீசினன். வாட்கை வீரர் முடியில் பிறை விளங்கியும் அதனைக் கண்டும் தாமோதரனாகிய மாலும் அஞ்சினனில்லை. அதனைக் கண்ணுற்ற வாட்கைவீரர் வாயிலிருந்து எழுந்த தெறுமொலியாகிய உங்கார அதட்டுதலைச் செய்தனர். அச் சக்கரம் அடங்கி வலியிழந்து கீழ்வீழ்ந்தது. உங்காரம் - உட்கொலி; அச்சுறுத்தும் தெறலோசை. தாமோதரன் - கடைக் குணமாகிய தாமத குணப்பொருள்கள் நிறைந்த வயிற்றினையுடையவன்.

சசிமுடி - சந்திரனைச் சூடிய வீரபத்திரர்.

## 357. எலும்புங் கபாலமும் ஏந்தி எழுந்த

357. எலும்புங் கபாலமும் ஏந்தி எழுந்த
வலம்பன் மணிமுடி வானவ ராதி
எலும்புங் கபாலமும் ஏந்தில னாகில்
எலும்புங் கபாலமும் இற்றுமண் ணாமே.

விளக்கமிக்க பேரொளி ததும்பும் மணிமுடி தாங்கியவன் சிவபெருமான். அவனே வானவர் முதல்வன். ஆதி - முதல்வன். அயன் அரி என்னும் இருவர்தம் எலும்பினையும் மண்டையோட்டினையும் ஏந்தினவன் சிவனே. அவன் அவ்வாறு ஏந்துதல் தான் ஒருவனுமே அழிவில் முழுமுதல் என்பதைக் காட்டுவதாகும். ஏனை மண்ணவர் விண்ணவர் அனைவர்களும் பிறந்திறக்கும் பீடிலா உயிரினங்களே என்பதையும் அதுவே காட்டும். அச் சிவபெருமான் அவ் எலும்பினையும் மண்டையோட்டினையும் ஏந்தா தொழிந்தால் அவை இற்று மண்ணொடு மண்ணாய்ப் போயழியும். அழியும் மாயா காரியப் பொருள்களும் சிவபெருமான் கையதேல் அழிவினை எய்தாவென்க. இதன் குறிப்பு காரணமாயை என்றும் அழிவினை எய்தாது சிவபெருமான் தாங்குதலில் நிற்கும் என்பதாம்.

வலம் . . . ராதி - ஒளிபொருந்திய அழகிய முடியை உடைய சிவன்.

## 358. பிரமனும் மாலும் பிராநேனநான் என்னப்

358. பிரமனும் மாலும் பிராநேனநான் என்னப்
பிரமன்மால் தங்கள்தம் பேதைமை யாலே
பரமன் அனலாய்ப் பரந்துமுன் நிற்க
அரனடி தேடி அரற்றுகின் றாரே.

சிற்றுயிரினமாகிய பிரமனும் மாலும் தவப்பேற்றால் முறையே படைத்தல் காத்தல்களாகிய தொழிலைப் புரிகின்றனர். அதுவும் சிவபெருமானின் திருவருளாணையே யாகும். ஆனால் அவர்கள் இருவரும் அத் தொழில் மேம்பாடு தங்கள் வன்மையாலாயதென்று அனைத்தையும் கெடுக்கும் புல்லறிவால் நினைத்தனர். அதனால் அறன்கடை நின்ற பேதையராயினர். அப் பேதைமைச் செருக்கால் மாலும் நான்முகனும் தனித்தனியே தாந்தாம் முதற்பொருளென்று வழக்கிட்டனர். அவர்தம் பேதைமைக்கிரங்கிய சிவபெருமான் அவர்கள் நடுவில் மண்ணுக்குக் கீழும் விண்ணுக்கு மேலும் இடையீடின்றி ஒன்றாய் முளைத்துத் தோன்றித் திகழும் பேரொளிப் பிழம்பாய் நின்றனன். நிற்க மாலும் அயனும் முறையே அடியும் முடியும் தேடித் தங்கள் முதன்மையை நிலைநாட்ட அரற்றுவாராயினர். வழக்கிடுதல் - வாதாடுதல்.

## 359. அடிமுடி காண்பார் அயன்மால் இருவர்

359. அடிமுடி காண்பார் அயன்மால் இருவர்
படிகண் டிலர்மீண்டும் பார்மிசைக் கூடி
அடிகண் டிலேன்என் றச்சுதன் சொல்ல
முடிகண்டேன் என்றயன் பொய்மொழிந் தானே.

அடிமுடி காணும் பொருட்டு மாலும் அயனும் முயன்றனர். முயன்று இழிவாகுங் கருவிலங்கும் பறவையுமாய்த் தோன்றினர். கருவிலங்கு - பன்றி. பறவை - அன்னம். கருமை - மயக்கும் மாயையின் அறியாமை நிறம். வெண்மை - இயக்கும் மாயையின் அறிவின் நிறம். பன்றி உருவெடுத்த அச்சுதனாகிய மால் அடிதேடப் போயினன். அன்னவுரு வெடுத்த அயன் முடிதேடப் போயினன். இருவரும் ஆற்றலழிந்து துன்புற்றுத் தேடமுடியாது வாடி நிலத்தே மீண்டனர். அச்சுதன் அடிகண்டிலேன் என உண்மை உரைத்தனன். ஆனால் அயனோ முடிகண்டுள்ளேன் என்று படுபொய் யுரைத்து வடுவுற்றனன். நன்றியில் செல்வரினும் கன்றிய புல்லறிவாளர் பொய்ம் மொழிக்கஞ்சாக் கையர் ஆவர்போலும். படிகண்டிலர் - கருதிய வண்ணம் பார்த்திலர். மயக்கும் மாயை - மூலப்பகுதி. இயக்கும் மாயை - தூவாமாயை.

## 360. ஆமே முலகுற நின்றஎம் அண்ணலுந்

360. ஆமே முலகுற நின்றஎம் அண்ணலுந்
தாமே முலகில் தழற்பிழம் பாய்நிற்கும்
வானே முலகுறும் மாமணி கண்டனை
நானே அறிந்தேன் அவன்ஆண்மை யாலே.

ஏழுலகமும் ஒன்றாய்ப் பொருந்துமாறு தழற்பிழம்பாய் நின்றருளியவன் எம் அண்ணலாகிய சிவபெருமான். அவன் இயற்கையிலேயே உலகமே உருவமாக நிற்பவன். வானத்துக் கூறப்படும் ஏழுலகங்களிலும் பொருந்தி நிற்கும் திருநீலகண்டத்தை யுடையவனும் சிவனே. அச் சிவபெருமான் அடியேன் அவன் திருவடிக்கண் வைத்த காதலால் என்னை ஆட்கொண்டருளினன். அதனால் அவனருளாலே அவன் திருவடியிணையினை யானறிந்தேன். ஆண்மை - திருவாணை; திருவருள். ஏழுலகம் என்பதற்கு எழுவகைத் தீவுகள் என்றலும் ஒன்று. அவை வருமாறு: நாவல், இறலி, கிரவுஞ்சம், குசை, இலவம், தெங்கு, புட்கரம் என்பன. 'முதலது நாவலந் தீவே யுடைய, திறலியின் றீவே கிரவுஞ்சத் தீவே, குசையின் றீவே யிலவந் தீவே, தெங்கந் தீவே புட்கரத் தீவென், றேத்திய பெருந் தீ வேழிற்கும் பெயரே. (பிங்கலம், 452.)

## 361. ஊனாய் உயிராய் உணர்வங்கி யாய்முன்னஞ்

361. ஊனாய் உயிராய் உணர்வங்கி யாய்முன்னஞ்
சேணாய்வா னோங்கித் திருவுரு வாய்அண்டத்
தாணுவும் ஞாயிறுந் தண்மதி யுங்கடந்து
ஆண்முழு தண்டமு மாகிநின் றானே.

கலப்பால் மாயாகாரிய உடம்பாய், அவ்வுடம்பகத்து வினைக்கீடாக வுறையும் உயிராய், அவ்வுயிரின் உணர்வாய் நீக்கமற நின்று காத்தருளுபவன் சிவன். தீயாய் இருப்பவனும் அவனே. முன்னம் அறியாமைமிக்குத் தம்முள் சண்டையிட்ட அயனும் அரியும் தெளியும் வண்ணம் தீப்பிழம்பாய் அண்டமுற நிமிர்ந்து நின்றவனும் சிவனே. அண்டங்களைத் தாங்கும் கற்றூணும் அவனே. ஞாயிற்றையும் திங்களையும் பொருள் தன்மையால் கடந்து நிற்பவனும் சிவனே. உதவுதல் தன்மையால் அனைத்து அண்டங்களையும் ஆளும் அண்ணலாய் நின்றருள்பவனும் சிவனே. இத் திருப்பாட்டு முதல் 'ஊழிவலஞ் செய்' என்னும் திருப்பாட்டு முடியச் 'சரீவோபாதானம்' எனச் சில ஏடுகளிற் காணப்படுவதாகக் கூறுவாருமுளர். தாணு - தூண்.

## 362. நின்றான் நிலமுழு தண்டத்துள் நீளியன்

362. நின்றான் நிலமுழு தண்டத்துள் நீளியன்
அன்றே யவன்வடி வஞ்சின ராய்ந்தது
சென்றார் இருவர் திருமுடி மேற்செல
நன்றாங் கழலடி நாடவொண் ணாதே.

சிவபெருமான் அவன் பொருள்சேர் புகழைப் புண்ணிய மெய்யடியார் புகழும்போது நீண்டு கொண்டே செல்வதுபோல் பேரொளிப் பிழம்பாய்த் தோன்றிய ஞான்று நீண்டுகொண்டே சென்றனன். இதுவே அண்டமுற நீண்ட இயல்பு. இப் பிழம்பினைக் கண்டு அறியாமையாற் கலாய்த்த அயனும் அரியும் அஞ்சினர். அவ்விருவரும் அதனை ஆராய்ந்து சென்றனர். முடியையும் அடியையும் முறையே இருவரும் அளக்கச் சென்றனர். காணவொண்ணாது நாணி மீண்டனர்.

மேற்செல; ஆராய்ந்து செல்லுந்தோறும் மேலும் மேலும் வளர்ந்து செல்ல. நன்றாங் கழலடி - பிறவிப் பிணிக்கு மருந்தாய நற்றாள்.

## 363. சேவடி ஏத்துஞ் செறிவுடை வானவர்

363. சேவடி ஏத்துஞ் செறிவுடை வானவர்
மூவடி தாவென் றானும் முனிவரும்
பாவடி யாலே பதஞ்செய் பிரமனுந்
தாவடி யிட்டுத் தலைப்பெய்து மாறே.

எங்கும் நிறைந்து நீக்கமின்றி விளங்கும் சிவபெருமான் திருவடியை ஏத்துகின்ற வானவக் கூட்டத்தாரும், மாவலிபால் வஞ்சனையாகக் குறுகிச் சென்று மூவடி மண்ணிரந்த மாலும், முனிவரும், வேதம் பாடும் நான்முகனும், தேடியலைந்தும் முடிவு காணாது எய்த்தனர். பாவடி - கீதவடிவான வேதம். தாவடியிட்டும் - அலைந்து திரிந்தும். தலைப்பு - ஒளிப்பிழம்பின் கீழும் மேலும் ஆகிய முடிவிடம்.

செறிவுடை - கூட்டமாகிய. மூவடி தா என்றான்: வாமனன். பாவடி . . செய் - வேதமோதும். தாவடி . . மாறே - அடியையும் முடியையும் எய்துமாறு.

## 364. தானக் கமலத் திருந்த சதுமுகன்

364. தானக் கமலத் திருந்த சதுமுகன்
தானக் கருங்கட லூழித் தலைவனும்
ஊனத்தின் உள்ளே உயிர்போல் உணர்கின்ற
தானப் பெரும்பொருள் தன்மைய தாமே.

செந்தாமரையை உறைவிடமாகக் கொண்டு தங்கும் நான்முகனுக்கும், அதுபோல் கருங்கடலை உறைவிடமாகக் கொண்டு தங்கும் மாலுக்கும், ஊழித் தலைவனாகிய உருத்திரனுக்கும், அவரவர்தம் உடம்பினுள் உயிர் உறைவது போல் அவரவருயிர்க்கு உயிராய் உறைதலைச் செய்வதான பெரும் பொருள் சிவபெருமான் ஆவன். அனைவரும் அவன் தன்மையராய் அவன் ஆட்டுவித்தவண்ணம் ஆடும் உயிரினத்தராவர். கருங்கடல் ஊழித் தலைவன். கருங்கடல் தலைவன் - அரி. ஊழித் தலைவன் - அரன்.

## 365. ஆலிங் கனஞ்செய் தெழுந்த பரஞ்சுடர்

365. ஆலிங் கனஞ்செய் தெழுந்த பரஞ்சுடர்
மேலிங்ஙன் வைத்ததோர் மெய்ந்நெறி முன்கண்டு
ஆலிங் கனஞ்செய் துலகம் வலம்வருங்
கோலிங் கமைஞ்சருள் கூடலு மாமே.

சிவபெருமான் உயிர்ப்பொருள் உயிரல் பொருள் எல்லாவற்றுடனும் இயற்கை உண்மைப் புணர்ப்பாய் வேறறநிறைந்து நிற்கின்றனன். இந் நிலையைச் சுத்தாத்துவிதம் என்ப. இதனையே ஆலிங்கனம் என்ப. இங்ஙனம் திகழும் அச் சிவன் இயற்கைப் பேரறிவுப் பேரொளிப் பெரும் பொருளாவன். 'அவன் ஆருயிர் தன் திருவடியைச் சார்தற் பொருட்டுச் செந்நெறியாகிய மெய்ந்நெறியை அமைத்தருளினன். அந்நன்னெறியினைத் திருவருளால் முனைத்துக் கண்டு தழுவி உயர்ந்தோர் வலம் வருவர். சிவபெருமான் திருவடியைத் தலைக்கூடுதற்குச் சிறந்த செந்தமிழடையாளமாகிய 'சிவயநம' என்னும் திருவைந்தெழுத்து உண்மையால் மீளா அடிமையாய்க் கூடுதலுமாகும். கோலிங்கம் - சிறந்த அடையாளம்.

ஆலிங்கனம் செய்து - கலந்து. மெய்நெறி - சுத்த அத்துவிதம். கோலிங்கம் ஐஞ்சு - பஞ்ச லிங்கங்கள்.

# 366. வாள்கொடுத் தானை வழிபட்ட தேவர்கள்

366. வாள்கொடுத் தானை வழிபட்ட தேவர்கள்
ஆள்கொடுத் தெம்போல் அரனை அறிகிலர்
ஆள்கொடுத் தின்பங் கொடுத்துக்கோ ளாகத்
தாள்கொடுத் தானடி சாரகி லாரே.

தாம் வாழ்வான் வானவர்கள் முழுமுதற் சிவனைத் தொழுது போர் வெல்லும் வாளே சீரெனக் கொண்டு வேண்டினர். சிவபெருமானும் 'வேண்டுவார்க்கு வேண்டுவதே ஈயும்' பெருவள்ளலாதலின் அவ்வாறே வாள் கொடுத்தருளினன். அத் தேவர்கள் வாள் கொடுத்த வள்ளலை அந்த அளவில் நினைந்து வழிபட்டனர். அவர்கள் நம்மைப் போல் தம்மைச் சிவபெருமானுக்கு அடிமையாகக் கொடுத்து அவன் திருவருளால் அவன் திருவடியை உணர்கிலர். அந் நோக்கத்துடன் அவனை வழிபட்டால் அவன் ஆளாக வேண்டுமென்னும் நல்லெண்ணத்தை நம்பால் எழுப்பியருள்வன். அடிமையானதும் திருவடியின்பத்தைக் கொடுத்து வாழ்வித்தருள்வன். மேலும் நீங்காத் துணை வலியாக அத் திருவடியையே தந்தருள்வன். இத்தகைய சிவபெருமான் திருவடியைச் சாராது வாழ்நாட்களெல்லாம் வீழ்நாளாக்குவர் வானவர். வாள்கொடுத்து என்பதற்கு அறிவு கொடுத்து எனலும் ஒன்று. என்னை? நாளுடனே வாளும் நயந்து சிவனருளல், ஆளுளத்துத் தாளெழுப்பலாம் ஆதலின் என்க. ஆள் கொடுத்தல், அடிமையாம் எண்ணத்தை எழுப்பல்.

வாள் கொடுத்தான் - அறிவாகிய ஒளியைக் கொடுத்தான். ஆள் கொடுத்து - அடிமைப்பட்டு. கோளாக - வலிமை உண்டாக.

## 367. ஊழி வலஞ்செய்தங் கோரும் ஒருவற்கு

367. ஊழி வலஞ்செய்தங் கோரும் ஒருவற்கு
வாழி சதுமுகன் வந்து வெளிப்படும்
வீழித் தலைநீர் விதித்தது தாவென
ஊழிக் கதிரோன் ஒளியைவென் றானே.

பல்லூழி காலம் சிவபெருமானை நல்லறிவுடன் வழிபட்டு வலம் வந்து இடையறாது நாடினன். அங்ஙனம் நாடிய மெய்யன்பினனாகிய ஒருவனுக்குப் படைக்குந் தொழிலை மேற்கொண்டு அருளோன் மெய்க்கண் சிவபெருமான் நான்கு திருமுகங்களுடன் தோன்றியருளினன். அவன் ஆலம் விழுதொத்துக் காணப்படும் திருச்சடையின்கண் விளங்கும் திருவருளாகிய வான்புனலைத் தந்தருள வேண்டுமென்று விண்ணப்பித்தனன். எல்லாவொளிகளையும் வென்று பேரொளியாய்ப் பேரூழிக் கதிரவனாய் விளங்கும் சிவபெருமான் அவ்வாறே அருள்புரிந்தனன். அருளோன்மெய் - சதாசிவதத்துவம். தலைநீர் - தலையில் விளங்கும் அந்தண்மை வாய்ந்த திருவருள்.

சதுமுகன் - கர்த்திருசாதாக்கியத்திலுள்ள நான்கு முகங்களை உடைய சிவன்.

## 368. ஆதியோ டந்தம் இலாத பராபரம்

368. ஆதியோ டந்தம் இலாத பராபரம்
போதம தாகப் புணரும் பராபரை
சோதி யதனிற் பரந்தோன்றத் தோன்றுமாந்
தீதில் பரையதன் பால்திகழ் நாதமே.

தொடக்கமும் ஈறும், பிறப்பும் இறப்பும், எழுவாயும் இறுவாயும் ஆகிய ஆதியோடு அந்தமும் இலாத விழுமிய முழுமுதற் பெரும் பொருள் சிவபெருமான். அச் சிவபெருமானுக்குத் திருவுடலாய்ப் புணரும் பேரறிவுப் பெரும் பொருள் பராபரை எனப்படும். பராபரை என்பதும் பராசத்தி என்பதும் ஒன்றே. அதுவே வனப்பாற்றலெனப்படும். அவ் வனப்பாற்றல் அளவில் பேரொளியாய்த் திகழும். அப் பேரொளியினின்றும் அப்பாலாம் சிவம் தோன்றும். அப்பாலாம் சிவம் துரியாதீத சிவன் எனப்படும். அதனையே பரம் என்பர். அச் சிவன் தோன்றுதற்கு நிலைக்களமாக முதற்கண் ஓசையாகிய நாதம் தோன்றும். பரை திருவருளாணை.

## 369. நாதத்தில் விந்துவும் நாதவிந் துக்களில்

369. நாதத்தில் விந்துவும் நாதவிந் துக்களில்
தீதற் றகம்வந்த சிவன்சத்தி என்னவே
பேதித்து ஞானங் கிரியை பிறத்தலால்
வாதித்த விச்சையில் வந்தெழும் விந்துவே.

மேலோதிய ஓசையாகிய நாதத்தினின்றும் ஒளியாகிய விந்து தோன்றும். ஓசை செவிக்குப் புலனாவது. ஒளி கண்ணுக்குப் புலனாவது. அது வரிவடிவம். நாதவிந்துக்களாகிய இருமெய்களினின்றும் முறையே சிவன் சிவை என்னும் மெய்கள் தோன்றும். சிவன் பால் நின்று பேரறிவும், சிவையாகிய சத்தியினின்று பேராற்றலும் வெளிப்படும். பேரன்பு எனப்படும் இச்சை, என்றும் ஒன்றுபோல் நிற்பதென ஆய்ந்து நிலைநிறுத்தப்பட்டது. அவ் விச்சை விந்துவில் நின்றும் தோன்றும். 'இச்சையில் வந்தெழும் விந்துவே' என்பதில் விந்துவில் இச்சை வந்தெழும் என மாறுக. தீதற்றகம் வந்த என்பதற்கு மலமாசகன்ற அன்பர் உள்ளத்தில் தோன்றிய என்றலும் ஒன்று.

## 370. இல்லது சத்தி இடந்தனில் உண்டாகிக்

370. இல்லது சத்தி இடந்தனில் உண்டாகிக்
கல்லொளி போலக் கலந்துள் ளிருந்திடும்
வல்லது ஆக வழிசெய்த அப்பொருள்
சொல்லது சொல்லிடில் தூராதி தூரமே.

உலகு உடல் உண்பொருள்களாகிய காரியம் தோன்றுதற்கு இடமெனப்படும் இல்லாயுள்ளது மாயை. உள்ளதாகிய அம் மாயை சத்தியால் காரியப்படும். அதனால் அம் மாயையையினைச் சத்தியிடந்தனில் உண்டாகி என்றனர். சத்தியும் சிவனும் மணியும் ஒளியும்போலக் கலந்துள் இருந்திடும். கல் - மணி. அம் மாயையினை இத்தகைய உறுதிப் பொருள்களாகச் சத்தியின் இடமாக நின்று ஆக்கியருளிய அப்பெரும் பொருள் புகழ்ச்சி மொழிகளுக்கு எட்டாத தொலைவிலுள்ளதாகும். இல்லது - மாயை; அது முதற்பொருளீறு. 'இல்லே எனும் மாயையிலிட்டென்னை' என்பதுங் காண்க. வல்லது - உறுதியானது.

இல்லது - மாயை. வல்லது வழி ஆக - மாயை மூலமாக. சொல்லது - புகழ். தூராதி தூரம் - விரிவுடையது.

## 371. தூரத்திற் சோதி தொடர்ந்தொரு சத்தியாய்

371. தூரத்திற் சோதி தொடர்ந்தொரு சத்தியாய்
ஆர்வத்து நாதம் அணைந்தொரு விந்துவாய்ப்
பாரச் சதாசிவம் பார்முதல் ஐந்துக்குஞ்
சார்வத்துச் சத்திஓர் சாத்துமா னாமே.

மாற்றம் மனங்கழிய நின்ற மறையோன் சிவன். அவன் தொலைவில் தோன்றும் சுடர்ச் சோதியாயுள்ளான். அன்பினால் அவனைத் தொடர்ந்தொரு சத்தி தோன்றிற்று. அச் சத்தியின் ஆர்வத்தால் நாதந்தோன்றும். அந் நாதத்தின்பின் விந்து தோன்றும். அதன்பின் அறிவும் ஆற்றலும் ஆகிய சிவம் சத்தி என்னும் இரண்டும் ஒப்ப நிற்கும் நிலையாகிய அருளோன்மெய் சதாசிவம் எனப்படும். பெருமை மிக்க அச் சதாசிவமெய் அதன்பின் தோன்றும். நிலமுதலாகிய பூதம் ஐந்திற்கும் சார்பிடமாய் நிற்பது சத்தியென்னும் பேரறிவுப் பெரும்பொருள். அச் சத்தியையுடைய பெரும் பொருள் ஒப்பில்லாத சிவன் எனப்படும் சாத்துமான் என்க. இதுவரையும் தூமாயையாகிய விந்துவின் நிலைவேறுபாட்டு நிகழ்ச்சி முறைகளாகும். இம்முறை ஒன்றினின்று ஒன்று தோன்றுவதன்று. வீட்டில் பல அறைகள் தடுக்கப்படுவதுபோல் அமைப்பதாகும். இதனைப் பகுப்பமைப்பு என்ப. இதுவே விருத்தியெனவும் படும். படம் குடிலானாற்போல என்பதும் இது. பாரம் - பெருமை. வத்து - பொருள்.

சத்தி ஓரா வத்து மானும் - ஆராய்ந்தறியப்படாத பரம்பொருளைச் சத்தி ஒக்கும்.

## 372. மானின்கண் வானாகி வாயு வளர்ந்திடும்

372. மானின்கண் வானாகி வாயு வளர்ந்திடும்
கானின்கண் நீருங் கலந்து கடினமாய்த்
தேனின்கண் ஐந்துஞ் செறிந்தைந்து பூதமாய்ப்
பூவின்கண் நின்று பொருந்தும் புவனமே.

மோகினி என்பது தூவாமாயைக்கு ஒரு பெயர். அத்தூவா மாயையில் கலை தோன்றும். அக் கலையினின்று மூலப்பகுதி தோன்றும். இம் மூலப்பகுதிக்கு மான் என்று பெயர். பின் மூலப் பகுதியில் தோன்றும் இறுப்பு மெய்யாகிய புத்தி தத்துவத்திற்கும் மான் என்று பெயர். இம் மானின்கண் நின்று எழுச்சியாகிய ஆங்காரம் தோன்றும். இவ் வெழுச்சி மூவகைப்படும். அவை உணர்வு உழைப்பு உலகம் என்பன. இவற்றுள் உலக எழுச்சியினின்றும் பூதமுதலாகிய நுண்மை ஐந்தும் தோன்றும். நுண்மை - தன்மாத்திரை. நுண்மையினின்று வான் வளி வளர்ந்து தோன்றும். கானலாகிய தீயும், நீரும், எல்லாங் கலந்து கடினமாக இருக்கும் நிலமும் தோன்றும். முறையே இவற்றின் நிலைக்களமாகிய நுண்மையினை ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் எனக் கூறுப. கானல் என்பது கான் எனக் கடை குறைந்து நின்றது. தேனாகிய திருவருள் ஆற்றலின்கண் இவ்வைந்தும் கூடி உலகத்திலும் உடலிலும் பூதமாகப் பொருந்தும். பூதம் - பருமையாகத் தோன்றுவது. இவ்வைம் பூதக் கூட்டரவே புவனமாகும். பலவுலகத் தொகுப்பு புவனம் என்ப. புவனங்கள் இருநூற்று இருபத்து நான்கென்ப.

## 373. புவனம் படைப்பான் ஒருவன் ஒருத்தி

373. புவனம் படைப்பான் ஒருவன் ஒருத்தி
புவனம் படைப்பார்க்குப் புத்திரர் ஐவர்
புவனம் படைப்பானும் பூமிசை யானாய்ப்
புவனம் படைப்பானப் புண்ணியன் தானே.

ஒருவன் ஒருத்தியாய் ஓர் உடம்பின் கண்ணே தோற்றுவித்துத் திகழும் சிவபெருமான் புவனம் முழுவதையும் படைப்பவனாவன். பேரறிவும் பேராற்றலும் சீராக ஒருங்கமைந்த இவர்க்கு மக்களாயுள்ளவர் ஐவர். அவ் ஐவரும் முறையே அருளோன், ஆண்டான் அரன், அரி, அயன் என்பவராவர். இவ்வைவரும் முறையே சதாசிவன், மாஈசன், உருத்திரன், மால், அயன் எனவும் கூறப்படுவர். புவனத்தைப் படைக்கின்ற செந்தாமரை மேலுறை அயனும் சிவபெருமான் திருவாணை பெற்றவனாதலின் அவனுடன் கலப்பால் சிவன் ஒன்றாயிருப்பதால் அவனையும் சிவபெருமான் என்பர். பூமிசையான் - நான்முகன். நிலவுலகத்தினின்று புண்ணியப் பயனளிக்கும் புண்ணியனாயுள்ள சிவபெருமான் அயனுடன் நின்றும் புவனத்தைப் படைத்தருள்வன். புண்ணியன் - அம்மையோடு அப்பனாய்த் திகழ்ந்து ஆருயிர்கட்கு வழுவில் நலமருளும் முழுமுதற்சிவன்.

ஒருவன் ஒருத்தி - சிவம் சத்தி. புத்திரர் ஐவர் - சதாசிவன் - மகேசன் - உருத்திரன் - மால் - அயன்.

## 374. புண்ணியன் நந்தி பொருந்தி உலகெங்கும்

374. புண்ணியன் நந்தி பொருந்தி உலகெங்கும்
தண்ணிய மானை வளர்த்திடுஞ் சத்தியுங்
கண்ணியல் பாகக் கல்வி முழுதுமாய்
மண்ணியல் பாக மலர்ந்தெழு பூவிலே.

புண்ணியனாகிய நந்தி என்று ஓதப்பெறும் சிவபெருமான் பொருந்துதலினாலே திருவருளாற்றலாம் சத்தியும் உலகமெங்கணும் தண்ணளியுடன் பொருந்தி நிற்பர். பொருந்தி மானாகிய உடல்மெய்யினை வளர்த்தருள்வன். கண்ணுதலாகிய திருவுள்ளங் கொண்ட இயல்பினாலே ஐம்பூதம் முதலிய தத்துவங்கள் ஒன்றோடொன்று கலந்து நிலம் நீர் நெருப்பு உயிர் நீள்விசும்பு முதலாகிய உலகங்களாக விரிந்து தோன்றும். இப்பூதங்கள் அகத்தும் புறத்தும் காணப்படும். புறத்துக் காணப்படுவது அண்டம் எனவும், அகத்துக் காணப்படுவது பிண்டம் எனவும் கூறுப. கண்ணுதல் - கருதுதல். உடல்மெய் - ஆன்மதத்துவம்.

## 375. நீரகத் தின்பம் பிறக்கும் நெருப்பிடை

375. நீரகத் தின்பம் பிறக்கும் நெருப்பிடை
காயத்திற் சோதி பிறக்கும்அக் காற்றிடை
ஓர்வுடை நல்லுயிர்ப் பாதம் ஒலிசத்தி
நீரிடை மண்ணின் நிலைப்பிறப் பாமே.

ஐம்பூதங்களுள் மண்ணானது எல்லாவற்றையும் தாங்கி நிலைப்பிக்கச் செய்யும் தன்மை வாய்ந்தது. அதனான் மண்ணினை நிலைப்பிறப்பாம் என்றனர். அதன் மேல் விளங்கும் நீரகத்துச் சுவை இன்பம் தோன்றும். அதன்மேல் நெருப்பினிடத்து ஒளி தோன்றும். அதன் மேல் காற்றினிடத்து உயிர்ப்புப் பிறக்கும். அதன்மேல் வானத்தினிடத்து ஒலி தோன்றும். காயம்: ஆகாயம்; முதற்குறை, வானம். உயிர்ப்பு - மூச்சு. நல்லுயிர்ப்பு - அனைத்துயிர்க்கும் ஒத்த நன்மைதரும் காற்று. ஓர்வுடை ஒலி - ஆராய்வதற்கும் நிறைவுறுதற்கும் துணையாம் ஓசை. ஆதம் - ஒளி; ஆதபம் என்பதன் இடைக்குறை இத் திருப்பாட்டு ஐம்பூதங்களின் தோற்றமுறை கூறுகின்றது. ஐம்பூதங்களும் ஐந்து தன் மாத்திரைகளினின்றுந் தனித்தனி தோன்றுவன. ஒரு பூதத்தினின்று மற்றொரு பூதம் தோன்றுவதன்று. அங்ஙனம் தோன்றுவனவாகச் சொல்லுவது ஏற்றுரையே. ஏற்றுரை - உபசாரம். வானத்தினின்றும் காற்றுத் தோன்றும் என்பதற்குரிய காரணம் காற்றினிடத்து அதன் இயற்கைப் பண்பாகிய ஊறுமட்டு மன்றிச் செயற்கையாகிய வானத்தின் பண்பாம் ஓசையும் விரவியிருப்பதால் அச்சிறப்பு நோக்கி வானத்தினின்றும் காற்றுத் தோன்றிற்று என்பதாம். இது

தலைவியைச் செவிலி பெற்றமகளென நற்றாய் நவில்வதை ஒக்கும். நற்றாய் மகளென்றல் நண்ணும் இயல்பாகும், உற்ற செவிலிக்காம் சிறப்பு என்பதை நினைவிற் கொள்க. உண்மையான் நோக்குவார்க்குக் காற்று ஊற்றுத் தன்மாத்திரையினின்றுந் தோன்றும் என்பதே வாய்ப்புடைத்தாம். ஊற்றுத் தன்மாத்திரையில் ஓசைப் பண்பும் விரவியிருக்கும். அங்ஙனம் ஊற்றுத் தன்மாத்திரையில் விரவியிருக்கும் ஓசையோடு சிறப்புற்று நிற்கும் ஊற்றுத் தன்மாத்திரையினை ஆகாயம் எனக் கூறுவர். அவ்வாகாயத்தினின்றுங் காற்றுத் தோன்றும் என்பர். மேவும் வேற்றுப் பண்பிடமாய் விளம்புவரால், தாவில் சிறப்புணர்த்துதற்கு. ஆதலால் அமையும் என்க. இப்படியே மற்றைப் பூதங்களும் தோன்றும் என்ப. இத் திருப்பாட்டில் காணப்படும் உயிர்ப்பு, ஆதம், ஒலி, சத்தி, நிலை என்பன முறையே காற்று, தீ, வானம், நீர், நிலம் என்னும் பூதங்களின் பண்புகளாம்.

## 376. உண்டுல கேழும் உமிழ்ந்தான் உடனாகி

376. உண்டுல கேழும் உமிழ்ந்தான் உடனாகி
அண்டத் தமரர் தலைவனும் ஆதியுங்
கண்டச் சதுமுகக் காரணன் தன்னொடும்
பண்டிவ் வுலகம் படைக்கும் பொருளே.

ஏழுலகினையும் ஒருகாலத்து உண்டு உமிழ்ந்தவன் மாயன். அதனால் உலகோர் அவனை மண்ணுண்ட மாயன் என்பர். கண்ணுக்கும் கருத்துக்கும் முறையே தோன்றும் பருவுடல் நுண்ணுடலாகிய உடல் மெய் இருபத்து நான்கினையும் காப்பவன் மாயன். அதனால் அவன் மண்ணுண்ட மாயன் எனப்படுவன். அத்தகைய அரியும், அவனுடனாகி அவனுக்கு மேற்பட்டு நிற்கும் அண்டத்தமரர் தலைவனாகிய அரனும், திருவாணையால் ஆதியாகிய படைத்தல் தொழிலைச் செய்யும் இயற்றுதற் காரணனாகிய அயனும் பல பொருள்களுடன் ஐந்தொழிற்கும் காரணனாகிய முழுமுதற் கடவுளாம் சிவபெருமானால் முன்னே படைக்கப்பட்டவராவர். இச் சிவன் நாலாம் நிலைக்கண் உள்ள சிவன் என்ப நாலாம் நிலை - துரியநிலை. ஆதி - காரணம்.

## 377. ஓங்கு பெருங்கடல் உள்ளுறு வானொடும்

377. ஓங்கு பெருங்கடல் உள்ளுறு வானொடும்
பாங்கார் கயிலைப் பராபரன் தானும்
வீங்குங் கமல மலர்மிசை மேலயன்
ஆங்குயிர் வைக்கும் அதுவுணர்ந் தானே.

உயர்ந்த பெரிய கடல் மேல் தங்கியிருக்கும் அரியுடனும், பெரிய செந்தாமரை மலர் மேலுறையும் அயனுடனும் முறையே காத்தல் படைத்தல்களாகிய தொழிலினை அவர்கள் வாயிலாக இயற்றவுன்னினன் சிவன். சிறந்த திருக்கயிலையின்கண் எழுந்தருளியுள்ள 'யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையா'னாகிய அவன் அவர்கள்பால் திருவாணையினை வைத்தருளத் திருவுள்ளங் கொண்டருளினன். உயிர் - திருவாணை. உணர்ந்தான் திருவுள்ளங்கொண்டான்.

## 378. காரணன் அன்பிற் கலந்தெங்கும் நின்றவன்

378. காரணன் அன்பிற் கலந்தெங்கும் நின்றவன்
நாரணன் நின்ற நடுவுட லாய்நிற்கும்
பாரணன் அன்பிற் பதஞ்செய்யும் நான்முகன்
ஆரண மாய்உல காயமர்ந் தானே.

அனைத்துயிர்க்கும் அனைத்துடற்கும் அனைத்துலகிற்கும் வினைமுதற் காரணனாயுள்ளவன் சிவபெருமான். அன்பாகிய திருவருளுடன் கலந்து எங்கும் நீக்கமற நின்றவன் சிவன். நாரணனாகிய திருமாலின் நடுவுடல் என்று சொல்லப்படும் நெஞ்சிடங்கொண்டவனும்
சிவனே. அனைத்துயிர்களாலும் அன்பினால் ஓதப்படும் ஒண்பொருளும் அவனே. நான்முகன் நிலையினைத் தந்தருள்பவனும் அவனே. ஆருயிர்களை அறவழியில் நடத்தும் ஆரணமாகிய மறையாய் விளங்குபவனும் அவனே. உலகமே உருவமாகக் கொண்டு திகழ்பவனும் சிவபெருமானே. ஆரணம்: ஆர் + அரணம் = ஆராணம்; ஆரணம் எனமரீஇற்று; ஒழுக்கக் காவலாயுள்ளது. உடல்நடு - நெஞ்சம். பாரணன் - வழுத்தப்படுவோனாகிய சிவன். பதஞ்செய்வன் - நிலையை அளிப்பன். ஆரணம் - சொல்லுலகு.

## 379. பயன்எளி தாம்பரு மாமணி செய்ய

379. பயன்எளி தாம்பரு மாமணி செய்ய
நயன்எளி தாகிய நம்பன்ஒன் றுண்டு
அயன்ஒளி யாயிருந் தங்கே படைக்கும்
பயனெளி தாம்வய ணந்தெளிந் தேனே.

செம்மையாகிய திருவடியின்பத்தினை எளிதாக அளித்தருளும் நம்பன் சிவபெருமான். அவனே மெய்யன்பர்கட்கு எல்லாப் பயனையும் யாண்டும் எளிதாகத் தந்தருளுவன். அதனால், விலைவரம்பில்லாப் பெரிய சிறந்த செம்மணியாக வுள்ளவனும் அவன் ஒருவனே. அயனுடைய அறிவிற்கு அறிவாய்க் கலந்து நின்று படைப்புத் தொழிலை நடப்பித்தருள்பவனும் அவனே. இவ்வாறாக எல்லாப் பயனையும் எளிதில் ஈந்தருளுவதற்குக் காரணம் சிவபெருமானின் பேரருளுடைமையே எனத் தெளிந்தேன். சிவபெருமான் ஆருயிர்களுள் சிலவற்றைத் தகுதியுடையனவாக ஆக்கி, அவற்றைக்கொண்டு ஏனை உயிர்களுக்கு வேண்டும் துணைபுரிவிக்கின்றனன். இம்முறைதான் அவன் உன்முகமாய் நின்று செய்தருள்வதாகும். செம்மணி - மாணிக்கம். நயன் - இன்பம். ஒளி - சிவஞானம். வயணம் - காரணம்.

(அ .சி.) வயணம் - காரணம்.

## 380. போக்கும் வரவும் புனிதன் அருள்புரிந்

380. போக்கும் வரவும் புனிதன் அருள்புரிந்
தாக்கமுஞ் சிந்தைய தாகின்ற காலத்து
மேக்கு மிகநின்ற எட்டுத் திசையொடுந்
தாக்குங் கலக்குந் தயாபரன் தானே.

அனைத்தையும் ஒடுக்கும் அரனே முழுமுதலாகலின் போக்காகிய பேரொடுக்கத்தைச் செய்பவனும் சிவபெருமான். ஆண்டவன் அருளால் மீண்டும் உலகுள ஆதலின் வரவாகிய உலகப் புதுப்படைப்பினைச் செய்தருள்பவனும் அவனே. அவ்வுயிர் உலகங்கட்கு ஆக்கமாகிய காத்தலைச் செய்தருள்பவனும் சிவனே. இவையனைத்தும் சிந்தையாகிய திருவுள்ளக் குறிப்பான் நிகழ்வன. அக் காலத்துச் சிறப்பு மிகும்படியாக நின்ற எட்டுத் திசையொடும் சிவபெருமான் வேறறக் கலந்து நின்றும் தொடக்குறான். அவன் அங்ஙனம் கலந்து நிற்பதற்குக் காரணம் அவனது எல்லையில்லாத பேரருளாகிய தயா என்க. போக்கு - அந்தம்; பேரொடுக்கம். வரவு - ஆதி; மீண்டுலகப் படைப்பு. ஆக்கம் - காப்பு. மேக்கு - உயர்வு; சிறப்பு.

## 381. நின்றுயி ராக்கு நிமலன்என் னாருயிர்

381. நின்றுயி ராக்கு நிமலன்என் னாருயிர்
ஒன்றுயி ராக்கும் அளவை உடலுற
முன்துய ராக்கும் உடற்குந் துணையதா
நன்றுயிர்ப் பானே நடுவுநின் றானே.

உயிர்க்கு உயிராய் நின்று எல்லாவற்றையும் இயைந்து இயக்கும் சிவபெருமான் இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கியவன். அவனே என் ஆருயிராக உள்ளான். ஆருயிர்களை அன்பு செய்தற்குக் கருவியாகிய உடலுடன் ஒன்றும்படி பொருத்துபவனும் அவனே. அக்காலத்து அவ்வுயிர்கள் முன் செய்து கொண்ட வினைக்கீடாகப் 'பேறு, இழவு, இன்பம், பிணி, மூப்புச் சாக்காடு' என்னும் ஆறும் அவ்வுயிர்களுக்குக் கருவினுள் அமையப் படைத்தருள்வன். இவையே அவ்வுயிர்களைத் துன்புறுத்தும் உடலுக்குத் துணையாவன. அச் சிவபெருமான் ஆருயிர்களின் 'உயிர்ப்பாய்ப் புறம்போந்து புக்கு' நின்றருள்வன். அவன் அனைத்திற்கும் காவலாய் நடுவு நின்றருளினன். உயிர்ப்பான் - உயிர் மூச்சாய் விளங்குவான்.

ஒன்று . . . உடலுற - உயிரை உடலோடு சேர்க்கும்போது.
முன் துயராக்கும் உடற்கு - ஊழின்படி படைக்கும் உடலுளி.

## 382. ஆகின்ற தன்மையில் அக்கணி கொன்றையன்

382. ஆகின்ற தன்மையில் அக்கணி கொன்றையன்
வேகின்ற செம்பொனின் மேலணி மேனியன்
போகின்ற சீவன் புகுந்துட லாய்உளன்
ஆகின்ற தன்மைசெய் ஆண்டகை யானே.

சொல்லுலகும் பொருளுலகும் ஆகிய அனைத்தும் சிவபெருமான் திருவருளால் மீண்டும் தோன்றும். அக் காலத்து அவன் சிவமணியும் கொன்றை மாலையும் அணிந்தவனாய்த் திகழ்வன். அவன் திருமேனி புடமிட்டு எடுத்த செவ்விப் பொன்போலும் மிக்க அழகு வாய்ந்தது. பேரொடுக்கக் காலத்து உலகினையும் உடம்பினையும் ஒருங்கு நீங்கிச் செல்லும் ஆவிகளுக்கு நிலைக்களமாகிய உடலாகவுள்ளவனும் சிவபெருமானே. எக் காலத்தும் யாண்டும் ஆருயிர்கட்கு ஏர்மிக்க சீர்சிறப்புச் செய்வித்தருளும் ஆளும் தன்மை வாய்ந்த அண்ணலும் சிவபெருமானே. ஆகின்ற தன்மையில் - உலகம் உண்டாதற் பொருட்டு. அக்கு சிவமணி; உருத்திராக்கம்; எலும்பெனலுமாம். மேலணி - மேலான அழகிய.

## 383. ஒருவன் ஒருத்தி விளையாடல் உற்றார்

383. ஒருவன் ஒருத்தி விளையாடல் உற்றார்
இருவர் விளையாட்டும் எல்லாம் விளைக்கும்
பருவங்கள் தோறும் பயன்பல வான
திருவொன்றிற் செய்கை செகமுற்று மாமே.

ஒருவன் ஒருத்தியாகிய சிவபெருமானும் சிவையும் ஆருயிர்கள் உய்யும் பொருட்டுக் 'காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடு'தலாகிய திருவருளைப் புரிவர். விளையாடுதல்; தற்பயன் கருதாது பிறர் பயன் நாடி எளிதாகவும் இனிதாகவும், விழைவுடனும், தொடக்குணாதும், பகையாதும் புரியும் வெற்றிச் செயல். இவ் விளையாட்டினை அருளிப்பாடு என்று கூறுதலே அமைவுடைத்து. இவ்விருவர் அருளிப் பாட்டினால் பருவங்கள் தோறும் பயன் பலவாக விளையும் அனைத்தும் நிகழ்வனவாகும். திருவாகிய நடப்பாற்றல் மாயையுடன் திருவுள்ளம் ஒன்றுதலாகிய உன் முகத்தைச் செய்தருளின் உலகமெலாம் தோன்றி நின்று நிகழும் என்க.

திரு ஒன்றில் - சத்தி சிவத்தோடும் கூடில்.

## 384. புகுந்தறி வான்புவ னாபதி அண்ணல்

384. புகுந்தறி வான்புவ னாபதி அண்ணல்
புகுந்தறி வான்புரி சக்கரத் தண்ணல்
புகுந்தறி வான்மலர் மேலுறை புத்தேள்
புகுந்தறி யும்முடிக் காகிநின் றாரே.

புவனாபதி அண்ணலாகிய அரனிடமாகச் சிவபெருமான் உயிர்க்கு உயிராய்ப் புகுந்து நின்று அவன் தொழிலை உணர்த்தியும் உணர்ந்தும் அருள்வன். அதுபோல் சக்கரத் தண்ணலாகிய அரியினிடமாக நின்றும் அருள்வன். அதுபோல் செந்தாமரை மேல் உறைவானாகிய அயனிடத்தும் அவ்வாறே நின்றருள்வன். இம் முத்திறத்தோரும் புகுந்தறிந்து முடிப்பிக்கும் சிவபெருமானின் முடித்தலாகிய நிறை வேற்றுதற்குக் கருவியாகி நின்றனர். புவனாபதி - உலக முதல்வியின் முதல்வன் என்றலுமாம்.

புவனாபதி அண்ணல் - உருத்திரன். உழக்கு - அளவு கருவி.

# 385. ஆணவச் சத்தியும் ஆம்அதில் ஐவருங்

385. ஆணவச் சத்தியும் ஆம்அதில் ஐவருங்
காரிய காரண ஈசர் கடைமுறை
பேணிய ஐந்தொழி லால்விந்து விற்பிறந்து
ஆணவம் நீங்கா தவரென லாகுமே.

ஆணவ ஆற்றல் அகன்றாலும் பயிற்சி வயத்தான் ஏற்படும் வாசனையாகிய பசையாற்றலையே ஆணவச் சத்தி என்றனர். அப்பசையாற்றலகலத் தூமாயையில் தோன்றும் நிலைக்களம் ஐந்தாகும். அவற்றின்கண் வாழும் உயர்ந்த உயிரினத்தவரும் ஐவராவர். இவர்களை இயைந்தியக்கும் காரணக் கடவுளரும் ஐவராவர். இவ்விருவகையினரையும் முறையே உயிர்ப்பால் உடையான்பால் எனக் கூறுவர். உயிர்ப்பால் - அணுபக்கம். உடையான்பால் - சம்புபக்கம். இவ்வைவருள் அருளோனாகிய சதாசிவ நிலையிலுள்ள உயிர்ப்பாலார், நுகர்வுப் பசையுடையர். நுகர்வுப் பசை - போக வாசனை. அதன்பின் ஆண்டான் மெய்யாகிய ஈசுரதத்துவத்து ஆட்டுதற் பசையாகிய அதிகார மலவாசனையுடைய உயிர்ப்பாலார் உறைவர். ஆசான் மெய்யாகிய சுத்த வித்தியா தத்துவத்து மலவாசனையுடையாராய்க் கீழுள்ள குணதத்துவத்திருந்து திருவாணைவழி படைத்தல், காத்தல், துடைத்தல்களைப் புரியும் அயன் அரி அரன் வானவர்கோன் முதலாயினாரைத் தூண்டித் தொழிற்படுத்தும் அரன் அரி அயன் வேந்தன் முதலியோராகிய உயிர்ப்பாலார் உறைவர். இந் நிலைகளனைத்தும் முழுமுதற் சிவபெருமான் புரிந்தருளும் ஐந்தொழிலால் தூமாயையாகிய

விந்துவினின்றும் அமைப்புமுறைப் பகுப்பாம் விருத்தியாய்த் தோன்றும். இவர்களனைவரும் மலப்பசையுடையவரே. அக்கருத்தால் ஆணவம் நீங்காதவரென்றனர்.

அமைப்புமுறைப் பகுப்பு - விருத்தி; பகுப்பமைப்பு.

ஆணவ...ஐவர் - ஆணவமலம் ஒன்றுடைய அணுபட்ச சதாசிவராதி ஐவர். காரிய காரண ஈசர் - அணுபட்ச சம்புபட்சத்தார். விந்து - சுத்த மாயை.

## 386. உற்றமுப் பாலொன்று மாயாள் உதயமா

386. உற்றமுப் பாலொன்று மாயாள் உதயமா
மற்றைய மூன்று மாயோ தயம்விந்து
பெற்றவன் நாதம் பரையிற் பிறத்தலால்
துற்ற பரசிவன் தொல்விளை யாட்டிதே.

அருஞ்சைவர் தத்துவம் முப்பத்தாறனுள் நிலமுதல் மாயையீறாகிய தத்துவம் முப்பத்தொன்று. இம் முப்பத்தொன்றும் தூவாமாயை என்று சொல்லப்படும். இக் கருத்தினுக்குப் பாடம் 'முப்பானொன்று' என்றிருத்தல் வேண்டும். அங்ஙனம் கொண்டால், மற்றை மூன்றாகிய ஆசான்மெய் ஆண்டான்மெய் அருளோன்மெய் என்னும் மூன்றும் தூமாயையின் விளக்கங்களாகும். அதன்மேல் விந்து. இவ் விந்து நாதத்தில் தோன்றும். நாதம் பரைநிறைவில் தோன்றும். இவை அனைத்தும் சிவபெருமான் பரையில் பொருந்துவதால் தோன்றுவன. இனி முப்பால் படைத்தல் காத்தல் துடைத்தல் ஆகிய தொழிலுக்குரிய முப் பண்புகளென்றலும் ஒன்று. இம் முப்பண்புகள் மூலப்பகுதியில் தோன்றுவன. இவை அமைதி ஆட்சி அழுந்தல் எனக் கூறுப. இவற்றை முறையே சத்துவம் இராசதம் தாமதம் என்ப. இம் மாயையின் குணம் காரியக் கடவுளர்க்கு உள்ளன. உணர்த்துமெய், உணர்வுமெய், உடன்மெய் ஆகிய மூன்றும் காரண மாயையில் தோன்றுவன. இம் மூன்றும் முறையே விந்து மோகினி மான் என்று சொல்லப்படும். விந்து - தூமாயை. மோகினி - தூவாமாயை. மான் - மூலப்பகுதி. விந்து நாதத்தில் தோன்றும். நாதம் திருவருள் நிறைவில்

தோன்றும். இவையனைத்தும் நீக்கமறக் கலந்து வேறற நிற்கும் பரசிவத்தின் தொன்மைத் திருவிளையாட்டென்ப. காரியக் கடவுளர் உயிர்ப் பகுதியினர். பரையில் - திருவருளாணை இயைந்தியக்கலால்.

முப்பால் - முக்குணம். உமையாளுதயம் - சிற்சத்தியிடத்துத் தோன்றும்.

## 387. ஆகாய மாதி சதாசிவ ராதியென்

387. ஆகாய மாதி சதாசிவ ராதியென்
போகாத சத்தியுட் போந்துடன் போந்தனர்
மாகாய ஈசன் அரன்மால் பிரமனாம்
ஆகாயம் பூமி காண அளித்தலே.

வான் வளி தீ நீர் நிலம் என்னும் ஐம்பூதங்களும், அவற்றை முறையே இயைந்தியக்கும் கண்காணித் தெய்வங்கள் அருளோன், ஆண்டான், அரன், அரி, அயன் என்னும் ஐவரும் தோற்றக் கேடில்லாத திருவருளினாற்றலுடன் போந்தனர். இத் தோற்றத்தை அருள் வெளியாகிய மாகாயத்தில் தோன்றியதென்ப. அருளோன் ஆண்டான் அரன் அரி அயன் என்னும் இவர்களால் நாம் காணும் பருமையான வான் முதல் ஐந்தும் தோன்றின. அருளோன் - சதாசிவன். ஆண்டான் - ஈசுரன்.

காண அளித்தல் - புலனுக்குத் தோன்றுமாறு உண்டாக்கல்.

## 388. அளியார் முக்கோணம் வயிந்தவந் தன்னில்

388. அளியார் முக்கோணம் வயிந்தவந் தன்னில்
அளியார் திரிபுரை யாம்அவள் தானே
அளியார் சதாசிவ மாகி அமைவாள்
அளியார் கருமங்கள் ஐந்துசெய் வாளே.

தூமாயையின்கண் திருவருள் நிலைக்களமாம் முக்கோணம் தோன்றும். அதன்கண் வீற்றிருப்பவள் திரிபுரை என்று சொல்லப்படுவள். அருளோனாகிய சதாசிவத்திற்கு உடலாய் அமைவாள். அவள் படைத்தல் காத்தல் துடைத்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழிலையும் புரிவள். அவ்வைந்தொழிலும் அருளால் புரியப்படுவனவே.

அளி - கருணை. முக்கோணம் வயிந்தவம் - முக்கோணச் சக்கரத்தில் உள்ள பீஜ எழுத்து.

## 389. வாரணி கொங்கை மனோன்மணி மங்கலி

389. வாரணி கொங்கை மனோன்மணி மங்கலி
காரணி காரிய மாகக் கலந்தவள்
வாரணி ஆரணி வானவர் மோகினி
பூரணி போதாதி போதமு மாமே.

தன் கண்ணை மறைக்கும் தன்மை வாய்ந்த கச்சுப்பூண்டு விளங்கும் திருவருள் அருளோன் நிலையில் மனோன்மணி எனப்படுவள். சிவன் நிலையில் மங்கலி எனப்படுவள். மங்கலம்: மாண்கலம் என்னும் சொல்லின் மரூஉ. மாண்கலம் பூட்டுவாரும் காப்பாரும் நலக்குரியாராவர். மாண்கலம் பூண்பார் நல்லாராவர். நல்லார் சிவஞானமுடையார். திருவருளம்மையே அனைத்திற்கும் வினைமுதற் காரணியாவள். காரியப் பொருள்களிற் கலந்து இயக்கலால் கலந்தவளும் ஆவள். இது படைத்தல். வாரணி - காத்தலைப் புரிபவள். ஆரணி - துடைத்தலைப் புரியும் காளி. வானவர் மோகினி - மறைத்தலைப் புரியும் ஆதி. பூரணி - அருள்தலைப் புரியும் திருவருள். போதம் - ஆருயிரின் சிற்றறிவினைப் புணர்ந்தியக்கும் அறிவுத் திருவருள். அதிபோதம் - இயற்கைப் பேரறிவுப் பெரும் பொருள். இங்ஙனம் எல்லாமாய் நிற்பவள் திருவருளம்மை. போதாதி போதம்: போதம் + அதிபோதம். போதம் - சிற்றறிவு. அதிபோதம் - பேரறிவு.

## 390. நின்றது தானாய் நிறைந்த மகேசுரன்

390. நின்றது தானாய் நிறைந்த மகேசுரன்
சென்றங் கியங்கும் அரன்திரு மாலவன்
மன்றது செய்யும் மலர்மிசை மேலயன்
என்றிவ ராக இசைந்திருந் தானே.

திருவருளுடன் தானாய் நின்றுநிறைந்த ஆண்டானும், திருவாணைவழி இயக்க இயங்கும் அரன் அரி அயன் என்னும் மூவரும் கலப்பால் சிவபெருமானே யாவர். திருவினைப் பெருவாழ்வெனக் கொண்டு விளங்குபவன் திருமால். மணம் கமழும் செந்தாமரை மேலுறைபவன் திசைமுகனாகிய அயன். இசைந்திருத்தல் - திருவருளால் பொருந்தியிருத்தல்.

## 391. ஒருவனு மேஉல கேழும் படைத்தான்

391. ஒருவனு மேஉல கேழும் படைத்தான்
ஒருவனு மேஉல கேழும் அளித்தான்
ஒருவனு மேஉல கேழும் துடைத்தான்
ஒருவனு மேஉல கோடுயிர் தானே.

ஒப்பில்லாத விழுமிய முழுமுதற் சிவபெருமானாகிய ஒருவனே உலகங்கள் ஏழினையும் படைத்தருளினன். அவனே காத்தல் துடைத்தல் முதலியவற்றையும் புரிந்தருளினன். அவனே கலப்பினால் உலகமாய் உயிராய்த் திகழ்கின்றனன். உயிரினங்களாகிய அரன் அரி அயன் என்னும் மூவரும் சிவபெருமான் திருவாணை பெற்றுத் தத்தம் தொழில்களை இயற்றுவோராதலின் ஏவுதற் கருத்தாவாகிய சிவபெருமானாலேயே அவைகளும் செய்யப்படுவன. படைத்தல் காத்தல் துடைத்தல்களாகிய முத்தொழிலையும் முழுமுதற் சிவன் திருவுள்ளமாகிய நினைப்பளவானே செய்தருள்வன். அம்மட்டோ உயிரின் வேண்டுகோளை ஏற்று அவ்வுயிர்களைக் கொண்டும் புரிவித்தருள்வன். இஃதன்றோ விழுமிய கடவுட்டன்மை என்ப!

## 392. செந்தா மரைவண்ணன் தீவண்ணன் எம்இறை

392. செந்தா மரைவண்ணன் தீவண்ணன் எம்இறை
மைந்தார் முகில்வண்ணன் மாயஞ்செய் பாசத்தும்
கொந்தார் குழலியர் கூடிய கூட்டத்தும்
அந்தார் பிறவி அறுத்துநின் றானே.

எம் இறையாகிய சிவபெருமான் திருவடித் தோற்றத்தால் செந்தாமரை வண்ணமும், திருவடியுணர்வால் தீவண்ணமும் பொருந்தியுள்ளவன். வலிமை மிக்க முகில்வண்ணனாகிய மாயன் வினைக்கீடாகச் செய்யும் மயக்க ஆசையால் மணங்கமழும் பூங்கொத்து நிறைந்த மாலை சூடிய கூந்தலையுடைய பெண்களும் ஆடவரும் கூடிய கூட்டத்து இருள் நீங்கா ஆருயிர்கட்குப் பிறவி வந்து எய்தும். அப் பிறவியினை நற்றவத்தால் அறுத்து அருள்புரிவன் சிவபெருமான். பிறப்பறுத்தலும் சிறப்புறுத்தலும் சிவபெருமான் ஒருவனுக்கே உரிய ஒப்பில் திருவருட் செயலாகும். அந்தார்: அந்தம் + ஆர், என்பது அந்தார் என நின்றது. அந்தம் - இருள். ஆர் - நிறைந்த.

## 393. தேடுந் திசைஎட்டுஞ் சீவன் உடல்உயிர்

393. தேடுந் திசைஎட்டுஞ் சீவன் உடல்உயிர்
கூடும் பிறவிக் குணஞ்செய்த மாநந்தி
ஊடு மவர்தம துள்ளத்தின் உள்நின்று
நாடும் வழக்கமும் நான்அறிந் தேனே.

எட்டுத் திசைகளிலும் வாழ்வின் பொருட்டு ஆருயிர்கள் உடலை நாடுகின்றன. அந் நாட்டத்தை வினைக்கீடாக உடலோடு கூட்டி நிறைவேற்றியருள்பவன் மாநந்தியாகிய சிவபெருமான். குணஞ்செய்தல் என்பது அவ்வுயிர்கள் வேண்டியதையே அளித்து நலம்புரிதல். பிறவி எடுத்தவுயிர்கள் சிவனை அடைய வேண்டிய ஒழுக்க நெறியில் நில்லாது ஊடுதலாகிய மாறுபாட்டைப் புரிகின்றன. அம் மாறுபாட்டைப்புரியும் அவ்வுயிர்களின் உள்ளத்துள் மறைந்து நின்று அதனை ஆராயும் முறைமையினையும் மேற்கொண்டுள்ளான் சிவன். அவனருளால் அதனையும் அறிந்துள்ளேன் கூடும் குணம் - கூடும் தன்மை என்றலும் ஒன்று. நாடும் - நாடச் செய்யும் என்றலும் ஒன்று. இதற்குப் பிறவினை தன் வினையாய் நின்றதென்க.

## 394. ஓராய மேஉல கேழும் படைப்பதும்

394. ஓராய மேஉல கேழும் படைப்பதும்
ஓராய மேஉல கேழும் அளிப்பதும்
ஓராய மேஉல கேழும் துடைப்பதும்
ஓராய மேஉல கோடுயிர் தானே.

சிவனும் சிவையும் கூடும் கூட்டத்தாலேயே உலகங்கள் காரியப்படுகின்றன. உடலோடு உயிர் கூடி வாழ்கின்றன. சிவனும் சிவையும் ஒன்றே இருநிலைப்பட்டுக் கூடி நிற்றலின் ஓராயம் என்றனர். ஓராயம் - ஒப்பில்லாத கூட்டம். இதனை அது தானால் என்னும் தாதான்மியம் என்ப. அவ்வாறே சிவனும் சிவையும் கூடிய ஓராயத்தால் உலகம் ஏழினையும் காத்தருள்கின்றனன். அதுபோல் துடைத்தும் அருள்கின்றனன். அதுபோல் உலகுடனும் உயிருடனும் கலந்து வேறற நின்றியக்குவதும் ஓராயமேயாம். உலகோடுயிர் தானே: உலகுயிர்களை இயைந்தியக்கும் சிவனே.

ஓராயம் - சிவமும் சத்தியும் கூடிய கூட்டம்.

# 395. நாதன் ஒருவனும் நல்ல இருவருங்

395. நாதன் ஒருவனும் நல்ல இருவருங்
கோது குலத்தொடுங் கூட்டிக் குழைத்தனர்
ஏது பணியென் றிசையும் இருவருக்
காதி இவனே அருளுகின் றானே.

எல்லாரானும் நத்தப்படும் முதன்மையுடையவன் நாதன். அவன் ஒருவனாகிய சிவபெருமானே ஆவன். நன்மைக்குரிய அரியும் அயனும் ஆகிய இருவரும் குற்றம் பொருந்திய தூவாமாயை ஆக்கப்பாடு களாகிய முப்பத்தொரு தத்துவங்களுடனும் கூட்டிக் குழைக்கப்பட்ட உடம்பினையுடையர். நிலமுதல் அசுத்தமாயை ஈறாகிய தத்துவங்கள் முப்பத்தொன்றென்ப. அவ்விருவரும் அடியேங்கட்குக் கட்டளையிடும் பணி ஏதென்று சிவபெருமானிடத்து இரந்து பின்னிற்பர். ஆதியாகிய நடப்பாற்றலோடு கூடிய சிவபெருமான் அவ்விருவர் வேண்டுகோளையும் ஏற்றருளி அவர் செய்ய வேண்டிய காத்தல் படைத்தல்களை முறையே அவர்கட்கு அருள்புரிவன்.

## 396. அப்பரி செண்பத்து நான்குநூ றாயிரம்

396. அப்பரி செண்பத்து நான்குநூ றாயிரம்
மெய்ப்பரி செய்தி விரிந்துயி ராய்நிற்கும்
பொய்ப்பரி செய்திப் புகலும் மனிதர்கட்
கிப்பரி சேஇருள் மூடிநின் றானே.

சிவபெருமான் அருளிய திருவாணையினால் அயன் நால்வகைத் தோற்றத்து ஏழ்வகைப் பிறப்பினுள் எண்பத்து நான்கு நூறாயிர வேறுபாட்டோடு கூடிய உடம்புகளை ஆருயிர்கட்குப் படைத்தளித்தனன். சிவபெருமான் அம்மையப்பராக விளங்கும் தொன்மை மெய்ப்பரிசினால் ஆருயிர்கள் இங்ஙனம் விரிந்து நின்றன. இவ்வுண்மையினை யுணராது பாழ்ங்கோளராகிய நாத்திகர்கள் இப் படைப்பினைப் பொய்த்தன்மை என்று புகல்வர். சிவபெருமான் அவர் தம் ஆணவ ஆற்றல் தொழிற்பட்டு அகலும் பொருட்டு அவர்களை அவ் வாணவ வல்லிருள் மூடுதலிலேயே வைத்து நின்றனன்.

# 397. ஆதித்தன் சந்திரன் அங்கிஎண் பாலர்கள்

397. ஆதித்தன் சந்திரன் அங்கிஎண் பாலர்கள்
போதித்த வானொலி பொங்கிய நீர்புவி
வாதித்த சத்தாதி வாக்கு மனாதிகள்
ஓதுற்ற மாயையின் விந்துவின் உற்றதே.

தூவாமாயையின் காரியமாகிய மூலப்பகுதியின் காரியங்களாக ஞாயிறு, திங்கள், தீ ஆகிய முச்சுடர்களும் எண்புலக் காவலர்களும் தோன்றினர். எண்புலக் காவலராவர்: ஞாயிறு, நமன், வருணன், சோமன், தீ, நிருதி, வாயு, சாந்தன் என்போராவர். போதத்திற்கு வாயிலாகிய எழுத்தோசைக்கு இடனாக இருப்பது வான். அவ் வானும், ஒலியாகிய காற்றும், பெருகும் தன்மை வாய்ந்த நீரும், நிலமும் ஆகிய பூதங்களும் தூவாமாயையின் காரியங்களே. அளவையான் ஆராய்ந்து முடித்தலாகிய வாதித்த சத்தாதி எனப்படும். ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் எனப்படும் தன்மாத்திரை ஐந்தும் அதன் காரியங்களே. வாக்காதியாகிய செய்தற் கருவிகள் எனப்படும் வாய், கால், கை, எருவாய், கருவாய் என்னும் ஐந்தும் அதன் காரியங்களே. மனாதிகள் எனப்படும் உட்கலனாகிய எண்ணம், மனம், எழுச்சி, இறுப்பாகிய நான்கும் அதன் காரியங்களே. இவற்றை முறையே சித்தம் மனம் அகங்காரம் புத்தி எனவுங் கூறுப. இனம்பற்றிச் செவி, கண், மெய், நாக்கு, மூக்கு என்னும் அறிதற் கருவிகள் ஐந்தும் அதன் காரியங்களே யாம். சித்தாந்த சைவ நூற்கண் பேசப்படுகின்ற தூமாயையின் கீழாய் அடங்கிய

மூலப் பகுதியின்கண் நின்று முறையாகத் தோன்றியனவே மேற்கூறியவைகள். உற்றதே - திருவருளாணையால் தோன்றியது. ஏ: ஈற்றசை.

## 398. புகுந்துநின் றான்வெளி யாய்இரு ளாகிப்

398. புகுந்துநின் றான்வெளி யாய்இரு ளாகிப்
புகுந்துநின் றான்புகழ் வாய்இகழ் வாகிப்
புகுந்துநின் றான்உட லாய்உயி ராகிப்
புகுந்துநின் றான்புந்தி மன்னிநின் றானே.

வெளியாகிய சிற்றறிவினை விளக்குதற் பொருட்டு நடப்பாற்றல் வாயிலாக அச் சிற்றறிவுடன் கலந்து நின்றனன் சிவபெருமான். அதுபோல் இருளாகிய அறியாமையைத் தொழிற்படுத்தும் பொருட்டு அதனுடனும் தோய்ந்தும் தோயாது நிற்கின்றனன். வெளி - ஒளி; சிற்றறிவு. சிற்றறிவுள்ளவர் சிவனைத் தொழுது புகழ்வர். அறியாமை வயப்பட்டவர் பழுதுரைத்து இகழ்வர். இது 'நல்லார் அறஞ்சொல்லப் பொல்லார் புறங்கூற' என்னும் ஆளுடைய பிள்ளையார் அருளிய செந்தமிழ்த் திருமறையான் உணரலாம். அவ்வவர் புகழ் இகழ் மொழியினுள்ளும் புகுந்து நின்றனன் சிவன். ஆருயிர்கட்கு உடலாகவும் உயிர்க்கு உயிராகவும் புகுந்து நின்றனன். அங்ஙனம் நின்றருளிய சிவன் ஆருயிர்களின் அறிவுக்கு அறிவாய் அவ்வறிவினை விளக்கி நிலை பெற்று நின்றனன். மன்னுதல் - நிலைபெறுதல். புந்தி - அறிவு.

## 399. தானே திசையொடு தேவரு மாய்நிற்குந்

399. தானே திசையொடு தேவரு மாய்நிற்குந்
தானே உடலுயிர் தத்துவ மாய்நிற்குந்
தானே கடல்மலை யாதியு மாய்நிற்குந்
தானே உலகில் தலைவனு மாமே

சிவபெருமான் கலப்பினால் பத்துத் திசையும் பற்றுடைத் தேவருமாய்த் தானாகவே நிற்பன். அதுபோல் உடலாய் உயிராய் ஏனைய தத்துவங்களுமாய் நிற்பன். அதுபோல் கடலும் மலையும் முதலாகிய எல்லாப் பொருள்களுமாய் நிற்பன். பொருள்தன்மையால் அச் சிவபெருமான் இவை அனைத்திற்கும் முதல்வனுமாய் நிற்பன்.

## 400. உடலாய் உயிராய் உலகம தாகிக்

400. உடலாய் உயிராய் உலகம தாகிக்
கடலாய்க் கார்முகில் நீர்பொழி வானாய்
இடையாய் உலப்பிலி எங்குந்தா னாகி
அடையார் பெருவழி அண்ணல்நின் றானே.

முழுமுதல் விழுப்பொருளாம் சிவபெருமான் கலப்பால் உடல் உயிர் உலகமாகவும் நின்றனன். கடலாய், அக் கடனீரைப் பருகிக் கருக்கொண்ட கருமுகிலாய் நின்றனன். அம் முகிலால் பொய்யாது பெய்யப்படும் நீர் நிறை வானாகவும் நின்றனன். இவை அனைத்தினும் இடையென்று சொல்லப்படும் உள்ளுறைபவனாய் நிற்பவனும் அவனே. என்றும் ஒருபடித்தாய் அழிவின்றி நிற்பவனும் சிவனே. எங்குந் தானாகி நிற்பவனும் அவனே. தன் திருவடியைப் புகலிடமாக் கொண்டு வந்து சாரும் மெய்யடியார்கள் என்றும் இன்புற்று வாழும் வண்ணம் அவனருளால் பெருவழி வகுத்தருளினன். பெருவழி - சித்தாந்தச் சைவத் திருநெறி. அவனே யாவர்க்கும் யாவைக்கும் அண்ணலாகிய முழுமுதல்வனாய் நின்றருளினன்.

## 401. தானொரு காலந் தனிச்சுட ராய்நிற்குந்

401. தானொரு காலந் தனிச்சுட ராய்நிற்குந்
தானொரு கால்சண்ட மாருத மாய்நிற்குந்
தானொரு காலந் தண்மழை யாய்நிற்குந்
தானொரு காலந்தண் மாயனு மாமே.

சிவபெருமான் ஒரு காலத்து ஒப்பில்லாத பேரறிவுப் பெருஞ்சுடராய் நிற்பன். ஒருகாலத்துப் பெருங்காற்றாகவும் நிற்பன். ஒருகாலத்துக் குளிர்ந்த பெருமழையாய் நிற்பன். ஒரு காலத்துத் தொழிலின் பொருட்டுத் தலைக்குணத்தை மேற்கொண்ட குளிர்ந்த மாயவனுமாய் நிற்பன்.

தலைக்குணம் - அமைதிக்குணம்; சாத்துவிககுணம். இத் திருப்பாட்டான் சிவபெருமான் எல்லாமாய் இயைந்து நின்று அவற்றை இயக்கும் எழில் ஓதப்படுகின்றது.

## 402. அன்பும் அறிவும் அடக்கமு மாய்நிற்கும்

402. அன்பும் அறிவும் அடக்கமு மாய்நிற்கும்
இன்பமும் இன்பக் கலவியு மாய்நிற்கும்
முன்புறு காலமும் ஊழியு மாய்நிற்கும்
அன்புற ஐந்தில அமர்ந்துநின் றானே.

(ப. இ.) அனைத்துயிர்கள் மாட்டுங்கொள்ளும் அன்பால் ஒருவர்க்கு உண்மையறிவு உண்டாகும். அவ்வுண்மை அறிவினால் ஒழுக்கத் தனிச் சிறப்பாம் அடக்கமுடைமை உண்டாகும். எனவே அப் பண்புகளினிடமாக நின்றருள்பவன் சிவபெருமான். அதனால் அப் பண்புகளே சிவபெருமான் என ஓதப்பட்டன. அதுபோல் நல்லறக் காதலர் தம்முள் சிவநினைவுடன் எய்தும் இன்பமும், அவ் வின்பத்தின் பொருட்டுக் கூடும் கூட்டத்துணையும், சிவபெருமானே யாவன். பேரூழிப்பின் உலகங்களனைத்தையும் திருவருளால் ஒருங்கு தோற்றுவிக்கும் பெரும் பொருள் சிவபெருமானே. அங்ஙனம் தோற்றுவித்து பெரும் பொருள் சிவபெருமானே. அங்ஙனம் தோற்றுவித்து நிலைநிறுத்திப் பின் பேரொடுக்கம் செய்யும் ஊழிப் பெருமானும் சிவனே. இது 'தொல்லூழி தடுமாறித் தொகல் வேண்டுங் காலத்தால், பல்வயின் உயிரெல்லாம் படைத்தான்கட் பெயர்ப்பான்' (கலித்தொகை, 129) என்பதனால் விளங்கும். யாவரும் எண்மையாக வழிபட்டு ஈடேறும் பொருட்டு அன்பு செய்தல் வேண்டும். அதற்கேற்றவாறு ஐம்பெரும் பூதவுருவாய் அமர்ந்து நிற்பவனும் சிவனே. ஆய்நிற்கும் - காதலர்தம் கூட்டம் நிகழ்
வதற்குக் காரணமாய் அருளும் சிவனும் அவ்வுயிர்களுடன்

உடனாய் நிற்பன். ஐந்தில் அமர்ந்து நின்றான் என்பதற்குத் திருவைந்தெழுத்திலமர்ந்து நின்றான் எனலுமொன்று.

## 403. உற்று வனைவான் அவனே உலகினைப்

403. உற்று வனைவான் அவனே உலகினைப்
பெற்று வனைவான் அவனே பிறவியைச்
சுற்றிய சாலும் குடமுஞ் சிறுதூதை
மற்றும் அவனே வனையவல் லானே.

மாயாகாரியமாகிய உலகனைத்தையும் முதற்காரணமாம் மாயையினின்றும் படைத்தருள்வன் சிவன். ஆயின் சிவபெருமான் வினை முதற் காரணன் என்பது குறிப்பெச்சம். ஆருயிர்களுக்கு வினைக்கீடாகப் பிறவியைப் பலவாறு படைத்தருள்பவனும் அவனே. 'பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்' என்பது ஓரறிவு முதல் ஆறறிவு ஈறாகவுள்ள உயிர்கள் என்னும் பாகுபாடு பருவுடலைப் பற்றியனவே ஆகும்; இந்நிலை எய்துவதற்கு முன் ஆண்டவன் படைத்தருளும் எட்டுறுப்புக்களோடு கூடிய நுண்ணுடம்பினையேயாம். நுண்ணுடம்பு மலத்தைப் பற்றிப் படைத்தளித்த யாவர்க்கும் ஒன்றுபோல் அமைந்த இயற்கைப் பிறப்புடம்பாகும். அதனாலும் அஃது எல்லாவுயிர்க்கும் ஒன்று போலமைந்த இயற்கையுடம்பாகும். சிறப்புடம்பு நால்வகைத் தோற்றத்து வினைக்கீடாக அமையும் உடம்புகளேயாம். அக் குறிப்புச் 'சிறப்பொவ்வா செய்தொழில் வேற்றுமையான்' என்பதனாற் பெறப்படும். ஈண்டுச் சிறப்பு: வினைக்கீடாகச் செய்யவேண்டிய தொழிலுக்கு வாய்ப்புடைய உடம்பு. இது செயற்கையுடம்பாகும். இவ்வுடம்புகள் இருவினைக்கீடாகப் பலவேறு வகையாகக் கொடுக்கப்படுகின்றன. அதற்கு ஒப்பு

குயவன் சிறிய குடும்பம் பெரிய குடும்பம் முதலியவற்றுக்கு வேண்டும், சால் குடம் சிறு தூதை முதலியவற்றைப் படைத்துக் கொடுப்பதாகும். தூதை - சிறு முட்டி. சால் குடம் முதலியவற்றை உருவகமாக உடம்புகளுக்குக் கொள்க. இவற்றைப் படைத்தருளும் வல்லான் சிவபெருமான் ஒருவனே.

## 404. உள்ளுயிர்ப் பாயுட லாகிநின் றான்நந்தி

404. உள்ளுயிர்ப் பாயுட லாகிநின் றான்நந்தி
வெள்ளுயி ராகும் வெளியாய் நிலங்கொளி
உள்ளுயிர்க் கும்உணர் வேயுட லுட்பரந்
தள்ளுயி ராவண்ணந் தாங்கிநின் றானே.

உயிர்மூச்சாகவும், அம் மூச்சின் நிலைக்களமாகிய உடம்பாகவும் கலப்பு முறையில் நின்று நிறையும் பெருமை மிக்கவன் நந்தியாகிய சிவபெருமான். மலம் நீங்கிய உயிர் வெள்ளுயிர் என்பபடும். அவ்வுயிர்க்கு இடம் கொடுத்தருளும் வெளியாய் நிற்பவனும் சிவனே. வெளி - திருவருள்வெளி. உயிருள் உணர்வாய் நிற்பவனும் சிவனே. உயிரை உடலாகக் கொண்டு வீற்றிருந்தருளும் விழுப்பொருளும் சிவனே. பரம் - விழுப்பொருள். தள்ளுண்ட உயிராக வண்ணம் தாங்கி நின்றவனும் சிவனே என்பதற்குத் தள்ளப்படும் உயிர் மேலாகும் வண்ணம் அவ்வுயிரினைத் தாங்கி நிற்பவனும் சிவனே என்றலும் ஒன்று.

தள்ளுயிர் - பல அண்டங்களிலும் செலுத்தப்படும் உயிர்.

## 405. தாங்கருந் தன்மையுந் தானவை பல்லுயிர்

405. தாங்கருந் தன்மையுந் தானவை பல்லுயிர்
வாங்கிய காலத்து மற்றோர் பிறிதில்லை.
ஓங்கி எழுமைக்கும் யோகாந்த மவ்வழி
தாங்கிநின் றானும்அத் தாரணி தானே.

சிவபெருமான் பல்லுயிர்களையும் வேறறக் கலந்து தாங்குவதாகிய காத்தலைப் புரியும் அரிய இயல்பு வாய்ந்தவன். அவ்வுயிர்களை ஒடுக்கும் பேரொடுக்கக் காலத்துக் காப்பதும் அவனே; மற்றோர் எவரும் இலர். மிகச் சிறந்து தோன்றும் தலைமைப் பாட்டினை எய்துவதற்குரிய செறிவு நெறியைக் காப்பவனும் அவனே. செறிவு வழியாற் பெறப்படும் அறிவுநெறியைக் காப்பவனும் சிவனே. அவ்வுலக இன்பநிறைவும் தானே ஆவன். தாங்கல் - காத்தல். அவ்வழி - அச் சிறந்த அறிவு நெறி. அத்தாரணி - வீட்டுலகு. செறிவு நெறி - யோகநெறி. அவ்வழி - அந்த யோகநெறியாக வரும். அறிவுநெறி - ஞானநெறி.

தாங்கருந் தன்மை - காக்கும் தன்மை.

## 406. அணுகினுஞ் சேயவன் அங்கியிற் கூடி

406. அணுகினுஞ் சேயவன் அங்கியிற் கூடி
நணுகினும் ஞானக் கொழுந்தொன்று நல்கும்
பணிகினும் பார்மிசைப் பல்லுயி ராகித்
தணிகினும் மன்னுடல் அண்ணல்செய் வானே.

சிவபெருமான் ஆருயிர்களுடன் கலப்பால் ஒன்றாய்க் கூடியிருப்பினும் அவ்வுயிர்களின் கூட்டறிவிற்கும் சிற்றறிவிற்கும் எட்டாத சேய்மையன். இது, கற்பாரொடு கலந்து கற்பிப்பார் காண்குறினும், கற்பார் காணாவறிவர்காண், என்பதனால் விளங்கும் அவ்வுயிர்கள் உயிர்ப்புப் பயிற்சியால் மூலத்தீயுடன் ஒன்றித் திருவருளால் மேல்நோக்கிச் செல்லுதல் வேண்டும். சென்றால் திருவடியுணர்வாகிய ஞானக்கொழுந்தினைச் சிவபெருமான் நல்கியருள்வன். பல்லுயிர்களையும் அவ்வவ்வுயிர்களுக்கேற்ற பணியிற் செலுத்தி உடனாய் நிற்பினும், அவ்வுயிர்களால் காணுதற்கு அரியன். அவ்வுயிர்களுடன் கலந்து தங்கினும் பொருள் தன்மையால் வேறாயுள்ளவன். அவனே மலங்கழுவி நலங்கெழுமுவதற்கு வாயிலாகிய உடலினைப் படைத்தளித்தருளினன். அவன் அருள்வழி நிற்பார்க்கு மலம் கழுவப்படும். மலங்கழுவப்படவே அவ்வுயிர் தலைமைப்பாடமைந்த சிவபெருமான் திருவடியிணையினைத் தலைக்கூடும். கூடவே அதுவும் தலைமைப்பாடெய்தும். இதுவே அண்ணல் செய்தானே என்னும் கருத்தாகும். இதற்கு ஒப்பு, திருமண வீட்டில் கூடினார் அனைவரும்

திருமண வீட்டுப் பெயரும் பொருந்தும் மகிழ்ச்சியும் கொண்டு திகழ்வதாகும். மண்ணுடல்: மலங்கழுவுவதற்குரிய கருவியாகிய வுடல். மண்: முதனிலைத் தொழிற்பெயர். மண்ணுதல் - கழுவுதல்.

அணுகினும் - சீவனுடன் இருந்தாலும்.

## 407. அங்கிசெய் தீசன் அகலிடஞ் சுட்டது

407. அங்கிசெய் தீசன் அகலிடஞ் சுட்டது
அங்கிசெய் தீசன் அலைகடற் சுட்டது
அங்கிசெய் தீசன் அசுரரைச் சுட்டது
அங்கியவ் வீசற்குக் கைஅம்பு தானே.

சிவபெருமான் அங்கியாகி மெய்யுணர்வுத் தீயினை அளித்தருள அத் தீயினைக் கொண்டே அகலிடத்தைச் சுட்டருளினன். சுட்டருளினன் என்பது பேரொடுக்கத்தைச் செய்தருளினன் என்பதாம். அதுபோல் அலைகடலையும் ஒடுக்கியருளினன். அதுபோல் முப்புரத் தசுரரையும் ஒடுக்கியருளினன். அதனால் அம் மெய்யுணர்வுத் தீ சிவபெருமானுக்குக் கைக்கணையாகும். கைக்கணை என்பது எப்பொருளும் அவன் நிலைக்களத்தே தங்குமென்பதாகும். என்னை? பிறிதோர் நிலைக்களம் இன்மையான் என்க. கை அம்பு - செயற்கருவி.

## 408. இலயங்கள் மூன்றினும் ஒன்றுகற் பாந்த

408. இலயங்கள் மூன்றினும் ஒன்றுகற் பாந்த
நிலையன் றழிந்தமை நின்றுணர்ந் தேனால்
உலைதந்த மெல்லரி போலும் உலகம்
மலைதந்த மானிலந் தான்வெந் ததுவே.

இலயங்கள் என்று சொல்லப்படும் ஒடுக்கங்கள் மூவகைப்படும். அவை நாளொடுக்கம், ஊழியொடுக்கம், பேரூழி யொடுக்கம் என்பன. அவற்றுள் ஊழி முடிவின் நிலைமை ஒருகாலத்து அழிந்தமையை அவனருளால் நின்றுணர்ந்தேன். உலைப்பானையிலிட்ட மெல்லிய அரிசி செவ்வியுற ஆக்கப்பெறும் அரி - அரிசி. அதுபோல் உலகம் உயிர்கள் செவ்வியுற அமைக்கப் பெறுவதற்கு நிலைக்களமாகும். சிற்றூழி முடிவில் மான் என்று சொல்லப்படும் மூலப்பகுதியால் தரப்படும் சில மண்ணுலகங்கள் அழியும். அம் மூலப்பகுதி மலைவாகிய மருளைத் தரும் தூவாமாயையினின்றும் தோன்றியது. மூலப் பகுதி தூவா மாயையில் தோன்றிய கலையினின்றும் தோன்றுவதாகும். கலையினை உழைப்பு மெய் என்ப. மூலப்பகுதியே முக்குண உறையுள் காமம் வெகுளி மயக்க விளைவுகள், ஆகமம் மூலப்பகுதியால், கலை மலவாற்றலிற் சிறிது நீக்குதலும் உயிராற்றலை விளக்குதலும் ஒருங்கு செய்யும். மலை - தூவா மாயை. அலைதந்த மானிலம் என்று கொள்ளின் சுவைத் தன்மையும் சேர்ந்த நாற்ற நுண்மையினின்று தோன்றிய நிலமென்க. நுண்மை - தன்மாத்திரை.

இலயங்கள் மூன்று : - தினப்பிரளயம் - கற்பாந்தப் பிரளயம் - கடைப் பிரளயம். உலை தந்த மெல்லரி - உலையிலிட்ட அரிசி. அலை தந்த மானிலம் - அப்புவிலிருந்து உண்டான உலகம்.

# 409. பதஞ்செய்யும் பாரும் பனிவரை எட்டும்

409. பதஞ்செய்யும் பாரும் பனிவரை எட்டும்
உதஞ்செய்யும் ஏழ்கடல் ஓதம் முதலாங்
குதஞ்செய்யும் அங்கி கொளுவியா காசம்
விதஞ்செய்யும் நெஞ்சில் வியப்பில்லை தானே.

ஆருயிர்கள் பிறப்பற்றுச் சிறப்புற்று என்றும் ஒருபடித் தாய் வாழ்தற்குத் துணை செய்யும் இந் நிலவுலகம் பதஞ் செய் பார் எனப்பட்டது. பதம் - இனிய செவ்வி. அத்தகைய இவ்வுலகும் குளிர்ந்த மேகங்கள் தங்கும் பெருமலைகள் எட்டும், ஓசைசேர் ஏழ்கடலும், இவை முதலாம் பிறவும் திருவருள் இயக்கத்தால் தோன்றுவனவாகும். இவற்றைக் காணுந்தோறும், கேட்குந்தோறும், கேட்பிக்குந்தோறும், கேண்மையுறுந்தோறும், நுகருந்தோறும் அளவிலா மகிழ்ச்சி அனைத்துயிர்க்கும் இனைத்தெனக் கூறவொண்ணாதவாறு என்றும் மிகுகின்றது. இவற்றைப் பேரொடுக்கக் காலத்துப் பெரும் பொருட் கிளவியானாகிய சிவபெருமான் சிவஞான அனல் கொளுவி ஒடுக்கின்றனன். அவ்வொடுக்கம் ஆகாச விதஞ்செய்வதாகும். அஃதாவது, உய்த்துணர்வார்க்கு உள்ளதாய்க் கட்புலனாகாததாய் இருப்பதாகும். அதுபோல், மாயகாரியமாகிய உலகம் தன் காரணமாகிய மாயையில் உள்ளதாய் ஒடுங்கித் தோற்ற மில்லதாய் இருக்கும் திருவருளால் இவ்வுண்மை உணரலாகும். அங்ஙனம் உணர்ந்தார் நெஞ்சில் உலக வியப்பு எஞ்ஞான்றும் உறுவதில்லை. உதம் செய்யும் - உதயம் செய்யும்; உதயம்

என்பதன் கடைக்குறை. பார் - உலகம். பனி - குளிர்ந்த மேகம். அங்கி - தீ.

பதம் செய்யும் பார் - ஆன்மாக்களுக்கு இன்பத்தைக் கொடுக்கும் உலகம். முதம் - மகிழ்ச்சி. குதம் - மிகுதி. ஆகாசவிதம் - தோற்றாதபடி.

# 410. கொண்டல் வரைநின் றிழிந்த குலக்கொடி

410. கொண்டல் வரைநின் றிழிந்த குலக்கொடி
அண்டத்துள் ஊறி யிருந்தெண் டிரையாகி
ஒன்றின் பதஞ்செய்த ஓம்என்ற அப்புறக்
குண்டத்தின் மேல்அங்கி கோலிக்கொண் டானே.

திருவருளால் இயக்கப்படும் கொண்டலாகிய மழை திருவருளென்றே கூறப்படும். அம்மழை குலக்கொடி யென்றும் உருவகிக்கப்படும். ஒன்றா உயர்ந்த பெருமலையினின்று ஆருயிர் உய்ய அருவியாக வழிந்தோடிய பெருமழை அண்டத்துள் நிரம்பிற்று. மீண்டும் அண்டத்துள் நின்று ஊற்றெடுத்தது. பெரிய தெளிந்த திரையையுடைய கடலாய், யாறாய், பிற நீர்நிலைகளாய்ப் பொருந்திற்று. பொருந்தி எல்லாப் பொருள்களையும் யாவர்க்கும் பயன்படுமாறு இனிய செவ்வி வாய்க்கச் செய்தது. அதன் மேற்புறத்து வேள்விக் குண்டத்து ஓமென மொழிந்து வளர்க்கப்படும் அழல் தோன்றிற்று. அவ் அழலினைச் சிவபெருமான் வாரிக் கைஏற்றுக் கொண்டனன். இரும் தெண்டிரையாகி - பெரிய தெள்ளிய திரைகளை உடையவாகி. ஒன்றின்பதஞ்செய்து - பொருந்தி இனிய செவ்வியை உண்டாக்கி. ஒன்று + இன்பதம் = ஒன்றின்பதம். ஒன்று: ஒன்றுதல் முதல் நிலைத் தொழிற்பெயர். பதஞ்செய்தல் - செவ்வியுண்டாக்குதல். தலையில் விழுப்புனலும் கையில் மழுத்தீயும் சிவபெருமான் மாட்டுக் காண்கின்றோம். இஃதோர் உண்மையைப் புலப்படுத்தும் உருவகமாகும். விழுப்புனலாகிய கங்கை படைத்தற்காம் ஆதிப் பெருந்திரு

மழுப்படையாகிய தீ அந்தப் பெருந்திரு ஆதிப்பெருந்திரு படைத்தலைப் புரியும் திருவருள். அந்தப் பெருந்திரு துடைத்தலைச் செய்யுந் திருவருள். நிலைப்பினைச் செய்வதைப் பெண்பாலாகவும் நீக்கத்தைச் செய்வதை ஆண்பாலாகவும் உருவகிப்பது மரபு அம் முறைபற்றியே திருவள்ளுவ நாயனாரும் 'ஆதிபகவன்' என இருபால் ஈற்றாலும் ஓதியருளினர். நிலமும் நீரும் பெண்பாலாகவும் தீ ஆண்பாலாகவும் கொள்ளப்படும். தலை என்பது இடத்தைக் குறிப்பது போல் கை என்பதும் இடத்தைக் குறிக்கும். அது 'கைப்பொருள் தன்னில் மெய்ப்பொருள் கல்வி' என்பதனால் விளங்கும். ஆதி யருள் தலையில் அப்புனலாய்த் தோன்று மந்தம், தீதில் திருக்கையகத்தாம் தீ எனக் கொள்க. குலக்கொடி - புனல்மகள்.

ஒன்றின் - மாயையின் ஓம் என்ற அப்புறக் குண்டம் பிரணவம். கோலிக் கொண்டான் - திரட்டிக் கொண்டான்.

## 411. நித்தசங் காரம் உறக்கத்து நீள்மூடம்

411. நித்தசங் காரம் உறக்கத்து நீள்மூடம்
வைத்தசங் காரமுஞ் சாக்கிரா தீதமாஞ்
சுத்தசங் காரந் தொழிலற்ற கேவலம்
உய்த்தசங் காரம் பரன்அருள் உண்மையே.

நித்த சங்காரமாகிய நாளொடுக்கம் ஒவ்வொரு நாளும் நிகழ்வது. அஃது உறக்கத்து அறிவு அடங்கியிருப்பது. இதனை நீள்மூடம் என்ப. இவ்வுறக்கம் பேருறக்கம் எனலாம். இதுபோல் ஒவ்வொரு நாளும் நிகழும் கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் என்பனவும் அவ்வத் தலைப்புக் கூட்டி நாளொடுக்கம் என்ப. ஆருயிர்கள் இளைப்பாறுதற் பொருட்டுத் தொன்மையிலேயே அமைக்கப்பட்ட ஒடுக்கம் சாக்கிரா தீதமாகிய அப்பால் நிலை. இஃது ஐவகை நிலைகளுக்கும் அப்பாற்பட்ட நிலை. ஆருயிர் கருவிகளுடன் கூடித் தொழிலுறாது அறியாமையுடன் மட்டும் ஒட்டியிருக்கும் தொழிலற்ற ஒடுக்கநிலை. இதுவே சுத்த சங்காரம் என்ப. உய்த்த சங்காரம் என்பது திருவருள் நோக்கத்து ஒடுங்கியிருக்கும் ஓர்நிலை. அது தூவாமாயையின் விரிவனைத்தும் எண்கூற்றுப் பேரால் முடிக்கப்படும். தூவாமாயை முப்பத்தொரு மெய்களையுடையது. அவை நிலமுதல் மாயை ஈறாகக் கூறப்படும். இவற்றின் எண்கூறாவன 'பூதமொன்று, பூதமுதலொன்று, அறிதற்கருவி ஒன்று, செய்தற் கருவி ஒன்று, அகக்கலன் ஒன்று, குணம் ஒன்று, மூலப்பகுதி ஒன்று, போர்வை ஒன்று என்பன.

போர்வையினைக் கலாதி என்ப. இப் பாகுபாட்டினைக் காரணவுடம் பெனவும், பரதேக மெனவும் கூறுப. இவ்வுடம்போடு கூடித் திருவருளில் ஒடுங்கியிருப்பதாகும். இவை யனைத்தையும் திருவுள்ளத்தான் இயற்றிற் அப்பால் நிற்கும்நிலை பரன் உண்மையாகும். உய்த்த சங்காரம்: ஆருயிர்களை அருளில் செலுத்தும் ஒடுக்கம்.

## 412. நித்தசங் காரம் இரண்டுடல் நீவுதல்

412. நித்தசங் காரம் இரண்டுடல் நீவுதல்
வைத்தசங் காரமும் மாயாசங் காரமாஞ்
சுத்தசங் காரம் மனாதீதந் தோய்வுறல்
உய்த்தசங் காரஞ் சிவன்அருள உண்மையே.

நாளொடுக்கத்துள் நுண்ணுடல் பருவுடல்களாகிய இரண்டிடத்தும் ஆருயிர்கள் பற்றின்றி யிருக்குமாறு செய்தலும் ஒன்று. நீவுதல் - கடத்தல். நிலைப்பித்த ஒடுக்கம் மாயைப் பற்றகற்றி ஒடுக்குதல் மாயாசங்காரம் என்பதும் இது. ஆருயிர் தன்னளவில் நிற்கும் நிலை சுத்த ஒடுக்கம் என்ப. இது மனத்தைக் கடந்து நிற்கும் நிலை. மனத்தைக் கடந்து நிற்றல் என்பது மனத்தொழில் அகன்று நிற்றல். தோய்வுறல் மனமகன்று நிற்றல். அருளிலொடுங்கல் உய்த்த சங்காரம். அப்பால் நிலை சிவன் உண்மை 411, 412 ஆகிய இரண்டு திருப்பாட்டும் கீழ்ப்பாடு என்று கூறப்படும் கீழாலவத்தையை ஒதுகின்றன. இக் கீழாலவத்தையே நாளொடுக்கம் என்ப.

இரண்டு உடல் - தூலம். சூக்குமம்.

## 413. நித்தசங் காரங் கருவிடர் நீக்கினால்

413. நித்தசங் காரங் கருவிடர் நீக்கினால்
ஒத்தசங் காரம் உடலுயிர் நீவுதல்
சுத்தசங் காரம் அதீதத்துட் டோய்வுறல்
உய்த்தசங் காரம் பரனருள் உண்மையே.

நாளொடுக்கத்துள் பிறவிப் பெருந் துன்பமாகிய கருவிடர் நீக்குதல் மேலானது. அது நீக்கினால் உயிர் உடலோடு கூடி வாழினும் அவ்வுடலில் பற்றின்றி வாழும். இது தோய்வுறாநிலை, அகன்ற நிலை, கழன்ற நிலை எனவும் கூறப்படும். நீவுதல் கழலுதல். தோய்வுறாநிலை தாக்கற்று நிற்கும் நிலை. நிலைப்பிக்கும் ஒடுக்கம் ஆருயிர் ஒன்றுடனும் கலவாது தனித்து நிற்கும் அப்பால் நிலை. அருளுட் செலுத்தி யொடுக்குதல் உய்த்த சங்காரம். அதன் மேல் பரன் உண்மையாகும்.

உடல் உயிர் நீவுதல் - கருவி கரணங்கள் கழன்று நிற்றல்.

## 414. நித்தசங் காரமும் நீடிளைப் பாற்றலின்

414. நித்தசங் காரமும் நீடிளைப் பாற்றலின்
வைத்தசங் காரமும் மன்னும் அனாதியிற்
சுத்தசங் காரமுந் தோயாப் பரன்அருள்
உய்த்தசங் காரமும் நாலாம் உதிக்கிலே.

நாளொடுக்கம் என்று சொல்லப்படுவதனுள் என்றும் நிலைத்த ஒடுக்கமாவது நீண்ட இளைப்பாற்றுதலாகும். இது படைப்போனாகிய அயனார் நாள்முடிவின்கண் நிகழ்வதாகும். ஆருயிர்களை இளைப்பாற்றுதற் பொருட்டுத் தொன்மையிலமைத்த இடைநிலை ஒடுக்கம் நீண்ட வொடுக்கமாகும். இடைநிலை - அவாந்தரம். சுத்தசங்காரம் எனப்படும் பேரொடுக்கம் மாறா ஒடுக்கமாகும். நாளொடுக்கம் இடை நிலை ஒடுக்கம், பேரொடுக்கம் என்பனவற்றின் மேல் திருவடியிற் கூடுதல் நாலாம் நிலை என்ப.

## 415. பாழே முதலா எழும்பயிர் அப்பயிர்

415. பாழே முதலா எழும்பயிர் அப்பயிர்
பாழாய் அடங்கினும் பண்டைப்பாழ் பாழாகா
வாழாச்சங் காரத்தின் மாலயன் செய்தியாம்
பாழாம் பயிராய் அடங்கும்அப் பாழிலே.

பாழாகிய குணங்குறியற்ற வினையினீங்கி விளங்கிய அறிவினையுடைய, உண்மை அறிவு இன்ப வடிவினன் சிவபெருமான். அவனை வினைமுதலாகக் கொண்டு மாயா காரியமாகத் தோன்றியது இவ்வுலகம். வினைமுதற் காரணம் - நிமித்த காரணம். பயிர் - உலகம். இவ்வுலகத்துத் தோன்றிய உயிர்கள் உலகு உடல்களைக் கடந்து பாழில் ஒடுங்கும். அங்ஙனம் ஒடுங்கினும் அப் பாழ் பண்டைப் பாழாகா. பண்டைப் பாழென்பது மலம் நீங்காத நிலையில் ஊழிகள் தோறும் ஒடுங்குமிடம். அது போன்று அன்று என்பது மல நீங்கியபின் நிலைத்த பேரொடுக்கம் என்பதைக் குறிப்பது. நிலைத்த சிவ வாழ்வினைக் கொடுக்காத வொடுக்க மென்பது அயன் அரி என்னும் இருவர் ஆட்சிக்குள் நிகழும் ஒடுக்கமாகும் இவ் விருவர் ஊழிகளிலும் உயிர். திருவடிப் பேறு எய்தாது ஒடுங்கிக் கிடக்கும் நிலை பாழ் நிலை என்க. மாலயன் செய்தி - திருவருளாணையினைத் தவமிருந்து பெற்ற காப்போன் படைப்போன் செய்திகளாம்.

பாழ் - சிவம். பயிர் - உலகம். வாழாச் சங்காரம் - வாழ்வினைக் கொடாத அழிப்பு.

## 416. தீயவை தார்மின்கள் சேரும் வினைதனை

416. தீயவை தார்மின்கள் சேரும் வினைதனை
மாயவைத் தான் வைத்த வன்பதி ஒன்றுண்டு
காயம்வைத் தான்கலந் தெங்கும் நினைப்பதோர்
ஆயம்வைத் தானுணர் வாரவைத் தானே.

எஞ்சுவினைத் தொகுப்பாகக் கிடக்கும் வினைகளைச் சிவகுருவின் திருக்கடைக்கண் திருநோக்கத்தால் எரிசேர் வித்துப்போல் பயனழியுமாறு தீய வையுங்கள். ஊழ்வினையினை இடையறாத் திருவடி நினைப்பால் குளிர்தாங்கும் போர்வை பூண்டார் அக் குளிரினைப் பற்றிச் சிறிதும் எண்ணாமை போன்று நுகரவைத்தான். நுகர வைத்தல் உடலோடமைத்து உள்ளத்தை ஒட்டாது தடுத்து உடலூழாய்க் கழிய வைத்தல். உள்ளம் சிவன் நினைவில் மூழ்கியிருத்தலால் ஊழ்வினை அவர் களைத் தெறுதலில்லை. நிறைந்த நீர் நிழலையடைந்து இன்புறுவார் எவ்வகைச் சூட்டாலும் தெறப்படாமை இதற்கு ஒப்பு. இவ்வருளிப் பாட்டினையே மாயவைத்தான் என ஓதினர். சேரும் வினை என்பது ஆகுபெயராய் எஞ்சு வினையைக் குறித்தது. அங்ஙனம் வைத்தருளிய சிவபெருமானின் திருக்கோவில் ஒன்றுண்டு, ஆருயிர்கட்கு உடம்பினையும் அளித்தருளினன் அம்மட்டோ? அவ்வுயிர்களைத் தனக்கு உடம்பாகவும் கொண்டருளினன். காயம் - உடம்பு. எல்லாவற்றுடனும் நீக்கமறக் கலந்து நின்று அவற்றை இயக்கி அருளுகின்றனன். மேலும் சிவனை நினைந்து பிறப்பற்றுத் திருவடிச் சிறப்புற்று வாழ்தற்கு வழியாகச் சிவனடியார் கூட்டத்தையும்

வைத்தருளினன். திருவடியுணர்வு நுகருமாறுந் திருவருள் வைத்தருளினன். சேரும் வினையினை ஏறுவினை என்றலும் ஒன்று. அது தீய வைத்தலின்மையாற் பொருந்தா தென்க.

சேரும் வினை - ஆகாமியம். ஆர்மின் - ஊழ்வினையைப் புசியுங்கள். மாயம் . . .உண்டு - புருவமத்தி. ஆயம் - சிவம் சத்தி கூட்டம். ஆய் உணர்வு - அறியும் அறிவு.

## 417. உள்ளத் தொருவனை உள்ளுறு சோதியை

417. உள்ளத் தொருவனை உள்ளுறு சோதியை
உள்ளம்விட் டோரடி நீங்கா ஒருவனை
உள்ளமுந் தானும் உடனே இருக்கினும்
உள்ளம் அவனை உருவறி யாதே.

உயிருக்கு உயிராய் உள்ளத்தே நீங்காது நிற்கின்ற ஒப்பில் முழுமுதலாம் சிவபெருமானை உள்ளத்து ஒருவன் என்பர். அவனே உள்ளுறு சோதியாவன். அவன் ஒவ்வொரு உள்ளந்தோறும் ஓரடிச் சிற்றளவேனும் விலகாது நின்றருள்கின்றனன். உள்ளமும் சிவமும் வேறறக் கலந்து உடனாக இருப்பினும் உள்ளமாகிய உயிர் தன் சிற்றறிவினானும் சுட்டறிவினானும் அச் சிவனைக் காணமாட்டாது. முற்றறிவினால் காணுமாயினும் அம் முற்றுணர்வினை அவன் வெளிப்படுத்தியருளுதல் வேண்டும். அவன் வெளிப்படுத்தாமலிருப்பதே மறைப்பருள் என்று கூறப்படும். அந்நிலையில் - அவன் தன்னைக் காட்டாத நிலையில் - ஆருயிர்கள் அவனது உண்மை நிலையினை அறியமாட்டா என்க. உரு - சிவபெருமானின் உண்மை நிலை.

## 418. இன்பப் பிறவி படைத்த இறைவனுந்

418. இன்பப் பிறவி படைத்த இறைவனுந்
துன்பஞ்செய் பாசத் துயருள் அடைத்தனன்
என்பிற் கொளுவி இசைந்துறு தோற்றசை
முன்பிற் கொளுவி முடிகுவ தாமே.

திருவடியின்பம் பெறுவதற்கு வாயிலாகக் கொடுக்கப்பட்டது மக்கட்பிறவி. அதனால் அப்பிறவி இன்பப் பிறவிஎன ஓதப் பெற்றது. அஃதாவது பேரின்பம் எய்துதற்கு ஏதுவாகிய பிறவி. அத்தகைய பிறவியைத் தண்ணருளால் படைத்துத் தந்த சிவபெருமானும் துன்பத்தை மிகுவிக்கும் பாசத் தொடர்ச்சினையும் அடைத்தருளினன். இதுவே 'மால் கொடுத்து ஆவி வைத்தார்' என்பதன் வாய்மையாகும். இவ்வுடம்பு என்புகளைப் பொருத்தி, தசைகளை இசைத்து, வலிமையுடைய நரம்புகளாற் பிணித்துத் தோலால் மூடி முடித்தமைத்த தொன்றாகும்.

## 419. இறையவன் மாதவன் இன்பம் படைத்த

419. இறையவன் மாதவன் இன்பம் படைத்த
மறையவன் மூவரும் வந்துடன் கூடி
இறையவன் செய்த இரும்பொறி யாக்கை
மறையவன் வைத்த பரிசறி யாதே.

துடைத்தலைச் செய்யும் இறையவனாகிய அரனும், காத்தலைச் செய்யும் மாதவனாகிய அரியும், படைத்தலைச் செய்யும் மறை ஓதுபவனாகிய அயனும் முழுமுதற் சிவபெருமான் படைத்தளித்தருளிய சிறந்தபொறிகளமைந்த உடம்பின்கண் வந்து கூடினர். அங்ஙனம் கூடுமாறு அவர்கள் செய்தவத்துக் கீடாக அமைத்தருளியவன் சிவபெருமான். அவன் அவ்வாறு உடற்கண் பொருத்தியருளிய திருவுள்ளக் குறிப்பினை இம் முத்தேவரும் அறியார். அச் சிவன் கடைசிவரியிற் காணப்பெறும் மறையவன் என்பது வினைப்பயனை நுகர்வித்தற் பொருட்டுத் தன்னை மறைத்து வைக்கும் திருவருளினையுடையோன் என்பது பொருள். முத்தேவரும் மறைப்பினுட்படுவர் ஆதலின் அவர்களும் சிவனை அறியார் இரும்பொறியாக்கை - மாயாவியந்திரதனு. சிவபெருமானை நோக்கிப் பெருந்தவத்தைச் செய்து காத்தற்றொழிலைப் பெற்றனன் மாயன். அதனால் அவன் மாதவன் என்று அழைக்கப்பட்டனன்.

இறையவன் - உருத்திரன். மாதவன் - மால். இன்பம் படைத்த மறையவன் - அயன்.

## 420. காண்கின்ற கண்ணொளி காதல்செய் தீசனை

420. காண்கின்ற கண்ணொளி காதல்செய் தீசனை
ஆண்டெண் அலியுரு வாய்நின்ற ஆதியை
ஊன்படு நாவுடை நெஞ்சம் உணர்ந்திட்டுச்
சேண்படு பொய்கைச் செயலணை யாரே.

சிவபெருமான் ஆருயிர்கள் தன்னைக் கண்டு காதல் செய்யும் பொருட்டுக் கண்ணொளியை அளித்தருளினன். தானும் ஆண் பெண் அலி என்னும் திருவுருவங் கொண்டருளினன். அலி என்பது ஈண்டு அருவுருவத் திருமேனி. அவன் ஆதியாகிய அம்மையையுடைய விழுமிய முழுமுதற் பெரும் பொருளாம் சிவபெருமானாவன். தவ வாழ்க்கைக்குத் தகுதியமைந்த தூயவுணவினைச் சிவ நினைவுடன் சுவைத் துண்ணும் நாவே ஊண்படு நன்னாவாகும். அத்தகைய உணவினை உட்கொண்ட நெஞ்சமே நன்னெஞ்சமாகும். அத்தகையார் திருவருளால் சிவனை உணர்வர். உணரவே பிணிப்புக்களெல்லாம் மிகுந்த தொலைவில் அகன்று விடும். நிலையில்லாத உலக நிகழ்ச்சிகள் அவர்களை அணையா. பொய் + கை + செயல்; நிலையில்லாத செய்கை முறைகள். அத்தகையாரும் அச் செய்கைக்கண் நெருங்கார்.

## 421. தெருளும் உலகிற்குந் தேவர்க்கும் இன்பம்

421. தெருளும் உலகிற்குந் தேவர்க்கும் இன்பம்
அருளும் வகைசெய்யும் ஆதிப் பிரானுஞ்
சுருளுஞ் சுடருறு தூவெண் சுடரும்
இருளும் அறநின் றிருட்டறை யாமே.

திருவருளால் தெளிவினையடைந்த உலகத்தோர்க்கும், சிவவுலகத் தேவர்க்கும் இன்பத்தினை அருளும்வகை செய்தளிப்பவன் அம்மையப்பராகிய சிவபெருமான். வளர்தலும் தளர்தலுமாகிய தன்மை சுருள் எனப்படும். அத்தகைய தன்மையினையுடைய திங்களும், மிக்க சுடராகிய ஞாயிறும், தூயவெப்பமிக்க தீயும், இவற்றால் போக்கப்படும் புற இருளும் முற்றும் அடங்கத் திருவருள் தோன்றும். ஆயினும் செவ்வியில்லார்க்குத் தன்னைக் காட்டாமையால் அவ்வருள் இருட்டறை போன்று மறைப்பினைச் செய்து நிற்கும். இருட்டறை என்பது, அக இருளாகிய ஆணவத்தை அறுக்கும் பொருள் என்பதாகும். அகவிருட்டு - ஆணவ வல்லிருள்.

# 422. அரைக்கின் றருள்தரும் அங்கங்கள் ஓசை

422. அரைக்கின் றருள்தரும் அங்கங்கள் ஓசை
உரைக்கின்ற ஆசையும் ஒன்றோடொன் றொவ்வாப்
பரக்கும் உருவமும் பாரகந் தானாய்க்
கரக்கின் றவைசெய்த காண்டகை யானே.

நடப்பாற்றலாகிய ஆதி வினைக்கீடாகத் துன்புறுத்தும் அருள் என்ப. அவ்வருள் மாயா காரியமாகப் படைக்கும் பொருள் பல. அவற்றுள் ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் என்னும் ஐந்தும் புலன்கள் என்று சொல்லப்படும். இவற்றை நுண்மை எனவும், பூதமுதலெனவும், தன்மாத்திரை எனவும் கூறுப. அவைபோல் புறப்பொருள் வாயிலாக வரும் ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் என்னும் ஐந்தும் புலன் என்றே சொல்லப்படும். இவ்விரண்டும் புலன்கொளி புலன் என்று முறையே வழங்கப் பெறும். புலன் கொளியானது புலனாகிய பொருளுடன் கலந்து பற்றிப் பொன்னுரைக்கும் கட்டளை அப் பொன்னை ஏற்றுத் தான் பொன் வண்ணமாயிருப்பதுபோல் புலன்கொளியும் கொண்ட புலத்தின் வண்ணமாக இருக்கும். அவ்வாறு இருப்பதற்கு அவாவினை எழுப்புவது மனம். எனவே ஐம்புலன்கொளியும் மனமும் ஒன்றோடொன்று ஒவ்வாத ஐம்பூத உடம்பகத்து உருவமாகப் பரந்திருக்கும். அதுபோல நிலவுலகத் தினும் பரந்திருக்கும். இவையனைத்தையும் தொழிற்படுத்தும் ஆதியருள் இவற்றுடன் கலந்து மறைந்துநின்று அருள்புரியும். இவற்றைத் திருவுள்ளத்தால் சிவபெருமான் கண்டருள்வன்.

அரைக்கின்ற அருள் - மறைப்பு. அங்கங்கள் - தத்துவங்கள்.

# 423. ஒளித்துவைத் தேனுள் ளுறவுணர்ந் தீசனை

423. ஒளித்துவைத் தேனுள் ளுறவுணர்ந் தீசனை
வெளிப்பட்டு நின்றருள் செய்திடு மீண்டே
களிப்பொடுங் காதன்மை என்னும் பெருமை
வெளிப்பட் டிறைஞ்சினும் வேட்சியு மாமே.

முழுமுதற். சிவபெருமான் திருவடியிணையினைத் திருவருளால் உணர்ந்தேன். அகத்தே வைத்து, திருமுறைவழியாகத் தொழுதேன். அகவழிபாடு அறிவிற்கு அறிவாய் விளங்கும் அவனை உணர்ந்து வழிபடுவதென்க. அச் சிவபெருமானைப் புறத்துவழிபட நேர்ந்தால் அருளோன், கூத்தப் பெருமான், அம்மை, ஆலமர்செல்வன், அம்மையப்ப பிள்ளை, மூத்தபிள்ளையார், இளையபிள்ளையார் என்னும் திருவுருவம் ஏழும், மெய்யடியார் திருவுரு வகைகள் ஒன்றும் ஆகிய எண்பெருநிலைகளும் வழிபடற்குரிய வடிவங்களாம். அவ்வடிவங்களுள் அருளால் மனம்பற்றிய தொன்றை முறைமுறையாக வழிபடுதல் வேண்டும். அவ் வழிபாட்டை ஏற்று அச் சிவபெருமானும் வெளிப்பட்டு அருள்வன். அளவிறந்த களிப்பினாலும் பெரும்பேரன்பாகிய காதன்மையாலும் மீண்டும்மீண்டும் வழிபட வழிபடப் பெருமை விளங்கித் தோன்றும். தோன்றலும் தொழுந்தோறும் பழுதில் வேட்கையும் மிகும் என்க. வேட்சி - வேட்கை.

வேட்சி - விருப்பம்.

## 424. ஒருங்கிய பாசத்துள் உத்தம சித்தன்

424. ஒருங்கிய பாசத்துள் உத்தம சித்தன்
இருங்கரை மேலிருந் தின்புற நாடி
வருங்கரை ஓரா வகையினிற் கங்கை
அருங்கரை பேணில் அழுக்கற லாமே.

செறிவுடைத்தாய் ஆருயிரும் பாசமும் வேறு என்று சொல்லமுடியாதபடி நிற்கும் பாசத்துள் ஆருயிரின் பொருட்டுக் கலந்தும் தோய்வின்றி நிற்பவன் சிவன். அவன் சார்ந்தார் அனைவரையும் காத்தருளுந் தன்மையால் தலையானவன் ஆவன். அத்தலையாய பேரறிவுப் பொருளாம் சிவபெருமானின் நிலைபேறாகிய அழிவில் புகலிடம் இருங்கரை எனப்படும். அப்புகலிடத்து உறைந்து பேரின்பம் துய்ப்பதற்கு நாடுங்கள். அங்ஙனம் நாடுவதால் எல்லையின்றிவரும் பிறவிக் கடலினை எண்ணிப் பார்ப்பதற்கே இடன் இல்லாமல் போகும். அங்ஙனம் போகத் திருவருளாகிய புனல்மகள் ஏற்றருளினள். அவளின் திருவருளால் மலஅழுக்கு முதலிய எல்லா அழுக்கும் அகலும். நாடி நாடுக என்று பொருள்படும் இகரவீற்று வியங்கோள். இஃது 'அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி' என்னும் மெய்கண்டார் திருமொழியான் உணர்க. கங்கை அருங்கரை - திருவருளின் எல்லையிலாத்துணை. உத்தமசித்தன் - தலையாய சிவபெருமான்.

## 425. மண்ணொன்று தான்பல நற்கல மாயிடும்

425. மண்ணொன்று தான்பல நற்கல மாயிடும்
உண்ணின்ற யோனிகட் கெல்லாம் ஒருவனே
கண்ணொன்று தான்பல காணுந் தனைக்காணா
அண்ணலும் இவ்வண்ண மாகிநின் றானே.

மண் ஒன்றுதானே பொருள் முதற்காரணமாய் நின்று பானை, சட்டி, கலயம், குடம் முதலிய பல்வேறு வடிவமாகத் திரியும். அத்திரிபும் அதனைப் பெற்றுப் பயன்பெறுவார் தகுதிக்கு ஏற்றவாறு அமைந்ததாகும். அவ்வமைவும் வினைமுதற் காரணனாகிய ஒரு குயவனால் ஆகும். ஈண்டு இரட்டுற மொழிதலான் மண் இடவாகு பெயராகக் குயவனைக் குறிக்கும். அவாய் நிலையான தண்ட சக்கர முதலிய துணைக் காரணங்களும் பெறப்படும். இதுபோல் ஆருயிர்கட்கு உயிருக்கு உயிராய் என்றும் பிரிப்பின்றி நின்றருளும் முழுமுதற் சிவபெருமான் ஒருவனே. அவனே வினைமுதற் காரணன் ஆவன். அவன் நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பினுள் எண்பத்து நான்கு நூறாயிர வடிவ வேறு பாட்டோடு கூடிய உடம்புகளைப் பொருள்முதற் காரணமாகிய தூவாமாயையினின்றும் படைத்தருள்கின்றனன். அவனுக்குத் துணைக் காரணம் அவனின் வேறல்லாத திருவருளும் அதன் வழித்தாய ஆருயிர்களின் இருவினைகளுமாம் என்க. பொருள்முதற் காரணம் - முதற்காரணம். வினைமுதற் காரணம் - நிமித்தகாரணம். கண்ணிரண்டும் ஒன்றனையே காண் என்பது போலக் கண்ணொன்றே பல பொருள்களையும் உயிர் கலந்து காட்டக் காணும், ஆனால் காட்டிய

உயிரையும் காணாது காணும் தன்னையுங் காணாது. இதுபோல் ஆருயிர்கட்குக் கட்டு ஒட்டு என்னும் ஈரிடத்தும் அண்ணலாகிய சிவபெருமான் உடனாய் நின்று முறையே சுட்டுப்பொருள்களையும் சுட்டிறந்து நின்ற முற்றுப் பொருளாகிய தன்னையும் காட்டுவன். அவ்வுயிர் கட்டு நிலையில் காட்டுகின்ற சிவனையும் காண்கின்ற தன்னையும் காணமாட்டாது. ஒட்டுநிலையில் தன்னையும் தலைவனையும் அன்னவன் துணையால் கண்டின்புறும். யோனிகள் - உடல்கள். இவ்வண்ணம் - கண்போல் உயிர்களும் தமக்குக் காட்டும் துணையாம் சிவபெருமானைத் தம் முனைப்பால் காணா என்பதாம்.

யோனிகள் - நால்வகைப் பிறப்புகள்; அண்டசம் முதலியன.

## 426. எட்டுத் திசையும் எறிகின்ற காற்றொடு

426. எட்டுத் திசையும் எறிகின்ற காற்றொடு
வட்டத் திரையனல் மாநிலம் ஆகாயம்
ஒட்டி உயிர்நிலை என்னும்இக் காயப்பை
கட்டி அவிழ்ப்பன் கண்ணுதல் காணுமே.

எண்புலமாகிய எட்டுத் திசைகளிலும் ஆருயிர்கட்கு இன்பம் எய்துதற்பொருட்டு வழங்குவது வளி. அவ்வளியே காற்றெனப்படும். அது வீசும் காற்றென ஓதப்பெற்றது. உலகை வட்டமாக ஆடைபோல் சூழ்ந்திருக்கும் கடல் ஈண்டு வட்டத்திரை எனப்பட்டது. திரை சினையாகு பெயராகக் கடலைக் குறிக்கும். அஃது ஈண்டு நீர் என்னும் பொதுமையைக் குறிப்பதாகும். அனல் - தீ. மாநிலம் - பெரிய நிலம். ஆகாயம் - விசும்பு. எனவே, காற்று, நீர், தீ, நிலம், வானம் என்னும் ஐம்பெரும் பூதக் கூட்டரவால் ஆயது உயிர் நிலை. இதனைக் காயப்பை என்ப. ஆருயிர்கட்கு வினைக்கீடாக இவ்வுடல்களைப் படைத்தளித்து அருளால் கட்டிப் பிணைத்து அமைப்பவன் சிவபெருமான். இருவினையொப்பு உற்ற காலத்து அப் பெரும் கட்டினை அவிழ்த்தருள்பவனும் அவனே. அவன் அருள் வழிவாம் நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமான் என்க. ஒட்டு - திருவடிப்பேறு.

வட்டத்திரை - கடல்.

## 427. உச்சியில் ஓங்கி ஒளிதிகழ் நாதத்தை

427. உச்சியில் ஓங்கி ஒளிதிகழ் நாதத்தை
நச்சியே இன்பங்கொள் வார்க்கு நமன்இல்லை
விச்சும் விரிசுடர் மூன்றும் உலகுக்குத்
தச்சும் அவனே சமைக்கவல் லானே.

அருஞ்சைவர் மெய் முப்பத்தாறனுள் முடிந்த முடிபாக விளங்கும் முப்பத்தாறாம் மெய் ஒலி என்ப. அஃது ஒளிவண்ணமாக விருக்கும் அது மெய்களின் உச்சியில் சிறந்திருக்கும். உச்சி - அந்தம். மெய் - தத்துவம். ஒலி - நாதம். அவ் வொளிவண்ணமாம் ஒலியினை நேரே இயக்கும் சிவபெருமானை முழுவிருப்பத்துடன் வழிபட்டு இன்பங்கொள்வார்க்கு வரும் பிறப்பில்லை அதனால் அவர்தம் இறப்புக் காலத்தும் கூற்றுவனுக்கு அவர்பால் வேலையில்லை. இவ்வுண்மை வரும் திருநாவுக்கரசர் திருமறைத் திருப்பாட்டானுணர்க:

இன்னங் கேண்மின் இளம்பிறை சூடிய
மன்னன் பாத மனத்துடன் ஏத்துவார்
மன்னும் அஞ்செழுத் தாகிய மந்திரம்
தன்னில் ஒன்றுவல் லாரையுஞ் சாரலே. - 5. 92 - 9.

அஞ்செழுத்தாகிய மந்திரம் தன்னிலொன்று, என்பதற்கு நமசிவய, சிவயநம, சிவயசிவ, சிவசிவ என்னும் வகை நான்கில் ஏதாவது ஒன்று
எனவும், கோடிக்கணக்கான எண்ணிக்கை வகைகளுள் ஏதாவது ஒன்று எனவும், காலமும் எண்ணும் மிகச் சிறியவாகவுள்ள ஒன்று எனவும் பொருள்படும். உலகுக்கு

என்றும் பொன்றாப் புகலிடமாய் உள்ளவன் சிவபெருமான். உலகினுக்குப் பல்லக விளக்காக விஞ்சும் ஞாயிறு திங்கள் தீ என்னும் மூன்றனையும் படைத்தமைத்தவனும் அவனே. அவனே எல்லாம் வல்ல முடிவிலாற்றலையுடையவன். ஒளி திகழ் நாதத்தை: அப்பாற்பட்ட ஒளிமெய்யைத் தொழிற்படுத்தும் ஒளி வண்ணமாய்த் திகழும் சிவபெருமானை. இந் நிலையினைப் பரநாதம் என்ப. நச்சி - விரும்பி. தச்சுமவன் - புகலிடமாயுள்ளவன் (தச்சும்: தஞ்சம்). விச்சும்: விஞ்சும். இவை எதுகை நோக்கி வலித்தல் திரிபு எய்தின.

விச்சும் - மேலான. சுடர் மூன்று - சூரியன் - சந்திரன் அக்கினி.

## 428. குசவன் திரிகையில் ஏற்றிய மண்ணைக்

428. குசவன் திரிகையில் ஏற்றிய மண்ணைக்
குசவன் மனத்துற்ற தெல்லாம் வனைவன்
குசவனைப் போல்எங்கள் கோல்நந்தி வேண்டில்
அசைவில் உலகம் அதுஇது வாமே.

களம் பல படைக்கும் வேட்கோவாகிய குயவன் தகுதியாம் மண்ணைச் செய்வன செய்து திரிகையில் ஏற்றுவன். ஏற்றிய மண்ணை அக் குயவன் நல்லுள்ளத்தில் எண்ணியவாறே பல்வேறு வகைக் கலங்களாக்குவன். அங்ஙனம் ஆக்குவதும் தன்பொருட்டு அன்று. ஆருயிர்களின் நன்மையின் பொருட்டேயாம். அவ்வியிர்களின் வளர்ச்சி முறைக்கு ஏற்றவாறு பல்வேறு கலங்கள் வேண்டப்படுவவாயின. அக்குயவனைப்போல் எங்கள் பேரறிவுப் பெருந் தலைவராம் நந்தியடிகள் உன் முகமாய்த் திருவுள்ளங் கொள்ளில் காரணத்தில் அசைவில்லாத தன் வைப்பாற்றலாம் மாயையினின்று அதுஇது என்று சொல்லப்படும் பல உடல் உலகம் உண்பொருள்கள் தோன்றுவவாயின. நந்தி யெங்கடவுளாகிய சிவபெருமானும் இப்படைப்புத் தொழிலினை ஆருயிர்களின் நன்மையின் பொருட்டே செய்தருள்கின்றனன். அவ்வுயிர்களின் பொருட்டே அவையும் பல்வேறுவகையாக அமைந்துள்ளன.

அதுவி துவாமே - பலவகை.

## 429. விடையுடை யான்விகிர் தன்மிகு பூதப்

429. விடையுடை யான்விகிர் தன்மிகு பூதப்
படையுடை யான்பரி சேஉல காக்குங்
கொடையுடை யான்குணம் எண்குண மாகுஞ்
சடையுடை யான்சிந்தை சார்ந்துநின் றானே.

ஆனேற்றை ஊர்தியாகவும் உயர்த்துங்கொடியாகவும் உடையவன் சிவன். ஒருவரால் படைக்கப்படாது தானே திருவருளால்
தோன்றும் பல்வேறு தோற்றத்தன்.
பூதப்படைகளையுடையவன். ஆருயிர்கள் உய்யும் பரிசாக உலகு உடல்களைப் படைத்தருளும் பெருங் கொடையுடையான். எட்டு வான் அருட் குணத்தையுடையவன். இவ்வெட்டு வான்குணமும் பின்னல் சடையாகவுடையவன். பின்னல் - புணர்ப்பு; அத்துவிதம். ஆருயிர்களின் எண்ணமாகிய சிந்தையினைப் பேரருளால் சார்ந்து நின்றனன். பூதம் - உயிர்கள். சடை - தாங்கல்.

## 430. உகந்துநின் றேபடைத் தான்உல கேழும்

430. உகந்துநின் றேபடைத் தான்உல கேழும்
உகந்துநின் றேபடைத் தான்பல ஊழி
உகந்துநின் றேபடைத் தான்ஐந்து பூதம்
உகந்துநின் றேஉயிர் ஊன்படைத் தானே.

'யாவார்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்' சிவபெருமானாதலின், அவன் உயர்ந்தவன் ஆகின்றான். உகப்பு - உயர்வு. சிவபெருமான் உயர்ந்துநின்றே ஏழுலகங்களையும் படைத்தருளினன். அதுபோல் பல ஊழிகளையும் படைத்தனன். அதுபோல் ஐம்பெரும் பூதங்களையும் படைத்தருளினன். அதுபோல் ஆருயிர்கட்கு வேண்டும் உடல்களைப் படைத்தருளினன். ஏழுலகு: எழுவகைப் பிறப்புயிர்களும் உய்யப் படைத்தளிக்கும் உடல்கள் என்றலும் ஒன்று. எழுவகைத் தீவுகள் என்றலும் ஒன்று. ஊழி - காலவரையறை. உயிர்ஊன் - ஆருயிர் உறைதற்காம் உடல். ஊன்; ஆகுபெயர். உகப்பு: உயர்வு. 'உகப்பே யுயர்தல் உவப்பே யுவகை.' - தொல். சொல்- 305.

## 431. படைத்துடை யான்பண் டுலகங்கள் ஏழும்

431. படைத்துடை யான்பண் டுலகங்கள் ஏழும்
படைத்துடை யான்பல தேவரை முன்னே
படைத்துடை யான்பல சீவரை முன்னே
படைத்துடை யான்பர மாகிநின் றானே.

தொன்மைக் காலத்தே முழுமுதற் சிவபெருமான் ஆருயிர்கள் உய்வதன்பொருட்டு உடல் கலன் உலகம் உணா முதலியவற்றை உள்ளதாகிய மாயையினின்றும் படைத்து உயிர்களுடன் பொருத்தியருளினன். இதுவே படைப்பு. உயிர்கள் என்றும் உள்ளன. படைக்கப்பட்டன அல்ல. அதுபோல் முன்னமே மல ஆற்றல் குறைந்த அளவில் பற்றியுள்ள உயிர்களைத் தேவராகப் படைத்தருளினன். இத்தேவர்கள் பிறப்புத் தேவர் ஆவர். இவர்கள் நிலையினை மக்களாய்ப் பிறந்தாரும் எய்துவர். அவர்கள் சிறப்புத் தேவர் என்று அழைக்கப் பெறுவர். பிறப்புத் தேவர் மலவாற்றல் மிகுந்த அளவில் பற்றியுள்ள ஆருயிர்கட்குத் துணைசெய்யவே ஆண்டவனால் படைக்கப்பட்டனர். அதுபோல் பல சீவர்களாகிய உயிர்களுக்கும் உடல் முதலியவற்றைப் படைத்தருளினன். எல்லாவற்றையும் படைத்து உடையான் என்னும் திருப்பெயர் தாங்கியுள்ளவன் சிவன். எல்லாவற்றுடனும் கலந்து நிற்பவனும் அவனே. எல்லாவற்றையும் கடந்து நிற்பவனும் அவனே. அவன் கலப்பு நிலையில் இறைவன் என்று அழைக்கப்படுவன். கடந்த நிலையில் பரமன் என்று அழைக்கப்படுவன். பரம் - மேல்; விழுப்பொருள்.

## 432. ஆதி படைத்தனன் ஐம்பெரும் பூதம்

432. ஆதி படைத்தனன் ஐம்பெரும் பூதம்
ஆதி படைத்தனன் ஆசில்பல் ஊழி
ஆதி படைத்தனன் எண்ணிலி தேவரை
ஆதி படைத்தவை தாங்கிநின் றானே.

எவற்றிற்கும் வினைமுதற்காரணமாயுள்ள சிவபெருமான் ஆதியென்று அழைக்கப்படுவன். அத்தகைய ஆதி ஐம்பெரும் பூதங்களையும் படைத்தருளினன். அவனே ஆருயிர்களின் மலகன்ம மாயைக் குற்றங்கள் நீங்குதற்கு வாயிலாகிய பல ஊழிகளையும் படைத்தருளினன். அவனே 'நால்வே றியற்கைப் பதினொரு மூவரொடு' கூடிய அளவில்லாத தேவர்களையும் படைத்தருளினன். இங்ஙனம் படைத்தவை அனைத்தையும் தாங்கிக் காத்தருள்பவனும் அவனே. படைத்தலென்பது உயிர்களுக்கு உடல்கலன் உலகுகளைப் படைத்து அவ்வுயிர்களை அவற்றுடன் பொருத்தி வினைக்கீடாக நடத்துவதே யாகும். ஆதி - அம்மை; அம்மையுடன் கூடிய சிவபெருமான்.

## 433. அகன்றான் அகலிடம் ஏழுமொன் றாகி

433. அகன்றான் அகலிடம் ஏழுமொன் றாகி
இவன்றா னெனநின் றெளியனும் அல்லன்
சிவன்றான் பலபல சீவனும் ஆகி
நவின்றான் உலகுறு நம்பனு மாமே.

சிவபெருமான் கலப்பினால் விரிந்த உலகங்கள் ஏழுடனும் ஒன்றாகி., நீக்கமற நிறைந்து நின்றனன். அகலுதல் - செறிதல்; நிறைதல். இறைவன் அங்ஙனம் கலந்து நிற்பினும் இவன்தான் இறைவன் என்று சுட்டியுணர்த்தப்படக் கூடிய அத்துணை எளியனும் அல்லன். அதுபோலவே அவன் கலப்பினால் ஆருயிர்களுடன் ஒன்றாகி நீக்கமறநிற்கின்றனன். அதனால் பலபல சீவனும் ஆகி என்றனர். சிவபெருமானே சிவகுருவாய் வந்தருளி வழிவகைகளை நவின்றருளினன். சீவனுமாகி, என்பது உயிர்க்குத் துணையாய் உடனாகி நின்றருளி என்பதாகும். நம்பன் - சிவபெருமான். நம்புவார்களுடைய நம்பிக்கைக்கு முழு உரிமை வாய்ந்தவன் நம்பன்.

## 434. உண்ணின்ற சோதி உறநின்ற ஒருடல்

434. உண்ணின்ற சோதி உறநின்ற ஒருடல்
விண்ணின் றமரர் விரும்பும் விழுப்பொருள்
மண்ணின்ற வானோர் புகழ்திரு மேனியன்
கண்ணின்ற மாமணி மாபோத மாமே.

அனைத்துயிர்க்கும் உயிராய் உள்நின்று ஊக்கும் சிவபெருமான் அவ்வுயிர்களைத் தாங்குகின்றனன். அதனால் அவன் ஒப்பில்லா உடல் போன்றவனாகின்றனன். அவன் பேரொளியாய்த் திகழ்கின்றனன். யாவரும் யாவையும் தன்பால் நிலவ நின்றருளினவனும் சிவபெருமானே. விண்ணின்கண் வாழும் அமரர்களும் விரும்பும் விழுத்துணைப் பெரும்பொருள் சிவபெருமான். நிலவுகத்துவாழும்
சித்தாந்த சைவப் பெருமை மிக்க சான்றோர் அன்புடன் புகழும் பொருள் சேர்புகழ்த் திருமேனியை உடையவன் சிவன். கண்ணுள் நிலைத்து நிற்கும் கருமணி போன்றவன் சிவன். மா - கருமை. சிவகுருவினால் போதிக்கப்பெறும் விழுப்பொருள் சிவபெருமான். கண்ணின்ற என்றதற்குக் கருத்துள் நின்ற என்றலும் ஒன்று. இப்பொருட்கு மாமணி என்பதற்குத் திருவைந்தெழுந்து எனக்கொள்க.
(அ. சி.) மண்ணின்ற வானோர் - உலகத்திற்கு வந்த வானவர்.

## 435. ஆரும் அறியாத அண்டத் திருவுருப்

435. ஆரும் அறியாத அண்டத் திருவுருப்
பார்முத லாகப் பயிலுங் கடத்திலே
நீரினிற் பால்போல நிற்கின்ற நேர்மையைச்
சோராமற் காணுஞ் சுகம்அறிந் தேனே.

மக்கள் தேவர் மூவர் முதலிய யாவராலும் அறிய வொண்ணாத அண்டத் திருவுருவை உடையவன் சிவன். உலகங்களுள் உயிர்க்கு உயிராய் நிற்கின்ற ஒப்பில் திருவுருவன் சிவன். நிலமுதலாகச் சொல்லப்படும் பெரும் பூதங்களுள் பயின்று விளங்குபவனும் சிவனே. தக்ககலத்தில் தூயநீரில் கலந்துள்ள பால்போல் சிவபெருமான் கலந்து நிற்கும் சிறந்த தன்மையை உடையவன். பால் தன் வண்ணத்தையும் சுவையினையும் நீருக்கு நல்கி நீரென்னும் பெயரினை மாற்றிப் பால் என்னும் தோற்றமும் பெயரும் பெறச் செய்கின்றது. அதுபோலவே சிவபெருமான் ஆருயிர்களைத் தூய்மையாக்கித் தன் எண்குணங்களையும் பதிவித்துச் சிவமாம் பெருவாழ்வை அருளுகின்றனன். அதனால் அவ்வுயிர்கள் திருவடிப் பேரின்பத்தைத் துய்க்கின்றன. சிவனெனவே அழைக்கப் பெறுகின்றன. இதுவே புறத்தும் அகத்தும் புலனாகும் சிவ இன்பமாகும். இவ்வுண்மையினைத் திருவருளால் அறிந்து தீரா இன்புற்றேன் என்க. நேர்மையை - உண்மைத் தன்மையை. சோராமல் - மறந்து விடாமல். காணும் - நுகரும். சுகம் - பேரின்பம்.

## 436. ஆங்குகின் றான்முன் பிரிந்த இருபத்தஞ்

436. ஆங்குகின் றான்முன் பிரிந்த இருபத்தஞ்
சாங்குகின் றானவ னாதிஎம் ஆருயிர்
ஆங்குகின் றான்கரப்பக் கோளகை யுள்ளிருந்து
ஆங்குகின் றான்அவன் ஆவ தறிந்தே.

உயிர்கள் இறந்தபின் வினைக்கீடாக அச்சுமாறிப் பிறக்கும். அச்சுமாறுதல் - பருவுடம்பு மாறுதல். பருவுடம்பு மாறுதலாவது ஆண் பெண்ணாக மாறலாம்: பெண் ஆணாக மாறலாம்; அம்மட்டோ? உயர் திணை அஃறிணையாகவும் மாறலாம்; இவ்வகை மாறுதல் என்க. திணைபால்கள் சேரும் வினைக்கீடாமாறி, அணைபிறப்பாம் மக்கட்கறி. இறந்தவுயிர் நுண்ணுடம்பாகிய புரியட்ட வடிவத்துடன் மீண்டும் கருவில் பிறக்கும். புரியட்டவடிவம்; தன்மாத்திரை
என்று சொல்லப்படும் ஓசை, ஊறு, ஒளி, சுவை நாற்றம் என்ற ஐந்து, மனம், எழுச்சி, இறுப்பு என்ற மூன்று ஆகிய எட்டுங்கூடிய வடிவம். இவ்வடிவம் படைப்புக் காலந்தொட்டுப் பேரொடுக்க காலம் வரை எவ்வகை மாறுதலும் எய்தாது. எல்லாவுயிர்க்கும் வேறுபாடின்றி ஒன்றுபோல் உள்ளது. இதனையே திருவள்ளுவ நாயனார் 'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்று அருளினர். பின்னர் வழங்கப்படுவதும் மாறப்படுவதுமாகிய பருவுடம்பே செய்யும் வினைக்கீடாக வேறுபடும். அதனையே திருவள்ளுவ நாயனர். 'சிறப்பொவ்வா, செய்தொழில்

வேற்றுமை யான்' என்று அருளினர். இவ்வேற்றுமையுடம்பு பெரும்பூதம் ஐந்து, அறிதற் கருவி ஐந்து, செய்தற் கருவி ஐந்து, வளிபத்து ஆகிய இருபத்தைந்து பொருள்களாலாயது. அவை திருவருளால் அமைக்கப்பெறுவன. அவற்றைத் தான் முன் பிரிந்த இருத்தைந்தென்று ஓதினர். இவ்விருபத்தைந்துந்தான் பருவுடம்பு ஆகும். இறப்பும் பிறப்பும் பருவுடம்பிற்கேயாம். இப்பருவுடம்பின் கண் முன் நுண் உடம்புடனே பிரிந்து சென்ற ஆருயிரை வினைக்கீடாகப் புகச் செய்கின்றனன். இவற்றைத் திருவருள் கருப்பையினுள் உயிர்க்குயிராய் நின்று அமைக்கின்றது. அதுவே சிவபெருமான் ஆவதறிந்து அமைக்கின்றான் என்பதாகும்.

இருபத்தைந்து - பூதம் 5, புலன் 5, ஞானேந்திரியம் 5, கன்மேந்திரியாம் 5, காரணம் 4, புருடன் 1 ஆக 25.

## 437. அறிகின்ற மூலத்தின் மேல்அங்கி அப்புச்

437. அறிகின்ற மூலத்தின் மேல்அங்கி அப்புச்
செறிகின்ற ஞானத்துச் செந்தாள் கொளுவிப்
பொறைநின்ற இன்னுயிர் போந்துற நாடிப்
பறிகின்ற பத்தெனும் பாரஞ்செய் தானே.

நுண்ணுணர்வான் அறியப்படுகின்ற மூலாதாரத்துக்கு மேல் அகட்டுத் தீயும் நீரும் நிறைந்துள்ள கருப்பையில் அறிவோடு கூடிய உயிர் தங்கிய கருவுடன் வெவ்விய இளங்காலை முடக்கித் தலையுடன் சேரத்து ஓம் வடிவமாய் அமைக்கின்றனன். கருப்பையினுள் சுமையாக நின்ற அவ்வுயிர் வெளிப்போமாறு திருவுளங்கொண்டு முந்தித் தவங்கிடந்து தாங்கிய அன்னை வயிற்று முந்நூறு நாளாகிய பத்துத் திங்களும் நீங்கும் சுமையாக வைத்தருளினன். பறிகின்ற - நீங்குகின்ற. பாரம் - சுமை.

அங்கி அப்பு - உதராக்கினியும், நீரும். செந்தாள் கொழுவி - சிவந்த பாதங்களைக் கட்டி. ஓம்துறை - பிரணவக் கரை. பறிகின்ற - விட்டு நீங்குகின்ற. பத்து - பத்து மாதம்.

## 438. இன்புறு காலத் திருவர்முன் பூறிய

438. இன்புறு காலத் திருவர்முன் பூறிய
துன்புறு பாசத் துயர்மனை வானுளன்
பண்புறு காலமும் பார்மிசை வாழ்க்கையும்
அன்புறு காலத் தமைத்தொழிந் தானே.

எக்கால்த்தும் நீங்காது மிக்குறும் எழில் இன்பம் மக்கட்பேறு ஒன்றான்மட்டும் உண்டாம். அதனை, எய்துதற்கு மனையறம் பேணும் இயல்புடையிருவராகிய கணவனும் மனைவியும் விரும்பிக் கடவுளைக் கைதொழுது அவ்வழி முயலுதல் வேண்டும். அங்ஙனம் முயலுங்கால் இருவர்மாட்டும் ஒருவாப் பேரன்பு உண்டாகும். அவ்வன்பின் பெருக்கால் இருவரும் அகம்புறம் ஒத்துக்கூடுவர். அக் கூட்டத்துறுபயனால் கருவுறும். அக்காலத்து அருள்வெளியாகிய வானத்து வீற்றிருந்தருளும் சிவபெருமான் ஆருயிர் கருவிற் புகுமாறு திருவுள்ளங் கொள்வன். தொன்மையிலேயே ஊறிப் பொருந்திப் பொதிந்துள்ள துன்பவாயிலாம் ஆணவத்தை அறவே அகற்றுதற்கு ஆக்கிக்கொடுத்தருளும் உடல் அருவுடல். அருவுடல் என்றாலும் நுண்உடல் என்றாலும் ஒன்று. மாறிப் பிறக்கும் உயிர்கட்கு அவ்வுயிர்களின் வினைக்கீடாகப் பொருந்தும் பண்பும், வாழ்நாளும், நிலவுலக வாழ்க்கையில் ஏற்படும் செல்வ வறுமைகளும், கருவினுள் பதித்தருளினன்.

முன்பு ஊறிய - அநாதியே ஆன்மாவைப் பற்றியுள்ள.

## 439. கருவை ஒழிந்தவர் கண்டநால் மூவேழ்

439. கருவை ஒழிந்தவர் கண்டநால் மூவேழ்
புருடன் உடலில் பொருந்துமற் றோரார்
திருவின் கருக்குழி தேடிப் புகுந்தது
உருவம் இரண்டாக ஓடி விழுந்ததே.

பிறவாப் பெருநெறிபற்றிய திருவடியுணர்வு கைவந்த சிவனடியார் கருவை ஒழிந்தவராவர். அவர்கள் பருவுடலுக்கெனக் கண்டறிந்த (436) இருபத்தைந்து பொருள்களும் அவ்வுண்மையினைக் காணாதாரைப் பொருந்தும். அவர்களே மற்றோரார் என ஓதப்பட்டவராவர். திருமகளனைய வாழ்க்கைத் துணைவியின் கருவில் துணைவனது வெண்ணீர் ஓடிவிழுந்தது, ஆங்குள்ள செந்நீருடன், அதுகலப்புற்றது. அதனால் ஆண்பெண் என்னும் இரண்டாகிய வடிவங்களுள் ஒன்றாகத் திரிபுற்று வளர்ந்தது. வெண்ணீர் - சுக்கிலம். செந்நீர் - சுரோணிதம்.

கருவை ஒழிந்தவர் - சத்திநி பாதர். நால் மூவேழ் - 25 தத்துவங்கள்.

## 440. விழுந்தது லிங்கம் விரிந்தது யோனி

440. விழுந்தது லிங்கம் விரிந்தது யோனி
ஒழிந்த முதல்ஐந்தும் ஈரைந்தொ டேறிப்
பொழிந்த புனல்பூதம் போற்றுங் கரணம்
ஒழிந்த நுதல்உச்சி உள்ளே ஒளித்ததே.

வாழ்க்கைத் துணைவராங் காதலர் அன்புற்று இன்புறும் வாயிலாம் மகப்பெறுதற் பொருட்டுக் கூடிய கூட்டத்து இலிங்கமாகிய உருவுடம்புக்கு வாயிலாம் வித்துப் புகுந்தது. அதனை ஏற்றுக்கொள்ளும் பொருட்டுக் கருவழியாகிய யோனி விரிந்தது. நுண்ணுடலில் தங்கியிருந்த ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்னும் நுண்மை ஐந்தும் அறிதற் கருவி ஐந்து, செய்தற் கருவி ஐந்து ஆகப் பத்தினுடன் கூடிய மழையாகப் பொழியும் நீர்முதலாகச் சொல்லப்படும் பூதங்கள் ஐந்தும் தோன்றின. அவற்றால் போற்றப்படும் கரணங்களும் கூடின. புருவ நடுவிலும் உச்சியிலும் நின்று உணரும் தொழிலும் இடையறாது நிகழ்வதாயிற்று. அறிதற் கருவி; செவி, மெய், கண், நாக்கு, மூக்கு. செய்தற் கருவி; வாய், கால், கை, எருவாய், கருவாய், கரணம்; எண்ணம், மனம், எழுச்சி, இறுப்பு. அறிவு நிகழ்தற்கு நிலைக்களம் புருவநடுவும் உச்சியும் என்ப.

## 441. பூவின் மணத்தைப் பொருந்திய வாயுவுந்

441. பூவின் மணத்தைப் பொருந்திய வாயுவுந்
தாவி உலகில் தரிப்பித்த வாறுபோல்
மேவிய சீவனில் மெல்லநீள் வாயுவுங்
கூவி அவிழுங் குறிக்கொண்ட போதே.

பூவினகத்துத் தங்கியிருக்கும் நறுமணத்தை ஓவாது சுழலும் காற்று வெளிப்படுத்தி உலகத்தில் கொண்டுவந்து பரப்பி நிலைப்பிக்கும். அதுபோல் அருவுடம்புடன் கருவிற் கூடிய ஆருயிரை அங்குப் பொருந்திய காற்றுக்கள் பத்தினுள் சிறிது சிறிதாக வளர்ந்து பெருகும் மென்மையமைந்த உயிர்க்காற்று பிறக்கும் குறிப்பு ஏற்பட்டதும் உடனொத்துப் பொருந்தி வெளிக்கொணரும். இதற்கு உயிர் பிரியுங்காலத்துத் தொழிற்காற்று என்று கூறுவாருமுளர். கருவுற்பத்தி நிலைக்களத்து அங்ஙனம் கூறுதல் பொருந்தாதென்க.

நீள் வாயு - தனஞ்சயன். கூவி அவிழும் - இரைந்து கொண்டு செல்லும்.

## 442. ஏற எதிர்க்கில் இறையவன் றானாகும்

442. ஏற எதிர்க்கில் இறையவன் றானாகும்
மாற எதிர்க்கில் அரியவன் றானாகும்
நேரொக்க வைக்கின் நிகரீபோதத் தானாகும்
பேரொத்த மைந்தனும் பேரர சாளுமே.

சிவனை மறவாத்திருவுடைக் காதலிருவர் கலந்து கூடுங்கால் தோன்றும் வித்தாகிய விந்து நடுநாடி வழியாக ஒலியாற்றல் என்னும் நாதசத்திக்கு மேற்பட்டு எதிர்த்துச் செல்லுதல் சிறப்புடைத்து. அங்ஙனம் செல்லின் அது வாயிலாகப் பிறக்கும் பிள்ளை சிவ வடிவாகத் தோன்றும். அதுபோலன்றி அமைதியாக எதிர்த்தால் செயற்கருஞ் செய்கை செய்யும் சீரியோனாகத் தோன்றும். சமமாகச் சென்றால் தனக்குத்தானே ஒப்பாகிய பேரறிவுப் பிள்ளையாகத் தோன்றும். மேற் கூறிய முறையில் ஒத்த பெருமைவாய்ந்த மைந்தனும் சிவவுலகப் பேரரசு திருவருளால் ஆளும் பெற்றியனாவன். நிகரீபோதம் - சிறந்த அறிவு ; திருவடியுணர்வு.

ஏற எதிர்க்கில் - விந்துவைச் சுழுமுனையில் ஏற்றி நாதத்தை எதிர்த்துச் சென்றால், ஆற எதிர்க்கில் - நிதானமாக எதிர்க்கில்.

## 443. ஏயங் கலந்த இருவர்தஞ் சாயத்துப்

443. ஏயங் கலந்த இருவர்தஞ் சாயத்துப்
பாயுங் கருவும் உருவா மெனப்பல
காயங் கலந்தது காணப் பதிந்தபின்
மாயங் கலந்த மனோலய மானதே.

அண்டங்கள் பலவற்றையும் பொருந்தி வினைக்கீடாக உழன்று வருந்திய உயிர் இருவராய்க் கலந்து இல்வாழ்க்கையராய் நல்லறம் பேணுகின்றனர். அவ்விருவருடைய அரும்பெரும் பண்புகளால் தோன்றும் கருவும் உருவாகும். அங்ஙனம் உருவாவதற்குத் தாயினுடைய உணவுச் சாரமும் வேண்டும். அவ்வுணவுச் சாரம் மருந்தனைய பல மசாலை எனப்படும் காயம் கலந்ததனால் ஆகும். அவ்வுணவு உடலாந்தன்மை யுண்டாகப் பதிந்தபின் சொல்லொணாப் பெருவேட்கையுடன் கூடி இருவர் உள்ளமும் ஒன்றுபட்ட பெறுபேறே அறிவறிந்த மக்களாகும். சாயத்து - நிறத்தால்; ஈண்டுப் பண்பால். காண - சாரமாய்த் தோன்ற. பதிந்தபின் - தங்கியபின், மாயம்கலந்த - பெருவேட்கை சேர்ந்த. மனோலயம் - உள்ளத் தொருமை.

ஏய் அங்கு அலந்த - பல அண்டங்களில் பிறந்திறந்து அலைந்து வருந்தின. மாயங் கலந்த - மோக வலைப்பட்ட.

## 444. கர்ப்பத்துக் கேவல மாயாள் கிளைகூட்ட

444. கர்ப்பத்துக் கேவல மாயாள் கிளைகூட்ட
நிற்குந் துரியமும் பேதித்து நினைவெழ
வற்புறு காமியம் எட்டாதல் மாயேயஞ்
சொற்புறு தூய்மறை வாக்கினாஞ் சொல்லே.

ஆருயிர் கருப்பையினுள் அருவுடம்போடு மட்டும் இருக்கும். பல்வேறு கருவிகளாக விரியும் மாயாகாரியக் கருவிக் கூட்டங்களைத் தொழிற்படுத்துவது நடப்பாற்றல். உயிர் கருவினுள் அருவுடம்போடு மட்டும் இருக்கும் நிலையினைப் புலம்பு நிலை என்பர். புலம்பு - கேவலம். நடப்பாற்றல் மாயா கருவிகளைக் கூட்டப் புலம்புப் பேருறக்கம் ஆகும். அவ்வுறக்கத்தினின்றும் வேறுபடுத்தி அந்நடப்பாற்றல் நினைவெழச் செய்யும். அதன்மேல் காமிய இன்ப நுகர்வுக்குரிய அன்பு எழும். அதனால் மாயேயமாய்ப் புறத்துத் தோன்றும் ஓசை முதலிய பொருள்கள் அகத்தை எட்டும். அங்ஙனம் எட்டச் செய்வதற்குத் தூண்டுங் கருவியாக நிற்பது அகப்புறக் கலனாகிய எண்ணம், மனம், எழுச்சி, இறுப்பு என்னும் நான்குமாம். அவற்றைத் தூண்டித் தொழிற்படுத்துங் கருவி நால்வகை ஓசையாகும். இவ்வோசை தூமாயையினின்றும் வெளிப்படுவன. எட்டாதல் - கிட்டும்படியாக. எட்டு: முதனிலைத் தொழிற்பெயர். அதனை எண்ணுப் பெயராகக் கொள்ளின் எண்வகை நுகர்வுப் பொருள்கள் எனக் கொள்க.

கிளைகூட்ட - தத்துவங்களைக் கூட்ட.

## 445. என்பால் மிடைந்து நரம்பு வரிக்கட்டிச்

445. என்பால் மிடைந்து நரம்பு வரிக்கட்டிச்
செம்பால் இறைச்சி திருந்த மனைசெய்து
இன்பால் உயிர்நிலை செய்த இறையோங்கும்
நன்பால் ஒருவனை நாடுகின் றேனே.

எலும்புகளால் நெருங்கப்பெற்று, நரம்பினைக்கொண்டு வரிந்துகட்டித் தசையினைக் குருதி நீரால் இணைத்தமைத்துத் திருந்திய மனை செய்தருளினன் சிவன். அம் மனை உடம்பெனப்படும். அவ்வுடம்பகத்து உயிர் தங்கியிருக்கும். அதனால் அஃது உயிர்நிலை என்று அழைக்கப்படும். உயிர் உடலகத்துத் தங்குவது இன்பம் எய்துவதற்கேயாம். அதனால் இன்பால் உயிர்நிலை என்று ஓதப்பெற்றது. இவ்வாறு செய்தருளியவன் சிவன். அவனே இறைவனாவன். அவனே சிறந்த நன்மைப் பகுதி முழுவதும் ஒருங்கமைந்த முழுமுதல்வனானவன். அவனே ஒப்பில்லாத ஒருவனாவன். அவன் திருவடியினைச் சேர்ந்து உய்யுமாறு செந்தமிழ்த் திருவைந்தெழுத்தால் சீர்பெற வழுத்துகின்றேன். நன்பால் - நன்மைப்பகுதி. குருதிநீர் - செந்நீர்.

செம்பால் - உதிரம்.

## 446. பதஞ்செய்யும் பால்வண்ணன் மேனிப் பகலோன்

446. பதஞ்செய்யும் பால்வண்ணன் மேனிப் பகலோன்
இதஞ்செய்யு மொத்துடல் எங்கும் புகுந்து
குதஞ்செய்யும் அங்கியின் கோபந் தணிப்பான்
விதஞ்செய்யு மாறே விதித்தொழிந் தானே.

உடலுக்கு உறுதியாம் அழகினைத் தரும் பால்போன்று வெண்மை நிறம் பொருந்திய நெற்றியமிழ்து பால்வண்ணன் மேனிப் பகலோன் எனப்படும். அவ்வமிழ்து இனிமையாக்குதற் பொருட்டு உடலெங்கும் ஒத்துப் புகுந்து நிறைந்து நின்றது. குதமாகிய மூலத் திடமாக நின்று தோன்றும் தீயின் வெப்பத்தினைத் தணிவிக்கும் பொருட்டு இவ்வமிழ்தினை அமைத்தருளினன் சிவன்.

குதம் செய்யும் அங்கி - மூலச்சூடு.

## 447. ஒழிபல செய்யும் வினையுற்ற நாளே

447. ஒழிபல செய்யும் வினையுற்ற நாளே
வழிபல நீராடி வைத்தெழு வாங்கிப்
பழிபல செய்கின்ற பாசக் கருவைச்
சுழிபல வாங்கிச் சுடாமல்வைத் தானே.

ஆருயிர்கட்கு வினைத் துய்ப்பு முடிந்த நாளில் பலமுறை நீங்கிய இரப்பாகிய ஒடுக்கத்தினைச் செய்தருள்வன். பலவழியினாலும் திருவருள்புரிந்து எழுவகைப் பிறப்பினுள் வினைக்கீடாக ஒன்றிற் பிறக்குமாறு அருள்புரிவன். அங்ஙனம் அருள்புரிந்து தோற்றுவித்தலால் பாவமும் பழியும் பலவாகச் செய்யும் பிணிப்பாகிய கருவில் ஆவி புகுந்ததென்க. கருப்பையில் காணும் பலவகையான துன்பங்களை நீங்கச் செய்தனன். மூலத் தீ சுட்டுவிடாவண்ணம் அமைத்து வைத்தருளினன், ஒழிபல - நீங்குதல் பல. நீராடி - திருவருள்வைத்து இன்புறுத்தினன். வாங்கி என்பது வாங்க என்னும் எச்சத்தின் திரிபு. வாங்கி - நீங்கச் செய்து.

## 448. சுக்கில நாடியில் தோன்றிய வெள்ளியும்

448. சுக்கில நாடியில் தோன்றிய வெள்ளியும்
அக்கிர மத்தே தோன்றுமவ் வியோனியும்
புக்கிடும் எண்விரல் புறப்பட்டு நால்விரல்
அக்கரம் எட்டும்எண் சாணது வாகுமே.

நடுநாடி வழியாக வருவதும் வெள்ளியாகிய விந்து. வித்து என்பதே விந்து என மருவியது. அம்முறையே தோன்றும் செந்நீராகிய சுரோணிதம். இச் சுரோணிதம் இங்கு யோனி எனக் குறிக்கப் பெற்றது. எட்டுவிரல் புறப்பட்டுச் செம்பாதியாகிய நான்கு விரல் உட்புகும். எழுத்தெட்டும் எண்சாண் உடம்பெனக் கூறப்படும். எழுத்தெட்டாவன; ஓங்காரத்துள் அமைந்த அகரவுகர மகரங்கள் மூன்றும், நிலம் நீர், நெருப்பு உயிர் (காற்று) விசும்பு ஆகிய பெரும்பூதங்கள் ஐந்தினுக்கும் முறையே லகார, வகார, ரகார, யகார, அகார எழுத்துக்கள் ஐந்தும் கூடிய எட்டுமாகும். இவ்வெட்டினையுமே வித்தெழுத்துக்கள் எட்டென்ப. வித்து எனினும் பீசம் எனினும் ஒன்றே. சுக்கில நாடி - வெண்ணீர் வரும்நாடி.

## 449. போகத்துள் ஆங்கே புகுந்த புனிதனுங்

449. போகத்துள் ஆங்கே புகுந்த புனிதனுங்
கோசத்துள் ஆகங் கொணர்ந்த கொடைத்தொழில்
ஏகத்துள் ஆங்கே இரண்டெட்டு மூன்றைந்து
மோகத்துள் ஆங்கொரு முட்டைசெய் தானே.

சிவபெருமான் ஆருயிர்கள் போகந் துய்த்தற்பொருட்டுப் போகியாக இருந்தருளுகின்றனன். அங்ஙனம் அருள்வதால் அவன்தன் தூய்மையாகிய புனிதத் தன்மையில் ஏதும் குறைபாடின்று. உயிர்களைக் கருவாகிய முட்டையிற் புகச் செய்தற்பொருட்டு இயல்புடைய இருவராகிய காதலர் மாட்டுப் பெருவேட்கையினை எழுப்பியருள்கின்றான். ஆங்குப் புகுந்த வுயிர் ஐ வேறு வகையான் ஒன்றன்பின் ஒன்றாகப் பொருந்திய பின்னர் உடம்பினைச் சாரும். ஐவேறு உடம்புகளாவன: உருவுடம்பு, வளியுடம்பு, மனவுடம்பு, அறிவுடம்பு, இன்பவுடம்பு என்பன. இவற்றை முறையே அன்மைய கோசம், பிராணமயகோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்தமய கோசம் என்ப. இவற்றை ஓர்புடை யொப்பாகப் பூதம் எழுச்சி மனம்இறுப்பு மூலம்வழி, ஆதலுடம் பைந்தாம் அறி, எனக் கூறலாம். கோசம் - உடம்பு. இத்தகைய கொடைத் தொழிலைச் செய்து அருள்புரிபவன் சிவபெருமான். இத்தகைய உடம்பு ஒன்றாகக் காணப்படுகின்றது. இவ்வுடம்பு தூவாமாயையினின்றும் ஆக்கப்படுவது. இவ்வுடம்பு முப்பத்தொரு மெய்களையுடையது. அவை உடல் மெய் இருபத்துநான்கு, உணர்வு மெய் ஏழு

என்ப. இவற்றை முறையே ஆன்மதத்துவம் வித்தியாதத்துவம் எனவும் கூறுப. அங்கு இரண்டெட்டுப் பதினாறு, மூன்றைந்து பதினைந்து ஆக முப்பத்தொன்று கூறிய குறிப்பினால் உணரலாம்.

கோசம் - பஞ்சகோசம். இரண்டெட்டு மூன்றைந்து - முப்பத்தொரு தத்துவங்கள்.

## 450. பிண்டத்தில் உள்ளுறு பேதைப் புலன்ஐந்தும்

450. பிண்டத்தில் உள்ளுறு பேதைப் புலன்ஐந்தும்
பிண்டத்தின் ஊடே பிறந்து மரித்தது
அண்டத்தின் உள்ளுறு சீவனும் அவ்வகை
அண்டத்து நாதத் தமர்ந்திடுந் தானே.

பிண்டமாகிய உடம்பினகத்து ஐம்பொறிகளினூடே புலப்படும் பொருளை ஏற்றுக் கொள்ளும் புலன்கள் ஐந்து. அவை ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்பன. இவற்றைப் புலன் எனவும் தன்மாத்திரை எனவும் கூறுப. இப்புலன்கள் முறையே செவி, மெய், நோக்கு, நாக்கு, மூக்கு என்னும் பொறிகளை இடமாகக்கொண்டு திகழும் மெல்லிய நரம்புகள் என்ப. இப்புலனைந்தும் அறிவுடையனபோல காணப்படினும் உண்மையானோக்கு வார்க்கு அவை அறிவில்லன என்பது புலனாகும். அதனால் ஈண்டுப் பேதைப்புலன், என்று ஓதப்பெற்றது. இப் புலன்கள் உடம்பினுள் தோன்றி உணருந் தன்மையை உடையவாயின. மரித்தல்: எண்ணுதல் ; உணர்தல். இது மருவுதல் என்னும் அடியாகத் தோன்றியதாகும். இச்சொல் வடமொழியில் ஃச்மரித்தல் என்றாயிற்று. கருப்பை முட்டையாகிய அண்டத்தினுள் அருளால் பொருந்திய ஆருயிரும், ஆங்கு உயிர்ப்பாகிய நாதத்தினோடு விரும்பிப் பொருந்தியிருக்கும்.

பேதைப்புலன் - அறிவற்ற புலன்.

# 451. இலைப்பொறி யேற்றி யெனதுடல் ஈசன்

451. இலைப்பொறி யேற்றி யெனதுடல் ஈசன்
துலைப்பொறி யிற்கரு ஐந்துடன் ஆட்டி
நிலைப்பொறி முப்பது நீர்மை கொளுவி
உலைப்பொறி ஒன்பதில் ஒன்றுசெய் தானே.

சிவபெருமான் எனக்களித்த உடலும் அதன்கண் காணப்படும் பொறிகளும் நிலையுடையனவல்ல. இலைஎன்பது இல்லை என்பதன் நடுக்குறை. அச்சொல் அவாய் நிலையான் நிலையுதல் என்னும் சொல்லைப்பெற்று நிலையுதல் இல்லை என்று ஆயிற்று. தூண்டித் தொழிற்படுத்தும் துணைப்பொறியாம் உணர்த்துமெய் ஐந்தென்ப. அவற்றுடன் ஆருயிர்களை இணைத்து வினைக்கீடாக ஆட்டுபவன் சிவன். நிலைப் பொறியாகவுள்ள மெய்கள் முப்பது. தனித்தனித் தன்மைவாய்ந்த அம் முப்பது மெய்களையும் உடற்கண் இணைத்தருளினன். உலைதலையுடைய உடலகத்துக் காணும் பொறிகளும் உலைதலையுடையன உடலகத்து இல்லிகளாகிய ஓட்டைகள் ஒன்பதுள்ளன. இல்லி என்பது கடைக்குறைந்து இல்லென நின்றது. இவ்வளவு தன்மையோடுங் கூடிய உடம்பொன்றைப் படைத்தருளினன். உணர்த்து

மெய் ஐந்து : அத்தன், அன்னை, அருளோன்,ஆண்டான், ஆசான் என்பன. உணர்வுமெய் ஆறு : காலம், ஊழ், உழைப்பு, உணர்வு, விழைவு, மருள் என்பன. உடல் மெய் இருபத்துநான்கு : மூலப்பகுதி, இறுப்பு, எழுச்சி, மனம்

அறிதற்கருவி ஐந்து, செய்தற் கருவி ஐந்து, பூத முதலாம் நுண்மை ஐந்து, பூதம் ஐந்து என்பன. பூதமுதல் என்பது பூதத்திற்குக் காரணம் என்பதாகும். முதல் - காரணம்; தன் மாத்திரை.

ஐந்துடன் - சிவ தத்துவங்கள் ஐந்துடன். உலைப் பொறி - சரீரம்.

# 452. இன்புற் றிருவர் இசைவித்து வைத்தமண்

452. இன்புற் றிருவர் இசைவித்து வைத்தமண்
துன்பக் கலசம் அணைவான் ஒருவனே
ஒன்பது நீர்ச்சால் கலசம் பதினெட்டு
வெந்தது சூளை விளைந்தது தானே.

மனையறத்தில் இன்பமுறும் மகப்பெறுவான் வேண்டிச் சிவபெருமானை நோக்கித் தவமுயன்ற இயல்புடைய இருவரும் ஆண்டவன் திருவுள்ளத்தால் இசைந்து உடல் இசைவிப்பதன் பொருட்டுக் கருவாக வைத்த மண் ஒன்று. உடம்பு இடும்பைக்கு இலக்கம். அதனால் இடும்பைக்கே கொள்கலமாகிய துன்பக்கலசம் என்றனர். அவ் வுடல் ஒருயிர் அணைதற்பொருட்டு அமைந்தது. அவ் வுடற்கலசத்துக்கு ஒன்பது தொளைகள் உள்ளன. அவ்வொன்பதும் நீர்ச்சால் எனப்படும். மேலும் அதன்கண் பத்துப்பொறிகள் உள்ளன. அப் பத்தும் அறிதற்கருவியும் செய்தற்கருவியும் என்ப. இவை பத்தும் புறக்கருவியாகும். மேலும் அகக்கருவி எட்டென்ப. அவை, நுண்மை ஐந்து, மனம் எழுச்சி இறுப்பு மூன்று என்பன. இவற்றை அருவுடம்பெனவும் புரியட்டரூபம் எனவும் கூறுப. இவ்வுடற்கலசம் மூலத்தீயாகிய சூளையில் வெந்ததாகும். திருவருளாணையால் நிகழ்வதால் எளிதில் விளைந்ததென ஓதுவார் தானே விளைந்தது என்றனர்.

துன்பக்கலசம் - சரீரம். ஒன்பது நீர்ச்சால் - ஒன்பது கழிவாய். கலசம் பதினெட்டு - 18 பக்க எலும்பு.

## 453. அறியீ ருடம்பினி லாகிய வாறும்

453. அறியீ ருடம்பினி லாகிய வாறும்
பிறியீ ரதனிற் பெருகுங் குணங்கள்
செறியீ ரவற்றினுட் சித்திகள் இட்ட
தறியவீ ரைந்தினு ளானது பிண்டமே.

முன்வினைக்கீடாகக் கருவினுள் அமைக்கப்பட்ட பேறு, இழவு. இன்பம், பிணி, மூப்பு, சாக்காடு என்னும் ஆறினுக்கும் ஏற்றவாறு ஆருயிர்கட்குக் குணங்கள் உண்டாகும். அவ்வுண்மையினைத் திருவருள் நாட்டத்தால் அறியாதிருக்கின்றீர். அங்ஙனம் பெருகும் குணங்களில் அல்லதைவிட்டுப் பிறியீர். நல்லதைப் பிறித்து அறியுங்கள் என்பதும் ஒன்று. அவ் வழியாகக் கைவரும் சித்திகளில் நல்லதன் கண் செறிந்து நிறைந்து பயன்கொள்ளீர். கருவினுள் வித்து இட்டது
முதல் அப் பிண்டம் பத்துத் திங்கள் காறும் வளர்ச்சியுறும். சித்திகள் - நிறைவேற்று முறைகள். பிண்டம் - உடல். பேறு - செல்வம். இழவு - வறுமை. மூப்பு - உயர்வு. சாக்காடு - இழிவு. பிணி - துன்பம்.

உடம்பினிலாகிய ஆறு - பேறு, இழவு, நரை, திரை, மூப்பு, சாக்காடு. பிறியீர் - பிரித்து அறிவீர்.

## 454. உடல்வைத்த வாறும் உயிர்வைத்த வாறும்

454. உடல்வைத்த வாறும் உயிர்வைத்த வாறும்
மடைவைத்த ஒன்பது வாய்தலும் வைத்துத்
திடம்வைத்த தாமரைச் சென்னியுள் அங்கிக்
கடைவைத்த ஈசனைக் கைகலந் தேனே.

சிவபெருமான் முன் ஓதியவாறு உடல் வைத்தருளினன். அதனுடன் ஆருயிர்களை வினைக்கீடாக இணைத்து வைத்தருளினன். மடைபோல் அமைக்கப்பட்ட ஒன்பது வாயில்கள் இணைத்தருளினன். உச்சியினுள் ஆயிர இதழ்த்தாமரை நிலைக்களமும் அமைத்தருளினன். பேரொடுக்கத்தைச் செய்யும் பெரும்பொருளாகிய சிவபெருமான் அந்தம் என்று அழைக்கப்படுகின்றனன். அதுவே இங்குக் கடைவைத்த ஈசன் என்று ஓதியருளினர். திருவருளால் அச் சிவபெருமானை இடையறாது நினையும் நற்றவ ஒழுக்கத்தை மேற்கொண்டனன். இதுவே இங்குக் கைகலந்தேன் என்று ஓதப்பெற்றது.

## 455. கேட்டுநின் றேன்எங்குங் கேடில் பெருஞ்சுடர்

455. கேட்டுநின் றேன்எங்குங் கேடில் பெருஞ்சுடர்
மூட்டுகின் றான்முதல் யோனி மயனவன்
கூட்டுகின் றான்குழம் பின்கரு வையுரு
நீட்டிநின் றாகத்து நேர்பட்ட வாறே.

நூலுணர்வாரும் நுண்ணுணர்வாரும் ஓதும்முறையைக்கேட்டு நின்றேன். அவர்கள் கூற்று வருமாறு : எஞ்ஞான்றும் யாண்டும் கேடில்லாது நின்று விளங்குபவன் பெருஞ்சுடராகிய சிவபெருமான். அவன் ஆருயிர்களை வினைக்கீடாக உலகு உடல்களிற் பொருந்தும் வினைமுதற் காரணன் ஆவன். குழம்புபோன்ற கருவைக் கூட்டி வைக்கின்றனன். அதனை உருவாக்குகின்றனன். உடலை வளர்க்கின்றனன். அவ்வுடலுடன் கலப்பால் ஒன்றாக இயைந்து நின்றருளினன். சேர்ந்திருக்கும் தன்மையினை நேர்படல் என்ப. முதல் யோனி: வினைமுதற் காரணம்.

## 456. பூவுடன் மொட்டுப் பொருந்த அலர்ந்தபின்

456. பூவுடன் மொட்டுப் பொருந்த அலர்ந்தபின்
காவுடைத் தீபங் கலந்து பிறந்திடும்
நீரிடை நின்ற குமிழி நிழலதாய்ப்
பாருடல் எங்கும் பரந்தெட்டும் பற்றுமே.

பூவாகிய கருப்பையினுள் மொட்டாகிய விந்துக்குறி பொருந்த அப் பூவிரியும். விரிந்தபின் சுமையாயுள்ள குடும்ப விளக்குப் போலும் கருத்தோன்றிப் பிறந்திடும். அக்கரு நீரிடை நிற்கும் நீர்க்குமிழியின் நிழல்போன்று நிற்கும். இதுவே பூதம் ஐந்தும் பொறி பத்தும் ஆகிய பதினைந்து (449) கருவிகளாலாகிய பருவுடல். இதன் கண் யாண்டும் நிலைத்துள்ள நுண்மை ஐந்து, மனம், எழுச்சி, இறுப்பு என்னும் மூன்று ஆக எட்டும் நுண்ணுடல் என்ப. அவ்வுடலுடன் ஆருயிர் பருவுடற்கருவிற் புகும். காவுடை - சுமையாயுள்ள. நிழல் - சாயல். பாருடல் - மூவைந்தாலாகிய உருவுடல். எட்டு - அருவுடலாகிய நுண்ணுடற் கருவிகள் எட்டு.

பூ - யோனி. மொட்டு - இலிங்கம். காவுடைத் தீபம் - கரு.

## 457. எட்டினுள் ஐந்தாகும் இந்திரி யங்களுங்

457. எட்டினுள் ஐந்தாகும் இந்திரி யங்களுங்
கட்டிய மூன்று கரணமு மாய்விடும்
ஒட்டிய பாச உணர்வென்னுங் காயப்பை
கட்டி அவிழ்த்திடுங் கண்ணுதல் காணுமே.

அருவுடலாகிய நுண்ணுடல் ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்னும் புலன்கள் ஐந்தும் அகப்புறக்கலன்களாகிய மனம் எழுச்சி இறுப்பு என்னும் கரணங்கள் மூன்றும் ஆகிய எட்டினாலாயது. இது படைப்புக் காலந்தொட்டுப் பேரொடுக்கக் காலம் வரையில் அழியாதிருக்கும். (இடையே திருவடிப்பேறெய்தும் செவ்வி வாய்ப்பின் அக்காலத்து இந்நுண்ணுடல் ஒடுக்கப்படும்). இந் நுண்ணுடலுடன் கூடிப் பருவுடலிற் புகுந்ததும் ஆருயிர்க்குச் சுட்டுணர்வு ஏற்படும். சுட்டுணர்வைப் பாசவுணர்வெனக் கூறுப. உருவுடலைக் காயப்பை என்ப. அக் காயப்பையினுள் நுண்ணுடலுடன் கூடிய உயிரைப் புகச் செய்பவன் கண்ணுதற் பெருங்கடவுளாகிய சிவபெருமானாவன். அந்நிலையில் அவன் கட்டுவித்தோனாவன். பின்பு செவ்வி வந்துற்றபோது அக் கட்டினை அவிழ்த்துத் தன் திருவடியில் ஒட்டுவிப்போனும் அவனே. அருவுடலிற் காணப்படும் ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் ஐந்தும் புலன் என்ப இவ்வைந்தும் உணர்வெழுச்சியினின்றும், தோன்றுவன. இவை நிகழ்தற்கு இடன் செவி, மெய், கண், நாக்கு, மூக்கு என்ப. இஃது, உள்ள புலன் ஐந்தும் உணர்வெழுச்சியிற் றோன்றும்,

கொள்ளு செவி மெய்கண் நா மூக்கு என்பதனால் அறியலாம். இவற்றை இந்திரியம் எனவும் கூறுப. பாசவுணர்வு - கண் முதலிய கருவிகள் வழியாக வரும் உணர்வு. இதனைச் சுட்டுணர்வு எனவும் பாசம் வாயிலாக உணரும் உணர்வு எனவும் கூறுப. சிவபெருமான் ஆருயிர்களை அவற்றின் வினைக் கீடாகத் திருவருளால் உடலுடன் கூட்டி வினைக் கழிவின்கண் உடலை ஒழித்திடுவன்.

# 458. கண்ணுதல் நாமங் கலந்துடம் பாயிடப்

458. கண்ணுதல் நாமங் கலந்துடம் பாயிடப்
பண்ணுதல் செய்து பசுபாசம் நீங்கிட
எண்ணிய வேதம் இசைத்த பரப்பினை
மண்முத லாக வகுத்துவைத் தானே.

நெற்றிக் கண்ணையுடைய நற்றமிழ்ச் சிவபெருமான் திருப்பெயர் 'நமசிவய' என்ப. இத் திருவெழுத்தைந்தும் ஒருபுடை ஒப்பாக அந்தக்கரணங்கள் நான்கும் ஆள் ஒன்றும் ஆகிய ஐந்தினையும் இயைந்தியக்குவதாகக் கூறலாம். அங்ஙனம் கூறுமிடத்து நகரம் இறுப்பு மெய்யினையும், மகரம் மனத்தையும், சிகரம் ஆளையும், வகரம் எண்ணத்தினையும், யகரம் எழுச்சியினையும் இயக்குவவாகும். இஃது, இறுப்பே மனம் ஆளோ டெண்ணம் எழுச்சி, உறுப்பாம் நமசிவய ஓது எனக் கொள்க. இதுவே கண்ணுதலோன் நாமம் கலந்து உடம்பாய்ப் பண்ணுதல் என்பதாகும். திருவைந்தெழுத்தின் தொகையாகக் கூறப்படும் அகர உகர மகரம் நாதம் விந்து என்னும் ஐந்தும் முறையே, எழுச்சி இறுப்பு மனம் ஆள் எண்ணம் என்பனவற்றை இயைந்தியக்கும் என்பதும் ஒன்று. இவற்றால் திருவடி யுணர்வு கைவந்து பசு பாசம் நீங்கப்பெறும் பசு: சிற்றுணர்வு. பாசம்: சுட்டுணர்வு: அங்ஙனம் நீக்குதற்பொருட்டுத் திருவைந்தெழுத்தின் விரியாகிய செந்தமிழ்த் திருமறை திருமுறை ஆகிய வேதாகமங்களை ஆக்குவித்தருளினன். அவற்றை அன்பியலும் அருளியலும் என இரண்டாகப்

பகுத்தருளினன். அன்பியல் உலகியலாகிய அறம் பொருள் இன்பம் ஆகும். அருளியல் வீடாகும். இனம்பற்றி அடியியல் திருவடிப் பேறாகும். இது மண்முதலாக வகுத்து வைத்தான் என்பதனால் பெறப்படும். மண்முதல் என்பது அன்பியலுக்கு நிலவுலக வாழ்க்கை முதல் எனப் பொருள்படும். அருளியல் என்பது மண்முதல் சிவம தீறாகச் சொல்லப்படும் முப்பத்தாறு மெய்களும் கொள்க. உடம்பாயிட : உள்ளுறுப்புக்களைச் செலுத்த. உடம்பு உள்ளுறுப்பிற்கு முதலாகு பெயர். பசு - பிணிப்பி, பசுத்தன்மை - பிணிப்புமை; பிணிப்புத் தன்மை, வேதம் - மறை. இசைத்த - இயற்றுவித்த. பரப்பினை - எங்கும் நீக்கமின்றிச் செறிந்த பரப்பினையுடையாய்.

கண்ணுதல் நாமம் - நமச்சிவாய.

## 459. அருளல்ல தில்லை அரனவன் அன்றி

459. அருளல்ல தில்லை அரனவன் அன்றி
அருளில்லை யாதலி னவ்வோர் உயிரைத்
தருகின்ற போதிரு கைத்தாயர் தம்பால்
வருகின்ற நண்பு வகுத்திடுந் தானே.

அருளும் அரனும் மரமுங்காழ்ப்பும் போலப் பிரிவிலா இருநிலை ஒரு பொருள். ஒரு நிலை அறிவுநிலை. மற்றொரு நிலை ஆற்றல்நிலை அறிவு நிலையைக் கடந்த நிலையென்றும் ஆற்றல் நிலையைக் கடத்துநிலை என்றும் கூறுப. அருளின்றி அவனும் இல்லை. அவனன்றி அருளும் இல்லை ஆதலின் சிவபெருமான் ஆருயிர்களை உடலுடன் இணைப்பதாகிய படைத்தலைச் செய்யுங்கால் வனப்பாற்றல் நடப்பாற்றலாகிய இருவகை ஒழுக்கத் தாயர்பால் ஒப்புவித்து அவ்விருவரையும் விழுத்திணைத்துணைப் பொருளாக்கினன். அவ்விருவராலும் சுரக்கின்ற திருவருளாகிய அன்பினைத் தன் பால் நண்பாகத் தானே சுரந்தருள அமைத்தனன். கைத்தாயர் : ஒழுக்கத்தாயர், செவிலித்தாயர்; வளர்ப்புத்தாயர். கை - ஒழுக்கம். சீர்சிவமும் பேரருளும் செப்பிற் கடந்த நிலை, பார்கடத்துந் நிலையாம் பண்பு.

## 460. வகுத்த பிறவியை மாதுநல் லாளுந்

460. வகுத்த பிறவியை மாதுநல் லாளுந்
தொகுத்திருள் நீக்கிய சோதி யவனும்
பகுத்துணர் வாகிய பல்லுயிர் எல்லாம்
வகுத்துள்ளும் நின்றதோர் மாண்பது வாமே.

நடப்பாற்றலாகிய ஆதி மாதுநல்லாள் எனப்படுவள். அவள் ஆருயிர்கட்கு வினைக்கீடாகப் பிறவியை வகுத்தருளினள். வனப்பாற்றலாகிய திருவருள் சோதி நல்லாளாகும். அவள் வழியாக அருட்பெரும் சோதியாகிய சிவபெருமான் ஆருயிர்களின் இருளாகிய அறியாமையை நீக்கியருள்வன். அச் சிவபெருமான் பலவாகிய உயிரினங்களை மாதுநல்லாளாகிய ஆதியாற்றல்வழிப் பகுத்துணரச் செய்தருள்வன். அங்ஙனம் அமைத்தருளின சிவபெருமான் உயிருக்குயிராய் உண்ணின்றுணர்த்திச் சிறப்பருளினன் என்க.

## 461. மாண்பது வாக வளர்கின்ற வன்னியுங்

461. மாண்பது வாக வளர்கின்ற வன்னியுங்
காண்பது ஆண்பெண் அலியெனுங் கற்பனை
பூண்பது மாதா பிதாவழி போலவே
ஆம்பதி செய்தானச் சோதிதன் ஆண்மையே.

மூலத் தீயின் சார்பாக வளர்கின்ற கருவினை வெளிப்படுமுன் ஆண் பெண் அலியெனக் காண்பது கற்பனையாகும். பேரொளிப் பிழம்பாம் அருட்பெரும் சோதி தன் அறிவாண்மையால் கருவுற்ற உயிரின் தாய்தந்தை வழி நிழல்போல் அமைத்தருளினன். தாயைப் போன்று பிள்ளை என்பதனால் உடலமைப்புப் பெரும்பாலும் தாயுடம்பைப் போன்றதாகும். 'தந்தையறிவே மகனறிவு' 'தந்தைய ரொப்பர் மக்க' ளென்பதனால் உணர்வின் வளர்ச்சியமைப்புப் பெரும்பாலும் தந்தையின் உணர்வினைப் போன்றதாகும். தீப்பிழம்பாம் இறைவனை ஆண் பெண் அலி என்றல் கற்பனையாகும் என்றலும் ஒன்று. இங்ஙனம் குறிப்பது சார்புத்தன்மையாகும். சார்பு - தடத்தம்; பொது. ஆம் பதி - அமைத்தவுடம்பு. ஆண்மை - காக்குந்தன்மை.

வழிபோல - சாயல் போல.

# 462. ஆண்மிகில் ஆணாகும் பெண்மிகில் பெண்ணாகும்

462. ஆண்மிகில் ஆணாகும் பெண்மிகில் பெண்ணாகும்
பூணிரண் டொத்துப் பொருந்தில் அலியாகும்
தாண்மிகு மாகில் தரணி முழுதாளும்
பாணவ மிக்கிடில் பாய்ந்ததும் இல்லையே.

காதலரிருவரும் மருவிப் பொருந்துங்கால் ஆண் ஆகிய வலப்பால் மூச்சு மிகுந்து சென்றால் கருவுற்றுப் பிறக்குமுயிர் ஆணாகப் பிறக்கும். பெண்ணாகிய இடப்பால் மூச்சு மிகுந்து சென்றால் பிறக்குமுயிர் பெண்ணாகப் பிறக்கும். இரண்டு மூக்கின் வழியாகவும் வரும் மூச்சு ஒத்திருந்தால் பிறக்குமுயிர் அலியாக இருக்கும். ஆள்வினை முயற்சியில் கருத்து மிகுதியாகவிருந்தால் பிறக்குமுயிர் சிறப்பாகப் பிறக்கும். அச் சிறப்புடன் பிறந்த உயிர் 'உழையார் புவனம் ஒருமூன்று' மொருங்குடன் ஆளும். அகப் பயிற்சியால் விந்து கட்டுப்பட்டுத் திண்மை ஏற்படின் மருவி இன்புறினும் விந்து வெளிச் செல்லுவதில்லை. ஆதலால் பாய்ந்ததும் இல்லை என்றனர். பாணவம்; பண்ணவம் என்பதன் செய்யுள் திரிபு. பண்ணவம் - திண்மை.

## 463. பாய்ந்தபின் னஞ்சோடில் ஆயுளும் நூறாகும்

463. பாய்ந்தபின் னஞ்சோடில் ஆயுளும் நூறாகும்
பாய்ந்தபின் னாலோடில் பாரினில் எண்பதாம்
பாய்ந்திடும் வாயுப் பகுத்தறிந் திவ்வகை
பாய்ந்திடும் யோகிக்குப் பாய்ச்சலு மாமே.

காதலர் இருவரும் மருவிக் கூடியபின் வாரசரம் (மூன்றாம் தந்திரம், 16. வாரசரம்) முறைப்படி உயிர்ப்பு ஐம்பூதங்களிலும் பரந்து ஓடினால் பிறந்த உயிர்க்கு அகவை நூறு ஆகும். நான்கு ஓடினால் அகவை எண்பதாகும். இம்முறையாகச் செல்லும் மூச்சினைப் பகுத்தறிந்து காண்க. யோகமுறையில் கூடுபவர் உயிர்ப்பினையுணர்ந்து வேண்டியவாறு செலுத்துதலும் கூடும். மேலும் தந்தையின் உயிர்ப்பு ஐந்துமுறை ஓடினால் மகவுக்கு அகவை நூறெனவும், நான்குமுறை ஓடினால் எண்பது எனவும் கூறுதலும் ஒன்று.

## 464. பாய்கின்ற வாயு குறையிற் குறளாகும்

464. பாய்கின்ற வாயு குறையிற் குறளாகும்
பாய்கின்ற வாயு இளைக்கின் முடமாகும்
பாய்கின்ற வாயு நடுப்படிற் கூனாகும்
பாய்கின்ற வாயுமா தர்க்கில்லை பார்க்கிலே.

சர ஓட்டஞ் செல்கின்ற உயிர்க்காற்று அளவிற் குறைந்தால் பிறக்கும் மகவும் குறுகிய வடிவமாகப் பிறக்கும். அம் மூச்சு நெடுந்தொலைவு ஓடி இளைத்தவன் மூச்சுப் போல் இளைத்துப்போனால் பிறக்கும் மகவு முடமாகும். அம் மூச்சு இடைநிலைப்பட்டிருந்தால் கூனாகும். இவ்வாராய்ச்சி அனைத்தும் ஆண்பாலார்க்கே அன்றிப் பெண்பாலார்க்கு இல்லை.

## 465. மாதா உதரம் மலமிகில் மந்தனாம்

465. மாதா உதரம் மலமிகில் மந்தனாம்
மாதா உதரம் சலமிகில் மூங்கையாம்
மாதா உதரம் இரண்டொக்கில் கண்ணில்லை
மாதா உதரத்தில் வந்த குழவிக்கே.

இருவரும் மருவுங்கால் தாயார் வயிற்றில் மலம் துப்புரவாகக் கழியாமல் தங்கி மிக்கிருந்தால் பிறக்கும் மைந்தன் மந்தனாவன். அதுபோல் நீரல் நீராகிய சிறுநீர் மிகுந்திருந்தால் பிறப்பது ஊமையாகும். இரண்டும் ஒப்ப இருக்குமானால் குருடாகும். இங்ஙனம் நோவது தாய் வயிற்றுத் தோன்றும் சேய்க்கு என்க. (மகப்பேறு ஆண்டவன் திருவருட்பேறாம் தவநிலை. அதனால் இருவரும் தூயராய்ச் சிவனினைவுடன் உடனுறைவின்பந் துய்த்தல் வேண்டும்.)

இரண்டு - மலமும் சலமும். (30)

## 466. குழவியும் ஆணாம் வலத்தது வாகில்

466. குழவியும் ஆணாம் வலத்தது வாகில்
குழவியும் பெண்ணாம் இடத்தது வாகில்
குழவியும் இரண்டாம் அபானன் எதிர்க்கில்
குழவி அலியாகுங் கொண்டகால் ஒக்கிலே.

உயிர்ப்பு இருவரும் மருவுங் காலத்து வலமூக்கின்வழி வந்துகொண்டிருந்தால் பிறக்கும் மகவு ஆணாகும். அஃது இடது மூக்கின் வழி வந்துகொண்டிருந்தால் பெண்ணாகும். மலக்காற்றாகிய அபானன் எதிர்த்து வருமானால் இரட்டைப் பிள்ளைகள் பிறக்கும். இருமூக்கின் வழியாகவும் ஒத்துவருமானால் பிறப்பது அலியாகும்.

# 467. கொண்டநல் வாயு இருவர்க்கும் ஒத்தெழில்

467. கொண்டநல் வாயு இருவர்க்கும் ஒத்தெழில்
கொண்ட குழவியுங் கோமள மாயிடுங்
கொண்டநல் வாயு இருவர்க்குங் குழறிடில்
கொண்டதும் இல்லையாங் கோல்வளை யாட்கே.

மருவிப் புணரும் காதலர் இருவருக்கும் வருகின்ற உயிர்ப்பு ஓர் அளவாக வருதல் வேண்டும். அங்ஙனம் ஒத்து எழுந்தால் திருவருளால் கருவுற்றுத் தோன்றும் குழவியும் நனிமிகு வனப்புடையதாகவிருக்கும். வனப்பு - அழகு. அவ் வுயிர்ப்பாகிய மூச்சு தடுமாறுமேயானால் அழகிய வளையலையணிந்த காதலி வயிற்றில் கருத்தங்கியது ஏதும் இல்லையாகும். அந்தோ மூச்சுப் பயிற்சியின்மையானும், மூச்சின் அருமையினை உணராமையானும், காலமும், இடனும், காதலும், கருத்தும் தீதற உணராது காமம் மேலிட்டபொழுதெல்லாம் முறையின்றி மருவி உரனும் இழந்து வரனுடை மக்கட் பேற்றையும் அழித்துவிடுகின்றனர். சிற்றுயிர்களுக்கு உள்ள இயற்கை அடக்கம்தானும் ஆறறிவுயிராகிய நம்மனோர்க்கு அமையாவிடின் ஆன்றோர் என்ன கூறுவர்? எங்ஙனம் மதிப்பர்? சிற்றுயிர்கள்மாட்டு யாண்டேனும் வேண்டும் கருவீணாய் மாண்டதெனக் கண்டதும் கேட்டதும் உண்டோ? இனியேனும் உண்மையுணர்ந்து ஒழுகுவோமாக.

குழறினால் - தடுமாறினால்.

## 468. கோல்வளை உந்தியிற் கொண்ட குழவியுந்

468. கோல்வளை உந்தியிற் கொண்ட குழவியுந்
தால்வளை யுள்ளே தயங்கிய சோதியாம்
பால்வளர்ந் துள்ளே பகலவன் பொன்னுருப்
போல்வளர்ந் துள்ளே பொருந்துரு வாமே.

அழகிய வளையலணிந்த பெண்களின் உந்தியளவாம் அடி வயிற்றில் கருவுற்றுத் தங்கிய அரும்பெறற் குழந்தையும் அண்ணாக்குத் தொளைவயிற் காணும் பேரொளிப் பிழம்பொக்கும். தால் - நாக்கு; அண்ணாக்கு. வயிற்றில் முறைமுறையாக வளர வேண்டிய வுறுப்புக்கள் அனைத்தும் செவ்வையுற வளர்ந்து பகலவனின் பொன்னுருவாம் தன்மையினை எய்தும். இந் நிலைமையினையே பிள்ளை சிவசூரியன்போல் இருக்கின்றதென்று செப்புவர். எனவே, வயிற்றகத்துச் சேய் சிவந்த உருவாக விளங்கும். பொன்னுரு - காலையே போன்றிலங்கும் பொன்னிறம்.

உந்தி - கொப்பூழ்; ஈண்டு, அடி வயிறு. தால்வளை - அண்ணத்தின் கண்ணதாம் தொளை. பகலவன் - கதிரவன்.

## 469. உருவம் வளர்ந்திடும் ஒண்மதிங்கள் பத்திற்

469. உருவம் வளர்ந்திடும் ஒண்மதிங்கள் பத்திற்
பருவம தாகவே பாரினில் வந்திடும்
மருவி வளர்ந்திடு மாயையி னாலே
அருவம தாவதிங் காரறி வாரே.

தாய் வயிற்றில் தக்க தவப் பேற்றால் தோன்றிய மக்கட் கரு பத்துத் திங்கள் நிறைந்ததும் திருவருளால் நிலவுலகத்துத் தோன்றும். தோன்றி 'ஈன்று புறந்தருதல்' தாயின் தலையாய கடனாதலின் அம் மகவும் தாயால் வளர்க்கப்பெறும். வளருங் காலத்து இருட் சார்பாம் மருளின் மயக்கத்தினாலே தன் உண்மையறியாது வளரும். அவ்வாறு வளரும் தன்மையினை அறிவார் யார்? மாயை - இருட்சார்பாம் மருள். அருவம் - கட்புலனாகாமை; அறியாமை.

## 470. இட்டான் அறிந்திலன் ஏற்றவள் கண்டிலள்

470. இட்டான் அறிந்திலன் ஏற்றவள் கண்டிலள்
தட்டான் அறிந்தும் ஒருவர்க் குரைத்திலன்
பட்டாங்கு சொல்லும் பரமனும் அங்குளன்
கெட்டேன்இம் மாயையின் கீழ்மையெவ் வாறே.

காதலால் மருவித் தம்வயம் இழந்து இன்புற்றார் இருவருள் வித்தாகிய விந்துவினை இட்ட தலைவனும் பிள்ளை பிறக்கும் அல்லது பிறக்கும் வாய்ப்பில்லாது போகும் என்றும் உணரான். ஒரு வேளை பிறந்தாலும் அஃது ஆணா பெண்ணா என்று அறியும் அறிவும் உண்டாகாது. அதுபோல் அவ்வித்தினை ஏற்ற தலைவியும் ஏதும் அறிந்திலள். தட்டான் ஆகிய சிவபெருமான் அறிந்திருந்தும் ஒருவருக்கும் உணர்த்தான் தட்டான்: காரணத்தின்றும் காரியப்பாட்டினை ஆக்கியருள்வோன்; மனம் வாக்குக்கு எட்டாதவன்; மாற்றம் மனங்கழிய நின்ற மறையோன். பட்டாங்காகிய உண்மை உணர்த்தும் முழுமுதற் சிவனும் உயிருக்கு உயிராய் ஆங்கு உள்ளான். அந்நிலையில் அம் மாயையானது ஆவியின் அறிவினைக் கீழ்ப்படுத்திப் பிறப்பு இறப்புக்களில் உழலச் செய்கின்றது. இத்தகைய தாழ்நிலையை அம் மாயை எவ்வாறு செய்கின்றது என்று நினைக்க நினைக்க மிக்க வியப்பினைத் தருவதாகின்றது.

இட்டார் - தந்தை. ஏற்றவர் - தாயார். தட்டான் - சிவன்.

## 471. இன்புற நாடி இருவருஞ் சந்தித்துத்

471. இன்புற நாடி இருவருஞ் சந்தித்துத்
துன்புறு பாசத்தில் தோன்றி வளர்ந்தபின்
முன்புற நாடி நிலத்தின்முன் தோன்றிய
தொன்புற நாடிநின் றோதலு மாமே.

காதலரிருவரும் இன்பம் எய்தும்படி விரும்பி மருவிக் கூடுவர். அங்ஙனம் கூடிய கூட்டத்தில் கருவுண்டாகும். அக் கருவி

லுறும் ஆருயிர், துன்பமாகிய பாசப்பிணிப்பில் கட்டுண்டு வரும். வந்து பிறக்கும்; பிறந்து முறையே வளரும். அங்ஙனம் வளர்ந்தபின் மேலோங்கி வாழ முயலும். அங்ஙனம் முயலும்போது, பழைமையாகிய வினைக்கீடாக வரும் பிறவியினை நாடுதல் வேண்டும். அப்படி நாடித் திருவைந்தெழுத்தை அகங்குழைந்து அன்புடன் இடையறாது ஓதுதல் வேண்டும். பாசம் - மாயை. முன்புற - மேலா இருக்க. தொன்பு : புவ்வீறு பெற்ற பண்புப் பெயர்; பழைமை.

தொன்பு - பழமையாகிய பிறவி.

## 472. குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைக்கூட் டிட்டால்

472. குயிற்குஞ்சு முட்டையைக் காக்கைக்கூட் டிட்டால்
அயிர்ப்பின்றிக் காக்கை வளர்க்கின் றதுபோல்
இயக்கில்லை போக்கில்லை ஏனென்ப தில்லை
மயக்கத்தால் காக்கை வளர்க்கின்ற வாறே.

காக்கைக் கூட்டில் குயில் முட்டையிட அதனை அக்காக்கை சிறிதும் ஐயம் கொள்ளாது அடைகாத்து வெளிப்படுத்துவது போல, இறைவன் ஆவிகளின் வினைக்கீடாக அவ் ஆவிகளை அருவுடலோடு (உளமனுவாய்) உருவுடல் பெறத் தந்தை கருவில் இரண்டு திங்களும் தாய் கருவில் பத்துத் திங்களும் புகுத்தியருளுகின்றனன். அதனால் அனைத்துயிரும் ஆண்டவன் மக்களே. அவ்வுண்மையுணராது பெற்றோர் தம் மக்களே எனத் திரியக் கொள்வது மயக்கத்தால் ஆவது. உண்மையுணர்ந்தார் ஆசான் மாணாக்கரை ஓம்புவதுபோல் தம் மக்களையும் பிறர் மக்களையும் ஏனைச் சிற்றுயிர்களையும் சிவனினைவுடன் ஒப்பப் பேணுவர். அங்ஙனம் பேணின் அதுவே இறைபணியாகும். சிறந்தது பயிற்றலுமாகும். அயிர்ப்பு - ஐயம். சிறந்தது - திருவடிப்பேறு.

## 473. முதற்கிழங் காய்முளை யாய்அம் முளைப்பின்

473. முதற்கிழங் காய்முளை யாய்அம் முளைப்பின்
அதற்புத லாய்ப்பல மாய்நின் றளிக்கும்
அதற்கது வாய்இன்ப மாவது போல
அதற்கது வாய்நிற்கும் ஆதிப் பிரானே.

முதற் கிழங்காய் - காரணமாகிய வித்தாய். முளைப்பின் - முளைத்த பின்பு. அதற்புதலாய்ப் பலமாய் - அதன் வளர்ச்சியிற் செடியாய் அரும்பு மலர் காய்கனி முதலிய பயனாய். நின்றளிக்கும் - நிலைத்து நின்று கைம்மாறு கருதாது பயனுதவும். அதற்கது போல - ஓரறிவுயிர்கள் பிறவுயிர்கட்குத் தாம் பயன்படுவதே இன்பமாகக் கொள்வது போன்று. அவ் ஓரறிவுயிர்க்கும் சிவபெருமான் இன்பருள்வன். ஆதிப்பிரான் - ஆதியை யுடைய முழுமுதற் சிவபெருமான்.

அதன் புதலாய் - அதன் செடியாய்.

## 474. பரத்திற் கரைந்து பதிந்தநற் காயம்

474. பரத்திற் கரைந்து பதிந்தநற் காயம்
உருத்தரித் திவ்வுடல் ஓங்கிட வேண்டித்
திரைக்கடல் உப்புத் திரண்டது போலத்
திரித்துப் பிறக்குந் திருவரு ளாலே.

திருவருளால் பதினைந்து மெய்களால் விளங்கும் பருஉடல் உணவின் காரியமாகும். அது வேண்டுமளவு கரைந்து கருவில் சேர்ந்து பதியும். பின்னர் அஃது உருவாய்த் திரண்டு ஓங்கும். அங்ஙனம் திரண்டு உருவாவதற்குக் கடல் நீரிலுள்ள உப்புத்திரண்டு வேறாகுவதே ஒப்பாகும். அங்ஙனம் திரித்துப்பிறப்பிக்கும் செயல் அனைத்தும் திருவருளின் திருவுள்ளத்தால் நிகழ்வன. திருவுள்ளம் - சங்கற்பம்.

திரித்து - மீண்டு.

## 475. சத்தி சிவன்விளை யாட்டால் உயிராக்கி

475. சத்தி சிவன்விளை யாட்டால் உயிராக்கி
ஒத்த இருமாயா கூட்டத் திடைபூட்டிச்
சுத்தம தாகுந் துரியம் பிரிவித்துச்
சித்தம் புகுந்து சிவமய மாக்குமே.

திருவருட் பெருந்திருவாம் சத்தியுடன், அத் திருவினை விட்டு நீங்கா மரமுங் காழ்ப்பும் போல் உரம்பெற்று என்றும் வரமருளும் சிவபெருமானும் ஆருயிர்கள் உய்தற்பொருட்டு ஐந்தொழில் புரியத் திருவுள்ளங் கொண்டருளினன். இத் திருக்குறிப்பே விளையாட்டென ஓதப் பெற்றது. ஆருயிர்கட்கு மல மகற்ற உடலைப் படைத்தருளினன். அவ்வுடலுடன் உயிரை இணைத்தருளுவதையே உயிராக்கி என ஓதினர். அழுக்ககற்றத் துணைபுரியும் தன்மையிலும் அகற்றவேண்டுந் தன்மையிலும் ஒத்த பான்மையுடையன மாயைகள். அம் மாயை தூமாயை எனவும் தூவாமாயை எனவும் இருவகைப்படும். மல கன்மங்களுடன் விரவியது தூவாமாயை. மல கன்மங்களுடன் விரவாதது தூமாயை. இவ் விருமாயைகளும் சேர்ந்ததே அரும்சைவர் தத்துவமாகிய முப்பத்தாறு மெய்களும். அவற்றுள் முப்பத்தொரு மெய்களும் தூவாமாயை எனப்படும். இவை உருவுடல் அருவுடல் மருவுடல் கருவுடல் என நால் வகைப்படும். இவற்றைத் தூலவுடல் சூக்குமவுடல் கஞ்சுகவுடல் காரணவுடல் எனக் கூறுப. உருவே அருமரு வொண்கருமெய் நான்கும் பருமைநுண் போர்வை முதற் பாப்பு என நினைவு கூர்க. இவ்விருமாயையும் பகுப்பால்

இரண்டுபட்டதேனும் பொருளால் ஒன்றேயாம். இவற்றுடன் இணைத்து நடப்பாற்றலால் ஊட்டி நடத்துவிப்பன். தூய்மை எனக் கூறப்படும் பேருறக்கமாகிய துரிய நிலையில் மலமகற்றிச் சித்தமாகிய எண்ணத்தின்கண் சிவபெருமான் புகுந்தருள்வன். புகுந்து அவ்வுயிரைத் தன் வண்ணம் ஆக்கியருள்வன். விளையாட்டு - எண்ணத்தாலியற்றும் எளிமை. ஊட்டி - வினைப்பயனை நுகர்வித்து. சிவமயம் - சிவநிறைவு.

இருமாயா - சுத்தமாயை - அசுத்த மாயை.

## 476. விஞ்ஞானர் நால்வரு மெய்ப்பிரள யாகலத்

476. விஞ்ஞானர் நால்வரு மெய்ப்பிரள யாகலத்
தஞ்ஞானர் மூவருந் தாங்கு சகலத்தின்
அஞ்ஞானர் மூவரு மாகும் பதின்மராம்
விஞ்ஞான ராதியர் வேற்றுமை தானே.

இத் திருப்பாட்டு ஒருமலமுடையார் நால்வகையினர், இருமலமுடையார் மூவகையினர், மும்மலமுடையார் மூவகையினர் ஆகப் பதின்மரென ஓதுகின்றது. ஒரு மலமுடையார் - விஞ்ஞானாகலர். இருமல முடையார் - பிரளயாகலர். மும்மலமுடையார் - சகலர்.

## 477. விஞ்ஞானர் கேவலத் தாரது விட்டவர்

477. விஞ்ஞானர் கேவலத் தாரது விட்டவர்
தஞ்ஞானர் அட்டவித் தேசராஞ் சார்ந்துளோர்
எஞ்ஞானர் ஏழ்கோடி மந்திர நாயகர்
மெய்ஞ்ஞானர் ஆணவம் விட்டுநின் றாரே.

கேவலத்து ஆராதுவிட்டவர்: மும்மலத்து அழுந்தாத ஆட்டும் முதன்மை மலமட்டுமுடையவர். (முதன்மை - அதிகாரம்.) தஞ்ஞானர் - முழுச் செவ்வி வாயாதவர். அவர் ஆவியருளோன் எனப் பெயர் பெறுவர். (ஆவியருளோன் : அணுசதாசிவர்.) இவர்கள் அருளோன் மெய்க்கண் உறைவர். (அருளோன் மெய் : சதாசிவ தத்துவம்.) அட்டவித்தேசர் - அறிவுக்கடவுளர் எண்மர். இவ்வெண்மரும் ஆண்டான் மெய்யின்கண் உறைபவர். (ஆண்டான் மெய்: மகேசுர தத்துவம்.) எஞ்ஞான... நாயகர் - எண்மை ஞானத்தராய செவ்வியர் ஏழுகோடி மந்திரத் தலைவராவர். இவர்கள் ஆசான் மெய்யின்கண் உறைபவர். இம் மூவரும் முழுச் செவ்வி வாயாதவர். (ஆசான்மெய் - சுத்த வித்தியா தத்துவம்) மெய்ஞ்ஞானர் - முழுச் செவ்வி வாய்ந்தவர்; ஆட்டு முதன்மை மலமுமில்லாதவர். ஆணவம் விட்டு - மலப்பசையற்று. நின்றார் - சிவபெருமான் திருவடியிற் கலந்து பிரிவற நின்று பேறுபெற்றார். இந்நால்வரும் அறிவிற்சீலம், அறிவின் நோன்பு, அறிவிற் செறிவு, அறிவின் அறிவு என்னும் நானெறிப் பேற்றினராவர். (இந் நான்கும் ஞானத்திற் சரியை முதலனவாகக் கூறப்படும்.) இவர்களை

ஒருமலமுடையார் எனக் கூறுவது மலப்பசையறாமை பற்றி என்க. (மலப்பசை - மலவாசனை.)

# 478. இரண்டா வதில்முத்தி எய்துவர் அத்தனை

478. இரண்டா வதில்முத்தி எய்துவர் அத்தனை
இரண்டாவ துள்ளே இருமல பெத்தர்
இரண்டாகு நூற்றெட்டு ருத்திரர் என்பர்
முரண்சேர் சகலத்தர் மும்மலத் தாரே.

முன் திருப்பாட்டில் ஓதப்பட்ட முழுச் செவ்வி வாயாத ஒரு மலமுடைய மூவகையினரும், மற்றோர் படைப்புக்குப்பின் அத்தனாகிய சிவபெருமான் திருவடிக்கீழ் வீடுபேறு எய்துவர். இரண்டா... பெத்தர் - இரண்டாவது வகையினராகிய இருமலமுடையார் இருவகையினராவர். அவர் நிறைசெவ்வியும் குறைசெவ்வியும் உடையார் என இரு வகைப்படுவர். இவருள் நிறைசெவ்வியுடையாரும் விழுப்
பேற்றினர் வழிப்பேற்றினர் என இருவகையினராவர்.
இம்முறையில் குறை செவ்வியுடையார், விழுப்பேற்றினர், வழிப்பேற்றினர் என மூவகைப்படுவர். நிறை செவ்வி - பக்குவம் குறைசெவ்வி - அபக்குவம். விழுப்பேறு - பரமுத்தி. வழிப்பேறு - அபரமுத்தி. ஆண்டான்மெய்க்கண் உறையும் அறிவுக் கடவுளரை வழிபட்டு அவர்நிலை எய்திய முனிவர் ஒரு நூற்றெண்மரும் இவ்விருமலமுடையார் நிலையினராவர். முனிவர் உருத்திரர். (சீகண்ட உருத்திரரும் இந்நிலையினரேயாவர்.) முரண்சேர் ...தாரே - வலிமைமிக்க எல்லாக் கட்டும் உடையார் மும்மலத்தாராவர்.

## 479. பெத்தத்த சித்தொடு பேண்முத்தச் சித்தது

479. பெத்தத்த சித்தொடு பேண்முத்தச் சித்தது
ஒத்திட் டிரண்டிடை யூடுற்றார் சித்துமாய்
மத்தது மும்மலம் வாட்டுகை மாட்டாதார்
சத்தத் தமிழ்ந்து சகலத்து ளாரே.

முதன்மை மலப்பசை அறிவொடு தங்கிய ஒரு மலமுடையார் விழுமிய முழுமுதற் சிவனேயாவர். சித்தது : அது முதற் பொருள் ஈறு; பகுதிப் பொருள் விகுதி. முதற்பொருள் - பகுதிப்பொருள். ஈறு - விகுதி. ஒத்திட்...சித்துமாய் - இருமலப் பிணிப்பினர் மெய்யுணர்வினராய். குறை செவ்வியுடையராய்; மத்தத்து...மாட்டாதார் - மருளுடையராய் மும்மலத்தை அடக்கும் வலியில்லாராய்; சத்தத்...ளாரே - அருவுடலோடுறைந்து மும்மலக் கட்டுடையாராவர். மத்தத்து - உன்மத்தத்து; மருள் (தலைக்குறை). சத்தம் - ஓசை. இஃது அருவுடலைக் குறிக்கும்.

## 480. சிவமாகி ஐவகைத் திண்மலஞ் செற்றோர்

480. சிவமாகி ஐவகைத் திண்மலஞ் செற்றோர்
அவமாகார் சித்தர்முத் தாந்தத்து வாழ்வார்
பவமான தீர்வோர் பசுபாசம் அற்றோர்
நவமான தத்துவம் நாடிக்கண் டோரே.

சித்தர் - இறைவிளங்கும் நிறையுள்ளம் உடையார். முத்தாந்தம் - விழுப்பேறு; சாயுச்சியம். பவம் - பிறப்பு. நவமானதத்துவம் - ஒன்பதாகிய மெய். அவை : அறிவு; (அத்தன்). ஆற்றல் (அன்னை), நுண்ணோசை (நாதம்), நினைவோசை (விந்து), அருளோன், ஆண்டான், அரன், அரி, அயன் என்னும் ஒன்பது மெய்கள். நாடிக்கண்டார் - திருவருட்கண்ணால் ஆய்ந்துணர்ந்தார்.

ஐவகைத்திண்மலம் - ஆணவம் - கன்மம் - மாயை - மாயேயம் - திரோதாயி.

# 481. விஞ்ஞானர் ஆணவ கேவல மேவுவோர்

481. விஞ்ஞானர் ஆணவ கேவல மேவுவோர்
விஞ்ஞானர் மாயையில் தங்கும் இருமலர்
அஞ்ஞானர் அச்சக லத்தர் சகலராம்
விஞ்ஞான ராதிகள் ஒன்பான்வே றுயிர்களே.

மலப்பசை ஒன்று மட்டும் பொருந்துவோர் மெய்யுணர்வினராவர்; அவர் மூவகையினர். (ஆவியருளோன், அறிவுக் கடவுளர் எண்மர், எழுகோடி மந்திரத் தலைவர்.) விஞ்ஞான...இருமலர் - தூமாயையில் தங்கும் இருமலத்தாரும் மூவகையினர். (குறைசெவ்வியுடையார், விழுப்பேற்றினர், வழிப்பேற்றினர்.) அஞ்ஞான ...சகலராம் - தூவாமாயையில் உள்ள மும்மலமுடையாரும் மூவகையினர். (மட்டமானவர், விரைவானவர், மிகுவிரைவானவர்; மந்தர், தீவிரர், தீவிரதரர்.) விஞ்ஞான ...உயிர்களே - மேலே கூறிய மூவகை ஒன்பது பிரிவாம் உயிர்கள். விஞ்ஞானர் - தூமாயையினர். அஞ்ஞானர் - தூவாமாயையினர்.

## 482. விஞ்ஞான கன்மத்தால் மெய்யகங் கூடிய

482. விஞ்ஞான கன்மத்தால் மெய்யகங் கூடிய
அஞ்ஞான கன்மத்தி னால்சுவர் யோனிபுக்
கெஞ்ஞான மெய்தீண்டி யேயிடை யிட்டுப்போய்
மெய்ஞ்ஞான ராகிச் சிவமேவல் உண்மையே.

விஞ்ஞான கன்மத்தர் - மேலான ஞானகன்மத்தைப் புரிபவர். அஞ்ஞானகன்மத்தினால் - அந்த ஞானகன்மம் புரிவதாலே. சுவர்யோனி - தேவப்பிறப்பு. எஞ்ஞானம் - மேலெழும் ஞானம். (எஞ்ஞானம் என்பது எவ்வுஞானம் என்பதன் குறைவாகும்.) எவ்வுதல் - மேலெழுதல். மெய்யுணர்வு கைவந்த தவத்தோர் அறிவுநிலையினராய்ச் சிவன் திருவடியைக் கூடுதல் மெய்ம்மையே.

## 483. ஆணவந் துற்ற வவித்தா நனவற்றோர்

483. ஆணவந் துற்ற வவித்தா நனவற்றோர்
காணிய விந்துவா நாத சகலாதி
ஆணவ மாதி யடைந்தோ ரவரன்றே
சேணுயர் சத்தி சிவதத் துவமாமே.

ஆணவத்தால் பொருந்திய மறைப்பு நனவில்லாதார் காணும் பொருட்டு விந்துநாதம் ஆணவமாதி அடைந்தோராவர். எல்லாவற்றுக்கு மேலாக அன்னை மெய்யும் அத்தன் மெய்யும் உள்ளன. அன்னை - சத்தி. அத்தன் - சிவன். ஆணவந்துற்ற - ஒட்டாய்ப் பொருந்திய பழமலம். அவித்தாம் நனவு - மறைபட்ட நனவு. (அவித்து - மறைவு) அற்றோர் - மருள் நனவு நீங்கினோர். சகலாதி - புணர்வாகிய உடல் கலன் உலகம் ஊண் முதலியன. ஆணவமாதி அடைந்தோர் - ஆணவ முதலியன நீங்கினோர். சேணுயர் - மிகத் தொலைவாகிய.

அவித்து ஆம் நனவு - மண்பட்ட அறிவு. விந்து ஆம் நாதம் - விந்துவைப் படைக்கின்ற நாதம்.

## 484. திலமத் தனையே சிவஞானிக் கீந்தால்

484. திலமத் தனையே சிவஞானிக் கீந்தால்
பலமுத்தி சித்தி பரபோக முந்தரும்
நிலமத் தனைபொன்னை நின்மூடர்க் கீந்தால்
பலமுமற் றேபர போகமுங் குன்றுமே.

திலமத்...குன்றுமே - எள்ளளவு பொருள் அகனமர்ந்த அன்பினராய் மிகக் கனிந்த மொழியினராய், முகமலர்ந்த நகையினராய், தலைகுனிந்த நிலையினராய், குறிப்புணர்ந்த அறிவினராய்ச் சிவஞானிகளுக்குப் பணிவுடன் கொடுத்தால் அளவில்லாத அழிவில்லாத செல்வ வாழ்வும், அறமும், அருளும், திருவடிப் பெருவாழ்வும் எளிதின் வந்தெய்துறும். முப்பொருளுண்மை கொள்ளா மைப்படிந்த மனத்தர் செப்பும் முழுமூடராவர். அறிந்தோ அறியாமலோ அம் மூடர்க்கு ஈயுமாறு நேர்ந்துவிட்டால் அந்தோ பயனிழந்து மேலாம் திருவடியின்பமும் கிட்டாது குன்றிப்போம் அம்மட்டோ! அம்மூடர்க்கு ஈந்த தானப் பயனால் இழிபிறப்பு அடைந்து, அழிவில் அல்லலுழப்பர். திலம் - எள். பலம்-கிட்டும் பேறு. முத்தி - வீடு. சித்தி - சிவவுலக வாழ்வு. பரபோகம் - திருவடிப்பேறு. நின்மூடர் - சிவனினைவு அற்றோர். பரபோகமும் குன்றும் - திருவடிப் பேற்றினுக்கு உரிய வழியும் கிட்டாது.

## 485. கண்டிருந் தாருயிர் உண்டிடுங் காலனைக்

485. கண்டிருந் தாருயிர் உண்டிடுங் காலனைக்
கொண்டிருந் தாருயிர் கொள்ளுங் குணத்தனை
நன்றுணர்ந் தார்க்கருள் செய்திடு நாதனைச்
சென்றுணர்ந் தார்சிலர் தேவரு மாமே.

உயிரைத் துன்புறுத்திக் கொண்டு செல்லும் கூற்றுவன் செயலை உலகோர் நேரே கண்டிருந்தனர். கொண்டிருந்... குணத்தனை - தன்னைவழிபட்டார் பொருட்டுக் கூற்றுவன் உயிரைக் கொள்ளை கொண்ட எண்குணக் கடவுளை. நன்றுணர்ந்தார்-நானெறியின் நன்மையினை உணர்ந்தவர். தேவருமாவர்-சிவவுலகத்து வாழும் தேவரும் ஆவர். மாற்றருங் கூற்றுவனை மாற்றும் ஆற்றல் சிவபெருமான் ஒருவனுக்கே யுளதென்பதும், அப்பெருமை தங்களைச் சாரவேண்டும் என்னும் அவாவும் 'புக்கடிமையினால்' விளங்குவதென்க.

## 486. கைவிட்டி லேன்கரு வாகிய காலத்து

486. கைவிட்டி லேன்கரு வாகிய காலத்து
மெய்விட்டி லேன்விகிர் தன்னடி தேடுவன்
பொய்விட்டு நானே புரிசடை யானடி
நெய்விட் டிலாத இடிஞ்சிலு மாமே.

கருவாய்க் கிடக்கின்ற காலத்தும் சிவபெருமான் கழலே நினையும் கருத்துடைய திருநெறி ஒழுக்கத்தை நெகிழவிட்டேன். அல்லன். மெய்விட்டிலேன் - உடம்பினிடத்துள்ள எனது என்னும் பற்றை விட்டவன் அல்லன். விகிர்தன் - பல்வேறு திருமேனிகொள்ளும் சிவபெருமான். பொய்விட்டு - உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று செய்யும் அன்பிலாப் பொய்ச்சொல் செய்து. நானே...னடி - பின்னற் சடையினையுடைய சிவபெருமான் திருவடியினை யானே (தேடுவன்). நெய்விட்.. மாமே - நெய்விடாது எரிக்க விரும்பிய விளக்குப்போல் பயனில்லதாகும். இடிஞ்சில் - அகல்; இட ஆகுபெயராய் விளக்கைக் குறித்தது. எண்ணெய் இல்லா விளக்குப் பயன் பெறாமை போலச் சிவ நினைவு இல்லாதவரும் பயன்பெறார்.

இடிஞ்சில் - அகல். வறடு - மலட்டுப் பசு.

## 487. ஆவன ஆவ அழிவ அழிவன

487. ஆவன ஆவ அழிவ அழிவன
போவன போவ புகுவ புகுவன
காவலன் பேர்நந்தி காட்டித்துக் கண்டவன்
ஏவன செய்யும் இளங்கிளை யோனே.

கருவினுள் ஆணையான் அமைத்த 'பேறு இழவு' முதலியனவும் பிறவும் ஆம். காவலன்...யோனே. சிவபெருமான் காட்டிக் காண்பவன்; அவன் திருவுள்ள ஆணை வழிப்பட்டு அவன் ஏவின செய்வோரே புத்தடியாராவர். இளங்கிளை - புத்தடிமை.

## 488. கோல வறட்டைக் குனிந்து குளகிட்டுப்

488. கோல வறட்டைக் குனிந்து குளகிட்டுப்
பாலைக் கறந்து பருகுவ தேயொக்கும்
சீலமும் நோன்பும் இலாதவர்க் கீந்தது
காலங் கழிந்த பயிரது ஆகுமே.

தகுதியல்லாதார்க்கு ஈவது வறட்டுப் பசுவைப் பேணிப் பால் கறந்து குடிப்பதை ஒக்கும். குனிந்து - வணங்கி. வறட்டை - கன்றீனாக் கறவை. காலம் கழிந்த - பருவம் நீங்கிய. சீலம் - சரியை. நோன்பு - கிரியை.

குளகு - தழை.

## 489. ஈவது யோக இயம நியமங்கள்

489. ஈவது யோக இயம நியமங்கள்
சார்வ தறிந்தன்பு தங்கு மவர்க்கன்றி
ஆவ தறிந்தன்பு தங்கா தவர்களுக்
கீவ பெரும்பிழை யென்றுகொ ளீரே.

யோகவுறுப்பாகிய இயம நியமங்களே செந்நெறியினைச் சார்வதற்குரியன என்று அறிந்து அன்புடன் அவற்றைக் கைக்கொண்டார்க்கே ஈவது தக்கது ஆகும். யோகம் - மணவொருக்கும்; அணைவு. இயமம் - தீமையகற்றல். நியமம் - நன்மை ஆற்றல். அன்றி ...ளீரே - இவ்வுண்மை அறிந்து அன்புகொண்டு அவற்றை மேற்கொள்ளாதவர் கட்குக் கொடுப்பது பெருங்குற்றமாகும்.

## 490. ஆமா றறியான் அதிபஞ்ச பாதகன்

490. ஆமா றறியான் அதிபஞ்ச பாதகன்
தோமாறும் ஈசற்குந் தூய குரவற்குங்
காமாதி விட்டோர்க்குந் தரல்தந்து கற்பிப்போன்
போமா நரகிற் புகான்போதங் கற்கவே.

பஞ்சபாதகன் - பொய், கொலை, களவு, காமம், பொருள் நசை ஆகிய ஐந்து பாவமும் அஞ்சாது நெஞ்சாரச் செய்தவன். தோமாறும் - ஆணவமலக் குற்றத்தை மாற்றும். குரவன் - ஆசான். காமாதி - காமம் வெகுளி மயக்கம். விட்டோர் - தவத்தோர். தரல் - தர வேண்டிய நற்பொருள்கள். தந்து - அன்புடன் அளித்து. கற்பிப்போன் - தன்னையும் பிறரையும் அவ்வழி நிறுத்துவோன். போதம் - திருவடியுணர்வு. கற்க - ஏற்றுக்கொள்ள. (நற்சார்பில் வந்து தோன்றுவன்.)

## 491. மண்மலை யத்தனை மாதனம் ஈயினும்

491. மண்மலை யத்தனை மாதனம் ஈயினும்
அண்ணல் இவனென்றே யஞ்சலி யத்தனாய்
எண்ணி யிறைஞ்சாதார்க் கீந்து இருவரும்
நண்ணுவர் ஏழா நரகக் குழியிலே.

உண்மை உணர்வுடன் இரவலர் இறைவர் திருவடியைத் தொழாராயின் அவர்க்கு: ஈந்தவர்-கொடுத்தவர். (அதுபோல் புரவலரும் தொழா அராயின்) மண்மலை ...மீயினும் - மண்ணும் மலையும் போல் பரப்பும் செறிவும் உயர்வுமாகிய பெரும் பொருள் தந்தாலும். (ஏற்போர்) இருவரும்...குழியிலே - ஈந்தவர் ஏற்றவர் ஆகிய இருவரும் கடு நரகக் குழிவீழ்வர். (ஏற்போர் என ஒரு சொல் வருவிக்க) எனவே, இரவலரும் புரவலரும் இறைவணக்கமுடையராய்த் தங்களை ஆண்டவனுக்கு அடிமை என்றும் தங்கள்பாலுள்ள அறிவு செல்வங்களை அவன் உடைமை என்றும் அருளால் உளங்கொண்டு ஒருவருக்கொருவர் ஈந்தும் ஏற்றும் உதவியாய் வாழ்வதே திருநெறி என்பது பெறப்படும்.

## 492. உள்ளத்தின் உள்ளே உளபல தீர்த்தங்கள்

492. உள்ளத்தின் உள்ளே உளபல தீர்த்தங்கள்
மெள்ளக் குடைந்துநின் றாடார் வினைகெடப்
பள்ளமும் மேடும் பரந்து திரிவரே
கள்ள மனமுடைக் கல்வியி லோரே.

தீர்த்தங்கள் - ஆண்டவனை மறவாமையாகிய அன்பும், அவன் பெருந்துணையாகிய அருளும், அவ் அருளால் கணிக்கும் 'சிவயசிவ' என்னும் திருவைந்தெழுத்தும், அம் மறை வண்ணமாகிய நாயன்மார் திருவுரு முதலியவற்றில் நிறைந்துநிற்கும் சிவனருளும் உள்ளத்து ஓவா துன்னத் தீர்த்தங்களாகும். மெள்ளக் ...வினை கெடப் - பிறப்பிற்கு ஏதுவாகிய வினையும், அதற்கேதுவாகிய மலமும்அகல மேற்கூறிய உள்ளத்துள்ள தீர்த்தங்களை நன்மனத்துடன் கைக்கொண்டால், அவ்வாறு முடியும்; அங்ஙனம் செய்யார். பள்ளமும் ...ளோரே - காடும் மலையும் சுற்றித் திரிவோர் திருமுறைக் கல்வியில்லாதவராவர்.

## 493. தளியறி வாளர்க்குத் தண்ணிதாய்த் தோன்றுங்

493. தளியறி வாளர்க்குத் தண்ணிதாய்த் தோன்றுங்
குளியறி வாளர்க்குக் கூடவும் ஒண்ணான்
வளியறி வாளர்க்கு வாய்க்கிலும் வாய்க்குந்
தெளியறி வாளர்தஞ் சிந்தையு ளானே.

தண்ணிது - குளிர்ந்தது; இன்பம். ஒண்ணான் - பொருந்தான். வளி - காற்று; உயிர்மூச்சு. (ஈண்டு மன ஒருக்கமாகிய யோகப் பயிற்சி) வாய்க்கினும் வாய்க்கும்: நானெறியு ளொன்றாகிய சிவயோகத்தால் வாய்க்கச்செய்யும். தெளியறி ...ளானே - திருவடி யுணர்வுடையார் தம் தூயவுள்ளத்துறையும் சிவபெருமான்.

தளி - இரக்கம். குளி - உலக அறிவு.

## 494. உள்ளத்தின் உள்ளே உணரும் ஒருவனைக்

494. உள்ளத்தின் உள்ளே உணரும் ஒருவனைக்
கள்ளத்தி னாருங் கலந்தறி வார்இல்லை
வெள்ளத்தை நாடி விடுமவர் தீவினைப்
பள்ளத்தி லிட்டதோர் பந்தருள் ளானே.

மெய்யடியார்தம் அன்புடலாகிய பள்ளத்தில் அமைத்த இறைபணியாகிய பந்தர் நிழலில் உள்ள சிவபெருமான். உள்ளத்தின்... ஒருவனை - மலம்நீங்கிய அன்பர் உள்ளத்தில் உணர்வுக்கு உணர்வாய் உணரப்படும் ஒப்பில் ஒருவனாம் சிவபெருமானை. கள்ளத்தி ...வார் இல்லை - தீநெறிக்கண் செல்வார் யாரும் கலந்துநிற்கும் சிவனை அறியமாட்டார். வெள்ளத்தை ...தீவினை - அவர் தீவினை எஞ்சுவினையாகிய வெள்ளத்தை நாடிச்சென்று கூடிவிடும். வெள்ளம் - அளவிறந்த தொகை. திருத்தநீராகிய வெள்ளத்தை எனினும் அமையும். இப்பொருட்கு வெள்ளத்தை நாடவிடுமவர் தீவினை என்க. நாடி : எச்சத் திரிபு.

## 495. அறிவார் அமரர்கள் ஆதிப் பிரானைச்

495. அறிவார் அமரர்கள் ஆதிப் பிரானைச்
செறிவா னுறைபதஞ் சென்று வலங்கொள்
மறியார் வளைக்கை வருபுனற் கங்கைப்
பொறியார் புனல்மூழ்கப் புண்ணிய ராமே.

ஆதிப்பிரானாகிய சிவபெருமானை மறவாநெஞ்சினராய் உறவான பேரன்பர் விழைதக்க அமரர் எனப்படுவர். அத்தகைய அமரர் அவனை அவனருளால் உள்ளவாறு உணர்வார்கள். அமர்தல் - விரும்புதல். எங்கும் நீக்கமற நிறைந்துள்ள சிவபெருமான் அடியார்பொருட்டு ஆண்டாண்டு வெளிப்பட்டருளிய இடங்கள் உறைபதங்களாகும். அப் பதங்களே திருவூர்கள் எனவும், திருக்கோவில்களெனவும் சிறப்பித்துச் சொல்லப்படும். அடுக்கினாலும் நெகிழ்வினாலும் மறிந்துவீழும் அழகு சேர் வளைக்கையினையுடைய உலக அன்னையையொத்த கங்கை என்னும் தீர்த்தத்தில் 'என்ன புண்ணியம் செய்தனை நெஞ்சமே முன்னை நீபுரி நல்வினைப் பயனிடை' என்பதுபோன்று முன்னைப் புண்ணியப் பேறுடையார் பொறியார் ஆவர். அவர் இப்பொழுது முழுகுவதால் மேலும் மிக்க புண்ணியப் பேற்றினராவர். மறியார் வளைக்கையைக் கங்கைக்கு அடையாக்கலும் ஒன்று வலங்கொள் - வெற்றிகொள்ளுதல். அறிவார் - திருவருளால் உணர்வார். பொறியார்புனல் - புண்ணியநீர்.

## 496. கடலிற் கெடுத்துக் குளத்தினிற் காண்டல்

496. கடலிற் கெடுத்துக் குளத்தினிற் காண்டல்
உடலுற்றுத் தேடுவார் தம்மையொப் பாரிலர்
திடமுற்ற நந்தி திருவரு ளாற்சென்
றுடலிற் புகுந்தமை ஒன்றறி யாரே.

திருவருளுடன் மாறுற்றுச் சிவபெருமானைத் தேடப் புகுவார் கடலில் போகட்ட பொன்னைக் குளத்தில் தேடி எடுக்கத் துணிந்து குளத்தில் இறங்கி முயல்வாரோடு ஒப்பர். திருவருள்வழி நிற்பார்க்குச் சிவபெருமானாகிய நந்தி அத் திருவருள் வழியாக உடலிற் புகுந்து நின்றருளுவன். இவ் வுண்மை ஒன்றும் அறியாராகவும் சிலருளர். உடலுற்று - மாறுபாடுற்று. திடமுற்ற - ஆருயிர்க்குநிலைத்த சார்பான. நந்தி - சிவபெருமான்.

(5)

## 497. கலந்தது நீர துடம்பிற் கறுக்குங்

497. கலந்தது நீர துடம்பிற் கறுக்குங்
கலந்தது நீர துடம்பிற் சிவக்குங்
கலந்தது நீர துடம்பில் வெளுக்குங்
கலந்தது நீர்நிலங் காற்றது வாமே.

உடம்பு ஐம்பூதக் கூட்டம். அவற்றுள் நிலம் பொன்மை: நீர் வெண்மை; தீ செம்மை; காற்று கருமை; வானம் புகைமை. இத்திருப்பாட்டில் குறிக்கப்படும் கறுப்பு, சிவப்பு, வெளுப்பு ஆகிய மூன்றும் முக்குணங்களைக் குறிப்பன. இவற்றைத் திருவருள் துணையால் சிவ நினைவால் தூய்மைப்படுத்துவதே தீர்த்தமாடுவதாகும்.

## 498.தாவர லிங்கம் பறித்தொன்றில் தாபித்தால்

498.தாவர லிங்கம் பறித்தொன்றில் தாபித்தால்
ஆவதன் முன்னே அரசு நிலைகெடுஞ்
சாவதன் முன்னே பெருநோய் அடுத்திடும்
காவலன் பேர்நந்தி கட்டுரைத் தானே.

'தழைத்ததோ ராத்தியின்கீழ்த் தாபரம் மணலாற் கூப்பி' என்பதனால் செந்தமிழ்ச் செந்நெறியாளரின் சீரிய வழிபாடு நாரிபாகன் தன் சிறந்த திருவுருவமாகிய செந்தழல் அடையாளமாம் சிவக்கொழுந்தின் வழிபாடாகும். இதுவே அருவுருவத் திருவுரு இதன்கண் எத் திருவுரு நினைவினையும் ஏற்றித் தொழுதற்கிடனுண்டாம். மாவாயிருப்பின் அவரவர் மனமிசைந்த உருவுடைப் பண்டமாக்கி யுண்பதும், பொற்கட்டி யாயிருப்பின் வேண்டியவாறு உருவு வேறுபட்ட அணியமைத்தணிந்து அகமகிழ்தலும் இதற்கொப்பாகும். எல்லா நினைவுக்கும் நிலைக்களமாக நிலையுற்றதென்னும் பொருளில் தாவரம் என்றனர். வேற்று நெறியாளர் ஆற்றாப் பகைமையால் அத் தாவரத்தைப் பறித்தெடுத்து ஆண்டு வேறொன்றைக்கொண்டு நிலைநாட்டுவர். அங்ஙனம் செய்வதனை வேந்தன் முன்னறிந்து ஆந்துணையும் தடுத்தல்வேண்டும். தடாது ஒழியின் புதிதாக நாட்டப்புகுந்தவுருவு நாட்டி முடிவதன் முன்னம், வேந்தனும் வேந்து இடைமுரிந்து கெடும். மாண்டு மடிவதன்முன்னே தீண்டற்கும் காண்டற்கும் ஒவ்வாத் தொழுநோயராய்ப் பெருந்துன்பத்தழுந்துவர். அனைத்துலக நன்மைக்கும்

நினைப்பரிய காவலனாய் நீடுவிளங்கும் நந்திப்பேரீசேர் நமசிவயத்தன் கட்டுரையாய் நவின்றருளினன். பறித்து - பிடுங்கி. ஒன்றில் - வேறொன்றை. தாபித்தால் - அங்கே நிலைநாட்டினால். ஆவதன் முன்னே - அப்படி நாட்டிய உருவம் நிலைப்படுவதன் முன்னே. பெருநோய் - அருவருக்கத்தகுந்த தொழுநோய். பேர் நந்தி - முழுமுதற் பெருங்கடவுள்.

## 499. கட்டுவித் தார்மதிற்-கல்லொன்று வாங்கிடில்

499. கட்டுவித் தார்மதிற்-கல்லொன்று வாங்கிடில்
வெட்டுவிக் கும்அபி டேகத் தரசரை
முட்டுவிக் கும்முனி வேதிய ராயினும்
வெட்டுவித் தேவிடும் விண்ணவன் ஆணையே

கட்டுவித்து ஆர் மதில் - செந்நெறிச்செல்வர்களால் கட்டுவிக்கப்பெற்று உயர்வு அகலம் திண்மை அருமை என்னும் நான்கினாலும் சிறந்து காட்சிக்கு இனிமையாக என்றும் நின்று நிலவும் திருக்கோயில் திருமதில். வாங்கிடல் - ஒரு சிறு துண்டுக்கல் நீக்கப்பட்டால். வெட்டுவிக்கும் - நீக்கியவர்களை அழிவிக்கும். அபிடேகத்தரசர் - திருமுடி சூடிய வேந்தர். முட்டுவிக்கும் - இடருறச்செய்யும்: விண்ணவன் - பரவெளியாகிய சிவபெருமான்.

## 500. ஆற்றரு நோய்மிக் கவனி மழையின்றிப்

500. ஆற்றரு நோய்மிக் கவனி மழையின்றிப்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்திருக் கோயில்க ளெல்லாஞ்
சாற்றிய பூசைகள் தப்பிடில் தானே.

கூற்றுதைத்த சிவபெருமான் திருக்கோவில்களில் எல்லாம் நெறி நூலும் துறைநூலுமாகிய செந்தமிழ் வேத ஆகமங்களில் விளம்பியபடி நாள்வழிபாடு சிறப்புவழிபாடுகள் முட்டாது செய்தல் வேண்டும். செய்யத் தவறுமானால் உலகத்துக்கு அளவில்லாத கொடிய நோய்கள் பெருகும். வேண்டுங்காலத்து மழைபெய்யாது. சிறப்புடை மன்னரும் போர்வலி குன்றி மறமும் மானமும் இழந்து சீரழிவர்.

## 501. முன்னவ னார்கோயில் பூசைகள் முட்டிடின்

501. முன்னவ னார்கோயில் பூசைகள் முட்டிடின்
மன்னர்க்குத் தீங்குள வாரி வளங்குன்றுங்
கன்னங் களவு மிகுத்திடுங் காசினி
என்னரு நந்தி எடுத்துரைத் தானே.

கூற்றுதைத்த கடவுள் எட்டுவான் குணத்துச் சிவபெருமான் ஒருவனே. அவன் எழுந்தருளியிருக்கும் திருக்கோவில்கள் இரண்டு. ஒன்று ஆருயிர்கள், மற்றொன்று திருக்கோவில். இவ் விரண்டிடங்களும் விழுமிய முழுமுதற் சிவபெருமானை முறையே சென்று நினைவூட்டுவதும், நின்று நினைவூட்டுவதும் ஆகிய திருவடையாளங்களாம். இவற்றின் வழியாக இவற்றை வழிபடும் மெய்யன்பினர்தம் தூய திருவுள்ளத்துச் சிவன் எழுந்தருள்வன். இவ் விரண்டிடங்களிலும் செய்யும் பூசை 'முன்னவனார் கோயில் பூசையாகும்.' அதற்கு முட்டு ஏற்பட்டால் ஆளும் வேந்தர்க்கு நாளும் தீங்குண்டாகும். வேண்டுங்காலத்து மழை பெய்யாது. உலகத்தில் கன்னங்களவு அளவில்லாமல் பெருகும். இங்ஙனம் நந்தியருள் செய்தனன். வாரி - வருவாய்; மழை. கன்னம் - களவெடுப்பதற்காகச் சுவரில் தோண்டுங்கருவி மிகுத்திடும். அளவின்றிப் பெருகும். காசினிக்கு (என்னும் பாடத்திற்கு) - உலகத்தில் வாழும் மக்களுக்கு (ஆகுபெயர்). முட்டிடின் - சிறப்பொடு பூசனை செய்யத் தடைப்பட்டு நடவாமற் போனால்.

## 502. பேர்கொண்ட பார்ப்பான் பிரான்தன்னை அர்ச்சித்தால்

502. பேர்கொண்ட பார்ப்பான் பிரான்தன்னை அர்ச்சித்தால்
போர்கொண்ட வேந்தர்க்குப் பொல்லா வியாதியாம்
பார்கொண்ட நாட்டுக்குப் பஞ்சமு மாம்என்றே
சீர்கொண்ட நந்தி தெரிந்துரைத் தானே.

இயற்கைச் செந்தமிழ் அந்தணாளர் பார்ப்பார் எனப்படுவர். திருவடியே குறிக்கோளாக மீளா அடிமையாய் வாழ்வதே பெரும்பேற்றின்பாக அகமும் புறமும் ஒத்துப் பார்ப்பார் ஒழுக்கமிக்க விழுத்திணைப் பார்ப்பாராவர். அவர்களே பூசைக்கு உரியவர். தமிழ் நாட்டில் வெளியிலிருந்து வருவாரும் உயர்நிலைப் பெயரை மயலாய் வைத்துக்கொள்வர். அவர்கள் பேர்கொண்ட பார்ப்பார் எனப்படுவர். அவர்கள் திருக்கோவில் பூசைசெய்யும் தக்கவராகார். அவர்களைக் கொண்டு பூசைசெய்வித்தால் தீமைகளைப் போர் செய்தகற்றும் வேந்தர்க்கு நீங்காக் கொடுநோய்கள் வீங்கும். முறைசேர் திருநாட்டில் வற்கடமாகிய பஞ்சமும் உண்டாகும்.

பேர்கொண்ட பார்ப்பான் - ஆரியப் பார்ப்பார்.

## 503. எம்பெரு மான்இறை வாமுறை யோஎன்று

503. எம்பெரு மான்இறை வாமுறை யோஎன்று
வம்பவிழ் வானோர் அசுரன் வலிசொல்ல
அம்பவள மேனி அறுமுகன் போயவர்
தம்பகை கொல்லென்ற தற்பரன் தானே.

நறுமணம் கமழும் வாடாக் கற்பகமாலை யணிந்த பீடார்மால் உள்ளிட்ட நால்வேறியற்கை முப்பத்து முக்கோடி தேவர்களும் சிவபெருமானிடம் முறையிட்டனர். 'எம்பெருமானே சூரபன்மன் முதலிய அசுரர் செய்யும் கொடுமை பொறுக்கமுடியலில்லை; எங்களை மாண்டொழியாவண்ணம் ஆண்டருளவேண்டும்' என்று முறையிட்டனர். சிவபெருமான் அறுமுகக் கடவுளைச் சென்று சூரனை அடக்கி விண்ணவரைக் காத்தருளப் பணித்தருளினன். திருவைந்தெழுத்தால் நாளும் நிகழும் திருக்கூத்து ஐந்தொழில் அருட்கூத்து. அவ் வைந்தொழிற்குரிய முகங்கள் ஐந்து. சிறப்பாக நடக்கும் போர் முதலியவை தன் ஆற்றலாகிய சத்தியினால் நிகழத்தப்படுவன. அதன்பொருட்டுக் கொள்ளும் திருமுகம் ஒன்றுஞ்சேரத் திருமுகங்கள் ஆறாகும். ஐம்முக அருளோனும் அறுமுகப் பொருளோனும் ஒன்றே என்பது திகழ் உருவின் எண்ணிக்கையானும் உணரலாம். அவ்விருவர் முகம் விழி மலர்க்கை மூன்றும் தனித்தனி முப்பது, செந்தமிழுக்குரிய இயற்கைச் சீரிய எழுத்தும் முப்பதே. இவ் வுண்மையை விளக்கும் திருப்பாட்டு வருமாறு:

"முகம்விழி மலர்க்கை மூன்று முப்பது முன்பு நாம்செய்
மகவினைக் கருள வந்த வள்ளலுக் கீண்டுச் சாடப்
புகுமிறைக் கவைகள் மூன்றும் முப்பதே பொலிவும் அற்றே
திகழுரு வானும் சேயைச் சிவனெனத் தெளிய லாமே."
-தணிகைப்புராணம், சீபரிபூரண நாமப்படலம், 183.

இதனாலன்றோ 'திருமுருகன்' அறுமுகச்சிவன் என்று அழைக்கப்படுகின்றனன். அவனுக்குரிய ஆறெழுத்து அருமறையும் 'ஓம் சிவயநம' என்று வழங்கப்பெறுகின்றது. வம்பவிழ் - மணநிறைந்த மாலையணிந்த அசுரன் - சூரபன்மன். அவர்தம் பகை - தேவர்பகை. தற்பரன் - தானே முழுமுதல்; சிவபெருமான். பொருளோன் - மகன்.

'தம்பொரு ளென்பதம் மக்கள் அவர்பொருள்
தந்தம் வினையான் வரும்'
திருக். - 63

என்னும் செந்தமிழ்ப் பொதுமறையின்கண் மக்களைப் பொருளென வழங்கியிருப்பதூஉம் காண்க.

மேலு ம் இவ்வுண்மை வரும் நம்பி ஆரூரர் திருப்பாட்டானும் உணர்க:

'பொ ரும்பலம துடையசுரன் றாரகனைப் பொருது
பொன்றுவித்த பொருளினைமுன் படைத்துகந்த புனிதன்
கரும்புவிலின் மலர்வாளிக் காமனுடல் வேவக்
கனல்விழித்த கண்ணுதலோன் கருதுமூர் வினவில்
இரும் புனல்வெண் டிரைபெருகி யேலமில வங்கம்
இருகரையும் பொருதலைக்கு மரிசிலின்றென் கரைமேல்
கரும்புனைவெண் முத்தரும்பிப் பொன்மலர்ந்து பவளக்
கவின்காட்டுங் கழிபொழில்சூழ் கலயநல்லூர் காணே"
- 7. 16 - 9.

அசுரன் - சூரபன்மன்.

## 504. அண்டமோ டெண்டிசை தாங்கும் அதோமுகங்

504. அண்டமோ டெண்டிசை தாங்கும் அதோமுகங்
கண்டங் கறுத்த கருத்தறி வாரில்லை
உண்டது நஞ்சென் றுரைப்பர் உணர்விலோர்
வெண்டலை மாலை விரிசடை யோற்கே.

அண்டங்களையும், எட்டுத்திசைகளையும் முட்டின்றிக் காத்தருளும் சிவபெருமானின் நிலவறையாகிய கீழ்நோக்கிய திருமுகம் அதோமுகம். அம் முகத்தின் கண்டங்கறுத்தது குற்றம் பொறுத்ததேயாம். மற்றுக் கூறப்படும் புராணக்கதைகள் உருவகமேயாம். கண்டங் கறுத்த கருத்து: திருப்பாற்கடல் - ஆருயிர் நன்றாய்வாழச் சிவபெருமான் திருவருளால் நல்கிய உலகு உடல் உடைமைகளாம். கடைதல் - சிவனை மறந்து யான் என்னும் செருக்கொடு வானவர் தானவர் எனப்படும் இருவினைக்கண் முயலுதல். நஞ்சு - சிவபெருமானை மறந்ததாகிய குற்றம். அதுவே கறையாகும். அக் குற்றத்தை ஏற்றுப் பொறுத்ததே கண்டம் கறுத்ததாகும். இதுவே உண்மைக்கருத்து. நஞ்சு - வெறுப்பு. கண்டம் - வரம்பு; திருவருளாணை.

அதோமுகம் - பிரகிருதிமாயை.

## 505. செய்தான் அறியுஞ் செழுங்கடல் வட்டத்துப்

505. செய்தான் அறியுஞ் செழுங்கடல் வட்டத்துப்
பொய்யே யுரைத்துப் புகழும் மனிதர்கள்
மெய்யே யுரைக்கில் விண்ணோர் தொழச்செய்வன்
மைதாழ்ந் திலங்கு மிடறுடை யோனே.

பொருள்சேர் புகழுக்குரிய இறைமைக்குணம் இலராயினாரை மயக்கத்தால் இறையென்று கொண்டு முறையின்றிப் புகழும் பொய்யுரை மனிதர்களை மெய்ப்பொருளாம் சிவபெருமான் அறிவன். அச் சிவபெருமானை மெய்ப்புகழ் புகழ்ந்து வழிபடுவாரைத் தொழப்படும் தேவர்தம்மால் தொழுவிப்பன். இவ் வுண்மை வருமாறு:

"முழுத்தழல் மேனித் தவளப் பொடியன் கனகக்குன்றத்து
எழிற்பரஞ் சோதியை எங்கள்பி ரானை இகழ்திர்கண்டீர்
தொழப்படுந் தேவர் தொழப்படு வானைத் தொழுதபின்னைத்
தொழப்படுந் தேவர்தம் மாற்றொழு விக்குந்தன்
தொண்டரையே."
- அப்பர், 4: 113 - 5.

செய்தான் ...வட்டத்து - உலக நிகழச்சிகளை அவ்வுலகை ஆக்கி நீக்கமற நிற்கின்ற சிவபெருமானே அறிவன். மெய்யேஉரைக்கில் - மெய்ப் பொருளாகிய சிவபெருமானைப் புகழ்ந்து வழுத்தினால் மை - மேகம் போலும் கருமை.

## 506. நந்தி எழுந்து நடுவுற ஓங்கிய

506. நந்தி எழுந்து நடுவுற ஓங்கிய
செந்தீக் கலந்துட் சிவனென நிற்கும்
முந்திக் கலந்தங் குலகம் வலம்வரும்
அந்தி இறைவன் அதோமுக மாமே.

நந்தியாகிய சிவபெருமான் செந்தீப் பிழம்பாக எழுந்தருள்வன். அவனுடன் தொன்மையிலேயே வேறன்றி நிற்கும் திருவருளாற்றல் நடப்பாற்றலாக நின்று உலகுயிர்களை வினைக்கீடாக ஆட்டும். அதுவே வனப்பாற்றலாய் நின்று நடப்பாற்றல் நிலையில் செவ்விபெறச் செய்த ஆருயிர்களைச் சிவத்துடன் கூட்டும். இதுவே வலமாகிய வெற்றியாகும். இத் திருமுகமே கீழ்நோக்கிய திருமுகமாகும். வலம்வரும் - வெற்றி கொள்ளும். அந்தி இறைவன் - அந்திபோலும் திருச்சடையினையுடைய சிவபெருமான். அதோமுகம் - திருவருளாற்றல்.

## 507. அதோமுகங் கீழண்ட மான புராணன்

507. அதோமுகங் கீழண்ட மான புராணன்
அதோமுகத் தன்னொடும் எங்கு முயலுஞ்
சதோமுகத் தொண்மலர்க் கண்ணிப் பிரானும்
அதோமுகன் ஊழித் தலைவனு மாமே.

கீழ்நோக்கிய திருமுகம் பூத்த சிறப்பினைக் கேண்மின். தொல்லோனாகிய சிவபெருமான் அத் திருமுகத்துடன் கலந்து எல்லாம் முயல்வன். மெய்யாயுள்ள ஓம் என்னும் வைப்பாற்றலின் மேன்முகம் ஒளிசேர் தூமாயையாகிய விந்து. கீழ்முகம் தூவாமாயையாகிய மோகினி. இந் நிலை தூண்டித் தொழிற்படுத்தும் கலப்பும், சிவகுருவாக எழுந்தருளும் நிலைக்களமும் குறிப்பதாகும். இத் திருமுகத்துக்குரிய முழு முதலே ஊழித்தலைவனாவன். ஓமொழி சொல்லப்படவே தூமாயையாகிய விந்துவும், தூவாமாயையாகிய மோகினியும், கீழ்மாயையாகிய மூலப்பகுதியும் பெறப்படும். புராணன் - காக்கும் பழையோன். அதோ முகத்தன் - அறுமுகன். அதோமுகன் - மாயையைக் காரியப்படுத்துபவன். ஊழித்தலைவன் - அனைத்தையும் ஒடுக்கும் தலைவன்.

சதோமுகம் - சத் ஓம் முகம்; சத்தாகிய பிரணவ சொரூபமான முகம்.

(5)

## 508. அதோமுக மாமல ராயது கேளும்

508. அதோமுக மாமல ராயது கேளும்
அதோமுகத் தாலொரு நூறாய் விரிந்து
அதோமுக மாகிய அந்தமில் சத்தி
அதோமுக மாகி அமர்ந்திருந் தானே.

கீழ்நோக்கிய திருமுகத்துடன் கூடி மாயாகாரியங்களைத் திருவுள்ளத்தால் தொழிற்படுத்தி அமர்ந்திருந்தனன் சிவன். அந்தமில் சத்தி - அளவில்லாத மாயையின் ஆற்றல்கள். (ஆறுகோடி மாயா சத்திகள்: செருக்கு, சினம், சிறுமை, இவறல், மாண்பிறந்த மானம், மாணாவுவகை என்பன.) அமர்ந்திருந்தான் - திருவுள்ளக்குறிப்பால் இயக்கி நின்றனன். அதோமுகம் - ஆதியாற்றல்.

## 509. தெளிவுறு ஞானத்துச் சிந்தையின் உள்ளே

509. தெளிவுறு ஞானத்துச் சிந்தையின் உள்ளே
அளிவுறு வாரம ராபதி நாடி
எளியனென் றீசனை நீசர் இகழில்
கிளியொன்று பூஞையிற் கீழது வாகுமே.

திருவடி யுணர்வுடையார் நல் உள்ளத்தினுள்ளே சிறந்து விளங்கும் சிவபெருமானை விண்ணவர் முதலியோர் தொழுது அவன் திருவருளைப் பெறுவர். எளியனென் ...வாகுமே - திருவடியுணர்விலாக் கீழோர் சிவபெருமானை மூவரொடும் ஒருவனாக எளிமையாக எண்ணிப் புறக்கணிக்கின்றனர். அதனால் அவர்கள் பிறவித்துன்பத்தில் உழல்கின்றனர். அவர்கள் நிலை பூனையால் கிழிக்கப்பட்ட கிளிபோலாகின்றது.

கீழது - கிழிபட்டது.

## 510. முளிந்தவர் வானவர் தானவர் எல்லாம்

510. முளிந்தவர் வானவர் தானவர் எல்லாம்
விளிந்தவர் மெய்ந்நின்ற ஞானம் உணரார்
அளிந்தமு தூறிய ஆதிப் பிரானைத்
தளிந்தவர்க் கல்லது தாங்கலொண் ணாதே.

கன்மனமுடைய வானவர் தானவரெல்லாம் விழுமிய முழுமுதற் சிவபெருமானைக் கெழுமித் தொழாது 'பெருநோய்கள் மிக நலியப் பெயர்த்துஞ் செத்துப் பிறப்பதற்கே தொழிலாகி இறக்கின்றனர்.' சிறந்த திருவடியமிழ்தை யருளும் சிவபெருமானைத் தளிர் கொண்டு வழிபட்டாரே அப் பேரின்பத்தைத் தாங்கும் பெற்றியராவர். தளிந்தவர் - தளிர்கொண்டு வழிபட்டவர். விளிந்தவர் - மீண்டும் பிறக்க இறந்தவர். அளிந்து - கனிந்து, தாங்குதல் - அணைதல்.

முளிந்தவர் - வாடிய சரீரத்தை உடையவர். தளிந்தவர் - அடங்கியவர்.

## 511. அப்பகை யாலே அசுரருந் தேவரும்

511. அப்பகை யாலே அசுரருந் தேவரும்
நற்பகை செய்து நடுவே முடிந்தனர்
எப்பகை யாகிலும் எய்தார் இறைவனைப்
பொய்ப்பகை செய்யினும் ஒன்றுபத் தாமே.

அறியாமையால் விளையும் செருக்காகிய பகையினாலே அசுரரும் தேவரும் பிறப்புப் பகைவராய்ப் பெரும்போர் செய்து மாண்டழிந்தனர். இறைவனைச் செந்தமிழ் மறையால் வழிபடுபவர் எப்பகையும் கொள்ளார், விள்ளார், சிவனே அவர்தம் பகையினை நீக்கியருள்வன். காவலர் மேவலரை நீக்கித் தாவில் குடிகளைத் தப்பாமற் காக்கும் வாய்மை
இதற்கொப்பாகும். விளையாட்டிடத்தும், பொய்ம்மையாகவுங்கூடப் பகையென்னும் சொல்லைக் கேட்டலும் நன்றன்று. அப்பகை - பிறப்புப் பகை. இறைவனை - முழுமுதற் சிவனை.

பொய்ப்பகை - விளையாட்டுப் பகை.

## 512. போகமும் மாதர் புலவி யதுநினைந்

512. போகமும் மாதர் புலவி யதுநினைந்
தாகமும் உள்கலந் தங்குள னாதலில்
வேதிய ராயும் விகிர்தனாம் என்கின்ற
நீதியுள் ஈசன் நினைப்பொழி வாரே.

மாதருடன் கூடியும் ஊடியும் அவர்களையே விடாமல் நினைந்துருகும் மயக்கமுள்ளவராதலால். வேதிய ...வாரே - மெய்யுணர்வு கைவந்த தவத்தோர் உணரும் முறையுள் நிலைபெற்று நிற்கும் இறைவனை நினையும் தவப்பேறில்லாது கழிவர். மெய்யுணர்ந்தார் மாதரொடு கூடி மகிழினும் போதொடுநீர்சுமந்தேத்திப் புகுவார் அவர்பின் புகு'வோராதலால் சிவனடியைத் தப்பாது சேர்ந்து இன்புறுவர்.

## 513. பெற்றிருந் தாரையும் பேணார் கயவர்கள்

513. பெற்றிருந் தாரையும் பேணார் கயவர்கள்
உற்றிருந் தாரை உளைவன சொல்லுவர்
கற்றிருந் தார்வழி உற்றிருந் தாரவர்
பெற்றிருந் தாரன்றி யார்பெறும் பேறே.

கீழானவர் தம்மைப் பெற்ற தாய் தந்தையரையும், பேண மாட்டார் நெருங்கிய உறவினரையும் மிகவும் வருந்தும்படி கடுமொழி கூறி நீக்குவர். கற்றிருந்...பேறே - உண்மைநூற் கல்வியுடைய ஆசானை அடுத்து அவர்வழி ஒழுகும் மேலானவர் பெற்ற தாய் தந்தையர்க்கு மட்டும் அல்லாமல் எல்லார்க்கும் நல்ல முறையாக நடந்து அவரவர்களும் தங்கள் தங்கள் பாக்கியம் என்று சொல்லும் நிலையினராவர். பேறு - பாக்கியம்.

## 514. ஓரெழுத் தொருபொருள் உணரக் கூறிய

514. ஓரெழுத் தொருபொருள் உணரக் கூறிய
சீரெழுத் தாளரைச் சிதையச் செப்பினோர்
ஊரிடைச் சுணங்கனாய்ப் பிறந்தங் கோருகம்
வாரிடைக் கிருமியாய் மாய்வர் மண்ணிலே.

(ப. இ.) திருவைந்தெழுத்து ஓதிவரும் வன்மை மிக்க சிவனடியாரை மனம் வருந்தும்படி நினைவாலும் சொல்லாலும் செயலாலும் புரிபவர், ஊழிக்காலம் நாயாய்ப் பிறந்து உழன்று துன்புறுவர். பலவூழிக் காலம் புழுவாய்ப் பிறந்து பழுதுற்றுத் துன்புறுவர்.ஓரெழுத்து - ஓர்ந்து உணரப்படும் ஐந்தெழுத்தாலாகியஆதி மந்திரம். ஒரு பொருள் - அம் மந்திரத்தால் பெறப்படும்ஒப்பில்லாத விழுமிய முழுமுதலாம் சிவபெருமான்.உணரக் கூறிய - அம் மறையினை உணரச் செவியறிவுறுத்த.சீரெழுத்தாளர் - மெய்யுணர்வளித்த ஆசான். சிதைய -சொல்லாலும் செயலாலும் கேட்டாரும் கண்டாரும் மனம்வருந்தும்படி செப்பினோர் - முறையின்றிப் பேசினோர்.சுணங்கன் - நாய். ஒருகம் - ஓரூழி. வார் - நீர்.கிருமி - புழு. செவியறிவுறூஉ - உபதேசம். (2)

# 515. பத்தினி பத்தர்கள்தத்துவ ஞானிகள்

515. பத்தினி பத்தர்கள்தத்துவ ஞானிகள்
சித்தங் கலங்கச் சிதைவுகள் செய்தவர்
அத்தமும் ஆவியும் ஆண்டொன்றில் மாண்டிடுஞ்
சத்தியம் ஈது சதாநந்தி ஆணையே.

ஒழுக்கநெறி யிழுக்காக் கற்புடைப்பெண்டீராவார் நம் மங்கையர்க்கரசியார் போன்றுசிவனை மறவாச் சீரிய கற்பினராவர். ஈன்றுபுறந்தரும் தாயார் சான்றோனாக்குவர். ஏன்று கொண்டமனைவிமார் ஆன்ற தெய்வமாக்குவர். தெய்வமாக்குதல்சிவன் நினைவை உண்டாக்கிச் சிவனடியினைக் கணவன்சேர்ந்தின்புறத் துணைநிற்றல். இதுவே வாழ்க்கைத்துணைவியின்சிறந்த குறிக்கோள். தெய்வத்துக்குரிய எண்பேருருவங்களில்ஆருயிர் வடிவே சீருஞ்சிறப்பும் ஒருங்கமைந்தது.ஏனையவடிவங்கள் கடந்தேறும் வகுப்புமுறை போன்றன.பிற தெய்வம் தொழாளென்பது முன் பயிற்சியாகத் தொழுதுமேற்போந்தபின் மீண்டும் அப் பயிற்சியினை மேற்கொள்ளாளென்பாம். நாம் தெய்வ நினைவுடன் ஒரு பொருளை எவ்வாறுபார்க்கின்றோமோ அவ்வாறே அப்பொருள் அருளால்ஆகிவிடும். அவ்வுண்மை வரும் குமரகுருபர அடிகள் வாய்மொழியான் உணர்க:

"செய்தவ வேட மெய்யிற் றாங்கிக்
கைதவ வொழுக்கமுள் வைத்துப் பொதிந்தும்
வடதிசைக் குன்றம் வாய்பிளந் தன்ன
கடவுள் மன்றிற் றிருநடங் கும்பிட்டு

# 5. உய்வது கிடைத்தனன் யானே யுய்தற்

5. உய்வது கிடைத்தனன் யானே யுய்தற்
கொருபெருந் தவமும் உஞற்றிலன் உஞற்றாது
எளிதினிற் பெற்ற தென்னெனக் கிளப்பின்
கூடா வொழுக்கம் பூண்டும் வேடம்
கொண்டதற் கேற்பநின் தொண்டரொடு பயிறலிற்

## 10. பூண்டவவ் வேடங் காண்டொறும் காண்டொறும்

10. பூண்டவவ் வேடங் காண்டொறும் காண்டொறும்
நின்னிலை என்னிடத் துன்னி யுன்னிப்
பன்னாள் நோக்கின ராகலின் அன்னவர்
பாவனை முற்றியப் பாவகப் பயனின்யான்
மேவரப் பெற்றனன் போலு மாகலின்

## 15. எவ்விடத் தவருனை யெண்ணினர்நீயுமற்

15. எவ்விடத் தவருனை யெண்ணினர்நீயுமற்
றவ்விடத் துளையெனற் கையம்வே றின்றே."
- 7. சிதம்பர மும்மணிக்கோவை, 11.

நம் மங்கையர்க்கரசியார் தம்கணவராகிய நின்றசீர் நெடுமாறனாரை ஆளுடையபிள்ளையாரைக் கொண்டு ஈண்டு மீண்டும் சிவனெறிக்குஆக்குவித்தது போன்று ஆண்டுச் சிவனார் திருவடிக்கண்ணும் அவரோடுங் கூட அமர்ந்திருக்க அருள் பெற்றுஅவரைத் திருவடிக் கண் ஆக்கிவித்தார். அவ்வுண்மைசேக்கிழாரடிகள் அருண்மொழியான் உணரலாம்.

அது வருமாறு :

"பூசுரர்சூ ளாமணியாம் புகலி வேந்தர்
போனகஞா னம்பொழிந்த புனிதவாக்கால்
தேசுடைய பாடல்பெறுந் தவத்தி னாரைச்
செப்புவதியா மென்னறிந்து தென்னர்கோமான்
மாசில்புகழ் நெடுமாறன் தனக்குச் சைவ
வழித்துணையாய் நெடுங்காலம் மன்னிப்பின்னை
ஆசில்நெறி அவரோடுங் கூட ஈசர்
அடிநிழற்கீழ் அமர்ந்திருக்க அருளும் பெற்றார்."
- 12. மங்கையர்க்கரசியார், 2.

இத்தகைய பத்தினிப் பெண்களையும், (திருவடி ஞானத்தின்மேல்விளையும் அன்பு பத்தியெனப்படும்; அத்தகைய) பத்திசேர்பத்தர்களையும், மெய்யுணர்வு கைவரப் பெற்றாரையும்சித்தங் கலங்கத் தீமைகள் செய்த

கொடியோர்பொருளும் உயிரும் ஓராண்டினுக்குள் நீங்க நரகத்தின்கண்ணே ஆழ்வர். இஃதுண்மை. நந்தியின் ஆணை. ஆளுடையபிள்ளையாரின் திருவுள்ளம் கலங்கச் செய்தஅமணரும் வரும்வழி தடுத்த புத்தரும் அப்பொழுதேவாழ்விழந்தமை இதற்கொப்பாகும். பத்தினிப் பெண்களின்சிறப்பு, கண்ணகி வரலாற்றாலும் காணலாம். அது,

"கோவல னாவிற் கூறிய மந்திரம்
பாய்கலைப் பாவை மந்திர மாதலின்
வனசா ரிணியான் மயக்கம் செய்தேன்
புனமயிற் சாயற்கும் புண்ணிய முதல்விக்கும்

## 200. என்திறம் உரையா தேகென் றேகத்."

200. என்திறம் உரையா தேகென் றேகத்."

- சிலம்பு 11. காடுகாண் காதை.

(தவத்தினும் கற்புச் சிறந்ததாகலின்,முற்கூறினார். இவர் சாயலும் அறனும் உடையரேனும்தவறுகண்டுழிக் கணத்தின் வெகுண்டு சவிப்ப ரென்றஞ்சிஅவர்க்கு உரையாதொழியென்றிரந்தா ளென்க. - அடியார்க்குநல்லார்.) தத்துவ ஞானிகள் - சித்தாந்த மெய்யுணர்வுகைவந்த நாயன்மார். அத்தமும் - பொன்னும்பொருளும். (3)

## 516. மந்திரம் ஓரெழுத்துரைத்த மாதவர்

516. மந்திரம் ஓரெழுத்துரைத்த மாதவர்
சிந்தையில் நொந்திடத் தீமைகள் செய்தவர்
நுந்திய சுணங்கனாய்ப் பிறந்து நூறுரு
வந்திடும் புலையராய் மாய்வர் மண்ணிலே.

ஒப்பில்லாத திருவைந்தெழுத்து மந்திரத்தைச் செவியறிவுறுத்திய மிக்க தவத்தையுடைய சிவகுருவைச் சிந்தை நோவும்படி தீமை செய்தவர்கள் வருந்தியலையும் நாயாகப் பிறப்பர். அளவில்லாத பிறப்புப் புலையராய்ப் பிறப்பார்கள். நூறு - அளவில்லாமை. நுந்திய பசி தூண்டுதலால் வருந்தியலைகின்ற: (இழிவென்று ஓதுக்கப்பட்ட).

## 517. ஈச னடியார் இதயங் கலங்கிடத்

517. ஈச னடியார் இதயங் கலங்கிடத்
தேசமும் நாடுஞ் சிறப்பும் அழிந்திடும்
வாசவன் பீடமும் மாமன்னர் பீடமும்
நாசம தாகுமே நந்நந்தி யாணையே.

சிவபெருமான் ஒருவனே ஈசன் எனத் தக்கான். நூல் வழக்கல்லாமல் உலக வழக்கிலும் ஈசன் கோவில் என்பது சிவபெருமான் திருக்கோலிலையே குறிக்கின்றது. சிவபெருமானின் அடியார் உள்ளம் கலங்கும்படி செய்யும் தீயோர் ஒருவர் உளராயினும் அத் தேசம் பாழாகும். அந் நாடும் பாழாகும். பல நாடுகள் கொண்டது நகரம். பல கண்டங்கள் கொண்டது உலகம். பல உலகங்கள் கொண்டது அண்டம். பல அண்டங்கள் கொண்டது புவனம். இந்திரன் நிலையும் கெடும். ஏனைப் பெருமன்னர் நிலையும் கெடும். இது நம் நந்தி ஆணை.

## 518. சன்மார்க்க சற்குரு சந்நிதி பொய்வரின்

518. சன்மார்க்க சற்குரு சந்நிதி பொய்வரின்
நன்மார்க்க முங்குன்றி ஞானமுந் தங்காது
தொன்மார்க்க மாய துறையும் மறந்திட்டுப்
பன்மார்க்க முங்கெட்டுப் பஞ்சமு மாமே.

செந்நெறிச் சிவகுருவினிடமிருந்து பொய் வருமானால் நன்னெறியும் கெடும்; மெய்யுணர்வும் தங்காது. பழைமை தொட்டு வருகின்ற செந்தமிழ்த் துறையாகிய ஆகமமும் மறைந்தொழியும். செந்தமிழ் நெறியாகிய வேதமும் கெடும். பஞ்சமும் உண்டாம். சந்நிதி - திருமுன்.

## 519. கைப்பட்ட மாமணி தானிடை கைவிட்டு

519. கைப்பட்ட மாமணி தானிடை கைவிட்டு
மெய்ப்பட்ட கல்லைச் சுமப்போன் விதிபோன்றும்
கைப்பட்ட நெய்பால் தயிர்நிற்கத் தானறக்
கைப்பிட்டுண் பான்போன்றும் கன்மிஞா னிக்கொப்பே.

தன் கையகத்து அருமையாகக் கிடைக்கப்பட்ட விலை வரம்பில்லாப் பெருமணி யொன்றை அறியாமையால் கீழே புறக்கணித்துப் போகட்டுவிட்டு எல்லாரும் உண்மையாகவே விலைமதிப்பில்லாப் பயனில்லாக் கல்லென்று இகழவும் நாணமின்றி அக்கல்லைச் சுமப்பவன் விதி போன்றும், மேலும் கையகத்துக் கிடைத்த நெய் பால் தயிர் இவற்றை யுண்ணாது கடுவனைய கசப்பினை யுண்ணுமவன் கன்மம் போன்றும் ஆவர், 'பசித்துண்டு பின்னும் பசிப்பானை யொக்கும் இசைத்து வருவினையை' இயற்றும் கன்மிகள். 'இசைத்த, இருவினை யொப்பில் இறப்பில் தவத்தான், மருவும் ஞானி'கள் மாமணியினைச் சுமப்பாராவர்.

# 520. ஆண்டான் அடியவ ரார்க்கும் விரோதிகள்

520. ஆண்டான் அடியவ ரார்க்கும் விரோதிகள்
ஆண்டான் அடியவர் ஐயமேற் றுண்பவர்
ஆண்டான் அடியாரை வேண்டாது பேசினோர்
தாந்தாம் விழுவது தாழ்நர காகுமே.

சிவனடியார்கள் மலப்பிணிப்புடைய மற்றையவர்கட்குப் பெரும் பகைவராவர். அவர்கள் பிச்சையெடுத்துண்பது தெருவிலும் ஊரிலுமன்று. தம் வீட்டிலேயே தாம் உழைத்த உழைப்பினையே உடையவன் உடைமை என்னும் உண்மை யுணர்ந்தவராதலால் அவ்வுடையவன் திருமுன் வைத்து முதற்கண் அவனுக்குக் குழைத்துப் பின்பு தாம் அதனை அவன்பால் பிச்சையாக ஏற்று உண்பர். இதுவே அவர் கொள்ளும் பிச்சையாகும். நாம் அமைத்த படைப்பமுதாயினும் அது கடவுட்டிருப் பெயரால் வழங்கப்படுவதூஉம் காண்க. இஃது, 'இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் பரந்து, கெடுக உலகியற்றி யான்' (1062) என்னும் திருக்குறளுக்கு மாறானதன்று. உடையான் - சிவபெருமான். அத்தகைய சிவனடியாரை ஏனை ஆன்றோரும் பொறுக்க முடியாத தீச்சொற்களைச் சொல்லித் துன்புறுத்த முயன்றோர் அவர்தம் தீவினையால் நரகத்தழுந்துவர். ஆர்க்கும் - கட்டும்; மலம். விரோதிகள் - எதிர்த்துச் செல்லும் தவத்தினர். (ஆர்க்கும் காரிய ஆகுபெயராக மலத்தினைக் குறிக்கும்.) ஐயமேற்று உண்பவர் - உண்ணும் உணவினை இறைவன் உடைமை எனக் கருதித் திருவடியை மறவா நினைவுடன் உண்பவர்.

ஐ - இறைவன். தாந்தாம் - தாமே செய்து கொண்ட தீவினையால். தாழ்நரகு - நீங்காப் பெருந்துன்ப இருளிடம். குழைத்தல் - நைவேதித்தல்.

## 521. ஞானியை நிந்திப் பவனும் நலனென்றே

521. ஞானியை நிந்திப் பவனும் நலனென்றே
ஞானியை வந்திப் பவனுமெய் நல்வினை
யான கொடுவினை தீர்வா ரவன்வயம்
போன பொழுதே புகுஞ்சிவ போகமே.

திருவடியுணர்வு பெற்ற சிவஞானியாகிய சிவனடியார்களை அறிந்தோ அறியாமலோ நிந்திப்பதாகிய வசைகூறுவோர் நல்வினைப்பகுதியினின்றும் நீங்கித் துன்புறுவர். வந்தித்தலாகிய இசை கூறுவோர் தீவினைப் பகுதியினின்றும் நீங்கி இன்புறுவர். நம்மைச் சிவனடியார்களுக்கு முற்றாக ஒப்புவித்து நின்ற அப்பொழுதே திருவடியின்பத்தை நாம் எய்துவம். மெய்ப்பொருள் நாயனாரும் ஏனாதிநாத நாயனாரும் பொய்க் கோலத்தையே மெய்யெனக் கொண்டு தம்மை அவர்கள்பால் ஒப்புவித்து அப்பொழுதே திருவடிப்பேறு பெற்றமை இதற்கொப்பாகும். தீர்வர் - ஞானியை நிந்திப்பவர் நல்வினையினின்றும் தங்குவர். வந்திப்பவர் தீவினையினின்றும் நீங்குவர்.

## 522. பற்றிநின் றார்நெஞ்சிற் பல்லிதான் ஒன்றுண்டு

522. பற்றிநின் றார்நெஞ்சிற் பல்லிதான் ஒன்றுண்டு
முற்றிக் கிடந்தது மூக்கையும் நாவையுந்
தெற்றிக் கிடந்து சிதைக்கின்ற சிந்தையுள்
வற்றா தொழிவது மாகமை யாமே.

அறுவகைக் குற்றத்துள் ஒன்றாகிய இவறன்மை என்னும் பற்றுள்ளத்தார்பால் பொறாமை என்னும் பல்லி பற்றிக் கிடந்தது. பெரும்பாலும் உண்பதும் உடுப்பதும் காண்பதனாலேயே பொறாமை விளைகின்றது. அதனால் அப் பொறாமை வித்து மூக்கையும் நாக்கையும் பின்னிக் கிடந்ததென்றனர். உடுப்பது மூக்குக்கும் உண்பது நாக்குக்கும் தனித்தனி எடுத்துக் காட்டாகும். இவை நம்மைப் பற்றாமலிருக்க வேண்டுமானால் பெரிய பொறுமையை உயிரினும் சிறப்பாகக் கைக் கொள்ளுதல் வேண்டும். பல்லி - உடும்பு. (உவமை ஆகுபெயராய்ப் பொறாமையைக் குறிக்கின்றது.) மூக்கையும் - மண்ணால் வரும் பெருமையையும், நாக்கையும் - மண்ணும் நீரும் சேர்ந்ததால் வரும் வளத்தையும், தெற்றிக் கிடந்தது - இரண்டையும் இணைத்துக் கிடந்தது (பொறாமை). வற்றா தொழிவது - உறையாது நீங்குவது. மாகமை - பெரிய பொறுமை.

பல்லி - பொறாமை. கமை - பொறுமை.

## 523. ஞானம் விளைந்தவர் நம்மிட மன்னவர்

523. ஞானம் விளைந்தவர் நம்மிட மன்னவர்
சேனை வளைந்து திசைதொறுங் கைதொழ
ஊனை விளைத்திடும் உம்பர்தம் ஆதியை
ஏனை வளைந்தருள் எட்டலு மாமே.

மன்னவர் சேனையுடன் சூழ்ந்து கைதொழும்படியாகத் திருவடியுணர்வு முற்றியவர் நம்மிடமாதற் பொருட்டு அவரை வழி படுவோமாக. ஊனை ...மாமே - உலகுடல்களைப் படைத்தருளும் சிவ பெருமானைத் தவத்தால் கைவரப் பெற்ற அம்மெய்யுணர்வினர் துணையால் வணங்கித் திருவருளை எய்துதல் எளிது ஆகும்.

## 524. வல்வகை யாலும் மனையிலும் மன்றிலும்

524. வல்வகை யாலும் மனையிலும் மன்றிலும்
பல்வகை யாலும் பயிற்றிப் பதஞ்செய்யுங்
கொல்லையி னின்று குதிகொள்ளுங் கூத்தனுக்
கெல்லையி லாத இலயமுண் டாமே.

சிறந்த முறையால் வீட்டிலும் நாட்டிலும் பொறுமையைக் கைக்கொண்டால், அப் பயிற்சி நல்ல செவ்வியை உண்டாக்கும். கொல்லையி...டாமே மேலும் பேரொடுக்கப் பெருவெளியில் கூத்தியற்றும் சிவபெருமான் திருவடியில் கூடி இன்புறுதல் உண்டாகும். மன்று - நாடு. கொல்லை - பேரொடுக்கப் பெருவெளி. இலயம் - ஒடுக்கம்; கூட்டம்.

கொல்லை - இடுகாடு.

## 525. ஓடவல் லார்தம ரோடு நடாவுவன்

525. ஓடவல் லார்தம ரோடு நடாவுவன்
பாடவல் லாரொலி பார்மிசை வாழ்குவன்
தேடவல் லார்க் கருள் தேவர்பி ரானொடுங்
கூடவல் லாரடி கூடுவன் யானே.

திருவருள் நினைவால் எவ்வகைத் தொண்டினுக்கும் உவப்புடன் முன்னிற்கும் ஒருவர் ஓடவல்லாராவர். அவரே சீல நெறியில் நிற்கும் சீரியோராவர். பாடவல்லார் நோன்பு நெறியினிற்கும் பண்பினராவர். திருமுறைத் திருப்பாட்டுக்களை ஓதியே வழிபாடாகிய பூசையினை நடாத்துதல் வேண்டும். அருச்சனை என்னும் மலர் தூவிப் போற்றுதலும் திருமுறைத் திருப்பாட்டாலேயே நடத்துதல் வேண்டும். அருச்சனைக்கு வேண்டும் போற்றித் தொடர்கள் ஆறு. அவை முறையே தனித்தனி ஐந்தொழிற்கும், ஐந்தொழிலும் சேர்ந்த ஒரு பெருநிலைக்கும் ஆகும். திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய போற்றித் திருத்தாண்டகம் ஐந்து. மணிமொழிப் பெருமானார் பாடியருளிய போற்றித் திரு அகவல் ஒன்று. ஆக ஆறும் அருளால் அமைந்த பேறு என்க. ஐந்தொழிற்கும் முறையே திருவுருவங்கள் மூத்த பிள்ளையார், இளைய பிள்ளையார், ஆலமர் செல்வன், அம்மை, அருளோன், என்ப. இவை அனைத்தும் ஒருங்கமைந்த திருவுருவம் அம்பலவாணர். இவற்றிற்கு வேண்டும் போற்றித் தொடர்த்திருப் பதிகத்தின் முதனினைப்பு : 1. பொறையுடைய. 2. எல்லாஞ். 3. பாட்டான. 4. வேற்றாகி. 5. கற்றவர்க. 6. நான்முகன் என்ப. அருளோன் - சதாசிவன். தேடவல்லார்

அகத்தவமாகிய செறிவு நெறியின் நிற்கும் செம்மையினராவர். கூட வல்லார் மீளா ஆளாய்க் கொய்ம்மலர்ச் சேவடியிணையே குறுகு நிலையினவாகிய அறிவு நெறியின் நிற்கும் அன்பினராவர். நம் திருக்கோவில்களில் இத்தகைய பயிற்சி முறைகள் பண்டு நடந்து வந்தன. இடையே மயலுணர்த்தும் அயலவர் சூழ்வால் கிடந்தொழிந்தன போலும். இனிமேலேனும் முன் போன்று அவை புத்துயிர் பெற்றுத் திகழ்தல் வேண்டும். இவ்வுண்மை வரும் சேக்கிழாரடிகள் வாய்மொழியான் உணரலாம்.

"நல்ல நந்தன வனப்பணி செய்பவர்
நறுந்துணர் மலர்கொய்வோர்
பல்ப ணித்தொடை புனைபவர் கொணர்திரு
மஞ்சனப் பணிக்குள்ளோர்
அல்லு நன்பக லுந்திரு வலகிட்டுத்
திருமெழுக் கமைப்போர்கள்
எல்லை யில்விளக் கெரிப்பவர் திருமுறை
எழுதுவோர் வாசிப்போர்."

- 12. கணநாதர், 3.

(இதன்கண் எண் பெருந்தொண்டு இயம்பப்படுகின்றன. இவற்றால் சிவபெருமானின் எண் பெருங்குணமும் எளிதின் எய்தும்.) செயற்கரிய செய்யும் செந்நெறியாளரே பெரியார். செயற்கரியன சீலம் நோன்பு செறிவு அறிவு என்னும் நாநெறித் தொண்டு. இவற்றை முறையே சரியை கிரியை யோகம் ஞானம் எனவும் கூறுவர். இத் திருப்பாட்டின் கண் குறித்த நாநெறிவல்லார் பணிகள் முறையே நவிலப்படுகின்றன. அவருடன் நடத்தல், வாழ்தல், தேடல், கூடல் செய்வாரே பெரியாரைத் துணைகோடற்கு உரியராவர்.

ஓடவல்லார் - மூர்த்தி - தலம் - தீர்த்தம் முறையால் வணங்குவோர். பாடவல்லார் - சிவன்புகழ் பாடுவார். தேடவல்லார் - யோகிகள். கூடவல்லார் - ஞானிகள்.

## 526. தாமிடர்ப் பட்டுத் தளிர்போல் தயங்கினும்

526. தாமிடர்ப் பட்டுத் தளிர்போல் தயங்கினும்
மாமனத் தங்கன்பு வைத்த திலையாகும்
நீயிடர்ப் பட்டிருந் தென்செய்வாய் நெஞ்சமே
போமிடத் தென்னொடும் போதுகண் டாயே.

பெரியோர் மிகத் துன்புற்று வாடினும் அத் துன்பத்தின் கண் தங்கள் மனத்தினைச் செலுத்தார். நீயிடர்ப் ...டாயே - நெஞ்சமே வருந்தி என்ன பயன்? அவ் வருத்தம் நீங்க அப் பெரியாரிடத்து யான் போம்போது என்னுடன் வருவாயாக.

## 527. அறிவார் அமரர் தலைவனை நாடிச்

527. அறிவார் அமரர் தலைவனை நாடிச்
செறிவார் பெறுவர் சிலர்தத் துவத்தை
நெறிதான் மிகமிக நின்றருள் செய்யும்
பெரியா ருடன்கூடல் பேரின்ப மாமே.

சிலர் தேவர்க்கும் மூவர்க்கும் யாவர்க்கும் மேலாம் சிவபெருமானைத் திருவருளால் உள்ளத்தே நாடி அறிவர். அவன் திருவடியொடுக்கத்தால் மெய்யுணர்வு கைவரப் பெறுவர். தத்துவம் - மெய்; மெய்யுணர்வு. நெறிதான் ...மாமே - நானெறிக்கண் படிப்படியாக உயர்த்தும் அப் பெரியாருடன் கூடி வாழ்வதே பேரின்பமாம்.

## 528. தார்சடை யான்றன் தமராய் உலகினிற்

528. தார்சடை யான்றன் தமராய் உலகினிற்
போர்புக ழானெந்தை பொன்னடி சேருவர்
வாயடை யாவுள்ளந் தேர்வார்க் கருள்செய்யுங்
கோவடைந் தந்நெறி கூடலு மாமே.

சிவபெருமானுக்கு உரியவராய் மதப்போரை விரும்பாமல் வாய்வாளாது உள்ளத்தே நினைவோர் பெரியர். அவர்க்கு அருள்
செய்யுமுதல்வன் சிவன். பெரியோரைச் சார்ந்தால் அவன் திருநெறி கூடலாம். தார் - மாலை. அடையா: செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; அடைத்து.

போர்புகழான் - மதச்சண்டையிடாமல். வாயடையா - மவுனமாக.

## 529. உடையான் அடியார் அடியா ருடன்போய்ப்

529. உடையான் அடியார் அடியா ருடன்போய்ப்
படையா ரழன்மேனிப் பதிசென்று புக்கேன்
கடையார நின்றவர் கண்டறி விப்ப
உடையான் வருகென ஓலமென் றாரே.

எல்லாம் உடையானாகிய நல்ல சிவபெருமானின் அடியார்கள் பண்டைப் பழவடியாருடன் கூடிப்புகுவர். அடியேனும், அவர்களுடன் முத்தலை வேற்படை நிறைந்தவனும், தழல் போலும் செம்மேனி உடையவனும் ஆகிய சிவபெருமானின் திருவெள்ளிமலைக்குப் போனேன். அங்குக் கடைகாவற் பெரிய தேவர் உடையானுக்கு அறிவிப்ப, அவன் அருள்தர உட்புக்கு அவர்கள் ஓலமென்றனர். ஆரழல் மேனி பதி - தீப்போலும் திருமேனியனாகிய சிவபெருமானது திருவெள்ளிமலை. கடை - கடைவாயில். ஓலம் - அடைக்கல மொழி.

# 530. அருமைவல் லான்கலை ஞானத்துள் தோன்றும்

530. அருமைவல் லான்கலை ஞானத்துள் தோன்றும்
பெருமைவல் லோன்பிற விச்சுழி நீந்தும்
உரிமைவல் லோன்உணர்ந் தூழி யிருக்குந்
திருமைவல் லாரொடு சேர்ந்தனன் யானே.

மாற்றம் மனம் கழிய நின்ற மறையோனாகிய அருமை வல்லோன் கலைஞானத்துள் தோன்றியருள்வன். அவனைத் தினைத்தனைப் பொழுதும் மறந்துய்யேனென்னுந் திண்ணிய நெஞ்சினராய் உள்ளார் பிறவிப் பெருஞ்சுழி நீந்துவர். சிவனடியாராம் உரிமை வல்லார் தம்மையும் தமையுடைய தன்னையும் உணர்வார். அருளால் ஊழிக்கு வாழ்வார். இத்தகைய வல்லார் (திருமை - சிவமை - திருத்தன்மை) சிவத்தன்மையுடையவராவர். அவருடன் சேரும் அருட்பேறு பெற்றனன். அருமைவல்லான் என்பதனை அடியாராகவே கொண்டு அவர் சித்தாந்தக் கலைஞானியாக இருப்பரென்றலும் ஒன்று. கலைஞானம் - திருமுறையுணர்வு. திருமை - திருவருள் தன்மை. தன்மையும் - தலைவனையும். கலைஞானத்துள் தோன்றுவோன் அருமைவல்லான். சிவஞானத்துள் தோன்றுவோன் பெருமைவல்லோன் இவன் பிறவிச்சுழியை நீந்துவோன் என ஓதியருளினர். இவ்வுண்மை வரும் சேச்கிழாரடிகள் திருமொழியான் உணரலாம் :

"சிவனடியே சிந்திக்குந் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை யறமாற்றும் பாங்கினிலோங் கியஞானம்

உவமையிலாக் கலைஞானம் உணர்வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாமுணர்ந்தார் அந்நிலையில்."
- 12. சம்பந்தர், 70.

இதன்கண் ஓதப்பெறும் உவமையிலாக் கலைஞானம்' புகழ் நூலாகிய திருமுறைகளும் பொருள் நூலாகிய மெய்கண்ட நூலிகளுமாகும். 'உணர்வரிய மெய்ஞ்ஞானம்' நண்ணுணர்வாகிய திருவடியுணர்வாகும். இதுவே 'உணர்வின் நேர்பெற வரும் சிவபோகம்' இதனை 'ஒழிவின்றியுருவின்கண், அணையும் ஐம்பொறி யளவினுமெளிவர வருளினை எனப் போற்றுதல்' நூலுணர்வாகிய 'உவமையிலாக் கலைஞான்' மாகும். நுண்ணுணர்வெனினும் தன்னுகர்வெனினும் ஒன்றே நுண்ணுணர்வு 'மாற்றம் மனம்கழிய நின்றமறை' அது சொல்லொணா நிலைமைத்து. எனினும், ஒருவகையாகத் 'திருச்சிற்றம்பலம்' என்னும் பெரும்பொருள் மறையால் ஓதியருளினர். இம்மறைக்கண் எழுத்து ஆறாகும். இம் மறையினை முதலும் முடிவும் ஓதும் மரபினால் பனனிரண்டெழுத்தாகும். இத்திருக்குறிப்புத் திருமுறை பன்னிரிண்டென்பதனைத் திருவருளான் உணர்த்தும் சிவக்குறிப்பாகும்.

திருமை - பெருமை.

இரண்டாம் தந்திரம் முற்றும்.

## 531. உரைத்தன வற்கரி ஒன்று மூடிய

531. உரைத்தன வற்கரி ஒன்று மூடிய
நிரைத்த இராசி நிறைமுறை எண்ணிப்
பிரைச்சதம் எட்டும் பேசியே நந்தி
நிரைத்த இயமம் நியமஞ்செய் தானே.

விடுத்தலும் எடுத்ததும் தடுத்தலுமாகிய உயிர்ப்புப் பயிற்சியுடையார் பதினாறு விடுத்துப் பன்னிரண்டு உள்ளிழுக்கும் ஏனையார் போலன்றிப் பதினாறுமே உள்ளிழுக்கப் பழகிவிடுவர். அதன்மேல் விடுத்தலும் எடுத்தலுமின்றித் தடுத்தலாகவே நிற்பர். எண்பெரும் யோக முறைகளையும் எடுத்தியம்பிய நந்தி தீதகற்றலும் நன்றாற்றலும் ஆகிய செய்முறைகளை அறநெறியொழுக வகுத்தருளினன். விடுத்தல் - இரேசகம். எடுத்தல் - பூரகம். தடுத்தல் - கும்பகம். வற்கரி : வற்கம் - குதிரைக் கழவாளம் முதலியன. அது வற்கரி என நின்று ஆகுபெயராய் உயிர்மூச்சைக் குறிக்கின்றது. இராசி - ஈண்டுப் பன்னிரண்டு என்னும் எண்ணுப்பெயர் விளக்கிநின்றது. இயமம் - தீதகற்றல். நியமம் - நன்றாற்றல்.

வற்கரி - மூச்சு. நிரைத்த இராசி -12. பிரைச்சதம் - யோகம்.

## 532. செய்த இயம நியமஞ் சமாதிசென்

532. செய்த இயம நியமஞ் சமாதிசென்
றுய்யப் பராசத்தி உத்தர பூருவ
மெய்த கவச நியாசங்கள் முத்திரை
எய்த வுரைசெய்வன் இந்நிலை தானே.

திருவருளால் இயமமாகிய தீதகற்றலும், நியமமாகிய நன்றாற்றலும் செய்து போந்தவர் நொசிப்பாகிய சமாதியை எய்துவர். திருவருள் உத்தரமாகிய பின்னும் பூருவமாகிய முன்னும் நடப்பாற்றல் வனப்பாற்றல்களாக மாறுதல் வேண்டும். அப்பொழுது 'சிவய நம' என நின்றது சிவயசிவ எனவரும். உறுப்புத் தொடுதற்குரிய திருமுறைத் திருப்பதிகம் 'திருவங்கமாலைத்' திருப்பதிகமாகும். சமாதி - நொசிப்பு . பராசத்தி - வனப்பாற்றலாகிய திருவருள். உத்தரம் - பின்பு; நடப்பாற்றல். பூருவம் - முதல்; நடப்பாற்றல் முன்னிலையாகிய வனப்பாற்றலாக மாறுதல். இஃது எவ்வாறெனின் சிவயநம என்பது சிவயசிவ எனக் கணித்தல். கவசம் - போர்வை. நியாசம் - (நெஞ்சு, தலை, குடுமி, கண், கை, கருவி என்னும் உறுப்புப் பொருள்களைச் சிவனுடைமை
என்று கருதித்) தொடுதல். இஃது இரண்டு வகை. ஒன்று உடம்பு. மற்றொன்று கை எனப்படும். அதனால் நியாசங்கள் எனக் கூறப்பட்டன. முத்திரை - கைவிரல்களால் பொருள் குறிக்கும் அடையாளங்கள். இந்நிலை இந்த முறைப்படி.

## 533. அந்நெறி இந்நெறி என்னாதட் டாங்கத்

533. அந்நெறி இந்நெறி என்னாதட் டாங்கத்
தன்னெறி சென்று சமாதியி லேநின்மின்
நன்னெறி செல்வார்க்கு ஞானத்தி லேகலாம்
புன்னெறி யாகத்திற் போக்கில்லை யாகுமே.

அந்நெறி இந்நெறி என்று தடுமாறிக் கூறாது, அகத்தவமாகிய எட்டுறுப்புக் கொண்ட யோகநெறியே சென்று சமாதியாகிய நொசிப்பின்கண் நிலைபெற்று நில்லுங்கள். இத்தகைய நன்னெறிக்கண் செல்வார்க்கு ஞானமாகிய திருவடியுணர்வு எளிதினெய்தும். அத்தகையோர் ஊனடைந்த உடம்பிற் புகுதார். அந்நெறி இந்நெறி என்னாது - அகத்தவமாகிய யோகத்துக்கு வேறுபட்ட வழிகளைப் பயன்தருவன என்று கொள்ளாமல். நன்னெறி - நல்ல அகத்தவம். ஆகத்திற் போக்கில்லை - மீட்டும் ஒருடம்பிற் புகும் பிறப்பில்லை.

## 534. இயம நியமமே எண்ணிலா ஆதனம்

534. இயம நியமமே எண்ணிலா ஆதனம்
நயமுறு பிராணாயா மம்பிரத்தி யாகாரஞ்
சயமிகு தாரணை தியானஞ் சமாதி
அயமுறும் அட்டாங்க மாவது மாமே.

தீதகற்றல், நன்றாற்றல், அளவிலா இருக்கை, வளிநிலை, தொகை நிலை, பொறை நிலை, நினைதல், நொசிப்பு என்னும் வழிமுறைத் தவநிலை பயிலுதல் வேண்டும். இயமம் - தீதகற்றல். நியமம் - நன்றாற்றல். ஆதனம் - இருக்கை. பிராணாயாமம் - வளிநிலை. பிரத்தியாகாரம் - தொகை நிலை. தாரணை - பொறைநிலை. தியானம் - நினைதல். சமாதி - நொசிப்பு.

அயமுறு - நல்வழிப்படுத்தும்.

## 535. எழுந்துநீர் பெய்யினும் எட்டுத் திசையுஞ்

535. எழுந்துநீர் பெய்யினும் எட்டுத் திசையுஞ்
செழுந்த ணியமங்கள் செய்மினென் றண்ணல்
கொழுந்தண் பவளக் குளிர்சடை யோடே
அழுந்திய நால்வர்க் கருள்புரிந் தானே.

தலைமைப்பாடுடைய திருவருட்டண்ணளிப் பவழக்குன்றனைய குளிர்சடையோன் சிவபெருமானாவன். அவன் ஆலமர் செல்வனாக வீற்றிருந்தருளித் திருவடியில் அழுந்திய நால்வர்க்குத் திருவருள் புரிந்தனன். எண்பெரும் திசையிலும் மேகங்கள் கடல்நீரை முகந்து பெய்யினும் அதற்குக் காரணம் முன்பு நீங்கள் செய்துபோந்த நியமங்களாகிய நன்றாற்றுதலேயாம். ஆதலால் மேலும் தொடர்ந்து நன்றாற்றுதலைப் புரியுங்கள் என்றருளினன். நல்லுழைப்பால் பெற்ற நல்லூதியம் தீதின்றி வந்த பொருளாகும். அப் பொருள் அறத்தையும் இன்பத்தையும் உறச் செய்யும். ஆனால் அவ்வறமும் இன்பமும் தொடர்ந்து நிகழ்வதற்கு நடைமுறையில் அப் பொருளை மேன்மேலும் ஈட்டுதல் வேண்டுமல்லவா? அஃது இதற்கு ஒப்பாகும். எழுந்து - (முகில்கள் கடல்நீரையுண்டு விண்ணில்) எழுந்து. தண் - அமைதி. அழுந்திய - திருவடியன்பில் உறுதியாய. நால்வர் : நன்னெறியாகிய சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்னும் நிலை நான்கினையும் கைக்கொண்டோர்.

அழுந்திய நால்வர் - நந்திகள். நால்வர் - சனகர் - சனந்தவர் - சனாதனர் - சனற்குமாரர்.

## 536. கொல்லான்பொய் கூறான் களவிலான் எண்குணன்

536. கொல்லான்பொய் கூறான் களவிலான் எண்குணன்
நல்லான் அடக்க முடையான் நடுச்செய்ய
வல்லான் பகுந்துண்பான் மாசிலான் கட்காமம்
இல்லான் இயமத் திடையின்நின் றானே.

பதினொரு அருஞ்செயல்கள் இதன்கண் ஓதியருளப்பட்டன. இவற்றை விழுமிய உயிரினும் விழுமியதாய்க் கைக்கொண்டு ஒழுகும் தீதகற்றலாகிய இயமத்து நின்றோன் ஓதும் நன்னெறியாளன் ஆவன். உயிரை உடம்பினின்றும் பிரிப்பதே வெளிப்படத் தெரிந்த கொலையாகும். உண்மையான் நோக்குவார்க்கு ஓரறிவுமுதல் ஆறறிவு ஈறாகச் சொல்லப்படும் எவ்வகையுயிர்க்கும் சிறியதுன்பம் இழைப்பதும் கொலையேயாகும். துன்ப இழைப்புக்கு நேர்முகமாகவோ மறைமுகமாகவோ துணைபுரிவதும் கொலையேயாம். அதனாலேயே திருவள்ளுவநாயனாரும் புலாலுண்டலும் கொலையே என்று அருளினர். பெருந் துன்பமும் கொலை என்னும் சொல்லால் ஆளப்படும் வழக்கு நோக்கின் அந்தோ உயிர் நீக்கும் கூற்றுச் செயற்கு மாற்றமும் இன்றுபோலும் வெகுளிப்பொருளாவரும் மெய்ப்பாட்டிற்குரிய பொருள்நிலைக்களம் நான்கு வருமாறு :

"உறுப்பறை குடிகோ ளலைகொலை யென்ற
வெறுப்ப வந்த வெகுளி நான்கே."

- தொல். பொருள்: 58.

இதனுள், 'கொலை யென்பது, அறிவும் புகழும்

முதலாயினவற்றைக் கொன்றுரைத்தல்.'
எண்குணன் - எண்ணத்தக்க சிறந்த குணமுள்ளவன்.
பகுந்துண்பான் - எல்லாமுடையவன் சிவன்; நம்பாலுள்ள பொருளும் அவனுக்கே உரிய உடைமை; எல்லா உயிர்களும் அவன் மக்கள் என்னும் இவ் வுண்மையுணர்ந்து தன்பாலுள்ளனவற்றை அன்புடன் குறிப்பறிந்து முகமலர்ந்து இன்மொழி புகன்று நன்றாற்றிக் கொடுத்து வந்தோன் பகுந்துண்பான் எனப்படுவன்.

எண்குணன் - எண்ணும் குணன் - எல்லாராலும் மதிக்கப்படும் குணமுடையவன்.

## 537. ஆதியை வேதத்தின் அப்பொரு ளானைச்

537. ஆதியை வேதத்தின் அப்பொரு ளானைச்
சோதியை அங்கே சுடுகின்ற அங்கியைப்
பாதியுள் மன்னும் பராசத்தி யோடுடன்
நீதி யுணர்ந்து நியமத்த னாமே.

எல்லாவற்றுக்கும் முழுமுதலாய்க் காரணமாயிருப்பவன் ஆதி. செந்தமிழ்மறையும் அந்தமில் பொருளுமாய் விளங்குபவன் சிவன். அகன்ற அறிவுப் பேரொளியாகவுள்ளவன் அவனே. சுடுந் தீயாகவுள்ளவனும் அவனே. திருமேனி யொருகூறு பெண்கூறாகத் திகழ்பவனும் அவனே. திருவருளால் இவ்வுண்மையுணர்ந்தோன் நீதி யுணர்ந்தோனாவன். பாதியுள் - திருமேனிக்கண் ஒருபாதியில். நீதி யுணர்ந்தான் - திருவருளால் முறைப்படி கண்டு வணங்கினவன். நியமத்தான் - அகத்தவத்தோன். அகத்தவம் - யோகம்.

## 538. தூய்மை அருளூண் சுருக்கம் பொறைசெவ்வை

538. தூய்மை அருளூண் சுருக்கம் பொறைசெவ்வை
வாய்மை நிலைமை வளர்த்தலே மற்றிவை
காமங் களவு கொலையெனக் காண்பவை
நேமியீ ரைந்து நியமத்த னாமே.

அகம்புறம் தூய்மை. அருள், ஊண் முதலியன சுருக்கிச் சிக்கனவாழ்வு, பொறுமை, செம்மை வாய்மை, நிலைமை (மானம்), காமமகற்றல், களவகற்றல், கொலையகற்றல் ஆகிய பத்தும் நன்றாற்றும் பண்பாகும், ஊண் சுருக்கம் வரும் திருவள்ளுவர் திருப்பாட்டானுணர்க.

"இழிவறிந் துண்பான்கண் இன்பம்போல் நிற்கும்
கழிபேர் இரையான்கண் நோய்."
- 946.

ஈண்டுக் காமம் : பன்மனைவியரை மணத்தலும், ஒரு மனைவிமாட்டும் (ஒத்த நிலையினராய்ச் சிவன் நினைவினராய் மகப்பேற்றின் பொருட்டுக் கூடுவதே காதற்கூட்டம்.) காதன்முறையின்றிக் கூடுவதும் காமக்கூட்டமாகும். அருவப்பொருளில் அன்பு செல்வது காதல். உருவப்பொருளில் அன்பு செல்வது காமம். காதல் உயிரின்மாட்டும் காமம் உடம்பின் மாட்டும் செல்வன். காதற் கூட்டமின்றிக் காமக்கூட்டம் கூடுதலும் காமம் ஆம் களவு : தான் ஒழுகவேண்டிய ஒழுக்கமுறைகளைத் தவிர்ந்தும், நினைப்பூட்டியும் செய்வனவும், தன் தேவைக்குமேல் பண்டங்களைத் தொகுத்துவைத்தலுமாம். பண்டங்கள் ஊண், உடை, உறையுள் முதலியன. கொலை: தன்னுயிர்

பிறப்பற்றுச் சிறப்புற முயலாது முயலும் முயற்சி கொலையாகும். நிலைமை - உறுதியுடைமை. காமம் கொலை களவு - இம் மூன்றும் அகற்றல். ஈரைந்தும் - குறித்தபத்தும்.

நேமி - நியமத்தை உடையவன்.

# 539. தவஞ்செபஞ் சந்தோடம் ஆத்திகந் தானஞ்

539. தவஞ்செபஞ் சந்தோடம் ஆத்திகந் தானஞ்
சிவன்றன் விரதமே சித்தாந்தக் கேள்வி
மகஞ்சிவ பூசையொண் மதிசொல்லீர் ஐந்து
நிவம்பல செய்யின் நியமத்த னாமே.

'உற்றநோய் நோன்றல் உயிர்க்கு உறுகண் செய்யாமை'யாகிய தவமும், திருவைந்தெழுத்தைக் கணித்தலாகிய செபமும், சிவனை நினைத்தலாகிய மகிழ்வும், முப்பொருளுண்மை கைக்கொள்வதாகிய மெய்ப்பொருள் ஆத்திகமும், சிவனடியார்களுக்குப் பணிந்து உள்ளன. உவந்து கொடுக்கும் தானமும், சிவனை வழிபடும் விரதமும், செந்தமிழ்த் திருமுறை சித்தாந்த நூல்களை ஓதலும், ஓதுவித்தலும், கேட்பித்தலும், கேட்டலும், நாடலும் முதலிய நயனார் மெய்யுணர்வு வேள்வி ஐந்தும் செய்தலும், திருவைந்தெழுத்தால் ஓம்பும் அகத்தழலும், திருவைந்தெழுத்தால் புரியும் அகப்பூசையும், அருளால் சிவனை மறவா நினைவால் உறவெனக் கொள்ளும் ஒண்மதியும் என்று சொல்லப்படும் பத்தும் நத்தும் நன்றாற்றலின் வித்தாகும். சந்தோடம் - மகிழ்ச்சி. ஆத்திகம் - கடவுட் கோள்.

சித்தாந்தக் கேள்வி - சைவ சித்தாந்த நூல்களிற் கூறும் பொருளைக் கேட்டல். மகம் - விருந்து முதலிய ஐம்பெரு வேள்வி. நிவம் - நிபம். இவை போன்ற நற்செயல்கள்.

## 540. பங்கய மாதி பரந்தபல் ஆதனம்

540. பங்கய மாதி பரந்தபல் ஆதனம்
அங்குள வாம்இரு நாலும் அவற்றினுள்
சொங்கில்லை யாகச் சுவத்திக மெனமிகத்
தங்க இருப்பத் தலைவனு மாமே.

தாமரை இருக்கை முதலாக இருக்கை பலதிறப்படும். அவற்றுள் எண்பேரிருக்கை நனிமிகச் சிறந்தன. அவ்வெட்டனுள்ளும், குற்றங்குறை ஏதும் இல்லாத இருக்கை, எல்லாரானும் ஒல்லும் வகை கைக்கொள்ளப்படும் இருக்கை சுவத்திகம் என்ப. சுவத்திகம் என்பது தொடைக்கும் முழங்காற்கு நடுவே இரண்டு உள்ளங்காலையும் செலுத்தி இறுமாந்திருப்பது. சுவத்திக ஆதனம் - இறுமாப்பிருக்கை. பங்கயமாதி - தாமரை இருக்கை முதலாக. இருநாலு மவற்றினுள் - அவற்றினுள் இருநாலுமென மாறிப் பொருள்கொள்க.

சொங்கு - சொக்கு என்பதன் மெலித்தல்; குற்றம்.
சுவத்திகம் - எது சரிப்படுகிறதோ அது; சுகமானது.

## 541. ஓரணை யப்பத மூருவின் மேலேறிட்

541. ஓரணை யப்பத மூருவின் மேலேறிட்
டார வலித்ததன் மேல்வைத் தழகுறச்
சீர்திகழ் கைகள் அதனைத்தன் மேல்வைக்கப்
பார்திகழ் பத்மா சனமென லாகுமே.

பத்மாதனமாகிய தாமரை இருக்கை : இரண்டு கால்களையும் மாற்றித் தொடைமேல் உள்ளங்கால் மலர்ந்திருக்குமாறு வலித்திழுத்துவைத்தல் வேண்டும். பின்பு அம் மலர்ந்த கால்களின்மேல் இருகைகளும் கோத்து மலர்ந்திருக்குமாறு வைத்தல் வேண்டும். நன்றாய் நிமிர்ந்திருந்து நேர்முகமாக நோக்குதல் வேண்டும். இதுவே பத்மாசனமாகும். அணை - ஓரம்.

ஊரு - தொடை.

## 542. துரிசில் வலக்காலைத் தோன்றவே மேல்வைத்து

542. துரிசில் வலக்காலைத் தோன்றவே மேல்வைத்து
அரிய முழந்தாளி லங்கையை நீட்டி
உருசி யொடுமூடல் செவ்வே யிருத்திப்
பரிசு பெறுமது பத்திரா சனமே.

பத்திராசனமாவது : குற்றமற்ற வலக்காலை வெளித்தோன்றுமாறு இடத்தொடையின்மேல் வைத்து இரண்டு முழந்தாள்களிலும் அங்கைகளை மேனோக்குமாறு அமைத்து நீட்டி உடம்பைச் செவ்வையாக நிமிர்ந்திருக்குமாறு செய்து பயிறல் பத்திராசனமாகும். இவ் விருக்கையால் உடல் தளர்ச்சியின்றிக் கிளர்ச்சியுடனிருக்கும்.

துரிசில் - குற்றமற்ற. உருகியிடும் உடல்-நெகிழும் உடல்.

## 543. ஒக்க அடியிணை யூருவில் ஏறிட்டு

543. ஒக்க அடியிணை யூருவில் ஏறிட்டு
முக்கி யுடலை முழங்கை களில்ஏற்றித்
தொக்க அறிந்து துளங்கா திருந்திடிற்
குக்குட ஆசனங் கொள்ளலு மாமே.

பாதங்கள் இரண்டையும் மாற்றித் தொடையின்மேல் ஏறுமாறு செய்தமைத்து, உடம்பின் பளுவை முழங்கை தாங்குமாறமைத்து அசைவின்றியிருத்தல் கோழியிருக்கையாகும். முக்கி - அழுத்தி; முங்கியென்னும் திசைச்சொல்லின் திரிபு. குக்குட ஆசனம் - கோழி இருக்கை.

துளங்காது - அசையாமல்.

## 544. பாத முழந்தாளிற் பாணி களைநீட்டி

544. பாத முழந்தாளிற் பாணி களைநீட்டி
ஆதர வோடும்வாய் அங்காந் தழகுறக்
கோதில் நயனங் கொடிமூக்கி லேயுறச்
சீர்திகழ் சிங்கா தனமெனச் செப்புமே.

முழந்தாளின்மேல் பாதத்தை வைத்து அவற்றின்மேற் கைகளை நீட்டி, விருப்புடன்மேல் நோக்கி, குற்றமற்ற கண்கள் மூக்கின் நுனியை நோக்குமாறு இருப்பது சிங்காதனமாகும். சிங்காதனம் - அரிமா இருக்கை.

பாணி - கை. கொடி மூக்கு - மூக்கு நுனி.

## 545. பத்திரங் கோமுகம் பங்கயங் கேசரி

545. பத்திரங் கோமுகம் பங்கயங் கேசரி
சொத்திரம் வீரஞ் சுகாதனம் ஓரேழும்
உத்தம மாமுது ஆசனம் எட்டெட்டுப்
பத்தொடு நூறு பலஆ சனமே.

பத்திரமுதல் சுகாதனம் ஈறாகச் சொல்லப்படும் இருக்கை ஏழும் மேலானதாகச் சொல்லப்படும், மாமுது ஆசனமும் சேர எட்டாகும். மாமுது ஆசனம் - சுவத்திகம். இவற்றுடன் சொத்திரம் சுகாசனம் கூட்டப் பத்தாகும். இப்படியே எட்டெட்டு ஆகிய அறுபத்து நான்கு, நூறு முதலிய இருக்கைகள் அளவில்லன. திருமூலநாயனார் ஓதியருளிய இருக்கை எட்டேயாம். எனினும் பிறர் கொள்கைகளைக் கூறும் முறையில் பிறவும் கொள்ளப்பட்டன. இஃது எழுவகை மதங்களுள் ஒன்றாகிய 'உடம்படல்' என்னும் முறையாகும்.

## 546. ஐவர்க்கு நாயகன் அவ்வூர்த் தலைமகன்

546. ஐவர்க்கு நாயகன் அவ்வூர்த் தலைமகன்
உய்யக்கொண் டேறுங் குதிரைமற் றொன்றுண்டு
மெய்யர்க்குப் பற்றுக் கொடுக்குங் கொடாதுபோய்ப்
பொய்யரைத் துள்ளி விழுத்திடுந் தானே.

ஐவர்களாகிய ஐம்பொறிகட்கும் தலைவன் ஆருயிராகும். ஐம்பொறிகளையும் உறுப்பாகக்கொண்டு உடல் உறுப்பியாகத் திகழ்கின்றது. அதனால் அவ் வுடலை ஐவர் வாழும் ஊரென்றனர். அவ்வூர்க்குத் தலைமகன் மனம். அத் தலைமகன் நாயகனாகிய ஆருயிராம் தலைவன் உய்யுமாறுகொண்டு ஊரும் குதிரை ஒன்று உண்டு. குதிரை ஈண்டு உயிர்ப்பு. உயிர்ப்பு எனினும் பிராணவாயு எனினும் ஒன்றே. மெய்ம்மையாக அகத்தவப்பயிற்சி யுடையார்க்கு அம் மனமாகிய குதிரை அடங்கிப் பற்றுக்கொடுத்து ஒழுகும். முறையான பயிற்சியில்லாத பொய்யர்க்குப் பற்றுக்கொடாது துள்ளி எழுந்து அவரைக் கீழே வீழ்த்தித் தான் வேண்டியவாறு ஆர்வத்துடன் சென்றுவிடும்.

ஐவர். ஐம்பொறிகள். ஊர் - உடல். தலைமகன் - மனம் குதிரை - பிராணவாயு. பற்றுக்கொடுக்கும் - வசப்படும். துள்ளி விழுத்திடும் - வசப்படாது.

## 547. ஆரிய னல்லன் குதிரை இரண்டுள

547. ஆரிய னல்லன் குதிரை இரண்டுள
வீசிப் பிடிக்கும் விரகறி வாரில்லை
சூரிய நாதன் குருவின் அருள்பெற்றால்
வாரிப் பிடிக்க வசப்படுந் தானே.

குதிரையைச் செலுத்தும் ஆரியனாகிய மனத்தோன் நல்லவன். குதிரையாகிய உயிர்ப்பு இருவகை. ஒன்று வலப்பால் நாடி; மற்றொன்று இடப்பால் நாடி இவற்றை முறையே பிங்கலை இடைகலை என்ப. அவ்வுயிர்ப்பினை விடுத்தலும் எடுத்தலும் ஆகிய செயலைப் போன்று தடுத்தலைச் செய்வதாகிய வீசிப்பிடிக்கும் வழி யறியாது மயங்குகின்றனர். திருவருள் வலத்தால் நன்னெறி நான்மைவழி யொழுகினால் சிவகுரு எழுந்தருளிவந்து ஆட்கொள்வர். அவரின் திருவருள் பெற்றால் அக் குதிரையாகிய உயிர்ப்பினை வயடுப்படுத்துதல் எளிதாகும். ஆரியன் - பெருமைமிக்க மனம். விரகு - உபாயம்; முறைமை. சூரிய - நுண்ணிய அறிவுள்ள. வாரி - சேர்த்து.

ஆரியன் - மிலேச்சன். குதிரை இரண்டு - இடைகலை பிங்கலை விரகு-உபாயம்.

## 548. புள்ளினும் மிக்க புரவியை மேற்கொண்டாற்

548. புள்ளினும் மிக்க புரவியை மேற்கொண்டாற்
கள்ளுண்ண வேண்டாம் தானே களிதருந்
துள்ளி நடப்பிக்குஞ் சோம்பு தவிர்ப்பிக்கும்
உள்ளது சொன்னோம் உணர்வுடை யோருக்கே.

புள்ளாகிய பறவையினும் மிக்க விரைவாகச் செல்லும் குதிரையினைச் சிவகுருவினருளால் மேற்கொண்டால் புறத்தே காணப்படும் கள்ளுண்டு களிப்பெய்துதல் வேண்டா. (319) தானே அகத்தின்கண் அளவில்லாத களிப்புண்டாகும். மேற்கொள்ளுதல் - அடக்குதல். உயிர்ப்புப் பயற்சியுடையாரைத் துள்ளிநடக்கும் பீடுசேர் நடையினராக்கும். சோம்பல் வராமல் தடுக்கும். திருவடியுணர்வு கைவரப்பெறும் செந்நெறியாளர்க்கு மெய்ம்மை எடுத்துரைத்தனம். குதிரைக்கு ஒப்புப் பள்ளென ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியரும் அருளினர். அது வருமாறு.

"வினைவயிற் பிரிந்தோன் மீண்டுவரு காலை
இடைச்சுர மருங்கிற் றவிர்த லில்லை
உள்ளம் போல வுற்றுழி யுதவும்
புள்ளியற் கலிமா வுடைமை யான."
- தொல். பொருள் : 194.

கலிமா - குதிரை.

புள்ளென்பது ஈண்டுப் பறவைப் பொதுவன்று. பறவையின் ஓர் இனம் புள்ளெனப்படும். அப் புள் முட்டையினின்றும் வெளிவந்த அப்பொழுதே பறக்கும் இயற்பண்பு வாய்ந்தது. அஃது ஈண்டைக்கு நனிமிகு பொருத்தமாகும். ஆருயிரும்

நிலத்தில் பிறந்ததும் ஏதொரு துணையும் இன்றித் தாமாகவே மூச்சுவிட்டு வாங்குகின்றதைக் காண்கின்றோமன்றோ? ஆதலால் முட்டையினின்றும் வெளிவந்தவுடன் பறக்கும் புள்ளே ஒப்பாகும். இவ் வுண்மை தேர்ந்து தெளிந்தே திருவள்ளுவநாயனாரும்,

"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே
உடம்போ டுயிரிடை நட்பு."

- 338.

என்று ஓதியருளி முட்டையினின்றும் வெளிவந்தவுடன் பறந்துபோகும் புள்ளே உடம்புடன் வந்தவுயிர் அவ் வுடம்பைவிட்டுப் போவதற்கு ஒப்பாகும் என ஓதியருளினர். நிலாமுகிப்புள், தளியுணவப்புள் முதலியவை போன்று வியத்தக்க இயற்கைவாய்ந்த முட்டையினின்றும் வெளிவந்ததும் பறக்கும். பண்பினவாய புள்ளொன்று உளதெனக் கோடலும் பொருந்தும். நிலாமுகிப்புள் - நிலவை உணவாகக்கொள்வது. தளியுணவுப்புள் - மழையை உணவாகக் கொள்வது. இதனை வானம்பாடியெனவும், சாதகப்புள் எனவும் கூறுப. இவ் வுண்மை வருமாறு:

"வானம் பாடி வறங்களைந் தானா
தழி துளி தலைஇய புறவிற் காண்வர
வானர மகளோ நீயே
மாண்முலை யடைய முயங்கி யோயே."

- ஐங்குறுநூறு, 418

புள்ளினுமிக்க - வேகத்தால் பறவையினும் சிறந்த. மேற்கொண்டால் - அடக்கிக்கொண்டால். துள்ளி நடப்பிக்கும் - நடனமிட்டு நடத்தலைச் செய்விக்கும். சோம்பு - மடி.

## 549. பிராணன் மனத்தோடும் பேரா தடங்கிப்

549. பிராணன் மனத்தோடும் பேரா தடங்கிப்
பிராண னிருக்கிற் பிறப்பிறப் பில்லை.
பிராணன் மடைமாறிப் பேச்சறி வித்துப்
பிராண னடைபேறு பெற்றுண்டீர் நீரே.

பிராணனாகிய உயிர்ப்புச் சிவகுருவினருளால் மனத்துடன் பொருந்தி அடங்கி இருக்குமானால் பிறப்பு இறப்பு இல்லை. உயிர்ப்பானது வலப்பால் இடப்பால் நாடிகளாகிய பிங்கலை இடைகலைகளில் மாறிமாறிப் போய் வருமானால், பேச்சுமுண்டாகும். அதனால் இறப்பும் பிறப்பும் இறவாது வந்துகொண்டிருக்கும். பேராது - பிரியாது. நடை பேறு - போதல், வருதல், (இறத்தல் பிறத்தல்).

மடைமாறி - இடைகலை - பிங்கலைகளை மாறிமாறி.

# 550. ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்

550. ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்
ஆறுதல் கும்பம் அறுபத்து நாலதில்
ஊறுதல் முப்பத் திரண்டதி ரேசகம்
மாறுதல் ஒன்றின்கண் வஞ்சக மாமே.

வளிநிலையாகிய மூச்சுப்பயிற்சி முறை இதிற் காணப்படுகிறது. ஏறுதல் - பூரகம். ஆறுதல் - கும்பகம். ஊறுதல் - இரேசகம். பூரகம் - உள்ளிழுத்தல். கும்பகம் - அடக்குதல். இரேசகம் - வெளிவிடுதல். வாமம் - இடகலை; இடமூக்கு. ஈரெட்டு - பதினாறுமாத்திரை, அறுபத்து நாலு மாத்திரை, முப்பத்திரண்டு மாத்திரை. இப் பயிற்சிக்குச் 'சிவ சிவ' என்னும் செந்தமிழ்த் திருமாமறை முடிவினை நான்குமுறை கணித்துத் தூய காற்றை உள்வாங்குதல் வேண்டும். அதுபோல 'சிவசிவ' என்பதனைப் பதினாறுமுறை கணித்து இரண்டு மூக்கையும் அடைத்து உள் நிறுத்துதல் வேண்டும். பின் 'சிவசிவ' என எட்டுமுறை கணித்து வலமூக்கைத் திறந்து வெளிவிடுதல் வேண்டும். இம்முறையே இடமூக்கிலும் பயிலுதல் வேண்டும் இவ்வாறு மாறிமாறி இயன்ற அளவு செய்தல் வேண்டும். சிவசிவ என்பது நான்கு மாத்திரை.

மாறுதல் - மடைமாறுதல்.

## 551. வளியினை வாங்கி வயத்தில் அடக்கில்

551. வளியினை வாங்கி வயத்தில் அடக்கில்
பளிங்கொத்துக் காயம் பழுக்கினும் பிஞ்சாம்
தெளியக் குருவின் திருவருள் பெற்றால்
வளியினும் வேட்டு வளியனு மாமே.

அகத்தவப் பயிற்சியால் உயிர்ப்பினை வாங்கி உந்திக்கண் அடக்கி வயப்படுத்தினால் உடம்புக்கு காலவரையறைப்படி ஏற்படும் முதுமை புறத்துக் காணப்படினும் அகத்து முதுமைப்பண்பு ஒருசிறிதும் காணப்படமாட்டாது. அதற்கு மாறாக இளமைப்பண்பு கிளர்ந்தெழுந்து கொழுந்துவிடும். அதனையே பளிங்கொத்துக் காயம் பழுக்கினும் பிஞ்சாம் என்று ஓதினர். அகத்துப்பண்பு இளமையாகப் புறத்துப் பொலிவு முதுமையாவது எதன்பொருட்டெனின்? அவர்தம் பயிற்சியின் சிறப்பும்
அகவையில் முதிர்வும் ஒருங்குணர்த்தும் உண்மை எண்மையான் என்க. அவையே ஏனையாரையும் அப் பயிற்சிக்கண் தூண்டித் தொழிற்படுத்தும் வண்மையுள்ளனவாகும். இந் நெறியால் தெளிவு பெறச் சிவகுருவின் திருவருள் எய்தும். அத் திருவருட்டுணையால் வேண்டுமேல் காற்றினும் விரைவாய் விண்ணிடைப் பறக்கும் அளியனும் ஆவன். அளியன் - மென்மத்தன்மையுடையன். எண்பெரும பேறுகளுள் ஒன்றாகிய மென்மையாகும். எண்பெரும் பேறு: நுண்மை, பருமை, விண்டன்மை, மென்மை, விரும்பிய தெய்தல், நிறைவுண்மை, ஆட்சியனாதல், கவர்ச்சி என்பன. இவற்றை

முறையே அணிமா, மகிமா, கரிமா, இலகிமா, பிராப்தி, பிராகாமியம், ஆட்சியனாதல், கவர்ச்சி எனலுமாம். வளியினும் - காற்றைவிட வேட்டு - விரும்பத்தக்க. அளியனும் - மென்மைத்தன்மையுடையனும். ஆம் - ஆவன் (விண்ணிற் பறக்கும் தன்மையுடையன் ஆவன் என்பது கருத்து.)

வயம் - வசம் (சகரத்துக்கு யகரம் போலி). பழுக்கினும் - முதுமைப் பருவம் எய்தினாலும். பிஞ்சாரம் - இளமைத் தன்மையை எய்தலாம்.

## 552. எங்கே இருக்கினும் பூரி இடத்திலே

552. எங்கே இருக்கினும் பூரி இடத்திலே
அங்கே யதுசெய்ய ஆக்கைக் கழிவில்லை
அங்கே பிடித்தது விட்டள வுஞ்செல்லச்
சங்கே குறிக்கத் தலைவனு மாமே.

எங்குத் தங்கநேரினும அங்கெல்லாம் இடமூக்கு வழியாக (இடைகலை) உயிர்ப்பினைப் பதினாறுமாத்திரையளவு எடுத்தலாகிய பூரகத்தைச் செய்வாயாக. செய்தபின் அங்கே தடுத்தலாகிய கும்பகத்தை அறுபத்துநான்கு மாத்திரையளவு செய்க. பின் விடுத்தலாகிய இரேசகத்தை முப்பத்திரண்டு மாத்திரையளவு செய்க. அங்ஙனம் செய்யவே அகத்தவப் பயிற்சியால் உணர்வினுள் ஒலிக்கும் சங்கு முதலிய ஒலிகள் பத்தும் (586) உண்டாகும். அகத்தவம் பயின்றார் பலருள்ளும் இவன் தலைசிறந்தவனாவன்.

பூரி இடத்திலே - இடைகலை வழியாய்ப் பிராணவாயுவைப் பதினாறு மாத்திரை உள்ளே வாங்கு. அங்கே பிடித்து - 64 மாத்திரை கும்பித்து. விட்டளவுஞ்செல்ல - 32 மாத்திரை இரேசகம் செய்ய (அஃதாவது வெளியேவிட). சங்கே குறிக்க - சங்கு முதலிய நாதங்கள் கேட்க. தலைவனுமாமே - பிராணாயாமப் பயிற்சியில் தலைசிறந்தவன் ஆகலாம்.

## 553. ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்குங்

553. ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்குங்
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாரில்லை
காற்றைப் பிடிக்குங் கணக்கறி வாளர்க்குக்
கூற்றை யுதைக்குங் குறியது வாமே.

உயிர்ப்பினை அகத்தவப்பயிற்சியால் மேலே ஏறும்படி செய்து இடப்பால் மூக்கு வலப்பால் மூக்கு வழியாக இரு கால் - இருமுறை எடுத்தலாகிய பூரித்தலைச் செய்க அங்ஙனம் செய்யும் காற்றை அருளால் தடுத்தலாகிய கும்பகத்தைச் செய்யும் மேலோதிய (552) முறைமைக் கணக்கினைக் கைக்கொண்டொழுகுவார் அரியர். அவ் வருமைப்பாடாம் 'காற்றைப்பிடிக்கும் கணக்கறி' வாருக்குச் சிவபெருமான் திருவருளால் கூற்றையுதைக்கும் குறிநிலையுண்டாம். உயிர்ப்புப் பயிற்சி செய்வார் வினையால் சிவவினையாக்கிக் கோடற்பொருட்டுச் 'சிவசிவ' என்னும் நான்கு. மாத்திரையுள்ள நம்பன் நற்றொடரை நாவழுத்திப் பயில்வர். அஃதாவது உயிர்ப்பினை விடுத்தற்கு நான்கு முறையும், எடுத்தற்குப் பதினாறு முறையும் தடுத்தற்கு எட்டுமுறையும் ஆக நவின்று பயில்வர். அம் மறைக்கணிப்பினால் வரும் நற்றவம் இயல்பாகவே உயிர்ப்புப் பயற்சியால்தானே எய்துகின்றது. இதுவே திருவள்ளுவ நாயனார் அருளிய, "வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள் யானையால் யானையாத் தற்று." - 678.

னும் செந்தமிழ்ப் பொதுமறையின் சீரியபொருட்கு நேரிய எடுத்துக் காட்டாகும். மேலும் திருமுறைத் திருவாணைவழித் திருவைந்தெழுத்து ஓதுவார்முன் நமன்றமர் நணுக அஞ்சுவர். அவ்வைந்தெழுத்துள்ளும் ஒப்பில் ஒன்றாய்நின்று சிறப்பது 'சிவசிவ' என்னும் இருதலை மணியாம் செழுமறையே. இதனை வழுத்துவாரை நமன்தூதர் நாடவும் அஞ்சுவர். இவ்வுண்மை வரும் அப்பர் வைப்பாம் அருள்மொழியான் உணர்க:

"இன்னங் கேண்மின் இளம் பிறைசூடிய
மன்னன் பாத மனத்துடன் ஏத்துவார்
மன்னு மஞ்செழுத் தாகிய மந்திரம்
தன்னி லொன்றுவல் லாரையும் சாரலே."

- 5: 106 - 6.

று: ஒப்பிலாச் 'சிவசிவ' என்னும் ஒன்று.

காற்றைப்பிடிக்கும் கணக்கு - மேலே கூறிய அளவு.

## 554. மேல்கீழ் நடுப்பக்க மிக்குறப் பூரித்துப்

554. மேல்கீழ் நடுப்பக்க மிக்குறப் பூரித்துப்
பாலாம் இரேசகத் தாலுட் பதிவித்து
மாலாகி யுந்தியுட் கும்பித்து வாங்கவே
ஆலாலம் உண்டான் அருள்பெற லாமே.

மேல் எனப்படும் தலை, கண், காதுகளும் கீழ் எனப்படும் கால், பெருவிரல் முதலியவைகளும், நடு எனப்படும் நெஞ்சகம், கொப்பூழ் முதலியவைகளும் நிறையுமாறு உயிர்ப்பினை உள்ளிழுத்தல் - எடுத்தல் செய்தல் வேண்டும். இதுவே பூரித்தல் எனப்படும். அங்ஙனம் எடுத்தல் செய்த உயிர்ப்பினை அளவுக்குமேல் வெளிவிடுத்தல் செய்யாது உட்பதிவித்தலாகிய அளவுடை விடுத்தலைச் செய்தல் வேண்டும். விடுத்தல் - இரேசகம். சிவபெருமான்பால் பேரன்புடையவராய் அழிவயிற்றினுள் தடுத்தலாகிய கும்பகத்தைச் செய்து வாழ்ந்துவந்தால் நனிமிக எளிதாய்ப் பிழை பொறுக்கும் விழைதகு பெருமானாகிய சிவபெருமான் திருவருளைப் பெறலாகும். ஆலமுண்டான் - மாலால் விளையும் மேலாம் பிழையென்னும் நஞ்சினையுண்டவன். மேல் - தலை, கண், காது முதலியன. கீழ் - கால், பெருவிரல் முதலியன. நடு - நெஞ்சம், கொப்பூழ் முதலியன. (இது பொறைநிலை என்கின்ற வாயுத்தாரணை முறையாம்.)

இரேசகத்தால் உட்பதிவித்து - அளவுக்கு மீறி வாயுவை வெளியே விடாமல்.

## 555. இட்ட தவ்வீ டிளகா திரேசித்துப்

555. இட்ட தவ்வீ டிளகா திரேசித்துப்
புட்டிப் படத்தச நாடியும் பூரித்துக்
கொட்டிப் பிராணன் அபானனுங் கும்பித்து
நட்டம் இருக்க நமனில்லை தானே.

வீடாகிய உடல் தளர்ச்சியுறாது வளர்ச்சியுறுமாறு அளவாக உயிர்ப்பினை விடுத்தல் செய்து உடலுக்குச் செழுமையும் கொழுமையும் வழுவின்றிக் கெழுமப் பத்துவகை நாடியினும் உயிர்ப்பினை எடுத்தல்வேண்டும். அங்ஙனம் எடுத்து வீணாகக் கழியும் உயிர்ப்பினையும் மலக்காற்றினையும் தடுத்து நிலைநிறுத்தலாகிய நட்டத்தினைப் புரிவோர்க்குப் பண்டு எழுதிய கணக்கின்படி நமன் வருவதற்கில்லை. ஒருவன் மூலபண்டாரத்தைச் செலவுசெய்யாது தான் தேடி உண்பித்தும் உண்டும் வருகின்றனன். அம்மட்டுமன்றி மூலபண்டாரத்தின்கண் நாளும் சிறுகச்சிறுகத் தன் ஊதியத்திலிருந்து பொருள் கூட்டித் தொகுத்தும் வருகின்றனன். இவ்வுண்மையோராது மூலபண்டாரம் இது காறும் செலவாகி முடிந்திருக்கும் என்று ஒருவன் கணக்குக்கூட்டினால் எவ்வளவு பிழையோ அவ்வளவு பிழையாகும் அகத்தவமாகிய யோகப் பயிற்சியுடையார்பால் கூற்றுவன் வாழ்நாட்கு அலகிடுதல். நாடிபத்து இடப்பால் நரம்பு, வலப்பால் நரம்பு, நடு நரம்பு, உள்நாக்கு நரம்பு, வலக்கண் நரம்பு, இடக்கண் நரம்பு, வலச்செவி நரம்பு, இடச்செவி நரம்பு, கருவாய் நரம்பு, எருவாய் நரம்பு என்பன.

வீடு இளகாது - சரீரம் தளராது. புட்டிபட - பருக்கும் படி. கொட்டிய - வீணாய்க் கழியும். நட்டம் இருக்க - நிலைநிறுத்த.

## 556. புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை

556. புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
நெறிப்பட வுள்ளே நின்மல மாக்கில்
உறுப்புச் சிவக்கும் உரோமங் கறுக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே.

உள்ளிருந்து புறப்பட்டு வெளிப்போந்து மீண்டும் உட்புக்குத் திரிகின்ற உயிர்ப்பினை மூச்சுப்பயிற்சி முறைப்படி தடுத்து உள்நிறுத்தி அருளால் தூய்மையாக்கி ஒழுகவல்லார்க்கு உடம்பு பொன்மேனியாகும். உயிர்க்குயிராய் உடன்நின்று விளங்கும் பின்னற்சடைசேர் பெருமானும் மன்னிநிற்பதன்றிப் புறப்பட்டுப் போகான். அவன் போகானாகவே அவனுக்கு உடலாகிய ஆருயிரும் போகாது. ஆருயிர் நிற்கவே உடலும் அழியாது. நெறிப்பட - முறைப்படி. உறுப்புச் சிவக்கும் - (உறுப்பு சினை யாகுபெயராய் உடம்பைக்குறித்தது.) உடம்பு பொன்னிறமாம்.

## 557. கூடம் எடுத்துக் குடிபுக்க மங்கையர்

557. கூடம் எடுத்துக் குடிபுக்க மங்கையர்
ஓடுவர் மீளுவர் பன்னிரண் டங்குலம்
நீடுவர் எண்விரல் கண்டிப்பர் நால்விரல்
கூடிக் கொளிற்கோல அஞ்செழுத் தாமே.

கூடமாகிய உடலின்கண் குடிபுகுந்து மங்கையராகிய பிங்கலை இடைகலை என்னும் வலப்பால் இடப்பால் நாடிகள் வாயிலாக உயிர்ப்புப் பன்னிரண்டுவிரல் அளவு ஓடுதலும் மீளுதலும் புரியும். அப்பன்னிரண்டு விரலுள் எண்விரல் அளவு எடுத்துக்கொண்டு நான்குவிரல் அளவு வீணாக வெட்டி அவை வாணாளென்று எண்ணாது போக்கிவிடுவர். அந் நால் விரலளவும் நாளும் அகத்தே கூடிக்கொள்ளின் மிகப்பெரும் வைப்பாகத் திகழும். அதன்மேல் பயிற்சியால் பெருகி மூலபண்டாரம் சாலமிகும். மிகவே அவ்வுயிர் திருநீறு சிவமணி அணிந்தார்தம் புறக் கோலம் போன்று உணர்வின்கண் 'சிவசிவ' என்னும் செந்தமிழ் மறைக்கோலமாய் உறையும். உறையவே கூற்றுவனும் நாட அஞ்சுவன். அஞ்செழுத்தாமே - உயிர்க்கிழவன் 'சிவசிவ' என்னும் திருவுருவனாவன்.

கூடம் - சரீரம். மங்கையர் - இடைகலை; பிங்கலை. எண். விரல் கண்டிப்பர் - பிராணவாயுவைப் பன்னிரண்டங்குலமுள்ள பொருளாகக் கொண்டால் பூரகம் எட்டங்குலப் பிரமாண முள்ளதாகும். நாலங்குலம் வந்து கூடாது. கால்விரல் - 16 மாத்திரையுள்ள பூரகத்தின் கால்பாகமாக உள்ள நாலங்குலம். கூடிக்கொளின் - 64

மாத்திரை அளவுள்ள கும்பகத்தாலும் 32 மாத்திரை அளவுள்ள இரேசகத்தாலும் நாலங்குலம் கூடிக்கொண்டால்.

# 558. பன்னிரண் டானை பகல்இர வுள்ளது

558. பன்னிரண் டானை பகல்இர வுள்ளது
பன்னிரண் டானையைப் பாகன் அறிகிலன்
பன்னிரண் டானையைப் பாகன் அறிந்தபின்
பன்னிரண் டானைக்குப் பகல்இர வில்லையே.

வெளிச்செல்லும் உயிர்ப்பு மாத்திரை பதினாறனுள் இயல்பாகவே நான்கு மாத்திரை உயிர்ப்புப்புறமே வீணாகக் கழிந்துபோக அகத்தே பன்னிரண்டு மாத்திரைதங்குகின்றது. அதுதானும் பின்னும் உயிர்ப்பினைக் கழிப்பதற்கே காரணமாகத் தங்குகின்றது. இப் பன்னிரண்டு மாத்திரை உயிர்ப்பினைப் பன்னிரண்டானை என்றனர். இவை பாகனாகிய ஆருயிர்க்கு அடங்குதல் நன்றாகும். அங்ஙனம் அடங்கின் நாளெல்லை, விழிப்பு உறக்கம், தோற்ற ஒடுக்கம், அறிவு அறியாமை எனப்படும் பகல் இரவுகள் இல்லை. அவ்வியானையினை அடக்குமுறையினைப் பாகனாகிய உயிர் அறிந்திலது. அதனை ஆருயிர் அறிந்தபின் எய்தவே மேலோதிய பகல் இரவுகளில்லை.

பன்னிரண்டானைக்கு - 16 மாத்திரையில் நாலு மாத்திரையை விட்டு விட்டு 12 மாத்திரையை மாத்திரம் பூரிப்பவருக்கு பாகன் - ஆன்மா.

## 559. கண்டுகண் டுள்ளே கருத்துற வாங்கிடிற்

559. கண்டுகண் டுள்ளே கருத்துற வாங்கிடிற்
கொண்டுகொண் டுள்ளே குணம்பல காணலாம்
பண்டுகந் தெங்கும் பழமறை தேடியை
இன்றுகண் டிங்கே இருக்கலு மாமே.

பிரத்தியாகாரமாகிய தொகைநிலைக்கண் அஃதாவது 'பொறியுணர் வெல்லாம் புலத்தின் வழாமல், ஒருவழிப் படுப்பது தொகைநிலையாம்' ஆகலின் அகத்தவப் பயிற்சிமுறையான் சிவபெருமானை உணர்வின்கண் கருத்துறவைப்பது தொகைநிலை. அங்ஙனம் சிவபெருமானை அகத்தே கொள்ளக்கொள்ள அவன்றன் எண்குணப் பெருக்கமும் எண்மையிற் காணலாம். பழங்காலத்தே நனிமிகு கனிவுடன் செந்தமிழ்ப் பழமறை தேடித் திளைக்கும் சிவபெருமானை இந்நாள் நாமும் அகத்தே கண்டு இன்புற்று இருக்கலுமாகும். பண்டு - பழமை; தொன்மை. தேடியை - தேடப்பட்ட சிவபெருமானை. பழமறை - செந்தமிழ்த் திருநான்மறை. இருக்கலும் - மெய்யடிமையாய் வாழ்தலும்.

## 560. நாபிக்குக் கீழே பன்னிரண் டங்குலம்

560. நாபிக்குக் கீழே பன்னிரண் டங்குலம்
தாபிக்கு மந்திரந் தன்னை அறிகிலர்
தாபிக்கு மந்திரந் தன்னை அறிந்தபின்
கூவிக்கொண் டீசன் குடியிருந் தானே.

கொப்பூழுக்குப் பன்னிரண்டுவிரல் அளவின் கீழுள்ளது மூலாதாரம். அம் மூலாதாரத்தைத் தூண்டித் தொழிற்படுத்தும் மந்திரம் இயற்கைச் செந்தமிழ் மறையாகிய 'ஓம்.' இம் மறையினையே ஆண்டு வரை செய்து நிலைநிறுத்துதல் வேண்டும். அதனைப் பலரும் அறிகிலர். திருவருளால் அதனையறிந்தபின் சிவபெருமானை அன்பால் அழைத்துக் கொள்ளுதல் வேண்டும். அழைக்கவே அவனும் வெளிப்பட்டு எழுந்தருளிக் குடியிருந்தருள்வன். மூலாதார எழுத்துக்கள் வ, ச, ஷ, ஸ என்பன என்றலும் ஒன்று. தாபிக்கு மந்திரம் - நிலைநிறுத்தும் ஓங்காரம். கூவி - அழைத்து. கொண்டு - அடிமைகொண்டு.

நாபிக்குக் கீழே பன்னிரண்டங்குலம் - மூலாதாரம்.

# 561. மூலத் திருவிரல் மேலுக்கு முன்நின்ற

561. மூலத் திருவிரல் மேலுக்கு முன்நின்ற
பாலித்த யோனிக் கிருவிரல் கீழ்நின்ற
கோலித்த குண்டலி யுள்ளெழுஞ் செஞ்சுடர்
ஞாலத்து நாபிக்கு நால்விரற் கீழதே.

மூலாதாரத்திற்கு இரண்டுவிரல் மேலும், குறிக்கு இருவிரற் கீழும் உள்ள இடம் பாப்பிருக்கையாகிய வட்டக் குண்டலியாகும். அக் குண்டலியாற்றல் மிக்க அழகுள்ளதாய் உணர்வினுள் எழும் செஞ் ாகும் அச் சுடர் உச்சித்துளைவழிச் செல்லும். மேலும் அச் சுடர் கொப்பூழுக்குக்கீழ் நான்குவிரல் எல்லையிலும் பரவியிருக்கும். அது பற்றியே மெய்கண்ட நாயனாரும் 'அஞ்செழுத்தால் குண்டலியிற் செய்தோமம்' என்றருளினர. யோனி - குறியிடம். செஞ்சுடர் - உச்சித் துளைவழி (பிரமரந்திரமார்க்கம்)

பாலித்த - பிறப்பைத் தருகின்ற. கோலித்த - வட்டமாயுள்ள.

## 562. நாசிக் கதோமுகம் பன்னிரண் டங்குலம்

562. நாசிக் கதோமுகம் பன்னிரண் டங்குலம்
நீசித்தம் வைத்து நினையவும் வல்லையேல்
மாசித்தி மாயோகம் வந்து தலைப்பெய்தும்
தேகத்துக் கென்றுஞ் சிதைவில்லை யாமே

மூக்கின்கீழ்ப் பன்னிரண்டுவிரல் அளவில் எல்லையிற் காணப்படும் இடம் நெஞ்சகமாகும். அவ்விடத்துச் சிவபெருமானை இவர்தந்தூரும் இறையென முறையுற நாடிக் கொல்லாமை முதலிய எண்பூக்கொண்டு திருவைந்தெழுத்தால் விழுமிய வழிபாடு ஆற்றுதல் வேண்டும். ஆற்றின் மாசித்தி மாயோகம் வந்துகைகூடும். மா - நனி மிகு பெருமை. இவ் வழிபாடுடையார்தம் உடம்பினுக்கு எந்நாளும் எவ்வகையூறும் உண்டாகாதென்க. 'செந்தமிழர் தெய்வமறை நாவர் செழுநற்கலை தெரிந்தவரோ, டந்தமில் குணத்தவர்க ளர்ச்சனைகள் செய்யு' முறைமையினை நம் மெய்கண்டநாயனார் அருளுமுறை வருமாறு:

"அஞ்செழுத்தால் உள்ளம் அரனுடைமை கண்டரனை
அஞ்செழுத்தால் அர்ச்சித் திதயத்தில்-அஞ்செழுத்தால்
குண்டலியிற் செய்தோமங் கோதண்டஞ் சானிக்கில்
அண்டனாஞ் சேடனாம் அங்கு."

- சிவஞானபோதம், 9: 3 - 1.

'கொல்லாமை ஐந்தடக்கல் கொள்பொறுமை யோடிரக்கம், நல்லறிவு மெய்தவம் அன்பெட்டு'ம் ஞானமலராகும். பன்னிரண்டங்குலம் - பன்னிரண்டங்குல இடமாகிய நெஞ்சு

(அநாகதம்). (இந்த நெஞ்சிடமே அகவழிபாட்டிற்குரியது. அகவழிபாடு - மானத பூசை.)

அதோமுகம் - கீழ்.

## 563. சோதி இரேகைச் சுடரொளி தோன்றிடிற்

563. சோதி இரேகைச் சுடரொளி தோன்றிடிற்
கோதில் பரானந்தம் என்றே குறிக்கொண்மின்
நேர்திகழ் கண்டத்தே நிலவொளி எய்தினால்
ஓதுவ துன்னுடல் உன்மத்த மாமே.

அகத்தே பிறைக்கீற்றுப்போலும் சுடரொளி தோன்றும். தோன்றினால் அதுவே குற்றமற்ற நற்றவப் பேரின்பமாகும். அதனைத் திருவருள் நினைவால் குறிக்கொண்டு ஒழுகுங்கள். ஒழுகவே மிடறாகிய விசுத்தியினிடத்து நிலவொளி தோன்றும். அந் நிலவொளி தோன்றி னால் புகழ்ந்து சொல்லப்பெறும் உன் பொன்மேனி சிவன் வயமாகும். அஃதாவது உன் நுகர்வனைத்தும் சிவன் நுகர்வாகும். கண்டத்தே - கழுத்திடமாக (விசுத்தி). பரவசம் - தன்னிழப்பும் தலைவன் உழப்பும் உழப்பு - இறைபணி.

இரேகைச் சுடரொளி - கீற்றுப்போன்ற ஒளி. கோதில் குற்றமில்லாத. உன்மத்தம் - பரவசம்.

## 564. மூலத் துவாரத்தை முக்கார மிட்டிரு

564. மூலத் துவாரத்தை முக்கார மிட்டிரு
மேலைத் துவாரத்தின் மேல்மனம் வைத்திரு
வேலொத்த கண்ணை வெளியில் விழித்திரு
காலத்தை வெல்லுங் கருத்திது தானே.

செல்வே நிமிர்ந்து நன்றாயிருந்து அயிர்ப்பின்றி உயிர்ப்பினை அடக்கி மூலத்துளையை வாலிதின் அழுத்தி அடைத்திருப்பாயாக. அதன்பின் உச்சித்துளையாகிய நடுநாடியின் முடிவிடமாம் மேலைத் துவாரத்தின்மேல் மனம் வைத்திருப்பாயாக. இம்முறையால் வித்தமிழ்தாகிய இந்திரியம் உடம்பெங்கணும் செறியும். வேல்போலும் கூரிய அமர்க்கண்ணை விழித்திருப்பாயாக. விழித்திருத்தல் என்பது புற நாட்டமுமின்றி உறக்கமுமின்றி அகநாட்டமுற்றிருத்தல். அங்ஙனமிருப்பதே வாழ்நாட்கு அலகாய் வயங்கொளி மண்டிலக்காலத்தை வெல்லும் கருத்தென்பதாகும். விடுமுறைநாட்களைச் சேர்த்துவைத்துள்ள பணியாளர் பின் ஆண்டுக்கணக்காய்ப் பணியின்றி ஊதியம் பெற்றுக் காலத்தை நீட்டிப்பிப்பது இதற்கு ஒப்பாகும். மேலைத்துவாரம் - புருவ நடுவிலுள்ள நடுநாடித் துளை. புருவநடு - ஆக்கினாசக்கிரம். நடுநாடி - சுழுமுனை.

முக்காரமிட்டிரு - நிமிர்ந்து உட்கார்ந்து, மூச்சடக்கி அழுத்தி இரு மேலைத்துவாரம் - மூலத்துக்கு மேல் உள்ள துவாரத்தின் மேல்; இந்திரியம் தேகத்திற்குள் பரவும் வழி.

## 565. எருவிடும் வாசற் கிருவிரன் மேலே

565. எருவிடும் வாசற் கிருவிரன் மேலே
கருவிடும் வாசற் கிருவிரற் கீழே
உருவிடுஞ் சோதியை உள்கவல் லார்க்குக்
கருவிடுஞ் சோதி கலந்துநின் றானே.

எருவிடும் வாசலாகிய கழிவாய்க்கு இரண்டுவிரல் மேலும் கருவிடும் வாசலாகிய குறிக்கு இரண்டுவிரற் கீழும் உள்ள நிலைக்களம் பாப்பிருக்கையாகிய குண்டலிநிலையாகும். அந்நிலைக்கண் திருவருளே திருவுருவாகக்கொண்டு திகழும் பேரறிவும் பேரொளிப் பெரும்பிழம்பு ஒன்று ஒருருவாய்த் தோன்றும். அப் பிழம்பினை அருளால் உணர்விற் கண்டு ஓவாது நினைக்கவல்லவர்கட்குக் கருவாகிய பிறப்பினை விடுவிக்கும் அச் சிவப்பிழம்பு வெளிப்படக் கலந்து விளங்கிநின்றருளினன். கருவிடும் சோதி - வினைமுதற்காரணமாய் நின்ற சிவன்.

எருவிடும் வாசல் - மலத்தைக் கழிக்கும் மூலம். கருவிடும் வாசல் - இந்திரியம் வெளிப்படும் வழி. உருவிடு சோதி - பிறப்பினை ஒழிக்கும் சிவபெருமான்.

## 566. ஒருக்கால் உபாதியை ஒண்சோதி தன்னைப்

566. ஒருக்கால் உபாதியை ஒண்சோதி தன்னைப்
பிரித்துணர் வந்த உபாதிப் பிரிவைக்
கரைத்துணர் வுன்னல் கரைதல்உள் நோக்கல்
பிரத்தியா காரப் பெருமைய தாமே.

திருவருளால் துன்புறுத்தும் உபாதியாகிய மாயையை, அளவிடப்படாத ஒள்ளிய பேரொளியாக விளங்கும் சிவபெருமானை வேறுபிரித் துணரும் ஆருயிரை, மாயையினின்றும் பிரித்துச் சிவத்துடன் சேர்க்க நினைத்தல், சேருமாறு அகத்தவத்தால் கரைதல், உணர்வினுள் நோக்கல், ஆகிய அருஞ்செயல்கள் தொகைநிலையாகிய பிரத்தியாகாரம் என்ப. பிரத்தியாகாரம் - தொகைநிலை. (ஆவியை ஆண்டானை இயைபினைத் தொகுத்துக்காண்டல்.) கரைத்து - தெளிந்து. உன்னல் - நினைதல். கரைதல் - புணர்தல். உள்நோக்கல் - அழுந்தல்.

உபாதி - மாயையுடன் கூடிய உயிரை. ஒண்சோதி தன்னை - சிவத்தை.

## 567. புறப்பட்ட வாயு புகவிடா வண்ணந்

567. புறப்பட்ட வாயு புகவிடா வண்ணந்
திறப்பட்டு நிச்சயஞ் சேர்ந்துடன் நின்றால்
உறப்பட்டு நின்றது உள்ளமும் அங்கே
புறப்பட்டுப் போகான் பெருந்தகை யானே.

நான்குவிரல் அளவு உயிர்ப்பு விடுத்தல் முறையான் வெளிச்சென்றது கழிந்துபோகாவண்ணம் உறுதிப்பட மெய்ம்மையாக எடுத்தன்முறையான் உள்வந்து நின்றால் உள்ளமாகிய ஆருயிரும் அங்கே பொருந்தி நிலைபெற்று நின்றதாகும் பெருந்தகையோனாகிய சிவபெருமானும் நீங்கிப்போகான். உள்ளம் உறப்பட்டு நின்றதென்பதற்கு மனம் வயப்பட்டு நின்றதென்றலும் ஒன்று. திறப்பட்ட நிச்சயம் - கடைப்பிடித்த உறுதி. உறப்பட்டு நின்றது - வயப்பட்டிருந்தது.

புறப்பட்ட வாயு - வெளிச்செல்லும் நால்விரல் அளவுள்ள வாயு. புகவிடா (போகவிடா) வண்ணம் - கழியாவண்ணம்.

## 568. கோணா மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்கட்டி

568. கோணா மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்கட்டி
வீணாத்தண் டூடே வெளியுறத் தானோக்கிக்
காணாக்கண் கேளாச் செவியென் றிருப்பார்க்கு
வாணாள் அடைக்கும் வழியது வாமே.

பொறைநிலையாகிய தாரணை என்பது மனத்தினை ஒரு வழி நிறுப்பதாகும். "மனத்தினை யொருவழி நிறுப்பது பொறைநிலை" என்பதூஉங் காண்க. புலன்களைப் பற்றிக்கொள்ளும் பண்புவாய்ந்த மனத்தினைத் திருவருள் நினைவால் புலன்வழிப் புகவிடாதும் கீழ் நோக்கவிடாதும் புரிந்துகட்டுவதாகிய அடக்குதலைச் செய்தல் வேண்டும். அங்ஙனம் அடக்கியபின் உணர்வுக்கண்கொண்டு நடுநாடி வழியாகத் திருவருள் வெளியினை உற்றுநோக்குதல் வேண்டும். நோக்கினால் அகத்தே அறிவின்கண் கண் காது முதலிய கருவிகளின்றியே காண்டலும் கேட்டலும் ஆகும். அவற்றையே ஈண்டுக் காணாக்கண் கேளாச்செவி என ஓதப்பெற்றது. இம் முறையையே வாழ்நாளின் முடிவுபெறாமல் தடுக்கும்வழி யென்றோ தப்பட்டது. கோணாமனத்தை - புலன்வழியிற் போகாமனத்தை கீழ்க்கட்டி - கீழ் நோக்காதபடி தடுத்து; அல்லது கால் முதலான இடங்களில் நிறுத்தி. வீணாத்தண்டு - நடுநாடி. நோக்கி - பரவெளியை உற்றுப்பார்த்து. வாணாள் - அகவை (வயது). அடைக்கும் வழி - கழியாது தடுக்கும்வழி.

கோணா மனம் - எப்பொழுதும் கோணும் தன்மையுள்ள மனம். குறிக்கொண்டு கீழ்க்கட்டி - மூலத்துவாரத்தை முக்காரமிட்டு. வீணாத் தண்டூடே வெளியுற - வீணாத்தண்டின் துவாரத்தின் ஊடே வெள்ளியாகிய சுக்கிலம் உற. வாணாள் அடைக்கும் - வாழ்நாள் கழிந்து போகாதபடி காக்கும்.

## 569. மலையார் சிரத்திடை வானீர் அருவி

569. மலையார் சிரத்திடை வானீர் அருவி
நிலையாரப் பாயும் நெடுநாடி யூடே
சிலையார் பொதுவில் திருநட மாடுந்
தொலையாத ஆனந்தச் சோதிகண் டேனே.

நடுநாடியாகிய மேருமலையின் உச்சிக்கண் அருள்வெளி வாயிலாக வரும் தூய அமிழ்தம் ஆருயிர் உடம்பின்கண் அவ்வுயிர் வேண்டும் நாள்முழுவதும் இருத்தற்பொருட்டு நிலையாகப் பொழியும். நடுநாடிவழியாகச் சென்று திருவருள் வெளிக்கண் நிகழ்த்தும் சிவபெருமானின் திருக்கூத்தைக் காண்டல் எளிதாகும். கண்டனன் எனவும் ஓதினர். மலை - மேரு; நடுநாடி. வான்நீர் அருவி - பரவெளிக் கண்ணுள்ள திங்கள் மண்டிலத்திருந்து ஒழுகும் அமிழ்தம். சிலையார் பொது - பலவகை இயங்களின் இன்னொலி கேட்கப்படும் பரவெளி.

மலையார் சிரத்திடை - உச்சியிலுள்ள. வான்நீர் - ஆகாய அருவி என்கிற ஆனந்தக்கண்ணீர். நிலையார - தேகம் நிலைத்து நிற்க. நெடுநாடி - நீண்டு பரந்து கிடக்கும் நாடிகள். சிலையார் பொது - உயிருள்ள இடம், அஃதாவது உள்ளம். தொலையாத விட்டகலாத.

## 570. மேலை நிலத்தினாள் வேதகப் பெண்பிள்ளை

570. மேலை நிலத்தினாள் வேதகப் பெண்பிள்ளை
மூல நிலத்தில் எழுகின்ற மூர்த்தியை
ஏல எழுப்பி இவளுடன் சந்திக்கப்
பாலனும் ஆவான் பார்நந்தி ஆணையே.

ஆறுநிலைகளுக்கும் அப்பாற்பட்ட அருள்வெளிக்கு உரியவன்மேலை நிலத்தினாள். இதுவே பற்றுக்கோடில்லா நிலை. இதனைச் சார்பில்நிலை எனவும் கூறலாம். இதுவே நிராதாரம். அவளே மெய்யுணர்வுச் செல்வி. மூலாதாரத்திலுள்ள திருவருள் திருவுருவினையுடையவன் சிவன். அத்திருவருளைத் திருமேனியாகவுடைய சிவபெருமானை எழுப்புதல் வேண்டும். எழுப்பித் திருவருளுடன் கூடச்செய்தல் வேண்டும். அங்ஙனம் செய்யவே அவ் வுயிர் என்றும் இளமையாகவே இருக்கும். 'என்றும் இளையாய் அழகியாய் ஏறூர்ந்தான் ஏறே' என்றழைக்கப் படுதற்கும் உரிமையுண்டாகும். வேதகப் பெண்பிள்ளை என்பதற்கு வேறுபாட்டினைச் செய்கின்றவள் என்றலும் ஒன்று. மூர்த்தியை எழுப்பி என்பதற்குப் பாப்பிருக்கைக் குண்டலியை எழுப்பி என்றுரைத்தலுமாம். இவளுடன் சந்திக்க என்பதற்கு அவள் செல்லும் உச்சித்துளைவழிச் சென்று சிவபெருமானைக் கண்டு கும்பிட எனலுமாம். வேதகப் பெண்பிள்ளை - (இரும்பைப் பொன்னாக்கும்) வேறுபாட்டினைச் செய்யும் திருவருள். மூர்த்தியை ஏல எழுப்பி - (பாம்பின் வடிவமாகிய குண்டலி) ஆற்றலை முறைப்படி துயிலினின்றெழுப்பி.

இவளுடன் சந்திக்க - அவள் செல்லும்
உச்சித்துளைவழிச் சென்று முழுமுதற் சிவனைக் கும்பிட..

மேலை நிலைத்தினாள் - நிராதாரத் தானத்திற்குரிய மன உன்மனி. வேதகப்பெண் - வேதத்தைக் கைக்கொண்ட சத்தி. மூல நிலத்தில் எழுகின்ற மூர்த்தி - விநாயகர் அல்லது அந்தமில் சத்தி.

## 571. கடைவாச லைக்கட்டிக் காலை எழுப்பி

571. கடைவாச லைக்கட்டிக் காலை எழுப்பி
இடைவாசல் நோக்கி இனிதுள் இருத்தி
மடைவாயிற் கொக்குப்போல் வந்தித் திருப்பார்க்கு
உடையாமல் ஊழி இருக்கலு மாமே.

உயிர்ப்புப் பயிற்சியால் மூலவழியினை அடைத்து உயிர்க்காற்றை எழுப்பி, புருவநடுவாகிய இடைவாசலை இனிது நோக்கித் துனியின்றியிருத்தல் வேண்டும். இருக்கவே நனிமிகு இன்பம் உண்டாம். பின் செவ்விருந்துணையும் கொக்குப்போல் குறிக்கொண்டு நிற்றல் வேண்டும். செவ்வி வாய்த்ததும் திருவருள் வீழச்சியாகும். அதன் பொருட்டு இவ் வுடலகத்துப் பல வூழிகள் நிலையாக இருக்கலுமாகும். கால் - உயிர்க்காற்று (பிராணவாயு). கொக்குப்போல் - தக்ககாலம் பார்க்கும் கொக்கைப்போல. வந்தித்திருப்பார்க்கு - செவ்வி (மலபரிபாகம்) வருந்துணையும் திருவருளையுன்னி இடையறாது திருவைந் தெழுத்தையெண்ணி வணங்கியிருப்பார்க்கு. உடையாமல் - இறவாமல். ஊழி - பலகோடி ஆண்டுகள்.

கடைவாசல் - மூலத்துவாரம். இடைவாசல் - வீணாத் தண்டினுள் சுக்கிலம் புகும் வழி.

## 572. கலந்த உயிருடன் காலம் அறியில்

572. கலந்த உயிருடன் காலம் அறியில்
கலந்த உயிரது காலின் நெருக்கங்
கலந்த உயிரது காலது கட்டிற்
கலந்த உயிருடல் காலமும் நிற்குமே.

திருவருள் ஆருயிர்களுடன் கலந்துநிற்கும் நிலைமையினைக் காலத்துடன் பார்த்துணர்தல் வேண்டும். உணரவே பொறி புலன்களுடன் கலந்துழலும் தன்மை கைவிடும். கைவிடவே கடை வாசலைக்கட்டி இடைவாசல்நோக்கி இனிதிருக்கச் சிவபெருமான் உள்ளத்துள் கலந்து வெளிப்பட்டருள்வன். அருளவே சிவத்துடன் கலந்தவுயிர் அவ் வுடற்கண் நெடுநாள் நிற்கும்.

கலந்த உயிர் - கடைவாசலைக் கட்டி, இடைவாசல் நோக்கி, இனிய உள்ளத்திலிருக்கும் சிவத்துடன் கலந்த உயிர். காலமும் நிற்கும் - ஆயுள் நிலைத்து நிற்கும். (5)

## 573. வாய்திற வாதார் மனத்திலோர் மாடுண்டு

573. வாய்திற வாதார் மனத்திலோர் மாடுண்டு
வாய்திறப் பாரே வளியிட்டுப் பாய்ச்சுவர்
வாய்திற வாதார் மதியிட்டு மூட்டுவர்
கோய்திற வாவிடிற் கோழையு மாமே.

மேன்மை ஞானமாகிய வாய்வாளாமை என்று சொல்லப்படும் மோனநிலையுடையார் வாய்திறவாதவராவர். அத்தகையார் தூயவுள்ளத்துச் சிவபெருமான் என்னும் விலைவரம்பில்லா உலைவில் செம்மணி ஒன்றுண்டு. செம்மணி உவமையாகு பெயராகச் சிவனைக் குறிக்கும் வாய்திறத்தலாகிய உலகிடை உழல்வார் உயிர்ப்பினை வெளியிட்டுக் கழிப்பர். பேச்சற்றார்க்கு மூச்சுஅறா ஆகலின் சிவபெருமானை அறிவின் கண்ணமைத்து இன்பத்தை எழுப்புவர். செம்மணி அடங்கியுள்ள கோயாகிய மணிப்பேழையினைத் திறத்தல்வேண்டும். அப் பயிற்சியின் நின்று திறவாது ஒழியின், பிறவிப்பயன் எய்தாத கோழையராவர். மாடு - செம்மணியொப்பாம் சிவபெருமான். வளியிட்டுப் பாய்ச்சுவர் - மூச்சையடக்காது சிவபெருமானை மறப்பர். மதியிட்டு மூட்டுவர் - திருவடியுணர்வு கொண்டு சிவனை நினைவர். கோய் - அணிகலச் செம்புமாம். இது நடுநாடி எனவும் கொள்ளப்படும். திறவாவிடில் - சிவனை அகத்தே உணராவிடில். கோழை - பிறவிபெறுங் குற்றத்தோன். வாள் - சொல்.

வாய்திறவாதார் - மோன நிலையில் உள்ளவர். மாடு - பெருமை. கோய் - பரணி; (பரணி மும்மீன் அடுப்புப்போல)

மூன்று கண்கள் இரு கண்களுடன் ஞானக்கண்ணும் சேர்ந்தது. ஞானக்கண் திறந்ததற்கு அடையாளம் ஆனந்தக்கண்ணீர்.

## 574. வாழலு மாம்பல காலும் மனத்திடைப்

574. வாழலு மாம்பல காலும் மனத்திடைப்
போழ்கின்ற வாயு புறம்படாப் பாய்ச்சுறில்
ஏழுசா லேகம் இரண்டு பெருவாய்தல்
பாழி பெரியதோர் பள்ளி அறையே.

உள்ளத்தினின்றும் புறப்பட்டு ஆங்காரத்தாற் செலுத்தப்படும் உயிர்ப்பைப் புறம்போகலொட்டாது தடுத்தல்வேண்டும். அங்ஙனம் தடைசெய்யாவழி அவ் வுயிர்ப்பு மனத்தைப் புலன்களிற் செலுத்தித் துன்புறச்செய்யும். உயிர்ப்பினைத் தடுத்து உரங்கொண்ட நெஞ்சகத்தார் அவ் வுடம்பின்கண் பலவூழி வாழ்தலும் செய்வர். ஏழு சாளரங்களும் இரண்டு பெருவாயில்களுமுடைய இவ்வுடம்பு காமம் வெகுளி மயக்கங்களாகிய குப்பைமிகுந்த பாழியறையுமுடையது. அப் பாழியறையினை 'அன்புகொடு மெழுகி அருள்விளக்கேற்றித், துன்பவிருளைத் துரந்து முன்புற, மெய்யெனும் விதானம் விரித்து'ப் பள்ளியறை ஆக்குதல் வேண்டும். ஆக்கவே சிவபெருமான் எழுந்தருளி விளங்கி எங்குமிலாததோர் இன்பநம்பாலதாக ஆக்கியருள்வன். போழ்கின்ற வாயு - மனத்தைப் புலன்கடோறும் அலையச்செய்யும் உயிர்மூச்சு. புறம்படா - புறத்திற் செல்லாதபடி. பாய்ச்சுறில் - நடுநாடியிற் செலுத்தினால். பாழி - தூய நிலைக்களமாகிய உடல். பள்ளியறை - சிவனெழுந்தருளும் சிற்றம்பலம்; (ஆயிர இதழ்த் தாமரை).

மனத்தைப் புலன்களிற் செலுத்துகின்ற வாயு. சாலேகம் ஏழு - ஏழு வாயில்கள் (செவி2, கண்2, மூக்கு2, வாய்1 ஆக7). பெருவாய் இரண்டு - எருவாய் கருவாய் ஆகிய இரண்டு. பள்ளியறை - உயிரும் சிவமும் ஒன்றி நிற்கும் இடமாகிய உள்ளம்.

## 575. நிரம்பிய ஈரைந்தில் ஐந்திவை போனால்

575. நிரம்பிய ஈரைந்தில் ஐந்திவை போனால்
இரங்கி விழித்திருந் தென்செய்வை பேதாய்
வரம்பினைக் கோலி வழிசெய்கு வார்க்குக்
குரங்கினைக் கோட்டை பொதியலு மாமே.

ஆங்காரத்தாற் செலுத்தப்பட்டு உடம்பகத்து நிறைந்திருக்கும் காற்றுக்கள் பத்து. அவை வருமாறு: 1. உயிர்க்காற்று, 2. மலக்காற்று, 3. தொழிற்காற்று, 4. ஒலிக்காற்று, 5. நிரவுகாற்று, 6. தும்மற்காற்று, 7. விழிக்காற்று, 8. கொட்டாவிக்காற்று, 9. இமைக்காற்று, 10. வீங்கற்காற்று. இவற்றுண்மையை வருமாறு நினைவுகூர்க:

"உயிர்மலம் தொழிலொலி நிரவுதும் மல்விழி
செயிர்கொட்ட டாவியிமை வீங்கற்கால் ஈரைந்து."

இவ் வீரைந்தில் உயிர்க்காற்று, மலக்காற்று, தொழிற்காற்று, ஒலிக்காற்று, நிரவுகாற்று என்னும் ஐந்தும் ஐயுயிர்ப்பு என அறையப்படும். உயிர்ப்புப்பயிற்சியின்றி இவை வீணாக வெளியிற் கழிந்தால் உய்யும் உணர்வில்லாத பேதாய் விழத்திருந்து என்செய்குவை. உயிர்ப்புப் பயிற்சியான் இவை வரம்பினுட்பட்டுத் திருவருள்வழியினைச் செய்வார்க்குக் குரங்காகிய மனத்தினை அடக்கிக் கோட்டையாகிய உடம்பகத்துப் பொதியவைத்தலும் உண்டாம். பொதியவைக்கவே திருவருளின்பம் நீங்காதோங்கும். பொதியல் - அடக்கல்.

ஈரைந்து - தசவாயு ஐந்து - பிராணன், அபானன்; வியானன், உதானன், சமானன். குரங்கு - மனம். கோட்டை - தேகம்.

## 576. முன்னம் வந்தனர் எல்லாம் முடிந்தனர்

576. முன்னம் வந்தனர் எல்லாம் முடிந்தனர்
பின்னை வந்தவர்க் கென்ன பிரமாணம்
முன்னுறு கோடி உறுகதி பேசிடில்
என்ன மாயம் இடிகரை நிற்குமே.

தொன்றுதொட்டுப் பிறந்திறந் துழல்வாருள் முன்னம் பிறந்தவர் அனைவரும் இறந்தொழிந்து 'தோற்றமுண்டேல் மரணமுண்டு துயர மனைவாழ்கை' என்பதனை நிலைநாட்டினர். இவ் வறிவுரை யருண்மொழி திருவடிப் பேற்றைக் கனவினும் கருதாது நனவினும் கனவினும் மீண்டும் மீண்டும் பிறந்து மனைவாழ்க்கையிற் சிறந்து வாழ வேண்டுமென்னும் புல்லறிவாளர்க்கே புகன்றருளப்பட்டதாகும். நல்லறிவாளர் மனைவாழ்க்கைக்கண் நின்றே திருவடிப்பேறு பெறுவர். அவர்கள் மீண்டும் பிறக்க மறந்தும் வேண்டார். அவர்களை நோக்கின் மனை வாழ்க்கை புனையும் புணையாகும். பின்பிறந்து வந்தார்கள் இறவார் என்பதற்கு ஏதும் அளவையுண்டா? ஆவிபிரிந்தார் மேவியுறும் நிலை அளவில்லன. அந் நிலைகளையும் பேசிடில் அவையனைத்தும் நிலை பேறின்மையாக முடியும். இடிகரைபோன்ற வுடல் யாண்டும் நிலை பெறாது.

முன்னமே ...முடிந்தனர் - இதற்குமுன் பலபேர் இறந்தொழிந்தார்கள். பின் ...பிரமாணம் - பின்னால் வருபவர் இறக்கமாட்டார் என்பதற்கு ஆதாரம் இல்லை. இடிகரை - அழியும் தேகம்.

## 577. அரித்த வுடலைஐம் பூதத்தில் வைத்துப்

577. அரித்த வுடலைஐம் பூதத்தில் வைத்துப்
பொருத்தஐம் பூதஞ்சத் தாதியிற் போந்து
தெரித்த மனாதிசத் தாதியிற் செல்லத்
தரித்தது தாரணை தற்பரத் தோடே.

ஆற்றுவெள்ளம் கரையினை அரித்துப் பாழாக்குவது போன்று புலப்பொருள்வெள்ளம் உடம்பினை அரித்துப் பாழாக்குகின்றது. மெய்கள் ஒன்றினின்று ஒன்று தோன்றியதுபோல் முறையே ஒடுங்கும். அவ் வொடுங்குமுறை உணர்வினில் உணர உண்மை புலனாம். உண்மையாவது உலகம் நிலையாது; உடையானாகிய சிவன் நிலைப்பன். இவை புலனாகவே உலகப்பற்று அறும். உடலைப் பூதத்தில் ஒடுக்குதல் வேண்டும். பூதத்தை எண்ண முதலிய அகப்புறக்கலன்களில் ஒடுக்குதல் வேண்டும். சொல்லப்பட்ட மனாதிகளை மூலப்பகுதியில் ஒடுக்குதல் வேண்டும். ஆருயிரைப் பேருயிராகிய சிவத்தில் ஒடுக்குதல் வேண்டும். இம்முறையான் நினைவதே பொறைநிலையாகிய தாரணை எனப்படும். சத்தாதி - சுவை முதலிய பூதமுதல்கள். போந்து - ஒடுங்கி. சத்தாதி - குணம் முதலிய மாயைகள். தற்பரம் - தானே மேல்; சிவபெருமான்.

அரித்த உடல் - ஐம்புலன்களால் அவதிப்பட்ட உடல். தாரணை - மண்முதல் தத்துவங்களை ஒன்றினொன்று ஒடுக்கிச் சிவத்தைச் சிந்தித்தலேயாகும். அஃதாவது, பூதங்கள் ஐந்தைப் புலன்களில் ஒடுக்கி, புலன்களை

அந்தக்கரணம் நான்கில் ஒடுக்கி, அந்தக்கரணங்களை மாயையில் ஒடுக்கி, மாயையை ஆன்மாவில் ஆன்மாவைச் சிவத்தில் ஒடுக்கல்.

## 578. வருமாதி யீரெட்டுள் வந்த தியானம்

578. வருமாதி யீரெட்டுள் வந்த தியானம்
பொருவாத புந்தி புலன்போக மேவல்
உருவாய சத்தி பரத்தியான முன்னுங்
குருவார் சிவத்தியானம் யோகத்தின் கூறே.

ஆருயிர் நீங்கா நினைவுடன் ஓங்கும் பண்பு தியானமாகும். இந் நினைவிற்போந்த பூதம் ஐந்து, புலன் ஐந்து, கரணம் நான்கு, மாயை ஒன்று, ஆருயிர் ஒன்று ஆகப் பதினாறு மெய்களையும் நினைவது ஆருயிர்த் தியானம். இறுப்பு மெய்யாகிய புந்தி யியல்பாகவே புலன்களைப் பற்று தலைவிட்டுக் கடந்து நிற்றல் வேண்டும். இந் நிலை அன்னை அத்தனாகிய சத்தி பரத்தி யான நினைவாகும். கருதப்படும் சிவகுருவை நினைதல் சிவத்தியானமாகும். இவ் விரண்டும் முறையே உருவத்தியானமும் அருவத்தியானமுமாகும். இவை அகத்தவமாகிய யோகத்தின் கூறாகும். உருவாய சத்திபரத்தியானம் - அம்மையப்பராம் அருளுருவ அன்புவழி பாடு. உன்னும் - நினைக்கும். குருவார் சிவத்தியானம் - நிறையருட் குருவாம் சிவனடி நினைக்கும் அறிவுவழிபாடு. யோகத்தின் அகத்தவத்தின். கூறு - இருவகை.

ஈரெட்டு - பூதங்கள் 5. புலன்கள் 5. அந்தக்கரணங்கள் 4. மாயை 1. சீவன் 1. ஆக 16. புந்தி புலன் போக - புலன்கள் எல்லாம் புந்தியில் ஒடுங்க.

## 579. கண்ணாக்கு மூக்குச் செவிஞானக் கூட்டத்துட்

579. கண்ணாக்கு மூக்குச் செவிஞானக் கூட்டத்துட்
பண்ணாக்கி நின்ற பழம்பொருள் ஒன்றுண்டு
அண்ணாக்கின் உள்ளே அகண்ட ஒளிகாட்டிப்
புண்ணாக்கி நம்மைப் பிழைப்பித்த வாறே.

நோக்கு, நாக்கு, மூக்கு, காது (உடம்பு) என்னும் பூதங்கள் ஐந்தன் கூட்டத்தால் பண்ணாகிய ஓசையை எழுப்பிச் சொல்லாக்கிப் பொருளுணர்த்தும் பழம்பொருள் ஒன்றுண்டு. அப்பொருள் திருவருள். அதனை நினைந்தால் அண்ணாக்கின் உள்ளாக எல்லையின்றி எங்கும் பரந்த பொங்குபேரொளியினைக் காட்டும். அப்பயிற்சியான் நம்மை வருத்திப் பிறப்பு இறப்புக்களினின்றும் நம்மை உய்வித்து அருளியதும் அப் பழம்பொருளே. ஞானக்கூட்டம் அறிகருவி (ஞானேந்திரியம்) கூடுமிடம். புண்ணாக்கி - வருத்தி.

பண்ணாக்கி - நாதத்தை ஒலிக்கச் செய்து.

## 580. ஒண்ணா நயனத்தில் உற்ற ஒளிதன்னைக்

580. ஒண்ணா நயனத்தில் உற்ற ஒளிதன்னைக்
கண்ணாரப் பார்த்துக் கலந்தங் கிருந்திடில்
விண்ணாறு வந்து வெளிகண் டிடவோடிப்
பண்ணாமல் நின்றது பார்க்கலு மாமே.

புருவநடுவினை உற்றுப்பார்த்தலால் மெய்யுணர்வு ஒளி வெளிப்படும். அகக்கண்ணால் பார்த்துக் கலந்திடுதல் வேண்டும். அங்ஙனம் வெளிப்படவே திருவருள் வெள்ளப்பெருக்குப் பள்ளமடையாப் பெருகும். அவ்வருள்வெளியினைக் கண்டு ஆர்வத்துடன் ஓடிச்சென்றால் ஆக்கப்பாடாகிய காரியநிலை எய்தாது என்றும் காரணமாய் முழுமுதலாய் நிற்கும் சிவபெருமானைக் காணுதலும் பேணுதலும் பேரின்பம் பூணுதலும் உண்டாம். பண்ணாமல் நின்றது - தானேயாம் தூய சிவம். பார்க்கலும் - உணர்த்த வுணர்ந்து வழிபடலும்.

ஒண்ணாம் நயனம் - ஞானக்கண். விண்ணாறு - ஆனந்தக் கண்ணீர்.

## 581. ஒருபொழு துன்னார் உடலோ டுயிரை

581. ஒருபொழு துன்னார் உடலோ டுயிரை
ஒருபொழு துன்னார் உயிருட் சிவனை
ஒருபொழு துன்னார் சிவனுறை சிந்தையை
ஒருபொழு துன்னார் சந்திரப் பூவே.

திருவருள் நாட்டத்தில் ஒருபொழுதேனும் உடலுயிரப் பண்பை நினையார். அதுபோல் உயிருக்கு உயிராய் உயிருள் விளங்கும் சிவனை நினையார். ஒரு பொழுதேனும் அச்சிவனுறை தவமார் உள்ளத்தை நினையார் அதுபோல் உச்சித்துளைமேல் தோன்றும் திருவருள் வெளிக்கண் காணப்படும். திங்களனைய தூய வெண்ணிறத் தாமரைப்பூ தோன்றும்; அதனையும் நினையார்.

சந்திரப்பூ - ஆஞ்ஞையிலுள்ள சந்திரன் போன்ற வெண்ணிற ஒளி.

## 582. மனத்து விளக்கினை மான்பட ஏற்றிச்

582. மனத்து விளக்கினை மான்பட ஏற்றிச்
சினத்து விளக்கினைச் செல்ல நெருக்கி
அனைத்து விளக்குந் திரியொக்கத் தூண்ட
மனத்து விளக்கது மாயா விளக்கே.

திருவருள் நினைவால் மனத்து விளக்கினை மயக்கமாகிய மான்பட ஏற்றுதல் வேண்டும். அதனால் வெகுளியைக் கண்டு விலகுமாறு செய்தல்வேண்டும். ஏனைக் கருவி கரணங்களை வழிப்படுத்தி நன்றாய் விளங்குமாறு தூண்டுதல் வேண்டும். தூண்டவே காமம் அகலும். மான் - மூலப்பகுதி; அறியாமை. இவற்றால் 'காமம் வெகுளி மயக்கங்கள்' நீங்கும். அப்பொழுது மனத்துவிளக்கு மாயாவிளக்காகும். மான் - மூலப்பகுதி (ஈண்டு அவித்தை). அனைத்துவிளக்கும் - அறிதற்காம் புலன் கலன்கள். (புலன் கருவி. கலன் - கரணம்.) மாயாவிளக்கு - அணையா விளக்கு.

மான் - அவிச்சை. திரி - அறிவு.

# 583. எண்ணா யிரத்தாண்டு யோகம் இருக்கினும்

583. எண்ணா யிரத்தாண்டு யோகம் இருக்கினும்
கண்ணார் அமுதனைக் கண்டறி வாரில்லை
உள்நாடி உள்ளே ஒளிபெற நோக்கிற்
கண்ணாடி போலக் கலந்துநின் றானே.

சிவனினைவின்றி அளவில் காலமாகிய எண்ணாயிரத்தாண்டு யோகம் இருந்தாலும் கண்ணுள் மணியும், அம் மணியுணர் அமிழ்தும் அனைய சிவபெருமானைக் கண்டறியவொண்ணாது. அகத்தே நாடி அருள் ஒளிபெற்று நோக்கினால் சிவபெருமானாகிய அழல்வண்ணன் நிழல்தரு பளிங்கொத்துக் கலந்து காட்டியும் கண்டும் இருந்தனன் என்பது புலனாகும். கண்ணாடியைப் பார்க்குங்கால் பார்க்கும் கண் தன்னையும் அக் கண்ணாடியையும் காணும். அதுபோல் ஆருயிர் பேருயிராகிய சிவபெருமானைக் காணும் வாயிலாகவே தன்னையும் காணும். 'கண்ணாடியைக் காணும் கண்ணே தனைக்காணும் பெண்ணார் தாள் காணவுயிர் பேசு' என்பதை நினைவுகூர்க. எண்ணாயிரத்தாண்டு யோகவுறுப்பு எட்டினையும் குறிக்கும் குறிப்புமாகும். கண்ணாடிபோல - கண்ணாடியில் தோன்றும் பாவைபோல (ஆடிப்பாவை - நிழலுரு) நெஞ்சத்தில் சிவனை நினைந்தால் சிவன் விளங்குவன். அவனை மறந்தால் ஆவியின் முனைப்பு விளங்கும்.

## 584. நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்

584. நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமும் இல்லை மனைக்கும் அழிவில்லை
ஓட்டமும் இல்லை உணர்வில்லை தானில்லை
தேட்டமும் இல்லை சிவனவ னாமே.

நாட்டம் இரண்டினையும் புருவநடுவிற்கு நேராம் மூக்கு நுனியில் வைத்தல்வேண்டும். அங்ஙனம் வைத்து உயிர்ப்படக்கி அசைவறநிற்கத் திருவருள்ஒளி அகத்தே காணப்படும். ஒளி காணப்படவே உடம்புக்கு எவ்வகை வாட்டமுமில்லை. மனையாகிய உடம்பிற்கும் அழிவு ஏற்படாது. உயிர்ப்புப் புறஞ்செல்வதாகிய ஓட்டமும் இல்லை. புறப் புலன்கள்மாட்டுச் செல்லும் உணர்வுமில்லை. தன்முனைப்பில்லை. எவ்வகை வேட்கையுமில்லை. அவனே சிவனாவன். நடுமூக்கு - புருவநடுவாம் மூக்கின் நுனி. ஓட்டம் - உயிர்மூச்சின் இயக்கம். உணர்வு - உலக நாட்டம். மனை - உடல்.

நடுமூக்கு - புருவமத்தி. தேட்டம் - ஆராய்ச்சி.

## 585. நயனம் இரண்டும் நாசிமேல் வைத்திட்டு

585. நயனம் இரண்டும் நாசிமேல் வைத்திட்டு
உயர்வெழா வாயுவை உள்ளே அடக்கித்
துயரற நாடியே தூங்கவல் லார்க்குப்
பயனிது காயம் பயமில்லை தானே.

நயனமாகிய நாட்டமிரண்டனையும் நடுமூக்கின்மேல் வைத்துச் சிவனை நாடுக. உயர்ந்தெழுந்து புறத்துப்போகும் உயிர்ப்பினை உள்ளே ஒடுக்குக. பிறப்புத்துன்பம் நீங்குமாறு சிவனை நீங்கா நினைவுடன் தூங்கவல்லார்க்கு அத் துன்பம் நீங்கும். அதுவே பெரும்பயன். உடம்பினுக்கும் அழிவில்லை. துயரறநாடி துயரறநின்ற நடுநாடி. தூங்கவல்லார்க்கு நிலைத்து நிற்கவல்லார்க்கு. பயமில்லை - கூற்றுவனுக்கு அஞ்சவேண்டுவதில்லை.

## 586. மணிகடல் யானை வார்குழல் மேகம்

586. மணிகடல் யானை வார்குழல் மேகம்
அணிவண்டு தும்பி வளைபே ரிகையாழ்
தணிந்தெழு நாதங்கள் தாமிவை பத்தும்
பணிந்தவர்க் கல்லது பார்க்கலொண் ணாதே.

அகத்தவத்தால் உள்ளெழும் தெள்ளிய பண்ணார் இன்னோசை பத்தென்ப. அவை: மணி, கடல், யானை, புல்லாங்குழல், மேகம், வண்டு, தும்பி, சங்கு, பேரிகை, யாழ் என்பன. இப் பத்தினையும் ஒத்த ஓசை அகத்தே பயிலப்பெறும். அகத்தவத்தால் சிவனைப் பணிந்தவர்க்கே இவ்வோசை உண்டாகும். இதுவே திருச்சிலம்போசை என்ப. ஏனையார்க்கு இவை காண்டல் இல்லை என்க. வளை - சங்கு. தணிந்து - ஒத்து. தும்பி - ஆண்வண்டு. நாதம் - ஓசை. பணிந்தவர் - இறைபணி நிற்பவர். அல்லது - அல்லாமல். பார்க்கவொண்ணாது - திருவடியுணர்வு கிட்டவொண்ணாது.

## 587. கடலொடு மேகம் களிறொடும் ஓசை

587. கடலொடு மேகம் களிறொடும் ஓசை
அடவெழும் வீணை அண்டரண் டத்துச்
சுடர்மன்னு வேணு சுரிசங்கின் ஓசை
திடமறி யோகிக்கல் லாற்றெரி யாவே.

அண்டரண்டமாகிய அருட்பெரும்வெளியில் என்றும் பொன்றாது நின்று நிலவும் அறிவுப்பேரொளி சிவபெருமான். அவன் திருவருளால் அகத்தவம் கைவந்த யோகிகளுக்கே. கடல், யானை, புல்லாங்குழல், சங்கு இவையொத்த ஓசை உணர்வினில் உண்டாகும். அண்டரண்டத்து - பெருவெளியில். சுடர்மன்னு (மன்னுசுடர்) என்றும் நிலைபெற்றுள்ள சிவம். சுரிசங்கு - சுழிந்துள்ள சங்கு.

## 588. ஈசன் இயல்பும் இமையவர் ஈட்டமும்

588. ஈசன் இயல்பும் இமையவர் ஈட்டமும்
பாசம் இறங்கப் பரிந்துயி ராய்நிற்கும்
ஓசை யதன்மணம் போல விடுவதோர்
ஓசையாம் ஈசன் உணரவல் லார்க்கே.

உலகவிரிவும் இயக்கமும் ஓசையால் ஆவன. உலகம் ஆணவமலத் தேய்வின்பொருட்டு ஆண்டவனால் முதற்காரணமாகிய மாயையினின்று படைக்கப்பட்டது. இவ்வுண்மை உணரவல்லார் ஆண்டவனை உணரவல்லாராவர். ஈசன் - சிவபெருமான். இமையவரீட்டமும் உயிரினங்களே.

பாசமிறங்க - பாசம் கெட.

## 589. நாத முடிவிலே நல்லாள் இருப்பது

589. நாத முடிவிலே நல்லாள் இருப்பது
நாத முடிவில்நல் யோகம் இருப்பது
நாத முடிவிலே நாட்டம் இருப்பது
நாத முடிவில்நஞ் சுண்ட கண்டனே.

ஓசை முடிந்த இடமே திருவருள் வெளிப்படும் இடம். அதுவே அகத்தவம். அத் தவப்பேறே திருவடியுணர்வு. ஆண்டுத் திருநீலகண்டச் சிவபெருமான் வெளிப்படுவன்.

## 590. உதிக்கின்ற ஆறினும் உள்ளங்கி ஐந்துந்

590. உதிக்கின்ற ஆறினும் உள்ளங்கி ஐந்துந்
துதிக்கின்ற தேசுடைத் தூங்கிருள் நீங்கி
அதிக்கின்ற ஐவருள் நாதம் ஒடுங்கக்
கதிக்கொன்றை ஈசன் கழல்சேர லாமே.

அகத்தே மூலமுதற்றோன்றும் ஆறுநிலைகளிலும் அது போல் அகத்தே காணப்படும் திங்கள் முதலிய ஐந்து விளக்கங்களிலும், புகழப்படுகின்ற பேரொளி உண்டாகும். அவற்றால் ஆணவ வல்லிருள் அகலும். புலன் எனப்படும் பூத முதலாகிய தன்மாத்திரை ஐந்தனுள் சிறந்தது ஓசை. அஃது ஒடுங்குதல் வேண்டும். ஒடுங்கவே திருவடிப்பேறாகிய கதியினையருளும் கொன்றைமாலையணிந்த சிவபெருமான் திருவடியினைச் சேர்தல் உண்டாகும். புறவோசை யொடுங்கினவிடத்தே அகவோசை தோன்றும். ஆறினும்: 1. மூலம், 2. கொப்பூழ், 3. மேல்வயிறு, 4. நெஞ்சம், 5. மிடறு, 6. புருவநடு என்னும் ஆறு நிலைகளினும். உள்ளங்கி - அகஒளி. ஐந்து - திங்கள், ஞாயிறு, தீ, விளக்கு, பரவெளி என்னும் ஐந்து நிலைக்களங்களிலும் விளங்கும் ஒளி. அதிக்கின்ற ஐவருள் நாதம்: ஐவருள் அதிக்கின்றநாதம் - பூத முதலாகிய தன்மாத்திரையுள் மிக்கதாகிய ஓசை. கதி - திருவடிப்பேறு (அருளும்).

## 591. பள்ளி அறையிற் பகலே இருளில்லை

591. பள்ளி அறையிற் பகலே இருளில்லை
கொள்ளி அறையிற் கொளுந்தாமற் காக்கலாம்
ஒள்ளி தறியிலோ ரோசனை நீளிது
வெள்ளி அறையில் விடிவில்லை தானே.

பள்ளியறையாகிய ஆயிரவிதழ்த் தாமரைக்கண் எப்பொழுதும் பேரொளிப் பெருவிளக்கு ஒளிர்ந்துகொண்டிருக்கின்றது. அதனால் இருளில்லை. அத்திருவருள் விளக்கினைக் கண்டவர் யோகியரும் ஞானியரும் ஆவர். ஞானத்தில் ஞானங் கைவந்தவரே நாயன்மார். இத்தகையோர் உடல்கள் ஏனையார் உடல்கள்போன்று சுடுகாட்டில் எரிக்கப்படுதலோ, இடுகாட்டில் புதைக்கப்படுதலோ, கல்லறையில் அடக்கப்படுதலோ இலவென்க. அக் குறிப்புத் திருத்தொண்டத் தொகையில் ஓதப்பெறும். நாயன்மார் யார்க்கும் யாண்டும் கற்குகை (சமாதி) இன்மையே தெள்ளிதின் விளக்கும். ஒண்மையுடைத்தாகிய இதனையறியின் வேண்டுமேல் அளவின்றி அகவையும் நீளலாம். பேரொளி வண்ணமாம் பெருமானடியில் பேரின்பமுடிவு என்றும் இன்று. பகலே எப்பொழுதும் திருவருள் விளக்கம். இருளில்லை - அகவிருள் புறவிருள் இரண்டும் இல்லை. கொள்ளி அறை - சுடுகாடு. கொளுந்தாமல் - உடம்பு எரிபடாமல்; பூதங்கள் ஐந்தும் தத்தம் இனமாகிய உலகப் பூதங்களுடன் கலந்துவிடும். வெள்ளி - பேரொளிவண்ணம்.

பள்ளி அறை - உள்ளம். கொள்ளி அறை - சுடுகாடு.

## 592.கொண்ட விரதங் குறையாமற் றானொன்றித்

592.கொண்ட விரதங் குறையாமற் றானொன்றித்
தண்டுடன் ஓடித் தலைப்பட்ட யோகிக்கு
மண்டல மூன்றினும் ஒக்க வளர்ந்தபின்
பிண்டமும் ஊழி பிரியா திருக்குமே.

உயிர்ப்புப்பயிற்சியாம் அகத்தவ நோன்பு குறைவுறாது கைக்கொண்டு அருளுடன் ஒன்றியபின், உயிர்ப்பு நடுநாடிவழியாக மேலேறிச் செல்லும். அது செல்லும் நிலையினரே அகத்தவ யோகியராவர். அவர்கட்கு ஞாயிறு, திங்கள், தீ ஆகிய மூன்றும் ஒப்ப வளரும் வளரவே உயிரினுக்கு அழிவில்லை. உடம்பும் ஊழி ஊழியாக நீங்காது. ஒருபுடை யொப்பாக ஒளிமண்டலம் மூன்றும் முறையே வளியும், ஐயும், பித்தமும் ஒப்ப நிற்பிக்கும் குறிப்பாகும். வளி - வாதம். ஐ - சிலேத்துமம். மண்டலம் மூன்று - ஞாயிறு, திங்கள், தீ என்னும் ஒளி நிலைக்களங்கள் மூன்று. பிண்டமும் - உடலும். ஊழி - உலகப் பேரொடுக்க எல்லை.

தண்டுடன் - வீணாத்தண்டுடன். மண்டலம். மூன்று - சந்திர, சூரிய, அக்கினி.

## 593. அவ்வவர் மண்டல மாம்பரி சொன்றுண்டு

593. அவ்வவர் மண்டல மாம்பரி சொன்றுண்டு
அவ்வவர் மண்டலத் தவ்வவர் தேவராம்
அவ்வவர் மண்டலம் அவ்வவர்க் கேவரில்
அவ்வவர் மண்டல மாயமற் றோர்க்கே.

புறத்தும் அகத்தும் காணப்படும் அவ் வொளிமண்டலங்கள் மூன்றினுக்கும் துச்சில்போன்று அவ்வவரே கட்டிக் காக்கும் உரிய தேவராவர். அவ் வொளிமண்டலங்கள் அத் தேவர்கட்கு உரிமையும் ஏனையார்க்குத் துணைக்கருவிக் கூட்டமுமாகும். அவ் வவர் மண்டலம் - ஞாயிறு திங்கள் தீ இவற்றின் நிலைக்களங்கள். ஆயம் - ஏனைய உலக வுயிர்கட்குச் சுற்றுத் துணைக்கருவிக் கூட்டம்.

# 594. இளைக்கின்ற நெஞ்சத் திருட்டறை உள்ளே

594. இளைக்கின்ற நெஞ்சத் திருட்டறை உள்ளே
முளைக்கின்ற மண்டலம் மூன்றினும் ஒன்றித்
துளைப்பெரும் பாசத் துருவிடு மாகில்
இளைப்பின்றி மார்கழி ஏற்றம தாமே.

ஆணவவல்லிருள் முனைப்பதற்கிடமாகிய உடம்பகத்து நெஞ்சம் இளைக்கின்றது. தோன்றும் ஒளிமண்டலம் மூன்றினும் ஒற்றுமைப்பட்டு அன்பினால் துருவி ஆராய்வார்களானால் இளைப்பகலும். திருவருள் பெருவெளிக்கண் ஆராய்தல்வேண்டும். திங்களுள் மார்கழி ஏற்றமதாகும். எதனாலென்றால் மார்கழித் திங்கள் திருவாதிரைத் திருநாளாகும். திருவாதிரைச் செம்மீன் சிவபெருமானுக்குச் சிறப்புரிமையுடையது. உலகத் தோற்றத் தொழில்கள் முற்றுற்று விடிந்ததும் உலகந் தோற்றலுறும் அதனாலென்க. அதுபோல அகத்தவம் உடையராயினார்க்கு அகத்தே புதிய நிகழ்ச்சிகள் உண்டாகும். மார்கழி - மா + கழி (ர்: எழுத்துப்பேறு.) மா - கருமை. கழிதல் - நீங்குதல். இதுவே தோற்றப்பெருநாளாகும். இருட்டறை - ஆணவவல்லிருள் வண்ணமாம்
உடல். துளை - நடுநாடி பாசத் துருவிடுமாகில் (பாசத்துத் துருவிடுமாகில்) அன்பினால் தேடுவானாயின், மார்கழி ஏற்றமதாம் - மார்கழி என்று கூறப்படும் உலகத் தோற்றத் திருவாதிரைத் திருநாள் முதன்மையதாகும்.

## 595. முக்குண மூடற வாயுவை மூலத்தே

595. முக்குண மூடற வாயுவை மூலத்தே
சிக்கென மூடித் திரித்துப் பிடித்திட்டுத்
தக்க வலமிடம் நாழிகை சாதிக்க
வைக்கும் உயிர்நிலை வானவர் கோனே.

முக்குணமும் ஆருயிரை மூடியிருக்கும் மூடுதலினின்றும் அகல, உயிர்ப்பை மூலத்திடத்து முறைப்படச் சிக்கெனப்பிடித்தல் வேண்டும். பின்பு வலப்பால் இடப்பால் நாடிவழியாக மாறிமாறிப் பயிறல்வேண்டும். குறித்தநாழிகை வரை அகத்தே தடுத்தல்வேண்டும். அங்ஙனம் பயில உயிர்நிலையாகிய உடம்பைச் சிவபெருமான் நிலைப்பித்தருள்வன். முக்குண மூடற - அமைதி ஆட்சி அழுந்தல் என்னும் தொழிற்பண்பாம். மூன்றின் மறைப்பும் அகல. சிக்கென - உறுதியாக. திரித்து - மாறிமாறிச் செலுத்தி. நாழிகை - குறித்த நாழிகைவரை. சாதிக்க - அகத்தவம் பயில. உயிர்நிலை - உடல். வானவர்கோன் - சிவபெருமான். வைக்கும் - நிலைப்பிக்கும்.

## 596. நடலித்த நாபிக்கு நால்விரன் மேலே

596. நடலித்த நாபிக்கு நால்விரன் மேலே
மடலித்த வாணிக் கிருவிரல் உள்ளே
கடலித் திருந்து கருதவல் லார்கள்
சடலத் தலைவனைத் தாமறிந் தாரே.

சீர்பெற்ற கொப்பூழுக்கு நான்குவிரல் மேலும், இதழ் விரிந்த வாணியாகிய ஓசைபிறக்கும் இடத்திற்கு இருவிரல் கீழுமாக அலையற்ற கடல்போல் அசைவற்றிருக்கப்பெற்றுச் சிவபெருமானைக் கருதுதல் வேண்டும். அப்பொழுது கருதுவார் சிவனையும் தம்மையும் அறிந்தாராவர். கடலித்து - கடலின்றன்மையாய். நடலித்த: (நடலமென்பதன் அடியாகப் பிறந்த பெயரெச்சம்) சீர்பெற்ற. மடலித்த - இதழ்பொருந்திய. வாணி - ஓசை தோன்றுமிடம்.

மடலித்த வாணி - அனாகதம். கடலித்து - அலையற்ற கடல் போல் இருந்து. சடலத் தலைவன் - சீவன்.

## 597. அறிவா யசத்தென்னு மாறா றகன்று

597. அறிவா யசத்தென்னு மாறா றகன்று
செறிவான மாயை சிதைத் தருளாலே
பிறியாத பேரரு ளாயிடும் பெற்றி
நெறியான அன்பர் நிலையறிந் தாரே.

திருவருளால் மெய்யுணர்வு கைவந்தார் முப்பத்தாறு மெய்களும் நிலையுள்ளனவல்ல என்னும் மெய்ம்மையை யுணர்வர். உணரவே மாயைப் பற்றினின்றும் விலகுவர். தம்மைவிட்டு நீங்காத
பேரருளில் சாரும் தன்மையை அறிவர். இவர்களே முறையானுணர்ந்த முழுநிலை யன்பராகுவர். அறிவாய் - திருவருள் துணையால் திருவடியுணர்வாய். அசத்தென்னும் - நிலையில்லாததென்று சொல்லப்படும். ஆறாறு - அருஞ்சைவர்கள் கொள்ளும் முப்பத்தாறு தத்துவங்களும். அகன்று - அருளால் வேறென உணர்ந்து பற்றுநீங்கி. செறிவான - பிணித்திருக்கின்ற. அருள் - சிவபெருமானின் திருவருளாற்றல். பெற்றி - தன்மை.

அசத்தென்னும் ஆறாது - 36 தத்துவங்கள்.

## 598. சமாதி யமாதியிற் றான்செல்லக் கூடும்

598. சமாதி யமாதியிற் றான்செல்லக் கூடும்
சமாதி யமாதியிற் றானெட்டுச் சித்தி
சமாதி யமாதியில் தங்கினோர்க் கன்றே
சமாதி யமாதி தலைப்படுந் தானே.

தீதகற்றல் நன்றாற்றல் ஆகிய இயமநியம முறைகளால் செயலறலாகிய சமாதியுண்டாகும். அதன் இயல்பினைக் கூறக் கேட்கில், அவற்றான் எட்டுச்சித்தியும் உண்டாகும். அந் நிலையின் நின்றவர்க்கே சமாதி முதலியன கைகூடும் என்க. சமாதி - நொசிப்பு.

சமாது இயமம் ஆதியில்தான் - இயமம் ஆதிசாதனையால் உண்டாகும் சமாதி.

## 599. விந்துவும் நாதமும் மேருவில் ஓங்கிடிற்

599. விந்துவும் நாதமும் மேருவில் ஓங்கிடிற்
சந்தியி லான சமாதியிற் கூடிடும்
அந்த மிலாத அறிவின் அரும்பொருள்
சுந்தரச் சோதியுந் தோன்றிடுந் தானே.

நடுநாடியாகிய மேருவின்கண் விந்துநாதங்கள் நிலைபெற்று விட்டால் திருவருள் வெளிப்படுதலாகிய சமாதி கைகூடிடும். முடிவு பேறில்லாத அறிவினையுடைய அரும்பொருளாகிய சிவபெருமானின் எல்லையில்லாத வனப்புப்பேரொளி வயங்கித் திகழும். விந்து - உடலூர அமிழ்து. நாதம் - உயிர்ப்போசை. ஓங்கிடல் - நிலைத்திடல். சந்தியிலான - திருவருள் வெளிப்படுதலான. சமாதி - திருவடியுணர்வில் ஒடுக்கம்; நொசிப்பு.

மேரு - புருவமத்தி.

## 600. மன்மனம் எங்குண்டு வாயுவும் அங்குண்டு

600. மன்மனம் எங்குண்டு வாயுவும் அங்குண்டு
மன்மனம் எங்கில்லை வாயுவும் அங்கில்லை
மன்மனத் துள்ளே மகிழ்ந் திருப்பார்க்கு
மன்மனத் துள்ளே மனோலய மாமே.

மனம் அருவுடற்கண் நின்று புறத்துப் பொறியிற் பொருந்தலும் அகத்திற் கரணத்திற் பொருந்தலும் புரியும். அதனால் அது பொருந்துமனம் எனப்பட்டது. அத்தகைய மனம் எங்குண்டு அங்கெல்லாம் உயிர்ப்புப் புடைபெயர்ச்சியும் உண்டு. மனத்தின் அசைவு இல்லாத இடத்து உயிர்ப்பின் அசைவும் இல்லை. சிவபெருமான் திருவடியைப்பற்றுமனம் அசைவின்றி நிலைபெற்ற மனமாகும். அந் நினைவுடன் மகிழ்ந்திருப்பார்க்குச் சிவபெருமானும் அம் மனம் ஒடுங்கும் இடமாகத் தன் திருவடியை அருள்வன். அருவுடல் - நுண்ணுடல். வாயும் - உயிர்மூச்சும். மன்மனத்துள்ளே - சிவனை மறவாமனம். மனோலயம் - மனமொடுங்குமிடம் (திருவடி).

மன்மனம் - மன்னும் மனம்; தூலசூக்கும சரீரங்கள் இரண்டினும் பொருந்தும் மனம்.

## 601. விண்டலர் கூபமும் விஞ்சத் தடவியுங்

601. விண்டலர் கூபமும் விஞ்சத் தடவியுங்
கண்டுணர் வாகக் கருதி யிருப்பர்கள்
சென்டு வெளியிற் செழுங்கிரி யத்திடை
கொண்டு குதிரை குசைசெறுத் தாரே.

மலையும் விரிந்தஅலரும் சேர்ந்துள்ள பெரிய கூபம் போலும் திருவருள் விளக்கத்தும், எல்லையில்லாத. பெருவெளியும் கண்டு அவையே மெய்யுணர்வாகக் கருதியிருப்பார்க்கு உயிர்ப்புப் புறப்பட்டுச்சென்று புருவநடுவின் உச்சியில் நிற்கும். ஆங்குக் கடிவாளத்தை இழுத்துக் கட்டுவதுபோல் அங்கேயே நிற்கச்செய்வன். விண்டு - மலை. அலர் - விரிவான. கூபம் - கிணறு; வற்றாத் திருவருள்ஊற்று. விஞ்சு - மிகுதியாகிய. அத்து - அழகு. வெளி பேரருள்வெளி. செழுங்கிரி - புருவநடுமுனை; ஆக்கினையினுச்சி. குசைச்செறுத்தார் - கடிவாளத்தை இழுத்துக் கட்டினார்.

## 602. மூல நாடி முகட்டல குச்சியுள்

602. மூல நாடி முகட்டல குச்சியுள்
நாலு வாசல் நடுவுள் இருப்பிர்காள்
மேலை வாசல் வெளியுறக் கண்டபின்
காலன் வார்த்தை கனாவிலும் இல்லையே.

மூலாதாரத்திலுள்ள நடுநாடியில் முக்கட்டு உண்டாம். விரிவான புருவநடுவின் உச்சியில் கண் நாக்கு மூக்குச் செவி என்னும் நான்கு வாயில்களும் ஒன்றுகூடும். அவற்றின் நடுவுள் திருவருள் நினைவுடன் இருப்பீர்களாயின் உச்சித்துளை வாயிலை வெளியுறக் காண்பீர்கள். அம் மேலைவாசலை வெளியுறக் கண்டவன் கனவிலும் காலன் வருவான் என்னும் நினைவு உண்டாகாது. சிவவொளிமுன் ஆணவவல்லிருள் மூளாமை இதற்கொப்பாகும். முக்கட்டு - படைப்போன் காப்போன் துடைப்போன் ஆகிய மூவரின் சுடர்உருவி. இவற்றை முறையே பிரமக்கிராந்தி, விட்டுணுக்கிராந்தி, உருத்திரக்கிராந்தி என்ப. இப்படிப் பாடங்கொள்வாரும் உண்டு. மேலைவாசல் - உச்சித்துளை வழி எனலுமாம்.

முகட்டலகுச்சி - புருவமத்தி. நாலுவாசல் - கண், மூக்கு, செவி, வாய் நான்கு வாசல்களும் கூடும் இடம். மேலைவாசல் - நாற்சந்திக்கு மேலுள்ள வாசல்.

## 603. மண்டலம் ஐந்து வரைகளும் ஈராறு

603. மண்டலம் ஐந்து வரைகளும் ஈராறு
கொண்டிட நிற்குங் குடிகளும் ஆறெண்மர்
கண்டிட நிற்குங் கருத்து நடுவாக
உண்டு நிலாவிடும் ஓடும் பதத்தையே.

மண்டலம் ஐந்து, வரைகள் பன்னிரண்டு இவற்றை இடமாகக்கொண்டு நிற்கும் தெய்வங்கள் குடிகள் எனப்படும். அவர்களும் அறுவரும் எண்மரும் ஆவர். இவற்றைக் கண்டிட நிற்கும் கருத்துள்ளாகத் திருவடியின்பம் உண்டு நிலாவும். பதநிலைகளை விலக்கிவிடும். மண்டலம் ஐந்து - நிலம், நீர், தீ, காற்று, வானம் என மண்டலங்கள் ஐந்து. இவற்றிற்கு முறையே மூலம், கொப்பூழ், மேல்வயிறு, நெஞ்சம், மிடறு என்பன நிலைக்களங்கள். வரைகள் மூலமுதற் கூறப்படும், பன்னிரண்டு இடங்கள். ஆறு - நிலைக்களத் தெய்வங்கள் அறுவர்: பிள்ளையார், அயன், அரி, அரன், ஆண்டவன், அன்னையத்தன். அன்னையத்தன் - சதாசிவன். எண்மர்: மண்டலத்தெய்வங்கள். ஐவர்: ஞாயிறு, திங்கள், ஆற்றல்கள், மண்டலத்தெய்வங்கள் அயன், அரி, அரன், ஆண்டவன், அன்னையத்தன்.

வளைகள் - இடங்கள். குடிகள் - அதிதேவதைகள்.

## 604. பூட்டொத்து மெய்யிற் பொறிப்பட்ட வாயுவைத்

604. பூட்டொத்து மெய்யிற் பொறிப்பட்ட வாயுவைத்
தேட்டற்ற வந்நிலஞ் சேரும் படிவைத்து
நாட்டத்தை மீட்டு நயனத் திருப்பார்க்குத்
தோட்டத்து மாம்பழந் தூங்கலு மாமே.

உடம்பகத்துப் பூட்டப்பெற்றதொத்து அடக்கப்பட்ட உயிர்ப்பை மேற்செல்லவொட்டாது கொப்பூழின்கண் அடக்கிவைத்தல் வேண்டும். எண்ணத்தை அதன்கண்ணே செலுத்திக்கொண்டிருப்பார்க்குத் தோட்டத்து மாம்பழம்போல் (2922) இனிக்கும் திருவருளுடன் ஒற்றுமைப்பட்டிருத்தலுமாகும். தேட்டற்ற - மேற்செல்லுதலற்ற. அந்நிலம் - அந்தப் பேருறக்க இடமாகிய கொப்பூழ் (துரியத்தானம்). (மாம்பழம்: இனிமைபற்றி வந்த உவம ஆகுபெயர்.) நாட்டத்தை - நாடுதலை. மீட்டு - புறஞ்செல்லவொட்டாது அகமுகப்படுத்தி. நயனத்திருப்பார்க்கு - இடையறாது எண்ணியிருப்பார்க்கு. தோட்டத்து - திருவருள் வெளியில். தூங்கல் - உண்டுறைதல்.

பொறிப்பட்ட - அடக்கப்பட்ட. மாம்பழம் - சிவக்கனி

## 605. உருவறி யும்பரி சொன்றுண்டு வானோர்

605. உருவறி யும்பரி சொன்றுண்டு வானோர்
கருவரை பற்றிக் கடைந்தமு துண்டார்
அருவரை யேறி அமுதுண்ண மாட்டார்
திருவரை யாமனந் தீர்ந்தற்ற வாறே.

ஆருயிர்களுக்கு திருவருள் நாட்டத்தால் உயிர்ப்புப் பயிற்சியால் தம் உண்மைநிலையினை அறியும் தன்மையொன்றுண்டாம். வானோர் இவ் வுண்மையுராது அமிழ்துண்டால் நீண்டநாள் வாழலாமென்று பெரிய மலைபற்றிக் கடல்கடைந்தனர்; அமுதுண்டனர்; பயனின்றி மாண்டனர். உயிர்ப்புப் பயிற்சியால் நடுநாடிவழியாக அருவரையாம் உச்சித்துளை ஏறித் திருவடியமிழ்துண்ணமாட்டாதார் அத்தேவர்கள். அத் திருவடியமிழ்துண்பார்க்கு எல்லையில்லா அருட்பெருமையுடைய உயிர்ப்புப் பயிற்சியால் மனம் அடங்கிற்றென்க. உரு - ஆவியின் உண்மைநிலை (தற்சொரூபம்). கருவரை - நடுநாடி எனலுமாம்.

கருவரை - கருங்கல்லால் ஆகிய வரை. அருவரை - வீணாத்தண்டு. திருவரையா மனம் - அளவிடப்படாத பெருமையுள்ள மனம்.

## 606. நம்பனை யாதியை நான்மறை யோதியைச்

606. நம்பனை யாதியை நான்மறை யோதியைச்
செம்பொனின் உள்ளே திகழ்கின்ற சோதியை
அன்பினை யாக்கி யருத்தி ஒடுக்கிப்போய்க்
கொம்பேறிக் கும்பிட்டுக் கூட்டமிட் டாரே.

ஆருயிர்கள் அனைத்தும் நம்புதற்கிடமாகிய நம்பனை, ஆதியாகிய நடப்பாற்றலையுடைய சோதியை, நான்மறைகளையும் உள்ளிருந்தெழுப்பி ஓதுவிக்கும் ஓதியை, செம்பொன்னகத்துத் திகழும் வனப்பாற்றலாகிய திருவருட்சோதியை, சார்தற்பொருட்டு அவன் திருவடிக்குப் பேரன்புபூணுதல் வேண்டும். வேட்கைகளை யொடுக்கிப்போதல் வேண்டும். அங்ஙனம் செல்வார் நடுநாடிவழி ஏறித் திருவடிக்கண் கலந்திருப்பார். வீணாத்தண்டு - நடுநாடி. கூட்டமிட்டார் - கலந்திருந்தார்.

கொம்பேறி - வீணாத்தண்டு ஏறி.

## 607. மூலத்து மேலது முச்சது ரத்தது

607. மூலத்து மேலது முச்சது ரத்தது
காலொத் திசையிற் கலக்கின்ற சந்தினில்
மேலைப் பிறையினில் நெற்றிநேர் நின்ற
கோலத்தின் கோலங்கள் வெவ்வேறு கொண்டதே.

மூலத்துக்கு மேலாக முக்கோணமும் நாற்கோணமும் உள்ளன. உயிர்ப்புக்கள் ஒத்துப்பொருந்தினால் கூடுகின்ற பொருத்தில் திங்கள்மண்டிலத்தினின்றும் காணப்படும் அழகிய திருக்கோலங்கள் வெவ்வேறாகும். மூலத்து - வருவாய்க்கு. முச்சதுரத்தது - முக்கோணமும் நாற்கோணமும் உள்ளன. கால் - உயிர்மூச்சு. ஒத்து இசையில் - உயிர் மூச்சுக்கள் பொருந்திச்சேரில் சந்தினில் - பொருத்தில். மேலைப் பிறை - மேலேயுள்ள திங்கள் மண்டிலம். நெற்றிநேர்நின்ற - புருவநடுவில் வெளிப்பட்டுநின்ற கோலத்தின் கோலங்கள் - அழகிய அருள்வடிவத் தோற்றங்கள்.

## 608. கற்பனை யற்றுக் கனல்வழி யேசென்று

608. கற்பனை யற்றுக் கனல்வழி யேசென்று
சிற்பனை எல்லாஞ் சிருட்டித்த பேரொளிப்
பொற்பினை நாடிப் புணர்மதி யோடுற்றுத்
தற்பர மாகத் தகுந்தண் சமாதியே.

ஒருவர் வீண் எண்ணங்களாகிய கற்பனையற்று மூலத்தழல் வழியே சென்றால் திருவுள்ள நோக்கத்தால் எல்லாவற்றையும் படைத்தருளிய சிவபெருமானைக் காணலாம். அப் பேரொளிப் பொற்பினைக் கூடும் திருவடியுணர்வு கைகூடும். கூடவே, சிவபெருமானாக வீற்றிருக்கும் திருவடிப்பேறு உண்டாகும். சிற்பன் - உள்ளத்திருக் குறிப்பால் உலகைப் படைத்தருளும் முழுமுதல். தற்பரமாக - ஆவிகள் முழுமுதற் சிவமாயிருக்க. தகுந்தண் சமாதி - பிரிவிலாத் திருவருள் நிட்டையாகும்.

கற்பனை - வீண் சிந்தனைகள். கனல் - மூல அக்கினி. புணர்மதி - சிவத்தோடு கலக்கும் அறிவு.

## 609. தலைப்பட் டிருந்திடத் தத்துவங் கூடும்

609. தலைப்பட் டிருந்திடத் தத்துவங் கூடும்
வலைப்பட் டிருந்திடும் மாதுநல் லாளுங்
குலைப்பட் டிருந்திடுங் கோபம் அகலுந்
துலைப்பட டிருந்திடுந் தூங்கவல் லார்க்கே.

தலைப்பட்டிருந்திட - திருவருள்வழி நின்றிட வலைப் பட்டிருந்திடும் மாதுநல்லாளும் - வலைபோல உயிர்மூச்சை நடுநாடியிற் செலுத்தாது தடுத்து நிற்கும் குண்டலிசத்தி. குலைப்பட்டிருந்திடும் - மறைத்தலை நீங்கிநிற்கும். கோபம் - முனமருவு மறைப்பாற்றலின் சினம். அகலும் - திருவருளாய் விளங்கும். துலைப்பட்டிருந்திடும் - தராசுமுனை போன்று நேர் நிற்கும். இவையனைத்தும் திருவருள் வழிநிற்கும் ஒரு பெரும் செந்நெறிச்செல்வர்க்கே யுண்டாம்.

தத்துவம் - மெய்ப்பொருளான சிவம். தூங்கவல்லார் - யோகம் செய்பவர்.

## 610. சோதித் தனிச்சுட ராய்நின்ற தேவனும்

610. சோதித் தனிச்சுட ராய்நின்ற தேவனும்
ஆதியும் உள்நின்ற சீவனு மாகுமால்
ஆதிப் பிரமன் பெருங்கடல் வண்ணனும்
ஆதி அடிபணிந் தன்புறு வாரே.

இயற்கைப் பேரொளிப்பிழம்பாய் நிற்கும் முழுமுதற் சிவபெருமானும், ஆதியும் - பிரிவிலாத் திருவருளும், உள்நின்ற - இருவர் நடுவாக நின்ற (சிவயசிவ). சீவனும் - ஆவியும். ஆகுமால் - தானே தானாச் செய்தமையால் சிவமாகும். ஆதிப் ........வாரே - படைப்போனும் காப்போனும் முழுமுதற் சிவபெருமான் திருவடியைப் பணிந்து இடையறா அன்புசெய்வர்.

## 611. சமாதிசெய் வார்க்குத் தரும்பல யோகஞ்

611. சமாதிசெய் வார்க்குத் தகும்பல யோகஞ்
சமாதிகள் வேண்டாம் இறையுட னேகிற்
சமாதிதா னில்லை தானவ னாகிற்
சாமதியில் எட்டெட்டுச் சித்தியும் எய்துமே.

சமாதி - நிட்டை. பலயோகம் - பலதழுவல்: மந்திரத் தழுவல், பத்தித்தழுவல், ஞானத்தழுவல், கருமத்தழுவல் முதலியன. இறையுடன் ஏகில் - திருவடி நிறைவில் அடங்கில். தானவனாகில் - ஆவியும் முழுமுதற் சிவனருளால் சிவமாக்கப்பெற்ற நிலையில். சமாதியில் - நிட்டையின்றியே. எட்டெட்டுச்சித்தியும் - உவமையிலாக் கலைஞானம் அறுபத்துநான்கும். எய்தும் - திருவருளால் தாமே வந்து பொருந்தும்.

சமாதியில் எட்டும் எட்டுச் சித்தி - அணிமா முதலிய எட்டுச் சித்திகள்.

## 612. போதுகந் தேறும் புரிசடை யானடி

612. போதுகந் தேறும் புரிசடை யானடி
யாதுகந் தாரம ராபதிக் கேசெல்வர்
ஏதுகந் தானிவன் என்றருள் செய்திடு
மாதுகந் தாடு மால்விடை யோனே.

அம்மை உவப்ப ஐந்தொழிற் பெருங்கூத்தியற்றும் சிவபெருமான் ஆவியின் விழைவினை அறிந்து விரும்பியவாறு முடித்தருளுவன். அமராபதி - (அமர் + ஆ + பதி) அமரரை ஆளும் நிலையாம்.

அமராபதிக்கே செல்வர் - இயமம் முதலிய எட்டு யோகங்களில் சித்தி பெற்றவர் அமராபதியாகிய இந்திர உலகினை எய்துவர்.

நியமம்

(நன்றாற்றல்3)

## 613. பற்றிப் பதத்தன்பு வைத்துப் பரன்புகழ்

613. பற்றிப் பதத்தன்பு வைத்துப் பரன்புகழ்
கற்றிருந் தாங்கே கருது மவர்கட்கு
முற்றெழுந் தாங்கே முனிவர் எதிர்வரத்
தெற்றுஞ் சிவபதஞ் சேரலு மாமே.

சிவபெருமான் திருவடியிணையினை அவன் திருவருளாலே பற்றிப் பேரன்புபூண்டு கற்றதனால் ஆய பயன் அதனைத் தொழுலென்றே தொழுது, பொருள்சேர் புகழ் புகன்று இடையறாது எண்ணிக்கொண் டிருப்பார்க்குச் சிவமுனிவர்கள் ஒன்றுகூடி எழுந்து எதிர்வரத் தெளிவினையுடைய சிவவுலகம் எய்தலும் ஆகும். பரன்புகழ் - நந்திநாமம் நமசிவய என்னும் சந்தத்தமிழ். முற்றெழுந்....ரெதிர்வர - சிவமுனிவரனைவரும் எழுந்து எதிர்கொண்டேற்க. முற்று (உம்) - அனைவரும். தெற்றும் - தெளிவினை அளித்தருளும். சிவபதம் - சிவன் திருவடி.

ஆதனம்

(இருக்கை)

## 614. வருந்தித் தவஞ்செய்து வானவர் கோவாய்த்

614. வருந்தித் தவஞ்செய்து வானவர் கோவாய்த்
திருந்தம ராபதிச் செல்வன் இவனெனத்
தருந்தண் முழவங் குழலும் இயம்ப
இருந்தின்பம் எய்துவர் ஈசன் அருளே.

அகத்தவத்திற்கு வேண்டும் எட்டுறுப்பினுள் ஒன்றாகிய இருக்கைப்பேறு பெற்றார் வருந்தித் தவஞ்செய்துள்ளாரை யொப்பர். வானவர்கோவையும் ஆளும் அமராபதிச் செல்வருமாவர். அந் நிலையினை யாவரும் எடுத்தியம்பிப் புகழ்வர். மிக்க இனிமைதரும் முழவமாகிய தண்ணுமையும், புல்லாங்குழலும் பொருந்தியிசைப்பச் சிவபெருமான் திருவருள் விருந்தின்பத்தினைப் பொருந்தி அருந்திக் கழிமகிழ்வெய்துவர். அருளால் முயன்று இருக்கைத் தவம்செய்தபேற்றால் வானவர் கோவையும் ஆளும் ஆசான் மெய்வேந்தன் இவனென்று புகழ வாழ்வர். தண்முழவம் - தண்ணுமை; மத்தளம். குழல் - புல்லாங்குழல். ஆசான்மெய் - சுத்தவித்தை.

விருந்தின்பம் - புதிய இன்பம்.

பிராணாயாமம்

(வளி நிலை)

## 615. செம்பொற் சிவகதி சென்றெய்துங் காலத்துக்

615. செம்பொற் சிவகதி சென்றெய்துங் காலத்துக்
கும்பத் தமரர் குழாம்வந் தெதிர்கொள்ள
எம்பொற் றலைவன் இவனா மெனச்சொல்ல
இன்பக் கலவி இருக்கலு மாமே.

அகத்தவப்பயிற்சியின் உறுப்பாம் உயிர்ப்பு (வளிநிலை) முறை கைவந்தவர் செம்பொற் சிவகதி சென்றெய்துவர். எய்துங் காலத்துக் கும்புகும்பாகக்கூடிய அமரர்கூட்டம் வந்து எதிர்கொள்ளும். அவர்கள் எம் பொற்றலைவன் இவன் என்று புகழ்ந்தேத்திப் புகல்வர். சிவபெருமானுடன் இன்பக் கலப்பில் இருக்கலுமாம். செம்பொற் சிவகதி 'சிவனெனும் நாமம் தனக்கேயுடைய செம்மேனி எம்மான்' உலகம் எம் பொற்றலைவன் - எம் செல்வம்போலும் சிறந்த தலைவன்.

கும்பத்து அமரர் - பூரணகும்பங்களை ஏந்திய அமரர்.
பிரத்தியாகாரம்
(தொகை நிலை)

## 616. சேருறு காலந் திசைநின்ற தேவர்கள்

616. சேருறு காலந் திசைநின்ற தேவர்கள்
ஆரிவன் என்ன அரனாம் இவனென்ன
ஏருறு தேவர்கள் எல்லாம் எதிர்கொள்ளக்
காருறு கண்டனை மெய்கண்ட வாறே.

தொகைநிலையாகிய பிரத்தியாகாரவழி நிற்பார், சிவபெருமானின் திருவுருவினை எய்துவர். எய்திச் சிவவுலகம் புகுவர். புகுங்கால் எண்புலக்காவலர் இவன் யார் என்பர். மற்றுமுள்ள தேவர்கள் உண்மையுரைத்து உவப்புடன் எதிர்கொண்டு வழிபடுவர். மழைபோலும் கருத்த கண்டனை அருளால் மெய்ம்மையாக உணர்வினில் கண்ட ஒண்மைய ரிவராவர். அரனாம் - சிவபெருமான் ஆட்கொண்டருளித் தன் உருவைத் தான் கொடுத்தலால் அரன் திருவுருவாய் விளங்கினர் ஆவர். மெய்கண்டவாறு - நேரே கண்டமுறையாம்.

தேவர்கள் ஆர் இவர் என்ன - பிரத்தியாகாரப் பலத்தால் சிவசாரூபம் பெற்றுச் செல்லும் இவர் யார் என்று தேவர்கள் கேட்க.

தாரணை

(பொறை நிலை)

## 617. நல்வழி நாடி நமன்வழி மாற்றிடுஞ்

617. நல்வழி நாடி நமன்வழி மாற்றிடுஞ்
சொல்வழி யாளர் சுருங்காப் பெருங்கொடை
இல்வழி யாளர் இமையவர் எண்டிசைப்
பல்வழி எய்தினும் பார்வழி யாமே.

பொறைநிலையாகிய தாரணைவழிச் செல்வர் நல்வழி நாடினவராவர். நமன்வழி மாற்றினவராவர். ஆருயிர்கட்கும் வேறுறு தேவர்கட்கும் வேண்டுவகொடுக்கும் அயன் அரி நிலையினருமாவர். ஏனையிமையவர்கள் பல வேறிடங்களில் உறையினும் பிறப்பு இறப்புகட்கு உட்புகுந்து பார்வழி வருபவரே யாவர். நல்வழிநாடி : நல்வழிநாட, எச்சத் திரிபு. சுருங்காப் பெருங்கொடை வழியில் ஆளர் - குறையாத பெரும் செல்வம் அருளுதலை முறைமையாகப்பெற்ற ஆசான்மெய்க்கண் வீற்றிருக்கும் அயன் அரி என்னும் ஆட்சியாளர். பல்வழி - பல இடங்கள். பார்வழியாகும் - நிலத்தில் நடப்பதாகும்.

சொல்வழி - நூல்கள் கூறும் தாரணை மார்க்கம்.
சுருங்...ஆளர் - பிரம விட்டுணுக்கள்.
தியானம்
(நினைதல்)

## 618. தூங்கவல் லார்க்குந் துணையேழ் புவனமும்

618. தூங்கவல் லார்க்குந் துணையேழ் புவனமும்
வாங்கவல் லார்க்கும் வலிசெய்து நின்றிட்டுத்
தேங்கவல் லார்க்குந் திளைக்கும் அமுதமுந்
தாங்கவல் லார்கட்குந் தன்னிட மாமே.

நினைவுநிலையாகிய தியானவழியே சிவபெருமான் திருவடியிணையினைத் தவத்தால் நினைந்து அவன்றன் அருளாணைபெற்றுப் படைத்தல், காத்தல், துடைத்தல், அடைத்தல் ஆகிய நிலையினராவார்? அயன், அரி, அரன், ஆயிரங்கண்ணன் என்பவர். அடைத்தல் - அமிழ் தடைத்தல். இந் நால்வரும் முறையே ஏழ்புவனம் படைக்கவல்லார், பாற்கடல் தூங்கவல்லார், துடைத்து அசையாது நிற்கவல்லார், அடைத்து அமுதம் தாங்கவல்லாராவர். இவர்கள் நிலைகளும் கடவுள் நினைவின் வன்மையால் கிடைத்தன. தூங்கல் பாற்கடலில் துயிலுதல். வாங்கவல்லார் - மீண்டும் படைக்கவல்லார். தேங்கவல்லார் - அசையாது நிற்கவல்லார். முனிவன் (உருத்திரன்); அரன். தன்னிடம் - எண்ணிய கைகூட இடையறாது நினைக்குமிடம்.

தூங்கவல்லார் - விட்டுணு. துணை....வல்லார் - பிரமா. வலிசெய்...வல்லார் - உருத்திரன். அமுதம்...வல்லார் - இந்திரன் உள்ளிட்ட தேவர்கள்.

சமாதி

(நொசிப்பு)

## 619. காரிய மான உபாதியைத் தான்கடந்

619. காரிய மான உபாதியைத் தான்கடந்
தாரிய காரணம் ஏழுந்தன் பாலுற
வாரிய காரண மாயத் தவத்திடைத்
தாரியல் தற்பரஞ் சேர்தல் சமாதியே.

நொசிப்புநிலையாகிய சமாதியினைத் தலைப்பட்டார். மூலமலத்தின் காரியமாகிய எழுவகைத் துன்பங்களையும் நீங்கியவராவர். வினைமுதற்காரணம் ஏழும் தன்பால் எய்தியவராவர். நீண்டகாரணத் துன்ப நிலைகளைக் கெடுத்தவராவர். தவப்பேற்றால் தற்பரமாகிய சிவபெருமானைச் சார்தல் சமாதி என்ப. காரியமான உபாதி (ஏழு) மூலமலத்தின் காரியமாகிய துன்பம் ஏழு, அவை: மயக்கம், மதம், அவா, கவலை, உட்சூடு, வாட்டம், வியப்பு என்பன. காரண உபாதி - அத் துன்பத்தைப் போக்கும் வினைமுதற் காரணநிலை ஏழு - திருவருளாற்றல் ஏழு. அவை: திருவருளாற்றல், தொழிலாற்றல், அன்னை, ஆள்வி, துடைப்போள், காப்போள், படைப்போள் என்ப. வாரிய - நீண்ட காரணமாய - துன்பவாயிலாகிய ஏழும் கெட உபாதி என்பது காரணம் என்பதனோடும், ஏழென்பது காரியம் என்பதனோடும் இயைந்து நின்றன.

காரியமான உபாதி ஏழு - சீவனுடைய உபாதி 7. ஆரிய காரண (உபாதி) ஏழு - ஈசனுடைய உபாதி 7. தார் - ஒழுங்கு. தார் - இயல் - தற்பரம் எனப் பிரிக்க.

## 620. பணிந்தெண் திசையும் பரமனை நாடித்

620. பணிந்தெண் திசையும் பரமனை நாடித்
துணிந்தெண் திசையுந் தொழுதெம் பிரானை
அணிந்தெண் திசையினும் அட்டமா சித்தி
தணிந்தெண் திசைசென்று தாபித்த வாறே.

சிவபெருமான் திருவடியிணையினைப் பணிந்து எண்பெரும் பேறும் பெற்றவர்கள் அட்டமாசித்தியராவர். அவர்கள் சிவபெருமான் ஒருவனையே முழுமுதலாகக்கொள்ளும் பழுதில் விழுமியோராவர். அவர்கள் எண்புலன்களிலும் சென்று எண்பெரும் பேற்றினை நிலை நாட்டியவராவர். சிவபெருமானை யாண்டும் பணிந்து தொழுதல் கூறுவார் எண்திசையும் என்றார். அணிந்தெண்...தாபித்தவாறே - தொழுத பேற்றால் எண்வகைச்சித்தியும் கைவரப்பெற்று எட்டுப்புலன்களிலும் நிலைநிறுத்தியவாறாம்.

## 621. பரிசறி வானவர் பண்பன் அடியெனத்

621. பரிசறி வானவர் பண்பன் அடியெனத்
துரிசற நாடியே தூவெளி கண்டேன்
அரிய தெனக்கில்லை அட்டமா சித்தி
பெரிதருள் செய்து பிறப்பறுத் தானே.

வானவர் உள்ளிட்ட அனைத்துயிர்களின் தன்மைகளையும் இருந்தாங்கு அறிபவன் சிவபெருமான். அவன் திருவடியைத் திருமுறை வழியாகத் தொழுதேன். திருச்சிற்றம்பலமென்னும் செந்நெறி மன்றம் கண்டேன். காமம் வெகுளி மயக்கமென்னும் முக்குற்றமும் அகன்றன. அட்டமாசித்தியும் கைவந்தன. மேலும் பேசவொண்ணாப் பேரருளும் பெற்றேன். பிறப்பும் இறப்பும் அறுத்தருளி ஆட்கொண்டனன். பரிசறிவானவர் பண்பன் - எல்லார் தன்மைகளையும் இருந்தாங்கு இருந்து அறிந்தருளும் மேலோர் முதல்வன். துரிசற - காமம் வெகுளி மயக்கமாகிய முக்குற்றம் நீங்க. தூவெளி - தூயபரவெளி; திருச்சிற்றம்பலம். பிறப்பறுத்தான் - இறவாத இன்ப அன்பு தந்தருளிப் பிறப்பினை நீக்கினான்.

அடி என - திருவடிகளே பொருள் என.

## 622. குரவன் அருளிற் குறிவழி மூலன்

622. குரவன் அருளிற் குறிவழி மூலன்
பரையின் மணமிகு சங்கட்டம் பார்த்துத்
தெரிதரு சாம்பவி கேசரி சேரப்
பெரிய சிவகதி பேறெட்டாஞ் சித்தியே.

சிவகுருவானவர் செவியறிவுறுத்திய வழியே, மூலத்திடத்து இயங்கும் திருவருளாற்றல் துணைகொண்டு உயிர்ப்பு நடுநாடியிற் செல்லும் துன்பினையுணர்க. அதனைத் தெரியவுணர்த்தும் சாம்பவி, கேசரி, முத்திரை மேற்கொண்டு சிவநிலையும், எண்சித்தியும் ஒருங்கெய்துவ துண்மை குரவன் - ஆசான். குறிவழி - குரவன் அறிவுறுத்தியநெறி. மூலப்பரையின் - மூலத்திடத்தியக்கும் திருவருளாற்றலால். சங்கட்டம் பார்த்து - (உயிர்மூச்சு நடுநாடியிற் செல்லும்) வருத்தத்தையறிந்து. சாம்பவிகேசரி சேர - சாம்பவி கையடையாளப் பயிற்சியுடன் கேசரிக் கையடையாளப் பயிற்சி பொருந்த (கையடையாளம் - முத்திரை). சாம்பவி - சம்புவின் தொடர்பு எய்துதற்குரிய கையடையாளம். இது நெஞ்சச் சக்கரத்திலிருக்கும் சிவத்தினிடம் எண்ணத்தையும் உயிர் மூச்சையும் ஒடுக்கி அடங்கியிருக்கச்செய்யும் மாண்புடையது. நெஞ்சச் சக்கரம் - அநாகதம். கேசரி - வெளியெலாம் அடங்கியிருக்கும் புருவ நடுவில் எண்ணத்தையும் உயிர்மூச்சையும் ஒடுங்கியிருக்கச்செய்யும் வன்மையுடையது. புருவநடு - ஆக்கினை.

சாம்பவி, கேசரி - இருவகைத் தீக்கைகள்; முத்திரைகள் என்றுங் கூறுப.

## 623. காயாதி பூதங் கலைகால மாயையில்

623. காயாதி பூதங் கலைகால மாயையில்
ஆயா தகல அறிவொன் றனாதியே
ஓயாப் பதியதன் உண்மையைக் கூடினால்
வீயாப் பரகாயம் மேவலு மாமே.

காயமுதலாகச் சொல்லப்படும் பூதம் கலை காலம் மாயை முதலியவற்றின்கண் நுணுகிப் பற்றுக்கொள்ளாது அகலச் சிவபெருமானிடத்து அறிவொன்றும், தொன்மை முதலாக என்றும் ஒரு படித்தாகிய சிவபெருமான் திருவடியைக் கூடினால் திருவருள் வெளியிற்சேர்தல் எளிது. அறிவு ஒன்று - (ஒன்று அறிவு) ஒருபடித்தாய அறிவு. பரகாயம் - திருவருள் உடல். மேவல் - பொருந்தல்.

காயாதி - காயம் ஆதி. அறிவொன்று - ஒருமுகப்பட்ட சித்தம். ஓயா - முடிவு இல்லாத. வீயா - இறவாத.

## 624. இருபதி னாயிரத் தெண்ணூறு பேதம்

624. இருபதி னாயிரத் தெண்ணூறு பேதம்
மருவிய கன்ம மாமந்த யோகந்
தருமிவை காய உழைப்பாகுந் தானே
அருமிரு நான்காய் அடங்குமா சித்திக்கே.

வேண்டி வினைதழுவல் கன்மயோகம் எனப்படும். அஃது இருபதினாயிரத்தெண்ணூறு வேறுபாடுகளைக் கொண்டது. இவ் வியோகம் உடம்பினால் செய்யப்படும் அருமைமிக்க வுழைப்பினால் நிறைவுறும். இவையனைத்தும் எண்வகை யோகத்துள் அடங்கும். கன்மயோகம் - வேண்டி வினைதழுவல்.

இருபதி....யோகம் - பலதிறப்பட்ட கன்மயோகங்கள். காய உழைப்பு - தேகத்திற்கு வருத்தம். அரு....அடங்கும் - எட்டு யோகங்களுள் அடங்கும்.

## 625. மதிதனில் ஈராறாய் மன்னுங் கலையின்

625. மதிதனில் ஈராறாய் மன்னுங் கலையின்
உதய மதுநா லொழியவோ ரெட்டுப்
பதியும்ஈ ராறாண்டு பற்றறப் பார்க்கில்
திதமான ஈராறு சித்திக ளாமே.

திங்கட்கலையாகிய இடப்பால் மூக்கின்வழியும், இனம் பற்றி ஞாயிற்றின்கலையாகிய வலப்பால் மூக்கின்வழியும் விடுத்தலாகிய உயிர்ப்புப் பன்னிரண்டு விரலளவு வெளியிற்செல்லும். சென்ற அவ்வுயிர்ப்பில் நால்விரல் அளவு வெளியின்கண்ணேயே வீணாகச் சென்று விடும். எஞ்சிய எட்டுவிரலளவே அகத்துத் தங்கும். அங்ஙனமின்றி அப் பன்னிரண்டு விரலளவு உயிர்ப்பும் அகத்தே தங்கமுயன்று அவை முற்றாகத் தங்கினால் உறுதிப்பாடான எண்சித்திகள் எய்தும். பற்றற: அறப்பற்ற - முற்றுந்தங்க. ஈராறு: இரண்டு + ஆறு = எட்டு; உம்மைத் தொகை. இனம் பற்றி வலப்பாற் (பிங்கல) கலையும் கொள்க. உதயம் - வெளிப்படுதல். திதமான - அழியாமல் நிலையாக இருக்கக்கூடிய.

மதிதனில் - இடகலை. மன்னுங்கலை - பன்னிரண்டங்குலமாய்ப் பொருந்தும் பிராணகலை. நால் ஒழிய - 12 அங்குலத்தில் 4 அங்குலம் ஒழிய. ஈராறு - இரண்டும் ஆறும்; எட்டு.

## 626. நாடும் பிணியாகு நஞ்சனஞ் சூழ்ந்தக்கால்

626. நாடும் பிணியாகு நஞ்சனஞ் சூழ்ந்தக்கால்
நீடுங் கலைகல்வி நீள்மேதை கூர்ஞானம்
பீடொன்றி னால்வாயாச் சித்திபே தத்தின்
நீடுந் துரங்கேட்டல் நீண்முடி வீராறே.

'எம்மாடு சும்மாடாம் ஏவர் நல்லார்' என்பதனால் நம்முடைய இன சனங்கள் சூழினால்' எண்ணத்தக்க நோய்போன்ற பிறப்பினுக்குக் கட்டுத்துணையாகும். நிலைநிற்கும் கலையுணர்வுகளும், அவ் வுணர்வினைத்தரும் கல்விகளும், அவற்றால் வரும் தெளிவுணர்வும், தெளிவால் பெறப்படும் நுண்ணுணர்வும், ஆகிய பெருமையினால் வாய்ப்பனவல்ல சித்தி வேறுபாடுகள், அவை. 'உற்றநோய் நோன்றல் உயிர்க்குறுகண் செய்யாமை' என்னும் பொறையினாலும் சிவகுரு அறிவுறுக்கும் செவியறிவுறுத்தலானும் சேர்வன. இத்தகைய யோகப் பயிற்சியின் பேரெல்லை பன்னிரண்டு ஆண்டாகும். மேதை - மறைவிலா அறிவு. கூர்ஞானம் - நிறையறிவு. வாயா - கிட்டா. கேட்டல் - செவியறிவுறுத்தப் பெறுதல்.

நஞ்சனம் - உறவினர். வாயா - கிட்டா. துரம் - பொறுத்தல். நீண் முடிவு ஈராறு - யோகாப்பியாச காலம் 12 வருடங்கள்.

## 627. ஏழா னதிற்சண்ட வாயுவின் வேகியாந்

627. ஏழா னதிற்சண்ட வாயுவின் வேகியாந்
தாழா நடைபல யோசனை சார்ந்திடுஞ்
சூழான ஓரெட்டில் தோன்றா நரைதிரை
தாழான ஒன்பதிற் றான்பர காயமே.

அகத்தவமாம் யோகப்பயிற்சி ஏழு ஆண்டுகள் செய்யின் பெருங்காற்றினும் விரைவாகத் தங்காது அளவிலாக்கல் தொலைவு நடத்தல் கூடும். எட்டாண்டுப் பயிற்சியில் நரைதிரைகள் தோன்றா. ஒன்பதாண்டுப் பயிற்சியில் 'ஊண் உடல் வேறு செய்தான்' என்பதற்கிணங்கத் தூமாயை உடம்பாகும்.

ஏழானதில் - ஏழு ஆண்டில். எட்டில் - எட்டு ஆண்டில். ஒன்பதில் - ஒன்பது ஆண்டில்.

## 628. ஈரைந்திற் பூரித்துத் தியான உருத்திரன்

628. ஈரைந்திற் பூரித்துத் தியான உருத்திரன்
ஏர்வொன்று பன்னொன்றில் ஈராறாம் எண்சித்தி
சீரொன்று மேலேழ் கீழேழ் புவிச்சென்று
ஏரொன்று வியாபியாய் நிற்றல்ஈ ராறே.

பத்தாண்டுப் பயிற்சியில் திருமுறைச் சிவதீக்கை வாயிலாகத் திருநெறி நுழைவினரால் வழிபடப்பெறும் திருநீலகண்டப் பெருமானுக்கு ஒப்பாவர். பன்....சித்தி பதினோராண்டுப் பயிற்சியில் எண்பேறு பெறுவர். சீரொன்று...ராறே - பன்னிரண்டு ஆண்டுப் பயிற்சியில் சிறப்புப் பொருந்திய மேல் ஏழுலகும் கீழ் ஏழுலகும் ஆண்டான் மீநிறைவில் ஆவி வீழ் நிறைவாகும். மீநிறைவு - வியாபகம். வீழ்நிறைவு - வியாப்பியம். மிடைநிறைவு - வியாத்தி. எண் பேறு (எண் சித்தி) - 1. அணிமா. 2. மகிமா, 3. இலகிமா, 4. பிராத்தி, 5. பிராகாமியம், 6. ஈசத்துவம், 7. வசித்துவம், 8. கரிமா.

1. அணுவினும் மீதுண்மை வடிவுற்று நிற்றல் அணிமா என்னும் செல்வம்.

2. மேருவினும் மிகப்பெரிய வடிவுற்றுநிற்றல் மகிமா என்னும் செல்வம்.

3. சேறு முதலியவற்றில் இயங்கினும் அழுந்துதலின்றிக் காற்றினும் கடுநடைத்தாய் மெல்லிய வடிவுற்று நிற்றல் இலகிமா என்னும் செல்வம் (இம் மூன்றும் உடம்பால் எய்துவன).

4. மனத்தான் விழையப்பட்டன அனைத்தும் விழைந்தவாறே

பெறுதல் பிராத்தி என்னும் செல்வம்.

5. எண்ணமாத்திரையான் ஆயிரம் மகளிரைப் படைத்து அவரனைவரோடும் ஆயிரம் வழிவாய் நின்று விளையாடல் பிராகாமியம் என்னும் செல்வம்.

6. பிரமன் முதலியோர்மாட்டும் தன் ஆணைசெலுத்தி அவரால் பூசிக்கப்படுதல் ஈசத்துவம் என்னும் செல்வம்.

7. உலகமுழுவதையும் தன்வயமாக்குதல் வசித்துவமென்னும் செல்வம்.

8. புலன்களை நுகர்ந்தும் அவற்றில் தொடக்குண்ணாமை கரிமா என்னும் செல்வம் (இவ் வைந்தும் மனத்தால் எய்துவன). இவற்றை முறையே, 1. நுண்மை, 2. பருமை, 3. மென்மை, 4. விரும்பிய தெய்தல், 5. நிறைவுண்மை, 6. ஆட்சியனாதல், 7. கவர்ச்சி, 8. விண்டன்மை என்ப. கரி - சான்று. மா - செல்வம்.

## 629. தானே அனுவுஞ் சகத்துத்தன் நொய்ம்மையும்

629. தானே அனுவுஞ் சகத்துத்தன் நொய்ம்மையும்
மானாக் கனமும் பரகாயத் தேகமுந்
தானாவ தும்பர காயஞ்சேர் தன்மையும்
ஆனாத வுண்மையும் வியாபியு மாம்எட்டே.

இத் திருப்பாட்டு மேற்குறித்த எண் பெரும்பேறுகளையும் முறையே ஓதுகின்றன.

அனு - அணிமா (1). சகம் - மகிமா (2). நோன்மை - கரிமா (3). ககனம் - லகிமா (4). பரகாயத்தேகம் - பிராப்தி (5). தானாவது - பிராகாமியம் (6). ஆனாத உண்மை - ஈசத்துவம் (7). வியாப்பியம் - வசித்துவம் (8). இவை அட்டசித்திகளாகும்.

## 630. தாங்கிய தன்மையுந் தானனுப் பல்லுயிர்

630. தாங்கிய தன்மையுந் தானனுப் பல்லுயிர்
வாங்கிய காலத்து மற்றோர் குறையில்லை
யாங்கே எழுந்தோம் அவற்றுள் எழுந்துமிக்
கோங்கிய வரமுத்தி முந்திய வாறே.

ஆவி யோகப்பயிற்சியால் அனுவாக நின்று பல வுயிர்களொடும் செறிந்து அவைகளைத் தாங்கியகாலத்தும் அவற்றை அழித்த காலத்தும் அதற்கோர் மாறுதலில்லை. எல்லா இடங்களிலும் உயிர்களிலும் கலந்து தோன்றினும் ஒப்புயர்வில்லா வீடுபேற்றுக்கு முன்னேறும் வழியாம். செறிவு - வியாபகம். முந்தியவாறே என்பதற்கு முன்னிருந்த படியே என்றுமாம் (நிருவிகாரம்).

## 631. முந்திய முந்நூற் றறுபது காலமும்

631. முந்திய முந்நூற் றறுபது காலமும்
வந்தது நாழிகை வான்முத லாயிடச்
சிந்தை செயச்செய மண்முதல் தேர்ந்தறிந்
துந்தியுள் நின்று வுதித்தெழு மாறே.

ஒருநாழிகைக்கு விநாடி அறுபது. ஒருநாளுக்கு நாழிகை அறுபது. ஒரு பகலுக்கு நாழிகை முப்பது. அம் முப்பது நாழிகையையும்

வெளி, வளி, ஒளி, நீர், நிலம் என்னும் ஐம்பெரும் பூதங்களுக்கும் முறையே பகுக்கப்படின் காலைமுதல் அவ்வாறு நாழிகைகளாகும். ஆறு நாழிகைக்கும் விநாடி முந்நூற்று அறுபதாகும் எனவே ஒவ்வொரு பூதங்கட்கும் முந்நூற்றறுபதுவிநாடி உரிய காலமாகும். அக் காலம் அவ்வப்பூதப்பெயரான் வழங்கப்படும். எடுத்துக்காட்டாகக் காலை ஆறு நாழிகையும் வெளியாகிய வான்காலம் எனப்படும். அப்படியே மற்றவற்றையும் கூறிக் காண்க. இது தோற்றமுறை. எண்ணி மண் முதலாகத் தேர்ந்தறியின் அஃது ஒடுக்கமுறையாகும். இம் முறையாகவே இரவு முப்பது நாழிகையையும் அமைத்துக்கொள்க. நாளுக்கும் நாழிகைக்கும் ஒவ்வொன்றாக ஓதியுய்ய அப்பரடிகள் அருளிய 'சித்தத்தொகைத் திருக்குறுக்குறுந்தொகை'த் திருப்பாட்டு முப்பதும் காண்க. இஃதும் அகரவரிசையின் அமைந்துளது.

காலம் - விநாடி. 60 விநாடி - ஒரு நாழிகை. 360 காலம் - 360 விநாடி; ஆறு நாழிகை. ஒரு பகலுக்கு 30 நாழிகை, அதனை 5 பங்கு ஆக்க. ஒவ்வொரு பங்கையும் முறையே

வான் முதலாகக் கொள்க. வான் - வளி, தீ, நீர், நிலம் 'வான் முதலாயிட' என்றார். இது தோற்ற முறை. நிலம் முதலாகக் கொள்ளின் ஒடுக்கமுறை என்க. இதனை, "மண்முதற் றேர்ந்தறிவார்" என்றார். இவ்வாறே இரவையும் 5 பங்கு ஆக்கிக்கொள்க.

## 632. சித்தந் திரிந்து சிவமய மாகியே

632. சித்தந் திரிந்து சிவமய மாகியே
முத்தந் தெரிந்துற்ற மோனர் சிவமுத்தர்
சுத்தம் பெறலாம் ஐந்தில் தொடக்கற்றோர்
சித்தம் பரத்தில் திருநடத் தோரே.

எண்ணமாகிய சித்தம் புலன்களாகிய சுவையொளி ஊறு ஓசை நாற்றங்களிற் பற்றாமல் மடங்கிச் சிவத்தின்பாற் பற்றுமேல் அது சிவமயமாகும். இங்ஙனம் அமைவதற்கு எண்மையும் திண்மையும் உண்மையும் ஆயவழி செம்பொருளின் இம்பரிடைக்காணும் உம்பரும் உணராத் திருவுருவ வழிபாடேயாம். அத் திருவுருவ வழிபாட்டினுள்ளும் அம்பலவாணர் வழிபாடே ஐம்புல நுகர்வுக்குப் பெரிதுமொத்த திருக் குறிப்போடு பொருந்திய திருவுருவமாகும். அது வலது திருக்கையில் காண்பது உடுக்கையாகிய துடி. இது படைத்தல், வான்நிலை காதுப்பொறி. வலப்பால் அமைவுத் திருக்கை காத்தல், வளிநிலை, தோல்பொறி. இடப்பால் திருக்கையில் அங்கி துடைத்தல், தீநிலை; நோக்குப்பொறி. ஊன்றிய வலப்பால் திருவடி மறைத்தல், மண்நிலை; மூக்குப்பொறி. தூக்கிய திருவடி அருளல், நீர்நிலை; நாக்குப்பொறி. இம் முறையான் ஐம்பொறியளவினும் 'கண்டு கேட்டு உண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும், ஒண்டொடி கண்ணே உள' (குறள் - 1101) என்பது போன்று நுகர்வுண்டாகும். அவ் வுண்மை வரும் சேக்கிழாரடிகளின் வாய்மொழியான் உணர்க. திருவுருவும் - படிமை; விக்கிரகம்.

"உணர்வி னேர்பெற வரும்சிவ

போகத்தை யொழிவின்றி யுருவின்கண்
அணையும் ஐம்பொறி யளவினும்
எளிவர அருளினை எனப்போற்றி
இணையில் வண்பெருங் கருணையே
யேத்திமுன் னெடுத்தசொற் பதிகத்திற்
புணரும் இன்னிசை பாடின
ராடினர் பொழிந்தனர் விழிமாரி."

- 12. சம்பந்தர், 161.

அங்ஙனம் செம்பு பொன்னாவது போன்று மேனிலை எய்திய உள்ளத்தர் திருவருளால் திருவடிப்பேறு தெரிந்து பொருந்திய மோனத்தராவர். மோனம் - மேன்மைஞானம். அவரே சிவப்பேற்றினராவர். இங்ஙனம் பேறுபெற்றார் ஐம்மலத்தொடக்கற்ற செம்பொருட்டுணிவினராவர். சித்தமாகிய எண்ணம் திருநடம்புரியும் செம்பொருளில் சேர்ந்தோராவர். சித்தம்பரமாகிய தில்லைச் சிற்றம்பலத்தின் திருநடங்கண்ட திருவினராவர். என்றலும் ஒன்று. சுத்தம் என்பதற்கு மலமிலாத் தூய்மை எனவோ தூநிலைப்பாடு எனவோ கூறலும் ஒன்று. சுத்தம் - மாசின்மை (தூயநிலை). ஐந்து - ஐம்மலம்; எண்பேறுள் மனத்தாலெய்துவன ஐந்துமாம். தொடக்கு - பிணிப்பு.

திரிந்து - புலன் வழியினின்றும் திரிந்து. முத்தம் - முத்தி. சித்தம்பரம் - சிதம்பரம், சிதாகாயம்.

## 633. ஒத்தஇவ் வொன்பது வாயுவும் ஒத்தன

633. ஒத்தஇவ் வொன்பது வாயுவும் ஒத்தன
ஒத்தஇவ் ஒன்பதின் மிக்க தனஞ்சயன்
ஒத்தஇவ் வொன்பதில் ஒக்க இருந்திட
ஒத்த வுடலும் உயிரும் இருந்தவே.

ஒன்பதிலொக்க இருந்திட - பத்து நாடிகளுள் நடுநாடி ஒழித்து ஒன்பது நாடிகளிலும் ஒன்பது காற்றுக்களும் முறையே கூடியிருக்க. நரம்பு என்றாலும் நாடி என்றாலும் ஒன்று. பத்து நாடியும் முறையே காண்க: இடப்பால் நரம்பு, வலப்பால் நரம்பு, நடுநரம்பு, உள்நாக்கு நரம்பு, வலக்கண் நரம்பு, இடக்கண் நரம்பு, வலச்செவி நரம்பு, இடச்செவி நரம்பு, கருவாய் நரம்பு, எருவாய் நரம்பு என்பன. இவற்றை முறையே: இடகலை, பிங்கலை, சுழுமுனை, சிகுவை, புருடன், காந்தாரி, அத்தி, அலம்புடை, சங்கினி, குகு என்ப. இவற்றுள் வீங்கற் காற்றாகிய தனஞ்சயன் நடுநரம்பி (சுழுமுனை)ல் தங்குவது. ஒத்த உடலும் உயிரும் - (தம்முள்) ஒத்துவாழும் உடலும் உயிரும் நெடுநாள் நீங்காது ஓங்கிவாழும்.

ஒன்பது வாயு - தனஞ்சயன் ஒழிந்த ஒன்பது வாயு.

## 634. இருக்குந் தனஞ்சயன் ஒன்பது காலில்

634. இருக்குந் தனஞ்சயன் ஒன்பது காலில்
இருக்கும் இருநூற் றிருபத்து நான்கில்
இருக்கு முடலி லிருந்தில வாகில்
இருக்கும் உடலது வீங்கி வெடித்ததே.

வீங்கறற்காற்று ஏனைக்காற்று. ஒன்பதும்போல் இருக்கும். இருக்கு.....வெடித்ததே - இருநூற்று இருபத்துநான்கு உலகங்களிலும் வாழும் உயிர்களின் உடலில் வீங்கறற்காற்று பாங்குறநிற்கும். இக் காற்று வெளிப்பட்டுவிட்டால் உடல்வீங்கி வெடித்திடும்.

கால் - வாயு. இருநூற்றிருபத்து நான்கு - புவனங்களின் தொகை.

## 635. வீங்குங் கழலை சிரங்கொடு குட்டமும்

635. வீங்குங் கழலை சிரங்கொடு குட்டமும்
வீங்கும் வியாதிகள் சோகை பலவதாய்
வீங்கிய வாதமுங் கூனு முடமதாம்
வீங்கும் வியாதிகள் கண்ணில் மருவியே.

வீங்கற்காற்றின் திரிபால் இதில் குறித்த பல நோய்கள் உண்டாகும்.

## 636. கண்ணில் வியாதி யுரோகந் தனஞ்சயன்

636. கண்ணில் வியாதி யுரோகந் தனஞ்சயன்
கண்ணிலிவ் வாணிகள் காச மவனல்லன்
கண்ணினிற் கூர்மன் கலந்தில னாதலாற்
கண்ணினிற் சோதி கலந்ததும் இல்லையே.

வீங்கற்காற்றின் திரிபால் பலநோய்கள் கண்ணிலுண்டாம். விழிக்காற்றின் திரிபால் கண்நோய்கள் பலவும் உண்டாம்; கண்ணொளியும் விளங்காது.

## 637. நாடியின் ஓசை நயனம் இருதயந்

637. நாடியின் ஓசை நயனம் இருதயந்
தூடி யளவுஞ் சுடர்விடு சோதியைத்
தேவருள் ஈசன் திருமால் பிரமனும்
ஓவற நின்றங் குணர்ந்திருந் தாரே.

நடுநாடியிற் கேட்கப்படும் ஓசையினைக் கண்ணொளியாய் நெஞ்சத்துடிப்பாய் உணரலாம். இவ் வோசையினை ஆண்டான் அரி அயன் முதலியோரும் இடையறாது உணர்ந்திருந்தனர். இவர்கள் தூமாயையிலுள்ளவர். துடி என்பது முதல் நீண்டு தூடி என்றாயிற்று.

தூடி - துடி; எட்டு விநாடி.

## 638. ஒன்பது வாசல் உடையதோர் பிண்டத்துள்

638. ஒன்பது வாசல் உடையதோர் பிண்டத்துள்
ஒன்பது நாடி யுடையதோ ரோரிடம்
ஒன்பது நாடி ஒடுங்கவல் லார்கட்கு
ஒன்பது காட்சி யிலைபல வாமே.

ஒன்பது தொளைகளையுடைய இப் பிண்டமாகிய உடம்பகத்து வீங்கறகாற்று ஒழிந்த ஏனை ஒன்பது காற்றும் புகும் ஒன்பது நாடிகளையும் ஒடுக்கவல்ல யோகப்பயிற்சியுடையார் வல்லாராவர். அவர்கள் இந் நாடிகள் சேரும் நாற்சந்தியிடத்தை அருளால் காண்பர். அவர்கள் அகத்தே கேட்கப்படுவன பல்வேறு ஓசைகளாகும். ஒன்பது வாசல் - செவி முதலிய ஒன்பது தொளைகள். பிண்டம் - உடல். ஒன்பது காட்சி - வாயில்கள் ஒன்பதானும் பெறும் உணர்வுகள். இலை பலவாமே - அவ் வுணர்வுகள் அத்துணையின்றி அளவிறந்து தோன்றும்.

ஒன்பது ...இடம் - நாற்சந்தி.

## 639. ஓங்கிய அங்கிக்கீழ் ஒண்சுழு னைச்செல்ல

639. ஓங்கிய அங்கிக்கீழ் ஒண்சுழு னைச்செல்ல
வாங்கி இரவி மதிவழி ஓடிடத்
தாங்கி உலகங்கள் ஏழுந் தரித்திட
ஆங்கது சொன்னோம் அருவழி யோர்க்கே.

இம் மந்திரம் திரிபுக்கரணியைக் கூறுகின்றது. ஓங்கி....யோர்க்கே - மூலத்தீயின் கீழ்ச்செல்லுமாறு நடுநாடியைச் செலுத்தி வலப்பால் நரம்பின்வழி வரும் உயிர்மூச்சினை இடப்பால் நரம்பின்வழி யோடச்செய்யின், அங்ஙனம் செய்யும் அகத்தவ அறிஞர் உலகேழுஞ் செறிந்த ஒண்மையராவர்.

## 640. தலைப்பட்ட வாறண்ணல் தையலை நாடி

640. தலைப்பட்ட வாறண்ணல் தையலை நாடி
வலைப்பட்ட பாசத்து வன்பிணை மான்போல்
துலைப்பட்ட நாடியைத் தூவழி செய்தால்
விலைக்குண்ண வைத்ததோர் வித்தது வாமே.

அகத்தவத்தோர் சிறந்த சிவபெருமான் திருவருள் துணையால் கட்டுற்ற பிணைமான்போல் தராசு நுனிபோல் உயிர் மூச்சைச் சமனுற வைப்பின் தமக்கும் பிறர்க்கும் பயன்பட்டோராவர். இதற்கு ஒப்பு விலைக்குக் கொடுக்கவும் உண்ணவும் அமைத்த வித்தாகும். உண்ணல் - தமக்குப் பயன்படுதல். கொடுத்தல் - பிறர்க்குப் பயன்படல்.

## 641. ஓடிச்சென் றங்கே ஒருபொருள் கண்டவர்

641. ஓடிச்சென் றங்கே ஒருபொருள் கண்டவர்
நாடியி னுள்ளாக நாதம் எழுப்புவர்
தேடிச்சென் றங்கே தேனை முகந்துண்டு
பாடியுள் நின்ற பகைவரைக் கட்டுமே.

திருவருள் துணையால் அகத்தவப்பயிற்சியால் உணர்வினுள் ஓடிச்சென்று ஒப்பில்லா ஒரு பெரும்பொருளைக் காணுதல் வேண்டும். அங்ஙனம் கண்டவர் தம் நாடியினகத்து அகவொலியை எழுப்புவர். அவர் நெற்றிப்புருவ நடுவின்கட் காணப்படும் தேனமிழ்தினைத் தேடிச்சென்று முகந்து உண்பர். பாடியாகிய உடம்பகத்து அறுபகையும், செறுபுலன் ஐந்தும் நீங்காது நின்றுகொண்டு பெருந்துன்பத்தினை ஓவாது புரிகின்றன. அவற்றை ஆண்டவன் மாட்டுக்கொள்ளும் 'அகனமர்ந்த அன்பி'னால் வெல்லுதல் வேண்டும். அவ்வன்பினர் அப் பகைவரை வென்றடக்குவர். நாடியின் - நடுநாடியின் வாயிலாக. தேன் நெற்றிபுருவ மதியமிழ்து. பாடி - பகைவர் தங்குமிடம் (உடம்பு). பகைவர் அறுபகையும் ஐம்புலனும். கட்டும் - அடக்கும்.

ஒரு பொருள் - குண்டலினி. பகைவர் - ஐந்து இந்திரியங்கள்.

## 642. கட்டிட்ட தாமரை ஞாளத்தில் ஒன்பது

642. கட்டிட்ட தாமரை ஞாளத்தில் ஒன்பது
மட்டிட்ட கன்னியர் மாதுடன் சேர்ந்தனர்
தட்டிட்டு நின்று தளங்களி னூடுபோய்ப்
பொட்டிட்டு நின்று பூரண மானதே.

(ப. இ.) கட்டமைந்த தாமரை நாளத்தையொத்த நடுநாடி வழியாகச் செல்லும் உயிர்ப்புடன் உணர்வுசெல்லும். சென்றக்கால் ஒன்பதென்னும் அளவையினைக்கொண்ட திருவருளாற்றலுடன் கூடுவர். அவ்வாற்றல்களுடன் மேலேறிப் புருவ நடுவின்கட் செல்லுதல் வேண்டும். செல்லவே ஆங்குள்ள நிறைந்த தேனமிழ்து நுகர்ந்து இன்புறலாம். இதுவோர் நிறைவுமாகும். ஞாளம் - நாளம்; தண்டு. கன்னியர் - ஒன்பது திருவருளாற்றல்: சிவை, பண்ணவி, திருவருளறிவாற்றல், தொழிலாற்றல், அன்னை, ஆள்வி, துடைப்போள், காப்போள், படைப்போள். சிவை - சத்தி. பண்ணவி - விந்துசத்தி. அன்னை - மனோன்மனி. தளங்களினூடு - மூலநிலை முதலிய ஆறு நிலைகளின்வழி. பொட்டு - நெற்றிப் புருவநடு.

ஒன்பது கன்னியர் - ஒன்பது சத்திகள். தளம் - ஆதாரம்.

## 643. பூரண சத்தி எழுமூன் றறையாக

643. பூரண சத்தி எழுமூன் றறையாக
ஏரணி கன்னியர் எழுநூற்றைந் தாக்கினர்
நாரணன் நான்முக னாதிய ஐவர்க்குங்
காரண மாகிக் கலந்து விரிந்ததே.

முழுநிறை ஆற்றல் நிலைக்களத்தை இருபத்தோர் அறையாக்கினர். அவற்றுள் தங்குங்கன்னியர் அவற்றை எழுநூற்றைந் தாக்கினர். இக் கன்னியர் நாரணன் முதலாகச் சொல்லப்பெறும் ஐந்தொழிற் கடவுளருடனும் கலந்து அவர்களை இயக்கி எங்கும் விரிந்து நின்றனர். எழுமூன்று அறையாக - இருபத்தொரு வகுப்பாக. ஐவர்க்கும் - அன்னை அத்தன் (சதாசிவன்), ஆண்டான், அரன், அரி, அயன் ஆகிய ஐங்கடவுளர்க்கும். காரணமாகி தோற்றத் துணையாகி. கலந்து - ஒன்றாய்ப் பின்னி. விரிந்தது - உடனாய் இயக்கிற்று.

## 644. விரிந்து குவிந்து விளைந்தஇம் மங்கை

644. விரிந்து குவிந்து விளைந்தஇம் மங்கை
கரந்துள் எழுந்து கரந்தங் கிருக்கிற்
பரந்து குவிந்தது பார்முதற் பூதம்
இரைந்தெழு வாயு விடத்தினில் ஒடுங்கே.

திருவருளாற்றல் உலகுயிர்கட்குத் தாரகம் எனப்படும் மீநிறைவாய் இருப்பள். இந் நிலை உலகினை இயக்கும் நிலையாகும். இந் நிலையினும் அத் திருவருள் சிவனிடத்து வீழ்நிறைவாய் நிற்பள். அதனால் 'விரிந்தும் குவிந்தும் விளைந்த இம் மங்கை' எனப்படுவள். அவ் வருள் மீண்டும் வெளிப்பட்டால் உலகந்தோன்றும். அவ் வருள் சிவத்தின்கண் ஒடுங்கும். அருள் ஒடுங்கினால் பூதங்களும் ஒடுங்கும். விரிந்து - (திருவருளாற்றல்) உலகு உயிர்கட்கு மீநிறைவாய். குவிந்து - உடையானிடத்து வீழ்நிறைவாய். மீநிறைவு - வியாபகம். வீழ்நிறைவு - வியாப்பியம். (வீழ்தல் - ஒத்தல், சமம்.) கரந்து....ஒடுங்கே - திருவருளாற்றல் சிவத்தில் ஒடுங்கி மீண்டும் எழுந்து வெளிப்பட்டால் பார் முதலிய பூதங்கள் வெளிப்படும். அவ் வாற்றல் சிவத்தில் ஒடுங்கினால் பூதங்கள் ஒடுங்கும். இரைந்தெழு வாயு - ஓசையுடன் மேலெழும் உயிர்ப்பு, ஒடுங்கே - ஒடுங்குமே. உயிர்ப்பு - பிராணவாயு.

## 645. இடையொடு பிங்கலை என்னும் இரண்டும்

645. இடையொடு பிங்கலை என்னும் இரண்டும்
அடைபடு வாயுவும் ஆறியே நிற்குந்
தடையவை யாறெழுந் தண்சுட ருள்ளே
மிடைவளர் மின்கொடி தன்னில் ஒடுங்கே.

இடப்பால் வலப்பால் மூக்குகளிரண்டாலும் உள்ளுறை உயிர்ப்பும், ஆறியே நிற்கும் - அடங்கியே நிற்கும். தடையவை ஆறு - குற்றமாகத் தடுக்கும் தீப்புண் ஆறு: செருக்கு, சினம், சிறுமை, இவறல், மாண்பிறந்த மானம், மாணாவுவகை. எழும்...வொடுங்கே - புருவ நடுவில் தோன்றும் குளிர்ந்த நிலாமண்டலத்தின் ஒளியுள்ளே அடங்கி வளர்கின்ற மின்னற்கொடியாம் ஆற்றலில் ஒடுங்கும். மிடை - அடக்கம்.

## 646. ஒடுங்கி ஒருங்கி உணர்ந்தங் கிருக்கில்

646. ஒடுங்கி ஒருங்கி உணர்ந்தங் கிருக்கில்
மடங்கி அடங்கிடும் வாயு வதனுள்
மடங்கி அடங்கிடு மன்னுயி ருள்ளே
நடங்கொண்ட கூத்தனை நாடுகின் றேனே.

ஒடுங்கி - அடங்கி, ஒருங்கி - ஒருதன்மைப்பட்டு. உணர்ந்து - அழுந்தியறிந்து. அங்கு - திருவருளாற்றலில். இருக்கின் - உறைத்து நின்றால். மடங்கி.....அதனுள். உயிர்ப்பும் அதனுள் அடங்கித் தங்கிடும். மடங்கி....றானே. உயிர்ப்படக்கத்தால் புறத்துப்புலன் செல்லாது அகத் தடங்கும். உயிரினுள்ளே திருக்கூத்துக்கொண்டருளும் கூத்தப் பெருமானை நாடுகின்றவனாவேன்.

## 647. நாடியின் உள்ளே நாதத் தொனியுடன்

647. நாடியின் உள்ளே நாதத் தொனியுடன்
தேடி யுடன்சென்றத் திருவினைக் கைக்கொண்டு
பாடியுள் நின்ற பகைவரைக் கட்டிட்டு
மாடி ஒருகை மணிவிளக் கானதே.

நடுநாடியினுள்ளே அருளொலியுடன் ஆராய்ந்து ஒருங்கு சென்று அவ் வருளை மேற்கொண்டு, பாடியு....கானதே - உடம்பினுள் பகையாய் நின்ற மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐவரையும் அருளால் அடக்க அவ் வுடம்பு அளவில் பெருமையினையுடைய சிறந்த தூண்டாவிளக்கு ஆயது.

மாடி - பெருமையினையுடைய.

## 648. அணிமாதி சித்திக ளானவை கூறில்

648. அணிமாதி சித்திக ளானவை கூறில்
அணுவில் அணுவின் பெருமையில் நேர்மை
இணுகாத வேகார் பரகாய மேவல்
அணுவத் தனையெங்குந் தானாத லென்றெட்டே.

இத் திருப்பாட்டு எண்பேறுகளைத் தொகுத்துக் கூறுகின்றது. அணுவில் அணுவின் நேர்மை - நுண்மை. பெருமையின் நேர்மை - பருமை. நேர்மை - விண்தன்மை. இணுகாத நேர்மை - மென்மை. வேகார் நேர்மை - விரும்பியதெய்தல். பரகாயமேவல் - நிறைவுண்மை. எங்குமாம் நேர்மை - ஆட்சியனாதல். தனையொக்கும் தானாதல் - கவர்ச்சி.

அணுவில் அணுவின் நேர்மை - அணுவுக்கணுவாதல். பெருமையின் நேர்மை - பெரிதில் பெரிதாதல். வேகார் - வேகாத.

## 649. எட்டா கியசித்தி யோரெட்டி யோகத்தாற்

649. எட்டா கியசித்தி யோரெட்டி யோகத்தாற்
கிட்டாப் பிராணனே செய்தாற் கிடைத்திடு
மொட்டா நடுநாடி மூலத்த னல்பானு
விட்டான் மதியுண்ண வும்வரு மேலதே.

எண்வகை யோகத்தால் - எண்பேறு பெற்று உயிர்ப்பை அடக்கிக்கொண்டால், கிடைத்திடு....விட்டால் - கிடைத்தற்கரிய மாண்பினையுடைய நடுநாடி வழியாக மூலத்தீயைச் சூரியமண்டலமாகிய நெஞ்சத்தாமரையின்மேற் செலுத்தினால், மதி...மேலதே - புருவ நடுவாகிய திங்கள் மண்டிலத்தமிழ்துண்ணும் மேண்மையுண்டாம்.

கிட்டா - அடக்கமுடியாத.

## 650. சித்திக ளெட்டன்றிச் சேரெட்டி யோகத்தாற்

650. சித்திக ளெட்டன்றிச் சேரெட்டி யோகத்தாற்
புத்திக ளானவை எல்லாம் புலப்படுஞ்
சித்திகள் எண்சித்தி தானாந் திரிபுரை
சத்தி அருள்தரத் தானுள வாகுமே.

அகத்தவமாம் எண்வகை யோகத்தால் சித்தியாம் எண்வகைப் பேறுகள் பெறுவதுமட்டும் அல்லாமல் பலவகை அறிவுகளும் புலப்படும். சித்திகள் எண்சித்தி - எண்பேறுகளும் இட வேறுபாட்டால் ஒவ்வொன்றும் எவ்வெட்டாக அறுபத்துநான்காம்: "பேய்களுக்கு இவ்வெட்டும் நிலவுலகத்தை வியாபித்துக் கூறியவாறேயுள்ளன. அரக்கருலகத்துள்ளார்க்கு நீருலகத்தையும் வியாபித்து இருமடங்கும், இயக்கருலகத்துள்ளார்க்குத் தீயுலகத்தையும் வியாபித்து மும்மடங்கும், காந்தருவ வுலகத்துள்ளார்க்கு வாயுவுலகத்தையும் வியாபித்து நான் மடங்கும், இந்திரவுலகத்துள்ளார்க்கு ஆகாயவுலகத்தையும் வியாபித்து ஐந்து மடங்கும், சோமலோகத்துள்ளார்க்கு மனத்தினையும் வியாபித்து ஆறுமடங்கும், பிரசாபதியுலகத்துள்ளார்க்கு ஆங்காரத்தையும் வியாபித்து ஏழுமடங்கும், பிரமலோகத்துள்ளார்க்குப் புத்தியையும் வியாபித்து எட்டுமடங்கும் ஏற்றமா யுள்ளனவாகலான், எண்வகைச் செல்வமும் இங்ஙனம் ஒரோவொன்று எவ்வெட்டாய். விரியான் அறுபத்துநான்காம் எனக்கொள்க" சிவஞானபோதம், 2 - 2. சிவஞான முனிவரனார் பேருரை.

எழுத்திலக்கண முதலாக நிலை (அவத்தை)யிற் செலுத்துதல் ஈறாகக் கூறப்பட்ட அறுபத்துநாலு சித்திகளும் எனக் கூறுவாரும் உளர். தானாந்திரிபுரைசத்தி - தானாகவே யிருக்கின்ற முப்புரச்செல்வி. நெய்வோரும் தைப்போரும் நோந்த பலதரல்போல், ஐயனருள் சித்தர்க்கும் ஆரமரர் - கையசுரர், பேயர் முதலோர்க்கும் பெட்ப படைத்தளிக்கும், ஆயதனால் வேண்டுவவாம் அங்கு.

அணிமா

(நுண்மை)

## 651. எட்டிவை தன்னோ டெழிற்பரங் கைகூடப்

651. எட்டிவை தன்னோ டெழிற்பரங் கைகூடப்
பட்டவர் சித்தர் பரலோகஞ் சேர்தலால்
இட்டம துள்ளே இறுக்கல் பரகாட்சி
எட்டு வரப்பு மிடந்தானின் றெட்டுமே.

எழல்பரம் - அன்பறிவாற்றல்கள் மூன்றும் இயல்பாகவே விளங்கும் முழுமுதற்சிவம். (அன்பறிவாற்றல் - இச்சாஞானக்கிரியை). கைகூட - இடையறா நினைப்பால் மிக்குவிளங்க. பட்டவர் சித்தர் - கைகூடிய அத்தகையவரே மேலான சித்தராவர். பரலோகம் - சிவவுலகம். இட்டம்....பரகாட்சி - விரும்பப்படும் பொருளாகிய சிவத்தினுள் ஒடுங்குதல் சிவக்காட்சி. இறுக்கல் - ஒடுங்குதல், எட்டு வரப்பும் - எண்பேறுகளும், இடந்தானின் றெட்டும்: நின்ற இடந்தான் எட்டும் - இருக்கும் இடத்தே எளிதாக வந்து எய்தும்.

## 652. மந்தர மேறு மதிபானு வைமாற்றிக்

652. மந்தர மேறு மதிபானு வைமாற்றிக்
கந்தாய்க் குழியிற் கசடற வல்லார்க்குத்
தந்தின்றி நற்காய மியலோகஞ் சார்வாகும்
அந்த வுலகம் அணிமாதி யாமே.

மந்தரம் - புருவநடு; மேரு ஏறும் மதி பானுவை மாற்ற - மேலே ஏறுகின்ற திங்கள் ஞாயிறாகிய இடப்பால் வலப்பால் உயிர்ப்பை மேலது கீழது கீழது மேலதாய் மாற்றிவைக்க. குழியில் - அமிழ்த ஊற்றினால். கந்தாய் - அடித்த முளைபோல் அசைவற்றிருக்க. தந்து: தந்தது என்பதன் திரிபு. இன்றி - தந்தபடியேயல்லாமல். நற்காயம் - யோகப்பயிற்சியால் சிறந்து விளங்கும் உடல். இவை நுண்மையாகிய அணிமா என்னும் சித்தியால் கிடைக்கும்.

கந்து - அடித்த முளை. குழி...ர்க்கு - அமுத ஊற்றினாலே குற்றம் அற்று இருக்க வல்லார்க்கு.

## 653. முடிந்திட்டு வைத்து முயங்கிலோ ராண்டில்

653. முடிந்திட்டு வைத்து முயங்கிலோ ராண்டில்
அணிந்த அணிமாகை தானாம் இவனுந்
தணிந்தவப் பஞ்சினுந் தானொய்ய தாகி
மெலிந்தங் கிருந்திடும் வெல்லவொண் ணாதே.

(பானுவில் விடுதல்: அமுதத்தை இணைவிழைவுச் சூட்டால் வெளிப்படுத்தல்.) முயங்கில் - அகத்தவமாம் யோகத்தில் பொருந்தியிருந்தால். அணிந்த - புகழ்ந்து கூறப்பட்ட. அணிமா - நுண்மை. கைதானாம் - தானாக எளிதாகக் கைகூடும். தணிந்த - மெலிந்த. நொய்யதாகி - மெலிவாகி. மெலிந்தங்கிருந்திடும் - இலேசாயங்கிருப்பன். இந்நிலை ஓராண்டில் கைகூடும்.

முடிந்திட்டு வைத்து - அமுதத்தைப் பானுவில் விடாமல் அடக்கிவைத்து.
இலகிமா
(மென்மை)

# 654. ஆகின்ற வத்தனி நாயகி தன்னுடன்

654. ஆகின்ற வத்தனி நாயகி தன்னுடன்
போகின்ற தத்துவம் எங்கும் புகலதாய்ச்
சாகின்ற காலங்கள் தன்வழி நின்றிடின்
மாய்கின்ற தையாண்டின் மாலகு வாகுமே.

திருவருள் துணையுடன் முதல்நிலையாகிய மூலாதாரத்தினின்றும் மேலேறும் எல்லா நிலைகளிலும், அத் திருவருளாற்றலே துணையாக. சாய்கின்ற....வாகுமே - ஐந்தாண்டுப்பயிற்சியில் மிக்க மென்மையாகிய இலகிமா கைகூடும்.

போகின்ற தத்துவம் - மூலாதாரத்தினின்றும் தான் போகும் தத்துவங்கள். புகலதாய் - அச் சத்தியே ஆதாரமாக.

## 655. மாலகு வாகிய மாயனைக் கண்டபின்

655. மாலகு வாகிய மாயனைக் கண்டபின்
தானொளி யாகித் தழைத்தங் கிருந்திடும்
பாலொளி யாகிப் பரந்தெங்கு நின்றது
மேலொளி யாகிய மெய்ப்பொருள் காணுமே.

மாலகுவாகிய - பெருமையுள்ள மென்மை வடிவினனான. மாயனை - முழுமுதற் சிவனை. தானொளியாகி - இயற்கைப் பேரொளியாய். மேலொளி - பரவெளியிலமர்ந்த. மெய்ப்பொருள் - முழு முதற்சிவம். அச்சிவம் ஆண்டுக் காணப்படும்.

மாலகு - லகிமா.
மகிமா
(பருமை)

## 656. மெய்ப்பொருள் சொல்லிய மெல்லிய லாளுடன்

656. மெய்ப்பொருள் சொல்லிய மெல்லிய லாளுடன்
தற்பொரு ளாகிய தத்துவங் கூடிடக்
கைப்பொரு ளாகக் கலந்திடு மோராண்டின்
மைப்பொரு ளாகு மகிமாவ தாகுமே.

மெய்ப்பொருளாகிய முப்பொருளை முறையுறச்சொல்லியருளிய திருவருளுடன் சிவபெருமான் கூடிட ஓராண்டினுள் மகிமா நிலையினர்க்கு அழிவில் திருவடியுணர்வை அறிவுறுத்தியருளிய அந்நிலை கைகூடும். தற்பொருள் - தன்பொருள்: முழுமுதற்சிவமாகிய மெய்ப் பொருள். மைப்பொருளாகும் மகிமா - மறைந்த பொருளான மகிமா.

## 657. ஆகின்ற காலொளி யாவது கண்டபின்

657. ஆகின்ற காலொளி யாவது கண்டபின்
போகின்ற காலங்கள் போவது மில்லையாம்
மேனின்ற காலம் வெளியுற நின்றன
தானின்ற காலங்கள் தன்வழி யாகுமே.

ஆகின்ற கால் - வாழ்நாட்குத் துணையாகின்ற உயிர்ப்பாகிய பிராணவாயு. ஒளியாவது - உள்ளடங்கியதால் அஃது ஒளிவண்ணமாகும். கண்டபின் - அகத்தும் புறத்தும் ஒப்பக்கண்டபின். போகின்ற....இல்லையாம் - கழிந்து போதற்குரிய வாழ்நாட்காலமாகிய (அகவை) ஆயுட்காலம் நீங்குவதில்லை. மேல்நின்ற காலங்கள் - மேன்மையுள்ளதாய் விளங்கும் காலமெய். (மெய் தத்துவம்.) வெளியுறநின்றபின் - தான் செய்யும் துணைத்தொழிலைவிட்டு அமைந்தபின். தானின்ற காலங்கள் - கழிதற்கென வரையறுக்கப்பட்ட வாழ்நாட்கள் தன் வழியாகும் - அந் நாட்கள் அகத்தவமுடையார் நினைத்தவண்ணம் ஆம்.

## 658. தன்வழி யாகத் தழைத்திடு ஞானமும்

658. தன்வழி யாகத் தழைத்திடு ஞானமும்
தன்வழி யாகத் தழைத்திடும் வையகம்
தன்வழி யாகத் தழைத்த பொருளெலாம்
தன்வழி தன்னரு ளாகிநின் றானே.

தன்வழியாக - ஆவியின் வயமாக. ஞானமும் தழைத்திடும் திருவடியுணர்வு திகழ்ந்துவிளங்கும். வையகம்.◌...றானே - திருவருள் வழியின் ஆவி நிற்கும். அத்தகைய ஆவியின்வழி உலகம் செல்லும். உலகத்துப் பொருள்கள் அனைத்தும் அவன்வழியே செல்லும்.

தன் வழியாக - தன் வசமாக.
பிராத்தி
(விரும்பியதெய்தல்)

## 659. நின்றன தத்துவ நாயகி தன்னுடன்

659. நின்றன தத்துவ நாயகி தன்னுடன்
கண்டன பூதப் படையவை யெல்லாங்
கொண்டவை யோராண்டு கூட இருந்திடில்
விண்டது வேநல்ல பிராத்திய தாமே.

மாயகாரியமெய்களை இயக்கும் மறைப்பாற்றலுடன் நின்றனவாய், கண்டன...தாமே - காணப்படும் பூதகூட்டங்களெல்லாம் பொறைநிலையுடன் கூடவிருந்தால் ஓராண்டுப்பயிற்சியுள் எண்ணியன திண்ணமாகக் கைகூடும். பொறைநிலை - தாரணை. பூததாரணை - பூதங் களின் ஆற்றலை யோகப்பயிற்சியால் வெல்லுதல். படை - கூட்டம் விண்டதுவே - வெளிப்பட்டதேயாம்.

கூட இருந்திடில் - பூத தாரணையோடுகூட இருந்தால்.
கரிமா
(விண்தன்மை)

## 660. ஆகின்ற மின்னொளி யாவது கண்டபின்

660. ஆகின்ற மின்னொளி யாவது கண்டபின்
பாகின்ற பூவிற் பரப்பவை காணலா
மேகின்ற காலம் வெளியுற நின்றது
போகின்ற காலங்கள் போவது மில்லையே.

ஆகின்ற மின்னொளி - அகத்தவமாகிய யோகப் பயிற்சியிற் காணப்படும் மின்னல்போலும் ஒளி. பாகின்ற....காணலாம் இருந்த இடத்திலிருந்தே உலகப்பரப்பு முழுவதும் ஒருங்கு காணலாம். புருவ நடுவுக்குமேற் காணப்படும் ஆயிரம் இதழ்த் தாமரைப்பரப்பு முழுவதும் ஒருங்கு காணலாம் என்பதும் ஒன்று. மேகின்ற....நின்றது - நாழிகை நாள் முதலவாகக் காரியப்படுத்தப் பொருந்துகின்ற காலமெய் வெளிப்பட்டுத் தனித்துநின்றது. மேகின்ற: மேவுகின்ற என்பதன் திரிபு. போகின்ற...மில்லையே - கழியவேண்டிய வாழ்நாட்கள் கழிவனவுமில்லை.

பூவின் பரப்பு - சக்கிர அறைகள்.

## 661. போவதொன் றில்லை வருவது தானில்லை

661. போவதொன் றில்லை வருவது தானில்லை
சாவதொன் றில்லை தழைப்பது தானில்லை
தாமத மில்லை தமரகத் தின்னொளி
யாவது மில்லை யறிந்துகொள் வார்க்கே.

உயிர்ப்புப் புறம் போவதும் அகம் புகுவதும் என்னும் நிலையில்லை. சாவ....தானில்லை - இறப்பும் பிறப்பும் இல்லை. தாமத...வார்க்கே - முக்குணத்துள் ஒன்றாகிய அழுந்தல் என்னும் கடைக்குணமில்லை. எனவே முக்குணத் துன்பமும் இல்லை. நடுநாடியிலுள்ள உட்டொளை உயிர்ப்பு நிறைந்திருப்பதால் ஒளியாவதும் இல்லை. உண்மையறியும் பண்பினர்க்கு தாமதம் அழுந்தல், இனக்கோளால் ஏனை அமைதி (சாத்விகம்) ஆட்சி (இராசதம்) இவற்றின் துன்பங்கள் இல. தமர் - தொளை.

## 662. அறிந்த பராசத்தி யுள்ளே அமரில்

662. அறிந்த பராசத்தி யுள்ளே அமரில்
பறிந்தது பூதப் படையவை யெல்லாங்
குறிந்தவை யோராண்டு கூட இருக்கில்
விரிந்தது பரகாய மேவலு மாமே.

பராசத்தி - வனப்பாற்றலாகிய திருவருள். பறிந்தது...யெல்லாம் - பூதக்கூட்டங்களின் தொடக்கனைத்தும் அகன்றது. இவ் வோராண்டுப் பயிற்சியால் எங்கும் செறிதலும் எவ் வுடற்கண் புகுதலும் எய்தும். உடற்கண் புகுதல் - கூடுவிட்டுக் கூடுபாய்தல்.

அறிந்த பராசத்தி - யோகத்தாற் கண்ட சிற்சத்தி குறிந்தவை - குறித்தவை.
பிராகாமியம்
(நிறைவுண்மை)

## 663. ஆன விளக்கொளி யாவ தறிகிலர்

663. ஆன விளக்கொளி யாவ தறிகிலர்
மூல விளக்கொளி முன்னே யுடையவர்
கான விளக்கொளி கண்டுகொள் வார்க்கு
மேலை விளக்கொளி வீடெளி தாநின்றே.

ஆனவிளக்கொளி - எப்பொருளையும் விளக்கும் முழுமுதற் சிவத்தின் இயற்கையொளி. கானவிளக்கொளி - புருவநடுவிலுள்ள உயிர்க்கு உயிராய் உதவும் சிவவொளி. மேலை விளக்கொளி - வானோர்க்கு உயர்ந்த உலகத்துறையும் சிவவொளி. இவ்வொளிகளைக் காணும் பயிற்சியுடையார்க்குத் திருவடிப்பேறு. எளிதாநின்று இன்பந்தரும். இவரே மூல விளக்கொளி முன்னேயுடையவர்.

மூல விளக்கொளி - சீவனுடைய இயற்கை ஒளி. கான விளக்கொளி - ஆஞ்ஞையிலுள்ள ஒளி.

ஈசத்துவம்
(ஆட்சியனாதல்)

## 664. நின்ற சதாசிவ நாயகி தன்னுடன்

664. நின்ற சதாசிவ நாயகி தன்னுடன்
கண்டன பூதப் படையவை எல்லாங்
கொண்டவை யோராண்டு கூடி யிருந்திடிற்
பண்டையவ் வீசன் தத்துவ மாகுமே.

நுண்மை ஐம்பூதங்களையும் இயைந்தியக்கும் தெய்வங்கள் முறையே அயன், அரி, அரன், ஆண்டான், அன்னை அத்தன் என்ப. இவர்கள் முறையே நாற்றமுதல் ஐந்திற்குமாம். அன்னை அத்தன் - சதாசிவம். இவ் வுண்மை உணர்ந்து அவ்வப் பூதங்களின் தன்மையை அவ்வவ் விடங்களில் அமைத்துக்கொண்டிருந்தால், பண்டைய...மாகுமே - தொன்மை ஆண்டான்முறையில் ஆட்சியனாம்.

## 665. ஆகின்ற சந்திரன் தன்னொளி யாயவன்

665. ஆகின்ற சந்திரன் தன்னொளி யாயவன்
ஆகின்ற சந்திரன் தட்பமு மாயிடும்
ஆகின்ற சந்திரன் தன்கலை கூடிடில்
ஆகின்ற சந்திரன் தானவ னாமே.

திங்கள் மண்டிலச் சிறப்புணர்ந்தவன் நிலவொளியாய், நிலவின் குளிர்ச்சியாய், நிலவின் கலைவளர்ச்சியாய், நிலவாய் விளங்குவன்.

## 666. தானே படைத்திட வல்லவ னாயிடும்

666. தானே படைத்திட வல்லவ னாயிடும்
தானே யளித்திட வல்லவ னாயிடும்
தானேசங் காரத் தலைவனு மாயிடும்
தானே யிவனெனுந் தன்மைய னாமே.

படைத்தல் காத்தல் துடைத்தல்களாகிய உடம்பின்கண் செய்யப்படும் முத்தொழில்களையும் எளிதாக இயற்றும் வலிமையுடையவன் ஆவன். முழுமுதற் சிவனே இவன் என மொழியவும்படுவன்.

## 667. தண்மைய தாகத் தழைத்த கலையினுள்

667. தண்மைய தாகத் தழைத்த கலையினுள்
பன்மைய தாகப் பரந்தஐம் பூதத்தை
வண்மைய தாக மறித்திடில் ஓராண்டின்
மென்மைய தாகிய மெய்ப்பொருள் காணுமே.

குளிர்ச்சியாக விளங்கும் திங்கள் கலையினுள், மாறுபட்ட பல தன்மைகள் பொருந்திய பரந்து திரியும் ஐம்பூதங்களைத் திருவருள் துணையால் வளப்பம்பொருந்திய நன்னெறிக்கு வாயிலாக மாற்றிக் கொள்ளுதல் வேண்டும். அங்ஙனம் கொண்டால் ஓராண்டுப்பயிற்சியில் எப்பொருட்கும் சார்பாம் இயற்கை மென்மைத்தன்மை வாய்க்கும்: வாய்ந்த பெரும் பேற்றால், மெய்ப்பொருளாம் முழுமுதற் சிவத்தைக் கண்டு வழிபடுதல் கூடும்.

வசித்துவம்

(கவர்ச்சி)

## 668. மெய்ப்பொரு ளாக விளைந்தது வேதெனின்

668. மெய்ப்பொரு ளாக விளைந்தது வேதெனின்
நற்பொரு ளாகிய நல்ல வசித்துவங்
கைப்பொரு ளாகக் கலந்து உயிர்க்கெலாந்
தற்பொரு ளாகிய தன்மைய னாகுமே.

திருவருள் துணையால் உண்மைப்பொருளாக விளைந்தது எதுவென்றால், அருட்பொலிவாம் கவர்ச்சி என்று சொல்லக்கூடிய வசித்துவமாம். அதுவே தூய நற்பொருள். கைப்பொரு...னாகுமே - எல்லாவுயிர்க்கும் இயைந்தியக்கும் பொருளாகக் கலந்த முழுமுதற் சிவமாம் தன்மையனாகிய பெரும்பொருளே தற்பொருள். தற்பொருள் - தானே முழுமுதல்; சிவபெருமான்.

கைப்....எல்லாம் - காணப்படும் உயிர் வருக்கங்களுக்கு எல்லாம்.

## 669. தன்மைய தாகத் தழைத்த பகலவன்

669. தன்மைய தாகத் தழைத்த பகலவன்
மென்மைய தாகிய மெய்ப்பொருள் கண்டிடின்
பொன்மைய தாகப் புலன்களும் போயிட
நன்மைய தாகிய நற்கொடி காணுமே.

திருவருள் துணை மேலிட்டபருவத்தில் மெய்ப்பொருளாகிய சிவபெருமானை அவன் அருட்கண்ணால் கண்டவிடத்து. பொன்மை..போயிட - உடம்பு முழுவதும் பொன்வண்ணமாகத் திருவடிப் பேறாகிய நன்மை மேலிட நற்கொடிபோலும் அருள் வீழ்ச்சியுண்டாகும். நன்மை - திருவடிப்பேறு. நற்கொடி - திருவருள்.

தழைத்த பகல் - சிறப்புற்ற அந்நாள்.

## 670. நற்கொடி யாகிய நாயகி தன்னுடன்

670. நற்கொடி யாகிய நாயகி தன்னுடன்
அக்கொடி யாகம் அறிந்திடில் ஓராண்டு
பொற்கொடி யாகிய புவனங்கள் போய்வருங்
கற்கொடி யாகிய காமுக னாமே.

திருவருளாற்றலை ஓராண்டுப்பயிற்சியில் தன்னுள்ளத்தே இடையறா நினைப்பாம் தியானத்தால் பெற்றவர், பொற்கொடி ....னாமே - அத் திருவருளால் இயக்கப்பெறும் இருநூற்று இருபத்து நான்கெனும் உலகங்களெல்லாம் எளிதாகப் போய்வருவர். அப்படிப் போய்வந்தாலும் அம் மாயைக்கண் தொடக்குறார். கற்கொடி - கல்லின்கொடிபோன்ற உரனுடைய உள்ளம். காமுகன் - அவ் வுரனுடை யுள்ளத்தை அருளால் விரும்புபவன்.

## 671. காமரு தத்துவ மானது வந்தபின்

671. காமரு தத்துவ மானது வந்தபின்
பூமரு கந்தம் புவனம தாயிடும்
மாமரு வுன்னிடை மெய்த்திடு மானனாய்
நாமரு வும்ஒளி நாயக மானதே.

அழகிய உண்மைப் பொருளானது கைகூடியபின், மாமரு.....மெய்த்திடும் - நினைத்த இடம் செல்லத்தக்க பேரருள் ஆற்றல் தானே வந்து பொருந்தும். மானனாய்....மானதே - திருவருளால் சிவமாம் பெருவாழ்வு பெற்றோய் நாம் அடைதற்குரிய உணர்வொளிப் பெரும் பிழம்பு அச் சிவபெருமானேயாம். மான் - பெரியோன். மா - பெருமை.

## 672. நாயக மாகிய நல்லொளி கண்டபின்

672. நாயக மாகிய நல்லொளி கண்டபின்
தாயக மாகத் தழைத்தங் கிருந்திடும்
போயக மான புவனங்கள் கண்டபின்
பேயக மாகிய பேரொளி காணுமே.

நமக்கு என்றும் மாறாத்தலைவனாம். சிவபெருமான் திருவருள் உணர்ந்தபின், தாயக...திடும் - இவ் வுயிர்கள் அவ் வருள்வெளியாம் திருச்சிற்றம்பலமே நிலைத்த உறைவிடமாகக் கொண்டு வாழும.◌ போயக....கண்டபின் - சென்று விரிந்துகிடக்கும் உலகங்களைக் கண்ட பின், பேயக....காணுமே - தன்வழிச் செலுத்தும் பேய்போன்ற திருவரு
ளாற்றலின் பேரொளி விளங்கும். பேயகம் - புகழ்ந்து பேசப்படும் இடம் என்று கூறுவாருமுளர். அப் பொருளுக்குப் பேசகம் என்பது சகரத்துக்கு யகரம் போலியாக வந்ததாகும்.

தாயகம் - சொந்த இடம். போயகமான - அகலமான. பேயகம் - பேசகம்; புகழ்ந்து பேசும் இடம்.

## 673. பேரொளி யாகிய பெரியஅவ் வேட்டையும்

673. பேரொளி யாகிய பெரியஅவ் வேட்டையும்
பாரொளி யாகப் பதைப்பறக் கண்டவன்
தாரொளி யாகத் தரணி முழுதுமாம்
ஓரொளி யாகிய காலொளி காணுமே.

மிக்க ஒளியாகிய நெஞ்சத்தாமரையை அகலஒடுக்கத்தால் பார்க்கும் சுடரொளியாகக் கண்டவன் தாரொளி...காணுமே - உலக முழுவதும் நேரொளியாகவும், ஒருங்குகாணும் ஒளியாகவும் உயிர்ப் பொளியால் காணுவன்.

பெரிய அவ் ஏடு - பெரிய இதழுள்ள தாமரை, தார் ஒளி - நேர்மையான ஒளி. கால் ஒளி - பிராணவாயுவின் ஒளி.

## 674. காலோ டுயிருங் கலக்கும் வகைசொல்லிற்

674. காலோ டுயிருங் கலக்கும் வகைசொல்லிற்
காலது அக்கொடி நாயகி தன்னுடன்
காலது ஐஞ்ஞூற் றொருபத்து மூன்றையுங்
காலது வேண்டிக் கொண்டஇவ் வாறே.

உயிர்ப்பினுடன் ஆவி இயைந்து இயக்கும் வகையினைச் சொல்லின், ஆலது...தன்னுடன் - எங்கும் நிறைந்த திருவருளாற்றல் நிறைவினுள், காலது....மூன்றையும் - எழுபத்தீராயிரம் நாடிகளில் பெருத்த நாடிகளாகிய ஐஞ்ஞூற்றுப் பதின்மூன்றையும் காலது... வாறே - விரவி இயங்கும் உயிர்ப்பினைத் திருவருள் தன் ஆற்றலில் அடக்கித் தன்வழிச் செலுத்தும்.

காலது 513 - பிராணவாயு வியாபிக்கும் நாடிகளின் தொகை. பெண் - சத்தி.

## 675. ஆறது வாகும் அமிர்தத் தலையினுள்

675. ஆறது வாகும் அமிர்தத் தலையினுள்
ஆறது ஆயிர முந்நூற்றொ டைந்துள
ஆறது வாயிர மாகு மருவழி
ஆறது வாக வளர்ப்ப திரண்டே.

(அலை அதுவாகும் அமிர்தத்து ஆறினுள்) அலைவீசுகின்ற அமிழ்த ஆற்றிலே (அது முதற்பொருள் ஈறு). ஆறது...டைந்துள-; ஆறது...மருவழி - (ஆயிரம் - அளவின்மை) எழுபத்தீராயிரம் நாடிகளாகும் நுண்ணிய செம்மையான வழிகளை. ஆறது...திரண்டே - நன்னெறிக்குய்யும் செவ்வி வழியாக நிலைப்பிப்பது இறைவனும் இறைவியுமாகிய அத்தனும் அன்னையும் செய்யும் ஆரருள் என்க.

ஆறதுவாகும் அமிர்தத் தலையினுள் - அமுத ஆறு பெருகும் தலையினுள். ஆறது...அருவழி - அமுதம் பெருகும் வழிகள் 1305. வளர்ப்பதிரண்டே - விருத்தியாக்குவது சத்தியும் சிவமும்.

## 676. இரண்டினின் மேலே சதாசிவ நாயகி

676. இரண்டினின் மேலே சதாசிவ நாயகி
இரண்டது கால்கொண் டெழுவகை சொல்லில்
இரண்டது ஆயிரம் ஐம்பதோ டொன்றாய்த்
திரண்டது காலம் எடுத்ததும் அஞ்சே.

நெருப்பு மண்டிலம் பகலோன் மண்டிலம் என்னும் இரண்டிற்கும் மேலதாய் விளங்கும் சதாசிவநாயகி என்னும் வேந்துத் தலைவி. இரண்...சொல்லில் - இடதுமூச்சு வலதுமூச்சு என்னும் உயிர்ப்பு நிறைந்து நிற்கும் நாடிகளை ஆய்ந்து சொல்லுங்கால். இரண்...டொன்றாய் - இரண்டான்வரும் உயிர்ப்பு முதன்மையான ஆயிரத்து ஐம்பத்தொன்றாம் நாடிகளில், திரண்டது - நிறைந்து செறிந்தது. கால்...அஞ்சே - கால அளவையைக் கொள்ளத்தக்கது ஐம்பூதத் தொடர் பால் ஐவகைப்பட்ட (677) உயிர்ப்பென்னும் பிராணவாயுவேயாம்.

## 677. அஞ்சுடன் அஞ்சு முகமுள நாயகி

677. அஞ்சுடன் அஞ்சு முகமுள நாயகி
அஞ்சுடன் அஞ்சது வாயுத மாவது
அஞ்சது வன்றி இரண்டது வாயிரம்
அஞ்சது காலம் எடுத்துளும் ஒன்றே.

புலம்பத்தாகலின் திருவருளாற்றலுக்கும் முகம் பத்தாயிற்று; அத்தகைய பத்துத் திருமுகங்களையுடைய அம்மை முதல்வியாவள். புலம் - திசை. அஞ்சுதலுடன் கூடிய திருமுகம் ஐந்தென்றலும் ஆம். அஞ்சுடன் அஞ்சது - பத்துக் காற்றுக்கள். ஆயுதமாவது - அப்பத்துக் காற்றுக்களும் படைக்கருவிகளாகும். அஞ்சது வன்றி - தும்மல், விழி, கொட்டாவி, இமை, வீங்கற்காற்றுக்கள் ஐந்தும் நீங்கிய உயிர்வளி, மலக்காற்று, தொழிற்காற்று, ஒலிக்காற்று, நிரவுகாற்று ஆகிய உயிர்ப்பு, ஐந்தனுள், இரண்டது - இடப்பால் வலப்பால் உயிர்ப்பு இரண்டு; ஆயிர...மொன்றே - ஐயாயிர ஆண்டுகள் பயின்று நடுநாடியின்கண் அடக்கியுள்ள உயிர்ப்பு ஒன்றேயாம்.

## 678. ஒன்றது வாகிய தத்துவ நாயகி

678. ஒன்றது வாகிய தத்துவ நாயகி
ஒன்றது கால்கொண் டூர்வகை சொல்லிடில்
ஒன்றது வென்றிகொள் ஆயிரம் ஆயிரம்
ஒன்றது காலம் எடுத்துளு முன்னே.

திருவருளாற்றல் நடுநாடி உயிர்ப்பினைக்கொண்டு செலுத்தும் வகையினைச் சொன்னால், ஊர்வகை - உடனாய்நின்று நடத்தும் முறை ஒன்றது...முன்னே - அளவிடப்படாத காலங்களுக்குமுன் நடத்தும் என்பதைக் கருதுவாயாக. ஊர்வகை: ஆருயிர்களுடன் பேருயிர் உடனாய் நின்று செலுத்தும் புணர்ப்புப் பண்பு மூன்றனுள் ஒன்றாகும். இதுவே 'இவர் தந்தூர்தல்'.

## 679. முன்னெழும் அக்கலை நாயகி தன்னுடன்

679. முன்னெழும் அக்கலை நாயகி தன்னுடன்
முன்னுறு வாயு முடிவகை சொல்லிடின்
முன்னுறும் ஐம்பத் தொன்றுடன் அஞ்சுமாய்
முன்னுறு வாயு முடிவகை யாமே.

திருவருள் ஆற்றலுடன் மேலோங்கும் உயிர்ப்பு ஐம்பத்தாறு என்னும் கால அளவையைக்கொண்டு முடியும் என்க.

## 680. ஆய்வரும் அத்தனி நாயகி தன்னுடன்

680. ஆய்வரும் அத்தனி நாயகி தன்னுடன்
ஆய்வரு வாயு அளப்பது சொல்லிடில்
ஆய்வரும் ஐஞ்ஞூற்று முப்பதொ டொன்பதும்
ஆய்வரு வாயு வளப்புள் ளிருந்ததே.

உயிர்ப்பின் அளவினைக் கூறுங்கால் அஃது ஐஞ்ஞூற்று முப்பத்தொன்பதாகும். இவை ஒப்பில்லாத திருவருள் முதல்வி தன்னுடன் வரும்.

## 681. இருநிதி யாகிய எந்தை யிடத்து

681. இருநிதி யாகிய எந்தை யிடத்து
இருநிதி வாயு இயங்கு நெறியில்
இருநூற்று முப்பத்து மூன்றுடன் அஞ்சாய்
இருநிதி வாயு இயங்கும் எழுத்தே.

சங்கம் என்னும் எண்ணும் தாமரை என்னும் எண்ணும் கொண்டுள்ள செல்வங்களினும் மிக்குள்ளதாகிய உயிர்ப்பு, 'செல்வன் கழலேத்தும் செல்வமே' மிக்க சிவபெருமான் ஆணையின்வழிச் செல்வது. அவ் வுயிர்ப்பு இயங்கும் சிறந்த நாடிகள் இருநூற்று முப்பத்துமூன்று. அவ் வுயிர்ப்பினை இயக்கும் எழுத்து ஐந்து. எழுத்து ஐந்தும் முறையே நாதம், விந்து, அகர உகர மகரங்கள். நாதத்தை முதல் ஒலி எனவும், விந்துவை ஒலிமுதல் எனவும் கூறுவர். இவற்றை ஒலிவடிவம் வரிவடிவம் எனக் கூறுதலுமாம்.

## 682. எழுகின்ற சோதியுள் நாயகி தன்பால்

682. எழுகின்ற சோதியுள் நாயகி தன்பால்
எழுகின்ற வாயு இடமது சொல்லில்
எழுநூற் றிருபத்தொன் பானது நாலாய்
எழுந்துடன் அங்கி இருந்ததிவ் வாறே.

திருவருளாற்றலால் தோன்றுகின்ற உயிர்ப்பின்நாடிகள் எழுநூற்றிருபத்தொன்பது. அது பலவாறாய் விரிந்து மேற்பட்டு ஒளி மண்டிலங்களுடன் ஒன்றியிருந்தது. நாலாய் - பலவாறாய்.

## 683. ஆறது கால்கொண் டிரதம் விளைத்திடும்

683. ஆறது கால்கொண் டிரதம் விளைத்திடும்
ஏழது கால்கொண் டிரட்டி இறக்கிட
எட்டது கால்கொண் டிடவகை யொத்தபின்
ஒன்பது மாநிலம் ஒத்தது வாயுவே.

மூலமுதற் சொல்லப்படும் ஆறு நிலைகளில் முறைப்படி உயிர்ப்பினை அமைத்தால் உணர்வின்பமாகிய அகச்சுவை தோன்றும். ஏழது... இறக்கிட - உயிர்ப்பினை ஓர் அளவுக்குட்படுத்தி உள்ளிழுத்து இழுத்ததற்கு இரண்டுமடங்கு உள்ளடக்கினால்; எட்டது...யேற்றபின் - அமிழ்த மண்டிலத்தைப் பொருந்தும்படியாக மேற்செலுத்தின், ஒன்பது...வாயுவே - ஒன்பான் ஆற்றல்களாகிய நவசத்திகளும் நின்றியக்கும் நிலைக்களத்தைப் பொருந்தும் உயிர்ப்பு என்க. மேலும் 675 முதல் இது முடிய வுள்ளனவும் இவை போல்வனவும் ஆசான் வாயிலாக ஆசறத்தெரிதல் அனைவர்க்கும் அமையும் நன்றென்ப.

## 684. சந்திரன் சூரியன் தற்பரன் தாணுவிற்

684. சந்திரன் சூரியன் தற்பரன் தாணுவிற்
சந்திரன் தானுந் தலைப்படுந் தன்மையைச்
சந்தியி லேகண்டு தானாஞ் சகமுகத்
துந்திச் சமாதி யுடையொளி யோகியே.

தானாம் சகமுகத்து - ஒற்றுமைநயத்தான் தானாகவே கருதும் உடலின்கண்ணும், அதற்கு வேண்டும் ஊண் உறையுள் முதலியவற்றிற்கு நிலைக்களனாம் உலகின் கண்ணும், உந்தி - (உள்ள பற்றை) நீக்கி மேல்நோக்கி. சமாதி....யோகியே - இறைநிறைவில் அடங்கி அதனால் விளங்கும் திருவருள் ஒளியுடையார் யோகியராவர்.

சந்திரன் சூரியன் - சந்திர கலை; சூரிய கலை. தாணுவின் சந்திரன் - பரம ஆகாயத்திலுள்ள பரமசிவத்துக்குரிய சந்திரன். சந்தியிலே கண்டு - சந்திக்கும்போது தரிசித்து.

## 685. அணங்கற்ற மாதல் அருஞ்சன நீவல்

685. அணங்கற்ற மாதல் அருஞ்சன நீவல்
வணங்குற்ற கல்விமா ஞான மிகுத்தல்
சிணுங்குற்ற வாயர் சித்திதாங் கேட்டல்.
நுணங்கற் றிருத்தல்கால் வேகத்து நுந்தலே.

இறைவன் நற்றாள் தொழுதற்காம் கல்வியும் அதனால் எய்தும் திருவடியுணர்வாம் பெரிய ஞானம் மிகுதிப்படுதலும், சிணுங்குற்...கேட்டல் - அருமறை பேசும் வாயினர்தம் சித்தியினைக் கேட்டலும், நுணங்...நுந்தலே - அசைவற்றிருத்தலும் உயிர்ப்பினை விரைந்து மேலேற்றுதலினாலாம் பயன்.

அணங்கற்றமாதல் - ஆசை ஒழிதல். சிணுங்குற்ற வாயர் -சித்தர்.

## 686. மரணஞ் சரைவிடல் வண்பர காயம்

686. மரணஞ் சரைவிடல் வண்பர காயம்
இரணஞ்சேர் பூமி இறந்தோர்க் களித்தல்
அரணன் திருவுற வாதனமூ வேழாங்
கரனுறு கேள்வி கணக்கறிந் தோனே.

இறப்பினையும் முதுமையினையும் ஒழித்தல், தன்னுடம்பைத் தானே நீத்து ஆவிநீத்த வேறோர் உடம்பினுள் புகுதல், இரணம்.. களித்தல் - பொன்வண்ணமான விண்ணுலகத்தை ஆவி நீத்தோர்க்கு அருளுடனளித்தல் ஏற்படும். அரணன் திருவுருவாதல் - புகலிடமாம் சிவபெருமானின் திருவுருப்பெறுதல். மூவேழாங்...தோனே - வெண்மை செம்மை கருமை என்னும் முப் பண்புகளும் ஞாயிற்றின் ஏழுநிறத்துடன் உறழ இருபத்தொரு நிறமாகும்; அவ் வகையான இருபத்தொரு நிறங்களினும் விரவி மறைந்து நின்றியக்கும் சிவபெருமானை அடைதற்காம் மெய்யுணர்வுக் கேள்வியுடையவர் செந்நெறி வழக்குணர்ந்தவராவர். கரன் - உயிர்தொறும் மறைந்து நிற்கும் கள்வன்; கரப்போன்.

சிறை - சரீரம். இரணம் சேர் பூமி - செல்வம் பொருந்திய நாடு. அரணன் - பரமசிவன். மூவேழாங்கரன் - சூரியன்; சிவன்.

## 687. ஓதம் ஒலிக்கும் உலகை வலம்வந்து

687. ஓதம் ஒலிக்கும் உலகை வலம்வந்து
பாதங்கள் நோவ நடந்தும் பயனில்லை
காதலில் அண்ணலைக் காண இனியவர்
நாதன் இருந்த நகரறி வாரே.

அலையொலிக்கும் கடலாற் சூழப்பெற்ற உலகமெலாம் சூழ்ந்து கால்நோவ வலம்வந்தாலும் நிறைந்த பயனில்லை. காதலி... வாரே - பேரன்பாகிய காதலினால் முழுமுதற் சிவபெருமானைக் காணத்தக்க இனிய மெய்யடியா ரகமுகநாட்டம் செய்வோராவர். அத்தகையோர், ஆருயிர்த்தலைவனாம் சிவபெருமான் அமர்ந்து விளங்கும் அகத்திருக் கோவிலை உணர்வர். நகர் - திருக்கோவில்.

## 688. மூலமுதல் வேதா மாலரன் முன்னிற்கக்

688. மூலமுதல் வேதா மாலரன் முன்னிற்கக்
கோலிய ஐம்முகன் கூறப் பரவிந்து
சாலப் பரநாதம் விந்துத் தனிநாதம்
பாலித்த சத்தி பரைபரன் பாதமே.

ஆறுநிலைகளுக்கும் ஓங்கார முதல்வராம் ஆனைமுகன் (பிள்ளையார்,) அயன், அரி, அரன், ஆண்டான், ஐம்முகன் என ஆறு கடவுளர் சொல்லப்படுவர். ஆண்டான் - மகேசன். ஐம்முகன் - அருளோன்; சதாசிவன். பரவிந்து...பாதமே - நிறைந்த திருவருள், தொழிலும் அறிவும் ஒளியும் ஓசையும் முடிவிடத்தில் நின்று இயக்கும். அதுவே அருளாற்றல். அதுவே பரை; அதுவே பரன் திருவடி. பரவிந்து - அருளொளி. பரநாதம் - அருளோசை.

## 689. ஆதார யோகத் ததிதே வொடுஞ்சென்று

689. ஆதார யோகத் ததிதே வொடுஞ்சென்று
மீதான தற்பரை மேவும் பரனொடு
மேதாதி யீரெண் கலைசெல்ல மீதொளி
ஓதா அசிந்தமீ தானந்த யோகமே.

நிலைக்களம் ஆறினையும் காணும் மனவொருக்கமாகிய யோகத்தினால் அதனைத் தூண்டித் தொழிற்படுத்துந் தெய்வங்களாகிய
ஆனைமுகன், அயன், அரி; அரன், ஆண்டான், ஐம்முகன் என்னும் இவர்கள் துணையுடன் சென்று; மீதான்...செல்ல - மேலான இடத்தில் விளங்கும் திருவருளாற்றல் ஒருகூறாய்ப் பொருந்தியிருக்கும் சிவத்துடன் பதினாறு கலைகள் பொருந்திய திங்கள் மண்டிலத்தையடைய; மீதொளி...யோகமே - மாற்றம் மனம் கழியநின்ற பரவெளி மேலிடத்து ஒடுக்கம் உண்டாம் என்க. யோகம் - ஒடுக்கம்.

## 690. மதியமும் ஞாயிறும் வந்துடன் கூடித்

690. மதியமும் ஞாயிறும் வந்துடன் கூடித்
துதிசெய் பவரவர் தொல்வா னவர்கள்
விதியது செய்கின்ற மெய்யடி யார்க்குப்
பதியது காட்டும் பரமன்நின் றானே.

இடமூச்சு வலமூச்சுக்களை முறைப்படி ஒடுக்கிச் செய்கின்ற அகத்தவத்தோரைத் தொன்மையான வானவர் வணங்குவர். மெய்யடி...றானே - அவரே மெய்யடியாராவர். அவர்க்குத் திருவடி காட்டும் முழுமுதற்சிவனும் முன் நின்றான் என்க.

மதியமும் ஞாயிறும் - இடகலை பிங்கலை.

## 691. கட்டவல் லார்கள் கரந்தெங்குந் தானாவர்

691. கட்டவல் லார்கள் கரந்தெங்குந் தானாவர்
மட்டவிழ் தாமரை யுள்ளே மணஞ்செய்து
பொட்டெழக் குத்திப் பொறியெழத் தண்டிட்டு
நட்டிடு வார்க்கு நமனில்லை தானே.

உயிர்ப்பினை ஒடுக்குந் திறலினர்க்கு எங்கும்ஆம் உணர்ச்சி எய்தும். அதனால், அவர் எங்குந் தாமாவார். மட்டவிழ்... செய்து - மணம் கமழ்கின்ற பரவெளியில் தோன்றும் ஆயிரவிதழ்த் தாமரையின்கண். அன்னை அத்தனாகிய சத்திசிவங்களைக் கலந்துறச் செய்து; பொட்டெழ..தானே - உச்சித்தொளைவழி திறக்கும்படியாக உயிர்ப்பினால் மோதி ஐம்பொறிகள் புறஞ்செலாமல் அகத்தே புலன் கொள்ளுமாறு தண்டாகிய நடுநாடியிற் செலுத்தி நின்றிடுவார்க்குக் கூற்றுத் துன்பம் எய்தாது.

கட்டவல்லார்கள் - பிராணவாயுவைக் கட்டவல்லவர்கள். மட்...குத்தி - சகசிர அறைக்குள்ளே பிரமரந்திர வழி திறக்கும்படி மோதி. பொறி எழ - பொறிகள் விடயங்களில் செல்லாமல். நட்டிடுவார் - நின்றிடுவார்.

## 692. காதல் வழிசெய்த கண்ணுதல் அண்ணலைக்

692. காதல் வழிசெய்த கண்ணுதல் அண்ணலைக்
காதல் வழிசெய்து கண்ணுற நோக்கிடிற்
காதல் வழிசெய்து கங்கை வழிதருங்
காதல் வழிசெய்து காக்கலு மாமே.

நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் தன் திருவடியை எளிதிற்கூட அமைத்தருளிய அன்பு நெறிப்படி அவனை அக்கண்ணால் நோக்கும் மெய்யடியார்களுக்கு நெற்றியமிழ்தமாகிய கங்கை பெருகும். அவ் வழியாக ஆட்கொள்ளுதலுமாம்.

காதல்வழி - அன்புநெறி. கங்கை வழிதரும் - அமுதம் பெருகும்.

## 693. காக்கலு மாகுங் கரணங்கள் நான்கையுங்

693. காக்கலு மாகுங் கரணங்கள் நான்கையுங்
காக்கலு மாகுங் கலைபதி னாறையுங்
காக்கலு மாகுங் கலந்தநல் வாயுவுங்
காக்கலு மாகுங் கருத்துற நில்லே.

அகக்கலன் நான்கையும், அமிழ்தகலை பதினாறையும், உயிர்ப்பினையும் திருவருள் துணையால் அடக்கவல்லார் திருவடியுணர்வில் கருத்தூன்றி நிற்பர்.

கலை பதினாறு - அமுதகலை 16.

## 694. நிலைபெற நின்றது நேர்தரு வாயு

694. நிலைபெற நின்றது நேர்தரு வாயு
சிலைபெற நின்றது தீபமும் ஒத்துக்
கலைவழி நின்ற கலப்பை அறியில்
மலைவற வாகும் வழியிது வாமே.

நடுநாடிவழியாகச் செல்லும் உயிர்ப்பு ஒடுங்கிநின்றது. அது தூண்போன்று அசையாமலும் ஒளிபோன்று விளக்கமாயும் அமைய அமுத கலையிடத்து அம்மையும் அப்பனும் (சத்திசிவம்) இயைந்தியக்கும் எழிலை உணர்ந்தால், மருளானது தெருளாக மாறும். இதுவே தாள் தலைக்கூடும் வழியாகும்.

கலை...கலப்பை - அமுத கலையினிடத்துச் சிவம் சத்தி நின்ற கலப்பை. மலைவு - மயக்கம்.

## 695. புடையொன்றி நின்றிடும் பூதப் பிரானை

695. புடையொன்றி நின்றிடும் பூதப் பிரானை
மடையொன்றி நின்றிட வாய்த்த வழியுஞ்
சடையொன்றி நின்றஅச் சங்கர நாதன்
விடையொன்றி லேறியே வீற்றிருந் தானே.

எங்கும் செறிந்துறையும் உயிர்த்தலைவனாம் சிவபெருமானை, புருவநடுவில் ஊறும் அமிழ்தம் பொங்கிவழியும் வழி, வாய்ப்பாகக் கிடைத்தவிடத்தும், அனைத்தையும் தாங்கும் அருட்சடையோடு விளங்கும் பேரின்பத்தலைவன் அறத்தின் வழிவாம் ஆனேற்றின்மீது வீற்றிருந்தருள்வன். அவ் விறைவனை அகம் புறம் ஒத்து வழிபடுதல் வேண்டும். சடை - திருவாதிரைநாள்; தாங்குமிடம். புடை - செறிவு.

## 696. இருக்கின்ற காலங்கள் ஏதும் அறியார்

696. இருக்கின்ற காலங்கள் ஏதும் அறியார்
பெருக்கின்ற காலப் பெருமையை நோக்கி
ஒருக்கின்ற வாயு வொளிபெற நிற்கத்
தருக்கொன்றி நின்றிடுஞ் சாதக னாமே.

மக்கள் தம் வாழ்நாட்களுள் இதுகாறும் சென்ற நாட்கள் போக எஞ்சி இருக்கின்ற நாட்கள் இவ்வளவு என்றும் அறியார்; மூச்சுப் பயிற்சியினால் வாழ்நாட்களை மிகுதிப்படுத்துதற்குரிய வழியின் பெருமையைப் பார்த்து, வாழ்நாளை அழிக்கும் புறத்துச்செல்லும் உயிர்ப்பினை அடக்கினால் செருக்ககன்ற நன்னெறியில் செல்லும் தொண்டனாவன். ஒருக்குதல் - அழித்தல். சாதகன் - தொண்டன்.

இருக்கின்ற காலம் - இனி வாழுங்காலம்.

## 697. சாதக மானஅத் தன்மையை நோக்கியே

697. சாதக மானஅத் தன்மையை நோக்கியே
மாதவ மான வழிபாடு செய்திடும்
போதக மாகப் புகலுறப் பாய்ச்சினால்
வேதகமாக விளைந்து கிடக்குமே.

தொண்டுநெறியான அத் தன்மையை நோக்கிப் பெருந்தவமாகிய அகவழிபாடு செய்திடுக. பரவெளியில் காணப்படும் ஆயிரம் இதழ்த் தாமரையின்கண் உயிர்ப்பினைச் செலுத்துக. செலுத்தினால் செம்பு முதலியன குளிகையினால் பொன்னாவதுபோல் ஆவியும் சிவனாக விளங்கும். வேதகம் - செம்பு பொன்னாதல்.

போதகமாக - சகசிர அறையில்.

## 698. கிடந்தது தானே கிளர்பயன் மூன்று

698. கிடந்தது தானே கிளர்பயன் மூன்று
நடந்தது தானேஉள் நாடியுள் நோக்கிப்
படர்ந்தது தானே பங்கய மாகத்
தொடர்ந்தது தானேஅச் சோதியுள் நின்றே.

மேலாம் அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று பயனும் விளங்கிக் கிடந்தன. நடந்தது....நோக்கி - உயிர்ப்பு நடுநாடியை நோக்கி நடந்தது. படர்ந்தது....மாக - பரவெளியில் விளங்கும் ஆயிர இதழ்த்தாமரையைச் சார ஆவி இடையறாது நினைந்தது. தொடர்ந்தது... நின்றே - பேரொளி அறிவுப் பிழம்பாம் சிவமுதல் உயிர்க்குயிராய் நின்று தொடர்ந்தது என்க.

## 699. தானே எழுந்தஅத் தத்துவ நாயகி

699. தானே எழுந்தஅத் தத்துவ நாயகி
ஊனே வழிசெய்தெம் உள்ளே யிருந்திடும்
வானோர் உலகீன்ற அம்மை மதித்திடத்
தேனே பருகிச் சிவாலய மாகுமே.

தானே முழுமுதலாகத் தோன்றிய முதல்வி மெய்யாகிய தத்துவங்களைத் தூண்டித் தொழிற்படுத்தும். ஊனே....யிருந்திடும் - அம் முதல்வி அடியேன் நெஞ்சத்து விளங்க அந் நெஞ்சினை அடியேனைக் கொண்டு தூய்மைசெய்து ஆண்டு விளங்கி வீற்றிருப்பள். வானோர் மதித்திட - விண்ணும் மண்ணும் ஒருங்கீன்ற அம்மை திருவடியின்பத்தைக் கடைந்துதர. மதித்திட என்பது மத்தித்திட என்பதன் இடைக்குறை. மத்தித்தல் - கடைதல். தேனே...மாகுமே - சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன் முந்திப்பொழியும் முதல்வன் திருவடியின்பம் நிறைந்த சிவன் திருக்கோவிலாகும்.

## 700. திகழும் படியே செறிதரு வாயு

700. திகழும் படியே செறிதரு வாயு
அழியும் படியை அறிகில ராரும்
அழியும் படியை அறிந்தபின் நந்தி
திகழ்கின்ற வாயுவைச் சேர்தலு மாமே.

பரந்து செல்லும் உயிர்ப்பினை (பிராணவாயு) அடங்கும்படி செய்யுமுறையினை யாரும் அறிகிலர். அறிந்தபின் சிவபெருமான் அவ்வுயிர்ப்பின் மேலதாய்த் திகழ்ந்து விளங்குவன்.

## 701. சோதனை தன்னில் துரிசறக் காணலாம்

701. சோதனை தன்னில் துரிசறக் காணலாம்
நாதனும் நாயகி தன்னிற் பிரியுநாள்
சாதன மாகுங் குருவழிப் பட்டு
மாதன மாக மதித்துக்கொள் ளீரே.

ஆவிகளின் உண்மைநிலையினை ஆண்டவன் அளத்தல் இருளறற் பொருட்டேயாம். சிவபெருமான் அமிழ்தவண்ணன். அவன் மறைப்பாற்றலாகிய ஆதியின்கண் வீழாது குருவாய் வெளிப்படுவன். அக் குருவின் வழிப்பட்டு ஒழுகினால் திருவடிப் பெரும்பேறு எய்துவர். அறிந்து கொள்வீராக. சோதனை - அளத்தல். மாதனம் - திருவடிப்பேறு.

## 702. ஈராறு கால்கொண் டெழுந்த புரவியைப்

702. ஈராறு கால்கொண் டெழுந்த புரவியைப்
பேராமற் கட்டிப் பெரிதுண்ண வல்லிரேல்
நீரா யிரமும் நிலமாயி ரத்தாண்டும்
பேராது காயம் பிரான்நந்தி ஆணையே.

இயல்பாக உயிர்ப்புப் பதினாறுமாத்திரை ஓடிக்கொண்டிருக்கும். அவற்றுள் நான்கு அகமும், முந் நான்கு புறமுமாய் இருக்கும். இப் பன்னிரண்டும் அகமாய் அடங்கிவிட்டால் அஃது உயிர்ப்பின் (பிராணாயாமம்) பெறுபேறாகும். அப் பேறுபெற்றார் அளவில்லாத காலம் நீருள் மூழ்கி யிருந்தாலும் நிலத்தினுள் புதையுண்டிருந்தாலும் உடம்பழியாது வாழ்வர். இது முழுமுதற் சிவனார் அருளாணையாகும்.

## 703. ஓசையில் ஏழும் ஒளியின்கண் ஐந்தும்

703. ஓசையில் ஏழும் ஒளியின்கண் ஐந்தும்
நாசியின் மூன்றும் நாவில் இரண்டுந்
தேசியும் தேசனுந் தன்னிற் பிரியுநாள்
மாசறு சோதி வகுத்துவைத் தானே.

இயல்பாகவே கட்டற்ற முழுமுதற் சிவம் மீண்டும் உலகைப் படைக்க வுன்னினன். அப்பொழுது தன் அருள்வெளியில் தங்கியுள்ள மாயையும் திருவருள் ஆற்றலும் வெளிப்போந்து தொழிற்படுவவாயின. இம் முறைகளை அவனே வகுத்து வைத்தனன். நாவில் இரண்டு - பேச்சுஞ் சுவையும்.

ஓசையில் 7 - சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம், சரித்தல், சேர்த்தல், ஒளியில் 5 - இரசம், உருவம், கந்தம், வெம்மை, தகித்தல். நாசியில் 3 - கந்தம், இடைகலை, பிங்கலை. தேசி - பிராணவாயு. தேனு - சந்தி.

## 704. உடம்பார் அழியில் உயிரார் அழிவர்

704. உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே.

நம் உடம்பு திருவடியுணர்வு பெறுதற்பொருட்டே தரப்பட்டது. அவ் வுடம்பை மெய்யுணர்வு வழியில் பழக்கி அத் திருவடியுணர்வினைப் பெறுதல் வேண்டும். அதனை வீணே அழியவிட்டால் உயிர் பயனடையாது. அது பாற்கலத்தைப் பாலைப் பருகுவதன்முன் அழியவிடுவதை ஒக்கும். அவ் வுடம்பை வளர்க்கும் வழிவகை திருவைந்தெழுத்தெண்ணல். அதனை இடையறாது கணித்துக் கொண்டிருப்பதே உடம்பை வளர்க்கும் உபாயம். அதனாலேயே உயிர் வளர்ச்சியுண்டாம். உயிர்வளர்ச்சி - மெய்யுணர்வு. உபாயம் - வழிவகை. உடம்பார் உயிரார் அவற்றின் சிறப்புநோக்கி உயர்திணை வாய்பாட்டால் கூறப்பட்டன. இஃது அஃறிணை உயர்திணையில் வந்த திணைவழுவமைதி.

## 705. உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்

705. உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டான்என்று
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே.

பாற்கலத்தைப் பால்நோக்கிப் பேணுவதுபோல் உடம்பினுள் சிவபெருமான் உயிர்க்குயிராய்க் கோவில் கொண்டருளினன் என்னும் உண்மையுணர்ந்து அதனை அவனுடைமை என்று பேணுகின்றேன். இவ் வுண்மையுணராதகாலத்து அதனை இழுக்குடையதென்று எண்ணினேன்.

## 706. சுழற்றிக் கொடுக்கவே சுத்தி கழியுங்

706. சுழற்றிக் கொடுக்கவே சுத்தி கழியுங்
கழற்றி மலத்தைக் கமலத்தைப் பூரித்து
உழற்றிக் கொடுக்கும் உபாயம் அறிவார்க்கு
அழற்றித் தவிர்ந்துடல் அஞ்சன மாமே.

உயிர்ப்பினை உள்ளிழுத்து வெளிவிடும் முறைமைச் செயலால் சுடச்சுடரும் பொன்போல் அருள்ஒளி மிகும். அதனால் மலம் கழலும். மலங்கழல நெஞ்சத் தாமரை பொலிவுறும். எழுபத்தீராயிர நாடிகளிலும் சுழன்றுவரும் வழியை அறிபவர்க்கு உடல் துன்பம் தருவதைவிட்டுத் திருவடி இன்பத்தைத்தரும் மந்திர மைப்போல் ஆகும். சுழற்றி - சுழித்து. சுத்தி - புடம். உழற்றி - சுழன்றுவரச் செய்து. அஞ்சனம் - மந்திரமை.

சுழற்றிக் கொடுக்க - பூரித்து இரேசிக்க. அஞ்சனம் - மறைபொருளாகிய சிவத்தைக் காட்டும் மை.

## 707. அஞ்சனம் போன்றுட லையறு மந்தியில்

707. அஞ்சனம் போன்றுட லையறு மந்தியில்
வஞ்சக வாத மறுமத் தியானத்திற்
செஞ்சிறு காலையிற் செய்திடிற் பித்தறும்
நஞ்சறச் சொன்னோம் நரைதிரை நாசமே.

மூச்சுப் பழக்கத்தால் நுண்மை காட்டும் மைப்போல் உடல் தூய்மையுறும். காலைப்பயிலும் மூச்சுப்பழக்கத்தால் பித்தம் நீங்கும். நடுப்பகலிற் பயில்வதால் வாதம் நீங்கும். மாலையிற் பயில்வதால் ஐ (கோழை, கபம்) அறும். இம் மூன்றின் வேறுபாட்டால் உடற்கண் நிகழும் நஞ்சாம் நோய் அணுகாது அறும். அதனால் உடற்கண் நரை திரை தோன்றா.

ஐ - கபம். நஞ்சு அற - விசம் நீங்க.

## 708. மூன்று மடக்குடைப் பாம்பிரண் டெட்டுள

708. மூன்று மடக்குடைப் பாம்பிரண் டெட்டுள
ஏன்ற வியந்திரம் பன்னிரண் டங்குலம்
நான்றவிம் முட்டை யிரண்டையுங் கட்டியிட்
டூன்றி யிருக்க உடம்பழி யாதே.

உச்சுவாசம் - மூச்சை உள்ளிழுத்தல். நிச்சுவாசம் - மூச்சை ஒடுக்குதல். இந் நிகழ்ச்சியைக் குறிப்பால் உணர்த்தும். எழுத்துக்கள் இரண்டு. அவற்றை உவமையில் காட்டும் பாம்பின் நிலை இரண்டு. எழுத்து உகரமும் அகரமும் பாம்பின் நிலை சிறிது தலைநிமிர்தலும், மண்டலித்திருத்தலுமாம். இவற்றைத் தமிழ் வரிவடிவ அமைவே காட்டுவதாகவும், இவற்றை மறைமொழியாக வுணர்த்துவார் பாம்பு இரண்டு எட்டு என்றனர். தமிழ் இரண்டு: 2. எட்டு: 8. இயல்பாகவே உள்ளமைய வேண்டிய மூச்சுப் பன்னிரண்டங்குலம் என்ப. இடப்பால் வலப்பால் வழிச்செல்லும் மூச்சை அடக்கின் உடலழியாது.

மூன்று மடங்கு - இரேசகம், பூரகம், கும்பகம், பாம்பிரண்டெட்டு - உகார அகர வடிவான. உச்சுவாசம் - நிச்சுவாசம். இயந்திரம் - பிராணவாயு. முட்டை யிரண்டு - இடகலை பிங்கலை.

## 709. நூறும் அறுபதும் ஆறும் வலம்வர

709. நூறும் அறுபதும் ஆறும் வலம்வர
நூறும் அறுபதும் ஆறும் இடம்வர
நூறும் அறுபதும் ஆறும் எதிரிட
நூறும் அறுபதும் ஆறும் புகுவரே.

உயிர்ப்பு நூற்றறுபது மாத்திரை இடமூக்கு வலமூக்கு வழியாக உள்ளிழுக்க. ஆறு - ஆறுநிலைகள்; (ஆறாதாரம்) - இவற்றின் வழியாக உயிர்ப்பு உள்ளமைதல். நூறும்...எதிரிட - நடுநாடி வழியாக உயிர்ப்பு மேனோக்கிச் செல்ல. எதிரிட - மேனோக்கிச் செல்ல. நூறும்...புகுவரே - வரையறுக்கப்பட்ட நூறாண்டினையும் மாறும்படி நீண்டநாள் எய்துவர்.

## 710. சத்தியார் கோயி லிடம்வலஞ் சாதித்தான்

710. சத்தியார் கோயி லிடம்வலஞ் சாதித்தான்
மத்தியா னத்திலே வாத்தியங் கேட்கலாம்
தித்தித்த கூத்துஞ் சிவனும் வெளிப்படும்
சத்தியஞ் சொன்னோஞ் சதாநந்தி ஆணையே.

திருவருளாற்றல் உறைந்திருக்கும் உடம்பாகிய கோயிலில் உயிர்ப்பினை வலமூக்கின் வழி நிறுத்தினால்; மத்தி...கேட்கலாம் புருவ நடுவில் பரவெளி ஒலி (நாதம்)யினைக் கேட்கலாம். மத்தியத்தானம்; மத்தியானமென்றாயிற்று. வாத்தியம் - நாதம். தித்தித்...வெளிப்படும் - தித்தித்தா என இசைக்கப்பெறும் தாளத்துக்கேற்பத் திருக்கூத்தியற்றும் சிவனும் வெளிப்படுவன்; சத்தியம்....ஆணையே - ஆண்டவன் அருளாணைவழி உண்மை கூறினோம் என்க.

சத்தியார் கோவில் - தேகம்.

## 711. திறத்திறம் விந்து திகழு மகார

711. திறத்திறம் விந்து திகழு மகார
முறப்பெற வேநினைந் தோதுஞ் சகார
மறிப்பது மந்திர மன்னிய நாத
மறப்பெற யோகிக் கறநெறி யாமே.

விந்துவாகிய தூமாயையினின்று தோன்றும் அகரமும் அதனுடன் பொருந்தும் சகாரமும் (அச: அசபை) மெய்ப்பொருள் நினைந்து ஓதலும்; மறிப்பது...யாமே - மீண்டும் மீண்டும் இடையறாது அவ் வொலியை மறப்பின்றி நினையின் அகத்தவத்தோர்க்கு அறமுறையாகும்.

## 712. உந்திச் சுழியி னுடனேர் பிராணனைச்

712. உந்திச் சுழியி னுடனேர் பிராணனைச்
சிந்தித் தெழுப்பிச் சிவமந் திரத்தினால்
முந்தி முகட்டின் நிறுத்தி அபானனைச்
சிந்தித் தெழுப்பச் சிவனவ னாமே.

கொப்பூழின்கண் தோன்றுகின்ற உயிர்ப்பினைச் 'சிவ சிவ' என நினைந்து உச்சித்தொளையில் நிறுத்திக் கீழ்நோக்கிச் செல்லுங் காற்றைச் செல்லவொட்டாது மேல்நோக்கிச் செலுத்தின், அங்ஙனம் செலுத்துபவன் சிவனாம்தன்மை எய்துவன். முகடு - உச்சித்தொளை. சிவமந்திரம் என்பதனை, முன்மொழி (ஓம்) அல்லது அம்சம் எனவும் கூறுவர். அம்சம் என்பது ஆவியின் மறை என்ப. இம் மறையுணர்ச்சி காணும் வகை: உயிர்ப்பு உள்ளிருந்து வெளிவருங்கால் அம் என்னும் ஓசை உண்டாகும். வெளியிலிருந்து உள்வருங்கால் சம் என்னும் ஓசை கேட்கும். மறை - மந்திரம்.

## 713. மாறா மலக்குதந் தன்மே லிருவிரற்

713. மாறா மலக்குதந் தன்மே லிருவிரற்
கூறா இலிங்கத்தின் கீழே குறிக்கொண்மின்
ஆறா உடம்பிடை அண்ணலும் அங்குளன்
கூறா உபதேசங் கொண்டது காணுமே.

நீங்கா மலம்பொருந்திய எருவாய்க்குமேல் இருவிரலும் குறிக்குக் கீழும் உள்ள இடத்தை உன்னிப் பார்மின்; ஒழியாத உடம்பினுள் முழுமுதல் தலைவனும் அங்கு வெளிப்படுவன். ஊமை எழுத்து அல்லது பேசா எழுத்தினைக்கொண்டு காண்மின். குதம் - எருவாய். இலிங்கம் - குறி. ஆறா - ஒழியாத. கூறா - பேசா.

## 714. நீல நிறனுடை நேரிழை யாளொடுஞ்

714. நீல நிறனுடை நேரிழை யாளொடுஞ்
சாலவும் புல்லிச் சதமென் றிருப்பார்க்கு
ஞாலம் அறிய நரைதிரை மாறிடும்
பாலனு மாவர் பராநந்தி ஆணையே.

திருவருளையே புகலிடமாகக் கைக்கொண்டிருப்பார்க்கு உலகறிய நரை திரை மாறிடும். அருளாகிய தாய்வழி நிற்கும் பொருட் சேய் ஆவர். பாலன் - முருகன்; இவர் சூர்மா கொன்றனர். ஆவிப் பாலர் அருள் துணையால் இருண்மாகொல்வர்.

## 715. அண்டஞ் சுருங்கில் அதற்கோ ரழிவில்லை

715. அண்டஞ் சுருங்கில் அதற்கோ ரழிவில்லை
பிண்டஞ் சுருங்கிற் பிராணன் நிலைபெறும்
உண்டி சுருங்கில் உபாயம் பலவுள
கண்டங் கறுத்த கபாலியு மாமே.

விதை (பீசம்) வாயிலாம் உடனுறைவு (புணர்ச்சி) குறையில் உயிர்ப்புமிகும். அதனால் உடம்புக்கு அழிவில்லை. உணவு அளவிற் சிறிது குறைத்துண்ணின் உயிர்ப்பு மிகுதியாகத் தங்கும். அதனால் சிவ இன்பம் மிகும். பொதுவாக மக்கட்கு உள்ளே போகும் உயிர்ப்பு பத்து விரல். வெளியே போகும் உயிர்ப்பு பன்னிரண்டு விரல். இம் முறை, முறையே நடக்கும்போது இருபத்துநான்கு விரல், ஓடும் போது நாற்பத்திரண்டு விரல், உண்ணும்போது பதினெட்டு விரல், உறங்கும்போது ஐம்பது விரல், உடனுறைவின்போது அறுபது விரல், உயிர்ப்பு வெளிச்செல்லும். விரல் - அங்குலம்.

அண்டம் - பீசம். பிண்டம் - தேகம்.

## 716. பிண்டத்துள் உற்ற பிழக்கடை வாசலை

716. பிண்டத்துள் உற்ற பிழக்கடை வாசலை
அண்டத்துள் உற்று அடுத்தடுத் தேகிடில்
வண்டிச் சிக்கு மலர்க்குழல் மாதரார்
கண்டிச் சிக்குநற் காயமு மாமே.

மூலத்திடத்துள்ள குண்டலியாற்றலை எழுப்பி நடுநாடி வழியாக அடுத்தடுத்துச் செலுத்தினால் உடம்பு பொன்னியலும் மேனியாகும். அம் மேனியினைப்போல் தம் மேனியும் ஆகவேண்டும் என்னும் எண்ணம் வண்டுகள் விரும்பும் மலர்மாலையைக் சூடிய கூந்தலையுடைய பெண்களுக்குக் கண்டதும் உண்டாகும். பிழக்கடை - புழக்கடை.

பிழக்கடை - குதம், குய்யம் இரண்டிற்கும் இடையிலுள்ள வாயில். அண்டத்துள் உற்று - அண்டத்து உள்ளிருந்து வெளிப்படும் வெள்ளியை வீணாத்தண்டுள் விட்டு.

## 717. சுழலும் பெருங்கூற்றுத் தொல்லைமுன் சீறி

717. சுழலும் பெருங்கூற்றுத் தொல்லைமுன் சீறி
சுழலும் இரதத்துள் அங்கியுள் ஈசன்
கழல்கொள் திருவடி காண்குறில்ஆங்கே
நிழலுளுந் தெற்றுளும் நிற்றலு மாமே.

யாவரும் மனமருளும்படி தொன்றுதொட்டே சீற்றத்துடன் வரும் கூற்றுவனைத் தன்னையடைந்தார் பொருட்டுச் சிவபெருமான் சீறியருளுவன். அச் சிவன் நெற்றிநடுவிற் காணப்படும் முக்கோணமாயுள்ள தீயினுள் விளங்குவன். முக்கோணம் தேர்போல் காணப்படுதலால் இரதம் என்று குறிக்கப்பட்டது. கழல்...மாமே - சிவபெருமான் திருவடித்துணைகொண்டு நோக்கினால் அங்கு நிழல்செய்கின்ற அழகிய மண்டபத்துள் என்றும் சிவன் விளங்குவன்.

## 718. நான்கண்ட வன்னியும் நாலு கலையேழுந்

718. நான்கண்ட வன்னியும் நாலு கலையேழுந்
தான்கண்ட வாயுவும் சரீர முழுதொடும்
ஊன்கண்டு கொண்ட உணர்வு மருந்தாக
மான்கன்று நின்று வளர்கின்ற வாறே.

நெற்றிநடுவில் முக்கோண வடிவிற்றாய்ச் சிவபெருமான் வீற்றிருப்பது அவனருளால் அடியேனால் காணப்பட்டதாகும். மேலும் கலை நான்கும் உயிர்ப்பு ஏழும் காணப்பெற்றேன். அதனால் திருவடியுணர்வே உய்யுமருந்தாக உடம்பகத்துக் கண்டுகொண்டேன். மான் கன்றனைய ஆவி உடம்பகத்து நின்று வளருகின்றது.

நான் கண்ட வன்னி - சிவன். நாலு கலை - ஓமரூபி, அகந்தை, நாதை, அநாதை ஏழு - வாயு ஏழு; பஞ்சப் பிராணனோடு இடகலை பிங்கலை. மான்கன்று - சீவன்.

## 719. ஆகுஞ் சனவேத சத்தியை அன்புற

719. ஆகுஞ் சனவேத சத்தியை அன்புற
நீகொள்ளின் நெல்லின் வளர்கின்ற நேர்மையைப்
பாகு படுத்திப் பலகோடி களத்தினால்
ஊழ்கொண்ட மந்திரந் தன்னால் ஒடுங்கே.

ஆவிகளை நன்னெறிப்படுத்த உடனாயுறைந்து நடத்துவிக்கும் மறைப்பாற்றலினிடத்து அவ்வாற்றல் வனப்பாற்றலாக மாறும் படி அவ் ஆவிகள் அன்புசெய்தால், நெல்வித்து ஒன்று ஆயிரக்கணக்காகப் பல்குவதுபோன்று மீட்டும் மீட்டும் வினைக்கீடாகப் பெருகி வரும் உடம்புகளின் எல்லை முடிவு எய்தும். திருவைந்தெழுத்தின் முதலெழுத்தாகிய பேசா எழுத்தின்கண் ஆவி ஒடுங்குதல் முறையாம். பேசா எழுத்து - சிகரம். இதனையே அசபை என்பர்.

சனவேதசத்தி - திரோதாயி. நெல்...மையை - ஒரு நெல்லினின்றும் பல நெல் உற்பத்தியாதல் ஒப்ப. ஊழ்கொண்ட மந்திரம் - அசபா மந்திரம்.

## 720. மதிவட்ட மாக வரையைந்து நாடி

720. மதிவட்ட மாக வரையைந்து நாடி
இதுவிட்டிங் கீரா றமர்ந்த அதனாற்
பதிவட்டத் துள்நின்று பாலிக்குமாறு
மதுவிட்டுப் போமாறு மாயலுற் றேனே.

பன்னிருவிரல் பெருவெளியாகிய மதி எல்லையாகப் புருவ நடுவிலுள்ள மேருவின்கண் ஐந்துநாடிகள் கூடுமிடத்தினின்று நீங்கி நெஞ்சின்கண் பன்னிரண்டு விரல் உயிர்ப்புடன் கூடியிருந்ததனால், சிவன் எழுந்தருளியிருக்கும் பெருவெளியில் தோன்றும் மாறா இன்பத்தேனைப் பருகினேன்; பருக உலகப் பழக்கம். நீங்கிற்று; நீங்கச் சிவனடிக்கீழ் மறைந்தேன்.

மதிவட்டம் - சகசிர அறை. வரை - புருவமத்தி. பதி வட்டம் - சிவம் இருக்கும் இடம். மது - அமுதம்.

# 721. உற்றறி வைந்தும் உணர்ந்தறி வாறேழுங்

721. உற்றறி வைந்தும் உணர்ந்தறி வாறேழுங்
கற்றறி வெட்டுங் கலந்தறி வொன்பதும்
பற்றிய பத்தும் பலவகை நாழிகை
அற்ற தறியா தழிகின்ற வாறே.

தம்கண் உற்றவற்றைத் தனித்தனியுணரும் ஐம்புலவுணர்வின் உண்மையறிந்தவர் நற்குணப் பெருக்கம் ஏழும் நன்கறிவர்; மெய்யுணர்வின் முதல் எட்டையும் பொருந்துவர்; சிவனிலை ஒன்பதையும் சேர்வர். முனைத்துச் செலுத்தும் காற்றுக்கள் பத்தினையும் அடக்குவர். பலகாலங்கள் ஒடுங்கியிருப்பர். அக் காலங்கள் சென்றமையும் அறியார்: ஐந்து : நாற்றம், சுவை, ஒளி, நற்காற்று, வெளி. நற்குணம் ஏழு : ஆட்சி, ஆண்மை, அரும்புகழ், அழியாத் திரு, திருவடியுணர்வு, பற்றின்மை, பரனடிப்பற்று. மெய்யுணர்வுமுதல் எட்டு: "உம்மையின் வாசனைபற்றி முன்னொடுபின் மலைவின்றிப் பொருந்துமாற்றாற் பொருள்களை ஆராய்ச்சிசெய்து உய்த்துணரும் ஞானம் ஒன்று, தன்னைப்பற்றி வருவன, பிற வுயிர்களைப் பற்றி வருவன, தெய்வத்தைப் பற்றி வருவன என்னும் வாயில்களான்வரும் மூவகைத்துக்கத்தான் மடிவுவந்துழி நிகழ்வனவாகிய ஞானம் மூன்று, நட்டோர் கூறும் வாயுறை மொழியான் வரும் ஞானம் ஒன்று, மெய்ப்பொருள் நூல்களைத் தானே ஓதி உணர்தலானும், ஆசிரியனை வழிபட்டு ஓதியுணர்தலானும் வரும் ஞானம் இரண்டு. தான முதலிய நல்வினைகளான் வரும் ஞானம்

ஒன்று." சிவனிலை ஒன்பது: அறிவு, ஆற்றல், ஓசை, ஒளி, அருளோன், ஆண்டான், அழிப்போன், அளிப்போன், அமைப்போன், அறிவு - சிவம், ஆற்றல் - சத்தி. ஓசை - நாதம். ஒளி - விந்து. உயிர்ப்பு: பத்து (300 பக்கம் காண்க).

ஐந்தும் உணர்ந்தறிவார் - புலன்வழிச் செல்லாதார்.

## 722. அழிகின்ற ஆண்டவை ஐயைந்து மூன்று

722. அழிகின்ற ஆண்டவை ஐயைந்து மூன்று
மொழிகின்ற முப்பத்து மூன்றென்ப தாகுங்
கழிகின்ற காலறு பத்திரண் டென்பது
எழுகின்ற ஈரைம்ப தெண்ணற் றிருந்தே.

இத் திருப்பாட்டில் உலகோர் கூறும் உடற்குஉறும் கண்டங்கள் கூறப்படுகின்றன. அவற்றின் ஆண்டுக்கணக்கு இருபத்தைந்து முதல் இருபத்தெட்டு, முப்பது முதல் முப்பத்து மூன்று, அறுபது முதல் அறுபத்திரண்டு, நூறு என்ப. மேலும் பலவுள. அவற்றைக் கோள்நூற்களுட் காணலாம்.

அழிகின்ற ஆண்டு - கண்டங்கள். ஐயைந்து மூன்று - 28 - வது வயது; ஒரு கண்டம். முப்பத்து மூன்று - 33 வது வயது ஒரு கண்டம். அறுபத்திரண்டு - 62 - வது வயது ஒரு கண்டம். ஈரைம்பது - 100 - வது வயது ஒரு கண்டம்.

## 723. திருந்து தினமத் தினத்தி னொடுநின்று

723. திருந்து தினமத் தினத்தி னொடுநின்று
இருந்தறி நாளொன் றிரண்டெட்டு மூன்று
பொருந்திய நாளொடு புக்கறிந் தோங்கி
வருந்துத லின்றி மனைபுக லாமே.

ஆகாநாள்கள்: பிறந்த கிழமை, நாள்மீன் (நட்சத்திரம்), பிறந்தநாள் மீனிலிருந்து ஒன்று, இரண்டு, மூன்று, எட்டாம்நாள் மீன்கள்.

நாள் - மீன்; நட்சத்திரம்.

## 724. மனைபுகு வீரும் மகத்திடை நாடி

724. மனைபுகு வீரும் மகத்திடை நாடி
எனவிரு பத்தஞ்சும் ஈரா றதனால்
தனையறிந் தேறட்டுத் தற்குறி யாறு
வினையறி யாறு விளங்கிய நாலே.

உடம்பினுள் புகுந்த உயிர்நிலை கூறப்படுகிறது. உடல் மெய் இருபத்துநாலு ஆள் ஒன்று ஆக இருபத்தைந்து மெய். இவற்றுடன் கூடிய வுயிர் பன்னிரண்டு விரல் உயிர்ப்புமுறையினால் தன்னையுணரும். அங்ஙனம் உணர்ந்தோர் உயிர்ப்பினை அடக்குவர். மூலம் முதலாகிய ஆறுநிலைகளையும் உணர்வர். கட்டுறுத்தும் வினை காணார். வெளிச்செல்லும் உயிர்ப்பு நான்கினாலேயே உயிர் நீங்கும். மெய் - தத்துவம்.

இருபத்தைந்து - ஆன்ம தத்துவம் 24 - ம் சீவனும். ஈராறு - பன்னிரண்டங்குல சுவாசம். அட்டு - விலக்கி. நாலே - நால்விரல் அளவுள்ள சுவாசம்.

## 725. நாலுங் கடந்தது நால்வரும் நாலைந்து

725. நாலுங் கடந்தது நால்வரும் நாலைந்து
பாலங் கடந்தது பத்திப் பதினைந்து
கோலங் கடந்த குணத்தாண்டு மூவிரண்டு
ஆலங் கடந்ததொன் றாரறி வாறே.

உட்கலன் நான்கையும் செலுத்துவோர் நால்வர். உட்கலம்: அகங்காரம், புத்தி, மனம், எண்ணம் (சித்தம்). நால்வர் முறையே அயன், அரி, அரன், ஆண்டான் எனப்படுவர். நாலைந்து - ஒன்பது : சிவனிலை ஒன்பது. பத்திப்பதினைந்து - பதினஞ்சு பத்தி : தேய்பிறை வளர்பிறைகள். பாலம் - ஆணை. ஆலமுண்ட கண்டத்து அரனார் ஆறுநிலைகளின் திருவுருவமுங் கடந்து ஆவிகளுக்கு எண்குணம் அளித்து அருள்பவராவர். அகங்காரம் - எழுச்சி. புத்தி - இறுப்பு.

நாலும் - கரணங்கள் நாலும். நால்வரும் - பிரமனாதி நால்வரும். நாலைந்து - நவவடிவங்களும். பத்தி பதினைந்து - வளர்பிறை, தேய்பிறை நாட்கள் 15. ஆலங்கடந்ததொன்று - சிவன்.

## 726. ஆறும் இருபதுக் கையைந்து மூன்றுக்குந்

726. ஆறும் இருபதுக் கையைந்து மூன்றுக்குந்
தேறு மிரண்டு மிருபத்தொ டாறிவை
கூறு மதியொன் றினுக்கிரு பத்தேழு
வேறு பதியங்க ணாள்விதித் தானே.

அகத்தவப்பயிற்சியுடையார்க்கு உலகியல் நாட்கள் போன்று அமையாமல் இருபதும் இருபத்தைந்தும் உறழ ஐஞ்ஞூறு ஆகும். இவற்றை ஆறால் உறழ மூவாயிரமாகும். நமக்கு மூவாயிரம் நாட்கள் சென்றால் அவர்கள் நிலைக்கு ஆறுநாட்களா யமையும் போலும். இத்தகைய நிலையினர் ஒருசாரார். வேறு ஒருசாரருக்கு நமக்கு நூற்றறுபத்தாறு நாள்கள் ஒருநாளாகும். மதிவட்டம் வரும் இருபத்தேழு நாட்களும் இவ்வாறு விதித்தனன் என்க.

## 727. விதித்த இருபத்தெட் டொடுமூன் றறையாகத்

727. விதித்த இருபத்தெட் டொடுமூன் றறையாகத்
தொகுத்தறி முப்பத்து மூன்று தொகுமின்
பதித்தெறி பத்தெட்டும் பாரா திகணால்
உதித்தறி மூன்றிரண் டொன்றின் முறையே.

இதில் குறித்து ஓதப்பட்டுள்ள எண்முறைகளும் மேலது போன்றோ வேறோ விளங்கவில்லை. இவ் விரண்டு திருப்பாட்டுக்களின் பொருள் நுட்பங்கள் வல்லார்வாய்க் கேட்டுணர்வதே வாய்ப்பாகும்.

## 728. முறைமுறை யாய்ந்து முயன்றில ராகில்

728. முறைமுறை யாய்ந்து முயன்றில ராகில்
இறையிறை யார்க்கும் இருக்க அரிது
மறையது காரண மற்றொன்று மில்லை
பறையறை யாது பணிந்து முடியே.

உடலோடு கூடி நெடுநாள் இருக்க முயல்வார் முறை முறையாக உயிர்ப்படக்குவதில் பழகுதல் வேண்டும். அங்ஙனம் முயலாவிட்டால் உலகக்கணக்கின்படி வாழ்நாள் முடிவில் ஒருசிறிதும் கூடுதலாக இருக்கமுடியாது. இம் மறைபொருளைப் பறைபோல் வெளிப்படுத்தாது பணிவுடன் பயின்று வாழ்நாளைப் பெருக்குக.

இறை - கொஞ்சம். மறை - மறைந்த. பறை அறையாது - வெளிப்படுத்தாது.

## 729. முடிந்த தறியார் முயல்கின்ற மூர்க்கர்

729. முடிந்த தறியார் முயல்கின்ற மூர்க்கர்
இடிஞ்சில் இருக்க விளக்கெரி கொண்டு
கடிந்தனன் மூளக் கதுவவல் லார்க்கு
நடந்திடும் பாரினில் நண்ணலு மாமே.

உடம்பை நிலைத்திருக்கச் செய்யும் முறைகளை மறைத்து வைத்துள்ள தன்மையை அறியாது முயல்கின்றவர் மூர்க்கர் எனப்படுவர். உடம்பு நிலைத்திருக்க விரும்புவோர் மூலத்தீயின்கண்
உயிர்ப்பினை அடக்குதல் வேண்டும். நில்லாவுலகில் அவ் வுடல் நிலைக்கும் வழியதுவே. இடிஞ்சில்: விளக்கின் அகல் - ஆகுபெயராக உடம்பினைக் குறிக்கும். விளக்கெரி: விளக்குப்போலும் மூலத்தீ. கதுவல் - (உயிர்ப்பினை) அடக்குதல். நடந்திடும் பாரினில் - நில்லாவிலகினில். எண்ணலுமாம் - (அழியாமல்) இருப்பதும் கூடும்.

முடிந்தது - மறைந்து வைத்தது. இடிஞ்சில் - அகல்; ஈண்டுத் தேகம். இருக்க - அழியாது இருக்க. விளக்கெரி - மூலாக்கினி, கதுவல் - (கது - வெடிப்பு) வீணாத்தண்டின் கடைவாசலைத் திறத்தல.◌ நடந்திடும் பார் - அழியும் உலகம். நண்ணல் - நிலைபெறுதல்.

## 730. நண்ணு சிறுவிர னாணாக மூன்றுக்கும்

730. நண்ணு சிறுவிர னாணாக மூன்றுக்கும்
பின்னிய மார்பிடைப் பேராமல் ஒத்திடுஞ்
சென்னியின் மூன்றுக்குஞ் சேரவே நின்றிடும்
உன்னி யுணர்ந்திடும் ஓவியந் தானே.

நெற்றிநடுவில் தோன்றும் மும்முடிச்சும், தலையின்கண் உள்ள திங்கள் ஞாயிறு தீ என்னும் மூன்றுக்கும் தொடர்பாகும். இவற்றை ஓவியம் போன்று உள்ளத்துக் கருதுதல் அருள்நினைவாகும். விரல் - விரலம் என்பதன் திரிபு; நெற்றி. ஓவியம்: சித்திரம். அஃது உவமையாகு பெயராய் உன்மனையைக் குறிக்கும். உன்மனை: உன்மனை என்னும் திருவருளாற்றல்.

சிறு...மூன்று முக்கட்டு - பிரம, விண்டு, உருத்திரக் கட்டுகள் அல்லது கிரந்திகள் அல்லது சுவாதிட்டானம், மணிபூரகம், அனாகதம். சென்னியின் மூன்று - சந்திரன், சூரியன், அக்கினி. உள்ளி....ஓவியம் - உன்மனை.

## 731. ஓவிய மான வுணர்வை அறிமின்கள்

731. ஓவிய மான வுணர்வை அறிமின்கள்
பாவிக ளித்தின் பயனறி வாரில்லை
தீவினை யாமுடன் மண்டல மூன்றுக்கும்
பூவில் இருந்திடும் புண்ணியத் தண்டே.

உயிர்ப்படங்கி அசைவற்றிருக்கும் உணர்வை அறிமின்கள். மீண்டும் பிறப்பதற்கு வாயிலாக இறக்கும் உடம்பினைப்பெற்ற கொடியோர் இவ் வுண்மையினை உணரார். ஞாயிறு திங்கள் தீ என்னும் மண்டிலம் மூன்றும் பரவெளி மண்டிலத்தோடியையுடையன. பரவெளி மண்டிலம் - ஆயிரம் இதழ்த்தாமரை. இம் மூன்றினையும் தாங்கி நிற்பது நடுநாடி. நடுநாடி: சுழுமுனை.

பூவில்....தண்டே - சகசிர அறையிலிருந்து வெளிப்பட்டுள்ள வீணாத்தண்டு.

## 732. தண்டுடன் ஓடித் தலைப்பெய்த யோகிக்கு

732. தண்டுடன் ஓடித் தலைப்பெய்த யோகிக்கு
மண்டல மூன்று மகிழ்ந்துடல் ஒத்திடுங்
கண்டவர் கண்டனர் காணார் வினைப்பயன்
பிண்டம் பிரியப் பிணங்குகின் றாரே.

உயிர்ப்பினை வீணாத்தண்டென்னும் நடுநாடி வழியாகச் செலுத்திப் பிரமரந்திரமாகிய உச்சித்தொளைக்கண் நிறுத்திய அகத்தவத்தோர்க்கு ஞாயிறு திங்கள் தீ என்னும் மூன்றுமண்டலமும் முரணின்றி ஒத்திருக்கும். இம் முறைமையினை உணர்ந்தவரே மெய்யுணர்ந்தோராவர். இவற்றை யுணராதார் ஊழ்வினை வயப்பட்டு பிண்டமாகிய உடல் பிரியப்போகிறதே என்று இறப்புக் காலத்து மிக்க துன்பம் உறுகின்றனர்.

தலைப்பு எய்த யோகி - சகசிர அறையை அடைந்த யோகி; மண்டலம் மூன்று - சந்திரன், சூரியன், அக்கினி. வினைப்பயன் - ஊழ், வல்வினை. பிண்டம் - தேகம்.

## 733. பிணங்கி அழிந்திடும் பேறது கேள்நீ

733. பிணங்கி அழிந்திடும் பேறது கேள்நீ
அணங்குட னாதித்த னாறு விரியின்
வணங்குட னேவந்த வாழ்வு குலைந்து
சுணங்கனுக் காகச் சுழல்கின்ற வாறே.

இறப்புக்காலத்துப் பெரும் துன்பம் அடைவோர் தம் வாழ்நாளை ஞாயிறு நாள்தோறும் அளந்துசெல்லும் விரிந்த வழியென்று உணராதவராவர். அவ் வுணர்வின்மையால் மதிக்கும்படி வந்த வாழ்வும் பாழாய் உடல் நாயுண்ணச் சுமந்து திரிந்த தன்மையராய் மாள்வர்.

# 734. சுழல்கின்ற வாறின் துணைமலர் காணான்

734. சுழல்கின்ற வாறின் துணைமலர் காணான்
தழலிடைப் புக்கிடுந் தன்னு ளிலாமற்
கழல்கண்டு போம்வழி காணவல் லார்க்குக்
குழல்வழி நின்றிடுங் கூத்தனு மாமே.

இடையறாது ஆவிகளைப் பிறப்பு இறப்பாகிய துன்பச் சுழலிற்படுத்தும் செருக்கு, சினம், சிறுமை, இவறல், மாண்பிறந்த மானம், மாணாவுவகை என்னும் ஆறுபகையாகிய குற்றங்களும் அடங்கினால் இறைவன் திருவடித்துணையைக் காண்பர். காணாதவர் தீயிடை வீழ்ந்து அழிவர். தன்னுடம்பில் பற்றுற்று நில்லாமல் திருவடி கண்டு அவ் வழியில் ஒழுகவல்லார்க்கு உயிர்ப்பு உச்சித்தொளைவழி விரும்பியபோது செலுத்தும் அருள் ஏற்படும்.

குழல்வழி - வீணாத்தண்டின் மேலைத்துவாரம், அஃதாவது பிரமரந்திரம்.

## 735. கூத்தன் குறியிற் குணம்பல கண்டவர்

735. கூத்தன் குறியிற் குணம்பல கண்டவர்
சாத்திரந் தன்னைத் தலைப்பெய்து நிற்பர்கள்
பார்த்திருந் துள்ளே அனுபோக நோக்கிடில்
ஆத்தனு மாகி யலர்ந்திடு மொன்றே.

சிவபெருமானது உண்மைத் தன்மைக் காட்சியால் பல நன்மைகளைக் கண்டவர் மெய்ப்பொருள் நூலாகிய சாத்திரத்தை ஓதி அதன்வழியில் நிற்பவராவர். திருவருள்கண்ணாக அறிவினிடத்து உணர்தலாகிய அனுபவம் பார்த்திடில், ஆத்தனாகிய சிவபெருமான் அறிவிற்கறிவாய் ஒன்றாய்நிற்கும் நிலையில் அவன் பரப்பெங்கும் ஆவி நிற்றலால் அவ் ஆவி சிவனும் ஆகும். ஒன்று ஏ அலர்ந்திடும்: எங்கணும் ஒன்றாய்ச் செறிந்திடும். அலர்ந்திடும் - செறிந்திடும்; வியாபகமாகும்.

## 736. ஒன்றில் வளர்ச்சி உலப்பிலி கேளினி

736. ஒன்றில் வளர்ச்சி உலப்பிலி கேளினி
நன்றென்று மூன்றுக்கு நாளது சென்றிடுஞ்
சென்றிடு முப்பதுஞ் சேர இருந்திடிற்
குன்றிடைப் பொன்திகழ் கூத்தனு மாமே.

நடுநாடி ஒன்றில் உயிர்ப்புச் செல்வதாகிய அழிவிலா நிலைவு எய்தின் மூன்று நாடிகளிலும் செல்லுவதால் குறைந்தும் கூடியும் வரும் வாழ்நாள், பெருகும். முப்பத்தாறு மெய்களும் பற்றற்ற நிலையில் உற்றிடின் பொன்மலைக்கண் விளங்கியருளும் கூத்தனாகிய சிவனுமாவன். பொன் மலை ஈண்டு நடுநாடியாகும். முப்பதும் சேர என்பதன்கண் உள்ள உம்மையால் எஞ்சிய ஆறும் கூட்டி முப்பத்தாறு மெய்களெனக் கொள்ளப்பட்டது. மெய் - தத்துவம்.

ஒன்றில் - சுழுமுனை நாடி ஒன்றில். மூன்றுக்கு - மூன்று நாடிகளுக்கு. நாள் - வாழ்நாள்.

## 737. கூத்தவன் ஒன்றிடுங் கூர்மை அறிந்தங்கே

737. கூத்தவன் ஒன்றிடுங் கூர்மை அறிந்தங்கே
ஏத்துவர் பத்தினில் எண்டிசை தோன்றிடப்
பார்த்து மகிழ்ந்து பதுமரை நோக்கிடிற்
சாத்திடு நூறு தலைப்பெய்ய லாமே.

சிவபெருமான் நெஞ்சமாகிய அனாகதத்தின்கண் இடையறாது இயற்றும் திருக்கூத்தின் உண்மைகண்டு தொழுவார், மெய்யுணர்ந்தோராவர். அவர் பத்தெழுத்துச் சேர்ந்திருக்கும் இடமாகிய அந் நெஞ்சத்திடமாக நின்று அறிவான் நோக்குவர். அவர்க்கு எட்டுத் திசைப்பொருள்களும் இயல்பாகத் தோன்றும். அவற்றைக் கண்டு களிகூர்ந்து, ஆயிர இதழ்த்தாமரை என்று சொல்லப்படும் பரவெளியில் விளங்கும் சிவபெருமானை அருளால் காண்பர். கண்டால் நூல்கள் கூறும் அகவை நூறும் எய்துவர்.

பத்தினில் - பத்து அக்கரங்கள் கூடும் அனாகதத்தில். பதுமர் - சிவபெருமான். நூறு தலைப்பெய்தலாம் - நூறு வயது இருக்கலாம்.

## 738. சாத்திடு நூறு தலைப்பெய்து நின்றவர்

738. சாத்திடு நூறு தலைப்பெய்து நின்றவர்
காத்துடல் ஆயிரங் கட்டுறக் காண்பர்கள்
சேர்த்துடல் ஆயிரஞ் சேர இருந்தவர்
மூத்துடன் கோடி யுகமது வாமே.

மேற்கூறியபடி நூறு ஆண்டுகள் வாழ்ந்தவர் அம் முறையானே ஆயிரம் ஆண்டுகள் வாழ்வர். ஆயிரம் ஆண்டுகள் வாழ்ந்தவர் அறிவு முதிர்ந்து ஊழியும் காண்பர். ஊழி - உகமுடிவு; உலகமுடிவு.

காத்து....காண்பர் - பல ஆயிர ஆண்டுகள் காண்பர். மூத்து - அறிவில் முதிர்ந்து.

## 739. உகங்கோடி கண்டும் ஒசிவற நின்று

739. உகங்கோடி கண்டும் ஒசிவற நின்று
அகங்கோடி கண்டு எயலறக் காண்பர்கள்
சிவங்கோடி விட்டுச் செறிய இருந்தங்கு
உகங்கோடி கண்டங் குயருறு வாரே.

ஊழிகளைப் கோடிகோடியாகக் கண்டும் தளர்வின்றி நிற்றலால் உள்ளத்திடத்துச் சிவபெருமானை வேறறக் காண்பர். முடிந்த இடமாகிய சிவபெருமானைக் கண்டவர்கள் தன்முனைப்பற்றுச் சிவபெருமானுடன் புணர்ந்துநின்று அளவில் கோடி உகங்கண்டு உயர்வற உயர்நலம் எய்துவர். நின்று என்பது நிற்ப எனத் திரிந்து நின்றது.

சிவங்கோடி - சிவமே முடிந்த இடமாக.

## 740. உயருறு வாருல கத்தொடுங் கூடிப்

740. உயருறு வாருல கத்தொடுங் கூடிப்
பயனுறு வார்பலர் தாமறி யாமற்
செயலுறு வார்சிலர் சிந்தையி லாமற்
கயலுறு கண்ணியைக் காணகி லாரே.

உயர்ந்தோர் சிலர். உலகோர்போலத் தம்மிழப்புடன் செயல் செய்வர்; (அதனால் வினைப்பயனால் கட்டுண்ணார்.) பலர் இம்மை மறுமையில் எண்ணமில்லாமல் உலகத்தோடுங் கூடிய பிறப்புப்பயனையே அடைவர். அவர் அங்கயற்கண்ணியாம் அம்மையை உணரமாட்டார்.

செயல் உறுவார் - கன்மங்களைச் செய்வார்.

## 741. காணகி லாதார் கழிந்தோடிப் போவர்கள்

741. காணகி லாதார் கழிந்தோடிப் போவர்கள்
நாணகி லாதார் நயம்பேசி விடுவர்கள்
காணகி லாதார் கழிந்த பொருளெலாங்
காணகி லாமற் கழிகின்ற வாறே.

திருவருளைக் காணப்பெறாதார் மீண்டும் பிறத்தற் பொருட்டு மாள்வர். பிறவி எடுப்பதில் நாணங்கொள்ளாதவர் உலக நயங்களைப் பேசிக் கழிவர் (நூல்நயங்கள் எனினும் அமையும்). மெய்ப் பொருளுண்மை காணமாட்டாதார் கழிந்த பொருள்களின் நிலையாமையை அறியாத்தன்மையரே யாவர்.

## 742. கழிகின்ற அப்பொருள் காணகி லாதார்

742. கழிகின்ற அப்பொருள் காணகி லாதார்
கழிகின்ற அப்பொருள் காணலு மாகுங்
கழிகின்ற வுள்ளே கருத்துற நோக்கிற்
கழியாத அப்பொருள் காணலு மாமே.

உடலைவிட்டுச் செல்லும் ஆவித்தன்மையின் உண்மை உணராதார், திருவருள் துணையால் அதனைக் காணுதலுமாகும். கழியும் உடம்பினுள்ளே ஆழ்ந்து அசைவறநின்று நோக்கின் என்றும் யாண்டும் நீங்காது உடனுறையும் சிவமுதலைக் காணுதலுமாகும்.

கழிகின்ற...பொருள் - சீவன். கழியாத....பொருள் சிவன்.(23)

## 743. கண்ணன் பிறப்பிலி காணந்தி யாயுள்ளே

743. கண்ணன் பிறப்பிலி காணந்தி யாயுள்ளே
எண்ணுந் திசையுடன் ஏகாந்த னாயிடுந்
திண்ணென் றிருக்குஞ் சிவகதி யாநிற்கும்
நண்ணும் பதமிது நாடவல் லார்கட்கே.

முக்கண்ணனாகிய சிவபெருமான் என்றும் பிறவாதவன். ஆவியினகத்துள் புணர்ந்துநிற்பவன். எல்லாத் திசைகளிலும் ஒன்றியிருப்பவன். அவனை உறுதியாக எண்ணின் ஆவி சிவன்நிலையாகவே நிற்கும். இதுவே எவர்க்கும் முடிந்த முடிபாகிய நிலையாகும். இவ்வுண்மை நாடவல்லார் அரியர் என்ப.

கண்ணன் - முக்கண்ணன், சிவன்.

## 744. நாடவல் லார்க்கு நமனில்லை கேடில்லை

744. நாடவல் லார்க்கு நமனில்லை கேடில்லை
நாடவல் லார்கள் நரபதி யாய்நிற்பர்
தேடவல் லார்கள் தெரிந்த பொருளிது
கூடவல் லார்கட்குக் கூறலு மாமே.

திருவருள் துணையால் அறிவுக்கு அறிவாம் சிவனை இடையறாது நினைக்கும் நினைப்பாகிய நாட்டமுள்ளார்க்கு இறப்பில்லை; பிறப்பில்லை. அம் மெய்யுணர்வுத் திருவினர் வையத்து வாழும் தெய்வமாகக் கொள்ளப்பெறுவர். மெய்ப்பொருள் நாடவல்லார் அறுதியிட்டு ஆய்ந்த பொருளிதுவாகும். சிவபெருமானுடன் இரண்டறக்கூடும் திருவருள்பெற்ற திறலினர் எய்தும் பேரின்பப் பெருவாழ்வு சொல்லில் அடங்குவதன்று.

நரபதி - மனிதர்களுக்குள் சிறந்தவர்.

## 745. கூறும் பொருளி தகார வுகாரங்கள்

745. கூறும் பொருளி தகார வுகாரங்கள்
தேறும் பொருளிது சிந்தையுள் நின்றிடக்
கூறு மகாரங் குழல்வழி யோடிட
ஆறும் அமர்ந்திடும் அண்ணலு மாமே.

மெய்ப்பொருள் நூற்களில் கூறும் பொருள் அகரம் சிவபெருமானாகும். உகரம் ஆவி ஆகும். தெளியவேண்டிய உண்மைப் பொருளும் இவையாகும். இப் பொருள்நாட்டம் நெஞ்சத்து உரம் பெற்று நிற்க, மகரமாகிய (நாதம்) ஓசை நடுநாடி வழியாக வெளிப்பட, உடம்பகத்துள்ள தாங்கல் ஐந்தொழில் சார்தலாம் நிலைக்களமாதலின் கண்ணும் உறைந்திடும் சிவபெருமான் திருவருள் புரிவன். ஆவிகள் அவனாக விளங்கும்.

## 746. அண்ணல் இருப்பிட மாரும் அறிகிலர்

746. அண்ணல் இருப்பிட மாரும் அறிகிலர்
அண்ணல் இருப்பிடம் ஆய்ந்துகொள் வார்களுக்
கண்ணல் அழிவின்றி உள்ளே அமர்ந்திடும்
அண்ணலைக் காணில் அவனிவ னாகுமே.

அண்ணலாகிய சிவபெருமான் ஆவியுடன் கலந்துறையும் உண்மைநிலையை யாரும் தம்மறிவால் தெளிந்திலர். திருவருள் துணையால் அவ் வுண்மைநிலையைத் தெளிவார்க்கு அண்ணல் மறைவின்றி அறிவுக்கறிவாய் விளங்கி வெளிப்படுவன். அங்ஙனம் வெளிப்படின் சிவன்நிறைவினுள் கோலத்தினுள் கோலங்கொள்வார். அடங்கு மாறுபோல ஆவியடங்க அக் கோலமே கோலியாகாத் திகழ்வதுபோல் ஆவியாகிய இவன் சிவனாகவே திகழ்வன். அழிவின்றி - மறைவின்றி உள்ளே அமர்ந்திடும் - அறிவுக்கு அறிவாய் வெளிப்படும்.

## 747. அவனிவ னாகும் பரிசறி வாரில்லை

747. அவனிவ னாகும் பரிசறி வாரில்லை
அவனிவ னாகும் பரிசது கேள்நீ
அவனிவ னோசை ஒளியினுள் ஒன்றிடும்
அவனிவன் வட்டம தாகிநின் றானே.

சிவன் ஆவியாய்நிற்கும் மெய்ந்நிலையை அறிவார் அரியர். அவனிவனாகும் பரிசினைக் கேட்பாயாக. ஓசையும் ஒளியும்போல் சிவனும் ஆவியும் கலந்து நிற்கும். அஃது ஓ மொழியின்கண் அகரம், உகரம், மகரம், ஒளி (விந்து), ஓசை (நாதம்) கலந்து வட்டமாய் நிற்பதையொக்கும். அவனிவனாகும் தன்மை ஒட்டில் உண்டாகும். ஒட்டு - திருவடிப்பேறு. கட்டில் இவன் அவனாகும். இது 'கட்டுங்கால் நார் முன்னாம் கண்ணிக்கால் பூமுன்னாம், ஒட்டிலிறை முன்னுயிர்பின் ஓது' என்பதனால் உணர்க. நார் - ஆர்உயிர். பூ - பேர் உயிராம் சிவன்.

ஓசை - நாதம். வட்டம் - பிரணவம்.

## 748. வட்டங்க ளேழு மலர்ந்திடும் உம்முளே

748. வட்டங்க ளேழு மலர்ந்திடும் உம்முளே
சிட்டன் இருப்பிடஞ் சேர அறிகிலீர்
ஒட்டி யிருந்துள் உபாயம் உணர்ந்திடக்
கட்டி இருப்பிடங் காணலு மாகுமே.

நிலைகள் ஆறும் மேலுள்ள திங்கள் மண்டிலமும் ஆகிய ஏழுவட்டங்கள் ஏழும் ஆவியினுள் மலர்ந்திடும். ஆண்டு எழுந்தருளியுள்ள சிவன்நிலை யுணர்கிலீர். திருவருளோடு உடனாய் நின்று உணர்ந்திடக் கட்டியாகிய சிவபெருமான் நிலையினைக் காணலாகும்.

வட்டங்கள் ஏழு - ஆதாரங்கள் ஆறும் சகசிர அறையாகிய மதிமண்டலமும் ஆக ஏழு. கட்டி - கருப்புக்கட்டி போன்ற சிவம்.

## 749. காணலு மாகும் பிரமன் அரியென்று

749. காணலு மாகும் பிரமன் அரியென்று
காணலு மாகுங் கறைக்கண்டன் ஈசனைக்
காணலு மாகுஞ் சதாசிவ சத்தியுங்
காணலு மாகுங் கலந்துடன் வைத்ததே.

சிவபெருமானைப், படைப்போனாகவும், காப்போனாகவும், துடைப்போன் மறைப்போன் அருள்வோனாகவும் காணுதல் ஆகும். இத் திருவுருவங்கள் திருவருளாற்றலுடனும் ஆவியுடனும் சிவபெருமான் உடங்கியைந்து தோற்றியனவாகும். கறைக்கண்டன் - துடைப்போன். ஈசன் - மறைப்போன். சதாசிவம் - அருளோன். சத்தி - திருவருளாற்றல்.

## 750. வைத்தகை சென்னியில் நேரிதாய்த் தோன்றிடில்

750. வைத்தகை சென்னியில் நேரிதாய்த் தோன்றிடில்
உத்தம மிக்கிடில் ஓராறு திங்களாம்
அத்த மிகுத்திட் டிரட்டிய தாயிடில்
நித்தல் உயிர்க்கொரு திங்களில் ஓசையே.

உயிர்ப்போசையானது உச்சிக்கு நேரே அளவாய்த் தோன்றிடில் முதன்மை நிலையாகும். அளவின் மிகுமானால் ஆறு திங்களில் அகவை முடிவெய்தும். அதுவும் இரண்டுமடங்காயின் ஒரு திங்களில் அகவை முடிவெய்தும் என்க.

அத்தம் -கை.

## 751. ஓசையும் ஈசனும் ஒக்கும் உணர்வின்கண்

751. ஓசையும் ஈசனும் ஒக்கும் உணர்வின்கண்
ஓசை யிறந்தவர் ஈசனை உள்குவர்
ஓசை யிறந்தவர் நெஞ்சினுள் ஈசனும்
ஓசை யுணர்ந்த வுணர்விது வாமே.

அறிவுருவாகிய சிவபெருமான் உயிர்ப்பின்கண்ணும் திருவுருவின்கண்ணும் ஒப்ப விளங்குவர். உயிர்ப்பை அடக்கியவர் இறைவனை எண்ணுவர். அங்ஙனம் உயிர்ப்படக்கியவர் நெஞ்சினுள் இறைவனும் ஆவியறிவுடன் ஒன்றித்து மேம்பட்டு விளங்குவன். ஓசை - உயிர்ப்பு. இறந்தவர் - உயிர்ப்பை அடக்கியவர்.

ஓசை இறந்தவர் - மனம் அடங்கப்பெற்றவர்.

## 752. ஆமே அழிகின்ற வாயுவை நோக்கிடில்

752. ஆமே அழிகின்ற வாயுவை நோக்கிடில்
நாமே லுறைகின்ற நன்மை யளித்திடும்
பூமேல் உறைகின்ற போதகம் வந்திடும்
தாமே யுலகில் தலைவனு மாமே.

உயிர்ப்பினர்க்கு வெளியில் புறப்பட்டுச்சென்று அழிகின்ற நால்விரல் உயிர்ப்பையும் அடக்கின், அஃது அண்ணாக்கு மேனோக்கி எழுந்து மூக்குவழியினை அடைக்கும் நன்மையினைத் தரும். பரவெளி ஆயிர இதழ்த்தாமரைமேல் விளங்கும் திருவடியுணர்வு கைகூடும். அவ்வுணர்வு கைகூடியவர் செந்நெறித் தலைவருமாவர். போதகம் - திருவடியுணர்வு.

## 753. தலைவ னிடம்வலஞ் சாதிப்பார் இல்லை

753. தலைவ னிடம்வலஞ் சாதிப்பார் இல்லை
தலைவ னிடம்வல மாயிடில் தையல்
தலைவ னிடம்வலந் தன்வழி யஞ்சில்
தலைவ னிடம்வலந் தன்வழி நூறே.

தலைவனருளால் உயிர்ப்பினை இடமூக்கு வலமூக்கு வழியாகச் செலுத்தவேண்டிய முறைப்படி செலுத்திப் பயிற்சிசெய்யின் நெடுநாள் வாழலாம். அங்ஙனம் செய்வார் அரியர். அப் பயிற்சி செய்வார்க்குத் திருவடி கைகூடும். இம்முறைப் பயிற்சி நாடொறும் ஐவைந்து நாழிகைகள் பயிலின் அகவையும் நூறாகும். அஞ்சில் - ஐந்து நாழிகையில். உயிர்ப்பும் ஐவிரலின் அளவினதாகும்.

இடம் வலம் சாதிப்பார் - பிராணாயாமத்தைச் சரியாய்ச் செய்து முடிப்பவர்.

## 754. ஏறிய வாறினில் எண்பது சென்றிடுந்

754. ஏறிய வாறினில் எண்பது சென்றிடுந்
தேறிய ஏழிற் சிறக்கும் வகையெண்ணில்
ஆறொரு பத்தாய் அமர்ந்த இரண்டையுந்
தேறியே நின்று தெளியிவ் வகையே.

அவ் வுயிர்ப்பு ஆறு விரலளவாக ஒழினால் அகவை எண்பதாகும். ஏழானால் அறுபதாண்டு வாழ்வர்.

## 755. இவ்வகை எட்டும் இடம்பெற ஓடிடில்

755. இவ்வகை எட்டும் இடம்பெற ஓடிடில்
அவ்வகை ஐம்பதே யென்ன அறியலாஞ்
செவ்வகை ஒன்பதுஞ் சேரவே நின்றிடின்
மூவ்வகை யாமது முப்பத்து மூன்றே.

அவ் வுயிர்ப்பு எண்விரலளவாக ஓடினால் நாற்பத்தைந்தாண்டு வாழ்வர். ஒன்பது விரலளவாக ஓடினால் முப்பத்து மூன்றாண்டு வாழ்வர்.

## 756. மும்மூன்றும் ஒன்றும் முடிவுற நின்றிடில்

756. மும்மூன்றும் ஒன்றும் முடிவுற நின்றிடில்
எண்மூன்றும் நாலும் இடவகை யாய்நிற்கும்
ஐம்மூன்றும் ஓடி அகலவே நின்றிடற்
பன்மூன்றொ டீராறு பார்க்கலு மாமே.

சரவோட்டம் பத்து எண்வரை நின்று முடிவுபெறில் இருபத்தெட்டு ஆண்டு அகவை என்பர். பதினைந்து ஓடி அகன்று நிற்பின் அகவை இருபத்தைந்தென்ப.

## 757. பார்க்கலு மாகும் பகல்முப் பதுமாகில்

757. பார்க்கலு மாகும் பகல்முப் பதுமாகில்
ஆக்கலு மாகுமவ் வாறிரண் டுள்ளிட்டுப்
போக்கலு மாகும் புகலற ஒன்றெனில்
தேக்கலு மாகுந் திருத்திய பத்தே.

பகல் முப்பது நாழிகையும் பன்னிரண்டு கூறிட்டுச் சரவோட்ட எண்ணை மேலோதியவாறு பகுந்து ஒழுகுதல் வேண்டும். ஒற்றைப்பட எண் வருமானால் அவற்றை இரட்டைப்பட வருமாறு அமைத்துக்கொள்ளுதல் வேண்டும்.

## 758. ஏயிரு நாளும் இயல்புற ஓடிடிற்

758. ஏயிரு நாளும் இயல்புற ஓடிடிற்
பாயிரு நாளும் பகையற நின்றிடும்
தேய்வுற மூன்றுந் திகழவே நின்றிடில்
ஆயுரு வாறென் றளக்கலு மாமே.

பொருந்திய நாட்கள் இரண்டிலும் இயற்கைமுறையாக ஓடினால் அந் நாட்கள் அகப்பகை புறப்பகை இல்லாதகலும், ஓட்டம் இளைத்து மூன்றெண்ணுக்கு வருமானால் ஆராயப்படும் உருவவகை யென்று ஆராய்ந்து கூறலுமாம்.

## 759. அளக்கும் வகைநாலும் அவ்வழி யேஓடில்

759. அளக்கும் வகைநாலும் அவ்வழி யேஓடில்
விளக்கும் ஒருநாலு மெய்ப்பட நிற்கும்
துளக்கும் வகையைந்துந் தூய்நெறி ஓடில்
களக்க மறமூன்றிற் காணலு மாமே.

ஆராயும் அவ் வோட்டம் நான்காக ஓடினால் விளக்கமுற அவ்வொரு நான்கும் மெய்க்கண் பொருந்திநிற்கும். அவ் வசைவு ஐந்தாக ஓடினால் குற்ற மூன்றில் முடிவதையும் காணலாம்.

## 760. காணலு மாகுங் கருதிய பத்தோடிற்

760. காணலு மாகுங் கருதிய பத்தோடிற்
காணலு மாகுங் கலந்த இரண்டையும்
காணலு மாகுங் கலப்பற மூவைந்தேற்
காணலு மாகுங் கருத்துற ஒன்றே.

அவ் வோட்டம் பத்தாயின் பகை உறவு இரண்டினையும் காணலாம். பதினைந்து ஓடின் கருத்திற் பொருந்த உறவொன்றே காணலாகும்.

## 761. கருதும் இருபதிற் காணஆ றாகும்

761. கருதும் இருபதிற் காணஆ றாகும்
கருதிய ஐயைந்திற் காண்பது மூன்றாம்
கருதும் இருப துடனாறு காணிற்
கருதும் இரண்டெனக் காட்டலு மாமே.

இருபது ஓடினால் அறுவகை நிலைகள் காணலாகும். இருபத்தைந்தேல் மூவகை நிலைகளாகும். இருபத்தாறேல் இரண்டு நிலைகள் காணலாகும்.

## 762. காட்டலு மாகுங் கலந்திரு பத்தேழில்

762. காட்டலு மாகுங் கலந்திரு பத்தேழில்
காட்டலு மாகுங் கலந்தெழும் ஒன்றெனக்
காட்டலு மாகுங் கலந்திரு பத்தெட்டிற்
காட்டலு மாகுங் கலந்தவு ரைந்தே.

இருபத்தேழில் கலந்து தோன்றும் ஒருநிலை காணலாம்.
இருபத்தெட்டில் ஏழுநிலைகள் காணலாம்.

## 763. ஈரைந்தும் ஐந்தும் இருமூன்றும் எட்டுக்கும்

763. ஈரைந்தும் ஐந்தும் இருமூன்றும் எட்டுக்கும்
பாரஞ்சீ நின்ற பகைபத்து நாளாகும்
வாரஞ்செய் கின்ற வகையாறஞ் சாமாகில்
ஓரஞ்சொ டொன்றொன் றெனவொன்று நாளே.

இருபத்தொன்பதானால் பத்துநாட்களுக்குள் பகையாகும்.
முப்பதாகில் ஏழுநாட்களுள் பகையாகும்.

## 764. ஒன்றிய நாள்கள் ஒருமுப்பத் தொன்றாகிற்

764. ஒன்றிய நாள்கள் ஒருமுப்பத் தொன்றாகிற்
கன்றிய நாளுங் கருத்துற மூன்றாகுஞ்
சென்றுயிர் நாலெட்டுஞ் சேரவே நின்றிடின்
மன்றியல் பாகு மனையில் இரண்டே.

பொருந்திய நாட்களில் முப்பத்தொன்றாகில் மூன்று நாட்களுள் கன்றுதல் ஏற்படும். முப்பத்திரண்டு நின்றிடில் இரண்டு நாட்களுக்குள் பொதுமை ஏற்படும்.

## 765. மனையில்லொன் றாகும் மாதமு மூன்றுஞ்

765. மனையில்லொன் றாகும் மாதமு மூன்றுஞ்
சுனையில்லொன் றாகத் தொனித்தனன் நந்தி
வினையற வோங்கி வெளிசெய்து நின்றால்
தனையுற நின்ற தலைவனு மாமே.

முப்பத்து மூன்றானால் அருளில் ஒன்றுபடும் என நந்தி அருளினன். தற்செயலற்று அருள்வழிநின்றால் தலைவனைச் சாரும் தனி இயல்புண்டாகும். மாதமும் - முப்பதும்: இது தொகைக்குறிப்பு.

## 766. ஆரு மறியார் அளக்கின்ற வன்னியை

766. ஆரு மறியார் அளக்கின்ற வன்னியை
ஆரு மறியார் அளக்கின்ற வாயுவை
ஆரு மறியார் அழிகின்ற அப்பொருள்
ஆரு மறியா அறிவறிந் தேனே.

அகத்துக் காணப்படும் தீயை அளப்பதும், காற்றை யளப்பதுமாகிய நிலைகளை யாரும் அறியார். அப் பொருள்கள் அழிவு பாடுடையன என்றும் யாரும் அறியார். அடியேன் திருவருள் துணையால் அவற்றையறியும் அறிவறிந்தேன்.

## 767. அறிவது வாயுவொ டைந்தறி வாய

767. அறிவது வாயுவொ டைந்தறி வாய
அறிவா வதுதான் உலகுயி ரத்தின்
பிரிவுசெ யாவகை பேணியுள் நாடிற்
செறிவது நின்று திகழு மதுவே.

காற்றெலாம் ஒடுங்கி அவற்றுடன் ஏனைய நான்கு பூதமுங்கூட ஐந்தனையும் அருளால் உணர்தல்வேண்டும். வேரறநிற்கும் சிவபெருமானை அகத்தே பேணிநாடுதல் வேண்டும். அப்பொழுது அச்சிவன் செறிந்து விளங்குவன். செறிந்து - நிறைந்து.

## 768. அதுவரு ளும்மரு ளான துலகம்

768. அதுவரு ளும்மரு ளான துலகம்
பொதுவரு ளும்புக ழாளர்க்கு நாளும்
மதுவரு ளும்மலர் மங்கையர் செல்வி
இதுவருள் செய்யும் இறையவ னாமே.

அகத்திருள் நீங்க வினைக்கீடாக மருளான உலகைப் படைத்தருளும். திருவடியைப் புகழ்வார்க்குப் பொதுநிலை அருளப்படும். தேன்நிறைந்த மலர் சூடிய மங்கையர் செவ்வி வாய்க்கும். இதை யருள்வது இறைவனாகும்.

## 769. பிறப்பது சூழ்ந்த பெருந்தகை நந்தி

769. பிறப்பது சூழ்ந்த பெருந்தகை நந்தி
குறிப்பது கூடிய கோலக் குரம்பைப்
பழுப்பதி யாவது பற்றறும் பாசம்
அழுப்படி செய்வார்க் ககலு மதியே.

ஆருயிர்கள் பிறத்தல்வேண்டும் என நந்தி திருவுள்ளக் குறிப்புக் கொண்டருளினன். அக் குறிப்பினால் மாயாகாரியமாகிய குரம்பையை ஒத்த இவ் வுடம்பு ஆருயிர்கட்கு அமைந்தது. இவ் வுடல் தொன்றுதொட்டு வருவது. பாசப்பற்றறுக்கக் கருவியாவதும் இதுவே. பாசங்கள் அழுது விலகும்படி செய்வார்க்கு மெய்யுணர்வு பெருகும்.

## 770. வெள்ளிவெண் திங்கள் விளங்கும் புதனிடம்

770. வெள்ளிவெண் திங்கள் விளங்கும் புதனிடம்
ஒள்ளிய மந்தன் இரவிசெவ் வாய்வலம்
வள்ளிய பொன்னே வளரும் பிறையிடந்
தெள்ளிய தேய்பிறை தான்வல மாமே.

உயிர்ப்பின் ஓட்டத்தைச் சரமென்பர். அது, வெள்ளி திங்கள் புதன்கிழமைகளில் இடமூக்கின் வழியாகச் செல்லுதல்வேண்டும்.
சனி ஞாயிறு செவ்வாய்க்கிழமைகளில் வலமூக்கின்வழியாக ஓடுதல் வேண்டும்.
வியாழக்கிழமைக்கு வளர்பிறையில் இடமூக்கும் தேய் பிறையில் வலமூக்குமாக ஓடுதல் வேண்டும்.

## 771. வெள்ளிவெண் திங்கள் விளங்கும் புதன்மூன்றுந்

771. வெள்ளிவெண் திங்கள் விளங்கும் புதன்மூன்றுந்
தள்ளி இடத்தே தயங்குமே யாமாகில்
ஒள்ளிய காயத்துக் கூன மிலையென்று
வள்ளல் நமக்கு மகிழ்ந்துரைத் தானே.

வெள்ளி, திங்கள், புதன் ஆகிய மூன்றுநாட்களிலும் இயல்பாகவே பயிற்சிவயத்தால் வலமூக்கைவிட்டு இடமூக்கின் வழியாகவே ஓடின் சிறந்த உடம்பினுக்கு அழிவில்லை என்று வள்ளலாகிய சிவபெருமான் மகிழ்ந்தருளிச் செய்தார்.

## 772. செவ்வாய் வியாழஞ் சனிஞாயி றேஎன்னும்

772. செவ்வாய் வியாழஞ் சனிஞாயி றேஎன்னும்
இவ்வா றறிகின்ற யோகி இறைவனே
ஒவ்வாத வாயு வலத்துப் புரியவிட்டு
அவ்வா றறிவார்க்கவ் வானந்த மாமே.

செவ்வாய், வியாழம், சனி, ஞாயிறு ஆகிய கிழமைகளில் முற்கூறிய முறைப்படி ஓட்டம் அறிபவர் வலமூக்கின் வழியாகச் செலுத்தி அழியாவின்பம் எய்துவர். இவ்வா றறிகின்ற என்ற பாடத்திற்கு இவ்+ஆர் எனப் பிரித்து இவ் வகையான நிறைந்த மறை எனக் கொள்க. இரகசியம். இனி வார், வாரம் என்பதன் கடைக்குறை எனினும் ஒக்கும்.

## 773. மாறி வருமிரு பான்மதி வெய்யவன்

773. மாறி வருமிரு பான்மதி வெய்யவன்
ஏறி இழியும் இடைபிங் கலையிடை
ஊறும் உயிர்நடு வேயுயி ருக்கிரந்
தேறி அறிமின் தெரிந்து தெளிந்தே.

திங்கட்கிழமை ஞாயிற்றுக்கிழமைகளில் மூச்சு ஓட்டம் கடக்கவேண்டிய முறைக்கு மாறாக (770) நடந்து ஏறி இறங்குவதும் நடுநாடியிற் புகுவதும் கண்டால் உயிருக்கு இடர்வரும் என எண்ணுதல் வேண்டும். ஊறும் உயிர் - வளருமுயிர்.

## 774. உதித்து வலத்திடம் போகின்ற போது

774. உதித்து வலத்திடம் போகின்ற போது
அதிர்த்தஞ்சி யோடுத லாமகன் றாரும்
உதித்தது வேமிக வோடிடு மாகில்
உதித்த விராசி யுணர்ந்துகொ ளுற்றே.

அவ்வக் கிழமைகட்குக் கூறிய முறைப்படித் தோன்றி மூச்சு ஓடும்போது சிதறி ஓடினால் இறப்பு நெருங்கும் என்று அஞ்சுக. அவ் வுயிர்ப்பு அளவில்லாமல் ஓடினால் உடன் இறப்பர் என்க. அதிர்த்து - சிதறி. இராசி - ஒழுங்கு.

## 775. நடுவுநில் லாமல் இடம்பலம் ஓடி

775. நடுவுநில் லாமல் இடம்பலம் ஓடி
அடுகின்ற வாயுவை அந்தணன் கூடி
இடுகின்ற வாறுசென் றின்பணி சேர
முடிகின்ற தீபத்தின் முன்னுண்டென் றானே.

உயிர்ப்போட்டம் நடுநாடியில் நிற்றல்வேண்டும். அப்படி நில்லாமல் இடம் வலம் ஓடினால் அதனால் இறப்பு நேரும். அவ்வாறு இறப்பினைத்தரும் மூச்சோட்டத்தைச் சிவபெருமான் திருவடிக்கீழ் நிறுத்தில் மூலவாற்றல் எழும்பும். திருவருள் ஒளி ஆவியுடன் விளங்கும். அந்தணன் கூடின்: சிவபெருமான் சேரின்; இது, திருவடி மறவாநெறியான் வருவது.

நடுவுநில்லாமல் - சுழுமுனையில் நில்லாமல். அந்தணன் - சிவபெருமான். பணி - குண்டலி சத்தி. தீபம் - பிராணன் சென்று அடங்கும் சோதி.

## 776. ஆயும் பொருளும் அணிமலர் மேலது

776. ஆயும் பொருளும் அணிமலர் மேலது
வாயு விதமும் பதினா றுளவலி
போய மனத்தைப் பொருகின்ற வாதாரம்
ஆயுவு நாளு முகுர்த்தமு மாமே.

அகத்தவத்தோராகிய யோகிகள் ஆராயும் பொருள் பரவெளித்தாமரையில் விளங்கும் முழுமுதற்சிவனையேயாம். அதற்காகப் பயிலும் மூச்சுப்பயிற்சியும் பதினாறு (550) மாத்திரை என்ப. மன வொடுக்கத்தை யருளும் காரணப்பொருளும் அச் சிவனேயாம். வாழ் நாட்களைக் கூறுபடுத்தி வழங்கும் நாள், கிழமை, திங்கள், ஆண்டு முழுத்தம் முதலியவற்றின் காரணப்பொருளும் சிவபெருமானேயாம். அதனால் அகவை (ஆயுள்) மிகும் என்பதாம். மலர் - தாமரை. ஆதாரம் - ஒடுக்கும் சிவம். முகுர்த்தம் - முழுத்தம்.

பதினாறு - பதினாறு மாத்திரை (பூரக இலக்கம்).

## 777. வாரத்திற் சூலம் வரும்வழி கூறுங்கால்

777. வாரத்திற் சூலம் வரும்வழி கூறுங்கால்
நேரொத்த திங்கள் சனிகிழக் கேயாகும்
பாரொத்த சேய்புதன் உத்தரம் பானுநாள்
நேரொத்த வெள்ளி குடக்காக நிற்குமே.

மறைப்பாற்றலின் கைப்படையாகிய முத்தலைவேல் (சூலம்) வரும் வழி வருமாறாகும்: திங்கட்கிழமையும் சனிக்கிழமையும் கீழ்ப்புலம் (திசை) ஆகும். செவ்வாய்க்கிழமையும் புதன்கிழமையும் வடக்காகும். ஞாயிற்றுக்கிழமையும் வெள்ளிக்கிழமையும் மேற்காகும். பாரொத்த - நிலத்துக்குப் பொருந்திய. சேய் - செவ்வாய். உத்தரம் - வடக்கு. குடக்கு - மேற்கு.

## 778. தெக்கண மாகும் வியாழத்துச் சேர்திசை

778. தெக்கண மாகும் வியாழத்துச் சேர்திசை
அக்கணி சூலமு மாமிடம் பின்னாகில்
துக்கமும் இல்லை வலமுன்னே தோன்றிடின்
மிக்கது மேல்வினை மேன்மேல் விளையுமே.

வியாழக்கிழமை தென்புலமாகும். எலும்புமாலை சூட்டப் பெற்ற முத்தலைவேல் இடப்பக்கத்தும் பின்பக்கத்தும் உறுதுணையாய் நிற்பின் முயலும் செயல் அனைத்தும் இன்பமாய் இயலும். வலப்பக்கத்தும் முன்பக்கத்தும் தோன்றுமானால் செயல் துன்பமாய் முடியும்.

எடுத்துக்காட்டாக: வெள்ளி, ஞாயிறு, செவ்வாய், புதன் ஆகிய நான்கு நாட்களும் கிழக்குநோக்கிச் செல்லலாம். திங்களும் சனியும், வியாழனும் மேற்கு நோக்கியும், வியாழனும், வெள்ளியும் ஞாயிறும் வடக்குநோக்கியும், செவ்வாயும் புதனும், திங்களும் சனியும் தெற்குநோக்கியும் போதல் நன்மையாம்.

## 779. கட்டக் கழன்று கீழ்நான்று வீழாமல்

779. கட்டக் கழன்று கீழ்நான்று வீழாமல்
அட்டத்தைக் கட்டி அடுப்பை அணைகோலி
விட்டத்தைப் பூட்டி மேற்பையைத் தாட்கோத்து
நட்ட மிருக்க நமனில்லை தானே.

இன்பமிழ்தமாகிய விந்துவை உச்சித்தொளைக் குகைக்கண் நிரப்பிவைத்தல்வேண்டும். ஒரோ வழி அது கீழ்நோக்காமல் ஒழுகிவிடாமல் மேல் வாயாகிய அண்ணத்தின்கண் தடுத்து, அடுப்பாகிய (இடகலை பிங்கலை சுழுமுனை) மூன்று. நாடிகள் கூடுமிடத்து உண்ணாக்கால் அணைகோலி, விட்டமாகிய புருவ நடுவின்கண் நிறுத்தி, கருமூலப்பையாகிய விதையுட் புகாமல் அடைத்து நடு நாடியில் உறைத்து நிற்பதனால் நமன் நணுகான் என்க. அட்டம் - அண்ணம். பை - விதை. நட்டம் - நடு. மூன்று நாடி கூடுமிடத்தைத் தீமண்டிலமென்பாருமுளர்.

கட்ட - விந்துவைக் கட்ட. கழ...விழாமல் - வெளிப்படாமல். அட்ட...கோலி - வீணாத்தண்டின் கடைவாயிலைத் திறந்து. விட்டம் - வீணாத்தண்டு. மேற்பை - சகசிர அறை. நட்டம் இருக்க - நாடி இருக்க.

## 780. வண்ணான் ஒலிக்குஞ் சதுரப் பலகைமேற்

780. வண்ணான் ஒலிக்குஞ் சதுரப் பலகைமேற்
கண்ணாறு மோழை படாமற் கரைகட்டி
விண்ணாறு பாய்ச்சிக் குளத்தை நிரப்பினால்
அண்ணாந்து பார்க்க அழுக்கற்ற வாறே.

உயிர் வெளிச் செல்லும் சிறந்த வாயில்களாகிய கண், செவி, மூக்கு, வாய் என்னும் அறிகருவி நான்கும் ஒன்றுகூடும் அண்ணத்திடத்து, அதன்மேலிருக்கும் அமிழ்த யாறு வரும் தொளை கீழ்நோக்கி ஒழுகும். அவ்வொழுக்கு ஆறாய் வீணாகாது, உச்சித்தொளைக் குகையில் நிரப்பி அத்தொளையை நாநுனியால் அடைக்க அதை நடுநாடி வழியாகச் செலுத்தி அக்குளத்திலே நிரப்பினால் மேல்நோக்கும் எண்ணம் தோன்றும். தோன்றவே இருட்சார்பாம் மருள்மயக்க அழுக்கு அகலும்.

வண்ணான் - பிராணன். சதுரப் பலகை - நாற்சந்தி. மேற் கண்ணாறு - அமுதம் வரும் மேலைத்துவாரம். மோழைபடாமல் - வீண்போகாமல். குளம் - கபாலக்குகை, மனம்.

# 781. இடக்கை வலக்கை இரண்டையும் மாற்றித்

781. இடக்கை வலக்கை இரண்டையும் மாற்றித்
துதிக்கையால் உண்பார்க்குச் சோரவும் வேண்டாம்
உறக்கத்தை நீக்கி உணரவல் லார்கட்கு
இறக்கவும் வேண்டாம் இருக்கலு மாமே.

இடநாடி வலநாடி வழியாகக் கீழ்நோக்கும் அமிழ்தினை மாற்றி, உள்நாக்கை வளைத்துத் துதிக்கைபோலமைத்து அத்தொளைகளை அடைத்து நடுத்தொளை வழியாக நுகர்வார்க்கு இறப்பிற்கு அஞ்சிச் சோர்வடைதல் ஏற்படாது. (உயிர்ப் பண்பாகிய 'உண்டி, உறக்கம், பயம், இன்பம்' ஆகிய நான்கனுள் உறக்கம் மட்டும் சொல்லப்பட்டுள்ளது; இனம்பற்றி ஏனையவும் சேர்த்துக்கொள்ளுதல்வேண்டும்.) உறக்கமுதலிய உயிரின் பொதுக்குணம் கொள்ளாது சிவபெருமான் திருவடியை இடையறாது எண்ணும் திண்ணிய சிறப்புக் குணம் கொள்ளும் மெய்யடியார்கட்கு இறப்பும் நேராது. விழைந்த நாளெல்லாம் உடம்போடு வாழுதலும் கூடும். துதிக்கை: நுதிக்கை; முனையுள்ளகை.

இடக்கை, வலக்கை - இடகலை, பிங்கலை. துதிக்கை - சுழுமுனை.

## 782. ஆய்ந்துரை செய்யில் அமுதநின் றூறிடும்

782. ஆய்ந்துரை செய்யில் அமுதநின் றூறிடும்
வாய்ந்துரை செய்யும் வருகின்ற காலத்து
நீந்துரை செய்யில் நிலாமண் டலமதாய்ப்
பாய்ந்துரை செய்தது பாலிக்கு மாறே.

செந்தமிழ்த் திருமாமறை முதலியவற்றை நன்கு ஆராய்ந்து கூறுமிடத்து, நெற்றியமிழ்து நிலைபெற்று ஊறுந்தன்மை கைகூடி மிகுதிப்படும் செவ்வி வரும் என்பது புலனாம். அது வரும் பொழுது, மிகுதியாகக் கூறப்படும் மதிமண்டலத் திருந்து திருவடியை நினையுமாறும் அவ்வமிழ்தை ஓம்புமாறும் நவில்வதுண்டாகும். அங்ஙனம் நவிலுவதே இப் பகுதியின் நோக்கமாகும். நவிலுதல் - சொல்லுதல். வாய்ந்து - கைகூடி. துரை - மிகுதி. நீந்துரை - மிகுதி. நிலா மண்டலம் - நெற்றிநடு. பாய்ந்து - பாவித்து, நினைத்து பாலிக்கும் - ஓம்பும்.

வாய்ந்து - சித்திபெற்று. நீந்து - மிகுதியாக. பாலிக்கு மாறு - காப்பாற்றுமாறு.

## 783. நாவின் நுனியை நடுவே சிவிறிடிற்

783. நாவின் நுனியை நடுவே சிவிறிடிற்
சீவனும் அங்கே சிவனும் உறைவிடம்
மூவரு முப்பத்து மூவருந் தோன்றுவர்
சாவதும் இல்லை சதகோடி யூனே.

நாக்கின் நுனியால் அண்ணமுகட்டில் காணப்படும் உச்சித்தொளை வழியைத் துருத்திபோல் குவித்துவைத்து அடைத்தால், அங்கு உயிரும் உயிர்க்குயிராம் சிவனும் உடங்கியைந்துறைவர். திருவருட் கண்ணால் காணுதலின் ஆவி முத்தேவரையும், முப்பத்து முக்கோடி தேவரையும் எளிதிற் காண்பர். உடலுக்கு நூறுகோடி ஊழியாயினும் அழிவில்லை என்க. சிவிறிடல் - விசிறியின் அடிப் பகுதிபோல் விரிந்து குவிதல். மூவர்: அயன், அரி, அரன். மூப்பத்துமூவர்: பகலவர் பன்னிருவர், முனிவர் (உருத்திரர்) பதினொருவர், வசுக்கள் எண்மர், மருத்துவர் இருவர் என்ப. சதம் - நூறு. ஊன் - உடல்.

## 784. ஊனூறல் பாயும் உயர்வரை உச்சிமேல்

784. ஊனூறல் பாயும் உயர்வரை உச்சிமேல்
வானூறல் பாயும் வகையறி வாரில்லை
வானூறல் பாயும் வகையறி வாளர்க்குத்
தேனூறல் உண்டு தெளியலு மாமே.

உயர்விடமாகிய நெற்றிநடுவில் உடலமிழ்து ஒழுகும். இவ்வமிழ்தினை விந்து என்பர். இதனைக் கீழ்நோக்கிச் செல்லவிடாமல் மூச்சுப் பயிற்சியால் உச்சித்தொளைக்கு ஏற்றின் அது வானமிழ்து என்னும் பெயர்பெறும். உச்சி உயர்ந்த இடமாதலின் வான் எனப் பெயர் பெற்றது. ஊறல் - இடையறா ஊற்றுடைய புனல். இதனை ஆகாயக் கங்கையென உருவகித்தனர். திருவருள் துணையால் இந்நிலை எய்தினார்க்குத் தேனூறலாகிய திருவடியின்பம் உண்டு; திருவடி யுணர்வாகிய தெளிவும் உண்டு. (கங்கை மதி பாம்பு கடுக்கை என்னும் நான்கும் இறைவன்முடிமேல் உள்ளன. ஈண்டு ஒப்புநோக்குங்கால் கங்கை: வானூறல். மதி: ஊனூறல். பாம்பு: குண்டலியாற்றல், கடுக்கை: தேனூறல் என்ப.)

ஊன்ஊறல் - சுக்கிலம். வான்ஊறல் - அமுதம். தேன்ஊறல் - அமுதத்தின் சுவை.

## 785. மேலையண் ணாவில் விரைந்திரு காலிடிற்

785. மேலையண் ணாவில் விரைந்திரு காலிடிற்
காலனும் இல்லை கதவுந் திறந்திடும்
ஞாலம் அறிய நரைதிரை மாறிடும்
பாலனு மாவான் பராநந்தி ஆணையே.

மேல்வாய் அகத்துக் காணப்பெறும். அணாக்காகிய உள்நாக்கில் இரு மூக்கின் வழியாகவும் வரும் உயிர்ப்பி (பிராணாவாயு)னை
வேகமாகச் சென்று பொருந்தும்படி பயிலின், பயின்றார்க்குக் காலன் செயலாகிய இறப்பில்லை. உச்சித்தொளை வாயிலும் திறந்திடும். உலகம் அறிய நரை திரை முதலிய உடல் தன்மைகள் மாறிவிடும். முழுமுதற் சிவத்தின் ஆணையாகும் இது. பராநந்தி - முழுமுதற் சிவம்.

அணா - அண்ணாக்கு.

## 786. நந்தி முதலாக நாமேலே யேறிட்டுச்

786. நந்தி முதலாக நாமேலே யேறிட்டுச்
சந்தித் திருக்கில் தரணி முழுதாளும்
பந்தித் திருக்கும் பகலோன் வெளியாகச்
சிந்தித் திருப்பவர் தீவினை யாளரே.

முழுமுதற்சிவம் காட்டும் ஆசானாக; அவன் காட்டிய வழியே உள்நாக்கினை மேலே ஏறிட்டு அடைத்து இருந்தால் நெடுநாள் உலகினை ஆளலாம். வலமூக்கின் வழிவரும் உயிர்ப்பு நெற்றியமிழ்து முற்றாதபடி தடைப்படுத்தும். அத் தடை நீங்கி வெளியாகும்படி இடையறாது எண்ணுமவர்க்கு எளிதாக மேலது கைகூடும். இப் பயிற்சியிலாதார் பிறப்பு இறப்புத் துன்புக்கு ஆட்படும் தீவினையராவர். முதலாக - ஆசானாக.

பந்தி...பகலோன் - அமுதம் பெருகாதபடி அதனைத் தன்னுள் அடக்கிக்கொண்டிருக்கும் சூரியகலை அல்லது பிங்கலை.

## 787. தீவினை யாடத் திகைத்தங் கிருந்தவர்

787. தீவினை யாடத் திகைத்தங் கிருந்தவர்
நாவினை நாடின் நமனுக் கிடமில்லை
பாவினை நாடிப் பயனறக் கண்டவர்
தேவினை யாடிய தீங்கரும் பாமே.

பாவச் செயல்களைச் செய்ததனால் பிறப்பு இறப்புக்கு உட்பட்டுத் திகைப்புற்றிருந்தவர், நாவின் நுனியால் உண்ணாக்குத் தொளையை அடைக்கும் பயிற்சியாகிய கேசரியோகத்தைப் பயின்றால் நெடுநாள் வாழ்வர். அவர்களிடத்து நமனுக்கு வேலையில்லை. செந்தமிழ் மறைப்பாட்டினை ஆராய்ந்து இடையறாது ஓதி அதன் முழுப் பயனையும் மேற்கொண்டவர் சிவத்துடன் கூடிப் பேரின்பமுறுவர். பாவினை - திருமறைத் திருப்பாட்டை. பயனற - (அறபயன் என்பன முன்பின்னாகத் தொக்கன.) முழுப்பயனையும்.

தீவினையாட - தீய கருமங்களாலே. நாவினை நாடல் - நாவின் நுனியை அண்ணாக்கில் சிவிறிடல் (இதுதான் கேசரி யோகம்). பாவினைப் பாடி - மறைப்பாட்டுக்களைப் பாடி தேவினை - நன்மைதரும் கருமங்களாலே.

## 788. தீங்கரும் பாகவே செய்தொழி லுள்ளவர்

788. தீங்கரும் பாகவே செய்தொழி லுள்ளவர்
ஆங்கரும் பாக அடையநா வேறிட்டுக்
கோங்கரும் பாகிய கோணை நிமிர்த்திட
ஊன்கரும் பாகியே ஊனீர் வருமே.

கேசரியோகப் பயிற்சியால் வெறுக்கத் தகுந்த உடம்பினை விரும்பத் தகுந்த கரும்புபோல். ஆக்கிக்கொண்டவர். பூவரும்புபோன்ற நாவின் நுனியை மேனோக்கிக் குவித்துச் செலுத்திப் பாம்பின் தலை போன்று காணப்படும் கோங்கரும்பை ஒத்த குண்டலியின் வளைவை நேராக்கினால், உடல் கரும்புபோன்று இனிமையுடையதாய் மதிமண்டலத் தமிழ்தும் நுகரவரும். கோணை - வளைவை. ஊனீர் - உடலமிழ்து.

கோங்கு அரும்பு - பாம்பின் தலை, குண்டலி.

## 789. ஊனீர் வழியாக வுண்ணாவை யேறிட்டுத்

789. ஊனீர் வழியாக வுண்ணாவை யேறிட்டுத்
தேனீர் பருகிச் சிவாய நமவென்று
கானீர் வரும்வழி கங்கை தருவிக்கும்
வானீர் வரும்வழி வாய்ந்தறி வீரே.

மதிமண்டலத் தமிழ்தாகிய ஊனீர் வழியாக உண்ணாக்கை மேற்செலுத்திப் பின்தோன்றுந் திருவருளின்பினைத் துய்த்து 'சிவயநம' என்னும் செந்தமிழ்த் திருமறை ஐந்தினையும் இடையறாது கணித்தால் உச்சித்தொளை அமிழ்தமாகிய பேரின்பம் வருவழியை திருவருள் அமைத்தருளும். இதுவே பரவெளிப் பேரின்பம் வரும் வழி என்று அறிந்து கொள்வீராக.

ஊனீர் - அமுதம். கான் - மேல்வீடு. கங்கை - இடகலை.

## 790. வாய்ந்தறிந் துள்ளே வழிபாடு செய்தவர்

790. வாய்ந்தறிந் துள்ளே வழிபாடு செய்தவர்
காய்ந்தறி வாகக் கருணை பொழிந்திடும்
பாய்ந்தறிந் துள்ளே படிக்கத வொன்றிட்டுக்
கூய்ந்தறிந் துள்ளுறை கோயிலு மாமே.

முற்கூறிய முறைப்படி அமைந்துணர்ந்து அகவழிபாடு செய்தவர்க்குச் சிவபெருமான் அவர்களுடைய கார் அறிவாம் அறியாமையை எரிப்பர். அவ் வுயிர் திருவடியுணர்வில் அடங்கி அவ்வுணர்வாகவே நிற்கும்படி திருவருள் புரிவர். அத் திருவடி யுணர்வுப் பரப்பில் நிறைந்து, சிவனை உணர்ந்து கேசரியோக அடையாளமாகிய தடையினை அமைத்து அதனால் மலமகன்று, திருவடியை ஓவாது உணர்ந்தாருள்ளம் சிவனுறை திருக்கோயிலுமாகும்.

காய்ந்து - அஞ்ஞானத்தை எரித்து. படிக்கதவு - கேசரி முத்திரையாகத் தடை. கூய்ந்து - நிர்மலமாகி.

## 791. கோயிலின் உள்ளே குடிசெய்து வாழ்பவர்

791. கோயிலின் உள்ளே குடிசெய்து வாழ்பவர்
தாயினும் நல்லார் தரணி முழுதுக்குங்
காயினும் நல்லவர் காய்ந்தவர் தம்முளுந்
தீயினும் தீயரத் தீவினை யாளர்க்கே.

உள்ளக்கோயிலினுள்ளே சிவபெருமான் குடியிருந்து வாழ்வர். எல்லாவுலகங்களுக்கும் திருவருள் செய்வதில் தாயினும் நல்லவராவர். நோய்க்கு மருந்துபோல், தீவினையாளர் தம் தீவினையைத் துன்பம் தந்து காய்வர். அங்ஙனம் சினந்தாலும் சினக்கப்பட்டவர்களுக்கும் அவர்களை நன்மைப்படுத்தி நல்லருள்புரிவர். தீவினையாளர்களைத் துன்பப்படுத்துவதில் தீயினும் கொடியராவர்.

## 792. தீவினை யாளர்தஞ் சென்னியி னுள்ளவன்

792. தீவினை யாளர்தஞ் சென்னியி னுள்ளவன்
பூவினை யாளர்தம் பொற்பதி யானவன்
பாவினை யாளர்தம் பாவகத் துள்ளவன்
மாவினை யாளர் மதியிலுள் ளானே.

பூவினையாளராகிய சீலநெறியினர்க்கு அவர் வாழும் திருவாரூராய்ப் பொலிவர். தீவினையாளராகிய நோன்பு நெறியினர்க்கு அவர் வழிபடும் அருவுருவாய்த் திகழ்வர். மாவினையாளராகிய செறிவு நெறியினர்க்கு அவர்தம் மதிமண்டிலத் தமிழ்தாய் மன்னுவர். பாவினையாகிய அறிவு நெறியினர்க்கு அவர்தம் பாவிளங்கும் உணர்வுக்கு உணர்வாய் உறைந்து உவகையூட்டுவர். பாவினை - திருப்பாட்டாகிய கீதத் தொண்டு. இம்முறைமை 'பத்தராய்ப் பணிவார்கள்' என்னும் திருப்பாட்டானுணர்க.

தீவினையாளர் - சிவாக்கினி வளர்த்துப் பூசனை புரிபவர். பூவினையாளர் - பூவால் பூசனை புரிபவர். பாவினையாளர் - தோத்திரப் பாக்களால் பூசனை புரிபவர். மாவினையாளர் - யோக முயற்சியுடையவர்.

## 793. மதியி னெழுங்கதிர் போலப் பதினாறாய்ப்

793. மதியி னெழுங்கதிர் போலப் பதினாறாய்ப்
பதிமனை நூறுநூற் றிருபத்து நாலாய்க்
கதிமனை யுள்ளே கணைகள் பரப்பி
எதிர்மலை யாமல் இருந்தனன் தானே.

அகத்தவத்தோர் உடம்பகத்துத் திங்களினிடத்து எழுங்கலைக் கதிர்கள் பதினாறாகும். அதுபோல் பதினாறு இதழ்களுள்ள மிடற் (விசுத்தி)றிடம் மனையொக்கும்.

மூலம், கொப்பூழ், மேல் வயிறு, நெஞ்சம் வரையிலுள்ள ஞாயிறு தீ இவற்றின் கதிர்கள் இருநூற்று இருபத்துநான்காகும். இவை ஊரொக்கும். புருவநடுவில் காணப்படும் அருள்கதிர்கள் அளவில. அவற்றைப் பரப்பி ஆவி மயங்காவண்ணம் ஆண்டவன் இருந்தனன். அதனால் ஆவியும் மயங்காதிருந்தது. கதிமனை - மேல் வீடு. கணைகள்: உவமையாகுபெயராய் அருட்கதிர்களைக் குறிக்கும்.

மதி...பதினாறாய் - சந்திரகலை பதினாறுபோல 16 இதழ்களுள்ள விசுத்தி. நூறு நூற்றிருபத்து நாலாய் - மூலாதாரம் முதல் அனாகதம் வரை ஒளிபரப்பும் கிரணங்கள் 224.

## 794. இருந்தனள் சத்தியு மக்கலை சூழ

794. இருந்தனள் சத்தியு மக்கலை சூழ
இருந்தனள் கன்னியு மந்நடு வாக
இருந்தனள் மானேர் முகநில வார
இருந்தனள் தானும் அமுதம் பொழிந்தே.

சத்தியும் கன்னியும் ஆகிய திருவருள் அருட்கதிர்கள் சூழ மிடற்றின் நடுவாக இருந்தனள். மான்போலும் விழிகளும் மதி போலுந் திருமுகமும் உள்ள திருவருள் அருளமுதம் பொழிந்து இருந்தனள். விசுத்தி - மிடறு. அக்கலை - அந்த அருட்கதிர்கள்.

அந் நடு - விசுத்தியின் நடு. மானேர்முக நிலவார - மான் நேர் முகம் நிலவு ஆர என்று பிரிக்க.

## 795. பொழிந்த இருவெள்ளி பொன்மண் ணடையில்

795. பொழிந்த இருவெள்ளி பொன்மண் ணடையில்
வழிந்துள் ளிருந்தது வான்முத லங்குக்
கழிந்தது போகாமற் காக்கவல் லார்க்குக்
கொழுந்தது வாகுங் குணமது தானே.

(திருவருளால்) சொரியப்பட்டு விளங்கும் வெண்ணிறமான அமிழ்து, பொன்நிறமான மண்போல் தாங்கும் மூலத்திடத்தில் சேரின், அங்குப் பெருகிவழிந்து உடம்பெங்கும் நிறைந்திருந்து உறுதிதரும். வான் முதலாகிய ஐம்பூதக் கூட்டுறவாலாகிய உடம்பில் கழிவு ஏற்பாடாது. அப்படிக் காக்க வல்லார்க்கு உடம்பு கொழுந்துபோல் என்றும் பொலிவுடன் இருக்கும். இதுவே கைக்கொள்ளத் தகுந்த உயர்ந்த பண்பாகும்.

பொழிந்து அவிரும் வெள்ளி - சத்தியால் சொரியப்படும் அமுதம். பொன்மண் - பூதலம்; மூலாதாரம். வான்முதல் - ஆகாயம் முதலிய பூதங்கள்.

## 796. குணமது வாகிய கோமள வல்லி

796. குணமது வாகிய கோமள வல்லி
மணமது வாக மகிழ்ந்தங் கிருக்கில்
தனமது வாகிய தத்துவ ஞானம்
இனமது வாக இருந்தனன் தானே.

பசுங்கொடிபோலும் இறைவி இறைவனுடன் கலத்தலாகிய மணம் எய்தி ஆவியகத்திருந்தால், இறைவனும் அத் திருவருளுடன்கூடி ஆவிக்குப் பேரின்பப் பெருஞ்செல்வம் நல்கியருள எழுந்தள்ருவன். வல்லி - இறைவி. மணம் - கலப்பு. தனம் - பேரின்பச் செல்வம். தத்துவ ஞானம் - இறைவி.

மணமதுவாக - ஈசனுடன் கூடி.

## 797. இருந்த பிராணனும் உள்ளே எழுமாம்

797. இருந்த பிராணனும் உள்ளே எழுமாம்
பரிந்தஇத் தண்டுடன் அண்டம் பரிய
விரிந்தஅப் பூவுடன் மேலெழ வைக்கின்
மலர்ந்தது மண்டலம் வாழலு மாமே.

மூலத்திடத்து இருந்த உயிர்ப்பு (பிராணன்) நடுநாடியினுள் மேலெழும். அப்படி எழுந்து அண்டமாகிய ஆயிர இதழ்த் தாமரை என்னும் பரவெளியில் செல்ல நோக்கும். அங்ஙனம் செலுத்திப் பூவுடன் பொருந்தவைத்தால் மதிமண்டலம் மலரும். நெடுநாள் உடலகத்து வாழ்தலும் உண்டாம். அண்டம் - பரவெளி.

பரிந்த - பரித்த சரீரத்தைத் தாங்கி நிற்பதாகிய. தண்டு - வீணாத்தண்டு. அண்டம் பரிய - ஆகாயம் செல்ல. பூ - சகசிர அறை. மண்டலம் - மதிமண்டலம்.

## 798. மண்டலத் துள்ளே மனவொட்டி யாணத்தைக்

798. மண்டலத் துள்ளே மனவொட்டி யாணத்தைக்
கண்டகத் தங்கே கருதியே கீழ்க்கட்டிப்
பண்டகத் துள்ளே பகலே ஒளியாகக்
குண்டலச் காதனுங் கூத்தொழிந் தானே.

தீ மண்டிலமாகிய மூலத்திடத்து உயிர்ப்புச் சேர ஒட்டியாணக்கட்டு என்னும் உண்மையினை ஆசான் அறிவிக்கும் முத்திரை வழியாக, உள்ளே கண்டு கீழ்ப் பகுதியினை அடைத்தல்வேண்டும். அப்படி அடைத்தால், மேல் வீடாகிய பரவெளிக்குள்ளே பகலின்கண் ஞாயிற்றின் ஒளியினும் சிறந்த அருள்ஒளி தோன்றும். தோன்றவே, ஐந்தொழிற் கூத்தனும் அவ் ஆவிக்கு அருட்காப்பு ஒன்றே புரிவன். அதனால் ஏனைத் தொழிலில் நீங்கி இருந்தனன் என்ப. மன : மன்ன என்பது இடைக்குறைந்து நின்றது : சேர. பண்டகம் - பரவெளி. குண்டலக்காதன் - கூத்தப் பெருமான்.

மண்டலத்துள்ளே - மண் தலத்துளே; உலகிலே.
ஒட்டியாணம் - மூலத்துவாரத்தை முக்காரமிட்டிருத்தல்.
பண்டகம் - மேல் வீடு; சகசிர அறை.

## 799. ஒழிகின்ற வாயுவும் உள்ளே அமருங்

799. ஒழிகின்ற வாயுவும் உள்ளே அமருங்
கழிகின்ற வாயுவுங் காக்கலு மாகும்
வழிகின்ற காலத்து வட்டக் கழலைப்
பழிகின்ற காலத்துப் பையகற் றீரே.

வெளிச்செல்லும் உயிர்ப்பும் செல்லாது அகத்தே தங்கும். உயிர்ப்புச் செல்லாமையால் வீணாகக் கழியும் வாணாள் உறுப்பாகிய உயிர்ப்பினைக் காத்தல்கூடும். மதியமிழ்தம் மூலத்திடத்து வழியாமல் நடுநாடியின் உட்டுளைவழிச் செல்லின், பயிற்சியில்லாது பழிக்கப்படுகின்ற குண்டலிப் பாம்பின் படத்தினை அடைத்தல்கூடும். அதனைச் செய்வீர்களாக.

ஒழிகின்ற - வீணாய்ப் போகின்ற. கழிகின்ற வாயு - வராமல் இருக்கின்ற 4 விரல் அளவுள்ள சுவாசம். வட்டக்கழல் - பிரமரந்திரம். பை - குண்டலியின் தலை.

## 800. பையினி னுள்ளே படிக்கத வொன்றிடின்

800. பையினி னுள்ளே படிக்கத வொன்றிடின்
மெய்யினி னுள்ளே விளங்கும் ஒளியதாங்
கையினுள வாயுக் கதித்தங் கெழுந்திடின்
மையணி கோயில் மணிவிளக் காமே.

பையாகிய உடம்பினுள்ளே படி என்னும் நிலமெய்யினுக்குரிய முத்திரையாகிய கதவினால் அடைத்தால், உடம்பினுள்ளே நன்றாக விளங்கும் ஒளியுடையதாகிய உயிர்ப்பு நம் வரைத்தாகும். வரை - வசம். அவ்வுயிர்ப்பு ஒலித்துக்கொண்டு மேலெழும். மேலெழுந்தால், அருள் மழை தவழும் பரவெளிக் கோயிலின் செம்மணி விளக்கமாகிய இறைவன் காணப்படுவன். கையினுள் வாயு - கைவயப்பட்ட உயிர்ப்பு. கதித்து - ஒலித்து.

பை - சரீரம். படிக் கதவு - கேசரி யோகம்.

## 801. விளங்கிடும் வாயுவை மேலெழ உன்னி

801. விளங்கிடும் வாயுவை மேலெழ உன்னி
நலங்கிடுங் கண்டத்து நாபியி னுள்ளே
வணங்கிடு மண்டலம் வாய்த்திடக் கும்பிச்
சுணங்கிட நின்றவை சொல்லலு மாமே.

ஒடுங்குகின்ற கழுத்தினிடத்தும் கொப்பூழினிடத்தும் விளங்குகின்ற உயிர்ப்பை மேல்நோக்கி எழுமாறு நினைந்து, கழுத்தினைச் சுருக்குதலாகிய சாலந்திரை முத்திரை ஒட்டியாணப் பிணிப்பு முத்திரைகளை ஆக்குதல்வேண்டும். அங்ஙனம் ஆக்கினால் சாலந்திரையால் மெய்யமிழ்து கீழ் ஒழுக ஒட்டாது தடைப்படும். ஒட்டியாணப் பிணிப்பால் உயிர்ப்பு மடங்கும். இவை வாய்க்கவே நெற்றிமண்டிலம் வாய்த்து அமிழ்து நிறையும். நிறைந்து வாட்டிடுதலால் நிலைபெற்று நிற்குமென்பது கூறுதலாகும். நலங்கிடுதல் - ஒடுங்குதல். கும்பிச்சு - நிறைந்து.

## 802. சொல்லலு மாயிடு மாகத்து வாயுவுஞ்

802. சொல்லலு மாயிடு மாகத்து வாயுவுஞ்
சொல்லலு மாகு மண்ணீர்க் கழனமுஞ்
சொல்லலு மாகும் இவையஞ்சுங் கூடிடிற்
சொல்லலு மாந்தூர தெரிசனந் தானே.

மண், நீர், தீ, காற்று, விண் என்னும் ஐம்பூதங்களும் உடம்பகத்து ஒரு முகப்பட்டுக் கூடினால் உயிர்ப்பும் கைவயப்படும். உயிர்ப்பாகிய பிராணவாயு வயப்பட்டால் பரவெளி முழுமுதற் சிவத்தை அருட்கண்ணால் கண்டு கும்பிடுதலாகும். மாகம் - விண். கழனம் - ஈண்டுத் தீ தூரம் - பரவெளி. தெரிசனம் - கும்பிடுதல்.

மாகம் - ஆகாயம். அஞ்சு - பூதங்கள் அஞ்சும். தூர தரிசனம் - பரம்பொருள் தரிசனம்.

## 803. தூர தெரிசனஞ் சொல்லுவன் காணலாங்

803. தூர தெரிசனஞ் சொல்லுவன் காணலாங்
காராருங் கண்ணி கடைஞான முட்பெய்திட்டு
ஏராருந் தீபத் தெழிற்சிந்தை வைத்திடிற்
பாரா ருலகம் பகன்முன்ன தாமே.

பரவெளி வணக்கமாகிய கும்பிடுதலைச் சொல்லப்புகின் மழைபோலும் திருக்கண்ணையுடைய திருவருளால் முடிஞானம் எனப்
படும் அறிவில் அறிவாம் (ஞானத்தின் ஞானம்) திருவடியுணர்வை உணர்வுட் கொண்டால், அவ்வுணர்வு உள்ளத்தினிடத்து அழகு மிக்க ஒளிவழிவாகும். உள்ளமும் அழகுநிறை உள்ளமாகும். இவ்வுள்ளம் அமைந்தோர்க்கு உலகமும் உலகியல் துய்ப்பும் பகலிற் காணப்படும் பொருள்போல் நன்றாக விளங்கும். கண்ணி - கண்ணையுடையாள்; திருவருள். பார் - உலம். ஆர்உலகம் - உலகியல் துய்ப்பு.

கடைஞானம் - முடிந்த ஞானம்.

## 804. முன்னெழு நாபிக்கு முந்நால் விரற்கீழே

804. முன்னெழு நாபிக்கு முந்நால் விரற்கீழே
பன்னெழு வேதப் பகலொளி யுண்டென்னும்
நன்னெழு நாதத்து நற்றீபம் வைத்திடத்
தன்னெழு கோயில் தலைவனு மாமே.

விளங்கித் தோன்றும் கொப்பூழின்கீழ்ப் பன்னிரண்டு விரல் அளவினதாகிய மூலத்திடத்து மறைகள் முதற்கண் ஓதும் ஓமொழியுண்டாம். உடம்பின் நடுவிடமாகிய நெஞ்சிடத்து ஒளிப்பிழம்பு தோன்றும். நன்மையாகத் தோன்றும் அவ் வொளிப்பிழம்பினிடத்து நல்லக விளக்காகிய 'நமச்சிவாய ஐந்தெழுத்தை' இடையறாது ஓதி (உன்னடியேன் செய்பணிகள் உன்தொண்டே உன்னருளே, உன்னடிக்கே ஒப்புவித்தேன்.) ஒப்புவித்தல் வேண்டும். ஒப்புவிக்கவே தலைவனாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலாக. அவ்வுடல் அமையும். அதுவே கேசரியோகத்தின் பயனாம்.

## 805. பூசு வனவெல்லாம் பூசிப் புலர்த்திய

805. பூசு வனவெல்லாம் பூசிப் புலர்த்திய
வாச நறுங்குழல் மாலையுஞ் சாத்திக்
காயக் குழலி கலவி யொடுங்கலந்து
ஊசித் துளையுறத் தூங்காது போகமே.

அகத்தவமாகிய யோகப்பயிற்சியைக் கைவிட்டு இன்பத் துறையாகிய போகப் பயிற்சியிற் சென்றால் அஃது ஒரு ஞான்றும் நிறைவுறாது. மனத்தை மாற்றும் பெண்கள், கூந்தலுக்குப் பூசத் தகுந்த மயிர்ச்சாந்து முதலியன பூசியும், அகிற்கட்டை முதலியவற்றால் அவற்றை உலரவைத்தும் அவற்றால் நறுமணம் என்றும் மாறாத கூந்தலையும், மாலை சூடிய குழல் போன்ற இனிய மொழியையும் உடையவராய் இருப்பர். அப்பெண், விரும்புவார் உள்ளத்தை வெதுப்புவள். அதனால் ஏற்படும் நிலையில் இன்பம் ஊசியின் தொளை போன்று சிறியதாகும். ஆயினும் தளர்வு ஏற்படாமல் மயக்கும். காயக் குழலி; காய் + அக் குழலி. காய்தல் - வெதுப்புதல்.

காயக்குழலி - மனதை வெதுப்புகின்ற அப் பெண் (காய் அக் குழலி). ஊசித்துளை - ஊசிக் காதுபோன்ற துளை.

## 806. போகத்தை யுன்னவே போகாது வாயுவு

806. போகத்தை யுன்னவே போகாது வாயுவு
மோகத்தை வெள்ளியு மீளும் வியாழத்தில்
சூதொத்த மென்முலை யாளுநற் சூதனுந்
தாதிற் குழைந்து தலைகண்ட வாறே.

இன்பத்துறையாகிய போகத்தை நினைத்தால் உயிர்ப்பு நடு நாடிவாழியாற் செல்லாது. பெருவேட்கையால் வெள்ளியாகிய விந்துவும் வியாழமாகிய நாதத்தில் மீளும். சூதுக்காயை ஒத்த மெல்லிய முலையை உடையவளும், நன்மைக்குரிய ஆடவனும் தம்மிற்கூடி நாத விந்துக்களின் குழைவால் இன்பந்தலைகண்ட முறைமையாகும். சூதம் - வாதரசம்; குளிகை. பரிபாசை - குறியீடு.

வெள்ளி - விந்து. வியாழம் - நாதம். சூது - சூதாட்டத்தில் உபயோகப்படும் கருவி. சூதன்-ஆடவன். விந்துவை இரசம் என்றும் நாதத்தைக் கந்தகம் என்று கூறுவது சித்தர்களுடைய பரிபாசை.

## 807. கண்டனுங் கண்டியுங் காதல்செய் யோகத்து

807. கண்டனுங் கண்டியுங் காதல்செய் யோகத்து
மண்டலங் கொண்டிரு பாலும் வெளிநிற்கும்
வண்டியை மேற்கொண்டு வானீர் உருட்டிடத்
தண்டொரு காலுந் தளராது அங்கமே.

சாலந்திரத்தால் ஒடுக்கப் (801) பட்ட கழுத்தையுடைய ஆடவனும் அம்முறையே ஒடுக்கப்பட்ட கழுத்தையுடைய மகளிரும் காதலித்துப் பயிலும் பரியங்கயோகப் பயிற்சி வயத்தால் ஞாயிறு திங்கள் மண்டிலங்களாகிய முறையே மிடற்றினிடத்தும் உச்சியினிடத்தும் உயிர்ப்பினைச்செலுத்தி உரித்தாக்கிக் கொண்டால், அவர்கள் இரண்டு பக்கமும் வெளியிற்காணும் இடமூக்கும் வலமூக்கும் ஆகிய வண்டியை மேற்கொண்டு மேலாந் தன்மை வாய்ந்த ஓசை ஒளியென்னும் நாதவிந்துக்கள் திரண்டுருண்டு கைவருமாறு செய்வர். அப்படிச் செய்தால் முதுகந்தண்டு ஒருகாலும் தளராது. தளராதாகவே உடலுக்கும் அழிவில்லை. பரிதியாகிய ஞாயிற்று மண்டிலம். கொப்பூழ் முதல் மிடற்று வரையுள்ள இடமாகும். மதியாகிய திங்கள் மண்டிலம், மிடறு முதல் ஆயிர விதழ்த்தாமரைக் களமாகிய உச்சிவரையுள்ள இடமாகும். வானீர்: உயர்ந்த தன்மை வாய்ந்த: நாதவிந்துக்கள். அங்கம்: உடல். வான் - உயர்வு.

கண்டனும் கண்டியும் - கண்டத்தைக்கொண்டு கருமம் முடித்த ஆடவனும் மாதும். வண்டி - இடகலை, பிங்கலை. வானீர் - அமுதம் தண்டு - தேகம்.

## 808. அங்கப் புணர்ச்சியு மாகின்ற தத்துவம்

808. அங்கப் புணர்ச்சியு மாகின்ற தத்துவம்
அங்கத்தில் விந்து வருகின்ற போகத்துப்
பங்கப் படாமற் பரிகரித் துத்தம்மைத்
தங்கிக் கொடுக்கத் தலைவனு மாமே.

அங்கப் புணர்ச்சியாகிய பரியங்க யோகப் பயிற்சியால் உடம்பின்கண் அழியாது தங்கும் நாதவிந்துக்கள். விந்து நுகர்வு நினைவால் கீழ்நோக்கி வீணாகாமல் மேல் நோக்கிச் செலுத்தி நெற்றி நடுவில் தங்கும்படி அமைப்பர். அப்படி அமைத்தவர் பொறி புலன்களைத் தம் வழிப்படுத்தும் தலைவருமாவர். தத்துவம் - அழியாதது. போகம் - நுகர்வு நினைப்பு. பரிகரித்து - நீக்கிச் செலுத்தி.

அங்கப்புணர்ச்சி - பரி அங்கி யோகம். பங்கப்படாமல் நாதவிந்துக்கள் கெடாமல்.

## 809. தலைவனு மாயிடுந் தன்வழி ஞானந்

809. தலைவனு மாயிடுந் தன்வழி ஞானந்
தலைவனு மாயிடுந் தன்வழி போகந்
தலைவனு மாயிடுந் தன்வழி யுள்ளே
தலைவனு மாயிடுந் தன்வழி அஞ்சே.

ஒருமைப் (யோகம்) பயிற்சியால் புலன்களை (பொறி)த்தன் வழிப்படுத்தினால் அப்படிச் செய்தவர் ஐம்பொறிகளுக்கும் தலைவராவர். மேலும் உட்கலன்களோடு கூடிய நுண்ணுடற்கும் தலைவராவர். அதனால் போகமாகிய நுகர்வும் அவர் வழிப்படும். படவே திருவடியுணர்வாகிய மெய்ஞ்ஞானத்துக்கு உரிமையாம் தலைமை எய்துவர்.

தன்வழி அஞ்சு - ஐம்புலன்களும் தன் வசமே.

## 810. அஞ்சு கடிகைமேல் ஆறாங் கடிகையில்

810. அஞ்சு கடிகைமேல் ஆறாங் கடிகையில்
துஞ்சுவ தொன்றத் துணைவி துணைவன்பால்
நெஞ்சு நிறைந்தது வாய்கொளா தென்றது
பஞ்ச கடிகை பரியங்க யோகமே.

பரியங்க யோகம் பயில்வார் ஐந்து நாழிகை அளவு பயிலுதல் வேண்டும். அதற்குமேலும் பயிலப்புகின் ஆறாவது நாழிகையில் துணைவி துணைவன்பால் கொள்ளும் புலவியினை நீளவிட்டால் நெஞ்சு நிறைந்தது வாய் சோர்வதுபோல் விந்து வெளியாகும். ஆதலால் பரியங்கயோகம் ஐந்து நாழிகையேயாம். கடிகை - நாழிகை.

## 811. பரியங்க யோகத்துப் பஞ்ச கடிகை

811. பரியங்க யோகத்துப் பஞ்ச கடிகை
அரியஇவ் வியோகம் அடைந்தவர்க் கல்லது
சரிவளை முன்கைச்சி சந்தனக் கொங்கை
உருவித் தழுவ ஒருவற்கொண் ணாதே.

ஐந்து நாழிகை அளவு இப் பரியங்க யோகம் பயின்றவரே திருவருட் பேற்றைச் சேர்வர். ஏனையோர்க்கு, அப் பேறு கிட்டாது. திருவருளை இங்குப் பெண்ணாக உருவகித்தார். சரிவளை முன்கை அகத்தவமாகிய யோகப் பயிற்சி. சந்தனக் கொங்கை தவப் பயனாம் விந்து எனப்படும் ஒளியமிழ்து கைச்சி - கையை உடையவள்.

## 812. ஒண்ணாத யோகத்தை உற்றவ ராரென்னில்

812. ஒண்ணாத யோகத்தை உற்றவ ராரென்னில்
விண்ணார்ந்த கங்கை விரிசடை வைத்தவன்
பண்ணார் அமுதினைப் பஞ்ச கடிகையில்
எண்ணா மெனஎண்ணி இருந்தான் இருந்ததே.

அரிய பெரியவர்கட்கல்லாமல் ஏனையார்க்கு இயற்ற ஒண்ணாத இப் பரியங்க யோகத்தைப் பயின்று வெளிப்படுத்தியவர் சீகண்ட முதல்வராவர். ["சீகண்ட உருத்திரன் அயன்மால் போலச் சகலரினன்றிப் பிரளயாகலரிற் பக்குவமுடையோனாய்க் கட்டு நீங்கி முத்தி பெற்ற கடவுளாகலானும், பரமசிவனுக்குரிய எல்லாப் பெயர்களும் வடிவமும் தொழிலும் பெற்றுடையன்," மெய்கண்டார் தமிழ் சிவஞான முனிவரனார் பேருரை] இவர் நடப்பாற்றலாகிய சலமகளை (கங்கை)த் திருச்சடையில் வைத்தவர். வேறொன்றும் எண்ணாது ஐந்து நாழிகை பரியங்கம் பயின்றவர் இருந்தபடியே இருந்து இன்புறுவர். கங்கை - சலமகள்; (திரோதான சத்தி) நடப்பாற்றல்.

# 813. ஏய்ந்த பிராயம் இருபது முப்பதும்

813. ஏய்ந்த பிராயம் இருபது முப்பதும்
வாய்ந்த குழலிக்கு மன்னர்க்கு மானந்தம்
வாய்ந்த குழலியோ டைந்து மலர்ந்திடச்
சோர்ந்தன சித்தமுஞ் சோர்வில்லை வெள்ளிக்கே.

இப் பரியங்க யோகப் பயிற்சிக்குரிய அகவை பெண்களுக்கு இருபதும், ஆண்களுக்கு முப்பதுமாகும். இந்த யோகம் கை வந்தவர் இடையறாப் பேரின்பம் எய்துவர். இவர்கள் உடனுறைந்து வாழினும் ஐம்புலன் மலர எண்ணம் (சித்தம்) இடம் பெறினும் வெள்ளிக்குச் சோர்வில்லை என்க. வெள்ளி - விந்து. திருநீலகண்டக் குயவனாரும் அவர்தம் கற்புறு மனைவியாரும் பிரிவின்றி உடனாயிருந்தும் உடனுறை வின்மையராய்ச் சிவயொகியராய் வாழ்ந்தனர். அம்மட்டோ, 'அற்புறு புணர்ச்சியின்மை அயலறியாமை வாழ்ந்தார்.' அவர்தம் செப்பரும் வாழ்க்கையின் வாய்மைச் சிறப்பு இதற்கு எடுத்துக்காட்டாகும்.

ஏய்ந்த..முப்பதும் - பரியங்கி யோகம் பயில் பெண்களுக்கு 20 வயதும் ஆடவர்க்கு முப்பது வயதும் ஆம். வெள்ளி - விந்து; சுக்கிலம்.

## 814. வெள்ளி யுருகிப் பொன்வழி ஓடாமே

814. வெள்ளி யுருகிப் பொன்வழி ஓடாமே
கள்ளத்தட் டானார் கரியிட்டு மூடினார்
கொள்ளி பறியக் குழல்வழி யேசென்று
வள்ளியுண் ணாவில் அடக்கிவைத் தாரே.

இப் பரியங்க யோகப் பயிற்சி கைவராதவர் சிலர் கை வந்தார் போன்று நடிப்பர். அவர்கள் கள்ளத்தட்டார் எனப் பெயர் பெறுவர். அவர்களுக்கு வெள்ளி உருகிப் பொன்னாகிய நாதவழி ஓடும். இதனை அவர்கள் மனச்சான்று நன்குணர்த்தும். என்றாலும் அவர்கள் அதனை மறைத்து வைப்பர் அவர்கள் வஞ்சனையாகக் கொண்ட அக் கொள்கை வெளிப்படக் குழலாகிய குறிவழியே சென்று ஒழுகிவிடும். இதனைப் பிறர்குற்றமாகிய அற்றமறைக்கும் பெரியவர் வெளிப்படுத்தாது தங்கள் அழகிய நாவில் அடக்கி வைத்துக்கொள்வர். வள்ளியல் - அழகு பொருந்திய.

வெள்ளி - விந்து. பொன் - நாதம். கள்ளத் தட்டான் - யோகிபோல் நடிப்பவன். கரி - சாட்சியான மனம். குழல் - இலிங்கம்; ஆண் குறி.

## 815. வைத்த இருவருந் தம்மின் மகிழ்ந்துடன்

815. வைத்த இருவருந் தம்மின் மகிழ்ந்துடன்
சித்தங் கலங்காது செய்கின்ற ஆனந்தம்
பத்து வகைக்கும் பதினெண் கணத்துக்கும்
வித்தக னாய்நிற்கும் வெங்கதி ரோனே.

இப் பரியங்க யோகப் பயிற்சி கைவந்த இருவரும் எண்ணம் சிறிதும் கலங்காது செய்கின்ற வாழ்க்கைஇன்பம் ஏனையோர்க்கு விளக்கந் தருவதாகும். அதனால் அவர்கள் புறவிருள் போக்குகின்ற வெங்கதிரவன்போல் பத்துப் புலன்களில் உள்ளவர்க்கும் பதினெட்டுக் குழுவிலுள்ளவர்க்கும் ஒட்டிய அகவிருளகற்றும் செயற்கரிய ஒண்மையராய்த் திகழ்வர். பத்துப்புலம் - பத்துத்திசை. வித்தகன் - செயற்கரிய செய்வோன்.

பதினெண் கணம் - உலகிலுள்ள 18 வகைத் தொழிலாளர். கூட்டங்கட்கும்.

# 816. வெங்கதி ருக்குஞ் சனிக்கும் இடைநின்ற

816. வெங்கதி ருக்குஞ் சனிக்கும் இடைநின்ற
நங்கையைப் புல்லிய நம்பிக்கோ ரானந்தந்
தங்களிற் பொன்னிடை வெள்ளிதா ழாமுனந்
திங்களிற் செவ்வாய் புதைத்திருந் தாரே.

பகலவ மண்டிலப் பண்ணவனாகிய அருளோன் - சதா சிவனுக்கும், அவர்தம் கீழ் நோக்கிய பகுதியிற் காணும் சனிக்கும் இடையே நின்ற நங்கையாகிய மனோன்மனியைக் கண்டு கலந்த ஆண்டாற்கு ஒப்பிலாத பேரின்பம் உண்டாம். தங்களுள் பொன்னாகிய நாதத்தினிடத்து வெள்ளியாகிய விந்து கீழ் நோக்கித் தங்குவதன் முன்னம், திங்களாகிய மதிமண்டிலத்துக்கண் அவ் விந்து செவ்வாயாகிய நாதத்துடன் கலந்து அங்குத் தங்கப் பயின்றோராவர். வெங்கதிர்: உவம ஆகுபெயராக முழுமுதற் சிவன் என்றலும் ஒன்று. நம்பி - ஆண்டான்.

வெங்கதிர் - சூரிய மண்டல அதிபதியாகிய சதாசிவம். சனி - அதோமுக மண்டலமாகிய சனி. நங்கை - மன உன்மனி. வெள்ளி - திங்கள்; விந்து. பொன் - செவ்வாய்; நாதம்.

## 817. திருத்திப் புதனைத் திருத்தல்செய் வார்க்குத்

817. திருத்திப் புதனைத் திருத்தல்செய் வார்க்குக்
கருத்தழ காலே கலந்தங் கிருக்கில்
வருத்தமு மில்லையா மங்கைபங் கற்குந்
துருத்தியுள் வெள்ளியுஞ் சோரா தெழுமே.

பரியங்க யோகத்தால் உள்ளத்தைத் தூய்மை செய்து அதனால் புதனாகிய அறிவைத் திருவடியில் வைப்பதாகிய நன்மையைச் செய்வார்க்கு எண்ணிப் பார்க்கும் சிறந்த அழகோடு மேனிலையிற் கலந்திருக்கில் உடலுறு வருத்தம் ஏதும் இன்றாம். மங்கைபங்கனாகிய முழுமுதற் சிவனருளால், துருத்தி போன்ற நெற்றி நடுவண் வெள்ளி போன்ற திங்கள்ஒளியும் தளர்ச்சியின்றிக் கிளர்ச்சியுடன் எழும். ஏதும் - ஒரு சிறிதும்.

புதன் - அறிவு. வெள்ளி - சந்திர ஒளி.

## 818. எழுகின்ற தீயைமுன் னேகொண்டு சென்றிட்டால்

818. எழுகின்ற தீயைமுன் னேகொண்டு சென்றிட்டால்
மெழுகுரு கும்பரி செய்திடும் மெய்யே
உழுகின்ற தில்லை ஒளியை அறிந்தபின்
விழுகின்ற தில்லை வெளியறி வார்க்கே.

கொழுந்துவிட்டு எரிகின்ற தீயின்முன் கொண்டு போனதும் மெழுகு உருகுவது போன்று பயிற்சியில்லார்க்கு உடல் அழியும். அதனால் அஃது எல்லாராலும் விரும்பப்படுகின்றதில்லை. அருள் ஒளியைப்பரியங்க யோகப் பயிற்சியால் நெஞ்சத்தின்கண். அருளால் உணர்ந்தபின், பரவெளி தோன்றும். அவர்கட்கு உடம்பும் அழிவதில்லை, விழுகின்ற - விரும்பப்படுகின்ற.

உழுகின்றது - அழிக்கின்றது.

## 819. வெளியை அறிந்து வெளியி னடுவே

819. வெளியை அறிந்து வெளியி னடுவே
ஒளியை அறியி னுளிமுறி யாமே
தெளிவை அறிந்து செழுநந்தி யாலே
வெளியை அறிந்தனன் மேலறி யேனே.

பரியங்க யோகப்பயிற்சியால் பரவெளியை அறிந்து அருள் ஒளியை உணர்தல்வேண்டும். உணர்ந்தால் உணர்வோர் உள்ளம் அவ்வொளிக்கு அடிமையாகும். இதன் துணையால் திருவடி யுணர்வு தலைப்படும். அது தலைப்பட எல்லாம்வல்ல நந்தி வெளிப்படும். நந்தியருளாலே உணர்வு வெளியை - திருச்சிற்றம்பலத்தை உணர்தல் கூடும். அதுவே பேரின்பம். இப் பேரின்பினைக் காலமுண்டாக எய்தாமல் போனேன் என அவ் ஆவி வருந்தும். தெளிவு - திருவடியுணர்வு, வெளி - திருச்சிற்றம்பலம்.

உளி - மனம், முறி - அடிமை. மேல் - முன்னமேயே.

## 820. மேலாந் தவத்தில் விரிந்தவ ராரெனின்

820. மேலாந் தவத்தில் விரிந்தவ ராரெனின்
மாலாந் திசைமுகன் மாநந்தி யாயவர்
நாலா நிலத்தி னடுவான வப்பொருள்
மேலா யுரைத்தனர் மின்னிடை யாளுக்கே.

மேலாந்தலமாகிய சிவ உலகத்திலே அருளால் சென்று பொருந்தியவர் யாரென்றால்? ஆசான் மெய் (சுத்தவித்தை)க்கண் தங்கி இருக்கும் திருமால், நான்முகன், நந்தியெங் கடவுள் என்பவராவர். நாலாம் நிலம் என்று சொல்லப்படும் பேருறக்கமாகிய துரியநிலையின் நடுவில் செம்பொருளாகிய சிவம் தோன்றும். அச் சிவன் மின்னிடையாளாகிய திருவருளுக்கு முதல்வனாவன்.

நாலாநிலம் - துரியம்.

## 821. மின்னிடை யாளுமின் னாளனுங் கூட்டத்துப்

821. மின்னிடை யாளுமின் னாளனுங் கூட்டத்துப்
பொன்னிடை வட்டத்தின் உள்ளே புகப்பெய்து
தன்னொடு தன்னைத் தலைப்பெய்ய வல்லாரேன்
மண்ணிடைப் பல்லூழி வாழலு மாமே.

மின்னிடையாளாகிய திருவருளும் மின்னானாகிய சிவ பெருமானும் ஒன்றியியைந்து பொன்னிடை வட்டமாகிய ஆயிரஇதழ்ப் பரவெளியில் எழுந்தருளுவன் அதற்காம் தவப்பயிற்சியைக் கைக்கொண்டவர், தம்முடனே தன்ஐ ஆகிய தலைவனைக் கூடியவராவர். அத்துணை வல்லார் இம் மண்ணிடைப் பல்லூழி வாழலுஞ் செய்வர்.

பொன்னிடை வட்டம் - பொன்போலும் ஒளியுள்ள சகசிர அறை.

## 822. வாங்க லிறுதலை வாங்கலில் வாங்கிய

822. வாங்க லிறுதலை வாங்கலில் வாங்கிய
வீங்க வலிக்கும் விரகறி வாரில்லை
வீங்க வலிக்கும் விரகறி வாளரும்
ஓங்கிய தன்னை உதம்பண்ணி னாரே.

உள்ளுக்கு உயிர்ப்பினை இழுத்தலாகிய பூரகமும், வெளிவிடுதலாகிய இரேசகமும், உள்ளடக்கலாகிய கும்பகமும் முறையாகச் செய்யும் வழிவகை அறிவாரில்லை. அம் முறை அறிவார்கள் அதனால் சிறப்பு எய்திய தம்மை உய்யும்வழி செய்தவராவர். விரகு - வழிவகை (உபாயம்).

வாங்கல் - பூரித்தல். இறுதல் - இரேசகம். வீங்கல் - கும்பித்தல். உதம்பண்ணல் - உய்யும் வழி அறிதல்.

## 823. உதமறிந் தங்கே ஒருசுழிப் பட்டாற்

823. உதமறிந் தங்கே ஒருசுழிப் பட்டாற்
கதமறிந் தங்கே கபாலங் கறுக்கும்
இதமறிந் தென்றும் இருப்பாள் ஒருத்தி
பதமறிந் தும்முளே பார்கடிந் தாளே.

உய்யும் வழியறிந்து அவ்விடத்து ஒப்பில்லாத சிவமும் சிவையும் ஒருங்கியைந்து விளங்கும்சுழி தோன்றின், அதன் வழியாக மண்டை கருமையாகும். திருவருளம்மையாகிய சிவசத்தி செவ்வியறிந்து எக் காலத்தும் திகழ்ந்து விளங்குவள். அத் திருவருள் மென்னிலையறிந்து நிலைக்களங்களாகிய ஆதாரங்களைக் கடந்து ஆண்டருள்வள். சுழி - பிரமக்கிரந்தி. இதம் - செவ்வி. கபாலம் - மண்டை.

கதம் - மார்க்கம். பதம் - பக்குவம். பார் - ஆதாரங்கள்.

## 824. பாரில்லை நீரில்லை பங்கயம் ஒன்றுண்டு

824. பாரில்லை நீரில்லை பங்கயம் ஒன்றுண்டு
தாரில்லை வேரில்லை தாமரை பூத்தது
ஊரில்லை காணும் ஒளியது ஒன்றுண்டு
கீழில்லை மேலில்லை கேள்வியிற் பூவே.

ஐம்பூதங்களுள் பூவினுக்கு வேண்டப்படும் நிலமும் நீருமில்லை. ஆனால் இவைகளுக்கு அப்பால் ஒரு தாமரையுண்டு. அது தான் திருவருள் தோற்றமாகிய ஆயிரஇதழ்த் தாமரை என்ப. அத் தாமரைக்கு அரும்பும் இல்லை. வேரும் இல்லை. ஆனால் அத் தாமரை மலர்ந்துள்ளது. அங்கு ஓர் ஊருமில்லை. கீழாகிய ஆதியும் மேலாகிய அந்தமும் இல்லாத கேள்வியென்று சொல்லப்படும் மெய்யுணர்வாகிய பூவாகும் அது. அப்பூவின்கண் ஒப்பில்லாத சிவஒளி ஒன்றுண்டு.

பங்கயம் - சகசிர அறை. தார் - அரும்பு. கேள்வி - ஞானம்.

## 825. உடலிற் கிடந்த வுறுதிக் குடிநீர்க்

825. உடலிற் கிடந்த வுறுதிக் குடிநீர்க்
கடலிற் சிறுகிணற் றேற்றமிட் டாலொக்கும்
உடலில் ஒருவழி ஒன்றுக் கிறைக்கில்
நடலைப் படாதுயிர் நாடலு மாமே.

உடலின்கண் காணப்படும் திருவருள் துணையால் ஊறும் சிவக்குடிநீர் ஒன்றுண்டு. அது கடல் அருகே தோன்றும் சிற்றூறல் போல் இனிப்புடையதாக இருக்கும். அவ் வூறலுள் ஏற்றமிட்டு இறைப்பது ஒப்ப உடலின்கண் ஒருவழியாகிய நெஞ்சத்திடத்துத் திருவடிமறவா நினைப்பாகிய சிவநீரை இறைத்தால் உடலுக்கு நடலையாகிய கலக்கம் ஏற்படாது. இஃது உயிர்க்குப் பெருங்காவலுமாகும். நாடல் - காத்தல்.

கடலிற் சிறுகிணறு - கடலுக்கருகிலுள்ள நன்னீர்க் கிணறு. உடலில் ஒருவழி - பிரமரந்திரம். நடலை - கலக்கம்.

## 826. தெளிதரும் இந்தச் சிவநீர் பருகில்

826. தெளிதரும் இந்தச் சிவநீர் பருகில்
ஒளிதரு மோராண்டில் ஊனமொன் றில்லை
வளியுறும் எட்டின் மனமும் ஒடுங்கும்
களிதருங் காயங் கனகம தாமே.

தெளிவைத் தருகின்ற இந்தச் சிவநீராகிய அமிழ்தைப் பருகினால் ஓராண்டுப் பயிற்சியில் சிவவொளி மேலோங்கும். உயிர்ப்பாகிய அகாரத்தில் மனமும் ஒடுங்கும். சிவஇன்பத்திற்குரிய இவ் வுடல் பொன்மேனியாகும். அமுரி சிறுநீருக்கும் பெயராகும். அதனால் அதனையுடைய உடலைக் கடல் என முற்பாட்டில் உருவகித்தார். கடல்நீர் மேகத்தால் மொண்டு உவர்நீக்கி நன்னீராவதுபோல் இவ் வுடம்பின்கண் உயிர்ப்புப் பயிற்சியால் மாறா இனிய சிவநீர் கடலருகே தோன்றும் சிற்றூறல் போன்றதெனவும் கூறப்பட்டது. இப் பாட்டில் அதன் நன்மை கூறப்படுகின்றது. எட்டு - அகரம்: இது தமிழெண்.

சிவநீர் - அமுரி, அமுத நீர். வளியுறு எட்டின் - எட்டின் குறியாகிய அகர உருவாகியவர் கலந்துள்ள (சீவப்) பிராணவாயு.

## 827. நூறு மிளகு நுகருஞ் சிவத்திநீர்

827. நூறு மிளகு நுகருஞ் சிவத்திநீர்
மாறும் இதற்கு மருந்தில்லை மாந்தர்கள்
தேறில் இதனைத் தெளியுச்சி கப்பிடின்
மாறும் இதற்கு மறுமயி ராமே.

நூறுமிளகு அளவு சிவத்திநீரைப் பருகுவார்க்கு உடல் முன்னிலையினும் சிறந்து பொன்மேனியாக மாறும். இதற்குமேற் சிறந்த சாவாமருந்து வேறொன்றும் இல்லை. மக்கள் இதனைத் தெளிந்து இச் சிவநீரை உச்சித்தொளைக்குக் கொண்டுசேர்ப்பின் உடல் ஒளியுடலாக மாறும். வெள்ளை நரைமயிரும் மிக்க கருமையாக மாறும் (சிவநீருடன்
ஒருநாளைக்கு ஒரு மிளகு விழுக்காடு நூறுநாளைக்கு உண்ணுதல் வேண்டும் எனவும் கூறுவர்). உச்சி - பிரமரந்திரம்.

கப்பு - சேர்.

## 828. கரையரு கேநின்ற கானல் உவரி

828. கரையரு கேநின்ற கானல் உவரி
வரைவரை என்பர் மதியிலா மாந்தர்
நுரைதிரை நீக்கி நுகரவல் லார்க்கு
நரைதிரை மாறு நமனுமங் கில்லையே.

கொப்பூழின்கீழ் கரை அருகே நின்ற பருகலாகாத் தோற்றமுடன் நின்ற உப்புநீர் (சிறுநீர்) பயிற்சியிலா மாந்தர் அதனைக் கழிகழி என்று கரைவர். சாரமற்றதாகிய நுரையும் பித்தப்பாங்காகிய திரையும் அகற்றி அமிழ்தாக்கி மேலேற்றுதலாகிய துகர்தலைச் செய்ய வல்லார்க்கு நரைதிரை ஏற்படாது. அவர்கட்குக் கூற்றுவன் வருதலாகிய இறப்பும் இல்லை.

உவரிக்கரையருகே நின்ற காணல் - உப்பு நீர்ப்பையருகே உள்ள விந்து. வரை வரை - ஒழி ஒழி; கழி கழி.

## 829. அளக நன்னுத லாயோ ரதிசயங்

829. அளக நன்னுத லாயோ ரதிசயங்
களவு காயங் கலந்தஇந் நீரிலே
மிளகு நெல்லியும் மஞ்சளும் வேம்பிடில்
இளகும் மேனி இருளுங் கபாலமே.

எழில் வாய்ந்த இருங்கூந்தலையுடைய பெண்ணே! வியத்தகு புதுமையொன்று விளம்புவேன் கேட்பாயாக. உடம்பகத்து மறைந்து விரவிய இச் சிறுநீரிலே புறத்து மருந்து முறையாக மிளகு நெல்லி மஞ்சள் வேம்பு ஆகிய நான்கும்கலந்து கைக்கொண்டால் உடம்பு மென்மைப்பொலிவு எய்தும். மண்டைமயிரும் கொண்டலொத்துக் கருமையாகும்.

களவு - களவு, கற்பு என்னும் இருமுறைகளில் ஒன்று. மிளகு...வேம்பு - இந் நான்கும் அரைத்து, பாலுடன் கலந்து, தலைக்குத் தேய்த்து முழுகுவது கற்பமுறை.

## 830. வீர மருந்தென்றும் விண்ணோர் மருந்தென்றும்

830. வீர மருந்தென்றும் விண்ணோர் மருந்தென்றும்
நாரி மருந்தென்றும் நந்தி அருள்செய்தான்
ஆதி மருந்தென் றறிவார் அகலிடஞ்
சோதி மருந்திது சொல்லவொண் ணாதே.

சிறந்த மருந்தென்றும், தெய்வமருந்தென்றும், திருவருள் மருந்தென்றும் நந்தியெங்கடவுள் நவின்றனர். உண்மையுணர்வார் இதனை ஆதிமருந்தெனவும் அகன்ற உலகினை விளக்கும் உடலொளி விளக்கு இதுவாகும் எனவும் மொழிந்தார். இம் மருந்தின் பெருமை இயம்புதற்கரிது. விண்ணோர் - தெய்வம். நாரி - திருவருள்.

## 831. எய்து மதிக்கலை சூக்கத்தி லேறியே

831. எய்து மதிக்கலை சூக்கத்தி லேறியே
எய்துவ தூலம் இருவகைப் பக்கத்துள்
எய்துங் கலைபோல ஏறி இறங்குமாம்
துய்யது சூக்கத்துத் தூலத்த காயமே.

திங்களுடைய தேய்தலும் வளர்தலுமாகிய இருவகைப் பக்கத்துமுள்ள கலைகள் நுண்மையிலிருந்து பருமையாய் விளங்கற்கும், பருமையிலிருந்து நுண்மையாய் ஒடுங்கி மறைதற்கும் எடுத்துக்காட்டாக இருப்பனபோல் மாந்தர் உடம்பும் நுண்மையிலிருந்து பருமையாய் விளங்குதலும் பருமையிலிருந்து நுண்மையாய் ஒடுங்குதலும் கொள்ளுதல் வேண்டும். உடம்புகள் மலநீக்கத்துக்குத் துணையாக அளித்தருளப்பட்ட விளக்கனைய தூய்மையது; காலவரையறைக்கு உட்பட்டது.

## 832. ஆகின்ற சந்திரன் சூரியன் அங்கியுள்

832. ஆகின்ற சந்திரன் சூரியன் அங்கியுள்
ஆகின்ற ஈரெட்டொ டாறிரண் டீரைந்துள்
ஏகின்ற வக்கலை யெல்லா மிடைவழி
ஆகின்ற யோகி அறிந்த அறிவே.

திங்களுக்குரிய கலைகள் பதினாறு. ஞாயிற்றுக்குரிய கலைகள் பன்னிரண்டு தீயினுக்குரிய கலைகள் பத்து. இவைகளை அகமுகப்பயிற்சியால் தெளிந்து நடுநாடியின் வழியாக மேல்நோக்கிச் செலுத்துவர். இதன் பயனாக உடம்பு எழிலுடன் விளங்கும்.

சந்திரன் ஈரெட்டு - சந்திரகலை 16. சூரியன் ஆறிரண்டு - சூரியகலை 12. அங்கி எட்டெட்டு - அக்கினிகலை 64. இடைவழி - இடகலை.

## 833. ஆறாற தாங்கலை ஆதித்தன் சந்திரன்

833. ஆறாற தாங்கலை ஆதித்தன் சந்திரன்
நாறாற நலங்கினார் ஞாலங் கவர்கொளப்
பேறாங் கலைமுற்றும் பெருங்காலில் ஈரெட்டு
மாறாக் கதிர்கொள்ளு மற்றங்கி கூடவே.

ஞாயிற்றினுடைய பன்னிரண்டு கலைகளும் திங்களின் வெளியாகச் செலுத்தப்பயின்றவர் உலகோர் உவக்கும் பேற்றினை எய்துவர். உயிர்ப்பினில் இடமூக்கு வலமூக்குகளுக்குரிய பதினாறு கலைகளும் தீயின் கலையுடன் கூடப் புறத்துச் செல்லுவதற்கு மாறாக நடுநாடி வழியிற் செல்லும். பெருங்கால் - உயிர்ப்பு; பிராணவாயு. இடமூக்கு - இடகலை. வலமூக்கு - பிங்கலை. மாறாக் - மாறாக.

ஆறு ஆறு அதாம் கலை - 12 கலை அளவாகிய.

## 834. பத்தும் இரண்டும் பகலோன் உயர்கலை

834. பத்தும் இரண்டும் பகலோன் உயர்கலை
பத்தினொ டாறும் உயர்கலை பான்மதி
ஒத்தநல் அங்கிய தெட்டெட் டுயர்கலை
அத்திறன் நின்றமை ஆய்ந்துகொள் வீரே.

பகலோனாகிய ஞாயிற்றின் உயர்வாகிய கலைகள் பன்னிரண்டாகும். அதுபோல் பால்போல் விளங்கும் திங்களின் கலைகள் பதினாறாகும். தீயின் கலை அறுபத்துநான்காகும். இவை மூன்றும் இம்முறையாக விளங்குவதை ஆராய்ந்துகொள்வீர்களாக. அங்கி - தீ.

## 835. எட்டெட் டனலின் கலையாகும் ஈராறுட்

835. எட்டெட் டனலின் கலையாகும் ஈராறுட்
சுட்டப் படுங்கதி ரோனுக்குஞ் சூழ்கலை
கட்டப் படுமீ ரெட்டா மதிக்கலை
ஒட்டப் படாஇவை ஒன்றோடொன் றாவே.

மேற்கூறிய முறைப்படி அறுபத்துநான்குடன் ஒட்டியிருக்கின்ற தீயும், பன்னிரண்டுடன் கூடிய ஞாயிறும், பதினாறுடன் ஒட்டிய திங்களும் தனித்தனி விளங்கிக்கொண்டிருக்கின்றன. இவை ஒன்றோடொன்று ஒட்டுதல் கூடா.

## 836. எட்டெட்டும் ஈராறும் ஈரெட்டுந் தீக்கதிர்

836. எட்டெட்டும் ஈராறும் ஈரெட்டுந் தீக்கதிர்
சுட்டிட்ட சோமனில் தோன்றுங் கலையெனக்
கட்டப் படுந்தார கைக்கதிர் நாலுள
கட்டிட்ட தொண்ணூற்றொ டாறுங் கலாதியே.

மேற்கூறிய முவ்வகையான கலைக்கதிர்களுள், பிறையுவாவாகிய அமாவாசையில் திங்களின் கதிர் ஒடுங்கியிருப்பதால் சுட்ட சோமன் எனக் கூறப்படும். சோமன் - திங்கள். அந்நாளில் திங்களினிடத்தில் விண்மீன்போல் காணப்படும் கதிர்கள் நான்குள. இவை அடங்கியிருப்பன. இவை தொண்ணூற்றாறு மெய்களுடன் கலந்து நிற்கும். மெய்கள் - தத்துவங்கள். கலைகள் ஞாயிறு. 12, திங்கள் 16, தீ 64, நாள் 4. ஆகக் கலைகள் தொண்ணூற்றாறு.

## 837. எல்லாக் கலையும் இடைபிங் கலைநடுச்

837. எல்லாக் கலையும் இடைபிங் கலைநடுச்
சொல்லா நடுநாடி யூடே தொடர்மூலஞ்
செல்லா எழுப்பிச் சிரத்துடன் சேர்தலால்
நல்லோர் திருவடி நண்ணிநிற் போரே.

ஞாயிறு திங்கள் தீ இவற்றின் கலைகளெல்லாம் இடநாடி வலநாடி, சிறப்பாகச் சொல்லப்படும் நடுநாடி இவற்றின் வழியாகக் கீழ் நோக்கி மூலத்திற்செல்லாது, மேலெழுப்பி உச்சிக்குச் செல்லுமாறு செலுத்தச் சேர்தலால் அங்ஙனம் சேரும் பேறுபெற்றவர் நல்லோராவர். அத்தகையோர் சிவபெருமான் திருவடியை நண்ணி நிற்பர். இடநாடி - இடகலை. வலநாடி - பிங்கலை. நடுநாடி - சுழுமுனை.

## 838. அங்கியிற் சின்னக் கதிரிரண் டாட்டத்துத்

838. அங்கியிற் சின்னக் கதிரிரண் டாட்டத்துத்
தங்கிய தாரகை யாகுஞ் சசிபானு
வங்கிய தாரகை யாகும் பரையொளி
தங்க நவசக்ர மாகுந் தரணிக்கே.

தீயினின்று வெளிப்படும் நுண்கதிர்கள் இரண்டும், ஞாயிறு. திங்கள், விண்மீன்கள் எல்லாவற்றுடனேயும் விரவி விளக்கும். திருவருள் பரவெளியில் திளைத்தலும், புதிய மறைவழி (நவசக்கரம்) ஆதலும் ஆகும். சின்னக்கதிர் - நுண்கதிர். ஆட்டல் - விளக்கல். தாரகை - ஒழுங்கு. வங்கிய தாரகை - கூட்டமான விண்மீன்கள்.

வங்கிய - கூட்டமான.

## 839. தரணி சலங்கனல் கால்தக்க வானம்

839. தரணி சலங்கனல் கால்தக்க வானம்
அரணிய பானு அருந்திங்கள் அங்கி
முரணிய தாரகை முன்னிய ஒன்பான்
பிரணவ மாகும் பெருநெறி தானே.

நிலம், நீர், தீ, காற்று இந் நான்கற்கும் இடங்கொடுத்துக் கொண்டிருக்கும் தக்க வானம், அழகிய ஞாயிறு, ஞாயிற்றின் ஒளிபெற்று விளங்கும் திங்கள், சிவவேள்வித்தீ, வலிமைமிக்க விண்மீன்கள் ஆகிய ஒன்பதும் பிரணவமாகிய ஓங்காரத்துள்ளொளியாம் சிவபெருமானின் சார்புருவமாகும். இவற்றை மேற்கொண்டொழுகுவது சித்தாந்த சைவப் பெருநெறியாகும். தரணி நிலம். சலம் - நீர். கனல் - தீ. அரணிய - அழகிய. அங்கி - சிவ வேள்வித்தீ; காட்டுத்தீ, வீட்டுத்தீ, பாட்டுத்தீ (இம் மூன்றும் முறையே ஆகவனீயம், காருகபத்தியம், தெக்கணாக்கினி என்ப). முரணிய - வலிமைமிக்க. பாட்டு - ஞானம்.

# 840. தாரகை மின்னுஞ் சசிதேயும் பக்கத்துத்

840. தாரகை மின்னுஞ் சசிதேயும் பக்கத்துத்
தாரகை மின்னாச் சசிவளர் பக்கத்துத்
தாரகை பூவிற் சகலத்தி யோனிகள்
தாரகைத் தாரகை தானாஞ் சொரூபமே

தேய்பிறையில் விண்மீன்கள் விளங்கி மின்னும், அது போல் வளர்பிறையில் அவைகள் மின்னா. உலகவுயிர்கள் அனைத்தும் உடலெடுக்கும் பிறப்பு விண்மீனைக்கொண்டே காணப்படுகின்றது. அதனால் உலகனைத்தும் விண்மீன்களின் உருவமே என்று உருவகம் செய்வது பொருந்தும். ஒவ்வொருவருக்கும் பிறந்தநாள் என்றே வழங்குகின்றோம். நாள் - நட்சத்திரம். (இத் திருமந்திரம் ஆவி அறியாமை வயப்பட்டுத் தன்முனைப்போடுள்ள காலத்துத் தேய்பிறையில் விண்மீன் வெளிப்படுவதையும், திருவடி யுணர்வு வெளிப்பட்டுத் தன் முனைப்பற்று அருள்வழியில் ஆவி அடங்கிநிற்கும் நிலையின்கண் விண்மீன் வெளிப்படாமையினையும் குறிப்பிற் புலப்படுப்பதாகும்.)

தாரகைபூவில் சகலத்தியோனிகள் - தாரகைகளே உலகில் சகல உற்பத்திக்குங் காரணம்.

## 841. முற்பதி னைந்தின் முளைத்துப் பெருத்திடும்

841. முற்பதி னைந்தின் முளைத்துப் பெருத்திடும்
பிற்பதி னைந்திற் பெருத்துச் சிறுத்திடும்
அப்பதி னைந்தும் அறியவல் லார்கட்குச்
செப்பரி யான்கழல் சேர்தலு மாமே.

திங்களின் கலைகள் முதற் பதினைந்தில் முளைத்து முறை முறையாகப் பெருத்திடும். பிற்பதினைந்தில் பெருத்த அவை முறை முறையாகக் குறைந்து சிறுத்திடும். இத்தகைய மாறுதலை உற்றுநோக்க வல்லார் சுட்டி யுணரப்படும் பொருள் அனைத்தும் தோன்றி மறையும் அழிபொருள்கள் என்னும் உண்மை தெளிவர். மாற்றம் தெளிந்து மனம் கழியநின்ற மறையோனாகிய சிவபெருமான் திருவடியைச் சேர்வர்.

முன்பதினஞ்சு - வளர்பிறை. பின்பதினஞ்சு - தேய்பிறை.

## 842. அங்கி எழுப்பி யருங்கதிர் ஊட்டத்துத்

842. அங்கி எழுப்பி யருங்கதிர் ஊட்டத்துத்
தங்குஞ் சசியால் தாமம்ஐந் தைந்தாகிப்
பொங்கிய தாரகை யாம்புலன் போக்கறத்
திங்கள் கதிரங்கி சேர்கின்ற யோகமே.

மூலத் தீயை எழுப்பி மதிமண்டிலத்துக் காணப்படும் திங்கட் கதிருடன் சேர்த்தால், அங்குக் காணப்படும் திங்களால் அக் கதிர்கள் அமைவுற்று ஐந்தாக விரியும். திங்கட் கதிர் விரிந்த காலத்து விண்மீன்களாகிய தாரகைகள் மடங்குவதுபோன்று ஐம்புலன்களும் அகத்திங்கள் கதிர் விரிந்த காலத்து மடங்கும். இந் நிலைக்குத் திங்கட்கதிர் அங்கி விரவுகின்ற யோகம் என்று பெயர். மதிமண்டிலம்: மிடறு முதல் ஆயிர இதழ்த் தாமரை வரையாகும். ஆயிர இதழ்த் தாமரையை வெளி என்றும் உச்சித்தொளையென்றும் கூறுவாருமுளர். வெளி என்பதே பெருவழக்கு. ஊட்டத்து - கொடுப்பதில். சசி - திங்கள். தாரகை - விண்மீன். போக்கற - புறம்போதல் மடங்க.

ஊட்டத்து - கொடுப்பதிலே.

## 843. ஒன்றிய ஈரெண் கலையும் உடலுற

843. ஒன்றிய ஈரெண் கலையும் உடலுற
நின்றது கண்டும் நினைக்கிலர் நீதர்கள்
கன்றிய காலன் கருத்துழி வைத்தபின்
சென்றதில் வீழ்வர் திகைப்பொழி யாரே.

திங்களின் பதினாறு கலையும் உடம்பின்கண் புறம் போகாது அகத்தே பொருந்த நிற்கின்ற ஒளிநிலை கண்டு தாழ்வானவர்கள் உண்மையை நினைக்கின்றிலர். அதனால், அவர்கள் சினந்து உடலைக் காலம்நோக்கிப் பிரிக்கக் கருத்துக்கொள்ளும் காலனின் கருத்தின்படி சென்று பிறப்பு இறப்பு என்னும் மாறாப்பெருஞ் சுழலில் விழுவர். இத் தடுமாற்றமாகிய மயக்கத்தினின்றும் விடுபடார். நீதர்கள் - நீசர்கள்: தாழ்வானவர்கள். கன்றிய - சினந்த. கருத்துழி - கருத்தின்படி திகைப்பு - மயக்கம்.

## 844. அங்கி மதிகூட வாகும் கதிரொளி

844. அங்கி மதிகூட வாகும் கதிரொளி
அங்கி கதிர்கூட வாகு மதியொளி
அங்கி சசிகதிர் கூடவத் தாரகை
தங்கி யதுவே சகலமு மாமே.

மூலத் தீயும் திங்கட் கதிரும் கலந்த இடத்துப் பகலவன் கதிரொளி விளங்கும். மூலத்தீயும் பகலவன் கதிரும் விரவிய இடத்து மதியொளி திகழும். மூலத்தீ திருவடியுணர்வோடு கலப்புறலால் விண்மீனை ஒத்த ஆவிகளின் ஒருநிலைத்தங்குதல் ஏற்படும். அந்நிலையே எல்லாம் ஆகும் நிலையாம். தாரகை - விண்மீன்; நட்சத்திரம்.

## 845. ஈராறு பெண்கலை எண்ணிரண் டாண்கலை

845. ஈராறு பெண்கலை எண்ணிரண் டாண்கலை
பேராமற் புக்குப் பிடித்துக் கொடுவந்து
நேராகத் தோன்றும் நெருப்புற வேபெய்யில்
ஆராத ஆனந்தம் ஆனந்த மானதே.

பெண்கலையாகிய திங்கட்கலை பதினாறும், ஆண்கலையாகிய பகலவன் கலை பன்னிரண்டும் உயிர்ப்புப் பயிற்சியால் உடம்பை விட்டகலாமல் உடம்பினுள்ளே மூலத்தினிடம் நிற்றல் வேண்டும். அங்ஙனம் நிற்கப்பெற்றால் தெவிட்டாத திருவடியின்பம் நிலைத்த இன்பமாம். நெருப்பு - மூலத்தீ. பெய்தல் - அதன்கண் நிலைப்பித்தல்.

## 846. காணும் பரிதியின் காலை இடத்திட்டு

846. காணும் பரிதியின் காலை இடத்திட்டு
மாணும் மதியதன் காலை வலத்திட்டுப்
பேணியிவ் வாறு பிழையாமற் செய்விரேல்
ஆணி கலங்காதவ் வாயிரத் தாண்டே.

வலமூக்காகிய பருதியின்வழி இயங்கும் உயிர்ப்பை (மூச்சுக் காற்றை) இடமூக்கின்வழி வாங்கியும், இடமூக்காகிய திங்களின் வழி இயங்கும் உயிர்ப்பை வலமூக்கின் வழி வாங்கியும், இம்முறையாக அம் மூச்சைத் தவறுதலில்லாது பழகி வந்தால், அளவில்லாத ஆண்டுகள் ஆணியாகிய உயிர் உரனுடன் அவ்வுடலில் வாழும்.

பருதி - பிங்கலை. மதி - இடகலை. ஆணி - சீவன்.

## 847. பாலிக்கும் நெஞ்சம் பறையோசை ஒன்பதில்

847. பாலிக்கும் நெஞ்சம் பறையோசை ஒன்பதில்
ஆலிக்கும் அங்கே அமரர் பராபரன்
மேலைக்கு முன்னே விளக்கொளி யாய்நிற்குங்
காலைக்குச் சங்கு கதிரவன் தானே.

உடம்பகத்துள்ள ஒன்பது தொளைகள் வழியாகவும் தன்னுமையாகிய பறையோசை முழங்கும். அங்குத் தேவர்க்கும் மூவர்க்கும் மற்று யாவர்க்கும் மேலாம் சிவபெருமான் இன்பக் கூத்தியற்றுவன். திருவழிப் பேற்றிற்கு முன்செல்லும் மெய்யுணர்வு விளக்கொளியாய் விளங்கும். அவ் விளக்கத்தால் காலைத்தோன்றும் கதிரவன்ஒளி சங்கின் நிறமும் திங்களின் நிலவும்போன்று காணப்படும்.

ஆலிக்கும் - ஒலிக்கும். ஒன்பதில் - ஒன்பது துவாரங்களையுடைய தேகத்தில். காலைக்குச் சங்கு கதிரவன் - சூரியன் சங்கின் நிறமுள்ள சந்திரன் போன்று தோன்றுவன்.

# 848. கதிரவன் சந்திரன் காலம் அளக்கும்

848. கதிரவன் சந்திரன் காலம் அளக்கும்
பொதிரவ னுள்ளே பொழிமழை நிற்கும்
அதிரவ னண்டப் புறஞ்சென் றடர்ப்ப
எதிரவ னீச னிடமது தானே.

ஆருயிரின் அகவைக் காலத்தை அளக்குங் கருவிகள் ஞாயிறும் திங்களும் ஆகும். அகவை - வயது. உள்ளங்கவர்கள்வனாக ஒளித்து உடன்நிற்கும் சிவனுக்குள் திருவருள் பொழிமழை போன்று அமிழ்தாய்த் திகழும். அண்டத்தப்பாலும் சென்று முழங்க நடிக்கும் சிவன் நெஞ்சத்துச் செறிந்துநிற்பன். அதனால் அந் நெஞ்சிடமே எழுந்தருளி முன்தோன்றும் இறைவன் இருப்பிடமாகும்.

பொதிர் - ஒளித்தல். மழை - அமுதம்.

# 849. உந்திக் கமலத் துதித்தெழுஞ் சோதியை

849. உந்திக் கமலத் துதித்தெழுஞ் சோதியை
அந்திக்கு மந்திர மாரும் அறிகிலார்
அந்திக்கு மந்திர மாரும் அறிந்தபின்
தந்தைக்கு முன்னே மகன்பிறந் தானே.

மூல முதல் புருவநடு ஈறாகவுள்ள நிலைக்களங்கள் ஆறும், அடியே படைப்புடன் காப்புத் துடைப்பு, முடியே மறைப்பருளாம் முன் என்ப. அவற்றுள் படைப்புக்களமாம் கொப்பூழின்கண் தோன்றிச் சுடர்விட்டெழும் ஒளிப்பிழம்பை வணங்கி வழிபடும் மறையினை ஆரும் அறிகிலர். வழிபடும் அம் மறையினை யாவரும் அறிந்தபின் தந்தையாகிய சிவத்திற்குமுன் ஆவியாகிய மகன் தோன்றினன் என்ப. இது, 'சிவயசிவ' என்றும் செந்தமிழ்த் திருவைந் தெழுத்தின் மறையின்கண் சிகரத்துக்கு முன் யகரம் நிற்கும் நிலையினையே தந்தைக்குமுன் மகன் பிறந்தான் என்பதைக் குறிக்கும். எனவே நிலைக்களமாகிய ஆதார வழிபாட்டுக்குரிய மறை திருவைந்தெழுத்தே என்க. கொப்பூழுக்கு முன்னிடமாகிய மூலத்தில் ஓம் மொழிப் பிள்ளையார் தோன்றியதைக் கூறுதலும் ஒன்று. இம்முறையில் ஆறிடங்களுக்கும் முறையே 1. ஓம் நமசிவய, 2. ஓம் நமசிவய, 3. நமசிவய, 4. சிவயநம, 5. சிவயசிவ, 6. சிவசிவ என்ப. அந்திக்க - வந்திக்க; வணங்க.

# 850. ஊதியம் ஏதும் அறியார் உரைப்பினும்

850. ஊதியம் ஏதும் அறியார் உரைப்பினும்
ஓதியும் ஏதும் அறியாத ஊமர்கள்
ஆதியும் அந்தமும் அந்திக்க வல்லிரேல்
வேதியன் அங்கே வெளிப்படுந் தானே.

பகற் குருடாம் கோட்டான் போன்ற அறிவில்லார் தாங்களாக ஓதியும் பிறர் உரைப்பக்கேட்டும் அடைதற்காம் பேற்றினை அறியார். உயிர்ப்பின் துவக்கமும் முடிவும் உணர்ந்து அடக்கும் வன்மை பெற்றவரானால் அறிவுருவாம் சிவபெருமான் அங்கு அப்பொழுதே வெளிப்பட்டருளுவன். அந்திக்க - அடக்க.

ஆதியும் அந்தமும் - சுவாசம் உதித்தலும் ஒடுங்குதலும்.

## 851. பாம்பு மதியைத் தினலுறும் பாம்பினைத்

851. பாம்பு மதியைத் தினலுறும் பாம்பினைத்
தீங்கு கதிரையுஞ் சோதித் தனலுறும்
பாம்பு மதியும் பகைதீர்த் துடன்கொளீஇ
நீங்கல் கொடானே நெடுந்தகை யானே.

முதலிடமாகிய பாப்பிருக்கை (குண்டலி) புருவநடுவாகிய மதியமிழ்தைக் கீழிழுத்துத் தின்ன முயலும் வெப்பஞ் செய்கின்ற கதிரையும் அக் குண்டலித் தீ வாட்டும் இவற்றைத் திருவருள் துணையால் அவ்வவற்றினிடத்தில் மாறுபாடின்றி அமையும்படி பயின்றால் நெடுந்தகையனாகிய சிவனும் மதியும் பாம்பும் பகைதீர்ந்து உறவாய் உடன் வாழும்படி செய்தருள்வன்.

பாம்பு - குண்டலினி. மதி - அமுதம். தீங்கு கதிரை - தீங்கு செய்கின்ற சூரியன்.

## 852. அயின்றது வீழ்வள வுந்துயில் இன்றிப்

852. அயின்றது வீழ்வள வுந்துயில் இன்றிப்
பயின்ற சசிவீழ் பொழுதில் துயின்று
நயந்தரு பூரணை உள்ள நடத்தி
வியந்தரு பூரணை மேவுஞ் சசியே.

பாம்பினால் விழுங்கப்பட்ட திங்கள் அப் பாம்புவிட்டு விலகுகின்றவரையும் உறக்கமின்றி இருந்து, விட்டு விலகியதும் விரும்பத் தகுந்த பூரணையாகிய நடுநாடி வழியாக உயிர்ப்புப் பயிற்சியைப் பயின்று புறநாட்டமின்றியிருந்து மேற்கொள்வார்க்குச் சசியாகிய புருவநடுவின்கண் விளையும் திங்கள் அமிழ்தம் கைகூடும் என்க. பூரணை - நடுநாடி.

அயின்றது - பாம்பினால் விழுங்கப்பட்ட மதி.

## 853. சசியுதிக் கும்அள வுந்துயி லின்றிச்

853. சசியுதிக் கும்அள வுந்துயி லின்றிச்
சசியுதித் தானேல் தனதூண் அருந்திச்
சசிசரிக் கின்றள வுந்துயி லாமற்
சசிசரிப் பின்கட் டன்றுயில் கொண்டதே.

புருவநடுவில் தோன்றும் மதியமிழ்தம் புலனாகும் வரை உயிர்ப்புப்பயிற்சியை விடாது பயின்று,அம் மதியமிழ்தம் புலனாயதும் அம் மதியமிழ்தினைத் துய்த்து, அம் மதியமிழ்து உடம்பின்கண் எல்லா இடங்களிலும் பரவும் வரையில் பயிற்சிவிடாது செய்க. அம் மதியமிழ்து எங்கணும் பரவியபின் புறநாட்டம் அறவே நீங்கிற்றாகும். சசி - மதி. உதித்தல் - (உணர்வில்) புலனாதல். துயிலின்றி - மடியில்லாமல்; முயற்சியுடன் தனதூண் - தன் நெற்றிக்கண் காணப்படும் மதியமிழ்து. துயிலாமல் - புறநாட்டமில்லாமல்; அகநாட்டத்துடன். சரிப்பின் - பரவினால். துயில்கொள்ளுதல் - புறநாட்டம் முற்றாக நீங்குதல்.

## 854. ஊழி பிரியா திருக்கின்ற யோகிகள்

854. ஊழி பிரியா திருக்கின்ற யோகிகள்
நாழிகை யாக நமனை அளப்பர்கள்
ஊழி முதலாய் உயர்வார் உலகினில்
தாழவல் லார்இச் சசிவன்ன ராமே

ஊழாகிய உடம்பின் கால அளவையைப் பொருந்தாமல் இருக்கின்றவர் அகத்தவத்தோராவர். அகத்தவம் - யோகம். கால அளவையைப் பொருந்தாமையாவது: அகத்தவம் இல்லாதார்க்குக் காலம் கணக்கிடுவது நாழிகை, நாள், கிழமை, திங்கள், ஆண்டு என ஞாயிற்றைக் கருவியாகக் கொண்டு அளப்பது. அகத்தவத்தோர்க்கு உயிர்ப்பை - பிராணவாயுவைக் கருவியாகக் கொண்டு அளப்பது. ஒவ்வொருநாளும் நாம் விட்டுவாங்கும் மூச்சு வாங்குவதைவிட விடுவதே அளவிறப்ப ஆகின்றது. அதனால் வரவுக்கு மிகுதியாகச் செலவு செய்யும் ஒருவரைப்போல் விரைவில் காலத்தை அளக்கும் காலன் - கூற்றுவன் முன் சென்று விடுகின்றோம். அகத்தவமுடையோர் உயிர்ப்புப் பயிற்சியால் மூச்சை அளவாக விட்டுக் கூடுதலாக உள்ளே தங்கவைத்துக் கொள்கின்றனர். மேலும் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு மூச்சை வெளியில் ஒரு சிறிதும் விடாமல் உள்ளேயே அடக்கிவைத்துக்கொள்கிறார்கள். அதனால் அவர்கள் காலம் அளவின்றி நீள்கின்றது. சுருங்கச் சொன்னால் அவர்கள் தாமாகவே வேண்டும்போது தம் ஆவியை நீத்துக்கொள்வர். அதனால் அவர்கள் தங்கள் பயிற்சியாகிய நாழியால் நமனை அளக்கின்றனர். நமனை

அளப்பதாவது சிவனை இடையறாது எண்ணும் எங்கள் பால் ஏ நமனே! உனக்கு வேலையில்லை என்பதே: மேலும் பலவூழிகள் மாளாது அவ்வவ்வூழிக் காலங்களில் தூய பரவெளியில் திளைத்திருந்து மீண்டும் அவ்வுடம்புடனே தோன்றுவர். அதனால் அவர்கள் ஊழிமுதல்வரும் ஆகின்றனர். இம் முதன்மை அவர்கட்குச் சிவனருளால் கிடைக்கப்பெற்றதாகும். இவ் வுண்மை 'யோகியாயிருந்
துயிர்க்கு யோகத்தைப் புரிதல் ஓரார்' என்னும் தமிழாகம விரிவாகிய சிவஞான சித்தியார் திருப்பாட்டான் உணர்க. நாழி - அளக்கும் கருவி; படி தாழ - தங்க. ஊழி - கற்பம். உடம்பில் அகத்தவ முயற்சியால் நெடுநாள் தங்கவல்லார் மதியமிழ்தப் பயிற்சியுடையாராவர். இவரைச் சசிவன்னர் எனக் கூறுவர். நாழிகையாக என்பதை, நாழி + கையாக என்று பிரித்து நாழி - படி, கையாக - அளக்கும் கருவியாக எனப்பொருள் கொள்க.

ஊழி தரியாது - விதியை அடையாமல்.

## 855. தண்மதி பானுச் சரிபூமி யேசென்று

855. தண்மதி பானுச் சரிபூமி யேசென்று
மண்மதி காலங்கள் மூன்றும் வழிகண்டு
வெண்மதி தோன்றிய நாளில் விளைந்தபின்
தண்மதி வீழ்வள விற்கண மின்றே.

குளிர்ந்த திங்களும், ஞாயிறும் உச்சி வழியாக நிலத்தே சென்று நிலைப்பின் உலகத்தாரால் மதிக்கப்படுகின்ற இறப்பு, நிகழ்வு எதிர்வு என்னும் மூன்று கால நிகழ்ச்சியையும் ஒருகாலத்து ஓரிடத்தே இருந்து கண்டு கொள்வர். நிறைமதி தோன்றிய நாளில் மதியமிழ்தம் விளையும். விளைந்தபின் அக் குளிர்ந்த மதியமிழ்தம் உடல்முழுவதும் நிறைவதற்குரிய அளவிற்கு எண்ணில்லை என்க. உச்சிசரி - உச்சித் தொளைவழி. உச்சி சநி என்பது உச்சரி என நின்றது செய்யுட்டிரிபு. வீழ்வு - நிறைவு. அளவிற்கு -, அணம் இன்றே - எண்ணில்லை.

மண்மதி - உலகத்தாரால் மதிக்கப்பட்ட.

## 856. வளர்கின்ற ஆதித்தன் தன்கலை யாறுந்

856. வளர்கின்ற ஆதித்தன் தன்கலை யாறுந்
தளர்கின்ற சந்திரன் தன்கலை யாறும்
மலர்ந்தெழு பன்னிரண் டங்குலம் ஓடி
அலர்ந்து விழுந்தமை யாரறி வாரே.

ஞாயிற்றின் விளக்கமிக்க கலை ஆறும், திங்களின் தேய்பிறைப்பக்கக் கலை ஆறும் உயிர்ப்புப் பன்னிரண்டு விரலளவு ஓடி விரிந்து உள்ளடங்குந் தன்மையை அறிந்தவர் நெடுநாள் வாழும் தன்மையை அறிவர். அல்லாதார் எவரும் அறியார்.

## 857. ஆமுயிர்த் தேய்மதி நாளே யெனல்விந்து

857. ஆமுயிர்த் தேய்மதி நாளே யெனல்விந்து
போம்வழி எங்கணும் போகாது யோகிக்குக்
காமுற இன்மையிற் கட்டுண்ணு மூலத்தில்
ஓமதி யத்துள்விட் டுரையுணர் வாலே.

உயிர்க்கு மதியமிழ்தம் கீழ்நோக்கிக் கழியுமானால் தேய்வு பக்கம் எனக் கூறுக. அகத்தவமுடையார்க்குக் காம வேட்கை இன்மையால் அவ்வமிழ்து (விந்து) போம் இடமெல்லாம் போகாது கட்டுப்படும். அவ்வாறு கட்டுப்படுவதற்கு மூலத்திடத்துத் தோன்றும் ஓ மொழி மறையினை இடையறாது புருவநடுவில் எண்ணுதல் வேண்டும். எண்ணு
தல் - தியானித்தல். அவ்வாறு எண்ணும் உணர்வினால் மதியமிழ்து நடுநாடிவழியாக மேற்செல்லும். எனல் - எனக் கூறுக. இது 'பயனில் சொல் பாராட்டு வானை மகனெனல், மக்கட் பதடி எனல்' (குறள் - 196) என்பதனால் விளங்கும்.

உயிர்த் தேய்மதி - சீவனுக்கு அபரபக்கம். விந்து...போலிது - சாதாரணமாகச் செல்லும் வழியில் செல்வது விந்து. காமுறவு - ஆசையுறுதல். மூலத்தில் கட்டுண்ணும் - மூலாதாரத்தில் உள்ள வீணாத்தண்டின் ஊடே செல்லும்.

## 858. வேறுறச் செங்கதிர் மெய்க்கலை யாறொடுஞ்

858. வேறுறச் செங்கதிர் மெய்க்கலை யாறொடுஞ்
சூறுற நான்குந் தொடர்ந்துற வேநிற்கும்
ஈறிலி னன்கலை யீரைந்தொ டேமதித்
தாறுட் கலையுள் அகலுவா வாமே.

சிறப்பாகத் தீயின் கலை ஆறுடனும் கீழ்ப் பகுதியிற் காணும் கலை நான்கும் தொடர்வுபட்டேநிற்கும். அழிவில்லாத ஞாயிற்றின்கலை பத்துடன் திங்களின் கலை அடங்கியேநிற்கும். அந்நாளே விரிந்த உவாநாளாகும். சூறு - கீழ்ப்புறம். இனன் - ஞாயிறு. மதித்தாறுள் - திங்களின் கலையுட்பட்டிருக்க.

## 859. உணர்விந்து சோணி உறவினன் வீசும்

859. உணர்விந்து சோணி உறவினன் வீசும்
புணர்விந்து வீசுங் கதிரிற் குறையில்
உணர்வும் உடம்பும் உவையொக்க நிற்கில்
உணர்வும் உடம்பும் ஒருகால் விடாவே.

உணர்விற்கு வாயிலாகிய ஒளிவிந்து, நாதமாகிய சோணி தத்து - நாதத்தின்கண் கலக்க ஞாயிற்றின் ஒளி மிக்குக் காணப்படும். ஞாயிற்றின் கதிர் குறையுமானால் விந்து மேலே விளங்கித் தோன்றும். ஒளியாகிய உடம்பும் உணர்வும் ஓரளவாகித் தோன்றின் அத்தகைய யோகியர்க்கு உடம்பு ஒரு காலத்தும் விட்டு நீங்காது. சோணி - சோணிதம்: நாதம். உவை - அவ்விரண்டும்.

சோணி - சோணிதம்; நாதம். இனன் - சூரியன். உவை - அவை இரண்டும்.

## 860. விடாத மனம்பவ னத்தொடு மேவி

860. விடாத மனம்பவ னத்தொடு மேவி
நடாவு சிவசங்கின் நாதங் கொளுவிக்
கடாவிடா ஐம்புலன் கட்டுண்ணும் வீடு
படாதன இன்பம் பருகார் அமுதமே.

இடையறாத ஒடுக்கமனமும் உயிர்ப்பும் ஒன்றுகூடிப் பொருந்தி அனைத்தையும் என்றும் பிரிப்பின்றி இயைந்து இயக்கும் சிவபெருமானின் தனிப்பெரு மறையாம் 'சிவ' என்றும் அருளொலி முழக்கத்தை எழுப்பினால் கட்டுப்படாது முருட்டுத் தன்மையாய் இழுத்துச் செல்லும் ஐம்புலன்களும் கட்டுக்கு அடங்கும். விடுதலில்லாது என்றும் நிலைத்திருக்கும் திருவடியின்பம் துய்க்கும் தெவிட்டாத நிறை இன்பம்
ஆகும். விடாத - நீங்காத. பவனம் - உயிர்ப்பு. நடாவு - இயக்குகின்ற. சங்கநாதம் - சங்கொலி போலும் ஒலி. கடா - முருட்டுத் தன்மை. விடா - நீங்காத. கட்டுண்ணும் - அடங்கும். வீடுபடாதன - விடுபடாதன; நீங்காத. விடு - வீடு என முதல் நீண்டது. சங்கு - வெண்ணிறம் பொருந்திய சிறந்த முதன்மை வாய்ந்த இசைக் கருவி. பருகாரமுதம்: பருகு + ஆர் + அமுதம்.

மனபவனம் - மனமும் பிராணனும். கடா - முரட்டுத்தனம். வீடுபடாதன - நீங்காத.

## 861. அமுதப் புனல்வரு மாற்றங் கரைமேற்

861. அமுதப் புனல்வரு மாற்றங் கரைமேற்
குமிழிக் குட்சுட ரைந்தையுங் கூட்டிச்
சமையத்தண் டோட்டித் தரிக்கவல் லார்க்கு
நமன்இல்லை நற்கலை நாள்இல்லை தானே.

மதியமிழ்தப் பெருக்கு மிக்குவரும் ஆற்றங்கரையாம் புருவநடுவின்மேல் தோன்றும் குமிழியகத்து அறிவு, ஆற்றல், ஓசை, ஒளி (சிவம், சத்தி, நாதம், விந்து) ஆவி என்னும் சுடர் ஐந்தினையும் ஒருங்குகூட்டி நடுநாடிவழியாக உயிர்ப்பினைச் செலுத்தி உறைப்புடன் நிற்கவல்லார்க்கு உடம்பினின்று உயிரைப் பிரிக்கும் நமனுக்கு உட்படும் நலிவில்லை; கலை நாள் முதலியன கட்டுறுத்தும் பிணிப்பில்லை. அழியாது உடம்புடன் என்றும் இருப்பர். சமைய - பொருந்த. தண்டு - நடுநாடி. ஓட்டுதல் - செலுத்துதல். தரித்தல் - நிலைத்தல். கலை - நட்டு. நாள் - நாள்கோள்.

தற்சுடர் ஐந்து - சிவம், சத்தி, நாதம், விந்து, சீவன். சமைய - பொருந்த.

## 862. உண்ணீ ரமுத முறுமூ றலைத்திறந்

862. உண்ணீ ரமுத முறுமூ றலைத்திறந்
தெண்ணீர் இணையடித் தாமரைக் கேசெலத்
தெண்ணீர் சமாதி யமர்ந்துதீ ராநலங்
கண்ணாற் றொடேசென்று கால்வழி மாறுமே.

உண்ணீரமுதமாகிய மதியமிழ்தத்தின் பொருந்திய ஊற்றினைத் திருவருளின் துணைப் பயிற்சியால் திறத்தல் வேண்டும். திறந்து தெளிந்த அருட்குணம் வாய்ந்த திருவடியாகிய தாமரையை இடையறாது எண்ணுதல் வேண்டும். எண்ணி இன்புற அலைவின்றி உளம் தெளிந்த நிட்டையிருத்தல் வேண்டும். நிட்டையிருந்து, என்றும் நீங்காது நிலைத்துள்ள ஏற்றமாம் உணர்வு எனப்படும் திருவடியுணர்வாகிய கருத்துவழிச் சென்று உறைத்தல் வேண்டும். உறைக்கின் உயிர்ப்பானது பொதுவாகச் செல்லும் வலமூக்கு, இடமூக்குவழி அகன்று நடுநாடிவழியாக மாறும் என்க. தெண்ணீர் - தெளிந்த அருட் பண்பு. தெண்ணீர்ச் சமாதி - அலைவில்லாத தெளிந்த நிட்டை. தீரா நலக்கண் - திருவடியுணர்வு. கால் - உயிர்ப்பு.

தீரா நலக்கண் - ஞானக்கண்.

## 863. மாறு மதியுமா தித்தனு மாறின்றித்

863. மாறு மதியுமா தித்தனு மாறின்றித்
தாறு படாமல்தண் டோடே தலைப்படில்
ஊறு படாதுடல் வேண்டும் உபாயமும்
பாறு படாஇன்பம் பார்மிசைப் பொங்குமே.

உடம்பகத்துக் காணப்படும் ஞாயிற்று மண்டிலம் திங்கள் மண்டிலம் இயற்கையில் மாறுடையதாயினும் பயிற்சியால் மாறில்லாமல் பிரிவில்லாமல் இயைந்து நடுநாடியாகிய தண்டுடன் கூடினால் உடலுக்கு அழிவில்லை. நிலத்தின்மீது அழிவில்லாத திருவடிப் பேரின்பம் அளவின்றிப் பெருகும். அதற்குரிய வழிவகையும் இதுவே.

மாறும் - மாறுபட்டிருக்கின்ற. தாறுபடாமல் - பிரிவில்லாதபடி. தண்டோடு - வீணாத்தண்டூடே. ஊறுபடாது - கெடாது. பாறு படா - அழிவில்லாத.
மூன்றாம் தந்திரம் முற்றும்.

# 864. போற்றுகின் றேன்புகழ்ந் தும்புகல் ஞானத்தைத்

864. போற்றுகின் றேன்புகழ்ந் தும்புகல் ஞானத்தைத்
தேற்றுகின் றேன்சிந்தை நாயகன் சேவடி
சாற்றுகின் றேன்அறை யோசிவ யோகத்தை
ஏற்றுகின் றேன்நம் பிரான்ஓர் எழுத்தே.

அடிமையாம் அனைத்துயிர்க்கும் என்றும் விட்டு நீங்காப் புகலிடமாயுள்ள திருவடியுணர்வைத் தமிழாகமவழிப் போற்றுகின்றேன். தனிப்பெரும் தலைவனாம் சிவபெருமான் திருவடியை உள்ளத்துணர்வால் ஓவாது தெளிகின்றேன். அதனால் திருவடியைக் கூடுதலாகிய சிவயோகத்துக்கு வேண்டத்தக்க சக்கரத்தையும் ஓங்காரமாம் ஒண்மறையினையும் அருளால் கூறுகின்றேன். எம்பிரானாரது கணிக்கப்படாத - பேசா எழுத்தாம் சிகரத்தினைக் கணியாது உணர்வால் ஓதுகின்றேன். அசபை என்பது செபிக்கப்படாதது என்று பொருள்படும். அதற்குரிய எழுத்தைப் பிறவாறு கூறுவாருமுளர். பேசும் எழுத்து 'வ' எனவும், பேசா எழுத்து 'சி' எனவும் கூறுவது தமிழாகம மரபு. 'சிவ' என இணைத்தே ஓதுவதியற்கை. அதனால் ஈண்டுச் 'சி' எனக் கூறப்பட்டது.

அறை + ஓர் - சக்கரமும் பிரணவமும். அறை - வீடு. ஓரெழுத்து - அசபா மந்திரம்.

## 865. ஓரெழுத் தாலே உலகெங்குந் தானாகி

865. ஓரெழுத் தாலே உலகெங்குந் தானாகி
ஈரெழுத் தாலே இசைந்தங் கிருவராய்
மூவெழுத் தாலே முளைக்கின்ற சோதியை
மாவெழுத் தாலே மயக்கமே உற்றதே.

ஓ என்னும் முன்னெழுத்தாலே உலகம் எல்லாம் கலப்பால் தானாகி; ஓ என்பதைப் பிரித்தால் அ + உ, என்று ஈரெழுத்தாகும். அவ்விரண்டும் சிவன் சிவை என்னும் இருபொருள்களைக் குறிக்கும். (எழுத்தின்படி பார்த்தால் அறிவோன் உடையாள் என்று பொருள் வரும்.) இவற்றை உயிர்க்குயிர் (பரமான்மா) உயிர் (சீவான்மா) எனவும் உரைப்பர். மூன்றெழுத்தாகிய அ + உ + ம் என்பன வற்றால் தோன்றுகின்ற பேரொளியினை, மாயையினைக் குறிக்கும் 'ம்' என்னும் எழுத்தால் (சலமகள் - நடப்பாற்றல் ம எனக் குறிக்கப்படுகின்றது.) உயிர்க்கு மயக்கம் வந்து பொருந்தும்.

ஓர் எழுத்து - ஓ என்னும் எழுத்து. ஈர் எழுத்து - அ + உ. இருவராய் - சீவன் + சிவன் or சத்தி + சிவன். மூவெழுத்து - அ + உ + ம். மா எழுத்து - ம் or மாயை.

## 866. தேவ ருறைகின்ற சிற்றம் பலம்என்றுந்

866. தேவ ருறைகின்ற சிற்றம் பலம்என்றுந்
தேவ ருறைகின்ற சிதம்பர மென்றுந்
தேவர் உறைகின்ற திருஅம் பலமென்றுந்
தேவர் உறைகின்ற தென்பொது வாமே.

தேவர்க்கும் மூவர்க்கும் மற்று யாவர்க்கும் பெருமானாகிய முழுமுதற் சிவன் என்றும் உறைகின்ற திருவிடம் சிற்றம்பலம் என்ப; இதனையே சிதம்பரம் எனவும் கூறுவர். இதனையே திருவம்பலம் எனவும் கூறுவர். இவை எல்லாம் அழகிய அம்பலம் என்னும் தென் பொதுவேயாம் (தென் - அழகு; திருவடி.)

தென் - அழகு, பெருமை.

## 867. ஆமேபொன் னம்பலம் அற்புதம் ஆனந்தம்

867. ஆமேபொன் னம்பலம் அற்புதம் ஆனந்தம்
ஆமே திருக்கூத் தனவரத தாண்டவம்
ஆமே பிரளய மாகும்அத் தாண்டவம்
ஆமேசங் காரத் தருந்தாண்ட வங்களே.

எல்லையில் புகழ்சேர் தில்லைப் பொன்னம்பலத்தின்கண் என்றும் இடையறாது நிகழும் திருக்கூத்து ஐவகைக் குறிப்பாகும். தாண்டவம் என்பது ஆவிகளை முன்னேற்றப் புரியும் அருட்செயலாகும். அவை. அற்புதக்கூத்து, ஆனந்தக்கூத்து, அனவரதக்கூத்து, ஊழிக்கூத்து, பேரொடுக்கக் கூத்து என்பன. அற்புதம் - வியப்பு. ஆனந்தம் - பேரின்பம். அனவரதம் - இடைவிடாமை.

பொன்னம்பலம் - பொன்னம்பலத்தாண்டவம். அற்புதம் - அற்புதத் தாண்டவம். ஆனந்தம் - ஆனந்தத் தாண்டவம். அனவரதம் - அனவரதத் தாண்டவம். பிரளயம் அல்லது சங்காரம் - பிரளயத் தாண்டவம்; எனத் தாண்டவங்கள் 5

## 868. தாண்டவ மான தனியெழுத் தோரெழுத்

868. தாண்டவ மான தனியெழுத் தோரெழுத்
தாண்டவ மான தனுக்கிர கத்தொழில்
தாண்டவக் கூத்துத் தனிநின்ற தற்பரந்
தாண்டவக் கூத்துத் தமனியந் தானே.

இத் திருக்கூத்துக்கள் ஒப்பில்லாத திருவைந்தெழுத்தின் அருள்கூத்து ஆகும். அவை அனைத்தும் ஆவிக்கு அருளும் அருளிப்பாடேயாகும். அக் கூத்தினை அருளுபவன், முழுமுதற் சிவபெருமானே. அது நிகழும் இடம் ஆருயிர்களின் நெஞ்சகம் - பொன்னம்பலம். இவ்வுண்மை 'உண்மை விளக்க'த் திருப்பாட்டான் உணரலாம். அது:

"தோற்றம் துடியதனில் தோயும் திதியமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு."
- உண்மை விளக்கம், 36.

தாண்டவமான தனி எழுத்து ஓர் எழுத்து - ஐந்தெழுத்து நடனம். தொழில் - அது தொழில்நடனம். ஆக்கல் - அளித்தல். அழித்தல் - மறைத்தல் - அருளல் தற்பரம் - தற்பரக்கூத்து. தமனியம் - பொன்.

## 869. தானே பரஞ்சுடர் தத்துவ மாய்நிற்குந்

869. தானே பரஞ்சுடர் தத்துவ மாய்நிற்குந்
தானே அகார உகாரம தாய்நிற்குந்
தானே பரஞ்சுடர் தத்துவக் கூத்துக்குத்
தானே தனக்குத் தராதலந் தானே.

ஒப்பில்லாத பேரொளிப் பிழம்பும் தானேயாம். என்றும் அழிவின்றி ஒன்றுபோல் யாண்டும் செறிந்து நிற்கும் மெய்ப்பொருளும் தானேயாம். அகர உகரமாகிய அறிவோனும் உடையாளுமாக விளங்குவதும் தானேயாம். அருட்பெரும் கூத்துக்குத் தனிமுழுமுதலாய் விளங்குவதும் தானேயாம். தனக்கு நிலைக்களமாக இருப்பதும் தானேயாம். தராதலம் - நிலைக்களம்; தாங்கும் இடம்.

தத்துவம் - மெய்ப்பொருள். அகர உகாரமதாய் - அக்கர உருவமாய். தராதலம் - பூமி ஆதாரம் என்பது.

## 870. தராதல மூலைக்குத் தற்பர மாபரன்

870. தராதல மூலைக்குத் தற்பர மாபரன்
தராதலம் வெப்பு நமவா சியவாந்
தராதலஞ் சொல்லிற் றான்வா சியவாகுந்
தராதல யோகந் தயாவாசி யாமே.

தாங்கும் ஆறு நிலைக்களங்களுள் மூலையாகிய மூலாதாரத்துக்கு நிலைக்களத் தெய்வம் மூத்தபிள்ளையாராகும். வெப்புத் தன்மையவாகிய தீமண்டிலத்துக்கு நிலைக்களத் தெய்வம் (அதி தெய்வம்) நகரமாகிய சலமகளாகும். சலமகள் - மறைப்பாற்றல். அம் முறை நமவாசிய என்னும் ஐந்தெழுத்தும் கூத்தப் பெருமான் வடிவமாகும். இவ் வடிவம்:

"சேர்க்கும் துடிசிகரம் சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம் - பார்க்கிலிறைக்கு
அங்கி நகரம் அடிக்கீழ் முயலகனார்
தங்கும் மகரமது தான்."

- உண்மை விளக்கம், 34.

என ஓதும் தமிழாகம முறைப்படியாம். இத் திருப்பாட்டின்படி, ந, ம, வ, சி, ய என அமைத்தால் ஏறத்தாழக் கீழ்நோக்கிய முக்கோணமாகும். அது மட்டுமன்று, நம் நாவலந்தீவின் நல்லமைப்பையும் ஒக்கும். முக்கோணம் தீயின் அடையாளம். இந் நிலைக்குரிய தமிழ்மறை நமவசிய. இம் முறையாகக் கணிப்பார்க்கு எளிதாக உயிர்ப்படங்கும். அது சிறந்த பயிற்சியாகும். தராதலம் - உலகம். வாசி - உயிர்ப்பு. வாசி - சிறந்த பயிற்சி.

## 871. ஆமே சிவங்கள் அகார உகாரங்கள்

871. ஆமே சிவங்கள் அகார உகாரங்கள்
ஆமே பரங்கள் அறியா விடம்என்ப
ஆமே திருக்கூத் தடங்கிய சிற்பரம்
ஆமே சிவகதி ஆனந்த மாமே.

அகரம் சிவமாகவும், உகரம் சிவை யாகவும் ஆகும். இவை இரண்டும் சுட்டறிவுக்கு எட்டாத துணைப் பொருள்கள். ஆதலால் அறியா இடமென்ப. அறிவுருவாம் முழுமுதல் ஐந்தொழில் திருக்கூத்தடங்கிய பெரும்பொருள் ஆகும். இறவாத இன்ப நிலையமாக இலங்குவது சிவகதியேயாம். பரங்கள் மேலாம் மெய்ப்பொருள்கள். சிற்பரம் - மேலாம் அறிவுரு. சிவகதி - இன்ப நிலையம்.

## 872. ஆனந்த மூன்றும் அறிவிரண் டொன்றாகும்

872. ஆனந்த மூன்றும் அறிவிரண் டொன்றாகும்
ஆனந்தஞ் சிவாய அறிவார் பலரில்லை
ஆனந்த மோடும் அறியவல் லார்கட்கு
ஆனந்தக் கூத்தாய் அகப்படுந் தானே.

இறவாத இன்ப நிலையம் அகர உகர மகரங்களென்னும் மூன்றுமாம். அறிவாற்றல் அறிவென அறிவு இரண்டாம். அறிவாற்றல் - ஆணை; சத்தி. அறிவு - சிவம். இவற்றுடன் யகரம் ஒன்று கூட்ட அறிவு (சிவய) மூன்றாகும். இம் மூன்றனையும் திருவருட்டுணையால் அறிவார் பலரில்லை சிலரே யாவர். இறவாத இன்பத்தினை அதனுடன் புணர்ந்து அறியவல்லார்க்கு அவ் வின்பம் ஒளியாது வெளிப்பட்டு அகப்படும் என்க. கூத்தாயகப்படுதல் - இன்பாய் நுகர்தல்.

ஆனந்தம் மூன்று - அ. உ. ம். அறிவு இரண்டு - சத்தி - சிவம். ஒன்றாகும் ஆனந்தம் சிவாய - சத்தி - சிவம் - ஆன்மா.

## 873. பருவ திரண்டும் பலகலை வல்லார்

873. பருவ திரண்டும் பலகலை வல்லார்
படுவதோங் காரம் பஞ்சாக் கரங்கள்
படுவது சங்காரத் தாண்டவப் பத்தி
படுவது கோணம் பரந்திடும் வாறே.

இணைந்திருக்கும் அம்ச மந்திரம் (சிவ) இரண்டும் புரிவார் பல்கலை வல்லாராவர். அம்சமந்திரம் இரண்டும் அறிவும் ஆணையுமாகக் கூறலாம். அறிவே சிவம். ஆணையே சத்தி. இவ்விரண்டின் விரிவே ஓங்கார பஞ்சாக்கரங்கள். இம் முறை குறிப்பதே சங்காரத் தாண்டவம். இத் தாண்டவத்தின் முறைமையால் எல்லா இடங்களிலும் சிவப் பேறு பரவும் என்க. பரவும் - வியாபகமாகும். பத்தி - முறைமை. கோணம் - புலம்; திசை. வாறு - பேறு; சிவப்பேறு. சங்காரம் - பேரொடுக்கம்.

இரண்டும் - அம்ச மந்திரங்கள் இரண்டும். படுவது - சொல்லப்படுவது.

## 874. வாறே சதாசிவ மாறிலா ஆகமம்

874. வாறே சதாசிவ மாறிலா ஆகமம்
வாறே சிவகதி வண்டுறை புன்னையும்
வாறே திருக்கூத்து ஆகம வசனங்கள்
வாறே பொதுவாகு மன்றின் அமலமே.

பெரும் பேறாகிய சதாசிவ நாயனாரருளிய முன்னொடு பின் முரண்பாடில்லாத இறைவன் நூலாம் ஆகமம் முப்பொருள் நூலாகும். அவ்வாகமத்தின் வளப்பமிக்க துறையே மலமகற்றிச் சிவப்பேறாக்கும். அனைவர்க்கும் பொதுவாம் அம்பலத்தின்கண் நடிக்கும் திருக்கூத்தும் ஆகமவுயிராம் திருவைந் தெழுத்தாகும். கூதத்தியற்றுவோனும் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய இறைவனாகும். மாறிலா - முரண்பாடில்லாத. வண்டுறை - வளப்பமிக்க துறை. புன்னையும்: புல் + நையும் - புல்லுமலமாகிய ஆணவம், தேயும். அமலம் - இயல்பாகவே பாசமின்மை. நெறிநூல் - வேதம். துறைநூல் - ஆகமம்.

சதாசிவம் மாறிலா ஆகமம் - சதாசிவ நாயனார் வெளியிட்ட மாறுபாடில்லாத ஆகமங்கள். அமலம் - சிவம்; நின்மல சிவம்.

## 875. அமலம் பதிபசு பாசங்கள் ஆகமம்

875. அமலம் பதிபசு பாசங்கள் ஆகமம்
அமலந் திரோதாயி யாகுமா னந்தமாம்
அமலஞ்சொல் ஆணவ மாயை காமியம்
அமலந் திருக்கூத்தங் காமிடந் தானே.

ஆவியின் மாட்டு முழுமுதற் சிவன் செய்யும் திருக்கூத்தைத் தமிழாகமமாம் திருவைந்தெழுத்தின் சீரிய முறையில் வைத்துக் கண்டால் பசு பாசங்கள் பதியின் நாட்டத்தால் முறையே பிணி வீடும் பிணியாமையுமாகிய தன்மையால் தூய்மையாகும். பிணிவீடு - கட்டினின்றும் விடுபடுதல். பிணியாமை - தம் வழியீர்க்கும் மலம் மாயை கன்மங்களில் மலம் அடங்கி விடுதலும் மாயை கன்மங்கள் ஆவியின் வழியொழுகுதலுமாம். மறைப்பாற்றலாகிய திரோதாயியும் திருவடியின்பம் கூட்டுவிக்கும் அருளாற்றலாக வனப்பெய்தும். ஆணவம் மாயை காமியம் என்னும் மூன்றும் மலம்மாயை கன்மங்களின் காரியங்களாகும்.

## 876. தானே தனக்குத் தலைவியு மாய்நிற்குந்

876. தானே தனக்குத் தலைவியு மாய்நிற்குந்
தானே தனக்குத் தனமலை யாய்நிற்குந்
தானே தனக்குத் தனமய மாய்நிற்குந்
தானே தனக்குத் தலைவனு மாமே.

முழுமுதற் சிவன் தானே தனக்கு ஆற்றலென்று ஓதப்படும் தலைவியுமாய் நிற்பன் தானே தனக்கு அழிவில் பெரும் செல்வமுமாக நிற்பன். தானே தனக்குச் சிவமயமாய் நிற்பன். தானே தனக்கு எல்லாம் வல்ல முதன்மையனாகவும் நிற்பன். தனம் - திருவடிச்செல்வம்.

தனமலை - பெரும் செல்வம். தலைவன் - பதி.

## 877. தலைவனு மாய்நின்ற தற்பரக் கூத்தனைத்

877. தலைவனு மாய்நின்ற தற்பரக் கூத்தனைத்
தலைவனு மாய்நின்ற சற்பாத் திரத்தைத்
தலைவனு மாய்நின்ற தாதவிழ் ஞானத்
தலைவனு மாய்நின்ற தாளிணை தானே.

அடிமையாகிய உயிருலகம், உடைமையாகிய உயிரல் உலகம் அனைத்திற்கும் என்றும் பொன்றாத் தலைவனுமாய் நின்றருள்பவன் தற்பரக்கூத்தன். அவனே என்றும் ஒன்றுபோல் விளங்கும் நிலைப் பொருளாகிய சற்பாத்திரமாவன். மணத்தூளாகிய பேருணர்வுத் தாளிணை என்னும் தாமரை போலும் திருவடியை உடையவனாக விளங்குபவனும் அவனே யாவன்.

சற்பாத்திரம் - சத்து.

# 878. இணையார் திருவடி எட்டெழுத் தாகும்

878. இணையார் திருவடி எட்டெழுத் தாகும்
இணையார் கழலிணை யீரைந்த தாகும்
இணையார் கழலிணை ஐம்பத்தொன் றாகும்
இணையார் கழலிணை ஏழா யிரமே.

தமக்குத் தாமே ஒப்பாகிய திருவடிகள் இரண்டும் எட்டெழுத்தாகும். எட்டெழுத்து: ஓம், அம், உம் நமசிவய அத்தகைய கழிலிணைகள் இரண்டும் இருவகை ஐந்தெழுத்தாகும். இருவகை ஐந்தெழுத்து: சிவயநம; சிவயசிவ. அவையே ஐம்பத்தோரெழுத்துமாகும். பண்டைக் காலத்தில் தமிழ் எழுத்துக்கள் ஐம்பத்தொன்றாக வழங்கி வந்தன. பின் உயிர்ப்புச் செட்டு நோக்கி முப்பதாக அமைத்தனர். ஏனைய ஒலிகளை ஒலிப்பிக்க நேரின் ஒலிப்பிக்கும் வாய்ப்பாக ஆய்தம் (ஃ) என்னும் கருவி எழுத்தொன்றும் அமைத்துக் கொண்டனர். அத்தகு கழலிணைகள் ஏழாயிரமாகும். ஏழாயிரம் என்பது ஏழுவகைத் திருவருளாற்றலாகும். ஆற்றல் ஏழு: கலைமகள், அலைமகள், உலைமகள், சலமகள், மலைமகள், நிலைமகள், தலைமகள் என்ப. இவ் வெழுவகை ஆற்றல்களின் தொழில்கள் முறையே படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல், கலப்பித்தல், களிப்பித்தல் என்பன. இவ் வெழுவகை யாற்றல்களும் முறையே வாணி, திரு, உமை, மகேசை, மனோன்மணி, விந்து, சத்தி' என்று கூறைப்பெறும். ஐம்பத்தோரெழுத்தை ஓதும் ஆசிரியர் முப்பதெழுத்து

வழங்கத் துவங்கிய காலத்தவராதலான் முப்பதெழுத்தே வழங்குகின்ற தொல்காப்பியர் காலத்துக்குச் சற்று முன்னாவரென எண்ணுதல் தவறாகாது.

எட்டு எழுத்து - அ.

## 879. ஏழா யிரமாய் இருபதாய் முப்பதாய்

879. ஏழா யிரமாய் இருபதாய் முப்பதாய்
ஏழா யிரத்தும் எழுகோடி தானாகி
ஏழா யிரத்துயிர் எண்ணிலா மந்திரம்
ஏழா யிரண்டாய் இருக்கின்ற வாறே.

திருவருளாற்றல்கள் ஏழானும் செலுத்தப்படும் எழுத்துக்கள் ஐம்பதாகும். மந்திரங்கள் ஏழு முடிபினை உடையன எனவும் கூறுவர். முடிபு - கோடி. பயனை உடனே கைகூடச் செய்யும் உயிர் மந்திரங்கள் பலவாகும். (வியாகிருதி மந்திரம் ஏழு, அம்ச மந்திரம் இரண்டு எனவும் கூறுவர்.) திருவருளாற்றல் மந்திரம் ஏழு; சிவ என்னும் மந்திரம் இரண்டனுள் எல்லாம் அடங்கும்.

## 880. இருக்கின்ற மந்திரம் ஏழா யிரமாம்

880. இருக்கின்ற மந்திரம் ஏழா யிரமாம்
இருக்கின்ற மந்திரம் எத்திறம் இல்லை
இருக்கின்ற மந்திரஞ் சிவன்திரு மேனி
இருக்கின்ற மந்திரம் இவ்வண்ணந் தானே.

ஏழுகோடிப் பெருமந்திரங்களினுள்ளும் இந்த அசபா மந்திரத்துக்கு ஒப்பானது ஏதும் இல்லை. மந்திரங்கள் எல்லாம் சிவன் திருமேனியாகும்.

## 881. தானே தனக்குத் தகுநட்டந் தானாகும்

881. தானே தனக்குத் தகுநட்டந் தானாகும்
தானே அகார உகாரம தாய்நிற்கும்
தானே இரீங்காரத் தத்துவக் கூத்துக்குத்
தானே உலகில் தனிநடந் தானே.

சிவ என்னும் ஈரெழுத்தும் ஒப்பில்லாத சிறந்த திருக்கூத்தாகும். அவையே அகர உகரங்களாகவும் நிற்கும். மேலும் உலகத் தோற்ற ஒடுக்கங்களுக்கு முதற்காரணமாயுள்ள மாயைக்கு அடிப்படை மந்திரமாயுள்ள இரீங்கார மந்திரமும் அதுவே யாம்.

ரீம் - மாயையின் பீச மந்திரம்.

## 882. நடமிரண் டொன்றே நளினம தாகும்

882. நடமிரண் டொன்றே நளினம தாகும்
நடமிரண்டொன்றே நமன்செய்யுங் கூத்து
நடமிரண் டொன்றே நகைசெயா மந்திரம்
நடஞ்சிவ லிங்கம் நலஞ்செம்பு பொன்னே.

ஆருயிர்கள்மாட்டுப் பொருந்திப் புரியும் திருக்கூத்திரண்டாகும். அவை முறையே மருட்கைக் கூத்தும் இன்பக் கூத்துமாகும். மருட்கை - வியப்பு; அற்புதம். இவை உயிர்கட்கு நீங்கா இன்பம் அளித்தற்பொருட்டேயாம். ஊழி முடிவும் உலக முடிவும் ஆகிய இருவேறு கூத்துக்களும் நிகழும். இக் கூத்தினை நமன் கூத்து என்பர் ஊழி முடிவு - பிரளயம். உலகமுடிவு - சங்காரம். மகிழ்ச்சிக்கு ஏதுவாய் அகத்தும் புறத்தும் ஆடும் கூத்துக்கள் இரண்டு. அகக் கூத்தை, அனவரதக் கூத்தென்பர். புறக்கூத்தை, பொதுக்கூத்து என்பர். செம்பு போன்று மலத்தோடுள்ள உயிரை மல நீக்கிப் பொன்னாக்கிப் போற்றித் திருவடியில் வாழ்விக்கும் திருக்கூத்து ஒன்று.

நடம் இரண்டு - அற்புதம் ஆனந்தம். நளினம் - இன்பம். நடம் இரண்டு நமன் செயும் - பிரளயம் - சங்காரம் நமன் செயும் கூத்து. நடம் இரண்டு - பொது, அனவரதம் நகைசெயும் - சீவத்துவம் ஒழித்துச் சிவத்துவத்தை விளங்கச் செயும். செம்பு பொன்னே - செம்பைப் பொன்னாக்குதல் போன்றது.

## 883. செம்புபொன் னாகுஞ் சிவாய நமவென்னிற்

883. செம்புபொன் னாகுஞ் சிவாய நமவென்னிற்
செம்புபொன் னாகத் திரண்டது சிற்பரஞ்
செம்புபொன் னாகும் சிரீயுங் கிரீயுமெனச்
செம்புபொன் னான திருவம் பலமே.

'சிவய நம' என்னும் தமிழ் மந்திரமாம் திருவைந்தெழுத்தை இடையறாது நாடினால் செம்பு பொன்னாவது போல் உயிர் சிவமாகும். சிவமாதல்: சிவனால் ஆட்கொள்ளப்படுதல். அங்ஙனம் திருவருள் கூர்ந்தது சிவனருள். சிவனருள் மந்திரவித்து சிரீயும் கிரீயும் ஆகும், இதுவே திருவம்பலமாகும்.

சிரீயும் கிரீயும் - சத்தி பீச மந்திரங்கள்.

## 884. திருவம் பலமாகச் சீர்ச்சக் கரத்தைத்

884. திருவம் பலமாகச் சீர்ச்சக் கரத்தைத்
திருவம் பலமாக ஈராறு கீறித்
திருவம் பலமாக இருபத்தைஞ் சாக்கித்
திருவம் பலமாகச் செபிக்கின்ற வாறே.

சிறந்த திருவம்பலச் சக்கரத்தைத் திருவருள் திகழ்ந்து விளங்கும் பொருட்டு நீட்டத்தில் ஆறுவரையும் குறுக்கே ஆறுவரையுமாகக் கீறினால் இருபத்தைந்து அறைகள் உண்டாகும். அவ் விருபத்தைந்து அறைகளிலும் திருவெழுத்தைந்தையும் முறையாக அமைத்து அவற்றைக் காதலாற் கணித்தல்வேண்டும். கணித்தல் - செபித்தல்.

ஈராறு - குறுக்கு ஆறுவரை நெடுக்கு ஆறுவரை கீற திருவம்பலச் சக்கரமாம். இருபத்தஞ்சாக்கி - இருபத்தைந்து அறைகளாக்கி. திருவம்பலமாகச் செபிக்கின்றவாறு பஞ்சாக்கரங்களை மாறியிட்டுச் சிற்றம்பலச் சக்கரமாகக் கொண்டு செபிக்கின்ற விதம்.

## 885. வாறே சிவாய நமச்சி வாயநம

885. வாறே சிவாய நமச்சி வாயநம
வாறே செபிக்கில் வரும்பேர் பிறப்பில்லை
வாறே அருளால் வளர்கூத்துக் காணலாம்
வாறே செபிக்கில் வருஞ்செம்பு பொன்னே.

'சிவயநம' என்னும் நுண்ணிய திருவெழுத்தைந்தையும் இடையறாது கணித்துக்கொண்டேயிருந்தால், அத்தகையோர்க்குப் பிறப்பில்லை. பெறுபேறாகிய திருவருளின் வலியால் திருவம்பலக் கூத்துக் காணலாம். கணிப்பின் பயனாக உயிர் திருவடியை அடையும். வாறு - பேறு. வாறு - வலிமை வாறு - ஆறு.

## 886. பொன்னான மந்திரம் புகலவும் ஒண்ணாது

886. பொன்னான மந்திரம் புகலவும் ஒண்ணாது
பொன்னான மந்திரம் பொறிகிஞ்சு கத்தாகும்
பொன்னான மந்திரம் புகையுண்டு பூரிக்கிற்
பொன்னாகும் வல்லோர்க் குடம்புபொற் பாதமே.

பொன்போலும் சிறந்த திருவைந்தெழுத்து மந்திரத்தின் பெருமையினை அளவிட்டுக் கூறமுடியாது. அம் மந்திரத்தை இரண்டாம் பயிற்சி நிலையாகிய உதட்டளவில் கணித்தல் வேண்டும். அம் மந்திரத்தினை உயிர்ப்புப் பயிற்சியுடன் கணித்தால் உடம்பு பொன்வண்ணமாகும். அதன்கண் உறைத்து நிற்பார்க்கு அருள்விளக்கத்தால் அவர் உடல் அருளுடல் ஆகும்.

கிஞ்சுகம் - உதடு. புகை - சுவாசம்.

## 887. பொற்பாதங் காணலாம் புத்திரர் உண்டாகும்

887. பொற்பாதங் காணலாம் புத்திரர் உண்டாகும்
பொற்பாதத் தாணையே செம்புபொன் னாயிடும்
பொற்பாதங் காணத் திருமேனி யாயிடும்
பொற்பாத நன்னடஞ் சிந்தனை சொல்லுமே.

சீலத்தொண்டால் திருவடிக்காட்சியும், நோன்புத் தொண்டால் திருமேனி தீண்டலும் உண்டாகும். திருவடியாணையால் செம்பு பொன்னாவதுபோல் மலமகன்று தூய்மையுறும். செறிவுத்தொண்டால் சிவனுருவெய்தும். அறிவுத் தொண்டால் திருவைந்தெழுத்தானாம் திருவருட்கூத்தின் நாட்டம் உண்டாகும். இவ் வுண்மையினைச் செவ்வி வாய்ந்தார்க்கு ஓதுங்கள். புத்திரர் - நோன்புத் தொண்டர்.

திருமேனியாயிடும் - சிவசாரூபம் கிட்டும்.

## 888. சொல்லு மொருகூட்டிற் புக்குச் சுகிக்கலாம்

888. சொல்லு மொருகூட்டிற் புக்குச் சுகிக்கலாம்
நல்ல மடவார் நயந்துட னேவருஞ்
சொல்லினும் பாசச் சுடர்ப்பாம்பு நீங்கிடுஞ்
சொல்லுந் திருக்கூத்தின் சூக்குமந் தானே.

திருவைந்தெழுத்துக் கணிக்கும் சிறப்பால் மற்றோர் உடம்பிற் புகுந்து அவ்வுடம்பின் சார்பால் துன்புறும் சிற்றுயிர்கட்குத் துன்பம் நீங்கி இன்புறும் வழியை ஆக்கலாம். திருவருள் துணையும் விருப்புடன் வந்து சொல்லிலும் செயலிலும் கைகூடும். குண்டலியானது நடுநாடியினைவிட்டு நீங்கும். இவையே ஐந்தெழுத்தருட்கூத்தின் அருமறையாகும். சூக்குமம் - அருமறை; இரகசியம். 'ஆறறி யந்தணர்க்கு அருமறை பலபகர்ந்து' (கலித்தொகை, கடவுள் வாழ்த்து) என்பதனால் இவ் வுண்மை யுணரலாம். இத்திருமூலர் திருவரலாறும் காண்க.

ஒரு கூட்டில் புக்கு - இன்னொரு சரீரத்தில் புகுந்து. சுடர்ப்பாம்பு - குண்டலி.

## 889. சூக்குமம் எண்ணா யிரஞ்செபித் தாலுமேற்

889. சூக்குமம் எண்ணா யிரஞ்செபித் தாலுமேற்
சூக்கும மான வழியிடைக் காணலாஞ்
சூக்கும மான வினையைக் கெடுக்கலாஞ்
சூக்கும மான சிவனதா னந்தமே.

நெஞ்சகத்து வஞ்சமின்றி எண்ணத்தக்க நுண் ஐந்தெழுத்தை எண்ணினால் உம்மேலுள்ள நுண்ணுடல் வினையை நீங்கிச் செய்யலாம். மேலும் உச்சித்தொளைவழியையும் காணலாம். உணர்வுக்கு உணர்வாய்த் திகழும் சிவன் திருவடியின்பமும் சிறந்து விளங்கும்.

சூக்குமமான வழி - பிரமரந்திரம்.

## 890. ஆனந்தம் ஒன்றென் றறைந்திடம் ஆனந்தம்

890. ஆனந்தம் ஒன்றென் றறைந்திடம் ஆனந்தம்
ஆனந்தம் ஆ ஈ ஊ ஏ - ஓமென் றைந்திடம்
ஆனந்தம் ஆனந்தம் அஞ்சும தாயிடம்
ஆனந்தம் அம்-ஹிரீம்- அம்-க்ஷம்-ஆம்- ஆகுமே.

அஞ்செழுத்து முறையில் ஆவி சிவனுக்கு அடிமை என்று ஓர்ந்து சிவனிறைவில் அடங்கிச் சிவனே எனும்படி நிற்பதாகிய ஒன்றென்று சொல்லப்படும் நிலை எய்தினால் திருவடிப்பேற்றின்பம் ஆகும். அதுவே ஆ, ஈ, ஊ, ஏ, ஓம் என ஐந்திடத்து வரைதலும், அம், கி (ஹி) ரீம், அம், ச(க்ஷ)ம், ஆம் என ஐந்திடத்து வரைதலும் நிலைத்த பேரின்பம்தரும் திருஅம்பலச் சக்கரத்தின் வித்தெழுத்தாகும். இப் பத்தெழுத்துமே அச் சக்கரத்துக்குரிய வித்தெழுத்தாம் என்க. வித்தெழுத்தைப் பீசாச்சரம் என்ப.

ஆனந்தம்...ஆமே - ஆ, ஈ, ஊ, ஏ, ஓ என்ற 5 எழுத்துக்களும், அம், ஹிரீம், அம், க்ஷம், ஆம் என்ற 5 பீச அக்கரங்களும் சிதம்பரச் சக்கரத்திற்கு உரியவை.

## 891. மேனி யிரண்டும் விலங்காமல் மேல்கொள்ள

891. மேனி யிரண்டும் விலங்காமல் மேல்கொள்ள
மேனி யிரண்ஞூடு மிக்கார் விகாரியா
மேனி யிரண்டும்-ஊ- ஆ-ஈ-ஏ-ஓ என்னும்
மேனி யிரண்டும்-ஈ- ஓ-ஊ-ஆ-ஏ - கூத்தாமே.

விழுமிய முழுமுதற் சிவபெருமானின் நினைப்படையாள நீளுருவம் இருவகைப்படும். ஒன்று சொல்லுருவம்; மற்றொன்று பொருளுருவம். சொல்லுருவம் என்பது மந்திர உருவம். பொருளுருவம் என்பது திருமுகம் திருக்கை திருவடி முதலான திருவுறுப்புக்களோடு கூடிய திருவுருவம். திருவுருவங்களின் அடியில் திருச்சக்கரமாகிய மந்திரவுருவங்கள் எல்லாத் திருக்கோவில்களிலும் இன்றும் உள்ளன. அத் திருமேனி இரண்டினும் மிக்கு விளங்கித் தோன்றுவன் சிவன். அங்ஙனம் தோன்றினும் திரிபு எய்தாச் செம்பொருளாவன். திரிபு - விகாரம்.

நெட்டெழுத்தேழனுள் ஐ, ஔ என்னும் இரண்டெழுத்தும் நீங்கலாகிய ஐந்தெழுத்தும் வித்தெழுத்தெனப்படும். இவை இருவேறு
வகையாக எழுதப்பட்டுச் சிவயநம, நமசிவய என்பதும் இவற்றுடன் இணைத்து வரையப்படும் முறையும் காண்கின்றோம். இவையே திருக்கூத்தின் உட்பொருள்களாவன.

## 892. சூத்தே சிவாய நமமசி வாயிடுங்

892. சூத்தே சிவாய நமமசி வாயிடுங்
சூத்தே-ஈ-ஊ- ஆ-ஏ-ஓம்- சிவாயநம வாயிடுங்
சூத்தே-ஈ-ஊ- ஆ-ஏ-ஓம்- சிவயநம வாயிடுங்
சூத்தே-ஈ-ஊ- ஆ-ஏ-ஓம்- நமசிவாய கோளொன்றுமாறே.

சிவயநம என்னும் செந்தமிழ்த் திருமறை ஐந்தெழுத்தாலாகிய திருக்கூத்து ஆருயிர்களை உருகிக் குழைவிக்கும். இக் குழைவினையே ஆவியின் ஒப்படைப்பாகிய ஆத்தும நிவேதனம் என்ப. சிவயநம, நமசிவய என்னும் நுண்மையும் பருமையும் ஆகிய இருவகைத் திருவைந்தெழுத்தினுடன் மேற்கூறிய நெட்டெழுத்து ஐந்தினையும் இணைத்துக் கணித்து வழிபடுதலே செந்நெறிக் கொள்கை என்க.

## 893. ஒன்றிரண் டாடவோ ரொன்று முடனாட

893. ஒன்றிரண் டாடவோ ரொன்று முடனாட
ஒன்றினின் மூன்றாட ஓரேழும் ஒத்தாட
ஒன்றினா லாடவோர் ஒன்பதும் உடனாட
மன்றினில் ஆடினான் மாணிக்கக் கூத்தே.

திருச்சிற்றம்பலச்சிவனார் செய்தருளும் திருவைந்தெழுத்தானாம் திருக்கூத்தினுள் மாணிக்கக் கூத்தென்பதும் ஒன்று. அக் கூத்தானே உலகுயிர்கள் ஆடும் உண்மை இதன்கண் காணப்படும். ஒன்றிரண்டென்னப்படும் நிலம் நீர் இரண்டும் ஆடும். ஓரொன்று என்பது ஒப்பில்லாத ஒன்றாகிய சிவம்; அஃது உடனாட என்பது திருவருளுடன் விரவி நின்றாட என்பதாம். ஒன்றினின் மூன்று. ஒளிப் பொருளாம் ஒன்று தீ. அதுபோல் ஒளியுடை இருபொருள்கள் ஞாயிறும் திங்களுமாகும். இம்மூன்றும் ஆட, (ஓரேழ் என்பன உலகங்கள் ஏழும், உயிரின் பிறப்புவகை ஏழும் குறிப்பவாகும். இவ் விருவகை ஏழும் ஆடும், ஓரொன்பது என்பது இணையார்-(878)-இல் காணப்படும் எழுவகைத் திருவருள் ஆற்றல்களுடன் காண்டல் காட்டல் இரண்டும் கூடி ஒன்பதாகும். இவற்றை முறையே அறிவு, ஆற்றல், ஒலி, ஒளி, அருள், ஆண்டான், அரன், அரி, அயன் என்னும் அருவம் நாலு, அருவுருவம் ஒன்று, உருவம் நாலு என்பதாகிய மெய்நிலைகள் என்ப. இவையும் ஆடும். இவைகளெல்லாம் இடையீடின்றி ஆடும்படி பொன்னம்பலத்தின்கண் ஆடினான் என்க.

அசபை கூறப்புகுந்த இதன்கண் அஞ்செழுத்தருட்கூத்தும் திருவம்பலச் சக்கர அடிப்படையும் விளக்கியருளினர், அசபையும் ஐந்தெழுத்தும் முறையே நுண்மையும் பருமையும் என்னும் இணைவானென்க.

ஒன்று இரண்டு - பிருதிவி, அப்பு பூதங்கள். ஒன்றினில் மூன்று - அக்கின் பூத வேறுபாடாகிய சூரியன், சந்திரன், அக்கினி. ஏழும் - ஏழு உலகங்கள். ஒன்பது - ஒன்பது சிவவடிவங்கள் இவைகளெல்லாம் ஆட ஆடுவது மாணிக்கக் கூத்து.

## 894. இருந்தஇவ் வட்டங்கள் ஈராறி ரேகை

894. இருந்தஇவ் வட்டங்கள் ஈராறி ரேகை
இருந்த இரேகைமேல் ஈரா றிருத்தி
இருந்த மனைகளும் ஈராறு பத்தொன்று
இருந்த மனையொன்றில் எய்துவன் றானே.

எண்ணூற்றெண்பத்து நான்காம் பாட்டில் ஓதிய திருவம்பலச்சக்கர அறைகள் இருபத்தைந்து. இதன்கண் மேலும் பன்னிரண்டு வரைகள் வரைந்தால் பதினொரு அறைகள் வரும். ஆக மொத்தம் அறைகள் முப்பத்தாறாகும். இவற்றுள் இடையிலுள்ள ஓர் அறையில் சிகர முதல்வன் வீற்றிருந்தருள்வன். இஃது அருஞ்சைவர் மெய்கள் ஆறாறு என்பதை நினைப்பிக்கும் குறிப்புமாகும்.

வட்டங்கள் - 25 அறைகள். ரேகை - வரை. ஈராறு பத்தொன்று - 12-ம் 11-ம்.

## 895. தானொன்றி வாழிடந் தன்னெழுத் தேயாகுந்

895. தானொன்றி வாழிடந் தன்னெழுத் தேயாகுந்
தானொன்று மந்நான்குந் தன்பே ரெழுத்தாகுந்
தானொன்று நாற்கோணந் தன்னைந் தெழுத்தாகுந்
தானொன்றி லேயொன்று மவ்வரன் தானே.

மேற்கூறிய இருபத்தைந்து அறைகளிலும் நடுவாகத் தோன்றும் எழுத்துச் சிறப்பென்னும் செம்பொருளாகும். அதுவே சிவம். மற்றைய 'வ, ய, ந, ம' என்னும் நான்கெழுத்துக்களும் சேர்ந்து ஆண்டவனுடைய பொன்றாப் புகழ்சேர் திருப்பெயராகும். 'நந்திநாமம் நமசிவய' என்னும் திருமுறையான் உணரலாம். நாற்கோணம் உள்ளிட்ட நான்கு பெருந்திசைகளும் இந் நான்கெழுத்தும் ஆகும். இந்நான் கெழுத்திலும் சிகரம் யாண்டும் உடனாய் நிற்கும். சிவபெருமான் திருப்பெயரெழுத்து ஐந்தாகும்.

தன்னெழுத்து - சி. நான்கு - சிகரம் ஒழிந்த நாலு.

## 896. அரகர என்ன அரியதொன் றில்லை

896. அரகர என்ன அரியதொன் றில்லை
அரகர என்ன அறிகிலர் மாந்தர்
அரகர என்ன அமரரும் ஆவர்
அரகர என்ன அறும்பிறப் பன்றே.

மலஆற்றலை வினை அரத்தால் தேய்ப்பித்தலின். அரனென்னப்பட்டனன். மாயாகாரியத்தை நடப்பாற்றலால் ஒடுக்குதலின் கரன் என்னப்பட்டான். கரன்: கரப்பவன். கரத்தல் - ஒடுக்குதல். இவ் வுண்மை "காத்தும் படைத்தும் கரந்தும் விளையாடி" என்னும் எட்டாம் திருமுறையான் உணரலாம். எனவே, இருசொற்களின் முதனிலைகள் சேர்ந்து அரகர என்றாயிற்று. அதனை அரகர என்று உள்ளன்புடன் ஓதுவார்க்குத் திருவருள் துணை முன்னிற்பதால் செயற்கரிய செயலென்று ஒன்றும் இல்லை. இவ் வுண்மையினைப் பலர் உணர்ந்திலர். அரகர என்று ஓதச் சிவவுலகப் பெரும்பேற்றினராவர். அரகர என்று ஓதப் பிறப்பற்றுச் சிறப்புற்றுப்பெரு வாழ்வு வாழ்வர்.

## 897. எட்டு நிலையுள எங்கோன் இருப்பிடம்

897. எட்டு நிலையுள எங்கோன் இருப்பிடம்
எட்டினில் ஒன்றும் இருமூன்றும் ஈரேழும்
ஒட்டிய விந்துவும் நாதமும் ஓங்கிடப்
பட்டது மந்திரம் பான்மொழி பாலே.

நடுவீட்டைச் சூழ இருக்கும் எட்டுவீடும் எட்டுநிலை எனப்படும். இவ் வமைப்பில் ஒன்று உலகின் முதலாகிய ஓம் எனப்படும். ஓம் நமசிவய என்னும் ஆறெழுத்து அருமறையும், பதினான்கு உலகங்களும், ஒளியும் ஒலியும் ஆகிய எல்லாம் திருவருள் தாங்குதலினின்று தோன்றின. ஒட்டு - அமைப்பு. பான் மொழி - திருவருள்.

எட்டுநிலை - நடுவீட்டைச் சூழ இருக்கும் எட்டுவீடு. ஒட்டினில் - இந்த அமைப்பில். ஒன்று - பிரணவம்.

## 898. மட்டவிழ் தாமரை மாதுநல் லாளுடன்

898. மட்டவிழ் தாமரை மாதுநல் லாளுடன்
ஒட்டி இருந்த உபாயம் அறிகிலர்
விட்ட எழுத்தை விடாத எழுத்துடன்
கட்டவல் லாருயிர் காக்கவல் லாரே.

சிவனும் சிவையும் பிரிப்பின்றி ஒட்டியுறையும் வழிவகையறியின், விட்ட எழுத்தாகிய 'வ' விடாத எழுத்தாகிய 'சி' இவ்விரண்டினையும் மாமுதல் என்னும் உண்மை வெளியாகும். மாமுதல் மகாகாரணம். இவ் விருபெரும் எழுத்தாகிய சிவ என்னும் செந்தமிழ்த் தனிமறையினை இடையறாது கணிக்கவல்லார் தம்முயிர் திருவடியிற் கூடிப் பேரின்பம் எய்தும் நிலையினைப் பேணவல்லாராவர். கட்டல் - இடையறாது கணித்தல். காத்தல் - பேணுதல்.

விட்ட எழுத்து - வ. விடாத எழுத்து - சி.

## 899. ஆலய மாக அமர்ந்தபஞ் சாக்கரம்

899. ஆலய மாக அமர்ந்தபஞ் சாக்கரம்
ஆலய மாக அமர்ந்தவித் தூலம்போய்
ஆலய மாக வறிகின்ற சூக்குமம்
ஆலய மாக அமர்ந்திருந் தானே.

செந்தமிழ்த் திருவைந்தெழுத்தாலாகிய திருக்கோவிலே அம்பலவாணர் அருள் உறையுளாகும். இவ் வைந்தெழுத்துப் பருமை: நுண்மை, மீநுண்மை, முதல், மாமுதல் என ஐவகைப்படும். பருமை, நமசிவய. நுண்மை: சிவயநம மீநுண்மை: சிவயசிவ முதல்: சிவசிவ. மாமுதல்: சிவ. இவற்றுள் பருமையாகிய நமசிவய என்பதன் மேல் நுண்மையாக அறிகின்ற சிவயநம, என்னும் அதுவே திருக்கோவிலாக அமர்ந்திருந்தான் என்க. இந்
நிலை இரண்டும் முறையே உலகியலைப் பெரிதாகவும் வீட்டியலைப் பெரிதாகவும் கொள்ளும் குறிப்பினவாகும்.

## 900. இருந்தஇவ் வட்டம் இருமூன்றி ரேகை

900. இருந்தஇவ் வட்டம் இருமூன்றி ரேகை
இருந்த வதனுள் இரேகையைந் தாக
இருந்த அறைகள் இருபத்தைந் தாக
இருந்த அறையொன்றில் எய்தும் அகாரமே.

எண்ணூற்று எண்பத்துநான்காம் திருப்பாட்டில் ஓதியவாறு திருவம்பலச்சக்கரம் அமைத்த இடத்து அதன் ஓர் அறையின்கண் அகரம் அமையும். அகரம் சிவபெருமானின் அடையாள எழுத்தாகும்.

அகரம் - அகர உருவனாகிய சிவன்.

## 901. மகார நடுவே வளைத்திடுஞ் சத்தியை

901. மகார நடுவே வளைத்திடுஞ் சத்தியை
ஒகாரம் வளைத்திட் டும்பிளந் தேற்றி
அகாரந் தலையாய் இருகண் சிகாரமாய்
நகார வகாரநற் காலது நாடுமே.

இதன்கண் திருவம்பலச்சக்கரம் எழுத்துமுறை அமைப்பினால் தலை, கண், கால் முதலிய உறுப்புக்களோடமைந்த ஓர் ஆள் வடிவமாகத் தோன்றுமுறை ஓதப்பெற்றுள்ளது.

மகாரம் - நாதம். சத்தி - சத்திபீசம். ஒகாரம் வளைத்திட்டு - ஒ எழுதி. உம் பிளந்து - உம் என்பதை நீக்கி அகரம் தலையாய் - அகரம் சிரசாக. இருகண் சிகாரமாய் - சிகரம் கண்களாய். நகாரம் வகாரம் - நகரம், வகரம் கால்களாய் இது சிதம்பரச் சக்கர நடுவில் ஈசனை மனித உருவமாகக் காணும் முறை கூறியது.

## 902. நாடும் பிரணவ நடுவிரு பக்கமும்

902. நாடும் பிரணவ நடுவிரு பக்கமும்
ஆடு மவர்வாய் அமர்ந்தங்கு நின்றது
நாடு நடுவுண் முகநம சிவாய
வாடுஞ் சிவாயநம புறவட்டத் தாயதே.

இதன்கண் ஓங்காரநடுவில் சிவமும், நடுவட்டத்தில் நமசிவய முகமுமாக அமைத்தல் ஓதப்பெறுகின்றது. சிவபெருமான் "ஒருசுடராய் உலகேழு மானான்கண்டாய், ஓங்காரத்துட் பொருளாய் நின்றான் கண்டாய்" எனத் திருத்தாண்டகத் திருப்பதிகத்தின்கண் வருவதுங் காண்க.

பிரணவநடு இருபக்கமும் - பிரணவ நடுவில் இருபக்கத்திலும். அவர் - அந்த சத்தி சிவங்களின். ஆடும் வாய் - பேசும் வாய். நடுவுள் - நடுவட்டத்தில் முகம் நமசிவாய - நமசிவாய என்பது முகமாக. புறவட்டம் - மேல்வட்டம்.

## 903. ஆயுஞ் சிவாய நமமசி வாயந

903. ஆயுஞ் சிவாய நமமசி வாயந
வாயு நமசிவா யயநம சிவாய
வாயுமே வாய நமசியெனு மந்திரம்
ஆயுஞ் சிகாரந் தொட்டந்தத் தடைவிலே.

இதன்கண் செந்தமிழ்த் திருமறையாம் திருவைந்தெழுத்தினுள் நுண்மையவாய் 'சிவயநம' என்னு மந்திரத்தினை நான்கு முறை எழுத்துக்களை மாற்றியமைக்கும் நிலை ஓதப்படுகின்றது. அந் நான்கும் ஈற்றிலிருந்து முறையே ஒவ்வோர் எழுத்தும் முதலெழுத்தாக எழுதுதல் வேண்டும். அங்ஙனம் எழுதின் திருவம்பலச்சக்கரம் இருபத்தைந்திலும் திருவைந்தெழுத்து அமைந்திருக்கும் உண்மை புலனாகும். மேலும் தொடக்கத்திலும் முடிவிலும் சிகரம் தோன்றும் சிறப்புக் காண்க. முதல் வரியின் கடைசியில் காணப்படும் 'ய ந' என்னும் இரண்டெழுத்தால் ஆயும் உயிரும் அதற்குத் துணையாம் நடப்பாற்றலாகிய திருவருள் துணையும் சிறப்பாகத் தோன்றுமுறை ஓதப்படுகின்றன. அடைவிலே - முறையிலே.

சிகாரந்....விலே - சிகரம் முதலாக இட்டுக் கடைசிவரையில் மாறும் முறை கூறியது.

## 904. அடைவினில் ஐம்பதும் ஐயைந் தறையின்

904. அடைவினில் ஐம்பதும் ஐயைந் தறையின்
அடையும் அறையொன்றுக் கீரெழுத் தாக்கி
அடையு மகாரத்தில் அந்தமாம் க்ஷவ்வும்
அடைவின் எழுத்தைம்பத் தொன்றும் அமர்ந்ததே.

இதன்கண் ஐந்தெழுத்துக்கு அமைந்த இருபத்தைந்து அறைகளுள் ஐம்பதெழுத்தும் அமைக்குமுறை ஓதப்படுகின்றது.

ஐம்பது - க்ஷகரம் நீங்கிய 50 எழுத்துக்கள். ஐயைந்தறையில் அடையும் - அறை ஒன்றுக்கு இரண்டு அக்கரங்களாக 50 அக்கரங்கள். மகாரத்தில் அந்தமாம் க்ஷவ்வும் அடையும் - க்ஷகரத்தைப் பிரணவ வட்டத்து அமைந்த மகரத்தோடும் சேர்த்திடுக.

## 905. அமர்ந்த அரகர வாம்புற வட்டம்

905. அமர்ந்த அரகர வாம்புற வட்டம்
அமர்ந்த அரிகரி யாமத னுள்வட்டம்
அமர்ந்த அசபை யாம்அத னுள்வட்டம்
அமர்ந்த இரேகையும் ஆகின்ற சூலமே.

மூன்று வட்டங்களுள் அமைக்கப்பெறும் மந்திரங்கள் இதன்கண் ஓதப்பெறுகின்றன.

புறவட்டம் - வெளிவட்டம்; இதற்கு அரகர என்றும், அதனுள் வட்டம் - புறவட்டத்தை அடுத்துள்ள வட்டம்; அதற்கு அரிகரி என்றும் ஆம். நாதனுள் வட்டம் - அவ் வுள் வட்டத்தை அடுத்துள்ள வட்டம்; அதற்குரியது அசபா மந்திரம். ரேகையும் - வரைகளின் முனைகளில். சூலமே - சூலம்போன்ற குறிகள் கீறுக.

## 906. சூலத் தலையினில் தோற்றிடுஞ் சத்தியுஞ்

906. சூலத் தலையினில் தோற்றிடுஞ் சத்தியுஞ்
சூலத் தலையினிற் சூழும்ஓங் காரத்தால்
சூலத் திடைவெளி தோற்றிடும் அஞ்செழுத்து
ஆலப் பதிக்கும் அடைவது வாமே.

முத்தலை வேலாகிய சூலத்தின் முனையில் சிவையின் எழுத்தாகிய வகரம் அமைத்தல் வேண்டும். அச் சூலத்தைச் சூழ ஓங்காரம் அமைத்தல் வேண்டும். சூலத்தின் இடைவெளியில் திருவைந்தெழுத்து அமைத்தல் வேண்டும். அதுவே இறையாகிய சிவத்தின் நிலைக்களமாகும். இறை: பதி. ஆல் - ஆசை.

சூலத்தலை - சூலத்தின் முனை. சத்தி - சத்திபீசம். சூலத்....வாமே - சூலத்தைச் சூழ ஓங்காரம் இட்டு அமைத்துச் சூல இரேகைகளுக்கு இடையிலே பஞ்சாக்கரங்களை அமைக்க என்றது.

## 907. அதுவாம் அகார இகார உகாரம்

907. அதுவாம் அகார இகார உகாரம்
அதுவாம் எகாரம் ஒகாரம தைந்தாம்
அதுவாகுஞ் சக்கர வட்டமேல் வட்டம்
பொதுவாம் இடைவெளி பொங்குநம் பேரே.

முன்னைப்பாட்டில் ஓதப்பெற்ற திருவைந்தெழுத்து தமிழ்மொழியின் உயிர்க்குறிலாகிய அ, இ, உ, எ, ஒ என்னும் ஐந்தெழுத்தாகும். இவையே இங்குக் குறிக்கப்பெற்றன. இவற்றைச் சக்கர வட்டங்களிலும் மேல்வட்டங்களிலும் வரைக. நடுவாகிய நம்பெயர் 'நமசிவய' என்க.

அதுவாம் - அப் பஞ்சாக்கரமாவன அ, இ உ எ ஒ.

## 908. பேர்பெற் றதுமூல மந்திரம் பின்னது,

908. பேர்பெற் றதுமூல மந்திரம் பின்னது,
சோர்வுற்ற சக்கர வட்டத்துட் சந்தியின்
நேர்பெற் றிருந்திட நின்றது சக்கரம்
ஏர்பெற் றிருந்த இயல்பிது வாமே.

திருப்பெயராகப்பெற்ற 'நமசிவய' என்பதே சிவமூல மந்திரமாகும். மற்றைய எழுத்துக்கள் உள்வட்டம் வெளிவட்டங்களில் முன்னைத் திருப்பாட்டில் கண்ட முறைபோல் திகழ்வனவாகும்.

## 909. இயலுமிம் மந்திரம் எய்தும் வழியின்

909. இயலுமிம் மந்திரம் எய்தும் வழியின்
செயலும் அறியத் தெளிவிக்கு நாதன்
புயலும் புனலும் பொருந்தங்கி மண்ணின்
முயலும் எழுத்துக்கு முன்னா இருந்ததே.

மேற்கூறிய முறையானே அமைக்கப்படும் திருவம்பலச் சக்கரத்தின்கண் நில முதல் வானம் ஈறாகக் கூறப்படும் பூதங்கள் ஐந்தினுக்கும் உரிய ல, வ, ர, ய, அ ஏற்ற இடத்து அமைத்தல் வேண்டும்.

## 910. ஆறெட் டெழுத்தின்மே லாறும் பதினாலும்

910. ஆறெட் டெழுத்தின்மே லாறும் பதினாலும்
ஏறெட் டதன்மேலே விந்துவும் நாதமுஞ்
சீறிட்டு நின்று சிவாயநம வென்னக்
கூறிட்டு மும்மலங் கூப்பிட்டுப் போமே.

ஐம்பதெழுத்தாக அமைக்கப்படும் காலத்து உயிரினத்தில் ஆறாவதெழுத்து 'ஊ' பதினான்காவதெழுத்து 'ஔ' எட்டு என்பது அகர எழுத்தாகும். அதன்மேல் ஒளியும் ஒலியும் கணிக்குமாறு கூட்டுதல்வேண்டும். சீறிட்டு - கணிக்குமாறு கூட்டியிட்டு, 'சிவயநம' என இடையறாது கணித்துக்கொண்டிருந்தால் மும்மலங்களும் பிளவு பட்டு இன்னலுற்றுப் புலம்பியகலும். பிளவுபடுதல் - ஆற்றலடங்குதல்.

# 911. அண்ணல் இருப்ப தவளக் கரத்துளே

911. அண்ணல் இருப்ப தவளக் கரத்துளே
பெண்ணினல் லாளும் பிரானக் கரத்துளே
எண்ணி இருவர் இசைந்தங் கிருந்திடப்
புண்ணிய வாளர் பொருளறி வார்களே.

சிவபெருமான் இயைந்தியைக்கும் சிவையின் எழுத்தாகிய வகரத்தோடு பிரிப்பின்றி நிற்பன். சிவையும் சிவபிரான் எழுத்துடன் அவ்வாறு நிற்கும். சிவபெருமான் எழுத்து 'சி' சிவனும் சிவையுமாகிய இருவரும் ஆவியின் நடுவுள் இருத்தலான் அவ் வுயிர் திருவடியுணர்வையுணரும். அவ் வுணர்வுடையார் புண்ணியவாளர் எனவும் பொருளறிவாளர் எனவும் பேசப்பெறுவர். அதுவே 'சிவயசிவ'. இப்பெருமறையின் குறிப்பு வருமாறு:

'நாடும் நமசிவய நாப்பண்சி நாப்பண்ய
கூடும் சிவயநம கூறுங்கால் - நேடும்
சிவயசிவ நாப்பண் சிறப்பிருவர், சேர்வாம்
சிவசிவ தாடலையாம் சேர்ப்பு.'

அவளக்கரம் - சத்திபீசம். பிரானக்கரம் - சிவபீசம்.

# 912. அவ்விட்டு வைத்தங் கரவிட்டு மேல்வைத்து

912. அவ்விட்டு வைத்தங் கரவிட்டு மேல்வைத்து
இவ்விட்டுப் பார்க்கில் இலிங்கம தாய்நிற்கும்
மவ்விட்டு மேலே வளியுறக் கண்டபின்
தொம்மிட்டு நின்ற சுடர்க்கொழுந் தாமே.

திருவருட்குறியாம் சிவலிங்கத்தின் சிறப்புச் சாக்கிய நாயனார் திருவரலாற்றினுள் அருவம் உருவம் என்னும் இரண்டற்கும்
காரணமாம் அருவுருவத் திருவுரு என்று ஓதப்பெற்றுள்ளது.1 இத் திருவுரு அடி நடு முதல் என முப்பகுப்பினையுடையது. அடிப்பகுதியில் 'அ' எனவும், நடுப்பகுதியில் 'அர' எனவும், முடிப்பகுதியில் 'இ' எனவும் எழுத்துருவில் அமைத்துக்கொள்ளுதல் வேண்டும். அ என்பது அறிவினையும், அர என்பது தொழிலினையும், இ என்பது இன்பத்தினையும் குறிக்கும். மகரத்தையிட்டு உச்சித்தொளையின்கண் உயிர்ப்புச் செல்லுவதை யுணர்ந்தபின் அவ்விடத்துத் தொம்தோம் என்று திருக் கூத்தியற்றும் சுடர்க்கொழுந்தினைக் காணுதலாகும். மேல் உச்சித் தொளை. வளி - உயிர்ப்பு; பிராணவாயு. தொம் - ஒலிக்குறிப்பு. தோம் என்பது குறுகியதெனக்கொண்டால் தமிழின் அடையாளமாகிய தகரத்தின்மேல் நின்ற ஓங்காரம் எனக்கொள்ளுதல் வேண்டும். இது திருமுறை பன்னிரண்டும் 'தோ' எனத் துவங்கி 'ம்' என முடியும் சிறப்பினை ஒத்ததாகும். தோம் என்பது தமிழ் ஓம் என்றாகும்.

அவ்விட்டு - அகரத்தை எழுதி. அரவிட்டு - அதன்மேல் அர என்பது எழுதி. இவ்விட்டு - அதன்மேல் இ எழுதிப் பார்க்கில் சிவலிங்கமாம். தொம் - தகர ஒகரம்.

## 913. அவ்வுண்டு சவ்வுண் டனைத்துமங் குள்ளது

913. அவ்வுண்டு சவ்வுண் டனைத்துமங் குள்ளது
கவ்வுண்டு நிற்குங் கருத்தறி வாரில்லை
கவ்வுண்டு நிற்குங் கருத்தறி வாளர்க்குச்
சவ்வுண்ட சத்தி சதாசிவன் தானே.

அகரமும் சகரமும் அங்குண்டு. இவ் விரண்டும் சிவம் சிவை என்னும் அத்தன் அன்னையைக் குறிக்கும். ஈண்டுக் கூறப்படும் அகரம் அடியையும், சகரம் சடையையும் குறிக்கும். இவ்விரண்டும் ஆருயிர்களுடன் பின்னிக்கொண்டு நிற்கும் திருவுள்ளப்பெற்றி அறிவாரில்லை. அத் தன்மையின் மெய்ம்மையினை அறியும் அடியவர்க்கு அச் சகரத்தின் வண்ணமாம் சதாசிவன் தோன்றும்.

சவ்வுண்ட சத்தி - ச என்னும் பீசமந்திரத்துள்ள சத்தி.

## 914. அஞ்செழுத் தாலே அமர்ந்தனன் நந்தியும்

914. அஞ்செழுத் தாலே அமர்ந்தனன் நந்தியும்
அஞ்செழுத் தாலே அமர்ந்தபஞ் சாக்கரம்
அஞ்செழுத் தாகிய வக்கர சக்கரம்
அஞ்செழுத் துள்ளே அமர்ந்திருந் தானே.

நந்தியாகிய சிவபெருமான் திருஐந்தெழுத்தாகவே அமர்ந்தருளினன் அஞ்சு சொற்களின் முதலெழுத்துக்களாகிய அஞ்செழுத்தாலாகியது பஞ்சாக்கரம். இவ் வைந்தெழுத்துக்களாலேயே சக்கரங்கள் அமைக்கப்படும். அதனுள் அமர்ந்துறைபவன் விழுமிய முழுமுதற்சிவன், அஞ்செழுத்தின் விரிவாம் அஞ்சு அஞ்சொல்: சிறப்பு (சி) வனப்பு (வ) யாப்பு (ய) நடப்பு (ந) மறைப்பு (ம).

## 915. கூத்தனைக் காணுங் குறிபல பேசிடிற்

915. கூத்தனைக் காணுங் குறிபல பேசிடிற்
கூத்த னெழுத்தின் முதலெழுத் தோதினார்
கூத்தனொ டொன்றிய கொள்கைய ராய்நிற்பர்
கூத்தனைக் காணுங் குறியது வாமே.

கூத்தனாகிய சிவபெருமானைக் காணும் நெறிகள் நான்காகப் பேசப்படினும், அவன் திருவைந்தெழுத்தின் முதலெழுத்தாகிய சிவ என்பதனைச் சிறந்து எடுத்து ஓதும் மெய்யடியார் கூத்தப் பெருமானுடன் பிரிவின்றிக் கலந்த புணர்ப்பினராவர். இதுவே திருவடி சேரும் பெருநெறியாகும். சிம் என ஒலிக்கின் ஆறுதலாகிய கும்பக முறை என்ப.

கூத்தன் எழுத்து - பஞ்சாக்கரம். முதலெழுத்து - சி.

## 916. அத்திசைக் குள்நின்ற அனலை எழுப்பியே

916. அத்திசைக் குள்நின்ற அனலை எழுப்பியே
அத்திசைக் குள்நின்ற நவ்வெழுத் தோதினால்
அத்திசைக் குள்நின்ற அந்த மறையனை
அத்திசைக் குள்ளுற வாக்கினன் தானே.

மூல நிலைக்களத்துத் தோன்றும் அனலை எழுப்பி ஆங்கு ஒலிக்கவேண்டிய ஓங்காரத்தை ஓதினால், ஆங்கு உறைகின்ற மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனாகிய சிவபெருமான் ஆருயிரை அவ்விடத்து உள்ளுற ஆக்கியருளினவனாவன். திசை - உயிர்ப்புச் செல்லும் இடமாகிய மூலம்.

அவ் வெழுத்து - ஓங்காரம்.

## 917. தானே யளித்திடுந் தையலை நோக்கினால்

917. தானே யளித்திடுந் தையலை நோக்கினால்
தானே யளித்திட்டு மேலுற வைத்திடுந்
தானே யளித்த மகாரத்தை ஓதிடத்
தானே யளித்ததோர் கல்லொளி யாகுமே.

சிவபெருமான் தானாகவே அளித்தருளும் தூமாயை என்னும் குண்டலியினை ஆராய்ந்தால், சிவம் தானாகவே மேல்நிலையில் வைத்திடும். அதுபோல் மகரமாகிய ஒலி(நாதம்) யினை ஓதிட முழு மாணிக்க ஒளியாகிய சிவபெருமான் தோன்றுவன்.

(அ. சி) தையல் - குண்டலினி. மகாரம் - நாதம். கல்லொளி - மாணிக்கச்சோதி.

## 918. கல்லொளி யேயென நின்ற வடதிசை

918. கல்லொளி யேயென நின்ற வடதிசை
கல்லொளி யேயென நின்றனன் இந்திரன்
கல்லொளி யேயென நின்ற சிகாரத்தைக்
கல்லொளி யேயெனக் காட்டிநின் றானே.

வடபெருங்கல் எனச் சிறப்பிக்கப்படும் திருக்கைலாய மலையை உறைவிடமாகக் கொண்டவன், ஆங்குப் போகமருளும் புண்ணியவேந்தன் சிவபெருமான். அவனுக்குரிய செந்தமிழ் மந்திர ஐந்தெழுத்தின் முதலெழுத்துச் சிகரம். இது வைரவொளிபோன்று திகழ்வது. குணக்குன்றின்மேல் இட்ட விளக்கெனக் காட்டினன். இந்திரன் - வேந்தன்; சிவபெருமான்; மருத நிலக்கடவுள்.

கல் - பனிக்கட்டி (கல்மழை என்னும் வழக்கில் காண்க). வடதிசை - கயிலாயம். கல் - வயிரக் கல்; இந்திரன் - இந்திரியத்தை அவித்தவன்; பொறி வாயிலைந்தவித்தவன்; சிவன். கல் - வயிரம். கல் - நிலையான.

## 919. தானே யெழுகுணந் தண்சுட ராய்நிற்குந்

919. தானே யெழுகுணந் தண்சுட ராய்நிற்குந்
தானே யெழுகுணம் வேதமு மாய்நிற்குந்
தானே யெழுகுண மாவதும் ஓதிடில்
தானே யெழுந்த மறையவ னாமே.

எழுத்துக்கள் தோன்றுவதற்குரிய பண்பமைந்த ஒலியாகிய அருட்சுடரும் சிவனே. அவ் எழுத்துக்களாலாகிய அறிவு நூலாம் மறையும் அவனே. எல்லா நற்பண்புகளுமாய் நிற்பவனும் அவனே. தானாகத் தோன்றிய உள்ளங்கவர் கள்வனும் அவனே. மறையவன் - கள்வன்.

தானே எழு குணம் - நாதம்.

## 920. மறையவ னாக மதித்த பிறவி

920. மறையவ னாக மதித்த பிறவி
மறையவ னாக மதித்திடக் காண்பர்
மறையவன் அஞ்செழுத் துண்ணிற்கப் பெற்ற
மறையவன் அஞ்செழுத் தாமது வாகுமே.

ஆண்டவன் ஆருயிரனைத்தையும் தன்வண்ணம் ஆக்குவன். அதன்பொருட்டு மானுடப்பிறவியை மதித்து அருளினன். அவ் வுண்மையை உணர்ந்து செந்நெறி ஒழுகி மறையவனாக மதித்திடக் காண்பர். அந் நிலை எய்துவதற்குத் திருவைந்தெழுத்தின் உள்ளீடாய் நிற்பவன் சிவன். அவ் அஞ்செழுத்தோதுவார் சிவமாகி வாழ்வர். அஞ்செழுத்து - சிவயநம.

மறையவன் அஞ்செழுத்தாம் - தமிழ் நான்மறைகள் எல்லாம் அஞ்செழுத்தின் பெருமையை விளக்குவவாம்.

## 921. ஆகின்ற பாதமு மந்நவாய் நின்றிடும்

921. ஆகின்ற பாதமு மந்நவாய் நின்றிடும்
ஆகின்ற நாபியுள் அங்கே மகாரமாம்
ஆகின்ற சீயிரு தோள்வவ்வாய்க் கண்டபின்
ஆகின்ற வச்சுடர் யவ்வியல் பாமே.

அன்பாகிய உலகியலும் அருளாகிய வீட்டியலும் சிவன் திருவடியாலாகுவன். அத் திருவடிக்கண் நகரம். கொப்பூழின்கண் மகரம். இருதோளின்கண் சிகரம். வாயின்கண் வகரம். திருமுடியின்கண் யகரம். இம் முறையாக அம்பலவாணரின் அருமறைத் தமிழ்த் திருவுரு அமைப்பர். சுடர் - திருமுடி. சிஇரு என்பது நீட்டும் வழி நீட்டலாய்ச் சீ என்றாயிற்று.

பாதமுமந் நவ்வாய் - நகரம் திருவடி. நாபியுளங்கே மகாரமாய் - மகரம் நாபிக்கமலம். சீ இருதோள் - சிகரம் இருதோள்கள். வவ் வாய் - வகரம் வாய். அச் சுடர் யவ் வியல்பு - யகரம் சுடர் அல்லது புருவமத்தி.

## 922. அவ்வியல் பாய இருமூன் றெழுத்தையுஞ்

922. அவ்வியல் பாய இருமூன் றெழுத்தையுஞ்
செவ்வியல் பாகச் சிறந்தனன் நந்தியும்
ஒவ்வியல் பாக ஒளியுற நோக்கிடிற்
பவ்வியல் பாகப் பரந்துநின் றானே.

மேல் ஓதிய திருவைந்தெழுத்தின் செவ்விய தன்மையாகச் சிவனும் சிறந்தனன். ஓங்கார இயல்பாகப் பேரொளி எங்கணும் ஓங்கும். திருப்பாட்டாகத் திகழும் தமிழ்த்திரு நான்மறையாக நிறைந்து நின்றனன் சிவபெருமான். இருமூன்று: 2 + 3 - 5 - திருவைந்தெழுத்து. ஒவ்வியல்பு: ஓங்கார இயல்பு. மந்திரங்களை உய்த்துணருமாறு எழுத்துக்களை மாத்திரை கூட்டியும் குறைத்தும் வழங்குவர். கூட்டி வழங்குவது சிவ என்பது சிவா என நீள்வதாம். குறைத்து வழங்குவது ஓங்காரத்தை ஒவ்வாக வழங்குவதாம்.

இரு மூன்று எழுத்து - பிரணவமும் ஐந்தெழுத்துக்களும். ஒவ் வியல்பு - பிரணவத்தின் இயல்பு. பவ் வியல்பு - பர இயல்பு; செய்யுள் வடிவமான தமிழ் நான்மறைகளின் இயல்பு.

## 923. பரந்தது மந்திரம் பல்லுயிர்க் கெல்லாம்

923. பரந்தது மந்திரம் பல்லுயிர்க் கெல்லாம்
வரந்தரு மந்திரம் வாய்த்திட வாங்கித்
துரந்திடு மந்திரஞ் சூழ்பகை போக
உரந்தரு மந்திரம் ஓமென் றெழுப்பே.

அவ்வுண்டு (913) என்பது முதல் இதுவரையும் சிவ மந்திரங்கள் விளக்கப் பெற்றன. இவை எல்லா உயிர்கட்கும் வேண்டும் வரந்தரு மந்திரமாகும். அம் மந்திரம் பிறவியாகிய பெரும் பகையை நீக்கும். ஓமென்று உள்ளன்புடன் கணிக்கத் திருவருளாற்றல் கைகூடும். எழுப்பவே என்பது எழுப்பே என்று திரிந்துநின்றது. துரந்திடும் - நீக்கும்.

பரந்தது மந்திரம் - மந்திரங்கள் இவ்வாறு பரவின. சூழ் பகை - பிறப்புக்குக் காரணமான இன்ப துன்பங்கள்.
1. அவ்வுட. சிவஞானசித்தியார், 4. 1 - 2.

## 924. ஓமென் றெழுப்பித்தன் உத்தம நந்தியை

924. ஓமென் றெழுப்பித்தன் உத்தம நந்தியை
நாமென் றெழுப்பி நடுவெழு தீபத்தை
ஆமென் றெழுப்பியவ் வாறறி வார்கள்
மாமன்று கண்டு மகிழ்ந்திருந் தாரே.

ஓம் என முதற்கண் ஓசையை எழுப்புதல் வேண்டும் பின்பு நமசிவய என்னும் தமிழ் மந்திரத்தை நவிலுதல்வேண்டும். இதன்கண் நடுவெழு திருவிளக்குச் சிகரம். சிவயநம என்று ஓதுவதே திருவடி சேரவழியாகும். இவ்வுண்மை அறிவார்கள் திருச்சிற்றம்பலம் கண்டு என்றும் இன்புற்றிருப்பார்கள். மாமன்று - திருச்சிற்றம்பலம்.

## 925. ஆகின்ற சக்கரத் துள்ளே எழுத்தைந்தும்

925. ஆகின்ற சக்கரத் துள்ளே எழுத்தைந்தும்
பாகொன்றி நின்ற பதங்களில் வர்த்திக்கும்
ஆகின்ற ஐம்பத் தோரெழுத் துள்நிற்கப்
பாகொன்றி நிற்கும் பராபரன் தானே.

904இல் ஓதியபடி திருவம்பலச் சக்கரத்தில் அமைக்கப்படும் எழுத்துத் திருவைந்தெழுத்தாகும். இவ்வைந்தெழுத்தும் ஐந்து சொற்களின் முதலெழுத்தாகும். அவை அச் சொற்களின் மாட்டு விளக்கமுறும். இவ்வைந்தெழுத்தின் பொருளாக விரிவனவேயாம் ஐம்பத்தொரு எழுத்தும். இவ் வனைத்தினையும் உண்ணின்றுய்க்கும் முழுமுதல் சிவபெருமான் ஒருவனேயாம். பாகொன்றி - பகுத்தல் பொருந்தி. இத் திருப்பாட்டு அகவழி பாட்டைக் குறிப்பதாகும். 904-ஆம் திருப்பாட்டுப் புறவழிபாட்டைக் குறிப்பதாகும்.

## 926. பரமாய அஞ்செழுத் துள்நடு வாகப்

926. பரமாய அஞ்செழுத் துள்நடு வாகப்
பரமாய நமசிம பார்க்கில் மவயநசி
பரமாய சியநம வாம்பரத் தோதிற்
பரமாய வாசி மயநமாய் நின்றே.

எவ்வகை மந்திரங்களுக்கும் முதன்மை வாய்ந்ததாய்த் தாயாய்த் திகழும் திருவைந்தெழுத்துள் நடுவாய் விளங்குவது 'ய' கரமாகும். இவ்வைந்தெழுத்தை: யநவசிம, மவயநசி, சியநமவ, வசிமயந - என நான்கு வகையாகக் கணிக்கப்படும். இங்ஙனம் எழுத்துக்களை நிலைமாறிக் கணித்தல் பொருளுண்மை நன்கு புலனாய்ப் பதிதற்கேயாம்.

அஞ்செழுத்துள் நடு - யகரம். இவ் வெழுத்தை முதலாக வைத்து மாறி உச்சரிக்கும் முறை இப் பாட்டில் கூறப்படுகிறது.

## 927. நின்ற எழுத்துக்கள் நேர்தரு பூதமும்

927. நின்ற எழுத்துக்கள் நேர்தரு பூதமும்
நின்ற எழுத்துக்கள் நேர்தரு வண்ணமும்
நின்ற எழுத்துக்கள் நேர்தர நின்றிடில்
நின்ற எழுத்துள்ளும் நின்றனன் தானே.

என்றும் நின்று நிலவும் திருவைந்தெழுத்தாலேயே ஐம்பூதங்களும் நிகழ்வன. ஐம்பூதங்களுக்குரிய ஐந்து நிறங்களும் அவ்வைந்தெழுத்தாலேயே விளங்குவன. இவ்வைந்தெழுத்துக்களும் முதன்மை பெற நின்ற இடத்து அவ்வெழுத்துக்களின் உள்ளீடாய் நின்று செலுத்துபவன் சிவபெருமான்.

நின்ற....தானே - அவ்வாறு நின்ற ஐந்தெழுத்துக்களே 5 பூதங்களும் 5 வண்ணங்களும் ஆகப் பொருந்தி நின்றான்.

## 928. நின்றது சக்கரம் நீளும் புவியெல்லாம்

928. நின்றது சக்கரம் நீளும் புவியெல்லாம்
மன்றது வாய்நின்ற மாயநன் னாடனைக்
கன்றது வாகக் கறந்தனன் நந்தியுங்
குன்றிடை நின்றிடுங் கொள்கைய னாமே.

அழிவில்லாத திருவம்பலச் சக்கரத்தினான் எல்லா வுலகமும் நிலைபெறுகின்றன. இத் திருவம்பலச் சக்கரத்து நிலைபேறாகவுள்ள சிவபெருமானை அச் சக்கரவழிபாட்டினால் நந்தியெம் பெருமான் ஆன்கன்றின் வாயிலாகப் பால்பெறுவது போல் பெற்றுக்கொண்டனன். இந்நிலை குன்றிடை நிற்பார் நிலைத்தகொள்கைபோல் திருவம்பலச் சக்கரத்தின் பெறுபேறு நிலைத்தபேறாகும். மாயநன்னாடன் - மாயா காரியமாகிய நல்ல நாட்டின் தலைவனும் நடத்துவோனும் ஆகின்றவன்.

நின்றது...னாமே - இத் திருவம்பலச் சக்கரத்தைப் பூசித்து நந்திதேவர் கயிலையில் காவற்றலைமை எய்தினார் என்பது.

## 929. கொண்டஇச் சக்கரத் துள்ளே குணம்பல

929. கொண்டஇச் சக்கரத் துள்ளே குணம்பல
கொண்டஇச் சக்கரத் துள்ளே குறியைந்து
கொண்டஇச் சக்கரங் கூத்தன் எழுத்தைந்துங்
கொண்டஇச் சக்கரத் துள்நின்ற கூத்தே.

திருவம்பலச் சக்கரத்தால் பெறப்படும் நன்மைகள் பல. அவற்றுள் சிறந்தன படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்தொழிற் பெயருமாகும். மேலும் கூத்தப் பெருமான் தன் திருவுருவினைக் கீழிருந்து மேல்நோக்கின் 'நமசிவய' எனவும், மேலிருந்து கீழ்நோக்கின் 'சிவயநம' எனவும் வழங்கும் செந்தமிழ்த் திருவைந்தெழுத்தின் சீருமாகும். குறி - பெயர். இவ்வுண்மை உண்மை விளக்கத்திற் காணப்படும் 'சேர்க்கும்' (34) 'தோற்றம்' (36) என்னும் (363) திருவெண்பாக்களான் உணர்க.

குறியைந்து - மூலாதாரத்தைத் தவிர்த்து ஆதாரச் சக்கரங்கள் ஐந்து. எழுத்தைந்து - அச் சக்கரங்களின் நடுவில் விளங்கும் எழுத்துக்கள் ஐந்து.

## 930. வெளியி லிரேகை யிரேகையி லத்தலை

930. வெளியி லிரேகை யிரேகையி லத்தலை
சுளியில் உகாரமாஞ் சுற்றிய வன்னி
நெளிதரு கால்கொம்பு நேர்விந்து நாதந்
தெளியும் பிரகாரஞ் சிவமந் திரமே.

திருவம்பலமாகிய பரவெளியில் சக்கரக் கீற்றுக்களில்லை. திருவம்பலச் சக்கரத்துள் கீற்றுக்கள் உண்டு. குற்றமற்ற உகரம் தீயின் அடையாளம். நெளிவு சேர்ந்தகோடு ஒளியாகிய விந்துவாகும். நெளிவில்லாத நேர்கோடு ஒலியாகிய நாதமாகும். இவற்றைத் தெளியும்போது 'சிவ' என்னும் மந்திரமாகும்.

இரேகை - திருவம்பலச் சக்கரத்தின் கீற்றுகள். சுளியில் - வட்டம்; வளைவு.

## 931. அகார வுகார சிகார நடுவாய்

931. அகார வுகார சிகார நடுவாய்
வகாரமோ டாறும் வளியுடன் கூடிச்
சிகார முடனே சிவன்சிந்தை செய்ய
ஒகார முதல்வன் உவந்துநின் றானே.

அகர உகரம் ஓங்காரத்தைக் குறிக்கும். சிகரவகரம் திருவைந்தெழுத்தைக் குறிக்கும். இவை ஓம் நமசிவய எனவாகும். இவற்றை ஆறெழுத்து மந்திரம் என்ப. சிவசிவ என்று இடையறாது உயிர்ப்புடன் எண்ணிக்கொண்டிருக்க ஓங்கார முதற்பொருளாகிய சிவபெருமான் தோன்றியருள்வன்.

அகரம்..ஆறும் - பிரணவத்தோடு கூடிய ஐந்தெழுத்து; சடாக்கரம். வளி...செய்ய - சிகரத்துடன் தொடங்கிக் காற்றைப் பிடிக்கும் கணக்கறிந்து சிவன் சிந்தனைசெய்ய.

## 932. அற்ற விடத்தே அகாரம தாவது

932. அற்ற விடத்தே அகாரம தாவது
உற்ற விடத்தே யுறுபொருள் கண்டிடச்
செற்றம் அறுத்த செழுஞ்சுடர் மெய்ப்பொருள்
குற்றம் அறுத்தபொன் போலுங் குளிகையே.

துயிலற்ற இடமாகிய புருவநடுவின்கண் வெளிப்பட்டுத் தோன்றுவது அகரமாகும். அந்த அகரம் நேர்ந்த இடத்து முழுமுதற் சிவத்தைக் கண்டிடச் செய்யும் ஆருயிர்களின் மாசகற்றிய விழுச்சுடர் மெய்ப் பொருளாகிய சிவன் செம்பின் குற்றமாகிய களிம்பகற்றிப் பசும் பொன்னாக்கும் குளிகையை ஒப்பன். போலும்: ஒப்பில்போலி.

அற்றவிடம் - புருவத் திடைவெளி.

## 933. அவ்வென்ற போதினில் உவ்வெழுத் தாலித்தால்

933. அவ்வென்ற போதினில் உவ்வெழுத் தாலித்தால்
உவ்வென்ற முத்தி யுருகிக் கலந்திடும்
மவ்வென்றென் னுள்ளே வழிப்பட்ட நந்தியை
எவ்வணஞ் சொல்லுகேன் எந்தை இயற்கையே.

அகரத்துடனே உகரத்தையும் ஒலித்தால் அடியார் நடுவுள்ளிருக்குங் குறிப்பினை உணர்த்துவதாகிய உவ்வென்ற வீடுபேறு
பிரிவின்றி எய்தும். மகர நிலையாகிய மனத்தின்கண் விளங்கும் நந்தியாகிய சிவம் என்னும் முன்னின்று வழிப்படுத்தும். எம் தந்தையாகிய சிவபெருமான் புரியும் அருளிப்பாட்டை எச்சொல்லால் எடுத்து இயம்புவேன். உவ்: நடு இடத்தைக் குறிக்கும் அடையாளம்.

பிரணவத்தின் உச்சரிப்பைக் குறிக்கின்றது இப் பாடல்.

## 934. நீரில் எழுத்திவ் வுலக றறிவது

934. நீரில் எழுத்திவ் வுலக றறிவது
வானில் எழுத்தொன்று கண்டறி வாரில்லை
யாரிவ் வெழுத்தை அறிவா ரவர்கள்
ஊனில் எழுத்தை உணர்கிலர் தாமே.

'பிறப்பதற்கே தொழிலாகி இறக்கும்' உலகவர்கள் நீர் மேல் எழுத்துப்போல் நிலையில்லாத உலகியற் சுட்டுப்பொருள்களையே உணர்வர். திருச்சிற்றம்பலமாகிய பரவெளியில் ஒலிக்கும் ஓங்கார நிலை எழுத்தை உள்ளபடி ஒலித்துணர்வாரில்லை. இவ்வோங்கார எழுத்தை உணர்கின்ற மெய்யடியார்கள் தலையெழுத்தென்று சொல்லப்படும் ஊழை உள்ளத்துணரார். (அவ்வூழ் உடலூழாய்க்கழியும்.)

நீரில் எழுத்து - நிலையற்றது. உலகார் அறிவது - உலகத்தில் பெரும்பாலோர் உச்சரிப்பது. வானில் எழுத்து - ஆகாய தத்துவத்தினிடத்து முதல் முதல் தோன்றிய பிரணவம். யாரிவ் வெழுத்தை யறிவார் - ஒருவரும் அறியாதவர். அவர்கள் - அப்படி அறியமாட்டாதார். ஊனில் எழுத்து - ஊன் அகத்துள்ள நெஞ்சத்தினிடம் பொறிக்கப்பட்ட எழுத்துக்கள்.

## 935. காலை நடுவுறக் காயத்தில் அக்கரம்

935. காலை நடுவுறக் காயத்தில் அக்கரம்
மாலை நடுவுற ஐம்பது மாவன
மேலை நடுவுற வேதம் விளம்பிய
மூல நடுவுற முத்திதந் தானே.

உயிர்ப்பு ஆறுநிலைக்களங்களுள் நடுவாகிய நெஞ்சத்தின் கண்நிற்ப, பெருவெளியில் தோன்றிய ஓங்காரம், ஐம்பத்தோரெழுத்துக் களாலாகிய சொல்மாலையின் நடுமணியாக விளங்கும். மேலும் மறைகளின் நடுவாக விளங்கும் திருவைந்தெழுத்தே சிவமூல மந்திரமாகும். அதனை இடையறாது நாட வீடுபேறாகும். நாட - சிந்திக்க.

காலை நடுவறக் காயத்தில் - உடம்பில் இருகாலின் இடுக்கின் நடுவுதொட்டு உள்ள மூலாதாரம் தொடங்கி ஆறு ஆதாரங்களில். அக்கரமாலை...ஆவன - ஐம்பத்தோரக்கரங்களும் மாலைபோன்று உள்ளன. மேலும்...மூலம் - அம் மாலையில் பதக்கங்கள் போன்று உள்ள ஆதாரத்தானங்களின் நடுவில் இருக்கும், வேதத்தில் சொல்லப்பட்ட ஐந்தெழுத்து.

## 936. நாவியின் கீழது நல்ல எழுத்தொன்று

936. நாவியின் கீழது நல்ல எழுத்தொன்று
பாவிக ளத்தின் பயனறி வாரில்லை
ஓவிய ராலும் அறியவொண் ணாதது
தேவியுந் தானுந் திகழ்ந்திருந் தானே.

கொப்பூழின்கீழ் மூலத்திடத்துத் திகழும் ஒன்று நல்ல எழுத்தாகிய ஓங்காரம். சிவசிவ என்கிலாத் தீவினையாளர் இதன் பயனை அறிகின்றிலர். படைப்போன் முதலாகிய தேவர்களாலும் அறிதற்கரியது. அம்மையோடு சிவபெருமான் ஆண்டுச் சிறந்திருந்தனன். நாவி - நாபி; கொப்பூழ். பாவிகள் - தீவினையாளர். ஓவியர் - படைப்போன் முதலிய தேவர்.

நாவி ....ஒன்று - பிரணவம்.

## 937. அவ்வொடு சவ்வென் றரனுற்ற மந்திரம்

937. அவ்வொடு சவ்வென் றரனுற்ற மந்திரம்
அவ்வொடு சவ்வென்ற தாரும் அறிகிலர்
அவ்வொடு சவ்வென்ற தாரும் அறிந்தபின்
அவ்வொடு சவ்வும் அனாதியு மாமே.

அகரமும் சகரமும் அரனுக்குரிய மந்திரமாகும். மகரத்துடன் கூடிய சகரம் - சம். இதனை யாரும் அறிகிலர். அகரத்துடன் கூடிய சகரமாகிய ச, என்னும் மறையினை எல்லாரும் அறிந்தபின், அகர சகரங்கள் - தொன்மையனவாகும். அனாதி - தொன்மை. இதனை அசபை என்பர். அசபை - அசபா: சபிக்கப்படாதது (அசம்).

அவ் ...மந்திரம் அசபா மந்திரம்.

## 938. மந்திரம் ஒன்றுள் மலரால் உதிப்பது

938. மந்திரம் ஒன்றுள் மலரால் உதிப்பது
உந்தியி னுள்ளே உதயம்பண் ணாநிற்குஞ்
சந்திசெய் யாநிற்பர் தாம தறிகிலர்
நந்தி தொழுதுபோ யார்த்தகன் றார்களே.

திருவைந்தெழுத்தே வழிபாட்டு முதன்மை மந்திரம். அதனை நெஞ்சத்தினிடத்து உயிர்ப்புடன் கணிக்க மலர் வழிபாடு - அருச்சனையாகும். கொப்பூழின் உள்ளே உயிர்ப்புடன் கணிக்க ஓம வேள்வியாகும். புறத்தே சந்தி செய்கின்றவர் இவ் வுண்மையினை உணரார். நந்தியாகிய சிவபெருமானைத் தொழுததாக எண்ணி ஆரவாரித்து நீங்குவர். உள்மலர் - நெஞ்சத்தாமரை; அனாகதம். கொப்பூழ் - சுவாதிட்டானம். அந்தி என்ற பாடத்திற்குப் பேர் கொண்ட பார்ப்பார்க்கு அந்தி வழிபாடே சிறந்ததென்ப.

உந்தி ....நிற்கும் - மனத்தை மணிபூரகத்தில் நாட்டி, கும்பகத்தில் இருந்து மந்திரங்களை விதிப்படி உச்சரித்தால் மந்திரங்கள் பலனைக் கொடுக்கும். சந்தி செய்யா நிற்பர் - இம்மாதிரி உச்சரிக்க அறிகிலாதார். ஆர்த்து - ஆர்ப்பாட்டம் செய்து.

## 939. சேவிக்கு மந்திரஞ் செல்லுந் திசைபெற

939. சேவிக்கு மந்திரஞ் செல்லுந் திசைபெற
ஆவிக்குள் மந்திரம் ஆதார மாவன
பூவுக்குள் மந்திரம் போக்கற நோக்கிடில்
ஆவிக்குள் மந்திரம் அங்குச மாமே.

தொழுகை மந்திரம் யாண்டும் கணிக்கப்படும். அம்மந்திரத்துக்கு உயிரினைப் போன்று நிற்பது ஆறு நிலைக்கள மந்திரமாகும். நெஞ்சத் தாமரைக்குள் நிலைபெறு மந்திரம் எது என்று குற்றமற ஆராயின் ஆருயிருக்கு உயிராகிய திருவைந்தெழுத்தாகும். அவை தொண்டர் அஞ்சுகளிறும் அடக்கும். அங்குசம் - தோட்டியாகும்.

பூவிக்குள் - ஆறு ஆதாரங்களாகிய பூவிற்குள். ஆவிக்கு - உயிருக்கு. அங்குசம் - ஐம்பொறிகளாகிய மதயானைகளை அடக்க அங்குசமாகும்.

## 940. அருவினில் அம்பரம் அங்கெழு நாதம்

940. அருவினில் அம்பரம் அங்கெழு நாதம்
பெருகு துடியிடை பேணிய விந்து
மருவி யகார சிகார நடுவாய்
உருவிட வூறு முறுமந் திரமே.

கண்ணுக்குப் புலனாகாத பரவெளியில் தோன்றுவது ஒலி. அவ்வொலி வெளித்தோன்றுங் கருவி துடியிடைபோன்று விரிந்தும் குவிந்தும் விரிந்தும் நிலவுவது ஒளியாகிய விந்து. இதனை உகாரம் என்ப. இவ் விந்துவை மருவிய நாதம் அகாரம் என்ப. இவ் விரண்டும் கலந்ததோற்றம் ஓங்காரம் என்ப. மந்திரங்களுட் தலையாயது நமசிவய என்ப. இதன்கண் சிகரம் நடுவாக இருப்பது காண்க.

அம்பரம் - ஆகாயம். விந்து - உகாரம். விந்து மருவிய அகாரம் - பிரணவம். சிகார நடுவாய் - நமசிவாய என்னும் தூல பஞ்சாக்கரம்.

# 941. ஆறெழுத் தோதும் அறிவார் அறிகிலர்

941. ஆறெழுத் தோதும் அறிவார் அறிகிலர்
ஆறெழுத் தொன்றாக ஓதி உணரார்கள்
வேறெழுத் தின்றி விளம்பவல் லார்கட்கு
ஓரெழுத் தாலே உயிர்பெற லாமே.

ஓம் நமசிவய என்பது ஆறெழுத்து மந்திரம். இம் மந்திரத்தினை நமசிவய எனவும், சிவயநம எனவும் ஓதுவர். அப்பொழுது இவ்விரண்டினையும் முறையே பருமை ஐந்தெழுத்து, நுண்மை ஐந்தெழுத்தென்பர். சிவயசிவ என்பது மீநுண்மை ஐந்தெழுத்து. சிவசிவ என்பது முதல்நிலை ஐந்தெழுத்து. முதல்நிலை: காரணம். ஓரெழுத்து - ஒப்பில்லாத சிவ என்னும் எழுத்து. இஃதிரண்டெழுத்தாயினும் உடலுயிர்போன்று ஓரெழுத்தேயாம்.

ஆறெழுத்து - பிரணவத்தோடுங் கூடிய தூல பஞ்சாக்கரம். ஆறெழுத்தொன்றாக - தூலத்தைச் சூக்குமந்திலும், சூக்குமத்தைக் காரணத்திலும், காரணத்தை மகா காரணத்திலும், மகா காரணத்தை முத்தி பஞ்சாக்கரத்திலும் ஒடுக்கி ஏகமாகும்படி. வேறு எழுத்து - வைகரி வடிவாய் விகாரப்பட்ட எழுத்துக்கள்.

## 942. ஓதும் எழுத்தோ டுயிர்க்கலை மூவைந்தும்

942. ஓதும் எழுத்தோ டுயிர்க்கலை மூவைந்தும்
ஆதி எழுத்தவை ஐம்பதோ டொன்றென்பர்
சோதி எழுத்தின் நிலையிரு மூன்றுள
நாத எழுத்திட்டு நாடிக்கொள்ளீரே.

மந்திரங்கட்கெல்லாம் முதலாக ஓதப்படும் ஓங்காரத்துடன் ஏனை உயிரெழுத்துப் பதினைந்துங்கூட மொத்தம் உயிரெழுத்துப் பதினாறு. மெய்யெழுத்து முப்பத்தைந்து. ஆகமொத்தம் எழுத்து ஐம்பத்தொன்று. சோதியாகிய ஒளி எழுத்து சிவம். அகத்தே மூல முதல் புருவநடு ஈறாகவுள்ள ஆறு நிலைக்களங்கள் உள்ளன. அவற்றின்கண் பரவெளி எழுத்தாகிய ஓம் என ஒலித்துக் கண்டுகொள்க.

ஓது ...மூவஞ்சு - உயிர் 16 (திருமூலர் காலத்தில் தமிழ் மொழியில் உயிர் 16 உண்டு என்பது இதனால் அறிகின்றோம்) ஆதி... என்பர் - மெய்யெழுத்துக்கள் 35-ம் சேர்ந்து (16+35) 51 எழுத்துக்கள் என்று புலவர் கூறுவர். (செந்தமிழ்க் காலத்துக்கு முந்திய தமிழ்மொழி நிலை இது.) சோதி எழுத்து, நாத எழுத்து - சி.

## 943. விந்துவி லுஞ்சுழி நாதம் எழுந்திடப்

943. விந்துவி லுஞ்சுழி நாதம் எழுந்திடப்
பந்தத் தலைவி பதினாறு கலையதாய்க்
கந்தர வாகரங் காலுடம் பாயினாள்
அந்தமும் இன்றியே ஐம்பத்தொன் றாயதே.

சுழியாகிய விந்துவினின்று எழுத்தோசை தோன்றும். அவ்வெழுத்து ஐம்பத்தொன்று என்ப. அவ்வெழுத்துக்களின் முதல்வி திருவருளாற்றலாகும். அவள் பதினாறு கலையாக விளங்குவள். இவ்வைம்பத்தோரெழுத்தும் அம்மையின் வடிவமாக அமைக்கப்படும்.

விந்து ...திட - 51 எழுத்துக்களும் விந்துவினின்றும் உற்பத்தி... எழுத்துக்கள் எல்லாம் சத்தி உருவமாகும்.

## 944. ஐம்ப தெழுத்தே அனைத்துவே தங்களும்

944. ஐம்ப தெழுத்தே அனைத்துவே தங்களும்
ஐம்ப தெழுத்தே அனைத்தாக மங்களும்
ஐம்ப தெழுத்தேயு மாவ தறிந்தபின்
ஐம்ப தெழுத்தும்போய் அஞ்செழுத் தாமே.

ஓங்காரத்துடன் கூடிய ஐம்பத்தோரெழுத்துக்களாலாகியதே பொதுவும் சிறப்புமாகக் கூறப்படும் தொன்மைத் தமிழ்மறையும்
முறையும் என்ப. மறையை வேதம் எனவும், முறையை ஆகமம் எனவும் கூறுப. இவ்வெழுத்துக்களாலாகிய பயனை உணர்ந்தபின் இவை யனைத்தும் ஒடுங்கி ஐந்தெழுத்தே நின்று நிலவி முதன்மையுறும் என்க.

ஐம்...தாமே - 51 எழுத்துக்களாலேயே எல்லா வேதங்களும் ஆகமங்களும். 51 எழுத்துக்களும் அஞ்செழுத்தில் அடங்கின.

## 945. அஞ்செழுத் தாலைந்து பூதம் படைத்தனன்

945. அஞ்செழுத் தாலைந்து பூதம் படைத்தனன்
அஞ்செழுத் தாற்பல யோனி படைத்தனன்
அஞ்செழுத் தாலிவ் வகலிடந் தாங்கினன்
அஞ்செழுத் தாலே அமர்ந்துநின் றானே.

திருவைந்தெழுத்தினுள் மகர அடையாளத்தால் உலகம் படைக்கப்பட்டது விளங்கும். அதுபோல் யகர அடையாளத்தால் உடலுடன் உயிரினை இணைத்தது விளங்கும். யோனி - உயிர். நகர அடையாளத்தால் விரிந்த வுலகத்தை இயைந்தியக்கிக் காக்கும் நடுநிலைமை விளங்கும். சிகரவகர அடையாளங்களால் எல்லாமாய் அமர்ந்தமை விளங்கும்.

அஞ்செ...றானே - அஞ்செழுத்துக்களே உலக உயிர்களாய் விரிந்தன.

## 946. வீழ்ந்தெழ லாம்விகிர் தன்திரு நாமத்தைச்

946. வீழ்ந்தெழ லாம்விகிர் தன்திரு நாமத்தைச்
சோர்ந்தொழி யாமல் தொடங்கும் ஒருவற்குச்
சார்ந்த வினைத்துயர் போகத் தலைவனும்
போந்திடும் என்னும் புரிசடை யோனே.

திருவருள் துணையால் திருவைந்தெழுத்தை முறையாக இடைவிடாது கணித்தால் உலகியல் நுகர்வுடன் அதன்கண் தொடக்கின்றி வாழ்தலுமாகும். பிறவிப் பெருந்துயர் நீங்கத் தம்முதல் குருவுமாய் வந்தருள்வன். அவனே புரிசடையோனவன். புரிசடையோன்: புரி + சடையோன் - திருவாதிரை நாளை விரும்புவோன். புரிதல் - விரும்புதல். சடை: திருவாதிரைநாள், நாள் - நட்சத்திரம். சடை: பின்னல். ஒன்றாய், வேறாய், உடனாய் விரும்பியுறையும் புணர்ப்பினோன் புரிசடையோன் எனப்படும். புணர்ப்பு: பின்னல்; அத்துவிதம்.

வீழ்....யோனே - அஞ்செழுத்தை விதிப்படி உச்சரிக்கும் ஒருவன் பந்தத்தினின்றும் விடுபடலாம். சிவனும் வெளிப்படுவான்.

## 947. உண்ணு மருந்தும் உலப்பிலி காலமும்

947. உண்ணு மருந்தும் உலப்பிலி காலமும்
பண்ணுறு கேள்வியும் பாடலு மாய்நிற்கும்
விண்ணின் றமரர் விரும்பி அடிதொழ
எண்ணின் றெழுத்தஞ்சு மாகிநின் றானே.

முழுமுதற் சிவன் அவன் திருவருளால் அடியவர் உண்ணும் முடிவிலா அமிழ்து. எந்நாளும் பண்ணோடு பொருந்திய திருமுறைப்பாடலும் ஆவன். மெய்கண்ட நூற்கேள்வியுமாய் விளங்குவன். தூயவிண்ணாகிய சிவவுலகத்தில் வாழும் அழிவில் காதலர்கட்குத் திருவடிதொழத் திருவைந்தெழுத்துமாகி நின்றனன்.

மருந்து - அமிழ்தம்.

## 948. ஐந்தின் பெருமையே அகலிட மாவது

948. ஐந்தின் பெருமையே அகலிட மாவது
ஐந்தின் பெருமையே ஆலய மாவது
ஐந்தின் பெருமையே யறவோன் வழக்கமும்
ஐந்தின் வகைசெயப் பாலனு மாமே.

திருவைந்தெழுத்தின் அளவிலாப் பெருமையினாலேயே எல்லாவுலகமும் ஒழுங்காக நடைபெற்று வருகின்றன. திருவைந்தெழுத்தின் சிறந்த திருக்குறிப்பே சிவபெருமான் திருக்கோவிலாகும். அது, சிவக்கொழுந்தாகிய சிவலிங்கம் காணப்படும் கருவரை நிலை சிகரம். அதன் அடுத்த மண்டபத்தில் காணப்படும் மனோன்மணி நிலை வகரம்; ஆனேற்று நிலை யகரம். அம்பலவாணர் நிலை நகரம். பலிபீட நிலை மகரம். (2372) அறவோன் ஆகிய சிவபெருமான் அருளும் வழக்கமும் திருவைந்தெழுத்தேயாம். திருவைந்தெழுத்தை முறையாகக் கணிப்பாரைக் காக்கும் காவலன் சிவபெருமானாவன். (பாலன் - காவலன்)

ஐந்தின் - அஞ்செழுத்தின்.

## 949. வேரெழுத் தாய்விண்ணாய் அப்புற மாய்நிற்கும்

949. வேரெழுத் தாய்விண்ணாய் அப்புற மாய்நிற்கும்
நீரெழுத் தாய்நிலந் தாங்கியும் அங்குளன்
சீரெழுத் தாய்அங்கி யாயுயி ராமெழுத்து
ஓரெழுத் தீசனும் ஒண்சுட ராமே.

ஓசையின் மூலாமகிய ஓங்காரமய், ஐம்பெரும் பூதங்களின் எழுத்தாய், அவற்றிற்கு அப்பாலுமாய் விண்ணெழுத்து வ. நீரெழுத்து ம. நிலந்தாங்கும் எழுத்து ந. தீ யெழுத்து சி. காற்றாகிய உயிரெழுத்து ய. ஒப்பில்லாத ஓர் எழுத்து சிவன். இவ் வெழுத்துக்களாக நின்றியக்கும் சிவபெருமான் பேரொளிப் பிழம்பினன் ஆவன்.

வேர் எழுத்து - மூல எழுத்தாகிய பிரணவம் (ஆணிவேர்) ஆகிய எழுத்து எழுத்தாணி என்றுங் கூறுப. விண் எழுத்து - வ. நீர் எழுத்து - ம. நிலந்தாங்கி எழுத்து - ந. அங்கி எழுத்து - சி. உயிராம் எழுத்து - ய. ஓர் எழுத்து - சி.

## 950. நாலாம் எழுத்தோசை ஞாலம் உருவது

950. நாலாம் எழுத்தோசை ஞாலம் உருவது
நாலாம் எழுத்தினுள் ஞாலம் அடங்கிற்று
நாலாம் எழுத்தே நவிலவல் லார்கட்கு
நாலாம் எழுத்தது நன்னெறி தானே.

சிவயநம என்னும் திருவைந்தெழுத்தின் நான்காவது எழுத்து நகரம். இந் நகரமே உலகை உருவாகக் கொண்டு இயங்குவது. அவ் வெழுத்தினுள் உலகம் அடங்கி அதன் ஆணைவழிநடக்கும். நாலாமெழுத்தை முதலாகக் கொண்டு நமசிவய என ஓதவல்லார்கள் நன்னெறிச் செல்லும் செல்வர்களாவர்.

நாலாம் எழுத்து - வ.

## 951. பட்ட பரிசே பரமஞ் செழுத்ததின்

951. பட்ட பரிசே பரமஞ் செழுத்ததின்
இட்ட மறிந்திட் டிரவு பகல்வர
நட்டம தாடு நடுவே நிலயங்கொண்டு
அட்டதே சப்பொரு ளாகிநின் றாளே.

சிறப்பும் சீரும் அனைத்திற்கும் மேலாய அஞ்செழுத்தேயாம். அன்பு சேர் ஆருயிர்கட்கு அஞ்செழுத்தின்கண் விழைவு உண்டாக வேண்டி மறப்பும் நினைப்பும் உண்டாக, அம்பலவாணர் திருக்கூத்தியற்றுவர். திருவருள் நடுவே. ஆருயிர் நடுவே, அனைத்துலகின் நடுவே இடங்கொண்டு எண் பெரும் பொருளாய் நின்றருள்பவன் சிவன். எண் பொருள்: நிலம், நீர், தீ, காற்று, வான், திங்கள், ஞாயிறு, ஆருயிர் என்பன.

இட்டம் - தியான உறைப்பு.

## 952. அகாரம் உயிரே உகாரம் பரமே

952. அகாரம் உயிரே உகாரம் பரமே
மகார மலமாய் வருமுப் பதத்திற்
சிகாரஞ் சிவமாய் வகாரம் வடிவமாய்
யகாரம் உயிரென் றறையலு மாமே.

உயிரெனக் குறிப்பதாய உடல்மெய் இருபத்து நான்கும் அகாரமாகும். பரமெனக் குறிப்பதாய உணர்த்து (சிவ) மெய் ஐந்தும் உகரமாகும். மலமெனக் குறிப்பதாய உணர்வு மெய் ஏழும் மகாரமாகும். இம் முப்பத்தாறு மெய்களுள் சிகரம் சிவமாகிய உயிர்க்குயிராய், வகரம் சிவபெருமானின் திருமேனியாய், யகரம் திருவருளின் கைப்படும் உயிராய்த் திகழுமென்க.

முப்பத்தாறு - 36 தத்துவங்கள்.

## 953. நகார மகார சிகார நடுவாய்

953. நகார மகார சிகார நடுவாய்
வகாரம் இரண்டும் வளியுடன் கூடி
ஒகார முதற்கொண் டொருகால் உரைக்க
மகார முதல்வன் மனத்தகத் தானே.

நமசிவய என்பதன்கண் சிகரம் நடுவாகும். இரண்டு வளி என்பது இடப்பால் வலப்பால் மூச்சு. இஃது உயிர் அடையாள
மாகிய யகரத்தைக் குறிக்கும். இவ் வைந்துடன் ஓமொழியை முதற் கொண்டு உள்ளன்புடன் ஒருமுறை ஓதினால், மகாரமாகிய நாதமெய்க்குத் தலைவனாகிய சிவபெருமான் ஓதுவார் நெஞ்சை இடமாகக் கொண்டு எழுந்தருள்வன்.

வளியுடன் - சீவான்மாவுடன்.

## 954. அஞ்சுள வானை அடவியுள் வாழ்வன

954. அஞ்சுள வானை அடவியுள் வாழ்வன
அஞ்சுக்கும் அஞ்செழுத் தங்குச மாவன
அஞ்சையுங் கூடத் தடுக்கவல் லார்கட்கே
அஞ்சாதி யாதி அகம்புக லாமே.

காடாகிய தொண்ணூற்றாறு மெய்க்கூட்டத்தாலாகிய இவ் வுடம்பினுள் ஐம்புல யானைகள் தம் மனம் போல் திரிகின்றன. அவற்றைத் தடுத்து நேர்வழியிற் செலுத்த வேண்டுமானால் தோட்டியாகிய கருவி வேண்டும். அக் கருவியே சிவயநம என்னும் திருவைந்தெழுத்தாகும். அவ்வைந்தெழுத்தை இடையறாது நாடுவார்க்குத் திருவைந்தெழுத்திற்கு முதல்வனாகிய சிவபெருமானின் ஆதி என்று ஓதப்பெறும் திருவருளாற்றலின் திருவடி புகுதலாகும். இடையறாது நாடுதல் - விடாது சிந்தித்தல்.

அஞ்சுள ஆனை - ஐம்புலன்கள். அடவி - தத்துவக் கூட்டத்தாலாய தேகம். அஞ்சையும் கூடத்தடுக்க வல்லார்கட்கு - காற்றைப் பிடிக்கும் கணக்கு அறிவார்கட்கு. அஞ்சாதி யாதி அகம் - அஞ்செழுத்ததிபனாகிய சிவன் இருப்பிடம்.

# 955. ஐந்து கலையில் அகராதி தன்னிலே

955. ஐந்து கலையில் அகராதி தன்னிலே
வந்த நகராதி மாற்றி மகராதி
நந்தியை மூலத்தே நாடிப் பரையொடுஞ்
சந்திசெய் வார்க்குச் சடங்கில்லை தானே.

நீக்கல், நிலைப்பித்தல், நுகர்வித்தல், அமைதியாக்கல், அப்பாலாக்கல் ஆகிய ஐந்து திருவருள் ஆற்றல்களால் செலுத்தப்படுவன அகர முதலிய எழுத்துக்கள், நமசிவய என்பதைச் சிவயநம எனக் கணித்தல் வேண்டும். மகர முதல்வனாகிய நந்தியை மூலத்திடத்து நாடித் திருவருளோடும் சேர்த்து வழிபடுவார்க்குப் புறச் சடங்குகள் இன்றியமையாதனவன்று. மேற்கூறிய நீக்கல் முதலிய ஐந்து திருவருள் ஆற்றல்களையும் நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தி அதீதை என்னும் ஐந்து கலைகள் எனவும் கூறுப.

ஐந்து கலை - நிவர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியாதீதம். அகராதி - கலைகளால் காரியப்பட்ட அகர முதலிய வன்னங்களில். நகராதி மாற்றி - சிகர முதலாக உச்சரித்து. சடங்கு - கன்மம்.

## 956. மருவுஞ் சிவாயமே மன்னும் உயிரும்

956. மருவுஞ் சிவாயமே மன்னும் உயிரும்
அருமந்த யோகமும் ஞானமு மாகுந்
தெருள்வந்த சீவனார் சென்றிவற் றாலே
அருள்தங்கி யச்சிவ மாவது வீடே.

பொருந்திய சிவய என்னும் மூன்றெழுத்துக்களும் முறையே அறிவும் செறிவும் ஆவியுமாகும். அறிவு - ஞானம். செறிவு - யோகம். ஆவி - உயிர். யோகம் என்பது உயிர் திருவருளுடன் கூடுதல். அஃதாவது முழுமுதற் சிவத்தை அகத்தே திருவுருவிற் கண்டு வழிபடுதல். இந்நிலை அருமருந்தன்ன நிலையாகும். திருவடியுணர்வு கைவரப் பெற்ற உயிர் இம்முறை யுணர்ந்து வழிபடத் திருவருளுடன் உயிர் கூடிய நிலையில் அவ்வுயிர் சிவம் என்று அழைக்கப்படும். அதுவே வீடாகும் (பின் பேறு என்பது சிவத்துடன் கூடுதலாகும்.)

அருள்தங்கி ய சிவமாவது - திருவருட் சத்தி பதிந்து ய ஆகிய ஆன்மா சிவமாகி அநுபவிக்கக்கூடியது முத்தி இன்பம்.

## 957. அஞ்சுக அஞ்செழுத் துண்மை அறிந்தபின்

957. அஞ்சுக அஞ்செழுத் துண்மை அறிந்தபின்
நெஞ்சகத் துள்ளே நிறையும் பராபரம்
வஞ்சக மில்லை மனைக்கும் அழிவில்லை
தஞ்ச மிதுவென்று சாற்றுகின் றேனே.

ஐந்து மலங்களும் நீங்குதற்குத் திருவைந்தெழுத்தின் உண்மையறிந்து ஓதி ஒழுகுதல் வேண்டும். அப்பொழுது சிவபெருமான் நெஞ்சத்திடத்து நிறைந்து வெளிப்படுவன் அந் நெஞ்சத்தில் பிறவிக்கு வித்தாகிய தீய நினைவுகள் தோன்றா. இவ்வுடம்பும் விரும்பும் நாள் வரையும் அழியாதிருக்கும். இந் நிலையே நமக்கு நிலைத்த புகலிடமாகச் சொல்லப் பெறும். உக - நீங்க. அம் + சுகம் என்பது அஞ்சுகம் என்றாகும்; அப்பொழுது மிகவும் இன்பம் தரும் என்று கொள்ளுதலும் ஒன்று.

அஞ்சு உக - அஞ்சு மலங்கள் நசிக்க.

## 958. சிவாயவொ டவ்வே தெளிந்துளத் தோதச்

958. சிவாயவொ டவ்வே தெளிந்துளத் தோதச்
சிவாயவொ டவ்வே சிவனுரு வாகுஞ்
சிவாயவொ டவ்வுந் தெளியவல் லார்கள்
சிவாயவொ டவ்வே தெளிந்திருந் தாரே

சிவய என்பதனோடு முதலாய சிவ என்னும் அவ்விரண்டெழுத்தையும் கூட்டிச் சிவயசிவ எனத் தெளிந்து உள்ளன்புடன் ஓதுதல் வேண்டும். சிவயசிவ என்பதே சிவபெருமானின் மந்திர வுருவாகும். இவ் வுண்மையினைத் தெளியவல்லார்கள் சிவசிவ என்று சிறந்திருப்பார்கள்.

## 959. சிகார வகார யகார முடனே

959. சிகார வகார யகார முடனே
நகார மகார நடுவுற நாடி
ஓகார முடனே ஒருகா லுரைக்க
மகார முதல்வன் மதித்துநின் றானே.

சிவயநம என்னும் திருவைந்தெழுத்தையும் ஓமொழியுடன் ஓதுதலும் உண்டு. அங்ஙனம் ஓதுவாரையும் உலகமே உருவமாகக் கொண்டு நடத்தும் சிவபெருமான் திருவுளங்கொண்டு நிற்பன். 953-ஆம் திருப்பாட்டில் ஓம் நமசிவய என உலகியலும், இத் திருப்பாட்டில் ஓம்சிவயநம என வீட்டியலும் ஓதப் பெறுகின்றன. உலகியலை வேதநெறி யெனவும், வீட்டியலை ஆகம நெறியெனவும் கூறுவர்.

953 - ஆம் மந்திரத்தில் நகார முதலாக உச்சரிப்பதையும், இதில் சிகார முதலாக உச்சரிப்பதையும் கூறியுள்ளார்.

## 960. நம்முதல் ஓரைந்தின் நாடுங் கருமங்கள்

960. நம்முதல் ஓரைந்தின் நாடுங் கருமங்கள்
அம்முதல் ஐந்தில் அடங்கிய வல்வினை
சிம்முத லுள்ளே தெளியவல் லார்கட்குத்
தம்முத லாகுஞ் சதாசிவந் தானே.

நமசிவய என்னும் திருவெழுத்து ஐந்தினால் படைத்தல் காத்தல் துடைத்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழில்களும் நிகழ்வனவாம். சிவபெருமானின் சிறந்தவிரி நிலைகள் பிள்ளையார், சிவமுருகன், ஆலமர் செல்வன், அம்மை, அறிவாற்றலாம் அழற்பிழம்பு ஆகிய ஐந்து திருவுருவங்களாம். திருத் தொழிலைந்தும் சிவன்தானே செய்தும் உயிர்களைக் கொண்டு செய்வித்தும் வருதலின் அது வல்வினை என்று சொல்லப்படும் பெருஞ் செயலாகும். சிவயநம எனத் தெளிய வல்லார்க்குச் சதாசிவன் என்று சொல்லப்படும் அறிவாற்றலினை சிவன் தம் முதலாக வெளிப்பட்டருள்வன்.

நம்...கருமங்கள் - உலகத்தில் காரியங்கள் கைகூட ந முதலாக ஓதவேண்டும். சிம்...றானே - சி முதலாக ஓதினால் முத்தியின்பம் கிட்டும்.

## 961. நவமுஞ் சிவமும் உயிர்பர மாகுந்

961. நவமுஞ் சிவமும் உயிர்பர மாகுந்
தவமொன் றிலாதன தத்துவ மாகுஞ்
சிவமொன்றி யாய்பவ ராதர வால்அச்
சிவமென்ப தானாம் எனுந்தெளி வுற்றதே.

நகர முதலாய நமய என்ற மூன்றும் நவமாகும், சிகர முதலாய சிவ என்ற இரண்டும் சிவமாகும். இப் பிரிவு இரண்டும் முறையே உயிரும் இறையுமாகும். இவ்வைந்தெழுத்துக்கள் பயனைத் தந்து கழியும் தவத்துடன் ஒப்பாவன வல்ல. நிலைபெற்ற திருவடிப் பேற்றைத் தரும் மெய்யுணர்வை நல்கும் மெய்மையன. சிவத்துடன் பொருந்தித் திருவைந்தெழுத்தின் உண்மையால் பேரன்பு பூண்டவர் சிவனே தானாகத் திகழ்வர்; (பளிக்கு மணியகத்துள்ள நூல் பளிக்கு மணியாகவே திகழும்)

## 962. கூடிய எட்டும் இரண்டுங் குவிந்தறி

962. கூடிய எட்டும் இரண்டுங் குவிந்தறி
நாடிய நந்தியை ஞானத்துள் ளேவைத்து
ஆடிய ஐவரும் அங்குற வாவர்கள்
தேடி அதனைத் தெளிந்தறி யீரே.

எட்டும் இரண்டும் அகர உகரம். இவை உயிரும் இறையுமென்று கூறப்படும். எட்டும் இரண்டும் கூடுங்கால் பத்தாகும். பத்தென்பது யகரம். அஃதுயிர். உயிர் சிவத்துடன் ஒன்றி ஒருமனப்பட்டு நாடப்படும் நந்தியை நாடித் திருவடியுணர்வினுள் வைத்தால் வாடுதலைச் செய்விக்கும் ஐம்புலனும் சிவத்தைத் தேடுதலுக்குத் துணை செய்யும். இங்ஙனம் தேடு நிலையைத் தெளிந்துணர்க.

எட்டும் இரண்டும் - அகரமும் உகரமும்.

## 963. எட்டும் இரண்டும் இனிதறி கின்றிலர்

963. எட்டும் இரண்டும் இனிதறி கின்றிலர்
எட்டும் இரண்டும் அறியாத ஏழையர்
எட்டும் இரண்டும் இருமூன்று நான்கெனப்
பட்டது சித்தாந்த சன்மார்க்க பாதமே.

எட்டு மிரண்டும் பத்து. இதன் அடையாளம் ய. யகரம் உயிர். உயிரின் அடையாளக்குறி. இவற்றை யாவரும் இனிதறியமாட்டார். இதை யறியவல்ல அறிவிலார், இரு மூன்று நான்கு கூட்டும் கணக்குப்போல் பத்தென்பர். சிவபெருமான் திருவடியே பத்தென்பதாகும். செந்நெறியில் கூறப்படும் பருமை நுண்மையாகிய திருவைந்தெழுத்துப் பத்தாகும். சிவக்குறி - சிவக்கொழுந்து; சிவலிங்கம்.

எட்டு....பட்டது - அகரம் உகரம் என்று அறியாதவர் எட்டுமிரண்டும் பத்து (இருமூன்று நான்கு) எனக் கூறுவர்.

## 964. எட்டு வரையின்மே லெட்டு வரைகீறி

964. எட்டு வரையின்மே லெட்டு வரைகீறி
இட்ட நடுவுள் இறைவன் எழுத்தொன்றில்
வட்டத்தி லேயறை நாற்பத்தெட் டும்மிட்டுச்
சிட்டஞ் செழுத்துஞ் செபிசீக் கிரமே.

குறுக்கும் நெடுக்குமாக எட்டு வரைகள் கீறப்பட்டால் அதன்கண் அறைகள் நாற்பத்தொன்பது அமையும். இதன்கண் நடுவரையில் சிகரம் பொறிக்கப்படுதல் வேண்டும். மேலும் கீழும் பக்கமும் ஒவ்வோர் அறைகள் தள்ளப்பட ஐவைந்தறைகளாகும். இவற்றின்கண் திருவைந்தெழுத்தை அமைத்து நனிமிக விரைந்து என்னுக.

எட்டுவரை மேலும் கீழும் வரைந்தால் 49 அறைகள் உண்டு. இறைவன் எழுத்து - சி.

## 965. தானவர் சட்டர் சதிரர் இருவர்கள்

965. தானவர் சட்டர் சதிரர் இருவர்கள்
ஆனஇம் மூவரோ டாற்றவ ராதிகள்
ஏனைப் பதினைந்தும் விந்துவும் நாதமுஞ்
சேனையுஞ் செய்சிவ சக்கரந் தானே.

ஊர்காவலராம் ஐயனாரும், நகர் காவலராம் வைரவரும், திருக்கோவிற் காவலராம் பிள்ளையார் முருகரும், திருவாயிற் காவலிருவரும், விந்து நாதம் முதலாகக் கூறப்படுந் தூமாயை ஐவரும், சிவகணத் தலைவர்களும் சிவசக்கரத்துள் நாட்டப்படுபவராவர். தானவர் - ஐயனார்; சாத்தனார்.

தானவர் - ஐயனார். சட்டர் - வயிரவர். சதிரர் - விநாயகர்; முருகர். ஆற்றவர் - வாயில் காப்போர். சேனை - சிவகணங்கள்.

## 966. பட்டன மாதவ மாறும் பராபரம்

966. பட்டன மாதவ மாறும் பராபரம்
விட்டனர் தம்மை விகிர்தா நமஎன்பர்
எட்டனை யாயினும் ஈசன் திறத்திறம்
ஒட்டுவன் பேசுவன் ஒன்றறி யேனே.

சிவசக்கரத்தினுள்ளே சீலம் நோன்பு செறிவு அறிவு என்னும் நானெறி நற்றவம் ஆற்றுவிக்கும் சிவபெருமான் திருவடிக்குத் தம்மை ஒப்புவித்தவர்கள் முழுமுதலே நமசிவய என வழுத்துவர். எள்ளளவு காலமும் சிவன் திறமே பேசுவர். அவன் திருவடியினையே உணர்வர். இவையன்றி வேறொன்றும் அறியார்.

பட்டனம் - சிவசக்கரம்.

## 967. வித்தாஞ் சகமய மாக வரைகீறி

967. வித்தாஞ் சகமய மாக வரைகீறி
நத்தார் கலைகள் பதினாறு நாட்டிப்பின்
உத்தாரம் பன்னிரண் டாதி கலைதொகும்
பத்தாம் பிரம சடங்குபார்த் தோதிடே.

விந்துவின் காரியமாகிய உலகத்துள் மண்ணின் வடிவு போன்று நாற்கோண வரைகீறி விருப்பமுள்ள திங்கள் மண்டிலத்தின் கலை பதினாறும் நாட்டுக. அதன்பின் ஞாயிற்று மண்டில வேறுபாடாகிய பன்னிரண்டும் அமைக்க. பத்தாம் கலையாகத் தொகும் தீ மண்டிலமும் அமைக்க வித்து: விந்து நத்தார்: நத்து + ஆர் = விருப்பம் பொருந்திய.

வித்து - விந்து. நத்தார் - விருப்பமுள்ள. கலைபதினாறு - சந்திரமண்டலம். பன்னிரண்டாதி - சூரியமண்டலம். கலைதொகும் பத்தாம் - அக்கினிமண்டலம்.

## 968. கண்டெழுந் தேன்கம லம்மல ருள்ளிடை

968. கண்டெழுந் தேன்கம லம்மல ருள்ளிடை
கொண்டொழிந் தேன்உடன் கூடிய காலத்துப்
பண்பழி யாத பதிவழி யேசென்று
நண்பழி யாமே நமவென லாமே.

நெஞ்சத் தாமரையினிடத்துச் சிவபெருமானைக் கண்டெழுந்தேன். அகத்துள் ஒற்றித்து ஒண்மை கொண்டுள்ளேன். சிவ சக்கரத்தின் பண்பகலாது அம் முறையைக் கைக்கொண்டு அடிமையாம் உறவெய்தி 'நமசிவய' வாழ்க என வாழ்த்துவோமாக.

கமலமலருள் - உள்ளக்கமலத்திடை. பண்பழியாத பதிவழி - குணம் கெடாத சிவசக்கரத்தினால். நம எனலாம் - "நமசிவாய வாழ்க" எனலாம்.

## 969. புண்ணிய வானவர் பூமழை தூவிநின்

969. புண்ணிய வானவர் பூமழை தூவிநின்
றெண்ணுவர் அண்ணல் இணையடி மந்திரம்
நண்ணுவர் நண்ணி நமஎன்று நாமத்தைக்
கண்ணென உன்னிக் கலந்துநின் றாரே.

சிவ உலகத்தில் வாழும் சிவ புண்ணியப் பேறு பெற்ற வானவர்கள் அகமலர்ந்த அன்பின் அடையாளமாக முகமலர்ந்து மணங்கமழும் முழுநெறி மலர்கள் தூவி நின்று தொழுவர். சிவபெருமான் திருவடியிணைகளைச் சிவசிவ என இடையறாது வழுத்திச் சேர்வர். நமசிவய என்னும் திருவெழுத்தைக் கண்போன்று கருதிக் கணிப்பர். கணித்துக் கலந்து நின்று களிப்பர். கணித்தல் - செபித்தல்.

## 970. ஆறெழுத் தாவ தாறு சமயங்கள்

970. ஆறெழுத் தாவ தாறு சமயங்கள்
ஆறுக்கு நாலே இருபத்து நாலென்பர்
சாவித் திரியில் தலையெழுத் தோன்றுள
பேதிக்க வல்லார் பிறவியற் றார்களே.

ஆறு எழுத்துக்களாலாயது ஆறு சமயங்கள் என்பர். ஒவ்வோர் எழுத்தையும் நான்கு பாகுபாடு செய்ய ஆறுக்கும் இருபத்து நான்கெழுத்தாகும். இவ் விருபத்து நான்கு எழுத்தும் காயத்திரி என்ப. காயத்திரியின் முன் சேர்த்து மொழியும் எழுத்து ஓங்காரம். அவ்வோங்காரத் தறிவதாகிய உண்மைகாண வல்லார் பிறவாப் பெரு வாழ்வு எய்துவர். சாவித்திரி: காயத்திரி.

சாவித்திரி - காயத்திரி 24 எழுத்துக்கள் கொண்டது. தலை எழுத்து - பிரணவம். பேதிக்க - பிரித்தறிய.

## 971. எட்டினில் எட்டறை யிட்டோ ரறையிலே

971. எட்டினில் எட்டறை யிட்டோ ரறையிலே
கட்டிய ஒன்றெட்டாய்க் காண நிறையிட்டுச்
சுட்டி இவற்றைப் பிரணவஞ் சூழ்ந்திட்டு
மட்டும் உயிர்கட் குமாபதி யானுண்டே.

963 - இல் கூறியபடி அறையமைத்து, ஓர் அறையின்கண் எட்டு வீடமைத்து, இவ் வீடுகளைச் சூழ ஓமொழியமைத்து வழிபடின் உயிர்கள் எய்தும் முடிந்த எல்லையாகிய பெருமுதல் அங்கு வெளிப்படும். மாபதியான் - பெருமுதல். பெரும்பதியாகிய சிவவுலகத்தான் என்பதும் ஒன்று. மாபதியான்: உயிர்க்குயிராயுள்ளான் என்பதும் ஒன்று.

மட்டும் - யந்திர பூசைசெய்து தியானம் செய்பவர்கட்கு மாபதியான் - சிவன்.

## 972. நம்முதல் அவ்வொடு நாவின ராகியே

972. நம்முதல் அவ்வொடு நாவின ராகியே
அம்முத லாகிய எட்டிடை யுற்றிட்டு
உம்முத லாகவே உணர்பவர் உச்சிமேல்
உம்முத லாயவன் உற்றுநின் றானே.

நகர முதலாக உயிர் அடையாளமாகிய அகாரம் (953) ஈறாக இடையறாது ஓதும் நாவினராகி, பின் கூறப்பட்ட எட்டறைகளுள் உகரத்தை முதலாகக்கொண்டு உணர்பவரின் தலைமேல் அவ் வுகரமாகிய (1721) திருவருளாற்றக்குரிய முதல்வனாகிய சிவன் திருவடி சூட்டுவன். இத் திருப்பாட்டில் நமசிவய என எழுதவும் ஓதவும் கூறப்பட்டுள்ளன. அகரம் உயிரடையாளம் என்றால் எழுதும்போது யகரம் எழுதுதல் வேண்டும்.

நம்முதல் - நகர முதலாகக்கொண்டு. எட்டிடை - எட்டு அறைகளில். உம் முதலாயவன் - சத்தி முதல்வனாகிய சிவன். ("பாரும் உகாரம் பரந்திட்ட நாயகி" என்பது காண்க.)

## 973. நின்ற அரசம் பலகைமேல் நேராக

973. நின்ற அரசம் பலகைமேல் நேராக
ஒன்றிட மவ்விட்டு ஓலையிற் சாதகந்
துன்று மெழுகையுள் பூசிச் சுடரிடைத்
தன்ற வெதுப்பிடத் தம்பனங் காணுமே.

மெய்யுணர்வு விளங்குவதற்கு நிலைக்களமாக நிற்கும் அரசமரத்தின் பலகையில் திருவைந்தெழுத்தை மகர முதலாக வரையமைத்து எழுதுதல் வேண்டும். அம் மந்திரத்திருவுருவினுக்கு பூவும் புனலும் புகையும் ஒளியும் பாவும் பிறவும் கொண்டு வழிபாடு செய்க.

ஓலையின்கண்ணும் அத்திருவைந்தெழுத்தினை வரைந்து, அதன்மேல் மெழுகுபூசி அதைச் சிறிது வெப்பமுறக் காட்டி அப் பலகையின் மேல் வைத்தல் நிறுத்துதல் என்ப. நிறுத்துதலைத் தம்பனம் என்ப. 926-இல் மாறி எழுதும் முறை காண்க.

அரசம்பலகை - அரசமரத்துப் பலகையில் யந்திரத்தைச் செதுக்கி. மவ்விட்டு - மகரமுதலாக அஞ்செழுத்தை மாறி. சாதகம் - உருவேற்றுதல்.

## 974. கரண விரளிப் பலகை யமன்றிசை

974. கரண விரளிப் பலகை யமன்றிசை
மரணமிட் டெட்டின் மகார வெழுத்திட்டு
வரணமி லைங்காயம் பூசி யடுப்பிடை
முரணிற் புதைத்திட மோகன மாகுமே.

பயன் கைகூடச் செய்தற்குத் துணையாங் கருவியினைக் கரணம் என்ப. கரணம் அமைத்து என்பது இரளியாகிய கொன்றை மரப்பலகை செய்தலாகும். யமன் திசையாகிய தென்திசை முகமாக அப் பலகையினை அமைத்துத் தீமையாகிய பகையை ஒழிப்பதன் பொருட்டு எட்டறையில் மகர முதலாக மாறி மாறி வரைந்து, வரணமாகிய மறைப்பில்லாத ஐங்காயம் பூசி அடுப்பினகத்துத் தலைகீழாகப் புதைத்திடல் மோகனமாகிய மயக்கமுறை என்ப.

கரணம் - சாதனத்துக்கு இரளி - கொன்றை. யமன் திசை - தெற்கு. மரணமிட்டு - மாரக அக்கரம் இட்டு. எட்டின் மகார மிட்டு - எட்டறைகளிலும் மகரத்தை மாறி இட்டு. வரணம் - மறைப்பு. ஐங்காயம்: சுக்கு - மிளகு - கடுகு - உள்ளி - பெருங்காயம். முரணின் - மாறாக.

## 975. ஆங்கு வடமேற்கில் ஐயனார் கோட்டத்திற்

975. ஆங்கு வடமேற்கில் ஐயனார் கோட்டத்திற்
பாங்கு படவே பலாசப் பலகையிற்
காங்கரு மேட்டிற் கடுப்பூசி விந்துவிட்டு
ஓங்காரம் வைத்திடும் உச்சா டனத்துக்கே.

வடமேற்குப் புலமாகிய வாயு மூலையில் அரி அரர் மகனாகிய ஐயனார் கோவிலில் அழகுறப் புரசுப் பலகையில் வெப்பமுள்ள கரிய தகட்டில் நஞ்சு பூசி விந்துவாகிய வட்டம் அமைத்து அதன்மேல் ஓங்காரம் அமைத்துப் பூசித்தலை உச்சாடனம் ஆகிய ஏவுதல் என்ப.

கோட்டம் - கோவில். காங்கு அருமேட்டில் - வெப்பமுள்ள கரிய தகட்டில். கங்கு - கந்துள்; நெருப்போடு கூடிய கரிக்கட்டி. கடு - கடுகு - கடு + கு - சிறுத்தவிடம்.

## 976. உச்சியம் போதில் ஒளிவன்னி மூலையிற்

976. உச்சியம் போதில் ஒளிவன்னி மூலையிற்
பச்சோலை யிற்பஞ்ச காயத்தைப் பாரித்து
முச்சது ரத்தின் முதுகாட்டில் வைத்திடு
வைச்சபின் மேலோர் மாரணம் வேண்டிலே.

நண்பகற்போதில் ஒளியுடைத்தாகிய வன்னி மூலையென்று சொல்லப்பெறும் தென்கிழக்கு மூலையில் பச்சையான பனை ஓலையில் (974) சுக்கு, கடுகு, மிளகு, உள்ளி, வெள்ளுள்ளி என்னும் ஐந்தினையும் அரைத்துப் பூசி முச்சதுரமாக அமையும் சந்திகளிலும், சுடுகாட்டிலும் புதைத்து வைத்திடுக. வைத்த பிறகு பகையை அழிக்கும் மாரணமாக அஃது அமையும். மாரணம்: ஏவலாற் செய்யுங்கொலை. வெள்ளுள்ளி நீக்கிப்பேயுள்ளி கொள்ளலுமாம்.

வன்னிமூலை - அக்கினிமூலை - தென்கிழக்கு பஞ்சகாயம் - ஐங்காயம் (மேலே கூறியபடி). பாரித்து - பூசி. முதுகாடு - சுடுகாடு.

## 977. ஏய்ந்த வரிதார மேட்டின்மே லேபூசி

977. ஏய்ந்த வரிதார மேட்டின்மே லேபூசி
ஏய்ந்த வகாரம் உகாரம் எழுத்திட்டு
வாய்ந்ததோர் வில்லம் பலகை வசியத்துக்
கேய்ந்தவைத் தெண்பதி னாயிரம் வேண்டிலே.

973-இல் ஓதியபடி மகர முதலாக வரைந்த ஐந்தெழுத்து ஏட்டின்மேல் அரிதாரமாகிய மருந்து பூசி; (அரிதாரமென்பது: கட்டியரிதாரம், காட்டரிதாரம், கனத்தீ அரிதாரம், தகட்டரிதாரம், தாளகம், பொன்னரிதாரம், மடலரிதாரம், வைப்பரிதாரம் என எண்வகைய.) அதன்மேல் அகார உகாரங்களை எழுதி, வாய்ப்புடைய வில்வ மரப் பலகையின் மேலும் மகர முறையாக வரைந்து, முன்னெழுதிய ஏட்டினையும் அதன்மேல் வைத்து வசியமென்னும் கவர்ச்சி அமைதற்பொருட்டு, அம் மந்திரத்தினை எண்பதினாயிரம் எண் திருவுரு ஏற்றுதல் வேண்டும். திருவுரு ஏற்றுதல் என்பது சிவம் பண்ணுதல் என்பதாகும். இதனைச் செபம் பண்ணுதல் எனவும் கூறுவர்.

வில்லம் - வில்வம்.

## 978. எண்ணாக் கருடனை ஏட்டின் யகாரமிட்

978. எண்ணாக் கருடனை ஏட்டின் யகாரமிட்
டெண்ணாப் பொன்னொளி எழுவெள்ளி பூசிடா
வெண்ணாவற் பலகையி லிட்டுமேற் கேநோக்கி
எண்ணா வெழுத்தோடெண் ணாயிரம் வேண்டிலே.

கருடனை என்று சொல்லப்பெறும் ஒப்பாம் நிலைமை எய்துதற்கு வழி யாதென நாடின் ஓலையில் யகார முதலாக மாறி அமைத்து அவ் வைந்தெழுத்தினையும் எழுதி, கருதுதற்குரிய வியாழக்கிழமையில் அவ்வோலைமேல் வெண்ணிறமான ஒருவகைப் பொடியினைப் பூசி வெண்நாவல் பலகையின்மேல் அதனை வைத்து, மேற்குநோக்கியிருந்து கொண்டு, நெஞ்சின்கண் ஒருமிக்க எண்ணாயிரம் எண் உருவேற்றுதல் வேண்டும். எண்ணுதல் - சிந்தித்தல்; நாடுதல். 973 நின்ற என்பது முதல் இத் திருமந்திரம் முடியத் தம்பன முதலாகக் கருடனை ஈறாக ஓதப்பெற்றுள்ளன.

யகாரமிட்டு - யகரத்தை மாறி. பொன் நாள் - வியாழம். எழுவெள்ளி - வெள்ளிபற்பம்.

## 979. அம்புய நீலங் கழுநீ ரணிநெய்தல்

979. அம்புய நீலங் கழுநீ ரணிநெய்தல்
வம்பவிழ் பூகமும் மாதவி மந்தாரந்
தும்பை வகுளஞ் சுரபுன்னை மல்லிகை
செண்பகம் பாதிரி செவ்வந்தி சாத்திடே.

தாமரை, கருங்குவளை, செங்கழுநீர், நெய்தல், பலா, மாதவி, மந்தாரம், தும்பை, மகிழ், சுரபுன்னை, மல்லிகை, செண்பகம், பாதிரி, செவ்வந்தி ஆகிய பதினான்கு வகையான நறுமணமிக்க பூக்களைக் கொண்டு வழிபாடு செய்வாயாக. மாதவி - குருக்கத்தி. வகுளம் - மகிழ். அருச்சனை - வழிபாடு. ('ஆரா தனையே வழிபா டருச்சனை' பிங்கல நிகண்டு. 1799.)

மாதவி - குருக்கத்தி. வகுளம் - மகிழ்.

## 980. சாங்கம தாகவே சந்தொடு சந்தனந்

980. சாங்கம தாகவே சந்தொடு சந்தனந்
தேங்கமழ் குங்குமங் கர்ப்பூரங் காரகிற்
பாங்கு படப்பனி நீராற் குழைத்துவைத்
தாங்கே அணிந்துநீர் அர்ச்சியும் அன்பொடே.

புழுகு, கத்தூரி முதலிய சாந்துடன், சந்தனம், மணமிகுந்த குங்குமம், பச்சைக் கருப்பூரம், வயிரம் ஏறிய அகில், ஆகிய இவற்றினுடன் அளவாகப் பனிநீர் சேர்த்துக் குழைத்து அவற்றை அணியவேண்டிய இடங்களில் முறையாக அணிந்து அன்புடன் வழிபடுவாயாக. புழுகு - புனுகு. குங்குமம் - குங்குமப்பூ; செஞ்சாந்து. சாங்கம் - முறைமை. சந்து: சாந்து - மணக்கூட்டு.

சாங்கம் - முறைமை. கர்ப்பூரம் - பச்சைக்கர்ப்பூரம்.

# 981. அன்புட னேநின் றமுதமும் ஏற்றியே

981. அன்புட னேநின் றமுதமும் ஏற்றியே
பொன்செய் விளக்கும் புகைதீபந் திசைதொறுந்
துன்பம் அகற்றித் தொழுவார் நினையுங்கால்
இன்புட னேவந் தெய்திடும் முத்தியே.

உள்ளன்புடன் படைப்பினைக் குழைத்து, விளக்கம் மிக்க திருவிளக்குகள் எல்லாப் பக்கங்களிலும் ஏற்றுக. புகையும் ஒளியும் காட்டி வழிபடுக. இனம்பற்றி மணியும் இயமும் இயம்புக. செந்தமிழ் மாமறைத் திருமுறை யோதுக. இத்தகைய தொழுகையினர் நினையுங்கால் திருவடிப் பேற்றின்பம் உடனே கைகூடும். அமுதம் - படைப்பு. நிவேதனம் - குழைத்தல்; ஊட்டல். வழிபாட்டுக்குரிய உறுப்புக்கள் ஐந்து; அவை, பூவும் புகையும், புனலும் படைப்பும், விளக்கும் ஒளியும், பாவும் பண்ணும், மணியும் இயமும் என்ப. பா - திருமுறை. இயம் - வாத்தியம்; வாழ்த்தியம் - மேளதாளம். 'திருநீற்றுப் பதிகம்' ஓதித் திருநீறு எடுத்தல்வேண்டும். 'பாராழி வட்டத்தார்' என்னும் திருப்பாட்டு ஓதிப் புகையினை எடுத்தல் வேண்டும். 'எல்லா வுலகமும்' என்னும் திருப்பாட்டு ஓதி ஒளியினை எடுத்தல்வேண்டும். 'ஓசையொலியெலாம்' என்னும் திருப்பாட்டு ஓதி பாவும் இயமும் இயம்புதல்வேண்டும். 'நமசிவய' எனக் கீழிருந்து மேல்நோக்கியும், 'சிவயநம' என மேலிருந்து கீழ்நோக்கியும், ஓம் என வட்டமிடும் முறையே 'ஆடும், சேர்க்கும், ஓங்கார' என்னும் உண்மை விளக்கத் திருவெண்பா ஓதிப் புகையொளி காட்டி வழிபடுக.

## 982. எய்தி வழிப்படில் எய்தா தனவில்லை

982. எய்தி வழிப்படில் எய்தா தனவில்லை
எய்தி வழிப்படில் இந்திரன் செல்வமுன்
எய்தி வழிப்படில் எண்சித்தி உண்டாகும்
எய்தி வழிப்படில் எய்திடும் முத்தியே.

மேல் ஓதப்பெற்ற பொருள்களெல்லாம் அன்பினால் தொகுத்துக்கொண்டு மெய்ம்மையாக வழிபாடு செய்யின் இவ்வுலகின் கண் எய்தவேண்டுவன அனைத்தும் எய்தும். மேலும் தேவவுலக வாழ்வும் உண்டாகும். எண்வகையான சித்திகளும் கைகூடும். எளிதிற் கிடையாத வீடுபேறும் கிடைக்கும். வழிப்படில் என்பது செந்நெறிச் செல்வர்கள் சென்ற நெறிப்படியே சென்று வழிபடுதல் என்றாகும்.

# 983. நண்ணும் பிறதார நீத்தார் அவித்தார்

983. நண்ணும் பிறதார நீத்தார் அவித்தார்
மண்ணிய நைவேத் தியமனு சந்தான
நண்ணிய பஞ்சாங்க நண்ணுஞ் செபமென்னு
மன்னு மனபவ னத்தொடு வைகுமே.

ஐம்புலனும் அடக்கியவர்கள் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவார் பிறன்மனை நோக்காத பேராண்மையர். அஃதாவது அயலான் மனைவியை மறந்தும் கனவினும் மனத்தினும் தீண்டாத அருங்கற்புடைய ஆடவராவர் என்பதாம். செம்மையாக அமைக்கப்பட்ட இடைவிடா நினைப்போடு கூடிய படைப்பும், முழங்கை இரண்டு, முழந்தாளிரண்டு, நெற்றி ஒன்று ஆக ஐந்துறுப்பும் நிலத்தே படும்படி புரியும் வணக்கமும், செபமும், வழிபாட்டுக்கு இன்றியமையாதனவாகும். அத்துடன் இடைவிடா நினைப்பாகிய தியானமும், அதற்குவேண்டும். உயிர்ப்படக்கமும் வேண்டும். மனம் - விடாநினைப்பு. பவனம் - உயிர்ப்பு. பிறன்மனை என்பதற்கு மனையை உடம்பாக்கி இன்னமோர் உடம்பெடுக்கும் பிறப்பு என்றலும் ஒன்று.

அவித்தார் - ஐம்புலன்களை அடக்கியவர். மண்ணிய - நன்றாய்ச் சமைத்த. பஞ்சாங்கம் - ஐந்து அங்கங்கள் பூமியில் படும்படி கும்பிடுதல். மனபவனம் - மனமும் பிராணவாயுவும்.

## 984. வேண்டார்கள் கன்மம் விமலனுக் காட்பட்டோர்

984. வேண்டார்கள் கன்மம் விமலனுக் காட்பட்டோர்
வேண்டார்கள் கன்ம மதிலிச்சை யற்றபேர்
வேண்டார்கள் கன்மம் மிகுசிவ யோகிகள்
வேண்டார்கள் கன்மம் மிகுதியோ ராய்ந்தன்பே.

சிவபெருமானுக்கு மீளா அடிமையானவர்கள் முனைப்பொடு செய்யும் இருவினைகளையும் வேண்டார். பயன் வேண்டிச் செய்யும் கன்மங்களையும் விரும்பார். சிவயோகமாகிய செறிவுநிலையிலுள்ளார் எவ்வினையும் விரும்பார். தலையன்பு வாய்ந்தவராகிய அறிவு நிலையிலுள்ளாரும் பணியே அன்றிப் பிறப்புக்கு வித்தாகிய வினைகளை விரும்பார். பின் இரண்டடியும் செறிவும் அறிவும் குறிப்பதால் முன்னிரண்டடியும் முறையே சீலமும் நோன்பும் குறிப்பனவாகக் கொள்க.

## 985. அறிவரு ஞானத் தெவரும் அறியார்

985. அறிவரு ஞானத் தெவரும் அறியார்
பொறிவழி தேடிப் புலம்புகின் றார்கள்
நெறிமனை யுள்ளே நிலைபெற நோக்கில்
எறிமணி யுள்ளே இருக்கலு மாமே.

அருட்கண்ணால் நோக்கும் மெய்யுணர்வில்லார் சிவனை அறியவரும் ஞானவழியாலுணரார். நெறியல்லா நெறியாகிய ஐம்பொறி வழியாகச் சிவனைக் காணலாம் என்று தேடி இளைப்பர். முறையாகச் சிவனுக்கு நிலைபெற்ற எட்டாம் இடமாகிய உயிரின்கண் இடைவிடாது அவனருளால் உணரின் ஒளி வீசுகின்ற திருவடியாகிய மாமணியினுள் நிலைத்திருத்தலுமாகும்.

எறிமணி - ஒளியில் பத்துவித நாதத்தின்.

## 986. இருளும் வெளியும்போல் இரண்டாம் இதய

986. இருளும் வெளியும்போல் இரண்டாம் இதய
மருளறி யாமையும் மன்னு மறிவு
மருளிவை விட்டெறி யாமை மயங்கு
மருளுஞ் சிதைத்தோ ரவர்களா மன்றே.

வெளியும் இருளும்போல் நெஞ்சமும் மயக்கந் தருவதாய அறியாமையும் உயிரிற் கலந்திருக்கும். ஆருயிரின் அறிவு அறியாமையை விட்டொழிக்கும் ஆற்றலுடையதன்று. அதனால் மயங்கும். திருவருள் துணையால் அறியாமையை அகற்றியவர் சிவ வழிபாட்டினராவர்.

இருளும் வெளி - இருளொடு கூடிய ஆகாயம். எறியாமை - நீங்காமை.

## 987. தானவ னாக அவனேதா னாயிட

987. தானவ னாக அவனேதா னாயிட
ஆன இரண்டில் அறிவன் சிவமாகப்
போனவ னன்பிது நாலா மரபுறத்
தானவ னாகுமோ ராசித்த தேவரே.

ஆருயிர்கள் கட்டுநிலையில் முனைத்துநிற்கும். அப்பொழுது உடனாய் நிற்கும் இறைவன் அவ்வுயிரின் வழி நிற்பன். ஆதலால் உயிர் அவனாகவே நிற்கின்றது. வீட்டுநிலையாகிய ஒட்டுநிலையில் திருவருள் முனைத்துநிற்கும்; அப்பொழுது உயிர் ஆண்டவன் வழிநிற்கும். அந்நிலையில் அவனே - ஆண்டவனே உயிரைத் தன்னுள்ளடக்கித் தானாக நிற்பன். ஆண்டவன் அவ்வுயிராகவே நிற்கு நிலை இஃதென்ப. இவ்விரு நிலையிலும் சிற்றறிவாகிய உயிர் சிவமாக விளங்கும் ஒட்டுநிலையே உயர்ந்ததாகும். அங்ஙனம் உயிர் சிவமாவதற்குப் பேரன்பாகிய காதல் வேண்டும். அக் காதலின் பயனாக எய்துவது தானாதல் என்று சொல்லப்பெறும் சாயுச்சியமாம். நெறிநான்கால் எய்தும் பயன் நான்கென்பர். அவை சிவனுலகிருத்தல். சிவன் அண்மையிலிருத்தல். சிவனுருப் பெறுதல். சிவனாதல் என்ப. தான் எனினும் சிவன் எனினும் ஒன்றே அந்நிலையருளும் சிவனைப் பேரொளிப்பிழம்பென்னுந் தகைமை பற்றி ஆதித்த தேவர் என்பர். ஆதித்த தேவர் - சிவசூரியர்.

அறிவன் - சிவன். நாலாம் மரபு - சாயுச்சியம்.

## 988. ஓங்கார முந்திக்கீழ் உற்றிடும் எந்நாளும்

988. ஓங்கார முந்திக்கீழ் உற்றிடும் எந்நாளும்
நீங்கா வகாரமும் நீள்கண்டத் தாயிடும்
பாங்கார் நகாரம் பயில்நெற்றி யுற்றிடும்
வீங்காகும் விந்துவும் நாதமே லாகுமே.

ஓங்காரமானது கொப்பூழின் கீழிடத்தாய மூலத்திடத்ததாம். எஞ்ஞான்றும் சிவனைவிட்டு நீங்காது அச் சிவனே தானாம் வனப்பாகிய திருவருள் எழுத்து வகரம். அது கழுத்தினிடத்ததாகும். ஆருயிர்களைப் பண்படுத்தும் நடப்பாகிய ஆதியருள் நகரம். அது நெற்றியினிடத்ததாகும். மிக்க பெருமையையுடைய ஒளியாகிய விந்து அதற்கும் மேலதாகும். ஓசையாகிய நாதம் அதற்கும் அப்பாலாகும். வீங்காகும் - பெருமையுடையதாகும்.

ஓங்காரம் உந்திக்கீழ் - மூலாதாரத்தில் பிரணவம். வகாரம் நீள்கண்டம் - கண்டத்தானத்தில் வ எழுத்து. பாங்கார் யகாரம் பயில் நெற்றி - புருவ மத்தியில் ய எழுத்து.

## 989. நமவது வாசன மான பசுவே

989. நமவது வாசன மான பசுவே
சிவமது சித்திச் சிவமாம் பதியே
நமவற வாதி நாடுவ தன்றாஞ்
சிவமாகு மாமோனஞ் சேர்தல்மெய் வீடே

சிவக்கொழுந்தாகிய சிவலிங்கத்தின் இருக்கையாகிய ஆவுடையார், நம என்னும் எழுத்துக்களாகும். அவ்விருக்கை உயிரே. (உயிர் அடையாளம் ய.) ஆவுடையார்க்கு மேலுள்ள தூண் ஒத்துக் காணும் ஒளிப்பகுதி சிவ என்னும் எழுத்துக்களாகும். இச் சிவமே வேண்டும் சித்திகளை அருள்வதாகிய இறையாகும். இறை - பதி. நம என்னும் எழுத்துக்களுக்குரிய உலகியல் நீங்குதலும் ஆதியாகிய நடப்பாற்றலை நாடுவதாகிய சிந்தித்தல் இன்றாம் என்பது நமசிவய எனச் சிவம் பண்ணுவதின்று. சிவயநம எனக் கணிப்பது உண்டு. இதுவே முற்றப் பற்றறக் கழியும் வழியாகும். அதனால் பெறப்படுவது திருவடிப் பேறு. மாமோனம் - பெரிய விடுதலை.

ஆசனம் - ஆவுடையார்.

## 990. தெளிவரு நாளிற் சிவஅமு தூறும்

990. தெளிவரு நாளிற் சிவஅமு தூறும்
ஒளிவரு நாளில் ஓரெட்டில் உகளும்
ஒளிவரும் அப்பதத் தோரிரண் டாகில்
வெளிதரு நாதன் வெளியாய் இருந்தே.

திருவருள் துணையால் திரு அடியுணர்வாகிய தெளிவு வந்த காலத்துச் சிவ அமுதாகிய பேரின்பம் ஊறும். அப்பொழுது எட்டாகிய அகரத்தின்கண் ஆருயிர் ஒளி விளங்கும். அகர நிலையின்கண் இரண்டொலியுண்டானால் அருள் வெளியில் திகழும் முழுமுதற் சிவன் வெளிப்படுவன். இரண்டொலி: யகரம். இஃது உயிரடையாளம். இதன்கண் அகர ஒலியும் யகர ஒலியும் உள்ளன. நாதன் - சிவபெருமான்.

சிவ அமுது - சிவத்தின் இன்பம். எட்டில் உகளும் ஒளி - அகாரத்தில் விளங்கும் ஆன்மஒளி.

## 991. நவகுண்ட மானவை நானுரை செய்யின்

991. நவகுண்ட மானவை நானுரை செய்யின்
நவகுண்டத் துள்ளெழு நற்றீபந் தானும்
நவகுண்டத் துள்ளெழு நன்மைகள் எல்லாம்
நவகுண்ட மானவை நானுரைப் பேனே.

அனல் ஓம்பும் குண்டங்கள் ஒன்பது. அதன் தன்மையைச் சொல்லுமிடத்து அதன்கண் சிவமாகிய பேரொளிப்பிழம்பு தோன்றாநிற்கும். எல்லா நன்மைகளும் அவ்வனல் ஓம்புதலால் உண்டாகும். அதன் விளக்கத்தை இனிக் கூறுவாம். நவம் - ஒன்பது.

# 992. உரைத்திடுங் குண்டத்தின் உள்ளேழுக் காலும்

992. உரைத்திடுங் குண்டத்தின் உள்ளேழுக் காலும்
நகைத்தெழு நாற்கோண நன்மைகள் ஐந்தும்
பகைத்திடு முப்புரம் பாரங்கி யோடே
மிகைத்தெழு கண்டங்கள் மேலறி யோமே.

இவ் வனற்குண்டத்துள் மூன்று வரைகளாயுள்ள முக்கோணமும், அதைச் சூழ்ந்துள்ள நாற்கோணமும் அமைத்து அனல் ஓம்புக. அதனால் விளையும் நன்மைகள் ஐந்து. அவை, படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் என்ப. மேலும் அவ்வனலால் பருமை, நுண்மை, முதன்மை என்னும் மும்மையுடல்களும் அகலும். மும்மையுடல்கள்: பூதம் ஐந்து, அறிகருவி ஐந்து, செய்கருவி ஐந்து. இப்பதினைந்தாலாயது பரியவுடம்பு. பூதமுதல் (தன் மாத்திரை) ஐந்து, மனம், எழுச்சி, இறுப்பு ஆகிய உட்கருவி மூன்றும் கூடிய எட்டும் நுண்ணுடம்பு. அவற்றோடு குணம் அல்லது மூலப் பகுதி ஒன்றுங்கூடி இருபத்துநான்கு மெய்யும் உடன்மெய் யாகும். பூதமொன்று, பூதமுதல் ஒன்று, அறிகருவி ஒன்று, செய்கருவி ஒன்று, அகக்கலன் ஒன்று, குணம் ஒன்று, மூலப் பகுதி ஒன்று, கலாதி ஒன்று ஆகிய எண்வகையாலாகியது முதன்மையுடல். முதன்மை எனினும் முதல்நிலை எனினும், காரணம் எனினும் ஒன்றே. மூவகையுடல் பற்றுகள் அகலும். அகல மிகுதியும் துன்புறுத்தும் வினைக்கட்டுக்களும் அகலும். அகலவே அவற்றை யறியாது சிவமே அறிந்திருப்பர். முக்காலும்

என்பதை இறப்பு, நிகழ்வு, எதிர்வு எனக் கூறுதலும் உண்டு.

முக்கால் - முக்கோணம். நன்மைகள் ஐந்து - ஆக்கலாதி ஐந்தொழில்கள் முப்புரம் - முச் சரீரம் (தூலம், சூக்குமம், காரணம்) -

## 993. மேலறிந் துள்ளே வெளிசெய்த வப்பொருள்

993. மேலறிந் துள்ளே வெளிசெய்த வப்பொருள்
காலறிந் துள்ளே கருத்துற்ற செஞ்சுடர்
பாரறிந் தண்டஞ் சிறகற நின்றது
நானறிந் துள்ளே நாடிக்கொண் டேனே.

மேனிலை அறிந்து ஆருயிர்க்குள்ளேயே வெளி செய்தருளிய சிவனை, உயிர்ப்பாகிய மூச்சுப் பழக்கத்தால் உள்ளேயே நாடுக. அப்பொழுது சிவமாகிய செஞ்சுடர் விளங்கும். தாங்கும் நிலைக்களங்களை ஆராய்ந்தால்பரவெளி என்னும் ஆகாயம் ஏதொரு தாங்குதலுமின்றி நின்றது. இவ் வுண்மைகளை அருளால் நானறிந்து அகத்துள் நாடிக் கொண்டேன்.

கால் - பிராணவாயு. அண்டம் - ஆகாயம். சிறகற - ஆதாரம் இன்றி.

## 994. கொண்டஇக் குண்டத்தின் உள்ளெழு சோதியாய்

994. கொண்டஇக் குண்டத்தின் உள்ளெழு சோதியாய்
அண்டங்கள் ஈரேழு மாக்கி அழிக்கலாம்
பண்டையுள் வேதம் பரந்த பரப்பெலாம்
இன்றுசொல் நூலாய் எடுத்துரைத் தேனே.

இக் குண்டத்தினுள் அனலோம்பும் அந்தணர், அவ் ஆற்றலால் உள்ளெழும் ஒளியாய்த் திகழ்வர். அத் தன்மையால் பதினான்கென்னும் எண்ணுள் அடங்கிய உலகங்களெல்லாவற்றையும் ஆக்கி நிறுத்தி அழிக்கும் வலிமை உண்டாகும். விரிந்த அண்டங்கள் எங்கணும் விரிந்து நிலவியுள்ள பண்டைச் செந்தமிழ் அறிவுநூல்களின் பொருளெல்லாம் திருவருள் துணையால் இந் நாள் இந்நூலாக எடுத்துரைத்தேன். பரந்த பரப்பெலாம் என்பதனைப் பரப்பெலாம் பரந்த என மாறுக. நூல் - திருமந்திரம்.

அண்டங்கள் ஈரேழு - 14 உலகங்கள். பண்டையுள - முன்னிருந்து இறந்துபோன. வேதம் பரந்த பரப்பு - வேதங்களிற் கண்ட பொருள்களை விளக்கிநின்ற ஆகமங்கள் கூறிய பொருள்களை எல்லாம். இன்றுசொல் நூல் - தமிழ் மூவாயிரம்.

## 995. எடுத்தவக் குண்டத் திடம்பதி னாறிற்

995. எடுத்தவக் குண்டத் திடம்பதி னாறிற்
பதித்த கலைகளும் பாலித்து நிற்குங்
கதித்தனல் உள்ளெழக் கண்டுகொள் வார்க்கே
கொதித்தெழும் வல்வினை கூடகி லாவே.

முறையான் அமைக்கப்பட்ட அனற்குண்டத்துள் பதினாறிதழ்களில் உரிய எழுத்துக்கள் வரையப்படும். கொழுந்துவிட்டெரியும் அச் சுடரினைக் காணும் பேற்றினரப்பால், மிக்க கொதிப்புடன் தோன்றும் தீவினைகள் சேரமாட்டா.

பதினாறு - பதினாறு இதழ். கலைகள் - அக்கரங்கள்.

## 996. கூடமுக் கூடத்தின் உள்ளெழு குண்டத்துள்

996. கூடமுக் கூடத்தின் உள்ளெழு குண்டத்துள்
ஆடிய ஐந்தும் அகம்புறம் பாய்நிற்கும்
பாடிய பன்னீ ரிராசியும் அங்கெழ
நாடிக்கொள் வார்கட்கு நற்சுடர் தானே.

முச்சந்திப்புக்களோடு கூடிய முக்கோணத்துள் கூத்தப் பெருமான் ஆற்றியருளும் ஐந்தொழிலும் அகம்புறமாய் நிற்கும். சிறப்பித்துச் சொல்லப்படும் பன்னிரண்டு கலையுள்ள உயிர்ப்பும் அங்குத் தோன்றும். அந் நிலையினை எண்ணிப் பார்ப்பார்க்குச் சிவஒளி தோன்றும்.

முக்கூடம் - புருவமத்தி. ஆடிய ஐந்து - ஐந்தொழில்கள். பன்னீரிராசி - தேகத்தின்கண் உள்ள பன்னிரண்டு இராசித் தானங்கள் (இது நேபாள சுவாமிகள் வரைந்து அளித்த படத்தை நோக்க வெளியாம்).

## 997. நற்சுட ராகுஞ் சிரமுக வட்டமாங்

997. நற்சுட ராகுஞ் சிரமுக வட்டமாங்
கைச்சுட ராகுங் கருத்துற்ற கைகளிற்
பைச்சுடர் மேனி பதைப்புற் றிலிங்கமும்
நற்சுட ராயெழு நல்லதென் றாளே.

நல்ல அனற்சுடர் உச்சியும் முகமும் வட்டமாக அமைந்திருக்கும். அச் சுடரே கைமேல் பயன்தருதற்குரிய ஒன்றாகும். அதனை இடையறாது கருதுவார்க்கு, அழகிய உடம்பு அசைவற்று இருக்கும். அவ்வாறிருப்பார்க்குச் சிவலிங்கம் ஒளிப்பிழம்பாக விளங்கும்.

சிரமுகவட்டம் - புருவமத்தி (இதுதான் சிற்றம்பலம்)
கருத்துற்ற கை - தியானிப்பவர் கையில்.

## 998. நல்லதென் றாளே நமக்குற்ற நாயகஞ்

998. நல்லதென் றாளே நமக்குற்ற நாயகஞ்
சொல்லதென் றாளே சுடர்முடிப் பாதமா
மெல்லநின் றாளை வினவகில் லாதவர்
கல்லதன் றாளையுங் கற்றும்வின் னாளே.

நம் உயிருக்கு உயிராக விளங்கும் திருவருள் அம்மை அனலோம்பும் முறைமை நல்லதென்றருளினள். திருவைந்தெழுத்துமே அருமறையாகிய உபதேசம் என்றருளினள். அவளே திருவடி நிலையாக மென்மையுற்று நின்றனள். அவ்வம்மையின் உண்மைத் தன்மையை உணராதவர் கலைகளையும் அதற்கு அடியாகிய மறைகளையும் உணர்ந்தவராயினும் 'கல்லார் நெஞ்சில் நில்லான் ஈசன்' ஆதலால் அம்மையும் வேறாகவே நிற்பள். நாயகம் - அம்மை. சொல் - உபதேசம். கல் - கலை. தாள் - அடியான மறை. வின்னாள் - வேறானவள்.

நாயகம் - தேவி. மெல்ல நின்றாள் - திருவருட் சத்தி.

## 999. வின்னா விளம்பிறை மேவிய குண்டத்துச்

999. வின்னா விளம்பிறை மேவிய குண்டத்துச்
சொன்னால் இரண்டுஞ் சுடர்நாகந் திக்கெங்கும்
பன்னாலு நாகம் பரந்த பரஞ்சுடர்
என்னாகத் துள்ளே இடங்கொண்ட வாறே.

ஒளியையே நாவாகவுடைய இளம்பிறைபோல் அமையப் பெற்ற அனற்குண்டத்துச் சிறப்பித்துச் சொல்லப்படும் சிவனும் சிவையும் எல்லாத் திசைகளிலும் சுடர்விட்டு விளங்குவர். முதுகந்தண்டாகிய மேருவினிடத்தில் அச் சிவச்சுடர் பல்வகையாகத் தோன்றும். அச் சுடர் ஆருயிரின் அகத்து நிலைகொண்டு விளங்கும். வில் - ஒளி. இரண்டும் - சிவனும் சிவையும். சிவை - சத்தி. நாகம் - மேரு.

இரண்டும் - சத்தியும் சிவமும்.

## 1000.இடங்கொண்ட பாதம் எழிற்சுட ரேக

1000.இடங்கொண்ட பாதம் எழிற்சுட ரேக
நடங்கொண்ட பாதங்கள் நண்ணீ ரதற்குச்
சகங்கொண்ட கையிரண் டாறுந் தழைப்ப
முகங்கொண்ட செஞ்சுடர் முக்கண னார்க்கே.

அனற்குண்டத்தை இடமாகக்கொண்ட அழகிய திருவடிச் சுடர் ஒப்பில்லாத என்றும் மாறாத திருக்கூத்தியற்றும் தன்மையதாகும். அத் திருவடிகளே அவ்வனலுக்கு உயிர்த் தன்மையாகும். உலகெலாம் விளங்கும் பன்னிரண்டு கலைகளும் நாளும் பெருக, திருமுகம் கொண்டருளிய செஞ்சுடர் முக்கணப்பராகும்.

கை - கலை. இரண்டு ஆறு - பன்னிரண்டு. செஞ்சுடர் - சூரியன்.

## 1001.முக்கணன் றானே முழுச்சுட ராயவன்

1001.முக்கணன் றானே முழுச்சுட ராயவன்
அக்கணன் றானே அகிலமும் உண்டவன்
திக்கண னாகித் திகையெட்டுங் கண்டவன்
எக்கணன் றானுக்கும் எந்தை பிரானே.

இயற்கைப் பேர்அன்பு அறிவு ஆற்றல்களுடைய சிவன் முக்கண்ணன் என்று அழைக்கப்படுவான். முக்கண் திங்கள் ஞாயிறு, தீ. திங்கள் என்பது அன்பாகிய இடக்கண். ஞாயிறென்பது ஆற்றலாகிய வலக்கண். தீ என்பது அறிவாகிய நெற்றிக்கண். அம் முக்கண்ணன் எப்பொருட்கும் அந்தத்தைச் செய்பவன், அதனால் அகிலமும் உண்டவன் எனப்படுவன். அவனே எட்டுத்திசைகளிலும் நீக்கமற நிறைந்து நிற்பவன். இஃது 'எண்தோள் முக்கண் எம்மானே' என்னும் திருமுறையான் உணரலாம். உலகோர் கண்ணன் என்று எவனைக் கூறுகின்றனரோ அவனுக்கும் இறைவனாவன். அவனே எந்தை என்க. தான் : அசை.

அகிலமும் உண்டவன் - பெரு ஊழியில் உலகங்களை எல்லாம் தன்னிடம் ஒடுக்கிக்கொண்டவன். திக்கண...கண்டவன் - எட்டுத் திசைகளிலும் வியாபித்தவன். எக்கணன்றானுக்கு - திருமாலுக்கு.

## 1002.எந்தை பிரானுக் கிருமூன்று வட்டமாய்த்

1002.எந்தை பிரானுக் கிருமூன்று வட்டமாய்த்
தந்தைதன் முன்னே சண்முகந் தோன்றலாற்
கந்தன் சுவாமி கலந்தங் கிருத்தலான்
மைந்தன் இவனென்று மாட்டிக்கொள் வீரே.

எம் தந்தையாகிய கடவுளுக்குச் சுடரே திருவுரு. அவ்வுரு ஆறுவட்டமாகத் திகழ்ந்து நின்றது, அவ் வட்டத்தினின்றும் அறுமுகக் கடவுள் தோன்றினன். அவனைக் கந்தக் கடவுள் என்றும் வழங்குவர். கந்தக் கடவுளும் சிவபெருமானும் பிரிப்பின்றிக் கலந்து விளங்கு கின்றனர். அதனால் தந்தையும் மைந்தனும் ஒருபுடை யொப்பு முறை சாற்றுவர். கந்தன்சுவாமி - கந்தக்கடவுள்.

## 1003.மாட்டிய குண்டத்தின் உள்ளெழு வேதத்துள்

1003.மாட்டிய குண்டத்தின் உள்ளெழு வேதத்துள்
ஆட்டிய காலொன்றும் இரண்டும் அலர்ந்திடும்
வாட்டிய கையிரண் டொன்று பதைத்தெழ
நாட்டுஞ் சுரரிவர் நல்லொளி தானே.

ஓமகுண்டத்தில் ஓமம் செய்யுங்கால் ஓதப்பெறும் ஓமொழி மந்திரத்தின் அகர, உகர, மகரமாகிய மூன்றும் வெளிப்பட்டிலங்கும். தீவினையை வாட்டும் தன்மை வாய்ந்த ஞாயிறு திங்கள் தீ ஆகிய முச்சுடரும் அத் தீவினைகள் பதைத்தெழும்படி நாட்டப் பெறும். அங்ஙனம் நாட்டப் பெறுவார் ஒளியுருவினராவர். சுரர் - ஒளியுருவினர். இவர்க்குண்டாம் ஒளி திருவருள் ஒளியே. வேதம் என்னும் தமிழ்ச்சொல் வித்தம் என்னும் அடியாகத் தோன்றுவது. வித்தம்: வைத்தியம், வைதிகம், வேதம் என வழங்குவதாயிற்று.

காலொன்றும் இரண்டும் - பிரணவபாதங்கள் மூன்றும். கை இரண்டு ஒன்று - சூரியன் சந்திரன் அக்கினி மண்டலங்கள் மூன்று.

## 1004.நல்லொளி யாக நடந்துல கெங்கும்

1004.நல்லொளி யாக நடந்துல கெங்கும்
கல்லொளி யாகக் கலந்துள் இருந்திடும்
சொல்லொளி யாகத் தொடர்ந்த உயிர்க்கெலாங்
கல்லொளி கண்ணுளு மாகிநின் றாளே.

திருவருள் ஒளி உலகமெங்கும் நடந்து நன்மையருளும் உயிர்க்குயிராய் உணர்வொளியாகக் கலந்து உள்ளுறையும் ஆசான் அருளிய குருமொழி கொண்டு ஒழுகுவார்க்கு நிலைபெற்ற ஒளியாய்க் கண்ணுள்ளும் நிற்கும். அதுவே திருவருள் என்க. சொல்லொளி - குருமொழி. கல்லொளி - உணர்வொளி.

கல்லொளி - நிலைபெற்ற ஒளி.

## 1005.நின்றஇக் குண்டம் நிலையாறு கோணமாய்

1005.நின்றஇக் குண்டம் நிலையாறு கோணமாய்
பண்டையில் வட்டம் பதைத்தெழு மாறாறுங்
கொண்டஇத் தத்துவம் உள்ளே கலந்தெழ
விண்ணுளும் என்ன எடுக்கலு மாமே.

ஓம குண்டம் அறுகோணமாய் அமைக்கப்படும். இவ்வமைப்பு மூலாதாரம் முதலாகச் சொல்லப்படும் ஆறு நிலைக்களங்களையும் குறிக்கும். ஒலியுலகுக்கு முன் முதலாய வட்டம் ஓ மொழி என்க. தொடர்ந்து தோன்றுவனவும் சேர்ந்து தத்துவங்கள் முப்பத்தாறென்ப. இவைகள் கலந்தெழப் பெருவெளியிலும் உள்ளதாம்படி காண்டலுமாகும்.

## 1006. எடுக்கின்ற பாதங்கள் மூன்ற தெழுத்தைக்

1006. எடுக்கின்ற பாதங்கள் மூன்ற தெழுத்தைக்
கடுத்த முகம்இரண் டாறுகண் ணாகப்
படித்தெண்ணு நாவெழு கொம்பொரு நாலும்
அடுத்தெழு கண்ணான தந்தமி லாற்கே.

சிவ என்னும் மந்திரமொழியால் ஆருயிர்களை எடுத்தருளும் வகைகள் மூன்று. அவை, தன்மை முன்னிலை படர்க்கை என்பன. தன்மையில் அருளுதல் ஒருமலமுடையார்க்கு. முன்னிலையில் அருளுதல் இருமலமுடையார்க்கு. படர்க்கையில் அருளுதல் மும்மலம் உடையார்க்கு. சிவ என்னும் எழுத்திரண்டினையும் ஒத்துத் துலங்கும் அம்மையப்பர் திருமுகங்கள் இரண்டு. ஒவ்வொரு முகங்களிலும் கண்கள் மூன்று. ஆகக் கண்கள் ஆறு. மெய்யுணர்வினர் நாவின்கண் இடையறாது படித்தெழு கொழு கொம்பாகவுள்ளது 'சிவசிவ' என்னும் நாலெழுத்தாகும். முடிவு பேறில்லாத முழுமுதற் சிவனை அடையும் திருவடிப்பேற்றினர்க்கு அதுவே மெய்யுணர்வுக் கண்ணாகும்.

கடுத்த - ஒத்த முகம் இரண்டு - சத்தி, சிவங்களின் முகங்கள் இரண்டு. படித்தெண்ணும் - இப்படியாகக் கருதுக.

## 1007.அந்தமில் லானுக் ககலிடந் தானில்லை

1007.அந்தமில் லானுக் ககலிடந் தானில்லை
அந்தமில் லானை அளப்பவர் தாமில்லை
அந்தமில் லானுக் கடுத்தசொற் றானில்லை
அந்தமில் லானை அறிந்துகொள் பத்தே.

முடிவு பேறில்லாத சிவனைப் போன்று ஆவியும் முடிவு பேறில்லாததே. அவ் ஆவிக்கு உரியதாகக் கொள்ளப்படும் இடம் ஒன்றும் இல்லை. அவ் ஆவிகள் அளவிறந்தன. அவ் ஆவிகளைத் தனி முறையில் குறிக்கும் சொல் ஏதும் இல்லை. சார்பு முறையில் யகரம் என்ப; யகரம் என்பது யாப்பு என்றாகும். யாப்பு - கட்டு. இஃது உடலுடனும் அருளுடனும் பிணிப்புறும் தன்மையாகும். பத்து என்பது தமிழ் எண்ணால் எழுதினால் யகரமாகும்.

அந்தமில்லான் - ஆன்மா. அடுத்த சொல் - குறித்த சொல். பத்து - ய.

## 1008.பத்திட்டங் கெட்டிட் டாறிட்டு நாலிட்டு

1008.பத்திட்டங் கெட்டிட் டாறிட்டு நாலிட்டு
மட்டிட்ட குண்டம் மலர்ந்தெழு தாமரை
கட்டிட்டு நின்று கலந்தமெய் யாகமும்
பட்டிட்டு நின்றது பார்ப்பதி பாலே.

பத்து, எட்டு, ஆறு, நாலு முதலிய இதழ்களையுடைய தாமரைபோல் அமைக்கப்படுவது மூலம் முதலிய நிலைகள். அதற்குமேல் ஓமகுண்டத்து மலர்ந்தெழுதாமரை கட்டுற்று நின்ற கலந்த உடம்பென்ப: இவ்வுடம்பகத்து நின்ற உயிர் திருவருளாகிய பார்ப்பதியைப் பொருந்தியுள்ள தென்க. எட்டு - அகர மெனவும் கூறுதலுமுண்டு; ஓமகுண்டத்தின் மேல் விரிந்துள்ள தீமண்டலம் எனவும் கூறுப.

பத்து, எட்டு, ஆறு, நாலு - ஆதார இதழ்கள்.

## 1009.பார்ப்பதி பாகன் பரந்தகை நாலைந்து

1009.பார்ப்பதி பாகன் பரந்தகை நாலைந்து
காற்பதி பத்து முகம்பத்துக் கண்களும்
பூப்பதி பாதம் இரண்டு சுடர்முடி
நாற்பது சோத்திரம் நல்லிரு பத்தஞ்சே.

அம்மையப்பராய் விளங்கும் சிவபெருமான் ஐந்து திருமுகங்களுடன் விளங்குங்கால் அவனை விட்டுவிலகாத அம்மையும் ஐந்து திருமுகங்களுடன் விளங்குவள். இவ் இருவர்க்கும் திருவுடம்பு ஒருடம்பாய்த் திகழும். அப்பொழுது முகம் பத்து, கண் முப்பது. செவி இருபது, கை இருபது, திருமுடி இருபது, திருவடி இரண்டு என்னும் எண்களை இத் திருப்பாட்டுக் குறிக்கின்றது. இறுதியிலுள்ள இருபத்தஞ்சே என்பதை இருபது தஞ்சே எனப் பிரித்தல் வேண்டும். ஆருயிர்கட்கு இத் திருவுருவே தஞ்ச மென்க. தஞ்சே - தஞ்சம். இருபது - இருவகை ஐம்முகம்.

பார்ப்பதி - மனோன்மணி. பாகம் - சதாசிவன்.

## 1010.அஞ்சிட்ட கோலம் அளப்பன ஐயைந்தும்

1010.அஞ்சிட்ட கோலம் அளப்பன ஐயைந்தும்
மஞ்சிட்ட குண்ட மலர்ந்தங் கிருத்தலால்
பஞ்சிட்ட சோதி பரந்த பரஞ்சுடர்
கொஞ்சிட்ட வன்னியைக் கூடுதல் முத்தியே.

ஐந்து திருமுகங்களோடு கூடிய அருளோன் நிலையாகிய சதாசிவத் திருமேனியும், அதன் விரிவாகிய இருபத்தைந்து என்னும் ஏனைச் சிவத் திருவுருவங்களும், அழகு மிக்கதாகிய ஓமகுண்டங்களும் மலர்ந்துள்ளன. அதன் கண் எழும்பரஞ்சுடர் செம்பஞ்சு போலும் ஒளிமிக்கதாகிய பேரொளிப் பிழம்பாகும். அத்தகைய அருமையான ஒளிப்பிழம்பினைக் கூடுவதே வீடுபேறாகும்.

அஞ்சிட்ட கோலம் - சதாசிவ உருவம். ஐயைந்து - இருபத்தைந்து ஈச உருவங்கள். கொஞ்சிட்ட - அருமையான. வன்னி - சோதி.

## 1011.முத்திநற் சோதி முழுச்சுட ராயவன்

1011.முத்திநற் சோதி முழுச்சுட ராயவன்
கற்றற்று நின்றார் கருத்துள் இருந்திடும்
பற்றற நாடிப் பரந்தொளி யூடுபோய்ச்
செற்றற் றிருந்தவர் சேர்ந்திருந் தாரே.

வீடுபேற்றை அருள்பவனும், என்றும் ஒருபடித்தாய பேரொளிப் பிழம்பாயுள்ளவனுமாய சிவன் ஐயந்திரிபறச் செந்தமிழ்த் திருமுறையும் சித்தாந்தமும் ஓதியுணர்ந்து ஒழுகும் மெய்யடியார் உள்ளத்துள்மிக்கு விளங்குவன். உற்ற பற்றறும் வழிவகைகள் யாதென்று எண்ணி அதன்வழி ஒழுகுதல் வேண்டும். அவ் வழியாவது செய்யுஞ் செயலெல்லாம் சிவன் செயல் என்னும் உண்மை கண்டு நடத்தல். அது, வழி நடப்பார் வெளிச்சத்தின் துணையாக நடக்கின்றோம் என்று எண்ணுவதை யொக்கும். இறைவனை மறவாது காமம் முதலிய குற்றங் கழிந்திருந்தவர் அவன் திருவடியிற் கலந்து இன்புறுவர்.

முத்தன் - முத்தியைப் பயப்பவன். கற்று அற்று நின்றார் - கலைகள் அனைத்தும் கற்று, சந்தேக விபரீதம் அற்று உணர்ந்து அடங்கி நின்றார். செற்று - சினம்.

## 1012.சேர்ந்த கலையஞ்சுஞ் சேருமிக் குண்டமும்

1012.சேர்ந்த கலையஞ்சுஞ் சேருமிக் குண்டமும்
ஆர்ந்த திசைகளும் அங்கே அமர்ந்திடும்
பாய்ந்தஐம் பூதமும் பார்க்கின்ற வன்னியைக்
காய்ந்தவர் என்றுங் கலந்தவர் தாமே.

நீக்கல், நிலைப்பித்தல், நுகர்வித்தல், அமைதியாக்கல், அப்பாலாக்கல் என்று சொல்லப்படும் ஐங்கலையும் சேர்ந்தது. ஆகும் ஓமகுண்டம், ஐங்கலை என்பது ஐவகைத் திருவருளாற்றல்கள். நிறைந்த திசை விளக்கமும் அங்கே காணப்பெறும். பரந்த நிலமுதலிய ஐம்பூதவுண்மையும் அங்கே புலனாகும். இவற்றைத் திருநோக்கம் செய்வது செஞ்சுடர்ச் சிவபெருமான். உலகவுண்மையுணர்ந்து பற்றற்றவர் அச் சிவபெருமான் திருவடியிற் கலந்து இன்புறுவர்.

பாய்ந்த - பரந்த. காய்ந்தவர் - உலகத்தை வெறுத்தவர்.

## 1013.மெய்கண்ட மாம்விரி நீருல கேழையும்

1013.மெய்கண்ட மாம்விரி நீருல கேழையும்
உய்கண்டஞ் செய்த ஒருவனைச் சேருமின்
செய்கண்ட ஞானந் திருந்திய தேவர்கள்
பொய்கண்டம் இல்லாப் பொருள்கலந் தாரே.

புலனாம் படி வரையறை செய்யப்பட்ட கடலாற் சூழப்பட்ட உலகங்கள் ஏழு. அவ் ஏழையும் உய்யுமாறு வரையறை செய்த ஒப்பில்லா முழுமுதலைச் சேருங்கள். வரையறை செய்யப்பெற்ற அறிவினாலுணர்வார் தேவரே யாவர். அவர்கள் நிலையில்லாததும் எல்லைப்படுத்தப்பட்டது. இல்லாததுமாகிய மெய்பொருளாம் சிவத்துடன் கலந்திருப்பர்.

பொய்கண்டம் இல்லா - அசத்தும் கண்டமும் இல்லா, அதாவது சத்தாயும் எங்கும் வியாபித்தும் உள்ள.

## 1014.கலந்திரு பாதம் இருகர மாகும்

1014.கலந்திரு பாதம் இருகர மாகும்
மலர்ந்திரு குண்ட மகாரத்தோர் மூக்கு
மலர்ந்தெழு செம்முக மற்றைக்கண் நெற்றி
உணர்ந்திரு குஞ்சியங் குத்தம் னார்க்கே.

ஓமகுண்டத்து விளங்கும் இறைவன் திருவுருவினை வருமாறு கருதுதல் வேண்டும். செம்மை நிறம் பொருந்திய திருமுகமும், குழிந்த குங்கும நிறமாகிய மூக்கும், நெற்றிக் கண்ணோடு கூடிய முக்கண்ணும், நீண்ட கரிய தலைமயிரும், இரண்டு திருக்கைகளும், இரண்டு திருவடிகளும் உடைய ஒரு பெரும் பொருளாகக் கருதுக. மகாரம் - மகரம்: குங்கும நிறம்.

இம் மந்திரம் நவகுண்டநாதன் உருவத்தியானம் கூறுகின்றது.

## 1015.உத்தமன் சோதி உளனொரு பாலனாய்

1015.உத்தமன் சோதி உளனொரு பாலனாய்
மத்திம னாகி மலர்ந்தங் கிருந்திடும்
பச்சிம திக்கும் பரந்து குழிந்தன
சத்திமா னாகத் தழைத்த கொடியே.

பெரியோனாகிய சிவபெருமான் பேரொளியாயிருப்பன். அவன் கட்டிளைஞனாய், காளையாய், விளங்கித்தோன்றுவன். மேற்குத் திக்கிலும் பரந்து குழிந்த விடத்துத் திருவருள் உருவாய்த் திகழ்வன். அச் சிவனார்க்குத் திருவுருவாய் அம்மையும் அமைவள். பாலன் - இளைஞன். மத்திமன் - காளை. சத்திமான் - திருவருள் உருவாக உடையவன். கொடி - திருவருளாகிய அம்மை.

மத்திமன் - குண்டத்தின் நடு. பச்சிமம் - மேற்கு.

## 1016.கொடியாறு சென்று குலாவிய குண்டம்

1016.கொடியாறு சென்று குலாவிய குண்டம்
அடியிரு கோணமாய் அந்தமும் ஒக்கும்
படியே முலகும் பரந்த சுடரை
மடியாது கண்டவர் மாதன மாமே.

ஓமகுண்டத்தின்கண் வரையப்பட்ட கோட்டின் வழியே சென்று விளங்கும் அடிப்பகுதியில் இருகோணம் முதலும் முடிவும் ஒத்துள்ள பான்மையாக வரைக. முறையாக ஏழுலகும் நிறைந்திருக்கும் பேரொளிப் பிழம்பாகிய சிவனைச் சோர்வுறாது அகக்கண் கொண்டு நோக்குவோர் செல்வன் கழலேத்தும் செல்வம் எய்தியவராவர். கொடி - கோடு. படி - முறைமை. மாதனம் - திருவடிச் செல்வம்.

## 1017.மாதன மாக வளர்கின்ற வன்னியைச்

1017.மாதன மாக வளர்கின்ற வன்னியைச்
சாதன மாகச் சமைந்த குருவென்று
போதன மாகப் பொருந்த உலகாளும்
பாதன மாகப் பரிந்தது பார்த்தே.

இறவாப் பெருஞ் செல்வமாக விளங்கும் ஓமத் தீயினைப் பயிற்சி முறையாகச் சமைந்த அறிவிப்பு முறையென்று கொள்ள உலகெலாம் ஆளும் சிவபெருமான் பேரருளோடு ஆழ்ந்து நோக்கியருள்வன். போதனம் - அறிவிப்பு. பார்த்துப்பரிந்தது எனக் கூட்டுக.

வன்னி - நவகுண்ட அக்கினி, பாதனமாக - ஆழ்ந்து.

## 1018.பார்த்திடம் எங்கும் பரந்தெழு சோதியை

1018.பார்த்திடம் எங்கும் பரந்தெழு சோதியை
ஆத்தம தாகவே யாய்ந்தறி வாரில்லை
காத்துட லுள்ளே கருதி இருந்தவர்
மூத்துடல் கோடி யுகங்கண்ட வாறே.

எல்லா இடங்களிலும் நிறைந்து விளங்குகின்ற பேரொளியை நமக்கு எஞ்ஞான்றுமுள்ள திருவருள் துணை என்று அறிவாரிலர்.
பேரொளியினை ஓமகுண்டத்து அவியாது காத்து அதன் வழியாகச் சிவபெருமானை எண்ணியிருந்தவர் மெய்யுணர்வு பழுத்து உடல்கெடாது கோடிக்கணக்கான ஊழிகள் கண்டு வாழ்வர். ஆத்தம் - துணை. மூத்து - பழுத்து. உகம் - ஊழி.

ஆத்தமதாக - உபகாரம் உள்ளதாக. காத்து - நவகுண்ட அக்கினியைக் காப்பாற்றி, பூசித்து.

## 1019.உகங்கண்ட ஒன்பது குண்டமும் ஒக்க

1019.உகங்கண்ட ஒன்பது குண்டமும் ஒக்க
அகங்கண்ட யோகியுள் நாடி எழுப்பும்
பயங்கண்டு கொண்டஇப் பாய்கரு வொப்பச்
சகங்கண்டு கொண்டது சாதன மாமே.

தொன்மை தொட்டுப் போற்றிவருகின்ற ஒன்பது திருவருள் ஆற்றலைக் குறிக்கும் ஒன்பது (346) ஓமகுண்டமும் அகத்தவத்தாராகிய யோகிகள் அகத்தே வளர்த்துப் பயிலுவர். கருவுக்கு அஞ்சி வாழும் அவர்களின் பிறப்பு நீங்குவது ஒப்ப இவ்வுலகப் பிணிப்பும் நீங்கும். அங்ஙனம் நீங்க இவ் வோமப் பயிற்சி துணையாகும்.

உகங் கண்ட - பழமையான

## 1020.சாதனை நாலு தழல்மூன்று வில்வயம்

1020.சாதனை நாலு தழல்மூன்று வில்வயம்
வேதனை வட்டம் விளையாறு பூநிலை
போதனை போதைஞ்சு பொற்கய வாரண
நாதனை நாடு நவகோடி தானே.

செந்நெறிச் செல்வர்கள் பயிலும் நிலை சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்னும் நான்காகும். ஞாயிறு, திங்கள், தீ என்னும் தழல் வண்ணன் முக்கண்ணையும் குறிக்கும் தழல் மூன்று. இம் மூன்றன் அடையாளம் முறையே வட்டம், பிறை, முக்கோணம் என்ப. அத்தழல் அழகிய வட்டக் குண்டத்தின்கண் நாற்புறமும் வீசும் ஒளித்தன்மை வாய்ந்தது. மேலும் அகத்தே விளையும் ஆறு நிலைக்களத்தைக் கொண்டது. மெய்யுணர்வுப் போதனையுமாகும். ஐம்பூதங்களுக்குச் சொல்லப்படும் ஐந்து பொழுதுமாகும். பொன்வண்ணமான பெரிய ஐராவணமென்னும் யானைக்குரிய முதல்வன் சிவபெருமான் அவனை நாடுமவர் பல வூழிகள் பயன்பெற்றுய்வர். சாதனை - பயில்வு. வேதன் - எண்டு நான்கு என்னும் எண்ணில் வந்தது. ஐ - அழகு. கயவாரணம் யானை எனக்கொண்டு அதன் முகம்போன்ற மூத்த பிள்ளையார் என்றலும் ஒன்று. ஐராவணம் ஈராயிரம் கொம்புகளையுடைய வெள்ளை யானை. இது சிவபெருமானுக்குரியது. பொன் வண்ணம் - சிறந்த வண்ணம்.

தழன்மூன்று - கொடிநிலை, கந்தழி, வள்ளி. ஆறு பூநிலை - ஆறு ஆதாரங்கள். போதஞ்சு பொற்கயம் - ஐம்பூதங்கள். வாரண நாதன் - விநாயகன்.

## 1021.மாமாயை மாயை வயிந்தவம் வைகரி

1021.மாமாயை மாயை வயிந்தவம் வைகரி
ஓமாயை உள்ளொளி ஓராறு கோடியில்
தாமான மந்திரஞ் சத்திதன் மூர்த்திகள்
ஆமா யலவாந் திரிபுரை யாங்கே.

காரிய உலகு உடல் பொருள்களுக்குக் காரணமாகிய மாமாயையும், அக் காரியமாயையும், ஒளியாகிய வைந்தவமும், செவி ஓசையும், ஓமொழியும், அதன் உள் ஒளியாகிய எழுத்துக்களும், செருக்கு, சினம், சிறுமை, இவறல், மாண்பிறந்த மானம், மாணாவுவகை என்னும் அறுபகைக்கு உடனாகும் ஆறுகோடி மாயையின் ஆற்றல்களும் தாமே இயங்கும் தன்மையவல்ல. மந்திர உருவாகிய திருவருளாற்றல் இவற்றை இயைந்தியக்குகின்றது. அதனால் அவை இயக்க இயங்கும் பொருளாகும். அவ்வாற்றலே திரிபுரை என்று வழங்கப்படும். அவ்வாறு இயைந்தியக்கினும் அவ்வாற்றல் பொருள் தன்மையால் வேறாகும். ஆறுகோடி வகையாயுள்ள மந்திரங்களென்றலும் ஒன்று. சத்திதன் மூர்த்திகளாம் என்பதற்குச் சத்தியின் எழுத்துருவங்கள் என்றலும் ஒன்று.

வயிந்தவம் - விந்து. ஓ மாயை - பிரணவம். ஆறுகோடியிற்றாமான மந்திரம் - ஆறு ஆதார மந்திர எழுத்து.

## 1022.திரிபுரை சுந்தரி அந்தரி சிந்துரப்

1022.திரிபுரை சுந்தரி அந்தரி சிந்துரப்
பரிபுரை நாரணி யாம்பல வன்னத்தி
இருள்புரை ஈசி மனோன்மனி என்ன
வருபல வாய்நிற்கு மாமாது தானே.

மூன்று பிரிவுகளாயுள்ள வட்டத்துக்குரியவள் திரிபுரை என்பர். அழகருளும் அழகினள்; உள்வெளியாயுள்ள அந்தரி; செந்நிறமுள்ள அனைத்துலகுங்காக்கும் பரிபுரை; ஆருயிரைக் காக்கும் நாரணி, பால் போலும் தூய வெண்ணிறத்தள்; இருள் போலும் கருநிறத்தள்; ஆருயிர் மனத்து உன்னித்து நின்றருளும் பெருமை வாய்ந்த மனோன்மனி; இத்தகைய சிறப்புடன் இன்னும் பலவாய் நிற்கும் முழுமுதற்றலைவி அம்மையேயாகும். மாமாது - முழுமுதற்றலைவி. இதன்கண் வரும் ஒன்பது திருப்பெயரும் ஒருபுடை யொப்பாக ஒன்பான் ஆற்றல்களையும் குறிப்பனவாகும்.

திரிபுரைசுந்தரி - மும்மலம் நீங்க அருள்செயும் சத்தி.
இருள்புரை ஈசி - கரியநிறமுள்ள சத்தி.

## 1023.தானா அமைந்தவம் முப்புரந் தன்னிடைத்

1023.தானா அமைந்தவம் முப்புரந் தன்னிடைத்
தானான மூவுரு வோருருத் தன்மையள்
தானான பொன்செம்மை வெண்ணிறத் தாள்கல்வி
தானான போகமும் முத்தியும் நல்குமே.

முப்புரமாவது இரும்பு, பொன், வெள்ளி என்னும் மூன்று பொருள்களான் இயல்பாயமைந்த கோட்டை [இவற்றை மும்மல காரியம் (329) என்பர். மும்மலம்: ஆணவம், கன்மம், மாயை இவற்றை நிறமாகக் கொள்ளின் ஆணவம் இரும்பு, கன்மம் பொன், மாயை. வெள்ளி என்ப. முக்குண நிறத்தைக் கூறுங்கால் தலைக்குணம் வெண்மை என்றும், இடைக்குணம் பொன்மை என்றும், கடைக்குணம் கருமை என்றும் கூறுப] அக் கோட்டை யகத்துக் கருமை செம்மை வெண்மை என மூன்றுரு அம்மூன்றன் கண்ணும் திகழும் ஒருருத் தன்மையள் குறித்த முந்நிறமும் தானே யானவள். கல்வியும் வாழ்வும் பேறும் தானாக நிற்பவள் அம் மூன்றையும் நல்கியருள்வன். போகம் - வாழ்வு. முத்தி - பேறு. 'நாகத்தணையானும் நளிர்மாமலரானும் போகத்தியல்பினாற் பொலிய' அருள்வதூஉம் திருவருளம்மையேயாகும்.

ஒருத்த - ஒடு உற்ற.

## 1024.நல்குந் திரிபுரை நாதநா தாந்தங்கள்

1024.நல்குந் திரிபுரை நாதநா தாந்தங்கள்
பல்கும் பரவிந்து பாரண்ட மானவை
நல்கும் பரைஅபி ராமி அகோசரி
புல்கு மருளுமப் போதந்தந் தாளுமே.

குறித்த மூன்றையும் அளித்தருளும் அம்மை நாத நாதாந் தங்களாகிய முப்பத்தாறு மெய்களும் பரவி நிலைப்பதற்கு நிலைக்களமாகி மேலொளியாகும். மேலொளி - பரவிந்து. நிலவுலக முதலிய எல்லா அண்டங்களையும் படைத்தருளும் பரை. அழகும் விருப்பும் நிறைந்த அபிராமி. புலனுணர்வுக்கு எட்டாதவள். பொருந்திய அருளையும் அழகிய திருவடி யுணர்வையும் தந்தருளிக்காப்பவளாவள். ஆளும் - காக்கும்.

## 1025.தாளணி நூபுரஞ் செம்பட்டுத் தானுடை

1025.தாளணி நூபுரஞ் செம்பட்டுத் தானுடை
வாரணி கொங்கை மலர்க்கன்னல் வாளிவில்
ஏரணி அங்குச பாசம் எழில்முடி
காரணி மாமணிக் குண்டலக் காதிக்கே

நீருண்ட கரிய மேகம் போலும் அழகிய அம்மை திருவடியின்கண் சிலம்பணிந்தவள். செம்மைநிறம் பொருந்திய பட்டுடை உடுத்தவள். கச்சுப்பூண்ட மார்பினள். நான்கு திருக்கைகளிலும் முறையே கரும்பு வில்லும், பூவாளியும், அழகிய தோட்டியும், கயிறும் உடையவள். அழகிய திருமுடியும் உடையவள். சிறந்த மணி அழுத்திய குண்டலக்காதினையுடையவள். இத்தகைய வடிவமாக அம்மையை நினைக்க. நினைத்தல் - தியானித்தல். அங்குசம் - தோட்டி. பாசம் - கயிறு. கன்னல் - கரும்பு. வாளி - கணை.

இது தியான உருவம் கூறியது, மலர்வாளி, கன்னல் வில், அங்குசம், பாசம் கொண்ட நான்கு கரங்கள்.

## 1026.குண்டலக் காதி கொலைவிற் புருவத்தள்

1026.குண்டலக் காதி கொலைவிற் புருவத்தள்
கொண்ட அரத்த நிறமன்னு கோலத்தள்
கண்டிகை யாரங் கதிர்முடி மாமதிச்
சண்டிகை நாற்றிசை தாங்கிநின் றாளே.

ஆருயிர்கள் உய்தற்பொருட்டு அம்மைகொண்ட திருக்கோலம் வருமாறு: குண்டலக்காதும், கொல்லும் தகுதி வாய்ந்த விற்போலும் புருவமும், ஆடை அணி பூச்சு முதலிய அனைத்தும் செம்மை நிறம் வாய்ந்தனவும், சிவமணி மாலையும், ஒளிமணி முடியும் ஆகும். அவள் தானே விளங்கும் இயற்கையுணர்வினையும் உடையவள். சண்டிகை என்னும் திருப்பெயரினள். எப் புலத்துள்ளவர்களும் அம்மையை வழிபடும் பொருட்டு அவள்பால் வேண்டிப்பெற்ற வரப்பேற்றால் அம்மைகொண்ட திருக்கோலம் இதுவாகும்.

சண்டிகை - அம்பிகையின் பெயர்.

## 1027.நின்ற திரிபுரை நீளும் புராதனி

1027.நின்ற திரிபுரை நீளும் புராதனி
குன்றலில் மோகினி மாதிருக் குஞ்சிகை
நன்றறி கண்டிகை நாற்கால் கரீடணி
துன்றிய நற்சுத்த தாமரைச் சுத்தையே.

உயிருய்யக் கலந்துநிற்கும் அம்மை திரிபுரை என்று சொல்லப்பெறுவள். நிலைபெற்ற தொன்மையள். நிலைபெற்ற - ஒரு தன்மையாயுள்ள. குறையாத அழகுடையவள். அழகுமிக்க கூந்தலையுடையவள். சிவனெறி அடையாளமாம் சிவமணி பூண்டவள். நான்கு உரல்போலும் கால்களையுடைய பிடியானையை ஊர்பவள். நெருங்கிய பல இதழ்களையுடைய தூய தாமரையில் வீற்றிருக்கும் தூயவுடம்பினள். குன்றலில் - குறைதலில்லாத. மோகினி - அழகினையுடையவள். மாது - அழகு.

குன்றலில் மோகினி - குறைதல் இல்லாத அழகினை உடையவள். நாற்கால் கரீடணி - யானை வாகனம் உடையவள்.

## 1028.சுத்தவம் பாரத் தனத்தி சுகோதயள்

1028.சுத்தவம் பாரத் தனத்தி சுகோதயள்
வத்துவ மாயா ளுமாசத்தி மாபரை
அத்தகை யாவும் அணோரணி தானுமாய்
வைத்தவக் கோல மதியவ ளாகுமே.

தூய கச்சினையும் முத்துமாலையினையும் அணிந்த மார்பினையுடையவள். இன்ப வூற்றாம் இயல்பினள். மாயையைத் தொழிற்படுத்தும் பொருளாயுள்ளவள். உமையவள், ஆற்றலள், பெரும்பொருட் செல்வி, முதலிய சிறப்புப் பெயரினள். அன்பருள்ளத்துறையும் அழகினள். இத்தகைய கோலங்களோடு கூடிய அம்மை மெய்யுணர்வு உருவினளா
கும். வம்பு - கச்சு. ஆரம் - முத்துமாலை. தனத்தி - முலையாகிய மார்பினள். சுகம் - இன்பு. மதி - மெய்யுணர்வு.

வம்பார - கச்சு, மாலை அணிந்த. சுகோதயள் - சுக உற்பத்திக்குக் காரணம் ஆனவள். வத்துவம் - மாயை.

## 1029.அவளை யறியா அமரரும் இல்லை

1029.அவளை யறியா அமரரும் இல்லை
அவளன்றிச் செய்யும் அருந்தவம் இல்லை
அவளன்றி ஐவரால் ஆவதொன் றில்லை
அவளன்றி யூர்புகு மாறறி யேனே.

திருவருளாற்றலை உணராத தேவர்களும் இலர். திருவருள் துணையின்றிச் செய்யும் சீரிய தவமுமில்லை. அவள் துணையின்றி அருந்தவப்பேற்றால் படைத்தல் முதலிய ஐந்தொழில்களைச் செய்யும் ஐங்கடவுளராலும் ஆவதொன்றில்லை. அவள்தன் அருள் துணையில்லாமல் திருவடிப்பேறு கைகூடச் செய்யும் செந்நெறியும் இல்லை.

ஐவர் - ஐந்து ஆதார மூர்த்திகள். ஊர்- முத்தி உலகம்.

## 1030.அறிவார் பராசத்தி ஆனந்தம் என்பர்

1030.அறிவார் பராசத்தி ஆனந்தம் என்பர்
அறிவா றறிவுரு வாமவள் என்பர்
அறிவார் கரும மவளிச்சை என்பர்
அறிவார் பரனு மவளிடத் தானே.

திருவடியுணர்வு கைவந்த மெய்கண்டார் அருளம்மையின் திருவுரு பேரின்பம் என்பர். அறிவுரு எனவும் கூறுவர். ஐந்தொழிலும் அவளது விழைவாகிய திருவுள்ளம் என்பர். விழுமிய முழுமுதற் சிவனும் அவளிடமாகக் கொண்டு திகழ்பவன் என்பர். ஆனந்தம் - பேரின்பம். இச்சை - விழைவு. மெய்கண்டார்: செம்பொருட்டுணிவினர்.

சத்தி, சிவம் வேறின்றி உள்ள நிலையைக் கூறிற்று இம் மந்திரம்.

## 1031.தான்எங் குளன்அங் குளள்தையல் மாதேவி

1031.தான்எங் குளன்அங் குளள்தையல் மாதேவி
ஊன்எங் குளதங் குளன்உயிர்க் காவலன்
வானெங் குளதங் குளமந்த மாருதம்
கோனெங்கும் நின்ற குறிபல பாரே.

தான் என்று சொல்லப்படும் அச் சிவபெருமான் எங்கெலாம் உளன் அங்கெலாம் தையல் மாதேவியாகிய திருவருளம்மையும் அவனைவிட்டுப் பிரியாது அங்கெல்லாம் (1030) உளள். இயங்கு திணை நிலைத்திணையாகிய இருசார் உடம்புகள் எங்கெலாம் உள அங்கெலாம் பொருந்திய உயிர்க்குயிராய்க் காவலனாயுளன் சிவன். வெளி எங்கெலாம் உள்ளது அங்கெலாம் ஆருயிர்க்கு இன்பந்தரும் தென்றற் காற்றாயுளன். இவையே எல்லா இடங்களிலும் நீக்கமறச் சிவபெருமான் நிறைந்து நிற்கும் பல்வேறு குறியாம் என்பர். மந்தமாருதம் - தென்றற்காற்று. 'வானெங்குளவங் குளேவந்து மப்பாலாம்' என்னும் பாடத்திற்கு வானுள்ள இடமெல்லாம் சிவன் வந்து நிறைந்தும் அதற்கு அப்பாலும் உளன் என்று பொருள் கூறுக.

சத்தியும் சிவமும் உலகில் பிரிவின்றி நின்ற நிலையைக் கூறிற்று இம்மந்திரம்.

## 1032.பராசத்தி மாசத்தி பல்வகை யாலுந்

1032.பராசத்தி மாசத்தி பல்வகை யாலுந்
தராசத்தி யாய்நின்ற தன்மை யுணரா
உராசத்தி ஊழிகள் தோறும் உடனே
புராசத்தி புண்ணிய மாகிய போகமே.

மேலாகிய ஆற்றலும், பெரிதாகிய ஆற்றலும் உடையவள் அம்மை. பலவகையாலும் உலகு உடல் உயிர்களைத் தாங்கும் ஆதார ஆற்றலுடையவளும் அவளே. மெய்யுணர்வு வடிவமாக இருப்பவளும் அவளே. இவைகளே அவள்தம் திருவுருவங்கள். யாவர்க்கும் விருப்பத்தை அருள்பவளும் அவளே. எல்லாவூழிகளிலும் ஆருயிர்களைப் புரக்கும் ஆற்றல் உடையவளும் அவளே. புண்ணியப்பயனைத் தந்தருளும் வாழ்வும் அவளே. வாழ்வு - போகம். பராசத்தி மாசத்தி என்பன அடையடுத்துநின்ற பண்புப் பெயர்கள். தராசத்தி - தாங்கும் ஆற்றல். யுணரா உராசத்தி: யுணராவுரு, ஆசத்தி என்று பிரித்தல்வேண்டும். புரா - புரக்கும்.

பராசத்தி - எங்கும் வியாபித்துள்ள சத்தி. தராசத்தி - ஆதாரசத்தி. உராசத்தி - பொருந்தும் சத்தி. புராசத்தி - திரிபுரை சுந்தரி.

## 1033.போகஞ்செய் சத்தி புரிகுழ லாளொடும்

1033.போகஞ்செய் சத்தி புரிகுழ லாளொடும்
பாகஞ்செய் தாங்கே பராசத்தி யாய்நிற்கும்
ஆகஞ்செய் தாங்கே அடியவர் நாள்தொறும்
பாகஞ்செய் ஞானம் படர்கின்ற கொம்பே.

ஆருயிர்க்கு வினைக்கீடாக விரும்பிய வாழ்வினையருளும் நகரப் பொருளாகிய நடப்பாற்றல் அவ் வுயிர்களுடன் இணைந்து கன்ம ஒப்பு வரச் செய்து அவ்விடத்தே வகரப் பொருளாகிய வனப்பாற்றலாக நிற்பன். போகஞ் செய்சத்தி 'ந' பராசத்தி 'வ'. ஆருயிர்களின் நெஞ்சிடத்து நின்று அடியவர்களுக்கு நாளும் திருவடியுணர்வு பெருகச் செய்யும் கொழுகொம்பொத்த செல்வியாவள்.

ஆகம்செய்து - மனத்தில் இருத்தி. பாகம்செய் - முதிர்ச்சி பெறும்.

# 1034.கொம்பனை யாளைக் குவிமுலை மங்கையை

1034.கொம்பனை யாளைக் குவிமுலை மங்கையை
வம்பவிழ் கோதையை வானவர் நாடியைச்
செம்பவ ளத்திரு மேனிச் சிறுமியை
நம்பிஎன் உள்ளே நயந்துவைத் தேனே.

கொம்புபோன்று துவளும் இடையினை உடையாளை, குவிந்த அழகிய மார்பினையுடைய மங்கையை, மணங்கமழ்கின்ற மலர்சூடிய கூந்தலையுடையாளை, சிவவுலகத்துள்ளார் இடையறாது சிந்தித்துத் தொழும் செல்வியை, செம்மையான பவழம்போலும் திருமேனியை உடைய இளநங்கையை மும்மைக்கும் பெருந்துணையென்று உறுதியாக நம்பி மிக விரும்பி என் உள்ளத்துள்வைத்தேன். சிறுமி - கௌரி: எட்டு அல்லது பத்து ஆண்டுப் பருவப்பெண். வானவர் நாடியை என்பதற்குத் தேவ வாழ்வினையுடையாளை என்றும் கூறுவர்.

வானவர்நாடி - தேவர்களால் விரும்பிப் பூசிக்கப்படுபவள்.

## 1035.வைத்த பொருளும் மருவுயிர்ப் பன்மையும்

1035.வைத்த பொருளும் மருவுயிர்ப் பன்மையும்
பத்து முகமும் பரையும் பராபரைச்
சித்தக் கரணச் செயல்களுஞ் செய்திடுஞ்
சத்தியும் வித்தைத் தலையவ ளாமே.

அருளால் தோற்றுவித்துள்ள உலகுடல் உண்பொருள்களும் அப் பொருள்களுடன் இணைத்துவைக்கப்பெற்ற அழிவில்லாத பலவுயிர்களும், பத்துத்திசையிலும், நிறைந்து நின்றியக்கும் பான்மையால் பத்து முகமுடையவளும், நடப்பாற்றலாகிய பரையும், வனப்பாற்றலாகிய பராபரையும், அகக்கரணமாகிய எண்ணம், மனம், எழுச்சி, இறுப்பு என்னும் நான்கினையும் செயல்படுத்துபவளும், எல்லாவற்றையும் இயக்கும் முதல்வியும் ஆகிய உலகீன்ற அம்மை திருவடியுணர்வின் தலைவியாவாள். வித்தை - திருவடியுணர்வு; மெய்யுணர்வு; பதிஞானம்; பிரம வித்தை.

# 1036.தலைவி தடமுலை மேல்நின்ற தையல்

1036.தலைவி தடமுலை மேல்நின்ற தையல்
தொலைவில் தவஞ்செயுந் தூய்நெறித் தோகை
கலைபல வென்றிடுங் கன்னியென் உள்ளம்
நிலைபெற இங்கே நிறைந்துநின் றாளே.

திருவருளம்மை அண்ணாந்து ஏந்திய வனமுலையினையுடைய தையலாகிய தலைவி. அவளே கெடாத நற்றவஞ்செய்யும் செந்நெறித்தோகை. மறைமுறை முதலாகிய உறுதி நூல்களும், இலக்கண இலக்கிய முதலிய எழில் நூல்களும் உலகுய்ய உள்நின்று உணர்த்தியருளிய என்றும் ஒருபடித்தாம் கன்னியாவளும் அவளே. அவ் அம்மை கன்னியானமையால் அவள்தம் திருமுலை கை வாய்ப்படாதது. அவள் பிறவாப் பிறவியள் ஆதலின் அவளும் முலையுண்ணாதவள், என்னுள்ளம் அவள்பால் நிலைபெற்று நிற்பதன்பொருட்டு வெளிப்பட்டு நிறைந்து நின்றனள். மறை - வேதம். முறை - ஆகமம்.

கலைபலவென்றிடுங் கன்னி - வேதங்கள் ஆகமங்கள் வல்ல சத்தி.

## 1037.நின்றவள் நேரிழை நீள்கலை யோடுற

1037.நின்றவள் நேரிழை நீள்கலை யோடுற
என்றன் அகம்படிந் தேழுல குந்தொழ
மன்றது வொன்றி மனோன்மனி மங்கலி
ஒன்றனோ டொன்றிநின் றொத்தடைந் தாளே.

நிறைந்து நின்ற அத் திருவருளம்மை சிறந்த அணிகலன் களையுடையவள். அழிவில்லாத நிறைந்த முழுக் கலைகளுடன் என் நெஞ்சகத்து வீற்றிருந்தனள். அவளே எல்லாவுலகினரும் வந்து எளிதாகத் தொழும்படி பொன்னம்பலத்தின்கண் பொருந்தி நின்றனள். மனோன்மனி எனவும், மங்கலம் உடையவளெனவும் அழைக்கப்படுபவளும் அவளே. அவள் சிவத்துடன் வேறற ஒன்றிநின்று யாண்டும் ஒத்து உறைந்தனன் என்க. மங்கலம்: மாண்கலம் என்பதன் மருவாகும்.

ஒன்றென ஒன்றி - சிவத்தோடு ஒன்றாகக் கலந்து.

## 1038.ஒத்தடங் குங்கும லத்திடை யாயிழை

1038.ஒத்தடங் குங்கும லத்திடை யாயிழை
அத்தகை செய்கின்ற வாய பெரும்பதி
மத்தடை கின்ற மனோன்மனி மங்கலி
சித்தடைக் கும்வழி தேர்ந்துண ரார்களே.

சிவத்துடன் யாண்டும் மரமும் காழ்ப்பும்போல உடனொத்து அடங்கி நிற்கும் தாமரை யிருக்கையினையுடைய செல்வி தகுதி வாய்ந்த அருட்செயல்புரிந்த பெருமுதல்வி. களிப்படையச் செய்யும் மனோன்மனி, மங்கல மாண்பினள் என்னும் திருவருள் தன்னை வழிபடுவார்க்குப் பல்வேறு சித்திகளையும் எளிதாக அடைவிக்கும் நன்னெறியினைச் சிலர் உணராதிருக்கின்றனர். மத்து - களிப்பு.

சித்தடைக்கும் வழி - சித்துக்களை அடையும் மார்க்கம்.

## 1039.உணர்ந்துட னேநிற்கும் உள்ளொளி யாகி

1039.உணர்ந்துட னேநிற்கும் உள்ளொளி யாகி
மணங்கமழ் பூங்குழல் மங்கையுந் தானும்
புணர்ந்துட னேநிற்கும் போதருங் காலைக்
கணிந்தெழு வார்க்குக் கதியளிப் பாளே.

ஆருயிர்கட்கு விளக்கும் கருவியாக அமைந்து சிவத்துடன் கூடி உடனாய்நிற்பள். அகவொளியாய் விளங்குவள். மலர்சூடிய கூந்தலையுடைய மங்கையும் அத் திருவுருவுள் விளங்கும் சிவமுடன் ஒன்றாய் வெளிப்பட்டு அருள்வள். அப்பொழுது அவ் அம்மையைத் தூய மனத்துள் நாடிமுயல்வார்க்கு அவள் நன்னிலையை நல்கியருள்வள். கணிந்தெழுதல் - நாடிமுயலுதல்; சிந்தித்துமுயலுதல். கதி - நன்னிலை.

உடனே - சிவத்துடனே கணிந்து சிந்தித்து.

## 1040.அளியொத்த பெண்பிள்ளை ஆனந்த சுந்தரி

1040.அளியொத்த பெண்பிள்ளை ஆனந்த சுந்தரி
புளியுறு புன்பழம் போலுள்ள நோக்கித்
தெளியுறு வித்துச் சிவகதி காட்டி
ஒளியுற வைத்தென்னை உய்யவுண் டாளே.

அனைத்துயிர்களிடத்தும் சமமான தலையளி செய்யும் பெண்பிள்ளை. பேரின்பப் பேரழகி. மெய்யடியார் உள்ளம் புளியம் பழமும் தோடும் ஒன்றாயிருந்தும் ஒட்டுப்பற்றின்றி நிற்பதுபோல் உலகியலில் பற்றின்றிநிற்கும். அந் நிலையினைநோக்கி உண்மையினைத் தெளிவிப்பள். உயிரின் அழியாத் தன்மையினையும் சிவனுடன் கூடும் பேரின்ப நிலையினையும் காட்டுவள். அதன்பின் திருவடியுணர்வு வண்ணமாய் நம்மை ஆக்குவள். அம் முறையில் அடியேனையும் உய்யக் கொண்டாள் என்க. சித்து - அறிவு. திருவடியுணர்வு - சிவஞானம்.

அளியொத்த - யாரிடத்தும் சமமான கருணை.

## 1041.உண்டில்லை என்ற துருச்செய்து நின்றது

1041.உண்டில்லை என்ற துருச்செய்து நின்றது
வண்டில்லை மன்றினுள் மன்னி நிறைந்தது
கண்டிலர் காரண காரணி தன்னொடு
மண்டல மூன்றுற மன்னிநின் றாளே.

கண்ணுக்கும் கை முதலிய புலன்கட்கும் புலனாவது உருவம். கண்ணுக்குப் புலனாகாத உருவம் அருவம். இவ்விரண்டினை படைத்தருள நிலையாக நின்றனள் அம்மை. தில்லைச்சிற்றம்பலத்தின்கண் என்றும் நீங்காது அருட்கூத்துநோக்கி உறைபவளும் அவளே. காரணப் பொருள்கள் அனைத்தினுக்கும் காரணமாய் நிற்கும் முதல்வி. உடல்மெய், உணர்வுமெய், உணர்த்துமெய் என்னும் மாயாகாரியத்தத்துவ மண்டலம் மூன்றினும் நிலைபெற்று இயக்கி நின்றனள். உடல்மெய் - ஆன்ம தத்துவம் இருபத்துநான்கு. உணர்வு மெய் - வித்தியா தத்துவம் ஏழு. உணர்த்து மெய் - சிவதத்துவம் ஐந்து.

உண்டு, இல்லை என்றது உரு - உரு, அரு.

## 1042.நின்றா ளவன்றன் உடலும் உயிருமாய்ச்

1042.நின்றா ளவன்றன் உடலும் உயிருமாய்ச்
சென்றாள் சிவகதி சேரும் பராசத்தி
ஒன்றாக என்னுட் புகுந்துணர் வாகியே
நின்றாள் பரஞ்சுடர் ஏடங்கை யாளே.

சிவபெருமானின் உடலும் உயிருமாக என்றும் நிற்பவள் திருவருளம்மை. மெய்யடியார்களைச் சிவனிலையில் சேர்ப்பிக்கும் வனப்பாற்றலாகிய அருளம்மை, என் நெஞ்சத்தில் கலப்பால் ஒன்றாய்ப், பொருட்டன்மையால் வேறாய், உயிர்க்குயிராதல் தன்மையால் உடனாய்ப் புகுந்து நின்றனள். பேருணர்வாகவே நின்றனள். பேரொளியாக நின்றனள். செந்தமிழ் மறையும்முறையும் வரைந்த திருஏடு அங்கையிலுள்ளவள். அவன் - சிவபெருமான். பராசத்தி - வனப்பாற்றல்.

## 1043.ஏடங்கை நங்கை இறைஎங்கள் முக்கண்ணி

1043.ஏடங்கை நங்கை இறைஎங்கள் முக்கண்ணி
வேடம் படிகம் விரும்பும்வெண் தாமரை
பாடுந் திருமுறை பார்ப்பனி பாதங்கள்
சூடுமின் சென்னிவாய்த் தோத்திரஞ் சொல்லுமே.

செந்தமிழ் மறைமுறை ஏட்டைத் திருக்கையிலுடைய நங்கை. தலைமைப் பாடமைந்த மூன்று திருக்கண்களையுடைய நம்தலைவி. படிகம்போலும் தூயவெண்ணிறத்தள். வெண்டாமரை இருக்கையை விரும்புபவள். திருமுறை பாடும் திருவாயினள். பேரருள் வாய்ந்த அந்தணாட்டி. அப் பெருமாட்டியின் திருவடிகளை நம்தலை சூடுமாக. அவளுடைய பொருள்சேர் புகழை நம்வாய் பாடுமாக வேடம் - கோலம். பார்ப்பனி - அந்தணாட்டி சென்னி - தலை. தோத்திரம் - புகழ். ஏடு தொடங்குவித்து இறையருளால் எழுத்தறிவிக்கும் ஆசான் இதனை ஓதியும் ஓதுவித்தும் எழுத்தறிவிப்பன். எழுத்தறிவித்தல் - ஏடு தொடங்குதல்.

ஏடங்கை நங்கை - வேதம் ஆகமங்களைச் சுவடி உருவமாகக் கையில் வைத்துள்ள மனோன்மனி. [இதனால் சதாசிவ தத்துவம் ஆரம்பத்திலேயே வேதாகமங்கள் எழுதப்பட்டுச் சுவடி உருவமாய்ச் சத்தி கையில் இருந்தன என்று ஏற்படுவதாலும், வடமொழி எழுத்தில்லாத மொழியானதாலும், எழுதும் மொழி தமிழ் ஆனபடியாலும், வேதாகமங்கள் தமிழ் மொழியிலேயே இருந்தன என்றும், அது பிற்காலத்தில் தமிழ் நாடாகிய

இந்தியாவுக்கு ஆரியர்கள் வந்த காலத்தில் தமிழ் எழுத்துக்களாகிய கிரந்தத்திலும், தமிழின் வழிமொழியாகிய பஞ்ச திராவிடத்தில் ஒன்றான மராட்டிய (தேவநாகரம்) எழுத்துக்களிலும் எழுதப்பட்டன என்பது தெளிவாகின்றது]

## 1044.தோத்திரஞ் செய்து தொழுது துணையடி

1044.தோத்திரஞ் செய்து தொழுது துணையடி
வாய்த்திட ஏத்தி வழிபடு மாறிரும்
பார்த்திடு மங்குச பாசம் பசுங்கரும்பு
ஆர்த்திடும் பூம்பிள்ளை யாகுமாம் ஆதிக்கே.

திருமுறைகளை ஓதிப்புகழ்ந்து தொழுக. இரண்டு திருவடிகளையும் பேறு வாய்க்குமாறு ஏத்தி என்றும் வழிபடு நெறியில் உறைத்து நிற்க தோட்டியும் கயிறும், கரும்பு வில்லும் பூங்கணையும் உடையவள் அம்மை. சிவமெய்யினின்றும் சிவைமெய் தோன்றினமையால் அவள் பிள்ளை முறையாகுமாம், நடப்பாற்றலாகிய ஆதித் திருவருளுக்கு என்க. சிவை - சத்தி. மெய் - தத்துவம்.

வழிபடும் ஆறு இரும் - வழிபாடு செய்யும் நெறியில் நில்லுங்கள்.

## 1045.ஆதி விதமிகத் தண்டந்த மால்தங்கை

1045.ஆதி விதமிகத் தண்டந்த மால்தங்கை
நீதி மலரின்மேல் நேரிழை நாமத்தைப்
பாதியில் வைத்துப் பலகாற் பயில்விரேல்
சோதி மிகுத்துமுக் காலமுந் தோன்றுமே.

சிவபெருமானின் ஆதித் தொழிலாகிய படைப்புப்பெருக, பேரளியாகிய பெருங்கருணைபுரிந்தவள் திருமாலின் தங்கை. அந்நேரிழையின் திருப்பெயராகிய நமசிவய என்னும் தமிழ் ஐந்தெழுத்து அருள் மந்திரத்தை முறையாக எட்டிதழ்த் தாமரை வரைந்து அதன் மத்தியில் அமைக்க. பலமுறை உருவேற்றத் திருவருள்ஒளி பெருகும். அது பெருக, அகக்கண் திறந்து முக்காலவுணர்ச்சியும் கைகூடும். இதனை யோகக் காட்சி என்ப. திருமால் - பேரன்பு வாய்ந்த பித்தனார்; சிவபெருமான். முக்காலம்: இறப்பு, நிகழ்வு, எதிர்வு. தண் - பெருங்கருணை.

## 1046.மேதாதி ஈரெட்டு மாகிய மெல்லியல்

1046.மேதாதி ஈரெட்டு மாகிய மெல்லியல்
வேதாதி நூலின் விளங்கும் பராபரை
ஆதார மாகியே ஆய்ந்த பரப்பினள்
நாதாதி நாதத்து நல்லரு ளாளே.

உணர்த்துமெய் ஐந்தும், உணர்வுமெய் ஏழும், உட்கலன் நான்கும் ஆகப் பதினாறுமெய்களும் அம்மையால் இயக்கப்படுகின்றன. அதனால் அம் மெய்யினை அவளாகவே கூறுவர். உலகுயிர்கட்கு ஆதாரமாய் எங்குஞ் செறிந்தவள். ஒலியும் அப்பால் ஒலியுமாகிய நாதநாதாந்தத்தள். அவள் நமக்கு நல்லருள் புரிவாள். மேதை - அறிவு; சுத்தவித்தை.

மேதாதி ஈரெட்டு - மேதை முதலிய தத்துவங்கள் பதினாறு.

## 1047.அருள்பெற் றவர்சொல்ல வாரீர் மனிதர்

1047.அருள்பெற் றவர்சொல்ல வாரீர் மனிதர்
பொருள்பெற்ற சிந்தைப் புவனா பதியார்
மருளுற்ற சிந்தையை மாற்றி யருமைப்
பொருளுற்ற சேவடி போற்றுவன் நானே.

குருவருள்பெற்றுத் திருவைந்தெழுத்து ஓதும் நிறையருள் பெற்றவரே உண்மை சொல்லவாரீர். நன்னெறி எய்தாத ஏனை மக்கள் திருவருள் பெற்று மேலுலகங்களில் தலைமையாக இருப்பவரையும் முத்தொழில் புரிவோரையும் மெய்த்தேவரெனவே மயங்கி வழிபட்டு மருள்நிறைந்த சிந்தையராகின்றனர். அவர்தம் மனமயக்கத்தை மாற்றிப் பேரின்பப் பெருவாழ்வை நல்கியருளும் சிவபெருமான் ஒருவனே பிறப்பு இறப்பில்லாத பெருங்கடவுளென்போம்.

சொல்ல - பிறர்க்கு எடுத்துரைக்க. பொருள் - இன்பப் பொருள். புவனாபதியார் - பிரமன் முதலிய பதவியாளர்கள். மருளுற்ற சிந்தை - புவனாதிபதிகளைப் பரம்பொருள் எனக் கருதும் மயக்க உணர்வு. அருமைப்பொருள் - முத்திச் செல்வத்தை நல்கும்.

## 1048.ஆன வராக முகத்தி பதத்தினள்

1048.ஆன வராக முகத்தி பதத்தினள்
ஈன வராகம் இடிக்கும் முசலத்தோ
டேனை யுழுபடை ஏந்திய வெண்ணகை
ஊன மறவுணர்ந் தாருளத் தோங்குமே.

இயற்கை உழுபடை போன்ற வெண்பன்றிமுகத்தினள். அதற்கொத்த திருவடியினள். நன்னெறிச் செல்லாது புன்னெறிச் செல்லும் புரையோரை நன்னெறிப்படுத்தும் பொருட்டு அவர்தம் உடம்பினை இடித்து ஒறுக்கும் இருப்புலக்கையினையுடையவள். நன்மைக்கு அடையாளமாகிய உழுபடையாகிய ஏரினைக் கைக்கொண்டவள். பால் நிலவுபோலும் வெள்ளிய நகையினையுடையவள். திருவடியுணர்வு கைவந்த செந்நெறிச் செல்வர்கள் உள்ளத்துப் பிறப்புக்கு வித்தாம் மலப்பசை வந்து பொருந்தாது நீங்க வீற்றிருந்து உணர்வொளியாக ஓங்குவள். ஈனவர் - புன்னெறிச் செல்வோர். முசலம் - இருப்புலக்கை. புரையோர் - கீழோர். ஊனம் - மலப்பசை. ஆன....தி: நன்னெறியாளர் உள்ளத்து விரும்பியிருப்பவள் என்றலும் ஒன்று.

வராகமுகத்தி - வராகி. ஈனவர் - இழிகுணம் உடையோர். முசலம் - இருப்புலக்கை.

## 1049.ஓங்காரி என்பா ளவளொரு பெண்பிள்ளை

1049.ஓங்காரி என்பா ளவளொரு பெண்பிள்ளை
நீங்காத பச்சை நிறத்தை யுடையவள்
ஆங்காரி யாகியே ஐவரைப் பெற்றிட்டு
இரீங்காரத் துள்ளே யினிதிருந் தாளே.

ஓமொழிக்கு உரியளாகிய ஒப்பில்லாத பெண்பிள்ளை. என்றும் நீங்காத மரகதமாகிய பச்சை நிறத்தினையுடையவள். எழுச்சியுடையவளாய் அருளோன், ஆண்டான், அரன், அரி, அயன் என்னும் ஐவர் நிலைகளையும் படைத்து ஐவரையும் தொழிற்படுத்தும் ஆற்றலள், இரீங்காரத்துள்ளே இனிதிருந்தனள் என்க. இரீங்காரம் மாயையின் வித்தெழுத்தென்ப. தேனுண்டு மயங்கி வீழும் வண்டொலியை ஒத்திருப்பதுங் காண்க. ஆங்காரி - எழுச்சியுடையவள்.

ஐவர் - சதாசிவன், மகேசன், உருத்திரன், மால், பிரமன்.
ரீங்காரம் - ரீம் என்பது மாயையின் பீச எழுத்து.

## 1050.தானே தலைவி யெனநின்ற தற்பரை

1050.தானே தலைவி யெனநின்ற தற்பரை
தானே யுயிர்வித்துத் தந்த பதினாலும்
வானோர் தலமும் மனமும்நற் புத்தியுந்
தானே சிவகதி தன்மையு மாமே.

தானே தலைவியென வெளிப்பட்டு உலகியலில் நின்றருளும் திருவருள் தற்பரை யாவள். இவள், நமசிவய என்பதன்கண் முதலிற் காணப்படும் நடப்பாற்றலாகிய நகரத்தின் முதல்வியாவள். ஆருயிர்கள் வினைக்கீடாகப் பிறந்துழலும் உலகங்கள் பதினாலும் அவளுடைய அருளாணைவழி நிகழ்கின்றன. ஆதலால் அத் திருவருளையே உயிர்வித்தாகக் கொண்டுரைப்பர். சிவவுலகங்களும், மனமும் இறுப்பாகிய நற்புத்தியும் அத் திருவருள் ஆணை வழிநின்று நிகழ்கின்றன. அத் திருவருளே சிவ நிலைத்தன்மையுமாகும். இது, சிவயநம என்பதன்கண் இரண்டாம் எழுத்தாகக் காணப்படும் வனப்பாற்றலாகிய வகரத்தின் முதல்வியாகும். உலகியலில் உயிர்களைத் தான் முன்நின்று நடத்துவதால் தான் முதலில் விளங்குகின்றனள். வீட்டியலில் ஆருயிர்களைச் சிவத்துடன் கூட்டி இன்புறுத்தலின் இன்பம்தரும் சிகரத்துக்குப்பின் இரண்டாவது விளங்குகின்றனள். இதற்கொப்பு உலகியலில் விருந்தினரை அழைத்து வருங்கால் முன்னும், ஊட்டுங்கால் பின்னும் இல்வாழ்வார் நின்று சிறப்புச் செய்வதாகும்.

உயிர்வித்து - உயிர்களின் உடல் கருவிகளுக்குக் காரணம்.
பதினாலும் - பதினான்கு உலகங்களும்.

## 1051. பன்னிரண் டாங்கலை யாதி பயிரவி

1051. பன்னிரண் டாங்கலை யாதி பயிரவி
தன்னில் அகாரமு மாயையுங் கற்பித்துப்
பன்னிரண் டாதியோ டந்தம் பதினாலுஞ்
சொன்னிலை சோடச மந்தமென் றோதிடே.

பன்னிரண்டு கலைவடிவான ஆதி வயிரவி இடமிருந்து அகாரமாகிய ஓசையும் மாயையாகிய ஒளியும் கூட்டி நினைந்து நோக்கக் கலை பதினான்காகும்; இப் பதினான்கும் புகழ்ந்து சொல்லப்படுகின்ற அம்மையின் இருப்பிடம். திங்களின் கலை பதினாறும் செல்வியின் சிறந்த இருப்பிடமாகும். ஓசை - ஒலி வடிவம். ஒளி - வரி வடிவம். சோடசம் - பதினாறு.

பன்...ரவி - ஆதி பயிரவியின் கலை 12. அகாரமும் மாயையும் - அகரகலையும் மாயையின் கலையும் சேர்ந்து 14 கலைகள்.

## 1052.அந்தம் பதினாலும் அதுவே வயிரவி

1052.அந்தம் பதினாலும் அதுவே வயிரவி
முந்து நடுவும் முடிவும் முதலாகச்
சிந்தைக் கமலத் தெழுகின்ற மாசத்தி
அந்தமும் ஆதியு மாகிநின் றாளே.

வயிரவியின் இருப்பிடம் முன் ஓதிய பதினான்கு கலையாகும் முதல் நடு இறுதியாகத் திகழ்பவள். நெஞ்சத் தாமரையிடத்து விளங்கும் பேராற்றல். அந்தமும் ஆதியும் ஆகிநின்றனள். இஃது, ஒடுக்கத்தையும் தோற்றத்தையும் செய்விக்கும் உரிமை உடையவள் என்பதாம்.

அந்தம் வயிரவி - வயிரவிக்குக் கலைகள் பதினாறு. சிந்தைக் கலசம் - சித்தமாகிய தத்துவம்.

# 1053.ஆகின்ற மூவரும் அங்கே அடங்குவர்

1053.ஆகின்ற மூவரும் அங்கே அடங்குவர்
போகின்ற பூதம் பொருந்து புராதரர்
சார்கின்ற சார்வுழிச் சாரார் சதிர்பெறப்
போகுந் திரிபுரை புண்ணியத் தோரே.

வயிரவியாகிய பேராற்றலினிடத்துப் படைப்போன் காப்போன் துடைப்போனாகிய முத்தேவரும் அடங்குவர். தோன்றி மறையும் மண்முதற் பூதங்கள் அங்கே ஒடுங்கும். இப் பூதங்களுடன் இயைந்து வினைக்கீடாக உலவும் தொன்மை வாய்ந்த ஆருயிர்கள் உண்மை யுணர்ந்து இப் பிறப்பினிற் சாராது அம்மையாகிய வயிரவியைச் சார்தல்வேண்டும். உடலைச் சாராது வயிரவி அம்மையின் திருவடியைச் சார்வோர், புண்ணியப் பேற்றினையுடைய பெரியவராவர். சதிரர் - செயற்கரிய செய்த பெரியோர். புண்ணியம் - நற்றவம்.

ஆகின்ற மூவர் - பிரமன், மால், உருத்திரர். போகின்ற பூதம் - அழிவெய்தும் மண் முதலிய பூதங்கள். புராதரர் - உயிர்கள்.

## 1054. புண்ணிய நந்தி புனிதன் திருவாகும்

1054. புண்ணிய நந்தி புனிதன் திருவாகும்
எண்ணிய நாட்கள் இருபத்தேழ் சூழ்மதி
பண்ணிய வன்னி பகலோன் மதியீறு
திண்ணிய சிந்தைதன் தென்னனு மாமே.

ஆருயிர்களுக்கு இன்ப வாழ்வுநல்கும் இயல்பினால் புண்ணியன் என்பர். ஆக்க நிலைக்களமாதலின் நந்தி என்பர். இயற்கைத் தூயோனாதலின் புனிதன். குறைவிலா நிறைசெல்வன் ஆதலின் திருவாகும் என்பர். விண்மீனாகிய நாட்கள் இருபத்தேழும், அவை சூழ்ந்த நடுவில் திகழும் திங்களும், விறகு முதலியன பற்றி ஒளிதரும் தீயும், ஞாயிறும் ஆகிய இப்பொருள்கள் முடிந்தமுடிவாக விளங்கும் பேரறிவுப் பொருளாகிய தென்னன் என்று சிறப்பித்துச் சொல்லப்படும் சிவபெருமான் திருவுள்ளத்தால் ஆக்கப்பெற்றன.

திரு ஆகும் - எல்லாச் செல்வங்களும் ஆகும். நாள் - மீன். தென்னவன் - சிவன்; தென்பாண்டி நாட்டான். (இப் பெயரை மாணிக்கவாசகர் எடுத்து ஆண்டுள்ளார்.)

## 1055.தென்னன் திருநந்தி சேவகன் தன்னொடும்

1055.தென்னன் திருநந்தி சேவகன் தன்னொடும்
பொன்னங் கிரியிற் பூதலம் போற்றிடும்
பன்னும் பரிபிடி யந்தம் பகவனோ
டுன்னுந் திரிபுரை ஓதிநின் றானுக்கே.

அழகிய சிவபெருமான், திருநந்தியாகிய காவலனாவான். அவனொடும் திருவெள்ளிமலையில் அனைத்துலகும் காத்தருளும் பெண் யானையனைய அம்மை வீற்றிருக்கின்றாள். திருவடிப்பேறுன்னித் திருமுறைகளை நாளும் இடையறாது ஓதிநிற்பார்க்கு அந்தம் ஆகிய பகவன் என்னும் அண்ணலோடு உறைந்து திரிபுரை ஆரருள்புரிவள்.

சேவகன் - வீரன். பொன்னங்கிரி - திருக்கயிலாயம். பன்னும் - கூறப்படுகின்ற. பரிபிடி - இரக்கமுள்ள. (இம் மந்திரத்தில் சிவனை "அந்தம் பகவன்" என்றும் வேறோர் இடத்தில் 'ஆதிபகவன்' என்றும் வழங்கியிருப்பதை நோக்குக).

## 1056.ஓதிய நந்தி உணருந் திருவருள்

1056.ஓதிய நந்தி உணருந் திருவருள்
நீதியில் வேத நெறிவந் துரைசெய்யும்
போதம் இருபத் தெழுநாள் புணர்மதி
சோதி வயிரவி சூலம்வந் தாளுமே.

மறைநூல் அருளால் ஓதியருளிய சிவபெருமானை அவனருளால் உணருங்கள். மறைவழியே முறை அருளினன். நாண்மீன் இருபத்தேழையும் பொருந்தும் திங்களையிடமாகக்கொண்டு அதற்கு அறிவு விளக்கியருள்வன். அம்மையாகிய வயிரவியும் தன் கையில் திகழும் முத்தலைவேலாகிய சூலத்தால் உலகனைத்தையும் காத்தருள்வள்.

நீதியில் - நெறிமுறையில்.

## 1057.சூலங் கபாலங்கை ஏந்திய சூலிக்கு

1057.சூலங் கபாலங்கை ஏந்திய சூலிக்கு
நாலங் கரமுள நாகபா சாங்குச
மாலங் கயனறி யாத வடிவுக்கு
மேலங்க மாய்நின்ற மெல்லிய லாளே.

சூலத்தையும், விண்ணோர் தலைமண்டை ஓட்டையும், ஏந்தி விளங்கும் சூலியாகிய சிவபெருமானுக்கு அழகிய திருக் கைகள் நான்குள. சூலமும் கபாலமும் தாங்கிய இரு திருக்கைகள்போக எஞ்சிய திருக்கைகள் இரண்டிலும் முறையே பாம்பாகிய கயிறும் தோட்டியும் உள்ளன. மாலும் அயனும் அளந்தறியமுடியாத அனற்பிழம்பாய்த் தோன்றிய முழுமுதற் சிவபெருமான் தன் திருவுருவின்கண் செம்பாக வடிவம் தனதாக்கொண்டு திகழும் அம்மை காத்தருள்வன்.

நாலங்கரமுள - நான்கு கைகள் உள. மால...மேலங்கமாய் - மாலயன் அறியாத சிவனுக்கு அங்கமாய். (இதனைத்தான் மாணிக்கவாசகர் "உடையாள் நடுவில் நீயிருத்தி") என்றார்.

## 1058.மெல்லியல் வஞ்சி விடமி கலைஞானி

1058.மெல்லியல் வஞ்சி விடமி கலைஞானி
சொல்லிய கிஞ்சுக நிறமன்னு சேயிழை
கல்லியல் ஒப்பது காணுந் திருமேனி
பல்லிய லாடையும் பன்மணி தானே.

இயற்கையாகவே பேரிரக்கம் வாய்ந்த மெல்லியலாவள். ஆருயிர்களின் வினைக்கீடாக வஞ்சித்தலும் தண்டித்தலும் உடையவள். எனினும் உண்மையானோக்கும் திருவடியுணர்வுசேர் கலைஞானிகள் ஓதுகின்ற முள்முருக்கம்பூ நிறம்போன்ற நிலைத்த செம்மை நிறமுடையவள்
அவள். மாணிக்க மணியொத்த செந்நிறம் வாய்ந்த திருமேனியுடையவளும் அவளே. அவள் கரையில் பல மணிகள்சேர் பொன்னாடையுடையவள். விடமி - தண்டிப்பவள். கல்லியல் - மாணிக்கவண்ணம். பன்மணித்தான - பல மணிகளாலமைந்தன.

விடமி - நியாயத்தைத் கடைப்பிடித்தவள். கல் - மாணிக்கக் கல். இயல் - வண்ணம். பல் இயல் ஆடை - பலவிதமான. ஆடைகள்; மேகலை, இடைகலை, கச்சு முதலியன.

## 1059.பன்மணி சந்திர கோடி திருமுடி

1059.பன்மணி சந்திர கோடி திருமுடி
சொன்மணி குண்டலக் காதி யுழைக்கண்ணி
நன்மணி சூரிய சோம நயனத்தள்
பொன்மணி வன்னியும் பூரிக்கின் றாளே.

பல மணிகள் அழுத்திய ஒளிமிக்க பல உறுப்புக்களையுடைய திருவடியும், புகழ்ந்து சொல்லப்படும் மணிகள் இழைத்த குண்டலம் அணிந்த காதும் உடையவள். மானபோலும் கண்ணையுடையவள். நல்ல விளக்கமுள்ள ஞாயிறு திங்கள் தீ என்னும் மூன்றையும் கண்ணாகவுடையவள். பொன்போல் விளங்குகின்ற தீவண்ணத் தம்மை மிகவும் களிப்புறுகின்றாள். கோடி - ஒருவகை முடியுறுப்பு. உழை - மான். நயனம் - கண். வன்னி - தீ. பூரித்தல் - களிப்புறுதல்.

உழை - மான். வன்னி - அக்கினி.

## 1060.பூரித்த பூவிதழ் எட்டினுக் குள்ளே யோர்

1060.பூரித்த பூவிதழ் எட்டினுக் குள்ளே யோர்
ஆரியத் தாளுண்டங் கெண்மர் கன்னியர்
பாரித்த பெண்கள் அறுபத்து நால்வருஞ்
சாரித்துச் சத்தியைத் தாங்கள்கண் டாரே.

செழிப்பான தாமரை இதழ் எட்டினுக்குள் அருமை மிக்க தாளுண்டு அங்கே மாறா ஆற்றலும் அருளும் மிக்க கன்னியர் எண்மருறைவர். அவர்கள் பால் தோன்றும் கலை முதல்வியர் அறுபத்து நால்வராவர் அவர்கள் அனைவரும் திருவருளாற்றலைச் சார்ந்து உண்மையுணர்ந்து திகழ்பவராவர்.

ஆரியத்தான் - தாமரை இதழ்கள் நடுவில் உள்ளதோர் உறுப்பு.

## 1061.கண்ட சிலம்பு வளைசங்கு சக்கரம்

1061.கண்ட சிலம்பு வளைசங்கு சக்கரம்
எண்டிசை யோகி இறைவி பராசத்தி
அண்டமொ டெண்டிசை தாங்கும் அருட்செல்வி
புண்டரி கத்தினுட் பூசனை யாளே.

ஆராய்ந்து எடுக்கப்பெற்ற சிலம்பும், வலம்புரிச் சங்கும், சக்கரமும் உடையவள். எட்டுத் திசைகளிலும் நிறைந்திருப்பவள், முதல்வி; திருவருளாற்றல்; பல்வேறு அண்டங்களையும் பல்வேறு திசைகளையும் படைத்து ஆருயிர்களுக்கு அளித்துக் காக்கும் திருவருட் செல்வி. அன்பர்களின் நெஞ்சத் தாமரையின்கண் அவர்கள் ஆர்வமுடன் செய்யும் வழிபாட்டை ஏற்றுக்கொள்ள எழுந்தருளும் அம்மை. வளை - வலம்புரி யோகி - நிறைந்திருப்பவள். புண்டரீகம் - தாமரை

கண்ட - பொறுக்கி எடுத்த.

# 1062.பூசனை கந்தம் புனைமலர் மாகோடி

1062.பூசனை கந்தம் புனைமலர் மாகோடி
யோசனை பஞ்சத் தொலிவந் துரைசெய்யும்
வாசமி லாத மணிமந் திரயோகந்
தேசந் திகழுந் திரிபுரை காணே.

வழிபாட்டிற்குவேண்டிய மணப் பொருள்களும், அழகிய மணமுள்ள பூக்களும், சிறந்த புதிய ஆடைகளும், நெடுந்தொலைவுக்குக் கேட்கும் ஐவகையான இயமுழக்கமும், சொல்லுதற்கரிய தலையான திருவெழுத்தைந்தாகிய மந்திரமும் கூடிச் செய்யும் பூசையினை ஏற்றருளும் ஒளி மிகுந்த திரிபுரையாவள். பஞ்சத்தொலி - ஐவகை இயங்களின் ஓசை. இயம் - வாத்தியம். ஐவகையியங்களாவன: தோற்கருவி, தொளைக்கருவி, நரம்புக்கருவி, தாளக்கருவி, மிடற்றுக்கருவி, வாசமிலாத வசமிலாத என்பதன் நீட்டம். மணி - தலையான. யோகம் - கூட்டம். கோடி - புத்தாடை.

யோசனை - காத தூரம். பஞ்சத்தொலி - மணி, கடல், யானை, வளை, சங்கு ஆகிய ஐந்து ஒலிகள். வாசமில்லாத - சொல்லற்கரிய. தேசம் - ஒளி.

## 1063.காணும் பலபல தெய்வங்கள் வெவ்வேறு

1063.காணும் பலபல தெய்வங்கள் வெவ்வேறு
பூணும் பலபல பொன்போலத் தோற்றிடும்
பேணுஞ் சிவனும் பிரமனும் மாயனும்
காணுந் தலைவிநற் காரணி காணே.

உலகத்தில் படைத்தல் காத்தல் துடைத்தல்களின் பொருட்டு அயன் அரி அரன் என்னும் முத்தேவர்களும் அம்மையருளால் தவமுடைய ஆருயிர்களினின்றும் தோன்றுவர். அது பொன்னினின்றும் பல அணிகள் தோன்றுவதையொக்கும். இங்கே அம்மையின் ஆணை பொன்னொக்கும். அதனால் பலபல தெய்வங்கள் என்று கொள்ளற்க. சிவன், பிரமன், மாயன் என்று சொல்லப்படும் முத்தேவர்களுக்கும் காரணமாகிய முதல்வி அம்மையாரும். சிவன் - அரன். பிரமன் - அயன். மாயன் - அரி.

பூண் - ஆபரணம்.

## 1064.காரணி மந்திரம் ஓதும் கமலத்துப்

1064.காரணி மந்திரம் ஓதும் கமலத்துப்
பூரண கும்ப விரேசம் பொருந்திய
நாரணி நந்தி நடுவங் குரைசெய்த
ஆரண வேதநூல் அந்தமு மாமே.

ஆதிமந்திரம் அஞ்செழுத்து என்னும் உண்மையால் அக் காரண மந்திரத்தை இடையறாது ஓதும் மெய்யடியார்களது நெஞ்சத் தாமரையின்கண், உட்கொளல் நிறுத்தல் விடுதல் என்னும் உயிர்ப்புப் பயிற்சிக்குத் துணையாக திருவருளம்மை எழுந்தருள்வள். அங்ஙனம் எழுந்தருளும்போது நாரணி என்று பெயர்பெறுவள். சிவபெருமான் அருளிச் செய்த மறை நூலின் முதலும் முடிவுமாய் விளங்குவதும் திருவருளம்மையேயாம். பூரணம் - மூச்சை உட்கொளல். கும்பம் - நிறுத்தல். இரேசம் - வெளி விடுதல். நந்தி - சிவபெருமான். பூரகம், கும்பகம், இரேசகம் என்பன பூரணம், கும்பம், இரேசம் என நின்றன.

பூரணம் - பூரகம்.

## 1065.அந்த நடுவிரல் ஆதி சிறுவிரல்

1065.அந்த நடுவிரல் ஆதி சிறுவிரல்
வந்த வழிமுறை மாறி யுரைசெய்யுஞ்
செந்தமி ழாதி தெளிந்து வழிபடு
நந்தி இதனை நவமுரைத் தானே.

அந்தத்தைச் செய்யும் கடவுளாகிய சிவபெருமான் நடுவிரலாகவும், படைத்தலைச் செய்யும் ஆதியாகிய நடப்பாற்றல் சிறு விரலாகவும் கொண்டு ஓதும் உலகியல் 'நமசிவய' என்று ஆகும். இம் முறையினை ஊனநடனம் என்ப. இதனைமாற்றி யுரைசெய்தலாவது சிறுவிரல் முதல் பெருவிரலீறாகச் 'சிவயநம' என்று ஆகும். இது ஞான நடம் என்ப. இம்முறையில் முன் சிறப்பாகிய சிகரம் நின்ற நடுவிரலிடத்து யாப்பாகிய யகரம் நிற்கின்றது. இதுவே அடியார் நடுவுள் என்னும் குறிப்பாகும். இவ்வைந்தெழுத்தும் இம்முறைவைப்பும் செந்தமிழுக்கே உடைய சிறப்பென்பது விளங்கச் 'செந்தமிழாதி தெளிந்து' என்று ஓதியருளினர். அங்ஙனமிருந்தும் ஆரியமொழிமயலினர் ஐந்தெழுத்து ஆரியமொழியென்று சீரியலழித்துக் கூறுவர். இவ்வைந்தெழுத்தால் வழிபடுமுறையினைச் சிவபெருமான் அடியேன் வழியும் புதுப்பித்து உரைத்தருளினன். இதனை - வழிபடு இம்முறையினை. நவம் - புதுமை. இத் தமிழ்மறை ஏனைய மந்திரங்கள் போலாது. நடுவிரலைத் தொட்டு ஆழிவிரல் சிறுவிரல் பெருவிரல் சுட்டுவிரல் வரை ஐந்தெழுத்து மறைகூறித் தொடுதலென்பாரும் உளர்.

இம் மந்திரம் "அஞ்செழுத்து" தமிழ் என்றும், சமயம் முதலிய தீக்கைகளைப் பெற்றவர்கள் நடுவிரல் அடி முதற்கொண்டு சுண்டுவிரலுக்கு வந்து ஓங்கார உருவமாய் விரல்களின் வரைகளைக் கொண்டு ஐந்தெழுத்தைக் கணிப்பதைக் கூறுகின்றது. நடுவிரல் ஆதி - நடுவிரல் அடி.

## 1066.உரைத்த நவசத்தி ஒன்று முடிய

1066.உரைத்த நவசத்தி ஒன்று முடிய
நிரைத்த விராசி நெடுமுறை எண்ணிப்
பிரைச்சதம் எட்டுமுன் பேசிய நந்தி
நிரைத்து நியதி நியமஞ்செய் தானே.

ஆறாதாரத்தின் அப்பாற்பட்ட ஆதார சத்திகள் ஒன்பதும் ஒன்றுகூடி வரிசையாகத் தத்தம் இடங்களில் நிலைபெறு முறையை ஆராய்ந்து பிரைச்சதம் எட்டையும் முன்னருளிய சிவபெருமான் கோவை செய்து அமைத்தனன் என்க.

நியமம் - ஏற்பாடு; அமைவு.

## 1067.தாமக் குழலி தயைக்கண்ணி உள்நின்ற

1067.தாமக் குழலி தயைக்கண்ணி உள்நின்ற
வேமத் திருளற வீசும் இளங்கொடி
ஓமப் பெருஞ்சுடர் உள்எழு நுண்புகை
மேவித் தழுதொடு மீண்டது காணே.

மணம் கமழும் மலர்சூடிய நீண்ட கூந்தலையுடையவள். பேரருள் வாய்ந்த கண்ணையுடையவள். ஆருயிர்களின் அகஇருளைக் கடிந்தோட்டும் பேரொளிப்பிழம்பாம் இளங்கொடிக் கன்னி. அகத்தே கொப்பூழின்கண் அஞ்செழுத்தால் வளர்க்கப்படும் ஓமப் பெருஞ்சுடர். அதன் அகத்தெழும் நறுமண நுண்புகை. அத்தகைய திருவருளாற்றல் நமக்கு வேண்டும் எல்லா நலமும் மேவுவித்து அருளமுது ஊட்டிக் காத்தது என்க. வீசும் - ஓட்டும்.

உண்ணின்ற ஏமத்திருள் - அஞ்ஞானம். ஓமப் பெருஞ் சுடர் - நாபி. உள்எழு நுண்புகை - பிராணன்.

## 1068.காணும் இருதய மந்திரமுங் கண்டு

1068.காணும் இருதய மந்திரமுங் கண்டு
பேணு நமவென்று பேசுந் தலைமேலே
வேணு நடுவு மிகநின்ற வாகுதி
பூணு நடுவென்ற வந்தஞ் சிகையே.

உள்ளத்தைப் பெருங்கோவிலாகக் கண்டு மனமணி இலிங்கத்தை நமசிவய என்று வழிபட்டு நடுநாடிவழியாக உயிர்ப் படக்குதலை அவியாக்கி முடிவில் கொண்டைபோல் கருதுக. மந்திரம் - திருக்கோவில். தலை - முடிவு. வேணு - நடுநாடி; சுழுமுனை.

## 1069.சிகைநின்ற வந்தக் கவசங்கொண் டாதிப்

1069.சிகைநின்ற வந்தக் கவசங்கொண் டாதிப்
பகைநின்ற வங்கத்தைப் பாரென்று மாறித்
தொகைநின்ற நேத்திர முத்திரை சூலம்
வகைநின்ற யோனி வருத்தலு மாமே.

முதன்மையாய் விளங்கும் கவசமாகிய காப்புச் சட்டையை ஓதி உடம்பினைக் காத்தருளென்று வேண்டுக. மீட்டும் அறிவுப் பொறியினைக் காட்டி அறிவுப்பொறி - சின்முத்திரை. பெருவிரலும் ஆள்காட்டி விரலும் ஒன்றாய்ப் பிரிப்பின்றிப் புணர்ந்தமைந்து நிற்க மற்றைய மூன்று விரல்களும் அகன்று நிற்பது. பெருவிரல், ஆண்டானாகவும் ஆள்காட்டிவிரல் அடிமையாகிய ஆருயிராகவுங்கொள்ப. நடுவிரல் வினையாகவும், ஆழிவிரல் மாயையாகவும், சிறுவிரல் ஆணவமாகவும் கொள்ப. சூலம், யோனி என்னும் இரண்டும் வருத்தலும் கூறப்படும். அறிவுப் பொறியினைக் காட்டி - காட்டுக என்பது உறுப்புத் தொடுதல். காட்டி: இகர ஈற்று வியங்கோள்.

இவ்விரு மந்திரப் பாட்டுக்களிலும் ஆறங்க மந்திரங்களைப் பற்றிக் கூறப்பட்டிருக்கின்றன. இருதயம், நம என்று இருதயாயநம. பேசுந் தலைநம - சிரசேநம. சிகையே - சிகாயநம. கவசம்கொண்டு - கவசாய நம. நேத்திரம் - நேத்திராய நம. பகைநின்ற அங்கம் - அத்திராய நம.

## 1070.வருத்த மிரண்டுஞ் சிறுவிரன் மாறிப்

1070.வருத்த மிரண்டுஞ் சிறுவிரன் மாறிப்
பொருத்தி அணிவிரற் சுட்டிப் பிடித்து
நெரித்தொன்ற வைத்து நெடிது நடுவே
பெருத்த விரலிரண் டுள்புக்குப் பேசே.

சூலம் யோனி என்னும் முத்திரைகள் இரண்டும் கைவிரல்களைச் சிறிது வருத்தத்துடன் அமைத்தல்வேண்டும். சிறுவிரல்களை ஒன்றின்மேலொன்றாக மாறிவைத்து, அணிவிரலை நீட்டிப்பிடித்து அமைப்பது சூலமுத்திரையாகும். இவற்றுடன் நடுவிரலிரண்டும் உட்புகுமாறு அமைப்பது யோனி முத்திரையாகும்.

சூலம், யோனி - இரண்டும் முத்திரைகள்.

# 1071.பேசிய மந்திரம் இகாரம் பிரித்துரை

1071.பேசிய மந்திரம் இகாரம் பிரித்துரை
கூச மிலாத சகாரத்தை முன்கொண்டு
வாசிப் பிராணன் உபதேச மாகைக்குக்
கூசிய விந்து வுடன்கொண்டு கூவே.

சிறப்பித்துக் கூறப்படும் சிகார மந்திரத்தில் இகரத்தைப் பிரித்தால் சகரமாகும். இம் மெய்யெழுத்து மேற்சேரும் எழுத்தின்மையால் கூசமிலாத சகரம் என்றாயிற்று. அச்சகரத்தின் மேல் இகரத்தையும் கூசிய விந்துவாகிய மகரத்தையும் கூட்டினால் (ச் + இ + ம்) சிம் என்று ஆகும். இஃது உயிர்ப்புப் பழக்கத்திற்குரிய மந்திரமாகும்.

பேசிய மந்திரம் - சி இகாரம் பிரித்து - ச் + இ கூசிய விந்து - ம். சகாரத்தை முன்கொண்டு கூவினால் சிம் என ஆகும். இது பிராணாயாமம் சித்திக்கும் முறை.

## 1072.கூவிய சீவன் பிராணன் முதலாகப்

1072.கூவிய சீவன் பிராணன் முதலாகப்
பாவிய சவ்வுடன் பண்ணும் யகாரத்தை
மேவிய மாயை விரிசங்கு முத்திரை
தேவி நடுவுள் திகழ்ந்துநின் றாளே.

ஓதப்பெறும் மந்திரக்கிழவன் உயிர்ப்புப் பயிற்சிக்குக் கொள்ளும் சிம் என்பவற்றுள் பரந்து செல்லும் ஓசையுடைய சகரத்துடன் மகரமும் சேரச் சம் என்றாகும். இதனைச் சங்கு முத்திரை என்ப. இம் முத்திரை அருளம்மையாரின் இருப்பிடமாகும். இதன்கண் அம்மை எழுந்தருளி விளங்குவள்.

கூவிய - சொன்ன; உருப்போட்ட. சவ்வுடன் பண்ணும் மகரம் - சம்.

## 1073.நின்ற வயிரவி நீலி நிசாசரி

1073.நின்ற வயிரவி நீலி நிசாசரி
ஒன்றும் இரண்டும் ஒருங்கிய உள்ளத்துச்
சென்றருள் நாயகி தேவர் பிரானுக்கே
நன்றருள் ஞாலத்து நாடிடுஞ் சாற்றியே.

நிலைபெற்று நின்றருளும் வயிரவி நீலநிறம் அமைந்தவளாதலின் நீலி. அன்பறிவாற்றல்களாகிய மூன்றும் இறைவியின் திருவடியில் முறையே ஒடுங்கப்பெற்ற மெய்யடியார்கள்தம் உள்ளத்து விரைந்து சென்றருளும்முதல்வி. பேரொடுக்கத்தின் பின்னும் நிலைத்திருப்பவளாதலின் அப் பேரிருட்காலத்தும் விளங்கும் நிசாசரி. சிவபெருமானை விட்டு நீங்காத நன்மையருளும் திருவருளம்மை உலகோர் அவ்வம்மையின் திருவடியைப் புகழ்ந்து நாடித் தொழுவாராக ஒன்றுமிரண்டு - மூன்று; அன்பறிவாற்றல்கள். நிசாசரி - இருளிலும் நடப்பவள்.

நிசாசரி: நிசி + சரி - இரவில் சஞ்சரிப்பவள். பேர் ஊழிக் காலத்து, சந்திரர் சூரியர் கெட்டு இருக்கும் நிலைபெற்ற இருளில் உள்ளவள் ஆனதால் நிசாசரி.

## 1074.சாற்றிய வேதஞ் சராசரம் ஐம்பூதம்

1074.சாற்றிய வேதஞ் சராசரம் ஐம்பூதம்
நாற்றிசை முக்கண்ணி நாடும் இருள்வெளி
தோற்றும் உயிர்ப்பன்மை சோதி பராபரை
ஆற்றலொ டாய்நிற்கும் ஆதி முதல்வியே.

உலகியல் ஒழுக்கம் செம்மையாகப் போதிக்கும் தமிழ் மறையகத்து விளங்கும் தனிப்பெரு முதல்வி திருவருளம்மை. இயங்குதிணை நிலைத்திணை என்னும் இருவகை இடங்களிலும் இயைந்தியக்குபவளும் அவளே. ஐம்பூதங்களுடன் விரவி அவற்றைச் செலுத்துபவள். நான்கு புலத்தினும் நிறைந்திருப்பவள். மூன்று திருக்கண்களையுடையவள். கருதப்படும் இருளையும் வெளியையும் இயக்குபவள். தோன்றியுள்ள பல் வேறு உயிர்களுக்கும் வேண்டுவ அருளும் பேரொளிப்பிழம்பி, முடி விலாற்றலுடன் விளங்கும் முதல்வி, எல்லாம் அவளேயாவள்.

உலகின்கண் உள்ள சரம் அசரம் முதலிய பொருள்களும் வேதங்களும் ஆகமங்களும் உலகங்களும் உயிர்களும் எல்லாம் சத்தி சொரூபம் என்று இப் பாட்டில் கூறப்பட்டிருக்கிறது.

## 1075.ஆதி வயிரவி கன்னித் துறைமன்னி

1075.ஆதி வயிரவி கன்னித் துறைமன்னி
ஓதி யுணரில் உடலுயிர் ஈசனாம்
பேதை உலகிற் பிறவிகள் நாசமாம்
ஓத வுலவாத கோலமொன் றாகுமே.

நடப்பாற்றலைச் செய்யும் வயிரவி. எல்லாம் ஈன்றெடுத்தும் என்றும் கன்னியாயிருப்பவள். சிவபெருமானுக்கு உடலுயிராயவள் அறியாமை நிறைந்த உலகினர் அவளை அன்புடன் வழிபட்டால் பிறவி அகலும். ஓதுதற்கரிய மெய்யுணர்வே திருமேனியாகவுடையவள்.

ஆதி வயிரவி - சக்கரத்துடன் கூடிய வயிரவி மந்திரத்தை, கன்னித்துறை - விசுத்தி. உடல் உயிர் ஈசனாம் - உடலில் உள்ள உயிர் ஈசனது தன்மையை அடையும். உலவாத கோலம் - அழிவற்ற தேகம்.

## 1076.கோலக் குழலி குலாய புருவத்தள்

1076.கோலக் குழலி குலாய புருவத்தள்
நீலக் குவளை மலரன்ன கண்ணினாள்
ஆலிக்கும் இன்னமு தானந்த சுந்தரி
மேலைச் சிவத்தை வெளிப்படுத் தாளே.

அழகிய கூந்தலையும் புருவத்தையும் உடையவள். குவளை மலரையொத்த கண்ணையுடையவள். நீங்கா மகிழ்ச்சியைத் தருகின்ற பேரழகினள். சிவபெருமான் எல்லாங் கடந்தவர். நாமுய்யும் பொருட்டுத் தடையிலா ஞானமாகிய அம்மையை உருவாகக்கொண்டு எழுந்தருளுவர். அதனால் அவரை வெளிப்படுத்தியது திருவருளாற்றல் என்பர்.

ஆலிக்கும் - மகிழ்ச்சி பயக்கின்ற. சிவத்தை வெளிப்படுத்தாள் - அருவமாயுள்ள சிவத்தின் தன்மையை உணரும்படி செய்வள்.

## 1077.வெளிப்படு வித்து விளைவறி வித்துத்

1077.வெளிப்படு வித்து விளைவறி வித்துத்
தெளிப்படு வித்தென் சிந்தையி னுள்ளே
களிப்படு வித்துக் கதிர்ப்படு சோதி
ஒளிப்படு வித்தென்னை உய்யக்கொண் டாளே.

ஊழ்வினைப்பயன் உண்மையினை நடப்பாற்றலாக நின்று வெளிப்படுவித்து, அதன் விளைவாக ஏறுவினைத்தொடர்ச்சியை அறிவித்து, அடிமை என்னும் நாட்டத்தால் முயலின் ஏறு வினைத்தொடர்பு இன்றென்பதையும் தெளியப்படுத்தி, உய்விப்பள்: தெளியப்படுத்துங்கால் நடப்பாற்றல் வனப்பாற்றலாம் நிலை எய்தும். அதனால் திருவடியுணர்வு கைவரும். அதனால் திருவடிப் பேறெய்தும் சிவப்பேரொளியை மிகவும் விளக்குவித்து என்னை உய்யக்கொண்டருளினள். தெளியப்படுத்தி என்பது தெளிப்படுத்தி எனக் குறைந்து நின்றது.

விளைவு - பயன். களிப்படுவித்து - களிப்பைச் செய்து. கதிர்ப்படு சோதி - பரையாகிய இரணங்களைக் கொண்ட சிவசோதியை. ஒளிப்படுவித்து - உயிர் தரிசிக்கும்படி செய்து.

## 1078.கொண்டனள் கோலங் கோடி அநேகங்கள்

1078.கொண்டனள் கோலங் கோடி அநேகங்கள்
கண்டனள் எண்ணெண் கலையின்கண் மாலைகள்
விண்டனள் மேலை விரிகதிர் மூன்றையுந்
தண்டலை மேல்நின்ற தையல்நல் லாளே.

உலகுய்தற்பொருட்டு அருளம்மையார் கொண்டருளிய திருக்கோலத் திருவுருவங்கள் பலகோடி என்பர். அறுபத்து நாலு கலைகளையும் தோற்றுவித்தனள். அவற்றுள் வெளிப்பட்ட நூற்சுவடி வரிசைகளையும் வெளிப்படுத்துவித்தனள். அதுபோல் ஞாயிறு திங்கள் தீ என்னும் மூன்று ஒளியுடைய பொருள்களையும் படைத்தருளினள்.
சித்தொளையின் மேலுள்ள அருள் வெளியும் தானேயாம். அவள் தையல் நல்லாளாவள்.

கொண்...கள் - வயிரவி என்கிற மனோன்மனி சத்தியானவள் வேண்டும் கோலம் பூண்டு. கண்டனள் - உண்டாக்கினாள். எண்...மாலைகள் - 64 கலைகளின் பதிகங்கள் அல்லது கோவைகள். விண்ட...மூன்றை - காலதத்துவ காரணராகிய சோமன் - சூரியன் - அக்கினி இவற்றை ஆக்கினாள். தண் தலை மேல் நின்ற - குளிர்ச்சி பொருந்திய சகசிர அறையுள் நின்ற.

## 1079.தையல்நல் லாளைத் தவத்தின் தலைவியை

1079.தையல்நல் லாளைத் தவத்தின் தலைவியை
மையலை நோக்கும் மனோன்மனி மங்கையைப்
பையநின் றேத்திப் பணிமின் பணிந்தபின்
வெய்ய பவமினி மேவகி லாவே.

எல்லாவற்றையும் படைத்துக் காக்கும் நல்லாளை, சீலம் நோன்பு செறிவு அறிவு என்னும் மெய்த்தவம் நான்மையின் தலைவியை, ஆருயிர்களின் மயக்கங்கள் அத் தவப்பேற்றால் அகலும்படி திருக்கடைக்கண் நோக்கருளும் மனோன்மனி மங்கையை, அமைதியாய் அமர்ந்து திருமுறை ஓதி வழி பாடியற்றிப் பணியுங்கள். பணிந்த பிற்பாடு கொடிய பிறவிநோய் அற்று ஒருகாலும் மீண்டும் பொருந்தாதகலும்.

தவத்திற் றலைவி - சகசிர அறைத் தலைவியை.

## 1080.வேயன தோளி விரையுறு மென்மலர்

1080.வேயன தோளி விரையுறு மென்மலர்
ஏய குழலி இளம்பிறை ஏந்திழை
தூய சடைமுடிச் சூலினி சுந்தரி
ஏயென துள்ளத் தினிதிருந் தாளே.

மூங்கில்போலும் தோளையுடையவள்; மணமுள்ள பூவை அணிந்தவள்; பிறையும் அணியும் பூண்டவள்; தூயசடைமுடியையுடையவள், சூலத்தையுடையவள், அழகினள், அடியேன் உள்ளத்தும் பொருந்தி எனக்கும் இன்பந் தந்துகொண்டிருக்கின்றனள்.

## 1081.இனியதென் மூலை இருக்குந் குமரி

1081.இனியதென் மூலை இருக்குந் குமரி
தனியொரு நாயகி தானே தலைவி
தனிப்படு வித்தனள் சார்வு படுத்து
நனிப்படு வித்துள்ளம் நாடிநின் றாளே.

புறத்தும் அகத்தும் தென்மேல் மூலையில் வீற்றிருந்தருள்வள். என்றும் ஒருவழிவாயிருத்தலின் குமரி எனும் திருப்பெயர் பூண்டனள். ஒப்பிலாத முதல்வி, தானே தலைவி. மாயாகாரியமாகிய உடல் உலகு முதலியவற்றின் நிலைமையுணர்த்தி நீ இவற்றின் வேறு எனத் தனிப்படுத்தினள். சிவபெருமான் திருவடிச் சார்பே நிலையான சார்பெனச் சார்வித்தனள். என்னை நாடி என்னகம் உறைந்து என்னை மிகவும் மேற்படுத்தியருளினள்.

தென்மூலை - சகசிர அறையில் உள்ள தென்மூலை. தனிப்படுவித்து - தத்துவங்களினின்றும் பிரித்து. சார்வு படுத்து - சிவத்தொடுங் கூட்டி.

## 1082.நாடிகள் மூன்று நடுவெழு ஞாளத்துக்

1082.நாடிகள் மூன்று நடுவெழு ஞாளத்துக்
கூடி இருந்த குமரி குலக்கன்னி
பாடகச் சீறடிப் பைம்பொற் சிலம்பொலி
ஊடக மேவி உறங்குகின் றாளே.

வலப்பால் இடப்பால் நடுநாடி மூன்றனுள்ளும் நடுநாடி வாயிலாகத் தோன்றுகின்ற திருவடியுணர்வுடன் கூடியிருந்த குமரியம்மை. சிறந்த முதல்வி; பாடகமணிந்த சிறிய திருவடியையுடையவள். மாற்றுயர்ந்த பொன்னாலாகிய சிலம்பை அணிந்தவள்; அச் சிலம்பொலியுடன் அடியேன் அகத்துப் பொருந்தித் தங்கியருளுகின்றனள்.

நாடி...ஞாளத்து - புருவமத்தியில் உள்ளம் என்னும் கூடத்தில்.

## 1083.உறங்கு மளவின் மனோன்மனி வந்து

1083.உறங்கு மளவின் மனோன்மனி வந்து
கறங்கு வளைக்கைக் கழுத்தாரப் புல்லிப்
பிறங்கொளித் தம்பலம் வாயில் உமிழ்ந்திட்டு
உறங்கலை யாவென் றுபாயஞ்செய் தாளே.

அடியேன் உறங்கிக்கொண்டிருக்கும்போது ஒலிக்கின்ற வளையலணிந்த திருக்கையால் நெஞ்சமுதல் கழுத்துவரை குளிரத்தடவி ஒளிக்கும் ஒளியருளும் தம் பேரொளியாகிய திருவருளாற்றலை, என் அறிவினிடத்தில் புகப்பெய்து ஐயா உறங்குதலாகிய மறவியைக் கொள்ளாதே பிறப்பற்றுச் சிறப்புற்று வாழ்வதற்கு இது வழிவகையாகும் என்று அருளினள். அவளே மனோன்மனி யாவள். புல்லி - தடவி. பிறங்கொளி - மிக்க ஒளி. தம்பலம் - அம்மையின் திருவருளாற்றல். உறங்கல் - உறங்காதே; மறவாதே. உபாயம் - வழிவகை. தம்பலம்: தாம்பூலமென்று கூறுவது ஏற்புடைத் தாகாது. தம்பலம் - தம் பயன்; திருவருள்.

உறங்கல் - தூங்கற்க.

## 1084.உபாயம் அளிக்கும் ஒருத்தியென் உள்ளத்து

1084.உபாயம் அளிக்கும் ஒருத்தியென் உள்ளத்து
அபாயம் அறக்கெடுத் தன்பு விளைத்துச்
சுவாவை விளக்குஞ் சுழியகத் துள்ளே
அவாவை அடக்கிவைத் தஞ்சலென் றாளே.

ஆருயிர் அனைத்திற்கும் உய்யும் வழிவகைகளை அருளிச் செய்யும் ஒப்பில்லாத முழுமுதல்வி எளியேனுடைய ஈரமில் நெஞ்சகத்து

இடர் அனைத்தும் இல்லாமல் நீக்கி, அருளின் வித்தாகிய ஆண்டவன் அன்பினை விளைவித்து, நாயனைய மனத்தை விளக்குவதாகிய சுழியகம் எனப்படும் புருவநடுவாகிய நனவு நிலைக்களத்து நிலையிலாப் பொருள்களிலும் பிறருடைமைகளிலும் செல்லும் பற்றாகிய அவாவை அடக்கி வைத்து அஞ்சாதே என்று அருளினள். சுவா: நாய் - உவம ஆகுபெயராக மனத்தைக் குறிக்கின்றது. சுழியகம் - நனவுக்களம்; விழிப்புநிலை; சாக்கிரத்தானம்.

சுவாவை - மனத்தை. சுழியகம் - சக்கரம் (ஆதார சக்கரம்).

## 1085.அஞ்சொல் மொழியாள் அருந்தவப் பெண்பிள்ளை

1085.அஞ்சொல் மொழியாள் அருந்தவப் பெண்பிள்ளை
செஞ்சொல் மடமொழி சீருடைச் சேயிழை
தஞ்சமென் றெண்ணித்தன் சேவடி போற்றுவார்க்கு
இஞ்சொல் அளிக்கும் இறைவியென் றாரே.

உயிரை உய்விக்கும் அழகிய 'நமசிவய' என்னும் குரு மொழியினை அருள்பவள் திருவருளம்மை. அவளே அதற்குரிய நானெறியாம் நற்றவப்பேற்றினை நல்குபவள். புகழ்மொழி தரும் பொற்பினள். சிறந்த மாறாத பண்புகளாம் அணியருள்பவள். தன் திருவடியே புகல் என்று கருதிப் போற்றும் புண்ணியர்க்கு என்றும் பேரின்பம் பயக்கும் இனிய சொல்லையருளும் இறைவி அவளென்று நவின்றனர். இன்சொல் என்பது எதுகை நோக்கி இஞ்சொல் என்றாயிற்று. அளிக்கும் - அருளும். இறைவி - தலைவி. அளி - கருணை.

## 1086.ஆருயி ராயும் அருந்தவப் பெண்பிள்ளை

1086.ஆருயி ராயும் அருந்தவப் பெண்பிள்ளை
காரியல் கோதையள் காரணி நாரணி
ஊரும் உயிரும் உலகும் ஒடுக்கிடுங்
கோரியென் உள்ளங் குலாவிநின் றாளே.

ஆருயிர்களின் நிலைமைகளை இடையறாது நோக்கிக் கொண்டிருக்கும் தவமுடைய பெண்ணணங்கு, மழைபோன்ற கரிய பெரிய கூந்தலையுடையவள், உலகம் அனைத்திற்கும் அன்பாயிருப்பவள், பேரூழிக்காலத்து ஊர் உடல் உலகு அனைத்தினையும் ஒடுக்கும் உட்குருவத்தை உடையவள், அவள் என் உள்ளம் புகுந்து வீற்றிருந்தருளினள். கோரம் - அச்சம்; உட்கு. கோரி - அச்சப்படுத்தும் திருவுருவுடையவள். நாரணி - அன்புடையவள். நார் - அன்பு. நாரணன் : சிவன்பெயர்.

கோரி - ஒடுக்குங் காலத்து எடுக்கும் கோர உருவம் உடையவள்.

## 1087.குலாவிய கோலக் குமரியென் னுள்ளம்

1087.குலாவிய கோலக் குமரியென் னுள்ளம்
நிலாவி யிருந்து நெடுநாள் அணைந்தும்
உலாவி இருந்துணர்ந் துச்சியி னுள்ளே
கலாவி யிருந்த கலைத்தலை யாளே.

எளியேனுடன் அளவளாவியருளும் அழகிய கன்னி என்னுள்ளத்துத் திகழ்ந்து தொன்றுதொட்டுக் கலந்து (புணர்ந்து) வீற்றிருந்தருளி, செவ்வியினை உணர்ந்து, உச்சித்தொளையினுள் கலந்து நிற்கும் கலைமுதல்வியாவள். செவ்வி - பரிபாகம்.

கலாவி - கலந்து. கலைத்தலை - சந்திரகலை அணிந்த தலை அல்லது 64 கலைகளை விரித்தவள்.

## 1088.கலைத்தலை நெற்றியோர் கண்ணுடைக் கண்ணுள்

1088.கலைத்தலை நெற்றியோர் கண்ணுடைக் கண்ணுள்
முலைத்தலை மங்கை முயங்கி இருக்குஞ்
சிலைத்தலை யாய தெரிவினை நோக்கி
அலைத்தபூங் கொம்பினள் அங்கிருந் தாளே.

வாலறிவாம் திருவுருவில் அறிவடையாளமாகிய நெற்றிக் கண்ணையுடையவன் சிவன். அவன் ஆருயிர்களுக்குக் கண்போன்றவன். அவன் இடப்பால் வீற்றிருந்து அருளும் முலைமங்கை திருவருளம்மை. அவளுடன் சிவன் கலந்துநிற்கின்றனன். பொன்மலையை வில்லாகக் கொண்டவன். அவனது நாட்டத்தையே அம்மை நோக்கியருளித் துவளும் அழகிய இடையினையுடையள். அவ்வம்மை உள்ளத்துறைந்தனள் கண் - கண்போன்ற சிவன். அலைத்த - துவண்ட. பொன்மலை வில்: பொன்மலையிற் பிறந்த மூங்கிலை வில்லாக உடையவன். மலை இடவாகு பெயராக மூங்கிலைக் குறிக்கும். 'இமையவில்' என்பதற்கு நச்சினார்க்கினியர் வரைந்த உரை காண்க.

## 1089.இருந்தனள் ஏந்திழை என்னுள்ள மேவிப்

1089.இருந்தனள் ஏந்திழை என்னுள்ள மேவிப்
பொருந்திய நால்விரல் புக்கனள் புல்லித்
திருந்திய தாணுவிற் சேர்ந்துடன் ஒன்றி
அருந்தவ மெய்தினள் ஆதியி னாளே.

முதல்வி என்னுள்ளம் பொருந்தி நால்விரல் அளவினதாகிய உயிர்ப்புடன் சேர்ந்து, மூலக்கனலை எழுப்பிப் பயிற்சியால் செம்மையுற்ற நடுநாடியிற் சேர்ந்து உடன்கலந்து இருந்தனள். அவளருளால் அருந்தவத்தை எய்துவித்தனள். அவளே ஆதி என்னும் இறைவியாவள். உயிர்ப்பு - பிராணன். தாணு - நடுநாடி; வீணாத்தண்டு.

பொருந்தினள் நால்விரல் - நால்விரல் அளவுள்ள பிராண வாயு.

## 1090.ஆதி யனாதி யகாரணி காரணி

1090.ஆதி யனாதி யகாரணி காரணி
சோதிய சோதி சுகபர சுந்தரி
மாது சமாதி மனோன்மனி மங்கலி
ஓதியென் னுள்ளத் துடனியைந் தாளே.

தொடக்க நடப்பாற்றலாகிய ஆதியும், தொன்மை வனப்பாற்றலாகிய அனாதியும், தனக்கோர் காரணம் இல்லாதவளும் தான் எல்லாவற்றுக்கும் காரணமாயுள்ளவளும், ஒளிக்குள் ஒளியாய்த் திகழ்பவளும், பேரின்பமருளும் அழகிய முதல்வியும், இனிய அமைதி தருபவளும், மனத்தின்கண் சிவநினைப்பை நிலைபெறச் செய்பவளாகிய மனோன்மனியும், மங்கல குணமுடையவளும் ஆகிய இறைவி திருவைந்தெழுத்தை உயிருக்கு உயிராய்நின்று ஓதுவித்து உடனாக இருந்தருளினள். அகாரணம் - காரணமின்மை. உடனியைதல் - இயைந்து இயக்குவித்தல்.

அகாரணகாரணி - தனக்கோர் காரணம் இல்லாதவள்.

## 1091.இயைந்தனள் ஏந்திழை என்னுள்ள மேவி

1091.இயைந்தனள் ஏந்திழை என்னுள்ள மேவி
நயந்தனள் அங்கே நமசிவ என்னும்
அயன்றனை யோரும் பதமது பற்றும்
பெயர்ந்தனள் மற்றும் பிதற்றறுத் தாளே.

முதல்வி என்னுள்ளம் பொருந்தி எளியேன் 'நமசிவ' என்னும் தமிழ்மறையை மேற்கொண்டு ஒழுகும் பரிபாகமாகிய செவ்வியை விழைந்தனள். அதனை ஓதுவித்தனள். அப்பொழுதே நிலையிலாப் பொருள்களின் பற்றுக்களையும் நீக்கியருளினள். மேலும் பிறப்புத் துன்பத்தையும் அறுத்தருளினள். நமசிவ: என்பது முறையே அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு பொருள்களையும் குறிக்கும் மறைமொழிக் குறிப்பாகும். 'நமசிவய' என்றிருப்பின் அறம்பொருள் இன்பம் வீடு பேறு என்னும் ஐந்து பொருள்களையும் குறிக்கும் குறிப்பாகும். அயன்: ஈண்டு மறையினை ஆகுபெயராகக் குறிக்கும் பெயர்ந்தனள்: பிறவினை தன்வினையாக நின்றது.

## 1092.பிதற்றிக் கழிந்தனர் பேதை மனிதர்

1092.பிதற்றிக் கழிந்தனர் பேதை மனிதர்
முயற்றியின் முத்தி அருளும் முதல்வி
கயற்றிகழ் முக்கண்ணுங் கம்பலைச் செவ்வாய்
முகத்தருள் நோக்கமும் முன்னுள்ள தாமே.

உண்மை அறிவு இல்லாத மாந்தர் பயனிலவாகிய சொற்களைப் பிதற்றி வாழ்நாளை வீழ்நாள் ஆக்கினர். நானெறியில் விடாது முயல்வார்க்கு வீடுபேற்றையருளும் முதல்விக்கு அருள்பொழியும் முக்கண்ணும், முதல் ஒலியாகிய நாதத்துக்கும் ஒலியருளும் செவ்விய திருவாயும், இன்பத் திருவருள் பொழியும் திருமுகமும் இயல்பாகவே தொன்மையாய் உள்ளன.

முயற்றி - முயற்சி. கம்பலை - ஒலி.

## 1093.உள்ளத் திதயத்து நெஞ்சத் தொருமூன்றுள்

1093.உள்ளத் திதயத்து நெஞ்சத் தொருமூன்றுள்
பிள்ளைத் தடமுள்ளே பேசப் பிறந்தது
வள்ளற் றிருவின் வயிற்றினுள் மாமாயைக்
கள்ள ஒளியின் கருத்தாகுங் கன்னியே.

எண்ணம் மனம் இறுப்பு என்னும் மூன்றும் முறையே சித்தம் மனம் புத்தி என வழங்கப்படும். இம் மூன்றும் முதல்வி இயைந்தியக்க இயங்குவன. அதனால் ஆண்டு உறைகின்றனள் என்ப. இடப்பால் வலப்பால் நடுநாடி என்னும் மூன்றனுள் பிள்ளைத்தடமெனப் பேசப் பெறும் நடுநாடியினுள் அகவொலி தோன்ற அருளியவளும் அவளே. வள்ளலாகிய சிவபெருமான் திருவடியுணர்வாகிய அகத்தினுள் காரண மாயையின்கண் மறைந்துநின்று அதைக் கொண்டு ஒளியருளும் திருவுள்ளம் சேர் அம்மை கன்னித் தெய்வமாகும்.

ஒரு மூன்று - இடகலை, பிங்கலை, சுழுமுனை,
பிள்ளைத்தடம் - சுழுமுனை.

## 1094.கன்னியுங் கன்னி அழிந்திலள் காதலி

1094.கன்னியுங் கன்னி அழிந்திலள் காதலி
துன்னியங் கைவரைப் பெற்றனள் தூய்மொழி
பன்னிய நன்னூற் பகவரும் அங்குள
என்னேஇம் மாயை இருளது தானே.

ஆணைசேர் தெய்வங்களைப் படைத்தும் அருளம்மை கன்னித் தன்மை நீங்கிலள். அஃதாவது அம்மை திருவுள்ளத்தால் - நினைப்பால் படைக்கின்றமையின் எவ்வகை மாறுதலும் எய்திலள் என்பதாம். ஆருயிர்களிடத்துத் துன்பம் துடைக்கும் பெருங்காதலுடைய அம்மை ஆருயிர்களுடன் ஒன்றாய்க் கலந்து அயன், அரி, அரன், ஆண்டான், அருளோன் என்னும் ஐவரை (அயன், அரி, அரன், ஈசுரன், சதாசிவன்) ஈன்றருளினள். தூய்மை நிறைந்த மொழிகள் அடங்கிய மறையும் முறையும் என்னும் தமிழ்வேதாகமங்களை மெய்யடியார்கள் வழி அருளிச் செய்தனள். இத்தகைய இடத்தே விளக்கடியில் இருள் இருப்பதுபோல் செருக்கு, சினம், சிறுமை, இவறல், மாண்பிறந்த மானம், மாணாவுவகை என்னும் அறுவகை மாயை ஆற்றலும் நமக்குப் பகையாய் நம்முடனிருக்கின்றன. அறியாமையாகிய இருளும் ஆண்டுள்ளது. இருளுடன் கூடியதனால் ஒளிக்குத் துணையாம் மாயையும் இருளாய் நிற்கின்றது.

ஐவர் - அயன், அரி, அரன், ஈசன், சதாசிவன். நன்னூல் - 64 கலைகள். பகைவர் - காமக் குரோத முதலியவைகள்.

## 1095.இருளது சத்தி ஒளியதெம் அண்ணல்

1095.இருளது சத்தி ஒளியதெம் அண்ணல்
பொருளது புண்ணியர் போகத்துள் இன்பம்
தெருளது சிந்தையைத் தெய்வமென் றெண்ணில்
அருளது செய்யும்எம் ஆதிப் பிரானே.

அறிவிலாற்றலாகிய மாயையினைத் தொழிற்படுத்தும் திருவருளம்மையின் தன்மை நிறம் இருளாகும். நம் அண்ணலாகிய சிவபெருமான் வெளிச்சம் தருவதாகிய ஒளிப்பொருளாவர். புண்ணியப் பேறுடையார்க்குப் பொருளாகிய பயனாவது திருவடிப் பேரின்பம். மெய்யுணர்ந்த நாட்டத்தை (சிந்தை)ச் சிவபெருமான் இருப்பிடமாகக் கொண்டு ஒழுகுபவர் உள்ளத்துள் ஆதிப்பிரானார் நிறைந்த அருளினைப் புரிந்தருளுவர்.

இருளது சத்தி - சத்தியின் நிறம் கறுப்பு.

## 1096.ஆதி அனாதியும் ஆய பராசத்தி

1096.ஆதி அனாதியும் ஆய பராசத்தி
பாதி பராபரை மேலுறை பைந்தொடி
மாது சமாதி மனோன்மனி மங்கலி
ஓதமென் னுள்ளத் துடன்முகிழ்த் தாளே.

தொடக்கமும் தொன்மையும் ஆகிய திருவருள் செம்பொருளாம் சிவனுடன் செம்பாதி உடம்பினள் ஆவள். சிவவுலகத்து வீற்றிருப்பவள்; அழகும் அமைதியும், மனத்தை இயைந்தியக்கலும் நன்மைப்பாடும் உடைய அம்மை, 'நமசிவய' என்று நாவழுந்த ஓதும் நம்மகத்து உடனுறைந்தருள்வள். முகிழ்த்தல் - தோன்றல்; உறைதல்.

பாதிபராபரை - சிவத்தில் பாதி ஆனவள்; இடப்பாகம் பெற்றவள்.

## 1097.ஓதிய வண்ணங் கலையின் உயர்கலை

1097.ஓதிய வண்ணங் கலையின் உயர்கலை
ஆதியில் வேதமே யாமென் றறிகிலர்
சாதியும் பேதமுந் தத்துவ மாய்நிற்பள்
ஆதியென் றோதினள் ஆவின் கிழத்தியே.

நல்லார் உளத்தினின்று ஓதியருளிய முறைப்படி நூல்களினெல்லாம் சிறந்த நூல் தொடக்கமாகிய அறநூலாகும். இவ் வுண்மையினைச் சிலர் அறியாதிருக்கின்றனர். இனங்களும் அவற்றின் வேறுபாடுகளும் அகன்று மெய்ம்மையாய் நிற்பவள் ஆதி என்னும் அருளம்மையாகும். இவ் வுண்மையினை உயிர்க்குயிராகிய திருவருளம்மை ஓதியருளினள். ஆவின் கிழத்தி - உயிர்க்குயிராகிய அம்மை. கிழத்தி - உரிமையுடையவள். ஆ - உயிர்.

## 1098.ஆவின் கிழத்திநல் லாவடு தண்டுறை

1098.ஆவின் கிழத்திநல் லாவடு தண்டுறை
நாவின் கிழத்தி நலம்புகழ்ந் தேத்திடுந்
தேவின் கிழத்தி திருவாஞ் சிவமங்கை
மேவுங் கிழத்தி வினைகடிந் தாளே.

ஆருயிர் அனைத்தையும் அடிமையாகக் கொண்டருளும் உடையாள்; நாவுக்கரசியார்; ஆவடுதுறையில் எழுந்தருளியிருப்பவள். பொருள்சேர் புகழாம் நன்மையினை மெய்யன்பர்கள் போற்றும் அருளோனாகிய சதாசிவக் கடவுளின் அருளாற்ற (மனைவி)லாம் அம்மை. திருவடிப் பேரின்பத்து நல்லாரைக் கூட்டுவிக்கும் சிவமங்கை. எங்கும் பொருந்தி உரிமை பூண்டருளும் முதல்வி. இவளே ஆருயிர்களின் வினையை அகற்றினள்.
.

ஆவின் கிழத்தி - உயிர்களின் தலைவி. நாவின் கிழத்தி - வாணி. தேவின் கிழத்தி - சதாசிவ பத்தினி.

## 1099.வினைகடிந் தாருள்ளத் துள்ளொளி மேவித்

1099.வினைகடிந் தாருள்ளத் துள்ளொளி மேவித்
தனையடைந் தோர்க்கெல்லாந் தத்துவ மாய்நிற்பள்
எனையடி மைகொண்ட ஏந்திழை ஈசன்
கணவனைக் காண அனாதியு மாமே.

இருள்சேர் இருவினையும் சேராத நல்லார் உள்ளத்து உணர்வொளியாய்த் திகழ்பவள் திருவருளம்மை. அவளே தன் திருவடியைத் தலைக்கூடினார்க்கெல்லாம் சென்றடையாத் திருவாகிய தத்துவமாக நிற்பள். அவளே எளியேனை அடிமை கொண்டருளிய திருவார் செல்வி. சதாசிவக் கடவுளாகிய அருளோனையும் ஈன்றவள். அவ்வருளோனைக் கணவனாகக் கொண்டவள். அத்தகைய அம்மை தொன்மையளாவள். தொன்மை - அனாதி

கண மே - தன் கணவனாகிய சதாசிவம் முதல் ஐவரைப் பெற்றதால் அநாதியும் ஆவள்.

## 1100.ஆதி அனாதி அகாரணி காரணி

1100.ஆதி அனாதி அகாரணி காரணி
வேதம தாய்ந்தனள் வேதியர்க் காய்நின்ற
சோதித் தனிச்சுடர் சொரூப மாய்நிற்கும்
பாதி பராபரை பன்னிரண் டாதியே.

அம்மை தொடக்கமும் தொன்மையும் தனக்கோர் காரணமுமில்லாதவளும் தான் எல்லாவற்றுக்குங் காரணமாயுள்ளவளுமாவள். அறவோர் பொருட்டு அறநூலை ஆய்ந்தருளினள். நிலைபெற்று நிற்கும் ஒப்பிலாப் பேரொளிச்சுடராய் நிற்பவள். பன்னிரு கலையாகத் திகழும் சிவபெருமானுக்குப் பாதித் திருமேனியாகவுடையவள். அவளே நடப்பாற்றலாகிய ஆதியாவள். வேதம் - அறநூல். வேதியர் - அறவோர்.

பன்னிரண்டு - ஆதாரம் 6, நிராதாரம் 6 ஆக 12.

## 1101.அளந்தேன் அகலிடத் தந்தமும் ஆதியும்

1101.அளந்தேன் அகலிடத் தந்தமும் ஆதியும்
அளந்தேன் அகலிடத் தாதிப் பிரானை
அளந்தேன் அகலிடத் தாணொடு பெண்ணும்
அளந்தேன் அவனருள் ஆய்ந்துணர்ந் தேனே.

திருவருள் துணையால் விரிந்த நிலவுலகத்துக்குரிய ஒடுக்கமும் தோற்றமும் சார்பளவையான் அளந்தேன். அதுபோல் ஒருவனே தேவன். அவனே ஆதிப்பிரான். அவனையும் உணர்ந்தேன். ஆண்பெண் என்னும் இரண்டின் தன்மைகளையும் ஆய்ந்தேன். அவன் திருவருளாகிய சிவசத்தியின் உண்மையினையும் உணர்ந்தேன்.

## 1102.உணர்ந்திலர் ஈசனை ஊழிசெய் சத்தி

1102.உணர்ந்திலர் ஈசனை ஊழிசெய் சத்தி
புணர்ந்தது பூரணம் புண்ணியர் தங்கள்
கணங்களைத் தன்னருள் செய்கின்ற கன்னி
கொணர்ந்த வழிகொண்டு கும்பக மாமே.

ஆண்டவனைத் தோற்றுவிக்கும் அருளாற்றலாகிய சத்தியின் மெய்ம்மையை உணர்கிலர். அவ்வாண்டவனை அம்மைகூட அவர் எங்கும் நிறைந்தருளினர். சிவவழிபாடியற்றும் சிவபுண்ணியப் பேறுடையாரின் திருக்கூட்டங்களைத் தன் திருவருள் பேற்றில் ஆழ்த்தியருளிய கன்னியாவள். கொண்டுவந்த முறையே உள்ளத்தால் ஒடுக்கமும் செய்வள். பூரணம் - நிறைவு. கும்பகம் - ஒடுக்கம்.

குணர்ந்த - கொணர்ந்த. கும்பகம் - ஒடுக்கம்.

# 1103.கும்பக் களிறைந்துங் கோலொடு பாகனும்

1103.கும்பக் களிறைந்துங் கோலொடு பாகனும்
வம்பில் திகழும் மணிமுடி வண்ணனும்
இன்பக் கலவி இனிதுறை தையலும்
அன்பிற் கலவியு ளாயொழிந் தாரே.

மத்தகம் பொருந்திய யானையை ஒத்த புலன்களைந்தும் அப் புலன்களை அடுத்துச் செலுத்தும் மனமும், அவற்றைக் கருவியாகக் கொண்டு ஒற்றித்துக் காணும் ஆவியும், திருவடி அன்பினாற் கலந்து அடங்கின. புதுமையாகக் காணப்படும் மணிதிகழ்கின்ற திருமுடியினையுடைய சிவபெருமானும், அவனுடன் ஆருயிர் இன்புறுதற் பொருட்டுக் கலந்து இன்புற்றுறையும் தையலாகிய திருவருளம்மையும் ஆருயிர் புரிந்துள்ள அன்பினால் அவ்வுயிர்களுடன் வேறறக் கலந்து நின்றனர்.

கும்பக் களிறு - இந்திரியம். கோல் - மனம். பாகன் - ஆன்மா. மணிமுடி வண்ணன் - பரமசிவன். இனி துறை தையல் - பூரணசத்தி.

## 1104.இன்பக் கலவியில் இட்டெழு கின்றதோர்

1104.இன்பக் கலவியில் இட்டெழு கின்றதோர்
அன்பிற் புகவல்ல னாம்எங்கள் அப்பனும்
துன்பக் குழம்பில் துயருறும் பாசத்துள்
என்பிற் பராசத்தி என்னம்மை தானே.

கருவாய்க் கிடந்து கருக்குழியில் துன்புறுங் காலத்து நடுநாடியின்கண் நடப்பாற்றலாகிய அம்மை கலந்திருந்து காத்தருளுகின்றனள். பின் திருவடியின்பில் கலத்தற்பொருட்டு ஆவிகளின் அன்பினை எழச் செய்து அவ்வன்பு வாயிலாக நம் ஆருயிர்த் தந்தையாகிய சிவபெருமானும் எழுந்தருள வல்லனாவன்.

துன்பக் குழம்பு - கருப்பாசயம். பாசம் - சரீரம்.

# 1105.என்னம்மை என்னப்பன் என்னுஞ் செருக்கற்று

1105.என்னம்மை என்னப்பன் என்னுஞ் செருக்கற்று
உன்னம்மை ஊழித் தலைவனும் அங்குளன்
மன்னம்மை யாகி மருவி யுரைசெய்யும்
பின்னம்மை யாய்நின்ற பேர்நந்தி தானே.

நிலையாத உடலின் தொடர்பாக என் அம்மை எனவும் என் அப்பன் எனவும் கூறப்படும் சொல் செருக்கினை உண்டாக்கும். அது பிறப்புக்கு வித்தாகும். ஆதலால் அதனை அறுத்தல் வேண்டும். அம்மையும் அப்பனும் நம்போன்ற உயிரினங்களே. நமக்கும் அவர்கட்கும் அனைத்துயிர்க்கும் நிலைபெற்ற உயிர்த்தொடர்பாம் அம்மையும் அப்பரும் அங்கு உளர். அவ்விருவரும் உன்னித்து (தியானித்து)த் தொழும் ஊழித் தலைவராவர். ஆருயிரின்கண் மருவிப் புகழ்ந்து சொல்லப்படும் புணர்ப்பாம் திருவடிப்பேறாய் நின்ற பெரும் பொருள் சிவபெருமானாகும். பின்: பின்னல் (முதனிலைத் தொழிற்பெயர்). எல்லார்க்கும் அம்மையப்பர் எண்குணஞ்சேர் முக்கண்ணர், நில்லா வுடலுறவு நீக்கு.

உன் அம்மை - நினைதற்குரிய அம்மை.

## 1106.தாரமேல் உறைகின்ற தண்மலர் நான்முகன்

1106.தாரமேல் உறைகின்ற தண்மலர் நான்முகன்
பாரமேல் இருப்ப தொருநூறு தானுள
பூமேல் உறைகின்ற போதகம் வந்தனள்
நாமேல் உறைகின்ற நாயகி ஆணையே.

உலகினைப் படைத்தற்பொருட்டுத் திருமாலின் குளிர்ந்த கொப்பூழ்த் தாமரையின்கண் தோன்றியவன் நான்முகன். அத் தாமரை நிலை ஆவிகளிடத்து மூலத்துக்குமேல் கூறப்படும். அதற்கு நூறு இதழ்கள் உண்டு. நெஞ்சத் தாமரைமேல் உறைகின்ற உணர்வுச் செல்வி எழுந்தருளினள். அவள் எழுந்தருள்வதும் தூய நாவின்கண் உறைகின்ற நாவரசியின் ஆணையேயாம். போதகம் - ஞானம்; உணர்வு. நாவரசி - வாகீசுவரி.

பாரமேல் - சுவாதிட்டானம்.

## 1107.ஆணைய மாய்வருந் தாது ளிருந்தவர்

1107.ஆணைய மாய்வருந் தாது ளிருந்தவர்
மாணைய மாய மனத்தை ஒருக்கிப்பின்
பாணைய மாய பரத்தை அறிந்தபின்
தாணைய மாய தனாதனன் தானே.

மெய்ம்மையாக அன்பர் அகத் தாமரையின்கண் வீற்றிருப்பவர் அம்மையப்பராவர். மிகுதியாகத் தோன்றும் ஐயம் திரிபு முதலிய குற்றங்களை அகற்றி மனத்தை ஒருமுகப்படுத்தி முதலோசையின் உயிர்ப்பாய் விளங்கும் முழுமுதலை உணர்ந்தபின் திருவடி இன்பங் கிடைக்கப் பெறும். அது கிடைக்கப்பெற்றார் அத் திருவடிக்கு இருக்கையாவர்.

ஆணையம் - உண்மை. தாதுள் - ஆதாரத் தாமரையுள். மாணையமான - ஐயம், விபரீதம் முதலிய குற்றங்கள் பொருந்திய. பாணையமாய - இனிய - நாதவடிவனான தாணையமாய தன் ஆதனம் - திருவடி இன்பம்.

## 1108.தானே எழுந்தஇத் தத்துவ நாயகி

1108.தானே எழுந்தஇத் தத்துவ நாயகி
வானேர் எழுந்து மதியை விளக்கினள்
தேனேர் எழுகின்ற தீபத் தொளியுடன்
மானே நடமுடை மன்றறி யீரே.

தன்பாலுள்ள அளவிலாப் பேரருளால் மாயாகாரியத் தொகுதிகளாகிய தத்துவங்களை நடத்தும் தலைவி, திருவருள் வெளியில் செவ்விதாக எழுந்து அறிவை விளக்கியருளினள். பேரின்பத்தேனைத் தருதற்பொருட்டுத் திருவடியுணர்வுடன் தோன்றும் பேரொளியைத் தாங்கி உயிருணர்வை மன்றமாகக்கொண்டு ஆடுங்கூத்தின் உண்மை உணரீர்.

மதி - ஞானம்.

## 1109.அறிவான மாயையும் ஐம்புலக் கூட்டமும்

1109.அறிவான மாயையும் ஐம்புலக் கூட்டமும்
அறிவான மங்கை அருளது சேரிற்
பிறியா அறிவறி வாருளம் பேணும்
நெறியாய சித்த நினைந்திருந் தாளே.

உணர்வு மெய்யெனப்படும் அறிவாயமெய் ஏழும், ஐம்புலக் கூட்டமாகிய உடல்மெய் இருபத்துநான்கும், ஆவி பேரறிவே உருவான பெருமாட்டியைச் சேர்ந்தபொழுது, அத் திருவருளின் திருவுள்ளப்படி நன்னெறிப்பட்டுச் செல்லும். சேர்ந்தார் பிரிவரிய அறிவு அறிவாம் திருவினராவர். அவர்களைத் திருவருள் சிறப்பாக நன்னெறிப்படருமாறு திருவுள்ளம்கொள்ளும். அறிவான மாயை: அசுத்த தத்துவம். ஐம்புலக் கூட்டம்: பிரகிருதிமாயை.

அறிவான மாயை - மனம். அறிவான மங்கை அருள் - திருவருட் சத்தி.

## 1110.இரவும் பகலும் இலாத இடத்தே

1110.இரவும் பகலும் இலாத இடத்தே
குரவஞ்செய் கின்ற குழலியை நாடி
அரவஞ்செய் யாமல் அருளுடன் தூங்கப்
பருவஞ்செய் யாததோர் பாலனு மாமே.

நினைப்பும் மறப்பும் இல்லாமற் செய்யும் திருவடியுணர்விடத்து, அருள் விளையாட்டு நிகழ்த்தும் ஆருயிர்க் குழவியை ஆராயின் அவ்வுயிர் ஐந்தெழுத்துணர்வேயாக நிற்கும். வேறு எவ்வகை ஓசையும் எழாது. அருளுடனே தங்கிநிற்கும் அவ்வுயிர் என்றும் இளமை நீங்காது ஒருபடித்தாக இருக்கும். அதனால் பருவம் செய்யாத பாலன் என்றார்.

இரவு....தே - நினைப்பு மறப்பு இல்லாமல். குரவம் - விளையாட்டு. அரவம் செய்யாமல் - உதடு அசையாமல். பருவம்..தோர் - பாலன், குமரன் முதலிய பருவங்கள் இல்லாததோர்.

## 1111.பாலனு மாகும் பராசத்தி தன்னொடு

1111.பாலனு மாகும் பராசத்தி தன்னொடு
மேலனு காவிந்து நாதங்கள் விட்டிட
மூலம தாமெனும் முத்திக்கு நேர்படச்
சாலவு மாய்நின்ற தற்பரத் தாளே.

நீங்கா இளைமைபெற்ற ஆருயிர் திருவருளம்மையுடன் நாத விந்துக்கள் என்று பேசப்பெறும் ஓசையும் ஒளியுமாகிய முப்பத்தாறு தத்துவங்களையும் கடந்துசெல்ல முழுமுதற் சிவபெருமான் திருவடியைத் தலைக்கூடும். அவ்வாறு நிறைந்த திருவருளைச் செய்யும் அம்மை முழுமுதல்வி. தற்பரத்தாள் - முழுமுதல்வி.

## 1112.நின்ற பராசத்தி நீள்பரன் தன்னொடு

1112.நின்ற பராசத்தி நீள்பரன் தன்னொடு
நின்றறி ஞானமும் இச்சையு மாய்நிற்கும்
நன்றறி யுங்கிரி யாசத்தி நண்ணவே
மன்ற னவற்றுள் மருவிடுந் தானே.

முழுமுதற் சிவனை விளக்கமுறச் செய்யும் தொழிலாற்றல் வெளிப்பட, கூத்தப்பெருமானாகிய சிவன் அவ்வாற்றலுடன் கலந்தருள்வன். நிலைபெற்ற திருவருளாற்றல் அச் சிவத்துடன் அறிவாற்றலாக விழைவாற்றலாக அமைந்து நிற்கும். அறிவாற்றல் - ஞானசத்தி. விழைவாற்றல் - இச்சாசத்தி.

நன்று....சத்தி - ஈசனை நன்கு புலப்படுத்தும் கிரியா சத்தி. மன்றன் - கூத்தப்பெருமான்.

## 1113.மருவொத்த மங்கையுந் தானும் உடனே

1113.மருவொத்த மங்கையுந் தானும் உடனே
உருவொத்து நின்றமை ஒன்றும் உணரார்
கருவொத்து நின்று கலக்கின போது
திருவொத்த சிந்தைவைத் தெந்தைநின் றானே.

மலர் மணம்போன்று அடங்கித்தோன்றும் சிவனும் அருளும் ஒருருவாய் ஒத்து நிற்கும் உண்மையினை உணரார். கருவுக்கு உயிராய் நின்று அக் கருவினைத் தொழிற்படுத்தியபோது எந்தையாகிய சிவபெருமான் அவ்வுயிர் தன் திருவடியைச் சேரவேண்டுமென்று திருவுள்ளங்கொண்டு நின்றனன். தவமிருந்து மகப்பெறுவார் பெற்ற ஞான்றே தக்கமணவாளரை நாடுதல் இதற்கு ஒப்பாகும்.

மரு - வாசனை. உரு ஒத்து - உருவ வேறுபாடு இல்லாமல். கருஒத்து - கருவிலேயே உள்புகுந்து. திரு ஒத்த - முத்தி அடையவேண்டும் என்ற.

## 1114.சிந்தையின் உள்ளே திரியுஞ் சிவசத்தி

1114.சிந்தையின் உள்ளே திரியுஞ் சிவசத்தி
விந்துவும் நாதமு மாயே விரிந்தனள்
சந்திர பூமி சடாதரி சாத்தவி
அந்தமொ டாதிய தாம்வண்ணத் தாளே.

திருவருள் சிவபெருமான் திருவுள்ளத்து அன்பாகிய விழைவாற்றலாய் ஒருபடித்தாய்த் திகழ்வள். ஒளியும் ஓசையுமாகிய விந்து நாதங்களைத் தொழிற்படுத்தி அவை தானாகவே நின்றனள். திங்கள் மண்டிலத்தும் வீற்றிருப்பள். திருச்சடையை உடையவள். தலைமைப் பண்பாம் அறிவாகவே அமைந்தவள். முடிவும் முதலுமாய் உலகம் விளங்குதற்கு நிலைக்களமாகவுள்ளவள். சடாதரி - திருச்சடையை உடையவள். சாத்தவி - தலைக்குணம் வாய்ந்தவள்.

சடாதரி - சடைய உடையவள். சாத்தவி - சாத்மீக குணம் உடையவள்.

## 1115.ஆறி யிருந்த அமுத பயோதரி

1115.ஆறி யிருந்த அமுத பயோதரி
மாறி யிருந்த வழியறி வாரில்லை
தேறி யிருந்துநல் தீபத் தொளியுடன்
ஊறி யிருந்தனள் உள்ளுடை யார்க்கே.

திருவடியுணர்வு நிறைந்து அடங்கியிருந்த திருமுலையை உடையவள். சிவனும் சிவையும் பொருளால் ஒன்றாய், தோற்றத்தால் பிரிப்பில்லாத வேறுபாடற்ற இரண்டாய் விளங்கும் நிலைமையை அறிபவர் இல்லை. திருவடியே நிலைபேறான புகலென்று தெளிந்திருந்து மெய்யுணர்வு விளக்கமாய்த் திகழும் ஆருயிர்கட்குப் பேரின்பமாம் இன்னமிழ்தாய் அதுவும் வற்றாவூற்றாய் அருளம்மை வீற்றிருப்பள்.

ஆறி இருந்த - சிவத்துள் அடங்கி இருந்த. அமுத பயோதரி - அமிழ்தக் கடல் போன்றவள்.

# 1116.உடையவன் அங்கி உருத்திர சோதி

1116.உடையவன் அங்கி உருத்திர சோதி
விடையவன் ஏறி விளங்கி யிருக்குங்
கடையவர் போயிடுங் கண்டவர் நெஞ்சத்
தடையது வாகிய சாதகர் தாமே.

உலகியற்பொருள்களை உடைமையாகவும் ஆருயிர் இனங்களை அடிமையாகவும் என்றும் உடையவன் சிவன். அவனே தீயினுக்கும் ஒளிகொடுக்கும் அரனாகவுள்ளவன்; ஆனேறாகிய அறத்தினை ஊர்பவன்; சிறந்து மேனிலத்து விளங்கும் மெய்ப்பொருள். அறிவாற்றல் அன்புகளில் கடையவராயுள்ளார் இவ்வுண்மையினை அறியார். திருவருள் துணையால் அருட்கண்ணே கண்ணாகக்கொண்டு சிறப்புறக் காணும் நல்லார் தூயநெஞ்சத்துள் அவன் விளங்கியருள்வன். இவ் விளக்கமுடையாரை அடயோகப் பயிற்சியினர் என்பர். நல்லார் - ஞானிகள். சாதகர் - பயிற்சியினர்.

அங்கி உருத்திரன் - தேயு தத்துவ அதிபதியாகிய உருத்திரன். விடையவன் - இடப இலக்கினத்துக்கு உரியவன். கடையவர் போயிடும் - அறிந்துகொள்ளாதவர் தவறிவிடுவர். நெஞ்சத்..சாதகர் - அடயோகர்.

## 1117.தாமேல் உறைவிடம் மாறித ழானது

1117.தாமேல் உறைவிடம் மாறித ழானது
பார்மேல் இதழ்பதி னெட்டிரு நூறுள
பூமேல் உறைகின்ற புண்ணியம் வந்தனள்
பார்மேல் உறைகின்ற பைங்கொடி யாளே.

திருவருளாற்றல் திங்கள் மண்டிலத்தும் ஞாயிற்று மண்டிலத்தும் உறையும் நிலையினை மேலிடத்து உறைவென்பர். திங்கள் மண்டிலத்தின் இதழ் கீழ்நோக்கியும், ஞாயிற்று மண்டிலத்தின் இதழ் மேல் நோக்கியும் நிற்பன. இவையே மாறிதழ்கள் என்று சொல்லப் பெறுவன. நிலத்தின்மேல் அத் திருவருள் தங்குவதற்குப் பதினெட்டிதழும் இருநூறிதழ்களும் ஆகிய தாமரைகள் உள்ளன. அப் பூமேலுறைவதற்குப் புண்ணியமாக எழுந்தருளினள், முறைமேல் நின்று நிறையும் பைங்கொடி போன்ற அருளம்மை. பார்: முன்னது நிலம் பின்னது முறை.

மாறிதழ் - இதழ்கள் கீழ்நோக்கியும் மேல்நோக்கியும் இருப்பது.

## 1118.பைங்கொடி யாளும் பரம னிருந்திடத்

1118.பைங்கொடி யாளும் பரம னிருந்திடத்
திண்கொடி யாகத் திகழ்தரு சோதியாம்
விண்கொடி யாகி விளங்கி வருதலாற்
பெண்கொடி யாக நடந்த துலகே.

அழகிய கொடிபோன்ற அருளம்மையும் சிவன் திருவுருக் கொண்டு விளங்கும் பொருட்டு ஆற்றல்மிக்க தொடர்ந்த பேரொளிப் பிழம்பாவள். அவள் விண்ணிலே காணப்படும் மின்னற்கொடி போன்று விளங்கி வருகின்றனள். அதனால் உலகனைத்தும் பெண்கொடி வண்ணமாய் நடந்து பிறங்குவவாயின.

'பெண்ணில் நல்லாளொடும் பெருந்தகை இருந்ததை எண்ணில்,
மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்வைகலும்
எண்ணில் நல்லகதிக்கு யாதும் ஐயுறவில்லை'
என்னும் தமிழ்மறை இதனை நன்கு உணர்த்தும்.

## 1119.நடந்தது வம்மலர் நாலுடன் அஞ்சாய்

1119.நடந்தது வம்மலர் நாலுடன் அஞ்சாய்
இருந்தனர் கன்னிகள் எட்டுடன் ஒன்றாய்ப்
படர்ந்தது தன்வழி பங்கயத் துள்ளே
தொடர்ந்தது உள்வழிச் சோதி யடுத்தே.

திருவருளால் நடந்துவரும் உலகத்து இதழ் ஒன்பது கொண்ட தாமரையுளது. அதன்கண் வீற்றிருப்பார் ஒன்பதின் ஆற்றலர்கள். இவரை நவ (878, 893) சத்தி என்பர். அகத் தாமரை ஆகிய நிலைக்களங்களில் நிகழும் நிகழ்ச்சிகள் திருவருள் ஆணைவழி நிகழ்வன. உச்சித் தொளைவழி ஒள்ளொளியைத் தொடர்வதுமாகும். 'சோதி உள்வழி' எனக்கொண்டு சிவனிருக்குமிடம் எனினுமாம்.

## 1120.அடுக்குந் தாமரை ஆதி யிருப்பிடம்

1120.அடுக்குந் தாமரை ஆதி யிருப்பிடம்
எடுக்குந் தாமரை இல்லகத் துள்ளது
மடுக்குந் தாமரை மத்தகத் தேசெல
முடுக்குந் தாமரை முச்சது ரத்தே.

ஆருயிரை அடுத்திருக்கும் நெஞ்சத்தாமரை (அனாகதம்) ஆதியையுடைய சிவபெருமானின் உறைவிடம். நெஞ்சினின்றும் மேலுயர்த்தும் நிலைக்களம் இல்லகமாகிய மிடறாகும். உயிரமிழ்தாகிய வித்து மடுக்கும் தாமரை புருவநடுவாகும். அப் புருவநடுவிலே ஆருயிரைச் செல்லுமாறு முடுக்கும் தாமரை மூலமாகும். மூலம் - மூலாதாரம். இது முச்சதுரம் உடையது. சதுரம் எனினும் சதிரம் எனினும் ஒன்றே.

அடுக்குந் தாமரை - ஆஞ்ஞை எடுக்குந் தாமரை - விசுத்தி. மடுக்குந் தாமரை - அனாகதம். முடுக்குந் தாமரை - மணிபூரகம் (Solar pluxes).

## 1121.முச்சது ரத்தே எழுந்த முளைச்சுடர்

1121.முச்சது ரத்தே எழுந்த முளைச்சுடர்
எச்சது ரத்தும் இடம்பெற ஓடிடக்
கைச்சது ரத்துக் கடந்துள் ஒளிபெற
எச்சது ரத்தும் இருந்தனள் தானே.

முச்சதுரமாகிய மூலத்திடத்து எழுந்த சுடர் எங்கும் இடம்பெற்று விளங்கும்படி செல்லவும், அழகிய பெருமை மிக்க இவ் வொளி எய்தும்படியும் எல்லா இடங்களிலும் திருவருளம்மை நிறைந்திருந்தனள்.

முச்...சுடர் - மணிபூரகத்தினின்றுமே எவ்விடத்துக்கும் சத்தி பரவுதலால் முளைச்சுடர் எனப்பட்டது. எச் சதுரம் - எல்லா இடத்திலும். கைக் சதுரம் - பிரமரந்திரம்.

## 1122.இருந்தனள் தன்முகம் ஆறொடு நாலாய்ப்

1122.இருந்தனள் தன்முகம் ஆறொடு நாலாய்ப்
பரந்தன வாயு திசைதிசை தோறுங்
குவிந்தன முத்தின் முகவொளி நோக்கி
நடந்தது தேறல் அதோமுகம் அம்பே.

புலம் பத்தாகலின் அம்மையும் பத்துத் திருமுகங்களுடன் வீற்றருளினள். அம்மையின் உயிர்ப்பே ஆருயிர்க்குக் காற்றாக வழங்கலின் காற்றாக எங்கும் விரவி இருந்தனள். அருளொளி அதிருமுகத்தின்கண் ஒருங்கு திரண்டு பொலிந்து விளங்கிற்று. அத் திருமுகத்து ஒளியின் துணையால் அம்புபோல் விரைவாய் இன்பம் பொழியும் கீழ்முக நோக்கி ஆருயிர் நடந்தது. புலம் - திசை.

தன்....நாலும் - முகங்கள் பத்து. வாயு - சத்தி உயிர்ப்பு. அதோமுகம் - கீழ்முகம்.

## 1123.அம்பன்ன கண்ணி அரிவை மனோன்மனி

1123.அம்பன்ன கண்ணி அரிவை மனோன்மனி
கொம்பன்ன நுண்ணிடை கோதை குலாவிய
செம்பொன்செய் யாக்கை செறிகமழ் நாடொறும்
நம்பனை நோக்கி நவிலுகின் றாளே.

கணையொத்த கண்ணையும் கொம்பொத்த இடையையும் பிற அழகுகளையும் உடைய திருவருளம்மை, நறுமணங்கமழ்கின்ற செம்பொன் திருமேனியுடன் சிவபெருமானை நோக்கி ஆருயிர்கட்காம் இன்பமொழி நயமுற நாடொறும் நவில்கின்றனள். அம்மை சிவபெருமானுடன் ஆருயிர்கட்கு அருமறை பகர்கின்றனள். என்பதும் ஒன்று.

செறிகமழ் - கமழ்செறி - மணம் செறிந்த. நவிலுகின்றான் - சொல்லுகின்றான்.

## 1124.நவிலும் பெருந்தெய்வம் நான்மறைச் சத்தி

1124.நவிலும் பெருந்தெய்வம் நான்மறைச் சத்தி
துகிலுடை யாடை நிலம்பொதி பாதம்
அகிலமும் அண்ட முழுதுஞ்செம் மாந்து
புகலுமுச் சோதி புனையநிற் பாளே.

எல்லாராலும் புகழ்ந்து பேசப்பெறும் பெரும்பொருள் கடவுள் - தமிழ் நான்மறையின் உள்ளுறையாற்றல். அவள் திசைகளையே மெல்லுடை ஆடையாகவுடையவள். இருநிலமே திருவடியாகவுடையவளும் அவளே. அண்டமுதலாகச் சொல்லப்பெறும் எல்லா இடங்களிலும் ஓங்கிநிமிர்ந்து சிறப்பித்துச் சொல்லப்படும் ஞாயிறு திங்கள் தீ என்னும் மூன்றினுக்கும் ஒளியருளும் அழகிய பேரொளிப்பிழம்பாய்த் திகழ்பவளும் அவளே. செம்மாந்து - ஓங்கிநிமிர்ந்து.

நான்மறை - தமிழ் நான்மறைகளை வெளிப்படுத்திய.

## 1125.புனையவல் லாள்புவ னத்திறை எங்கள்

1125.புனையவல் லாள்புவ னத்திறை எங்கள்
வனையவல் லாள்அண்ட கோடிகள் உள்ளே
புனையவல் லாள்மண்ட லத்தொளி தன்னைப்
புனையவல் லாளையும் போற்றியென் பேனே.

எங்கள் அம்மை இருநூற்று இருபத்துநான்கென இயம்பப்
பெறும் புவனங்களுக்கு முழுமுதல்வனாகிய
சிவபெருமானைத் தன் ஒரு

## 1. என்னி. அப்பர், 5. 21 - 1.

1. என்னி. அப்பர், 5. 21 - 1.

கூற்றிலே பொருத்தவல்லாள். அவளே அளவிறந்த அண்டகோடிகளைத் திருவுள்ளத்தால் படைக்கவும் வல்லள். அவ்வம் மண்டலத்துள்ள ஒளிகொடுக்கும் பொருள்களுக்கும் ஒளியருளவல்லாளும் அவளே. எல்லாவற்றையும் அழகுபடுத்தி நிலைப்பிக்க வல்லாளுமாவாள். அவள் திருவடிகளையும் போற்றி வணங்குவேன்.

வனைய - ஆக்க. புனைய - அலங்கரிக்க.

## 1126.போற்றியென் பேன்புவ னாபதி அம்மையென்

1126.போற்றியென் பேன்புவ னாபதி அம்மையென்
ஆற்றலுள் நிற்கும் அருந்தவப் பெண்பிள்ளை
சீற்றங் கடிந்த திருநுதற் சேயிழை
கூற்றந் துரக்கின்ற கோள்பைந் தொடியே.

எல்லாப் புவனங்கட்கும் முதல்வியாக விளங்குகின்ற அருளம்மையைப் போற்றுகின்றேன். அவள் ஆருயிர்களின் அன்பறிவாற்றல்களுள் அவற்றை இயைந்தியக்க இடையறாது நிற்கின்றனள். அதனால் அருந்தவப் பெண்பிள்ளை என்று வழங்கப்பெறுவள். சினமகன்ற அகற்றிய அழகிய நெற்றியை உடைய அம்மை. கூற்றத்தை மாற்றும் முடிவிலாற்றல் அமைந்த வடிவினள்.

ஆற்றல் - அறிவு ஆற்றல். கூற்....கோள் - கூற்றுவனைத் துரத்துகின்ற வல்லமையுள்ள.

## 1127.தொடியார் தடக்கைச் சுகோதய சுந்தரி

1127.தொடியார் தடக்கைச் சுகோதய சுந்தரி
வடிவார் திரிபுரை யாமங்கை கங்கைச்
செடியார் வினைகெடச் சேர்வரை என்றென்று
அடியார் வினைகெடுத் தாதியு மாமே.

அழகிய வளையலணிந்த திருக்கையையுடையாள் திருவருளம்மை. அவளே இன்ப வூற்றாந்திருவினள். அழகிய திரிபுரை; மங்கை; சலமகள்; அவளே திருடி சேர்வார் துன்பவினைகளை எல்லாம் அகற்றியருள்பவள். ஞாயிற்றுக்கும் ஒளிகொடுப்பவளும் அவளே. அவள் அடியார்வினைகளை அறக்கெடுத்து அவர்களைத் திருவடியுணர்வில் என்றென்றும் நிலைக்கச் செய்யும் நடப்பாற்றலாகிய ஆதியாவள்.

செடி - துன்பம். என்று என்று - சூரியன் என்று.

## 1128.மெல்லிசைப் பாவை வியோமத்தின் மென்கொடி

1128.மெல்லிசைப் பாவை வியோமத்தின் மென்கொடி
பல்லிசைப் பாவை பயன்தரு பைங்கொடி
புல்லிசைப் பாவையைப் போகத் துரந்திட்டு
வல்லிசைப் பாவை மனம்புகுந் தாளே.

இயல்பாகவே பண்ணும் தோற்கும் மென்மையும் இனிமையும் வாய்ந்த திருமொழியினை உடையவள், அருள்வெளியில் விளங்கும் மெல்லிய பூங்கொடி; பல உயிர்களோடும் இயல்பாகவே இயைந்து இயக்கும் எழிலினள், நற்பயன்தரும் நல்லாள், புன்னெறியுள் செல்லும் போக்கினை விலக்கி, மேலாம் நன்னெறிக்கு உய்க்கும் நங்கை திருவருளம்மை. அவள் எளியேன் உள்ளத்தும் வீற்றிருந்தனள்.

வியோமம் - ஆகாயம். பல்...பாவை - இசைக்கும் நாயகி. புல் - புன்மையான். இசைப்பாவை வல்மனம் என்று கொள்க.

## 1129.தாவித் தவப்பொருள் தானவன் எம்மிறை

1129.தாவித் தவப்பொருள் தானவன் எம்மிறை
பாவித் துலகம் படைக்கின்ற காலத்து
மேவிப் பராசத்தி மேலொடு கீழ்தொடர்ந்
தாவிக்கு மப்பொருள் தானது தானே.

எம்மிறைவனாகிய சிவபெருமான் உலகுடல்களைப் படைத்தருள உறுதிசெய்தபொழுது பாவித்தலாகிய திருவுள்ளங் கொண்டனன். உடனே திருவருள் அவனுடன் பொருந்தி முனைத்து நின்றனள். மேலொடு கீழாக, இறைவனுடன் தொடர்ந்ததுபோல் ஆவியிலும் பொறிபுலன் கரணங்களிலும் தொடர்ந்துநின்றனள். பாவித்து - திருவுள்ளம்கொண்டு. பராசத்தி - வனப்பாற்றலாகிய திருவருள்.

தாவித்த - நிச்சயித்த பாவித்து - நினைத்துப் பார்த்து. ஆவிக்கு - உயிர்களுக்கு. அப் பொருள் - கருவிகள்.

## 1130.அதுவிது என்பார் அவனை அறியார்

1130.அதுவிது என்பார் அவனை அறியார்
கதிவர நின்றதோர் காரணங் காணார்
மதுவிரி பூங்குழல் மாமங்கை நங்கை
திதமது உன்னார்கள் தேர்ந்தறி யாரே.

முழுமுதற் சிவனை அது இது எனச் சுட்டுப்பொருள் போல் கூறுவார் அப் பெரும் பெயர்ப் பொருளை உணரார். பெரும்பெயர்: 'நமசிவய'. திருவடிப் பேரின்பம் துய்ப்பதற்குரிய மெய்யுணர்வு கைவரப் பெறார். பேரின்பப் பெருவாழ்வைக் கைவரச் செய்யும் திருவருளினிடத்துத் தம்மை அடைக்கலமாக ஒப்புவிப்பார், இன்பத் தேன் நிறைந்த மணம் கமழும் பூச்சூடிய கூந்தலினையுடைய அம்மையின் செம்மை தேர்ந்தவரார். ஆதலால் அவர் ஏனை நிலைமைகளை ஒருசிறிதும் கருதார். காரணம் - மெய்யுணர்வு; சிவஞானம்.

கதி - முத்தி. திதம் - தன்மை.

## 1131.நாலிதழ் ஆறில் அவிர்ந்தது தொண்ணூறு

1131.நாலிதழ் ஆறில் அவிர்ந்தது தொண்ணூறு
தானித ழானவை நாற்பத்து நாலுள
பாலித ழானவள் பங்கய மூலமாய்த்
தானித ழாகித் தரித்திருந் தாளே.

நாலிதழ்கொண்டது மூலம். ஆறிதழ்கொண்டது கொப்பூழ். தொண்ணூறு இதழ்கொண்டது மேல்வயிறு. நாற்பது இதழ் கொண்டது நெஞ்சகம். பதினாலு இதழ்கொண்டது மிடறு. பத்திதழ் கொண்டது புருவநடு. இவையனைத்தும் தாமரைப் பூவாக உருவகிக்கப்படும். திருவருளம்மை இவ்விடங்களில் நின்று இயக்குவள். பால் - பக்கம்; பத்து.

ஆறு ஆதாரங்களின் இதழ்களையும் அவற்றின் பீச எழுத்துக்களையும் பற்றி இப் பாட்டுக் கூறுகின்றது. ஆறில் அவிர்ந்தது தொண்ணூறு - தொண்ணூற்றாறு புற தத்துவங்கள். தானிதழாகி - இதழ்களாயுள்ளவை ஆதார சத்திகளாகி.

## 1132.தரித்திருந் தாளவள் தன்னொளி நோக்கி

1132.தரித்திருந் தாளவள் தன்னொளி நோக்கி
விரித்திருந் தாளவள் வேதப் பொருளைக்
குறித்திருந் தாளவள் கூறிய ஐந்து
மறித்திருந் தாளவள் மாதுநல் லாளே.

திருவருளம்மை தன் உயிர்க்கு உயிராய் ஒளியாய் விளங்கும் செம்பொருளாம் சிவனையே நோக்கி நின்றனள். அவன் திருவுள்ளப்படி மறையும் முறையுமாகிய வேதாகமப் பொருள்களை விரித்தருளினள். படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்து தொழில்களையும் உள்ளக் குறிப்பால் உஞற்றியருளினள். தோற்றுவித்தருளினமை போன்று ஒடுக்குங்காலத்து அவற்றை முறையே ஒடுக்கியருளினள். அதனால், அவ்வம்மை மாதுநல்லாள் என வழுத்தப்படுவாளாயினள்.

தன்னொளி - சத்தி தங்கிய சிவ ஒளி. விரித்திருந்தாள் - வெளிப்படுத்தினாள். மறித்திருந்தாள் - ஒடுக்கி இருந்தாள்.

## 1133.மாதுநல் லாளும் மணாளன் இருந்திடப்

1133.மாதுநல் லாளும் மணாளன் இருந்திடப்
பாதிநல் லாளும் பகவனு மானது
சோதிநல் லாளைத் துணைப்பெய்ய வல்லிரேல்
வேதனை தீர்தரும் வெள்ளடை யாமே.

மாது நல்லாளாகிய திருவருள் தன் மணாளனாகிய சிவன் தன்மெய்யினில் செம்பாதிகொள்ள இடங்கொடுத்துப் பாதி நல்லாளா
யினள். சிவனும் பகுப்புடையான் என்னும் பொருளில் பகவனாயினன். அத்தகைய அறிவுப் பேரொளி நல்லாளைத் தம் ஆருயிர்த் துணையாகக் கொள்ள வல்லாரின் பிறவித் துன்பம் தீரும். அவ்வம்மை அருட்பெரும் வெளியாகும். வெள்ளடை - அருட்பெரும்வெளி.

பெய்ய - கொள்ள. வேதனை - பிறவித் துன்பம். வெள்ளடை - தெளிவு.

## 1134.வெள்ளடை யானிரு மாமிகு மாமலர்க்

1134.வெள்ளடை யானிரு மாமிகு மாமலர்க்
கள்ளடை யாரக் கமழ்குழ லார்மன
மள்ளடை யானும் வகைத்திற மாய்நின்ற
பெண்ணொரு பாகம் பிறவிபெண் ணாமே.

திருவருள்வெளியில் உறைபவன் சிவன். அவன்மிக்க கருமையும் தேனும் மணமும் நிறைந்த பூவும் விளங்காநின்ற மருள் மாதர் உள்ளத்தால் அள்ளிக்கொள்ளும் தன்மையன் அல்லன். ஆயினும் அச் சிவனும் அருள்மாதரால் தோற்றுவிக்கப்பட்டோன். அருள் மாதருக்கு அரையுடம்பு நல்கிய அப்பன். (ஆடவர் அருள்நாட்டமுடைய மாதர் துணையாற் சிவனை அடைந்து சிறப்புறுவர். மருள்நாட்டமுடைய மாதர் துணையாற் சிவனை அடையாது பிறப்புறுவர். இவ்வுண்மை முறையே வாழ்க்கைத்துணை நலம் பெண்வழிச் சேறல் என வள்ளுவர் வரை செய்த வாய்மையான் உணரலாம்.)

வெள்ளடை - பரமஆகாயம். கமழ்...அடையான் - மாதரால் கவரப்படும் தன்மையில்லாத சிவம். பிறவி பெண்ணும் - பிறவி பெண்ணிடத்திலேயே உண்டாம்.

## 1135.பெண்ணொரு பெண்ணைப் புணர்ந்திடும் பேதைமை

1135.பெண்ணொரு பெண்ணைப் புணர்ந்திடும் பேதைமை
பெண்ணனிடை ஆணும் பிறந்து கிடந்தது
பெண்ணுடை ஆணென் பிறப்பறிந் தீர்க்கின்ற
பெண்ணுடை ஆணிடைப் பேச்சற்ற வாறே.

திருவருளாற்றலாகிய பெண் திருவருளையே திருவுருவாகக் கொண்டு திகழும் சிவனாகிய பெண்ணைக் கலந்திடும். (இஃது அறிவு அறிவொடு கலக்கும் குறிப்பு.) ஆருயிர்களின் அறியாமையாகிய பேதைமையையகற்றும் திருவருளாற்றலாகிய பெண்ணின் எண்ணமாகிய நடுவுள் அவ்வாற்றலைத் திருமேனியாகவுடைய ஆணாகிய சிவனும் தோன்றி நின்றனன். (பேணுதலால் பெண்; ஆளுதலால் ஆண்; பேணுதல்; ஏற்பித்தல். ஆளுதல் - இன்புறுத்தல்.) என் பிறப்பகற்றும் செவ்வியறிந்து தன் திருவடிக்கு ஆக்குகின்ற அருளே திருமேனியாகவுடைய சிவபெருமானின் உண்மையுணர்ந்தால் குறியால் உணரப்படும் பெண் ஆண் என்னும் பேச்சு அற்றுவிடும். ஈர்க்கின்ற - சேர்க்கின்ற.

பெண் - சத்தி. ஒரு பெண்ணை - பேணப்பட்ட ஒருவனாகிய சிவத்தை. (பெண்: பேண் என்பதின் குறுக்கம்) பெண்ணிடை யாணும் பிறந்து இருத்தல் - "உடையாள் நடுவுள் நீயிருத்தி" என்ற வாக்கின் பொருள். பெண்ணுடை ஆண் மாதொரு பாகன்.

## 1136.பேச்சற்ற நற்பொருள் காணும் பெருந்தகை

1136.பேச்சற்ற நற்பொருள் காணும் பெருந்தகை
மாச்சற்ற சோதி மனோன்மனி மங்கையாங்
காச்சற்ற சோதி கடவு ளுடன்புணர்ந்
தாச்சற்றென் உட்புகுந் தாலிக்குந் தானே.

சிவன் 'மாற்றம் மனம்கழிய நின்ற மறையோ' னாதலின் பேச்சற்ற இடத்தில் உணரும் நற்பொருளாவன். அப் பெருந்தகை இயல்பாகவே மாசகன்ற பேரறிவுப் பேரொளி. மனோன்மனி மங்கையாகிய பகையற்ற பேராற்றல் பேரொளி அச் சிவனை மணந்தனள். அவள் எளியேனுட்புகுந்து தானே களிப்பிக்கச் செய்வாளாயினள். மாசு: மாச்செனத்திரிபாயிற்று. ஆலித்தல் - களித்தல்.

மாச்சற்ற - மாசு அற்ற. காச்சற்ற - பகைமை அற்ற.

## 1137.ஆலிக்குங் கன்னி அரிவை மனோன்மனி

1137.ஆலிக்குங் கன்னி அரிவை மனோன்மனி
பாலித் துலகிற் பரந்துபெண் ணாகும்
வேலைத் தலைவியை வேத முதல்வியை
ஆலித் தொருவன் உகந்துநின் றானே.

ஆருயிர்களின் அன்பிற் கீடாகக் களிப்பிக்கச் செய்யும் கன்னி அரிய மனோன்மனி. அவள் உலகிற் பெரும்பயன் அருளி நீக்கமற நிறைந்துநிற்கும் பெண்ணாவள். அவளே ஐந்தொழில் புரியும் அருட்டலைவி. அவளே மறை முதல்வி அவளை இடப்பால் பெற்று ஒப்பில்லாத சிவன் உயர்ந்து நின்றனன். உகப்பு - உயர்வு.

வேலைத் தலைவி - ஐந்து தொழில்களுக்கும் முதல்வி.

## 1138.உகந்துநின் றான்நம்பி ஒண்ணுதற் கண்ணோடு

1138.உகந்துநின் றான்நம்பி ஒண்ணுதற் கண்ணோடு
உகந்துநின் றான்நம் முழைபுக நோக்கி
உகந்துநின் றான்இவ் உலகங்கள் எல்லாம்
உகந்துநின் றான்அவள் தன்றோள் தொகுத்தே.

நம்பியாகிய சிவன் அழகிய நெற்றிக்கண்ணுடன் உயர்ந்து நின்றனன். அவன் ஆருயிர்கள் தன் திருவடியில் புகவேண்டும் என்னும் அருள் நோக்கத்தால் அவ்வுயிர்களிடத்தும் முதன்மை பெற்றிருந்தனன். அனைத்துலகங்களுக்கும் அவனே தலைவனாய் நின்றனன். இவையனைத்தும் திருவருளம்மையின் திருத்தோள் புணர்ந்தமையால் வந்தன. அதனால் அம்மையை அணைந்து உயர்ந்து நின்றான் எனபர். 'உகப்பே உயர்தல் உவப்பே உவகை.' தொல். சொல் - 305.

அவள் தன் தோள் தொகுத்து - புணர்ந்து.

## 1139.குத்து முலைச்சி குழைந்த மருங்கினள்

1139.குத்து முலைச்சி குழைந்த மருங்கினள்
துத்தி விரிந்த சுணங்கினள் தூமொழி
புத்தகச் சீறடிப் பாவை புணர்வினைத்
தொத்த கருத்தது சொல்லகி லேனே.

ஆருயிர்கட்கு அறிவமிழ்தம் அளவறிந்து ஊட்ட ஏந்தும் திருமுலையினையும், அவ்வுயிர்களை உளங்கொண்டு சுமத்தலால் துவளும் திருமருங்கிணையும் உடைய அருளம்மை, பொறியமைந்த தேமலையுடையவள். அவளே தூய திருமொழியினையுடையவள். அவளே மெய்யுணர்வு நூல் கைவரச் செய்யும் சிறிய திருவடியையுடையவள். அவளே உயிரோவியத்தள். அவள் மறவா நினைவுடன் ஆருயிரோடு ஒன்றாய் வேறாய் உடனாய்ப் புணர்ந்து நிற்கும் பழைமையான திருக்குறிப்பிணைப் புகலும் ஆற்றலில்லேன். குத்தல் - அளவாய் வார்த்தல். புத்தகம்: ஆகுபெயராக மெய்யுணர்வைக் குறிக்கும். தொத்த - பழைமையான.

துத்தி - பொறிகளை உடைய. சுணங்கினள் - தேமலை உடையவள். புத்தகம் - மயிலிறகு போன்ற மென்மையான.

## 1140.சொல்லவொண் ணாத அழற்பொதி மண்டலஞ்

1140.சொல்லவொண் ணாத அழற்பொதி மண்டலஞ்
செல்லவொண் ணாது திகைத்தங் கிருப்பர்கள்
வெல்லவொண் ணாத வினைத்தனி நாயகி
மல்லவொண் ணாத மனோன்மனி தானே.

சொல்லமுடியாத பேரொளிப்பிழம்பு சூழ்ந்த சிவவுலகு பெற்றார் பேற்றினைக் கண்டு பேறுபெறும் செவ்வியில்லார் சொல்லவும் முடியாதபடி திகைத்திருப்பர். அங்ஙனமிருப்பதும் மாற்றமுடியாத நடப்பாற்றலின் மறைப்பருளேயாகும். அவள் அத் துறையின்கண் தனிப்பெரும் தலைவியாவள். அவள் மனோன்மனி எனப்படுவள். அவளை வெல்லுதல் எவருக்கும் இயலாததொன்று.

வினை - மறைத்தல் தொழில். மல்ல - வெற்றிகொள்ள

## 1141.தானே இருநிலந் தாங்கிவின் ணாய்நிற்குந்

1141.தானே இருநிலந் தாங்கிவின் ணாய்நிற்குந்
தானே சுடும்அங்கி ஞாயிறுந் திங்களுந்
தானே மழைபொழி தையலு மாய்நிற்குந்
தானே வடவரைத் தண்கடற் கண்ணே.

திருவருளம்மையே இருநிலமாகவும், பூதங்களைத் தாங்கும் விண்ணாகவும், தீ ஞாயிறு திங்கள் என்னும் முச்சுடர்களாகவும், நீருக்கு முதலாம் மழையாகவும் நிற்பள். அவளே, பண்டு தமிழ்நாட்டின் வடஎல்லையாக அமைந்த இமயமலையாகநிற்பள். இம் மலை ஆதற்கு முன் கடலின்கண் அமிழ்ந்திருந்தது. அது தென்கடற்கோளால் மேலெழுந்தது.

வடவரை - தமிழ் நாட்டின் வடக்கின்கண்ணேயுள்ள இமயம். தண் கடற்கண்ணே தண்கடலாயிருந்த இடத்தின்கண்ணே மேலே கிளம்பிய (வடவரை என்று கொள்க).

## 1142.கண்ணுடை யாளைக் கலந்தங் கிருந்தவர்

1142.கண்ணுடை யாளைக் கலந்தங் கிருந்தவர்
மண்ணுடை யாரை மனித்தரிற் கூட்டொணாப்
பண்ணுடை யார்கள் பதைப்பற் றிருந்தவர்
விண்ணுடை யார்களை மேலுறக் கண்டே.

நெற்றிக்கண்ணுடைய திருவருளம்மையைச் சார்ந்திருந்தவர் செந்நெறி மாண்புடையர். அவரே சிவவுலகஞ் சேர்ந்தவர், தடுமாற்றமின்றி ஒரு நிலைப்பட்டு உயர்ந்திருப்பது கண்ட உண்மையாளர். அவரே அருட்பண்புடையராவர். அவர்களும் தடுமாற்றமாகிய நடுக்கற்றிருப்பர்.

கண்ணுடையாள் - மனோன்மனி. மண்ணுடையாரை - (மண் - மாட்சிமை) திருவருட் சத்தி கலந்த மாட்சிமை உடையவரை. பண்ணுடையார் - மணி கடல் முதலிய பத்துவித நாதங்களைக் கேட்டவர். விண்ணுடையார் - முத்தியுலகை உடையவர்.

## 1143.கண்டெண் டிசையுங் கலந்துவருங் கன்னி

1143.கண்டெண் டிசையுங் கலந்துவருங் கன்னி
பண்டெண் டிசையும் பராசத்தி யாய்நிற்கும்
விண்டெண் டிசையும் விரைமலர் கைக்கொண்டு
தொண்டெண் டிசையுந் தொழநின்ற கன்னியே.

திருவருள் எட்டுத் திசைகளிலுமுள்ள உலகுடல் கருவிகளைக் கருதியவளவானே தோற்றமுறக் கண்டு அவற்றுடன் கலந்தியக்கும் கன்னி. அவள் உலகத் தோற்றத்துக்குமுன் கருவுற்ற தாய்போல் சூலியாக நிற்பள். அப்பொழுது அவள் வனப்பாற்றல் என்று பெயர் பெறுவள். அவள் திருவடியை எண்புலத்துள்ளாரும் நறுமலர் கைக் கொண்டு திருமுறையோதித் திருத்தொண்டியற்றித் தொழுவர். அவர் தொழுகையை ஏற்றுத் துணையருள் புரிய இணையிலாக் கன்னியாக அவள் நின்றனள்.

கன்னி - நினைப்புமாத்திரையில் எல்லா உலகங்களையும் உடம்புகளையும் கருவிகளையும் போகங்களையும் ஆக்குவதால் கன்னி எனப்பட்டார்.

## 1144.கன்னி ஒளியென நின்றவிச் சந்திரன்

1144.கன்னி ஒளியென நின்றவிச் சந்திரன்
மன்னி யிருக்கின்ற மாளிகை செந்நிறஞ்
சென்னி யிருப்பிடஞ் சேர்பதி னாறுடன்
பன்னி யிருப்பப் பராசத்தி யாமே.

Try error :java.sql.SQLException: Closed Statement: next

தேன் நிறைந்த மலர்சூடிய மனோன்மனிமங்கை என்னும் அம்மை ஆருயிர்கள் கற்கும் கல்வியும் அதன் பயனுமாய் நிற்பள். ஆயுழி - ஆராயுமிடத்து. யோகம் - கூடியிருக்கும் பயன்.

இது - சத்தியும் சிவமும் சேர்ந்த காட்சி.

## 1148. யோகநற் சத்தி ஒளிபீடந் தானாகும்

1148. யோகநற் சத்தி ஒளிபீடந் தானாகும்
யோகநற் சத்தி ஒளிமுகந் தெற்காகும்
யோகநற் சத்தி உதர நடுவாகும்
யோகநற் சத்திதாள் உத்தரந் தேரே.

சிவனுடன் விட்டுப்பிரியாத திருவருளாற்றல் ஒளி விளங்கும் இருக்கையாகிய பீடமாகும். அவ்வாற்றலே திருவுருவின் திருமுகமாகும். அம் முகம் தென்முகம் நோக்கியதாகும். அவ்வாற்றலே வயிறாகும். அதுவே நடுவாகும். அவ்வாற்றலே திருவடியாகும். அத் திருவடியே உயர்வற உயர்ந்த சிறப்பாகும். உத்தரம் - உயர்வு. இதனை அறிவாயாக.

## 1149. தேர்ந்தெழு மேலாஞ் சிவனங்கி யோடுற

1149. தேர்ந்தெழு மேலாஞ் சிவனங்கி யோடுற
வார்ந்தெழு மாயையு மந்தம தாய்நிற்கும்
ஓர்ந்தெழு விந்துவும் நாதமும் ஓங்கிடக்
கூர்ந்தெழு கின்றனள் கோல்வளை தானே.

திருவருளம்மை (சத்தி) பேரொளிப்பிழம்பாம் சிவத்தினுள் ஒடுங்கும். அதுவே பேரொடுக்கநிலை அந்நிலையில் மாயாகாரியங்களும் தம் முதற்காரணமாகிய மாயையின்கண் ஒடுங்கும். அம் மாயை திருவருள் ஆற்றலின்கண் ஒடுங்கும். இதுபோல் உலகத்தோற்றத்தின்கண் சிவத்தின் நின்றும் அருளாற்றல் வெளிப்படும். அது வெளிப்பட்டதும் மாயையின்கண் சொல்லுறுப்பாகத் தோன்றும் ஓசையும் ஒளியுமாகிய நாதவிந்துக்கள் அம்மையின் நினைவாற்றலால் தோன்றும். அவை தொழிற்படுமாறு, அழகிய வளையலணிந்த அம்மையும் அப்பனிடமாக நின்று முனைத்தெழுகின்றனள்.

## 1150. தானான வாறெட்ட தாம்பரைக் குண்மிசை

1150. தானான வாறெட்ட தாம்பரைக் குண்மிசை
தானான வாறுமீ ரேழுஞ் சமகலை
தானான விந்து சகமே பரமெனுந்
தானாம் பரவா தனையெனத் தக்கதே.

பரையாகிய திருவருள் மூலமுதலாகிய ஆறு நிலைக்களங்களும், அகத்தவமாகிய எட்டுயோக நிலைகளும் தனக்கு இடம் என்று கொண்டருள்வள். அதுபோல அறுவகை வழிகளும் பதினான்கு உலகங்களும் தானாகக் கலந்திருப்பள். கலைவழிவாகச் சமையப்பட்ட உலகிற்கு முதலாம் விந்துவும் தானாக நிற்பள். பரமனாகிய நாதமும் தானாம். இத் திருவருள் திருவழிப்பேற்றை அப்பொழுது காட்டாது மறைத்தலின் மறைப்பாற்றல் எனத் தக்கதென்றனர். பரவாதனை - மேற்றடை; மேனிலையைக் காட்டாத தடை. பரம் - மேல். வாதனை - தடை.

ஆறு - ஆறாதாரம். எட்டு - எட்டுயோகங்கள். ஆறு - நிராதாரம் ஆறு. ஈரேழு - பதினாலு உலகங்கள்.

## 1151. தக்க பராவித்தை தானிரு பானேழில்

1151. தக்க பராவித்தை தானிரு பானேழில்
தக்கெழு மோருத் திரஞ்சொல்லச் சொல்லவே
மிக்கிடும் எண்சத்தி வெண்ணிற முக்கண்ணி
தொக்க கதையோடு தொன்முத் திரையாளே.

மிகவும் சிறந்த திருவருளின் கலையைப் பயிலுதற்கு ஏற்றநாள் முக்கூட்டாகிய பரணிநாளாகும். பண்டைக் காலத்தில் கார்த்திகையை முதல்நாளாகக் கொண்டு எண்ணியுள்ளார்கள். அதனால் பரணிநாள் இருபத்தேழாம் நாளாயிற்று அத் திருவருட் கலையைப் பயில்வார்க்கு ஒப்பில்லாத விடைபகரவே வெளிப்பட்டுத் தோன்றுவள். அவள் எட்டுச் சத்திகளையுடையவள். அவள் வெள்ளிய நிறமுடையவள். அவளே மூன்று திருக்கண்களையு முடையவள். அவளே அமைந்த காரணத்துடன் அரிய பழைமையான முத்திரையையும் உடையவள். உத்திரம் - விடை. சொல்லச் சொல்ல: அடுக்கு. கதை - காரணம். உருத்திரமெனக்கொண்டு திருவெம்பாவைக்கண் எண்பேராற்றல் வருமாறு கூறுதலை ஒத்துக் காண்க. நாள் - நட்சத்திரம்.

இருபானேழு - இருபத்தேழு வயதிற்குள். உருத்திரம் - உடல் உறுதியை அடையும் அஞ்செழுத்து மந்திரம் (உரு - உடல்; திரம் - உறுதி.)

## 1152. முத்திரை மூன்றின் முடிந்தமெய்ஞ் ஞானத்தள்

1152. முத்திரை மூன்றின் முடிந்தமெய்ஞ் ஞானத்தள்
தத்துவ மாயல்ல வாய சகலத்தள்
வைத்த பராபர னாய பராபரை
சத்தியு மானந்த சத்தியுங் கொங்கே.

அன்பு அறிவு ஆற்றல்களை விளக்கும் மூவகை முத்திரைகளுள் முடிந்த முத்திரையாகிய அறிவு முத்திரையுடையவள் அருளம்மை. தத்துவமாகிய உலகுடல்களுடன் கலப்பால் ஒன்றாய், பொருள் தன்மையால் வேறாய், உதவுதலால் உடனாய் எல்லாமாயிருப்பவளும் அவளே. அவள் அருள் செய்தற்பொருட்டுச் சிவபெருமானுக்குத் திருமேனியாகவுடையவள். நடப்பாற்றலாகிய ஆதிசத்தியும், வனப்பாற்றலாகிய இன்பச் சத்தியும் சிவனைவிட்டுப் பிரிந்து நில்லாதவர். அதனால் அவ்விருவரும் சிவனை மணக்கின்றனர் என்றனர். கொங்கு: மணக்கின்றனர்.

கொங்கு - வாசனை, நறுமணம்.

## 1153. கொங்கீன்ற கொம்பின் குரும்பைக் குலாங்கன்னி

1153. கொங்கீன்ற கொம்பின் குரும்பைக் குலாங்கன்னி
பொங்கிய குங்குமத் தோளி பொருந்தினள்
அங்குச பாச மெனுமகி லங்கனி
தங்கு மவள்மனை தானறி வாயே.

அருளம்மை மணங்கமழ்கின்ற கொம்புபோலும் இடையினையுடையாள். குரும்பைபோன்ற திருமுலையை உடையவளும் அவளே. அவளே அருள் விளக்கத்துடன் திகழும் கன்னி; குங்குமநிறத்தினை உடையவள். தோட்டியும் கயிறும் உடைய திருக்கையினையுடையவளும் அவளே. எல்லாவுலகங்களிலும் நிறைந்துநிற்பவளும் அவளே. அவள் அடியார் அகத்தாமரையின்கண் வீற்றிருப்பவள். இவற்றை அடியவர்க்கு அத்திருவருள் உணர்த்த உணர்ந்து ஒழுகும் தன்மை அவர்க்கு எய்தும். அவர்தம் நெஞ்சகமே அம்மை உறையும் உறையுளாகும்.

# 1154. வாயு மனமுங் கடந்த மனோன்மனி

1154. வாயு மனமுங் கடந்த மனோன்மனி
பேயுங் கணமும் பெரிதுடைப் பெண்பிள்ளை
ஆயும் அறிவுங் கடந்த அரனுக்குத்
தாயும் மகளுநல் தாரமு மாமே.

மாற்றம் மனம் கழிய நின்ற மனோன்மனி அம்மை திருவடிபோற்றும் பேய்களும், பூதக்கூட்டங்களும் மிகுதியாகவுடைய பெண்பிள்ளை. தேர்வும் தெளிவும் எட்டாத சிவபெருமானுக்குத் தாய் மகள் மனைவியுமென்னும் முறைமையினையுடையளாவள். முப்பத்தைந்தாம் மெய் அன்னைமெய்; இதின் நின்றும் முப்பத்துநான்காவதாகிய அருளோன்மெய் தோன்றும். இந்நிலையில் தாயாவள். முப்பத்தாறாவதாகிய அத்தன் மெய்யினின்றும் முப்பத்தைந்தாவதாகிய அன்னை மெய் தோன்றும், இந்நிலையில் மகளாவள். முப்பத்துநான்காவதாகிய அருளோன் மெய் அருளும் (சத்தி) ஆண்டானும் (சிவன்) கூடிய சதாசிவ தத்துவமாகும். இந்நிலையில் மனைவியாவள். (1099)

பேயுங் கரையும்-உயிர்க்கூட்டங்கள். (பிறப்பு எடுப்பதற்கு முந்திய நிலை). அரனுக்குத் தாய் - சத்தி தத்துவத்தினின்றும் சதாக்கிய தத்துவ வாசியாகிய சதாசிவமாகிய அரன் தோன்றுவதால் தாயாகியும்; மகள் - சிவதத்துவத்தினின்றும் சத்தி தத்துவம் தோன்றுவதால் சிவத்துக்கு மகளாயும்; தாரம் - ஆதி சத்தியாகி நின்று சத்தி தத்துவத்தில் சதாசிவ நாயனாரோடும் கூடி இருந்து

உலகமும் பல் உயிர்களும் தோற்றுவதற்கு ஏதுவாயிருத்தலால் தாரம் ஆயும் நின்ற அவசர பேதங்களை ஆய்ந்து அறிந்துகொள்க.

## 1155. தாரமு மாகுவள் தத்துவ மாய்நிற்பள்

1155. தாரமு மாகுவள் தத்துவ மாய்நிற்பள்
காரண காரிய மாகுங் கலப்பினள்
பூரண விந்து பொதிந்த புராதனி
பாரள வாந்திசை பத்துடை யாளே.

சிவனுக்கு மனைவியாகநிற்கும் அருளம்மை, அவனுக்கு அறிவாற்றலாகவும் நிற்பள். இக் கலப்பு உலகத் தோற்றத்தின் காரண காரியத் தொடர்பாகும். அவளே தூமாயையுடன் நிறைந்து மறைந்தியக்கும் பொற்பினளாவள். அவளே தொன்மையளுமாவள். நில எல்லையாகக் கூறப்படும் பத்துப்புலங்களையும் உடையவளும் அவளே. புலம் - திசை.

## 1156. பத்து முகமுடை யாள்நம் பராசத்தி

1156. பத்து முகமுடை யாள்நம் பராசத்தி
வைத்தனள் ஆறங்க நாலுடன் றான்வேதம்
ஒத்தனள் ஆதாரம் ஒன்றுடன் ஓங்கியே
நித்தமாய் நின்றாளெம் நேரிழை கூறே.

சிவபெருமானது கூறாகத் திகழும் திருவருள் அம்மை, புலம் பத்தாதலின் பத்துத் திருமுகங்களையுடையவள். அவள் பேரருள் என்னும் பெயருடைய பராசத்தியாவள். அவளே திருநான்மறையும் கருவியாம் ஆறு உறுப்புக்களும் ஆருயிர் உய்ய ஓதுவித்தனள். அவளே அத்தனாகிய சிவனுக்கு அருள், திருமேனியாதலால் தாங்குவதாகிய ஆதாரம் ஆகின்றனள். ஒடுங்கும்போது அருள் அத்தனுள் ஒடுங்குதலால் தாங்கப்படுவதாகின்றது. இம்முறையாகத் தானதுவாம் தன்மையில் சிவனும் அருளும் என்றும் பிரிப்பின்றிநின்று அருள்செய்வர்.

பத்து முகமுடையாள் - ஆதார ஆதேய சத்தியின் முகங்கள் பத்து. வைத்தனள் - தன் கரத்திடத்துச் சுவடி உருவமாக வைத்துளாள். ஆறங்கம் - தமிழ் அங்க நூல்கள் ஆறு. நாலுடன் தான் வேதம் - தமிழ் மறைகள் நான்கு.

## 1157. கூறிய கன்னி குலாய புருவத்தள்

1157. கூறிய கன்னி குலாய புருவத்தள்
சீறிய ளாயுல கேழுந் திகழ்ந்தவள்
ஆரிய நங்கை யமுத பயோதரி
பேருயி ராளி பிறிவறுத் தாளே.

திருவருளம்மை என்றும் கன்னி என்றும் கூறப்படுவள். அவள் விளங்கும் புருவத்தள். நடப்பாற்றலாக உலகேழிலும் இயைந்தியக்குங்கால் முற்சினம் பொருந்தியவளும் அவளே. வனப்பாற்றலாக ஆருயிர்களுள் செவ்வி வாய்ந்தவற்றை அரனடிக்குச் சேர்த்தலால் நிறைந்த பேரருள் உள்ள நங்கையாகின்றாளும் அவளே. அவள் அனைத்துயிரையும் அருள் காரணமாகக் காக்கின்றனள். அவள் ஆருயிரினின்றும் பிரிய வேண்டிய மலமாயை கன்மங்களைப் பிரிவித்தனள். ஆரிய - நிறைந்த பிறிவறுத்தாள்: பிறிவு - பிரிய வேண்டிய மலமாயை கன்மங்கள்.

ஆரிய நங்கை - மகிமை பொருந்திய மங்கை. பயோதரம் - பால் நிறைந்த முலைத்தடம். பேர் உயிராளி-எண்ணிறந்த உயிர் வருக்கங்களை ஆட்டுவிப்பவள்.

## 1158. பிறிவின்றி நின்ற பெருந்தகைப் பேதை

1158. பிறிவின்றி நின்ற பெருந்தகைப் பேதை
குறியொன்றி நின்றிடுங் கோமளக் கொம்பு
பொறியொன்றி நின்று புணர்ச்சிசெய் தாங்கே
அறிவொன்ற நின்றனள் ஆருயி ருள்ளே.

திருவருள் ஆருயிர்களைவிட்டுப் பிரியாதுநிற்கும் பெருந்தகை அம்மை. பேதை - இரக்கமுள்ள தாய். அகவழிபாடு செய்யும் அன்பர்கள் குறிக்கும் குறிப்பில் பொருந்திநிற்கும் இளமையும் அழகும் மென்மையும் வாய்ந்த கோமளக்கொம்பும் அவளே. அறிகருவியுடன் ஒத்துநின்று அவற்றைத் தொழிற்படுத்தி ஆருயிர்கட்கு உயிர்க்குயிராய் நின்று அவ் வுயிர்களின் அறிவுக்கு அறிவாயிருப்பவளும் அவளே.

## 1159. உள்ளத்தி னுள்ளே யுடனிருந் தைவர்தங்

1159. உள்ளத்தி னுள்ளே யுடனிருந் தைவர்தங்
கள்ளத்தை நீக்கிக் கலந்துட னேபுல்கிக்
கொள்ளத் தவநெறி கூடிய இன்பத்து
வள்ளற் றலைவி மருட்டிப் புரிந்தே.

திருவருள் உயிர்க்குயிராய் உள்நின்று உடனாய் ஐம்புல வேடரின் கள்ளத்தைக் குருவாய் வந்து உண்மையுணர்த்தி நீக்கினள். அவளே பிரிப்பின்றி ஒன்றாய்க் கலந்து பொருந்தி, சீலம் நோன்பு செறிவு அறிவு என்னும் நற்றவம் நான்கினையும் கொள்ளுவித்து, அதனால் பெருகிய இன்பத்தைப் பெறுவித்து வள்ளல் தலைவியுமாயினள். இச்செயல் அனைத்தும் வியப்புடைய செயலாகும். மருட்சி - வியப்பு.

வள்ளற்றலைவி - உயிர் வருக்கங்களுக்குக் கைம்மாறு கருதாமல் நல்லறிவினை ஊட்டும் வள்ளற்றன்மை வாய்ந்த திருவருட்சத்தி.

## 1160. புரிந்தருள் செய்கின்ற போகமா சத்தி

1160. புரிந்தருள் செய்கின்ற போகமா சத்தி
இருந்தருள் செய்கின்ற இன்பம் அறியார்
பொருந்தி இருந்த புதல்விபூ வண்ணத்
திருந்த விலக்கில் இனிதிருந் தாளே

ஆருயிர்களுக்கு அகமிருந்து வாழ்வாகிய போகத்தை அருளும் பேரறிவாற்றல் அம்மையாவள். உணர்வில் தங்கி ஒப்பிலா இன்பம் ஊட்டும் இவ் உண்மையைச் சிலரறியார். உயிர்தொறும் அமைந்துவிளங்கும் அம்மை செந்தாமரை வண்ணத் திருமேனியையுடையவள். ஆருயிர்களை ஈடேற்றும் குறிப்புடன் பேரளிபூண்டு இனி திருந்தனள்.

பூவ...இலக்கி - செந்தாமரை ஆசனத்தி.

## 1161. இருந்தனள் ஏந்திழை என்னுள மேவித்

1161. இருந்தனள் ஏந்திழை என்னுள மேவித்
திருந்து புணர்ச்சியில் தேர்ந்துணர்ந் துன்னி
நிரந்தர மாகிய நிரதி சயமொடு
பொருந்த விலக்கிற் புணர்ச்சி அதுவே.

அடியேன் உள்ளத்தைப் பொருந்தித் திருவருள் அம்மை இருந்தனள். நாமெல்லாம் ஆண்டவன் திருவடிப் பேரின்பமாகிய எல்லையில்லாத வியத்தகு இன்பத்தைப் பெற்று என்றும் ஒன்றுபோல் வாழச் சிவபெருமானுடன் அம்மை பொருந்தியிருப்பள். அதனால் ஆருயிர்க்கும் பிரிவில்லாப் பேரின்பம் உண்டு. எல்லையில்லாத வியத்தகு இன்பம் - நிரதிசயானந்தம்.

## 1162. அதுஇது என்னும் அவாவினை நீக்கித்

1162. அதுஇது என்னும் அவாவினை நீக்கித்
துதியது செய்து சுழியுற நோக்கில்
விதியது தன்னையும் வென்றிட லாகும்
மதிமல ராள்சொன்ன மண்டல மூன்றே.

உறுதிகொள்ளுதலில்லாது உய்யும் நெறி அதுவோ இதுவோ எனத் தடுமாறும் ஆசையை நீக்கி, அருளம்மையை அகத்தும் புறத்தும் ஒருங்கு வழிபட்டு, உயிர்ப்பு ஒடுங்கியிருந்து இடையறாது நோக்கினால் ஊழையும் உப்பக்கம் காணலாம். இதுவே விதியை வெல்லுவதாகும். அவ் வம்மை அமிழ்தம் பொழிகின்ற திங்கள் மண்டிலத்தை இருக்கையாகக் கொண்டவள். அவள் கூறியருளிய மண்டிலம் மூன்றாகும். 'சிவயநம' எனச் சிந்தித்தலே விதியை வெல்லும் மதியாகும்.

மதிமலராள் - அமுதம் சொரிகின்ற மண்டலத்தில் உள்ள செந்தாமரைப் பீடத்தாள்.

## 1163. மூன்றுள மண்டலம் மோகினி சேர்விடம்

1163. மூன்றுள மண்டலம் மோகினி சேர்விடம்
ஏன்றுள ஈரா றெழுகலை உச்சியில்
தோன்று மிலக்குற வாகுதல் மாமாயை
ஏன்றனள் ஏழிரண் டிந்துவொ டீறே.

மோகினியாகிய உணர்வுமெய் - அசுத்தமாயை காலம் நியதி கலை என்னும் மூன்று பிரிவினையுடையது. அவை பன்னிரண்டாகக் காணப்பெறும் கலைமுடிவிற் காணப்படும். இதற்குக் குறிக்கோளாக இருப்பது மாமாயை என்னும் தூமாயை. இவற்றைப் பதினாலு கலையாகவும் பன்னிரண்டு கலையாகவும் ஏற்றனள் அம்மை.

## 1164. இந்துவி னின்றெழு நாதம் இரவிபோல்

1164. இந்துவி னின்றெழு நாதம் இரவிபோல்
வந்துபின் நாக்கின் மதித்தெழுங் கண்டத்தில்
உந்திய சோதி இதயத் தெழும்ஒலி
இந்துவின் மேலுற்ற ஈறது தானே.

இந்துவாகிய தூமாயையினின்றெழும் முப்பத்தாறா மெய்யாகிய ஒலி நாதம் நிறையுயிர் அகத்துப் பகலவன்போல் கதிரொளியாகத் தோன்றிச் செவியில் (வைகரி) பொருந்துமாறு நாக்கில் எழும் அதன் முன்னிலையாகிய கண்டத்தில் வெளித்தள்ளும் மிடற்றோ (மத்திமை)சையாக நிற்கும். அதன் முன்னிலையாகிய நினைவு (பைசந்தி) ஓசை திங்கள் நிலவொத்து இருக்கும். இதற்கு முன்னிலையாகிய நுண்ணோசை ஒன்று உண்டெனினும் இவைபோல் ஒப்பில்வைத்துக் கூறமுடியாமையால் இதுவே ஈறென்றனர்.

## 1165. ஈறது தான்முதல் எண்ணிரண் டாயிர

1165. ஈறது தான்முதல் எண்ணிரண் டாயிர
மாறுதல் இன்றி மனோவச மாயெழில்
தூறது செய்யுஞ் சுகந்தச் சுழியது
பேறது செய்து பிறந்திருந் தாளே.

முடிந்த முடிவாகிய திருவருளம்மை முதல்வியாவள். அவளிருக்கை பதினாறாயிரம் இதழ்களையுடையதாய் மாறுதலில்லாமல் அன்பர் மனத்தடங்குவதாய் அழகிய மதிமண்டலத் தாமரையாகும். இதுவே சிறந்த நறுமணம் கமழும் விந்துவாகும். இதனால் உயிர்கட்குப் பேறருளிக் காட்சிப் புலனாம் உருவுடனும் தோன்றியிருந்தனள் என்பது புலனாம்.

## 1166. இருந்தனள் ஏந்திழை ஈறதி லாகத்

1166. இருந்தனள் ஏந்திழை ஈறதி லாகத்
திருந்திய ஆனந்தஞ் செந்நெறி நண்ணிப்
பொருந்து புவனங்கள் போற்றிசெய் தேத்தி
வருந்த இருந்தனள் மங்கைநல் லாளே.

திருவருளம்மை முடிவாக மதிமண்டலத்திருந்தனள். எல்லா வுலகங்களிலும் அவரவர் வினைக்கீடாகப் பிறந்து வாழும் உயிர்கள் முயன்று வழிபட்டுச் செந்நெறி முறைப்படி ஒழுகிப் பேரின்பமெய்தி வாழ மங்கை நல்லாளும் எழுந்தருளியிருந்தனள். மங்கைநல்லாள் - திருவருளம்மை.

## 1167. மங்கையும் மாரனும் தம்மொடு கூடிநின்று

1167. மங்கையும் மாரனும் தம்மொடு கூடிநின்று
அங்குலி கூட்டி அகம்புறம் பார்த்தனர்
கொங்கைநல் லாளுங் குமாரர்கள் ஐவருந்
தங்களின் மேவிச் சடங்குசெய் தாரே

மங்கையாகிய திருவருளும் மாரனாகிய சிவனும் ஒப்ப நின்று தம்மிற்கூடி உள்ளும்புறமும் உற்றுநோக்கினர். அதனால் அருளோன், ஆண்டான், அரன், அரி, அயன் என்னும் ஐவரும் முறையே தோன்றினர். இவ்வைவரும் முறையே அருளல், மறைத்தல், துடைத்தல், காத்தல், படைத்தல் என்னும் ஐந்துதொழில்களையும் அருளாணை பெற்றுப் புரிவாராயினர். சத்தியும் சிவனும் அங்குலியாகிய மகத் (மூலப்பகுதி) தத்துவத்தைச் சீகண்ட முனைவன் வாயிலாகத் தொழிற்படுத்துவர். அப்பொழுது கொங்கை நல்லாளாகிய எழுச்சிமெய் தோன்றும். அதிலிருந்தும் குமரர்கள் ஐவர்களாகிய பூமுதல் (நுண்மை) ஐந்தும் ன்றும். அவற்றினின்றும் பூதங்கள் தோன்றும். பூதங்கள் உலகமாய் தெரியும். இவ் வகையாகக் கூறுவாருமுளர். எழுச்சியம்மை - ஆங்காரதத்துவம்.

மாரன் - சிவன். அங்குலி...பார்த்தனர் - மாயையும் உயிர்க் கூட்டங்களும் தங்கி இருக்கும் அதோமுகத்தைப் பார்த்து அணுக் கூட்டங்களைக் கிளப்பிவிட்டும் பின் புறம் நோக்க சத்தியருள் பெற்ற சதாசிவன் முதல் பிரமன் வரை உள்ள ஐவரும். சடங்கு - ஐந்தொழில்.

## 1168. சடங்கது செய்து தவம்புரி வார்கள்

1168. சடங்கது செய்து தவம்புரி வார்கள்
கடந்தனி னுள்ளே கருதுவ ராகில்
தொடர்ந்தெழு சோதி தொளைவழி ஏறி
அடங்கிடும் அன்பின தாயிழை பாலே.

புறத்தே வேள்வி முதலிய சடங்குகள் செய்து தவம் புரியும் நன்னெறியாளர் அகத்தேயும் அவ் வழிபாட்டைப் பயில்வாராயின் உயிர்க்குயிராகிய திருவருளம்மை பேரொளியாகத் தோன்றுவள். அவ்வருளொளியைத் துணையாகப்பற்றி மேற்சென்று அன்பின்கண் அடங்குதல்வேண்டும். அங்ஙனம் அன்பின்கண்ணடங்கி நிற்பார் அம்மையார் திருவடியைச்சேர்வர்.

கடம் - தேகம்.

## 1169. பாலித் திருக்கும் பனிமல ராறினும்

1169. பாலித் திருக்கும் பனிமல ராறினும்
ஆலித் திருக்கும் அவற்றின் அகம்படி
சீலத்தை நீக்கத் திகழ்ந்தெழு மந்திரம்
மூலத்து மேலது முத்தது வாமே.

அகநிலைக்களங்களாகிய ஆறாதாரமும் தாமரை மலர்களாக அமைத்துக்கொள்ளப்படும். அவற்றுடன் பொருந்திக் களித்திருக்கும் அந்நிலையும் திருவருளம்மையைச் சேரச் செல்வார்க்கு நீக்குதல் வேண்டும். அந் நிலையினையும்நீக்கி மேலோங்குதல் வேண்டும். அங்ஙனம் மேலோங்குதற்குத் துணையாம் மந்திரம் 'நமசிவய' என்பதாகும். இதுவே முத்துப்போன்று தனி முதல் தமிழ் மந்திரமாகும்.

பனிமலர் ஆறினும் - ஆதாரங்கள் ஆறினும்.

## 1170. முத்து வதனத்தி முகந்தொறு முக்கண்ணி

1170. முத்து வதனத்தி முகந்தொறு முக்கண்ணி
சத்தி சதிரி சகளி சடாதரி
பத்துக் கரத்தி பராபரன் பைந்தொடி
வித்தகி என்னுள்ள மேவிநின் றாளே.

முத்துப்போலும் அருளொளி வீசும் திருமுகத்தினையுடையவள். ஒவ்வொரு திருமுகத்தும் மும்மூன்று கண்களையுடையவள். அறிவாற்றலள்; திறமைமிக்கவள். உயிர்கள் உய்யும் பொருட்டு, அருளால் திருமேனி கொள்பவள். விரிந்த திருச்சடையினையுடையவள். பத்துக் கரத்தினையுடையவள். கரம் - திருக்கை. சிவபெருமான் ஒரு கூற்றிலே மாறாது விளங்கும் ஒப்பிலா வளையலை அணிந்தவள். வியத்தகு காரணமாயுள்ளவள். அத்தகைய திருவருளம்மை எளியேன் உள்ளம் பொருந்தி நின்றருளினள்.

## 1171. மேவிய மண்டலம் மூன்றுடன் கீழெரி

1171. மேவிய மண்டலம் மூன்றுடன் கீழெரி
தாவிய நற்பதத் தண்மதி யங்கதிர்
மூவருங் கூடி முதல்வியாய் முன்நிற்பார்
ஓவினு மேலிடு உள்ளொளி யாமே.

பொருந்திய மண்டலங்கள் மூன்றினுக்கும் உரிய தெய்வங்களாகக் கருதப்படுவோர் தீ, திங்கள், ஞாயிறு எனப்படுவர். இம் மூவரும் முதல்வியாரின் திருமுன் அவர் திருவாணையை வேண்டி நிற்பர். அம் முதல்வியாரின் திருவருள்ஒளி இடையறாது விளங்கிக்கொண்டிருக்கும். கீழெரி: நிலத்தினின்றும் மேலோங்கும் எரி. தாவிய நற்பதம்: வானம். திருவருள் ஒளி கண்மூடிய காலத்தும் அகத்து விளங்குமாதலின் ஓவினும் என்றார். ஓவினும்: கண்மூடினும்.

ஒவினும் - விலக்கினும்.

## 1172. உள்ளொளி மூவிரண் டோங்கிய அங்கங்கள்

1172. உள்ளொளி மூவிரண் டோங்கிய அங்கங்கள்
வெள்ளொளி அங்கியின் மேவி அவரொடுங்
கள்ளவிழ் கோனைக் கடந்துட னேநிற்குங்
கொள்ள விசுத்திக் கொடியமு தாமே.

திருவருளம்மை அகத்தே ஒளியோடு காணப்படும் ஆறு நிலைக்களங்களுக்கும் ஒளிகொடுத்துக் கொண்டிருக்கும் முதல்வியாகப் பொருந்துவள். பொருந்தி அந் நிலைக்களங்களுக்குரிய தெய்வங்களுடன் தேன்வழியும் கொன்றைமாலை யணிந்துள்ள சிவபெருமான் வழிக் கலந்து உடனாய்நிற்பள். அவளே, மிகவும் இயற்கைத் தூய்மை எய்தியவள்.

## 1173. கொடிய திரேகை குருவுள் இருப்பப்

1173. கொடிய திரேகை குருவுள் இருப்பப்
படியது வாருனைப் பைங்கழ லீசன்
வடிவது வானந்தம் வந்து முறையே
இடுமுதல் ஆறங்கம் ஏந்திழை யாளே.

ஒழுங்காயமைந்த சிறந்த வரைகளுள் குருவுருவாம் திருவருள் உள்ளிருத்தலால் பொருந்திய நிறம் விளங்குகின்ற பொற் கழலணிந்த சிவபெருமானின் திருவுருவம் பேரின்பமாகும். அத் திருவுருவாய் விளங்கும் அம்மை ஆறாதாரங்களுக்கு முதல்வியாவள்.

## 1174. ஏந்திழை யாளும் இறைவர்கள் மூவருங்

1174. ஏந்திழை யாளும் இறைவர்கள் மூவருங்
காந்தார மாறுங் கலைமுதல் ஈரெட்டு
மாந்த குளத்தியு மந்திர ராயுவுஞ்
சார்ந்தனர் ஏத்த இருந்தனள் சத்தியே.

திருவருளம்மையும் அவர் ஆணைவழி இயங்கும் அயன், அரி, அரன் என்னும் கடவுளர் மூவரும், அறுவகை ஓசையும், பதினாறு கலைகளும், தீநெறிச் செலுத்தாது நன்னெறிச் செலுத்தும் புருவநடு ஆணையும், மறைமொழி ஆராய்வும், கொண்டவளாய்ச் சார்ந்தவர் வழிபட்டேத்தும் தன்மையளாய் வீற்றிருந்தனள். குளம் - நெற்றி; புருவநடு.

## 1175. சத்தியென் பாளொரு சாதகப் பெண்பிள்ளை

1175. சத்தியென் பாளொரு சாதகப் பெண்பிள்ளை
முத்திக்கு நாயகி என்ப தறிகிலர்
பத்தியைப் பாழில் உகுத்தஅப் பாவிகள்
கத்திய நாய்போற் கதறுகின் றாரே.

சத்தியென்று ஓதப்பெறும் பெண்பிள்ளை தோன்றாத் துணையாவள். அவள் ஆருயிர்கள் எல்லாம் நன்னெறி நான்மை பயின்று நாயனடி தலைக்கூடப் பெறுவதற்குத் துணைபுரிவள். அவ்வம்மை வீடுபேறளிக்கும் மேன்மையள். அவள் திருவடியில் சேர்ப்பிக்கும் பேரன்பாகிய பத்தியினைப் பாழாக உகுத்த அறிவிலாதவர் குரைக்கும் நாய் கடியாதென்பதுபோல் பயனின்றி மறைமொழிந்து கதறுகின்றார்கள். இவர்களே 'அசிக்க ஆரியங்கள் ஓதும் ஆதர்கள்' எனத் திருமாளிகைத் தேவரால் அறையப்பட்டோராவர். மேலும் நக்கீர தேவரால் 'ஆரியப் புத்தகப் பேய்கொண்டு புலம்புற்று' எனக் கடியப் பட்டோருமாவர்.

சாதக - சாதகர்க்குரிய.

## 1176. ஆரே திருவின் திருவடி காண்பர்கள்

1176. ஆரே திருவின் திருவடி காண்பர்கள்
நேரேநின் றோதி நினையவல் லார்க்குக்
காரேர் குழலி கமல மலரன்ன
சீரேயுஞ் சேவடி சிந்தைவைத் தாளே.

செந்தமிழ்த் திருமறையும் திருமுறையும் நானெறிப் பயிற்சியில் நின்று ஓதி அம்மையின் திருவடியை நினையவல்லார்க்கு மழை நிகர் கூந்தலையுடைய அவ் அம்மை செந்தாமரையன்ன. சீரும் சிறப்பும் வாய்ந்த தன் சேவடியை நல்கியருள்வள். அத் திருவடியை வைத்தற்குரிய இடம் நினையவல்லாரது உள்ளத் தாமரை. இம் முறையன்றி அத் திருவடியைக் காணுந் தகுதி எவர்கட்கும் இல்லை. திருமறை: நால்வர் தமிழ். திருமுறை: மூலர் தமிழ். இவற்றை முறையே அறநூல் எனவும் பொருள் நூல் எனவும் கூறுதலுமாம். நெறிநூல் துறைநூல் என்றலும் இவையே.

## 1177. சிந்தையில் வைத்துச் சிராதியி லேவைத்து

1177. சிந்தையில் வைத்துச் சிராதியி லேவைத்து
முந்தையில் வைத்துத்தம் மூலத்தி லேவைத்து
நிந்தையில் வையா நினைவதி லேவைத்துச்
சந்தையில் வைத்துச் சமாதிசெய் வீரே.

திருவருளம்மையின் திருவடியைக் கழியாகக் காதலுடன் உள்ளத்தில் வைத்தலும், தலை முதலிய உறுப்புக்களின் வைத்தலும், கண்முன் நிறுத்தலும், மூலத்துவைத்தலும், பழிபாவங்களைச் சிறிதும், நாடாத நாட்டமாகிய சிந்தையுள் வைத்தலும் செய்து திருமுறை நூல்களைப் பண்ணொடும் ஓதி அமைதி வடிவாய் இன்புற்று வாழ்வீராக. சிரசாதி என்பது சிராதி எனத் திரிந்துநின்றது.

சிராதி - சிரசு முதலிய உறுப்புகளில். நிந்தை - மறதி. சந்தை - உருப்போடல்.

## 1178. சமாதிசெய் வார்கட்குத் தான்முத லாகிச்

1178. சமாதிசெய் வார்கட்குத் தான்முத லாகிச்
சிவாதியி லாருஞ் சிலைநுத லாளை
நவாதியி லாக நயந்தது ஓதில்
உவாதி அவளுக் குறைவில தாமே.

சமாதியாகிய ஒடுக்கத்தில் பயில்வார்க்குத் திருவருளம்மையே முதல்வியாவள். அவள் விற்போலும் நெற்றியை உடையவள். அவளே சிவத்தில் பொருந்தியிருப்பவள். ஒன்பது திருவுருவங்களாகக் கோலங்கொண்டு அருள்செய்யும் அம்மையும் அவளே. அவ் வுருவில் விரும்பியதொன்றை வழிபடில் அத் திருவுருவே எவ்வகைத் திரிபுமில்லாத அம்மை அருள்புரிவதற்காம் உறையுள் என்ப. உறைவிலதாமே. உறைவு இல் அது ஆமே: உறையுமிடம் அது ஆகும்.

சிவாதி - சிவத்தில். நவாதி - ஒன்பது முகூர்த்தங்கள். உவாதி - விகாரம்.

## 1179. உறைபதி தோறும் முறைமுறை மேவி

1179. உறைபதி தோறும் முறைமுறை மேவி
நறைகமழ் கோதையை நாடொறு நண்ணி
மறையுட னேநிற்கு மற்றுள்ள நான்கும்
இறைதினைப் போதினில் எய்திட லாமே.

திருவருளம்மை உயிர்கள் உய்தற்பொருட்டு, அகத்துப்போல் புறத்தும் திருக்கோவில் கொண்டெழுந்தருளியுள்ளாள். அத் திருக்கோவில் தோறும் முறைமுறையாகச் சென்று மணம் கமழ்கின்ற பூச்சூடியுள்ள அம்மையை நாடொறும் கும்பிட்டு 'நமசிவய' என்னும் தமிழ்மந்திரம் மறவாநினைவுடன் ஓதிக்கொண்டிருக்கும் மெய்யடியார்கட்குத் தூமாயையின் கண்ணுள்ள ஏனைய அத்தன், அருளோன், ஆண்டான், ஆசான் ஆகிய நான்குமெய்களின்கண் உறையும் இறைவன் திருவருளும் தினைப்பொழுதினுள் எளிதின் எய்தும்.

## 1180. எய்திட லாகும் இருவினை யின்பயன்

1180. எய்திட லாகும் இருவினை யின்பயன்
கொய்தளிர் மேனிக் குமரி குலாங்கன்னி
மைதவழ் கண்ணிநன் மாதுரி கையொடு
கைதவம் இன்றிக் கருத்துறும் வாறே.

மேற்கூறிய வழிபாட்டு முறையில்லாதார் இருவினையின் பயனை எய்தி இளைப்பர். மாந்தளிர்போலும் திருமேனியும், குமரிப் பருவமும், என்றும் நீங்கா இளமையும், அருள்பொழியும் கண்ணும், உடைய திருவருளம்மையை இனிய செந்தமிழ்மொழியொடு வஞ்சனை முதலியன இன்றி வழிபடுக. இஃது அருளம்மையைக் கருத்தில் எழுந்தருளப் பண்ணும் வகையாகும். வாறு - வகை; விதம். மாரி, துர்க்கை எனப் பாடம்கொள்வாரும் உளர்.

கைதவம் - வஞ்சம் - பொய் - துன்பம்.

## 1181. கருத்துறுங் காலங் கருது மனமுந்

1181. கருத்துறுங் காலங் கருது மனமுந்
திருத்தி யிருந்தவை சேரு நிலத்து
ஒருத்தியை உன்னி உணர்ந்திடு மண்மேல்
இருத்திடும் எண்குணம் எய்தலும் ஆமே.

வழிபடும் காலமுறைமையினைக் கருதுக. திருவருளம்மையின் திருவடியிணையைச் செவ்விய நெஞ்சில் நினைக. வழிபாட்டுக்குரிய இடத்தை நாடுங்கள். ஒப்பில்லாத அவ் அம்மையை உள்ளுற நினைந்து போற்றுங்கள். போற்றவே சிவபெருமானின் எட்டுக் குணங்களும் அவளருளால் உங்களை அதர்வினாய் வந்து எளிதாக இனிதாக எய்தும்.

எண்குணம் - தன் வயத்தனாதல் முதலிய எண்குணங்கள்.

## 1182. ஆமையொன் றேறி அகம்படி யானென

1182. ஆமையொன் றேறி அகம்படி யானென
ஓமஎன் றோதியெம் உள்ளொளி யாய்நிற்கும்
தாம நறுங்குழல் தையலைக் கண்டபின்
சோம நறுமலர் சூடிநின் றாளே.

ஆமையைப் போன்று மெய் முதலிய அறிகருவிகளைத் திருவருள் துணையால் தீயவழியிற்போக ஒட்டாமல் தடுத்து நல்லவழியில் செலுத்துங்கள். இதுவே புலனடக்கம். யான் திருவருளுக்கு அடிமை என உறுதியாக எண்ணுக. ஓம் என்னும் தமிழ்மறையினை ஓதுக. அப்பொழுது அம்மை உள் ஒளியாக நின்றருள்வள். அத்தகைய பூச்சூடிய நறுமணங்கமழும் கூந்தலையுடைய அம்மையைக் கண்டபின் திங்கள் சூடி நின்ற அறிவருள் நிலை தோன்றும். ஓம் என்பது ஓம எனத் திரிந்து நின்றது.

ஆமையொன்றேறி - ஐம்புலன் அடக்கி. ஓம் அ - பிரணவம்.

## 1183. சூடிடும் அங்குச பாசத் தொளைவழி

1183. சூடிடும் அங்குச பாசத் தொளைவழி
கூடும் இருவளைக் கோலக்கைக் குண்டிகை
நாடும் இருபத நன்னெடு ருத்திரம்
ஆடிடுஞ் சீர்புனை ஆடக மாமே.

தோட்டியும் கயிறும் தொளைவழியாகப் போடப்படும் வளையல்களும், நீர்க்கரகமும், நல்லார் நாடும் இரண்டு திருவடியும் அரன் நாமமாகிய ஐந்தெழுத்தோதும் திருவாயும்கொண்டு பொன்மன்றில் திருவருளம்மை ஆடிடும் என்ப. உருத்திரம்: ஈண்டுத் திருவைந்தெழுத்து.

உருத்திரம் - உருத்திர மந்திரம்.

## 1184. ஆமயன் மாலரன் ஈசன் சதாசிவன்

1184. ஆமயன் மாலரன் ஈசன் சதாசிவன்
தாமடி சூடிநின் றெய்தினர் தம்பதங்
காமனுஞ் சாமன் இரவி கனலுடன்
சோமனும் வந்தடி சூடநின் றாளே.

திருவருள் அம்மையின் திருவடியைச் சூடி அயன், அரி, அரன், ஈசன், சதாசிவன் என்னும் தூமாயையிலிருக்கும் ஐவரும் தங்கள் தங்கள் நிலையை எய்தினர். (இவர்கள் ஆருயிர் இனத்தில் தவப்பேறுடையார்; இவர்களை அனுபக்கத்தாரென்ப.) இதுபோல் காமனும் அவன் தம்பி சாமனும், பகலவனும், தீக்கடவுளும், திங்களும் அம்மையின் அருள்பெற்றுத் தங்கள் தங்கள் நிலையினை எய்தினர். (இவர்கள் மூலப் பகுதியின்கணுள்ளவர்கள்.) சாமனைப் புதன் என்பாருமுளர்.

சாமன் - புதன்; காமன் - தம்பி.

## 1185. சூடும் இளம்பிறை சூலி கபாலினி

1185. சூடும் இளம்பிறை சூலி கபாலினி
நீடும் இளங்கொடி நின்மலி நேரிழை
நாடி நடுவிடை ஞான முருவநின்
றாடு மதன்வழி அண்ட முதல்வியே.

முழுமுதல்வியாகிய அம்மை, இளம்பிறைசூடியவள். சூலத்தைக் கைக்கொண்டவள். கபாலமாகிய மண்டை ஓட்டினை ஏந்தியவள். என்றும் ஒருபடித்தாம் இளங்கொடி; இயல்பாகவே மலமிலாதவள். சிறந்த அணிகலன் அணிந்தவள். நடுநாடியாகவுள்ளவள். ஆனேற்றை ஊர்பவள். மெய்யுணர்வே திருமேனியாகவுடையவள். அவள் ஆட்டத்தின்வழி அண்டம் அனைத்தும் நின்றாடும் என்க.

## 1186. அண்ட முதலாய் அவனி பரியந்தங்

1186. அண்ட முதலாய் அவனி பரியந்தங்
கண்டதொன் றில்லை கனங்குழை யல்லது
கண்டனுங் கண்டியு மாகிய காரணங்
குண்டிகை கோளிகை கண்டத னாலே.

அண்டமுதலாக உலகம் ஈறாகச் சொல்லப்பட்ட அனைத்தும் அம்மையின் கலப்பின்றி இயங்குவதில்லை. அது வண்டிக்காரன் இல்லாமல் வண்டியியங்குவதில்லை என்பதை யொக்கும். பிழைபொறுக்கும் பெற்றியின் அடையாளமாகிய கண்டனும் கண்டியும் ஆண் பெண் போல் இருவேறு வகைத் தோற்றம் அளிப்பது காரியவுலக உருவால்
வேறுபாடு காணப்பெறும் உயிர்களின் உடம்பைப் பொறுத்தேயாம். இதுஇயற்கையாகிய மரம், நிலை கதவு எனச் செயற்கையான் இருவேறு வகைப்பட்டு இயைந்து பயனெய்துவதையொக்கும். இதுவல்லாமல் உயிரிலேனும் உயிர்க்குயிராகிய இறையிலேனும் ஆண்பெண் வேறுபாடு இல்லை. இவ் வுண்மை 'காவலும் காதலும் கண்டியைந்தின்புற, மேவும் ஆண் பெண்ணிரண்டாம் மெய்' என்பதனாலும் விளங்கும். குண்டிகை கோளிகை என்னும் ஆண்பெண் வேறுபாடுகள் நோக்குக.

கண்ட ...னாலே - ஆண்பெண் என்னும் விதமாக உலகத்தைப் படைப்பதற்குச் சத்தியும் இரு விதமாய் நின்றாள்.

# 1187. ஆலமுண் டானமு தாங்கவர் தம்பதஞ்

1187. ஆலமுண் டானமு தாங்கவர் தம்பதஞ்
சாலவந் தெய்துந் தவத்தின்பந் தான்வரும்
கோலிவந் தெய்துங் குவிந்த பதவையோ
டேலவந் தீண்டி இருந்தனள் மேலே.

நாடிகள் ஒருங்கு கூடிவந்து பொருந்தும் நடுநாடியுடன் அமைய வந்துசேர்ந்து உச்சித்தொளைமேல் திருவருள் அம்மை தங்கியிருக்கின்றனள். அவள் திருவருளால் ஆலமுண்டான் பதமாகிய சிவவுலகம் மிகவும் எய்தும். அமுதுண்டவானவர் நிலையினை விரும்பின் அதுவும் எய்தும். நாெனறி நற்றவத்தின்பமும் கைகூடும். குவிந்த பதவை: சிறுவழி; நடுநாடியாகிய சுழுமுனையாகும்.

குவிந்த பதவை - சிறு வழி. மேல் - கபாலத்தில்.

## 1188. மேலாம் அருந்தவம் மேன்மேலும் வந்தெய்தக்

1188. மேலாம் அருந்தவம் மேன்மேலும் வந்தெய்தக்
காலால் வருந்திக் கழிவர் கணத்திடை
நாலா நளினநின் றேத்திநட் டுச்சிதன்
மேலா மெழுத்தின னாமத்தி னாளே.

உயர்ந்த பெருந்தவம் வந்து கைகூடவேண்டிக் காடும் மலையும், நாடும் நகரமும், யாறும் கடலும், குளமும் கூவலும், குகையும் திகையும் கால்நோவ நடந்து வீணாக் கழிவர். அவ்வாறன்றிக் கண்ணிமைப்பொழுதினுள் அருந்தவம் கைகூடும்வழி வருமாறு: இரைக் குடராகிய ஆமத்தின்கண் திருவருளம்மை தங்கியுள்ளாள். அவளை மூலமாகிய நாலிதழ்த் தாமரையின்கண் நாடி வழிபட்டு உச்சிக்குமேல் உடன்கூடி உறைத்துநின்று, ஓமொழியை உன்னுதலே முறையாம்.

காலால் வருந்தி - நடந்து அலைந்து. நாலாம் நளினம் - நாலிதழ்த் தாமரை. ஆமம் - ஆமாசயம்.

## 1189. ஆமத் தினிதிருந் தன்ன மயத்தினள்

1189. ஆமத் தினிதிருந் தன்ன மயத்தினள்
ஓமத்தி லேயும் ஒருத்தி பொருந்தினள்
நாம நமசிவ என்றிருப் பார்க்கு
நேமத் துணைவி நிலாவிநின் றாளே.

இரைக்குடரில் தங்கும் சோற்றுவண்ணத்தள். கொப்பூழின் கண் செய்யப்படும் ஓமத்தினிடத்தும் பொருந்தியிருந்தனள். அவள் ஒப்பில்லாத திருவருளம்மையாவள். அவள் திருப்பெயர் 'நமசிவ' என்னும் நான்மறையாகும். அம் மறையினை மறவாநினைவுடன் வழுத்துவார்க்கு அம்மை மாறா உறுதித் துணையாவள். விட்டுநீங்காது விளங்கி நிற்பள்.

ஓமம் - அக்கினி காரியம்; நெய்யால் செய்யும் வேள்வி.

## 1190. நிலாமய மாகிய நீள்படி கத்தின்

1190. நிலாமய மாகிய நீள்படி கத்தின்
சிலாமய மாகுஞ் செழுந்தர ளத்தின்
சுலாமய மாகுஞ் சுரிகுழற் கோதை
கலாமய மாகக் கலந்துநின் றாளே.

திருவருளம்மை நிலவும் பளிங்குக்கல்லும் போன்ற வெண்ணிறத்தினள். வட்டமாகிய திரண்ட முத்துப் போன்றவள். நெளிந்த நீண்ட தலையையுடையவள். ஐங்கலை வண்ணமாயிருப்பவள். ஆருயிர் உலகுடல் அனைத்துடனும் கலந்துநின்றனள். ஐங்கலை நீக்கல், நிலைப்பித்தல், நுகர்வித்தல், அமைதியாக்கல், அப்பாலாக்கல்.

சுலா - வட்டம்.

## 1191. கலந்துநின் றாள்கன்னி காதல னோடுங்

1191. கலந்துநின் றாள்கன்னி காதல னோடுங்
கலந்துநின் றாளுயிர் கற்பனை எல்லாங்
கலந்துநின் றாள்கலை ஞானங்கள் எல்லாங்
கலந்துநின் றாள்கன்னி காலமு மாயே.

திருவருட்கன்னி, காதலனாகிய சிவபெருமானுடன் கலந்து நின்றாள். ஆருயிர்கள் நாடும் நாட்டத்துள் எல்லாம் கலந்து நின்றாளும் அவளே. அவளே கலை நூல்கள் மெய்யுணர்வு நூல்கள் எல்லாவற்றிலும் கலந்திருந்தனள். காலமும் ஊழியும் நாள்களுமாகிக் கலந்துநின்றவளும் அவளே.

காலம் - கால தத்துவம்.

## 1192. காலவி எங்குங் கருத்தும் அருத்தியுங்

1192. காலவி எங்குங் கருத்தும் அருத்தியுங்
கூலவி ஒன்றாகுங் கூட லிழைத்தனள்
மாலினி மாகுலி மந்திர சண்டிகை
பாலினி பாலவன் பாகம தாமே.

காலமெய்யாக நிற்கும் அம்மை ஊணாகவும் உண்பிப்பதாகவும் எங்கும் கலந்துநின்றனள். அவளே உற்றுழி உதவும் ஒருபெரும் திருவினள். ஆருயிர்கள் உலகுடல்களுடன் கூடும் தன்மையை அமைத்தவளும் அவளே. அவளே பேரன்பினள்; பெருமைசேர் குலத்தினள்; மந்திர உருவினள்; சண்டிகைப் பெயரினள். எண்டிசையும் ஓம்பும்
எழிலினள். பால்போலும் வெண்மை நிறம்பொருந்திய சிவபெருமானின் பங்குடையவளும் அவளே.

காலவி - கால தத்துவ முதல்வி. கூலவி - அநுகூலமானவள். குலி - மனைவி.

## 1193. பாகம் பராசத்தி பைம்பொன் சடைமுடி

1193. பாகம் பராசத்தி பைம்பொன் சடைமுடி
ஏகம் இருதயம் ஈரைந்து திண்புய
மோக முகமைந்து முக்கண் முகந்தொறும்
நாக முரித்து நடஞ்செய்யும் நாதர்க்கே.

திருவருளம்மை, பொன்போலும் திருச்சடை முடியினையும், ஒன்றாம் திருவுள்ளத்தினையும், பத்துத்திருத்தோள்களையும், வேட்கை விளைவிக்கும் ஐந்து திருமுகங்களையும், முகந்தொறும் மூன்று திருக் கண்களையும், யானையுரிபோர்த்த போர்வையினையும் உடையராய் எந்நாளும் நள்ளிருளிலும் நட்டம் செய்யும் சிவபெருமானார்க்கு ஒருபாகம் ஆனவள். அவளே பேரறிவுப் பேராற்றல் என்னும் பராசத்தியாயிருப்பவள்.

## 1194. நாதனு நாலொன் பதின்மருங் கூடிநின்

1194. நாதனு நாலொன் பதின்மருங் கூடிநின்
றோதிடுங் கூட்டங்கள் ஓரைந் துளஅவை
வேதனும் ஈரொன்ப தின்மரு மேவிநின்
றாதியும் அந்தமு மாகிநின் றாளே.

சிவபெருமானும், முப்பத்தாறு மெய் (தத்துவம்)களும், மெய்யடியார்கள் அனைவரும் கூடிநின்று நினைவுற ஓதும் இயக்கம் ஆட்சி, நடுக்கம், விளக்கம், தோன்றுவித்தல் முதலிய ஐந்தொழில்புரியும் திரு முகங்க (1705)ளைந்தும், அயனும், பதினெட்டுத்தெய்வ கணங்களும் ஆகிய யாவருடனும் திருவருளம்மை பொருந்தியிருந்தனள். அவளே எல்லா வுலகினுக்கும் ஆதியும் அந்தமும் ஆகிநின்றாள்.

நாலொன்பதின்மர் - 36 தத்துவங்கள். ஓர் ஐந்து - ஐந்து பிரமர் (ஈசானர் - தற்புருடர் - அகோரர் - வாமதேவர் - சத்தியோசாதர்). வேதன் - அயன். ஈரொன்பதின்மர் - 18 கணங்கள்.

## 1195. ஆகின்ற நாள்கலை ஐம்பத் தொருவர்கள்

1195. ஆகின்ற நாள்கலை ஐம்பத் தொருவர்கள்
ஆகிநின் றார்களில் ஆருயி ராமவள்
ஆகிநின் றாளுட னாகிய சக்கரத்
தாகிநின் றானவன் ஆயிழை பாடே

மாயாகாரியவுலகம் தோன்றும் நாள் முதற்கண் எழுத்துக்கள் ஐம்பத்தொன்றும் தோன்றும். இவற்றுள் அகரவுயிராக நிற்பவள் அம்மையாகும். அவளுக்கு உடனாம் பொறியமைப்பாகிய சக்கரமாக அமைந்துநின்றான் சிவன். அஃது ஆயிழை பக்கமாகும்.

கலை - அக்கரம். பாடு - பக்கம்.

## 1196. ஆயிழை யாளொடு மாதிப் பரமிடம்

1196. ஆயிழை யாளொடு மாதிப் பரமிடம்
ஆயதொ ரண்டவை யாறும் இரண்டுள
ஆய மனந்தொ றறுமுக மவைதனில்
ஏயவார் குழலி இனிதுநின் றாளே.

திருவருள் அம்மையுடன் ஆதியாகிய சிவன் இடமாயிருப்பது சக்கரமாகும். சக்கரம் - யந்திரம்; அண்டவை. அச் சக்கரம் எட்டு இதழ்களையுடையதாயிருக்கும். அவ்வெட்டிதழ்களுள் மனத்திற்கு வாய்த்த ஆறு இதழ்களில் மணங்கமழ்கின்ற கூந்தலையுடைய அம்மை இனிது வீற்றிருக்கின்றனள். முகம் - இதழ்.

அண்டவை - சக்கரம். ஆறும் இரண்டுள - எட்டிதழ்.

## 1197. நின்றனள் நேரிழை யோடுடன் நேர்பட

1197. நின்றனள் நேரிழை யோடுடன் நேர்பட
இன்றெ னகம்படி ஏழும் உயிர்ப்பெய்துந்
துன்றிய வோரொன் பதின்மருஞ் சூழலுள்
ஒன்றுயர் வோதி யுணர்ந்துநின் றாளே.

நேரிழையாகிய திருவருளம்மை அகத்தே நேர்பட நின்றனள். அதனால், பத்துக்காற்றாகிய உயிர்ப்பினுள் உயிர்க்காற்று, மலக்காற்று, வீங்கற்காற்று மூன்றும் ஒழித்து ஒழிந்த தொழிற்காற்று ஒலிக்காற்று, நிரவுகாற்று, தும்மற்காற்று, விழிக்காற்று, கொட்டாவிக் காற்று, இமைக்காற்று ஆகிய ஏழும் இயங்கும். அம்மையுடன் நெருங்கிய ஒன்பது ஆற்றல்களும் சூழ்ந்து விளங்கும். உயர்வற உயர்ந்த ஒன்றாகிய சிவபெருமானை ஆருயிர்கட்கு உணாத்த ஓதிநின்றனள். அருளம்மை ஓதிநின்றது தமிழ்மறையும் முறையுமாகும். மறை - வேதம். முறை - ஆகமம்.

உயிர்ப்பெய்தும் - உணர்ச்சியுறும். ஒன்பதின்மர் - ஒன்பது சத்திகள். ஒன்று - சிவம்.

## 1198. உணர்ந்தெழு மந்திரம் ஓமெனும் உள்ளே

1198. உணர்ந்தெழு மந்திரம் ஓமெனும் உள்ளே
மணந்தெழு மாங்கதி யாகிய தாகுங்
குணர்ந்தெழு சூதனுஞ் சூதியுங் கூடிக்
கணந்தெழுங் காணுமக் காமுகை யாமே.

அகத்தே உணர்ந்தெழு மந்திரம் ஓம் என்று சொல்லுப. அம் மந்திரத்தினுள்ளே பொருள் விளக்கமாகத் தோன்றும். ஆகும் நிலையும் கைகூடும். மேன்மைப் பண்புகள் அனைத்தும் இயல்பாகவே அமைந்துள்ள மறைபொருளாகிய சிவனும் சிவையும் பிரிவறக்கூடி ஆருயிர்களுடன் கலந்தெழுவர். இவ்வாறு எழும்படி காண்பது உயிர்கள் மாட்டு மிக்க விருப்பமுள்ள அம்மையினால் ஆகும். காமுகை - விருப்பமுள்ளவள்.

மணந்தெழும் - பொருந்தி எழும். சூதனும் சூதியும் - சிவமும் சத்தியும் கணந்து - கலந்து.

## 1199. ஆமது வங்கியும் ஆதியும் ஈசனும்

1199. ஆமது வங்கியும் ஆதியும் ஈசனும்
மாமது மண்டல மாருத மாதியும்
ஏமது சீவன் சிகையங் கிருண்டிடக்
கோமலர்க் கோதையுங் கோதண்ட மாகுமே.

ஒளிக்கும் ஒளியருளும் பேரொளிப்பிழம்பாகிய சுடரும், நடப்பாற்றலாகிய ஆதியும், அவ் வாதியை உடலாகவுடைய ஆண்டானும், திங்கள்மண்டலமும், காற்றுமுதலாயதும், காவலாகிய உயிரெழுத்தும், உயிரெழுத்துக்கு ஒலிதரும் சிகையாகிய நாதமும், நடுநாடியாகிய கோதண்டமும் இருண்ட கூந்தலின்கண் சிறந்த மலர் சூடிய திருவருளம்மையான் இயங்கும்.

சீவன் சிகை - உயிர் அக்கரம். கோதண்டம் - சுழுமுனை.

## 1200. ஆகிய கோதண்டத் தாகு மனோன்மனி

1200. ஆகிய கோதண்டத் தாகு மனோன்மனி
ஆகிய ஐம்ப துடனே அடங்கிடும்
ஆகும் பராபரை யோடப் பரையவள்
ஆகு மவள்ஐங் கருமத்தள் தானே.

நாடுநாடியின்கண் விளக்கமுறும் மனோன்மனியானவள் ஐம்பத்தொரேழுத்துக்களுள் அடங்குவள். அவளே பேரறிவுப் பேராற்றலுடன் பெரும்பொருளாவள். அவள் படைத்தல் முதலிய ஐந்தொழிலுக்கும் உரியவளாவள். பராபரை - பேரறிவுப் பேராற்றல். பரை - பெரும்பொருள்.

ஆகிய ஐம்பத்து உடன்-51 அக்கரங்களுடன்.

## 1201. தானிகழ் மோகினி சார்வான யோகினி

1201. தானிகழ் மோகினி சார்வான யோகினி
போன மயமுடை யாரடி போற்றுவர்
ஆனவ ராவியி னாகிய வச்சிவந்
தானாம் பரசிவ மேலது தானே.

திருவருள் ஆருயிர்களின் அன்பை இயக்கும் மோகினி. அவளே சார்ந்த யோகினியாகிய காளி. (காளியின் ஏவல்செய்பவளும் யோகினி எனப்படுவள்.) பிறப்பறமுயலும் பெரியோர் அம்மையின் திருவடியைப் போற்றுவர். எழுவகைப் பிறப்பினுள் மேலான மக்கள் பிறப்புயிரின்கண் மிக்குவிளங்குவது சிவம். அச் சிவம் தானாக விளங்குவது பரசிவம். அதற்கும் மேலாக விளங்குவது திருவருளம்மையாகும்.

போன மயம் உடையார் - பிறப்பற்றவர். ஆவியினாகிய - உயிர்தொறும் நிறைந்த.

## 1202. தானந்த மேலே தருஞ்சிகை தன்னுடன்

1202. தானந்த மேலே தருஞ்சிகை தன்னுடன்
ஆனந்த மோகினி யம்பொற் றிருவொடு
மோனையில் வைத்து மொழிதரு கூறது
வானவை யோமெனும் அவ்வுயிர் மார்க்கமே.

முடிவின்கண்ணும் மேலாக விளங்கும் அம்மை, உயிரெழுத்துக்கு உயிர்ப்புநல்கும் சிகையாகிய நாதத்துடன், பேரின்பம்தரும் அன்பியாவள். அன்பி - மோகினி. அழியாத திருவடிச் செல்வத்துடன் முதற்கண்வைத்த முதல்வியாவள். சொல்லப்படும் கூறுடையதானவை ஓமெனும் எழுத்தாம். அவ்வெழுத்தின்வழிப் பயில்வார் உயிர்மார்க்கம் செல்பவராவர்.

மோனையில் - முதலில்.

## 1203. மார்க்கங்கள் ஈன்ற மனோன்மனி மங்கலி

1203. மார்க்கங்கள் ஈன்ற மனோன்மனி மங்கலி
யார்க்கும் அறிய வரியா ளவளாகும்
வாக்கு மனமு மருவியொன் றாய்விட்ட
நோக்கும் பெருமைக்கு நுண்ணறி வாமே.

உயிர்களின் நிலைமைக்கு ஏற்பப் பல நெறிகளையும் வகுத்தருளிய மனோன்மனி மங்கலக் குணத்தினையுடையாள். அவள் யார்க்கும் தங்கள் அறிவு முனைப்பால் அறிதற்கு ஒண்ணாதவள். மொழியும் நினைப்பும் ஒன்றாய் அடங்கிக் கண்ணால் பார்க்கும் தன்மையும் நீங்கிய பெருமையுடையவர்களுக்கு அவர்களது அறிவுக்கு அறிவாய் - நுண்ணறிவாய் விளங்குவள். நுண்ணறிவு - அறிவுக்குள் அறிவு.

மார்க்கங்கள் - தாச மார்க்கம், சற்புத்திர மார்க்கம், சக மார்க்கம், சன்மார்க்கம்.

## 1204. நுண்ணறி வாகும் நுழைபுலன் மாந்தர்க்குப்

1204. நுண்ணறி வாகும் நுழைபுலன் மாந்தர்க்குப்
பின்னறி வாகும் பிரானறி வத்தடஞ்
செந்நெறி யாகுஞ் சிவகதி சேர்வார்க்குத்
தன்னெறி யாவது சன்மார்க்க மாமே.

நுழைபுலன் மாந்தராகிய மெய்யடியார்கட்குத் திருவருளம்மை அறிவுக்கு அறிவாகிய நுண்ணறிவாயிருப்பள். அவர்களறிவு பிரானறிவுக்குப் பின்னாகநிற்கும். அதுவே பெருவழியாகும். அதுவே செல்லும் நெறியுமாகும். சிவ நிலையை எய்துவார்க்குத் தலைவனெறி யாவதும் அதுவே. அதுவே அறிவுநெறியாகிய சன்மார்க்கமாகும். சன்மார்க்கம் (சத்+மார்க்கம்) உண்மைநெறி; மெய்ந்நெறி.

## 1205. சன்மார்க்க மாகச் சமைதரு மார்க்கமுந்

1205. சன்மார்க்க மாகச் சமைதரு மார்க்கமுந்
துன்மார்க்க மானவை எல்லாந் துரந்திடும்
நன்மார்க்கத் தேவரும் நன்னெறி யாவதுஞ்
சன்மார்க்கத் தேவியுஞ் சத்தியென் பாளே.

அறிவுநெறியாக அமைந்தமுறையும் தீநெறியானவை எல்லாவற்றையும் ஓட்டிவிடும். அம்முறையே நடக்கும் நல்லொழுக்கத்தால் நன்னெறி வந்து கைகூடும். இந்நெறிக்கு முதல்வியும் திருவருளம்மையேயாகும். மார்க்கம் - முறைமை; ஒழுங்கு.

## 1206. சத்தியும் நானுஞ் சயம்புவும் அல்லது

1206. சத்தியும் நானுஞ் சயம்புவும் அல்லது
முத்தியை யாரும் முதலறி வாரில்லை
அத்திமேல் வித்திடில் அத்தி பழுத்தக்கான்
மத்தியி லேற வழியது வாமே.

சத்தியாகிய பேரறிவுப் பேராற்றலும், ஆவியும், ஆண்டானும் ஆகிய இவை அல்லாது, முத்திக்கு யாரும் காரணமாகுவாரிலர். உடம்புக்குள் உயிரினை இணைத்துவைக்கில் அவ்வுடம்பு முதிர்ந்தால் நடுத்தண்டின்வழியாகச் சென்று உயிர்ப்பு உயரும். உயிர்ப்பு - பிராணவாயு. அத்தி - அகரம். வித்து - மகரம். மத்தி - புருவநடு எனக் கூறலும் ஒன்று.

நானும் - சீவனும். அத்தி - சரீரம். வித்து - உயிர். அத்தி பழுத்தால் - சரீரம் பண்பட்டால். மத்தியில் - வீணாத் தண்டூடே.

## 1207. அதுவிது வென்றவ மேகழி யாதே

1207. அதுவிது வென்றவ மேகழி யாதே
மதுவிரி பூங்குழல் மங்கைநல் லாளைப்
பதிமது மேவிப் பணியவல் லார்க்கு
விதிவழி தன்னையும் வென்றிட லாமே.

ஒருநெறிப்படாது அது வழி என்றும், இதுவழியென்றும் மயங்கி வீண்காலம் போக்காது, தேன்வழியும் பூச்சூடியுள்ள கூந்தலையுடைய மங்கை நல்லாளாகிய திருவருளம்மையைத் திங்கள் மணடிலத் தமிழ்வழியேசென்று வணங்கவல்லார்க்குப் பிறப்பு இறப்புக்கு உட்படுத்தும் விதிவழியையும் வென்றிடுதல்கூடும்.

பதிமது - சந்திர மண்டலத்தமுது. விதிவழி - வல்வினை.

## 1208. வென்றிட லாகும் விதிவழி தன்னையும்

1208. வென்றிட லாகும் விதிவழி தன்னையும்
வென்றிட லாகும் வினைப்பெரும் பாசத்தை
வென்றிட லாகும் விழைபுலன் தன்னையும்
வென்றிடு மங்கைதன் மெய்யுணர் வோர்க்கே.

விதிவழியை வெல்லுவதும், இருவினைப் பாசத்தை வெல்லுவதும், நிலையாப் பொருளை விரும்பும் ஐம்புலன்களை வெல்லுவதும் இயல்பாகவே பொறிவாயில் ஐந்தவித்த பொற்புடைய திருவருளம்மையை வழிபட்டு அவளருளும் திருவடியுணர்வாகிய மெய்யுணர்வினாலாகும். 'அவனருளாலே அவன்தாள் வணங்கி' என்பது, இதற்கொப்பாகும்.

வென்றிடும் - மேன்மை பொருந்திய.

## 1209. ஓரைம் பதின்மருள் ஒன்றியே நின்றது

1209. ஓரைம் பதின்மருள் ஒன்றியே நின்றது
பாரம் பரியத்து வந்த பரமிது
மாரங் குழலாளும் அப்பதி தானுமுன்
சாரும் பதமிது சத்திய மாமே.

மிகப் பழங்காலத்துத் தமிழ் எழுத்துக்கள் ஐம்பத்தொன்றாக வழங்கப்பட்டன. அதற்குரிய தெய்வங்களும் ஐம்பத்தொருவராவர். அவருள் ஒன்றிநின்றதும் அம்மையின் மெய்யுணர்வேயாகும். இம் முறைமை வழி வழியாக வருவது. கடவுளும் அங்ஙனம் வந்ததாகும். கோடகசாலையின் மலர்சூடிய கூந்தலையுடைய அம்மையும் அவள்தன் கணவனாகிய சிவபெருமானும் வந்துபொருந்தும் நிலையும் இதுவேயாகும். இஃது உண்மையாகும் மாரம்- கோடகசாலை.

ஓர் ஐம்பதின்மர் - 51 அக்கர அதி தேவர்கள். பாரம்பரியம் - பரம்பரை.

## 1210. சத்தியி னோடு சயம்புவும் நேர்படில்

1210. சத்தியி னோடு சயம்புவும் நேர்படில்
வித்தது வின்றியே எல்லாம் விளைந்தன
அத்தகை யாகிய ஐம்பத் தொருவருஞ்
சித்தது மேவித் திருந்திடு வாரே.

சத்தியாகிய-முப்பத்தைந்தாம் அன்னைமெய்யினை முப்பத்தாறாவதாகிய அத்தன்மெய் நேர்படுதலாகிய நோக்கம்கொண்டதனால் வேறு காரணம் ஏதும் இன்றி ஐம்பத்தோரெழுத்துக்களும் தோன்றின. தோன்றவே அவற்றிற்குரிய கடவுளரும் தோன்றினர். இக் கடவுளரும் சித்தாகிய அறிவினை மேவிச் செம்மையுறுவர். உரிய கடவுளர் - அதி தெய்வம்.

சயம்பு - சிவன்.

## 1211. திருந்து சிவனுஞ் சிலைநுத லாளும்

1211. திருந்து சிவனுஞ் சிலைநுத லாளும்
பொருந்திய வானவர் போற்றிசெய் தேத்த
அருந்திட அவ்விடம் ஆரமு தாக
இருந்தனள் தானங் கிளம்பிறை என்றே.

இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதலே திருந்துதலாகும். அங்ஙனம் திருந்திய சிவனும், சிலையாகிய விற்போலும் நெற்றியினையுடைய அம்மையும் எழுந்தருளியிருக்கும் வெள்ளிமலையிற் சென்று வானவர்கள் போற்றி முறையிட்டுத்தொழ ஆண்டவன் அக்கொடிய நஞ்சினை எடுத்து அருந்தவும், தேவர்கள் அமிழ்தத்தையுண்ணவும் திருவருளம்மை ஆரருள் புரிந்தனள். பொருந்திய: வீற்றிருக்கும் திரு வெள்ளிமலை.

அவ்விடம் - வலிய ஆலகால விடம்.

## 1212. என்றும் எழுகின்ற வேரினை எய்தினார்

1212. என்றும் எழுகின்ற வேரினை எய்தினார்
அன்றது வாகுவர் தார்குழ லாளொடு
மன்றரு கங்கை மதியொடு மாதவர்
துன்றிய தாரகை சோதிநின் றாளே.

என்றும் வளர்ந்தோங்கும் திருவருள் அழகினை எய்தினார் அப்பொழுதே அவ்வழகின் வண்ணமாகுவர். நடப்பாற்றலாகிய தார் குழலாளொடும் அவ்வாற்றலின் வெளிப்பாடாம் நிலைபெற்ற கங்கையாளொடும், மதியொடும், வணங்கும் மாதவரோடும், தொடர்ந்து காணப்படும் பேரொளிப்பிழம்பாக அம்மை நின்றனள். ஏர் - அழகு.

## 1213. நின்றனள் நேரிழை யாளொடு நேர்பட

1213. நின்றனள் நேரிழை யாளொடு நேர்பட
ஒன்றிய வுள்ளொளி யாலே யுணர்ந்தது
சென்ற பிராணிகள் சிந்தையில் வேண்டிய
துன்றிடு ஞானங்கள் தோன்றிடுந் தானே.

திருவருளம்மை நடப்பாற்றலுடன் நேர்படநின்றனள். அவ்வருள் காட்டக்காணும் உள்ளொளியாலே அஃது உணரப்படுவது. அவ்வழியின்கீழ்ச் சென்ற ஆருயிர்களின் நாட்டத்தில் வேண்டியவைகள் வந்து எளிதாகப் பொருந்தும். திருவடியுணர்வுகளும் தோன்றியிடும்.

## 1214. தோன்றிடும் வேண்டுரு வாகிய தூய்நெறி

1214. தோன்றிடும் வேண்டுரு வாகிய தூய்நெறி
ஈன்றிடு மாங்கவள் எய்திய பல்கலை
மான்றரு கண்ணியும் மாரனும் வந்தெதிர்
சான்றது வாகுவர் தாமவ ளாயுமே.

திருவருளம்மை நன்னெறிச் செல்வார் அன்புகூர்ந்து விரும்பும் திருவுருவோடு தோன்றியருள்வள். அவள் பலவேறு கலைகளையும் உணர்த்துவித்துப் படைத்தருள்வள். மான்போலும் கண்ணை யுடைய அம்மையும், மாரனாகிய சிவபெருமானும் மெய்யடியார்முன் தோன்றியருள்வர். அங்ஙனம் தோன்றியருளுவதும் சிவபெருமானும் அம்மையும் பொருவால் ஒருவராயிருக்கும் உண்மையான் என்க.

வேண்டுரு - விரும்பும் உருவம்.

## 1215. ஆயும் அறிவுங் கடந்தனு வாரணி

1215. ஆயும் அறிவுங் கடந்தனு வாரணி
மாயம தாகி மதோமதி யாயிடுஞ்
சேய அரிவை சிவானந்த சுந்தரி
நேயம தாநெறி யாகிநின் றாளே.

திருவருளம்மை ஆராய்வும் அறிவும் கடந்த நுண்ணியல்பானவள். அவள் கச்சுப் பூட்டப்பெற்ற கொங்கையினை யுடையவள். அவளே சொல்லமுடியாத மருட்சியுடன் மதோன்மத்தியாவள் அவள் செந்நிறம் வாய்ந்த அம்மை. அவளே சிவப்பேரின்ப அழகி அவள் அன்புநெயியில் அகப்படும் திருவாய்நின்றனள்.

அணுவாரணி - அணுவுக்கணுவானவள்.

## 1216. நெறியது வாய்நின்ற நேரிழை யாளைப்

1216. நெறியது வாய்நின்ற நேரிழை யாளைப்
பிறிவது செய்யாது பிஞ்ஞக னோடுங்
குறியது கூடிக் குறிக்கொண்டு நோக்கும்
அறிவொடும் ஆங்கே அடங்கிட லாமே.

திருநெறியாகிநின்ற திருவருளம்மையைப் பின்னல் திருச் சடையினையுடைய பிஞ்ஞகனோடும் பொருளால் பிரித்துப் பேசாது அம்மையின் குறிப்பின்வழிக்கூடி வேறோர் குறிப்பின்றி அதுவே குறிப்பாகக் குறிக்கொண்டு நோக்குவார் நல்லாராவர். அவர்தம் அறிவு திருவருளறிவுடன் அடங்கி அருளறிவாகவேநிற்கும். அடங்கலென்பது ஆருயிர் தஞ்செயலற்று அருட்செயலாகவே இயங்குதல். அன்னை அஞ்ஞை என்றாவதுபோல் பின்னலன் பிஞ்ஞகன் என்றாயிற்று. நல்லார் - மெய் கண்டார்; சிவஞானி; திருவடியுணர்வுகை வந்தார்.

சத்தியையும் சிவனையும் பிரித்தல் கூடாது என்றது இப்பாட்டு.

## 1217. ஆமயன் மாலரன் ஈசன்மா லாங்கதி

1217. ஆமயன் மாலரன் ஈசன்மா லாங்கதி
ஓமய மாகிய ஒன்பதும் ஒன்றிடத்
தேமய னாளுந் தெனாதென என்றிடும்
மாமய மானது வந்தெய்த லாமே.

திருவருள் ஆணைபெற்றுத் தொழில்புரியும் அயன், அரி (மால்), அரன், ஆண்டான் என்னும் ஆருயிர் இனமாம் இவர்கள் விரும்பும் நிலையினை. அருளவும் மிகவும் சிறப்புத் தன்மை பொருந்திய ஒன்பது ஆற்றல்களும் ஒன்றுகூடவும், தீரா இன்பவழிவினனாகிய சிவபெருமான் திருநோக்கம் கொண்டனன். கொள்ளவே தென்னாதெனா எனத் தேனுண்ணவந்து மொய்க்கும் ஆருயிர் வண்டினங்களின் நிலைக்களமாகிய ஒலிமெய் வழிவமெய்திற்று என்பர். மால் - விருப்பம். எனவே தூயமாயையின்கண் அயன்மால் முதலானோர் விரும்பும் நிலைவந்து கைகூடும். இங்குக் கூறிய அயன் மால் அரன் ஆகிய மூவரும் ஆசான் மெய் (சுத்தவித்தை) யின்கண் உறைவோர்.

தேமயம் - இன்ப வழிவம்.

## 1218. வந்தடி போற்றுவர் வானவர் தானவர்

1218. வந்தடி போற்றுவர் வானவர் தானவர்
இந்து முதலாக எண்டிசை யோர்களுங்
கொந்தணி யுங்குழ லாளொடு கோனையும்
வந்தனை செய்யும் வழிநவில் வீரே.

பூங்கொத்தணிந்த கூந்தலையுடைய திருவருளம்மையுடன் கோனாகிய சிவபெருமானையும் இன்பநாட்டமே மிக்குடைய வானவர்களும் பொருள்நோக்கமே மிக்குடைய தானவர்களும் திங்கள் முதலாகச் சொல்லப்படுகின்ற எண்புலக் காவலர்களும் பயன்வேண்டிவந்து திருவடி போற்றுவர். போற்றிவழிபடும் முறைமை வரும் மந்திரத்தால் ஓதப்படும்.

## 1219. நவிற்றுநன் மந்திரம் நன்மலர் தூபங்

1219. நவிற்றுநன் மந்திரம் நன்மலர் தூபங்
கவற்றிய கந்தங் கவர்ந்தெரி தீபம்
பயிற்றும் உலகினிற் பார்ப்பதி பூசை
அவிக்கொண்ட சோதிக்கோர் அர்ச்சனை தானே.

உலகோர் பயின்று செய்யப்படும் பார்ப்பதி பூசைக்கண் நெய்யுணாக்கொள்ளும் அறிவொளி அம்மையின் வழிபாட்டிற்கு உயிர் போன்று சிறந்தது நயந்துமொழியும் 'நமசிவய' என்னும் தனித்தமிழ் மந்திரமாகும். அம் மந்திரத்தின் மென்மை, அழகு, மலர்ச்சி, மணம் போன்று விளங்குவன நறுமணம் சேர்மலரும் புகையும். அம் மந்திர ஒளிபோன்று திகழ்வது நறுமணம் கமழும் சுடர்விட்டெரியும் நெய் விளக்கு. கொலைபுலை நீத்தோரே அம்மையைத்தொழும் உலையா நிலைசேர் ஒண்குணத்தோராவர். (319) அவி - பாலவி. (1793.)

அவிக்கொண்ட - நெய்யவியுண்ட.

## 1220. தாங்கி உலகில் தரித்த பராபரன்

1220. தாங்கி உலகில் தரித்த பராபரன்
ஓங்கிய காலத் தொருவன் உலப்பிலி
பூங்கிளி தங்கும் புரிகுழ லாளன்று
பாங்குடன் ஏற்பப் பராசத்தி போற்றே.

அழகிய பசுங்கிளி மொழிவேட்டுத் தங்கும் திருக்கையினையும் பின்னால் திருச் சடையினையுமுடைய திருவருளம்மை பண்டே சிவபெருமானை ஒருபாகத்தே கொண்டனள். அதனால் அப்பராபரனாகிய சிவன் உலகினைத் தாங்கினன்; திங்களைச் சூடினன்; ஊழிக் காலத்தும் கெடா ஒருவனாய்நின்றனன். ஓங்கிய காலம் - ஊழிக்காலம். உலப்பிலி - அழிவில்லாதவன். அத்தகைய பேரறிவுப் பேராற்றலை வழிபடுவாயாக.

உலப்பிலி - அழிவில்லாதவன்.

## 1221. பொற்கொடி மாதர் புனைகழல் ஏத்துவர்

1221. பொற்கொடி மாதர் புனைகழல் ஏத்துவர்
அற்கொடி மாதுமை யார்வத் தலைமகள்
நற்கொடி மாதை நயனங்கண் மூன்றுடை
விற்கொடி மாதை விரும்பி விளங்கே.

கரிய கொடிபோலும் நிறம்வாய்ந்த உமையம்மையை, ஆருயிர்கள்மாட்டு நீங்கா ஆர்வம்பூண்ட முதல்வியை, நல்ல கொடி போலும் இடையினையுடைய எழிலியை, மூன்று திருக்கண்களையுடைய மூப்பியை, தொடரொளி விளங்கும் துணைவியைச் சூழவரும் பொன்போல் விளங்கும் பணிப்பெண்கள் திருவடிதொட்டு வழிபடுவர். நெஞ்சமே நீயும் உணர்ந்து அன்பு பூண்டு அங்ஙனம் வழிபடுவாயாக. அற்கொடி: அல் + கொடி - கரியகொடி.

மாதர் - பரிவார சத்திகள். அற்கொடி - கரிய கொடி போன்ற. விற்கொடி - ஒளி பொருந்திய சத்தி.

## 1222. விளங்கொளி யாய விரிசுடர் மாலை

1222. விளங்கொளி யாய விரிசுடர் மாலை
துளங்கு பராசத்தி தூங்கிருள் நீங்கக்
களங்கொள் மணியுடன் காம வினோதம்
உளங்கொ ளிலம்பியம் ஒன்று தொடரே.

மிக்கு விளங்குகின்ற ஒளியோடுகூடிய மலர்மாலையும், விரிசுடர்வாய்ந்த மணிமாலையும் விளங்கும் பராசத்தி, 'மாக்கள் சிந்தையுள் சார்ந்துநின்ற, பொங்கிய இருளைப்போக்'கத் திருநீலகண்டம் விளங்குகின்ற சிவபெருமானுடன் மனத்தே காம விளையாட்டுக் கொள்கையில்லாத தோணித்தன்மை ஒத்த புணையாவள். அவள் திருவடியைத் தொடர்ந்து வழிபடுவாயாக அம்பியம்- தோணித் தன்மை. அம்பி - தோணி.

தூங்கிருள் - நிலைபெற்ற ஆணவம். இலம்பியம் - உபதேசமொழி.

## 1223. தொடங்கி உலகினிற் சோதி மணாளன்

1223. தொடங்கி உலகினிற் சோதி மணாளன்
அடங்கி இருப்பதென் அன்பின் பெருமை
விடங்கொள் பெருஞ்சடை மேல்வரு கங்கை
ஒடுங்கி யுமையொடும் ஒருரு வாமே.

உலகினில் ஒளியினைத் தொடங்குவித்து அதற்கும் ஒளிகொடுத்து விளங்கும் சிவபெருமான் திருவருளின்கண் அடங்கியிருப்பது ஏன்? அதுதான் பேரன்பாகிய காதலின் பெருமை பரந்த அடர்ந்த பெருஞ்சடைமேல் வருகின்ற கங்கையாள் நடப்பாகிய மறைப்பாற்றலாவள். அவள் உமையாள் என்னும் வனப்பாகிய உறைப்பாற்றலின்கண் ஒடுங்குவள். ஆதலால் கங்கையும் உமையும் காணில் ஒருவளே. இவ்வுண்மை அப்பரருளிய 'செறி கழலும் திருவடியும்' என்னும் திருத்தாண்டகத்தினுள் 'மலைமகளும் சலமகளும் மலிந்து தோன்றும்' என்பதனால் விளங்கும். மலைமகள் - பராசத்தி. சலமகள் - திரோதானசத்தி. சலம் : வஞ்சனை; மறைப்பு. விடங்கொள் - இடங்கொள்; பரந்த.

## 1224. உருவம் பலவுயி ராய்வல்ல நந்தி

1224. உருவம் பலவுயி ராய்வல்ல நந்தி
தெருவம் புகுந்தமை தேர்வுற நாடிற்
புரிவளைக் கைச்சியெம் பொன்னணி மாதை
மருவி இறைவன் மகிழ்வன மாயமே.

பல்லுயிர்க்கும் வினைக்கீடாகப் பல உடம்புகளைப் படைத்துக்கொடுத்தருளி அவ்வுடம்புதொறும் தானும் விரவிநிற்றற் பொருட்டுப் பலவாய் நிற்கவல்ல நந்தி, அவ்வுயிர்கட்குக் காட்சி அளித்தற் பொருட்டு வெளிப்பட்டும் நின்றருளினன். அதன் உண்மையினை ஆராய்ந்து அறியின் வளையணிந்த கையினையும் பொன்னணிந்த மேனியினையும் உடைய திருவருளம்மையைக் கலந்ததனாலெனப் புலனாம். அக்கலப்பால் பதியென்னும் பொருளுடைய இறையவனாவன். இங்ஙனம் கலந்து மகிழ்வனவெல்லாம் அறிதற்கரியன. மாயம்: அறிதற்கரியன.

தெருவும் புகுந்தமை - வெளியிட்டமை.

## 1225. மாயம் புணர்க்கும் வளர்சடை யானடித்

1225. மாயம் புணர்க்கும் வளர்சடை யானடித்
தாயம் புணர்க்குஞ் சலநதி அமலனைக்
காயம் புணர்க்குங் கலவியுள் மாசத்தி
ஆயம் புணர்க்குமவ் வியோனியு மாமே.

வளரும் திருச்சடையினையுடைய சிவபெருமான் மாயா காரியமாகிய உலகு உடல் கலன் ஊண் முதலியவற்றை இயைந்தியக்கிப் படைத்தருள்வன். அவனே திருவடிப் பேற்றைச் சாரும் கூட்டுறவை நல்கியருள்வன். மறைப்பாற்றலாகிய சலநதியைத் (1223) தாங்குபவனும் அவனே. இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய இறைவன் உயிர்களுக்கு வினைக்கீடாக உடலையளித்துக் கூட்டுவிப்பன். இவையனைத்தும் திருவருளோடு கூடிய கூட்டங்காரணமாக நிகழ்வன. மாசத்தி - திருவருள். யோனி - காரணம். உலகு - புவனம். உடல் - தனு. கலன் - கரணம். ஊண் - போகம்.

மாயம் புணர்க்கும்-மாயையின் பரிணாமங்களாகிய உடல் - கருவி - உலக போகங்களைக் கொடுக்கும். அடித்தாயம் - திருவடி ஞான உரிமை. சலமதி - கங்கையையும் மதியையும் தரித்த காயம் புணர்க்கும் - உயிரை உடலுடன் கூட்டும்.

## 1226. உணர்ந்தொழிந் தேனவ னாமெங்கள் ஈசனைப்

1226. உணர்ந்தொழிந் தேனவ னாமெங்கள் ஈசனைப்
புணர்ந்தொழிந் தேன்புவ னாபதி யாரை
அணைந்தொழிந் தேனெங்கள் ஆதிதன் பாதம்
பிணைந்தொழிந் தேன்றன் அருள்பெற்ற வாறே.

எங்கள் ஆண்டவனை அவனருளால் உறுதியாகவுணர்ந்தேன். அவனே புவனமாகிய உலகமுதல்வன். அவனைப் புணர்ந்தேன்; அணைந்தேன். எங்கள் ஆதியையுடைய முழுமுதல்வனைப் பின்னிக் கிடந்தேன். இவையனைத்தும் திருவருள் தரப்பெற்றவாறென்க.

பிணைந்து - கலந்து.

## 1227. பெற்றாள் பெருமை பெரிய மனோன்மனி

1227. பெற்றாள் பெருமை பெரிய மனோன்மனி
நற்றாள் இறைவனே நற்பய னேஎன்பர்
கற்றான் அறியுங் கருத்தறி வார்கட்குப்
பொற்றாள் உலகம் புகல்தனி யாமே.

ஒன்பது திருவாற்றல்களுள் முதன்மை பெற்றவள் மனோன்மனி. அவளே அனைத்துப் பெருமையும் பெற்றவள். அவள் துணையாக இறைவன் நல்ல திருவடியே அழிவிலாத நற்பயன் என்று கூறுவர். கற்றகல்வியின் பயனாகிய கருத்தை யறிவார்கட்கு அவன் திருவடியாகிய விழுப்பேற்றினை எய்துதல் எளிதாகும் - தனிச் சிறப்பாகும்.

பொற்றாக உலகம் - முத்தி உலகம்.

## 1228. தனிநா யகன்றனோ டென்னெஞ்சம் நாடி

1228. தனிநா யகன்றனோ டென்னெஞ்சம் நாடி
இனியார் இருப்பிடம் ஏழுல கென்பர்
பனியான் மலர்ந்தபைம் போதுகை ஏந்திக்
கனியாய் நினைவதென் காரணம் அம்மையே.

குளிரால் மலர்ந்த அழகிய பூக்களைக் கை ஏந்திக் கனிந்த வுள்ளத்துடன் அம்மையின் திருவடியை நினைந்து தொழுங்காரணத்தால் ஒப்பில்லாத முழுமுதல்வனை என்னெஞ்சம் நாடுவதாயிற்று. அதன் பயனாக இனியார் என்னும் பெயர் சிவபெருமானுக்கு எய்துவதாயிற்று. அவ்வினியார் உறையும் உறையுள் ஏழுலகுக்கும் அப்பால் என்பர்.

கனியாய் நினைவது - கனிந்து நினைவது.

## 1229. அம்மனை அம்மை அரிவை மனோன்மனி

1229. அம்மனை அம்மை அரிவை மனோன்மனி
செம்மனை செய்து திருமங்கை யாய்நிற்கும்
இம்மனை செய்த இந்நில மங்கையும்
அம்மனை யாகி அமர்ந்துநின் றாளே.

உச்சி வீட்டுக்குரிய அம்மை மனோன்மனி என்ப. அவளே செம்பொருள் திருவடியின் உறையுளைச் செய்து திருமங்கையாய்நிற்பள். அவள் இம் மனையாகிய: இவ்வுடலைத் தந்தருளிப் பெருமைமிக்க நிலமடந்தை என்னும் பெயர் பூண்டனள். அவளே அழகிய அன்னையாய் ஆதியாய் யாண்டும் பொருந்திநின்றனள். அவ்வருளம்மை தந்தருளிய ஒரு மனையாகிய ஒருடம்பிலேயே பிறப்பற முயலுதல்வேண்டும். வேறு பிறப் பெடுக்கும் நோக்கங்கொண்டார். பிறன்மனைநோக்கும் பேதையராவர். அவர் 'பிறன்மனை நோக்காத பேராண்மை'யராகாமை பெரிதும் வருந்தத்தக்க தொன்றாகும். மனை - பிறிதுமோருடம்பு.

அம்மனை - சகசிர அறை; இம்மனை - இவ்வுடல்.

## 1230. அம்மையும் அத்தனும் அன்புற்ற தல்லது

1230. அம்மையும் அத்தனும் அன்புற்ற தல்லது
அம்மையும் அத்தனு மாரறி வாரென்னை
அம்மையொ டத்தனும் யானும் உடனிருந்து
அம்மையொ டத்தனை யான்புரிந் தேனே.

மகப்பேறு கருதி அருந்தவமிருந்து உடலுறவாம் அம்மையும் அத்தனும் என்மாட்டு அன்பு பூண்டனர். அவ்வன்பு உடலைக் கண்டேயாம்; உயிரைக் கண்டன்று. என்னை என்பது ஈண்டு உயிரை. உயிர்க்கும் உறவாம் அம்மையும் அத்தனுமாகிய சிவனும் சிவையும், அடிமையாகிய யானும் உடனுறையும் காரணத்தால் அம்மையோடத்தனாகிய சிவன் சிவை என்னும் விட்டுப்பிரியா இருவர்களையும் அருட் கண்ணே கண்ணாகக் கொண்டு அடியேனும் தொழுதுய்ந்தேன்.

அம்மையும் அத்தனும் - சத்தியும் சிவமும்.

## 1231. ஏரொளி யுள்ளெழு தாமரை நாலிதழ்

1231. ஏரொளி யுள்ளெழு தாமரை நாலிதழ்
ஏரொளி விந்துவி னாலெழு நாதமாம்
ஏரொளி யக்கலை எங்கும் நிறைந்தபின்
ஏரொளிச் சக்கர மந்நடு வன்னியே.

மூலாதாரத்துத் தோன்றுவது நாலிதழ்த் தாமரை. அதனுள்ளிருந்து உச்சித்தொளைவரைத் தொடர்ந்து தோன்றுவதோர் கதிரொளி உண்டு. அவ் ஏரொளித் துணையால் விந்துவின் ஒளிதோன்றும். அவ் வொளியால் நாதஒலி உண்டாம். அவ்வொப்பில்லா ஒளி எங்கும் நிறைந்தபின் நடுவாகிய வீணாத்தண்டின் இருபக்கமும் அழகிய பேரொளி தோன்றும். அதன் நடுவாகச் சுடர்ச் சக்கரம் அனற்பிழம்பாக நிற்கும்.

ஏரொளி - வீணாத்தண்டின் இரு பக்கமும் உள்ள கதிரொளி.

## 1232. வன்னி யெழுத்தவை மாபலம் உள்ளன

1232. வன்னி யெழுத்தவை மாபலம் உள்ளன
வன்னி யெழுத்தவை வானுற ஓங்கின
வன்னி யெழுத்தவை மாபெருஞ் சக்கரம்
வன்னி யெழுத்திடு வாறது சொல்லுமே.

சுடர்ச் சக்கரத்து எழுத்துக்கள் மிக்க வலுவைத் தருவன.
அவ்வெழுத்தே வானுற ஓங்கும் வழியும் வகுத்தன.
அவ்வெழுத்துக்களே மிகப்பெரும் சக்கரத்தமைந்தன.
அவ்வெழுத்தமைக்கும் முறையும் சொல்லப்படும்.

வன்னி எழுத்து - ஏரொளிச் சக்கர எழுத்து.

## 1233. சொல்லிய விந்துவும் ஈராறு நாதமாஞ்

1233. சொல்லிய விந்துவும் ஈராறு நாதமாஞ்
சொல்லிடு மப்பதி யவ்வெழுத் தாவன
சொல்லிடு நூறொடு நாற்பத்து நாலுரு
சொல்லிடு சக்கர மாய்வரு மேலதே.

கூறப்படும் விந்துவும் பன்னிரண்டு உயிர்ப்புக்களையுடையது. உயிர்ப்பு - பிராணன். அதன் தலைமை எழுத்துவழிவாகிய நாதமாகும். அவ்வோசை வழியாக உலகம் தோன்றிடும் முறைமைக்குப் பன்னிரண்டும் பன்னிரண்டும் உறழ நூற்றுநாற்பத்து நான்கு அறைகளுள்ள சக்கரம் தோன்றும்.

1233 முதல் 1238 வரை ஐம்பூதங்களின் உற்பத்தி கூறப்படுகிறது.

## 1234. மேல்வரும் விந்துவு மவ்வெழுத் தாய்விடும்

1234. மேல்வரும் விந்துவு மவ்வெழுத் தாய்விடும்
மேல்வரு நாதமும் ஓங்கும் எழுத்துடன்
மேல்வரு மப்பதி யவ்வெழுத் தேவரின்
மேல்வரு சக்கர மாய்வரு ஞாலமே.

உச்சியளவுஞ் சென்ற விந்துவும் நாத ஓசையால் வெளிப்படும். அதனால் அது நாத எழுத்தாகிய அகரமாகத் தோன்றும். அகர எழுத்துடன் கூடிச் சுழல மேற்கூறிய சக்கரம் உலகமாய் விரியும்.

## 1235. ஞாலம தாக விரிந்தது சக்கரம்

1235. ஞாலம தாக விரிந்தது சக்கரம்
ஞாலம தாயிடும் விந்துவும் நாதமும்
ஞாலம தாயிடு மப்பதி யோசனை
ஞாலம தாக விரிந்த தெழுத்தே.

நூற்றுநாற்பத்துநான்கு அறைகளோடு கூடிய சக்கரமே உலகமாக விரிந்தது. உலகமுதலாக நிற்பதும் நாதவிந்துக்களாகும். ஞாலமும் யோசனையாகிய ஓர் நீட்டலளவையைக் கொண்டது. ஞாலமதாக விரிதற்குக் காரணமாகவுள்ளது ஓசை என்க.

## 1236. விரிந்த எழுத்தது விந்துவும் நாதமும்

1236. விரிந்த எழுத்தது விந்துவும் நாதமும்
விரிந்த எழுத்தது சக்கர மாக
விரிந்த எழுத்தது மேல்வரும் பூமி
விரிந்த எழுத்தினில் அப்புறம் அப்பே.

எழுத்தாக விரிந்தது விந்துவும் நாதமும். சக்கரமாக விரிந்ததும் அவ் வெழுத்துக்களே. அவ்வெழுத்தின் சுழற்சியால் நிலம் விரிந்தது. அந் நிலத்தின்மேல் தோன்றுவது நீராகும்.

## 1237. அப்பது வாக விரிந்தது சக்கரம்

1237. அப்பது வாக விரிந்தது சக்கரம்
அப்பினில் அப்புறம் அவ்வன லாயிடும்
அப்பினில் அப்புறம் மாருத மாயெழ
அப்பினில் அப்புறம் ஆகாச மாமே.

நீராக விரிந்த சக்கரத்தின்மேல் அனலாய் விரிந்திடும் அனலின்மேல் காற்றாய் விரிந்திடும். காற்றின்மேல் ஆகாசமாகிய வெளியாய் விரிந்திடும்.

## 1238. ஆகாச அக்கர மாவது சொல்லிடில்

1238. ஆகாச அக்கர மாவது சொல்லிடில்
ஆகாச அக்கரத் துள்ளே எழுத்தவை
ஆகாச அவ்வெழுத் தாகிச் சிவானந்தம்
ஆகாச அக்கர மாவ தறிமினே.

வெளியின் அடையாளமாகிய எழுத்தைக் கூறுமிடத்து ஆகாச அக்கரத்துள்ளே நிறைகின்ற நாதவிந்துக்களாகிய வித்தெழுத்துக்களுமாகி ஆகாச எழுத்தே சிவப்பேரின்பம் ஆவதறிக. மேல் 1233 முதல் இதுகாறுங் கூறிய திருப்பாட்டுக்களால் கூறிய ஐம்பூதங்களுக்குரிய எழுத்துக்கள் முறையே 'ல வ ர ய அ' என்ப. ('பொன்பார்' உண்மை விளக்கம். 6)

## 1239. அறிந்திடுஞ் சக்கரம் ஐயைந்து விந்து

1239. அறிந்திடுஞ் சக்கரம் ஐயைந்து விந்து
அறிந்திடுஞ் சக்கர நாத முதலா
அறிந்திடும் அவ்வெழுத் தப்பதி யோர்க்கும்
அறிந்திடும் அப்பக லோனிலை யாமே.

அறியப்படும் சக்கரம் ஐந்தும் ஐந்தும் கூடிய பத்தும் ஆகும். அவை முறையே மூலாதாரமுதல் ஆதாரங்கள் ஆறு. ஞாயிறு திங்கள் தீ மண்டலம் மூன்று. அதீதமாகிய அப்பாலொன்று. விந்துவும் நாதமும் சக்கரமுதலாம். அந்த அந்தச் சக்கரத்துக்குரிய முதன்மையோர் உளர். இம் முதன்மையோர்க்குத் தெய்வம் பகலவனாகிய சிவபெருமான். அவனே அனைத்திற்கும் நிலைக்களமாவன்.

ஐயஞ்சு - ஐந்து ஐந்து - 10. அப்பதியோர் - அந்தந்தச் சக்கர அதிபர்கள். பகலோன் - சிவசூரியன்.

## 1240. அம்முதல் ஆறுமவ் வாதி எழுத்தாகும்

1240. அம்முதல் ஆறுமவ் வாதி எழுத்தாகும்
அம்முதல் ஆறுமவ் வம்மை எழுத்தாகும்
இம்முதல் நாலும் இருநடு வன்னியே
இம்முத லாகும் எழுத்தவை எல்லாம்.

அந்த முதன்மையான ஆதாரங்கள் ஆறும் ஆதி எழுத்துக்குரியனவாகும். அவை அம்மை எழுத்தாகும். அதீத முதலான நான்கும், இருநடு என்ப. இருநடு என்பது இரண்டுக்கும் நடு என்பதாகும். எனவே, மூலம் கொப்பூழ் மேல்வயிறு என்னும் மூன்றனுள் நடுவாகவுள்ள கொப்பூழ் என்க. இது அனலுக்கிடமாகும். இக் கொப்பூழிலிருந்து எல்லா எழுத்துக்களும் தோன்றும்.

அம்முதல் ஆறும்-அந்த முதன்மையான ஆதார எழுத்துக்கள் ஆறும். ஆதி எழுத்து - ஆக்கற்றொழிலுக்குக் காரணமான எழுத்துக்கள். இருநடு - நாபி.

## 1241. எழுத்தவை நூறொடு நாற்பத்து நாலும்

1241. எழுத்தவை நூறொடு நாற்பத்து நாலும்
எழுத்தவை யாறது வந்நடு வன்னி
எழுத்தவை யந்நடு வச்சுட ராகி
எழுத்தவை தான்முதல் அந்தமு மாமே.

மூலாதாரமுதலாகச் சொல்லப்படும் எழுத்துக்கள் நூற்று நாற்பத்துநான்கும், அவ்வச்சக்கரங்களில் அமைந்துள்ளன. நடுவாக ஆறெழுத்துமாகும். அவற்றுள் நடுவாகக் காணப்படுவது அனலாகும். எழுத்துக்கள் முதலும் முடிவும் ஆவன.

## 1242. அந்தமும் ஈறு முதலா னவையற

1242. அந்தமும் ஈறு முதலா னவையற
அந்தமும் அப்பதி னெட்டுடன் ஆதலால்
அந்தமும் அப்பதின் மூன்றில் அமர்ந்தபின்
அந்தமும் இந்துகை யாருட மானதே.

மேற்கூறிய அந்தமும் ஈறும் முதலானவை நீங்க, நெஞ்சம் மிடறு என்னும் ஈரிடத்துமுள்ள எழுத்துக்கள் பதினெட்டாகும். பன்னிரண்டாம் நிலை எனப்படும் துவாதசாந்தா தீதத்தின் எழுத்துப் பதின்மூன்றாகும். அதன்மேல் திங்கள்மண்டிலம். அதன்மேல் அறியும் நிலையுளது.

பதினெட்டு - விசுத்தி - ஆஞ்ஞையின் எழுத்துக்கள் .
பதின்மூன்று - துவாத சாந்தத்தின் எழுத்துக்கள்.
இந்துகை - சந்திர மண்டலம். ஆருடம் - அறிதல்.

## 1243. ஆவின மானவை முந்நூற் றறுபது

1243. ஆவின மானவை முந்நூற் றறுபது
மாவின மப்பதி னைந்தின மாயுறு
மாவின மப்பதி னெட்டுட னாயுறு
மாவின மக்கதி ரோன்வர வந்தே.

ஆவினம்-(அவ்வினம்) அதன் வகை. பகலவன் வகையாகத் தோன்றும் நாள்கள் முந்நூற்றறுபது. மாதத்தின் இருகூறு பதினைந்து தினம். இது பிறை யல்லது பக்கம் எனக் கூறப்படும். திங்கள் பன்னிரண்டும் கார்முதலாகச் சொல்லப்படும் பருவம் ஆறும் ஆகிய பதினெட்டு இவையெல்லாமாகப் பொருந்துகின்ற கால எண்ணிக்கைகள், காலமெய்யினைப் படைத்தருளும் கால காலனாகிய சிவபெருமானாலாவன. அதனால் அவன் சிவக்கதிரோன் எனப்படுவன். அக் கதிரோன்வர இவை எல்லாம் வந்தனவென்க.

ஆவினம் - அந்த வகை.

## 1244. வந்திடும் ஆகாசம் ஆறது நாழிகை

1244. வந்திடும் ஆகாசம் ஆறது நாழிகை
வந்திடும் அக்கரம் முப்பதி ராசியும்
வந்திடு நாளது முந்நூற் றறுபதும்
வந்திடு ஆண்டு வகுத்துரை யவ்வியே.

வான் வழியாகக் கணக்கிடும் நாழிகை முப்பதும், பன்னிரு மனைகள் எனப்படும் இராசியும், இவற்றான் வரும் நாள்கள் முந்நூற்றறுபதும் அவ்விதியின்படி கணக்கிடப்படும் என்க. அவ்விதியே என்பது அவ்வியே எனத் திகரம் குறைந்துநின்றது.

ஆகாசம் ஆறு - ஆகாய வழி. அவ்வியே - அவ்விதியே.

## 1245. அவ்வின மூன்றுமவ் வாடது வாய்வரும்

1245. அவ்வின மூன்றுமவ் வாடது வாய்வரும்
எவ்வின மூன்றுங் கிளர்தரு வேரதாஞ்
சவ்வின மூன்றுந் தழைத்திடுந் தண்டதாம்
இவ்வின மூன்றும் இராசிக ளெல்லாம்.

அவ்வினமாகிய மூன்றும்-ஆடாகிய மேட வீதியும், எவ்வின மூன்றும் - விளக்கமிக்க ஏராகிய இடபவீதியும், செவ்வின மூன்றும் - தழைத்து விளங்கும் தண்டாகிய மிதுன வீதியும் எனப் பன்னிருமனைகளும் பகுக்கப்படும் . அவை வருமாறு : "மேடவீதி யிடபவீதி, மிதுன வீதி யெனவொரு மூன்றே, அவைதாம், இருசுடர் முதலிய இயங்கும் நெறியே . இடபம் சிங்கம் மிதுனம் கடகம், இனைய நான்கும் மேடவீதி . மீன மேடம் கன்னி துலாமு, மான இடப வீதிக் கமைந்தன. வில்லு மகரங் குடமே விருச்சிகம், சொல்லிய மிதுன வீதித் துறையே." பிங்கலந்தை, 274.7. ஆடு- மேடம். ஏர் - இடபம். தண்டு - மிதுனம்.

ஆடு - மேடம்.

## 1246. இராசியுட் சக்கரம் எங்கும் நிறைந்தபின்

1246. இராசியுட் சக்கரம் எங்கும் நிறைந்தபின்
இராசியுட் சக்கர மென்றறி விந்துவாம்
இராசியுட் சக்கர நாதமும் ஒத்தபின்
இராசியுட் சக்கரம் நின்றிடு மாறே.

மூலாதார முதல் சக்கரங்கள் எங்கும் நிறைந்தபின், இதனை இராசிச் சக்கரம் என்று கூறுவர். இச் சக்கரம் விந்து என்னும் ஒளியால் நிலைபெறும். இவ் விந்துவும் நாதமும் அகவோசை புறவோசைகளால் ஒத்த இடத்து இராசியுட் சக்கரம் செவ்வே இயங்கும்.

இராசியுள் சக்கரம் - ஆறாதாரங்களும் மேடம் முதலிய 12 இராசிகளுள்.

## 1247. நின்றிடு விந்துவென் றுள்ள எழுத்தெலாம்

1247. நின்றிடு விந்துவென் றுள்ள எழுத்தெலாம்
நின்றிடு நாதமும் ஓங்கும் எழுத்துடன்
நின்றிடு மப்பதி யவ்வெழுத் தேவரில்
நின்றிடு மப்புறந் தாரகை யானதே.

விந்து முதலாகக் கூறப்படும் எழுத்துக்களெல்லாம் நாதம் உள்ளிருந்து ஒலிப்பிக்க ஒலிக்கும். அவ்வம்மனைக்குரிய எழுத்துக்கள்வரின் ஆங்கு நிற்கும். அதன்பின் தாரகை என்னும் நாள்கள் நிற்கும். மூலமுதல் நிலைகள் ஆறினுக்கும் மனைகள் இவ்விரண்டாகும். நாள்கள் (நட்சத்திரம்) நாலரையாகும். இவ்விரண்டு - இரண்டிரண்டு.

விந்து என்று உள்ள - விந்து என்று சொல்லப்படுகின்ற குறி எழுத்து எல்லாம். நாதமும் ஓங்கும் - நாதமும் கூடி எழும். அப்பதி - அந்தந்த இராசி மண்டலம். அவ்வெழுத்தே வரில் - அது அதற்குரிய எழுத்துக்களே வரில். தாரகை - நட்சத்திரங்களாம். ஆதாரம் ஒவ்வொன்றினுக்கும் இராசி இரண்டு நட்சத்திரம் 4 1/2 ஆக இராசி 12 நட்சத்திரம் 27.

## 1248. தாரகை யாகச் சமைந்தது சக்கரந்

1248. தாரகை யாகச் சமைந்தது சக்கரந்
தாரகை மேலோர் தழைத்தது பேரொளி
தாரகை சந்திரன் நற்பக லோன்வரத்
தாரகை தாரகை தாரகை கண்டதே.

சக்கரம் நட்சத்திர வடிவமாகச் சமைந்தது. அந் நட்சத்திரங்களுக்கு ஒளிகொடுத்துக்கொண்டு செழித்த சிவ ஒளி மேலாக நிற்கின்றது. இந் நட்சத்திரச் சக்கரத்தில் சந்திரனும் சூரியனும் வர, நட்சத்திர வடிவமான எழுத்து முறையாகக் காணப்பட்டது.

பேரொளி - சிவ ஒளி. தாரகை கண்டது - நட்சத்திர வடிவமான அக்கரம் காணப்பட்டது.

## 1249. கண்டிடு சக்கரம் விந்து வளர்வதாங்

1249. கண்டிடு சக்கரம் விந்து வளர்வதாங்
கண்டிடு நாதமுந் தன்மேல் எழுந்திடக்
கண்டிடு வன்னிக் கொழுந்தன வொத்தபின்
கண்டிடு மப்புறங் காரொளி யானதே.

காணப்படும் நட்சத்திர சக்கரங்கள் விந்துவினால் உண்டாவதாம். அவ் விந்துவின் மேல் நாதமும் தோன்றும். அந் நாதத்தின் மேல் அழல் வண்ணமாகிய சிவ ஒளி தோன்றும். இவை அனைத்தும் ஒத்தபின் செம்மேனி எம்மானின் ஒரு பங்காகிய அம்மையின் காரொளி தோன்றும். இவ் வொளி எல்லாவற்றையும் இயக்கும்.

கண்டிடு சக்கரம் - இவ்வாறு காணப்பட்ட தாரகைச் சக்கரம். வன்னிக்கொழுந்து - ஒளிச்சுடர். காரொளி - சத்தி ஒளி.

## 1250. காரொளி அண்டம் பொதிந்துல கெங்கும்

1250. காரொளி அண்டம் பொதிந்துல கெங்கும்
பாரொளி நீரொளி சாரொளி காலொளி
வானொளி ஒக்க வளர்ந்து கிடந்தபின்
நேரொளி ஒன்றாய் நிறைந்தங்கு நின்றதே.

அக் கரிய ஒளியானது அண்டத்தை உள்ளிட்டு உலகெங்கும் நிறையும். பாரொளியும் நீரொளியுமாகிய இரண்டும் அடங்குவதற்குரிய சாரொளியாகத் தீயொளியும், அதனையும் அடக்கிக் கொண்டிருக்கும் சாலொளியாகிய காற்றொளியும், அதனையும் உள்ளடக்கிக் கொண்டிருக்கும் மேலொளியாகிய வானொளியும் ஆகிய இவை எல்லாமும் மூலாதார முதலாகத் தோன்றிய ஐம்பூத மண்டலங்களினும் நிறைந்து நிற்பதால் அழகிய ஒளியாய் எங்கும் நிறைந்து நிற்கும் என்பது கருத்தென்க.

சாரொளி - தீயொளி. சாலொளி - வாயு ஒளி. ஏரொளி - மூலாதாரத்தினின்று ஐம்பூத மண்டலங்களிலும் நிறைந்த ஒளி.

## 1251. நின்றது அண்டமும் நீளும் புவியெலாம்

1251. நின்றது அண்டமும் நீளும் புவியெலாம்
நின்றவிவ் வண்ட நிலைபெறக் கண்டிட
நின்றவிவ் வண்டமு மூல மலமொக்கும்
நின்றவிவ் வண்டம் பலமது விந்துவே.

பேரண்டங்களும் விரிந்த பல உலகங்களும் நிலைத்து நிற்கின்றன. ஊழி முடிவுவரை இவைகள் நிலைபெறக் காண்கின்றோம். இவைகளும் ஒருவகையான் மூலமலத்துடன் ஒக்கும். இவ் வண்டம் முதலன நிலைநிற்பதற்கு அடிப்படை வலுவாகவுள்ளது விந்து. மெய் - தத்துவம். விந்து - முப்பத்தைந்தா மெய்.

மூலமலம் - ஆணவ மலம். அண்டம் பலம் - அண்டத்துக்குப் பலம்.

## 1252. விந்துவும் நாதமும் ஒக்க விழுந்திடில்

1252. விந்துவும் நாதமும் ஒக்க விழுந்திடில்
விந்துவும் நாதமும் ஒக்க விரையதாம்
விந்திற் குறைந்திடு நாதம் எழுந்திடில்
விந்துவை எண்மடி கொண்டது வீசமே.

விந்து நாதம் என்னும் இரண்டும் சமமாகக் கலந்தால் அவை அண்டத்துக்கு வித்து என்பர். விந்துவானது குறைந்து நாதமானது கூடித் தோன்றுமானால் அது மந்திரவித்து என்பர். கூடும் முறைமை விந்துவைவிட நாதம் எட்டு மடங்கு கூடுதலென்பர். விரை - வித்து. அது: பகுதிப் பொருள் விகுதி. வீசம் - பீசம், மந்திர வித்து.

ஒக்க - சமமாக.

## 1253. வீசம் இரண்டுள நாதத் தெழுவன

1253. வீசம் இரண்டுள நாதத் தெழுவன
வீசமும் ஒன்று விரைந்திடு மேலுற
வீசமும் நாதமும் எழுந்துடன் ஒத்தபின்
வீசமும் விந்து விரிந்தது காணுமே.

நாதத்தில் நின்று தோன்றுவன மந்திர வித்துக்கள் இரண்டு. அவற்றுள் ஒன்று மேலோங்கும்படி விரைந்து செல்லும். வித்தும் நாதமும் மேலோங்கி எழுந்து ஒத்துடன் நின்றபின், அவை பரந்து விளங்கும்.

## 1254. விரிந்தது விந்துவுங் கெட்டது வீசம்

1254. விரிந்தது விந்துவுங் கெட்டது வீசம்
விரிந்தது விந்துவும் நாதத் தளவினில்
விரிந்தது வுட்கட்ட எட்டெட்டு மாகில்
விரிந்தது விந்து விரையது வாமே.

விந்து விரிந்த காலத்து வித்தாகிய பீசம் மறையும். அவ் விந்துவும் நாதத்தளவினில் விரியும் உள்ளே அடங்கும் உயிர்ப்பு அறுபத்து நான்கு மாத்திரையாகும். அவ்வாறு விரிந்த விந்து, அனைத்துலகுக்கும் வித்துமாகும்.

## 1255. விரையது விந்து விளைந்தன எல்லாம்

1255. விரையது விந்து விளைந்தன எல்லாம்
விரையது விந்து விளைந்த உயிரும்
விரையது விந்து விளைந்தவிஞ் ஞாலம்
விரையது விந்து விளைந்தவன் தாளே.

தோன்றிய உலகங்கள் அனைத்தும் விந்து என்னும் காரணத்தின் உண்டாவன. விந்துவால் விளைந்த உடலகத்து உயிரையும் சிவன் சேர்த்து வைப்பன். விந்து காரணமாக இவை யெல்லாம் விளைந்தன என்ப. அவ் விந்து காரணமாக மேலான அறிவு உண்டாகும். மேலான அறிவு - மெய்யுணர்வு.

## 1256. விளைந்த எழுத்தது விந்துவும் நாதமும்

1256. விளைந்த எழுத்தது விந்துவும் நாதமும்
விளைந்த எழுத்தது சக்கர மாக
விளைந்த எழுத்தவை மெய்யினுள் நிற்கும்
விளைந்த எழுத்தவை மந்திர மாமே.

எழுத்துக்களுக்கு முதலாக விளைந்தது விந்துவும் நாதமும். அப்படி விளைந்த எழுத்தாகிய விந்துவும் நாதமும் சக்கரமாகும். அவ் வெழுத்துக்களே உடம்பினகத்தும் நிற்கின்றன. அவ் வெழுத்துக்களே மந்திரமுமாகும். உடம்பினகத்து. ஆறு நிலைக்களங்களுள்.

மெய்யினில் - சரீரத்துக்குள் இருக்கும் ஆறு ஆதாரங்கள் உள்.

## 1257. மந்திரஞ் சக்கர மானவை சொல்லிடில்

1257. மந்திரஞ் சக்கர மானவை சொல்லிடில்
தந்திரத் துள்ளெழுத் தொன்றெரி வட்டமாங்
கந்தரத் துள்ளு மிரேகையில் ஒன்றில்லை
பந்தம தாகும் பிரணவம் உன்னிடே.

தந்திரமாகிய வழிவகைகளால் அகத்தே எழுந்து தோன்றி வட்டவடிவமான எரி ஒன்று உண்டு. இதுவே மந்திர சக்கரமெனச் சொல்லப்படும். கழுத்தளவிலும் அகத்தே வரிவடிவின்றி ஒலிவடிவேயோம். இவற்றிற்கெல்லாம் முன்னாக ஓமொழி பிணிப்புள்ளதாகும். அதனை முதன்மையாகக் கொண்டு அகவழிபாடாகிய தியானத்தைப் புரிவாயாக கழுத்திடத்தை வெளிநிலை எனவும் கூறுவர்.

தந்திரம் - ஆகமம். கந்தரம் - கழுத்து. இரேகையில் - வரைகளில். பந்தமதாகும் பிரணவம் - வரைகளைக் கொண்ட சக்கரத்தில் பந்தித் திருக்கும் பிரணவத்தை. உன்னிட - தியானிக்க.

## 1258. உன்னிட்ட வட்டத்தில் ஒத்தெழு மந்திரம்

1258. உன்னிட்ட வட்டத்தில் ஒத்தெழு மந்திரம்
பின்னிட்ட ரேகை பிழைப்பது தானில்லை
தன்னிட் டெழுந்த தகைப்பறப் பின்னிற்கப்
பன்னிட்ட மந்திரம் பார்க்கலு மாமே.

அகவழிபாடாகப் புரியப்படும் ஓமொழி வட்டத்தில் பொருந்தித் தோன்றும் மந்திரம், கலந்துள்ள சக்கரத்தின்கண் வரையப் படுதல் தவறுதலில்லை. அம் மந்திரத்தை ஒட்டி எழுந்த தடை நீங்க அதன்பின் நிற்கும்படி சொல்லப்பட்ட மந்திரத்தை ஆராய்தலுமாம்.

பின்னிட்ட - கலந்துள்ள. தன்னிட்டு - வரையப்பட்டு. எழுந்த - எழுந்த மந்திரம். பன்னிட்ட - சொல்லப்பட்ட.

## 1259. பார்க்கலு மாகும் பகையறு சக்கரங்

1259. பார்க்கலு மாகும் பகையறு சக்கரங்
காக்கலு மாகுங் கருத்தில் தடமெங்கும்
நோக்கலு மாகும் நுணுக்கற்ற நுண்பொருள்
ஆக்கலு மாகும் அறிந்துகொள் வார்க்கே.

பிறப்பு இறப்புக்களாகிய பழம்பகையை அகற்றும் தன்மைவாய்ந்த சக்கரத்தை. அன்புடன் நோக்குதலும் ஆகும். விரிந்த கருத்தின்கண் அமைத்துக் காத்தலுமாகும். சோர்வின்றி அதன்பாலே நோக்கல் நோக்கமாகிய தியானத்தைப் புரிதலுமாகும். அவ்வுணர்விற் காணும் நுண் பொருளை ஆக்கலாகிய அழுந்தி அறிதலைப் புரிதலுமாகும். அழுந்தியறிதல் - அனுபவித்தல்.

பகை - பிறவிப்பகை. நுணக்கற்ற - தளருதல் இல்லாத.

## 1260. அறிந்திடுஞ் சக்கர மாதி யெழுத்து

1260. அறிந்திடுஞ் சக்கர மாதி யெழுத்து
விரிந்திடுஞ் சக்கர மேலெழுத் தம்மை
பரிந்திடுஞ் சக்கரம் பாரங்கி நாலும்
குவிந்திடுஞ் சக்கரங் கூறலு மாமே.

மேற்கூறிய முறையான் அறியப்படும் சக்கரம் ஆதியை உடைய சிவபெருமானின் எழுத்தாகிய சிகரமாகும். அதன் மேலெழுத்து அம்மை எழுத்தாகிய வகரமாகும். மற்றைய இடங்களில் நிலம் நீர் நெருப்பு காற்று ஆகிய நான்கு பூதங்களின் எழுத்தாகும். அவை முறையே ல வ ர ய என்ப.

ஆதி எழுத்து - ஆதி சத்தியோடு கூடிய சிவன் எழுத்து மேலெழுத்து அம்மை - அதன் மேலே சத்தி எழுத்து. பார் அங்கி நாலும் - பார், நீர், தீ, வாயு எழுத்துக்கள் நான்கும். குவிந்திடும் - கூடிய

## 1261. கூறிய சக்கரத் துள்ளெழு மந்திரம்

1261. கூறிய சக்கரத் துள்ளெழு மந்திரம்
ஆறியல் பாக அமைந்து விரிந்திடுந்
தேறிய அஞ்சுடன் சேர்ந்தெழு மாரண
மாறியல் பாக மதித்துக்கொள் வார்க்கே.

மேற்குறித்த சக்கரத்துள் தோன்றும் மந்திரம் ஆறு இயல்பு ஆகும். அங்ஙனம் அமைந்து விரியும் இவ்வாறனுள் மாரணம் ஒழிந்த ஐந்தும் பகைமையை வெல்லுவதற்காகப் பயன்படுத்தப்படும். ஆறுவகையாவன : தம்பனம், மோகனம், உச்சாடனம், வித்துவேசணம், மாரணம், வசியம். வித்துவேசணம் - கருடணை, (973-978)

ஆறியல்பு : தம்பனம், மோகனம், வசியம், மாரணம், உச்சாடனம், வித்துவேடணம். அஞ்சுடன் - மாரணம் ஒழிந்த ஏனைய அஞ்சுடன்.

## 1262. மதித்திடும் அம்மையும் மாமாது மாகும்

1262. மதித்திடும் அம்மையும் மாமாது மாகும்
மதித்திடும் அம்மையும் அங்கனல் ஒக்கும்
மதித்தங் கெழுந்தவை காரண மாகில்
கொதித்தங் கெழுந்தவை கூடகி லாவே.

அனைத்துயிர்க்கும் நீங்கா அருள் புரிபவள் என மதிக்கப்படும் அம்மையும், குறித்த சக்கரத்தின் முதல்வியுமாகும். அவ் வம்மையையே பயில்வார்க்குப் பகையை வெல்லத் துணைசெய்யும் அழகிய அனலையொத்து அவள் காணப்படுவள். அம்மை காரணமாக உடனெழும் ஐம்பூதங்களும் தொழில் செய்யும். அம்மையின் ஆணையின்றி அவை எத்தொழிலும் செய்ய வல்லனவாகா.

## 1263. கூடிய தம்பனம் மாரணம் வசியம்

1263. கூடிய தம்பனம் மாரணம் வசியம்
ஆடியல் பாக அமைந்து செறிந்திடும்
பாடியுள் ளாகப் பகைவரும் வந்துறார்
தேடியுள் ளாகத் தெளிந்துகொள் வார்க்கே.

பகையை வெல்லுதற்குக் கையாளப்படும் தம்பனம். மாரணம், வசியம் முதலியவை விளையாட்டாக எளிதாக வந்து பொருந்தியிடும். பாடிவீடொத்த உடம்பின்கண் பகைவரும் வந்து அணுகுறார். இவ் வுண்மையினை அம்மையின் திருவருளால் தெளிந்து கொள்வார்க்குப் பகையே உண்டாகாது.

ஆடியல்பு - விளையாட்டு பாடி - பாடி வீடு; பகை அரசர் தங்குமிடம்; இங்கே சரீரம்.

## 1264. தெளிந்திடுஞ் சக்கர மூலத்தி னுள்ளே

1264. தெளிந்திடுஞ் சக்கர மூலத்தி னுள்ளே
அளிந்த அகாரத்தை யந்நடு வாக்கிக்
குளிந்த வரவினைக் கூடியுள வைத்து
அளிந்தவை யங்கெழு நாடிய காலே.

மூலாதாரத்தில் தெளிவாகக் காணப்படும் சக்கரத்தினுள்ளே எல்லா எழுத்துக்குந் துணைசெய்யும் அளியுடைய அகரம், நடுவாக எழுதப்படும் . வட்டவடிவான குண்டலினி ஆற்றல் (பாப்பிருக்கை) அரவு வட்டமிட்டது போன்று காணப்படும் . அதனை மனங்கூடி அங்ஙனம் அமைத்து வழிபடுவராயின் நாடியது எளிதாகக் கைகூடும்.

அரவினை - குண்டலினி சத்தியை . அளிந்து - கனிந்து.

## 1265. காலவரை முக்கால் முழுதெனும் மந்திரம்

1265. காலவரை முக்கால் முழுதெனும் மந்திரம்
ஆலித் தெழுந்தமைந் தூறி எழுந்ததாய்ப்
பாலித் தெழுந்து பகையற நின்றபின்
மாலுற்ற மந்திர மாறிக்கொள் வார்க்கே.

காலவரை முக்கால் முழுமை என்னும் மாத்திரைகளையுடைய மந்திரங்களை முறையாக ஒலிக்க, அவ்வோசை எழுந்தன. பின்பு அது சக்கரத்துக்குப் பொருந்த அமைந்தது. மேலும் ஊறித் திகழ்ந்து முழங்கும் . கருதிய பயனைக் கைகூடச் செய்தபின், அம் மந்திரத்தினை முறைப்படி மாற்றி ஒலிக்க உணர்ந்தவர்களுக்கு வேறு கருதிய பயனும் கைகூடும்.

கால்...மந்திரம் - கால் முதலிய மாத்திரையளவாக உச்சரிக்கப்பட்ட மந்திரம். மாலுற்ற - விரும்பி உச்சரித்த.

## 1266. கொண்டஇம் மந்திரங் கூத்தன் எழுத்ததாய்ப்

1266. கொண்டஇம் மந்திரங் கூத்தன் எழுத்ததாய்ப்
பண்டையுள் நாவிற் பகையற விண்டபின்
மன்றுள் நிறைந்த மணிவிளக் காயிடும்
இன்றும் இதயத் தெழுந்து நமவெனே.

மேற்குறித்த மந்திரமொலித்து வேண்டுவ பெற்று அமைந்தபின் அதன் செயலறுதியாகக் கூத்தன் எழுத்தாம் சிவ என்பதை உதடு அசையாமல் உண்ணாவில் பண்டைப் பகையாகிய ஆணவம் அறும்பொருட்டு ஒலித்தபின். பொன்னம்பலத்தின்கண் விளங்கும் மணி விளக்காய் உள்ளம் பொலிவுறும். அத்தகைய உள்ளத்தில் நம எனக் கூட்டிச் 'சிவயநம' ஒலிப்பாயாக.

கூத்தன் எழுத்து - ஆதி எழுத்து; சிவன் எழுத்து உணாவில் - உள்ளே உள்ள நாவால் (உதடுகள் அசையாமல்)

## 1267. அறிந்த பிரதமையோ டாறு மறிஞ்சு

1267. அறிந்த பிரதமையோ டாறு மறிஞ்சு
அறிந்தவச் சத்தமி மேலிவை குற்றம்
அறிந்தவை யொன்றுவிட் டொன்றுபத் தாக
அறிந்து வலமது வாக நடவே.

வளர்பிறை ஒன்று முதல் ஆறுவரை ஆறாதாரங்களிலும் காணப்படும் திதிகள் என்க. இதனை அறிந்து மேலே ஏழாம் பிறை முதல் பொருந்தும் பிறைகளை ஒன்றுவிட்டு ஒன்றாக எண்ணுங்கால் ஏழை விட்டு எட்டும், ஒன்பதைவிட்டுப் பத்தும், பதினொன்றை விட்டுப் பன்னிரண்டும், பதின்மூன்றைவிட்டுப் பதினான்கும் ஆகிய நான்கும் முன்னுள்ள ஆறும் கூட்டப் பத்தாகும். இப் பத்தும் பகையை வெல்வார் புறப்பட்டுச் செல்லும் புலத்தைத் தம் வலப்பால் அமையும்படி செல்வாராக ஏழை விட்டு எட்டு என்பது: சத்தமியைவிட்டு அட்டமி எனவும் அதுபோல் மற்றவற்றையும் கொள்க.

ஆறும் - ஆறு ஆதாரங்களினும். வலமதுவாக-வலப்பக்கம் வளர்பிறையாக

## 1268. நடந்து வயிரவன் சூல கபாலி

1268. நடந்து வயிரவன் சூல கபாலி
கடந்த பகைவனைக் கண்ணது போக்கித்
தொடர்ந்த வுயிரது வுண்ணும் பொழுது
படர்ந்த வுடல்கொடு பந்தாட லாமே.

மேற்கூறிய முறைப்படி நடந்து வயிரவக் கடவுளினது துணையை வேண்டி அவர் சூலத்தை யுடையவரென்றும், கபாலத்தை யுடையவரென்றும் மனங்கொண்டு பகைமேற் செல்லுதல் வேண்டும். அங்ஙனம் செல்வார் பகை வென்று பகைவன் கருத்தையும் கண்ணையும் போக்கி அவன்தன் உயிரினைத் தொட்டுண்ணும் போழ்து மிக எளிதாக அவன்தன் உடலைப் பந்தாடலொத்துப் பந்தாடலாகும்.

சூலகபாலி - சூலத்தையும் கபாலத்தையும் . கடந்து - வென்று

## 1269. ஆமேவப் பூண்டரு ளாதி வயிரவன்

1269. ஆமேவப் பூண்டரு ளாதி வயிரவன்
ஆமே கபாலமுஞ் சூலமுங் கைக்கொண்டங்
காமே தமருக பாசமுங் கையது
வாமே சிரத்தொடு வாளது கையே.

ஆருயிர்கள் விரும்புமாறு திருவருள் புரியும் வயிரவக் கடவுளின் திருவுருவில் காணப்படும் படைகள் முதலியன வருமாறு : மண்டையோடு, சூலம் உடுககை, கயிறு, தலை, வாள் என்ப.

ஆ மேவ-உயிர்கள் விரும்ப தமருகம் - உடுக்கை. இதில் வயிரவருடைய ஆறு ஆயுதங்கள் கூறப்பட்டுள்ளன

## 1270. கையவை யாறுங் கருத்துற நோக்கிடும்

1270. கையவை யாறுங் கருத்துற நோக்கிடும்
மெய்யது செம்மை விளங்கு வயிரவன்
துய்ய ருளத்தில் துளங்குமெய் யுற்றதாய்ப்
பொய்வகை விட்டுநீ பூசனை செய்யே.

வயிரவக் கடவுளின் திருக்கைகளைக் காண்பார், அக் கைகளிற்காணும் மேற்கூறிய ஆறு பொருள்களையும் காண்பர் . அக் கடவுளின் திருமேனி செம்மை நிறம் பொருந்தியதாக இருக்கும் . சிவனினைவு மாறாத நெஞ்சினையுடைய தூயவருள்ளத்தில் வயிரவக் கடவுள் விளங்குவன். அகம் புறம் வாய்மை பெற்றமையோடு பொய்யினை அறவேவிட்டு நெஞ்சே நீ பூசை செய்வாயாக

கையவை ஆறு - வயிரவர்க்கு ஆறு கைகள் . மெய்யது செம்மை - நிறம் சிவப்பு.

## 1271. பூசனை செய்யப் பொருந்தியோ ராயிரம்

1271. பூசனை செய்யப் பொருந்தியோ ராயிரம்
பூசனை செய்யு மதுவுட னாடுமால்
பூசனை சாந்து சவாது புழுகுநெய்
பூசனை செய்துநீர் பூசலை வேண்டுமே.

வயிரவக் கடவுளின் வழிபாட்டிற்குத் திருமுறைப் போற்றித் தொடர் ஓராயிரம் ஓதி மலர் வழிபடுவாயாக . திருமுழுக்குக்குச் சிறந்தது தேனேயாம் சாந்து சவ்வாது புனுகு முதலிய நறுமணப் பொருள்களை அணிவிப்பாயாக இங்ஙனம் பூசை செய்து சாத்துதலைச் செய்வாயாக. பூசல் - சாத்துதல்.

ஓராயிரம் பூசனை - ஆயிர நாமப் பூசனை. மது - தேன் பூசலை - சாத்துப்படி செய்தலை.

## 1272. வேண்டிய வாறு கலகமு மாயிடும்

1272. வேண்டிய வாறு கலகமு மாயிடும்
வேண்டிய ஆறினுண் மெய்யது பெற்றபின்
வேண்டிய வாறு வரும்வழி நீநட
வேண்டிய வாறது வாகுங் கருத்தே.

நெஞ்சே நீ விரும்பியவாறு நின் பகைவர்களுக்குள் போர் மூண்டு அவர்கள் மாண்டழிவர். (1261-இல் ஓதிய) அறுவகைச் செயல்களுக்குரிய உண்மையை அடைந்தபின் நீ விரும்பியது கைகூட வேண்டிய வாறு நடப்பாயாக. உன் கருத்து அவ் வழியாகவே வந்து கைகூடும்.

கலகமும் - பகைவர்களுக்குள் கலகமும் மெய்யது பெற்றபின் - உண்மையை அறிந்தபின்.

## 1273. சாம்பவி மண்டலச் சக்கரஞ் சொல்லிடில்

1273. சாம்பவி மண்டலச் சக்கரஞ் சொல்லிடில்
ஆம்பதம் எட்டாக விட்டிடின் மேலதாங்
காண்பதந் தத்துவ நாலுள் நயனமும்
நாம்பதங் கண்டபின் நாடறிந் தோமே.

சாம்பவி மண்டலச் சக்கரம் வரையும் முறைமையைக் கூறின் எட்டுவரை கீறுதல் அல்லது எட்டிதழ்த்தாமரை அமைத்தல் வேண்டும். அதன் சிறந்த பகுதியாகக் காணப்பெறுவன நான்காகும். அதன் கண் ஒளி ஓசை சிவை சிவம் (விந்து நாதம் சத்தி சிவம்) என்னும் நான்கு மெய்யும் காணப்பெறும். இந் நான்கனுள் கண்ணாகக் கருதப்படுவது விந்துவாகும். இந் நிலையினைத் திருவருள் துணையால் நாம் உணர்ந்து ஒழுகினபின் நாம் நாட்டவர்களால் நன்கறியப்படுவோம். நாடு - உலகம்.

பதம் - வரை. தத்துவம் நாலு - விந்து, நாதம், சத்தி, சிவம். நயனம் - விந்து.

## 1274. நாடறி மண்டலம் நல்லவிக் குண்டத்துக்

1274. நாடறி மண்டலம் நல்லவிக் குண்டத்துக்
கோடற வீதியுங் கொடர்ந்துள் இரண்டழி
பாடறி பத்துடன் ஆறு நடுவீதி
ஏடற நாலைந் திடவகை யாமே.

நாடறிந்த சாம்பவி மண்டலமாகிய இக் குண்டத்து, திரிபு முதலிய வேறுபாடுகள் அகல இரண்டு பக்கங்களிலும் வீதிகள் அமைத்துச் சிறந்ததாகக் காணப்படும் எட்டிதழ்நடுவிலுள்ள பதினாறு வீதிகளுள் இதழ்கள் அகல நான்கு மூலைகளும் அவற்றின் இடை இடம் நாலும் நடு இடமும் ஆம்.

கோடற - விகாரம் நீங்க. ஏடு - இதழ்.

## 1275. நாலைந் திடவகை யுள்ளதோர் மண்டலம்

1275. நாலைந் திடவகை யுள்ளதோர் மண்டலம்
நாலுநல் வீதியுள் நல்ல இலிங்கமாய்
நாலுநற் கோணமும் நந்நால் இலிங்கமாய்
நாலுநற் பூநடு நண்ணலவ் வாறே.

நாலு ஐந்து இடமாகவுள்ள அம் மண்டலத்து நாலுக்கும் நடுவீதியாகக் காணப்படும் இடம் அருட்குறி(லிங்கம்) வடிவமாயும், நான்கு கோணங்களிலும் நான்கு நான்கு இலிங்கங்களாகவும், ஆறு நிலைக் களங்களுள் நான்காவது நிலைக்களமாகிய நெஞ்சத்தில் ஆண்டவன் விளங்கித் தோன்றுவன்.

நாலு நற்பூ - அனாகதம்.
(பாடம்) 1. நாடரி.

## 1276. ஆறிரு பத்துநா லஞ்செழுத் தஞ்சையும்

1276. ஆறிரு பத்துநா லஞ்செழுத் தஞ்சையும்
வேறுரு வாக விளைந்து கிடந்தது
தேறி நிருமல சிவாய நமவென்று
கூறுமின் கூறிற் குறைகளும் இல்லையே.

(ஆறு + இருபது + நாலு + ஐந்து) ஆக முப்பத்தைந்தும் தொன்மைத் தமிழ் மெய்யெழுத்துக்களாகும். அவை வேறுருவாக விரியப் பட்டுக் கிடந்தன. அஞ்சையும்-திருவைந்தெழுத்தையும்; அஞ்சு + ஐயும் - ஐந்தெழுத்தையும்; ஐ ஆகிய திருவருள் வித்தெழுத்தையும் . இவைகளை உணர்ந்து இவைகளுக்கு உயிராக விளங்கும் 'சிவயநம' என்னும் தமிழ்மறையினை முறையுறக் கூறுங்கள். கூறினால் எவ்வகைக் குறைகளும் உண்டாகா. இவ்வுண்மையினை அறிபவரில்லை.

ஆறு இருபத்துநாலு அஞ்சு - 35 - மெய்கள் . அஞ்சு - பஞ்சாக்கரம். ஐ - சத்தி எழுத்து.

## 1277. குறைவதும் இல்லை குரைகழற் கூடும்

1277. குறைவதும் இல்லை குரைகழற் கூடும்
அறைவதும் ஆரணம் அவ்வெழுத் தாகித்
திறமது வாகத் தெளியவல் லாருக்கு
இறவில்லை என்றென் றியம்பினர் காணே.

சிவயநம எனக் கூறுவார்க்கு எவ்வகைக் குறையும் நேராது. ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த திருவடியைக் கூடுதலுமாகும். இவ்வுண்மையினை அறைவதும் மறைநூலாகும். அதனால் மறைநூல் முறைநூலாகிய வேதாகமங்களும் அவ்வைந்தெழுத்தால் ஆவன. இவ்வுண்மையினைத் தெளியவல்லாருக்கு இறப்பில்லை என்று செந்நெறிச் செல்வர்கள் கூறினர். இற : இறத்தல்; முதனிலைத் தொழிற்பெயர்.

## 1278. காணும் பொருளுங் கருதிய தெய்வமும்

1278. காணும் பொருளுங் கருதிய தெய்வமும்
பேணும் பதியும் பெருகிய தீர்த்தமும்
ஊணும் உணர்வும் உறக்கமுந் தானாகக்
காணுங் கனகமுங் காரிகை யாமே.

உலகிற் காணப்படும் உலகியற் பொருள்களும், வழிபடு கடவுளும், விரும்பும் நிலைகளும், நீர் நிரம்பிய தீர்த்தமும், உண்ணும் உணவும், உணரும் உணர்வும், உறங்கும் உறக்கமும், கருதப்படும் பொன் முதலிய செல்வங்களும் திருவருள் அம்மையால் கிடைப்பன . அதனால் அவைகளை அம்மை எனவே அன்பால் கூறுவர்.

## 1279. ஆமே எழுத்தஞ்சு மாம்வழி யேயாகப்

1279. ஆமே எழுத்தஞ்சு மாம்வழி யேயாகப்
போமே யதுதானும் போம்வழி யேபோனால்
நாமே நினைத்தன செய்யலு மாகும்
பாரீமேல் ஒருவர் பகையில்லை தானே.

ஐந்தெழுத்தும் தோன்றுவதற்கிடனாம் நாதமாகிய ஓசை வழியே வழியாகப் போகும் மேலிடமாகிய உச்சித்தொளைவழியே சென்றால் நாம் நினைத்த எச்செயலையும் மறை ஆற்றலால் செய்தலும் ஆகும். நிலவுலகில் ஒருவரும் பகையாகார். அப்பார் மேல் எனும் பாடத்திற்கு, துறக்கவுலகம் முதலிய உலகங்களிலும் பகையில்லை என்க.

## 1208. பகையில்லை என்றும் பணிந்தவர் தம்பால்

1208. பகையில்லை என்றும் பணிந்தவர் தம்பால்
நகையில்லை நாணாளும் நன்மைக ளாகும்
வினையில்லை என்றும் விருத்தமும் இல்லை
தகையில்லை தானுஞ் சலமது வாமே.

சாம்பவி மந்திரத்தை முறையாக உருவேற்றியவர்க்கு எத்திறத்தும், என்றும், பகை உண்டாகாது; யாண்டும் பிறரால் எள்ளப்படும் தன்மையும் நேராது; எந்நாளும் பெருநன்மைகளெல்லாம் பெருகும்; எக்காலத்தும் தீவினைகள் உண்டாகா; வினைசெயற்கண் நிகழும் இடையூறாகிய விருத்தமும் எய்தா; எவ்வகைத் தடையும் எங்கும் நேரா. உருவேற்றியவர் தாமும் பலரறியும் நறுமணம் போன்று மேன்மையுறுவர். சலம்-மணம். சாம்பவி மந்திரம் என்பது திருவைந்தெழுத்தே.

தகைவு - தடை. சலமதுவாம் - எளிதாம்.

## 1281. ஆரும் உரைசெய்ய லாமஞ் செழுத்தாலே

1281. ஆரும் உரைசெய்ய லாமஞ் செழுத்தாலே
யாரும் அறியாத ஆனந்த ரூபமாம்
பாரும் விசும்பும் பகலு மதியதி
ஊனும் உயிரும் உணர்வது வாமே.

சாம்பவி மந்திரமாம் அஞ்செழுத்தை யாரும் ஓதலாம். அத்திருவைந்தெழுத்து யாரும் தம்மறிவால் அறியவொண்ணாத பேரின்ப உருவமாகும். அதுவே, மண்ணும், விண்ணும் (945) ஞாயிறும், திங்களும், சிறந்த உடலும், உயிரும், உணர்வுமாக விரவிநிற்கும் அதிமிகுந்த; சிறந்த. திருவைந்தெழுத்து நமசிவய'- இத்தமிழ்மறையினைச் செந்நெறிச் செல்வர்கள் அனைவர்களும் ஓதுதலாம். இருபாலாரும் ஓதலாம். 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' (2066) என்பது போல் - மந்திரமும் ஒன்றே 'ஓதுசெயற் பாவுடலாம் உய்க்கு மறையுயிராம், தீதில் 'சிவயநம செப்பு'. என்பதே 'செந்தமிழர் தெய்வமறை நாவர்' சீர்ப்பாடு.

1. தக்கா. திருக்குறள், 446.2. அஞ்செழுத்தே. உண்மை விளக்கம், 45.

## 1282. ககராதி யோரைந்துங் காணிய பொன்மை

1282. ககராதி யோரைந்துங் காணிய பொன்மை
அகராதி யோரா றரத்தமே போலும்
சகராதி யோர்நான்குந் தான்சுத்த வெண்மை
ககராதி மூவித்தை காமிய முத்தியே.

திருமூலநாயனார் வட்ட எழுத்து வழங்கிய மிகப் பழங்காலத்திருந்தவர். அவர் காலத்துத் தமிழின்கண் ஐம்பத்தோர் எழுத்து வழக்கிலிருந்தன. அதனால் இங்ஙனம் ஓதியருளினர். ககர எழுத்து முன்னம் ஐந்தினமாக வழங்கிவந்தது. இதனைக் கவ்வருக்கம் என்பர். இவ்வெழுத்துப் பொன்மைநிறம் என்பர். அகராதி ஓராறும் என்பது ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ என்பன. இவை செம்மைநிறம் என்ப. சகர இனம் நான்கும் தூய வெண்மைநிறம் என்ப. க. அ. ச. என மூவகையாகக் கூறப்படும். இம் மூவகை மந்திரமும் விரும்பிய வாழ்வினைத் தரும் போகம் - வாழ்வு.

ககாராதி ஓரைந்தும் - தமிழ்மொழியில் செந்தமிழ்க் காலத்துக்கு முன் வட்டெழுத்துக்காலத்தில் இருந்த க வருக்கம் 5-ம். (நாயனார் வட்டெழுத்துக் காலத்தவர் ஆனதால் அக்காலத்து வழக்கப்படி கூறுகின்றார்.) அகராதி ஓராறு - ஆ - ஈ - ஊ. ஏ - ஐ - ஓ. சகாராதி ச வருக்கம் நான்கு காமிய - விரும்பப்பட்ட

## 1283. ஓரில் இதுவே உரையும்இத் தெய்வத்தைத்

1283. ஓரில் இதுவே உரையும்இத் தெய்வத்தைத்
தேரிற் பிறிதில்லை யானொன்று செப்பக்கேள்
வாரித் திரிகோண மனமின்ப முத்தியுந்
தேரில் அறியுஞ் சிவகாயந் தானே.

மேற்கூறிய ககர, அகர, சகரமாகிய மூவெழுத்தும் கூடிச் சொல்லும் புவனாபதியாகிய இத் தெய்வத்தைத் தெரியுமிடத்து இத்தெய்வத்திற்கு ஒப்பாகப் பிறிதொரு தெய்வம் எங்கும் கிடையாது அதனால், யான் சொல்லுவது ஒன்றனைக் கேட்பாயாக. இத் தெய்வ அடையாளமாக வரைந்து கொள்ளுவது முக்கோணமாகும் இதனால் பெறும் மனம், இன்பம், பேறு, என்னும் மூன்றும் ஆராயின் அறியத்தக்க முழுமுதற் சிவத்தின் திருமேனி யாகும்.

சிவகாயம் - சிவ உருவம்.

## 1284. ஏக பராசக்தி ஈசற்காம் அங்கமே

1284. ஏக பராசக்தி ஈசற்காம் அங்கமே
ஆகம் பராவித்தை யாமுத்தி சித்தியே
ஏகம் பராசத்தி யாகச் சிவகுரு
யோகம் பராசத்தி உண்மைஎட் டாமே.

ஒப்பில்லாத பேரறிவுப் பேராற்றலாகிய பராசத்தி சிவ பெருமானுக்குத் திருமேனியாவள் சிவபெருமானின் திருவுரு தடையிலா மெய்யுணர்வாகிய பராவித்தையாகும். அதுவே மீளாப் பேறளிக்கும் பெருநிலையாகும். அதுவே வேண்டும் சித்தியுமாகும். ஒரே திருவருளே சிவகுருவாகத் தோன்றுவள். சிவயோகம் எட்டும் அத் திருவருளேயாம்.

சிவகுருயோகம் - சிவராசயோகம். எட்டாமே - எட்டு யோகங்களாமே.

## 1285. எட்டா கியசத்தி எட்டாகும் யோகத்துக்

1285. எட்டா கியசத்தி எட்டாகும் யோகத்துக்
கட்டாகு நாதாந்தத் தெட்டுங் கலப்பித்த
தொட்டாத விந்துவுந் தானற் றொழிந்தது
கிட்டா தொழிந்தது கீழான மூடர்க்கே.

திருவருளாற்றல் எட்டாகும். அதுவே சிவயோகம் எட்டாகும். உறுதியாகிய ஓசையாகிய நாதமுடிவில் எட்டுயோகங்களையும் ஒன்றாகச் செய்ததும் அத் திருவருளே. அவ்விடத்துக் கலவாத விந்துவும் தானில்லாது அடங்கிற்று. இத்தகைய பேறுகள் அறிவிலாக் கீழோர்க்குக் கிடையாது ஒழிந்தன.

எட்டாகிய - அடையப்படுவன ஆகிய. கட்டாகும் - உறுதியுடையதாயிருக்கும் தொட்டாத....மூடர்க்கே - விந்துவை வீணாகக் கழியவிட்ட மூடர்க்கு எட்டுச் சித்திகளும் கிட்டாது ஒழிந்தது ஆகும். (இது விந்துவைக் கட்டினால் எல்லாம் சித்திக்கும் என்றது.)

## 1286. ஏதும் பலமாக மிந்திரா சன்னடி

1286. ஏதும் பலமாக மிந்திரா சன்னடி
ஓதிக் குருவின் உபதேசம் உட்கொண்டு
நீதங்கும் அங்க நியாசந் தனைப்பண்ணிச்
சாதங் கெடச்செம்பிற் சட்கோணந் தானிடே.

பயனுறத் திங்கள் மண்டிலத்திறைவன் பாதம் ஓதிக் குருவின் அருமறையாகிய உபதேசத்தையும் உட்கொண்டு நீ அதற்கு வேண்டும் உறுப்புத்தொடுதல் கைவிரல் தொடுதல் முதலிய செயல்களைச் செய்து பிறப்பு நீங்கும்படி செப்புத்தகட்டில் அறுகோணம் வரைவாயாக. சிவதீக்கையிற் கண்டபடி திருவங்கமாலையினை ஓதி உறுப்புத்தொடுக.

இந்து இராசன் - சந்திர மண்டலத்து அதிபதி. தங்கு மங்க நியாசம் - கரநியாசம் அங்கநியாசங்களை. சாதம் - பிறப்பு. செம்பில் தாமிரத்தகட்டில். சட்கோணம் - அறுகோணம். (சடு - ஆறு)

## 1287. சட்கோணந் தன்னில் சிரீம்ஹிரீம் தானிட்டு

1287. சட்கோணந் தன்னில் சிரீம்ஹிரீம் தானிட்டு
வட்கோண மாறின் தலையில்ரீங் காரமிட்டு
எக்கோண முஞ்சூழ எழில்வட்டம் இட்டுப்பின்
மிக்கீரெட் டக்கர மம்முதன் மேலிடே.

அவ்வறுகோணத்தில் சிரீம் கிரீம் வரைந்து, அழகிய கோண ஆறின் உச்சியில் இரீங்காரமிடுக. அதன்மேல் எல்லாக் கோணமும் உள்ளடங்கும்படி அழகிய பெரிய வட்டம் இடுக. அதன்கண் பதினாறிதழ் வரைக. அப் பதினாறிதழிலும் அகர முதலிய உயிர் எழுத்துக்கள் பதினாறையும் மேல் வரைக. வட்கோணம்: வண் + கோணம் = அழகிய கோணம்.

வட்கோணம் - அழகிய அறுகோணம். ஈரெட்டக்கரம் - உயிர் பதினாறும். (இது திருமூலர் காலத்தில் உயிர் 16-ம் மெய் 35-ம் இருந்ததைக் குறிக்கின்றது.) அம் முதல் மேலிடு - பதினாறு இதழ்களிலும் அகர முதல் இடு.

## 1288. இட்ட இதழ்கள் இடையந் தரத்திலே

1288. இட்ட இதழ்கள் இடையந் தரத்திலே
அட்டஹவ் விட்டதின் மேலே உவ்விட்டுக்
கிட்ட இதழ்களின் மேலே கிரோம் சிரோம்
இட்டுவா மத்தாங் கிரோங்கென்று மேவிடே.

மேற்கூறிய பதினாறு இதழ்களின் இடைவெளியில் பொருந்திய ஹவ்விட்டு அதன்மேலே உகரத்தை வரைந்து நெருங்கியிருக்கின்ற இதழ்களின் மேலே கிரோம், சிரோம் என வரைந்து இடப்புறத்திலே கிரோங்கு என்று வரைக.

அந்தரம் - வெளி. அட்ட - பொருந்திய. உவ்விட்டு - உகரத்தை இட்டு. வாமத்து - இடப் பக்கத்தில். (கிரோம் - சிரோம் என்பன பீச எழுத்துக்கள்)

## 1289. மேவிய சக்கர மீது வலத்திலே

1289. மேவிய சக்கர மீது வலத்திலே
கோவை யடைவே குரோங்சிரோங் கென்றிட்டுத்
தாவில்ரீங் காரத்தாற் சக்கரஞ் சூழ்ந்து
பூவைப் புவனா பதியைப்பின் பூசியே.

(ப. இ .) அமைத்த சக்கரமீது வலப்பக்கத்தில் மாலை போன்று குரோங் சிரோங்கென்று வரைக. சக்கரத்தைச் சூழ்ந்து குற்றமற்ற ரீங்காரம் வரைக. அதன்பின் நாகணவாய்ப் புள்ளினையொத்த உலக முதல்வியாகிய திருவருள் அம்மையைப் பூசிப்பாயாக.

கோவை - மாலை பூவைப் புவனா பதியை - புவனாபதி என்ற சத்தியை. (பூவை - சத்தி..)

## 1290. பூசிக்கும் போது புவனா பதிதன்னை

1290. பூசிக்கும் போது புவனா பதிதன்னை
ஆசற் றகத்தினில் ஆவா கனம்பண்ணிப்
பேசிய பிராணப் பிரதிட்டை யதுசெய்து
தேசுற் றிடவே தியான மதுசெய்யே

திருவருளம்மையைப் பூசனை செய்யும்போது செம்பொருளாம் சிவனை மறவாத செம்மனத்தில் வெளிப்படுமாறு அழைத்துப் பின் கூறிய முறைப்படி வரையப்பட்ட சக்கரத்திலோ அமைக்கப்பட்ட திருவுருவத்திலோ இழைத்தலாகிய பிராணப்பிரதிட்டை செய்து அருள் விளக்கம்கொண்டு அகவழிபாடு செய்க. அகவழிபாடு - தியானம்.

ஆசற்று - உள்ளத்தூய்மையுடன்.

## 1291. செய்ய திருமேனி செம்பட் டுடைதானுங்

1291. செய்ய திருமேனி செம்பட் டுடைதானுங்
கையிற் படையங் குசபாசத் தோடபய
மெய்யில் அணிகலன் இரத்தின மாமேனி
துய்ய முடியும் அவயவத்தில் தோற்றமே.

திருவருள் அம்மையின் திருமேனி செம்மைநிறம் வாய்ந்தது. பட்டுடையும் சிவப்பு நிறமே. திருக்கைகளில் தோட்டி, கயிறு, அஞ்சற்க என்னும் அடையாளம். திருமேனியின்கண் மாணிக்க அணிகள். திருமுடியும் செம்மைநிறம் வாய்ந்ததே.

## 1292. தோற்போர்வை நீக்கித் துதித்தடைவிற் பூசித்துப்

1292. தோற்போர்வை நீக்கித் துதித்தடைவிற் பூசித்துப்
பாற்போ னகமந் திரத்தாற் பயின்றேத்தி
நாற்பால நாரதா யாசுவா காஎன்று
சீர்ப்பாகச் சேடத்தை மாற்றிப்பின் சேவியே.

அரைக்குமேலுள்ள மேலாடையை நீக்கி முறையாகப் போற்றி வழிபட்டுப் பாற்சோறு (1793) அமைத்துக் குழைத்தலாகிய நிவேதனம் பண்ணி, நாற்புறத்தும் நாரதாயாசுவாகா என்று சிறப்புப் பொருந்தியன சாத்தி, எடுத்த மாலை முதலியவற்றை மாற்றிப் பின் தொழுவாயாக. தோல்: ஆகுபெயரால் உடம்பு.

தோற்போர்வை - மேல் வேட்டி. பால்போனகம் பாயசம். சீர்ப்பு - சிறப்பு.

# 1293. சேவிப் பதன்முன்னே தேவியையுத் வாகனத்தாற்

1293. சேவிப் பதன்முன்னே தேவியையுத் வாகனத்தாற்
பாவித் திதய கமலம் பதிவித்தங்
கியாவர்க்கும் எட்டா இயந்திர ராசனை
நீவைத்துச் சேமி நினைந்தது தருமே.

முன்னே வழிபடுவதன் பொருட்டு நெஞ்சத் தாமரையினின்றும் வெளிப்படுத்தி அழைத்து இழைத்த திருவருளம்மையை மீண்டும் நெஞ்சத் தாமரையுள் நுழைத்தலாகிய உத்வாகனம் செய்து, அன்புடன் நினைந்து நெஞ்சகத்தே இழைத்தலாகிய பதிவித்தலைச் செய்து, எத்தகையார்க்கும் அடையமுடியாத இந்திரராசனாகிய புவனாபதி சக்கரத்தை நீ ஓம்பிவைத்து வழிபட்டு வருவாயாக. அச் சக்கரம் நீ கருதிய அனைத்தும் கைகூடச் செய்யும். இயந்திரம் - சக்கரம்.

உத்வாகனத்தால் - இதயத்தில் ஒடுக்குவதால். இயந்திர இராசன் - புவனாபதியை.

## 1294. நவாக்கரி சக்கர நானுரை செய்யின்

1294. நவாக்கரி சக்கர நானுரை செய்யின்
நவாக்கரி ஒன்று நவாக்கரி யாக
நவாக்கரி எண்பத் தொருவகை யாக
நவாக்கரி யக்கிலீ சௌமுத லீறே.

வியத்தகு தன்மை வாய்ந்த 'வ' கரமென்னும் ஓரெழுத்துக்குரியவள் திருவருளம்மை அவளுக்குரிய நவாக்கரி சக்கரத்தை யான் ஓதப் புகுந்தால் அந் நவாக்கரி எண்பது வகையாக எழுத்து மாறுதலால் காணப்படும். நவாக்கரி எழுத்து முதற்கண் கிலீம் என்பதும் முடிவில் 'சௌ' என்பதும் ஆகும்.

நவாக்கரி - புதுமையான அக்கரி. நவாக்கரியாக நவாக்கரி சக்கரமாக. அ. கிலி - சௌ - முதல் ஈறே அந்தக் கிலீம் முதல் சௌ ஈறாக.

## 1295. சௌமுதல் அவ்வொடு ஹௌவுட னாங்கிரீம்

1295. சௌமுதல் அவ்வொடு ஹௌவுட னாங்கிரீம்
கௌவு ளுமையுளுங் கலந்திரீம் சிரீமென்
றொவ்வில் எழுங்கிலீ மந்திர பாதமாச்
செவ்வுள் எழுந்து சிவாய நமவென்னே.

முதற்கண் சௌ, ஔ, ஹௌ, கிரீம், கௌ, ஐ, இரீம், சிரீம், கிலீம் ஆகிய இவை ஒன்பதும் மந்திர உறுப்பாகக் கொண்டு செம்மையாக உள்ளெழுந்த முறையில் 'சிவயநம' எனக் கணிப்பாயாக. ஆதிமந்திரம் அஞ்செழுத்தென்பதும் அதனையுயிராகவும் ஏனைய மந்திரங்களை உடலுறுப்புக்களாகவும் கொண்டு வழிபடுக.

சௌ...பாதமா - சௌ - ஔ - ஹௌ - கிரீம் - கௌ ஐ - இரீம் - சிரீம் - கிலீம் என்பன மந்திர உறுப்புக்களாக. செவ்வுள் - செவ்வையாக.

## 1296. நவாக்கரி யாவது நானறி வித்தை

1296. நவாக்கரி யாவது நானறி வித்தை
நவாக்கரி யுள்ளெழும் நன்மைகள் எல்லாம்
நவாக்கரி மந்திர நாவுளே ஓத
நவாக்கரி சத்தி நலந்தருந் தானே.

நவாக்கரி என்று சொல்லப்படும் மந்திரமே யானறியும் மெய்யுணர்வுக் கலையாகும். அதனால் நன்மைகளெல்லாம் அகத்தே தோன்றும். அம் மந்திரத்தினை வாய்திறந்து ஒலியாது நாப் புடைபெயரும் மாத்திரையான் ஒலித்துக் கணிக்க. அங்ஙனம் கணிக்கவே அதற்குரிய திருவருளாற்றலள் எல்லாநலமும் தந்தருளுவள்.

நாவுளே ஓத - வாய்திறந்து உச்சரியாது நா புடை பெயரும் அளவில் உச்சரிக்க.

## 1297. நலந்தரு ஞானமுங் கல்வியும் எல்லாம்

1297. நலந்தரு ஞானமுங் கல்வியும் எல்லாம்
உரந்தரு வல்வினை யும்மைவிட் டோடிச்
சிரந்தரு தீவினை செய்வ தகற்றி
வரந்தரு சோதியும் வாய்த்திடுங் காணே.

நானெறி நன்மையைத் தரும் திருவடியுணர்வும், ஏனைக் கல்வியுமெல்லாம் திருவருளாற்றலால் உறுதிப்பாட்டினைத் தரும். எஞ்சு வினையாகிய வல்வினை உம்மைவிட்டு நீங்கி ஒழியும். முதன்மையான ஏறுவினைதொடராது ஒழியும். அங்ஙனம் ஒழியும்படி செய்யப் பேரொளிப் பிழம்பாகிய சிவன் வந்து வாய்க்கும். எரிசேர் உனக்கிலா வித்துக்களிவை.

## 1298. கண்டிடுஞ் சக்கரம் வெள்ளிபொன் செம்பிடை

1298. கண்டிடுஞ் சக்கரம் வெள்ளிபொன் செம்பிடை
கொண்டிடும் உள்ளே குறித்த வினைகளை
வென்றிடு மண்டலம் வெற்றி தருவிக்கும்
நின்றிடுஞ் சக்கரம் நினைக்கு மளவே.

சக்கரத்தினை வெள்ளியினாலும் பொன்னாலும் செம்பினாலும் செய்தமைக்க. இச் சக்கரத்தினை முறையாக வழிபட்டுக் கணிக்க. கணித்தலும் அப்பொழுதே எஞ்சுவினைகள் வெல்லப்பட்டு நீங்கும். நாற்பத்தொன்பது நாளென்னும் ஒரு மண்டலம் வழிபட்டுவர, திருவருள் துணையால் வெற்றிகள் உண்டாகும். மேலும் அச் சக்கரத்தை நினைத்த அப்பொழுதே எல்லா நலமும் பெருகும்.

மண்டலம் - 49 நாள். 7 நாள் ஒரு வாரம் - (7 வாரம் ஒரு மண்டலம்.)

## 1299. நினைத்திடு மச்சிரீ மக்கிலீ மீறா

1299. நினைத்திடு மச்சிரீ மக்கிலீ மீறா
நினைத்திடுஞ் சக்கர மாதியு மீறு
நினைத்திடு நெல்லொடு புல்லினை யுள்ளே
நினைத்திடும் அருச்சனை நேர்தரு வாளே.

உண்மையன்பொடு நினைக்க. முற்கூறிய சிரீம் கிலீம் என்னும் முதலும் முடிவுமாக அமைத்து அச் சக்கரத்தினை முதலும் ஈறுமாக ஓதி நினைக்க. நினைத்துச் செந்நெல்லும் வெள்ளையறுகும் கலந்து அருச்சனை புரிக. அங்ஙனம் அருச்சிப்பார் நினைந்த அப்பொழுதே திருவருளம்மை செந்நின்று அருள்வள். செந்நின்று - நேர் நின்று.

நெல்லொடு புல் - அருச்சனைக்கு. மஞ்சள் அரிசியும், அறுகம் புல்லும்.

## 1300. நேர்தரு மத்திரு நாயகி யானவள்

1300. நேர்தரு மத்திரு நாயகி யானவள்
யாதொரு வண்ணம் அறிந்திடும் பொற்பூவை
கார்தரு வண்ணணங் கருதின கைவரும்
நார்தரு வண்ணம் நடந்திடு நீயே.

நேர் வந்தருளும் பராசத்தியும் ஆதிசத்தியும் ஆகிய திருநாயகி எந்நிறத்தள் என்று அறியலுறுவார் காயாம் பூப்போலும் கரிய நிறம் என அறிவர். அந்நிறமாக நினைத்துத் தொழுவார்க்கு அவர்கள் நினைத்தன திருவருளால் கைகூடும். திருநாயகிக்கு அன்பு சுரக்கும் வண்ணம் வழிபாடும் வாழ்க்கை முறையும் சிறந்த ஒழுக்கமாகக் கொண்டு ஒழுகுவாயாக.

திரு - சிவசத்தி - ஆதிசத்தி - வண்ணம் - நிறம். பொற் பூவைக் கார்தரும் வண்ணம் - காயாம் பூப்போலும் நிறம். நார் - விருப்பம்.

## 1301. நடந்திடும் பாரினில் நன்மைகள் எல்லாங்

1301. நடந்திடும் பாரினில் நன்மைகள் எல்லாங்
கடந்திடுங் காலனும் எண்ணிய நாளும்
படர்ந்திடு நாமமும் பாய்கதிர் போல
அடைந்திடு வண்ணம் அடைந்திடு நீயே.

திருநாயகியைத் தொழுவார்க்கு உலகின்கண் அவளருளால் எல்லா நலங்களும் பெருகும். காலனும் வந்து அணுகான்; கருதியபடி வாழ்நாளும் பெருகும். எங்கணும் புகழ் ஓங்கும். பரந்த கதிர்களையுடைய பகலவனைப்போல் நிகரின்றி விளங்கி ஒளிவிடுவர். இத் திறமெல்லாம் எய்தத் திருநாயகியை நெஞ்சே நீ நினைப்பாயாக.

காலனும் எண்ணிய நாளும் கடந்திடும் - யமனும் அணுகான்; வரையறுக்கப்பட்ட வாழ்நாளும் பெருகும்.

## 1302. அடைந்திடும் பொன்வெள்ளி கல்லுடன் எல்லாம்

1302. அடைந்திடும் பொன்வெள்ளி கல்லுடன் எல்லாம்
அடைந்திடு மாதி யருளுந் திருவும்
அடைந்திடும் அண்டத் தமரர்கள் வாழ்வும்
அடைந்திடும் வண்ணம் அறிந்திடு நீயே.

திருநாயகி அருளால் பொன், வெள்ளி, மாணிக்கம், முதலிய எல்லாப் பொருள்களும் எளிதின் வந்தடையும். ஆதியாகிய சிவபெருமான் திருவருளும், திருவடிப்பேறும் எய்தும். விரும்பினால் அண்டங்களில் வாழும் தேவர்கள் வாழ்வும் கிட்டும். இம் முறைமைகளையறிந்து இவையெல்லாம் கைகூடும் வண்ணம் அருளம்மை திருவடியை வழிபடுவாயாக.

திரு - முத்தி. வண்ணம் - முறைமை.

## 1303. அறிந்திடு வார்கள் அமரர்க ளாகத்

1303. அறிந்திடு வார்கள் அமரர்க ளாகத்
தெரிந்திடு வானோர் தேவர்கள் தேவன்
பரிந்திடும் வானவன் பாய்புனல் சூடி
முரிந்திடு வானை முயன்றிடு நீரே.

தேவர்களாமாறு அருள்செய்கின்றவன் சிவன். இதனை மெய்யுணர்ந்தார் அறிவர். விண்ணவரும், விண்ணவர் தலைவனும் வாழுமாறு அருள்செய்பவனும் சிவனே. கங்கையாற்றினை உலகுய்யச் சூடுபவனும், அதனை ஒடுக்குபவனும் சிவனே. அவன் திருவடியை அடைய முயல்வீர்களாக.

தேவர்கள் தேவன் - தேவ இந்திரன். பாய்புனல் - கங்கை. முரிந்திடுவான் - முரித்திடுவான் என்பது மெலிந்து வந்தது; அழிப்பவன்.

## 1304. நீர்பணி சக்கரம் நேர்தரு வண்ணங்கள்

1304. நீர்பணி சக்கரம் நேர்தரு வண்ணங்கள்
பாரணி யும்ஹிரீ முன்ஸ்ரீ மீறாந்
தாரணி யும்புகழ்த் தையல்நல் லாள்தனைக்
காரணி யும்பொழிற் கண்டுகொள் வீரே.

நீங்கள் தொழுது விழுப்பயன் எய்துதற்குரிய சக்கரம் நவாக்கரியாகும். அதன் எழுத்துக்கள் உலகம் புகழும் சிரீயும் கிரீயுமாகும் (ஸ்ரீஹிரீ) மாலையணிந்து விளங்கும் புகழ்மிக்க தையல் நல்லாள் உறையும் மேகங்கள் தங்கும் அழகு மிகுந்த சோலையாற் சூழப்பட்ட கடம்பவனத் திருவூரில் சென்று அவள் திருவடியைத் தொழுவீராக.

வண்ணங்கள் - வர்ணங்கள்; எழுத்துக்கள்.

நீர் பணி - நீவிர் வணங்குகின்ற. தாரணியும் புகழ் - புகழ் மாலை அணிகின்ற.

## 1305. கண்டுகொள் ளுந்தனி நாயகி தன்னையும்

1305. கண்டுகொள் ளுந்தனி நாயகி தன்னையும்
மொண்டுகொ ளும்முக வசியம தாயிடும்
பண்டுகொ ளும்பர மாய பரஞ்சுடர்
நின்று கொளுநிலை பேறுடை யாளையே.

ஒப்பிலாத திருநாயகி தன்னைக் கண்டுகொள்ளும் பேறுடையார் அருட்பொலி வெய்துவர். அதனால் அவர்கள் முகம் மிக்க அழகுடையதாய்க் கண்டார் அள்ளிக்கொள்ளும்படியான கவர்ச்சியைக் கொண்டிருக்கும். பழமையாக நம்மை ஆட்கொள்ளும் பண்புடைய ஈடும் எடுப்புமில்லாப் பெருஞ்சுடர் நம்மை நிலைபேறுடைய அம்மையுடன் வெளிப்பட்டு நின்று ஆட்கொள்ளும். வசியம் - கவர்ச்சி.

மொண்டுகொளும் - அள்ளிக்கொள்ளும்படியாக.

## 1306. பேறுடை யாள்தன் பெருமையை எண்ணிடில்

1306. பேறுடை யாள்தன் பெருமையை எண்ணிடில்
நாடுடை யார்களும் நம்வச மாகுவர்
மாறுடை யார்களும் வாழ்வது தானிலை
கூறுடை யாளையுங் கூறுமின் நீரே.

திருவடிப்பேற்றை யருளும் திருநாயகிதன் அளவிலா அருட்பெருமைகளை இடையறாது எண்ணினால் பெருநில வேந்தரும் நம் வயம் ஆகுவர். அறியாமையாலாவது காரணம் பற்றியாவது பகை கொண்டவர்கள், அப் பகைமைப் பண்புடன் நிலைத்து வாழார். (பகைமை நீங்கி உறவாகி வாழ்வர்.) அத்தன் ஒரு கூற்றிலே என்றும் உறைந்து எங்கும் நிறைந்து அன்னை நிற்பள் அவளை அன்புடன் தொழுவாயாக.

நாடுடையார் - அரசர். மாறுடையார் - பகைவர். கூறுடையாள் - பாகம் பிரியாள்; பாகாயி.

## 1307. கூறுமின் எட்டுத் திசைக்குந் தலைவியை

1307. கூறுமின் எட்டுத் திசைக்குந் தலைவியை
ஆறுமின் அண்டத் தமரர்கள் வாழ்வென
மாறுமின் வையம் வரும்வழி தன்னையுந்
தேறுமின் நாயகி சேவடி சேர்ந்தே.

எட்டுப் புலங்களிலும் ஒட்டி நிலைபெறும் முழுமுதல்வியை அன்பகத்துக் கொண்டு இடையறாது நாடுங்கள். அவள் மெய்ப் புகழையே கூறுங்கள். அதுவே பொருள் சேர் புகழ். அதனால் அவாவை அடக்குதல் எளிது. அவாவினை அடக்குங்கள். அடக்கி, அமரர்கள் வாழ்வினையும், நிலவுலகத்துப் பிறக்கும் பிறப்பினையும் மாற்றிக் கொள்ளுங்கள். திருநாயகி திருவடியே நிலைத்த புகலிடம் என்று தெளியுங்கள்.

ஆறுமின் - ஆசையை அடக்குமின். மாறுமின்...தன்னையும் பிறவியை மாற்றிக் கொள்ளுங்கள். தேறுமின் - தெளியுங்கள்.

## 1308. சேவடி சேரச் செறிய இருந்தவர்

1308. சேவடி சேரச் செறிய இருந்தவர்
நாவடி யுள்ளே நவின்றுநின் றேத்துவர்
பூவடி யிட்டுப் பொலிய இருந்தவர்
மாவடி காணும் வகையறி வாரே.

திருநாயகி தன் திருவடியைச் சேரும்படியான சீலம் முதலிய பெரும் தவத்தைப் புரிந்தவர்கள் 'சிவயநம' என்னும் செந்தமிழ் மறையினை உள் நாவடியில் ஓதிக் கணித்துப் போற்றுதல் வேண்டும். அங்ஙனம் போற்றுவார்க்கு வழிபாட்டின் உறைப்பு உண்டாம். அதனால் திருமுறைப் போற்றித் தொடர் புகன்று மலர்தூவி வழிபடுவர். அங்ஙனம் வழிபடும் நற்றவப் பேறுடையார் திருவடிப் பேறெய்தும் நன்னெறியினை உணர்வர்.

இருந்தவர் - பெருமையுள்ள தவசிகள். நாவடி - உள் நாவினாலே. பூ அடியிட்டு - பூக்களைக் கொண்டு அருச்சனை செய்து. மாஅடி - பெருமை பொருந்திய திருவடி; முத்தி.

## 1309. ஐம்முத லாக வளர்ந்தெழு சக்கரம்

1309. ஐம்முத லாக வளர்ந்தெழு சக்கரம்
ஐம்முத லாக அமர்ந்திரீ மீறாகும்
அம்முத லாகி யவர்க்குடை யாடனை
மைம்முத லாக வழுத்திடு நீயே.

ஐகாரத்தை முதலாகக் கொண்டு வளர்ந்தெழும் நவாக்கரி சக்கரம். அந்த ஐகார முதலாகவும் இரீம் ஈறாகவும் வரைவர். அகர முதலாக விளங்கும் சிவபெருமானுக்கு உடையாளாக விளங்கும் முழு முதல்வியை மையாகிய மாயைக்கு முதல்வியாக வழுத்துவாயாக.

ஐம்முதலாக - ஐ எழுத்து முதலாக. அம்முதலாகியவர் - அகரமுதலாகியவர் சிவன்; "ஆருமறியார் அகாரம் அவனென்று" என்பது காண்க. மைம்முதலாக - மாயைக்குத் தலைவியாக.

## 1310. வழுத்திடு நாவுக் கரசிவள் தன்னைப்

1310. வழுத்திடு நாவுக் கரசிவள் தன்னைப்
பகுத்திடும் வேதமெய் யாகம மெல்லாந்
தொகுத்தொரு நாவிடை சொல்லவல் லாளை
முகத்துளும் முன்னெழக் கண்டுகொ ளீரே.

நாவுக்கரசியாகிய இவளைப் போற்றும் மெய்யன்பர்களது நாவினிடத்து அவள் விளங்கியருளி மெய்ப்பொருளையுணர்த்தும் செந்தமிழ் மறையாகமங்களை எல்லாம் தொகையாக ஒப்பில்லாத ஒரு நாவிடத்துச் சொல்லியருள வல்லாளாவள். அவ்வன்பர்களது திருமுகமும். அருள் பொலிவோடு முற்பட்டுத் தோன்றும். கண்டு கொள்வீர்களாக.

நாவுக்கரசு இவள் தன்னை - வாக்குக்கு அரசியை; வாகீசுவரியை. ஒரு நாவிடை - தன்னைத் துதிக்கும் ஒப்பற்ற ஒருவனுடைய நாவினாலே. முகத்துளும் - முகப்பொலிவினால்.

## 1311. கண்டஇச் சக்கரம் நாவில் எழுதிடிற்

1311. கண்டஇச் சக்கரம் நாவில் எழுதிடிற்
கொண்டஇம் மந்திரங் கூத்தன் குறியதாம்
மன்றினுள் வித்தையு மானுடர் கையதாய்
வென்றிடும் வையக மெல்லியல் மேவியே.

திருவருளால் கண்ட இச் சக்கரம் இடையறாது நாவிலழுத்திடிற் கைக்கொண்ட இம் மந்திரமே கூத்தப்பெருமான் திருவுருவாகும். இதுவே திருவம்பலச் சக்கரமுமாகும். இதனைப் போற்றுவார்க்குத் திருவருளம்மை விளங்கித் தோன்றுவள். அதனால் அச் சக்கரமும் அவர்கட்குக் கைகூடும். அவர்கள் உலகியல் நிகழ்ச்சிகளையும் வெல்லுவர்.

கூத்தன் - நடராசன். மன்றினுள் வித்தை - திருவம்பலச் சக்கரம்.

## 1312. மெல்லிய லாகிய மெய்ப்பொரு ளாள்தனைச்

1312. மெல்லிய லாகிய மெய்ப்பொரு ளாள்தனைச்
சொல்லிய லாலே தொடர்ந்தங் கிருந்திடும்
பல்லிய லாகப் பரந்தெழு நாள்பல
நல்லியல் பாலே நடந்திடுந் தானே.

பேரிரக்கத்தான் மென்மைத் தன்மை வாய்ந்த மெய்ப் பொருள் முதல்வியைக் குருமொழிகொண்டு போற்றித் தொடர்ந்திருங்கள். அவள் திருவருளாலே உலகில் நன்மை தீமைகள் பலவாக எல்லையின்றி மாறிமாறிப் பெருகிவரும் இயல்புகள் ஒழிந்து அளவில்லாத காலங்கள் இன்பமே தரும் நன்முறைமையோடு நடக்கும்.

சொல்லியல் - உபதேசம். பல்லியல்பாக - பல வகையாக. நல்லியல்பாலே - நன்மையாகவே.

## 1313. நடந்திடு நாவினுள் நன்மைகள் எல்லாந்

1313. நடந்திடு நாவினுள் நன்மைகள் எல்லாந்
தொடர்ந்திடுஞ் சொல்லொடு சொற்பொருள் தானும்
கடந்திடுங் கல்விக் கரசிவ ளாகப்
படர்ந்திடும் பாரிற் பகையில்லை தானே.

திருவருள் வலத்தால் குருமொழியை இடையறாது கணிக்க எல்லா நன்மைகளும் எளிதாக நடக்கும். சொல்லும் பொருளும் தொடர ஒண்ணாத சொல்லுலகுக்கு முதல்வியாகிய திருவருளம்மையை இடையறாது தொழுவார்க்கு நிலவுலகில் பசி, வறுமை, நோய், பகை முதலிய எவ்வகை இடையூறும் உண்டாகா. கணிக்க - உள்நாக்கால் ஒலிக்க சொல்லுலகு - சத்தப்பிரபஞ்சம்.

## 1314. பகையில்லை கௌமுத லையது வீறா

1314. பகையில்லை கௌமுத லையது வீறா
நகையில்லை சக்கர நன்றறி வார்க்கு
மிகையில்லை சொல்லிய பல்லுரு வெல்லாம்
வகையில்லை யாக வணங்கிடுந் தானே.

மேற்கூறியவாற்றால் பகையில்லாமையுடன் கௌ முதலாக ஐ ஈறாக ஒலித்துவரின் அவர்களைப் புறக்கணிப்பார் எவரும் இலர். மேற்குறித்த சக்கரத்தை இடையறாது வழுத்துவார்க்கு நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பின் எண்பத்து நான்கு நூறாயிர வேறுபாடுள்ள பிறப்பினுள் எவ்வகைப் பிறப்புத் துன்பமும் இல்லையாகும். அதனால் திருவருளம்மையை வணங்குங்கள்.

பகை...ஈறா - கௌ முதல் ஐ ஈறா உச்சரிப்பின் பகையில்லை. நகையில்லை - பிறர் பழிப்பு இல்லை. பல்லுரு - பல வகையான உயிர் வருக்கங்களுக்கு எல்லாம். மிகையில்லை - பிறப்பு இல்லை. வகை இல்லையாக - வெல்லுந் திறமை இல்லையாக.

## 1315. வணங்கிடுந் தத்துவ நாயகி தன்னை

1315. வணங்கிடுந் தத்துவ நாயகி தன்னை
நலங்கிடு நல்லுயி ரானவை யெல்லாங்
கலங்கிடுங் காம வெகுளி மயக்கந்
துலங்கிடுஞ் சொல்லிய சூழ்வினை தானே.

முப்பத்தாறு மெய்க்கும் முதல்வியாகிய அம்மையைத் திருவடியுணர்வு கைவந்த நல்லுயிர்களெல்லாம் வணங்கி அவள் திருவருளில் அடங்கி நிற்க, காமம் வெகுளி மயக்கங்கள் கலங்கி அகன்றொழியும். செந்நெறிக்கு வாயிலாகிய சீலம் நோன்புகள் துலங்கிக் கைகூடி விளங்கும். நலங்கிடும் - அடங்கிடும். சூழ்வினை - நற்றவம்.

நலங்கிடும் - அடங்கும்.

## 1316. தானே கழறித் தணியவும் வல்லனாய்த்

1316. தானே கழறித் தணியவும் வல்லனாய்த்
தானே நினைத்தவை சொல்லவும் வல்லனாய்த்
தானே தனிநடங் கண்டவள் தன்னையுந்
தானே வணங்கித் தலைவனு மாமே.

அம்மை வழிபாட்டினன் திருவருள் வலத்தால் பேரவைக் கண் தானே எவர்க்கும் மிக்கானாய் விளங்குவன். அதனால் தானே பேசி அமையவும் வல்லனாவன். தானே பிறர் நினைத்தவற்றை எளிதாக வுணர்ந்து ஐயுறவின்றித் துணிந்து கூறவும் வல்லனாவன். பேரூழிக் காலத்துப் பெரும் பொருளாம் சிவபெருமான் புரியும் தனிப்பெரும் திருக்கூத்தைக் காணவும் வல்லனாவன். அப் பெருமானைவிட்டுப் பிரியா ஆணையாம் திருவருளைக் காணவும் வல்லனாவன். அத் திருவருளை வணங்கி அம் முதல்வி துணையால் சிவனடியிற் கூடிச் சிவமே யாகத் திகழவும் வல்லனாவன்.

தானே....வல்லனாய் - அவையிற் பேசும் ஆற்றல் வாய்ந்தவனாய். தனி நடம் - பெரு ஊழிக் காலத்தில் சத்தியும் சிவனும் தனித்து இருக்கும்போது சிவன் செய்யும் நடனம்.

## 1317. ஆமே யனைத்துயி ராகிய அம்மையுந்

1317. ஆமே யனைத்துயி ராகிய அம்மையுந்
தாமே சகலமும் ஈன்றஅத் தையலும்
ஆமே யவளடி போற்றி வணங்கிடிற்
போமே வினைகளும் புண்ணிய னாகுமே.

அனைத்துயிரையும் உடலுடன் சேர்த்தலாகிய படைப்பினையருளி அவ் வுயிர்களுடன் கலப்பால் ஒன்றாயிருத்தலின் அனைத்துயிரும் ஆகிய அம்மை என்பர். அவ் வுயிர்களுக்கு வேண்டும் உறையுள் உழைப்பு உணா உறவு முதலிய உதவிகளை ஈன்றவளும் அவ் அம்மையே. அவள் திருவடியைப் போற்றிடில் இருள்சேர் இருவினையும் அகலும். பொருள் சேர் புண்ணியமும் பெருகும். புண்ணியம் - இறைபணி.

## 1318. புண்ணிய னாகிப் பொருந்தி உலகெங்கும்

1318. புண்ணிய னாகிப் பொருந்தி உலகெங்கும்
கண்ணிய னாகிக் கலந்தங் கிருந்திடுந்
தண்ணிய னாகித் தரணி முழுதுக்கும்
அண்ணிய னாகி அமர்ந்திருந் தானே.

சிவபெருமான் உலகெங்கணும் புண்ணியனாகிப் பொருந்தினன். கருதி மதிக்கத்தக்க சிறப்புடையனாகி நிலைபெற்ற ஆருயிர் அனைத்தினும் கலந்துநின்றனன். திருவருட் கூறுடையனாதலின் குளிர்ந்த தண்ணளியுடையவனாயினன். தரணி முழுவதுக்கும், அதன்கண் வாழும் உயிர்களுக்கும் உயிருக்கு உயிராய் நெருங்கியிருந்து இன்புறுத்துவான் என்க.

கண்ணியன் - பெருமை உடையவன். தண்ணியன் - இரக்கமுடையவன். அண்ணியன் - அருகில் இருப்பவன்.

## 1319. தானது கம்இரீம் கௌவது ஈறாம்

1319. தானது கம்இரீம் கௌவது ஈறாம்
நானது சக்கர நன்றறி வார்க்கெலாம்
கானது கன்னி கலந்த பராசத்தி
கேளது வையங் கிளரொளி யானதே.

சக்கரம் வரைபவர் எழுத்துக்களை மாற்றியும் வரைவர். அது மரபுமாகும். அம் முறையில் கிரீம் முதலாகக் கௌ ஈறாக வரைந்து வழிபடும் சக்கரம் நானறிந்த முறையில் நவாக்கரி சக்கரமாகும். அதனது நன்மையை அறிபவர்கட்கெல்லாம் கடம்பவனத்து வாழும் என்றும் கன்னியாகி யாண்டும் கலந்த பேரறிவுப் பேராற்றலாம் அம்மை உறவினளாவள். அத் திருவருளம்மையால் உலகெலாம் விளங்கும் பேரொளியானது தோன்றிற்று. பராசத்தி - பேரறிவுப் பேராற்றலள். கேள் - உறவு. கம் + இரீம் = கிரீம்: க + இரீம் = கிரீம்.

நான் அது - நான் அறிந்த அந்த. கான் - கடம்பவனம். கேள் அது - உறவு ஆனது.

## 1320. ஒளிக்கும் பராசத்தி உள்ளே அமரிற்

1320. ஒளிக்கும் பராசத்தி உள்ளே அமரிற்
களிக்கும்இச் சிந்தையிற் காரணங் காட்டித்
தெளிக்கு மழையுடன் செல்வமுண் டாக்கும்
அளிக்கும் இவளை அறிந்துகொள் வார்க்கே.

கரவாடும் வன்நெஞ்சர்க்கு ஒளிக்கும் பேரறிவுப் பேராற்றலளாம் அம்மை அன்பருள்ளத்து வெளிப்பட்டு அமர்ந்திருப்பள். அதனால் அவ்வுள்ளம் பெருமகிழ்வு கொள்ளும். அவ்வுள்ளத்திற்கு அனைத்திற்கும் வினைமுதற் காரணமாம். சிவபெருமானைக் காட்டுவித்து வழிபடச் செய்வள். தெளிய வேண்டிய பொருள்களனைத்தையும் தெளிவித்தருள்வள். அத் தெளிவருளுடன் பெருந்திருவினையும் உடைமையாக அளித்தருள்வள். திருவருளும் புரிவள். இவளை அறிந்து வழிபடுவாயாக.

ஒளிக்கும் - வஞ்சகர்க்கு மறைந்திருக்கும். காரணம் - சிவத்தை. தெளிக்கும் - தெரிவிக்கும். அளிக்கும் - காப்பாற்றுவாள்.

## 1321. அறிந்திடுஞ் சக்கரம் அருச்சனை யோடே

1321. அறிந்திடுஞ் சக்கரம் அருச்சனை யோடே
எறிந்திடும் வையத் திடரவை காணின்
மறிந்திடு மன்னனும் வந்தனை செய்யும்
பொறிந்திடுஞ் சிந்தை புகையில்லை தானே.

அருளாலறிந்து கைக்கொண்டொழுகும் நவாக்கரி சக்கரத்தினை வழிபடுவாயாக. அஃது உலகத் துன்பங்கள் அனைத்தையும் நீக்கும். சிறையிலடைத்துத் தண்டம் செய்யும் மன்னனும் வலிய வந்து வழிபடுமாறு செய்யும். உள்ளத்தைக் கலங்க வைக்கும் எவ்வகைத் துன்பங்களும் உளவாகா.

எறிந்திடும் - விலக்கும். காவல் மறிந்திடும் - சிறையில் வைத்திடும். பொறிந்திடும் - கலக்கம் உறுகின்ற. புகை - துன்பம்.

## 1322. புகையில்லை சொல்லிய பொன்னொளி யுண்டாங்

1322. புகையில்லை சொல்லிய பொன்னொளி யுண்டாங்
குகையில்லை கொல்வ திலாமையி னாலே
வகையில்லை வாழ்கின்ற மன்னுயிர்க் கெல்லாஞ்
சிகையில்லை சக்கரஞ் சேர்ந்தவர் தாமே.

நவாக்கரி சக்கர வழிபாடு உடையவர்கட்குப் புகையாகிய துன்பம் இல்லை. அகத்தவத்தோராகிய யோகிகளுக் குண்டாகும் கடவுட் காட்சியாம் பொன்னொளி அகத்தே காணப்படும். அத்தகையோர் கொலையும் புலையும் விடுத்த சிவ நிலையினராதலின் அவர்கட்குப் பிறவியில்லை. மன்னுயிரையெல்லாம் வேறுபாடில்லாமல் ஒக்கப்பார்த்து அவர் புரியும் கடவுள் தொண்டினுக்கு முடிவில்லை.

குகை - கருப்பாசயம். சிகை - முடிவு.

## 1323. சேர்ந்தவர் என்றுந் திசையொளி யானவர்

1323. சேர்ந்தவர் என்றுந் திசையொளி யானவர்
காய்ந்தெழு மேல்வினை காணகி லாதவர்
பாய்ந்தெழும் உள்ளொளி பாரிற் பரந்தது
மாய்ந்தது காரிருள் மாறொளி தானே.

நவாக்கரி சக்கர வழிபாட்டினர் உள்ளொளியுடையவராதலின் எல்லாத் திசைகளினும் ஞாயிறும் திங்களும் போன்று விளக்கும் விளக்காவர். பின்னும் பிறவிக்கு வித்தாகிய சினந்தெழுகின்ற ஏறுவினை இலராவர். ஆவியெங்கணும் பரந்தெழுகின்ற சிவபெருமானின் முற்றுணர்வொளி உள்ளும் புறம்பும் ஒத்துத் திகழ்ந்தது. அதனால் ஆணவ வல்லிருள் அகன்று ஒடுங்கிற்று. ஒப்பொளியாகிய மாயாகாரிய ஒளியும் தூய அருளொளிக்குத் துணையாகும்.

திசை ஒளி - திக்குகள் எங்கும் புகழ் பெற்றவர். மேல்வினை - ஆகாமியம். உள்ளொளி - ஞான ஒளி. காரிருள் - ஆணவ இருள். மாறு ஒளி - மயக்கம்.

## 1324. ஒளியது ஹௌமுன் கிரீமது ஈறாங்

1324. ஒளியது ஹௌமுன் கிரீமது ஈறாங்
களியது சக்கரங் கண்டறி வார்க்குத்
தெளிவது ஞானமுஞ் சிந்தையுந் தேறப்
பணிவது பஞ்சாக் கரமது வாமே.

ஒளியுடையதாகிய ஹௌ என்பதை முதலிலும் கிரீம் என்பதை ஈற்றிலும் வரைந்து திருவருட் களிப்பை உண்டாக்கும் அச்சக்கரத்தை வழிபடுவார்க்குத் தெளிந்த மெய்யுணர்வும், தெளிந்த நாட்டமும் கைகூடும். பின் செந்தமிழ்த்திருவைந் தெழுத்தினை இடையறாது உருவேற்றி முழுமுதற் சிவபெருமானை வழிபாடு புரிவாயாக.

களியது - களிப்பினைத் தருவது. பஞ்சாக்கரம் அது - நவாக்கரி மந்திரமே பஞ்சாக்கரமாம்.

## 1325. ஆமே சதாசிவ நாயகி யானவள்

1325. ஆமே சதாசிவ நாயகி யானவள்
ஆமே அதோமுகத் துள்ளறி வானவள்
ஆமே சுவையொளி யூறோசை நாற்றம்
ஆமே யனைத்துயிர் தன்னுளு மாமே.

எல்லாவற்றையும் திருவுள்ளத்தால் படைத்தருளும் சதாசிவ நாயகியானவள். தூவாமாயையிற் காணப்படும் ஊழி, ஊழ், உழைப்பு, உணர்வு, உள்ளன்பு, உழைப்பி, உறழ்வு என்னும் ஏழு மெய்கட்கும் அறிவாயிருப்பள். ஊழி - காலம். உள்ளன்பு - விழைவு. உழைப்பி - ஆள். உறழ்வு - மருள். மூலப்பகுதியிற் காணப்படும் சுவையொளி யூறு ஓசைகட்கு இயக்கியாயுள்ளவள். எல்லாவுயிர்க்கும் உயிர்க்குயிராய் நின்று இயைந்து இயக்கும் இறைவியாவள்.

அதோமுகத்துள் ளறிவானவள் - அதோமுகத்தில் ஒடுக்கப்பட்டுக் கிடக்கும் உயிர் வருக்கங்களுக்கு அறிவாய் விளங்குபவள்.

## 1326. தன்னுளு மாகித் தரணி முழுதுங்கொண்டு

1326. தன்னுளு மாகித் தரணி முழுதுங்கொண்டு
என்னுளு மாகி இடம்பெற நின்றவள்
மண்ணுளும் நீரனல் காலுளும் வானுளுங்
கண்ணுளும் மெய்யுளுங் காணலு மாமே.

திருவருளம்மை எல்லாவுலகங்களையும் தன்னுள் அடக்கித் தானாகவே நிற்பள். எளியேன் உள்ளும் எளியேன் தங்குதற்கு இடமும் ஆகிநின்றவளும் அவளே. அவளே நிலம், நீர், நெருப்பு, உயிர், நீள் விசும்பாகவும் விரிந்து நின்றனள். அடியேன் கண்ணுளும் மெய்யுளும் கலந்து நிற்பவளும் அவளே. அவள் அருளாலே 'கண்ணால் யானும் கண்டேன் காண்க' எனக் கட்டுரைக்குமாறு வெளிப்பட்டுக் காட்சியருள்பவளும் அவளே. மெய்ப்பொருளாகிய சிவனார் திருஉள்ளத்திருப்பவளும் அவளே என இவ்வகையாகக் கூறுதலும் ஒன்று.

தன் ... நின்றவள் - அண்டமும் பிண்டமும் ஆகி நின்றவள். மண் ... .ஆமே - ஐம்பூதங்களிலும் ஊனக்கண்ணிலும் தேகத்துள்ளும்.

## 1327. காணலு மாகுங் கலந்துயிர் செய்வன

1327. காணலு மாகுங் கலந்துயிர் செய்வன
காணலு மாகுங் கருத்து ளிருந்திடிற்
காணலு மாகுங் கலந்து வழிசெயக்
காணலு மாகுங் கருத்துற நில்லே.

திருவருள் வலத்தால் ஏனை உயிர்களுடன் நீ கலந்து அவை செய்வனவற்றைக் காணுதலும் ஆகும். அவ் வுயிர்கள் தம் கருத்தின்கண் மறைவாக வைத்திருக்கும் பொருள்களை நின்னால் அறிதலும் கூடும். அவ் வுயிர்களுடன் கலந்து அவற்றைக்கொண்டு நாம் விரும்பியவாறு தொழில் செய்வித்தலும் கூடும். அதனால், திருவருளின் திருவுள்ளப்பாங்கின்வழி ஒழுகுவாயாக.

## 1328. நின்றிடும் ஏழு புவனமும் ஒன்றாகக்

1328. நின்றிடும் ஏழு புவனமும் ஒன்றாகக்
கண்டிடும் உள்ளங் கலந்தெங்குந் தானாகக்
கொண்டிடும் வையங் குணம்பல தன்னையும்
விண்டிடும் வல்வினை மெய்ப்பொரு ளாகுமே.

திருவருள் வலத்தால் ஏழாக நிலைபெறும் உலகங்களனைத்தையும் ஒருமிக்கக் காணலாம். எல்லா உயிர்களின் உள்ளத்தினுங் கலந்து எங்கும் தானாகக் காணலாம். மாயாகாரிய உலகங்களின் உண்மைப் பண்பினை உள்ளவாறு உணரலாம். இருவினைப் பிணிப்பும் நம்மை விட்டு அகலும். மெய்வழிவாம் சிவனைச் சேர்ந்து நாம் உய்யலாம்.

## 1329. மெய்ப்பொரு ளௌமுதல் ஹௌவது ஈறாக்

1329. மெய்ப்பொரு ளௌமுதல் ஹௌவது ஈறாக்
கைப்பொரு ளாகக் கலந்தெழு சக்கரந்
தற்பொரு ளாகச் சமைந்தமு தேச்சுரி
நற்பொரு ளாக நடுவிருந் தாளே.

உண்மைப் பொருளாகச் சமைந்த அமுதேசுவரிச் சக்கரமானது 'ஔ' முதல் 'ஹௌ' ஈறாக வரையப்படுவது. திருவருளம்மையாகிய அமுதேசுவரி (நமசிவய) நடுவிலிருந்தாள் என்க. நடுவிருத்தலாவது நாடுவாரது நாட்டத்து அகமும் புறமும் ஒத்துக் காணப்படும் காட்சிப் பொருளாவது. 'உடையாளுந்தன் நடுவிருக்கும், உடையாள் நடுவுள் நீயிருத்தி, அடியேன் நடுவுள் இருவீரும் இருப்ப'தென்பது தமிழ் மறை முடிவாம் திருவாசகம்.

ஔ முதல் ஹௌ ஈறாக் கூறின் அமுதேசுவரிச் சக்கரம் என்ப.

## 1330. தாளதி னுள்ளே சமைந்தமு தேச்சுரி

1330. தாளதி னுள்ளே சமைந்தமு தேச்சுரி
காலது கொண்டு கலந்துற வீசிடில்
நாளது நாளும் புதுமைகள் கண்டபின்
கேளது காயமுங் கேடில்லை காணுமே.

உச்சிக்குமேல் ஆயிர இதழ்த் தாமரை என்று சொல்லப்படும் நிலைக்களத்துக்குத் தாளாகிய நாளம் போன்று காணப்படுவது நடு நாடியாகும். நடுநாடி எனினும் சுழுமுனை எனினும் ஒன்றே. நடுநாடியில் எழுந்தருள்பவள் அமுதேசுவரி. உயிர்ப்பினை எழுப்பி அம்மையுடன் கலந்து மேலேயுள்ள முழுமுதற்சிவத்தைப் பொருந்தும்படி செய்தால், அது நாளுக்குநாள் வியத்தகு புதுமைகள் பல காணச் செய்யும். கண்ட பின் உறவாகிய உடம்புக்கும் கேடில்லையாகும்.

தாள் அதினுள்ளே - தாமரைத் தாள்போன்ற சுழுமுனையிலே. காலது கொண்டு - பிராண வாயுவுடன். உற வீசிடில் - மேல் உறச்செய்திடில். நாளது நாள் - நாளுக்கு நாள். கேளது - தெரிந்துகொள்.

## 1331. கேடில்லை காணுங் கிளரொளி கண்டபின்

1331. கேடில்லை காணுங் கிளரொளி கண்டபின்
நாடில்லை காணும் நாண்முத லற்றபின்
மாடில்லை காணும் வரும்வழி கண்டபின்
காடில்லை காணுங் கருத்துற் றிடத்துக்கே.

கெடாது நிலைத்திருக்கும் திருவருள் ஒளியைக் கண்டபின் நாடு முதலிய வேற்றுமை இல்லை. காலவரையறையைக் கடந்தபின் முன்பின் கீழ்மேல் என்ற இடப் பாகுபாடுகளும் இல்லை. திருவருள் கை வந்து எய்தச் சீல முதலிய நானெறிகளைக் கண்டபின் பிறவித் துன்பங்கள் உளவாகா. ஆதலின் திருவருளிடத்தில் உள்ளன்பைச் செலுத்துவாயாக.

நாடில்லை - தேச பேதம் இல்லை. மாடில்லை - பக்க பேதம் இல்லை. காடு இல்லை - துக்கம் இல்லை.

## 1332. உற்றிட மெல்லாம் உலப்பில்பா ழாக்கிக்

1332. உற்றிட மெல்லாம் உலப்பில்பா ழாக்கிக்
கற்றிட மெல்லாங் கடுவெளி யானது
மற்றிட மில்லை வழியில்லை தானில்லை
சற்றிட மில்லை சலிப்பற நின்றிடே.

ஆருயிர் திருவருள் வலத்தால் சிவமாந்தன்மை எய்தும். எய்தியபொழுது பார்க்கும் இடமெல்லாம் மாயாகாரியப் பொருள்கள் பகல் விளக்குப்போல் முனைத்துத் தோன்றாது அடங்கி நிற்றலால் அவை உலப்பில் பாழாகத் தோன்றும். உலகியற் பொருள்களைப்பற்றி முன் கற்றறிந்து கைக்கொண்ட பயிற்சிகளெல்லாம் விடுபட்டமையால் வெட்ட வெளியாகும். சிவத்தொடு கலந்தமையால் அப்பொடு கலந்த உப்பு அப்பேயாய்ப் போக்கு வரத்தின்றி ஒன்றேயாய்ப் புணர்ந்திருத்தல் போல் ஆருயிரும் கலப்பால் நிறைந்து ஒன்றேயாய் நிற்கும். அப்பொடு கல்முதலிய கரையாத பிற பொருள் சேர்ந்தால் கலவாது முறையே பளுவானது கீழும் எளிதானது மேலுமாக இருக்கும். அப்பு - தண்ணீர். உலப்பிலா - கேடிலா. உலப்பில் பாழ் - அடங்கி நிற்கும் நிலை.

உற்...பாழாக்கி - மாயா காரியம் எல்லாம் முழுவதும் ஒழித்து. கற்ற - அறிந்த. இடம் - உலகம். கடுவெளி - இன்மை. சலிப்பற - உறுதியாக அசையாமல்.

## 1333. நின்றிடும் ஏழ்கடல் ஏழ்புவி எல்லாம்

1333. நின்றிடும் ஏழ்கடல் ஏழ்புவி எல்லாம்
நின்றிடும் உள்ளம் நினைத்தவை தானொக்கும்
நின்றிடுஞ் சத்தி நிலைபெறக் கண்டிட
நின்றிடும் மேலை விளக்கொளி தானே.

அண்டமாகிய உலகத்தின்கண், உள்ள முறைமைகள் பிண்டமாகிய உடம்பின் கண்ணும் காணப்படும். ஆதலின் ஏழ்கடலும் ஏழ்புவியும் உடலின் கண்ணும் காணலாம். திருவருள் துணையால்
உள்ளம் கள்ளமின்றி நிலைபெற்று நிற்கும். நிற்கவே அவ் வுள்ளம் நினைப்பவை யனைத்தும் அருளால் வலிய வந்து முன்னிற்கும். திருவருள் ஆற்றல் உள்ளத்து நிலைபெற்று நிற்றலால், பார்க்குமிடமெல்லாம் திருவருட் பொலிவே காணப்படும். புருவநடுவின்கண் அளவிலாத் திருவருள் ஒளி காணப்படும்.

நின்றி...எல்லாம் - அண்டத்திலுள்ளவற்றை எல்லாம் பிண்டத்தில் காணலாம். நின்றிடும் உள்ளம் - மனம் நிலைபெறும். நின்றிடும் சத்தி நிலைபெற - என்றுமுள்ள சத்தி இதயத்தில் வீற்றிருக்க. கண்டிடம் நின்றிடும் - எங்கும் சத்தி மயமாய்த் தோன்றும். மேலை விளக்கொளி - புருவ மத்தியிலுள்ள தீபம் போன்ற சிவ சத்தி ஒளி.

## 1334. விளக்கொளி சௌமுத லௌவது ஈறா

1334. விளக்கொளி சௌமுத லௌவது ஈறா
விளக்கொளிச் சக்கரம் மெய்ப்பொரு ளாகும்
விளக்கொளி யாகிய மின்கொடி யாளை
விளக்கொளி யாக விளங்கிடு நீயே.

விளக்கொளி போன்று துணையாம் நவாக்கரி சக்கரம் சௌ முதல் ஔ ஈறாக வரையப்படுவதாகும். அதுவே மெய்ப் பொருளாம் சிவத்தை விளக்குவதாகும். எல்லாச் சக்கரத்திற்கும் உணவுக்கு இன்றியமையாது வேண்டப்படும் உயரிய உப்புப்போல் உயிர் மந்திரமாகவுள்ளது 'நமசிவய' என்பதே. ஏனை மந்திரங்களும் சக்கரத்தில் வரையும் எழுத்துக்களும் கைகூட வேண்டியவைகளைக் காதலுளம் கொள்ளக் கருதும் கருத்தின் குறியாகும். இஃது 'ஓதுசெயற் பாவுடலாம் உய்க்கு மறை யுயிராம், தீதில் நமசிவய செப்பு' என்பதனால் விளங்கும். நவாக்கரி சக்கரத்தில் விளங்கும் மின்கொடிபோன்று தோன்றும் திருவருளம்மையைக் காதலுள்ளத்தாற் காண்பர். கண்ட அப் பேற்றால் கண்ட அம் மெய்யன்பரும் உலகினுக்குத் திருவருள் ஒளி விளக்காய்த் திகழ்வர். மேலும் 'எல்லாச் செயற்கும் இயம்புமறை ஐந்தெழுத்தே, வல்ல சிவயநம வாழ்த்து' என்பதனையும் நினைவுகூர்க.

விளக்கொளிச் சக்கரம் - எல்லாவற்றையும் விளக்கும் நவாக்கரி சக்கரம்.

## 1335. விளங்கிடு மேல்வரு மெய்ப்பொருள் சொல்லின்

1335. விளங்கிடு மேல்வரு மெய்ப்பொருள் சொல்லின்
விளங்கிடு மெல்லிய லானது வாகும்
விளங்கிடு மெய்ந்நின்ற ஞானப் பொருளை
விளங்கிடு வார்கள் விளங்கினர் தானே.

மேற்கூறிய நவாக்கரி சக்கரத்தினிடத்து விளங்கும் மெய்ப்பொருளாம் சிவத்தைக் கூறுங்கால், திகழும் அருளம்மையே அதுவாகும். சிவமெய்யாக என்றும் ஒருபடித்தாய் நிற்கும் மெய்யுணர்வுப் பொருளை விளங்கிக் கொண்டவர்கள், உலகத்துக்கு அப்பொருளை விளக்கும் முறைமைசேர் இறைபணியாளராவர். இறைபணியாளர்: அடிமையாய் நின்றுணர்வில் ஆண்டவருள் தூண்டப், படிமிசையாற்றும் பண்பினராவர். ஆசையற்று வீடும் வேண்டாவிறலின ரிவரே.

விளங்கிடுவார்கள் - விளக்கியிடுவார்கள் என்பது மெலிந்து வந்தது.

## 1336. தானே வெளியென எங்கும் நிறைந்தவள்

1336. தானே வெளியென எங்கும் நிறைந்தவள்
தானே பரம வெளியது வானவள்
தானே சகலமும் ஆக்கி அழித்தவள்
தானே யனைத்துள அண்ட சகலமே.

திருவருளம்மை நான்கு பூதங்களுக்கும் இடங்கொடுத்து மேலோங்கிநிற்கும் வெளியாகிய வானம்போன்று எங்கும் நிறைந்துள்ளாள். அவளே சிவவுணர்வுப் பெருவெளியாவள். நிலத்திணை இயங்குதிணை என்னும் எல்லாவுயிர்களுக்கும் இருவினைகட்கு வேண்டியவாறு உடல்களைப் படைத்தளிப்பவளும் அவளே. அவ்வுயிர்கள் இளைப்பாறுதற் பொருட்டு அவ்வுடல்களைத் துடைத்தழிப்பவளும் அவளேயாவள். அவளே தாங்கும் கலப்பால் அண்டமும் உலகமும் அனைத்துமாகுவள்.

வெளியென - ஆகாயத்தைப் போலப் பரமவெளி ஞானாகாயம்.

## 1337. அண்டத்தி னுள்ளே அளப்பரி தானவள்

1337. அண்டத்தி னுள்ளே அளப்பரி தானவள்
பிண்டத்தி னுள்ளே பெருவெளி கண்டவள்
குண்டத்தி னுள்ளே குணம்பல காணினுங்
கண்டத்தில் நின்ற கலப்பறி யார்களே.

அண்டமாகிய பேருலகின்கண் பிரிப்பின்றி நிறைந்து நிற்கும் திருவருளம்மை அளத்தற்கரிய வியத்தகு தன்மையள். பிண்டமாகிய உடலின் கண்ணும் வெளிக்கு வெளியாம் அருள்வெளி கண்டவள். ஓமம் செய்தற்குரிய இடனாம் கொப்பூழின்கண் தோன்றும் நன்மைகள் பல காண்பர். கண்டாலும் மிடற்றோசை ஆகிய வைகரிவாக்குத் தோன்று தலரிது. அவ்வோசை தோன்றின் அத்துடன் முழுமுதல் சிவனைக் காணுதலுங் கூடும். இவ்வுண்மையினை அறியார் பலராவர்.

குண்டம் - நாபி. கண்டம் - விசுத்தி.

## 1338. கலப்பறி யார்கடல் சூழுல கெல்லாம்

1338. கலப்பறி யார்கடல் சூழுல கெல்லாம்
உலப்பறி யாருட லோடுயிர் தன்னைச்
சிலப்பறி யார்சில தேவரை நாடித்
தலைப்பறி யாகச் சமைந்தவர் தானே.

முழுமுதற் சிவன் திருவருளை இடமாகக்கொண்டு எங்ஙனும் நிறைந்து நிற்பன். அவ்வுண்மையை அருளால் உணர்ந்தவர் உடலுடன்கூடி நெடுநாள் கேடின்றிவாழ்வர். இறந்து பிறந்து உழலும் தேவரை நாடித் தொழுவோர் ஓசையின் உண்மையினை உணராராவர். அத்தகையோர், நல்ல தலையெழுத்துப் பெறாதவராய்ப் பிறந்திறந்துழலும் தலையெழுத்துச் சுமந்தவராவர். ஓசை - திருச்சிலம் பொலி.

உலப்பு - அழிதல். சிலப்பு அறியார் - சிலம்பொலி கேளாதவர். தலைப்பறியாக - தலைப்பொறி என்பது தலைப்பறி என வந்தது; தலை எழுத்து. சமைந்தவர் - பெற்றவர்.

## 1339. தானே எழுந்தஅச் சக்கரஞ் சொல்லிடின்

1339. தானே எழுந்தஅச் சக்கரஞ் சொல்லிடின்
மானே மதிவரை பத்திட்டு வைத்தபின்
தேனே யிரேகை திகைப்பற ஒன்பதில்
தானே கலந்த வரையெண்பத் தொன்றுமே.

திருவருள் ஆணையால் தானாகவே - இயற்கையாகவே எழுந்த நவாக்கரி சக்கரத்தைக் கூறுங்கால், இந்திரனே! மதிக்கத் தகுந்த வரைகள் குறுக்கும் நெடுக்குமாகப் பத்துக் கீறி அமைத்தபின் அழகு பொருந்திய ஒன்பது வரைகளின் அறைகளை எண்ணிப் பார்த்தால் எண்பத்தொன்றாகும். மான் : மன் என்பதன் திரிபு, இந்திரனாகிய மாணவன்; (137) இந்திரன். தேன் - அழகு.

மானே - இந்திரனே. மதிவரை பத்திட்டு - குறுக்கும் நெடுக்குமாக மதிக்கும் வரைகளைப் பத்தாகக் கீறி. தேனே...மே - அப்படி ஏற்பட்ட 81 அறைகள்.

## 1340. ஒன்றிய சக்கரம் ஓதிடும் வேளையில்

1340. ஒன்றிய சக்கரம் ஓதிடும் வேளையில்
வென்றிகொள் மேனி மதிவட்டம் பொன்மையாங்
கன்றிய ரேகை கலந்திடுஞ் செம்மையில்
என்றிய லம்மை எழுத்தவை பச்சையே.

குறித்த சக்கரத்தை முறையாக ஓதும் வேளையில் சக்கரத்தின் மேலிடும் வரை மதிவட்டம் போன்றிருத்தல்வேண்டும். அதனைப் பொன்நிறமாக அமைத்தல்வேண்டும். அழுத்தமாக வரையப்பட்ட ஏனைய வரைகள் சிவப்பு நிறமாக அமைத்தல்வேண்டும். ஞாயிற்றினை ஒத்துத் திகழும் அம்மையின் எழுத்தாகிய 'நமசிவய' பச்சை நிறமாக அமைத்தல்வேண்டும். இந்நிறங்கள் அனைத்தும் சக்கரத்தினைத் தொழுது பயில்வார்மாட்டும் பொலிந்து விளங்கும். என்றியல்: என்று - ஞாயிறு; இயல் - தன்மை. பொன்மை செம்மை பசுமை இவற்றை முறையே அறிவு ஆட்சி அடைவு ஆகவும் கூறலாம். அடைவு - நுகர்வு.

மேனி மதி வட்டம் - சக்கரத்தின் மேல் இடும் சந்திரன் போன்ற வரை. கன்றிய ரேகை - ஏனைய வரைகள். என்...எழுத்து - அச் சக்கரத்தின் அறைகளில் இடும் எழுத்துக்கள்.

## 1341. ஏய்ந்த மரவுரி தன்னில் எழுதிய

1341. ஏய்ந்த மரவுரி தன்னில் எழுதிய
வாய்ந்தஇப் பெண்ணெண்பத் தொன்றில் நிரைத்தபின்
காய்ந்தவி நெய்யுட் கலந்துடன் ஓமமும்
ஆய்ந்தலத் தாமுயி ராகுதி பண்ணுமே.

பொருந்திய மரப்பட்டையின்கண் வரைந்த எண்பத் தோரறையிலும் அம்மையின் மந்திர எழுத்தாகிய 'நமசிவய' என்பதனை மாறிமாறி வரைந்தபின், ஓமம் நெய் முதலியவற்றால் வளர்த்துப், பொங்கலும் படைத்து நின்ற ஆகுதியும் செய்க. பெண்: ஆகுபெயராக அம்மையின் எழுத்தைக் குறிக்கும். ஆயந்தலத்: ஆந்தலத்து - தக்கதாய் அமைந்த தூய இடத்து. உயிராகுதி : அவிக்கு உயிர்போன்ற நெற் பொரியாகுதி.1 பூரணவாகுதி: நிறையாகுதி.

மரவுரி - மரப்பட்டை. இப் பெண் - இந்த எழுத்துக்கள். அம்மை எழுத்தென்று மேற்பாட்டிற் கூறியபடி ஈண்டுப் பெண் என்றே கூறினார் எண்பத்தொன்றின் - 81 அறைகளிலும். காய்ந்தவி - சமைத்த சோறு. ஆய்ந் தலத்து - செய்யத்தகும் இடத்தில். உயிராகுதி - பிராண ஆகுதி - பூரண ஆகுதி.

## 1342. பண்ணிய பொன்னைப் பரப்பற நீ பிடி

1342. பண்ணிய பொன்னைப் பரப்பற நீ பிடி
எண்ணிய நாட்களில் இன்பமும் எய்திடும்
நண்ணிய நாமமும் நான்முகன் ஒத்தபின்
துண்ணென நேயநற் சேர்க்கலு மாமே.

சக்கரவடிவாகச் செய்யப்பட்ட திருவருளம்மையின் திருவுருவை உள்ளப் பதைப்பு ஒடுங்க நீ முறையாக வழிபட்டு உறுதியாகக் கைக்கொள்வாயாக. உருவேற்றுதற்கென வரையறுக்கப்பட்ட நாட்களில் இன்பமும் எய்தும். மந்திரவுருவாலும் அம்மை வழிபாட்டாலும் திருவடியுணர்வு கைவந்தவர் நான்முகனை ஒத்தவராவர். நான்முகனை ஒத்தலாவது உறுதிப்பொருள் நான்கினையும் உள்ளவாறுணர்ந்து கைக் கொண்டொழுகி உணர்த்தவல்லாராய் எங்கணும் புகழ் பூசனைபெற்று விளங்குதல். திருவருள் மிக விரைவாக அவ்வுயிரைச் சிவபெருமான் திருவடிக்கீழ்ச் சேர்க்கும். நல்நேயம் - சிவபெருமான்.

பண்ணிய பொன்னை - இயந்திர வடிவமாகச் செய்த பொன்னிறத்தளான நவாக்கரிசத்தியை. பரப்பு அற - பரபரப்பு அற - நிதானமாக. நண்...மாமே - ஆத்ம சத்திகளின் அருள் பெறலாகும்.

## 1343. ஆகின்ற சந்தனங் குங்குமங் கத்தூரி

1343. ஆகின்ற சந்தனங் குங்குமங் கத்தூரி
போகின்ற சாந்து சவாது புழுகுநெய்
ஆகின்ற கற்பூர மாகோ சனநீருஞ்
சேர்கின்ற ஒன்பதுஞ் சேரநீ வைத்திடே.

பேரறிவுப் பேராற்றலின் வகை ஒன்பது என்பர். இவற்றையே நவசத்தி என்பர். இவ் ஒன்பது ஆற்றலையும் ஒருபுடையொப்பாகக் கூறப்படும் ஒன்பது பொருள்களைத் தொகையாகச் சேர்த்து வைக்கப்படும் முறைமை ஓதப்படுகின்றது. அவை வருமாறு: நன்மையாகின்ற சந்தனம், குங்குமம், கத்தூரி, எங்கணும் நறுமணம் பரவும் சாந்து, சவாது, புனுகு, நெய், பச்சைக்கருப்பூரம், கோரோசனை கலந்த தூநீர் என்பன.

போகின்ற - வாசனை வீசுகின்ற. ஆகோசனம் - பசுவினின்றும் எடுக்கப்படும் கோரோசனை. ஒன்பது - சந்தனம் (1) குங்குமம்
கத்தூரி (3) சாந்து (4) சவ்வாது (5) புழுகு (6) நெய் (7) கற்பூரம் (8) கோரோசன நீர் (9)

## 1344. வைத்திடும் பொன்னுடன் மாதவ நோக்கிடிற்

1344. வைத்திடும் பொன்னுடன் மாதவ நோக்கிடிற்
கைச்சிறு கொங்கை கலந்தெழு கன்னியைத்
தச்சிது வாகச் சமைந்தஇம் மந்திரம்
அர்ச்சனை யாயிரம் ஆயிரஞ் சிந்தியே.

பெருந்தவப்பேற்றால் பொன்தகட்டில் வரைந்த சக்கரத்தின்கண் விளங்கும் அழகிய கொங்கையுடைய கன்னியம்மையைக் கவர்ச்சியுறச் செய்யும் இம் மந்திரத்தை ஆயிரமுறை உருவேற்றினால் ஆயிரம் அருச்சனையாகும். ஆயிரமுறை உருவேற்றுக. கை - அழகு. ஆயிரம் ஆயிரம்: அடுக்கு அளவின்மை குறித்து நின்றது.

வைத்திடும் பொன்னுடன் - சக்கரத்தின்கண் தாபிக்கப்பட்டிருக்கும் பொன்மயமாகிய நவாக்கரி சத்தியுடன். கை - அழகிய. தச்சு - வசியம்.

## 1345. சிந்தையி னுள்ளே திகழ்தரு சோதியாய்

1345. சிந்தையி னுள்ளே திகழ்தரு சோதியாய்
எந்தை கரங்கள் இருமூன்றும் உள்ளது
பந்தமா சூலம் படைபாசம் வில்லம்பு
முந்தை கிலீமெழ முன்னிருந் தாளே.

அன்பர் உள்ளத்தின்கண் அளவிறந்த இயற்கைப் பேரொளியாய் விளங்கும் அம்மை தந்தையாகவும் தோற்றமருள்வள். அத் தோற்றத்தின்கண் திருக்கைகள் ஆறினிலும், மழு, சூலம், தோட்டி, கயிறு, வில், அம்பு என்னும் ஆறு கருவிகள் காணப்படும். இவைகள் கிலீம் என்னும் வித்தெழுத்தில் தோன்றுவன. அவ் வித்தெழுத்தைச் சேர்த்தொலிக்க அம்மை முன்னிற்பள். பந்தம் - தீப்பந்தம்; மழு. படை - தோட்டி.. கைகள் ஆறு ஓதுவதால் திருமுகங்கள் மூன்று கொள்ளப்படும்.

எந்தை - தந்தைபோலும் அன்புள்ள. பந்தம் - மழு, கிலீம் - பீச எழுத்து.

## 1346. இருந்தனர் சத்திகள் அறுபத்து நால்வர்

1346. இருந்தனர் சத்திகள் அறுபத்து நால்வர்
இருந்தனர் கன்னிகள் எண்வகை எண்மா
இருந்தனர் சூழ எதிர்சக் கரத்தே
இருந்த கரமிரு வில்லம்பு கொண்டே.

திருவருளம்மையின் விரிந்த ஆற்றல்களாவார் அறுபத்து நால்வர். மதிக்கத் தகுந்த எண்வகை ஆற்றலரும் உளர். இவர்கள் அனைவர்களும் நவாக்கரி சக்கரத்தின் சூழவும் திருமுன்பும் இருப்போராவர். திருவருளம்மையின் இரண்டு திருக்கையிலும் வில்லும் அம்பும் காணப்பெறும்.

எண் வகை - மதிக்கத்தகுந்த.

# 1347. கொண்ட கனகங் குழைமுடி யாடையாய்க்

1347. கொண்ட கனகங் குழைமுடி யாடையாய்க்
கண்டஇம் முத்தங் கனல்திரு மேனியாய்ப்
பண்டமர் சோதிப் படரித ழானவள்
உண்டங் கொருத்தி உணரவல் லாருக்கே.

திருவருளம்மையின் காதணியும், திருமுடியும், ஆடையும் பொன்வண்ணமாவன. திகழ்கின்ற பெரிய முத்துக்களாலாவன அணிகள். திருமேனி தழல் வண்ணம். தொன்மையிலேயே இயற்கைச் செவ்வொளியாய் விளங்குவன உதடுகள். ஒப்பில்லாத அம்மையின் இத் திருவுருவினை அவள் அருட்கண் கொண்டு கண்டு வழிபடுக. அத்தகை வழிபாட்டினர்க்கே அம்மை வெளிப்பட்டருள்வள்.

கனகம்குழை - பொன்னாலாகிய குழை. கண்டவிம் முத்தம் -பருமுத்து. கனல் திருமேனி - கனல் நிறமேனி. சோதிபடர் இதழ் - செவ்வதரம்.

## 1348. உணர்ந்திருந் துள்ளே ஒருத்தியை நோக்கிற்

1348. உணர்ந்திருந் துள்ளே ஒருத்தியை நோக்கிற்
கலந்திருந் தெங்குங் கருணை பொழியும்
மணந்தெழும் ஓசை யொளியது காணுந்
தணந்தெழு சக்கரந் தான்தரு வாளே.

திருவருள் துணையால் சக்கரத்தில் தோன்றும் திருவுருவினை நன்றாக வுணர்ந்திருந்து உள்ளத்தின் உள்ளே நோக்கினால் நோக்குவார்க்கு எங்குங் கலந்து பேரருள் பொழிவள். அகத்தெழும் ஓசை மணி முதற் (586) பத்தும் புலனாகும். அம்மையும் சக்கரத்தினின்றும் போந்து வெளிப்பட்டு உருவாய்த் தோன்றி அருள்புரிவள்.

மணந்து - கலந்து. ஓசை - மணி கடல் முதலிய பத்து விதமான ஒலி. தணந்து - நீங்கி; (அஃதாவது சக்கரத்தினின்றும் தோன்றி.)

## 1349. தருவழி யாகிய தத்துவ ஞானங்

1349. தருவழி யாகிய தத்துவ ஞானங்
குருவழி யாகுங் குணங்களுள் நின்று
கருவழி யாகுங் கணக்கை யறுத்துப்
பெருவழி யாக்கும் பேரொளி தானே.

வீடுபேற்றினைத் தருதற்குத் திருவடியுணர்வு - சிவஞானம் கைவருதல்வேண்டும். அது 'தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தக்' கைகூடும். குருவருள் கிடைத்ததும் சிவபெருமானின் எண் குணங்களும் ஆருயிர்மாட்டு மேம்பட்டுத் திகழும். திகழவே பிறப்புக்குக் காரணமாகிய வினைத்தொடக்கு அறும். வினைத்தொடக்கறப் பெருவழியாகிய செல்லாத செந்நெறிச் செல்வர். செல்லவே திருவருட் பேரொளி முன்னிற்கும்.

தருவழி - முத்தியைத் தரக்கூடிய. கரு...அறுத்து - பிறவி வேரை அறுத்து. பெருவழி - முத்தி.

## 1350. பேரொளி யாய பெரிய பெருஞ்சுடர்

1350. பேரொளி யாய பெரிய பெருஞ்சுடர்
சீரொளி யாகித் திகழ்தரு நாயகி
காரொளி யாகிய கன்னிகை பொன்னிறம்
பாரொளி யாகிப் பரந்துநின் றாளே.

முச்சுடர்க்கும் ஒளிகொடுத்து மூவாப் பேரொளிச் சுடராய் விளங்குவது திருவருள். சிறந்த இயற்கைஒளியாத் திகழும் முழுமுதல்வி நீலமேனி வாலிழையினளாவள். அவள் என்றும் திரிபிலாக் கன்னி. பொன்னிறத்தையுடைய நிலவுலகத்தில் வாழ்கின்ற ஆருயிர் அனைத்திற்கும் அறிவொளியாக உடனாக நிறைந்து நின்றனள்.

காரொளி - நீல ஒளி. பாரொளி - உலகத்துக்கு ஒளி.

## 1351. பரந்த கரம்இரு பங்கயம் ஏந்திக்

1351. பரந்த கரம்இரு பங்கயம் ஏந்திக்
குவிந்த கரமிரு கொய்தளிர்ப் பாணி
பரிந்தருள் கொங்கைகண் முத்தார் பவளம்
இருந்தநல் லாடை மணிபொதிந் தன்றே.

திருவருளம்மையின் நான்கு திருக்கைகளுள் மேல் நோக்கிய இருகைகளும் பரந்த கைகள் எனப்படும். மார்பினிடத்தும் திருவடி சுட்டியும் விளங்குந் திருக்கைகள் குவிந்த கைகள் எனப்படும். பரந்த கைகள் இரண்டிலும் நீர்ப்பூக்களாகிய தாமரையும் குமுதமும் காணப்படும். குவிந்த கைகள் இரண்டிலும் விரல்கள் விரிந்து காணப்படுதலால் தளிரின் சாயல்போன்று காணப்படும். கொங்கைகளால் ஏனைத் தாயர் ஆருயிர்கட்கு உடல் வளமாம் உணவு நல்குவர். திருவருள்தாய் உயிர் வளமாம் உணர்வு நல்குவள். அதுவே திருநெறியதமிழ் பாடும் சீருணர்வாகும். அம்மையின் அருட்கொங்கைகள் அத்தகையன. அஃது ஆளுடைய பிள்ளையார்க் கருளிய திருமுலைப்பாலின் சிறப்பால் உணரலாம். அங்கொங்கைகள் முத்தணியும், பவழவண்ணமும், அகத்தமை மணியும், தன் கண்ணை மறைக்கும் கச்சுப்பூணுதலும் உடையன. 'உடுப்பார்தம் கண்மறைக்கும் உள்ளுடைகாண்பார்கண், தடுக்குமால் மேலாடை சார்ந்து' என்பதனை நினைவுகூர்க.

பரந்தகரம் - அபயகரம். குவிந்தகரம் - சின்முத்திரைக்கரம்.

## 1352. மணிமுடி பாதஞ் சிலம்பணி மங்கை

1352. மணிமுடி பாதஞ் சிலம்பணி மங்கை
அணிபவ ளன்றி யருளில்லை யாகுந்
தணிபவர் நெஞ்சினுள் தன்னரு ளாகிப்
பணிபவர்க் கன்றோ பரகதி யாமே.

மாணிக்கம் பதித்த திருமுடியும் சிலம்பணிந்த திருவடியும் உடைய மங்கை செந்நிறப் பொருள்கள் அணிவதன்றிக் கருமைநிறம் வாய்ந்த பொருள்கள் அணிபவளல்லள். பேரன்பு பூண்டு ஒழுகும் மெய்யடியார் நெஞ்சினுள் அருளால் விளங்கித் தோன்றுவள். தொழுது வணங்கும் தொண்டர்க்குத் திருவடிப்பேறு நல்குவள்.

தணிபவர் - கற்று அடங்கினவர்.

## 1353. பரந்திருந் துள்ளே அறுபது சத்தி

1353. பரந்திருந் துள்ளே அறுபது சத்தி
கரந்தன கன்னிகள் அப்படி சூழ
மலர்ந்திரு கையின் மலரவை ஏந்தச்
சிறந்தவர் ஏத்துஞ் சிரீம்தன மாமே.

சக்கரத்தினுள்ளே பரந்த இடங்களினுள்ளே ஆற்றல்கள் அறுபதும் காணப்படும். ஆற்றல்கள் - சத்திகள். திருவருட் கன்னிகள் எண்மரும் சூழ மறைந்திருப்பர். விரிந்த இருகைகளிலும் தாமரையும் குமுதமும் தாங்குவள். சிறந்த தொண்டர்கள் ஓதும் 'சிரீம்' என்னும் வித்தெழுத்துத் திருவடிச் செல்வத்தை நல்கும. சத்திகள் - யோகினிகள். கன்னிகள் - வசினியாதி எண்மர்.

சிரீம் தனம் - செல்வத்தைக் கொடுக்கும் பீச மந்திரம்.

## 1354. தனமது வாகிய தையலை நோக்கி

1354. தனமது வாகிய தையலை நோக்கி
மனமது வோடி மரிக்கிலோ ராண்டிற்
கனமவை யற்றுக் கருதிய நெஞ்சந்
தினகர னாரிட செய்திய தாமே.

திருவருட் செல்வமாகிய அம்மையை மறவா மனத்தான் திருவைந்தெழுத்தோதி நோக்கினால் மன அடக்கம் எளிதாக வந்து வாய்க்கும். அடங்கிய மனத்துடன் ஓராண்டு பயின்றால் ஆசைப்பளுவாகிய பற்று நீங்கித் திருவருளால் எண்ணியவெல்லாம் கைகூடும். சிவச் சுடராம் தினகரனார் திருவடிப்பேறே அவர் விழையும் செய்தியாகும். தினகரனார்: பகலவனார்; பகல் - தினம். கரன் - செய்பவன்.

ஓடி மரிக்கில் - அடங்கினால். கனமிவையற்று - ஆசை ஒழிந்து. தினகரன் - சூரியன்.

## 1355. ஆகின்ற மூலத் தெழுந்த முழுமலர்

1355. ஆகின்ற மூலத் தெழுந்த முழுமலர்
போகின்ற பேரொளி யாய மலரதாய்ப்
போகின்ற பூரண மாக நிறைந்தபின்
சேர்கின்ற செந்தழல் மண்டல மானதே.

மூலத்திடத்துத் தோன்றும் பெரிய தாமரைமலர், திருவருளாற்றலாகிய அம்மை வீற்றிருந்தருள வாய்ந்த நறுமலர். அம்மலரின்கண் ஆருயிர்ப்புரியும் அன்பிற்குத் தக்கவாறு திருவருள் பெருகும். பெருகியபின் செந்தழல் மண்டலமாம் சிவத்தின் திருவடியைச் சேர்ப்பிக்கும்.

## 1356. ஆகின்ற மண்டலத் துள்ளே அமர்ந்தவள்

1356. ஆகின்ற மண்டலத் துள்ளே அமர்ந்தவள்
ஆகின்ற ஐம்பத் தறுவகை யானவள்
ஆகின்ற ஐம்பத் தறுசத்தி நேர்தரு
ஆகின்ற ஐம்பத் தறுவகை சூழவே.

மேற்கூறிய சிவச்சுடர் மண்டலத்துள்ளே விரும்பி உறைபவள் திருவருளம்மை. உயிரும் மெய்யுமாம் ஐம்பத்தோரெழுத்தும் வித்தெழுத்தைந்தும் ஆகிய ஐம்பத்தாறு எழுத்துக்களையும் இயக்கும் ஆணையளும் அவளே. அவற்றை இயக்க ஐம்பத்தாறு ஆற்றலளாயும் நிற்பவளும் அவளே. ஐம்பத்தாறு எழுத்துக்களையும் இயக்கும் ஐம்பத்தாறு இயக்கிகள் சூழ நடுவில் வீற்றிருப்பவளும் அவளே. இயக்கிகள் - அதி தேவதைகள். ஆற்றலள் - சத்தி.

ஐம்பத்து அறுவகை - அக்கரங்கள் 51 - பீசம் 5-ஆக 56. ஐம்பத்து அறுவகை சூழ - 56 அக்கரதேவதைகள் சூழ.

## 1357. சூழ்ந்தெழு சோதி சுடர்முடி பாதமாய்

1357. சூழ்ந்தெழு சோதி சுடர்முடி பாதமாய்
ஆங்கணி முத்தம் ஆழகிய மேனியுந்
தாங்கிய கையவை தார்கிளி ஞானமாய்
ஏந்து கரங்கள் எடுத்தமர் பாசமே.

திருவருளம்மையை அருட்கண்ணால் நோக்குவார்க்கு அவ் அம்மை முடிதொட்டு அடிகாறும் இயற்கைப் பேரொளிப்பிழம்பாய்த் தோன்றுவள். அவள்தம் அழகிய திருமேனியும் பெருமுத்துப் போன்ற வெண்ணிறமாக இருக்கும். அம்மையின் திருக்கைகள் நான்கில் ஒன்றில் மெய்யுணர்வு அடையாளமும், மற்றொன்றில் புகல்தரு அடையாளமும், ஒன்றில் பளிங்கு மணியும், பிறிது ஒன்றில் பசுங்கிளியும் காணப்பெறும். மெய்யுணர்வு அடையாளம் - சின்முத்திரை. புகல்தரு அடையாளம் - திருவடி சுட்டுதல். இங்ஙனம் திருக்கைகள் தாங்கிநிற்றல் பேரருளாலேயாம். மாபாசம் - பேரருள்.

தாங்கிய கை - அன்பரை ஆதரிக்கும் அபயகரம். தார் - படிகமாலை. ஞானம் - சின்முத்திரை.

## 1358. பாசம தாகிய வேரை யறுத்திட்டு

1358. பாசம தாகிய வேரை யறுத்திட்டு
நேசம தாக நினைத்திரும் உம்முளே
நாசம தெல்லாம் நடந்திடும் ஐயாண்டிற்
காசினி மேலமர் கண்ணுத லாகுமே.

அம்மையின் திருவருளால் பாசமாகிய பற்றுக்களனைத்தையும் அறுத்திட்டுப் பேரன்பால் திருவடியை இடையறாது நெஞ்சுளே நினைந்திரும். இப் பயிற்சி ஐந்தாண்டு நிறைவதன்முன் தீமைகளனைத்தும் தாமே அகன்றொழியும். நிலவுலகில் கண்ணுதல் திருவருள் கைவரப்பெற்று மெய்யடியாராகத் திகழ்வர்.

## 1359. கண்ணுடை நாயகி தன்னரு ளாம்வழி

1359. கண்ணுடை நாயகி தன்னரு ளாம்வழி
பண்ணுறு நாதம் பகையற நின்றிடில்
விண்ணமர் சோதி விளங்க ஹிரீங்கார
மண்ணுடை நாயகி மண்டல மாகுமே.

வனப்பாற்றலாகிய கண்ணுடைய முதல்வியின் திருவருளால் பண்ணொடு பொருந்திய நாதமாகிய முதல் ஒலி ஆருயிர்க்குச் சிறப்புறுவதன்பொருட்டு உறவாக நிற்கும். நின்றபொழுது திருவருள் வெளியில் வீற்றிருக்கும் சிவன் விளங்கித் தோன்றுவன். ஹ்ரீங்கார வித்தெழுத்துக்குரிய நடப்பாற்றலாகிய மண்ணுடை முதல்வி விழுச்சுடர்ச் சிவமண்டலத்தில் விளங்குவள். வனப்பாற்றல் - பராசத்தி. நடப்பாற்றல் - திரோதான சத்தி: ஆதி சத்தி; 'மறைத்துக் கொடுநிற்பது.'

## 1360. மண்டலத் துள்ளே மலர்ந்தெழு தீபத்தைக்

1360. மண்டலத் துள்ளே மலர்ந்தெழு தீபத்தைக்
கண்டகத் துள்ளே கருதி யிருந்திடும்
விண்டகத் துள்ளே விளங்கி வருதலால்
தண்டகத் துள்ளவை தாங்கலு மாமே.

நவாக்கரி சக்கரமாகிய ஒளிமண்டலத்துள் மிக்கு எழுகின்ற விழுச்சுடராகிய அம்மையை அருளால் கண்டு நெஞ்சுள்ளே இடையறாது நினைமின். அவ்வம்மையின் திருஅருளால் களங்கமொழியும். மாசகற்றி அம்மை விளங்கிவருதலால், நடுநாடியினுள் அம்மையுடன் ஆருயிரும் விளங்கித் தோன்றும்.

மண்டலத்துள்ளே - நவாக்கரி சக்கரத்துள்ளே. விண்டு - களங்கம் ஒழிந்து. தண்டு அகத்து - வீணா தண்டத்துள்.

## 1361. தாங்கிய நாபித் தடமலர் மண்டலத்து

1361. தாங்கிய நாபித் தடமலர் மண்டலத்து
ஓங்கி எழுங்கலைக் குள்ளுணர் வானவள்
ஏங்க வரும்பிறப் பெண்ணி யறுத்திட
வாங்கிய நாதம் வலியுட னாகுமே.

ஓசைக்கு இடனாகவுள்ள கொப்பூழின்கண் காணப்பெறும் தாமரைமலர் மண்டலத்து விளங்கும் கலைகளுக்கு முதலாம் ஓசைமெய்க்குள் உணர்வாய்த் திகழ்பவள் அம்மை. ஆருயிர்களை வருந்தும்படி செய்யும் பிறப்பினை எவ்வாறு அறுப்பதென்று கருதி அறுத்திடத் தோன்றும் நாதம் அருளால் மேலும் மேலும் உரத்ததாய் ஒலிக்கும். ஓசைமெய் - நாத தத்துவம்.

நாபித் தடமலர் மண்டலம் - மணி பூரகம். ஏங்க - வருத்தம் உற.

## 1362. நாவுக்கு நாயகி நன்மணி பூணாரம்

1362. நாவுக்கு நாயகி நன்மணி பூணாரம்
பூவுக்கு நாயகி பொன்முடி யாடையாம்
பாவுக்கு நாயகி பாலொத்த வண்ணத்தள்
ஆவுக்கு நாயகி அங்கமர்ந் தாளே.

நாவினுக்கு அருங்கலம் 'நமசிவய' ஆகலின் இதன்கண் குறிக்கப்படும் நடப்பாற்றல் நாவுக்கு முதல்வியாவள். அவள் அணிவது மணி அணியாகும். அவளே செல்வத்திற்கு முதல்வியாவள். பொன்
முடியும் பொன்னாடையும் உடையவளும் அவளே. கல்விக்கு முதல்வி. பால்போலும் வெண்ணிறத்தள், ஆருயிர்க்கு முதல்வி, பேரறிவுப் பேராற்றலம்மை, இந்நிலைகளும் அவளே பூவென்பதைப் பரவெளியில் காணப்படும் ஆயிர இதழ்த்தாமரை எனவும் கூறுவர்.

நாவுக்கு நாயகி - வாகீச்சுரி. பூவுக்கு நாயகி - இலக்குமி. பாவுக்கு நாயகி - வாணி. ஆவுக்கு நாயகி - மனோன்மனி.

## 1363. அன்றிரு கையில் அளந்த பொருள்முறை

1363. அன்றிரு கையில் அளந்த பொருள்முறை
இன்றிரு கையில் எடுத்தவெண் குண்டிகை
மன்றது காணும் வழியது வாகவே
கண்டங் கிருந்தவர் காரணி காணுமே.

திருவருளம்மை தொன்மையில் முப்பொருளுண்மை தேற்றும் வலது திருக்கையில் மெய்யுணர்வடையாளமும், இத் திருக்கையை ஒத்த இடது பக்கத்துத் திருக்கையில் சிவஞானபோதச் சுவடியும், மற்றோர் வலது கையில் பளிங்கு மணியும், அதனையொத்த இடது கையில் சிரகமாகிய கெண்டியும் அமைந்த திருக்கோலத்தள். இத் திருக்கோல வழிபாட்டின் வாயிலாகத் திருச்சிற்றம்பலமாகிய பேரறிவுவெளி காணப் பெறும். அதுகண்டவர் திருவடியின்பம் துய்ப்பர். இவற்றிற்கெல்லாம் காரண காரணியாக இருப்பவள் திருவருளம்மையே.

அன்று - சிருட்டி ஆரம்பத்தில். இருகையில் - சின் முத்திரையைக் காட்டும் கையினாலும், சுவடி ஏந்திய மற்றொரு கையினாலும். அளந்த பொருண்முறை - அளவு படுத்திய ஞானப் பொருள். வெண்குண்டிகை - வெள்ளிய கமண்டலமும், படிக மாலையும்.

## 1364. காரணி சத்திகள் ஐம்பத் திரண்டெனக்

1364. காரணி சத்திகள் ஐம்பத் திரண்டெனக்
காரணி கன்னிகள் ஐம்பத் திருவராய்க்
காரணி சக்கரத் துள்ளே கரந்தெங்குங்
காரணி தன்னரு ளாகிநின் றாளே.

எல்லாவற்றிற்கும் காரணமாக இருப்பன எழுத்துக்களே. அவற்றிற்குரிய தெய்வங்கள் ஐம்பத்திரண்டு. அத் தெய்வங்களை இயக்கும் திருவருட் கன்னியும் ஐம்பத்திருவராவர். இக் கன்னியும் நவாக்கரி சக்கரத்து மறைந்து நின்றருள்வள். எழுத்து ஐம்பத்தொன்று, நவாக்கரி சக்கரம் ஒன்று ஆக ஐம்பத்திரண்டுக்கும் தெய்வமும் கன்னியரும் இவர்கள் ஐம்பத்திருவராவர்.

சத்திகள் ஐம்பத்திரண்டு - அக்கர சத்திகள் 51-ம், நவாக்கரி சக்கர சத்தி 1-ம் ஆக 52.

## 1365. நின்றஇச் சத்தி நிலைபெற நின்றிடிற்

1365. நின்றஇச் சத்தி நிலைபெற நின்றிடிற்
கண்டஇவ் வன்னி கலந்திடும் ஓராண்டிற்
கொண்ட விரதநீர் குன்றாமல் நின்றிடின்
மன்றினி லாடு மணியது காணுமே.

நவாக்கரி சக்கரத்து நிலைபெறும் திருவருள் ஒளி ஓராண்டுப் பயிற்சியில் உயிருடன் கலக்கும். அம்மை வழிபாடாகிய நோன்பினை முட்டின்றிச் செய்துவந்தால் திருச்சிற்றம்பலத்தாடும் சிவ பெருமானின் திருச்சிலம்பொலி கேட்கும். அது மணியொலி முதல் பத்து வகையாகக் கூறப்படும். ஈண்டு மணி யொலியே கேட்கப்படும் என்றலும் ஒன்று. திருவருள் ஒளியிற் கலத்தலாற் பூதத் தீயினை வெல்லுவர்.

## 1366. கண்டஇச் சத்தி இருதய பங்கயங்

1366. கண்டஇச் சத்தி இருதய பங்கயங்
கொண்டஇத் தத்துவ நாயகி யானவள்
பண்டையவ் வாயுப் பகையை யறுத்திட
இன்றென் மனத்துள் இனிதிருந் தாளே.

திருவருளம்மை நான்காம் நிலையாகிய நெஞ்சத் தாமரையின்கண் வீற்றிருந்தருள்வள். அவள்தம் அருள் துணையால் நான்காம் பூதமாகிய காற்றினை வெல்லுவர். அம்மை உள்ளத்தின்கண் உயிர்க்குயிராய் இனிதிருந்தனள்.

கண்ட இச் சத்தி - மணிபூரகத்தில் காணப்பட்ட இந்தச் சத்தி. வாயுப்பகையை அறுத்திட - பிராணாயாமம் கைகூட்டினால்.

## 1367. இருந்தவிச் சத்தி இருநாலு கையிற்

1367. இருந்தவிச் சத்தி இருநாலு கையிற்
பரந்தஇப் பூங்கிளி பாச மழுவாள்
கரந்திடு கேடகம் வில்லம்பு கொண்டங்
குரந்தங் கிருந்தவள் கூத்துகந் தாளே.

திருவருள் அம்மை எட்டுத் திருக்கைகளுடன் திகழ்வள், ஆறு திருக்கைகளிலும் அறுபகை செறும் ஆறுபடைக்கலங்கள் தாங்குவள். அவை முறையே கயிறு, மழு, வாள், வாள்விலக்கி, வில், அம்பு என்பன. வாள்விலக்கி - கேடகம். மற்றைய இரண்டு திருக்கைகளுள் ஒன்று அஞ்சலி அடையாளம். மற்றொன்று புகலருள் அடையாளம். அஞ்சலென்றமைப்பது சொல்லாதலின் அத் திருக்கையின் அகத்தே சொல்லுறுப்பாம் கிளியும் அமைக்கப்பெறும் ஆர்வ மேலீட்டால் ஆரவாரித்து ஆருயிர் உய்ய அப்பன் திருக்கூத்துக் கண்டருள்வள். குரந்து - குரைத்து. ஆரவாரித்து.

இருநாலுகை - எட்டுக்கை; பரசம் - மழு - வாள் கேடகம் - வில் - அம்பு - அபயம் - வரதம். அபயகரத்தில் கிளி. இவ்வாறு கொள்க. குரந்து - ஆரவாரித்து.

## 1368. உகந்தனள் பொன்முடி முத்தார மாகப்

1368. உகந்தனள் பொன்முடி முத்தார மாகப்
பரந்த பவளமும் பட்டாடை சாத்தி
மலர்ந்தெழு கொங்கை மணிக்கச் சணிந்து
தலைந்தங் கிருந்தவள் தான்பச்சை யாமே.

திருவருளம்மை பொன்முடியினையும் முத்துமாலையினையும் விழைந்தவள். நிறைந்த பவழமாலையும் செம்பட்டுடையும் பூண்டவள். அண்ணாந்து ஏந்திய வனமுலையின்கண் கச்சுப்பூண்டவள். ஆருயிர் இன்புற்றுய்ய மலர்ந்த திருமுகத்துடன் திகழ்ந்திருந்தனள். அவள்தம் திருமேனி பச்சை நிறமாகும்.

பச்சை - பச்சை நிறத்தி.

## 1369. பச்சை இவளுக்குப் பாங்கிமார் ஆறெட்டு

1369. பச்சை இவளுக்குப் பாங்கிமார் ஆறெட்டு
கொச்சையார் எண்மர்கள் கூடி வருதலாற்
கச்சணி கொங்கைகள் கையிரு காப்பதாய்
எச்ச விடைச்சி இனிதிருந் தாளே.

பச்சைத் திருமேனியுடைய அம்மைக்குச் சூழ இருக்கும் பாங்கிமார் ஆறெட்டாகிய நாற்பத்தெண்மர். அணுக்கமாக இருக்கும் மழலை மொழித் தோழியர் எண்மர். இவர்களோடு கூடித் திருவுலாக் கொள்வள். இவ் விருதிறத்தினரும் இருபுறக் காவலராவர். இந்நிலையில் இளைத்தது போன்று காணப்படும் சிறிய இடையினையுடைய அம்மை இனிது வீற்றிருந்தனள். எச்ச - இளைத்த. இடைச்சி - இடையையுடையவள். இருகை - இருபுறம். எச்ச : எய்த்தலென்பதன் மரூஉ.

பாங்கிமார் ஆறெட்டு - பரிவார சத்திகள் 48. கொச்சை யார் எண்மர் - தோழியர் 8. கையிரு - இருகை; இருபுறம். எச்ச இடைச்சி - சிற்றிடைச்சி.

## 1370. தாளதி னுள்ளே தாங்கிய சோதியைக்

1370. தாளதி னுள்ளே தாங்கிய சோதியைக்
காலது வாகக் கலந்துகொள் என்று
மாலது வாக வழிபாடு செய்துநீ
பாலது போலப் பரந்தெழு விண்ணிலே.

திருவருளம்மை தாமரை நாளம் போலும் உச்சித் தொளையிலே விளங்கிக்கொண்டிருக்கும் திருவருட்சுடரை நடுநாடி உயிர்ப்புடன் கூடிச்சென்று வேறறக் கலந்து கொள்ளென்று அருளினள். திருவருள் அம்மையினிடத்துப் பேரன்பு பூண்டு வழிபாடு செய்வாயாக. கள்ளமில் உள்ளத்தால் அவ் வுள்ளம் பால்போலாகி, வெளியாகிய புருவ நடுவின்கண் அவ் வெளியுடன் நிறைந்திருப்பாயாக.

தாள் - பிரமரந்திரம். கால் - பிராணவாயு. மால் - விருப்பம். பாலதுபோல - களங்கம் அற்று. விண் - புருவமத்தி.

## 1371. விண்ணமர் நாபி இருதய மாங்கிடைக்

1371. விண்ணமர் நாபி இருதய மாங்கிடைக்
கண்ணமர் கூபங் கலந்து வருதலாற்
பண்ணமர்ந் தாதித்த மண்டல மானது
தண்ணமர் கூபந் தழைத்தது காணுமே.

புருவ நடுவின்கண் மதிமண்டலத்து அமிழ்தம் தங்கியுள்ளது. அது மந்திர உருவால் மேல்வயிறு நெஞ்சம் இவ் விரண்டற்கும்
மேலிடமாகிய கழுத்தின்கண் வந்து தங்கும். அதனால் அக் கழுத்திடத்தை அமிழ்தக்கிணறு என்று அறைவர். இதனால் உடம்பகத்துள்ள ஞாயிற்று மண்டலம் குளிர்ச்சி எய்தும். கூபம் - கிணறு.

கூபம் - விசுத்தி.

## 1372. கூபத்துச் சத்தி குளிர்முகம் பத்துள

1372. கூபத்துச் சத்தி குளிர்முகம் பத்துள
தாபத்துச் சத்தி தயங்கி வருதலால்
ஆபத்துக் கைகள் அடைந்தன நாலைந்து
பாசம் அறுக்கப் பரந்தன சூலமே.

அமிழ்தக் கிணற்றினுள் சத்தி தண்ணளி பொருந்திய பத்துத் திருமுகங்களோடு கூடியவள். அவளால் ஞாயிற்று மண்டிலத்தின் வெப்பம் வேண்டிய அளவாக விளங்குகின்றது. ஆருயிர்கட்கு இடருற்ற பொழுதெல்லாம் அவ் விடரையகற்றி நலமுறுத்தித் திடமுடன் வாழச் செய்யும் திருக்கைகள் இருபதென்ப. முத்தலை வேலாகிய சூலம் ஆவிகளது மும்மல அழுக்கை அகற்ற எங்கும் விரிந்து திகழ்கின்றது.

தாபத்துச் சத்தி - ஆதித்திய மண்டல சத்தி. ஆபத்துக் கைகள் - ஆபத்துக் காலத்தில் உதவும் கைகள்.

## 1373. சூலந்தண் டொள்வாள் சுடர்ப்பறை ஞானமாய்

1373. சூலந்தண் டொள்வாள் சுடர்ப்பறை ஞானமாய்
வேலம்பு தமருக மாகிளி விற்கொண்டு
காலம்பூப் பாசம் மழுகத்தி கைக்கொண்டு
கோலஞ்சேர் சங்கு குவிந்தகை எண்ணதே.

குறித்த திருக்கைகள் இருபதன் கண்ணும் கருதத்தக்க சில கருவிகள் ஈண்டுக் கூறப்படுகின்றன. அவை வருமாறு: முத்தலை வேல், கதை, விளக்கமிக்க வாள், சிறந்த பறை, அறிவொளியாய் விளங்கும் வேல், அம்பு. உடுக்கை, ஆகிளி, வில், நீண்ட காம்பையும் அழகினையுமுடைய தாமரைப்பூ, கயிறு, மழு, கத்தி, அழகுமிக்க சங்கு, திருவடி சுட்டிக் கூட்டுவிக்கும் திருக்கையாகிய குவி கையும் என்க.

## 1374. எண்ணமர் சத்திகள் நாற்பத்து நாலுடன்

1374. எண்ணமர் சத்திகள் நாற்பத்து நாலுடன்
எண்ணமர் சத்திகள் நாற்பத்து நால்வராம்
எண்ணிய பூவித முள்ளே யிருந்தவள்
எண்ணிய எண்ணங் கடந்துநின் றாளே.

விரும்பத்தகுந்த நாற்பத்து நான்கு ஆற்றல்கள் தம்மைச் சூழ வீற்றிருக்கும் அருளாற்றலர் நாற்பத்து நால்வராவர். இவர்கள் நடுவுள் கழுத்தாகிய விசுத்தியினிடமாக வீற்றிருந்தருளும் திருவருளம்மை நினைப்பைக் கடந்து நீங்காது நிற்கும் நிலையினளாவள். எண்ணம் - நினைப்பு; சங்கற்பம்.

## 1375. கடந்தவள் பொன்முடி மாணிக்கத் தோடு

1375. கடந்தவள் பொன்முடி மாணிக்கத் தோடு
தொடர்ந்தணி முத்து பவளங்கச் சாகப்
படர்ந்தல்குற் பட்டாடை பாதச் சிலம்பு
மடந்தை சிறியவள் வந்துநின் றாளே.

மாற்றம் மனங்கழிய நின்ற மறையவளாகிய திருவருளம்மை கருதுவார் கருதும் திருவுரு ஆவள். அது வருமாறு : அழகிய பன்மணி குயின்ற பொன்னார் நன்முடியினள். மாணிக்கத் திருத்தோடு அணிந்தவள். முகத்தினாலும் பவழத்தினாலும் ஆய அணி அணிந்தவள். முத்தும் பவழமும் கரையில் கோத்த கச்சுப்பூண்டவள். படர்ந்த அல்குலினை உடையவள். அவ் வல்குலின்மேல் பட்டாடை உடுத்தவள். திருவடிக்கண் சிலம்பு பூண்டவள். அளவிறந்த பொறுமையள். என்றும் கன்னியாக இருப்பவள். கருதுவார் கருத்துக்கியைய எழுந்தருளி வந்து அருள் புரிபவள். சிறுவள் - கன்னி.

## 1376. நின்றஇச் சத்தி நிரந்தர மாகவே

1376. நின்றஇச் சத்தி நிரந்தர மாகவே
கண்டிடு மேரு வணிமாதி தானாகிப்
பண்டைய வானின் பகட்டை யறுத்திட்டு
ஒன்றிய தீபம் உணர்ந்தார்க்குண் டாமே.

என்றும் கன்னியாக நின்றருளும் பேரறிவுப் பேராற்றலளாகிய அம்மை அகத்தவஞ் சேர் உயிர்களுடன் எப்பொழுதும் விளங்கித் தோன்றுவள். அங்ஙனம் தோன்றுதலால் மேரு என்று சொல்லப்படும் புருவ நடுவில் அணிமா முதலாகச் சொல்லப்படுகின்ற எண் வகைச் சித்திகளும் தாமாகவே வந்து கைகூடும். ஆருயிர்களினது தொன்மைப் பிணிப்பாம் மலத்தை அறுத்திடத் துணைபுரியும் திருவடி யுணர்வாம் உள்ளொளி விளக்கம் அருளாலுணர்ந்தவர்களுக்கு உண்டாகும். பகடு - மலம், பிணிப்பு; கட்டு.

மேரு - புருவமத்தி. ஆனின் பகடு - ஆன்மாவின் பாசம். தீபம் - ஒளியாகிய சத்தி.

## 1377. உண்டோர் அதோமுகம் உத்தம மானது

1377. உண்டோர் அதோமுகம் உத்தம மானது
கண்டஇச் சத்தி சதாசிவ நாயகி
கொண்ட முகமைந்து கூறுங் கரங்களும்
ஒன்றிரண் டாகவே மூன்றுநா லானதே.

அருளோன் என்று சொல்லப்படும் சதாசிவக் கடவுளின் கீழ் நோக்கிய திருமுகம் அம்மையின் திருமுகமாகும். அத் திருமுகமே சிறந்ததாகும். அவ் வாற்றல் சேர் அம்மையே சதாசிவ நாயகி ஆவள். இத் திருமுகத்தோடு சேர்ந்து சதாசிவக் கடவுளுக்குத் துணைவியாகிய அம்மைக்கு ஐந்து திருமுகங்கள் உண்டு. ஐந்து திருமுகங்களுக்கும் பத்துத் திருக்கைகள் உண்டு.

அதோமுக . . நாயகி - அதோ முக சத்தி; சதாசிவ நாயகியாகும். ஒன்று..ஆனதே - 1 - 2 - 3 - 4 - 10.

## 1378. நன்மணி சூலங் கபாலங் கிளியுடன்

1378. நன்மணி சூலங் கபாலங் கிளியுடன்
பன்மணி நாகம் மழுகத்தி பந்தாகுங்
கன்மணி தாமரைக் கையில் தமருகம்
பொன்மணி பூணாரம் பூசனை யானதே.

மேல் ஓதிய சதாசிவ நாயகியின் திருக்கைகள் பத்திலும் காணப்படும் பொருள்கள் வருமாறு: அழகிய பளிங்குமாலை, முத்தலை வேல், மண்டையோடு, பசுங்கிளி, பல மணிகளையுடைத்தாகிய பாம்பு, மழுப்படை, கத்தி, பூப்பந்து, மாணிக்கம் போல் விளங்கும் செந்தாமரை, உடுக்கு என்பன. பொன்னாலும் மணியாலும் ஆகிய பல அணிகள் பூண்டவள். இத்தகைய திருவுருவே வழிபாட்டுக்குரிய திருவுருவமாகும்.

## 1379. பூசனைச் சத்திகள் எண்ணைவர் சூழவே

1379. பூசனைச் சத்திகள் எண்ணைவர் சூழவே
நேசவள் கன்னிகள் நாற்பத்து நேரதாய்க்
காசினிச் சக்கரத் துள்ளே கலந்தவள்
மாசடை யாமல் மகிழ்ந்திருந் தார்களே.

பூசனைக்குரிய திருவருளம்மை கன்னிப் பெண்கள் நாற்பதின்மர் சூழவீற்றிருப்பள். இக் கன்னிப் பெண்களைச் சூழ ஆற்றல் மிக்க நாற்பதின்மர் சூழ்ந்திருப்பர். இவற்றிற்கு நடுவே உலகச் சக்கரம் அமைந்திருக்கும். அச் சக்கரத்துள் வழிபாடு செய்வார் குற்றமடையாமல் அம்மை எழுந்தருளியிருப்பள் உலகச்சக்கரம் - காசினிச் சக்கரம்; பூப் பிரத்தான யந்திரம்.

எண்ணைவர் - நாற்பதின்மர். கன்னிகள் - பரிவார தெய்வப் பெண்கள். காசினி - பூமியில்.

## 1380. தாரத்தி னுள்ளே தயங்கிய சோதியைப்

1380. தாரத்தி னுள்ளே தயங்கிய சோதியைப்
பாரத்தி னுள்ளே பரந்துள் எழுந்திட
வேரது வொன்றிநின் றெண்ணு மனோமயங்
காரது போலக் கலந்தெழு மண்ணிலே.

தாரம் என்று சொல்லப்படும் ஓங்காரத்தினுள் சுடரொளி விளங்கும். அச் சுடரொளியைப் பாரமாகிய உயிர்ப்பினுள் நிறைந்து எங்கும் எழும்படி செய்தல் வேண்டும். அதற்கு வேராகிய மூலத்தினின்று எண்ணுதற்குரிய மனவடிவம் விளங்குதல் வேண்டும். அவ்வடிவம் உறக்க நிலையாகிய நெஞ்சத்திடத்து உயிர் நிற்பதுபோல் அம்மை வடிவில் அடங்கி நிற்கும். உயிர்ப்பு - பிராணவாயு.

தாரம் - பிரணவம். பாரம் - பிராணவாயு. வேர் - மூலாதாரம். கார் - சுழுத்தி நிலை.

## 1381. மண்ணில் எழுந்த அகார உகாரங்கள்

1381. மண்ணில் எழுந்த அகார உகாரங்கள்
விண்ணில் எழுந்து சிவாய நமவென்று
கண்ணில் எழுந்தது காண்பரி தன்றுகொல்
கண்ணில் எழுந்தது காட்சி தரஎன்றே.

மூலாதாரத்தில் எழுந்த ஓங்காரத்தின் வகையாகிய அகர உகரங்கள் ஓங்காரத்தின் விரியாகிய அருள் வெளிக்கண் தோன்றிய 'சிவயநம' என்று திகழும். அருள்வெளியில் தோன்றி அவ் வருண் மறை உச்சித்தொளையிலும் எழுந்து விளங்கும். அது வேறெங்கும்காண ஒண்ணாதது. வரிவடிவாகக் கண்ணுக்கு காட்சிதர வந்தது. அங்ஙனம் வந்தது அத் தமிழ் மறையினை உணர்வில் உணர்தற் பொருட்டேயாம். மண் - மூலாதாரம். விண் - அருள்வெளி. கண் உச்சித்தொளை. காட்சி - கண்ணுக்குப் புலனாதல்.

மண்ணில் - மூலாதாரத்தில். விண்ணில் - ஆஞ்ஞையில். கண்ணில் - பிரமரந்திரத்தில். கண்ணில் எழுந்தது - தோன்றியது.

## 1382. என்றங் கிருந்த அமுத கலையிடைச்

1382. என்றங் கிருந்த அமுத கலையிடைச்
சென்றங் கிருந்த அமுத பயோதரி
கண்டங் கரமிரு வெள்ளிபொன் மண்ணடை
கொண்டங் கிருந்தது வண்ணம் அமுதே.

புருவமத்தியில் காணப்படும் திங்கள் மண்டலத்துள் வீற்றிருந்தருளும் அம்மை அருளமுத முலையினள் அவளுடைய திருக் கழுத்து வெண்ணிறம். திருக்கை பொன்னிறம். அத் திருக்கையினிடத்து மண்ணாலாகிய சிரகம் விளங்கும். அத் திருவருள் அம்மையின் நிறம் வெண்மை நிறமாகும். சிரகம் - கமண்டலம். அமுதம் - வெண்மை. மண்ணடை - சிகரம்.

அமுதபயோதரி - அமுதேச்சுரி. மண்ணடை. மண்ணாற் செய்த கமண்டலம்.

## 1383. அமுதம தாக அழகிய மேனி

1383. அமுதம தாக அழகிய மேனி
படிகம தாகப் பரந்தெழு முள்ளே
குமுதம தாகக் குளிர்ந்தெழு முத்துக்
கெமுதம தாகிய கேழிலி தானே.

திருவருளம்மை அமுதம் போலும் வெண்மை நிறம் பொருந்திய திருமேனியை யுடையவள். கருதுவார் கருத்தினுள் பளிங்கு போன்று வெண்நிறமாகத் தோற்றமருள்வள். குமுதம் போன்ற குளிர்ந்த பருத்த முத்துமாலை அணிந்தவள். என்றும் ஒன்று போல் நின்று நிலைப்பவள். அதனால் கேழலாதவள் என்று அழைக்கப்படுவள். குமுதம் - வெள்ளாம்பல். கெமுதம்: கெழுமுதம் - பொருந்திய: இடைக்குறை. கேழிலி - அழிவிலாதவள்.

படிகம் - பளிங்கு நிறம். குமுதம் - அல்லி. கெமுதம் பொருந்திய.

## 1384. கேடிலி சத்திகள் முப்பத் தறுவரும்

1384. கேடிலி சத்திகள் முப்பத் தறுவரும்
நாடிலி கன்னிகள் நாலொன் பதின்மரும்
பூவிலி பூவிதழ் உள்ளே யிருந்திவர்
நாளிலி தன்னை நணுகிநின் றார்களே.

காலவரையறையைக் கடந்த நாளிலியாகிய அம்மையின் திருவடியிணையைப் பொருந்தி நின்றவர்கட்கு அவ் வம்மை அழிவில்லாதவள் என்றும், முப்பத்தாறு சத்திகளையுடைய நாடற்கரிய முப்பத்தாறு கன்னிப் பெண்கள் தன்னைச் சூழவீற்றிருப்பவளென்றும், பிறப்பில்லாதவளென்றும், இறப்பில்லாதவளென்றும், நெஞ்சத்தாமரையாகிய பூவிதழினுள் இருந்து விளங்குகின்றவளென்றும் அருளால் உணரவரும். நாடிலி - நாடற்கரிய. பூவிலி - பிறப்பில்லாதவள். பூ - பிறப்பு. இவர் - விளங்குகின்ற. நணுகல் - பொருந்தல்.

பூவிலி - தோற்றம் இல்லாதவள்.

## 1385. நின்றது புந்தி நிறைந்திடும் வன்னியுங்

1385. நின்றது புந்தி நிறைந்திடும் வன்னியுங்
கண்டது சோதி கருத்துள் இருந்திடக்
கொண்டது வோராண்டு கூடி வருகைக்கு
விண்டவௌ காரம் விளங்கின அன்றே.

நெஞ்சத் தாமரையின்கண் எஞ்சாது விளங்கும் சிவ பெருமானும். மேலே கூறிய திருவருளம்மையைச் சுடருருவாய் அன்பர்கள் உள்ளத்து அமைத்திடலால் அவர்கட்கு ஓராண்டில் கைகூடியருள்வன். அக்காலத்து ஔகாரம் முதலிய வித்தெழுத்துக்கள் விளங்கும் என்க. புந்தி - நெஞ்சம். வன்னி - சிவன். சோதி - திருவருட்சுடர்.

புந்தி....வன்னி - அனாகதத்தில் விளங்கும் உருத்திரன். கூடி வருகை - சித்தியாதல். விண்ட - மேலே சொன்ன.

## 1386. விளங்கிடு வானிடை நின்றவை யெல்லாம்

1386. விளங்கிடு வானிடை நின்றவை யெல்லாம்
வணங்கிடு மண்டலம் மன்னுயி ராக
நலங்கிளர் நன்மைகள் நாரண னொத்துச்
சுணங்கிடை நின்றிவை சொல்லலு மாமே.

வானத்திலுள்ள அண்டகோடிகளில் வாழும் உயிரினங்கள் அனைத்தையும் நிலவுலகில் வாழும்.
உயிரினங்களைப்போன்று கண்டு கூறுதலும் உண்டாகும்; தூயமாயையின்கண் வாழும் கீழுள்ள திருமாலை இயக்கும் அருளாற்றல் வாய்ந்த மாலாகிய நாரணனைப் போன்று இடையறாது நெஞ்சத்தாமரையில் சிவனை நினையும் திருவருளுடையார்க்கு சுணங்கு - பூந்தாள்: நெஞ்சத்தாமரை (ஆகுபெயர்).

வானிடை....எல்லாம் - வானிலுள்ள ஏனைய அண்டங்களின் உயிர்கள் எல்லாம். மண்டலம் - பூமி.

## 1387. ஆமே அதோமுக மேலே அமுதமாய்த்

1387. ஆமே அதோமுக மேலே அமுதமாய்த்
தாமே யுகாரந் தழைத்தெழுஞ் சோமனுங்
காமேல் வருகின்ற கற்பக மானது
பூமேல் வருகின்ற பொற்கொடி யானதே.

கீழ்நோக்கியுள்ள திங்கள் மண்டிலத்தின்மேல் அமிழ்தமயமாய்த் தோன்றும் எழுத்து உகரமாகும். அதன்கண் திங்களும் செழித்து விளங்கும். முற்கூறிய கடம்பவனத்தில் எழுந்தருளியுள்ள திருவருளம்மை நெஞ்சத் தாமரையில் எழுந்தருளும் அழகிய கொடி போலும் அம்மையாகும். கா - சோலை; கடம்பவனம்.

காமேல் - கடம்பவனத்தில்.

## 1388. பொற்கொடி யாளுடைப் பூசனை செய்திட

1388. பொற்கொடி யாளுடைப் பூசனை செய்திட
அக்களி யாகிய ஆங்காரம் போயிடும்
மற்கட மாகிய மண்டலந் தன்னுளே
பிற்கொடி யாகிய பேதையைக் காணுமே.

திருவருள் அம்மையின் வழிபாட்டினை முறைப்படி செய்திடப் பிறப்புக்கு வித்தாய்ப் பெருமயக்கம் தரும் ஆங்காரமாகிய ஆணவம் அகன்றிடும். நிலைபெற்ற பெருவெளியாகிய பேரொடுக்க நிலைக்களத்தின் கண் 'சிவசிவ' என்னும் தமிழ் நான்மறையில் பிற்கொடியாகச் சிகரத்துக்குப் பின் தோன்றும் வகரமாகிய வனப்பாற்றலாம் அருளம்மை வந்து தோன்றுவள். மற்கடம்: மன்கடம் - நிலைபெற்ற பெருவெளி.

அக்களி - மயக்கம் கொடுக்கின்ற; மற்கடம் - கூடம் மன்னும்.

## 1389. பேதை யிவளுக்குப் பெண்மை அழகாகுந்

1389. பேதை யிவளுக்குப் பெண்மை அழகாகுந்
தாதை யிவளுக்குத் தாணுவு மாய்நிற்கும்
மாதை யிவளுக்கு மண்ணுந் திலகமாய்க்
கோதையர் சூழக் குவிந்திடங் காணுமே.

பேரிரக்கம் வாய்ந்த திருவருளம்மையாகிய இவளுக்கு அனைத்துயிரையும் பேணும் பெண்மை நிறைந்த அழகாகும். இவ்வம்மைக்குச் சிவபெருமான் தாங்குந்தூணனைய தந்தையாகும். பெண்ணரசியாகிய இவளுக்கு அழகுறுத்தும் பொட்டுப் போன்று சூழக் கன்னிப் பெண்கள் பலர் சூழ்ந்திருப்பர். அவ்விடமே அம்மை கூடியிருக்கும் அருளிடமாகும். மாதை: மாது + ஐ - பெண்ணரசி. தாணு - தூண். மண்ணுதல் - அழகுறுத்தல் கோதையர் - கன்னியர். குவிந்திடம் - கூடியிருக்குமிடம். ஐ - அரசி.

பெண்மை - பெண்தன்மை. மாது ஐ - பெண்களுக்குத் தேவி. மண்ணும் - அலங்கரிக்கின்ற.

## 1390. குவிந்தனர் சத்திகள் முப்பத் திருவர்

1390. குவிந்தனர் சத்திகள் முப்பத் திருவர்
நடந்தனர் கன்னிகள் நாலெண்மர் சூழப்
பரந்தித ழாகிய பங்கயத் துள்ளே
இருந்தனள் காணும் இடம்பல கொண்டே.

சூழயிருக்கும் ஆற்றற் செல்விகள் முப்பத்திருவர்.
இவர்கட்கு அகமாகச் சூழ்ந்துவரும் கன்னிப் பெண்கள் முப்பத்திருவராவர்.
இவர்களனைவரும் சூழ்ந்துவர இடப்பால் திகழும் விரிந்த இதழ்களையுடைய நெஞ்சத் தாமரையின்கண் வீற்றிருந்தருளும் அம்மை மூல முதலாகிய ஆறு நிலைக்களங்களையும் கொண்டு தோன்றியருள்வள்.

## 1391. கொண்டங் கிருந்தனர் கூத்தன் ஒளியினைக்

1391. கொண்டங் கிருந்தனர் கூத்தன் ஒளியினைக்
கண்டங் கிருந்தனர் காரணத் துள்ளது
பண்டை மறைகள் பரந்தெங்குந் தேடுமால்
இன்றென் மனத்துளே இல்லடைந் தாளுமே.

கூத்தனார் ஒளியினைக்கொண்டு அங்கு எழுந்தருளியிருக்கும் திருவருளம்மையை அகத்தவமுடையோர் கண்டிருந்தனர். கூத்தனாரும் திருவருளம்மையாகிய சிவகாமியாரும் கலந்த கலப்பால் உலகுடல் பொருள்களெல்லாம் காரியப்பட்டுத் தோற்றுகின்றன. தொன்மைச் செந்தமிழ்த் திரு நான் மறைகளெல்லாம் அம்மையின் அடியிணையை எங்கணும் தேடுகின்றன. அத்தகைய அம்மை என் உள்ளத்தைக் குடியிருப்பாகக்கொண்டு என்னை ஆண்டருளினள் என்க.

காரணத்துள்ளது - எவற்றிற்கும் காரணமாயுள்ளது.
இல்லடைந்தாளுமே - குடியாகக்கொண்டு எனை ஆளும்.

## 1392. இல்லடைந் தானுக்கும் இல்லாத தொன்றில்லை

1392. இல்லடைந் தானுக்கும் இல்லாத தொன்றில்லை
இல்லடைந் தானுக் கிரப்பது தானில்லை
இல்லடைந் தானுக் கிமையவர் தாமொவ்வார்
இல்லடைந் தானுக்கு இல்லாதில் லானையே.

என்றும் நிலைத்த மாறாத இல்லாகிய திருவருளம்மையின் திருவடியைப் பெற்றவர் இல்லடைந்தாராவர். அத்தகைய திருவடியில் லடைந்தார் யாண்டும் எவரிடத்தும் ஒன்றினையும் இரவார். அத்தகை யோர்க்கு விண்ணாட்டில் வாழும் வினைப்பயன்சேர் இமையவரும் ஒப்பாகார்; தாழ்ந்தவரேயாவர். அவர்கட்குக் கிடைத்தற்கரிய பொருள் என்று ஏதும் இல்லை. அதற்குக் காரணம், அவர்கள் புகலிடமாக ஆருயிர்க்குத் தலைவனாம் சிவபெருமானையே கொண்டிருத்தலான் என்க. ஈற்றடியில் இல்லாதில்லானையே என்பதை : இல் + ஆன் + ஐ = புகலிடமாக ஆனாகிய உயிர்கட்கு ஐயாகிய தலைவன் சிவபெருமானாவன். இல்லாதில் - அதனால் இல்லாத பொருள் ஏதும் இல்லை.

ஆன் ஐ - விடையை வாகனமாக உடைய சிவன்.

# 1393. ஆனை மயக்கும் அறுபத்து நாற்றறி

1393. ஆனை மயக்கும் அறுபத்து நாற்றறி
ஆனை யிருக்கும் அறுபத்து நாலொளி
ஆனை யிருக்கும் அறுபத்து நாலறை
ஆனையுங் கோடும் அறுபத்து நாலிலே.

ஆன் ஆகிய உயிருடன் கலக்கும் உச்சித்தொளைக்குமேல் சொல்லப்படும் அருளாணையாகிய நிலைக்களத்தினின்றும் மேனோக்கி எழுந்து விரியும் கதிர்கள் அறுபத்துநான்கு. ஓமொழி உருவாம் சிவ பெருமான் ஆனை எனப்படுவன். ஆன் + ஐ: உயிர்கள் தலைவன். அவன் அவ்வொளிகட்கு உள்ளொளியாக விளங்குவன். அச் சிவபெருமான் அவ்வொளிக் கதிர்களாகிய அறையில் வீற்றிருந்தருள்வன். சிவபெருமானும் மூலமுதலா எழுந்து அப்பால் வரையும் செல்லும் திருவருளாற்றலாகிய ஒலிக் கலையும் அவ்வொளிக் கதிர்களூடு தோன்றியருளும். ஒன்று முதல் நான்கு தந்திரங்களும் முறையே ஒரு புடையொப்பாக 'அறம் பொருள் இன்பம் வீடு' என்னும் நாற்பொருள்களும் ஓதுவனவாகும். நாற்பொருள்களே ஆலமர் செல்வன் அருளியதாகும். அவ்வுண்மை வரும் ஆளுடைய பிள்ளையார் அருளிய தென்றமிழ்மறையான் உணர்க:

"சுழிந்த கங்கை தோய்ந்த திங்கள் தொல்லரா நல்லிதழி
சழிந்த சென்னிச் சைவ வேடந் தாளிணைத் தைம்புலனும்
அழிந்த சிந்தை அந்தணாளர்க் கறம்பொரு ளின்பம் வீடு
மொழிந்த வாயான் முக்கணாதி மேயதுமுது குன்றே."
- 1. 53 - 6.

சழிந்த - கங்கை முதலிய நாற்பொருளும் பொறுத்தமையால் சப்பளித்த. அழிந்த - செம்மை வாய்ந்த. தமிழ் நான்மறைகள் தொன்றுதொட்டே நம் தமிழகத்துப் பயின்று வந்த வாய்மை திருமறைக்காடு திருஒத்தூர் என்னும் தூயதமிழ்த் திருப்பெயர்களான் உணரலாம். தமிழ் நான்மறைகள் அனைவராலும் சிறப்புறப் பயின்று வந்தமையானும், இத்திருவூர்களில் நூலும் நூல் வல்லார்களும் மிக்கிருந்தமையானும் இவ்வூர்கள் முதன்மையாய் அத் திருப்பெயர்கள் எய்துவவாயின. அம் மறைகளிருந்த தடமுந்தெரிய வொண்ணாதபடி அழித்தவர் பேர்கொண்ட பார்ப்பார். அச் செந்தமிழ்த் திருமாமறையின் தொடர்பாயெழுந்த திருமுறைகளை அழிக்க மடிதற்று முற்படுவாரும் அவரே இந் நாற்பொருளும் அறம் என்னும் ஒரு சொல்லால் வழங்கப்படும் மேல்வரும் ஐந்து தந்திரங்களும் பேறு, பேற்று வழி, வழிபாடு, வழிபாட்டுறுதி, மாறாவாழ்வு என்னும் 'சிவயசிவ' மந்திரப் பொருள் ஐந்தினையும் ஒருபுடை யொப்பாக உணர்த்துவனவாகும். இவ்வைம்பொருளும் அருள் என்னும் ஒரு சொல்லால் வழங்கப்பெறும்.

ஆனை - ஆன்மாவை. ஆணை - பிரணவ சொரூபியான சிவன். கோடு - சத்தி.

நான்காம் தந்திரம் முற்றும்.

## 1394. ஊரும் உலகமும் ஒக்கப் படைக்கின்ற

1394. ஊரும் உலகமும் ஒக்கப் படைக்கின்ற
பேரறி வாளன் பெருமை குறித்திடின்
மேருவும் மூவுல காளி யிலங்கெழுந்
தாரணி நால்வகைச் சைவமு மாமே.

ஊர் உலகம் உடல் உறுப்பு உண்பொருள் எல்லாம் கருவியின்றிக் கலந்தியக்கும் கருத்தளவானே படைத்தருள்கின்றவன் சிவன். அவன் இயல்பாக விளங்கும் முற்றுணர்வுடைய பேரறிவாளனாவன். அவன்றன் அளவிலாப் பெருமையை நாமறிந்த அளவில் குறிப்போமானால் மேருவாகிய பொன்மலையும், மூவுலகையும் ஒருங்கு ஆளும் அவன் (சிவபெருமான்) படைத்தருளும் உலகமும், சுத்தம், மிகுசுத்தம், மார்க்கம், கடுஞ்சுத்தம் என்னும் நால்வகைச் சைவமும் ஓர் புடை ஒப்பாகச் சொல்லலாம். அசுத்தம் - மிகுசுத்தம். நால்வகைச் சைவமும் சிவபெருமானின் நின்றே தோன்றுவன. துளக்கமில்லாத சிவபெருமானின் அளத்தற்கரிய பெருமையினுக்குப் பொன்மலையொப்பாகும். எங்கும் நீக்கமற நிறைந்து நிற்கும் இயல்பினுக்கு நிலவுலகம் ஒப்பாகும். தவறாது திருவடிப்பேறாம் மெய்ப்பயன் தருதற்கு நால்வகைச் சைவம் ஒப்பாகும். சுத்தம் - உண்மை, இயற்கை, நால்வகைச் சைவம் வருமாறு: இயற்கைச் செந்நெறி, மீ இயற்கைச் செந்நெறி, மெய்யுணர்வுச் செந்நெறி, மெய்கண்டார் செந்நெறி என்பன.

இவற்றை முறையே, சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடுஞ்சுத்த சைவம் எனவும் கூறுப. அசுத்தம் என்பதில் 'அ' அப்பால் என்பதன் முதலெழுத்தாகும். எனலு மொன்று. செந்நெறி எனினும் சிவனெறி எனினும் ஒன்றே.

நால்வகைச் சைவம் - சுத்த சைவம், அசுத்த சைவம், மார்க்க சைவம், கடுஞ்சுத்த சைவம். மேரு - பூமியின் மத்திய இரேகையும் நிரட்சர ரேகையும் சேரும் இடத்தில் இருந்து கடல் கொண்டடொழிந்த மேரு மலை. சுமேரு - வட துருவம் (North pole.) குமேரு - தென் துருவம் (South pole.) இங்கே நிலைதவறாமைக்கு உவமையாக வந்தது. மூவுலகு - பரந்து விரிந்த தன்மைக்கு உவமை. சைவம் - மெய்ப்பயன் தருவதற்கு உவமை.

## 1395. சத்தும் அசத்துஞ் சதசத்துந் தான்கண்டு

1395. சத்தும் அசத்துஞ் சதசத்துந் தான்கண்டு
சித்தும் அசித்துஞ் சேர்வுறா மேநீத்த
சுத்தம் அசுத்தமுந் தோய்வுறா மேநின்று
நித்தம் பரஞ்சுத்த சைவர்க்கு நேயமே.

நிலைத்த மெய்ப்பொருளாகிய சிவமும், நிலையாத பொய்ப் பொருளாகிய மாயாகாரிய உலகமும் திருவருட் கண்ணால் கண்டு, தூமாயை தூவாமாயை ஆகிய இரண்டிலும் மயங்குவதாகிய பற்றுக் கொள்ளாதுநின்று சுட்டுணர்வு சிற்றுணர்வாகிய சித்தும், உணர்வில்லதாகிய அசித்தும் தம்பால் தோன்றாமல் உள்ளம் கடந்த சுத்தமாகிய உண்மைச் சைவர்க்கு என்றும் யாண்டும் உள்ளதாகிய பெரும்பொருள் சிவன். அச் சிவன் அவர்கட்கு இறவாத இன்பவழிவாய் அன்பு செய்யப்படும் பொருளாவன். நேயம் - அன்பு செய்யப்படும் பொருள். சுத்தம் - தூமாயை; அசுத்தம் - தூவாமாயை. நீத்தல் - கடத்தல். பரம் - பெரும் பொருள்.

சத்து - மெய்ப்பொருள் ஆகிய பதி. அசத்து. மாயை. உடல். சதசத்து - உயிர். சித்து - ஞானம். அசித்து - அஞ்ஞானம். சுத்தம் - சுத்தமாயை. அசுத்தம் - அசுத்த மாயை. நித்தம் - நித்தியம். பரம் - சிவம்.

## 1396. கற்பன கற்றுக் கலைமன்னு மெய்யோகம்

1396. கற்பன கற்றுக் கலைமன்னு மெய்யோகம்
முற்பத ஞான முறைமுறை நண்ணியே
சொற்பத மேவித் துரிசற்று மேலான
தற்பரங் கண்டுளோர் சைவசித் தாந்தரே.

திருமுறை மெய்கண்ட நூல்களாகிய மெய்யுணர்வு நூல்களைத் திருவருள்சேர் நல்லாசான்பால் கற்று, அக் கல்விப் பேற்றான், எய்தக்கூடிய மெய்ப்பொருட் சேர்க்கையாம் சிவயோகத்துக்கு முன்னிலை சீலம் நோன்பு எனப்படுவன. அவ்விரண்டன் உணர்வும் பயிலப்பயிலக் கைகூடும். அம்முறையால் முன்னைப்பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளாகிய சிவத்தைப் பொருந்துவர். அதனால் மலமாயாகன்மங்களாகிய குற்றம் அறும். குற்றமறலும் தற்பரமாகிய விழுமிய முழுமுதற் சிவனைக் காண்பர். அங்ஙனம் கண்டுளோரே சைவசித்தாந்தர் எனப்படுவர். தொல்பதம் - பழம்பொருள். தற்பரம் - தானே பெரும் பொருள்.

கலைமன்னு மெய்யோகம் - நூல்களில் கண்ட உண்மையான யோகம். முற்பதம் - யோகத்திற்கு முந்திய சரியை, கிரியை. தொற்பதம் - தொல்பதம்; சமாதி நிலை.

## 1397. வேதாந்தஞ் சுத்தம் விளங்கிய சித்தாந்த

1397. வேதாந்தஞ் சுத்தம் விளங்கிய சித்தாந்த
நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற காட்சியர்
பூதாந்த போதாந்த மாகப் புனஞ்செய்ய
நாதாந்த பூரணர் ஞானநே யத்தரே.

(ப. இ .) மெய்ப்பொருளை ஐயம் திரிபற விளக்கும் சைவசித் தாந்தமே உண்மை வேதாந்த (2139) மாகும். சித்தாந்தப் பெருநெறி நிற்பாரே நாதமுடிவாகிய சிவனைக் கண்டு இன்புறுவோராவர்; பிறப்பிறப்பாகிய தடுமாற்றம் இலராவர்; பூதமுடிவும் அறிவு முடிவும் கைவரத் தத்துவ மாகிய மெய்க்கூட்டங்களை அடக்குதலாகிய செம்மை நிலையினை எய்துவர்; இவர்களே தத்துவங் கடந்த நிறைபெரும் பொருளைச் சேர்ந்தோராவர். இவர்கள் பேரறிவுப் பிழம்பாம் பெரும் பொருட் சிவனை உணர்ந்து உணர்ந்து ஒப்பிலா இன்பமுறும் ஒண்மையராவர். நேயத்தர் - உணரப்படும் பொருளை உணர்ந்தடைந்தவர்.

வேதாந்தம்...சித்தாந்தம் - சுத்த சைவ சித்தாந்தமே வேதங்களின் முடிவு. பூதாந்தம் - பூதங்களின் முடிவு. போதாந்தம் - ஞான முடிவு. புனம் செய்ய - ஐம்புலக் காட்டினைப் பண்படுத்த.

# 1398. இணையார் திருவடி ஏத்துஞ் சீரங்கத்து

1398. இணையார் திருவடி ஏத்துஞ் சீரங்கத்து
இணையார் இணைக்குழை யீரணை முத்திரை
குணமா ரிணைக்கண்ட மாலையுங் குன்றாது
அணைவாஞ் சரியை கிரியையி னார்க்கே.

தமக்குத் தாமே ஒப்பாகிய நூலுணர்வு நுகர்வுணர்வுகளாகிய இரண்டு திருவடிகளையும் தொழுந் தன்மையருடம்பு சிறப்புடம்பாகும். அவர்கட்கு இரண்டு குண்டலங்கள் காதணியாகக் காணப் பெறும் திருநீறும், திருவைந்தெழுத்தும், அறிவடையாள அங்கையும், நற்பண்பு வாய்ந்த தலையினும் மார்பினுமாகிய இரண்டு சிவமணி மாலைகளும் குறையாது என்றும் பொருந்துவனவாகும். இத்தகையோர் சீலத்தர் நோன்பினர் என்றழைக்கப் பெறுவர். சீரங்கம் - சிறப்புடம்பு.

சீரங்கம் - சிறப்புற்ற சரீரம். ஈரணை முத்திரை - விபூதி அணிந்து அஞ்செழுத்தைச் செபித்துச் சின்முத்திரையுடன். குணமார் - நற்குணத்தைக் கொடுக்கின்ற. இணை - இணைத்த. கண்டமாலை - உருத்திராக்க மாலை. குன்றாது - தவறாது.

## 1399. காதுப்பொ னார்ந்த கடுக்கன் இரண்டுசேர்த்து

1399. காதுப்பொ னார்ந்த கடுக்கன் இரண்டுசேர்த்து
ஓதுந் திருமேனி யுட்கட் டிரண்டுடன்
சோதனை செய்து துவாதெச மார்க்கராய்
ஓதி யிருப்பார் ஒருசைவ ராகுமே.

பொன்னாலாகிய இரண்டு காதணியும், சிவமணி வடமாகிய உட்கட்டிரண்டும் உடையராய் வழியாறினையும் ஆசானருளால் உண்மை காண்டலாகிய தூய்மை செய்து. ஐந்தெழுத்தருமறை கோடலாகிய உபதேசம்பெற்று அதனை இடையறாது ஓதியிருப்பர். அவர் ஒப்பில்லாத சிறந்த சைவராவர். உபதேசத்தைப் பெற்றவர் மெய்கண்டார் என்று அழைக்கப் பெறுவர்.

சோதனை செய்து - அத்துவா சோதனை செய்து. இது நிர்வாண தீக்கையில் செய்யக்கூடியது.

## 1400. கண்டங்கள் ஒன்பதுங் கண்டவர் கண்டனர்

1400. கண்டங்கள் ஒன்பதுங் கண்டவர் கண்டனர்
கண்டங்கள் ஒன்பதுங் கண்டாய் அரும்பொருள்
கண்டங்கள் ஒன்பதுங் கண்டவர் கண்டமாங்
கண்டங்கள் கண்டோர் கடுஞ்சுத்த சைவரே.

நாவலந்தீவு முதலிய நிலவுலகங்கள் ஒன்பது பாகங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. அவ்வொன்பது கண்டங்களையும் இறையுறை திருப்பதிகளாகக் கண்டு வழிபட்டு வலஞ்செய்து வந்தவர், அங்ஙனம் விளங்கும் சிவபெருமானின் அருவம் நான்கு, உருவம் நான்கு, அருவுருவம் ஒன்று ஆகிய ஒன்பது திருமேனிகளையும் கண்டவராவர். இவர்களே வேறுபட்ட பல அண்டங்களையும் அருட்காட்சியால் கண்டவராவர். இவர்கள் கடுஞ்சுத்த சைவர் என அழைக்கப்படுவர். கடுஞ்சுத்த சைவர்: நிலைபேறான உண்மைச் சித்தாந்த சைவர். இச் சிறப்பினரையே அசுத்த சைவர் எனக் குறிக்கப்பெற்றுள்ளது. அ: ஈண்டுத் தலைமை அழகு முதலிய சிறப்புப் பொருளுணர்த்தும்.

கண்டங்கள் ஒன்பது - இப் பூமி. அண்டத்தின் பாகங்கள் ஒன்பது. கண்டு ஆய் - பார்த்து ஆராய்ந்த.

## 1401. ஞானி புவியெழு நன்னூ லனைத்துடன்

1401. ஞானி புவியெழு நன்னூ லனைத்துடன்
மோன திசையும் முழுஎண்ணெண் சித்தியும்
ஏனை நிலமும் எழுதா மறையீறுங்
கோனொடு தன்னையுங் காணுங் குணத்தனே.

திருவடியுணர்வு கைவந்த ஞானியர் ஏழுலகங்களிலும் நிலவும் நல்ல நூற்களுடன் வாய்வாளாநிலையும் எய்துவர்; அறுபத்து நான்கு கலைகளும், அவற்றால் ஏற்படும் அறுபத்துநான்கு பேறுகளும் பெறுவர். இவ்வுலகம் நீங்கிய ஏனை உலகங்களும், உணர்விலுணர்த்தும் எழுதாமறைமுடிவும் காண்பர். யாவர்க்கும் முதல்வனாம் சிவபெருமானையும் யாண்டும் அடிமையாம் தன்மை வாய்ந்த தம்மையும் மாசறக்காணும் வாய்மையராவர். மோனதிசை - மவுனநிலை வாய்வாளாமை. சித்தி - பேறு. வாள் - சொல். வாய்வாளாமை. சொல்லாடாமை எழுதாமறை: ஓசை; நாதம்.

புவியெழு நன்னூல் - பூமியின்கண் தோன்றிய நல்ல நூல்கள். மோன திசை - மவுன நிலை. ஏனை நிலம் - ஏனைய அண்டங்கள். எழுதா மறை - எழுதப்பட்ட வேதங்கள். (எழுதா செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்). கோன் - சிவம் தன்னை - ஆன்மாவை.

## 1402. பொன்னாற் சிவசாத னம்பூதி சாதனம்

1402. பொன்னாற் சிவசாத னம்பூதி சாதனம்
நன்மார்க்க சாதனம் மாஞான சாதனந்
துன்மார்க்க சாதனந் தோன்றாத சாதனஞ்
சன்மார்க்க சாதன மாஞ்சுத்த சைவர்க்கே.

செம்பொன் அனைய சீலம் நோன்பு செறிவு அறிவு என்னும் நால்வகை நன்நெறியும், திருநீற்றுத்துணையும், ஆகிய இவை நன்னெறியாகிய சித்தாந்தச் செந்நெறி. பிறப்பு இறப்பிற் புகுத்தும் புன்னெறிக்கண் என்றும் பொருந்தாத மனக்கோளும் நன்னெறியின் வழித்துணையாகும். மேற்கூறியனவாகிய செந்நெறி நிற்பாரே உண்மைச் சைவர் என்று அழைக்கப்பெறுவர். சுத்தம் - உண்மை; இயற்கை.

பொன்னாற் சிவசாதனம் - பொன்கட்டிய உருத்திராக்க மாலை. நன்மார்க்க சாதனம் - சரியை, கிரியை, யோகம், ஞானம். துன்...சாதனம் - இவை சன்மார்க்கத்திற்கு அடைமொழிகள்.

## 1403. கேடறு ஞானி கிளர்ஞான பூபதி

1403. கேடறு ஞானி கிளர்ஞான பூபதி
பாடறு வேதாந்த சித்தாந்த பாகத்தின்
ஊடறு ஞானோ தயனுண்மை முத்தியோன்
பாடுறு சுத்தசை வப்பத்த நித்தனே.

மலம் அற்ற திருவடியுணர்வுசேர் ஞானி மெய்யுணர்வுச் சிறப்பினனாவன். அவனே குற்றமற்ற மறையும் முறையும் எனப்படும் வேதாந்த சித்தாந்தப் பகுதியிலுள்ள சிவசிவ என்னும் உயிர்போல் ஊடுறும் மெய்யுணர்வு கைவந்த தவத்தோனாவன். அவனே அவாவென்னும் பசையற்றோனாகிய உயிர்வாழ் உண்மை வீடுபேற்றினனாவன். அவனே பெருமைமிக்க உண்மைச் சைவக்கோட்பாட்டினனாவன். அவனே என்றும் நிலைபெற்றோனாவன். அவனே மெய்யுணர்வுச் செந்நெறியினனாவன்.

பாடு - குற்றம். வேதாந்த சித்தாந்தபாகம் வேதங்களின் முடியை ஒத்த சித்தாந்தப் பகுதி. தமிழ்ச் சிவஞான போதமே சித்தாந்த சாத்திரங்களில் முதன்மை பெற்றது. ஆகமங்களின் சாரமாயுள்ளது. அறம், பொருள், இன்பம், வீடு என்னும் தமிழ் நான்மறைகளின் முடியை ஒத்தது. வடமொழி வேதங்களுக்கு ஆகமங்கள் உடன்பாடு இல்லை. அவ் வேதங்களில் அறம், பொருள், இன்பம், வீடு என்னும் பாகுபாடுகளும் இல்லை. இதனை வலியுறுத்தவே 'வேதாந்த சித்தாந்த பாகம்' என்றார் நாயனார். பாடு - பெருமை.

## 1404. சுத்தம் அசுத்தந் துரியங்கள் ஓரேழுஞ்

1404. சுத்தம் அசுத்தந் துரியங்கள் ஓரேழுஞ்
சத்தும் அசத்துந் தணந்த பராபரை
உய்த்த பராபரை யுள்ளாம் பராபரை
அத்தன் அருட்சத்தி யாயெங்கு மாமே.

அசுத்தமாகிய புலம்பின்கண் நனவு கனவு உறக்கம் என்னும் மூன்றும், சுத்தமாகிய புரிவின்கண் நனவு கனவு என இரண்டும், பேருறக்கம் உயிர்ப்படங்கல் என்னும் இரண்டும் ஆகிய ஏழும், நிலைப்பதாகிய காரணமாயையும் நிலையாததாகிய காரிய மாயையும் நீங்கிய பராபரையாகிய திருவருள் ஆருயிரோடு பொருந்தியும் உயிர்க்கு உயிராகியும் நிற்பவளாவள். அவளே அத்தன் அருளாற்றலாகிய அன்னையாவள். அவளே எங்கும் நிறைந்து நின்று எவற்றையும் இயக்குபவளாவள். புலம்பு - கேவலம். புரிவு சுத்தம். உள் - உயிர்க்குயிர்.

தணந்த - நீங்கின. உள்ளாம் பராபரை - ஆன்மாவுக்கு உள்ளிருந்து நடத்தும் சத்தி.

## 1405. சத்தும் அசத்துந் தணந்தவர் தானாகிச்

1405. சத்தும் அசத்துந் தணந்தவர் தானாகிச்
சித்தும் அசித்துந் தெரியாச் சிவோகமாய்
முத்தியுள் ஆனந்த சத்தியுள் மூழ்கினார்
சித்தியு மங்கே சிறந்துள தானே.

சத்து அசத்துக்களாகிய காரண காரிய மாயைகளை மலமற்றமையால் வேறுபடுத்துணரும் இயல்பு அகன்றவராவர். சிற்றுணர்வும் சுட்டுணர்வும் இல்லாச் சிவனிறைவில் அடங்கிச் சிவனே தானாகி வீடுபேற்றின்கண் இறவாத இன்ப இறைவியுள் அடங்கினவராவர். அவர்க்குப் பெரும்பேறும் சிறந்து விளங்கும். சிவ + அகம் = சிவோகம்; சிவநிறைவில் உறைதல்.

சிவோகமாய் - சிவமே ஆய்.

## 1406. தன்னைப் பரனைச் சதாசிவன் என்கின்ற

1406. தன்னைப் பரனைச் சதாசிவன் என்கின்ற
மன்னைப் பதிபசு பாசத்தை மாசற்ற
முன்னைப் பழமல முன்கட்டை வீட்டினை
உன்னத் தகுஞ்சுத்த சைவர் உபாயமே.

உண்மைச் சைவர்கள் உள்ளுற நினைத்து மேற்கொண்டு ஒழுகவேண்டிய வழிவகையான பொருள்கள் எட்டு. அவை : ஆருயிர், இயற்கைப் பேரறிவுப் பெரும்பொருள், அருளோனாகிய சதாசிவன், இறை, உயிர் தளை, தொன்மையாகிய ஆணவமலம், வீடுபேறு என்பன.

தன்னை - ஆன்மாவை. முன்னை அநாதியேயுள்ள. முன் கட்டை - அநாதியே ஏற்பட்ட ஆணவக் கட்டை.

## 1407. பூரணந் தன்னிலே வைத்தற்ற வப்போதம்

1407. பூரணந் தன்னிலே வைத்தற்ற வப்போதம்
ஆரண மந்த மதித்தானந் தத்தோடு
நேரென ஈராறு நீதி நெடும்போகங்
காரண மாஞ்சுத்த சைவர்க்குக் காட்சியே.

ஆருயிர், நிறைவாம் சிவத்துள் அடங்குதலாகிய முற்றுணர்வு எய்துதலும் பண்டைத் தன்முனைப்பாகிய சிற்றுணர்வு அறும். அதுவே மறைமுடிவாம். பேரின்பத்துடன் கலந்து, பன்னிரண்டாம் நிலையில் பெறப்படும் சிவ நுகர்வு முறையாக எய்தும். இவையனைத்தும் சுத்த சைவர்க்குக் காட்சியாம். மதித்தல் - மத்தித்தல்: கலத்தல். மத்தித்தல் என்பது மதித்தலென ஆயது இடைக்குறை.

அற்ற அப்போதம் - ஒழிந்த அந்த ஆன்மபோதம். ஆரணம் அந்தம் - வேதாந்தம். மதித்த - கலந்த. ஈராறு நீதி - 12 ஆதாரங்களின் முடிவு.

## 1408. மாறாத ஞான மதிப்பற மாயோகந்

1408. மாறாத ஞான மதிப்பற மாயோகந்
தேறாத சிந்தையைத் தேற்றிச் சிவமாக்கிப்
பேறான பாவனை பேணி நெறிநிற்றல்
கூறாகு ஞானி சரிதை குறிக்கிலே.

மெய்கண்டார் எல்லையற்ற என்றும் ஒரு படித்தாயிருக்கிற திருவடியுணர்வு கைகூடுதலால் பிறப்புக்கு வித்தாம் பெரிய யோகங்களைப் பொருளாகத் தெளியவொட்டாது உள்ளத்தைத் தெளிவித்துச் சிவனிலையமாக்குவர். முழுதுணர்பேறான சிவனையே நாடுதலாகிய பாவனைபேணி அந்நெறியில் உறைத்துநிற்றல் அறிவிற்சீலம் என்ப்படும் ஞானத்திற் சரியையாகும்.

மதிப்பு - எல்லை. பாவனை - சிவோகம் பாவனை.
கூறாகு ஞானி சரியை - ஞானத்தில் சரியை.

## 1409. வேதாந்தங் கண்டோர் பிரமமித் தியாதரர்

1409. வேதாந்தங் கண்டோர் பிரமமித் தியாதரர்
நாதாந்தங் கண்டோர் நடுக்கற்ற யோகிகள்
வேதாந்த மில்லாத சித்தாந்தங் கண்டுளோர்
சாதா ரணமன்ன சைவர் உபாயமே.

உலகியல் ஒழுக்கங்கூறும் மறைமுடிபு கண்டோர் பெரும் பொருளுணர்வு கைவரப் பெற்றோராவர். அருஞ்சைவர் தத்துவம் முப்பத்தாறன் முடிவினைக் கண்டோர் பிறவித் தடுமாற்றமில்லாத சிவ யோகியராவர். உலகியல் கடந்த உணர்வு நிலையாகிய சித்தாந்தத்தினைக் கண்டோர் பொதுச்சைவர்தம் வழிவகை யுணர்ந்தோராவர்.

வித்தியாதரர் - அறிந்தவர்.

## 1410. விண்ணினைச் சென்றணு காவியன் மேகங்கள்

1410. விண்ணினைச் சென்றணு காவியன் மேகங்கள்
கண்ணினைச் சென்றணு காப்பல காட்சிகள்
எண்ணினைச் சென்றணு காம லெணப்படும்
அண்ணலைச் சென்றணு காபசு பாசமே.

வானத்தை இடமாகக்கொண்டு பொழிகின்ற பெரிய மேகங்களும் அவ் வானத்தைப் போய் ஒட்டாது. கண்ணினாற் காணப்படும் பல காட்சிப்பொருள்களும் கண்ணினைச்சென்று பொருந்தா. அவைபோல நாடுதலாகிய பாவனைக்கு அப்பால்பட்டதென்னும் சிவபெருமானாகிய அண்ணலை யான் என்னும் சிற்றறிவும் எனதென்னும் சுட்டறிவும் ஆகிய பசுபாசங்கள் சென்றணுகா (159) என்க.

வியன் - பரந்த.

## 1411. ஒன்றும் இரண்டும் இலதுமாய் ஒன்றாக

1411. ஒன்றும் இரண்டும் இலதுமாய் ஒன்றாக
நின்று சமய நிராகார நீங்கியே
நின்று பராபரை நேயத்தைப் பாதத்தாற்
சென்று சிவமாதல் சித்தாந்த சித்தியே.

'பொன்னும் பணியும் போல்' பொருள் ஒன்றே என்னும் தன்மையும், 'இருளும் ஒளியும் போல்' வேறு என்னும் தன்மையும் இல்லாமல் 'உடலுயிர் கண் அருக்கன் அறிவொளி போல்' வேறன்மையாகிய புணர்ப்பாய் நின்று, திருவருளால் அன்பு செய்யப்படும் சிவனைச் சத்தி நிபாதமாகிய திருவருள் வீழ்ச்சியால் சென்று சிவமாம் பெருவாழ்வைப் பெற்றுப் பேரின்பம் உறுதல் சித்தாந்தப் பெரும்பேறாகும். இவ்வுண்மை வரும் சிவப்பிரகாசச் செந்தமிழாகமத் திருப்பாட்டானுணரலாம்:

"ஒன்றிரண்டாகி யொன்றின் ஒருமையாம் இருமையாகி
ஒன்றிலொன் றழியும் ஒன்றா தென்னினொன் றாகாதீயின்
ஒன்றிரும் புறழி னின்றாம் உயிரினைந் தொழிலும் வேண்டும்
ஒன்றிநின்றுணரும் உண்மைக் குவமை யாணவத்தொ டொன்றே."

- 10. 8.

மேலும் 'கட்டுங்கால் நார்முன்னாம் கண்ணிக்கண் பூமுன்னாம், ஒட்டிலிறை முன்னுயிர்பின் ஓது' என்னும் ஒப்புங் காண்க.

ஒன்று - ஏகான்மவதாம். இரண்டு - துவிதம். ஒன்றாக நின்று - சுத்த அத்துவிதமாய். சமய நிராகாரம் - மதநிந்தை. நேயத்தை - சிவத்தை.

## 1412. வேடங் கடந்து விகிர்தன்றன் பான்மேவி

1412. வேடங் கடந்து விகிர்தன்றன் பான்மேவி
ஆடம் பரமின்றி ஆசாபா சஞ்செற்றுப்
பாடொன்று பாசம் பசுத்துவம் பாழ்படச்
சாடுஞ் சிவபோ தகர்சுத்த சைவரே.

செந்நெறிக்குக் கூறப்படும் திருக்கோலங்கள் ஏதும் இல்லாமல், கருத்தாலன்றிக் கருவியால் செய்விக்கும் தன்மையில்லாத முழுமுதற் சிவனைப் பொருந்தி ஆரவாரம் இல்லாமல் 'காமம், வெகுளி, மயக்கம் என்னும் மூன்றன் நாமங்'களையும் கெடுத்து, துன்பத்தினை விளைவிக்கும் பசைமலமும் தன்முனைப்பும் அற்றொழிய திருவடியுணர்வு வந்து துணையாகும் மெய்யுணர்வினர் சிவபோதகர் எனப்படுவர். இவர்களே உண்மைச் சைவராவர். சாடுதல் - ஒருசார் துணையாதல். பசை மலம் - வாசனாமலம்; நசை.

விகிர்தன் - சிவன். ஆசாபாசம் - ஆசை, பாசம். பாடொன்று - துன்பம் பொருந்திய. போதகர். ஞானிகள்.

## 1413. உடலான ஐந்தையும் ஓராறும் ஐந்தும்

1413. உடலான ஐந்தையும் ஓராறும் ஐந்தும்
மடலான மாமாயை மற்றுள்ள நீவப்
படலான கேவல பாசந் துடைத்துத்
திடமாய்த் தனையுறல் சித்தாந்த மார்க்கமே.

ஐம்பூதங்களாலான யாக்கையும், ஆறுகோடி மாயாசத்திகள் என்று சொல்லப்படும். செருக்கு, சினம், சிறுமை, இவறல், மாண்பிறந்த மானம், மாணாவுவகை ஆகிய அறுவகைக் குறறங்களும், ஐவகைப் புலன்களும், இவற்றிற்கு நிலைக்களமான காரணமாயையும், ஒழிக்க வேண்டுவனவாய புலம்பினைச் செய்த பழமலமும் அருளால் துடைத்து உறுதியாகத் தன்னையுணர்ந்து தலைவனை யுறுதல் சித்தாந்த சைவச் செந்நெறிச் சீர்மையாகும். உடலான ஐந்து என்பதற்கு உடலின்கண் காணப்படும் நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் என்னும் நிலை ஐந்தும் எனலுமாம். இதுவே மெய்கண்டார் செந்நெறியாகும்.

உடலான ஐந்து - உடலின்கண் ஏற்படும் ஐந்து அவத்தைகளும், ஓர் ஆறும் - காமம் முதலிய ஆறும். ஐந்தும் - ஐம்புலன்களும். அடல் - வலிமை. நீவப்படல் - ஒழிக்கத்தக்க. கேவலபாசம் - சகசமலம்; ஆணவம். தனையுறல் - தன்னை அறிதல்.

## 1414. சுத்தச் சிவனுறை தானதில் தோயாமல்

1414. சுத்தச் சிவனுறை தானதில் தோயாமல்
முத்தர் பதப்பொருள் முத்திவித் தாமூலம்
அத்தகை யான்மா அரனை அடைந்தற்றாற்
சுத்த சிவமாவ ரேசுத்த சைவரே.

உண்மைச் சிவபெருமான் உரைத்தருளிய தமிழ் ஆகமத்தின்கண் சொல்லப்பெறுகின்ற தூமாயை நிலைக்களங்களாகிய பதப்பேற்றின்கண் விருப்புற்றுத் தங்காமல், திருவடிப்பேற்றினர்கள் திருவாய்மலர்ந்தருளிய திருவைந்தெழுத்தே செவியறிவுறூஉவாகிய உபதேசமாகும். அம் மெய்யுணர்வினைப்பெற்ற ஆருயிர் சிவபெருமானின் திருவடிப்பேற்றினைத் தலைக்கூடும். அதனால் அவ்வாருயிர்க்கிழவர் உண்மைச் சிவனாகவே இருப்பர். அவரே சுத்த சைவர் என்றழைக்கப் பெறுவர். சுத்தமெனினும், உண்மை எனினும், இயற்கை எனினும் ஒன்றே. இவரே மெய்கண்டாராவர்.

சிவன் உரை - சிவனால் சொல்லப்பட்ட. தானத்தில் - பதமுத்திகளில் முத்தர் - சீவன் முத்தர். பதப்பொருள் - கூறும் பொருள். முத்திவித்தாம். மூலம் - முத்திக்குக் காரணமாகிய மூலம். அடைந்ததற்றால் - அடைந்தால்.

## 1415. நானென்றுந் தானென்றும் நாடிநான் சாரவே

1415. நானென்றுந் தானென்றும் நாடிநான் சாரவே
தானென்று நானென் றிரண்டிலாத் தற்பதந்
தானென்று நானென்ற தத்துவ நல்கலால்
தானென்று நானென்றுஞ் சாற்றகில் லேனே.

ஆருயிரானது உலகியல் தன்மையில் பிரியாப் பிரிவாக இருப்பதால் நானென்னும் நினைப்பும், சிவனைத் தான் என்னும் நினைப்புங் கொண்டு எண்ணி வாழும். அவ்வுயிர் மீளா அடிமையாகச் சாரவே தானென்றும் நானென்றும் எண்ணும் எண்ணம் தோன்றாமல் அதற்கு மலரும் மணமும்போலக் கலந்து ஒன்றாய்த் தோன்றும் சிவம் நானென்ற நினைவற்றுத் தானென்று மொழியும் உண்மையினை நல்கும். அப்படி நல்கியருளுதலால் தானென்றோ நானென்றோ காற்று மாற்ற மடங்கித் திருவடியின்பத்துய்ப்பாகவே ஆருயிர் நிற்கும். இதற்கு ஒப்பு: கற்கலுறு வாராசான் கல்லூரி நூல்தனையும், பொற்பினுடன் நாடுவர் புக்கதற்பின் - சொற் பொருள் நூல், கற்குஞ் செயலன்றிக் கண்ணார் எவையுமே, அற்புறு பேற்றின்கண்ணும் ஆம் என்பதே. கண்ணார் - கருதார்.

தற்பதம் - தான் ஆகிய பதம். நான் - ஆன்மா. தான் - சிவன்.

## 1416. சாற்றரி தாகிய தத்துவஞ் சித்தித்தால்

1416. சாற்றரி தாகிய தத்துவஞ் சித்தித்தால்
ஆற்றரி தாகிய ஐந்தும் அடங்கிடும்
மேற்றிகழ் ஞானம் விளக்கொளி யாய்நிற்கும்
பாற்பர சாயுச்சிய மாகும் பதியே.

சொல்லவொண்ணாத இறைநிறைவில் அடங்குவதாகிய மெய்ம்மை கைகூடினால் தன்வழி ஈர்க்கும் புலன் ஐந்தும் திருவருளால். ஆருயிரின் வழிச்சென்று அடங்கிடும். அதன்பின் திருவடிப் பேருணர்வாம் விளக்கொளி ஒளிர்ந்து நிற்கும். நிற்கவே தானாதலாகிய பரசாயுச்சியப்பேறுபதியும், பரசாயுச்சியம் - உயர்வற உயர்ந்த ஒரு பெருநலம்.

தத்துவம் - தானென்றும் நானென்றும் இரண்டிலாத் தற்பதம். ஐந்து - புலன்கள் ஐந்தும்.

## 1417. உயிர்க்குயி ராய்நிற்றல் ஒண்ஞான பூசை

1417. உயிர்க்குயி ராய்நிற்றல் ஒண்ஞான பூசை
உயிர்க்கொளி நோக்கல் மகாயோக பூசை
உயிர்ப்பெறு மாவா கனம்புறப் பூசை
செயிற்கடை நேசஞ் சிவபூசை யாமே.

சிவபெருமான் அனைத்துயிரினும் உயிர்க்குயிராய் நிற்கும் உண்மையினை அவனருளால் கண்டுணர்தல் சிறந்த அறிவு வழிபாடாகும். அச் சிவன் உள்ளொளியாய் நின்று அறிவை விளக்கும் அவ் வுண்மை காண்டல் செறிவுவழிபாடாகும். புறத்திருவுருவின்கண் உயிர்க்குயிராய் நிற்கும் சிவபெருமானை ஆவாகனம் முதலாகச் சொல்லப்படுகின்ற அழைத்தல், இழைத்தல், குழைத்தலாகிய தொண்டினைத் திருமுறை வழியாகச் செய்யின் அது நோன்பு வழிபாடாகிய புறப்பூசையாகும். பூசைமுடிவில் மீட்டும் அச் சிவபெருமானை அகத்தே அமைத்தல் நுழைத்த லெனப்படும். 'அழைத்தல் இழைத்தல் குழைத்தல் நுழைத்தல், விழைவார் சிவபூசை வித்து.' அழைத்தல் - ஆவாகனம். இழைத்தல் தாபித்தல். குழைத்தல் - பிராணப் பிரதிட்டை. நுழைத்தல் - உத்வாகனம். இப் புறப்பூசை தலையன்பாற் செய்யப்படும். சிவபூசையாகும். கடைநேசம் - தலையன்பு. கடை : கடுத்தல்; மிகுதல்; தலை.

உயிர்க்குயிராய் நிற்றல் - எல்லா உயிர்களையும் தன்னுயிர் போல் கருதி நிற்றல் (ஞான பூசை). உயிர்க்கொளி

நோக்கல் - உயிரின் கண் ஒளியைக் கண்டு நிற்றல் (யோக பூசை.) உயிர் பெறும் ஆவாகனம் - தன் உயிரின்கண் உள்ள சிவத்தை வெளியிலுள்ள பொருள்களில் தாபித்துப் பூசித்தல் (கிரியா பூசை.)

## 1418. நாடு நகரமும் நற்றிருக் கோயிலுந்

1418. நாடு நகரமும் நற்றிருக் கோயிலுந்
தேடித் திரிந்து சிவபெரு மான்என்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்தபின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாக் கொள்வனே.

இதன்கண் சீலநெறி நிற்போர் திருத்தொண்டு ஓதப்பெறுகின்றது. சிவபெருமான் மெய்யடியார்கள் உய்யுமாறு ஆண்டாண்டு வெளிப்பட்டருள்கின்ற திருநாடு திருநகரம் திருக்கோவில் முதலியவற்றைத் தலையன்பால் தேடித்திரிந்து 'ஆலயம் தானும்அரனெனத் தொழுமே' என்றபடி இடையறாது தொழுவர். அங்ஙனம் தொழுவார்க்கு அகம்புறமாய் இன்றியமையாதன முறையே பாடுதலும் பணிதலுமாம். அங்ஙனம் செய்தார் நல்லுள்ளங்களைச் சிவபெருமான் திருக்கோவிலாகக் கொண்டருள்வன்.

இப் பாட்டில் சரியா பூசையைப் பற்றிக் கூறுகிறார்.

## 1419. பத்தர் சரிதை படுவோர் கிரியையோர்

1419. பத்தர் சரிதை படுவோர் கிரியையோர்
அத்தகு தொண்டர் அருள்வேடத் தாகுவோர்
சுத்த வியமாதி சாதகர் தூயோகர்
சித்தர் சிவஞானஞ் சென்றெய்து வோர்களே.

சீலநெறியிற் செல்வோர் பத்தர் எனப்படுவோர். நோன்பு நெறியிற்செல்வோர் தொண்டர் எனப்படுவர். இயற்கை இயமாதி எண்ணுறுப்புங் கைக்கொண்டோர் சிவயோகர் எனப்படுவர். சிவனை மறவாச் செய்கையோர் சிவஞானி எனப்படுவர். இவர்களே சித்தராவர். இவர்கள் முடிபே சித்தாந்தம். இந் நால்வரும் திருவெண்ணீறு, சிவமணி, திருவைந்தெழுத்து முதலிய திருக்கோலமுடையவராவர். எண்வகையுறுப்பு: அடக்கம், நடக்கை, இருக்கை, வளிநிலை, தொகைநிலை, பொறைநிலை, நினைவு, சமாதி என்பன. இவற்றை இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி எனவும் (பிங்கலந்தை. 419) கூறுப. சமாதி - சிவநிறைவு.

பத்தர் - சரியையாளர். தொண்டர் - கிரியையாளர். சாதகர் - யோகிகள். சித்தர் - சிவஞானிகள்.

## 1420. சார்ந்தமெய்ஞ் ஞானத்தோர் தானவ னாயினோர்

1420. சார்ந்தமெய்ஞ் ஞானத்தோர் தானவ னாயினோர்
சேர்ந்தவெண் யோகத்தர் சித்தர் சமாதியோர்
ஆய்ந்த கிரியையோர் அருச்சனை தப்பாதோர்
நேர்ந்த சரியையோர் நீள்நிலத் தோரே.

திருவடியுணர்வு கைவரப்பெற்ற சிவஞானியர் சிவனிறைவில் அடங்கிச் சிவனாயிருப்பர். எண்வகைத் தவத்தால் சிவயோகம் மேற்கொண்டவர் சிவனார் திருவுருவினைப் பெறுவர். நோன்பினராய கிரியையாளர் சிவன் அணுக்கராயிருப்பர். சீலத்தராய கரியையாளர் சிவவுலகினிலிருப்பர். நீள்நிலம் - சிவவுலகம்; அழியாவுலகம்.

தானவனாயினோர் - சாயுச்சியம். சேர்ந்தவெண்யோகத்தார் - சாரூபத்தார். அர்ச்சனை தப்பாதோர் - சாமீபத்தார். நீணிலத்தோர் - சாலோகத்தார். இம் மந்திரம், சரியையாளர் சாலோகத்தையும், கிரியையாளர் சாமீபத்தையும், யோகத்தார் சாரூபத்தையும், ஞானத்தார் சாயுச்சியத்தையும் அடைவர் என்றது.

## 1421. கிரியை யோகங்கள் கிளர்ஞான பூசை

1421. கிரியை யோகங்கள் கிளர்ஞான பூசை
அரிய சிவனுரு அமரும் அரூபந்
தெரியும் பருவத்துத் தேர்ந்திடும் பூசை
உரியன நேயத் துயர்பூசை யாமே.

நோன்பு செறிவு அறிவு என்னும் முப்பருவத்தும் அழியாப் பயனளிக்கும் என ஆய்ந்தெடுத்துச்செய்யும் சிவபூசை, தலையன்பால் செய்யும் உயர்வற உயர்ந்த உரிய பூசையாகும். இவற்றுள்
நோன்பினர் செறிவினர் ஆகிய இருவரும் கட்புலனாம் திருவுருவப் பற்றுக்கோடுடன் புரிவர். அறிவினர் உணர்வில் திகழும் பற்றுக் கோடில்லாத அறிவுருவிற்றொழுவர். பற்றுக்கோடு - சாதாரம். பற்றுக்கோடின்மை - நிராதாரம். சிவபூசையே உடையவர்பூசை.

கிரியையாளரும் யோகிகளும் செய்வது உருவப் பூசையாகும்; ஞானபூசை என்பது அருவப் பூசையாகும்.

## 1422. சரியாதி நான்குந் தருஞான நான்கும்

1422. சரியாதி நான்குந் தருஞான நான்கும்
விரிவான வேதாந்த சித்தாந்த மாறும்
பொருளா னதுநந்தி பொன்னகர் போந்து
மருளாகு மாந்தர் வணங்கவைத் தானே.

சீலம் நோன்பு செறிவு அறிவு என்னும் நன்னெறி நான்கினும் தனித்தனி முடிந்த முடிபாகக் கொள்ளப்படும் அறிவு நிலையாகிய ஞானம் நான்கு வேதாந்த நெறி ஆறு. அவை கபாலம், காணாதம், பாதஞ்சலம், அச்சபாதம், வியாசம், சைமினியம் என்பன. இவையாறும் புறச்சமயமாகும். சித்தாந்தநெறி ஆறு. அவை வைரவம், வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம் என்பன. இவை யாறும் அகப்புறச் சமயமாகும். சிவவுலகத்தில் நின்று நந்தியங்கடவுள், குன்றாவருளால் குருவுருவாய்த் தோன்றி அறியாமை வயப்பட்டுழலும் மாந்தர்க்கு மெய்ப்பொருளுணர்வு தோன்றுமாறு சீலமுதலிய நன்னெறி நான்கினையும் அருள்புரிந்து முழுமுதற்சிவனை வழிபடுமாறு அமைத்தனன்.

ஞான நான்கு சரியையின் ஞானம், கிரியையின் ஞானம், யோகத்தின் ஞானம், ஞானத்தின் ஞானம். வேதாந்தம் ஆறு காபிலம், காணாதம், பதஞ்சலம், அட்சபாதம், வியாசம், ஜைமீனியம் - 6 சித்தாந்தம் ஆறு - பைரவம் வாமம், காளாமுகம், மாவிரதம், பாசுபதம், சைவம். பொன்னகர் - சிவலோகம். மருள் - அஞ்ஞானம்.

## 1423. சமையம் மலசுத்தித் தன்செயல் அற்றிடும்

1423. சமையம் மலசுத்தித் தன்செயல் அற்றிடும்
அமையும் விசேடமும் அரன்மந் திரசுத்தி
சமைய நிருவாணங் கலாசுத்தி யாகும்
அமைமன்னு ஞானமார்க் கம்அபி டேகமே.

செந்நெறிக்கண் திருமுறை வழியாகச் செய்யப்படும் சிவதீக்கை மூவகைப்படும். அவை சமயம் விசேடம் நிருவாணம் என்ப. சமயதீக்கை என்பது நன்னெறிக்குத் தடையாகிய தீமைகள் பலவற்றின் உண்மையினை யுணர்த்தி அவற்றினைத் தூய்மைப்படுத்தலும் சிவ பெருமானருளின் துணையின்றி எவர்க்கும் யாண்டும் எச்செயலும் இல்லை என்னும் உண்மையுணர்ந்து தற்செயலறுதலுமாம். விசேடதீக்கையாவது 'நந்தி நாமமாகிய' திருவைந்தெழுத்தை இடையறாது கணிப்பதால் எல்லாவகையான அகம்புறத் தூய்மைகள் எய்துவனவாகும். நிருவாண தீக்கையாவது அறுவை வழியாகிய மந்திரம், பதம், வன்னம், தத்துவம், புவனம், கலை என்பனவற்றைத் தூய்மைப்படுத்தலாகும். வழியறு வகையின் வாய்மை வருமாறு : 1. அப் பால்நிலையில் ஒப்பில் அறிவு ஒருசிறிதும் விளங்காது புலம்புற்றுக்கிடந்த ஆருயிர்கட்கு அறிவு விளங்கி அழுந்தி அறிதலாகிய நுகர்வு உண்டாகும்பொருட்டு நுண்ணோசை முதல் செவியோசை ஈறாகிய மொழிகளைத் தோற்றுவிக்கும் கருவிகள் கலையாகும். 2. அம் மொழிகளால் ஆருயிர்கட்கு அழுந்தியறிதல் உண்டாகும்படி முயற்சிக்கும் கருவிகள்

மெய்யாகும். மெய் - தத்துவம். 3. அம் முயற்சியால் கண்டும் கேட்டும் அறியப்படும். புலனுகர்வுக்குரிய இடம் உலகமாகும். உலகம் - புவனம். 4. அம் முயற்சியால் கண்டும் கேட்டும் அறிந்தவற்றின் இயல்புகளையும் அவற்றைப் பெறுதற்குரிய வழிவகைகளையும் உள்ளவாறு உணரும்படி பயிலத்தக்க அறிவுக் கருவியாகிய செந்தமிழ் மறைமுறைகள் எனப்படும் வேதாகமங்களாகிய நூல்கள் எழுத்தெனப்படும். எழுத்து - வருணம். 5. அத் தமிழ் வேதாகமங்களாகிய மறைநூல் முறைநூல்களால் அறியப்படும் நுகர்வுகள் நிலை எனப்படும். நிலை - பதம். 6. அந் நிலைக்கண் வழுவாதொழுகி உய்தற்கு விழுமிய முழுமுதல் வழிபாடு இன்றியமையாததாகும். அவ் வழிபாட்டிற்குத் திருவுருவ அமைப்பு உயிர் போன்றதாகும். திருவுருவம் படிமம் எனவும் படும். அத் திருவுரு சொல்லுருவும் பொருளுருவும் என இருவேறு வகைப்படும். அவற்றுள் பொருளுருவினும் சொல்லுருவே நனிமிகச் சிறந்ததாகும். சொல்லெனினும் மறை எனினும் ஒன்றே. மறை - மந்திரம். அது 'நமசிவய' 'சிவயநம' எனப்படும் இவ்வழிபாட்டுத் திருவுருவங்களே மந்திரம்.

இவற்றைத் தூய்மைப்படுத்தலென்பது, பயன் வேண்டிச் செய்யப்படும் செயலனைத்தும் தொழில் எனப்படும். சிவனடிமை என்னும் தெளிவுடன் செய்யப்படும் செயல் அனைத்தும் தொண்டெனப்படும். ஆருயிர்கள் முன் தொழிலாகச் செய்யப்பட்ட வினைப்பயன்கள் இவ் ஆறு வழிகளிலும் அமைந்து கிடக்கும். அவற்றை மாற்றி மேல் செய்வன அனைத்தும் தொண்டாமாறு விதித்து நிறுத்தல். 'தோற்று பயன் வேண்டல் தொழில் சிவத்தால் வேண்டாமை, ஆற்றுதொண்டாக்கலாம் ஆய்ந்து'

என்பதனையும் நோக்குக. மேலும் 'ஓசைமெய்யோடுலகம் ஓங்குநூல் துய்ப்புநிலை, ஆசில்வழி பாட்டுமறை ஆறு' என்பதையும் நினைவுகூர்க. ஓசை - கலை. மெய் - தத்துவம். ஞான தீக்கை என்பது மேலோதிய மூன்றனையும் செய்விக்கும் உரிமை நல்குவதாகிய ஆசிரியத் திருமுழுக்கு என்னும் அபிடேகமாகும்.

இம் மந்திரம் சைவத்திலுள்ள தீக்கைகளை விவரிக்கின்றது: சமயம் - விசேடம் - நிருவாணம் - அபிடேகம்.

# 1424. பத்துத் திசையும் பரமொரு தெய்வமுண்

1424. பத்துத் திசையும் பரமொரு தெய்வமுண்
டெத்திக் கிலரில்லை என்பதின் அமலர்க்கு
ஒத்துத் திருவடி நீழல் சரணெனத்
தத்தும் வினைக்கடல் சாராது காணுமே.

பத்துத் திக்குகளிலும் ஒப்பில்லாத முழுமுதற்சிவன் ஒருவனுளன். அவன் இல்லாத திக்குகள் இல்லையென்று அருள் நூல்கள் கூறுகின்றன. அகத்தே கொல்லாமை முதலிய சிவனை எளிதாக எய்துவிக்கும் நற்பண்புகள் 'கொல்லாமை ஐந்தடக்கல் கொள்பொறுமையோடிரக்கம். நல்லறிவு மெய்தவம் அன்பெட்டு' அமையப் புறத்தே அவற்றிற்கு இனமாகிய நறுமலர்களைக்கொண்டு திருமுறைப்போற்றித் தொடர்புகன்று திருவடி நீழலே மாறாப் புகலிடமென்று அருச்சித்தல் வேண்டும். அங்ஙனம் அருச்சிப்பார்க்கு ஏறுவினையாகிய ஆகாமியம் உணக்கிலாவித்து ஒரு ஞான்றும் விளையாமைபோல் சாராது என்க.

எத்திக்கிலர் இல்லை - தெய்வம் பலவியில்லாத திக்கு இல்லை. தத்தும் - ஏறும்.

## 1425. கானுறு கோடி கடிகமழ் சந்தனம்

1425. கானுறு கோடி கடிகமழ் சந்தனம்
வானுறு மாமல ரிட்டு வணங்கினும்
ஊனினை நீக்கி உண்பவர்க் கல்லது
தேனமர் பூங்கழல் சேரவொண் ணாதே.

மண்ணும் விண்ணும் ஆகிய எங்கணும் நறுமணம் கமழும் சந்தனமும், அத்தகைய சிறந்த மணம் கமழும் நறுமலரும் கைக்கொண்டு நாளும் வழிபட்டாலும் தம்மை அடிமை என்று கொண்டு கொல்லாமலும் கொன்றதைத் தின்னாமலும் இருப்பதாகிய செந்நெறியொழுகிச் சிவனை நினைப்பதாகிய திருவுடையார்க்கன்றி திருவருள் வீழ்ச்சியாகிய சத்திநிபாதம் கிட்டாது. சத்தி - திருவருள். நிபாதம் - நன்றாய்ப் பதிதல்; வீழ்ச்சி.

கோடி-எல்லை. வான் உறு-பெருமை பொருந்திய. ஊனினை நீக்கி - சரீர அபிமானம் விட்டு அல்லது மாமிச உணவை விட்டு.

## 1426. கோனக்கன் றாயே குரைகழல் ஏத்துமின்

1426. கோனக்கன் றாயே குரைகழல் ஏத்துமின்
ஞானக்கன் றாகிய நடுவே யுழிதரும்
வானக்கன் றாகிய வானவர் கைதொழும்
மானக்கன் றீசன் அருள்வள்ள மாமே.

எவர்க்கும் முழுமுதலாய் வேண்டுவார் வேண்டுருவுடன் தோன்றுபவராய் உள்ள சிவபெருமானின் தாயாய் விளங்குபவள் திருவருளம்மை. அத் திருவருளம்மையின் ஒலிக்கும் சிலம்பணிந்த திருவடியிணையினைப் போற்றித் தொழுங்கள். தொழுதால் அத் திருவருளம்மை மெய்யுணர்வு நல்கும் வித்தாய் உங்கள் நடுவே எழுந்தருள்வள். அவள் எழுந்தருள்வதால் பெருமைமிக்க ஆனேற்றின்மீது வரும் சிவபெருமானின் பேரின்பப் பெருவளம் மிக்கு உண்டாகும். அச் சிவபெருமான் வானுலகப் பசுக்களாகிய தேவர்களால் என்றும் தொழப்படும் சிறப்பினன். கோன் தலைவன்; முதல்வன். நக்கன் - தோன்றுபவன். ஞானக்கன்று - மெய்யுணர்வு நல்கும் வித்து. மான - பெருமையையுடைய. கன்று - ஆனேறு; இடபம். நகுதல் - தோன்றுதல்..

கோன் நக்கன் தாய் - இறைவன் தாய்; தேவி. ஞான..... தரும் - ஞானம் உண்டாகும். வானக்கன்று ஆகிய வானவர் - வானத்தின்கண் உள்ள உலகங்களில் வசிக்கும் பசுக்களாகிய வானவர் (பசுக்கள் - மும்மலங்களையுடையவர்) ஆனக்கு - ஆனால். அன்று

ஈசன் அருள்வளமாமே - அப்பொழுது ஈசன் அருட் செல்வ முண்டாம்.

## 1427. இதுபணிந் தெண்டிசை மண்டலம் எல்லாம்

1427. இதுபணிந் தெண்டிசை மண்டலம் எல்லாம்
அதுபணி செய்கின் றவளொரு கூறன்
இதுபணி மானுடர் செய்பணி யீசன்
பதிபணி செய்வது பத்திமை காணே.

மேல் ஓதிய முறைமைகளை வணங்கி ஏற்றுக்கொண்டு, எட்டுத் திசைகளால் சூழப்பெறும். உலகு உடல் பொருள்கள் நிறை மண்டலங்களையெல்லாம் படைத்து அளித்து அழித்து மறைத்தருள் செய்யும் ஐந்தொழிலுடைய அம்மையை ஒரு கூற்றிலே உடையவன் சிவன். மாந்தர் செய்யத்தகுந்த இறைபணி சிவப்பணியேயாம். இச் சிவப்பணியே நோன்பாளராகிய கிரியையினர் செய்யும் சிவபத்தித் திருப்பணியாகும்.

இது பணிந்து - இவ்வுரையை நம்பி. இது பணி - ஆக்கி அளிக்கும் தொழில்.

## 1428. பத்தன் கிரியை சரியை பயில்வுற்றுச்

1428. பத்தன் கிரியை சரியை பயில்வுற்றுச்
சுத்த அருளால் துரிசற்ற யோகத்தில்
உய்த்த நெறியுற் றுணர்கின்ற ஞானத்தாற்
சித்தங் குருவரு ளாற்சிவ மாகுமே.

சிவபத்தன் ஆனவன் திருமுறையில் கூறியபடி சீலம் நோன்பு இரண்டினையும் சிறப்பாகச் செய்துவர இயற்கைத் திருவருள் மேலும் துணைசெய்யும். அத் துணையால் குற்றம் நீங்கம். குற்றம் நீங்கலும் யோகத்தில் செலுத்தும். யோகம் - செறிவு. இச் செறிவால் அறியும் எண்ணமாகிய சித்தம் குருவருளால் சிவமாய்த் திகழும்.

## 1429. அன்பின் உருகுவ னாளும் பணிசெய்வன்

1429. அன்பின் உருகுவ னாளும் பணிசெய்வன்
செம்பொன்செய் மேனி கமலத் திருவடி
முன்புநின் றாங்கே மொழிவ தெனக்கருள்
என்பினுட் சோதி இலங்குகின் றானே.

சித்தம் சிவமாய சிவபத்தன் எல்லையிலாத் தலையன்பால் உருகுவன். அவன் எந்நாளும் அடிமைப் பணி செய்தொழுகுவன். பொன் போலும். திருமேனியும் செந்தாமரையனைய திருவடியும் உடையவன் சிவன். அவன் அடியேன் முன்நின்று அருமறையருளத் திருவடியுணர்வு கைவந்த ஒரு மெய்யடியாரை ஊர்ந்து செறிந்த அறிவொளியாய் விளங்கியருள்வன். என்பு - உடல். அருமறை - உபதேசம். சித்தம் கூறவே இனக்கோளாக மனம் எழுச்சி இறுப்பு முதலியவும் கொள்ளப்படும்.

## 1430. நெறிவழி யேசென்று நேர்மையுள் ஒன்றித்

1430. நெறிவழி யேசென்று நேர்மையுள் ஒன்றித்
தறியிருந் தாற்போல் தம்மை யிருத்திச்
சொறியினுந் தாக்கினுந் துண்ணென் றுணராக்
குறியறி வாளர்க்குக் கூடலு மாமே.

ஆசான் அருளிய அருமறைவழியே ஒழுகி அகத்தவமாகிய யோகத்தில் பொருந்தி ஆ முதலியவற்றைக் கட்டுந்தறி (தூண்) மாறுதலின்றி இருந்தாற்போல் தம் உடம்பை இருத்தித் தினவு முதலியன உடம்பில் தோன்றினும் சொறியாமலும், காற்று மழை மின்னல் இடி முதலியன உடம்பில் மோதினும் அசையாமலும் இருந்து கருதிய குறியாம் சிவத்தை அறிவார்க்கு அருளால் அச் சிவத்துடன் கூடலுமாகும்.

நெறிவழி - குரு உபதேசித்தபடி. தறி - கம்பம்.

## 1431. ஊழிதோ றூழி உணர்ந்தவர்க் கல்லால்

1431. ஊழிதோ றூழி உணர்ந்தவர்க் கல்லால்
ஊழிதோ றூழி யுணரவுந் தானொட்டான்
ஆழி அமரும் அரியயன் என்றுளார்
ஊழி முயன்றும் ஒருச்சியு ளானே.

ஊழிதோ றூழி பலவரினும் என்றும் ஒரு படித்தாய் நின்று நிலவும் முழுமுதற் சிவனை அவன் அருட்கண்ணால் உணர்ந்தவர்க்கல்லாமல் பலவூழிகண்டாலும் தம் அறிவால் அச் சிவனைக் காண முடியாது. சக்கரப் படையைத் தாங்கும் அரியும் அயனும் பலவூழி முயன்றும் காண ஒண்ணாது நீங்கி மறைந்துநின்றனன். ஒருச்சி: ஒருவியென்பதன் திரிபு. ஒருவி - நீங்கி.

ஒருச்சி - விலகி, நீங்கி, ஒருவி.

## 1432. பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோற்

1432. பூவினிற் கந்தம் பொருந்திய வாறுபோற்
சீவனுக் குள்ளே சிவமணம் பூத்தது
ஓவியம் போல உணர்ந்தறி வாளர்க்கு
நாவி யணைந்த நடுதறி யாமே.

மலரின்கண் மணம்பொருந்தியமைவதுபோல் ஆருயிரின் கண்ணும் அன்னையத்தனாம் சிவமணம் பூத்தமைந்தது. அவ்வமைவினையுடையார், புனைந்த சித்திரம்போல் அச் சிவனையே உணர்ந்தறிவர். அப்படி அறிகின்றவர் புனுகுப்பூனை அணைந்தநடுதறிபோன்று அசையா திருப்பர். நாவி - புனுகுப் பூனை.

## 1433. உய்ந்தனம் என்பீர் உறுபொருள் காண்கிலீர்

1433. உய்ந்தனம் என்பீர் உறுபொருள் காண்கிலீர்
கந்த மலரிற் கலக்கின்ற நந்தியைச்
சிந்தை யுறவே தெளிந்திருள் நீங்கினால்
முந்தைப் பிறவிக்கு மூலவித் தாமே.

உயிர்க்குயிராய் உண்ணின்று உணர்த்திவரும் முதன்மை வாய்ந்த சிவபெருமானைக் கண்டவரே உய்வர். அங்ஙனம் உய்ந்தனம் என்று உணராதிருக்கின்றீர்கள். மணங்கமழும் நல்லார்தம் நெஞ்சத் தாமரையில் கலக்கின்ற நந்தியை, உங்கள் உள்ளம் பொருந்தத் தெளியுங்கள். தெளிந்தால் இருள் நீங்கும். இருள் நீங்கினால் நுண்ணுடலாகிய கருவுறாது தோன்றும் முதற் பிறவியை ஒழிப்பதற்கு அத் தெளிவு அழியாக் காரணமாகும். வித்து - காரணம்.

உறுபொருள் - அடைதற்கு உரிய பொருள். முந்து அப்பிறவிக்கு மூல அவித்தாகும் - உண்டாகும் பிறவிகள் இல்லையாகும்.

## 1434. எழுத்தொடு பாடலும் எண்ணெண் கலையும்

1434. எழுத்தொடு பாடலும் எண்ணெண் கலையும்
பழித்தலைப் பாசப் பிறவியும் நீங்கா
வழித்தலைச் சோமனோ டங்கி யருக்கன்
வழித்தலைச் செய்யும் வகையுணர்ந் தேனே.

இலக்கண இலக்கியங்களும். இவற்றின் விரிவான அறுபத்து நான்கு கலைகளும், பழித்தற்கிடமாகிய சுட்டுணர்வாகும் அச் சுட்டுணர்வாகிய பாசத்தினால் தொடரும் பிறவியும், நீங்காத முறைமை வாயந்த் இடப்பால் நரம்பாகிய திங்களும், வலப்பால் நரம்பாகிய ஞாயிறும், நடுப்பால் நரம்பாகிய தீயும் அருளான் அமையும் நிலைகளை யுணர்வர். அவ்வுணர்வால் முதன்மையான செந்நெறிச் செல்லும் மேன்மை எய்தும்.

எழுத்து - இலக்கணம், நூல். பாடல் - இலக்கியங்கள். எண்ணெண் கலை - 64 கலைகள். பழித்தலை : பழிச்சலை என்பதன் திரிபு; படிக்காவிட்டால். வழித்தலை - தலைவழி; முக்கிய நெறி. சோமன், அங்கி, அருக்கன் - இடகலை, பிங்கலை, சுழுமுனை. வருத்தலைச் செய்யும் - பிராணாயாமம் செய்யும்.

## 1435. விரும்பிநின் றேசெயில் மெய்த்தவ ராகும்

1435. விரும்பிநின் றேசெயில் மெய்த்தவ ராகும்
விரும்பிநின் றேசெயின் மெய்யுரை யாகும்
விரும்பிநின் றேசெயின் மெய்த்தவ மாகும்
விரும்பிநின் றேசெயில் விண்ணவ னாகுமே.

சிவத்தை விரும்பிநின்றே செயல் செய்யும் நல்லோர் உண்மைத் தவத்தவராவர். அவ்வாறே ஒழுகின் குருவருள் அருமறை கைகூடும். அதுபோல் செய்யின் அஃது இறப்பில் தவமாகிய உண்மைத் தவமாகும். மேலும் கைக்கொளின் தூய விண்ணுலக நேராட்சியுடைய சிவனென மதிக்கப்படுவன்.

## 1436. பேணிற் பிறவா உலகருள் செய்திடுங்

1436. பேணிற் பிறவா உலகருள் செய்திடுங்
காணில் தனது கலவியு ளேநிற்கும்
நாணில் நரக நெறிக்கே வழிசெயும்
ஊனிற் சுடுமங்கி யுத்தமன் றானே.

அகத்தவமாகிய யோகநெறியினைப் பேணி ஒழுகுவார் மீண்டும் பிறப்பதற்கு வாயிலில்லாத தூய சிவவுலகை எய்துவர். இவ்வுலகே பிறவாவுலகெனப்படும். அருட்கண்ணாற் காண்பார் சிவபெருமான் வேறறக் கலந்து நிற்கும் கலவியுள் நிற்பர். இத்தவ ஒழுக்கிற்செல்ல நாணமுறுவார் இருளுலகெய்தி இன்னலுறுவர். சிவன் உடம்பினுள் அவ்வுடம்பு நிலைத்துநிற்பதற்குவேண்டும் சூட்டினையருள்வன். அத்தகைய சிவபெருமானே சார்ந்தாரைக் காக்கும் தலைவனாவன்.

பிறவா உலகு - சிவலோகம். தனது கலவியுளே - சீவனிற் கலந்தே.. நாணின் - யோக மார்க்கத்தை நாணத்தால் விட்டுவிட்டால். நரக நெறி - பாப மார்க்கம். ஊனிற் சுடும் சரீர துன்பத்தைக் கொடுக்கும். அங்கி உத்தமன் - தீ வடிவனான சிவன்.

## 1437. ஒத்தசெங் கோலார் உலப்பிலி மாதவர்

1437. ஒத்தசெங் கோலார் உலப்பிலி மாதவர்
எத்தனை யாயிரம் வீழ்ந்தனர் எண்ணிலி
சித்தர்கள் தேவர்கள் மூவர் பெருமையாய்
அத்த னிவனென்றே அன்புறு வார்களே.

முட்டாது முறைசெய்யும் முடியுடை வேந்தர் எண்ணிலாதவர்; கெடாத விழுத்தவவேந்தர் அளவிலாதவர். இவ்விரு திறத்தாரும் சிறந்த பெருமையுடைய சிவபெருமானை விரும்பிவழிபட்டு உய்ந்தனர். அளவிறந்த சித்தர்களும் தேவர்களும் மூவர்களும் அச் சிவபெருமானையே வழிபட்டுச் சிறப்பும் பெருமையும் சேரப்பெற்றனர். எல்லாரும் சிவபெருமான் திருவடியிணைக்கே தலையன்பூண்டு ஒழுகுவார். வீழ்ந்தனர் - விரும்பினர்.

ஒத்த செங்கோலார் - முடி அரசர்கள். உலப்பிலி மாதவர் - கேடில்லாத தவசிகள்.

## 1438. யோகிக்கு யோகாதி மூன்றுள கொண்டுற்றோர்

1438. யோகிக்கு யோகாதி மூன்றுள கொண்டுற்றோர்
ஆகத் தகுகிரி யாதி சரியையாந்
தாகத்தை விட்ட சரியையொன் றாம்ஒன்றுள்
ஆதித்தன் பத்தியுள் அன்புவைத் தேனே.

செறிவு நிலையாகிய யோகிக்குச் செறிவு, நோன்பு, சீலம் என்னும் மூன்றும் உள்ளன. அவர்கள் அம் மூன்றினையும்கொண்டு செலுத்துவோர் ஆவர். நோன்புநிலையாகிய கிரியையாளர் சீலம் என்று சொல்லப்படும் சரியைக்கும் உரியவராவர். ஆசையறுத்தவராகிய சீலத்தர் சரியை ஒன்றற்குமே உரியர். என்றும் பொன்றா ஒன்றாய் யாண்டும் இயற்கைப் பேரொளியாய் விளங்கும் சிவ சூரியன்பால் நீங்கா அன்பு வைத்தேனே.

தாகம் - ஆசை. ஆதித்தன் - சிவசூரியன்.

## 1439. யோகச் சமயமே யோகம் பலவுன்னல்

1439. யோகச் சமயமே யோகம் பலவுன்னல்
யோக விசேடமே அட்டாங்க யோகமாம்
யோகநிர் வாணமே யுற்ற பரோதயம்
யோக அபிடேகமே ஒண்சித்தி யுற்றலே.

செறிவு நிலையாகி யோகத்தில் சமயம், விசேடம், நிருவாணம், அபிடேகம் என நான்கு நிலைகள் உள்ளன. அவை முறையே சிவ நுழைவு சிவநோன்மை சிவநுண்மை சிவ நுகர்மை என அழைக்கப் பெறும். யோகத்தில் சமயம் பலவகையான யோக முறைகளை நினைத்தல். யோகத்தில் விசேடம் எட்டுறுப்புடன் கூடிய யோகம். யோகத்தில் நிருவாணம் முழுமுதற் சிவம் தோன்றல். யோகத்தில் அபிடேகம் சித்தி பெறுதல். உறுதல் : உறல்; உற்றல் என மிக்குநின்றது.

இம் மந்திரம் யோகத்தில், சமயம், விசேடம், நிருவாணம், அபிடேகம் இற்றென விளக்குகின்றது.

## 1440. ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை

1440. ஞானத்தின் மிக்க அறநெறி நாட்டில்லை
ஞானத்தின் மிக்க சமயமும் நன்றன்று
ஞானத்தின் மிக்கவை நன்முத்தி நல்காவாம்
ஞானத்தின் மிக்கார் நரரின்மிக் காரே.

திருவடியுணர்வாகிய ஞானத்தின் மிக்க பிறப்பறுப்பதாகிய அறநெறி எந்நாட்டினும் இல்லை. ஞானத்தின் வேறான சமயமும் இம்மை உம்மை அம்மை என்னும் மூவிடத்து நன்மையுள் ஏதும் தருவதின்று. அதனால் அக் கோட்பாடு நன்மையுமாகாது. ஞானத்திற்குப் புறம் பாயுள்ளவை நல்ல வீடுபேற்றினைத் தாரா. சிவஞானத்தாற் சிறந்தோர் மாந்தரிற் சிறந்தோராகிய அந்தண்மெய்யடியாராவர்.

நாட்டில்லை - நாட்டில் இல்லை. மிக்க - வேறான - மிக்கார் - சிறந்தவர். நரரின் - மக்களில்.

## 1441. சத்தமுஞ் சத்த மனனுந் தகுமனம்

1441. சத்தமுஞ் சத்த மனனுந் தகுமனம்
உய்த்த வுணர்வு முணர்த்தும் அகந்தையுஞ்
சித்தமென் றிம்மூன்றுஞ் சிந்திக்குஞ் செய்கையுஞ்
சத்தங் கடந்தவர் பெற்றசன் மார்க்கமே.

மிக்க வேகமாக யாண்டும் நிறைந்துள்ள ஒலி முதலாகிய நாதமெய்யும், அதுபோன்று பரந்த தன்மையுள்ள, மனமும், அம் மனம் பற்றி ஐயுற்ற பொருளை உறுதிசெய்வதாகிய இறுப்பு என்னும் புத்தியும், அப்புத்தியினை எழுப்புவதாகிய அகங்காரமும், தூக்கி எண்ணுவதாகிய சித்தமும் ஆகிய ஐந்தனுள் சித்தம் மனத்தின்கண் அடங்குவதாலும், நாதம் இவற்றைத் தொழிற்படுத்துவதாலும் ஏனைய மனம் அகங்காரம் புத்தி என்னும் மூன்றும் சிறந்தன. அவை முறையே நிகழ்த்தும் நினைப்பு எழுச்சி இறுப்பு ஆகிய அந்தக் கரணச் செய்கைகளும் நாதகலையும கடந்தவரே ஞானியராவர். அவர்கள் செல்லும் நெறியே மெய்ந்நெறியாகும். மெய்ந்நெறி - சன்மார்க்கம்.

இம் மந்திரம் அந்தக்கரணங்கள் சுத்தமாய் இருப்பதே சன்மார்க்க நெறி என்று கூறுகின்றது.

## 1442. தன்பால் உலகுந் தனக்கரு காவதும்

1442. தன்பால் உலகுந் தனக்கரு காவதும்
அன்பா லெனக்கரு ளாவது மாவன
என்பார்கள ஞானமும் எய்துஞ் சிவோகமும்
பின்பாலின் நேயமும் பெற்றிடுந் தானே.

தான் சார்ந்திருக்கும் மாயாகாரியமாகிய நிலையுதலிலவாம் உலகமும், தன்னோடு தொடர்புடைய உடம்பும் நிலைபெற்ற திருவருளால் கிடைத்தன. இவற்றால் சிவபெருமானிடத்து நீங்காக் காதல்கொண்டு ஒழுகினால் அச் சிவத்துள் அடங்கித் தானே சிவமாகப் பொலிவன் இதுவே சிவோகம். பின் திருவருள் முயற்சியினால் தானாகவே சிவன் திருவடியின்பினைத தலைக்கூடுவன். மருந்துவனைச் சார்ந்த நோயாளிக்கு நேரும் முயற்சியெல்லாம் மருந்துவனாலேயாம் என்பது இதற்கு ஒப்பாகும்.

சிவோகம் - அவனே தானே ஆகிய நெறி. பின்பால் - சிவோகம் பாவனை கைவந்த பின். நேயம் - சிவம்.

## 1443. இருக்குஞ் செருமி இடம்பிரம மாகும்

1443. இருக்குஞ் செருமி இடம்பிரம மாகும்
வருக்கஞ் சராசர மாகும் உலகந்
தருக்கிய ஆசார மெல்லாந் தருமே
திருக்கிலா ஞானத்தைத் தேர்ந்துணர்ந் தோர்க்கே.

மாறுபாடில்லாத சிவஞானத்தைத் திருவருளால் தெளிந்துணர்ந்தோர் சிவஞானியராவர். அவர் ஒடுக்கமாகிய நிட்டை கூடியிருக்குமிடம் சிவன் எழுந்தருளியிருக்கும் இடமாகும். இயங்குதிணை நிலைத்திணையாகிய கூட்டமனைத்தும் அவர்கட்கு உலக உறவாகும். மேம்பாடு மிக்க ஒழுக்கமனைத்தும் தாமே வந்து எய்தும்.

செருமி இருக்கும் - மறைந்து இருக்கும். ஆசாரம் - ஒழுக்கம். திருக்கிலா - மாறுபாடில்லாத.

## 1444. அறிவும் அடக்கமும் அன்பும் உடனே

1444. அறிவும் அடக்கமும் அன்பும் உடனே
பிறியா நகர்மன்னும் பேரரு ளாளன்
குறியுங் குணமுங் குரைகழல் நீங்கா
நெறியறி வார்க்கிது நீர்த்தொனி யாமே.

சிவத்தை அறியும் அறிவும், சிவத்தில் அடங்கும் அடக்கமும், சிவத்தைப் பற்றும் தலையன்பும் உள்ளவர்கேடில்லாத சிவவுலகத்தில் வாழ்வோராவர். அவர்கள்தம் புற அடையாளச் சிவக்கோலமும், அக அடையாளச் சிவப்பண்பும் ஒலிக்கும் கழலணிந்துள்ள சிவபெருமான் திருவடியிணையினை நீங்கா நிலைமையினைக் குறிப்பனவாகும். அவர்கள் பால் அடங்கி நிற்கும் திருவடியுணர்வு காற்று முதலிய துணையால் நீரில் ஒலியுண்டாவதுபோல் செந்நெறிச் செல்லும் துணையால் வெளிப்படும்.

பிறியா நகர் - முத்தி நகர். நீர்த்தொனி - நீரினிடத்து உள்ள ஒலி காற்று முதலிய கூட்டுறவால் வெளிப்படுவதுபோல, அறிவால் ஆன்மாவில் அடங்கியுள்ள ஞானம் பிரகாசிக்கும்.

## 1445. ஞானம் விளைந்தெழு கின்றதோர் சிந்தையுள்

1445. ஞானம் விளைந்தெழு கின்றதோர் சிந்தையுள்
ஏனம் விளைந்தெதி ரேகாண் வழிதொறுங்
கூனல் மதிமண் டலத்தெதிர் நீர்கண்டு
ஊன மறுத்துநின் றொண்சுட ராகுமே.

திருவடியுணர்வாகிய சிவஞானமே முறுகிநிற்கும் நல்லார் திருவுள்ளத்துள் மூலாதாரம் உயிர்ப்பு முதலிய அகத்துவத்துக்கு
வேண்டும் கருவிகளோடு கூடிச் செய்யும் யோகமும் கைகூடும். அதனாற் காணப்பெறும் வழிதொறும் பற்றுக்கோடின்றிச் சென்று புருவநடுவாம் திங்கள்மண்டிலத்துத் தோன்றும் புத்தமிழ்தங் காண்பர். கண்டு திருவருளால் மலமாயா கன்மங்களாகிய தளையினை யறுத்து நிலைநிற்பர். அங்ஙனம் நின்றார்க்கு விட்டு நீங்காது விளங்குவது சிவனார் அருட்சுடரேயாகும். அச் சுடர் ஒண்சுடர் எனப்படும்; இது பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அம்மொழித் தொகையாகும்.

ஏனம் - சாதனக் கருவி, ஆதாரயோகம். வழி - ஆதார மார்க்கம். கூன.....கண்டு - சந்திர மண்டலத்துப் பெருகும் அமுதம். ஊனமறுத்து - மலம் ஒழித்து. ஒண்சுடர் - சிவம்.

## 1446. ஞானிக் குடன்குண ஞானத்தில் நான்குமா

1446. ஞானிக் குடன்குண ஞானத்தில் நான்குமா
மோனிக் கிவையொன்றுங் கூடாமுன் மோகித்து
மேனிற்ற லாஞ்சத்தி வித்தை விளைத்திடுந்
தானிக் குலத்தோர் சரியை கிரியையே.

சிவஞானிக்குரிய பண்பு நான்காகும். அவை, அறிவிற் சீலம், அறிவில் நோன்பு, அறிவிற்செறிவு, அறிவில் அறிவு என்பன. ஞானத்தின் மேனிலையாகிய மோனத்தை எய்தியவர்க்கு மேற்கூறிய நாற்படிகளுள் ஏதும் பொருந்தா. சிவசத்தியில் தன்னை மறந்து நிற்க, அஃது அப்பால் நிலையிலுள்ள குண்டலினிசத்தியின் வலிகொண்டியற்றும் யோகப்பயனை விளைத்திடும். இவையே பற்றுக்கோட்டோடும் செய்யும் யோகியர்க்கு நிகழும் அறிவிற்சீலம், அறிவில் நோன்பு எனப்படும். இவை ஞானத்திற்சரியை ஞானத்திற் கிரியை எனப்படும்.

ஞானத்தில் நான்கு - ஞானத்தில் சரியை, ஞானத்தில் கிரியை, ஞானத்தில் யோகம், ஞானத்தில் ஞானம். முன் மோகித்து - சிவ சன்னிதியில் தன்னை மறந்து. சத்திவித்தை - குண்டலி யோகம். தானிக் குலத்தோர் - ஆதார யோகிகள்.

## 1447. ஞானத்தின் ஞானாதி நான்குமா ஞானிக்கு

1447. ஞானத்தின் ஞானாதி நான்குமா ஞானிக்கு
ஞானத்தின் ஞானமே நானென தென்னாமல்
ஞானத்தின் யோகமே நாதாந்த நல்லொளி
ஞானக் கிரியையே நன்முத்தி நாடலே.

சிவஞானிக்கு ஓதப்பட்ட அறிவில் அறிவு முதலிய நான்கும் உள்ளன. அறிவில் அறிவாகிய ஞானத்தின் ஞானமே யான் எனதென்னும் செருக்கறல். ஞானத்தில் யோகம் முப்பத்தாறு மெய்யுங் கடந்த அருள்வெளியில் காணும் சிவ ஒளி. ஞானத்தில் கிரியையே திருவடிப்பேற்றினை நாடுதல். மெய் - தத்துவம். ஞானத்தில் சரியை என்பது திருவடிப்பேற்றினைத் திருமுறைச் செல்வர் நவில நன்கினிது கேட்டல்.

## 1448. நண்ணிய ஞானத்தின் ஞானாதி நண்ணுவோன்

1448. நண்ணிய ஞானத்தின் ஞானாதி நண்ணுவோன்
புண்ணிய பாவங் கடந்த பிணக்கற்றோன்
கண்ணிய நேயங் கரைஞானங் கண்டுளோன்
திண்ணிய சுத்தன் சிவமுத்தன் சித்தனே.

பொருந்திய சிவஞானத்தின் நாற்படியும் மேற்கொண்டவன், பிறப்புக்கு வித்தாம் இருள்சேர் இருவினையும் கடந்தோனாவன். இருவினை நான் என்னும் முனைப்பாற்செய்யும் புண்ணிய பாவம். கருதப்படுகின்ற பிழம்போடு கூடித்தோன்றி அருளும் திருவுருவில் மறைந்திருக்கும் அன்பின் விளை ஞானச் சிவப்பொருளை அவ்வுருக்கரைந்த நிலையிற் காண்பவனும் அவனேயாவன். அவனே நிலைபேறான தூயோன். அவனே சிவப்பேற்றினன். அவனே திருவடி எய்திய சித்தன்.

## 1449. ஞானச் சமயமே நாடுந் தனைக்காண்டன்

1449. ஞானச் சமயமே நாடுந் தனைக்காண்டன்
ஞான விசேடமே நாடு பரோதயம்
ஞானநிர் வாணமே நன்றறி வானருள்
ஞானாபி டேகமே நற்குரு பாதமே.

சிவஞானத்தின் நிகழும் நால்வகைத் தீக்கையும் வருமாறு: சிவ நுழைவெண்பது சிவனைக்காணுமுறையால் தன்னைக் காண்பது. சிவநோன்மையென்பது மேலாம் சிவத்தோற்றம் காண்பது. சிவ நுண்மை என்பது வாலறிவினனாகிய சிவபெருமானின் திருவருள் விழ்ச்சி. சிவ நுகர்மை என்பது திருவருளாசான் திருவடியினை மறவாமை.

நுழைவு - சமயம், நோன்மை - விசேடம். நுண்மை நிருவாணம். நுகர்மை - அபிடேகம். திருவருள் வீழ்ச்சி - சத்தி நிபாதம், நிபாதம் - நன்றாய்ப் பதிதல்.

பரோதயம் - பரம் + உதயம்; சிவம் தோன்றல்.
நன்றறிவான் அருள் - சிவனருள். நற்குரு - சிவகுரு.

# 1450. சாற்றுஞ்சன் மார்க்கமாந் தற்சிவ தத்துவத்

1450. சாற்றுஞ்சன் மார்க்கமாந் தற்சிவ தத்துவத்
தோற்றங்க ளான சுருதிச் சுடர்கண்டு
சீற்றம் ஒழிந்து சிவயோக சித்தராய்க்
கூற்றத்தை வென்றார் குறிப்பறிந் தார்களே.

நல்லாரால் புகழ்ந்து சொல்லப்பெறும் தூமாயை மெய்கள் ஐந்து. அவை, ஆசான், ஆண்டான், அருளோன், அன்னை, அத்தன் என்பன. இவற்றை முறையே சுத்தவித்தை, ஈசுரம், சதாசிவம், சத்தி, சிவம் எனவும் கூறுப. செந்தமிழ்த் திருமறையும் திருமுறையும் (தமிழ் வேதாகமங்கள்) கூறும் சிவபெருமானின் உண்மைத் தன்மை
உணர்வொளியினைக் கண்டு, சீற்ற முதலிய அறுபகை செற்று சிவயோகசித்தராய் வாழ்வார். அவர்களே கூற்றத்தைவென்று கூத்தப் பெருமான் திருவடியைத் தலைக்கூடும். இயல்பமைந்த மெய்ந்நெறியாகிய சன்மார்க்கத் தன்மையுணர்ந்தோராவர். சீற்றம் - சினம்.

சிவ தத்துவத் தோற்றங்கள் - சுத்தவித்தை. ஈச்சுரம், சாதாக்கியம், சத்தி, சிவம் ஆக 5. சுருதி - தமிழ் நான்மறைகளும் தமிழ் ஆகமங்களும். குறிப்பு - சன்மார்க்க நெறி.

## 1451. சைவப் பெருமைத் தனிநா யகன்நந்தி

1451. சைவப் பெருமைத் தனிநா யகன்நந்தி
உய்ய வகுத்த குருநெறி ஒன்றுண்டு
தெய்வச் சிவநெறி சன்மார்க்கஞ் சேர்ந்துய்ய
வையத் துள்ளார்க்கு வகுத்துவைத் தானே.

கொலையும் புலையும் (1425) விடுத்த செந்நெறியாகிய சைவத்தின். பெருமைமிக்க ஒப்பில்லாத முதல்வன் நந்தியெம்பெருமான், அவன் ஆருயிர்கள் அனைத்தும் திருவடிபெற்று உய்யுமாறு வகுத்தருளிய குருநெறி ஒன்று உண்டு. அதுவே தெய்வச் சிவனெறி. அந்நெறியாகிய சன்மார்க்கத்தைச் சேர்ந்து ஒழுகி உய்யும்படி நிலவுலகத்துள்ளார்க்குச் செந்தமிழால் வகுத்தருளினன். தெய்வச் சிவனெறி எனினும் சன்மார்க்கமெனினும் ஒன்றே.

## 1452. தெரிசிக்கப் பூசிக்கச் சிந்தனை செய்யப்

1452. தெரிசிக்கப் பூசிக்கச் சிந்தனை செய்யப்
பரிசிக்கக் கீர்த்திக்கப் பாதுகஞ் சூடக்
குருபத்தி செய்யுங் குவலயத் தோர்க்குத்
தருமுத்திச் சார்பூட்டுஞ் சன்மார்க்கந் தானே.

மெய்ந்நெறியாகிய சன்மார்க்கத்தில் சிவன் அளித்தருளும் திருவடிப்பெறு சிவகுருவின் பத்தியினால் கைகூடுவதாகும். அப் பெரும் பற்றுச் சிவகுருவினைக்காண, வழிபட, இடையறாது எண்ணத், திருவடியினைத்தொட, சிவகுருவின் பொருள்சேர் புகழினை வாயாரப் புகல, சிவகுருவின் திருவடியிணையினைத் தம்முடிமேற் சூடத் தாமே விளைவதாகும். வழியறு வகையின் வாய்மை யிவ்வாறாம்.

## 1453. தெளிவறி யாதார் சிவனை யறியார்

1453. தெளிவறி யாதார் சிவனை யறியார்
தெளிவறி யாதார் சீவனு மாகார்
தெளிவறி யாதார் சிவமாக மாட்டார்
தெளிவறி யாதவர் தீரார் பிறப்பே

சன்மார்க்க நெறியின்கண் ஒழுகித் திருமுறைவழியாக முப்பொருளின் மெய்ம்மை தெளியாதவர் சிவனை உணரார். சிவனை

1. மந்திரத்தான். சிவஞானசித்தியார், 12. 3 - 4."
மூவகையா. சிவப்பிரகாசம், 8." சாத்திரத்தை
திருக்களிற்றுப்படியார், 6.

உணராமையினால் உயிர்ப்பயன் எய்தார். பயன் எய்தாராகவே அறிவுடைப் பொருளுமாகார். மெய்ம்மை தெளியாதவர் சிவன் திருவடியிணையினைக் கூடிச் சிவமாம் பெருவாழ்வு எய்தார். மெய்ம்மை தெளியாதார் பிறப்பறார்; சிறப்பு உறார்.

## 1454. தானவ னாகித் தானைந்தா மலஞ்செற்று

1454. தானவ னாகித் தானைந்தா மலஞ்செற்று
மோனம தாமொழிப் பான்முத்த ராவதும்
ஈனமில் ஞானாநு பூதியில் இன்பமுந்
தானவ னாயுற லானசன் மார்க்கமே.

சிவபெருமான் திருவருளால் ஆவி சிவமாகித் தொன்மையே ஒட்டிய ஆணவமும், அதனை அகற்றுதற்பொருட்டுத் தொடக்கமாகக் கட்டிய கன்ம மாயைகளும், மாயாகாரியமாகிய உலகுடல் உண்பொருள்களாம் மாயேயமும், இவற்றைத் தொழிற்படுத்துந் திருவருளாம் நடப்பாற்றலும் (திரோதானசத்தி) ஆகிய ஐந்து மலங்களையும் அகற்றி உணர்விற் கணிப்பதாகிய 'சிவசிவ' என்னும் செந்தமிழ்மறையே வாய்வாளா மோன மொழி எனப்படும். அம் மொழி பெற்றாரே வீடுபேற்றினராவர். அவரே குறைவில்லாத சிவஞானத் துய்ப்பினர். அவரே அச் சிவனடியின்பமும் தலைப்படுவர். இந்நிலையே தானவனாம் சன்மார்க்கமாகும். சன்மார்க்கம் - மெய்ந்நெறி; தெய்வச் சிவநெறி.

ஐந்து ஆம் மலம் - ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி ஆக - 5. மோன...மொழியால். "சும்மா இரு சொல்லற" என்ற குருமொழியால். அநுபூதி - அநுபவம்.

## 1455. சன்மார்க்கத் தார்க்கு முகத்தொடு பீடமுஞ்

1455. சன்மார்க்கத் தார்க்கு முகத்தொடு பீடமுஞ்
சன்மார்க்கத் தார்க்கு இடத்தொடு தெய்வமுஞ்
சன்மார்க்கத் தார்க்கு வருக்கந் தெரிசனம்
எம்மார்க்கத் தார்க்கும் இயம்புவன் கேண்மினோ.

எவ்வகை நெறியினர்க்கும் இயல்பாகிய சிறந்த உண்மையினைக் கூறுகின்றேன். கேளுங்கள். மெய்ந்நெறியாகிய சன்மார்க்கநெறி நிற்பார்க்கு இணக்கம்சேர் நல்லார் கூட்டமும் அவர்கள் கூடிவாழும் இடமுமே சிறந்தன. அவர்கள் கூடியிருக்கும் இடமே சிவபெருமானை நோக்கி வழிபடும் திசையாகும். அவர்கள் இருப்பே சிவபெருமான் திருவுருவ இருப்பாகும். அவர்களே தெய்வமாகும். அவர்களைக் காண்பதே தெரிசனமாகிய காட்சியாகும்.

வருக்கம் - சங்கம்.

# 1456. சன்மார்க்க சாதனந் தான்ஞான ஞேயமாம்

1456. சன்மார்க்க சாதனந் தான்ஞான ஞேயமாம்
பின்மார்க்க சாதனம் பேதையர்க் காய்நிற்கும்
துன்மார்க்கம் விட்ட துரியத் துரிசற்றார்
சன்மார்க்கந் தானவ னாகுஞ்சன் மார்க்கமே.

சன்மார்க்க சாதனமாகிய நன்னெறிப் பயிற்சியால் எய்துவன, திருவடியுணர்வும், அதனால் உணரப்படும் சிவமாம் பெருவாழ்வாம் திருவடியினையும் என்ப. நன்னெறி எனினும் காதன்மை நெறி எனினும் ஒன்றே. அதன் வழிநெறியாகிய தோழமை, மகன்மை, தொண்டன்மை (அடிமை) என்னும் மூன்றும் பின்மார்க்கப் பயிற்சியாகும். இம் மூன்றும் முற்றா உரனுடைப் பேதையர்க்கு ஆவன. தீமை அனைத்தும் விட்டு நன்மையின்கண் தன்னிழுப்பாகிய நெறியிற் செல்வோர், நான்காம் நிலையாகிய பேருறக்கமும் கடந்து அப்பால் என்று சொல்லப்படும் ஐந்தாம் நிலையாகிய உயிர்ப்படங்குதல் வழிநிற்பாராவர். தம் நிலையின் வழி நிலையாகிய நனவு கனவு உறக்கம் பேருறக்கம் முதலியவற்றைத் துரிசென்றே கொள்வர். அதுவும் நீங்கினோர் நன்னெறியாளராவர். அவர்கள் எய்தும் தனிப்பேறு தானவனாகும் தனிப்பெரும் வழியே. தானவன் எனப்து தன்னை அடிமை எனவும் சிவனை ஆண்டான் எனவும் கொண்டு தானற்று ஒழுகுதல். மெய்ந்நெறி என்றாலும் நன்னெறியென்றாலும் ஒன்றே.

பின் மார்க்கம் - சகமார்க்கம், புத்திர மார்க்கம், தாச மார்க்கம். துரியத் துரிசு - துரியாதீதத்துக்குக் கீழ்ப்பட்ட துரியம்.

## 1457. சன்மார்க்க மெய்த வருமருஞ் சீடர்க்குப்

1457. சன்மார்க்க மெய்த வருமருஞ் சீடர்க்குப்
பின்மார்க்க மூன்றும் பெறவியல் பாமென்றால்
நன்மார்க்கந் தானே சிவனொடு நாடலே
சொன்மார்க்க மென்னச் சுருதிகைக் கொள்ளுமே.

நன்னெறியினைப் பெறவிரும்பிப் பேராக் காதலுடன் வரும் மெய்கண்டாராகிய மாணவர்க்கு, அதன் வழிநிலையாகிய பின் மார்க்கம் என்று சொல்லப்பெறும் செறிவு நோன்பு சீலம் என்னும் மூன்றும் அவர்கள் பயின்று அவர்களுக்குக் கைகூடினமையின் அஃது அவர்களுக்கு இயல்பாம் என்பர். இயல்பென்பது சித்தித்ததென்◌ாபதாகும். மேல் அவர்களுக்கு நிகழ வேண்டுவது இடையறாது சிவத்தை எண்ணுதலேயாம். எண்ணுதல் - நாடுதல், சிந்தித்தல். இதுவே அருமறை என்னும் திருவைந்தெழுத்து உபதேசமாகும். இத்தகைய திருமுறைத் தமிழாகமங்களை மேற்கொண்டொழுகுவதே (சுருதி - ஆகமம்) அந்நிலையாகும்.

## 1458. அன்னிய பாசமும் ஆகுங் கருமமும்

1458. அன்னிய பாசமும் ஆகுங் கருமமும்
முன்னும் அவத்தையும் மூலப் பகுதியும்
பின்னிய ஞானமும் பேதாதி பேதமுந்
தன்னொடுங் கண்டவர் சன்மார்க்கத் தோரே.

தனக்கு வேறாய்த் தன்னை அடிமைப்படுத்தி தன்னுள் அடக்கும் ஆணவப் பழமலமாகிய அன்னிய பாசமும், அப் பாச ஆற்றலைத் தேய்த்து அடக்கும் மருந்தாகிய வினையும், அவ் வினை காரணமாக விளையும் பிறப்பு இறப்பாகிய நிலைகளும், அந் நிலைகளுக்குக் கருவியாகிய மாயா காரியமான மூலப்பகுதியும், இறை உயிர் தளையாகிய பதிபசு பாசங்களின் உண்மை உணரும் மெய்யுணர்வும், ஒற்றுமை வேற்றுமைப் பொருள்களின் தொடர்புகளும் சார்புநிலையாம் தன்னொடு கண்டவர் சன்மார்க்கத்தவராவர். பின்னியஞானம்: புணர்ப்புணர்வு; அத்துவிதம்.

அன்னிய பாசம் - தனக்கு வேறாய்ப் பாசம் உண்டு என்றும், ஆகும் கருமம் - பாசத்தால் கன்மம் உண்டு என்றும், முன்னும் அவத்தையும் - அக் கன்மங் காரணமாகப் பிறப்பு இறப்புக்களாகிய அவத்தைகள் உண்டு என்றும், மூலப் பகுதியும் - அவத்தைக் கேதுவான மூலப் பிரகிருதி உண்டு என்றும், பின்னிய ஞானம் இவைகளை அறியும் அறிவு உண்டு என்றும், பேதாதி பேதமும் -

இவைகளின் பேதங்களையும், தன்னொடும் - ஆன்மாவையும். கண்டவர் - கண்டு ஆராய்பவர்.

## 1459. பசுபாச நீக்கிப் பதியுடன் கூட்டிக்

1459. பசுபாச நீக்கிப் பதியுடன் கூட்டிக்
கசியாத நெஞ்சங் கசியக் கசிவித்து
ஒசியாத வுண்மைச் சொரூபோ தயத்துற்று
அசைவான தில்லாமை யானசன் மார்க்கமே.

ஆணவப் பிணிப்பால் ஏற்படும் தன்முனைப்பாம் சிற்றுணர்வுத் தன்மை முனைப்பி அல்லது பசு எனப்படும். அத்தகைய பசுத் தன்மையினையும் பாசத் தன்மையினையும் நீக்கி முழுமுதற் சிவமாகிய பதியுடன் கூட்டி வைப்பதும் நன்னெறியாகும். ஒன்றாலும் இளகிக் கசியாத உள்ளத்தினைக் கசியச் செய்து என்றும் பொன்றா உண்மை ஆவித் தன்மையைத் தோன்றச் செய்வதும் அந் நன்னெறியேயாம் என்றும் துளக்கமின்றித் திருவடி நிறைவில் அழுத்துவித்து வாழச் செய்வதும் அந்நன்னெறியேயாகும்.

ஒசியாத - கெடாத. சொரூப உதயம் - ஆன்மாவின் இயற்கை உருவம்.

## 1460. மார்க்கஞ்சன் மார்க்கிகள் கிட்ட வகுப்பது

1460. மார்க்கஞ்சன் மார்க்கிகள் கிட்ட வகுப்பது
மார்க்கஞ்சன் மார்க்கமே யன்றிமற் றொன்றில்லை
மார்க்கஞ்சன் மார்க்க மெனுநெறி வைகாதோர்
மார்க்கஞ்சன் மார்க்க மாஞ்சித்த யோகமே.

நன்னெறியாகிய சன்மார்க்கம் தன்னைச் சார்ந்த சன்மார்க்கிகளாகிய நல்லார் எய்தும்படி வகுப்பது சன்மார்க்கமேயன்றி வேறொன்றில்லை. அந் நன்னெறி நிலையினை எய்துவோர் செல்லும்வழி நன்னெறிக்கு வாயிலாகிய சித்தயோகமேயாகும். சித்தயோகம் என்பது ஆருயிரின் எண்ணம் ஓவாது சிவத்தின்பால் கூடியிருப்பது. அதனைச் சிவயோகம் எனவுங் கூறுவர்.

சித்தயோகம் - சிவராச யோகம்.

## 1461. சன்மார்க்கந் தானே சகமார்க்க மானது

1461. சன்மார்க்கந் தானே சகமார்க்க மானது
மன்மார்க்க மாமுத்தி சித்திக்குள் வைப்பதாம்
பின்மார்க்க மானது பேராப் பிறந்திறந்து
உண்மார்க்க ஞானத் துறதியு மாமே.

சன்மார்க்கத்துக்கு வழியாக இருப்பது சகமார்க்கமாகும். சகமார்க்கம் எனினும் தோழமைநெறி எனினும் ஒன்றே. நிலைபேறாகவுள்ள தோழமை நெறியின்பயன் சிறந்த பேறாகிய சித்தியுள் நிலைப்பிப்பதாகும். நன்னெறி வாயிலாம் நானெறி விடுத்து ஏனைய நெறிகளில் உழல்வோர் நீங்காப் பிறப்பு இறப்புகளுக்கு உட்பட்டு அதுவே உறுதி எனத் திரிவர். ஆருயிர்களைத் தோழமை நெறியில் இருத்துதற்கு இருந்து காட்டியவர் நம்பி ஆருரர்.

சகமார்க்கம் - தோழனைப்போல் பத்தி பண்ணும் நெறி. மன் - பெருமை பொருந்திய. பின். மார்க்கம் - மேலே கூறிய நான்கு மார்க்கங்கள் அல்லாதது. உன் - அலைகிற.

# 1462. மருவுந் துவாதச மார்க்கமில் லாதார்

1462. மருவுந் துவாதச மார்க்கமில் லாதார்
குருவுஞ் சிவனுஞ் சமயமுங் கூடார்
வெருவுந் திருமகள் வீட்டில்லை யாகும்
உருவுங் கிளையும் ஒருங்கிழப் பாரே.

செந்நெறி வகையாம் பன்னிரண்டு நிலைகளைக் கைக்கொள்ளாதார் சிவகுருவினையும் சிவன் திருவடிநீழற் பெருவாழ்வினையும் சிவனெறியினையும் மேற்கொண்டு பொருந்தார். இம்மூன்றும் பொருந்தாப் புன்னெறியினரைக் காணவும் திருமகள் அஞ்சுவள். அவர்க்குக் குடும்பமும் இல்லாதொழியும். அழகும் உறவும் பிறவும் ஒருங்கிழப்பர். பன்னிரண்டு நிலைகளுள் ஆறுநிலைகள் பற்றுக்கோடுள்ளன. ஏனை ஆறுநிலைகள் பற்றுக்கோடில்லன. இவற்றை முறையே பற்றுக்கோடி பற்றுக்கோடிலி எனப் பகர்வர். மூலம், அடிவயிறு, மேல்வயிறு, நெஞ்சம், கழுத்து, புருவநடு என்னும் ஆறும் ஆறாதாரம். ஞாயிற்று மண்டிலம் திங்கள் மண்டிலம், தீ மண்டிலம், சமனை, உன்மனை, அதீதம் என்னும் ஆறும் நிராதாரம். இவையே பன்னிரண்டு நிலைகளுமாகும். ஆதாரம் - பற்றுக்கோடி. நிராதாரம் - பற்றுக்கோடிலி.

துவாதச மார்க்கம் - பன்னிரண்டு ஆதாரங்களின் வழி - ஆதாரங்கள் 6. நிராதாரங்கள் 6. அவை மண்டலம் 3-ம், சமனை - உள்மனை, அதீதம் - 3-ம். சமயம் - சகமார்க்கம். திருமகள் வெருவும் - இலக்குமி அச்சப்படுவாள்.

## 1463. யோகச் சமாதியின் உள்ளே யகலிடம்

1463. யோகச் சமாதியின் உள்ளே யகலிடம்
யோகச் சமாதியின் உள்ளே யுளரொளி
யோகச் சமாதியின் உள்ளே யுளசத்தி
யோகச் சமாதி யுகந்தவர் சித்தரே.

தோழமை நெறியாகிய சகமார்க்கத்தில் சமாதியாகிய நிட்டையிலிருப்போர்க்கு, அவர் உள்ளத்தின்கண் திருவருட்கண்ணால் பரந்த உலகங்கள் காணப்படும். அதுபோல் உள்ளொளியாகிப் பேரொளி தோன்றும். அவ் வுள்ளத்தின்கண் திருவருளம்மை காட்சியருள்வள். இச் சமாதியின் உயர்ந்தோர் அனைத்துச் சித்தியும் அடைவர். அவர்களே சித்தரெனப்படுவர்.

யோகச் சமாதி - சகமார்க்கம்.

## 1464. யோகமும் போகமும் யோகியர்க் காகுமால்

1464. யோகமும் போகமும் யோகியர்க் காகுமால்
யோகஞ் சிவரூபம் உற்றிடும் உள்ளத்தோர்
போகம் புவியிற் புருடார்த்த சித்தியது
ஆகும் இரண்டும் அழியாத யோகிக்கே.

அகத் தவமாம் யோகமும் அதன் புறப்பொலிவாம் போகமும் யோகியர்க்கு எய்துவன. அகத்தவம் சிவவடிவம் எய்துதல். புறப் பொலிவு நம்பி ஆரூரரும் நங்கை பரவையாரும் போன்று சிவத்தொண்டு மறவாச் சீர்மையுடன் அனைத்துயிர்க்கும் அருள்தாங்கி இம்பர்மனைத் தவம்புரிதல். இதுவே உயிர்க்கு உறுதிதரும் அறம், பொருள், இன்பம், வீடுபேறென்னும் நிலை எய்துவதற்கு வாயிலாகும். இவ்விரு நிலையும் அழியாச் செவ்விசேர் யோகியர்க்கு ஒருங்கு எய்துவன. அழியாத யோகியர் சிவவடிவம் எய்திய உள்ளத்தராவர்.

புருடார்த்தம் - அறிவு, பொருள், இன்பம், வீடு. இரண்டு - யோகம், போகம்.

# 1465. ஆதார சோதனை யானாடி சுத்திகள்

1465. ஆதார சோதனை யானாடி சுத்திகள்
மேதாதி யீரெண் கலந்தது விண்ணொளி
போதா லயத்துப் புலன்கர ணம்புந்தி
சாதா ரணங்கெட லாஞ்சக மார்க்கமே.

ஆறு ஆதாரங்களையும் திருவருள் துணையால் கண்டு மேல்நோக்குதல் நாடி சுத்திகளாகும். சுத்தி - உண்மையோர்தல். மேதை முதலேழ் முதற் பொருள்களும் பதினாறு கலைகளும் கலந்த கலப்பும், பரவெளிப் பரப்பும், அறிவுநிலையத்துள் காணப்படும் ஐம்புலன் அந்தக் கரணம் நான்கு ஆகியவைகளும் ஆய்தல் சீல நிலையினைத் தாண்டுதல். இவை தோழமை நெறியாகும். ஏழ் முதற் பொருள்கள் சாரம், செந்நீர், ஊன், கொழுப்பு, எலும்பு, மூளை, வெண்ணீர் என்பன. இவற்றை இரசம், இரத்தம், மாமிசம், மேதசு, அத்தி, மச்சை, சுக்கிலம் எனவுங் கூறுப. முதற்பொருளைத் தாது என்ப.

மேதாதி - மேதை முதலிய தாதுக்கள். ஈரெண் - பதினாறு கலைகள். விண்ணொளி - சூரிய சந்திர ஒளி. போதாலயம் - ஞான ஆலயம். சாதாரணம் - சீவ இயல்பு.

## 1466. பிணங்கிநிற் கின்றவை யைந்தையும் பின்னை

1466. பிணங்கிநிற் கின்றவை யைந்தையும் பின்னை
அணங்கி யெறிவ னயிர்மன வாளாற்
கணம்பதி னெட்டுங் கருதும் ஒருவன்
வணங்கவல் லான்சிந்தை வந்துநின் றானே.

ஆருயிர்கட்கு உடலாய் அவற்றுடன் மாறுபட்டு நிற்கின்ற இருபத்தைந்து மெய்களையும் அவ்வுயிர் அகத்தவத்தால் எய்தும் கூரிய ஞான வாளால் வருத்தி எறியும். பதினெண் குழுவினரும் கைகூப்பி வணங்கித்தொழும் சீரும் சிறப்பும் வாய்ந்த ஒப்பில் சிவபெருமானை வணங்கவல்லவர் உள்ளத்தின்கண் அவன் வெளிப்பட வந்தருள்வன். கணம் பதினெட்டு : 'அமரர் சித்த ரசுரர் தைத்தியர், கருடர் கின்னரர், நிருதர் கிம்புருடர், காந்தருவ ரியக்கர் விஞ்சையர் பூதர், பசாசர் அந்தரர் முனிவருரகர் ஆகாய வாசியர் போகபூ மியரெனப், பாகு பட்டன பதினெண் கணமே.' (பிங்கலந்தை, 92.) இருபத்தைந்து மெய்களும் மாறுபட்டு நிற்கும் உண்மையினை நம் மெய்கண்டார் குறிப்பிற் புலப்படுத்துவார் 'அன்றும் புலனாய அஞ்செழுத்தை' என்றருளினர். இது போன்று மெய்கண்டார் செந்தமிழ்ச் சிவஞானபோதத்தின்கண் காணப்படும் ஒற்றுமைகள் பல. அவை அங்கங்கே வரும் அடிக்குறிப்பிற் காண்க.

அணங்கு - வருத்தி.

## 1467. வளங்கனி யொக்கும் வளநிறத் தார்க்கும்

1467. வளங்கனி யொக்கும் வளநிறத் தார்க்கும்
வளங்கனி யொப்பதோர் வாய்மைய னாகும்
உளங்கனிந் துள்ள முகந்திருப் பார்க்குப்
பழங்கனிந் துள்ளே பகுந்துநின் றானே.

வளம் கனி என்பது வளம் கன்னி என்பதன் இடைக் குறை. வளந்தரும் கன்னியாகிய திருமகள் மனமொப்பி மார்பில் வீற்றிருக்கும் திருமால் வளமிக்க களங்கனியொத்த நிறமுடையவராவர். அத் திருமாலுக்கும் முதன்மை வாய்ந்த மெய்ப்பொருளாயுள்ளவன் சிவன். சிவபெருமான் வழிபாட்டினால் உள்ளங் கனிந்து உயர்ந்திருப்பர் மெய்யடியார். திருவடிப் பேரின்பப் பழங்கனிய அம் மெய்யடியார்க்கு அதனைப் பகிர்ந்துகொடுத்து உடனின்றருள்வன் அச் சிவன்.

வாய்மையன் - தன்மையன்.

## 1468. மேவிய சற்புத் திரமார்க்க மேதொழில்

1468. மேவிய சற்புத் திரமார்க்க மேதொழில்
தாவிப்ப தாஞ்சக மார்க்கஞ் சகத்தொழில்
ஆவ திரண்டும் அகன்று சகமார்க்கத்
தேவியோ டொன்றல் சன்மார்க்கத் தெளிவதே.

தோழமை நெறியாகிய சகமார்க்கத்தை நிலைநிறுத்துவது மகன்மை நெறியாகிய சற்புத்திர மார்க்கமாகும். சகமார்க்கமாகிய அகத் தவமும் மனைத்தவமும் ஆகிய இரண்டும் காதன்மை நெறியாகிய சன்மார்க்க அடிப்படையாகும். அகத் தவம் - யோகம். மனைத் தவம் - சகத்தொழில்.

இம் மந்திரம் - சற்புத்திர மார்க்கம், சக மார்க்கம், சன்மார்க்கம். ஒன்றுக்கொன்று அடிப்படை என்று கூறுகிறது.

# 1469. பூசித்தல் வாசித்தல் போற்றல் செபித்திடல்

1469. பூசித்தல் வாசித்தல் போற்றல் செபித்திடல்
ஆசற்ற நற்றவம் வாய்மை அழுக்கின்மை
நேசித்திட் டன்னமும் நீசுத்தி செய்தன்மற்
றாசற்ற சற்புத் திரமார்க்க மாகுமே.

மகன்மை நெறிநிற்பார்க்குத் திருமுறை வழியாக வழிபாடு செய்தலும், திருமுறை எழுதுதல் அதனை ஓதுதல். அறுவகைப் போற்றித் தொடர் புகன்று அருச்சித்தல், திருவைந்தெழுத்தைக் கணித்தல், ஆகியவையும் குற்றமறச் செய்யும் நற்றவமாகும். வாய்மையும் அழுக்காறின்மையும் கைக்கொள்ளவேண்டிய தூய்மைகளாகும். அன்பமைத்துப் படைப்புக் குழைத்தல் நைவேத்தியமாகும். திருமுழுக்கு முதலியன திருவுருவின்மாட்டுச் செய்தல் தூய்மையதாகும். இவற்றோடிணைந்த மற்றவையும் மகன்மை நெறியாகும். போற்றித்தொடர் திருநாவுக்கரசு நாயனார் பாடியருளிய போற்றித் திருத்தாண்டகம் ஐந்து, திருவாதவூரடிகள் பாடியருளிய போற்றித் திருவகவல் ஒன்று ஆக ஆறும் திருமுறைக்கண் தனிமுதன்மையாகக் காணப்படுகின்றன. இவை முறையே ஐந்தொழிற்றனிமைக்கும் ஒருங்காம் இனிமைக்கும் வாய்ப்பாக அமைந்த அருளிப்பாடாகும். தனித்தனி ஐந்தொழிற்கு முறையே பிள்ளையார், முருகவேள், ஆலமர் கடவுள், அம்மை, சிவக்கொழுந்து, ஆகிய ஐம்பெரும் படிமங்களுக்கும் ஆம். திருவாசகப் போற்றித் திருவகவல் ஐம்பெருந்தொழிலும் ஒருங்கு காணப்படும் அம்பலவாண அரும்பெரும் படிவத்துக்கு ஆம்

போற்றித் திருத் தாண்டகங்களின் முதல் நினைப்பு முறையே வருமாறு: 1. பொறையுடைய. 2. எல்லாஞ், 3. பாட்டான, 4. வேற்றாகி, 5. கற்றவர்களுண்ணும் என்பனவாம்.

## 1470. அறுகாற் பறவை அலர்தேர்ந் துழலும்

1470. அறுகாற் பறவை அலர்தேர்ந் துழலும்
மறுகா நரையன்னந் தாமரை நீலங்
குறுகா நறுமலர் கொய்வன கண்டுஞ்
சிறுகால் அறநெறி சேரகி லாரே.

வண்டுகள் தேனையுண்டு இன்புறும்பொருட்டுத் தேனிறை பூக்களை நாடித்திரியும். அதுபோல் வெள்ளை அன்னங்களும் தாமரை மலரை நாடித்திரியும். அத்தகைய சிறப்புப் பொருந்திய தாமரை நீலம் முதலிய பூக்களைத் தக்க செவ்வியில் மெய்யடியார்கள் புனல் முழுகி வாய் புதைத்து உள்ளம் திருவைந்தெழுத்தோதிக் கொய்வன கண்டும் கால முண்டாகவே சிலர் அறநெறியாகிய செந்நெறி சேராது பின்னிற்பர்.

அறுகாற் பறவை - வண்டு மறுகா - அலைந்து. நரை அன்னம் - வெள்ளை அன்னப்பறவை. சிறு கால் - இளம் பருவம்.

## 1471. அருங்கரை யாவது அவ்வடி நீழற்

1471. அருங்கரை யாவது அவ்வடி நீழற்
பெருங்கரை யாவது பிஞ்ஞக னாணை
வருங்கரை யேகின்ற மன்னுயிர்க் கெல்லாம்
ஒருங்கரை யாயுல கேழினொத் தானே.

ஆருயிர்கள் பிறவிப் பெருங்கடல் நீந்திக் கரையேறும் அரியகரை சிவபெருமான் திருவடிநீழலாகும். அனைத்துயிர்க்கும் பேரெல்லையாகத் திகழ்வது சிவபெருமான் ஆணையாகும். வினைக் கீடாக வரும் பிறப்பெழுவகையுட் புகும் உயிர்கட்கெல்லாம் ஒப்பில்லாத ஒரு தனி வேந்தாய்த் தோன்றிய உலகனைத்தினும் ஒப்பநின்றருளினன் சிவன்.

அருங்கரை - சம்சாரக் கடலுக்குக் கரை. வருங்கரை - எழும் பிறப்புக்கள். அரையாய் - இறைவனாய்.

## 1472. உயர்ந்தும் பணிந்தும் முகந்துந் தழுவி

1472. உயர்ந்தும் பணிந்தும் முகந்துந் தழுவி
வியந்தும் அரனடிக் கேமுறை செய்மின்
பயந்தும் பிறவிப் பயனது வாகும்
பயந்து பரிக்கிலப் பான்மைய னாமே.

திருவேடப் பொலிவால் உயர்ந்தும், சிவனடியார் திருவடியிணையினைப் பணிந்தும், அதனால் உள்ளம் உவந்தும், திருவைந் தெழுத்தினை அகம் தழுவியும், அதனால் வியப்புற்றும் சிவபெருமான் திருவடிக்கே திருத்தொண்டு செய்வோம் என்பாரே மகன்மை நெறியினராவர். அப் பணியினை அன்புடன் செய்யுங்கள். பிறவிக்கு அஞ்சிப்
பெருமான் அடியிணையைச் சேரும் பெரும்பேறதுவாகும். அன்பும் அச்சமுங் கொண்டு அவன் திருவடியினை நெஞ்சத்தமைத்துத் தொழுதால் சிவபெருமானும் அவ்வாருயிரினை முன்னின்று தாங்குபவனாவன். அன்பும் அச்சமுங்கொண்டு வழிபடும் முறையினைத் திருவள்ளுவநாயனார் "அகலாது அணுகாது தீய்க்காய்வார் போல்க, இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்." (691) என்னுந் திருப்பாட்டால் குறித்தருளினர். மேலும் "யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்" என்பதனால் அச்சமும், "யாவரும் பெற்றறியா இன்பத்துள் வைத்தான்" என்பதனால் அன்புங்கொண்டு வழிபடுதல்வேண்டும் என்பதாம். அல்லதூஉம்,

சிறப்பின்பாற்கொள்ளும் அன்பும், பிறப்பின்பாற் கொள்ளும் அச்சமும் அகலாவுள்ளத்தராய் வழிபடுதலென்றலும் ஒன்று.

பயந்து பரிக்கில் - பயம் பத்தியுடன் சற்புத்திர மார்க்கத்தைக் கைபற்றினால்.

## 1473. நின்று தொழுவன் கிடந்தெம் பிரான்தன்னை

1473. நின்று தொழுவன் கிடந்தெம் பிரான்தன்னை
என்றுந் தொழுவன் எழிற்பரஞ் சோதியைத்
துன்று மலர்தூவித் தொழுமின் தொழுந்தோறுஞ்
சென்று வெளிப்படுந் தேவர் பிரானே.

பணிசெய்து கிடந்து அருள்வழிநின்று எம்பிரானாகிய சிவபெருமானைத் தொழுவேன். அப்பொழுது சிவப் பேரொளி தோன்றும். அந்த எழிற்பெருஞ்சுடரை என்றும் இடையறாது தொழுவன். மெய்யன்பர்களே, நீங்களும் மிக்க மலர்கொண்டு சிவபெருமான் திருவடியில் திருமுறைப் போற்றித் திருமாமறை ஓதி வழிபாடு செய்யுங்கள். நீங்கள் கைகூப்பி வலம்வந்து கீழ்வீழ்ந்தெழுந்து தலைவணங்கித் தொழுந்தோறும் தயிரில் வெளிப்படும் வெண்ணெய் போன்று தேவர்க்கும் பிரானாகிய சிவபெருமான் உங்கள் உள்ளத் தாமரையின்கண் வெளிப்பட்டருள்வன்.

சென்று - உதயமாகி.

## 1474. திருமன்னுஞ் சற்புத் திரமார்க்கச் சரியை

1474. திருமன்னுஞ் சற்புத் திரமார்க்கச் சரியை
உருமன்னி வாழும் உலகத்தீர் கேண்மின்
கருமன்னு பாசங் கைகூம்பத் தொழுது
இருமன்னு நாடோறும் இன்புற் றிருந்தே.

கிடைத்தற்கரிய மக்கள் யாக்கை பெற்ற உலகவரே! கேளுங்கள். மகன்மை நெறிக்கண் ஒழுகுவார்க்கு வீடுபேறு எளிதின் எய்தும். பிறவிக்கு வித்தாகிய ஆணவமலப்பாசம் இம் மகன்மை நெறியினரைக் கண்டு செயலற்றொடுங்கும். அதனால் நாள்தோறும் திருவைந்தெழுத்து ஓதித்தொழுது இன்புற்றிருங்கள். மகன்மைநெறி - சற்புத்திர மார்க்கம். கைகூம்ப - செயலற்றொடுங்க. கை - செயல்.

பாசங்கை கூம்ப - பாசம்கெட.

## 1475. எளியனல் தீப மிடல்மலர் கொய்தல்

1475. எளியனல் தீப மிடல்மலர் கொய்தல்
அளிதின் மெழுக லதுதூர்த்தல் வாழ்த்தல்
டளிமணி பற்றல் பன்மஞ் சனமாதி
தளிதொழில் செய்வது தான்தாச மார்க்கமே.

அடியார்க்கு எளியனாய் ஒழுகுதல், திருக்கோவில்களில் நல்ல விளக்கிடுதல், திருநந்தனவனத்தில் மலர்கொய்தல், அன்புடன் மெழுகல், திருவலகிடுதல், திருமுறைத் திருப்பதிகம் பாடியபடி பொருள் சேர் புகழை ஓதி வாழ்த்தல், திருக்கோவிற்கண் உள்ள அசையா மணி போன்ற விளக்கமிக்க பெரிய மணிகளை அடித்தல், திருமுழுக்குக்கு வேண்டிய திருத்தநீர் முதலியன கொணர்தல் இன்னும் திருக்கோவில் திருத்தொண்டு பலவும் புரிதல் அடிமைநெறி என்ப. பளி: பள்ளி என்பதன் இடைக்குறை. பள்ளி - திருக்கோவில். தளி - திருக்கோவில். அடிமைநெறி - தாசமார்க்கம்.

எளி - பணிவாக. அளிதின் - அன்புடன். தூர்த்தல் - திருவலகு இடல். பளி - பள்ளி; கோவில்.

## 1476. அதுவிது வாதிப் பரமென் றகல்வர்

1476. அதுவிது வாதிப் பரமென் றகல்வர்
இதுவழி யென்றங் கிறைஞ்சின ரில்லை
விதிவழி யேசென்று வேந்தனை நாடும்
அதுவிது நெஞ்சில் தணிக்கின்ற வாறே.

ஆதிப்பரம் அது இது என்று ஐயுற்றுத் தெளியாது நீங்குவர். வாய்மைச் செந்நெறி இது என்று தெளிந்து வேந்தனாம் சிவபெருமானை வழிபட்டுத் தொழுதாரில்லை. தமிழ்த் திருமாமறை திருமுறை வழியே உண்மை கண்டு ஓர்ந்து செந்நெறிச் சென்று சிவபெருமானை நாடுங்கள். அதுவே உள்ளத்தில் தோன்றும் ஐயுறவை அகற்றித் தெளிவினைத் தருவதாகும். தணித்தல் நீக்குதல். திருமாமறை - தமிழ் வேதம். திருமுறை - தமிழாகமம். வேந்தன் - மருதநிலத் தெய்வம்.

விதி வழி - தமிழ் வேதம்; தமிழ் ஆகமங்கள் விதித்தபடி. வேந்தன் - சிவபெருமான்.

## 1477. அந்திப்பன் திங்க ளதன்பின்பு ஞாயிறு

1477. அந்திப்பன் திங்க ளதன்பின்பு ஞாயிறு
சிந்திப்பன் என்றும் ஒருவன் செறிகழல்
வந்திப்ப வானவர் தேவனை நாடொறும்
வந்தப்ப தெல்லாம் வகையின் முடிந்ததே.

திருவருள் துணையால் திங்களாகிய இட கலையையும் ஞாயிறாகிய பிங்கலையையும் அடக்குவன். அடக்கி எந்நாளும் ஒப்பில்லாத சிவபெருமானின் திருவடியிணையை நாடுவன் தேவர் முதல்வனாகிய அச் சிவபெருமானையே நாடொறும் வணங்குவன். அவ்வாறு வணங்கும் திறங்களெல்லாம் சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்னும் நன்னெறி நான்கு வகையில் அடங்கும். இஃது உயிராவணமிருந்து உற்றுநோக்குதலாம்.

அந்திப்பன் - அடக்குவேன். திங்கள் ஞாயிறு - இடகலை பிங்கலை. வகை - நான்கு வகையான மார்க்கங்கள்.
(3)

## 1478. அண்ணலை வானவர் ஆயிரம் பேர்சொல்லி

1478. அண்ணலை வானவர் ஆயிரம் பேர்சொல்லி
உன்னுவர் உள்மகிழ்ந் துண்ணின் றடிதொழக்
கண்ணவ னென்று கருது மவர்கட்குப்
பண்ணவன் பேரன்பு பற்றிநின் றானே.

ஒரு நாமம் ஒருருவம் ஒன்றும் இல்லாச் சிவனை வானவர்கள் ஆயிரம் திருப்பெயர் சொல்லி அண்ணல் என்று நினைத்து வழிபடுவர். அச் சிவபெருமானை நாம் திருவடிதொழுதல்வேண்டுமென்று எண்ணினால் அப்பொழுதே அவன். மகிழ்ந்து தொழுதற்குத் துணையாய் உயிர்க்குயிராய் உண்ணின்று. அவனே அறிவிக்கின்ற கண்ணாவன் - அங்ஙனம் கருதுவார்க்குப் பண்ணவனாகிய அச் சிவபெருமான் அவ்வுயிரினிடத்துப் பேரன்பு பூண்டு அவ்வுயிரினைப்பற்றி நின்றான் கண்ணவன்: அவன் கண்; அவனே அறிவிக்கின்ற கண்ணாவான்.

உண்ணின்று - மனமார.

## 1479. வாசித்தும் பூசித்தும் மாமலர் கொய்திட்டும்

1479. வாசித்தும் பூசித்தும் மாமலர் கொய்திட்டும்
பாசிக் குளத்தில்வீழ் கல்லா மனம்பார்க்கின்
மாசற்ற சோதி மணிமிடற் றண்ணலை
நேசத் திருந்த நினைவறி யாரே.

பாசிக்குளம் போலும் கருக்குழியில் வீழ்ந்து உழலும் நன்னெறி கல்லாத மனத்தோரைப் பார்க்கின், நல்லார் திருமுறையினை ஓதியும், அம் முறையினை எழுதிப் பூசித்தும், அதன் வழியாக நறுமலர் கொய்தும், இயல்பாகவே மாசற்ற பேரொளிப்பிழம்பாம் திருநீலகண்டப் பெருமானைப் பேராப்பெருங் காதல்கொண்டு வழிபட்டிருக்குங் கருத்தினை அவர் அறியாதவராவர் என்பதாம். நல்லார் - ஞானி.

பாசிக்குளம் - கருப்பாயசம்.

## 1480. எவ்விடத் தும்பணி யின்மைகண் டுள்ளவர்

1480. எவ்விடத் தும்பணி யின்மைகண் டுள்ளவர்
எவ்விடத் தும்பணி யீசன் பணியென்றே
அவ்விடத் தைங்கரு மத்தால் அறிதலால்
உவ்விடத் தோருக்கோர் உபாய மில்லையே.

திருவடி உணர்வுசேர் மெய்யடியார் எந்த இடத்தும் இறைவனையின்றித் தமக்கொரு பணியின்மை கண்டுள்ளவராவர். தாம் செய்யும் பணியனைத்தும் ஆண்டவன், அடிமையாகிய தம்மைக் கொண்டு செய்விக்கும் பணியென்றே நினைவர். இது 'நின்னடியேன் செய்பணிகள் நின்தொண்டே நின்னருளே. நின்னடிக்கே ஒப்புவித்தேன்' என்னும் உண்மையினை உணர்த்தும். அங்ஙனம் அம் மெய்யடியார் அறிவதூஉம் உலகமும், உலகத்தொழில்களும், உயிர்ச் செயல்களும் ஆண்டவன் ஐந்தொழிலின்கண் அடங்கும் உண்மையறிவதால் என்க; இதனையொழித்து எவ்விடத்தோர்க்கும் பேறெய்தும் வழிவகை வேறில்லை என்க. 'என்கடன் பணிசெய்து கிடப்பதே' என்னும் செந்தமிழ்ச் சிறப்பு மறையின் சீரிய பொருள் உலகிடை ஊர்ந்துசெல்ல ஊர்தி உழைப்பதற்குக் கருவி, உறைவதற்கு இல்லம் முதலியன தருவார்க்குக் கொடுக்கும் கூலிப் பணம்போன்றாகும் இதனை வருமாறு நினைவுகூர்க.

ஊர உழைக்க உறையத் தருங்கருவிக்
காரத் தருங்குறி யாரறியார் - சாரத்

தருமுடற்கு நற்கோள் தருதல்சிவத் தொண்டே
உருகுமனத் தன்ப ருரை.

## 1481. சாலோக மாதி சரியாதி யிற்பெறுஞ்

1481. சாலோக மாதி சரியாதி யிற்பெறுஞ்
சாலோகஞ் சாமீபந் தங்குஞ் சரியையான்
மாலோகஞ் சேரில் வழியாகுஞ் சாரூபம்
பாலோகம் இல்லாப் பரனுரு வாமே.

சிவவுலகம், சிவனண்மை, சிவனுருவம், சிவனாம் பெரு வாழ்வு என்னும் நான்கும் சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்னும்
நாநெறியின் பெறுபேறாக எய்துவன. சிவவுலகநிலை சீலத்தால் எய்தப் பெறும். சிவனண்மைநிலை நோன்பால் மாவுலகத்தைச் சார்வதால் எய்தும். இந் நோன்புவழித்தாம் செறிவினால் விரிவாம் உலகத் தொடர்பில்லாத சிவத்தினுருவம் எய்தும்.

சரியையால் சாலோகம் பெறலாம் என்றது இம் மந்திரம்.

## 1482. சமயங் கிரியையிற் றன்மனங் கோயில்

1482. சமயங் கிரியையிற் றன்மனங் கோயில்
சமய மனுமுறை தானே விசேடஞ்
சமயத்து மூலந் தனைத்தேறன் மூன்றாஞ்
சமயாபி டேகந் தானாஞ் சமாதியே.

நோன்மைநிலையில் சிவனுழைவாகிய சமயம் 'நமசிவய' என்னும் திருவெழுத்தைந்தால் தன் உள்ளமே திருக்கோயிலாகக் கொள்ளுதல். சிவநோன்மையாகிய விசேடம். 'சிவயநம' என்னும் திருவைந்தெழுத்தே. திருக்கோயில் சிவனுண்மையாகிய நிருவாணம் 'சிவயசிவ' என்பதே திருக்கோயில் சிவநுகர்வை என்னும் திருமுழுக்கு அல்லது அபிடேகம். 'சிவசிவ' என்பதே திருக்கோயில் என்று வழிபடுதல். இந் நுகர்மை நிலையினைச் சிவனாம் சமாதி என்ப. சமாதி - நொசிப்பு..

## 1483. பாசம் பசுவான தாகும்இச் சாலோகம்

1483. பாசம் பசுவான தாகும்இச் சாலோகம்
பாசம் அருளான தாகும்இச் சாமீபம்
பாசஞ் சிரமான தாகும்இச் சாரூபம்
பாசங் கரைபதி சாயுச் சியமே.

பாசம் பசுப்போல் நெகிழ்ச்சியுறுநிலை சிவ அண்மையில் சிவவுலகமாகும். அப் பாசம் அருள்போல் வருத்துவதொழிந்து பொருந்து மளவானிற்பது சிவனண்மையாகும். பாசம் தோற்றத்தளவானிற்பது சிவவுருவமாகும். பாவம் அத் தோற்றமும் ஒடுங்கி நிற்பது சிவனாதலாகும்.

பாசம் பசுவானதாகும் - செயலற்ற பாசம் பசுப்போன்று நெகிழ்ச்சியுறும். பாசமருளானதாகும் - பாசம் வருத்தும் தன்மையறும். பாசம் சிரமான - பாசம் அதிகார மாத்திரையாய் நிற்கும். பாசம் கரை - பாசம் அற்று ஒழிதல்.

## 1484. தங்கிய சாரூபந் தானெட்டாம் யோகமாந்

1484. தங்கிய சாரூபந் தானெட்டாம் யோகமாந்
தங்குஞ் சன்மார்க்கந் தனிலன்றிக் கைகூடா
அங்கத் துடல்சித்தி சாதன ராகுவர்
இங்கிவ ராக விழிவற்ற யோகமே.

எண்வகை உறுப்புக்களானமைந்த சிவயோக நெறியான் எய்துவது சிவவுருவம். இந்நிலையும் சீலம், நோன்பு, செறிவு, அறிவு என வழங்கப்பெறும் நன்னெறியாகிய சன்மாக்கத்தினன்றிக் கிடையாது. அச் சிவயோகர் உடல் உறுப்புக்களோடு கூடியிருப்பினும் சித்திப்பயிற்சி பெற்றவராவர்.

யோகமார்க்கத்தால் சாரூபம் கிட்டும் என்றது இம் மந்திரம். அங்கத்துடல் - உறுப்புக்கள் அமைந்த உடல்.

## 1485. சயிலலோ கத்தினைச் சார்ந்த பொழுதே

1485. சயிலலோ கத்தினைச் சார்ந்த பொழுதே
சயிலம தாகுஞ் சராசரம் போலப்
பயிலுங் குருவின் பதிபுக்க போதே
கயிலை இறைவன் கதிர்வடி வாமே.

உலகத்து ஒப்பில் ஒருமலை என்று சொல்லப்படும் பொன் மலையினைச் சார்ந்த இயங்குதிணையும் நிலைத்திணையுமாகிய பொருள்களெல்லாம் அப் பொன்வண்ணமாதல்போல் சிவகுரு வீற்றிருக்கும் திருவூர் புகுந்தபோதே கயிலைமலையில் வீற்றிருக்கும் சிவபெருமானின் இயற்கை அறிவொளி வடிவமாவன் மெய்கண்டானாகிய மாணவன். சயிலலோகம்: லோகசயிலம். சயிலம் - மலை. சயிலாதி : மலைகளுள் முதன்மையான கைலைமலை.

சயிலலோகம் - சிலை, சைலம், சயிலம் அஃதாவது மேரு "மேருவைச் சார்ந்த காகமும் பொன்னாம்" என்னும் பழமொழிப்படி "சயிலமதாகும் சராசரம் போல" என்றார்.

## 1486. சைவஞ் சிவனுடன் சம்பந்த மாவது

1486. சைவஞ் சிவனுடன் சம்பந்த மாவது
சைவந் தனையறிந் தேசிவஞ் சாருதல்
சைவஞ் சிவந்தன்னைச் சாராமல் நீவுதல்
சைவஞ் சிவானந்தஞ் சாயுச் சியமே.

சிவனாம் நிலையில் முதனிலை சைவம் சிவனுடன் தொடர்புற்று நிற்றல். இரண்டாம்நிலை அந் நெறியின் உண்மை உணர்ந்து சிவன் அண்மையில் சார்ந்துநிற்றல். மூன்றாம்நிலை சார்ந்துநிற்றலைக் கடந்து முழுநீறு பூசிய முனிவர்போன்று வேறன்மையாக விரவி நிற்றல். இந்நிலையே சைவத்தின்கண் ஓதப்படும் சிவனார் திருவடிப் பேரின்பம் என்னும் சாயுச்சியமாகும். 'தோல்மறைந்து வெண்ணீறு தோன்றல் பொருள் வேறன்மைச். சால்புணர்ப்புச் சாற்றுந் தனித்து.

சாராமல் நீவுதல் - சார்ந்து நில்லாமல் இரண்டறக் கலத்தல்.

## 1487. சாயுச் சியஞ்சாக் கிராதீதஞ் சாருதல்

1487. சாயுச் சியஞ்சாக் கிராதீதஞ் சாருதல்
சாயுச் சியமுப சாந்தத்துத் தங்குதல்
சாயுச் சியஞ்சிவ மாதல் முடிவிலாச்
சாயுச் சியமனத் தானந்த சத்தியே.

சிவனாம் பெருநிலையாகிய சாயுச்சியம் சார்தல் மேலாலவத்தையில் நனவில் உயிர்ப்படங்குதல் வேண்டுதல் வேண்டாமை இல்லாமையாகிய உவர்ப்புநிலை உலகங் கடந்தநிலை இந் நிலை உபசாந்தநிலை என்றும் கூறப்படும். இதுவே சிவனாம் பெருநிலையில் தங்குதல். இவ்வுவர்ப்பு நிலை. 'காட்டல் வெறுப்புப்புக் காட்டாமை ஆம் விரும்பிங், கூட்டல் உவர்ப்பாம் உணர்' என்பதனான் உணரலாம் ஊட்டல் - ஒப்பக் காண்டல். சிவமாம் பெருவாழ்வே எய்துதல் முடிவிலாச் சாயுச்சியம். இதன்கண் சிவபெருமானது திருவருட் பேரின்பமாகவே திகழ்தல். இவ் விழுப்பேறு யான், எனது, ஆண், அறிவு, என்னும் இருமாத்திரைச் சொற்பொருளாய் ஆயிருர் நிற்குங்காறும் பெறுதல் இயலாது. ஆனால் பெண், அன்பு என்னும் ஒரு மாத்திரைச் சொற்பொருளாயவழி எய்துதல் இயையும். இயையவே விழுமிய முழுமுதற் சிவபெருமானும் கண், இன்பு என ஒரு மாத்திரைச் சொற்பொருளாய் விளங்கியருள்வன்.

உபசாந்தம் - விருப்பு வெறுப்பு இல்லாமை.

# 1488. இருட்டறை மூலை யிருந்த குமரி

1488. இருட்டறை மூலை யிருந்த குமரி
குருட்டுக் கிழவனைக் கூடல் குறித்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
மருட்டி யவனை மணம்புரிந் தாளே.

அறியாமையாகிய இருள் சூழ்ந்த இவ் வுடலகத்து அறியாமையை நீக்கி அறிவை விளக்கும் திருவருட்குமரி மூலையிலிருப்பார்
போன்று மறைந்துறைந்தனள். அறிவுக்கண் விளங்காது குருடாக இருந்த ஆருயிர்க்கிழவனைக் கூடுதல் கருதி அவனுக்கு ஏற்பட்ட குருடாகிய அறியாமையை அகற்றிச் சிவபெருமானின் எண்குணங்களையும் வண்ணமுறக் காட்டித் தன்மாட்டே பேரன்பு கொள்ளுமாறு மயக்கி அவன்பால் சிவமணம் கமழும்படி தான் கூடியிருந்தனள்.

இருட்டறை - அஞ்ஞான இருள் படர்ந்த சரீரம். குமரி திருவருட் சத்தி. குருட்டுக் கிழவன் - ஞானக்கண்ணில்லாத ஆன்மா, அஃதாவது அஞ்ஞானமுள்ள சீவன். குருட்டினை - அஞ்ஞானத்தை மருட்டி - தெளிவு உண்டாக்கி. மணம் புரிந்தாள் - தங்கினாள்.

## 1489. தீம்புல னான திசையது சிந்திக்கில்

1489. தீம்புல னான திசையது சிந்திக்கில்
ஆம்புல னாயறி வார்க்கமு தாய்நிற்குந்
தேம்புல னான தெளிவறி வார்கட்குக்
கோம்புல னாடிய சொல்லையு மாமே.

சிவனடியின்பம் எய்துதற்குரிய நிலையினை எண்ணில் அந்நிலை திருவடியுணர்வாய் அவ் வுணர்வினை உணர்வார்க்கு இறவா இன்ப நுகர்வாம் சிவ அமிழ்தாய் நிற்கும். இத்தகைய இனிய உணர்வாகித் தெளிவறியுடையவர்கட்குக் கோப்புலனாகிய சிவஞானம் எண்ணியவாறே ஐம்புலனுகர்வின்பம் தரும் புறத்துப் பூங்காவொத்து அகத்துத் திகழும். கோப்புலன். கோம்புலன் என எதுகைநோக்கித் திரிந்தது. கோப்புலன் - உயர்ந்த ஞானம். கொல்லை - பூங்கா.

தீம்புலன் - இன்பம் அனுபவிக்கும். தசை - சமயம். ஆம் புலனாய் - பொருந்திய அறிவாய். கோம்புலன் - சிவஞானம்.

## 1490. இருள்நீக்கி எண்ணில் பிறவி கடத்தி

1490. இருள்நீக்கி எண்ணில் பிறவி கடத்தி
அருள்நீங்கா வண்ணமே யாதி யருளும்
மருள்நீங்கா வானவர் கோனொடுங் கூடிப்
பொருள்நீங்கா இன்பம் புலம்பயில் தானே.

பழமலமாம் இருளைப் பிறைமதிபோல் நீக்கி, அதன் பொருட்டு அவ் வுயிர்க்கு நேர்ந்த பல பிறவிகளையும் கொடுத்துக் கடத்தி ஆதியாகிய நடப்பாற்றல் திருவருள் நீங்காவண்ணம் உடனின்றருளும் அருளவே அவ் வுயிர் உன்மத்தம் அகலாத வானவர் கோனாகிய சிவபெருமானுடன் கூடி என்றும் நிலைத்திருப்பதாகிய பேரின்பம் நுகரும். உயிர்நிலைக்களமாம் உடம்பாகவும் அவ் வருள் திகழும். புலம்பயல் : பயில்புலம் - உறையும் உடம்பு.

## 1491. இருள்சூ ழறையில் இருந்தது நாடிற்

1491. இருள்சூ ழறையில் இருந்தது நாடிற்
பொருள்சூழ் விளக்கது புக்கெரிந் தாற்போன்
மருள்சூழ் மயக்கத்து மாமலர் நந்தி
அருள்சூழ் இறைவனும் அம்மையு மாமே.

புறவிருள் நிறைந்திருக்கின்ற அறையின்கண் உள்ள நுகர்பொருள்களை ஆராய்ந்து கைக்கொள்ளலுறுவார்க்கு அப் பொருளையும் நாடுவார் கண்ணையும் சூழ்ந்து ஒருங்கு விளக்கும் திருவிளக்கு விளங்கி நின்று எரிந்தாற்போன்று, அகவிருளாகிய மலமயக்கத்தால் அறிவு விளங்காத ஆருயிர் பேரின்பப் பெருவாழ்வு நல்கும் மெய்ப்பொருளாம் சிவத்தினைக் கூடி அழியா இன்பம் நுகர்தற்குத் திருவருள் விளக்கொத்து அவ் வுயிரின் அறிவினை விளக்கிச் சிவத்தினைக் காட்டித் திருவடியிற்கூட்டி வனப்பாற்றலாகத் துணைசெய்து நிற்கும். மெய்ப்பொருளாகிய அப் பெரும்நந்தி ஆருயிரின் நெஞ்சத் தாமரையில் வீற்றிருந்தருள்வன். அதனால் மாமலர்நந்தி எனப்படுவன். அப் பெருமான் ஆருயிர்களை ஆட்டலும் காட்டலும் கூட்டலும் ஊட்டலும் அவ் வுயிர்க்கு வாட்டமில் ஊனுமாய் விளங்குந் தன்மையினன். அதனால் அவன் ஒருவனே அம்மையப்பரென்னும் விட்டு நீங்கா ஒட்டியுறும் இருநிலையும் உடையனாவன். மாமலர் - சிவனடிமறவாத் தூயநெஞ்சம்.

இருட்டறையில் விளக்கொளியால் பொருளைக் காண்பது போல, அஞ்ஞான இருள் படர்ந்த சரீரத்தில் திருவருட்

சத்தியின் ஒளியால் சிவமாகிய பொருளைக் காணலாம் என்றது இம் மந்திரம்.

## 1492. மருட்டிப் புணர்ந்து மயக்கமும் நீக்கி

1492. மருட்டிப் புணர்ந்து மயக்கமும் நீக்கி
வெருட்டி வினையறுத் தின்பம் விளைத்துக்
குருட்டினை நீக்கிக் குணம்பல காட்டி
அருட்டிகழ் ஞான மதுபுரிந் தானே.

திருவருளம்மை ஆருயிர்கள் தன்மாட்டு விருப்பம் கொள்ளும்படி அவ்வுயிர்களை மயக்கிக் கூடினள். அவளே அவ் வுயிர்கள் பழமலப் பிணிப்பால் மாயையின்கண் மயங்கிக்கிடந்த மயக்கினை நீக்கியருளினள். அச்சுறுத்தி வினைகளை அறுத்துத் திருவடியின்பத்தினை விளைத்தவளும் அவளே. அவளே ஞானக்கண் பெறாது அகக்கண் குருடாயிருந்த குருட்டினை நீக்கியருளினள். எய்தற்குரிய நன்மைகள் பலவற்றையும் காட்டித் திருவருள் வண்ணமாகிய சிவஞானத்தினைப் பதித்தருளினவளும் அவளே. அங்ஙனம் செய்தருளியவள் வனப்பாற்றலாகிய திருவருளம்மை. வனப்பாற்றல்: இதன் முதலெழுத்து வகரம். இதுவே 'சிவ' என்பதிலுள்ளவை.

## 1493. கன்னித் துறைபடிந் தாடிய ஆடவர்

1493. கன்னித் துறைபடிந் தாடிய ஆடவர்
கன்னித் துறைபடிந் தாடுங் கருத்திலர்
கன்னித் துறைபடிந் தாடுங் கருத்துண்டேற்
பின்னைப் பிறவி பிறிதில்லை தானே.

புறத்தே செந்தமிழ் நாட்டுத் தென்கோடி முனையாகிய கன்னியாகுமரி என்னும் கன்னித்துறைத் திருத்தநீர்ப்படிந்து ஆடியவர்,
அத்துடன் அமைந்துவிடுகின்றனர். அஃது அகத்தே விளங்கும் திருவருள் நெறியாகிய கன்னித்துறை படிந்தாடுதற்கு வழியென்று நினைந்து ஆண்டுச் சென்று பயிலும் கருத்துடையரல்லர். அத் திருவருள் நெறிச் செல்லும் கருத்துண்டாகுமானால் அவர் பிறவாப் பெருநெறி பற்றிப் பிறப்பற்றுச் சிறப்புற்று வாழ்வர்.

கன்னித்துறை - சத்தி பொருந்துதலுக்கு உரிய வழி.

## 1494. செய்யன் கரியன் வெளியன்நற் பச்சையன்

1494. செய்யன் கரியன் வெளியன்நற் பச்சையன்
எய்த வுணர்ந்தவர் எய்வர் இறைவனை
மைவென் றகன்ற பகடுரி போர்த்தவெங்
கைய னிவனென்று காதல்செய் வீரே.

படைத்தல் காத்தல் துடைத்தல் மறைத்தல் ஆகிய உலகியற்றொழில் நான்கிற்கும் கொள்ளும் திருமேனியின் நிறம் முறையே செம்மை, கருமை, பசுமை என்ப. இறைவன் இந் நிறங்களை மேற்கொள்கின்றனன் என்னும் உண்மையைப் பொருந்த உணர்ந்தவர் அவன் திருவடியினை அடைவர். எய்வர்; எய்துவர் என்பது எய்வரெனக் குறைந்து நின்றது. அவனே அறியாமைச் சார்பாகத் தோன்றிய தன் முனைப்பாகிய யானையினைத் தற்கிழமைப் பொருளாகிய நகத்தால் உரித்துப் போர்த்தனன். மழுவாகிய தீயினைக் கையில் தாங்கியவனும் அவனே. இம் முறைமையினை நினைந்து அவன்பால் பேரன்பு பூணுங்கள். இந் நிறவைப்புக் குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்னும் நானில வைப்பமைவினை நினைவுறுத்துவதாகும்.

செய்யன் - அயன். கரியன் - அரி. வெளியன் - அரன் (உருத்திரன்). பச்சையன் - ஈசன் (மகேசன்) மை வென்றகன்ற பகடு - யானை. வெங்கையன் - வேம் + கையன் - இடக் கரத்தில் எரி.

## 1495. எய்திய காலங்கள் எத்தனை யாயினுந்

1495. எய்திய காலங்கள் எத்தனை யாயினுந்
தையலுந் தானுந் தனிநா யகமென்பர்
வைகலுந் தன்னை வணங்கு மவர்கட்குக்
கையிற் கருமஞ்செய் காட்டது வாமே.

உலகினுக்கு எத்தனை ஊழிகள் செல்லினும் சிவையும் சிவனும் ஒப்பில்லாத முழு முதன்மையராவரென்பர். நாடோறும் தம்மை வணங்கும் மெய்யடியார்கட்கு உண்மையறிவின்ப அடையாளத் திருக்கையால் மெய்ப்புணர்ப்புற்றிருக்கும் தவநிலையாற்றக் காட்டியருள்வர். அடையாளக் காட்டதுவுமாகும். உண்மையறிவின்ப அடையாளம் - சின் முத்திரை. அடையாளம் - பொறி.

கையில் - சின்முத்திரையால். கருமஞ் செய் காட்டு - யோகம் செய் என்று கூறுவது போலும்.

## 1496. கண்டுகொண் டோமிரண் டுந்தொடர்ந் தாங்கொளி

1496. கண்டுகொண் டோமிரண் டுந்தொடர்ந் தாங்கொளி
பண்டுபண் டோயும் பரமன் பரஞ்சுடர்
வண்டுகொண் டாடு மலர்வார் சடையண்ணல்
நின்றுகண் டார்க்கிருள் நீக்கிநின் றானே.

ஞாயிறும் திங்களும் ஆகிய ஒளியிரண்டும் பழைமையாக ஒன்றை ஒன்று தொடர்ந்து வரினும் அவை இளைப்புறும். ஆனால், பரமனாகிய பரஞ்சுடர் என்றும் ஒன்றுபோலிருப்பன். வண்டு மொய்க்கும் கொன்றைமலர்மாலை யணிந்து நீண்ட திருச்சடையினையுடைய சிவபெருமான் திருவடியிணையினை நன்னெறி நால்வகையுள் மேலாம் அறிவு வகையில் நின்று கண்டோர்க்கு அவன் எழுந்தருளி இருள்நீக்கி ஆண்டருள்வன். நால்வகை: சீலம், நோன்பு, செறிவு, அறிவு.

இரண்டு - சூரியன்; சந்திரன் ஓயும் - தளர்வுறும்.

## 1497. அண்ணிக்கும் பெண்பிள்ளை அப்பனார் தோட்டத்தில்

1497. அண்ணிக்கும் பெண்பிள்ளை அப்பனார் தோட்டத்தில்
எண்ணிக்கும் ஏழேழ் பிறவி யுணர்விக்கும்
உண்ணிற்ப தெல்லாம் ஒழிய முதல்வனைக்
கண்ணுற்று நின்ற கனியது வாகுமே.

அப்பனார் உடைமையாகிய தோட்டம் ஒன்றுள்ளது. அப்பனார் - சிவனார். அத் தோட்டம் ஆருயிர்களின் உடம்பாகும். அதன் கண் பொருந்தியிருக்கின்ற பெண்பிள்ளை திருவருளாற்றலாவள். அளவில்லாத எழுவகையாகத் தோன்றும் பிறப்புயிர்க்கு அத் திருவருள் உணர்வினை விளக்கும் உடம்பகத்துள்ள கருவிக் கூட்டங்களும் கருமக் கூட்டங்களும் ஆகிய அனைத்தையும் அத் திருவருள் அகற்றியருள்வள். அகற்றவே முழுமுதலாகிய விழுமிய சிவக்கனி கண்ணுறப் பொருந்தி நிற்கும். எண்ணிகும் என்பது எண்ணிக்கும் என எதுகை நோக்கித் திரிந்தது. எண்ணிகும் எண்ணைக் கடக்கும்; அளவிறக்கும்.

அண்ணிக்கும் - பொருந்தும். பெண்பிள்ளை - திருவருட் சத்தி. அப்பனார் தோட்டம் - சரீரம். எண்ணிக்கும் அளவுகடந்த. உண்ணிற்பது எல்லாம் - நெஞ்சத்துள் நிற்கும் வினைப்பயன்கள் எல்லாம்.

## 1498. பிறப்பை யறுக்கும் பெருந்தவம் நல்கும்

1498. பிறப்பை யறுக்கும் பெருந்தவம் நல்கும்
மறப்பை யறுக்கும் வழிபட வைக்குங்
குறப்பெண் குவிமுலை கோமள வல்லி
சிறப்பொடு பூசனை செய்யநின் றார்க்கே.

குறப்பெண்ணாகிய வெள்ளிமலை மலையாள் - திருவருள் அம்மை. செந்தமிழ்த் திருமுறை வழியே சிறப்புடன் பூசனைபுரியும் மெய்யடியார்கட்கு அவர்களுடைய பிறப்பை அறுப்பன். நானெறிப் பெருந்தவத்தை நல்குவன். அறியாமையான் நிகழும் சிவனை மறக்கும் மறப்பை அறுப்பன் 'சிவயநம' என்னும் திருவைந்தெழுத்தைக் கணித்து இடையறாது வழிபட வைப்பன்.

குறப்பெண் - குறிஞ்சி நிலப்பெண். பார்வதி.

## 1499. தாங்குமின் எட்டுத் திசைக்குந் தலைமகன்

1499. தாங்குமின் எட்டுத் திசைக்குந் தலைமகன்
பூங்கமழ் கோதைப் புரிகுழ லாளொடும்
ஆங்கது சேரும் அறிவுடை யார்கட்குத்
தூங்கொளி நீலந் தொடர்தலு மாமே.

எட்டுத்திசைக்கும் தலைமகனோடு கூடி விளங்கும் திருவருளம்மையை உள்ளத்தாமரையினிடத்து இடையறாது உன்னுங்கள். மணங்கமழ்கின்ற மலர்சூடிய கூந்தலினையுடைய திருவருள் அம்மையின் திருவடியை வழிபடும் மெய்யுணர்வினையுடையார்க்கு நீங்கா ஒளி நீலமாகிய திருவருள் வீழ்ச்சி தொடர்ந்து அருள்புரியும். நீலம் - திருவருள்: உவமையாகுபெயர். திருவருள் வீழ்ச்சி : சத்திநிபாதம்.

தாங்குமின் - நினையுங்கள். ஒளி நீலம் - நீல ஒளி, சத்தி.

## 1500. நணுகினு ஞானக் கொழுந்தொன்று நல்கும்

1500. நணுகினு ஞானக் கொழுந்தொன்று நல்கும்
பணிகிலும் பன்மலர் தூவிப் பணிவன்
அணுகிய தொன்றறி யாத வொருவன்
அணுகும் உலகெங்கும் ஆவியு மாமே.

பலவாகிய நறுமலர்களைத் தூவித் திருவருளம்மையைப் பணிந்தாலும், அப் பணிவின்வழியே அணுகினும் மெய்யுணர்வினையே நல்குவள். சிவபெருமான் வேறறநிற்பினும் அணுகிய ஆருயிர்க் கிழவன் அவனருளாலன்றித் தன்னறிவால் காணும் தகைமையன் அல்லன். அச் சிவபெருமான் உயிர்க்குயிராய் நிற்பதுமட்டுமன்றி ஒன்றோடொன்று நெருங்கிச் சூழலும் அனைத்துலகினுக்கும் ஆவியாகவும் நின்றருள்கின்றனன்.

## 1501. இருவினை நேரொப்பில் இன்னருட் சத்தி

1501. இருவினை நேரொப்பில் இன்னருட் சத்தி
குருவென வந்து குணம்பல நீக்கித்
தருமெனு ஞானத்தால் தன்செய லற்றால்
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே.

இறப்பில் தவமாகிய சீலம் நோன்பு செறிவு அறிவு என்னும் நன்னெறி நால்வகையால் நல்வினைப் பயனும் தீவினைப் பயனும் ஆகிய இரண்டிலும் உள்ளந்தோயாமல் உடல்தோய நின்று ஒப்புக் கொள்ளும் நிலை வந்தால் திருவருளாற்றல் சிவகுருவாக வெளிப்பட்டு வந்து ஆருயிர்கள்பால் முன்கிடந்த மருட்குணம் பலவற்றையும் நீக்கி அவ்வருள் தந்தருளுமென்று சிறப்பித்துச் சொல்லப்படும் திருவடியுணர்வினை நல்கும். அவ்வருளுணர்வால் ஆருயிரின் முனைப்பாகிய தஞ்செயலற்றால் ஆணவம் மாயை கன்மம் என்னும் மும்மலமும் தீரும். அம்மலம் தீர்ந்தால் அவ்வுயிர் சிவன் அவன் என்னும் சிறப்பினை எய்தும். இருவினையொப்பினை வருமொப்பால் காண்க : சந்தனமும் சாணகமும் சார்ந்த சுலிக்கெடுப்பார், எந்த மணமும் வரையார் இங்கு.

இருவினை நேரொப்பு - புண்ணிய பாவத்தில் சம உணர்வு.
திரிமலம் - ஆணவம், கன்மம், மாயை.

## 1502. மாலை விளக்கும் மதியமும் ஞாயிறுஞ்

1502. மாலை விளக்கும் மதியமும் ஞாயிறுஞ்
சால விளக்குந் தனிச்சுடர் அண்ணலுள்
ஞானம் விளக்கிய நாதன்என் உள்புகுந்
தூனை விளக்கி யுடனிருந் தானே.

மாலைக் காலத்தில் இருட்டைப்போக்கி ஒளியை நல்கும் திருவிளக்கும், அதுபோன்ற மதியமும், பகலில் அதுபோன்று ஒளியை நல்கும் ஞாயிறும் விளக்கம் தருமாறு அவற்றிற்கு விளக்கம் அருளும் தனிச்சுடர் அண்ணலாகிய சிவபெருமான், ஆருயிர்களுக்கு உயிர்க்குயிராய் உண்ணின்று திருவடியுணர்வினை விளக்குதற் பொருட்டுத் தானே முழுமுதல் தலைவன் என அருளி என் உள்ளே புகுந்துநின்றவனும் அவனே. அங்ஙனம் புகுந்தருளியதோடமையாது உடம்பின் மெய்ம்மைத் தன்மையினையும் விளக்கியருளி உடனாய்நின்றனன்.

ஊனை - சரீரத்தை.

## 1503. ஆயத்துள் நின்ற அறுசம யங்களுள்

1503. ஆயத்துள் நின்ற அறுசம யங்களுள்
காயத்துள் நின்ற கடவுளைக் காண்கிலா
மாயக் குழியில் விழுவர் மனைமக்கள்
பாசத்தில் உற்றுப் பதைக்கின்ற வாறே.

விரிவின்றிச் சுருங்கிய கட்டினுள் ஒடுங்கிநிற்கும் முக்கூற்றுப் புறச்சமயங்களினுள்ளும் மேல் ஆராய்தலின்றி அது அதுவே மெய்ம்மையென மயங்கி நிற்கின்றவர் 'உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்' ஆக எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானைக் காணமாட்டார். மெய்ப்பொருள் காணாமையால் மீண்டும் பிறப்பதற்கே ஆளாகி மாயக்
குழியாகிய கருக்குழியில் வீழ்வர். அங்ஙனம் வீழ்ந்து பிறப்பதால் மனைவி மக்கள் என்னும் பாசத்திலுற்றுத் தடுமாறுவர். இதுவே உள்ளம் நடுங்கி உலைதற்கு வழியாகும். முக்கூறு: புறப்புறம், புறம், அகப்புறம்.

## 1504. ஆறு சமய முதலாஞ் சமயங்கள்

1504. ஆறு சமய முதலாஞ் சமயங்கள்
ஊற தெனவும் உணர்க உணர்பவர்
வேற தறவுணர் வார்மெய்க் குருநந்தி
யாறி யமைபவர்க் கண்ணிக்குந் தானே.

ஆறுசமயம் முதலாகச் சொல்லப்படுகின்ற சமயங்களனைத்தும் பிறப்பற்றுச் சிறப்புற்றுப் பேரின்பம் எய்தலுறுவார்க்கு இடையூறாகும் என உணர்க. அங்ஙனம் மெய்ம்மையுணர்பவர் அச் சமயங்கட்கு வேறாகிய சித்தாந்தச் செந்நெறியினைத் திருவருள் துணையால் நன்றாக உணர்வர். உணரவே நந்தியாகிய சிவகுரு வெளிப்பட்டு வந்து அருமறை1 அருள்வன். அருளவே அவ் வருள் பெற்றார் ஆறியமைவர். அத்தகையோர்க்குச் சிவன் அணுக்கமாய் இன்புறுத்தியருள்வன். அருமறை - குருமொழி; உபதேசம். (சிவயநம).

## 1505. உள்ளத்து ளேதான் கரந்தெங்கும் நின்றவன்

1505. உள்ளத்து ளேதான் கரந்தெங்கும் நின்றவன்
வள்ளற் றலைவன் மலருறை மாதவன்
பொள்ளற் குரம்பை புகுந்து புறப்படுங்
கள்ளத் தலைவன் கருத்தறி யார்களே.

ஆருயிரின் நெஞ்சினுள்ளே மறைந்து எங்கும் நீக்கமற நிறைந்துநின்றவன், வள்ளலாகிய முதல்வன். அவன் உச்சிக்கு அப்பால் அருள் வெளியில் காணப்படும் ஆயிரவிதழ்த் தாமரையில் வீற்றிருந்தருளும் அம்மையோடு கூடிய அப்பன். அவன் ஒன்பது ஓட்டைகளையுடைய நிலையில்லாத இவ் வுடலில் புகுந்து நின்றனன். இங்கிருந்து ஆருயிர்களின் செவ்விநோக்கி வெளிப்படுபவன் கள்ளத்தலைவனாகிய மறையோன். அவனது மெய்ம்மைக் கருத்தினை எவரும் எளிதாக அறியமாட்டார்கள் என்க.

பொள்ளல் - ஒன்பது ஓட்டைகள் உள்ள. மலர் உறை மாதவன் - உள்ளத் தாமரையில் வீற்றிருப்பவன்; 'மலர்மிசை ஏகினான்' இதன் வழித்து.

## 1506. உள்ளத்தும் உள்ளன் புறத்துள்ளன் என்பவர்க்

1506. உள்ளத்தும் உள்ளன் புறத்துள்ளன் என்பவர்க்
குள்ளத்தும் உள்ளன் புறத்துள்ளன் எம்மிறை
உள்ளத்தும் இல்லை புறத்தில்லை என்பவர்க்
குள்ளத்தும் இல்லை புறத்தில்லை தானே.

எங்கும் நிறைந்துள்ள சிவபெருமானை ஆருயிர்களின் உள்ளத்துமுளன் புறத்துமுளன் என்று அன்புடன் சிவயநம என்னும் செந்தமிழ்மறை ஓதி வழிபடுவார்க்கு எம்மிறையாகிற அச்சிவபெருமான் வெளிப்பட்டு நன்மை அருள்வன். உள்ளத்தும் இல்லை; புறத்தும் இல்லை என்று கூறுபவர்க்கு உள்ளத்தும் புறத்தும் வெளிப்படாது மறைந்து நின்று நன்மையருள்வானல்லன். இல்லை என்பதன் பொருள் சிவபெருமானால் எய்தும் நன்மை இல்லை என்பதாம். இதற்கு ஒப்பு திருக்குறளில் என்ன இருக்கின்றது? அதில் ஒன்றுமில்லை என்பார்க்கு அத் திருக்குறளினால் எய்தும் நன்மை ஏதும் இல்லை என்பதாம்.

# 1507. முதலொன்றா மானை முதுகுடன் வாலுந்

1507. முதலொன்றா மானை முதுகுடன் வாலுந்
திதமுறு கொம்பு செவிதுதிக் கைகான்
மதியுடன் அந்தகர் வகைவகை பார்த்தே
அதுகூற லொக்கும் ஆறு சமயமே.

உறுப்பும் உறுப்பியுமாகிய யானை முதல் ஒன்றாகும். அவ் யானையின் மலைபோன்ற முதுகையும், துடைப்பம் போலும் வாலையும், தண்டுபோலும் உறுதியான கொம்பையும், முறம்போலும் செவியினையும், உலக்கைபோலும் துதிக்கையினையும், உரல்போலும் காலினையும் கண்ணிலார் பலர் தனித்தனி ஒவ்வோர் உறுப்பினை மட்டுந் தடவி யானை என்பது முறையே மலை எனவும், துடைப்பம் எனவும், தண்டெனவும், முறம் எனவும், உலக்கை எனவும், உரல் எனவும் கூறித் தம்முள் மாறுபட்டுச் சண்டையிட்டனர். அச் சண்டையினை ஒத்ததே ஆறு சமயத்தாரும் தத்தம் சமயமே உயர்ந்ததெனக் கூறி முரண்படுதல். கண்ணுள்ளான் ஒருவன் இவையனைத்தும் யானை அல்ல, இவையனைத்தும் யானையின் ஒவ்வோர் உறுப்பாகும். இவை யனைத்தும் சேர்ந்த உறுப்பியே யானையாம் என்று கூறியமைதிப்படுத்தினன். ஈண்டுக் கண்ணுள்ளான் திரு அருட்கண்ணுடைய சித்தாந்தச் சைவன்.

## 1508. ஆறு சமயமுங் கண்டவர் கண்டிலர்

1508. ஆறு சமயமுங் கண்டவர் கண்டிலர்
ஆறு சமயப் பொருளும் அவனலன்
தேறுமின் தேறித் தெளிமின் தெளிந்தபின்
மாறுதல் இன்றி மனைபுக லாமே.

முக்கூற்றுப் புறச்சமயத்துள் குறிப்பாக ஆறுவகைச் சமயம் வருமாறு : வைணவம், சமணம், பாஞ்சராத்திரம், பாட்டாசாரியம, உலகாயதம், சூனியவாதம் என்பன. இச் சமயங்களின் நின்றவர் சமயங்கடந்த தனிமுதற் சிவத்தைக் காண்கிலர். இச் சமயத்தாரால் கூறப் படும் பொருளும் அவனல்லன். இவ் வுண்மையினைத் தெளிதற்பொருட்டு நல்லாருடன் ஆராயுங்கள். ஆராய்ந்து தெளியுங்கள். தெளிந்தபின் நுமக்குத் திருவடியாகிய நிலைத்த புக்கில்லாம் மனைபுகுந்து பேரின்பம் எய்துதலாகும். நல்லார் : நற்றமிழாகமம் கைக்கொண்டு நாளும் இடையறாதொழுகும் சித்தாந்தச் சைவர்.

ஆறு சமயம் - பைரவம், சமணம், பாஞ்சராத்திரம், பாட்டாசாரியம், உலகாயதம், சூனிய வாதம். (வேறுவிதமாகக் கூறுவாருமுளர்.)

## 1509. சிவமல்ல தில்லை யறையே சிவமாந்

1509. சிவமல்ல தில்லை யறையே சிவமாந்
தவமல்ல தில்லை தலைப்படு வார்க்கிங்
கவமல்ல தில்லை அறுசம யங்கள்
தவம்வல்ல நந்திதாள் சார்ந்துய்யு நீரே.

அறைகூவி விளம்புங்கால் சிவபெருமான் அன்றி வேறு ஒரு முழுமுதல் யாண்டும் இன்று. சிவமாம் பெருவாழ்வெய்தும் சீலம் நோன்பு செறிவு அறிவென்னும் இறப்பில் தவமன்றி வேறு சிறந்த தவமும் இல்லை. திருவடிப் பேறெய்தும் செந்நெறிச் செல்வர்கட்கு மேல் ஓதியனவன்றி ஆறு சமயங்களும் தவத்திற்கு மாறாகிய அவமேயாகும். செந்நெறித் தவத்தான் வெளிப்பட்டருளும் வல்ல சிவகுருவாகிய நந்தியெங்கடவுளின் திருவடியிணையினைச் சார்ந்து நீங்கள் உய்வீர்களாக.

அவமல்லதில்லை அறு சமயங்கள் - ஆறு சமயங்களும் பாபமார்க்கங்கள்.

## 1510. அண்ணலை நாடிய ஆறு சமயமும்

1510. அண்ணலை நாடிய ஆறு சமயமும்
விண்ணவ ராக மிகவும் விரும்பியேம்
உண்ணின் றழிய முயன்றில ராதலான்
மண்ணின் றொழியும் வகையறி யார்களே.

சிவபெருமான் திருவடியிணையினை எய்துதல் வேண்டுமென்று எண்ணிமுயலும் ஆறு அகச் சமயத்தவர்களும் பிறரும் அந்நாட்டமொழிந்து தாங்களே தேவராகவேண்டுமென்று மிகவும் விரும்புகின்றனர். விரும்புதலான் பிறப்புக்கு வித்தாம் ஏமம் என்று சொல்லப்படும் உள்ளே நிற்கும் ஆசை ஒழியமுயன்றிலர். ஆதலால் மண்ணில் பிறக்கும் பிறப்பறமுயலும் செந்நெறியின் நிற்கும் வகை அறியாராயினர் விரும்பி : விரும்ப எனத் திரிக்க ஏமம் என்பது ஏம் எனக் குறைந்து நின்றது.

அண்ணலை நாடிய ஆறு சமயம் - உட் சமயங்கள் ஆறும் உள் நின்று அழிய - ஆசை ஒழிய. மண்ணின்று ஒழியும் வகை - பிறப்பு அறும் வகை.

## 1511. சிவகதி யேகதி மற்றுள்ள எல்லாம்

1511. சிவகதி யேகதி மற்றுள்ள எல்லாம்
பவகதி பாசப் பிறவியொன் றுண்டு
தவகதி தன்னொடு நேரொன்று தோன்றில்
அவகதி மூவரும் அவ்வகை யாமே.

சிவபெருமான் திருவடியிணையினைச் சேர்ப்பிக்கும் நானெறி சேர் நன்னெறியே விழுப்பேறளிக்கும் முழுத்தவ நெறியாகும். அஃதொழிந்த மற்றுள்ள நெறிகளெல்லாம் பாசம் அறாமையால் பிறப்பைத் தரும் சிறப்பிலா நெறியாகும். அவர்கட்குப் பிறவியுண்டு. தனக்குத் தானே ஒப்பாகிய நன்னெறியாம் சன்மார்க்கம் தோன்றில் அதுவே சிவத்தைப் பேணும் தவகதியாகும். விண்ணவரினும் மேலாம் அயன் அரி அரன் என்று சொல்லப்படும் மூவரும் சிவத்தைப் பேணாமையால், பிறப்புக்கு வாயிலாம் அவகதியிற் சேர்வர். 'சிவத்தைப் பேணில் தவத்திற் கழகு' என்பதுங் காண்க.

தவகதி - சன்மார்க்கம் மூவரும் - மும்மூர்த்திகளும் : அயன், அரி, அரன்

## 1512. நூறு சமயம் உளவா நுவலுங்கால்

1512. நூறு சமயம் உளவா நுவலுங்கால்
ஆறு சமயமவ் வாறுட் படுவன
கூறு சமயங்கள் கொண்ட நெறிநில்லா
வீறு பரநெறி யில்லா நெறியன்றே.

சொல்லுமிடத்துச் சமயங்கள் அளவிறந்தனவாக வுள்ளன. அவ் வளவிறந்த சமயங்களும் ஆறுசமயம் கூறும் பொருள்களையே பெரும்பாலும் கூறுகின்றன. இங்ஙனம் கூறும் சமயங்களின் நெறியினைப் படிமுறை எனக் கடந்து இவற்றினும் மேலாக வுள்ளது பரநெறியாம் சிவநெறியே என்று தெளிக. அச் சிவபெருமான் திருவடியே என்றும் பொன்றா இயற்கை எழில்சேர் எல்லையில் பேரின்ப இல்லாம் புகலிட வீடுபேற்று நெறியாகும். வீறு : பிறிதொன்றற்கும் இல்லாத் தனிப்பெருமுதன்மை.

நூறுசமயம் - அளவிறந்த சமயம். ஆறு சமயம் - மேலே கூறிய ஆறு சமயங்களும். அவ்வாறுள் - அளவிறந்த சமயங்களுள். வீறு பரநெறி - வலிமை மிக்க சிவநெறி.

## 1513. கத்துங் கழுதைகள் போலுங் கலதிகள்

1513. கத்துங் கழுதைகள் போலுங் கலதிகள்
சுத்த சிவனெங்குந் தோய்வுற்று நிற்கின்றான்
குற்றந் தெளியார் குணங்கொண்டு கோதாட்டார்
பித்தேறி நாளும் பிறந்திறப் பாரே.

தவநெறி பேணாது அவநெறி திரியும் வீணர்கள் பிறர் வெறுக்கும்படியாகக் குரல் எழுப்பிக் கத்தும் கழுதையினை ஒப்பர். இயற்கை உண்மை அறிவின்ப வண்மைச் சிவபெருமான் எல்லாஇடத்தும் பிரிப்பின்றி விரவிநிற்கின்றான். மக்கள் அவனை நினையாமையாகிய குற்றமும் அக் குற்றத்திற்குக் காரணமாகிய மலப்பிணிப்பும் தம்பால் உள்ளன என்பதனை யுணரார். அவனுடைய மெய்ம்மையான புகழைப் பாராட்டித் தொழார். நிலையாப் பொருள்களாகிய உலகு உடைமை உடல்களில் மயக்கம் கொண்டு அதனால் பித்தேறி என்றும் பிறந்திறந்து துன்புறுவர்.

கலதிகள் - வீணர்கள்.

## 1514. மயங்குகின் றாரு மதிதெளிந் தாரும்

1514. மயங்குகின் றாரு மதிதெளிந் தாரும்
முயங்கி யிருவினை முழைமுகப் பாச்சி
இயங்கிப் பெறுவரே லீறது காட்டிற்
பயங்கெட் டவர்க்கோர் பரநெறி யாமே.

உண்மை தெளியாமையால் மயங்குகின்றவர்களும், அறிவு தெளிந்தவர்களும் இருவினைப் பயன்களை நுகர்ந்து உச்சித்துளைக்குகை அருகிலிருக்கும் திருவருளம்மையினைக் கூடி அவள் இயக்கும் இயக்கத்தின் வழியே செல்லப்பெறுவார்களானால் அவர்களுக்கு வினை முடிவும் பரவெளியும் அருட்கண்ணால் காட்டப்பெறும். காட்டப்பெறுதலாற் பிறப்பு இறப்புக் குறித்து ஒருசிறிதும் அவர் அஞ்சார். அவரே, நன்னெறியாகிய மேனெறியை எய்தியவர் ஆவர் முழைமுகப்பு ஆச்சி : உச்சித்துளையில் விளக்கும் திருவருளம்மை : ஆச்சி : அம்மை.

முயங்கு - அனுபவித்து. முழை முகப்பு ஆச்சி - குண்டலி சத்தி. ஈறு - வினை முடிவு.

## 1515. சேயன் அணியன் பிணியிலன் பேர்நந்தி

1515. சேயன் அணியன் பிணியிலன் பேர்நந்தி
தூயன் துளக்கற நோக்கவல் லார்கட்கு
மாயன் மயக்கிய மானுட ராமவர்
காயம் விளைக்குங் கருத்தறி யார்களே.

முழுமுதற்சிவம் மாற்றம் மனம் கழியநின்ற மறையோனாதலின் தொலைவிலுள்ளோன். அவன் அருள் கண்ணால் காணும் தவமுடையார்க்கு உயிர்க்கு உயிராய் வெளிப்படுதலின் நெருக்கமாக உள்ளவனுமாவன். இயல்பாகவே பாசங்களினின்று நீங்கியவன் ஆதலின் பிணியிலன். அவன் திருப்பெயர் நந்தி இயல்பாகவே தூய்மையாகிய வாலறிவினன். அவனை ஒருமனப்பட்ட நெஞ்சினராய் அசையாது நின்று இடையறாது நோக்கவல்லார்க்குப் பிறப்பறும்; சிறப்புறும். திருவடிப் பேரின்பம் எய்தும். பிறப்பு இறப்புக்கு உட்பட்டு உடம்பால் விளையும் துன்பநிலையினை அறியாது அதுவே இன்பமென மயங்குவோர், மாயவன் மயக்கிற்பட்ட மருண்ட மாந்தராவர். சிறப்பு - திருவடிப்பேறு.

# 1516. வழியிரண் டுக்குமோர் வித்தது வான

1516. வழியிரண் டுக்குமோர் வித்தது வான
பழியது பார்மிசை வாழ்தல் உறுதல்
சுழியறி வாளன்றன் சொல்வழி முன்னின்
றழிவறி வார்நெறி நாடநில் லாரே.

மேல்நிலை கீழ்நிலை என்னும் இருவகைப் பிறப்பு நிலைக்கும் காரணமாகப் பழிக்கப்படுவது நில்லா வுலகினை, நிலையென மயங்கும் நிலைமை. ஓமொழியேனும் அல்லது புருவமத்தியேனும் என்று கொள்ளப்படும் சுழியினிடமாக வெளிப்பட்டுநின்று இயக்கவல்லவன் சிவபெருமான். அவன் ஆணைவழி முன்னின்று உலக அழிவினை உணரவல்லார் நன்னெறியினை நாடவல்லாராவர். அவர்கள் தீ நெறிக்கண் செல்லார்.

வழியிரண்டு - மேல்கதி, கீழ்கதி. சுழி - பிரணவம். அழிவு அறிவார் - நிலையாமையை உணர்வார். நெறி - முற்கூறிய இரண்டு வழிகளை.

## 1517. மாதவர் எல்லாம் மாதேவன் பிரான்என்பர்

1517. மாதவர் எல்லாம் மாதேவன் பிரான்என்பர்
நாதம தாக அறியப் படுநந்தி
பேதஞ்செய் யாதே பிரான்என்று கைதொழில்
ஆதியும் அந்நெறி யாகிநின் றானே.

இறப்பில் பெரும்தவத்தோரெல்லாம் மாதேவனாகிய சிவபெருமானே முழுமுதல்வன் என்பர் அதன் தூமாயையின்கண் விளங்கும் ஓசைமெய்யாகிய நாதத்துவ வழிவாக அறியப்படுவன் தூமாயை அவனுடைய நேராட்சி என்பர். அவன் திருப்பெயர் நந்தி அவனை வேறாகக் கருதாது அவனே உயிர்க்குயிராய் நிற்கும் முதல்வன் என்று 'சிவசிவ' என நினைந்து அம்மை அப்பரே என வாழ்த்தி ஆண்டருள் என்று கைதொழுதால் ஆதியாகிய சிவபெருமானும் அம்முறையே உடனாய் நின்றருள்வன். சி என்னும் முதலெழுத்து அப்பனையும், வ என்னும் இரண்டாமெழுத்து அம்மையையும் குறிப்பன.

நாதமதாக - நாத உருவினனாக.

## 1518. அரனெறி யப்பனை யாதிப் பிரானை

1518. அரனெறி யப்பனை யாதிப் பிரானை
உரநெறி யாகி யுளம்புகுந் தானைப்
பரநெறி தேடிய பத்தர்கள் சித்தம்
பரனறி யாவிடிற் பல்வகைத் தூரமே.

அரனெறியாகிய சிவனெறி அப்பனை ஆதியாகிய அம்மையை உடம்பின் இடப்பக்கமாகிய ஒரு கூற்றிலே விட்டுவிலகாது ஒட்டித் திகழும் முழுமுதற்சிவனை, அறிவு நெறியாகிய ஆருயிர்களின் உள்ளம் புகுந்தவனை, நன்னெறியாகிய வீடுபேற்றுநெறியினைத் தேடிய 'பண்டை நற்றவத்தால் தோன்றிப் பரமனைப் பத்திபண்ணும் தொண்டர்'களின் உள்ளத்தை உடனிருந்தறியும் ஒருவனை அறியாவிட்டால் வீடு பேற்றுவழி தொடுதற்கும் தொடுமாறுன்னுதற்கும் கிட்டாநெடுந்தொலைவாகும்.

அரன்நெறி - சன்மார்க்கம். உரநெறி - அறிவு நெறி. பரநெறி - முத்திநெறி. பல்வகைத் தூரம் - நெடுந்தூரம்.

## 1519. பரிசற வானவன் பண்பன் பகலோன்

1519. பரிசற வானவன் பண்பன் பகலோன்
பெரிசறி வானவர் பேற்றில் திகழுந்
துரிசற நீநினை தூய்மணி வண்ணன்
அரிதவன் வைத்த அறநெறி தானே.

மாயையின் குணங்கள் சிறிதும் இல்லாதவன் மேலாம் சிவபெருமான் ஒருவனே. அவன் எண்பெரும் அருட்குணங்களையுடையவன். இயற்கைப் பேரொளியாய் எவற்றினுக்கும் ஒளிகொடுப்பவனும் அவனே. மிகுதியும் உயர்ந்த தேவர்கள் அவனைத் தொழுவதால் தத்தம் பேறாகிய நிலையில் திகழ்கின்றனர். அவனை நம் ஆணவ முதலிய குற்றங்கள் நீங்கும்படி நெஞ்சே நீ நினைவாயாக. அவன் தூய பளிங்கு நிறத்தன். அவன் அருளிச்செய்த அறநெறியாகிய சன்மார்க்கம் மிக்க அருமையும் பெருமையும் வாய்ந்தது.

பரிசற வானவன் - மாயை இல்லாதவனான சிவன். பெரிசறிவானவர் - மிக்க அறிவுள்ள வானவர். தூய்மணி - படிகமணி. அரிதவன் - அரிய தவத்தைச் செய்து அடையக்கூடியவன். அறநெறி - சன்மார்க்கம்.

## 1520. ஆன சமயம் அதுஇது நன்றெனும்

1520. ஆன சமயம் அதுஇது நன்றெனும்
மாய மனிதர் மயக்க மதுவொழி
கானங் கடந்த கடவுளை நாடுமின்
ஊனங் கடந்த வுருவது வாமே.

அச் சமயம் நன்று இச் சமயம் நன்று என்று திருவருள் உணர்த்த உணரும் தன்மையில்லாதார் பிழைப்பின் பொருட்டு வஞ்சனையாகக் கூறும் மயக்கமொழிகளை ஒழிப்பாயாக. செந்தமிழ்க் கீதங்கள் தந்தருளிய சிவபெருமானை அவன் திருவருட்டுணையால் நாடுங்கள். நாடவே மலமாயை கன்மங்களாகிய குற்றம் நீங்கி எல்லாமாம் சிவபெருமானது உண்மையறிவின்ப வண்ணவடிவினைப் பெறுவீர்.

மாய மனிதர்-வஞ்ச மனிதர். கானங் கடந்த-தத்துவங்கள் கடந்த. ஊனம் - குற்றம்.

## 1521. அந்நெறி நாடி அமரர் முனிவருஞ்

1521. அந்நெறி நாடி அமரர் முனிவருஞ்
செந்நெறி கண்டார் சிவனெனப் பெற்றார்பின்
முன்னெறி நாடி முதல்வன் அருளிலார்
சென்னெறி செல்லார் திகைக்கின்ற வாறே.

மேலோதிய நன்னெறியாகிய சிவனெறியைத் திருவருளாலுணர்ந்து அதனையே முதன்மை எனக் கைக்கொண்ட அமரரும் முனிவர்களும் திருவடியைத்தலைக்கூடும் செல்லும் நெறியினைக் கைக்கொண்டனர். அவர்கள் சிவமாம் பெருவாழ்வை எய்தினர். மக்களால் மாறுகொண்டு காலத்தால் பின்னும் முன்னுமாக அமைக்கப்பட்ட நெறிகளை நாடிச் செல்வோர் முதல்வன் திருவருள் பெறாதவராவர். ஆகவே, நன்னெறியாகிய செல்லும் நெறியிற் செல்லாதவராவர். அவர்கள் மயங்கும் மயக்கத்திற்கு ஓர் அளவில்லை.
1. இவ்வகைப்பல. 12. திருநாவுக்கரசர், 82

சென்னெறி - செல்லத்தக்க நெறி. பின் முன்நெறி - நந்தி வகுத்த சன்மார்க்கத்துக்கு முந்தியும் பிந்தியும் மானிடரால் வகுக்கப்பட்ட நெறிகள்.

## 1522. உறுமா றறிவதும் உள்நின்ற சோதி

1522. உறுமா றறிவதும் உள்நின்ற சோதி
பெறுமா றறியிற் பிணக்கொன்றும் இல்லை
அறுமா றதுவான வங்கியு ளாங்கே
இறுமா றறிகிலர் ஏழைகள் தாமே.

சிவன் திருவடியைப் பொருந்துதற்கு வாயிலாகிய நன்னெறியினை அறிவதும், உயிர்க்குயிராகிய தழல் வண்ணனாகிய சிவபெருமானை அறிவதும் ஆகிய அறிவினையறிவதும், அச் சிவனைப்பெறுமாறு அறிவதும் ஏற்பட்டால், எந்நெறியினரோடும் பிணக்கு ஒன்றும் ஏற்படமாட்டாது. பிறப்பறும்படி பேரொளிப் பிழம்பாம் சிவபெருமான் திருவடியிற் பிரிவிலா அடிமையாய் உறைதல் வேண்டும். இவ் வுண்மைகளை அறிவிற்குறைந்தார் அறியமாட்டார்.

உறும் ஆறு - அடையத்தக்க மார்க்கம். பிணக்கு - விரோதம். அறுமாறு - பிறவி அறும் வழி. அங்கியுள் - அங்கி உருவனான சிவபிரானிடத்தில். இறுமாறு - இலயிக்கின்ற விதம்.

## 1523. வழிநடக் கும்பரி சொன்றுண்டு வையங்

1523. வழிநடக் கும்பரி சொன்றுண்டு வையங்
கழிநடக் குண்டவர் கற்பனை கேட்பர்
சுழிநடக் குந்துய ரம்மது நீக்கிப்
பழிநடப் பார்க்குப் பரவலு மாமே.

சிவபெருமான் திருவடியிணைகளை அடைவதற்கு நேர் வழியாகத் திகழ்வது நன்னெறியே. அதன் வழியே செல்வது பயிற்சித் துணையாகும். உலகியல்பினைக் கடந்து செல்லும் புறச்சமயத்தார் கற்பனையாகக் கூறும் பொய்ம்மொழிகளைக் கேட்பார் நன்னெறிச் செல்லார். பிறப்பு இறப்புக்களாகிய சுழியிற்பட்டு நடக்கும் பெருந்துன்பத்தினை நீக்கியும் நிலையாப் பொருளைப் பற்றுச்செய்தலாகிய பழியினை நீக்கியும் நடப்பார்க்குச் சிவபெருமானைத் தொழுதலுமாகும்.

வழி - சன்மார்க்க வழி. பரிசு - சாதனம். கழி நடக்கு - வரம்பு கடந்த நடக்கை. கற்பனை - மானிடரால் கற்பிக்கப்பட்ட மதங்கள். சுழி நடக்கும் துயரம் - கற்பனை செய்யப்பட்ட மதங்களின் கொள்கைகளால் ஏற்படும் துயரம். பழி நடப்பார் - துன்பம் தருவனவற்றைப் பழித்து நடப்பார்.

## 1524. வழிசென்ற மாதவம் வைகின்ற போது

1524. வழிசென்ற மாதவம் வைகின்ற போது
பழிசெல்லும் வவ்வினைப் பற்றறுத் தாங்கே
வழிசெல்லும் வல்வினை யார்திறம் விட்டிட்
டுழிசெல்லில் உம்பர் தலைவன்முன் னாமே.

சிவபெருமானை அடைதற்குரிய நன்னெறி மாதவம் இருக்கின்றபோது, புன்னெறிக்கண் செல்லும் கொடிய வினையின் பற்றறுத்துச் செல்லாமல் அப் புன்னெறியின் வழியே செல்லும் கொடு வினையார் சார்பைவிட்டகன்ற நன்னெறிக்கண் சென்றால் தேவதேவனாய் மூவர்கோனாய் விளங்கும் முழுமுதற் றலைவனாம் சிவபெருமான் அப்பொழுதே முன்னின்றருள்வன்.

பழி செல்லும் - நிந்தனை பரவுகின்ற. ஆங்கேவழி - அந்த நிந்தனை பரவும் வழியான பிற மார்க்கம். வழி செல்லில் - சன் மார்க்கத்தில் சென்றால்.

# 1525. இமையங்க ளாய்நின்ற தேவர்கள் ஆறு

1525. இமையங்க ளாய்நின்ற தேவர்கள் ஆறு
சமயங்கள் பெற்றனர் சாத்திரம் ஓதி
யமையறிந் தோமென்ப ராதிப் பிரானுங்
கமையறிந் தாருட் கலந்துநின் றானே.

இமையமலைபோன்று அசைவற நின்ற தேவர்கள் அவர்கள் நிலைமைக்கேற்றவாறு ஆறு சமயங்கள் பெற்றனர். அவற்றிற்குரிய சாத்திரங்களாகிய பொருள் நூல்களை ஓதினர். அடைதற்காய் அமைந்த நிலையினை அறிந்தோம் என்பர். ஆதிப்பிரானாகிய சிவபெருமானும் பிழைபொறுக்கும் தன்மையராய்ப் பொறுமையுடன் ஒழுகுவாருடன் கலந்து நின்றருள்வன் :

இமையங்கள் - இமயமலைபோன்று அசைவற நின்ற. அமை - அடையத்தக்கது. கமை - பொறுமை.

## 1526. பாங்கமர் கொன்றைப் படர்சடை யானடி

1526. பாங்கமர் கொன்றைப் படர்சடை யானடி
தாங்கு மனிதர் தரணியில் நேரொப்பர்
நீங்கிய வண்ணம் நினைவுசெய் யாதவர்
ஏங்கி உலகில் இருந்தழு வாரே

தாரும்கண்ணியும் ஆக முறையே மார்பினிடத்தும் தலையினிடத்தும் கொன்றைப்பூவால் அமைந்தவற்றைச் சூடி விளங்கும் திருச்சடையினையுடைய சிவபெருமான் திருவடியிணையினை மறவாது உளங்கொண்டு தாங்கும் மெய்யடியார்கள் இந் நிலவுலகத்தில் தமக்குத் தாமே ஒப்பாக விளங்குவர். சிவபெருமானை நினையாது செந்நெறியினை நீக்கித்தாம் புன்னெறியிற் செல்லும் புரையாகிய குற்றத்தினை எண்ணாதவர் செய்வது இன்னதென்றறியாது இவ் வுலகத்தில் ஏங்கி இருந்து அழுவர்.

நேரொப்பர் - சமானம் ஆவார். நீங்கிய - அஞ்ஞானம் நீங்கிய.

## 1527. இருந்தழு வாரும் இயல்புகெட் டாரும்

1527. இருந்தழு வாரும் இயல்புகெட் டாரும்
அருந்தவ மேற்கொண்டங் கண்ணலை எண்ணில்
வருந்தா வகைசெய்து வானவர் கோனும்
பெருந்தன்மை நல்கும் பிறப்பில்லை தானே.

புன்னெறிச் சென்று துன்புற்றிருந்து அழுவாரும் மக்கள் தன்மையாம் இயல்பு குன்றினாரும் நன்னெறி நான்கு தொண்டுகளாம் நற்றவத்தை மேற்கொண்டு அவ்விடத்து அண்ணலாகிய சிவபெருமானை வல்லவாறு 'சிவயநம' என எண்ணினால் அவன் எவ்வகை வருத்தமும் எய்தி வருந்தாதபடி செய்தருள்வன். சிவவுலகத்தார் நேர்தலைவனாகிய சிவபெருமான் திருவடியுணர்வினை நல்கியருள்வன். அதனால் இனிப் பிறப்பில்லையாகிச் சிறப்பு வந்துறும், பெருந்தன்மை - திருவடியுணர்வு.

இயல்பு - தன்னிலைமை. வானவர்கோன் - சிவன். பெருந்தன்மை - ஞானம்.

## 1528. தூரறி வாளர் துணைவர் நினைப்பிலர்

1528. தூரறி வாளர் துணைவர் நினைப்பிலர்
பாரறி வாளர் படுபயன் றானுண்பர்
காரறி வாளர் கரந்து பிறப்பார்கள்
நீரறி வாரநெடு மாமுகி லாமே.

குற்றமாகிய தூர்வையைக் குணமென அறிந்து தம் மனம் போல்ஒழுகுபவர் யாண்டும் உள்ளுறு துணையாக நிற்கும் அம்மையப்பரின் நிலைப்பில்லாதவராவர். நிலையாத உலகமே பெரிதென மயங்கி அவ்வழியொழுகுவார் உலகப் பயனை நுகர்ந்து பிறப்பர். அறியாமை வயப்பட்டுத் தம்முனைப்புடன் ஒழுகுவார் மீண்டும் மீண்டும் இறந்து பிறந்து இன்னலுறுவர். திருவடியுணர்வாகிய அருள்நீர் அறிவார் அத் திருவடியுணர்வாக நின்று திருவருள் வண்ணமாவர். மாமுகில்-திருவருள் வண்ணம். இவர் சிவனடி இன்பம் எய்துவர். நீர் - தன்மை.

தூர் அறிவாளர் - ஈசனைத் தமக்குப் புறம்பாக நினைப்பவர். துணைவர் - பெத்தம் முத்திகளில் துணையாய் இருப்பவர் ஈசன் என்று: பார் அறிவாளர் - உலக அறிவுடையோர். படுபயன் - உலகப் பயன்களை. உண்பர் - துய்ப்பர். கார் அறிவாளர் - அஞ்ஞானிகள். கரந்து பிறப்பார் - செத்துப் பிறப்பார். நீர் அறிவார் - சிவத்தின் தன்மையை அறிவார். நெடுமாமுகில் - பெருமை தங்கிய கார்முகில் போன்றவர்.

## 1529. அறிவுடன் கூடி அழைத்ததோர் தோணி

1529. அறிவுடன் கூடி அழைத்ததோர் தோணி
பறியுடன் பாரம் பழம்பதி சிந்துங்
குறியது கண்டுங் கொடுவினை யாளர்
செறிய நினைக்கிலர் சேவடி தானே.

முற்றுணர்வாகிய சிவஞானத்துடன் கூடித் திருவருள் துணையால் தோணியாகிய சிவபெருமான் திருவடியினை ஓவாது அழைத்தால் அவர் திருவருளால் உடம்பு பொன்மயமாகும். பாரமாகிய தூவாமாயைத் தத்துவக் கூட்டங்களும் பழமலத்தால் நேர்ந்த மாயாகாரியமாகிய பழம்பதி என்னும் உடம்பும் அகலும். இவ் வுண்மையினைச் சிவனடியார்பால் நேரிற் கண்டிருந்தும், மலக்கொடும் வினைஞர் சிவபெருமான் திருவடியிணையினைச் சேருமாறு நினைக்கிலர்.

தோணி - சிவத்தின் திருவடி. பறி - பொன் போன்ற உடல். பாரம் - தத்துவக் கூட்டம். பழம்பதி - அநாதி மாயையால் ஆகிய சரீரம். குறி - கருத்து.

## 1530. மன்னும் ஒருவன் மருவு மனோமயன்

1530. மன்னும் ஒருவன் மருவு மனோமயன்
என்னின் மனிதர் இகழ்வரிவ் வேழைகள்
துன்னி மனமே தொழுமின் துணையிலி
தன்னையும் அங்கே தலைப்பட லாமே.

நிலைபெற்ற ஒப்பில்லாத சிவபெருமான் அன்பால் நினைவாரது உள்ளக் கமலத்தின்கண் அவர் நினைந்த வழிவோடு பொருந்தி விளங்கும் மனோமயன் ஆவன். இவ் வுண்மையினை மெய்யடியார்கள் கூறக் கேட்கும் மக்கள் அதனைப் பொருட்படுத்துகின்றாரில்லை. பொருட்படுத்தாது இகழ்வார் தாழ்ந்த அறிவினையுடையவராவர். அவ் வழிச் செல்லாது சிவபெருமானை மனங்கொண்டு நெருங்கித் தொழுங்கள். தொழுதால் ஒப்பில்லாத அவன் அப்பொழுதே வெளிப்பட்டருள்வன். அருளவே அவன் திருவடியினைக் கூடி இன்புறலாம்.

மன்னும் - நிலைபெற்று இருக்கும். ஏழைகள் - அறிவில்வறியவர். துணையிலி தன்னை - ஒப்பற்றவனை.

## 1531. ஓங்காரத் துள்ளொளி உள்ளே உதயமுற்

1531. ஓங்காரத் துள்ளொளி உள்ளே உதயமுற்
றாங்கார மற்ற அனுபவங் கைகூடார்
சாங்கால முன்னார் பிறவாமை சார்வுறார்
நீங்காச் சமயத்துள் நின்றொழிந் தார்களே.

ஓங்காரத்தில் உள்ளொளி வண்ணமாக இருப்பவன் சிவன். அவன் அருளின்தோற்றம் அங்கே உண்டாக ஆங்காரம் அறும். அறவே சிவனடியின்ப நுகர்வு கைகூடும். இந் நிலைமை கைகூடாதவர் தங்கட்கு இறப்பு உண்டென எண்ணார். எனவே பிறவாமையைச் சார்வுறார். இத்தகையோர் பிறப்பு இறப்பினைத் தரும் புறச்சமய நெறியில் உழல்வர் - நுகர்வு : துய்ப்பு : அழுந்தியறிதல் : அனுபவம்.

நீங்காச் சமயம் - மயக்கம் நீங்காத பிரம சமயம்.

## 1532. இமையவர் தம்மையும் எம்மையும் முன்னம்

1532. இமையவர் தம்மையும் எம்மையும் முன்னம்
அமைய வகுத்தவன் ஆதி புராணன்
சமையங்க ளாறுந்தன் றாளிணை நாட
அமையங் குழல்கின்ற ஆதிப் பிரானே.

பிறப்புத் தேவர்களையும், சிறப்பிற்குரிய மக்களையும் மல ஆற்றலின் வன்மை மென்மைகளுக்கேற்ப வினைக்கீடாகப் பொருந்தக் கருவுறா நுண்ணுடல் கருவுறும் பருவுடல்களை மாயையினின்றும் படைத்தருளியவன் அம்மையோடு கூடிய தொன்மையன். அறுவகைச் சமயங்களும் படிமுறையான் தன் திருவடியிணையினை எண்ண வகுத்தருளினவன் தொன்மைச் சிவபெருமானேயாவன். இவ் வுண்மையறியாது சிலர் அச்சமயங்களில் நின்று மேல் நோக்காது உழல்கின்றனர்.

இமையவர் - இமயமலை வாசிகள். ஆதி புராணன் - உலக உற்பத்திக்கு ஆதியாகிய அநாதி முதல்வன்.

## 1533. ஒன்றது பேரூர் வழியா றதற்குள

1533. ஒன்றது பேரூர் வழியா றதற்குள
என்றுது போல இருமுச் சமயமும்
நன்றிது தீதிது என்றுரை யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயையொத் தார்களே.

திருவடிப் பேறெய்துதற்குரிய வழிகள் ஆறாகும். அவ்வாறினையும் சமயங்கள் என்று கூறுவர். அவை படிமுறையின் வைத்து மேற்செலுத்துவன. இவ் வுண்மையினை உணராமல் இச் சமயம் நல்லது அச் சமயம் தீயது என்று சொல்லிச் சண்டையிடுவோர் குன்றினைப் பார்த்துக் குரைத்தெழுகின்ற நாயினைப் போன்றவராவர்.

குன்று குரைத்தெழு நாய் - (இஃது ஒரு பழமொழி.) குன்றைப்பார்த்து குரைக்கும் நாய், அஃதாவது, வீண் ஆரவாரம்.

## 1534. சைவப் பெருமைத் தனிநா யகன் தன்னை

1534. சைவப் பெருமைத் தனிநா யகன் தன்னை
உய்ய வுயிர்க்கின்ற ஒண்சுடர் நந்தியை
மெய்ய பெருமையர்க் கன்பனை இன்பஞ்செய்
வையத் தலைவனை வந்தடைந் துய்மினே.

சித்தாந்த சைவத்தின் மாண்புமிக்க ஒப்பில்லாத தலைவனை, அனைத்துயிரும் உய்யும்படியாக உயிருக்கு உயிராக நின்று உயிர்ப்புக் கொள்ளுமாறு துணைசெய்யும் உணர்வொளிப்பிழம்பாம் நந்தியை, உண்மையான நன்னெறியின்கண் ஒழுகும் தக்க அடியார்கட்கு அன்பனை, அனைத்துயிர்க்கும் பேரின்பம் அருளும் உலக முதல்வனை, காதலுடன் வந்து கழல்பணிந்து உய்வீர்களாக. உயிர்ப்பு - மூச்சு.

மெய்ய - மெய்யான.

## 1535. சிவனவன் வைத்ததோர் தெய்வ நெறியிற்

1535. சிவனவன் வைத்ததோர் தெய்வ நெறியிற்
பவனவன் வைத்த பழவழி நாடி
இவனவன் என்ப தறியவல் லார்கட்
கவனவ னங்குள தாங்கட னாமே.

சிவபெருமான் ஆருயிர்கள் படிமுறையால் வழிபட்டு உய்யும்பொருட்டு அமைத்தருளிய தெய்வநெறியாகிய நன்னெறியில் அச்சிவபெருமான் ஏற்படுத்திய பழைமையான சன்மார்க்க நெறியை ஆராய்ந்து நோக்கினால் நன்னெறிச் செல்வார் இவன் அவன் என்னும் வேறுபாட்டினை ஒழித்து ஆருயிர்கட்கு அருள்செய்யும் பேருயிரே சிவன் என அழைக்கப்படுகின்றான் என்னும் உண்மை காண்பர். இவ் வுண்மை அறியவல்லார்களுக்கு அவ்வச் சமயங்கள் தோறும் சிவபெருமான் நின்று பயிற்சி வேறுபாட்டிற்குத் தகப் பயன் அருள்வன்.

பவன் - பரமசிவன். பழவழி - பழைமையான சன்மார்க்கம்.

## 1536. ஒத்த சமயங்கள் ஓராறு வைத்திடும்

1536. ஒத்த சமயங்கள் ஓராறு வைத்திடும்
அத்த னொருவனாம் என்ப தறிந்திலர்
அத்தன் ஒருவனாம் என்ப தறிந்திடின்
முத்தி விளைக்கு முதல்வனு மாமே.

அறுவகைச் சமயத்தையும் பருவத்திற்கேற்றவாறு அமைத்தருளியவன் சிவபெருமானே. அவன் ஒருவனே என்னும் உண்மையைப் பலரறிந்திலர். அத்தனாகிய அச் சிவன் ஒருவனே என்பதறிந்திட்டால், அங்ஙனமறிந்த மெய்யன்பர்க்கு வீடுபேற்றினை நல்கியருளும் முழுமுதல்வனும். அச் சிவபெருமானேயாவன்.

## 1537. ஆமா றுரைக்கும் அறுசம யாதிக்குப்

1537. ஆமா றுரைக்கும் அறுசம யாதிக்குப்
போமாறு தானில்லை புண்ணிய மல்லதங்
காமாம் வழியாக்கும் அவ்வே றுயிர்கட்கும்
போமாறவ் வாதாரப் பூங்கொடி யாளே.

அவரவர் நிலைமைக்கு ஏற்றவாறு கூறப்பட்டுள்ள ஆறு சமயங்கட்கும் பயன் முன்னேறிச் செல்வதற்கு வழித்துணையாம் புண்ணியம் ஒன்றுமேயாம். சிவபெருமான் திருவடியின்பத்தினை அளிக்கும். நன்னெறியாம் சன்மார்க்கத்திற்குப் பயன் உயிர்களின் செவ்விக்கேற்ப ஊட்டும் சிவப்பேறேயாம். எல்லா வுயிர்களையும் அவ்வவ்வுயிர்களின் செவ்விக்கு ஏற்பப் பயனளித்து ஆட்கொள்பவன் திருவருளம்மையே.

ஆமாம் வழி - சரியான மார்க்கம் - அவ் வேறுயிர் - மலபரிபாகம் பெற்ற சீவர்கள்.

## 1538. அரனெறி யாவ தறிந்தேனும் நானுஞ்

1538. அரனெறி யாவ தறிந்தேனும் நானுஞ்
சிரநெறி தேடித் திரிந்தஅந் நாளும்
உரநெறி யுள்ளக் கடல்கடந் தேறுந்
தரநெறி நின்ற தனிச்சுடர் தானே.

அரனாரால் அருளிச்செய்யப்பட்ட நெறிகளை அறிந்த நானும், தலைமையாகிய நன்னெறியினை நாடியலைந்த நாளிலும் மிகவும் வன்மையாகிய காமம் வெகுளி மயக்கம் போன்ற குற்றக்கடலுள் மனம் அழுந்தி நின்ற அக் காலத்து அக் கடலினைக் கடந்து கரையேறுவதற்கு வேண்டிய முறைமையான சிறந்த நெறியினைத் தந்தருளிய நாளிலும் என்னைவிட்டு நீங்காது உடனாக நின்றருளியவள் திருவருளம்மையே.

நன்னெறி உணராது வேறு நெறிகளில் அலைந்து திரிந்த காலத்திலும் கூடவே இருந்து மலபரிபாகம் வருவித்துச் சன்மார்க்கத்தில் கூட்டியதும் சிவசத்தியே என்று கூறுவது இம் மந்திரம்.

## 1539. தேர்ந்த அரனை அடைந்த சிவனெறி

1539. தேர்ந்த அரனை அடைந்த சிவனெறி
பேர்ந்தவர் உன்னிப் பெயர்ந்த பெருவழி
ஆர்ந்தவர் அண்டத்துப் புக்கவ் வருள்நெறி
போந்து புனைந்து புணர்நெறி யாமே

திருவருளம்மையால் உணர்த்தவுணர்ந்த சிவபெருமானையடைந்த நன்னெறியானது, சிவநெறியைக் கைவிட்டு வேற்று நெறியிற் சென்றலைந்து பருவம் எய்தலும் மீண்டும் சிவனெறியைக் கருதி வந்தவர்க்கும் இடந்தரும் பெருவழி. ஏனைய நெறிகளினின்று ஒழுகி அவ்வப்பயன்களை அண்டமாகிய அவ்வவ் வுலகங்களிற் சென்று நுகர்வர். நுகர்ந்தபின் மீட்டும் திருவருள் நெறியாகிய சிவனெறி புகுந்து அந்நெறி ஒழுகி இறவா இன்பப் பேறெய்துவர். இவையனைத்தையும் உடனிருந்து உதவியருள்பவள் திருவருளம்மையே. "புண்ணியனை வையம் புகழ்ந்தவாறாம் புகழ்நூல்" அருளிச் செய்த நால்வருள், தேவாரம் அருளிய மூவருள் நடுவராம் முதல்வர் திருநாவுக்கரசு நாயனார். அவர் புறச்சமயம் புக்கு அருளால் மீண்டும் சித்தாந்தசைவப் பெருநெறி வந்து பெரும்பேறெய்தி நம்மையெல்லாம் ஆட்கொண்டருளியமை இதற்கொரு சாலும் கரியாகும். சாலும்கரி - போதுமான சான்று.

தேர்ந்து அவ் அரனை அடைந்த - திருவருட் சத்தி உணர்த்த அறிந்து அடைந்த. பேர்ந்து - விலகி. உன்னி - உண்மை

நெறியென்று கருதி. பெயர்ந்த பெருவழி - சென்றடைந்த பிற சமயங்கள். ஆர்ந்தவர் - அவ்வச் சமய ஒழுக்க நெறி நின்றவர். அண்டத்துப் புக்கு - அவ்வச் சமயங்களுக்குத் தக்க போக பூமிகளில் சென்று புசித்து நீங்கி அருணெறி போந்து - பூமியில் மறுபடியும் திருவருள் கூட்ட உட்சமயங்களில் புகுந்து படிப்படியாக மேலேறி. புனைந்து புணர் நெறியாம் - பின் உண்மை இதுவென்று கண்டு அதனைப் புகழ்ந்து கைக்கொண்டு அடையும் சன்மார்க்க நெறி ஆகும்.

## 1540. ஈரு மனத்தை யிரண்டற வீசுமின்

1540. ஈரு மனத்தை யிரண்டற வீசுமின்
ஊறுஞ் சகாரத்தை ஓதுமின் னோதியே
வாரும் அரனெறி மன்னியே முன்னியத்
தூருஞ் சுடரொளி தோன்றலு மாமே.

திருவருள் துணையால் பொறிபுலன்வழிச் செல்லும் மனத்தை அடக்கி ஆளுங்கள். வேறுபட்ட நெறிகளிற் செல்லும் செலவினை அகற்றுங்கள். இகரம் ஊர்ந்த சகரத்தை-சி என ஒட்டெழுத்துடன் அஃதாவது வ என்னும் எழுத்தும் சேர்த்துச் 'சிவ' என ஓதுங்கள். அங்ஙனம் ஓதிவருங்காலத்து அரனெறியில் நிலைத்துச் சார்பாகக் கருதப்படும் 'ய' கரத்தையும் கூட்டிச் 'சிவயசிவ' என ஓதுங்கள். அங்ஙனம் ஓதுங்கால் அடிப்படைச் சிவஒளி உள்ளொளியாகத் தோன்றும் என்க. இகரமாகிய இன்பப்பேறு ஆருயிர்கட்கே உரியது. அதனால் ஆருயிர் இகரம் எனக் குறிக்கப்படும். சிவபெருமான் அறிவின்பாகவும் ஆருயிர் இன்பியாகவும் அழைக்கப்படும். 'சி' 'ச்+அ+இ' ச்:ச. சத்து உண்மை. திருவருள். அ: அறிவு - சிவன். இ: இன்பு - திருவடி: இன்பி - இன்பந் துய்க்கும் ஆருயிர். எனவே 'சி' என்னும் சிறப்பின் முதலெழுத்து உண்மை அறிவு இன்பம் ஒருங்கமை ஓர் உருவாய்த் திகழும் உண்மை வண்மையுணர்ந்தின்புறுக. இது 'சிவயநம' வின் முதலெழுத்தாதலும் நோக்குக.

ஈரும் மனம் - சலிக்கும் மனத்தை. இரண்டற - ஒரே நிலையில் நிற்க. ஊரும் சகரம் - சி. வாரும் அரனெறி

மன்னி - வ எழுத்தைச் சேர்த்து. முன்னி - எண்ணிய.
உயிர் தூரும் - மண்டி இருக்கும்.

# 1541. மினற்குறி யாளனை வேதியர் வேதத்

1541. மினற்குறி யாளனை வேதியர் வேதத்
தனற்குறி யாளனை ஆதிப் பிரான்தன்னை
நினைக்குறி யாளனை ஞானக் கொழுந்தின்
நயக்குறி காணில் அரனெறி யாமே

அகத்தவமாகிய யோகக் காட்சியில் சிவபெருமான் மின்னல் போன்று அறிவொளி அருள்வன். அத்தகைய சிவபெருமானைத் திருநான்மறைவல்ல சிவமறையோன் அம் மறையிற் குறித்தபடி சிவனை முழுமுதலாக்கொண்டு செந்தழல் ஓம்பும். சிவவேதியராகிய அந்தணர்க்கு அவ்வனல் வழிவாகத் தோன்றிருள்வன். அவனே ஆதிப்பிரானாகிய அம்மையப்பனாவன். மெய்யன்பர்கள் நினைக்கும் நினைவுக்குறியாகிய திருமேனி கொண்டருள்வன். செறிவு நோன்பு சீலமாகிய முத்திறத்தார்க்கும்
வெளிப்பட்டருளும் அகஒளி, புறவொளி, திருவுரு ஆகிய மூன்றுங் கடந்த அறிவு நிலையாகிய ஞானநெறியில் உணர்வுக்கு உணர்வாய்த் தோன்றும் பேரறிவுப் பேரொளியை அருட்கண்ணாற் காணின் அதுவே அரனெறியாகும். சிவபெருமானை முழுமுதலாகக்கொண்டு கொலையும் புலையுமொழித்துச் செந்தமிழ்த் திருநான்மறைவழியே செய்யும் நல வேள்வியே சிவவேள்வி என்க. அதுவே 'கற்றாங் கெரியோம்பிக் கலியை வாராமே செற்றார்' செய்யும் சிவத்தொண்டாகும். 'பசுவேட்டு எரியோம்பு' மென்பதற்கு அனைத்துயிரும் இன்புற்று வாழவேண்டுமெனச் சிவவேள்வி சிறக்கப் பேணும்

என்பதே பொருளாம். 'எரிபெருக்குவர் அவ்வெரி ஈசன, துருவருக்கம தாவ துணர்கிலார்' செய்யும் மயலுற்ற அயலவர் வேள்வியே பிறவேள்வி என்க. பசு - மன்னுயிர்த் தொகுதி.

மினற்குறியாளனை - மின்னல்போன்ற ஒளியுடையானை. அனற்குறியாளனை - சிவாக்கினி உருவமானவனை. நினைக்குறியாளனை - சகுணத்திருமேனியுடையானை.

# 1542. ஆய்ந்துண ரார்களின் ஆன்மாச் சதுர்பல

1542. ஆய்ந்துண ரார்களின் ஆன்மாச் சதுர்பல
வாய்ந்துண ராவகை நின்ற அரனெறி
பாய்ந்துணர் வார்அரன் சேவடி கைதொழு
தேர்ந்துணர் செய்வதோர் இன்பமு மாமே.

நெறிகளை ஆராய்ந்துணரும் தன்மையிலாதாராகிய ஆவிகளின் திறமைப்பாடு பலவாகும். வாய்ந்துணர்ந்து அவ் வழியிலே நின்று நன்னெறியாகிய அரனெறியிற் சென்று உணர்ந்து ஒழுகுவார் ஒரு வகையினர்; அரன் திருவடியிணையினைக் கைதொழுவர் மற்றொரு வகையினர். அங்ஙனம் ஏர்ந்துணர்ந்தொழுகுவார் எய்தும் பெரும் பயன் திருவடியின்பமேயாகும்.

வாய்ந்து உணராவகை - வாய்ந்து உணரும் வகை. (உணரா : செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்), ஏர்ந்து - சிவஞானம் கைவரப்பெற்று. உணர்செய்வது - அநுபவிப்பது.

## 1543. இத்தவம் அத்தவம் என்றிரு பேரிடும்

1543. இத்தவம் அத்தவம் என்றிரு பேரிடும்
பித்தரைக் காணின் நகுமெங்கள் பேர்நந்தி
எத்தவ மாகிலென் எங்குப் பிறக்கிலென்
ஒத்துணர் வார்க்கொல்லை யூர்புக லாமே.

நன்னெறியாகிய சிவனெறியிற் கொண்டுய்க்கும் எந்நெறிகளிலும் செய்யப்பெறும் தவங்களெல்லாம் அவ்வந்நெறியினிற்பார்க்கு ஏற்புடையனவே. எனவே இத்தவம் அத்தவம் என்று வேறுபடுத்திப் பேசுவோர் பித்தராவர். அத்தகையோரைக் காணில் நம் நந்தியாகிய சிவபெருமான் சிரித்தருள்வன். எவ்வகைத் தவமானாலென்ன, எவ்வகைப் பிறப்பு எய்தினாலென்ன, திருவருள் துணையால் திருவடியுணர் வெய்துவார் விரைந்து சிவவுலகு எய்துவர்.

ஒல்லை - சீக்கிரம். விரைவில்.

## 1544. ஆமே பிரான்முகம் ஐந்தொடு மாருயிர்

1544. ஆமே பிரான்முகம் ஐந்தொடு மாருயிர்
ஆமே பிரானுக் கதோமுக மாறுள
தாமே பிரானுக்குந் தன்சீர மாலைக்கும்
நாமே பிரானுக்கு நரரியல் பாமே.

சிவபெருமானின் திருமுகம் ஐந்துள. அவை இயக்கம் ஆட்சி. நடுக்கம் தோன்றுவித்தல் என்னும் தொழில் பற்றிய பெயர்களுடையன. இவற்றை ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோ சாதம் எனவும் கூறுப. இத் திருமுகங்களின் இடம் முறையே உச்சி கிழக்கு தெற்கு வடக்கு மேற்கு எனத் திசைநோக்குவன. இத் திருமுகங்கள் ஐந்துடன் ஆருயிர்களை உடல் உலகுடன் பொருத்துவதும், மாயையைக் காரியப்படுத்துவதும், வினைமலங்களைத் தொழிற்படுத்துவதும் ஆகிய நடப்பாற்றலாகிய ஆதிசத்தி கீழ்நோக்கிய திருமுகம் என்று கூறப்படும். இதனுடன் சேர்த்து ஆறு திருமுகங்கள் உள. இவை சிவபெருமானுக்குரியன. இத்துடன் அயன் அரி முதலிய தேவர்கள் தலை மாலையும் பூண்டுள்ளார். மக்களாகிய நாம் அச் சிவபெருமானுக்கு அன்புடையராவோம். நரரியல்பு : நாரரியல்பு; நாரம் - அன்பு.

ஆருயிர்...ஆறுள-ஆர் உயிர்களும் மாயை (Matter) யின் அணுக்களும் தங்கும்படியான அதோ முகத்தையும் கூட்டச் சதாசிவத்தின் முகங்கள் ஆறாகும்.

## 1545. ஆதிப் பிரானுல கேழும் அளந்தவன்

1545. ஆதிப் பிரானுல கேழும் அளந்தவன்
ஓதக் கடலும் உயிர்களு மாய்நிற்கும்
பேதிப் பிலாமையின் நின்ற பராசத்தி
ஆதிக்கட் டெய்வமும் அந்தமு மாமே.

அம்மையோடு கூடிய அப்பனாகிய சிவபெருமான் உலகை அளந்த மாலாகவும், அம் மால் நிறம்போலும் ஒலியுடைய கடலாகவும் அக் கடல் சூழ் உலகில் வாழும் பல்வேறு உயிர்களாகவும், கலப்பால் ஒன்றாய் நிற்பன். அவன் வனப்பாற்றலாகிய திருவருளம்மையுடன் பிரிப்பின்றி மரமுங் காழ்ப்பும்போல ஒருவனே இருநிலைமையுமாய் நிற்பன். அவ் வம்மையே நடப்பாற்றலாகிய ஆதியும் ஆவள். அவளே ஒடுக்கத்தைச் செய்யும் ஆண்டவனுமாவள். ஆதி - நடப்பாற்றல்.

பேதிப்பிலாமையில் - பிரிவு இல்லாமல். ஆதிக்கண் - சிருட்டி ஆரம்பத்திலும், அந்தமும் - ஒடுங்கும் காலத்திலும்.

## 1546. ஆய்ந்தறி வார்கள் அமரர்வித் தியாதரர்

1546. ஆய்ந்தறி வார்கள் அமரர்வித் தியாதரர்
ஆய்ந்தறி யாவண்ணம் நின்ற அரனெறி
ஆய்ந்தறிந் தேனவன் சேவடி கைதொழ
ஆய்ந்தறிந் தேனிம்மை அம்மைகண் டேனே.

அமரரும் வித்தியாதரரும் சிவனை ஆய்ந்தறிவார்கள். அவர்கள் ஆய்ந்து அறிய முடியாதபடி அப்பால் நின்றதாகும் அரனெறி. சிவபெருமானின் திருவடியைத் தொழும்பேறு கிடைத்தமையால் அவ்வருள் துணையால் அவனை ஆராய்ந்துணர்ந்தேன். அம் முறைமையினால் நிலையாதனவாகிய இம்மை உம்மையாகிய மறுமைகளை வெறுத்து ஒதுக்கினேன். அதனால் செந்நெறியாகிய அம்மையென்னும் அரனெறியின் உண்மையினை உள்ளவாறு உணர்ந்தேன். அம்மை - திருவடிப்பேறு.

ஆய்ந்து அறியாவணம் - சாதாரண மனிதர்கள் ஆராய்ந்து அறிய முடியாத. காய்ந்து - விருப்பு வெறுப்பு இன்றி.

## 1547. அறியவொண் ணாதவ் வுடம்பின் பயனை

1547. அறியவொண் ணாதவ் வுடம்பின் பயனை
அறியவொண் ணாத அறுவகை யாக்கி
அறியவொண் ணாத அறுவகைக் கோசத்
தறியவொண் ணாததோர் அண்டம் பதிந்ததே.

பெறுதற்கரிய மக்கள்யாக்கையின் பயன் வீடுபேறடைதல். அதனையடையும் வழிவகைகளை எளிதாக்க அகச் சமயம் ஆறனையும் அருளினன். உண்டென்று கூட உணரமுடியாத தொன்மை ஆணவ மலத்தை அறுவகைசெய்து, உணவுடம்பு, வளியுடம்பு, மனவுடம்பு, அறிவுடம்பு, இன்பவுடம்பு ஆகிய ஐவகையுடம்புகளானும் அறியமுடியாத திருவருள் பெருவெளி ஆருயிர்மாட்டுப் பதிந்ததென்க. அறுவகை - அற்றுப்போம்வகை. ஐவகை உடம்பினையும் முறையே அன்மையகோசம் பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்த மயகோசம் என்ப. அகச்சமயம் ஆறும் வருமாறு : 1. ஆவிக்கற்கோள். 2 ஆவி வேற்றுமைக்கோள். 3. சிவனொப்புக்கோள். 4. கருவி சென்று பற்றுங்கோள். 5. சிவன் செயலின்மைக்கோள். 6. சிவத்திரிபுக்கோள் என்பன. இவற்றை முறையே பாடாணவாதம், பேதவாதம், சிவசமவாதம், சங்கிராந்தவாதம், ஈசுவரவிகாரவாதம், நிமித்த காரண பரிணாமவாதம் எனவுங் கூறுப.

உடம்பின் பயன் - உடம்பினால் பெறப்படும் பயன் முத்தி. அறுவகை - ஆறுவகை உட்சமயங்களாக.

அறியவொண்ணாத அறுவகை - அறிதற்கு அரிதாகிய ஆணவமலம் அறும்வகை செய்து. கோசத்து - உடம்பினுள், அண்டம் - அண்டகாரணனாகிய சிவம்.

நான்குறுதி பெற்றார் சிவநற்றாட் பேறுறுவர்
நூன்முறைஐந் தாந்தந்திரம் நோக்கு.

ஐந்தாம் தந்திரம் முற்றும்.

# ஆறாம் தந்திரம்

(வியாமளாகமம்)

விநாயகர் காப்பு

ஐந்து கரத்தனை யானை முகத்தனை
இந்தின் இளம்பிறை போலும் எயிற்றனை
நந்தி மகன்தனை ஞானக் கொழுந்தினைப்
புந்தியில் வைத்தடி போற்றுகின் றேனே.

## 1548. பத்திப் பணித்துப் பரவும் அடிநல்கிச்

1548. பத்திப் பணித்துப் பரவும் அடிநல்கிச்
சுத்த வுரையால் துரிசறச் சோதித்துச்
சத்தும் அசத்துஞ் சதசத்துங் காட்டலாற்
சித்தம் இறையே சிவகுரு வாமே.

முழு அன்பாகிய பத்தியினை அடியேன்பால் எழுப்பி எல்லாராலும் தொழப்படும் தன் திருவடியிணையினைத் தந்தருளி, இயற்கைத் தூய செவியறிவுறூஉவாகிய திருவைந்தெழுத்தாம். உபதேச மந்திரத்தால் வழி ஆறினும் உள்ள குற்றங்களைப் போக்கியருள்வன். நிலைபெற்ற சிவமெய்யினையும் நிலைபேறில்லாத மாயாகாரிய உலகியற் பொருள்களையும் இரண்டனுடனும் சார்ந்து இரண்டன் பயனையும் நுகர்ந்து சார்பி எனப்படும் உயிராம் சதசத்தினையும் உணர்வுக்கு உணர்வாய் அருட்கண்ணாலுணர்த்தியருள்வன். ஆதலால் சிவகுருவாக எழுந்தருளி வருபவன் உறுதியாக விழுமிய முழுமுதற் சிவனேயாவன்.

பத்திப்பணித்து - அன்பு கனியச் செய்து. சுத்த உரை - குற்றமற்ற தெளிந்த உரை. துரிசற - மலபந்தங்கள் நீங்க. சோதித்து - அத்துவா சோதனை செய்து. சத்து, அசத்து, சதசத்து - சிவம், பாசம். சீவன். சித்தம் இறையே - உள்ளத்தின்கண் இருக்கும் இறைவனே

## 1549. பாசத்தைக் கூட்டியே கட்டிப் பறித்திட்டு

1549. பாசத்தைக் கூட்டியே கட்டிப் பறித்திட்டு
நேசித்த காயம் விடுவித்து நேர்நேரே
கூசற்ற முத்தியிற் கூட்டலா நாட்டத்தது
ஆசற்ற சற்குரு அம்பல மாமே.

ஆருயிர்களுக்குத் தொன்மையே ஏற்பட்ட மலத்தைப் போக்குதற்கு, மாயை வினைகளை உடன்கூட்டி அம் மலத்தைப் பறித்திட்டருள்வன். மலம் நீங்கவும் உயிர்கள் சார்புபற்றிப் பன்னெடுநாள் விருப்பம் வைத்திருந்த உடலின் விருப்பத்தை ஒழிப்பித்து, நேரடியாகத் தன் திருவடியிற் கூட்டிப் பெரும்பேறு நல்குதலால் அச் சிவம் பேரருள் நோக்கத்தையுடையது. அத்தகைய குற்றமகற்றிக் குணமருளும் உண்மைக் குரு அறிவுப் பெருவெளிச் சிவனேயாவன்.

பாச ...ட்டு - மாயைக் கூட்டி ஆணவமலத்தைத் தொலைத்து. கூசற்ற - அச்சமற்ற. நேசித்..வித்து - தானென விரும்பி இருந்த சரீர ஆசையை நீக்கி. நாட்டத்தது - கருத்தினையுடையது.

## 1550. சித்திகள் எட்டொடுந் திண்சிவ மாக்கிய

1550. சித்திகள் எட்டொடுந் திண்சிவ மாக்கிய
சுத்தியும் எண்சத்தித் தூய்மையும் யோகத்துச்
சத்தியும் மந்திர சாதக போதமும்
பத்தியும் நாதன் அருளிற் பயிலுமே.

அகத்தவத்தாற்கு எய்தும் எண்வகைச் சித்திகளுடன் உறுதியான சிவமாக்கிய அறுவகை வழிகளின் தூய்மையும், சிவபெருமானின் தன் வயத்தனாதல் முதலிய திருவருட் குணங்கள் எட்டும், சிவயோகத்தால் வரும் சத்தியும், மந்திரங்களைப் பயிலும் உணர்வும், பொதுநீக்கிச் சிவபெருமானே முழுமுதல் என வழிபடும் முழுமுதற் பண்பும் ஆகிய இவையனைத்தும் முழுமுதல் தலைவனாகிய சிவபெருமான் திருவருளால் கைகூடும் என்ப.

சுத்தியும் - அத்துவா சோதனையும். எண்...யும் - சிவனுடைய எண்குணங்களையும் பொருந்தியதால் தூய்மையும், யோக...யும் - எண்வித யோகங்களால் அடையும் வல்லமையும். மந்திர சாதகமும் - மந்திர வல்லமையும். போதமும் - அறிவும். பத்தியும் - அடியார் பத்தியும். நாத...லும் - சிவகுரு கருணையால் நடைபெறும்.

## 1551. எல்லா வுலகிற்கும் அப்பாலோன் இப்பாலாய்

1551. எல்லா வுலகிற்கும் அப்பாலோன் இப்பாலாய்
நல்லார் உள்ளத்து மிக்கருள் நல்கலால்
எல்லாரும் உய்யக்கொண் டிங்கே அளித்தலாற்
சொல்லார்ந்த நற்குரு சுத்த சிவமே.

முப்பத்தாறு தத்துவங்களுக்கு உட்பட்ட உலகங்கள் அனைத்திற்கும் அப்பாற்பட்ட சிவன், இவ் வுலகத்துத் தென்னாடுடைய சிவனேயாய்த் திகழ்கின்றனன். அவன் நல்லாராகிய சிவஞானிகள் உள்ளத்து மிக்க அருள் செய்தல்போல் ஏனையார்க்கும் செய்தற் பொருட்டுப் புறத்தே தம் முதல் குருவுமாய்த் தோன்றி யருள்வன் அதனால் எல்லாரையும் இப் பிறப்பொன்றிலேயே உய்யக் கொண்டருள்வன். அதனால் புகழமைந்த நற்குரு இயற்கைச் சிவனே. சுத்தம் - இயற்கை.

எல்...லோன்-அண்டங்கள் எல்லாம் கடந்த அமலன். இப்பாலாய் - குருவடிவாய் இங்கு வந்து. உய்யக்கொண்டு - ஈடேறும்படி.

## 1552. தேவனுஞ் சுத்த குருவும் உபாயத்துள்

1552. தேவனுஞ் சுத்த குருவும் உபாயத்துள்
யாவையும் மூன்றா யுனக்கண் டுரையாலே
மூவாப் பசுபாச மாற்றியே முத்திப்பால்
யாவையும் நல்குங் குருபரன் அன்புற்றே.

தேவனாகிய சிவபெருமானும் இயல்பாகவே பாசங்களின் நின்று நீங்கிய அடிமை ஆருயிரும் சிவகுருவாவர். இவ் விருவரும் ஒருவரே. இறை, உயிர், தளை என்று கருதிப் பேசப்பெறும் பதி, பசு, பாசம் என்ற மூன்றினுள் உன்னி உரைக்கப்படும் ஒன்றாக அவனிருப்பதுங் காண்க. அவன், கெடாத உயிராகிய பசுவினது தளையாகிய பாசத்தை அருமறை, உபதேசத்தால் மாற்றியருள்வன்; மாற்றவே திருவடிப்பேற்றின்கண் எல்லாவுயிரும் சென்று இன்புறும். அத்தகைய சிவபெருமான் மேலாம் குருபரன் ஆவன். அவன் திருவடியிணையில் முழு அன்பு புரிவாயாக. பரம் - மேல். இவ் வைந்து செய்யுட்களுள் மூன்றாவது செய்யுள் ஒழிந்த ஏனைய நான்கு செய்யுட்களிலும் முறையே சிவகுரு, சிவசற்குரு, நற்குரு குருபரன் என்னும் திருப்பெயர்கள் காணப்படுகின்றன. இவற்றால் முறையே அறிவிற் சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்னும் நான்கு நெறிகளும் குறிப்பிற் புலப்படுவன காண்க. அருமறை - திருவைந் தெழுத்து உனக்கண்டு : உன்னக் கண்டு; உன்ன - கருத. உன என்பது உன்ன என்பதன் இடைக்குறை.

தேவனும் - சிவனும். உபாயத்துள் - பதார்த்தங்களுள். மூன்றாய் உனக் கண்டு - பதி, பசு, பாசம் என மூன்றாகக் கருதுவதை உணர்ந்து. மூவாப் பசு பாசம் - அழிவில்லாத ஆன்மாவின் பாசத்தை.

## 1553. சுத்த சிவன்குரு வாய்வந்து தூய்மைசெய்து

1553. சுத்த சிவன்குரு வாய்வந்து தூய்மைசெய்து
அத்தனை நல்கருள காணா அதிமூடர்
பொய்த்தகு கண்ணான் நமரென்பர் புண்ணியர்
அத்தன் இவனென் றடிபணி வாரே.

இயற்கைச் சிவபெருமான் குருவாய் எழுந்தருளி வந்து ஆருயிர்களை மலமகற்றித் தூய்மை செய்தருள்வன். அக் குருவே தன் திருவடியிணையையும் நல்கியருள்வன். இவ் வுண்மையினைக் காணும் பேறில்லாத புல்லறிவாளராகிய அதிமூடர், நிலையில்லாத மாயாகாரிய மாகிய ஊனக்கண் கொண்டு கண்டு சிவகுருவும் நம்மனோரில் ஒருவரே என்பர். அருட்கண் பெற்ற புண்ணியப் பேறுடையார் அத்தனாகிய சிவபெருமான் இவனே என்று, 'காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கிச் சிவசிவ' என்று ஓவாது ஓதி அவன் திருவடியை வணங்குவர். அத்தனை: அத்+தன்னை. அங்ஙனம் செய்தருளிய தன்னை; அத்தனாகிய சிவனை. சுத்தம் - புனிதம்; இயற்கை.

பொய்...என்பர்-அருட்கண்ணால் அன்றி ஊனக்கண் கொண்டு பார்க்கும் மூடர் சிவகுருவைச் சிவமாகப் பாவிக்காது மானிடரில் ஒருவர் என்பர்.

## 1554. உண்மையிற் பொய்ம்மை ஒழித்தலும் உண்மைப்பார்

1554. உண்மையிற் பொய்ம்மை ஒழித்தலும் உண்மைப்பார்
திண்மையும் ஒண்மைச் சிவமாய அவ்வரன்
வண்மையும் எட்டெட்டுச் சித்தி மயக்கமும்
அண்ணல் அருளன்றி யாரறி வாரே.

சிவகுரு உண்மையாகிய திருவடியுணர்வால் நிலையில்லதாகிய காரறிவாண்மை என்னும் அறியாமையை அகற்றுவன். அகற்றுதலும் காரணத்தின் நிலைபேறுடையதாய திண்மைமிக்க மாயாகாரிய நிலைமையும், இயற்கை உண்மை அறிவு இன்ப ஒண்மைச் சிவனார் அம்மாயையினைக் காரியப்படுத்தி, நாம் பயன்பெறும்படி நமக்குத் தந்தருளிய வண்மையும் புலனாகும். அறுபத்துநான்கு சித்திகளை எய்தும் மயக்கமும் அகலும். இவையனைத்தும் சிவபெருமானாகிய அண்ணலின் திருவருளாலாகும். இவ்வுண்மையினை அறிவார் மிகவும் அரியர்.

பொய்ம்மை அஞ்ஞானத்தை. உண்மைப் பார் திண்மையும் - உண்மையாகக் காணப்பட்ட உலகத்தின் மாய வலிமையும். எட்டெட்டு சித்தி மயக்கம் - 64 சித்திகளால் ஆகும் மயக்கமும்.

## 1555. சிவனே சிவஞானி யாதலாற் சுத்த

1555. சிவனே சிவஞானி யாதலாற் சுத்த
சிவனே யெனஅடி சேரவல் லார்க்கு
நவமான தத்துவ நன்முத்தி நண்ணும்
பவமான தின்றிப் பரலோக மாமே.

சிவஞானமாகிய முற்றுணர்வைத் தந்தருளும் சிவகுரு சிவஞானியாவர். அவர் சிவனெனவே படுவர். ஆதலால் சிவகுருவை இயற்கை உண்மைச்சிவனே என நினைந்து அவர் திருவடியைச் சேரும் நற்பேறு பெற்றார்க்குத் தூவாமாயையின் காரியமாகிய அவ் வுடலுறுப்புக்கள் தூமாயையின் காரியமாக வேறுபடும். வேறுபடுதல் - சிறப்புறுதல். இதுவே ஈண்டு நவமான தத்துவம் என ஓதப்பட்டுள்ளது. 'உள்ளம் சிவனுடன் ஒன்றாகில் உடலும் அவனுடலாகும் இஃது 'உள்ளநினை வாலுணர்வாம் உற்றுணர்வால் தூய்மையுடல், வள்ளலுடன் அமைப்பன் வந்து' என்னும் முறைமையாலறிக. வழிப்பேறுகளாகிய முத்தியும் கைகூடும். பிறப்பும் அறும். விழுப்பேறாகிய பரலோகம் எனப்படும் வானோர்க்குயர்ந்த உலகமாகிய திருவடிப்பேறும் எய்தும்.

பவம் - பிறப்பு.

## 1556. குருவே சிவமெனக் கூறினன் நந்தி

1556. குருவே சிவமெனக் கூறினன் நந்தி
குருவே சிவமென் பதுகுறித் தோரார்
குருவே சிவனுமாய்க் கோனுமாய் நிற்கும்
குருவே யுரையுணர் வற்றதோர் கோவே.

நந்தியாகிய முழுமுதற்சிவன், அருள்வீழ்ச்சியால் எழுந்தருளிவந்து ஆட்கொள்ளும் குருவே சிவன் என்று அருளினன். திருவருள் துணையால் குருவே சிவன் என்னும் மெய்ம்மையினைக் குறித்தோர் சிவனுமாய்ச் சிறப்பருள் தலைவனுமாய் நிற்பவராவர். அவரையே சிவகுருவென்பர். அச் சிவகுருவே நூலாலும் நூலாலுணரும் நோன்மை யறிவாலும் அறியவொண்ணாத சிவன் என்பர். நூலுணர்வு - சுட்டுணர்வு. நோன்மையுணர்வு - சிற்றுணர்வு. நுண்ணுணர்வு - முற்றுணர்வு. அருள்வீழ்ச்சி - சத்திநிபாதம்.

## 1557. சித்தம் யாவையுஞ் சிந்தித் திருந்திடும்

1557. சித்தம் யாவையுஞ் சிந்தித் திருந்திடும்
அத்தன் உணர்த்துவ தாகும் அருளாலே
சித்தம் யாவையுந் திண்சிவ மானக்கால்
அத்தனும் அவ்விடத் தேயமர்ந் தானே.

அத்தனாகிய சிவபெருமான் தன் திருவருளால் ஆவிகளுக்கு உண்ணின்று உணர்த்தியருள்வன். அதனால் எண்ணமாகிய சித்தம் யாவற்றையும் உள்ளவாறு உணர்ந்திருந்திடும். அம் முறையில் எண்ணமானது இடையறாது சிவத்தையே நாடுதலால் எண்ண முதலிய கருவிகளனைத்தும் சிவக்கருவியாகச் சிறக்கும். அத்தனாகிய சிவபெருமானும் அவ் ஆவி தானாகவே அமர்ந்திடுவன். எண்ணம் - சித்தம்.

சித்த..ஆனக்கால் - பசுகரணம் எல்லாம் பதிகரணம் ஆனக்கால்.

## 1558. தானந்தி சீர்மையுட் சந்தித்த சீர்வைத்த

1558. தானந்தி சீர்மையுட் சந்தித்த சீர்வைத்த
கோனந்தி யெந்தை குறிப்பறி வாரில்லை
வானந்தி யென்று மகிழும் ஒருவற்குத்
தானந்தி யங்கித் தனிச்சுட ராமே.

தானே, சிவபெருமானென விளங்கும் நந்தியெங் கடவுள் வகுத்தருளிய சீலம் நோன்பு செறிவு அறிவு என்னும் இறவாத் தவமாம் நாநெறியுள், அறிவு நெறியாகிய நன்நெறியின்கண் காணப்படுவதான திருவருள் முறைமையினை நல்கியருளியவன் நந்தியாகிய சிவபெருமான். அவனுடைய திருவருட் குறிப்பினை அறிவாரில்லை. அவனருளால் அறிவார்க்கு அவன் மேலாகிய சிவன் எனக் காணப்படுவன். அவ்வுண்மையினைக் கண்டு ஆவிகள் பெருமகிழ்வு கொள்ளும். அச் சிவனே மாலைக்காலத்து விளங்கும் அருட்சுடார்த் திருவிளக்காகவும் தோன்றியருள்வன்.

சீர்மையுள் - சன்மார்க்க ஒழுககத்துள். சந்தித்த - காணப்படுவதான. வானந்தி - மேலான நந்தி. அந்தி அங்கி - மாலைக்காலத்துத் தீபம் போன்றவன்.

## 1559. திருவாய சித்தியும் முத்தியும் சீர்மை

1559. திருவாய சித்தியும் முத்தியும் சீர்மை
மருளா தருளும் மயக்கறும் வாய்மைப்
பொருளாய வேதாந்த போதமும் நாதன்
உருவாய் அருளா விடிலோர ஒண்ணாதே.

வாராத செல்வமாகிய திருவடிப்பேறும், வீடும் அவ்வவற்றின் சிறப்புக்களும் மயக்கமுறாவண்ணம் அருளுதலும், மெய்ப் பொருளுணர்த்தி பொய்ப்பொருளின் மயக்கறுத்தலும், அம் மெய்ப் பொருளை உள்ளவாறுணர்த்தும் திருநான்மறையின் முடிபும், அம் முடிபாற் பெறப்படும் சித்தாந்த நுண்ணுணர்வும் சிவகுரு வடிவெடுத்துச் சிவபெருமான் அருளாவிடின் ஒருவராலும் உணரவொண்ணாதென்க.

நாதன் உருவாய் - நந்தி குருவடிவாய் வந்து.

## 1560. பத்தியம் ஞானவை ராக்கிய மும்பர

1560. பத்தியம் ஞானவை ராக்கிய மும்பர
சித்திக்கு வித்தாஞ் சிவோகமே சேர்தலான்
முத்தியின் ஞான முளைத்தலால் அம்முளை
சத்தி யருள்தரில் தானெளி தாமே.

சிவன்பால் முழுமையன்பாம் பத்தியும், அப் பத்தியின் விளைவாம் திருவடியுணர்வும், அவ் வுணர்வால் ஏற்படும் வைராக்கியம் என்னும் பற்றுறுதியும் திருவடிப்பேற்றுக்கு வாயில்களாகும். இவற்றான் அவன் நான் ஆனேன் எனக் கருதுதலாகிய பாவனை உண்டாம். அப்பாவனையால் சிவனேயாவன். அதனால் வீடுபேற்றிற்கு வித்தாகிய திருவடியுணர்வு தோன்றும். அம் மெய்யுணர்வுத் தோற்றம் திருவருள் வழியாகக் கிடைக்கப் பெறுதலால் எளிதாயிற்றென்க.

முத்தியின் ஞான முளைத்தலால் - முத்தியடைய இச்சை உண்டாகலான். அம் முளை-அந்த இச்சை. சத்தி அருள்தரில் - திருவருட் சத்தி அருளில்.

# 1561. இன்னெய்த வைத்ததோர் இன்பப் பிறப்பினை

1561. இன்னெய்த வைத்ததோர் இன்பப் பிறப்பினை
முன்னெய்த வைத்த முதல்வனை எம்மிறை
தன்னெய்துங் காலத்துத் தானே வெளிப்படு
மன்னெய்த வைத்த மனமது தானே.

மேலோதிய சிறப்புக்கள் எல்லாம் எய்துதற்குரிய தென்னாட்டகத்துப் பிறக்கும் இன்பப் பிறப்பினை முன்னமே எய்தும்படி அருள் செய்த முழுமுதல்வனாகிய சிவபெருமானை எம் தலைவன் என்று வழுத்துவோம். அவன் திருவடியை ஆருயிர் அடையும் செவ்வி அருளால் எய்துங்காலத்து அச் சிவன் தானே வெளிப்பட்டருள்வன். அத்தகைய செவ்வி வாய்ப்பது அருளுக்குத் தனியிடமாக மனம் அமைந்தகாலத் தென்க. அங்ஙனம் அமைந்த மனம் ஏனைக் கருவிகளுக்குத் தலைமைப்பாடு எய்தும்.

இன் எய்த - இன்பம் எய்த. முன் எய்த - பிறப்பினை எய்த வைத்த. தன் எய்தும் - தன்னை அடையுங் காலத்தில். மன்.....தானே - பெருமை எய்த வைத்த உள்ளத்தின்கண்ணே. (மனம்: உள்ளத்துக்கு ஆகுபெயர்.)

## 1562. சிவமான ஞானத் தெளியவொண் சித்தி

1562. சிவமான ஞானத் தெளியவொண் சித்தி
சிவமான ஞானத் தெளியவொண் முத்தி
சிவமான ஞானஞ் சிவபரத் தேயேகச்
சிவமான ஞானஞ் சிவானந்த நல்குமே.

சிவமாக்கும் திருவடியுணர்வு சிவஞானம் எனப்படும். சிவஞானம் எனினும் திருவருள் எனினும் ஒன்றே. அத் திருவருளால் ஆருயிர்களின் அறிவு தெளிவுபெறும். அறிவு தெளியச் சிறந்த சித்திகள் கைகூடும். பற்றுறுதியாகிய வீடும் எய்தும். இவற்றால் சிவம் தானாதல் என்னும் சீரும் பொருந்தும். அத்திருவருளே தவலில் சிவ இன்பமாகும்.

சிவபரம் - சாயுச்சியம்.

## 1563. அறிந்துணர்ந் தேனிவ் வகலிட முற்றுஞ்

1563. அறிந்துணர்ந் தேனிவ் வகலிட முற்றுஞ்
செறிந்துணர்ந் தோதித் திருவருள் பெற்றேன்
மறந்தொழிந் தேன்மதி மாண்டவர் வாழ்க்கை
பிறிந்தொழிந் தேனிப் பிறவியை நானே.

திருவருட்டுணையால் உலகியல் உண்மை முற்றும் அறிந்துணர்ந்தேன். சிவன் திருவடிக்குப் பேரன்பு வைத்துத் திருமுறையும் சித்தாந்த நூல்களும் ஓதியுணர்ந்து திருவருள் பெற்றேன். சிவனடி நினைக்கும் சிறந்த அறிவில்லாரின் பெருவாழ்வையும் மறந்தொழிந்தேன். அதனால் சிறப்பிலார் தம் திறத்துச் சேர்வை நீங்கிற்று. நீங்கவே பிறவியினின்று விடுபட்டேன்.

அகலிடம் - உலகம் முழுதும். செறிந்துணர்ந்து - அன்பினால் உணர்ந்து. மதி மாண்டவர் - அறிவு கெட்டவர்.

## 1564. இசைந்தெழும் அன்பில் எழுந்த படியே

1564. இசைந்தெழும் அன்பில் எழுந்த படியே
பசைந்தெழும் ஈசரைப் பாசத்துள் ஏகச்
சிவந்த குருவந்து சென்னிகை வைக்க
உவந்த குருபதம் உள்ளத் துவந்ததே.

திருவருள் வலத்தால் ஒத்து எழும் அன்பின்கண் அவ்வன்புருவாக விழைந்து எழும் சிவபெருமானை, மேலும் மேலும் முறுகி வளரும் அன்பின்வழிச் சென்று தொழுவர். தொழுவே, சிவபெருமான் சிவகுருவாக வந்து மும்மலங்களை அகற்றுவர். அகற்றி உச்சியின்கண் திருக்கையினைப் பொருந்துமாறு வைத்தருளுவர், அருளவே அவர்தம் திருவடி ஆவிகளின் உள்ளத்து இடனனைமந்து வெளிப்பட்டு அமரும்.

பசைந்து எழும் - விரும்பித் தோன்றுகிற. பாசத்துள் ஏக - அன்பின்வழிச் செல்ல. சிவந்த - அஞ்ஞானத்தைக் கோபித்த
சென்னி கை வைக்க - தலையில் கை வைத்துச் செய்யும் தீக்கையைச் செய்ய.

# 1565. தாடந்த போதே தலைதந்த எம்மிறை

1565. தாடந்த போதே தலைதந்த எம்மிறை
வாடந்த ஞான வலியையுந் தந்திட்டு
வீடந்த மின்றியே யாள்கென விட்டருட்
பாடின் முடிவைத்துப் பார்வந்து தந்ததே

எம் தலைவனாகிய சிவபெருமான் தன் திருவடியிணையினை எம் உள்ளத்தே பதித்தபொழுதே, இதுகாறும் பொறிபுலன்களுக்கு அடிமைப்பட்டுக் கிடந்த எமக்கு அவைகள் அடிமைப்படும்படியான தலைமையையும் தந்தருளினன். அறியாமையை ஈரும் வாளாகிய திருவடியுணர்வினையும் தந்தருளினன்; முடிவுபேறில்லாத திருவடிப்பேற்றினையும் தந்தருளினன்; திருவருளால் தன் திருவடியை வெளிப்பட்டுச் சிவகுருவாய் எழுந்தருளி வந்து எம் முடிமேல் வைத்தருளினன்.

தாள் தந்த போதே - திருவடியை என் சென்னிமிசை சூட்டினபோதே. தலைதந்த - தலைமைத் தன்மை வந்தது. வாள் தந்த ஞான - வாள் போலும் அஞ்ஞானத்தை ஈரும் ஞான. வீடு அந்தமின்றியே ஆள்கென - முத்தி இன்பத்தை என்றும் நித்தியமாய் அனுபவி என்று அருட்பாடின் - அருளினால். முடி வைத்து - தலையில் திருவடியைச் சூட்டி. பார் வந்து - பூமியிலே குருவடிவாய் வந்து.

## 1566. தானவ னாகிச் சொரூபத் துவந்திட்டு

1566. தானவ னாகிச் சொரூபத் துவந்திட்டு
ஆன சொரூபங்கள் நான்கும் அகற்றின
ஏனைய முத்திரை யீந்தாண்ட நன்னந்தி
தானடி முற்சூட்டித் தாபித்த துண்மையே.

திருவருளால் ஆருயிர் சிவமாகிச் சிவனதுண்மை யறிவின்ப நிலையினில் நிற்கும். அப்பொழுது மலமாயை கன்மம் மாயேயம் என்னும் நான்கினது இயல்புகளும் நீங்கின நிலையினை எய்தும். சிவன் திருவடிக்கு அடிமையாம் அடையாளப் பொறியினை நல்கி நல்ல நந்தியெங்கடவுள் ஆண்டனன். அச் சிவபெருமான் திருவடி சூட்டி ஆருயிர்களை அருள்வழி நிலைப்பித்தது மெய்ம்மையேயாகும். இது, நிலைப்பித்தல் திருவருளாகிய பிரதிட்டாகலையின் அருட்செய்கையாகும். இக் கலைகள் ஐவகை என்ப. அவை: நீக்கல், நிலைப்பித்தல், நுகர்வித்தல், அமைதியாக்கல், அப்பாலாக்கல் என்ப. சொரூபம் - இயற்கை. முத்திரை - பொறி.

## 1567. உரையற் றுணர்வற் றுயிர்ப்ப மற்றுத்

1567. உரையற் றுணர்வற் றுயிர்ப்ப மற்றுத்
திரையற்ற நீர்போல் சிவமாதல் தீர்த்துக்
கரையற்ற சத்தாதி நான்குங் கடந்த
சொரூபத் திருத்தினன் சொல்லிறந் தோமே.

சிவகுருவாய் வந்து திருவடி சூட்டியதும் பிறப்பிற் கேதுவாய் உரையும் உணர்வும் அகன்றன. அகலவே, உயிரும் உயிருக்குயிராகிய சிவனும் என்று வேறுபடுத்திப் பேசும் பேச்சும் அற்றது. திரையும் கடலுமாகிய ஒன்றனையே திரையெனவும். கடலெனவும் இரு பெயரால் பேசுகின்றோம். கடல் தெளியாத நிலைமையில், கடல் தெளிந்த இடத்தில் இரண்டு பெயரில்லை. அதுபோல் மேற்கூறிய உயிரும் சிவனும் என்பதாகிய பேச்சு அற்றதாகும். ஆனால் ஆருயிரும் சிவனும் மலர்மணம் போல இயையும் இருபொருள்கள். அதனால் கடல் போல் ஒன்றெனும் பெயர் சிவத்தின்மாட்டு இன்றாகும். ஆனால் புணர்ப்பு என்னும் பெயர் உண்டாகும். எல்லையிலாத நுண் ஓசை, நினைவோசை, மிடற்றோசை, செவியோசையாகிய நான்மையும் சத்தாதி நான்கு எனப்பட்டன. அவை ஓசை மெய்யாகிய நாதத்தைக் குறிக்கும். அந்நாதத்தைக் கடந்து விளங்குகின்ற சிவ இயற்கையின்கண் ஆருயிர்களாகிய நம்மை நுகர்வித்தருளினன். அதனால் வாய்நிறை உணவினர், நாவால் உரையாட இயலாமைபோல யாமும் பேசாநிலை பெற்றனம் என்க.

உயிர் பரமற்று - சீவன் சிவன் என்கிற வேறுபாடின்றி.
சொல்லிறந்தோம்-மவுன நிலையடைந்தோம்.

## 1568. குரவன் உயிர்முச் சொரூபமுங் கைக்கொண்டு

1568. குரவன் உயிர்முச் சொரூபமுங் கைக்கொண்டு
அரிய பொருள்முத் திரையாகக் கொண்டு
பெரிய பிரானடி நந்தி பேச்சற்று
உருகிட என்னையங் குய்யக்கொண் டானே.

சிவகுருவாய் எழுந்தருளும் ஆண்டவன், ஆருயிரினுடைய பருமை நுண்மை முன்மை (காரணம்) என்னும் மூவகை யுடம்புகளையும் இரவலை ஏற்பதுபோன்று தன் உடைமையாக ஆக்குகின்றனன். ஆவியும் உடலும் உடைமை எல்லாமும் காணிக்கையாகக் கொள்கின்றனன். சிவபெருமான் திருவடியைப்பெற்ற நந்தியெங் கடவுளர் என்னை உய்யக் கொண்டருளினன். அதனால் உரையற்று உள்ளம் உருகிக் கண்களில் இன்பவெள்ள நீர் பெருகப் பள்ளத்து வெள்ளம்போல் அமைதி ஆக்கினன்.

உயிர்முச் சொரூபம் - தூலம், சூக்குமம், காரணம். அரியபொருள் முத்திரையாக - உடல், பொருள், ஆவி மூன்றையும் காணிக்கையாக. பேச்சற்று - மவுன நிலையில் இருந்து.

## 1569. பேச்சற்ற இன்பத்துப் பேரானந் தத்திலே

1569. பேச்சற்ற இன்பத்துப் பேரானந் தத்திலே
மாச்சற்ற என்னைச் சிவமாக்கி மாள்வித்துக்
காச்சற்ற சோதி கடன்மூன்றுங் கைக்கொண்டு
வாச்ச புகழ்மாளத் தாள்தந்து மன்னுமே.

சொல்லவொண்ணாததாகிய திருவடி இன்பப் பெரு வாழ்வில் ஒடுங்கச்செய்து, (மாச்சு : மாய்த்து - ஒடுங்கச்செய்து) உரிமையற்ற அடிமையாகிய என்னைச் சிவமாக்குதலாகிய அப்பாலாக்கலைச் செய்தருளினன். செய்யவே பிணிப்புத்தன்மையாகிய பசுத்துவம் அழியும். அழியவே கொடுமையில்லாத திருவருள் ஒளி வெளிப்படும். வெளிப்பட்டு உள்ளம், உரை, உடல் என்னும் முக்கருவியினாலும் இயற்றப்படும் படர்தல் பாடல் பாடுகிடத்த (பணிதல்) லாகிய மூன்று திருத்தொண்டுகளையும் கைக்கொண்டொழுக அருளும். பிணிமுனைப்பால் எழும் தற்புகழ்ச்சியினை மாளச்செய்யும் திருவடியைத் தந்து என்றும் ஒன்றுபோல் நின்று நிலைபெறுமா றருளும். பிணி - கட்டு: ஆணவம்.

மாச்சற்று - ஒடுங்கச் செய்து. மாள்வித்து - பசுத்துவத்தை ஒழித்து. காச்சற்ற - கொடுமையில்லாத. கடன் மூன்றும் - முக்கரணங்களால் செய்யப்படும் காரியங்கள். வாச்சபுகழ் - தற்புகழ்ச்சி.

## 1570. இதயத்தும் நாட்டத்தும் என்றன் சிரத்தும்

1570. இதயத்தும் நாட்டத்தும் என்றன் சிரத்தும்
பதிவித்த பாதப் பராபரன் நந்தி
கதிவைத்த வாறும்மெய் காட்டிய வாறும்
விதிவைத்த வாறும் விளம்பவொண் ணாதே.

அடியேனுடைய உள்ளத்தும் கள்ளமிலாக் கண்ணகத்து, உச்சியிலும் தன்னுடைய அரும்பெறல் திருவடியைப் பதிவித்த தொழப்படும் தேவர் தொழப்படும் பெரும்பொருள் நந்தி திருவடிப்பேறாகிய கதியமைத்தவாறும், சிவகுருவாய் எழுந்தருளிவந்து மெய்ப்பொருள் உணர்த்தியவாறும், திருமறை திருமுறைகளாகிய செந்தமிழ் வேதாகம விதி வைத்தவாறும் அவனருளால் அல்லாமல் ஆவிகளின் சுட்டறிவு சிற்றறிவுகளான் வெளிப்படுத்திக் கூற ஒண்ணா தென்க.

# 1571. திருவடி வைத்தென் சிரத்தருள் நோக்கிப்

1571. திருவடி வைத்தென் சிரத்தருள் நோக்கிப்
பெருவடி வைத்தந்த பேர்நந்தி தன்னைக்
குருவடி விற்கண்ட கோனையெங் கோவைக்
கருவழி வாற்றிடக் கண்டுகொண் டேனே

அடியேன் முடியில் திருவடியை வைத்தருளலும், திருக்கடைக்கண் நோக்கமருளலும் செய்தருளித் தன் பெருவடிவாகிய சிவ நிறைவினைத் தந்தருளியவன் பெரும்பொருள் நந்தியாகும். இவ்விரண்டும் முறையே திருவடி தீக்கை எனவும் திருநோக்கத் தீக்கை எனவும் கூறப்படும். அந் நந்தியெங்கடவுளைக் குருவடிவிற் கண்டனம். அவனே நம் பிறப்பாகயி கருவழிவு ஆற்றுந் தலைவனாவன். அவனே கண்ணனைய காதலனாகிய கோவும் ஆவன். ஆவனருளால் அவன் திருவடியைக் கண்டுகொண்டேன்.

## 1572. திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்குந்

1572. திருவடி ஞானஞ் சிவமாக்கு விக்குந்
திருவடி ஞானஞ் சிவலோகஞ் சேர்க்குந்
திருவடி ஞானஞ் சிறைமல மீட்குந்
திருவடி ஞானமே திண்சித்தி முத்தியே.

திருவடியுணர்வு ஆருயிர்களை மும்மலப் பிணிப்பினின்றும் செம்மையுற விடுவிக்கும். அவ் வுணர்வே கிடைத்தற்கரிய திருவருட் சித்திகளை எய்துவிக்கும். அதுவே சிவ வுலக வாழ்வினைச் சேர்ப்பிக்கும். அவ் வுணர்வே சிவமாம் பெருவாழ்வையும் கூட்டுவிக்கும்.

## 1573. மேல்வைத்த வாறுசெய் யாவிடின் மேல்வினை

1573. மேல்வைத்த வாறுசெய் யாவிடின் மேல்வினை
மால்வைத்த சிந்தையை மாயம தாக்கிடும்
பால்வைத்த சென்னிப் படரொளி வானவன்
தாள்வைத்த வாறு தரிப்பித்த வாறே.

மேலோதிய திருவருள் ஆணையின்வழி ஆருயிர்கள் செம்மையுற ஒழுகாவிட்டால், பண்டைப் பழவினைகளாகிய எஞ்சு வினைகள் உள்ளத்தை மயக்கி ஆசைக்குழியுள் வீழ்த்திப் பிறப்பு இறப்பிற்படுத்தி மாயமதாக்கும். பால்போலும் பிறையினைச் சூடியருளிய திருமுடியினையுடைய அறிவுப் பேரொளிப் பெருமானாகிய சிவபெருமான் திருவடி சூட்டியவாறும், செந்நெறிக்கண் நிற்பித்தவாறும் திருவருளே.

## 1574. கழலார் கமலத் திருவடி என்னும்

1574. கழலார் கமலத் திருவடி என்னும்
நிழல் சேரப் பெற்றேன் நெடுமால் அறியா
அழல்சேரும் அங்கியுள் ஆதிப் பிரானுங்
குழல்சேரும் மின்னுயிர்க் கூடுங் குலைத்ததே.

ஆண்மை அடையாளக் கேண்மையாம் கழல் அணிந்துள்ள செந்தாமரையனைய திருவடி என்று சிறப்பித்துச் சொல்லப்படும் என்றும் பொன்றாப் பொருள் நிழல் சேரப்பெற்றேன். மேலும் நீண்ட திருமாலும் காணமுடியாத அழல்வண்ணமாய் எழுந்தருளி வெளிப்பட்டு நின்றவன் சிவன். அவனே உயிர்க்கு உயிராக நிற்பன். அங்ஙனம் நிற்கின்ற அவன் அம்மையோடும் கூடி அப்பனாகத் திகழ்வன். அதுவும் உயிருக்கு உயிராய் உணர்வின்கண் திகழ்வன். அந்நிலையில் என் உயிர் நிலைக்களமாம் உடம்பும் நீங்கிற்று. குழல் சேரும் மின்னும் - கரிய கூந்தலையுடைய மின்னொளி போலும் அம்மையும். கூடும்: என்பதன்கண் உள்ள உம்மையைப் பிரித்து மின் என்பதனொடு கூட்டுக. ஆதிப்பிரான்: ஆதியாகிய சிவன்.

## 1575. முடிமன்ன ராய்மூ வுலகம தாள்வர்

1575. முடிமன்ன ராய்மூ வுலகம தாள்வர்
அடிமன்னர் இன்பத் தளவில்லை கேட்கின்
முடிமன்ன ராய்நின்ற தேவர்கள் ஈசன்
குடிமன்ன ராய்க் குற்ற மற்றுநின் றாரே.

நிலவுலகில் முடிசூடு மன்னராய்த் திகழ்ந்து வாழினும் சிவனடியார் பெறும் மாறா இனபம் அவர்களுக்கு இல்லை. அம் மன்னர்கள் உம்மை வாழ்வாகிய ஒளியுலக வாழ்வு எய்தினும் தேவராவர். (அந்நிலை மீண்டும் பிறப்பினைத் தரும்.) சிவபெருமான் அடியவராய் வாழ்பவர் தனிமுடி கவித்து ஆளும் அரசினும் இனியனாகிய சிவனடியின்பத்தினை இம்மையே நுகர்வர். அச் சிவனுக்கு நிலைபெற்ற குடியாக வாழும் அடியார் அறுபகை செற்று ஐம்புலன் அடக்கி நானெறி ஒழுகி மும்மலக் குற்றம் அற்று நின்றனர். அதனால் இருவகையாம் பிறப்பிறப்பற்று ஒன்றாம் சிறப்புற்றுத் திருவடியின்பத்து வாழ்வர்.

## 1576. வைத்தேன் அடிகள் மனத்தினுள் ளேநான்

1576. வைத்தேன் அடிகள் மனத்தினுள் ளேநான்
பொய்த்தே யெரியும் புலன்வழி போகாமல்
எய்த்தேன் உழலும் இருவினை மாற்றிட்டு
மெய்த்தேன் அறிந்தேனவ் வேதத்தின் அந்தமே.

திருவருளால் திருவடியினிடத்தில் உள்ளம் வைத்தேன். அதனால் அவன் அருட்கண் பெற்றேன். அவ் வருட்கண் துணையினால் நிலையிலாப் பொருள்களை நிலையுள்ளனவாக விளக்கும் ஐம்புலன்வழிப் போகாமல் நின்றேன். நிற்கவே இருவினையின்கண் உழன்று பிறப்பு இறப்பு எடுத்து இளைத்துப்போகும் தன்மையினை மாற்றுநிலை எய்திற்று. அதனால் உண்மைத் திருவடியின்பத்தேனை உணர்ந்தேன். அத் தேனே உண்மையறிவின் முடிபாகும். வேதாந்தம் - உண்மையறிவின் முடிபு. தேனே சிவன் வண்ணம் தேற்றுமருள் வண்ணம்பால், மானே உயிர் பளிங்கு மற்றிரண்டும் சாரஇன்பமாம்.

அடிக்கண் - திருவடி ஞானத்தை பொய்....வழி - பொய்ப் பொருள்களில் பற்றுவைக்கும் ஐம்புலன் வழி. எய்த்தேன் - ஒழித்தேன். மெய்த்தேன் - உண்மை இன்பம். வேதத்தின் அந்தம் வேதத்தில் கூறப்பட்ட முடிவான பொருள்.

## 1577. அடிசார லாம்அண்ணல் பாத மிரண்டும்

1577. அடிசார லாம்அண்ணல் பாத மிரண்டும்
முடிசார வைத்தனர் முன்னை முனிவர்
படிசார்ந்த இன்பப் பழவடி வெள்ளக்
குடிசார் நெறிகூடி நிற்பவர் கொள்கையே.

நன்னெறிச் செல்வார் திருவருடந்ணையல் திருவடி சேர்வர். பண்டைப் பழவடியாராகிய முழுநீறு பூசிய முனிவர்கள் சிவபெருமான் திருவடியிரண்டனையும் தம் முடிக்கு அணியாக அணிந்தனர். படிமுறையான் ஏற்றமாக எய்தும் இன்ப நிறைவினராகிய அடியாருள் இணங்கி வாழும் இன்பவெள்ளத்துள் மூழ்குதலே நன்னெறிச் செல்வார் கொள்கையாகும். நன்னெறி - சன்மார்க்கம்.

படிசார்ந்த - சோபான முறைப்படி அடையப்பட்ட. பழவடி இன்ப வெள்ளக்குடி - பழமையான மோக்க இன்பத்துள் மூழ்கும் அடியாரோடு. சார்நெறி - சேர்தற்குரிய சன்மார்க்கம்.

## 1578. மந்திர மாவதும் மாமருந் தாவதுந்

1578. மந்திர மாவதும் மாமருந் தாவதுந்
தந்திர மாவதுந் தானங்க ளாவதுஞ்
சுந்தர மாவதுந் தூய்நெறி யாவதும்
எந்தை பிரான்தன் இணையடி தானே.

எந்தைபிரானாகிய அம்மையப்பரின் இணையடிகளே உடல் நோய், உளநோய், ஊறு, பகை, பிறப்பு முதலிய எல்லாவகைத் துன்கங்களையும் அறவே அகற்றும் திறமார் மந்திரமாகும்; பெரிய நன்மருந்துமாகும்; நூலுணர்வுமாகும்; உயர்ந்த இன்பமூட்டும் ஒப்பிலா ஒளி நிலங்களுமாகும்; உயிர், உணர்வு, உள்ளம், உடல், உடை, உறையுள் ஆகியவற்றிற்கு அழகினைத் தருவதுமாகும்; திருவடி சேர்க்கும் தூய நெறியுமாகும். திருவடி என்பது, 'சிவயநம' இதன்கண் ஆவியின் அடையாளமாகிய 'ய' கரத்தின் முன்னும் பின்னும் உள்ளனவாகிய வகரமும் நகரமும் அண்ணல் திருவடி இரண்டுமாகும். வகரம் வனப்பாற்றல். நகரம் நடப்பாற்றல். வகரம் சிவத்துடன் கூட்டும். நகரம் உடலுடன் கூட்டும். வகரம் வலது திருவடி. நகரம் இடது திருவடி.

இம் மந்திரக் கருத்தைத் திருஞானசம்பந்த சுவாமிகள் எடுத்து ஆண்டுள்ளார். திருவடி ஞானமே எல்லாமாம் என்பது இம் மந்திரக் கருத்து.

## 1579. நீங்காச் சிவானந்த ஞேயத்தே நின்றிடப்

1579. நீங்காச் சிவானந்த ஞேயத்தே நின்றிடப்
பாங்கான பாசம் படரா படரினும்
ஆங்கார நீங்கி யதனிலை நிற்கவே
நீங்கா அமுத நிலைபெற லாமே.

கட்டிலும் ஒட்டிலும் ஆருயிர்களை என்றும் விட்டு நீங்காத அருளால் உணரப்படும் பொருளாகிய முழுமுதற் சிவத்தின் விழுமிய பேரின்பத்தே அழுந்தி நிற்கப் புல்லுமலமாகிய ஆணவப் பசை தொடராது. ஒருகால் தொடர நேரினும், திருவருள் துணையால் ஆங்காரம் நீங்கி அத் திருவருள் நினைவாகவே மெய்யடியார் நிற்பர். நிற்கவே அவர்கட்குப் பேரின்பப் பெருவாழ்வு நீங்காது நிலைபெறும். பசை - வாசனை. அமுதம்-பேரின்பம். ஞேயம் - உணரப்படும் பொருள்.

ஞாதுரு - அறியும் ஆன்மா. ஞானம் - அறியும் அறிவு. ஞேயம் - அறியப்படு பொருள் பாங்கான பாசம் - சகச மலம், ஆணவம். ஆங்.....கவே - ஆங்காரத்தை அடக்கி மவுனம் சாதிக்கவே. நீங்கா அமுத நிலை - அழியாத இன்ப நிலை.

# 1580. ஞேயத்தே நின்றோர்க்கு ஞானாதி நின்றிடும்

1580. ஞேயத்தே நின்றோர்க்கு ஞானாதி நின்றிடும்
ஞேயத்தின் ஞாதுரு ஞேயத்தில் வீடாகும்
ஞேயத்தின் ஞேயத்தை ஞேயத்தை யுற்றவர்
ஆயத்தின் நின்ற அறிவறி வாறே.

திருவருள் துணையால் ஞேயமாகிய திருவடிப்பேற்றில் உறைந்து நின்றோர்க்கு, முற்றுணர்வாகிய சிவஞான முதலியன நிலை பெறும். திருவடியுணர்வாம் திருவருள், அம் முற்றுணர்வு நல்கும் வீடாகிய சிவபெருமானுடன் பிரிப்பின்றி நிற்கும். அத்தகைய திருவருட் போற்றல் திருவடியைச் சார்வர். அவரே ஆயமாகிய சிவனடியார் திருக்கூட்டத்துடன் இணங்கித் தொண்டுபுரிவர். அதுவே ஆண்டவனை அடையும் நன்னெறியினைப்பற்றி வாழும் அறிவினை நல்கும் வாயிலினைப் பயப்பதாகும் அவ் வறிவுடையவரே சிறந்த நிறைந்த அறிவராவர்.

ஞேயத்தே நின்றோர்க்கு - மெய்ப்பொருளை ஆராய்வோர்க்கு. ஞேயத்தின்....வீடாகும் - மெய்ப்பொருளை அறிந்த ஆன்மாவின் அறிவே முத்தியைப் பயக்க உதவியாகும். ஞேயத்தின்.... ஞேயத்தை - சத்தியையும் சிவத்தையும். ஆயத்தினின்ற - சிவமான தன்மையின்.

## 1581. தானென் றவனென் றிரண்டாகுந் தத்துவந்

1581. தானென் றவனென் றிரண்டாகுந் தத்துவந்
தானென் றவனென் றிரண்டுந் தனிற்கண்டு
தானென்ற பூவை யவனடி சாத்தினால்
நானென் றவனென்கை நல்லதொன் றனறே.

இருவகை அறிவுப்பொருள்களுள் பேரறிவுப் பொருளாகிய அவன் என்றும், சிற்றறிவுப் பொருளாகிய தானென்றும் விதந்து மொழியப்படும் உண்மைப் பொருள்கள் இருவேறு வகையினவாம். பேரறிவென்பது தானே விளங்கும் தன்மைவாய்ந்த இயற்கை அறிவு; சிற்றறிவென்பது பேரறிவு, உடன் கலந்து விளக்க விளங்கும் தன்மை வாய்ந்த இயற்கை அறிவு. அவன் - சிவன். தான் - ஆருயிர். தான் அவன் என்னும் இவ் விரு நிலைமையினையும் ஆருயிர் அருட்டுணையால் தம் முணர்வில் காண்பதாகும். அங்ஙனம் கண்டபின் ஆருயிர் தன்னை ஒரு பூவாம் நிலைமைக்குக் கொண்டுவந்து அப் பூவை அவன் திருவடியில் சாத்தும். அங்ஙனம் சாத்தினால் நானென்றும் அவன் என்றும் வேற்றுமையுறக் கூறாது மலர்க் கூந்தல் என ஒற்றுமையுறக் கூறுவது போல் உடையான் அடிமை என ஒருமையுறக் கூறுவர். அதுவே நன்னெறி நான்மையின் நன்மையாகும். அடிமை என்னும் ஒரு சொல்லே இரு பொருள் புணர்ப்பினை உணர்த்தும் எழிலுடையதாகும், மாணவன் என்பது போன்று.

தத்துவம் - உண்மைப் பொருள். இரண்டும் தனிற்கண்டு சிவத்தைச் சீவனிற் கண்டு. தானென்ற பூவை -

ஆன்மாவை. நானென்று அவனென்கை-சிவன் சீவன் என்று பிரித்துக் கூறல்.

## 1582. வைச்சன வாறாறு மாற்றி யெனைவைத்து

1582. வைச்சன வாறாறு மாற்றி யெனைவைத்து
மெச்சப் பரன்றன் வியாத்துவ மேலிட்டு
நிச்சய மாக்கிச் சிவமாக்கி ஞேயத்தால்
அச்சங் கெடுத்தென்னை யாண்டனன் நந்தியே.

ஆவிகள் சிவபெருமானைக் கூடுதற்பொருட்த் துணைக் கருவிகளாக அமைத்துக் கொடுத்த முப்பத்தாறு மெய்களும் ஆவியின் வழிச் செல்லாது ஆவிகளைத் தன்வழி இழுத்துத் தடுமாற்றத்துக்கு உட்படுத்தித் தாம் தலைமையாக நிற்கின்றன. ஆவிக்கு இவைகள்களையாகும். இக் களைகளைக் களைந்து ஆவியை வளர்த்தெடுப்பது திருவருளின் சீர் ஆகும். அம் முறையே ஆண்டவன் திருவடிக் கண்ணும் ஆவியை அத் திருவருள் நிலைப்பிக்கும். அப்பொழுது அடக்கமாகிய செறிவினை ஆவியடையும். செறிவு வியாபகம்; வியாத்துவம். சிவம், நிறைவாகிய வியாபகமாக இருக்கும். ஆவி அச் சிவமாம் பெருவாழ் வெய்தும். திருவடியுணர்வாகிய ஞேயத்தால் எனக்குள்ள பிறப்பு இறப்பாகிய அச்சத்தைக் கெடுத்தனன். கெடுத்து என்னையும் ஆண்டு கொண்டனன். அவனே நந்தியாகிய சிவபெருமான்.

ஆறாறு - 36 தத்துவங்கள். மாற்றி - களைந்து. எனை வைத்து - என்னை நிலைக்கச் செய்து. பரன்றன் வியாத்துவம் மேலிட்டு சிவத்தின் வியாபகம் மேலிடும்படி

## 1583. முன்னை யறிவறி யாதஅம் மூடர்போற்

1583. முன்னை யறிவறி யாதஅம் மூடர்போற்
பின்னை யறிவறி யாமையைப் பேதித்தான்
தன்னை யறியப் பரனாக்கித் தற்சிவத்து
என்னை யறிவித் திருந்தனன் நந்தியே.

சிவதீக்கை பெறுமுன், அறிய வேண்டிய உண்மைகளை அறியாதிருந்த அறிவிலார்க்குச் சிவதீக்கைக்குப் பின் அறிவறியாமை என்னும் இரண்டினையும் சிவன் அழித்தனன். தன்னையாகிய ஆவியை அறிய அவ் வாவியைச் சிவமாக்கினன். ஆக்குதலும் சிவத்துடன் கூடி ஆவி தன்னையும் சிவத்தையும் காணும். அவ்வாறு காணும்படி அருளினன் சிவபெருமான்.

முன்னை - தீக்கை பெறாமுன்னர். பின்னை - தீக்கை பெற்றுப் பாசம் ஒழிந்தபின். அறிவறியாமையைப் பேதித்தான் - அறிதலும் அறியாமலிருத்தலும் என்னும் தன்மையை ஒழித்தான். தன்னை அறியப் பரனாக்கி - ஆன்மாவாகிய தன்னை உணரச் சிவமாக்கி. தற்சிவத்து - அந்தச் சிவனிடத்திலே. என்னை - ஆன்மாவை.

## 1584. காணாத கண்ணுடன் கேளாத கேள்வியுங்

1584. காணாத கண்ணுடன் கேளாத கேள்வியுங்
கோணாத போகமுங் கூடாத கூட்டமும்
நாணாத நாணமும் நாதாந்த போதமுங்
காணா யெனவந்து காட்டினன் நந்தியே.

சிவபெருமான் ஆவிகளுக்குக் காணாத கண்ணாகிய அருட்கண் அளித்தனன். மேலும் கேளாத கேள்வியாகிய அறிவுப் பொறிமறை அருளினன். அஃதாவது சின்முத்திரை உபதேசம். குறைநிறைதலாகிய கோணலில்லாத சிவ வாழ்வினை அருளினன். போக்கும் வரவுமில்லாத பொருவறும் புணர்ப்பு அருளினன். இயற்கை நாணமாகிய அடிமைநிலை அருளினன். நாதமுடிவாகிய திருவடியுணர்வையும் சேர்த்தனன். இவை அனைத்தையும் காண்க என்று கண்டு காட்டினன். அவன் நந்தியெம்பெருமானவன். அறிவுப்பொறி - சின்முத்திரை. அஃதாவது பெருவிரலும் ஆட்காட்டி விரலும பிரிப் பின்றிப் புணர்ந்து ஒன்றாயநிற்க நடுவிரல், அணிவிரல், சிறுவிரல் மூன்றும் முறையே வினை மாயை ஆணவக் குறிப்புணர்த்தி நிற்பதாம்.

காணாத கண் - ஞானக் கண். கேளாத கேள்வி உபதேச மொழி. கோணாத போகம் - குறைதல் நிறைதல் இல்லாத சிவபோகம். கூடாத கூட்டம் - பிரிதலும் கூடுதலும் இல்லாத சேர்க்கை. நாணாத நாணம் - சொல்ல முடியாத வார்த்தை; ஆனால் நாணத்தால் அல்ல. இதனைத் தாயுமானவர்:

"அவன்
சொல்லாத வார்த்தையைச் சொன்னாண்டி தோழி
சொன்னசொல் ஏதென்று சொல்வேன் - என்னைச்
சூதாய்த் தனிக்கவே சும்மா இருத்தி
முன்னிலை ஏதுமில் லாதே - சுக
முற்றச்செய் தேஎனைப் பற்றிக்கொண்ட டாண்டி
பற்றிய பற்றற உள்ளே - தன்னைப்
பற்றச்சொன் னான்பற்றிப் பார்த்த இடத்தே
பெற்றதை ஏதென்று சொல்வேன் - சற்றும்
பேசாத காரியம் பேசினான் தோழி."
என்ற விளக்கியுள்ளார்.
நாதாந்த போதம் - நாதமுடிவான ஞானம்.

## 1585. மோனங்கை வந்தோர்க்கு முத்தியுங் கைகூடும்

1585. மோனங்கை வந்தோர்க்கு முத்தியுங் கைகூடும்
மோனங்கை வந்தோர்க்குச் சித்தியும் முன்னிற்கும்
மோனங்கை வந்தூமை யாமொழி முற்றுங்காண்
மோனங்கை வந்தைங் கருமமும் முன்னுமே.

வாய்வாளாமையாகிய மோனம் கைவந்தோர்க்கு, திரு வடிப்பேறும் கிட்டும்; அவர்க்குச் சித்தியாகிய திருவருள் நிலையும் கைகூடும்; அவர்க்குச் சொல்லிறந்த மறையாகிய சிகரம் கைகூடும். இதனை அசபாமறை என்பர். இத் திறத்தார்க்கு ஐந்தொழிலும் ஆண்டவன் அருளால் செய்தல் கூடும்.

ஊமையாமொழி - பேசாத மந்திரம்; இதனை அசப மந்திரம் என்னும் கூறுப. ஊமை எழுத்து - பிரணவம். ஐங்கரும்- ஐந்தொழில்கள்.

## 1586. முத்திரை மூன்றின் முடிந்தது மூன்றின்பால்

1586. முத்திரை மூன்றின் முடிந்தது மூன்றின்பால்
வைத்த கலைகால் நான்மடங் கான்மாற்றி
உய்த்தவத் தானந்தத் தொண்குரு பாதத்தே
பெத்த மறுத்தோர் பிறந்திற வாரே.

சிவதீக்கையுற்ற நன்னெறிச் செல்வர், பொறியாகிய முத்திரை (622, 1495) மூன்றினாலும் இடப்பால் வலப்பால் நடுநாடி ஆகிய மூன்றினும் செல்லும் உயிர்ப்பினில் வீணாக வெளியாகும். நால் விரல் அளவினை உள்நிறுத்தல் செய்வார். அங்ஙனம் செய்யும்படி பழக்கிய பேரின்பச் சிவகுரு பாதத்தே நிலைபெறுவர். அதனால் அவர் மலப் பிணிப்பு அறும். அவர்கள் பிறந்திறக்கும் பெருந்துன்பப் பெற்றியினின்று நீங்குவர்.

முத்திரை மூன்று - சாம்பவி முதலிய முத்திரை மூன்று. மூன்றின்பால் - இடகலை, பிங்கலை, சுழுமுனைகளில். வைத்த...மாற்றி - பிராணவாயு நாலு விரற்கடை வீணாக வெளிச்செல்லுதலைக் கும்பகத்தால் நிறுத்தி. பொத்த மறுத்தோர் - பெந்தம் என்பது வலிந்து வந்தது. பெந்தம் - பந்தம், பாசம் ஒழிந்துள்ளோர்.

## 1587. மேலைச் சொரூபங்கள் மூன்று மிகுசத்தி

1587. மேலைச் சொரூபங்கள் மூன்று மிகுசத்தி
பாலித்த முத்திரை பற்றும் பரஞானி
ஆலித்த நட்டமே ஞேயம் புகுந்தற்ற
மூலச் சொரூபன் மொழிஞா துருவனே.

முன் ஓதிய காண்பன், காட்சி, காட்சிப்பொருள் என்னும் மூன்றும் திருவருட் பொறிச்சிறப்பால் உள்ளங்கொள்கின்ற சிறந்த மெய்யுணர்வுடையோன் சிவபெருமான் புரிந்தருளும் திருக்கூத்தினைத் திருவருட்கண்ணாற் கண்டு அம் மெய்ப்பொருளின் திருவடியிற் புகுவன், புகுந்த காரணத்தால் பருவுடம்பாகிய மூலப்பகுதியின் காரியங்கள் புடம்போட்ட பொன்போலவும் வேதித்த செம்புபோலவும் ஞானத்தின் திருவுருவாகும். அவனே சிவஞானி. பொறி - முத்திரை.

மேலைச் சொரூபங்கள் - அறிவு, அறிபவன், அறியப்படுபவன். சத்திபாலித்த முத்திரை பற்றும் - சிவசத்தி அருளிய சாம்பவியாதி முத்திரைகளைப் பற்றுகின்ற. ஆலித்த...புகுந்து விரும்பிய நடனத்தின் வழியே ஞேயத்திலே படிந்து. அற்றமூலச் சொரூபன் - மூலப் பிரகிருதி அற்ற சரீரத்தையுடைய ஆன்மா.

## 1588. இறப்பும் பிறப்பும் இருமையும் நீங்கித்

1588. இறப்பும் பிறப்பும் இருமையும் நீங்கித்
துறக்குந் தவங்கண்ட சோதிப் பிரானை
மறப்பில ராய்நித்தம் வாய்மொழி வார்கட்கு
அறப்பதி காட்டும் அமரர் பிரானே.

ஒருவர்க்கு இறப்பும் பிறப்புமாகிய ஆற்றொணாத் துன்பத்து இருதன்மையும் நீங்கி இறைவனுக்கு அடிமையாகிய மெய்யுணர்வு பெறுதலே தமிழகத்துத் துறவும் தவமும் ஆகும். அந் நெறியினை உடங்கியைந்து உணர்த்தியருளியவன் சிவபெருமான் அவன் திருவடியிணையை மறவாதவராய் அவன்பால் பத்தராய் அவனையே பன்னியநூல் தமிழ்மாலையால் பாடுவார்கட்கு அறப்பதியாம் சிவவுலகத்தினைத் தந்தருள்வன், அமரர்பிரானாகிய சிவபெருமான்.

வாய்மொழிவார் - துதிப்பவர். அறப்பதி - முத்தியுலகம்.

## 1589. பிறந்தும் இறந்தும்பல் பேதைமை யாலே

1589. பிறந்தும் இறந்தும்பல் பேதைமை யாலே
மறந்து மலஇருள் நீங்க மறைந்து
சிறந்த சிவனருள் சேர்பரு வத்துத்
துறந்த வுயிர்க்குச் சுடரொளி யாமே.

பலவேறு ஆற்றல்களையுடைய ஆணவமலமாகிய பேதைமையினால் பிறந்தும் இறந்தும் சிவத்தை மறந்தும் அல்லலுறும் ஆருயிர்களின் மலவிருள் நீங்கும்படி உயிர்க்குயிராய் மறைந்து நின்று செவ்வி வருவித்து வெளிப்படுபவன் சிவன். அவ்வாறு வெளிப்படுங்காலத்துச் சிவகுரு எனப்படுவன். சிவகுருவாய் வந்து திருமுறை வழித் தீக்கை செய்து ஆருயர்களை ஆட்கொள்வன். ஆட்கொண்ட காலத்து அவ் வுயிர் சிவத்தைப் பேணும் அகத்துறவெய்தும். அவ் வுயிர் அதனால் அருட்சுடர்ப் பொலிவொடு திகழும்.

பிற...யாலே - பல பிறவிகளின் அனுபவத்தால்.
மறந்...நீங்க - ஆணவமலம் பரிபாகப்பட்டுத் தன் வலி அடங்க. மறைந்து சிறந்த - ஆன்மாவிலேயே மறைந்து இருந்து பின் பரிபாகத்தினால் வெளிப்பட்ட.
சிவ.......பருவத்து - திருவருட்சத்தி பதியும் காலத்தில்.
துறந்த உயிர் - துறவுக்கு உரிய அறங்களைக் கைக்கொண்ட உயிர்.
துறவறங்களாவன : அருள் உடைமை, இனியவை கூறல், அடக்க முடைமை, தவம் உடைமை - செய்யப்படுவன நான்கு.

கூடாவொழுக்கம், அழுக்காறு, வெஃகல், புறங்கூறல், பயனில சொல்லல் - தவிரப்படுவன ஐந்து.
துறவு உடைமை, நிலையாமை உணர்தல், மெய்யுணர்தல் - உணரப்படுவன மூன்று.
அவா அறுத்தல் - வெறுக்கப்படுவது ஒன்று. ஆகப் பதின்மூன்றும் துறவு அறங்களாம்.

# 1590. அறவன் பிறப்பிலி யாரும் இலாதான்

1590. அறவன் பிறப்பிலி யாரும் இலாதான்
உறைவது காட்டகம் உண்பது பிச்சை
துறவனுங் கண்டீர் துறந்தவர் தம்மைப்
பிறவி யறுத்திடும் பித்தன்கண் டீரே.

இல்லற நெறியினிற்பாருடன் இயைந்து அறவன் என்னும் திருப்பெயர் பெறுகின்றான். தான் எல்லார்க்கும் துணைபுரிந்தருள்வதன்றி எவர் துணையும் வேண்டாத தனியன். அவன் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கினமையால் மாயாகாரிய உடம்பெடுப்பதாகிய பிறப்பில்லாதவன். அவன் ஊழிப்புறங் காட்டகத்து உறைபவன். அன்பரிடம் அன்பினையே பிச்சையாக ஏற்று உண்பவனும் அவனே. இந்நிலை பிறர்க்கென வாழும் பெருநிலையாகிய துறவு நிலையாகும். துறவு நிலையென்பது தீநெறிக்கட் செல்லாது நன்னெறிக்கட் செல்வது. இங்ஙனம் துறந்தார்தம் பிறவியை அறுத்திடும் பேரன்பினன் சிவன்; காண்பீராக.

காட்டகம் - உள்ளம். அறவன் - இல்லறவாசிகளுக்காக இல்லறங்களைக் கைக்கொண்டவன். துறவன் - துறவிகளுக்காகத் துறவு அறங்களையும் கைக்கொண்டவன்.

## 1591. நெறியைப் படைத்தான் நெருஞ்சில் படைத்தான்

1591. நெறியைப் படைத்தான் நெருஞ்சில் படைத்தான்
நெறியில் வழுவின் நெருஞ்சில் முட்பாயும்
நெறியில் வழுவா தியங்கவல் லார்க்கு
நெறியின் நெருஞ்சில் முட்பாயகி லாவே.

அன்புநெறியாகிய இல்லறமும் அதன் முதிர்வாம் அருள் நெறியாகிய துறவறமும் இருகால்போல் அகம் புறம் என்று சிறப்பித்துச் சொல்லப்படும் நெறியாகும். அந்நெறியினைப் படைத்தவன் சிவனே. அந்நெறி நில்லாது தீநெறி நிற்பார் துன்புற்று அந் நெறிக்கு வருமாறு செய்ய நெருஞ்சில்போன்ற துன்ப நெறிகளையும் படைத்தளித்தனன். மெய்ந் நெறிக்கண் வழுவாது ஒழுகவல்லார்க்குப் பிறவித்துன்ப முதலிய எத்துன்பங்களும் எய்தா. அத் துன்பங்கள் நெருஞ்சிலாக உருவகப்படுத்தப்பட்டன.

நெறி - வழி. இம் மந்திரம் அறவழியிற் செல்லாதவர்களைத் துன்பம் சுடும் என்பதை உவமான முகத்தால் உணரவைத்தது.

## 1592. கேடுங் கடமையுங் கேட்டுவந் தைவரும்

1592. கேடுங் கடமையுங் கேட்டுவந் தைவரும்
நாடி வளைந்தது நான்கட வேனலேன்
ஆடல் விடையுடை அண்ணல் திருவடி
கூடுந் தவஞ்செய்த கொள்கையன் றானே.

சிவகுருவால் ஆட்கொள்ளப்பட்ட வுயிர், பிறப்பு இறப்புத் துன்பங்களையும் அத் துன்பங்களினின்றும் விடுபடுதற்குரிய சிவ வழிபாடும் அக் குருவால் கேட்டு மகிழ்ந்தது. மகிழவே ஐம்புல ஆசைகள் அகன்றன. அதனால் ஐம்புலக் கள்வர் பற்றிப் பிடித்துச் செய்யும் துன்பங்கட்கு அவ்வுயிர் கடமைப்படாது நீங்கிற்று. அதனால் அத்தகைய வுயிர் வெற்றிப்பாடமைந்த ஆனேற்றையுடைய அண்ணலாகிய சிவபெருமான் திருவடியைக்கூடும். தாவில் தவஞ்செய்யும் தலைமையினை ஆயும்; எய்தும்.

கேடும் - தீயவை இன்ன என்றும், கடமையும் - அறங்கள் இன்ன என்றும், கேட்டு - உபதேசவாயிலாகக் கேட்டு, உவந்து - இன்பம் எய்தி, ஐவரும் நாடி வளைந்தது - ஐம்புல ஆசையால் விளைந்த பயனுக்கு. நான் கடவேன் அலேன் - நான் உட்பட்டவன் அல்லன்.

# 1593. உழவன் உழவுழ வானம் வழங்க

1593. உழவன் உழவுழ வானம் வழங்க
உழவன் உழவினிற் பூத்த குவளை
உழவன் உழத்தியர் கண்ணொக்கும் என்றிட்டு
உழவன் அதனை யுழவொழிந் தானே.

சீலம் நோன்பு செறிவு அறிவு என்னும் நன்னெறி நான்மைப் பயிற்சியாம் உழவாகிய தொண்டினைச் செய்ய வானம் ஆகிய திருவருள் வெளியிலுறையும் சிவபெருமான் அருளாகிய மழையைப் பொழிய, தொண்ட வுழவர் ஆரத்தந்த அவ் வுழவினிற் செவ்விநோக்கி மலரும் குவளையாகிய திருவடியுணர்வு சிவஞானம் பூத்தது. உழவனாகிய மெய்த்தொண்டன், தன்னை விட்டு நீங்காது தன்னுடைய அன்பறிவாற்றல்களுக்கு உடன் துணைசெய்யும் சிவபெருமானின் அன்பு அறிவாற்றல்கள் அத் திருவடி யுணர்வை அருள் நோக்கம் செய்து காத்தளிக்குமென்று அத் திருவருள் பொறுப்பில் ஒப்புவித்து ஒழுக, அவன் செய்யும் திருத்தொண்டும் அருள் தொண்டாய் நிகழ்ந்தது.

உழவன் - சரியையாதி நாற்பாதங்களில் பயிலும் பக்குவன். உழவு - பயிற்சி. வானம் - கருணை மழை. வேளை பூத்தது - வேளை ஒருவகைச் செடி. வேளை என்றால் காலத்துக்கும் ஒரு பெயர். பக்குவ காலத்தில் ஞானம் உண்டாயது என்பது பொருள். உழத்தியர் - அறிவு, இச்சை, செயல்கள்.

## 1594. மேல்துறந் தண்ணல் விளக்கொளி கூற்றுவன்

1594. மேல்துறந் தண்ணல் விளக்கொளி கூற்றுவன்
நாள்துறந் தார்க்கவன் நண்பன் அவாவிலி
கார்துறந் தார்க்கவன் கண்ணுத லாய்நிற்கும்
பார்துறந் தார்க்கே பதஞ்செய லாமே.

தொன்மையிலேயே தொடக்கும் பற்றும் அறவே இல்லாத இயற்கை மயலில்லாத துறவி சிவபெருமான். அவன் மெய்யடியார்கட்கு ஆக்கமும் கேடும் இல்லாத அருட்பெரும் சோதி. அகத்தவமாகிய சிவயோகப் பயிற்சி முறையால் கூற்றுவனை வென்றவர்க்கு உற்ற தோழன்; அவா என்று சொல்லப்படும் பசைமலமும் இல்லாதவன். காரறிவாண்மையாகிய அறியாமையினின்று நீங்கிய ஆருயிர்க்குச் சிவன் கண்ணுதலாகிய உருவத் திருமேனி கொண்டருள்வன். உலகப்பற்று முற்றும் அற்றவர்க்குத் திருவடிப்பேறு எய்தும்.

மேல் துறந்த - இயற்கைத் துறவியாகிய. கூற்றுவன் நாள் துறந்தார்க்கு - யோகத்தால் எமனை வென்றவர்களுக்கு. கார் - அஞ்ஞானம். பார் - உலகப் பற்று.

## 1595. நாகமும் ஒன்று படம்ஐந்து நாலது

1595. நாகமும் ஒன்று படம்ஐந்து நாலது
போகமுட் புற்றிற் பொருந்தி நிறைந்தது
ஆக மிரண்டும் படம்விரித் தாட்டொழிந்
தேகப் படஞ்செய் துடம்பிட மாமே.

ஆருயிர்கட்கு நாகம்போலும் உடம்பு ஒன்று. அதன் ஐந்து படம் போலும் ஐம்பொறிகள். அப் பொறிகள் வழியாக அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நாற்பயன்களையும் உயிர் நுகரும். உளப்புற்றாகிய உடம்பினது அகத்துப் பொருந்தி நிறைந்து நிற்பன் சிவன். நுண்மை முன்மையாகிய உடம்பு இரண்டினுள்ளும் படமாகிய பொறி வழிச் சென்று ஆடும் செயலறப் பாடஞ்செய்தலாகிய தகுதியுண்டாக்கி, அச் சிவபெருமான் அவ் வுடம்பினை இடமாகக் கொண்டருள்வன். நுண்மை - சூக்குமம். முன்மை - காரணம். படஞ்செய்து: பாடம் செய்து என்பதன் குறுக்கம்.

நாகம் - ஆன்மா. படமைந்து - ஐம்பொறிகள். நாலது போகம் - போகம் நான்கு: அறம், பொருள், இன்பம், வீடு. உட்புற்றில் சரீரத்தில். ஆகம் இரண்டு - சூக்குமம், காரணம். இரண்டு சரீரங்களிலும் - படம் விரித்தாட்டொழிந்து பொறிகளில் சென்று உழல்வதை ஒழிந்து. படம் செய்து பக்குவப்படுத்தி. உடம்பிடமாம் - உடம்பிலே நிலைத்திருக்கும்.

## 1596. அகன்றார் வழிமுதல் ஆதிப் பிரானும்

1596. அகன்றார் வழிமுதல் ஆதிப் பிரானும்
இவன்றா னெனநின் றெளியனும் அல்லன்
சிவன்றாள் பலபல சீவனு மாகும்
நயன்றான் வரும்வழி நாமறி யோமே.

அம்மையுடன் கூடிய அப்பனாகிய சிவனும் பற்றற்றார் வழிக்கு முதல்வன் ஆவன். அவன் இன்ன தன்மையன் என்றிசைக்கும் எளியனும் அல்லன். சிவன் தாளாகிய திருவருள் ஆருயிர்கட்கு ஏற்றவாறு பலவாக அமைந்து செவ்வி வருவிக்கும். நயமாகிய திருவடியுணர்வு திருவருளுணர்வா லுணரத்தக்கது. நாம் என்னும் அகச் செருக்கு உள்ளவரையும் அவ் வுயிர் ஆணவ முனைப்புடையது. அம் முனைப்பால் சிவனை உணரமுடியாதென்பதுதான், நாமறியோம் என்பது.

அகன்றார் வழிமுதல் - துறவிகள் பரம்பரைக்கு முதல்வன். சிவன்றாள் - சிவசத்தி. வரும் வழி - அச் சத்தி வரும் வழி நாம் அறியோம் - 'நாம்' என்னும் மமகாரத்தைக் கொண்டு இருக்கிறவரை அறியோம்.

## 1597. தூம்பு திறந்தன ஒன்பது வாய்தலும்

1597. தூம்பு திறந்தன ஒன்பது வாய்தலும்
ஆம்பற் குழலியின் கஞ்சுளிப் பட்டது
வேம்பேறி நோக்கினன் மீகாமன் கூரையிற்
கூம்பேறிக் கோயிலிற் பூக்கின்ற வாறே.

உடம்பகத்துக் காணப்படும் வாயில்கள் இரண்டும் சாளரங்களாகிய ஏழும் கூடித் தொளைகள் ஒன்பது. அத் தொளைகள் ஒன்பதும் திறக்கப்பட்டன. ஆம்பற்பூச் சூடிய கூந்தலையுடைய திருவருளம்மை கஞ்சுகமாகிய சட்டைபோல் அவ் வுடம்பினைக் காப்பள். உயிர்ப்பு முறையால் வேம்பாகிய நடுநாடியின் வழிமேலேறி நோக்கினால், மீகாமனாகிய சிவபெருமான் கூரைக்கூம்பாகிய உச்சித்துளையில் திருக்கோவில் கொண்டருள்வன். அருளவே அருள் பூக்கின்ற முழுமுதற் சிவபெருமானின் விழுச்சுடர் வெளிப்படும். கூம்பு - பாய்மரம்.

தூம்பு - தொளை. ஆம்பல் குழலி - தேவி, சத்தி. கஞ்சுளி சட்டை வேம்பேறி - வீணாத்தண்டு ஏறி. மீகாமன் - சீவன். கூரையின் கூம்பு - முகட்டின் உச்சி. பூக்கின்ற - ஒளிவிடுகின்ற.

## 1598. ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம்

1598. ஒடுங்கி நிலைபெற்ற உத்தமர் உள்ளம்
நடுங்குவ தில்லை நமனுமங் கில்லை
இடும்பையும் இல்லை இராப்பகல் இல்லை
படும்பயன் இல்லை பற்றுவிட் டோர்க்கே.

புலன்களை நிலைபெறவேண்டிய சிவபெருமான் திருவடியின்கண் ஒடுக்குவார் நன்மையே செய்வர். அதனால் அவர்கள் தலைசிறந்தவராவர். அவர்களுள்ளம் எஞ்ஞான்றும் நடுக்கம் உறாது. அவர்கள் தேனாரும் சிவவாழ்க்கை வாழ்வதால் அவர்கட்குப் பிறப்பு இறப்புத் துன்பம் எய்தா. அதனால் அவர்களுக்கு நமனும் இல்லை. வேறு எவ்வகை உலகியல் துன்பமும் இல்லை. சிவனின் நினைப்பு மறப்பாகிய பகல் இரவுகளில்லை. அடைதற்குரிய வழிப்பயன்களும் இல்லை. அவர்களே பற்றற்றான் பற்றினைப் பற்றி ஏனைப் பற்றுக்களை அறுத்தவராவர்.

ஒடுங்குநிலை - புலன்வழிச் செல்லா நிலை.

## 1599. எம்மா ருயிரும் இருநிலத் தோற்றமுஞ்

1599. எம்மா ருயிரும் இருநிலத் தோற்றமுஞ்
செம்மா தவத்தின் செயலின் பெருமையும்
அம்மான் திருவருள் பெற்றவ ரல்லால்
இம்மா தவத்தின் இயல்பறி யாரே.

மலத்தேய்வின் பொருட்டு ஆருயிர்களை மாயாகாரியமாகிய உடலுடன் கூட்டுவதாகிய உயிர்த்தோற்றமும், அவ் வுயிருடன் கூடிய உடல் நிலைத்திருப்பதற்கு வேண்டிய உலகமும் உலகியற் பொருள்களுமாகிய பெருநிலத் தோற்றமும், திருவடியைச் சேர்தற் பொருட்டுச் செய்யப்படும் நன்னெறி நான்மைத் தவத்தின் பெருமையும் சிவபெருமான் திருவருள் பெற்ற செந்நெறிச் செல்வர்களுக்கே தெரிய வரும். ஏனையார்க்குத் தெரியவாரா. இவ் வுண்மைகளை உள்ளவாறு உயர்வதும் ஒருபெரும் தவமாகும்.

## 1600. பிறப்பறி யார்பல பிச்சைசெய் மாந்தர்

1600. பிறப்பறி யார்பல பிச்சைசெய் மாந்தர்
சிறப்பொடு வேண்டிய செல்வம் பெறுவர்
மறப்பில ராகிய மாதவஞ் செய்வார்
பிறப்பினை நீக்கும் பெருமைபெற் றாரே.

உயிருய்யுமாறு உயிர்க்குயிராகிய உடையவனால் தரப்பட்ட உடலுக்கும் உழையாது பிச்சை எடுத்துண்ணும் பலர், பிறப்பு இறப்புக்களால் ஏற்படும் பெருந் துன்பத்தினை யறியார். சிவபெருமான் திருவடியை மறவாமையே பெருந்தவம். அப் பெருந்தவம் செய்தார், சிறப்பாகிய வீடுபேற்றுடன் வேண்டிய இம்மை மறுமைச் செல்வங்களும் பெறுவர். அவர்களே பிறப்பினையறுக்கும் சிவபுண்ணியப் பெருமை பெற்றவராவர். பிச்சை - தவவுணவு.

பிச்சைசெய் மாந்தர் - தவசிகள். மறப்பிலராகி - நினைப்பு மறப்பு இல்லாதவராகி.

## 1601. பள்ள முதுநீர் பழகிய மீனினம்

1601. பள்ள முதுநீர் பழகிய மீனினம்
வெள்ளம் புதியவை காண விருப்புறும்
கள்ளவர் கோதையர் காமனோ டாடினும்
உள்ளம் பிரியா ஒருவனைக் காணுமே.

மீனினங்கள் பள்ளத்தின் தங்கிக் கிடக்கும் பழைமையான தண்ணீரினை நுகர்ந்துகொண்டிருந்தாலும், புதுவெள்ளம் எப்பொழுது வரும் என்றே நினைந்துகொண்டிருக்கும். அதுபோல் ஆருயிர் அனைத்தும் ஆண்டவன் திருவடியைப் பேணுதலே நற்றவமாதலின் அம் முறையில் பெண் என்று அழைக்கப்படும். இது 'சிவத்தைப்பேணில் தவத்திற்கு அழகு' என்னும் கொன்றைவேந்தனால் (28) உணரலாம். ஆதலின் மணங்கமழ்கின்ற பூச்சூடிய இறைவனைப் பேணும் பெண்ணாகிய வுயிர், நிலையாப் பொருள்களை வினைக்கீடாக நுகர்ந்துகொண்டிருப்பினும் சிவனை உள்ளம் தழுவுதலால் என்றும் பிரியா ஒருவனாம் சிவனைக் கண்டு கொண்டின்புறும்.

கள்....காணுமே - தவசிகள் உலக அனுபவங்களில் அழுந்தி நின்றாலும் உள்ளம் சிவனைவிட்டு அகலாது.

## 1602. கரந்துங் கரந்திலன்கண்ணுக்குந் தோன்றான்

1602. கரந்துங் கரந்திலன்கண்ணுக்குந் தோன்றான்
பரந்த சடையன் பசும்பொன் நிறத்தன்.
அருந்தவர்க் கல்லால் அணுகலு மாகான்
விரைந்து தொழப்படும் வெண்மதி யானே.

பற்றுடையவர்களுடன் பற்றற்ற சிவனும் விரவிப் பாலில் நெய்போல் மறைந்து நிற்கின்றனன். அங்ஙனம் நிற்பினும், பற்றற்ற மெய்யடியார்கட்கு வெளிப்பட்டுத் தோன்றியருள்வன். அவனே பொன் போலும் விரிந்த பின்னல் திருச்சடையினையுடையவன். அவன் பொன் போலும் மேனியன். திருவருள் துணையால் அருந்தவம் ஆற்றிய செந்தமிழ்ச் சிவனார்முன் விளங்கி நிற்பன். செந்தமிழ்ச் சிவனார் - மெய்யடியார். அத்தகு மெய்த்தவத்தோரே அச் சிவனாரின் இயற்கை உண்மை அறிவின்ப நிலையினை உணர்வர். ஆகையால் வாலறிவனாகிய வெண்மதியினைக் காலமுண்டாகவே காதல் செய்து உய்தலும், வேண்டினுண்டாகத் துறத்தலும்போன்று விரைந்து தொழுதல் வேண்டும்.

## 1603. அமைச்சரும் ஆனைக் குழாமும் அரசும்

1603. அமைச்சரும் ஆனைக் குழாமும் அரசும்
பகைத்தெழும் பூசலுட் பட்டார் நடுவே
அமைத்ததோர் ஞானமும் ஆத்தமும் நோக்கி
இமைத்தழி யாதிருந் தார்தவத் தாரே.

சூழ்ச்சிமிக்க அமைச்சரும், பெருமைமிக்க யானைக் கூட்டங்களும் ஆற்றல்மிக்க அரசரும் பகைத்தெழுந்து செய்த பெரும் போரில் இருதிறத்தாரும் எண்ணிறந்தாராய் மாண்டனர் அப் போர்நடுவே நின்று காண்பார்க்கு நிலையாமை உணர்ச்சியும், திருவடியுணர்வும், சிவப்பேற்றின்கண் ஆத்தமாகிய நேயமும் இயல்பாக வுண்டாகும். அந் நோக்கல் நோக்காகிய கருத்தினை மறந்து அழியாதிருந்தார் இறவாத நற்றவம் செய்தோராவர்.

இம் மந்திரம் பெரிய வல்லரசுகளும் பகைத்தெழுந்து, சண்டையுட்பட்டு, மாண்டு ஒழிவதைக் கண்டு அச் சமயத்தில் ஏற்படும் ஞானத்தால் அறிவுடையோர் தவத்தை மேற்கொள்வர் என்றது. அத்தம் என்பது ஆத்தம் என்று ஆயிற்று. அத்தம் - சமயம்.

## 1604. சாத்திரம் ஓதுஞ் சதுர்களை விட்டுநீர்

1604. சாத்திரம் ஓதுஞ் சதுர்களை விட்டுநீர்
மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்குமின்
பார்த்தவப் பார்வை பசுமரத் தாணிபோல்
ஆர்த்த பிறவி அகலவிட் டோடுமே.

உண்மை நாட்டமின்றிப் பொருள் கருதி நூல்களைப் படித்துப் பிதற்றித் திரியும் பொய்ப் பெருமைகளை விட்டகன்று நீங்கள் மாத்திரையாகிய ஒரு நொடிப்பொழுதேனும் உயிர் உணர்வு வெளிமுகப்படாது. அகமுகப்பட்டுச் சிவனை அவனருளால் நோக்குங்கள். அங்ஙனம் நோக்கினால், அப் பார்வையுணர்வு பசுமரத்தாணிபோல் உயிரின்கண் பதிந்து விளங்கும். அவ் விளக்கத்தால் தொன்றுதொட்டுப் பிணித்துவரும் பிறவி நீங்கியோடும்.

சதுர் - பெருமை. மாத்திரைப்போது - இமைகொட்டும் நேரம். மறித்து - வெளிமுகமாய் இருக்கும் அறிவைத் தடுத்து. ஆர்த்த - பந்தித்த.

## 1605. தவம்வேண்டு ஞானந் தலைபட வேண்டில்

1605. தவம்வேண்டு ஞானந் தலைபட வேண்டில்
தவம்வேண்டா ஞான சமாதிகை கூடில்
தவம்வேண்டா மச்ச கசமார்க்கத் தோர்க்குத்
தவம்வேண்டா மாற்றந் தனையறி யாரே.

ஒருவர்க்குத் திருவடியுணர்வு வேண்டப்படுமானால் அதற்குச் சீலம் நோன்புகளாகிய புறத்தவப் பயிற்சிகள் இடையறாது வேண்டப்படும். ஞான சமாதியாகிய திருவடியுணர்வில் நிலைத்து நிற்போருக்கு முற்ற முடிந்த மேல்வகுப்புக்குச் செல்வார் நிலைபோன்று வேறு தவங்கள் வேண்டப்படுவன அல்ல. அதுபோலவே செறிவு அறிவு ஆகிய இருநிலையின நிற்பார் முறையே அகத்தவமும் அறிவுத்தவமும் உடையராவர். அவர்கட்கும் ஏனைத்தவங்கள் வேண்டா. பிறர் இப்பொருள் மொழியுண்மையினை யறியார்.

சகசன்மார்க்கத்தோர்க்கு - சகமார்க்கத்தோர்; சன்மார்க்கத்தோர்; அஃதாவது யோகஞான நெறியில் நிற்பவர். மாற்றம் - தடுமாற்றம்.

## 1606. ஓதலும் வேண்டாம் உயிர்க்குயி ருள்ளுற்றாற்

1606. ஓதலும் வேண்டாம் உயிர்க்குயி ருள்ளுற்றாற்
காதலும் வேண்டாமெய்க் காய மிடங்கண்டாற்
சாதலும் வேண்டாஞ் சமாதிகை கூடினாற்
போதலும் வேண்டாம் புலன்வழி போகார்க்கே.

உயிருக்கு உயிராகிய சிவபெருமான் அவ் வுயிரினிடமாக வெளிப்பட்டு விளங்கினால், பாடம் கைவரப்பெற்றோர்க்கு அப் பாடம் மீண்டும் படிக்க வேண்டாமை போலச் சிவனை அடைதற்காக ஓதும் ஓதல் முயற்சிகள் வேண்டாம் என்பதே ஓதுதலும் வேண்டாம் என்பது. மெய்யாகிய உடம்பின்கண் சிவபெருமான் உள்ளம் பெருங்கோவிலாகக் கொள்வோனாதலின் அதனைக் கோவிலாகக் கொண்டருளின பின்பு அதன்பொருட்டுச் செய்த தனிப்பெருங் காதலாகிய பத்தி முயற்சியும் வேண்டாம். இஃது அடிப்படை போட்டுக் கட்டிய வளமனையாகிய வீட்டிற்குப் பின் அடிப்படை முயற்சி வேண்டாமையை ஒக்கும். வேண்டாமை என்பது குறிப்பாக முற்றுப்பெற்றமையைப் புலப்படுத்தும். தான் அவனாதல் என்னும் சமாதி கைகூடினால் அழுந்தும் முயற்சியாகிய சாதலும் வேண்டாம். திருவருள் வலத்தால் தம்மை ஐந்துபுலனும் பின்செல்லும்படியாக ஒழுகும் ஒழுக்கத்தினார்க்கு இடம்பெயர்ந்து தவத்திற்குச் செல்லும் முயற்சிகள் வேண்டா.

உயிர்க்குயிர் - சிவன். மெய்க்காயமிடங் கண்டால் - உடம்பினுள் உத்தமன் கோவில்கொண்டால். போதல் - தவமியற்ற வனம் முதலிய இடங்களுக்குப் போதல்.

## 1607. கத்தவும் வேண்டாங் கருத்தறிந் தாறினாற்

1607. கத்தவும் வேண்டாங் கருத்தறிந் தாறினாற்
சத்தமும் வேண்டாஞ் சமாதிகை கூடினாற்
சுத்தமும் வேண்டாந் துடக்கற்று நிற்றலாற்
சித்தமும் வேண்டாஞ் செயலற் றிருக்கிலே.

மெய்ந்நூற் பொருள்களின் உண்மைக் கருத்தறிந்து அடங்கினால், வெளிப்படையாக அச் சொற்றொடர்களை எடுத்தும் படுத்தும் கத்துதலாகிய முயற்சிகள் வேண்டா. சமாதி கைகூடினால் வேதம் ஓதுதலாகிய சத்தமும் வேண்டா. ஆணவத் தொடக்கற்றவர்க்கு வேறு துப்புரவுகள் வேண்டா. உயிர்ச் செயலற்று உடையான் செயலாக இருப்பின் ஒன்றைத் தூக்கி நாடுதலாகிய சித்தமும் வேண்டா.

கருத்தறிந்து - உண்மைப் பொருளை அறிந்து. ஆறினால் - அடங்கினால். சத்தமும் - மந்திர உச்சாடனமும் ஆரவார பூசையும். தொடக்கு - பற்று.

## 1608. விளைவறி வார்பண்டை மெய்த்தவஞ் செய்வார்

1608. விளைவறி வார்பண்டை மெய்த்தவஞ் செய்வார்
விளைவறி வார்பண்டை மெய்யுரை செய்வார்
விளைவறி வார்பண்டை மெய்யறஞ் செய்வார்
விளைவறி வார்விண்ணின் மண்ணின்மிக் காரே.

உடம்பெடுத்தபயன் உடம்பினுள் உடையானைக் கண்டு வழிபடுதல். இவ் வுண்மையினை யுணர்ந்தார் நன்னெறி நான்மைத்தவம் புரிவராவர். அதுபோல் மெய்யுரையாகிய குருமொழிகொள்வார் உடம்பின் பயன் உணர்ந்தோராவர். மெய்யறமாகிய சிவபுண்ணியஞ் செய்வாரும் உண்மை உணர்ந்தோரே. இவ் வுண்மையுணர்ந்தோர் விண்ணிலும் மண்ணிலும் வாழ்வார் அனைவரினும் மிக்கோராவர்.

விளைவு - உடம்பினால் ஆம் பயன்.

## 1609. கூடித் தவஞ்செய்து கண்டேன் குரைகழல்

1609. கூடித் தவஞ்செய்து கண்டேன் குரைகழல்
தேடித் தவஞ்செய்து கண்டேன் சிவகதி
வாடித் தவஞ்செய்வ தேதவம் இவைகளைந்
தூடிற் பலவுல கோரெத் தவரே.

திருவருளோடு கூடிச் சிவத்தைப் பேணுவதாகிய தவத்தைச் செய்து அவன் திருவடியைக் கண்டுகொண்டேன். அத் தவ வழியே சென்று சிவ நிலையையும் கண்டேன். முன்னாக அவ் வுண்மை உணர்ந்தவர் உடல் வருந்தும்படியாகத் தவஞ்செய்யார். ஐம்புலன்களையும் வென்றவர் பலவுலகப் பண்பினராவர். வெல்லாது ஊடி நிற்பவர் ஒரு தவமும் உடையவராகார்.

கூடி - மனம் ஒருமைப்பட்டு. வாடி - உடலை விரதங்களால் வாட்டி. இவை களைந்து ஊடில் - இவ்வாறு தவம் செய்வதை விட்டு மாறுபடில். உலகோர் எத் தவரே - உலகினர் எவ்வகைத் தவமும் உடையராகார்.

## 1610. மனத்துறை மாகடல் ஏழுங்கை நீத்தித்

1610. மனத்துறை மாகடல் ஏழுங்கை நீத்தித்
தவத்திடை யாளர்தஞ் சார்வத்து வந்தார்
பவத்திடை யாளர் அவர்பணி கேட்கின்
முகத்திடை நந்தியை முந்தலு மாமே.

மனத்துக்கு மேலுள்ள இறுப்புமெய் யென்னும் புத்தி தத்துவத்தின்கண் தங்கிக் கிடக்கின்ற கடல்போலும் எல்லையில்லாத எழுவகைப் பிறப்பிற்குங் காரணமாகிய எஞ்சுவினைகளைச் சிவகுருவின் வழித் திருவைந்தெழுத்துக் கணிக்குமுறையில் நீந்தி நற்றவஞ்செய்யும் நல்லாராகிய சிவஞானிகளுடன் இணங்கி அவர்வழி நிற்பார்க்குப் பிறப்பில்லை. அதனால் அவர் பிறப்பினை எய்தார். அந் நல்லார்தம் பணியினைக் கேட்டுத் தொண்டு புரியின், நந்தியாகிய சிவபெருமானை நேராகக் கண்டு அவன் தாளிணைக்கு முந்துதலுமாகும். முகம் - நேர்.

மனத்துறை - மனத்தின் பகுதியாகிய நெஞ்சத்திடத்தே பதிந்துள்ள. மாகடல் ஏழுங் கைநீந்தி - சமுத்திரம்போலும் எழுவகைப் பிறவிகளுக்கும் காரணமான விதைகளை நீக்கி. சார்வத்து - கூட்டத்தில். பவத்திடையாகார் - பிறவியில் சேரார். முகத்திடை - நேராக.

## 1611. மனத்திடை நின்ற மதிவாள் உருவி

1611. மனத்திடை நின்ற மதிவாள் உருவி
இனத்திடை நீக்கி இரண்டற வீர்த்துப்
புனத்திடை அஞ்சும்போ காமல் மறித்தால்
தவத்திடை யாறொளி தன்னொளி யாமே.

மனமாகிய உறையினின்றும் மதியாகிய வாளினை (சிவய நம) எடுத்துச் செருக்குச் சினம் சிறுமை, இவறல், மாண்பிறந்த மானம், மாணா வுவகை ஆகிய ஆறு கோடி மாயா சத்திகளென்னும்
பகைவர்களை வென்று நீக்கி உயிரையும் உடையானையும் நான் அவன் என்று இரண்டாக வேறுபட எண்ணாமல், அவ் வெண்ணத்தை அவ்வாளினால் ஈர்த்து, உலகமாகிய விளைநிலத்தில் மெய், வாய், கண், மூக்குச் செவி யென்னும் ஐம்பொறிகளையும் புகலொட்டாமல், சிவனடிப்பேறாகிய வானோர்க்கும் உயர்ந்த மேனிலத்தில் போமாறு செலுத்தினால் நால்வகைத் தவத்தினும் முடிந்த தவமாகிய அறிவில் அறிவாகிய தவத்தால் பெறப்படும் சிவவொளியின்கண் தன்ஒளி அடங்கி ஆவியும் தன் ஒளியைக் கண்டு இன்புறும். அறிவுள் அறிவு - ஞானத்தில் ஞானம்.

மதிவாள் - அறிவாகிய வாள். இனத்திடை நீக்கி - காமம் முதலிய பகைவர் அறுவரினின்றும் விலக்கி. இரண்டற ஈர்த்து - தான், நான் (சிவன் - சீவன்) என்ற பாவனை ஒழிந்து சிவோகம் பாவனை செய்து. புன.....மறித்தால் -

ஐம்பொறிகளும் புலன்களின் வழிச் செல்லாமல் தடுத்தால். தவ.....யாமே - தவத்தினால் பெறும் ஒளியாகிய சீவ ஒளியைப் பெறலாகும்.

## 1612. ஒத்து மிகவுநின் றானை யுரைப்பது

1612. ஒத்து மிகவுநின் றானை யுரைப்பது
பத்தி கொடுக்கும் பணிந்தடி யார்தொழ
முத்தி கொடுக்கும் முனிவ னெனும்பதஞ்
சத்தான செய்வது தான்தவந் தானே.

சிவன் ஆருயிர்களுடன் வேறறக் கலந்து நின்று எஞ்ஞான்றும் இயங்கி அருள்கின்றனன். அவன் திருப்பெயராகிய 'சிவய நம' என்னும் திருவைந்தெழுத்தைப் பொருளுணரப் புகழ்ந்து ஓதுவதும், பத்தியினை முறுகுவிக்கும் மெய்யடியார்களைப் பணிந்து தொழுவதும் செய்யும் பெற்றியர்க்கும் வீடுபேற்றினை அளித்தருளும் சிவபெருமானாகிய முனிவரன் வெளிப்பட்டருள்வன். மேலும் தன் திருவடிப்பேறென்னும் சிவமெய்யினைத் தந்தருள்வன். அதுவே நற்றவத்தின் பயனாம்.

ஒத்து - சீவனோடு ஒத்து. உரைப்பது - துதிப்பது. முத்தி....தவந்தானே - முத்தியைப் பயக்கும் நன்மை தீமைகளை முனிந்த நிலையாகிய சிவத்தன்மையகைக் கொடுப்பதும் தவமே.

## 1613. இலைதொட்டுப் பூப்பறித் தெந்தைக்கென் றெண்ணி

1613. இலைதொட்டுப் பூப்பறித் தெந்தைக்கென் றெண்ணி
மலர்தொட்டுக் கொண்டேன் வரும்புனல் காணேன்
தலைதொட்ட நூல்கண்டு தாழ்ந்ததென் உள்ளந்
தலைதொட்டுக் கண்டேன் தவங்கண்ட வாறே.

சிலர் புறப்பூசையினை அயன்மொழியால் ஆற்றுகின்றனர். அவர்கள் உடல், செயல் செய்தாலும் உள்ளம் மொழிப் பொருள் தெரியாமையால் அதன்கண் தங்குவதில்லை. அதனால் செய்யுங்கால் சிவனுக்கு எண்ணி இலையிட்டும் பூச்சாத்தியும் வழிபட்டுக் கொண்டு வந்தாலும் கண்களில் இன்பநீர் பெருகக் காண்கிலம். திருமறையும் திருமுறையும் ஆகிய செந்தமிழ் வேத ஆகமங்களைத் தலைசிறந்த மெய்ந்நூலாகக்கொண்டு திருவைந்தெழுத்தை மந்திரமாகவும் திருப்பாடல்களை வழிபாட்டிற் செய்யும் செய்திறன் விளக்கும் தந்திரமாகவும்
கொண்டு பொருளுணர்ந்து வழிபட்டால் வழிபடுவார் உள்ளம் அதன்கண் தங்கும். அதனால் இன்பக்கண்ணீர் பெருகும். அம்முறையில் அத் தமிழ் நூல்களின்வழி வழிபாடு செய்து கண்ணீரையும் கண்டேன். அதுவே நற்றவம் எனவும் கொண்டேன். எண்ணுதிரு ஐந்தெழுத்தே யாவுக்கும் மந்திரமாம், பண்ணுசெயல் தந்திரமாம் பாட்டு மந்திரம் - மறை. தந்திரம் - முறை. மேலும் வரும் வெண்பாவாலும் அது வலியுறும்:
"வேண்டுமருந் துண்டார்பால் மெய்நோய்கள் நீங்குமால்
நீண்டகண் கேள்வியால் நீங்காவாம் - பூண்டமொழிச்

சொற்பொருள்கள் ஓர்ந்தார்பால் தோயுமால் தோயாவாம்
பற்பலர்பால் அன்பின்பப் பண்பு."

இலைதொட்டு - பத்திரங்கிள்ளி (சிவபூசைக்குரிய செயல்). வரும் புனல் கண்டேன் - கண்களில் ஆனந்த நீர் வரக்கண்டேன். தலை தொட்ட நூல் - ஞான நூல். தாழ்ந்தது - அடங்கிற்று. தலைதொட்டு - அதுமுதல்.

## 1614. படர்சடை மாதவம் பற்றிய பத்தர்க்கு

1614. படர்சடை மாதவம் பற்றிய பத்தர்க்கு
இடரடை யாவண்ணம் ஈசன் அருளும்
இடரடை செய்தவர் மெய்த்தவ நோக்கில்
உடரடை செய்வ தொருமனத் தாமே.

படர்ந்த சடையினையுடையராய் முழுமுதற் சிவனையே வேண்டிப் புரியும் அழிவில்லாத பெருந்தவம் இன்பமெனக் கொண்டு இடையறாது செய்த உண்மைப் பத்தர்கட்குப் பிறப்பு முதலிய துன்பங்கள் ஏதும் அணுகாவண்ணம் சிவபெருமான் காத்து அருளிச் செய்வன். இன்னாமை இன்பம் எனக்கொண்டு ஒழுகுவார் தவமும் மெய்த்தவமாகும். அத் தவத்தினை நோக்கில் உடம்பு அடையாமல் தடுப்பதற்கு வழி ஒருமனப்பட்டுச் சிவனை இடையறாது நினைவதேயாம்.

பத்திய பத்தர் - அருளுடைமை முதலிய பதின்மூன்று (1589) துறவு அறங்களைக் கைக்கொண்ட தவத்தர். இடர் அடை செய்தவர் - துன்பத்தை இன்பமாகக் கருதுபவர். உடர் அடை செய்வது - உடர் - உடல்; (ரகரம் போலி) பிறவியைத் தடுப்பது. ஒருமனம் - ஒருமைப்பட்ட மனம்.

## 1615. ஆற்றிற் கிடந்த முதலைகண் டஞ்சிப்போய்

1615. ஆற்றிற் கிடந்த முதலைகண் டஞ்சிப்போய்
ஈற்றுக் கரடிக் கெதிர்ப்பட்ட தன்னொக்கும்
நோற்றுத் தவஞ்செய்யார் நூலறி யாதவர்
சோற்றுக்கு நின்று சுழல்கின்ற வாறே.

திருமறை, திருமுறைகளாகிய செந்தமிழ் அருள் நூல்களை - வேதாகமங்களை அருட்கண்கொண்டு கற்றுணராதார் நோன்பிருந்து தவம் செய்யமாட்டார். தவத்திற்கு அஞ்சிப் பிறப்பு இறப்பின் பெருந் துன்பத்திற்கு அஞ்சாது பிறந்து சோற்றுக்கு நின்று அலைகின்றவர்களுடைய நிலை, ஆற்றிற் கிடக்கின்ற முதலைத் துன்பத்திற்கு அஞ்சிக் காட்டில் வாழும்ஈன்றணிய குட்டிகளையுடைய கரடியின் வாயில்பட்ட முறையையொக்கும்.

ஈற்றுக்கரடி - குட்டிபோட்ட கரடி ஈன்ற என்பது விரிந்து வந்தது; குட்டிகளுடன் உள்ள கரடி மிகக் கொடுமையானதாய் இருக்கும்.

## 1616. பழக்கின்ற வாறும் பழமுண்ணு மாறுங்

1616. பழக்கின்ற வாறும் பழமுண்ணு மாறுங்
குழக்கன்று துள்ளியக் கோணியைப் பல்காற்
குழக்கன்று கொட்டிலிற் கட்டவல் லார்க்குள்
இழுக்காது நெஞ்சத் திடவொன்று மாமே.

நற்றவம் முதிர்ச்சியடையுமாறும், அத் தவத்தின் பயனை நுகருமாறும், இளங்கன்றொத்துத் துள்ளித் திரிகின்ற நெஞ்சினைப் பலமுறை அடக்கும் வன்மையுடையார் இனிமேற் கோணியாகிய உடம்பினுள் புகுந்தன்மையையும் உணரவல்லாராவர். அவர்க்கு மெய்ம்மை தோன்றும். இளங்கன்றாகிய பசுவின்மனத்தை யடக்கவல்லார்க்கு நெஞ்சத்திடம் உண்டாகும்; பிறப்பும் நேராது.

பழக்கின்றவாறும் - தவத்தின் முதிர்ச்சியடையும் விதமும். பழம் - தவத்தின் பயன். குழக்கன்று - பிராணவாயு. கோணி - சரீரம். கொட்டில் - புருவமத்தி. இழுக்காது - தவறாது. நெஞ்சத்திட - ஈசனை நெஞ்சில் இருத்த. ஒன்றும் - கூடும்.

## 1617. சித்தஞ் சிவமாகச் செய்தவம் வேண்டாவால்

1617. சித்தஞ் சிவமாகச் செய்தவம் வேண்டாவால்
சித்தஞ் சிவானந்தஞ் சேர்ந்தோர் உறவுண்டால்
சித்தஞ் சிவமாக வேசித்தி முத்தியாஞ்
சித்தஞ் சிவமாதல் செய்தவப் பேறே.

இடையறாது செந்தமிழ்த் திருமறையாம் 'சிவசிவ' என்னும் தனிப்பெரு மந்திரத்தை ஓதிக்கொண்டு வருவார் நெஞ்சம் சிவனுறையும் இயற்கைத் திருக்கோவிலாகும். அவ்வாறு செய்பவர் வேறு எத்தவமும் செய்யவேண்டுவதின்று. அத்தகையோர் சித்தமாகிய நெஞ்சத்திடத்துச் சிவனடிப் பேரின்பமே நிலைபெறும். அதனால் அவர் வலிந்து ஆட்கொள்ளப்படும் சிவமாகிய தேவராவர். அவருடைய நல்லுறவும் வாய்க்கும். சித்தம் சிவமாம் பெருவாழ்வும் எய்தும். அஃது எய்தவே சித்திமுத்தி என்று சொல்லப்படும் அன்பியல் வாழ்க்கை, அருளியல் வாழ்க்கை, இன்பியல் வாழ்க்கை மூன்றும் எய்தும். சித்தம் சிவமாதலே செய்தவப்பேறு. இதுவே தாடலைபோற்றாழும் தவமார் தனிப்பெருங், கூடலை வாழ்வாகுமாற்கூறு. கூடல் + ஐ = தலைவன் வந்து கூடல்.

செய்தவம் வேண்டாவாம் - செய்த அவம் வேண்டாவாம் எனப் பிரிக்க. மறச் செயல்களை நீக்கவேண்டும். உறவுண்டால் - சிவ ஞானிகள் இணக்கம் இருந்தால்.

## 1618. பிரானருள் உண்டெனில் உண்டுநற் செல்வம்

1618. பிரானருள் உண்டெனில் உண்டுநற் செல்வம்
பிரானருள் உண்டெனில் உண்டுநன் ஞானம்
பிரானரு ளிற்பெருந் தன்மையும் உண்டு
பிரானரு ளிற்பெருந் தெய்வமு மாமே.

சிவபெருமானின் திருவருள் உண்டானால் செல்வன் கழலேத்தும் செல்வம் உண்டாகும். அதுபோல் திருவடியுணர்வும் உண்டாகும். அத் திருவருளால் அறிவினுள் அறிவாம் பேராப் பெருநிலையும் உண்டாகும். அதுபோல் சிவமாம் பெருவாழ்வும் எய்தும்.

## 1619. தமிழ்மண் டலம்ஐந்துந் தாவிய ஞானம்

1619. தமிழ்மண் டலம்ஐந்துந் தாவிய ஞானம்
உமிழ்வது போல உலகந் திரிவார்
அவிழு மனமும்எம் ஆதி யறிவுந்
தமிழ்மண் டலம்ஐந்துந் தத்துவ மாமே.

'சிவயசிவ' என்னும் தமிழ் மண்டலம் ஐந்தினும் பரவி நிற்கும் அறிவு, அருள், அடிமை, இன்பு, அன்பு என்னும் ஐந்தினையும் சித்தாந்த சைவராகிய சித்தர்கள் உலகம் எங்கணும் வலியச் சென்று செவ்விவாய்ந்தார்க்கு அறிவுறுத்துவர். அத்தகைய நல்லோர் மலர்ந்த மனமும், திருவடியுணர்வும் மேலோதிய தமிழ் மண்டலம் ஐந்தும் தமிழகத் தொன்மைச் செம்பொருட் டுணிவின் மாறா மெய்ம்மையாம் என்க.

தமிழ்....திரிவார் - மண்டலம் ஐந்தும் தமிழ் தாவிய ஞானத்தை உமிழ்வதுபோல உலகந்திரிவார் என வாசிக்க. தமிழ் தாவிய ஞானம் - தமிழ் வேதாகமங்களில் கூறப்பட்ட ஞானம். மண்டலம் ஐந்து - மண் தலம் ஐந்து; அஃதாவது பூமி அண்டத்திலுள்ள ஐந்து கண்டங்களும். உமிழ்வதுபோல உலகந்திரிவர் - சித்தர்கள் ஐந்து கண்டங்களிலும் சஞ்சரித்துத் தமிழ்த் தத்துவ அறிவைப் பக்குவர்களுக்கு உபதேசிப்பார். அவிழுமனம் - அன்பால் உருகிய மனம். திருமூலர் காலம் B. C. 6000 முதல் B. C. 100; ஆனதால், அக் காலத்தில் தமிழர்கள் ஐந்து கண்டங்களிலும் குடி ஏறி இருந்தார்கள். ஆண்டு எல்லாம் தமிழ் மொழியும், சைவ சமயமும் சிவலிங்க வழிபாடும்

பரவி இருந்தன. இஃது அவ்வக் கண்டங்களில் இப்போது அகப்படும். சிவலிங்கங்களாலும் கல்வெட்டுகளாலும் தமிழ்த் திரிபான மொழியைப் பேசும் மனிதர்கள் அவ்வக் கண்டங்களில் வசித்தலாலும் உறுதி பெறுகின்றது.
(2)

## 1620. புண்ணிய பாவம் இரண்டுள பூமியில்

1620. புண்ணிய பாவம் இரண்டுள பூமியில்
நண்ணும் பொழுதறி வார்சிவ ஞானிகள்
எண்ணி இரண்டையும் வேரறுத் தப்புறத்து
அண்ணல் இருப்பிடம் ஆய்ந்துகொள் வீரே.

திருவடியுணர்வு மறவா நல்லோராகிய சிவஞானிகள் நிலவுலகில் தோன்றும்பொழுது புண்ணிய பாவமாகிய இருவினைகளையும் அறிவர். அத்தகைய நல்லோர் நற்றுணையால் பிறப்புக்கு வித்தா புண்ணிய பாவ மிரண்டனையும் வேரறுத்து, முப்பத்தாறு மெய்யும் கடந்து அப்பாலுள்ள அருள்வெளியே செப்பமுற விளங்கும் அண்ணலாகிய சிவபெருமான் இடம். அதுவே நாம் அடைய வேண்டிய நல்லிடம் என்று உணர்ந்துகொள்வீர்.

இம் மந்திரம் புண்ணியத்தையும் பாவத்தையும் இரண்டையும் ஒழிக்கவேண்டு மென்றது. அஃதாவது இரண்டிலும் பற்றற இருக்கும் நிலை.

## 1621. முன்னின் றருளு முடிகின்ற காலத்து

1621. முன்னின் றருளு முடிகின்ற காலத்து
நன்னின் றுலகில் நடுவுயி ராய்நிற்கும்
பின்னின் றருளும் பிறவியை நீக்கிடும்
முன்னின் றெனக்கொரு முத்திதந் தானே.

நற்றவம் நிறைவுறுங் காலத்துச் சிவபெருமான் எதிர் தோன்றி அருள்புரிவன். நன்மை நிறைந்த இவ் வுலகத்தில் அனைத்துயிர்க்கும் தினைத்துணையும் வேற்றுமையின்றிச் சிவன் நடுவாய் நின்றருள்வன். நடுவாய் - பொதுவாய் நிற்றல்; என்பது உயிர்க்குயிராய் நிற்றலெனினுமாம். எஞ்சுவினைக்கீடாக வரக்கடவ பிறவிகளைப் பின் நின்று நீக்கியருள்வன். பின்னின்று: பின்னி நின்று; புணர்ந்து நின்று நினைப்பின் வீற்றிருந்தருள்வன். அதனால் அடியேன் அவனையே நினைப்பேன். அதனால் அவன் வீடுபேற்றையும் தந்தருள்வன். முன் - நினைப்பு பின்னி என்பது பின் எனக் கடைக் குறைந்தது.

முன்னின்று அருளும் - எதிர்தோன்றி அருளுவன். முடிகின்ற காலத்து - தவம் முற்றுப்பெற்ற காலத்து. நன்னின்று......நிற்கும் நன்மார்க்கத்தில் நிற்கும் உயிர்களுக்கு அவ் வுயிர்களின் ஊடே சிவன் சிறந்து விளங்குவான்.

## 1622. சிவனரு ளாற்சிலர் தேவரு மாவர்

1622. சிவனரு ளாற்சிலர் தேவரு மாவர்
சிவனரு ளாற்சிலர் தெய்வத்தோ டொப்பர்
சிவனரு ளால்வினை சேரகி லாமை
சிவனருள் கூடின்அச் சிவலோக மாமே.

சிவபெருமான் திருவருளால் உடல்மெய்யாகிய இருபத்து நான்களுள் தங்கிப் படைத்தல், காத்தல், துடைத்தல், விண்ணாடு புரத்தல் முதலிய இறைமைத் தொழில்களை ஆருயிர்கள் சிவனாராணையால் புரியும். அப்பொழுது அவ் வுயிர்கள் தேவர்கள் எனப்படும். இத் தேவர்களையும் இயக்கும் அருள்பெற்ற வுயிர்கள் உணர்த்துமெய்யாகிய முப்பத்திரண்டாம் மெய்யின்கண் தங்கி அயன், அரி, அரன், வேந்தன் என்னும் பெயர்களையே பூண்டு நிற்கும். முப்பத்திரண்டாம் மெய் ஆசான் மெய் அல்லது சுத்தவித்தை எனப்படும். மெய் - தத்துவம். இவர்களும் தேவர்கள் என அழைக்கப்பெறுவர். இந் நிலவுலகத்துச் சிவனருளால் வாழ்வாங்கு வாழும் வாய்மையர்களும் தேவர் எனப் பெறுவர் சிவபெருமான் திருவருளால் எஞ்சுவினை, ஏன்றவினை, ஏறு வினை என்னும் முத்திற வினைகளும் சேரமாட்டா. சிவபெருமான் திருவடிகூடப்பெற்றால் சிவவுலக வாழ்வு சேர்வதுறுதி..

தேவர் - செவ்வாய், சுக்கிரன், புதன், வியாழன் கோள்களில் வசிப்பவர்கள் தேவர் எனப்படுவர். பூமியில் வசிப்பவர் மானிடர் எனப்படுவர். சந்திரன் முதலிய உபகோள்களில்

வசிப்பவர் பிதிர்க்கள் எனப்படுவர். தெய்வத்தோடு ஒப்பர் - மானிடரே ஆயினும் தேவர் தன்மை பெற்று இருப்பவர்.

## 1623. புண்ணியன் எந்தை புனிதன் இணையடி

1623. புண்ணியன் எந்தை புனிதன் இணையடி
நண்ணி விளக்கென ஞானம் விளைந்தது
மண்ணவ ராவதும் வானவ ராவதும்
அண்ணல் இறைவன் அருள்பெற்ற போதே.

அம்மையும் அப்பனுமாக ஒருடம்பில் விளங்கும் சிவபெருமான் புண்ணியன் என்று அழைக்கப்படுவான். யாவர்க்கும் தந்தையாயுள்ளானாதலின் அவன் எந்தை எனப்படுவான். அவனே யாவரையும் தூய்மைப்படுத்தலால் அவன் புனிதமாயுள்ளான். நல்லார் அத்தகையோன் திருவடியைத் திருவைந்தெழுத்தோதிச் சேர்வர். அப்படிச் சேர்தலால் அவர்பால் திருவிளக்குச் சுடராகிய சிவஞானம் விளைந்தது. தலைமைப்பாடமைந்த சிவபெருமான் திருவருள் பெற்றபோதே மண்ணவர் பிறப்பற்றுச் சிறப்புறுவதும் சிவவுலகத்தவராகிய வானவராவதும் நிகழும்.

விளக்கென - விளக்கின் ஒளிபோல.

## 1624. காயத்தே ரேறி மனப்பாகன் கைகூட்ட

1624. காயத்தே ரேறி மனப்பாகன் கைகூட்ட
மாயத்தே ரேறி மயங்கு மவையுணர்
நேயத்தே ரேறி நிமலன் அருள்பெற்றால்
ஆயத்தே ரேறி யவனிவ னாமே.

உடம்பாகிய தேரினுட் புகுந்து, மனமாகிய தேரோட்டி சேர்த்துவைக்க. மாயத் தேராகிய இவ் வுலகத்தில் மயங்கும் உயிரினங்கள் திருவடியன்பாகிய தேரேறிச் சிவபெருமான் திருவருளைப் பெற்றால் ஆயமாகிய சிவனடியார் திருக்கூட்டத்துடன் விரவி உயர்வற உயர்ந்த சிவமாம் பெருவாழ்வை எய்தும்.

காயத்தேர் - உடம்பு. மனப்பாகன் கைகூட்ட மனத்தோடு கூடி மாயத்தேர் - உலக வாழ்க்கை. நேயத்தேர் - நியமம் நேயம் என வந்தது. இமயம் நியமம் முதலிய ஒழுக்கங்களைக் கைக்கொண்டு. ஆயத்தேர் - சமாதி யோகம்.

# 1625. கதிர்கண்ட காந்தங் கனலின் வழிவாம்

1625. கதிர்கண்ட காந்தங் கனலின் வழிவாம்
மதிகண்ட காந்தம் மணிநீர் வழிவாஞ்
சதிகொண்ட சாக்கி யெரியின் வழிவாம்
எரிகொண்ட ஈசன் எழில்வழி வாமே.

ஞாயிற்றின் கதிர்கண்டு அக் கதிரொளியை ஏற்று வெளிப்படுத்தங் கல் (சூரியகாந்தக் கல்) கதிர்க் கல் எனவும், திங்களின் கதிரையேற்றுக் குளிர்நீரை வெளிப்படுத்துங் கல் (சந்திரகாந்தக் கல்) நிலாக் கல் எனவும், தீயினைக் காண அதன் கதிரை வெளிப்படுத்தங் கல் தீக் கல் எனவும் வழங்கப்பெறும். இக் கல்லைச் சக்கிமுக்கிக் கல் என்பர். கதிர் கண்டவுடன் கதிர்க்கல் கனலைக் கக்கும். மதி கண்டவுடன் நிலாக் கல் குளிர்ச்சியைக் கக்கும். தீத்தட்டுங் கருவியாகிய சதியினைக் கொண்ட சக்கி - சாக்கி என்னும் தீக்கல் தீயினைக் கக்கும். மழுவாகிய தீயினை இடத்திருக்கையில் கொண்டருளிய சிவபெருமானை அருள் துணையால் அவன் இயற்கை எழில் வடிவில் காணலாம். அக் காட்சியான் ஆருயிர்கள் அனைத்தும் சிவனாம் நிலையினை எய்தும். கக்குதல் - காலுதல்.

மணி - முத்து. சதி - தீத்தட்டுங் கருவி; முக்கி. சாக்கி - சக்கி என்பதன் நீட்டல்; தீத்தட்டுங் கல், இவை இரண்டினையும், "சக்கி முக்கி" என்பதன் உலக வழக்கு.

## 1626. நாடும் உறவுங் கலந்தெங்கள் நந்தியைத்

1626. நாடும் உறவுங் கலந்தெங்கள் நந்தியைத்
தேடுவன் தேடிச் சிவபெரு மான்என்று
கூடுவன் கூடிக் குரைகழற் கேசெல்ல
வீடு மளவும் விடுகின் றிலேனே.

நாடுதலாகிய சிந்தித்தலும், உறவாகிய முழுநேயமுங் கொண்டு எங்கள் நந்தியாகிய சிவபெருமானை அவன் அருள்விளக்கத் துணையால் தேடுவேன். தேடிச் சிவபெருமானென்று கூடுவேன். கூடி இடையறாது நினைக்கும் நினைவாகிய ஒலிக்கும் ஆண்மைக் கழலணிந்துள்ள திருவடிக்கே செல உடம்பைவிட்டு உயிர் நீங்கும்வரைத் திருவடியைப் பற்றுதலாகிய திருவைந்தெழுத்து ஓதுதலை நீங்கேன்.

நாடு முறவு கலந்து - உள்ளன்போடு. வீடு மளவும் சாகும்வரை.

## 1627. ஆடம் பரங்கொண் டடிசிலுண் பான்பயன்

1627. ஆடம் பரங்கொண் டடிசிலுண் பான்பயன்
வேடங்கள் கொண்டு வெருட்டிடும் பேதைகாள்
ஆடியும் பாடியும் அழுதும் அரற்றியுந்
தேடியுங் காணீர் சிவனவன் தாள்களே.

கூடா ஒழுக்கத்தினராய்த் தவவேடம் கொண்டு பிறரை அஞ்சுவித்துத் திரிவார்க்குப் பயன் ஆடம்பரமான சோறு கறி உண்பதே
யாம் பேதைகளே! பிறப்பின் பயன் இதுவோ? சிவனார் திருவுருவினைக் கண்டவுடன் மெய்ம்மறந்து ஆடியும், பொய்யில் திருமுறை பாடியும், இன்பக் கண்ணீர் பெருக்கி அழுதும், மகிழ்ச்சி மேலீட்டால் அரற்றியும் இம்முறையாகத் தேடியுங் காணுங்கள். இதுவே பிறவிப்பயன்.

வேடங்கள் கொண்டு - பொய்யாகத் தவசி வேடம் பூண்டு. வெருட்டிடும் - மயக்கும்.

## 1628. ஞானமில் லார்வேடம் பூண்டிந்த நாட்டிடை

1628. ஞானமில் லார்வேடம் பூண்டிந்த நாட்டிடை
ஈனம தேசெய் திரந்துண் டிருப்பினும்
மான நலங்கெடும் அப்புவி யாதலால்
ஈனவர் வேடங் கழிப்பித்தல் இன்பமே.

திருவடியுணர்வில்லாக் கீழோர் சிவக்கோலம் பூண்டு சிறந்த தென்னாட்டகத்துக் கூடா ஒழுக்கம் புரிந்து பிறரை வஞ்சித்து ஏதும் உழையாது இரந்துண்டிருப்பர். அவர் அவ்வாறு இருப்பதால் நாட்டின் பெருமையும் நன்மையும் கெட்டொழியும். ஆகையால் அப் பொருந்தா வேடத்தாரை அவ் வேடத்தை நீக்கச்செய்து நாட்டுக்கு நன்மையும் இன்பமும் வாய்க்கும்படி செய்வது நல்லோர் கடனாகும். மானம் - பெருமை.

இருப்பினும் - சுகமாக இருந்தபோதிலும். ஆன நலம் - உண்மை வேடத்தால் ஆன நன்மை. கழிப்பித்தல் - நீக்கல்.

## 1629. இன்பமுந் துன்பமும் நாட்டா ரிடத்துள்ள

1629. இன்பமுந் துன்பமும் நாட்டா ரிடத்துள்ள
நன்செயல் புன்செய லாலந்த நாட்டிற்காம்
என்ப இறைநாடி நாடோறும் நாட்டினின்
மன்பதை செப்பஞ் செயின்வையம் வாழுமே.

நாட்டவர் செய்யும் நன்செயலாகிய புண்ணியத்தால் இன்பமும், புன்செயலாகிய பாவத்தால் துன்பமும் நாட்டில் நிலைத்து நிற்கும். ஆகவே உலகாளும் வேந்தன் பொய் வேடங் கொண்டார்தம் இழிசெயலால் நாட்டிற்குத் துன்பம் உண்டாவதைக் கருதி ஒவ்வொரு நாளும் அப் பொய்வேடத்தாரை நாட்டினின்றும் அகற்றி மன்பதைகளைச் செம்மையாக வாழும் நெறியில் செலுத்தினால் அவர்கள் நன்கு வாழ்வர். இக்குறிப்பினையே திருவள்ளுவநாயனார், 'ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே, வேந்தமைவில்லாத நாடு' (740) என்றருளிச் செய்தனர்.

இறை - அரசன். நாடி - உண்மைத் தவசிகள் இன்னார் என்றும் பொய்த் தவசிகள் இன்னார் என்றும் ஆராய்ந்து பார்த்து.

## 1630. இழிகுலத் தோர்வேடம் பூண்பர்மே லெய்த

1630. இழிகுலத் தோர்வேடம் பூண்பர்மே லெய்த
வழிகுலத் தோர்வேடம் பூண்பர்தே வாகப்
பழிகுலத் தாகிய பாழ்சண்ட ரானார்
கழிகுலத் தோர்கள் களையப்பட் டாரே.

ஒழுக்கத்தால் தாழ்ந்த குடியிலுள்ளோர் தவக்கோலம் பூணுதல் உயர்ந்த ஒழுக்கம் கைக்கொண்டு மேலோராதற்கு. இது படியாதார் படித்துக் கற்றார் ஆவதை யொக்கும். வழிவழியாக ஒழுக்க மேன்மையால் உலகோர் வழிபடத்தக்க உயர்குடியில் தோன்றியவர் தவக்கோலம் பூணுதல் மக்களிற் சிறந்த தேவராதற்காம். பழிக்கப்பட்ட புன்செயலால் பிறப்பினை வீணாக்கிக் கழிக்கத்தக்க குலத்தராயுள்ளார். தவக்கோலம் பூண்பது தங்களை நாட்டைவிட்டு அகற்றுவிப்பதற்கேயாம்.

இழிகுலம் - இழிந்த ஒழுக்கங்களுள்ள குடி. வழி குலம் - பிறர் வழிபடக் கூடிய ஒழுக்கமுடைய குடி. பாழ்சண்டர் - வீணர், கொடியர். கழி குலத்தோர் - பிறரால் ஒதுக்கித் தள்ளப்படக்கூடிய ஒழுக்கமுள்ள குடி.

## 1631. பொய்த்தவஞ் செய்வார் புகுவர் நரகத்துப்

1631. பொய்த்தவஞ் செய்வார் புகுவர் நரகத்துப்
பொய்த்தவஞ் செய்தவர் புண்ணிய ராகாரேற்
பொய்யத்தவம் மெய்த்தவம் போகத்துட் போக்கியஞ்
சத்திய ஞானத்தால் தங்குந் தவங்களே.

தவத்தினைப் பொய்ம்மையாகச் செய்வார் இருளுலகம் புகுந்து இன்னலுறுவர். பொய்த்தவம் உள்ளத்தில் உண்மையின்றிக் கோலத்தால் மட்டும் நடித்தல். பொய்த்தவம் செய்வார் புண்ணியராகார். பின் அதற்குப் பயன் மெய்த்தவம்போன்று நடிப்பதால் நிலையிலா உலகவின்பம் பொருந்தாவழியில் சிறிதுண்டாம் ; அத்தனையே அத்தவப்பயன். உண்மையும் திருவடியுணர்வும் மேற்கொள்ளுதலால் மெய்த்தவப் பயன்கள் நிலைக்கும்.

## 1632. பொய்வேடம் பூண்பர் பொசித்தல் பயனாக

1632. பொய்வேடம் பூண்பர் பொசித்தல் பயனாக
மெய்வேடம் பூண்போர் மிகுபிச்சை கைக்கொள்வர்
பொய்வேடம் மெய்வேடம் போலவே பூணினும்
உய்வேட மாகும் உணர்ந்தறிந் தோர்க்கே.

மெய்க்கோலம் பூண்பார்க்குக் கிடைக்கும் சிறந்த உணவு முதலிய உலகியலின்பங்கள் பொய்க்கோலம் பூண்பார்க்கும் எளிதாகக் கிடைக்கின்றன. பொய்க்கோலம் செய்வார் மெய்க்கோலம்போல் நடிப்பினும் தவப்பெருமையின் உண்மையினை அறிவார் தாங்கள் மெய்த் தவவழிநின்று மேன்மையுறுவர். மேலும் பொய்த்தவத்தார்மாட்டுப் பரிவும் கொள்வர். பிச்சை - தவவுணவு.

பொசித்தற் பயனாக - சாப்பாட்டுக்காக உய்வேடம் ஆகும் உணர்ந்து அறிந்தோர்க்கு - பொய்வேடத்திற்கே உலகத்தில் மரியாதையும் சோறும் கிடைக்கின்றனவே, மெய்யாகவே வேடம் பூண்டால் பலன் அதிகம் உண்டு. அம்மையினும் இன்பம் உண்டு என்று அறிவார்க்கு அப் பொய் வேடமே அவன் உய்வதற்கு உதவும் வேடமாகும்.

## 1633. தவமிக் கவரே தலையான வேடர்

1633. தவமிக் கவரே தலையான வேடர்
அவமிக் கவரே யதிகொலை வேடர்
அவமிக் கவர்வேடத் தாகாரவ் வேடந்
தவமிக் கவர்க்கன்றித் தாங்கவொண் ணாதே.

திருவடியுணர்வுக்கு வாயிலாகிய நற்றவமிக்கவரே தலையான சிவக்கோலமுடையவராவர். தவமில்லாத அவமாகிய பாவச் செயல் மிக்கவரே கொடுங்கொலைக்கு ஒரு சிறிதும் நடுங்காத வனவேடராவர். சிவக்கோலமாகிய தவக்கோலமிக்கவரே அக் கோலத்தைத் தாங்குந் தகுதியினராவர். மற்றவர்கள் அக் கோலத்தைத் தாங்குந் தகுதியுடைய வரல்லர்.

தலையான - சிறந்த.

# 1634. பூதி யணிவது சாதன மாதியிற்

1634. பூதி யணிவது சாதன மாதியிற்
காதணி தாம்பிர குண்டலங் கண்டிகை
ஓதி யவர்க்கும் உருத்திர சாதனந்
தீதில் சிவயோகி சாதனந் தேரிலே.

சிவ அடையாளங்களுள் முதன்மை வாய்ந்தது திருவெண்ணீறு. அதனை 'அழகினுக்கு அணியாம் வெண்ணீறு அஞ்செழுத்து ஓதிச் சாத்தல்' என்பதனால் உணரலாம். இத் திருவெண்ணீறு உடம்பின்கண் பலவேறிடங்களில் அணியப்படுவது. செம்பொன்னாலாக்கிய குண்டலங்கள் இரண்டு காதுகளிலும் காணப்படும். வண்டனைய சிவமணிகள் முப்பத்திரண்டு கொண்ட கண்டிகை மார்பிடத்துக் காணப்படும். இனம்பற்றி நாவின்கண் 'சிவசிவ' என்னும் திருவைந்தெழுத்து வழுத்தப்படுதலும் கொள்க. இவையே சிவ அடையாளங்களாகும் குற்றமற்ற செறிவு நிலையாகிய சிவயோகிக்கும் இவையே அடையாளங்களாகும். செம்பொன் - தாமிரம். வண்டனைய - வண்டு போலும் பருமனான.

பூதி - விபூதி. வி: உபசர்க்கம். புழுதி என்னும் சொல் இடைக்குறைந்து முதல் நீண்டு பூதி என்று ஆயிற்று.
ஆதியில் - முதலில்.
கண்டிகை - 32 உருத்திராக்க மணிகள் கொண்ட மாலை.
ஓதியவர்க்கும் - வேதங்கள் ஆகமங்கள் படித்தவர்க்கும்.
உருத்திரசாதனம் - உரு - உடல்; திரம் - உறுதி, 'உடலுக்கு உறுதியைத் தரக்கூடிய சாதனம்.'

## 1635. யோகிக் கிடுமது வுட்கட்டுக் கஞ்சுளி

1635. யோகிக் கிடுமது வுட்கட்டுக் கஞ்சுளி
தோகைக்குப் பாசத்துச் சுற்றஞ் சடையதொன்
றாகத்து நீறணி யாங்கக் கபாலஞ்
சீகத்த மாத்திரை திண்பிரம் பாகுமே.

உட்கட்டாகிய கோவணமும், கஞ்சுளியாகிய போர்வையும், திருச்சடையின்கண் மயிலிறகாலாகிய குல்லாவும், முழுவுடம்பும் அணியும் திருவெண்ணீறும், கையில் மண்டையோடும், அழகிய வலத் திருக்கையில் பிரப்பங்கோலும் சிவயோகியின் அடையாளங்களாகும். சீலத்தின் அடிப்படை என்பதை விளக்கத் தாய்ச்சீலை என்றும் முதன்மைக்காவல் என்பதை விளக்கக் கோவணம் என்றும் அற்ற மறைக்கும் துணிக்குப் பெயராயின. கோஅரணம் கோவணம் என்றாயிற்று.

உட்கட்டு - கோவணம், கஞ்சுளி - பொக்கணம், மேற் போர்வை. தோகைக்குப் பாசம் - மயிலிறகால் ஆய குல்லா. (குப்பாயம் - குப்பாசம் என வந்தது. சகரம் யகரமானது போலி) சீகத்த மாத்திரை - அழகிய கையில் பிடிக்கும் கோல் (க என்னும் எழுத்துக்கு ஹ என்னும் ஒலி. வளாகம் - என்னும் சொல்லொலிபோல்.)

## 1636. காதணி குண்டலங் கண்டிகை நீறும்

1636. காதணி குண்டலங் கண்டிகை நீறும்
ஊதுநற் சங்கும் உயர்கட்டி கப்பரை
ஏதமில் பாதுகம் யோகாந்த மாதனம்
ஏதமில் யோகபட் டந்தண்டம் ஈரைந்தே.

காதணியாகிய குண்டலமும், சிவமணியாலாகிய கண்டிகையும், ஓசை எழுப்பும் திருவைந்தெழுத்தும், வெண்சங்கும், மண்டையாகிய சட்டியும், திருநீற்றுமடலும், பாதக்குறடும், சிவயோகிக்குரிய அழகிய இருக்கையும், யோகப்பட்டமும், யோகத்தண்டும் என்னும் பத்து அடையாளங்களும் சிவயோகியர்க்கு உரியனவாகும்.

யோக அந்தம் - யோகத்துக்குரிய அழகிய. யோகப் படம் - யோகப்பட்டிகை. தண்டம் - யோக தண்டம்.

## 1637. நூலுஞ் சிகையும் உணரார்நின் மூடர்கள்

1637. நூலுஞ் சிகையும் உணரார்நின் மூடர்கள்
நூலது வேதாந்தம் நுண்சிகை ஞானமாம்
பாலொன்றும் அந்தணர் பார்ப்பார் பரமுயிர்
ஓரொன் றிரண்டினில் ஓங்காரம் ஓதிலே.

அகநிலையையுணர்த்தும் புற அடையாளங்கள் நூலும் சிகையும் என்று உணராதார் பெருமூடராவர். நூலென்பது மறை முடிவாம் 'சிவய நம' வாகும். நுண்ணிய சிகை என்பது அச் சிவய நம என்னும் மந்திரப்பயனாம் திருவடியுணர்வாகும். அதுவே சிவஞானமாம். அச் சிவஞான ஒழுக்கத்தில் நிலைநிற்போர் அந்தணராவர். பார்ப்பாராகிய மெய்கண்டார் ஓங்காரத்தின் கண் (952) உகரம் புரமாகவும், அகரம் உயிராகவும் கொள்வர். இனம்பற்றி மகரம் தளையாகவும் கொள்ளப்படும். மெய்கண்டார்: சித்தாந்தச் சைவ மாணவர்.

பாலொன்றும் - ஒழுக்கமுள்ள. பார்ப்பார் - உணருவார். பரம் - சிவம்.

## 1638. கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை

1638. கங்காளன் பூசுங் கவசத் திருநீற்றை
மங்காமற் பூச மகிழ்வாரே யாமாகில்
தங்கா வினைகளுஞ் சாருஞ் சிவகதி
சிங்கார மான திருவடி சேர்வரே.

அயன், அரி என்னும் இருவர்தம் முழு எலும்புக் கூட்டினைச் சுமக்கும் சிவபெருமான் கங்காளன் எனப்படுவன். அவன் ஆருயிர்கள் உய்வதற்குக் காவலாயுள்ளது - திருவெண்ணீறு என்றுணர்த்தக் கவசமாக அத் திருவெண்ணீற்றை அணிந்துகொள்கின்றனன். அத் திருநீற்றை எப்பொழுதும் மங்காமல் பூசுதற்கு மகிழ்வாரிடம் எத்தகைய வினைத் துன்பங்களும் தங்கா; சிவநிலையும் சாரும் - அழகிய திருவடிப்பேறும் கைகூடும்.

திருவடி. சாயுச்சிய முத்தி.

## 1639. அரசுட னாலத்தி யாகும்அக் காரம்

1639. அரசுட னாலத்தி யாகும்அக் காரம்
விரவு கனலில் வியனுறு மாறி
நிரவயன் நின்மலன் தாள்பெற்ற நீதர்
உருவம் பிரமன் உயர்குல மாமே.

அத் திருவெண்ணீறானது அரசு, ஆல், அத்தி ஆகிய மூன்றின் சுள்ளிகள் சிவபெருமான் வீற்றிருந்தருளும் எட்டுத் திரு வுருவங்களின் ஒன்றாகிய சிவவேள்வித் தீயின்கண் ஒளிவிட்டெரிந்து உருமாறிக் காரியமாகக் காணப்படுவது. உருவம், அருவம், உருவருவம் என்னும் மூன்று நிலையும் கடந்த சிவபெருமான் திருவடியினைத் தலைக் கொண்ட மெய்யடியார் திருவுருவம் திருநீற்றுத் திருவுருவமாகும். அவர்களே திருமுறையுணர்ந்த திருவடிச் செல்வத்தராவர். அவர்களே மெய்ப்பொருளையடையும் உயர்குலத்தினராவர். 'இட்டார் பெரியோர்' என்பது திருநீறு இட்டார் பெரியோரென்பதே 'இடாதார் இழிகுலத்தோர்' என்பது திருநீறு இடாதார் இழிகுலத்தோர் என்பதே. இவையன்றி மக்களில் சாதி என்றும் உயர்வு தாழ்வு என்றுங் கூறுவது தமிழக மரபன்று. காரம் காரியம்; திருநீறு.

விரவு கனலில் வியன் உரு மாறி, அரசு....அக்காரம் விபூதியானது சிவாக்கினி காரியத்தில் அரசு, ஆல், அத்தி முதலிய சமித்துக்கள் எரிக்கப்பட்டு நீறு ஆக்கப்படுவதாலும் உண்டாகும் (இது ஒருமுறை). நிரவயன் - வடிவமற்ற சிவன். நீதர் - நீதியை உடையவர். பிரமன் உயர் குலம் -

பிரமனால் படைக்கப்பட்ட மனிதர்களில் உயர்ந்த ஒழுக்கத்தை உடையவர் ஆவர். "மேதினியில் இட்டார் உயர்ந்தோர் இடாதார் இழிகுலத்தோர், பட்டாங்கில் உள்ளபடி" என்ற ஔவையார் வாக்கை நோக்குக. இழிகுலம் என்றும் உயர்குலம் என்றும் திருமூலர் கூறியது சாதி அல்ல. ஒழுக்கத்தில், அறநெறிகளைக் கடைப்பிடித்து ஒழுகுவதில் உயர்ந்தவர், தாழ்ந்தவர் ஆவார். "பட்டாங்கில் உள்ளபடி" என்றது வேதாகமங்களில் கூறியபடி என ஔவையாரும் எடுத்துக் காட்டியுள்ளார்.

# 1640. ஞானமி லார்வேடம் பூண்டும் நரகத்தர்

1640. ஞானமி லார்வேடம் பூண்டும் நரகத்தர்
ஞானமுள் ளார்வேடம் இன்றெனில் நன்முத்தர்
ஞான முளதாக வேண்டுவோர் நக்கன்பால்
ஞான முளவேட நண்ணிநிற் பாரே.

திருவடியுணர்வாகிய சிவஞானம் கைவரப்பெறாதார் வேடம் பூண்டு பழிப்புக்கு ஆளாகி நரகத்திலாழ்வர். திருவடியுணர்வு கைவந்தோர் கோலமுள்ளாரெனினும் இலரெனினும் நல்ல வீடுபேற்றினை எய்துவர். மிக்க மகிழ்ச்சியை உண்டாக்குவோனாகிய நக்கன் சிவபெருமானிடத்து மெய்யுணர்வுகொள்ள விரும்புவோர் ஞானவேடத்தினைப் பொருந்திநிற்பர். நகுதல் - மகிழ்தல். ஞானவேடம் என்பது, 'ஞானமெய்ந் நெறிதான் யார்க்கும் நம்ச்சிவாயச் சொலாம்' என்று ஆளுடைய பிள்ளையார் அருளுமாற்றால் ஓவாது திருவைந்தெழுத்தினை உள்ளன்புடன் ஓதி ஒழுகுதல்.

நரகத்தர் - நரக புவனங்களை அடைந்து துன்புறுவர். இன்றெனின் - இன்றெனினும் - (உம் தொக்கி வந்துள்ளது) இல்லாமலிருந்தாலும். நக்கன்பால் - சிவனிடத்தில்.

## 1641. புன்ஞானத் தோர்வேடம் பூண்டும் பயனில்லை

1641. புன்ஞானத் தோர்வேடம் பூண்டும் பயனில்லை
நன்ஞானத் தோர்வேடம் பூண்பர் அருள்நண்ணத்
துன்ஞானத் தோர்சம யத்துரி சுள்ளோர்கள்
பின்ஞானத் தோரொன்றும் பேசகில் லார்களே.

சிற்றுணர்வுடையோர் சிவக்கோலமாகிய ஞானவேடம் பூண்டும் பயனில்லை. திருவருள் கைவரப்பெற்றோர் சிவக்கோலம் இலரெனினும் சிவஞானத்தவரேயாவர். திரிபுணர்வாகிய துன்ஞானத்தோர் தத்தஞ் சமயமே முடிந்த மெய்ச்சமயமென்றும் ஏனைய சமயங்கள் சமயங்களல்லவென்றும் இருதலையும் ஆய்வின்றி ஒருதலையாகக் கூறும் சமயக் கடும்பற்றினர் என்னும் சமயக் குற்றமுள்ளோராவர். அக் குற்றமுடையார்பால் பின்ஞானத்தோராகிய மெய்ப்புணர்ப்பின் உணர்வுடையார் ஒன்றும் உரையாடார். பின்ஞானம் - பின்னல்ஞானம். பின்னல் - ஒன்றாய் வேறாய் உடனாய்ப் பிரிவின்றி நிற்கும் புணர்ப்பு; அத்துவிதம்.

புன்ஞானம் - சிறிது ஞானம். துன்ஞானத்தோர் - பொய் ஞானம் உடையவர். சமயத் துரிசு - சமயங்களில் உள்ள குற்றம்.

## 1642. சிவஞானி கட்குஞ் சிவயோகி கட்கும்

1642. சிவஞானி கட்குஞ் சிவயோகி கட்கும்
அவமான சாதனம் ஆகாது தேரில்
அவமா மவர்க்கது சாதன நான்கும்
உவமான மில்பொருள் உள்ளுற லாமே.

மதிக்கத்தகாத தீயசெயல்களைத் துணையாகிய சாதன மெனக்கொண்டு நடப்போர் அரிய மக்கட்பிறப்பின் பயனை வீணாக்குகின்றனர். ஆராயின் சிவஞானிகட்கும் சிவயோகிகட்கும் அவை பொருந்தாதன. அவர்கட்குப் பொருந்திய துணை நான்காகும். அவை: சீலம், நோன்பு, செறிவு, அறிவென்பன. தனக்குவமை இல்லாதானாகிய சிவன் மேற்கூறிய நானெறியால் வழிபடுவோர் உள்ளத்து வீற்றிருந்தருள்வன்.

அவமான - பாபம் விளைக்கக்கூடிய. உவமானம் இல் பொருள் - தனக்கு உவமையில்லாதான்; சிவன். உள்ளுறலாம் - உள்ளத்திலே அடையலாம்.

## 1643. கத்தித் திரிவர் கழுவடி நாய்போன்று

1643. கத்தித் திரிவர் கழுவடி நாய்போன்று
கொத்தித் திரிவர் குரக்களி ஞானிகள்
ஒத்துப் பொறியும் உடலும் இருக்கவே
செத்துத் திரிவர் சிவஞானி யோர்களே.

மெய்யுணர்வு இல்லாதார் கழுமரத்தடியிலுள்ள நாயினைப் போல் வீணாகக் கத்தித் திரிவர். குரங்குபோன்ற தாவும் மனமுடைய சிலர் கழுகுபோன்று பிறரைக் கொத்தித் திரிவர். சிவமெய்யுணர்வினர் பொறிகலன் முதலியன ஒத்துப் பொருந்திய உடலுடன் கூடியிருந்தும் உலகியற் செயல்களில் ஊன்றிய நாட்டமின்றி உலகச் செயலற்றுச் செத்தாரைப்போன்று திரிவர். சாதல் - தற்செயலறுதல். பிணம் பிறர் செய்வனவற்றிற்கெல்லாம் இடங்கொடுத்துக் கிடக்கும். அதுபோல் சிவஞானிகள் தற்செயலற்றுத் திருவருள் இயக்க இயங்கித் திரிவர்.

கழுவடி - கழுமரத்தின் அடியில் நிற்கும். குரக்கு அளி ஞானிகள் - குரங்குபோன்று தாவித்திரியும் மனத்தையுடைய ஞானிகள்.

## 1644. அடியா ரவரே யடியா ரலாதார்

1644. அடியா ரவரே யடியா ரலாதார்
அடியாரு மாகாரவ் வேடமு மாகார்
அடியார் சிவஞான மானது பெற்றோர்
அடியா ரலாதார் அடியார்கள் அன்றே.

அருளியக்கத் தன்முனைப்பற்று அதன்வழி இயங்கும் சிவ மெய்யுணர்வினர் மெய்யடியாராவர். அத் தகுதியில்லார் அடியாரும் ஆகார். அவர் கொள்ளும் கோலம் சிவக்கோலமும் ஆகாது. திருவடியுணர்வு பெற்றோர் மெய்யடியாராவர். அடியார் தன்மையில்லாதவர் ஒரு காலமும் மெய்யடியார்களாகார்.

அடியார் - பொறியும் உடலும் ஒத்துச் செத்துத் திரியும் சிவஞானிகள்.

## 1645. ஞானிக்குச் சுந்தர வேடமும் நல்லவாந்

1645. ஞானிக்குச் சுந்தர வேடமும் நல்லவாந்
தானுற்ற வேடமுந் தற்சிவ யோகமே
ஆனவவ் வேடம் அருண்ஞான சாதனம்
ஆனது மாமொன்றும் ஆகா தவனுக்கே.

சிவஞானிக்கு நம்பியாரூரர்போன்று திருமணக்கோல மொத்த அழகிய கோலமும் தோற்றத்தாலும் பயனாலும் நன்மையேயாம். கொண்ட அத் திருவேடமும் சிவயோக வேடமேயாம். மேலும் அத் திருக்கோலம் அருள்ஞானத் துணையு(சாதன) மாகும். சிவஞானம் கைவரப் பெறாதார் கொள்ளும் கோலம் ஒருவகையானும் பொருந்தாதென்க.

சுந்தர வேடம் - அழகுள்ள தவ வேடம் ஒன்றும் - ஒரு வேடமும். அவனுக்கே - தவம் அல்லாத அவ் வழியில் உள்ளவனுக்கே.

## 1646. ஞானத்தி னாற்பத நண்ணுஞ் சிவஞானி

1646. ஞானத்தி னாற்பத நண்ணுஞ் சிவஞானி
தானத்தில் வைத்த தனியால யத்தனாம்
மோனத்த னாதலின் முத்தனாஞ் சித்தனாம்
ஏனைத் தவசி இவனென லாகுமே.

திருவடியுணர்வாகிய ஞானத்தினால் சிவனிலை எய்துவோன் சிவஞானியாவன். இவன் உலகத்தினிடத்து நடமாடுங் கோயிலினுள் சிறந்த தனிப்பெருங் கோயிலோனாவன். வீணுரையாடா மோனமுடையனாதலின் வீடுற்ற முத்தனாவன். மேலும் திருவடிப்பேறுற்ற சித்தனுமாவன். உண்மைக்கோலம் இல்லாத ஏனைத் தவத்தர் இவனோடொத்துப் பேசுந் தகுதியினரல்லர்.

தானத்தில் - உலகத்தில். தனியாலயத்தன் - உள்ளம் பெருங்கோயிலாக உடையவன். ஏனைத் தவசி - பொய் வேடத்தையுடைய தவசி. இவன் - உண்மை வேடமுள்ள சித்தன்.

## 1647. தானற்ற தன்மையுந் தானவ னாதலும்

1647. தானற்ற தன்மையுந் தானவ னாதலும்
ஏனைய வச்சிவ மான இயற்கையுந்
தானுறு சாதக முத்திரை சாத்தலு
மேனமும் நந்தி பதமுத்தி பெற்றதே.

யான், எனதென்னும் செருக்கற்ற தன்மையும், சிவனருளால் தான் சிவனாதலும், மற்றைய உலகிற் காணப்படும் இயங்கு திணை நிலைத்திணைப் பொருள்களனைத்தும் சிவத்தொடர்பால் செய்யுள் நலம்போல் சிவமாகக் காணப்படுதலும், தான்கொள்ளும் கோலத்துக்குத் தக்கவாறு துணையாகிய சாதகங்கொள்ளுதலும், உண்கலம் ஏற்றலும் முதலியன நந்தியாகிய சிவன் திருவடிநிலை பெற்றவர்கட்குரிய அடையாளங்களாகும். செய்யுள் பூமாலையொக்கும், உரைநடை பூச்சரமொக்கும். 'பூவுதிரப் போஞ்சரம் போற்றுமுறை நெஞ்சினில்லா, பூவுதிரா மாலைசெய்யுள் போற்று.'

தானற்ற தன்மை - 'யான்', 'எனது' என்னும் பற்று நீங்கின தன்மை தான் அவனாதல் - அவனே தானேயாகிய நெறி; தான் சிவமாந் தன்மை எய்தி நிற்றல். ஏனைய - தன்னைத் தவிர்த்து மற்றத் தாவர சங்கமங்கள். தானுரு - தான்கொண்ட. சாதக முத்திரை - வேடமும், பழக்கமும். ஏனமும் - பிச்சைப் பாத்திரமும்.

# 1648. அருளால் அரனுக் கடிமைய தாகிப்

1648. அருளால் அரனுக் கடிமைய தாகிப்
பொருளாந் தனதுடற் பொற்பதி நாடி
இருளான தின்றி யிருஞ்செயல் அற்றோர்
தெருளாம் அடிமைச் சிவவேடத் தோரே.

திருவட்டுணையால் சிவபெருமானுக்கு அடிமையாகி அச்சிவனார் உடைமையாகிய தன் உடல் அவர் உறையும் பொற்பதி என்று நாடுதலாகிய உண்மையுணர்வு கொள்ளுதலால் அறியாமையாகிய மலவிருள் அகலும். அகலவே தன் முனைப்பால் செய்யும் இருவகைச் செயல்களும் அகலும். அவை அற்றவர்கள் தெளிவினையுடைய மீளா அடிமையராவர் அவர்கொள்ளும் சிவக்கோலமே மெய்யான தவக்கோலமாகும்.

பொருளாம் - மெய்ப்பொருள் வெளிப்படுதற்குரிய. பொற்பதி - சிவம் தங்கும் அழகிய இடம். அருள் - அஞ்ஞானம்.

## 1649. உடலில் துவக்கிய வேடம் உயிர்க்காகா

1649. உடலில் துவக்கிய வேடம் உயிர்க்காகா
உடல்கழன் றால்வேடம் உடனே கழலும்
உடலுயிர் உண்மையென் றோர்ந்துகொள் ளாதார்
கடலில் அகப்பட்ட கட்டையொத் தாரே.

உடலிற் காணப்படும் வேடமாகிய திருக்கோலம் உயிரினைப் பொருந்தி உயிரினுக்குத் துணையாகாது. உடல் உயிரை விட்டு நீங்கினால் அவ் வேடமும் உடனே நீங்கும். உடலின்கண் தங்கும் உயிர் அழிவில்லாத உண்மையான மன்னுயிராகும். இத்தகைய உண்மையினை உணர்ந்துகொள்ளாதார் கடலிற்பட்ட மரக்கட்டை இடையறாது அங்கும் அங்கும் அலைவதுபோன்று பிறவிப் பெருங்கடலினை நீந்தமாட்டாது பிறந்து இறந்து உழன்று அதனுள் அழுந்துவர்.

உடல் உயிர் - உடலில் உள்ள உயிர். கடலில் அகப்பட்ட கட்டை - கடலில் அகப்பட்ட கட்டையைப்போல் பவக்கடலில் அகப்பட்டுப் பல அண்டங்களிலும் பிறவியெடுத்து எடுத்து அலைவர்.

## 1650. மயலற் றிருளற்று மாமன மற்றுக்

1650. மயலற் றிருளற்று மாமன மற்றுக்
கயலுற்ற கண்ணியர் கையிணக் கற்றுத்
தயலற் றவரோடுந் தாமேதா மாகிச்
செயலற் றிருந்தார் சிவவேடத் தாரே.

உலகப் பொருளின்கண் மருளாகிய மயலற்று அதற்கழிப்படையாகிய ஆணவவல்லிருளற்று, அதன் வயத்தாகிய கரியமன மற்று, அம் மனம் பற்றும் கயல்போலும் கண்ணையுடைய பொதுமகளிர் தம்கை இணக்கம் அற்று, இவை யனைத்தும் அறுதற்கேதுவாகிய பொதுத்தையலர் கூட்டமற்ற மெய்யடியாரோடு அவரே தாமாகித் தன் முனைப்பாகிய செயலற்று ஒழுகுவார் உண்மைச் சிவக்கோலத்தராவர்.

கையிணக்கு - கூட்டுறவு. தயலற்றவர் - தையல் அற்றவர்; பெண் ஆசை இல்லாதவர். செயல் - உலக விவகாரம்.

## 1651. ஓடுங் குதிரைக் குசைதிண்ணம் பற்றுமின்

1651. ஓடுங் குதிரைக் குசைதிண்ணம் பற்றுமின்
வேடங்கொண் டென்செய்வீர் வேண்டா மனிதரே
நாடுமின் நந்தியை நம்பெரு மான்தன்னைத்
தேடும்இன் பப்பொருள் சென்றேய்த லாமே.

ஓடுங் குதிரையாகிய உயிர்ப்பின் குசையாகிய அளவுட்படுத்தும் கழிவாளத்தைத் திண்ணமாகப் பற்றி உயிர்ப்பினை அடக்குங்கள். இன்றியமையாத அச் செயலின்றி வெறும் பொய்க்கோல மட்டும் பூண்டு திரிவதால் பயனொன்றும் இல்லை. மாந்தர்கள், அப் பொய்க்கோலம் கொள்ளுதல் வேண்டா. நந்தியாகிய சிவனை உளத்தின்கண் நாடுங்கள்; திருவருளால் நம் பெருமானை உணர்வின்கண் தேடுங்கள் .தேடினால் அழியா உண்மை அறிவு இன்பப்பொருளாகிய சிவனார் திருவடி இன்பத்தினைச் சென்றெய்தி இன்புறுதல் கூடும். இதுவே, 'தேடிக் கண்டுகொண்டேன்' என்பதாகும்.

குசை - கழிவாளம் ஓடு.....பற்றுமின் - ஓடுகின்ற பிராண வாயுவை அடக்கி, வீண்போகாது செய்மின்.

## 1652. குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்

1652. குருட்டினை நீக்குங் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வார்
குருநடுங் குருடுங் குருட்டாட்டம் ஆடிக்
குருடுங் குருடுங் குழிவிழு மாறே.

உண்மை உணர்ச்சியில்லார் அகக்கண் குருடாகிய அறியாமையினை நீக்கும் மெய்க்குருவினைக் கைக்கொள்ளார். அறியாமையை அகற்றும் நெறியே தெரியாத பொய்க்குருவினை மெய் எனக் கொள்வர். அங்ஙனங் கொள்ளுவதால் வழிகாட்டத் தெரியாத குருடுங் குருடுங் கூடிக் குருட்டு ஆட்டம் கொண்டு குழியில் விழுவதுபோன்று அகக்கண் இல்லாத பொய்க் குருவினைக் கொண்டு கருக்குழியில் வீழ்வர்.

குருடு - அஞ்ஞானம். குழி விழுமாறு - குருடும் குருடும் சேர்ந்தால் குழியில் விழுவதுபோல, அஞ்ஞானம் நீங்காத குருவைக் கொண்டால் கொண்டவனும் குருவும் பிறவிக் குழியில் விழவேண்டியது தான்.

## 1653. மனத்தில் எழுந்ததோர் மாயக்கண் ணாடி

1653. மனத்தில் எழுந்ததோர் மாயக்கண் ணாடி
நினைப்பின் அதனின் நிழலையுங் காணார்
வினைப்பயன் போக விளக்கியுங் கொள்ளார்
புறக்கடை இச்சித்துப் போகின்ற வாறே.

மறைப்பாற்றல் மனத்தை வினைக்கீடாக இயக்குவதோர் மாயக்கண்ணாடியாகும். முகப் பார்க்கும் கண்ணாடியில் முன்புறம் ஒளியுள்ளதாகக் காணப்படும். பின்புறம் பூச்சுள்ளதால் மறைத்து மழுங்கலாகக் காணப்படும். ஆருயிர்களை உலகத்துடன் நடத்துங்கால் பின்புற வாயிலாகவே நடத்துகின்றது. அவ் வுயிர்களைச் சிவத்துடன் நடத்துங்கால் முன்புற வாயிலாகவே நடத்துகின்றது. முன்புறம் என்பது திறப்பும் பின்புறம் என்பது மறைப்பும் ஆகும். நினைப்பினால்கூட அம் மறைப்பாற்றலின் சாயலையுங் காணமாட்டார். ஆருயிர்கள் தாம் செய்து நுகரும் வினைப்பயன்களை நூன்முறையான் விளக்கியும் மனங்கொள்ளார். இத்தகையோர் சிறப்பு எய்த விரும்பாது பிறப்பு எய்த விரும்பித் தாழ்ந்து போவோராவர்.

மாயக்கண்ணாடி - திரோதான சத்தி. இச் சத்தி முன்புறம் ஒளியுள்ளதாயும் பின்புறம் மங்கலாயும் உள்ள முகம் பார்க்கும் கண்ணாடி
போன்றது. ஒருவனுக்குப் பந்தகாலத்தில் பின்புறத்தையும் முத்தி காலத்தில் முன்புறத்தையும் இச் சத்தி காட்டி நிற்கும். வினைப்.......கொள்ளார். தங்களுடைய வினைகள் ஒழியத் திரோதான சத்தியால் விளக்கத்தைப் பெறுவதற்கும்

முயற்சி செய்யார். புறக்கடை இச்சித்து - சத்தியின் பின்புறத்தையே இச்சித்துப் பந்தத்திலேயே மூழ்கிக் கிடப்பர்.

# 1654. ஏயெனில் என்னென மாட்டார் பிரசைகள்

1654. ஏயெனில் என்னென மாட்டார் பிரசைகள்
வாய்முலை பெய்ய முதரநின் றூறிடுந்
தாய்முலை யாவ தறியார் தமருளோர்
ஊனிலை செய்யும் உருவிலியாம் தானே.

குடிபோல் வாழும் மக்கள் அவர்களை அன்பாக அழைத்து மொழியினும் மனங்கொள்ளமாட்டார். பாலுண்குழவி வாய் வைக்குங்கால் தாய்முலை சுரப்பதுபோல், அப் பாலால் இனிமை யுண்டாவதுபோல் நடப்பாற்றலாகிய அம்மையை நாடிப் பிறப்பற வேண்டினால், அவ்வுயிரைச் சிவத்துடன் கூட்டுதற்கு அருளுடம்பையும் அவ் வுடம்பு வளர்வதற்குத் தகுதி வாய்ந்த செந்தமிழ்த் திருவைந்தெழுத்தையும் அவள் அருளுவள். அருளுடம்பு பாலையொக்கும். திருவைந்தெழுத்து இனிமையை ஒக்கும் வேண்டுதல் வாய் வைத்தலையொக்கும். அவ் வருள் பிறவாமையை அருளும் உருவில்லாதவளாவள்.

ஏய் : விளித்தற்குறி. பிரசைகள் - மானிடர். வாய் முலை பெய்ய மதுரம் - முலையில் வாய் வைக்க மதுரமான பால். தாய் முலை ஆவது - திரோதான சத்தி தாய்போன்று இருக்கும் தன்மையை. தமருளோர் - தெரிந்து சத்தியை உறவாகக் கொண்டவர்க்கு. ஊனிலை செய்யும் சரீரத்தை அழியாமல் செய்யும். அஃதாவது பிறவி இல்லாமல் செய்யும்.

## 1655. வாயொன்று சொல்லி மனமொன்று சிந்தித்து

1655. வாயொன்று சொல்லி மனமொன்று சிந்தித்து
நீயொன்று செய்யல் உறுதி நெடுந்தகாய்
தீயென்றிங் குன்னைத் தெளிவன் தெளிந்தபின்
பேயென்றிங் கென்னைப் பிறர்தெளிகி லாரே.

சொல்லும் நினைப்பும் செயலும் ஒல்லும்வகை ஒன்று போல் இணைந்திருப்பனவே உறுதியாகும். என்றும் பொன்றா வாழ்வு பெறும் உரிமையுடைய உயிர் நெடுந்தகை என்று அழைக்கப்பெறும். அத்தகைய உறுதி நெடுந்தகையே முப்பொறிகளும் ஒன்றுபடாமல் ஒன்றும் செய்யற்க. ஒன்றுபட்டுச் சிவனை வழிபட்டால் உயிர் தீயுருவாகிய சிவனாகும் யான் அவ் வுண்மையைத் தெளிவன். தெளிந்த பின் பெரும்பித்தும் பிடி விலகாமையும் உள்ள பேயென்று பிறர் என்னைத் தெளியமாட்டார்.

நீயொன்று செய்ய - ஆன்மாவின் கை ஒன்று செய்ய. தீயென்று - தீ உருவினனான சிவன் என்று. பேய் என்று - பேய்போல்பவன், சிவப்பித்துப் பிடித்தவன்.

## 1656. பஞ்சத் துரோகத்துப் பாதகர் தம்மையும்

1656. பஞ்சத் துரோகத்துப் பாதகர் தம்மையும்
யஞ்சச் சமயத்தோர் வேந்தன் அருந்தண்டம்
விஞ்சச்செய் திப்புவி வேறே விடாவிடிற்
பஞ்சத்து ளாய்ப்புவி முற்றும்பா ழாகுமே.

பொய், கொலை, களவு, கள், காமம் என்னும் ஐப்பெரும் பாவங்களும் அஞ்சாது நெஞ்சார இயற்றுவோர், நம்பகக் கேடுசூழ் பெரும் பாதகராவர். அவர்களையும் ஏனையோரும் அவ்வாறு செய்து பாதகர் ஆகாவண்ணம் அஞ்சி ஒழுகும்படி தண்டித்தல் வேந்தன் கடனாகும். அத் தண்டமாவது அக் கொடியோரை நாடுகடத்தலேயாம். அவ்வாறு செய்யாவிட்டால் நாட்டினில் மழை பெய்யாது விளைவு குன்றிப் பஞ்சமுண்டாகும்.

பஞ்சத் துரோகம் - பொய், கொலை, கள், களவு, காமம். பஞ்சச் சமயத்தோர் - பஞ்சாயத்தோர்; நியாயாதிபதிகள். விஞ்ச - மிகுதியாக. புவி வேறே - நாடு கடத்தி. பஞ்சத்துளாய். பஞ்சம் ஏற்பட்டு.

## 1657. தவத்திடை நின்றவர் தாமுண்ணுங் கன்மஞ்

1657. தவத்திடை நின்றவர் தாமுண்ணுங் கன்மஞ்
சிவத்திடை நின்றது தேவர் அறியார்
தவத்திடை நின்றறி யாதவர் எல்லாம்
பவத்திடை நின்றதோர் பாடது வாமே.

சிவனை மறவாது செந்தமிழ்த் திருவைந்தெழுத்தோதி ஒழுகும் பெருந்தவத்திடை நின்றவர் உடம்புள்ள துணையும் ஊழ்வினை நுகர்வு நீங்காதாகலால் அத் தவத்தோர்க்கு அந் நுகர்வு உடலோடு நின்றுவிடும். அவர் உள்ளத்தின்கண் நின்றுநிலைபெறும் மாறில் நுகர்வு சிவ நுகர்வேயாம். இவ்வுண்மையினைச் செருக்கறாத் தேவரும் அறியார். நற்றவமாகிய சிவ வழிபாட்டில் நின்று அறியமாட்டாதவரெல்லாரும் பிறப்பிடை நின்று துன்புறுவர்.

உண்ணுங் கன்மம் - கன்ம அனுபவம். சிவத்திடை நின்றது - சிவானுபவமாக இருந்தது. பவத்திடை. பிறப்பினில். ஓர் பாடு - ஒப்பற்ற துன்பம்.

## 1658. கன்றலுங் கருதலுங் கருமஞ் செய்தலும்

1658. கன்றலுங் கருதலுங் கருமஞ் செய்தலும்
தின்றலுஞ் சுவைத்தலுந் தீமை செய்தலும்
பின்றலும் பிறங்கலும் பெருமை கூறலும்
என்றிவை இறைவன்பால் இயற்கை அல்லவே.

நற்றவத்தால் சிவத்தையுற்றவர்பால் செருக்குக்கொண்டு சினத்தலும், நட்பு உறவு கருதலும், பயன்கருதிச் செயல் செய்தலும், முனைத்துத் தின்றலும், சுவைத்தலும், தீமை செய்தலும், முறையின்றித் தாழ்த்தலும், உயர்த்தலும், தற்பெருமை கூறுதலும் ஆகிய நிகழ்ச்சிகள் மறந்தும் உண்டாகா. காரணம் என்ன என்றால், இவையொன்றும் வழி மறந்தும் உண்டாகா. காரணம் என்ன என்றால், இவையொன்றும் வழி படப்படும் சிவத்தின்பால் இயற்கையாகவே என்றும் இன்மையான் என்க.

கன்றல் - கோபித்தல். பின்றல் - தாழ்ச்சி அடைதல். பிறங்கல் - மேன்மையை யடைதல்.

## 1659. விடிவ தறியார் வெளிகாண மாட்டார்

1659. விடிவ தறியார் வெளிகாண மாட்டார்
விடியில் வெளியில் விழிக்கவு மாட்டார்
கடியதோ ருண்ணிமை கட்டுமின் காண்மின்
விடியாமை காக்கும் விளக்கது வாமே.

அக நிகழ்ச்சியாகச் சித்தம் சிவத்தினிடத்தில் மறவா விழிப்பாக நிற்பது விடியல் என்பதை யுணரார். அறிவுப்பெருவெளியையும் காணமாட்டார். அச்சமில்லாத அப் பெருவெளியில் நினைப்புக் கொள்ளவும் மாட்டார். காவலாக உள்நோக்கம் கொள்ளுதற்பொருட்டுக் கண்ணிமையை அடக்குமின். அகநோக்கிக் காண்மின். பிறவாற்றால் நீங்காத ஆணவவல்லிருளைத் தடுத்து நீக்கும் திருவடியுணர்வாகிய விளக்கு அவையாகும்.

விடிவது - சித்தத்தைச் சிவனிடம் வைப்பது. வெளி - ஞனம். வெடியில் - அச்சமில்லதை. வெளியில் - பரம ஆகாயத்தில் விழிக்கவும் பார்வையைச் செலுத்தவும். கடி - இன்பத்துக்குக் காரணமாயுள்ள. உள் - உள்ளத்தை, மனத்தை. நிமை - கண் இமைப்பொழுது. விடியாமை - அஞ்ஞான இருள். காக்கும் - தடுக்கும். விளக்கதுவாம் - ஞானம் உண்டாம்.

## 1660. வைத்த பசுபாச மாற்று நெறிவைகிப்

1660. வைத்த பசுபாச மாற்று நெறிவைகிப்
பெத்த மறமுத்த னாகிப் பிறழ்வுற்றுத்
தத்துவ முன்னித் தலைப்பட்டா தவ்வாறு
பித்தான சீடனுக் கீயப் பெறாதானே.

தொன்மையே அமைந்த பிணிப்பியாகிய பசுத்தன்மைக்குரிய ஆணவவல்லிருளை மாற்று நன்னெறியொழுகிக் கட்டற்று வீடுபெற்றுடையோனாகிப் பல்லாற்றானும் நிலலாவுலகியலின் நிலையா வாழ்க்கையில் மாறுதலுற்று, மெய்ப்பொருளை இடையறாது நினைந்து திருவடியில் தலைப்படுதல் நன்மாணாக்கனுக்குரிய நலங்களாகும். இந் நெறியில் வாராது உலகியல் மயக்கங்கொண்ட மாணவர்க்கு அருமறையாகிய உபதேசம் செய்தல் கூடாது. ஈதல்: ஈண்டு உபதேசம் செய்தல்.

வைத்த - அநாதியாய் உள்ள. பசுபாசம் - பசுத்துவத்துக்குக் காரணமான ஆணவம். பெத்தமற - பந்தம் நீங்க. பிறழ்வு உற்று - மாறுதலை அடைந்து. தத்துவம் முன்னி - மெய்ப்பொருளைச் சிந்தித்து. தலைப்படாது - மேம்பாடு அடையாது. பித்தான மயங்கிய. ஈயப்பெறா உபதேசிக்கப்படா.

# 1661. மன்னும் மலம்ஜந்தும் மாற்றும் வகையோரான்

1661. மன்னும் மலம்ஜந்தும் மாற்றும் வகையோரான்
துன்னிய காமாதி தோயுந் தொழில்நீங்கான்
பின்னிய பொய்யன் பிறப்பிறப் பஞ்சாதான்
அன்னிய னாவன் அசற்சீட னாமே.

காரணத்தின்கண் மாறா நிலைபேறுடைய ஆணவம் கன்மம் மாயை மறைப்பாற்றல் மாயேயமாகிய காரியத்தன்மை ஆகிய மலம் ஐந்தும் மாற்றும் வழிவகைகளை ஆராயான்; பொருந்திய ஆறு கோடி மாயா சத்திகளாம் செருக்கு, சினம், சிறுமை, இவறல், மாண்பிறந்தமானம், மாணாவுவகை என்னும் குற்றங்களில் மீண்டும் மீண்டும் விழும் செய்கையில் நீங்கான்; முற்றும் கலந்த பொய்ம்மையன்; பிறப்பு இறப்பு ஆகிய இவற்றிற்கு அஞ்சான். இத்தகையோன் நன்னெறிக்கு வேறான புன்னெறியனாவன். அவனே உண்மைக்கு மாறுபட்ட பொய்ம்மை மாணவனும் ஆவன். அசற்சீடன்: அசத் + சீடன், அசத் - பொய்ம்மை.

மலம் ஐந்து - ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி அல்லது வைந்தவன், ஓரான் - சிந்தியான். தோயும் - பொருந்தும். பின்னிய - நிறைந்த. அன்னியன் - உபதேசத்திற்குப் புறம்பாவான். அசற்சீடன - பயனற்ற சீடன்.

## 1662. தொழிலறி வாளர் சுருதிகண் ணாகப்

1662. தொழிலறி வாளர் சுருதிகண் ணாகப்
பழுதறி யாத பரம குருவை
வழியறி வார்நல் வழியறி வாளர்
அழிவறி வார்மற்றை யல்லா தவரே.

செந்தமிழ் வேதாகமங்கள் கண்ணாகக் குற்றம் ஒரு சிறிதும் இல்லாத மேலான சிவகுருவின் திருவடியைச் சார்ந்து அவரை வழிபாடு செய்தலையறிவார் வீடுபேறு எய்தும் நன்னெறியறிவாராவர். இவ் வுண்மை அறியாதவர் பிறந்து இறந்து உழலும் அழிவுநெறியினையே அறிவர். அவர்கள் வீடுபேற்றுக்கு உரியர் அல்லாதவராவர்.

தொழில் - கன்மங்கள். சுருதி - வேதம், ஆகமம். பழுது - குற்றம். வழியறிவார் - வழிபட அறிவார். அழிவறிவார் - அழிவினைச் செய்யும் துன்மார்க்கம் அறிவார்.

## 1663. பதைத்தொழிந் தேன்பர மாவுனை நாடி

1663. பதைத்தொழிந் தேன்பர மாவுனை நாடி
யதைத்தொழிந் தேன்இனி யாரொடுங் கூடேன்
சிதைத்தடி யேன்வினை சிந்தனை தீர
உதைத்துடை யாயுகந் தாண்டரு ளாயே.

சிவபெருமானே! பிறப்புத் துன்பங்கண்டு அஞ்சிப் பதறினேன். உன் திருவடியை நாடி இடைவிடாது அலைந்தேன். அறியாதார் உடம்பினை இனியாரென்று கூறுகின்றனர். அவ் வுடம்புடன் கூடேன். அடியேனின் இருவினையினையும் சிதைத்து மனக்கவலை தீரப் பிறப்பினை உதைத்து, அடியேனை உவந்து ஆண்டருள்வாயாக.

பதைத்து - பதறி. பரமா - சிவனே. அதைத்து - அலைந்து. உதைத்து - நீக்கி. உடையாய் - என்னை அடிமை கொண்டவனே.

# 1664. பதைக்கின்ற போதே பரமென்னும் வித்தை

1664. பதைக்கின்ற போதே பரமென்னும் வித்தை
விதைக்கின்ற வித்தினை மேல்நின்று நோக்கிச்
சிதைக்கின்ற சிந்தையைச் செல்வே நிறுத்தி
இசைக்கின்ற அன்பருக் கீயலு மாமே.

பிறப்பு இறப்புகளில் படும் துன்பத்தை நினைக்கின்றபோதே உள்ளம் பதைக்கின்றது. மேலாகிய சிவனைச் சேரும் திருவடியுணர்வைப் புருவ நடுவினின்றும் நோக்கி, அந் நோக்கத்திற்கிடையூறாக உலகியலிற் செல்லும் மனத்தைத் தடுத்து நேரே நிறுத்தி சிவன் திருவடியில் இடையறாது சேர்க்கின்ற மெய்யன்பர் அருமறை பெறுதற்குரியராவர். அருமறை - உபதேசம். செந்தமிழ்த் திருவைந்தெழுத்து.

பதைக்கின்றபோது - பிறப்பு இறப்பை நினைத்துப் பதறுகின்ற காலத்து. பரம் என்னும் - சிவஞானம் என்னும். மேனின்று - புருவ மத்தியில் நின்று. சிதைக்கின்ற - கெடுதலைச் செய்கின்ற. செவ்வே - நேரே. இசைக்கின்ற - ஈசன் திருவடியில் பொருந்தி வைக்கின்ற.

## 1665. கொள்ளினும் நல்ல குருவினைக் கொள்ளுக

1665. கொள்ளினும் நல்ல குருவினைக் கொள்ளுக
உள்ள பொருளுடல் ஆவி யுடன்ஈக
எள்ளத் தனையும் இடைவிடா தேநின்று
தெள்ளி யறியச் சிவபதந் தானே.

உய்யுநெறி காட்டும் செய்ய சிவகுருவினை ஆராய்ந்து கொள்க. அச் சிவகுருவின்பால் உடைமை, உடல், உயிர் என்னும் மூன்றனையும் ஒருங்கீக. அவன் நிழல்போல் எள்ளத்தனை காலமும் அவனை விட்டு நீங்காது உடனுறைக. அவனருளால் பொருளுண்மை தத்துவ உண்மை உணர்ந்தவர் சிவனடிசேர்வர்.

உள்ளபொருள் - உரிமையாயுள்ள பொருள். எள்ளத் தனையும் - சிறிதும். தெள்ளி அறிய - ஆராய்ந்து உணர.

## 1666. சோதி விசாகந் தொடர்ந்திரு தேள்நண்டு

1666. சோதி விசாகந் தொடர்ந்திரு தேள்நண்டு
ஓதிய நாளே உணர்வது தானென்று
நீதியுள் நீர்மை நினைந்தவர்க் கல்லது
ஆதியும் ஏதும் அறியகி லானே.

உலகோர் கொள்ளும் முறைமையுள் அருமறைகொள்ளச் சோதி. சிவாகம் முதலிய நாள்களும்; தேள், நண்டு முதலிய கோள்களும்,
திங்கள் முதலிய கிழமைகளும் சிறந்தனவாக நினைப்பவர்க்கல்லது அதன் முதலும் காரணமும் அறியவொண்ணாவென்க.

சோதி - சுவாதி நாள். தேள் - விருச்சிகம். நண்டு - கடகம், ஓதிய நாள் - சொல்லப்பட்ட சுப வாரங்கள். ஆதியும் ஏதும் - முதலும் காரணமும்.

## 1667. தொழிலார மாமணித் தூய்தான சிந்தை

1667. தொழிலார மாமணித் தூய்தான சிந்தை
எழிலால் இறைவன் இடங்கொண்ட போதே
விழலார் விறலாம் வினையது போகக்
கழலால் திருவடி கண்டரு ளாமே.

சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்னும் நன்னெறி நான்மை நற்றவத்தினின்று மனம்தனை மாமணிலிங்க வைப்பாகக் கொண்டு வழிபடச் சிவபெருமானும் அந் நெஞ்சத்திடமாக உறைந்தருள்வன். அவன் உறைந்ததும் பயனில் முயற்சிகளில் சென்று ஆணவ வலிமை கொண்டு திரியும் சிறப்பிலாருடன் சேரும் தீச்சேர்கை அகலும். அஃதகலும் பொருட்டுக் கழலணிந்த திருவடியைக் காண்பாயாக. காணவே அருள்நிறை வுண்டாகும்.

தொழிலார - சரியை முதல் நாற்பாதங்களிலும் சித்தி பெற்ற. விழலார் - சரியை முதலிய மார்க்கங்களை அனுசரியாத வீணருடைய. விறலாம்-வலிமை பொருந்திய.

## 1668. சாத்திக னாய்ப்பர தத்துவந் தானுன்னி

1668. சாத்திக னாய்ப்பர தத்துவந் தானுன்னி
ஆத்திக பேத நெறிதோற்ற மாகியே
ஆர்த்த பிறவியி னஞ்சி யறநெறி
சாத்தவல் லானவன் சற்சீட னாமே.

அறிவும் அமைதியுமாகிய தலைமைக்குணம் உடையனாய் உண்மைப்பொருளாகிய சிவனடியை மறவாமல் நினைந்து, கடவுள் உண்டெனுங் கொள்கை வேறுபாடுடைய நெறிகளின் அடிப்படைத் தோற்றத்தை மேற்கொண்டு, எல்லையின்றிப் பிணித்துவரும் பிறவியினுக்கு அஞ்சிச் செந்நெறியாகிய அறநெயின்கண் உறைத்துநிற்க வல்லான் நன் மாணவனாவன்.

சாத்திகனாய் - சத்துவகுணம் உடையவனாய். ஆத்திக பேத நெறி - கடவுள் உண்டென்னும் பல சமயங்கள். ஆர்த்த - பந்தித்த. சாத்தவல்லான் - கைக்கொள்ளவல்லான்.

## 1669. சத்தும் அசத்துமெவ் வாறெனத் தானுன்னிச்

1669. சத்தும் அசத்துமெவ் வாறெனத் தானுன்னிச்
சித்தை யுருக்கிச் சிவனருள் கைகாட்டப்
பத்தியின் ஞானம் பெறப்பணிந் தானந்தச்
சத்தியில் இச்சைத் தகுவோன்சற் சீடனே.

நிலைப்பும் அறிவும் உள்ளனவாகிய சிவமும், நிலையில்லனவும் அறிவில்லனவும் ஆகிய காரியமல கன்ம மாயைகளும் குரு வருளால் நினைந்து மலப்பிணிப்போடு கூடிய அறிவுப் பொருளாகிய ஆன்மாவை, அப் பிணிப்பின்றும் வேறுபடுத்திச் சிவபெருமான் திருவருள் கைகாட்டுதலால் முழுக்காதலாம் பத்தியினால் திருவடியுணர்வு பெறுவர். பெறவே, இடையறா வணக்கம் புரிவர். திருவடிப் பேரின்பத் தின்கண் அன்புமீதூரும். அத்தகையோன் நன்மாணவன் ஆவன். காரணமல கன்மமாயைகள் நிலைப்புள்ளன. ஆனால் அறிவில்லன. கைகாட்டல் - துணைபுரிதல். தகுவோன் - தகையோன்.

சித்தை உருக்கி - பாசத்தொடு கலந்த சித்துருவனான ஆன்மாவை வேறுபிரித்து. ஆனந்த சத்தி - முத்தி.

## 1670. அடிவைத் தருளுதி யாசானின் றுன்னா

1670. அடிவைத் தருளுதி யாசானின் றுன்னா
அடிவைத்த மாமுடி மாயப் பிறவி
அடிவைத்த காய அருட்சத்தி யாலே
அடிபெற்ற ஞானத்த னாசற்று ளோனே.

சிவகுருவே இப்பொழுதே உன் திரவடியை அடியேன் முடிமீதே வைத்தருள் என்று உள்ளன்புடன் நினைந்தால், தொன்மையை புல்லிய ஆணவல்லிருளும் துன்பத்திலே முடியும் மாயப்பிறவியும் யாவற்றையும் ஆதியாய் நின்று தொடங்கி இயக்கியருளும் அறிவுப் பெரு வெளியில் திகழும் திருவருளம்மை அருளால் அவை முற்றும் அகலும். அகலவே திருவடிஞானம் பெற்ற திருவாளனாவன். அவனே குற்றமற்ற நற்றவனாவன்.

இன்று உன்னா - இப்பொழுது நினைத்து. அடிவைத்த - தொடங்கிய. காய - பரம ஆகாய. அடிபெற்ற ஞானம் - நிலைத்த ஞானம். ஆசு - குற்றம்.

## 1671. சீராரு ஞானத்தின் இச்சை செலச்செல்ல

1671. சீராரு ஞானத்தின் இச்சை செலச்செல்ல
வாராத காதல் குருபரன் பாலாகச்
சாராத சாதக நான்குந்தன் பாலுற்றோன்
ஆராயும் ஞானத்த னாமடி வைக்கவே.

திருவடிப்பேற்றிற்கு உரித்தாய சிவஞானத்தில் ஆராக் காதல் மீதூர குருபரன் திருவடியில் ஏனையார்க்கு வாராத பெருங்காதல் உண்டாகும். குருவருளான் அன்றி எய்தப்பெறாத திருவடிப்பேற்றிற்குத் துணையாகிய சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்னும் நன்னெறி நான்மையும் கைகூடப் பெற்றோனாவன். சிவகுருவின் திருவடி முடிசேரச் சிவஞானச் செல்வம் சேர்ந்த சீரியோனாவன். ஏனையார் - அபக்குவர். சாதகம் - துணை.

வாராத காதல் - அபக்குவர்க்கு வாராத அன்பு. குருபரன் பாலாக - குருவினிடத்து உண்டாக. சாதக நான்கும்- சரியையாதி நான்கும் அடிவைக்க - குருவானவர் திவடி தீக்கை செய்து உபதேசிக்க

## 1672. உணர்த்து மதிபக் குவர்க்கே யுணர்த்தி

1672. உணர்த்து மதிபக் குவர்க்கே யுணர்த்தி
இணக்கிற் பராபரத் தெல்லையுள் இட்டுக்
குணக்கொடு தெற்குத் தரபச்சி மங்கொண்டு
உணர்த்துமி னாவுடை யான்தன்னை யுன்னியே.

முற்செய்தவத்தான் சிவஞானம் எய்துதற்குரிய சிறந்த செவ்விவாய்ந்த நன்மாணவாக்கே திருவைந்தெழுத்தை யுணர்த்தி, எப்பொருட்கும் சார்பாய் முழுமுதற்சிவம் நின்றும் எவற்றினும் தோய்தலும் பற்றுச்செய்தலுமில்லாத அதன் மேலான திருவடி எல்லையுள் ஆவியினைப் புகுவித்து, முறையே : கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்கு என்னும் நாற்புலங்களையும் மேற்கொண்டு நாநெறியினையும் அறிவுறுத்தியருள்வன். ஆவிக்குரியானாகிய சிவபெருமான் தன்னை நினைந்து மேலோதியவற்றை உணர்த்தியருள்வன்.

இணக்கில் - ஒன்றோடும் பற்றுதல் இல்லாத. பராபரத்து எல்லையில் - சிவ வியாபகத்துள். உத்தரம் - வடக்கு. பச்சிமம் - மேற்கு. ஆவுடையான் தன்னை - பசுபதியை.

## 1673. இறையடி தாழ்ந்தை வணக்கமும் எய்திக்

1673. இறையடி தாழ்ந்தை வணக்கமும் எய்திக்
குறையது கூறிக் குணங்கொண்டு போற்றச்
சிறையுடல் நீயறக் காட்டிச் சிவத்தோ
டறிவுக் கறிவிப்போன் சன்மார்க்கி யாமே.

முழுமுதற் சிவபெருமான் திருவடிக்கண் பேரன்புபூண்டு தாழ்ந்து, நெஞ்சுநேர் இரு கையும் கூப்பல், தலைமேல் ஏறக் கூப்பல், தலை ஒன்று கையிரண்டு முழங்காலிரண்டு ஆக ஐந்துறுப்பு; இவற்றுடன் நெஞ்சமும் கூடி ஆறுறுப்பு; தலை ஒன்று, காதிரண்டு, கையிரண்டு, கால் இரண்டு நெஞ்சு ஒன்று ஒக எட்டுறுப்பு ஆகிய இம்முறையால் வணங்குவது ஐவகை வணக்கமாகும் நமக்கு வேண்டும் இன்றியமையாப் பொருள்களை வேண்டி விண்ணப்பித்தல், இறைவன்றன் எண்குணங்களையும் புகழ்ந்து போற்றல், கட்டும், யான் எனதென்னும் செருக்கும் அற வொழுகல் ஆகிய இப் பண்புகளைச் சிவகுரு அறிவுறுத்துவன். மேலும், சிவபெருமான் பண்பினையும் அறிவுறுத்துவன். இவற்றை அன்புடன் ஏற்றுக்கொள்வோன் நன்னெறி நன்மாணவனாவன். நன்னெறி - சன்மார்க்கம். இவ்வணக்கம் நம்பியாரூரர் திருவாரூரில் 'அன்பு பெருக வுருகியுள்ள மலைய அட்டாங்க பஞ்சாங்கமாக' வணங்கினாரென்பதனால் விளங்கும்.

ஐவணக்கம் - (1) கைகளால் கும்பிடுதல். (2) கைகளைத் தலைக்குமேல் தூக்கி கும்பிடுதல் (மூன்றுறுப்பு). (3)

கைகள் இரண்டு, தலை ஒன்று, முழங்கால்கள் இரண்டு ஆக ஐந்து உறுப்புகள் நிலந்தோய வணங்கல். (4) மேற்கூறிய ஐந்து உறுப்புகளுடன் நெஞ்சம் நிலந்தோய வணங்கல். (5) கைகள் 2, கால்கள் 2, தலை 1, காதுகள் 2, நெஞ்சு 1 ஆக எட்டு உறுப்புக்களும் நிலந்தோய வணங்கல். இவைகளை வடமொழியாளர் ஏகாங்கம், திரியாங்கம், பஞ்சாங்கம், சாஷ்டாங்கம், அஷ்டாங்கம் என்பர். சிறையுடல் - பந்தமான சரீரம். நீயற - நீ என்பது அல்ல என்று. அறிவுக்கு - ஆன்மாவின் அறிவுக்கு

## 1674. வேட்கை விடுநெறி வேதாந்த மாதலால்

1674. வேட்கை விடுநெறி வேதாந்த மாதலால்
வாழ்க்கைப் புனல்வழி மாற்றிச்சித் தாந்தத்து
வேட்கை விடுமிக்க வேதாந்தி பாதமே
தாழ்க்குந் தலையினோன் சற்சீட னாமே.

மறைமுடிவாம் வேதாந்தமென்பது இயற்கை உடைமையாகிய நில முதலியனவும், செயற்கை உடைமையாகிய உடை, உறையுள், ஊர்தி, ஒப்பனை முதலிய உடைமைகளும், உயிர்நிலையாகிய உடம்பும் என்னும் மூவகைப் பற்றுக்களும் விட்டநிலையாகும். இம் மூன்றனையும் மண், பொன், பெண் எனக் கூறுவர். புலன்வழிச் செல்லும் புன்னெறி வாழ்க்கையினை மாற்றி, அப் புலன்களை நலன்வழிச் செலுத்தும் சித்தாந்தத்து, உலகியல் வேட்கைவிட்ட வேதாந்தி முறையாக வந்து சேர்வன் . சேர்ந்து சித்தாந்தச் சிவகுருவின் பாதம் தலையினால்வணங்குவன். அவனே நன்னெறிசேர் நன்மாணாக்கன் ஆவன்.

வேட்கை - மூவகை ஆசைகள். வாழ்க்கைப் புலன் - உலக வாழ்வுக்கு ஆதாரமான இந்திரியங்கள். சித்தாந்தத்து வேட்கை விடுமிக்க வேதாந்தி - சுத்த அத்துவித சித்தாந்தத்திலே ஆசைகொள்ளும் வேதாந்தி. தாழ்க்கும் - வணங்கும்.

## 1675. சற்குணம் வாய்மை தயாவிவே கந்தண்மை

1675. சற்குணம் வாய்மை தயாவிவே கந்தண்மை
சற்குரு பாதமே சாயைபோல் நீங்காமே
சிற்பர ஞானந் தெளியத் தெளிவோர்தல்
அற்புத மேதோன்ற லாகுஞ்சற் சீடனே,

நன்னெறி நன்மாணாக்கனுக்குரிய பத்துத் தன்மைகளும் முறையே வருமாறு: நற்பண்பு, வாய்மை, இரக்கம், நல்லறிவு, பொறுமை, குருவினடி நீங்காமை, உண்மையறிவின்பப் பெரும் பொருளுணர்வு, தெளிவு, ஓர்வு, அருள் நிகழ்ச்சி என்பன. இவை முற்றவுமுடைய மெய்யுணர்வினனே நன்மாணவனாவன். சற்சீடன் - நன்மாணவன்.

தயா - தயை, கருணை, இரக்கம். சாயைபோல் - நிழல் போல். தண்மை - பொறுமை.
ஆறாம் தந்திரம் முற்றும்.

## 1676. நாலும் இருமூன்றும் ஈரைந்தும் ஈராறுங்

1676. நாலும் இருமூன்றும் ஈரைந்தும் ஈராறுங்
கோலிமேல் நின்ற குறிகள் பதினாறும்
மூலங்கண் டாங்கே முடிந்து முதல்இரண்டுங்
காலங்கண் டானடி காணலு மாமே.

அகநிலைகள் ஆறும் வருமாறு: நான்கிதழுள்ள மூலமும், ஆறிதழுள்ள கொப்பூழும், பத்து இதழுள்ள மேல்வயிறும், பன்னிரண்டிதழுள்ள நெஞ்சமும், பதினாறு இதழுள்ள மிடறும், இரண்டு இதழ் உள்ள புருவ நடுவும் ஆகிய ஆறிடங்களும் ஆறு ஆதாரங்கள் எனப்படும். இவற்றிற்குரிய எழுத்துக்கள் அராய்ந்து அமைக்கபெறும். இந் நிலைக் களங்களின் நினைந்து வழிபடக் காலத்தைத் தோற்றுவித்துத் தொழிற்படுத்தும் சிவபெருமானின் திருவடி காணலாகும்.

நாலும் - நான்கு இதழ்கள் உள்ள மூலாதாரம். இரு மூன்றும் - ஆறு இதழ்கள் உள்ள சுவாதிட்டானம். ஈரைந்தும் - பத்து இதழ்கள் எள்ள மணிபூரகம். ஈராறும் - பன்னிரண்டு இதழ்கள் உள்ள அனாகதம். பதினாறும் - பதினாறு இதழ்கள் உள்ள விசுத்தி. இரண்டும் - இரண்டு இதாழ்கள் உள்ள ஆஞ்ஞை. காலங்கண்டான் கால தத்துவத்தையே உண்டாக்கியவன் குறிகள் - அக்கரங்கள்.

## 1677. ஈராறு நாதத்தில் ஈரெட்டாம் அந்தத்தின்

1677. ஈராறு நாதத்தில் ஈரெட்டாம் அந்தத்தின்
மேதாதி நாதாந்த மீதாம் பராசத்தி
போதா லயத்த விகாரந் தனிற்போத
மேதாதி யாதார மீதான உண்மையே.

ஓசை மெய்யாகிய நாத தத்துவத்தின்கண் பன்னிரு கலைகளோடு கூடியது சூரியமண்டலம்; பதினாறு கலைகளோடு கூடியது திங்கள் மண்டலம். நிலமுதல் நாதம் ஈறாகச் சொல்லப்பட்ட முப்பத்தாறு மெய்களுக்கும் மேலாகப் பேராற்றலாகிய திருவருளம்மை வீற்றிருந்தருள்வள். இயற்கையுணர்வின் இருப்பிடமாகிய தனிமுதற் சிவன் அதற்குமேல் காணப்படுவன். இவற்றிற்கெல்லாம் சார்பு நிலைக்களமாக வுள்ளதும் அச் சிவனேயாவன்.

ஈராறு நாதத்தில் - நாத தத்துவததில் பன்னிரு கலைகள் (சூரிய மண்டலம்). ஈரெட்டா மந்தத்தில் - சந்திர மண்டலத்தில் பதினாறு கலைகள். மேதாதி - பிருதிவி முதலாக. போதாலயம். ஞானாலயம. அவிகாரம் - அருவமாகிய சிவன். மீதானம் - நிராதாரத்துக்கு மேல்பட்ட இடம் (விமலனுடைய இடம்). "ஆதாரத்தாலே நிராதாரத்தே சென்று, மீதானத்தே செல்க உந்தீபற் - விமலற்கிடமதென்று உந்தீபற."

## 1678. மேலென்றுங் கீழென் றிரண்டறக் காணுங்கால்

1678. மேலென்றுங் கீழென் றிரண்டறக் காணுங்கால்
தானென்றும் நானென்றுந் தன்மைகள் ஓராறும்
பாரெங்கு மாகிப் பரந்த பராபரங்
காரொன்று கற்பக மாகிநின் றானே,

மேல் கீழ் என்னும் பாகுபாடுகள் நீங்கி ஆராயுமிடத்துத் தான், யான், நி என்னும் மூவிடப்பெயர்களும்; அவன், அவள், அது என்னும் திணை பாற் பெயர்களும் கூடிப் பெயர்த்தன்மை ஆறாகும். நிலவுலகமெங்கணும் பரந்து நிறைந்த முழுமுதற் றனிப்பொருளாம் சிவன் வேண்டாமைக் கொடுத்தலிற் காரும் வேண்டாக்கொடுத்தலிற் கற்பகமும் ஆகி நின்றருள்கின்றனன்.

ஓராறு - தான், நான், நீ, அவன், அவள், அது ஆக ஆறு தன்மைகள். காரொன்று கற்பகமாக - மேகத்தையும் கற்பக மரத்தையும் ஒப்பாக.

# 1679. மேதாதி யாலே விடாதோ மெனத்தூண்டி

1679. மேதாதி யாலே விடாதோ மெனத்தூண்டி
ஆதார சோதனை அத்துவ சோதனை
தாதார மாகவே தானெழச் சாதித்தால்
ஆதாரஞ் செய்போக மாவது காயமே.

பதினாறு கலைப் பிராசாதத்தாலே இடையறாது ஓமெனத் தூண்டி ஆறு நிலைக்களங்களையும் ஆறு வழிகளையும் சிவகுருவின்திருவருட்டுணையால் செவ்வையுறத் திருத்தினால் உடம்பின்கண் வழிபடற்கு இயைபு உண்டாகும். மூலாதார முதல் வழிபாடியற்றினால் அங்ஙனம் வழிபாடுவார்க்கு வரும் நுகர்வு சிவநுகர்வேயாம். பிராசாதம் - ஒருவகை மந்திரம்.

மோதாதியாலே - பதினாறு காலைப் பிராசாதத்தாலே. ஆதார சோதனை - ஆறு ஆதார சோதனை. அத்துவா சோதனை - ஆறு அத்துவாக்கள் சோதனை (மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை). தாது ஆரமாக - மூலாதாரம் முதலாகக் கொண்டு. செய்போகம் - சிவபோகம்.

## 1680. ஆறந்த முங்கூடி யாகும் உடம்பினிற்

1680. ஆறந்த முங்கூடி யாகும் உடம்பினிற்
கூறிய வாதார மற்றுங் குறிக்கொண்மின்
ஆறிய அக்கரம் ஐம்பதின் மேலாக
ஊறிய வாதாரத் தோரெழுத் தாமே.

சொல்லும் பொருளுமாகிய வழிகள் ஓராறு. அவை முறையே எழுத்து மொழி மறை எனவும், உலகு கலன் (தத்துவம்) கலை எனவும் கூறுப. இவற்றான் இயங்குவது உடம்பு. இதன்கண் மூலமுதல் ஆறு நிலைக்களங்களிலும் வழிபடும் முறைமைகளைக் குறிக்கொண்டு போற்றுமின். அமைந்துள்ள எழுத்துக்கள் ஐம்பதின்மேல் அமுதூறும் மூலாதாரத்து எழுத்து ஒன்று உண்டு. அஃது ஓமொழி என்ப.

ஆறந்தம் - அத்துவாக்கள் ஆறு. ஆறிய - அமைந்துள்ள. ஊறிய - அமுதம் ஊறுதற்குரிய. ஓர் எழுத்து - பிரணவம்.

## 1681. ஆகும் உடம்பும் அழிக்கின்ற அவ்வுடல்

1681. ஆகும் உடம்பும் அழிக்கின்ற அவ்வுடல்
போகும் உடம்பும் பொருந்திய வாறுதான்
ஆகிய அக்கரம் ஐம்பது தத்துவம்
ஆகும் உடம்புக்கும் ஆறந்த மாமே.

தோற்றும் பருவுடம்பு அழிகின்ற வுடலாகும். தோன்றா நுண்ணுடல் இதன்கண்ணின்று உயிருடன் ஏகும் உடம்பாகும். இவற்றுக்குரிய எழுத்துக்கள் ஐம்பதாகும். தத்துவமாகிய உடம்புக்கு வழிகள் ஆறும் உறுப்புகளாகும். வழிகள் - அத்துவாக்கள்.

ஆகும் உடம்பு - தூல சரீரம். போகும் உடம்பு - சூக்கும சரீரம் ஆறந்தம் - அத்துவாக்கள் ஆறு.

## 1682. ஆயு மலரின் அணிமலர் மேலது

1682. ஆயு மலரின் அணிமலர் மேலது
வாய இதழும் பதினாறும் அங்குள
தூய அறிவு சிவானந்த மாகிப்போய்
மேய அறிவாய் விளைந்தது தானே.

மூலாதாரங்களின் வைத்து ஆராயுமலர்களின் மேலானது அழகிய பதினாறு இதழ்களுடைய மிடற்றின்கண் மலராகும். ஆங்கு வழிபடும் தூய அறிவு சிவப்பேரின்பமமாய்த் திகழும். அவ் வறிவு சிவ அறிவினுள் அடங்கிச் சிவ அறிவாய் விளங்கும்.

ஆயுமலர் - ஆராய்தற்குரிய ஆதார மலர்கள். இதழ் பதினாறு - விசுத்தி. அறிவு - ஆன்மா. மேய அறிவு - போருந்திய சிவம்.

## 1683. இலிங்கம தாவ தியாரும் அறியார்

1683. இலிங்கம தாவ தியாரும் அறியார்
இலிங்கம தாவ தெண்டிசை யெல்லாம்
இலிங்கம தாவ தெண்ணெண் கலையும்
இலிங்கம தாக எடுத்த துலகே.

அம்மையப்பரின் அடையாளமாகிய சிவலிங்கமே எல்லாத் திசைகளும், எல்லாக் கலைகளும், எல்லாவுலகுமாம். இவ் வுண்மையினை நுண்ணுணர்வினாரே அறிவர். ஏனையார் அறியார். அம்மை ஆற்றலாகவும் அப்பன் பொருளாகவும் திகழ்வர். ஆதலால் எப்பொருளை எடுத்துக் கொண்டாலும் ஆற்றலும் ஆற்றலின் நிைலைக்களமுமாக ஒவ்வொன்றும்இருதிறப்படும். இது கதிரும் கதிரவனும் போன்ற நிலையாகும். எங்கும் நிறைந்து நீக்கமற நிற்கின்ற சிவனும் சத்தியும் எல்லாப் பொருளையும் இயைந்தியக்குகின்றமையான் எல்லாம் சிவனெனப்படும் சத்தி சத்தன் என்பதை ஆற்றல் ஆற்றலி எனவும் கூறுவர்.

இலிங்கம் - குறி. உலகமும் சரம் அசரங்களும் எல்லாம் சிவ வடிவம் என்பது.

## 1684. உலகில் எடுத்தது சத்தி முதலா

1684. உலகில் எடுத்தது சத்தி முதலா
உலகில் எடுத்தது சத்தி வடிவாய்
உலகில் எடுத்தது சத்தி குணமாய்
உலகம் எடுத்த சதாசிவன் தானே.

சதாசிவனாகிய முழுமுதல் தன்னைவிட்டு நீங்கா ஆணையாகிய சத்தியே வினைமுதற் காரணமாகக்கொண்டு உலகினைக் கருத்தளவானே படைத்தருள்கின்றனன். அதனால் சத்தியே உலகின் காரணம், உலகின் வடிவம், உலகின் குணம் என ஏற்றிக் கூறுவர். ஏற்றுரை - புனைவு. கருத்து : திருவுள்ளக்குறிப்பு.

சத்தி முதலா - சத்தியை முதற்காரணமாக் கொண்டு.

## 1685. போகமும் முத்தியும் புத்தியுஞ் சித்தியும்

1685. போகமும் முத்தியும் புத்தியுஞ் சித்தியும்
ஆகமும் ஆறாறு தத்துவத் தப்பாலாம்
ஏகமும் நல்கி யிருக்குஞ் சதாசிவம்
ஆகம வத்துவா வாறுஞ் சிவமே.

அன்பியல் வாழ்க்கையாகிய போகமும், அருளியல் வாழ்க்கையாகிய முத்தியும், முறையே அவற்றின் பயனாகிய சிற்றின்பமாகிய புத்தியும், பேரின்பமாகிய சித்தியும், சித்திக்குரிய வழிவகை கூறும் திருமூலர் போன்ற செந்தமிழாகமும், அவற்றின்கண் காணப்படும் அருஞ்சைவர் தத்துவம் முப்பத்தாறும், அதற்கு அப்பாலாகத் திகழும் ஒப்பில் ஒருமுதலாம் சதாசிவமும். ஆகமநூலிற் காணப்படும் அத்துவாவாகிய வழிகள் ஆறும் சிவபெருமானேயாம். சிவபெருமானே யாம் என்பதற்குப் பொருள் அவன்றன் ஆணையால் நிகழ்வன என்பதாம்.

ஏகம் - ஆன்மா. ஆகம - ஆகமங்கள் கூறுகின்ற.

## 1686. ஏத்தினர் எண்ணிலி தேவரெம் ஈசனை

1686. ஏத்தினர் எண்ணிலி தேவரெம் ஈசனை
வாழ்த்தினர் வாசப் பசுந்தென்றல் வள்ளலென்று
ஆர்த்தனர் அண்டங் கடந்தப் புறநின்று
காத்தனன் என்னுங் கருத்தறி யாரே.

எம்மை ஆளும் பெருமானாகிய அழிவில் செல்வனை முப்பத்து முக்கோடி என வரையறுக்கப்பெறும் அளவிலாத தேவர்கள் மணம் கமழ்கின்ற இளம்தென்றலாகக் கருதப்படும் காற்றும் ஏனைப் பூத நான்கும் ஐந்து திருவுருவில் வைத்து வழிடுகின்றனர். அதற்கு மேலுள்ள அருவுருவத் திருமேனியையேனும், அருவத் திருமேனியையேனும். அத்தேவர்கள் அறியார். சிவன் இம் முத்திறத் திருமேனிக்கும் அண்டங்களுக்கும் அப்பால் விளங்கும் இயற்கை உண்மை உணர்வுத் திருமேனியை அத்தேவர் எங்ஙனம் உணருவர்?

வாசப் பசுந்தென்றல் வள்ளல் என்று - பஞ்சபூதங்களையே தன்னுருவாக்கொண்ட சகுண பரசிவத்தை. வாழ்த்தினர் - தேவர் பூசித்தனர். அண்டங்.....யாரே - நிர்க்குண சிவத்தைத் தேவர்கள் அறியார்.

## 1687. ஒண்சுட ரோன் அயன் மால்பிர சாபதி

1687. ஒண்சுட ரோன் அயன் மால்பிர சாபதி
ஒன்சுட ரான இரவியோ டிந்திரன்
கண்சுட ராகிக் கலந்தெங்குந் தேவர்கள்
தண்சுட ராயெங்கும் தற்பர மாமே.

ஒளிசேர் தீ, அயன், மால், படைப்புத் துணையாம் ஒன்பான் படைப்போர் (பிரசாபதி), ஒண்சுடரான ஞாயிறு, வானவர் கோன் முதலிய தேவர்களுக்கும் அவர்களுடன் கலந்து உள்நின்று உணர்த்துவோன் சிவன். எங்கும் நிறைந்து குளிர்ந்தருள் செய்பவனும் அவனே.

ஒண்சுடர் - அக்கினி. தண்சுடர் - சந்திரன்.

## 1688. தாபரத் துண்ணின் றருளவல் லான்சிவன்

1688. தாபரத் துண்ணின் றருளவல் லான்சிவன்
மாபரத் தண்மை வழிபடு வாரில்லை
மாபரத் துண்மை வழிபடு வாளர்க்கும்
பூவகத் துள்நின்ற பொற்கோடி யாகுமே.

அறிவில் பொருளாகிய மண் முதலியவற்றினின்றும் சிவபெருமான் வழிபடுவோர்க்கு அருள்புரிவன் சிவன். அவன் முழுமுதற் கடவுளாவன். அத்தகைய மெய்ப்பொருளை வழிபடுவாரில்லை. அவ்வுண்மையோர்ந்து வழிபடுவார்க்கு உச்சியின் மேற் காணப்படும் ஆயிர இதழ்த் தாமரையின்கண் வீற்றிருந்தருளும் திருவருள் அம்மையின் பேரருள் உண்டாம்.

தாபரம் - அசரப் பொருள்கள். மாபரம் - பொருமையுள்ள சிவம். பூவகம் - சகசிர மலர். பொற்கொடி - சிவ சத்தி

## 1689. தூய விமானமுந் தூலம தாகுமால்

1689. தூய விமானமுந் தூலம தாகுமால்
ஆய சதாசிவ மாகுநற் சூக்குமம்
பாய பலிபீடம் பத்திர லிங்கமாம்
ஆய அரனிலை ஆய்ந்துகொள் வார்கட்கே.

(ப. இ .) கருவறையின்மேல் புறந்தோன்றும் மேன்முடி உச்சியாகிய விமானம் தூய்மையும் பருமையும் வாய்ந்த சிவக்குறியாகும். சிவக்குறி - சிவலிங்கம். அவ் விமானத்தின்கீழ் அகத்தே கருவறையில் விளங்கும் அருளோன் ஆகிய சதாசிவன் நுண்ணிய சிவக்குறியாவன். பரந்த பலிபீடம், ஆனேறு இவையும் சிவலிங்கமென அழைக்கப்பெறும். பத்திரம் - ஆனேறு, சிறந்ததும் உறுதியளிப்பதுமாகிய திருக்கோவிலின் மெய்ம்மை நினைவார்க்கு இவ் வுண்மை செம்மையாகப் (7) புலப்படும். அரனிலை - சிவன் திருக்கோவில்.

விமானம் - கருப்பக்கிரகத்தின்மேல் கட்டப்படும் கோபுரம். தூலமதாகும் - தூல இலிங்க உருவமாகும். சதாசிவம் - கருப்பக் கிரகத்துள்ள இலிங்க வடிவம் சூக்கும இலிங்கம் ஆகும். பாய் - பரந்த. பலிபீடம் - பலி இடும் இடம். பத்திரம் - இடபம். அரனிலை - சிவாலயம்.
(7)

## 1690. முத்துடன் மாணிக்கம் மொய்த்த பவளமுங்

1690. முத்துடன் மாணிக்கம் மொய்த்த பவளமுங்
கொத்துமக் கொம்பு சிலைநீறு கோமளம்
அத்தன்றன் னாகம மன்ன மரிசியாம்
உய்த்ததின் சாதனம் பூமண லிங்கமே.

முத்து, மாணிக்கம், பவழம், திருவுருச் செதுக்கிய மரக் கொம்பு, பளிங்கு முதலிய வெண்கற்கள், திருவெண்ணீறு, மரகதம் சிவபெருமானை முழுமுதலாக்கொண்டு செந்தமிழின்கண் வரையப் பெற்ற திருமந்திரம் போன்ற ஆகம அருள் நூற்கள், திருவமுது, அமுது முதலாகிய அரிசி ஆகிய பத்தும் அழகிய தூய்மையாக்கும் மணமுள்ள சிவலிங்க வழிபாட்டுக்குரிய இலிங்கம் அமைக்கும் கருவித் துணைப் பொருள்களாகும். துணைப்பொருள் - சதானம்.

கொத்தும் அக் கொம்பு - சித்திரவேலை செய்யப்பட்ட மரம். அத்தன்றன் ஆகமம் - சாத்திரப் புத்தகம் (இன்னின்ன இலிங்கமாகப் பூசிக்கலாம் என்றது இம் மந்திரம்).

## 1691. துன்றுந் தயிர்நெய்பால் துய்ய மெழுகுடன்

1691. துன்றுந் தயிர்நெய்பால் துய்ய மெழுகுடன்
கன்றிய செம்பு கனலிர தஞ்சலம்
வன்திறல் செங்கல் வடிவுடை வில்லம்பொன்
தென்றியங் கொன்றை தெளிசிவ லிங்கமே.

இறுகிய தயிர், தூயநெய், பால், மெழுகுவதற்குப் பயன் படும் பசுச்சாணம், துரிசகன்ற செம்பு, தழல், பாதரசம், புனலின்கண் உண்டாம் சங்கினம், சுடப்பட்ட செங்கல், அழகிய வில்வம், பொன் ஆகிய பதினொன்றனுள் காலம் இடங்களுக்கு ஏற்ப அழகியதொன்றனைத் தெளிவாம் திருவடியுணர்வு கைவரச்செய்யும் சிவலிங்கமாக வைத்து வாபடுக. மெழுகு: தேன்மெழுகென்றலுமொன்று.

மெழுகு - மெழுகுக்குப் பயன்படும் சாணம். செம்பு - தாமிரம். கனல் - அக்கினி. இரதம். பாதரசம். சலம் - சலத்தில் உண்டாகும் சங்கு (சலஞ்சலம்). வில்லம் - வில்வம். தென் தியங்கு ஒன்றை - அழகு விளங்கும் தயிர் முதல் பொன் இறுதியாகச் சொல்லப்பட்ட பொருள்களில் ஒன்றை.

## 1692. அதுவுணர்ந் தோனொரு தன்மையை நாடி

1692. அதுவுணர்ந் தோனொரு தன்மையை நாடி
எதுவுண ராவகை நின்றனன் ஈசன்
புதுவுணர் வான புவனங்கள் எட்டும்
இதவுணர்ந் தென்னுடல் கோயில்கொண் டானே.

திருவருள் உணர்வால் சிவனை உணர்ந்தோன் ஆருயிரும் சிவனும் புணர்ப்பினால் ஒருதன்மையவாக நிற்கும் நிலைமையினை நாடி, எவ்வகையாலும் உணரவொண்ணாதபடி நின்றவன் சிவன் என்று தெளிவன் தெளியவே சிவனது முற்றுணர்வாகிய திருவடியுணர்வு யான் எனதென்னும் செருக்காகிய தன்முனைப்பு அற்றவிடத்து விளங்கி மேம்படும். சிவபெருமான் விளங்கும் எட்டு இடங்களையும் எண்பேருலகமாகக் கொள்ளப்படும். அவை பூதங்கள் ஐந்து; ஞாயிறு திங்கள், ஆருயிர் மூன்று ஆகிய எட்டு எனப்படும். அம் முறையில் அடியேன் உடம்பினையும் கோவிலாகக் கொண்டருளினன்.

அது - சிவம். ஒரு தன்மை - அத்துவிதம். எது - எதனாலும். புது உணர்வு - ஞானம். புவனங்கள் எட்டு பஞ்சபூதம், சூரியன், சந்திரன், ஆன்மா என்பவைகளுடன் கூடிய புவனங்கள். இது உணர்ந்து - இச் சரீரமும் தனக்கோர் உருவமாம் என்று கருதி.

## 1693. அகிலிட மாயறி யாமல் அடங்கும்

1693. அகிலிட மாயறி யாமல் அடங்கும்
உகலிட மாய்நின்ற வூனத னுள்ளே
பகலிட மாமுனம் பாவ வினாசன்
புகலிட மாய்நின்ற புண்ணியன் றானே.

அனைத்தினும் செறிந்து அதற்கு அப்பாலுமாய்த் திகழும் சிவன் அகலிடமாய், மலப்பிணிப்பினரால் அறிய ஒண்ணாதவனாய், அனைத்தும் ஒடுங்கும் ஒடுக்க நிலையமாய் நின்றனன். நம் உடம்பகத்தும் ஞாயிற்றை இடமாகக்கொண்டு எழுந்தருளி எஞ்சுவினையாகிய சஞ்சிதத் தொகுப்புகளை எரிசேர் வித்தென அழிப்பன். அனைத்துயிர்க்கும் அனைத்துலகங்களுக்கும் புகலிடமாயுள்ள புண்ணியச் செல்வனாவன் சிவன்.

(ப. இ.) அறியாமல் - உணர்தற்கு அரிதாய். உகலிடம் - அழிதற்கு இடம். பகலிடமாம் - சூரிய மண்டலத்தை இடமாகக் கொண்டருளிய. முனம் - முன் பிறப்புக்களில் ஈட்டிய.

## 1694. போது புனைகழல் பூமிய தாவது

1694. போது புனைகழல் பூமிய தாவது
மாது புனைமுடி வானக மாவது
நீதியுள் ஈசன் உடல்விசும் பாய்நிற்கும்
ஆதி யுறநின்ற தப்பரி சாமே.

மெய்யடியார்கள் பாடிப் பரவிப் பணிந்து திருமுறைப் போற்றித் தொடர் ஓதி வழிபட்ட நறுமலர் நிறைந்துள்ள திருவடிகள் கீழுலகத்தாவன. சலமகள் வீற்றிருக்கும் திருமுடி தூய வானகத்துக்கும் அப்பாலாகும். அறமுறையே சிறந்த சிவனார் திருமேனி விசும்பாகத் திகழும். ஆதியாகிய சிவபெருமான் உலகமே யுருவமாகக்கொண்ட திருக்கோலம் இதுவாகும்.

போது புனை - அன்பர்களால் சூட்டப்படும் மலரினை அணிந்த. மாது புனை - கங்கையைத் தரித்த. ஆதி உற நின்றது - அண்ட உருவமாய் நின்றது.

## 1695. தரையுற்ற சத்தி தனிலிங்கம் விண்ணாந்

1695. தரையுற்ற சத்தி தனிலிங்கம் விண்ணாந்
திரைபொரு நீரது மஞ்சன சாலை
வரைதவழ் மஞ்சுநீர் வானுடு மாலை
கரையற்ற நந்தி கலையுந் திக்காமே.

நிலத்தின்கண் அமைந்த ஆவுடையார் ஆகிய சத்தியின் மேல் சிவலிங்கம் விண்ணாகும். அலைபெருகும் கடல்,அச் சிவபெருமான் திருமுழுக்குச் செய்யும் திருமஞ்சனசாலையாகும். அவர் முழுகும் திருத்த நீர், மலையில் தவழும் உலையா மேகங்களாகும். திருமேனியில் சூடும் மாலை, விண்ணின்கண் காணப்படும் எண்ணிலா விண்மீன்களாகிய உடுக்களாகும். தத்துவங்கடந்த எல்லையிலாச் சிவபெருமானுக்குத் திரு ஆடை, எட்டுப் புலன்களாகும். உடு நட்சத்திரம். புலன் - திசை.

தரை உற்ற சத்தி - தரை ஆவுடையார். இலிங்கம் விண் ஆகாயம் இலிங்கம். திரை பெறுநீர் - கடல். மஞ்சன சாலை - நீர் ஆடுதற்குரிய இடம். வரை தவழ் மஞ்சு நீர் - வரைகளின்மேல் தவழும் மேகம், கங்கைநீர். வான் உடுமாலை - வானத்தில் விளங்கும் மீன் கணங்கள் ஆகாய இலிங்கத்தின்மேல் விளங்கும் மாலையாகும். கரை அற்ற நந்தி - தத்துவங்கடந்த நந்தியெம்பெருமான்.

## 1696. மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்

1696. மானுட ராக்கை வடிவு சிவலிங்கம்
மானுட ராக்கை வடிவு சிதம்பரம்
மானுட ராக்கை வடிவு சதாசிவம்
மானுட ராக்கை வடிவு திருக்கூத்தே.

மக்கள் யாக்கையின் வடிவு சிவலிங்கம்; மக்கள் வடிவு திருச்சிற்றம்பலமாகும்; மக்கள் வடிவு அருளோனாகிய சதாசிவன்; மக்கள் வடிவு அம்பலவாணர் இயற்றும் அருட்பெருங்கூத்து; சிவ பெருமான் மக்கள் யாக்கையை நடமாடுந் திருக்கோவிலாகக் கொண்டு வடிவாய் அரங்காய் வகுப்பாய் வாழ்வாய்ப் பயனளித்தருள்கின்றனன்.

ஆக்கை வடிவு - சரீரத்தின் அமைப்பு.

## 1697. உலந்திலர் பின்னும் உளதென நிற்பர்

1697. உலந்திலர் பின்னும் உளதென நிற்பர்
நிலந்தரு நீர்தெளி யூனவை செய்யப்
புலந்தரு பூதங்கள் ஐந்தும்ஒன் றாக
வலந்தரு தேவரை வந்திசெய் யீரே.

இறந்தவர் இறந்தே போனார் என்பதற்கிடனின்றி வினைக் கீடாக மீண்டும் பிறக்கின்றனர். அவர்கள் உடம்பு தோற்றமுறையில் நீரினின்று நிலம் தோன்றும் என்பதாகக் குறிக்கவே ஐம்பூதச் சேர்க்கையால் ஆகியது என்பது விளங்கும். இப் பிறப்பினை வெல்வது சிவபெருமான் திருவடி வணக்கத்தாலாகும்.

நிலந்தரு நீர் - நிலம் உற்பத்திக்குக் காரணமான நீர். தெளியூன் - காணப்பட்ட தூல உடல். புலந்தரு - அறியப்படுகின்ற. வலந்தரு - பிறப்பிறப்பை வெற்றிகொள்ளுமாறு வல்லமை தருகின்ற.

## 1698. கோயில்கொண் டன்றே குடிகொண்ட ஐவரும்

1698. கோயில்கொண் டன்றே குடிகொண்ட ஐவரும்
வாயில்கொண் டாங்கே வழிநின் றருளுவர்
தாயில்கொண் டாற்போல் தலைவனென் னுட்புக
வாயில்கொண் டீசனு மாளவந் தானே.

ஆருயிர்களின் உடம்பகத்து உறுப்புகளை இயக்கும் கொருட்டுத் தொன்மையிலேயே அருளோன், ஆண்டான், அரன், அரி, அயன் என்னும் ஐவரும் குடிகொள்கின்றனர். உடம்பினை இடமாகக் கொண்டு செலுத்துகின்றனர். கன்றை நினைந்து ஆ மனைபுகுவது போன்று, சிவபெருமான் அடியவாகளுக்கு அருள்புரிதல் வேண்டி அவர்கள் செய்யும் பேரன்புக்கீடாகச் சிவமாக்கி ஆண்டருள்வன்.

கோயில்கொண்ட அன்றே - சரீரம் எடுத்தபோதே. ஐவர் - ஐந்து கர்த்தர், ஐம்மூர்த்திகள். வாயில் கொண்டு சரீரத்தை வழியாகக்கொண்டு. வழிநின்று - சரீரத்தில் இருந்து கொண்டே. தாய் இல் கொண்டால்போல் - கன்றினையூட்டத் தாய்ப் பசு இல்லாம் நோக்கிச் சொல்வதுபோல. வாயில்கொண்டு அன்பினை வழியாகக்கொண்டு.

## 1699. கோயில்கொண் டானடி கொல்லைப் பெருமறை

1699. கோயில்கொண் டானடி கொல்லைப் பெருமறை
வாயல்கொண் டானடி நாடிகள் பத்துள
பூசைகொண் டான்புல னைந்தும் பிறகிட்டு
வாயில்கொண் டானெங்கள் மாநந்தி தானே.

மக்கள் யாக்கையினைத் திருக்கோவிலாகக்கொண்டு எழுந்தருளினன் சிவன். மிகுதியான மறைநூற்களைத் தன்னை யாடையும் வழிகாட்டியாகக் கொண்டான். திருவடி சேர்வார் நாடிகள் பத்தினையும் தூய்மை செய்தல் வேண்டும். புலனைந்தும் தம் பின்வரச் சிவனை வழிபடுதல் வேண்டும். அவ்வாறு வழிபடும்போது சிவன் நாடிகளையும் இடமாகக்கொண்டு அருள்புரிவன்.

கொல்லை - காடு. அடிநாடிகள் - திருவடி செல்லுதற்குரிய நாடிகள். பிறகிட்டு - பின்னிடச்செய்து. வாயில்கொண்டான் - அந்த நாடிகளை வழியாகக் கொண்டான்.

## 1700. கூடிய பாதம் இரண்டும் படிமிசை

1700. கூடிய பாதம் இரண்டும் படிமிசை
பாடிய கையிரண் டெட்டும் பரந்தெழுந்
தேடு முகம்ஐந்து செங்கணின் மூவைந்து
நாடுஞ் சதாசிவ நல்லொளி முத்தே.

ஆருயிர்கள் அன்பினால் வந்து கூடி இன்புறுதற் பொருட்டு அமைந்த திருவடிகள் இரண்டு. புகழ்ந்து கூறப்பட்ட திருக்கைகள் பத்து. விரிந்தெழுந்து நாடும் திருமுகங்கள் ஐந்து. ஆதிரை நாளாகிய செங்கைபோல் ஒளிதரும் கண்கள் பதினைந்து. இத்தனையும் கொண்டு விளங்கும் அருளோனாகிய சதாசிவக் கடவுள் நல்ல திருவருள் ஒளியாகிய முத்தாகும்.

கூடிய பாதம் - சேர்ந்துள்ள பாதம். பாடிய - புகழ்ந்து கூறப்பட்ட. செங்கணின் - சிவந்த கண்களில்.

## 1701. வேதா நெடுமால் உருத்திரன் மேலீசன்

1701. வேதா நெடுமால் உருத்திரன் மேலீசன்
மீதான ஐம்முகன் விந்துவும் நாதமும்
ஆதார சத்தியு மந்தச் சிவனொடுஞ்
சாதா ரணமாஞ் சதாசிவந் தானே.

அயன், அரி, அரன், ஆண்டான், ஐம்முகன் விந்துநாதம் இவற்றை இயைந்து இயக்கும் திருவருளாற்றல். அத் திருவருளாற்றலை மரமும் காழ்ப்பும்போல் விட்டு நீங்காதிருக்கம் சிவன் ஆகிய அத்தனையும் பொதுவாகச் சதாசிவன் எனப்படும்.

மீதான ஐம்முகன் - மகேசனுக்கு மேற்பட்ட சதாசிவன்.
சாதாரணமாம் - பொதுவாக.

## 1702. ஆகின்ற சத்தியின் உள்ளே கலைநிலை

1702. ஆகின்ற சத்தியின் உள்ளே கலைநிலை
ஆகின்ற சத்தியின் உள்ளே கதிரெழ
ஆகின்ற சத்தியின் உள்ளே அமர்ந்தபின்
ஆகின்ற சத்தியுள் அத்திசை பத்தே.

திருவருட்சத்தியினுள் விடுவித்தல் முதலிய ஐந்து கலைகளும் உண்டாம். அச் சத்தியின் அருளால் ஞாயிற்றின் கதிர்களண்டாம். அச் சத்தியினுள் சிவன் அமர்ந்தருளியபின் அத் திருவருள் பத்துப்புலமும் நிறைந்து இயக்கி அருள்வன்.

ஆகின்ற - எல்லாம் உண்டாக்குகின்ற. கலை - சந்திரன். கதிர் - சூரியன். அத் திசை பத்தி - பத்துத் திக்குகளைக்கொண்ட உலகம்.

## 1703. அத்திசைக் குள்ளே அமர்ந்தன ஆறங்கம்

1703. அத்திசைக் குள்ளே அமர்ந்தன ஆறங்கம்
அத்திசைக் குள்ளே அமர்ந்தன நால்வேதம்
அத்திசைக் குள்ளே அமர்ந்த சரியையோடு
அத்திசைக் குள்ளே அமர்ந்த சமயமே.

பத்துத் திசைக்கும் உட்பட்ட உலகத்தில் அவ்வுலகம் நன்கு நடைபெறும் பொருட்டு ஆறு அங்கங்களும், நான்கு வேதங்களும், சீலம் நோன்பு செறிவு அறிவு என்னும் நன்னெறி நான்மைகளும் அவற்றைச் சிறப்பாகக்கொண்டு திகழும் செந்நெறியும் சித்தாந்த சைவமும் அத்திருவருளால் நிலைப்பன. சித்தாந்த சைவம் ஐம்பெரும் தூண்களால் தாங்கப்பட்டு நிலைநிற்கின்றது. அவை முறையே திருமூல நாயனாரருளிய இத் திருமந்திரமும் 'மொழிக்குமொழி தித்திக்கும் மூவர் சொல்லமிழ்தாமகிய' தேவாரங்களும், களிக்கும் அருட்டேன் அளிக்கும் விழுமிய திருவாசகம் திருக்கோவையாகும் என்க. இவ் வுண்மை வருமாறு:

"நம்மூல ராற்போற்ற நால்வரால் நாட்டநிலை
செம்பொருட்சித் தாந்தசைவம் தேறுங்கால்-நம்மறையாம்
அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மையோ
டைந்துசால் பூன்றிய தூண்."

அத் திசைக்குள் - மேலே கூறிய பத்துத் திக்குகளுக்கு உட்பட்ட உலகத்தில்.

## 1704. சமயத் தெழுந்த அவத்தையீ ரைந்துள

1704. சமயத் தெழுந்த அவத்தையீ ரைந்துள
சமயத் தெழுந்த இராசிஈ ராறுள
சமயத் தெழுந்த சரீரமா றெட்டுள
சமயத் தெழுந்த சதாசிவந் தானே.

சித்தாந்த சைவத்திற் கூறப்படும் நிலைகள் பத்து. இவை ஐந்து அவத்தைகள் மேல்நோக்கியும் ஐந்து அவத்தைகள் கீழ்நோக்கியும் உயிர் சென்று வருங்கால் நிகழ்வன. மேலும் உயிர்ப்புக்கலைகள் பன்னிரண்டுள்ளன. அயன், அரி, அரன், ஆண்டான், அருளோன், அன்னை என்னும் திருமேனிகள் ஆறு; பூதமைந்து, ஞாயிறு, திங்கள், ஆருயிர் மூன்று ஆகிய வடிவங்கள் எட்டு. இவையனைத்தும் பூண்டருள்வோன் அருளோன் ஆகிய சதாசிவனேயாவன்.

அவத்தை - மேலாலவத்தை, கீழாலவத்தை. இராசி - மேட முதலிய இராசிகள். சரீரமாறு - பிரமனாதி சத்தி ஈறாக ஆறு. எட்டு - பிருதிவியாதி வழிவம் எட்டு.

## 1705. நடுவு கிழக்குத் தெற்குத் தரமெற்கு

1705. நடுவு கிழக்குத் தெற்குத் தரமெற்கு
நடுவு படிகநற் குங்கும வன்னம்
அடைவுள அஞ்சனஞ் செவ்வரத் தம்பால்
அடியேற் கருளிய முகமிவை அஞ்சே.

சதாசிவக் கடவுளுக்கு ஓதபபெறும் திருமுகங்கள் ஐந்து. அவ்வைந்து முகங்களும் முறையே உச்சி, கிழக்கு, தெற்கு, வடக்கு, மேற்கு என்னும் புலன்கள் ஐந்தும் நோக்கி விளங்குகின்றன. புலன்கள் - திசைகள். இவ் வைந்து திருமுகங்களின் வண்ணங்கள் முறையே வருமாறு: உச்சி முகம் பளிங்குநிறம். கிழக்கு முகம் குங்குமம். தெற்கு முகம் நீலவரணம். வடக்கு முகம் செல்வரத்தமாகும். மேற்கு முகம் பால் நிறமாகும். இத் திருமுகங்கள் ஐந்தும் அடியேற்கு அருளுதற் பொருட்டுக் கொண்டனவாகும். இவ் வைந்து திருமுகங்களும் 'சிவயநம' என்றலும் ஒன்று.

இம் மந்திரம் சதாசிவத்தின் முகங்களின் வரிசைக் கிரமத்தையும், நிறங்களையும் கூறுகிறது. ஈசானம் - நடு. தற்புருடம் - கிழக்கு. அகோரம் - தெற்கு. வாமதேவம் - வடக்கு. சத்தியோசாதம் - மேற்கு. ஈசானம் - படிக நிறம். தற்புருடம் மஞ்சள் குங்கும நிறம். அகோரம் - அஞ்சன (கறுப்பு) நிறம். வாமதேவம் - சிவப்பு நிறம். சத்தியோசாதம் - பால் நிறம்.

## 1706. அஞ்சு முகமுள ஐம்மூன்று கண்ணுள

1706. அஞ்சு முகமுள ஐம்மூன்று கண்ணுள
அஞ்சினொ டஞ்சு கரதலந் தானுள
அஞ்சுடன் அஞ்சா யுதமுள நம்பியென்
நெஞ்சு புகுந்து நிறைந்துநின் றானே.

ஐந்து திருமுகங்களும், பதினைந்து திருக்கண்களும், பத்துத் திருக்கைகளும், பத்துத் திருப்படைகளும் கொண்டு திகழ்கின்ற நம்பியாகிய சதாசிவக் கடவுள் அடியேன் நெஞ்சுள் புகுந்து நிறைந்து நின்றருளினன்.

## 1707. சத்தி தராதல மண்டஞ் சதாசிவஞ்

1707. சத்தி தராதல மண்டஞ் சதாசிவஞ்
சத்தி சிவமிக்க தாபர சங்கமஞ்
சத்தி யுருவம் அருவஞ் சதாசிவஞ்
சத்தி சிவதத் துவமுப்பத் தாறே.

அருளோன் நிலமண்டிலம் சத்தியாகவும், வான்மண்டிலம் சதாசிவமாகவும் விளங்கி வீற்றிருந்தருள்வன்.

சத்திசிவமாம் இருவரும் நிலைத்திணை, இயக்குதிணை ஆகிய இரண்டன்கண்ணும் இயைந்து இயக்குவர். சத்தி உருவம், சதாசிவம் அருவுருவம். நிலமுதல் சத்திசிவம் ஈறாகத் தத்துவம் முப்பத்தாறாகும். இம் முப்பத்தாறு மெய்களும் அருஞ்சைவர்கட்குரிய பொருண்மையாகும்.

## 1708. தத்துவ மாவ தருவஞ் சராசரந்

1708. தத்துவ மாவ தருவஞ் சராசரந்
தத்துவ மாவ துருவஞ் சுகோதயந்
தத்துவம் எல்லாஞ் சகலமு மாய்நிற்குந்
தத்துவ மாகுஞ் சதாசிவன் தானே.

சத்திசிவ மெய்கள் உருவமும உள்ளுறை அருவமும் ஆகத திகழும் இயங்குதிணை நிலைத்திணை உலகங்கள் முற்றும் விரிந்து
விளங்கும். இன்பத்தோற்ற வூற்றாய் எழுவதும் சத்திசிவமாகும். எல்லா மெய்களும் சத்திசிவம் இரண்டின் கலப்பியக்கத்தால் இயங்குவன. மெய் - தத்துவம். அதனால் தத்துவம் எல்லாம் சதாசிவன் என்று அழைக்கப்படும்.

# 1709. கூறுமி னூறு சதாசிவன் எம்மிறை

1709. கூறுமி னூறு சதாசிவன் எம்மிறை
வேறோர் உரைசெய்து மிகைப்பொரு ளாய்நிற்கும்
ஏறுரை செய்தொழில் வானவர் தம்மொடு
மாறுசெய் வானென் மனம்புகுந் தானே

அருளோன் எனப்படும் சதாசிவனே நம் முழுமுதற் கடவுளாவன். அவன் திருவடியிணையினைப் போற்றித் தொடர்ப்பதிகம் ஐந்தோ டொன்றும் புகன்று, தம் கைகளான் மலர்தூவி அளவின்றி வழிபடுங்கள். நூறு - அளவின்மை. செந்தமிழ்த் திருமறை திருமுறைகட்கு முரணாக நூல்களைச் செய்து மருளால் உலகுக்கும் தமக்கும் கேடுசூழும் அந் நூற்சொற்கள் குற்றமுடையனவாகும். வானவர்கோன் அயன் மால் உள்ளிட்ட தேவர்கள் மயக்கத்தால் தம்மைத் தாமே உயர்த்திச்செருக்குற்றுச் சொல்லும் சொற்கள் ஏற்றுரை எனப்படும். அங்ஙனம் சொல்லித் தீரிவதே தொழிலாகவுள்ள அத் தேவர்களுக்குச் சிவபெருமான் மறைந்து மாறுபட்டு நிற்பன். அத்தகையோன் அடியேன் உள்ளம் புகுந்து ஆண்டனன். அருச்சனை நூற்றெட்டு ஆயிரத்தெட்டு என்பதை அப்பரடிகளின் 'போற்றிசைத்துன்' என்னும் திருப்பாட்டு ஒருவகையாகக் குறிக்கின்றது. 'எண்ணாயிர நூறு', எண் + ஆயிரம்; எண் + நூறு; எட்டுடன் கூடிய ஆயிரம், நூறு எனக் கொள்க.

கூறுமின் நூறு- 108 நாமங்களால் துதியுங்கள். (108க்கு 100 என்றும், 1008க்கு 1000 என்றும் கூறுவது மரபு).

வேறோர் உரை. தமிழ் வேதத்துக்கு மாறான உரை. மிகைப்பொருள் - குற்றமுள்ள பொருள். ஏறுரை செய்தொழில் - தம்மை மேம்பட உரைக்கும். வானவர் தம்மொடு - தேவர்கள் என்று சொல்லிக்கொள்ளும் ஆரியர் தம்மொடு. மாறு செய்தான்- விரோதப்பட்டிருப்பவன்.

# 1710. இருளார்ந்த கண்டமும் ஏந்து மழுவுஞ்

1710. இருளார்ந்த கண்டமும் ஏந்து மழுவுஞ்
சுருளார்ந்த செஞ்சடைச் சோதிப் பிறையும்
அருளார்ந்த சிந்தையெம் ஆதிப் பிரானைத்
தெருளார்ந்தென் உள்ளே தெளிந்திருந் தேனே.

தேவர்கள் சிவனை மறந்து அமிழ்தெடுக்க முனைந்தனர். அம் மறந்ததாகிய உய்தியில் பாவம் நஞ்சாக வெளிப்பட்டது. அவர்கள் அஞ்சிச் சிவனிடம் முறையிட்டனர். அவன் அக் குற்றத்தினை மன்னித்து அந் நஞ்சினைக் கண்டத்தில் இருத்தினன். அதனால் இருளார்ந்த கண்டமாயது. இயற்கையுணர்வுள்ளவன் சிவனே என்பது பற்றுக் கோடின்றித் தீயாகிய மழுவினைத் திருக்கையில் அவன் ஏந்தியிருப்பதால் விளங்கும். அதன் பேர்ஒளி எப்புறமும் காணப்படுதலால் அஃது அவன்றன் முற்றுணர்வினைக் குறிக்கும். மாலையில் தாங்குருவேபோலும் சடைக்கற்றை திருமேனிபோன்று செம்மையுடையதாகத் திகழும். அதன் கண் வளரும் ஒளியுடைப் பிறை விளக்க விளங்கும் இயல்புடைய ஆருயிர்களைக் குறிக்கும் . இவையே ஆதிப்பிரான் திருவடையாளங்களாகும். அவர்தம் திருவருள் துணையால் அடியேன் எண்ணத்தின் மருள் அகன்றது; திருவடியுணர்வாகிய தெருள் நிறைந்தது. அதனால் மெய்ப்பொருள் தெளிந்திருந்தேன். ஆதிப்பிரான்: அம்மையோடு கூடிய அப்பன். ஆதி - அம்மை.

## 1711. சத்திதான் நிற்கின்ற ஐம்முகஞ் சாற்றிடில்

1711. சத்திதான் நிற்கின்ற ஐம்முகஞ் சாற்றிடில்
உத்தரம் வாமம் உரைத்திடும் சத்தி
பச்சிமம் பூருவம் தற்புரு டன்னுரை
தெற்கி லகோரம் வடகிழக் கீசனே.

திருவருளாற்றல் விளங்கி நிற்கின்ற ஐந்து திருமுகங்களையும் சொல்லுமிடத்து வடக்குத் திருமுகம் வாமதேவமென்னும் விளக்கமாகும். புகழ்ந்து சொல்லப்படும் சத்தியோசாதம் என்னும் தோன்று வித்தல் மேற்கு முகமாகும் . கிழக்குத் திருமுகம் தற்புருடம் என்னும் ஆட்சியாகும். சீர்த்திமிக்க தெற்குத் திருமுகம் அகோரம் என்னும் நடுக்கமாகும். வடகிழக்குத் திருமுகம் ஈசானன் என்னும் இயக்கமாகும். ஈசானம் வடகீழ்ப்புலமென்றே வழங்கப்படுகின்றது. இவ் வழக்குமுறை திருநாவுக்கரசு நாயனார் அருளிய திருப்பாட்டானு முணரலாம்.

"ஞாயிறாய் நமனுமாகி வருணனாய்ச் சோமனாகித்
தீயறா நிருதிவாயுத் திப்பிய சாந்தனாகிப்
பேயறாக் காட்டிலாடும் பிஞ்ஞக னெந்தைபெம்மான்
தீயறாக் கையர்போலுந் திருப்பயற் றூரனாரே."

## 4.32 - 6.

4.32 - 6.

எனவே இதற்கியைப் பொருள்கொள்ளுங்கால் பாட வேறுபாடு கொள்ளுதல் வேண்டும். இப்பொழுதுள்ள பாட்டும் தளைதட்டுதல் என்னும் பொருந்தும் யாப்பமைதியும் பெறவில்லை. அஃதாவது தளைதட்டாமலிருக்கின்றது. ஆதலால் அப் பாடம் 'தெற்கில கோரம் வடகிழக் கீசனே' என்றிருத்தல் வேண்டும். அங்ஙனமே அமைத்துப் பாட வேறுபாடு காட்டப்பட்டுள்ளது.

இம் மந்திரம் ஐம்முகங்களும் எத்திசைகளை நோக்குகின்றன என்பதை விளக்குகிறது.

# 1712. நானுநல் லீசான நடுவுச்சி தானாகுந்

1712. நாணுநல் லீசான நடுவுச்சி தானாகுந்
தாணுவின் றன்முகந் தற்புருட மாகுங்
காணும் அகோரம் இருதயங் குய்யமா
மாணுற வாமமாஞ் சத்திநற் பாதமே.

ஐம்பெரும் மந்திரங்கள் குறிக்கும் முறை வருமாறு : 'பொக்கமிக்கவா பூவும்நீருங்கண்டு' நாணும் தன்மை வழிவாகிய ஈசான மறையை உச்சியிற் சுட்டுக . தற்புருடம் என ஓதி முகத்திற் சுட்டுக. அகோரம் என ஓதி நெஞ்சிற் சுட்டுக. சிறந்த வாமதேவமென வோதிக் குறியிற் சுட்டுக. சத்தியோசாதம் என வோதிப் பாதத்திற் சுட்டுக. இம்மந்திரங்கள் ஐந்தினுக்கும் ஓம் என முதற்கண் தனித்தனிச் சேர்த்து ஓதிக்கொள்க.

நாண் - அடக்கம் . அவ்வவ் வவயவங்களுக்கு மந்திரம் இன்னதெனக் கூறுகின்றது இம் மந்திரம். ஈசானம் - உச்சி; தற்புருடம் - முகம் . அகாரம்-இருதயம்; வாமம் - குய்யம். சத்தி - பாதம்; இவை பஞ்சப்பிரம மந்திரங்கள் என்னப்படும்.

# 1713. நெஞ்சு சிரஞ்சிகை நீள்கவ சங்கண்ணாம்

1713. நெஞ்சு சிரஞ்சிகை நீள்கவ சங்கண்ணாம்
வஞ்சமில் விந்து வளர்நிறம் பச்சையாஞ்
செஞ்சுறு செஞ்சுடர் சேகரி மின்னாகுஞ்
செஞ்சுடர் போலுந் தெசாயுதந் தானே.

நெஞ்சு, தலை, தலைமுடி, பெரிய போர்வை, கண், கருவி ஆகிய ஆறும் உறுப்புகள் எனப்படும். மலகன்மம் விரவுதலாய குற்றம் நீங்கிய தூமாயை விந்து எனப்படும். அதனுடைய பெருக்கநிறம் பச்சையாகும். நிறைவுள்ள தலையணிபோலும் சிறந்த வனப்பாற்றலாள் திருவருள் அம்மையாவள் . அவனின் செவ்விய பகலவன்போலும் மிகுந்த ஒளியினைத் தரும் திருக்கைகள் பத்திலும் பத்துப் படைக்கருவிகள் உள. மேல் ஓதிய பெருமறை ஐந்தும், இதன்கண் ஓதிய உறுப்புகள் ஆறும் ஆகிய பதினொன்றும் சைவக் கூட்டு மந்திரங்களாகும். தலைமுடி - சிகை.

இம் மந்திரம் ஆறு அங்க மந்திரங்களைக் கூறுகின்றது. இவை கரு அங்க மந்திரம் அல்லது சட் அங்க மந்திரம் எனப்படும். அவையாவன : நெஞ்சு - இருதயாய நம . சிரம் - சிரசாய நம. சிகை - சிகாய நம. கவசம் - கவசாய நம. கண் - நேத்திரப்யோ நம. அம்பு - அத்திராய நம பஞ்சப் பிரம மந்திரங்களும், ஆறு அங்க மந்திரங்களுமே சைவ மந்திரங்களாம்.

## 1714. எண்ணில் இதயம் இறைஞான சத்தியாம்

1714. எண்ணில் இதயம் இறைஞான சத்தியாம்
விண்ணிற் பரைசிர மிக்க சிகையாதி
வண்ணக் கவசம் வனப்புடை இச்சையாம்
பண்ணுங் கிரியை பரநேத் திரத்திலே.

அருளோனாகிய சதாசிவக் கடவுளுக்குத் திருவருள் துணைகொண்டு ஆராயுமிடத்து நெஞ்சம் அறவி◌ாற்றலாகும். அறிவுப் பெருவெளியாகிய வனப்பாற்றல் பரை எனப்படும். அது தலையாகும். நடப்பாற்றலாகிய ஆதி தலைமுடியாகிய சிகையாகும். அழகிய போர்வை திருவளர் அன்பாற்றலாகும். தொழிலாற்றல் கண்ணாகும். இம் முறையால் சிவபெருமானுடைய திருவுரு திருவுறுப்புகள் அனைத்தும் திருவருளாற்றலே என்பது தெளிவு.

இறை - சிவனுக்கு; இதயம் - ஞானசத்தி. சிரம் - பராசத்தி; சிகை - ஆதி சத்தி; கவசம் - இச்சா சத்தி; நேத்திரம் கிரியா சத்தி ஆகும்.

## 1715. சத்திநாற் கோணஞ் சலமுற்று நின்றிடும்

1715. சத்திநாற் கோணஞ் சலமுற்று நின்றிடும்
சத்தி அறுகோணஞ் சயனத்தை யுற்றிடுஞ்
சத்திநல் வட்டஞ் சலமுற் றிருந்திடுஞ்
சத்தி யுருவாஞ் சதாசிவன் தானே.

திருவருளாற்றல் நாற்கோணமாகிய மூலத்தினிடத்து நீர்போல் இடையறாது இயக்கிக்கொண்டிருக்கும். அத் திருவருளே கொப்பூழின்கண் மால்போல் கிடந்து உற்றுழி இயக்கும். இந்நிலை அறுகோணமாகும். அத் திருவருளே நெற்றிப் புருவநடுவில் வட்ட நிலையத்தில் நின்று ஆணை செலுத்திக் கொண்டிருக்கும் இக் குறிப்புத் தோன்றவே செந்தமிழான்றோர் தொன்றுதொட்டு நெற்றிப் புருவ நடுவில் வட்டமாகப் பொட்டு இடுவதை மரபாகக் கொண்டுள்ளனர். திருவருளாற்றலின் வடிவே சிவன் வடிவமாகும். சந்தனம், குங்குமம், சாந்து ஆகிய மூன்றாலிடும் பொட்டு முப்பண்பின் அடையாளமாகும். திருநீற்றுப் பொட்டுச் சிவனார் எண்குண அடையாளமாகும்.

# 1716. மானந்தி எத்தனை காலம் அழைக்கினுந்

1716. மானந்தி எத்தனை காலம் அழைக்கினுந்
தானந்தி யஞ்சின் தனிச்சுட ராய்நிற்குங்
கானந்தி யுந்தி கடந்து கமலத்தின்
மேனந்தி ஒன்பதின் மேவிநின் றானே.

பேரன்பும் பெருங்காதலும் பொருந்திய மெய்யடியார்கள் பலநாள் அழைப்பர். அதற்கிணங்கி எழுந்தருளும் சிவபெருமானின் அன்பு, அறிவு, ஆற்றல், வனப்பு, நடப்பு ஆகிய திருவருளாற்றல் ஐந்தும் ஒப்பில்லாத் தனி முழுமுதல் ஆற்றலாகும். அவை பெருஞ்சுடராகப் பொலியும். அத் திருச்சுடர் நடுவாய் அதற்கு உயிராய்ச் சிவன் பிரிப்பின்றி நின்றருள்வன். கால்நந்தி உயிர்ப்பினை உந்திச்சென்று உச்சியின்மேல் ஆயிரம் இதழ்த் தாமரையில் அமர்ந்து வேண்டும் திருவுருக்கொள்வன். அத் திருவுரு ஒன்பது வகைப்படும். அவை வருமாறு: அறிவு, ஆற்றல், ஒலி, ஒளி ஆகிய நான்கும் அருவமாகும். அருளோன் ஆகிய சதாசிவன் அருவுருவமாகும். ஆண்டான், அரன், அரி, அயன் என்னும் நான்கும் உருவமாகும். இவற்றை முறையே சிவம், சத்தி, சதாசிவன், ஈசன், உருத்திரன், மால், அயன் எனலுமாம். இத் திருவுருவங்களைப் பொருந்தி நின்று உலகினை இயைந்து இயக்கி அருளுகின்றனன்.

மானந்தி - ஆசை மிகுந்து. அஞ்சில் - சத்தி உருவமாகிய பஞ்ச முகங்களில். கானந்தி - பிராணவாயு.

உந்தி - மேலே செலுத்தி. கமலத்தின்மேல் - உச்சித் தாமரை; சகசிர அறை. ஒன்பதின் மேவி - ஒன்பது வடிவங்களில் பொருந்தி.

## 1717. ஒன்றிய வாறும் உடலி னுடன்கிடந்து

1717. ஒன்றிய வாறும் உடலி னுடன்கிடந்து
என்றுமெம் மீச னடக்கும் இயல்பது
தென்றலைக் கேறத் திருந்து சிவனடி
நின்று தொழுதேனென் னெஞ்சத்தி னுள்ளே.

சிவபெருமான் மேல்ஓதிய முறையான் உலகத்துடன் பொருந்தி அவ் வுலகினை இயக்குகின்றனன். அதுபோல் உடலுடனும் உயிருடனும் பொருந்தி அவ் வுடல் உயிர்களை இயைந்து இயக்குகின்றனன். இவை அவனது பேரருட் பெருமாண்பாகும். அத்தகைய சிவனடி நம் முடிமேல் சூட்டப்பெறுதலால், அழகிய தலை யெனப்படும் தென்தலையாகும். தென் - அழகு. நம்மை எல்லாம் திருத்தி யாட்கொள்ளும் சிவனடி இயல்பாகவே திருந்திய அடியாகும். அத் திருவடியை நெஞ்சத்தினுள்ளே நின்று தொழுதனென். தென்னாடு - அழகிய நாடு.

ஒன்றியவாறு - சிவன் உலகத்தில் பொருந்தி இருக்கும் முறைமை.

## 1718. உணர்ந்தேன் உலகினில் ஒண்பொரு ளானைக்

1718. உணர்ந்தேன் உலகினில் ஒண்பொரு ளானைக்
கொணர்ந்தேன் குவலயங் கோயிலென் நெஞ்சம்
புணர்ந்தேன் புனிதனும் பொய்யல்ல மெய்யே
பணிந்தேன் பகலவன் பாட்டு மொலியே.

மேலோதியவாற்றால் உலகினில் நிறைந்து நிற்கும் ஒண்பொருளாகிய சிவனை அவனருளால் உணர்ந்தேன். உலத்தின்கண் திருக்கோவில் கொண்டருள்வதுபோல் என் உள்ளத்தின்கண்ணும் திருக்கோவில் கொண்டருளப் பாடிப் பரவிப் பணிந்து வேண்டினன். ஈண்டுப் பரவுதல் நினைதல் மேற்று. அச் சிவனுடன் பின்னற் புணர்ப்பாய்ப் புணர்ந்தனன். புணர்ப்பு - அத்துவிதம். பகலவனாகிய சூரியனுக்கும் ஒளியருள்வது சிவனே. அவன்போல் அவன் உள்நின்று உணர்த்தி எழுப்ப அருளொலியாக நால்வர் திருமூலர் ஆகிய ஐவர் வாயிலாக வருவதாகிய செந்தமிழ்த் திருமுறையும் திருமுறையும்போன்ற வேதாகமங்களும் அவற்றால் பெறப்படும் மெய்ப்பொருளாம் சிவனும் பொய்யல்ல மெய்யே ஆகும்.
"நம்மூல ராற்போற்ற நால்வரால் நாட்டநிலை
செம்பொருட்சித் தாந்தசைவம் தேறு,"
என்பதனை ஈண்டு நினைவுகூர்க.

கோயில் என் நெஞ்சம்-உள்ளம் பெருங்கோவில். இங்கே நெஞ்சம் என்பது உள்ளம். பகலவன் - சூரியனை உண்டாக்கிய சிவன். பாட்டும் ஒலி - ஒலிப்பாட்டு; நாத தத்துவத்தினின்றும் எழுந்த தமிழ் வேத ஆகமங்கள்.

# 1719. ஆங்கவை மூன்றினும் ஆரழல் வீசிடத்

1719. ஆங்கவை மூன்றினும் ஆரழல் வீசிடத்
தாங்கிடும் ஈரேழு தானடு வானதில்
ஓங்கிய ஆதியும் அந்தமு மாமென
ஈங்கிவை தம்முடல் இந்துவு மாமே.

மூவகை உலகினும் சிவச்சுடர் வீசுகின்றது. அதன்மேல் ஈரேழ் உலகினும் அச் சிவன் நடுவணதாகிய அறிவுப் பெருவெளியாக நின்றருள்வன். அவனே உலகினைப் படைத்தலால் ஆதியாகவும், மீண்டும் தன்பால் ஒடுக்குதலால் அந்தமாகவும் விளங்குகின்றனன். மேலும் ஆருயிரின் உடம்பகத்துத் திருவருள் நிலையாம் திங்களுமாகும்.

# 1720. தன்மேனி தற்சிவ லிங்கமாய் நின்றிடுந்

1720. தன்மேனி தற்சிவ லிங்கமாய் நின்றிடுந்
தன்மேனி தானுஞ் சதாசிவ மாய்நிற்குந்
தன்மேனி தற்சிவன் தற்சிவா னந்தமாந்
தன்மேனி தானாகுந் தற்பரந் தானே.

ஆருயிர்களின் உடம்புகள் சிவலிங்கமாகவே நின்றிடும். அதுபோல் அச் சிவலிங்கத்து உள்ளும் புறமுமாய் நிறைந்து நிற்கும் சதாசிவமுமாகும். உடம்பே தனிமுதற்சிவன். உடம்பே சிவன் திருவடிப் பேரின்பம். உடம்பே சிவமெய்யாகும். உடம்பே ஒப்பில் முழுமுதல். இத் திருமந்திரம் ஆருயிரின் இடையறாச் சிவனினைப்பால் அவ் வுடம்பு, உள்ளம், உணர்வு, உணர்விலுளதாம் இன்பம் எல்லாம் சிவனேயாகும் என்பதை வலியுறுத்துகின்றது.

மானிட உடல் சதாசிவ உருவமான சிவலிங்க உருவமாகும் என்றது இம் மந்திரம்.

## 1721. ஆரும் அறியார் அகார மவனென்று

1721. ஆரும் அறியார் அகார மவனென்று
பாரு முகாரம் பரந்திட்ட நாயகி
தாரம் இரண்டுந் தரணி முழுதுமாய்
மாறி யெழுந்திடும் ஓசைய தாமே.

தவத்தால் அருள் கைவரப்பெறாதார் எவரும் அகர எழுத்துப்போன்று சிவபெருமான் ஒன்றாய் வேறாய் உடனாய் நின்று இயக்கும் மெய்ப்புணர்ப்பினை உணரார். ஆருயிரின்பொருட்டு உடல் உலகு உண்பொருள்களாக விரிந்த மாயைக்கு நிலைக்களமாக நிற்பது திருவருளாற்றல். அஃது உகரமாகும். தாரம் என்பது எல்லா வுலகினையும் தாங்கும் ஓமொழியாகும். அதன்கண் விரவிநிற்பது அகரம், உகரம், மகரம் என்பன. இவற்றுள் அகர வுகரம் விரிவாகும். மகரம் ஒடுக்கமாகும். எனவே எழுந்திடும் ஓசை அகர உகரம் என்ப.

தாரம் இரண்டும் - பிரணவ உறுப்புக்களாகிய அகாரம், உகாரம் இரண்டும்.

## 1772. இலிங்கநற் பீடம் இசையும்ஓங் காரம்

1772. இலிங்கநற் பீடம் இசையும்ஓங் காரம்
இலிங்கநற் கண்ட நிறையு மகாரம்
இலிங்கத்துள் வட்ட நிறையும் உகாரம்
இலிங்க மகார நிறைவிந்து நாதமே.

சிவலிங்கத்தின் அடிப்பகுதியாகிய பீடம் ஓங்கார வடிவமாகும். அப் பீடத்தினுள் மறைந்திருக்கும் சிவலிங்கத்தின் நடுப்பகுதி கண்டம் எனப்படும். சிவலிங்கத்தினுடன் பொருந்தியிருக்கும் வட்ட மான பகுதி உகாரமாகும். சிவலிங்கத்தின் மேற்பகுதி மூவகைப்படும். அவை முறையே கீழிருந்து அகரம், விந்து, நாதம் என்பன.

இலிங்க உருவத்தின் அடிப்பீடம் பிரணவ உருவம் என்றும், இலிங்கத்தின் கண்டம், அஃதாவது அதோமுகம் பிரணவ எழுத்துக்களில் மகாரத்தைக் குறிக்கும் என்றும், இலிங்கத்தின் நடு வட்டம், அஃதாவது உள் வட்டம் (ஒடுங்கியுள்ள வட்டம்) உகாரத்தைக் குறிக்கும் என்றும், மேல் இலிங்க பாகம் அகாரத்தைக் குறிக்கும் என்றும் இம் மந்திரம் கூறுகின்றது.

## 1723. அகார முதலா யனைத்துமாய் நிற்கும்

1723. அகார முதலா யனைத்துமாய் நிற்கும்
உகார முதலா யுயிர்ப்பெய்து நிற்கும்
அகார வுகாரம் இரண்டு மறியில்
அகார வுகாரம் இலிங்கம தாமே.

உலகுடல் உயிர்கட்குத் தாங்கும்நிலைக்களனாக நிற்பவன் சிவன். அவ் அடையாளம் அகரத்தால் குறிக்கப்பெறும். அதனால் அகரமுதலாய் அனைத்துமாய் நிற்கும் என்றருளினர். அவை இயங்குமாறு இயைந்தியக்கும் திருவருளாற்றல் சிவை. அவ் வியக்கத்தை உயிர்ப்பு என அருளினர். இவ் வடையாளம் உகரமாகும். அகர உகரமாகிய இவ்விரண்டுமே 'சத்தியும் சிவமுமாய தன்மையில் வுலகமெல்லாம்' என்னும் செம்பொருட்டுணிவின் மெய்ம்மையாகும். இவற்றை உணரின் அகரவுகரமே சிவலிங்கம் என்க.

அகரம், சிவன்; உகரம், சத்தி; சிவத்துடன் சத்தி சேர்ந்தவிடத்துப் பொருள்கள் உயிர்ப்பெய்தும் என்றும் இம் மந்திரம் கூறுகின்றது.

## 1724. ஆதார மாதேய மாகின்ற விந்துவு

1724. ஆதார மாதேய மாகின்ற விந்துவு
மேதாதி நாதமு மீதே விரிந்தன
ஆதார விந்து அதிபீட நாதமே
போதாவி லிங்கப் புணர்ச்சிய தாமே.

தூமாயையின்கண் தோன்றும் விந்து தாங்குவதாகிய ஆதாரமாகும். அதனால் தாங்கப்படுவதாகிய நாதம் ஆதேயமாகும். இவ்விரண்டும் திருவருளால் உலகமாய் விரிந்தன. ஆதாரவிந்து சிறந்த பீடமாகும். நாதமே சிவலிங்கமாகும். இவ் விரண்டன் புணர்ச்சியே மனமணி யிலிங்கமாகிய ஆருயிர் இலிங்கமாகும். இதனை ஆத்துமலிங்கம் என்ப. சிவபெருமான் இரண்டுமாய் நிற்பன். அது வருமாறு: ஆனேற்றால் தாங்கப்படுவோன் பிறையினால், தான் தாங்குவோன் சிவன்தான்.

ஆதேயம் - ஆதாரத்தில் நிலைத்துள்ளது.

## 1725. சத்தி சிவமாம் இலிங்கமே தாபரஞ்

1725. சத்தி சிவமாம் இலிங்கமே தாபரஞ்
சத்தி சிவமாம் இலிங்கமே சங்கமஞ்
சத்தி சிவமாம் இலிங்கஞ் சதாசிவஞ்
சத்தி சிவமாகுந் தாபரந் தானே.

திருக்கோவில்களில் நிலைபெற்ற இலிங்கம் தாபர இலிங்கம். தாபரம் - நிலைப்பு அவ் விலிங்கம் சத்தியும் சிவமுமாகும். அடியாராகிய திருக்கோவில் சங்கமமாகும். சங்கமம் - இயங்குதல். மெய்யடியார் திருக்கோலங்களும் சத்தி சிவமாகும். சத்தி சிவம் இரண்டினையும் இணைத்து ஓதுங்கால், சதாசிவம் எனப்பெறும் தானே தனி முழுமுதல் சத்தி சிவம் இரண்டும் இணைந்த சதாசிவம் என்ப.

தாபர இலிங்கம் - கோவில்களில் உள்ள அருவுருவத் திருமேனியான இலிங்கம். சங்கம லிங்கம் - அடியார். தாபரம் சத்தி சிவமாம். உலகமே சத்தி சிவ உருவங்களாம்.

## 1726. தானே ரெழுகின்ற சோதியைக் காணலாம்

1726. தானே ரெழுகின்ற சோதியைக் காணலாம்
வானே ரெழுகின்ற ஐம்ப தமர்ந்திடம்
பூநே ரெழுகின்ற பொற்கொடி தன்னுடன்
தானே ரெழுகின்ற அகாரம தாமே.

மூலத்திடத்து என்றும் அழகோடு தானாக எழுந்து ஒளி வீசுகின்ற சிவச்சுடரைக் காணலாம். தூய மாயையின் கூறாக அம் மூலத்திடத்து எழுகின்ற ஐம்பது எழுத்துக்களின் தொகையாகிய ஓங்காரமும் அம் மூலத்தேயாம். ஆயிரம் இதழ்த் தாமரையின் நிலைக்களமாகிய உச்சித்துளைமேல் சிவசத்தியுடன் சேர்ந்து விளங்குவது அகார முதல்வனாகிய சிவபெருமானாகும்.

தான் ஏர் எழுகின்ற சோதி என்றும் உள்ள இயற்கைச் சோதி. ஐம்பது அமர்ந்திடம் - 51 அக்கரங்களும் அடங்கிய பிரணவம். பூ நேர் எழுகின்ற பொற்கொடி - ஆயிரத்தெட் டிதழ்த் தாமரையில் (உச்சித் தாமரை) இருக்கின்ற மனோன்மணி. அகாரம் - சிவன்; "யாரும் அறியார் அகாரம் அவனென்று."

## 1727. விந்துவும் நாதமும் மேவு மிலிங்கமாம்

1727. விந்துவும் நாதமும் மேவு மிலிங்கமாம்
விந்துவ தேபீட நாத மிலிங்கமாம்
அந்த இரண்டையும் ஆதார தெய்வமாய்
வந்த கருவைந்துஞ் செய்யு மவையைந்தே.

ஒளியும் ஒலியும் ஆகிய விந்துநாதங்கள் பொருந்தும் சிவலிங்கம்; விந்து பீடமாகும்; நாதம் இலிங்கமாகும். இவ் விரண்டையும் சார்புக் கடவுளாகக் கொண்டு அருளோன், ஆண்டான், அரன், அரி, அயன் என்னும் ஐம்பெரும் தெய்வநிலைகள் தோன்றின. இவ் வைந்தினையும் ஐந்தொழிற்கு வேண்டும் கருவென்ப. கரு - காரணம். இவ் ஐவரின் வாயிலாக ஐந்து தொழில்கள் நிகழ்கின்றன. அத் தொழில்கள் முறையே அருளல், மறைத்தல், துடைத்தல், காத்தல், படைத்தல் என்ப.

அந்த இரண்டு-நாத விந்துக்கள். கருவைந்து-ஐந்து மூர்த்திகள். செய்யும் அவை ஐந்தே-அம் மூர்த்திகள் செய்யும் தொழில்கள் ஐந்து (படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்).

## 1728. சத்திநற் பீடந் தகுநல்ல ஆன்மா

1728. சத்திநற் பீடந் தகுநல்ல ஆன்மா
சத்திநற் கண்டந் தகுவித்தை தானாகுஞ்
சத்திநல் லிங்கந் தகுஞ்சிவ தத்துவஞ்
சத்திநல் லான்மாச் சதாசிவந் தானே.

சத்திவழிவாகக் கொள்ளப்படும் சிவலிங்கத்தினிடத்துப் பீடம் ஆவிநிலையாகும். கழுத்தினை ஒத்த பீடத்தின் குழி திருவடியுணர்வாகிய சிவஞானமாகும். மேல்தோன்றும் இலிங்கம், சிவமெய்யாகும். எவற்றினுக்கும் உயிர்க்குயிராம் பேராவி - பரமான்மா, சதாசிவமாகும்.

தகு நல்லவான்மா - சீவான்மா. சத்தி நல்லான்மா - பரமான்மா.

## 1729. மனம்புகுந் தென்னுயிர் மின்னிய வாழ்க்கை

1729. மனம்புகுந் தென்னுயிர் மின்னிய வாழ்க்கை
மனம்புகுந் தின்பம் பொழிகின்ற போது
நலம்புகுந் தென்னொடு நாதனை நாடும்
இலம்புகுந் தாதியு மேற்கொண்ட வாறே.

ஆருயிர்களின் உள்ளத்தின்கண் சிவபெருமான் திருவருளால் புகுந்து நிலைபெற்ற திருவடி வாழ்க்கையை அருளினன். அதனால் பேரின்பப் பெருவாழ்வு பொழிவதாயிற்று. அந்த இன்ப நன்மையின் நாட்டத்துடன் ஆருயிரையும் சிவனையும் அருளால் நாடுவர். அந் நாட்டப் பயனாக உடம்பாகிய வீட்டினுள் ஆதியாகிய சிவன் புகுந்து ஆண்டுகொண்டனன்.

இலம் புகுந்து - சரீரமாகிய வீடு.

## 1730. பராபரன் எந்தை பனிமதி சூடி

1730. பராபரன் எந்தை பனிமதி சூடி
தராபரன் தன்னடி யார்மனக் கோயிற்
சிராபரன் தேவர்கள் சென்னியின் மன்னு
மராமரன் மன்னி மனத்துறைந் தானே.

உண்மையறிவு இன்பப் பெரும்பொருள் பராபரன் என்று அழைக்கப்பெறும் அத்தகைய எந்தையாகிய சிவபெருமான் குளிர்ந்த ஆருயிராகிய திங்களைச் சூடினவன். தரைமுதலாகச் சொல்லப்படுகின்ற உலகங்களுக்கு இறைவன். தன் அடியாரின் முழு அன்பு மனத்தினைத் திருக்கோவிலாகக் கொண்டருளினன். அவனே முதற்கடவுள். அவனே ஆயிரவிதழ்த் தாமரையாகிய உச்சி நிலையத் திருப்பவன். தேவர்களுடைய முடியின்கண் வீற்றிருக்கும் (மராமரன், மரு + ஆம் + அரன்) மலர்மணம்
போன்ற புணர்ப்புள்ள புண்ணியன் சிவன். அவன் அடியேன் உள்ளத்து நிலைத்து நின்றருளினன்.

தராபரன் - தரையாகிய உலகங்களுக்கு இறை. சிராபரன் - மேலான தேவன். மராமரன் - மரு + ஆம் + அரன் - பூவின் மணம் போன்ற சிவன்.

## 1731. பிரானல்ல நாமெனிற் பேதை யுலகங்

1731. பிரானல்ல நாமெனிற் பேதை யுலகங்
குராலென்னு மென்மனங் கோயில்கொள் ஈசன்
அராநின்ற செஞ்சடை அங்கியும் நீரும்
பொராநின் றவர்செயப் புண்ணியன் தானே.

நல்ல முழுமுதல் நாங்களே என்று உலகோரிற் சிலர் கூறுவரானால், அறியாமைக் குழியில் வீழ்ந்து துன்புறுவர். பிணிப் புண்ணப் பட்டமையால் பசுப் பிணிப்பி என்றழைக்கப்படும். அதுவே இங்குக் குரால் என ஓதப்பெற்றது. அத்தகைய என் மனம் கோயிலாகக் கொண்டனன். அரவணிந்த செவ்விய திருச்சடையை உடையவர் திருவடிக்கூட்டமாகிய வீட்டியலில் தீயினையும், கருவழி ஊட்டமாகிய உலகியலில் நீரினையும் போன்று மாறுபடுகின்றவர். அங்ஙனம் மாறுபட நிற்பதும் ஆருயிர்களுக்கு அருள் செய்தற் பொருட்டேயாம். இத்தகைய மாறா அருளுடையோன் சிவன். அவன் புண்ணியன் என்று அழைக்கப்படுவன்.

பிரானல்ல நாமெனில் - நல்ல பிரான் நாம் எனில். குரால் - பசு. பொரா நின்றவர் - பொருகின்றவர்; அஃதாவது தரிக்கின்றவர். செய - கருணை புரிய.

## 1732. அன்றுநின் றான்கிடந் தானவன் என்று

1732. அன்றுநின் றான்கிடந் தானவன் என்று
சென்றுநின் றெண்டிசை ஏத்துவர் தேவர்கள்
என்றுநின் றேத்துவன் எம்பெரு மான்தனை
ஒன்றியென் உள்ளத்தின் உள்ளிருந் தானே.

தொன்மையிலேயே ஆருயிர் உய்தற்பொருட்டுத் திருவருளால் அவ் வுயிர்கட்குக் கட்புலனாம்படி அங்கங்கே தோன்றி நின்றனன் சிவன். அதுபோல் வீற்றிருந்தருள்பவனும் அவனே. இவ்வாறாக எல்லாப் புலன்களிலும் உறையும் விண்ணவர்கள் பாடிப் பரவிப் பணிந்து தொழுவர். அடியேனும் இறைவனை எந்நாளும் ஏத்துவன். அச் சிவனும் அடியேன் உள்ளத்துள் முத்திறத்தால் கலந்து நின்றருளினன். அதனால் அவன் என்னுள்ளத்து ளிருக்கின்றனன். முத்திறம்; ஒன்றாய், வேறாய், உடனாய்.

அன்று - ஒரு காலத்தில். ஒன்றி - கலந்து.

## 1733. உருவும் அருவும் உருவோ டருவும்

1733. உருவும் அருவும் உருவோ டருவும்
மருவி பரசிவன் மன்பல் லுயிர்க்குங்
குருவு மெனநிற்குங் கொள்கைய னாகுந்
தருவென நல்குஞ் சதாசிவன் தானே.

கட்புலனாம் திணைபால் வேறுபாட்டுருவும், கட்புலனாகா அருவும், கட்புலனாயினும் வேறுபாடு தோன்றா அருவுருவும் ஆகிய முத்திறப் பிழம்புகளிலும் அருளால் பொருந்தியிருப்பவன் பரமசிவன். செவ்விவாய்ந்த ஆருயிர்க்குத் தம் முதல் குருவுமாய்த் தோன்றியருள் பவனும் சிவனே. இவை சிவனார் திருவுள்ளக் கோட்பாடாகும். 'வேண்டுவார்க்கு வேண்டுவதே ஈயும்' வள்ளலாதலின் தருகவென வேண்டியதும் பின்னையென்னாது அப்பொழுதே வேண்டுவ நல்குவன். அவனே சதாசிவன் என்ப.

தருவென - தா என்று கேட்க. நல்கும் - விரும்பியவற்றைக் கொடுக்கும்.

## 1734. நாலான கீழ துருவ நடுநிற்க

1734. நாலான கீழ துருவ நடுநிற்க
மேலான நான்கு மருவு மிகநாப்பண்
நாலான ஒன்று மருவுரு நண்ணலாற்
பாலா மிவையாம் பரசிவன் தானே.

சதாசிவக்கடவுள் ஒன்பது (1716) திருமேனிகளையுடையன். உருவம் நாலு; இவை கீழ்ப்படி என்ப; அருவம் நாலும் மேற்படி என்ப; நடுப்படி அருவுருவம் ஒன்று என்ப. இவையனைத்தும் பரமசிவன் அருளிற் கொள்ளும் நினைப்புருவமாகும். இவை முறையே அயன், அரி, அரன், ஆண்டான் எனவும் அருளோன் எனவும், ஒளி ஓசை அன்னை அத்தன் எனவும் கூறுப.

நாலான கீழது உருவம். அருவுருவமாகிய சதாசிவத்துக்குக் கீழ்ப்பட்ட அயன், அரி, அரன், ஈசன் ஆகிய நான்கு பேதங்களும் உருவம் ஆகும். மேலான நான்கும் அருவம். அருவுருவமாகிய சதாசிவத்துக்கு மேற்பட்ட விந்து, நாதம், சத்தி, சிவம் ஆகிய நான்கு பேதங்களும் அருவம் ஆகும். நாப்பண் - நடுவில் உள்ள. நாலான ஒன்று - ஈசன், அரன், அரி, அயன் ஆகியவர்களை நடத்தும் சதாசிவம் ஒன்றும். அருவுரு - அருவுருவாம். பாலாம் இவை - இவ்வாறு முற் பகுதியில் அடங்கும் ஒன்பது வடிவங்களும்.

## 1735. தேவர் பிரானைத் திசைமுக நாதனை

1735. தேவர் பிரானைத் திசைமுக நாதனை
நால்வர் பிரானை நடுவுற்ற நந்தியை
ஏவர் பிரானென் றிறைஞ்சுவா ரவ்வழி
யாவர் பிரானடி அண்ணலு மாமே.

மேல் ஓதிய ஒன்பான் திருப்படிமங்களுள் நடுவாகக் காணப்படும் சதாசிவக் கடவுள், தேவர்கள் அனைவர்களுக்கும் அவர் வணங்கப்படும் முழுமுதல்வனாவர். எண்புலமாகிய எட்டுத்திசைகளிலும் காணப்படும் காவற்றெய்வங்கள் கைகூப்பி வணங்கும் முழுமுதல்வனும் அவனே. அயன், அரி, அரன், ஆண்டான் ஆகிய நால்வரும் அடிதொழும் சிறப்பு வாய்ந்த முழுமுதல்வனும் அவனே. எல்லாரும் முழுமுதலென்றே தொழுவர். அம் முறையான் யாவர்களும் அச் சிவபெருமானின் திருவடியை அடைவர்.

தேவர்.....நந்தியை - முப்பகுதியில் நடுவில் உள்ள அருவுருவாகிய சதாசிவம், தேவர்களுக்குப் பிரான், எட்டுத் திக்கு இறைவர்களுக்கு நாதன்; அயன், அரி, அரன், ஈசன் என்னும் நால்வருக்கும் பிரான் ஆவான் அவனை. ஏவர் பிரான் - எல்லாருக்கும் பெருமான்.

## 1736. வேண்டிநின் றேதொழு தேன்வினை போயற

1736. வேண்டிநின் றேதொழு தேன்வினை போயற
ஆண்டொரு திங்களும் நாளும் அளக்கின்ற
காண்டகை யானொடுங் கன்னி யுணரினும்
மூண்டகை மாறினும் ஒன்றது வாமே.

இருள்சேர் இருவினையும் நீங்கி அறச் சதாசிவக் கடவுளாகிய அருளோன் திருவடியை வேண்டி நின்று தொழுதேன். ஆண்டு, திங்கள், நாள் எனக் குறியிட்டு அளக்கப்படும் காலவரையறை ஞாயிறு திங்கள் விண்மீன்களைக்கொண்டு நிகழ்கின்றது. ஞாயிறும் திங்களும் சதாசிவக் கடவுளின் இருபெரும் திருக்கண்களாகும். அதனால் அச் சதாசிவக் கடவுளே அளக்கின்றார் என்ப. அக் கடவுளோடும் பிரிப்பின்றி நிற்கும் திருவருளாற்றல் மனோன்மணி எனப்படும். இவ் வன்னை அத்தன் என்னும் திருவுருவங்களில் எதனை வழிபட்டாலும் இருவரும் வேறுருவில் ஒருடம்பாய்த் திகழ்கின்றமையால் எல்லாம் சதாசிவ வழிபாடேயாகும்.

ஆண்.....கின்ற - சதாசிவத்துக்கு ஞாயிறும், திங்களும் இரு கண்கள் ஆதலால் நாள், மாதம், ஆண்டு இவைகளைச் செய்கின்ற இறைவன் என்னப்பட்டது. கன்னி - மனோன்மணி. மூண்ட - மூடிய, பொருந்திய.

# 1737. ஆதி பரந்தெய்வம் அண்டத்து நற்றெய்வஞ்

1737. ஆதி பரந்தெய்வம் அண்டத்து நற்றெய்வஞ்
சோதி யடியார் தொடரும் பெருந்தெய்வம்
நீதியுள் மாதெய்வ நின்மலன் எம்மிறை
பாதியுள் மன்னும் பராசத்தி யாமே.

ஆதியாகிய அம்மையோடு கூடிய பெருந்தெய்வம். எல்லா அண்டங்களுக்கும் நன்மையருளும் சிவத்தெய்வம். திருவடியுணர்வு கைவரப்பெற்ற சோதியடியார் அருள்துணையால் ஆராக்காதலுடன் இடையறாது தொடரும் 'நமசிவயப்' பெருந்தெய்வம். நீதியுள் நிறைந்த நீள்பெருந்தெய்வம். இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய நேசநிறை தெய்வம். அத் தெய்வ வடிவங்களாகத் தோன்றும் ஒருமுதற் சிவ பெருமானே எம் தலைவனாவன். அவன்றன் உடம்பில் ஓர்பாதி தனதாக்கொள்ளும் நிலைபெற்ற வனப்பாற்றலாகிய அம்மை பராசத்தியாகும்.

பாதி.....ஆமே-மாதொரு பாகன் ஆவான்.

## 1738. சத்திக்கு மேலே பராசத்தி தன்னுள்ளே

1738. சத்திக்கு மேலே பராசத்தி தன்னுள்ளே
சுத்த சிவபதந் தோயாத தூவொளி
அத்தன் திருவடிக் கப்பாலைக் கப்பாலாம்
ஓத்தல ஆமீசன் தானான வுண்மையே.

சத்தி தத்துவத்துக்கு மேல் விளங்கும் இயக்கநிலை அறிவுப் பேராற்றலாகிய பராசத்தியாகும். அப் பேராற்றலினுள் திகழ்வது இயற்கை உண்மைச் சிவனிலையாகும். அதற்குமேல் யாதினும் தோயாது அறிவுப் பெருவெளி நிற்கும். சிவபெருமானாகிய அத்தன் திருவடி எல்லாங் கடந்த இன்பநிலையம். அந்நிலையம் ஆற்றலாகிய சத்திக்கு இயைந்த அறிவாகிய சிவன் வீற்றிருந்தருளும் மெய்ம்மையாகும். ஆற்றல் - முடிவிலாற்றல். அறிவு - முற்றறிவு.

சத்திக்கு மேலே - சத்தி தத்துவத்துக்கு மேலே. பராசத்தி தன்னுள் - பரை என்னும் சத்தி இடத்தில். சுத்த சிவபதம் - நின்மல சிவத்துக்கு இடம். தோயாத தூவெளி - யாதினும் தாக்கற்று நிற்கும் துய்ய சோதியாகிய சிவம். அப்பாலைக்கப்பாலாம் ஒத்தவும் - பராசத்தியோடு கூடியும் கூடாமலும். ஈசன் தானான உண்மை - சிவத்தின் உண்மை நிலை.

## 1739. கொழுந்தினைக் காணிற் குவலயந் தோன்றும்

1739. கொழுந்தினைக் காணிற் குவலயந் தோன்றும்
எழுந்திடங் காணில் இருக்கலு மாகும்
பரந்திடங் காணிற் பார்ப்பதி மேலே
திரண்டெழக் கண்டவன் சிந்தையு ளானே.

முற்றறிவுப் பெருங்குறியாம் சிவக்கொழுந்து அருளாற் காணுந் தன்மைத்து. அங்ஙனம் காணப்பெற்றால் குவலயமாகிய உலகவுண்மைகள் தெற்றென விளங்கும். அச் சிவபெருமான் திருமேனி கொண்டு எழுமிடம் அறிவாற்றலாகிய திருவருளேயாம். இவ் வுண்மை தேறின் அம்மையப்பரை நினைந்து மறவாமல் இருக்கலுமாகும். பரமாகிய சிவபெருமானின் திடமெனப்படும் உண்மையை உணரின் அம்மையை ஒரு கூற்றிலே உடைய அப்பன் தோன்றும். பார்ப்பதி - அம்மை. அங்ஙனம் தோன்றும் சிவன் மெய்யடியார் எண்ணமாகிய சிந்தையுள் எழுந்தருளி நின்றனன்.

கொழுந்து - சிவக்கொழுந்து, அஃதாவது ஞானலிங்கம். எழுந்திடம் - பரை என்னும் சிற்சத்தி. பரம்திடம் - பரசிவத்தின் உண்மைநிலை. பார்ப்பதி மேலே திரண்டெழக் கண்டவன் - மாதொரு கூறனாகக் கண்டவன்.

## 1740. எந்தை பரமனும் என்னம்மை கூடமும்

1740. எந்தை பரமனும் என்னம்மை கூடமும்
முந்த வுரைத்து முறைசொல்லின் ஞானமாஞ்
சந்தித் திருந்த விடம்பெருங் கண்ணியை
உந்தியின் மேல்வைத் துகந்திருந் தானே.

எந்தையாகிய சிவபெருமானும் என் அம்மையாகிய பெருமாட்டியும் மணியொளிபோலப் பிரிப்பின்றிக் கலந்து கூடிய கூட்டமும் முற்படக் கூறி முறை இயம்பின் திருவடியுணர்வாகிய சிவ ஞானமாகும். இருவரும் கூடியிருந்த நிலைக்களம் கொப்பூழாகிய சுவா திட்டானமாகும். அதற்கு மேலெனப்படும் நெஞ்சமாகிய அநாகதத்தின்கண் பெருங்கண்ணியை உடன்வைத்து மாறிலாத உவப்புடையவனானான்.

கூட்டம் - ஒரு பாகத்தமர்ந்த சேர்க்கை. ஞானமாம் சந்தித்திருந்த இடம் - ஞானம் உண்டாகும் இடம். பெருங்கண்ணி - குண்டலினி. உந்தியின்மேல் வைத்து - மணிபூரகத்தில மனத்தைப் பதித்து (Solar plexues).

# 1741. சத்தி சிவன்றன் விளையாட்டுத் தாரணி

1741. சத்தி சிவன்றன் விளையாட்டுத் தாரணி
சத்தி சிவமுமாஞ் சிவன்சத் தியுமாகுஞ்
சத்தி சிவமன்றித் தாபரம் வேறில்லை
சத்திதான் உன்றுஞ் சமைந்துரு வாகுமே.

உலகுடல்களாகிய மாயாகாரியப் பொருள்கள் சிவன் சத்தியொடு பொருந்தச் சத்தியின் எண்ணத்தால் எளிதாகத் தோன்றிக் காரியப்படுகின்றன. அதனால் அவ் வருட்செயலை விளையாட்டென்பர். இளைப்பில் செய்கை யாண்டும் விளையாட்டென்பதே. ஈண்டு விளையாட்டு என்பதற்குப் பொருள். சத்தி சிவமாகும் சிவம் சத்தியுமாகும். இவ்விரண்டும் பொருளான் ஒன்றே. அகங்கை புறங்கை போன்று இயல்பால் இருநிலை என்ப சத்தியும் சிவமும் இல்லாமல் எப்பொருளும் தோற்றமுறாது. சத்தியே யாண்டும் எல்லாப் பொருள்கட்கும் தாங்கும் நிலைக்களம். அதனால் சத்தியே உலகமாகச் சமைந்தது என ஏற்றிக்கூறுவர். ஏற்றுரை - புனைவு; உபசாரம்.

தாரணி - அண்டங்கள் எல்லாமும், அவைகளில் உள்ள இயங்கியற்பொருள்கள் எல்லாமும். தாபரம் - தாபர இலிங்கம் என்கிற ஞானலிங்கம். சத்தி.....ஆகுமே- சிவத்துடன் சத்தி சேர்ந்துதான் உருவ உலகமாகும்.

## 1742. குரைக்கின்ற வாரிக் குவலய நீரும்

1742. குரைக்கின்ற வாரிக் குவலய நீரும்
பரக்கின்ற காற்றுப் பயில்கின்ற தீயும்
நிரைக்கின்ற வாறிவை நீண்டகன் றானை
வரைத்து வலஞ்செயு மாறறி யேனே.

ஒலிக்கின்ற கடலாற் சூழப்பட்ட இவ் வுலகமும், நீரும், தீயும், காற்றும் (வெளியும்) வரிசையாக விளங்கும் விளக்கம் சிவனாலேயாம். இவை எல்லாமாய்ச் செறிந்த சிவனை நாம் ஒரு குறியின்வைத்து வழிபடுதல் வேண்டும். அங்ஙனம் வழிபடுவதும் அவன்றன் திருவருட்டுணையாலேயாம். இவ் வுண்மை அறியகில்லேனே. குறி - வரைத்து.

வரைத்து - எல்லைப்படுத்தி.

## 1743. வரைத்து வலஞ்செய்யு மாறிங்கொன் றுண்டு

1743. வரைத்து வலஞ்செய்யு மாறிங்கொன் றுண்டு
நிரைத்து வருகங்கை நீர்மல ரேந்தி
உரைத்தவன் நாமம் உணரவல் லார்க்குப்
புரைத்தெங்கும் போகான் புரிசடை யோனே.

அச் சிவபெருமானை ஒரு குறியின்கண் வைத்து வழிபடும் வகை ஒன்று உண்டு. அது திருவைந்தெழுத்தால் ஆம். செம்பொற் குடத்து நிரைத்து வைத்த தெண்ணீரும், மருமலரும் அங்கையில் ஏந்திப் புகழ்ந்து மொழியப்படும் 'நந்திநாமம் நமச்சிவாய' என்னும் செந்தமிழ்த் திருமறை ஓதித் திருவடியிலிட்டு வழிபடுதல் என்பதேயாம். இங்ஙனம் வழிபட்டு உணர்வின்கண் உணரவல்லார்க்குப் புரிசடையோனாகிய சிவபெருமான் விட்டு நீங்கி எங்கும் போகான்.

இப் பாட்டு மஞ்சன நீராட்டி, மலரான் அருச்சித்து சிவநாமங்களை உச்சரித்து, அவன் திருவடியை உள்ளன்போடு உணர்ந்து உருக வேண்டுமென்று கூறிற்று.

## 1744. ஒன்றெனக் கண்டேயெம் ஈசன் ஒருவனை

1744. ஒன்றெனக் கண்டேயெம் ஈசன் ஒருவனை
நன்றென் றடியிணை நானவ னைத்தொழ
வென்றைம் புலனு மிகக்கிடந் தின்புற
அன்றென் றருள்செய்யும் ஆதிப் பிரானே.

எம் முதல்வனாகிய சிவபெருமான் ஒருவனே உலகுக்கு முழுமுதல் என அருளால் உணர்ந்தேம். அவனை நன்னெறி நான்மையும்
எய்தத் தொழுதலே நன்றென்று அவன் திருவடியிணையைப் புனலும் பூவும்கொண்டு நனவினும் கனவினும் மனமுறத் தொழுதனம். அங்ஙனம் தொழுதமையால் ஐம்புலனும் வென்றனம். வென்ற ஐம்புலனும் மிகக் கிடந்து இன்புறும்படி அப்பொழுதே ஆதிப்பிரான் அருள்செய்தனன். புலன்கள் ஆண்டவன் திரு ஆணைவழியே நிகழ்வன.

இன்புற என்று அன்று - இன்பம் அடைக என்று அப்பொழுது.

## 1745. மலர்ந்த வயன்மால் உருத்திரன் மகேசன்

1745. மலர்ந்த வயன்மால் உருத்திரன் மகேசன்
பலந்தரும் ஐம்முகன் பரவிந்து நாதம்
நலந்தருஞ் சத்தி சிவன்வடி வாகிப்
பலந்தரு லிங்கம் பராநந்தி யாமே.

மாலின் கொப்பூழில் தோன்றிய அயனும், அம் மாலாகிய அரியும், அரனும், ஆண்டானும், பயனருளும் அருளோனாகிய ஐம்முகனும், மேலாம் விந்து நாதங்களும், நன்மையருளும் சத்தி சிவன் வடிவங்களும் நிறைந்த குறைவிலா இன்பப் பயனுக்கு வாயிலாகிய பாடிப் பரவிப் பணியும் பணியாம் நற்றவத்தைத் தந்தருளும் நந்தியெம்பெருமானே. அவனே சிவலிங்கமுமாவன்.

மலர்ந்த - உலகமாகப் பரிணமித்த பிரகிருதி மாயைக்கு அதிபனான. பலந்தரும் ஐம்முகன் - முத்திப்பலனைக் கொடுக்கும் சதாசிவன். பலந்தரும் - ஐந்து மூர்த்திகளாயிருந்து அவ்வப் பயனை அளிக்கும். பராநந்தி - சிவலிங்கம் (இது ஞானலிங்கமாகிய சதாசிவத்தின் மேலாகிய இலிங்கம்).

## 1746. மேவி யெழுகின்ற செஞ்சுட ரூடுசென்று

1746. மேவி யெழுகின்ற செஞ்சுட ரூடுசென்று
ஆவி எழுமள வன்றே உடலுற
மேவப் படுவதும் விட்டு நிகழ்வதும்
பாவித் தடக்கிற் பரகதி தானே.

மூலத்திடத்திருந்து நடுநாடி வழியாகச் செல்லும் மூல அனலை எழுப்பி அவற்றொடு சென்று ஆவி உச்சித்துளையின் வழி வெளியேறுங்காறும் (என்பது இறக்குமளவும் என்று ஆகும்) ஆவி உடலோடுறையும் அக் காலங்களில் தொட்டுப் பொருந்திச் செய்யப்படுவனவும், விட்டு வருந்தித் தவிரப்படுவனவும் நூலுணர்வானும் நுண்ணுணர்வானும் உணர்ந்து உயிர்ப்பினை அடக்கி ஒழுகின் சிவன் திருவடிப்பேறாம் பரகதியுண்டாம்.

மேவி.....சுடர் வீணாத்தண்டு ஊடே செல்லும் செம்மையாகிய சோதி. ஆவி - உயிர். மேவப்படுவது - தழுவப்படுவது. விட்டு நிகழ்வது - ஒழிக்கப்படுவது.

## 1747. உடல்பொருள் ஆவி உலகத்தாற் கொண்டு

1747. உடல்பொருள் ஆவி உலகத்தாற் கொண்டு
படர்வினை பற்றறப் பார்த்துக்கை வைத்து
நொடியின் அடிவைத்து நண்ணுணர் வாக்கிக்
கடியப் பிறப்பறக் காட்டினன் நந்தியே.

தென்னாடுடைய சிவன் ஆருயிர்களின் செவ்வி நோக்கிச் சிவகுருவாகத் தோன்றியருளி, அவர்தம் உடல் பொருள் ஆவி மூன்றனையும் அவர் அன்புடன் ஒப்புவிக்க அருளாற் கைக்கொண்டருள்வன். அவர்தம் எஞ்சுவினையாகிய சஞ்சிதம் பற்றறத் திருவுள்ளங்கொண்டு பார்த்தலாகிய திருக்கண்ணோக்கமும், கையை முடியில் வைத்தலும், திருவடியை முடியில் வைத்தலும், நுண்ணுணர்வாகிய திருவைந்தெழுத்தைச் செவியறிவுறுத்தலும் ஆகிய சிறந்த நன்னெறி நான்மைக் குறிப்பாஞ் சிவ தீக்கையைப் புரிந்தருள்வன். இச் சிவ தீக்கையால் வேறொன்றானும் போக்கப்படாத பிறப்பறும்; திருவடிப்பேறாம் சிறப்புறும்.

உடல்.....கொண்டு - பக்குவப்பட்ட ஆன்மாக்களுடைய உடல், பொருள், ஆவி மூன்றையும் அடிமையாகக்கொண்டு. படர்வினை - தொல்வினை (சஞ்சிதம்). கை வைத்து - தலையில் கை வைத்து, அடி வைத்து - தலையில் திருவடியைச் சூட்டி. நுண்ணுணர்வாக்கி - பசுகரணங்களைப் பதிகரணங்களாக்கி ஞான வடிவினனாகச் செய்து.

## 1748. உயிருஞ் சரீரமும் ஒண்பொரு ளான

1748. உயிருஞ் சரீரமும் ஒண்பொரு ளான
வியவார் பரமும்பின் மேவும் பிராணன்
செயலார் சிவமுஞ் சிற்சத்தி யாதிக்கு
உயலார் குருபரன் உய்யக்கொண் டானே.

உயிரும் உடலும் நிலைப்பான சேர்க்கைசேர் சிறந்த பொருள்கள் என்று மகிழாதவர்தம் உயிருடலாகிய பாரத்தை உயிர்க் குயிராய்த் திகழும் சிவமும் சிற்சத்தியும் ஏன்றுகொள்ளும். அவ்வுயிர் கடைத்தேறும் வண்ணம் சிவபெருமான் தம்முதல் குருவுமாய் வந்து ஆண்டருளி ஏன்றுகொண்டனன். உயலார்: உயல் + ஆர்=கடைத்தேறும் வண்ணம் எழுந்தருளி நிறைந்த.

வியவார் - மகிழார். உயலார் - உய்யும்படி எழுந்தருளிய.

## 1749. பச்சிம திக்கிலே வைத்தஆ சாரியன்

1749. பச்சிம திக்கிலே வைத்தஆ சாரியன்
நிச்சலும் என்னை நினையென்ற வப்பொருள்
உச்சிக்குங் கீழது வுண்ணாக்கு மேலது
வைச்ச பதமிது வாய்திற வாதே.

சிவகுருவானவர் வடக்கு நோக்கி அமர்வர். சீவதீக்கை பெறுவோராகிய மாணவர் மெய்கண்டார் எனப்படுவர். அவர் சிவகுருவின் இடப்பாலாகிய மேற்பக்கம் அமர்வர். மேற்குத் திக்குப் பச்சிமம் எனப்படும். அந்நிலையில் சிவகுருவானவர் நாடொறும் மாணவரை நினையும்படி ஆணை ஈந்தது 'சிவசிவ' என்னும் செந்தமிழ் மறையே. அச் சிவன் உறையுமிடம் உச்சிக்குக் கீழும் உண்ணாக்குக்கு மேலும் ஆகும். அச் சிவனை விட்டு நீங்காத ஆவிக்கும் நனவில் உயிர்ப் படங்கலாகிய சாக்கிரத்தே அதீதத்தைப் புரியும் தவநிலையும் அதுவேயாம். அந் நிலையில் பிறப்புவழி உண்டாகாது.

பச்சி......ஆசாரியன் - தீக்கை செய்யும்போது ஆசாரியன் வடக்கு முகமும் மாணவன் கிழக்கு முகமாகவும் இருக்க வேண்டும். ஆதலால் ஆசாரியனுக்கு மாணவன் மேற்கே வீற்றிருப்பதால் பச்சிம திக்கிலே என்றார். உச்சி.....வாதே - சிவம் இருக்கும் இடம். அதுதான் உயிர் நிலையும். உயிரைவிட்டு என்றும் பிரியாதவன்.

# 1750. பொட்டடித் தெங்கும் பிதற்றித் திரிவேனைப்

1750. பொட்டடித் தெங்கும் பிதற்றித் திரிவேனைப்
பொட்டடித் துள்ளமர் மாசெலாம் வாங்கிப்பின்
தட்டொக்க மாறினன் தன்னையும் என்னையும்
வட்டம தொத்தது வாணிபம் வாய்த்ததே.

விரும்பியவாறு எல்லா இடங்களிலும் பிதற்றித் திரியும் அறிவில்லாத என்னை, விரும்பியவாறு தீவழியில் செல்லாது தடுத்து, ஆவியோடு ஒட்டி உள்ளுறைந்துள்ள மாசனைத்தும் அருளால் நீக்கினன். தன்னையும் என்னையும் தட்டொக்கமாறினன் என்பது சிவயநம - என்ற நிலையினைச் சிவசிவ என்றருள்வது. இம் மாறுதலாகிய வாணிபத்தால் பெரிய உழைப்பின்றிப் பண்டமாற்றுதலின்றிப் பெறும் ஊதியமாகிய வட்டம் வாய்த்தது. 'நம' வொடு இருந்த ஆருயிரைச் 'சிவ'வொடு இருக்குமாறு மாறினன் என்பதே மாறுதல். வட்டம் - வாசி.

பொட்டடித்து - வெறும் வாயாடியாக. பொட்டடித்து - மாயையை நீக்கி. உள்ளமர் மாசு - கன்மமலம். தட்டொக்க - இருவினை ஒப்பு, மலபரிபாகம் உண்டாக. வட்.......த்தே- உலகப் பழமொழி.

## 1751. தரிக்கின்ற பல்லுயிர்க் கெல்லாந் தலைவன்

1751. தரிக்கின்ற பல்லுயிர்க் கெல்லாந் தலைவன்
இருக்கின்ற தன்மையை யேதும் உணரார்
பிரிக்கின்ற விந்து பிணக்கறுத் தெல்லாங்
கருக்கொண்ட ஈசனைக் கண்டுகொண் டேனே.

சார்ந்திருக்கின்ற உலகுடல் உயிர்கள் அனைத்திற்கும் முழுமுதல்வன் சிவபெருமான். அவன் ஒன்றாய் வேறாய் உடனாய் என்றும் நின்றருளும் மெய்ப்புணர்ப்பு நிலையில் மெய்ம்மையினை ஒரு சிறிதும் உணரார். விந்துவாகிய மாயை, உடையானாகிய கடவுளையும் அடைவானாகிய உயிரையும் இடைநின்று பிரிக்கின்றது. அங்ஙனம் பிரிப்பதாகிய மாறுபாட்டினை நீக்கி, எல்லாவற்றையும் தன் பெரு நிறைவில் கருக்கொள்வதாகிய அடக்குதலைச் செய்துகொள்ளும் சிவ பெருமானை அவன்திருவருள் துணையால் கண்டுகொண்டேன்.

பிரிக்கின்ற விந்து - சிவனையும், சீவனையும் பிரிக்கின்ற மாயை. பிணக்கு - மாறுபாடு. கருக்கொண்ட - அண்டங்களையும் ஆன்மாக்களையும் தன்னுள் அடக்கி வைத்திருக்கின்ற.

## 1752. கூடும் உடல்பொருள் ஆவி குறிக்கொண்டு

1752. கூடும் உடல்பொருள் ஆவி குறிக்கொண்டு
நாடி யடிவைத் தருண்ஞான சத்தியால்
பாடல் உடலினிற் பற்றற நீக்கியே
கூடிய தானவ னாங்குளிக் கொண்டே.

ஆருயிர்கள் வினைக்கீடாகத் தன்னால் (சிவனால்) கூட்டப்பட்டு மாயாகாரிய உடலுடன் கூடயிருக்கின்றன. அவ்வுடலையும், அதனால் ஈட்டிய பொருள்களையும், அவற்றால் வாழும் உயிர்களையும் தன் திருவடியில் சேர்த்துத் தூய்மையும் இன்பமும் சேர்ப்பித்தல் வேண்டுமென்னும் குறிப்பினைத் திருவுள்ளங்கொண்டு செவ்வி நாடியிருப்பன். செவ்வி வாய்த்ததும் அவ்வுயிர்க்குத் திருவடி சூட்டியருள்வன். தன் பேரறிவுப் பேராற்றலால் அவ்வுயிர் உடலில் துன்பப்படலை நீக்கிப் பற்றறச் செய்தருள்வன். இதுகாறும் குளியாகிய மறைவினைக்கொண்டருளிய அவன் வெளிப்பட்டு உயிரைத் தானாக்கிவிடுவன். இதுவே தானவனாகும் என்பது.

பாடல்: படல் என்பதன் நீட்டம்; துன்பத்துக்கு இடமான குளிக்கொண்டே - சீவனுடன் மறைந்து நின்றே.

## 1753. கொண்டா னடியேன் அடிமை குறிக்கொள்ளக்

1753. கொண்டா னடியேன் அடிமை குறிக்கொள்ளக்
கொண்டான் உயிர்பொருள் காயக் குழாத்தினைக்
கொண்டான் பலமுற்றுந் தந்தவன் கோடலாற்
கொண்டா னெனவொன்றுங் கூறகி லேனே.

அடியேன் சிவனுக்கு அடிமையாகவேண்டும் என முழு அன்புடன் கருதுதலும் அச் சிவனும் அடிமையாக ஏற்றுக்கொண்டனன். உயிர், பொருள், உடல் ஆகிய அவனால் தரப்பட்ட அனைத்தையும் அவற்றாலாம் பயன் எய்தியதும் ஆண்டவன் ஏற்றுக்கொண்டனன். அத்திருவருளின் மெய்ம்மையினை நோக்கின் தந்த சிவனே மீண்டும் ஏற்றுக் கொள்வதால் கொண்டான் என்று கூறவும் ஒண்ணாது. இஃது ஒரு பொருளை இரவலாகப் பெற்றவன் மீட்டும் அப் பொருளால் ஆம் பயனை மட்டும் அடைந்துகொண்டு அப் பொருளைப் பழுதில்லாமல் ஈந்தார்பால் செப்பும் உளமகிழ்வுடன் ஒப்புவிப்பதை ஒக்கும். இஃது,

'இரவற் பொருட்பயனை எய்தியின் புற்றார்
குரவனடிக் குய்ப்பரன்பு கொண்டு."
என்பதனாலுணர்க.

கொண்டான் - அடிமை கொண்ட சிவன். அடிமை - ஆட்கொள்ளப்பட்ட சீவன்.

## 1754. குறிக்கின்ற தேகமுந் தேகியுங் கூடி

1754. குறிக்கின்ற தேகமுந் தேகியுங் கூடி
நெறிக்கும் பிராணன் நிலைபெற்ற சீவன்
பறிக்கின்ற காயத்தைப் பற்றிய நேர்மை
பிறக்க அறியாதார் பேயுடன் ஒப்பரே.

நன்மைக்குத் துணையென்று குறிக்கப்படுகின்ற உடலும், உடலையுடைய உயிராகிய உடலியும் அருள்நினைவுடன் கூடினால் அவை செம்மையாக நிற்கும். உயிர்ப்புடன்கூடி நிலைபெற்ற உயிர் வாழ்கின்றது. காலவரையறைக்குட்பட்டுக் கூற்றுவனால் அவ்வுடல் பறிக்கப்படுகின்றது. அவ்வுடலும் உயிரும் சிவன் திருவடிக்கீழ்ச் சேர்ந்து சிறந்து விளங்க வேண்டிய வழிமுறையை அறியாதார் பயனிழந்து அலையும் பேயோடொப்பர். பிறங்கவென்பது பிறக்க என வலித்து நின்றது.

நெறிக்கும் - நன்கு நிற்கும். பிராணன் நிறைபெற்ற - பிராணவாயுவை இருப்பிடமாகக் கொண்ட. பறிக்கின்ற - இயமனால் வலிந்துகொள்ளப்படுகின்ற. நேர்மை - முறைமை பிறக்க: பிறங்க என்பதன் வலித்தல் விகாரம்; விளங்க என்னும் பொருட்டு.

# 1755. உணர்வுடை யார்கட் குலகமுந் தோன்றும்

1755. உணர்வுடை யார்கட் குலகமுந் தோன்றும்
உணர்வுடை யார்கட் குறுதுய ரில்லை
உணர்வுடை யார்கள் உணர்ந்தவக் காலம்
உணர்வுடை யார்கள் உணர்ந்துகண் டாரே.

திருவருள் வலத்தால் திருவடியுணர்வுடையார் உலகத்தின் உண்மையியல்பினை உணர்வர். ஒரு பொருளின் உண்மையினை உணரும் வகை மூன்றாகும். அவை, திரியக் காண்டல், இரட்டுறக் காண்டல், தெளியக் காண்டல் என்ப. உலகுடல்களின் வழிவினை ஆராயாது தோற்றத்தளவானே நிலைக்குமெனக் காண்டல் திரியக் காண்டல். அவை மலம் என்றும் அறிவில்லவென்றும் தோன்றி மறைவவென்றும், உருவுள்ள வென்றும் தெரிவது இரட்டுறக் காண்டல். அவை ஆண்டவன் திருவடியை ஆருயிர் அடைவதற்கு அவனருளால் தரப்பட்ட இரவற் கருவிகள். அவற்றைப் பயன்படுத்திக்கொண்டு அவன்பால் ஒப்புவிப்பதே முறைமையும் கடமையும் ஆம் என்று நிறைநெஞ்சில் நினைப்பதே தெளியக் காண்டல். இம் முறையான் உணர்வார் உள்ளத்தில் உலகவுண்மை தோன்றும். அவ்வாறு அருளால் உலக வுண்மையினை உணர்ந்தவர்க்குப் பிறரெய்தும் மூவகைத் துன்பமும் இல்லை. அருளால் - சிவகுருவால் சிவத்தினையுணர்ந்த மெய்யடியார் உணர்ந்த அப்பொழுதே இறை உயிர் தளை என்னும் முப்பொருள் உண்மையினையும், அப்பொருளின்

தொடர்பினையும், எய்ப்பில் வைப்பாம் திருவடியினையும் செப்பமுற உணர்வர்.

உணர்வு உடையார் - பதி, பசு, பாச உணர்ச்சி உடையார். உணர்ந்த அக் காலம் - பதியை அறிந்த அக் காலத்தில். உணர்ந்து கண்டார் - பதி, பசு, பாச இயல்பின் உண்மை நிலையைக் கண்டார்.

## 1756. காயப் பரப்பில் அலைந்து துரியத்துச்

1756. காயப் பரப்பில் அலைந்து துரியத்துச்
சால விரிந்து குவிந்து சகலத்தில்
ஆயவவ் வாறா றடைந்து திரிந்தோர்க்குத்
தூய அருள்தந்த நந்திக்கென் சொல்வதே.

ஆருயிர்கள் கடல்போல் எல்லையின்றி வரும் பிறப்புக்களில் உழன்று ஒவ்வொரு நாளும் நாபியாகிய கொப்பூழின்கண் உயிர்ப் பொன்றுடன், பேருறக்கமாகிய துரியநிலையினை எய்தும். அந்நிலையினில் மிக விரிந்த ஆவி குவிந்து அடங்கிநிற்கும். இது கேவலமாகிய புலம்புடன் ஒக்கும். பின் நெற்றிக்கண் முப்பத்தாறு மெய்களானுமாகிய பருவுடல், நுண்உடல், பண்புடல், போர்வையுடல், முதலுடல் என்னும் ஐவகையுடல்களுடனும் முப்பத்தைந்து கருவிகளுடனும் புணர்வினை எய்தும். இவற்றினுழன்று செவ்விவாய்ந் தோர்க்கு அருள் தந்த தூய்மையுண்டாகும். இத் தூய்மையாவது மாயா காரியங்களின் உண்மையுணர்ந்து அவற்றின் கண் பற்றின்றி ஆண்டான்கண் பற்று வைத்து ஒழுகுதல்.

காயப் பரப்பு - அளவில்லாத பிறப்பு. துரியம் - கேவல துரியம். சகலம் - அஞ்சு அவத்தையோடுங் கூடிய நிலை. ஆறாறு - 36 தத்துவங்கள்.

## 1757. நானென நீயென வேறில்லை நண்ணுதல்

1757. நானென நீயென வேறில்லை நண்ணுதல்
ஊனென வூனுயிர் என்ன வுடனின்று
வானென வானவர் நின்று மனிதர்கள்
தேனென இன்பந் திளைக்கின்ற வாறே.

ஆண்டவனும் ஆருயிரும் தன்மை முன்னிலைகளால் பெறப்படும் நான் நீ என்பனபோன்று (கடவுளும் உயிரும்) பிரிந்து தோன்றும் பொருள்கள் அல்ல. பின் எவ்வாறு நண்ணி நிற்பதெனின் உடலுயிர்போல் கலப்பால் ஒன்றாய் நிற்பன். வானம் ஏனைய பூதங்களுடன் உடனின்று இயக்குவதுபோல் உடனாய் நின்றருள்வன். வானவர்கள் தொலைவிலகல மனிதர்கள் சிவபெருமான் திருவடியில் தலைக்கூடி அத் திருவடியின்பத்தேன் நுகர்வர். அந் நிலை ஒருசார் பொருள் தன்மையால் வேறாம். இத்தகைய முப்புணர்ப்பால் இன்பந்துய்த்துக் களிக்கின்றவாறாகும்.

ஊன் உயிரென்ன - உடலும் உயிரும்போல. வானென - ஆகாயம் எல்லாப் பூதங்களிலும் கலந்திருத்தல் போல.

# 1758. அவனும் அவனும் அவனை யிறியார்

1758. அவனும் அவனும் அவனை யிறியார்
அவனை யறியில் அறிவானும் இல்லை
அவனும் அவனும் அவனை யறியில்
அவனும் அவனும் அவனிவ னாமே.

உலகியலாகிய அன்பியலிலும், வீட்டியலாகிய அருளியலிலும் தனித்தனி ஒழுகுவோன் அவன் அவன் என இருமுறை ஓதப்பட்டுள்ளான். அவ்விருவரும் அவனாகிய சிவனை ஆராய்ந்தறிவரே யன்றி அழுந்தியறியார். அவனாகிய சிவனை அழுந்தியறியில், ஆருயிரின் சிற்றுணர்வு இல்லை. அவ்வுயிர்க்குச் சிவனது முற்றுணர்வேயுண்டு. அதனால் சிற்றுணர்வு நிலையாம் அறிவானும் இல்லை. அவனை அவனருளால் உணர்வார் பேற்றியலாகிய இன்பியலினராவர். இவர்களே ஞான நெறியினராவர். இந் நெறியினரை யொப்ப அன்பியல் அருளியலாகிய இருநெறியினரும் காண்பரேல் அவர்களும் அவனருளால் அவனேயாவர். அதுவே அவனிவனாம் என்று ஓதியது. அன்பியலாரைக் கன்மகாண்டி என்றும், அருளியலாரைப் பத்திகாண்டி என்றும் கூறுப. அவன் எனப், பலகால் வருவது சொற்பொருள் பின்வரும் நிலை என்னும் அணி.

அவனும் அவனும் - கன்மகாண்டியும் பத்திகாண்டியும். அவனை அறியில் - சிவனை அறியில். அறிவானும் இல்லை - சீவபோதம் இல்லையாம். அவனிவன் - சிவபோதத்தை அடைந்தவர்கள்.

## 1759. நானிது தானென நின்றவ னாடோறும்

1759. நானிது தானென நின்றவ னாடோறும்
ஊனிது தானுயிர் போலுணர் வானுளன்
வானிரு மாமுகில் போற்பொழி வானுளன்
நானிது வம்பர நாதனு மாமே.

சிவன் ஆருயிர்மாட்டு வைத்த பேரளியால் உடம்பைத் தான் எனக் கருதும் உயிர்போல் அவ்வுயிரைத் தானெனக் கருதி நாடொறும் உணர்வன். கைம்மாறு கருதா மழைபோல் அருள் மழை பொழிவன். அம் முறையால் ஆருயிரும் அறிவுப் பெருவெளியாகிய பரமாகாயத்துக்கு முதல்வனாகும் என ஏற்றியுரைப்பர். ஏற்றுரை - முகமன், உபசாரம். பேரளி - பெருங்கருணை.

நான் இது தானென்ன - சீவனோடு ஒன்றித்தாய். ஊனிது தானுயிர் போல் - உடலைத் தானென்றிருக்கும் உயிரைப் போல. இருமாமுகில் போல் கைம்மாறு கருதாது பொழியும் மேகத்தை போல.

## 1760. பெருந்தன்மை தானென யானென வேறாய்

1760. பெருந்தன்மை தானென யானென வேறாய்
இருந்தது மில்லைய தீசன் அறியும்
பொருந்தும் உடலுயிர் போலுமை மெய்யே
திருந்தமுன் செய்கின்ற தேவர் பிரானே.

பெருந்தன்மையாகிய தான் என்னும் சிவனும், யான் என்னும் உயிரும் இடத்தால் வேறுபட்டு இருந்ததில்லை; கலப்பால் ஒன்றாகவே யிருந்தனம். இவ்வுண்மை திருவடி யுணர்வுபெற்றுச் சிவனாயினார் யாவரும் அறிவர். ஆருயிர்க்கு மாயாகாரியமாகிய உடலிருப்பதுபோல் உடையானுக்குத் திருவருளாகிய திருமேனி யுளது. அத் திருமேனியும் இயல்பாகவே யமைந்த திருந்திய திருமேனியாகும். அதனால் யாவரையும் திருந்தச் செய்கின்றனன் சிவன்.

பெருந்தன்மை - சிவபிரான். யான் - சீவன். உமைமெய்யே திருந்த - சிற்சத்தியே உடலாக: முன் - அநாதியில்; அஃதாவது படைப்புக்கு முந்திய காலத்தில்.

## 1761. இருபத மாவ திரவும் பகலும்

1761. இருபத மாவ திரவும் பகலும்
உருவது வாவ துயிரும் உடலும்
அருளது வாவ தறமுந் தவமும்
பொருளது வுள்நின்ற போகம தாமே.

ஆருயிர்கட்கு இரு நிலையாவது அறியாமையாகிய இரவும், அறிவாகிய பகலும் என்ப. ஆருயிர்க்கு மாயாகாரிய உடலிருப்பது போன்று திருவருளுக்கு ஆருயிர் உடலாக இருக்கின்றது. அருளென்பது அன்பியலில் அறமும், அருளியலில் தவமுமாகும். பொருளாவது நீருள் வெப்பம்போல் திருவருள் உள்நின்ற சிவனாகும். பொருளென்பது ஆருயிர் நுகர்வாம் பேரின்பம். அதுவே சிவபோகம். பொருள் அழிவில் மெய்ப் பொருள்.

இரவும் பகலும் - அஞ்ஞானமும் ஞானமும். போகம் - சிவபோகம்.

## 1762. காண்டற் கரியன் கருத்திலன் நந்தியுந்

1762. காண்டற் கரியன் கருத்திலன் நந்தியுந்
தீண்டற்குஞ் சார்தற்குஞ் சேயனாத் தோன்றிடும்
வேண்டிக் கிடந்து விளக்கொளி யானெஞ்சம்
ஈண்டிக் கிடந்தங் கிருளறு மாமே.

நந்தியாகிய சிவன் ஆருயிரின் சுட்டறிவால் காண்டற் கரியன்; சிற்றறிவால் கருதற்கும் அரியன். அவன் திருவடியுணர்வு கைவரப்பெறாதாரால் தொடுதற்கும் தோய்தற்கும் ஒண்ணாத நெடுந் தொலைவிலுள்ளான்போன்று தோன்றுவன். அவன் திருவருளை வேண்டி வேறு நினைப்பின்றிச் சிவத்தைப் பேணலாகிய தவத்தைச் செய்யும் செந்நெறியாளர்க்கு உள்ளுணர்வொளியாகிய திருவடியுணர்வு கைவரும். அவ்வுணர்வுடையார் நெஞ்சத்து விளங்கும் அச் சிவஞானத்தால் தொன்மை ஆணவ வல்லிருள் அற்றொழியும்.

விளக்கு ஒளி - விளக்குகின்ற ஞானம்.

## 1763. குறிப்பினின் உள்ளே குவலயந் தோன்றும்

1763. குறிப்பினின் உள்ளே குவலயந் தோன்றும்
வெறுப்பிருள் நீங்கில் விகிர்தனும் நிற்குஞ்
செறிப்புறு சிந்தையைச் சிக்கென நாடில்
அறிப்புறு காட்சி அமரரு மாமே.

அருளால் ஆணவவல்லிருள் அற்றொழிந்த மெய்யடியார் உள்ளக் குறிப்பினுள் உலகவியல்பின் உண்மைத்தன்மை விளங்கும். நல்லாரால் வெறுக்கத்தகுந்த காரறிவாண்மையாகிய அறியாமை நீங்கினால், கருத்தாலியற்றும் விகிர்தனாகிய சிவபெருமானும் விளங்கி நிற்பன். திருவடியின்கண் உள்ளப்பிணிப்புடைய உணர்வின்கண் அச் சிவனை நன்றாக நாடினால், அறியத்தகுந்த சிவஞானத்துடன் விழையத்தகுந்த சிவவுலகத்துறைவர் 'விகிர்தன்' இச் சொல் தேவார திருவாசகங்களில் பலகால் வருகின்றது.

குறிப்பினுள் - உள்ளத்திலே. வெறுப்பு இருள் - வெறுக்கத் தகுந்த அஞ்ஞானம். செறிப்பு உறு - பாசத்தைப் பொருந்திய. அறிப்பு உறு - அறிவு பொருந்திய.

## 1764. தேர்ந்தறி யாமையின் சென்றன காலங்கள்

1764. தேர்ந்தறி யாமையின் சென்றன காலங்கள்
பேர்ந்தறி வானங்கள் பிஞ்ஞகன் எம்மிறை
ஆர்ந்தறி வாரறி வேதுணை யாமெனச்
சார்ந்தறி வான்பெருந் தன்மைவல் லானே.

ஒப்பில் ஒருவன் திருவருள் துணையால் முப்பொருள் உண்மையினை நானெறி வாயிலாய் ஐந்தெழுத்து முறைமையின் வைத்து ஆராய்ந்து உண்மை காணாது இதுகாறுங் காலங்கள் வீணாகக் கழிந்தன. அறியாமை நீங்கிய மெய்யன்புசேர் நல்லாரால் பின்னற் றிருச் சடையினையுடைய எம்மிறையாகிய சிவபெருமான் வெளிப்பட்டு அறியப்படுவன். பிஞ்ஞகன்: பின்னல் சடையினன். அன்னை அஞ்ஞை என்பது போன்று பின்னை பிஞ்ஞை என்றாயிற்று. சிவபெருமானை அறிவதற்கு அவன் திருவடியுணர்வே துணையாகும். அவ்வுணர்வினைச் சார்ந்து அறியும் உரமுடையான் சிவனருட் பெருந்தன்மைவல்லானாவன்.

பேர்ந்து - அஞ்ஞானம் ஒழிந்து - அறவே துணை - ஞானமே துணை.

## 1765. தானே யறியும் வினைகள் அழிந்தபின்

1765. தானே யறியும் வினைகள் அழிந்தபின்
நானே யறிகிலன் நந்தி யறியுங்கொல்
ஊனே யுருகி யுணர்வை யுணர்ந்தபின்
தேனே யனையனந் தேவர் பிரானே.

ஆருயிரின் இருள்சேர் இருவினையும் அருளால் அழிந்த பின் அவ்வுயிர் தன்னைத்தானே திருவருட்டுணையாலறியும். மலகன்ம மாயைகளை அவ் வுயிர் அறியாது. அவ்வாறிருப்ப நந்தியாகிய சிவபெருமான் அவற்றை அறிவது எங்ஙனம்? அவன் அறியான். அறியான்: ஈண்டு அனுபவியான். உள்ளம் உருகித் தொழுது உணரப்படும் உணர்வாகிய சிவனை உணர்ந்தபின், தேனே அனைய சிவபெருமானின் திருவடியின்பத்தை உயிர் துய்க்கும்.

## 1766. நானறிந் தன்றே யிருக்கின்ற வீசனை

1766. நானறிந் தன்றே யிருக்கின்ற வீசனை
வானறிந் தாரறி யாது மயங்கினர்
ஊனறிந் துள்ளே யுயிர்க்கின்ற ஒண்சுடர்
தானறி யான்பின்னை யாரறி வாரே.

எஞ்சுவினை, ஏறுவினையாகிய இருவினையும் அற்ற அப்பொழுதே அருளால் அச் சிவனை நான் அறிந்தேன் . வினைக்கீடாகத் துறக்கவுலகம் சென்று நல்வினைப் பயனாம் இன்பந்துய்த்து மீண்டும் பிறக்கும் நயனிலாத்தேவர் துறக்கவின்பினைமட்டும் அறிந்து செருக்கிச் சிவனை யறியாராயினர் . உடலை உயிருடன் பொருத்தி அவ்வுயிர்க்கு உயிராய் நின்றியக்குகின்ற அறிவுப் பெருஞ்சுடராகிய சிவபெருமானை, அவனருளால் மெய்யன்பு பூண்ட அடிமையாகிய அவனும் அறியானாயின் பின்னை யாரறிவார்.

அன்றே - கன்மம் ஒழிந்தபொழுதே. வான் அறிந்தார் - சுவர்க்க போகங்களை அறிந்தார்.

# 1767. அருளெங்கு மான அளவை யறியார்

1767. அருளெங்கு மான அளவை யறியார்
அருளை நுகரமு தானதுந் தேரார்
அருளைங் கருமத் ததிசூக்க முன்னார்
அருளெங்குங் கண்ணான தாரறி வாரே.

திருவருளாற்றல் பிரிப்பின்றி எங்கணும் நிறைந்து நிற்கும் இயற்கை உண்மையினை உணரார் . அவ்வருளே திருவடி இன்பம் ஊட்டும் செவிலியாதலின், அதுவே உண்ணும் அமுதமாம் உண்மையினையும் உணரார். திருவருள் படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐந்தொழில்களையும் அயன், அரி, அரன், ஆண்டான், அருளோன் என்னும் சிவன் ஆணைபெற்ற செவ்வுயிராகிய இவர்கண்மாட்டு இறைவன் மீநுண்மையாய் நின்று இயற்றுவிக்கும் எண்மையினையும் நினையார். அத்திருவருளே எங்கணும் நிறைந்து எவ்வுயிர்க்கும் அறிவுக்கு அறிவாய் நின்று இயக்குவதனை அவ்வருள் பெற்றவரே அறிவர் . மற்று யாரறிவார்? ஒருவரும் அறியார் என்பது குறிப்பெச்சம். நாள் விழா, சிறப்பு விழா, பயன் விழா, விலக்குச் செயல், கழுவாய்ச் செயல் என்னும் உலகோர் இயற்றும் ஐந்தொழிற்கும் அப்பால் நிற்பது திருவருள் என்பாரும் உளர். விலக்கு - நிசேதம்.

அருள் எங்கும் ஆன அளவு - திருவருள் எல்லையை, ஐங்கருமம் - ஆக்கலாதிய ஐந்தொழில் . கண் - அறிவு.

## 1768. அறிவில் அணுக அறிவது நல்கிப்

1768. அறிவில் அணுக அறிவது நல்கிப்
பொறிவழி யாசை புகுத்திப் புணர்ந்திட்டு
அறிவது வாக்கி அடியருள் நல்குஞ்
செறிவொடு நின்றார் சிவமாயி னாரே.

திருவடியுணர்வாகிய அறிவில் ஆருயிர்கள் பொருந்த, அச் சிவன் அறிவுக்கு அறிவாய் நின்று அறிவினை அருளினன். அந்நிலை எய்துதற்குரிய பயில்வு கைக்கொள்ளும் பொருட்டுப் பொறிவழி விருப்பினை உயிர்க்குப் புகுத்தினன். தானும் அவ்வுயிரினோடு புணர்ந்து நின்றனன் . அவ் வருளின்வழித் திருவடி யுணர்வுபெற்றுத் திருவருள் நிறைவில் நிலைத்து நின்றார் அச் சிவமாகவே இருப்பர்.

அறிவில் - ஞானத்தில். செறிவு - நன்னெறி ஒழுக்கம்.

## 1769. அருளிற் பிறந்திட் டருளில் வளர்ந்திட்டு

1769. அருளிற் பிறந்திட் டருளில் வளர்ந்திட்டு
அருளில் அழிந்திளைப் பாறி மறைந்திட்டு
அருளான ஆனந்தத் தாரமு தூட்டி
அருளால்என் நந்தி யகம்புகுந் தானே.

ஆருயிர் அனைத்தும் மலந் தேய்தற்பொருட்டு, வினைக் கீடாக உடலுடன் அருளால் பொருந்தும். அப் பொருந்துதலையே பிறப்பென்பர் . அருளால் பிறந்து, வினைப்பயன் துய்க்கும்படி அருளால் வளர்ந்திட்டு, அருளால் வினைச்செவ்வி வாய்த்தற்பொருட்டு ஒடுங்கி நின்று, முழுமுதற் சிவனை ஆருயிரின் பழுதகலும்வரை மறைத்து வைப்பதால் மறைந்திட்டு, திருவடி இன்பம் ஊட்ட அருள்புரிந்து சிவகுருவாகி அருளால் சிவபெருமான் ஆருயிரின் அகம் புகுந்தனன். அதனால் எல்லாம் திருவருட் செயலேயாம்.

## 1770. அருளால் அமுதப் பெருங்கடல் ஆட்டி

1770. அருளால் அமுதப் பெருங்கடல் ஆட்டி
அருளால் அடிபுனைந் தார்வமுந் தந்திட்டு
அருளான ஆனந்தத் தாரமு தூட்டி
அருளால்என் நந்தி யகம்புகுந் தானே.

திருவடி மறவாச் சீரிய நினைவே அழியா அமிழ்தப் பெருங்கடலாகும் . அக் கடலின்கண் திருவருளால் ஆட்டுவித்து, அத் திருவருளாலேயே திருவடியினைச் சூட்டி, மறவாப் பேரன்பும் வழங்கி, அத் திருவருட் பேரின்பினையும் உண்பித்து, அத் திருவருளாலேயே அச் சிவன் ஆருயிரின் அகம் புகுந்தான்.

அடிபுனைந்து - திருவடிசூட்டி.

## 1771. பாசத்தி லிட்ட தருளந்தப் பாசத்தின்

1771. பாசத்தி லிட்ட தருளந்தப் பாசத்தின்
நேசத்தை விட்ட தருளந்த நேசத்திற்
கூசற்ற முத்தி யருளந்தக் கூட்டத்தின்
நேசத்துத் தோன்றா நிலையரு ளாமே.

ஆருயிர்களைப் பண்டே புல்லிய மலநோய் நீங்க வினை உடல் என்ற வேறிரு பாசத்துடன் இணைத்துவைத்தது திருவருள். பின் செவ்வி வாய்த்ததும் அவைகளை அப் பாசத்தினின்று விடுவித்ததும் அவ் வருளே. பாசம் விடுத்ததும் ஆருயிரின் நேசம் முற்றும் சிவன் திருவடியில் பொருந்துமாறு புரிவது அருள். அச்சமகற்றும் திருவடிப் பேரின்பமும் அருள். திருவயின்பந் திளைத்துச் சிவனுள்ளடங்கி ஆருயிர் நிற்றலால் அவ் வுயிரும் சிவனும் பிரிப்பின்றி ஒன்றாய்ப் பின்னி உறையுமாறு செய்வதும் அருளே.

## 1772. பிறவா நெறிதந்த பேரரு ளாளன்

1772. பிறவா நெறிதந்த பேரரு ளாளன்
மறவா அருள்தந்த மாதவன் நந்தி
அறவாழி அந்தணன் ஆதிப் பராபரன்
உறவாகி வந்தென் உளம்புகுந் தானே.

ஆருயிர்கள் இனிப் பிறந்துழலாவண்ணம் பிறவாப் பேரருளும் செந்நெறியினைத் தந்தருளியவன், பிறப்பு இறப்பில்லாத பேரருளாளனாகிய சிவபெருமான். தன் திருவடியை மறவா நினைவுடன் இருக்கும்படி அருள்புரிந்தவனும் அவனே. பெருந்தவக்கோலத்தோனாகிய நந்தி மாதவன் என்பதற்கு மாதை ஒரு கூற்றிலேயுடைய சிவபெருமான் என்றலும் ஒன்று. அவனே அறவாழி அந்தணன் - அனைத்திற்கும் காரணமாம் பெரும்பொருளும் அவனே. உயிர்க்குயிராய் ஆண்டான் அடிமை உறவாய் என் நெஞ்சம் புகுந்தருளினன்.

பிறவாநெறி - முத்தி. மறவா அருள் - மறதியில்லாத ஞானம்.

# 1773. அகம்புகுந் தானடி யேற்கரு ளாலே

1773. அகம்புகுந் தானடி யேற்கரு ளாலே
அகம்புகுந் துந்தெரி யானரு ளில்லோர்க்கு
அகம்புகுந் தானந்த மாக்கிச் சிவமாய்
அகம்புகுந் தானந்தி யானந்தி யாமே.

சிவபெருமான் திருவருளால் அடியேன் உள்ளத்தைத் தூய்மைப்படுத்தி அங்குப் புகுந்தனன். திருவருள் கைவரப்பெறாதானுக்கு அகம் புகுந்தும் அவரால் உணர்தற்கு அரியன். உள்ளம் புகுந்து கண், எண்ணம், அறிவமைதி எல்லாம் சிவத்தொடர்பாக ஆக்குதலால் எல்லாம் சிவ இன்பமாகவே திகழும். சிவமாக்கி ஆருயிர்களை ஆளுமுறையால் ஆனந்தி என்னும் பெயர் சிவனுக்காயிற்று. ஆனந்தி : ஆன் - உயிர். நந்தி - சிவன்.

சிவமாய் அகம்புகுந்தானந்தி - சிவகரணமாய் ஆனந்திப்பவன். ஆன் நந்தியாமே-பசுபதியாகிய சிவசாரூபத்தையடைவான்.

## 1774. ஆயும் அறிவோ டறியாத மாமாயை

1774. ஆயும் அறிவோ டறியாத மாமாயை
ஆய கரணம் படைக்கும்ஐம் பூதமும்
ஆய பலவிந் திரிய மவற்றுடன்
ஆய வருளைந்து மாமருட் செய்கையே.

ஆருயிர் கண் முதலிய பொறிகளைத் துணையாகக் கொண்டு அறியும் அவ் வுயிருடன் கூடிய மாயை மாமாயை எல்லாம்
அறிவில்லன எனினும் அவற்றினின்றும் அறிவிற்குத் துணையாம் கரணம், பூதம் இந்திரியம் எல்லாம் தோன்றுகின்றன. அவை அறிவிற்குத் துணையாய் அறிவுபோல் விளங்குவதும் திருவருள் ஆற்றலின் துணைச் செயலேயாம். இஃது எழுத்து நோக்கத் துணைசெய்யும் கண்ணாடியைச் செய்தமைப்பது போன்றதாகும். திருவருளாற்றல். வனப்பாற்றல், நடப்பாற்றல், அன்பாற்றல், அறிவாற்றல், தொழிலாற்றல் என்னும் ஐவகை யாற்றல்களாகப் பிரிந்து தெழிற்படுகின்றது. இவற்றை முறையே பராசத்தி, திரோதானசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என்ப. இவற்றின் விரிவுகளும் அளவில்லன. இந்திரியத்தைப் புலன் எனவும் புள் எனவும் (1987) கூறுப. எனவே உலகனைத்தும் திருவருள் இயக்கத்தால் இயங்குவன. அதனால் எல்லாம் அருட் செய்கையே.

அறியாத மாமாயை - மூலப் பிரகிருதி.

## 1775. அருளே சகலமு மாய பௌதிகம்

1775. அருளே சகலமு மாய பௌதிகம்
அருளே சராசர மாய அகிலம்
இருளே வெளியே யெனுமெங்கும் ஈசன்
அருளே சகளத்த னன்றியின் றாமே.

அனைத்திற்கும் தாங்கும் நிலைக்களமாய்த் திருவருள் நிற்றலின் பூதகாரியமுதல் அனைத்தும் அருளேயாம். இயங்குதிணை நிலைத்திணையாகிய எல்லாவற்றின் வாழ்க்கைகளும் அருளாலேயே நிகழ்வனவாம். இருளும்வெளியுமாகிய அறியாமை அறிவுகள் தொழிற்படத் துணை நிற்பதும் அருளே. அவ் வருளே சிவபெருமானுக்குத் துணைவியாய்த் திருமேனியுமாய் நிற்கும். அதனால் அருளுருவானவன் சிவன். அருளன்றிச் சிவன் இன்று.

பவுதிகம் - பூதகாரியம். சகளத்தன் - மாயையாற் றிருமேனி கொண்ட சிவபிரான்.

## 1776. சிவமொடு சத்தி திகழ்நாதம் விந்து

1776. சிவமொடு சத்தி திகழ்நாதம் விந்து
தவமான ஐம்முகன் ஈசன் அரனும்
பவமுறு மாலும் பதுமத்தோன் ஈறா
நவமவை யாகி நடிப்பவன் தானே.

சிவமாகிய அறிவும், சத்தியாகிய ஆற்றலும், ஒலியும், ஒளியும், அருளோனும், ஆண்டானும், அரன் அரி அயன் என்னும் மூவரும் ஆகிய ஒன்பதின்மரும் உலகுயிர் நிகழ்ச்சியின்பொருட்டு வேண்டப்படுவர். அவ் வொன்பது திருக்கோலங்களும் முழுமுதற் சிவன் ஒருவனே (1716) திருவருளாற்கொண்டு நடிப்பன்.

சிவத்தின் ஒன்பது அவசரங்கள் கூறப்பட்டன.

## 1777. அருட்கண் ணிலாதார்க் கரும்பொருள் தோன்றா

1777. அருட்கண் ணிலாதார்க் கரும்பொருள் தோன்றா
அருட்கண் ணுளோர்க்கெதிர் தோன்றும் அரனே
இருட்கண்ணி னோர்க்கங் கிரவியுந் தோன்றா
தெருட்கண்ணி னோர்க்கெங்குஞ் சீரொளி யாமே.

திருவருட்கண் வாய்க்கப்பெறாதார்க்கு உண்மை அறிவு இன்ப உருவினனாகிய சிவபெருமான் தோன்றான். அரும்பொருள் - சிவன். அருட்கண் உள்ளோர்க்கு அரன் எதிர்தோன்றுவன். கண் குருடாகிய இருட்கண்ணினோர்க்கு யாவர்க்கும் வெளிச்சமாகிய ஞாயிறும் தோன்றாது. அஞ் ஞாயிறு குருடு நீங்கித் தெளிந்த கண்ணுடையார்க்குச் செவ்வையாகத் தோன்றும். அதுபோல் சிவனும் அருட்கண்ணினர்க்குத் தோன்றுவன்.

அருட்கண் - அருளைக்கொண்டு பார்க்கு கண்.
தெருட்கண் - ஒளியைக்கொண்டு பார்க்கும் கண்.

## 1778. தானே படைத்திடுந் தானே அளித்திடுந்

1778. தானே படைத்திடுந் தானே அளித்திடுந்
தானே துடைத்திடுந் தானே மறைத்திடுந்
தானே யிவைசெய்து தான்முத்தி தந்திடுந்
தானே வியாபித் தலைவனு மாமே.

எங்கும் நிறைந்து எவற்றினும் பிரிப்பின்றித் திகழும் சிவபெருமான், ஆருயிர்களின்மாட்டு வைத்த அரும்பெரும் தலையளியால் தூண்டுவாரும் வேண்டுவாரும் எவரும் இன்றியே அருளே துணையாகக் கொண்டு திருவுள்ளக்கருத்தானே படைப்புமுதல் வீடுபேறு ஈறாகவுள்ள எல்லாச் செயல்களையும் புரிந்தருள்வன். அவனே விழுமிய முழுமுதல்வனாவன். இறைவன் ஒருவனே முறையுற ஐந்தொழிலும் புரியும் நிறைவுடைமையான். ஏனை ஆணைக் கடவுளர் ஒவ்வொன்றே செய்யுமுரிமையர்.

## 1779. தலையான நான்குந் தனதரு வாகும்

1779. தலையான நான்குந் தனதரு வாகும்
அலையா வருவுரு வாகுஞ் சதாசிவம்
நிலையான கீழ்நான்கு நீடுரு வாகுந்
துலையா இவைமுற்று மாயல்ல தொன்றே.

தூமாயைக்கண் விளங்கும் அறிவு, ஆற்றல், ஒலி, ஒளி, ஆகிய நான்கும் சிவனுக்குரிய அருவநிலையாகும்; அருளோனாகிய சதாசிவன் அருஉருவ நிலையாகும்; ஆண்டான், அரன், அரி, அயன் ஆகிய நான்கு நிலையும் உருவநிலையாகும்; இவருள் அரன், அரி, அயன் என்னும் மூவரும் உடல்மெய்யாகிய மூலப்பகுதியில் அப் பெயர்களோடு ஆணையால் முத்தொழில்புரியும் மூவரையும் தொழில்படுத்துவோராவர்.
இம் மூவரும் ஆசான் மெய்க்கண் உறைவோர். தலையளி: தண்ணளி; பெருங்கருணை. இவ்வகை (1776) ஒன்பது திருமேனிகளுடன் இயைந்து இயக்கினும் சிவபெருமான் ஒன்றும் இயைந்திடா இயல்பினனாகி யப்பாலுள்ளவனாவன்.

தலையான நான்கு - சிவம், சத்தி நாதம், விந்து. கீழ் நான்கு-ஈசன், அரன், மால், அயன்.

## 1780. ஒன்றது வாலே உலப்பிலி தானாகி

1780. ஒன்றது வாலே உலப்பிலி தானாகி
நின்றது தான்போல் உயிர்க்குயி ராய்நிலை
துன்றி யவையல்ல வாகுந் துணையென்ன
நின்றது தான்விளை யாட்டென்னுள் நேயமே.

உலப்பிலியாகிய சிவபெருமான் தன்னைவிட்டு என்றும் யாண்டும் பிரிப்பின்றி உடனாய் நிற்கும் திருவருளாற்றலைத் (தாதான்மிய சத்தியை) தனக்குத் திருமேனியாகவும் உலகுயிர்களை நடத்தும் திரு ஆணையாகவும் கொண்டு கருத்தளவான் இயக்குகின்றனன். அதுபோல் உயிர்க்குயிராய் நின்று உடங்கியைந்து இயக்கினும் பொருள் தன்மையில் தான்வேறாய் நிற்பன். பெற்றோரும் ஆசிரியரும் முறையே பிள்ளைகளையும் மாணவர்களையும் கைப்பிடித்து நடத்தியும் ஓதி ஓதுவித்தும் உடனாய் நிற்கின்றனர். அவ்வாறு நிற்பினும் பொருள்தன்மையில் பெற்றோர் ஆசிரியர் என்ற பெயர்ப்பொருளால் வேறுபடுகின்றனர். இவ் வொப்பே சிவபெருமான் இயைந்தும் இயந்திடா நிலைமைக்கு ஒப்பாகும். இம் முறையால் ஆண்டவன் இயைந்தியக்கும் நிலையைப், படியிலாப் பணியாதலின் விளையாட்டென்பர். படி - சம்பளம். அவன் என்னுள் நிறைந்துநிற்கும் அன்புப் பிழம்பாகும். அதனாலேயே அன்பு சிவம் ஒன்று என்று ஓதும் முறை வந்தது.

ஒன்று அதுவால் - சத்தியால். என் உள்நேயம் - என் உள்ளத்தின்கண் நேயமாய் இருக்கும் சிவன்.

## 1781. நேயத்தே நின்றிடும் நின்மலன் சத்தியோடு

1781. நேயத்தே நின்றிடும் நின்மலன் சத்தியோடு
ஆயக் குடிலையுள் நாதம் அடைந்திட்டுப்
போயக் கலைபல வாகப் புணர்ந்திட்டு
வீயத் தகாவிந்து வாக விளையுமே.

ஆருயிர்களின் அன்பின் நிலைக்களமாக நிற்பவன் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய சிவபெருமான். அவன் தன் திருவாணை ஆகிய சத்தியைத் தொழிற்படுத்துதலால் குடிலையாகிய மாமாயையுள் நாதமாகிய ஓசை தோன்றும். மேலும் நீக்கல் நிலைப்பித்தல் முதலிய ஐங்கலைகள் தோன்றும். இங்ஙனம் பலவாகக் காரியப்படினும் காரணமாயையாகிய விந்து என்றும் அழியாதது. வேண்டும் விளைவினைத் திருவாணையால் என்றும் நின்று தந்துகொண்டே இருக்கும்.

குடிலை - மகாமாயை. வீயத்தகா - கெடுதல் இலாத. விந்து - சுத்த மாயை.

# 1782. விளையும் பரவிந்து தானே வியாபி

1782. விளையும் பரவிந்து தானே வியாபி
விளையுந் தனிமாயை மிக்கமா மாயை
கிளையொன்று தேவர் கிளர்மனு வேதம்
அளவொன் றிலாவண்ட கோடிக ளாமே.

பரவிந்துவாகிய தூமாயையைத் திருவருளாணை நேரே தொழிற்படுத்தும். அம் மாயை அவ்வாணையின் தொழிற்பாடுகள் எல்லாவற்றுக்கும் நிலைக்களமாய் நிறைவாய் நிற்கும். திருவருளாணை - சிவசக்தி. நிறைவு - வியாபகம். அவ் வாணையால் காரியப்படுவதே விளைவு. அவ்விளைவு, தூவாமாயை தூமாயை என இருதிறப்படும். இத் தூமாயை தேவர் இனங்களுக்கும், மந்திரங்களுக்கும், வேதாகமமாகிய முறை நூல் இறை நூல்கட்கும் இடமாம். அளவில்லாத அண்ட கோடிகளுக்கும். உடல், உறுப்பு, உலகம் உணவு ஆகிய நான்மையாக விளங்கும் பொருள்கட்கும் தூவாமாயை இடமாம். அண்டகோடிகள் என்பது அண்டங்களில் வாழும் உயிர்கள். அண்டங்களுக்கும் நிலைக்களமாக இடங்கொடுத்து இருப்பது திருவருளாணையே.

மாயையின் பிரிவுகள் கூறப்பட்டன. பரவிந்து சுத்தமாயை என்றும், தனிமாயை அசுத்தமாயை என்றும், மாமாயை மூலப் பிரகிருதி என்றும் விளக்கப்பட்டது.

## 1783. அருளிற் றலைநின் றறிந்தழுந் தாதார்

1783. அருளிற் றலைநின் றறிந்தழுந் தாதார்
அருளிற் றலைநில்லார் ஐம்பாச நீங்கார்
அருளிற் பெருமை யறியார் செறியார்
அருளிற் பிறந்திட் டறிந்தறி வாரே.

திருஆணையாகிய திருவருளில் உறைத்து நின்று அழுந்தி அறிதலாகிய அனுபவங்கொள்ளாதார், அத் திருவருளின்வழி ஒழுகார். அதனால் மருளின்வழி ஒழுகுவர். ஒழுகவே, ஆணவம், கன்மம், மாயை, மாயையாக்கம், நடப்பாகிய மறைப்பாற்றல் என்னும் ஐவகைப் பாசங்களும் நீங்கார். மறைப்பாற்றல் திருவருளேயாயினும் 'நோய்நாடி நோய் முதல்நாடி அதுதணிக்கும், வாய்நாடி வாய்ப்பச் செய்யும்' மருத்துவன் போல் ஆருயிர்களோடு பாசங்களை இணைப்பித்து ஆணவத்தைத் தேய்ப்பித்துத் தூய்மைப்படுத்துதலால் அதுவும் மலமென்று ஏற்றிச் சொல்லப்படும். இஃது 'உற்றவன் தீர்ப்பான்' என்னும் மருந்து வகை நான்கனுள் தீர்ப்பானும் ஒரு மருந்தாகச் சேர்க்கப்பட்டிருப்பதை யொக்கும். திருவருளின் இயற்கை உண்மைப் பெருமையை உணரார், அதன் பெருநிறைவிலடங்கி நில்லார். இவ் வுண்மைகளைத் திருவருளோடிணங்கி அதன் துணையால் அறிதல் வேண்டும். பெருநிறைவு - வியாபகம்.

ஐம்பாசம் - ஐந்து மலம்.

## 1784. வாரா வழிதந்த மாநந்தி பேர்நந்தி

1784. வாரா வழிதந்த மாநந்தி பேர்நந்தி
ஆரா அமுதளித் தானந்தி பேர்நந்தி
பேரா யிரமுடைப் பெம்மான்பே ரொன்றினில்
ஆரா அருட்கடல் ஆடுகென் றானே.

மீண்டு வாரா வழியருள்புரிகின்ற முழுமுதற் சிவமாகிய மாநந்தியின் திருப்பெயர் 'நமசிவய.' அந்நந்தியே ஆருயிர்களுக்கு ஆரா அமுதளித்துப் பேரின்பம் பெருக்கும் இன்பவுருவினன். இன்பவுருவினன் என்பதே ஆனந்தி. அவனுக்கு அருட்பண்பு காரணமாக அளவில்லாத திருப்பெயர்கள் உண்டு. அத் திருப்பெயர்களுள் 'சிவ' என்னும் ஒப்பில்லா ஒரு பெயரில் அன்புபூண்டு இன்புற ஓதிக் குறையாத திருவருட்கடல் ஆடுக என்று பணித்தருளினன். 'குறைவிலா மங்கல குணத்தனாதலின், அறைகுவர் சிவனென அறிவின் அறிவின் மேலையோர்' எனக் காஞ்சிப் புராணத்தின்கண் மாதவச் சிவஞான முனிவரனார் அருளுமாற்றன் இவ் வுண்மை எண்மையினுணரலாம்.

## 1785. ஆடியும் பாடியும் அழுதும் அரற்றியுந்

1785. ஆடியும் பாடியும் அழுதும் அரற்றியுந்
தேடியுங் கண்டேன் சிவன்பெருந் தன்மையைக்
கூடிய வாறே குறியாக் குறிதந்தென்
ஊடுநின் றானவன் தன்னரு ளுற்றே.

திருவருள் கைவரப்பெறுதலான் ஆடுதல், பாடுதல், இன்பக் கண்ணீர் உகுத்தல், ஓலமிடுதல், இடம் இடம்தோறும் சென்று நாடுதல் ஆகிய நற்பணி புரிந்து சிவன் பெருந்தன்மையை அவன் உணர்த்த உணர்ந்தேன். அவன் என்றும் என்னுடன் கூடியிருக்கும் இயல்போடே புருவ நடுவின்கண் அறிவாலன்றி அருளால் உணரும் திருவடியைத் தந்தருளினன். தந்தருளி, என்னுடன் வெளிப்பட்டு நின்றருளினன். இதுவும் திருவருளைப் பொருந்தியே என்க. அறிவாலன்றி அருளாலறிவதைக் குறியாக்குறி என்றருளினர்.

# 1786. உற்ற பிறப்பும் உறுமல மானதும்

1786. உற்ற பிறப்பும் உறுமல மானதும்
பற்றிய மாயாப் படல மெனப்பண்ணி
அத்தனை நீயென் றடிவைத்தான் பேர்நந்தி
கற்றன விட்டேன் கழல்பணிந் தேனே.

ஆருயிரினோடு பண்டே வேறறப் புல்லிய மலப்பிணிப் பால் பிறப்புண்டாயிற்று. பிறப்புண்டாகவே உடல், உறுப்பு, உலகம், உணவு ஆகிய மாயாகாரியக் கூட்டங்களின் தொடர்பும், அவற்றை வேறென்றுணராது தானென்றே உணரும் மருள்பற்றும் உண்டாயின. அத் தொடர்புகள் நீயல்ல என்று அருளால் தெளிவித்து இவற்றிற்கு வேறாக இவற்றை இயக்கியும் இயங்கியும் நிற்பது நீ என்று நந்தி உணர்த்தினன். தன் திருவடியை அடியேன் முடியில் சூட்டியருளினன்.

இதுகாறும் நம்பர் அருளின்றி நான் என் அறிவால் உணர்ந்த மதக் கோட்பாடுகள் அத்தனையும் விட்டொழித்தேன். சிவபெருமான் திருவடியைப் பணிந்தேன்; இறைபணி நின்றேன்.

உறுமலம் - ஆணவமலம். அத்தனை நீ - அவ்வளவே (தத்துவங்கள் அல்லாது தனித்திருக்கும்) ஆன்மாவாகிய நீ. கற்றன - மாறுபாடான கோட்பாடுகள்.

## 1787. விளக்கினை யேற்றி வெளியை அறிமின்

1787. விளக்கினை யேற்றி வெளியை அறிமின்
விளக்கினின் முன்னே வேதனை மாறும்
விளக்கை விளக்கும் விளக்குடை யார்கள்
விளக்கில் விளங்கும் விளக்கவர் தாமே.

திருவருளாகிய திருவடியுணர்வைப் பொருந்தி அறிவருள் வெளியாகிய சிவபெருமானை உணருங்கள். அத்திருவருள் ஒளிமுன் பிறவி காரணமாக ஏற்பட்ட துன்பங்கள் அனைத்தும் நீங்கும். சிவபெருமானை உணர்த்தும் திருவருளாகிய இயற்கை அறிவு விளக்கைப் பெற்றுள்ளவர்கள், திருவருளாகிய விளக்கினைத் திருமேனியாகக் கொண்டு ஒளிர்ந்து விளங்கும் விளக்காகிய சிவத்துள் ஒடுங்கிச் சிவமாய்த் திகழ்வர். இஃது அகமும் புறமும் நிறைந்து வடியும் பாற்கலம் பாலாய்த் திகழ்வது போன்றும் நீர்நிறை மண்பாண்டம் நீராய் விளங்குவதுபோன்றும், அகத்தின் அழகு முகத்திற் புலனாவதுபோன்றும், முழுநீறு பூசிய முனிவர் போன்றும் புணர்ப்பில் தோன்றும் பொருவில் பெற்றியினை ஒக்கும். இவற்றைப் 'பால்வடியும் பாற்கலம் நீர்ப்பாண்டம் முழுநீறு - சால்முகம் போற் புணர்ப்பாம் சாற்று' என்பதனால் நினைவுகூர்க.

விளக்கு - அருள் ஒளி. வெளி - ஆகாய உருவத்தையுடைய சிவன். விளக்கை விளக்கும் விளக்கு - அருளைத் தெரிவிக்கும் ஞானம். விளக்கில் விளங்கு விளக்கு - அருளில் ஒளிரும் சிவம்.

## 1788. ஒளியும் இருளும் ஒருகாலுந் தீரா

1788. ஒளியும் இருளும் ஒருகாலுந் தீரா
ஒளியுளோர்க் கன்றோ ஒழியா தொளியும்
ஒளியிருள் கண்டகண் போலவே றாயுள்
ஒளியிருள் நீங்க வுயிர்சிவ மாமே.

திருவருள் கைவரப்பெறாதார்க்கு ஒளியாகிய நினைப்பும், இருளாகிய மறைப்பும் ஒருகாலும் நீங்கா. திருவடியுணர்வு கைவரப் பெற்றவர்க்குச் சிவனையே மறவா நினைவோடிருப்பதால் ஏனைப் பொருள்கள் மாட்டுள்ள நினைப்பும் மறப்பும், நழுவியமை தெரியாதே நழுவிப்போம். நழுவாது நழுவுதல் அறிவிற்குத் தெரியாதே நீங்குவது. ஒளியோடு கூடிக் கண் ஒளியாகியும், இருளோடுகூடி இருளாயும் இருப்பதுபோல் ஆருயிரும் உலகியற் பொருளுக்கும் சிவத்துக்கும் வேறாம் தன்மையாய்ச் சார்ந்ததன்வண்ணமாய் நிற்பதொன்று. சுட்டுணர்வும் சிற்றுணர்வும் நிலையாத ஒளியாகும். ஆணவவல்லிருள் சார்பாலாம் இருளும் நிலையாததாகும். இவ் விரண்டும் நீங்கவே உயிர் சிவத்தின் முற்றுணர்வு எய்திச் சிவமாகவே இருக்கும். வீடுபேற்றின்கண்ணும் உயிர் சிவத்தின் வேறாமென்றனர்.

## 1789. புறமே திரிந்தேனைப் பொற்கழல் சூட்டி

1789. புறமே திரிந்தேனைப் பொற்கழல் சூட்டி
நிறமே புகுந்தென்னை நின்மல னாக்கி
அறமே புகுந்தெனக் காரமு தீந்த
திறமேதென் றெண்ணித் திகைத்திருந் தேனே.

திருவருள் நெறிக்குப் புறம்பாக நில்லாதவற்றை நிலையின என்றுணர்ந்து புல்லறிவாளனாய்த் திரிந்துழன்றேன். அத்தகைய என்னை நன்னெறிப்படுத்தித் திருவடிசூட்டி ஆட்கொண்டனன் சிவன்; அடியேனுடைய நிறமென்னும் உள்ளத்தின்கண் வீற்றிருந்தருளினன்; அடியேனைப் பற்றியுள்ள மலங்களை அகற்றித் தூயவனாக்கி அருளினன்; அடியேனைச் சிறந்தது பயிற்றுதற்பொருட்டு அறத்தின் முதல் நிலையாம் இல்லறம் புகுத்தியருளினன்; அதன்கண் சிவனை மறவாத் திருவருளமிழ்தம் அளித்தனன். இவற்றை எல்லாம் உணர்ந்து இத்தன்மைகள் எவ்வாறென அறியவொண்ணாது திகைத்திருந்தேன்.

## 1790. அருளது வென்ற அகலிடம் ஒன்றும்

1790. அருளது வென்ற அகலிடம் ஒன்றும்
பொருளது வென்ற புகலிடம் ஒன்றும்
மருளது நீங்க மனம்புகுந் தானைத்
தெருளுறும் பின்னைச் சிவகதி யாமே.

உயிர்ப் பொருள், உயிரில் பொருள் அனைத்திற்கும் நிலைக்களமாக நின்றியக்குவது திருவருளே. அதனால் அஃது அகலிடம் எனப்பட்டது. அகலிடம் - பரவெளி. அத் திருவருள் ஒன்றே. அத் திருவருளைத் திருமேனியாகக் கொண்டிருக்கின்ற மெய்ப்பொருளாகிய சிவம் ஒன்று. அச் சிவம் எவற்றிற்கும் புகலிடமாவது; புகலுறுவது ஆருயிர்களேயாம், அச் சிவமும் ஒன்றே. அச் சிவனால் ஆருயிர்கட்கு மலத்தால் இருளும், மாயையால் மருளும், வினையால் இன்பத் துன்பங்களும், இவற்றால் பிறப்பு இறப்பும் நேர்வவாயின. இவையனைத்தும் மலமெனப்படும். இவை நீங்கச் சிவன் அடியேன் உளத்து மறவா நினைவை அருளி வெளிப்பட்டு நின்றனன். அதன் பின்பு தெருளாகிய உண்மைத் தெளிவு ஏற்பட்டது. அத் தெளிவு ஏற்பட்ட வுயிர் சிவனிலையை எய்தும்.

மருளது நீங்க - மயக்கம் ஒழிய.

## 1791. கூறுமின் னீர்முன் பிறந்திங் கிறந்தமை

1791. கூறுமின் னீர்முன் பிறந்திங் கிறந்தமை
வேறொரு தெய்வத்தின் மெய்ப்பொருள் நீக்குமின்
பாறணி யும்முடல் வீழவிட் டாருயிர்
தேறணி வோமிது செப்பவல் லீரே.

திருவருள் துணையில்லாமல் மருளும் உணர்வுடையீர் சொல்லுங்கள்; முழுமுதற் சிவன் பிறந்தார், உண்டுறைந்தார், இறந்தார் என்று வேதாகம அளவையால் நாட்டமுடியுமா? முடியும் என்பார்க்குத் தக்க விடை, முடியாதென்பதேயாகும்; சிவபெருமான் நஞ்சுண்டும் இறவாது சிறந்தனன். அதே அளவையான் ஏனைத் தெய்வங்கள் பிறந்திருந்துழன்று இறந்தொழியவில்லை யென்றுஞ் சொல்ல முடியுமா? முடியாதென்பதாகும். அத் தெய்வங்கள் அமுதுண்டும் இறந்தொழிந்தன. அதனால் அத் தெய்வங்களை உயிரினமென்று ஒதுக்காது மெய்ப்பொருள் என்று கொள்ளும் பிழைபாட்டுக் கொள்கையினின்றும் நீங்குங்கள். இவ்வுடல் இறந்துபட்டுப் பருந்துகளால் உண்ணப்படும் தன்மையது. இவ்வுடலை விட்டு ஆருயிர் நீங்கும் தன்மையது. அங்ஙனம் நீங்கிய வுயிர் அருளால் தெருளுடையதாயின் மெய்ப்பொருளாம் சிவனடியினை எய்தும். இதுவே திருவருட்டெளிவினைப் பெறுவதென்று துணிந்து சொல்லுங்கள்.

கூறு. . . . . .தமை - சிவன் பிறந்து இறந்ததைப்பற்றி உங்களால் சொல்லமுடியுமா? முடியாது. வேறு.....மின் - ஆதலின், பிறந்து இறக்கும் வேறு தெய்வங்கள்

# 1792. உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்

1792. உள்ளம் பெருங்கோயில் ஊனுடம் பாலயம்
வள்ளற் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கங்
கள்ளப் புலனைந்துங் காளா மணிவிளக்கே.

ஆருயிரின் உள்ளமாகிய நெஞ்சமே திருக்கோயிலின்கண் காணப்படும் பெருமை மிக்க கருவறையினை ஒக்கும். இக் கருவறையின்கண் வீற்றிருப்பது சிவக்கொழுந்து. ஊனாலாகிய உடம்பு முற்றும் திருக்கோவிலாகும். பேரருளால் எல்லாம் புரியும் சிவபெருமானாகிய பெருவள்ளற்கு வாய்மை ஐந்தெழுத்து வழுத்துவதாகிய வாய் கோபுர வாயிலாகும். திருவருளால் மெய்ப்பொருளுண்மையினைச் செவ்வையாகத் தெளிந்தார்க்கு அவ் வுயிரே சிவக்கொழுந்தாகும். கள்ளவழி இழுக்கும் மெய் வாய் முதலிய ஐந்து புலன்களும் களையாகிய அழகுமிக்க மணி விளக்கே. களை - அழகு; அது களா என்று ஆகிப் பின் காளா என்றாயிற்று.

காளாமணி - அழகிய மணி; அஃதாவது மாணிக்கம்.

## 1793. வேட்டவி யுண்ணும் விரிசடை நந்திக்குக்

1793. வேட்டவி யுண்ணும் விரிசடை நந்திக்குக்
காட்டவும் நாமிலங் காலையும் மாலையும்
ஊட்டவி யாவன வுள்ளங் குளிர்விக்கும்
பாட்டவி காட்டுதும் பாலவி யாமே.

சிவபெருமானை முழுமுதலாகக்கொண்டு செய்யும் முழுமுதல் வேள்வியே திருமுறை வேள்வியாகும். அவ் வேள்வி புரிவாராகிய சிவ அந்தணரின் பேரன்பினையே சிவன் ஏற்றுக்கொள்கின்றனன். அவனே விரிசடை நந்தியாகும். எல்லாப் பொருளும் அவன் உடைமை, எல்லாவுயிரும் அவன் அடிமை. அவ்வாறு இருப்பதால் நமக்கென உரிமையுடையது ஒருசிறிதும் இன்று. ஆதலால் புகை ஒளி காட்டுதல்கள்கூட நம்முரிமை அல்ல. ஆயினும் முழுமுதற் சிவத்தின் உள்ளம் குளிர் விக்கும்படியாக ஊட்டும் அவி செந்தமிழ்த் திருப்பாட்டுகளாகும். ஆகவே அதனையே காட்டுவோமாக. அவ்வவியே பாலவியாகும். சிவத்தின் உள்ளம் குளிர்விப்பதென்பது ஆருயிரின் உள்ளங் குளிர்விப்பதேயாகும். இவ் வுண்மை "நல்லிசைஞானசம் பந்தனும்நாவுக் கரையரும்பாடிய நற்றமிழ் மாலை, சொல்லியவே சொல்லி ஏத்துகப் பானை" என நம்பியாரூரர் ஓதியருளிய செந்தமிழ்ச் சிறப்புத் திருமறையால் உணரலாம். விழுமிய முழுமுதற் சிவத்தினைத் தொழுவோர், வழிவழிக் கொலைபுலை ஒழித்த வாய்மையர். பால் - சிறப்பு.

வேட்டு அவி உண்ணும் - அந்தணர்கள் செய்யும் நெய் வேள்வியின் அவிசு உண்ணும் (ஆரியர் செய்யும் உயிர்க்கொலை வேள்வி அல்ல). இதனையே நம் திருஞானசம்பந்தர் "பறப்பைப் படுத்து எங்கும் பசுவேட்டு எரியோம்பும்" என்று கூறினார். பசு என்பது ஈண்டு நெய்க்கு ஆகுபெயர். நெய்யைப் பறப்பை (சிருக்கு - சிருவம்) யில் விட்டு எங்கும் வேள்வி செய்யும் என்று பொருள் காட்டவும். நாம் இலம் - வேள்வி செய்து காட்ட நம்மால் முடியாது (போனால்). பாட்டவி - தோத்திரப் பாடலான அவிசாவது. பால் அவி - பால் ஆகிய அவிசாவது. ஆமே - ஆகும்.

## 1794. பான்மொழி பாகன் பராபரன் தானாகும்

1794. பான்மொழி பாகன் பராபரன் தானாகும்
மான சதாசிவன் தன்னையா வாகித்து
மேன்முகம் ஈசான மாகவே கைக்கொண்டு
சீன்முகஞ் செய்யச் சிவனவ னாகுமே.

பால்போலும் தமிழ் மொழி பகரும் திருவருளம்மையை இடப்பாகத்தேயுடைய முழுமுதல்வன் சிவனாவன். பெருமைமிக்க அன்னையும் அத்தனுமாக விளங்குவோன் சதாசிவன். சதாசிவனை அருளோன் என்றும் கூறுவர். அச் சிவக்கொழுந்தினிடத்துச் சிவபெருமானை எழுந்தருளச் செய்வதாகிய ஆவாகனம் செய்க. சதாசிவக் கடவுளிடத்து விளங்கும் ஐம்முகங்களில் மேல்முகம் ஈசானமாகும். அச் சதாசிவனைத் தொழுவோர் அருட்பொலிவினராய் அழகிய முகத்தினராய்த் திகழ்வர். அவ்வழகே ஈண்டுச் சீன்முகம் என்று ஓதப்பெற்றது. சீன்முகம் என்பது சீலமும். அது சீன்முகம் என நிற்கின்றது. சீல்: சீலம் என்பதன் கடைக்குறை.

ஆவாகித்து - எழுந்தருளச்செய்து. சீன்முகம் - அழகிய முகம்.

## 1795. நினைவதும் வாய்மை மொழிவது மல்லாற்

1795. நினைவதும் வாய்மை மொழிவது மல்லாற்
கனைகழல் ஈசனைக் காண வரிதாங்
கனைகழல் ஈசனைக் காண்குற வல்லார்
புனைமலர் நீர்கொண்டு போற்றவல் லாரே.

ஒலிக்கின்ற ஆண்மைக் கழலணிந்துள்ள சிவபெருமானைக் காணவல்லார் அருள் துணையால் சிவன் திருவடியை இடையறாது நினைவதும், மெய்ப்பொருள் தன்மையை உள்ளவாறுணர்ந்து மொழிவதும் (இறைபணி நிற்பதும்) செய்பவராவர். ஏனையார்க்குக் காண ஒண்ணாது. அச் சிவனை அருட்கண்ணால் காணவல்லார்க்கு வழிபாடு செய்யும் வகைமையுண்டாகும். அங்ஙனம் வழிபடுவார்க்குப் புனைமலரும் நீரும் தனைநிகரில் பொருள்களாகும். 'போற்றவல்லார்' என்னும் சொற்குறிப்பால் திருமுறைப் போற்றித்தொடர் புகன்று அருச்சனை பாட்டே யாகும் என்னும் முறைமை முற்றுவதே முழு வழிபாடாகும். நினைதல் - பாவித்தல் அப்பர் போற்றித் திருப்பதிகம் ஐந்து, அருள்வாதவூரர் போற்றித்திருவகவல் ஒன்று ஆக ஆறும் ஓதி நாளும் அருச்சிக்க.

## 1796. மஞ்சன மாலை நிலாவிய வானவர்

1796. மஞ்சன மாலை நிலாவிய வானவர்
நெஞ்சினுள் ஈசன் நிலைபெறு காரணம்
அஞ்சமு தாம்உப சாரம்எட் டெட்டொடும்
அஞ்சலி யோடுங் கலந்தர்ச்சித் தார்களே.

அழகிய மாலை விளங்குகின்ற சிவவுலகினர் தம் உள்ளத்தின்கண்ணே சிவபெருமான் நிலைபெறுங் காரணத்தை உன்னில், அஞ்சமுதமும், பதினாறு முகமனும் கூடி வழிபடுவதாகும். ஐந்தமிழ் தென்பது பழவகை, தேங்காய், தேன், நெய், சருக்கரையாகும். கைகளை உச்சியின்மேல் ஏறக் குவித்தவராய்க் கசிந்த உள்ளத்துடன் திருமுறைத் திருப்பாட்டு மொழிந்து வழிபடுவதின் பயனாகும் சிவபெருமான் உள்ளத்தின்கண் வெளிப்பட்டு உறைவது என்க.

அஞ்சமுது - பஞ்சாமிர்தம். உபசாரம் எட்டு எட்டு - 16 உபசாரங்கள்.

# 1797. புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு

1797. புண்ணியஞ் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண் டருள்புரி யாநிற்கும்
எண்ணிலி பாவிகள் எம்மிறை யீசனை
நண்ணறி யாமல் நழுவுகின் றாரே.

செந்தமிழ்ச் சிவவழிபாட்டின் மிக்க புண்ணியம் ஒன்றும் இன்று. அவ் வழிபாடே அழியாப் புண்ணியம். அவ் வழிபாடியற்றும் மெய்யன்பினர்க்குப் பூவும் புனலும் முட்டில்லாமல் யாண்டும் கிட்டும். அண்ணலாகிய சிவபெருமான் அவ் விரண்டினாலும் செய்யும் வழி பாட்டினைக் கண்டு செவ்விய அருள்புரிவன். இவ் வுண்மையினைக் கருதியுணராதவர் பெரும்பாவிகளாவர். அது, 'சிவசிவ என்கிலர் தீவினையாளர்' (2667) என்னும் திருமொழியான் உணர்க. அவர்கள் சிவனை வழிபட்டு அவன் திருவடிசேர அறியாது செந்நெறி விலகிப் போகின்றனர்.

## 1798. மறப்புற்று விவ்வழி மன்னிநின் றாலுஞ்

1798. மறப்புற்று விவ்வழி மன்னிநின் றாலுஞ்
சிறப்பொடு பூநீர் திருந்தமுன் ஏந்தி
மறப்பின்றி யுன்னை வழிபடும் வண்ணம்
அறப்பெற வேண்டும் அமரர் பிரானே.

உலகியலில் ஈடுபட்டு உன் திருவடி வழிபாட்டினை மறந்து உலகியலிலேயே உறைத்து நின்றாலும், நீ அடியேனை மறவாவண்ணம் காத்தாட்கொள்க. சிவனை மறவாச் சிறந்த வுள்ளத்துடன் மெய்யடியார் பூவும் புனலும் அங்கையில் ஏந்தி ஐந்தெழுத்தோதி வழிபாடு செய்வர். அங்ஙனம் வழிபடுமாறு அடியேனுக்கு முழு அருள்புரிதல் வேண்டும். தேவர்க்கும் மூவர்க்கும் மற்றும் யாவர்க்கும் முதல்வர் சிவபெருமானாவர்.

# 1799. ஆரா தனையும் அமரர் குழாங்களுந்

1799. ஆரா தனையும் அமரர் குழாங்களுந்
தீராக் கடலும் நிலத்தும தாய்நிற்கும்
பேரா யிரமும் பிரான்திரு நாமமும்
ஆரா வழியெங்கள் ஆதிப் பிரானே.

அலையும் ஒலியும் நீங்கா நிலையுள்ள கடலடுத்த திருவூர்களிலும், ஏனைய நிலனடுத்த திருவூர்களிலும் விளங்கும் திருக்கோவில் தோறும் அதுவதுவாய்த் திகழ்ந்து நிற்கும் சிவபெருமானை, அமரர் குழாங்களும் வந்து ஆராதனை புரியும். அப்பொழுது வானோர் பேராயிரம் பரவி வழிபடுவர். அவன் திருப்பெயராகிய நானெறி ஐந்தெழுத்தை நவின்று வழிபடுவர். நானெறி ஐந்தெழுத்து வருமாறு: 'நமசிவய,' 'சிவயநம', 'சிவயசிவ', 'சிவசிவ' என்பன. இவை முறையே பருமை, நுண்மை, மீநுண்மை, அருண்மை எனப்பெறும். இவற்றை முறையே தூலம், சூக்குமம், அதிசூக்குமம், காரணம் எனவும் கூறுப. வழிபாட்டாலும் விழுப்பயனாலும் குறைவிலா நிறைவாம் சிவவழிபாடு ஆராவழியாகும். அவற்றை ஏற்று அருள்புரிபவர் அம்மை அப்பர். இந் நான்மையினையும் வருமாற்றான் நினைவுகூர்க: 'பருமை நுண்மை மீ நுண்மை பண்பார் அருண்மை, வருநான்மை ஐந்தெழுத்தாம் வாழ்த்து '

தீரா - அலையும் ஓதையும் ஒழியாத. பிரான் திருநாமம் - நமசிவய. ஆராவழி - துதித்து வணங்கும் இடத்து.

## 1800. ஆனைந்தும் ஆட்டி அமரர் கணந்தொழத்

1800. ஆனைந்தும் ஆட்டி அமரர் கணந்தொழத்
தானந்த மில்லாத் தலைவன் அருளது
தேனுந்து மாமலர் உள்ளே தெளிந்ததோர்
பாரைங் குணமும் படைத்துநின் றானே.

அமரர் கூட்டங்கள் பால், தயிர், வெண்ணெய்,1 நெய், மோர் எனவரும் ஆனைந்தும் சிவபெருமான் திருமுடிக்கு ஆட்டித் தொழுவர். அங்ஙனம் ஆட்டுவதும் என்றும் அழிவிலாது நின்று நிலவும் சிவபெருமான் திருவருளேயாம். தேனொழுகும் மலரினுள் மனநிறைவு தெளிந்ததோர் பொருளாவதுபோல், சிவபெருமானும் ஐம்பூதப் பண்பாகவும் கலப்பால் விளங்குவன். பூதப்பண்பு வருமாறு: நாற்றம், சுவை, ஒளி, ஊறு, ஓசை என்பன. கோநீர் கோமயம் ஏற்புடையனவாகா.

ஆனைந்து - பால், தயிர், நெய், வெண்ணெய், மோர். ஆன் ஈண்டுப் பாலுக்கு ஆகுபெயர். "பாலாம் ஐந்துடன் ஆடும் பரமனார்" (சம்பந்தர்.) "கோதனத்தில் ஐந்தாடியை" (அப்பர்.) பார் ஐங்குணம் - நிலத்தின்கண் உள்ள சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்.

## 1801. உழைக்கொண்ட பூநீர் ஒருங்குடன் ஏந்தி

1801. உழைக்கொண்ட பூநீர் ஒருங்குடன் ஏந்தி
மழைக்கொண்ட மாமுகின் மேற்சென்று வானோர்
தழைக்கொண்ட பாசந் தயங்கிநின் றேத்தப்
பிழைப்பின்றி எம்பெரு மானரு ளாமே.

நன்னிலத்தில் காணப்படும் பூவும் புனலும் கைக்கொண்டு மழைமேகத்தின் மேற்கொண்டு பெருகிய அன்புடன் மைகதொழுது வணங்க, தவறுதலின்றிச் சிவபெருமான் திருவருள் கைகூடும் என்க.

உழை - பூமி. தழைக்கொண்ட - சுற்றியுள்ள. பிழைப்பின்றி - தவறாமல்.

# 1802. வெள்ளக் கடலுள் விரிசடை நந்திக்கு

1802. வெள்ளக் கடலுள் விரிசடை நந்திக்கு
உள்ளக் கடற்புக்கு வார்சுமை பூக்கொண்டு
கள்ளக் கடல்விட்டுக் கைதொழ மாட்டாதார்
அள்ளற் கடலுள் அழுந்துகின் றாரே.

திருச்சடையின்கண் கடல்போலும் வெள்ளநீரைத் தாங்கும் நந்தியாகிய சிவபெருமான் திருவடிக்கு, நிறைந்த கடல்போலும் அன்புள்ள நெஞ்சத்துடன் பூ முதலியன சுமந்து கொண்டு வந்து கடல் போலும் கள்ளங் கவடுகளை அகற்றி வழிபடும் சிவப்புண்ணியப் பேறிலாதார் துன்பக் கடலுள் அழுந்துவர்.

வெள்ளக் கடலுள் விரிசடை - கங்கையைச் சடையில் தரித்த. உள்ளக் கடல் - உள்ளத்தின்கண் எழும் அன்புக் கடல். வார் பெரிய. கள்ளக்கடல் - கடல்போலும் வஞ்சனை. அள்ளற்கடல் - ஒருவித நரகம்.

## 1803. கழிப்படும் தண்கடற் கவ்வை யுடைத்து

1803. கழிப்படும் தண்கடற் கவ்வை யுடைத்து
வழிப்படு வார்மலர் மொட்டறி யார்கள்
பழிப்படு வார்பல ரும்பழி வீழ
வெளிப்படு வோருச்சி மேவிநின் றானே.

உப்பங் கழியைச் சாரும் கடல் ஒலியினையும் அடக்கி மீதெழும் திருமுறைத் திருப்பாட்டு முழக்கங்களோடு மெய்யடியார்கள் மலர்கொண்டு வழிபடுவர். வழிபாட்டிற்குத் தகுதியில்லாத மொட்டனைய பொருள்களை விலக்கிவிடுவர். அறியாமையினால் சிவனை மறந்து தீநெறிக்கண் செல்லும் தீராப் பழி தீரும் வண்ணம் நல்லாரிணக்கத்தால் வழிபடுவோரின் உச்சியின்மேல் பொருந்தி வெளிப்பட்டு அருள்புரிவன்.

கழி....வழிப்படுவார் - கடல் ஒலியைத் தாழச்செய்து உரக்கத் தோத்திரங்கள் கூறி வழிபடுவோர். பழி வீழ - அஞ்ஞானம் நீங்க. வெளிப்படுவோர் - உண்மையான அன்பு நிறைந்த பூசனை புரிவோர்.

## 1804. பயனறி வொன்றுண்டு பன்மலர் தூவிப்

1804. பயனறி வொன்றுண்டு பன்மலர் தூவிப்
பயனறி வார்க்கரன் தானே பயிலும்
நயனங்கள் மூன்றுடை யானடி சேர
வயனங்க ளாலென்றும் வந்துநின் றானே.

சிவபெருமான் திருவடிக்கண் கொல்லாமை ஐந்தடக்கல் கொள்பொறுமை யோடிரக்கம், நல்லறிவு, மெய்தவம் அன்பெட்டுமாகிய நற்பண்புகள் திருவருளால் தமக்கு எய்தும் பொருட்டே புற அடையாளமாகப் புறத்தே நறுமலரெட்டிட்டு வழிபடுகின்றனர். அவர்களே பயனறிவு படைத்தவராவர். அவர்தம் அன்புடை உள்ளத்துச் சிவ பெருமான் எழுந்தருளி ஆட்கொள்வன். மூன்று திருக்கண்களையுடைய சிவன் தன் திருவடியில் கூடுவதற்குத் தமிழ் வழிபாடே காரணம் என்க. வயனம்: வயணம் - காரணம்.

பயன் அறிவு - மெய்ஞ்ஞானம். வயனம் - காரணம்.

## 1805. ஏத்துவர் மாமலர் தூவித் தொழுதுநின்று

1805. ஏத்துவர் மாமலர் தூவித் தொழுதுநின்று
ஆர்த்தெம தீசன் அருட்சே வடியென்றன்
மூர்த்தியை மூவா முதலுரு வாய்நின்ற
தீர்த்தனை யாருந் துதித்துண ராரே.

இறைவனாகிய சிவபெருமான் திருவடியைப் பன்மலர் தூவித் திருமுறை ஓதிப் பேரன்பின் பெருமுழக்குடன் வழிபடுவர். அத்தகைய இன்பத் திருவுருவனை, அழிதல் இல்லாத வினைமுதற் காரணனை, ஆருயிர்களின் மலப்பினிப்பிணின்று தீர்த்தருளி அவ்வுயிர்களை ஆட்கொள்ளும் தூயோனை, நன்னெறிப் புகாதார் யாரும் வழிபட்டுணரார். தீர்த்தன் - தூயோன். வினைமுதற் காரணம் - நிமித்த காரணம்.

மூவாமுதல் - கெடாத காரணமாய்.

## 1806. தேவர்க ளோடிசை வந்துமண் ணோடுறும்

1806. தேவர்க ளோடிசை வந்துமண் ணோடுறும்
பூவொடு நீர்சுமந் தேத்திப் புனிதனை
மூவரிற் பன்மை முதல்வனாய் நின்றருள்
நீர்மையை யாவர் நினைக்கவல் லாரே.

விண்ணவர்கள் சிவபெருமானைச் சென்னிதாழ்த்துப் புகழும் புகழுரை எங்கணும் பரந்து மண்ணுலகின்கண் வந்து நிறையும் மூவருக்குமுயிராய் உள்நின்றியக்கலின் கலப்பால் மூவராய், அம் மூவர் மாட்டும் அருளும் ஆணையும் வைத்து முதன்மையாய் நிற்றலின் மூவரின் முதல்வனாய், நின்றருள்வன் சிவன். இத்தகைய பேரருட் பெருநீர்மை தவம்தரு தன்மையாம் அவனருளின்றி அறியவல்லார் ஒருவருமிலர். 'வல்லாரே' என்பதன்கண் உள்ள ஏகாரம் எதிர்மறை.

ஓடிசை - பரந்த கீர்த்தி. மூவரிற் பன்மையாய் - மூவரொடு கலத்தலால் பன்மையாய்.

## 1807. உழைக்கவல் லோர்நடு நீர்மல ரேந்திப்

1807. உழைக்கவல் லோர்நடு நீர்மல ரேந்திப்
பிழைப்பின்றி ஈசன் பெருந்தவம் பேணி
இழைக்கொண்ட பாதத் தினமலர் தூவி
மழைக்கொண்டல் போலவே மன்னிநில் லீரே.

தம் ஆருயிர் உய்யுமாறு சிவபெருமானைத் திருமுறை வழியாகத் திருவருள் துணையால் வழிபடும் திருவடியுணர்வுசேர் நல்லார் நடுவில் பூவும் புனலும் கைக்கொண்டு, நாளும் தவறுதலில்லாமல் சிவபெருமானைக் குறித்துச் சண்டேசுரர் செய்ததுபோன்று சிவவழிபாடு செய்வதே இறப்பில் பெருந்தவமாம். அச் சிவவழிபாட்டினைச் செய்து அடிச் சார்ந்தார் கலந்திருக்கும் திருவடியில் கொல்லாமை முதலிய எட்டுப் (1804) பண்புகளும் வாய்ப்பதன் பொருட்டு அவற்றின் அடையாளமாகிய இனமலர்களைத் திருமுறைப் போற்றி மொழிந்து, வழிபட்டு மெய்சிலிர்த்து இன்பக் கண்ணீர் அருவி பொழிய நன்னெறியில் நிலைத்து நிற்பீராக. மழைக் கொண்டல்பேல் இன்பக் கண்ணீர் பெருக்குவதெனக் கொள்க.

பிழைப்பு - தவறுதல். இழைக்கொண்ட - சேர்ந்து இருக்கின்ற. மழைக்கொண்டல் போல - குளிர்ந்த மேகம்போல மெய் குளிர்ந்து.

## 1808. வென்று விரைந்து விரைப்பணி யென்றனர்

1808. வென்று விரைந்து விரைப்பணி யென்றனர்
நின்று பொருந்த இறைபணி நேர்படத்
துன்று சலமலர் தூவித் தொழுதிடு
கொண்டிடு நித்தலுங் கூறிய வன்றே.

ஐம்புலன்களையும் வென்று நறும்புகையும் நெய்யொளியும் காட்டும் சிவப்பணியினைச் செய்யும் தொண்டர்கள் நேர்நின்று அன்பார் மனம்பொருந்த இறைபணி கைகூட நிறைந்த பூவும் புனலும் தூவித் திருமுறைவழித் தொழுதிடுமின். இவ்வாறே நாடொறும் வழிபாடு செய்வீராக.

வென்று - புலன்களை வென்று. விரைப்பணி - தூபப்பணி. இறைபணி - பூசை. கூறியவாறு - தமிழ் வேதாகமங்களில் கூறியவாறு.

## 1809. சாத்தியும் வைத்துஞ் சயம்புவென் றேத்தியும்

1809. சாத்தியும் வைத்துஞ் சயம்புவென் றேத்தியும்
ஏத்தியு நாளு மிறையை யறிகிலார்
ஆத்தி மலக்கிட் டகத்திழுக் கற்றக்கான்
மாத்திக்கே செல்லும் வழியது வாமே.

ஆடை அணிகலன் வெண்ணீறு சாந்து பூ முதலியன சாத்தியும், திருவுரு முதலியன அமைத்து நிலைநாட்டியும், இயற்கைத் தனிப்பெருங் கடவுள் என்று ஏத்தியும், அங்ஙனமே நாளும் தொடர்ந்து தொழுதும் சிவனை அவனருளால் உணர்கிலர் பலர். ஆத்தியாகிய ஆசைகளை ஒழித்து அதன்வழியாக மல அழுக்கு அற்ற இடத்துப் பெரிய வீடுபேற்றுக்குச் செல்லும் வழியுண்டாகும். அதுவே சிவவழிபாட்டுப் புண்ணியப் பேறென்க. மாதிக்கு - பெரிய வீடுபேறு. ஆத்தி: ஆர்த்தி என்பதன் திரிபு.

சாத்தியும் - பூ, ஆடை முதலியன சாத்தியும். வைத்தும் - உருவத்தில் அமர்த்தி வைத்தும். ஆத்தி - ஆசை. மலக்கிட்டு - ஒழித்து. அகத்து இழுக்கு - மனக்குற்றம். மாதிக்கு - முத்தி உலகம்.

## 1810. ஆவிக் கமலத்தின் அப்புறத் தின்புற

1810. ஆவிக் கமலத்தின் அப்புறத் தின்புற
மேவித் திரியும் விரிசடை நந்தியைக்
கூவிக் கருதிக் கொடுபோய்ச் சிவத்திடைத்
தாவிக்கு மந்திரந் தாமறி யாரே.

ஆவிக்கமலமாகிய நெஞ்சத் தாமரையின் மேலாக ஆருயிர்கள் இன்புறும் வண்ணம் உச்சிக்குமேல் திகழும் பரவெளிக்கண் விளங்கா நின்ற விரிசடை நந்தியை, அவன் திரு அருளால் அப் பரவெளியினின்று 'சிவ' என அழைத்து, நெஞ்சத்தில் 'சிவய' எனக் கருதி, அங்கிருந்தும் திருவுருவின்கண் 'சிவயசிவ' என்று மறைமொழிந்து நிலைநிறுத்துதல் வேண்டும். இத்தகைய திருமுறைத் திருமந்திர வுண்மையினை ஒருசிலரே அறிவர். இதனை, அழைப்பு சிவ ஆர்சிவய ஆம் நினைப்பு மெய்க்கண், நுழைப்பு சிவயசிவ நோக்கு. என்பதனால் நினைவு கூர்க.

ஆவிக்கமலம் - சகசிர அறை.

## 1811. சாணாகத் துள்ளே அழுந்திய மாணிக்கங்

1811. சாணாகத் துள்ளே அழுந்திய மாணிக்கங்
காணு மளவுங் கருத்தறி வாரில்லை
பேணிப் பெருக்கிப் பெருக்கி நினைவோர்க்கு
மாணிக்க மாலை மனம்புகுந் தானே.

மூலம் கொப்பூழ் மேல்வயிறு நெஞ்சம் மிடறு புருவநடு என்னும் ஆறுநிலைக்களனும் ஒன்றற்கொன்று இடை எல்லை ஒரு சாணாகும். புருவ நடுவுக்குமேல் உச்சித்துளை ஒரு சாணாகும். அதன்மேல் பரவெளி. இவற்றுள் ஆருயிர் உய்தற்பொருட்டு ஊடுருவி நிற்கும் மாணிக்கவண்ணனன் சிவபெருமானாவன். இவ் வுண்மையினை அவனருளால் அளந்து காணும் கருத்தறிவாரில்லை. அவன் திருவடியுணர்வினைப் பேணி வளர்த்து அதனால் இறவா இன்ப அன்பினை வளர்த்து இடையறாது நினைவோர்க்கு மாணிக்க மலையனைய சிவபெருமான் அம் மெய்யன்பர் உள்ளம் புகுந்தருளி நிற்பன். மலை: மாலையென முதல் நீண்டது.

சாணாகம் - ஆஞ்ஞை. பெருக்கு - அன்பினைப் பெருக்கி.

# 1812. பெருந்தன்மை நந்தி பிணங்கிருள் நேமி

1812. பெருந்தன்மை நந்தி பிணங்கிருள் நேமி
இருந்தன்மை யாலுமென் நெஞ்சிடங் கொள்ள
வருந்தன்மை யாளனை வானவர் தேவர்
தருந்தன்மை யாளனைத் தாங்கிநின் றாரே.

பெருந்தன்மையும் பேரருளும் வாய்ந்தவன் சிவபெருமானாகிய நந்தி. ஆருயிரைப் பிணித்து மாறுபடுத்தும் அறியாமை வல்லிருள் அகல அவ் ஆண்டவன் கைக்கொள்ளும் அறவாழியாகிய நேமி என்னெஞ்சத்து வீற்றிருக்குந் தன்மையாலும் என் நெஞ்சத்திடம் நிறைவுற அவன் வரும் தன்மையாலும் அவனே உண்மையறிவு இன்ப உருவ முழுமுதல்வனாவன். அவனே சிவவுலகத்தார்க்கும் துறக்கவுலகத்தார்க்கும் வேண்டும் எல்லா வாய்ப்புகளையும் திருவருளாணையால் ஈந்தருள் பவனாகிய சிவன். அவன் திருவடியிணையினைத் தாங்கி நின்றாரே நன்னெறிச் செல்வராவர்.

பிணங்கு இருள் - மாறுபடும் அஞ்ஞானம்.

## 1813. ஆகின்ற நந்தி யடித்தா மரைபற்றிப்

1813. ஆகின்ற நந்தி யடித்தா மரைபற்றிப்
போகின் றுபதேசம் பூசிக்கும் பூசையும்
ஆகின்ற ஆதார மாறா றதனின்மேற்
போகின்ற பொற்பையும் போற்றுவன் யானே.

கலப்பால் எல்லாமாய் நிற்கும் திருவாணை நந்தியின் திருவடித் தாமரையினைப் பற்றுக்கோடாகக் கொண்டு ஆருயிர் திருவடிப் பேற்றினை எய்துதற்குரிய அருமறையாகிய உபதேசம் திருவைந்தெழுத்தாகும். அதனை ஆருளால் அருளிச் செய்பவன் சிவகுருவாவன். அவனைப் பூசிக்கும் பூசை குரு பூசையாகும். அப் பூசையினையும், அகத்தே ஆறு நிலைக்களங்களில் செய்யும் வழிபாட்டினையும், அருஞ்சைவர் மெய்யாகப் பெறப்படும் முப்பத்தாறு தத்துவங்களுக்குமேல் செல்லுகின்ற மாறா அழகினையுடைய விழுமிய முழுமுதற் சிவனையும் இடையறாது அடியேன் வழிபடுவன்.

போகின்றுபதேசம் - முத்தி எய்துதற்குரிய உபதேசம்.

## 1814. மேவிய ஞானத்தின் மிக்கிடின் மெய்ப்பரன்

1814. மேவிய ஞானத்தின் மிக்கிடின் மெய்ப்பரன்
ஆவயின் ஞான நெறிநிற்றல் அர்ச்சனை
ஓவற வுட்பூ சனைசெய்யில் உத்தமஞ்
சேவடி சேரல் செயலறல் தானே.

மெய்ப்பரனாகிய சிவபெருமானை அடைதற்குரிய அறிவினுள் அறிவாகிய ஞானத்தின் ஞானம் மேற்பட்டவிடத்துச் செய்யும் வழிபாடு ஞான பூசையாகும். அதுவே விழுமிய அருச்சனையாகும். இவ் வருச்சனையினை 'ஞான நூல்தனை, ஓதல் ஓதுவித்தல் நற்பொருளைக் கேட்பித்தல் தான்கேட்டல் நன்றாம், ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும் இறைவனடி அடைவிக்கும் எழில் ஞானபூசை' என்பர். இடையீடின்றித் திருவைந்தெழுத்தால் நெஞ்சம் பூசையிடமாகவும், கொப்பூழ் ஓம இடமாகவும், புருவநடு செம்பொருள் காணும் நிலைக்களமாகவும் கொண்டு புரிவது உட்பூசையாகிய அகவழிபாடாகும். இவ் வழிபாட்டில் உறைத்து நிற்போர் தலையாயவராவர். அந்நெறியில் திருவடி தலைக் கூடுதல் என்பது ஆருயிர் தன் செயல் அற்று இறைபணி நிற்றல்.

ஆவயின் - அவ்விடத்தில். செயல்அறல் - சரியை ஆதிகள் ஒழிதல்.

## 1815. உச்சியுங் காலையும் மாலையும் ஈசனை

1815. உச்சியுங் காலையும் மாலையும் ஈசனை
நச்சுமின் நச்சி நமவென்று நாமத்தை
விச்சுமின் விச்சி விரிசுடர் மூன்றினும்
நச்சுமின் பேர்நந்தி நாயக னாகுமே.

காலை, உச்சி, மாலை என்னும் முப்பொழுதுகளிலும் சிவபெருமானை வழிபடுதற்குப் பேரன்பு கொள்ளுங்கள். 'நமசிவய' என்னும் நற்றமிழ்மறையே சிவன் திருப்பெயர். ஆதலால், பேரன்பு கொண்டு அத் திருவைந்தெழுத்தைப் புகழ்ந்து ஓதிப் போற்றுங்கள். சிவபெருமான் திருக்கண்களாக ஞாயிறு, திங்கள், தீ மூன்றும் சொல்லப்படும். அம் மூன்றினும் சிவபெருமான் திருவருள் ஒளி மேம்பட்டு விளங்கும் உண்மை அறிந்து சிவன் திருவுருவாக வழிபடுங்கள். அவன் திருப்பெயர் நந்தி நாயகன் என்று நவிலப்படும். முன்னெறியாகிய முதல்வன் முக்கண்ணனாவன். அவன் திருவடி சேர்ப்பிக்கும் நன்னெறியாவது நற்றமிழ் மறையாம் 'நமசிவய' வே.

விச்சுமின் - புகழுங்கள்.

## 1816. புண்ணிய மண்டலம் பூசைநூ றாகுமாம்

1816. புண்ணிய மண்டலம் பூசைநூ றாகுமாம்
பண்ணிய மேனியும் பத்துநூ றாகுமாம்
எண்ணிலிக் கைய மிடிற்கோடி யாகுமாற்
பண்ணிடில் ஞானியூண் பார்க்கில் விசேடமே.

சிவபூசையினை நால்வராம் நன்னெறி முதல்வர்களின் திருப்பாடல் பெற்ற திருவூர்களில் செய்யின் ஏனைய இடங்களில் செய்வதினும் நூறுமடங்கு பயன் கூடுதலாகும். சிவத்தை வழிபடும் இறப்பில் தவத்தை மேற்கொண்டுள்ள மெய்யன்பர் திருமேனிக்கண் வழிபடின் பயன் ஆயிரமடங்கு மிகுதியாகும். சிவன் திருவடியினையன்றிப் பிறிதொன்றினையும் நாடாத தானவனாம் தன்மை வாய்ந்த சிவஞானிக்கு ஐயமாகிய பிச்சை இடுவார் எய்தும் பயன் ஒரு கோடி மடங்கு கூடுதலாகும் எல்லாவற்றினும் சிறந்தது சிவஞானி உண்ட ஊணாம்.

புண்ணிய மண்டலம் - தேவகோட்டம். பண்ணியமேனி தவம் செய்தவர். எண்ணிலி - ஆசையற்ற ஞானி. ஞானியூண் பார்க்கில் - ஞானிக்கு அன்னம் அளித்தால்.

## 1817. இந்துவும் பானுவும் இலங்குந் தலத்திடை

1817. இந்துவும் பானுவும் இலங்குந் தலத்திடை
வந்தித்த தெல்லாம் அசுரர்க்கு வாரியாம்
இந்துவும் பானுவும் இலங்காத் தலத்திடை
வந்தித்தல் நந்திக்கு மாபூசை யாமே.

இடமூக்கு வலமூக்குகளில் உயிர்ப்பு நடக்குங்கால் சிவவழிபாடு செய்யின் அதன் பயன் அசுரர்க்கு வாரியாகிய பயனாகும். இவை இரண்டின் வழியன்றி நடுநாடிக்கண் உயிரிப்படங்கி உள்ள ஒருமையுடன் சிவவழிபாடு செய்யின் அதன் பெரும் பயன் பூசை செய்யும் சிவபுண்ணியர்க்கேயாம். இப் பூசையே செப்பரும் பெரும் பூசையாகும். இந்து - இடகலை. பானு - பிங்கலை.

இந்துவும் பானுவும் - இடைகலை, பிங்கலை. வாரியாம் - பயன்படுவனவாம். இந்....டை - கும்பகத்தைச் செய்து.

## 1818. இந்துவும் பானுவு மென்றெழு கின்றதோர்

1818. இந்துவும் பானுவு மென்றெழு கின்றதோர்
விந்துவும் நாதமு மாகிமீ தானத்தே
சிந்தனை சாக்கிரா தீதத்தே சென்றிட்டு
நந்தியைப் பூசிக்க நற்பூசை யாமே.

திங்களும் ஞாயிறும் அதன்வழித்தாம் விந்துவும் நாதமும் திகழ்கின்ற ஆறுநிலைக்களங்களுக்கும் அப்பாற்பட்ட மேலிடத்தே நாட்டத்தினை நிறுத்தி, நனவில் உயிர்ப்படங்கனி◌ார் ஒத்து சிவனிறைவிலொடுங்கிச் சிவபெருமானை வழிபடும் சிவபூசையே திருவடி சேர்க்கும் நற்பூசையாகும்.

மீதானம் - ஆறு ஆதாரங்களுக்கு மேற்பட்ட இடம்.
சாக்கிர அதீதம் - சாக்கிரமும் சொப்பனமும் அல்லாத நடுநிலைமை.

## 1819. மனபவ னங்களை மூலத்தான் மாற்றி

1819. மனபவ னங்களை மூலத்தான் மாற்றி
அனித வுடற்பூத மாக்கி யகற்றிப்
புனிதன் அருள்தனிற் புக்கிருந் தின்பத்
தனியுறு பூசை சதாசிவற் காமே.

மனமாகிய எண்ணத்தினையும், அதற்குத் துணையாம் பவனமாகிய உயிர்ப்பினையும் திருவைந்தெழுத்தால் வேறு புலன்களுக்குச் செல்லவொட்டாது சிவனடிக்கே மாற்றி, நிலையில்லாததாகிய பூதவுடற்கண் காணப்படும் ஐம்பூதங்களையும் அவ்வப்பூத முதற்கண் அருளால் ஒடுக்கித் திருவருளையே இடையறாது நினைக்கும் நினைவாகிய அருளுடன் பாக ஆக்கி அதன்கண் உறைந்து பேரின்பப் பேற்றிற்கு வாயிலாகிய தனியன்பின் வழிபாடு சதாசிவ வழிபாடாகும். மூலம் - திருவைந்தெழுத்து - அருள் - பேரறிவுப் பேராற்றல்; ஞானசத்தி.

மனபவனங்கள் - மனமும் பிராணவாயுவும். அனிதம் - அநித்தியம். மூலத்தான் - அஞ்செழுத்தால். பூதமாக்கி அகற்றி - ஐம்புலன்களை ஒடுக்கி. புனிதன் அருள்தனில் - திருவருட்சத்தியில்.

## 1820. பகலும் இரவும் பயில்கின்ற பூசை

1820. பகலும் இரவும் பயில்கின்ற பூசை
இயல்புடை யீசாக் கிணைமல ராகப்
பகலும் இரவும் பயிலாத பூசை
சகலமுந் தான்கொள்வன் தாழ்சடை யோனே.

புறத்தே விளக்கமுறும் பகல் இரவாகிய காலங்களில் அகத்தே அருட்பண்பாகிய மலரும், புறத்தே அதன் நினைவுக் குறியாம் நறுமலராகிய மலரும் ஆகிய இருவகை மலர்களும் இணைமலர் எனப்படும். இவையே சிவபூசைக்கு ஏற்றவையாகும். அன்பகத்தே பகலும் இரவும் எனப் பிரித்துப் பயில்வதற்கோர் இயைபின்று. ஆதலின், அவ்வுட் பூசை காலம் நீங்கயிதாகும். எனவே அப் பூசையினை ஒழிவின்றி எப்பொழுதும் இயலும் ஒப்பில் பூசை என்பர். இவ் விருவகைப் பூசையினையும் எழிலார் தாழ் சடையோன் என்று கொள்வன்.

பகலும் இரவும் பயிலாத பூசை - உட்பூசை.

# 1821. படமாடக் கோயிற் பகவற்கொன் றீயில்

1821. படமாடக் கோயிற் பகவற்கொன் றீயில்
நடமாடக் கோயில் நம்பர்க்கங் காகா
நடமாடக் கோயில் நம்பர்க்கொன் றீயில்
படமாடக் கோயிற் பகவற்க தாமே.

அருஞ்சைவர் தத்துவம் ஆறாறினையும் பிண்டவடிவிற் காட்டும் படம்போல் விளங்குவது திருக்கோவில். இது நின்றுபயன் அளிக்கும் அருள் நிலையம். சிவனை மறவா நினைவுடன் யாண்டும் இயங்குவாரின் திருமேனி நடமாடும் திருக்கோவில் என்ப. அவர்தம் மறவா நினைவுக்குரிய இடங்கள் எட்டென்ப. அவை நிற்றல், இருத்தல், கிடத்தல், நடத்தல், மெல்லல், துயிலல், விழித்தல், இமைத்தல் என்ப. நடமாடும் திருக்கோவில் சென்று பயனருளும் சிறப்புடைத் திருக்கோவிலாகும். இத் திருக்கோவிற்குச் செய்யும் சிறப்பு முழுவதும் படமாடக்கோவிற் பரமனார் திருவடிப்பால் சாரும். ஆனால் படமாடக் கோவில் வழிபாடு ஆண்டே தங்கி நடமாடக் கோவிலை நண்ணுவதில்லை. இவை யிரண்டும் முறையே கல்லெழுத்தும் கருத்தழுத்தமும் ஆகும். "எவரேனும் தாமாக இலாடத்திட்ட திருநீறு" என்பது அப்பர் அருண்மொழி. 'தாமாக' என்பது தாம் சிவமாக: எனவே சிவனடியாரே என்பதாம். கண்ணிற்காணும் இவரே சிவமாவர். காணா அவர் சிவமெனக் கருதற்க.

படம் மாடக்கோயில் - மாடங்களையுடைய கோயிலானது தத்துவங்களைக் காட்டும் படம்போன்ற அந்த இல்லில்

இருக்கும். நடம்மாடக்கோயில் ஆதாரங்களாகிய மாடங்களையுடைய நடமாடும் தேகமான கோயிலில் இருக்கும்.

## 1822. தண்டறு சிந்தை தபோதனர் தாமகிழ்ந்

1822. தண்டறு சிந்தை தபோதனர் தாமகிழ்ந்
துண்டது மூன்று புவனமும் உண்டது
கொண்டது மூன்று புவனமுங் கொண்டதென்று
எண்டிசை நந்தி எடுத்துரைத் தானே.

சிவனை மறவாத சிந்தை தண்டறு சிந்தை அந் நாட்டத் தினையுடையோர் இறவாத் தபோதனர். அவர்கள் அருளால் மகிழ்ந்து உண்டது மூன்று உலகமும் முற்ற உண்டதாகும். மூன்று உலகம் அவன் அவள் அது எனும் அவை. அதுபோல் அவர் ஏற்றுக்கொண்டதும் மூன்று உலகமும் ஏற்றுக்கொண்டதாகும். இவ் வுண்மையினை எட்டுப்புலன்களிலும் என்றும் நிறைந்து நின்றியக்கும் நந்தியாகிய சிவபெருமான் நல்லருளால் நல்லார்க்கு நவின்றருளினன்.

தண்டறு - நீங்குதல் இல்லாத. கொண்டது - உட்கொண்டது. எண்டிசை - எங்கும் புகழ்பெற்ற.

## 1823. மாத்திரை யொன்றினின் மன்னி யமர்ந்துறை

1823. மாத்திரை யொன்றினின் மன்னி யமர்ந்துறை
யாத்தனுக் கீந்த அரும்பொரு ளானது
மூர்த்திகள் மூவர்க்கு மூவேழ் குரவர்க்குந்
தீர்த்தம தாமது தேர்ந்துகொள் வீரே

நுழைவு, நோன்பு, நுண்மை என்று சொல்லப்படும் சமயம், விசேடம், நிருவாணம் ஆகிய மூன்றும், குரு முழுக்கு என்று சொல்லப்படும் ஆசாரியபிடேகமும் பெற்ற நல்லாரை ஆத்தன் என்பர். அத்தனுக்கு உரியோன் ஆத்தன் என்பர். அந்நல்லார் உலகியலை ஆளுதலால் ஏற்படும் ஆண் என்னும் இரு மாத்திரையினின்றும் நீங்கித் திருவடியைப் பேணுவதால் அமையும் பெண்ணென்னும் ஒரு மாத்திரையாய் ஓங்கினர். அதனால் அவர் மாத்திரை எனவும் பெயர் பெறுவர். அவர்பால் சிவபெருமானும் இடையீடின்றி மாத்திரைக்குள் வெளிப்பட்டு நிலை நிற்பன். அத்தகைய நல்லார்க்கு அன்புடன் ஈந்த அரும்பொருள்கள் சிவபெருமானுக்கு நேராக ஈந்தனவேயாகும். மேலும் அப் பொருள்கள் அயன், அரி, அரன் மூவர்க்கும் தந்தையின் பெற்றோர், தாயின் பெற்றோர், மனைவயின் பெற்றோர் ஆகிய முத்திறத்து எழுவகையினர்க்கும் அன்னார் நன்னிலைக்கு உதவியாம் தூய பொருளாகும். இவ் வுண்மையினைத் தேர்ந்துகொள்வீராக. இதுவே திருவள்ளுவ நாயனார் அருளும் 'தென்புலத்தார்' கடனென்ப.

ஆத்தன் - மகேசுரன்; அஃதாவது சமயம், விசேடம், நிர்வாணம், ஆசாரி யபிடேகம் பெற்றவன். மூர்த்திகள் மூவர் - அயன், அரி, அரன். மூவேழ்குரவர் - தந்தை, தாய், மனைவி குடிவழியில் ஏழு தலைமுறையில் உள்ள மூதாதையர் (அஃதாவது பிதிர்க்கள், நம்மை விட்டுப் பிரிந்து போனவர்கள்).

## 1824. அகரம் ஆயிரம் ஆரியர்க் கீயிலென்

1824. அகரம் ஆயிரம் ஆரியர்க் கீயிலென்
சிகரம் ஆயிரஞ் செய்து முடிக்கிலென்
பகரு ஞானி பகலூண் பலத்துக்கு
நிகரிலை என்பது நிச்சயந் தானே.

பேர்கொண்ட பார்ப்பார் தங்குமிடம் அகரமாகும். அவர்க்கு அத்தகைய அகரம் ஆயிரம் ஈதலிலும், கோபுரத்துடன் கூடிய திருக்கோவிகள் ஆயிரமமைத்துக் கடவுள் மங்கலம் செய்வதினும், அருளொளி விளக்கத்தால் ஞானத்தின் திருவுருவாய் விளங்கும் சிவஞானிக்கு ஒரு பகலுணவு அளிக்கும் பேறு அளவிலாததாகும். அவ்விரண்டும் இப் பேற்றுக்கு ஒப்பாகாவென்பது ஒருதலை. ஒருதலை - நிச்சயம். ஈண்டுப் 'பகரும் ஞானி' என்பது புறத் திருக்கோலத்தால் மட்டுமன்றி அகத்தே இடையறா நினைவால் எழுந்தருளிவித்துள்ள சிவப்பொலிவால் அவர்தம் திருமேனி இவர் சிவஞானி என முன்வந்து தானே நவிலும் என்பதாம். திருவாயும் 'சிவசிவ' எனச் செப்பும்.

அகரம் - ஆரியப் பிராமணர் வசிக்கும் இடம்.

## 1825. ஆறிடும் வேள்வி அவிகொளும் நூலவர்

1825. ஆறிடும் வேள்வி அவிகொளும் நூலவர்
கூறிடும் விப்பிரர் கோடிபே ருண்பதில்
நீறிடுந் தொண்டர் நினைவின் பயனிலை
பேறெனில் ஓர்பிடி பேறது வாகுமே.

அருமறை நூலவர் எனச் சொல்லிக்கொள்வோர் சொல்லும் வழியில் வேள்வி செய்வோர் அவர்களால் அந்தணர் என்று கூறப்படுவர். அத்தகைய பேர்கொண்டோர், கோடிக்கணக்கானவர் உண்பதற்கு ஒரு பயன் உண்டென்றால் அப் பயன் திருவெண்ணீறணியும் சிவத்தொண்டர்க்கு ஒரு பிடி சோறு அளிக்க வேண்டுமென்று அன்புடன் நினைக்கும் நினைவின் பயனுக்கு ஒருசிறிதும் ஒவ்வாதென்க. எனவே சிவனடியார்களுக்கு விருந்தயர்தலே பெரும்பேறென்க.

## 1826. ஏறுடை யாயிறை வாஎம்பி ரானென்று

1826. ஏறுடை யாயிறை வாஎம்பி ரானென்று
நீறிடு வாரடி யார்நிகழ் தேவர்கள்
ஆறணி செஞ்சடை யண்ண லிவரென்று
வேறணி வார்க்கு வினையில்லை தானே.

திருவைந்தெழுத்தோதித் திருநீறு அணியுங்கால் ஏறுடையாய் எனவும், இறைவா எனவும் எம்பிரான் எனவும், உள்ளன்பால் ஓதுவர். அவ்வாறு ஓதித் திருவெண்ணீறணியும் மெய்யடியார்கள் இயங்கும் தேவர்கள் ஆவர். அம் மெய்யடியார்களை ஒருவர் ஆறணி செஞ்சடை அண்ணலாகிய சிவபெருமான் இவர்களே என்று நினைதல் வேண்டும். அங்ஙனம் நினைந்து அம் மெய்யடியார்களைச் சிறப்பாக வழிபாடுவார்க்கு முத்திற வினைகளும் மூளா என்க. முத்திற வினைகளாவன: எஞ்சுவினை, ஏன்றவினை, ஏறுவினை என்பன. இவற்றை முறையே சஞ்சிதம், பிராரத்தம், ஆகாமியம் என்ப.

வேறணிவார் - அடியாராகக் கருதிப் பூசிப்பவர்.

## 1827. சீர்நந்தி கொண்டு திருமுக மாய்விட்ட

1827. சீர்நந்தி கொண்டு திருமுக மாய்விட்ட
பேர்நந்தி யென்னும் பிறங்கு சடையனை
நாளொந்து நொந்து வருமள வுஞ்சொல்லப்
பேர்நந்தி யென்னும் பிதற்றொழி யேனே

மெய்யடியார்கள் அருளால் சிவனையே நினைந்து திருமுறை ஓதி, இறைபணி நிற்பர். அவர்கள்பால் சிவன் தயிரில் நெய் போல் விளங்கித் தோன்றுவன். அதனால் அவ்வடியார்கள் திருமுகம் சிவப் பொலிவுடன் தோன்றும். அத் தோற்றம்பற்றி அவர்களைச் சிவனெனவே அழைப்பர். அத்தகைய பேர் வழங்கும் நந்தியென்னும் விளங்கு திருச்சடையுடையவனைப் பன்னாளாயினும் என்னையாள எழுந்தருளும்வரை நான் வருந்தி வருந்தி ஐந்தெழுத்தோதி அழைப்பன். அங்ஙனம் சிவன் நேர்ந்து என்னை ஆட்கொள்ளும்வரை பேரன்பால் நந்தியென்னும் பெயரைப் பிதற்றொழியேன். நந்திநாமம் 'நமசிவய' என்க.

திருமுகமாய்விட்ட - அடியார் வடிவமாகத் தோன்றிய.

## 1828. அழிதக வில்லா அரனடி யாரைத்

1828. அழிதக வில்லா அரனடி யாரைத்
தொழுதகை ஞாலத்துத் தூங்கிருள் நீங்கும்
பழுதுப டாவண்ணம் பண்பனை நாடித்
தொழுதெழ வையகத் தோரின்ப மாமே.

அழியுந் தன்மையில்லாத அருட்பண்புகளை மேற்கொண்டொழுகும் சிவனடியாரை இவ் வையத்துள்ள மெய்யடியார் கண்ணிற்காணும். சிவன் எனக் காதலாற் றொழுவர். அதனால் அவர்கள்பால் பண்டே புல்லிய மலவிருள் நீங்கும். தொழாத நாள் இல்லையென்று சொல்லும்படி அம் மெய்யடியார்களைச் சிவனெனவே நாடித் தொழுதெழ ஒப்பில்லாத சிவப்பேரின்பம் பின்னையென்னாது அப்பொழுதே உண்டாம்.

பண்பனை - சிவ வடிவத்தையுடைய மகேசுரனை.

## 1829. பகவற்கே தாகிலும் பண்பில ராகிப்

1829. பகவற்கே தாகிலும் பண்பில ராகிப்
புகுமத்த ராய்நின்று பூசனை செய்யும்
முகமத்தோ டொத்துநின் றூழிதோ றூழி
அகமத்த ராகிநின் றாய்ந்தொழிந் தாரே.

அம்மைக்கு ஒருகூறு பகுந்தளித்ததனால் அப்பனாகிய சிவபெருமான் பகவன் என்று அழைக்கப்பட்டான். அவனை யுணர்தற்கு வேண்டும் உலகியற் பண்புகள் ஏதும் இலராகிலும், மெய்யடியார்கள்மாட்டுப் பூண்டுள்ள அளவிறந்த அன்பாகிய மத்தராய் நின்று பூசனைக்கு வேண்டிய முகமனாகிய சிறப்புடன் வழிபாடு செய்வர். அவ் வழிபாட்டின் பயனாய் ஊழி ஊழியாக நின்று உள்ளத்தை அதற்கே ஈந்தவராய் வேறு ஆராய்வு ஏதுமின்றி அடங்கி நிற்பர்.

பண்பு இலராகி - அன்பு இல்லாராகி. மத்தராய் - மயக்கம் உடையராய். முகமத்தோடு - உபசாரங்களோடு. அகம் மத்தராகி - மதி மயங்கினராய்.

## 1830. தாழ்விலர் பின்னும் முயல்வ ரருந்தவம்

1830. தாழ்விலர் பின்னும் முயல்வ ரருந்தவம்
ஆழ்வினை யாழ அவர்க்கே அறஞ்செய்யும்
ஆழ்வினை நீக்கி அருவினை தன்னொடும்
போழ்வினை தீர்க்கும்அப் பொன்னுல காமே.

சிவனடியார் வழிபாட்டின் அன்பில் ஒரு சிறிதும் குறை பாடிலராய், மேலும்மேலும் சிவத்தைப் பேணும் இறப்பில் தவத்தால் ஆழச்செய்யும் ஏறுவினை அகன்றொழிய, மெய்யடியார் திருவடியினை வழிபட்டு மண்ணினிற் பிறந்தார் எய்த வேண்டிய பெரும்பயனை
எய்துவர். மேலும் அந்த ஏறுவினை நீக்கினமை போன்று, அருவினையாகிய எஞ்சுவினையுடன் போழ்வினையாகிய ஏன்றவினையும் அருளால் தாக்காது நீக்குவர். அவர்கள் வாழும் இடனே சிவவுலகாகும்.

தாழ்விலர் - அன்புடன் பூசை செய்வதில் தாழ்வு இல்லாதவர். ஆழ்வினை - ஆகாமியம். அருவினை - சஞ்சிதம். போழ்வினை - பிராப்தம்.

## 1831. திகைக்குரி யானொரு தேவனை நாடும்

1831. திகைக்குரி யானொரு தேவனை நாடும்
வகைக்குரி யானொரு வாதி யிருக்கிற்
பகைக்குரி யாரில்லை பார்மழை பெய்யும்
அகக்குறை கேடில்லை யவ்வுல குக்கே.

பத்துப் புலத்துக்கும் ஒத்து ஒருவனாய் நிற்கும் முழுமுதற் சிவனை, அவனருளால் இடையறாது எண்ணும் மெய்யடியார் வேந்தருள்ளிட்டுச் சிவனுக்கு மாறா நிற்போர் எவரையும் மதியார். ஆளுடைய பிள்ளையார் போன்று எவரையும் வழக்கிட்டு வெல்லவும் வல்லர். அவ்வுண்மையாளர் வாழும் நாட்டில் பகைமையாளராம் தீயோர் இரார். அவர் இலராகவே பருவ மழை பொய்யாது; பொய்யாதாகவே விளைவுங் குன்றாது. குன்றாதாகவே கூலம்செழிக்கும்; பஞ்சமும் இல்லையாகும்.

அகக்குறை - தானிய விலைக் குறைவு.

## 1832. அவ்வுல கத்தே பிறந்தவ் வுடலொடும்

1832. அவ்வுல கத்தே பிறந்தவ் வுடலொடும்
அவ்வுல கத்தே அருந்தவ நாடுவர்
அவ்வுல கத்தே அரனடி கூடுவர்
அவ்வுல கத்தே அருள்பெறு வாரே.

மெய்யடியார்கள் சிவவுலகத்தே தோன்றுவர். அச் சிவவுலகத்துக்குரிய தூயவுடலுடன் இருப்பர். அவ் வுலகத்தின்கண் சிவனை வழிபடும் அருந்தவம் ஆற்றுவர். அச் சிவவுலகத்தே நின்று இறையருள் நேர்படின் சிவன் திருவடியினைக் கூடுவர். அச் சிவவுலகத்திலேயே திருவருள் இன்பத்தினை எய்துவர். அவ்வுலகம் - சிவவுலகம்.

அவ்வுலகத்தே - அவரவர் பிறந்த உலகத்தே.

## 1833. கொண்ட குறியுங் குலவரை யுச்சியும்

1833. கொண்ட குறியுங் குலவரை யுச்சியும்
அண்டரும் அண்டத் தமரரும் ஆதியும்
எண்டிசை யோரும்வந் தென்கைத் தலத்தினுள்
உண்டெனில் நாமினி உய்ந்தொழிந் தோமே.

ஆருயிர்கள் வினைக்கீடாக ஏற்கும் பல்வேறு வகையான பிறப்பு வேறுபாட்டு உண்மைகளும், உலகிடைக் காணப்படும் உயர்ந்த மலையுச்சியின் தன்மைகளும், ஒன்றோடொன்று நெருங்குதற்கரிய பலவேறு அண்டங்களும், அவ்வவ் அண்டங்களில் வாழும் அமரரும், அவர்களை இயக்கும் காரணரும், எட்டுப்புலங்களில் உள்ளாரும் திருவருட்டுணையால் நாடுங்கால் என் அறிவின்கண் செவ்விதிற் புலனாகா நின்றனர். இந் நிலையே அருள்கை வந்த மெய்ந்நிலையென்பர். இந் நிலை எய்தின் நாம் உய்ந்தவராவோம்.

அண்டரும் - அண்டு + அரும்; அடைதற்கு அரிய.

# 1834. அண்டங்கள் ஏழும் அகண்டமும் ஆவியுங்

1834. அண்டங்கள் ஏழும் அகண்டமும் ஆவியுங்
கொண்ட சராசர முற்றுங் குணங்களும்
பண்டை மறையும் படைப்பளிப் பாதியுங்
கண்ட சிவனுமென் கண்ணன்றி யில்லையே.

ஞாயிற்றினைச் சூழ்ந்து சுழலும் எழுவகைக் கோள்களும், வேறு விரிந்த நிலைகளும், அவ்வந் நிலைகளிலுள்ள ஆவிகளும், ஆங்காங்குள்ள இயங்குதிணை நிலைத்திணை உயிர்களும், அவ்வவற்றின் பண்புகளும், பண்டைத்தமிழ் நான்மறையும், படைத்தல் காத்தல் முதலிய திருவருட்டொழில்களும் சிவபெருமான் என்னுடன் விளங்கி நின்று என் அறிவின்கண் காட்டுதலால் அவை அனைத்தின் உண்மைகளும் அடியேன் அறிவின்கண் செவ்விதிற் புலனாகா நின்றன.

அண்டங்கள் ஏழும் - நாம் இருக்கும் இச் சூரிய மண்டலத்தைச் சேர்ந்த ஏழு கோள்களும். அகண்டமும் - வேறு பல அண்டங்களும். பண்டைமறை - தமிழ் மொழியில் முன்னிருந்த மறைகளும், என் கண் அன்றி - என் உள்ளத்தின்கண் அன்றி.

## 1835. பெண்ணல்ல ஆணல்ல பேடல்ல மூடத்துள்

1835. பெண்ணல்ல ஆணல்ல பேடல்ல மூடத்துள்
உள்நின்ற சோதி ஒருவர்க் கறியொணாக்
கண்ணின்றிக் காணுஞ் செவியின்றிக் கேட்டிடும்
அண்ணல் பெருமையை ஆய்ந்தது மூப்பே.

இருவினைக்கீடாகத் தரப்படும் பருமையான உடம்பின் கண்ணே ஆண், பெண், பேடு என்ற குறி வேறுபாடுகள் காணப்படுமேயன்றி, உயிரின்கண் அவை ஒருசிறிதும் காணப்படா. ஆயின் இறைவன் மாட்டு அவை காணப்படும் என்பது எங்ஙனம் பொருந்தும்? இறைவன் ஆண், பெண், பேடு என்பவற்றுள் ஒன்றும் அல்லன். அவன் ஆருயிரின் அகமாகிய நெஞ்சத்தினுள் மறைந்தும் அறிவுப் பேரொளியாகத் திகழ்கின்றனன். ஆயினும் அவனருளாலன்றித் தம்மறிவால் ஒருவர்க்கும் அறியவொண்ணாதவன். அவன் கருவிகளின் துணையின்றியே நிறைந்தும் கலந்தும் எல்லாம் அறிவாற்றலான் உணர்வன். அதனால் அவன் கண்ணின்றிக் காண்பன், செவியின்றிக் கேட்பன். இவையே 'பொறி
வாயில் ஐந்தவித்தான்' என்னும் பொருவில் பண்பு. இத்தகைய அண்ணல் பெருமையை சிவகுருவால் ஆய்ந்தறிவதே பிறப்பற்ற பெரு நிலையாம் சிறப்பு. மூப்பு - சிறப்பு. இது, 'திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகம்,' 'கோயின் மூத்த திருப்பதிகம்' என்பனவற்றான் உணர்க.

மூடத்துள் - மனத்தின்கண் உள்ள உள்ளத்தினுள். மூப்பே - அனுபவமே.

## 1836. இயங்கும் உலகினில் ஈசன் அடியார்

1836. இயங்கும் உலகினில் ஈசன் அடியார்
மயங்கா வழிசெல்வர் வானுல காள்வர்
புயங்களு மெண்டிசை போதுபா தாள
மயங்காப் பகிரண்ட மாமுடி தானே.

ஓவாது சுழலும் இவ்வுலகினில் சிவபெருமானின் திருவடியுணர்வு கைவரப்பெற்ற சிவனடியார்கள் செந்நெறியிற் செல்வர்; சிவ உலகை ஆள்வர். அச் சிவபெருமான் திருத்தோள்கள் புலம் எட்டிலும் நலம்புரிய எட்டாயின. போதாகிய அவன் திருவடித் தாமரை பாதாளம் ஏழினுக்கும் அப்பால்; திருமுடி. வெளியில் திகழும் புறவண்டங்களுக்கும் அப்பாலாம்.

மயங்காவழி - ஞான வழி. போது - திருவடி.

## 1837. அகம்படி கின்றநம் ஐயனை யோரும்

1837. அகம்படி கின்றநம் ஐயனை யோரும்
அகம்படி கண்டவர் அல்லலிற் சேரார்
அகம்படி யுட்புக் கறிகின்ற நெஞ்சம்
அகம்படி கண்டாம் அழிக்கலும் எட்டே.

மறவா நினைவுடைய உள்ளத்தில் வீற்றிருந்தருள்கின்ற முழுமுதற் சிவனை, மனவடக்கங்கொண்டு கொல்லாமை முதலிய எண்பெரும் பண்பு (1804) மலர்களைக் கொண்டு நாளும் வழிபடும் மெய்யடியார் பிறப்பு, இறப்பு ஆகிய பேரல்லலில் சேரார். தம் முனைப்பாம் அகங்காரம் அருளாலடங்கப் பெற்றார் நுண்ணுடலின் மெய்ம்மையை யுணர்வர். அத்தகையோர் எட்டுறுப்பால் ஆகிய நுண்ணுடலை யறிந்து நீங்கவல்லாராவர். நுண்ணுடல்: தன் மாத்திரை ஐந்து, மனம் எழுச்சி இறுப்பாகிய உட்கலன் மூன்று ஆக எட்டு. ஒரும்; அசை.

அகம் படிகின்ற - உள்ளத்தின்கண் வீற்றிருக்கின்ற.
அகம்படி கண்டவர் - ஆங்காரம் அடங்கியவர்.

## 1838. கழிவு முதலுங் காதற் றுணையும்

1838. கழிவு முதலுங் காதற் றுணையும்
அழிவும தாய்நின்ற ஆதிப் பிரானைப்
பழியும் புகழும் படுபொருள் முற்றும்
ஒழியுமென் னாவி யுழவுகொண் டானே.

சொல்லுக் கடங்காத பெருமையும், எல்லையில்லாத முதன்மையும், தன்னின் நீங்காத திருவருள் அம்மையாம் காதற்றுணையும், பேரொடுக்கப் பெருமானுமாய் நின்ற காரணக் கடவுளை வழிபடுதலும், பொருள்சேர் புகழ்கூறுதலும், அவனருட்டொழில் ஐந்தின் பொருண்மை மொழிதலும் பணியாகக் கொண்ட அடியேன் ஆவியை (உழுவார், உழுநிலத்தைத் தம் விருப்பம்போல் செய்வர்) உழவு நிலமாகக் கொண்டு ஆண்டவன் இயக்குகின்றனன்.

## 1839. என்தாயோ டென்னப்பன் ஏழேழ் பிறவியும்

1839. என்தாயோ டென்னப்பன் ஏழேழ் பிறவியும்
அன்றே சிவனுக் கெழுதிய ஆவணம்
ஒன்றா யுலகம் படைத்தான் எழுதினான்
நின்றான் முகில்வண்ணன் நேரெழுத் தாயே.

என் அருமைத் தாயுடன் தந்தையும் எழுவகையாக விரிந்த பிறப்பும் தொன்மையிலேயே சிவனுக்கு அடிமை என்று எழுதி ஏற்பித்த ஆளோலையாகிய ஆவணம் அனைவர்க்கும் உண்டு. அதனை நடுவெழுதி ஒப்புவித்தவன் படைப்போனாவன். காப்போனாகிய முகில்வண்ணன் சான்றெழுத்திட்ட சால்பினன் ஆவன். நோயாளியும், அறியாமையுடையாரும், மருத்துவர்க்கும், ஆசிரியர்க்கும், நோய் நீக்கத் தொடங்குவதன் முன்னும் கற்பிக்கத் தொடங்குவதன் முன்னும் அடிமைத் தன்மை வாய்ந்தவராவர். அவ்வத் தொடக்கத்து அடிமையராவர் இதனையே ஊழ்முறை என்பர். நேர் எழுத்து - சான்றாக ஒத்துஇட்ட கை எழுத்து. இதனை மேலெழுத்தெனவும் கூறுப. இது, 'மற்றுமேலெழுத்திட்டார்கள்' என்னும் சேக்கிழாரடிகள் திருமொழியானுணர்க. இருமுதுகுரவர் வரும் அருள்வழியும் மாசற்றிருத்தல் வேண்டுமென்பது 'மாசிலா மரபில் வந்த வள்ளல்' வன்றொண்டர் என்பதனால் விளங்கும்.

அன்றே - அநாதியே.

## 1840. துணிந்தா ரகம்படி துன்னி உறையும்

1840. துணிந்தா ரகம்படி துன்னி உறையும்
பணிந்தா ரகம்படி பாற்பட் டொழுகும்
அணிந்தா ரகம்படி யாதிப் பிரானைக்
கணிந்தா ரொருவர்க்குக் கைவிட லாமே.

திருவடியுணர்வால் உண்மை துணிந்தார் நெஞ்சத்தின்கண் மேலோங்கிப் பொருந்தி உறைவன் சிவன்; இறைபணி நிற்பார் உள்ளத்து அவர் வயப்பட்டு ஒழுகுவன். இடையறாச் சிவநினைவால் அந் நினைவார் உள்ளம் அழகிய திருவுள்ளம் ஆகின்றது. அவ் வுள்ளத்தின்கண் அன்னையோடு கூடிய அத்தனாகிய சிவபெருமான் தாங்கப்படுவோனாய் வீற்றிருந்தருள்கின்றனன். அவ் வுண்மையினை மதித்து எண்ணுவார்க்கு அவ் வெண்ணத்தை எவ்வாற்றானும் கைவிடல் முடியுமோ?

பாற்பட்டு - வசப்பட்டு. கணிந்தார் - மதித்தார்.

## 1841. தலைமிசை வானவர் தாழ்சடை நந்தி

1841. தலைமிசை வானவர் தாழ்சடை நந்தி
மிலைமிசை வைத்தனன் மெய்ப்பணி செய்யப்
புலைமிசை நீங்கிய பொன்னுல காளும்
பலமிசை செய்யும் படர்சடை யோனே.

தாழ்ந்த திருச்சடையினையுடைய நந்தியம்பெருமான் தலையால் வணங்கும் சிவவுலகினர்க்குத் தன் திருவடியை அவர்தம் முடிமேல் சூட்டியருளினன். திருவடியொன்றே அகந்தழீஇ மெய்ப்பணி செய்வார்க்கு மலகன்ம நீங்கிய தூமாயை உலகத்து இன்பப்பயன் அருள்வன். அவனே படர்சடைச் சிவபெருமானாவன்.

மிலைமிசை - மிசைமிலை, தலையில் அணியும்படி. புலை - குற்றம். பலமிசை செய்யும் - பயனை இசைக்கின்ற.

## 1842. அறியாப் பருவத் தரனடி யாரைக்

1842. அறியாப் பருவத் தரனடி யாரைக்
குறியால் அறிந்தின்பங் கொண்ட தடிமை
குறியார் சடைமுடி கட்டி நடப்பார்
மறியார் புனல்மூழ்க மாதவ மாமே.

இளம்பருவத்து அரனடியவர்களை அவர்கள் மேற்கொண்டுள்ள சிவத்திருக்கோலப் பொலிவால் சிவன் அடிமை கொண்டருள்கின்றனன். அந் நிலையிலும் ஒரு பேரின்பம் அளித்தருள்கின்றனன். கொன்றைச் சடையான் திருவடியை மறவா நினைவினர் என்பதன் புற அடையாளமே பின்னிய திருச்சடையுடையராய் ஒழுகுவர். அவர்தம் திருவடியினை விளக்கிய திருத்த நீரை அலைசேர் அரும்புனலாக மூழ்க, அதுவே இறப்பில் தவமாம். இதன்கண் நாயனார் அடியேன் எனத் தம்மைக் குறித்தார்.

அறியாப் பருவம் - இளமையில். குறியால் - சிவ சின்னங்களால். மறியார் - அலைகள் பொருந்திய.

# 1843. அவன்பால் அணுகியே அன்புசெய் வார்கள்

1843. அவன்பால் அணுகியே அன்புசெய் வார்கள்
சிவன்பால் அணுகுதல் செய்யவும் வல்லன்
அவன்பால் அணுகியே நாடு மடியார்
இவன்பாற் பெருமை இலயம தாமே.

மேல் ஓதிய சிவனடியாரை அடைந்து, அவர்க்கு அன்பும் பணியும் இன்புறச் செய்வார், சிவபெருமான் திருவடியை நெருங்கவும் வல்லராவர். மேலும், அம் மெய்யடியாரைத் தொடர்ந்து நாடுபவர் சிறந்தோராவர். அவர்பால் முழுப்பெருமையும் தங்கும். சிவனடியார் வாயிலாகவே தாயிலாச் சிவனை ஏய்தலாம்.

அவன் - சிவனடியார். இலயமதாமே - அடங்குமே.

## 1844. முன்னிருந் தார்முழு தெண்கணத் தேவர்கள்

1844. முன்னிருந் தார்முழு தெண்கணத் தேவர்கள்
எண்ணிறந் தன்பால் வருவர் இருநிலத்
தெண்ணிரு நாலு திசையந் தரமொக்கப்
பன்னிரு காதம் பதஞ்செய்யும் பாரே.

முதன்மையாக ஒண்மையுடன் இருந்த சிவனடியாரைப் பதினெண்கணத்தவர் உள்ளிட்ட தேவர்கள் அனைவரும் கைகூப்பித் தொழுவர். அவர்களே இந் நிலவுலகத்து வந்து சிறப்புடன் பூசையாற்றுவர். அவ் வழிபாடு தெளிந்த எட்டுத் திசையிலும் சேர்ந்து வழிபட, அவ் வழிபாட்டின் பயனாகப் பன்னிருகாத எல்லை சிவமணம் கமழும். அஃதாவது திருவெண்ணீறு, சிவமணி, திருவைந்தெழுத்துப் பயிலுவதால் அக்குறி சிவமாந்தலைவன் அருட்குறியாகிய வாய்மைக் குறியாகும்.

தெண் - தெளிவு.

## 1845. சிவயோகி ஞானி செறிந்தஅத் தேசம்

1845. சிவயோகி ஞானி செறிந்தஅத் தேசம்
அவயோகம் இன்றி அறிவோருண் டாகும்
நவயோகங் கைகூடு நல்லியல் காணும்
பவயோகம் இன்றிப் பரலோக மாமே.

சிவன் திருவடியை மறவா நினைவுடையோன் சிவயோகியாவன். சிவனிறைவில் அழுந்தித் தற்செயலற்றுச் செய்வனவெல்லாம் சிவன் செயலாப் புரிபவன் சிவஞானியாவன். அத்தகையோர் வாழும் நாடு சிவநாடு ஆகும். அந் நாட்டில் மெய்யுணர்வுடையோர் வாழ்வர். அங்குக் கேட்டைத் தரும் தீவினைகள் ஏதும் நிகழா. ஆண்டு அருளால் எய்தும் புதுமை யுண்டாகும். மேலும் எவ்வகையான நன்மையும் பெருகும். ஆண்டு வாழ்வோர் மீண்டும் பிறவார்; சிவவுலகம் உறுவர்.

## 1846. மேலுணர் வான்மிகு ஞாலம் படைத்தவன்

1846. மேலுணர் வான்மிகு ஞாலம் படைத்தவன்
மேலுணர் வான்மிகு ஞாலம் கடந்தவன்
மேலுணர் வார்மிகு ஞாலத் தமரர்கள்
மேலுணர் வார்சிவன் மெய்யடி யார்களே.

சிவபெருமான் திருவாணையால் உயிர்கட்கு உலகுடல்களைப் படைத்துக் கொடுத்தனன் அயன். அதுபோல் காத்தனன் அரியும். எனினும் அவர்கள் உணர்வெல்லாம் படைத்தல் காத்தலாகிய தொழிலே மேல் என்று உணர்ந்து உவகையுற்று நிற்கும். அதனால் சிவனை உணரார். இந் நிலவுலகத்து வாழும் மெய்யடியார் விரும்பியுணர்வது சிவனையே. அதனால் அவர்கள் சிவனடியார்கள் என்று எவரானும் என்றும் வழுத்தப்பெறுவர்.

மேலுணர்வு - மேலாகிய அறிவு.

# 1847. எட்டுத் திசையும் இறைவ னடியவர்க்

1847. எட்டுத் திசையும் இறைவ னடியவர்க்
கட்ட அடிசில் அமுதென் றெதிர்கொள்வர்
ஒட்டி யொருநிலம் ஆள்பவர் அந்நிலம்
விட்டுக் கிடக்கில் விருப்பறி யாரே.

எட்டுத் திசையிலுமுள்ளார் இறைநினைவுடன் முறையுடன் சமைக்கும் அடிசிலாகிய செஞ்சாலிச் சோற்றை இறைவன் நிறையருள் அடியவர்கட்கு என்றே கொள்வர். அதனால் அது சுவையமிழ்தாய்த் திகழும். அவ்வமிழ்தினை எதிர்கொண்டு மெய்யடியார்கட்கு முன் ஊட்டுவர். பின் தாமும் மகிழ்ந்துண்பர். உயிர்நிலைக்களமாகிய உடம்புகளை ஆள்பவர் உயிர்களே. அவ் வுயிர்கள் அவ் வுடலினையும், அதன்பொருட்டுச் சமைக்கும் உணவினையும் சிவனுக்கு என்று எண்ணுதல் வேண்டும். அங்ஙனம் எண்ணாவிட்டால் உண்மையைவிட்டு விலகியிருப்பவராவர். அவர்கள் தாம் விட்டுக்கிடக்கில் விருப்பறியார் என்று அழைக்கப்படுவோராவர்.

விட்டுக்கிடக்கில் - நீங்கி இருந்தால்.

# 1848. அச்சிவன் உள்நின்ற அருளை அறிந்தவர்

1848. அச்சிவன் உள்நின்ற அருளை அறிந்தவர்
உச்சியல் போதாக வுள்ளமர் கோவிற்குப்
பிச்சை பிடித்துண்டு பேத மறநினைந்து
இச்சைவிட் டேகாந்தத் தேறி யிருப்பரே.

உடலகத்து உயிர்மட்டும் இருக்கின்றதென்று எண்ணுவோர், ஒருபடி தாழ்ந்தோரேயாவர். இவர்கள் உடலே உயிரென்று எண்ணுவோரினும் உயர்ந்தோரே. உண்மையில் உடல் அதனகத்து உயிர், அவ் வுயிரகத்து உயிர்க்குயிராகிய சிவன் ஆகிய முப்பொருள் உண்மையினைக் காணுதல் வேண்டும். அவ் வுணர்வு சிவனருளால் கைகூடுதல் வேண்டும். அங்ஙனம் கைகூடியவர்களே 'அச் சிவன் உள்நின்ற அருளை' அறிந்தவராவர். திருக்கோவிலிலும் மக்களே புழங்குகின்றனர். வீட்டிலும் மக்களே புழங்குகின்றனர். ஆனால் திருக்கோவிலைச் சிவனுடையதென்றும் வீட்டைத் தம்முடையதென்றும் எண்ணுகின்றனர். தமக்குள் சிவன் நின்று அருளால் தம்மை இயக்குகின்றான் என்னும் உண்மையினை உணர்ந்தவர் தம் வீட்டையும் திருக்கோவில் என்றே எண்ணுவர். இது தந்தையார் கட்டிய வீட்டில் தாம் வாழ்ந்தாலும் அவ் வீடு தந்தையார் வீடு என்று எண்ணம் வருவதை ஒக்கும். சிவன் உள்நிற்கும் உண்மையுணர்ந்தவர், உச்சிப்பொழுது வரத் தாம் உண்ணும் ஊண் சிவபெருமான் உறையும் திருக்கோவிலாகிய தம்முடலுக்கெனக் கருதுவர். உண்ணுங்கால் சிவனும்

தாமும் வேறெனக் கருதார். இதுவே பிச்சை பிடித்துண்டலாகும். பிச்சை - திருக்கோவிலுணா. நாம் சமைத்தாலும் உண்டாலும் ஆண்டவனுக்கு என்று எண்ணும் நினைவால் கோவிலுணா என்கின்றோம். பேதமற நினைப்பது இதுவே; இது கடைத்தேங்காய் என்பதை யொக்கும். வேறெப் பொருளிலும் தமக்கென்னும் வேட்கையினைவிட்டுச் சிவனிறைவில் ஒடுங்கிச் சிவனாய் ஒற்றுமைப்பட்டிருப்பர். இதுவே ஏகாந்தத் திருத்தல். உச்சிவேளையும் கதிரவனுடலுடனொன்றி உடலின் நிழல் வெளிவராதிருக்கும் வேளை. இதனைத் தன்னிழல் தன்னடியில் தங்குதல் என்பர். இதுவும் ஏகாந்தத்தை உணர்த்தும் எடுத்துக்காட்டாகும். 'தீயவை செய்தார் கெடுதல் நிழல்தன்னை, வீயா தடியுறைந் தற்று' (208) என்னும் திருமொழியும் இங்கு நினைவுகூர்க.

உள்ளமர் கோவிற்கு - உள்ளமாகிய கோயிலில் இருக்கும் ஆன்மாவுக்கு.

## 1849. விச்சுக் கலமுண்டு வேலிச்செய் ஒன்றுண்டு

1849. விச்சுக் கலமுண்டு வேலிச்செய் ஒன்றுண்டு
உச்சிக்கு முன்னே யுழவு சமைந்தது
அச்சங்கெட் டச்செய் அறுத்துண்ண மாட்டாதார்
இச்சைக்குப் பிச்சை இரக்கின்ற வாறே.

உடலை வளர்க்கும் உணவினும் சிறந்தது உயிர்ப்பு. உயிர்ப்பு - பிராணவாயு. உயிர்ப்பு உடலைக் கால நீடிக்கச் செய்யும். உணவு பசித்துண்டு பின்னும் பசிப்பதனோடொக்கும். உயிர்ப்பு இயங்குதற்குரிய கலம் மூக்காகும். தக்க காவலையுடைய விளைநிலம் போன்றது புருவ நடுவாகிய ஆணையிடம். உச்சிக்கு நேராகப் புருவ நடுவின்கண் அகத்தவமாகிய யோகப் பயிற்சியால் உழவாகிய அமிழ்தம் சமைந்தது. கூற்றுவனுக்குச் சிறிதும் அஞ்சாது வயலறுப்பதுபோல் அவ்வமிழ்தத்தை அருந்தமாட்டாதார், உடன்மேல் வைத்த வேட்கையால் பிச்சை உணவினைப் பிறர் சமைத்துத் தர யிரந்துண்டு உழல்கின்றனர். யோக உணவாகிய அமிழ்து தாமே தமதுடலகத்துத் திருவருளால் சமைப்பது. உச்சிக்குமுன்னே என்பது உண்ணும் வேளையாகிய உச்சிக்குமுன் எனினும் அமையும். கலம் - கருவி.

விச்சுக்கலம் - (விச்சு - வித்து) உயிர் நிலைப்பதற்கு வித்தாயிருக்கின்ற பிராணவாயு இயங்கும் மூக்கு. வேலிச்செய் - ஆஞ்ஞை உச்சிக்கு முன் - உச்சிக்குக் கீழே புருவ மத்தி நேர். உழவு - யோகம். அச்சங்கெட்டு -

பயம் இல்லாமல். செய்யறுத்து - அமிர்தம்கொண்டு.
இச்சைக்கு - உடலை வளர்க்கும் ஆசை கொண்டு.

## 1850. பிச்சைய தேற்றான் பிரமன் தலைதன்னில்

1850. பிச்சைய தேற்றான் பிரமன் தலைதன்னில்
பிச்சைய தேற்றான் பிரியா அறஞ்செய்யப்
பிச்சைய தேற்றான் பிரமன் சிரங்காட்டிப்
பிச்சைய தேற்றான் பிரமன் பரமாகவே.

சிவபெருமான் படைப்போனாகிய அயன் மண்டையோட்டினை ஆருயிர்கட்குக் காட்டிப் பிச்சை ஏற்பானாயினன். சிவன் தன்னைவிட்டு நீங்காச் சிவையின்வழி முப்பத்திரண்டு அறமும் இடைவிடாது செய்வித்துக் கொண்டிருக்கின்றான். அங்ஙனமிருப்பவும் இரப்பதற்குக் காரணம், ஈவோரெல்லாம் அருளாளர் நிலையாகவும் இரப்போரெல்லாம் ஆண்டான் நிலையாகவும் கருதுதல் வேண்டும் என்னும் குறிப்பு. அதனால் 'இரப்பவர்க்கீயவைத்தான் ஈபவர்களுக்கு அருளும் வைத்தான்' என்னும் செந்தமிழ்ச் சிறப்பு மறையின்வழி ஒழுகுதல் வேண்டும் என்பது காண்க. பிரமன் சிரங்காட்டி இரப்பது பிரமனிலும் தான் உயர்ந்தோன் எனவும், உலப்பிலோன் எனவும் மொழிந்திருக்கும் இயற்கை உண்மையினை எண்மையாக உலகத்துக்கு உணர்த்தவென்க. பிரமன் பரமாக: பிரமனிலும் தான் பரம் என்பதை உணர்த்த.

## 1851. பரந்துல கேழும் படைத்த பிரானை

1851. பரந்துல கேழும் படைத்த பிரானை
இரந்துணி என்பர்கள் எற்றுக் கிரக்கும்
நிரந்தர மாக நினையும் அடியார்
இரந்துண்டு தன்கழல் எட்டச்செய் தானே.

எழுவகை யுலகம் முழுமையும் வழுவின்றிப் படைத்த விழுப்பொருளாம் சிவபெருமானை இரந்துண்பவன் என்று கூறுவர் உண்மையறியார். அவன் எதன்பொருட்டு இரக்கின்றான் என்பதனை உய்த்துணர்தல் வேண்டும். அஃது இடைவிடாது தன் மெய்யடியார்கள் தன்னையே நினைந்துகொண்டிருக்கின்றனர். அவர்கள் உண்ணும் ஊண் தன் திருவருளால் வழங்கப்படுவதென்னும் மெய்ம்மை உணர்த்த உணர்கின்றனர். அதனால் அவர்கள் அத் திருவருளின்பால் இரந்து பெற்று உண்ணுதல் வேண்டும். அவ்வாறு உண்ணில் தன் திருவடியினை எய்துவது எளிதாம் என்னும் திருக்குறிப்பாம் என்க. உண்ணும் ஊணே சிவன் தந்ததெனக் கொள்வோர், அதனால் நிகழும் எல்லாமும் சிவன் தந்தன வென்றே கொள்வர். அதனால் இறைபணியில் நிற்பர்.

## 1852. வரவிருந் தான்வழி நின்றிடும் ஈசன்

1852. வரவிருந் தான்வழி நின்றிடும் ஈசன்
தரவிருந் தான்தன்னை நல்லவர்க் கின்பம்
பொரவிருந் தான்புக லேபுக லாக
வரவிருந் தாலறி யானென்ப தாமே.

மெய்யடியார்கள் செந்நெறிக்கண் வருமாறு சிவபெருமான் அருளுருக்கொண்டு அந்நெறிக்கண் வெளிப்பட்டு நின்றனன். திருவடியுணர்வால் நன்னெறிக்கண் செல்வார்க்குத் தன்னை உரிமையாகக் கொடுத்திட இருந்தனன் சிவன். அம்முறையால் நல்லவராகிய சிவஞானியின்பால் திருவடியின்பம் உண்டாதற்பொருட்டு வெளிப்பட்டுமிருந்தனன். தன் திருவடியே நிலைத்த பெரும்புகலாகக்கொண்டு ஒழுகும் உறுதி உண்மையர் தம்மை உடனிருந்து உணர்வின்கண் அறிவான் என்பதல்லால், அறியான் என்பது எங்ஙனம் பொருந்தும்? பொர - உண்டாதற்பொருட்டு.

# 1853. அங்கார் பசியும் அவாவும் வெகுளியும்

1853. அங்கார் பசியும் அவாவும் வெகுளியும்
தங்கார் சிவனடி யார்சரீ ரத்திடைப்
பொங்கார் புவனத்தும் புண்ணிய லோகத்துந்
தங்கார் சிவனைத் தலைப்படு வாரே.

சிறு தீயினையொத்த பசி, அவா, வெகுளி முதலான குற்றப்பாடுகளில் சிவனடியார்கள் ஒருசிறிதும் மனம் பொருந்தார். உடம்பு உடைமை முதலியவற்றில் பற்றுக்கொண்டு அவற்றை இறைவன் உடைமையெனவும், தமக்கு அவனால் கொடுக்கப்பெற்ற இரவலெனவும் கொள்ள வேண்டிய உண்மையை மறந்து, தம்மை மதித்து மனம் பொங்கிச் செருக்குறார். துறக்கவுலகம் சிவவுலகம் முதலிய எவ்வுலகத்துமுள்ள நிலையிலா இன்பத்தையும் கொள்ளார்; உள்ளார். சிவன் திருத்தாளே தலைப்படுவர். அத் திருவடியின்பே 'பேரா ஒழியாப் பிரிவில்லா, மறவா நினையா அளவிலா மாளாஇன்ப மாகடலாகும்.'

பொங்கார் - பெருமை நிறைந்த.

## 1854. மெய்யக ஞான மிகத்தெளிந் தார்களுங்

1854. மெய்யக ஞான மிகத்தெளிந் தார்களுங்
கையக நீண்டார் கடைத்தலைக் கேசெல்வர்
ஐயம் புகாமல் இருந்த தவசியார்
வையகம் எல்லாம் வரவிருந் தாரே.

உள்ளுணர்வாய் உண்மையாய்த் திகழும் திருவடியுணர்வு கைவரப்பெற்ற தெளிவுடையார்கள் சிவஞானி எனப்படுவர். அவர்கள் திருவடி இயக்கத்தால், மனையறம்புரியும் மாண்புசேர் நல்லார்வாழ் மனைத்தலைச் சேர்வர். அங்ஙனம் சேர்தல் அவர் நல்வழியானீட்டிய பொருளை நல்லுளத்தோடு நல்லுரை நவின்று நன்றாற்றி நல்கும் தானத்தைப் பெற்றுப் பயனீதற்பொருட்டு ஆகும். இதுவே அவர் மனைத்தலை சென்று பிச்சையுண்பதாம். வேறுசில சிவஞானிகள் தாம் தங்குமிடத்தே தங்கியிருப்பர். முன்னோதிய முறைப்படியுள்ள மனையறத்தார் சிவஞானி தங்குமிடத்தே கொண்டு வந்து பணிந்து படைப்பர். அதனையும் ஏற்று அருள்புரிவர்.

கையக நீண்டார் - கை + அகம் - நீண்டார், உள்ளன்போடு கொடுக்க முந்துவார். ஐயம்புகாமல் - பிச்சை எடுக்காமல், "இருக்குமிடம் தேடி என்பசிக்கே அன்னம் உருக்கமுடன் கொண்டுவந்தால் உண்பேன்" என்று இருக்கும.

## 1855. நாலேழு மாறவே நண்ணிய முத்திரை

1855. நாலேழு மாறவே நண்ணிய முத்திரை
பாலான மோன மொழியிற் பதிவித்து
மேலான நந்தி திருவடி மீதுய்யக்
கோலா கலங்கெட்டுக் கூடுநன் முத்தியே.

நாலேழு என்பது நாலும் ஏழும் என்னும் உம்மைத் தொகை. எனவே பதினொன்று என்று ஆகும். அறிதற் கருவியாகிய செவி. மெய், கண், நாக்கு, மூக்கு என்னும் ஐந்தும், செய்தற் கருவியாகிய கருவாய், கால், கை, வாய், எருவாய் என்னும் ஐந்தும், மனம் ஒன்றும் ஆகிய பதினொரு மெய் - தத்துவங்களையும் அருளால் தம் வழிப்படுத்திய தெளிவினரே முத்திரையாகிய சிவப்பொறி பொறித்துக்கொள்வர். ஈண்டு முத்திரை யென்பது திருத்தொண்டத் தொகைத் திருப்பாட்டுப் பதினொன்றனையும் காதலுடன் இடைவிடாது ஓதுதல். ஏனைய பயனில்லாத ஆரவாரமுள்ள பேச்சுகளைப் பேசுவதற்கு வாயின்கண் இடம்பெறாமல் ஊமை போன்றிருத்தல். ஊமை - வாய்வாளாமை. அதன்கண் வாய்வாளாமையை மேற்கொண்டு மனத்தையும் பதிவித்து முழுமுதற் சிவனாம் நந்தி திருவடிக்கண் சென்றுய்ய, உலகியல் ஆரவாரப் பெருமைச் செயல்கள் நீங்குதல் வேண்டும். அங்ஙனம் நீங்கிக் கைக்கொள்ளும் இடையறாச் சிவனினைவே திருவடிப்பேறாகும். கோலாகலங் கேட்டு எனப் பாடங்கொள்ளின் திருவடிச் சிலம்பொலி கேட்டு எனக் கொள்க. கோலாகலம் - கூக்குரல். இனி அழகிய

ஆய்ந்தணிந்த கலம் - வீரக்கழல். ஆகுபெயராக அதன் ஓசையைக் குறித்ததென்றலும் ஒன்று.

நாலெழும் - மண்முதல் 11 தத்துவங்கள். ஆற - அடங்க. கோலாகலம் - பத்துவித நாதம்.

# 1856. துரியங்கண் மூன்றுஞ் சொருகிட னாகி

1856. துரியங்கண் மூன்றுஞ் சொருகிட னாகி
அரிய வுரைத்தார மங்கே யடக்கி
மருவிய சாம்பவி கேசரி யுண்மை
பெருகிய ஞானம் பிறழ்முத் திரையே.

உயிர் உடலுடன்கூடித் தன்னை மறக்கும் நிலை பேருறக்கம் என்ப. இதனை உடற்பேருறக்கம் எனவும், இதுபோல் அருளுடன் கூடியநிலை அருட்பேருறக்கம் எனவும், சிவத்துடன் கூடியநிலை சிவப்பேருறக்கம் எனவும் கூறுப. இம்மூன்றும் முறையே சீவதுரியம், பர துரியம், சிவதுரியம் எனக் கூறுதலுமாம். இம்மூன்றும் திருவடியுணர்வால் அடங்குமிடனாகி, அரியவுரையாகிய நன்மொழி புகலுதற்குரிய கருவியாம் தாரம் என்னும் நாக்கினையும் உடனடக்குதல் வேண்டும். இது பொருந்திய சாம்பவி கேசரி முத்திரையின் உண்மைப் பெருக்கமாகும். சிவஞானம் விளங்குவதாகிய முத்திரையும் அதுவே யாகும்.

துரியங்கள் மூன்று - சிவதுரியம், சீவதுரியம், பரதுரியம். சொருகிடம் - அடங்குமிடம். தாரம் - நாக்கு. பிறழ் - விளங்குகின்ற.

# 1857. சாம்பவி நந்தி தன்னருட் பார்வையாம்

1857. சாம்பவி நந்தி தன்னருட் பார்வையாம்
ஆம்பவ மில்லா அருட்பாணி முத்திரை
ஓம்பயில் ஓங்கிய வுண்மைய கேசரி
நாம்பயில் நாதன்மெய்ஞ் ஞானமுத் திரையே.

சாம்பவியோடுகூடிய நந்தியெங் கடவுளரின் திருவருட் பார்வையாகிய ஆருயிரின் பிறப்பினை அறுக்கும் உண்மை அடையாளம் அருட்பாணி முத்திரை. இதனையே சின்முத்திரை என்ப. இவ்வடையாளக் குறிப்பு ஒரு மலம் நீங்க இருமலங்கூட்டி அருமலம் மூன்றும் அகற்றி ஆருயிர் ஆலமர் செல்வனுடன் வேறன்றிப் புணரும் உண்மை இயற்கைப் புணர்ப்பாகும். பெருவிரல் இறையாகும் எனவும், ஆள்காட்டி விரல் ஆளாம் அடிமையாகிய ஆருயிர் எனவும், இருவிரல்களும் இணைந்து ஒற்றுமைப்பட்டு வட்டமாயிருப்பது கட்டற்று ஒட்டியுடன் உற்று மாளா இன்பத்து மீளாதழுந்தலாம் பெருவாழ்வு எனவும் கொள்க. நடுவிரல் வினையாகவும், அணிவிரல் மாயையாகவும், சிறுவிரல் மலமாகவும் கொள்க. அம்மூன்றும் விலகிநிற்றல் மீளா ஆளாகிய உயிரைவிட்டு மீட்டும் அவ் வுயிருடன் சேரும் செயலற்று அயலுற்று நிற்றல். ஓம்மொழி பயிலும் உண்மையை உடைய அடையாளம் கேசரியாகும். பொருள் சேர்புகழ் விளங்குகின்ற சிவபெருமான் திருப்புகழாகிய 'சிவயநம' என்று நாமம் ஓதுதல் ஞானமுத்திரை யாகும்.

ஆம்பவம் - இனி உண்டாகும் பிறப்பு. பாணிமுத்திரை - சின்முத்திரை. நாம்: நாமம் என்பதன் குறுக்கம்.

## 1858. தானத்தி னுள்ளே சதாசிவ னாயிடும்

1858. தானத்தி னுள்ளே சதாசிவ னாயிடும்
ஞானத்தி னுள்ளே நற்சிவ மாதலால்
ஏனைச் சிவமாஞ் சொரூப மறைந்திட்ட
மோனத்து முத்திரை முத்தாந்த முத்தியே.

கண்டத்திடத்து அருளோனாகிய சதாசிவன் வீற்றிருந்தருள்வன். திருவடியுணர்வாகிய சிவஞானத்தினால் அகத்தினுள் உணர்வுக்குணர்வாய் நற்சிவன் தோன்றுவன். வாய்வாளாமையாகிய மோனத்தினுள் சிவமாம் உருவம் மறைந்திடும். இதுவே மோன முத்திரை. முடிந்த முடிபாகிய வீடுபேறும் இதுவே.

தானம் - கண்டம். மோனத்து முத்திரை - மவுனம். முத்தாந்த - முடிந்த.

## 1859. வாக்கு மனமும் இரண்டு மவுனமாம்

1859. வாக்கு மனமும் இரண்டு மவுனமாம்
வாக்கு மவுனத்து வந்தாலு மூங்கையாம்
வாக்கு மனமும் மவுனமாஞ் சுத்தரே
ஆக்குமச் சுத்தத்தை யாரறி வார்களே.

செயலறுந் தன்மையாகிய மௌனம் இரு வகைப்படும். ஒன்று வாய்; மற்றொன்று மனம். இவ் விரண்டும் ஒருங்கு செயலற்றாலே பயன் உண்டு. வாய்மட்டும் பேசாதிருந்தால் ஊமையே. இரண்டும்
ஒன்றுபட்டால் அருளில் அழுந்திய தூய உயிராகும். திருவருள் உடன் நின்று ஆக்கும் அத் தூய்மையின் உண்மையினை அறிவார் யார்? ஒருவரும் இலரென்பதாம்.

மனமும் மவுனம் - ஐம்புலன் ஒடுக்கம்.

## 1860. யோகத்தின் முத்திரை யோரட்ட சித்தியாம்

1860. யோகத்தின் முத்திரை யோரட்ட சித்தியாம்
ஏகத்த ஞானத்து முத்திரை எண்ணுங்கால்
ஆகத் தகுவேத கேசரி சாம்பவி
யோகத்துக் கேசரி யோகமுத் திரையே.

எண்பெரும் இருத்திகளாகிய சித்திகள் யோகமுத்திரை என்ப. ஒப்பில்லாத உண்மை உணர்வுடையாளத்தை ஆராயுமிடத்துத் திருநான்மறையின்கண் வகுக்கப்பெற்ற முறையான் ஒழுகிக் கடவுளருளால் கைவரும் கேசரி சாம்பவி யோகத்துக் கேசரி முதலிய முத்திரைகளடங்கிய யோகமுத்திரையாகும்.

ஏகத்த - ஒப்பற்ற. ஆகத் தகுவேதம் - வேதம் கூறிய முத்தி அடைதற்குரிய.

## 1861. யோகியெண் சித்தி அருளொலி வாதனை

1861. யோகியெண் சித்தி அருளொலி வாதனை
போகிதன் புத்தி புருடார்த்த நன்னெறி
யாகுநன் சத்தியும் ஆதார சோதனை
ஏகமுங் கண்டொன்றில் எய்திநின் றானே.

அகத் தவமாகிய யோகத்தால்பெறும் எண்சித்தி யுள்ளவன். திருவருள் உயிர்ப்பாகிய அருள் மூச்சுடைய வாதனாவன். போக நிலையிலுள்ளார் புத்திக்குமேல் உணரும் நன்னெறியின்கண் உளனாகுவர். இவையே உண்மையாகும். இதுவே மூலமுதல் ஆறு நிலைக்களங்களிலும் நின்றருள்பவன் சிவன் என்று துணியும் செம்மை கண்டு உடனாகக்கூடி எதிர் நிற்கும் பண்பாகும். எதிர் நிற்றல்: ஏற்றுக் கொள்ளுதல். வாதனை: செம்பைப் பொன்னாக்கும் செய்கை, இரசவாதனை.

ஏகமும் - முழுதும். ஒன்றில் - சிவத்தில்.

## 1862. துவாதச மார்க்கமென் சோடச மார்க்கமாம்

1862. துவாதச மார்க்கமென் சோடச மார்க்கமாம்
அவாவறு மீரை வகையங்க மாறுந்
தவாவறு வேதாந்த சித்தாந்தத் தன்மை
நவாவக மோடுன்ன னற்சுத்த சைவமே.

பன்னிருவகையான யோகவழி வன்மை வழியாகும். மென்மை வழி சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்னும் நன்னெறி நான்மையாகும். அந் நன்னெறி நான்மையும் ஒவ்வொன்றும் நன்னான்காக விரியும். அங்ஙனம் வருவதால் பதினாறு வழியாகும். வேந்துறுப்புப் பத்தாகும். செருக்கு, சினம், சிறுமை, இவறல், மாண்பிறந்த மானம், மாணாவுவகை என்னும் குற்றம் ஆறும் பற்றற நீங்கிய நெஞ்சுடன் மேலோதிய வழிகளில் நின்று சிவனை இடையறாது நினைக்கும் பேறுபெற்றவர் நன்மைமிக்க இயற்கைச் சைவத்தினை (1395) மேற்கொண்டவராவர். நவா: அந் அவா என்பது முதற் குறைந்து நவா என்றாயிற்று. பற்றற்ற என்பது பொருள். வேந்துறுப்புப் பத்து வருமாறு: 1. திருப்பெயர், 2. நாடு, 3. ஊர், 4. ஆறு, 5. மலை, 6. புரவி, 7. படை, 8. முரசு, 9. தார், 10. கொடி என்பன.

துவாதச மார்க்கம் - யோக மார்க்கம். சோடச மார்க்கம் - சரியையிற் சரியையாதி 16 மார்க்கம். ஈரை வகை அங்கம் - பத்து அங்கம். ஆறு - காமாதி ஆறு. நவா - அவா அற்ற.

## 1863. மோனத்து முத்திரை முத்தர்க்கு முத்திரை

1863. மோனத்து முத்திரை முத்தர்க்கு முத்திரை
ஞானத்து முத்திரை நாதர்க்கு முத்திரை
தேனிக்கு முத்திரை சித்தாந்த முத்திரை
கானிக்கு முத்திரை கண்ட சமயமே.

மேலோதிய மோன முத்திரை நல்லுயிராகிய முத்தர்க்கு உரியது. நாதராகிய சிவகுருவினர்க்கு உரியது ஞான முத்திரை. செம்பொருட்டுணிவாம் சித்தாந்தச் செந்நெறியாளர் முத்திரை ஆன்சுரை முத்திரையாகும். ஆன்சுரை முத்திரை - தேனு முத்திரை. உயிர்ப்படங்கு முத்திரை கண்ட நெறிகள் இவை என்ப.

முத்தர்க்கு - சீவன் முத்தர்க்கு. நாதர்க்கு - குருவுக்கு. தேனிக்கு முத்திரை - தேனு முத்திரை அல்லது பசுமடி முத்திரை. கானிக்கும் - வாயு அடங்கும்.

## 1864. தூநெறி கண்ட சுவடு நடுவெழும்

1864. தூநெறி கண்ட சுவடு நடுவெழும்
பூநெறி கண்டது பொன்னக மாய்நிற்கும்
மேனெறி கண்டது வெண்மதி மேதினி
நீனெறி கண்டுள நின்மல னாகுமே.

தூய நெறியாகக் காணப்பெறும் உச்சித்துளை வழி, மேல் திகழும் ஆயிரம் இதழ்த் தாமரை அருள் வழியாகும். அருளால் அந்நெறி அழுந்திக் காண்பவரின் உள்ளமும் உடலும் பொன்வண்ணமாய்த் திகழும். மேல்நெறியாகக் காணப்படுவது திங்கள் மண்டிலமாகும். மேற்செல்லும் உயிர்ப்பு வழி கண்டவருள்ளம் மலமகன்று நலமுற்று நிலைநின்ற தூய்மையாகும்.

சுவடு-பிரம ரந்திரம். பூநெறி-சகசிர அறை; உச்சித் தாமரை. மதி மேதினி - சந்திர மண்டலம். நீனெறி - பிராணவாயு மேற்செல்லும் நெறி.

## 1865. வளர்பிறை யிற்றேவர் தம்பாலின் மன்னி

1865. வளர்பிறை யிற்றேவர் தம்பாலின் மன்னி
உளரொளி பானுவின் உள்ளே யொடுங்கித்
தளர்விற் பிதிர்பதந் தங்கிச் சசியுள்
உளதுறும் யோகி யுடல்விட்டாற் றானே.

யோகி வளர்பிறையில் உடலைவிட்டு நீங்கினால் திங்கள் மண்டிலத்தே சென்று தங்குவன். செல்லும் வழியில் துறக்கவுலகத்தும், ஞாயிற்றுலகத்தும், பிதிர் உலகத்தும் தங்கித்தங்கிச் செல்வன்.

ஊர் ஒளி-சீவ ஒளி. பிதிர்பதம்-உடலைவிட்டு உயிர் பிதிர்ந்து நிற்கும் பதம்.

## 1866. தானிவை யொக்குஞ் சமாதிகை கூடாது

1866. தானிவை யொக்குஞ் சமாதிகை கூடாது
போன வியோகி புகலிடம் போந்துபின்
ஆனவை தீர நிரந்தர மாயோகம்
ஆனவை சேர்வார் அருளின்சார் வாகியே.

மேலோதியவாறு சமாதி கைகூடாது உடல்விட்டுப் போன யோகி நிலையான சிவனடிப் புகலிடம் புகாது மீண்டும் பிறக்க நேரின், நற்சார்பில் வந்து பிறந்து வினைநீங்கி அருளின் சார்வாகி நிலையான புகலிடம் மாயோகி ஆவன்.

புகலிடம் போந்து-கன்மத்துக்கு ஈடாகப் பதவி அடைந்து. பின்னால் நவைதீர - உலகிற் பிறந்தபின் கன்மம் நீங்க. நிரந்தரம் - இடைவிடாது. அருளின் சார்வாகி - அருள் கூட்டுவிக்க நேர்ந்து.

## 1867. தானிவ் வகையே புவியோர் நெறிதங்கி

1867. தானிவ் வகையே புவியோர் நெறிதங்கி
ஆன சிவயோகத் தாமாறா மவ்விந்து
தானதி லந்தச் சிவயோகி யாகுமுன்
ஊனத்தோர் சித்திவந் தோர்காய மாகுமே.

அங்ஙனம் புவியிற் பிறந்த யோகி ஏனை உலகோர்போன்று உண்டுடுத்து உழைத்து உறங்கி வாழ்ந்து சிவயோகி செல்லும் தூமாயையின்கண் முன்போற் சிவயோகி ஆவதன்முன் இவ்வுடலின்கண் சித்தி கைவரப்பெற்றுத் திகழ்வன். அதற்கு நிலைக்களமாகிய இவ்வுடலே தூயவுடலாகும்.

புவியோர் நெறி - கன்ம மார்க்கம். விந்துதானதில் - சுத்த மாயையில். ஊனத்தோர் சித்தி வந்து - அந்த உடலிலேயே ஒப்பற்ற சித்திபெற்று. ஓர் காயம் - ஒப்பற்ற உடலாக மாறும்.

## 1868. சிவயோகி ஞானி சிதைந்துடல் விட்டால்

1868. சிவயோகி ஞானி சிதைந்துடல் விட்டால்
தவலோகஞ் சேர்ந்துபின் றான்வந்து கூடிச்
சிவயோக ஞானத்தாற் சேர்ந்தவர் நிற்பர்
புவலோகம் போற்றுநர் புண்ணியத் தோரே.

சிவயோகியாகிய ஞானியர் உடல் சிதைந்து நீங்கினால், சிவவுலகம் சென்று பின் நிலவுலகம் வந்து பிறந்து நிறைந்த சிவயோகஞானத்தால் திருவடி சேர்ந்து நிலையின்பம் பெற்று நீடுவாழ்வர். புவஉலகம் முதலிய அனைத்துலகும் இச் சிவயோக ஞானியரைப் போற்றும். அதனால் போற்றுநர்க்குப் புண்ணியப்பேறும் உண்டாகும்.

தவலோகம் - ஒளி உலகம்.

## 1869. ஊனமின் ஞானிநல் யோகி யுடல்விட்டால்

1869. ஊனமின் ஞானிநல் யோகி யுடல்விட்டால்
தானற மோனச் சமாதியுள் தங்கியே
தானவ னாகும் பரகாயஞ் சாராதே
ஊனமின் முத்தராய் மீளார் உணர்வுற்றே.

குற்றமற்ற திருவடியுணர்வு பெற்ற ஞானியாதற் பொருட்டுச் சிவயோகியராகிச் செறிவுநெறி நின்றவர் உடல்விட்டால் தான் என்னும் உயிர்த் தன்மை நீங்க உரையற்ற, உலகவுணர்வற்ற, உணர்த்தும் உணர்வுடன் நிறைவுற்ற (மோன சமாதி) அருளில் தங்கித் தானவனாகுவர். வேறோர் உடற்கண் புகுதார். பழுதற்ற நல்லுயிராவர். இயற்கையும் முற்றுமாம் இன்பவுணர்வு எய்தி என்றும் மீளாதின்புறுவர். முத்தர் - நல்லுயிர்; ஞானியர்.

பரகாயம் - வேறு சரீரம். உணர்வுற்று - தத்துவ ஞானம் அடைந்து.

# 1870. செத்தார் பெறும்பய னாவது ஏதெனில்

1870. செத்தார் பெறும்பய னாவது ஏதெனில்
செத்துநீர் சேர்வது சித்தினைக் கூடிடல்
செத்தா ரிருந்தார் செகத்தில் திரிமலஞ்
செத்தார் சிவமாகி யேசித்தர் தாமே.

உலகியலை மறந்தவர் செத்தார் எனப்படுவர். அவர் பெரும்பயன் யாதென்று கேட்டால், ஆணவமலம் கெட்டு பேணுபணி தொட்டு அருள் தன்மை வாய்ந்து சிவனடியைச் சேர்வது. அச் சிவனடி கூடியபின்னும் அன்னார் நிலவுலகத்திருத்தலும் கூடும். அங்ஙனமிருந்தார் மும்மலமற்ற செம்மலாயிருப்பர். அவர்கள் செம்பொருளாகிய சிவமாகவே விளங்குவர். அவர்களே சித்தர் என்று அழைக்கப்படுவோராவர். (சித்தர் நெறியே சித்தாந்த நெறி.)

செத்தார் - உலகத்தை மறந்து சமாதியில் இருப்பவர். செத்து நீர் சேர்வது - அவிச்சை கெட்டுச் சிவத்தைச் சேர்வது. திரிமலம் செத்தார் - மும்மலம் கெட்டவர்.

## 1871. உன்னைக் கருவிட் டுரவோ னரனருள்

1871. உன்னைக் கருவிட் டுரவோ னரனருள்
பன்னப் பரனே யருட்குலம் பாலிப்பன்
என்னப் புதல்வர்க்கும் வேண்டி யிடுஞானி
தன்னிச்சைக் கீச னுருச்செய்யுந் தானே.

கருவிடுதலாகிய பிறப்பின் பற்றற்று உரவோனும் அரனும் ஆகிய சிவபெருமான் திருவடியை நினைக்க மொழிய அப்பரனே அருள்நெறிக்கு வாயிலாகிய சிவக்குலத்தை அளித்தருள்வன். அதனால் அவர் சிவகுருவாய்த் திகழ்வர். மாணாக்கர்களாகிய மெய்கண்டார்கள் பலர் விரும்புவர். அச் சிவஞானியின் விழைவெல்லாம் சிவனார் விழைவேயாம். அதனால் அச் சிவஞானியாகிய சித்தர் நினைத்தவையனைத்தையும் அப்பொழுதே சிவபெருமான் ஆக்கி அளித்தருள்வன்.

கருவிட்டு - பிறப்பு அற்று. உரவோன் - வல்லமையுள்ள. புதல்வர் - கடவுள் நெறிப்படி நிற்பவர். தன்னிச்சை - கருதும் விருப்பம்.

## 1872. எங்குஞ் சிவமா யருளா மிதயத்துத்

1872. எங்குஞ் சிவமா யருளா மிதயத்துத்
தங்குஞ் சிவஞானிக் கெங்குமாந் தற்பரம்
அங்காங் கெனநின்று சகமுண்ட வான்தோய்தல்
இங்கே யிறந்தெங்கு மாய்நிற்கும் ஈசனே.

எங்கனும் சிவமாகக் கண்டு அச் சிவத்தின் திருவருளாம் நெஞ்சகத்துத் தங்குபவன் சிவஞானியாவன். அச் சிவஞானிக்கு எங்கனும் விழுமிய முழுமுதல்வன் நிலையுண்மை உலைவின்றித் தோன்றும். அதற்கு ஒப்பு பூதவெளி எல்லாவற்றையும் தன் உள்ளடக்கித் தானாக நீக்கமின்றி நிற்பதாகும். அச் சிவஞானி நிலவுலகத்தில் அருளால் வாழ்ந்துவரினும் எங்கும் நிறைந்துள்ள ஈசனாவன். ஈசன் - ஆண்டான். எங்கும் சிவமாகக் காண்பது என்பதன் பொருள், உலகனைத்தும் சிவன் உடைமை எனவும், உயிரனைத்தும் அவனடிமை எனவும் அவன் ஆரருளால் ஆருயிர் உணர்வின்கண் உணர்வது.

இங்கு - இவ்வுலகத்தில்.

## 1873. அந்தமின் ஞானிதன் னாகந் தீயினில்

1873. அந்தமின் ஞானிதன் னாகந் தீயினில்
வெந்திடி னாடெலாம் வெம்பும் தீயினில்
நொந்தது நாய்நரி நுகரி னுண்செரு
வந்துநாய் நரிக்குண வாகும் வையமே.

என்றும் அழிவில்லாத திருவடியுணர்வு கைவரப்பெற்ற சிவஞானியின் திருமேனியினைக் கல்லறைப்படுத்தலாகிய சமாதியின்கண் வையாமல் தீயினில் வெந்திடச் செய்தால் நாடெல்லாம வெப்புநோய் மிகும்; அதனினும் கொடிய தொழுநோய்களும் மிகும்; அவற்றால் மக்கள் துன்புறுவர். மேலும் அத் திருமேனி புறத்தே வாளா எறியப்பட்டு நாய் நரியால் உண்ணைப்படின், உலகத்தில் பெரும்போர் வந்து மக்கள் பலர் மாண்டு அவர்தம் உடம்புகள் நாய் நரிகளால் உண்ணப்படும். நீள் + உலகம் - நீணுலகம் என்பதுபோல், உள் + செரு - உண்செரு வென்றாயிற்று.

உண்செரு - உள்நாட்டுக் கலகம்.

## 1874. எண்ணிலா ஞானி யுடலெரி தாவிடில்

1874. எண்ணிலா ஞானி யுடலெரி தாவிடில்
அண்ணல்தங் கோயில் அழலிட்ட தாங்கொக்கும்
மண்ணின் மழைவிழா வையகம் பஞ்சமாம்
எண்ணரு மன்னர் இழப்பார் அரசுமே.

அளவிடுதற்கரிய திருவடியுணர்வு கைவரப்பெற்ற சிவஞானியரின் திருவுடல் எரியிலிடப்படின், அது சிவபெருமான் திருக்கோவிலின்கட் தீயிட்டதையொக்கும். அப் பெரும் பாவத்தால் மண்ணினில் மழை விழாது. அதனால் நீங்கா வற்கடமாம் பெரும்பஞ்சமும் உண்டாகும். அளவிலா மன்னரும் தத்தம் அரசினையுமிழப்பர்.

## 1875. புண்ணிய மாமவர் தம்மைப் புதைப்பது

1875. புண்ணிய மாமவர் தம்மைப் புதைப்பது
நண்ணி யனல்கோக்கில் நாட்டில் அழிவாகும்
மண்ணி லழியில் அலங்கார பங்கமாம்
மண்ணுல கெல்லாம் மயங்குமனல் மண்டியே.

சிவஞானியின் திருமேனியைப் புதைத்துத் திருக்கோவிலமைப்பது பெரும் சிவபுண்ணியமாகும். அப்படிச் செய்யாமல் தீயின்கண் இட்டால் நாட்டுக்குப் பெரும் அழிவு உண்டாகும். மேலும் அத்திருமேனி ஓம்புவாரற்று மண்ணினில் கிடந்து அழியின் நாட்டின் அழகெலாம் பாழ்பட்டு நாடும் வீழ்ச்சியுறும். தணியா வெப்பும், தீயும் பிணியும் பிறவும் மண்ணுலகம் எங்குமாகிப் பெருந்துன்புண்டாகும்.

அனல் கோக்கின் - தீயிட்டால். அலங்கார பங்கம் - நாடு அழியும்.

## 1876. அந்தமில் ஞானி அருளை அடைந்தக்கால்

1876. அந்தமில் ஞானி அருளை அடைந்தக்கால்
அந்த வுடல்தான் குகைசெய் திருத்திடில்
சுந்தர மன்னருந் தொல்புவி யுள்ளோரும்
அந்தமில் இன்ப அருள்பெறு வாரே.

அளவிடப்படாத சிவஞானி திருவடிப்பேறாம் அருளை அடைந்தக்கால் அவர்தம் திருவுடலினை நிலவறையாகிய குகைசெய்து அவற்றின்கண் அமைத்தல்வேண்டும். அங்ஙனம் அமைத்தால் அறிவாற்றல்களால் மிக்க அழகுபெற்ற வேந்தரும் நிலவுலகத்துவலமும் நலமும் குலமும் சேர்மாந்தரும் முடிவிலாப் படியிலா வடிவுடை ஆரருள் இன்பம் பெற்று வாழ்வர். நிலவறை - சமாதி.

குகை - நிலவறை.

## 1877. நவமிகு சாணாலே நல்லாழஞ் செய்து

1877. நவமிகு சாணாலே நல்லாழஞ் செய்து
குவைமிகு குழவைஞ் சாணாகக் கோட்டித்
தவமிகு குகைமுக் கோணமுச் சாணாக்கிப்
பவமறு நற்குகை பத்மா சனமே.

நிலவறைப்படுக்கும் குகையின் அளவு வருமாறு: ஆழம் ஒன்பது சாண்; அகலமாகிய சுற்றளவு ஐந்து சாண்; மூன்று சாண் அகலத்தில் முக்கோணம். இத்தகைய முறைப்படி அமைக்கும் குகை தாமரை இருக்கையாகிய பதுமாசனமாகும்.

குகையின் ஆழம் அகலம் சாண் அளவில் கூறப்பட்டுள்ளது.

## 1878. தன்மனை சாலை குளங்கரை யாற்றிடை

1878. தன்மனை சாலை குளங்கரை யாற்றிடை
நன்மலர்ச் சோலை நகரினற் பூமி
உன்னருங் கானம் உயர்ந்த மலைச்சாரல்
இந்நிலந் தான்குகைக் கெய்தும் இடங்களே.

சிவஞானியின் திருமேனியினை நல்லடக்கமாகிய குகை அமைக்கும் நல்லிடங்கள் வருமாறு: அச் சிவஞானியின் திருவடிப்புணைசேர் மெய்கண்டார்தம் நல்ல வீட்டின் பக்கம், 'அளவில் சனம் செலவொழியாவழி' நடைச்சாலை அண்மை, 'அருளுடையார் உளமனைய தண்ணளிசேர்' குளங்கரை, அருள்வெள்ளப் பெருக்கனைய ஆற்றிடைக் குறை, நன்மலர்ச் சாலை, நகர்நாப்பண் பகர்நலமெலாம் வாய்ந்த மேடு, அருமைபெருமை மிக்க காடு, பெருவளஞ்சேர் தெருளுடையார் விழையும் மழைசார் திருமாமலைச் சாரல் என்பன.

குகை செய்யும் இடம் கூறப்பட்டுள்ளது.

## 1879. நற்குகை நால்வட்டம் பஞ்சாங்க பாதமாய்

1879. நற்குகை நால்வட்டம் பஞ்சாங்க பாதமாய்
நிற்கின்ற பாத நவபாத நேர்விழப்
பொற்பம ரோசமும் மூன்றுக்கு மூன்றணி
நிற்பவர் தாஞ்செயும் நேர்மைய தாமே.

நல்ல குகையின் மேற்பரப்பு நால்வட்டம் சேர்ந்ததாயிருத்தல்வேண்டும். வணங்கும் மெய்யடியார்கள் முழந்தாள் இரண்டு, முன்கைஇரண்டு நெற்றிஒன்று ஆக ஐந்துறுப்பும் நிலத்தே படும்படி வணங்கத்தக்க இடம் வாய்ப்புள்ளதாக இருத்தல்வேண்டும். அதன் பொருட்டு ஒன்பது அடிநீளம் இடம் அமைத்தல்வேண்டும். இக் குறிப்பால் திருக்கோவில்களில் பலிபீடத்தின் முன்னும் அதன் வெளியிலும் எட்டுறுப்பும் நிலத்தேபடும்படி நலத்தே வணங்குதல்வேண்டும். மற்றுத் திருவுருவங்களின்முன் ஐந்துறுப்பும் நிலத்தேபடும்படி வணங்குதல் வேண்டும் என்னும் நெறிமுறை தோன்றுதல் காண்க. அழகிய குகை அமைப்பும் மூன்று நிலையதாய் மூன்று சுற்றுள்ளதாய் அழகியதாய் அமைதல்வேண்டும். வழிபாட்டில் உறைத்துநிற்கும் மெய்யன்பர்கள் செய்யும் நேர்மைகள் மேலோதியனவாகும்.

நால்வட்டம் - நாலாபக்கம். பஞ்சாங்க பாதமாய் - அஞ்சு அங்கங்கள் நிலத்தில் பதியும்படி வணங்குதற்கு இடமுள்ளதாய். நவபாதம்-ஒன்பது காலடி. ஓசம் - குகை, கோயில்.

## 1880. பஞ்சலோ கங்கள் நவமணி பாரித்து

1880. பஞ்சலோ கங்கள் நவமணி பாரித்து
விஞ்சப் படுத்ததன் மேலா சனமிட்டு
முஞ்சி படுத்துவெண் ணீறிட் டதன்மேலே
பொன்செய்நற் சுண்ணம் பொதியலு மாகுமே.

நிலவறைக் குகையின் அடிப்பகுதியில் பசும்பொன், வெண்பொன், செம்பொன், வரைபொன், கரும்பொன் என்னும் ஐவகைப் பொன்னும், ஒன்பான் ஒளிக்கற்களும் அமைத்தல்வேண்டும். இவற்றின் மேல் இருக்கையமைத்தல்வேண்டும். அதன்மேல் தருப்பைப்புல் பரப்புதல் வேண்டும். திருவெண்ணீறு குவித்தல்வேண்டும். அதன்மேல் திருமேனியை வைத்தல்வேண்டும். அதன்மேல் அழகிய சுண்ணச் சாந்து பூசிப் பொதிதல்வேண்டும். பொன்னைந்தும் முறையே தங்கம், வெள்ளி, செம்பு, ஈயம், இரும்பு எனப்படும். வரைபொன் - ஈயம். வரைதல் - எழுதுதல். பொன் என்னும் சொல் பொது என்பது "தூண்டிற் பொன்" என்பதனாலுணர்க.

முஞ்சி - தருப்பைப் புல். சுண்ணம் - சாந்து. பொதியல் - பூசுதல்.

## 1881. நல்குகை நால்வட்டம் படுத்ததன் மேற்சாரக்

1881. நள்குகை நால்வட்டம் படுத்ததன் மேற்சாரக்
கள்ளவிழ் தாமங் களபங்கத் தூரியுந்
தெள்ளிய சாந்து புழுகுபன் னீரிசேர்த்து
ஒள்ளியநற் றூபம் உவந்திடு வீரே.

குகை நடுவில் நால்வட்டம் அமைத்து அதன்மேல் தேன் நிறைந்த மலர்மாலைகள், சந்தனக் கலவை, கத்தூரி முதலிய மணக்கூட்டுக்கள், சாந்து, புனுகு, பன்னீர்சேர்த்துத் தக்கவாறு பொதிதல் வேண்டும். பின் சிறந்த நறும்புகையும் விரும்பி மகிழ்ந்து இடுவீர்களாக.

நள் குகை - குகை நடுவில்.

## 1882. ஓதிடும் வெண்ணீற்றால் உத்தூளங் குப்பாய

1882. ஓதிடும் வெண்ணீற்றால் உத்தூளங் குப்பாய
மீதினி விட்டா சனத்தினின் மேல்வைத்துப்
போதறு சுண்ணமும் நீறும் பொலிவித்து
மீதி லிருத்தி விரித்திடு வீர்நீரே.

செந்நெறிக்கு உளமாக ஓதப்படும் திருவெண்ணீற்று முழுப்பூச்சு குப்பாயம்போல் அமைத்தல்வேண்டும். இருக்கைமேலும் திருவெண்ணீறு குவித்தல்வேண்டும். அதன்மேல் திருமேனியை எழுந்தருளுவித்தல்வேண்டும். மணப்பொடியும் திருவெண்ணீறும் மேலும் பொலிவித்தல்வேண்டும். அதன்மேல் திருமேனியைச் செம்மையுற இருத்துவீராக. செந்நெறிக்கு உயிராவது திருவைந்தெழுத்து; உடல் சிவமணி. சிவமணி - கடவுட் கண்மணி. (உருத்திராக்கம்).

குப்பாயம் - சட்டை. சுண்ணம் - வாசனைப்பொடி.

## 1883. விரித்தபின் னாற்சாரு மேவுதல் செய்து

1883. விரித்தபின் னாற்சாரு மேவுதல் செய்து
பொரித்த கறிபோ னகமிள நீருங்
குருத்தலம் வைத்தோர் குழைமுகம் பார்வை
தரித்தபின் மேல்வட்டஞ் சாத்திடு வீரே.

மேலோதியபடி அமைத்தபின் சாருமனை பொருந்த வைத்து அதன்மேல் பாவாடை விரித்து இலையமைத்துப் பொன்போல் பொரித்த கறிவகைகளும், போனகமாகிய திருவமுதும் இளநீரும் சிவகுருவின் திருமுன்னிலையில் படையுங்கள். அத் திருவுருமுன் குழை முகப்பார்வை தரித்தலாகிய நைவேத்தியம் கண்டபின் மேற்கட்டியமைத்துவேண்டுவ செய்வீராக.

சாரு - சாய்மணை. போனகம் - சோறு. குருத்தலம் - குருவின்முன். மேல்வட்டம் - மேல்நிலை.

## 1884. மீது சொரிந்திடும் வெண்ணீறுஞ் சுண்ணமும்

1884. மீது சொரிந்திடும் வெண்ணீறுஞ் சுண்ணமும்
போது பலகொண்டு தர்ப்பைப்புல் வில்வமும்
பாத வுதகத்தான் மஞ்சனஞ் செய்துபார்
மீதுமூன் றுக்குமூன் றணிநிலஞ் செய்யுமே.

மேலே மழைபோற்பொழியும் திருவெண்ணீறும், மணப் பொடியும், பலவகை நறுமலரும், தருப்பைப் புல்லும் வில்வமும் கைக் கொண்டு சிவபெருமான் திருவடி விளக்கிய திருத்தநீரால் திருமஞ்சனஞ் செய்து, மேற்கூறியவற்றால் வழிபாடு செய்க. வழிபடற்குரிய காலம் மூன்று, கருவி மூன்று, பணி மூன்று, கருத்து மூன்று ஆதலின் மூன்றுக்கும் மூன்று அழகிய இடம் அமைப்பீராக. காலம்: காலை, நண்பகல், மாலை. கருவி மூன்று: உள்ளம், உரை, உடல் பணிமூன்று: அன்பு, அறிவு, ஆற்றல் கருத்து மூன்று: அன்பு, இன்பு, அடைவு. அன்பு, கூடும் அன்பினில் கும்பிடுவோர். இன்பு: பேறுவேண்டும் வீறினர். அடைவு: உலகியல்வேண்டும் நிலையினர்.

## 1885. ஆதன மீதில் அரசு சிவலிங்கம்

1885. ஆதன மீதில் அரசு சிவலிங்கம்
போது மிரண்டினில் ஒன்றைத்தா பித்து
மேதகு சந்நிதி மேவுத் தரம்பூர்வங்
காதலிற் சோடசங் காணுப சாரமே.

கல்லறைப்படுத்த குகையின்மீது அரசு, சிவலிங்கம் ஆகிய இவ் விரண்டினுள் தகுதியானதொன்றை நிலைநாட்டிச் சிறப்புப் பொருந்திய திருமுன் வடக்குநோக்கியேனும் கிழக்குநோக்கியேனும் அமைத்துப் பதினாறு வகைச் சிறப்புடன் பூசனை செய்வாயாக சிறப்புப் பதினாறாவன: 1. திருமஞ்சனம், 2. நறுமலர், 3. மணக்கூட்டு, 4. நறும்புகை, 5. உறுஞ்சுடர், 6. குளிர்நீர், 7. திருவமுது, 8. தூசு, 9. அடைக்காய், 10, கண்ணாடி, 11. குடை, 12. சுவரி, 13. ஆலவட்டம், 14. விசிறி, 15. ஆடல், 16. வாத்தியம் என்பன. வாழ்த்தியம் என்னும் சொல் வாத்தியம் என்றாயிற்று.

ஆதனம் - சமாதிக்குகையின் மேலுள்ள வேதிகை.

## 1886. உதயத்தில் விந்துவில் ஓங்குகுண் டலியும்

1886. உதயத்தில் விந்துவில் ஓங்குகுண் டலியும்
உதயக் குடிலில் வயிந்தவம் ஒன்பான்
விதியிற் பிரமாதி கள்மிகு சத்தி
கதியிற் கரணங் கலைவை கரியே.

விந்து என்று சொல்லப்படும் தூமாயை தோற்றத்தில் சிறந்த குண்டலியும், பெருவெளியில் மாயாகாரியமான வைந்தவம் ஒன்பதும், அவற்றின் முறையால் அயன் முதலிய ஒன்பதின்மரும், திருவருள் முறையாகக் கரணங்கள் கலைகள் வைகரி முதலிய ஓசைகள் ஆகிய எல்லா ஆக்கப்பாடுகளும் தோன்றும்.

குடிலில் - பரமாகாயத்தில். வயிந்தவம் ஒன்பான் - விந்து மாயாகாரியம் ஒன்பது. கதில் - முறையாக.

# 1887. செய்திடும் விந்துபே தத்திறன் ஐயைந்துஞ்

1887. செய்திடும் விந்துபே தத்திறன் ஐயைந்துஞ்
செய்திடு நாதபே தத்திற னாலாறுஞ்
செய்திடு மற்றவை யீரிரண் டிற்றிறஞ்
செய்திடு மாறாறு சேர்தத் துவங்களே.

தூமாயையாகிய விந்துவினின்று நல்லுயிர்களை யியக்கிச் சிவன் திருவருளால் கொள்ளும் திருவுருவ வகை இருபத்தைந்து. அவை வருமாறு: 1. சிவக்கொழுந்து, 2. அம்மையப்ப பிள்ளை, 3. ஒற்றைத்தாளர், 4. எச்சத் தலைவர், 5. விடையூர்தி, 6. நந்திவரத்தர், 7. கூத்தப்பெருமானார், 8. கொடுஞ்சினத்தர், 9. பெண்ணொரு கூற்றண்ணலார், 10. ஆலமர் செல்வர், 11. திருநீலகண்டர், 12. சலந்தரனொடுக்கி, 13. ஆழியருள்வோன், 14. அந்தகாசுரன் ஒடுக்கி, 15. திரிபுரரொடுக்கி, 16. கங்கை தாங்கி, 17. உற்றுழியுதவி, 18. சிவச்சுடர்க்கொழுந்து, 19. மீனொடுக்கி, 20. ஆமையொடுக்கி, 21. பன்றியொடுக்கி, 22. ஆளரியொடுக்கி, 23. முதுகெலும்புதூக்கி, 24. காலவைரவர், 25. பலிப்பகவன் என்பன. நாதத்தின் வகையாகிய விந்து, பரவிந்து, நாதம், பரநாதம் என்னும் நான்கும் தோன்றின. நாத வகை உட்கருவிகள் இருபத்துநான்கும் தோன்றும். இவற்றின் விரிவாகிய முப்பத்தாறு மெய்களும் தோன்றும். மெய் - தத்துவம்.

மற்று இவை ஈரிரண்டு - விந்து, பரவிந்து, நாதம், பரநாதம். விந்துபேதம் - 25. நாதபேதம் - 24. இவைகள் விந்து, நாத தத்துவங்களின் உண்ணிலைக் கருவிகள்.

## 1888. வந்திடு பேத மெலாம்பர விந்துமேல்

1888. வந்திடு பேத மெலாம்பர விந்துமேல்
தந்திடு மாமாயை வாகேசி தற்பரை
உந்து குடிலையோ டேமுறு குண்டலி
விந்துவில் இந்நான்கு மேவா விளங்குமே.

பரவிந்துவில் தோன்றும் மாமாயை மேலோதிய இருபத்தைந்து சிவவடிவங்களையும் தந்திடும். மேலும் வாகேசி தற்பரை செலுத்துங்குடிலை, இன்புறுத்துங் குண்டலி என்னும் விந்துவில் பொருந்தித் தோன்றும்.

ஏமுறு - இன்பம் பொருந்திய. மேவா - மேவி.

## 1889. விளங்கு நிவிர்த்தாதி மேவக ராதி

1889. விளங்கு நிவிர்த்தாதி மேவக ராதி
வளங்கொள் உகார மகாரத் துளவிந்து
களங்கமில் நாதாந்தங் கண்ணினுள் நண்ணி
உளங்கொள் மனாதியுள் அந்தமு மாமே.

மேலும் நீக்கல், நிலைப்பித்தல், நுகர்வித்தல், அமைதியாக்கல், அப்பாலாக்கல், ஆகிய ஐங்கலைகளும் தூமாயையின்கண்ணின்று தோன்றும். இத் தூமாயையின் நின்றே அகர முதலும் உளங்கொள் உகரமும், மகரமும், விந்துவும், நாதமும் ஆகிய ஐந்து எழுத்துக்களும் தோன்றும். இவை முறையே எழுச்சி, இறுப்பு, மனம், எண்ணம், ஆள், என்னும் ஐந்து கருவிகளையும் செலுத்துங் கடவுளர் ஐவர்க்கும் கைக் கருவியாகநிற்கும். இக் கடவுளர் ஐவரும் முறையே அயன், அரி, அரன், ஆண்டான், அருளோன் எனப்படுவர்.

நிவிர்த்தாதி - நிவிர்த்திகலை முதலியன. கண்ணினுள் - கருத்தினுள். மனாதி - அந்தக்கரணங்கள்.

## 1890. அந்தமும் ஆதியு மாகிப் பராபரன்

1890. அந்தமும் ஆதியு மாகிப் பராபரன்
வந்த வியாபி யெனலாய வந்நெறி
கந்தம தாகிய காரண காரியந்
தந்தைங் கருமமுந் தான்செய்யும் வீயமே.

காரண காரியமாகிய முதல் விளைவுகளுக்கு எண்ணத்துணையாய்நிற்கும் முழுமுதற்சிவன் பராபரன் எனப்படுவன். அவன் எங்கும் நீக்கமற நிறைந்துநிற்கும் வியாபியாவன். அந்நிலையில் மணஞ்சேர் காரணகாரிய முதல்வராய்த் திருத்தொழில் ஐந்தினையும் இடையறாது புரிவன். இவையே அவன்றன் அளவில் பெருமையாம். வீயம். வியம் - பெருமை. வியம், வீயமானது செய்யுட்டிரிபு.

கந்தமதாகிய - வாசனை பரவிய. வீயம்: வியம் என்பதன் நீட்டம். வியம் - பெருமை.

## 1891. வீயம தாகிய விந்துவின் சத்தியால்

1891. வீயம தாகிய விந்துவின் சத்தியால்
ஆய வகண்டமும் அண்டமும் பாரிப்பக்
காயஐம் பூதமுங் காரிய மாயையில்
ஆயிட விந்து அகம்புற மாகுமே.

பெருமை உடைத்தாகிய விந்துவின் ஆற்றலால் அகண்டமும் அண்டமும் ஆகிய அனைத்து ஆக்கப்பாடுகளும் உண்டாவன. ஆகாய முதலிய ஐம்பூதமுள்ளிட்ட முப்பத்தொரு மெய்களும் தூமாயையாகிய விந்துவின் காரியம் போன்ற படங்குழலானாற்கோலும் வளர்ச்சியன்று. பால் தயிரானாற் போன்ற திரிபு. இதனைத் தூவாமாயை என்பர். இவை தூமாயையின் கீழ்ப் பகுதியாகும். இவ் விந்து முப்பத்தாறு மெய்களுக்கும் அகம் புறம் என்ப. விந்து எனினும் காரணமாயை எனினும் ஒன்றே.

காய ஐம்பூதம் - ஆகாய முதலாம் ஐம்பூதம். காரிய மாயை - விந்துவின் விகாரமான அசுத்த மாயை.

## 1892. புறமகம் எங்கும் புகுந்தொளிர் விந்து

1892. புறமகம் எங்கும் புகுந்தொளிர் விந்து
நிறமது வெண்மை நிகழ்நாதஞ் செம்மை
உறமகிழ் சத்தி சிவபாத மாயுட்
டுறனொடு வீடளிக் குஞ்செயற் கொண்டே.

மேலோதியவாறு விந்து புறமகம் எங்கும் விரவி ஒளிர்ந்து கொண்டிருக்கிறது. விந்துவின் நிறம் வெண்மை. நாதத்தின் நிறம் செம்மை. அறிவாற்றல்களால் ஆருயிர்களை மகிழ்விக்க மகிழும் சத்தி சிவம் இரண்டற்கும் முறையே விந்து நாதம் பதிந்த நிலைக்களமாகும். பதிவு - நிலைப்பு. பதிவு பாதமென்றாயிற்று. உயிர்க்குயிராயுணர்விற்குணர்வாய் உண்ணின்று பேறருளும் அருளிப்பாடுகொண்டே இவையனைத்தும் நிகழ்கின்றன.

## 1893. கொண்டஇவ் விந்து பரமம்போற் கோதற

1893. கொண்டஇவ் விந்து பரமம்போற் கோதற
நின்ற படங்கட மாய் நிலை நிற்றலிற்
கண்டக லாதியின் காரண காரியத்து
அண்டம் அனைத்துமாய் மாமாயை யாகுமே.

இவ் விந்து முழுமுதற்சிவன் முதலுமீறுமின்றித் தொன்மையாய் இருப்பதுபோல் விந்துவும் தொன்மையேயாம். ஆவிகளின் ஆணவக்குற்றமற நிற்பது இவ் விந்து, இதன்கண்ணின்றும் படமாகிய சீலையும், கடமாகிய ஏனமும் முதலியன தோன்றும். (அங்ஙனம் தோன்றுவதும் திருவருளாற்றலான் என்க.) இயக்கிக் காணச்செய்யும் ஐவகைத் திருவருளாற்றலாம் கலைகளால் காரணகாரியத் தொடர்பாய் மாமாயையினின்றும் தோன்றும்.

பிரமம்போல் அல்லது பரமம்போல் - சிவத்தைப்போல. படம் கடம் - வேட்டி, மட்குடம்.

## 1894. அதுவித்தி லேநின்றங் கண்ணிக்கு நந்தி

1894. அதுவித்தி லேநின்றங் கண்ணிக்கு நந்தி
இதுவித்தி லேயுள வாற்றை யுணரார்
மதுவித்தி லேமல ரன்னம தாகிப்
பொதுவித்தி லேநின்ற புண்ணியன் தானே.

மேலோதிய காரணமாகிய விந்துவில் நாதமாகிய சிவன் விரவிப் பிரிப்பின்றிக் கலந்துநிற்கின்றனன். இந்த முறையாக மாயை தொழிற்படும் இயற்கை உண்மையினை உணரார். தேனுக்குக் காரணமாயுள்ளது மலர்; அஃது ஈண்டு மலர்வித்தெனப்பட்டது. அஃது ஈண்டு உச்சித் துளைமேற்கொள்ளப்படும் ஆயிர இதழ்த் தாமரையினைக் குறிக்கும். அத் தாமரைமீது மகிழ்ந்தமரும் அன்னத்தைப் போன்று போகமீன்ற புண்ணியனாகிய சிவபெருமான் வீற்றிருந்தருள்கின்றனன். அதுபோன்று பொன்னம்பலத்தின் கண்ணும் நின்றருள்கின்றனன்.

அதுவித்தில் - அந்த விந்துவாகிய வித்தில். அண்ணிக்கும் - கலந்திருக்கும். மதுவித்திலே மலர் - மதுவுக்குக் காரணமாகிய மலர். பொது வித்து - புருவ மத்தி அல்லது சிற்சபை.

## 1895. வித்தினி லன்றி முளைவில்லை அம்முளை

1895. வித்தினி லன்றி முளைவில்லை அம்முளை
வித்தினி லன்றி வெளிப்படு மாறில்லை
வித்தும் முளையும் உடனன்றி வேறல்ல
அத்தன்மை யாகும் அரனெறி காணுமே.

வித்தும் முளையும் இருபொருளாக உடன்தோன்றுவன அல்ல. வித்தை நிலைக்களமாகக்கொண்டு முளை உள்ளடங்கி இருக்கும்.
எனினும் வித்தும் முளையும் குவளையும் பாலும்போன்று வெவ்வேறாவன. அடங்கியிருக்கும் அம்முளை அவ்வித்தின் வாயிலாலன்றி வேறு வாயிலாக வெளிப்படுமாறில்லை. அவ்வித்தும் முளையும் இரு கைபோல வெவ்வேறாகத் தோன்றும் இருபொருளும் அல்ல. கையும் விரலும் போன்று ஒட்டி உடனாகத் தோன்றும் இருபொருளுமன்று. மலர் மணம்போல அடங்கித் தோன்றும் இருபொருளாம். அதுபோல் விந்துவாகிய தூமாயை திருவருளாற்றலாம் நிலைக்களத்து அடங்கி அவ்வாற்றலால் தொழிற்படும் இதுபோன்று சிவனார் திருவருள் தாரகமாம் நிலைக்களத்து மாயை தொழிற்படும். அதனால் மாயையும் திருவருளும் ஒன்றன்று வெவ்வேறாம். இதுவே அரனாரருளிய மெய்கண்ட செந்நெறி அல்லது சித்தாந்த சைவம். 'நம்மூலராற்போற்ற நால்வரால் நாட்டநிலை, செம்பொருள் சித்தாந்த சைவம் தேறு' என்பதனை நினைவுகூர்க. குவளை - பாற்கலம்.

## 1896. அருந்திய வன்ன மவைமூன்று கூறாம்

1896. அருந்திய வன்ன மவைமூன்று கூறாம்
பொருந்து முடன்மனம் போமல மென்னத்
திருந்து முடன்மன மாங்கூறு சேர்ந்திட்டு
இருந்தன முன்னாள் இரதம தாகுமே.

ஆருயிர்கள் அருந்திய சோறு மூன்று கூறுபடும். ஒன்று பருவுடலை வளர்க்கும் பகுதியாகும். மற்றொன்று நுண்ணுடலிற் காணப்படும் மனத்தை வளர்க்கும் பகுதியாகும். பிறிதொன்று சக்கையாய் மலமாய்க் கழியும் பகுதியாகும். ஆருயிர்கள் கட்டுள்ளடங்கிப் போக்கு வரவு புரிதற்கு நிலைக்களம் உடல். அதனை ஐவகையாகக் கூறுப. அவை வருமாறு: பருவுடம்பு, வளியுடம்பு, மனவுடம்பு, அறிவுடம்பு, இன்பவுடம்பு என்பன. இவற்றை அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம் எனவும் கூறுப. முன்னாட்களில் உண்ட உணவின் சாரம் பருவுடலாக மனவுடலாக வளர்ந்திருக்கின்றன. உழைப்பாலுடலழகாம் ஊணாலாமுள்ளம், மழையொழுக்கா லாமுயிரின் மாண்பு. என்பதனை நினைவு கூர்க.

முன்னாளிரதம் - முந்தின தினத்தின் உண்ட அன்ன இரசம்.

## 1897. இரத முதலான ஏழ்தாது மூன்றின்

1897. இரத முதலான ஏழ்தாது மூன்றின்
உரிய தினத்தின் ஒருபுற் பனிபோல்
அரிய துளிவிந்து வாகுமேழ் மூன்றின்
மருவிய விந்து வளருங்கா யத்திலே.

இரதமாகிய சாரம் முதலாகச் சொல்லப்படும் ஏழ்முதற்பொருள்களால் ஆக்கப்பட்டதிவ்வுடல். தாது - முதற்பொருள். அவ்வேழும் வருமாறு: சாரம், செந்நீர், ஊன், கொழுப்பு, என்பு, மூளை, வெண்ணீர் என்பன. இவற்றை இரசம், இரத்தம், மாமிசம், மேதசு, அத்தி, மச்சை, சுக்கிலம் எனவும் கூறுப. இவற்றுள் சாரம், செந்நீர், வெண்ணீர் ஆகிய மூன்றும் ஓர்நாள் ஒருபுற்பனிபோல் திரளும். இத் திரட்சியே விந்துவெனப்படும். இவ் விந்து ஏழ்மூன்றாகிய இருபத்தொருநாள் வரை உடம்பில் வளரும்.

புற்பனி - புல் நுனிப்பனி. ஏழ் மூன்றின் - ஏழ் தாதுக்களில். இரதம், இரத்தம், சுக்கிலம் என மூன்றினும்.

## 1898. காயத்தி லேமூன்று நாளிற் கலந்திட்டுக்

1898. காயத்தி லேமூன்று நாளிற் கலந்திட்டுக்
காயத்துட் டன்மன மாகுங் கலாவிந்து
நேயத்தே நின்றோர்க்கு நீங்கா விடாமையின்
மாயத்தே செல்வோர் மனத்தோ டழியுமே.

அதன்பின் மூன்றுநாள்காறும் பரந்து கலந்து முன் உடல்விந்துவாக விருந்த அது மனவிந்துவாக மாறும் அதனைக் கலையாகிய அறிவு விந்துவாக அமைத்துச் சிவன் திருவடியுணர்வாய் நீங்காது நின்றோர்க்கு அவ் விந்துவும் நீங்கா. பற்றறாமையின் உலக மயக்கில் ஈடுபடுவோர்க்கு அவ் விந்து மனத்துடன் அழியும். இதனையே கனவிற் கழிதல் என்ப.

நேயத்தே - சிவத்திலே.

# 1899. அழிகின்ற விந்து அளவை யறியார்

1899. அழிகின்ற விந்து அளவை யறியார்
கழிகின்ற தன்னையுட் காக்கலுந் தேரார்
அழிகின்ற காயத் தழிந்தயர் வுற்றோர்
அழிகின்ற தன்மை யறிந்தொழி யாரே.

இங்ஙனம் அழிகின்ற வெண்ணீராகிய விந்துவின் அளவை அறியார். அவ்வளவு கூறுங்கால் எண்பது துளிச் செந்நீர் ஒரு வெண்ணீரின் ஒரு துளியாகும். இத்தகைய எண்பது வெண்ணீர்த் துளியே ஒரு முழுத்துளி விந்துவாகும். எனவே ஒரு துளி விந்து வீணா அழியின் ஆறாயிரத்துநானூறு துளிச் செந்நீர் அழிந்ததாகும். இதுபற்றியே 'கணக்கன் கோளன் காணி இழந்தான்' என்னும் பழமொழியும் வழங்குவதாயிற்று. கணக்கன்: ஒழுக்கம் வழக்கு இழுக்காது கைக்கொள்வோன். அது கருத்தாவாகுபெயராய் அவனால் ஆக்கப்படும் நூலைக் குறித்தது. அந் நூற்கு மாறுபட நடப்போன் கோளன் எனப்படுவன். காணி என்பது எண்பதில் ஒரு கூறு; எனவே அஃது எண்ணலளவை ஆகுபெயராய் விந்துவை உணர்த்தும். இழந்தான் - விந்துவை இழந்தான் என்பதாம். விந்து கழிவதால் வாழ்நாளும் உடலும் பாழாவதறியார். அப் பாழில் நின்று தன்னைக் காக்கவும் ஆய்ந்துமுயலார். நிலையில்லாது அழிகின்ற உடலத்து வீணாய் அழிந்து தளர்வுற்றோர், தங்கள் நாளும் அழிகின்ற தன்மையை அறிந்து அவற்றினின்றும் நீங்கி நல்வழிப்படரார். இடையிடையே கடைமுதலாக வருவனவாகிய திருப்பாட்டுக்களும் பலவுள.

எடுத்துக்காட்டாக 1889 முதல் 1893 வரை யுள்ளவும், 1896 முதல் 1899 வரை யுள்ளவும் கடைமுதற்றொடை என்க. கடைமுதல்: அந்தாதி.

ஒழியார் - ஆசையை ஒழியார்.

## 1900. பார்க்கின்ற மாதரைப் பாரா தகன்றுபோய்

1900. பார்க்கின்ற மாதரைப் பாரா தகன்றுபோய்
ஓர்க்கின்ற வுள்ளம் உருக அழல்மூட்டிப்
பார்க்கின்ற கண்ணாசை பாழ்பட மூலத்தே
சேர்க்கின்ற யோகி சிவயோகி தானுமே.

(ப. இ .) இணைவிழைச்சாகப் பார்க்கின்ற மாதரைத் தான் பாராது விலகிப்போய்ச் சிவத்தையே இடையறாது நினைக்கின்ற நெஞ்சம் நெகிழ்ந்து மேலும் உருகும்படி மூலத்திடத்துத் தழலினை மூட்டிப் புறத்தே பிறவிக்குவாயிலாக அவாவுடன் பார்க்கின்ற கண்ணாசை முற்றும் நீங்க மூலத்திடத்திருந்து நடுநாடி வழியாக உயிர்ப்பினை மேலேற்றிச் செலுத்திப் பயில்வோர் அகத்தவத்தவராய சிவயோகியராவர். உடனுறை வின்பம்; ஆண்பெண் சேர்க்கை.

மூலத்தே சேர்க்கின்ற - மூலாதாரத்தில் வீணாத் தண்டு ஊடே விந்துவைச் செலுத்துகின்ற.

## 1901. தானே யருளாற் சிவயோகந் தங்காது

1901. தானே யருளாற் சிவயோகந் தங்காது
தானேயக் காமாதி தங்குவோ னும்முட்குந்
தானே யதிகாரந் தங்கிற் சடங்கெடும்
ஊனே யவற்றுள் ளுயிரோம்பா மாயுமே.

(ப. இ .) திருவருள் நாட்டத்தால் மேலோதியவாறு சிவயோகத்தில் உறைத்துநில்லாது ஒருவன் காமம் முதலாகச் சொல்லப்படும் மருட்பகை ஆறினுட் தங்குவோனாயின் அவன் பெரிதும் அஞ்சுவன். அதன்மேல் யோகப்பேற்றை ஆட்டுவிக்கும் அதிகாரத்திற்குப் பயன்படுத்தி அவ்வதிகாரத்திலே தங்கினால் உடல் கெட்டொழியும். உடம்பினுள் உயிர் மேல்நிலைக்குச் செல்லாமல் பிறந்து இறந்து உழலும் கீழ் நிலையில் புகும்படித் திருவருள் ஓம்பாது கைவிடும். உடலும் பயனின்றி அழியும்.

சிவயோகம் தங்காது - சிவயோக மார்க்கத்தில் நில்லாமல். உட்கும் - கெடும். ஓம்பா - காக்கப்படாமல்.

## 1902. மாயாள் வசத்தே சென்றிவர் வேண்டில்

1902. மாயாள் வசத்தே சென்றிவர் வேண்டில்
ஓயா இருபக்கத் துள்வளர் பக்கத்துள்
ஏயாவெண் ணாளின்ப மேற்பனி மூன்றிரண்டு
ஆயா அபரத்து ளாதிநாள் ஆறாமே.

உலகியல் வாழ்க்கையில் மங்கை நல்லாளைக் கூடுதல் வேண்டுமென்னும் வேட்கை உண்டாயின் மாறிமாறி வருகின்ற வளர்பிறை தேய்பிறை என்னும் இரண்டு பக்கத்துள், வளர்பிறைப் பக்கத்துள் முன் எட்டுநாள் இன்பமும் பொருந்தாமல், ஞாயிற்றினுக்குரிய பின் ஆறு நாளுமே இன்பம் பெறுக. இதுபோல் தேய்பிறையில் முன் ஆறுநாளும்

மாயாள் - பெண். இவர் வேண்டில் - கூடவேண்டில். வளர்பக்கம் - வளர்பிறை. அபரம் - தேய்பிறை, இருபக்கத்திலும் சூரியன் நாள் அவ்வாறு ஆகும். அந் நாட்கள் கூடுதற்கு உரிய நாள்கள்.

# 1903. ஆறைந்து பன்னொன்று மன்றிச் சகமார்க்கம்

1903. ஆறைந்து பன்னொன்று மன்றிச் சகமார்க்கம்
வேறன்பு வேண்டுவோர் பூவரிற் பின்னந்தோ
டேறும் இருபத் தொருநா ளிடைத்தோங்கும்
ஆறின் மிகுத்தோங்கும் அக்காலஞ் செய்யவே.

வளர்பிறையில் ஆறுநாட்களும், தேய்பிறையில் ஞாயிற்றுக்குரிய ஒன்பது நாட்களில் முதல்பிறை, எட்டாம் பிறையும், பதின்மூன்றாம் பிறையும், கருவுவாவாகிய அமாவாசையும் என்னும் நான்கு நாளும் நீங்கலாகிய ஐந்து நாட்களும் ஆகிய இருபக்கமும் கூடிப் பதினொருநாட்கள் அகத் தவத்தோராகிய யோகியர் மங்கைநல்லாரை மருவுதற்கு வாய்த்த மாண்புடைய நாட்களாகும். மெய்ப்பத்தராம் குடும்பத்துள்ளார், தங்கள் மனைவியராம் மங்கைநல்லாரை மருவுதற்கு அந் நல்லார்க்குப் பூப்பெய்திய மூன்று நாட்களும் நீங்கலாக இருபத்தேழு நாட்களும் அமிழ்தம் ஓங்கும். இந்நாட்களில் வாய்த்த வோர்நாளில் மருவுதல் பொருந்தும்.

ஆறு ஐந்து பன்னொன்று-வளர்பிறையில் ஆறு நாட்களும், தேய்பிறையில் சூரியனுக்குரிய 9 நாட்களில், 1, 8, 13 அமாவாசை ஒழிந்த ஐந்து நாட்களும் ஆகப் பதினொரு நாட்களும், சகமார்க்கம் - யோக நெறியுடையார்க்கு மார்க்கம். வேறு அன்பு - வேறு மார்க்க முடையார்க்கு. பூவரிற்பின் - மங்கையர்க்குப் பூப்பு வந்தபின். ஓங்கும் - அமுதம் பெருகும். செய்ய - கலவிசெய்ய.

## 1904. செய்யும் அளவிற் றிருநான் முகூர்த்தமே

1904. செய்யும் அளவிற் றிருநான் முகூர்த்தமே
எய்யுங் கலைகாலம் இந்து பருதிகால்
நையு மிடத்தோடி னன்காம நூல்நெறி
செய்க வலமிடந் தீர்ந்து விடுக்கவே.

மங்கைநல்லாரை மருவுதற்குப் பொருந்திய நற்பொழுது இரவுப்பொழுதேயாம். அவ் இரவுப்பொழுதிலும் எட்டு முழுத்தம் வாய்ப்புடையதென்ப. விந்துவைக் கருப்பையில் தங்கவிடும் காலம் ஞாயிறு திங்களைத் தன்னுள் அடக்குவதான வலப்பால் மூக்கில் உயிர்ப்புச் செல்லுங் காலம். நல்ல காமநூலின் முறைப்படி மருவுதல் செய்க. ஒருகால் இடப்பால் மூக்கில் உயிர்ப்புச் செல்லின் அதனை மாற்றி வலப்பால் விடுக்க. இந்து பருதிகாலனையுமிடம்: இந்து பருதி நையும் காலம். காலம், கால் என நின்றது.

அளவிற்று - சரியான காலம். இருநாள் முகூர்த்தம் - இரவுகாலம். எய்யும் கலைகாலம் - கருப்பையில் விந்துவைப் பதியவைக்கும் காலம். இந்து பருதிகால் நையும் - இந்து பருதியின் மூக்கில் சரிக்கும் காலத்தில் அஃதாவது வாயு வலது மூக்கில் சரிக்கும் காலம். செய்க...வே. இடைகலையில் வாயுவை விடாது பிங்கலையில் விடுக்க.

## 1905. விடுங்காண் முனைந்திந் திரியங்க ளைப்போல்

1905. விடுங்காண் முனைந்திந் திரியங்க ளைப்போல்
நடுங்கா திருப்பானும் ஐயைந்து நண்ணப்
படுங்காதன் மாதின்பாற் பற்றற விட்டுக்
கடுங்காற் கரணங் கருத்துறக் கொண்டே.

பேரன்பாகிய காதன் மங்கையினிடத்து மகப்பேறு ஒன்றே கருதிச் சிற்றின்பப் பற்றுக்களை அறவே விட்டு விரைந்தோடும் உயிர்ப்பினை அமைதிப்படுத்திக் கரணங்களைத் திருத்திய கருத்துட்கொண்டு மன எழுச்சியுடன் நடுக்கமின்றிப் பொறிபுலன் பத்தும் ஒத்துப் பொருந்தக் கருப்பையில் விந்து விடும் முறைமையே விழுமிது என்க. காண்: முன்னிலை யசை.

ஐயைந்து - ஐந்தும் ஐந்தும் பத்து - பொறியும் புலனுமாகிய பத்து.

## 1906. கொண்ட குணனே நலனேநற் கோமளம்

1906. கொண்ட குணனே நலனேநற் கோமளம்
பண்டை யுருவே பகர்வாய் பவளமே
மிண்டு தனமே மிடைய விடும்போதிற்
கண்ட கரணமுட் செல்லக்கண் டேவிடே.

சிறப்பெனக்கொண்ட நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னும் பெண்மைக்குணம் நான்கும், இயற்கையன்பு செயற்கை அன்புகளால் ஏற்படும் நன்மையும், மருவும் பருவமாகிய இளமையும் (பேரிளம்பெண்), மணந்த ஞான்றுள்ள கட்டுக்குலையா வடிவமும். மும்மையும் பயக்கும் செம்மை வாயாகிய பவழமும், மலைநேர் பொலியும் முலையும் வாய்ந்து திகழாநின்ற மங்கைநல்லாரை மருவிப்புணர அன்புள்ளத்தை இன்புறச் செலத்தும்போது கலவிமுறைகளை நன்கு கருதிச் செலுத்துவாயாக.

கோமளம் - இளமை.

## 1907. விட்டபின் கர்ப்பவுற் பத்தி விதியிலே

1907. விட்டபின் கர்ப்பவுற் பத்தி விதியிலே
தொட்டுறுங் காலங்கள் தோன்றக் கருதியே
கட்டிய வாணாள்சா நாள்குணங் கீழ்மைசீர்ப்
பட்ட நெறியிதென் றெண்ணியும் பார்க்கவே.

மேலோதியவாறு கூடிக் கருப் பதித்தபின் கருப்பத் தோற்றமுறையானே பின் அம் மகவினுக்கு வரக்கூடிய காலக் கணக்குகளை நன்கு உன்னி, வாழ்நாள் நிலைமையும், சாநாள் நிலைமையும் சிறந்த குணனும், சிறவாக் குணனும், கீழ்மைக் குணனும் முதலிய எல்லாவற்றையும் தாங்கள் கூடிய கூட்டத்தாலும் ஓடிய உயிர்ப்பினாலும் உய்த்துணர்ந்து நோக்குதல் வேண்டும். பேறு - செல்வம். இழவு - வறுமை. இன்பம் - இன்பம். பிணி - துன்பம். மூப்பு - உயர்வு. சாக்காடு - இழிவு.

கீழ்மை - தீநெறி ஒழுக்கம்.

## 1908. பார்த்திட்டு வைத்துப் பரப்பற் றுருப்பெற்று

1908. பார்த்திட்டு வைத்துப் பரப்பற் றுருப்பெற்று
வார்ச்செற்ற கொங்கை மடந்தையை நீக்கியே
சேர்த்துற் றிருதிங்கள் சேரா தகலினும்
மூப்புற்றே பின்னாளி லாமெல்லா முள்ளவே.

மேலோதியபடி உய்த்துணர்ந்து பார்த்தபின் உலகியற்றொழில் பொருந்தாமல் வடிவம்பெற்று, கச்சினை வென்று பெருத்து வளர்ந்த முலையினையுடைய மடந்தையின் வயிற்றினின்றும் நீங்கி, கூழயிருந்து தந்தையின் வயிற்றில் விந்துவாய் விளைந்த இரு திங்களாகிய அறுபதுநாள் நீங்க, முந்நூறுநாள் தாயகட்டில் தங்கி வரினும் உலகினிடை வாழ்நாளில் எய்தும் 'பேறு, இழவு, இன்பம், பிணி, மூப்புச், சாக்காடு' என்னும் ஆறும் பின்னாளில் வருவனவாயினும் அன்றே உய்த்துணரும்படி அமைந்துள்ளன.

வையத்துப் பரப்பு - உலக வியாபாரம். மூப்புற்று - கருமுதிர்ந்து.

# 1909. வித்திடு வோர்க்கன்றி மேலோர் விளைவில்லை

1909. வித்திடு வோர்க்கன்றி மேலோர் விளைவில்லை
வித்திடு வோர்க்கன்றி மிக்கோ ரறிவில்லை
வித்தினில் வித்தை விதற வுணர்வரேல்
மத்தி லிருந்ததோர் மாங்கனி யாமே.

உலகிடைப் புறப்பொருளிலும் வித்திடுவோர்க்கல்லாமல் விளைவு வருவதில்லை. வித்திடுவோர்க்கே சிறப்புடைய அறிவு உண்டு. அதுபோல் கரு இடுவார்க்கும் அனைத்தும் உள்ளன. விந்துமாயையாகிய தூமாயையினின்றும் கருமுதலாம் விந்து உண்டாகும். அவ் விந்துவினின்று வரும் உயிர்வித்தை அசைவின்றி இருந்து உணர்வாரானால் தயிர்கடை மத்துப்போன்று விளங்கித் தோன்றும். அம் மத்தின் உள்ளீடாகச் சிவன் விளங்கித் தோன்றுவன். முப்பழத்துள் நடுப்பழமாகிய மாம்பழம் சிவனாவன். இஃது உவமையாகுபெயர். மற்றைய விரண்டும் வாழை, பலா. விது + அற என்பது விதற என நின்றது.

விது - சலனம். மாங்கனி - சிவம்.

## 1910. கருத்தினில் அக்கர மாயுவு மியாவுங்

1910. கருத்தினில் அக்கர மாயுவு மியாவுங்
கருத்துளன் ஈசன் கருவுயி ரோடுங்
கருத்தது வித்தாய்க் காரண காரியங்
கருத்துற மாறிவை கற்பனை தாமே.

கருப்பதிக்குங் காலத்தில் தந்தை எண்ணும் எண்ணங்களே அக் கருவின்மாட்டுப் பதிந்து பின் விளக்கமுறும். அதனால் அக் கரத்தாலாகிய அறிவும் அறிவால் பெருகும் அகவையும் கருப் பதிக்கும்போது தந்தை எண்ணுவனவற்றையே ஆண்டவன் அமைத்து விடுகின்றனன்.
அதனாலேயே பிள்ளைப்பேறு தவப்பேறென்ப. மேலும் கரு என்பதற்குக் காரணம் என்னும் பொருளும் உண்டு.
தந்தையின் கருத்தே வித்தாய், காரணகாரிய விளைவாய் இவையனைத்தும் கற்பனையளவாகிய நினைப்புப்போல் அமையும் என்க.

கருத்தது வித்தாய் - நாயகனது எண்ணமே குழந்தைக்கு மேல் அனுபவத்துக்குக் காரணமாய். கற்பனை - நாயகனது எண்ணம்.

## 1911. ஒழியாத விந்து வுடன்நிற்க நிற்கும்

1911. ஒழியாத விந்து வுடன்நிற்க நிற்கும்
அழியாப் பிராணன் அதிபலஞ் சத்தி
ஒழியாத புத்தி தபஞ்செப மோனம்
அழியாத சித்தியுண் டாம்விந்து வற்றிலே.

விந்துவானது மூலத்துள் இயற்கையழலால் வற்றப்பட்டு உடலுடன் கலந்து கரைந்துவிடுதல் வேண்டும். அவ்வாறு உடலுடன் ஒன்றாய் விந்து விலகாது வேறிடம் செல்லாது நிற்பின் விரைவில் உயிர் அழியாது. அளவிறந்த வலுவுண்டாம். ஆற்றலும் நீங்காது. நல்லறிவு, தவம், திருவைந்தெழுத் தெண்ணலாகிய சிவம், வாய்வாளாமை, அழியாத எண்பெரும்சித்தி யாவும் அருளால் உண்டாகும். கற்பானுடைய முயற்சியும் நினைவும் தெளிவும் அவனுக்குப் புலவன் என்னும் பொருவில் பட்டம் வழங்குதற்குக் கருவியாகும். எனினும் அக் கருவிகளே பட்டம் வழங்கா. அக் கருவிக்குரிய கற்றோனும் பட்டத்தைச் சூட்டிக்கொள்ளான். வினவித் தேர்ந்து நினைவுற்று நடுநிற்கும் சான்றோரே பட்டத்தினை வழங்குவர். அதுபோல் திருவருளாற்றலே அனைத்தினையும் கைகூடச்செய்யும்.

## 1912. வற்ற அனலைக் கொளுவி மறித்தேற்றித்

1912. வற்ற அனலைக் கொளுவி மறித்தேற்றித்
துற்ற சுழியனல் சொருகிச் சுடருற்று
முற்று மதியத் தமுதை முறைமுறை
செற்றுண் பவரே சிவயோகி யாரே.

மூலத்து அனலைக் கொளுத்தி விந்துவினை வற்றச்செய்து அவ் விந்துவினைக் கீழ்நோக்கவொட்டாது தடுத்து மேல்நோக்கி ஏற்றிப் பொருந்திய புருவநடுவாம் சுழியின்கண் நிறுத்தி ஒளிபெற்றுத் திங்கள் மண்டிலத்து முழுமதி அமிழ்தினை முறைமுறை பிழிந்து நுகர்ந்து அதுவே உணவாய் உடலை வளர்த்து அருளால் ஊழியும் அழியாமல் இருப்பவர் சிவயோகி என்று சிறப்பித்து அழைக்கப்பெறும் அகத்தவத்தோர் ஆவர்.

மறித்து ஏற்றி - விந்துவைக் கீழ்நோக்க விடாமல் தடுத்து மேல் ஏற்றி. துற்றசுழி - ஆஞ்ஞை.

## 1913. யோகியும் ஞானியும் உத்தம சித்தனும்

1913. யோகியும் ஞானியும் உத்தம சித்தனும்
யோகியும் ஞான புரந்தர னாவோனும்
மோக முறினு முரையமிர் துண்போனும்
ஆகிய விந்து அழியாத அண்ணலே.

பண்டைப் பயிற்சிகொண்ட வுளத்தால் வேட்கை யுற்றாலும் விந்துவினை வெளிவிடாது உள்ளடக்கி நுகர்ந்து இன்புறும் நன்மையரும் உளர். அவர்கள் வருமாறு: யோகியும், ஞானியும், தலையாய சித்தனும், தலையாய யோகியும், தலையாய ஞானமுதல்வனும் ஆவர். இவ் வைவர்களும் எஞ்ஞான்றும் விந்துவினை மைந்துடன் காக்கும் தலைமையராவர்.

## 1914. அண்ணல் உடலாகி யவ்வனல் விந்துவும்

1914. அண்ணல் உடலாகி யவ்வனல் விந்துவும்
மண்ணிடை மாய்க்கும் பிராணனாம் விந்துவுங்
கண்ணுங் கனலிடைக் கட்டிக் கலந்தெரித்து
உண்ணில் அமிர்தாகி யோகிக் கறிவாமே.

அகத்தவ யோகியர்க்கு ஏனையார்க்கு உயிர்க்குயிராய்த் திகழும் அண்ணலாகிய சிவபெருமான் உடலாய்த் திகழ்வன். அங்ஙனம் திகழ்வதால் விந்து மாயையாகிய அனற்பிழம்பும் மண்ணிடை வீணாக் கழிப்பின் மாயச்செய்யும் உயிர்விந்துவாகிய அனற்பிழம்பும் கருதப்படும் மூலக்கனலுடன் கூடிக் கலந்து ஒப்பில் பேரொளிப்பிழம்பாய்ச் சுடர் விட்டு அகத்தமிர்தாகி யோகிக்குத் தாவில் அறிவாகும் என்ப.

கண்ணுங்கனல் - மூலாக்கினி.

## 1915. அறியா தழிகின்ற வாதலால் நாளும்

1915. அறியா தழிகின்ற வாதலால் நாளும்
பொறியால் அழிந்து புலம்புகின் றார்கள்
அறிவாய் நனவி லதீதம் புரியச்
செறிவா யிருந்து சேரவே மாயுமே.

மேலோதிய உண்மையினை அருள்வழி நின்று அறியாது நாளும் விந்து அழிந்து பொறிவேட்கைக்கு உட்பட்டுப் பலர் புலம்புகின்றனர். அருளால் அறிவுடையராய் நனவிலே சிவ நினைவன்றி ஏதும் உணரா உயிர்ப்படங்கலாகிய அப்பாலைப் புரிந்தோர்க்குத் தூமாயை விந்துவும் உயிர்விந்துவும் ஒன்றாய்க் கூடிக் கட்டுப்பட்டு நிற்கும். அதீதம் - அப்பால்.

பொறியால் - அடக்காத ஐம்பொறிகளால். செறிவாய் - இரண்டு விந்துக்களும் கலந்து. மாயும் - கட்டுப்படும்.

## 1916. மாதரை மாய வருங்கூற்ற மென்றுன்னக்

1916. மாதரை மாய வருங்கூற்ற மென்றுன்னக்
காதல தாகிய காமங் கழிந்திடுஞ்
சாதலு மில்லை சதகோடி யாண்டினுஞ்
சோதியி னுள்ளே துரிசறுங் காலமே.

பிறப்பற்றுச் சிறப்புற்று வாழநினையாத உருவால் மட்டும் பெண்ணாய்த் தோன்றும் மாதரைத் தங்கட்கும் பிறர்க்கும் வருங்கூற்றம் என்று எண்ணுதல்வேண்டும். அங்ஙனம் எண்ணினால் நேர்மையும்
சீர்மையுமின்றிக் கொண்ட காதலாகிய பெயருடன் தோன்றும் காமம் கழிந்திடும். அதனால் வரம்பின்றி இடையே நேரும் சாதலும் இல்லை. சிவச்சுடர் ஒளியினுள் தங்கி நூறுகோடியாண் டென்றாலும் வாழ்ந்து அக்காலமெல்லாம் குற்றமறும் நற்றிறப்பொழுதாய்ச் சிறக்கும்.

# 1917. காலங் கடந்தவன் காண்விந்து செற்றவன்

1917. காலங் கடந்தவன் காண்விந்து செற்றவன்
காலங் கடந்தழிந் தான்விந்து செற்றவன்
காலங் களின்விந்து செற்றுற்ற காரிகை
காலின்கண் வந்த கலப்பறி யாரே.

உலகியலில் மக்கட்கு வரையப்பட்ட காலங்களைக் கடந்து நெடுநாள் வாழ்பவன் விந்துவினை அடக்கி வென்றவனாவன். கால வரையறைக்கு உட்பட்டு மாண்டு ஒழிந்தவர் விந்துவினால் வெல்லப்பட்டுத் தோற்றவராவர். இளமைக்காலத்தில் விந்துவினால் வெல்லப்பட்டு அழகிய பெண்ணைக் கூடினவர்களுக்கு அக் கூட்டப்பயனாய் உயிரை ஓட்டும் தனஞ்செயனாகிய வீங்கற்காற்றுத் தோன்றி வளரும். அவ் வீங்கற்காற்றுத் தம்முயிரைப் போக்குந் தன்மைத்தென்றும் அஃது இணைவிழைச்சால் விளைவதென்றும் உணரார்.

விந்து செற்றவன் - விந்துவை அடக்கினவன். விந்து செற்றவன் - விந்துவினால் செயிக்கப்பட்டவன் காலங்களில் - இளமையில். விந்து செற்று உற்ற காரிகை - தான் கூடின பெண். காலின்கண் - தனஞ்செயன் என்னும் வாயு மூலமாக.

## 1918. கலக்குநாள் முன்னாள் தன்னிடைக் காதல்

1918. கலக்குநாள் முன்னாள் தன்னிடைக் காதல்
நலத்தக வேண்டில்அந் நாரி யுதரக்
கலத்தின் மலத்தைத்தண் சீதத்தைப் பித்தை
விலக்கு வனசெய்து மேலணை வீரே.

காதலால் கருத்தொத்த இருவரும் மருவி வாழ விரும்பினால் கூடுவதற்குத் தகுதியெனக் கருதும் நாளின்முதல்நாளில் காதற்பெரும்பயனும் நன்றாதற் பொருட்டுக் காதலியின் மலக்குடலிற்றங்கும் மலத்தை அகற்றி வாதபித்தம் ஐ என்னும் மூன்றினையும் இருக்க வேண்டிய முறையில் இருக்கச்செய்து நன்முறையாகக் கூடியின்புறுவீராக, அங்ஙனமின்றேல் 465 - ஆம் திருப்பாட்டின்கண் ஓதிய தீங்கு உண்டாகும். ஐ - கபம்.

காதல் நலத்தக - காதலால் நலம் உண்டாகவேண்டிய. உதர.....செய்து - முன்னாளிலேயே மலம் போகச்செய்து வாத, பித்த சிலேத்துமங்கள் தம்தம் நிலையில் இருக்கச்செய்து.

## 1919. மேலா நிலத்தெழு விந்துவும் நாதமுங்

1919. மேலா நிலத்தெழு விந்துவும் நாதமுங்
கோலால் நடத்திக் குறிவழி யேசென்று
பாலாம் அமிர்துண்டு பற்றறப் பற்றினால்
மாலா னதுமாள மாளுமவ் விந்துவே.

மூலம் முதலாகச் சொல்லப்படும். ஆறு நிலைகளுக்கும் அப்பாலுள்ள தூவெளி மேனிலம் எனப்படும். அங்கு விந்துவும் நாதமும்
தோன்றும். அவற்றை நடுநாடி வழியாக நடத்தி அகத்தவ ஆசான் கூறியருளியபடி சென்று அவ் விந்துப்பாலாகிய அமிழ்தத்தினைப் பருகுவராயின் பற்றறப் பற்றினாராவர். பிறப்பிற்கு ஏதுவாம் மருள் முற்றும் மாயும். அவ் விந்துவும் அடங்கும்.

மேலாநிலம் - நிராதாரம். கோலால் - சுழுமுனையால். குறி - ஆசிரியன் கூறியபடி. மாலானது - போகமானது. மாளும் - கட்டுப்படும்.

## 1920. விந்து விளையும் விளைவின் பயன்முற்றும்

1920. விந்து விளையும் விளைவின் பயன்முற்றும்
அந்த வழிவும் அடக்கத்தில் ஆக்கமும்
நந்திய நாசமும் நாதத்தாற் பேதமும்
தந்துணர் வோர்க்குச் சயமாகும் விந்துவே.

விந்து துளிதுளியாகக் (1899) கூடி விளைகின்ற விளையும், விளைந்து முற்றினால் எய்தும் பயனும், உணர்ந்து அடங்குதல் நன்று. இம்முறையே எஞ்ஞான்றும் கைக்கொளின் நீண்டு வாழ்தல் நேரும். அங்ஙனமின்றி இணைவிழைச்சாகிய ஆண்பெண் கூட்டத்தினை விரும்பினால் அவ்விந்து வீணாய்க் கழிந்து வாழ்நாளை வீழ்நாள் ஆக்கும். இவற்றை யுண்மையாக வுணரின் விந்து அடங்கும். அவ் வடக்கத்தில் பேராக்கம் உண்டாகும். அடங்காதுவிட்டால் பெரும்போக்கு ஏற்படும். நாதத்தால் ஏற்படும் விந்துவின் சிறப்பும் அருளால் உணர்வார்க்கு விந்து அடங்கும் வெற்றியும் உண்டாகும்.

அழிவு - வெளிச்செல்லுதல். நந்திய - மிகுந்த.

## 1921. விந்துவென் வீசத்தை மேவிய மூலத்து

1921. விந்துவென் வீசத்தை மேவிய மூலத்து
நந்திய அங்கியி னாலே நயந்தெரித்
தந்தமில் பானு அதிகண்ட மேலேற்றிச்
சந்திரன் சார்புறத் தண்ணமு தாமே.

(ப. இ .) விந்துவென்று சொல்லப்படுகின்ற உயிர்வாழ் வித்தினைப் பொருந்திய மூலத்திடத்து விளங்கும் மூலஅனலால் செம்மையுறச் செய்து கொப்பூழ் முதல் நெஞ்சம்வரையுள்ள ஞாயிற்றுமண்டிலத்துக்கு வலப்பால் நாடிவழியாக ஏற்றி அதன்மேல் நெஞ்சமுதல் நெற்றிவரையுள்ள திங்கள் மண்டிலத்துக்கு இடப்பால் நாடிவழியாக ஏற்றி அத்திங்கள் மண்டிலச் சார்புறத் தண்மையும் வெண்மையுமிக்க வண்மை அமுதமாகும்.

வீசம் - வித்து. பானுவதி கண்டம் - சூரியன் இருக்கும் இடம் வலதுகண். சந்திரன் சார்பு - சந்திரன் இருக்குமிடம் இடதுகண் (வலது மூக்கு இடது மூக்குமாம்).

# 1922. அமுதச் சசிவிந்து வாம்விந்து மாள

1922. அமுதச் சசிவிந்து வாம்விந்து மாள
அமுதப் புனலோடி அங்கியின் மாள
அமுதச் சிவபோகம் ஆதலாற் சித்தி
அமுதப் பலாவன மாங்குறும் யோகிக்கே.

திங்களின் துளிதுளியாம் அமுதம் என்று சொல்லப்படுகின்ற உடற்கண் விந்து மாளுதலாகிய கட்டுப்பாட்டினை எய்த, அதுவே பெருக்கெடுத்தோடிக் கொப்பூழில் தோன்றுகின்ற சிவ அனலில் கட்டுப்படும். அப்பொழுது ஆர் அறிவில் விளைவது சிவபோகமாகும். அதனால் அவ்விடத்துத் திருவடியின்பப் பலாவனம் எய்தும். இவை அனைத்தும் அருளால் முயலும் சிவயோகியர்க்கு உண்டாம். பலாவனம்: பலாத்தோப்பு.

அமுத..மாள - விந்து கட்டுப்பட அமுத....மாள - அவ்விந்து சிவாக்கினியாற் கட்டுப்பட. அமுத....யோகம் - அழிவற்ற சிவயோகம். பலாவனம் - பலாக்கனி நிறைந்த இடம்.

# 1923. யோகமவ் விந்து ஒழியா வகைபுணர்ந்து

1923. யோகமவ் விந்து ஒழியா வகைபுணர்ந்து
ஆகம் இரண்டுங் கலந்தாலு மாங்குறாப்
போகஞ் சிவபோகம் போகிநற் போகமா
மோகங் கெடமுயங் கார்மூடர் மாதர்க்கே.

சிவபோக நுகர்வினராய யோகியர் உலகியல் வாழ்வின்படி மணந்துகொண்ட அத்தகைய சிவபோக நுகர்வினராகிய பெண்ணுடன் கூடினாலும் உடற்கூட்டமேயன்றி உளக்கூட்டம் சிவனிடத்திருப்பதால் விந்து வெளிப்படுவதினின்று, அவர், அத்துணை மனவடக்கம் அருளால் பெற்றவராவர். அக் காலத்து இருவர்க்கும் எய்துவது அன்பியற் போகமன்று. அருளியற் போகமுமன்று. ஆனால் அருள்கூட்டக் கூடும் ஆண்டான் அடியிணைசார் இன்பியற்போகமாகும். இதுவே அருளால் துய்க்கும் நற்போகமாகும். இச் செந்நெறியொழுக்கம் மேற்கொள்ளாத அறியாமையால் மூடப்பட்ட மூடர்கள் அனைவரும் ஆணவச்சார்பாமருளால் பெருமயக்குற்று மோகங்கெட ஆகம் முயங்காது ஆகங்கெட மோகம் முயங்கி விந்துவிட்டழிவர். கண்டால் கைதொட்டால் சொற்கேட்டால் கருதினால், கலவாமலே விந்து கழியும் கழிகாமுகர் மூடர். இன்பியற் போக இயல்பினர் நம்பியாரூரரும் நங்கை பரவை சங்கிலியாருமாவர்.

விந்து ஒழியா வகை - விந்து வெளிப்படாவண்ணம்.
ஆக....போகம் - ஆண் பெண் கலக்கும் காலத்திலும் விந்து வெளிப்படாமல் போகம் செய்வதுதான் சிவபோகம்.

## 1924. மாத ரிடத்தே செலுத்தினும் அவ்விந்து

1924. மாத ரிடத்தே செலுத்தினும் அவ்விந்து
காதலி னால்விடார் யோகங் கலந்தவர்
மாதர் உயிராசை கைக்கொண்டே வாடுவர்
காதலர் போன்றங்கன் காதலாஞ் சாற்றிலே.

அருளால் சிவயோகம் கைவரப்பெற்றவர் மகப்பேற்றின் பொருட்டு விந்துவினை மாதர்பால்விட நேரினும் ஏனையாரிபோன்று காதலால் விடார்; அருளால் விடுவர். இந் நன்னெறி வாராது புன்னெறி யொழுகுவார் தம்முயிரின்மாட்டுக் காதல்கொண்டிருப்பார் போன்று மருண்டு பெண்களையே உயிரெனப் பெருவேட்கைகொண்டு மருந்து பிறிதில்லாவாட்டம் எய்துவர். இவர்கள் உண்மைக்காதல் உயிர்க்காதல் உடையான்காதல் என்பதனை மறந்து உடற்காதல் உலகக்காதல் கொண்டு ஓவாது அலமருவோராவர். இதுவே காதலாஞ்சாறு.

## 1925. சாற்றிய விந்து சயமாகுஞ் சத்தியால்

1925. சாற்றிய விந்து சயமாகுஞ் சத்தியால்
ஏற்றிய மூலத் தழலை யெழமூட்டி
நாற்றிசை யோடா நடுநாடி நாதத்தோ
டாற்றி யமுதம் அருந்தவிந் தாமே.

மேலோதிய விந்து கட்டும் வாயில் வருமாறு: திருவருட் சத்தியால் மூலத்திடத்து அனலை எங்கும் தன் உள்ளத்தைப் போகவிடாமல் 'சிவசிவ' என்றும் நான்மறையால் கைவரச்செய்து சிவயோகியாகிய தான் கூடும் தவயோக வாழ்க்கைத்துணையாம் பெண்ணின்பால் உள்ள செந்நீராம் நாதத்துடன் தன் நடுநாடிக்கண் விந்துவாம் வெண்ணீரைச் செலுத்தினால் அவ்விந்து கட்டுப்படும். அதுவுமல்லாமல் நெற்றிவாயிலாகத் திங்கள் அமிழ்தத்தை அருந்துவதும் இதற்குத் துணையாகும். விந்து: சுக்கிலம்; வெண்ணீர். நாதம்: சுரோணிதம்; செந்நீர்.

விந்து சயம் - விந்துக்கட்டு. நடுநாடி நாதத்தோடு ஆற்றி - பெண்ணின் நாத சத்தியால் சுழுமுனை நாடியில் விந்து செல்லும்படி செலுத்தி.

## 1926. விந்துவும் நாதமும் மேவக் கனல்மூல

1926. விந்துவும் நாதமும் மேவக் கனல்மூல
வந்த வனன்மயிர்க் கால்தோறும் மன்னிடச்
சிந்தனை மாறச் சிவமக மாகவே
விந்துவு மாளுமெய்க் காயத்தில் வித்திலே.

மேலோதியவாறு விந்துவும் நாதமும் நடுநாடி வழியாக உடற்கண் பொருந்த மூலத்தெழுந்த அனல் மயிர்த்துளைதோறும் நிலைபெறும்படி, நெஞ்சமானது பயிற்சிவயத்தால் உலகியலை நோக்காது மாறும்படி இடையறாது 'சிவசிவ' என்று எண்ணிக்கொண்டிருப்பச் சிவமாவர் அம்முறையால் விந்துவின் தூய்மையாகிய கட்டுப்பாடும் எய்தும். இதுவே உடம்புநிலைக்கும் வித்தாகும். வித்து - காரணமுமாம். மாளுதல் - கட்டுப்படுதல்.

கனன் மூல - மூலக்கனல். சிந்தனை மாற - உலக சிந்தை சிவத்தினிடம்மாற. விந்துவும் மாளும் - விந்துவும் கட்டப்படும்.

# 1927. வித்துக்குற் றுண்பான் விளைவறி யாதவன்

1927. வித்துக்குற் றுண்பான் விளைவறி யாதவன்
வித்துக்குற் றுண்ணாமல் வித்துச்சுட் டுண்பவன்
வித்துக்குற் றுண்பானில் வேறல வீற்றவன்
வித்துக்குற் றுண்ணாமல் வித்துவித் தானன்றே.

உலகுக்கு அச்சாணியாகத் திகழும் தாளாண்மையில் குறைவிலாவேளாளர்கள் எத்துணை யிடுக்கண் நேரினும் வித்தினைக்குற்றி
ஒரு ஞான்றும் உண்ணார்; என்னை, வித்தினும் விளைவே மிக்கபயன் தருவது ஆதலான். அதுபோல் சிவயோகியரும் வித்தாகிய விந்தினைப் பெண்பால் விடுதலாகிய குற்றினைச் செய்து தம் வாழ்நாள் குறைதலாகிய ஊணினையுண்ணார் விந்துவை அடக்கி நெடுநாள் வாழின் அந்நாள் காறும் உலகத்துப் பலகோடி மக்களுக்கு அவ்வியோகியர் பெரும் பயனாவர். அங்ஙனமின்றிப் பெண்பால் விந்துவினை விட்டு ஒருசில மக்களைப் பெற்றுத் தம் வாழ்நாளை வீணே மாய்த்து விரைந்து மாள்வதால் உண்டாம் பெரும்பயன் யாது? திருவருள் கைவரப்பெற்றுப் பொருவரும் அருள் நூலும் தெருள் நூலும் செய்தருளினார் வித்துக் குற்றுண்ணா விழுமிய வேளாண் சான்றோரேயாவர். விளைவறியாதவனே வித்துக்குற்றுண்பான்: அதுபோல் வித்துக்குற்றுண்ணாமல் வித்தாகிய விந்து வினைக் காமத் தீயால் பெண்பால் விடுத்து அதனைச் சுட்டுண்பான் வித்துக் குற்றண்ணும் வேளாளனினும் வேறல்லன். வித்தினைக் கட்டுப்படுத்தி அவ் விந்துவைப் பெண்பால் விடுத்து உண்ணாமல், தன்பால் நடுநாடி வழியாக

மேலேற்றித் தன் உடற்கண் வித்து விதைத்தவன், விழுத்தவச் சிவயோகியாவன். வித்துக்குற்றுண்ணாமல் என்பதற்கு நெல்லின் விளைவின் மாண்புநோக்கி அதனை உண்ணாமல் போற்றியும் அதனினும் சிறந்த விந்துவைச் சுட்டுண்பவன் எனினும் ஆம்.

வித்துத்துக்குற்றுண்பான் - வித்துக்கு வைத்திருக்கும் நெல்லை குத்தி உண்பான். அதுபோல், விந்துவைக் கட்டிச் சுழுமுனையில் ஏற்றாமல் மாதரிடத்தில் செலுத்துபவன்.

# 1928. அன்னத்தில் விந்து அடங்கும் படிகண்டு

1928. அன்னத்தில் விந்து அடங்கும் படிகண்டு
மன்னப் பிராணனாம் விந்து மறித்திட்டு
மின்னொத்த விந்துநா தாந்தத்து விட்டிட
வன்னத் திருவிந்து மாயுங்கா யத்திலே.

உண்ணும் நல்லுணவால் ஏற்படும் விந்து தன் உடம்பகத்தே யோகப் பயிற்சியால் அடங்கும் வகையினைக் கண்டு, உயிர் நெடுநாள் நிலை பெறுமாறு அவ்விந்துவினைக் கீழ்நோக்கவொட்டாதுமேலேற்றி மின்னல் போலத் தோன்றி மாயும் இவ்வுடம்பகத்து - விந்துநாதம் இரண்டினையும் ஒன்றுகலந்து உடம்பகத்து ஆக்க அழகினையுடைய காரணகாரியமாகிய இருவகை விந்துவும் உடம்பின்கண் கட்டுப்படும்.

அன்....கண்டு - அன்னத்தால் உண்டாகும் விந்து.
மின்.....காயத்திலே - விந்துவை நாத சத்தியின் உதவியால் பயன்படுத்திக் கொள்ளாமல் விட்டுவிட்டால் நாதமும் விந்துவும் அழியும்.

## 1929. அன்னம் பிராணனென் றார்க்கு மிருவிந்து

1929. அன்னம் பிராணனென் றார்க்கு மிருவிந்து
தன்னை யறிந்துண்டு சாதிக்க வல்லார்க்குச்
சொன்ன மாமுருத் தோன்றும்எண் சித்தியாம்
அன்னவ ரெல்லாம் அழிவற நின்றதே.

யார்க்கும் உண்ணும் உணவினாலும் நண்ணும் பயிற்சியாகிய உயிர்ப்பினாலும் உண்டாகும் இருவிந்துகள். அவ் விந்துவின் மாண்பினை அறிந்து தன் உடலகத்தே உண்டுகொள்வதாகிய தங்குதலைச் செய்யவல்லார்க்கு அவர்தம் தவ உடம்பு பொன்போன்று திகழும். எண்பெரும் சித்திகளும் தோன்றும். அவர்கள் இந் நிலமிசை நீடுவாழ்வார்.

சொன்னமுமாம் - தங்கம்போல் மாறும். அன்னவர் - விந்துவைக் கட்டினவர்.

## 1930. நின்ற சிகாரம் நினைக்கும் பிராணனாய்

1930. நின்ற சிகாரம் நினைக்கும் பிராணனாய்
ஒன்று மகாரம் ஒருமூன்றே டொன்றவை
சென்று பராசத்தி விந்து சயந்தன்னை
ஒன்ற வுரைக்க வுபதேசந் தானே.

ஓமொழிக்கண் அகரம் உகரம் மகரம் மூன்றும் முறையே இறை உயிர் தளையாகத் தோன்றும். இம் மூன்றெழுத்திற்கும் உயிராய்த் தோன்றுவது சிவ என்றும் சிறப்பு எழுத்தினில் முதற்கண் காணப்படும் சிகரமாகும். இம் மூன்றெழுத்தும் மூலத்திடத்தவாகும். இதன்கண் திருவருளாற்றலாகிய பராசத்தி விந்துவினைக் கட்டுப்படுத்தியருள்வள். இந்நிலை கைகூடுமாறு உயிராகிய சிகரத்தை முதலாகக்கொண்டு திகழும் திருவைந்தெழுத்தைச் சிவகுரு அருளிச்செய்ய மேற்கொண்டு கணிப்பது உபதேசமாகிய செவியறிவுறூஉவாகும். இது 'சிவயநம'.

பிராணனா...மூன்று - பிராணனாய்க் கருதப்படும் அகாரம் உகாரம், மகாரம்.

## 1931. தானே யுபதேசந் தானல்லா தொன்றில்லை

1931. தானே யுபதேசந் தானல்லா தொன்றில்லை
வானே யுயர்விந்து வந்த பதினான்கு
மானே ரடங்க அதன்பின்பு புத்தியுந்
தானே சிவகதி தன்மையு மாமே.

சிவகுரு அருளிச் செய்யும் 'சிவயநம' என்னும் தமிழ்மறை தானே உபதேசமாகும். சிவபெருமான்றன் கலப்பில்லாத ஒருபொருளுமில்லை. தூமாயையினின்றும் வெளிவந்த கலைகள் பதினான்கு என்ப. மானாகிய மனம் 'சிவசிவ' என வழுத்தும் நினைவால் செவ்வையுற்றடங்க அதன்பின் இறுப்பாகிய புத்தியும் அடங்க ஆருயிர் சிவத்தடங்க அதுவே சிவகதியாகும்.

விந்து வந்த பதினான்கு - விந்து மாயையினின்றும் வந்த பதினான்கு வித்தைகளும். மான் - மனம்.

## 1932. விந்துவும் நாதமும் விளைய விளைந்தது

1932. விந்துவும் நாதமும் விளைய விளைந்தது
வந்தஇப் பல்லுயிர் மன்னுயி ருக்கெலாம்
அந்தமும் ஆதியு மாமந் திரங்களும்
விந்து அடங்க விளையுஞ் சிவோகமே.

விந்து நாதம் என்னும் இரண்டும் கட்டுற்று விளைய விளைந்தது உயர்திணை. வினைக்கீடாக ஆணையால் தோன்றிய இயங்குதிணை நிலைத் திணையாகிய பல உயிர்கட்குள்ளும் ஆறறிவு நிரம்பப்பெற் றது உயர்திணை. மன்னுயிர்கள் எல்லாவற்றிற்கும் அந்தமும் ஆதியுமாகிய அருந்தமிழ் மந்திரம் இரண்டு. அவை முறையே 'சிவசிவ', 'நமசிவய' என்ப. இம் மந்திர வலியால் விந்துவினைக் கட்டுப்படுத்தியவர்க்குச் சிவோகமே விளையும்.

விந்து அடங்க - விந்து கட்டுப்பட.

## 1933. வறுக்கின்ற வாறு மனத்துலா வெற்றி

1933. வறுக்கின்ற வாறு மனத்துலா வெற்றி
நிறுக்கின்ற வாறுமந் நீள்வரை யொட்டிப்
பொறிக்கின்ற வாறுமப் பொல்லா வினையை
அறுக்கின்ற நால்வரும் அத்திப் பழமே.

திருவருள் வலத்தால் விந்துவினைக் கட்டுப்படுத்தும் முறை ஏற்படும். மனத்தை அடக்கிப் புலத்தைத் தன்வழிப்படுத்தும் வெற்றியும் உண்டாகும். அவ்வெற்றியினை மனத்தே நிறுத்தும் நிறையும் உண்டாகும். பொன்வரையாகிய நீண்டமலையை ஒத்த நடுநாடிவழியை ஒட்டிச் சேர்கின்ற முறைமையும் ஏற்படும். அக்காலத்துப் பிறப்பிற்கு வித்தாம் பொல்லாவினைகள் இரண்டும் அறுக்கப்பட்டொழியும். அப்பொழுது தொன்மையனாய்த் தீமேனியையுடைய நன்மையனாய் விளங்கும் 'கற்றவர்களுண்ணும் கனியாம்' சிவபெருமான் வந்தருள்புரிவன். அத் + தீ + பழம் என்பன அத்திப்பழம் என்றாயிற்று.

வறுக்கின்றவாறு - விந்துவைக் கட்டும் உபாயம். நிறுக்கின்ற - அடக்குகின்ற. நீள்வரை - வீணாத் தண்டு. பொறிக்கின்ற - சேர்க்கின்ற. அத்திப்பழம் - உடல்.

## 1934. விந்துவும் நாதமும் மேவி யுடன்கூடிச்

1934. விந்துவும் நாதமும் மேவி யுடன்கூடிச்
சந்திர னோடே தலைப்படு மாயிடில்
அந்தர வானத் தமுதம்வந் தூறிடும்
அங்குதி மந்திரம் ஆகுதி யாகுமே.

விந்துவும் நாதமும் அருளால் பொருந்தி யுடன்கூடித் திங்களுடன் தலைப்படுமாயின் ஆயிரவிதழ்த் தாமரைப் பரவெளியினின்று ஊற்றெழும் அமிழ்தம்வந்து வெள்ளம்போன்று இடையறாது பெருகும். அவ்விடத்துத் திருவைந்தெழுத்து மந்திரமே ஆகுதியாகும்.

சந்திரன் - இடைகலை. அங்குதி மந்திரம் - அப்போது உண்டாகும் உறுதிப்பாடு.

## 1935. மனத்தொடு சத்து மனஞ்செவி யென்ன

1935. மனத்தொடு சத்து மனஞ்செவி யென்ன
இனத்தெழு வார்கள் இசைந்தன நாடி
மனத்தில் எழுகின்ற வாக்கு வசனங்
கனத்த இரதமக் காமத்தை நாடிலே.

இணைவிழைச்சாகிய காமத்தை விரும்பினால் மனத்தொடு பொருந்திய நிலையான எண்ணமும் மனங்கூடி உணரும் ஓசையும் என்று
சொல்லப்படுகின்ற இக்கூட்டத்தால் எழுந்து சொல்லுகின்ற சொல்கனத்த இரதமாகிய பயனில்லதாகும்.
இணைவிழைச்சு - ஆண்பெண் போகவிருப்பம்.

காமத்தை நாடினால் எல்லாம் வீண் என்பதைக் கூறிற்று.

## 1936. சத்தமுஞ் சத்த மனமும் மனக்கருத்

1936. சத்தமுஞ் சத்த மனமும் மனக்கருத்
தொத்தறி கின்ற விடமும் அறிகிலர்
மெய்த்தறி கின்ற விடமறி வாளர்க்கு
அத்தன் இருப்பிடமும் அவ்விடந் தானே.

கண் நாக்கு மூக்குச் செவி மெய் என்னும் அறிதற்கருவி ஐந்தும் ஈண்டுச் சத்தமென்னும் சொல்லாற்பெறப்படும். அவ்வோசையினை வெளிப்படுத்தத் துணைபுரியும் மனமும், அம் மனக்கருத்து ஒத்து அறிகின்ற புலன்களும் எவ்வாறு ஒன்றோடொன்று தொடர்ந்து யார் இயக்க இயங்குகின்றன என்னும் இயற்கை மெய்ம்மையினை அறியார். உண்மைச் சிவனருளால் இவை இயங்குகின்றன என்று அறியவல்லார்க்கு அவ்வறிவாகவே அத்தனாகிய சிவபெருமான் வீற்றிருந்தருள்வன். அதுவே அவனது தூய இருக்கையாகும்.

## 1937. உரமடி மேதினி யுந்தியி லப்பாம்

1937. உரமடி மேதினி யுந்தியி லப்பாம்
விரவிய தன்முலை மேவிக்கீ ழங்கி
கருமுலை மீமிசை கைக்கீழிற் காலாம்
விரவிய கந்தர மேல்வெளி யாமே.

உடலைத் தாங்கும் உறுதியான பாதம் நிலம் ஆகும். பாதத்திலிருந்து கொப்பூழ்வரை நீராகும். கொப்பூழிலிருந்து மார்புவரை தீயாகும். மார்பிலிருந்து தோள்வரைக் காற்றாகும். கழுத்துக்கு மேல் வான வெளியாகும். இம்முறையாக உடம்பின்கண் ஐம்பெரும் பூதநிலை நிற்பன காண்க.

உரம் அடி மேதினி - உறுதியுள்ள திருவடி மண் தத்துவம் ஆம். உந்தியில் அப்பாம் - உந்திவரை நீர் தத்துவம். முலை மேவிய கீழ் அங்கி - மார்புவரை தீதத்துவம். கருமுலை மீமிசை கைக்கீழிற்கால் - கறுத்த முலைக்காம்பினின்று தோள்வரை கால் (காற்று) தத்துவம். கந்தர மேல்வெளி - கழுத்துக்குமேல் வெளி (ஆகாயம்) தத்துவம்.

## 1938. செஞ்சுட ரோன்முத லாகிய தேவர்கள்

1938. செஞ்சுட ரோன்முத லாகிய தேவர்கள்
மஞ்சுடை மேரு வலம்வரு காரணம்
எஞ்சுட ரீசன் இறைவன் இணையடி
தஞ்சுட ராக வணங்குந் தவமே.

செஞ்சுடராகிய ஞாயிறும் அதன் ஒளியினைக்கொள்ளும் திங்கள், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி முதலான கோள்களும், ஏனைய விண்மீன்களும், வானவர்களும், மேகம் தவழும் பொன் மலையாகிய பனிமலையினை நாளும் வலம்வருவர். அதன் காரணம் தங்கட்கு ஒளி சிவபெருமான்பாலிருந்து அவன் திருவாணைவழி வருதல்வேண்டும் என்னு பெருவேட்கையேயாம். அதனால் அப்பொன்மலைமேல் வெள்ளி மலைக்கண் வீற்றிருந்தருளும் சிவபெருமான் திருவடியிணையை நாளும் போற்றிவணங்குவர்.

தேவர்கள் - கோள்களும் - மீன்களும். இறைவன் இணையடி தஞ்சுடராக - இறைவன் திருவடியை வலம் வந்து வணங்குதலால் தமக்கு ஒளி உண்டாக.

# 1939. பகலவன் மாலவன் பல்லுயிர்க் கெல்லாம்

1939. பகலவன் மாலவன் பல்லுயிர்க் கெல்லாம்
புகலவ னாய்நின்ற புண்ணிய நாதன்
இகலற ஏழுல கும்முற வோங்கும்
பகலவன் பல்லுயிர்க் காதியு மாமே.

பகலவன் சிவபெருமான்தன் இயற்கைப் பேரொளியினின்று இரவலாய்ப்பொற்று ஒளிதருகின்றனன். அப் பகலவனாகிய அண்ட ஞாயிறும், காப்போனாகிய மாலவனும், ஏனைப் பல்லுயிர்களும் என்றும் புகலிடமாய் நின்றுநிலவ விளங்குபவன் சிவபெருமான். அவனே புண்ணிய முதல்வன். ஏழுலகத்தும் எவ்வகை மாறுபாடுமின்றி அனைத்துயிரும் சிறப்புறநின்று இயற்கை உண்மை அறிவின்பப் பேரொளி தருபவன் சிவன். அவனே பேரொளிப் பகலவன் ஆவன். அவனையே சிவஞாயிறு - சிவசூரியன் எனவும் கூறுப. இச் சிவன் அனைத்துயிர்க்கும் ஆதிகாரணன் ஆவன். அச் சிவபெருமான் பகலவன்மாட்டு முனைத்துத் தோன்றுதலால் "நிலம், நீர், நெருப்பு, உயிர் (காற்று) நீள்விசும்பு, நிலாப் பகலோன்" என்ற வரிசையில் ஏழாவதாக நிற்கின்றனன். அதனால் தெய்வ வழவங்களில் அவன் மிக்கோனாவன். அதுபற்றியே அவன் பலர் புகழ் ஞாயிறு என்று சிறப்பிக்கப்படுகின்றனன். காலை இளஞாயிறு சிவமுருகனாகவும், பகல் முக்கூறு திருமாலாகவும், மாலை ஞாயிறு வளர்சிவனாகவும் வகுத்தமைத்தனர் நந்தமிழ்ச் சான்றோர்; அதனையோர் வெண்பாவில் தருகின்றாம்.

காலைக் கடற்செவ்வான் காட்டும் சிவமுருகன்
வேலைமுக்கூ றாம்பகல் மேவுமால்-மாலைச்செவ்வான்
வைகுசிவன் மேகம் வளர்சடைமேற் றிங்கள்தோய்
மைமுகில்நீ ராவிகங்கை மற்று.

பகலவன் - அண்டச் சூரியன். மாலவன் - அரி. இகல் அற - பேதம் இன்றி. பகலவன் - சிவசூரியன்.

## 1940. ஆதித்தன் அன்பினோ டாயிர நாமமுஞ்

1940. ஆதித்தன் அன்பினோ டாயிர நாமமுஞ்
சோதியி னுள்ளே சுடரொளி யாய்நிற்கும்
வேதியர் வேண்டினும் விண்ணவர் சொல்லினும்
ஆதியில் அன்பு பழுக்கின்ற வாறே.

ஆதித்தனாகிய சிவஞாயிற்றினைச் சோதியாகிய உலக ஞாயிறு ஆயிரந் திருப்பெயர்களை வாயாரப் புகன்று வழிபட அஞ்ஞாயிற்றினுள் அளவில் சுடரொளியாய் அவன் விளங்குவன். அச் சிவன் திருப்பெயரை மறையவராயினும் வானவாரயினும் காதலால் ஓதுவராயின் சிவனருள் அன்பு செழித்துப் பழுக்கின்றவாறாகும். சிவன் திருப்பெயர் 'நமசிவய' என்ப.

ஆதித்தன் - சிவசூரியன். சோதி - அண்டச் சூரியன். ஆதியில்-சிவபிரானிடத்தில்.

## 1941. தானே யுலகுக்குத் தத்துவ னாய்நிற்குந்

1941. தானே யுலகுக்குத் தத்துவ னாய்நிற்குந்
தானே யுலகுக்குத் தையலு மாய்நிற்குந்
தானே யுலகுக்குச் சம்புவு மாய்நிற்குந்
தானே யுலகுக்குத் தண்சுட ராகுமே.

மேலோதிய சிவபெருமானே உலகினுக்கு என்றும் ஒருபடித்தாய் நிற்கும் மெய்ப்பொருளாவன். அவனே உலகியல் நடத்தற் பொருட்டுத் தையலாகிய திருவருளாயும் நிற்பன். அவனே ஆருயிர்கட்கு இடையறா இன்பருளிச் சம்புவமாய் நிற்பன். அவனே தண்சுடராகிய திருவருட் பேரொளியாய் நிற்பன்.

தத்துவமாய் - மெய்ப்பொருளாய். தையல், சம்பு - சத்தி, சிவம் (Positive and Negative Energy). தண்சுடர் - அருள் ஒளி.

## 1942. வலையமுக் கோணம் வட்டம் அறுகோணந்

1942. வலையமுக் கோணம் வட்டம் அறுகோணந்
துலையிரு வட்டந் துய்ய விதமெட்டில்
அலையுற்ற வட்டத்தில் ஈரெட் டிதழாம்
அலைவற் றுதித்தனன் ஆதித்த னாமே.

வளையம், முக்கோணம், வட்டம், அறுகோணம், துலை, இருவட்டம் ஆகிய அறுவகை அடையாளங்களால் மூலமுதல் ஆறிடங்
களுள் அவற்றின் துய்யதன்மையை ஆராயின் சுழன்றுகொண்டிருக்கும் வட்டத்தில் பதினாறு இதழ்த்தாமரை காணப்பெறும். அதன்கண் - நெஞ்சத்திடத்து செவ்விதாக ஞாயிறு தோன்றும்.

இது விசுத்தியில் சூரியன் உதிக்கும் முறை கூறியது.

## 1943. ஆதித்த னுள்ளி லானமுக் கோணத்திற்

1943. ஆதித்த னுள்ளி லானமுக் கோணத்திற்
சோதித் திலங்குநற் சூரிய னாலாங்
கேத முறுங்கேணி சூரிய னெட்டிற்
சோதிதன் னீரெட்டிற் சோடசந் தானே.

மேலோதியவாறு ஞாயிற்றுக்குரிய நிலைக்களனாகிய முக்கோணத்தில் யாவற்றையும் விளக்கித் திகழ்கின்றவன் பகலவன். பகலவன் என்றாலும் சூரியன் என்றாலும் ஒன்றே. அவனது நாலாங்கால் குற்றந்தரும் கேணிபோன்றாகும். பகலவனுக்குரிய எட்டிதழ்த்தாமரை, பதினாறிதழ்த்தாமரை என்ப. குற்றந்தருங் கேணி என்பது திங்களின் நாலாங்கால் இறங்குந்தன்மையான் நேருவது.

கேதமுறங் கேணி - குற்றத்தைச் செய்வதான கிணறு போலும் ஆதித்த மண்டலம். சோடசம் - பதினாறு.

## 1944. ஆதித்த னோடே அவனி யிருண்டது

1944. ஆதித்த னோடே அவனி யிருண்டது
பேதித்த நாலும் பிதற்றிக் கழிந்தது
சோதிக்குள் நின்று துடியிடை செய்கின்ற
வேதப் பொருளை விளங்குகி லீர்நீரே.

ஞாயிறு ஒளிதராவிடின் உலகம் இருளால் மூடப்படும். எழுத்தோசை நான்கும் செயலுறாது பிதற்றிக் கழிந்தது. இயற்கைப் பேரொளியாகிய சிவத்துடன் வேறறநின்று விளங்கும் துடிபோலும் இடையினையுடைய திருவருள் அறிவுப்பேராற்றலாம் ஆதிஅம்மை செய்தருளும் மறைபொருளை உலகோர் உள்ளவாறு உணரமாட்டார். "நாயகன் கண்ணயப்பால் நாயகிபுதைப்ப" என்பது உலகினுக்கு எவ்வகையாலும் ஒளிதருபவன் சிவபெருமானேஎன்னும் உண்மையை உணர்த்தவே. அம்மை, அப்பனின் திருக்கண்ணினைப் புதைக்கவே உலகம் இருண்டுவிட்டது. அதனால் ஞாயிற்றினுக்கும் ஒளிதருபவன் சிவபெருமான் என்பது பெறப்பட்டதல்லவா! நயப்ப என்பது 'நயப்பால்' எனத் திரிந்து நின்றது. ஞாயிறு சிவபெருமானின் எண்பெரும் வடிவங்களுள் ஒன்று. இவ்வுண்மையினை நம் தமிழ்ச் சான்றோரே உலகினுக்கு உணர்த்தினர். அதனை 'முருகன்மால் முற்சிவனார் மூத்தபிள்ளை முப்போ, திருளொலிஓம் காட்சி வடிவாம் . 'என்பதனால் நினைவு கூர்க.

பேதித்த நால் - வேறுபட்டுத் தோன்றும் நால்வகைவாக்கு. துடியிடை - சத்தி.

## 1945. பாருக்குக் கீழே பகலோன் வரும்வழி

1945. பாருக்குக் கீழே பகலோன் வரும்வழி
யாருக்குங் காணவொண் ணாத அரும்பொருள்
நீருக்குந் தீக்கு நடுவே யுதிப்பவன்
ஆருக்கும் எட்டாதவ் வாதித்தன் தானே.

பார்போலும் மூலத்திடத்து மண்ணின் இயைபாம் வித்து நிலைக்குக் கீழே நிற்பது ஞாயிறு வரும்வழியாகும். அது திருவருள் துணையில்லாத யாவர்க்கும் காணவொண்ணாத அரும்பொருள். நீர்நிலையாகிய மேல்வயிற்றினுக்கும் தீநிலையாகிய நெஞ்சத்தினுக்கும் நடுவே அஞ்ஞாயிறு தோன்றும். அஞ்ஞாயிறு தம்முணர்வு முனைப்பால் ஆராய்வார் எவருக்கும் எட்டாத அரும்பொருட் பகலவன் ஆவன். மேல்வயிறு - மணிபூரகம். நெஞ்சம் - அனாகதம். ஆதித்தன் - பகலோன்.

பார் - மூலாதாரம். நீருக்கும் தீக்கும் நடு - மணிபூரகத்துக்கும் அனாகதத்துக்கும் நடு. வித்து - பீசம்.

## 1946. மண்ணை யிடந்ததின் கீழொடும் ஆதித்தன்

1946. மண்ணை யிடந்ததின் கீழொடும் ஆதித்தன்
விண்ணை யிடந்து வெளிசெய்து நின்றிடுங்
கண்ணை யிடந்து களிதந்த வானந்தம்
எண்ணுங் கிழமைக் கிசைந்துநின் றானே.

நிலவுலகம் உருண்டையாக இருக்கின்றது. அஃது உருண்டு ஞாயிற்றைச் சுற்றி வருகின்றது. உலகம் தானாக உருள்வதற்குப் பகலும் இரவுங் கூடிய ஒருநாள் ஆகின்றது. அது ஞாயிற்றைச் சுற்றிவர முந்நூற்று அறுபத்தைந்தேகால் நாட்கொண்ட ஓர் ஆண்டு ஆகின்றது. இரவுப்பொழுது வருங்கால் அஞ்ஞாயிறு நிலத்தைப் பிளந்துகொண்டு போவதுபோல் நமக்குத் தோன்றுகின்றது. அங்ஙனம் மண்ணைப் பிளந்து ஓடும் ஞாயிறானது விண்ணின்கண்ணதாய்த் தன்னையும் பொருள்களையும் தன் கதிரால் விளக்கி நின்றிடும். அக் கதிரால் ஆருயிர்களின் கண்கள் விளக்கமுறும். அப்பொழுது ஆருயிர்கள் கண்டும் கொண்டும் உண்டும் கூடியும் இன்புற்றுக் களிக்கின்றன. அத்துடன் தன்னை அகந்தழீஇ நிற்பதாகிய தியானத்திற்கும் உரிமை கொடுத்தருளுகின்றனன். இத் தியான உரிமையே எண்ணுங் கிழமை என இயம்பப்பெற்றது. இசைந்துநிற்றல் - உடனாய் நிற்றல்.

இடந்து - பிளந்து. வெளிசெய்து - விளக்கி. எண்ணுங்கிழமை- தியானிக்கும் உரிமை.

## 1947. பாரை யிடந்து பகலோன் வரும்வழி

1947. பாரை யிடந்து பகலோன் வரும்வழி
யாரும் அறியார் அருங்கடை நூலவர்
தீரன் இருந்த திருமலை சூழென்பர்
ஊரை யுணர்ந்தார் உணர்ந்திருந் தார்களே.

உலகம் ஞாயிற்றைச் சுற்றி வருகின்றது. ஆனால் ஞாயிறு உலகைச் சுற்றிவருவதாகக் கூறுவோர் உண்மை உணராதவராவர். அவ்வுண்மையினை நுண்ணுணர்வினரே உணர்வர். தாழ்ந்த நிலையினர் பொருட்டுச் செய்யப்பட்ட நூலினையே உயர்ந்தநூலாகக் கருதிச் சிலர் ஞாயிறு திருமலையினைச் சுற்றி வருகிறதென்பர். உயர்ந்தோர் உச்சித்துளைவாயிலாக ஞாயிற்றைக் காணும் முறையிற் காண்பர். ஞாயிற்றைப் பகலவன் எனவும் பகலோன் எனவும் கூறுவர்.

கடைநூலவர் - கடைப்பட்ட நூற்களை உணர்ந்தவர். தீரன் - சிவபிரான். ஊரை - ஈசன் இருக்கும் புருவமத்தி, உச்சித்தாமரை.
பிண்டாதித்தன்

## 1948. நின்றும் இருந்துங் கிடந்தும் நடந்தும்

1948. நின்றும் இருந்துங் கிடந்தும் நடந்தும்
கன்றாய நந்திக் கருத்துள் இருந்தனன்
கொன்று மலங்கள் குழல்வழி யோடிட
வென்று விளங்கும் விரிசுடர் காணுமே.

ஆருயிர்கள் நின்றாலும், இருந்தாலும், கிடந்தாலும், நடந்தாலும் அருவாகிய சிவன் அவர்கள் உள்ளத்தைவிட்டு அகலாது கருத்துள் நின்று அருளுவன். அதனால் மலங்கள் அடங்கும். ஞாயிற்றின் ஒளி நடுநாடி வழியாகச் சென்று பரவும். அவ்வொளி எல்லா ஒளிகளையும் வென்று மிக்கு விளங்கி விரியும். இவ் வொளியினை அகஞாயிறு என்ப. அகஞாயிறு: பிண்டாதித்தன். பிண்டம்- சிற்றுலகம்; உடல். அண்டம் - பேருலகம்; உலகம்.

## 1949. ஆதித்தன் ஓடி யடங்கும் இடங்கண்டு

1949. ஆதித்தன் ஓடி யடங்கும் இடங்கண்டு
சாதிக்க வல்லவர் தம்மை யுணர்ந்தவர்
பேதித் துலகம் பிதற்றும் பிதற்றெல்லாம்
ஆதித்த னோடே யடங்குகின் றாரே.

உயிர்ப்பு பிங்கலைவழியாக ஓடி நடுநாடியிற் புகும். புகும் போது உண்டாகும் அகவொளி ஞாயிறு எனப்படும். அவ்வொளியினை உணர்ந்து அந்நிலையிலே நிற்கவல்லார் தம்மை உணர்ந்தோராவர். அஃதாவது காலக்கணக்கை வேண்டியவாறு கூட்டிக்கொள்ளும் ஆற்றலைத் திருவருளால் உடையராதல். அவ் வழி முயலாதாரனைவரும் வீண் பிதற்றல்களைப் பிதற்றித் திரிவர். அவர்கள் புறத்துக்காணும் ஞாயிற்றின் அளவையாகிய காலக்கணக்கால் வாழ்நாள் முடிந்து மாண்டு அடங்குவர். எனவே யோகியர் வாழ்நாள் அகஞாயிற்றைக் கொண்டு அளக்கப்படும் என்பது காண்க.

## 1950. உருவிப் புறப்பட் டுலகை வலம்வந்து

1950. உருவிப் புறப்பட் டுலகை வலம்வந்து
சொருகிக் கிடக்குந் துறையறி வாரில்லை
சொருகிக் கிடக்குந் துறையறி வாளர்க்கு
உருகிக் கிடக்குமென் னுள்ளன்பு தானே.

அகத்தவமுயற்சியால் உயிர்ப்பினை நடுநாடிவழியாகச் செலுத்தி அகவொளியும் கண்டவர், அக் காட்சியாற் பல அண்டங்களும் ஒன்றோடொன்று நெருங்கிச் சுழன்றுகொண்டு நிற்கும் உண்மை நிலையினை உணர்வர். அங்ஙனம் உணர்வார்க்கு உள்ளன்பு நெகிழ்ந்து 'அயரா அன்பின் அரன்கழல் செலும்' என்னும் முறையாய்ச் சென்று இன்புறும் மெய்யன்புநிலை எளிதாக இனிதாக எய்தும். இந்நிலையினையே உள்ளன்பு நிலையென உரைக்கப்படும்.

உருவி - மூலாதாரத்தினின்றும் சுழுமுனையில் ஊடுருவி மனவாதித்தன்

# 1951. எறிகதிர் ஞாயிறு மின்பனி சோரும்

1951. எறிகதிர் ஞாயிறு மின்பனி சோரும்
எறிகதிர் சோமன் எதிர்நின் றெறிப்ப
விரிகதி ருள்ளே வியங்குமென் ஆவி
ஒருகதி ராகில் உவாவது வாமே.

வெப்பக் கதிரினை வீசும் ஞாயிறும் தட்பக் கதிரினை வீசும் திங்களும் மேல் கீழாய் நேரொக்கத் தோன்றுங் காலம் உவாவெனப்படும். உவா-முழுநிலா: நிறைமதி: பூரணை. அங்ஙனம் விரிந்து எறிக்கும் கதிரினுள் ஆருயிர் இயங்காநிற்கும்.

உவா - பூரணை.

## 1952. சாந்திரன் சூரியன் தான்வரிற் பூசனை

1952. சாந்திரன் சூரியன் தான்வரிற் பூசனை
முந்திய பானுவில் இந்துவந் தேய்முறை
அந்த இரண்டும் உபய நிலத்திற்
சிந்தை தெளிந்தார் சிவமாயி னார்களே.

சந்திரகலை என்று சொல்லப்பெறும் இடகலையும் சூரியகலை யென்று சொல்லப்பெறும் வலப்பால் கலையும் முறையாக இயங்கிச் கொண்டிருப்பின் நற்றவமாம் சிவபூசைக்கு உற்ற அமைவாம் என்க. சூரியகலையின்கண் சந்திரகலை பொருந்தி நிகழுங்கால் பூசனைப் பொழுதாம் என்க. அக் கலை நடுநாடி வழியாகச் செல்லுங்கால் சிந்தைத் தெளிவுண்டாகும். இவரே 'சித்தம் சிவமாக்கப்' பெற்ற திருவினர். இவரே சிவமாய் அமர்ந்திருந்தார்.

பானுவில் இந்து வந்து ஏய்முறை - சந்திரகலை சூரிய கலையில் ஒடுங்கி நிற்கும் முறை. உபயநிலம் - சுழுமுனை.

# 1953. ஆகுங் கலையோ டருக்கன் அனல்மதி

1953. ஆகுங் கலையோ டருக்கன் அனல்மதி
ஆகுங் கலையிடை நான்கென லாமென்பார்
ஆகும் அருக்கன் அனல்மதி யோடொன்ற
ஆகுமப் பூரணை யாமென் றறியுமே.

பிங்கலையாகிய வலப்பால் உயிர்ப்பு எனப்படும் ஞாயிறும், அனலாகிய தீயும், திங்களாகிய இடப்பால் உயிர்ப்பும், கலையெனப்படும் நடுநாடியும் ஆகிய நான்கும் கலையென்று அழைக்கப்படும். அருக்கனாகிய வலப்பால் உயிர்ப்பும், மூலத் தீயும், திங்களாகிய இடப்பால் உயிர்ப்பும் நடுநாடிக்கண் கூடிப் பொருந்த மேலோதிய நிறைநிலா ஆகுமென்றறிக. அகத்தே காணும் நிறைநிலாவென்பது திங்கள் அமிழ்தத் தீஞ்சுவை வெண்ணிலாவென்க. இதற்கு இடம் நெற்றிப்புருவம் என்க.

ஒன்ற வாங்கும் - கூடும்படி வாசியை உள்ளடக்கும் கலை இடை நான்கு - இடைகலை, பிங்கலை, சுழுமுனை, அனல்.

# 1954. ஈரண்டத் தப்பால் இயங்கிய வவ்வொளி

1954. ஈரண்டத் தப்பால் இயங்கிய வவ்வொளி
ஓரண்டத் தார்க்கும் உணரா வுணர்வது
பேரண்டத் தூடே பிறங்கொளி யாய்நின்ற
தாரண்டத் தக்கா ரறியத்தக் காரே.

ஈரண்டமாகிய அனலும் கதிரும் உள்ள நிலைக்களங்களுக்கு மேலாக விளங்கும் அந் நிலவொளி புறத்தே காணப்படும் எவ்வகை அண்டத்தார்க்கும் அறிதற்கரியதாகும். அஃது அறிவுப் பிழம்பாய நிற்பது. அது பெரிய அண்டத்தூடே ஒளிர்ந்துகொண்டு திகழும் பேரொளியாகவுள்ளது. அச் சிவபெருமான் திருவருளால் அவ்வொளியினை நெருங்கத்தக்க தவமுடையவர் யாவர்! அவரே அறியத் தக்கவராவரென்க. இத்திருக்குறிப்புச் சிவபெருமான் வெண்திங்கட் கண்ணியான் என்னும் மெய்ம்மையினை விளக்குவதாகும். பெருமான் பிள்ளைப்பிறை அணிவான் என்பது ஆருயிர்களின் அறிவுக்கு அறிவய் அவ் வுயிரறிவினை நாளும் வளர்க்கும் குறிப்பாகும். வெண்திங்கள் கண்ணியான் என்பது அவ்வுயிர்க்கு இறவா இன்பச் சிறப்பறி வருள்தற் குறிப்பாகும். பிள்ளைப் பிறைசூடல் பேணுமறி வுக்கறிவாம், கொள்ளு திங்கள் கண்ணியின்பங் கூறு என்பதை நினைவுகூர்க.

ஈரண்டம் - அனல், சூரியன். அண்டத் தக்கார் - அடையத்தக்கவர்.

## 1955. ஒன்பதின் மேவி யுலகம் வலம்வரும்

1955. ஒன்பதின் மேவி யுலகம் வலம்வரும்
ஒன்பது மீசன் இயலறி வாரில்லை
முன்பதின் மேவி முதல்வன் அருளிலார்
இன்ப மிலாரிருள் சூழநின் றாரே.

கோள்கள் ஒன்பதும் விழுமிய முழுமுதற் சிவபெருமான் திருவாணைவழி இயங்குவனவாகும். இவ் வுண்மையினை அறிவார் அரியர். ஒருவரும் இலரென்றே கூறலாம். அவ்வொன்பதும் தனிப் பேராற்றலுடைய முதன்மைப்பொருள் என மயங்கும்படி செய்துவிட்டனர் வந்தேறும் மருளினர். அக் கோள்கள்பால் மயங்கற்க என்று நால்வர் பாடிய மறையும் மூலர் பாடிய முறையும் ஆகிய திருவருட் செந்தமிழ் வேதாகமங்கள் ஆயிர்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னரே அறுதியிட்டு வரைசெய்து ஓதியருளின. அதன்பின்னும் நம்மனோர் அயல் மயக்கினின்றும் தெளிவுற்றாரல்லர். நம்மை வழிப்படுத்தும் செம்மை நெறிசேர் அருச்சகரேனும் தெளிவுற்றாரா எனின்? இல்லை! இல்லை! முக்காலுமில்லை யென்றே நல்லார் நவில்கின்றனர். நம்மவர்நிலை அச்சமே கீழ்கள தாசாரம் எச்சம், அவாவுண்டேல் உண்டாம் சிறிது' (1075) என்னும் நாயனார் பொதுமறைக்கு முற்றும் ஒவ்வும் எடுத்துக் காட்டாக இருக்கின்றது. இனியேனும் நம்மவர் நால்வர் வழிநின்று நல்லவராய் விழித்து எழுந்து மூலர் முறையினை முற்றுங் கைக்கொண்டு எல்லா நலமும் பெற்று வாழ்வாராக. சிவபெருமான் திருவருளும்

துணைபுரிவதாக. இவ் வொன்பதினும் இயைந்தியக்கிப் பொருந்த நின்றருள்பவன் சிவன். அவனே முழுமுதல்வன் ஆவன். அவன் திருவருள் கைவரப்பெறாதார் 'இரு பிறப்பும் வெறுவியராய்' இன்பம் எய்தாதவராவர். அம்மட்டோ? பிறப்பு இறப்புக்கு உட்படுத்திப் பெருந்துன்பம் விளைக்கும் இருள்சூழ நின்றவருமாவர்.

ஒன்பது - ஒன்பது கோள்கள்.
ஞானாதித்தன்

## 1956. விந்து அபரம் பரமிரண் டாய்விரிந்து

1956. விந்து அபரம் பரமிரண் டாய்விரிந்து
அந்த அபரம் பரநாத மாகியே
வந்தன தம்மிற் பரங்கலை யாதிவைத்து
உந்தும் அருணோ தயமென்ன வுள்ளத்தே.

விந்து என்னும் தூமாயை இருவகைப்படும் அவை, ஒன்று கீழ்நிலைவிந்து; மற்றொன்னு மேல்நிலை விந்து. இவற்றை முறையே பரவிந்து அபரவிந்து எனக் கூறுப. அபரவிந்துவானது பரநாதமாகத் தோன்றிற்று. அவற்றினின்றும் திருவருள் ஐவகைக் கலையாக விளக்க முற்றது. கலையெனினும் நிலையெனினும் ஒன்றே. அவை முறையே நீக்கி, நிலைப்பி, நுகர்வி, அமைப்பி, அழுத்தி என்பன. இவற்றை முறையே நிவிர்த்தி., பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என்ப. இக்கலைகள் வாயிலாகச் சிவபெருமான் தூண்டித் தொழிற்படுத்துவன். இந்நிலையினைத்தான் ஆருயிர்களின் அகத்துத் தோன்றும் சிவசூரியன் என்ப. அதனையே அருணோதயம் என்ப. அருள்நன் தோற்றம் அருணோதயம்.

உந்தும் - நடத்தும்.

## 1957. உள்ள அருணோ தயத்தெழும் ஓசைதான்

1957. உள்ள அருணோ தயத்தெழும் ஓசைதான்
தெள்ளும் பரநாதத் தின்செய லென்பதால்
வள்ளல் பரவிந்து வைகரி யாதிவாக்கு
உள்ளன ஐங்கலைக் கொன்றாம் உதயமே.

ஞானாதித்தன் என்பது அறிவுச்சுடர் என்பதாகும். இவ்வறிவுச்சுடர் மூலத்திடமாக நின்று ஓசைவழிவாய்த் தோன்றும். அவ்வோசை மேல்நிலை நாதத்தின் செயல் எனக் கூறுப. நாதவழியின் நிறம் செம்மை எனக் கூறுப. அக் குறிப்புத் தோன்றவே அருணம் என்றனர். இவை வள்ளலாகிய சிவபெருமானால் நிகழ்வன. இந்த மேல்நிலை விந்துவிலிருந்து செவியோசை முதலிய ஓசைகள் தோன்றும். அதுபோலவே ஐங்கலைகளும் தோன்றும். ஐங்கலைகள் (1956) மேலோதப்பட்டன. இவ்வோசை நான்கும் ஐங்கலைகளுக்குட்பட்டன. அவையும் ஐவகையாகக் குறிக்கப்பெற்றன. அவ்வோசை ஐந்தும் வருமாறு: நுண்ணோசை, நினைவோசை, மிடற்றோசை, தன்செவிக்குக் கேட்கும் ஓசை, பிறர் செவிக்கும் கேட்கும் ஓசை என்ப. இவற்றை முறையே, சூக்குமை, பைசந்தி., மத்திமை. வைகரி-அ, வைகரி-ஆ என்ப. உதயம் - தோன்றுமிடம். வைகரி - அ, தன்செவிக்குக் கேட்பது. வைகரி - ஆ, பிறர் செவிக்குக் கேட்பது.

உள்ள - உள்ளத்தில். அருணோதயத்து-சிவந்த சிவசூரிய ஒளி வீசுதலால்.

## 1958. தேவர் பிரான்திசை பத்துத யஞ்செய்யும்

1958. தேவர் பிரான்திசை பத்துத யஞ்செய்யும்
மூவர் பிரானென முன்னொரு காலத்து
நால்வர் பிரான்நடு வாயுரை யாநிற்கும்
மேவு பிரான்என்பர் விண்ணவர் தாமே.

தேவர்கள் அனைவர்கட்கும் முழுமுதலவனாக என்றும் விளங்குபவன் சிவபெருமான். சிவபெருமான் திருவருளால் பத்துத் திசையும் அதன்கட்படும் பொருள்களெல்லாமும் மூலப்பகுதியினின்றும் தோற்றுவிக்கப்பட்டன. அவை தோன்றுதற்கு இயற்றுதற் கருத்தாவாக நிற்பவர் மூவர். அவர்கள் சிவபெருமானின் திருவாணைவழியாகவே இயற்றுகின்றனர். இவர்கட்குத் தனிப்பட்ட ஏதொரு முதன்மையும் கிடையாது. இவர்கள் முக்குணம்படைத்த உயிரினத்தவரே யாவர். இவர்களே அயன் அரி அரன் என அழைக்கப்படுவர். இவர்கள் மூலப் பகுதிக்கு உட்பட்டவர். இவர்களுக்கும் முதல்வன் சிவபெருமானே. இம் மூவர்க்கும் காலத்தால் முற்பட்டவரும் சிவபெருமான் திருவாணையால் இம் மூவர்கட்கும் கண்காணியாக நின்று தொழிற்படுத்துவோரும் மூவர் உளர். அவர்களும் உயிரினத்தவரேயாவர். ஆயினும் அவர்கள் கட்டுநீங்கிய சிறப்புயிரினத்தவராவர். இவர்கட்கு உறைவிடம் தூமாயையின்கண் காணப்படும் முப்பத்திரண்டாம் மெய்யாகிய ஆசான்மெய் என்க. ஆசான்மெய் - சுத்தவித்தை. இம் மூவரும் அயன் அரி அரன் என்னும் காரணத் தொழிற்பெயரே பெறுவர். இவர்களும், முப்பத்து மூன்றாம் மெய்யின் கண்ணுள்ள ஆண்டானும் ஆகிய நால்வரும்

ஒரு வகையினர் என்று மறைசொல்லாநிற்கும். இந் நால்வர்க்கும் பொதுவாம் முதன்மையன் சிவபெருமானே. இம் முறையான் யாவர்க்கும் யாவற்றிற்கும் இயற்கை முழுமுதல்வனாக விளங்குபவன் சிவபெருமானே என்று மண்ணவரேயன்றி விண்ணவரும் நண்ணி எண்ணிக் கண்ணி வழுத்தா நிற்பர்.

நால்வர் - அயன், அரி, அரன், ஈசன்.

# 1959. பொய்யிலன் மெய்யன் புவனா பதியெந்தை

1959. பொய்யிலன் மெய்யன் புவனா பதியெந்தை
மையிருள் நீக்கு மதியங்கி ஞாயிறு
செய்யிருள் நீக்குந் திருவுடை நந்தியென்
கையிருள் நீங்கக் கலந்தெழுந் தானே.

இருநூற்று இருபத்து நான்கு என எண் குறிப்பிடப்பட்டுள்ள புவனங்கட்கும் முதல்வன் சிவபெருமான். அவனே எந்தையுமாவன். அவன் பாழ்ங்கோளர் முதலாயினார் கூறுவதுபோன்று இல்லாதவனல்லன். உண்மையாக யாண்டும் உள்ளவன். புறத்தே மூடியுள்ள மாயிருளாகிய மையிருளை நீக்குவது திங்கள் தீ ஞாயிறு என்னும் மூன்றுமேயாம். இருள்சேர் இருவினையாம் செய்வினை இருளைப் போக்கியருள்பவன் புந்திவட்டத்துப் புகுந்து நின்றருளும் நந்தியெங்கடவுள். அவனே ஒட்டுமலமாகிய அறிவைத் தடைப்படுத்தும் ஒட்டிருளையொடுக்க என்னுள் உயிர்க்கு உயிராய் எழுந்தருளியிருந்தனன். அவன் பொய்யிலன் மெய்யன். ஒட்டிருள்: ஆருயிரின்பால் குற்ற இயல்பாய் ஒட்டியுள்ள தொன்மலம். என்கையிருள் - என்னிடத்துப் பண்டேயுள்ள இருள். கை - இடம். பாழ்ங்கோளர்: மெய்ப்பொருளாகிய கடவுளில் லென்போர். இவரை நாத்திகரென்ப.

புவனாபதி - புவனங்களை உண்டாக்கினவன். மெய்யிருள் - உலக இருள். செய்யிருள் - கன்மம். என் கை இருள் - என்னிடத்து உள்ள இருள்.

## 1960. தனிச்சுட ரெற்றித் தயங்கிருள் நீங்க

1960. தனிச்சுட ரெற்றித் தயங்கிருள் நீங்க
அனித்திடு மேலை யருங்கனி யூறல்
கனிச்சுட ராய்நின்ற கயிலையில் ஈசன்
நனிச்சுடர் மேல்கொண்ட வண்ணமு மாமே.

ஒப்பில்லாத சிவபெருமான் தனிச்சுடராவன். அவன் நிறைந்த இருள் நீங்க ஒளிவீசி அருள்செய்வன். அளித்திடும் என்பது எதுகைநோக்கி அளித்திடும் என நின்றது. அவனே திங்கள் அமிழ்தமாகிய அருங்கனி ஊறலை அளித்தருள்வன். அவனே முதிர்ந்த பேரொளிப் பிழம்பாயுள்ளவன். அவனே திருக்கயிலையில் வீற்றிருந்தருளும் சீர்சால் ஆண்டவன். அவனே எல்லா ஒளிக்கும் ஒளியருளித்தான் மேலாகத் திகழும் தனிச்சுடர் வண்ணமுமாவன்.

எற்றி - வீசி. அளித்திடும் - உதவிசெய்யும். அருங்கனி ஊறல் - மதி அமுதம். கனிச்சுடராய் - கனிந்த அருள் ஒளியாய். அளிச்சுடர் அருள்ஒளி வீச்சு.

## 1961. நேரறி வாக நிரம்பிய பேரொளி

1961. நேரறி வாக நிரம்பிய பேரொளி
போரறி யாது புவனங்கள் போய்வருந்
தேரறி யாத திசையொளி யாயிடும்
ஆரறி வாரிது நாயக மாகுமே.

சிவபெருமான் நூலறிவாகவல்லாமல் நுண்ணறிவாக ஆருயிரினுடன் ஒற்றித்து நின்றருள்வன். நுண்ணறிவென்பது அழுந்தி அறிவதாகிய அனுபவ அறிவாகும். அச் சிவபெருமான் வேறுபாடின்றி எல்லாவுலகங்களிலும் ஆணை செல்லா நிற்க அருள்வன். அவனருளாலன்றி ஆருயிரின் முனைப்பால் அறியமுடியாத எல்லாத் திசைகளிலும் நீக்கமற நிறைந்து நிற்கின்ற பேரொளியாய் விடுவன். இம் முறையால் சிவபெருமானே விழுமிய முழுமுதல் தலைவனாவன். தேரறியாத என்பதற்குத் தேரையுடைய ஞாயிறும் அறியமுடியாத என்றலும் ஒன்று.

## 1962. மண்டலத் துள்ளே மலர்ந்தெழும் ஆதித்தன்

1962. மண்டலத் துள்ளே மலர்ந்தெழும் ஆதித்தன்
கண்டிடத் துள்ளே கதிரொளி யாயிடுஞ்
சென்றிடத் தெட்டுத் திசையெங்கும் போய்வரும்
நின்றிடத் தேநிலை நேரறி வார்க்கடகே.

மண்தலமாகிய நிலவுலகத்துள்ளே விளங்கித் தோன்றும் ஒளியுடையது ஞாயிறு. இதுவே மூலத்திடத்து விளங்கும் ஞாயிறுமாகும். அதுவே மிடற்றினிடமென்று சொல்லப்படும் விசுத்தியின்கண் கதிர்காலும் ஒளியாய்த் திகழும். அவ் வொளி எல்லாத் திசைகளிலும் உலாவி விளங்கும். திருவருளால் நின்ற இடத்திலே நின்று திருவடியுணர்வால் எல்லாங் காண்பார்க்கு இவ் வுண்மை எளிதிற் புலனாம்.

மண்டலத்துள்ளே - மண் தலத்துள்ளே, பூமியிலே.
கண்டிடத்துள்ளே - கண்ட இடத்துள்ளே, விசுத்தியில்.

## 1963. நாபிக்கண் ணாசி நயன நடுவினுந்

1963. நாபிக்கண் ணாசி நயன நடுவினுந்
தூபியோ டைந்துஞ் சுடர்விடு சோதியைத்
தேவர்கள் ஈசன் திருமால் பிரமனும்
மூவரு மாக வுணர்ந்திருந் தார்களே.

ஆருயிர் உறையும் சீரிய உடலகத்துக் கொப்பூழ், கண், நாசி, புருவநடு, உச்சித்துளை என்று சொல்லப்படும் ஐந்திடத்தும் உயிருக்கு உயிராய் அறிவுக்கு அறிவாய் ஒளிகொடுத்தருளும் சிவபெருமானைத் தூமாயையின்கண் வீற்றிருக்கும் அரன், அரி, அயன் என்று சொல்லப்படும் மூவருமாக மெய்யுணர்ந்தோர் உணர்ந்திருந்தாரென்க. தூபி - உச்சித்துளை.

நாபி - கொப்பூழ். கண், நாசி. நயன நடு - புருவமத்தி. தூபி - சிரம். ஈசன் - மகேசன்.
சிவாதித்தன்

## 1964. அன்றிய பாச இருளுமஞ் ஞானமுஞ்

1964. அன்றிய பாச இருளுமஞ் ஞானமுஞ்
சென்றிடு ஞானச் சிவப்பிர காசத்தால்
ஒன்று மிருசுட ராமரு ணோதயந்
துன்றிருள் நீங்குதல் போலத் தொலைந்ததே.

ஆருயிர்கட்கு மாறுபாட்டுணர்வை எழுப்புவது பாசம். அப் பாசம் இருள் என்று சொல்லப்படும். இவ் விருள் அறிவைத் தடை செய்யும். அப்பொழுது அஃது அறியாமை என்று கூறப்படும். இவ் வறியாமையினைத் திருவடியுணர்வு வெளிப்படச் சிவஒளி தோன்றி யகற்றும். அகற்றவே, அச் சிவ ஒளியால் விளக்கம் அளித்துப் பொருந்தும் திங்களையும் ஞாயிற்றினையும் ஒளிரச் செய்யும். புறவிருள் அளவுக்கு உட்பட்ட அவ் வொளிகளால் நீங்குவதுபோன்று அகவிருள் அவ்வொளிக்கும் ஒளியருளும் அளவிலாத சிவஞான ஒளியால் நீங்கும்.

அன்றிய - மாறுபட்ட. இருசுடர் - பெருமை பொருந்திய சுடர். துன்று - தோன்ற.

# 1965. கடங்கடந் தோறுங் கதிரவன் தோன்றில்

1965. கடங்கடந் தோறுங் கதிரவன் தோன்றில்
அடங்கிட மூடில் அவற்றில் அடங்கான்
விடங்கொண்ட கண்டனு மேவிய காயத்து
அடங்கிட நின்றதும் அப்பரி சாமே.

நிலத்தே நீர் நிரப்பிவைக்கப்பட்ட குடங்கள் பலவற்றிலும் வானத்தே காணப்பெறும் கதிரவன் தோன்றுவன். அக் கதிரவன் பல குடங்களிலும் ஒரே வடிவாய்த் தனித்தனி வெவ்வேறாகக் காணப்படுவன். அங்ஙனம் காணப்படினும் கதிரவன் ஒருவனே. குடமாகிய கடம் பலவாதல்பற்றி அவன் நிழலுரு பலபோன்று தோன்றினும் உண்மையில் கதிரவன், ஒருவனே. அக் கதிரவனைத் தாந்தாம் கண்டவாறே குடத்துள் அடக்கிவிடவேண்டுமென்று குடத்தை மூடினால் அக் கதிரவன் அக் குடத்துள் அடங்குவதுண்டோ! இல்லை; இல்லை. அதுபோல் திருநீல கண்டத்தையுடைய முழுமுதற் சிவபெருமானும் கலப்பால் எல்லா உயிருடனும் தனித்தனி வெவ்வேறாகக் காணப்படுவன். உடம்புதோறும் உயிர் தனித்தனி வெவ்வேறாம். ஆனால் அவ்வுடலகத்துக் காணப்படும் உயிர்தோறும் நீக்கமற விரவிநிற்கும் சிவபெருமான் ஒருவனே. அவன் கதிரவனைப்போல் உடம்பில் அடங்கான். அவன் உடம்பகத்தும் புறத்தும் யாங்கணும் எஞ்ஞான்றும் விரவி நிற்பன்.

"நீர்போலாம் ஆருயிர்கள் நீர்நிரப்பு சால்உடல்கள்
ஆர்கதிர்போன் றாண்டவனு மாம்."

என்பதனை நினைவுகூர்க. சால் - நீர்க்குடம்.

# 1966. தானே விரிசுடர் மூன்றுமொன் றாய்நிற்குந்

1966. தானே விரிசுடர் மூன்றுமொன் றாய்நிற்குந்
தானே யயன்மா லெனநின்று தாபிக்குந்
தானே யுடலுயிர் வேறன்றி நின்றுளன்
தானே வெளியொளி தானிருட் டாகுமே.

(ப. இ .) ஞாயிறு திங்கள் தீ என்னும் மூன்றும் தனித்தனியே ஒளிதரும் ஒளிப்பொருள்கள். அவை மூன்றும் சிவபெருமான் ஒளியினைப் பெற்றே ஒளி தருகின்றன. அம் மூன்றும் ஒருபடித்தாக நிற்கின்றன. அவற்றைச் சிவபெருமானே அயன் அரியாக நின்று ஆக்கியும் நிறுத்தியும் அருளுகின்றனன். அச் சிவபெருமானே உடலுயிர்களுடன் வேறற விரவி நின்றருள்கின்றனன். அச் சிவபெருமானே எல்லாவற்றுக்கும் புகலிடமாகவுள்ள வெளியாகவும் நின்றருள்வன். எல்லா வொளிகளையும் தொழிற்படுத்தும் மாறாப் பேரொளியாகவும் சிவபெருமான் நின்றருள்வன். அம்மட்டோ? இருளுக்கு ஓராற்றான் நிலைக்களமாய் நீக்கத் தொழிற்றுணையாய் நிற்பவனும் சிவனே. மருத்துவமனை உற்றவன், தீர்ப்பான், மருந்து, உழைச்செல்வான் என்னும் நால்வர்க்கே யுரியது. ஆனால் உற்றவனைப் பற்றிநிற்கும் நோய்க்கும் மருத்துவமனையே இடமாக நிற்கின்றது. அதுபோல் தூய சிவபெருமானும் மாறுபட்ட தீய இருளுக்கும் புகலிடமாக இருக்கின்றான். அப் புகலிடம் நீக்கப் புகலிடமேயாம். ஆடையில் தோயப்பெற்ற சாயத்துக்கு ஆடை நீங்காப் புகலிடம். ஆடையில் ஏறிய அழுக்கினுக்கும் ஆடை தாங்காப் புகலிடம். தாங்காப்

புகலிடமெனினும் நீக்கப் புகலிடமெனினும் ஒன்றே. இவற்றை உடம்பிற்பட்ட சந்தனமும் சாணகமும் போன்றும் கருதலாம். ஒருபுடை யொப்புமையாக இக் குறிப்பினைச் சிவபெருமானின் திருநீலகண்டம் விளக்குவதாகும். விண்ணோர் இருள்முனைப்பால் மிக்கெழுந்த நஞ்சு நெற்றிக், கண்ணோன் கறைமிடற்றிற் காண் என நினைப்போமானால் நன்கு புலனாகும்.

## 1967. தெய்வச் சுடரங்கி ஞாயிறுந் திங்களும்

1967. தெய்வச் சுடரங்கி ஞாயிறுந் திங்களும்
வையம் புனல்அனல் மாருதம் வானகஞ்
சைவப் பெரும்பதி தாங்கிய பல்லுயிர்
ஐவர்க் கிடமிடை யாறங்க மாகுமே.

தெய்வத் திருவருளால் ஒளிபெற்றுத் திகழ்ந்து சுடரும் தீ, ஞாயிறு, திங்கள், நிலம், புனல், அனல், மாருதமாகிய காற்று, வானம், சித்தாந்த சைவப்பெரு முதல்வனாகிய சிவபெருமானால் தாங்கப் பெறும் பலவுயிர், ஆகிய எட்டும் சிவபெருமான் தன்னை நினைக்கும் மெய்யன்பர்கட்கு வெளிப்பட்டு நின்றருளும் நிலைக்களங்களாகிய திருவுருவங்களாகும். மெய், வாய், கண், மூக்குச், செவி என்னும் ஐம்புலனிகழ்ச்சிக்கு உடம்பு நிலைக்களமாகும். இவையனைத்தும் உடம்பகத்துக் காணப்பெறும் மூலமுதலாக எண்ணப்பெறும் ஆறு நிலைக்களங்களின் இடையுமாகும். இடையென்பதற்கு முச்சுடர்க்குப் பின்னால் ஓதப்படும் ஆறுறுப்பு என்றலும் ஒன்று.

ஐவர் - பஞ்சேந்திரியம். இடை ஆறங்கம் - அங்கத்தின் நடுவேயுள்ள ஆறு ஆதாரங்கள்.

# 1968. உன்னும் அளவில் உணரும் ஒருவனைப்

1968. உன்னும் அளவில் உணரும் ஒருவனைப்
பன்னு மறைகள் பயிலும் பரமனை
என்னுள் இருக்கும் இளையா விளக்கினை
அன்ன மயமென் றறிந்துகொண் டேனே.

சிவபெருமான் 'அன்னியமின்றிச் செய்வோர் செய்திப் பயன் விளைத்துநிற்'பவன். அதனால், ஆருயிர்கள் அவனை நினைத்த அளவில் அவன் உணரும் ஒப்பில்லாதவனாகின்றனன். புகழ்ந்தெடுத்துச் சொல்லப்பெறும் செந்தமிழ்த் திருமாமறையினை ஆருயிர்களின் அகத்து நின்று பயிற்றுவிப்பவன் சிவபெருமான். அத்தகைச் சிறப்புவாய்ந்த அவன் என்னுள் எழுந்தருளியுள்ளான். என்னுள் நிலைத்துநிற்கும் சோர்விலாப் பேரொளிப் பெருவிளக்காக உள்ளவனும் அவனே. அவனது இயற்கைத் தன்மை பேரறிவுப் பெருந்தன்மையாகும். அவ்வுண்மையினை அவனருளால் அறிந்துகொண்டடேன். இக் குறிப்பு அன்னமயம் என்பதனால் பெறப்படும். அன்னம் 'நீரொழியப் பாலுண் குருகு' ஆதலால் அஃது அறிவின் நினைவுக் குறிப்பாகும்.

இளையா - சோர்வு படாத. அன்மையன் அன்றென்று - உடம்பினின்றும் வேறானவன் என்று.

# 1969. அன்ன மிரண்டுள ஆற்றங் கரையினில்

1969. அன்ன மிரண்டுள ஆற்றங் கரையினில்
துன்னி யிரண்டுந் துணைப்பிரி யாதன்னந்
தன்னிலை யன்னந் தனியொன்ற தென்றக்கால்
பின்ன மடவன்னம் பேறணுகா தன்றே.

ஆருயிரின் வாழ்க்கையை ஆற்றுநீருக்கு ஒப்பாகக் கூறுக. அது 'சிறைசெய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்' என்னும் மெய்கண்டார்தம் பொய்யில் தமிழால் விளங்கும். அத்தகைய வாழ்க்கை யுடலகத்து இரண்டு அன்னங்கள் துணைபிரியாதனவாய்த் துன்னி நிற்கின்றன. அவ் விரண்டனுள் ஒன்று தானே விளங்கும் பேரறிவுப் பெரும்பொருளாம் சிவபெருமான். மற்றொன்று சிவபெருமான் விளக்க விளங்கும் சிற்றறிவுச் சிறு பொருளாகிய உயிர். இவற்றை முறையே முற்றுணர்வுப்பொருள் சிற்றறிவுப்பொருள் எனவும் கூறலாம். வேறோராற்றான் விளக்கின் அறிவதும் அழுந்துவதும் என்றும் கூறலாம். அறிவது சிவபெருமான். அழுந்துவது ஆருயிர். ஒன்றே சிவமுதல்வன் உண்ணும் உயிர் பலவாம், அன்றே உளநீடமைவு என்பதனால் ஒன்றும் பலவுமாம் உண்மை உணர்க. அவ் வுயிராகிய அன்னத்திற்குத் தான் சிவபெருமானைவிட்டு நீங்கிநிற்கும் தனிமுதற்பொருள் என்று எண்ணுங்காறும் அச் சிவபெருமானை எய்தும்பேறு கிட்டாதென்க. தன்னிலை யன்னந்தனியொன்று என்றது ஒப்பில்லாத சிவபெருமான் தனி நிலைப்பட்டதொன்றாவன். அறியாமை வயப்பட்ட

ஆருயிர் மடவன்னம் என ஓதப்பெற்றது. ஈன்றாளும் கைம்மகவும்போல் தனித்திராமை துணைப் பிரியாமை.

ஆற்றங்கரை - உலக வாழ்வு. அன்னம் இரண்டு - சிவன், சீவன். துணைப்பிரியா - இரண்டும் தனித்து இரா. தன்மை - தன்னிலை. அன்னம் தனி ஒன்று - விகாரப்பாடில்லாத - ஒப்பற்ற பரமான்மா. பின்னது - இன்னொன்று. மடவன்னம் - அறியாமை நிறைந்துள்ள சீவான்மா. பேறணுகாது - தான் வேறு என்று எண்ணிக்கொண்டு இருக்கும் அளவும் முத்தி அடையாது. புருடன்

## 1970. வைகரி யாதியு மாயா மலாதியும்

1970. வைகரி யாதியு மாயா மலாதியும்
பொய்கரி யான புருடாதி பேதமும்
மெய்கரி ஞானங் கிரியா விசேடத்துச்
செய்கரி யீசன் அனாதியே செய்ததே.

ஆருயிர்கள் மலப்பிணிப்பினின்றும் நீங்கிச் சிவபெருமான் திருவடியின்பமாகிய நலப்பிணிப்புற்று வாழ்தற்பொருட்டு உள்ளதாகிய மாயையினின்றுந் தொன்மையிலேயே நால்வகை ஓசைகளையும், ஐவகை மலங்களையும், எழுவகை உணர்வுமெய்களையும், தோற்றுவித்து மெய்ப்பொருளாய்ச் சான்றாய் என்றும் நின்று விளக்கும் சிவபெருமான் பேரறிவுப் பெரும் பொருளாவன். அவன் தனது பேராற்றற் பெருந்திருவால் இவ்வனைத்தையும் ஆக்கி அருள்கின்றனன். அம் முறையாற் சிவபெருமான் இவையனைத்தும் தொழிற்படுத்தும் சான்றாவன் என்க. வைகரியாதி நான்கும்: செவியோசை, மிடற்றோசை, நினைவோசை, நுண்ணோசை என்ப. ஆணவம், கன்மம், மாயை, மாயைஆக்கம், மறைப்பாற்றல் என்பன ஐவகை மலங்களாகும். எழுவகை உணர்வுமெய்: மருள், காலம், ஊழ், உழைப்பு, உணர்வு, விழைவு, ஆள் என்பன.

வைகரியாதி - வைகரி முதலிய ஐந்து வாக்குகள். மாயா மலாதி - மாயை முதல் ஐந்து மலங்கள். புருடாதி - புருடன் முதலிய ஏழு தத்துவங்கள். மெய்கரி - பிறப்பை ஒழித்து நிற்கும். கரி ஈசன் - சாட்சியான சிவன்.

## 1971. அணுவில் அணுவினை ஆதிப் பிரானை

1971. அணுவில் அணுவினை ஆதிப் பிரானை
அணுவில் அணுவினை ஆயிரங் கூறிட்டு
அணுவில் அணுவை அணுகவல் லார்கட்கு
அணுவில் அணுவை அணுகலு மாமே.

அணுவாகிய ஆருயிர்க்கு உயிராய் நுண்ணியனாய் விளங்குபவன் ஆதியாகிய அம்மையையுடைய சிவபெருமான் ஆவன். அவனைத் திருவருளுணர்வால் அளவின்றி நுணுகி ஆராயவல்லார்கட்கு அணுவுக்கு அணுவாய்த் திகழும் சிவபெருமானை அணுகுவது கைகூடும். அணுகுவது - மாணடி சேர்வது.

# 1972. படர்கொண்ட ஆலதின் வித்தது போலச்

1972. படர்கொண்ட ஆலதின் வித்தது போலச்
சுடர்கொண் டணுவினைத் தூவழி செய்ய
இடர்கொண்ட பாச இருளற வோட்டி
நடர்கொண்ட நல்வழி நாடலு மாமே.

விழுது ஊன்றி விரிவாய்ப் படர்ந்திருக்கும் ஆலமரத்தின் தன்மை முற்றும் அதன் வித்தின்கண் அடங்கியிருப்பதுபோல், திருவருள் ஒளியினைக்கொண்டு அணுவாகிய ஆருயிர் உய்யச் செந்நெறியினைத் தம் திருவுள்ளத்தமைத்தனன் சிவன். அத் திருவருளின் துணையால் அந் நன்னெறியிற் சென்று எந்நாளும் துன்பத்தை மிகுவிக்கும் பாச இருளை முற்றாக ஓட்டுதல் வேண்டும். ஓட்டி அகத்தும் புறத்தும் ஐந்தொழிற்கூத்து இயற்றியருளும் திருவடிசேர் திருநெறியை நாடுவது நாடற்கரிய பெருநன்மையாகும்.

படர்கொண்ட ஆல் - விழுதுவிட்டுப் படருந் தன்மையுள்ள ஆலமரம். சுடர்கொண்டு - அருள் ஒளியினால். விடர்கொண்ட - அநாதியே பந்தித்துள்ள. நடர் - அம்பலக் கூத்தர்.

# 1973. அணுவுள் அவனும் அவனுள் அணுவுங்

1973. அணுவுள் அவனும் அவனுள் அணுவுங்
கணுவற நின்ற கலப்ப துணரார்
இணையிலி யீச னவனெங்கு மாகித்
தணிவற நின்றான் சராசரந் தானே.

மிகவும் நுண்மையாகிய அணுவாம் உயிரினுள் சிவபெருமானும், அச் சிவபெருமானிடமாக ஆருயிரும் வேறறக் கலந்து நிற்கும் கலப்புச் சொல்லொணாதென்க. ஆயினும் திருவருட்கண்ணால் அஃதுணர்தல்வேண்டும். அங்ஙனம் உணராதார் செந்நெறிக்குச் சேயராவர். சிவபெருமான் ஒப்பில்லாதவன். அவன் எங்கும் எல்லையின்றிக் கலந்து நிற்கின்றான். அம் முறையால் அவனே இயங்குதிணையும் நிலைத் திணையுமாகிய எல்லாப் பொருள்களுமென்று நல்லாரால் சொல்லப்படுகின்றனன்.

அவன் - சிவன். கணு - பேதம். தணிவு - எல்லை. சீவன்

## 1974. மேவிய சீவன் வடிவது சொல்லிடில்

1974. மேவிய சீவன் வடிவது சொல்லிடில்
கோவின் மயிரொன்று நூறுடன் கூறிட்டு
மேவிய கூறது ஆயிர மாயினால்
ஆவியின் கூறுநூ றாயிரத் தொன்றாமே.

'துறந்தார் பெருமை துணைக்கூறின் வையத்து, இறந்தாரை எண்ணிக்கொண்டற்று' என்பதுபோல ஆருயிரின் வடிவம் அளவிட்டுக் கூறவொண்ணாததாகும். அவ் வுண்மையினை ஒருவகையாக ஓதியருள்வாராயினர். உடல் கலன் உலகம் ஊண் முதலியவற்றுடன் பொருந்திய ஆருயிரின் வடிவினைக் கூறுவோமானால் பசுவினது மயிர் ஒன்றினை எடுத்து நூறுபங்கு செய்தல்வேண்டும். பின்பு அந் நூற்றினில் ஒன்றினை எடுத்து ஆயிரம் கூறுசெய்தல்வேண்டும். அந் நிலையில் ஏற்படும் ஒரு கூற்றினை நூறாயிரம் கூறுசெய்தால் எவ்வளவு ஏற்படுமோ அவ்வளவாகும் ஆருயிரின் வடிவமென்க. எனவே, ஆருயிர்க்கு வடிவமின்றென்னும் வாய்மையினை வனப்புற வகுத்து ஓதுவதிது.

கோ - பசு. ஆவி - சீவன்.

# 1975. உண்டு தெளிவன் உரைக்க வியோகமே

1975. உண்டு தெளிவன் உரைக்க வியோகமே
கொண்டு பயிலுங் குணமில்லை யாயினும்
பண்டு பயிலும் பயில்சீவ னார்பின்னைக்
கண்டு சிவனுருக் கொள்வர் கருத்துளே.

இயற்கையுணர்வும் முற்றுமுணர்தலும் ஒருங்கியைந்த தூய அறிவினையுடையவன் சிவன். அதனால் அவன் தெளிவினன் என்று ஓதப்படுகின்றனன். அவன் எல்லாவற்றுடனும் பிரிப்பின்றி நிற்கும் பெரியோன். அதனால் விட்டுப்பிரிந்து தனித்துநிற்கும் பண்பு அவன்பால் என்றும் இல்லை. ஆயினும், தொன்மையிலேயே அவனுடன் நீக்கமற நின்று அகத்தவம் பயின்றுவரும் ஆருயிர் பின்பு அவன் திருவருளால் அவன் திருவுருவினைக் காணும். காண்டலும் கருத்தகத்து அவன் திருவுருப்பெற்று இன்புறும்.

தெளிவன் - சிவன். பயில் சீவனார் - யோக நெறி பயின்ற சீவன்.

## 1976. மாயா வுபாதி வசத்தாகுஞ் சேதனத்

1976. மாயா வுபாதி வசத்தாகுஞ் சேதனத்
தாய குருவரு ளாலே யதில்தூண்ட
ஓயும் உபாதியோ டொன்றினொன் றாதுயிர்
ஆய துரியம் புகுந்தறி வாகவே.

ஆருயிர்க்கு மாயாகாரிய உடம்பு தடைபோன்றதாகும். அதனால் அதனை மாயாஉபாதி என்பர். அவ் வுடலகத்துப் புகுந்து நிற்கும் ஆருயிர் சேதனமாகிய அறிவுடையது. அவ் வறிவுடைய உயிரைத் தனக்கு உடலாகக்கொண்டு சிவபெருமான் சிவகுருவாக எழுந்தருள்வன். அச் சிவகுரு அகத்தவமாகிய யோகியரை அதன் மேனிலையாகிய அறிவுநிலைக்குத் தூண்டியருள்வன். அங்ஙனம் தூண்டவே யோகத்தடைகள் நீங்கும். அப்பொழுது ஆருயிர் உடல் கலன் உலகு உணா என்னும் நால்வகைப் பற்றினுள் ஒன்றினும் பற்றின்றி நான்காம் நிலையாகிய பேருறக்கத்தினை எய்தும். பேருறக்கம் எனினும். துரியநிலை எனினும் ஒன்றே. அந் நிலையினை எய்தித் திருவடியுணர்வாகவே நிற்கும். உபாதி - தடை.

சேதனத்தாய குரு - மானிட வடிவங்கொண்ட குரு. அதில் - யோகத்தில். ஓயும் - ஒழியும்.

பசு

## 1977. கற்ற பசுக்கள் கதறித் திரியினுங்

1977. கற்ற பசுக்கள் கதறித் திரியினுங்
கொற்ற பசுக்கள் குறிகட்டி மேயினும்
உற்ற பசுக்கள் ஒருகுடம் பால்போது
மற்றைப் பசுக்கள் வறள்பசுவாந் தானே.

மெய்யுணர்வுகளைத் திருவருளுணர்வால் கற்றுள்ள ஆருயிர்கள் அச் சிவபெருமானை நாடித்திரியும். அங்ஙனம் திரிந்தாலும், வெற்றியுடன் அறிவுவிளங்கும் கட்டுயிர்கள் குறிகட்டி மேய்ந்தாலும் சிவனைப் பொருந்திய உயிரினங்கள் ஒருகுடம் நிறைபால்போன் றின்ப நிலையினை எய்தும். இவற்றையொழிந்த ஏனையுயிர்கள் அறிவின்கண் வறுமையுற்றுத் திரியும். அதனால் அறிவில் குறைந்தவுயிர்களாகவே இருக்கும். வறள் - வெறுமை; வறுமை.

பசுக்கள் - மனிதர்கள். கொற்ற - மேம்பட்ட. குறி கட்டி - உருவ வழிபாடு செய்து. உற்ற - யோக நெறிப்பட்ட.

## 1978. கொல்லையின் மேயும் பசுக்களைச் செய்வதென்

1978. கொல்லையின் மேயும் பசுக்களைச் செய்வதென்
எல்லை கடப்பித் திறைவ னடிகூட்டி
வல்லசெய் தாற்ற மதித்தபின் அல்லது
கொல்லைசெய் நெஞ்சங் குறிப்பறி யாதே.

ஐம்புலக் காட்டினுள் தம்புலம் அறியாது மேயும் பசுக்களாகிய ஆருயிர்களை வருமாறு செய்வதன்றி வேறென் செய்வது? திருவருள் உடனாய் நின்று உடல் கலன் உலகூண் முதலியவற்றின்கண் வைத்துள்ள பற்றின் எல்லையினைக் கடப்பித்துத் திருவடியிற்கூட்டி இன்புறுவிக்கும் அச் செயலே நல்லதாகிய வல்ல அருஞ்செயல் செய்வதாகும். அத் திருவருள் அவ்வாறு செய்தருளத் திருவுள்ளங்கொண்ட பின்புதான் பண்படா விளைநிலமாகிய ஐம்புலக் கொல்லையினை இவ்வாறு செய்யும் திருக்குறிப்பினை ஆருயிர்கள் உணர்தல்கூடும். அதற்குமுன் ஏதும் அறியா இயல்பினவாகும்.

கொல்லை - ஐம்புலக்காடு. வல்ல - சக்தியுள்ளதாக. போதன்

# 1979. சீவ னெனச்சிவ னென்னவே றில்லை

1979. சீவ னெனச்சிவ னென்னவே றில்லை
சீவ னார்சிவ னாரை யறிகிலர்
சீவ னார்சிவ னாரை யறிந்தபின்
சீவ னார்சிவ னாயிட் டிருப்பரே.

யாண்டும் பிரிப்பின்றிக் கலப்பால் ஒன்றாய் நிற்கும் சிவபெருமானும் ஆருயிரும் ஒன்றைவிட்டொன்றகன்று ஒன்றைத் தனித்துக் காணுதல் இயலாது. அஃது இடமும் இடத்து நிகழ்பொருளும் போல் கலந்து காண்பதன்றித் தனித்துக் காண இயலாத தன்மையினை யொக்கும். அம்முறையால் 'சீவனெனச் சிவனென்ன வேறில்லை' என்றதாகும். அதுவே அன்றிப் பொருளால் ஒன்றென்றதன்று. ஆருயிர் திருவருள் துணையில்லாமல் சிவனாரை அறியமாட்டா. இஃது ஒளியுடைக்கண் கதிரின் துணையின்றிக் கதிரவனைக் காணாமையை ஒக்கும். திருவருளால் ஆருயிர் பேருயிர்ஆம் சிவனாரை அறிந்தபின் ஆருயிர் பேருயிராகிய சிவனார் திருவடியில் அடங்கிச் சிவனாகவே இருந்து இன்புறும்.

# 1980. குணவிளக் காகிய கூத்தப் பிரானும்

1980. குணவிளக் காகிய கூத்தப் பிரானும்
மனவிளக் காகிய மன்னுயிர்க் கெல்லாம்
பணவிளக் காகிய பல்தலை நாகங்
கணவிளக் காகிய கண்காணி யாமே.

பேரின்பப் பேரொளியாய் என்றும் நின்று விளங்கும் கூத்தப்பெருமானும், மனமாகிய விளக்கினையுடைத்தாயுள்ள நிலைபெற்ற ஆருயிர்கட்கெல்லாம் கண்காணியாவன். ஈண்டு மனமெனப்படுவது இறுப்புமெய்யாகிய புத்திதத்துவமாகும். ஐந்தலை அரவின் படத்தின்கண் விளக்கந்தரும் மணிகள் உள்ளன. அவ் அரவின் கூட்டங்களைத் தன்னகத்துக்கொண்டு விளங்கும் சிவபெருமான் கூட்டமாகிய ஒளி விளக்கினன் எனப்படுவன். அவன் அறிவுக்கண்ணால் காணப்படும் கண்காணியாவன். கண் - கண்ணால். காணி - காணப்படுவது. காணி என்பதற்குக் காண்பது எனவும் பொருளுண்டு எனினும் ஈண்டுக் காணப்படுவது என்பது. இதுபோல் ஈண்டு மனமும் இறுப்பு மெய்யாகிய புத்தியினையே குறிக்கும். இக் கருத்துப்பற்றியே ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பிய முனிவனாரும், மரபியல் இருபத்தேழாம் நூற்பாவின்கண் "....ஆறறி வதுவே அவற்றொடு மனனே" என்று ஓதினர். ஆண்டும் 'மனன்' என்பது புத்தியினையே குறிக்கும். மனம் ஏனைச் சிற்றுயிர்க்கும் விளக்கமெய்தும். ஆனால் பகுத்தறிவாகிய புத்தியின் சிறந்த விளக்கம் மக்களுயிர்க்கே உண்டு. கண்காணி: பழஞ்சொல்.

குண விளக்கு - ஆனந்த ஒளி பணம் - படம். கணம் - கூட்டம்.

# 1981. அறிவாய் அறியாமை நீங்கி யவனே

1981. அறிவாய் அறியாமை நீங்கி யவனே
பொறிவாய் ஒழிந்தெங்குந் தானான போதன்
அறிவா யவற்றினுட் டானா யறிவன்
செறிவாகி நின்றஅச் சீவனு மாமே.

முழுமுதற் சிவபெருமான் இயல்பாகத் தானே விளங்கும் பேரறிவாகவுள்ளவன். இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய
வன். பொறிவாயில் ஐந்தவித்தலாகிய பொய்தீர் ஒழுக்கமென்னும் பொருண்மை நிலையிலாப் பொறிகளின் வாயிலாகவன்றி நிலையுள்ள அறிவின் வாயிலாகக் காண்பது என்பதாகும். இவ் வுண்மை "கேளாதே எல்லாங் கேட்டான்" என்னும் செந்தமிழ்த் திருமாமறை முடிவினால் நன்குணரலாம். எனவே சிவபெருமான் பொறிவாயிலின்றியே அறிவினால் எல்லாம் உணர்வன். அறிவிக்க அறிவாய் விளங்கும் ஆருயிரின் அறிவிற்கு அறிவாய் நின்று அறிவித்தும் அறிவன். அம் முறையில் கலப்பால் ஒன்றாய்நிற்கும் ஆருயிர் அந் நிலையில் சிவனாகவும் நிற்கும். அதுபோல் பேருயிராகிய சிவபெருமானும் ஆருயிராகவும் நிற்பன். எழுத்தறிவிக்குங்கால் ஆசான் மாணவனின் கையைப் பிடித்து எழுதுவிப்பன். அப்பொழுது மாணவன் கை ஆசான் கையுளடங்குவதால் ஆசான் கையாகவும் கூறப்படும். அதுவே இதற்கு ஒப்பு.

எங்கும் தானான போதன் - சிவன். செறிவாகி - கலந்து.

## 1982. ஆறாறின் தன்மை அறியா திருந்தேனுக்கு

1982. ஆறாறின் தன்மை அறியா திருந்தேனுக்கு
ஆறாறின் தன்மை அறிவித்தான் பேர்நந்தி
ஆறாறின் தன்மை அருளால் அறிந்தபின்
ஆறாறுக் கப்புற மாகிநின் றானே.

அருஞ்சைவர் தத்துவம் (2139) முப்பத்தாறும் இன்னின்ன என்னும் மெய்ம்மை அறியாதிருந்த அடியேனுக்கு மிகவும் சிறந்த நந்தி யெம்பெருமான் திருவருளால் அறிவிற்கறிவாய் நின்று அறிவித்தருளினன். அம் முப்பதாறின் தன்மைகளைத் திருவருளால் அறிந்த பின் அம் முப்பத்தாறு மெய்களுக்கும் அப்பால் நின்றருள்பவன் சிவபெருமானாவன் என்னும் மெய்ம்மை புலப்பட்டதென்க.

## 1983. சிவமா கியஅருள் நின்றறிந் தோரார்

1983. சிவமா கியஅருள் நின்றறிந் தோரார்
அவமா மலமைந்து மாவ தறியா
தவமான செய்து தலைப்பறி கின்றார்
நவமான தத்துவ நாடகி லாரே.

அருஞ்சைவர் தத்துவம் (2139) முப்பத்தாறும் உணர்ந்தவரே பிறப்பற்றவராவர். ஆருயிர்களைப் பேருயிராகிய சிவமாம் பெரு வாழ்வில் சேர்ப்பிக்கும் திருவருளின்கண் உறைத்து நின்று உண்மை உணர்வோர் அரியர். அதனால் 'அறிந்தோரார்' என வினவுவாராயினர். கொள்கை எனவோ சமயம், மதம் எனவோ கூறிக்கொள்வோர் நிலைமையனைத்தும் அவரவர்கள் மேற்கொள்ளும் தத்துவத்தளவிலேயே நிலைபெறும். எல்லா வுயிர்களையும் பிணித்துப் பிறப்பு இறப்பாகிய அவத்தொழிலில் படுத்தும் மலங்கள் ஐந்தென்ப. இம் மலங்கள் ஐந்தானும் நிகழ்த்துவிப்பன எதுவாயினும் வீணாகிய அவம் என்றே சொல்லப்படும். இவ் வுண்மையினைப் பலர் அறியார். பிறப்புநிலையினை நால்வகையாகக் கூறுவர். அவை விலங்கு, மக்கள், தேவர், நரகர் என்பன. இவற்றுள் எறும்பு முதல் யானை யீறாகிய ஐயறிவு உயிர்கள் அனைத்தும் விலங்கு என்ற பகுப்பில் அடங்குவனவாகும். ஆறறிவுயிர் மக்களாவர். மக்களில்
நல்வினைத் துய்ப்பினர் தேவராவர். மக்களில் தீவினைத் துய்ப்பினர் நரகராவர. இந் நான்கு நிலையினையும் மா,

மக்கள், இன்பி, துன்பி எனக் கூறலாம். இன்பியாகிய தேவர்நிலையினை அவாவித் தவம் புரிவாரும் உளர். அத்தகையோர் செய்யும் தவம் பிறப்பினைத் தருவதேயாகும். அது பசித்துண்டு பின்னும் பசிப்பான் நிலையினையொக்கும். இத்தகைய தவத்தினைச் செய்து மீண்டும் பிறப்பினை எய்தித் துன்புறுவாரும் பலர். அவர்களையே 'தலைப்பறிகின்றார்' என்றருளினர். இத்தகையார் தாங்கள் தங்கள் கொள்கையில் கேட்டறியாத புதுமையும் மேன்மையும் சிறந்த தத்துவங்களை நாடுந் தன்மையிலாராவர்.

(.அ. சி.) தலைப்பறிகின்றார் - மீண்டும் பிறக்கின்றவர்கள். நவமான - மேலான.

## 1984. நாடோறும் ஈசன் நடத்துந் தொழில்உன்னார்

1984. நாடோறும் ஈசன் நடத்துந் தொழில்உன்னார்
நாடோறும் ஈசன் நயந்தூட்டல் நாடிடார்
நாடோறும் ஈசன்நல் லோர்க்கருள் நல்கலால்
நாடோறும் நாடார்கள் நாள்வினை யாளரே.

பொழுதுவிடிவதும் பொழுதுமுடிவதும் உயிரினை ஈர்ந்து செல்லும் வாளின் ஈாப்புக்கணக்கென எண்ணாதவர் தங்கட்கு நாள் இன்பமாகக் கழியாநின்றதென எண்ணும் அறியாமைமிக்க நாள் வினையாளராவர். இவர்களையே திருவள்ளுவநாயனார் 'ஆசையுட்பட்டு அவஞ்செய்வார்' என்றருளினர். அத்தகைய நாள் வினையாளர்கள் ஒவ்வொரு நாளும் சிவபெருமான் செய்தருளும் ஐந்தொழிலின் அருமைகளை நினையார். ஒவ்வொரு நாளும் அச் சிவபெருமான் வினைப் பயன்களைப் பிறழா நிகழ்ச்சியாக ஆருயிர்களை ஊட்டும் அருளினையும் நாடார். ஒவ்வொரு நாளும் திருவருளால் செவ்விவாய்ந்த நல்லுயிர்க்குத் திருவடியுணர்வை நல்கி ஆட்கொள்ளும் முறைமையினையும் நாடார். ஆட்கொள்ளப்பட்டோர் நல்லார் என்று அழைக்கப்படுவர். இவர்களே சீவன்முத்தர். சீவன்முத்தரெனினும் சிறப்பினர் எனினும் ஒன்றே.

# 1985. ஆக மதத்தன ஐந்து களிறுள

1985. ஆக மதத்தன ஐந்து களிறுள
ஆக மதத்தறி யோடணை கின்றில
பாகனு மெய்த்தவை தாமும் இளைத்தபின்
யோகு திருந்துதல் ஒன்றறி யோமே.

மிக்க மதத்தை உடையனவாகிய களிறுகள் உடம்பகத்து ஐந்துள. அவை செவி, மெய், நோக்கு, நாக்கு, மூக்கு என்பன. இவற்றையே நாயனார் 'உரன் என்னும் தோட்டியான் ஓரைந்துங் காப்பான், வரனென்னும் வைப்பிற்கோர் வித்து' என வாய்மொழிந்தனர். அவை அடங்கா மதங்கொண்டிருப்பதால் கந்தாகிய கட்டுத் தறியில் அணைகின்றில. ஈண்டுச் சிவபெருமானைக் கட்டுத்தறியாக உருவகித்தனர் அவற்றின்வழியே சென்று அவற்றைவழியே சென்ற அவற்றைக் கைக்கொண்டுள்ள பாகராகிய ஆருயிர்களும் இளைத்தன. அக் களிறுகளும் அலைந்து அலைந்து எய்த்தன. இந்நிலையில் சிவபெருமான் திருவருளால் அகத்தவமாகிய யோகுதிருந்துதல் என்னும் பொருந்துநிலையொன்று ஏற்பட்டது. அதுவே அப் புலன்களாகிய யானைகளைக் கட்டுத்தறியாகிய சிவத்தின் பால் அணைத்தலாகும். இஃதல்லாது வேறொன்றும் யாம் அறியோம் என்க. மேலும் 1995இல் ஓதும் அஞ்சும் அடக்கும் முறைமையும் இதுவேயாம்.

ஆகமதத்தன - மதத்தன ஆக. ஆகமதத்து - உன்மத்தமாக. தறி - சிவன். பாகன் - ஆன்மா.

# 1986. கருத்தினன் னூல்கற்றுக் கால்கொத்திப் பாகன்

1986. கருத்தினன் னூல்கற்றுக் கால்கொத்திப் பாகன்
திருத்தலும் பாய்மாத் திகைத்தன்றிப் பாயா
எருத்துற வேறி யிருக்கிலு மாங்கே
வருத்தினும் அம்மா வழிநட வாதே.

ஆருயிர்களின் ஐம்புலன்களை மதமாவாக உருவகிப்பது போல் மனத்தைத் தேராகவும் உயிர்ப்பைப் பாய்மாவாகவும் உருவகிப்பர். உயிர்ப்புப் பயிற்சியினை உரைக்கும் திருமந்திர முதலிய தமிழாகமங்களை நன்கு கற்று அப் பாய்மாவினைச் செலுத்துமுறையாகிய அகத்தவப் பயிற்சியில் ஆருயிர் முயலுதல் வேண்டும். அவ்வுயிர்ப்பாகிய பாய்மாவும் முதற்கண் வருத்தமுற்றன்றித் திருத்தமுறா. இம் முறையானன்றி அப் பாவமாவாகிய உயிர்ப்பினை எருத்தத்து ஏறி இருப்பினும், வருத்தி வழி நடத்தினும் அம்மா வழி நடவாதென்க. இது முறையறியாது யோகம் பயில்வார் உயிர்ப்பினை மடுத்தலும் விடுத்தலும் ஒடுக்கலும் செய்து நன்மை எய்தாது தீமை எய்தித் துன்புறுவார் நிலையினைக் குறிப்பிப்பதாகும். பாய்மா - குதிரை. அம்மா - அக் குதிரை. இதனை யானையாகவே கொண்டு பொருள் கூறுதலு மொன்று. யானையாகக் கூறுங்கால் பாய்மா - மதம் பாய்கின்ற மா எனக் கூறுக. யோகப்பயிற்சியின்றி ஐம்புலன்களை அடக்குவது முடியாததொன்று. அவ்வியானைகளும் வருத்தமுறாமல் வழிக்கு வருவதில்லை. அதன்எருத்தத்து ஏறியிருப்பினும் வருந்திச் செலுத்தினும் வழிநடவாதென்க. எருத்தம்; கழுத்து; பிடர்; ஈண்டு முதுகின்மேற்று.

கால் கொத்தி - பிராணவாயுவை அடக்கி. திகைத்தன்றி - வருத்தப்பட்டல்லாமல். அம்மா - அந்த இந்திரியங்களாய யானைகள்.

# 1987. புலமைந்து புள்ளைந்து புட்சென்று மேயும்

1987. புலமைந்து புள்ளைந்து புட்சென்று மேயும்
நிலமைந்து நீரைந்து நீர்மையும் ஐந்து
குலமொன்று கோல்கொண்டு மேய்ப்பான் ஒருவன்
உலம்வந்து போம்வழி யொன்பது தானே.

செவி, மெய், நோக்கு, நாக்கு, மூக்கு ஆகிய அறிதற்கருவிக்கு நிலைக்களமாகிய பொறிகள் ஐந்து; அவை ஈண்டுப் புலமென ஓதப்பெற்றன. அவற்றினிடமாக நின்று புலன்களை ஏற்றுக் கொள்ளும் இந்திரியங்களாகிய புலன்கொளி ஐந்து. அவையும் செவி மெய் நோக்கு நாக்கு மூக்கென நவிலப்படும். அவை ஈண்டுப் புள்ளென்று உருவகிக்கப்பட்டன. அப் புட்கள் சென்று நுகர்வதாகிய மேயப்படும் புலம் ஐந்து. அவை ஈண்டு நிலமென உருவகிக்கப்பட்டன. அவை ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்பன. அவற்றிற்குரிய பண்புகளும் ஐந்து. அவை கேட்டல், உறுதல், காண்டல், சுவைத்தல், முகர்தல் என்பன. இவையே நீர் எனக் குறிக்கப்பட்டன. இப் பயன்களை அப் புட்கள் நுகரும். அதுவே அப் புட்கள் சென்று மேயும் தொழில்களுமாகும். அத் தொழில்களே ஈண்டு நீர்மை எனக் குறிக்கப்பெற்றன. இவ் வைந்தும் தொழிலால் வேறுபடினும் அறிவிலுறும் பயனால் ஒன்றுபடுதலின் குலம் ஒன்றேயாம். மேய்க்குங் கோலாகிய அறிவினைக்கொண்டு மேய்ப்போனாகிய ஆருயிர் உடம்புகள்தோறும் தனித்தனி ஒன்றேயாம். மிகவும் அலைவுற்றுப் போகும் வழி ஒன்பது என்க.

அவ்வொன்பதும் உடலகத்துக் காணப்படும் தொளைகள். அவற்றுள் இரண்டு வாயில்கள் எனவும் ஏழு சாலேகம் எனவும் கூறப்படும். வாயில்கள் இரண்டும் முறையே உணவு உட்புகும் வழியும் சக்கை வெளிக்கழியும் வழியும் என்க. சாலேகம் ஏழும் முறையே காதிரண்டு, கண்ணிரண்டு, மூக்கிரண்டு. கருவாய் ஒன்று என்பன. சாலகம்: சாலேகம்; சாளரம்; சன்னல். மேய்ப்பானைப் பேருயிராகிய சிவனெனக் கொள்ளின் மாடு மேய்ப்பவன் போன்று மேய்த்தற்றொழில் ஒன்று மட்டும் அவன்பாலுளதாகும். அம் மாட்டின் பயனைத் துய்ப்பார் அம் மாட்டுக்கு உரியவராதல்போன்று பொறிகளின் பயனைத் துய்ப்பார் அப் பொறிகளைச் சுமந்து நிற்கும் ஆருயிர்கள் என்க. மேலதனை வரும் வெண்பாவால் நினைவுகூர்க.

"பொறியே புலனாம்புள் ளிந்திரியம் புள்மேய்
நெறியே சுவைநிலனாம் நீர்தான் - அறியின்
நிலப்பண்பாம் புட்டொழிலும் நீர்மையாம் ஐந்தும்
புலம்புள்நிலம் நீர்நீர்மை போற்று."

புள் - ஆன்மா. நிலம் - சுவை முதலிய ஐந்து. நீர்மை - இந்திரிய வியாபகம். மேய்ப்பான் - சிவன். வழிஒன்பது - நவத்துவாரம்.

## 1988. அஞ்சுள சிங்கம் அடவியில் வாழ்வன

1988. அஞ்சுள சிங்கம் அடவியில் வாழ்வன
அஞ்சும்போய் மேய்ந்துதம் அஞ்சக மேபுகும்
அஞ்சின் உகிரும் எயிறும் அறுத்திட்டால்
எஞ்சா திறைவனை எய்தலு மாமே.

உடம்பாய தத்துவக் காட்டகத்துப் புள்ளியாகிய இந்திரியங்கள் அரிமாவாக உருவகிக்கப்பட்டன. அவை அக் காட்டகத்து வாழ்கின்றன. அவையும் ஐந்தே. அவ் வைந்தும் புறமே சென்று புறப் பொருள்களை நுகர்ந்து பின்பு அகம் வந்து சேரும். அவ் வரிமாவாகிய ஐந்து சிங்கத்தின் கூரிய நகத்தினையும் பல்லினையும் திருவருளால் அறப்போமானால் உறுதியாய்ச் சிவபெருமான் திருவடியிணையை எய்துதல் கூடும். இருள்முனைப்பால் இயற்றப்படும் நல்வினைக்குக்
கருவியாக அவ் வைம்பொறிகள் அமையும்போது அவை கூரிய நகமாகவும், தீவினைக்குக் கருவியாக அமையும்போது நச்சுப் பல்லாகவும் அமைத்தறிதல் வேண்டும். அவ்விரண்டும் இறைபணிக்கு அமையுங்கால் முறையே விரல்நுதிக் காவலாகவும் சுவைப்பொருள் சுவைக்குந் துணையாகவும் சொற்பொருள் உரைக்கும் பொற்பாகவும் அமைகின்றன.

இவ்வுண்மை,

"மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
ஆயவா றுயிரின் மேவும் மருளெனில் இருளாய் நிற்கும்
மாயைமா மாயை மாயா வருமிரு வினையின் வாய்மை
ஆயவா றுயிரின் மேவும் அருளெனில் ஒளியாய் நிற்கும்."

- சிவப்பிரகாசம், உண்மை - 20.
நகமும் பல்லும் இருள்முனைப்புச் செயற்குக் கருவியாங்கால் நல்வினைக்காம் நகம் நன்றல் வினைக்குப்பல், அல்முனைப்பால் ஆற்று செயற் கங்கு என்ப.

சிங்கம் - இந்திரியம். உகிர் - நகம் (செல்லுதல்) எயிறு - பல் (பற்றுதல்).

# 1989. ஐவர் அமைச்சருள் தொண்ணூற் றறுவர்கள்

1989. ஐவர் அமைச்சருள் தொண்ணூற் றறுவர்கள்
ஐவரு மைந்தரு மாளக் கருதுவர்
ஐவரு மைந்து சினத்தொடே நின்றிடில்
ஐவர்க் கிறையிறுத் தாற்றகி லோமே.

'ஆகின்ற தொண்ணூறோடாறும் பொது என்பர்' (2139) ஆதலின் அத் தொண்ணூற்றாறு மெய்களும் ஐவர் அமைச்சர் ஆவர். மற்றைய மெய்கள் 'வாயின் மிலேச்சர், சாரணர், தூதர், சூத மாகதர், புரோகிதர்' முதலாயினரும்; இவுளி மறவர், யானையவீரர், தறுகணாளர், மள்ளர், தந்திரத் தலைவர் முதலாயினாரும்; 'உறுதிச் சுற்றத்தாரும்' பிறரும் ஆவர். இவ் வைவரும் மெய் வாய் கண் மூக்குச்செவி யென்னும் அறிதற்கருவி ஐந்தும் என்ப. இவ் வைவரும் தாங்கள் நுகரவேண்டிய முறையே உள்ள ஊறு, சுவை, ஒளி, நாற்றம், ஓசை என்பனவற்றை உண்டு முடிக்கக் கருதுவர். அவற்றின் எண்ணப்படியே விட்டால் அந் நுகர்வு எல்லையின்றிச் செல்லும். அவ் வைவரும் வலிமை மிக்க சினத்துடன் இருப்பரானால் அவர்கட்கு இறை இறத்தலாகிய புலன்களைத் தொகுத்துக் கொடுத்தல் என்றும் நம்மால் முடியாத தொன்றாகும். இறையிறுத்தல்: ஓவாது கொடுத்து நிறைத்தல். ஐவர்க்கு இறை என்பதை மனமெனக் கொண்டு அம் மனம் அவ் வைம்புலனையும் விரும்பியவாறு நாம் செல்ல இடங்கொடுத்துவிட்டால் மனம் விரும்பிய நுகர்வுகளைத் தேடிக் கொடுப்பது நம்மால் முடியாத தொன்றாகும். அவ்

வுண்மை:

"பூக்கைக் கொண்டரன் பொன்னடி போற்றிலார்
நாக்கைக் கொண்டரன் நாம நவில்கிலார்
ஆக்கைக் கேயிரை தேடி யலமந்து
காக்கைக் கேயிரை யாகிக் கழிவரே."

அப்பர். 5. 90 - 5.

என்னும் அப்பர் பெருமான் அருளிய ஒப்பில் பொருள் மறையான் உணர்க. அரன்நாமம் - 'நவசிவய'

தொண்ணூற்றறுவர் - 96 புறத் தத்துவங்கள். ஐந்தரு - அஞ்சு விடயங்கள். ஐவர்க்கு இறை - மனம்.

# 1990. சொல்லகில் லேன்சுடர்ச் சோதியை நாடொறுஞ்

1990. சொல்லகில் லேன்சுடர்ச் சோதியை நாடொறுஞ்
சொல்லகில் லேன்திரு மங்கையும் அங்குள
வெல்லகில் லேன்புலன் ஐந்துடன் தன்மையுங்
கொல்லநின் றோடுங் குதிரையொத் தேனே.

திருவருள் நலத்தால் ஒவ்வொருநாளும் இயற்கை உண்மை அறிவு இன்பப் பெருஞ்சுடராகிய சிவபெருமானைத் திருமுறை வழியாகப் பொருள்சேர் புகழ் புகன்று இருள் நீங்கி அருள்தாங்கித் தொழுககில்லேன். 'குவளைக் கண்ணி கூறன் காண்க' எனத் தொழுவார் கண்முன் 'அவளும் தானும் உடனே காண்க' என்னும் மெய்ம்மையால் அருளாற்றலாகிய திருமங்கையும் அங்குத் தோன்றியருள்வள். அதனால் அவளும் அங்குளள் என ஓதப்பெற்றனள். அவளையும் அதுபோல் தொழும் ஆற்றல்பெற்றேன் அல்லேன். அதனால் ஐம்புலன்களையும் அவற்றுடன் விட்டுப் பிரிவின்றி ஒட்டிச்செல்லும் மனத்தையும் வெல்லும் ஆற்றல் பெற்றிலேன். அதனால் தன்மேல் ஊர்வாரைப் போர்முனையில் வீழ்த்தி இறப்புத் துன்பத்தை எய்துவிக்க நினைக்கும் போர் முறை கல்லாப் பொல்லா. மாவைச் சார்ந்தாரை ஒத்துளேன்.

திருமங்கை - அருட்சத்தி. தன்னை - மனத்தை.

## 1991. எண்ணிலி யில்லி யுடைத்தவ் விருட்டறை

1991. எண்ணிலி யில்லி யுடைத்தவ் விருட்டறை
எண்ணிலி யில்லியோ டேகிற் பிழைதரும்
எண்ணிலி யில்லியோ டேகாமை காக்குமேல்
எண்ணிலி யில்லதோர் இன்பம் தாகுமே.

விளக்கமாகத் தெரியும் ஒன்பது தொளைகளேயன்றி மயிர்க்கால்கள் அனைத்தும் தனித்தனிக் கட்புலனாகா நுண்தொளைகள் ஆகும். அதனால் இவ் வுடல் அளவிடமுடியாத தொளைகளையுடையதாகும். அம்மட்டுமன்று; எளிதிற் போக்கமுடியாத ஆணவவல்லிருள் நிறைந்த பாழறையுமாகும். ஆங்குக் காணப்படும் அளவிலாத் தொளைகள் வழி ஐவரும் மனமும் அடுத்தடுத்துச் செல்லுவாராயின் பிறப்பு இறப்புக்கு உட்படும் துன்பமாகிய பிழையினையே தருவர். திருவருளால் மனத்தினை அடக்கி ஐம்புலனையும் திருவடித்தொண்டில் ஈடுபடுத்துதல் வேண்டும். அங்ஙனம் ஈடுபடுத்தினால் அவை அத்தொளைகள்வழி வீணாகப் புறஞ்செல மாட்டா. அம் முறையொன்றே
அவற்றைப் புறஞ்செல்லாமற் காப்பதாகும். அப்படிக் காப்போமானால் மாற்றம் மனம் அளவை எல்லாவற்றையும் கடந்த எண்ணிலியாகிய சிவபெருமானின் எங்கும் இல்லாத அளவிடப்படாத பேரின்பம் இறவாத இன்ப அன்பின் பெறுபேறாக வந்துறும். இதுவே 'அஞ்சும் அடக்கா வகை அறிந்தேனே' (1995) என்பதன் செம்பொருள். 'அடக்கா' செய்யா என்னும் வாய்பாட்டு வினைஎச்சமாகக் கொள்க.

எனவே, அடக்கி இறைபணியிற் செல்லுதல் என்பதாகும். அடக்கா - அடக்கி.

இல்லி - துளை. இருட்டறை - சரீரம். எண்ணிலி - அளவிடப்படாதவனான. சிவன் இல்லது - துவாதசாந்தம்.

## 1992. விதியின் பெருவலி வேலைசூழ் வையந்

1992. விதியின் பெருவலி வேலைசூழ் வையந்
துதியின் பெருவலி தொல்வான் உலகம்
மதியின் பெருவலி மானுடர் வாழ்க்கை
நிதியின் பெருவலி நீர்வலி தானே.

கடலாற் சூழப்பட்ட இந் நிலவுலகம் இருவினைக்கீடாக அவ் வினைப்பயன் துய்க்கும் நிலைக்களமாகவும், இருவினை ஒருவாது புரியும் பெருநிலமாகவும் சிவபெருமான் திருவுள்ளத்தால் படைக்கப்பட்டதாகும். அதனால் அது 'விதியின் பெருவலி' என்று ஓதப்பெற்றது. இவ் வுலகில் முழுமுதலாகிய சிவபெருமானை, 'பொதுநீக்கித் தனை நினைய வல்லாரா'தல் வேண்டும் என்னும் திருமுறையின்படி தொழுது அதன் பெறுபேறு துய்க்கும் இடமாகவுமுள்ளது வானுலகம் எனப்படும் சிவவுலகம். மக்கள் வாழ்க்கை அம்மை அப்பராம் செம்பொருளைச் செம்பொருட்டுணிவாம் செந்நெறியின்வழித் தொழுது பணிசெய்யும் மெய்யுணர்வின் வலியால் சீர்சிறப்பினை எய்தும். இவற்றிற்கு ஒப்புப் பெருங்கடலின் பெருவலியனைத்தும் அதன் நீர் வலியால் நிறைவது போன்று ஆகும். சங்கு, முத்து, பவழம் முதலிய விலை வரம்பில்லாப் பொங்குபொருள் உடைத்தாகையால் கடல் நிதியென்று ஓதப்பட்டது. அப் பெருமையும் அதற்கு மழைநீரால் வருவதாகும். அதனால் நீர்வலி என்பதற்கு மழைநீர் வலி என்பதும் ஒன்று. இவ் வுண்மை: "நெடுங்கடலும் தன்நீர்மை குன்றும் தடிந்தெழிலி

தான்நல்கா தாகி விடின்"

- திருக்குறள், 17.

என்னும் செந்தமிழ்ப் பொதுமறையான் உணர்க.

நிதி - சமுத்திரம்.

## 1993. குட்ட மொருமுழ முள்ள தரைமுழம்

1993. குட்ட மொருமுழ முள்ள தரைமுழம்
வட்டம் அமைந்ததோர் வாவியுள் வாழ்வன
பட்டன மீன்பல பரவன் வலைகொணர்ந்து
இட்டனன் யாமினி யேதமி லோமே.

ஒருமுழ ஆழமும் அரைமுழப் பரப்பும் உள்ளதாகிய வட்டமாக அமைந்ததொரு முகஞ்சேர் நீர்நிலையொன்று உடம்பகத்துக் காணப்பெறும். அந் நீர்நிலையுள் வாழ்வன புலன்களாகிய மீன்கள் பல. நம்முள் நின்று நம்மை யியக்கும் திருவருளால் நாம் சிவனைப் பொது நீக்கித் தொழுதனம். அதனால் சிவபெருமான் அம் மீன்களைச் செம்மைப்படுத்தச் செம்பரவனாகத் தோன்றியருளினன். கடலில் வலைவீசி மீன் படுத்து மருளினன். அதனால் அம் மீன்கள் செம்மைக்குத் துணையாயின. அதனால் நாம் ஐம்புலப்புன்மைத் துன்பத்தினின்று நீங்கிச் சிவஇன்ப நினைவில் தூங்கினோம் என்க. தூங்குதல் - ஆழ்தல்; அழுந்தல். ஐம்புலன் அடக்குமுறைமை ஆண்டவனை வழிபடும் முறைமையேயாம். பரவன்: பரதவன்.

## 1994. கிடக்கும் உடலிற் கிளரிந் திரியம்

1994. கிடக்கும் உடலிற் கிளரிந் திரியம்
அடக்க லுறுமவன் தானே யமரன்
விடக்கிரண் டின்புற மேவுறு சிந்தை
நடக்கின் நடக்கும் நடக்கு மளவே.

அனைத்துயிரும் நன்னெறி எய்தும்பொருட்டுச் சிவபெருமானால் அமைத்தருளப்பட்ட உடம்பின்கண் காணப்படும் பொறிகள் அந் நன்மைக்குத் துணையாகவே அமைக்கப்பட்டன. மலச்சார்பினால் அவைகள் தீயவழிகளில் கிளர்கின்றன. அவ் வழியில் நாமும் சென்று விடாது நலச்சார்பால் 'தம்மை ஐந்து புலனும் பின்செல்லும் தகையினராய்' ஒழுகுதல் வேண்டும். அங்ஙனம் ஒழுகுதலாவது தம்மைச் சிவபெருமான் திருவடிக்கே ஒப்புவித்து மீளா அடிமையாய் வாழ்தல். இதுவே புலனடக்கமாகும். இத்தகைய புலனடக்கமுள்ளவரே புலவராவர். அப் புலவரால் விரும்பப்படுபவரே அமரராவர். அமரர் - விரும்பத்தக்கவர். அமர்வு - விருப்பம். உடம்பாகிய விடக்கின்கண் அருந்தல் பொருந்தல்களாகிய இரண்டின்பத்தினும் ஈடுபாடுற்று உள்ளம் சென்று நடந்தால் உயிர்ப்பு வீணாகும். அவ் வுயிர்ப்பு நடக்கும் வரை உடலும் நடக்கும்.

விடக்கு - உடல். இரண்டு - அருந்தல், பொருந்தல்.
கடக்குமளவு - பிராணவாயு இயங்கும் வரை.

## 1995. அஞ்சு மடக்கடக் கென்பர் அறிவிலார்

1995. அஞ்சு மடக்கடக் கென்பர் அறிவிலார்
அஞ்சு மடக்கும் அமரரும் அங்கிலை
அஞ்சு மடக்கில் அசேதன மாமென்றிட்டு
அஞ்சு மடக்கா அறிவறிந் தேனே.

புலனடக்கம் என்பது அவற்றைத் தீயவழியிற் செலுத்தாது (1993) தூயவழியிற் செலுத்துதலேயாம். இவ் வுண்மை திருவருளால் செந்நெறிச் செல்வார்க்கே தெளியவரும். ஏனையார் எல்லாம் பொறிபுலன்களைச் செயலறச் செய்தலே அடக்குதலென்பர். அத்தகையோர் அறிவிலாராவர் என ஓதியருள்கின்றனர். சிவவுலகத்தாரும் சிவனைத் தொழும் இறைபணியில் நிற்பாராவர். அதனால் அஞ்சும் அடக்கிய அமரரும் அங்கில்லை என்றனர். ஐம்புலனையும் செயலறச் செய்தலாகிய அடக்குதலைச் செய்தால் அதனகத்துத் தங்குமுயிர் அறிவற்ற கற்போன்றாகும். அஃது ஈண்டு 'அசேதனம்' எனக் கூறப்பட்டது. அதனால் அஞ்சினையும் அடக்காமல் அடக்கிச் சிவ வழிபாட்டில் செலுத்தும் அறிவுவழியிற் றிருப்பும் அறிவறிந்தேனென்க. அசேதனம் - அறிவில்லது. சேதனம் - அறிவுள்ளது. 'அடக்கா' என்பது செய்யா என்னும் வினை எச்சமாகக் கொண்டு அடக்கி (வாழும்) வகை அறிந்தேன் எனக் கொள்க. வாழும் என்பது அவாய் நிலையாய் இடைப் பிற வரலாய் வந்தது. அடக்குதல் சிவனடியார் திருக்கூட்டத்துள்ளும்

சிவபெருமான் திருவடிக்கண்ணும் (1985) ஒல்லும் வகை ஓவாது செலுத்தி உய்யும் நன்னெறிக்கண் ஒழுகுதல்.

அஞ்சு - பஞ்சேந்திரியங்கள்.

## 1996. முழக்கி யெழுவன மும்மத வேழம்

1996. முழக்கி யெழுவன மும்மத வேழம்
அடக்க அறிவென்னுந் தோட்டியை வைத்தேன்
பிழைத்தன வோடிப், பெருங்கேடு மண்டிக்
கொழுத்தன வேழங் குலைக்கின்ற வாறே.

ஐம்புலன்களாகிய மும்மதவேழம் காவலைக் கடந்து முழக்கி எழுவவாயின. அவற்றை அடக்குதற்கு அறிவென்னும் தோட்டியினை அகத்துக் கொண்டுள்ளேன். அவ் வேழம் அத் தோட்டியினையும் கைந்நீவித் தப்பியோடின. அங்ஙனம் ஓடினமையால் நீக்க முடியாத பெருங்கேடுகள் பெருகுவவாயின. அக் கேட்டால் அவ் வேழங்கள் கொழுப்பெய்தின. அதனால் அவ் வேழங்கள் நம்முடைய நன்மைகளையெல்லாம் குலைக்கின்றன. குலைத்தல் - கெடுத்தல். அறிவென்னும் கோட்டையை என்னும் பாடத்திற்கு அவ் வேழங்கள் வரம்பை மீறாமலிருப்பதற்கு அமைக்கப்பட்ட அறிவுக்கோட்டை என்க. நீவி - கடந்து.

மும்மத வேழம் - இந்திரியம். பிழைத்தன - தவறு செய்தன. மண்டி - நிறைந்து. குலைக்கின்ற - அறிவை அழிக்கின்ற.

## 1997. ஐந்தில் ஒடுங்கில் அகலிட மாவது

1997. ஐந்தில் ஒடுங்கில் அகலிட மாவது
ஐந்தில் ஒடுங்கில் அருந்தவ மாவது
ஐந்தில் ஒடுங்கில் அரன்பத மாவது
ஐந்தில் ஒடுங்கில் அருளுடை யாரே.

ஐம்புலன்களும் திருவைந்தெழுத்து என்னும் சிறந்த தவத்தினால் ஒடுங்குதலாகிய நல்வழிப்பட்டால் விரிந்த இவ் வுலகம் சிவவுலகமாய்ச் சீர்சால் இன்பம் பயக்கும். மேலும் அந்நிலையே 'சிவத்தைப்பேணில் தவத்திற் கழகு' என்னும் நற்றவமும் ஆகும். அதுவே அரனார் திருவடிப்பேறுமாகும். அந்நிலை மெய்யாக எய்தினவர்களே எய்யாத் திருவருளுடையாராவர். எய்யாத் திரு - குறையாத செல்வம்.

# 1998. பெருக்கப் பிதற்றிலென் பேய்த்தேர் நினைந்தென்

1998. பெருக்கப் பிதற்றிலென் பேய்த்தேர் நினைந்தென்
விரித்த பொருட்கெல்லாம் வித்தாவ துள்ளம்
பெருக்கிற் பெருக்குஞ் சுருக்கிற் சுருக்கும்
அருத்தமும் அத்தனை ஆய்ந்துகொள் வார்க்கே.

மிகுதியாகப் பன்னிப்பன்னிப் பேசி ஆகும் பயன் என்! கானல்நீர் போல் தோன்றி மாயும் உலகம் எனக் கட்டுரைத்தும் ஆவதென்? மாயாகாரியமாக விரித்தமைத்த சுட்டுப் பொருள்களுக்கு எல்லாம் துணைக்காரணமாக நிற்பது உளளமேயாம். உள்ளம் காரியப் பாட்டினைப் பெருக்கி விரியுமேயானால் பெருகுவதாகும். அம் மனமானது அக் காரியப்பாடுகளைச் சுருக்கிச் சுருங்குமேயானால் அவையும் சுருங்கும். எனவே மனத்தை அடக்கிச் சிவவழிபாட்டிற் செலுத்தி வாழ்வதே உண்மைப் பொருளாகும். இவ் வுண்மையினைத் திருவருளால் ஆய்ந்துகொள்வார் அதனை நன்குணர்ந்தாராவர்.

பேய்த்தேர் - கானல். அருத்தம் - பொருள். அத்தனை - அவ்வளவு.

# 1999. இளைக்கின்ற வாறறிந் தின்னுயிர் வைத்த

1999. இளைக்கின்ற வாறறிந் தின்னுயிர் வைத்த
கிளைக்கொன்று மீசனைக் கேழல் புகழோன்
தளைக்கொன்ற நாகமஞ் சாடல் ஒடுக்கத்
துளைக்கொண்ட தவ்வழி தூங்கும் படைத்தே.

ஆருயிர்களின் புலம்புநிலையில் - அவ் வுயிர்கள் மலப்பிணிப்பால் வாடிவதங்குவதாகிய இளைப்பினை எய்துவவாயின.
அதனைத் திருவருட்கண்ணால் கண்ணுற்றுப் பேரருள் புரிவித்தனன் சிவன். அஃது என்னவெனின்? மேன்மேலும் பெருகும் சிவப்பேற்றினில் திளைக்குமாறு செய்யும் பேரருளாகும். அங்ஙனம் செய்தருளியவன் என்றும் ஒருபடித்தாய்க் கேடின்றி நின்று நிலவும் மாறில் பெரும்புகழ் சேர் சிவபெருமானாவன். கட்டுப்பாடு எய்திய நாகமாகிய விந்துவினால் 'பொறிவாயில் ஐந்தவித்தல்' என்னும் அஞ்சாடல் அடங்கும். அவை அடங்கவே உயிர்ப்பு நடுநாடி வழியில் தங்கும். உயிர்ப்புத் தங்கவே விந்துவும் மேன்மேலும் கட்டுற்று உயரும்.

இனனுயிர் - கருணை, தளைக்கொன்ற - கட்டிய, நாகம் - விந்து. அஞ்சாடல் ஒடுக்க - பொறி வாயில் ஐந்தவிக்க. துளை . . . . . . . தூங்கும் - சுழுமுனையில் பொருந்தும்.

## 2000. பாய்ந்தன பூதங்கள் ஐந்தும் படரொளி

2000. பாய்ந்தன பூதங்கள் ஐந்தும் படரொளி
சார்ந்திடு ஞானத் தறியினிற் பூட்டிட்டு
வாய்ந்துகொள் ஆனந்த மென்னும் அருள்செய்யில்
வேய்ந்துகொள் மேலை விதியது தானே.

பூதங்களாகிய புலன்கள் ஐந்தும் புறத்துப் பாயும் இயல்பின. அதனால் அவை பாய்ந்தன. அப் பாய்வினைத் திருவருளால் அகற்றிச் சாரப்படும் என்றும் பொன்றாத் திருவடியுணர்வாகிய கட்டுத்தறியில் இணைத்துப் பூட்டுவதாகும். இணைத்துப் பூட்டுவதென்பது 'சிவசிவ' என்னும் செந்தமிழ் முந்துமறையினை நந்தாதெண்ணும் நலவழிபாடாகும். அந் நெறியிற் சென்றார்க்குச் சிவபெருமான் சிறந்ததாக ஆய்ந்து கொள்ளப்பெற்ற திருவடிப்பேரின்பம் என்னும் பெரும் பேரருளினைச் செய்தருள்வன். அங்ஙனம் செய்தருளின் அதுவே சிறந்ததாகிய திருவடிப் பேற்றின் பெருவாழ்வு முறைமையுமாகும். இஃது ஐம்புலனையும் அடக்கிக்கொள்ளும் முறைமையால் எய்துவதென்க.

விதி - முறை. படர்க்கின்ற - படர்கின்ற.

## 2001. நடக்கின்ற நந்தியை நாடோறு முன்னில்

2001. நடக்கின்ற நந்தியை நாடோறு முன்னில்
படர்க்கின்ற சிந்தையைப் பைய வொடுக்கிக்
குறிக்கொண்ட சிந்தை குறிவழி நோக்கில்
வடக்கொடு தெற்கு மனக்கோயி லாமே.

எல்லாம் எளிதாகவும் இனிதாகவும் இயல்பாகவும் நடக்குமாறு திருவுள்ளத்தால் திருவருள்புரியும் நந்திக்கடவுளை ஒவ்வொருநாளும் அதன் அமர்ந்த அன்பினராய் இரவும் பகலும் இகவாது நினைத்தல்வேண்டும். அங்ஙனம் நினைத்தால் எங்கும் பரந்து செல்லும் உள்ளத்தை மெள்ள ஒடுக்கும் தன்மை அருளால் வாய்க்கும். வாய்க்கவே சிவகுருவால் செவியறிவுறுத்தப்பெற்ற குறியாகிய திருவைந்தெழுத்துத் திருமறையினைக் கணித்தல் கைகூடும். வட பெருங்கல்லும் தென்பெருங் கடலும் நடங்கொள் இடமாகக் கொண்டருளும் சிவபெருமான் திருவைந்தெழுத்து எண்ணுபவர் சிந்தையே திருக்கோயிலாகக் கொண்டருள்வன். செவியறிவுறூஉ உபதேசம்.

பைய - மெதுவாக. குறிவழி - உபதேசப்படி.

## 2002. சென்றன நாழிகை நாள்கள் சிலபல

2002. சென்றன நாழிகை நாள்கள் சிலபல
நின்றது நீள்பொருள் நீர்மேல் எழுத்தொத்து
வென்று புலன்கள் விரைந்து விடுமின்கள்
குன்று விழவதில் தாங்கலு மாமே.

வாழ்நாள்கள் நாழிகை, நாள், திங்கள், ஆண்டு முதலிய பெயர்கொண்டு சிலபல சென்றன. நெடுநாள் நிற்கும் பொருள்போல் காணப்படும் 'இவ் வுடல் நீர்மேல் எழுத்துப் போன்று சடிதின் மறையும் தன்மைத்தாய் நின்றது. திருவருளால் புலன்களை அடக்கி விரைந்து வேட்கையினை விட்டு அகலுங்கள். அகன்றால் குன்றுபோல் காணப்படும் புறப்பொருள்கள்மேற் செல்லும் பொறிகளைத் தடுத்தலுமாகும். குன்று உவமையாகு பெயராகப் பொருள்களை - விடயங்களைக் குறிப்பதாயிற்று. தாங்கல் - தடுத்தல்.

பொருள் - உடல். விடுமின்கள் - அடக்குங்கள். குன்று....... தாங்கல் - விடயங்களிற் செல்லாமல் தடுத்தல்.

## 2003. போற்றிசைத் துப்புனி தன்திரு மேனியைப்

2003. போற்றிசைத் துப்புனி தன்திரு மேனியைப்
போற்றிசெய் மீட்டே புலனைந்தும் புத்தியால்
நாற்றிசைக் கும்பின்னை யாருக்கு நாதனை
ஊற்றுகை யுள்ளத் தொருங்கலு மாகுமே.

தூயோனாகிய சிவபெருமான் திருமேனியைப் போற்றிசைத்துத் தொழுங்கள். சிவனினைவாகிய சிறந்த அறிவினால் புலன்களைப் புன்னெறியதனிற் செல்லும் போக்கினை விலக்கி மேலாம் நன்னெறியொழுகச் செய்யும் பெருநலம் வாய்க்கும். அந்நலத்தால் நாற்றிசைக்கும் முன்னையும் பின்னையுமாக விளங்கும் அனைத்துயிர்க்கும் முழு முதல்வன் சிவன். அவனே நாதனாகவும் விளங்குவன். அச் சிவபெருமானைத் திருவடி இன்ப ஊற்றமிழ் துண்டாம் நெஞ்சகத்துக் கண்டு தொழுக; அதனால் அவன் திருவடிக்கண் ஒடுங்குதலும் நிலை பெறும் என்க. நாதன் - மெய்க்குரவன்.

ஊற்றுகை - அமிர்தப் பெருக்கு ஒருங்கல் - ஒடுங்குதல்.

## 2004. தரிக்கின்ற நெஞ்சஞ் சகளத்தி னுள்ளே

2004. தரிக்கின்ற நெஞ்சஞ் சகளத்தி னுள்ளே
அரிக்கின்ற ஐவரை யாரும் உணரார்
சிரிக்கின்ற வாறு சிலபல பேசில்
வரிக்கொண்ட மைசூழ் வரையது வாமே.

சிவபெருமான் தூமாயையை நிலைக்களமாகக்கொண்டு திருவருளின்கண் திருமேனிகொண்டருள்வன். இது சிவனடியார் திருநீற்றுத் திருமேனியுடன் திருக்கோயிலின்கண் சிவபெருமான் திருமுன் வீற்றிருப்பதை ஒருபுடையொக்கும். திருக்கோயில் தூமாயையாகவும், திருவெண்ணீறு திருவருளாகவும், உடம்பு சிவபெருமானாகவும் ஒப்பமைத்துக்கொள்க. இக் குறிப்பே 'அந்த வுடம்பு தன்னுடனே அரனார் மகனார் ஆயினார்'1 எனவும், 'ஊனுடம்பு வேறு செய்தான் நொடித்தான்மலை உத்தமனே' எனவும் கூறிப் போந்த திருமுறைத் திருவருண்மொழிகளால்' பெறப்படும் பேருண்மையும் ஆகும். சிவபெருமான் கொண்டருளும் அருள் திருமேனியைச் சகளம் என்பர். சகளம் - நிலைக்களம்; சிவக்கொழுந்து. அச் சிவக்கொழுந்தினிடத்து அன்புடையார் நெஞ்சம் தங்கி இன்புறுகின்றது. அதற்கு இடையூறாகப் புறப்பொருளில் ஈர்த்துத் தீரா, இடையூறிழைக்கும் ஐம்புல அரிப்பினை யாரும் உணரார். எள்ளி நகையாடுதற்குரிய சில பல சிரிப்புமொழிகளைப் பேசி யாவதென்? உறுதியாக நின்று நம்மைப் பிறவித் துயருட்படுத்துவது மேகம் சூழ்ந்த

கருவரையனைய ஆணவ வல்லிருளேயாம் என்க.
அரித்தல் - துன்புறுத்தல்.

## 2005. கைவிட லாவதொன் றில்லை கருத்தினுள்

2005. கைவிட லாவதொன் றில்லை கருத்தினுள்
எய்தி யவனை யிசையினால் ஏத்துமின்
ஐவ ருடைய அவாவினில் தோன்றிய
பொய்வ ருடைய புலன்களும் ஐந்தே.

மேலோதியவாறு ஆணவ வல்லிருளுக்கு அஞ்சிச் சிவவழிபாட்டைக் கைவிடுவதால் ஆவதொன்றில்லை. ஆணவ வல்லிருளை வெல்லுவதே சிவராத்திரிச் சிவவழிபாடாகும். உள்ளத்துள்ளே உறைந்து உணர்வினில் ஒளிர்ந்து உடம்பெல்லாம் விளங்கும் சிவபெருமானைத் திருமுறைத் திருப்பண்ணால் வழிபடுங்கள். இசையினால் என்பதற்கு இசைமை இசை என நிற்பதாகலின் செந்தமிழ்த் திருமுறையே சிவபெருமான் திருவடியில் ஆருயிர்களை இசைவிக்கும் அருமறை எனக் கூறுதலும் ஒன்று. அது, "வீடும் ஞானமும் செந்தமிழ் தரும்" என்பதனால் விளங்கும். ஐம்புல ஆசையினால் தோன்றிய நிலைபேறில்லாத மலையாட்டை ஒக்கும். அப் புலன்கள் பற்றும் பொருள்களும் நிலைபேறில்லன. அவையும் புலன்கள் என்றே சொல்லப்படும். அப் புலன்களும் ஐந்தேயாம். அவை, சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் (1987) என்னும் ஐந்துமேயாம்.

இசை - பண். பொய் வருடைய - அறியாமைமிக்குள்ள மலையாட்டை ஒத்த.

## 2006. உணர்வொன் றிலாமூடன் உண்மையோ ராதோன்

2006. உணர்வொன் றிலாமூடன் உண்மையோ ராதோன்
கணுவின்றி வேதா கமநெறி காணான்
பணிவொன் றிலாதோன் பரநிந்தை செய்வோன்
அணுவின் குணத்தோன் அசற்குரு வாமே.

சிவகுரு எழுந்தருளிவந்து ஆருயிர்களை ஆட்கொள்ளும் நல்வழியாம் திருநெறிக்கு வழித்துணையாக நிற்பவன் குலகுரு அவனே குலதெய்வம். இவ் வுண்மை! திருஞானசம்பந்தப்பெருமானாராம் சிவகுரு எழுந்தருளப் பாண்டிமன்னனுக்கும் பாண்டி நாட்டிற்கும் வழித்துணையாக நின்றவர் மங்கையர்க்கரசியாராம் குலகுரு அவரே குலதெய்வம். இவ் வுண்மை சேக்கிழாரடிகள் அருளிய "மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம்"1 என்ற மறை மொழியான் உணரலாம். குலகுரு வென்பார் திருக்கோவில் வழிபாடு செய்வாரும், சிவதீக்கை செய்விப்பாருமேயாவர். அவர்கள் செம்மையாளராக இருத்தல் வேண்டும். அத்தகைய பெருநிலைக்குப் பொருந்தாத் திருந்தாமாக்களாவார் சிவ உணர்வென்பது ஒரு சிறிதும் இல்லாத மூடன்; முப்பொருள் உண்மையாம் மெய்ம்மை உணராதோன்; அருமறையாம் திருவைந்தெழுத்துபதேசக் கணுவின்றியுள்ளோன். செந்தமிழ் வேதாகமநெறி காணாதவன்; தாழ்வெனும் தன்மையாம் அன்பும் பணிவும் ஒரு சிறிதும் இல்லாதோன்; சிவபெருமானையும் சித்தாந்த சைவத்தையும் இகழ்வோன்;

பிறப்பு இறப்புக்கு உட்படுத்தும் ஆணவச் செருக்குடையோன் ஆகிய தன்மையாளராவர்.

## 2007. மந்திர தந்திர மாயோக ஞானமும்

2007. மந்திர தந்திர மாயோக ஞானமும்
பந்தமும் வீடுந் தரிசித்துப் பார்ப்பவர்
சிந்தனை செய்யாத் தெளிவியா தூண்பொருட்டு
அந்தக ராவோர் அசற்குரு வாகுமே.

மந்திரமாகிய மறைமொழி யுண்மையும், அதனைப் பொருண்மையுடன் விளக்கும் செந்தமிழ்ச் சிவாகம உண்மையும், அவ வழியாகப் பயிலும் செறிவுநிலையாம் யோகமும் அறிவுநிலையாம் ஞானமும், இவற்றால் நீங்கவேண்டிய பிறப்பும் ஓங்கவேண்டிய சிறப்புமாம் பந்தம் வீடும் திருவருளால் கண்டு காட்டுந் தன்மை வாய்ந்த நல்லார்பால் உபதேசம் பெற்று அவர் வழி நிற்றலே குலகுருவென வெளிப்போதற்குத் தகுதியாம் ஒளிச்சிறப்பென்க. அவ்வொளியே பார்ப்பவரைச் சிவமாக நினைக்கத்தூண்டும். தெளியப் பணிக்கும். இவை யொன்றும் இன்றி வயிற்றுப்பிழைப்பின் பொருட்டுப் போலியாகக் குருக்கள்கோலம் பூண்டும் க்ஷசாமல் திருக்கோயில் வழிபாடுசெய்ய முன்வந்தும் திரியும் வஞ்சகர், அறிவிலாராவர். அந்தகர் - அறிவிலாதார, குருடர் இத்தகையார் நாணமிலாதவராகலின் அகக்கண்ணே அன்றிப் புறக்கண்ணும் குருடராவர்.

ஊண்பொருட்டு - வயிற்றுப் பிழைப்பிற்கு. அந்தகராவோர் - அழகிய குருபீடத்தில் அமர்வோர்.

## 2008. ஆமா றறியாதோன் மூடன் அதிமூடன்

2008. ஆமா றறியாதோன் மூடன் அதிமூடன்
காமாதி நீங்காக் கலதி கலதிகட்கு
ஆமா றசத்தறி விப்போன் அறிவிலோன்
கோமா னலனசத் தாகுங் குரவனே.

பிறப்பற்றுச் சிறப்புறுதற்காம் வழிவகைகளை அறியாதோன் ஆமாறறியாதோனாவன். அவனையே மூடன் என்று சொல்லும் உலகம். காமம் வெகுளி மயக்கம் முதலிய குற்றம் நீங்கா வீணர்கள் - பாவிகள் அதிமூடராவர். அத்தகைய பெரும்பாவிகளை ஒத்தவனே பொய்ப்பொருளை மெய்ப்பொருளென அறிவிக்கும் அறிவிலாக் குருக்கள். அஃதாவது (1995) செத்துச் செத்துப் பிறக்கும் மால் முதலிய சிறு தெய்வங்களையும், கோள்களையும், அவற்றிற்குப் பெருமை தரும் மறைகளையும், அவற்றைக் கொண்டாடும் ஆசிரியர்களையும் நன்கு மதித்து வழிபடும் அவரே போலிக் குருக்கண்மார் ஆவர். அந்தோ இவர்கள் தாம் கெடுவது மட்டுமல்லாமல் பிறரையும் வழிபடுவித்துக் கெடுக்கின்றனர். என்னே கொடுமை! இவர்மாட்டுக் கழிவிரக்கங்கொண்டு நம் அப்பர்பெருமான் கூறும் அருள்மொழி வருமாறு:

"எரிபெ ருக்குவ ரவ்வெரி யீசன்
துருவ ருக்கம தாவ துணர்கிலார்
அரிய யற்கரி யானை அயர்த்துப்போய்
நரிவி ருத்தம தாகுவர் நாடரே."

- அப்பர். 5 - 100 - 7.

அவன் குலகுருவாம் பெருமையுடையவனாகான். அவன் உண்மைக்கு மாறாகிய பொய்க்குரவனாவன.

கலதி - பாவி. அசத்து - பொய்ப்பொருள். கோமானலன் - பெருமையுடையவன் அல்லன்.

## 2009. கற்பாய கற்பங்கள் நீக்காமற் கற்பித்தால்

2009. கற்பாய கற்பங்கள் நீக்காமற் கற்பித்தால்
தற்பாவங் குன்றுந் தனக்கே பகையாகும்
நற்பால் அரசுக்கு நாட்டுக்கும் கேடென்றே
முற்பாலே நந்தி மொழிந்துவைத் தானே.

குலகுருவாய் வருவார் வீண்நினைப்பாய் நினைவுகளைத் தோன்றும் போதே துடைத்துவிடாமல் முறுகவிடுவாராகார். அங்ஙனம் பயனில் நினைவுகளை விடாமல் நினைப்பார் கற்பித்தலாகிய உபதேசத்தைப் புரிந்தால் அதனை ஏற்றுக்கொள்ளும் ஆருயிரும் தன் தன்மையாகிய அறிவுநிலையிற் கெடும். அவ் வுயிரின் செந்நெறி முன்னேற்றத்திற்கு அதுவே பகையாகும். அறமுறை தவறாது நற்பான்மையோடு ஆட்சி புரியும் வேந்தனுக்கும் அந் நாட்டுக்கும் நீங்காக் கேடே நாளும் ஓங்கும். இவ் வுண்மையினை நந்திமுதல்வர் (98; 99) தொன்மையிலேயே திருவாணை மொழிந்து தேற்றியருளினர்.

கற்பங்கள் - சங்கற்பங்கள் (எண்ணங்கள்), தற்பாவம் ஆன்ம அறிவு.

## 2010. குருடர்க்குக் கோல்காட்டிச் செல்லுங் குருடர்

2010. குருடர்க்குக் கோல்காட்டிச் செல்லுங் குருடர்
முரணும் பழங்குழி வீழ்வர்கள் முன்பின்
குருடரும் வீழ்வர்கள் முன்பின் னறவே
குருடரும் வீழ்வார் குருடரோ டாயே.

புறக்கண் குருடராக இருப்பவரும் அகக்கண்ணாகிய அறிவு நாட்டமுடையாரும் ஒரு குருவை நாடுவர். அக் குருவாய் வருவார் புறக்கண் உள்ளாராய் நல்லொழுக்க முதலிய அகக்கண் குருடராய் உள்ளவரும் கோலத்தால் குருவாய் வெளிப்படுவர். இவ் விருதிறத்தாரும் ஒருவகையான் முழுக்குருடரே யாவர். அக் குருக்கள் கோயில் வழிபாடாம் கோலைக் காட்டி மெய்யுணர்வுக்குத் துணைபுரிவது போல் விளம்புவர். அவர் பொய்ம்மையை அறியாது மெய்ம்மையெனக் கொண்டு வழிபட்டால் இருவரும் பிறப்பு இறப்புக்களாகிய முரண்பட்ட பாழ்ங்குழியில் முன் பின்னாக வீழ்வர். இயற்கைக் குருடராகிய உயிர்களும் செயற்கைப் பாவக்குருடர்களாகிய குருடருடன் வீழ்ந்து அகக்கண்ணும் குருடராய்க் கழிவர்.

முரணும் - மாறுபட்ட. பழங்குழி - பாழ்ங்குழி. முன்பின் அற - முன்பின் என்று இல்லாது.

## 2011. தாடந் தளிக்குந் தலைவனே சற்குரு

2011. தாடந் தளிக்குந் தலைவனே சற்குரு
தாடந்து தன்னை யறியத் தரவல்லோன்
தாடந்து தத்துவா தீதத்துச் சார்சீவன்
தாடந்து பாசந் தணிக்கு மவன்சத்தே.

சிவகுருவாக எழுந்தருளி வந்து தலையளிபுரியும் சிவனும் அதற்கு வழித்துணையாக நிற்கும் குலகுருவும் கருத்தில் ஒருவரேயாவர். சிவபெருமானின் திருவடியிணையினைத் தந்தருள்பவனே மெய்க்குரவன். மெய்க்குரவன் எனினும் சற்குரு எனினும் ஒன்றே. திருவடியிணையினைத் தந்தருளித் தன்னையும் உண்மையாக அறிவிப்பவன் மெய்க்குரு. தாளை அருளித் தத்துவாதீதமாகிய அப்பால் நிலைக்கண் ஆருயிரைச் சாரச்செய்பவன் குரு திருவடியினைத் தந்தபின் பாசந் துடைத்தருள்வன். அவன் என்றுமுள்ள மெய்ப்பொருளாவான். சத்து - மெய்ப்பொருள்.

## 2012. தவிரவைத் தான்வினை தன்னடி யாரீகோள்

2012. தவிரவைத் தான்வினை தன்னடி யாரீகோள்
தவிரவைத் தான்சிரத் தோடுதன் பாதந்
தவிரவை தான்நமன் தூதுவர் கூட்டந்
தவிரவைத் தான்பிற வித்துயர் தானே.

சிவகுருவாக எழுந்தருளிய சிவன் ஆருயிர்கட்கு அளித்தருளும் அருளிப்பாடுகள் பலவாம். அவை வருமாறு: தன்னடியார்
களின் வினைகளை நீங்க அருளினன். தன்னடியார்கட்குக் கோள்கள் துன்புறுத்தாமல் அவர் ஏவும் தொழிலை இயற்ற அருளினன். நமனின் தூதுவர்கூட்டம் நணுகாது விலகவைத்தனன். பிறவிப்பெருந்துயர் நீங்க வைத்தனன்.

தவிர - ஒழிய. கோள் - குற்றம். சிரத்தோடு - சிரசின் மேல்.

## 2013. கறுத்த இரும்பே கனகம தானான்

2013. கறுத்த இரும்பே கனகம தானான்
மறிந்திரும் பாகா வகையது போலக்
குறித்தஅப் போதே குருவருள் பெற்றான்
மறித்துப் பிறவியில் வந்தணு கானே.

கருமைநிறம் வாய்ந்த இரும்பு வேதிப்பான் தொழிலால் செம்பொன்னாகும். அங்ஙனம் செம்பொன்னானபின் மீண்டும் இரும்பாகாது. அவ்வகைபோன்று செவ்விவாய்ந்தபொழுது சிவகுரு எழுந்தருள்வன். குறித்த அப்பொழுதே குருவருள் கிட்டும். அக் குருவருள் பெற்றவன் மீண்டும் பிறவிப்பெருங்கடலில் வந்து பொருந்தான்.

## 2014. பாசத்தை நீக்கிப் பரனோடு தன்னையும்

2014. பாசத்தை நீக்கிப் பரனோடு தன்னையும்
நேசத்து நாடி மலமற நீக்குவோர்
ஆசற்ற சற்குரு வாவோர் அறிவற்றுப்
பூசற் கிரங்குவோர் போதக் குருவன்றே.

திருவருளால் சிவபெருமானுடன் தன்னையும் அன்பினான் ஆராய்ந்து அருளால் பாசத்தை நீங்கியவரும், ஏனையார்க்கும் அவ்வருளாலேயே மலமற நீக்குபவர் மெய்க்குரவராவர். அங்ஙனமன்றி நல்லறிவு சிறிதுமில்லாது மாயப்போக்கு மனமிரங்கும் - கோழையாகும் புல்லியராவர். அவர் ஒருஞான்றும் மெய்யுணர்வுக் குரவராகார்.

பூசற்கு - கலகத்துக்கு.

## 2015. நேயத்தே நிற்கும் நிமலன் மலமற்ற

2015. நேயத்தே நிற்கும் நிமலன் மலமற்ற
நேயத்தை நல்கவல் லோனித்தன் சுத்தனே
ஆயத்த வர்தத் துவமுணர்ந் தாங்கற்ற
நேயர்க் களிப்பவன் நீடுங் குரவனே.

இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய முழுமுதற்சிவன் அன்பரது அன்பகத் தாமரையில் அருளால் பிணைந்து நிற்பன. குற்ற
மற்ற தன்னை மெய்யன்பர்கட்குச் சுற்றமாகக் கொடுத்தருளும் துணைவன். என்றும் அழியா நிலைமையன். இயற்கைத் தூய்மையன். சிவமெய்யடியார் கூட்டத்துத் திருவருளால் கூடி மெய்யுணர்வு கைவரப் பெற்றவர் தத்துவம் உணர்ந்தோராவர். அவரே மலப்பகை யற்றவருமாவர். அத்தகையோர் பேரன்பினராவர். அவர்க்குத் திருவடிப்பேறளிப்பவனே நிலைபெற்ற மெய்க்குரவனாவன்.

நேயம் - சிவநெறி. ஆயத்தவர் - சிவனடியார் கூட்டத்தில் இருப்பவர். அற்ற நேயர் - ஆசை அற்ற அடியார்.

## 2016. பரிசன வேதி பரிசித்த தெல்லாம்

2016. பரிசன வேதி பரிசித்த தெல்லாம்
வரிசை தரும்பொன் வகையாகு மாபோற்
குருபரி சித்த குவலயம் எல்லாந்
திரிமலந் தீர்ந்து சிவகதி யாமே.

பொன்னாக்கு மருந்து பரிசனவேதி எனப்படும். இதனைப் பொன்னாக்குவது எனப் புகலினும் பொருந்தும். பண்டையோர் இதனைக் குளிகை என்றனர். அக் குளிகை உலகியற்பொருள்களில் இயைபுடைய பொருள்கள் எல்லாவற்றினும் பட்ட அளவானே அவை முற்றும் பொன்னாகிவிடும். அதுபோல் மெய்க்குரவனாகிய சிவகுரு தொட்ட இடமெல்லாம் மும்மலம் அகன்று ஆருயிர்க்கிழவர் செம்மலர் நோன்றாள் சேர்ந்து சிவகதி எய்திச் சிவனாகிச் சிவனடிக்கீழிருப்பர்.

பரிசனவேதி - உலோகங்களைப் பொன்னாக்கும் மருந்து.

# 2017. தானே யெனநின்ற சற்குரு சந்நிதி

2017. தானே யெனநின்ற சற்குரு சந்நிதி
தானே யெனநின்ற தன்மை வெளிப்படில்
தானே தனைப்பெற வேண்டுஞ் சதுர்பெற
ஊனே யெனநினைந் தோர்ந்துகொள் உன்னிலே.

சிவபெருமான் ஆருயிருடன் பின்னி அவ் வுயிராகவே நின்றருள்கின்றனன். அவன் திருமுன் அந் நிலைபோல் அவ் வுயிரைத் தன்னுள் அடக்கி அவ் வுயிர் தானாயே நின்றருள்வன். இது கற்றுவல்ல புலவன் தன் புலமை மேலோங்காது தானாகப் புலமை உள்ளடங்கி நிற்கப் பொதுவாக ஆளெனத் தோன்றுவன் அப் பொதுநிலையாம் ஆளியல்பு உள்ளடங்கப் புலமை மேலோங்கச் சிறப்பாகப் புலவன் எனப் புகழப்படுவன். ஆள்புலவன் ஆர்ந்த புலனடங்க ஆளாமவ், வாளடங்க ஆம்புலவன் அங்கு என்பதனையொக்கும். இம் முறைபோல் உயிர் சிவனாம் தன்மை வெளிப்படில் அவ் வுயிர் திருவடியுணர்வால் தானாகவே தனையுணர்தல் வேண்டும். பெருமைமிக்க இவ் வுடம்பிலே உன்னகத்தே உன்னையும் உடையானையும் மெய்யுணர்வால் உன்னி உணர்ந்து கொள்வாயாக.

தனைப்பெற - தன்னை அறிய. சதுர் - பெருமை. ஊனே என - இந்த உடலிலேயே என்று.

## 2018. வரும்வழி போம்வழி மாயா வழியைக்

2018. வரும்வழி போம்வழி மாயா வழியைக்
கருவழி கண்டவர் காணா வழியைப்
பெரும்வழி யாநந்தி பேசும் வழியைக்
குருவழி யேசென்று கூடலு மாமே.

வினைக்கீடாக வரும்வழியாம் பிறப்பும் போம்வழியாம் இறப்பும் எஞ்ஞான்றும் மாறா மறையா மாயா அழியா வழியாக நிற்கும். இவ் வழியினைப் பிறக்கும் கருவழி கண்டவர் காண்பர். இவ் வழியினைக் காணாதவர் அருளால் காணும் வழி பெருவழி. அவ் வழி நந்தி முதல்வரால் நவின்று நாட்டியருளப்பட்ட நல்வழியாகும். அதுவே நன்னெறி; திருநெறி. அதனைச் சிவகுருவின் திருவருள்வழியே சென்று பொருள் பெறப்பெறுவதாகும்.

கருவழி - பிறக்கும் வழி. கருவழி கண்டவர் காணாவழி, பெரும்வழி, நந்தி பேசும்வழி - முத்திநெறி, சன்மார்க்கம்.

## 2019. குருவென் பவனே வேதாக மங்கூறும்

2019. குருவென் பவனே வேதாக மங்கூறும்
பரவின்ப னாகிச் சிவயோகம் பாவித்து
ஒருசிந்தை யின்றி உயர்பாச நீக்கி
வருநல் குரவன்பால் வைக்கலு மாமே.

சிவகுரு என்று அழைக்கப்படுபவன் செந்தமிழ் மறை முறையாம் வேதாகமம் சிறந்தெடுத்தோதும் பேரின்ப வடிவினன். அவ் வடிவுடையவனாகிச் செவ்வி யுயிரினுக்குச் சிவயோகம் சேர்ப்பித் தருள்வன். அவ் வுயிர் திருவடியுணர்வு கைவந்தமையால் வேறோர் எண்ணமும் எண்ணுவதில்லை. அவ் வுயிரை அந்நிலையான் உயரச் செய்து பாசப்பசை யகற்றித் திருவடிநீழற்கீழ் வருவித்துப் பேற்றின்கண் நிலைப்பிப்பவன் சிவகுருவாவன்.

பரஇன்பன் - பேரின்ப வடிவினன். உயர் - கிளைத்து எழும்.

## 2020. சத்தும் அசத்துஞ் சதசத்துந் தான்காட்டிச்

2020. சத்தும் அசத்துஞ் சதசத்துந் தான்காட்டிச்
சித்தும் அசித்துஞ் சிவபரத் தேசேர்த்துச்
சுத்த மசுத்த மறச்சுக மானசொல்
அத்தன் அருட்குரு வாமவன் கூறிலே.

என்றும் ஒருபடித்தாய் இயற்கை உண்மை அறிவு இன்ப மெய்ப்பொருளாய் விளங்குவது சிவம். அது சத்தென்று செம்பொருட்டுணிவினரால் ஓதப்படும். காரணகாரியத் தொடர்ச்சியாய்த், தோற்றவொடுக்கம் உடையதாய், அழிவில்லதாய், ஆற்றல் உள்ளதாய், அறிவில்லதாய் இயற்கை உண்மையாய் இருப்பது மலம். அஃது அசத்தென்று ஓதப்படும். சத்து - நிலையுள்ளது. அசத்து - நிலையில்லாதது. மெய் பொய் என்பனவற்றிற்கும் இவையே பொருள். மலம் மூவகைப் படும். அவை ஆணவம் கன்மம் மாயை என்று சொல்லப்படும். செம் பொருட்டுணிவினர் - சித்தாந்த சைவர். இவரே அருஞ்சைவர் எனவும் அழைக்கப்படுவர். ஆருயிர் கட்டுநிலையில் மலத்துடனும், ஒட்டுநிலையில் சிவத்துடனும் ஒடுங்கி அதுவதுவாய் நிற்கும். இந் நிலைக்குப் பளிங்கு, கண், வானம் ஒப்பாகச் சொல்லப்படும் புருவநடுவின்கண் நாம் பொட்டு வைக்கின்றோம். அப் பொட்டு வெண்மையாகவும் செம்மையாகவும் அமையலாம். இயற்கையாக ஏதுமில்லாத புருவநடு வெண்மைசார்ந்தால் வெண்மையாகவும், செம்மைசார்ந்தால் செம்மையாகவும் காணப்படும். இவ் வொப்புக்கூறுதலும் ஏற்புடைத்தாகும்.

வெண்பொட்டுச் செம்பொட்டு மேவும் புருவநடு, பண்பிவற்றால் தோன்றும் பதிந்து. இந்நிலையில் உயிரிசார்பி என அழைக்கப்படும். அப் பொருண்மையே தரும் சதசத்து என்பதும். இத்தகைய முப்பொருள் உண்மையினை உள்ளவாறு எடுத்துக்காட்டுபவன் சிவகுரு. சித்து - அறிவுடையது. அசித்து - அறிவில்லது. அறிவுடைய உயிர்கட்கும் அறிவில்லாத உடல் உலகங்கட்கும் சார்பிடமாய் நிற்கும் பேரறிவுசேர் பெரும்பொருள் சிவன். இஃது உணர்விலா உடைக்கும் உணர்வுடைய உடற்கும் உயிர் சார்பிடமாய் நிற்பதோடொக்கும். ஆருயிர் அருட்குரவனால் பொருளுண்மை உணர்வது தூநிலையாகும். உண்மை உணராநிலை தூவாநிலை யாகும். தூநிலை - சுத்தம் தூவாநிலை - அசுத்தம். இவ் விரண்டும் ஆருயிர்கட்கு அறும்படி அருள்பவன் சிவகுரவன். மாறாப் பேரின்ப நிலையை மன்னுவிக்கும் மறைமொழி திருவைந்தெழுத்து. அதனை அருளிச்செய்பவன் அத்தனாகிய அருட்குருவாகும். அச் சிவகுரு அருளிக் கூறும் அத் திருவைந்தெழுத்துக் கூற்றிலே எல்லாம் விளக்கமுறும்.

சத்து - சிவம். அசத்து - பாசம். சதசத்து - ஆன்மா.

## 2021. உற்றிடும் ஐம்மலம் பாச வுணர்வினாற்

2021. உற்றிடும் ஐம்மலம் பாச வுணர்வினாற்
பற்றறு நாதன் அடியிற் பணிதலாற்
சுற்றிய பேதந் துரியமூன் றால்வாட்டித்
தற்பர மேவுவோர் சாதக ராமே.

ஆருயிர்கட்குப் பண்டேபற்றிய பாசத்தினால் ஆணவம் கன்மம் மாயை மாயையாக்கம் நடப்பாற்றல் முதலிய ஐவகை மலங்கள் பொருந்தின. அவற்றின்மாட்டுள்ள பற்றுக்கள் சிவபெருமான் திருவடியில் திருமுறைபாடி வழிபட்டுப் பணிதலால் அற்று ஒழிந்தன. அவ் வுயிர்களைச் சூழ்ந்துள்ள உலகியல் நுகர்பொருள்கள் மாட்டுள்ள அவாவினைப் பேருறக்கமாகிய துரியமூன்றால் வாட்டினர். வாட்டவே தற்பரமாகிய சிவபெருமான் திருவடி தலைக்கூடும். தலைக்கூடவே இறவாப் பேரின்பம் நுகர்வர். அவரே நன்னெறிப் பயிற்சியாளராவர். இவரையே சாதகர் எனக் கூறுப. மூன்றாகிய பேருறக்கம் புலம்பு புணர்வு, புரிவு என்னும் மூன்றிடத்தும் காணப்படும் பேருறக்கம்.

தற்பர மேவுவோர் - சிவத்தை அடைய முயல்வோர்.

## 2022. எல்லாம் இறைவன் இறைவி யுடனின்பம்

2022. எல்லாம் இறைவன் இறைவி யுடனின்பம்
வல்லார் புலனும் வருங்கால் உயிர்தோன்றிச்
சொல்லா மலமைந் தடங்கியிட் டோங்கியே
செல்லாச் சிவகதி சேர்தல் விளையாட்டே.

ஆருயிர்கட்கு எல்லாம் அருளிச்செய்யும் சிவனும் சிவையும் அவ் வுயிர்களின் செவ்விநோக்கித் திருவடியின்பத்தை அருளிச்செய்ய வருங்கால் வலிமைமிக்க ஐம்புலனும் அதற்கு உடந்தையாகப் பசு கரணங்களெல்லாம் பதிகரணங்களாகச் சொல்லாமலே தோன்றும். அவை அமைந்து அடங்கும்; துணையாய்விடும். சிவபெருமானும் அவ் வுயிர்களை மேன்மேலும் பெருகி யாண்டும் நீங்காது நிற்கும் அவ்வின்பத்துள் நிலைப்பித்தருள்வன். இதுவே ஆருயிர்கள் எய்தும் பேரா இயற்கைச் சிவகதிப்பேறு. இச் செயலே சிவனார் திருவிளையாட்டு.

மல்லார் - வலிமையுள்ள.

## 2023. ஈனப் பிறவியில் இட்டது மீட்டூட்டித்

2023. ஈனப் பிறவியில் இட்டது மீட்டூட்டித்
தானத்து ளிட்டுத் தனையூட்டித் தாழ்த்தலும்
ஞானத்தின் மீட்டலும் நாட்டலும் வீடுற்று
மோனத்துள் வைத்தலும் முத்தன்றன் செய்கையே.

ஆருயிர்களுக்கு அறிவை விளக்கல்வேண்டும். அவற்றைப் பண்டே புல்லிய மலத்தை நீக்கல்வேண்டும். அதற்கு இயல்பாகவே "வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவன்" ஒருவன் வேண்டும். அவனே சிவபெருமான். அழுக்கை அழுக்கால் போக்குவதன்றோ செயற்பாலது. 'பிறவிப் பெருங்கடல் நீந்துவர் இறைவன் அடிசேர்ந்தார்'. அங்ஙனம் நீந்தினோர் நீத்தார் எனப்படுவர். மக்களைப் பிறப்பினர் இறப்பினர் சிறப்பினர் விறப்பினர் என வகுக்கலாம். பிறப்பினர் மீண்டும் பிறக்கும் வினையினர். இறப்பினர் வினையின் நீங்கினோர். சிறப்பினர் நினைவின் ஓங்கினோர். விறப்பினர் சுடச்சுடரும் பொன்போல் விளங்கிய அறிவினராய் வீறுபெற்றுயர்ந்தோர். இவருள் நீத்தார் இறப்பினராவர். நீர்வாழ் இனங்களுக்கு நீந்துதலை இயல்பாகவும் நிலத்து வந்து போதலைச் செயல்பாகவும் அமைத்துள்ளனன். அது போல் நிலத்துவாழ் இனங்களுக்கு நடத்தலை இயல்பாகவும் கடத்தலைச் செயல்பாகவும் அமைத்துள்ளனன். நம்மை யொழித்த ஏனைய உயிரினங்கட்கெல்லாம் அனைத்துச் செயல்களையும் அகத்து நின்று முனைத்துச் செய்கின்றனன். அதனால் அவை அந்நிலையில் சிவனை ஒருகாலத்தும் காணமாட்டா. நமக்கோ அகத்து முனைப்பது

மட்டுமல்லாமல் புறத்தும் "ஈன்றாளுமாய் எந்தையுமாய் உடன் தோன்றினராய்" வெளிப்பட்டு முனைத்துத் துணைபுரிகின்றனன். அத்துணை எல்லாவற்றினும் வல்லவராய் நல்லவராய் வாழப் பழக்குவதே. அதனால் நம்மைக்கொண்டே நம்மைச் செம்மைப்படுத்தி அம்மை அருள்கின்றனன் சிவன்.

அம்முறையில் சிவன் ஆருயிர்களைத் தாழ்வான பிறவிகளில் அருளால் பிறப்பிக்கின்றனன். இருவினைப்பயனை வருவினை பெருகவூட்டுகின்றனன். அவற்றினின்றும் மீட்பிக்கின்றனன். உயர்ந்தநிலையில் அமைக்கின்றனன். திருவினையூட்டுகின்றனன். தங்கச்செய்கின்றனன். ஞானப்பிறப்பினை நல்குகின்றனன். பிறவாமையை அருள்கின்றனன். திருவடியில் நாட்டுகின்றனன். வீடுறச் செய்கின்றனன். பேசாப் பீடுற வாக்குகின்றனன். இவையே விறப்புயிர்கட்குச் சிவனார் சிறப்புச் செய்விக்கும் செய்கையாகும் இத் திருப்பாட்டின்கண் வரும் வினை யெச்சங்களையெல்லாம் பொருள் எளிதாகவும் இனிதாகவும் விளங்குதற் பொருட்டு முற்றாக்கி யுரைத்தனம். தொழில் உம்மையையும் அங்ஙனமே உரைத்தனம். இதன்கண் இட்டு மீட்டு ஊட்டி இட்டு ஊட்டி உற்று என வினையெச்சம் ஆறும், தாழ்த்தல் மீட்டல் நாட்டல் வைத்தல் எனத் தொழில் உம்மை நான்கும் காணப்படும். இப் பத்துமே முத்தன் ஆக்கும் முத்தன்செய்கை என்க. ஆறு எச்சங்களும் ஆறு குணங்களையும் ஆறு நெறிகளையும் குறிக்கும் குறிப்பாகும். நான்கு உம்மைகளும் நான்கு துறைகளையும் பேறுகளையும் குறிக்கும் குறிப்பாகும். இத் திருப்பாட்டுக்கு முற்றும் அமைந்த எடுத்துக்காட்டாக இருப்பது

திருவைந்தெழுத்தில் நடுவாம் யகர நிலையாம் நம்பியாரூரர் (1771) திருவரலாறாகும். 'சிவயசிவ' என்னும் திருவைந்தெழுத்தில் முறையே ஆளுடைய பிள்ளை அரசு நம்பி அடிகள் மூலர் என்னும் செந்நெறி முதல்வர் ஐவரையும் அமைத்து அன்பு பூண்டு ஒழுகுதல் இன்பம் வேண்டுவார்க்கியல்பாம் என்க. இதனை வரும் வெண்பாவால் நினைவுகூர்க:

"ஆளுடைய பிள்ளை அரசுநம்பி யாரடிகள்
கேள்மூலர் ஐவரும் கேடிலா - வாள்மிக்க
ஐந்தாம் 'சிவயசிவ' அத்தமிழின் ஆரமைவா
வந்தார் திருவருளால் வாழ்த்து."

மீட்மூட்டி - அதினின்றும் திருப்பிப் போகங்களைப் புசிப்பித்து. தானத்துளிட்டு - புவனங்களில் இருத்தி. நாட்டல் - நிலை பெறுவித்தல்.

## 2024. அத்த னருளின் விளையாட் டிடஞ்சடஞ்

2024. அத்த னருளின் விளையாட் டிடஞ்சடஞ்
சித்தொ டசித்தறத் தெளிவித்த சீவனைச்
சுத்தனு மாக்கித் துடைத்து மலத்தினைச்
சத்துட னைங்கரு மத்திடுந் தன்மையே.

சிவபெருமான் செய்தருளும் திருவைந்தொழிலின் திருவினையாட்டிடம் ஆருயிர்களின் உடம்பாகும். அறிவுடையன விவை அறிவில்லன இவை என ஆருயிர்கட்கு அறிவித்து அவ் வறிவினால் தெளிவிக்கப்பட்ட செவ்வியுயிரை மலம்நீக்கி அருளுகின்றனன். உண்மைப்பொருளாகிய தன்வண்ணம் ஆக்குகின்றனன். இவையே திருவைந்தெழுத்தின் சிறப்பால் பெறப்படும் பேரின்பப்பேற்றினுக்கு வாயிலாகிய திருவைந்தொழிலாகும்.

சடம் - தேகம். சத்துடன் - சிவத்துடன். ஐங்கருமம் - ஐந்தொழில்.

## 2025. ஈசத்து வங்கடந் தில்லையென் றப்புறம்

2025. ஈசத்து வங்கடந் தில்லையென் றப்புறம்
பாசத்து ளேயென்றும் பாவியும் அண்ணலை
நேசத்து ளேநின்ற நின்மலன் எம்மிறை
தேசத்தை யெல்லாந் தெளியவைத் தானே.

ஈசத்துவம் என்று சொல்லப்படும் படைப்பாதி ஐந்தொழில் தன்மையையும் கடந்து மேல் ஒன்றும் இல்லையென்றும், அதன்பின்பு உற்று நோக்கும்போது எல்லாம் பாசமாகிய மாயையின் காரியத்துள்தான் என்று உயிர் நினைக்கும். அதுபோன்று நினைக்கும் எனக்கு அடியேனின் அன்புள்ள நெஞ்சத்து எழுந்தருளும் சிவபெருமான் அண்ணலாகிய தன்னையும், தன்னால் புரக்கப்படும் உலகத்தையும் பிறவற்றையும் என்னுள்ளே தெளியக் காட்டியருளினன். அச் சிவபெருமானே எம்தலைவனாவன். அவனே இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கிய தூயோனாவன்.

ஈசத்துவம் - ஐந்தொழில்.

## 2026. மாணிக்க மாலை மலர்ந்தெழு மண்டலம்

2026. மாணிக்க மாலை மலர்ந்தெழு மண்டலம்
ஆணிப்பொ னின்றங் கமுதம் விளைந்தது
பேணிக்கொண் டுண்டார் பிறப்பற் றிருந்தார்கள்
ஊனுக் கிருந்தார் உணராத மாக்களே.

செம்மணி ஒளிக்கற்களின் கதிர்வரிசைகள்போல் விரிந்து பரவி ஒளிவிடும் மண்டலம் புருவநடுவாகும். 'மாற்றறியாத செழும் பசும்பொன்'னாகிய சிவபெருமான் அப்பால் நிலையாம் ஆறிரண்டு சேர் ஈறில் அறிவுப்பெருவெளியில் நின்றருளுகின்றனன். அதனால் திருவடிப் பேரமிழ்தம் பெருகி விளைந்தது. அவ் வமிழ்தினைத் திருவருளால் 'சிவசிவ' என மாறாது மறவாது துறவாது உணர்விற் கணித்தலாகிய பேணுதலைப் புரிந்து உண்டுகொண்டிருக்கும் நற்றவத்தினர் பிறப்பற்றிருந்த நல்லோராவர். இவ் வுண்மையினை உணர்ந்து உரனுடன் ஒழுகாப் புலனுகர் மாக்கள் எல்லாம் 'துயிற் சுவையும் தூநல்லார் தோள்சுவையும்' தந்து மயலாக்கும் அயிற்சுவையாம் ஊனுண்டு வாழும் வீணுக்கிருந்தனர்.

மாணிக்க மாலை - மணி ஒளி போன்ற கதிர் ஒளிக்கூட்டம். ஆணிப் பொன் - பொன்னம்பலம் - உச்சித்தாமரை. ஊனுக்கு சோற்றுக்குக் கேடாய்.

## 2027. அசத்தொடு சத்தும் அசத்சத்து நீங்க

2027. அசத்தொடு சத்தும் அசத்சத்து நீங்க
இசைத்திடு பாசப்பற் றீங்கறு மாறே
அசைத்திரு மாயை அணுத்தானு மாங்கே
இசைத்தானு மொன்றறி விப்போன் இறையே.

அசத்து என்று சொல்லப்படும் அறிவில் பொருள்களும், அவ் வறிவில் பொருளாகிய உடலுடன் சேர்ந்து உலவும் சத்தாகிய அறிவுப்பொருளாம் உயிரும் தனித்தனி நிற்பின் ஏதும் பயனின்றாம். அசத்சத்து என்னும் அறியாமையோடு கூடிய அறிவுத்தன்மையாம் உயிர்மை பசுத்துவம் எனப்படும். பசுத்துவத்தைப் பிணிமை எனவுங் கூறுப. ஈண்டு அசத்சத்தென்று ஓதினர். அவ் வசத்சத்தாகிய அனைத்தும் அருளால் நீங்குதல்வேண்டும். நீங்கவே தொன்மைய என்று நன்மையுணர்ந்தாரால் இசைக்கப்படும் பாசப்பற்று இங்கு அறும்.
காரணமாயையினின்று முறையே கலக்குற்றுத் தோன்றிய காரியமாயை ஒன்று. அம் மாயை மலகன்மங்களோடு விரவாத பகுதி தூமாயை என்றும், அவற்றுடன் விரவிய பகுதி தூவாமாயை என்றும் இருவகைப்படும். அத்தகைய இருமாயையும், அணுவாகிய சிற்றுயிரும், தானாகிய பேருயிராம் சிவனும் என்னும் இவற்றை இசைத்தருளியவனும் சிவனே. ஒன்றென்று சொல்லப்படும் திருவைந்தெழுத்தாம் பொருண்மறை அறிவித்தருள்பவனும் சிவனே. அவனே 'தென்னாடுடைய சிவன்'. அவனே

'எந்நாட்டவர்க்கும் இறை'. இறை - பதி. ஒன்று - உண்மை உபதேசம்.

அசத் சத்து - சீவத்துவம். அனு - ஆன்மா. இசைத்தான் - கூட்டி வைத்தவன்.

## 2028. ஏறு நெறியே மலத்தை எரித்தலால்

2028. ஏறு நெறியே மலத்தை எரித்தலால்
ஈறில் உரையால் இருளை யறுத்தலான்
மாறில் பசுபாசம் வாட்டலால் வீடுக
கூறு பரனே குருவாம் இயம்பிலே.

சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்னும் நன்னெறி நான்மைவழித் திருவடிக்கு ஏற்றுமுறையால் சிவகுருவானவன் ஆருயிர்களின் மாயைகன்மங்களை எரித்தருள்கின்றனன். ஈறில் உரையாகிய திருவைந்தெழுத்தால் பொல்லா வல்லிருளாம் ஆணவத்தை அறுத்தருள்கின்றனன். ஒப்பில்லாத பசுபாசத்தை வீடுக என இறைபணியாம் தன்பணியில் நிறுத்தி வாட்டி அருள்கின்றனன். இம் முறைகளைத் திருமுறை வழிக் கூறியருள்கின்ற விழுப்பொருளே சொல்லுமிடத்துச் சிவகுருவாவன். இதன்கண் ஓதப்பெறும் எரித்தல் அறுத்தல் வாட்டல் என்னும் சொற்குறிப்பான் முறையே எஞ்சுவினை ஏன்றவினை ஏறுவினை என்ற மூன்றன் நீக்கம் பெறப்படும். எஞ்சு வினைஎரித்தல் ஏன்ற வினையறுத்தல், துஞ்சவாட் டல்ஏறு சொல் என்ற முறைமைகளை எளிதாகவும் இனிதாகவும் வெளிப்படுத்தியருள்வோன் சிவபெருமானாவன்.

ஏறு + நெறியே - உண்டாகும்பொழுதே. ஈறில் உரை - அழியாத உபதேசமொழி. மாறில் - ஒழியாத.

## 2029. கண்காணி யில்லென்று கள்ளம் பலசெய்வார்

2029. கண்காணி யில்லென்று கள்ளம் பலசெய்வார்
கண்காணி யில்லா விடமில்லை காணுங்கால்
கண்காணி யாகக் கலந்தெங்கு நின்றானைக்
கண்காணி கண்டார் களவொழிந் தாரே.

மேற்பார்வையிட்டு ஏற்பன செய்விப்போன் கண்காணியாவன். அவனே கடவுளும் ஆவன். இவ் வுண்மையினை யறியாது பலர் தவறான செய்கைகள் பலவற்றையும் செய்கின்றனர். அவர்கள் எண்ணத்தில்
கண்காணி இல்லை என்பதே. ஆராயுமிடத்து இடத்துக்கு உரியவன் இல்லையாயின் அவ்விடமும் இல்லையாகும். மேற்பார்வையாளராகக் கலந்து எங்கும் நலம்பெற நின்றருள்வன் சிவன். அங்ஙனம் நின்றருள்பவனை நற்றவத்தால் கண்காணித்துக் கண்டவர் பொருந்தாச் செய்கை முதலிய களவொழிந்தாராவர். கண்காணி என்பது மிகப்பெரும் பழம்தமிழ்ச்சொல்.

கண்காணி - மேற்பார்வையாளன்.

## 2030. செய்தான் அறியுஞ் செழுங்கடல் வட்டத்துப்

2030. செய்தான் அறியுஞ் செழுங்கடல் வட்டத்துப்
பொய்தான் மிகவும் புலம்பும் மனிதர்கள்
மெய்தான் உரைக்கில்வின் ணோர்தொழச் செய்வன்
மைதாழ்ந் திலங்கு மிடறுடை யோனே.

செழுவிய கடலாற் சூழப்பட்ட நிலவுலகத்து மறைத்துச் செய்யும் செயல்களைச் செய்தவன் அறிவானல்லவா? அப்படியானால் அவன் உறையும் உடலையும், உறையுளையும், உலகத்தையும், ஊண் முதலிய பிறவற்றையும் படைத்தருளி உடனாய் நின்று உணர்த்தியருளும் சிவபெருமான் எப்படி அறியாதிருப்பன்! அவன் அறியானென்று பலர் தவறு செய்கின்றனர். அவர்களனைவரும் முடிவில் தம்மைத்தாமே ஏமாற்றிக் கொள்வோராவர். பொய்யுரை புகன்றும், தீயசெய்வினை செய்தும் மிகவும் துன்புறுகின்றனர். புன்னெறிச் செல்லும் போக்கினையுடைய மனிதர்கள் அத்தகையோர் நன்னெறியொழுகி மெய்யுரை மொழிவரானால் அவர்கள் சிவனடியாராவர். அவர்களை விண்ணவரும் நண்ணித் தொழுவர். அங்ஙனம் தொழுமாறு செய்தருள்பவன் சிவன். அவன் நீலக்கதிர் சாலவீசும். மணிமிடற்று வேந்தனாம் சிவபெருமானாவன்.

## 2031. பத்திவிற் றுண்டு பகலைக் கழிவிடு

2031. பத்திவிற் றுண்டு பகலைக் கழிவிடு
மத்தகர்க் கன்றோ மறுபிறப் புள்ளது
வித்துக்குற் றுண்டு விளைபுலம் பாழ்செய்யும்
பித்தர்கட் கென்றும் பிறப்பில்லை தானே.

கோலமாத்திரையால் பத்தியுடையார் போன்று ஏனையார்க்கு அந் நெறிமுறைகளைப் போதித்து விலைபெற்று வாழும் வஞ்சகர் வீணாள் கழிப்பவராவர். அவரே பெருமயக்கம்கொண்ட மத்தகரும் ஆவர். அவருக்கே மறுபிறப்பும் உண்டு. பிறப்புக்கு அடிப்படையான எஞ்சுவினையை நெற்குற்றுண்பதுபோல் சிவகுருவின் திருக்கடைக்கண் நோக்கால் எரிசேர்வித்தெனச் செய்தவர் பிறப்பு விளைபுலமாம் கருப்பையினைப் பாழ்செய்தவராவர். அவரே சிவப்பித்தராவர் சிவப்பித்தராவார் திருவடியுணர்வு கைவந்தோர். அப் பித்தர்கட்கே எஞ்ஞான்றும் பிறப்பில்லை என்க. கோலம் - திருவேடம்.

பத்தி விற்றுண்டு - பத்தி நெறியில் தாம் நில்லாமல் காசுக்காகப் பிறர்க்கு எடுத்துரைத்து. பகலைக் கழிவிடும் - நாள் கழிக்கும். மத்தகர் - மதி மயக்கம் உடையவர். வித்து - பிறப்புக்கு ஆதாரமான கன்மம், விளைபுலம் - கர்ப்பாசயம். பித்தர் - ஞானிகள்.

# 2032. வடக்கு வடக்கென்பர் வைத்ததொன் றில்லை

2032. வடக்கு வடக்கென்பர் வைத்ததொன் றில்லை
நடக்க வுறுவரே ஞான மிலாதார்
வடக்கில் அடங்கிய வையகம் எல்லாம்
அகத்தில் அடங்கும் அறிவுடை யோர்க்கே.

'அயல் வழக்கின் துறை வெல்லும் அசைவில் செழுந்தமிழ் வழக்கே' வழங்கும் தென்றமிழ் நாட்டினரும் அயலவர் மயக்கால் வடக்கு வடக்கு என்று மதிமயங்கி நடக்கலுறுவாராயினர். 'மாதவஞ் செய் தென்திசை' என்னும் வாய்மையினை அறவே மறப்பாராயினர். இன்றுபோல் அன்றும் மறுப்பாருமாயினர். அந்தோ! எந்தநாள் விடியுமோ இந்த மயக்கம்! அவ்வடக்கே தென்னாட்டிலில்லாத சிறப்பு ஏதும் வைக்கப்பட்டதும் இல்லை. தென்னாட்டிலுள்ள சிறப்புகள் பலவும் அங்கு இன்றும் கிடையா. இத்தகையோரே சிவஞானமில்லாதவராவர். அவ் வடக்கின்கண் அடங்கிய உலகமெல்லாம் அகத்தின்கண் அடங்கும் ஈண்டு உலகமென்பது நிலையில் பொருள்களாகும். இஃது அண்டத்திலுள்ளது பிண்டத்திலும் என்னும் முறைமைபற்றி யாகும். அம் முறைமை திருவடியுணர்வுடையார்க்கே தெரியும். ஆயின் தெற்கின்கண்ணுள்ள சிவனடிப்பெருமை நிலையுடையதாய் அண்டபிண்டத்துள் அடங்காததாய் அறிவின்வழியாய் உணர்வின்கண் புணர்வதாகும். காணக் கேட்கக் கருதக் கிளக்கக் கிட்டாதாகும் அத் திருவடிப் பெருமை. கம்பன் அடியார்க்கு நாள்கோள் முதலியவற்றால் எந்நாளும் நலிவுண்டாகாது என்பதை உலகோர்க்கு உணர்த்த

வுன்னினன் சிவன். நாவரையர் வாயிலாகத் தூண்டியருளினன். ஞானசம்பந்தப் பெருமானார் "கோளறு பதிகம்" வாளெனப் பாடியருளினர். அந்நாள்தொட்டு இந்நாள்காறும் அவ் வழி யொழுகுவார் எத்துணையர்? அப் பதிகத்தை அறிந்தார்தாம் எத்துணையர்? அறிவித்தார் எத்துணையர்? இப்பொழுதுள்ள நடைமுறைச் சைவம் முக்கூற்றுப் புறச்சமயத்துள் எக்கூற்றுளடங்குமென்பதை யாவர்தாம் கூறவல்லார்? அதுபோல் திசைமயக் கொழிக்கச் சிவபெருமானால் நேரே தூண்டப்பட்டுக் கயிலைக் காட்சியினைத் திருவையாற்றில் கண்டு திருநாவுக்கரையர் பாடியருளினர் திருமுறைத் திருப்பதிகம். அதனைக் கைக்கொண்டு திருவையாற்றைக் கயிலை எனக் காண்பார் எத்துணையர்? இடமயக்கொழிக்கக் காரைக்காலம்மையார் கைலையினின்றும் போந்து திருவாலங்காட்டில் செந்தமிழ்த் திருப்பதிகம் பாடித் திருவடியுற்றனர். அதனை மேற்கொண்டு இடத்தாலும் மாதவம்செய் தென்நாடே சிறந்தது என்று போற்றிப் புகழ்வார் எத்துணையர்! இனியேனும் நன்னெறிபற்றி உறுதியுடன் ஒழுகிச் சிவ இன்பம் பெற்றுச் சிறப்போமாக. திருவருளும் பெருகத் துணைசெயுமாக.

வடக்கு வடக்கு என்பர் - வடக்கே யுள்ள காசி காசி என்பர். வடக்கில்.......கே - வடக்கே உள்ள 'காசி' என்ற இரண்டு எழுத்திலுள்ள பொருள் அறிவுடையோர்க்கு அகத்தினில் "சி" என்ற எழுத்தைக் "கா" என்று பொருள்படும். Vide "சி எழுத்தொன்றைச் சிந்தையில் இருத்த." சிற்றம்பல நாடிகள்.

## 2033. காயக் குழப்பனைக் காயநன் னாடனைக்

2033. காயக் குழப்பனைக் காயநன் னாடனைக்
காயத்தி னுள்ளே கமழ்கின்ற நந்தியைத்
தேயத்து ளேயெங்குந் தேடித் திரிவர்கள்
காயத்துள் நின்ற கருத்தறி யாரே.

மேலோதிய திருப்பாட்டின் விளக்கம்போன்று எழுந்தது இத் திருப்பாட்டு. ஆருயிர்களைக் காயத்துள் வினைக்கீடாகச் சேர்த்து வைப்பவன் சிவன். அக் காயமே சிவபெருமானுக்குரிய இயற்கைத் திருக்கோவிலாகும். அதனையே திருக்கோவிலாக நாடுகின்றவன் சிவன். அக் காயமாகிய உடம்பினுள் சிவமணம் கமழ வீற்றிருந்தருள்பவன் சிவன். அவனே நந்தி என்று அழைக்கப்படுவன். இம் மெய்ம்மையினை மேற்கொள்ளாது காசி காசியென்று கால்கடுத்தோடி எங்குந் தேடித் திரிவாராவர். இவர்கள்தாம் சிவபெருமான் ஆண் பெண்ணாக இணைந்து வாழும் உயிர்சேர் உடம்புகள்தோறும் வீற்றிருக்கும் அருள்தோற்றக் கருத்தறியாதவராவர்.

காயக் குழப்பன் - ஆன்மாவைச் சரீரத்தோடு சேர்ப்பவன். காய நன்னாடன் - காயமே கோயிலாகக் கொண்டவன். கமழ்கின்ற - விளங்குகின்ற. காயத்து உள் - உள்ளத்தினுள்ளே.

## 2034. கண்காணி யாகவே கையகத் தேயெழுங்

2034. கண்காணி யாகவே கையகத் தேயெழுங்
கண்காணி யாகக் கருத்து ளிருந்திடுங்
கண்காணி யாகக் கலந்து வழிசெய்யுங்
கண்காணி யாகிய காதலன் தானே.

ஆருயிர்களின் உணர்வுக்கருத்தாம் கண்ணைச் சிறந்த இருப்பிடமாகக்கொண்டு வீற்றிருந்தருளும் மெய்க்காதலனாம் சிவபெருமான் நேரே காணும்படியாக நானெறியொழுக்கத்தில் கையகத்தே வந்து தோன்றியருள்வன். அதுபோன்றே கருத்தினுள்ளும் இருந்திடுவன். அதுபோன்றே உடன்கலந்து செந்நெறிச் செலுத்தித் திருவடிப்பெரும் பேற்றினுக்கு ஒருவர் வழிகாட்டியுமருள்வன்.

கண்காணியாக - நேருக்கு நேராக. காதலன் - சிவன்.

## 2035. கன்னி யொருசிறை கற்றோர் ஒருசிறை

2035. கன்னி யொருசிறை கற்றோர் ஒருசிறை
மன்னிய மாதவஞ் செய்வோர் ஒருசிறை
தன்னியல் புன்னி யுணர்ந்தோர் ஒருசிறை
என்னிது ஈசன் இயல்பறி யாரே.

அறிவுநெறியில் நின்று கன்னியாகிய திருவருள் வீழ்ச்சி பெற்றார் வீற்றிருப்பது ஒருபுறம். அந் நெறிக்கு வரும் வாயிலாம் செறிவுநெறியில் நின்று அகத்தவம் பயில்வார் மிகப்பெருகி உறைவது ஒருபுறம். நோன்பு நெறியில் நின்று சிவபெருமானின் அருட்டிரு மேனியின் இயல்பினை யுன்னித் திருமுறைவழியாக வழிபாடியற்றும் அழிவில் அன்பினர் ஒருபுறம். ஈண்டு வழிபாடியற்றுவோர் என்பது இசையெச்சமாக வந்து இசைந்தது. 'ஆலயந்தானும் அரன் எனத்தொழுமே' என்னும் மெய்கண்ட நூன்முறைப்படி திருக்கோவிலையும் சிவனையும் சிவனெனவே தேறிச் சீலநெறியில் நின்று சிவத்தொண்டு புரியும் பெரும் பத்தராவார் ஒருபுறம். இவ்வாறாக அவ்வவர் செவ்விக்கேற்பப் படிமுறையான் அமைத்தருளியவன் சிவபெருமான். இவ்வுண்மையினியல்பினை உணராதார் ஈதென்னென்று வியப்புறுவர்.

கன்னி ஒரு சிறை - திருவருட்சத்தி பதிந்தவர் ஒரு பக்கம். தன்....சிறை - தன்னை அறிந்தவர் அஃதாவது ஆன்ம இயல்பை உணர்ந்தோர் ஒருபக்கம். என்னிது - என்ன ஆச்சரியம்:

# 2036. காணாத கண்ணிற் படலமே கண்ணொளி

2036. காணாத கண்ணிற் படலமே கண்ணொளி
காணாத வர்கட்குங் காணாத வவ்வொளி
காணாத வர்கட்குங் கண்ணாம் பெருங்கண்ணைக்
காணாது கண்டார் களவொழிந் தாரே.

படலத்தாற் காணுந்தன்மை யிழந்த கண்ணிற்கு அப்படலமாகிய மறைப்பே கண்ணொளியாகும். சிவபெருமானைக் காணுதல் வேண்டுமென்னும் காதல் தினைத்தனையுமில்லாதார்க்குக் காணும் தன்மையிருந்தும் அவரும் படல மறைப்பாற் காணாதாரைப் போன்று காணாத ஒளியுடையாரேயாவர். உலகியற்பொருளைக் காணாதவராய்ச் சிவபெருமானையே காணல்வேண்டுமென்னும் காதலர்க்கு அருட்கண்ணாம் பெருங்கண்ணே கண்ணாம். அக்கண்ணால் சிவனைக் காண்பவர் காணாது கண்டவராவர். காணாது காண்டல் என்பது ஆருயிர் தம்மை இழந்து கண்ணுதற்பண்ணவன் கழலிணைக்கு நீங்கா அடிமைபூண்டு அப் பண்ணவன் கண்ணே தம் கண்ணாகக்கொண்டு அவன் காட்டக் காண்பது. அங்ஙனம் கண்டவரே களவாகிய பிறப்பினை ஒழிந்தவராவர். மறைப்பே கண்ணொளி என்பது கண்ணொளி மறைப்பிற்குமேற் செல்லாமையால் அம் மறைப்பே கண்ணொளி தடைப்படுதற்குக் காரணம் என்பதனால் ஏதும் அறியாதிருப்பதென்பதாம்.

படலம் - மறைப்பு. காணாதவர் - காண ஆசைகொள்ளாதவர். காணாதவர் - குருடர். காணாது

கண்டவர் - சீவபோதம் இன்றிச் சிவபோதமாய்க் காண்பவர்.

## 2037. பித்தன் மருந்தால் தெளிந்து பிரகிருதி

2037. பித்தன் மருந்தால் தெளிந்து பிரகிருதி
உய்த்தொன்று மாபோல் விழியுந்தன் கண்ணொளி
அத்தன்மை யாதல்போல் நந்தி அருள்தரச்
சித்தந் தெளிந்தேன் செயலொழிந் தேனே.

பித்தனுக்கு அந் நோயால் ஏற்பட்ட பிரகிருதியாகிய கிறுக்குத்தன்மை, தீர்ப்பான் தரும் தக்கமருந்தால் நீங்கப்பெறும். நீங்கவே நல்ல நிலைமையைப்போய்ப் பொருந்துவன். அதுபோல கண்ணொளியும் படலம் நீங்கக் காணும் இயற்கைத்தன்மை எய்தும். அந்நிலைபோல் நந்திக்கடவுள் ஆருயிர்கட்கு இருட்சார்பாம் மருள்நீங்கத் திருவருள் தந்தருள்வன். தரச் செவ்வி உயிர்களின் சித்தந் தெளிவினை எய்தும். அம்முறையில் அவனருளால் தெளிவெய்தினேன். தெளிவெய்தவே செயல் ஒழிந்தேன் என்க.

பிரகிருதி - பித்தசுபாவம்.

## 2038. பிரான்மய மாகப் பெயர்ந்தன எட்டும்

2038. பிரான்மய மாகப் பெயர்ந்தன எட்டும்
பராமய மென்றெண்ணிப் பள்ளி யுணரார்
சுராமய முன்னிய சூழ்வினை யாளர்
நிராமய மாக நினைப்பொழிந் தாரே.

நிலம் நீர் நெருப்பு உயிர் நீள்விசும்பு நிலாப் பகலோன் புலனாய மைந்தன் ஆகிய எட்டுறுப்பும் சிவபெருமான் புணர்ந்து நிற்கும் தட்டுறுப்பாகும். அவ் வெட்டும் அவன் திருவாணைவழிப் புடைபெயர்வன. எல்லாம் சிவமயம் என்று எண்ணும் தவத்தோர் அகத்தவமாகிய அறி துயிற் பள்ளிநீங்கார். பேரறிவுப் பேரின்பப் பெருவழிவாம் திருவடி நிலையினை எய்தும்பொருட்டு நானெறியுள் மேனெறியாம் அறிவு நெறியினை ஆயும் திருவினையாளர் பிறப்பு இறப்புத்துன்பம் நீங்கிச் சிறப்புத் திருவடியின்பமாக ஓங்கி வேறு நினைப்பு ஏதும் இன்றி இருந்தனர் என்க. முன்னிய: செய்யிய என்னும் வினைஎச்சம்; எய்தும் பொருட்டு. தட்டுறுப்பு - சார்புறுப்பு.

பிரான்........எட்டும் - அட்ட மூர்த்தங்கள் (நிலம், நீர், அனல், வளி, வெளி, சந்திரன், சூரியன், ஆன்மா). பராமயம் - பரையின் மயம். சுராமயம் - ஆனந்த மயம். நிராமயம் - துன்பம் இன்மை.

## 2039. ஒன்றிரண் டாகிநின் றொன்றியொன் றாயினோர்க்கு

2039. ஒன்றிரண் டாகிநின் றொன்றியொன் றாயினோர்க்கு
ஒன்றும் இரண்டும் ஒருகாலும் கூடிடா
ஒன்றிரண் டென்றே யுரைதரு வோர்க்கெலாம்
ஒன்றிரண் டாய்நிற்கும் ஒன்றோடொன் றானதே.

ஆருயிர்கள் சிவனிறைவில் ஒன்றியிருப்பினும் மலநீக்கத்தின் பொருட்டுப் பிறப்பினை எடுக்கின்றன. அக் காலத்து வேறுபட்டு இருக்குமென்னின்; அது பொருந்தாது. பிறப்பேற்ற சிற்றுயிரும் பிறப்பளித்த பேருயிரும் எந்தக்காலத்தும் எந்த இடத்தும் பிரிந்து நின்றதில்லை. அப்படியன்று, பேருயிராகிய கடவுளே ஒன்றாயிருந்தது சிற்றுயிர் என வேறுபட்டு இரண்டா நின்றது. பின் ஒன்றாகிவிட்டது என்று கூறின், பெறுவானாகிய சிற்றுயிர் இல்லையாகி முடியும். சிற்றுயிர் - சீவான்மா. பேருயிர் - பரமான்மா. எனவே ஒன்றிரண்டாகி நிற்றால் என்பது : கலப்பால் சிற்றுயிரும் பேருயிரும் ஒன்றாகவுள்ளன. பொருள்
தன்மையில் அவ் விரண்டும் பெறுவானும் பேறுமாய் நிற்கும். பெறுவான் - சிற்றுயிர்; பேறு - பேருயிர். அதனால் ஆவியும் சிவனும் திருவருளால் வேறற நின்றும் இரண்டும் ஒன்றுகூடும். அக் கூட்டத்தின் உண்மையினை உணர்ந்தார் ஒன்றாயினோராவர். அவர்க்கு ஒன்றும் இரண்டும் வெவ்வேறாகவே இருந்தால் ஒருகாலத்தும் அவை ஒன்றுகூடா என்னும் உண்மை நன்கு புலனாகும். ஒன்றிரண்டு என்று பேசப்படுவோர்க்கெல்லாம்

ஒன்றிரண்டாகவே நிற்கும். திருவருளால் சிற்றுயிரும் பேருயிரும் ஒன்றெனலும் இன்றி இரண்டெனலும் இன்றி இரண்டற்கும் பொதுவாய்ப் புணர்ந்து வேறற நிற்கும் மெய்ம்மை விளங்கும். இதுவே ஒன்றோடொன்று கூடிப் பெறுவானும் பேறுமாய் வாழ்வதொரு பெற்றியாகும். இதுவே செம்பொருட்டுணிவினர் கொள்ளும் சிறந்த திருவடிப் பேறாகும். மேலும் இதுவே சிவப்பணியுமாகும்.

சிவபெருமான் ஒருவனே உயிரென வேறுபட்டு நின்று பின்னர்க் கூடி ஒன்றாகுமென்று கூறுவோமானால் அவ்விடத்துப் பெறுவானாகிய உயிரில்லை; பேறுதருவோனாகிய சிவன் இல்லை. உயிர்கள் வெவ்வேறாகவே நின்று சிவத்துடன் கூடிச் சிவமாய் விடுமெனில் பெறுவானில்லை. உயிர்களும் சிவமும் வீடுபேற்றின்கண்ணும் வெவ்வேறாகவே இருக்கும் எனின் பேறில்லை. தீயினைச் சார்ந்த இரும்புபோல் இருக்குமெனின் உயிர்கள்மாட்டும் ஐந்தொழில் காணப்படுதல் வேண்டும். அங்ஙனம் காணப்படுமாறில்லை.

இவையனைத்தும் ஒவ்வாமையான், கட்டில் ஆணவத்துடன் வேறற நிற்பதுபோல் ஒட்டில் சிவத்துடன் வேறற நிற்கும். இது 'பேதமை யொன்றோ பெருங்கிழமை யென்றுணர்க, நோதக்க நட்டார் செயின்.' (85) என்னும் செந்தமிழ்ப் பொதுமறையான் உணர்க.

"ஒன்றே உயிராகி ஒன்றிற்பெறு வான்பேறில்
நின்றீர்சேர்ந் தொன்றேல் பெறுவானில் - ஒன்றலின்றி
வெவ்வேறேல் பேறின்றாம் வெப்பிரும்பேல் செய்கையில்லை
செவ்வொப்பில் காணவச் சேர்ப்பு."

இதனை நினைவுகூர்க.

ஒன்று இரண்டாகி - சிவத்தொடு வேறாகி. ஒன்றாயினோர் - சிவத்தோடு கலந்தவர். ஒன்றும் இரண்டும் - மும்மலம். ஒன்றோடொன்று - துவிதம்.

## 2040. உயிரது நின்றால் உணர்வெங்கு நிற்கும்

2040. உயிரது நின்றால் உணர்வெங்கு நிற்கும்
அயரறி வில்லையா லாருடல் வீழும்
உயிரும் உடலும் ஒருங்கிக் கிடக்கும்
பயிருங் கிடந்துள்ளப் பாங்கறி யாரே.

உயிர்ப்பும் உயிராகாவாம். உயிர்ப்பு ஆகிய உயிர் நின்றால் அவ் வுடற்கண் உணர்வு எல்லாவிடத்திலும் நிகழ்தல் வேண்டும். நினைப்பும் மறப்பும் உண்டாகா. உடலும் கீழ்விழாது. ஆகையால் உயிர்ப்பும் உடலும் ஒற்றுமையுற்று வாழும் வாழ்வு சிவபெருமானின் திருவுள்ளப்பாங்காகும். அவ் வுண்மையினைப் பலரறியார்.

உயிரது - உயிர்ப்பு. அயர் அறிவு - மறந்து நினைக்கும் அறிவு. பயிர் - விளைவு, வாழ்வு.

## 2041. உயிரது வேறா யுணர்வெங்கு மாகும்

2041. உயிரது வேறா யுணர்வெங்கு மாகும்
உயிரை யறியில் உணர்வறி வாகும்
உயிரன் றுடலை விழுங்கு முணர்வை
அயரும் பெரும்பொரு ளாங்கறி யாரே.

திருவருளால் உயிர் உடலின் வேறு என்னும் உண்மை ஏற்படின் உணர்வு சுட்டும் சிற்றும் கடந்து முற்றாய் எங்கும் ஆகும். அதுபோல் உயிரின் உண்மையை அவ் வருளால் அறியில் அவ் வுணர்வே மெய்யுணர்வாகும். உடலை நீங்கச்செய்வது உயிரன்று. அவ் வுண்மையினை அறிவிக்காமல் மறைத்து வைத்திருப்பதும் பெரும்பொருளே. இவ் வுண்மைகள் அவனருளாலன்றி உணரவாரா. சுட்டும்: சுட்டுணர்வும். சிற்றும்: சிற்றுணர்வும். முற்றாய் - முற்றுணர்வாய்.

அயரும் - மறைக்கச்செய்யும். உயிர் அன்று உடலை விழுங்கும். உணர்வை - (உடல் உயிரை விழுங்குதல் என்பது சாதல்) பிரகிருதி மாயா உடலைச் சுத்த மாயா உடலாக உணர்தல்.

## 2042. உலகாணி யொண்சுடர் உத்தம சித்தன்

2042. உலகாணி யொண்சுடர் உத்தம சித்தன்
நிலவாணி ஐந்தினுள் நேருற நிற்குஞ்
சிலவாணி யாகிய தேவர் பிரானைத்
தலைவாணி செய்வது தன்னை யறிவதே.

தேரினைத்தாங்கும் அச்சாணி யொத்து விளங்குபவன் 'அண்ட மாரிரு ளூடு கடந்தும்பர், உண்டு போலுமோர் ஒண்சுடர்' என்னும் வெண்சுடர். அவனே தனக்கோர் தலைவனில்லா முழுமுதற் றலைவனாவன். அவனே எல்லாம் கைகூடச்செய்யும் சித்தன். அவன் நிலமுதலாகச் சொல்லப்படும் ஐம்பூதங்களுள்ளும் நுண்மையனாய், வண்மையனாய், திண்மையனாய், கண்மையனாய், எண்மையனாய் நிற்பன். நுண்ணிய உடலுடன் நிலவும் முத்தேவருள்ளிட்ட எத்தேவருந்தொழும் விழுத்திணைப் பெருமானைத் தன்னிடத்து வெளிப்பட்டு வாழ்பவனாகச் செய்வது தன்னை யறிவதென்னும் தலையறிவாகும். இதற்கோர் ஒப்பு "ஆளுடையபிள்ளை யரசுநம்பி யாரடிகள், கேள்மூலர்" ஆகிய ஐவர்தம் ஐந்தெழுத்து அருள் நூலை நாம் அகங்குழைந்து ஓதுங்கால் எவ்வெவர் நூலை ஓதுகின்றேமோ அவ்வவர் அங்ஙனம் ஓதப்பெறும் திருமறை உடலாகத் தாம் உயிராக நம்முயிர் உறையுளாக விளங்கித் திகழ்வது உணர்வுண்மையன்றோ, அதுவேயாம். இவ் வுண்மையினை வரும் வெண்பாவால் நினைவு கூர்க:

"ஐவர் பெருநூலை ஆங்கோத அவ்வவரும்

செய்வரங்கு வாழ்தல் சிறந்துசிவ - மெய்வாழ்வாம்
அம்மறை யாமுடல் ஆங்கவ ராமுயிர்
நம்மெய் உறையுளாம் நாடு."

உலகாணி - உலகுக்கு உறுதி. நிலவாணி ஐந்து - ஐம்பூதம். சிவவாணி - கலந்துநிற்கும். தலைவாணி - தன்னிடத்து வாழ்பவனாக.

## 2043. தானந்த மாமென நின்ற தனிச்சுடர்

2043. தானந்த மாமென நின்ற தனிச்சுடர்
ஊனந்த மாயுல காய்நின்ற வொண்சுடர்
தேனந்த மாய்நின்ற சிற்றின்ப நீயொழி
கோனந்த மில்லாக் குணத்தரு ளாமே.

பேரொடுக்கப் பேரறிவுண்மை இன்பப் பெரும் பொருள் ஓரொப்பில்லாச் சிவபெருமான்; ஆதலின், அவனே எல்லாவற்றிற்கும் அந்தமாகிய தனிமுதற் சுடராவன். இதுபற்றியே மெய்கண்டாரும் அந்தம் ஆதியென்றருளினர். உலக முதலாக உடம்பிறுதியாக நின்ற ஒண்மை வண்மைச்சுடரும் அவனே. நிலையுதலிலாத தேன்போலும் இனிமை வாய்ந்த உலகியற் சிற்றின்பத்தினை நீ விடுவாயாக. விழுமிய முழுமுதற் பெரும்பொருள் சிவபெருமான். அவனது முடிவுபேறில்லாத திருவருள் திருவடிப்பெரும்பேறு. இது நிலையுள்ள இன்பமாகும். அப்பேறு கைகூடும். கைகூடும் என்பது சொல்லெச்சம்.

தானந்தம் - எல்லாவற்றிற்கும் தானே முடிவிடமாம். ஊனந்தமாய் - உடல் இறுதியாய். தேனந்தமாய் - தேன்போலும் இனிமையாய். கோனந்தமில்லாக் குணத்து - சிவனது எல்லையற்ற கருணையினால்.

## 2044. உன்முத லாகிய வூனுயிர் உண்டெனுங்

2044. உன்முத லாகிய வூனுயிர் உண்டெனுங்
கன்முத லீசன் கருத்தறி வாரில்லை
நன்முத லேறிய நாம மறநின்றால்
தன்முத லாகிய தத்துவ மாமே.

ஆருயிர் உறையும் உடலின்கண் காணப்படும் நினைத்தற் கருவியாகிய மனம் இயங்குதற்கு வினைமுதற்காரணன் அரன் ஆவன். அவனே மலைகளுக்கெல்லாம் முதன்மைவாய்ந்த திரு வெள்ளிமலைச் செல்வனாவன். இவ் வுண்மைக் கருத்தினை அறிவார் பலரிலர். பிறப்புக்கு வித்தாகிய காமம் வெகுளி மயக்கமாகிய மூன்றன்நாமமும் அறு நன்னெறி நான்மையின் நிற்றல் வேண்டும். நின்றால் அவை அறும். அவை அற்றால், தனக்கு முதலாகிய மெய்ப்பொருளாம் சிவனை எய்துதல் கூடும். எய்தினால் அந்தமில பேரின்பம் வந்துறும். தத்துவம் - மெய்ப்பொருள். நான்மை : சீலம், நோன்பு, செறிவு, அறிவு.

உன்முதல் - மனம் இயங்குதற்கு மூலம். கன்முதல் - கயிலை. நன்முதல் - பிறப்பீனும் வித்து (காமம் வெகுளி முதலியன.)

## 2045. இந்தியம் அந்தக் கரண மிவையுயிர்

2045. இந்தியம் அந்தக் கரண மிவையுயிர்
வந்தன சூக்க வுடலன்று மானது
தந்திடும் ஐவிதத் தால்தற் புருடனு
முந்துள மன்னும் ஆறாறு முடிவிலே.

பூத முதலாகிய தன்மாத்திரை ஐந்தும், மனம் எழுச்சி இறுப்பு ஆகிய அகப்புறக் கலன் மூன்றும் கூடி எட்டாகும். இவ்
வெட்டும் உயிரன்று. உயிர் உறையும் நுண் உடல். இவை உயிர்க்குத் திருவருளால் கொடுத்தருளப்பட்ட இயற்கைப் பிறப்புடல். இவை மான் என்று சொல்லப்படும் மூலப்பகுதியினின்றும் திருவருளால் தரப்பெறும். காலம், ஊழ், உழைப்பு, உணர்வு, விழைவு என்னும் ஐம்போர்வை சுற்றியதும் ஆருயிர் ஆளாகும். ஆளாகும் என்பதாள் தற்குமாளப்படும். கோளாதற் கும்மாம் குறி என்பதனால் ஆருயிர் கருவிகரணங்களை ஆளும்; கர்த்தாவாகிய சிவபெருமானால் ஆளப்படும். அத்தகைய உயிரின் உள்ளத்தின்கண் மாறாது நிலைபெற்று மன்னும் சிவபெருமான் உன்னுதற்கும் அரிய அருஞ்சைவர்மெய் (2139) ஆறாறு என்னும் முப்பத்தாறு தத்துவ முடிவின்கண் முடிவின்றி விளங்கும் படியிலா விழுப்பொருள்.

ஐவிதம் - கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை, சமாதி.
ஆறு ஆறு - 36 தத்துவங்கள்.

## 2046. வித்துப் பொதிவார் விரைவிட்டு நாற்றுவார்

2046. வித்துப் பொதிவார் விரைவிட்டு நாற்றுவார்
அற்றதம் வாணாள் அறிகிலாப் பாவிகள்
உற்ற வினைத்துயர் ஒன்றும் அறிகிலார்
முற்றொளி தீயின் முனிகின்ற வாறன்றே.

வித்தின்பொருட்டு நெல்லை நன்றாக உணக்கிப் பேணி வைப்பர். விதைவிதைத்து நாற்றுண்டாக்குவார்கள். உடலுக்கு வேண்டும் உணவினைத் தேட எத்துணைப் பாடுபடுகின்றனர். இவர்கள் தங்களுடைய வாழ்நாள் இன்னும் எத்துணைப்பொழுது நிற்கும் என அறிய எவ்வகை முயற்சியும் செய்கின்றிலர். செய்வாரேல் நன்னெறி நான்மைவழி நாளும் ஒழுகுவர். அங்ஙனம் ஒழுகாமையால் தம் வாழ்நாள் அற்ற தன்மையினை அறிகின்றிலர். இவர்களே பழுதகலா முழுப்பாவிகளாவர். மேலும் தங்களை வந்து பொருந்தும் இருவினைத் துன்பத்தினைப் பற்றி ஒன்றும் அறிகிலர். இவர்கள் இன்புற எண்ணும் உலகப்பற்றின் வழியே மாண்டுமடிகின்றனர். முனிகின்றது; மடிகின்றது. இதற்கு ஒப்பு முற்றொளி என்று சொல்லப்படும் நிறைந்த விளக்கொளியின்முன் விட்டிற்பூச்சி வீழ்ந்து மாண்டு மடிகின்றதாகும். விட்டிற்பூச்சி அவாய் நிலையான்வந்தது.

வித்துப் பொதிவார் - கன்மத்தை ஈட்டுபவர். விரைவிட்டு நாற்றுவார் - பிறந்துழல்வார். தீயின் முனிகின்ற - விட்டில் விளக்குத் தீயில் மடிகின்ற.

## 2047. போது சடக்கெனப் போகின் றதுகண்டும்

2047. போது சடக்கெனப் போகின் றதுகண்டும்
வாதுசெய் தென்னோ மனிதர் பெறுவது
நீதியு ளேநின்று நின்மலன் தாள்பணிந்து
ஆதியை அன்பில் அறியகில் லார்களே.

வாழ்நாட்கு அலகாய் வயங்கொளி மண்டிலப்பொழுது மிக விரைவாக ஒவ்வொருநாளும் கழிந்துபோமாற்றைக் கண்டிருந்தும் வீணாகச் சாதி குலம் சமயம் என்னும் பொருள்பற்றி ஓயா வழக்கிட்டு அந்தோ! மாயும் மனிதர் பெறுவது என்னோ? ஏதுமின்று. இத்தகையோர் 'நெஞ்சுள் நின்று நினைப்பிக்கும் நீதி' சால் தூயோன் சிவபெருமான். அவன் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கியவன். அவன் திருவடியினை நன்னெறியாகிய நீதியுள் நின்று பணிந்து வழிபடும் திருமுறை வகைமையினையும் உணரார். ஆதியாகிய அம்மையோடு கூடி விளங்கும் அப்பனாம் முதல்வனை அகனமர்ந்த அன்பினில் வைத்துத் திருமுறை வழியாகத் தொழுது தூமலர் தம் கைகளால் தூவிப் போற்றித் தொடர் புகன்று வணங்கிப் பூசனை புரியவும் அறிகிலர்.

சடக்கென - விரைவாக.

# 2048. கடன்கொண்டு நெற்குத்துக் கையரை யூட்டி

2048. கடன்கொண்டு நெற்குத்துக் கையரை யூட்டி
உடம்பினை யோம்பி உயிராத் திரிவார்
தடங்கொண்ட சாரல் தழல்முரு டேறி
இடங்கொண் டுடலார் கிடக்கின்ற வாறே.

ஒருபோ துணவை ஒழியென்று கூறினார்க்கு உடன்பட்டு ஒழிக்கும் தன்மைவாய்ந்ததன்று வயிறு. அத்தகைய வயிற்றுடன் கூடியது உடம்பு. அவ் வுடம்பினுள் வஞ்சகப்புலையர்கள் ஐவராவர். அவர் நினைவினை நிறைவிக்கும் பொருட்டுக் கடன்பட்டு நெற்பெற்று அவற்றைக் குற்றியூட்டுகின்றனர். என்னினும் இனிமைவாய்ந்தது உடம்பென்று, அவ் வுடம்பினையே உயிராகக்கொண்டு திரிவார். அத்தகையோர் உடம்பும் உயிர்நீங்கிப் பிணமாகின்றது. அவ் வுடம்பினை விரிந்த இடம் அமைந்த சுடுகாட்டுப்பக்கம் கொண்டுபோவர். ஈமவிறகின் மேல் ஏற்றுவர். ஏற்றி எரியூட்டுவர். அதனை மாறா இடமாகக்கொண்டு உடம்புகிடக்கின்ற உண்மையினைக் கண்டும் அதுபோன்று தம்முடலைக் கருதாது கனியினும் கட்டிபட்ட கரும்பினும் இனிக்குமென்று எண்ணித் திரிகின்றனர்.

கையரை ஊட்டி - வஞ்சகருக்கு விருந்து செய்து சாரல் - இடுகாடு. தழல் - அனல். முருடு - சிதை (முருட்டுக் கட்டை).

## 2049. விரைந்தன்று நால்வர்க்கு மெய்ப்பதி சூழ்ந்து

2049. விரைந்தன்று நால்வர்க்கு மெய்ப்பதி சூழ்ந்து
புரந்தகல் லால்நிழற் புண்ணியன் சொன்ன
பரந்தன்னை யோராப் பழிமொழி யாளர்
உரந்தன்மை யாக வொருங்கிநின் றாரே.

முன்னாளில் மெய்ப்பதியாகிய சிவபெருமானைச் செம் பொருட்டுணிவுச் செல்வர் நால்வர் சூழவந்து வணங்கிச் செந்தமிழாகமச் செழும்பொருளைச் செவியறிவுறுத்துமாறு வேண்டிக்கொண்டனர். சிவபெருமானும் மலைமீது விளங்கும் ஆலநீழலில் தென்முகச் செல்வராய் இன்முகத்துடன் வீற்றிருந்தருளினன். அவ்வடிவே புண்ணிய வடிவம். அவன் உரைத்தருளிய நூலே மெய்கண்ட நூன்முதல். அதுவே முப்பொருளுண்மை செப்புந் தமிழ் நூற் கரு. அம் மெய்ப்பொருளுண்மையினை மெய்கண்டார் வழிநின்று திருவருட்கண்ணால் உணராதவர் புன்னெறிச் சென்று போதுபோக்கும் தீதால் பழிமொழியாளராவர். இத்தகையோர் மனம்போனவாறே நினைத்தற்கும் சொல்லற்கும் செய்தற்கும் உடன்பட்டு நிற்கும் மடமையராவர். முன்னாள் மெய்ப்பொருள் முதல்வன் பாற்கேட்ட வழிவழி நால்வராவர் : நந்தி, சனற்குமரன், சத்தியஞான தரிசனிகள், பரஞ்சோதி மாமுனிவர் என்ப.

நால்வர் - சனகன் முதலிய நால்வர். பரந்தன்மை - மேலான ஞானத்தை. உரம் - உறுதி.

## 2050. நின்ற புகழும் நிறைதவத் துண்மையும்

2050. நின்ற புகழும் நிறைதவத் துண்மையும்
என்றும்எம் மீசன் அடியவர்க் கேநல்கும்
அன்றி யுலக மதுவிது தேவென்று
குன்றுகை யாலே குறைப்பட்ட வாறன்றே.

'ஒன்றா வுலகத்து உயர்ந்த புகழல்லால், பொன்றாது நிற்பது' பிறிதொன்றில்லையாதலின் நின்ற புகழும் என்று ஓதப் பெற்றது அத்தகைய நிலைநின்ற புகழும், சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்று ஓதப்பெறும் நற்றவத்துண்மையும் எந்நாளும் எம்மை ஆண்டருளும் பெருஞ் செல்வனாகிய சிவபெருமானுக்குரிமை பூண்டு ஒழுகும் மெய்யடியார்கட்கே நற்பயனளித்து நீங்காது நண்ணுவதாகும். அதுவல்லாமல் இவ் வுலகத்தில் அயலோர் கூட்டரவால் மருளுற்றுச் செத்துச் செத்துப் பிறக்கும் உயிரினங்களை அது தெய்வம் இது தெய்வம் என்றும், இடி மின்னல் காற்று மழை தீ முதலிய அறிவில் பொருள்களையும் அவ்வாறே அது தெய்வம் இது தெய்வம் என்றும் அறிவுக் குறைவால் கூறுவார் பலர். அவர் அக் குற்றத்தாலும் அறியாமைச் செறிவாலும் பின்னும் குறைபட்டாராவர். குறைபடுதல், தாழ்ந்த பிறப்பினராதல். அவ் வுண்மை தக்கனுக்கு ஆட்டுத்தலை1 யமைந்தமை நன்குணர்த்தும்.

குன்றுகை - குறைதல்.

## 2051. இன்பத்து ளேபிறந் தின்பத்து ளேவளர்ந்து

2051. இன்பத்து ளேபிறந் தின்பத்து ளேவளர்ந்து
இன்பத்து ளேநினைக் கின்ற திதுமறந்
துன்பத்து ளேசிலர் சோறொடு கூறையென்
துன்பத்து ளேநின்று தூங்குகின் றார்களே.

பிறவாப் பெருநெறி எய்துதற்குச் சிவபெருமான் மக்கட் பிறப்பினை வகுத்தளித்தருளினன். அவ்வுயர்ந்த பிறப்பினை எய்த ஆருயிர்கள் மீட்டும் அப் பிறப்பிறப்பில் புகாது அந்த வுடம்பு தன்னுடனே அரனார்
மகனாராதல் வேண்டும். அதுவே இறவாத இன்பப் பிறப்பாகும். இன்பப் பிறப்பென்பது சிவனடி மறவா அன்புத் திருவுள்ளத்துடன் இருப்பது. அத்தகையாரே தொண்டராங் குணமிக்காராவர். அவ் வுண்மை வரும் சேக்கிழாரடிகள் மறைமொழியா னுணரலாம்:

"நின்றாலும் இருந்தாலும் கிடந்தாலும் நடந்தாலும்
மென்றாலும் துயின்றாலும் விழித்தாலும் இமைத்தாலும்
மன்றாடும் மலர்ப்பாதம் ஒருகாலும் மறவாமை
குன்றாத குணமுடையார் தொண்டராங் குணமிக்கார்."

## 12. பத்தராய்ப் பணிவார், 7.

12. பத்தராய்ப் பணிவார், 7.

குணமிக்கார் என்பது முக்குணங்கடந்து சிவனார் எண்குணத்தே கிடந்து வாழ்பவர். அவர்தம் மறவாச் சிவனினைவாகிய ஈறில் இன்பத்துளே பிறந்தவராவர். அத்தகைய மெய்யடியார் அருட்சார்பை விட்டு அகலாது ஒழுகுவர். அதனால் அவர்கள் அவ் வின்பத்திலே வளர்கின்றவராவர். உடைபோன்றிருப்பது சிவமணி. உடல்போன்றிருப்பது திருவெண்ணீறு. உயிர்போன்றிருப்பது திருவைந்தெழுத்து. இம் மூவகையாலும் யாவர்க்கும் சிவனை மறவா இன்பநினைவு உண்டாகும். அவ் வகை இன்பத்துள்ளே உறுதியுடனின்று நினைக்கின்றவர்களும் அவ்வின்பப் பிறப்பு எய்திய மெய்யடியார்களேயாவர். இத்தகையோரைக் கேட்டும் கண்டும் இச் சிறப்பினை மறந்து மருளுகின்றனர் சிலர். அம் மருட்சியால் சிலர் துன்பத்துளே தொடக்குறுகின்றனர். அத் தொடக்கினால் சோறும் கூறையும் வேண்டித் துன்பத்துள்ளே சிலர் தூங்கிச் சோர்கின்றனர். தூங்குதலென்பது வேறு எவ்வகை யுணர்வும் எழாது ஏதாவது ஒன்றிலே ஆழ்ந்து தங்கிவிடுதல்.

"உடையாம் சிவமணி ஒண்மையுடல் நீறாம்
நடையுயிரும் ஐந்தெழுத்தாம் நாடு."
என்பதனை நினைவுகூர்க.

இன்பம் - சிவம். மறந்து - மயங்கி. சோறொடுங் கூறை - சோற்றுக்கும் துணிக்குமாக.

## 2052. பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்

2052. பெறுதற் கரிய பிறவியைப் பெற்றும்
பெறுதற் கரிய பிரானடி பேணார்
பெறுதற் கரிய பிராணிகள் எல்லாம்
பெறுதற் கரியதோர் பேறிழந் தாரே.

'மானுடத் துதித்தல் கண்டிடிற் கடலைக் கையால் நீந்தினன் காரியங்காண்' என்பது தமிழாகம ஒத்தாகலின் மானுடப் பிறவியிற் பிறக்க நேர்ந்தார் அனைவர்க்கும் மாறின்றி மேலோதிய இன்பம் வந்து எய்துதல் ஒருதலை. அத்தகைய பெறுதற்கரிய மானுடப் பிறவி யினைப் பெற்றும் பெறுதற்கரிய சிவபெருமான் திருவடியிணையைப் பேணுகின்றிலர். இவர்கள் பெறுதற்கரிய பிராணிகளாவர். இவர்கள் ஆறறிவுயிரோடு பிறந்தும் ஐயறிவு விளங்கும் விலங்கு முதலியவற்றோடும் ஒப்பாகார் என்னும் கருத்தால் 'பிராணிகள்' என்றருளினர். இத்தகையோர் பெறுதற்கரிய சிவபெருமான் திருவடிப்பேற்றின் நற்பேறு இழந்தோராவர். சிறுபான்மை யானை சிலந்தி முதலியனவும் (2057) வழிபடுவது கேட்கப்படுதலின், வழிபடாதார் விலங்கினும் தாழ்வாவர்.

பெறுதற்கரிய பிறவி - மானிடப்பிறவி. பெறுதற்கரிய பேறு - முத்தி இன்பம்.

## 2053. ஆர்வ மனமும் அளவில் இளமையும்

2053. ஆர்வ மனமும் அளவில் இளமையும்
ஈரமும் நல்லவென் றின்புறு காலத்துத்
தீர வருவதோர் காமத் தொழில்நின்று
மாதவன் இன்ப மறந்தொழிந் தார்களே.

'காலமுண்டாகவே காதல்செய்து உய்ய' வேண்டுவது அனைவர்க்கும் அருளால் அமைந்துள்ள அருங்கடன். அக் காலமே ஒரு பொருளினிடத்துச் செல்லும் அன்பின்பெருக்காம் ஆர்வமனம் சோர்வின்றித் தோன்றும் காலம். தோன்றியவாறு தொழில்புரிவதற்கேற்ற அளவில்லாத ஊக்கமுந்தும் காலம் இளமைக்காலம். கருதியதை மறவா நினைவுடன் கருதற்காகும் காதலாம் ஈரமுடைய காலமும் அதுவே. இவையனைத்தினாலும் எய்தும் இன்பினை நல்லவென்றுகொண்டு இன்புறும் காலமும் அதுவே. அக் காலத்துப் பிறவியால் வரும் பெருந்துன்பம் நீங்குதற்குப் பற்றறுதல் வேண்டும். பற்றறுதற்குப் பற்றற்றான் பற்றினைப் பற்றுதல்வேண்டும். அதற்கு மாறாகச் சிவபெருமான்மாட்டுச் செல்லுவதோர் பெரும் பற்றாகிய பத்தி நீங்கவருவது உலகியற் பொருள்களில் செல்லும் காமம் அக் காமத்தொழிலிலேயே கன்றியமனத்தராய் நின்று மாதவன் இன்பத்தை மறந்தொழிந்தார்கள் மாண்பிலா மாக்கள். மாதவன்: மாதோடு கூடியவன்; பெரும்தவத்தையுடையவன். மாதர் அழகாதலால் யாவர்க்கும் அழகினைச் செய்வது வனப்பாற்றல். அவ் வாற்றலையுடையவன் மாதவன்.

இதுவே 'சீவ' என்னும் எழுத்தில் பேசும் எழுத்தாய்ப் பிறக்கும் 'வ' என்னும் எழுத்தின் சொற்பொருள்.

தீர - சிவபத்தி ஒழிய. மாதவன் - சிவன்.

# 2054. இப்பரி சேயிள ஞாயிறு போலுரு

2054. இப்பரி சேயிள ஞாயிறு போலுரு
அப்பரி சங்கியின் உள்ளுறை யம்மானை
இப்பரி சேகம லத்துறை யீசனை
மெய்ப்பரி சேவின வாதிருந் தோமே.

மேலோதியவாறு இன்பவடிவினனாய் என்றும் மறக்க ஒண்ணாதவனாய் விளங்கும் இப் பரிசுடைய சிவன் 'காலையே போன்றிலங்கும் மேனியன்' ஆதலின் அவனை இளஞாயிறுபோலும் திருவுருவினனென்று தொழுமின். அம் முறையாக அகத் தீயின் உள்ளுறைகின்றவன் அவன். அவனே அழகிய தலைவனாவன். அவனே நம் நெஞ்சத் தாமரையின் உள்ளுறைபவனாவன். அவனே வாராத செல்வம் வருவிக்கும் ஈசன் ஆவன். அவனை அவனருளால் வணங்குதல்வேண்டும். அருளால் வணங்குதல் திருவடியுணர்வால் வணங்குதல். அஃதாவது 'ஞானநூல்தனை யோதல் ஓதுவித்தல் நற்பொருளைக் கேட்பித்தல் தான்கேட்டல் நன்றாம், ஈனமிலாப் பொருளதனைச் சிந்தித்தல் ஐந்தும் இறைவனடி அடைவிக்கும் எழின்ஞான பூசை' என்பதற்கேற்றவாறு திருவைந்தெழுத்தால் வழிபடுதல். அவ் வழிபாட்டுப் பொருண்மையாம் உண்மைத்தன்மையினை நல்லார்பால் வினவாதிருந்தோமே என்று மனமார வருந்துதல் வேண்டும்.

அங்கியின் - உயிரின்கண் உள்ள. கமலத்துறை - உள்ளக் கமலத்திடை உறையும். மெய்ப்பரிசே - உண்மையான நெறியே. வினவாது - விசாரித்துத் தேடாது.

## 2055. கூடகில் லார்குரு வைத்த குறிகண்டு

2055. கூடகில் லார்குரு வைத்த குறிகண்டு
நாடகில் லார்நயம் பேசித் திரிவார்கள்
பாடகில் லாரவன் செய்த பரிசறிந்து
ஆடவல் லாரவர் பேறெது வாகுமே.

செவ்விநோக்கிச் சிவபெருமான் சிவகுருவாய் எழுந்தருள்வன். அவன் சிவதீக்கையினைத் திருமுறைவழிச் செய்து ஆட்கொள்வன். சிவபூசையினைத் திருவைந்தெழுத்தால் புரியத் திருவருள் புரிவன். அதுவே குரு வைத்தகுறி கண்டு கூடுவதாகும். அவ் வுண்மையினை நாடுவதாகிய சிந்தித்தலே நம்கடன். அதனை நாடாது நயமில்லனவற்றை நயமெனப் பேசி நாணிலர் திரிவர். சிவபெருமான் ஆருயிர்க்கு அளவின்றிப் புரியும் உளமகிழ் சிறப்பினைப் பாடிப் பரவுதல் வேண்டும். அதுவும் செய்கிலர். என்னே இவர்தம் புன்மை! குரு வைத்தருளிய குறிகண்டு நாடவும் பாடவும் ஆடவும் வல்லார் தேடரிய அளவிலாத் திருவடி யின்பினை எய்துவர். அவர் பெறும் அப் பெரும்பேற்றினை எவரே அளவிட்டுரைப்பர்? ஒண்ணாது என்னும் பொருளில் 'பேறெதுவாகும்' என வினா வாய்பாட்டான் ஓதி உணர்த்தியருளினர்.

## 2056. நெஞ்சு நிறைந்தங் கிருந்த நெடுஞ்சுடர்

2056. நெஞ்சு நிறைந்தங் கிருந்த நெடுஞ்சுடர்
நஞ்செம் பிரானென்று நாதனை நாடொறுந்
துஞ்சு மளவுந் தொழுமின் தொழாவிடில்
அஞ்சுற்று விட்டதோர் ஆனையு மாமே.

மெய்யன்பர்தம் பொய்யிலுள்ளத்து மேவி நிறைந்து அங்கு வீற்றிருந்தருளும் நெடுஞ்சுடர் சிவபெருமான். அவனே அனைவர்க்கும் ஆருயிர்நாதன். அவனே நம் செம்பிரான். இவ் வகையாக நினைந்து திருவைந்தெழுத்தால் தொழத் தொடங்குங்கள். தொடங்கிச் சாமன்றுவரையும் நாடொறும் விடாது தொழுங்கள். என்னை, 'தொழுவார்க்கே அருள்வது சிவபெருமா'னாதலான் என்க. இதனையே நற்றாள் தொழாவிடின் உற்றபயன் ஏதுமின்றென்றனர் பெருநாவலர். அங்ஙனம் தொழாவிட்டால் அஞ்சாகிய ஐம்புலனும் நம்மைப் பொருந்தி அது விரும்பிய இடத்தே நாம் சென்று அதனால் ஆட்டுண்டு பாகனில்லா யானைபோல் அழிவெய்துவோம். 'நஞ்சு' என்பதற்கு உள்ளம் நெகிழ்ந்து நைந்து என்றதும் ஒன்று.

நஞ்செம்பிரான் - நம் + செம் + பிரான், நம்முடைய செம்மையான கடவுள். அஞ்சு உற்றுவிட்டது - ஐம்புலனால் ஆட்டுண்டு வருந்துவது.

## 2057. மிருக மனிதர் மிக்கோர் பறவை

2057. மிருக மனிதர் மிக்கோர் பறவை
ஒருவர்செய் தன்புவைத் துன்னாத தில்லை
பருகுவ ரோடுவர் பார்ப்பயன் கொள்வர்
திருமரு மாதவஞ் சேர்ந்துணர்ந் தாரே.

முன்புள்ள உழுவலன்பின் தொடர்ச்சியினால் விலங்குகள் மனிதர் உயர்ந்தோர் பறவைகள் முதலிய அனைத்துயிர்களும் ஒப்பில்லாத ஒரு முழுமுதலாகிய சிவபெருமானிடத்து அன்புசெய்து நினைக்கின்றன. அன்புசெய்து நினையாத உயிர்களே இல்லை. நிலவுலகில் 'மக்களாய்ப் பிறந்தார் பெறும்பயன் மதிசூடும் அண்ணலார்' அடியிணையைத் தொழுதல். அப்படித் தொழுவாரே பிறவிப் பெரும்பயன் கொள்வார். அவர்கள் சிவபெருமானை அளவிறந்த அன்பினால் பருகுவாரொத்து இன்புறுவர். கிளர்ச்சியினால் கற்றி ஓடுவர். அத்தகையார் அழியாப் பெருந்திருவாம் சிவபெருமானின் திருவடியிணையினைப் பொருந்துவதற்கேற்ற பெருந்தவமாம் நானெறியில் இடையறாதொழுகும் நல்லோராவர். அவர்களே அடியார் இணக்கம் சேர்ந்தோராவர்.

பார்ப்பயன் - பூமியில் பிறந்ததால் உண்டாம் பயன். திருமரு மாதவம் - திருவருள் கூடும்படியான பெருமைமிக்க தவம்.

## 2058. நீதியி லோர்பெற்ற பொன்போல் இறைவனைச்

2058. நீதியி லோர்பெற்ற பொன்போல் இறைவனைச்
சோதியி லாருந் தொடர்ந்தறி வாரில்லை
ஆதி பயனென் றமரர் பிரானென்று
நாதியே வைத்தது நாடுகின் றேனே.

நீதியில்லாதார் பெற்ற செல்வம் தமக்கும் தம் வழியினுள்ளார்க்கும் சான்றவர்க்கும் பயன்படாது தீயார்க்கே பயன்படும். அதுபோல் கிடைத்தற்கரிய பொன்னினும் மிக்கது மக்களுடம்பு. இவ்வுடம்பினால் உள்ள பயன் உடம்பினுள் உத்தமனைக் காணுதல்.
அத்தகைய நன்னெறியிற் செல்லாது பொற்கொழுக்கொண்டு வரகுக்கு உழுவார்போன்று வீணாக அழிவாரும் பலர். அதனால் முழுமுதற் சிவபெருமானை அவனது திருவருளாகிய பேரறிவுப் பேரொளியால் தொடர்ந்து வழிபட்டு அறிவாரில்லை. ஆதியாகிய திருவருட்பயன் சிவனே என்றும், தேவர்பிரான் என்றும், தொன்மையிலேயே அமைந்த நன்மைய தென்றும் இடையறாது பாடிப் பரவிப் பணிகின்றேன்.

நீதி - முறைமை. நாதி: அநாதி என்றதின் முதற்குறை.

## 2059. இருந்தேன் மலரளைந் தின்புற வண்டு

2059. இருந்தேன் மலரளைந் தின்புற வண்டு
பெருந்தேன் இழைக்கின்ற பெற்றிமை யோரார்
வருந்தேன் நுகராது வாய்புகு தேனை
அருந்தேனை யாரும் அறியகி லாரே.

வண்டுகள் இன்புறும்பொருட்டு மிக்க தேனுள்ள மலர்களைச் சென்றணுகுகின்றன. இன்னிசைபாடி அளைகின்றன. அம் முயற்சியினால் பெருந்தேன் சேர்த்துக் கூடமைத்துத் தொகுக்கின்றன. இத் தன்மையினையும் உலகோர் உணராதிருக்கின்றனர். ஐம்புலன் நுகர்ச்சிக்கு எளிதாக வரும் நிலையிலா இன்பத்தேன்களை நுகராது நன்னெறி நான்மைவழியாக வந்து எய்தும் திருவடியின்பத்தேனைச் சிவனினைவுடன் அருந்துகின்றேன். அங்ஙனம் அருந்துகின்ற என்னை யாரும் அறிகின்றிலர். தொண்டரைத் தூயதொண்டரும் தொண்டர் முதல்வரும் அல்லவோ அறிகுவர்! ஏனைமிண்டர்கள் எங்ஙனம் அறிகுவர்? அருந்தேனை - அருந்துகின்ற என்னை. இது நம் நாயனார் தம் நிலைமொழிந்தருளும் இடங்களுள் ஒன்று.

மலர் அளைந்து - பூக்களைக் கிண்டி.

## 2060. கருத்தறி யாது கழிந்தன காலம்

2060. கருத்தறி யாது கழிந்தன காலம்
அருத்தியுள் ளான்அம ராபதி நாதன்
ஒருத்தனுள் ளானுல கத்துயிர்க் கெல்லாம்
வருத்திநில் லாது வழுக்குகின் றாரே.

உண்மைக் கருத்தினைத் திருவருள் துணையால் ஓர்த் துணராது காலங்கள் பலவூழியாகக் கழிந்தன. அருத்தியாகிய உண்மை அன்பினுள்ளான். தூமாயைச் சிவவுலக முதல்வன். அளவில்லாத உலகங்களுக்கும் அங்கங்கே வாழும் அளவிறந்த ஆருயிர்கட்கும் முதல்வனாக என்றும் ஒப்பில்லாத முழுமுதற் சிவன் ஒருவனே உள்ளான். அவன் திருவடியிணையினை எய்தி உய்திபெறுதற் பொருட்டு உடம்பினை வருத்தி நற்றவம் புரிந்து பற்றறுத்துச்சிறப்புற்றுயர்ந்து வாழ்வார் ஒருசிலராவர். அந் நெறிக்கு வாராது வழுக்குகின்றாரும் பலராவர்.

அருத்தி - அன்பு. அமராபதி - தேவலோகம். வருத்தி - தவத்தால் உடலை வாட்டி. வழுக்குகின்றார் - நெறி தவறுகின்றார்.

## 2061. குதித்தோடிப் போகின்ற கூற்றமுஞ் சார்வாய்

2061. குதித்தோடிப் போகின்ற கூற்றமுஞ் சார்வாய்
விதித்தன நாட்களும் வீழ்ந்து கழிந்த
அதிர்த்திருந் தென்செய்தீ ராறுதி ராகிற்
கொதிக்கின்ற கூழில் துடுப்பிட லாமே.

வினைக்கீடாக வரையறுக்கப்பட்ட நாள்களும் கழிந்தன. ஆகுல நீரராய்ப் பயனில மொழிந்தும் நயனிலபுரிந்தும் பொழுதுபோக்கி என்செய்தீர்! கூற்றம் குதித்தோடிப்போய் ஆற்றல்வாய்ந்த சிவத்தைப் பேணுதலாகிய நற்றவம் புரிகின்றிலீர். என்செய்வீர்! ஆறுதலாகிய 'அகனமந்த வன்பினராய் அறுபகைசெற்று ஐம்புலனும் அடக்கி ஞானப் புக'லினை எய்துவோர் ஆருயிர் கொதிக்கின்ற கூழொத்துக் காணப்படும் சிவபெருமான் திருவடியின்பில் துடுப்பிடுதல் ஒத்து அணைந்து இன்புறும்.

அதிர்த்திருந்து - ஆடம்பரமாக இருந்து. ஆறுதிராகில் - மனமாதி அடங்கப்பெற்றால். கொதிக்கின்ற கூழ் - சிவச்சோதி. துடுப்பிடல் - ஆன்மா ஒருமை அடைதல்.

## 2062. கரையரு காறாக் கழனி விளைந்த

2062. கரையரு காறாக் கழனி விளைந்த
திரையரு காமுன்னம் சேர்ந்தின்பம் எய்தும்
வரையரு கூறிய மாதவ நோக்கின்
நரையுரு வாச்செல்லு நாளில வாமே.

'உணர்ந்தார்க்கு உணர்வரியோன் தில்லைச் சிற்றம்பலத்து ஒருத்தன்' ஆகலின் அவனை அணையமுயல்வார் மனம் அடங்கிய எல்லையாகிய கரையின்கண் திருவடிப்பேரின்பக் கழனியாகிய சிவப்பேறு ஆற்றுப் பெருவெள்ளம்போன்று விளைந்து திகழ்கின்றது. நல்லோர் திரைப்பருவமாகிய முதுமை எய்துவதன்முன் திருவருளால் இரண்டறக் கூடிக் கலந்து இன்புறுதற்குப் பொருந்தும் பெருந்தவம் புரிவாராயினர். அதனால் உணர்வுள்ளத்து எல்லையிலாப் பேரின்பம் ஊறிப் பெருகுவதாயிற்று. இந் நன்னெறிக்கண் வாராத சில்லோர் நரைமுதிர் யாக்கையினராய்ச் சாநாளெய்தி வருந்துகின்றனர். அத்தகைய நாள் நற்றவத்தோர்க்கில்லென்ப.

கரையருகு - சிவக்கருணை ஆற்றின் கரையை அடுத்துள்ள - கருணைக்குரிய. ஆறாக் கழனி - சிவக்கருணை வெள்ளத்தில் திளைக்கின்ற ஆன்மாக்கள். விளைந்த - உண்டான சிவானந்தத்தை. திரை அருகா முன்னம் - நரைதிரை உண்டாகா முன்னம். வரை அருகு - மலையைச்
சேர்ந்த காடுகளிலோ, குகைகளிலோ. ஊறிய - செய்த. நரை உருவம் - முதுமைப்பருவம்.

## 2063. வரவறி வானை மயங்கிருண் ஞாலத்து

2063. வரவறி வானை மயங்கிருண் ஞாலத்து
இரவறி வானை யெழுஞ்சுடர்ச் சோதியை
அரவறி வார்முன் னொருதெய்வ மென்று
விரவறி யாமலே மேல்வைத்த வாறே.

இந் நிலவுலகத்துத் தொன்மையே புல்லிய இருளால் வரும் இருவினைக்கீடாகப் பிறப்பு நேரும் அதுபோல் கொண்டவினை நுகர்வின்கண் அப் பிறப்பு அறும். வரவறிவானை என்பதனால் பிறப்பும் இரவறிவானை என்பதனால் இறப்பும் பெறுமாறுணர்க. இத்தகைய நல்லுணர்வு எழுமாறு மங்காது ஓங்கி எழும் சுடர்ச்சோதியாகிய சிவபெருமானைச் செந்தமிழ்த் திருமுறை, திருமுறைவழியாக வுணர்ந்தவர் தமிழகச் சான்றவர். அவர்கள் உணர்ந்ததோடமையாது 'நான்பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்' என்பதற்கிணங்க உணர்த்தி உரைப்பாருமாயினர் அவரே அரவறிவார். அரவு - சொல். அது கருவியாகு பெயராய்த் தொன்மை நன்மைத் தமிழ் நூல்களை உணர்த்திற்று. இத்தகைய அருஞ்சைவர் முன் அவர் கூறும் ஒரு தெய்வமே உண்மையென்று உணர்ந்து அத் தெய்வமாம் சிவபெருமான் திருவடியில் கலந்து இன்புறும் நற்பேறில்லாதவர் அயன் மொழிமயக்கால் பல தெய்வப்பளகு கூறிப் பழிப்படுகின்றனர். அவர்கள் இன்னும் பிறக்க மேல்வினை வைத்தவராவர். பளகு - குற்றம்.

வரவு - தோற்றம். இரவு - முடிவு. அரவு அறிவார் - சொல்லத் தெரிவார். விரவு - கலத்தல்.

## 2064. மறந்தொழி மண்மிசை மன்னாப் பிறவி

2064. மறந்தொழி மண்மிசை மன்னாப் பிறவி
இறந்தொழி காலத்தும் ஈசனை உள்கும்
பறந்தல மந்து படுதுயர் தீர்ப்பான்
சிறந்த சிவநெறி சிந்தைசெய் யீரே.

மன்னா வுலகமாகிய இம் மண்ணினின்மீதுள்ள நிலையுதலில்லாத பிறவியை மறந்தொழியுங்கள் மன்னா - நிலையா. இறந்தொழியும் காலத்தும் சிவபெருமானைத் திருவைந்தெழுத்தால் வழுத்தி நினைக்கும் அருந்தவத்தை இப்பொழுதே மேற்கொள்ளுங்கள். அங்ஙனம் கொண்டால் வாழுங்காலத்தும் மாளுங்காலத்தும் சிவனினைவில்லார்க்கு ஏற்படும் படபடப்பையும் சுழன்று திரியும் துன்பத்தினையும் அதனால் நேரும் இருள்சேர் இருவினைப் பிறப்பையும் அந் நல்லார்க்கு வர வொட்டாது தீர்த்தருள்வன். இதுவே தென்னாட்டுச் சிறந்த சிவனெறியாகும். இந் நன்னெறியினை எண்ணங்கொண்டு நாடுவீராக. 'துஞ்சும் போழ்தும்' திருவைந்தெழுத்தும் நினைக்கும் தன்மையினை வரும் அப்பர் அருண்மொழியான் உணர்க :

'நெஞ்ச மென்பதோர் நீள்கயந் தன்னுளே
வஞ்ச மென்பதோர் வான்சுழிப் பட்டுநான்
துஞ்சும் போழ்துநின் னாமத் திருவெழுத்
தஞ்சும் தோன்ற வருளும்ஐ யாறரே."
அப்பர். 5. 27 - 3.

மன்னா - மன்னும். உள்கும் - நினையுங்கள். பறந்து - திரிந்து. அலமந்து - நிலைகலங்கி.

## 2065. செல்லு மளவுஞ் செலுத்துமின் சிந்தையை

2065. செல்லு மளவுஞ் செலுத்துமின் சிந்தையை
வல்ல பரிசால் உரைமின்கள் வாய்மையை
இல்லை யெனினும் பெரிதுளன் எம்மிறை
நல்ல வரனெறி நாடுமி னீவிரே.

செந்நெறிப் படரும் திருவினரே! ஒல்லும் வகையான் உங்கள் உள்ளம் செல்லுமளவும் சிவன் திருவடிக்கே செலுத்துங்கள். சிந்தையைச் செலுத்துவதென்பது திருவைந்தெழுத்தை வழுவாது தொழுது கணித்தல். தக்க முறையான் முப்பொருள் உண்மையாம் வாய்மையினை எடுத்துக் கூறுங்கள். சிலர் அறியாமையால் சிவன் இல்லை என்று கூறினும் எம் இறைவனாகிய சிவன் பெரிதும் உள்ளான். பெற்ற தாய் கிடையாதென்று உற்ற மகன் கூறினும் மற்று உலகம் கொள்ளாதல்லவா? நீங்கள் நல்ல அரனெறியை நாடொறும் நாடுங்கள். நாடுதல் - சிந்தைசெய்தல்.

செல்லுமளவும் - கூடியமட்டும். வல்ல பரிசு - இயன்ற அளவு.

## 2066. ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்

2066. ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமனில்லை நாணாமே
சென்றே புகுங்கதி யில்லைநுஞ் சித்தத்து
நின்றே நிலைபெற நீர்நினைந் துய்மினே.

பண்டு தென்னாட்டில் வழிபடும் முழுமுதற் கடவுள் வழிக்குலம் ஏற்பட்டது. முன்னாளில் எல்லாரும் செந்தமிழ்நாட்டில் சிவனை வழிபட்டனர் - தொழுதனர். அதனால் 'சைவர்' என்னும் ஒரு குலமே திகழ்ந்திருந்து. தொழில்பற்றிய குலம் பலவிருந்தாலும் வழிபாட்டுக் குலம் ஒன்றாக இருந்தமையால் பிணக்கின்றி அனைவரும் இணக்கமாக வாழ்ந்தனர். அதனால் 'ஒன்றே குலமும்' என்னும் இம் மறைமொழி எழுவதாயிற்று. அதுபோல் சிவபெருமானையே செந்தமிழர் முழுமுதற்றெய்வமாகக் கொண்டு வணங்கினர். அதனால் 'ஒருவனே தேவனும்' என்னும் இம் மறைமொழியும் எழுவதாயிற்று. நன்றாக நினைந்து தொழுங்கள். நமன் துன்பம் என்று சொல்லப்படும் இறப்பும் பிறப்பும் நமக்கு என்றும் இன்று. மீளா ஆளாய்ச் சிவனடிக்கீழ் நாமிருப்பதால் நாளும் அழிந்தொழியும் நிலைகட்குச் சென்று மீளும் பிறர்போல் சென்று மீளும் நிலை நமக்கில்லை. அதனால் நன்னெறி நல்லாராகிய நீவீர் நும் நல்லுள்ளத்துச் சிவபெருமான் திருவடி நின்று நிலைபெறவே நீர் நினைந்து உய்ம்மின். 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்' என்று இடையறாது ஓதப்படுவது

சிறந்ததொரு நன்மையாகும். அந் நன்றே நினைமின் என்பதும் ஒன்று.

சென்றே......இல்லை - நாம் தேடிச்சென்று அடையும் சிவகதி இல்லை. நும் சித்தத்......பெறும் - உம்முடைய சித்தத்தின் உள்ளேயே சிவகதி தானே வந்து நிலைபெறும்.

## 2067. போற்றிசெ யந்தண் கயிலைப் பொருப்பனை

2067. போற்றிசெ யந்தண் கயிலைப் பொருப்பனை
நாற்றிசைக் குந்நடு வாய்கின்ற நம்பனைக்
காற்றிசைக் குங்கமழ் ஆக்கையைக் கைக்கொண்டு
கூற்றுதைத் தான்றன்னைக் கூறிநின் றுய்மினே.

அழகிய செந்தண்மை வாய்ந்த திரு வெள்ளிமலைக்கண் வாழும் சிவபெருமானை நெஞ்சமே போற்றி செய்வாயாக. நான்கு திசைகளுக்கும் நடுவிடமாகக் காணப்படும் தில்லைக்கண் மன்னிய பொன்னம்பலவாணனாம் நம்பனை, உயிர்ப்பினால் நடத்தப்படும் ஒன்பது தொளைசேர் இவ் வுடம்பினைக் கைக்கொண்டு கூற்றை உதைத்துத் தன் திருவடியைக் கொடுத்தருளும் ஏற்றூர்தியும் நீற்றுமேனியும் தோற்று பெண்பாகமும் உடைய எம்மானை இடையறாது ஏத்தி ஐந்தெழுத்தோதி உய்யுங்கள். காற்று - உயிர்ப்பு.

காற்றிசைக்கும் - பிராணவாயுவினால் நடத்தப்படும்.

## 2068. இக்காய் நீங்கி யினியொரு காயத்திற்

2068. இக்காய் நீங்கி யினியொரு காயத்திற்
புக்குப் பிறவாமற் போம்வழி நாடுமின்
எக்காலத் திவ்வுடல் வந்தெமக் கானதென்று
அக்கால முன்ன அருள்பெற லாகுமே

பிறப்பினுக்கு அஞ்சிச் சிறப்பினுக்கு வழிநாடும் செந்நெறிச் செல்வர்களே! திருவருளால் இக் காயம் நீங்கியதும் இனியொரு காயமாகிய உடம்பினிற் புகுந்து பிறவாமல் திருவடிப்பேற்றிற்குச் செல்லும் செந்நெறியினை நாடுங்கள். இவ்வுடல் நமக்கு எந்தக்காலத்து வந்து உற்றது என்பதை நாம் திட்டமாக உணரோம். எனினும் அளவிடப்படாத ஊழிகள் கடந்தன என்று நினைக்கலாம். அதனை உண்மையாக நினைத்தால் சொல்லவும் கருதவும் கேட்கவும் ஒண்ணாத பேரச்சம் தோன்றாதிராது. அது தோன்றினால் அப்பொழுதே சிவபெருமான் திருவருள் பெறுதல் ஆகும். இன்னமொரு காயத்திற் புகும் வழிச் செல்வது பிறன்மனை நோக்குதல் என்னும் குற்றமாம். 'பிறன்மனை நோக்காத' என்னும் திருக்குறட் கருத்தை இதற்குங் கூறலாம். பிறனுக்கு மனைபோன்று வாய்க்க வேண்டிய மற்றோர் உடம்பு பிறன்மனை என்ப.

## 2069. போகின்ற வாறே புகுகின்ற அப்பொருள்

2069. போகின்ற வாறே புகுகின்ற அப்பொருள்
ஆகின்ற போதும் அரனறி வானுளன்
சாகின்ற போதுந் தலைவனை நாடுமின்
ஆகின்ற அப்பொருள் அக்கரை யாகுமே.

ஆருயிர்கள் வினைக்கீடாகச் செல்லும் நெறிவழியே பேருயிராகிய சிவபெருமானும் செல்வன். இது கைப்பற்றி நடை கற்கும் உடைமணிப் புதல்வன் போம்வழியே நடைபயிற்றும் நற்றந்தையும் புகுவதையொக்கும் நமக்கு ஏற்படும் செவ்வி எப்பொழுது வாய்க்கின்றதென்று அறியும் அரனாகிய சிவபெருமானும் நம்முடனே உளன். அதனால் இறக்கின்றபோது சிறக்கச்செய்யும் சிவபெருமானை நாடுங்கள். அங்ஙனம் நாடினால் அப் பொருளே ஒருவாப் பெரும்பயனாக வுள்ளது. அக்கரை - பெரும்பயன். அக்கரை என்பதற்குப் 'பிறவிப் பெருங்கடல் நீந்திச்' சேரும் கரையாகிய சிவபெருமான் திருவடி என்பதும் ஒன்று.

அக்கரை - பயனுடையது.

## 2070. பறக்கின்ற வொன்று பயனுற வேண்டின்

2070. பறக்கின்ற வொன்று பயனுற வேண்டின்
இறக்கின்ற காலத்தும் ஈசனை யுள்குஞ்
சிறப்பொடு சேருஞ் சிவகதி பின்னைப்
பிறப்பொன் றிலாமையும் பேருல காமே.

கூடுவிட்டு ஆருயிர் பிரிந்து செல்கின்றது. அக் காலத்து அது பயனுற வேண்டுமானால் இறக்கின்ற காலத்தும் சிவபெருமானை எய்துதற்கு வாயிலாம் அவன் திருவைந்தெழுத்தை இடையறாது நினைக்கும் தவத்தை மேற்கொள்ளுங்கள். அங்ஙனம் மேற்கொள்ளுவதற்கு வழி எத்தொழிலைத் தொடங்கினாலும் 'சிவ சிவ' என்னும் செந்தமிழ்த் திருமறை மொழிந்தே தொடங்குதல் வேண்டும். முடிப்பதும் அவ்வாறே செய்தல்வேண்டும். அங்ஙனம் செய்வதே நற்றவமாம். அது 'தும்மல் இருமல் தொடர்ந்த போழ்தும்' சொல்லுவது அம் மறை என்னும் தொல்வழக்கா லுணரலாம். அப்படிப் பழகிவந்தால் 'நான் மறக்கினும் சொல்லுநா நமச்சிவாயவே' என்னும் திருமறைப்படி நாத்தானே நவிலும். திருவருளால் திருவடிப்பேறெய்தும் சிறப்புடன் சிவநிலை சேரும் தவநிலை கைகூடும். பின்பு பிறப்பொன்றும் பெற்றியும் இல்லையாகும். இந் நிலையே வானோர்க்கு உயர்ந்த உலகமாகிய பேருலகாமென்பது. 'சிவ சிவ' என்று இடையறாது நாடிக்கொண்டு செய்யும் எச் செயலும் 'வினையான் வினையாக்கிக் கோடல் நனைகவுள், யானையால் யானையாத் தற்று' (678) என்னும்

திருவள்ளுவப் பயனை மேற்கொண்ட அரும்பெருஞ் செயலாகும்.

பறக்கின்ற - பிரிந்துபோகின்ற.

## 2071. கூடியும் நின்றும் தொழுதெம் மிறைவனைப்

2071. கூடியும் நின்றும் தொழுதெம் மிறைவனைப்
பாடியு ளேநின்ற பாதம் பணிமின்கள்
ஆடியு ளேநின் றறிவுசெய் வார்கட்கு
நீடிய வீற்றுப் பசுவது வாகுமே.

இறைவனாகிய சிவபெருமானைத் திருமுறைவழியாகத் திருவைந்தெழுத்தோதிக் கூடி நின்று கூட்டுத்தொழுகை தொழுங்கள். தனித்திருந்தும் இனித்த அத் தொழுகையை ஏத்துங்கள். ஏத்துதல் ஈண்டு இயற்றுதல். அகனமர்ந்த அன்பினராய்த் திருமுறை பாடி அடியாருள் நின்று சிவபெருமான் திருவடியிணையை வணங்குங்கள். அவ்வடியார் கூட்டத்துள்ளே நின்று எல்லாம் சிவமாகக் காணும் இயற்கை அறிவு இன்னருளால் எய்துவார்க்கு அச் சிவபெருமான் கன்றீன்ற புனிற்றாப் போன்று நன்று நின்று வெளிப்பட்டு அருள்வன். எல்லாம் சிவமாகக் காணுதல் என்பது பல்வேறு அழகமைந்த கலன்களுள் வைக்கப்பட்ட ஆன்பால் ஒன்றாயிருக்கும் உண்மையினைப் புறம்பொசியக் காண்பதாகும். இது, பன்னிறம்சேர் பல்பளிங்கில் பால்காண்பார் பால்நிறத்தைப், பன்னிறத்தின் மேற்காண்பார் பாத்து என்பதனையொக்கும். மேலும் பலர் புரியும் கூட்டுத்தொழுகையில் பல்லோர் 'சிவ சிவ' என்றே பகர்மறை, எல்லாமொன்றாய்க் கேட்ப தேர்பு என்பது ஒக்கும்.

ஈற்றுப் பசு - கன்று ஈன்ற பசு.

## 2072. விடுகின்ற சீவனார் மேலெழும் போது

2072. விடுகின்ற சீவனார் மேலெழும் போது
நடுநின்று நாடுமின் நாதன்தன் பாதங்
கெடுகின்ற வல்வினை கேடில் புகழோன்
இடுகின்றான் உம்மை இமையவ ரோடே.

ஆவிநீங்கி ஆருயிர் மேலோங்கிப் போம்பொழுது 'சிவயநம' என்று நாடுங்கள். அதுவே சிவபெருமானின் திருவடியிணையினை நாடுவதாகும். நாடுவது சிந்திப்பது. அப்படி நாடுவதால் அத் திருவடிச் சிறப்பால் நும் வினைகள் கெடுகின்றன. அழிவில்லாத புகழையுடைய அழகனாகிய சிவபெருமான் உம்மை இமையவர் நடுவுள் இருக்குமாறு அருள்புரிகின்றான். இமையவர்: திருவடிப்பேறு பெற்ற அருள்ஒளி நிறைந்த மெய்யடியார். இமை - ஒளி. இமையவர் - ஒளியுடையவர். இமை கண்ணைக் காப்பதுபோன்று இவர்கள் நன்னெறி நான்மையினைக் காக்கும் நல்லார் ஆதலின் இமையவர் என்பதும் ஒன்று. இமையம் - திரு வெள்ளிமலை. திருவெள்ளிமலையில் சிவபெருமான் திருவடிக்கீழ் வாழும் பெருவாழ்வுபெற்ற திருவினர். அதனாலும் இமையத்தில் வாழ்வார் இமையவர் என்றலும் ஒன்று. அன்பு அறிவு ஆற்றலாகிய மூன்றன் ஒருப்பாடும் சேர்ந்துதான் காவல்
நிகழும். அம் மூன்றனுள் அறிவு இருந்த இடத்திலிருந்தே ஆற்றலையும் அன்பையும் தூண்டித் தொழிற்படுத்தும். ஆற்றல் அவ் வறிவின் வழியே சுற்றித்திரிந்து போற்றிக் காக்கும். அன்பு காக்கப்படும் பொருளின்மாட்டு அன்பினை விளைவித்து மேன்மேலும் உறுதியுடன் காக்குமாறு

அவ்வறிவு ஆற்றல்களை இடையறாது தூண்டும். அதனால் காவல் அன்பின் காவலென்றே அறையப்படும். இம் முத்திறக் காவலின் முறைமை விளங்கும் சேக்கிழாரடிகளின் அருண்மொழி வருமாறு:

"அஞ்சு வான்கரத் தாறிழி மதத்தோர்
ஆனை நிற்கவும் அரையிருள் திரியும்
மஞ்சு நீள்வது போலுமா மேனி
மலர்ப்ப தங்களில் வண்சிலம் பொலிப்ப
நஞ்சு பில்கெயிற் றரவவெற் றரையின்
நாம மூன்றிலைப் படையுடைப் பிள்ளை
வஞ்ச லின்றிமுன் றிரியவுங் குன்றம்
எறிந்த வேலவன் காக்கவும் இசையும்."

# 12. திருக்குறிப்பு - 81.

12. திருக்குறிப்பு - 81.

சிவய நம' என்ற நிலையில் 'ய'கரமாகிய உயிர் 'வ'கரமாகிய திருவருளினையே நோக்கும். என்னை, வகரம் யகரத்திற்கு வலப்பால் இருப்பதால் என்க. நோக்குதலென்பது அதன் அரும்பெரும் உதவியை விரும்பி நாடுதல். 'நமசிவய' என்றிருந்தால் யகரம் ஈற்றில் நிற்பதாகின்றது. நடுவிலிருந்தாற்றான் நாட்டமுண்டாகும். அதன்பொருட்டு அம் மறையினை 'நமயசிவ' என அமைத்தல்வேண்டும். அப்பொழுது 'ய'கரமாகிய அவ்வாருயிர் தனக்கு வலப்பாலிருக்கும் 'ம'கரமாகிய உலகினை நாடும். இது பிறப்பியல் வாழ்வு. 'சிவய நம' என்பது சிறப்பியல் வாழ்வு. உயிர்விடும் போது 'சிவய நம' என்னும் சிறப்பியல் வாழ்வு மறையினை வழுத்துதல் வேண்டும். ஆனை : ஆன் + ஐ - ஆன் - உயிர்; ஐ - தலைவன் : ஆருயிர்கட்குத் தலைவன். ஆனை: அறிவு. பிள்ளை: ஆற்றல். வேலவன்: அன்பு.

விடு.....போது - சாகும்போது.

## 2073. இன்புறு வீர்அறிந் தேயெம் இறைவனை

2073. இன்புறு வீர்அறிந் தேயெம் இறைவனை
அன்புறு வீர்தவஞ் செய்யுமெய்ஞ் ஞானத்துப்
பண்புறு வீர்பிற வித்தொழி லேநின்று
துன்புறு பாசத் துழைத்தொழிந் தீரன்றே.

'திருநாமம். அஞ்செழுத்தும் செப்பாத தீமையினால் பெயர்த்தும் செத்துப் பிறப்பதற்கே தொழிலாகி இறக்க' நேரிடுகின்றது. அத்தகைய பிறவித்தொழிலிலேயே நின்று பிறப்புத் துன்பத்தை மிகுவிக்கும் பாசப்பற்றாகிய ஆக்கைக்கே இத்தனைகாலமும் உழைத்து இளைத்துக் களைத்தொழிந்தவர்களேகேண்மின்: எம் இறைவனாகிய முழுமுதற் சிவபெருமானை அவனருளால் அறிந்தே இன்புறுங்கள். அவன் திருவடிக்கண்ணே இறவாத இன்ப அன்பு வேண்டிக் காதல் செய்யுங்கள். சிவத்தைப் பேணுதலாகிய தவத்தைப் புரியுங்கள். அதற்குரிய திருவடியுணர்வுப் பண்புகளைப் பெறுவீராவீர். இறைவன்மாட்டு இன்புறுதலும் நற்றவத்தின்மாட்டு அன்புறுதலும் மெய்ஞ்ஞானத்துமாட்டுக் காதலுறுதலும் மேற்கொண்டார் மெய்ஞ்ஞானப் பண்பினராகவே இருப்பர். இன்பு அன்பு காதல் பண்பு என்னும் நான்கும் முறையே கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிட்டை என்னும் நான்குமாம்.

## 2074. மேற்கொள்ள லாவதோர் மெய்த்தவம் ஒன்றுண்டு

2074. மேற்கொள்ள லாவதோர் மெய்த்தவம் ஒன்றுண்டு
மேற்கொள்ள லாவதோர் மெய்த்தாளும் ஒன்றுண்டு
மேற்கொள்ள லாவதோர் மெய்ந்நெறி ஒன்றுண்டு
மெற்கொள்ள லாம்வண்ணம் வேண்டிநின் றோருக்கே.

அனைத்துயிரும் படிப்படியாகச் செவ்விபெற்று மேற்கொள்ளத்தக்க அழிவில் மெய்த்தவம் ஒன்றுண்டு. அத் தவமே சிவத்தைப் பேணும் தவமாகும். இத் தவமே சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்னும் நன்னெறி நான்மையாக நவிலப்படும். இப் பெருந் தவவாயிலாக எய்தற்கரிய திருத்தாளும் ஒன்றுண்டு. அத் திருவடியினைத் தலைப்படும் அறிவினுள் அறிவாம் மெய்ந்நெறியும் ஒன்றுண்டு. இவற்றை மேற்கொள்ளும்வண்ணம் விழைந்துநிற்பார் சிவக்கிழமையராவர். அந்நல்லார்க்கு எல்லாம் எளிதாகவும் இனிதாகவும் கைகூடும் என்க.

## 2075. சார்ந்தவர்க் கின்பங் கொடுக்குந் தழல்வண்ணன்

2075. சார்ந்தவர்க் கின்பங் கொடுக்குந் தழல்வண்ணன்
பேர்ந்தவர்க் கின்னாப் பிறவி கொடுத்திடுங்
கூர்ந்தவர்க் கங்கே குரைகழல் காட்டிடுஞ்
சேர்ந்தவர் தேவரைச் சென்றுணர் வாரன்றே.

திருவருட்டுணையால் திருவடியுணர்வால் சேர்ந்தவர்க்கு ஆர்ந்த இன்பம் கொடுத்தருளும் செம்மேனி எம்மான் சிவபெருமான். நன்னெறிச்சென்று நாடாது நீங்கியவர் பேர்ந்தவராவர். அவர்க்குத் துன்பப் பிறவியைக் கொடுத்தருள்வன். நன்னெறி நான்மையில் அறிவில் அறிவு என்று சொல்லப்படும் மேனெறிச் சென்றவர் கூர்ந்தவராவர். "கூர்ப்புங் கழிவும் உள்ளது சிறக்கும்" (தொல் சொல். 314) ஆதலின் ஆருயிர்கள்மாட்டு அடங்கியிருந்த சிவவிளக்கம் சிவப்பணியால் மிகும். அங்ஙனம் மிகப்பெற்றவர் கூர்ந்தவராவர். அத்தகையோர்க்கே திருவடியிணையினைக் காட்டி அருள்வன். அவ் வருள்வழிச்சென்று சார்ந்தவர் தேவராகிய சிவபெருமானை உணர்ந்தவராவர். உணர்தல் - சிவனின்பம் நுகர்தல்.

## 2076. முத்தியை ஞானத்தை முத்தமிழ் ஓசையை

2076. முத்தியை ஞானத்தை முத்தமிழ் ஓசையை
எத்தனை காலமும் ஏத்துவர் ஈசனை
நெய்த்தலைப் பால்போல் நிமலனும் அங்குளன்
அத்தகு சோதி யதுவிரும் பாரன்றே.

வீடுபேறாய், திருவடியுணர்வாய், அவ் வுணர்வினைப் பயக்கும் முத்தமிழ் மறையாய்த் திகழ்பவன் சிவபெருமான். அவனே அறிவுப் பெருந்திருவுடைய ஆண்டவன் ஆவன். அவனை நல்லார் அளவில் காலம் அகங்குழைந்து முகமலர்ந்து திருமுறை புகன்று திருவருளால் தொழுவர். அங்ஙனம் தொழுவார்க்கே அருளுவது சிவபெருமான் ஆதலின், அவர்பால் தயிரின்கண் நெய்போலவும், மலரின்கண் மணம் போலவும் விளங்கித் தோன்றுவன். அத்தகைய பேரொளிப்பிழம்பை முற்றவம் இன்மையால் சிலர் விரும்பார். அங்ஙனம் விரும்பாதார்மாட்டும் சிவபெருமான் உளன். அங்கு அவன் பாலினிடத்து நெய்போலவும், முகையினிடத்து மணம்போலவும் மறைந்துநிற்பன். நெய் - வெண்ணெய். முத்தமிழோசை- முத்தமிழ மறை. அருளோன் மெய்யாகிய சதாசிவ தத்துவமே ஓசை உருவாய் வெளிப்படுதற்குரிய முதலிடம். அம் மெய்யின்கணிருந்து முத்தமிழ் வந்தது என்பது 'சதாசிவ தத்துவம் முத்தமிழ் வேதம்' (149) என்பதனால் நன்கு பெறப்படும். முத்தமிழ் இயல், இசை, இன்பக்கூத்து. அருளோனாகிய சதாசிவன் உண்ணின்றுணர்த்தும் ஓசை முதல்வன். இயல், இசை, இன்பக்கூத்து ஆகிய மூன்றும்

வசையிலா அறம் பொருள் இன்பம் மூன்றினையும் வரையறுக்கும் நூற்புணர்ப்பாகும். அவை முறையே திருவள்ளுவநாயனார் அருளிச்செய்த திருக்குறள் அறத்தின் பகுதியாகும். நால்வர் அருளிய தேவார திருவாசகம் பொருளின் பகுதியாகும். திருச்சிற்றம்பலக்கோவையார் இன்பப்பகுதியாகும். இவையே செந்தமிழர் அந்தமில் திருமறை. இவையனைத்தையும் கைவிட்டு மருள்கொண்ட மனத்தராய் மாற்றார் மறையினைப் போற்றிப் புகழ்ந்து திரிவர் சிலர். அவர்களேனும் அம் மறையினைக் கற்றுணர்ந்தவர்களா? என்றால், அதுவும் இன்று. 'இருபிறப்பும் வெறுவியராய்' இந்நாள் வருபவர் இவரன்றோ! இவ் வுண்மையினை ஒரு வெண்பாவில் தருகின்றாம் :

"ஆன்றவரு ளோன்மெய் அறிமுத் தமிழ்வேதம்
சான்றதிரு வள்ளுவனார் சார்நால்வர்-ஏன்ற
இயலிசைகூத் தீண்டறம் ஏர்பொருள்நற் கோவை
மயலிலாக் கூத்தின்பாம் மற்று."

அருளோன் மெய்-சதாசிவ தத்துவம். இயல்: அறம், இசை:பொருள். கூத்து:நல்லின்பம். ஈண்டு 'முத்தமிழ்' என்னும் மொழி மிகப்பெரும் செந்தமிழ் நிலத்தொடு பொருந்திய பழையவழக்காதல் கண்டு இன்புறுக. விழுமிய முழுமுதற் சிவபெருமான் முத்தமிழோசை வடிவினனாய் இயற்கை அன்பறிவாற்றலனாய்த் திகழ்கின்றனன். இவ் வுண்மை 'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே' என்னும் அப்பரடிகளாரின் அருண்மொழியானும் நன்குணரலாம். மேலும் ஓசை தோன்றுவது நாத மெய்யினின்று, இயற்கையாகத் தோன்றுவது ஒண்மைமிக்க ஓங்காரமாகும். ஓ என்பது பெரும்பாலும் நம் செவிவடிவை யொத்திருக்கிறது.

முத்தியை - முத்தி கொடுப்பவனை. ஞானத்தை - ஞானமயம் ஆனவனை. முத்தமிழ் ஓசையை - முத்தமிழ் வேத ஒலியைக் கேட்டுக் கொண்டிருப்பவனை. Vide "சதாசிவம் தத்துவம் முத்தமிழ் வேதம்" (திருமூலர்). நெய்த்தலைபால் - பால் தலை நெய் என்று கொள்ளவும்.

## 2077. நியமத்த னாகிய நின்மலன் வைத்த

2077. நியமத்த னாகிய நின்மலன் வைத்த
உகமெத் தனையென் றொருவருந் தேறார்
பவமத்தி லேவந்து பாய்கின்ற தல்லாற்
சிவமத்தை யொன்றுந் தெளியகில் லாரே.

அனைத்துயிர்க்கும் அனைத்துடலையும் அவை உறையும் உலகங்களையும் ஒழுங்குறப் படைத்து நியமித்தலாகிய யாப்புறுதலைச் செய்தவன் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய சிவபெருமான். அவன் அமைத்தருளிய உலகம் எத்துணை ஊழியாக நின்று நிலவுகின்றது என்று ஒருவராலும் அளவிட்டுக் கூறுதல் முடியாது. யாப்புறுத்தல்: இருவினைக்கு ஈடாக ஒழுகுவித்தல். ஆருயிர்கள் பிறந்து இறந்து தடுமாறும் தொழிலினவாகவே இருக்கின்றன. மக்கள் இவற்றை உணராது பிறந்து இறப்பதையே கருமமாகக் கொள்கின்றனர். அதுவல்லாமல் சிவபெருமானைப்பற்றியோ அவனைச் சென்றடையும் நன்னெறி நான்மையினைப் பற்றியோ ஏதும் தெளியாது கழிகின்றனர். நன்னெறி நான்மையென்பது 'சீலம்நோன்பு, செறிவு, அறிவு' என்பன. நன்னெறி: சைவச் செந்நெறி.

நியமத்தன் - காரணன். உகம் - ஆண்டுகள். பவமத்திலே - பிறப்பிலே. பாய்கின்றது - இறப்பது.

## 2078. இங்கித்தை வாழ்வு மெனைத்தோ ரகிதமுந்

2078. இங்கித்தை வாழ்வு மெனைத்தோ ரகிதமுந்
துஞ்சொத்த காலத்துத் தூய்மணி வண்ணனை
விஞ்சத் துறையும் விகிர்தா எனநின்னை
நஞ்சற் றவர்க்கன்றி நாடவொண் ணாதன்றே.

நிலையில்லாத இவ் வுலக வாழ்க்கை புல்நுனிப் பனியினும் சின்மையதாகும். இதனை மலையினும் பெரிதாக எண்ணி மகிழ்வர் மருளினர். அது பெரும் பேதைமைச் செய்கையாகும். அதன்பொருட்டு எத்துணைச் சிறுதுன்பமும் இறக்கநேரினும் செய்யாதிருப்பதே அறமும் முறையும் அறிவுமாகும். சிவபெருமான் தூய பளிங்கனைய வெண்ணிற வண்ணத்தன். அவனைத் தத்துவங்கடந்த சிவமெய்யே என்றும், சிறப்புடைச் செய்கையனே என்றும் உன்னை உன் திருவருளால் ஆணவமற்ற நல்லாரே உள்ளவாறு நாட ஒண்ணும் என்றும், ஏனையார்க்கு நாட ஒண்ணா தென்றும் ஓதி வழிபடுக. துஞ்சுதல் இறத்தல். துஞ்சொத்த காலத்து என்பது இறப்பினையொத்த துன்பம் நேர்ந்தகாலத்தும் என்க. காலத்தும் என்னும் உம்மை செய்யுட்டிரிபால் தொக்கது. விஞ்சத்துறைதல்: தத்துவங்கடந்து நிற்றல் விகிர்தன்: வேறுபட்ட செய்கையன்; மாறில் செய்கையன்; சிறப்புடைச் செய்கையன் (1756): நஞ்சு - ஆணவம்.

எனைத்தோர் அகிதமும் - எவ்விதமான துன்பமும். துஞ்சொத்த காலத்து - மரணம் நேர்ந்தபோது. விஞ்சத்து - தத்துவங்கள் கடந்து. நஞ்சு - ஆணவம்.

## 2079. பஞ்சமு மாம்புவி சற்குரு பால்முன்னி

2079. பஞ்சமு மாம்புவி சற்குரு பால்முன்னி
வஞ்சக ரானவர் வைகில் அவர்தம்மை
அஞ்சவன் நாதன் அருநர கத்திடுஞ்
செஞ்சநிற் போரைத் தெரிசிக்கச் சித்தியே.

சிவகுருவாகிய சற்குருவினைச் சார்ந்து வஞ்சநெஞ்சினர் இருப்பாரானால் அவரைக்கண்டு சிவபெருமானாகிய நாதனும் அஞ்சுவன். அதனால் பேருலகமுற்றுக்கும் பெரும் பஞ்சமுண்டாகும். அப் பெரும் பாவிகளை இருள் உலகத்தில் தள்ளுவன். அவர்களைக் காண்பதும் பெரும் பாவமாகும். சிவகுரு பணிவிடையிற் செவ்வையாக வொழுகுவோர் நல்லாராவர். ஆண்டவன் அருளும் அவர்பால் பூண்டு விளங்கும். அதனால் அவரைக் காண்டலும், கைக்கூப்பித் தொழுதலும், வேண்டலும் கருதியது கைகூடுதற்கு வாயில்களாகும். செஞ்ச - செவ்வையாக. நிற்போர் - ஒழுகுவோர்.

செஞ்சு நிற்போர் - செய்து என்பது செஞ்சு என மருவி வந்தது; ஆசாரியன் பணிசெய்து நிற்போர்.

## 2080. சிவனை வழிபட்டார் எண்ணிலாத் தேவர்

2080. சிவனை வழிபட்டார் எண்ணிலாத் தேவர்
அவனை வழிபட்டங் காமாறொன் றில்லை
அவனை வழிபட்டங் காமாறு காட்டுங்
குருவை வழிபடிற் கூடலு மாமே.

தம்பயன்கருதி ஒரொருகால் அளவில்லாத தேவர்கள் சிவனை வழிபட்டனர். அதனால் அவர்கட்குத் திருவடிப்பேறு எய்துதற்குரிய வாயில்கள் ஏதும் உண்டாகமாட்டா. சிவனைவழிபட்டுத் திருவடிப்பேறு எய்துதற்குரிய நன்னெறி நான்மையினைக் காட்டியருள்பவன் சிவகுரு. அக் குருவினை வழிபட்டால் திருவடிப்பேறு எய்துதல் கூடும். இத் திருமறையால் செந்நெறிச் செல்வர்களாகிய நாமும் நால்வர் திருமூலராகிய ஐம்பெருங் குரவர்கள் வழிநின்றாலன்றிச் செம்பொருட் சிவபெருமான் திருவடியிணையினை எய்துதல் கூடாது என்பது தேற்றமாம் என்க. வழிநிற்றல் - அவர்கள் தந்தருளிய திருமுறைகளை ஓதி வழிபட்டு ஒழுகுதல்.

## 2081. நரருஞ் சுரரும் பசுபாச நண்ணிக்

2081. நரருஞ் சுரரும் பசுபாச நண்ணிக்
கருமங்க ளாலே கழிதலிற் கண்டு
குருவென் பவன்ஞானி கோதில னானாற்
பரமென்றல் அன்றிப் பகர்வொன்று மின்றே.

நரராகிய மண்ணுலகத்தவரும், சுரராகிய விண்ணுலகத்தவரும் யான் என்னும் பசுத்தன்மையும், எனது என்னும் பாசத் தன்மை யும் பொருந்தியவராய்ப் பிறப்பு இறப்புக் கருமங்களிலே ஈடுபட்டும் அவர்தம் வாழ்நாள் வீண்நாள் ஆகக் கழிதல்கண்டு கழிவிரக்கங்கொண்டு சிவகுருவாய்த்தோன்றி நன்னெறிகாட்டி ஆட்கொள்வன். அங்ஙனம் ஆட்கொண்டருளும் அச் சிவகுருவைச் சிவனென்றே வழிபடுதல்வேண்டும். அச் சிவகுரு குற்றமற்ற திருவடியுணர்வு கைவந்த மெய்ஞ்ஞானியராவர். அவரைச் சிவபெருமானென்று மெய்ம்மையாகக் கூறுதலல்லாமல் வேறெதுவும் கூறுதல் ஆகாதென்க.

கோதிலன் - குற்றம் இல்லாதவன். பரம் - சிவம்.

## 2082. ஆட்கொண் டவர்தனி நாயகன் அன்புற

2082. ஆட்கொண் டவர்தனி நாயகன் அன்புற
மேற்கொண் டவர்வினை போயற நாடொறும்
நீர்க்கின்ற செஞ்சடை நீளன் உருவத்தின்
மேற்கொண்ட வாறலை வீவித்து ளானே.

சிவகுருவானவர் செவ்விய வாய்ந்த நல்லாரை ஆட்கொண்டவராவர். அச் சிவகுருவினை ஒப்பில்லாத முழுமுதல்வனாகிய சிவபெருமான் என்றே உட்கொண்டு அவர்மாட்டுக் காதல் மிக மேற்கொண்டவர் மாணவர் ஆவர். அம்மாணவர்தம் வினையை நாடொறும் போயறச் செய்தருளுகின்றனன் சிவன். அருளின் தன்மை வாய்ந்த செவ்விய திருச்சடை வாய்ந்து என்றும் நின்றுநிலவும் அழிவில்லாதவன் சிவபெருமான். அம் மாணவர் சுட்டியுணரப்படும் உலகியல் உருவத்தின்மேற்கொண்ட மன அலைச்சலை அகற்றியருள்பவன் சிவன். நீர்க்கின்ற : அருள் தன்மை வாய்ந்த. நீர் - அருள். ஆறலை - அலைச்சல். வீவித்தல் - அகற்றல்; அழித்தல்.

உருவத்....ளானே - பிறந்து அலையும் வருத்தத்தை நீக்குவான்.

ஏழாம் தந்திரம் முற்றும்

**2083.காயப்பை யொன்று சரக்குப்
1பலவுளமாயப்பை யொன்றுண்டு
மற்றுமோர் பையுண்டுகாயப்பைக்
குள்நின்ற கள்வன் புறப்பட்டால்மாயப்பை
மண்ணா மயங்கிய வாறே.**

2083.காயப்பை யொன்று சரக்குப் 1பலவுளமாயப்பை யொன்றுண்டு மற்றுமோர் பையுண்டுகாயப்பைக் குள்நின்ற கள்வன் புறப்பட்டால்மாயப்பை மண்ணா மயங்கிய வாறே. உடம்பாகிய மெய்ப்பையினுள் உயிர் கலந்துநிற்கின்றது. அக் காயப்பை ஒன்று. அதன்கண் ஊன்முதலாகிய சரக்குகள் பலவுள்ளன. இதனை மாயையின் காரியம் என்ற பொருளில் மாயப்பை என்றும், நிலையாமை உடையது என்னும் பொருளில் மாயப்பை என்றும் கூறுப. மற்றுமோர் பை என்பது இவ்வுடம்பினகத்து உள்ளம் முதலியவற்றைக் கருவியாகக்கொண்டு ஓர்த்துணரும் ஆருயிரும் ஒன்றுண்டு. அவ்வுயிரை உடலாகக்கொண்டு அவ்வுயிர்க்கும் தோன்றாதவாறு கள்வன்போல் மறைந்துநின்று இயைந்தியக்கும் பேருயிராகிய சிவபெருமானும் ஒருவன் உளன். அச் சிவபெருமான் தனக்கு உடலாகிய உயிரொடும் இவ் வுடலினின்றும் புறப்பட்டால் இம் மாயப்பை மண்ணொடு மண்ணாய்க் கலந்து அழிந்தொழியும். சரக்கு என்பதற்குச் சினம் முதலிய சரக்குகள் என்பதும் ஒன்று. ஓர் பை என்பது ஓர்த்தல் என்னும் பொருளுடைய ஓர்பு என்னும் சொல் ஐகாரச்சாரியைபெற்று ஓர்பை என்று நின்றது.

காயப்பை - தேகம். சரக்கு - ஊன் முதலிய பொருள்கள். மாயப்பை - உடம்பு. ஓர்பை - ஒரும் உள்ளம். கள்வன் உள்ளத்தினுள்ளே ஒளித்தருளும் ஒருவன், உயிருடன் இணைந்த பரமாத்மா.

## 2084. அத்தன் அமைத்த உடலிரு கூறினிற்

2084. அத்தன் அமைத்த உடலிரு கூறினிற்
சுத்தம தாகிய சூக்குமஞ் சொல்லுங்காற்
சத்த பரிச உருவ ரசகந்தம்
புத்திமா னாங்காரம் புரியட்ட காயமே.

அன்னையோடுகூடிய அத்தனாகிய சிவபெருமான் அமைத்த மாயாகாரிய உடம்பு இருவகைப்படும். ஒன்று அனைத்துயிர்க்கும் கருவின்றியே திருவுள்ளத்தான் பிறப்பித்தளித்த பிறப்புடம்பு. இவ் வுடம்புக்குக் காரணம் மல ஆற்றல் மட்டுமேயாம். அம் மலவாற்றலை அகற்றும் பொருட்டுக் கண் கை முதலிய கருவிகளுடன் கூடியபுறத் தொழிலுக்கு ஏற்றவாறு அமைத்துக் கொடுக்கும் உடம்பு சிறப்புடம்பு ஆகும். பிறப்புடம்மை நுண்ணுடம்பு என்று கூறுவர். சிறப்புடம்பைப் பருவுடம்பு என்று கூறுவர். இந் நுண்ணுடம்பு வீடுபேறடைதல் அல்லது பேரூழிக்காலம் வரையும் அழியாதிருக்கும். பருவுடம்பு வினைப்போகத்தின் பயனாய் வினைக்கீடாகப் பிறந்து இறந்து மாறிமாறி வரும். இதுவே தாய்தந்தையர் கருவாயிலாக வருவது. இவ்வுண்மையினைத் திருவள்ளுவ நாயனார் :

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் வேற்றுமை யான்."
(திருக்குறள் - 972)

என்றருளினர். பிறப்புடம்பாகிய நுண்ணுடம்பு யானை முதல் எறும்பீறாகிய அனைத்துயிர்க்கும் வேறுபாடின்றி ஒன்றுபோல் கருவின்றியமைந்ததாகும். இது நம்முடைய கைகளெல்லாம் ஒன்றுபோலுள்ளன. அவற்றைக்கொண்டு உழுதல்,

எழுதுதல், நெய்தல், தைத்தல், சமைத்தல், பொன்வேலை செய்தல், தச்சுவேலை செய்தல், கொற்றுவேலை செய்தல், கப்பலோட்டுதல் முதலிய பல்வேறு வேலைகளுக்கும் கருவிகள் வெவ்வேறாகக் காணப்படுகின்றவன்றோ? அதுபோல் பருவுடம்புகள் வெவ்வேறாவன. நுண்ணுடம்பு ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்னும் பூத முதலாகிய தன்மாத்திரை ஐந்தும்; இறுப்பு, எழுச்சி, மனம் மூன்றும் ஆகிய எட்டுங் கூடியதாகும். புத்தி - இறுப்பு. மான் - மனம். அகங்காரம் - எழுச்சி. இவற்றைப் புரியட்டகாயம் என்ப.

இருகூறு - தூலம், சூக்குமம். மான் - மனம். புரியட்ட காயம் - சூட்சும சரீரம்.

## 2085. எட்டினில் ஐந்தாகும் இந்திரியங்களும்

2085. எட்டினில் ஐந்தாகும் இந்திரியங்களும்
கட்டிய மூன்று கரணமு மாயிடும்
ஒட்டிய பாசம் உணர்வது வாகவே
கட்டி யவிழ்ந்திடுங் கண்ணுதல்காணுமே.

மேலோதிய எட்டினுள் தன்மாத்திரை ஐந்தும் புலன் அல்லது இந்திரியம் என்று சொல்லப்படும். மனம் எழுச்சி இறுப்பு ஆகிய மூன்றும் அகப்புறக்கலன் அல்லது அந்தக்கரணம் என்று சொல்லப்படும். இவை ஆருயிர்களைத் தொன்மையிலேயே ஒட்டியுள்ள ஆணவ ஆற்றல் அகலுதற்கு ஆருயிர்க்கு இயற்கையாகவுள்ள உணர்வை எழுப்புதல் வேண்டும். அதன்பொருட்டு மேலோதிய எட்டினையும் கட்டு மலமாகச் சேர்த்தருளினன் கண்ணுதற் கடவுள். அக் கடவுளே செவ்வி நோக்கி எல்லாக் கட்டையும் அவிழ்த்து அகற்றியருள்வன்; காண்பீராக. இந்திரியத்தைப் புள்ளென (1987) ஓதுகின்றது இத்திருமந்திரம். திருவாதவூரடிகள் தாம் பாடியருளிய செந்தமிழ் மறை முடிபாம் 'திருவாசகத்தின்கண் 'இரைமாண்ட இந்திரியப் பறவை இரிந்தோட' என்பதனை ஈண்டு நினைவு கூர்க.

## 2086. இரதம் உதிரம் இறைச்சிதோல் மேதை

2086. இரதம் உதிரம் இறைச்சிதோல் மேதை
மருவிய வத்தி வழும்பொடு மச்சை
பரவிய சுக்கிலம் பாழாம் உபாதி
உருவம லாலுடல் ஒன்றென லாமே.

இவ்வுடம்பு பாழாகிய மாயையின் காரியமாக வருவது. பாழ் - அருவம். காரணமாயை - அருவம். காரியமாயை - உருவம். உபாதி - காரியம். இவ்வுடம்பு எழுவகைப் பொருள்களால் யாக்கப்பட்டது. அவை முறையே சாரம், செந்நீர், ஊன், கொழுப்பு, எலும்பு, மச்சை - மூளை, சுக்கிலம் - வெண்ணீர். இத்தகைய ஏழு பொருள்களின் கலப்பு உடம்பு என்னும் உண்மை அறிய வந்தால் இவ்வுடம்பை ஒரு பொருளென்று யாரும் மதித்துக்கூறி மகிழமாட்டார். இத் திருப்பாட்டின்கண் தோல் ஒரு தனிப்பொருள்போல் கூறப்பட்டுள்ளது. வழும்பும் மச்சையும் ஒன்றாகக் குறிக்கப்பட்டுள்ளன.

இரதம் - அன்ன ரசம். அத்தி - எலும்பு. வழும்பு - நிணம். மச்சை - எலும்புக்குள்ளிருக்கும் பொருள். உபாதி - காரியம்.

# 2087. ஆரே அறிவார் அடியின் பெருமையை

2087. ஆரே அறிவார் அடியின் பெருமையை
யாரே அறிவார் அங்கவர் நின்றது
யாரே அறிவார் அறுபத்தெட் டாக்கையை
யாரே அறிவார் அடிக்காவ லானதே.

திருவருள் துணையில்லாமல் திருவடியின் பெருமையை அறியும் வன்மையுடையார் யாவர்? பேருயிராகிய சிவபெருமான் ஆருயிருடன் கலப்பால் பிரிப்பின்றி ஒன்றாகவேநிற்பன். அவ்வாறு நிற்கும் தன்மையை அறிவார் யார்? மாயையின் காரியத்தின் காரியத்தை அறுபதாகக் காண்கின்றனர். அவை வருமாறு : பூதங்கள் ஐந்தின் கூறு 25, செய்கருவி 5, காற்று 10, நாடி 10, ஓசை 4, பற்று 3, குணம் 3. ஆக (2139) அறுபது. இவற்றின் விரிவை எம்மால் எழுதப்பட்ட சிவஞானபோதச் சிற்றுரை விளக்கத்தின்கட் காண்க. எட்டு புரியட்ட நுண்ணுடல். இத்தகைய அருமையான உடல் தலையாய சிவபெருமானுக்குச் சிறந்த உடம்பாகும். இதுவே நடமாடுங் கோவிலாகும். அடிக்காவல் - திருக்கோவில்.

அடி - சிவன் திருவடி. அவர் - சிவன். அறு - நீங்கும் பத்தோடு - பத்து வாயுக்களோடு. அடிக்காவல் - சிவ ஆலயம் (காவல் - ஆலயம் - 2-ம் திருவானைக்காவல் - திருக்கோடிக்காவல்).

## 2088. எண்சா ணளவால் எடுத்த வுடம்புக்குட்

2088. எண்சா ணளவால் எடுத்த வுடம்புக்குட்
கண்கால் உடலிற் கரக்கின்ற கைகளிற்
புண்கால் அறுபத்தெட் டாக்கை புணர்க்கின்ற
நண்பால் உடம்புதன் னாலுடம் பாமே.

எறும்புந் தன்கையால் எண்சாண் என்று கூறும் முறைப்படி அவரவர் உடம்பு அவரவர் கையளவுக்கு எண்சாணே ஆகும். அத்தகைய உடம்பில் அறிதற்கருவி செய்தற்கருவியாகிய கண் கால் முதலிய உறுப்புகளும், இவ்வுறுப்புகளின் ஊடே கலந்துநின்று தொழிற்படுகின்ற புலன்களாகிய இந்திரியங்களும், மேலோதிய புறப்புறக்கருவி அறுபதும் அகப்புறக்கருவி எட்டும் ஆகிய அறுபத்து எட்டும் கூடியது யாக்கை. அகக்கருவி யென்பது காலம், ஊழ், உழைப்பு, உணர்வு, விழைவு, மருள் என்னும் ஆறுமாகும். இவ்வுடம்புகள் நால்வகைப்படும். அவை வருமாறு பருவுடல், நுண்ணுடல், பேர்வையுடல், முதலுடல் என்பன. ஒரு புடையொப்பாகப் பருவுடல் பூதம் ஐந்து பொறிபத்து ஆகப் பதினைந்தாகும். நுண்ணுடல் புலனாகிய தன் மாத்திரை ஐந்து, மனம் எழுச்சி இறுப்பு மூன்று ஆக எட்டாகும். பேர்வையுடல் குணம், விழைவு, உணர்வு, உழைப்பு, ஊழ், ஊழி (காலம்) என்னும் ஆறாகும். முதலுடல் தூவாமாயை ஒன்றாகும்.

அறுபது + எட்டு - புறக்கருவிகள் அறுபதும், புரியட்டகமும்.
நாலுடம்பு - தூலம், சூக்குமம், காரணம், மகா காரணம்.

## 2089.உடம்புகள்1 நாற்கும் உயிராய சீவன்ஒடுங்கும் பரனோ டொழியாப் பிரமங்கடந்தொறு நின்ற கணக்கது காட்டிஅடங்கியே அற்றது ஆரறி வாரே.

2089.உடம்புகள்1 நாற்கும் உயிராய சீவன்ஒடுங்கும் பரனோ டொழியாப் பிரமங்கடந்தொறு நின்ற கணக்கது காட்டிஅடங்கியே அற்றது ஆரறி வாரே. நால்வேறு வகையாகக் கூறப்படும் உடம்புக்கு உயிராக விளங்குவது ஆருயிராகிய சீவன். அவ்வாருயிர் என்றும் பேருயிராகிய சிவத்துடன் ஒடுங்கியே யிருக்கும். ஆருயிரைவிட்டுப் பிரியாத சிவன் ஒருவனே. அச் சிவன் ஒருவனாக இருந்தே எல்லாவுயிருடனும் பலவாக விருப்பதற்கு ஒப்புக் கடம் பலவற்றிலும் காணப்படும் கதிரவனின் நிழல் ஒப்பாகும். கடம் உடம்பு, அதன்கண் காணப்படும் நீர் உயிரும், கதிரவனின் நிழல் கடவுளுமாகும். இம்முறையாக முப்பொருளும் நிற்கும் முறைமையினைத் திருவருள் கைவரப் பெற்றாரன்றி மற்று யாரறிவர். ஏகாரம் எதிர்மறை; ஒருவரும் அறியார் என்பதாகும். 'காணம் கடமுடம்பு கண்ணுநீர் தானுயிராம், பேணுகதிர் நீழலிறை பேசு' என்பதனை நினைவுகூர்க. ஒருபொருட் கொள்கையராகிய ஏகான்மவாதிகளும் இவ்வுவமையைத் தங்கட்குச் சார்பென மயங்கிக் கூறுவர். உவமையைப் பொருளொடு படுத்துரைக்குங்கால் கடம் : உடல், கதிரவன்: கடவுள், கதிரவனின் நிழல் எல்லாக் கடங்களிலும் வெவ்வேறாகத் தோற்றும் கடவுள். ஆனால் கடத்தின்கண்ணுள்ள நீர் எதனைக் குறிக்கும் என்று கூறுதல்வேண்டும். நீரில்வழி

நிழல்தோன்றுமா? என்று நினைதலும் வேண்டும். இவையெல்லாம் பொருந்தக் கூறமுடியாமையின் அவர்க்கது பொருந்தாமை அறிக.

## 2090.ஆறந்த மாகி நடுவுடன் கூடினால்தேறிய மூவாறுஞ் சிக்கென் றிருந்திடுங்கூறுங் கலைகள் பதினெட்டுங் கூடியேஊறும் உடம்பை உயிருடம் பெண்ணுமே.

2090.ஆறந்த மாகி நடுவுடன் கூடினால்தேறிய மூவாறுஞ் சிக்கென் றிருந்திடுங்கூறுங் கலைகள் பதினெட்டுங் கூடியேஊறும் உடம்பை உயிருடம் பெண்ணுமே. வழிகள் ஆறு முடிபினை உடையன. அவை: எழுத்து, சொல், மறை, தத்துவமாகிய மெய்கள் (உடல்) உலகம், கலைகள் என்று சொல்லப்படும். முற்கூறிய மூன்றும் சொல்லுலகு என்றும், பிற்கூறிய மூன்றும் பொருள் உலகு என்றும் கூறப்படும். இவ்வழிகளின் நடுவாய்த் திகழும் மெய்ப்பொருள் சிவபெருமான். அச் சிவத்துடன் கூடினால் பதினெட்டும் கூடினார் வழியொழுகும். கூடுதல் இடையறாது திருவைந்தெழுத்தினை எண்ணுதல். சொல்லப்படும் கலைகள் ஐந்து. அவை வருமாறு: நீக்கல், நிலைப்பித்தல், நுகர்வித்தல், அமைதியாக்கல், அப்பாலாக்கல் என்பன. பதினெட்டு என்பன: வளிபத்தும், நுண்ணுடம்பு எட்டும் ஆகும். இவற்றுடன் நன்றாக ஊறிக்கலந்து புடை பெயரும் என்க. அவ்வுடம்பினையே உயிருடம்பென எண்ணுமின்.

ஆறு - அத்துவாக்கள் ஆறு. நடு - சிவம். மூவாறும் - கலைகள் பதினெட்டும் (பத்து வாயு + புரி அட்டகம்).

## 2091. மெய்யினில் தூல மிகுத்த முகத்தையும்

2091. மெய்யினில் தூல மிகுத்த முகத்தையும்
பொய்யினிற் சூக்கம் பொருந்தும் உடலையுங்
கையினில் துல்லியங் காட்டும் உடலையும்
ஐயன் அடிக்குள் அடங்கும் உடம்பே.

புறந்தோன்றும்படி பொருந்தியுள்ள பருமை மிக்க பருவுடலையும், அகத்தே ஊன்றி உன்னும்படி யமைந்த நுண்ணுடலையும், உழைப்புக்கு விளக்கந்தரும் முதலுடலையும் தருதற்குக் காரணமாயுள்ள மாமாயையின்கண் சிவபிரான் ஒடுக்குவன். அம்மாமாயையுடம்பு சிவபெருமான் திருவடிக்கீழ் ஒடுங்கும். முதலுடம்பு - காரணவுடம்பு. உடம்பு - மாமாயை. முகத்தையும் - பொருத்தத்தையும்.

மெய் - தூலசரீரம். பொய் - சூக்குமசரீரம். துல்லியங் காட்டுமுடல் - அதி சூக்குமம் அல்லது காரணம். ஐயன் அடிக்குள் அடங்கும். உடம்பு - சிவத்தில் அடங்கும் மகாகாரண உடம்பு.

## 2092. காயுங் கடும்பரி கால்வைத்து வாங்கல்போற்

2092. காயுங் கடும்பரி கால்வைத்து வாங்கல்போற்
சேய விடமண்மை செல்லவும் வல்லது
காயத் துகிற்போர்வை யொன்றுவிட் டாங்கொன்றிட்டு
ஏயு மவரென்ன ஏய்ந்திடுங் காயமே.

பகைவரைக் காயும் தன்மை வாய்ந்த பாய்மாவாகிய குதிரை அண்மை இடத்தில் மட்டுமல்லாமல் மிகவும் தொலைவான இடத்துக்கும் மிகுந்த விரைவில் செல்லவும் வன்மையுடையதாகும். அதுபோல் ஆருயிரும் தன்னை மூடியிருக்கும் துகிலால் ஆகிய போர்வையைப் போன்றுள்ள உடம்பை வினைக்கீடாக ஒன்றுவிட்டு ஒன்றுபற்றிப் பிறக்கும். துகிற்போர்வை பழுதுற்றால் அதனை நீக்கிவிட்டு மற்றோர் போர்வையினை எடுத்துக்கொள்ளுதல் ஈண்டு ஒப்பாகும்.

இது, உயிர் பல அண்டங்களில் பல பிறவிகளை வெகு விரைவாக எடுக்கும் என்றது.

## 2093. நாக முடலுரி போலுநல் லண்டச

2093. நாக முடலுரி போலுநல் லண்டச
மாக நனாவிற் கனாமறந் தல்லது
போகலு மாகும் அரனரு ளாலேசென்
றேகு மிடஞ்சென் றிருபயன் உண்ணுமே.

ஆருயிர் ஓர் உடம்பைவிட்டு மற்றோர் பரு உடம்பை வினைக்கீடாக எடுக்கும். அதற்கிடையில் இருவினைப் பயனுள் தீவினைப் பயனின் ஒரு பகுதியை விண்ணுலகில் நுகரும். என்னை, அவ்வுயிர்கள் ஆண்டு நுகருங்கால் தாம் செய்த வினைவகையும், அதன் பயனை அவ்வவ்வாறே இப்பொழுது அடைகின்றோம் என்னும் நினைவும், அதனை எடுத்துரைத்து அழுத்துவிக்கும் குமனாரின் ஏவலாளர் செய்கையும் எண்ணி எண்ணித் துன்புறுவராகலானென்க. இதுபோல் நல்வினைப் பயனுக்கும் உண்டோ என்பது உரையளவையாற் றுணிய முடியவில்லை. வழியளவையான் நோக்குங்கால் இன்பப்பயன் நுகரும் தேவர்கள் செருக்குறுதலானும் அவர்கள் தம் முன்னிலையை அறிவுறுத்துவார் உளரெனக் கேட்கப் படாமையானும், அவர்களும் தங்களை மறந்து 'சாவமுன்னாள் தக்கன் வேள்வித் தகர்தின்றும் நஞ்சம் அஞ்சியும்' முறையிடுதலானும் அவர்களுக்கு உணர்த்துவாரும் ஊட்டுவாரும் ஆங்கு இலரென்பதே துணிபு. இஃது உலகில் தீவினை இயற்றிச் சிறைக்கோட்டம் புகுவார்க்கே உணர்த்துவாரும் ஊட்டுவாரும் காணப்படுகின்றமையான் உணரலாம். இவ்வுண்மை வரும் சிவஞானசித்தியார் திருப்பாட்டானும் உணரலாம்:

"அரசனும் செய்வ தீச னருள்வழி யரும்பா வங்கள்
தரையுளோர் செய்யிற் றீய தண்டலின் வைத்துத் தண்டத்து
உரைசெய்து தீர்ப்பன் பின்பு சொல்வழி நடப்பர் தூயோர்
நிரயமுஞ் சேரார் அந்த நிரயமுன் னீர்மை யீதாம்."

சித்தியார், 2. 2 - 29.

மீண்டு நிலவுலகத்துப் பிறக்கும்போது அவ்வுயிர்கள் இவற்றை மறந்துவிடுகின்றன. பருவுடம்பைவிட்டுப் போவதற்கு ஒப்பு, பாம்பு தோலைக்கழற்றிப் புதுத்தோலை எடுப்பதாகும். இடவேறுபாட்டிற்கு முட்டையகத்துக் குஞ்சு முதற்கண் முட்டையைவிட்டு வெளிவந்து கூட்டில் சின்னாட்கள் தங்கும்; பின்பு பறந்து புறத்துப்போகும்; இஃதொப்பாகும். அறிவு வேறுபாட்டிற்கு நனவின்கண் நினைவோடியற்றிய செயல்கள் எல்லாவற்றையும் கனவில் மறந்துவிடுவது ஒப்பாகும். அரனருளாலே ஆருயிர்கள் இம்முறையாகப் பாம்பு தோலுரிப்பதும், முட்டையிலிருந்து குஞ்சு வெயிப்படுவதும், நனவை மறந்து கனவிற்செல்லுவதும் போற்சென்று ஆண்டுப்பயன் உழந்து மீண்டு பிறக்கும். உழத்தல் - அனுபவித்தல்.

அண்டசம் - முட்டையில் பிறப்பன. இரு பயன் - புண்ணிய பாவப் பயன்.

## 2094. உண்டு நரக சுவர்க்கத்தில் உள்ளன

2094. உண்டு நரக சுவர்க்கத்தில் உள்ளன
கண்டு விடுஞ்சூக்கங் காரண மாச்செலப்
பண்டு தொடரப் பரகாய யோகிபோற்
பிண்டம் எடுக்கும் பிறப்பிறப் பெய்தியே.

ஆருயிர் இருவினைப்பயனைத் துய்ப்பதன் பொருட்டுத் 'துறக்கப்படாத உடலைத் துறந்து வெந்தூ துவரோடு இறக்கும்'. இறந்தால் இருவிசும்பு ஊறும். இருவிசும்பு - நரகசுவர்க்கம். நரகம் - துன்பவுலகு. சுவர்க்கம் - இன்பவுலகு. ஏறி ஆங்குள்ள இருவினைப்பயனையும் கண்டு உண்ணும். கண்டு உண்ணுதல்: அறிந்து நுகர்தல். அங்கெல்லாம் நுண்ணுடல் வாயிலாகச் செல்லும். ஆங்குள்ள நுகர்வுமுடிந்ததும் வேற்றுடம்பிற்புகும் அகத்தவத்தர்போல் ஏறிவந்து பிறக்கும். பிறந்தால் பிறப்பு இறப்பு உற்றுத்தடுமாறும்.

உண்டு - அநுபவித்து. கண்டு - அறிந்து. சூக்கம் காரணமாக சூக்கும தேவ வாயிலாக. பண்டு - பழைய வினை. பிண்டம் - சரீரம்.

## 2095. தானவ னாகிய தற்பரந் தாங்கினோன்

2095. தானவ னாகிய தற்பரந் தாங்கினோன்
ஆனவை மாற்றிப் பரமத் தடைந்திடும்
ஏனை யுயிர்வினைக் கெய்து மிடஞ்சென்றும்
வானும் நிலனும் புகுந்தும் வருந்துமே.

சிவமே நினைந்து சிவமாம் பெருந்திருப்பெற்ற சிவகுரு 'தானவனாகிய தற்பரந்தாங்கினோனாவன்' அவன் செவ்வுயிர்க்குப் பிறப்பிற்கு வாயில்களான ஆணவ கன்மமாயைகளை அறவே அகற்றிச் சிவபெருமான் திருவடிக்கீழ் அடைந்து இன்புறுமாறு துணைபுரிந்து வேண்டுவன செய்தருள்வன். அவ்வுயிர் சிறப்பெய்திப் பேரின்பம் இம்மையே பெற்று வாழும் அவ்வுயிரே சிறப்புயிராகும். அச் செவ்வி வாயாத பிறப்புயிர் செய்வினைப்பயனைத் துய்ப்பதற்கு இடமாகிய வான்சென்று துய்த்தும், பின் நிலவுலகத்தே வந்து பிறந்தும் வருந்தும். செவ்வுயிர் சிறப்புயிர் சேராப் பிறப்புயிர், இவ்வுலகில் வந்துபோம் எண். செவ்வுயிர் - பரி பக்குவம்எய்திய வுயிர். சிறப்புயிர் - இம்மையே அம்மை எய்திய செம்மையுயிர். இவ்வுயிரையே சீவன் முத்தன் என்ப. பேறெய்தும் நன்னெறியிற் புகாது பிறந்து இறந்து தடுமாறும் உயிர் பிறப்புயிர்.

தாங்கினோன் - அதிகாரி, புருடன், ஆனவை - ஆணவ முதலியவற்றை பரமத்து - முத்தியில், வினைக்கு - புண்ணிய பாவத்துக்குத் தக்கவாறு.

# 2096. ஞானிக்குக் காயஞ் சிவமே தனுவாமஞ்

2096. ஞானிக்குக் காயஞ் சிவமே தனுவாமஞ்
ஞானிக்குக் காயம் உடம்பே யதுவாகும்
மேனிற்கும் யோகிக்கு விந்துவும் நாதமும்
மோனிக்குக் காயமுப் பாழ்கெட்ட முத்தியே.

ஞானத்திற் சரியை என்று சொல்லப்படும் அறிவிற் சீலத்தார்க்கு ஆண்டானாகிய சிவனே உடம்பாவன். அறிவின் நோன்பினர்க்கு அருளோன் உடம்பாவன். அறிவிற்செறிவினர்க்கு அன்னையும் அத்தனுமாகிய விந்துவும் நாதமும் உடம்பாகும். அறிவின் அறிவினராம் மோனிக்கு உடம்பொத்த உயிர்நிலை முப்பாழ் என்று சொல்லப்படும் ஆணவம் கன்மம் மாயை மூன்றுங்கடந்த சிவபெருமான் திருவடிப்பேறே என்க. இந்நான்கும் முறையே அகலிடத்தார் ஆசாரத்தை அகலுதலும், தன்னை மறத்தலும், தன்னாமங்கெடுதலும், தலைவன்தான் தலைப்படுதலும் ஆகிய திருநெறி நான்மைத் திருவாகும். இக்குறிப்பு 'முன்னம் அவனுடைய நாமங்கேட்டாள்' என்னும் திருத்தாண்டகத் திருமறையுள் காண்க. 'மோனம் என்பது ஞானவரம்பு' என்ப. அதுவே அறிவின் அறிவாகும். அறிவின் அறிவு ஞானத்தின் ஞானம். மோனம்: முன்ஞானம் என்பதன் மரூஉ. முன்ஞானம் - முதன்மையான ஞானம்.

தநு - உடல். அது - தநு. விந்துவும் நாதமும் - விந்து, நாதம், தநு. முப்பாழ் - ஆணவம், கன்மம், மாயை. முத்தி - மகா காரண உடல்.

# 2097. விஞ்ஞானத் தோர்க்கா ணவமே மிகுதனு

2097. விஞ்ஞானத் தோர்க்கா ணவமே மிகுதனு
எஞ்ஞானத் தோர்க்குத் தனுமாயை தானென்ப
அஞ்ஞானத் தோர்க்குக் கன்மந் தனுவாகும்
மெஞ்ஞானத் தோர்க்குச் சிவதனு மேவுமே.

ஆணவமாகிய ஒருமலம் மட்டும் உடையார் விஞ்ஞானத்தராவர். இவர்களை விஞ்ஞானாகலர் என்பர். இச் சொல் மேலறிவால் கட்டற்றவர் எனப் பொருள்தரும். அகலர் - கட்டற்றவர். இவர்கள் கன்மம் மாயை என்னும் இரண்டின் தொடக்கற்றவராவர். இவர்கட்குப் பிணிப்பாகிய உடம்பு ஆணவம் மட்டுமே. அதனால் ஆணவமே மிகுந்த உடம்பென்பர். உடம்பு - பிணிப்பு விஞ்ஞானத்தை அடுத்ததாகிய அஞ்ஞானத்தோர் இருமலக்கட்டுடையார் அவர்கட்கு ஆணவம் கன்மம் இரண்டும் பிணிப்பாகும். எஞ்சு ஞானம்: எஞ்ஞானம். குறைந்த ஞானத்தையுடைய மும்மலக்கட்டுடையார்க்கு ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலமும் பிணிப்பாகும். திருவடியுணர்வு கைவரப் பெற்றோர்க்குச் சிவனடியே உடம்பு ஆகும். மெய்ஞ்ஞானம் என்பது எதுகைநோக்கி மெஞ்ஞானமென்றாயிற்று.

விஞ்ஞானத்தோர் - ஒரு மலமாகிய ஆணவமலம் உடையவர். எஞ்ஞானத்தோர் - எஞ்சு ஞானத்தோர், கன்மம் தவிர்ந்து எஞ்சியுள்ள ஆணவம், மாயை ஆகிய இரு மலமுடையவர். அஞ்ஞானத்தோர் - ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மும்மலம் உடையவர்.

## 2098. மலமென் றுடம்பை மதியாத ஊமர்

2098. மலமென் றுடம்பை மதியாத ஊமர்
தலமென்று வேறு தரித்தமை கண்டீர்
நலமென் றிதனையே நாடி யிருக்கிற்
பலமுள்ள காயத்திற் பற்றுமிவ் வண்டத்தே.

மாயாகாரியமாகிய தம் உடம்பை மதிப்புக்குரிய பொருளென்று பலர் மதிப்பர். உண்மையாக நோக்கின் அவ்வுடம்பு பிணிப்புறுத்து மலமாகும். மலம் தள்ளத்தக்க பொருள். அதனால் உடம்பையும் மலம் என்று மதியாதவர் ஊமராவர். ஊமர் பேசும் வாய்ப்பு இல்லாதவர். மக்களாய்ப் பிறந்தும் மாவொத்துத் திரிகின்றனர். பிறப்பில் எண்பெருங்குற்றம் உளவென்ப. அவை வருமாறு :

"சிறப்பில் சிதடும் உறுப்பில் பிண்டமும்
கூனும் குறளு மூமுஞ் செவிடும்
மாவும் மருளு முளப்பட வாழ்நர்க்
கெண்பே ரெச்ச மென்றிவை யெல்லாம்
பேதைமை யல்ல தூதய மில்லென
முன்னு மறிந்தோர் கூறின ரின்னும்.
(புறம். 28.)

இவ்வெண்பெரும் குற்றத்து ஊமும் ஒரு குற்றம் ஆகும். இவ்வுடம்பைச் சிறப்பாகக்கொள்ளும் தலமாகிய உறையுளென்று தங்கினமையையே நலமென்று. சிலர் நாடியிருப்பர். அங்ஙனமிருந்தால், இங்குள்ள பலவேறு அண்டங்களில் வினைக்கீடாகிய பயனை நுகர்வதற்குத் தகுதியான உடம்பைப் பெறுவர். வேறு - சிறப்பு. இம்மை

உடற்பிறவியின் பயன் அம்மையெய்துதலேயன்றி மீண்டும் இம்மையிற் பிறத்தலன்று.

தலம் ஒன்ற வேறு - வெவ்வேறு அண்டங்களில் பல வேறு வகைப்பட்ட உடல்களை.

## 2099. நல்ல வசனத்து வாக்கு மனாதிகள்

2099. நல்ல வசனத்து வாக்கு மனாதிகள்
மெல்ல விளையாடும் விமலன் அகத்திலே
அல்ல செவிசத்த மாதி மனத்தையும்
மெல்லத் தரித்தார் முகத்தார் பசித்தே.

தூய நினைவும் மொழியும் செயலும் உடையார் உள்ளம் திருவுள்ளமாகும். அவ்வுள்ளத்தின்கண் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய தூயோனாகிய சிவபெருமான் மெல்லநின்று விளையாடியருள்வன். உள்ளம் தூய்மை எய்துவது 'சிவசிவ' என்னும் தமிழ்மறையாலும் சிவனடியாரைப் பேணும் தவமுறையாலும் உண்டாம். அத்தகையோர் என்றும் 'செல்வன் கழலேத்தும்' செல்வராயிருப்பர். தீய நினைவும் சொல்லும் செயலும் உடையார் உள்ளத்தில் ஆண்டவன் விளக்கமுறான். அதனால் அவர்கள் என்றும் வறுமையுற்று மிக்க பசியினராய் மென்று தின்ன ஏதும் இரப்பினும் கிடையாராய்ப் பெருந்துன்பம் தாங்கியிருந்தாராவர். தரித்தார் - தாங்கியிருந்தார். வாக்குமனாதிகளைச் செலுத்துங் கருவிகள் மாயை ஆக்கமாகும். அக்கருவிகளைச் செலுத்தும் எழுத்துக்கள் வாக்காகும். அவ் வாக்குகளைச் செலுத்தும் தெய்வங்கள் இறைவன் திருவாணையாகும். கருவிகள் எண்ணம் மனம் எழுச்சி இறுப்பு ஆள் என்பனவாகும். இவற்றை முறையே செலுத்தும் எழுத்துக்கள் ஒளி (விந்து,) மகரம், அகரம், உகரம், ஒலி (நாதம்) என்பனவாகும். இவற்றைச் செலுத்தும்

தெய்வங்கள் முறையே ஆண்டான், அரன், அயன், அரி, அருளோன் என்ப. இக் குறிப்பே 'விமலன்மெல்ல அகத்தில் விளையாடுதல்' என்றலும் ஒன்று.

நல்ல.....கள் - பரிசுத்தமான மனம் வாக்குக் காயம் உடையவர்களிடம். அல்ல...தே - ஐம்பொறி அடக்கமும் அந்தக்கரண சுத்தமும் இல்லாதவர் பசித்தமுகத்தை யுடையவர், அஃதாவது வருந்துவர்.

## 2100. பண்ணாகுங் காமம் பயிலும் வசனமும்

2100. பண்ணாகுங் காமம் பயிலும் வசனமும்
விண்ணாம் பிராணன் விளங்கிய சத்தமும்
புண்ணாம் உடலிற் பொருந்து மனத்தையும்
அண்ணாந்து பார்க்க அழியும் உடம்பே.

இனிமையமைந்த சொல்லையும், சிறந்த உயிர்ப்பு விளங்கிய செயலையும் இவற்றுடன் பொருந்தும் மனத்தையும் கொண்டுள்ளது துன்புக்கு உறையுளாகிய உடம்பு. அவ்வுடம்பகத்துத் தங்கும் உயிர் அவற்றின்வழி உலகிடைச் செல்லாது. அவற்றைக்கொண்டு மேனோக்கிப் பார்த்தல்வேண்டும். அஃதாவது சிவபெருமான் திருவடியிணையினையே தூயவுள்ளத்துடன் நினைத்தலும் புகழ்தலும் போற்றலுமாகும். அங்ஙனம் செய்வார்க்கு அவ்வுடம்பின்கணுள்ள பற்று அப்பொழுதே அழியும். அண்ணாந்து: இஃதோர் அரிய வழக்குச் சொல்.

பண் - இனிமை. அண்ணாந்து பார்க்க - ஆராய்ந்து பார்க்க.

## 2101. அழிகின்ற வோருடம் பாகுஞ் செவிகண்

2101. அழிகின்ற வோருடம் பாகுஞ் செவிகண்
கழிகின்ற காலவ் விரதங்கள் தானம்
மொழிகின்ற வாக்கு முடிகின்ற நாடி
ஒழிகின்ற ஊனுக் குறுதுணை யில்லையே.

உடம்பைவிட்டு ஆருயிர் நீங்குங் காலத்துச் செவி கண் முதலிய உறுப்புகள் செயலற்று அழியும். அக்காலத்துப் புரியும் நோன்பினாலும் தானங்களினாலும் எவ்வகையான துணையும் அவ்வுடலினுக்கோ உயிரினுக்கோ வருவதில்லை. எனவே சிவபெருமானே உறுதுணையாவன். இவ்வுண்மை வரும் அப்பர் அருண்மொழியான் உணரலாம்.

"உற்றா ராருளரோ-உயிர்
கொண்டு போம்பொழுது
குற்றா லத்துறை கூத்தனல் லால்நமக்கு
உற்றா ராருளரோ
(அப்பர், 4. 9 - 10.)

மேலும், திருவள்ளுவனாரும் 'நாச்செற்று விக்குள்மேல் வாராமுன் நல்வினை, மேற்சென்று செய்யப்படும்' என்றதுங் காண்க.

## 2102. இலையா மிடையில் எழுகின்ற காமம்

2102. இலையா மிடையில் எழுகின்ற காமம்
உலைவாய நெஞ்சத்து மூழ்கும் உளத்துத்
தலையாய மின்னுடல் தாங்கித் திரியுஞ்
சிலையாய சித்தஞ் சிவமுன் னிடைக்கே.

இல்லையென்றே சொல்லும்படியான மிகவும் நுணுகிய இடையினையுடைய அழகமைந்த பெண்கள்பால் கொண்ட அளப்பருங் காமத்தால் நெஞ்சம் உலைவுற்று மூழ்கித் துன்புறும் 'மற்றும் தொடர்ப்பாடெவன்கொல் பிறப்பறுக்கல், 'உற்றார்க்கு உடம்பும் மிகை' (345) என்னும் உண்மையுணர்ந்தொழுகுவார் நெஞ்சத்திண்மையராவர். அவர்கள் உள்ளத்துத் தம்முடம்பு மின்னல்போன்று நிலையாது அகலும் என்பதே தோன்றும் தம்முடலைச் சுமையெனத் தாங்கித் திரிவர். அவர்களுடைய கல்லொத்த உறுதியான எண்ணமாகிய சித்தம் சிவபெருமானிடத்தே எத்திறத்தும் அழுந்திநிற்கும். அதனால் அவர்கள் சிறப்புயிராய்ப் பிறப்பற்றுப் பேரின்பம் உறுவர். சிலை - கல்; திண்மை. சிவமுன்னிடை - சிவத்தின் திருமுன். சுமை என்னுங் குறிப்பு உடலை இரவலாகத் தந்த இறைவன்பால் ஊறின்றி ஒப்புவிக்கும் ஒரு பெருங் கடமையை உணர்த்துவதாகும்.

இலையாமிடை - இல்லை என்று சொல்லும்படியான சிறுத்த இடை. சிலையாய - கல்போன்ற.

## 2103. ஐயைந்து மத்திமை யானது சாக்கிரங்

2103. ஐயைந்து மத்திமை யானது சாக்கிரங்
கைகண்ட பன்னான்கிற் கண்டங் கனாவென்பர்
பொய்கண் டிலாத புருட னிதயஞ்சுழுனை
மெய்கண் டவனுந்தி யாகுந் துரியமே.

மத்திமையாகிய புருவநடுவின்கண் அறிதற்கருவி ஐந்து, செய்தற்கருவி ஐந்து, வளி பத்து, அகப்புறக்கலன் நான்கு, ஆள் ஒன்று ஆகிய இருபத்தைந்து கருவிகளும் தொழிற்படும். இந்நிலை நனவு நிலையாகும். கண்டத்தின்கண் வளிபத்து, அகப்புறக்கலன் நான்கு ஆகப் பதினான்கு கருவிகளும் தொழிற்படும். இந்நிலை கனவுநிலையாகும். நெஞ்சத்தின்கண் எண்ணமும் ஆளும் என்னும் இரண்டு கருவிகள் தொழிற்படும். இந்நிலை உறக்கநிலையாகும். கொப்பூழின்கண் நிலைத்தவனாகிய ஆள் தொழிற்படும். இந்நிலை பேருறக்கநிலை. பேருறக்க நிலையெனினும் துரிய நிலையெனினும் ஒன்றே. 'பொய்கண்டிலாத புருடன்' என்பது ஏனைய புறக்கருவிகளும், அகப்புறக் கருவிகளும்போல் தொழிற்படுங்கால் தொடப்பட்டும் ஏனைக்காலங்களில் விடப்பட்டும்
வருவதன்றி என்று நீங்காது இணைந்தே நிற்பதென்பதாகும். மெய்கண்டவன் - நிலைத்தவன்; புருடன் நனவின்கண் அறிதற்கருவியாலும் செய்தற்கருவியாலும் கொள்ளப்படும் புலன்கள் (நிலம்) பத்தும் இத் திருப்பாட்டின்கண் குறிக்கப்படவில்லை. கருவிகள்

சொல்லப்படவே கருவிகளின் தொழிற்பாடும் அவற்றினுக்குரிய நிலமாகிய பொருள்களும் தாமே போதருமென்னுந் திருவுள்ளத்தால் ஓதாராயினர். எனவே நனவிற் கருவி முப்பத்தைந்து என்பதுடன் ஈண்டு ஓதிய இருபத்தைந்தென்பது மாறுபாடன்மை உணர்க உணரவே, ஈண்டுங் கொள்ளவேண்டுவன (2160) முப்பத்தைந்தென்பதேயாம். மேலும் கீழ்நோக்கும் பாடாகிய கீழாலவத்தை என்பதனால் ஆண்டு இப் புலன்கள் மெத்தென்று நிகழ்வதுண்மையின் அங்ஙனம் ஓதினாரென்றலும் ஒன்று.

ஐயைந்து-25 தத்துவங்கள்; நிலம் முதல், புருடன் வரை. மத்திமை - புருவ நடு. பன்னான்கு - அந்தக் கரணம் நான்கும் வாயு பத்தும். புருடன்- ஆன்மா. உந்தி - கொப்பூழ்.

## 2104. முப்பதோ டாறின் முதல்நனா ஐந்தாகச்

2104. முப்பதோ டாறின் முதல்நனா ஐந்தாகச்
செப்பதி னான்காய்த் திகழ்ந்திரண் டொன்றாகி
அப்பதி யாகும் நியதி முதலாகச்
செப்புஞ் சிவமீறாய்த் தேர்ந்துகொள் ளீரே.

அருஞ்சைவர்மெய் (2139) ஆறாறாகிய முப்பத்தாறனுள் ஒன்றித் தொழிற்படும் ஆருயிர் நாளும் ஐம்பாடு எய்தும் அவற்றுள் முதல் நிலையாகிய நனவுநிலை ஐவகைப்படும். அவை, நனவில் நனவு, நனவிற் கனவு, நனவில் உறக்கம், நனவில் பேருறக்கம், நனவில் உயிர்ப்படங்கல் என்பன. அந் நனவில் நான்கு வருமாறு: நனவிற்கனவு, நனவின் உறக்கம், நனவிற் பேருறக்கம், நனவில் உயிர்ப்படங்கல் என்பன. அந் நனவில் மூன்று வருமாறு: நனவில் உறக்கம், நனவில் பேருறக்கம், நனவில் உயிர்ப்படங்கல் என்ப. அந் நனவில் இரண்டு வருமாறு: நனவில் பேருறக்கம், நனவில் உயிர்ப்படங்கல் என்ப. அந் நனவில் ஒன்று: உயிர்ப்படங்கல். 'இரண்டு ஒன்று' என்பதனைக் கூட்டி மூன்றாகவும். தனித்தனியே இரண்டாகவும் ஒன்றாகவும் கொள்ளப்பட்டன. மண் முதலாகச் சிவமெய்யீறாகக் கூறப்படும் மெய்கள் முப்பத்தாறு. முதல்-மண். இவையனைத்தும் பதியாகிய சிவபெருமானின் திருவாணையாகும். திருவாணை - நியதி; யாப்புறவு. திருவாணை என்பது இம்மெய்கள் ஒழுங்காக நடைபெறும் நியதியாகும்.

முதல் நனா ஐந்தாக - சாக்கிரம் முதல் ஐந்து வகையாக. அதில் நான்கு - சாக்கிரத்தில் சாக்கிரம் ஒழிந்த ஏனைய நான்கு. சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம். இரண்டு - துரியம் துரியா தீதம். ஒன்று - துரியாதீதம்.

## 2105. இந்திய மீரைந் தீரைந்து மாத்திரை

2105. இந்திய மீரைந் தீரைந்து மாத்திரை
மந்திர மாய்நின்ற மாருதம் ஈரைந்தும்
அந்தக் கரணம் ஒருநான்கும் ஆன்மாவும்
பந்தவச் சக்கரப் பாலது வாகுமே.

பருவுடல் நுண்ணுடல் கூறுகளைக் கூறுங்கால் அறிதற் கருவியாகிய ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்னும் ஐம்புலன்களையும் ஏற்றுக்கொள்ளும் செவி, மெய், கண், நாக்கு, மூக்கு என்னும் பொறிகள் ஐந்தும்; செய்தற்கருவியாகிய பேசல், நடத்தல், கொடுத்தல், கழித்தல், (களித்தல்) இன்புறல் என்னும் புலன்களை நிகழ்த்தும் நாக்கு, கால், கை, எருவாய், கருவாய் ஐந்தும் ஆகிய இந்திரியம் பத்தும்; அவற்றால் கொள்ளப்படும் ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் ஐந்தும்; பேசல், நடத்தல், கொடுத்தல், கழித்தல், இன்புறல் ஐந்தும் மாத்திரையாகும். அறிவு வளியாகிய உயிர்க்காற்று, மலக்காற்று, தொழிற்காற்று, ஒலிக்காற்று, நிரவுகாற்று ஆகிய வளி ஐந்தும், தொழில் வளியாகிய தும்மற்காற்று, விழிக்காற்று, கொட்டாவிக்காற்று, இமைக்காற்று, வீங்கற்காற்று ஆகிய வளி ஐந்தும்கூடி வளி பத்தாகும். இவ் வளி 'மந்திரமாய் நின்றமாருதம் ஈரைந்து' என ஓதப்பெற்றது அந்தக்கரணமெனினும் அகப் புறக்கலன் எனினும் ஒன்றே. அவை, எண்ணம், மனம், எழுச்சி, இறுப்பு என நான்காகும் இவற்றைச் சித்தம், மனம், அகங்காரம்,

புத்தி எனவும் கூறுப. ஆன்மா என்று சொல்லப்படும் ஆன் ஒன்று ஆக முப்பதைந்து என்ப. சக்கரம் - உடல். பிறப்பு சக்கரம்போல் மாறிமாறிச் சுழன்று வருதலால் உடல் சக்கரம் எனப்பட்டது.

இந்தியம் ஈரைந்து - கன்மேந்திரியும் ஐந்து; ஞானேந்திரியம் ஐந்து. ஈரைந்து மாத்திரை - வசனாதி ஐந்து; சத்தாதி ஐந்து. மாருதம் ஈரைந்து - வாயுக்கள் பத்து. சக்கரம் - சரீரம்.

## 2106. பாரது பொன்மை பசுமை யுடையது

2106. பாரது பொன்மை பசுமை யுடையது
நீரது வெண்மை செம்மை நெருப்பது
காரது மாருதங் கறுப்பை யுடையது
வானகந் தூம மறைந்துநின் றார்களே.

ஐம்பெரும் பூதங்களின் நிறங்கள் வருமாறு: நிலத்தின் வண்ணம் பொன்மை; அது மினுமினுப்பாகிய பசுமையுடையது. நீரின் வண்ணம் வெண்மை. நெருப்பின் வண்ணம் செம்மை. நெருப்பையும் மழையையும் துணைநின்று செலுத்தும் காற்றின் வண்ணம் கறுமை. வானத்தின் வண்ணம் புகைமை. இவ்வைந்தனுள் நிலம், நீர், நெருப்பு மூன்றும் வெளிப்படத் தோன்றுவன. காற்று தொழிலால் புலனாவது வானம் உய்த்துணர்வால் புலனாவது. அதனால் வானத்தை மறைந்து நின்றார் என ஓதினர். மேலும் வானம் ஏனைநான்கு பூதங்களுடனும் விரவி அவற்றிற்கு இடம்கொடுத்து மறைந்துநிற்பது என்றலும் ஒன்று.

காரறு - குற்றமற்ற. ஐந்து பூதங்களின் நிறம்:- பார் - பொன்மை. நீர் - பசுமை. தீ - வெண்மை, செம்மை. வாயு - கறுப்பு. ஆகாயம் - புகை.

## 2107. பூதங்கள் ஐந்தும் பொறியவை ஐந்துளும்

2107. பூதங்கள் ஐந்தும் பொறியவை ஐந்துளும்
ஏதம் படஞ்செய் திருந்த புறநிலை
ஓது மலங்குண மாகுமா தாரமோ
டாதி யவத்தைக் கருவிதொண் ணூற்றாறே.

பூதம் ஐந்தும், பொறி ஐந்தும், குற்றம் எய்துமாறு இருந்த புறநிலைக்கருவிகள் என்ப. இவற்றால் நிகழும் குணம் செயல்கள் மலங்காரணமாகும். இவற்றை அடிப்படையாகக்கொண்டு விரிந்த கருவிகள் அறுபது, ஆகக் கருவிகள் தொண்ணூற்றாறு என்ப.

கருவிகள் அறுபது வருமாறு :

கூறு

நிலம் : மயிர், தோல், எலும்பு, நரம்பு, தசை ஆக 5

நீர் : நீர், குருதி, மூளை, கொழுப்பு, வெண்ணீர் ஆக 5

தீ : ஊண், உறக்கம், உட்கு, உடனுறைவு, மடி ஆக 5

வளி : ஓடல், இருத்தல், நடத்தல், கிடத்தல், தத்தல் ஆக 5

வெளி : வெ◌ட்குளி, இவறன்மை, மயக்கம், செருக்கு, பொறாமை ஆக 5

செய்தற்கருவி : பேசல், நடத்தல், உழைத்தல், கழித்தல்,மகப்பெறுதல் ஆக
5

அறிவுவளி : உயிர்க்காற்று, மலக்காற்று, தொழிற்காற்று,ஒலிக்காற்று, நிரவுகாற்று ஆக
5

தொழில்வளி : தும்மற்காற்று, விழிக்காற்று,கொட்டாவிக் காற்று,இமைக்காற்று, வீங்கற்காற்று ஆக
5

நாடி : இடப்பால்நரம்பு, வலப்பால்நரம்பு, நடுநரம்பு,இடக்கண்நரம்பு, வலச்செவிநரம்பு, உள்நாக்கு நரம்பு, இடச்செவிநரம்பு, வலக்கண்நரம்பு,கருவாய்நரம்பு,எருவாய்நரம்பு ஆக
10

ஓசை : நுண்ணோசை, நினைவோசை, மிடற்றோசை,செவியோசை ஆக
4

முப்பற்று : பொருட்பற்று, புதல்வர்ப்பற்று,பொய்யுலகப் பற்று ஆக
3

முக்குணம் : அமைதி, ஆட்சி, அழுந்தல் ஆக
3

(அறுபது)60

உடனுறைவு - ஆண்பெண் சேர்க்கை. பொய்யுலகு - தோன்றி யொடுங்கும் நிலையில்லாத உலகு.

ஏதம் - குற்றம். கருவி - தத்துவம்.

## 2108. இடவகை சொல்லில் இருபத்தஞ் சானை

2108. இடவகை சொல்லில் இருபத்தஞ் சானை
படுபர சேனையும் பாய்பரி ஐந்தும்
உடையவன் மத்திமை யுள்ளுறு நால்வர்
அடைய நெடுங்கடை ஐந்தொடு நான்கே.

ஆருயிர்கள் ஐம்பாடு எய்தும் இடவகைகள் ஐந்தென்ப. அவை: நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் என்ப. இவற்றுள் உயிர்ப்படங்கல் ஒழித்து ஒழிந்த நான்கினும் உள்ள கருவிகளை உருவகமாக ஓதியருளுகின்றனர். இருபத்தைந்து கருவிகள் யானையை ஒக்கும். பேசல், நடத்தல், கொடுத்தல், கழித்தல், இன்புறலின் கருவிகள் விரைந்து செல்லும் காலாட்களாகும். ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்பனவற்றை மேற்கொள்ளும் கருவிகள் ஐந்தும் மிகவிரைந்து செல்லும் பாய்பரிகளாகிய குதிரைகளாகும். மிடற்றோசையுள்ளிட்ட ஓசைகள் நான்கும் அமைச்சரை ஒக்கும். இந் நான்கும் மடங்குதலே அப்பால் நிலையாகும். ஓசை நான்கு: நுண்மை, நினைவு, மிடறு, செவி என்ப.

இருபத்தஞ்சானை - இருபத்தைந்து தத்துவங்கள். படுபரசேனை - வசனாதி ஐந்து. பாய்பரி ஐந்து - சத்தாதி ஐந்து. நால்வர் - நாலு வாக்கு. அடைய - மடங்க. கடை - வாயில்.

# 2109. உடம்பும் உடம்பும் உடம்பைத் தழுவி

2109. உடம்பும் உடம்பும் உடம்பைத் தழுவி
உடம்பிடை நின்ற உயிரை அறியார்
உடம்பொ டுயிரிடை நட்பறி யாதார்
மடம்புகு நாய்போல் மயங்குகின் றாரே.

பிறப்புக்காலந் தொட்டு ஒடுக்ககாலம் வரை மாறாதிருக்கும் நுண்ணுடல் ஓய்வின்றி வருந்தும் உடம்பாயிற்று. உடம்பும் - வருந்தும். அவ் வுடம்பு இருவினைக்கீடாக அடுத்தடுத்துப் பிறந்திருக்கும் பருவுடலைத் தழுவி இவ் விருவுடம்புகளினுள்ளும் இவற்றிற்கு வேறாக ஓர் உயிர் உண்டு. அவ் வுயிர் இவற்றைக் கருவியாகக்கொண்டு உலகியற் பற்றற்றுச் சிவபெருமான் திருவடிப் பற்றுற்றுப் பெருவாழ்வு எய்துவதற்குச் சிவபெருமான் கொடுத்தருளினன். இவ் வுண்மை உணர்வதே உடம்பொடு உயிருக்குள்ள நட்பினை உணர்தலாகும். இதனை யறியாதார் தமக்கு வேண்டிய இறைச்சி எலும்பு முதலியன என்றுமில்லாத சைவர் இருந்துவாழ் மடத்தில் புகுந்து மயங்கும் நாய்போன்று மயங்குகின்றார். மடம் - சைவர்வாழ்வீடு. இவ் வுண்மை வரும் சேக்கிழாரடிகளின் அருண்மொழியான் உணரலாம். அது வருமாறு:

"மிக்க செல்வ மனைகடொறும் விளைவு மின்பம் விளங்குவன
பக்க நெருங்கு சாலைதொறும் பயில்சட் டறங்கள் பல்குவன
தக்க வணிகொண் மடங்கள்தொறும் சைவமேன்மை சாற்றுவன

தொக்க வளங்கொள் இடங்கள்தொறும் அடங்கநிதியம் தோன்றுவன."

- 12. சேரமான், 3.

உடம்பும் உடம்பு - வருந்தும்.

## 2110. இருக்கின்ற வாறொன் றறிகிலர் ஏழைகள்

2110. இருக்கின்ற வாறொன் றறிகிலர் ஏழைகள்
முருக்கு மசபையை மாற்றி முகந்து
கருக்கொண்டு காமாரி சார முகந்தேர்ந்து
உருக்கொண்டு தொக்க உடலொழி யாதே.

உண்மையறிவில்லாத கோழையர் உடம்பகத்துத் தங்கியிருக்குந் தம் தன்மையை உணரமாட்டார். இவ் வுடம்பினையே சிவநினைவால், திருவெண்ணீறு சிவமணி பூணலால், சிவனடியாராகிய நடமாடுந் திருக்கோவில்களைச் சிவனெனவே தேறி வழிபடலால் மாற்றிச் சிவவுடலாக அமைத்துக் கொள்ளலாம். அங்ஙனம் அமைத்துக்கொண்டால் பிறப்பு இறப்புகளை அறுக்கும் பெருமறை 'சி'கரமாகும். இதனைப் பேசாமறை என்பர். இப் பேசாமறையே 'அசபை என' ஓதப்பெற்றது. அதனால் இறப்பு பிறப்புகளை ஒழிக்கலாம். அசபை - செபிக்கப்படாதது; தனியே ஒலிக்கப்படாதது. காமனை ஒடுக்கியவன் காமாரி. அவன் திருவடியைச் சாரக் காரணமாகிய நன்மையமைந்த நன்னெறி நான்மையினைக் கருவாகக்கொண்டு அவற்றின் வாயிலாக அவன் திருவடியைத் தேர்ந்து தொழுதால் சிவவுருக்கொண்ட வுடல் அழியாது. திருவடிக்கீழ் இருக்கலாம். சிவவுடல் - திருவருள் உடல்.

## 2111. ஒளித்திட் டிருக்கும் ஒருபதி னாலை

2111. ஒளித்திட் டிருக்கும் ஒருபதி னாலை
அளித்தனன் என்னுள்ளே ஆரியன் வந்து
அளிக்குங் கலைகளி னாலறு பத்தும்
ஒளித்திட்டு வைத்தான் ஒடுங்கிய சித்தே.

(ப. இ .) ஆருயிர்தோறும் 'விறகில்தீயின் நன்பாலிற்படு நெய் போல், மறைய நின்றுளனாகிய மாமணிச் சோதியான்' ஒளித் திட்டிருக்கும் ஒருபதி என்று ஓதப்பெற்றனன். அவன் அருளிய பொருளும் நெறியும் நந்நான்கு என்ப. அவை முறையே அறம், பொருள், இன்பம், வீடு எனவும், சீலம், நோன்பு, செறிவு, அறிவு எனவும் கூறப்படும். இவற்றை அளித்தருளினன். என்னுள்ளத்துள்ளே ஆரியன் என்னும் ஆசானாய் எழுந்தருளினன். ஆரியன்: நிறைந்தவன். ஆர்தல் - நிறைதல். இதுவே ஆன்றவன் சான்றவன் எனவும் வழங்கப்பெறும். அத்தகைய சிவகுருவானவர் உள்ளிருந்து உணர்த்தும் கலைகள் அறுபத்துநான்கு. அக் கலைகளின் வாயிலாக எண்ணத்தின் கருவியாகிய சித்தம் சிவன் திருவடியையன்றி வேறொன்றும் எண்ணாது ஒடுங்குமாறு செய்தருளினன். திருவடிப்புகலில் அடங்கியிருக்குமாறும் அருள்புரிந்தனன். ஒளித்திடுதல் - அடங்குதல். ஒரு பதி: ஒப்பில்லாத இறைவன்.

பதினாலை - பதினான்கு நூல்களை. ஆரியன் இயற்கெனவே உள்ளத்தின்கண் உள்ள சிவன். கலைகளின் நாலு அறுபத்து - 64 கலைகள்.

## 2112. மண்ணினில் ஒன்று மலர்நீரு மங்காகும்

2112. மண்ணினில் ஒன்று மலர்நீரு மங்காகும்
பொன்னினில் அங்கி புகழ்வளி யாகாயம்
மன்னு மனோபுத்தி யாங்காரம் ஓரொன்றாய்
உன்னின் முடிந்ததொரு பூத சயமே.

மண்ணும், அதனில் பொருந்தி விரிந்து இருக்கும் நீரும், பொன்போற் காணப்படும் தீயும், புகழ்மிக்கதாகிய வளியும், புகல்மிக்கதாகிய வானமும், நிலைபெற்றுள்ள மனம், இறுப்பு, எழுச்சி ஆகிய எட்டும் அவ் வவற்றின் தன்மையுடன் ஓரொன்றாய் நினைத்து உண்மை ஓர்ந்தால் பூதவெற்றி நிறைவுற்றதென்க. பூதவெற்றி எனினும் பூதசுத்தி எனினும் ஒன்றே. பூதமுறையினை வரும் புறப்பாட்டானும் உணர்க:

"மண்டிணிந்த நிலனும்
நிலனேந்திய விசும்பும்
விசும்புதைவரு வளியும்
வளித்தலைஇய தீயும்
தீமுரணிய நீரு மென்றாங்கு
ஐம்பெரும் பூதத் தியற்கை போலப்."
(புறம், 2.)

இப் பாட்டுத் தலைச்சங்கப் பாட்டென்ப. ஆசிரியர் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனார் கூறுவது வருமாறு:

"நிலந்தீ நீர்வளி விசும்போ டைந்தும்
கலந்த மயக்கம் உலகம் ஆதலின்

இருதிணை ஐம்பால் இயனெறி வழாஅமைத்
திரிவில் சொல்லொடு தழாஅல் வேண்டும்."
(தொல். பொருள். மரபு, 89)

உன்னின் - ஆராயின்.

## 2113. முன்னிக் கொருமகன் மூர்த்திக் கிருவர்

2113. முன்னிக் கொருமகன் மூர்த்திக் கிருவர்
வன்னிக்கு மூவர் வதுவைக்கு நால்வர்
கன்னிக்குப் பிள்ளைகள் ஐவர்மு னாளில்லை
கன்னியைக் கன்னியாகக் காதலித் தானே.

ஐம்பூதங்களுள் முதற்கண் நிற்பது வானம் இதன்கண் விளங்கும் பண்பு ஓசை ஒன்றே. அவ் வொன்றும் ஒருமகன் என ஓதப்பெற்றது. அதுபோல் வளியாகிய காற்றின்கண் நிற்பன ஓசை ஊறு என்னும் இரண்டுமேயாம். தீயினிடத்து ஓசை, ஊறு, ஒளி என்னும் மூன்றுமாம். நீரினிடத்து ஓசை, ஊறு, ஒளி, சுவை என்னும் நான்குமாம். கன்னியாகிய நிலமகளிடத்து ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்னும் (1049) ஐந்துமேயாம் சிவபெருமானுடைய உன்னித்துப் பொருந்தும் உன்முகத்தின் முன்னாட்களில் இவை இங்ஙனம் கலந்து விரிவு எய்துவதில்லை. கன்னியாகிய மாமாயையைத் தன் வைப்பாற்றற் கன்னியேயாகச் சிவபெருமான் காதலித்தருளினன். அதனால் இவ்வுலகம் நிகழ்ந்து வருகின்றது. வைப்பாற்றல்: விட்டு நீங்கும் சத்தி; பரிக்கிரக சத்தி.

முன்னிக்கு - ஆகாயத்துக்கு. ஒரு மகன் - ஓசை ஒன்று. மூர்த்திக்கு - வாயுவுக்கு. இருவர் - ஊறு, ஓசை. வன்னிக்கு மூவர் - தீக்கு ஊறு, ஓசை, ஒளி. வதுவைக்கு நால்வர் - நீருக்கு ஊறு, ஓசை, ஒளி, சுவை. கன்னிக்கு ஐவர் - மண்ணுக்குச் சுவை, ஒளி, ஊறு, ஓசை,

நாற்றம். முன்னாள் - படைப்பிற்கு முன். கன்னியை - மாயையை. கன்னியா - முதற் காரணமாகக் கொண்டு. காதலித்தார் - உலகைப் படைக்க நினைத்தார் ஈசன்.

## 2114. கண்டகன வைந்தும் கலந்தன தானைந்து

2114. கண்டகன வைந்தும் கலந்தன தானைந்து
சென்றுண்ட நான்கும் ஒருங்கே உணர்ந்தபின்
பண்டைய தாகிப் பரந்த வியாக்கிரத்து
அண்டமுந் தானாய் அமர்ந்துநின் றானே.

கனவின் உண்டாகும் நிலைகள் ஐந்து. கலந்துள்ள மெய் வாய் கண், மூக்குச் செவி என்னும் புலன்கள் (இந்திரியங்கள்) ஐந்து. அகப்புறக் கலன்களாகிய எண்ணம் மனம் எழுச்சி இறுப்பு என்னும் அந்தக்கரணம் நான்கு. இவற்றின் உண்மைத்தன்மைகளைத் திருவருளால் உணர்ந்தபின் தொன்மையதாய் அண்டமெங்கணும் பரந்துள்ள புலிபோன்ற பாய்ச்சலும் பற்றும் உள்ள இடையறாத வேக நடைவாய்ந்த மனம் சிவபெருமான் திருவடிக்கீழ் அடங்கிற்று. அங்ஙனம் அடங்கப் பெற்ற மனம் உடையோன் அத் திருவடியையே விரும்பி நின்றனன். வியாக்கிரம் - புலி.

கனவு ஐந்து - சொப்பனத்தில் உண்டாம் அவத்தைகள் ஐந்து. கலந்தன தான் ஐந்து - இந்திரியம் ஐந்து. உண்ட நான்கு - அந்தக் கரணநான்கு. பரந்த வியாக்கிரத்து - விரிந்த மனத்தால்.

## 2115. நின்றவன் நிற்கப் பதினாலிற் பத்துநீத்து

2115. நின்றவன் நிற்கப் பதினாலிற் பத்துநீத்து
ஒன்றிய அந்தக் கரணங்கள் நான்குடன்
மன்று கலந்த மனைவாழ்க்கை வாதனை
கன்றிய கண்டத்திற் கண்டான் கனவதே.

மேலோதியவாறு நின்றார் நிற்க. அங்ஙனம் நில்லாதாரனைவரும் இருவகைப் பொறிபத்தும் கலன் நான்குமாகிய பதினான்கில் பொறி பத்தையும் விட்டுப் பொருந்திய எண்ணம், மனம், எழுச்சி, இறுப்பு என்னும் அகப்புறக்கலன் நான்குடன் புறத்து மனை வாழ்க்கையின்கண் பயின்றுவந்துள்ள பசைத்தொடர்பால் கழுத்தினிடத்தில் கனவுகண்டனர். வாதனை - பசை.

மன்று - உலகம். மனைவாழ்க்கை - உலக வியாபாரம். கண்டத்தில் - சொப்பனாவத்தையில்.

## 2116. தான மிழந்து தனிபுக் கிதயத்து

2116. தான மிழந்து தனிபுக் கிதயத்து
மான மழிந்து மதிகெட்டு மாலாகி
ஆன விரிவறி யாவவ் வியத்தத்தின்
மேனி யழிந்து சுழுத்திய தாகுமே.

கனவின் நிலைக்களமாகிய கண்டத்தைவிட்டுக் கீழிறங்கி நெஞ்சத்திடத்துத் தனியே புகுந்து உலகியற் பெருமையும் அறிவும் அழிந்து உயிர்நிற்கும். ஆங்கு அவ் வுயிர்க்கு மயக்கம் ஒன்றுமே உடன் நிற்கும். அங்கு அமைதி ஆட்சி அழுந்தல் என்னும் மூன்று குணமும் வெளிப் படாது அடங்குநிலை அவ்வியத்தம். அதனையே விரிவானது அறியாத அவ்வியத்தம் என்று ஓதப்பெற்றது. இந் நிலையே உறக்க நிலையாகும். உறக்கம் - சுழுத்தி.

தானம் - கண்டத் தானம். மாலாகி - மயங்கி. அவ் வியத்தம் - மூலப்பகுதி.

## 2117. சுழுனையைச் சேர்ந்துள மூன்றுடன் காட்சி

2117. சுழுனையைச் சேர்ந்துள மூன்றுடன் காட்சி
கெழுமிய சித்தம் பிராணன்றன் காட்சி
ஒழுகக் கமலத்தின் உள்ளேயிருந்து
விழுமப் பொருளுடன் மேவிநின் றானே.

உறக்க நிலைக்களமாகிய நெஞ்சத்தின்கண் எண்ணமும், உயிர்ப்பும், ஆளும் ஆகிய மூன்று கருவிகளும் தொழிற்படும். பேருறக்க நிலைக்களமாகிய கொப்பூழின்கண் உயிர்ப்பும் ஆளும் ஆகிய இரண்டு கருவிகள் தொழிற்படும். உயிர்ப்படங்குதலாகிய மூலத்திடத்து ஆள் மட்டும் தொழிற்படும். இங்கு ஆருயிர் ஆள் என்னும் கருவியுடன் கூடி மூலப்பகுதி என்னும் திரிபுணர்ச்சிப் பண்பை நுகர்ந்துகொண்டிருக்கும். இவ் வுண்மை அவ் வுயிர் விழித்தெழுந்தபின் இன்புறத்துயின்றேன் என மொழிவதால் உணரலாம். அவ்வியத்தமாகிய மூலப்பகுதி மாறுபாட்டுணர்வைச் செய்யுமென்னும் உண்மை வரும் சித்தியார் திருப்பாட்டா னுணர்க:

"சித்தமாம் அவ்வியத்தம் சிந்தனை யதுவும் செய்யும்
புத்தியவ் வியத்தில் தோன்றிப் புண்ணிய பாவம் சார்ந்து
வத்துநிச் சயமும் பண்ணி வருஞ்சுக துக்க மோகப்
பித்தினின் மயங்கி ஞானக் கிரியையும் பேணி நிற்கும்."
(சிவஞானசித்தியார், 2. 3 - 8.)

சிந்தனை - ஈண்டு ஏற்புழிக் கோடலால் திரிபுணர்வின் மேற்று. விழுமப்பொருள்: மூலப்பகுதியாகிய பெருமைப் பொருள்.

காட்சி - வியாபாரம். கமலம் - நாபிக்கமலம். விழுமம் மேன்மையான.

## 2118. தானத் தெழுந்து தருக்குந் துரியத்தின்

2118. தானத் தெழுந்து தருக்குந் துரியத்தின்
வானத் தெழுந்துபோய் வையம் பிறகிட்டுக்
கானத் தெழுந்த கருத்தின் தலையிலே
ஊனத் தவித்தைவிட் டூமனின் றானே.

பேருறக்கமாகிய துரியத்தின்கண் ஆருயிர் எழுந்து தருக்குறும். உள்ளமானது எழுந்து உலகம் பின்னிடும்படியாக வேகமாகச் செல்லும்.
சென்று ஓசையுடன் மூலத்திடத்து ஊமனாகிய ஆருயிர் குறைவுடைத்தாகிய அறியாமைப் பண்பைச் செய்யும் மூலப் பகுதியின் செயலையும் விட்டு அம் மூலப்பகுதியுடன் மட்டும் தனித்து நிற்கும். ஆருயிர்: உயிர்ப்பு; பிராணவாயு.

வானத்து - உள்ளத்தினால். கருத்தின் தலை - மூலாதாரம். ஊமன் - ஆன்மா.

## 2119. ஊமை யெழுத்தொடு பேசும் எழுத்துறில்

2119. ஊமை யெழுத்தொடு பேசும் எழுத்துறில்
ஆமை யகத்தினில் அஞ்சும் அடங்கிடும்
ஓமய முற்றது வுள்ளொளி பெற்றது
நாமய மற்றது நாமறி யோமே.

ஊமை எழுத்தென்பது பேசா எழுத்து. அஃதாவது 'ம்'. மெய்யெழுத்துக்கள் உயிரைச் சார்ந்தன்றி ஒலியா. அதனால் அவை ஊமை எழுத்தெனப்படும். இம் மகாரம் ஓமொழியின்கண்ணுள்ளது. பேசும் எழுத்து அகர உகரங்கள். இந்த அகர உகரங்கள் மகரத்தொடு பொருந்தில் 'ஓம்' என்று ஆகும். இவற்றுள் அ ஆற்றலையும் உ அறிவையும் குறிக்கும். ஆற்றல் - சத்தி. அறிவு - சிவம். ஆமையானது தனக்கு இடர் நேருங்கால் காலிரண்டு கையிரண்டு முகமொன்று ஆகிய ஐந்துறுப்புக்களையும் உள்ளடக்கிக் கொள்ளும். ஏனைய நேரத்து வெளிப்படுத்தி நல்லனபுரியும். அதுபோல் ஆருயிரும், இவ் ஓமொழிச் சிறப்பால் ஐந்துறுப்பையும் தீமைக்கண் அடக்கி நன்றின்பால் உய்த்து நலம்புரியும். அக் காலத்து அவ் வுயிர் ஓமொழி வயமாக நிற்பதால் தன்னறிவாகிய சிற்றறிவு அகன்று நிற்கும். இதுவே நாமயமற்ற நன்னிலையாகும். நாம் மயம்: நாம் என்னும் தன்மை. இப் பொருளே பயக்கும் குறிப்புத் 'தன்நாமங் கெட்டாள்' என்னும் திருமறைத் திருப்பாட்டின் கண்ணும் காணலாம். 'ஊமை எழுத்தென்பதை ஓங்கார வடிவமாகிய பஞ்சமை வாக்கெனவும், பேசுமெழுத்து வைகரிவாக்கு

எனவும்' கொண்டு அதற்கியையப்பொருள் கூறுவாரும் உளர்.

ஊமை எழுத்து - ம் (மலம்). பேசும் எழுத்து - அ, உ (சத்தி சிவம்). ஆமை - ஆமையின் ஐந்து உறுப்புகள் அடங்குதல்போல. ஓமயம் - ஓம் மயம். நாமயம் - தற்போதம்.

## 2120. துரிய மிருப்பதுஞ் சாக்கிரத் துள்ளே

2120. துரிய மிருப்பதுஞ் சாக்கிரத் துள்ளே
நரிகள் பதினாலு நஞ்சுண்டு செத்தன
பரிய புரவியும் பாறிப் பறந்தது
துரிய மிறந்திடஞ் சொல்லவொண் ணாதே.

பேருறக்கமாகிய துரியமிருப்பது நனவாகிய சாக்கிரத் துள்ளேயாம். நரிகள் என்று சொல்லப்படும் அறிதற்கருவி ஐந்தும், செய்தற்கருவி ஐந்தும், அகக்கலன்கள் நான்கும் கூடிப் பதினான்கென்ப. இக் கருவிகள் பதினான்கும் ஆருயிர் புறத்துப் பரவாமையான் நுகர்ச்சியின்றி நஞ்சுண்டது ஒத்து அடங்கின. அப் பொறிகள் புலன்கொள்ளும் புலன்கள் பத்தும் குதிரையை ஒத்துத் தொடர்வின்றிப் பறந்தது.
உயிர்ப்படங்கலாகிய துரியாதீதத்து நிகழும் நிலையில் இன்ப நிலையினை இன்னதன்மைத்தென்று சொல்ல ஒண்ணாதென்க. துரியாதீத நிலை - அப்பால்நிலை.

நரிகள் பதினாலு - கன்மேந்திரியம் ஐந்து, ஞானேந்திரியம் ஐந்து, அந்தக் கரணம் நான்கு பரிய புரவி - வேகமாய்ச் செல்லும் ஓசை முதலிய ஐந்து. துரியம் இறந்த இடம் - துரியாதீதம்.

## 2121. மாறா மலமைந்தான் மன்னு மவத்தையின்

2121. மாறா மலமைந்தான் மன்னு மவத்தையின்
வேறாய மாயா தநுகர ணாதிக்கிங்கு
ஈறாக தேஎவ் வுயிரும் பிறந்திறந்து
ஆறாத வல்வினை யாலடி யுண்ணுமே.

ஆருயிர்கள் திருவடிப்பேறு எய்துங்காறும் விட்டு நீங்காது ஒட்டிநிற்கும் மலம் ஐந்தும் மாறாமலம் எனப்பட்டன. இவை ஆருயிர்களின் ஐம்பாட்டினும் உடன்நிற்கும். இவை நீங்காமையால் மாயாகாரியமாகிய உடல் கலன் முதலியவற்றை இன்னும் வேறாகப் பெறுதல் வேண்டும். ஆகையால் உடம்பின் ஈறு எய்துவதற்கில்லை. அதனால் எத்தகைய வுயிரும் பிறந்து இறந்து ஆறாத வல்வினையால் அடியுண்டு துன்புறும். ஆறாத - துய்த்துக் கழியாத அடியுண்ணும் - துன்புறும். ஆராத என்பது ஆறாத என எதுகை நோக்கித் திரிந்தது.

மாறாமலமைந்தான் - ஐந்து மலங்களும் நீங்காதவன்.

## 2122. உண்ணுந்தன் னூடாடா தூட்டிடு மாயையும்

2122. உண்ணுந்தன் னூடாடா தூட்டிடு மாயையும்
அண்ணல் அருள்பெற்ற முத்திய தாவது
நண்ண லிலாவுயிர் ஞானத்தி னாற்பிறந்
தெண்ணுறு ஞானத்தின் நேர்முத்தி எய்துமே.

நுகர்விக்கப்படவேண்டிய மாயாகாரியங்கள் திருவருள் எய்துங்காறும் ஊட்டாது கழியா. சிவபெருமான் திருவருள் பெறுவது வீடுபேறாகும். மாயையை நண்ணுதலில்லாத உயிர்கள் பிறப்பு எய்தினும் அப் பிறப்பு திருவடியுணர்வாகிய சிவஞானப் பிறப்பாகும். அப் பிறப்பின்கண் எண்ணத்தக்க திருவடியுணர்வால் நேர்முத்தியாகிய மீளாஆளாம் திருவடிப்பேறு எய்தும்.

உண்ணுந் தன்னூடு - இருவினைகளால் எற்றுண்ணும் உயிர்.

## 2123. அதிமூட நித்திரை யாணவ நந்த

2123. அதிமூட நித்திரை யாணவ நந்த
அதனா லுணர்வோ னருங்கன்ம முன்னித்
திதமான கேவல மித்திறஞ் சென்று
பரமாகா வையவத் தைப்படு வானே.

ஆருயிர்க்கு - ஆணவமிகுதலால் அதிமூடமாகிய உறக்க முண்டாகும். அதனால் அவ் வுயிர் இருவினைக்கு ஈடான கன்மங்களையே
நினைக்கும். நினைத்து நிலையான கீழைம்பாடு என்று சொல்லக் கீழாலவத்தையை எய்தும். இம் முறையாகச் சென்று சிறப்புநிலை யில்லாத ஐம்பாட்டினையும் எய்தும்.

நந்த - மிக. திதமான - நிலையான. கேவலம் - கீழாலவத்தை. பரமாகா - சிறப்பற்ற.

## 2124. ஆசான்முன் னேதுயில் மாண வகர்தமைத்

2124. ஆசான்முன் னேதுயில் மாண வகர்தமைத்
தேசாய தண்டால் எழுப்புஞ் செயல்போன்று
நேசாய வீசனு நீடாண வத்தரை
ஏசாத மாயாடன் னாலே எழுப்புமே.

உலகியலில் கலைக்கோயிலின்கண் கற்பிக்கும் பொற்புடை நல்லாசான் முன் கற்றற்பொருட்டுச் சென்று உற்றுறையும் நன்மாணவர் பயிற்சிவயத்தால் உறங்குவதும் செய்வர். பேரருள் வாய்ந்த ஆசான் அன்புடைய அம் மாணவரை இன்மொழி புகன்று எழுப்புவன். எழுப்புதற்பொருட்டுப் 'புடைப்பிற் சுற்றும் பூந்தலைச் சிறுகோல்' ஒன்று கையிற்கொண்டருள்வன். அது முறைசெய்யும் செங்கோல் போன்று நிறைநலம் பயக்கும் உரைசேர் புகழ்க்கோலாகும். அதனையே தேசாய தண்டென ஓதினர். அத் தண்டினால் எழுப்புவர். அதுபோன்று சிவபெருமானும் பெருகிய ஆணவப்பிணிப்பினை மருவிச் செய்வதின்ன தென்றறியாது உய்வகை நாடாது மையலுற்றுக் கிடக்கும் ஆருயிர்களைக் குற்றமற்ற தூமாயை என்று சொல்லப்படும் கைக்கருவியால் எழுப்பியருள் செய்வன். அவ்வாறு செய்வது அவ் வுயிர்கள்மாட்டு வைத்தருளிய பேரருளேயாகும். அக் குறிப்பு நேசாய ஈசன் என்பதனால் பெறப்படும். ஆணவப்பிணிப்பினரை நீடாணவத்தர் என்றருளினர். இதன்கண் 'மாணவக' என்னும் அருஞ்சொல்வழக்கு வந்துள்ளமை காண்க.

தேசாய - புகழ்பெற்ற. தண்டு - பிரம்பு. நேசாய - கருணை நிறைந்த நீடு - அநாதியே உள்ள. மாயாள் - மாயை.

## 2125. மஞ்சொடு மந்தா கினிகுட மாமென

2125. மஞ்சொடு மந்தா கினிகுட மாமென
விஞ்சறி வில்லோன் விளம்பு மிகுமதி
எஞ்சலி லொன்றெனு மாறென இவ்வுடல்
அஞ்சுணு மன்னவனன் றேபோ மளவே.

நீரும் நீர்க்குடமும் போலும் எனச் சிறந்த அறிவில்லாதவன் இறப்பு மெய்யாகிய புத்தியையும் அதனை இயைந்தியைக்கும் ஆருயிரையும் கூறுவன். அங்ஙனம் கூறுமவன் இரண்டனையும் ஒன்றெனுமாறு கூறிவிடுகின்றனன். அது பொருந்தாது. இவ் வுடலானது ஐம்புலனையும் நுகரும் ஆருயிர் நீங்கினால் தனித்துக்கிடக்கும். அவ் வுயிர் நீங்கும் அளவுமே சேர்ந்திருக்கும் தண்ணீரும் தண்ணீர்க்குடமும் நீங்கினாலும் மீண்டும் இணைந்துகொள்ளும். உயிர்நீங்கின வுடல் அவ்வாறன்று. மஞ்சு - நீர். மந்தாகினி - நீர்க்குடம்.

மஞ்சு - மேகம். மந்தாகினி - நீர். மதி - புத்தி. அஞ்சுணு மன்னன் - ஆன்மா.

## 2126. படியுடை மன்னவன் பாய்பரி ஏறி

2126. படியுடை மன்னவன் பாய்பரி ஏறி
வடிவுடை மாநகர் தான்வரும் போது
அடியுடை ஐவரும் அங்குறை வோருந்
துடியில்லம் பற்றித் துயின்றனர் தாமே.

உடம்பைத் தனதாகக்கொண்டு ஆளும் ஆருயிர் இடையறாது ஒடிக்கொண்டே இருக்கும் இயல்புவாய்ந்த மனமாகிய குதிரை மீது ஏறி அழகுமிக்கதாகிய அகநகரின்கண் வலம் வருகின்றது. அப்பொழுது அறிதற்கருவியாகிய செவி முதலிய ஐந்தும் செய்தற் கருவி முதலிய பிற கருவிகளும் புடைபெயராது உறங்கிக்கிடக்கும். அவைகளின் பற்றுக் கோட்டுக்கு இடனாகத் துடித்துக்கொண்டிருக்கும் இயல்புவாய்ந்த நெஞ்சம் துடியில்லம். அந் நெஞ்சத்தைப்பற்றி உறங்குகின்றனர்.

படியுடை மன்னவன் - ஆன்மா. பாய்பரி - சலிக்கும் மனம். ஐவர் - ஞானேந்திரியங்கள் உறைவோர் - கன்மேந்திரியங்கள். துடியில்லம் - இதயத்தானம்.

## 2127. நேரா மலத்தை நீடைந் தவத்தையின்

2127. நேரா மலத்தை நீடைந் தவத்தையின்
நேரான வாறுன்னி நீடு நனவினில்
நேரா மலமைந்து நேரே தரிசித்து
நேராம் பரத்துடன் நிற்பது நித்தமே.

ஐம்மலச் சூழலில் பிணிப்புண்டு செம்பொருளையறியாது துன்புறும் ஆருயிர்க்கிழவர் தமக்கு நேராகாத மாறாப் பிறவியில் தள்ளும் அம் மலங்களைத் திருவருளால் ஐம்பாட்டில் காண்குவர். காண்பரென்பது நோயால் ஆற்றல் குறைந்தவர் அவ் வாற்றலின் குறைபாட்டைப் புடைபெயர இயலாமையாகிய தம் குறைபாட்டில் வைத்து உணர்வதுபோன்ற தென்பதாம். அதுபோல் ஆருயிர்களும் ஐம்பாடாகிய ஐந்தவத்தையில் தம்மையும் செம்பொருளாம் சிவனையும் உணர்வதாகிய இன்பம் இழந்து உணராததாகிய துன்பம் உழந்து வருந்தும் என்பதாம். அம் மலங்கள் நேரானவாறு நினைப்பதற்கு இடம் பெருகிய நனவினில் ஆகும். நேராவது விட்டு நீங்குவது. நனவினில் அவ் வுண்மையை அருளால் கண்டவர் செம்மையாகவே நிற்கும் செம்பொருளாம் சிவத்துடன் உணர்வு நீங்காது ஒட்டி என்றும் இன்புறுவர். இதுவே நிலைபெற்ற உலைவில்லாத நித்தவாழ்க்கை என்பர். நித்தம்: எந்நாளும்; நில் என்னும் அடியாகத் தோன்றிய நிலை என்னும் பொருளில் நிற்றம் என்றாகிப் பின் நித்தம் என்றாயிற்று.

மத்திய சாக்கிராவத்தை

## 2128. சாக்கிர சாக்கிரந் தன்னில் திரோதாயி

2128. சாக்கிர சாக்கிரந் தன்னில் திரோதாயி
சாக்கிர சொப்பனந் தன்னிடை மாமாயை
சாக்கிரந் தன்னிற் சுழுத்திதற் காமியஞ்
சாக்கிரந் தன்னில் துரியத்து மாயையே.

நனவின் நனவு என்று சொல்லப்படும் நிலையில் திரோதாயி தொழிற்படுத்தும். திரோதாயி நடப்பாற்றல். இதுவே மறைப்பாற்றல். நனவினிடத்து நிகழும் கனவில் தூமாயைத் தொடர்பினராவர். நனவின் உறக்கத்துக் கன்மத் தொடர்பினராவர். நனவின் பேருறக்கத்துத் தூவாமாயைத் தொழிலினராவர்.

சகலம் - கருவி. கரணங்களுடன் கூடி இருக்கும் அவசரம்.

## 2129. மாயை எழுப்பும் கலாதியை மற்றதின்

2129. மாயை எழுப்பும் கலாதியை மற்றதின்
நேய விராகாதி ஏய்ந்த துரியத்துத்
தோயுஞ் சுழுனை கனாநனா வுந்துன்னி
ஆயின னந்தச் சகலத்து ளானே.

தூவாமாயையானது உயிர்ப்படங்கலாகிய துரியாதீத நிலையில் உழைப்புக் கருவியாகிய கலாதியுடன் அடங்கிநிற்கும். பேருறக்கத்தின்கண் விழைவுக் கருவியாகிய அராகம் முனைக்கும் உறக்கமாகிய சுழுனையின்கண் உணர்வுக்கருவியாகிய வித்தை முனைத்துக் கூடும். கனவுநிலையில் உழைப்பு முனைத்துக்கூடி உடல் மெய்யாகிய மூலப் பகுதிக் கருவிகள் இருபத்தைந்துடன் தொழிற்படும். நனவுநிலையுடன் எல்லாக் கருவிகளுமாகிய முப்பத்தைந்து கருவிகளுடன் தொழிற்படும்.

## 2130. மேவிய அந்தகன் விழிகட் குருடனா

2130. மேவிய அந்தகன் விழிகட் குருடனா
மாவயின் முன்னடி காணு மதுகண்டு
மேவுந் தடிகொண்டு சொல்லும் விழிபெற
மூவயி னான்மா முயலுங் கருமமே.

ஆணவமலத்தைப் பொருந்தி அறியாமை வயப்பட்டு அறிவுக்கண் ணிழந்திருந்த அகக்கண் குருடன் பார்க்கும் முகக்கண் ணில்லாத குருடனோடு ஒப்பன். அவ்விடத்து அருளுடையான் ஒருவனால் ஒருகோல் கொடுக்கப்படும். அதுவே அவ்விடத்துச் செய்யத் தக்கதாம். அதுவே அக் குருடனது விழைவாகிய பற்றுக்கோடுமாம். குருடனுக்குக் கோல் வேண்டுமென்னும் எண்ணம் கோலைப் பெறுவதன் முன் உறுவதற்கில்லை. ஆனால் நடக்கவேண்டுமென்னும் அடக்கமுடியாத ஆசையுறுவது இயல்பு. அதற்கு வேண்டும் துணைப்பொருள்களைக் கூட்டி நல்குவது அவனுடைய விளக்கமில்லாத தெளிவில் வேட்கையினை நிரப்புவதேயாகும். விழியோடு ஒத்துச் சொல்லப்படும் தடியினைக் கொண்டு பொருந்தும். அதுபோல் ஒருமலமுடையார், இருமலமுடையார், மும்மலமுடையார் ஆகிய முத்திறத்தார்மாட்டும் பண்டே ஒட்டியுள்ள ஆணவக்குருடு நீங்குதற்குத் துணையாக மாயாகாரிய உடம்பாகிய கோலினைச் சிவபெருமான் படைத்துக் கொடுத்து அருளுகின்றனன். இவ் வுடம்பு பெற்றதும் முத்திறத்துயிர்களும் நத்தும் கருமங்களிலும் முயலும். கண்ணிழந்து கண்ணையே வேண்டிய நம்பியாரூரர்க்குச் சிவபெருமான் குருடர்க்கு வேண்டியது கோலே எனத்

திருவெண்பாக்கத்து ஊன்றுகோலருளிய உண்மையான் ஈதுணரலாகும்.

விழிகண் - பார்க்கும் கண். மூவயின் - மூவகைப்பட்ட (சகலர், பிரளயாகலர், விஞ்ஞகர்).

## 2131. மத்திம மொத்த சிலந்தி வலயத்துள்

2131. மத்திம மொத்த சிலந்தி வலயத்துள்
ஒத்தங் கிருந்து உயிருண்ணு மாறுபோல்
அத்தனும் ஐம்பொறி யாடகத் துள்நின்று
சத்த முதல்ஐந்துந் தானுண்ணு மாறே.

சிலந்தியானது தன் வாயினால் தன்னுடம்பினின்றும் நூல் இழைக்கின்றது. அந் நூலால் தனக்குவேண்டிய உணவுகளை அகப்படுத்தும் வலைகளை அமைத்துக்கொள்ளும். மேலும் தான் தங்குவதற்குரிய கூடும் அமைத்துக்கொள்ளும். அக் கூட்டின் மத்தியில் தான் தங்குவதற்குரிய வாய்ப்பான இடமும் அமைத்துக்கொள்ளும். அவ் விடத்தையே மத்திமம் என்றருளினர். அதுபோல் சிவபெருமானும் ஆருயிர்கள் இருவினைக்கு ஈடாக ஆடுதல்புரியும் இடமாம் உடம்பினை அமைத்தருளினன். அவ் வுடலினின்று உயிர் ஆட்டம்புரியும். அத்தனாகிய சிவபெருமானும் ஐம்பொறிசேர் உடம்பகத்து அவ் வுயிர் ஐம்புலன்களையும் நுகர்தற்பொருட்டுத் தானும் உடங்கியைந்து காட்டிக் காண்பன். காட்டுதல் - உண்பித்தல். காணுதல் - உண்பிக்கத் துணை செய்தல். ஆகவே சிவபெருமான் அவ் வுடம்பகத்து உயிர்க்குயிராகத் தங்கி அருளுகின்றனன். தன்னைத் தாங்கும் தகுதியும் அதற்கு அவனே அளித்தருளினன். அவன் 'எம்மான் இருப்பும் இருப்பதுவுமாயிருப்பன், செம்மான் பிறை ஏறு சேர்ந்து' என்பதனால் இவ் வுண்மை புலனாகும்.

மத்திமம் ஒத்த சிலந்தி வலயத்துள் - சிலந்திக்கூட்டில் சிலந்தி தான் தாங்கக் கட்டும் மத்தியிலுள்ள வலுத்த இடத்தில் இருப்பதை அத்தன் - ஆன்மா. ஆடகம் - சரீரம்.

# 2132. வைச்சன வச்சு வகையிரு பத்தஞ்சு

2132. வைச்சன வச்சு வகையிரு பத்தஞ்சு
முச்சு முடனணை வானொரு வன்னுளன்
பிச்சன் பெரியன் பிறப்பிலி என்றென்று
நச்சி யவனருள் நானுய்ந்த வாறன்றே.

சிவபெருமான் ஆருயிர்கள் உய்தற்பொருட்டு வேண்டுவார்க்கு வேண்டும் திருக்கோலம்கொண்ட திருவுருவங்கள் இருபத்தைந்தாகும். அவற்றையே 'வைச்சனவாகிய அச்சுவகை இருபத்தஞ்சு' என்று ஓதினர். அவற்றின்கண் சிறப்பாக அணைந்து அருளிச்செய்யும் ஒப்பில் திருவுருவுடையவன் ஒருவனுளன். அவனே சிவபெருமான். அவன் அனைத்துயிர்களினிடத்தும் அனைத்துப் பொருள்களினிடத்தும் பேரன்பு பூண்ட பித்தன். மண்ணவர் விண்ணவர் அனைவர்கட்கும் அவரவர் தகுதிக்கேற்றவாறு பெருமையளிக்கும் பெரியன். என்றும் பிறப்பில்லாதவன். இவ் வகையாக நாளும் அகம் குழைந்து பாடிப் பரவிப் பணிகின்றவர்கள் நச்சுவாராவர். சிவபெருமான் நச்சுவார்க்கு இனியனாவன். அம் முறையான் அடியேனும் நச்சி உய்ந்தவனாகும். வைத்தன என்பது வைச்சன எனச் செய்யுட் டிரிபெய்திற்று. உச்சம் - சிறப்பு. பிச்சன் - பெருங்காதலன்.

அச்சு வகை - மூர்த்தி பேதம், முச்சுமுடன் - அம் மூர்த்தங்களுடன்.

## 2133. நாலா றுடன்புருட னற்றத் துவமுடன்

2133. நாலா றுடன்புருட னற்றத் துவமுடன்
வேறான ஐயைந்து மெய்ப்புரு டன்பரங்
கூறா வியோமம் பரமெனக் கொண்டனன்
வேறான நாலேழு வேதாந்த தத்வமே.

உடன்மெய் இருபத்துநான்கும் ஆன்ம தத்துவமெனப்படும். இவற்றுடன் ஆளின் சிறப்புநிலையும் கூட்டினால் இருபத்தைந்தாகும். சிறப்புநிலை குறிப்பதே 'புருடன் நற்றத்துவம்' என்பதாகும். ஆளின் பொதுத்தன்மையாம் உண்மையை மெய்ப்புருடன் என ஓதினர். அஃது உணர்வுமெய் ஏழாகும். உணர்த்து மெய்யினை 'வியோமம்பரம்' என்றருளினர். அஃது ஐந்து மெய்யாகும். இம் மூன்றுங் கூடிய மெய் முப்பத்தாறாகும். அதுவே அருஞ்சைவர் தத்துவம். வேதாந்திகள் கொள்ளும் மெய் (2136) இருபத்தெட்டென்ப. மெய் - தத்துவம்.

புருடன் பரம் - வித்தியா தத்துவம் ஏழு. வியோமம்பரம் - சிவ தத்துவம் ஐந்து.

## 2134. ஏலங்கொண் டாங்கே இடையொடு பிங்கலை

2134. ஏலங்கொண் டாங்கே இடையொடு பிங்கலை
கோலங்கொண் டாங்கே குணத்தி னுடன்புக்கு
மூலங்கொண் டாங்கே முறுக்கிமுக் கோணிலுங்
காலங்கொண் டானடி காணலு மாகுமே.

நாடிகள் பத்தினுள்ளும் சிறப்புடையன இடப்பால் நாடியும், வலப்பால் நாடியாகிய பிங்கலையுமாம். அவ் வுயிர்ப்புக் கோலத்துடன், அதனால் ஏற்படும் குணத்தினுடன் ஆருயிர் உலவும். மூலத்திடத்தும் புகும். அங்கிருந்து ஏனைய நாடிகளுக்குக் கிளர்ச்சியை ஊட்டி எல்லாவற்றையும் எழுச்சிபெறச் செய்யும். இதுவே முறுக்குதலென்பதாகும். அகத்தே காணப்படும் மூன்று மண்டலங்களிலும் விரவித் தன் உண்மை காணப்படும். அங்ஙனம் காணப்பெறும் ஆருயிர் காலகாலனாகிய சிவபெருமான் திருவடியிணையினைச் சாரும். சிவபெருமான்: காலங்கொண்டான். அஃதாவது மாயாகாரியங்களை ஆக்குவதற்குத் தானே தன் திருவருளினைக் கொண்டு காலமெய்யாகத் திகழ்ந்தனன்; அதனால் காலங்கொண்டான் என வழங்கப்பட்டனன். அடியிணையைச் சார்வதே காண்பதாகும்.

ஏலங்கொண்டு - பயிற்சி செய்து. குணம் - அநுபவம். மூலம் - மூலாதாரம். முறுக்கி - நாடிகளை நிமிர்த்தி. முக்கோணி - மூன்று மண்டலம். காலங்கொண்டான் - சிவன்.

## 2135. நாடிகள் பத்தும் நலந்திகழ் வாயுவும்

2135. நாடிகள் பத்தும் நலந்திகழ் வாயுவும்
ஓடிய காலில் ஒடுங்கி யிருந்திடுங்
கூடிய காமங் குளிக்கும் இரதமும்
நாடிய நல்ல மனமும் உடலிலே.

நாடிகள் பத்தும், வளிகள் பத்தும் உயிர்ப்புப் பயிற்சி முறையான் நடுநாடிவழியாகச் சென்று ஒடுங்குதலைப் பெறும். அக் காலத்து மிகுந்த இன்பமும், நுகரும் சுவையும், சிவபெருமானையே நல்ல மனதுடன் நாளும் நினைக்கும் நற்புண்ணியமும் எய்தும். இந் நன்மைகளே அந் நல்லுடலில் திகழும். நாடி பத்தாவன: இடப்பால் நரம்பு, வலப்பால் நரம்பு, நடு நரம்பு, உள்நாக்கு நரம்பு, வலக்கண் நரம்பு, இடக்கண் நரம்பு, வலச்செவி நரம்பு, இடச்செவி நரம்பு, கருவாய் நரம்பு, எருவாய் நரம்பு என்பன. இவற்றை முறையே இடைகலை, பிங்கலை, சுழுமுனை, சிகுவை, புருடன், காந்தாரி, அத்தி, அலம்புடை, சங்கினி, குரு எனவும் கூறுப. வளி பத்தாவன: உயிர்வளி, மலக்காற்று, தொழிற் காற்று, ஒலிக் காற்று, நிரவு காற்று, தும்மற் காற்று, விழிக் காற்று, கொட்டாவிக் காற்று, இமைக் காற்று, வீங்கற் காற்று என்பன. வளி என்றாலும் காற்று என்றாலும் ஒன்றே. இவற்றை முறையே பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயன் எனவும் கூறுப.

## 2136. பத்தொடு பத்துமோர் மூன்றும் பகுதியும்

2136. பத்தொடு பத்துமோர் மூன்றும் பகுதியும்
உய்த்த துரியமும் உள்ளுணர் காலமும்
மெய்த்த வியோமமு மேலைத் துரியமுந்
தத்துவ நாலே ழெனவுன்னத் தக்கதே.

அறிதற்கருவியாகிய செவி, மெய், கண், வாய், மூக்கு ஆகிய ஐந்தும்; செய்தற்கருவியாகிய வாய், கால், கை, எருவாய், கருவாய் ஆகிய ஐந்தும் இவற்றிற்குரிய புலன் பத்தும். அவை வருமாறு: ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் ஆகிய ஐந்தும்; நவிலுதல், நடத்தல், நலமுறக் கொடுத்தல், கழித்தல், களித்தல் ஆகிய ஐந்தும் சேர்ந்து பத்து என்ப. எண்ணம், மனம், எழுச்சி, இறுப்பு ஆகிய அகப்புறக் கலன் நான்கும், துரியமாகிய ஆள் ஒன்றும் காலம் ஒன்றும், வியோமம் என்று சொல்லப்படும் ஆண்டான் ஒன்றும், மேலைத்துரியம் அல்லது திருவருட் பேருறைவு என்று சொல்லப்படும் அத்தன் அல்லது சிவன் ஒன்றும் ஆகிய இருபத்தெட்டு மெய்களும் முன் (2133) ஓதப்பெற்ற வேதாந்த மெய்ந்நெறித் தத்துவங்களாகும். காலம் என்பதற்கு ஆருயிர் என்றலும் ஒன்று. ஆருயிர் - ஆன்மா.

பத்தொரு பத்து - மண் முதல் தத்துவம் இருபது. ஓர் மூன்றும் - ஒன்றும் + மூன்றும் - நான்கு; அந்தக்கரணங்கள் 4. துரியம் - புருடன். காலம் - ஆன்மா. வியோமம் - ஈசன். மேலைத்துரியம் சிவம்.

## 2137. விளங்கிடு முந்நூற்று முப்பதோ டொருபான்

2137. விளங்கிடு முந்நூற்று முப்பதோ டொருபான்
தளங்கொ ளிரட்டிய தாறு நடந்தால்
வணங்கிடு மைம்மலம் வாயு வெழுந்து
விளங்கிடு மவ்வழி தத்துவ நின்றே.

விளக்கமிக்க முந்நூறும், முப்பதைப் பத்தினால் பெருக்கிக் கிடைத்த முந்நூறும் சேர்ந்த அறுநூறு ஆகும். இரட்டியதாறு என்பது ஆறும் ஆறும் பெருக்க முப்பத்தாறு ஆகும். இம் முப்பத்தாறையும் அறுநூறுடன் பெருக்க இருபத்தோராயிரத்து அறுநூறு ஆகும். இவையே ஒருநாளைக்கு நாம் விடும் உயிர்ப்பாகும். உயிர்ப்பு - சுவாசம். இவற்றுள் நம்மகத்துத் தங்குவது ஏழாயிரத்து இருநூறு ஆகும். இக் கணக்கின்படி ஒருநாளைக்குச் செலவாகு முயிர்ப்பு 21600. அதற்கு வரவாகும் உயிர்ப்பு 7200. ஆயின் பாக்கி 14400. நம்முடைய வாழ்நாளாகிய இருப்பு உயிர்ப்பிலிருந்து நாள்தோறும் செலவாகின்றது. அதனால் வாழ்நாள் மிகவிரைவில் முடிவெய்துகின்றது. அங்ஙனம் நேராதிருக்கும்படி உயிர்ப்புப்பயிற்சி நாடொறும் செய்தல்வேண்டும். உயிர்ப்புப்பயிற்சி - யோகாப்பியாசம். பொன்னைப் பொருளைத் தேடுவது போல் உயிர்ப்பையும் - மூச்சையும் திறந்தவெளியில் நன்றாக நிமிர்ந்திருந்து சிவனினைவுடன் உள்ளிழுத்துத் தொகுத்து வைத்துக்கொள்ளுதல் வேண்டும். இதன் விரிவை இந் நூல் பிராணாயாமம் என்னும் தலைப்பின் கீழ்க் காண்க. அத்தகைய பயிற்சியினர்க்கு ஐவகைப் பாசங்களும்

விலகும். அப்பொழுது ஒப்பரிய மெய்ப்பொருளாம் சிவபெருமான் விளங்கித் தோன்றுவன்.

முந்நூறு - 300. முப்பதோடு ஒரு பான் - 30 X 10 = 300 ஆக மொத்தம் = 600. இரட்டியதாறு - 36. 600 X 36 = 21600. நடந்தால் - 21600 சுவாசம் நடந்தால்.

## 2138. நாலொரு கோடியே நாற்பத்தெண் ணாயிர

2138. நாலொரு கோடியே நாற்பத்தெண் ணாயிர
மேலுமோ ரைந்நூறு வேறா யடங்கிடும்
பாலவை தொண்ணூறோ டாறுட் படுமவை
கோலிய ஐயைந்து ளாகுங் குறிக்கிலே.

நான்கு கோடியே நாற்பத்தெண்ணாயிரத்து ஐஞ்ஞூறு மெய்கள் சிறப்பாகக் காணப்படும். அவை அனைத்தும் தொண்ணூற்றாறென்று கூறப்படும் மெய்களினுள் அடங்கும். அவற்றையும் அடக்கிக் கூறினால் இருபத்தைந்து மெய்களுள் அடங்கும். மெய்கள் - தத்துவங்கள்.

தத்துவங்கள் 40048500-ம் 96 தத்துவங்களிலும், அவை 25 தத்துவங்களிலும் அடங்கும்.

## 2139. ஆகின்ற தொண்ணூறோ டாறும் பொதுஎன்பர்

2139. ஆகின்ற தொண்ணூறோ டாறும் பொதுஎன்பர்
ஆகின்ற வாறா றருஞ்சைவர் தத்துவம்
ஆகின்ற நாலேழ்வே தாந்தி வயிணவர்க்கு
ஆகின்ற நாலாறை யைந்துமாயா வாதிக்கே.

சிவபெருமானின் திருவுள்ளக் குறிப்பினால் முதற்காரணமாகிய மாயையினின்று காரியமாகத் தோன்றும் மெய்கள் தொண்ணூற்றாறு. ஆகின்ற என்பதற்குக் காரியமாக ஆகின்ற என்றும், ஆருயிர்கட்கு நன்மைக்குத் துணைநிற்பதாகின்ற என்றும் இருபொருளும் பொருந்தும். அது, 'மாயா தனுவிளக்காம்' என்னும் மெய்கண்டார் அருள்மொழியால் விளங்கும். இத்தொண்ணூற்றாறினையும் பலவேறு கொள்கையினரும் பொதுவாக ஒப்புக் கொள்கின்றனர். சிறப்பாக ஒப்புக்கொள்ளும் மெய்ம்முறையில் வேறுபடுகின்றனர். அவருள் அருஞ்சைவராகிய செம்பொருட்டுணிவினர் முப்பத்தாறு மெய்கள் சிறப்பினை உடையவென அளவைமுறையான் அறுதியிட்டு உறுதி கூறுகின்றனர். செம்பொருட்டுணிவினர் - சித்தாந்தசைவர். வேதாந்தி என்று கூறப்படும் மறைமுடிவினர் - சித்தாந்தசைவர். வேதாந்தி என்று கூறப்படும் மறைமுடிவினர் இருபத்தெட்டு (2136) மெய்கள் கூறுகின்றனர். வயிணவர் இருபத்துநான்கு மெய்கள் கூறுகின்றனர். மாயாவாதி என்னும் ஒரு பொருட் கொள்கையினர் இருபத்தைந்து மெய்கள் கூறுகின்றனர். ஒரு பொருட் கொள்கை - ஏகான்ம வாதம். வைப்புமுறையில் இருபத்துநான்கு மெய்களுக்குமுன்

இருபத்தைந்து மெய்கள் கூறப்பெறுதல்வேண்டும். அங்ஙனமிருப்பவும் ஈற்றில் ஓதப்பெற்றது தலை தடுமாற்றமாகும். 'தலைதடுமாற்றம் தந்து புணர்த்தல்' என்பதோர் உத்தி. அதனால் மாயாவாதிகளின் மாண்பின்மை புலனாம். என்னை, அவர்கள் உயிர்களே இல்லை என்று மயங்கிக்கூறும் எல்லையில் பாவத்தினர். என்னை, 'மிண்டிய மாயாவாதம் என்னும், சண்ட மாருதம் சுழித்தடித்தார்த்து' என (போற்றித் திருவகவல் - 55 - 1) ஆளுடைய அடிகளும், 'யாங்க ளே கடவு ளென்றிடும் பாதகத் தவரும்' (பன்முகச். சிற்சுகோதய விலாசம் 10) எனத் தாயுமானச் செல்வரும் அருளிய திருவருள் மொழிகளான் உணரலாம் என்க. மாயாவாதி மூலப்பகுதி மாயையே உலகிற்கு முதல் என்று கூறுபவன். இவனைச் சாங்கியன் எனவும் கூறுப. இவன் கடவுள் ஒருவன் உண்டெனக் கொள்ளாப் பாழ்ங்கோளன். இங்ஙனம் கூறலும் ஒன்று. அதனால் அம்மாயாவாதி ஈற்றில் வைக்கப்பட்டனன் என்க. வைணவர்க்கு உடன்மெய்யாகிய மூலப்பகுதியுடன் இருபத்துநான்கென்ப.

36 தத்துவங்கள் சைவர்களுக்கு28" வேதாந்திக்கு24" வைணவர்களுக்கு25" மாயாவாதிக்கு.

## 2140. தத்துவ மானது தன்வழி நின்றிடில்

2140. தத்துவ மானது தன்வழி நின்றிடில்
வித்தக னாகி விளங்கி யிருக்கலாம்
பொய்த்தவ மாமவை போயிடு மவ்வழி
தத்துவ மாவ தகரஎழுத் தாமே.

திருவருள் துணையால் முப்பத்தாறு மெய்களின் உண்மை யுணர்ந்து இவையனைத்தும் நாமல்லவென்றும், நம்மால் ஆக்கப்பட்டன வல்லவென்றும், சிவபெருமானால் ஆக்கி அளித்தருளப்பட்ட இரவற் பொருளென்றும், அவன் திருவுள்ளத்தின்படி அவற்றைப்பேணி அவன் திருத்தொண்டினுக்கே ஒப்புவிப்பது நம் கடமையென்றும் நாளும் கொண்டொழுகும் செம்பொருட்டுணிவினர்வழி அவைநின்று ஒளியாய்த் திகழும். அத்தகையோர் திருவடியுணர்வாகிய சிவஞானம் கைவரப் பெற்ற நல்லோராவர். வித்தகர் - செயற்கரும் செய்கை செய்யும் நல்லார். அவர் சிவமென விளங்கி வீற்றிருப்பர். நிலையிலாத பயனைத் தந்தழியும் தவம் பொய்த்தவம். அத் தவங்கள் போயகலும். அகன்றவிடத்து உண்மையாக நிலைபெற்றுநிற்கும் பெரும்பொருட் கிளவியான் சிவன். அவனே அகர எழுத்திற்கு உரிய முதல்வன்.

வித்தகன் - ஞானி. அகாரம் - சிவம்.

## 2141. அறிவொன் றிலாதன ஐயேழு மொன்றும்

2141. அறிவொன் றிலாதன ஐயேழு மொன்றும்
அறிகின்ற என்னை அறியா திருந்தேன்
அறிகின்றாய் நீயென் றருள்செய்தார் நந்தி
அறிகின்ற நானென் றறிந்துகொண் டேனே;

முப்பத்தாறு மெய்களும் அறிவில்லாத பொருள்கள். இவற்றொடு விரவிநின்ற ஆருயிர்கள் இவற்றின் உண்மையினை அறியாதிருந்தன. அதனால் அவைகள் தம்மைப் பற்றியும் அறிந்தில. சிவபெருமானாகிய நந்தி திருவருளால் இவ் வுண்மைகளை உணர்த்தியருளினன். அம்முறையான் அவை அறிந்தன. அதுபோல் யானும் அறிந்து கொண்டேன் என்க.

ஐ ஏழும் ஒன்றும் - 36.

## 2142. சாக்கிர சாக்கிர மாதி தனில்ஜந்தும்

2142. சாக்கிர சாக்கிர மாதி தனில்ஜந்தும்
ஆக்கு மலாவத்தை யைந்து நனவாதி
போக்கி யிவற்றொடும் பொய்யான வாறாறு
நீக்கி நெறிநின்றொன் றாகியே நிற்குமே.

நனவின் நனவு முதலாகச் சொல்லப்படும் ஐம்பாடுகளும், புலம்புடன்கூடி எய்தும் ஐம்பாடுகளும், நனவு முதலாகச் சொல்லப்படும் ஐந்தும் தனக்கு வேறானவை என்னும் உண்மை கண்டுணர்ந்துநீங்கி நிலைபேறில்லாத முப்பத்தாறு மெய்களும் அங்ஙனமே வேறெனக் கண்டு நீங்கினோன் செந்நெறியில் நிற்போனாவன். அவன் திருவருளால் சிவத்துடன் ஒன்றி ஒன்றாகியே நிற்பன்.

மலாவத்தை - கேவலாவத்தை.

## 2143. ஆணவ மாதி மலமைந் தலரோனுக்கு

2143. ஆணவ மாதி மலமைந் தலரோனுக்கு
ஆணவ மாதிநான் காமாற் கரனுக்கு
ஆணவ மாதிமூன் றீசர்க் கிரண்டென்ப
ஆணவ மொன்றே சதாசிவற் காவதே.

ஆணவம், கன்மம், மாயை, மாயை யாக்கம், நடப்பாற்றலாகிய திரோதாயி என்னும் ஐம்மலங்களும் நீங்கப்பெறாத நிலையிலுள்ளவன் அயன். மாயையாக்க மொழிந்த ஏனைநான்கு மலங்களும் நீங்கப்பெறாதவன் அரி. ஆணவம், கன்மம், திராதாயியாகிய மறைப்பாற்றல் ஆகிய மூன்றும் நீங்கப்பெறாதவன் அரன். ஆணவம் மறைப்பாற்றல் இரண்டும் நீங்கப்பெறாதவன் ஆண்டான். ஆணவம் மட்டும் நீங்கப்பெறாதவன் அருளோன் என்ப.

மலம் ஐந்து - ஆணவம், மாயை, கன்மம், மாயேயம், திரோதம்.
அத்துவாக்கள்(வழிகள்)

## 2144. தத்துவம் ஆறாறு தன்மனு வேழ்கோடி

2144. தத்துவம் ஆறாறு தன்மனு வேழ்கோடி
மெய்த்தகு வன்னம்ஐம் பானொன்று மேதினி
ஒத்திரு நூற்றிரு பான்நான்கெண் பானொன்று
வைத்த பதங்கலை யோரைந்தும் வந்தவே.

மெய்கள் மண்முதற்சிவம் ஈறாக முப்பத்தாறு. மந்திரங்களின் முடிவுகள் ஏழு. கோடி - முடிபுகள். அவை வருமாறு: நம, சுவாகா, சுவதா, படு, வவுசட், வசட் என்பன. வன்னம் என்று சொல்லப்படும் எழுத்துக்கள் ஐம்பத்தொன்று. உலகங்கள் புவனம் இருநூற்று இருபான்நான்கு (224). சொற்கள் - பதங்கள் எண்பத்தொன்று. கலைகள் ஐந்து. முடிபு ஏழினையும் 'சொல்லார் நமசுவா காசுவதா தோற்றுபடு, வில்லார்வவு சட்வசட்டேழ் வேறு'. என்பதனால் நினைவுகூர்க.

மனு - மந்திரம். ஏழ்கோடி - ஏழுவகை முடிவைப்பெற்றது. அஃதாவது: நம, சுவாகா, சுவதா, படு வவுஷ, வஷட் முதலியன.

## 2145. நாடிய மண்டல மூன்று நலந்தெரிந்து

2145. நாடிய மண்டல மூன்று நலந்தெரிந்து
ஓடு மவரோ டுள்ளிரு பத்தைஞ்சுங்
கூடுவர் கூடிக் குறிவழி யேசென்று
தேடிய பின்னர்த் திகைத்திருந் தார்களே.

உடலகத்தே நாடப்படும் மண்டிலங்கள் மூன்று. சிவ குருவினருளால் அவற்றின் நன்மைகளை அறிந்துநிற்பாருடன் கலந்து நடப்பது இருபத்தைந்து மெய்களாகும். அவற்றுடனும் சிவகுருவின் அருமறையாம் உபதேச மொழியுடனும் சென்று காண்பார்க்குக் கருவிகள் ஒன்றும் தோன்றா. அதனால் திகைப்புற்றிருந்தாரை யொப்பர்.

நலம் தெரிந்து - நன்றாக ஆராய்ந்துகொண்டு. உள் இருபத்தைந்து - மண் முதல் தத்துவங்கள் 25. குறிவழி - குரு உபதேசம். திகைத்து - மயங்கி.

## 2146. சாக்கிர சாக்கிர மாதித் தலையாக்கி

2146. சாக்கிர சாக்கிர மாதித் தலையாக்கி
ஆக்கிய தூல மளவாக்கி அதீதத்துத்
தாக்கிய வன்பான தாண்டவஞ் சார்ந்தது
தேக்குஞ் சிவமாதல் ஐந்துஞ் சிவாயமே.

நனவின் நனவினை முதற்கொண்டு பருவுடற்கண் உள்ள உச்சித்தொளையாகிய வெளிவரைநின்று அப்பால் அருள்வெளியின்கண் அருளப்பெறும் திருக்கூத்தினைக் கண்டு வழிபட்டு அதன்மேல் தூவா மெய்க்கண் காணப்பெறும் சிவமெய் ஐந்தும் உணர்வுறுவர். அத்தகையார்க்கு எல்லாம் சிவவண்ணமாய்க் காணப்பெறும்.

சாக்கிர சாக்கிரம் - சாக்கிரத்தில் சாக்கிரம். ஆதித்தலையாக்கி - முதற்கொண்டு. தூலம் அளவாக்கி - தேகத்தின் உச்சிவரை செலுத்தி. அதீதத்து - துரியாதீதத்தில். அன்பான தாண்டவம் - சிவத்தின் கருணைநிறைந்த கூத்து. சிவம் ஆதல் ஐந்தும் - சிவ தத்துவங்கள் ஐந்தும். சிவாயமே - சிவமயமே.
சுத்த நனவாதி பருவம்

## 2147. நனவாதி தூலமே சூக்கப் பகுதி

2147. நனவாதி தூலமே சூக்கப் பகுதி
அனதான ஐஐந்தும் விந்துவின் சத்தி
தனதா முயர்விந்து தானின்று போந்து
கனவா நனவிற் கலந்ததிவ் வாறே.

நனவு முதலாகச் சொல்லப்படும் பருமைப் பகுதியே நுண்மையாம் பகுதியும், அத்தன்மையவாகிய இருபத்தைந்து மெய்களும் தூமாயை என்று சொல்லப்பெறும் மாமாயையினின்றும் போந்தனவாகும். அவற்றுடன் கலந்து தொழிற்படும் ஆருயிரின்நிலை தூநிலையாகும். அந்நிலை நனவிற் கனவுபோன்று காணப்பெறும்.

அனதான - அத்தன்மையதாகிய. விந்துவின் - மகா மாயையின். கனவா நனவு - நனவில் கனவு.

## 2148. நனவில் அதீதம் பிறந்தார் கிடந்தார்

2148. நனவில் அதீதம் பிறந்தார் கிடந்தார்
நனவில் துரியம் நிகழ்ந்தார் தவழ்ந்தார்
நனவிற் சுழுத்தி நடந்தார் வளர்ந்தார்
நனவிற் கனவோட னன்செய்தி யாமே.

நனவின்கண் உயிர்ப்படங்கும் நிலையினை எய்தினார் தூய நிலைக்கண் பிறந்தவராவர். அவர்தம் இருப்பாகிய கிடப்பும் திருவடியுணர்வின் கண்ணேயாகும். இதனை ஞானநிலம் என்பர். தூயநனவிற் பேருறக்கநிலை நிகழ்ந்தவரோடொக்கும். நனவின் உறக்கநிலை தவழ்ந்தாரோடொக்கும். நனவின் கனவுநிலை வளர்ந்துநடந்தாரோடொக்கும். நனவின் நனவுநிலை ஓடுதல் செய்வாரோடொக்கும். இவையனைத்தும் சிவன்பாலே செல்லுதலின் நற்றவமாயின. நன்செய்தி - நற்றவம். வளர்ந்தார்: வளர்ந்தாராய்; முற்றெச்சம்.

அனன் - அன்னவன்.

## 2149. செறியுங் கிரியை சிவதத் துவமாம்

2149. செறியுங் கிரியை சிவதத் துவமாம்
பிறிவிற் சுகயோகம் பேரருள் கல்வி
குறிதற் றிருமேனி குணம்பல வாகும்
அறிவில் சராசரம் அண்டத் தளவே.

தூயநிலைக்கண்ணுள்ளார் 'சாக்கிரத்தே அதீதத்தைப் புரியும் தபோதனர்' ஆதலின் அவர் புரிந்தருளும் பொருந்திய நோன்புகள் சிவமெய்யேயாகும். அதுபோல் பிறிவில்லாத செறிவு திருவருட் செறிவாகும். அவர்தம் திருமேனி திருவடியுணர்வின் அருள்விளக்கமேயாகும். அவர்தம் அறிவும் சிவபெருமானின் எண்குணங்களேயாகும். அவர்தம் நிலை இயங்குதிணை நிலைத்திணை வாழ் உயிர்கள் அனைத்திற்கும் உறையுளாம் பேரண்டத்தளவினுமிக்கது. அஃது அறிதற்கரியது. நோன்பு: கிரியை. செறிவு: யோகம். அறிவு: ஞானம்.

செறியுங் கிரியை - பொருந்திய செயல்கள். குறிதற்றிருமேனி - குறிக்கப்படும் சிவ உருவம். அறிவு இல் - இவ்வளவென்று அறியமுடியாத.

## 2150. தேசு திகழ்சிவஞ் சத்தி சதாசிவம்

2150. தேசு திகழ்சிவஞ் சத்தி சதாசிவம்
ஈசன் நல்வித்தை இராகங் கலைகாலம்
ஆசகல் வித்தை நியதி மகாமாயை
ஆசில் புருடாதி ஆன்மாவீ றாறே.

திருவருள் நேரே தொழில்புரியும் இடம் சிவமெய். சிவமெய்யே சிவதத்துவம் எனப்படும். அவை அத்தன், அன்னை, அருளோன், ஆண்டான், ஆசான் என்பன. இவை தூமாயைக்கண் உள்ளன. தூவாமாயையின் தோற்றங்கள் வருமாறு: ஊழி, ஊழ், தொழில், அறிவு, விழைவு, ஆள், மருள் என ஏழாகும். ஊழி - காலம். ஆருயிர்க்குப் பொருந்தும் ஆள்முதல் ஆன்மா ஈறாக ஆறு என்பது. ஆள்மெய் ஒரு தனிமெய் அன்று என்னும் குறிப்பிற்று.

சிவ தத்துவங்கள் ஐந்தும், வித்தியா தத்துவங்கள் ஏழும் கூறப்பட்டன.

## 2151. ஆணவ மாயையுங் கன்மமு மாமலங்

2151. ஆணவ மாயையுங் கன்மமு மாமலங்
காணு முளைக்குத் தவிடுமி யான்மாவுந்
தாணுவை யொவ்வாமற் றண்டுல மாய்நிற்கும்
பேணுவாய் மற்றுநின் பாசம் பிரித்துமே.

ஆணவம் உமியை ஒக்கும். மாயை தவிட்டை ஒக்கும். கன்மம் முளையையொக்கும். ஆருயிர் அரிசியினையொக்கும். ஆவி கலப்புத் தன்மையால் சிவனுடன் புணர்ப்பாய்ப் பிரிவின்றி நிற்பினும் அரிசியை ஒக்குமேயன்றிச் சிவனையொவ்வாது. திருவருளால் உன்னுடைய பாசங்களை விட்டுவிலகிச் சிறப்பருளும் சிவபெருமான் திருவடிப் பெருமையினைப் பேணுவாயாக. தாணு - சிவபெருமான்; தூண் என்னும் சொல்தாணு என மருவிற்று. தண்டுலம் - அரிசி.

காணும் - முளைக்கின்ற. தாணு - சிவம். தண்டுலம் - அரிசி.

## 2152. பசுக்கள் பலவண்ணம் பாலொரு வண்ணம்

2152. பசுக்கள் பலவண்ணம் பாலொரு வண்ணம்
பசுக்களை மேய்க்கின்ற ஆயன்ஒரு வண்ணம்
பசுக்களை மேய்க்கின்ற ஆயன்கோல் போடிற்
பசுக்கள் தலைவனைப் பற்றி விடாவே.

ஆருயிர்கள் பலவும் பலவேறு வகையின; ஆயினும் அவற்றின் அறிவுநிலை ஒன்றேயாம். அஃதாவது எல்லாவுயிர்களும் சிவபெருமான் விளக்க விளங்கும் சிற்றறிவினவே. ஆணவ மலவன் பிணிப்பின. அதற்கு ஒப்புப் பசுக்கள் பல நிறத்தன. ஆனால் அவற்றின் பாலெல்லாம் தூயவெண்மையான ஒரு நிறத்தன. இவ்வாருயிர்களைக் கொண்டு நடத்தும் பேருயிராகிய சிவபெருமான் ஒருவனே. அவன் முற்றுணர்வினனே. அதற்கு ஒப்புப் பசுக்களை மேய்க்கும் ஆயன் ஒரு வண்ணமாவன். அப் பசுக்களை மேய்க்கின்ற ஆயன் மேய்த்தற்றொழிற்குரிய கோலைக் கீழே போட்டுவிட்டால் அப் பசுக்கள் மேய்ப்பவனைச் சூழ்ந்து விலகாது நின்றுவிடும். கோல்போடுதல் தூண்டுதலைச் செய்யாமை. இவ்வுண்மை வரும் சேக்கிழாரடிகள் திருமறையான் உணர்க:

"பதவு காலங் களின்மேய்த்தும் பறித்தும் அளித்தும் பரிவகற்றி
இதமுன் டுறையு நற்றண்ணீ ரூட்டி யச்ச மெதிர்நீக்கி
அதர்நல் லனமுன் செலநீழ லமர்வித் தமுத மதுரப்பால்
உதவும் பொழுது பிழையாம லுடையோ ரில்லந் தொறுமுய்த்தார்."

- 12. சண்டேசுரர், 26.

சிவபெருமானாகிய முழுமுதல்வன் உலகியலை நடாத்தும் நடப்பாற்றலாகிய சலமகளை யொடுக்குவதே கோல்போடுவதாகும்.சலமகளையொடுக் கினால் வனப்பாற்றலாகிய மலைமகள் வெளிப்படுவள் மலைமகள் வெளிப்பட்டால் திருவடிநிலையாம் பெரும்பேறு எய்தும். சலமகள்: வஞ்சித்துக் கொண்டு ஆருயிர்களைத் திருவடிப்பேற்றிலுய்க்கும் மறைமகள். இக் குறிப்புச் சிவப்பிரகாசத்தின்கண் 'முற்சினமருவு திரோதாயி கருணையாகி' என்னும் முறைமொழியான் உணரலாம். சிவபெருமான் திருமுடிமேல் விளங்கும் கங்கை என்பதன் உள்ளுறையுமிதுவேயாகும். சலம் - வஞ்சனை; மறைப்பு. அவ்வாருயிர்கள் சிவன் நடப்பாற்றலை ஒடுக்கியதும் அவன் திருவடியிணையினைப்பற்றி விடாது மீளா ஆளாய்ப் பேரின்பம் எய்தும்.

பசுக்கள் - ஆன்மாக்கள். பால் - தன்மை. ஆயன் - பசுபதி. சிவம். கோல்போடின் - அருள்செய்தால்.

## 2153. பருவூசி ஐந்துமோர் பையினுள் வாழும்

2153. பருவூசி ஐந்துமோர் பையினுள் வாழும்
பருவூசி ஐந்தும் பறக்கும் விருகம்
பருவூசி ஐந்தும் பனித்தலைப் பட்டாற்
பருவூசிப் பையும் பறக்கின்ற வாறே.

செவி, மெய், கண், வாய், மூக்கு என்னும் பெரும் பொறிகள் ஐந்தும் தோற்பையாகிய உடம்பினுள் வாழ்கின்றன. அப் பொறிகள் ஐந்தும் பறக்கும் (1987) காக்கைகளாக உருவகிக்கப்பட்டன. விருகம் - ஈண்டுக் காக்கை. அதனால் பறக்கும் விருகம் என ஓதினர். அப்பொறிகள் ஐந்தும் இளைத்துக் களைத்து வருந்துமேயானால் அப் பொறிகள் அமைந்துள்ள உடம்பும் பறந்து இறந்தழியும். ஊசி: தொழிலுவம ஆகுபெயராகப் பொறிகளைக் குறித்தன.

ஊசி - பொறி. விருகம் - காக்கை. பனித்தல் - சலனப்படல். பை - சரீரம்.

## 2154. உடலிந் தியமனம் ஒண்புத்தி சித்தம்

2154. உடலிந் தியமனம் ஒண்புத்தி சித்தம்
அடலொன் றகந்தை அறியாமை மன்னிக்
கெடுமவ் வுயிர்மயல் மேலுங் கிளைத்தால்
அடைவது தானேழ் நரகத்து ளாயே.

உடலின்கண் காணப்படும் புறக்கலன்களாகிய பொறிகள் ஐந்தும், அகப் புறக்கலன்களாகிய எண்ணம் மனம் எழுச்சி இறுப்பு என்னும் அந்தக்கரணம் நான்கும் இருளின் வழியாகநின்று அறியாமையைப் பொருந்தி ஆருயிரைக் கெடுக்கும். அத்தகைய இயற்கை வாய்ந்த அவ்வுயிர்க் கிழவர் பொறிவழிச் சென்று அறிவழிந்து நிற்பதறியாது மேலும் மேலும் மயல்கிளைக்க இடந்தருமானால் தன்வயமிழந்து புன்னெறிச் சென்று ஏழ்நரகத்து வீழ்ந்து மீளாது இடருறுவர். கெடும்: கெடுக்கும் - பிறவினை தன்வினையாகநின்றது.

கெடுமவ்வுயிர் - கெடுகின்ற ஆன்மா. மயன் மேலுங் கிளைத்தல் - மயக்கம் அதிகப்படுமானால்.

## 2155. தற்றெரி யாத வதீதந்தற் காணவஞ்

2155. தற்றெரி யாத வதீதந்தற் காணவஞ்
சொற்றெரி கின்ற துரியஞ்சொற் காமியம்
பெற்ற சுழுத்திப்பின் பேசுறுங் காதலா
மற்றது வுண்டிக் கனநன வாதலே.

ஆருயிர் ஆணவத்துடன் ஒட்டித் தன்னையறியாது நிற்கும் நிலை அப்பால் நிலையாகும். அப்பால் நிலை: துரியாதீதநிலை. ஆணவமல வாற்றலைத் தேய்த்தற்பொருட்டுச் சிவபெருமான் தொன்மைக்கன்மமாம் ஊக்கத்தைச் சேர்த்து மன்னுவிப்பன். அதனால் அது பேருறக்க நிலையாகும். பின் வினைக்குப் பற்றுக்கோடும் செய்தற்கிடனும் விளைபயனுமாகத் திகழும் மாயையினைப் பொருத்துவிப்பன். அந்நிலை உறக்க நிலையாகும். காதலென்பது இடவாகுபெயராக1 மாயையைக் குறித்தது. இம் மூன்று நிலையினும் ஆருயிட்கட்கு வினைநுகர்வு இன்று. கனவு நனவுகளாகிய இரண்டின்கண்ணும் முறையே நுண்ணிய நுகர்வும் பரிய நுகர்வும் உள்ளன. அதனால் அவ்விரு நிலையும் நுகர்வு நிலையாகும்.

தற்கு - தனக்கு. காமியம் - கன்மம். காதலாம் - மாயையாம்.

## 2156. நனவிற் கனவில்லை ஐந்து நனவிற்

2156. நனவிற் கனவில்லை ஐந்து நனவிற்
கனவிலாச் சூக்குமங் காணுஞ் சுழுத்தி
தனலுண் பகுதியே தற்கூட்டு மாயை
நனவிற் றுரிய மதீதந் தலைவந்தே.

நனவிற் கனவில்லையாதலின் அந்நனவின்கண் ஐம்பொறியும் செம்மையாகத் தொழிற்படும். நனவின்கண் கனவு நிகழாத உறக்கம் சுழுத்தி எனப்படும். அதில் மனமுதலிய நுண்பொறிகள் தொழிற்படும். தன்னைச் சார்ந்துள்ள மாயை என்னும் மூலப்பகுதியின் நுகர்வே பேருறக்கநிலையாகும். நனவில் அப்பால்நிலை தன்னை வேறெனவுணரும் நிலை பொருந்தியதாகும். அதீதம் - அப்பால்.

## 2157. ஆறாறில் ஐயைந் தகல நனாநனா

2157. ஆறாறில் ஐயைந் தகல நனாநனா
வாறா மவைவிட வாகு நனாக்கனா
வேறான ஐந்தும் விடவே நனாவினில்
ஈறாஞ் சுழுத்தி யிதின்மாயை தானே.

அருஞ்சைவர் மெய்கள் (2139) முப்பத்தாறனுள் உடன்மெய் இருபத்துநான்கு, உணர்வுமெய் ஏழனுள் ஆள் ஒன்று ஆக இருபத்தைந்து கருவிகளும் நீங்க எஞ்சியுள்ள உணர்த்துமெய் ஐந்தும் உணர்வு மெய்களுள் ஊழி, ஊழ், உழைப்பு, உணர்வு, உவப்பு, மருள் என்னும் ஆறும் ஆகப்பதின் ஒன்றும் நனவின் நனவில் தொழிற்படும். உவப்பு: விழைவு; அராகம். நனவின் நனவு சாக்கிரம் சாக்கிரம். நனவிற் கனவு உணர்த்து மெய் ஐந்தும் நீங்கினநிலை. ஊழி, ஊழ், உழைப்பு, உணர்வு, உவப்பு, மருள் என்னும் உணர்வுமெய் 'ஆள்' நீங்கிய ஆறும் தொழிற்படும். இதுவே நனவிற் கனவாகும். இவ்வாறும் மிக நுண்மையாக நிகழும்நிலை நனவில் உறக்கமாகும். நனவிற் பேருறக்கம் மருளுடன் மட்டும்கூடி நிற்றல். மருள் - மாயை. ஈண்டு விலக்கப்பட்ட ஆள் சிறப்புநிலை என்க.

ஒவ்வொரு அவத்தையிலும் கழியும் தத்துவங்கள் இன்ன என இதில் கூறப்பட்டுள்ளது.

## 2158. மாயையில் வந்த புருடன் துரியத்தில்

2158. மாயையில் வந்த புருடன் துரியத்தில்
ஆய முறைவிட் டதுவுந்தா னன்றாகிச்
சேயகே வலவிந் துடன்செல்லச் சென்றக்கால்
ஆய தனுவின் பயனில்லை யாகுமே.

பேருறக்கநிலையாகிய துரியத்தில் ஆளுடன் மட்டும் ஆருயிர்நிற்கும். அதற்கப்பால் அந்நிலையையும் கடந்து அப்பால் நிலையாகிய புலம்பின்கண் மாயையுடன் செல்லும். அவ்வாறு நிற்கும் நிலையில் மாயாகாரிய உடம்பு இருந்தும் வினைநிகழ்ச்சி இன்மையால் ஏதும் பயன் இல்லை. ஈண்டுக் கூறப்படும் 'ஆள்' பொதுமை நிலையென்க.

புருடன் - ஆன்மா. கேவல விந்து - கேவலாவத்தையில் மாயையோடு.

## 2159. அதீதத் துரியத் தறிவனாம் ஆன்மா

2159. அதீதத் துரியத் தறிவனாம் ஆன்மா
அதீதத் துரிய மதனாற் புரிந்தால்
அதீதத் தெழுந்தறி வாகிய மானன்
முதிய அனலிற் றுரியத்து முற்றே.

அப்பால்நிலைப் பேருறக்கத்தின்கண் ஆருயிர் கருவிகளுடன் கூடாமல் தன்னளவாய் அறிவாய்நிற்கும். அந் நிலையிலேயே திருவருள் துணையால் உறுதியாக நின்றால் அப்பால் நிலையில் கிளர்ந்தெழுந்த அறிவாகிய ஆருயிர் முதிய அனல் என்று சொல்லப்படும் சிவபெருமானாகிய பேரறிவுச் சுடரில் புணர்ந்து நிலையுறும். அதீதத் துரியம் : அப்பால் நிலைப்பேருறக்கம்.

மானன் - ஆன்மா. முதியவனல் - பழமையான சிவாக்கினி.

## 2160. ஐயைந்து பத்துடன் ஆனது சாக்கிரங்

2160. ஐயைந்து பத்துடன் ஆனது சாக்கிரங்
கைகண்ட ஐயைந்திற் கண்டங் கனாஎன்பர்
பொய்கண்ட மூவர் புருடன் சுழுனையின்
மெய்கண் டவனுந்தி மேவல் இருவரே.

ஆருயிர்கள் ஒவ்வொருநாளும் எய்தும்நிலை ஐம்பாடு என்ப. அவற்றுள் நனவுநிலை புருவநடுவின்கண் ஆகும். அந்நிலையில் தொழிற்படும் கருவிகள் முப்பத்தைந்து. கனவுநிலை கழுத்தின் கண்ணாகும். இங்குத் தொழிற்படுங் கருவிகள் இருபத்தைந்து. உறக்கநிலை நெஞ்சத்தின் கண்ணாகும். இங்குத் தொழிற்படுங் கருவிகள் மூன்று. பேருறக்கநிலை கொப்பூழின்கண் ஆகும். இங்குத் தொழிற்படுங் கருவிகள் இரண்டு. (உயிர்ப்படங்குநிலை மூலத்தின் கண்ணாகும். இங்குத் தொழிற்படுங் கருவி ஒன்று.) கருவிகள் : பொறிபத்து, புலன்பத்து, வளிபத்து, கலன் நான்கு ஆள் ஒன்று ஆக முப்பத்தைந்து. புலன்பத்து, வளிபத்து, கலன் நான்கு, ஆள் ஒன்று ஆக இருபத்தைந்து. உயிர்ப்பு, எண்ணம், ஆள் ஆக மூன்று. உயிர்ப்பு ஆள் ஆக இரண்டு. ஆள் ஒன்று, கலன் - அந்தக்கரணம். ஆள் - புருடன். ஈண்டுக் கூறிய பொறியினைப் புள்ளென்றும் புலத்தினை நிலமென்றும் நம் நாயனார் ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்தேழாம் திருமந்திரன்தின்கண் ஓதியருளுகின்றனர். ஆளுடைய பிள்ளையாரும் "புலனைந்தும் பொறிகலங்கி"

என்று அருளுவதை இதனுடன் ஒத்துநோக்கின் 'புலன்' பொறியாகவும், 'பொறி' புள்ளாகவும் அமையும்.

மூவர் - புருடன், பிராணன், சித்தம். இருவர் - பிராணன், புருடன்.

## 2161. புரியட் டகமே பொருந்தல் நனவு

2161. புரியட் டகமே பொருந்தல் நனவு
புரியட் டகந்தன்னின் மூன்று கனவு
புரியட் டகத்தில் இரண்டு சுழுத்தி
புரியட் டகத்தொன்று புக்கல் துரியமே.

பூதமுதல் ஐந்து, மனம் எழுச்சி இறுப்பு என்னும் மூன்று ஆக எட்டும் நுண்ணுடல் என்ப. இவற்றைப் புரியட்டகம் என்ப. புரி என்பது பல சேர்ந்து பின்னலாய் ஒன்றுபோற் காணப்படும். அது வைக்கோற்புரி, நூற்புரி முதலிய வழக்கால் உணர்க. இவ்வெட்டும் நிறைந்து தொழிற்படும் நிலை நனவாகும். கனவின்கண் மனம் எழுச்சி இறுப்பு ஆகிய மூன்றும் தொழிற்படும். உறக்கத்தின்கண் எழுச்சியும் இறுப்பும் ஆகிய இரண்டும் தொழிற்படும். பேருறக்கத்தின்கண் எழுச்சி மட்டும் தொழிற்படும். பூதமுதல் - தன் மாத்திரை. எழுச்சி - ஆங்காரம்.

புரியட்டகம் - சூக்கும தேகம். மூன்று - மனம், புத்தி, ஆங்காரம். இரண்டு - புத்தி, ஆங்காரம். ஒன்று - ஆங்காரம்.

## 2162. நனவின் நனவு புலனில் வழக்கம்

2162. நனவின் நனவு புலனில் வழக்கம்
நனவிற் கனவு நினைத்தல் மறத்தல்
நனவிற் சுழுத்தியுண் ணாடல் இலாமை
நனவில் துரிய மதீதத்து நந்தியே.

நனவினின் நனவு பொறிகள் புலன்களிற் செல்லாது ஒடுங்கியிருக்கும் ஒண்மைநிலை. இதனை உலகத் தொழிலில் ஒட்டாநிலை என்ப. நனவிற் கனவு மனத்தின் இரண்டாம் தொழிற்பாடாகிய நினைத்தல். நனவின் உறக்கம் மறத்தல். நனவின் பேருறக்கம் எண்ணமாகிய சித்தத்தின் தொழிற்பாடு. இது மனத்தின் முதற்றொழிற் பாடாகும். நனவின் உயிர்ப்படங்கலின்கண் எண்ணத்தின் தொழிற்பாடும் இன்மை. நினைத்தல் - கனவு. மறத்தல் - உறக்கம். நாடல் - பேருறக்கம். நாடலிலாமை உயிர்ப்படங்கல்.

புலனில் வழக்கம் - உலக வியாபாரம் இல்லாத நிலை, ஐம்புலன் ஒடுக்கம்.

## 2163. கனவின் நனவுபோற் காண்டல் நனவாங்

2163. கனவின் நனவுபோற் காண்டல் நனவாங்
கனவினிற் கண்டு மறத்தல் கனவாங்
கனவிற் சுழுத்தியுங் காணாமை காணல்
அனுமாதி செய்தலி லான துரியமே.

கனவின்கண் நனவுபோற் காண்பது கனவின் நனவு. கனவிற் கனவு, கண்டு மறத்தலாகும். கனவின் உறக்கம் காணாமையாகும். கனவின் பேருறக்கம் அனுமாதியாகக் காண்டல். அனுமாதி: உத்தேசம். உத்தேசம் என்பது பொருளுண்மைமட்டுங் கோடல். அஃதாவது எழுவாய்க் காட்சியினை ஒத்தல். உயிர்ப்படங்கலின்கண் அவ் வுத்தேசச் செயலுமின்றி நிற்றல்.

அனுமாதி - உத்தேசம்.

## 2164. சுழுத்தி நனவொன்றுந் தோன்றாமை தோன்றல்

2164. சுழுத்தி நனவொன்றுந் தோன்றாமை தோன்றல்
சுழுத்தி கனவதன் உண்மை சுழுத்தியிற்
சுழுத்தி யறிவறி வாலே யழிகை
சுழுத்தித் துரியமாஞ் சொல்லறும் பாழே.

சுழுத்தியென்று சொல்லப்படும் உறக்கத்தின்கண் நனவு ஒன்றும் தோன்றாமை. உறக்கத்திற் கனவு ஆருயிரின்கண் தன் உண்மை மட்டும் தோன்றுதல். உறக்கத்தில் உறக்கம் - சுட்டுணர்வும் சிற்றுணர்வும் அழிவெய்தல். அந் நிலை முற்றுணர்வால் ஏற்படுவதாகும். முற்றுணர்வு - சிவஞானம். உறக்கத்தில் பேருறக்கம் சொற்கழிவாகிய பாழ் நிலையாகும். சொற்கழிவு - சொல்லுக்கு அடங்காதது.

## 2165. துரிய நனவா மிதமுணர் போதந்

2165. துரிய நனவா மிதமுணர் போதந்
துரியக் கனவா மகமுணர் போதந்
துரியச் சுழுத்தி வியோமந் துரியந்
துரியம் பரமெனத் தோன்றிடும் தானே.

துரியம் என்று சொல்லப்படும் பேருறக்கத்தின்கண் நனவாவது அனைத்துயிர்க்கும் நேரக்கூடிய இன்பவாயிலாம் உறுதியினை அறியும் அறிவாகும். இதம் - உறுதி. பேருறக்கக் கனவு தன்னை யுணரும் உணர்வு ஆகும். பேருறக்க உறக்கம் அருள்வெளியாகும். பேருறக்கத்தின்கண் பேருறக்கம் தான் சிவனாய்த் தோன்றுதல். அஃதாவது சிவனிறைவில் ஒடுங்குதல்.

அஃது ஆடை, அணி, பூச்சு, பேச்சு முதலியவற்றால் மாறுதல் எய்திய ஒருவனை அக் கோலத்தினுக்குரிய பெயரான் அழைக்கப்பெறுவதனை யொக்கும். அக் கோலப்பெயர் சார்புபற்றிய செயற்கையே யன்றி இயற்கையாகா தென்க.

## 2166. அறிவறி கின்ற அறிவு நனவாம்

2166. அறிவறி கின்ற அறிவு நனவாம்
அறிவறி யாமை யடையக் கனவாம்
அறிவறி யவ்வறி யாமை சுழுத்தி
அறிவறி வாகு மான துரியமே.

சிற்றறிவு திருவருளால் முற்றறிவின்கண் ஒடுங்கிநின்று அவ் வறிவினை அறிதல் அறிவின்கண் நனவாகும். அறிவிற் கனவு அவ்வறிவினை அறிகின்றோம் என்னும் எண்ணமும் தோன்றாது அவ்வறிவின்கண் ஒடுங்குதல். அறிவுறக்கம் தன்னறிவு அவ் வறிவின்பின் செல்லுதலால் அவ் வறிவேயாய்த் தன்னை மறத்தலாகும். அறிவுப் பேருறக்கம் பரமாகிய சிவன் தோன்றுதலாகும்.

## 2167. தானெங்கு மாயவ னைம்மலம் தான்விட்டு

2167. தானெங்கு மாயவ னைம்மலம் தான்விட்டு
ஞானந் தனதுரு வாகி நயந்தபின்
தானெங்கு மாய்நெறி நின்றது தான்விட்டு
மேனந்தச் சூக்க மவைவன்ன மேலிட்டே.

ஆருயிரின் உண்மைத்தன்மை எங்கும் பரம்பிநிற்கும் பெருநிலையாகும். அது, சிவகுருவின் அருளால் எய்தும். அந் நிலைமை ஐம்மலத் தொடர்பால் எய்தாதாயிற்று. 'தான் எங்குமாயவன்' என்பதற்கு எங்குமாம் தன்மையுடையவன் என்பது பொருள். சிவ குருவின் அருளால் தான் எங்குமாம் என்னும் உண்மையெல்லாம் தோன்றப்பெறும். பெறவே தான் ஐம்மலத் தொடக்கினின்றும் நீங்கி உண்மையறிவே தன்னுருவாகவே நிற்கும். அந் நிலைமையினை நயந்த பிற்பாடு தானெங்குமா யிருக்கும் இயல்புண்மையினை யுணரும். உணரவே தான் ஐம்புலவேடர் வழிச்சென்ற நெறிவிட்டு அகலும். மேல் பொருந்தக்கூடிய நுண்ணிய நிலையினையும் எய்தும். சூக்கம் - நுண்மை. அந் நிலைமையின் தன்மையாய் மேலிட்டு விளங்கும். வன்னம் - தன்மை.

ஐம்மலம் - ஐந்து மலங்கள். அவை வன்மை - அவை எல்லாவற்றின் தன்மை.

## 2168. ஐயைந்து மாறுமோ ரைந்து நனாவினில்

2168. ஐயைந்து மாறுமோ ரைந்து நனாவினில்
எய்யு நனவு கனவு சுழுத்தியா
மெய்யும்பின் சூக்கமும் மெய்ப்பகுதி மாயை
ஐயமுந் தானவ னத்துரி யத்தனே.

அருஞ்சைவர் மெய்கள் முப்பத்தாறாகும். அவற்றுள் உடல்மெய் இருபத்துநான்கு ஆள் ஒன்று ஆகிய இருபத்தைந்து மெய்களுள் இயைந்து தொழிற்படும் நிலை நனவு நிலையாகும். உணர்வுமெய் ஏழனுள் ஆள் ஒழித்து ஒழிந்த ஊழி, ஊழ், உழைப்பு, உணர்வு, உவப்பு, மருள் என்னும் ஆறு மெய்கள்மட்டும் தொழிற்படும் நிலை கனவுநிலையாகும். உணர்த்து மெய்யாகிய அத்தன் அன்னை அருளோன் ஆண்டான் ஆசான் என்னும் ஐந்து மெய்களுடன் மட்டும் தொழிற்படும் நிலை உறக்கமாகும். பேருறக்கத்தின்கண் நுண்ணுடலும் மூலப்பகுதியும் சேர்ந்த நிலைமையோடு ஆருயிர் நிற்கும். இந் நிலையினையே துரியத்தன்நிலை என்று ஓதப்பெற்றது.

பகுதி மாயை - மூலப்பிரகிருதி. துரிய அத்தன் - துரிய அவத்தையில் இருப்பவன்.

## 2169. ஈதென் றறிந்திலன் இத்தனை காலமும்

2169. ஈதென் றறிந்திலன் இத்தனை காலமும்
ஈதென் றறிந்தபின் ஏதும் அறிந்திலேன்
ஈதென் றறியும் அறிவை அறிந்தபின்
ஈதென் றறியும் இயல்புடை யோனே.

பல்லூழியாக உடம்புடன் பயின்று வரும் நாம் உடம்பு நாமல்ல; அது நமக்கு வேறானது. நாம் அதனை இயக்குகின்றோம் என்னும் உண்மைகள் சில ஊழிகள் கழிந்தபின்புதான் புலனாயின. அதுபோல் நம்மை இயக்கும் பேருயிராம் சிவபெருமான் ஒருவன் உளன் என்று உணர்வதற்கும் பல ஊழிகள் கழிந்தன. அக் குறிப்பே இத்தனை காலமும் என்னை அறிவித்து இயக்கும் பேரறிவுப் பொருள் சிவபெருமான் என்று உணர்ந்திலேன் என்பதாகும். அப் பெரும்பொருள் சிவன் என்று உணர்ந்தபின் வேறு பொருள்கள் ஒன்றையும் அறிந்திலேன்; எல்லாப் பொருள்களும் அவன்கண் அடங்கிநிற்கின்றன ஆதலான். இஃது ஒருவீட்டின் மாடியின்மீது ஏறுவோன் ஏறும்போது கீழ்வீடுகள் படிகள் முதலியவற்றை விளங்கக் காண்கின்றான். ஆயின் மேல்மாடியிற் புக்கதற்பின் அவையொன்றும் அவனுக்குப் புலனாகாமை இயல்பல்லவா? அதனை யொக்கும். ஒருவன் தன்னை இயக்கும் மெய்ப்பொருள் சிவன் என அப்பொருள் தானே காட்டக் கண்டபின் அதுவென்றே அறியும் சார்பறிவுடைய இயல்பினனாவன். அறியும் அறிவு: அறிவிக்கும் அறிவு. இது பிறவினைப் பொருளில் வந்த தன்வினை. ஒருபுடை

யொப்பாகக், "காணுங்காற் காணேன் தவறாய காணாக்கால், காணேன் தவறல் லவை" (1628) என்னும் திருவள்ளுவ நாயனார் திருமொழியான் உணரலாம். ஈண்டுக் காணுங்கால் என்பது சிவனைக் காணுங்கால் எனவும், தவறாய என்பது நிலையாத பிழைபாடுடைய உலகை என்பதும் பொருளாகக் கொள்க. இத் திருமந்திரத்தின்கண் நம் நாயனார் தம் முன்னிலை பின்னிலைகளை மொழிந்தருள்வாராயினர்.

## 2170. உயிர்க்குயி ராகிய வுருவா யருவாய்

2170. உயிர்க்குயி ராகிய வுருவா யருவாய்
அயற்புணர் வாகி யறிவாய்ச் செறிவாய்
நயப்புறு சத்தியும் நாதன் உலகாதி
இயற்பின்றி யெல்லாம் இருள்மூட மாமே.

சிவபெருமான் அனைத்துயிர்களுடனும் கலப்பால் ஒன்றாயிருக்கின்றான். அந் நிலையில் உயிர்க்கு உயிராகிய உருவாகவும் அருவாக
வும் விளங்கியருள்கின்றனன். அஃதாவது சிவன் உயிர்க்கு உயிராய் நிற்கும்போது அருவன் எனவும், உடலாய் நிற்கும்போது உருவன் எனவும் கூறப்படுவன். அவன் பொருள்தன்மையில் வேறாய் நிற்கும் போது அயற்புணர்வாய் நிற்பன். அயற்புணர்வு: சார்புப்புணர்வு. அப்பொழுது அவன் அறிவாகவும் அறிவிற் பின்னிய செறிவாகவும் விளங்குவன். செறிவு - நிறைவு. நாதன் ஆகிய சிவபெருமான், பேரறிவுப் பேராற்றலாகிய சத்தியுடன் கலந்து வெளிப்பட்டருள்வன். அவ்வாற்றலும் அவனையும் அவன் திருவுள்ளக் குறிப்பினையும் நயக்கும். அதனால் உலகமும் உலகத்துடன் ஒட்டிய உயிர்களும் ஓவாதியங்குகின்றன. அங்ஙனம் இல்லாவிட்டால் எல்லாம் இருள்மூழ்க் கிடக்கும்.

இயற்பு - இயற்கை.

## 2171. சத்தி யிராகத்திற் றானல் லுயிராகி

2171. சத்தி யிராகத்திற் றானல் லுயிராகி
ஒத்துறு பாச மலமைந்தோ டாறாறு
தத்துவ பேதஞ் சமைத்துக் கருவியும்
வைத்தனன் ஈசன் மலமறு மாறே.

ஈசனாகிய சிவபெருமான் தன்னைவிட்டு நீங்காத பேரறிவுப் பேராற்றலாம் சத்தியின்கண் உலகியல் நிகழ்ச்சியின் பொருட்டு நீங்கா விருப்பம் தாங்கினன். இராகம் - விருப்பம். உயிர் உடலை இயக்குவது போன்று சிவனும் சிவையாகிய சத்தியை இயக்குகின்றனன். அந் நீர்மையினால் சிவனை உயிராகவும் சிவையை உடலாகவும் உயர்ந்தோர் உருவகிப்பர். அறிவோனாகிய சிவன் ஆற்றலளாகிய சிவையைத் தொழிற்படுத்துவன். அப்பொழுது உலகமுண்டாகி உயிர்கள் உய்யும். அதனால் ஆருயிர்கட்கு ஒட்டிய கட்டாகிய மலத்தை யகற்றுவதற்கு வினை, மாயை, மாயையாக்கம், நடப்பாற்றல் ஆகிய நான்கையும் சிவன் கூட்டியருள்வன். அப்பொழுது மலம் ஐந்தெனப்படும். மெய்கள் முப்பத்தாறு என்று சொல்லப்படும். இவையனைத்தையும் படைத்துக் கூட்டிக் காத்தருள்பவன் சிவன். அதனால் மலமகலும். கருவிகள்: மாயை ஆக்கமாகிய புறநிலைக் கருவிகள் அறுபது (2107)

இராகத்தில் - விருப்பினால். மயம் - மலம் (ஆணவம்).

## 2172. சாக்கிரா தீதத்தி லாணவந் தன்னுண்மை

2172. சாக்கிரா தீதத்தி லாணவந் தன்னுண்மை
சாக்கிரா தீதந் துரியத்திற் றானுறச்
சாக்கிரா தீதத்தில் ஆணவந் தான்விடாச்
சாக்கிரா தீதம் பரனுண்மை தங்குமே.

அப்பால்நனவு என்னும் சாக்கிராதீதத்தில் ஆணவத்துடன் மட்டும் ஆருயிர் ஒட்டிநிற்கும் நிலை புலம்புநிலையாகிய தன் உண்மை நிலையாகும். அப்பால் நனவின் பேருறக்கம் சாக்கிராதீதத்துரியம். அதன்கண் ஆருயிர் தன்னிலையுணரும். இந் நிலைமை ஆணவம் அகலாத நிலைமையாகும். ஆணவம் நீங்கிய அப்பால்நனவின்கண் திருவருளால் திருவடியுணர்வாம் பரனுண்மை வெளிப்பட்டுத் தங்கும். இதுவே 'பாரிப்பா னொருவனென்று செவ்வையே உயிரிற்காணும் சிவரூபமாகும்'. (உண்மை நெறி விளக்கம் 3.)

## 2173. மலக்கலப் பாலே மறைந்தது சத்தி

2173. மலக்கலப் பாலே மறைந்தது சத்தி
மலக்கலப் பாலே மறைந்தது ஞானம்
மலக்கலப் பாலே மறைந்தனன் தானு
மலக்கலப் பற்றான் மதியொளி யாமே.

ஆருயிரும் பேருயிரும் தொன்மையே புணர்ப்பாக இருப்பினும் உயிரின் ஆற்றல் மலக்கலப்பால் மறைந்திருந்தது. அதுபோல் மலக்கலப்பாலேயே அறிவும் மறைந்திருந்தது. அறிவுக்கு அறிவாய் விளங்கும் பொற்றூணாகிய தாணுவாம் சிவனும் அம் மலக்கலப்பாலேயே மறைந்திருந்தனன். திருவருளால் மலக்கலப்பகன்றால் ஆருயிரினறிவு நிறைமதி போன்று சிறந்து விளங்கும். சிவபெருமான் பிறைசூடியருளினன் என்பது ஆருயிரின் அறிவு விளக்க விளங்குந்தன்மைத்தாகலின் அதனை அவன் தன்பால் வைத்து அதன் மதியை விளக்கியருள்கின்றனன் என்பதன் உருவகமேயாகும். இவ் வுண்மை பட்டினத்துப்பிள்ளையார் அருளும் திருவொற்றியூர் ஒருபா ஒருபது ஆறின்கண் "தூமதி சடைமிசைச் சூடுதல் தூநெறி, யாமதி யானென வமைத்தவாறே" என்னும் திருமொழியான் உணர்க. ஆருயிர் - ஆன்மா. பேருயிர் - பரமான்மா.

## 2174. திகைக்கின்ற சிந்தையுள் சிங்கங்கள் மூன்று

2174. திகைக்கின்ற சிந்தையுள் சிங்கங்கள் மூன்று
நகைக்கின்ற நெஞ்சுள் நரிக்குட்டி நான்கு
வகைக்கின்ற நெஞ்சினுள் ஆனைக்கன் றைந்து
பகைக்கின்ற நெஞ்சுக்குப் பாலிரண் டாமே.

செய்வதறியாது திகைக்கின்ற எண்ணத்தினுள் காமம் வெகுளி மயக்கங்கள் என்னும் அரிமா மூன்றுள்ளன. அகப்புறக்கலனாகிய நெஞ்சினுள் எண்ணம் மனம் எழுச்சி இறுப்பு என்னும் நரிக் குட்டிகள் நான்குள்ளன. அதுபோல் நெஞ்சினுள் செவி, மெய், நோக்கு, நாக்கு, மூக்கு என்னும் யானைகள் அஞ்சுள்ளன. இப் பகைப்பொருளாகிய அரிமா நரிமா கரிமா என்னும் பன்னிரண்டுடன் துன்னிநிற்கும். அந் நெஞ்சினுக்கு ஆடுதலும் அடங்குதலும் ஆகிய இருவகைத் தொழில்கள் உள்ளன. ஆடுதல் - பிரவிர்த்தி. அடங்குதல் - நிவிர்த்தி. இவற்றை முறையே ஓடுதல், ஒடுங்குதல் எனவும் கூறலாம். இவற்றில் ஆடுதலுக்கு அடங்குதலும் ஓடுதலுக்கு ஒடுங்குதலும் முறையே ஒவ்வோர் மாத்திரை முதலெழுத்துக்கள் குறிகிநிற்பன ஓர்க.

சிங்கங்கள் மூன்று - காமம், வெகுளி, மயக்கம். நரிக்குட்டி அந்தக்கரணங்கள். ஆனைக்கன்று - பொறிகள். பால் இரண்டு - பிரவிர்த்தி, நிவிர்த்தி.

## 2175. கதறு பதினெட்டுக் கண்களும் போகச்

2175. கதறு பதினெட்டுக் கண்களும் போகச்
சிதறி எழுந்திடுஞ் சிந்தையை நீரும்
விதறு படாமுன்னம் மெய்வழி நின்றால்
அதிர வருவதோர் ஆனையு மாமே.

(ப. இ .) வளிபத்தும் நுண்ணுடம்புக் கருவிகள் எட்டும் ஆகப் பதினெட்டும் இருவினை முளைக்கும் கண்களாகும். இவை கதறி எழுவன ஆகும். அவற்றுள் சிதறுண்டு எழும் நும் எண்ணமாகிய சிந்தையை அகற்றுதல் வேண்டும். அதுவும் நும்நிலை கெடாமுன்னம் நன்னெறி நான்மையாம் செந்நெறிவழி நின்றால் கைகூடும். அவ் வினைகளெல்லாம் நடுங்கும்படி வந்தருள்கின்ற சிவபெருமான் சிறந்து வெளிப்பட்டு அருள்வன். ஆனை: ஆன் + ஐ - ஆனை. ஆனாகிய ஆருயிர்கட்கு ஐயாகிய தலைவன் சிவன். 'ஐ' தலைவன் என்பதனை 'ஐயர் யாத்தனர் கரணம்' (தொல். பொருள் - ) என்பதனால் உணர்க.

பதினெட்டு - புரியட்டகமும் தசவாயுவும். விதறு - கெடுதி. ஆனை - சிவம்.

## 2176. நனவகத் தேயொரு நாலைந்தும் வீடக்

2176. நனவகத் தேயொரு நாலைந்தும் வீடக்
கனவகத் தேயுட் கரணங்க ளோடு
முனவகத் தேநின் றுதறியுட் புக்கு
நினைவகத் தின்றிச் சுழுத்திநின் றானே.

(ப. இ .) நனவின்கண் காணப்படும் கருவிகள் இருபது. அவை அறிதற்கருவி ஐந்து, செய்தற்கருவி ஐந்து, அவற்றால் கொள்ளப்படும் புலன்கள் பத்து ஆக இருபது. கனவகத்துத் தொழிற்படும் உட்கருவிகளுடன் ஆருயிர் செல்லுங்கால் நனவகத்துக் கருவிகள் விலகும். கனவகத்துக் கருவிகளும் முனவாகிய குற்றமுடையன என்பதுபோல் உதறித்தள்ளி நினைவும் ஒடுங்க உறக்கத்தில் நிற்கும். முனவு - குற்றம்.

நாலைந்து - மண் முதல் இருபது தத்துவங்களும்.

## 2177. நின்றவன் ஆசான் நிகழ்துரி யத்தனாய்

2177. நின்றவன் ஆசான் நிகழ்துரி யத்தனாய்
ஒன்றி யுலகின் நியமாதிக ளூற்றுச்
சென்று துரியாதீ தத்தே சிலகாலம்
நின்று பரனாய நின்மல னாகுமே.

(ப. இ .) இவ்வாறு நிற்கும் உயிர் ஆசான் திருவருளால் நனவிற் பேருறக்கத்தனாய் உலகத்துடன் பொருந்திச் செய்யவேண்டும் கடமைகளைச் செவ்வையாகச் செய்து நின்றால் அப்பால் நனவிற்செல்வது வாய்க்கும். அதன்கண் சிலநாள் உறைத்து நிற்றல் வேண்டும். இயல்பாகவே பாசங்களின் நீங்கிய சிவபெருமானின் திருவடிப்பேற்றால் மலம் நீங்கித் தூய்மை எய்தும். இதுவே ஆருயிர் பரனாய் நின்மலனாம் நிலைமை எய்துவது என்க.

## 2178. ஆனவவ் வீசன் அதீதத்தில் வித்தையாத்

2178. ஆனவவ் வீசன் அதீதத்தில் வித்தையாத்
தானுல குண்டு சதாசிவ மாசத்தி
மேனிகள் ஐந்தும்போய் விட்டுச் சிவமாகி
மோன மடைந்தொளி மூலத்த னாகுமே.

தூயேனாக விளங்கிய அவ் வாருயிர்க்கிழவன் ஈசன் என்று அழைக்கப்பெறுவன். அவ் வுயிர் அப்பால்நிலையில் திருவடியுணர்வாய்த் திகழும். சிவவுலக நுகர்வுகளை நுகரும். அருளோன் முதலாக அயன் ஈறாகச் சொல்லப்படும் தூமாயை அருள்விளக்க வடிவங்களை எய்தும் திருவருளால் அவ் வடிவங்களை அகன்று தூய சிவனாகி ஞானவரம்பாம் மோனம் எய்திப் பேரறிவுப் பேரொளிப் பெருமுதல்வனாக விளங்குவன். மோனம்: முன்மை, மேன்மை என்பன வற்றின் மரூஉவாகும். இந் நிலை ஒலிமெய்யாகிய நாதமுங் கடந்த நிலையாகும். முன்மைஞானம் - மோனம்.

வித்தையாய் - ஞானமாய். மேனிகள் ஐந்து - ஐந்து மூர்த்திகள், அயன் முதல் சதாசிவம் ஈறாக.

## 2179. மண்டல மூன்றினுள் மாயநன் னாடனைக்

2179. மண்டல மூன்றினுள் மாயநன் னாடனைக்
கண்டுகொண் டுள்ளே கருதிக் கழிகின்ற
விண்டலர் தாமரை மேலொன்றுங் கீழாகத்
தண்டமுந் தானா யகத்தினுள் ளாமே.

ஆருயிர்களின் உடலகத்துக் காணப்படும் மூன்று மண்டலங்களையும் முதல்வனருளால் கண்டுள்ளார் அம் மாயாகாரிய நன்னாட்டை உடைமையாகக்கொண்டுள்ள உரிமையர் சிவபெருமானார் என்பர். அவனை மாயநன்னாடனென்பர். அவனை அகத்துக் கண்டுள்ளவர் அவனை அகத்தே அவனருளால் கண்டு கருதுவர். கண்டு கருதிக் கழிந்து மேல்விளங்கும் விரிந்த ஆயிரம் இதழையுடைய அருள்வெளித் தாமரையைப் பொருந்தியும் நிற்கும் அகத்தவத்தோர்க்குப் புறத்தே காணப்படும் அண்ட முதலிய பொருள்கள் அனைத்தும் ஆடியிற் காண்பது போன்று அகத்தே காணப்படும் தொலைநிழற் காட்டி (Television) வாயிலாக ஒலியைப்போல் உருவையுங் காணும் இற்றை ஞான்று இதனை நம்புவதற்கில்லென்று கூற எவரும் முந்துறார். இற்றை ஞான்று கருவிகளின் வாயிலாக நாம் காணும் வியத்தகு புதுமைகளை நம் முன்னோர் அகத்தவ முயற்சியால் அருள் கருவியாகக் கண்டுள்ளனர் தண்டமென்பது நடுநாடியாகும். மாய நன்னாடனைக் காண்பதென்பது உலகமே உருவமாகக்கொண்டு திகழும் அவனது பரப்பினைக் காண்டலேயாகும். காண்டல்: உணர்வின்கண் உணர்தல்.

## 2180. போதறி யாது புலம்பின புள்ளின

2180. போதறி யாது புலம்பின புள்ளின
மாதறி யாவகை நின்று மயங்கின
வேதறி யாவணம் நின்றனன் எம்மிறை
சூதறி வாருச்சி சூடிநின் றாரே.

(ப. இ .) புள்ளினங்களென்று சொல்லப்படும் ஆருயிர்கள் செவ்வியாகியபோது அறியாது புலம்பின. திருவருளாற்றலாம் மாதினை யறியாது நின்று மயங்குவவாயின. வேறுபிரித்துக் காணமுடியாத நிலைமையாய் வேறறப் புணர்ந்து நின்றனன் சிவன். அவன் திருவடி
யுணர்வால் இச் சூழ்ச்சி உண்மையினை உணர்வோர் அப் பெருமானின் திருவடியைச் சூடிப் பேரின்பம் உற்றுத் திகழ்வராயினர்.

புள்ளினம் - ஆன்மாக்கள். மாது - சத்தி. வேறு - வேறுபாடு. சூது - சூழ்ச்சி.

# 2181. கருத்தறிந் தொன்பது கண்டமும் ஆங்கே

2181. கருத்தறிந் தொன்பது கண்டமும் ஆங்கே
பொருத்தறிந் தோன்புவ னாபதி நாடித்
திருத்தறிந் தேன்மிகு தேவர் பிரானை
வருத்தறிந் தேன்மன மன்னிநின் றானே.

திருவருட் கருத்தை உணர்ந்து மூலமுதல் உச்சி யீறாகச் சொல்லப்படும் நிலைகள் ஆறும், ஞாயிறு, திங்கள், தீ என்னும் மண்டலம் மூன்றும் ஆகிய ஒன்பதும் கண்டம் எனக் கூறப்படுகின்றன. இவற்றை அகத்தே பொருத்தியமைத்த பொருவில் பெரும்பொருள் யாதென ஆராய்வோன் சிவபெருமான் என்று அருளால் அறிவன். அறிந்ததும் அனைத்துலகினுக்கும் முழுமுதலாய்த் திகழும் விழுப்பொருட் சிவன், புவனாபதியாவன் என்பதும் உணரவரும். அவனை அடியேன் திருந்தும் வண்ணம் அறிவேனாயினேன். அவனை யறிந்ததும் அவனே அனைத்துத் தேவர்கட்கும் முழுமுதல்வன் எனவும் உணர்ந்தேன். அதனால் அவனைத் தேவர்பிரானென்று அழைத்தேன். அந் நிலையில் முயற்சி வருத்தத்தை நாடாது நற்றவம் முயன்றேன். அச் சிவபெருமானும் சிறப்புடன் அடியேன்பால் நின்று நிலைத்து அருளினன்.

திருத்து - நன்றாக. வருத்தறிந்தேன் - தவத்தால் உடலை வாட்டிப் பின் அறிந்தேன்.

## 2182. ஆன விளக்கொளி தூண்டு மவனென்னத்

2182. ஆன விளக்கொளி தூண்டு மவனென்னத்
தான விளக்கொளி யாமூல சாதனத்
தான விதிமூலத் தானத்தில் அவ்விளக்கு
ஏனை மதிமண்ட லங்கொண் டெரியுமே.

விளக்குந் தன்மைத்தான திருவிளக்கின் ஒளியினைத் தூண்டுவோன் ஒருவன் உளனாவதுபோன்று ஆருயிரின் அறிவினை விளக்கும் இயற்கை அறிவுப்பொருளாவான் ஒருவன் வேண்டும். அவன் சிவபெருமானாவன். விளக்குத் தூண்டுவோரின்றியும் எரியுமன்றோ எனின்? எண்ணெய் திரி இவற்றுள் ஏதுங் குறைவிலாத இடத்துத் தூண்டுவோரின்றியும் எரியும் ஆயினும் எரியும் அவ் விளக்கு, திரியினைத் தானே தூண்டிக்கொள்ள மாட்டாது. அதனால் தீ திரியினைப்பற்றி எரிந்துகொண்டு உட்செல்லும். திரி எண்ணெயின் மேலிருந்தால் எரிந்துகொண்டிருக்கும். உட்புகுந்தால் அணைந்துவிடும். எண்ணெயும் திரியும் குறைவுற்றாலும் விளக்கு அணைந்துவிடும். ஆகவே எந்நிலையினும் திருவிளக்கினுக்குத் தூண்டுவோன் ஒருவன் வேண்டும். ஈண்டுத் தூண்டுவோன் விளக்கை வாடாது காப்போன். அதுபோல் விளக்க விளங்கும் அறிவினையுடைய ஆருயிர்க்கு விளக்கும் பேரறிவுப் பொருளாம் சிவபெருமான் என்றும் இன்றியமையாது வேண்டப்படுவன் ஆவன். அறிவினை விளக்கும் முதற்கருவியாகிய துணைகளைக் கொண்டு மூலத்திடத்து அவ் விளக்கினை ஏற்றுதல்வேண்டும். ஏற்றவே அது புருவநடுவாகிய மதிமண்டலத்தை ஒளியிடமாகக் கொண்டு

விளங்கும்.

சாதனம் - துணை. ஏற்றுதல், உயிர்ப்புப் பயிற்சியால் ஒளி விளங்கச்செய்தல். எரிதல் - விளங்குதல்.

## 2183. உண்ணாடும் ஐவர்க்கு மண்ணடை யொதுங்கிய

2183. உண்ணாடும் ஐவர்க்கு மண்ணடை யொதுங்கிய
விண்ணாட நின்ற வெளியை வினவுறில்
அண்ணாந்து பார்த்தைவர் கூடிய சந்தியிற்
கண்ணாடி காணுங் கருத்ததென் றானே.

புறநாட்டமின்றி அகநாட்டமாய்த் தொழிற்படும் செவி மெய் கண் வாய் மூக்கு என்னும் அறிதற்புலன்கள் ஐந்தும் உச்சித் தொளைவரை நாடும். அங்ஙனம் நாடுதற்குரிய இடமாகிய வெளி அருள் வெளி எனப்படும். அவ் வெளியினை வினவி அண்ணாந்து நோக்கின் ஐம்பொறியும் ஒடுகிய கடந்தநிலை தோன்றும். இந் நிலையே நினைப்பு மறப்பற்ற திளைப்புநிலை. இதனையே அருட்கண்ணை நாடி அதன் வாயிலாகப் பொருட்பேற்றினை எய்துதல் என்ப. இதுவே நற்றவஞ் சார்வார் கருத்தென்று நாடினர். இவ் வுண்மை வரும் சேக்கிழாரடிகள் அருள்மொழியான் உணரலாம்:

"ஐந்துபேர் அறிவுங் கண்களே கொள்ள
அளப்பருங் கரணங்கள் நான்கும்
சிந்தையே யாகக் குணமொரு மூன்றும்
திருந்துசாத் துவிகமே யாக
இந்துவாழ் சடையான் ஆடுமா னந்த
எல்லையில் தனிப்பெருங் கூத்தின்
வந்தபே ரின்ப வெள்ளத்துள் திளைத்து
மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்."

(12. தடுத்தாட் - 106.)

கேட்டல், நாடல், தெளிதல், திளைத்தல் ஆகிய நான்கனுள் இது திளைத்தல் எனப்படும்.

ஐவர் - பொறிகள் ஐந்து. வெளி - சிவம். ஐவர் கூடிய சந்தி - ஐம்பொறி வழிகளும் கூடும் இடம். கண் நாடி - உள்நோக்கி.

## 2184. அறியாத வற்றை அறிவான் அறிவான்

2184. அறியாத வற்றை அறிவான் அறிவான்
அறிவான் அறியாதான் தன்னறி வாகான்
அறியா தவத்தை அறிவானைக் கூட்டி
அறியா தறிவானை யாரறி வாரே.

தன்னறிவால் சுட்டி யுணரப்படாததாய தூயமாயை முதலியவற்றைத் திருவருட் கண்ணால் காண்பவனே தெளிந்த அறிவுடையவனாவன். அவற்றைத் தன்னறிவான் அறியலுறுவான் அறியாதவனாவன். அறிவான் ஆகான் என ஓதினர். அறிவு விளங்காது புலம்புற்றிருந்த ஆருயிரை மாயாகாரியங்களைக் கூட்டி ஐம்பாடுகளிற் செலுத்தி மறைந்துநின்று அறிவித்துவரும் அவ் வருளுடையானை அவன் திருவருள் துணையின்றி எவர்தாம் அறிவர்! இப்பாடு கீழ்ப்பாடு என்ப. பாடு - அவத்தை.

தன்னறிவு - ஆன்மஞானம்.

## 2185. துரிய தரிசனஞ் சொற்றோம் வியோமம்

2185. துரிய தரிசனஞ் சொற்றோம் வியோமம்
அரியன தூடண மந்நன வாதி
பெரியன கால பரம்பிற் றுரியம்
அரிய அதீதம் அதீதத்த தாமே.

துரியம் எனப்படும் புரிவுக்காட்சி பேரறிவுப் பெருவெளியைக் காண்பதெனக் கூறினாம். வியோமம் - அறிவுவெளி சொல்லப்படும் நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் முதலியன தடையெனக் கழித்து நன்னடைக்குக் கொண்டுவர வேண்டியதொன்று. புரிவு - சுத்தம். காலங்கடந்த எங்கும் பரம்பிய பெரியனவாகிய புரிவு அருமைசேர் அப்பாலதாகும். அதீதம் - அப்பால். ஆருயிர் அப்பால் நிலையாகிய அந் நிலையினில் நிலைபெறும்.

## 2186. மாயையிற் சேதனன் மன்னும் பகுதியோன்

2186. மாயையிற் சேதனன் மன்னும் பகுதியோன்
மாயையின் மற்றது நீவுதன் மாயையாங்
கேவல மாகுஞ் சகலமா யோனியுள்
தோயும் மனிதர் துரியத்துட் சீவனே.

சேதனனாகிய அறிவுடைய ஆருயிர் மாயையிற் பொருந்தி மூலப்பகுதியோனாவன். திருவருள் மாயையைக் கூட்டுவிப்பது மாயையில் நிலைப்பிப்பதற்காகவன்று. மாயையைக்கூட்டி மலத்தை வாட்டி அம் மலத்துடன் கூட்டி அம் மாயையினையும் ஒருங்கு நீக்குவிப்பதற்கேயாம். உடம்பு உறையுள் முதலியவற்றின்கண்ணுள்ள அழுக்கைப் போக்கத் தூய தண்ணீரைவிட்டு அவ்வழுக்குடன் அத் தண்ணீரையும் சேர்த்து நீக்குவது இதற்கு ஒப்பாகும். மாயையுடன் கூடாத நிலையைப் புலம்பென்றும், கூடிய நிலையைப் புணர்வு என்றும், நீவுதலாகிய அகற்றும் நிலையினைப் புரிவு - என்றும் கூறுப. புலம்பு - கேவலம். புணர்வு - சகலம். புரிவு - சுத்தம்; துரியம். நால்வகைத் தோற்றத்து எண்பத்துநான்கு நூறாயிர வேறுபாட்டுப் பிறப்பினுள் பிறப்பது புணர்ப்பாகும். துரியமாகிய புரிவின்கண் ஆருயிர் அருள் நிலைக்களத்துத் தங்குதல் புரியும்.

சேதனன் - ஆன்மா. நீவுதல் - ஒழித்தல்.
கேவல சகல சுத்தம்(புலம்பு புணர்வு புரிவு)

## 2187. தன்னை யறியத்தன் றற்கேவ லன்றானும்

2187. தன்னை யறியத்தன் றற்கேவ லன்றானும்
பின்ன முறநின்ற பேத சகலனும்
மன்னிய சத்தசத் துச்சத சத்துடன்
துன்னுவர் தத்தந் தொழிற்கள வாகவே.

திருவருட்டுணையால் ஆருயிர் தன்னையறியும் அப்பொழுது அவன் புரிவி எனப் பெயர்பெறுவன். புரிவு - சுத்தன். இத்தகைய அறிவு பெறாதநிலையில் அவன் புலம்பி எனப் பெயர் பெறுவன். புலம்பி - கேவலன். அவன் புலம்பியினின்றும் நீங்கிப் புரிவி ஆதற் பொருட்டு ஆதியாகிய நடப்பாற்றல் உடல் கலன் உலகு உணா எனும் நான்கினை மாயையாக்கமாகப் படைத்தளிக்கின்றது. இவற்றுடன் கலந்த ஆருயிர் புணர்வி எனப் பெயர்பெறுவன். புணர்வி - சகலன். பின்னமுற நிற்றல் என்பது முன் நிலையாகிய புலம்பினும் மேலதாய், முழுநிலையாகிய புரிவினும் கீழதாய் வேறுபட நிற்றல், பேதம் என்பது நிலைப்பும் அறிவும் இல்லாத மாயாகாரியப் பொருள்களும் அல்லாமல் நிலைப்பும் அறிவுமுள்ள தூய சிவனும் அல்லாமல் சார்ந்ததன் தன்மைத்தாய் நிற்றல். நிலைபெற்ற அறிவுப்பொருள் சத்து. நிலையிலா அறிவில் பொருள் அசத்து. இரண்டன்பாலும் ஆருயிர்க்கு ஒட்டியிருப்பதால் அது சதசத்தாகும். இந் நிலை ஆருயிர்களின் தொழிற்கேற்ப வாய்ந்த நிலைகளாகும்.

இவற்றை ஓர் ஒப்பில் வைத்துக் காணுங்கால், படியாமலிருப்பது புலம்புநிலை. படிப்பது புணர்வுநிலை. பாட்டாகத் தான் திகழ்வது புரிவுநிலை. அப் பாட்டினை

நினைப்பது மெய். மறப்பது பொய். மெய் - நிலைப்பது; சத்து. பொய் - நிலையாதது; அசத்து. நிலைப்பது: என்றும் ஒருபடித்தா யிருப்பது. நிலையாதது: தோன்றி மறைவது. ஆருயிர் நினைப்பு மறப்பு இரண்டின் பாலும் நிற்பதால் நிற்பி எனக் கூறலாம். நிற்பி எனினும் சார்பி எனினும் ஒன்றே. அதுவே சதசத்து. இதனை ஒரு வெண்பாவினால் நினைவுகூரத் தருகின்றாம்:

பாட்டுப் படியாமை யேபடித்தல் பாட்டாதல்
பூட்டும் புலம்புபுணர்ப் பேபுரிவு - நாட்டும்
நினைப்புச்சத் தாகும் நிகழ்மறப்ப சத்தாம்
தனைச்சதசத் தாயெண்ணல் சார்பு.

பின்னம் - வேறு. துன்னுவர் - கூடுவர்.

## 2188. தானே தனக்குப் பகைவனும் நட்டானுந்

2188. தானே தனக்குப் பகைவனும் நட்டானுந்
தானே தனக்கு மறுமையும் இம்மையுந்
தானே தான்செய்த வினைப்பயன் துய்ப்பானுந்
தானே தனக்குத் தலைவனு மாமே.

இன்பத்தைச் செய்வது உறவு எனவும், துன்பத்தைச் செய்வது பகை எனவும் கூறுவது வழக்கு. ஆனால் அவற்றைச் செய்விக்குமாறு வினைமுதலாக நிற்பது செய்வதன்று; செயற்படுவதன் முன்னைச் செயலாம் இருவினையே இதனை ஓர் ஒப்பில் காண்பாம்: படித்தவர் பரிசுபெற்று இன்புறுவர். படியாதவர் துரிசுபெற்றுத் துன்புறுவர். இத் துன்ப இன்பங்கள் அவரவர்தம் படியாமை படித்தலாகிய செயல்களால் விளைந்தன. அவற்றைக் கூட்டுவோர் ஏனை மாணவர். கூட்டுவிப்போர் ஆசிரியர். எனவே செய்தார்செயல் வினைமுதலாகவும் செய்தார் பயனை ஏற்போராகவும், செயப்பட்டார் விளைநிலமாகவும்,1 சேர்ப்பார் கருவியாகவும் சேர்ப்பிப்பார் முழுமுதல்வராகவும் விளங்குவர். இது வரும் சேக்கிழாரடிகள் மொழியானுணர்க:

"செய்வினையும் செய்வானும் அதன்பயனும் சேர்ப்பானும்
மெய்வகையால் நான்காகும் விதித்தபொருள் எனக்கொண்டே
இவ்வியல்பு சைவநெறி யல்லவற்றிற் கில்லையென
உய்வகையாற் பொருள்சிவனென் றருளாலே உணர்ந்தறிந்தார்."

(12. சாக்கியநாயனார், 5.)

'நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம்' என்னும் செந்தமிழ்ப் பொதுமறையின்படி நோக்கினால் தானே தனக்குப் பகைவனும் நண்பனும் ஆவன். அஃதாவது ஒருவன் முன்பு செய்த தீவினையால் துன்பப்படுகின்றான். ஆனால் அவன் தான் முன்பு செய்த தீவினைப்பயன் தனக்கு வந்ததென்று உணர்வதில்லை. அப் பயன் வருவதற்குக் கருவியாக இருந்தவர்களையே காரணர்களாகக்கொண்டு வருந்துகின்றான்; பகைக்கின்றான். உண்மையாக நோக்கினால் தானேதான் தனக்குப் பகை என்பது புலனாகாதிராது. இதுபோலவேதான் இன்பத்திலும் இவ்வுண்மை 'பெரியாரைப் பேணாதொழுகின் பெரியாரால் பேரா இடும்பை தரும்' (812) என்னும் செந்தமிழ்ப் பொதுமறையான் நன்குணரலாம். இதன்கண் பேணா ஒழுக்கம் வினைமுதலாகவும் பெரியார் கருவியாகவும் நிற்பது காண்க. செய்வினைக்கு ஏற்ப மறுமை உலகங்களில் இன்பத் துன்பங்களை எய்துதல் மறவாநினைவுடன் ஆதலின் அந் நினைவு தன் பொருட்டாகும். மீண்டும் பிறந்து ஈண்டு நுகர்தல் நுகர்வோர்க்கு நினைவின்றேனும் காண்போர்க்கு நினைவுறுத்தலின் அவர் கூறும் வாயிலாக நுகர்வோர்க்கும் உய்த்துணர்வு வருதலின் இருவர் பொருட்டுமாகும். அவர் கூறுவதாவது: முன்பு என்ன புண்ணியம் செய்தனனோ இன்புறுகின்றனன் எனவும், என்ன பாவம் செய்தனனோ துன்புறுகின்றனன் எனவும் உலகுணரக் கூறுவதாம். அதனால் தனக்கு மறுமையும் இம்மையும் தானே என ஓதினர். தான் செய்த வினைப்பயனைத் தன்னுடல் நுகராது2 தானே நுகர்தல் வேண்டும். பிறர்க்கும் போகாது. பிறவாற்றாலும் கழியாது.

அதனால் துய்ப்பவனும் தானே எனப்பட்டது. அத் துய்ப்பினை அமைத்துக் கொண்டோனும் தானேயாதலால் தனக்குத் தலைவன் தானேஎன ஓதினர். தலைமை, வினைச்சிறப்பாலாம்.

## 2189. பாசம தாகும் பழமலம் பற்றற

2189. பாசம தாகும் பழமலம் பற்றற
நேசம தாய்நின்ற வாறாது நிங்கிடக்
காசமி லாத குணங்கே வலசுத்தம்
ஆசற நிற்ற லதுசுத்த சைவமே.

பண்டே புல்லிய பழமலம் பாசம் எனப்படும். அதன்கண்ணுள்ள பற்று நீங்குதற்பொருட்டு இடைசேர் மலமாகப் பொருந்திய மெய்கள் முப்பத்தாறு. இம் முப்பத்தாறு மெய்களிடத்தும் ஆருயிர்கள் அன்பு பூண்டு நின்றன. இம் முப்பத்தாறன் உண்மையினைத் திரு வருளால் உணர்ந்து நீங்குதல் வேண்டும். நீங்குதல் என்பது இவை நமக்குத் துச்சில் போன்று துணைக்கருவியே அன்றி நிலைப்பொருள் அல்லவென்றுணர்தல். அப்படி நீங்கிய அளவில் குற்றமற்ற குணத்தனி நிலையாகும். தனிநிலை - கேவலம். தூய நிலை அல்லது புரிவு மலமாயை கன்மங்களின் குற்றம் முற்றும் அறுதல். அறவே மாசற்று நிற்கும் நிலை சுத்தநிலை. இங்ஙனம் கூறுவது இயற்கை உண்மைச் சைவம். இயற்கை உண்மைச்சைவம் எனினும் சுத்தசைவம் எனினும் ஒன்றே.

## 2190. ஆமுயிர் கேவல மாமாயை இன்னடந்து

2190. ஆமுயிர் கேவல மாமாயை இன்னடந்து
ஆமுயிர் மாயை எறிப்ப அறிவுற்றுக்
காமிய மாயேய முங்கல வாநிற்பத்
தாமுறு பாசஞ் சகலத்த தாகுமே.

புலம்புநிலையிற் கிடந்த வுயிர் மாமாயையின்கண் உறையும். அவ் வுயிர் பின் முப்பத்தாறு மெய்களுடனும் கூடும். இம் மெய்களுடன் கூடியதும் 'மாயா தானுவிளக்காம்' என்ற முறைப்படி சிறிது அறிவு விளங்கும். அதனால் காமியமாகிய வினைகளும் மாயேயமாகிய கருவிகளும் உயிருடன் பொருந்தித் தொழிற்படும். இந் நிலையில் அவ்வுயிர் அக் கருவிகளினிடத்துப் பற்றுக் கொள்ளும். இந் நிலை புணர்வு நிலை என்ப. புணர்வு - சகலம்.

எறிப்ப - விளக்க.

# 2191. சகல அவத்தையிற் சார்ந்தோர் சகலர்

2191. சகல அவத்தையிற் சார்ந்தோர் சகலர்
புகலு மலமூ வகையும் புணர்ந்தோர்
நிகரின் மலரோன்மால் நீடுபல் தேவர்கள்
நிகழ்நரர் கீட மந்தமு மாகுமே.

கருவிகளுடன் கூடிய புணர்வுநிலையிற் சார்ந்தோர் புணர்வினராவர். புணர்வினரெனினும் சகலர் எனினும் ஒன்றே. இவர்கள் மும்மலப்பிணிப்பினர். மும்மலமாவது ஆணவம், கன்மம், மாயை என்பன. மும்மலப்பிணிப்புடையார் யாவரெனின்? ஒப்பில்லாத அயன், மால் பல தேவர்கள், இவ்வுலகில் வாழும் மக்கள் முதலாகப் புழு ஈறாகச் சொல்லப்படும் அனைத்துயிர்களும் என்க. புழுவுக்குரிய குணங்கள் நான்கு. அவை அருந்தல் பொருந்தல் அனந்தல் அச்சம் என்பன. இவற்றை உண்டல் உடனுறைதல் உறங்கல் உட்குதல் எனவும் கூறுப. உட்குதல் - இறப்பு நேருமே என்று அஞ்சுதல். இந் நான்கு குணங்களும் மால் உள்ளிட்ட தேவர்களுக்கும் உளவாயின் அத் தேவர் எவ்வகையில் உயர்ந்தோராவர்? அவர் வாழ்வு எங்ஙனம் உயர்ந்ததாகும்? சிவனெறி கல்லார் அவர் வயப்பட்டு அவநெறி செல்வர். அனந்தல் - உறங்கல்.

## 2192. தாவிய மாயையில் தங்கும் பிரளய

2192. தாவிய மாயையில் தங்கும் பிரளய
மேவிய மற்ற துடம்பாய்மிக் குள்ளன
ஓவல் இலக்கணர் ஒன்றிய சீகண்டர்
ஆவிய னூற்றெட் டுருத்திர ராகுமே.

தூவாமாயை கடந்த தூமாயை தாவியமாயை எனப்பட்டது. அம் மாயையினால் உடல்பெற்று அம் மாயையின்கண் உறைவோர் இருமலத்தாராவர். இவர்கள் இயல்பிலே இருமலத்தாரும் ஊழி முடிபாகிய பிரளயத்தில் திருவருளால் ஒருமலம் நீங்கிய இருமலத்தாரும் என இருவகையினராவர். ஒருமலமாகிய மாயை அகன்ற தன்மையர். மாயை அகன்ற தன்மை என்பது மயக்காது விளக்கும் மாயையினை உடையவர் என்பதாம். இது, பொலமுறும் வீடகன்று நலமுறும் வீட்டில் உறைவது போன்றதாகும். இங்குள்ளார் சீகண்டவுருத்திரர், நூற்றெட்டு உருத்திரர் முதலியோராவர். இச் சீகண்டவுருத்திரரே தமிழாகமமாகிய மெய்கண்ட நூற்களின் முதல்வராவர். இவர்கள் தூமாயையின்கண் ஆசான் மெய்யின் அடிப்பகுதியிலுறைவோராவர். இருமலம் : ஆணவம் கன்மம்.

தாவிய மாயை - சுத்த மாயை.

# 2193. ஆகின்ற கேவலத் தாணவத் தானவர்

2193. ஆகின்ற கேவலத் தாணவத் தானவர்
ஆகின்ற வித்தேச ராமனந் தாதியர்
ஆகின்ற எண்மர் எழுகோடி மந்திரர்
ஆகின்ற ஈசர் அநேகரு மாகுமே.

புலம்புநிலையினைச் செய்யும் ஆணவம்மட்டும் உடையார் ஒருமலத்தர். இவரை விஞ்ஞானாகலர் என்ப. இந் நிலையினையுடையார் அட்டவித்தேசரெனவும் கூறப்படுவர். இவர்கள் அனந்தர் முதல் எண்மராவர். எழுகோடி மந்திரமுதல்வர் முதல் பலராவர். வித்தை என்பது திருவடியுணர்வு என்பதாகும். வித்தியேசுரர் என்பது வித்தேசர் என நின்றது. இவர்கள் ஆண்டான் மெய்யின்கண் உறைவோராவர்.

மும்மலங்களும் முப்பத்தொரு மெய்களும் தொழிற்படுமாறு ஆவியின் அறிவைச் சுட்டறிவாக விளக்கிநிற்கும் 'அப்பாலாக்கல் முதல் நீக்கல்' ஈறாகக் கூறப்படும் ஐங்கலைகளுடன் கூடி நிற்பவர் மும்மலத்தர் - சகலர். கலர், கலைகளோடு கூடியவர். ச என்னும் வடமொழி இடைச்சொல் கலைகள் தம் மியல்பிற் குறையாது தொழிற்படுதலை யுணர்த்தும்.

சிவகுருவினருளால் உன்முகத்தே நோக்கும் ஆவியினோர் சிவனுகர்வு பெறுவர். அந் நுகர்வால் மருள்நீங்கும் மருள் நீங்கவே மாயை அகலும். மாயை அகலவே அவர் வினையும் மலமும் என்று சொல்லப்படும் இரு மலத்தோடு கூடிநிற்பர். ஆவயின் ஐங்கலைகள் ஆருயிர்க் கிழவர்கட்குள்ள அறிவு எதிர்முகத்தும் சுட்டற விளங்கும்படி

அவரோடு கூடி விளக்கி நிற்கும். அந் நிலையில் அவர் இருமலத்தர் - பிரளயாகலரெனப்படுவர். பிரளயம் - ஒடுக்கம். பிர என்பது அத் தொழின் முற்றும் ஒடுங்குதலை யுணர்த்தும்.

நனவில் உறக்கப்பாடு நிலையினை எய்தினவர் (நனவிற் சுழுத்தி) அச் சிவனுகர்வால் ஊழை வெல்லுவர். அஃதாவது ஊழான் வரும் நுகர்வுகளால் மொத்துணார். அவ் வூழ் உடலூழாகக் கழியும் அகப்புறக் கலன்களாகிய அந்தக் கரணங்களுடனும் கூடார். கூடாராகவே கன்மமலம் நீங்கும். நீங்கவே ஏனை ஒரு மலமாத்திரமுடையராவர். ஆகவே அனைத்தையும் சுட்டியும் சுட்டாதாகிச் சிவவுருவாய்த் தெளிந்து நிற்கும்வண்ணம் அவர்தம் அறிவைப் பேரறிவாய் விளங்கும்படி விளக்கி நிற்கும் ஐங்கலைகளோடும் கூடிநிற்பர். அந் நிலையிற் பேரறிவினர் - எனப்படுவர். பேரறிவினர் - விஞ்ஞானாகலர். விஞ்ஞானாகலர் - ஒருமலத்தர்.

இவற்றை வரும் வெண்பாவால் நினைவுகூர்க :

"மும்மலத்தால் ஐங்கலைகள் முற்றுவிக்கும் சுட்டறிவாம்
அம்ம அவர்சகலர் ஆசானால் - அம்மைச்
சிவனுகர்வால் ஐங்கலைகள் சேரொடுக்கம் கன்மில்
சிவவறிவாய் ஆக்கமலத் தீர்வு."

(அ. சி) கேவலத்து ஆணவத்தானவர் - ஆணவமலம் மாத்திரம் உள்ள விஞ்ஞானாகலர்.

## 2194. ஆமவ ரிற்சிவ னாரருள் பெற்றுளோர்

2194. ஆமவ ரிற்சிவ னாரருள் பெற்றுளோர்
போமலந் தன்னாற் புகழ்விந்து நாதம்விட்டு
ஓமய மாகி யொடுங்கலி னின்மலந்
தோமறு சுத்தா வவத்தைத் தொழிலே.

மேலோதிய தூமாயைக்கண் உறைவோர் சிவனருளாற் செவ்விவாய்த்து அவ் வொருமலம் அகன்று உயர்ந்தோரும் சிலர் ஆவர். அத்தகையோர் விந்துவாகிய ஒளியினையும், நாதமாகிய ஒலியினையும் விட்டகல்வர். இவ் விருமெய்களும் எல்லாரானும் புகழப்படுவனவாகும். இவ் விரு மெய்யினையும் விட்டோர் ஓமொழியுருவினராவர். அவ் வுருவின்கண் அடங்கிநிற்பர். அடங்குவதென்பது முனைப்பற்றுத் திருவருள் திருக்குறிப்பின்வழி ஒழுகுவது. இங்ஙனம் ஒழுகுவதனால் அவர் தூயோராவர். இதனையே குற்றம் நீங்கிய தூநிலைத் தொழிலென்பர். தூநிலை - சுத்தாவத்தை.

ஓமயமாகி - பிரணவ வழிவாகி.

## 2195. ஓரினு மூவகை நால்வகை யும்முள

2195. ஓரினு மூவகை நால்வகை யும்முள
தேரி லிவைகே வலமாயை சேரிச்சை
சாரிய லாயவை தாமே தணப்பவை
வாரிவைத் தீசன் மலமறுத் தானே.

புலம்புநிலையாகிய கேவலநிலை மூவகை என்ப. அவை புலம்பிற் புலம்பு, புணர்விற் புலம்பு, புரிவிற் புலம்பு என்பன. இவற்றைக் கேவல கேவலம், சகல கேவலம், சுத்த கேவலம் எனவும் கூறுப. இவையேயன்றி அவை நான்கு வகையாகக் கூறுப்படுவதுமுண்டு. அவை வருமாறு : இருட்புலம்பு, மருட்புலம்பு, தெருட்புலம்பு, அருட்புலம்பு என்பன. இவற்றின் விளக்கத்தைத் துகளறு போத முதலிய நூற்களுட் காண்க. ஆராயுமிடத்து இவையனைத்தும் புலம்புநிலையேயாகும். மாயையைச் சேர்ந்தபின்னரே ஆருயிர்க்கு உவப்பாகிய விழைவு விளக்க முறும். விளக்கமுறவே சாரியலாகிய அம் மாயை தாமே அகலும். அகலவே சிவபெருமான் தன் திருவருட் பெருங்கடலை ஆருயிர்க்குச் செவ்வி நோக்கி நிறைவித்து மலமறுத்தருளினன். உவப்பு - இச்சை; அராகம். செவ்வி - பருவம்.

மூவகை நால்வகை - கேவல அவத்தை மூன்றே அன்றி நான்கு வகைகளும் உண்டு.

## 2196. பொய்யான போதாந்தம் ஆறாறும் விட்டகன்று

2196. பொய்யான போதாந்தம் ஆறாறும் விட்டகன்று
எய்யாமை நீங்கவே எய்தவன் தானாகி
மெய்யாஞ் சராசர மாய்வெளி தன்னுட்புக்கு
எய்தாம லெய்துஞ்சுத் தாவத்தை யென்பதே.

நிலைபேறில்லாத மண்முதல் அறிவின் முதல்துணையாகிய ஒலிமெய் ஈறாகக் கூறப்பட்ட முப்பத்தாறு மெய்களும் அருளால் உண்மையுணர்ந்து கருத்தினில் விட்டகலுதல் வேண்டும். அகலவே இவரியலாகிய ஆணவ விளைவாம் அறியாமை நீங்கும். நீங்கவே அவ் வுயிர் சிவபெருமான் திருவடியினை எய்தத் தகுதியாகும். அப்பொழுது இயங்குதிணையுயிர் நிலைத்திணைஉயிர் உலகம் எல்லாவற்றுடனும் கலப்பால் பிரிப்பின்றி ஒன்றாய் நிற்கும் சிவன் தன்னுள் அவ் வுயிர் புகுமாறு அருள்வெளியினை அறிவித்தருள்வன். அந் நிலையினை ஆருயிர்கள் தம்முனைப்பற்றமையால் எவ்வாறு எய்தினோம் என்று அறிய வாராதவாறு எளிதாக எய்தும். இதுவே புரிவாகிய தூயநிலை யென்ப. தூயநிலை - சுத்தாவத்தை.

எய்யாமை - அறியாமை. எய்தவன் - முயற்சித்தவன். வெள் - சிவ ஆகாயம்.

## 2197. அனாதி பசுவியாத்தி யாகு மிவனை

2197. அனாதி பசுவியாத்தி யாகு மிவனை
அனாதியில் வந்த மலம்ஐந்தால் ஆட்டி
அனாதியிற் கேவல மச்சக லத்திட்டு
அனாதி பிறப்பறச் சுத்தத்து ளாமே.

தொன்மைக்கண் ஆருயிர் இவர்நிலையாம் ஆணவப் பிணிப்பால் அவ் வாணவச் செறிவினுள் அடங்கிக் கிடந்தன. இவர்நிலை - செறிவுநிலை. அடங்கிக்கிடப்பது - வியாத்தி. அத்தகைய ஆருயிரைத் தொன்று தொட்டுப் பிணித்துள்ள ஐவகை மலங்களாற் சிவபெருமான் ஆட்டிவைக்கின்றனன். அவ் வாட்டுதலின் பொருட்டு அவ் வுயிரைப் புலம்பு நிலையினின்றும் புணர்வு நிலையிற் புகுத்தருளுகின்றனன். அவ் வுயிர் சிவபெருமானின் திருக்குறிப்பின்வழி ஒழுகின் அந் நன்மையின் தன்மையால், தொன்மைப் பிறப்பறும். அறவே அவ் வுயிர் தூய நிலையினை எய்தும். தொன்மை - அனாதி.

வியாத்தி ஆகும் - உள்ளடங்கி இருக்கும் ஆட்டி - அலக்கழித்து. கேவலம் அச் சகலம் - கேவல நிலையிலும் சகல நிலையிலும்.

## 2198. அந்தரஞ் சுத்தாவத் தைகே வலத்தாறு

2198. அந்தரஞ் சுத்தாவத் தைகே வலத்தாறு
தந்தோர்தஞ் சுத்தகே வலத்தற்ற தற்பரத்
தின்பால் துரியத் திடையே யறிவுறத்
தன்பால் தனையறி தத்துவந்தா னாமே.

இந் நிலையில் எய்தும் தூயநிலைக்கு வழியாகவுள்ளது சேய தீய நிலையாகிய புலம்புநிலையாகும். சேய - தொன்மையாகிய. இந் நிலையினைக் கூட்டுவித்து உடனாய் நிற்கும் தற்பரன் சிவன். அவனருளால் மலம் அறும். அறவே சிவபெருமானிடத்துப் பேருறக்க நிலைப் பெற்றியினை ஆருயிர் எய்தும். அந் நிலைக்கண் ஆருயிர் 'தன்மையுடைய தன்னுணர்வால் தன்னையறியும்.' அறியவே தான் மெய்ப்பொருட்கு அடிமையாய் மெய்ச்சார்பினனாகத் திகழும். தத்துவம் - மெய்; நிலைபேறு;

ஆறு - மூலம், வழி. தன்பால் தனையறி - தனக்குள்ளே தன்னை அறியும்.

## 2199. ஐயைந் தொடுங்கும் ஆன்மாவில் ஆன்மாவும்

2199. ஐயைந் தொடுங்கும் ஆன்மாவில் ஆன்மாவும்
மெய்கண்டு சுத்த அவத்தையில் வீடாகுந்
துய்யவவ் வித்தை முதன்மூன்றுந் தொல்சத்தி
ஐய சிவஞ்சித்தி யாந்தோற்ற மவ்வாறே.

உடன்மெய் இருபத்து நான்குடன் ஆளுங்கூழி ஆருயிரில் ஒடுங்கும். அஃதாவது, அம் மெய்கட்கு முதல்வராகக் காணப்படும் சீகண்ட அரனால் ஒடுக்கப்படும் என்பதாம். ஆன்மா என்று சொல்லப்படும் உணர்வு மெய் ஆறும் அழிவிலானாகிய அனந்தரால் ஒடுக்கப்படும். உணர்த்துமெய் ஐந்தனுள் ஆசான், ஆண்டான், அருளோன் ஆகிய மூன்றும் தொல் சத்தி என்னும் ஒடுக்கநிலைச் சிவனால் ஒடுக்கப்படும். அன்னைமெய் முதன்மைச் சிவனால் ஒடுக்கப்படும். அத்தன்மெய் அச் சிவனாகவே நிற்கும். ஐயசிவன் - சுத்த சிவன்; முதன்மைச் சிவன். தொல்சத்தி : வனப்பாற்றல்; அன்னை. மீண்டும் தோன்றுங்கால் இம் முறையே தோன்றும். இருபத்தைந்து மெய்களும் திருவருளால் உண்மைகண்ட தூயநிலையில் விட்டு நீங்கும்.

வித்தை முதல் மூன்று - சுத்த வித்தை. ஈசுரம், சாதாக்கியம் ஆகிய மூன்று தத்துவங்கள். சிவம் சத்தியாம் - சத்தி, சிவம் ஆகிய இரண்டு தத்துவங்கள்.

## 2200. ஐயைந்து மான்மாவில் ஆறோ டடங்கிடும்

2200. ஐயைந்து மான்மாவில் ஆறோ டடங்கிடும்
மெய்கண்ட மேன்மூன்று மேவுமெய் யோகத்தில்
கைகண்ட சத்தி சிவபாகத் தேகாண
எய்யும் படியடங் குந்நாலேழ் எய்தியே.

உடன்மெய் இருபத்தைந்தும் ஆருயிர் உணர்வில் உணர்வுமெய் யாறுடன் ஒடுங்கும். அவ் வுயிர் பயிலும் அகத்தவ முறையினால் ஆசான் ஆண்டான் அருளோன் என்னும் மூன்று மெய்களும் ஒடுங்கும். உடனாய் நின்று கைகண்ட துணைபுரியும் அன்னை அத்தன் பாகத்தேயாகும். உடன்மெய் இருபத்தைந்து, உணர்வுமெய் ஒன்று, மூன்று கூடிய ஒன்று, இரண்டு கூடிய ஒன்று ஆக நாலேழாகிய இருபத்தெட்டாகும். இவ்விருபத்தெட்டு என்னும் எண் 'ஆகின்ற தொண்ணூற்' (2139)றோடு என ஓதப்படும் திருப்பாட்டில் 'ஆகின்ற (2136) நாலேழ் வேதாந்தி' என வரும் திருக்குறிப்பினை ஒத்திருப்பது நோக்குக.

மேல் மூன்று - காயபரம், வியோமம், பரம்.

# 2201. ஆணவத் தாரொன் றறியாத கேவலர்

2201. ஆணவத் தாரொன் றறியாத கேவலர்
பேணிய மாயைப் பிரளயா கலராகுங்
காணும் உருவினர் காணாமை காண்பவே
பூணுஞ் சகலர்முப் பாசமும் புக்கோரே.

மெய்யுணர்வாற் கட்டற்றவர் எனப்படும் ஒருமலம் மட்டும் உடைய விஞ்ஞானாகலர் மாயையினை ஏதும் அறியாத தனி நிலையினர். இந் நிலையினை அருவநிலை எனலாம். தூமாயைத் தொடர்புடையார் இருமலக் கட்டுடையாராவர். இவர் பிரளயாகலர் எனப்படுவர். இவர் ஊழியாற் கட்டற்றவர். இந் நிலையினை அருவுருவ நிலை என்னலாம். மும்மலக் கட்டுடையார் (2193) சகலர் எனப்படுவர். இவர்கள் காணும் உருவினராவர். நிலையாமையுள்ள உலகினைக் காணாமை என்றனர். இவ் வுலகினைக் காண்பவர் முப்பாசமும் புக்கவராவர்.

காணும் உருவினர் - தூல சரீரமுடையவர்.

## 2202. ஆணவ மாகும் விஞ்ஞான கலருக்குப்

2202. ஆணவ மாகும் விஞ்ஞான கலருக்குப்
பேணிய மாயை பிரளயா கலருக்கே
ஆணவ மாயையுங் கன்ம மூன்றுமே
காணுஞ் சகலர்க்குக் காட்டு மலங்களே.

விஞ்ஞானாகலருக்குப் பிணிப்பு ஆணவம் ஒன்றேயாம். பிரளயாகலருக்கு ஆணவம் கன்மம் (தூமாயை) என்னும் இருமலப் பிணிப்பினராவர். மும்மலக்கட்டினராகிய சகலர்க்கு ஆணவம் கன்மம் தூவாமாயை என்னும் மும்மலப் பிணிப்புமுடையவராவர்.

## 2203. கேவலந் தன்னிற் கிளர்ந்தவிஞ் ஞாகலர்

2203. கேவலந் தன்னிற் கிளர்ந்தவிஞ் ஞாகலர்
கேவலந் தன்னிற் கிளர்விந்து சத்தியால்
ஆவயிற் கேவலத் தச்சக லத்தையும்
மேவிய மந்தி மாமாயை மெய்ம்மையே.

ஒருமலக் கட்டுடையார் தனிநிலையில் விளங்கிய விஞ்ஞானாகலராவர். அந் நிலையிற் றூண்டித் தொழிற்படுத்துவது அன்னை என்று சொல்லப்படும் விந்து சத்தியாகும். அந்நிலையில் அவ் வுயிர் உடல்முதலியவற்றையும் எய்தும். அவ் வுடல் மாமாயையில் தோன்றும் மந்திரவுடலாகும். மெய்ம்மை - உடலின் தன்மை. விஞ்ஞாகலர்: விஞ்ஞானாகலர் என்பதன் இடைக்குறை.

## 2204. மாயையின் மன்னும் பிரளயா கலர்வந்து

2204. மாயையின் மன்னும் பிரளயா கலர்வந்து
மாயையுந் தோன்றா வகைநிற்க ஆணவ
மாய சகலத்துக் காமிய மாமாயை
ஏயமன் னூற்றெட் டுருத்திரர் என்பவே.

இருமலக்கட்டினராகிய பிரளயாகலர்மாட்டு ஆணவமே மேலிட்டு நிற்பதால் ஏனைக் கன்மம் மாயைகள் உள்ளடங்கி நிற்கும். அதனால் அவை தோன்றாவகை நிற்க என ஓதினர். அவர் தமக்கு உடம்பும் தூமாயையினால் அமைந்ததாகும். எனவே அவர் இயற்றுங் கன்மங்களும் இருள்சேர் இருவினையும் கடந்த இறைபணியாகும். ஈண்டு உறைவோரும் இம் மெய்யினரும் நூற்றெட்டு உருத்திரர் என்ப.

நிற்க ஆணவம் - ஆணவம் மேலிட்டிருக்க. காமிய மாமாயை - கன்மமும், சுத்த மாயையும்.

## 2205. மும்மலங் கூடி முயங்கி மயங்குவோர்

2205. மும்மலங் கூடி முயங்கி மயங்குவோர்
அம்மெய்ச் சகலத்தர் தேவர் சுரர்நரர்
மெய்ம்மையில் வேதா விரிமிகு கீடாந்தத்
தம்முறை யோனிபுக் கார்க்குஞ் சகலரே.

ஆணவங் கன்மம் மாயை என்னும் மும்மலமுங் கூடிக் கலந்து அவற்றையே தாமெனக்கொண்டு மருள்வோரே சகலராவர். சகலர் - முப்பிணிப்பினர். இவர்கள் யாவரென ஆயின் வருமாறு: இந்திரனாகிய வானவர்கோன் உள்ளிட்ட தேவர்களும், வானவரும், மக்களும், உண்மையுணர்வு இல்லாத அயன் அரி முதலாகப் புழு ஈறாகச் சொல்லப்படுவோருமாவர். இவர்கள் அனைவர்களும் மூலப்பகுதி மாயைக்கு உட்பட்டவர்களே. இவர்கள் செய்தொழில் வேற்றுமையினால் சிறப்பொவ்வாத பலவகையான பருவுடம்பைத் தூவாமாயையினின்றும் தோன்றாத்துணைவன் படைத்துக் கொடுத்தருளப் பெறுபவர்கள். இருவினைக்கீடாக இறந்தும் பிறந்தும் இடையறாது இன்னலுறும் இயல்பினர். யோனி - பிறப்பு. ஆர்க்கும் - கட்டுப்படும்.

## 2206. சுத்த அவத்தையில் தோய்தவர் மும்மலச்

2206. சுத்த அவத்தையில் தோய்தவர் மும்மலச்
சத்தசத் தோடத் தனித்தனி பாசமு
மத்த இருள்சிவ னான கதிராலே
தொத்தற விட்டிடச் சுத்தரா வார்களே.

தூயநிலையில் பொருந்தியவர் சிவபெருமானின் திருவருள் விளக்கத்தால் நிலைப்பாகிய மும்மல காரணத்தையும் தோன்றி யொடுங்குவதாகிய அவற்றின் காரியத்தையும் உண்மைகண்டு எண்மையாக நீங்கித் திண்மையோங்கிய உரனுடைப் பண்பினராவர். ஈண்டுச் சத்தெனப்படுவன மும்மலமாகும். அசத்தெனப்படுவன மும்மல காரியமாகும். இவற்றுடன் தனித்தனியாகப் பிரிவுபட்டுப் பிணிப்புறுத்தும் மருளாக்க விரிவாகிய மாயேயம் அறுபதும் (2107) தனித்தனிப் பாசம் எனப்டும். அவற்றின் தொத்தாகிய தொடர்ச்சியும் விட்டவராவர். பெருமயக்கத்தைச் செய்யும் மத்த இருளும் விட்டவராவர். இவையனைத்தும் விட்டவரே தூயோராவர். தூயோர் - சுத்தர். தொத்து: தொடர்பு. இது தொந்தம் எனவும் வரும். அது 'தொல்லை வல்வினைத் தொந்தந்தான் என்செய்யும்' என்னும் அப்பர் செப்பும் அருண்மொழியானுணரலாம். விட்டிட - முற்றும் அகல.

மத்த - மயக்கத்தைச் செய்யும். தொத்து அற - தொடர்ச்சி நீங்க.

## 2207. தற்கே வலம்முத்தி தானே தனிமையாம்

2207. தற்கே வலம்முத்தி தானே தனிமையாம்
பிற்பாற் சகலங் கலாதிப் பிறிவதாஞ்
சொற்பாற் புரிசுத்த கேவலஞ் சாக்கிரந்
தற்பாற் புரிவது தற்சுத்த மாகுமே.

தூயநிலையில் தான் தனித்துநிற்கும் வீடாகிய பற்றறுதி ஆருயிர் தனித்து நிற்பதாகும். இந் நிலையினைத் தூய புலம்பு என்னலாம். தூய புலம்பு - சுத்த கேவலம். தூய புணர்ப்பு உழைப்பு முதலாகச் சொல்லப்படும் தூவாமாயையினின்று விலகுவதாம். தூய புரிவாவது சொல்லப்படும் தூயபுலம்பும் புணர்ப்பும் தன்னுணர்வுக்கும் தோன்றாதொழிவது. இதுவே தன் தூய்மையாகும். உழைப்பு - கலைமெய்.

## 2208. அறிவின்றி முத்தன் அராகாதி சேரான்

2208. அறிவின்றி முத்தன் அராகாதி சேரான்
குறியொன்றி லாநித்தன் கூடான் கலாதி
செறியுஞ் செயலிலான் றினங்கற்ற வல்லோன்
கிறியன் மலவியாபி கேவலந் தானே.

ஆருயிர்க்கிழவன் புலம்பாகிய கேவல நிலையில் மலச்செறிவுடன் உள்ளவன். செறிவு - வியாபகம்; பரப்பு. அந் நிலையில் மருளாக்கக் கருவிகள் கூடாமையால் அறிவு முன் விளங்கப்பெறான். மருளாக்கம் - மாயாகாரியம்; அதனால் உடம்பில்லாதவன் ஆவன். ஈண்டு முத்தன் என்பது அமூர்த்தன் என்றிருத்தல் வேண்டும். அமூர்த்தன் - உடம்பு முன்னில்லாதவன். இது சிவஞானசித்தியார் ஓதும் பாடமாகும். அம் முறையில் பார்த்தால் 'அறிவின் றமூர்த்தன்' என்றிருத்தல் வேண்டும். உழைப்புமெய் முதலிய தூவாமாயைக் கருவிகளுடன் முன் சேர்தலில்லாதவன். உவப்பாகிய விழைவு முன்னில்லாதவன் குறி - விழைவு.
பிறந்து இறந்து வரும்நிலையாத் தன்மை முன்னில்லாத நிலைப்பினன். இறுப்பு முதலிய குணங்களுடனும் முன்கூடாதவன். இறுப்பு - புத்தி. அதனால் எச் செயலும் முன்னில்லாதவன். நுகர்வு முன்னில்லாதவன். தினக்கற்ற - தினங்கற்ற என்பது தின்னக்கற்ற என்பதன் மரூஉவாகும்; ஆணவத்துள் மறைந்திருப்பவன். கிறியன் - படிறன்; வஞ்சகன்; மறைந்திருப்போன். இந் நிலையே புலம்புநிலையாகும். இத் திருப்பாட்டின் விளக்கம்போன்று

வரும் சிவஞானசித்தியாரின் திருப்பாட்டு வருமாறு :

"அறிவிலன் அமூர்த்தன் நித்தன் அராகாதி குணங்க ளோடும்
செறிவிலன் கலாதி யோடுஞ் சேர்விலன் செயல்க ளில்லான்
குறியிலன் கருத்தா வல்லன் போகத்திற் கொள்கை யில்லான்
பிறிவிலன் மலத்தி னோடும் வியாபிகே வலத்தில் ஆன்மா."

(சிவஞானசித்தியார், 4. 3 - 7.)

அராகாதி - அராகம் முதலியன. கலாதி - கலை முதலியன. கிறியன் - வஞ்சகன்.

## 2209. விந்தவும் மாயையும் மேவுங் கிரியையுஞ்

2209. விந்தவும் மாயையும் மேவுங் கிரியையுஞ்
சந்தத ஞான பரையுந் தனுச்சத்தி
விந்துவின் மெய்ஞ்ஞான மேவும் பிரளயர்
வந்த சகலசுத் தான்மாக்கள் வையத்தே.

விந்துவாகிய தூமாயையும், மாயையாகிய தூவாமாயையும் என்றும் பேரறிவாய்த் திகழும் வனப்பாற்றலாகிய பரையும் ஆருயிர்கட்கு அவரவர் செவ்விக்கேற்ப உயிர்நிலையாகிய உடம்பாய் அமையும். ஒரு மலக்கட்டுடையார்க்கும் இருமலக்கட்டுடையார்க்கும், அமையும் உடம்பு தூமாயையினின்று தோன்றுவன. திருவடியுணர்வு கைவரப்பெற்றவர்க்குத் திருவருளினின்றுந் தோன்றுவன. மும்மலக்கட்டுடையார்க்கு உடம்பு தூவாமாயையினின்றுந் தோன்றுவன. செயல்களும் அவ்வம் மாயை களிலேயே நிகழும். மும்மலக்கட்டுடையார் வாழ்வது இவ்வுலகத்தேயாம். ஈண்டுப் பரை என்பது ஏற்புழிக்கோடலால் நடப்பாற்றலின் மேற்று.

## 2210. கேவல மாதியிற் பேதங் கிளக்குறிற்

2210. கேவல மாதியிற் பேதங் கிளக்குறிற்
கேவல மூன்றுங் கிளருஞ் சகலத்துள்
ஆவயின் மூன்று மதிசுத்த மூடவே
ஓவலில் லாவொன்பா னுற்றுணர் வோர்கட்கே.

புலம்பாகிய கேவலமும், புணர்வாகிய சகலமும், புரிவாகிய சுத்தமும் கேவலாதிகள் என்று ஓதப்பட்டன. இவற்றின் வேறுபாடுகளைக் கூறுமிடத்து ஒவ்வொன்றும் முத்திறப்படும். அவை வருமாறு: புலம்பிற் புலம்பு, புலம்பிற் புணர்வு, புலம்பிற் புரிவு என மூன்று. புணர்விற் புணர்வு, புணர்விற் புலம்பு, புணர்விற் புரிவு என மூன்று. புரிவிற் புணர்வு, புரிவிற் புலம்பு, புரிவிற் புரிவு என மூன்று ஆக ஒன்பது வகைப்படும். இவற்றை முறையே கேவல கேவலம், கேவல சகலம், கேவல சுத்தம் எனவும், சகல சகலம், சகல கேவலம், சகல சுத்தம் எனவும், சுத்த சுத்தம், சுத்த கேவலம், சுத்த சகலம் எனவும் கூறுப. இவ் வொன்பதினையும் பொருந்தி ஆருயிர் தூய்மைப்படும் நிலை திருவருளைப் பொருந்தி யுணர்வார்க்குத் தெற்றெனப் புலனாம்.

கேவலம் ஆதி - கேவலம், சகலம், சுத்தம். கேவல . . . . . . சகலத்து - சகலாவத்தையிலும். மூன்று உள - சகல சகலம், சகல கேவலம், சகல சுத்தம். இவ்வாறே மூன்றுக்கும் கொள்ள அவத்தைகள் ஒன்பதாகும்.

## 2211. கேவலத்திற் கேவலம் அதீதா தீதங்

2211. கேவலத்திற் கேவலம் அதீதா தீதங்
கேவலத் திற்சக லங்கள் வயிந்தவங்
கேவலத் திற்சுத்தங் கேடில்விஞ் ஞாகலர்க்கு
ஆவயி னாதன் அருண்மூர்த்தி தானாமே.

கேவலத்திற் கேவலம் எனப்படும் தூய புலம்பு அப்பாலைக்கு அப்பாலாம். அப் புலம்பிற் புணர்வு தூமாயை நிலைக்களம். அப் புலம்பிற் புரிவு குற்றமற்ற பேருணர்வாகிய விஞ்ஞானம். இந்நிலை ஒருமலத்தராகிய விஞ்ஞானாகலர் நிலை என்ப. அவ்விடத்து அவ் வுயிர் நாதனாகிய சிவபெருமான் விளங்கும் சீர்த்தவ உடம்பாகும். வயிந்தவம் - சுத்தமாயை.

அதீதாதீதம் - அதீதத்திற்கும் அப்பாற்பட்டது. வயிந்தவம் - சுத்த மாயை.

## 2212. சகலத்திற் கேவலஞ் சாக்கிரா தீதஞ்

2212. சகலத்திற் கேவலஞ் சாக்கிரா தீதஞ்
சகல சகலமே சாக்கிர சாக்கிரஞ்
சகலத்திற் சுத்தமே தற்பரா வத்தை
சகலத்தில் இம்மூன்று தன்மையு மாமே.

புணர்விற் புலம்பு நனவின் அப்பாலாகும். புணர்விற் புணர்வு நனவிற் கனவாகும். புணர்விற் புரிவு ஆருயிர் அருளுடன் கூடி நிற்கும் நிலை. தூய புணர்வின்கண் இம் மூன்று நிலையும் காண்க. பராவத்தை - அருள்நிலை.

உபசாந்தம் - ஓய்வுபெற்றிருத்தல்.

## 2213. சுத்தத்திற் சுத்தமே தொல்சிவ மாகுதல்

2213. சுத்தத்திற் சுத்தமே தொல்சிவ மாகுதல்
சுத்தத்திற் கேவலந் தொல்லுப சாந்தமாஞ்
சுத்த சகலந் துரிய விலாசமாஞ்
சுத்தத்தில் இம்மூன்றுஞ் சொல்லலு மாமே.

தூய புரிவிற் புரிவு ஆருயிர் தொன்மையும், முன்மையும், நன்மையும், உண்மையும், அறிவும், இன்பமும் ஒருங்கமைந்த தென்னாடுடைய சிவன் திருவுருவெய்தல். புரிவிற் புலம்பு தற்பணியறுதலாகிய தவ ஒடுக்கம். புரிவிற் புணர்வு இன்பினில் மூழ்கும் இனிய உறைவிடமாம் துரியவிலாசம். தூய துரியம் - இன்ப நிலையம்.

## 2214. சாக்கிர சாக்கிரந் தன்னிற் கனவொடுஞ்

2214. சாக்கிர சாக்கிரந் தன்னிற் கனவொடுஞ்
சாக்கிரந் தன்னிற் சுழுத்தி துரியமே
சாக்கிரா தீதந் தனிற்சுகா னந்தமே
ஆக்கு மறையாதி ஐம்மல பாசமே.

நனவில் நனவு, நனவிற் கனவு, நனவின் உறக்கம், நனவிற் பேருறக்கம் நனவின் உயிர்ப்படங்கல் ஆகிய ஐந்தும் துன்பில் இன்பாய் மன்னும். ஆணவம், கன்மம், மாயை, மாயை ஆக்கம், நடப்பாற்றல் ஆகிய ஐம்மலப் பிணிப்பும் மறையாது அகலும்.

## 2215. சாக்கிரா தீதத்திற் றானறு மாணவஞ்

2215. சாக்கிரா தீதத்திற் றானறு மாணவஞ்
சாக்கிரா தீதம் பராவத்தை தங்காது
ஆக்கு பரோபாதி யாஉப சாந்தத்தை
நோக்கு மலங்குண நோக்குத லாகுமே.

நனவின் அப்பாலாம் சாக்கிராதீதத்திற் றன்முனைப்பாம் ஆணவம் அறுதல் உண்டாம். இந்நிலை அருளில் தங்கும் நிலைக்கும் அப்பாலாகும். அருளையுடைய பெரும்பொருள் பரோபாதி. அது சிவம். இந்நிலை அச் சிவத்தை ஆருயிர்கள்மாட்டு விளங்கச்செய்யும்; எல்லாவற்றையும் திருவடியின்பினில் மூழ்குவிக்கும் சிவனடியினையே நோக்குவிக்கும். நோக்கும் என்பது பிறவினைப் பொருளில் வந்த தன்வினை. இந்நிலை எய்தினானை மலங்குணம் ஏதும் நோக்குதல் அமையாது. ஆகுமே : ஏகாரம் எதிர்மறை; ஆகாது என்பது பொருள். யா : அஃறிணைப் பன்மை; எஞ்சாது எல்லாமும் என்பது பொருள்.

பராவத்தை - பரையினிடத்துத் தங்கும் அவதாரம்.
பரோபாதி - பரசிவ சம்பந்தம்.

## 2216. பெத்தமும் முத்தியும் பேணுந் துரியமுஞ்

2216. பெத்தமும் முத்தியும் பேணுந் துரியமுஞ்
சுத்த வதீதமுந் தோன்றாமற் றானுணும்
அத்தன் அருளென் றருளால் அறிந்தபின்
சித்தமும் இல்லை செயலில்லை தானே.

கட்டும் வீடும் நல்லோரால் பேணப்படும் துரியமாகிய ஒடுக்கமும், தூய்மையாகிய அப்பால் நிலையும் திருவருளால் ஒருசிறிதும் தோன்றாவாகும். தான் நுகர்ந்து கொண்டிருப்பது அத்தன் சிவபெருமானின் திருவடியின்பம் என்றருளால் அறிவன். அறிந்தபின் எண்ணமாகிய சித்தத்தின் இயக்கம் இல்லை. அஃது இல்லையாகவே வேறு எச்செயலும் இல்லை. தானே: தான், ஏ - அசை.

## 2217. எய்திய பெத்தமும் முத்தமும் என்பன

2217. எய்திய பெத்தமும் முத்தமும் என்பன
எய்தும் அரனரு ளேவிளை யாட்டோடு
எய்தி டுயிர்சுத்தத் திடுநெறி என்னவே
எய்தும் உயிரிறை பாலறி வாகுமே.

பெத்தமாகிய பிறப்பும், முத்தியாகிய சிறப்பும் ஆருயிர்கட்கு எய்திய காரணம் என்னவென்று ஆராய்ந்தால் அவ் வுயிர்களைச் செந்நெறியிற் செலுத்தும் நன்மையின்பொருட்டு என்றாகும். இத் திருவருட் செயல்கள் சிவபெருமானின் திருவுள்ளக் குறிப்பான் நிகழ்வன. அதுவும் மிகவும் எளிமையாகக் கருதியவாறே நிகழ்வன. அக் குறிப்புத் தோன்றவே 'திருவிளையாட்'டென ஓதினர். அவ்வுயிரைத் தூய்மைக்கண் நிறுத்தும் தூயவழியும் அதுவேயாம். திருவருளால் ஆருயிர் இவ் வுண்மையினை யுணரும். உணர்ந்ததும் தம் அறிவு முழுவதும் அச் சிவன்பாலே பற்றி இன்புறும்.

உயிரிறை - உயிருக்கு இறைவன்.

## 2218. ஐம்மலத் தாரு மதித்த சகலத்தர்

2218. ஐம்மலத் தாரு மதித்த சகலத்தர்
ஐம்மலத் தாரு மருவினைப் பாசத்தார்
ஐம்மலத் தார்சுவர்க் கந்நெறி யாள்பவர்
ஐம்மலத் தார்அர னார்க்கறி வோரே.

ஆணவம், கன்மம், மாயை, மாயையாக்கம், நடப்பாற்றல் என்னும் ஐம்மலங்களுமுடையவர் மிகுந்த பிணிப்பினராகிய சகலத்தவராவர். இவர்கள் இருள்சேர் இருவினைப் பிணிப்பினர். இவர்கள் துறக்கவுலக இன்பத்தை நுகர்பவராவர். இத்தகையோர் சிவபெருமானாகிய அரனாரை அறியும் அறிவுடையராகார். அரனார்க்கு என்பது இரண்டாம் வேற்றுமைப்பொருளில் வந்த நான்காம் வேற்றுமை உருபின் மயக்கம். அறிவோரே என்பது அறியார் என்னும் பொருள்பட வந்த எதிர்மறை ஏகாரம். என்னை,

"யாத னுருபிற், கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்."
(தொல். சொல், 106.)

என்பதனால் உருபுமயக்கம் கொள்ளப்பட்டது.

## 2219. கருவி லதீதங் கலப்பிக்கு மாயை

2219. கருவி லதீதங் கலப்பிக்கு மாயை
அரிய துரிய மதிலுண்ணும் ஆசையும்
உரிய சுழுனை முதலெட்டுஞ் சூக்கத்து
அரிய கனாத்தூலம் அந்நன வாமே.

கருவின்கண் அப்பால்நிலை தூவாமாயையுடன் கலப்பிப்பதாகும். பேருறக்க நிலையாவது மாயாகாரியப் பொருள்களை நுகர்வதற்கு எழும் வேட்கை. பேருறக்க உறக்கநிலைகள் எட்டுப் பாகுபாடாகும். நுண்ணுடம்பு கனாநிலையாகும். பருவுடம்பு நனவுநிலையாகும். ஆசையும் என்பதன்கண் உள்ள உம்மை இசைநிறைவாகும். எட்டுப் பாகுபாடு : பேருறக்கம், பேருறக்க வுறக்கம், பேருறக்கக் கனவு, பேருறக்க நனவு என நான்கும், அதுபோல் உறக்கத்துப் பேருறக்கம், உறக்கத்து உறக்கம், உறக்கத்துக் கனவு, உறக்கத்து நனவு என நான்கும் கூடி எட்டாகும். இவற்றைத் துரியம், துரிய சுழுத்தி, துரிய சொப்பனம், துரிய சாக்கிரம் எனவும் சுழுத்தியில் துரியம், சுழுத்தியில் சுழுத்தி, சுழுத்தியில் சொப்பனம்; சுழுத்தியில் நனவு எனவும் கூறுப.

சுழுனை முதல் எட்டு - (1) துரியம், (2) துரிய சுழுத்தி, (3) துரிய கனவு, (4) துரிய நனவு, (5) சுழுத்தியின் துரியம், (6) சுழுத்தியில் சுழுத்தி, (7) சுழுத்தியில் கனவு, (8) சுழுத்தியில் நனவு.

## 2220. ஆணவ மாகும் அதீதமேன் மாயையும்

2220. ஆணவ மாகும் அதீதமேன் மாயையும்
பூணுந் துரியஞ் சுழுத்திபொய்க் காமியம்
பேணுங் கனவும் மாமாயை திரோதாயி
காணு நனவில் மலக்கலப் பாகுமே.

உயிர்ப்படங்குதல் அல்லது அதீதம் என்று சொல்லப்படும் அப்பால் நிலைக்கண் ஆணவமட்டும் ஆருயிர்களைப் பிணித்துநிற்கும். பேருறக்கத்தின்கண் தூவாமாயை புணர்ந்துநிற்கும். உறக்கத்தின்கண் காமியம் என்னும் இருவினைகள் சூழ நிற்கும். கனவின்கண் தூமாயை சூழ்நிற்கும். நனவின்கண் நடப்பாற்றலாகிய திரோதாயியினுடன் ஐம்மலமும் பிணிப்புற்றிருக்கும்.

## 2221. அரன்முத லாக அறிவோன் அத்தீதத்தன்

2221. அரன்முத லாக அறிவோன் அதீதத்தன்
அரன்முத லாமாயை தங்கிச் சுழுனை
கருமம் உணர்ந்து மாமாயை கைக்கொண்டோர்
அருளு மறைவார் சகலத்துற் றாரே.

அரன் முதலாக அறிவோனாகிய ஆருயிர் அப்பால் நிலைக்கண் தங்கும். அரன் முதலாகக் கொள்ளும் மாயை பேருறக்கமாகும். உறக்கத்தில் கருமமாகும். கனவில் மாமாயையாகும். நனவில் மறைப்பருளாகிய நடப்பாற்றல் மேலோங்கும். இந் நிலையே புணர்ப்பு நிலையாகும். புணர்ப்பு - சகலம்.

# 2222. உருவுற்றுப் போகமே போக்கியந் துற்று

2222. உருவுற்றுப் போகமே போக்கியந் துற்று
மருவுற்றுப் பூதம னாதியான் மன்னி
வருமச் செயல்பற்றிச் சத்தாதி வைகிக்
கருவுற் றிடுஞ்சீவன் காணுஞ் சகலத்தே.

ஆருயிர்களுக்கு மாயாகாரிய உடம்பு எய்தியதும் உருவ நிலை எய்தும். அப்பொழுது வினைப்பயன் நுகர்வு உண்டாகும். அப்பொழுது பொறிகளால் புலன்களை நுகரும். அந் நுகர்ச்சி துற்று என்று ஓதப்பெற்றது. போகம் இன்ப துன்ப நுகர்வு. போக்கியம் நுகர்வுப் பொருள்கள். எடுத்துக்காட்டாகக் கண் நுகர்வுப்பொறி, காட்சி நுகர்வு. காணப்படும் திருக்கோயில் நுகர்வுப்பொருள். நுகர்வுக்கு வேண்டிய பூதம் மனம் முதலியவற்றுடன் வரும். மனம் பொறி முதலியவற்றால் சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் அறிதற்பொருளும், நவிலுதல், நடத்தல், நற்பொருள் கொடுத்தல், கழித்தல், கலந்து களிப்புறல் என்னும் செய்தற்பொருளும் ஆகிய புலன்களைக் கொண்டின்புறும். இவற்றைச் சத்தாதி என்று ஓதினர். இந் நிலைக் கருவிகளுடன் ஆருயிர் கருவுற்றுப் புணர்வாகிய சகலத்தின்கண் காணப்படும்.

போக்கியம் - போகத்துக்குக் காரணமானவை. போகம் - துன்பமும் இன்பமும். சத்தாதி - ஓசை முதலியன. கருவுற்றிடும் - கருப்பத்தில் தங்கும்.

## 2223. இருவினை யொத்திட இன்னருட் சத்தி

2223. இருவினை யொத்திட இன்னருட் சத்தி
மருவிட ஞானத்தில் ஆதன மன்னிக்
குருவினைக் கொண்டருட் சத்திமுன் கூட்டிப்
பெருமல நீங்கிப் பிறவாமை சுத்தமே.

நல்வினை தீவினைப்பயனை நான் என்னும் முனைப்பற்று நின்றுநோக்கல்நோக்குப்போல் நுகர்ச்சியாக நுகர்ந்து கழிக்கும் நிலையும், அருள் தூண்டுதலினால் அடிமை முறையில் முயன்று ஆற்றும் இறை பணியின்கண் விருப்பு வெறுப்பின்றி இறையன்பால் ஒழுகும் நிறை யொழுக்கமும் இருவினை யொப்பு எனப்படும். இவற்றிற்கு எடுத்துக்காட்டு சண்டேசுரநாயனாராவர். தன் தந்தை 'வெகுண்டு கொடிதாம் மொழி கூறித் தண்டுகொண்டு புடைக்கவும் சிறியபெருந் தோன்றலார் பெருமான்மேல் மண்டுகாதல் அருச்சனையின்வைத்தார் மற்றொன் றறிந்திலர்' இஃது உடல், ஊழ் நுகர்விலும், உள்ளம் ஊழி முதல்வனாகிய சிவபெருமான் திருவடி நுகர்விலும் அழுந்திநின்றமை காண்க. இப் பெருந்தகையார் தம் தந்தை பாலைச் சிந்தும்போது திருவருளின் உந்துதலால் 'தந்தை எனவே கண்டும் முறைமையினால் மாடுமேய்க்குங் கோல் மழுவாய் மாறிடத்' தந்தையின்தாளை அறவெறிந்தார். இது தற்பணியற்று இறைபணியுற்று விளங்கும் எழில்நிலையாகும். இந் நிலையில் ஏறுவினை இயற்றினாரைச் சாராமல் இயற்றப்பட்டாரைச் சார்ந்து அவர்க்கு நிகழும் நற்பயனுக்கு வயலுரம்போல்

துணையாயினவாறு காண்க. 'அற' எறிதல் என்பதன்கண்ணுள்ள 'அற' என்பது இயற்றினார்க்கு ஏறுவினை அறவெனவும், இயற்றப்பட்டார்க்குக் குற்ற ஒறுப்பாய்ப் பாவம் அற எனவும் பொருள்தரும். இருவினை யொப்பு வாய்ந்ததும் சிவபெருமானின் இன்னருளாற்றல் விளங்கித்துன்னும். திருவருள் மருவிடத் திருவடியுணர்வை மறவாத பெருங்காதலரை இடனாகக் கொண்டு சிவபெருமான் சிவகுருவாய் எழுந்தருள்வன். எழுந்தருளித் திருவைந்தெழுத்தைச் செவியறிவுறுத்தியருள்வன். பெருமலமாகிய ஆணவமலப் பசையறும். பசையறவே திருவடிச் சிறப்புற்றுப் பிறவாமை கைகூடும். இதுவே தூயநிலை என்ப. இத் திருப்பாட்டைச் சொல்லாலும் பொருளாலும் கருத்தாலும் அப்படியே கொண்டு திகழும் சிவஞானசித்தியார் திருப்பாட்டு வருமாறு :

"இருவினைச் செயல்கள் ஒப்பின் ஈசன்றன் சத்தி தோயக்
குருவருள் பெற்றுஞான யோகத்தைக் குறுகி முன்னைத்
திரிமலம் அறுத்துப் பண்டைச் சிற்றறி வொழிந்து ஞானம்
பெருகிநா யகன்றன் பாதம் பெறுவது சுத்த மாமே."

(சிவஞானசித்தியார், 4. 3 - 9.)

'சித்தம். சிவனொடும் 'ஆடஆட' என்ற திருமறையின்படி ஒருவருடைய உள்ளம் இருளொடு பொருந்தின் இருளாய் நிற்கும். அதுபோல் மருள், தெருள், அருள், பொருளென்பனவற்றோடு பொருந்தின் அவ்வவையாய் நிற்கும். பொருள் - மெய்ப்பொருள்; சிவபெருமான்.

இருவினை ஒத்திட - துன்ப இன்பங்களைச் சமமாகக் கருதுதல். மருவிட - பொருந்த ஆதனமன்னி - நிலைபெற்று.

## 2224. ஆறாறு மாறதின் ஐயைந் தவத்தையோடு

2224. ஆறாறு மாறதின் ஐயைந் தவத்தையோடு
ஈறா மதீதத் துரியத் திவனெய்தப்
பேறான ஐவரும் போம்பிர காசத்து
நீறார் பரஞ்சிவ மாதேய மாகுமே.

அருஞ்சைவர் மெய்கள் (2139) முப்பத்தாறாகும். இம் முப்பத்தாறு மெய்களுடன் கூடி ஆருயிர் ஐம்பாட்டினை எய்தும். ஐம்பாடாவன : நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் என்பன. ஒவ்வொன்றும் ஐவைந்து நிலையினை எய்தும். அஃதாவது நனவில் நனவு, நனவிற் கனவு, நனவில் உறக்கம், நனவில் பேருறக்கம், நனவில் உயிர்ப்படங்கல் என ஐந்துநிலை உண்டாகும். இதுபோல் மற்றவைக்கும் கூட்டிக்கொள்க. இம் முறையால் நிலைகள் இருபத்தைந்தாகும். நிலை யெனினும் அவத்தை எனினும் ஒன்று. (ஆறாறும் ஆறு) முப்பத்தாறு மெய்களும் வழிகளாகும். ஐயைந் தவத்தை என்பது மேற்கூறிய இருபத்தைந்து நிலைகள். முடிந்த முடிபாகிய அப்பாலைக்கு அப்பால் அதீதத் துரியம் என்ப. செவ்விவாய்ந்த ஒருவன் அருளால் அந்தநன்னிலையை அடைவன். அடைந்தால் தூமாயைக்கண் வாழும் ஐவர் நிலையும் விட்டு நீங்கும். ஐவர் நிலைகளாவன: அத்தன், அன்னை, அருளோன், ஆண்டான், ஆசான் என்பன. இயற்கைப் பேரறிவுப் பேரொளியாய்த் திகழும் திருவெண்ணீற்றுத் திருக்கோலச் சிவபெருமான் ஆட்கொண்டருள்கின்றனன். அந் நிலையின்கண், அவன்

ஆருயிர்க்கு இவர்தந்தூரும் எம்மானாக விளங்குகின்றனன். இவர்தந்தூர்தல் : இயைந்தியக்கல்; தூண்டித் தொழிற்படுத்தல்; அதிட்டித்தல்: ஆதேயம் என்பன ஒரு பொருள்கிளவிகள். ஆதாரம் இருப்பு, ஆதேயம் இருப்பது. சிவன் உலகியலில் ஆருயிர்களுக்கு இருப்பாகத் திகழ்கின்றனன். அக் குறிப்பே சிவன் பிறைசூடியருளியுள்ளான் என்பதன்கண் விளக்கமுறும். அதுபோல் வீட்டியலின்கண் ஆருயிர்கள் சிவனுக்கு இருப்பாகத் திகழ்கின்றன. அதுவே ஆதேயம். ஆதேயமாக இருப்பதென்பது அச் சிவன் ஆனேற்றின்மீது இவர்ந்து வருவதாகும். ஆதேயம் - தாங்கப்படுவது; இஃது எம்மான் இருப்பும் இருப்பதுவுமாயிருப்பன், செம்மான்பிறை ஏறு சேர்ந்து என்பதனால் உணர்க. சிவபெருமான் ஆருயிர்கட்கு இருப்பாங்கால் தோன்மேலாவன்; இருப்பது ஆங்கால் நெஞ்சத்தனாவன். இவ்வுண்மை "துஞ்சுங்கால் தோண்மேலராகி விழிக்குங்கால், நெஞ்சத்தராவர் விரைந்து" என்னும் நாயனார் பொதுமறையான் உணரலாம். துஞ்சல் - சிவனை மறத்தல். விழித்தல் - சிவனை நினைத்தல் 'பேறான ஐவரும்போம் என்பதற்கு மாறாகப் பேறானவை வரும்' எனப் பாடங்கொள்ளின் எண்பெரும் பேறும் வண்பெரும் வீடும் எய்தும் எனப்பொருள் கொள்க.

ஐயைந்து அவத்தை - ஐந்து அவத்தைகள் ஒவ்வொன்றும் ஐந்தாக இருபத்தைந்து. அதீதத் துரியம் - துரியாதீதத்தில் துரியா தீதம் பேறானவை - பெறுதற்கு அரிய சித்திகளும் முத்தியும். வரும் - உண்டாகும். நீறார் - திருநீறு அணிந்த.

# 2225. தன்னை யறியா துடலைமுன் தானென்றான்

2225. தன்னை யறியா துடலைமுன் தானென்றான்
தன்னைமுன் கண்டான் துரியந் தனைக்கண்டான்
உன்னுந் துரியமும் ஈசனோ டொன்றாக்கால்
பின்னையும் வந்து பிறந்திடுந் தானன்றே.

ஒருவன் உலகநூல் கேட்பதன்முன் தன்னுடைய வீடு மனைவி மக்கள் மாடு முதலிய புறப்பொருள்களையே தனக்கு உயிராகக் கருதி ஒழுகிவந்தனன். உலகநூல் கேட்டபின்னர்த் தன்னுடம்பே தனக்கு உயிர் எனக் கொண்டொழுகினன். அந்நிலையில் அவன் தன்னுடம்புக்கு வேறாகத் தான் ஒருவன் உண்டென்று உணர்கிலன். அக் குறிப்புத்தான் தன்னையறியாது முன்பெல்லாம் உடலைத் தானென்றான் என்பது. பின் வீட்டியல் நூற்களைப் படிப்படியாகக் கேட்டு அவ்வழி ஒழுகிவந்தனன். வரத் திருவருள் துணையால் தன்னைக் கண்டனன். கண்டு செந்நெறி யொழுகினன். அதனால் நன்னெறி நான்மையினையும் எய்தினன். அதனால் அப்பால் நிலையாகிய துரியங் கண்டனன். அந்நிலை சிவனுடன் இரண்டறக் கலக்கும் நிலைக்கு முன்னுள்ள நிலையேயாகும். அவனுக்கு அக் கலப்பு எய்தாவிடின் பின்னையும் வந்து பிறந்திடுவன்.

தன்னையறியாது உடலை முன் தான் என்றான் என்று பிரிக்க.

## 2226. சாக்கிரந் தன்னில் அதீதந் தலைப்படில்

2226. சாக்கிரந் தன்னில் அதீதந் தலைப்படில்
ஆக்கிய வந்த வயிந்தவ மானந்தம்
நோக்கும் பிறப்பறு நோன்முத்தி சித்தியாம்
வாக்கும் மனமும் மருவல்செய் யாவே.

நனவு நிலையில் அப்பால்நிலை வந்து பொருந்தினால் திருவருள் மாயாகாரியமாகிய வயிந்தவத்தின்பால் கொண்ட மாலாகிய மயக்கம்கெடத் திருநோக்கம் செய்யும். அதனால் பிறப்பறும். பிறப்பறவே பெரும் பேரின்பப்பேறாகிய வீடு கைகூடும். மாற்றம் மனம் என்னும் கருவிகள் ஆண்டுப் பொருந்துதலைச் செய்யா. மாற்றம் - வாக்கு. அப்பால் நிலையாவது உடையானை உன்னி உடைமையை உன்னாதிருத்தல். நினைத்த பொருளே தோன்றுதல் அனைத்திடத்தும் தினைத்தனையும் மாறா வுண்மைத் தெளிவாகும். மாற்றமாகிய சுட்டுணர்வும் மனமாகிய சிற்றுணர்வும் அப்பால் நிலையின்கண் வந்து பொருந்தா. உடையான் - சிவன். உடைமை - உலகம்.

வயிந்தவ மால் - மாயா மயக்கு. நந்த - கெட.

## 2227. அப்பும் அனலும் அகலத்து ளேவரும்

2227. அப்பும் அனலும் அகலத்து ளேவரும்
அப்பும் அனலும் அகலத்து ளேவாரா
அப்பும் அனலும் அகலத்து ளேதெனில்
அப்பும் அனலுங் கலந்ததவ் வாறன்றே.

அப்பாகிய விருப்பும் அனலாகிய வெறுப்பும் அகலமாகிய நெஞ்சத்துக்கண் ஆருயிர் நிற்கும்போது நிகழ்வன. நெஞ்சம் - உறக்க நிலை. மேலோதிய விருப்பு வெறுப்புக்கள் அகன்ற நிலையாகிய அப்பால் நிலைக்கண் வந்து பொருந்தா. அப்பால்நிலை - உயிர்ப்படங்கல். இதற்குரிய இடம் மூலம். இந் நிலை கருவிகளுடன் கூடாநிலை. விருப்பு வெறுப்பாகிய அப்பும் அனலும் நெஞ்சத்துக்கண் கலந்தமுறை எவ்வாறெனில், உறக்க நிலையாகிய நெஞ்சம் அரனார் இருப்பிடம். அரன் - தீவண்ணத்தன். அவன் 'நள்ளிருளிலும் நட்டம் பயின்றாடும் நாதன்.' பேருறக்க நிலையாகிய மேல்வயிறு அரியின் இருப்பிடம். அரி - நீர்வண்ணத்தன். இவ் விருநிலைமையினால் நெஞ்சிடத்து 'வேண்டுதல் வேண்டாமை'யாகிய விருப்பு வெறுப்புக்கள் தோன்றுவது இயல்பு. இதுவே 'அப்பும் அனலும் கலந்ததவ்வாறென' ஓதியதாகும்.

அப்பும் அனலும் - விருப்பும், வெறுப்பும். வாரா - துரியா தீதத்தில் வரமாட்டா.

## 2228. அறுநான் கசுத்தம் அதிசுத்தா சுத்தம்

2228. அறுநான் கசுத்தம் அதிசுத்தா சுத்தம்
உறுமேழு மாயை உடனைந்தே சுத்தம்
பெறுமா றிவைமூன்றுங் கண்டத்தாற் பேதித்து
உறுமாயை மாமாயை யான்மாவி னோடே.

உடன்மெய் இருப்பத்து நான்கும் தூவாமாயை உடையனவாகும். உணர்வுமெய் ஏழும் தூவாமையும் தூய்மையும் உடையனவாகும். உணர்த்துமெய் ஐந்தும் தூய்மையவாகும். இவை முறையே அசுத்தம், சுத்தாசுத்தம், சுத்தம் என்று கூறப்படும். ஒரு மாயையே பகுப்பு வேறுபாட்டால் இங்ஙனம் முத்திறப்பிரிவாய் வேறுபடும். இவை ஆருயிர்கட்குக் கருவியாய் அவற்றுடன் பொருந்தியிருக்கும். மாயையை உணர்வுமெய்யாகவும், மாமாயையை உணர்த்துமெய்யாகவும், ஆன்மாவை உடன்மெய்யாகவும் கொள்க. ஆன்மாவை இரட்டுறமொழிந்து உடன் மெய்யாகவும் உயிராகவும் கொள்க. இத் திருப்பாட்டுத் திருமுறைவழி நிகழும் சிவதீக்கைக்கண் மும்முறை நீர் பருகும்போது ஓதுதல்வேண்டும். மும்முறையும் ஓதவேண்டிய தொடர். 'போற்றிநா லாறுண்மை, போற்றிஏழ் மெய்யன்பு, போற்றிஐந் தாம்அறிவு போற்று.' என்பதாம். இத்தொடரை வருமாறு ஓதலும் ஒன்று 'போற்றிநா லாறுடல் போற்றிஏழ் மெய்யுணர்வு, போற்றிஐந் தாமுணர்த்தல் போற்று.' மெய் - தத்துவம்.

அறு நான்கு - ஆன்ம தத்துவங்கள் இருபத்திநாலு. உறும் ஏழு - வித்தியா தத்துவம் ஏழு. உடன் ஐந்து - சிவ தத்துவங்கள் ஐந்து. கண்டத்தால் - பகுதிகளால்.

## 2229. மாயைகைத் தாயாக மாமாயை யீன்றிட

2229. மாயைகைத் தாயாக மாமாயை யீன்றிட
ஆய பரசிவன் தந்தையாய் நிற்கவே
ஏயும் உயிர்கே வலசகலத் தெய்தி
ஆய்தரு சுத்தமுந் தான்வந் தடையுமே.

தூவாமாயை செவிலித்தாயாகவும், தூமாயை நற்றாயாகவும் கொண்டு ஈன்றிட்ட மகவு உடலாகும். தந்தையாவான் சிவபெருமான். அவன் திருவுள்ளத் திருக்குறிப்பால் மாயாகாரியவுடல் வெளிப்படுகின்றது. அம் முறையால் அவனைத் தந்தை என்கின்றனர். இந்த நிலையில் புலம்பிற்கிடந்த புல்லுயிர் உடம்பினைப் பெற்றுப் புணர்வு நிலையினை எய்துகின்றது. புணர்வுநிலையின்கண் செல்லுயிராய் ஒழுகித் திருவருளால் புரிவுநிலையினை அடைகின்றது. புரிவு நிலையினை அடைந்து நல்லுயிராகும். புலம்பு - கேவலம். புணர்வு - சகலம். புரிவு - சுத்தம்.

மாமாயை - சுத்த மாயை. மாயை - அசுத்த மாயை. பராவத்தை

## 2230. அஞ்சுங் கடந்த அனாதி பரந்தெய்வ

2230. அஞ்சுங் கடந்த அனாதி பரந்தெய்வ
நெஞ்சம தாய நிமலன் பிறப்பிலி
விஞ்சும் உடலுயிர் வேறு படுத்திட
வஞ்சத் திருந்த வகையறிந் தேனே.

உய்வகைக்குத் தடையாம் ஐவகைப் பாசங்களினின்றும் இயல்பாகவே நீங்கியவன் சிவபெருமான். அவன் முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருளாவன். இதுவே அனாதி என்னும் சொற்குப்பொருள். விழுத்தகைப் பெரும்பொருளும் அவனே. அவன் நன்றுநினைப்பார் உள்ளந்தோறும் கள்ளமின்றி நின்று நிலவும் தூயோன், என்றும் பிறவா இயல்பினன். மாயாகாரியமாக வியத்தகுமுறையில் படைத்தளித்த இவ் வுடலினின்றும் செவ்விநோக்கி ஆருயிரைப் பிரித்தருள்வன். அதன் பொருட்டு அவன் மாயையுடனும் கலந்துநிற்கின்ற திறத்தை அவனருளால் அறிந்தேன்.

அஞ்சும் - ஐந்து மலங்களும். வஞ்சத்து - மாயையின்கண். உடல் உயிர் வேறுபடுத்திட - தேக வாஞ்சையை ஒழித்திட.

## 2231. சத்தி பராபரஞ் சாந்தி தனிலான

2231. சத்தி பராபரஞ் சாந்தி தனிலான
சத்தி பரானந்தந் தன்னிற் சுடர்விந்து
சத்திய மாயை தனுச்சத்தி ஐந்துடன்
சத்தி பெறுமுயிர் தானங்கத் தாறுமே.

சாந்தி என்று சொல்லப்படுவது வேண்டுதல் வேண்டாமையில்லாத விழுமியநிலை. இதனை உவர்ப்பென்பர் உயர்ந்தோர்., இது பேரறிவுப் பெரும்பொருளின் திருவருளாற்றல் ஆகும். அவ் வாற்றலே பேரின்பமாகும். இவ் வருளின் பெருநிலையால், விந்து என்று சொல்லப்படும் தூமாயையின் கண்ணும் உடம்பும் உடம்பின் கூறுகளும் உண்டு. வனப்பாற்றல், நடப்பாற்றல், அன்பாற்றல், அறிவாற்றல், ஆற்றலாற்றல் என ஐவகைப்படும். இவ் வைவகைப் பிரிவும் அருட்பெரும் திருவின்
பிரிவேயாகும். அவ் வருட்பெரும் திருவைப் பேரறிவுப் பெரும்திரு என்ப. இதுவே ஞானசத்தி. இதனைப் பராசத்தி எனவும் கூறுப. ஆருயிர்கள் உடம்பால் ஆற்றல் எய்துகின்றன. ஆற்றலால் நல்லொழுக்கில் ஒழுகும். ஆறு - நல்லொழுக்கம்.

சாந்தி - விருப்பு, வெறுப்பு இன்றி இருத்தல்.

## 2232. ஆறாறுக் கப்பால் அறிவார் அறிபவர்

2232. ஆறாறுக் கப்பால் அறிவார் அறிபவர்
ஆறாறுக் கப்பால் அருளார் பெறுபவர்
ஆறாறுக் கப்பால் அறிவாம் அவர்கட்கே
ஆறாறுக் கப்பால் அரனினி தாமே.

அருஞ்சைவர் மெய் (2139) ஆறாறு என்று சொல்லப்படும் முப்பத்தாறு தத்துவங்களுக்கும் அப்பாலுள்ளது யாது என அறிபவர் மெய்ப்பொருள் உண்மையறிபவராவர். அவரே அப்பாலுள்ள நிறைந்த திருவருளையும் பெறுபவராவர். அருளார் என்பது ஆர் அருள் என நிலைமாறிக் கொள்ளப்பட்டது. முப்பத்தாறு மெய்களுக்கும் அப்பால் திகழும் மெய்ப்பொருளாம் சிவபெருமானைத் திருவருள் துணையால் அறியும் அறிவே மெய்யறிவாகும். அவ் வறிவு கைவந்த நற்றவத்தோரே சிறப்புயிரினராவர். அவர்கட்கே அரன் உள்ளும் புறம்பும் தெள்ள இனிக்கும் தீங்கனியாவன். அத் தீங்கனியினை 'நமச்சிவாயப்பழம்' என நவில்வர் (2922) நம் நாயனார். இதனையே பட்டினத்துப்பிள்ளையார் "சேணுயர் மருதமாணிக்கத் தீங்கனி" என்றருளினர். அது வருமாறு : "உழப்பின் வாரா . . . . . . . . . . . . . . . . . . . .

## 17.கண்ணனீ ரரும்பிக் கடிமலர் மலர்ந்து புண்ணனிய

17.கண்ணனீ ரரும்பிக் கடிமலர் மலர்ந்து புண்ணனிய
அஞ்செழுத் தருங்காய் தோன்றி நஞ்சுபொதி
காள கண்டமுங் கண்ணொரு மூன்றும்

## 20.தோளொரு நான்கும் சுடர்முகம் ஐந்தும்

20.தோளொரு நான்கும் சுடர்முகம் ஐந்தும்
பவழ நிறம்பெற்றுத் தவளநீறு பூசி
அறுசுவை யதனினும் உறுசுவை யுடைத்தாய்க்
காணினும் கேட்பினும் கருதினுங் களிதரும்
சேணுயர் மருத மாணிக்கத் தீங்கனி."
(11, திருவிடைமருதூர் மும்மணிக்கோவை, 10.)

# 2233. அஞ்சொடு நான்குங் கடந்தக மேபுக்குப்

2233. அஞ்சொடு நான்குங் கடந்தக மேபுக்குப்
பஞ்சணி காலத்துப் பள்ளி துயில்கின்ற
விஞ்சையர் வேந்தனும் மெல்லிய லாளொடு
நஞ்சுற நாடி நயஞ்செய்யு மாறன்றே.

நான்கு வகையாகச் சொல்லப்படும் ஐந்து சுவையான:
பூதம் ஐந்து, பூதமுதல் ஐந்து, பொறி ஐந்து, புலன் ஐந்து என்பன. பூதமுதல் - தன்மாத்திரை. அகக்கலன் என்று சொல்லப்படும் எண்ணம்
மனம் எழுச்சி இறுப்பு என்னும் நான்கு. இவ் விருபத்து நான்கினையும் கடந்து உட்புகுந்து உற்றகாலத்துப் பஞ்சு முதலிய ஐவகையால் அழகு செய்யப்பட்ட மெல்லிய பள்ளிக்கட்டிலில் ஆருயிர் தூங்கும். அவ் வுயிர்க் கிழவன் விஞ்சையர் வேந்தன் என்று சொல்லப்படுவன். விஞ்சை - வியத்தகுகருவி. வேந்தன் அக் கருவிகளுக்குத் தலைவன். மெல்லியலாள் - நடுநாடியிற் றங்கி நிற்கும் மெல்லிய உயிர்ப்பு. அவற்றுடன் கூடிக்கொள்ளும் அறி துயில் ஒருங்கிய உறக்கம் என்ப. ஒருங்கிய உறக்கம் எனினும் யோக நித்திரை எனினும் ஒன்றே. இந்நிலையில் ஆணவமலமாகிய நஞ்சு வாய்ப்பு நோக்கிப் பற்றப்பார்த்து உற்றுநிற்கின்றது. அதனை விழுமிய முழுமுதற் சிவபெருமான் எண்ணி நோக்குகின்றான். அவ் வாணவ நஞ்சு கண்டத்துட்படுகின்றது. கண்டம் - இடர். அதன்மேல் அவ் வுயிர்க்குத் திருவடியுணர்வைக் கொடுத்தருளத் திருவுள்ளம் கொள்கின்றனன். இதுவே நயம்

செய்வதென்பதாகும். பஞ்சுமுதல் அஞ்சாவன:
"சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேணம்
உறுதூவி சேக்கையோ ரைந்து."
என்பன. பள்ளியறைச் சிறப்பினைப் பட்டினத்துப்பிள்ளையார் பாடியருளிய திருவிடைமருதூர் மும்மணிக்கோவை "புண்ணிய புராதன......" என்று தொடங்கும் பத்தொன்பதாவது பாட்டினுள்ளும், "கருமுதற் றொடங்கி......" என வரும் திருக்கழுமல முன்மணிக்கோவை நான்காவது பாட்டினுள்ளும் வருவனகொண்டு தெளிக.

அஞ்சொடு நான்கு - அஞ்சு என்று சொல்லப்படுகின்ற எண்ணிக்கைகொண்ட நான்கு வகையான தத்துவங்கள், பூதம்-5; பொறி-5; புலன்-5; தன் மாத்திரை 5. அகம் - அந்தக்கரணங்கள். விஞ்ஞையர் வேந்தன் - சிவன். நஞ்சு - ஆணவமலம்.

## 2234. உரிய நனாத்துரி யத்தி லிவனாம்

2234. உரிய நனாத்துரி யத்தி லிவனாம்
அரிய துரிய நனாவாதி மூன்றிற்
பரிய பரதுரி யத்திற் பரனாந்
திரிய வருந்துரி யத்திற் சிவமே.

துரியம் என்று சொல்லப்படும் அப்பால்நனவில் ஆருயிர் தனித்துநிற்கும். அதனால் இவனாம் என்றருளினர். அப்பால் நனவு: துரியசாக்கிரம். அத்தகைய அருமைவாய்ந்த அப்பால் நனவு, அப்பாற் கனவு, அப்பாலுறக்கம் என்ற மூன்றினுள் பெருமைமிக்க அப்பாலைக் கப்பாலாம் பரதுரியத்தில் பரன் என்று சொல்லப்படும் திருவருளுடன் கூடியுறைபவனாம். இவற்றிற்கெல்லாம் மேம்பட்ட மாறுபாடில்லாத அப்பால் நிலைக்கண் தூய சிவனேயாவன்.

இவனாம் - இவ் வான்மாவாம். பரிய - பெருமையுள்ள. பரனாம் - அருட்சத்தியொடுங் கூடியவனாம். திரியவருந் துரியம் - பரதுரியாதீதம்.

## 2235. பரமாம் அதீதமே பற்றறப் பற்ற

2235. பரமாம் அதீதமே பற்றறப் பற்ற
பரமாம் அதீதம் பயிலப் பயில
பரமாம் அதீதம் பயிலாத் தபோதனர்
பரமாகார் பாசமும் பற்றொன் றறாதே.

யாவர்க்கும் யாவைக்கும் மேலாம் இயற்கையுண்மை அறிவின்ப மெய்ப்பொருள் பரமாகும். அப் பொருளை யடைதற்குக் 'குறிகளும் அடையாளமும் கோவிலும், நெறிகளும் அவர் நின்றதோர் நேர்மையும்' பயிலத் தந்தருளிய பாங்கினன் எனவுணர்ந்து திருவருளால் பயின்று திருவடியடைவன். இதற்கு ஒப்பு. கற்றுத் தேர்ந்தானுள்ளம் கற்ற செய்யுள் வண்ணமாய்த் திகழ்வது. கற்றுக் கைவந்தவனுக்கு முன் கற்பதற்குத் துணையாயிருந்த ஏடு முதலிய எவ்வகைக் கருவியையும் அவன் கருதுவதற்கு இன்றியமையாமையும் இடனும் ஏற்படாதல்லவா? அதுபோல் திருவருளால் அகத்தவம்புரிவார்க்கு முன் பற்றுக்கோடாக வேண்டியிருந்த அக் குறிகள் முதலியன இப்பொழுது தாமே வேண்டாவாய் நீங்கின. நீங்க அச் சிவபெருமானை அறிவுக்குள் விளங்கும் அறிவாய் வழிபடும் நெறி வெளிப்பட்டுப் புலனாம். புலனாகவே அம் மெய்ப்பொருளைப் பற்றறப் பற்றப் பயிலுதல் வேண்டும். அங்ஙனம் பயிலப் பயில மெய்ப்பொருள் நிலையே வாய்க்கும். அத்தகைய மெய்ந்நெறியில் பயிலும் பேறில்லாதார் அம் மெய்ப்பொருள் நிலையினை எய்தார். அந் நிலை எய்தாமையினால் அவர்க்குப் பாசமும் பற்றும் ஒரு சிறிதும் அறாவென்க. பற்றறப் பற்றுதல் நிராதார வழிபாடு. பற்றறப் பற்ற

என்பதற்குப் பண்டேபற்றிய பற்று அறப் பற்ற என்றலும் ஒன்று. தபோதனர்: குறிப்புமொழியாய்த் தவத்தோரல்லாதாரைக் குறித்தது.

பயிலா - அடையாத; பயிற்சி செய்யாத.

## 2236. ஆயும்பொய்ம் மாயை யகம்புற மாய்நிற்கும்

2236. ஆயும்பொய்ம் மாயை யகம்புற மாய்நிற்கும்
வாயு மனமுங் கடந்த மயக்கறின்
தூய அறிவு சிவானந்த மாகிப்போய்
வேயும் பொருளாய் விளைந்தது தானன்றே.

உண்மை யாராயுமுன் நிலைப்பதுபோன்று காணப்படும் இவ் வுலகமும் உலகவாழ்வும் அகம்புறமாகக் காணப்படும் பொய்மாயை என்க. பொய் : நிலையாதது. இதனையே திருவள்ளுவநாயனார் "நில்லாதவற்றை நிலையின என்றுணரும், புல்லறி வான்மை கடை" (331) என்றருளினர். அவற்றால் கொண்ட மருளின் எல்லையினைச் சொல்லவும் நினைக்கவும் ஒல்லாது. மருள் - மாயை. அத்தகைய மாயையின் மயக்கம் திருவருளால் அறுதல் வேண்டும். அற்றால் தூய சிவவுண்மையறிவு தோன்றும். அவ் வறிவு தோன்றவே சிவப்பேரின்பம் நிலைக்கும். நிலைக்கவே சிவபெருமான் எங்குமாய் நிற்கும் பரந்த நிலையுடன் நின்று சிவவிளைவாய்த் திகழ்வர்.

பொய் - மறைந்துள்ள மாயை வேயும் - எங்கும் பரந்துள்ள.

## 2237. துரியப் பரியில் இருந்தஅச் சீவனைப்

2237. துரியப் பரியில் இருந்தஅச் சீவனைப்
பெரிய வியாக்கிரத் துள்ளே புகவிட்டு
நரிகளை யோடத் துரத்திய நாதர்க்கு
உரிய வினைகள்நின் றோலமிட் டன்றே.

துரியப் பரியாகிய அப்பால் முடிவின்கண் இருந்த ஆருயிரை எவற்றிற்கு மேலாம் திருவைந்தெழுத்தை எண்ணுமாறு செலுத்துபவன் சிவன். திருவைந்தெழுத்தை இடையறாது எண்ணினால் நரிகளையொத்து நம்மை வஞ்சித்துக்கொண்டு தம்வழி இழுத்துச் செல்லும் பொறி புலன் கலன்களை அடக்கியருள்வன் சிவன். இதுவே அவற்றைத் துரத்துவதென்பதாகும். பின் இறைபணியாகிய சிவத்தொண்டினின்று சிவனுக்கு அடைக்கலம் என்னும் அடைக்கலமொழி தோன்றும். அடைக்கலமொழி - ஓலம்.

துரியப்பரி - துரிய அதீதம் வியாக்கிரம் - அஞ்செழுத்து எண்ணுதல். நரிகள் - கன்மேந்திரியங்கள் 5; ஞானேந்திரியங்கள் 5; அந்தக் கரணங்கள் 4; ஆக நரிகள் 14ஆம்.

## 2238. நின்றஇச் சாக்கிர நீள்துரி யத்தினின்

2238. நின்றஇச் சாக்கிர நீள்துரி யத்தினின்
மன்றனு மங்கே மணஞ்செய்ய நின்றிடும்
மன்றன் மணஞ்செய்ய மாயை மறைந்திடும்
அன்றே யிவனும் அவன்வடி வாகுமே.

நனவின்கண் ஏற்படும் அப்பால்நிலை சாக்கிரதுரியம் எனப்படும். அந் நிலையில் திருவைந்தெழுத்து ஐந்தனையும் அகநிலை. ஐம்பெருமன்றமாகக் கொண்டு சிவபெருமான் அம்மைகாண அருட் பெருங்கூத்து ஆடுகின்றனன். இதுவே அகக் கூத்தாகும். இவ் வகக் கூத்துச் சொல்லுலகைப்பற்றி நிகழ்கின்றது. இதுபோல் பொருளுலகைப் பற்றி நிகழும் புறக்கூத்தும் ஐந்திடமாகும். அவை முறையே திருஆலங்காடு, திருத்தில்லை, திருக்கூடல், திருநெல்வேலி, திருக்குற்றாலம் என்பன. இவற்றின்கண் அமைந்துள்ள மன்றங்கள் முறையே மணி, பொன், வெள்ளி, செம்பு, மண் என்ப. இவற்றிற்கு முறையே ஒருபுடையொப்பாகச் 'சிவய நம' என்னும் திருவைந்தெழுத்தாகும். இவ்வாறாக அகம் புற அம்பலங்களைக் கொண்டு நடிக்கும் அம்பலவாணரை மன்றன் என ஓதியருளினர். இவற்றை நினைவுகூர ஒரு வெண்பாவில் தருகின்றாம்:

"மேலாம் 'சிவயநம' மேவுமணி பொன்வெள்ளி
பாலாம்செம் போடுமண் பற்றல்போல்-மேலாம்
அவனாடல் செய்வனகம் ஆல்தில்லை கூடல்
தவநெல்லை குற்றாலந் தான்."

அத்தகைய மன்றனும் அப்பால்நிலைக்கண்ணே ஆருயிருடன் வேறற மீளாக்கலத்தலாகிய மணஞ்செய்ய நின்றருள்கின்றனன். அச் சிவபெருமானாகிய மன்றன் மணஞ்செய்தலாகிய கலத்தலைப் புரிதலும் மாயை முதலிய மலங்கள் மறைந்திடும். மறையவே அப்பொழுதே ஆருயிர் பேருயிராம் சிவன் வடிவமாகும். மணம் - கலப்பு.

மன்றன் - கூத்தப்பிரான். மணஞ்செய்ய - கலக்க. மன்றன்.....மறைந்திடும் - சிவ சக்தி சேர மாயை மறைந்துவிடும்.

## 2239. விரிந்திடிற் சாக்கிர மேவும் விளக்காய்

2239. விரிந்திடிற் சாக்கிர மேவும் விளக்காய்
இருந்த விடத்திடை யீடான மாயை
பொருந்துந் துரியம் புரியிற்றா னாகுந்
தெரிந்த துரியத் தீதக லாதன்றே.

பொறி புலன் கலன் முதலிய உறுப்புகள் விரிந்த இடத்து நனவினைப் பொருந்தும். மாயை விளக்குப் போன்று இருந்த இடத்தில் வலிமையோடு நிற்கும். நனவில் அப்பால்நிலைக்கு முன்நிலை வாய்க்குமிடத்து அருளால் ஆருயிர் தாமரையிலை நீர்போல் ஒட்டாது நிற்கும். இக் கருவிகளெல்லாம் நனவின்கண் ஏற்படும் பேருறக்கநிலையில் விட்டகலாது ஒட்டிச் செயலற்றிருக்கும்.

ஈடான - வலிமையுள்ள. தெரிந்ததுரியம் - நனவிற்றுரியம்.

# 2240. உன்னை யறியா துடலைமுன் நானென்றாய்

2240. உன்னை யறியா துடலைமுன் நானென்றாய்
உன்னை யறிந்து துரியத் துறநின்றாய்
தன்னை யறிந்தும் பிறவி தணவாதால்
அன்ன வியாத்தன் அமலனென் றறிதியே.

முன்நாளெல்லாம் உன்னுடைய இயற்கை உண்மைத் தன்மையை அறியாது 'ஐம்புலவேடர் சுழலிற்பட்டு' உடலையே நானென்று கூறினாய். அருளால் உன்னையறிந்து பேருறக்கமாகிய துரியத்தைப் பொருந்தி நின்றாய். தன்னுடைய நிலைமையினை அறிந்த அளவானே பிறவி நீங்காது. பிறவி நீங்குவது அப்பால் நிலையில் விளங்கும் மன்றன் என்று ஓதியருளப்பெற்ற எங்கும் நீக்கமற நிறைந்துள்ள இயல்பாகவே பாசங்களின் நீங்கிய சிவபெருமானால் ஆம் என்று அறிவாயாக. இஃது, உடல்பெருக்கும் நோயை நோயென்றுணராது அழகென்றுணர்ந்து சிலநாள் மகிழ்ந்து பின் துன்புறுநிலையில் நோயென்று உணர்கின்றனன். அதுநீங்க வேண்டுமென்றும் நாடுகின்றனன். ஆனால் அஃது அவனால் நீங்குவதன்று. அதனை நீக்கும் அன்பறிவு ஆற்றல் களமைந்த அரும்பெரும் மருத்துவனால் மட்டுமே முடியும்; அதுபோன்றதாகும். வியாத்தம் - நிறைவு; பரப்பு.

தணவாது - நீங்காது. வியாத்தன் - எங்கும் கலந்திருப்பவன்.

## 2241. கருவரம் பாகிய காயந் துரியம்

2241. கருவரம் பாகிய காயந் துரியம்
இருவருங் கண்டீர் பிறப்பிறப் புற்றார்
குருவரம் பெற்றவர் கூடிய பின்னை
இருவரு மின்றியொன் றாகிநின் றாரே.

கருவுற்ற நாள் முதலாக வளர்ந்து ஓர் எல்லையை எய்தும் நிலை பிறப்பாகும். அப் பிறப்பினால் ஏற்படுவது இவ்வுடல். படைத்தலையும் காத்தலையும் திருவாணையால் புரிந்துவரும் அயனும் அரியும் பிறப்பு இறப்பு உற்றவர்களே. சிவகுரு எழுந்தருளிவந்து திருவைந்தெழுத்தாகிய வரம் அருள்வன். அவ்வரத்தினைப்பெற்று அவர் திருவடி யில்ஆருயிர்க்கிழவன் சேர்வன். சேர்ந்தபிற்பாடு முத்திறப்புணர்ப்பாம் மொழியொணாக் கலப்புநிலையை எய்துவன். எய்தியவிடத்து ஆருயிர் சிவனடிக்கீழ் அடங்கும். அடங்கவே இருவரும் ஒருவராய் நிற்பர். இருவர் கலப்பும் தேனும் பாலும் கலந்த கலப்பினை மானும்: மானும் - ஒக்கும்.

கரு - பிறப்பு. இருவரும் - சீவனும் சிவனும். குருவரம் - குருவின் வரம். கூடிய - சமாதி கூடிய.

## 2242. அணுவின் துரியத்தி லான நனவும்

2242. அணுவின் துரியத்தி லான நனவும்
அணுவசை வின்கண் ணான கனவும்
அணுவசை விற்பரா தீதஞ் சுழுத்தி
பணியிற் பரதுரி யம்பர மாமே.

ஆருயிராகிய அணுவின் பேருறக்கநிலையாம் துரியத்தில் உண்டாகும் நனவும், ஆருயிரின் புடைபெயர்ச்சியில் உண்டாகும் கனவும், அப் புடைபெயர்ச்சியின்கண் தன்னை இழப்பதாகிய உறக்கமும் பொருந்திய இடத்து அப்பால்நிலை எய்தும். எய்தவே சிவனுடன் ஒன்றாம் சிறப்பு எய்தும். இதுவே பரம் என ஓதப்பெற்றது.

அணு - ஆன்மா. பணியில் - பொருந்தினால்.

## 2243. பரதுரி யத்து நனவும் பரந்து

2243. பரதுரி யத்து நனவும் பரந்து
விரிசக முண்ட கனவுமெய்ச் சாந்தி
உருவுறு கின்ற சுழுத்தியும் ஓவத்
தெரியுஞ் சிவதுரி யத்தனு மாமே.

மேற்பேருறக்கமாகிய பரதுரிய நனவு எங்கும் பரந்து விரிந்த உலக நுகர்வுகளை உண்டன. அதுபோல் கனவுப் பயனும் நுண்ணுகர்வுண்மையாதலின் பரதுரியக் கனவு மெய்ம்மை அமைதியாகும். கருவி கரண முதலிய உருவு மட்டும் அசைவின்றியிருக்கும் உறக்கநிலையும் நீங்க, ஆண்டு அருளாற்புலனாகும் ஒன்று. அதுவே சிவதுரிய நிலையாகும். அந்நிலை எய்தியவன் சிவதுரியத்தனாவன்.

## 2244. பரமா நனவின்பின் பாற்சக முண்ட

2244. பரமா நனவின்பின் பாற்சக முண்ட
திரமார் கனவுஞ் சிறந்த சுழுத்தி
உரமாம் உபசாந்த முற்றல் துறவே
தரனாஞ் சிவதுரி யத்தனு மாமே.

மேல்நனவு என்று சொல்லப்படும் பரமா நனவின் அடுத்தநிலை மெய்ம்மையும் உறுதியுமுடைய மேற்கனவில் உலக நுகர்வுகளை உண்ணும். சிறந்த உறக்கநிலை நல்லுறுதியாகும். பேருறக்கமேனிலை அமைதி நிறைதல். அதன் மேல்நிலை துறவாகும். இந்நிலை சிவதுரிய நிலையாகும். இந்நிலை எய்தினான் சிவதுரியத்தனாவன்.

பரமா நனவு - பர நனவில். தரனாம் - கைகூடப் பெற்றவனாம்.

## 2245. சீவன் துரிய முதலாகச் சீரான

2245. சீவன் துரிய முதலாகச் சீரான
ஆவ சிவன்துரி யாந்தம் அவத்தைபத்து
ஓவும் பராநந்தி யுண்மைக்குள் வைகியே
மேவிய நாலேழ் விடுத்துநின் றானன்றே.

ஆருயிரின் பேருறக்க நிலையாகிய சீவதுரிய முதல் சிவதுரியம் ஈறாக நிலைகள் பத்தென்ப இப்பத்து நிலையினையும் அருளால் கண்டு நீங்க ஆண்டு நிலைபெற்றுள்ள பராநந்தியாகிய சிவபெருமான் திருவடிக்கீழ்த்தங்கி நிலைபத்தும் அப்பால் நிலையொன்றுமாகிய பதினொன்றினையும் விடுத்து ஆருயிர்க் கிழவன் இன்புற்றிருந்தனன் என்க. நாலு+ஏழ்-பதினொன்று நாலேழ்: உம்மைத்தொகை நிலைபத்தாவன: சீவ துரியம், சிவதுரியாத்தம் ஆக இரண்டு. மேல்நனவு, மேற்கனவு, மேலுறக்கம், மேற்பேருறக்கம் ஆக நான்கு. சிவநனவு, சிவக்கனவு, சிவவுறக்கம், சிவப்பேருறக்கம் ஆக நான்கு. இம் முத்திறத்துப்பத்து நிலை என்க.

சீவன்.....பத்து - (1) சீவதுரியம், (2) சிவதுரியாதீதம், (3) பரநனவு, (4) பரகனவு, (5) பரசுழுத்தி, (6) பரதுரியம், (7) சிவநனவு, (8) சிவக்கனவு, (9) சிவசுழுத்தி, (10) சிவதுரியம்.

## 2246. பரஞ்சிவன் மேலாம் பரமம் பரத்திற்

2246. பரஞ்சிவன் மேலாம் பரமம் பரத்திற்
பரம்பரன் மேலாம் பரநன வாக
விரிந்த கனாவிடர் வீட்டுஞ் சுழுனை
உரந்தகு மாநந்தி யாமுண்மை தானே.

பரம் சிவன் இரண்டற்குமேல் பரமம். அப் பரத்திற்கு மேல் பரம்பரன். பரநனவு விரிந்த பரக்கனவு இவ்விரண்டும் ஆருயிர்களின் பிறப்புத் துன்பத்தை அகற்றும். அதன்மேல் பேரறிவுப் பெருமானாகிய பர நந்தியின் உண்மைநிலையினை எய்துவன்.

## 2247. சார்வாம் பரசிவஞ் சத்தி பரநாதம்

2247. சார்வாம் பரசிவஞ் சத்தி பரநாதம்
மேலாய விந்து சதாசிவ மிக்கோங்கிப்
பாலாய்ப் பிரமன் அரியம ராபதி
தேவாம் உருத்திரன் ஈசனாங் காணிலே.

எப்பொருட்குஞ் சார்பென நின்று எஞ்ஞான்றும் இன்பவடிவமாய் இலங்கும் மெய்ப்பொருள் பரசிவம், சத்தி, பரநாதம், பரவிந்து, சதாசிவம், ஈசன், அரன், அரி, அயன் என்னும் ஒன்பது நிலையுள் நிற்கும். இது பரநிலையாகும். இந்நிலையினை எய்திய ஆருயிர்க்கிழவரும் இப் பொயர்களையே பெற்று வாழ்வர். சதாசிவ மெய்யாகிய அருளோன் அருஉருவநிலை. மிக்கோங்கிய இந் நிலையினின்றே உருவநிலை நான்கும் தோன்றும். அரிய அமராபதித்தேவு என்னும் உருத்திரருக் கடக்கமே வானவரும் வானவர்கோனாகிய இந்திரனும் என்க.

இம் மந்திரம் பர அவத்தை உடையவர் பரசிவ முதல் அயன் ஈறாக ஒன்பது வடிவமாய் விளங்குவர் என்றது.

## 2248. கலப்பறி யார்கடல் சூழல கேழும்

2248. கலப்பறி யார்கடல் சூழல கேழும்
உலப்பறி யாருட லோடுயிர் தன்னை
அலப்பறிந் திங்கர சாளகி லாதார்
குறிப்பது கோல மடலது வாமே.

ஏழுவகையான உலகங்களும் பிறப்புக்களும் மாயாகாரியப் பொருள்களின் கலப்பென்றும், அவற்றுடன் ஆருயிர் கலந்திருப்பதும். நிலைப்பாடுடைய தன்றென்றும் ஆன்றோர் கொள்ளும் உண்மையினை அறியார் கலப்பறியாராவர் உயிருடன்கூடிய உடல் அழியும் என்பதையும் அத்தகைய அழிவுபாட்டுக்குரியவுடல் உயிரினைத் தன்வழியீர்த்து அலைப்பதனையும் அறியார். அருளால் அறிவரேல் அவ்வுடலினை ஆளும் தகுதியினை உடையவராவர். அத் தகுதியினை அறிந்து அவற்றை ஆளும் வலியில்லாதாரும் உண்மை உணரவும் வலிபெறவும் சிவபெருமானை ஒருங்கிய வுள்ளத்துக் குறித்தல்வேண்டும். அதற்குத் துணைபுரியும் கடவுள் திருக்கோலங்களை மேற்கொள்ளுதல்வேண்டும். அங்ஙனங் கொண்டால் அவற்றிற்கு வேண்டும் வலிமை முற்றும் அருளால் தாமே வந்துறும். குறித்தல் - தியானித்தல்.

உலப்பு - அழிதல். அலப்பு - அலைத்தல். குறிப்பது கோலம் - ஈசன் உருவத்தை நினைப்பது. அடல் - வலிமை.

## 2249. பின்னை யறியும் பெருந்தவத் துண்மைசெய்

2249. பின்னை யறியும் பெருந்தவத் துண்மைசெய்
தன்னை யறியில் தயாபரன் எம்மிறை
முன்னை யறிவு முடிகின்ற காலமும்
என்னை யறியலுற் றின்புற்ற வாறே.

பின்னையறிவாகிய செயற்கைக் கல்வியறிவினால் நன்னெறி நான்மை நற்றவத்துண்மை செய்து மேற்கொள்ளின் அன்னையாகிய திருவருளம்மை நம்மை அறிவள் அன்னையறிந்தால் பெருங்கண்ணோட்டப் பெரும்பொருளாகிய எம்மிறைவன் உணர்வன். உணரவே தொன்மை இயற்கை யறிவு சிவபெருமான் திருவடிக்கண் பொருந்தும் நன்னிலைமை வந்து எய்தும். அந்நிலையில் திருவடியுணர்வால் என்னையறியலுறுவேன்; உறவே ஆண்டவன்றன் திருவடி இணையிலா இன்பத்தினையும் எய்துவேன். ஒருவன் தன்னை யறிவதென்பது உள்ளம் உரை உடல் மூன்றாலும் உளுற்றும் எண்ணம் சொல் செயல் என்பவைகளாற்றானறியும் இவ்வறிவு நிலையில் சார்பறிவாகும். துய்ப்பினால் தன்னையறிவது நிலையுடைச் சார்பறிவாகும். அஃது கோலங்கொண்டோன் தன்னை அக் கோல வண்ணத்தனாயே குறிப்பதனையொக்கும். குறிப்பது - கருதுவது.

## 2250. பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்

2250. பொன்னை மறைத்தது பொன்னணி பூடணம்
பொன்னின் மறைந்தது பொன்னணி பூடணம்
தன்னை மறைத்தது தன்கர ணங்களாம்
தன்னின் மறைந்தது தன்கர ணங்களே.

இத் திருப்பாட்டு ஆருயிரின் நிலைமையினை ஓதுகின்றது. பொன்னாற் செய்யப்படும் அணிகள் அணிவாரால் போற்றப்பட்டுப் பெருமை எய்துகின்றன. அணிவாரும் அவற்றால் சிறப்பும் பெருமையும் உறப்பெறுகின்றனர். அவ் வணிகலன்களை அணியின் வேறுபாட்டுடன் காணுங்கால் பொன்னைப் பற்றிய குறிப்பும் காட்சியும் ஒருசிறிதும் புலனாகா. 'நாவலொடு பெயரிய பொலம்' என்னும் முறைப்படிப் பொன்னைப் பற்றிய வேறுபாடு ஆயுங்கால் அணியைப் பற்றிய குறிப்பும் காட்சியும் ஒருசிறிதும் தோன்றாவென்க. அதுபோல் உடல் கலன் முதலியவற்றை ஆயுங்கால் ஆருயிரின் குறிப்பும் காட்சியும் ஒருசிறிதும் தோன்றா. உடல் கலன் முதலிய பொருள்கட்கு மேலாக அறிவுள்ளதாய் அவற்றின் வேறாய் அவற்றை இயக்குவதாய் அவற்றாற் பயன் எய்தும்படி ஆண்டவனால் சேர்க்கப்பட்டதாய், அழிவில்லதாய், அவ்வாண்டான் அடிக்கீழ் வாழும் பெரும்பேற்றின்பு எய்தற்குரிய சிறப்பினதாய் உள்ள ஆருயிர் ஒன்றுண்டு என வழியளவை யான் ஆராயும்வழி அவ்வுடல்கலன்களைப் பற்றிய எண்ணமும் தோற்றமும் ஒருசிறிதும் புலனாகா. அதனால் தன்னை மறைத்தது தன் கரணங்கள், தன்னின் மறைந்தது தன் கரணங்கள் என்று ஓதியருளினர்.

தங்க நகையை நகை என்னும் எண்ணத்தோடு பார்க்குமிடத்துத் தங்கம் என்பது தோன்றாது. தங்கம் என்ற நோக்கத்துடன் பார்த்தால் நகை என்ற எண்ணம் இராது. அதுபோல், ஆன்மா தான் கருவி காரணங்களே என்று எண்ணினால் ஆன்ம தரிசனம் இல்லை. ஆன்மா தான் வேறு என்று நோக்கும்போது கருவி கரணங்கள் மறையும் என்பது இதன் கருத்து.

## 2251. மரத்தை மறைத்தது மாமத யானை

2251. மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமத யானை
பரத்தை மறைத்தது பார்முதற் பூதம்
பரத்தின் மறைந்தது பார்முதற் பூவே.

இத் திருப்பாட்டு "உலகமே உருவமாக யோனிகள் உறுப்பதாகக் கொண்டு அலகிலா நலங்கள்" என்றும் இடையீடின்றி ஒன்றாய் வேறாய் உடனாய் நின்று புரிந்தருளும் சிவபெருமானின் அரும் பெரும் தன்மையினை அருளுகின்றது. தேக்கு முதலிய சிறந்த மரங்களால் கைவல் தச்சன் ஓர் அழகிய யானையின் புனைஉரு அமைக்கின்றனன். அவ்வுருவினைப் பற்றிய எண்ணமும் ஆய்வுங்கொள்ளுங்கால் மரத்தைப் பற்றிய எண்ணமும் வேறுபாடும் ஒருசிறிதும் தோன்றா. மரத்தைப் பற்றிய எண்ணம் தோன்றுங்கால் யானையைப்பற்றிய எண்ணம் தோன்றுவதின்று. அதுபோல் சுட்டியுணரப்படும் உலகத்தையும். ஏனைப் பொருள்களையும் ஆராயுங்கால் முழுமுதற் சிவபெருமானின் எண்ணமும் பண்பும் உள்ளத்தின்கண் நண்ணுவதில்லை. ஆயிருர்களின் பொருட்டு வியத்தகு உலகுடல்களைப் படைத்து அவற்றுடன் விரவி நின்று இயக்காதியக்கிவரும் சிவபெருமானின் திருவுருவாம் திருவருள் இயல்பினையும் அவன்றன் அளத்தற்கரிய எண்பெரும் குணங்களையும் வழியளவையான் உன்னுங்கால் உலகுடற்பொருள்களைப் பற்றிய எண்ணம் ஒரு சிறிதும் தோன்றாது. அதனால் 'பார்முதற் பூதம் பரத்தை

மறைத்தது' எனவும், 'அது பரத்தில் மறைந்தது' எனவும் ஓதியருளினர். இயக்காதியக்கல் - கருத்தாலியக்கல். இவ்வுண்மை வரும் திருவள்ளுவநாயனார் செந்தமிழ்ப் பொதுத் திருமறையான் உணர்க:

"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு."

(திருக்குறள், 355.)

மேலும் திருவள்ளுவநாயனாரருளிய "காணுங்காற் காணேன் தவறாய காணாக்கால், காணேன் தவறல் லவை' (1286) என்னும் மறையும் ஒருபுடையொப்பாகக் கொள்க. அப் பொருள் வருமாறு: சிவபெருமானைத் திருவருட்கண்ணால், உணர்வின்கண் நினைவதாகிய காணுங்கால் நிலையாமையாகிய உலகியற் பொருள்களைக் காணேன். சிவபெருமானை நினையாமையாகிய காணாதவிடத்து (எதிர்மறை முகத்தால்) தவறுடையனவாகிய உலகினையே காண்பேன் என்பதாம். தவறு: தோன்றி யொடுங்கும் குற்றமுடைய உலகு உடல் உணா. தவறல்லவை - அக்குற்றம் ஒரு சிறிதும் இல்லாதவன் - சிவபெருமான்.

இதன்கண் காணப்படும் மெய்ப்பொருளாவது சிவன். அவனே அப் பொருள்களைப் படைத்துக் காத்து உடனாய்நின்று இயக்கியருளுகின்றனன். இவ் வுண்மை அப் பொருளைக் கண்டவுடன் எழுதல். இதற்கு ஒப்புத் திருக்குறளைக் கண்டவுடன் திருவள்ளுவநாயனார் திருவடி நினைவுக்கு வருதல். திருவடி - திருவருள். ஒரு பொருளுக்குச் சார்பினால் பல பெயர்கள் அமையும். அப் பெயர்களனைத்தும் அப் பொருளுமன்று அப் பொருளின் வேறுமன்று. சார்பினால் வரும்பெயர்கள் நிலையா. இயற்பெயர் நிலைக்கும். ஆருயிர்க்கு உயிர்க் கிழவன்

என்பது இயற்பெயர். ஏனைப் பருஉடற்சார்பால் வருவன அனைத்தும் செயற்பெயர். செயல் எனினும் சார்பெனினும் ஒன்று. அஃது 'அடிமை' என்னும் படியிலா முடிவிலா ஒப்பிலாத் திருப்பெயராம். செயற்பெயர்க்கு எடுத்துக் காட்டு வருமாறு: 'கோச் சேரமான் யானைக்கண் சேய் மாந்தரம் சேரல் இரும்பொறை.' இதன்கண் சாதி, குடி, வடிவு, இயற்பெயர், சிறப்புப் பெயர் என்னும் ஐம்பெயர்கள் காணப்படுகின்றன. இவையனைத்தும் செயற்பெயர்கள். இவற்றை வரும் வெண்பாவால் நினைவுகூர்க:

"சாதி குடிவடிவு சாற்றும் இயல்சிறப்பிங்
கீதஞ்சும் சார்பால் இயைவனவாம் - ஓதுங்கால்
கோச்சேரன் யானைக்கண் சேய் மாந்த ரம்பொறை
பாச்சார்பா லாங்கற் பனை."

## 2252. ஆறா றகன்று நமவிட் டறிவாகி

2252. ஆறா றகன்று நமவிட் டறிவாகி
வேறான தானே யகாரமாய் மிக்கோங்கி
ஈறார் பரையின் இருளற்ற தற்பரன்
பேறார் சிவாய அடங்கும்பின் முத்தியே.

அருஞ்சைவர்மெய் என்று சொல்லப்படும் (2139) முப்பத்தாறு தத்துவங்களின் உண்மையும் ஒருவனுக்குத் திருவருளால் உணர்த்தப்படும். உணர்த்தப்பட்டால் அப் பொருளுண்மை குறிக்கும் மகர எழுத்துப் படித்து முற்றுற்ற ஏடுபோல் வாளா இருக்கும். அம் மகரம் வாளா இருக்கவே அதனைத் தொழிற்படுத்திவரு நகரமும் கற்பித்த ஆசான் பொற்புப்போல் வாளா இருக்கும். இவ்விரண்டும் உள்ள காலத்து ஆருயிரின் அறிவு சுட்டறிவாகவும் சிற்றறிவாகவும் இருக்கும். இவை திருத்தமுறக் கருத்திலகன்றமையால் ஆருயிர் அறிவாகநிற்கும். நின்று அவ் வுயிரருளால் உழைத்து உயர்ந்தானும் ஒழுகி உயர்ந்தானும் போன்று மிக்கு ஓங்கும். மிக்கு ஓங்கி ஐம்மலங்களையும் அகற்றுவதாகிய ஈற்றினைச் செய்து அம் மகர எழுத்து நின்ற இடத்துத் தான் வந்து நிற்கும். அவ் வனப்பாற்றலாகிய திருவருளின் தனித் துணையால் இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கிய விழுமிய முழுமுதற் சிவன் தன் திருவடிப்பேற்றை நல்கி அத் திருவடிக்கீழ் அவ் வுயிர்களை வைத்தருள்வன். அக் குறிப்பு முன்பு நகரமுள்ள இடத்து இப்பொழுது சிகர நிற்பதாகும். இந் நிலையில் முன்னும் பின்னும் சிவ என்னும் ஈரெழுத்து நிற்க நடுவுள் யகரம் நிற்கும். இதுவே, 'சிவயசிவ' என்னும் செறிவுமறையாகும்.

இதுவே 'அடியேன் நடுவுள் இருவீரும் இருப்பதானால்' என்னும் குறிப்பாகும். 'சிவய' என நின்று பின் 'சிவயசிவ' என நிற்பதே திருவடிப்பேறென்க. சிவய என்பது திருவடியிற் சேரத் திருத்தநீர் ஆடிநிற்றல். சிவயசிவ என்பது அத் திருவடியில் அருத்தியினால் பொருத்தமுற ஆரா இன்பம் நுகர்ந்திருத்தல்; இதுவே திருவடிப் பேறென்க.1

நமவிட்டு-நகரத்தால் குறிக்கப்படும் திரோதான மலமும், மகரத்தால் குறிக்கப்படும் மாயா மலமும் இரண்டையும் நீக்கி. தானே அகாரமாய் - ஆன்மா சிவவடிவாய். "யாரும் அறியார் அகாரம் அவனென்று" (திருமூலர்) அகாரம் - சிவன். ஈறார்பரை - திருவருட் சத்தி.

## 2253. துரியத்தில் ஓரைந்துஞ் சொல்லக ராதி

2253. துரியத்தில் ஓரைந்துஞ் சொல்லக ராதி
விரியப் பரையின் மிகுநாத மந்தம்
புரியப் பரையின் பராவத்தா போதந்
திரியப் பரமந் துரியந் தெரியே.

துரியமாகிய மேல்நிலையிற் காணப்படும் மேல்நனவு, மேற்கனவு, மேலுறக்கம், மேற்பேருறக்கம், மேலொடுக்கம் என்னும் ஐந்து நிலையும் திருவருளால் தெரிதல்வேண்டும். சொல்லுலகும் பொருளுலகும் விரிதற்கிடமாகிய அகர முதலிய எழுத்துக்களை யுள்ளடக்கிநிற்கும் ஒலியாகிய நாதம் திருவருளால் தூமாயையினின்றும் தோன்றும். அதுபோல் இருவேறுலகங்களும் அந்தமாகிய ஒடுக்கத்தைப் பெறத் திருவருளால் பராவத்தையாகிய மேனிலை தோன்றும். அத்திருவருளுணர்வாகிய போதமும் ஒடுங்கத் தூய சிவனார் தோன்றுவர். இவையே துரியமாகிய மேனிலை என்க. திரிய - ஒடுங்க.

துரியத்தில் ஐந்து - துரியம், துரியநனவு, துரியகனவு, துரியசுழுத்தி, துரிய அதீதம் ஆக ஐந்து. பராவத்தா போதம் திரிய - பர அவத்தையிலுண்டாகும் காட்சியும் ஒழிய.

## 2254. ஐந்துஞ் சகலத் தருளாற் புரிவற்றுப்

2254. ஐந்துஞ் சகலத் தருளாற் புரிவற்றுப்
பந்திடுஞ் சுத்த அவத்தைப் பதைப்பினில்
நந்தி பராவத்தை நாடச் சுடர்முனம்
அந்தி யிருள்போலும் ஐம்மல மாறுமே.

ஆருயிர்கள் திருவருளால் ஐம்மலத் தன்மைகளை உணர்ந்து அவற்றினின்றும் நீங்குவதாகிய பற்றறுதியை உற்றுநிற்பதே துறவாகும். அதுவே தூய்மை. அதுவே தெளியக் காண்டல். அதுவே சுத்தி. அதுவே புரிவு. அப் புரிவினைப் பொருந்தி வந்திடும் பதைப்பு நிலையினில் நந்தியாகிய மேனிலை நாட்டம் உண்டாகும். அந் நாட்டத்து முன்னிலையில் சுடர் முன்னிலையில் அந்தியிருள் முந்தியடங்குவதுபோல் ஐம்மலமும் அடங்கும். அடங்கும் - அறும்; அறுதல், இருந்தும் பயனிலவாதல்.

## 2255. ஐயைந்து மட்டுப் பகுதியும் மாயையும்

2255. ஐயைந்து மட்டுப் பகுதியும் மாயையும்
பொய்கண்ட மாமாயை தானும் புருடன்கண்டு
எய்யும் படியாய் எவற்றுமாய் அன்றாகி
உய்யும் பராவத்தை யுள்ளுறல் சுத்தமே.

ஆருயிர்கட்குப் பருவுடலாயமைந்த உடல்மெய் இருபத்து நான்கும், இவற்றுடன் கூடிச் சிறப்பு வகையான் நிற்கின்ற ஆள் ஒன்றும் ஆகிய இருபத்தைந்து மெய்களும் உடலென்ப. ஆள் - புருடன். ஆளின் பொதுநிலைமை ஊழி ஊழ் உழைப்பு உணர்வு உவப்பு என்னும் தூவா மாயையினினாம் ஐம்போர்வை பெற்று நிற்றல். இவ் விரண்டும் முறையே உழைப்பார் கருவி கைக்கோடலும் கச்சரையாத்தலும் ஒக்கும். உழைத்தற் குடையடுத்தல் உன்னுபொது ஆளாம், விழை கருவி கோடல் சிறப்பு; என நினைவுகூர்க. மட்டுப் பகுதியாகிய மூலப் பகுதியும், ஏழு மெய்களுடன் கூடிய தூவாமாயை என்னும் உணர்வுமெய்யும் ஆகிய இவையனைத்தும் நிலையாமையுடையன, திருவடிசேர்வதற்குக் கருவியாவன என உணர்த்தும் தூமாயை ஐந்தும் திருவருளால் ஆருயிர் அறிவின்கண் காணப்படுதல் வேண்டும். காணவே, தான் இவற்றின் வேறெனவும் இவற்றால் எய்தும்படியுள்ளது தனக்கு ஏதும் இன்றெனவும், உள்ளத்துக் கொள்ளல் ஏற்படும். இவற்றிற்கு மேல்நிலையே உய்யும்படியமைந்த ஒப்பில் ஒருநிலை என்பது விளங்கும். அந் நிலையினை அருளால்

உள்ளுதலே ஆவித் தூய்மையாம் புரிவு நிலையாகும். புரிவு - சுத்தம். கச்சு: அரைப்பட்டிகை.

ஐயைந்து - ஆன்ம தத்துவம் 24-ம் புருட தத்துவமும் ஆக 25. மட்டுப்பகுதி - மூலப் பிரகிருதி.

## 2256. நின்றான் அருளும் பரமுமுன் னேயமும்

2256. நின்றான் அருளும் பரமுமுன் னேயமும்
ஒன்றாய் மருவும் உருவும் உபாதியுஞ்
சென்றா னெனைவிடுத் தாங்கிற்செல் லாமையும்
நன்றான ஞானத்தின் நாதப் பிரானன்றே.

நன்னெறி நான்மையால் நன்றான திருவடி உணர்வு வெளிப்படும். நாதங்கடந்து அந் நாதத்தையும் இயக்கும் முழுமுதல்வனாகிய சிவபெருமான் நாதப்பிரான் எனப்படுவன். அவன் அருளும் பரமும் ஆருயிர் செய்யும் அன்புமாய் நின்றருள்கின்றனன். ஆருயிருடன் பிரிவின்றி விரவி ஒன்றாய் மருவியிருக்கும் பருவுடல் நுண்ணுடல் முதலுடன் ஆகியவைகள் ஆருயிர்களைவிட்டு அகலும்படி செவ்விநோக்கிச் சிவகுருவாய்ச் சென்றருளினன். அடியேனைவிட்டுத் தான் யாண்டும் செல்லாமையும் பூண்டருளினன். உபாதி: முதலுடம்பு; காரணவுடம்பு.

நேயம் - அன்பு. உருவு - தூல, சூக்கும தேகங்கள்.
உபாதி - காரண தேகம்.
முக்குண நிர்க்குணம்

## 2257. சாத்திக மெய்து நனவெனச் சாற்றுங்கால்

2257. சாத்திக மெய்து நனவெனச் சாற்றுங்கால்
வாய்த்த இராசத மன்னுங் கனவென்ப
ஓய்த்திடுந் தாமதம் உற்ற சுழுத்தியாம்
மாய்த்திடு நிர்க்குண மாசில் துரியமே.

மூலப் பகுதியில் வெளிப்படும் முக்குண இயல்பினைச் சொல்லுமிடத்து அமைதிக் குணமாகிய சாத்துவிகம் நனவாகும். ஆட்சிக் குணமாகிய இராசதநிலை கனவாகும். ஈட்டுதல்தொழிலினின்றும் ஓய்ந்து ஊட்டுதற்றொழிலில் தோய்ந்துநிற்கும் அழுந்தற் குணமாகிய தாமதம் உறக்கமாகும். இம் மூன்று குணங்களையும் மாயுமாறு செய்து அருட்குணம் மேலோங்கி நிற்கும்நிலை நிர்க்குணமாகும். இந் நிலைபேருறக்கமாகிய துரிய நிலையாகும். பேருறக்கமாவது உலகினை மறந்து உடலினைத் துறந்து அடலேற்று வெல்கொடிச் சிவனை நினைந்து திருவருளில் அழுந்தும்நிலை.
அண்டாதி பேதம்

## 2258. பெறுபகி ரண்டம் பேதித்த அண்டம்

2258. பெறுபகி ரண்டம் பேதித்த அண்டம்
எறிகடல் ஏழின் மணல்அள வாகப்
பொறியொளி பொன்னணி யென்ன விளங்கிச்
செறியும்அண் டாசனத் தேவர் பிரானே.

புறத்தே காணப்படும் அண்டங்களும், நிலவண்டம், நீரண்டம், நெருப்பண்டம், காற்றண்டம், வான் அண்டம் என்று சொல்லப்படும் ஒன்றோடொன்று மாறுபட்ட பல அண்டங்களும் அளவில்லன. பேதித்தல் - மாறுபடுதல். அளவில்லன என்பதை ஓர் ஒப்பில் வைத்துக் கூறின் அலை வீசுகின்ற கடல்கள் ஏழென்ப. அவ் வேழின்கரையிற் காணப்படும் மணலை எண்ணுவது முடியாதவாறுபோல அளவில்லன என்பதாகும். தேவர் மூவர் யாவர்க்கும் முழுமுதல்வனாய் விளங்கும் சிவபெருமான் இவ் அண்டங்களனைத்தையும் இருக்கையாகக் கொண்டு பிரிவின்றி விளங்குகின்றனன். கண்ணும் ஒளியும் பொன்னும் அணியும் ஒன்றைவிட்டு ஒன்று தனித்து விளங்காமைபோன்று சிவனும் அண்டத்துடன் தனித்துப் பிரித்தறியவாரான்.

## 2257. சாத்திக மெய்து நனவெனச் சாற்றுங்கால்

2257. சாத்திக மெய்து நனவெனச் சாற்றுங்கால்
வாய்த்த இராசத மன்னுங் கனவென்ப
ஓய்த்திடுந் தாமதம் உற்ற சுழுத்தியாம்
மாய்த்திடு நிர்க்குண மாசில் துரியமே.

மூலப் பகுதியில் வெளிப்படும் முக்குண இயல்பினைச் சொல்லுமிடத்து அமைதிக் குணமாகிய சாத்துவிகம் நனவாகும். ஆட்சிக் குணமாகிய இராசதநிலை கனவாகும். ஈட்டுதல்தொழிலினின்றும் ஓய்ந்து ஊட்டுதற்றொழிலில் தோய்ந்துநிற்கும் அழுந்தற் குணமாகிய தாமதம் உறக்கமாகும். இம் மூன்று குணங்களையும் மாயுமாறு செய்து அருட்குணம் மேலோங்கி நிற்கும்நிலை நிர்க்குணமாகும். இந் நிலைபேருறக்கமாகிய துரிய நிலையாகும். பேருறக்கமாவது உலகினை மறந்து உடலினைத் துறந்து அடலேற்று வெல்கொடிச் சிவனை நினைந்து திருவருளில் அழுந்தும்நிலை.

அண்டாதி பேதம்

## 2258. பெறுபகி ரண்டம் பேதித்த அண்டம்

2258. பெறுபகி ரண்டம் பேதித்த அண்டம்
எறிகடல் ஏழின் மணல்அள வாகப்
பொறியொளி பொன்னணி யென்ன விளங்கிச்
செறியும்அண் டாசனத் தேவர் பிரானே.

புறத்தே காணப்படும் அண்டங்களும், நிலவண்டம், நீரண்டம், நெருப்பண்டம், காற்றண்டம், வான் அண்டம் என்று சொல்லப்படும் ஒன்றோடொன்று மாறுபட்ட பல அண்டங்களும் அளவில்லன. பேதித்தல் - மாறுபடுதல். அளவில்லன என்பதை ஓர் ஒப்பில் வைத்துக் கூறின் அலை வீசுகின்ற கடல்கள் ஏழென்ப. அவ் வேழின்கரையிற் காணப்படும் மணலை எண்ணுவது முடியாதவாறுபோல அளவில்லன என்பதாகும். தேவர் மூவர் யாவர்க்கும் முழுமுதல்வனாய் விளங்கும் சிவபெருமான் இவ் அண்டங்களனைத்தையும் இருக்கையாகக் கொண்டு பிரிவின்றி விளங்குகின்றனன். கண்ணும் ஒளியும் பொன்னும் அணியும் ஒன்றைவிட்டு ஒன்று தனித்து விளங்காமைபோன்று சிவனும் அண்டத்துடன் தனித்துப் பிரித்தறியவாரான்.

பகிர் - புற. பேதித்த - மாறுபட்ட பூமி. பொறி ஒளி - கண்ணொளி.

## 2259. ஆனந்த தத்துவம் அண்டா சனத்தின்மேல்

2259. ஆனந்த தத்துவம் அண்டா சனத்தின்மேல்
மேனிஐந் தாக வியாத்தமுப் பத்தாறாய்த்
தானந்த மில்லாத தத்துவ மானவை
ஈனமி லாஅண்டத் தென்மடங் காகுமே.

இயற்கை உண்மை அறிவின்ப வடிவினனாகிய சிவபெருமான் அண்டத் திருக்கைமேல் அமர்ந்துள்ளனன். அவன், அத்தன், அன்னை, அருளோன், ஆண்டான், ஆசான் என்னும் ஐவேறு பொதுவடிவங்கொண்டு ஆருயிர்கட்கு வேண்டுவ புரிந்தருள்கின்றனன். முப்பத்தாறு மெய்களுக்கும் அப்பாற்பட்டு அழிவில்லாது நிற்பவனும் அவனே. இத் தத்துவங்கள் அளவில்லாத அண்டங்களின் எண்ணிக்கையினும் எட்டுமடங்கிலுங் கூடுதலாகும். திருமேனி ஐந்துகொண்டு தோற்றம் அளிப்பினும் அவன் எங்கணும் நீக்கமற நிறைந்துநிற்கும் நிலையிலும் பிரிவின்றி நிற்பன். வியாத்தம் - பரப்பு, செறிவு, வியாபகம். (அ. சி) அண்டாசனம் - அண்டக் கூட்டங்களாகிற ஆசனம்.

பதினொராந்தானமும் அவத்தையெனக்காணல்

## 2260. அஞ்சில் அமுதுமோ ரேழின்கண் ஆனந்த

2260. அஞ்சில் அமுதுமோ ரேழின்கண் ஆனந்த
முஞ்சிலோங் காரமோ ரொன்பான் பதினொன்றில்
வஞ்சக மேநின்று வைத்திடிற் காயமாங்
கிஞ்சுகச் செவ்வாய்க் கிளிமொழி கேளே.

உயிர்க்கு ஒருநாளும் அழிவின்றி நிலைத்திருக்கும்படி செய்யும் இயல்பு வாய்ந்தது எது? அஃது அமிழ்து. விண்ணவர் உண்ட அமழ்தம் மண்ணவரைவிடச் சிலநாட்கள் நீடித்திருக்கும்படி செய்யும் நீர்மைத்து ஆனால் தூமாயையின்கண் பெறப்படும் சிவமெய், என்றும் அழியா இன்ப நிலைப்பினைத் தருவது. அதனால் அச் சிவனே சாவாமருந்தாவன். சாவாமருந்து - அமிழ்து. சிவமெய் - சிவதத்துவம். இஃது தூமாயையின் ஐந்து நிலைகளில் ஒடுக்கமுறை ஈற்றில் காணப்படுவது. இதுவே தோற்றமுறையில் முதலாவதாகும். இம் மெய் ஐந்தும் உணர்த்துமெய் என்று கூறப்படும். உணர்வுமெய் ஏழில் இறுதியாகக் காணப்படும் தூவாமாயை - மருள் இன்ப நிலையாகும். முஞ்சுதலாகிய அழிவில்லாத ஓங்காரம் மூன்று எழுத்துக்களைக்கொண்டதாகும். மூன்றாவன, அ + உ + ம் என்பன. இவற்றுடன் உடல்மெய் என்றதன்கண் காணப்படும் இருபது மெய்களுடன் ஓங்காரம் மூன்றும் சேர்ந்து இருபத்து மூன்று. இஃது ஆங்காரமெய்யாகும். பிறக்கும் பெற்றிவாய்ந்த ஆருயிர்கட்கு உடல்மெய் அவ்வாங்காரி (1049) பெற்ற பெண்பிள்ளையாகும்.

முள்முருக்கின் பூவிதழ் போன்ற செவ்விய இதழை உடைய பெண் பிள்ளையே கேட்பாயாக. சிஞ்சுகம் - முண்முருக்கு.

அஞ்சில் அமுது - சிவ தத்துவங்களின் ஈறாய சிவம். ஏழின்கண் ஆனந்தம் - வித்தியா தத்துவங்களின் ஈறாய மாயை. முஞ்சில் - அழிவில்லாத. ஓங்காரம், ஓரொன்பான், பதினொன்றில் - ஓங்காரம் மூன்று ஆக 23-வது தத்துவமாகிய அகங்காரம்.

## 2261. புருட னுடனே பொருந்திய சித்தம்

2261. புருட னுடனே பொருந்திய சித்தம்
அருவமொ டாறும் அதீதத் துரியம்
விரியுஞ் சுழுத்தியின் மிக்குள்ள எட்டும்
அரிய பதினொன்று மாமவ் வவத்தையே.

ஆளாகிய புருடனுடன் சித்த முதலியவற்றைத் தொழிற்படுத்தும் தூமாயை மெய்கள் ஐந்துங்கூடி ஆறாகும். இவ்வாறும் அப்பால் நிலையென்று சொல்லப்படும் துரியாதீதத்தின்கண் தொழிற்படும். இவை மிக நுண்மையவாதலின் அருவமெனப்பட்டன. தூவாமாயை ஏழும் தூமாயைக் கண் உள்ள ஆசான்மெய் ஒன்றும் ஆக எட்டும் மேல் உறக்கத்தின்கண் தொழிற்படும். தூமாயை மெய்கள் ஐந்தும் தூவாமாயை மெய்கள் ஆறும் ஆகிய பதினொன்றும் மேல்நிலைப்பாட்டிற்கு உள்ளன. மேல்நிலைப்பாடு - பராவத்தை.

## 2262. காட்டும் பதினொன்றுங் கைகலந் தாலுடல்

2262. காட்டும் பதினொன்றுங் கைகலந் தாலுடல்
நாட்டி யழுத்திடின் நந்தியல் லாலில்லை
ஆட்டஞ்செய் யாத வதுவிதி யேநினை
ஈட்டு மதுதிடம் எண்ணலு மாகுமே.

மேலோதிய பதினொன்றும் ஆருயிர்க்கு வந்துகூடினால் நுண்உடல் பருவுடல்கள் உண்டாம். திருவருளால் நன்றாக நாடி அறியின் நந்தியாகிய சிவபெருமானை அல்லது நிலைத்த சார்பு பிறிது இல்லை. அந்நிலை எய்தினார்க்குக் கருவிகள் ஆட்டஞ் செய்தலாகிய தொழிற்பாடுகள் புரியா. அது முறைமையாகும். உறுதியாக நந்தியெங்கடவுள் உன்னைத் திருவடிக்கண் அணைத்துக் கொள்வன். இதனை நினைப்பது ஆருயிர்க்குப் பேரின்பம் ஆகும்.

அழுத்திடின் - நிலைபெற்று நின்றால். ஆட்டம் செய்யாத - ஆடாத.
கலவு செலவு

# 2263. கேவலந் தன்னிற் கலவச் சகலத்தின்

2263. கேவலந் தன்னிற் கலவச் சகலத்தின்
மேவுஞ் செலவு விடவரு நீக்கத்துப்
பாவுந் தனைக்காண்டன் மூன்றும் படர்வற்ற
தீதறு சாக்கிரா தீதத்திற் சுத்தமே.

ஆருயிர் கருவிகளுடன் கூடாத நிலையில் புலம்பாகிய கேவலமாகும். காவலனாகிய சிவபெருமான் மாயாகாரியக் கருவிகளைப் படைத்தளித்தருளியபோது ஆருயிர் அதன்கட் செல்லும். அச் செலவினால் அவ்வுயிர் புணர்வாகிய சகல நிலையினை எய்தும். திருவருளால் இப் புணர்வு நிலையினைக் கருத்தால் துறந்துவிட்ட இடத்துப் புரிவாகிய சுத்தநிலையுண்டாம். இந் நிலையே நனவினெய்தும் அப்பால் நிலையாகும். இவற்றுடன் விரவிநிற்கும் தன்னை ஆருயிர் அருளால் இவற்றிற்கு வேறு எனக் காண்பது உயிர்க் காட்சியாகும். ஏழிற்பரை சிவபெருமானுக்கு வடிவமாம் எனக் காண்டல் அருட்காட்சியாகும்.
யான் எனது என்னும் செருக்கற்று எங்கும் நிறைந்த பொங்குபேரருட்பங்கனாகிய சிவபெருமான் பெருநிறைவில் அழுந்தல் சிவக் காட்சியாகும். காட்சி - தரிசனம். படர்வற்ற - செயலற்ற; ஓட்டற்ற - நினைவற்ற.

கேவலம் - தத்துவங்களோடு சேராதநிலை. கலவ - பொருந்த. சகலம் - தத்துவங்களோடு கூடிய நிலை. தனைக்காண்டல் - ஆன்ம தரிசனம். மூன்றும் - ஆன்ம தரிசனம், பரை தரிசனம், சிவ தரிசனம்.

# 2264. வெல்லும் அளவில் விடுமின் வெகுளியைச்

2264. வெல்லும் அளவில் விடுமின் வெகுளியைச்
செல்லும் அளவுஞ் செலுத்துமின் சிந்தையை
அல்லும் பகலும் அருளுடன் தூங்கினாற்
கல்லும் பிளந்து கடுவெளி யாமே.

எல்லாம் ஒறுக்கும் மதுகை உடைய உரனுடையாளராக இருந்துகொண்டு செல்லிடத்தும் சினங்கொள்ளாது விடுங்கள். உங்களுடைய முழுநாட்டத்தையும் விழுமிய முழுமுதற் பெரும்பொருளாம் சிவபெருமானிடத்து இடையறாது செலுத்துங்கள் 'எங்கெழிலென் ஞாயிறு எமக்கு' என்பதுபோல் அல்லும் பகலும் திருவருளுடனே தங்கிச் சிவபெருமானை இருநோக்காலும் நோக்குங்கள். அங்ஙனம் திருத்தொண்டு புரிந்தால் செருக்கென்னும் அகங்காரக்கல் அருளால் பிளக்கும். திருவருளின் அறிவுப்பெருவெளி திறக்கும் இந் நிலையினை இம்மையே எய்திய செம்மை அம்மையாளர் திருக்கண்ணப்பநாயனாராவர். இவ் வுண்மை வரும் சேக்கிழாரடிகள் திருவருளானுணர்க:

"இப்பரிசு திருவமுத செய்வித்துத் தம்முடைய
ஒப்பரிய பூசனைசெய் தந்நெறியில் ஒழுகுவார்
எப்பொழுதும் மேன்மேல்வந் தெழுமன்பால் காளத்தி
அப்பரெதிர் அல்லுறங்கார் பகல்வேட்டை யாடுவார்."
(12. கண்ணப்பர். 151.)

அம்மையாளர்: திருவடிப்பேற்றுக்குரியர்.

கல்லும் - அகங்காரம் என்னும் கல்லும். கடுவெளி - பரம ஆகாயம்.

நின்மலாவத்தை

## 2264. ஊமைக் கிணற்றகத் துள்ளே யுறைவதோர்

2264. ஊமைக் கிணற்றகத் துள்ளே யுறைவதோர்
ஆமையின் உள்ளே யமுவைகள் ஐந்துள
வாய்மையி னுள்ளே வழுவா தொடுங்குமேல்
ஆமையின் மேலுமோ ராயிரத் தாண்டே

எண்ணம் சொல் செயல்கள் ஏதும் நண்ணாத் தூயநிலை நின்மலாவத்தை என்பர். அந் நிலையினை ஊமைக்கிணறு என்று உருவகித்து ஓதியருளினர். ஆருயிர் கருவிகளுடன் கூடிக் கருத்தைச் சிவன்பால் இருத்தி ஏனை அகப்புறச் செயலற்று இருக்கும் நல்லோர்
ஊமை எனப்பெறுவர். ஈது அதற்கு ஒப்பாகும். புக்கவர் மீளாப் பெருநிலை - திருவடிநிலை ஊமைக்கிணறு எனப்பட்டது. புறம்செல்லும் வாயில்லாத் தசும்பு ஊமைத் தசும்பு. தசும்பு - பெருங்கலம். எனவே மெய்யடியார் மீளா ஆளாய்க் குறுகும் கொய்ம்மலர்ச் சேவடியிணைகள் ஈண்டு ஊமைக்கிணறு என உருவகிக்கப்பெற்றன. அந் நிலை ஐந்துறுப்பும் அடக்கும் ஆமை ஐந்தென்னும் எண்ணைக் குறிப்பானுணர்த்தும் நெறிப்பாடுடையதாயிற்று. எனவே தூயநிலைக்கண்ணும் ஐவகை நிலைகள் உள. அவை: தூய நனா, தூய கனா, தூய வுறக்கம், தூய பேருறக்கம், தூய உயிர்ப்படங்கல் என்பன. இவ் வைந்து நிலைகளிலும் நிகழும் உணர்வுகளும் ஐந்தென்ப. இவ் வுணர்வை 'அழுவைகள் ஐந்துள' என ஓதினர். இந் நெறியின்கண் நிற்கும் ஆருயிர் மெய்ப்பொருளாகிய சிவபெருமான் திருவடியில் ஒடுங்கும். அங்ஙனம் ஒடுங்கினால் நெடுநாள் உயிர்வாழும் ஆமையினும் மேலாக அவ்வுயிர் பல

ஆயிரக்கணக்கான ஆண்டுகள் அருளால் வாழும். இதற்கு எடுத்துக் காட்டு நம் திருமூலநாயனாராவர். அவ் வுண்மை வருமாறு:

"முன்னியஅப் பொருண்மாலைத் தமிழ்மூவா யிரஞ்சாத்தி
மன்னியமூ வாயிரத்தாண் டிப்புவிமேல் மகிழ்ந்திருந்து
சென்னிமதி அணிந்தார்தந் திருவருளால் திருக்கயிலை
தன்னிலணைந் தொருகாலும் பிரியாமைத் தாளடைந்தார்."
(12. திருமூலர், 27.)

ஊமைக் கிணறு - நின்மல அவத்தை. ஆமை - நின்மல அவத்தையின் பேதமான நனவு முதலிய ஐந்து. அழுவை - அவ்வவத்தைகளில் நிகழும் அனுபவங்கள். ஆமையின் மேலும்-ஆமை வயதுக்கு மேற்பட்ட (ஆமை நெடுநாள் உயிருடன் இருக்கும்.)

## 2266. காலங்கி நீர்பூக் கலந்த ஆ காயம்

2266. காலங்கி நீர்பூக் கலந்த ஆ காயம்
மாலங்கி யீசன் பிரமன் சதாசிவன்
மேலஞ்சும் ஓடி விரவவல் லார்கட்குக்
காலனும் இல்லை கருத்தில்லை தானே.

பெரும்பூதங்கள் ஐந்தென்ப. அவை முறையே நிலம், நீர், நெருப்பு, உயிர் (காற்று). நீள்விசும்பு என்ப. இவற்றை இயைந்தியக்கும் கடவுளரும் ஐவராவர். அவர் முறையே அயன், அரி, அரன், ஆன்டான், அருளோன் என்ப. அங்கி - அரன்; தீ. இவ் வைம்பூதங்களுள் விசும்பாகிய ஆகாயம் ஏனைய நான்கு பூதங்களும் இயங்குமாறு இடமளித்து அவற்றின்மேல் விரிந்தும் நிற்கின்றது. இக் கடவுளர் உயிரினத்தவரேயாவர். இவர்களை இயக்கும் காரணக்கடவுளரும் ஐவகையராவர். அவர்களையே மேலஞ்சும் என ஓதினர். அக் காரணக் கடவுளர்மாட்டுச் சென்று கலக்கவல்லார்களுக்கு உயிரைக் கூறுபடுத்திக் கொண்டு செல்லும் காலனும் வரமாட்டான். அவர்களுக்குச் சிவன்பாற் செல்லும் கருத்தன்றிப் பிறிது எக் கருத்தும் இன்றென்ப. முற்கூறும் ஐவரும் மூலம்முதலாகச் சொல்லப்படும் இடங்களில் வைத்து வழிபடப் பெறும் சார்புக்கடவுளராவர். சார்பு - ஆதாரம் மேலஞ்சுகடவுளர் சார்பிலராகிய கடவுளராவர். சார்பின்மை - நிராதாரம்.
1. குறிகள். சிவஞானசித்தியார். 2. 3 - 18.

அங்கி - உருத்திரன். மேலஞ்சு - நிராதாரத்தில் உள்ள ஐந்து மூர்த்திகள் - அஃதாவது ஆதார ஐந்து மூர்த்திகளை இயக்கும் மூர்த்திகள்.

## 2267. ஆன்மாவே தான்மைந்த னாயினன் என்பது

2267. ஆன்மாவே தான்மைந்த னாயினன் என்பது
தான்மா மறையறை தன்மை யறிகிலர்
ஆன்மாவே மைந்தன் அரனுக் கிவனென்றல்
ஆன்மாவும் இல்லையால் ஐயைந்தும் இல்லையே.

சிவபெருமானின் திருவடிப் பேரின்பப் பெருவாழ்வு அனைத்தையும் தனதாகக்கொண்டு நுகரும் உரிமை ஆருயிர்களுக்கே உள்ளது. அம் முறையால் ஆருயிர் மைந்தன் என ஓதப்பெற்றது. இவ்வுண்மையினைச் செந்தமிழ்த் திருமறை, திருமுறைகள் கிளந்தெடுத்து ஓதுகின்றன. மறை - வேதம். முறை - ஆகமம். இதனைப் பலர் அறிகிலர். ஆருயிரே பேருயிராகிய அரனுக்க மைந்தனாவன். உடன்மெய் இருபத்து நான்கும் ஆள் ஒன்றும் ஆக இருபத்தைந்தும் சார்ந்த இடத்து ஆருயிர் என்னும் பெயருண்டு. கடவுளைச் சார்ந்த இடத்து ஆருயிர். பேருயிர் என்னும் பெயர்களின்றி 'அடிமை' என்னும் பெயருண்டாகும். இம் முறையில் உடல் நீங்கினவிடத்து ஆன்மா என்னும் பெயரில்லை என்னும் பொருளில் ஆன்மாவும் இல்லை என்று ஓதினர். இது தொழில் நீங்கினால் தொழில்பெயர் நீங்குவதன்றித் தொழில் புரிந்தவனும் நீங்குவதில்லை. இவ் வுண்மை 'தன்நாமங் கெட்டாள்' என்னும் திருமறையான் உணரலாம். நாமங் கெடுதலன்றி நாமிகெடுவதில்லை. ஆன்மா என்பது ஆகுபெயராகப் பெயரைக் குறித்தது. நாமி: நாமத்தையுடைய ஆவி.

மைந்தன் - சில ஆனந்தத்தை அடைய உரிமையுடையவன்.

## 2268. உதய மழுங்கல் ஒடுங்கலிம் மூன்றின்

2268. உதய மழுங்கல் ஒடுங்கலிம் மூன்றின்
கதிசாக் கிரங்கன வாதி சுழுத்தி
பதிதரு சேதனன் பற்றாந் துரியத்து
அதிசுப னாவனந் தானந்தி யாமே.

ஆருயிர் உடலுடன் கூடித் தொழிற்படுவது தோற்றமாகிய உதயமாகும். இது நனவு. மழுங்கலாகிய குறைவு தொழிற் குறைபாடாகும். இது கனவு. ஒடுங்குதல் கருவிகள் ஒடுங்கித் தொழிலின்மையாகும். இஃது உறக்கம். சிவபெருமான் திருவடி நினைவு அகலாதிருத்தலே சிவனடியில் சேர்தல் என்ப. அதுவே ஈண்டுப் பதிதருதல் என ஓதப்பட்டது. சேதனன்: அறிவுடையவன்; ஆருயிர். சிவன் நினைவுடைய ஆருயிர் துரியமாகிய மேல்நிலையைப் பற்றும். அந்நிலையில் திருவருளால் மேல்நிலைக்கு உரிய முதல்வன் ஆவன். ஆண்டுள்ள மாறிலா மாறாத் திருவடியின்பத்துள் மூழ்கி இன்பவடிவாகவே ஆருயிர் என்றும் இருக்கும். நந்தான் - கெடான்.

சேதனன் - ஆன்மா.

## 2269. எல்லாந்தன் னுட்புக யாவுளுந் தானாகி

2269. எல்லாந்தன் னுட்புக யாவுளுந் தானாகி
நல்லாந் துரியம் புரிந்தக்கால் நல்லுயிர்
பொல்லாத வாறாறுட் போகாது போதமாய்ச்
செல்லாச் சிவகதி சென்றெய்து மன்றே.

திருவருளால் மேல்நிலையில் நிற்கும் ஆருயிர் சிவன் திருவடிக்கண் உறைத்துநிற்கும். அதனால் சிவனிறைவு எங்கணும் தான் நிறைந்துநிற்கும். பாலிற் கலந்த மோர் பால் முழுவதும் தயிராதற்கு அப்பால் முழுவதினும் கலப்பது இதற்கொப்பாகும். அதுபோல் ஆருயிர் சிவனுடன் வேறறக் கலந்துநிற்கும். அந் நிலையில் எல்லாப் பொருள்களும் ஆருயிரின் அகத்துள் ஒடுங்கும். சிவனுடன் ஒற்றித்து நுகரும் ஆருயிர் சிவன்கண் உறைதலால் சிவன் எழுந்தருளியிருப்பதாகிய மெய்யருக்குள் சிவன் இருப்பதால் அத் தொடர்பினால் எல்லாப் பொருள்களுள்ளும் ஆருயிரும் விரவிநிற்கும். அப்பொழுது முப்பத்தாறு மெய்களும் திருவருள்காட்சியான் அகலும். அகலவே எல்லாப் பொருள்களினுள்ளும் ஆருயிர்கள் நிற்கும்.

## 2270. காய்ந்த இரும்பு கனலை யகன்றாலும்

2270. காய்ந்த இரும்பு கனலை யகன்றாலும்
வாய்ந்த கனலென வாதனை நின்றாற்போல்
ஏய்ந்த கரணம் இறந்த துரியத்துத்
தோய்ந்த கருமத் துரிசக லாதன்றே.

கரும்பொன்செய் கொல்லன் உலையில் பழுக்கக்காய்ச்சிய இரும்பு தீவண்ணமாக விளங்கும். 'அவ் விரும்பு உலையைவிட்டு மாறியும் தீவண்ணத்தோற்ற நிலையைவிட்டு மாறியும் பண்டைய இரும்புபோல் காணப்படும். அங்ஙனம் காணப்பட்டாலும் கைவைத்தால் சுடும். காரணம் வெப்பம் ஆறாமை என்க. அதனைத்தான் வாதனை என்பர். இரும்பின்கண் கனல்தோற்றம் இல்லை. கனலென வாதனை நிற்கின்றது. வாதனை - பசை. அதுபோல் ஆருயிர்க்கு அகக்கலன், அகப்புறக் கலன், புறக்கலன்களாகிய முத்திறக்கலன்களும் சிவகுருவின் திருவருளால் முற்றும் அற்ற பேருறக்கமாகிய துரியநிலையில் தோய்ந்த கருமத்துரிசு என்னும் பசையறாதென்க. அகக்கலன் ஊழிமுதல் ஐந்து, அகப்புறக்கலன் எண்ணமுதல் நான்கு, புறக்கலன் அறிதற்கருவி ஐந்து, செய்தற் கருவி ஐந்து என்பன. துரிசு - வாதனை.

கருமத்துரிசு - கன்ம வாசனை.

## 2271. ஆன மறையாதி யாமுரு நந்திவந்து

2271. ஆன மறையாதி யாமுரு நந்திவந்து
தேனை யருள்செய் தெரிநனா வத்தையில்
ஆன வகையை விடுமடைத் தாய்விட
ஆன மலாதீதம் அப்பரந் தானே.

எல்லாமான மறை செந்தமிழ்த் திருவைந்தெழுத்தேயாம் அவை இருவகைப்படும். ஒன்று 'நமசிவய,' மற்றொன்று 'சிவயநம' என்பன இவ் வெழுத்துக்களால் தோன்றும் சிவபெருமானின் திருத்தோற்றம் முதல் திருவுருவத் தோற்றமாகும். அதுவே ஆதியாம் திருவுரு அதுவே ஐந்தொழில் திருவுரு. அது தூக்கால் மணிவயிறு தோள்முகம் முடி ஐந்தும் முறையே 'நமசிவய' என்ப. துடிவலக்கை, வீசிடக்கை, மகிழ்வலக்கை, மழுவிடக்கை, துதைவலக்கால் ஐந்தும் முறையே 'சிவயநம' என்ப. இத் திருக்கோலத்துடன் சிவபெருமான் எழுந்தருளிவந்து தன் திருவடித்தேனை அருள்செய்வன். இந் நிலை அப்பால்நனவு எனக் கூறப்படும். இந் நிலையில் ஆருயிர்கள் உடல் கலன் முதலிய கருவிகளை முறையாகவிட்டகலும். அகலவே ஆங்கு அருளால் தோன்றுவது 'ஆன அமலாதீதம்' என்னும் பிணிப்பிலா அப்பால் மணிநிலையானது கைகூடும். அதுவே அம் முழுமுதற் சிவபெருமானார் தன்மையை அளித்தருள்வதாகும். சிவபெருமான் தேனாகவும் சிவப்பெருமாட்டி பாலமிழ்தாகவும் நம்பால் உறைவர். தேன்

அறிவாகவும், பால் ஆற்றலாகவும், உறைவு அன்பாகவும் கொள்க. 'நானேயோ தவஞ்செய்தேன் சிவாயநம எனப் பெற்றேன், தேனாயின்னமுதமுமாய்த் தித்திக்கும் சிவபெருமான்' என்னும் செந்தமிழ் மறை முடிபின்கண் 'தேன் அமிழ்து தித்தித்தல்' மூன்றும் ஓதப்பெற்றுள்ளன. இம் மூன்றும் முறையே அறிவு ஆற்றல் அன்பு என்னும் மூன்றுமாகும். தித்தித்தல் - தித்திப்பை ஊட்டுதல். இதுவே 'மேல் உறைவர்' எனக் கூறப்பட்டது. திருவைந்தெழுத்தே சிவபெருமானுக்குரிய சிறந்த முதல் திருவுரு என்பதை வரும் தமிழாகம உண்மை விளக்கத் திருவெண்பாவால் உணர்க:

"ஆடும் படிகேள்நல் அம்பலத்தான் ஐயனே
நாடும் திருவடியி லேநகரம்-கூடும்
மகரம் உதரம் வளர்தோள் சிகரம்
பகரும்முகம் வாமுடியப் பார்."

- 32

"சேர்க்கும் துடிசிகரம் சிக்கெனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம்-பார்க்கிலிறைக்கு
அங்கி நகரம் அடிக்கீழ் முயலகனார்
தங்கு மகரமது தான்."

- 33

இத் திருவைந்தெழுத்தைத் தாங்கிக்கொண்டிருப்பது செந்தமிழ் ஓங்காரம். இஃது இலை பூவினைத் தாங்குவதுபோன்றாகும். பூப் பூப்பதற்கு முதற்காரணமாக இருப்பதும் அவ் விலையே. பூத்தபின் தாங்கும் துணைக்காரணமாக நிற்பதும் அவ் விலையேயாம். அம் முறையில் வருவன ஓங்காரமுமாம். இவ் ஓங்காரம் திருவைந்தெழுத்தைத் தாங்கிக்கொண்டு வேறற நிற்பதால் திருவைந்தெழுத்துக் கணிப்பார்க்கு ஓங்காரம்

வேண்டுவதின்றென்ப. அவ் வுண்மை வருமாறு:

"ஓங்கார மேநற் றிருவாசி உற்றதனில்
நீங்கா எழுத்தே நிறைசுடராம்-ஆங்காரம்
அற்றார் அறிவரணி அம்பலத்தான் ஆடலிது
பெற்றார் பிறப்பற்றார் பின்."

- 34

உருநந்தி - வடிவுடை சிவன். நனாவத்தை - நனவு. அடைத்தாய் - முறையாய் அமலா அதீதம் - சத்த துரிய அதீதம்.

## 2272. சுத்த அதீதஞ் சகலத்தில் தோய்வுறில்

2272. சுத்த அதீதஞ் சகலத்தில் தோய்வுறில்
அத்தன் அருள்நீங்கா வாங்கணிற் றானாகச்
சித்த சுகத்தைத் தீண்டாச் சமாதிசெய்து
அத்தனோ டொன்றற் கருள்முத லாகுமே.

தூய அப்பால்நிலை நனவில் ஆருயிர் தோய்வுற்றால் அத்தனாகிய சிவபெருமானின் திருவருள் வெளிப்பட்டுநின்று என்றும் நீங்கா என்க. அவ்விடத்து எண்ணமாகிய சித்தத்தினால் உணரப்படும் மாயா காரியப் பொருள்களிடமாக வரும் இன்பத்தை எண்ணாது உணர்வுக்கு உணர்வாய்த்திகழும் சிவபெருமான் திருவடியுணர்வில் ஒடுங்கி உணர்வதாகிய சமாதி செய்தல் வேண்டும். அச் சமாதியினால் அத்தனாகிய சிவபெருமான் திருவடியில் வேறற நின்றின்புறுதல் உண்டாகும். சிவபெருமானுடன் சேர்த்துவைப்பதற்குத் திருவருளே முதற் காரணமாம் என்க.

ஆங்கணில் - அவ்விடத்தில். சித்த சுகம் - சிந்தனையால் அடையும் சுகம். அருண்முதலாமே - அருளே காரணமாகும்.

## 2273. வேறுசெய் தானிரு பாதியின் மெய்த் தொகை

2273. வேறுசெய் தானிரு பாதியின் மெய்த் தொகை
வேறுசெய் தானென்னை எங்கணும் விட்டுய்த்தான்
வேறுசெய் யாவருட் கேவலத் தேவிட்டு
வேறுசெய் யாவத்தன் மேவிநின் றானன்றே.

சிவபெருமான் ஆருயிர்கள் ஒருவரோடொருவர் துணையாக மருவி வாழ்ந்து தன் திருவடியை அடையவேண்டுமெனத் திருவுள்ளங் கொண்டருளினன். அதன்பொருட்டுக் காவல் பூணுதலை மேற்கொள்ளும் ஆடவரையும், காதல் பேணுதலை மேற்கொள்ளும் மகளிரையும் காணுதல் கருதினன். கருதித் தான் ஆண் பெண்ணாம் இருவேறுருவில் ஒருபெரு வடிவங்கொண்டனன். அவ் வடிவமே அன்னை அத்தன் எனச் சொல்லப்படும் சத்தி சிவமாகும். அதனால் ஆருயிர்களும் ஆண் பெண் என இருவேறுருவுட்புகுந்தன. என்னையும் அங்ஙனமே செலுத்தி விடுத்தனன். தன்னினின்றும் என்னை வேறுபடுக்காது ஒன்று படச் செய்து ஒடுக்கிக்கொண்டனன். அதுவே அருட்கேவலம் எனப்படும். கேவலம் - புலம்பு; தனிமை; ஒடுக்கம்.

இருபாதி - ஆண் பெண் இரு பகுதியான உருவம், மங்கை பங்க உருவம். எங்கணும் விட்டுய்த்தான் - வியாபகம் உறச் செய்தான். அருட் கேவலம் - நின்மல கேவலம். வேறு செய்யா - வேற்றுமை செய்யாமல்.

## 2274. கறங்கோலை கொள்ளிவட் டங்கட லில்திரை

2274. கறங்கோலை கொள்ளிவட் டங்கட லில்திரை
நிறஞ்சேர் ததிமத்தின் மலத்தினில் நின்றங்கு
அறங்காண் சுவர்க்க நரகம் புவிசேர்ந்து
இறங்கா வுயிரரு ளாலிவை நீங்குமே.

ஆருயிரானது மலப்பிணிப்பினால் நன்மை தீமைகளைப் புரிகின்றது. அவ் விரண்டும் அறம்பாவம் ஆக வளர்ந்து முதிர்ந்து விளைகின்றது. விளைந்து இன்ப துன்பப்பயன்களை முறையே தனித்தனி நுகரும் ஒளியுலகு இருளுலகங்களிலும் ஒருங்கு நுகரும் நிலவுலகங்களிலும் புகுமாறு செய்து பயன் அருத்துகின்றன. இங்ஙனம் இரு வினைப்பயன் நுகர்வான் அவ் வுயிர்கள் மாறிமாறிப் பிறந்தும் இறந்தும் வரும் இடையறாநிலைக்குக் கறங்கோலையாகிய காற்றாடி, கொள்ளி சுற்றுவதாலேற்படும் வட்டம், கடலில் எழும் அலை, மத்தால் கடையப்படும் தயிர் முதலியன ஒப்பாகும். இங்ஙனம் மாறிமாறி வருந்தும் உயிர்களின் வருத்தங்கண்டு அவற்றைச் சிவபெருமான் திருவருளால் நீக்கற் பொருட்டுச் செவ்விவருவித்து நீக்கி அருள்கின்றனன்.

கறங்கு ஓலை - காற்றாடி கொள்ளிவட்டம் சூழ்ந்து - (கார்த்திகை மதியில் பிள்ளைகள்) எரிகொள்வது சூழ்ந்து. நிறம் சேர் - அழகிய. இரங்கா உயிர் - வருந்தும் உயிர்.

## 2275. தானே சிவமான தன்மை தலைப்பட

2275. தானே சிவமான தன்மை தலைப்பட
ஆன மலமுமப் பாச பேதங்களும்
ஆன குணமும் பரான்மா வுபாதியும்
பானுவின் முன்மதி போறப்ப ராவே.

திருவருட்பேற்றால் ஆருயிர் தானே சிவமாம்தன்மை எய்தும். எய்தத் தொன்மையான மலமும் அம் மலத்தைப்போக்க அருளார் சேர்க்கப்பட்ட பாச வேறுபாடுகளுமாகிய ஐம்மலங்களும் நீங்கும். அதனால் ஏற்படும் குணங்களாகிய தீமைகளும் அகலும். உயிர்த்தன்மைத் தடையாகிய பரான்மாவுபாதியும் நீங்கும். இவை முற்றும் உடன் ஒருங்கு அகல்வதற்கு ஒப்பு ஞாயிற்றின்முன் திங்கள் நீங்குவதாகும். நீங்குதல் என்பது அடங்குதல். அஃதாவது செயலறுதல்.

பாசபேதம் - ஐவகை மலம். பரான்மா - பசுத்தன்மை நீங்கிய ஆன்மா.

## 2276. நெருப்புண்டு நீருண்டு வாயுவும் உண்டங்கு

2276. நெருப்புண்டு நீருண்டு வாயுவும் உண்டங்கு
அருக்கனுஞ் சோமனும் அங்கே அமருந்
திருத்தக்க மாலுந் திசைமுகன் தானும்
உருத்திர சோதியும் உள்ளத்து ளாரே.

உலகமும் உடலும் ஒப்பெனக் கூறும் உண்மையான் உடலகத்தும் நிலமுண்டு; நீருண்டு; நெருப்புண்டு; காற்றுண்டு; வெளி
யுண்டு; ஞாயிறுண்டு; அவற்றை இயக்குந் தெய்வங்களாகிய அயன், அரி, அரன், ஆண்டான், அருளோன் என்பவரும் உளர். ஐம்பூத நிலையை முறையே மூலம், மேல்வயிறு, நெஞ்சம், கழுத்து, உச்சித்துளை என்ப. ஞாயிற்று மண்டிலத்தை அடிப்குதியிலும், திங்கள்மண்டிலத்தைப் புருவநடுவிலும் கூறுப.

இத் திருமந்திரம் அண்டத்தில் உள்ளவை பிண்டத்தில் உண்டு என்று கூறுகிறது.

## 2277. ஆனைகள் ஐந்தும் அடக்கி அறிவென்னும்

2277. ஆனைகள் ஐந்தும் அடக்கி அறிவென்னும்
ஞானத் திரியைக் கொளுவி அதனுட்புக்கு
ஊனை யிருளற நோக்கும் ஒருவற்கு
வானக மேற வழியெளி தாகுமே.

மெய், வாய், கண், மூக்குச் செவியென்னும் ஐம்புலன்களாகிய யானைகளைத் திருவருள் நினைவால் அடக்கி உயிரெனும் திரியைத் திருவடியுணர்வெனும் தீயாற் கொளுத்தி உன்னற்குரிய ஊனாகிய சிவபெருமானை அவனருளால் இருளற இடையறாது நோக்கும் பெரும்பேறெய்தினார் ஒருவர்க்குச் சிவவுலகம் ஏறி இன்புறும் வழி எளிதாகும். உன்னுதல் என்னும் தொழிற்பெயர். உன்னப்படும் பொருளாகிய சிவபெருமானைக் குறித்தது - ஆகுபெயர். உன்னுதல் என்னும் தொழிற்பெயர் முதனிலைத் தொழிற்பெயராகுங்கால் உன் என்று ஆகும். அது முதல் நீண்டுகொள்ளுதல் கோள் என்றாவதுபோல் ஊன் என்று ஆயிற்று.

ஆனைகள் ஐந்து - பொறிகள் ஐந்து. ஊனை - சிவனை. வானகம் - ஆஞ்ஞைத்தானம்.

## 2278. ஆடிய காலில் அசைக்கின்ற வாயுவந்

2278. ஆடிய காலில் அசைக்கின்ற வாயுவந்
தாடித் தெழுந்த தமருக ஓசையும்
பாடி யெழுகின்ற வேதா கமங்களும்
நாடியி னுள்ளாக நான்கண்ட வாறே.

ஆருயிர்களின் நெஞ்சகத்து நின்று அம்பலவாணன் செம்மைபெறத் திருக்கூத்து இடையறாது புரிந்தருளுகின்றனன். அவன் திருவடி ஆடியகால் என்று சொல்லப்படும். அதனால் அசைக்கப் பெறுகின்றது உயிர்ப்பு. அவ் வுயிர்ப்பினை நடுநாடிவழியாகச் செலுத்தி நிற்பார்க்குத் திருமறைத் திருமுறைகள் தோன்றுதற்கு வாயிலாம் வலக்கை உடுக்கைஒலி நலமுறக் கேட்கும். அவ் வொலி பருத்து எழும். 'தாடித்தெழுந்த தமருக ஓசை' என ஓதினர். தடித்தல்: தாடித்தென்று முதனீண்டது. புகழ் நூலும் பொருள் நூல்களுமாகத் தோன்றும் வேதாகமங்களும் உண்டாம். நடுநாடியின் முடிவிடமாம் உச்சித்துளை வழியாக இவையனைத்தும் என்னகத்தே கண்டுள்ளேன்.

அசைக்கின்ற வாயு - சிலம்பொலி. தாடித்து - மிகுத்து (தடித்து). நாடி - சுழுமுனை.

## 2279. முன்னைப் பிறவியிற் செய்த முதுதவம்

2279. முன்னைப் பிறவியிற் செய்த முதுதவம்
பின்னைப் பிறவியிற் பெற்றால் அறியலாந்
தன்னை யறிவ தறிவாமஃ தன்றிப்
பின்னை யறிவது பேயறி வாகுமே.

ஒருவர் முற்பிறவியிற் செய்த நற்றவப்பேறு பின்னைப் பிறவியில் பெண்ணொரு கூறனைப் பேணும் பெருந்தொண்டால் உணரலாம். திருவருளால் தன்னைத் தலைவனை உணரும் முறையில் உணர்தல் வேண்டும். தலைவனை உணரும் முறையில் உணர்தல் என்பது அடிமை என்று உணர்தல். அஃது 'ஆள்வாரிலி மாடுஆவேனோ' என்றருளிய திருமறை முடிவாலுணர்க. சார்பான் சாரப்படும் பொருளையுணர்தலே மக்கட்பிறப்பின் பெரும்பேறு. அவ் வுண்மை முறைப்பெயரானும், முதன்மைப்பெயரானும் உணர்க. இவ் வுண்மை ஏனையுயிரினங்களுக்கு இன்று. அதுபோல் ஆருயிர்க்கு எஞ்ஞான்றும் சார்பென நின்று இன்பங் கொடுத்தருளும் சிவபெருமான் சார்பினை எய்திய அடிமை என்றுணரப்படுதலே சிறப்பாம் என்க. அடிமை என உணர்தலே மெய்யுணர்வாகும். அதுவே வேண்டத்தக்க அறிவாம் என்க. இவ் விழுமிய அறிவல்லாத ஏனைய அறிவுகளெல்லாம் பழுதறிவாகும் அதுவே பேயறிவாகும். 'முன்னையறிவினில்' என்ற பாடத்திற்கு முன்னை அறிவின் தொடர்ச்சியால் எனவும் 'பின்னையறிவினை' என்ற

பாடத்திற்குப் பின்னைத் தோன்றும் சிவனையறியும் அறிவெனவும் பொருள் கொள்க.

## 2280. செயலற் றிருக்கச் சிவானந்த மாகுஞ்

2280. செயலற் றிருக்கச் சிவானந்த மாகுஞ்
செயலற் றிருப்பார் சிவயோகந் தேடார்
செயலற் றிருப்பார் செகத்தொடுங் கூடார்
செயலற் றிருப்பார்க்கே செய்தியுண் டாமே.

திருவருளால் செயலற்றிருப்பதைச் சமாதி அல்லது நிட்டை என்பர். 'தூங்கிக்கண்டார்' (173) என்பதும் இப்பொருட்டு செயலற்றிருக்கச் சிவஇன்பம் ஆகும். செயலற்றிருப்பார் சிவயோகந் தேடார். அவர்கள் உலகநிலையிலா வாழ்வுடனும் கூடார். செயலற்றிருக்கும் திருவினர்க்கே சிவபெருமானின் பேரின்பச் செய்தியுண்டாகும். செயலறல் அகப்புறச் செயலறலாகும் ஆனால் ஆண்டான் அடியின்ப நுகர்வுச் செயலுண்டு. அது ஒருவாறு நிற்கும் நிட்டை.

## 2281. தானவ னாகுஞ் சமாதிகை கூடினால்

2281. தானவ னாகுஞ் சமாதிகை கூடினால்
ஆன மலமறும் அப்பசுத் தன்மைபோம்
ஈனமில் காயம் இருக்கும் இருநிலத்து
ஊனங்கள் எட்டு மொழித்தொன்று வோர்கட்கே.

திருவருளால் ஆருயிர்க்குத் தான் அவனாம் சமாதி கை கூடினால் ஐவகையான மலமறும். சிற்றுணர்வி என்னும் பசுத்தன்மை அகலும். புலால் நுகர்தல், கொலை, களவு, கள், காமம், பொய்கூறல், சிவனை மறத்தல், சிவனடியாரை மறத்தல் என்னும் எண்பெருங் குற்றமும் ஒழிந்து சிவபெருமான் திருவடியை ஒன்றுவோர்க்குக் குற்றமற்ற அவர்தம் நல்லுடல் சிவவுலகத்திலிருக்கும். இருநிலம் - பெருமைமிக்க வுலகம்; சிவவுலகம். இருநிலம் - நிலவுலகம் என்றலும் ஒன்று.

ஊனங்கள் எட்டு - (1) பொய், (2) கொலை, (3) களவு, (4) கள், (5) காமம், (6) கடன் கோடல், (7) இரத்தல், (8) வெகுளல்.

## 2282. தொலையா அரனடி தோன்றுமஞ் சத்தி

2282. தொலையா அரனடி தோன்றுமஞ் சத்தி
தொலையா இருளொளி தோற்ற அணுவுந்
தொலையாத் தொழின்ஞானந் தொன்மையில் நண்ணித்
தொலையாத பெத்தமுத் திக்கிடை தோயுமே.

ஆருயிர்கட்குச் செவ்விவாய்த்ததும் திருவருள் வீழ்ச்சியாகிய சத்திநிபாதம் எய்தும். எய்தவே, என்றும் பொன்றாச் சிவபெருமானின் திருவடி தோன்றும் ஒடுங்குவதல்லாது கெடுதலெய்தாத மலமாகிய இருளும், சிற்றுணர்வாகிய உயிர்த்தன்மையும் தோன்றும் அணுவாகிய ஆருயிர்க்குக் கேடில்லாத தொன்மையிலேயே உள்ள நன்னெறி நான்மையின் தொழிலும் அறிவும் உண்டு. அதனால் கட்டு வீடென்று சொல்லப்படும் இருநிலையும் தோன்றும். அதற்கிடையில் ஆருயிர் அருளில் தோயும்.

அம் சத்தி - அருட்சத்தி. இருள் ஒளி - ஆணவத்தின் தன்மை. அணுவும் - ஆன்மாவின் தன்மை பெத்தம் - பந்த பாசங்களில் நிற்கும் நிலை.

## 2283. தோன்றிய பெத்தமும் முத்தியுஞ் சூழ்சத்தி

2283. தோன்றிய பெத்தமும் முத்தியுஞ் சூழ்சத்தி
மான்றுந் தெருண்டு முயிர்பெறு மற்றவை
தான்தரு ஞானந்தன் சத்திக்குச் சாதனாம்
ஊன்றலில் லாவுள் ளொளிக்கொளி யாகுமே.

திருவருட்சத்தியால் ஆருயிர்க்குத் தோற்றுவிக்கப்பட்ட கட்டும் வீடும் தோன்றும். அவற்றை அவ் வுயிர் மருண்டும் தெருண்டும் உணரும். பின் சிவபெருமான் அருள்கின்ற திருவடியுணர்வால் அவ்வுயிர் சத்திக்குச் சாதனம் ஆகும். அஃதாவது அவ் வுயிர் அருள்வழி ஒழுகுவது. ஊன்றி நின்று நிலைப்பதல்லாத உள்ளொளிக்குள் ஒளியாய் சிவஒளி தோன்றும்.

மான்றும் - மயங்கியும்.

## 2284. அறிகின்றி லாதன ஐயேழும் ஒன்றும்

2284. அறிகின்றி லாதன ஐயேழும் ஒன்றும்
அறிகின்ற என்னை யறியா திருந்தேன்
அறிகின்றாய் நீயென் றருள்செய்தான் நந்தி
அறிகின்ற நானென் றறிந்துகொண் டேனே.

தாமே அறியுந் தன்மையில்லாத முப்பத்தாறு மெய்களும் ஆருயிரால் அறிகின்றன. அவ் வுண்மையினையும் அறிகின்ற என்னையும் அறியாதிருந்தேன். சிவபெருமான் அறியும் தன்மை உனக்குள்ளதென்று அருளால் அறிவித்தான். அதனால் நான் அறிகின்றேன் என்று அறிந்து கொண்டேன். இதன்கண் நம்மூலர் தம் முன்னிலையினை ஓதி யருள்கின்றனர்.

ஐ ஏழும் ஒன்றும் - 36 தத்துவங்களும்.

## 2285. தானவ னாகிய ஞானத் தலைவனை

2285. தானவ னாகிய ஞானத் தலைவனை
வானவ ராதியை மாமணிச் சோதியை
ஈனமின் ஞானத்தி னின்னருட் சத்தியை
ஊனமி லாள்தன்னை யூனிடைக் கண்டதே.

மேலோதியவாறு விளக்க விளங்கும் அறிவுள்ளது உயிரென உணர்ந்தோன் இரும்பைப் பொன்னாக்கும் இயைபுபோல் தன்னை அவனாக்கும் ஞானத்தலைவன் சிவன் என்பன். சிவவுலக வாழ்வினர்க்கு முதல்வனும் அவனே. அளவிடப்படாத மாமணியாகிய செம்மணிச் சோதியை, மாசிலா மெய்யுணர்வை நல்கும் இனிய வனப்புமிகும் நல்லருளாற்றனும் அவனே. ஒருஞான்றும் முழுமுதற்றன்மையில் ஏதும் குறைபாடில்லாத சிவபெருமானை இவ் வுடம்பகத்தே அவன் காட்டக் கண்டுகொண்டேன் என்க.

## 2286. ஒளியும் இருளும் பரையும் பரையுள்

2286. ஒளியும் இருளும் பரையும் பரையுள்
அளிய தெனலாகும் ஆன்மாவை யன்றி
அளியும் அருளுந் தெருளுங் கடந்து
தெளிய அருளே சிவானந்த மாமே.

சிற்றறிவாகிய ஒளியும், ஆணவமாகிய இருளும், இவற்றை விளக்கும் நடப்பாற்றலாகிய பரையும், அத் திருவருளால் தலையளிக்கத்தக்க ஆருயிரும் அருளால் உணரலாகும். அதன்மேலும் தலையளிப்பையும், அதனைப் புரியும் அருளையும், அவ் வருளால் எய்தும் தெருளையும் கடந்து திருவடியைத் தெளியத் துணைபுரியும் வனப்பாற்றலாகிய திருவருளே சிவப்பேரின்பம் ஆகும்.

## 2287. ஆனந்த மாகும் அரனருட் சத்தியில்

2287. ஆனந்த மாகும் அரனருட் சத்தியில்
தானந்த மாமுயிர் தானே சமாதிசெய்து
ஊனந்த மாயுணர் வாயுள் ளுணர்வுறிற்
கோனந்தம் வாய்க்க மகாவாக் கியமாமே.

பேரின்பப் பெருவாழ்வாம் ஆனந்தமாவது அரனருள் ஆற்றல் என்ப. அவ் வின்பம் எய்திய ஆருயிர் தானே செயலற்றிருக்கும் சமாதி எய்தும். ஊன் எனப்படும் உடலின் முடிவு தோன்றி யொடுங்கும் ஆக்கப் பொருள் அறிவில்லது, அதன் முதல் அழிவில்லது என வுணர்த்தும் அருள்வழி உயிர் உணரும். உணர்ந்து உணர்த்துகின்ற அறிவையும் உணரும். உணர்ந்தால் கோனாகிய சிவபெருமானின் திருவடிப்பேரின்பம் வாய்க்கும். இவ் வுண்மையனைத்தும் பெரும் பொருட்கிளவியாகிய திருவைந்தெழுத்தால் உண்டாம். பெரும்பொருட்கிளவி - மகாவாக்கியம்.

கோனந்தம் - சிவத்தின் தன்மை. மகாவாக்கியம் - பெரும் பெயர்.

## 2288. அறிவிக்க வேண்டாம் அறிவற் றயர்வோர்க்கும்

2288. அறிவிக்க வேண்டாம் அறிவற் றயர்வோர்க்கும்
அறிவிக்க வேண்டாம் அறிவிற் செறிவோர்க்கும்
அறிவுற் றறியாமை யெய்திநிற் போர்க்கே
அறிவிக்கத் தம்மறி வாரறி வோரே.

அறிவு ஒருசறிதும் இன்றிக் கண்டதே காட்சி கொண்டதே கோலமாய் வந்த வரவையும், தந்த உறவையும், முந்தப்போம் நெறியையும் முற்றாக மறந்து மாவெனத் திரியும் கயவர்க்கும், சிறந்த திருமுறை நூற்களால் உண்மை உணர்த்தல் வேண்டுவதின்று. பேரறிவுப் பெரும் பொருளாம் சிவபெருமானுடன் ஓரறிவாய்த் திகழும் நிறைவினையுடைய ஒண்மை யோர்க்கும் மெய்யுணர்வு நூல்கள் வேண்டுவதில்லை. அறிவினைப் பொருந்தி அறியாமை வயப்பட்டிருக்கின்றோமே என்று பெருங்கவலை கொண்டு ஒருங்கிய மனத்தராய் உயர்வழி நாடுவார்க்கே மெய்யுணர்வு நூல்கள் வேண்டும் என்க. உயர்வழியாவது யாண்டும் எத்தகைய உருவுடனும் கூடும் பிறப்பு எஞ்ஞான்றும் துன்பம் என்பதும், நத்தும் சிவபெருமான் திருவுடன் கூடும் சிறப்பு எஞ்ஞான்றும் பொன்றா இன்பம் என்பதும் அருளால் அறிதல். அறிந்து அதனை எய்துதற்கு நன்னெறி நான்மை நற்றவம்புரிதல். இத்தகைய வேட்கையுடையோர்க்கு மெய்கண்ட நூல்களை அறிவித்தல்வேண்டும். அவர்கள் தம்மறிவால் அறியும் அறிவுடையோராவர். இவ் வுண்மை சிவஞானசித்தியார் பரபக்கத்தின்கண் காணப்படும் "போதமிகுத் தோர்" என்னும்

திருப்பாட்டானும் உணரலாம். மேலும், "எமக்கென் எவனுக் கெவை தெரியும் அவ்வத் தமக்கவனை வேண்டத் தவிர்" (46) என்னும் திருவருட் பயனாலும் இவ்வுண்மை உணரலாம்.

## 2289. சத்தும் அசத்துஞ் சதசத்துந் தான்கூடிச்

2289. சத்தும் அசத்துஞ் சதசத்துந் தான்கூடிச்
சித்தும் அசித்துஞ் சிவசித்த தாய்நிற்குஞ்
சுத்தம் அசுத்தந் தொடங்காத் துரியத்துச்
சுத்தரா மூன்றுடன் சொல்லற் றவர்களே.

ஆருயிர்க்கு நிலைப்பு நிலையாமை என்னும் இருபெயர் உண்டு. இதனைச் சதசத்து என்ப. இதனைச் சார்பி எனலும் ஒன்று. சத்தாகிய திரிபில் மெய்பொருளாம் சிவத்துடன் கூடுதற்கு உரிமையுடையதாதலால் சத்தென்னும் பெயர் உயிர்க்கு உண்டு. அதுபோல் திரிபினை எய்தும் மெய்ப்பொருளாம் மாயையுடன் கூடுதலால் அசத்தென்னும் பெயரும் உயிர்க்கு உண்டு. அசத்து: சத்தின் - உண்மையின் எதிர்மறையன்று. சத்துப்போன்று என்றும் திரிபின்றி ஒன்றுபோலிருக்கும் தன்மை அல்லாதது என்பது பொருள். கூட்டுப் பெயரியாகிய தான் சத்துடன் கூடிச் சத்தாகநிற்கும் அசத்துடன் கூடி அசத்தாக நிற்கும். அதுபோல் அவ் ஆருயிர் முற்றுணர்வாகிய சிவத்துடனும் நிற்கும். சற்றும் உணர்வில்லாத மாயை ஆக்கத்துடனும் மாயையுடனும் வினைமலங்களுடனும் நலம்பெற முயலக் கூடிநிற்கும். அதனால் சிவசித்தென்னும் பெயரும் உண்டாயிற்று. அறிவு அறியாமையாகிய இரண்டும் தொடங்காத பேருறக்கத்தும், ஆருயிர் தூயதாய் இருக்கும். அதுபோல் உறக்கம் கனவு நனவு என்ன மூன்றிலும் தூயதாகவே இருக்கும்.

## 2290. தானே யறியான் அறிவிலோன் தானல்லன்

2290. தானே யறியான் அறிவிலோன் தானல்லன்
தானே யறிவான் அறிவு சதசத்தென்று
ஆனால் இரண்டும் அரனரு ளாய்நிற்கத்
தானே யறிந்து சிவத்துடன் தங்குமே.

ஆருயிர்கள் தாமாக அறியமாட்டா. அறிவில்லாத தன்மையுடையனவல்ல. அறிவித்தால் அறியும் தன்மையுடையன. அதனால் தானே யறியான் அறிவில்லோனும் தானல்லன் என்றருளினர். அவ் வுயிரின் அறிவு சதசத்தென்னும் உண்மையை அருளால் அறிந்தால் அவ் வுயிரி தானே அறிவான். இவ் விருநிலையும் சிவபெருமான் திருவருளால் எய்தும். அதனால் அவ் வருளில் கலந்து அருளாய் நிற்பன். நிற்கவே தானே யறிந்து சிவத்துடன் புணர்ந்த அவன் திருவடியில் ஒருவாதுறைந்து பெருவாழ்வுற்றுப் பேரின்பம் துய்ப்பன். உயிரி - உயிர்க்கிழவன்; ஆன்மா.

## 2291. தத்துவ ஞானந் தலைப்பட் டவர்கட்கே

2291. தத்துவ ஞானந் தலைப்பட் டவர்கட்கே
தத்துவ ஞானந் தலைப்பட லாய்நிற்குந்
தத்துவ ஞானத்துத் தானவ னாகவே
தத்துவ ஞானானந் தந்தான் தொடங்குமே.

முப்பத்தாறு மெய்களின் உண்மை உணரும் உணர்வுதலைப் பட்டவர்கட்கே திருவடியுணர்வாகிய அழியாத் தத்துவஞானம் கைகூடும். அத் திருவடியுணர்வு கைவந்தால் சிவனருளால் உயிரி சிவனாவன். சிவனாகவே திருவடிக்கீழ் அமர்ந்து திருவடியின்பந் துய்ப்பன்.

## 2292. தன்னை யறிந்து சிவனுடன் தானாக

2292. தன்னை யறிந்து சிவனுடன் தானாக
மன்ன மலங்குணம் மாளும் பிறப்பறும்
பின்னது சன்முத்தி சன்மார்க்கப் பேரொளி
நன்னது ஞானத்து முத்திரை நண்ணுமே.

திருவருளால் ஒருவன் தன் உண்மை நிலையினை அறிந்து அச் சிவபெருமான் திருவடிக்கீழ்த் தங்கி நிலைப்பன். தங்கவே மலம் முதலியவற்றின் பிணிப்பு மறைப்பு துய்ப்பு முதலிய பண்புகள் அறும். அறவே பிறப்பும் அறும். அற்றபின் கைகூடுவது உண்மைத் திருவடிப் பேறாகும். அப் பேற்றால் நன்னெறிப்பேரொளி நண்ணும். நண்ணவே என்றும் நன்மை பயப்பதாகிய திருவடியுணர்வுப்பொறி பெற்ற திருவினராவர். அத் திருவினையே 'வாராத செல்வ' மெனவும், 'செல்வன் கழலேத்தும் செல்வம் செல்வமே' எனவும் செந்தமிழ்த் திருமறை அருள்வதாகும். பொறி - முத்திரை.

## 2293. ஞானந்தன் மேனி கிரியை நடுவங்கந்

2293. ஞானந்தன் மேனி கிரியை நடுவங்கந்
தானுறும் இச்சை உயிராகத் தற்பரன்
மேனிகொண் டைங்கரு மத்துவித் தாதலான்
மோனிகள் ஞானத்து முத்திரைபெற் றார்களே.

சிவபெருமான் ஆருயிர்களை ஆட்கொள்ளவேண்டித் திருவருளாகிய பேரறிவே திருமேனியாகக் கொண்டருள்வன். இவ் வுண்மை 'சத்திதன் வடிவே தென்னில் தடையிலா ஞானமாகும்' என்பதனால் பெறப்படும். திருமேனியிற் காணும் திருவுறுப்புக்கள் திருவருளாற்றலாகும். உயிர்ப்புத் திருவருள் விழைவாகும். இவற்றால் தானே முழுமுதலாம் சிவபெருமான் திருவுருக்கொண்டருளினன். அதனால் படைத்தல் காத்தல் துடைத்தல் மறைத்தல் அருளல் என்னும் திருத்தொழில் ஐந்தும் புரிவானாயினன். அவனே ஐந்தொழிலுக்கும் முழுமுதல்வனாவன் மோனமாகிய முதன்மை நிலையிலுள்ள நல்லார் திருவடிப்பொறியாம் சிறப்புப் பெற்றுய்ந்தார்.

ஐங்கருமம் - பூத சுத்தி முதலிய ஐந்து சுத்தி, இது விசேட தீக்கை பெற்றுச் சிவபூசை கைக்கொண்டவர் செய்யும் சுத்திகள். ஞானத்து முத்திரை - சின் முத்திரை.

## 2294. உயிர்க்கறி வுண்மை யுயிரிச்சை மானம்

2294. உயிர்க்கறி வுண்மை யுயிரிச்சை மானம்
உயிர்க்குக் கிரியை யுயிர்மாயை சூக்கம்
உயிர்க்கிவை யூட்டுவோன் ஊட்டு மவனே
உயிர்ச்செய லன்றியவ் வுள்ளத்து ளானே.

ஆருயிர்க்கு அன்பு அறிவு ஆற்றல் மூன்றும் என்றுமுள்ள உண்மையாகும். சிவபெருமான் ஆருயிர்க்கு இவற்றை விளக்குவித்தற் பொருட்டு மாயையினின்று நுண்ணுடல் பருவுடல்களைப் படைத்தளித் தருளினன். இவற்றால் வரும் பயனை அவ் வுயிர்கட்குச் சிவபெருமான் ஊட்டியருள்கின்றனன். அங்ஙனம் ஊட்டியருளுங்கால் அச் சிவபெருமான் தோன்றாத் துணையாக நின்றருள்கின்றனன். இவ்வுடல் கலன்களில் பற்றுவரச் செய்கின்றனன். பற்று - அபமானம். இவை யனைத்தும் உயிரை நன்னெறிப்படுத்த உயிர்க்குயிராகிய சிவபெருமான் செய்விக்கும் செயலென்க. எனவே ஆருயிரின் முன்மைச்செயலாகா. எனவே அடிமைச்செயலாகும் என்பது குறிப்பெச்சம். நுண்ணுடல்: கருவுருப் பிறப்புடல். பருவுடல்: கருவுறும் சிறப்புடல்.

## 2295. தொழிலிச்சை ஞானங்கள் தொல்சிவ சீவர்

2295. தொழிலிச்சை ஞானங்கள் தொல்சிவ சீவர்
கழிவற்ற மாமாயை மாயையி னாகும்
பழியற்ற காரண காரியம் பாழ்விட்டு
அழிவற்ற சாந்தாதீ தன்சிவ னாமே.

தொழில் விழைவு அறிவாகிய மூன்றும் தொன்மையாகவுள்ள பேருயிராகிய சிவபெருமானுக்கும் ஆருயிராகிய சீவர்களுக்கும் உள்ளன. சிவபெருமானுக்கு அவை மூன்றும் தாமே விளங்குவன. ஆருயிர்க்குச் சிவபெருமான் விளக்க விளங்குந்தகையன. சிவபெருமானுக்குத் தாமே விளங்குங்கால் தன்னின் வேறல்லாத் திருவருள் துணையால் விளங்கும் ஆருயிர்க்கு அவை மூன்றும் பிறப்பாகிய கட்டின்கண் திருவருள் இயைந்தியக்க மாயாகாரியக் கருவியும் ஒளியும் உறுதுணையாக கொண்டு விளங்குகின்றன. சிறப்பாகிய ஒட்டின்கண் திருவருளைக் கருவித் துணையாக் கொண்டு விளங்குகின்றன. அழிதல் இல்லாத மாமாயை மாயைகள் கருவியாக அன்பறிவு ஆற்றல்கள் நிகழ்வன. குற்றமற்ற காரணகாரியம் ஆகிய அருவநிலைப் பாழினையும் விட்டு மேலாகிய அழிதலில்லாத அப்பால் அமைதியானவன் சிவபெருமான்.

மாமாயை - சுத்த மாயை. மாயை - அசுத்த மாயை. சாந்தாதீதன் - ஆனந்த அதீதன்.

## 2296. இல்லதும் உள்ளதும் யாவையுந் தானாகி

2296. இல்லதும் உள்ளதும் யாவையுந் தானாகி
இல்லதும் உள்ளது மாயன்றாம் அண்ணலைச்
சொல்லது சொல்லிடில் தூராதி தூரமென்று
ஒல்லை யுணர்ந்தால் உயிர்க்குயி ராகுமே.

நிலைபேறில்லாத காரியத்தினும், நிலைபேறுள்ள காரணத்தினும் கலப்பால் சிவன் ஒன்றாய் நின்றருள்கின்றனன். இந் நிலை அவனுக்கும் நமக்கும் தொன்றுதொட்டே உள்ளது. அம் முறையால் சிவன் யாவையும் தானாகி நிற்கின்றனன். பொருள் தன்மையில் அவன் வேறாக நின்றருள்கின்றனன். அம் முறையால் அவன் யாவையும் அல்ல
னாகின்றனன். அத்தகைய விழுமிய முழுமுதல் அண்ணலைச் சொல்லால் சொல்லத் தொடங்கினால் 'சொற்கழிவு பாதமல' ராதலின் மிகவும் எட்டாத் தொலைவினனாவன் திருவருளால் அவனை உள்ளவாறுணர்ந்தால் அவன் உயிர்க்கு உயிராய் உடனாக நின்றருள்கின்றனன். இல்லது - அசத்து. உள்ளதன் மறுதலையன்று அசத்து; தோன்றி யொடுங்கும் திரிபுடையது அசத்து. ஒல்லை - ஒல்லும் வகை; உள்ளவாறு.

இல்லதும் உள்ளதும் - அசத்தும், சத்தும், சொல்லது - சொல்லினால்.

## 2297. உயிரிச்சை யூட்டி யுழிதருஞ் சத்தி

2297. உயிரிச்சை யூட்டி யுழிதருஞ் சத்தி
உயிரிச்சை வாட்டி யொழித்திடு ஞானம்
உயிரிச்சை யூட்டி யுடனுற லாலே
உயிரிச்சை வாட்டி யுயர்பதஞ் சேருமே.

ஆருயிர்க்கு அளவிறந்த பற்றினை உலகிடையூட்டி அலைதருமாறு செய்யும்அருள் நடப்பாற்றல். அவ் வுயிர்க்குச் செவ்வி வாய்ந்ததும் அப் பற்றினை வாட்டி ஒழித்திடுமாறு செய்யும்அருள் வனப்பாற்றல். நடப்பாற்றல் - ஆதிசத்தி; கிரியாசத்தி. வனப்பாற்றல் - பராசத்தி; ஞானசத்தி. அவ் வுயிர்க்கு வனப்பாற்றல் மெய்யுணர்வுப் பொருளாம் சிவபெருமான்பால் அன்பினையூட்டும். அச் சிவபெருமானும் ஆங்கு உடனாயுறைகின்றனன். ஆதலால் அவ் வுயிர்கள் உலகப்பற்றினை வாட்டி உயர்வற உயர்ந்த ஒரு பெரும் நிலையாம் சிவபெருமான் திருவடி நிலையினை அப்பொழுதே எய்தும்.

உயிரிச்சை - உயிருக்கு இச்சை. உழிதரும் - அலையச் செய்யும். உடனுறலால் - சிவன் உயிருடன் இருத்தலால்.

## 2298. சேருஞ் சிவமானார் ஐம்மலந் தீர்ந்தவர்

2298. சேருஞ் சிவமானார் ஐம்மலந் தீர்ந்தவர்
ஓரொன்றி லாரைம் மலவிருள் உற்றவர்
பாரின்கண் விண்ண ரகம்புகும் பான்மையர்
ஆருங்கண் டோரார் அவையருள் என்றன்றே.

அருளால் ஐம்மலம் தீர்ந்து தெருளுற்றவர் திருவடி சேர்ந்து சிவமானார். மெய்யுணர்வு ஒருசிறிதும் இல்லாதவர் ஐம்மல இருளுற்று மம்மர் கொண்டனர். அத்தகையோர் இருள்சேர் இருவினைப் பயனும் ஒருங்கு நுகர்தற்கு இடனாம் நிலவுலகிடைப் பிறப்பார். இருள்சேர் இருவினையுள் நல்வினைப்பயனைத் துய்த்தற்கு விண்ணிடைச் சேர்வர். தீவினைப்பயனைத் துய்த்தற்கு நரகிடைச் சேர்வர். இவையே அவர்தம் பான்மை ஆகும். இவற்றைக் கண்டும் கேட்டும் இவையனைத்தும் திருவருளியக்க இயங்குகின்றன என்னும் மெய்ம்மையை ஒருசிறிதும் உணரார் உண்மையறிவில்லார்.

ஓர் ஒன்றிலார் - தத்துவ ஞானம் இல்லாதவர்.

## 2299. எய்தினர் செய்யும் இருமாயா சத்தியின்

2299. எய்தினர் செய்யும் இருமாயா சத்தியின்
எய்தினர் செய்யும் இருஞான சத்தியின்
எய்தினர் செய்யும் இருஞால சத்தியின்
எய்தினர் செய்யும் இறையருள் தானே.

ஆருயிர்கள் தூமாயை தூவாமாயை என்னும் இருமாயைகளிலும் அருளால் பொருந்திச் செய்வன செய்யும் அதுபோல் பெரிய ஞானசத்தியினைப் பொருந்தி அறிவிளங்கப் பெறும். பெரிய நிலவுலகமுதலாம் மூலப்பகுதியினைப் பொருந்திக் துய்ப்பன துய்க்கும். இவையனைத்தும் திருவருளால் நிகழ்வனவாகும். எய்தினர்: முற்றெச்சம்.

இரு மாயா சத்தி - சுத்த மாயை. அசுத்த மாயை. ஞால சத்தி - பிரகிருதி மாயை.

## 2300. திருந்தனர் விட்டார் திருவி னரகந்

2300. திருந்தனர் விட்டார் திருவி னரகந்
திருந்தனர் விட்டார் திருவார் சுவர்க்கந்
திருந்தனர் விட்டார் செறிமலக் கூட்டந்
திருந்தனர் விட்டார் சிவமா யவமே.

திருவடியுணர்வால் திருத்தமுற்றவர் இன்பமில்லாத துன்ப நிறைந்த இருளுலகம் புகார். திருவடியுணர்வு - மெய்யுணர்வு; சிவஞானம். அத்தகைய உணர்வுடையார் நிலையிலா இன்பம் எய்தும் துறக்க வுலகத்தையும் கான்றசோறென ஒதுக்கித் தள்ளினர். அவர்கள் ஐம்மலக் கூட்டத்தையும் அறவேவிட்டனர். மேலும் சிவமாய்த் திகழ்ந்தனர். அதனால் அவமாய பிறப்பினை விட்டனர். இவர்களே தங்கருமம் செய்யும் தவத் தோராவர். ஏனையார் சிறப்பில்லாத பிறப்புவினை செய்யும் அவத்தராவர்.

திருந்தனர் - தத்துவ ஞானம் கை வந்தவர்.

## 2301. அவமுஞ் சிவமம் அறியார் அறியார்

2301. அவமுஞ் சிவமம் அறியார் அறியார்
அவமுஞ் சிவமும் அறிவார் அறிவார்
அவமுஞ் சிவமும் அருளால் அறிந்தால்
அவமுஞ் சிவமும் அவனரு ளாமே.

அவமாகிய பிறப்பினுக்கு ஏதுவாம் யான் எனது என்னும் செருக்குடன் செய்யும் பிணிச்செயலையும், சிவமாகிய சிறப்பினுக்கு ஏதுவாம் உருக்கமுடன் செய்யும் பணிச்செயலையும் அருளால் அறியாரே அறியாதவராவர். அவம் - பிறப்பு. சிவம் - சிறப்பு. இவ் வுண்மை வரும் திருவள்ளுவ நாயனார் திருமாமறையா னுணரலாம்:

"அறிவுடையார் ஆவ தறிவார் அறிவிலார்
அஃதறி கல்லா தவர். "
(திருக்குறள், 427.)

1. அண்டர். அப்பர், 5. 39 - 3.
" கொள்ளேன். 8. திருச்சதகம், 2.
2. தவஞ்செய்வார். திருக்குறள், 266.

பிறப்புச் சிறப்பாகிய அவம் சிவம் என்னும் இரண்டினையும் அருளால் அறிவாரே அறிவுடையராவார். அவ் விரண்டினையும் அருளால் அறிந்தால் அவ் விரண்டினையும் சிவபெருமான் நமக்குக் கூட்டுவிப்பதும் நாம் புரியும் பிணிச்செயல் பணிச்செயல்களின் பயனால் ஆகும் அவையும் அவன் திருவருளேயாம். அருளாலறிவதென்பது அருளை அறிவிக்கவேண்டி விண்ணப்பிக்கும் அடிமை அன்பால் அறிவதென்பதாம்.

கூட்டுவிப்பதும் அருளே என்பது உடனுக்குடன் இருவினைப் பயன்களைக் கூட்டு வியாதொழிந்தால் அவை மிகவும் முதிர்ந்து பின்னரப் பதமாக்கும் புதுச் செயலையும் கொண்டுவந்து தரும். இதற்கு ஒப்பு உலர்ந்த விறகை நிலத்தில் தொகுத்துவைத்துப் பின் எடுத்து அடுப்பில் வைத்து எரிப்பது எளிது. அதனை நீரில் தொகுத்துவைத்தோ மழையில் நனையவிட்டோ எடுத்து அடுப்பில் வைத்தால் எரியுமோ? எரியாதல்லவா? பின் என்ன செய்தல்வேண்டும். அவற்றை வெயிலில் சுமந்து உலரவைப்பதாகிய புதுச் செயலையும் செய்தல்வேண்டும். அங்ஙனம் செய்ய இடந்தராமல் ஆருயிர் மனம்போல் விடாமல் ஆண்டவன் வினைப்பயனை முனிவுடன் அவ்வப்போது தந்துவிடுகின்றனன். அங்ஙனம் செய்வது எத்துணைப் பேரருள் என்று எண்ணுமின். இதனைத் திருவள்ளுவநாயனார் 'இளைதாக முள்மரம் கொல்க களையுநர், கைகொல்லும் காழ்த்த இடத்து' (879) என்னும் செந்தமிழ்ப் பொதுமறையால் குறித்தருளுதல் காண்க. பிணிச்செயல் - தொழில். பணிச்செயல் - தொண்டு. தொழிலுக்குப் பயன் பிறப்பு. தொண்டுக்குப் பயன் சிறப்பு. கூலியால் செய்வது தொழில். குணத்தால் செய்வது தொண்டு.

அவம் - பிறப்புக்கு ஏதுவாய செயல்.

## 2302. அருளான சத்தி யனல்வெம்மை போலப்

2302. அருளான சத்தி யனல்வெம்மை போலப்
பொருளவ னாகத்தான் போதம் புணரும்
இருளொளி யாய்மீண்டு மும்மல மாகுந்
திருவரு ளானந்தி செம்பொரு ளாமே.

அனலும் அதன் வெம்மையும் பொருளால் ஒன்றாய்ப் பண்பால் இரண்டாய் விளங்கும். அப் பண்பிரண்டும் ஒளியும் சூடும் என்ப. அதுபோல் திருவருளும் சிவபெருமானும் ஒருவனேயாம். அத் திருவருளே ஆற்றலாகிய சத்தியாகும். அவ் வருள் மெய்ப்பொருளோ டொன்றாகும். அவ்வருளின் வழிவு தடையிலா ஞானமாகும், ஆணவம் 'இருளொளிர இருண்ட' இருளாகும். அவ் வானவத்தோடு மீண்டும் மாயை, கன்மம், மாயையின் விரிவாகிய மாயேயம் என்னும் மும்மலமும் கூடும். அங்ஙனம் கூடியவற்றை அகற்றுவதன் பொருட்டுத் திருவருள் வண்பேரருளின்ப நடப்பாற்றலாகக் கூடும். கூடி ஐம்மலமாகும். அந் நடப்பாற்றல் உடனாக இருந்து இம் மலங்களை அகற்றுவிக்கும். 'மும்மலம் ஆகும்' என்பதனை மாறுதல் ஆகும் என ஒருசொல் வருவித்துப் பொருள் கொள்க. அத் திருவருள் நந்தாச் செம்பொருளாம் சிவபெருமானைக் காட்டியருளும். காட்டவே ஆருயிர்கள் சிவபெருமானின் திருவடியுணர்வினைப் பெறும். பெறவே பேரின்பப் பெருவாழ்வு எய்தும்.

அருளான சத்தி - அருள் சத்தி. போதம் புணரும் - ஞானம் ஆகும்.

1. அருளது. சிவஞானசித்தியார், 5. 2 - 8.

## 2303. ஆதித்தன் தோன்ற வரும்பது மாதிகள்

2303. ஆதித்தன் தோன்ற வரும்பது மாதிகள்
பேதித்த தவ்வினை யாற்செயல் சேதிப்ப
ஆதித்தன் றன்கதி ராலவை சேட்டிப்பப்
பேதித்துப் பேதியா வாறருட் பேதமே.

ஞாயிறு கீழ்பால் தோன்றத் தாமரை முதலிய நீர்ப் பூக்கள் ஒன்று மலரும்; மற்றொன்று மலர்தற்குத் தகுதியாம் முகையாகும்; வேறொன்று உலரும் இச் செயல்கள் பூக்களின்கண் காணப்படினும் அப் பூக்கள் தம்மால்மட்டும் நிகழ்வனவல்ல. ஞாயிற்றின் கதிர்க் கலப்பும் இயைந்துள்ளதாற்றான் நிகழ்கின்றன. அதுபோல் திருவருட் கலப்பால் அவன் அவள் அது என்னும் மூவகை யுலகமும் தோன்றிநின்று அழிகின்றன. இதுபோல் நிலைபேறாகத் தோன்றும் உலகங்களும் அழியும். இவற்றை வேறுபடச் செய்வதற்கு வேண்டிய காரணங்கள் இவற்றின்கண் உண்டெனினும் இவற்றையியக்கும் திருவருள் வேறுபாட்டானாம் என்பதே துணிபு. அழியும் - ஒடுங்கும்.

பதுமாதி - தாமரை நீலோற்பலம் முதலியன. பேதித்தது - மலர்தல். குவிதல். சேட்டிப்ப - இயங்க. அருள் பேதம் - திருவருளின் வேற்றுமைத் திறம்.

## 2304. பேதம் அபேதம் பிறழ்பேதா பேதமும்

2304. பேதம் அபேதம் பிறழ்பேதா பேதமும்
போதம் புணர்போதம் போதமும் நாதமும்
நாத முடனாத நாதாதி நாதமும்
ஆதன் அருளின் அருளிச்சை யாமே.

ஆருயிர்கட்கு உடல் உலகுகளுடன் ஏற்படும் ஒற்றுமை, வேற்றுமை, பிறழ்வு எனப்படும் பேதம், அபேதம், பேதாபேதம் ஆகிய வேறுபாடுகளும் திருவருளின் திருவுள்ளத்தான் ஆவன. அதுபோல் அவ்வுயிர்களுக்குரிய இயற்கையறிவும், அவ் வறிவின் விளக்கத் துணையாம் கல்வி முதலிய செயற்கையறிவும், இவற்றான் ஏற்படும் அறிவின் வளர்ச்சியும், அவ் வறிவிற்குத் துணையாம் ஓசையாகிய நாதமும், இந் நாதத்தைத் தொழிற்படுத்தும் அருளொலியாம் பரநாதமும் திருவருளின் திருவுள்ளத்தான் ஆவனவே. திருவுள்ளம் - திருவருள் இச்சை. இவையெல்லாம் ஆதன் என்று சொல்லப்படும் ஆருயிரின் பொருட்டேயாம். பிறழ்வு - பேதாபேதம்.

ஆதன் - ஆன்மா.

## 2305. மேவிய பொய்க்கரி யாட்டும் வினையெனப்

2305. மேவிய பொய்க்கரி யாட்டும் வினையெனப்
பாவிய பூதங்கொண் டாட்டிப் படைப்பாதி
பூவியல் கூட்டத்தாற் போதம் புரிந்தருள்
ஆவியை நாட்டும் அரனரு ளாமே.

செயற்கைப்பொருள்களால் யானை முதலியவற்றைச் செய்து அவை இயங்குமாறு பொறிகளை அமைத்து இயக்கப்படுவது பொய்க்கரியாகும் அக் கரி இயங்கும் தொழிலை ஒப்ப யாண்டும் பரந்துள்ள நிலம் முதலிய ஐம்பூதங்களால் ஆக்கப்படும் இவ் வுடலும் ஆடுகின்றது. உடல் உலகுகளுக்குரிய படைப்பு முதலிய தொழில்களும் அயன் அரி அரன் முதலியவர்களால் நிகழ்வனவும் இத்தகையவே. ஆருயிர்க்கு உடல் கலன் உலகுகளை உள்ளத்தால் படைத்து. அவற்றுடன் ஆருயிர்களை இயைத்து இயக்குவது திருவருள். இவற்றின் சேர்க்கையால் ஆருயிர்கட்கு அறிவை விளக்குவிப்பதும் திருவருள். அவற்றினின்றும் செவ்வி வருவித்துப் பிரிவிப்பதும் திருவருள். பிரித்துச் சிவபெருமான் திருவடியில் சேர்ப்பிப்பதும் திருவருள். எல்லாம் ஆற்றுவித்து இணையில் இன்பம் துய்ப்பிப்பதூஉம் திருவருளேயாம். கரி - யானை; கரத்தையுடையது. கரம் கருமம் என்னும் அடியாகத் தோன்றிய தமிழ்ச்சொல். விலங்கினங்களுள் யானை ஒன்றினுக்கு மட்டுமே மூக்குக் கைபோன்று நீண்டு அமைந்ததுமட்டுமன்றிக் கைபோன்று வேலைக்கும் பயன்படுகிறது. அதனால் யானை 'கிரி' என்னும் சிறப்புப் பெயரான் வழங்கப்படலாயிற்று.

பொய்க்கரி - மரயானை. பாவிய பூதம் - மண் முதலிய பூதங்கள். பூவியில் - உலக இயல்.

## 2306. ஆறா றகன்று தனையறிந் தானவன்

2306. ஆறா றகன்று தனையறிந் தானவன்
ஈறாகி யாவினு மியாவுந் தனிலெய்த
வேறாய் வெளிபுக்கு வீடுற்றா னம்மருள்
தேறாத் தெளிவுற்றுத் தீண்டச் சிவமாமே.

மண் முதல் ஒலி ஈறாகச் சொல்லப்படும் முப்பத்தாறு மெய்களின் உண்மைகளை அருளால் அருள் நூற்களின் வாயிலாக உணர்ந்து அவற்றினிடத்துக்கொள்ளும் பற்றை விடுதல்வேண்டும். விடுதல் என்பது அம் மெய்கள் நாமல்ல என்றும், நமக்கு ஆண்டவனால் தரப்பட்ட இரவற்கருவியே என்றும், நமக்கு அவை என்றும் இரவலே என்றும், அவற்றால் ஆண்டவன் திருப்பணியைப் புரிதல் வேண்டும் என்றும், அவை நிலை இல்லன என்றும் கொண்டு பற்றின்றி நல்லன புரிந்தொழுகுதல். அங்ஙனம் ஒழுகிவரும் உரவோன், தன்னை அடிமை என்று அறிந்தவனாகின்றான். அடிமை என்றறிந்த மெய்யறிவினால் அவன் சிவத்தொடுங்கிச் சிவனாகின்றான். ஒடுங்கிச் சிவமாவதென்பது நிழலுருவில் ஒடுங்கியும் பெயரில் ஒடுங்கியும் பொருள் தோன்றுவது போன்றதாகும் இவனையே சிறப்பினன் எனக் கூறுவர். எல்லாவற்றுடனும் தான் விரவிநிற்பதால் தான் ஈறாவதும், தன்னில் எல்லாப் பொருள்களும் அடங்கி நிற்பதால் அவை தன்னிலெய்தி நிற்கும் தன்மையும் தோன்றும். தோன்றவே அவன் அவற்றிற்கு வேறாவன். வேறாகவே அருள்வெளியில் புகுவன். புகுந்தால் முற்றும் விடுதலை உற்றவனாவன்.

வனப்பாற்றலாகிய சிறந்த திருவருளைத் தெளிவன். தெளிந்தால் சிவகுரு எழுந்தருள்வன். சிவதீக்கை செய்தருள்வன். சிவதீக்கை பெற்ற வுயிர் சிவமாம் பெருவாழ்வு எய்தும்.

ஆனவன் - சிவமயம் ஆனவன். யாவும் தனில் எய்த - எல்லாப் பொருளும் தன்னிடத்தில் தோன்ற வேறாய் - அப்பொருள்
கட்கு வேறாய். வெளிபுக்கு - ஆகாயத்திடை போய். வீடு உற்றான் - சீவன் முத்தி அடைந்தான். அம் அருள் - சிறந்த திருவருள். தேறா - தேறி.

## 2307. தீண்டற் கரிய திருவடி நேயத்தை

2307. தீண்டற் கரிய திருவடி நேயத்தை
மீண்டுற் றருளால் விதிவழி யேசென்று
தூண்டிச் சிவஞான மாவினைத் தானேறித்
தாண்டிச் சிவனுடன் சாரலு மாமே.

திருவருளானன்றிப் பிறவாற்றான் எய்தற்கரிய இறவாத இன்ப அன்பாகிய திருவடிநேயத்தை அருளால் மீண்டும் ஆருயிர் எய்தும். எய்தவே சிவகுரு அருளிய செவியறிவுறூஉவின்வழி அவ் வுயிர் ஒழுகும். இவ் வாற்றால் ஒருவர்க்குச் சீலம் நோன்பு என்னும் இருபெருந்தன்மையும் கைகூடும். கூடவே சிவஞானம் எய்துதற்குரிய செறிவுநெறி கைகூடும். அவ்வகைக் குறிப்பே மா என்று ஓதப்பெற்றது. மா - குதிரை. குதிரை எனக் குறிப்பது யோக வழியை யாகும். யானை எனக் குறிப்பது ஞானவழியையாகும். இக் குறிப்பே 'தூண்டிச் சிவஞான மாவினைத் தானேறி' என்று ஓதியவற்றான் உணரலாம். இச் செறிவு நெறியினையுங் கடந்து அறிவு நெறியிற் புகுந்து அந் நெறியின் எல்லையாம் சிவபெருமானின் திருவடியைச் சார்வர். சார்ந்து என்றும் இன்புறுவர்.

விதிவழி - குரு உபதேசப்படி. மா - பரி.

## 2308. சார்ந்தவர் சாரணர் சித்தர் சமாதியர்

2308. சார்ந்தவர் சாரணர் சித்தர் சமாதியர்
சார்ந்தவர் மெய்ஞ்ஞான தத்துவ சாத்தியர்
சார்ந்தவர் நேயந் தலைப்பட்ட ஆனந்தர்
சார்ந்தவர் சத்த அருட்டன்மை யாரே.

நன்னெறி நான்மையினர் சீலத்தர், நோன்பினர். செறிவினர், அறிவினர் என்று அழைக்கப்படுவர். அவர்களே இங்குச சாரணர், சித்தர், சமாதியர், சாத்தியர் என அழைக்கப்பெற்றனர். இவர்கள் நால்வரும் சிவபெருமான் திருவடியிணையினை முறை முறையாகச் சார்ந்தவராவர். சாத்தியராகிய அறிவினர் மெய்ஞ்ஞான தத்துவ சாத்தியரென்றோதப் பெற்றனர். இந் நான்கு நெறியினும் ஒழுகப் பெற்றவர் எண்ணரும் அன்புசேர் பண்பமர் கண்ணப்பர்போன்று காதல் அன்பு நெறியினைத் தலைப்படுவர். இவர் நேயத்தர் என ஓதப்பெற்றனர். இவரே இறவா இன்பம் தலைப்பட்டவராவர். இவர் ஆனந்தர். இவர்கள் நிலைபெற்ற திருவருட்டன்மையராவர். இவர்கள், சாரணர் சித்தர் சமாதியர் சாத்தியர், பூரண வானந்தரருளார் எனப் போற்றுப்பெறுவர்.

சார்ந்தவர் - சிவனைச் சார்ந்தவர். சத்த அருள் - நாத சத்தி.

## 2309. தானென் றவனென் றிரண்டென்பர் தத்துவந்

2309. தானென் றவனென் றிரண்டென்பர் தத்துவந்
தானென் றவனென் றிரண்டற்ற தன்மையைத்
தானென் றிரண்டுன்னார் கேவலத் தானவர்
தானின்றித் தானாகத் தத்துவ சுத்தமே.

ஆருயிராகிய தானென்றும் பேருயிராகிய சிவனென்றும் பொருள் தன்மையில் அழியாமெய்ம்மை அறிவுப்பொருள் இருவேறு வகைய சிவன் ஒருவன். ஆருயிர்கள் அளவில. சிவன் - அவன். கலப்புத் தன்மையில தானென்றும் அவனென்றும் வேறுபடுத்திக் கூறாது நீற்றடியார் என்னும் நீர்மைபோல் சிவத்தர் என ஒற்றுமையாக ஓதுவர். எனவே இந்நிலையினுள்ளார் இருவேறுவகையாக உன்னார். இது கற்றார் கல்வியும் தாமும் வேறென உன்னாமையை ஒக்கும் இவர்கள் அருள் தனிமையராவர். கேவலம் - தனிமை. தன்னையிழந்து தலைவன் தானாக நிற்கும்நிலை பொருள் உண்மை ஏய்ந்தநிலையாம். பொருளுண்மை - தத்துவ சுத்தம்.

அவன் - சிவன். தானாக - சிவமாக.

## 2310. தன்னினில் தன்னை யறியுந் தலைமகன்

2310. தன்னினில் தன்னை யறியுந் தலைமகன்
தன்னினில் தன்னை யறியத் தலைப்படுந்
தன்னினில் தன்னையும் சார்கில னாயிடில்
தன்னினில் தன்னையுஞ் சார்தற் கரியவே.

திருவருளால் தன்னை யுணரும் முறைமையிலேயே தன்ஐ ஆம் சிவபெருமானையும் உணர்தல்வேண்டும். அவனே சிறந்த தலைமகன் ஆவன். தலைமகன் - சிறந்தோன். அங்ஙனம் தன்னையும் தன் தலைவனையும் அறிந்த நிலைமையால் சிவபெருமான் மிக்கெழுந்து தோன்றியருள்வன். இதுவே தலைப்படும் என்பதன் மெய்ம்மைப்பொருளாகும். உயிர்க்கிழவன் திருவருளால் தலைவனைச் சார்தல்வேண்டும். அங்ஙனஞ் சாரா தொழிந்தால் அத் தலைவனும் சார்தற்கரிய நிலைமையை உடையவனாவன். இத் திருமுறை தமிழாகமம் என்று ஓதப்பெறும். நால்வர் தமிழ் திருமறையாகும். முறையினை மறையினுள் அப்படியே காண்பது அருமையினும் அருமையாகு மல்லவா? அங்ஙனம் காணப்பட்டாலஃதருளியல்பல்லவா? அங்ஙனம் காணப்பட்ட உண்மை வரும் அப்பர் பெருமானின் அருண்மொழியான் உணரலாம். உயிர்க்கிழவன் - ஆன்மா.

"தன்னில் தன்னை அறியும் தலைமகன்
தன்னில் தன்னை அறியில் தலைப்படும்
தன்னில் தன்னை அறிவிலன் ஆயிடில்
தன்னில் தன்னையும் சார்தற் கரியனே."

(அப்பர், 5. 97 - 29.)

இத் திருப்பாட்டு முப்பது திருப்பாட்டுக்களுள் இருபத்தொன்பதாவதாகும். இத் திருப்பதிகம் உயிரெழுத்துப் பன்னிரண்டு, ஆய்தவெழுத்து ஒன்று, மெய்யெழுத்துக்களுள் வகர றகரங்களாகிய இரண்டும் ஒழித்து ஒழிந்த பதினாறும், காப்பு ஒன்றுமாகத் திருப்பாட்டு முப்பதாகும். இவற்றை முறையே நாள் ஒன்றுக்கு ஒவ்வொன்றாக ஒருதிங்களுக்கும், நாழிகை ஒன்றுக்கு ஒவ்வொன்றாகத் தனித்தனிப் பகல் இரவுகட்கும் ஓதியுய்யத் திருவுள்ளங் கொண்டமை உய்த்துணர்வார்க்கு நன்கு புலனாகும். இதனை வருமாறு நினைவுகூர்க. நாழிகையே நாள்வழிபாடுகள் நாம் செய்துய்ய, வாழிமுப்பதப்பருள் வாழ்த்து. இத் திருப்பாட்டின்கண் முதற்சீர் நான்கின்மட்டும் ஒவ்வோர் எழுத்துக்கள் குறைந்துள்ளன. அதற்குக் காரணம் திருக்குறுந்தொகை பதினொரு எழுத்துக்களானமைந்த வரியேயாம் என்க. திருமந்திரம் பன்னிரண்டெழுத்துக்கள் அமைந்தது. மேலும் வெண்டளை பிழையாதன.

தன்னினில் - தன் உடலில். தன்னை - ஆன்மாவை.

## 2311. அறியகி லேனென் றரற்றாதே நீயும்

2311. அறியகி லேனென் றரற்றாதே நீயும்
நெறிவழி யேசென்று நேர்பட்ட பின்னை
இருசுட ராகி இயற்றவல் லானும்
ஒருசுட ராவந்தென் உள்ளத்துள் ளாமே.

மேலோதியவாறு திருவருளால் யான் அறியகில்லேன் என்று நீயும் கவன்று அரற்றுதல் செய்யவேண்டா. நன்னெறிநான்மை வழியே சென்றால் திருவருளால் சிவன் உனக்கும் நேர்ப்படுவன். அவன் பின்பு அடியேனுக்கும் ஆருயிர் பேருயிர் என்ற இருசுடராய் இயைந்து இயக்கும் உண்மையினையும் புலப்படுத்துவன். அத்தகைய வல்லானாகிய சிவன் அடியேனை அவன் திருவடிக்கீழ் அடக்கி அடியேன் உள்ளத்துள்ளாவன். ஆருயிர் - ஆன்மா. பேருயிர் - பரமான்மா; சிவன்.

இருசுடர் - சிவன், சீவன். ஒருசுடர் - சிவன்.

## 2312. ஓம்புகின் றானுல கேழையும் உள்நின்று

2312. ஓம்புகின் றானுல கேழையும் உள்நின்று
கூம்புகின் றார்குணத் தின்னொடுங் கூறுவர்
தேம்புகின் றார்சிவஞ் சிந்தைசெய் யாதவர்
கூம்பகில் லார்வந்து கொள்ளலு மாமே.

சிவபெருமான் உயிர்க்கு உயிராய், உலகுக்கும் உயிராய் உள்நின்று உலகு ஏழினையும் ஓம்பியருள்கின்றனன். அச் சிவபெருமான் திருவடிக்கண் ஒருங்கிய மனத்தார் கூம்புகின்றாராவர். அத்தகையாரை மெய்யடியார் எட்டுவான்குணத்து எம்மான் எனக் கூறுவர். சிவபெருமானின் திருவடியிணையினை நினையாதவர் தேம்புகின்றாராவர். உள்ளத்தளர்ச்சியில்லாதவர் இடையறாது நினைத்து சிவன் திருவடியைக் கொள்ளத் தளரார்.

கூம்புகின்றார் - மனங்குவிந்தவர். கூம்பகில்லார் - தளர்ச்சி அடையாதவர்.

## 2313. குறியறி யார்கள் குறிகாண மாட்டார்

2313. குறியறி யார்கள் குறிகாண மாட்டார்
குறியறி யார்கடங் கூடல் பெரிது
குறியறி யாவகை கூடுமின் கூடி
அறிவறி யாவிருந் தன்னமு மாமே.

ஈண்டுக் குறிக்கப்படும் உடம்பகத்து வாழும் உயிராகிய தம்மை அறியமாட்டாதவர்கள் குறிக்கொண்டு ஆட்கொள்ளும் சிவபெருமானாகிய குறியினை அவனருளாலே காணமாட்டார்கள். தம்மையும் தலைவனையும் அறியும் தவப்பேறு இல்லாதவர், கடமாகிய உடம்பில் மிகுதியும் கூடிப் பிறப்பர். திருவடிக் கலப்பினால் தம்மையறியா வகையாக இன்பில் திளைத்து திருவடியில் கூடுங்கள். கூடினால் அன்னமாகிய சிவபெருமானை அறிந்து வேறொன்றும் அறிதல் செல்லாது. நாளும் சிவமாம் நிலைஎய்தி இன்புறுநிலையில் இந்நாள்காறும் அறிவிறந்து நின்ற சிவத்துடன் கூடி யின்புறுவர்.

கடம் - உடம்பு. குறி - உயிர். குறிகாண - சிவத்தைக் காண. அன்னம் - சிவம்.

## 2314. ஊனோ வுயிரோ வுறகின்ற தேதின்பம்

2314. ஊனோ வுயிரோ வுறகின்ற தேதின்பம்
வானோர் தலைவி மயக்கத் துறநிற்கத்
தானோ பெரிதறி வோமென்னு மானுடர்
தானே பிறப்போ டிறப்பறி யாரன்றே.

உடம்புடன் கூடி வாழும் உயிர்கள் ஏதோ இன்பம் அடைகின்றதாகக் கூறுகின்றனர். உண்மையில் அவ்வாறு அடையும் இன்பமொன்று உண்டா? உண்டாயின் அவ் வின்பத்தினையடைவது உயிரா? உடம்பா? வானவர்களாலும் ஓர்த்து உணர ஒண்ணாப் பெருநிலையின்கண் உள்ளவள் வனப்பாற்றலாகிய பேரறிவுப் பெருந்திரு. அத்தகைய வனப்பாற்றலாம் வண்மைத் திருவின் கலப்பினால் உண்மை உணர்வு தோன்றும். அத் தோற்றத்தின் வழியே அழுந்த நிற்பவாகிய பணிகளைப் பிணியில்லாமல் புரிவாயாக. தாமாகவே மிகுதியும் அறிவோமென்று பிழைபடச் சொல்லும் மானிடர் தானே எய்தும் பிறப்பு இறப்பினை மாற்றும் இயல்பறியாதவராவர். வானோர் தலைவி - பராசத்தி. மயக்கத்து - வசத்து. உறநிற்க - பிறழாது நிற்க.

# 4. அறிவுதயம்

4. அறிவுதயம் 2315. தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை

2315. தன்னை யறியத் தனக்கொரு கேடில்லை
தன்னை யறியாமல் தானே கெடுகின்றான்
தன்னை யறியும் அறிவை அறிந்தபின்
தன்னையே யர்ச்சிக்கத் தானிருந் தானே.

திருவருளால் தனக்குத் தலைவனாகிய சிவபெருமானை அறியத் தன்னை அறியும் ஆவியாகிய தனக்கு எஞ்ஞான்றும் பிறப்பு இறப்புக்களாகிய கெடுதல் உண்டாகமாட்டாது. அங்ஙனம் தனக்குரிய தலைவனையறியாது தானாகவே பிறந்து இறந்து துன்புறும் தீவினைகளைச் செய்து கெடுகின்றான். தன் தலைவனையறியும் தனியறிவை அறிந்தபின் அத் தலைவனாகிய சிவபெருமானை அருச்சிப்பார்கள். அங்ஙனம் அருச்சிப்பதால் அச் சிவபெருமான் அவர்கள் நல்லுள்ளத்தில் வல்லே புக்கு உறைகின்றனன். தனி அறிவு - சிவபெருமானை அறியும் ஒப்பிலா அறிவு; சிவபெருமானால் தவப்பயனாகக் கொடுக்கப்படும் அறிவு.

## 2316. அங்கே யடற்பெருந் தேவரெல் லாந்தொழச்

2316. அங்கே யடற்பெருந் தேவரெல் லாந்தொழச்
சிங்கா சனத்தே சிவனிருந் தானென்று
சங்கார் வளையுஞ் சிலம்புஞ் சரேலெனப்
பொங்கார் குழலியும் போற்றிஎன் றாளன்றே.

ஆருயிர் உள்ளங்கள்தோறும் எழுந்தருளும் வள்ளற்பிரானாகிய சிவபெருமான் புறத்துத் திருவெள்ளிமலையில் வீற்றிருந்தருள்கின்றனன். அங்கு வலிமைமிக்க தேவர்களெல்லாம் சென்று திருவடி பணிந்து தொழுதனர். அரியணைமீது அரியயற்கும் அறிதற்கு அரியான் வீற்றிருந்தனன் என்று தொழுதனர். விட்டு நீங்காத் திருவருளம்மை சங்க வளையும், அரிமணிச் சிலம்பும், விளக்கமிக்க திருக்கூந்தலும் உடையவள். அவள் சிவபெருமான்பால் வணங்கும் தேவர்கட்கும் பிறர்க்கும் அருள்வாயாக என்று சிவன்பால் விண்ணப்பித்தருளினள். போற்றி - காத்தருள்வாயாக: இகரஈற்று வியங்கோள்.

## 2317. அறிவு வடிவென் றறியாத என்னை

2317. அறிவு வடிவென் றறியாத என்னை
அறிவு வடிவென் றருள்செய்தான் நந்தி
அறிவு வடிவென் றருளால் அறிந்தே
அறிவு வடிவென் றறிந்திருந் தேனே.

தொன்மை மலத்தாலும், பன்மை மருளாலும் ஆருயிர் தன்னைச் செறியும் அறிவு வடிவென்று அறியாதிருந்தது. சிவபெருமான் அவ்வுயிர்கள்மாட்டுப் பேரருள்பூண்டு அவ் வுயிர்களை விளித்து நீவிர் தொன்மைமலச் சார்பால் அறிவு விளங்காதிருந்தீர். பின் மாயைச் சார்பால் மருள்கொண்டு தெருளாதிருந்தீர். உண்மையான் நோக்கின் நீவிர் அறிவே வடிவமாகவுடையீர் என்று அறிவுறுத்தருள்வன். அந்த முறையில் அடியேனையும் யான் அறிவுவடிவென்று உணர்த்தியருளினன். அதற்குமுன் யானும் என்னை அறிவு வடிவென்று அறியாதிருந்தேன். அவனருளால் யான் அறிவுவடிவென்ற உணர்ந்தேன். உணர்ந்ததும், அங்ஙனம் உணர்த்திய சிவபெருமான் திருவடியுணர்வில் அவனருளால் கலந்து அதனையே அறிந்து என்றும் இறவா இன்புற்றிருந்தேன்.

## 2318. அறிவுக் கழிவில்லை யாக்கமும் இல்லை

2318. அறிவுக் கழிவில்லை யாக்கமும் இல்லை
அறிவுக் கறிவல்ல தாதாரம் இல்லை
அறிவே யறிவை யறிகின்ற தென்றிட்டு
அறைகின் றனமறை யீறுகள் தாமே.

ஆருயிர்களின் அறிவுக்குக் கேடாகிற அழிவும், தோற்றமாகிய ஆக்கமும் இல்லை. சிற்றறிவுள்ள உயிர்களுக்கு முற்றறிவுள்ள சிவபெருமானே நிலைத்த சார்பாகும். வேறுசார்பில்லை. சார்பு - ஆதாரம். ஆருயிரறிவே பேருயிரின் அறிவுத்துணையால் தன்னையும் தலைவனையும் முறையே சார்வதும் சாரப்படுவதும் என அறிகின்றதென்று திருமறையும் திருமுறையுமாகிய செந்தமிழ் இறைநூல்கள் சிறந்து போதிக்கின்றன. மறை - நால்வர் நல்லருள். முறை - நம்பிரான் திருமூலர் நல்லருள். இவற்றையே தமிழ் வேதாகமங்கள் என்ப. (அ. சி) மறை ஈறுகள் - ஆகமங்கள்.

## 2319. மன்னிநின் றாரிடை வந்தருண் மாயத்து

2319. மன்னிநின் றாரிடை வந்தருண் மாயத்து
முன்னிநின் றானை மொழிந்தேன் முதல்வனும்
பொன்னின்வந் தானோர் புகழ்திரு மேனியைப்
பின்னிநின் றேனீ பெரியையென் றானன்றே.

தன் திருவடியில் பெருங்காதலுடன் சார்ந்து நின்றவரிடத்து வலியவள்ளலாகிய சிவபெருமான் வந்தருள்வன். அங்ஙனம் வருவது மாயாகாரிய உடம்பினைப்பெற்ற இடையறாச் சிவநினைவுடன் வாழும் நல்லாரை நிலைக்களமாகக் கொண்டென்ப. ஆதலால் அம் மாயாகாரிய உடம்பினைப்பெற்று வாழும் ஆருயிர் நிலையினை முன் ஓதினேன். முழுமுதல்வனாகிய சிவபெருமானும் திருவருளால் கொள்கின்றனன் திருமேனி ஆதலால் அத் திருமேனி பொன்போல் மிளிர்வதாகும். அத் திருமேனியை அனைத்துலகத்தாரும் புகழாநிற்பர். திருவருளால் அப் புகழ்த் திருமேனியைப் பின்னுதலாகிய புணர்ப்பு முறையில் பொருந்தி நின்றேன். அக்காலத்து அச் சிவபெருமான் தன் அடிமையாகிய என்னை நோக்கி 'நீ பெரியை' என்றருளினன். புணர்ப்பு - அத்துவிதம். இதன்கண் நம் மூலர் தம்பின் நிலை யருளுகின்றனர்.

மாயத்து - மாயாமய தேகத்தில். பொன்னின் - பொன்னைப் போல. பின்னி - கலந்து.

## 2320. அறிவறி வாக அறிந்தன்பு செய்மின்

2320. அறிவறி வாக அறிந்தன்பு செய்மின்
அறிவறி வாக அறியுமிவ் வண்ணம்
அறிவறி வாக அணிமாதி சித்தி
அறிவறி வாக அறிந்தனன் நந்தியே.

சிற்றறிவு முற்றறிவாம் நிலை எய்துதலை அறிவு அறிவாக என ஓதியருளினர். அஃதாவது ஆருயிர் சிவபெருமானின் பெரு நிறைவில் ஒடுங்கிச் சிவமாக விளங்குவது. இது 'முழுநீறு பூசியவர் முனிவ'ராய்த் திகழ்வதையொக்கும். அறிவாக அறிந்தபின் பின்னை மறத்தல் பெரும் பிழையாகலின் மறவாது பெருங்காதல் செய்மின். பெருங்காதல் செய்வதாவது செயலற்று நிற்றலாகிய நிட்டையினைப் புரிதல். சிவமாம் பெருவாழ்வுபெற்ற அறிவு தாம்பெற்ற பேற்றினை இம் முறையாக நினைக்கும். அந் நிலையில் அணிமாதி சித்திகள் தாமே வந்து பொருந்தும். இவ் வண்ணம் சிவபெருமான் அறியும்படி அருள்புரிந்தனன்.

## 2321. அறிவறி வென்றங் கரற்றும் உலகம்

2321. அறிவறி வென்றங் கரற்றும் உலகம்
அறிவறி யாமை யாரும் அறியார்
அறிவறி யாமை கடந்தறி வானால்
அறிவறி யாமை யழகிய வாறே.

உலகோர் திருவருள் நாட்டமின்றி அறிவு அறிவென்று அரற்றுவர். எது அறிவு எது அறியாமை என மெய்ம்மையினைப் பகுத்து உணரார். திருவருளால் உணரும் உயிர், அறிவு, அறியாமை என்னும் இரண்டினையும் அருளால் கடந்து முற்றறிவுபெற்றுச் சிவமாம் பெருவாழ்வு எய்தும். அங்ஙனம் எய்தினால் அவ் வறிவறியாமை கடந்து சிவமாம் பெருவாழ்வு எய்திய அடைதற்கரிய திருவாம் பேரழகு புலனாம் என்க.

## 2322. அறிவறி யாமையை நீவி யவனே

2322. அறிவறி யாமையை நீவி யவனே
பொறிவா யொழிந்தெங்குந் தானான போது
அறிவா யவற்றினுள் தானா யறிவின்
செறிவாகி நின்றவன் சீவனு மாமே.

மாயாகாரியக் கருவிகளைக்கொண்டு அறியும் அறிவு சுட்டறிவு. அறிந்ததைக் குறித்தலும் அறிந்தேன் என்றலும் சிற்றறிவு. இவ் விரண்டும் புல்லறிவு. இருட்சார்பால் ஏதும் அறியாநிலைமை அறியாமை இது பேதைமை. எனவே பேதைமையும் புல்லறிவாண்மையும் ஆகிய அறியாமை அறிவென்னும் இரண்டினையும் கடந்து நீங்கினவன் மேலோனாவன். அவனே பொறிவழிச்செல்லா நெறிநிற்பவன். பொறிவழி நீங்கினவன் சிவனருளால் எங்குந் தானாக விளங்குவன். தானானபோது நல்லறிவாகிய சிவவுணர்வாய் அவற்றினுள் தான் ஒடுங்கிநிற்பவன் ஆதலின் அறிவின் செறிவாகி நின்றவன் ஆவன். அவனே உயிர்க்கிழவனாகிய சீவனுமாவன். பேதைமையை அல்லறிவெனவும் கூறுப. அந்தமுறையில் அறியாமை, சிற்றறிவு, முற்றறிவு மூன்றனையும் அல்லோடு புல்நல் அறியாமை சிற்றறிவு, சொல்முற்றறிவெனவாம் தூக்கு எனக்கூறலாம்.

நீவி - ஒழித்து. பொறிவாய் ஒழிந்து - புலன்களைக் கடந்து.

## 2323. அறிவுடை யார்நெஞ் சகலிட மாவது

2323. அறிவுடை யார்நெஞ் சகலிட மாவது
அறிவுடை யார்நெஞ் சருந்தவ மாவது
அறிவுடை யார்நெஞ்சொ டாதி பகவனும்
அறிவுடை யார்நெஞ்சத் தங்குநின் றானே.

திருவருளால் நல்லறிவுடையார் நெஞ்சம் அருள்வெளியாகும். அந் நெஞ்சமே சிவபுண்ணிய அருந்தவ நிலைக்களமாகும். அவ் வறிவுடையார் நெஞ்சத்து மும்மையுலகத்துக்கும் அம்மையாகிய திருவருள் எனப்படும் ஆதி எழுந்தருள்வள். பகவனாகிய சிவபெருமானும் அந் நல்லார் நெஞ்சத்தின்கண் தங்கியருள்கின்றனன். மும்மை யுலகம் 'அவன், அவள், அது என்னும் அவை'.

## 2324. மாயனு மாகி மலரோன் இறையுமாய்க்

2324. மாயனு மாகி மலரோன் இறையுமாய்க்
காயநன் னாட்டுக் கருமுத லானவன்
சேயன் அணியன் தித்திக்குந் தீங்கரும்பு
ஆயமு தாகிநின் றண்ணிக்கின் றானே.

காத்தற்குரிய மாயனும், படைத்தற்குரிய மலரோனும், துடைத்தற்குரிய இறையும் ஆக விளங்குபவன் சிவபெருமான் ஒருவனே. இறை - அரன். ஆருயிர்கட்கு உடம்புகளைப் படைத்தளிக்கும் வினைமுதற் காரணனும் அவனே. அவன் அன்பரல்லாதார்க்குச் சேயனாக நிற்கின்றான். அன்பர்நல்லார்க்கு அண்ணியனாகவிருக்கின்றான். சேயன் - தொலைவிலுள்ளவன். அண்ணியன் - அருகிலுள்ளவன். மிகஇனிக்கும் கரும்பாவானும் அவனே. அமுதாகத் திகழ்பவனும் அவனே. உயிர் தொறும் ஓவாது அண்ணிக்கும் நுண்ணியானும் அவனே.

காயநன்னாடு - உடல். கரு - பிள்ளைக்கரு. அண்ணிக்கின்றான - சேர்ந்து இருக்கின்றான்.

## 2325. என்னை யறிந்திலேன் இத்தனை காலமும்

2325. என்னை யறிந்திலேன் இத்தனை காலமும்
என்னை யறிந்தபின் ஏதும் அறிந்திலேன்
என்னை யறிந்திட் டிருந்தலுங் கைவிடாது
என்னைவிட் டென்னை உசாவுகின் றானன்றே.

ஒருவன் விளக்கில்லாத இருட்டு வீட்டில் பொருளேயன்றித் தன்னையும் காணமாட்டாத் தன்மைபோல், சிவபெருமானின் நல்லுணர்வாம் முற்றுணர்வு விளக்கு ஏற்றப்படாமையால் ஆருயிர்க்கிழவன் தன்னை அறியும் தன்மையிலாதவனாகின்றனன். அதனால் வருந்தி இத்தனை காலமும் என்னை அறிந்திலேன் என ஓதப் பெற்றது. கருவிகளுடன் கூடி உயிர் தானுண்டென அறிவது அவ் வுயிரின் பொது நிலையும் நிலையில் நிலையுமாகும். கருத்தாவாகிய சிவபெருமான் உடன் கூடி உடனாய் நின்று உணர்வது சிறப்பு நிலையும் மாறா நிலையுமாகும். திருவருளால் என்னை யறிந்தபின் உலகியலில் யான் நிற்பினும் உலகியற் பொருள்கள் ஒன்றும் அறிந்திலேன். ஆருயிரின் தன்மை ஒன்றில் அழுந்தி அதுவதுவாய் நிற்குங்கால் வேறொன்றும் அறியாமையாகும். அது, சார்ந்தொன்றில் தானழுந்த வேறறியாத் தன்மையுயிர், ஆர்ந்த சிவத்தாரறியார் வேறு என்பதனால் உணர்க. என்னை யறிந்திட்டுச் சிவனிறைவில் அடங்கியுள்ளேன். சிவனும் என்னைக் கைவிடாது ஆண்டு கொண்டனன். சிவன் என்னைத் திருவருளிலிட்டு என்னையே உசாவுகின்றனன். உசாவுதல் - புலன்வினாதல்.

மாறாநிலை - நினைப்புள்நிலை. இதன்கண் நம் மூலர் தம்முன்நிலையருள்கின்றனர்.

## 2326. மாய விளக்கது நின்று மறைந்திடுந்

2326. மாய விளக்கது நின்று மறைந்திடுந்
தூய விளக்கது நின்று சுடர்விடுங்
காய விளக்கது நின்று கனன்றிடுஞ்
சேய விளக்கினைத் தேடுகின் றேனே.

மாயாதனு விளக்காதலின் மாய விளக்கது என்றார். அஃதாவது மாயாகாரியமாகிய உடல் கலன் உலகு ஊண் முதலிய பொருள்கள் விளக்குப்போல் நம் வாழ்க்கைக்குத் துணையாகவும், அதன்கண் காணப்படும் எண்ணெய் அகல் திரி தீ முதலியன போல நுகர்வாகவும் இருக்கின்றன. ஆனால் அது காலவரையறைக்கு உட்பட்டு மாயும். அதனால் அதனை நின்று மறைந்திடும் என்றனர். என்றும் ஒன்றுபோல் நின்று ஒளிரும். தூய விளக்காகிய சிவன் திருவடி விளக்கு ஆருயிர்களுக்கு முற்றுணர்வினை உற்றுவிளக்கி முற்றுவிக்கும். உடம்பாகிய விளக்கு அடம்பண்ணி 'உன்னோடு வாழ்தல் அரிதென்று' அலறி அழும்படி வருத்தும். இவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்ட திருவடிப் பேரின்பப் பெருவாழ்வென்னும் செம்மையான விளக்கு அம்மையினை அருள்வதாகும். அம்மை - திருவடிப்பேறு. அத் திருவிளக்கினை அருளால் நாடுகின்றேன். சேய - செம்மையான.

மாயவிளக்கு - மாயையாகிய விளக்கு. தூய விளக்கு - ஞான விளக்கு. காய விளக்கு - உடலாகிய விளக்கு. சேய விளக்கு - செம்மையாகிய விளக்கைப் போன்ற சிவன்.

## 2327. தேடுகின் றேன்திசை யெட்டோ டிரண்டையும்

2327. தேடுகின் றேன்திசை யெட்டோ டிரண்டையும்
நாடுகின் றெனல மேயுடை யானடி
பாடுகின் றேன்பர மேதுணை யாமெனக்
கூடுகின் றேன்குறை யாமனத் தாலே.

பத்துத் திசையின்கண்ணும் பரம் பொருளைப் பரிந்து தேடுகின்றேன். பொலம் ஒரு சிறிதும் இல்லா நலமே நிறைந்த சிவபெருமானைக் குறித்து அவன் திருவடியை நாடுகின்றேன். சிவபெருமானே நமக்கு வழித்துணையும் விழுத்துணையும் என்று பழுதில் செந்தமிழால் பாடிப் பரவுகின்றேன். அச் சிவபெருமானே பரம்பொருள்; அவனே ஆருயிர்த்துணை என்னும் உண்மை கண்டு அவன் திருவடியிற் கூடுகின்றேன். அதுவே நிறைமன வழிபாடாகும். அத் திருக்குறிப்புக் 'குறையாமனம்' என்பதனால் பெறப்படும். திசை - புலம். பொலம் - தீமை.

## 2328. முன்னை முதல்விளை யாட்டத்து முன்வந்தோர்

2328. முன்னை முதல்விளை யாட்டத்து முன்வந்தோர்
பின்னைப் பெருமலம் வந்தவர் பேர்த்திட்டுத்
தன்னைத் தெரிந்துதன் பண்டைத் தலைவன்தாள்
மன்னிச் சிவமாக வாரா பிறப்பன்றே.

முன்னை என்று ஓதப்படும் அனாதியின்கண் முதல் விளையாட்டாகிய பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும் என்னும் நுண்ணுடம்புப் பிறப்பில் பிறந்தோர், பின்பு ஐம் மலமும் அகலும் நிலையில் செவ்வி வாய்ந்தோர் ஆவர். அவர் திருவருளால் தம்மைத் தெரிவர். தெரிந்த தமக்குரிய பண்டைத் தலைவனாம் சிவபெருமானின் தாளிணையைச் சார்ந்த ஆளினராவர். இவர்கள் என்றும் பொன்றாது நின்று சிவமாக மன்னி வாழ்வர். அதனால் மீண்டும் பிறப்பினுக்கு வாரார்.

முன்னை முதல் - அநாதி முதல். விளையாட்டத்து - பிறப்பினுள். மலம் வந்தவர் - மல பரிபாகம் வந்தவர். பேர்த்திட்டு - சமாதியால் மலத்தைக் கெடுத்து.

# 5. ஆறந்தம்(அறுமுடிவு)

5. ஆறந்தம்(அறுமுடிவு) 2329. வேதத்தின் அந்தமும் மிக்கசித் தாந்தமும்

2329. வேதத்தின் அந்தமும் மிக்கசித் தாந்தமும்
நாதத்தின் அந்தமும் நற்போத அந்தமும்
ஓதத் தகுமெட் டியோகாந்த அந்தமும்
ஆதிக்க லாந்தமும் ஆறந்த மாகுமே.

அறுவகை ஈறும் ஒருவகை முடிபாம் பெறுமுடிபென்ப, அவற்றைக் கூறுங்கால் முறையே. 1. மறைமுடிபு, 2. முறைமுடிபு. 3. ஒலி முடிபு. 4. அறிவின் முடிபு, 5. செறிவின்முடிபு, 6. உணர்த்துவதன் முடிபு எனக் கூறுப. இவற்றை முறையே 'வேதத்தினந்த' முதலாக ஓதியருளினர். ஈண்டுக் குறிக்கப்படும் மறைமுடிபு செந்தமிழ் மறைபடிபே. மிக்கசித்தாந்தமென்பது தமிழாகமப் பிழிவாம் மெய்கண்ட அமிழ்தே. நாதாந்தம் முப்பத்தாறாம் மெய்யாம் ஓசைமுடிபே. போதாந்தம் நாதத்துணையாக அறியும் அறிவின் முடிபே. யோகாந்த மென்பது நிலைக்களத் திருவுருவச் சேர்க்கை முடிபே. கலாந்தமென்பது இவற்றைத் தொழிற்படுத்தும் திருவருள் ஆற்றலின் செயன் முடிபே என்க. கலா: கலை; ஐங்கலை. அவை நீக்கல் (2336) முதலைவகை ஆற்றல்.

வேதத்தின் அந்தம் - ஆகமம். சித்தாந்தம் - ஆகமசாரமாய்ச் சீவன் முத்தர்களால் இயற்றப்பட்ட முடிந்த முடிவான சித்தாந்த நூல்கள். ஆறந்தம் - (1) வேதாந்தம்,

(2) **சித்தாந்தம்**, (3) **நாதாந்தம்**, (4) **போதாந்தம்**, (5) **யோகாந்தம்**, (6) **கலாந்தம்.**

## 2330. அந்தமோ ராறும் அறிவார் அதிசுத்தர்

2330. அந்தமோ ராறும் அறிவார் அதிசுத்தர்
அந்தமோ ராறும் அறிவார் அமலத்தர்
அந்தமோ ராறும் அறியார் அவர்தமக்கு
அந்தமோ டாதி அறியவொண் ணாதன்றே.

மேலோதிய ஆறந்தங்களும் திருவருளால் அறிபவர் எல்லையில்லாத தூயராவர். அதுபோல் ஆறந்தமும் அறிவார் மலமற்றவராவர். இவற்றின் உண்மைகளைச் சிவகுரு வாயிலாக அறியாதவர் இறப்புப் பிறப்பினையும், உலக ஒடுக்கத் தோற்றங்களையும் ஒரு சிறிதும் உணராதவராவர்.

அந்தமோடு ஆதி - உலகத்தின் ஒடுக்கமும் தோற்றமும்.

## 2331. தானான வேதாந்தந் தானென்னுஞ் சித்தாந்தம்

2331. தானான வேதாந்தந் தானென்னுஞ் சித்தாந்தம்
ஆனாத் துரியத் தணுவன் றனைக்கண்டு
தேனார் பராபரஞ் சேர்சிவ யோகமாய்
ஆனா மலமற் றருஞ்சித்தி யாதலே.

தானான வேதாந்தம் என்பது நினைப்பாகிய பாவனைப் பயிற்சியான் யான் அதுவானேன் என்னும் முறைமையாகும். தான் என்னும் சித்தாந்தம் என்பது திருவருளால் பாவனைப் பயிற்சியுங் கடந்து தன்னாமங் கெடும் நிலைமை நேர்ந்து தானே எனச் சாற்றும் தனி மறையாகும். இவ்வுண்மை 'வினைக்கண் வினையுடையான் கேண்மை' என்னும் திருவள்ளுவ நாயனாரருளிய செந்தமிழ்ப் பொதுமறையான் உணர்க. கேண்மை - வேறாக நில்லாமை அதற்கு ஒப்பு முழுநீற்றோடு தோன்றிய விழுமிய திருமேனியாகும். திருமேனி திருநீற்றினுள் அடங்கத் திருநீறே தோன்றும் சிறப்பினதாகும் மெய்கண்ட நாயனாரும் 'தானே எனுமவரை' என அருளினர். நீங்குதலில்லாத சிவ நினைவுடன் கூடிய பேருறக்க நிலையாகிய ஆனாத்துரியத்து அணுவனாகிய ஆருயிர்க்கிழவன் திருவடி யுணர்வால் சிவனைக் காணுமுறையினால் தன்னையுங் காண்பன். கண்ணாடியில் தன்னைக் காண்பவன் கண்ணாடியைக் காணுமுறையால் தன்னைக் காண்பது இதற்கொப்பாகும். பொறிகள் அத்தனையும் புலன்களைக் கலந்து வேறன்மையாக் காணுங்காலத்து அதன் வாயிலாகவே தம் இருப்பினையும் துய்ப்பினையும் தாம் உணர்கின்றன; அதுவே ஈண்டு ஒப்பாகும். தேன்போலும்

மிக்க இனிமையையுடைய 'மேலோர்க்கும் மேலோர்க்கும் மேலாய்' நிற்கும் சிவபெருமானுடன் பிரிவின்றிச் சேரும் சிவயோகத்தை எய்துவர். எவற்றாலும் நீக்கமுடியாத மலமறும் பெறுதற்கரிய பேறு கைகூடும்.

தானான வேதாந்தம் - ஆன்மாவே பிரமம் என்று கூறும் வேதாந்தம். தான் என்னும் சித்தாந்தம் - சிவமே ஆன்மா என்னும் சித்தாந்தம். ஆனா - கெடாத. அணு - ஆன்மா.

## 2332. நித்தம் பரனோ டுயிருற்று நீள்மனஞ்

2332. நித்தம் பரனோ டுயிருற்று நீள்மனஞ்
சத்த முதல்ஐந்துந் தத்துவத் தால்நீங்கிச்
சுத்த மசுத்தந் தொடரா வகைநினைந்து
அத்தன் பரன்பால் அடைதல்சித் தாந்தமே.

என்றும் பொன்றா இயற்கை வாய்ந்தவன் சிவன். அவனே பரன் எனப்படுவன் : அவனுடன் ஆருயிர் அருளால் ஒன்று சேரும். சேர்ந்தபொழுது மனம், ஓசை முதலிய ஐந்து பொறிகளும் மெய்களாகும். மெய்கள் - தத்துவம். மெய்கண்ட நூற்பயிற்சியான் தத்துவ உண்மைகளை உணர்வர். உணரவே அவற்றின்கண் பற்று நீங்கும். தூமாயை, தூவாமாயை ஆகிய சுத்தம் அசுத்தங்கள் தொடரா முறைமையினை நன்கு நினைவர். நினையவே யாவர்க்கும் அத்தனாய் விளங்கும் சிவபெருமான் திருவடியை அடைந்து பேரின்பம் எய்துவர். இவ் வுண்மையினை விளக்குவது சித்தாந்தமாகும்.

நித்தம் - எப்போதும். தத்துவத்தால் - உண்மை தேர்தலால்.

## 2333. மேவும் பிரமனே விண்டு உருத்திரன்

2333. மேவும் பிரமனே விண்டு உருத்திரன்
மேவுசெய் யீசன் சதாசிவன் மிக்கப்பால்
மேவும் பரவிந்து நாதம் விடாவாறாறு
ஓவும் பொழுதனு வொன்றுள தாகுமே.

பொருந்திய அயன், அரி, அரன், ஆண்டான், அருளோன் அதற்கப்பால் பொருந்திய பரவிந்து. பரநாதமும் விட்டு முப்பத்தாறு மெய்களும் கருத்தின்கண் நீங்கியபொழுது நிலைத்த ஆருயிரின் உண்மை நன்கு புலனாகும்.

விடா - விட்டு. ஓவும் - நீங்கும்.

## 2334. உள்ள வுயிராறாற தாகும் உபாதியைத்

2334. உள்ள வுயிராறாற தாகும் உபாதியைத்
தெள்ளி யகன்றுநா தாந்தத்தைச் செற்றுமேல்
உள்ள இருள்நீங்க வோருணர் வாகுமேல்
எள்ளலின் நாதாந்தத் தெய்திடும் போதமே.

மெய்களின் ஆய்வுமுறைமையால் உண்மை கண்டுள்ள ஆருயிர் முப்பத்தாறு மெய்களின் பிணிப்பினின்றும் விடுபடும். பிணிப்பு - உபாதி. விடுபட்ட தெளிவினால் நாதாந்தத்தைக் கடக்கும். அகவிருள் அகல அருளணர்வு தோன்றும். தோன்றவே குறைபாடில்லாத நாத முடிவில் எய்தும் நல்லறிவு கைவந்து பொருந்தும். மெய்கள் - தத்துவங்கள்.

செற்று - கடந்து.

# 2335. தேடும் இயம நியமாதி சென்றகன்று

2335. தேடும் இயம நியமாதி சென்றகன்று
ஊடுஞ் சமாதியில் உற்றுப் படர்சிவன்
பாடுறச் சிவன் பரமாகப் பற்றறக்
கூடும் உபசாந்தம் யோகாந்தக் கொள்கையே.

ஆருயிர்க்கு நீங்கா உறுதிதரும் செயல் வகைகளை ஆராய்ந்து அல்லவற்றை அடக்குவதாகிய இயமமும் நல்லவற்றில் நடக்குவதாகிய நியமமும் கைக்கொண்டார் பின்பு அவற்றையுங் கடந்து செயலறுதலாகிய சமாதியை அடைவர். அம் முறையால் சிவபெருமானின் அருகு பொருந்துவர். ஆருயிர் சிவபெருமான் நிலையை எய்தப் பற்றற்ற நிலையிற் சாரும். அதுவே வேண்டுதல் வேண்டாமை இன்மை தலைப்படுதலாகும். தலைப்படுதல் - உபசாந்தம். இத் தலைப்பாடே யோகாந்தக் கொள்கையாகும். அடக்கலும் நடக்கலுமாகிய இயம நியமம் வருமாறு:

"பொய்கொலை களவே காமம் பொருணசை
இவ்வகை ஐந்தும் அடக்கிய தியமம்."

"பெற்றதற் குவத்தல் பிழம்புநனி வெறுத்தல்
கற்பன கற்றல் கழிகடுந் தூய்மை
பூசனைப் பெரும்பய மாசாற் களித்தலொடு
நயனுடை மரபின் நியமம் ஐந்தே."

(தொல். பொருள். புறத். 20. மேற்கோள்.)

பாடுற - அருகிற் சேர.

## 2336. கொள்கையி லான கலாந்தங் குறிக்கொள்ளில்

2336. கொள்கையி லான கலாந்தங் குறிக்கொள்ளில்
விள்கையி லான நிவிர்த்தாதி மேதாதிக்கு
உள்ளன வாம்விந்து வுள்ளே யொடுங்கலுந்
தெள்ளி யதனைத் தெளிதலு மாமே.

குறிக்கொள்ளத்தக்கதான கலாந்தத்தைச் சொல்லுமிடத்து நீக்கல் முதலிய ஐந்து கலைகளும், கொழுப்பு முதலிய எழுவகைப் பொருள்களும் மாயையின்கண் ஒடுங்கும். அங்ஙனம் ஒடுங்கு முறைமையினை ஆய்தலும், ஆய்ந்து தெளிதலும் கலாந்தமாகும். கலைகள் ஐந்து: நீக்கல், நிலைப்பித்தல், நுகர்வித்தல், அமைதியாக்கல், அப்பாலாக்கல் என்ப. பொருள்கள் ஏழு: சாரம், செந்நீர், ஊன், கொழுப்பு, எலும்பு, மூளை, வெண்ணீர் என்ப. ஏழு பொருள்கள் - சப்ததாதுக்கள்.

நிவிர்த்தாதி - நிவிர்த்திகலை முதலிய ஐந்து கலைகள். மேதை - மூளைச்சத்து, இது எழுவகைத் தாதுவில் ஒன்று.

## 2337. தெளியு மிவையன்றித் தேரைங் கலைவேறு

2337. தெளியு மிவையன்றித் தேரைங் கலைவேறு
ஒளியுள் அமைத்துள்ள தோரவல் லார்கட்கு
அளியவ னாகிய மந்திரந் தந்திரந்
தெளிவுப தேச ஞானத்தொ டைந்தாமே.

மேலோதியவாறு கலாந்தம் தெளிவதல்லாமல் வேறுமொரு வகையாற் குறிப்பதுமுண்டு. அந்தம் நீக்கல் முதலிய கலைகளைந்தினையும் சிறப்பாகிய திருவருள் ஒளியுள் அமைத்தல் வேண்டும். அங்ஙனம் அமைத்து ஓரவல்லார்கட்குச் சிவபெருமான் அளவில் பேரருள்புரிகின்றனன். அவை: மந்திரம், தந்திரம், தெளிவு, உபதேசம், ஞானம் என ஐந்தாகும். இவ் வைந்தினையும் அருளே மறைமுறை ஆசான்சொல் மெய்ம்மை, தருமுணர்வில் வைங்கலையந்தம் என்ப.

ஐந்து - கலை, மந்திரம், தந்திரம், உபதேசம், ஞானம்.

## 2338. ஆகும் அனாதி கலையா கமவேதம்

2338. ஆகும் அனாதி கலையா கமவேதம்
ஆகுமத் தந்திர மந்நூல் வழிநிற்றல்
ஆகு மனாதி யுடலல்லா மந்திரம்
ஆகுஞ் சிவபோ தகம்உப தேசமே.

கலை என்னும் திருவருளாற்றல் தொன்மையதாகும். இக் கலையே முறையும் மறையும் எனப்படும் ஆகம வேதங்களாகும். அம் முறை மறைவழியின் நிறையின் நீங்காதொழுகுதல் தந்திரமாகும். மனம் முதலிய கருவிகள் நீங்கி உணர்விற்கணிக்கும் ஒண்மையவாம் 'சிவசிவ' மந்திரமாகும். சிவபெருமானைத் தெளிவிக்கும் சிவ குருவின் திருவார்த்தை உபதேசமாகும். உபதேசம் - குருமொழி.

மனாதி உடலல்லா மந்திரம் - மனம் முதலிய கருவிகளும் சரீரமும் அல்லாது தனித்து நிற்கும் மந்திரம், அஃதாவது காரண பஞ்சாக்கரம்.

## 2339. தேசார் சிவமாகுந் தன்ஞானத் தின்கலை

2339. தேசார் சிவமாகுந் தன்ஞானத் தின்கலை
ஆசார நேய மறையுங் கலாந்தத்துப்
பேசா வுரையுணர் வற்ற பெருந்தகை
வாசா மகோசர மாநந்தி தானன்றே.

ஞானக்கலை என்பது அளவில் பேரொளிப் பகவனாகிய சிவபெருமானாகும். ஆன்றோரைப் பின்படர்ந்து ஒழுகுவது ஆசாரம் என்ப. அவ்வொழுக்கத்துத் தலைநிற்கும் பேரன்பு நேயம் என்ப. இவ்விரண்டும் சொல்லப்படும் கலாந்தமாகும். இவ் வழி ஒழுகி வாய் வாளாமையாகிய உரையுணர்வற்ற பெருநிலையுற்றோன் பெருந்தகையாவன். மாற்றம் மனம் கழிய நின்ற மறையோன் சிவபெருமானாவன்.

## 2340. தானவ னாகுஞ் சமாதி தலைப்படில்

2340. தானவ னாகுஞ் சமாதி தலைப்படில்
ஆன கலாந்தநா தாந்தயோ காந்தமும்
ஏனைய போதாந்தம் சித்தாந்த மானது
ஞான மெனஞேய ஞாதுரு வாகுமே.

ஆருயிர் பேருயிர்க்கண் ஒடுங்குதலேதானவனாகும் சமாதி நிலை என்ப. இந்நிலையினைத் தலைப்படுதலே கலாந்தம், நாதாந்தம், யோகாந்தம், போதாந்தம், சித்தாந்தம் என்ப. சிறந்த சித்தாந்தம் எனப்படுவது காட்சி, காணப்படும் பொருள், காண்போன் என்னும் முத்திற முடிபும் எத்திறமும் நீங்காது கொள்ளும் நிலைமைத்தாகும். ஞானம் - காட்சி. ஞேயம் - காணப்படும் பொருள். ஞாதுரு - காண்போன்.

ஞேயம் - காணப்படு பொருள். ஞாதுரு - காண்பவன்.

# 2341. ஆறந்த முஞ்சென் றடங்குமந் நேயத்தே

2341. ஆறந்த முஞ்சென் றடங்குமந் நேயத்தே
ஆறந்த ஞேயம் அடங்கிடு ஞாதுரு
கூறிய ஞானக் குறியுடன் வீடவே
தேறிய மோனஞ் சிவானந்த வுண்மையே.

மேலோதிய அறுவகை அந்தமும் நேயமாகிய பேரன்புப் பொருளாம். சிவபெருமான்கண் ஒடுங்கும் ஞாதுரு என்று சொல்லப்
படும் காண்போனும், காண்டற்குரிய ஞானமாகிய அறிவும் சிவன் திருவடிக்கீழ் ஒருங்கு ஒடுங்கும். ஒடுங்கவே தெளிந்த முன்மை யுணர்வாம் மோனம் கைகூடும். இதுவே சிவானந்த வுண்மையாகும். ஆனந்தம். ஆதற்குப் பொருந்தும் பேரின்பம். நீருள் மூழ்குவோனுக்கு வேறாக இருக்குங்கால் அந் நீரைப் பற்றிய நினைப்பும் உணர்வும் முனைப்பது போன்று நீருள் மூழ்குங்கால் தோன்றாமைபோல் மெய்யடியார்களுக்கும் சிவத்துடன் நிற்குங்கால் காட்சி காண்போன் முதலியன தோன்றா தடங்கும்.

## 2342. உண்மைக் கலையாறோ ரைந்தான் அடங்கிடும்

2342. உண்மைக் கலையாறோ ரைந்தான் அடங்கிடும்
உண்மைக் கலாந்தம் இரண்டைந்தோ டேழந்தம்
உண்மைக் கலையொன்றில் ஈறாய நாதாந்தத்து
உண்மைக் கலைசொல்ல வோரந்த மாகுமே.

மெய்ம்மைக் கலை பதினொன்று ஆகும். கலாந்தம் பதினேழாகும். உண்மையான கலையின்கண் முற்றுற நிற்பது நாதாந்தமாகும். இத் திருவருட் கலைகளைச் சிவகுரு அருளிச் செய்ய ஒப்பில் ஒரு முடிபாகும்.

## 2343. ஆவுடை யாளை யரன்வந்து கொண்டபின்

2343. ஆவுடை யாளை யரன்வந்து கொண்டபின்
தேவுடை யான்எங்கள் சீர்நந்தி தாடந்து
வீவற வேதாந்த சித்தாந்த மேன்மையைக்
கூவி யருளிய கோனைக் கருதுமே.

ஆவாகிய ஆருயிர்களை உடைமைப் பொருளாக் கொள்ளுங்கால் அவ் வுயிர் அருளுயிராகும். இதனால் திருவருளம்மை ஆவுடையாள் எனப்படுவள். சிவபெருமானாகிய அரன் எழுந்தருளி வந்து ஆவுடையாளைத் தன்னகத்து அடக்கிக்கொள்ளுவன். அங்ஙனம் கொண்ட பின், தேவர்களையும் உடைமைப் பொருள்களாகக் கொண்டருள்பவன் சிவன். அவன் எங்கள் சீர்நந்தி ஆவன். அதன்பின் சிவகுருவாக எழுந்தருளிவந்து திருவடி சூட்டியருளினன். என்றும் பொன்றா நிலைபேறுடைய வேதாந்த சித்தாந்த மேன்மையினை வலிய வந்து ஆண்ட வள்ளல் கூவியழைத்துக் கூறியருளினன். அத்தகைய முழுமுதல்வனை இடையறாது எழிலுள்ளத்து எண்ணுவோமாக. சிவபெருமான் வந்து ஆட்கொண்டபின் ஆவுடையாளைக் கூவி வேதாந்த சித்தாந்த உண்மைகளை அருளிச் செய்யும் பொருட்டு அருளினன் என்றலும் ஒன்று. அருளிய - அருளிச் செய்யும் பொருட்டு; செய்யிய என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம்.

## 2344. கருது மவர்தங் கருத்தினுக் கொப்ப

2344. கருது மவர்தங் கருத்தினுக் கொப்ப
அரனுரை செய்தருள் ஆகமந் தன்னில்
வருசம யப்புற மாயைமா மாயை
உருவிய வேதாந்த சித்தாந்த வுண்மையே.

கருதுவார் கருத்துக்கு ஒவ்வுமாறு பள்ளி வகுப்புப்போல் படிப்படியாக முப்பொருள் உண்மை வகுத்துரைத்தருளினன் அவ் வுரைகள் அரனுரை ஆகமம் என்று பெயர்பெறும் அவ்வாகமத்துள் கூறப்படும் சமய வுண்மைகள் அகச் சமயம், அகப்புறச் சமயம், புறச்சமயம், புறப்புறச் சமயம் என நான்காகவும், ஒவ்வொன்றும் அவ்வாறாக இருபத்துநான்காகவும் பெறப்படும். இவைகளெல்லாம் சமயப்புறம் என்றதனால் பெறப்பட்டன. இவையனைத்தும் மாயை மாமாயை என்னும் மாயாகாரியப் பகுப்பினுள் அடங்குவன ஆகும். இம் முப்பத்தாறு மெய்களுக்கும் அப்பாற்பட்டது வேதாந்தசித்தாந்த மெய்ம்மை என்ப. உருவிய - நீங்கிய.

## 2345. வேதாந்தங் கேட்க விருப்பொடு முப்பதப்

2345. வேதாந்தங் கேட்க விருப்பொடு முப்பதப்
போதாந்த மான பிரணவத் துள்புக்கு
நாதாந்த வேதாந்த போதாந்த நாதனை
ஈதாம் எனாதுகண் டின்புறு வோர்களே.

திருவருளால் ஆராயின் வேதாந்தம் என்பது விருப்புடன் கேட்கத்தக்க மூன்று பதங்களையுடையன. அவ்வுயிரினும் சிறந்த பதங்கள் அகரம் உகரம் மகரமாகும். இம் மூன்றும் முறையே அருவும் உருவும் மருவும் அகும். அருவால் சிவபெருமானும், உருவால் சிவபெருமானுக்கு உருவாம் வனப்பாற்றலாகிய அம்மையும், ஆருயிர்களுக்கு உருவைப் படைத்தளித்து நடத்தும் ஆதியும், மருவும் என்றதனால் பண்டே புல்லிய மலநோயும், அம் மலநோயாற் பிணிப்புண்ட ஆருயிர்களும், அப்பிணிப்பினைக் கண்டிரங்கி விடுவிக்கக் கூட்டிய வினைமாயைகளும் பெறப்படும். அகர உகர மகரங்கள் ஓங்காரம் எனப்படும். இம் மூன்றும் அறிவு விளங்குதற்குரிய ஓசைத் துணைக்கருவியாகும். இந்த அறிவின் முடிபாகிய பிரணவம் என்று சொல்லப்படும் ஓங்காரத்தினுட்புகுந்து நாதாந்தம் வேதாந்தம்போதாந்தங்கட்கு முதல்வனாகிய சிவபெருமானை இஃதென்று சுட்டியறியப்படாது ஒட்டியறிந்து ஓவா இன்பம் உறுவார்கள். போதாந்தம் - முடிந்த முடிபாகிய திருவடியுணர்வு.

முப்பதம் - அகாரம், உகாரம், மகாரம்.

## 2346. வேதாந்தஞ் சித்தாந்தம் வேறிலா முத்திரை

2346. வேதாந்தஞ் சித்தாந்தம் வேறிலா முத்திரை
போதாந்த ஞானம் யோகாந்தம் பொதுஞேயம்
நாதாந்தம் ஆனந்தஞ் சீரோ தயமாகும்.
மூதாந்த முத்திரை மோனத்து மூழ்கவே.

(.ப. இ.) வேதாந்த சித்தாந்த முப்பொருள் முடிபுகள் வேற்றுமையில்லாத ஒற்றுமையுள்ள அடையாளக் குறிப்பாகும். அறிவின் முடிவே அருள் ஞானம். செறிவின் முடிவாகிய யோகாந்தம் பொதுவாக அறியப்படும் பொருளாகிய ஞேயம் ஆகும். ஓசைமுடிவாகிய நாதாந்தம் இன்பமாகும். அம்மட்டோ அவ்வின்பவடிவாய்த் திகழ்ந்து இன்பத்தைத் தந்தருளும் சீர்த்தோற்றமுமாகும். முடிந்த முடிவாகிய திருவடிப் பேருணர்வின் முத்திரை மோனமாகிய மேன்மைத் திருவடி ஞானத்துள் மூழ்குதலாகும்.

மூதாந்தம் - பழைமையான அந்தம்.

## 2347. வேதாந்தந் தன்னில் உபாதிமே லேழ்விட

2347. வேதாந்தந் தன்னில் உபாதிமே லேழ்விட
நாதாந்த பாசம் விடுநல்ல தொம்பதம்
மீதாந்த காரணோ பாதியேழ் மெய்ப்பரன்
போதாந்த தற்பதம் போமசி என்பவே.

வேதாந்த நிலைக்கண் உயிர் நுகர்வு நிலை ஏழு. இவ்வேழும் விட்டகல் நாதாந்தமாகிய ஓசைப் பிணிப்பின்கண்ணுள்ள பற்றறும் நன்மை பயப்பதாகிய தொம்பதமாகும். தொம்பதமென்பது ஆருயிரைக் குறிக்கும் நீ என்பதாகும். உபாதி நுகர்வுநிலை. மீதாந்தமாகிய அப்பால் முடிவு காரணோபாதியாகிய இறைநுகர்வுநிலை ஏழாகும். மெய்ப் பொருளாம் சிவன் அறிவின் முடிவாம் தற்பதமாகும். தன் - தலைவன்; இறை. ஆருயிரும் இறையும் ஒன்று கூடும்நிலை அசி என்பதாகும். அசி - ஆகிறாய்.

உபாதி ஏழ் - சீவ உபாதி ஏழ். காரணோபாதி ஏழ் ஈசுர உபாதி ஏழ். அசி - சிவ சீவர் ஒன்றாம்நிலை.

## 2348. வேதாந்த ஞானம் விளங்க விதியிலோர்

2348. வேதாந்த ஞானம் விளங்க விதியிலோர்
நாதாந்த போதம் நணுகிய போக்கது
போதாந்த மாம்பரன் பாற்புகப் புக்கதால்
நாதாந்த முத்தியுஞ் சித்தியும் நண்ணுமே.

செந்தமிழ்த் திருநான்மறையினைத் திருவருள் நினைவுடன் கற்று அவற்றால் எய்தும் திருவடியுணர்வு கைவரப்பெறாத சில்லோர் பெயர் மாத்திரையானே வடமொழி வேதத்தையும் வேதமெனத் தப்பாகக்கொண்டு அழிந்துபட்டுப்போகும். வேள்வி முதலாயினவற்றையே புரிந்து அவஞ்செய்கின்றனர். இதனையே மெய்கண்ட நாயனார் 'பசித்துண்டு பின்னும் பசிப்பானையொக்கும்' என்னும் திருவெண்பாவால் அவ்வேத வேள்வி தாழ்வானவை மட்டுமன்றிப் பயனும் நிலையில்லன; துன்ப விளைவின என்றும் அருளினர். பின்பு நாதத்தையே தெய்வமாகக் கொள்வோர் நாதாந்தபோதம் எய்துவர். அவர்கள் வழிப்பேறாகிய பதமுத்தி எய்துவர். அறிவார்கள் அனைவர்க்கும் அறிவை விளக்கும் சிவபெருமான் எல்லையில்லாத பேரறிவினன். அவ்வறிவினைத் திருவருள் துணையால் வணங்குவர். வணங்கவே சிவபெருமான் பக்கத்துச் செறியும் சீர்மை எய்துவர். இவர்கட்கு நாதாந்த முத்தியும் சித்தியும் எளிதின் எய்தும். நண்ணும் - எய்தும்.

வேதாந்த ஞானம் விளங்க விதியிலோர் - உண்மை வேதாந்த ஞானம் அடைய ஊழ் இன்றி, வடமொழி வேதங்களை ஓதியாகாதிகளை இயற்றுவோர். நாதாந்த போதம் - நாத தத்துவத்தை உணரும் ஞானம் நாதாந்த

முத்தி - நாத தத்துவத்திலுள்ள பதமுத்தி. சித்தி - எண் சித்தி.

# 2349. அண்டங்கள் ஏழுங் கடந்தகன் றப்பாலும்

2349. அண்டங்கள் ஏழுங் கடந்தகன் றப்பாலும்
உண்டென்ற பேரொளிக் குள்ளாம் உளவொளி
பண்டுறு நின்ற பராசத்தி யென்னவே
கொண்டவ னன்றிநின் றான்எங்கள் கோவே.

எழுவகையாகக் கூறப்படும் அண்டங்கள் அனைத்தையும் கடந்து நீங்கி அப்பாலும் அருளால் நோக்கினால் அங்கு என்றும் நிலைப்பாக உண்டென்று சொல்லப்பெறும் அருள் ஒளியாகிய பேரொளி ஒன்று உண்டாம். அப் பேரொளிக்கும் உள்ளாக ஓர் அறிவுப் பேரொளியுண்டாம். அவ்வொளியே திருச்சிற்றம்பலமாகும். இத் திருச்சிற்றம்பலம் பண்டே பொருந்தியுள்ள பேரறிவுப் பெருந்திருவாகிய பராசத்தி எனப்படும். அப் பராசத்தியாகிய வனப்பாற்றலைத் திருமேனியாகக் கொண்டுள்ளவன் சிவபெருமான். அவன் எல்லாவற்றுடனும் கலப்புத் தன்மையால் விரவி நின்றான். எனினும் பொருள் தன்மையால் வேறுபட்டும் நின்றருள்கின்றனன். அத்தகைய விழுமிய முழுமுதற் சிவபெருமானே எங்கள் முதல்வன் ஆவன். கோ - முதல்வன்; வேந்தன். பரம்: மேல். இப்பரம் என்னும் தமிழ்ச் சொல் 'புரை' என்னும் உரிச்சொல்லடியினின்றும் தோன்றியது. 'உருவுட்காகும் புரை உயர்வாகும்.' (தொல். சொல் - 300.)

முளவொளி - சிற்றம்பலம். அன்றி நின்றான் - மற்றொன்றோடு சம்பந்தம் இல்லாது நின்றான்.

## 2350.கோவுணர்த் துஞ்சத்தி யாலே குறிவைத்துத்தேவுணர்த் துங்கரு மஞ்செய்தி செய்யவேபாவனைத் தும்படைத் தர்ச்சனை பாரிப்பலூவனைத் துண்டொழி யாத 2ஒருவனே.

2350.கோவுணர்த் துஞ்சத்தி யாலே குறிவைத்துத்தேவுணர்த் துங்கரு மஞ்செய்தி செய்யவேபாவனைத் தும்படைத் தர்ச்சனை பாரிப்பலூவனைத் துண்டொழி யாத 2ஒருவனே. சிவபெருமான் சிவகுருவாய் எழுந்தருளிவந்து திருவருளாலே அனைத்துண்மைகளையும் உணர்த்தியருள்வன். அவன் உணர்த்திய குறிவழிநின்று சிவவழிபாட்டுச் செய்தியைச் செய்தல்வேண்டும். அதன் பொருட்டுச் செந்தமிழ்த் திருமறை திருமுறை முதலியவற்றில் காணப்படும் மந்திரத் திருப்பாட்டுக்களை மனந்தூயராய் இனத்துடன் சேர்ந்து ஓதி எப்போதும் வழிபடுதல்வேண்டும். சிவபெருமான் தங்கும் கோயில் ஆருயிர்களின் கள்ளமிலா வெள்ளையுள்ளமே. திருக்கோயிலும் ஆங்குக் காணப்படும் குறிகளும் அடையாளமுமாகவுள்ள திருவுருவங்களும் பிறவும் அச் சிவபெருமான் அன்பர் உள்ளத்துக்கு எழுந்தருளி வரும் வாயில்களே. உள்ளம் சிவபெருமான் உற்றுறைஇல் கோயிலுரு, கொள்ள வருவழியாங்கூறு என்பதை நினைவுகூரின் மேலது விளங்கும். அங்ஙனம் வழிபாடு செய்யவே உண்டொழியாத எஞ்சுவினை யனைத்தும் ஒப்பில் ஒருவனாம் அச் சிவபெருமானால் நீங்கும்படி

ஏற்படும். ஓவ: என்பது ஓ என நின்றது. ஓவ - நீங்க. ஒருவன் - ஒப்பில் சிவபெருமான்.

கோ - ஆன்மா. சத்தி - திருவருட் சத்தி. தேவுணர்த்துங் கருமம் - சிவத்தை யறியும் செயல். பா - தோத்திரப் பாட்டு. பாரிப்ப - நிரம்பச் செய்ய. ஓவ - ஒழிய.

## 2351. ஒருவனை யுன்னார் உயிர்தனை யுன்னார்

2351. ஒருவனை யுன்னார் உயிர்தனை யுன்னார்
இருவினை யுன்னார் இருமாயை யுன்னார்
ஒருவனு மேயுள் ளுணர்த்திநின் றூட்டி
அருவனு மாகிய ஆதரத் தானே.

ஒப்பில் ஒருவனாம் சிவபெருமானை உள்ளன்புடன் நாடார். அவனை நாடாமையால் ஆருயிரின் உண்மையினையும் நாடார். இது மணத்தையறியும் வாயிலாகவே மறைந்துள்ள மலரை அறிதல்கூடும். மணத்தையே அறியாரெனின் மலரை எங்ஙனம் அறிவர்? அறியார் என்னும் ஒப்பினை இஃது ஒக்கும். இருள்சேர்முனைப்பாற் செய்யப்படும் நல்வினை தீவினை என்னும் இருவினையையும் நாடார். தூமாயை தூவாமாயை என்னும் இருமாயையினையும் நாடார். ஒருவனாகிய சிவபெருமான் ஒருவனுமே இவையனைத்தையும் உள்நின்று உணர்த்தியருளுகின்றனன். இருவினைப்பயனை ஊட்டியருள்கின்றனன். அவன் 'மாற்றம் மனம்கழிய நின்ற மறையோன்' ஆதலின் அருவன் என்றனர். அவனே யாவர்க்கும் யாவைக்கும் மேலாம் அளவிலாச் சீருடைய சிவனாவன். அச் சிவனே அனைத்தையும் தாங்கும் நிலைக்களனாவன். ஆதாரம் என்பது ஆதரம் எனக் குறுகி நின்றது. ஆதாரம் - நிலைக்களம்.

ஒருவன் - சிவன் vide "ஒன்றவன் தானே இரண்டு அவன் இன்னருள்" (மூலர்). இருமாயை - மாயை, மாமாயை. ஊட்டி - இருவினைகளைப் புசிப்பித்து.

## 2352. அரனன்பர் தானம தாகிச் சிவத்து

2352. அரனன்பர் தானம தாகிச் சிவத்து
வருமவை சத்திகள் முன்னா வகுத்திட்டு
உரனுறு சந்நிதி சேட்டிப்ப என்றுந்
திரனுறு தோயாச் சிவாநந்தி யாமே.

பேரொடுக்கப் பெருமானாகிய அரன் தன் அன்பர் தூயவுள்ளத்தையே கோயிலாகக்கொண்டு எழுந்தருளியுள்ளான். அச் சிவபெருமானிடமாகவிருந்து வெளிப்படும் ஆற்றல்கள் சத்திகள் என்று சொல்லப்படும். அவற்றை முதலாக வகுத்தருளினன். அத் திருவருள் ஆற்றல்கள் உள்நின்று உன்னும். அஃதாவது இவ்வாறு உலகம் உருவாகுக என நினைக்கும். அவ்வாறே அவையாகும். அக் குறிப்பே உரனுறு திருமுன் சேட்டிப்ப என்றருளினர். சேட்டித்தல் - தொழிற்படுதல். உரனுறுசந்நிதி - ஆற்றல் திருமுன். ஆருயிர்கள் திருவருளாற்றல்களில் நிலையுறுமாறு தோய்ந்து சிவஇன்பியாகும். தோயா - தோய்ந்து; செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். சிவானந்தி - சிவஇன்பி; திருவடி இன்பினைநுகர்வோன். ஆருயிர் என்றும் மீளா அடிமையாய்ப் பொன்றாப் பேரின்பம் புசிக்கும் என்னும் பொய்யில் வாய்மை வரும் வெண்பாவால் உணர்க:

"நெட்டுயிரெல் லாம்காவல் நேர்காதல் குற்றுயிராம்
கட்டுமலம் மும்மைமெய் கண்ணுதலோன் - மட்டில்
அகரவுயிர் ஆய்தமும் அம்மைஅடி இன்பம்
நுகர்வுயிரும் குற்றுகரம் நோக்கு."

காவல்: ஆண்மை, காதல்: பெண்மை. மும்மைமெய்: வல்லெழுத்து மெல்லெழுத்து இடையெழுத்து. அம்மை:

நடப்பாற்றல்; ஆதிசத்தி. குற்றுகரம்: குற்றியலுகரம். இது 'நுந்தை' என்பதன்கண் முதலாம். 'குற்றியலுகரம்' - தொல். எழுத்து - 67. நோக்குக.

## 2353. வேதாந்த தொம்பத மேவும் பசுவென்ப

2353. வேதாந்த தொம்பத மேவும் பசுவென்ப
நாதாந்த பாசம் விடநின்ற நன்பதி
போதாந்த தற்பதம் போயிரண் டயிக்கியஞ்
சாதா ரணஞ்சிவ சாயுச்சிய மாமே.

வேதாந்த வாயிலாக முப்பொருளுண்மை நாட்டல் 'தத்துவமசி' என்னும் மறையினால் ஆம். இவை தத், துவம், அசி எனப் பிரிந்து மூன்று சொற்களாக விளங்கும். இம் மூன்றனுள் தொம்பதம் நீ எனப் பொருள் பயந்து முன்னிலைச் சுட்டாய் ஆருயிர்களைக் குறிக்கும். அதனால் 'தொம்பதம் மேவும் பசுவென்ப' என்றருளினர். நாதமுடிவாகிய பாசம் ஆருயிர்களைப் பற்றிநிற்கும். அப் பாசம் அகல நிலைபெற்ற பதி, அறிவின் முடிநிலையாய் இயற்கைப் பேரறிவாய்த் திகழும் தற்பதமாகும். தத்-அது. அஃது என்ற சேய்மைச் சுட்டாகும். சேய்மைச் சுட்டென்பது சுட்டொணாப் பொருளை உளதென்னும் உண்மைக்கு ஊறின்றி உரைக்கும் கட்டுரை. எனவே, அஃது என்பது பதியாகிய சிவபெருமானாகும். ஆருயிரும், பேருயிராகிய பதியும் இரண்டறக் கூடும் கூட்டத்தைக் குறிப்பதாகும். அசி. அசி: ஆகிறாய். இரண்டன் கூட்டமும் அயிக்கியமாகும். ஆருயிர் பேருயிராகிய சிவமாகின்றது என்றமையால் முன் ஆகாமைக்குக் காரணம் மலம் என்பது ஆகும். அம் மலத்தைப் போக்கியது திருவருளாகும். அத் திருவருள் கற்பிப்பார் போன்று ஆருயிரைக்கொண்டே மலத்தை அகற்றுவிக்கும். எனவே

முப்பொருள் உண்மையும் அப்பொருள் கூட்டமும் திட்பமுறப் பெறப்படும் என்றும் மாறா இயல்பிற்றாய் இலங்கும் சிவ ஒன்றிப்பு ஆகும். சாதாரணம் - இயல்பு. சிவ ஒன்றிப்பு- சிவசாயுச்சியம்.

தொம்பதம் - வேதாந்தத்திலே தத்துவமசி என்ற தொடரைத் தத்பதம். துவம்பதம், அசிபதம் எனப் பிரித்துக் கூறுகிற வழக்கத்தினால் ஈண்டுத் துவம்பதம் என்றார்.

## 2354. சிவமாதல் வேதாந்த சித்தாந்த மாகும்

2354. சிவமாதல் வேதாந்த சித்தாந்த மாகும்
அவமவ மாகு மவ்வவ் விரண்டுஞ்
சிவமாஞ் சதாசிவன் செய்தொன்றா னானால்
நவமான வேதாந்த ஞானசித் தாந்தமே.

வேதாந்த சித்தாந்தமாகிய இருபெரும் திருநெறிகளும் சிவமாம் பெருவாழ்வை ஆருயிர்கட்கு வழங்குவனவாகும். ஏனைய நாதாந்தம், போதாந்தம், யோகாந்தம், கலாந்தம் என்று சொல்லப்படும் நான்கும் அத்துணைச் சிறப்பினவல்ல. மேலோதிய வேதாந்த சித்தாந்தம் விடுத்து ஏனைநான்கு அந்தங்களும் பெரும்பயன் விளைப்பன அல்ல. அதனால் அவற்றை அவம் என ஓதினர். எனவே வேதாந்த ஞான சித்தாந்தம் வியத்தகுமொன்று.

அவ்வவ்விரண்டும் - வேதாந்த சித்தாந்தம் ஒழிந்த ஏனைய நான்கு அந்தங்களும், நாதாந்தம் போதாந்தம், யோகாந்தம், கலாந்தம்.

## 2355. சித்தாந்தத் தேசீவன் முத்திசித் தித்தலாற்

2355. சித்தாந்தத் தேசீவன் முத்திசித் தித்தலாற்
சித்தாந்தத் தேநிற்போர் முத்திசித் தித்தவர்
சித்தாந்த வேதாந்தஞ் செம்பொரு ளாதலாற்
சித்தாந்த வேதாந்தங் காட்டுஞ் சிவனையே.

செம்பொருட்டுணிவாம் சித்தாந்தத்தின்கண் சீவன் முத்தியாகிய பிணிமையின்மை கைகூடும் பிணிமை இன்மை - பசுத்துவ நீக்கம். ஆதலால் சித்தாந்தச் செந்நெறியின்கண்ணே முத்தியாகிய திருவடிப்பேறு கைகூடும். கூடவே அந்நெறி நிற்பார் முத்தி சித்தித்தவராவர். சித்தாந்த வேதாந்தம் 'பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னும், செம்பொருள் காண்ப தறிவு' திருக்குறள் (358) என்பதையே ஆருயிர்கட்கு விளக்கிக் காட்டுவதால் அவை செம்பொருளாகும். ஆதலின் சித்தாந்த வேதாந்தம் சிவனையே (2362) காட்டும். ஏகாரம் பிரிநிலையும் தேற்றமுமாகும். பிணிமையின்மை - செருக்கின்மை.

சீவன்முத்தி - பசுத்துவ நீக்கம்.

## 2356. சிவனைப் பரமனுட் சீவனுட் காட்டும்

2356. சிவனைப் பரமனுட் சீவனுட் காட்டும்
அவமற்ற வேதாந்த சித்தாந்த மானான்
நவமுற் றவத்தையில் ஞானஞ் சிவமாந்
தவமிக் குணர்ந்தவர் தத்துவத் தாரே.

விழுமிய முழுமுதற் சிவபெருமானைப் பரமன் என்று சொல்லப்படும் அருட்பெரு வெளியாம் புற அம்பலங்களிலும், சீவன் என்று சொல்லப்படும் ஆருயிர் நெஞ்சமாம் திருச்சிற்றம்பலத்தின் கண்ணும் முறையே வேதாந்தசித்தாந்தச் செந்நெறிகள் காட்டுவனவாகும். அந்நெறியின்கண் உறைத்துநிற்போனுக்கு நவமுற்ற அவத்தையாகிய அப்பால் நிலையில் இயற்கையுணர்வும் முற்றுணர்வும் இயல்பாகவே அமைந்த சிவபெருமானின் திருவடியுணர்வுண்டாகும். இத்தகைய நற்றவத்தை அருளால் மிக்குணர்ந்தோர் திருவடிமெய்யுணர்வு பெற்றோராவர். தத்துவத்தார் - திருவடி மெய்யுணர்வு பெற்றார்.

நவமுற்ற - மேம்பட்ட. அவத்தை - துரியாவத்தை. தத்துவத்தார் - மெய் உணர்ந்தவர்.

## 2357. தத்துவ மாகுஞ் சகள வகளங்கள்

2357. தத்துவ மாகுஞ் சகள வகளங்கள்
தத்துவ மாம்விந்து நாதஞ் சதாசிவந்
தத்துவ மாகுஞ் சீவன்றன் தற்பரந்
தத்துவ மாஞ்சிவ சாயுச் சியமாமே.

சிவபெருமானின் திருவடிமெய்ம்மையுணர்வையும் நினைவையும் எழுப்பும் திருவுரு சிவமேயாகும். எழுத்தின் வரிவடிவம் ஒலி வடிவத்தினையும் ஒலி வடிவம் பொருளினையும் உணர்த்தும் மெய்ம்மை இதற்கொப்பாகும். அதனால் தத்துவமாகும் சகளமென்றனர். சகளம் - திருவுரு அகளம் - திருவுரு இன்மை. படித்த பாடம் அருவாய் மனத்துத் தோன்றுவது இதற்கு ஒப்பாகும். அதுபோல் ஒளி ஒலி அருளோன் முதலிய நிலைகளும் தத்துவமாகும். ஆருயிரும் பேருயிருமாகிய ஆவியும் சிவனும் தத்துவமாகும். சிவத்துடன் ஆருயிர் ஒன்றிப்பது சிவசாயுச்சியமாகும்.

சகளம் - உருவம். அகளம் - அருவம். தற்பரம் - சிவம்.

# 2358. வேதமோ டாகமம் மெய்யாம் இறைவன்நூல்

2358. வேதமோ டாகமம் மெய்யாம் இறைவன்நூல்
ஓதும் பொதுவுஞ் சிறப்புமென் றுள்ளன
நாதன் உரையவை நாடில் இரண்டந்தம்
பேதம தென்பர் பெரியோர்க் கபேதமே.

வேதம் ஆகமம் என்னும் இரண்டும் உண்மையாம் இறைவனை உண்மையாகவுணர்த்தும் வண்மைப் பெருநூல். அந்நூல் இறைவன் உள்நின்றுணர்த்தத் திருவருள் கைவந்த மெய்யடியார்கள் வாயினால் உரைத்தருளப்பட்ட உரைசேர் நூலாகும். இவ் வுண்மை 'எனதுரை தனதுரையாக' என அருளிய ஆளுடைய பிள்ளையார் திருப்பாட்டான் உணரலாம். 'தனதுரை' என்பதற்குச் சிவபெருமானின் திருவடிச் சிறப்பினையே புகழும் உரையாக என்றலும் ஒன்று. அவ் விரண்டும் முறையே திருநெறியினை விளக்கும் பொதுநூலும் சிறப்பு நூலுமாகும். பொதுநூல் என்பது அன்பியலை மிகுதியாகவும் அருளியலைத் தொகுதியாகவும் கூறுவதாகும். சிறப்புநூல் என்பது அருளியலை மிகுதியாகவும் அன்பியலைத் தொகுதியாகவும் கூறுவதாகும். அன்பியல் - உலகியல். அருளியல் - வீட்டியல். இவ்விரு பெரு நூற்களும் இறைவனால் எழுப்பப்பட்டு, மெய்யடியாரால் எழுதப்பட்டு, வழுத்துரையாக வழங்கப்பட்டுத் திருவருளால் நின்று நிலவலின் அவை நாதனாகிய சிவபெருமானின் நற்றாள் சேர நவிலும் நல்லுரையாகும். நாதன் உரையாகிய இவ் விரண்டினையும் அருளால் நாடின் இரண்டினுடைய பொருள் முடிபும் திருவடிசேர் ஒருமுடிபே யாம். அவ்

வுண்மையுணராது தம் மனம்போல் உரைக்கும் ஒருசிலர் வெவ்வேறு முடிபு என்பர். உண்மை யுணர்வண்மைப் பெரியோர்க்கு அவ் விரண்டும் ஒரு முடிபேயாம். பெரியோர்: கண்ணுதலோன் கழலிணையைக் கற்றல்கேட்டல் கருதல் கைக்கொள்ளல் கலத்தல் உடையார். பேதம் - வேறு. அபேதம் - வேறன்மை.

வேதம் - தமிழ் நான்மறை. ஆகமம் - தமிழ் ஆகமங்கள். இரண்டந்தம் - வேதாந்தம், சித்தாந்தம், அபேதம் - வேற்றுமை இன்மை.

## 2359. பரானந்தி மன்னுஞ் சிவானந்தம் எல்லாம்

2359. பரானந்தி மன்னுஞ் சிவானந்தம் எல்லாம்
பரானந்த மேன்மூன்றும் பாழுறா னந்தம்
விராமுத்தி ரானந்த மெய்ந்நட னானந்தம்
பொராநின்ற வுள்ளமே பூரிப்பி யாமே.

(ப. இ .) சிறப்புயிராகிய ஆவி பரானந்தி எனப்படும். அஃதாவது நந்தியைப் பரவிநந்தியென நாட்டோர் நவில நடப்போர். அத்தகைய பரானந்தி அருளால் அடையும் சிவ இன்பங்களெல்லாம் வருமாறு: ஆருயிர் உறக்கம், அருள்நிலை உறக்கம், சிவநிலை உறக்கம் என மூன்றாம். மாயையால் வரும் இன்பம் முத்திரைகள் பலவற்றானும் முற்றும் பல்வகை இன்பம். மெய்ப்பொருட் கூத்தாம் ஐந்தொழிலமை நடன இன்பம். இவற்றைப் பொருந்திய உள்ளமே பூரிப்புடையதாகும். அதனால் அவ்வுள்ளம் பூரிப்பி என வழங்கப்படும். அதனால் பூரிப்பியாகும். பாழ் - மாயை. பூரிப்பு - பொலிவு. பூரிப்பி - பொலிவுடையது.

பராநந்தி - சீவன் முத்தன். மூன்றும் - சிவசுழுத்தி. சீவசுழுத்தி பரசுழுத்தி. பாழுறானந்தம் - மாயையினாலாகிய இனபம். விரா - விரவிய, பொருந்திய. முத்திரானந்தம் - சாம்பவி முத்திரை முதலியவற்றின் பயிற்சியால் உண்டாகும் இன்பம். பொராநின்ற - அடைந்த. பூரிப்பு - இன்பம்.

## 2360. ஆகுங் கலாந்தம் இரண்டந்த நாதாந்தம்

2360. ஆகுங் கலாந்தம் இரண்டந்த நாதாந்தம்
ஆகும் பொழுதிற் கலையைந்தா மாதலில்
ஆகும் அரனேபஞ் சாந்தக னாமென்ன
ஆகு மறையா கமமொழிந் தானன்றே.

கலாந்தம் இரண்டாகும். அவ் விரண்டும் நாதாந்தம். கலையந்தம் என்ப. கலையந்தம் நீக்கலாகிய நிவிர்த்தி முதல் ஐந்தாகும். இவ் வைந்திற்கும் அரனே முழுமுதலாவன். அதனால் அரனே பஞ்சாந்தகனாமென்ன அருளினர். இங்ஙனம் மறையாகமம் முறையுற மொழிந்தனவென்க.

பஞ்சாந்தகன் - தனித்தனியே ஐந்து கலைகளின் முடிவிடத்து இருப்பவன்.

## 2361. அன்றாகு மென்னாதை வகையந்தந் தன்னை

2361. அன்றாகு மென்னாதை வகையந்தந் தன்னை
ஒன்றான வேதாந்த சித்தாந்தம் உள்ளிட்டு
நின்றா லியோகாந்த நேர்படு நேர்பட்டான்
மன்றாடி பாத மருவலு மாகுமே.

ஐவகையான முடிபாம் அந்தங்களும் மாறுபட்டதன்று. அன்றுதல் - மாறுபடுதல். இவ் வுண்மையினை வேதாந்த சித்தாந்தம் ஒன்றென விளங்கக் கூறும். அத்தகைய வேதாந்த சித்தாந்தத்தை முன்னிட்டு ஒழுகினால் யோகாந்த நேர்படும். அச் செறிவுநிலை ஏற்பட்டால் மன்றாடி பாதம் மருவலுமாம். மன்றம் ஐவகையாகும்:

"மேலாம் சிவயநம மேவுமணி பொன்வெள்ளி
பாலாம்செம் போடுமண் பற்றல்போல் - மேலாம்
அவனாடல் செய்வனகம் ஆல்தில்லை கூடல்
தவநெல்லை குற்றாலந் தான்."

அகம்: ஆருயிர்களின் அகத்துச் 'சிவயநம' என்னும் ஐம்மறைக்களத்து அவ்வுயிர் உய்ய அம்பலவாணன் அருட்கூத்தியற்றுகின்றனன். அக் கூத்தின் நினைப்பே புறத்து ஆலங்காடு, தில்லை, கூடல், நெல்லை, குற்றாலம் என்னும் ஐந்திடங்களிலும் நடிப்பதாகும். ஆல் - ஆலங்காடு. நெல்லை திருநெல்வேலி. மன்றாடியாகிய சிவபெருமான் திருவடியை அருளால் தலைக்கூடி இன்புறுதலாகும். தலைக்கூடுதல் - பொருந்துதல்.

அன்றாகும் என்னாது ஐவ்வகை அந்தம் - வேறுபட்டது என்று கருதாது ஐந்து வகையான அந்தங்களை.

## 2362. அனாதி சீவனைம் மலமற்றுப் பாலாய்

2362. அனாதி சீவனைம் மலமற்றுப் பாலாய்
அனாதி யடக்கித் தனைக்கண் டரனாய்த்
தனாதி மலங்கெடத் தத்துவா தீதம்
வினாவுநீர் பாலாதல் வேதாந்த வுண்மையே.

தொன்மையே யுள்ள ஆருயிர்க்குத் திருவருளால் ஆணவம், கன்மம், மாயை, மாயை, யாக்கம், நடப்பாற்றல் ஆகிய ஐம்மலங்களும் அறும். அற்றவிடத்து அப்பால் நிலை எய்தும். அப்பால் நிலை - துரியாதீத நிலை. எய்தவே தொன்மை ஆணவப்பசை அடங்கும். அடங்கவே தன்னையும் அரனையும் தகுமுறையாற் காணும். காணவே தன்னை வந்து பொருந்தும்படி பொத்திய ஆதிமலமாகிய கன்மம் மாயைகளாகிய இடைச் சேர்மலம் எளிதின் நீங்கும். நீங்கவே அருஞ்சைவர் - தத்துவம் (2139) முப்பத்தாறுக்கும் அப்பாலாக ஆருயிர் நிற்கும். நீர் பாலுடன் கலந்து பாலின் சுவையும் நிறமும் பெற்று விளங்கும் என விளக்குவது வேதாந்த மெய்ம்மையாகும் பாலோடளாய நீர் பாலாகுமென்பது பயனுடைப் பார்மொழி. ஆருயிரும் மலம் நீங்கிச் சிவனார் எண் குணம் பெற்றுச் சிவனாய்த் திகழும்.

தனாதிமலம் - தன் ஆதிமலம் - மாயை. (அனாதி மலம் ஆணவம்)

## 2363. உயிரைப் பரனை யுயர்சிவன் தன்னை

2363. உயிரைப் பரனை யுயர்சிவன் தன்னை
அயர்வற் றறிதொந் தத்தசி யதனாற்
செயலற் றறிவாகி யுஞ்சென் றடங்கி
அயர்வற்ற வேதாந்த சித்தாந்த மாமே.

ஆருயிரைப் பரனாகிய திருவருளை எவர்க்கும் மேலாம் பரசிவனை மருளற்றுத் தெருளுற்றுத் திருவருளால் செறிந்து காண்பாயாக. நீ அதுவாகின்றாய் என்று கூறும் 'தொந்தத்தசிப்' பெருங் கிளவியால் உன் செயலற்று அறிவாகியிருப்பாயாக. அறிவாகியும் திருவடிக் கீழ் அடங்கி நிற்பாயாக. இந் நிலையே மருளற்ற வேதாந்த சித்தாந்த அருள் மாண்பாகும். இவ் வுண்மை வரும் செந்தமிழ் மறை முடிபாம் திருவாசகச் செழுந்தேனால் உணரலாம். அத் திருப்பாட்டு வருமாறு:

"முத்திநெறி அறியாத மூர்க்கரொடு முயல் வேனைப்
பத்திநெறி அறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்
சித்தமலம் அறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அத்தன்எனக் கருளியவா றார்பெறுவார் அச்சோவே."
- 8. அச்சோப்பத்து, 1.

அயர்வற்றறி - மயக்கமற்றுக் காண்பாய். தொந்தத் தசி - துவம் + தத் + அசி - நீ சிவமாயிருக்கிறாய்.

## 2364. மன்னிய சோகமா மாமறை யாளர்தஞ்

2364. மன்னிய சோகமா மாமறை யாளர்தஞ்
சென்னிய தான சிவோகமாம் ஈதென்ன
அன்னது சித்தாந்த மாமறை யாய்பொருள்
துன்னிய ஆகம நூலெனத் தோன்றுமே.

நிலைபெற்ற அது நான் என்னும் ஆழ்ந்த நினைவினால் அவனே தானாகி நிற்கும் நிலை சோகம் எனக் கூறப்படும். ஆழ்ந்த நினைவு - பாவனை. இக் குறிக்கோள் மாமறையாளர்க்கு ஏற்படுவதாகும். அம் மறையாளர் முடியணியாத் திகழும் அருண்மறை 'சிவோகம்' எனப்படும். சிவோகம், சிவனுடன் கூடுதல். சிவோகம் இஃது என்று கூறத்தகும். இத்தகைய அரும்பொருள் சித்தாந்த மாமறையால் ஆராயப்படும் பொருளாகும். இப் பொருளை ஆராயும் எழில் நூல் ஆகமம் எனப்படும். சோகம்: ச + அகம் = அது நான். சிவோகம் - சிவத்துடன் கூடுதல்.

சோகமாய் - சோகம்பாவனையினால் அவனே தானாகி. சென்னியதான - தலையான் சிறந்த.

## 2365. முதலாகும் வேத முழுதா கமமப்

2365. முதலாகும் வேத முழுதா கமமப்
பதியான ஈசன் பகர்ந்த திரண்டும்
முதிதான வேத முறைமுறை யாலமர்ந்து
அதிகாதி வேதாந்த சித்தாந்த மாமே.

முதல் நூலாகிய வேதமும் முழுமுதல் நூலாகிய ஆகமமும் நல்லடியார் வாயிலாக முதல்வனாம் சிவபெருமானால் (2358) அருளிச் செய்யப்பட்டனவாகும். இவ்விரண்டனுள் முதன்மையான வேதமும் முறைமுறையாலமர்ந்த வேதாந்தமாகும். ஆகமம் நனிமிகச் சிறந்த சித்தாந்தமாகும்.

முதலாகும் - முதலில் உண்டான. அதிகாதி - நனி மேம்பட்ட.

## 6. பதிபசுபாசம் வேறன்மை

6. பதிபசுபாசம் வேறன்மை 2366. அறிவறி வென்ற அறிவு மனாதி

2366. அறிவறி வென்ற அறிவு மனாதி
அறிவுக் கறிவாம் பதியும் அனாதி
அறிவினைக் கட்டிய பாசம் அனாதி
அறிவு பதியிற் பிறப்பறுந் தானே.

ஆருயிரை அறிவென்றும், பேருயிரை அறிவுக்கு அறிவென்றும் கூறுப. ஆருயிர் - ஆன்மா. பேருயிர் - பரமான்மா. இவ்விரண்டும் தொன்மையே உள்ளன. தொன்மை - அனாதி. அனாதி - ஆதியில்லாதது. அறிவு அறிவு என்ற அறிவாகிய ஆருயிரும் தொன்மையே. அறிவுக்கு அறிவாய் விளங்கும் இயற்கை அறிவாம் பதியும் தொன்மையே. அறிவினை விளங்கவொட்டாது தடை செய்து ஒட்டி நிற்கும் பாசமும் தொன்மையே. அறிவாகிய ஆருயிர்க்குப் பாச நீக்கத்தின் பொருட்டு அருளால் பிறப்பு உண்டாகும் அருளோனாகிய அறிவுக்கறிவு அவ்வறிவிற் பதியுங் காலத்துப் பிறப்பறும். தானே என்பதை எளிதாகப் பிறப்பறும் எனக் கூறுக. ஈற்றசை எனலும் ஒன்று.

அறிவு - ஆன்மா. அறிவு பதியில் - சிவத்துவம் உண்டாயின்.

## 2367. பசுப்பல கோடி பிரமன் முதலாய்ப்

2367. பசுப்பல கோடி பிரமன் முதலாய்ப்
பசுக்களைக் கட்டிய பாசமூன் றுண்டு
பசுத்தன்மை நீக்கியப் பாசம் அறுத்தாற்
பசுக்கள் தலைவனைப் பற்றி விடாவே.

பாசத்தால் கட்டுண்ட உயிரைப் பசு எனக் கூறுப. நீர் நிலைகளில் அந் நீரின் தூய்மையினையும் தெளிவையும் மறைத்து மேல் படர்ந்து நிற்கும் அழுக்கைப் பாசம் என்ப. இது போல் ஆருயிரின் அன்பு அறிவாற்றல்களை மறைத்து நிற்கும் ஆணவம் பாசம் எனப்படும். அப் பாசத்தால் மூடப்பட்ட வுயிர் பசு எனப்படும். அப் பசுக்கள் பிரமன் முதலாகச் சொல்லப்படும் எண்ணில்லாத பல கோடி உயிர்களாகும். அப் பசுக்களைக்கட்டிய பாசமும் மூன்றென்ப. அம்மூன்றும் ஆணவம் கன்மம் மாயை என்ப. சிவபெருமான் திருவருளால் பசுத்தன்மை நீங்கினால் அப் பாசமும் அறும். அறுக்கப்பட்ட ஆருயிராகிய பசுக்கள் பதியாகிய தலைவனைப்பற்றி விட்டுவிடா என்க.

பசு - ஆன்மா. பசக்கள் தலைவன் - சிவன்.

## 2368. கிடக்கின்ற வாறே கிளர்பயன் மூன்று

2368. கிடக்கின்ற வாறே கிளர்பயன் மூன்று
நடக்கின்ற ஞானத்தை நாடோறு நோக்கித்
தொடக்கொன்றும் இன்றித் தொழுமின் தொழுதாற்
குடக்குன்றி லிட்ட விளக்கது வாமே.

ஆருயிர்கள் பாசப் பிணிப்புண்டு கிடக்கின்ற முறையில் அப் பாசப்பிணிப்பினின்றும் விடுபடக் கைக்கொள்ளவேண்டிய பொருள்கள் மூன்று. அவை இன்பமும் பொருளும் அறனும் என்ப. இம் மூன்றின் வழியொழுகினார் திருவடி எய்தற்குரிய நானெறியில் நடப்பர். அந்நானெறியுள் சீலத்தின் பயனாக நோன்பும், நோன்பின் பயனாகச் செறிவும் கைகூடும். இம் மூன்றன் வழி முடிந்த பயனாகிய அறிவு கைவரும். அவ்வறிவாகிய திருவடியுணர்வை நாடொறும் நோக்கல் நோக்கமாகக் கருதி ஒழுகிவருதல் வேண்டும். அப்படி யொழுகி வந்தால் தொடக்காகிய பாசப்பிணிப்பு ஒன்றும் இன்றாகும். அதன் பொருட்டு முழுமுதற் சிவபெருமானைச் செந்தமிழ்த் திருமுறை ஓதி இடையறாது தொழுங்கள். தொழுதால் குடத்துள் மறைந்திருந்த விளக்க குன்றின் விளக்காகச் சிறந்து உறைந்திருக்கக் காணலாம். குடவிளக்கென்பது ஆருயிர் பாசப்பிணிப்புண்டு மறைந்திருப்பதை யுணர்த்துவதாகும். அவ்வுயிர் பாசப்பிணிப்பு விண்டு சிவபெருமான் திருவடியினைத் திருவருளால் கண்டு சிறந்து உறைந்திருப்பதைக் குன்றின் விளக்கு உணர்த்துவதாகும்.

கிளீர்ப்பயன் மூன்று - அறம், பொருள், இன்பம். 'நான்கு' என்ற பாடமும் உண்டு. அப்பொழுது வீடு ஒன்றைச் சேர்த்த நான்கு ஆகும். நடக்கின்ற ஞானம் - சரியையாதியின் பலனாக நிகழும் ஞானம். தொடக்கு - ஆசாபாசங்கள். குடக்குன்றில் இட்ட விளக்கு - குடவிளக்கு. குன்றில் இட்ட விளக்கு எனப் பிரிக்க. குடத்தில் இட்ட விளக்காயிருந்த ஆன்மா குன்றில் இட்ட விளக்காய் மிளிரும்.

## 2369. பாசஞ்செய் தானைப் படர்சடை நந்தியை

2369. பாசஞ்செய் தானைப் படர்சடை நந்தியை
நேசஞ்செய் தாங்கே நினைப்பர் நினைத்தலுங்
கூசஞ்செய் துன்னிக் குறிக்கொள்வ தெவ்வண்ணம்
வாசஞ்செய் பாசத்துள் வைக்கின்ற வாறே.

குற்ற இயல்பாக ஒட்டியுள்ள ஆணவ மலத்தை யகற்றுதற் பொருட்டுக் கன்மம் மாயைகளாகிய பாசங்களைக் கூட்டியருளிப் பிறப்பித்த சிவபெருமானை, மாலையில் தாங்குருப் போன்று விளங்கும் படர்சடை நந்தியை இடையறா உள்ளன்பு பூண்டு தொழுங்கள். தொழுது நினைப்பவர் நினைத்தலும் பேரருட் பெரும் பொருளாகிய சிவபெருமான் நினைப்பதற்கும் குறிக்கொள்வதற்கும் கூசுவதெவ்வண்ணம்? மேலும் பாசத்துள் நிலை பெறுத்துவதெவ்வண்ணம்? செய்யாரென்க. மருத்துவன் நோயாளியைக் கண்டு கூசமுடியாதவாறும், நோய் நீங்கியபின் மேலும் அவனை நோய் மனையில் நிலைபெறச் செய்ய முடியாதவாறும் இதற்கு ஒப்பாகும். மேலும் கற்பிப்போன் கற்கவரும் மாணவனைக் கல்லாதவனென்று கூசமுடியாதவாறும் கற்றுத் தேறியபின் அவனை நிலைநிறுத்த முடியாதவாறும் ஒப்பாகும். எவ்வண்ணம் என்பது இடைநிலை விளக்காய் நின்று வைக்கின்றவாறு எவ்வண்ணம் என்று இயைக்க.
எவ்வண்ணம்: வினாவினைக் குறிப்பு; எதிர்மறைப் பொருள் தந்தது.

பாசஞ் செய்தானை - ஆன்மாக்களின் ஆணவமலம் நீங்குதற் பொருட்டு மாயா மலத்தைக் கூட்டி, உடல், கருவி, உலக இன்பங்களைக் கொடுத்தானை. சுசம் - சுசி. வாசம் செய் - நிலைபெற்ற.

## 2370. விட்ட விடமேறா வாறுபோல் வேறாகி

2370. விட்ட விடமேறா வாறுபோல் வேறாகி
விட்ட பசுபாச மெய்கண்டோன் மேவுறான்
கட்டிய கேவலங் காணுஞ் சகலத்தைச்
சுட்டு நனவில் அதீதத்துள் தோன்றுமே.

மெய்ப்பாவகனால் விடம் ஏறாவாறு போன்று திருவருளால் ஆருயிர்களை விட்டு வேறாகி அகன்ற பசுபாசங்களை மெய்கண்டோனாகிய சிறப்புயிர்க் கிழவன் மேவுதலைச் செய்யான். மேவுதல் - பொருந்துதல். தொன்மையிலே பிணித்த மலத்தனிமையாகிய புலம்பு சகலமாகிய புணர்ப்பினை எய்துவிக்கும். குறிக்கப்படும் நனவின்கண் அப்பால் நிலைக்கண்ணும் இப் புலம்பு நிலையாகிய தனிமை தோன்றும். புலம்பு - கேவலம். அப்பால்நிலைத்தனிமை ஆணவத்துடன் பிணிப்பின்றி அருளுடன் பிணிப்பூன்றி அறிவு மறைப்பின்றி அனைத்துலகும் கருவியும் மறைப்புற்று நிற்கும் நிலைமை. மெய்கண்டோன் - சீவன் முத்தன்.

விடம் - நஞ்சு. சுட்டும் - குறித்தறியும்.

## 2371. நாடும் பதியுடன் நற்பசு பாசமும்

2371. நாடும் பதியுடன் நற்பசு பாசமும்
நீடுமா நித்தன் நிலையறி வாரில்லை
நீடிய நித்தம் பசுபாச நீக்கமும்
நாடிய சைவர்க்கு நந்தி யளித்ததே.

ஆராயப்படும் பதி பசு பாசம் பலவாக விரியும். நீடும் - விரியும். என்றும் பொன்றாது ஒன்றுபோல் நின்று நிலவும் சிவபெருமானாகிய நித்தன் நிலையினை உள்ளவாறு அறிவாரில்லை. தொன்று தொட்டுத் தென்பட்டும் படாதும் வருகின்ற முப்பொருள்களும் என்றும் ஒன்றுபோல் நிலைப்பதாகிய பதியினிலைமையும், சார்பியாகிய பசுவுக்கு நேர்ந்த பசு பாச நீக்கமும் திருவருளால் ஆராயத் தொடங்கிய சைவ நற்சீலர்க்கு நந்தியாகிய சிவபெருமான் விளங்குமாறு அளித்தருளினன்.

நீடும் - விரியும். நித்தன் - சிவன். நாடிய - விரும்பிய.

# 2372. ஆய பதிதான் அருட்சிவ லிங்கமாம்

2372. ஆய பதிதான் அருட்சிவ லிங்கமாம்
ஆய பசுவும் அடலே றெனநிற்கும்
ஆய பலிபீட மாகுநற் பாசமாம்
ஆய அரனிலை யாய்ந்துகொள் வார்கட்கே.

கலப்பினால் எல்லாமாய் பொருட்டன்மையால் அல்லவுமாய் உள்ள பதியாகிய சிவபெருமான் அருட்சிவலிங்கமாகும். என்றும் பொன்றாகச் சார்பினவாய் நிற்கும் சார்பியாகிய பசுவும் அருட் சிவக்கொழுந்தின் திருமுன் ஒருங்கியவுளத்தோடுற்று ஒரு நோக்காய் வலிமை மிக்க ஆனேறு என அசைவின்றி நிற்கும். அவ் வானேற்றின் பின் காணப்படும் பலிபீடம் ஆருயிர்களினின்றும் அருளால் விடுபட்ட 'யான் எனது செருக்காகிய' பசு பாசங்கள் தங்கி மங்குமிட
மாகும். அரனிலையாகிய படமாடுந் திருக்கோவிலை ஆராய்வார்க்கு அருளால் இவ்வுண்மைகள் புலனாகும். எனவே திருக்கோவில் திருவுருவங்கள் மூவா முப்பொருள் உண்மை செப்பும் உருவெழுத் தோவியத்தவாத் திரு நூலாகும். ஆனேற்றின் முன்பின் பலிபீடம் அமையும் குறிப்பு வருமாறு: பாசமுன்னாகில் பலிபீடம் முன்னாம்பின், நேசமுதல் முன்னொளியால் நேர்:

இம் மந்திரம் "பிண்டத்தின் அமைப்பே கோவில்" எனக் காட்டுகின்றது. இந்தக் கருத்தையே "படம் மாடக்கோயில்" என்று வேறோர் இடத்தில் கூறியுள்ளார். கோயிலில் சிவ சந்நிதியில் இரண்டு நந்திகள் உண்டு. ஒன்றுகோயில்

முகப்பில் உள்ளது. இன்னொன்று சிவலிங்கத்தின் அணித்தாய் உள்ளது. முகப்பில் உள்ள நந்திக்குப் பலிபீடம் முகத்தின் பக்கம் உள்ளது. இலிங்கத்துக்கு அணித்தாயுள்ள நந்திக்குப் பலிபீடம் வாலின் பக்கம் உள்ளது. இதன் பொருள் என்னவென்றால் சிவன் ஆன்மாவுக்குத் தூரமாய் இருக்கும்பொழுது பாசம் ஆன்மாவின் முன்னால் இருக்கும். சிவத்தைக் கிட்டினால் பாசம் பின்னால் மறைந்துவிடும் என்பதே. அஃதாவது தற்போதம் உள்ளவர்க்குப் பாசம் முந்தியும், தற்போதம் இழந்தவர்க்குப் பிந்தியும் இருக்கும் என்பதே.

## 2373. பதிபசு பாசம் பயில்வியா நித்தம்

2373. பதிபசு பாசம் பயில்வியா நித்தம்
பதிபசு பாசம் பகரீவோர்க் காறாக்கிப்
பதிபசு பாசத்தைப் பற்றற நீக்கும்
பதிபசு பாசம் பயில நிலாவே.

பதி பசு பாசம் என்னும் முப்பொருளையும் நிலை வேறுபாட்டால் விரித்தும் தொழில் ஒற்றுமையால் தொகுத்தும் ஐம்பொருள்களாக அமைத்தனர் அருஞ்சைவர். அவையே 'சிவய நம' என்ப. பதியாகிய சிகரத்தின் நிலைவேறுபாட்டால் வகரமும் நகரமும் என விரிந்து மூன்றாயின. மலகன்ம மாயைகளின் தொழில் பெரும்பான்மையும் மறைத்தலும் மறைத்தற்குத் துணைபுரிதலும் ஆம். அதனால் அம் மூன்றையும் மகரம் என ஒன்றாயடக்கியும், யகரமாகிய ஆருயிர் என்றும் சார்ந்து நின்றதே உயிர்நிலை என வழங்கும் இயல்பிற்றாதலின் வகர நகரங்கட்கு நடுவாய் ஒன்றாயின. வகரம் நற்றாயாகவும் நகரம் செவிலித்தாயாகவும் பெரும்பாலும் கொள்ளற்கியையும். செவிலிக்கு உடலுயிர் ஓம்பற்காம் பொருள் கூட்டும் பணியும், நற்றாய்க்கு உணர்வுயிர் ஓம்பற்காம் அருள் கூட்டும் பணியும் இயல்பாக அமைந்துள்ளன. பதி பசு பாசம் மூன்றும் மீநிறைவு வீழ்நிறைவு மிடைநிறைவு என்ற முறையில் ஒன்றனுள் ஒன்று அடங்கி விளங்கும். இவற்றை முறையே வியாபகம் வியாப்பியம் வியாத்தி என்ப. பதி மீநிறைவாகும். பசு வீழ்நிறைவாகும், பாசம் மிடைநிறைவாகும். இம் முப்பொருள் உண்மை விரிக்கும் திருவைந்தெழுத்தை நாளும் இடையறாது பொருட் குறிப்புடன் ஓதி வருதல் வேண்டும்.

அங்ஙனம் பயின்று வருவார்க்கு நன்னெறி நான்மையின் வழியினை அருளிச்செய்வாராய் வழியமைத்தனர். அந் நெறி நிற்பார்தம் பசு பாசப்பற்றை அறவே நீக்கியருள்வன். அத் திருவருள் கிட்டியபின் பசு பாசம் ஒளிமுன் இருள் போன்று அவ்வாருயிர்க்கண் நில்லாவென்க.

பயில்வியா நித்தம் - நாள்தோறும் செய்யும் அஞ்செழுத்து எண்ணும் முறை. ஆறாக்கி - வழியை உண்டாக்கி.

## 2374. பதியும் பசுவொடு பாசமும் மேலைக்

2374. பதியும் பசுவொடு பாசமும் மேலைக்
கதியும் பசுபாச நீக்கமுங் காட்டி
மதிதந்த வானந்த மாநந்தி காணுந்
துதிதந்து வைத்தனன் சுத்தசை வத்தே.

பேருயிராகிய பதியும், ஆருயிராகிய பசுவும், அப் பசுவினைப் பிணித்த பாசமும், அருளால் பாசம் நீங்கிய இடத்துப் பெறும் திருவடிப்பேறாகிய மேலைக்கதியும், சிவகுருவாய்ச் சிவபெருமான் எழுந்தருளி வந்து பசு பாசத்தை நீக்கியருளும் நீக்கமும் மெய்ம்மையாக் காட்டி யருள்வது தனிப்பெரும் சைவமாம் சுத்த சைவத் தென்க. இத்தகைய தத்துவஞானமாகிய மெய்யுணர்வைத் தந்தருளியவன் இயற்கை உண்மை அறிவு இன்பமா நந்தியாகிய சிவபெருமானாவன்; அவன் திருவடியிணையினைச் செந்தமிழ்த் திருமுறை வழியாக வழிபட்டு உய்யும்படியாகவும் வைத்தருளினன்.

## 2375. அறிந்தணு மூன்றுமே யாங்கணு மாகும்

2375. அறிந்தணு மூன்றுமே யாங்கணு மாகும்
அறிந்தணு மூன்றமே யாங்கணு மாக
அறிந்த அனாதி வியாத்தனு மாவன்
அறிந்த பதிபடைப் பானங் கவற்றையே.

யாங்கணும் அறியும் தன்மைவாய்ந்த அணுவாகிய ஆருயிர் மூவகைப்படும். அவை ஒருமலம் இருமலம் மும்மலம் என்னும் பிணிப்பால் ஆவன. அம் மூன்றுமே யாங்கணுமாக நீக்கமற நிற்கும் நிலைமையினை அறிந்த பெரும்பொருள் சிவபெருமானாவன். அவன் தொன்மையிலுள்ளவன். எங்கும் நிறைந்தவன். ஆருயிர்களின் பிணித் துன்பத்தினின்றும் விடுவிக்கத் துணிந்தனன், அவற்றிற்கு வேண்டிய உடல்கலன் உலகு உணா முதலியவற்றை மாயாகாரியமாகப் படைத்தளித்தருளினன். அவற்றை: அவற்றிற்கு - உருபு மயக்கம். ஒருபுடை யொப்பாக (2352) ஒரு மலத்தார் இடையின மெய்யையும், இருமலத்தார் மெல்லின மெய்யையும், மும்மலத்தார் வல்லின மெய்யையும் ஒத்தவரெனக் கூறலாம். வல்லினமெய் மொழிக்கிறுதியில் நில்லாமை மிக்க செருக்குடைய மும்மலக் கட்டினை யொக்கும். மெல்லினமெய் மொழிக்கிறுதியில் வருதலானும் மெல்லென்று ஒலித்தலானும் மாயை அடங்கிய இருமலக் கட்டினை யொக்கும். இடையினமெய் லகர ழகர ளகரங்கள் பயின்று குழைந்திருப்பதால் வினை மாயை அடங்கிய ஒரு மலக்கட்டினையொக்கும். ஆய்தம் திருவருளம்மை

யொக்கும் ஐம்மலம் அகன்று செம்பொருட்டந்தையின் தாள்சேர் உயிர் குற்றுகரமாகும். அதுவே, "குற்றியலுகரம் முறைப்பெயர் மருங்கின், ஒற்றிய நகரமிசை நகரமொடு முதலும்" (தொல். எழுத்து, 67) என்னும் நூற்பாவின் கருத்தாகும். 'நுந்தை' என்னும் முறைப்பெயர் மெய்ம்முதலே ஆயினும் ஒற்றுமை நயத்தான் குற்றியலுகர முதலாயிற்று. அதுபோல் திருவடிப்பேறு பெற்ற அடிமையுயிரும் எண்குணமும் பதியப்பெற்று இரண்டறவிரவி நிற்பதால் முதலெனவுங் கூறப்படும். அக்குறிப்பு நுந்தை என்னும் பெயரில் தந்தை என்னும் பொருள் காணப்படுவதால் ஆருயிர்கள் அடிசேர் மகவெனக் கொள்க. இது 'மன்னவன்றன் மகன்' என்பதனாற் காண்க.

## 2376. படைப்பாதி யாவது பரஞ்சிவஞ் சத்தி

2376. படைப்பாதி யாவது பரஞ்சிவஞ் சத்தி
இடைப்பால் உயிர்கட் கடைத்திவை தூங்கல்
படைப்பாதி சூக்கத்தைத் தற்பரஞ் செய்யப்
படைப்பாதி தூய மலமப் பரத்தே.

ஆருயிர்கட்கு உடல் கலன் உலகு ஊண் முதலியவற்றைப் படைத்தருள வேண்டுமென்று தொன்மைக்கண் திருவுள்ளங்கொண்டது முழுமுதற் பெரும்பொருளாம் சிவம் ஆகும். அச் சிவன் வைப்பாற்றலாகிய மாயையினின்று இவற்றைப் படைத்து உயிர்கட்கு அளித்துக் காத்தருள்கின்றனன். சத்தி - வைப்பாற்றல். தூங்கல் - நிகழ்தல். படைப்பு முதலாகிய ஐந்தொழிலும் மிக நுண்தன்மை வாய்ந்ததாகும். நுண்மை: கருவியின்றிக் கருத்தாலியற்றுவிக்கும் கடவுட்செயல். நுண்மை - சூக்கம். அந் நுண்டொழிலைச் சிவபெருமான் செய்தருளுவதனால் ஆருயிர்கள் மலப்பிணிப்பினின்றும் விடுபடுகின்றன. விடுபடவே தூய்மை எய்துகின்றன. தூய்மை எய்துவதால் அச் சிவபெருமான் திருவடிநீழலை அவ் வுயிர்கள் எய்துகின்றன. தூயமலமப்பரத்தே: மலநீங்கிய ஆருயிர் தூயவாய் அப் பரத்தேயாம் எனக்கொள்க.

இடைப்பால் - திதி காலத்தில், அஃதாவது காத்தற் காலத்தில். தூங்கல் - நிகழுதல்.

## 2377. ஆகிய சூக்கத்தை யவ்விந்து நாதமும்

2377. ஆகிய சூக்கத்தை யவ்விந்து நாதமும்
ஆகிய சத்தி சிவபர மேலைந்தால்
ஆகிய சூக்கத்தில் ஐங்கரு மஞ்செய்வோன்
ஆகிய தூயவீ சானனு மாகுமே.

நுண்ணிய ஐந்தொழிலை விந்து, நாதம், சத்தி, சிவம், பரம் என்னும் மேல் ஐந்து நிலைகளாலும் ஆக்குவிப்பன். அந் நுண்ணிய ஐந்தொழிலை அருளால் ஆக்குவிப்போன் தூய இயக்க முதலாகிய ஈசானன் ஆவன்.

மேலைந்து - விந்து, நாதம், சத்தி, சிவம், பரம்.

## 2378. மேவும் பரசிவ மேற்சத்தி நாதமும்

2378. மேவும் பரசிவ மேற்சத்தி நாதமும்
மேவும் பரவிந்து ஐம்முகன் வேறீசன்
மேவும் உருத்திரன் மால்வேதா மேதினி
ஆகும் படிபடைப் போனர னாகுமே.

இப் படைப்பாதி ஐந்தொழிலையும் சிவபெருமான் அருவம் நான்கு, அருவுருவம் ஒன்று, உருவம் நான்கு ஆக ஒன்பான் நிலைகளின் நின்று உன்முகமாகிய கருத்தால் இயற்றியருளுகின்றனன் அந் நிலைகள் முறையே பரசிவம், பராசத்தி, பரநாதம், பரவிந்து எனவும்; ஐம்முகன் எனவும்; ஈசன், உருத்திரன், மால், அயன் எனவும் கூறப்படும். மாயாகாரியமாகிய உலகினைப் படைத்தருளுபவன் அரனாகிய சிவபெருமானாவன்.

ஐம்முகன் - சதாசிவன்.

## 2379. படைப்பு மளிப்பும் பயிலிளைப் பாற்றுந்

2379. படைப்பு மளிப்பும் பயிலிளைப் பாற்றுந்
துடைப்பு மறைப்புமுன் தோன்ற அருளுஞ்
சடத்தை விடுத்த அருளுஞ் சகலத்து
அடைத்த அனாதியை ஐந்தென லாமே.

படைத்தல், காத்தல் இளைப்பாற்றுதலாகிய துடைத்தல், வினைநுகர்வாகிய மறைத்தல் இந் நான்கும் இயல்பாகச் சிவபெருமானிடத்தில் முன்தோன்றிய திருவருள் வாயிலாகத் தோன்றுவன. அத் திருவருள் ஆருயிர்களை மலப்பிணிப்பினின்றும் விடுவித்துச் சிவப்பிணிப்பில் இடுவித்து வாழ்விக்கும். பேரறிவுப் பேராற்றல் திருவினால் தொன்மையிலேயே ஆருயிர்களைப் பிணிப்பினின்றும் விடுவிப்பவனும் சிவனே. விடுவித்தற்பொருட்டு அவ்வுயிர்களுக்குப் புணர்ப்பு நிலையை முதற்கண் அவனருளினன். முன்னைப் பழம்பொருட்கு முன்னைப்பழம் பொருளாகிய அத்தொன்மைப் பெரும்பொருளே நுண்ணிய ஐந்தொழிலும் செய்தருளும் என்க. சகலத்தடைத்த அனாதியை - புணர்ப்பிற் புணர்த்த தொன்மையை.

சடத்தை விடுத்த - உடற்பற்றை ஒழித்த. ஐந்து - அஞ்சு தொழில், படைப்பாதி முதலியன.

## 2380. ஆறாறு குண்டலி தன்னின் அகத்திட்டு

2380. ஆறாறு குண்டலி தன்னின் அகத்திட்டு
வேறாகு மாயையின் முப்பான் மிகுத்திட்டங்கு
ஈறாங் கருவி யிவற்றால் வகுத்திட்டு
வேறாம் பதிபசு பாசம்வீ டாகுமே.

குண்டலியாகிய மாமாயையினின்று முப்பத்தாறு மெய்கள் சிவபெருமான் திருவுள்ளத்தால் தோன்றி விரியும். இம் முப்பத்தாறினையும் பகுக்குங்கால் உணர்த்துமெய் ஐந்து, உணர்வுமெய் ஏழு, உடல்மெய் இருபத்துநான்கு என்பனவாகும். இவை முறையே தூமாயை, தூவாமாயை, பகுதி மாயை எனக் கூறுவர். ஆருயிர்கட்கு முடிந்த முடிபாக வேண்டிய கருவிகளையும் இவற்றாலேயே வகுத்தருளினன். பதி பசு பாசம் என்னும் உண்மைகளையும் தொடர்புகளையும் அருளால் உணருங் காலத்துப் பாசத்தினின்றும் பசு வேறாகும். வேறாகவே பதியினைச் சென்றெய்தும். எய்துவதே வீடுபேறாகும்.

மாயையின் முப்பால் - சுத்தம், அசுத்தம், சுத்தாசுத்தம், அஃதாவது மாமாயை, மாயை, மூலம் என்பன.

## 2381. வீட்கும் பதிபசு பாசமும் மீதுற

2381. வீட்கும் பதிபசு பாசமும் மீதுற
ஆட்கும் இருவினை யாங்கவற் றாலுணர்ந்து
ஆட்கு நரக சுவர்க்கத்திற் றானிட்டு
நாட்குற நான்தங்கு நற்பாச நண்ணுமே.

பதியானது பசுவினை மலநீக்கத்தின்பொருட்டு மாயா காரியமாகிய பாசத்தின்கண் விருப்பம் உண்டாகச் செய்யும். அவ்வுயிர் உலகுடல்கலன்களில் விருப்பம் மீதூர இருவினை புரியும்படி ஆழ்த்தும். அதன்வாயிலாக ஆருயிர்கள் இருவினைகளைப் புரியும். அவற்றின்பயன்களாகிய இன்ப துன்பங்களை நுகர்விப்பதன்பொருட்டு அவ்வுயிர்களை முறையே துறக்கநிரயங்களிலிட்டு ஆழச் செய்யும். இவ் வகையாகப் பயன்துய்க்கும் காலங்கழியப் பிறப்பிற்கு ஏதுவாகிய நான் என்னும் முனைப்புத் தங்கும்படி நற்பாசமாகிய மறைப்பாற்றல் வந்து பொருந்தும் என்க. மறைப்பாற்றல் - நடப்பாற்றல்; திரோதானசக்தி.

(16)

# 2382. நண்ணிய பாசத்தில் நானெனல் ஆணவம்

2382. நண்ணிய பாசத்தில் நானெனல் ஆணவம்
பண்ணிய மாயையில் ஊட்டற் பரிந்தனன்
கண்ணிய சேதனன் கண்வந்த பேரருள்
அண்ணல் அடிசேர் உபாயம தாகுமே.

மாயாகாரியவுடம்புடன் கூடி நான் என்று முனைத்து நிற்றல் ஆணவப் பண்பாகும். அவ் வாணவம் நீங்குதற்பொருட்டு மாயையின்கண் செலுத்தி இருவினைப்பயன்களையும் நடப்பாற்றல் ஊட்டுவதாகும். ஊட்டுவதனால் ஆணவமலம் அகலும் அகலவே கருதப்படும் அறிவிக்க அறியும் தன்மைவாய்ந்த சேதனனாகிய ஆருயிர்கள்மாட்டு வைத்தபேரருளினால் அவ்வுயிர்க்கு அண்ணலாகிய சிவபெருமானின் திருவடிசேரும் வழிவகைகளையும் அவ்வாற்றல் தோற்றுவித்தருளும். இதனையே உபாயமதாகும் என்றனர். ஆணவம்: வழக்குச் சொல்; ஆண்மை.

ஊட்டல் - ஊட்டலால். பரிந்தனன் - நீங்கினான்.

## 2383. ஆகும் உபாயமே யன்றி யழுக்கற்று

2383. ஆகும் உபாயமே யன்றி யழுக்கற்று
மோக மறச்சுத்த னாதற்கு மூலமே
ஆகு மறுவை யழுக்கேற்றி யேற்றல்போல்
ஆகுவ தெல்லாம் அருட்பாச மாகுமே.

நடப்பாற்றல் ஆருயிர்க்கிழவற்கு வினைமாயைகளைக் கூட்டல் வழிவகைகள் மட்டுமன்றி ஆணவ அழுக்கு நீங்கித் தூயனாதற் பொருட்டுக் கடும்பற்றாகிய மருள் நீங்குதற்கும் தூயனாதற்கும் இதுவே மூலமாகும். இதற்கு ஒப்பு அழுக்காக்கிய அறுவை என்னும் ஆடையினை மேலும் சாணி உவர் முதலிய அழுக்கினை ஏற்றி அவ்வழுக்கினை அகற்றுவதாகும். இவ்வனைத்தும் அருட்பாசமாகிய நடப்பாற்றலால் நிகழ்வனவேயாகும்.

அறுவை - வேட்டி; தறியினின்றும் அறுத்து எடுப்பது அறுவை. ஏற்றி - கலந்து. ஏற்றல்போல் - அடித்துப் போக்குதல் போல்.

## 2384. பாசம் பயிலுயிர் தானே பரமுதல்

2384. பாசம் பயிலுயிர் தானே பரமுதல்
பாசம் பயிலுயிர் தானே பசுவென்ப
பாசம் பயிலப் பதிபர மாதலாற்
பாசம் பயிலப் பதிபசு வாகுமே.

பாசத்துடன் பயின்றுவரும் ஆருயிர் முதல் பரமாகும். பரம் - சுவை. இயற்கையிலேயே சுமையுடையதாகுமென்ப. அப் பாசப்பிணிப்புச் சுமையுடைமையால் அவ்வுயிர் பசுவெனப்பட்டது. ஆருயிர் பாசம் பயின்று தூயனாதற்பொருட்டுப் பதியும் அப்பசுவுடன் கலத்தலால் பதியும் பசுவாகும் என்ப. இது நோயாளிக்கு மருந்து கூட்டிக்கொடுப்போன் அம்மருந்துடனும் நோயாளியுடனும் தொடர்பு கொண்டிருப்பதை யொக்கும். ஆருயிர்க்குப் பாசத்தினைப் பயிற்றுவித்தற்பொருட்டுப் பதியும் பரமாக விளங்கும். பரம் - முதன்மை.

# 2385. அத்தத்தில் உத்தரங் கேட்ட அருந்தவர்

2385. அத்தத்தில் உத்தரங் கேட்ட அருந்தவர்
அத்தத்தில் உத்தர மாகும் அருள்மேனி
அத்தத்தி னாலே யணையப் பிடித்தலும்
அத்தத்தில் தம்மை யடைந்துநின் றாரே.

அருந்தவர்கள் மறை முதலியவற்றைப் பயின்று பொருள் முடிபின்கண் மயங்கியிருந்தனர். அவர்கள் ஆலமர் கடவுளிடம் அருளால் வந்தனர். வந்து அத்தமாகிய பொருளின்கண் தெளிவாகிய அறிவு பெறுதற்பொருட்டு உத்தரம் வினவினர். அவ்வாலமர் செல்வன் சீர்மிகு சிறப்பினோன் ஆதலின் அத்தமாகிய கைவிரல்களினால் மாற்றமிலா மாறிலாப் பொருந்தும் விடை திருந்த அளித்தருளினன். மேலும் தன் அருள்மேனித் திருக்கையினால் தலையினைத் தொட்டுச் சிவதீக்கையும் செய்தருளினன். அங்ஙனம் தலையினைத் தொட்டபொழுதில் அவர்கள் தம்மை அவர்தம் திருவடிக்கு ஆளாக்கி அடைந்துநின்றனர். அத்தம் - பொழுது கைவிரல்களாற் காட்டும் உண்மை வருமாறு: பெருவிரல் பதியாகும். ஆட்காட்டி விரல் பசுவாகும். நடுவிரல் கன்மமாகும். அணி விரல் மாயையாகும். சிறுவிரல் ஆணவமாகும். பதியினைக் குறிக்கும் விரலுக்குப் பெருமைமிக்க விரல் என்று கூறுதலும், ஆளாம் உயிரினைக் குறிக்கும் விரலுக்கு ஆட்காட்டி விரலெனக் கூறுதலும் சாலப் பொருந்தும் இயற்கையவாதல் காண்க. இருவினையைக் குறிக்கும் விரலை நீண்ட நடுவெனலும் மாயையைக் குறிப்பதை அணியெனலும் ஆணவத்தைக் குறிப்பதைச் சிறுமை

எனலும் அங்ஙனமே பொருத்தமாதலறிக. பெருவிரல்நின்ற நிலையிலேயே நிற்பின் ஏனைய விரல்களுக்கு எவ்வகைச் செயல்களும் யாண்டும் எளிதின் நிகழ்வனவாகா. அஃது 'அவனசையாமல் அணுவசையா' தென்பதனை உணர்த்தும். எனவே ஆருயிரும் பேருயிரும் ஒன்றாய்ப் புணர்ப்பதற்கு இரண்டன்காதல் இணக்கமும் இன்றியமையாதென்க.இவற்றை வரும் வெண்பாவால் நினைவுகூர்க:

"முன்னோன் பெருவிரலாம் மூவா உயிர்சுட்டாம்
பின்மூன்றும் நீள்வினையே மாயைமலம் - உன்னுங்கால்
ஆளும் பெருவிரலும் ஆட்காட்டி யும்புணர்ப்பக்
கேளுறுமால் ஒட்டாவம் மூன்று.

அத்தத்தில் - சின்முத்திரையினால், உத்தரம் கேட்ட - தம் கேள்விகளுக்கு விடைகேட்ட, அருந்தவர் - தவசிகள், பிடித்தல் - தொட்டுத் தீக்கை செய்தல்.

## 7. அடி தலை யறியும் திறங்கூறல்

7. அடி தலை யறியும் திறங்கூறல் 2386.காலுந் தலையும் அறியார் கலதிகள்

2386.காலுந் தலையும் அறியார் கலதிகள்
காலந்தச் சத்தி யருளென்பர் காரணம்
பாலொன்று ஞானமே பண்பார் தலையுயிர்
காலந்த ஞானத்தைக் காட்டவீ டாகுமே.

காலாகிய வழியும் தலையாகிய சிரமும் உண்மை நூற் கல்வியில்லாதார் உணரார். அவர்கள் கலதிகளாகிய வீணர்களாவர். கால் என்பது சிறப்பித்துச் சொல்லப்படும் சத்தியாகிய திருவருள் என்பர். அனைத்திற்கும் வினைமுதற்காரணமாக என்றும் இயற்கையாகவே திகழ்பவன் சிவபெருமான். அவனே திருவடியுணர்வாகிய சிவஞானமாவன். அவனே திருவருட்பண்பு எட்டும் நிரம்பிய தலைவனாவன். ஆருயிர்க்குக்காலாகிய திருவருள் அச் சிவஞானத்தைக் காட்டியருளும். காட்டியருள அவ்வுயிர் திருவடிப்பேறாகிய வீடெய்தும். சிரம் என்பதிலுள்ள சிகரமும், வழி என்பதிலுள்ள வகரமுங்கூடச் சிவ என்றாகும். அது சிவ என்னும் செந்தமிழ்ப் பொருண்மறையாகும். மேலும் "பரையுயிரில் யான் எனதென்றற நின்றதடியாகும்." என்றும், "உரையிறந்த சுகமதுவே முடியாகு" மென்றும் தமிழாகமம் ஓதியருள்வதால் இவையிரண்டும் முறையே வழியும் சிறப்புப்பேறும் ஆகும். இவற்றை யுணராதாரையே தலைகால் தெரியாதலையும் தடுமாற்றத்தவராவர் என்ப.

கால் - தமிழ்மொழியில் கால் என்ற இலக்கத்தைக் குறிப்பது வ என்ற குறி. அஞ்செழுத்தில் வ அருளைக் குறிக்கும். தலை - ஞானம். இது "கால் அந்தச் சத்தி அருள் ஞானமே பண்பார் தலை" என்று இம் மந்திரத்திலேயே கூறப்பட்டிருப்பது காண்க.

## 2387. தலையடி யாவ தறியார் காயத்தில்

2387. தலையடி யாவ தறியார் காயத்தில்
தலையடி யுச்சியில் உள்ளது மூலந்
தலையடி யான அறிவை யறிந்தோர்
தலையடி யாகவே தானிருந் தாரே

ஆருயிரின் உடம்பகத்துத் தலை உச்சியிலுள்ளது. அடி என்பது வழியாகவுள்ளது. இவ் வுண்மையினை அருளால் அறியார். தலையடி என்பது 'சிவ' என்னும் செந்தமிழ்ப் பெருமறையாகும். இவ்வறிவை அறிந்தோர் சிவமாகவேயிருந்து இன்புறுவர்.

அடியாவது - பிண்ட உற்பத்தியில் முதலாவது, தலைஅடி உச்சி - தலையில் உச்சிக்கு நேர்கீழாக, மூலம் - ஆன்மா.

## 2388. நின்றான் நிலமுழு தண்டமும் மேலுற

2388. நின்றான் நிலமுழு தண்டமும் மேலுற
அன்றாள் அசுரர் அமரரும் உய்ந்திடப்
பின்றான் உலகம் படைத்தவன் பேர்நந்தி
தன்றா ளிணையென் தலைமிசை யானதே.

சிவபெருமான் நிலமும் அண்டமும் கீழும் மேலும் பொருந்தும் வண்ணம் பேரொளிப் பிழம்பாய் நின்றருளினன். அவ்வாறு அன்று நின்றருளியது அசுரரும் அமரரும் உய்ந்திடும்படி ஆள்வதற்கேயாம். அவனே பின்பு உலகம் படைத்தருளினன். அவன் திருப்பெயர் நந்தியாகும். அவன் திருவடி அடியேன் தலையின்கண் அமர்ந்தது.

## 2389. சிந்தையி னுள்ளே எந்தை திருவடி

2389. சிந்தையி னுள்ளே எந்தை திருவடி
சிந்தையும் எந்தை திருவடிக் கீழது
எந்தையும் என்னை யறியகி லானாகில்
எந்தையை யானும் அறியகி லேனே.

சிவபெருமானாகிய எந்தையின் திருவடி அவனருளால் அடியேன் எண்ணமாகிய சிந்தையின்கண்ணேயுள்ளது. அடியேன் சிந்தையும் எந்தையின் திருவடிக்கீழ் அமர்ந்துள்ளது. எந்தையும் அடியேனை அருள் உள்ளத்தால் நோக்குவதாகிய அறிதலைச் செய்யானாகில் எந்தையாகிய அவனை அடியேனும் அறிந்துகொள்ளும் வாய்ப்பினை எய்துவேன் அல்லேன். இது கற்பிக்கும் ஆசான் மாணவ கனையும் ஈன்றார் மக்களையும் உரிமையுடன் நோக்காராயின் அம்மக்கள் அவர்களை எங்ஙனம் ஆசான் ஈன்றார் என அறிவர்? மூத்தோர் முன்னறிந்து முறையுணர்த்திய பின்னரே இளையோர் அம் முறைவழி நின்று ஒழுகுவர் என்பவற்றோடொத்ததாகும் இது.

## 2390. பன்னாத பாரொளிக் கப்புறத் தப்பால்

2390. பன்னாத பாரொளிக் கப்புறத் தப்பால்
என்னா யகனார் இசைந்தங் கிருந்திடம்
உன்னா ஒளியு முரைசெய்யா மந்திரஞ்
சொன்னான் கழலிணை சூடிநின் றேனே.

நெருங்கவொண்ணாத ஆறாதார அகநிலை ஒளிக்கு அப்புறமாய் அதன்மேலுமாய் விளங்குவது அருட்பெரும் அறிவுப் பெருவெளி. அங்குப் பொருந்தி எழுந்தருளியிருப்பவன் என் முழுமுதற்றலைவனாகிய சிவபெருமானாவன். அவனது அளவில் பேரொளியை உன்னுதல் செய்யவும் ஒண்ணாது. அவனது திருப்பெயராம் மந்திரத்தை உரைத்தல் செய்யவும் ஒண்ணாது. உன்னுங்கால் ஏதாவது ஓர் உருவம் உன்னுங் கருவியாகிய மனத்துமுன் தோன்றும். உரைக்குங்கால் ஒலிவுருவம் செவிப் புலனாகும். இவ்விரண்டையும் கடந்து விரவிநின்றுணரும் மேல் நிலையாதலின் அங்ஙனம் ஓதியருளினர். அவற்றை அவன் அருளால் உணர்வின்கண் உணர்த்தியருளினன். அதனால் ஆருயிர்க்கிழவன் அவன் திருவடியைத் தலைச் சூடிநின்றனன். தலைச்சூடுதல், தலையன்பால் தலையிற்சூடுதல்.

பார்ஒளி - ஆதார ஒளிகள், அப்புறத்தப்பால் - பரமாகாய முடிவில். உன்னா வொளி - கருதப்படாத ஒளி, உரைசெயா மந்திரம் - வாயினால் உச்சரியாமல் உரைக்கும் மந்திரம்.

## 2391. பதியது தோற்றும் பதமது வைம்மின்

2391. பதியது தோற்றும் பதமது வைம்மின்
மதியது செய்து மலர்ப்பத மோதும்
நதிபொதி யுஞ்சடை நாரியோர் பாகன்
கதிசெயுங் காலங்கள் கண்டுகொ ளீரே.

பதியாகிய சிவபெருமானின் திருவடி யாண்டும் புகழ் மணியொளியாய்த் திகழ்ந்து தோன்றும். அத்திருவடியிணையினைத் தலையிற் சூடுங்கள். செந்தாமரையனைய அத் திருவடியிணையினை மறவா நினைவாக மதியாகிய அறிவினிற் கொள்ளுங்கள். அதனையே இடையறாது ஓதும் செயலை மேற்கொள்ளுங்கள். திருவருள் வெள்ளம் தங்கியிருக்கும் திருச்சடையினையும், பெண்ணமர்ந்திருக்கும் ஒரு பாகத்தினையும் உடையவன் சிவபெருமான்; அவனைப் போற்றும் காலங்கள் நான்கு. அவை செல்வொளிவானக் காலையும், வெள்ளொளி நண்பகலும், செவ்வொளி மாலையும், மையொளி நள்ளிரவு மாகும். இக் காலங்களைத் தொழத்தகும் இன்றியமையா இறைவன் இயற்கையோடொட்டிய திருவுருவ நற்காலமாகத் தொழுங்கள். தொழுதற்கு வேண்டும் திருமுறைத் திருப்பாட்டின் முதல் நினைப்புக்கள் வருமாறு. சிந்திப்பார், காலையே, படைக்கலமா, வாழ்க, என்றும் இன்பம் என்பனவாம். அங்ஙனம் தொழுதால் சிவபெருமான் திருவடிப் பேறாகிய நிலையினை நிலையாக அருள்புரிவன். இந் நாற்காலக் குறிப்பு அம்மையார் அருளிய

அருந்தமிழானுணர்க.

"காலையே போன்றிலங்கு மேனி கடும்பகலின்
வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு - மாலையில்
தாங்குருவே போலும் சடைக்கற்றை மற்றவற்கு
வீங்கிருளே போலும் மிடறு."

- 11. காரைக். அற்புதம் - 65.

பதம் - திருவடி, வைம்மின் - தலையை வைம்மின், மதியது செய்து - சிந்தித்து, மலர்ப்பதன் ஓதும் - திருவடியைப் புகழுங்கள், கதி செயும் - முத்தி உதவும்.

## 2392. தரத்துநின் றானடி தன்னிட நெஞ்சில்

2392. தரத்துநின் றானடி தன்னிட நெஞ்சில்
தரித்துநின் றானம ராபதி நாதன்
கரித்துநின் றான்கரு தாதவர் சிந்தை
பரித்துநின் றானப் பரிபாகத் தானே.

சிவபெருமானின் திருவடியினைப் பதம் வாய்ந்த விரிந்த மனநிலைக்கண் மாறாது நினையுங்கள். அப்படி நினைவார் மனத்து அவன் நீங்காது தங்கி நின்றருள்வன். தரித்தல் - தங்குதல். இடம் - விரிவு. அவன் இயல்பாகவே எங்கும் தங்கிநின்றருள்பவன். அவன் அனைவர்க்கும் நாதன். அமராபதியாகிய விண்ணவர்கோனுக்கு முதல்வன். கருதாதவரை வெறுத்து நின்றனன். கரித்து - வெறுத்து. சிந்தை சிவமாகச் செய்தனவே தவமாகத் திருவருளால் செவ்வி வாய்க்கும். செவ்வி - பரிபாகம். பரிபாகமுற்றாரைச் சிவன் தாங்கி நின்றனன்.

அமராபதி நாதன் - இந்திரன். கரித்து - வெறுத்து. பரித்து - தாங்கி.

## 2393. ஒன்றுண்டு தாமரை யொண்மலர் மூன்றுள

2393. ஒன்றுண்டு தாமரை யொண்மலர் மூன்றுள
தன்றாதை தாளும் இரண்டுள காயத்துள்
நன்றாகக் காய்ச்சிப் பதஞ்செய வல்லார்கட்கு
இன்றேசென் றீசனை யெய்தலு மாகுமே.

தாமரையாகிய சுழுமுனை ஒன்றுண்டு. அதன்கண் தாது மிக்க அழகிய ஒள்ளிய மலரும் மூன்றுண்டு. அதற்குரிய தாள்களும் இரண்டுள. தாளிரண்டு: இடப்பால் நரம்பு, வலப்பால் நரம்பு. மலர் மூன்று: மூன்று நரம்பங் கூடியமைந்த முடிச்சு. உடம்பகத்து மூலக்கனலால் நன்றாக வெதுப்பியபோது உள்ளம் செவ்வி வாய்க்கும். செவ்வி வாய்த்த வல்லார்கட்கு வாய்த்த அப்பொழுதே சிவபெருமானைச் சென்று தலைக்கூடுதலும் ஆகும்.

தாமரை - சுழுமுனை. மலர் - இதழ். காய்ச்சி - மூலக் கனலால் வெதுப்பி, பதம்செய - மனத்தை வசப்படுத்த.

## 2394. கால்கொண்டென் சென்னியிற் கட்டறக் கட்டற

2394. கால்கொண்டென் சென்னியிற் கட்டறக் கட்டற
மால்கொண்ட நெஞ்சின் மயக்கிற் றுயக்கறப்
பால்கொண்ட வென்னைப் பரன்கொள்ள நாடினான்
மேல்கொண்டென் செம்மை விளம்பவொண் ணாதே.

அடியேன் முடியில் சிவபெருமான் திருவடியினைச் சூட்டியருளினன். சூட்டலும் கட்டற்றது. ஆணவக் கட்டறலும், மாயா காரியப் பொருள்களினிடமாகவுள்ள நெஞ்சின் மயக்கம் நீங்கிற்று. மயக்கம் நீங்கவும் திருவடியுணர்வாகிய சிவஞானத்தை அடியேற்கு அளித்தருளினன். அவ்வுணர்வு பெற்ற என்னை மேலாம் தம் வண்ணம் ஆக்கத் திருவுள்ளங்கொண்டருளினன். அதனால் ஆரா இன்பத் திருவடியிணையின் மேல்நிலையைப் பெற்றின்புற்றேன். அத்தகைய மேற்கொண்டு துய்க்கும் செம்மை நலம் சொல்லிறந்ததொன்று.

கால் - திருவடி, கட்டு - பிறப்பு, மால் - மயக்கம், துயக்கு - கேடு. பால்கொண்ட - ஞானத்தின் பால்பட்ட, செம்மை - நன்மை.

## 2395. பெற்ற புதல்வர்போற் பேணிய நாற்றமுங்

2395. பெற்ற புதல்வர்போற் பேணிய நாற்றமுங்
குற்றமுங் கண்டு குணங்குறை செய்யவோர்
பற்றைய வீச னுயிரது பான்மைக்குச்
செற்றமி லாச்செய்கைக் கெய்தின செய்யுமே.

தாய் தந்தையராகிய இருமுது குரவர்கள் தம் அன்பும் அருமையும் நிறைந்த மக்களைப் பேணி வளர்ப்பதன் பொருட்டு நிறைந்த அன்புடன் செய்யும் முறைமைபோல் சிவபெருமானும் ஆருயிரின் கன்ம வாசனையாகிய நாற்றத்திற் சேற்றவாறு அவ்வுயிர்களின் குற்றமுங் கணமும் கண்டு, அவ்வவற்றிற்கு ஏற்றவாறு செய்தருள்கின்றனன். இங்ஙனம் செய்தருளுதற்குப் பற்றுக்கோடாகவுள்ளவன் சிவபெருமான் ஒருவனே; வேறொருவரும் இலர். அச் செம்பொருளாகிய சிவபெருமான் சினம் பகை முதலிய எவ்வகைக் குற்றமும் தனக்கு எய்துதலின்றிச் சொல்லுதற்கரிய பேரருளுடன் செய்தருள்கின்றனன். அவன் செய்தருளம் அருளிப்பாடு நடுவுநிலைமைவாய்ந்ததாகவுள்ளது. வினைக்கீடாக வரும் துன்பம் நோய்க்குத் தரும் மருந்து போன்று இன்றியமையாது கொடுக்கத்தக்க தொன்றேயாம்.

பேணிய - காக்கும்பொருட்டு. நாற்றம் - கன்ம வாசனை. பற்றைய - பற்றாக உள்ள, செற்றம் - சினம்.

## 8. முக்குற்றம்

8. முக்குற்றம் 2396. மூன்றுள குற்ற முழுதும் நலிவன

2396. மூன்றுள குற்ற முழுதும் நலிவன
மான்றிருள் தூங்கி மயங்கிக் கிடந்தன
மூன்றினை நீங்கினர் நீக்கினர் நீங்காதார்
மூன்றினுட் பட்டு முடிகின்ற வாறன்றே.

ஆருயிர்க்கு மீண்டும் மீண்டும் பிறப்பினைத் தரக்கூடிய குற்றம் மூன்று. அவை, 'காமம் வெகுளி மயக்கம்' என்பன. இக் குற்றங்கள் மூன்றும் நம்மை முற்றாகத் துன்பப்படுத்துவன. இம் மூன்றன் வயப்பட்ட உயிர்கள் இருட்சார்பாம் மருளால் மயங்கிக்கிடந்தன. மருளால் - மாயையால். அம் மருள் நீங்காமையால் ஆருயிர்கள் ஆணவ வல்லிருளின்கண் புல்லிக்கிடந்தன. திருவருளால் இம் மூன்றுக்கும் உட்படாமல் நீங்கினவர் பிறப்பு இறப்புக்களினின்றும் நீங்கினோராவர். திருவடியின்பப் பெருவாழ்வு பெற்றோரும் ஆவர். அக் குற்றங்களினின்றும் நீங்காதவர் பிறப்பின் துன்பத்தையும் இறப்பின் துன்பத்தையும் இடையறாது நுகர்வோராவர். மூன்றினால் வரும் வினைக்கு ஈடாய் அமையப்பெற்றுக் கணக்கிலாத துன்பங்கள் வந்து முடியும்.

முழுது நலிவன - நன்மைகள் எல்லாவற்றையும் கெடுப்பன, மான்று - மயக்க முடையதாய், இருள் தூங்கி - இருளாயிருந்து, முடிகின்ற - அழிகின்ற, முக் குற்றம் - காமம், வெகுளி, மயக்கம்.

## 2397. காமம் வெகுளி மயக்க மிவைகடிந்து

2397. காமம் வெகுளி மயக்க மிவைகடிந்து
ஏமம் பிடித்திருந் தேனுக் கெறிமணி
ஓமெனும் ஓசையி னுள்ளே யுறைவதோர்
தாம மதனைத் தலைப்பட்ட வாறன்றே.

மேலோதிய குற்றங்கள் மூன்றும் இன்ன என ஓதுகின்றனர். காமம் வெகுளி மயக்கம் என்னும் முக்குற்றங்களும் அருளால் கடிதல் வேண்டும். கடிதல் - நீக்குதல். கடிந்த நிலையில் ஏமமாகிய சிவபெருமானின் திருவடிப்பேற்றின்பம் வந்து கைகூடும். அவ்வின்பத்தைப் பெற்றுள்ள அடியேனுக்கு அடிக்கின்ற மணியகத்துத் தோன்றும் ஓசை போன்று 'ஓம்' என்னும் ஓசையினுள் விடாது தங்கியிருக்கும் தாமமாகிய சிவ ஒளி ஒன்று உண்டாகும். தாமம் ஒளி. முக்குற்றம் கடிந்தார்க்குச் சிவ ஒளி வந்து தானே தலைப்படும். திருவள்ளுவ நாயனாரும் பிறப்புக்கு வித்தாயுள்ளன "காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன், காமங் கெடக்கெடும் நோய்." (360) என்னுந் திருக்குறளால் மேலோதிய மூன்றுமே என்றருளினர், ஒருபுடையொப்பாகக் காமத்தால் மாயையும், வெகுளியால் வினையும், மயக்கத்தால் மலமும் பெறப்படும். அருளால் இவை நீங்கும் இவற்றின் நீக்கத்தால் மும்மல நீக்கமும் பெறப்படும்.

ஏமம் - சிவானந்தம், எறிமணி - அடிக்கும் மணி, தாமம் - ஒளி, ஈண்டுச் சிவ ஒளி.

# 9. முப் பதம்

9. முப் பதம் 2398. தோன்றிய தொம்பதந் தற்பதஞ் சூழ்தர

2398. தோன்றிய தொம்பதந் தற்பதஞ் சூழ்தர
ஏன்ற அசிபதம் இம்மூன்றோ டெய்தினோன்
ஆன்ற பராபர மாகும் பிறப்பற
ஏன்றனன் மாளச் சிவமா யிருக்குமே.

பிறப்பு இறப்புகட்கு உட்பட்டுத் தோன்றிவரும் ஆருயிரைத் தொம்பதம் என்பர். தொம்பதம் என்பதும் துவம் என்பதும் ஒன்றே. துவம் என்பது நீ என்னும் பொருள் தரும். அந்நீ, தத்பதமாகிய அது என்னும் சிவபெருமானை அருளால் சூழ்தருவாயாக. அங்ஙனம் சூழ்தரும் உன்னை அசிபதம் அச் சிவமாம் பெருவாழ்வினை ஆக்கியிடும். இக் குறிப்பு; தத்துவமசி - தத் - அது, துவம் - நீ, அசி - ஆகின்றாய். எனவே நீ அது ஆகின்றாய் என்பது அம்மறையின் பொருள். இம் முறைப்படி சிவபெருமான் வடிவம் எய்தினோன் நிறைந்த முழுமுதற் சார்பினன் ஆவன். நீண்ட நாட்களாகத் தொடர்ந்து வரும் பிறப்பு நீங்குதற் பொருட்டு அப் பிறப்பினை மலச் சார்பால் ஏன்று கொண்டோன் நலச் சார்பால் அம் மலச்சார்பு மாண்டொழியச் சிவச்சார்பு எய்திச் சிவமாகவே இருக்கும். செய்ய சிவமாதல் சிவச்சார்பு முற்றுமாய்த், துய்யசிவ இன்பருளால் துய்ப்பு என்ப ஆகலின் சிவச்சார்பே சிவமாதல் என்க.

முப் பதம் - தத் + துவம் + அசி, தத்துவமசி. ஏன்ற - பொருந்திய. ஆன்ற - பூரணமான, ஏன்றனன் - சீவனது பாசம், மாள - ஒழிய.

## 2399. போதந் தனையுன்னிப் பூதாதி பேதமும்

2399. போதந் தனையுன்னிப் பூதாதி பேதமும்
ஓதுங் கருவிதொண் ணூறுடன் ஓராறு
பேதமும் நாதாந்தப் பெற்றியிற் கைவிட்டு
வேதஞ்சொல் தொம்பத மாகுதன் மெய்ம்மையே.

திருவருளால் ஆருயிர் தம்மறிவு விளங்குவதற்குப் பூத முதலாகச் சொல்லப்படும் உடலின்கண்ணுள்ள மெய்கள் (2139) தொண்ணூற்றாறு. அக் கருவிகளின் வேறுபாடுகளும் பல. இவை யனைத்தும் கருவிகளே யன்றிக் கருத்தாவல்ல. நாம் கற்கும் நூல் நம்முடைய அறிவு
ஒழுக்கம் அன்பு இன்பு விளங்குவதற்குக் கருவியாக இருப்பது இதற்கு ஒப்பாகும். அந்நூல் கருத்தா அன்று என்பது எல்லார்க்கும் உடன் பாடல்லவா? ஆனால் அந் நூலின் கருத்தா ஒரு கடவுளுணர்வுடைய நல்லாரென்பது சொல்லாமலே விளங்கும். அதுபோல் மெய்களாகிய தத்துவக் கூட்டத்துக்குக் கருத்தா முழுமுதற் சிவபெருமானே யாவன். அந் நூலையும் நாம் அறிவான் மிக்க பிறர் துணையின்றி நம்மால் கற்றுக்கொள்ள முடியாமலிருப்பதும் நம்முடைய நடைமுறைப் பழக்கத்திலுள்ள நாம் கண்ட வுண்மையேயாகும். அதுபோல் அம் மெய்க் கூட்டங்களை நம்முடன் பிணைத்து நம்மைக்கொண்டு இயக்குவித்து நம் அறிவை விளங்கச் செய்வது சிவபெருமானின் திருவருளாகிய அறிவாற்றலாகும். இக் கருவிகளால் நாம் முதற்கண் அறிவது நிலையில் பொருள்களாகிய வியத்தகு உலகமும்

நயத்தகு உலக நுகர்பொருள்களுமேயாம். ஆனால் அவைகள் காட்சிக்கினிய கல்லூரியும் மாட்சிமிக்க கல்லூரிக் கருவிப் பொருள்களும் போன்றனவாகும். கற்பவர்கள் கல்லூரியைக் கண்டும் கருவிப் பொருள்களைக் கொண்டும் அறிவு நிரம்பப்பெற்று அன்பொழுக்கினராய் இன்பச் செறிவினராய் 'நான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்' (147) என முன்னின்று அது பெறற்குரியாரனைவர்க்கும் பல்லாற்றானும் துணை நிற்றலே நல்லாராதற்குரிய நற்றவமாகும். அதுவே பிறவிப் பெரும் பேறு. அப் பேறு எய்தும் நெறியிற் செல்லுவதற்கு வாயிலாகிய கல்வியினைக் கல்லாது கல்லூரியையும் நூல் முதலிய கருவிப் பொருள்களையுமே வியந்து காலங்கழிப்பாராயின் பயனின்றிக் கால முடிவில் கல்லூரியினின்றும் மீண்டுங் கல்லூரி சென்று கற்கும் நிலைமையில் வெளிவருதல் ஏற்படும். அதுபோல் நாமும் இவ்வுடல் உலகுகளை நிலையென வியந்து சிவ அன்பு பெருகப்பெறாது அன்பர் பணி செய்யப் பெறாது புல்லிய வாழ்வு வாழ்வோமானால் சிவபெருமான் திருவடிக்கு ஆளாகாது பிறவாப் பெரும் பேறாம் இறவா இன்பம் எய்தப்பெற்றுச் சிறவாது அரிய பிறப்பினைப் பயனின்றிக் கழித்து மீண்டும் பிறப்போம். இத்தகைய உணர்வினை அருளால் உணர்வதே தன்னையுணர்வதாகும். அருளால் உணர்வதென்பது அருள் நினைவுடன் உணர்தல். அஃது நாம் ஒளியின் துணையால் உணர்வதும் உழைப்பதும் உறுபயன் உண்பதும் உண்பிப்பதும் போன்றாகும். எனவே இத்தகைய போதத்தினையுன்னி இதற்குக் கருவியாகச் சிவபெருமானால் படைத்தருளி அளிக்கப்பெற்ற தொண்ணூற்றாறுவகைக் கருவிகளை நிலையென ஓராது அவற்றின் மாறுபட்ட வேறுபாடுகளும் நாதாந்தத்

தன்மையும் நிலையில்லன எனும் உண்மையினை உணரும் முறையான் உணர்ந்து ஒழுகுவது செந்தமிழ் மறையோதுவதாகிய தன்னைக்காண்டல் என்னும் தொம்பத வுண்மையாகும். தத் - அது; பதி. துவம் - நீ; பசு. அசி - ஆகிறாய்; ஆகத் துணையாகிறான்; ஆக்கப்படுகிறாய், பாசம், அருள்.

## 2400. தற்பதம் என்றுந் தொம்பதந் தானென்றும்

2400. தற்பதம் என்றுந் தொம்பதந் தானென்றும்
நிற்ப தசியத்துள் நேரிழை யாள்பதஞ்
சொற்பதத் தாலுந் தொடரவொண் ணாச்சிவன்
கற்பனை யின்றிக் கலந்துநின் றானன்றே.

தற்பதமாகிய சிவனென்றும், தொம்பதமாகிய ஆருயிர் என்றும் தனித்தனியாக நிற்பது அசிபதம் சேராத இடத்து. அசிபதம் சேர்தல் என்பது: ஆருயிர் சிவத்தைச் சார்ந்து மாறின்றிச் சிவமாகும் நிலை. அஃது ஆகிறாய் என்பதாம். ஆகிறாய் என்பது அருளால் ஆக்கப்படுகிறாய் என்பதாகும். அந்நிலையில் திருவருள் வீழ்ச்சியாகிய சத்தினிபாதம் வந்து பொருந்தும். இதனை 'நேரிழையாள் பதம்' என ஓதியருளினர். இத் திருவருள் வீழ்ச்சியினால் சொல்லாலும் நிலையாலும் தொடரவொண்ணாத முழுமுதற் சிவபெருமான் வேறுபாடின்றிக் கலந்து-நின்றருளினன். கற்பனை - வேறுபாடு.

அசியத்துள் - அதிபத நிலையில், நேரிழையாள் பதம் - சத்திநிபாதம், கற்பனை - விகற்பங்கள், கலந்து - சீவசிவ பேதமின்றி.

# 2401. அணுவும் பரமும் அசிபதத் தேய்ந்து

2401. அணுவும் பரமும் அசிபதத் தேய்ந்து
கணுவொன் றிலாத சிவமுங் கலந்தால்
இணையறு பால்தேன் அமுதென இன்பத்
துணையது வாயுரை யற்றிடத் தோன்றுமே.

ஆருயிராகிய அணுவும், அவ் வுயிரினைச் சிவத்துடன் கூட்டுவதாகிய பரமாகிய திருவருளும் அசிபதமாகிய ஆக்கப்பாட்டால் பொருந்தி யாண்டும் எவ்வகைத் தடையுமின்றி இலங்கும் சிவபெருமான் கலந்தருளினால் ஒப்பில்லாது உயர்ந்து விளங்கும் பால் தேன் அமுது ஆகிய இவை கலந்த கலவை யொத்து இனிக்கும். அவ் வினிப்பு யாண்டும் தெவிட்டாது விளங்கும். இவ் வின்பப்பகுதி சொல்லிறந்த தொன்றாய்த் தோன்றும். பால் தேன் அமுது எனும் மூன்றும் முறையே ஆருயிர் பேருயிர் சீரருள் என்னும் மூன்றன் ஒருபுடை ஒப்பாகக் கூறலாம். ஆருயிர் - பசு. பேருயிர் - பதி.

அணு - ஆன்மா, பரம் - பரான்மா, பரை ஆகிய அருளுடன் கூடிய ஆன்மா, ஏய்ந்து - கூடி, கணு - தடை, இன்பத்துணை - இன்பத்தின் பகுதி.

## 2402. தொம்பதந் தற்பதந் தோன்றும் அசிபதம்

2402. தொம்பதந் தற்பதந் தோன்றும் அசிபதம்
நம்பிய சீவன் பரன்சிவ னாய்நிற்கும்
அம்பத மேலைச் சொரூபமா வாக்கியஞ்
செம்பொருள் ஆண்டருள் சீர்நந்தி தானன்றே.

தொம்பதம் திருவருளை நம்பி வாழும் வாழ்க்கையினையுடைய ஆருயிராகும். தற்பதம் ஆருயிரைச் சிவத்துடன் கூட்டும் திருவருளாகும். ஆருயிரும் பேருயிரும் ஒன்றாய்க் கலந்து தோன்றும் நிலை சிவனாகும். இந்நிலையினைச் சிறப்புநிலை எனக் கூறுவர். சிறப்பு நிலையெனினும் சொரூப நிலையெனினும் ஒன்றே. அந் நிலையினையுணர்த்தும் அச் சொல்லும் சிறப்புப் பெரும் பொருட்கிளவியாகும். பெரும் பொருட்கிளவி - மாவாக்கியம். ஆருயிர் செம்பொருளாகிய சிவனை அடைதற்பொருட்டுச் சீர்த்தி மிக்க நந்திக் கடவுள் ஆண்டருளுகின்றனன்.

அம் பதம் - அழகிய அந்தப் பதம். மேலைச்சொரூபமா வாக்கியம் - கரணம் கடந்த உருவத்தை அறிவிக்கும் மகா வாக்கியம். செம்பொருள் - சிறந்தபொருள்.

## 2403. ஐம்ப தறியா தவரு மவர்சிலர்

2403. ஐம்ப தறியா தவரு மவர்சிலர்
உம்பனை நாடி யுரைமுப்ப தத்திடைச்
செம்பர மாகிய வாசி செலுத்திடத்
தம்பர யோகமாய்த் தானவ னாகுமே.

ஆருயிர்கட்கு அகவை ஐம்பதாகியும் முப்பொருள் உண்மையினைத் தப்பின்றித் தெரியுந்தன்மை வாய்த்திலது. அகவை - வயது. அதுபோல் சிலர் அறியாதவராவர். அவரும் அருள் நினைவால் 'தத்துவமசி' என்னும் முப்பதத்தை நாடிப் பெறுவதாகிய சிவனை நாடும் வழியாக முப்பதத்திடை வாசியாகிய உயிர்ப்பினைச் செலுத்தியிடச் செம்பர நிலைக்கு வழியமையும். அவ் வழி தமக்குரிய சிவனுடன் கூடுவதாகிய யோகமாகும். இச் செறிவு வழியாக ஆருயிர் சிவத்துடன் கூடிச் சிவனாகும்.

ஐம்பது - ஐம்பது வயதாகியும், செம்பரம் - செம்பொருள், வாசி செலுத்திட - பிராணாயாமப் பயிற்சி செய்ய.

## 2404. நந்தி யறிவும் நழுவில் அதீதமாம்

2404. நந்தி யறிவும் நழுவில் அதீதமாம்
இந்தியஞ் சத்தாதி விடவிய னாகும்
நந்திய மூன்றிரண் டொன்று நலமைந்து
நந்தி னனவாதி மூட்டும் அனாதியே.

பொருந்திய ஆருயிர்அறிவு அருள் நினைவால் நழுவப் பெறுமானால் மேற்பாடு என்று சொல்லப்படும் அப்பால் நிலையாகும். மேற்பாடு - மேலாலவத்தை. பொறிகள் ஓசை முதலிய புலன்களைக் கொள்ளாது நிற்கும். அந் நிலை விட்ட நிலையாகும். ஆருயிராகிய அவனும் விட்டவனாவன். அம் மேற்பாட்டின்கண்ணும் பொருந்திய உறக்கம், கனவு, நனவு என மூன்றுண்டு. கனவு நனவு என இரண்டுண்டு. நனவு என ஒன்றுண்டு. இந் நன்மைப் பாடாகிய மேற்பாடு ஐந்தும் அகன்றால் தொன்மைப் பெரும் பொருளாம் சிவபெருமான் நனவாதியிற் கூட்டுவிப்பன்.

அறிவு நழுவில் - உலக பாசம் ஒழிந்தால், விடவியன் - விட்டவன், மூன்றிரண்டு ஒன்று நாலைந்து - ஒன்று இரண்டு மூன்று நான்கு ஐந்து அவத்தைகள்.

## 2405. பரதுரி யத்து நனவு படியுண்ட

2405. பரதுரி யத்து நனவு படியுண்ட
விரிவிற் கனவும் இதனுப சாந்தத்து
உரிய சுழுனையு மோவுஞ் சிவன்பால்
அரிய துரியம் அசிபத மாமே.

மேற்பாட்டின்கண் ஏற்படும் பேருறக்கநிலையில் நனவு நிலை பொருந்திய இயல்பும் உண்டாம். இதனது விரிந்த நிலையில் கனவும்
ஏற்படும். இதன்மேல் ஏற்படும் உறக்கமும் உண்டு. அதனை ஒழிவாகிய உபசாந்தம் என்ப. அதுவும் நீங்கியவிடத்துச் சிவபெருமான் திருவடிக்கண் ஏற்படும் அரிய பெரிய துரியம் என்ற சொல்லப்படும். இந்நிலை அருளால் ஆக்கப்படுமுண்மை புலப்படுத்துவதே அசிபதமாகும்.

# 10. முப் பரம்

10. முப் பரம் 2406. தோன்றியென் னுள்ளே சுழன்றெழு கின்றதோர்

2406. தோன்றியென் னுள்ளே சுழன்றெழு கின்றதோர்
மூன்று மடிமண் டலத்து முதல்வனை
ஏன்றெய்தி யின்புற் றிருந்தே யிளங்கொடி
நான்று நலஞ்செய் நலந்தரு மாறன்றே.

என் உடம்பகத்துத் தோன்றி என்னுள்ளே வலம் சுழித்து எழும் மண்டிலங்கள் மூன்றுள. அவைமுறையே தீமண்டிலம், ஞாயிற்று மண்டிலம், திங்கள் மண்டிலம் எனச் சொல்லப்பெறும். இம்மூன்று மண்டலத்துக்குரிய முழுமுதல்வனாகிய சிவபெருமானைத் திருவருளால் ஏற்றுப்பொருந்தி இன்புற்றிருப்பம்; இறங்கொடியாகிய குண்டலினியை உயிர்ப்புப் பயிற்சியால் எழுப்பி அதனுடன் கலந்துநின்றுணர்ந்த காலத்தென்க. அக்காலத்து முழுநலமும் வந்து எய்தும் என்க.

மூன்றுபடி மண்டலம் - சோம, சூரிய, அக்கினி மண்டலங்கள். இளங்கொடி - குண்டலி, நான்று - கலந்து.

## 2407. மன்று நிறைந்தது மாபர மாயது

2407. மன்று நிறைந்தது மாபர மாயது
நின்று நிறைந்தது நேர்தரு நந்தியுங்
கன்று நினைந்தெழு தாயென வந்தபின்
குன்று நிறைந்த குணவிளக் காமே.

முழுமுதற் சிவபெருமானாகிய விழுப்பொருள் அழிவில்லாத அறிவுப் பெருவெளியாம் மன்றின்கண் நிறைந்துள்ளது. எவர்க்கும் எவைக்கும் மேலாகிய பெரும்பொருளாயதும் அதுவே. எங்கணும் நீக்கமற நின்றுநிறைந்ததும் அதுவே. அவ்வவ் வுயிர்களின் செவ்விக் கேற்ப நந்திப்பெருமானும் நேர் எழுந்தருள்வன். அப் பெருமான் கன்றை நினைந்து கனைத்தெழுந்தோடி வரும் தாயென எழுந்தருளிவந்து ஆட்கொண்டருள்வன். அங்ஙனம் ஆட்கொண்டருளியபின் அவன் மலை நிறைந்த விளக்கொத்து அலைவின்றி நிறைந்த எண்குண விளக்காய் இலங்கியருள்வன்.

## 2408. ஆறாறு தத்துவத் தப்புறத் தப்பரங்

2408. ஆறாறு தத்துவத் தப்புறத் தப்பரங்
கூறா வுபதேசங் கூறிற் சிவபரம்
வேறாய் வெளிப்பட்ட வேதப் பகவனார்
பேறாக ஆனந்தம் பேணும் பெருகவே.

அருஞ்சைவர் கொள்ளும் முப்பத்தாறு (2139) மெய்களையும் கடந்து அப்பால் விளங்குவது முழுமுதுற் சிவமாகிய அப்பெரும் பொருள். பரம் - பெரும்பொருள். சொல்லாது சொல்லும் கைவிர (2385) லடையாளமாகிய செவியறிவுறூஉ சிவபரத்தைப் பற்றியதாகும். செவியறிவுஉ - உபதேசம். சிறப்பாக வெளிப்பட்ட அருளோன் மெய்க் கண்ணுள்ள செந்தமிழ்மறையை வெளிப்படுத்தருளிய பகவனாராவர். அவர்தம் திருவடியுணர்வால் பெறற்கரும் பேறாகிய பேரின்பப் பேறு நம்மைப் பெருகப் பேணும் என்க. தன்னை நினைவாரைத்தான் முன்னினையுந் தணவாத் தண்ணளியோன் சிவன்.

கூறா உபதேசம் - சொல்லாமற் சொல்லுதல், குறிப்பாலுணர்த்தல். வேத் பகவனார் - வேதத்தை வெளியிட்ட சதாசிவனார்.

## 2409. பற்றறப் பற்றிற் பரம்பதி யாவது

2409. பற்றறப் பற்றிற் பரம்பதி யாவது
பற்றறப் பற்றிற் பரனறி வேபரம்
பற்றறப் பற்றினிற் பற்றவல் லோர்கட்கே
பற்றறப் பற்றிற் பரம்பர மாகுமே.

உலகியற் பற்றுக்கள் ஒழிக்கவேண்டிய நிலவிய சிவபெருமான் பற்றினைப் பற்றுக. அதுவே மேலாகிய பதியின் திருவடியைப் பற்றுவதற்கு வாயிலாகும். அங்ஙனம் எப்பற்றுமின்றி அம்மெய்ப் பொருள்பற்று ஒன்றுமே கொண்டு 'அன்பறாது என்நெஞ்சவர்க்கு' என்ற முறையிற் பற்றிநிற்பின் அவ்வுயிர் சிவபரமேயாகும். பற்றறச் செய்யும் பற்றாகிய திருவடியைப் பற்றின் சிவபெருமானுடன் இரண்டறக் கலந்து இறவா இன்பம் எய்தும் எழினிலை வாய்க்கும். அத்தகைய வல்லோர் நல்லோரால் பரம்பரம் என்று அழியாப் புகழுடன் அழைக்கப்படுவர்.
(அ. சி.) பற்று - உலகப் பற்று, பரன் அறிவு - சிவஞானம், பரம் பரமாம் - ஆன்மா சிவமாம்.

## 2410. பரம்பர மான பதிபாசம் பற்றாப்

2410. பரம்பர மான பதிபாசம் பற்றாப்
பரம்பர மாகும் பரஞ்சிவ மேவப்
பரம்பர மான பரசிவா னந்தம்
பரம்பர மாகப் படைப்ப தறிவே.

திருவருளால் தொன்றுதொட்டு வழிவழியாகத் தோன்றாத் துணையாக நின்றருளும் பதியினைப் பற்றினால் பாசம் பற்றாவாகும். யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடைய சிவபெருமான் திருவடியினைப் பற்றினார்க்கு அவன் எழுந்தருளிவந்து இன்புறுத்துவன். அதுவே மேலான திருவடியின்பமாகும். இவையனைத்தினையும் திருவடியுணர்வால் திருவருள் உந்துவதால் அறிவதே நிலைபெற்ற அறிவாகும்.

பரம்பரமாகும் பரம் - ஆன்மா; பரம்பரமாக - முறையாக.

## 2411. நனவிற் கலாதியா நாலொன் றகன்று

2411. நனவிற் கலாதியா நாலொன் றகன்று
தனியுற்ற கேவலந் தன்னில்தா னாகி
நினைவுற் றகன்ற அதீதத்துள் நேயந்
தனையுற் றிடத்தானே தற்பர மாமே.

நனவுக் காலத்தே உழைப்பு, உணர்வு, உவப்பு, ஆள்மருள் என்னும் ஐந்தும் செயலுறாது அகல ஆருயிர்நிற்கும் நிலை தனிநிலை யாகிய புலம்பாகும். தன்னில் தானாக நின்று அகன்ற அந்நிலையில் உள்ளது அப்பால் நிலையாகும். அந்நிலையில் உணர்வுக்கு உணர்வாய் விளங்கப்படும் பொருள் சிவபெருமானாவன். அச் சிவபெருமான் திருவடியிணையினைத் திருவருள் நினைவால் கொள்ள அவ்வுயிர் தற்பரசிவமாய்த் திகழும். உழைப்பு முதலியவற்றை முறையே கலை, வித்தை, அராகம், புருடன், மாயை எனவும் கூறுப.

(அ. சி.) நாலொன்று - ஐந்து: கலை, வித்தை, அராகம், புருடன், மாயை. நேயந்தனை - சிவத்தை.

# 2412. தற்கண்ட தூயமுந் தன்னில் விலாசமும்

2412. தற்கண்ட தூயமுந் தன்னில் விலாசமும்
பிற்காணுந் தூடணந் தானும் பிறழ்வுற்றுத்
தற்பரன் கால பரமுங் கலந்தற்ற
நற்பரா தீதமு நாடக ராதியே.

திருவருள் நினைவால் தலைவன்றன் உண்மையுணர்ந்து அதன்வாயிலாக ஆருயிர் தன் உண்மையினையும் உணரும். இதுவே தற்காண்டலென்ப. இந்நிலை மலமகன்ற நலமார் தூயநிலை என்ப. இதனைத் 'தூயம்' என ஓதினர். இதனை நின்மலாவத்தை எனவும் கூறுப. இந்நிலையில் ஆருயிர் பேருயிராகிய சிவபெருமானின் செறிவுடன் செறிந்திருப்பதால் தன் விரிவும் புலனாகும். செறிவு - நிறைவு; பரப்பு; வியாபகம். பின்பு மலம் கன்மம் மாயைகளை மீறி நிற்பதாகிய தூடணமும் உண்டாகும். தூடணம் - மீறிநிற்றல். தானும் முன்மலத்துடன் பிணிப்புற்ற நிலை பிறழ்வுறுதலாகிய நினைப்புமாறுதலை எய்தும். நினைப்புமாறுதலாவது முன் நிலைக்குமென்று நினைத்த உடல்கலன் உலகம் உணா இவை நிலையா என்னும் உண்மை நினைவு உண்டாதல். தற்பரன் என்பது தானே முழுமுதலென்பதாம். அவனே சிவபெருமான். அவனே காலங்கடந்த மேலோன். அவன் ஆருயிரைக் கலந்து நன்மைப் பாலாகிய நனிபெரும் மேலைநிலையாக்குவன். இதனை அகநாடுதலைச் செய்யும் ஆதிநிலையென்ப.

தூயம் - நின்மலத்துவம். விலாசம் - விரிவு. பராதீதம் - பரத்தில் அதீதம். தூயம் இஃதோர் அருஞ்சொல்.

# 11. பரலட்சணம்

11. பரலட்சணம் 2413. அதீதத்து ளாகி யகன்றவன் நந்தி

2413. அதீதத்து ளாகி யகன்றவன் நந்தி
அதீதத்து ளாகி யறிவிலோன் ஆன்மா
மதிபெற் றிருள்விட்ட மன்னுயிர் ஒன்றாம்
பதியிற் பதியும் பரவுயிர் தானே.

அப்பாலாகிய மேல்நிலைக்கண் நந்தி நிறைந்துநின்றனன். ஆணவப் பிணிப்பால் அறிவில்லாத கிடப்புநிலை எய்திய உயிர் திருவருள் நினைவால் உண்மை உணர்வு எய்தும். அக் கிடப்பு நிலையில் அறிவு விளங்காது கிடந்ததும் இப்பொழுது புலனாகும். உண்மை யுணர்வு பெற்றதனால் இருள் அகன்று அவ்வுயிர் தூய்மை எய்தும். அம் மன்னுயிர் தன்னைவிட்டு நீங்காது கலப்பால் ஒன்றாம் நிலையிலுள்ள பதியாகிய சிவபெருமான் திருவடியிற் பதியும். அப்பொழுது அவ்வுயிர் பரவுயிர் அல்லது சிறப்புயிர் எனப் பெயர் பெறும்.

அகன்றவன் - வியாபித்தவன். மதி - ஞானம். இருள் - ஆணவம்.

## 2414. ஆதியும் அந்தமும் இல்லா வரும்பதி

2414. ஆதியும் அந்தமும் இல்லா வரும்பதி
சோதிப் பரஞ்சுடர் தோன்றத்தோன் றாமையின்
நீதிய தாய்நிற்கும் நீடிய வப்பர
போதம் உணர்ந்தவர் புண்ணியத் தோரன்றே.

முதலும் முடிவும் இல்லாத அறிதற்கரிய பெரும்பதி சிவபெருமான். அவன் பேரொளிப் பிழம்பாய் உள்ளொளியாய் விளங்கும் ஒள்ளியன். நல்லார்க்குத் தோன்றியும் பொல்லார்க்குத் தோன்றாதும் நிற்கவல்லான். அதனால் அவன் அறமுறை குன்றியவனல்லன். அறமுறை - நீதி. யாண்டும் முறைமையோடே நிற்பன். என்றும் பொன்றாது நிலைப் பாடுடையதாக விருக்கும் சிவஞானபோதவழியினன். அம்மேலான சிவஞானபோதத்தை அருள்நினைவால் உணர்வோர் திருவருட்புண்ணியச் செல்வராவர்.

# 2415. துரியங் கடந்து துரியா தீதத்தே

2415. துரியங் கடந்து துரியா தீதத்தே
அரிய வியோகங்கொண் டம்பலத் தாடும்
பெரிய பிரானைப் பிரணவக் கூபத்தே
துரியவல் லார்க்குத் துரிசில்லை தானே.

துரியமாகிய பேருறக்கமும் நீங்கித் துரியாதீதமாகிய அப்பால் நிலையை எய்தினர்க்கு ஓர் அரிய ஒழிவு உண்டாகும். அவ்வொழி வினைப்பெற்று ஐவகை (2361) மன்றருங்களுள் வகர அடையாளமாகிய பொன்னம்பலத்தின்கண் ஐந்தொழிலருட்கூத்தை இயற்றுவியாநிற்பன். அவனே பெரிய முதல்வனாவன். மேலும் அவனை ஓங்கார வட்டத்தினுள்ளே ஆராய்ந்தறியவல்லார்க்க எவ்வகைக் குற்றமும் இல்லை. ஓங்கார (2271) வட்டத்தினுள் ஒலி, ஒளி, அ, உ, ம் என்னும் ஐந்தெழுத்தும் காணப்படும். இவை முறையே ஒருபுடையொப்பாகச் 'சிவயநம' என்னும் ஐந்தெழுத்தையும் பொருளையும் ஓதுவனவாகும். ஆதலால் இவற்றை ஆராய்வார் திருவைந்தெழுத்தை ஆராய்வார் பெறும்பயனைப் பெறுவர் ஆகவே துரிசிலாராவர். துரியவல்லார் - துருவவல்லார். துருவ என்பது துரிய என நின்றது.

வியோகம் - ஒழிவு. பிரணவக்கூபம் - ஓங்கார வட்டத்துள். துரிய - ஆராய்ந்து அறிய.

## 2416. செம்மைமுன் னிற்பச் சுவேதந் திரிவபோல்

2416. செம்மைமுன் னிற்பச் சுவேதந் திரிவபோல்
அம்மெய்ப் பரத்தோ டணுவனுள் ளாயிடப்
பொய்ம்மைச் சகமுண்ட போத வெறும்பாழிற்
செம்மைச் சிவமேரு சேர்கொடி யாகுமே.

செந்தமிழ் மூதாதையராகிய சித்தர்கள் குழூஉக் குறியாகக் கந்தகத்தைச் செம்மையென்றும், இரசத்தை வெள்ளை யென்றும் வழங்குவது மரபு. செம்மையின் முன்னிலையில் வெண்மை மாறுதல் எய்துவதுபோல் அம்மைக்குரிய முழுமுதற் சிவத்துடன் அணுவனாகிய ஆருயிர் பிரிவின்றிக் கலப்புறும். அப் பரம் அழகிய அழிவில்லாத பெரும்பொருளாதலின் அம்மெய்ப்பரம் என ஓதினர். நிலை பேறில்லாத சுட்டியுணரப்பட்ட உலகியல் நுகர்வுணர்வு அடங்கிவிடும். கலப்பில்லாத தூய இயற்கை அறிவொளிப் பெருவெளி வெறும்பாழ் எனப்படும். அப் பாழின்கண் செம்மைச் சிவமாம் பொருளில் பொன்மலை வெளிப்பட்டு விளங்கும். அம் மலையுடன் ஆருயிர்கள் தம்மை மறந்து மெய்ம்மைக் கலப்புற்று இரண்டறநின்று திரண்ட பேரின்பநுகர்வுச் சிறப்புறும். இதற்கு ஒப்பு பொன்மலையைச் சேர்ந்த காகம் பொன்வண்ணமாய் மன்னுவதாகும். கொடி - காகம்.

செம்மை - கந்தகம். சுவேதம் - பாதரசம். அணுவன் - ஆன்மா. போதவெறும் பாழ் - சுத்த ஞான ஒளி. மேரு சேர் கொடி - மேருவைச் சேர்ந்த காக்கைபோன்ற

தன்மை. இது 'மேருவைச்சேர்ந்த காகமும் பொன்னாம்' என்னும் பழமொழியை அடியாகக் கொண்டது.

## 2417.வைச்ச கலாதி வருதத்து வங்கெட

2417.வைச்ச கலாதி வருதத்து வங்கெட
வெச்ச இருமாயை வேறாக வேரறுத்து
உச்ச பரசிவ மாமுண்மை யொன்றவே
அச்சம் அறுத்தென்னை யாண்டனன் நந்தியே.

ஆருயிர்க்கு அறிவு விளங்குதற்பொருட்டு ஆண்டவன் முதற்கண் படைத்து விட்டுநீங்காது ஒட்டியுறுமாறு அமைத்த உணர்வு மெய்ஊ முதல் ஏழாகும். அவை ஊழி, ஊழ், உழைப்பு, உணர்வு, உவப்பு, உழைப்பது, உழல்வு (2411) என்பன. இவை முறையே காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை எனவும் கூறுப. இவற்றால் வரும் சுட்டுணர்வும் சிற்றுணர்வும் அடங்கும். இவை ஒடுங்கும். இவையே தத்துவம் கெடுதல் என்பதாகும். இம் மெய்கெட எஞ்சிய தூமாயையும் மூலப் பகுதி மாயையும் வேறாகும். பொருட்டும் பின் முளையாவாறும் வேரறுத்தல் வேண்டும். திருவருளால் வேரறுக்கவே யாவர்க்கும் யாவைக்கும் மேலாய் விளங்கும் உச்ச பரசிவனாம் பெரும்பொருள் வெளிப்படும். வெளிப்டலும் ஆருயிர் அவ்வுண்மைப் பொருளுடன் கலந்து இன்புறும். அச் சிவபெருமான். பிறப்பு இறப்பு ஆகிய அச்சத்தை நீக்கியருள்வன். அச்ச நீக்கி நந்தி ஆண்டருள்புரிந்தனன். உழைப்பது - ஆள். உழல்வு - மருள்; தூவாமாயை.

## 2418. என்னை யறிய இசைவித்த என்னந்தி

2418. என்னை யறிய இசைவித்த என்னந்தி
என்னை யறிந்தறி யாத விடத்துய்த்துப்
பின்னை யொளியிற் சொரூபம் புறப்பட்டுத்
தன்னை யளித்தனன் தற்பர மாகவே.

என்னை அறியும் இயல்பு எனக்கு இல்லாத ஆணவப் பிணிப்போடு மட்டும் இருந்த நிலையில் சிவபெருமான் மாயாகாரிய உடம்பினை உள்ளதாகிய மாயையினின்று உள்ளுமளவால் படைத்தளித்தருளினன். அதனால் என்னை யறியுமாறு என்னை அவ்வுடம்புடன் இசைவித்தருளினன் நந்தி. அருளால் என்னை யான் அறிந்ததும் உலகியற் பொருள்கள் ஏதும் அறிந்திலன். அவனே அத்தகைய அறிவுப் பெருவெளியின்கண் என்னைச் செலுத்தினன். பல்வேறு அறைகளையும் படிகளையும் கடந்து மேன்மாடத்தேறி நிலா முற்றத்துற்றவன் தான் இதுகாறும் தங்கியும் கிடந்தும் நடந்தும் கடந்தும் வந்த இடங்களொன்றையும் அறியாது நிலாமுற்றத்து வான்வெளி மட்டும் உணர்ந்து கொண்டிருப்பது இதற்கு ஒப்பாகும். அதன்பின் வெளிப்படும் திருவருள் ஒளியில் இயற்கை உண்மை அறிவின்ப வடிவம் தோன்றும். அந்நிலைக்கண் தன்னை யளித்தருள்வன். அவனே தற்பரமாகிய முழுமுதற் சிவபெருமானாவன். ஆருயிர் தானாம் வண்ணமாவதற்கு இங்ஙனம் அருள்புரிகின்றனன்.

சொரூபம்-ஆன்ம உருவம்.

## 2419. பரந்துஞ் சுருங்கியும் பார்புனல் வாயு

2419. பரந்துஞ் சுருங்கியும் பார்புனல் வாயு
நிரந்த வளியொடு ஞாயிறு திங்கள்
அரந்த அரனெறி யாயது வாகித்
தரந்த விசும்பொன்று தாங்கிநின் றானே.

நிலம் யாங்கணும் பரந்தும், நீர் அதனிற் சுருங்கியும் இருப்பதால் இத்தகைய அடைகொடுத்தருளினர். நிலம், நீர், அரத்த வண்ணமாகிய தீ, எங்கணும் நிறைந்த காற்று, யாவற்றிற்கும் இடங்கொடுக்கும் வானம், ஞாயிறு, திங்கள் ஆகிய காரியப் பொருள்கள் ஏழனையும் படைத்தருள்வது ஆதிசத்தியாகிய நடப்பாற்றலாகும். அப் படைப்பினை அவ்வாற்றல் புரிகின்றதென்னும் உண்மையினைச் சுட்டத் 'தரந்த' என்றருளினர். தரு + அந்த என்ற சொல் தரந்த என்றாயிற்று. தரு - தரப்படுகின்ற. அந்த முன்னோதப்பட்ட அந்த உலகங்கள். அவ்வுலகங்களைப் படைத்தருளும் அந்த அறிவுப் பெருவெளியாகிய விசும்பினைத் தாங்கி நின்றருள்பவன் சிவபெருமான் ஆவன். அவனை யறியும் திருநெறி அரனெறியாகும்.

அரந்த அரன் - சிவந்த நிறமுள்ள அரன், தரந்த - தரு + அந்த, உற்பத்தி செய்வதான அந்த.

## 2420. சத்தின் நிலையினில் தானான சத்தியுந்

2420. சத்தின் நிலையினில் தானான சத்தியுந்
தற்பரை யாய்நிற்குந் தானாம் பரற்குடல்
உய்த்தகு மிச்சையில் ஞானாதி பேதமாய்
நித்த நடத்து நடிக்குமா நேயத்தே.

சிவசத்து என்று சொல்லப்படும் மெய்ப்பொருளாம் சத்தின்நிலையினில் தானாக விளங்கும் சத்தியும், அச் சிவன் பரன் என நிற்கும் நிலையில் அம்மையும் பரை என நிற்பள். அவள் பரனாகிய சிவபெருமானுக்கு உடலாக நிற்பள். உலகங்களைப் படைத்து உயிர்களை உய்த்து உடனாயிருந்து செலுத்துமுறையில் தன் அன்பாற்றலகிய இச்சையினால், அதி ஆற்றல், அறிவாற்றல், தொழிலாற்றல் விழைவாற்றலாக வெளிப்படைப் பெயர்பெற்று நாடொறும் திருவருட்டொழில் ஐந்தினையும் சீர்பெற நடத்தியருள்வள். அஃது அவளுக்கோர் திருவிளையாடலாககும். இத் திருவளையாட்டுச் சிவபெருமான் திருவுள்ளத்தை இடனாகக்கொண்டு இயற்றப்பெறும்.

தற்......பரற்கு - பரை என்னும் சத்தியுடன் சேர்ந்த பரன், உடல் உய்த்தகும் - சரீரம் படைத்தலுக்கு உரிய. இச்சையின் ஞானாதி - ஆதிசத்தி, இச்சா சத்தி, கிரியா சத்தி, ஞானசத்தி முதலிய சத்திகளாய். மாநேயத்தே - பெருமையுள்ள சிவத்தினிடத்திலே.

## 2421. மேலொடு கீழ்ப்பக்க மெய்வாய்கண் ணாசிகள்

2421. மேலொடு கீழ்ப்பக்க மெய்வாய்கண் ணாசிகள்
பாலிய விந்து பரையுட் பரையாகக்
கோலிய நான்கவை ஞானங் கொணர்விந்து
சீலமி லாவணுச் செய்திய தாகுமே.

திருவருள் ஆருயிரை அகலாது நின்றுகாத்தருளுதற் பொருட்டு மேல், கீழ், பக்கம், மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் இவற்றொடு விரவி விந்து எனப்படும் ஒளிவழிவாய் நின்றுகாத்தளிக்கும் அவ்வருள் அறிவாற்றலாகிய பரையாகும். அப் பரை, பேரறிவாகிய சிவனிடத்து அடங்கிவிளங்கும். ஆருயிர்கள் உய்தற்பொருட்டு எண்ணி அமைத்துள்ளன நன்னெறி நான்மையாகும். அவை முறையே சீலம், நோன்பு, செறிவு, அறிவு எனப்படும். இவற்றால் திருவடியுணர்வு கைகூடும். அதன்பொருட்டு ஒளியுணர்வாகிய விந்து ஞானம் மேலெழுந்து விளங்கும். கருவியொடு கூடாவழிச் சீல முதலிய ஏதும் ஆருயிர்க்கு விளங்கா அவற்றை விளக்குவித்தற்பொருட்டுத் திருவருள் தம் விழைவால் திருத்தொழில் ஐந்தும் உள்ளிட்டு ஆவியின்கண் புரிவதே அம்மையின் அருளாகும். ஆவு - ஆருயிர்.

பாலிய - ஆன்மாக்களைக் காத்தற்பொருட்டு. கோலிய- சூழ்ந்த. அனுச்செய்தி - ஆன்மாக்களுக்காகச் செய்யும் ஐந்தொழில்.

## 2422. வேறா மதன்தன்மை போலுமிக் காயத்தில்

2422. வேறா மதன்தன்மை போலுமிக் காயத்தில்
ஆறாம் உபாதி யனைத்தாகுந் தத்துவம்
பேறாம் பரவொளி தூண்டும் பிரகாசமாய்
ஊறா யுயிர்த்துண் டுறங்கிடு மாயையே.

ஆருயிர் உடலொடுங்குங் காலத்தும் உடல் தொடங்குங் காலத்தும் வேறாயிருக்கும். அதுபோல் உடலுடன் கூடியுள்ள காலத்தும் அதன் தன்மை வேறாயிருத்தல்வேண்டும். உடலகத்து ஆறுநிலைகள் உண்டு. இவற்றை ஆறாதாரம் என்ப. இவையும் வருத்தந் தருவனவேயாகும். இவைபோல் ஏனைத் தத்துவக் கூட்டங்களும் வருத்தந் தருவனவேயாகும். திருவடிப்பேறாகிய அறிவுப் பேரொளி தூண்டும் சுடரொளியாகக் காணலாம். இத் திருவொளி தோன்றுதலும் ஒன்றின் பாகுபாடாகிய இருவேறு மாயையும் ஊறாவுயிர்த்தலாகிய பெருமூச்சு விட்டுச் செயலற்று உறங்கிக் கிடக்கும். ஊறா - ஊறி; பெருகி: செய்யா என்னும் வாய்பாட்டு வினைஎச்சம்.

ஆறாம் உபாதி - ஆறு ஆதனங்களின் அனுபவம். ஊறாய் - குற்றமுடையதாய், உயிர்த்துண்டு-பெருமூச்சுவிட்டு.

## 2423. தற்பர மன்னுந் தனிமுதற் பேரொளி

2423. தற்பர மன்னுந் தனிமுதற் பேரொளி
சிற்பரந் தானே செகமுண்ணும் போதமுந்
தொற்பதந் தீர்பாழிற் சுந்தரச் சோதிபுக்கு
அப்புற மற்றதிங் கொப்பில்லை தானன்றே.

தானே முழுமுதலாய் நிலைபெற்றிருக்கும் தனி முதற் பேரொளி சிவபெருமானாவன். அவனே இயற்கைப் பேரறிவும் பெரும் பொருளுமாவன். அவன் திருவருளால் ஆருயிர்கள் உலகவுண்மையினை அறிந்து அகலும். அதற்குத் துணையாகநிற்கும். அறிவுக்கு அறிவாம் பேரறிவாக நிற்பதும் அப் பெரும் பொருளே. தலைவனைக் கண்டு கைக்கொண்டவிடத்து தன் நாமங்கெடுதல் தலைவிக்கு இயல்பாகும். அது,
'தன் நாமங்கெட்டாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே' என்னும் அப்பர் அருண்மொழியான் உணரலாம். அதனால் தொம்பதமாகிய நீ என்னும் முன்னிலைப் பெயர் நீங்கும். பின்பு அவ்வுயிர் படர்க்கைப் பொருளுடன் படர்ந்து அதனுடன் பிரிப்பின்றி ஒன்றாய்க் கலந்து அதனுள்ளடங்கி அதன் பெயரே பெற்று விளங்கும். இப் பெயர் மன்னும் சார்பால் துன்னியதாகும். இந்நிலை மாற்றம் மனங்கழிய நிற்கும் போற்றரும் பொருவில் அருள்நிலையாகும். அதனால் அது பாழ் எனப் பகரப்பட்டது. அங்குச் சுட்டிறந்தறியும் அறிவிற்குப் புலனாம் அழகிய திருவருட் பேரொளியுண்டாம். ஆருயிர் அப் பேரொளியுடன் கலக்கும் - சாரும். சார்ந்த பின்பு அதற்கு ஒப்பாக வேறொன்றும் உண்டாகமாட்டது.

செகமுண்ணும் போதம் - உலகத்தை அறியும் அறிவு.
பாழ் - ஆசையற்ற இடம்.

# 2424. பண்ணடை மறைகள் பரவான் உடலென்னுந்

2424. பண்ணடை மறைகள் பரவான் உடலென்னுந்
துண்ட மதியோன் துரியாதீ தந்தன்னைக்
கண்டு பரனுமக் காரணோ பாதிக்கே
மிண்டி வைன்சுத்த னாகான் வினவிலே.

பண்டைத் தொன்மைத் தென்மறைகள் தூமாயைக்குரிய மேல்வெளியாகிய பரவானைச் சிவபெருமானின் திருவுடலாகத் தெளியுமாறு செப்புகின்றன. எனினும் அவை ஏற்றுரையாகும். வளரும் பிறையாகிய துண்டமதி என்பது விளக்க விளங்கும் அறிவினையுடைய ஆருயிரின் அடையாளம் ஆகும். அம் மதியினைத் தாங்கும் சிவபெருமான் அப்பலைக்கு அப்பாலாவுள்ள துரியாதீதத்தனாவன். அந்நிலையில் திருவருள் நினைவால் தன்னைக் கண்டு காரணநிலையும் கடந்த நிலையே சிவபெருமான் நிலையாகும். உலக காரணமாகிய தூமாயையைப் பொருந்திய உயிர் முழுநிலையாகிய தூநிலையை எய்தியதாகாது. இதனை வினவி ஆராயின் இதற்கும் அப்பாலாகிய மேனிலை புலனாகும்.

பண்டை மறைகள் - பழைய தமழ் நான்மறைகள் (இது புதிதாகத் தமிழ்நாட்டில் நுழைந்த ஆரிய மறைகளை நீக்கிக் கூறியது ஆகும்.) பரவான் - பரமாகாயம், காரணோபாதி - சுத்தமாயை; மிண்டினவன் - சேர்ந்தவன்.

## 2425. வெளிகால் கனலப்பு மேவுமண் ணின்ற

2425. வெளிகால் கனலப்பு மேவுமண் ணின்ற
தளியா கியதற் பரங்கா ணவன்றான்
வெளிகால் கனலப்பு மேவுமண் ணின்ற
வெளியாய சத்தி யவன்வழி வாமே.

வெளியாகிய விசும்பு, காலாகிய காற்று, கனல், நீர். மண் என்று சொல்லப்படும் ஐந்தின்கண்ணும முறையே பாரிடை ஐந்தாய்ப் பரந்தாய் போற்றி, நீரிடை நான்காய் நிகழ்ந்தாய் போற்றி, தீயிடை
மூன்றாய்த் திகழ்ந்தாய் போற்றி, வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி, வெளியிடை ஒன்றாய் விளைந்தாய் போற்றி' என்னும் மறை முடிவின்படி சிவபெருமான் நின்றருள்கின்றனன். அதனால் இவ்வைம் பூதங்களும் இயங்குமாறு அங்கு நின்றருள்வது பேரிரக்கமாய அளிசேர் தற்பரங்காண் என்றருளினர். அவன் இவ்வைந்தினிடமாகத் தன்னை விட்டுநீங்காத மரமும் காழ்ப்பும் போன்ற திருவாணை வழியாகவே நிறைந்தருளுகின்றனன். அவ்வாணையே பேரறிவுப் பெருவெளியாகிய சத்தியென்று பெரியோரால் சொல்லப்படும். அத் திருவாணையே சிவபெருமானுக்குத் திருமேனியாகும்.

நின்ற - நிலைபெற்றிருக்கின்ற, வெளியாய சத்தி - பரமாகாய சத்தி. அவன் வழிவாம் - அந்தப் பரனுடைய வழிவாம்.

## 2426. மேருவி னோடே விரிகதிர் மண்டலம்

2426. மேருவி னோடே விரிகதிர் மண்டலம்
ஆர நினையும் அருந்தவ யோகிக்குச்
சீரார் தவஞ்செய்யிற் சிவனருள் தானாகும்
பேரவும் வேண்டாம் பிறிதில்லை தானன்றே.

(ப. இ .) நிலையிற் றிரியாது பொன்வண்ணமாக என்றும் ஒன்று போல் பொன்றாது நின்றருளும் சிவனை மேருவென்பர் செந்தமிழர். அத்தகைய மேருவாகிய சிவபெருமானை விரிந்த கதிர்களையுடைய பகலவன் மண்டிலமாகிய நெஞ்சத்தினிடத்து வஞ்சனையின்றி எஞ்சாது நினைக்கின்ற அருந்தவயோகியர்க்கு அந்நினைப்பாகிய சிறந்த தவத்தை அவர் செய்யின் ஆண்டுச் சிவனருள் வெளிப்பட்டுத் தானாகநிற்கும். நீங்க வேண்டிய நீர்மையும் இல்லை. அச் சிவபெருமானின் திருவாணையாகிய திருவருளின் மிக்கது பிறிதொன்றில்லை.

மேரு-பரசிவம்.

# 12. முத் துரியம்

12. முத் துரியம் 2427. நனவாதி மூன்றினிற் சீவ துரியந்

2427. நனவாதி மூன்றினிற் சீவ துரியந்
தனதாதி மூன்றினிற் பரதுரி யந்தான்
நனவாதி மூன்றி னிற்சிவ துரியமா
மினதாகுந் தொந்தத் தசிபதத் தீடே.

செயலறலாகிய துரியத்தின்கண் நனவு கனவு உறக்கம் என்னும் மூன்றும் உண்டு. இவை, ஆருயிர்த் துரியமாகும். தனதாதி என்பது தானே எல்லாவற்றிற்கும் வினைமுதற்காரணமாக விளங்கும் சிவபெருமான்பாலும் சார்ந்தவர்பொருட்டு கனவு முதலிய மூன்றும் உள்ளன. அவை சிவதுரியம் எனப்படும். திருவருளெனப்படும் பரையின் கண்ணும் இத்தகைய மூன்றும் நிலைபெறும். இதுவும் சார்ந்தவர் பொருட்டேயாம். இவை ஆருயிர்த் துரியம், திருவருட்டுரியம், சிவத்துரியம் என மூவகைத்து. இவை பேருயிரின் இனமாகும் ஆருயிரும் சிவனுடன் மேவும் இந்நிலை தொம்பதத்துடன் அசிபதம் கூடிய கூட்டத்தால் பெறப்படும் அஃதாவது நீ அதுவாகிறாய் என்பதே.

முத்துரியம் - சீவதுரியம், பரதுரியம், சிவ துரியம் தனதாதி - பராவத்தையில் நனவாதி. ஈடு - வியாபகம்.

## 2428. தானா நனவில் துரியந்தன் தொம்பதந்

2428. தானா நனவில் துரியந்தன் தொம்பதந்
தானாந் துரிய நனவாதி தான்மூன்றில்
ஆனாப் பரபத மற்ற தருநனா
வானான மேன்மூன்றுந் துரியம் அணுகுமே.

ஆருயிர் தானாம் நனவில் பேருறக்கமாகிய துரியத்து நீ என்னும் முன்னிலைப் பொருளாய்த் தொம்பதமாக நிற்கும். ஆருயிரின் பேருறக்கநிலையிற் பேசப்படும் நனவு, கனவு, உறக்கம் என்னும் மூன்றினில் நீங்காத அருட்பாடாம் பராவத்தை முடிந்தவிடமாகும். அதுவே அந்நிலைக்குரிய அரிய நனவாகும். மிக மேலாகச் சொல்லப்படும் சிவதுரியத்து உறக்கம். பேருறக்கம், உயிர்ப்படங்கல் வந்து பொருந்தும் என்க.

தானா நனவில் - சீவ அவத்தையாகிய நனவில். பரபதம் அற்றது - பராவத்தையின் முடிந்த இடம். மேன் மூன்றும். சிவாவத்தையில் சுழுத்தியாதி மூன்றும்.

## 2429. அணுவின் துரியத்து நான்கும தாகிப்

2429. அணுவின் துரியத்து நான்கும தாகிப்
பணியும் பரதுரி யம்பயி னான்குந்
தணிவிற் பரமாகிச் சார்முத் துரியக்
கணுவிலிந் நான்குங் கலந்தவீ ரைந்தே.

அணுவாகிய ஆருயிர்த் துரியத்து நான்கும், பணிசெய்து போற்றும் பரையாகிய திருவருட்பாட்டில் நிகழும் துரியத்து நான்கும், நீங்காத சிவதுரியம் என்று சொல்லப்படும் பரமா அவத்தையில் நிகழும் இரண்டுங்கூட்டி இந்நான்கின் கலப்புஞ்சேரப் பத்தாகும் அவத்தை என்க ஆருயிர்த்துரியத்து நான்காவன: நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம் என்பன. இதுபோலவே பராவத்தையில் நான்கும் கூறிக் கண்டுகொள்க. சிவநிலைக்கண் பேருறக்கமும் உயிர்ப் படங்கலும் ஆகிய துரியமும் துரியாதீதமுமாகிய இரண்டு ஆகமொத்தம் பத்து என்க. இவையே கலந்த ஈரைந்தென்க. அவத்தை: நிலை; பாடு.

அணுவின் துரியத்து - சீவ துரியத்தில். கணுவில் - சேர்க்கையில். ஈரைந்து - சீவதுரியம் நான்கு + பரதுரியம் நான்கு + பராவத்தையில் துரியம் துரியதாதீதம் இரண்டு ஆகப் பத்து.

## 2430. ஈரைந் தவத்தை யிசைமுத் துரியத்துள்

2430. ஈரைந் தவத்தை யிசைமுத் துரியத்துள்
நேரந்த மாக நெறிவழி யேசென்று
பாரந்த மான பராபரத் தைக்கியத்து
ஓரந்த மாமிரு பாதியைச் சேர்த்திடே.

ஈரைந்தவத்தையாகிய பத்துப் பாட்டின்கண் பொருந்திய ஆருயிர்த்துரியம், அருட்டுரியம், அருளோனாகிய சிவத்துரியம் என்னும் முப்பாடுகளுள. பாடு - அவத்தை திருவடிப் பேறெய்தும் சிறந்த அந்தமாகிய செம்பொருட்டுணிவாம் சித்தாந்தத் திருநெறிக்கண் பெறப்படும் சிவகுருவின் திருவார்த்தையின்படி பயின்று ஒழுகிச் சென்றால் பேரொடுக்கத்தைச் செய்வதான விழுப்பொருட் சிவனாம் பராபரத்துத் தலைவன் தாள் தலைப்படுதலாகிய இரண்டறக் கலக்கும் ஐக்கியம் கைகூடும். பிரிப்பிலா ஒரு முடிவாய் ஒப்பிலா ஓரழகாய் இருபாதியென்று சொல்லப்படும் பெண்ணொரு கூறனாம் நண்ணரிய சிவபெருமான் திருவடியை நண்ணுவிக்கும். நேரந்தம் - சித்தாந்தம் பாரந்தம் - நிலமுதலாக அனைத்தையும் ஒடுக்கும் பேரொடுக்கம். ஓரந்தம் - ஒரு முடிவு; ஒப்பிலா அழகு. திருவார்த்தை - (183) உபதேசம்.

நெறிவழி - உபதேச முறையாக.

## 2431. தொட்டே யிருமின் துரிய நிலத்தினை

2431. தொட்டே யிருமின் துரிய நிலத்தினை
எட்டா தெனினின் றெட்டும் இறைவனைப்
பட்டாங் கறிந்திடிற் பன்னா வுதடுகள்
தட்டா தொழிவதோர் தத்துவந் தானன்றே.

துரியநிலையாகிய அருள்நிலத்தினைத் தொட்டே இருங்கள். தொட்டிருத்தல் என்பது ஓவாதுணர்வில் உணர்ந்திருந்தல். ஏனையார்க்கு எட்டாத நிலையிலுள்ளவனாயினும் உணர்வார்க்கு அவருணர்வில் எட்டும் ஒப்பிலா இறைவனைத் திருவருளால் உள்ளவாறு அறியுங்கள். அறிந்தால் பல்லும் நாவும் உதடும் பிறவும் கூடிப் பிறக்கும் தூயமாயாகாரியமாகிய சொல்லுக்கு எட்டாது நிற்குமவன் ஒப்பில்லாத மெய்ப்பொருளாகப் புணர்ந்து மெய்யின்பம் தந்தருள்வன்.

பட்டாங்கு - உள்ளவாறு. பன்னா - பல் + நா - பல்லும் நாவும் தட்டாதொழிவது - சொல்லுதற்கு இயலாது மேற்படுவது.

## 2432. மனவு நனவு கனவது புந்தி

2432. மனவு நனவு கனவது புந்தி
நினைவி லகந்தை சுழுனையுள் நிற்றல்
அதனை அறிசித்தந் துரியமிம் மூன்றின்
நினைவறல் மற்றது நேயத் தளவே.

ஆருயிர்கட்கு நேரும் நனவு கனவு ஆகிய இரண்டு நிலையின்கண்ணும் உட்கலனாகிய மனம் புத்தி அகங்காரம் என்று சொல்லப்படும் மனம் இறுப்பு எழுச்சி என்னும் மூன்றும் நன்றாகத் தொழிற்படும். உறக்கத்தின்கண் அவ்வுறக்க நிலையினை மட்டும் அறியக்கூடிய சித்தமாகிய எண்ணமொன்று மட்டும் உளதாகும். நனவு கனவு உறக்கம் ஆகிய இம் மூன்றின் நினைவும் அற்று நிற்றல் அருள் நிலையாகிய துரியமாகும் அப்பால் நிலையாம் அருளோன் உடனாம்நிலை நேயமாகிய சிவபெருமானுடன் கலந்து நிற்கும் நிலை. இதுவே துரியாதீதநிலை.

## 2433. நனவின் நனவாதி நாலாந் துரியந்

2433. நனவின் நனவாதி நாலாந் துரியந்
தனதுயிர் தொம்பத மாமாறு போல
வினையறு சீவன் நனவாதி யாகத்
தனைய பரதுரி யந்தற் பதமே.

நனவின்கண் நனவு முதலாகச் சொல்லப்படும் ஐந்து நிலையுள் நாலாம்நிலை துரியமாகும். புணர்ப்புநிலையில் தனதுயிர் தொம்பதம் என்று நிற்குமாறு போன்று, மலந் தேய்தற்பொருட்டு வினைகூட்டப்பட்டதாதலின் வினையறவே மலமும் அற்றதென்பதே பொருள். மலமற்ற ஆருயிர் தூநிலைக்கண் நனவு முதலாகிய நிலைகளில் தனித்து நிற்கும். தானாகவே ஒப்பற்ற நிலையாய்நிற்கும் அருள் நிலையாம் பரதுரியத்தினை எய்தி அருளுடன்நிற்கும். அப்பால் நிலையில் அருளையும் அகன்று அருளோனுடன் இரண்டறப் புணர்ந்துநிற்கும். இந்நிலையில் அவ்வுயிர் தற்பதமாகத் திகழும் தற்பதம்: அது என்னும் சுட்டாய்ச் சிவபெருமானைக் குறிக்கும் குறியாய்நிற்கும். குறி - பெயர்.

தனைய - தானாகிய. பரதுரியம் தற்பதம் - பராவத்தையில் துரியமே தற்பதமாம்.

## 2434. தொம்பதந் தற்பதஞ் சொன்முத் துரியம்போல்

2434. தொம்பதந் தற்பதஞ் சொன்முத் துரியம்போல்
நம்பிய மூன்றாந் துரியத்து நன்றாகும்
அம்புவி யுன்னா அதிசூக்க மப்பாலைச்
செம்பொருள் ஆண்டருள் சீர்நந்தி தானன்றே.

மேலோதிய ஆருயிர்த்துரியம், அருட்டுரியம், அருளோன் துரியம் என்னும் முத்துரியம் பேசப்பெறும். அருளோன்துரியம் எனினும் சிவதுரியம் எனினும் ஒன்றே. இம்மூன்று நிலைகளிலும் தொம்பதமும் தற்பதமும் பேசப்பெறும். இதுபோல் மூன்றாம் துரியமாகிய சிவதுரியத்தில் நன்மை பயத்தற்கு வாயிலாகிய நிலவுலகையும் உலக நுகர்பொருள்களையும் சிறிதும் நினைத்தற்கு இடமின்றி மீநுண்மையாகிய அதிசூக்கமும் அப்பாலைச் செம்பொருளுமாய் நின்று ஆண்டருள்கின்ற பெரும்பொருள் சீர்நந்தியென்க. செம்பொருள் - மெய்ப்பொருள்.

மூன்றாம் துரியம் - சிவதுரியம், செம்பொருள், மெய்ப்பொருள்.

# 13. மும்முத்தி

13. மும்முத்தி 2435. சீவன்றன் முத்தி யதீதம் பரமுத்தி

2435. சீவன்றன் முத்தி யதீதம் பரமுத்தி
ஓயுப சாந்தஞ் சிவமுத்தி யானந்த
மூவயின் முச்சொருப முத்திமுப் பாலதாய்
ஓவுறு தாரத்தில் உள்ளுநா தாந்தமே.

ஆருயிர்ப்பேறு துரியாதீதமாகிய அப்பால் நிலையாகும். பேறு எனினும் முத்தி எனினும் ஒன்றே. அருட்பேறு என்னும் பரமுத்தி ஆவிச் செயலொழிவாய் அருட்செயல் வழியாய்நிற்கும் நிலையாகும் அருளோன்பேறாகிய சிவமுத்தி இயற்கை உண்மை அறிவு இன்பப் பெருவழிவாகும். இம்முறையான் மூவிடத்தும் முவ்வியற்கைப் பேறு முப்பாலதாகும். செயலறலாகிய ஒழிவினைத் தரும் ஓங்காரத்தின்கண் (2271) கருதப்படும் ஒலிமுடிவாம் நாதாந்தமாகும்.

ஓவுறுதாரம் - பிரணவம்.

## 2436. ஆவ தறியார் உயிர்பிறப் பாலுறும்

2436. ஆவ தறியார் உயிர்பிறப் பாலுறும்
ஆவ தறியும் உயிரருட் பாலுறும்
ஆவதொன் றில்லை யகம்புறத் தென்றகன்று
ஓவு சிவனுடன் ஒன்றுதன் முத்தியே.

பிறப்புற்ற ஆருயிர் பிறப்பற்றுச் சிறப்புற்று வாழப்பிறந்தோம் என்பதை அறிவதே ஆவதறிவதாகும். திருவள்ளுவநாயனாரும் 'அறிவுடையார் ஆவதறிவார்' என்றருளினர். இவ்வுண்மையினை அறியார் 'மற்று நிலையாமை காணப்படும்' என்பதற்கிணங்கப் பிறப்பினையடைவர். மேலோதியவாறு ஆவதறியும் உயிர் திருவருட்பால் எய்தும். திருவருளின் வழியொழுகும் செம்பொருட்டுணிவினர்க்குப் புறமாகிய உலகத்தின்கண்ணும் அகமாகிய உடலின்கண்ணும் ஆகக்கடவனவாகிய பொருள்கள் ஏதும் இல்லையென்று நீங்குவர். அகலுதல் - நீங்குதல். அகன்று உலகங்கள் எல்லாம் கடந்து அப்பால் திகழும் சிவபெருமானுடன் ஒன்றுதலாகிய திருவடிப் பேற்றினை எய்துவர். இதுவே நிறைந்த விழுப்பேறாகும்.

ஓவுசிவன் - உலகம் கடந்த சிவன்.

## 2437. சிவமாகி மும்மல முக்குணஞ் செற்றுத்

2437. சிவமாகி மும்மல முக்குணஞ் செற்றுத்
தவமான மும்முத்தி தத்துவத் தயிக்கியத்
துவமா கியநெறி சோகமென் போர்க்குச்
சிவமாம் அமலன் சிறந்தனன் தானே.

முறையுறச் சென்று நிறைவுறு சார்பால் சிவமாகி விளங்கும் ஆருயிர் ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களையும், அமைதி ஆட்சி அழுந்தல் என்னும் முக்குணங்களையும் அருள் நினைவால் அடக்கி, அகற்றுதல்வேண்டும். அங்ஙனம் அகற்றும் நற்றவப் பேற்றினர் மேலோதிய ஆருயிர்ப்பேறு அருட்பேறு அருளோன்பேறு ஆகிய மூன்றன்வாயிலாகத் தத்துவத் தயிக்கியச்சார்பு வெளிப்படும். தத் + துவம் + அயிக்கியம் (அசி) - அது நீ ஆகின்றாய் இந்நெறியே சோகம் என்னும் நெறியுமாகும். அது நான் என்னும் அருமறைப்பேறு ஆண்டான் அடிமை முறையை உணர்த்துவதாகும். அங்ஙனம் உறைத்து நிற்பார்குச் சிவன் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய நிலைமையால் அமலன் என்று அழைக்கப்படுகிறான். அவனே இயற்கை உண்மை அறிவின்ப உருவினனாகலின் சிவன் என்று அழைக்கப்படுகின்றான். அத்தகைய விழுமிய முழுமுதல் இந்நிலையில் ஆருயிர்க்கிழவனைச் சிறந்தனனாக்கிச் சிறந்தானாவன்.

தத்துவத் தயிக்கியத்து - தத்துவமசியால். சோகம் - அவனே நான்.

## 2438. சித்தியும் முத்தியுந் திண்சிவ மாகிய

2438. சித்தியும் முத்தியுந் திண்சிவ மாகிய
சுத்தியும் முத்தீ தொலைக்குஞ் சுகானந்த
சத்தியும் மேலைச் சமாதியு மாயிடும்
பெத்தம் அறுத்த பெரும்பெரு மானன்றே.

பொருளும் அருளும் போக்கில் மெய்ப்பொருளும் முறையே சித்தி, முத்தி, சிவமாம் சுத்தி என்று ஓதப்பெறும். இவை முறையே தன்னைப்பற்றி வருவன, பிறவுயிர்களைப்பற்றி வருவன, தெய்வத்தைப்பற்றி வருவனவாகிய மூவகைத் துன்பங்களையும் ஒழிப்பனவாகும். இம்மூன்றனையும் தாபத்திரயம் என்பர். ஈண்டு இவற்றை முத்தீ என்று ஓதினர். இவை தொலையவே பேரின்பப் பேரருள் உருவாம் பேரறிவாற்றல் வெளிப்படும். அதன்மேல் செயலறலாகிய சமாதியும் கைகூடும். பின்னரப் பிணிப்பாகிய பெத்தத்தினை அறுத்தருளிய பெரும்பெருமான் வெளிப்பட்டுத் திருவடியை நல்கிப் பேரின்புறுத்துவன். அவனே முழுமுதல்.

முத்தீ தொலைக்கும் - தாபத்திரயங்களை ஒழிக்கும். சத்தி - திருவருள்.

# 14. முச் சொரூபம்

14. முச் சொரூபம் 2439. ஏறிய வாறே மலம்ஐந் திடைஅடைத்து

2439. ஏறிய வாறே மலம்ஐந் திடைஅடைத்து
ஆறிய ஞானச் சிவோக மடைந்திட்டு
வேறு மெனமுச் சொரூபத்து வீடுற்றங்கு
ஈறதிற் பண்டைப் பரனுண்மை செய்யுமே.

ஆருயிர்கட்கு ஆணவமலப்பிணிப்பால் வேறு நான்கு மலங்கள் அம் மலத்தை யகற்றச் சேர்க்கவேண்டியதாயிற்று. இச் சேர்க்கை அருளால் நிகழ்வது அவை முறையே கன்மம், மாயை, மாயேயம், நடப்பாற்றல் என்ப. சிவபெருமான் இவ் ஐவகை மலங்களையும் முறையே அகற்றியருள்வன். அருளவே ஆறுதலைத் தரும் சிவஞானம் மேலோங்கும் மேலோங்கவே சிவோகம் அடைவர். அடையவே பந்த பாசங்களைத் திருவருளால் வேறும் (வெல்லுதும்) என முனைவர். முனையவே ஆருயிர்ப்பேறு, அருட்பேறு, அருளோன்பேறு என்னும் மூவ்வியற்கை வீடுறுவர். வீடுற்று இறுதியிற் பண்டைப் பரனுடன் கூடிப் பரனுண்மையாயிருப்பர். இஃது ஒப்பில் தலைவி ஒப்பிலாத் தலைவனை மணந்து தன்னைத் தணந்து அவனாகவே நிற்கும் அருள் நிலையை ஒத்ததாகும். தணத்தல் - மறத்தல்.

## 2440. மூன்றுள மாளிகை மூவர் இருப்பிடம்

2440. மூன்றுள மாளிகை மூவர் இருப்பிடம்
மூன்றினின் முப்பத் தாறு முதிப்புள
மூன்றினி னுள்ளே முளைத்தெழுஞ் சோதியைக்
காண்டலுங் காயக் கணக்கற்ற வாறன்றே.

மூவகையான ஆருயிர்கட்கும் மாளிகை யொத்த உடல்களும் மூன்றுள. அவை முறையே பருவுடல், நுண்ணுடல், முதல் உடல் என்பன. முதல் உடலைப் பரவுடல் எனவுங் கூறுப. இதனைக் காரணவுடல் எனவும் இயம்புவர். இம் மூன்றுடல்களிலும் சேர்ந்து நிலமுதல் நீள் ஒலி ஈறாகிய முப்பத்தாறு மெய்களும் தோன்றும். இம் மூன்றினுள்ளும் உயிர்க்கு உயிராய்க் கலந்து நிற்கும் சிவபெருமான் பேரொளிப் பிழம்பாய் முளைத் தெழுந்தருள்வன். அவனை அவனருளால் காணுதல் வேண்டும். காண்டலும் பிறவிப்பேறாம் 'பிறவிப் பெருங்கடல் எல்லையை நீந்துவர்'. இதுவே 'காயக்கணக்கற்றதென' ஓதப்பெற்றதாகும்.

மாளிகை - தூலம், சூக்குமம், காரணம்; மூவர் - மூவகையான ஆன்மாக்கள். காயக் கணக்கு - பிறப்பு.

## 2441. உலகம் புடைபெயர்ந் தூழியும் போன

2441. உலகம் புடைபெயர்ந் தூழியும் போன
நிலவு சுடரொளி மூன்றுமொன் றாய
பலவும் பரிசொடு பான்மையுள் ஈசன்
அளவும் பெருமையு மாரறி வாரே.

பேரொடுக்கமாகிய பேரூழிக் காலத்து உலகம் ஒடுங்கிற்று. அத்தகைய ஊழியும் பல கழிந்தன. விளங்குகின்ற ஆருயிர், அருள், அருளோன் என்னும் மூன்றும் அருள்வெளியில் ஒன்றாயின. இம் மூன்றையும் அன்பு அருள் அருளோன் எனவும் கூறலாம். சீவன், பரம், சிவம் எனவும் கூறுப. பலவும் முறைப்படி சிவபெருமான் திருவடிக் கீழடங்கிக் கலப்பால் ஒன்றாயிருப்பினும் சிவபெருமானின் அளத்தற்கரிய அளவினையும் உரைத்தற்கரிய பெருமையினையும் எவராலும் அளந்தறிந்துரைக்க வொண்ணாவென்க. அதனால், ஒருவரும் அறியார் என்பது யாரறிவார் என்னும் குறிப்பால் பெறப்படும்.

புடைபெயர்ந்து - நிலைகெட்டு. நிலவு - விளங்குகின்ற. பரிசொடு - முறைப்படி.

## 2442. பெருவாய் முதலெண்ணும் பேதமே பேதித்து

2442. பெருவாய் முதலெண்ணும் பேதமே பேதித்து
அருவா யுருவாய் அருவுரு வாகிக்
குருவாய் வருஞ்சத்தி கோனுயிர்ப் பன்மை
உருவா யுடனிருந் தொன்றாயன் றாமே.

மாயாகாரிய உருக்களை மலைமுதல் மண் ஈறாகவும் யானை முதல் எறும் பீறாகவும் கண்டு கருதப்படும் வேறுபாடுகளையே ஆருயிர்களுக்குக் காட்டியருளுகின்றனன் சிவன். அவன் எல்லாவற்றுடனும் கலந்து அருவாய் உருவாய் அருவுருவாய்த் தோன்றியருள்வன். அருளே திருமேனியாய்க் குருவாய் எழுந்தருளும் தனிப்பெரும் தலைவனுமாவன். மன்னும் பலவுயிரோடும் கலந்து அவ்வவ்வுயிராய் உருவாய் உடனிருந்தருள்வன். அன்றாம் என்பது இந்நிலைமை சிவபெருமானுக்குத் தொன்மை யிலேயே இயற்கையாக அமைந்த நன்மைப் பண்பாம் என்க. அன்று - தொன்மை. ஆம் - பண்பாம்.

பெருவாய் - பெரிதியதாய். பேதமே பேதித்து - வேறுபடுத்தி.

## 2443. மணியொளி சோபை யிலக்கணம் வாய்த்து

2443. மணியொளி சோபை யிலக்கணம் வாய்த்து
மணியென லாய்நின்ற வாறது போலத்
தணிமுச் சொருபாதி சத்தியாதி சாரப்
பணிவித்த பேர்நந்தி பாதம்பற் றாயே.

ஆருயிரானது படிகமணியின் நிறமும் ஒளியும் போன்ற தன்மைவாய்ந்தது அஃதாவது வெண்மை நிறமும் ஏனைய நிறங்களையுட் பற்றியபோழ்து அவ்வந் நிறங்களாகத் தோன்றி ஒளிரும் ஒளியும் உடையது படிகம். அதுபோல் ஆருயிரும் சார்ந்ததன் வண்ணமாக நிற்கும். அஃதாவது ஆணவத்தைச் சார்ந்து அறிவு விளங்காது அறியாமையே தானாக நிற்கும். அருளால் படைத்தளிக்கப்பட்ட ஐம்புலன்களைச் சார்ந்து சுட்டறிவும், அப் புலன்களின் வேறு தான் எனக்கருதும் சிற்றறிவும் உடையவாய் நிற்கும். பின் அருள்வழி ஒழுகி உடல் கலன் உலகுகள் முற்றறிவு பெற்றுச் சிறப்புற்று வாழ்வதற்குச் சிவபெருமானால் அளிக்கப்பட்ட அருட்கொடை இரவல் பொருள்கள் என்றுணர்தல் வேண்டும். சிவகுரு எழுந்தருளித் திருவைந்தெழுத்தினைத் தேறுமாறு உணர்த்தியருள்வன். அருளவே முற்றறிவு பெற்று முழுமுதலடிக்கீழ்க் கெழுமி விழுமிதாய் வாழும். இவையே ஆருயிர்கள் சார்ந்ததன் வண்ணமாய் நிற்கும் ஆருயிர்த் தன்மையாகும். ஆருயிர் விழுப்பேறாம் சிவபெருமான் நிலையினை எய்தும். சிவபெருமானைச் செம்மணியாகச் செப்புவர் செம்பொருட்டுணிவினர். ஆருயிராம் பளிங்கும் செம்மணியாம் சிவனைச் சாரப்பட்டுச் செம்மணியாகத் திகழும். இவ்

வொப்பினைப் படிகத்தின் மேலேற்றிப் படிகம் நிற்குமாறுபோல ஆருயிரும் அடங்கி நிற்கும். அந்நிலையினை ஆருயிர் நிலை, அருள் நிலை, அருளோன் நிலை எனக் கூறுவர். இவையே முச் சொரூபமாகும். அவ்வுயிர் அறிவுப் பேராற்றலாகிய சத்தியாதியைச் சாருமாறு சிவபெருமான் பணித்தருளினன். அங்ஙனம் பணித்தருளிய பெரும் பொருட் கிளவியாம்2 நந்தியின் திருவடியிணையினை நெஞ்சமே பற்றற்று இடையறாது பற்றுவாயாக.

சோபை - ஒளி உதயம். தணி - பொருந்தியுள்ள.

## 2444. கல்லொளி மாநிறஞ் சோபைக் கதிர்தட்ட

2444. கல்லொளி மாநிறஞ் சோபைக் கதிர்தட்ட
நல்ல மணியொன்றி னாடியொண் முப்பதம்
சொல்லறு முப்பாழிற் சொல்லறு பேருரைத்து
அல்லறு முத்திராந் தத்தனு பூதியே.

ஒளியுடைத்தாகிய படிகத்தின்கண் வைக்கப்படும் சிறந்த பலநிற மணிகள் பொருந்தவைத்தால் தன்னால் சாரப்பட்ட மணியின் ஒளியாய்த் தான் விளங்குவதுபோல் ஆருயிரும் ஆராய்ந்து பார்ப்பின் சார்ந்ததன் வண்ணமாய் நிற்கும். அவ்வுண்மையினைத் தத்துவம் அசி என்னும் மும்முறை காட்டுவதாகும். சொல்லுதற்கரிதாகிய உடல்மெய் உணர்வுமெய் உணர்த்துமெய்யாகிய மூன்றும் கழிந்து நீங்குவதால் அவற்றை முப்பாழ் என ஓதப்பெறும். அம் முப்பாழின் உண்மையினையும் கண்டு சொல்லொண்ணாத பேர் என்னும் சிகரத்தைச் சொல்லுமாறு வகரம் கூட்டியுரைத்துப் பிறப்பல்லலை அறுத்துச் சிறப்புப்புல்லலை நிறுத்துக் காட்டுவது கடவுட் (2385) கையடையாளமாகும். அதுவே முத்திராந்தமென ஓதப்பெற்றது. இதுவே இறவா இன்பத் தழுந்திய அனுபூதி என்று சொல்லப்படும் இன்பியாகும். சொல்லறு பேருரைத்து என்பதற்கு அசபா காயத்திரியைத் தேனித்து என்றலும் ஒன்று. தேனித்தல் - தியானித்தல்.

கல்லொளி - காவிக்கல்லொளி. தட்ட - பொருந்த. சொல்லறுபேர் - அசபை.

## 2445. உடந்தசெந் தாமரை யுள்ளுறு சோதி

2445. உடந்தசெந் தாமரை யுள்ளுறு சோதி
நடந்தசெந் தாமரை நாதந் தகைந்தால்
அடைந்த பயோதரி யட்டி யடைத்தவ்
விடந்தரு வாசலை மேல்திற வீரே.

உடந்த செந்தாமரை என்பது உச்சிக்குமேல் விளங்கும் ஆயிரவிதழ்த் தாமரை என்பதாகும். உடன்ற என்பது உடந்த என நின்றது. உடன்ற - பொருத; எதிர்த்த இத் தாமரை மூலத்தாமரைக்கு எதிராகலின் அங்ஙனம் ஓதினர். அத் தாமரையின் உள்ளுறு சோதியாகிய அளவிலாப் பேரறிவுப் பேரொளியை நோக்கி நடக்கும் ஓசையாகிய நாதம் மூலத் தாமரையினின்றும் அகத்தவப் பயிற்சியால் நடப்பதாகும். அவ்வோசையாகிய நாதம் பயில்வார்க்கு அருளால் கைகூடினால் ஆண்டுப் பொருந்திய அமிழ்தன்னை வெளிப்பட்டருள்வள். அவள் அன்பற்றார்க்குத் தடையாக அமைத்த வற்றா இன்ப வீட்டு வாழ்கதவினை நும்மன்பால் அவளாலேயே மேல் திறக்குமாறு செய்வீர். பயோதரி - அமிழ்தன்னை. அட்டி - தடைசெய்து, இடந்தருவாயில் - பெருவாயில், திறவீர் - திறப்பிப்பீர்: பிறவினைப் பொருளில் வந்த தன் வினை.

உடந்த - எதிரில் உள்ள, ஆஞ்ஞை நடந்த - நோக்கிச் சென்ற, செந்தாமரை - மூலாதாரத்தாமரை, தகைந்தால் - வசப்பட்டால். பயோதரி - அமுதேசுவரி.

# 15. முக்கரணம்

15. முக்கரணம் 2446. இடனொரு மூன்றி லியைந்த வொருவன்

2446. இடனொரு மூன்றி லியைந்த வொருவன்
கடனுறு மவ்வுரு வேறெனக் காணுந்
திடமது போலச் சிவபர சீவர்
உடனுறை பேதமும் ஒன்றென லாமே.

திருவருளால் ஆருயிர் உடல், உணர்வு, உணர்த்து மெய் ஆகிய மூன்றிடங்களிலும் பொருந்தும். இம் முறையினையே பருவுடல் நுண்ணுடல் முதலுடல் என்பனவற்றிற்குக் கூறினும் பொருந்தும். அவ்வருளாலேயே செவ்வி வாய்த்தற் பொருட்டு உரித்தெனக் கருதிய அம்மூன்றனையும் அவ்வுயிர் தனக்கு வேறெனக் காணும். அதுபோன்று அருளோன். அருள் ஆருயிர் என்று சொல்லப்படும் சிவ பர சீவர்கள் உடனுறை வேறுபாடுகளும் ஒன்றெனல் ஆகும்.

கடனுறு - உரியதான.

## 2447. ஒளியை யொளிசெய்து வோமென் றெழுப்பி

2447. ஒளியை யொளிசெய்து வோமென் றெழுப்பி
வளியை வளிசெய்து வாய்த்திட வாங்கி
வெளியை வெளிசெய்து மேலெழ வைத்துத்
தெளியத் தெளியுஞ் சிவபதந் தானே.

திருவருள் நினைவால் மூலத்தழலொளியை ஓமென்று கணித்து எழுப்பி ஒளிரச் செய்தல் வேண்டும். அத்துடன் மேல்மூச்சு கீழ்மூச்சுக்களை அடக்குதல் வேண்டும். அதன் பொருட்டு உயிர்ப்புப் பயிற்சியினை மேற்கொள்ளுதல் வேண்டும். அதன் பொருட்டு உயிர்ப்பினை முறையாக வாங்கி உள் நிரப்புதல் வேண்டும். அதன்பின் நெஞ்சத்து வெளியைச் சிவ நினைப்பால் வெளி செய்தல் வேண்டும். வெளி செய்தபின் அதனை அருள்வெளியாக்குதல் வேண்டும். அதன் வாயிலாகக் குறிக்கோளை மேலெழச் செய்தல் வேண்டும். இவ் வுண்மைகளைத் திருவருள் தெளிவிக்கத் தெளியும் நல்லார் சிவபெருமான் திருவடியினைச் சார்வர். அதுவே சிவநிலையாகும். வெளி - நெஞ்சவெளியும் அருள்வெளியும் ஆகும். வாங்கி - மூச்சை உள்ளிழுத்து.

ஒளியை - மூலாக்கினியை. வளிசெய்து - பூரக, கும்பக, இரேசகம்செய்து. வெளியை - வெள்ளிய சுக்கிலத்தை.

## 2448. முக்கர ணங்களின் மூர்ச்சைதீர்த் தாவதக்

2448. முக்கர ணங்களின் மூர்ச்சைதீர்த் தாவதக்
கைக்கா ரணமென்னத் தந்தனன் காணந்தி
மிக்க மனோன்மனி வேறே தனித்தேக
ஒக்கும துன்மனி யோதுட் சமாதியே.

உள்ளம் உரை உடல் என்னும் மூன்று கருவிகளின் சோர்வினை அகற்றி ஆகவேண்டிய அருள் நிலையைக் கைக்கனி என்னும்படி தந்தருளினன். அவன் சிவபெருமானாகிய நந்தியாகும். ஆணை நிலையாகிய புருவ நடுவின்கண் விளங்கும் மனோன்மனி அங்கு நின்றும் மேலோங்க அதன்மேல் உன்மனையாகிய திருவருள் துணையாகும். அத் துணையால் ஒருமை யுணர்ச்சியுண்டாகும். அவ் வுணர்ச்சியால் செயலற்ற திருநிலை யெய்தும். இதனையே நிருவிகற்பசமாதி என்ப. இதனை ஒருமை யொடுக்கம் என்ப.

மூர்ச்சை - சோர்வு, கைக்காரணம் என்ன - கையில் வைத்து உணரும் விதமாக. மிக்க....ஏக - மனோன்மனி இருக்கும் ஆஞ்ஞையில் செல்ல.

## 16. முச் சூனியதொந்தத்தசி

16. முச் சூனியதொந்தத்தசி 2449. தற்பதந் தொம்பதந் தானாம் அசிபதந்

2449. தற்பதந் தொம்பதந் தானாம் அசிபதந்
தொற்பத மூன்றுந் துரியத்துத் தோற்றவே
நிற்ப துயிர்பர னிகழ்சிவ மும்மூன்றின்
சொற்பத மாகுமாந் தொந்தத் தசியன்றே.

அது என்னும் தற்பதமும் நீ என்னும் தொம்பதமும் தான் அதுவாகின்றதென்னும் அசிபதமும் தொன்மையேயுள்ளன. இம் மூன்றும் மேல்நிலையாகிய துரியத்துத் தோற்றமுறும். இத் தோற்றத்தின்கண் நிற்பன ஆருயிரும் அருளாகிய பரமும் அருளோனாகிய சிவமும் என்னும் மூன்றின் சொற் பொருளாகும். இவையே தொந்தத்தசி என்ப. இதன்கண் தொம்பதமாகிய நீ, தத்பதமாகிய அது, அசி ஆகின்றாய் என்னும் பொருள் காணப்படும்.

தானும் அசிபதம் - தன்மயமாவது உணர்த்தும் அசிபதம். தொற்பதம் - தொல்பதம், அநாதியான பதங்கள்.

## 2450. தொந்தத் தசிமூன்றில் தொல்கா மியமாதி

2450. தொந்தத் தசிமூன்றில் தொல்கா மியமாதி
தொந்தத் தசிமூன்றில் தொல்தா மதமாதி
வந்த மலங்குண மாளச் சிவந்தோன்றின்
இந்துவின் முன்னிருள் ஏகுதல் ஒக்குமே.

தொம்பதம் தத்பதம் அசிபதம் ஆகிய மூன்றும் நுண்ணிதின் உணருங்கால் கன்மம் மாயை ஆணவம் என்னும் மும்மல நிகழ்வும் நீக்கமுமாகும். அது போன்று அமைதி ஆட்சி அழுத்தம் என்னும் முக்குண நிகழ்வும் நீக்கமும் ஆவன என்ப. மேலோதிய மலமும் குணமும் மாளத் தூய சிவபெருமான் தோன்றியருள்வன். நாளும் பிறை வளர நாளும் இருள் தளர முழு நிலவின்கண் இருள் ஒரு சிறிதும் தோன்றாது அடங்கும். அதுபோல் ஆருயிரின்கண் அருளும் சிறிது சிறிதாக முனைக்க மருளும் சிறிது சிறிதாக அடங்கும். முழுநில வொத்துச் சிவபெருமான் தோன்றியருள முற்றாக மடங்கிவிடும். இதுவே சிறந்த எடுத்துக்காட்டின் பொருள் ஒப்பாகும்.

காமியமாதி - கன்ம முதலிய மும்மலம். தொல்தாமதமாதி - பழைமையான தாமத முதலிய முக்குணங்கள்.

## 2451. தொந்தத் தசியையவ் வாசியில் தோற்றியே

2451. தொந்தத் தசியையவ் வாசியில் தோற்றியே
அந்த முறையீரைந் தாக மதித்திட்டு
அந்த மிலாத அவத்தையவ் வாக்கியது
உந்து முறையிற் சிவமுன்வைத் தோதிடே.

தொம்பதத்தோடு காணப்படும் அசிபதப் பொருளை வாசியாகிய உயிர்ப்பின்கண் தோன்றக் கண்டு முன் (2429) ஓதியவாறு அவத்
தைகள் பத்தினையும் கருதுக. கருதி முடிவில்லாத அவத்தையை அவ் வாக்கியத்தால் செலுத்து முறையில் வைத்து ஓதுதல் வேண்டும். அங்ஙனம் ஓதுங்கால் சிவத்தை முன்வைத்து ஓதுக. சிவத்தை முன் வைத்து ஓதுவது 'சிவயநம'.

வாசி - பிராணவாயு. ஈரைந்து - பத்து அவத்தைகளாக. சிவமுன்வைத்து - சிவ, பர, சீவ, என வைத்து.

## 2452. வைத்துச் சிவத்தை மதிசொரு பானந்தத்து

2452. வைத்துச் சிவத்தை மதிசொரு பானந்தத்து
உய்த்துப் பிரணவ மாம்உப தேசத்தை
மெய்த்த இதயத்து விட்டிடு மெய்யுணர்ந்து
அத்தற் கடிமை யடைந்துநின் றானன்றே.

மேலோதியவாறு சிவத்தை முன்வைத்து ஓதுதலான் ஆருயிரின் அறிவு அச் சிவத்தின் இயற்கை உண்மை அறிவு இன்ப வழிவின்கண் செல்லும். அங்ஙனம் செல்லுமாறு செலுத்தி ஓமொழிச் செவியறிவுறூஉவாம் உபதேசத்தை மெய்யுணர்வால் களங்கமற்ற உள்ளத்தினிடத்துச் செலுத்திடும். அதன்பின் திருவருளால் சிவபெருமானின் திருவடியுணர்வினை உணர்ந்து அத் திருவடிக்கு என்றும் நீங்கா அடிமையாக அவ்வுயிர் நின்று இன்புறும்.

மதி - அறிவு. மெய்த்த - களங்கமற்ற. விட்டிடும் - சேர்ப்பன்.

## 2453. தொம்பத மாயையுள் தோன்றிடுந் தற்பதம்

2453. தொம்பத மாயையுள் தோன்றிடுந் தற்பதம்
அம்பரை தன்னில் உதிக்கும் அசிபதம்
நம்புறு சாந்தியில் நண்ணுமவ் வாக்கியம்
உம்பர்உரை தொந்தத் தசிவாசி யாமே.

துவம்பதப் பொருளாகிய நீ என்னும் உயிர்நிலை மாயையாகிய அறியாமைப் பிணிப்பில் கிடக்கும். அவ்வறியாமையை அகற்றுதற்குத் தற்பதப் பொருளாகிய சிவனும் கலப்பால் ஒன்றாய்த் திகழ்வன். அழகிய பரையாகிய திருவருளின்கண் அசிபதப் பொருள் தோன்றும். விருப்புறும் அமைதி யொடுக்கத்தின்கண் அச் சொற்பொருள் அமையும். மேலாம் பொருளுரை உயிர்ப்பின்கண் பயிலும் இரேசகமாகிய வெளிவிடுதற்குத் தொம்பதமும், பூரகமாகிய உள்ளிழுத்தற்குத் தத்பதமும், கும்பகமாகிய மூச்சை அசைவற நிறுத்தற்கு அசிபதமும் கொள்ளப்படும் என்க. நம்பு - நசை; விருப்பம். 'நம்பும் மேவும் நசையாகும்மே' என்னும் தொல்காப்பிய (33) உரியியலால் நம்பு நசையாகும் என்பது காண்க.

மாயையுள் - அஞ்ஞானத்துள்.

## 2454. ஆகிய வச்சோயந் தேவதத் தன்னிடத்து

2454. ஆகிய வச்சோயந் தேவதத் தன்னிடத்து
ஆகிய வைவிட்டாற் காயம் உபாதானம்
ஏகிய தொந்தத் தசியென்ப மெய்யறி
வாகிய சீவன் பரசிவ னாமன்றே.

மேலோதிய முப்பதங்களின் புணர்ப்பினை விளக்க அச் சோயமாகிய இவன் அவனே என்னும் முறைப்படி அவனே இத் தேவதத்தன் என்னும் பொருளின்கண் ஏற்படும் காலமும் இடமும் செய்தியும் நீங்கப் பெற்றால் அப் பெயர்க்குரிய பொருளாகிய உடம்பு காரணமளவாக நிற்கும். அக் காரணமாயையுங் கடந்த நிலையில் தொந்தத்தசியாகிய முப்பதம் மெய்யுணர்வினைத் தரும். அதனால் ஆருயிர் அருள் அருளோன் என்னும் மூன்றும் பெறப்படும். அவ்வுயிர் அருளுடன் கூடி அருளோன் அடியிற் கலந்து முடிவிலா இன்பம் எய்தும். சோயம்: இவன் அவனே.

சோயந் தேவதத்தன் - அவனே தேவதத்தன்.
இடத்தாகியவை - காலம் இடம் முதலியவற்றை.
உபாதானம் - மாயை.

## 2455. தாமத காமிய மாகித் தகுகுண

2455. தாமத காமிய மாகித் தகுகுண
மாமல மூன்றும் அகார வுகாரத்தோடு
ஆமறு மவ்வுமவ் வாயுடன் மூன்றில்
தாமாந் துரியமுந் தொந்தத் தசியதே.

அமைதி ஆட்சி அழுந்தலாகிய முக்குணமும் ஆணவம் கன்மம் மாயையாகிய மும்மலமும் நிகழ்வதும் நீங்குவதுமாகிய செயல்கள் அகர உகர மகரங்களான் ஆகும். அவ் அகர உகர மகரங்களே பத்தாய்ப் பகுத்த (2429) பாடுகளுள் மூன்றில் தாமாம் துரியம் தோன்றும், ஆணடுத் தொம்தத் அசி என்னும் பதப்பொருள் முற்றுறும்.

# 17. முப்பாழ்

17. முப்பாழ் 2456. காரிய மேழ்கண் டறுமாயப் பாழ்விடக்

2456. காரிய மேழ்கண் டறுமாயப் பாழ்விடக்
காரண மேழ்கண் டறும்போதப் பாழ்விடக்
காரிய காரண வாதனை கண்டறுஞ்
சீருப சாந்தமுப் பாழ்விடத் தீருமே.

மாயாகாரியமாகிய உடலும், பொறிகளும், எண்ணம் மனம் எழுச்சி இறுப்பு ஆகிய கலன் நான்கும், உயிர்ப்பும் என்று கூறப்படும் ஏழும் மெய்யுணர்வால் கண்டவித்துக் காரியப்பாழ் என்று பேசப்படும். இப் பாழ் ஏழும் அருளால் அகலும். காரணமாகிய பாழ் ஏழும் வருமாறு: அனைத்தையு முணர்ந்தவனாயிருக்குந் தன்மை, அனைத்திற்கும் காரணனாந்தன்மை, அனைத்திற்கும் உயிர்க்குயிராய் உள்ளுறையுந் தன்மை, அனைத்தையும் செலுத்தும் ஆணைத் தன்மை, அனைத்தையும் படைத்தல், அனைத்தையும் காத்தல், அனைத்தையும் துடைத்தல் என்பன. இவ்வேழும் அறிவுப் பாழாகும். இதுவும் அருளால் காண அகலும். காரிய காரண வருத்தங்கள் அகலவும் சிறந்த ஒழிவிலொடுக்கமாகிய உபசாந்தமும் அகலும்; இம் முப்பாழும் அகலவே பிறவி தீரும்.

காரியம் ஏழ் - காரிய உபாதி ஏழ். அவை:- உடல், பொறி, கரணம் நான்கு, பிராணவாயு மூன்று ஆக ஏழு. காரணம் ஏழ் - காரண உபாதி ஏழ். அவை :- (1) எல்லாம் அழித்தல், (2) எல்லாம் படைத்தல், (3) எல்லாம் அறிதல், (4)

எல்லாவற்றிற்கும் காரணமாதல், (5) எங்கும் வியாபித்திருத்தல், (6) எல்லாம் தானாதல், (7) எல்லாம் காத்தல்.

## 2457. மாயப்பாழ் சீவன் வியோமப்பாழ் மன்பரன்

2457. மாயப்பாழ் சீவன் வியோமப்பாழ் மன்பரன்
சேயமுப் பாழெனச் சிவசத்தி யிற்சீவன்
ஆய வியாப்த மெனுமுப்பா ழாம்அந்தத்
தூய சொரூபத்திற் சொல்முடி வாகுமே.

மாயப்பாழ் மாயையின் உண்மைகண்டு கடத்தலாகும். சீவப்பாழ் ஆருயிரின் உண்மை கண்டு அகறல். வியோமமாகிய அருள் வெளிப்பாழ் அருள் உண்மை கண்டு அப்பாலாதல். இம் மூன்றும் சேய முப்பாழெனச் செப்புவர். சேய - நீண்டதாய. சிவசத்தியாகிய திருவருளில் ஆருயிர் அடங்கு நிறைவாய் நிற்பதெனு முப்பாழும் பேசப்படும். இவையனைத்தும் தூய சிவன் உண்மைக்கண் அவன் சொல்லிறந்த தொல்லோனாதலின் சொல்லிறந்த முடிவாகு மென்க. அகல் நிறைவு - வியாபகம். அமை நிறைவு - வியாப்பியம். அடங்கு நிறைவு - வியாத்தி. மாயப்பாழ் மன்னுயிர்ப்பாழ். மாலருட்பாழ் ஆம் மூன்றும், தூயமுப் பாழென்ப தோய்ந்து.

வியாப்தம் - அடங்கி நிற்றல்.

## 2458. எதிரற நாளும் எருதுவந் தேறும்

2458. எதிரற நாளும் எருதுவந் தேறும்
பதியெனும் நந்தி பதமது கூடக்
கதியெனப் பாழைக் கடந்தந்தக் கற்பின்
உதறிய பாழில் ஒடுங்குகின் றேனே.

நாளும் ஆனேற்றினை உவந்து ஊர்ந்து உலகினுக்கருளும் ஒப்பில்லாத பதி சிவபெருமானாவன். அவனே நந்தி என்று அழைக்கப்படுவன். அவனுடைய திருவடியிணையினைக் கூடுதற் பொருட்டு நிலையெனக் கருதிய மாயை, உயிர், அருள் என்னும் முப்பாழையும் கடந்து, அவையனைத்தும் காரணம் பற்றிய கற்பனை (2465) என உதறி நீக்கி எஞ்சிய உருவற்ற பாழில் ஒடுங்குகின்றேன். பாழ் - உருவில்லது. கற்பனை யென்பது 'கற்பின்' எனச் செய்யுட் டிரிபாய் நின்றது.

எதிரற - இணையில்லாமல். உதறிய - விலக்கியுள்ள. பாழில் - உருவம் அற்ற இடத்தில்.

## 2459. துரியம் அடங்கிய சொல்லறும் பாழை

2459. துரியம் அடங்கிய சொல்லறும் பாழை
அரிய பரம்பரம் என்பர்கள் ஆதர்
அரிய பரம்பரம் என்றே துதிக்கும்
அருநிலம் என்பதை யாரறி வாரே.

செயலறலாகிய துரியம் அடங்கிய நிலையினைச் சொல்லறும் பாழென்பர். சொல்லறல் - சொல்ல முடியாததாதல். அப் பாழை அறிவிலாதார் அறிதற்கரிய பெரும் பொருட்குப் பெரும் பொருளாம் பரம்பரன் என்பார்கள். அப் பாழ் அறிதற்கரிய பரம்பரம் என்றே துதிக்கும் அருளார் அருநிலமாகும். இவ் வுண்மையினை அறிவார் யார்? ஒரு சிலரே என்க. அருநிலம் - அப்பாலிடம் ; துரியாதீதம்.

ஆதர் - அறிவு இல்லாதவர். அருநிலம் - துரியாதீதம்.

## 2460. ஆறாறு நீங்க நமவாதி யகன்றிட்டு

2460. ஆறாறு நீங்க நமவாதி யகன்றிட்டு
வேறா கியபரை யாவென்று மெய்ப்பரன்
ஈறான வாசியிற் கூட்டு மதுவன்றோ
தேறாச் சிவாய நமவெனத் தேறிலே.

அருஞ்சைவர் மெய் (2139) முப்பத்தாறென்ப. இம் முப்பத்தாறன் உண்மையினை உணர்தற்கு 'நமசிவய' என்னும் செந்தமிழ்த் திருவைந்தெழுத்தினைத் திருவருளால் தேர்தல் வேண்டும். தேருங்கால் ஒருபுடை யொப்பாக 'நகரம்' உணர்த்து மெய் ஐந்தனுள் ஆசான், ஆண்டான், அருளோன் என்னும் மெய் மூன்றாகும். 'மகரம்' உடன் மெய் இருபத்து நான்குமாகும். 'சிகரம்' அத்தன் மெய்யாகும். 'வகரம்' அன்னை மெய்யாகும். 'யகரம்' ஆள்மெய்யாகும். இவ்வாறாறு மெய்யும் உண்மைகண்டு அகலுங்கால் அவ் வாய்வின் மறையாம 'நமசிவய' வும் அகலும். சிறப்பாகிய பரை என்னும் திருவருள் 'யா' வென்று நிற்கும். யாவென நிற்பதாவது ஆருயிர்க்கு மருள் உடல் நீங்கி நகரமாகிய ஆதி அருள் உடல் ஆங்கமையும். மெய்ப்பரனாகிய சிகரத்தின் ஈறான வகரத்தில் யகரம் கூட்டப் பெறும். அப்பொழுது உணர்தற்கரிய 'சிவயநம' என அமையும். இதனை அருளால் தெளிதல் சிறப்புடைத்தாகும். 'நமசிவய' என்பதன் கண்ணுள்ள யகரம் நம என்பனவற்றைக் கடந்து நிற்கும் நிலையே 'சிவயநம' வாகும். 'ய'கரம் மறையாதலின் 'யா' என நீண்டு நின்றது.

இம் மறையின் மாண்பை வருமாறு நினைவுகூர்க :

'நாடும் நமசிவய நல்ல சிவயநம
கூடும் சிவயசிவ கூறிமேல் - நாடும்
சிவசிவஎன் றெண்ணுவர்நற் சீலமுதல் நான்கின்
தவநெறிசார் செந்தமிழர் தாம்.'

பரை - சத்தி. ஆவென்று - பசுவென்று. பரன் - சிவன். தேறில் - ஆராய்ந்தால்.

## 2461. உள்ளம் உருவென்றும் உருவம் உளமென்றும்

2461. உள்ளம் உருவென்றும் உருவம் உளமென்றும்
உள்ள பரிசறிந் தோரு மவர்கட்குப்
பள்ளமும் இல்லை திடரில்லை பாழில்லை
உள்ளமும் இல்லை உருவில்லை தானன்றே.

உருவாகிய உடலினையே உள்ளமாகிய உயிர் என்றும், உயிரையே உடலென்றும் தடுமாறிக் கூறுவர். அது கலப்பால் ஒன்று பட்டுப் புணர்ந்து நிற்கும் நிலைமையால் கூறப்படுவதாகும். இவ்வுண்மையினை அருளால் உள்ளவாறு ஓர்ந்துணர்வார்கட்குப் பள்ளமாகிய கருப்பையினுட் புக்கு உருப்பெற்றுத் தோன்றி உழலுமாறில்லை. திடராகிய உலகினில் உறைந்து நிலவுமாறுமின்று. பாழாகிய உருவற்ற நிலையில் வீழ்ந்து ஆழுமாறும் இன்று. ஆகவே உயிர் உடல் என்ற வேறுபாட்டு உரை உண்டாவதில்லை.

உள்ள பரிசு - உண்மையான தன்மை. பள்ளம் - கருப்பாசயம். திடர் - உலகம்.

# 18. காரிய காரண வுபாதி

18. காரிய காரண வுபாதி 2462. செற்றிடுஞ் சீவ வுபாதித் திறனேழும்

2462. செற்றிடுஞ் சீவ வுபாதித் திறனேழும்
பற்றும் பரோபாதி ஏழும் பகருரை
உற்றிடுங் காரிய காரணத் தோடற
அற்றிட வச்சிவ மாகும் அணுவனே.

முன் (2456) ஓதிய திருப்பாட்டின்கண் காரிய உபாதியாகிய சீவஉபாதி ஏழும் காரண உபாதியாகிய அருளுபாதி ஏழும் உள்ளவிடத்துத் தோன்றும் உபாதியாகிய வருத்தமும், அதனைச் சுட்டும் பெயர்களும் முற்றும் தோன்றாவாறு அற்றொழிதல் வேண்டும். அற்றொழிந்த விடத்து அவ்வணுவாகிய ஆருயிர் பற்றற்றார்க்கு என்றும் வற்றாப் பற்றாய் நிற்கும் பரசிவத்தின் அடியிணையைச் சாரும். சாரவே அச் சிவமாக நிற்கும்.

சீவ உபாதி - காரிய உபாதிகள். பரோபாதி - காரண உபாதிகள். அணுவன் - சீவன்.

## 2463. ஆறாறு காரியோ பாதி யகன்றிட்டு

2463. ஆறாறு காரியோ பாதி யகன்றிட்டு
வேறாய் நனவு மிகுத்த கனாநனா
ஆறா றகன்ற சுழுத்தி யதில்எய்தாப்
பேறா நிலத்துயிர் தொம்பதம் பேசிலே.

திருவருள் நினைவால் முப்பத்தாறு மெய்களால் ஏற்படும் காரியவருத்தம் என்னும் உபாதிகள் நீங்கும் நீங்கவே சிறப்பு நனவாய் மிகுத்த கனவின்கண் நிகழும் நனவும் உண்டாம். அதுபோல் ஆறாறு நீங்கிய உறக்கம் வந்துறும். அவ் வுறக்கமும் எய்தாத நிலைபெற்ற பேறாகிய திருவடியின்கண் சார்ந்து தொம்பதப் பொருளாகிய ஆருயிர் இன்புறும் பேசுமிடத்து இதுவே திருவடிப் பேறாகிய நிலம் என்ப.

(அ. சி) கனா நனா - கனவில் நனவு. பேறாநிலம் - முத்தி.

## 2464. உயிர்க்குயி ராகி யொழிவற் றழிவற்று

2464. உயிர்க்குயி ராகி யொழிவற் றழிவற்று
அயிர்ப்பறு காரணோ பாதி விதிரேகத்து
உயிர்ப்புறும் ஈசன் உபமிதத் தாலன்றி
வியர்ப்புறும் ஆணவம் வீடல்செய் யாவே.

ஆருயிரின் உயிர்க்குயிராய் விளங்கும் பேருயிர் முழுமுதற்சிவன். அவன் உயிர்க்குயிராய் நீக்கமற நிற்கின்றனன். அவன் என்றும் பொன்றா நிலையினனாகலின் அழிவற்றும் நிற்கின்றனன். மாறுபாடற்ற காரண உபாதியின் எதிர்மறையாகிய காரிய உபாதியின் கண்ணும் உடனாய் நின்று உற்று விளங்கும் ஆண்டவனாகவும் அவன் நிற்கின்றனன். அவனுடைய நீங்கா இயற்கைப் பேரருளாம் உபமிதியால் அல்லாமல் நடுக்கத்தைச் செய்யும் ஆணவவல்லிருள் விட்டு நீங்காது என்க. விதிரேகம். வியதிரேகம் - எதிர்மறை. வியதிரேகம் விதிரேகம் என வந்தது செய்யுட்டிரிபு. காரணோபதியின் எதிர்மறை என்று ஓதியது மாயை காரணத்தின்கண் எவ்வித மாறுபாடும் எய்தாதென்றும், காரியத்தின்கண் நிலம் மலை கடல் முதலிய பொருள்களாகத் தோன்றுவதும், அப் பொருள்கள் மண்ணும் கல்லும் நீருமாகத் தோண்டி எடுத்தல், வெட்டி எடுத்தல், முகந்து எடுத்தல் முதலியவற்றால் பிரிக்கப்படும் உறுப்புடையவாகக் காணப்படுவதும் ஆகிய மாறுதல்களும், பின் காரணத்தில் ஒடுங்குவதாகிய மாறுதலும் எய்தும் என்று

உணர்த்துதற்கென்க. வியர்ப்பு என்னும் காரியப் பெயர் ஆகுபெயராய்க் காரணத்தைக் குறித்ததென்க.

விதிரேகம் - எதிர்மறை. ஈண்டுக் காரிய உபாதியைக் குறிக்கின்றது. உபமிதத்தால் - கருணையினால். வீடல் - நீங்குதல்.

## 2465. காரியம் ஏழிற் கலக்கும் கடும்பசு

2465. காரியம் ஏழிற் கலக்கும் கடும்பசு
காரணம் ஏழிற் கலக்கும் பரசிவன்
காரிய காரணங் கற்பனை சொற்பதப்
பாரறும் பாழில் பராபரத் தானே.

முன் (2456) ஓதப்பெற்ற காரிய வருத்தம் ஏழின்கண்ணும் இருட்சார்பால் மருள் வயப்பட்டுத் துன்புறும் ஆருயிர் கலக்கும். அங்ஙனம் கலப்பதால் நீங்கா வருத்தம் எய்தும் அவ்வுயிரின் வருத்தத்தை ஒழித்தற் பொருட்டுக் காரண வருத்தம் ஏழின்கண்ணும் பரசிவன் எனப்படும் திருவருள் கலக்கும் அவ் வருள் கலந்து ஆருயிர்க்குத் துணைநின்று அவ் வுயிராலேயே அவ் வருத்தங்களை யகற்றும். இத்தகைய காரிய காரண வருத்தங்கள் வினைக்கீடாகக் கற்பிக்கப்பட்டு நிகழ்வனவாகலின் நீங்குந் தன்மைத்தாகும். ஈண்டுக் கற்பனை என்பது படைத்து மொழியும் கற்பனையன்று. திருவருள் திருவுள்ளத்தாற் கற்பிக்கும் கற்பனையாகும். கற்பனை - திருவாணை. ஏவுவார் கற்பித்தவாறே இயற்றுவார் இயற்றுவரன்றோ! அக் கற்பனை யாண்டும் பொய்யெனப்படுதற்கின்று. அதுபோன்றதாகும் ஈண்டுக் கூறும் கற்பனையும் சொல்லப்படும் அறியாமை விளையும் நிலம் அகன்ற இடம் உருவற்ற பாழென்ப. அப் பாழின்கண் திகழ்பவன் தொன்மைப் பெரும் பொருட்குத் தொன்மைப் பெரும் பொருளாம் சிவபெருமானாவன். அச் சிவபெருமான் திருவடிக் கீழ்த் தங்கும் ஆருயிர்.

கடும்பசு - மோகவசப்பட்டு வருந்தும் சீவன். சொற்பதப்பார் - சொல்லப்படும் அஞ்ஞானம் நிறைந்த பூமி.

# 19. உபசாந்தம்(செயலொழிவு)

19. உபசாந்தம்(செயலொழிவு) 2466. முத்திக்கு வித்து முதல்வன்றன் ஞானமே

2466. முத்திக்கு வித்து முதல்வன்றன் ஞானமே
பத்திக்கு வித்துப் பணிந்துற்றுப் பற்றலே
சித்திக்கு வித்துச் சிவபரந் தானாதல்
சத்திக்கு வித்துத் தனதுப சாந்தமே.

திருவடிப் பேறாம் முத்திக்கு வித்தாகிய வாயில் திருவடியுணர்வாகிய சிவஞானமாகும். இச் சிவஞானம் பெறுதற்கும் பெற்ற பேறு நீங்காதுறுதற்கும் வாயில் அவன் திருவடியினையும் அவன் மெய்யடியார் திருவடியினையும் பணிவும் இன்சொலும் உடையனாய் நீங்கா நினைவுடன் தொழுதல். இத் தொழுகையினையே பத்திக்கு வித்தாகும் என்ப. மனம் தன் வயப்படுதலாகிய சித்திக்கு வித்து அருள்வழி நிற்றலும் அவ் வருளினை மறவாமையுமாகும். திருவருள் தானாதல் என்பது அத் திருவருளை மறவாது உடலினுள் உயிர்விரவி அடங்கி நிற்குமாறு போலத் திருவருள் நினைவால் அத் திருவருளுள் அடங்கி நிற்பதாகும். சிவபரம் - சிவனைவிட்டு நீங்காத் திருவருள். திருவருள் வீழ்ச்சியாகிய சத்திநிபாதம் பதிதற்கு வாயில்பொறி புலனடக்கமாகிய செயலொழிவாகும். இதனையே உபசாந்தம் என்ப.

வித்து - ஏது. வற்றல் - உன்னல். உபசாந்தம் - ஐம்பொறியடக்கல்.

## 2467. காரியம் ஏழுங் கரந்திடு மாயையுள்

2467. காரியம் ஏழுங் கரந்திடு மாயையுள்
காரணம் ஏழுங் கரக்குங் கடுவெளி
காரிய காரண வாதனைப் பற்றறப்
பாரண வும்முப சாந்தப் பரிசிதே.

காரியவருத்தம் (2156) ஏழும் தூவா மாயையினுள் ஒடுங்கும். காரண வருத்தம் ஏழும் தூமாயையின்கண் ஒடுங்கும். காரிய காரண வருத்தங்களின் வாதனைப்பற்றாகிய பசையறத் திருவருட் பெருமை வந்து தலைப்படும். அது தலைப்படுதலே ஒடுக்கமென்னும் உபசாந்தமாகும். இவ்விளக்கமே அதன் பரிசாகும்.

கரந்திடும் - ஒடுங்கும். மாயையுள் - அசுத்தமாயையில். கடுவெளி - சுத்தமாயை. பாரணவும் - பெருமை பொருந்தும்.

## 2468. அன்ன துரியமே யாத்தும சுத்தியும்

2468. அன்ன துரியமே யாத்தும சுத்தியும்
முன்னிய சாக்கிரா தீதத் துறுபுரி
மன்னு பரங்காட்சி யாவ துடனுற்றுத்
தன்னின் வியாத்தி தனின்உப சாந்தமே.

ஒடுக்கச் செயலறலாகிய துரியமே ஆவித் தூய்மையாகும். பொருந்திய நனவினில் அப்பால் சிவனருளின்பமாகும். நிலைபெற்ற ஆவிக்காட்சியாவது சிவபெருமானின் திருவடியுணர்விற் கூடுவதாகும். அவ்வுணர்வின்கண் ஒடுங்கி நிற்பது உபசாந்தமாகும். ஒடுங்கி நிற்பது - அடங்கு நிறைவு ; வியாத்தி.

ஆத்திம சுத்தி - அந்தச்சுரணத் தூய்மை. புரி - பரமானந்தம். பரங்காட்சி - ஆன்மதரிசனம். உடனுற்று - சிவத்துடன் கூடி.

## 2469. ஆறா றமைந்தாண வத்தையுள் நீக்குதற்

2469. ஆறா றமைந்தாண வத்தையுள் நீக்குதற்
பேறான தன்னை யறிதற்பின் நீர்சுத்தி
கூறாத சாக்கிரா தீதங் குருபரன்
பேறாத வியாத்தம் பிறழுப சாந்தமே.

அருஞ் சைவர் மெய் (2139) முப்பத்தாறு இம் முப்பத் தாறும் மலத்தேய்வின் பொருட்டுச் செய்யப்படும் நலத்தொண்டினுக்குத் துணைக்கருவியாகச் செம்பொருளால் நம்பால் அளித்தருளப்பட்ட இரவல் பொருளாகும். இவ்வுண்மையினை யறிந்து அதனைப் பேணி ஒழுகுவதே, தத்துவசுத்தி என்னும் மெய்த்தூய்மையாகும். அதன் வாயிலாக ஆணவத்தினின்றும் அசுத்தால் நீங்குதல் ஆணவவல்லிருள் நீக்கமாகிய மலத் தூய்மையாகும். திருவடிப் பேற்றுக்கு உரித்தான ஆவிப்பேறு என அழைக்கப்பெறும். அத்தகைய தன்னை அருளால் அருளின்கண் அடங்கி நிற்கும். நிலையினுணர்தல் மும்மலத் தூய்மை யாகும். மும்மலம் ஒழிதலே மும்மலசுத்தி. கூறவொண்ணாத நனவின் அப்பாலாகிய சாக்கிராதீதம் சிவகுருவான் திருவடிப்பேறாகும். அத் திருவடியுன்கண் அடங்கும் நிறைவாய் நிற்றல் ஒளிமிக்க ஒடுக்கமாகிய உபசாந்தமாகும். அடங்கு நிறைவு - வியாத்தம். அசுத்தல் - மனத்தால்.

தீர்சுத்தி - பாசம் ஒழிதலாகிய சுத்தி. பிறழ் - விளங்குகின்ற.

## 2470. வாய்ந்த வுபசாந்த வாதனை யுள்ளப்போய்

2470. வாய்ந்த வுபசாந்த வாதனை யுள்ளப்போய்
ஏய்ந்த சிவமாத லின்சிவா னந்தத்துத்
தோய்ந்தறல் மோனச் சுகானுபவத் தோடே
ஆய்ந்ததில் தீருகை யானதீ ரைந்துமே.

திருவுருள் நினைவால் வாய்ந்த 1. ஒழிவில் ஒடுக்கம் 2. பசையறல் 3. திருவருள் தினைவிற் சேறல் 4. பொருந்தும் சிவமாதல் 5. சிவ இன்பம் 6. அதில் தோய்தல் 7. தோய்வு நினைவகறல் 8. மேன்மைநிலை 9. இன்பத்தழுந்தல் 10. அழுந்து நினைவகறல் ஆகிய பத்தும் நனவினப்பால் நலப்பாடாகும். நினைவறல் என்பது ஆருயிர் ஒன்றைக் கண்டும் கேட்டும் உளம்கொள்ளும். கொண்டதன்பால் வேட்கையுறும். வேட்கையுற்றுநாடி நண்ணும் இதுகாறும் அவ்வுயிர் அப் பொருட்கு வேறாக நிற்கின்றது. அதனால் அப் பொருளின் நினைவு அவ்வுயிரைவிட்டு அகவாதிருக்கும். நண்ணியதும் அப் பொருளின்கண் தோயும். தோய்ந்ததும் அந்நினைவு நானாக அகன்றுவிடும்.
கற்கவேண்டுமென்னும் நினைவு கற்குங்கால் தானே அகல்வது இதற்கு ஒப்பாகும். தோய்ந்ததும் தோமில் இன்பத்தழுந்தும். அழுத்தல் எனினும் அழுந்தி அறிதலெனினும் ஒன்றே. அதுவே அனுபவம்.

ஈரைந்து - (1) ஆணவம் ஒழிதல், (2) தன்னை உணர்தல், (3) அதனை ஒழிதல், (4) நனவில் அதீதம், (5) வியாபிதம், (6) உபசாந்தம், (7) சிவமாதல், (8) சிவானந்தத்தில் தானற்று

அழுந்தல், (9) அவ் வானந்தத்தை அனுபவித்தல், (10) அதனையும் ஒழித்தல்.

## 2471. பரையின் பரவ பரத்துடன் ஏகமாய்த்

2471. பரையின் பரவ பரத்துடன் ஏகமாய்த்
திரையினின் றாகிய தெண்புனல் போலுற்று
உரையுணர்ந் தாரமு தொக்க வுணர்ந்துளோன்
கரைகண் டானுரை யற்ற கணக்கிலே.

திருவருள் நிறைவாகிய பரவலினால் ஆருயிர் பரமாகிய அவ் வருளுடன் பிரிப்பின்றி வேறற்ற ஒன்றாய் நிற்கும். இதற்கு ஒப்பு கடலினின்றும் எழுந்த துளி வான்புகுந்து மழையாய்ப் பொழிந்து ஆறாய் மலை நிலம் பலவும் கடந்து மீண்டும் அக் கடலினுக்கே வந்து பொருந்துவதாகும். ஈண்டுக் கடலென்பது கடல் நீரையன்று. கடலின் நீருக்கும் நிலத்துக்கும் அடிப்படையாய்த் தாங்கி நிற்கும் பூதவெளியை என்க. இதனால் கடவுளும் கட்டுயிரும் ஒன்றே என மட்டின்றிப் பேசும் வாய் வேதாந்த மாயாவாதக்கோள் பொருந்தாமை காண்க. அவர்கள் கடல் நீரைக் கடவுளாகவும் அதன் துளியைக் கட்டுயிராகவும் கரைகின்றனர். அப் பாழ்ங்கோள் பொருந்தாமை காண்க சிவகுருவின் அருளுரை உணர்ந்து ஆரமுதொத்த அருளின்பம் உணர்ந்துளோன் "மாற்றம் மனங்கழிய நின்ற மறையோனின்" கரைகண்ட கவினுளோன் ஆவன். ஆங்குப் பேச்சற்ற பெருநிலையுண்டாம். அதுவே உரையற்ற கணக்கில் என்று ஓதப்பெற்றது. கட்டுயிர் - பசு.

பரையின் பரவ - திருவருளின் பெருக்கினால். திரையினின்றாகிய - கடலிற்கூடிய. தெண்புனல் - ஆறு.

ஆர் அமுது ஒக்க - தேவ அமிர்தம்போல. உரையற்ற - பேச்சற்ற.

# 20. புறங்கூறாமை

20. புறங்கூறாமை 2472. பிறையுள் கிடந்த முயலை எறிவான்

2472. பிறையுள் கிடந்த முயலை எறிவான்
அறைமணி வாட்கொண் டவர்தமைப் போலக்
கறைமணி கண்டனைக் காண்குற மாட்டார்
நிறையறி வோமென்பர் நெஞ்சிலர் தாமே.

பிறையாயிருந்து வளர்ந்து மதியாய் விளங்கும் நிறைபிறையின்கண் காணப்படும் களங்கத்தினை முயல் என்பர். அம் முயலினை எறிதலாகிய கொல்லுதற் பொருட்டு ஒலிக்கின்ற மணி கட்டிய கூர்வாளினை நேர்படக் கொண்டவர் எல்லாரானும் நகைக்கப்படுவர். அதுபோன்று திருநீலகண்டப் பெருமானை அவன் திருவருளால் காணும் பேறு பெறாதார் ஒழிவிலொடுக்கம் உணர்ந்தோம் என்பர். ஒழிவில் ஒடுக்கம்: ஒழிவின்கண் ஒடுக்கம். ஒழிவிலொடுக்கம் - உபசாந்தம். இவர்கள் மனமடங்கக் கல்லாப் புனவர் என்க. புனவர் - வேடர்.

பிறை - சந்திரன். எறிவான் - கொல்லும்பொருட்டு. அறைமணி வாள் - ஒலிக்கின்ற மணி கட்டிய வாள். நிறை - உபசாந்தம். நெஞ்சிலர் - மனம் இல்லாதவர்.

## 2473. கருந்தாட் கருடன் விசும்பூ டிறப்பக்

2473. கருந்தாட் கருடன் விசும்பூ டிறப்பக்
கருந்தாட் கயத்திற் கரும்பாம்பு நீங்கப்
பெருந்தன்மை பேசுதி நீயொழி நெஞ்சே
அருந்தா அலைகட லாறுசென் றாலே.

வலிய தாளையுடைய கருடன் விசும்பு ஆறாகப் பறந்து கொண்டிருக்கின்றது. ஆனால் மிகவும் ஆழமுள்ள புற்றில் வாழும் பாம்பு புடை பெயராது மூச்சு மடங்கி ஒடுங்கிக் கிடக்கின்றது. அதுபோல் நெஞ்சமே நீயும் அடங்கி நிற்கும் வழியை அருளால் அறிந்து அடங்குதல் வேண்டும். அம்முறையினை ஒரு சிறிதும் உணராது உணர்ந்தாரைப் போன்று நெஞ்சமே வீண்பெருமை பேசுகின்றாய். அதனால் ஆம்பயன் ஏதும் இன்று. ஆறு அலைகடலிற் சென்று ஆண்டே பிரித்தறிய வாராது அடங்கியிருப்பதுபோல் அடங்கியிருப்பாயாக. ஆறு சென்றால் என்னும் சொல்லின்பின் குறிப்பெச்சமாய்ச் 'சென்றால் கூடி மீண்டுவாராது அடங்கியிருப்பதுபோல் அடங்கியிரு' எனக் கூறிக்கொள்க. காயம் - புற்று; பாம்பு அடங்கியிருக்கும் பெரிய இடம்.

கருந்தாள் - வலிய கால். இறப்ப - தாண்டிச்செல்ல. கருந்தாட்கயம் - புற்று. நீ யொழி - நீ அப்பெருமை பேசுதலை விட்டுவிடு. அலைகடல் - அலைகளையுடைய கடலில்.

# 2474. கருதலர் மாளக் கருவாயில் நின்ற

2474. கருதலர் மாளக் கருவாயில் நின்ற
பொருதலைச் செய்வது புல்லறி வாண்மை
மருவலர் செய்கின்ற மாதவம் ஒத்தால்
தருவலர் கேட்ட தனியும்ப ராமே.

கருவாயாகிய போர்முனையிற் சென்று கருதலராகிய பகைவர்கள் மாளும்படியாக் போர் செய்து வெல்லுவது சிறந்த அறிவாண்மையன்று. அது புல்லறிவாண்மையேயாகும். திருவருள் நினைவால் அடக்கத்தை மருவிய ஆண்மையர் மருவலர் எனப்பட்டார். அவர் செய்கின்ற சிவத்தைப் பேணுதலாகிய நற்றவம் ஒத்துக் கைகூடினால் கருதியது கைகூடும். அவர்கள் கேட்டதளிக்கும் தருவலர்களாவர். தருவலர் என்பார், கற்பகதருப்போல் வேண்டியதை மறாதுகொடுக்கும் வள்ளலராவர் என்பதாம். ஒப்புயர்வற்ற சிவ வுலகமாகிய தனியும்பரும் கைகூடும்.

கருதலர் - பகைவர். கருவாய் - போர்க்களம். மருவலர் - அடங்கினவர். தருவலர் - கொடுக்கும் வள்ளல்கள்.

## 2475. பிணங்கவும் வேண்டாம் பெருநில முற்றும்

2475. பிணங்கவும் வேண்டாம் பெருநில முற்றும்
இணங்கியெம் மீசனே யீசனென் றுன்னிற்
கணம்பதி னெட்டுங் கழலடி காண
வணங்கெழு நாடியங் கன்புற லாமே.

உய்தி தரும் முழுமுதல் தெய்வம் சிவபெருமான் என்பதில் மாறுபடுதல்வேண்டா. பெருநிலமுற்றுக்கும் அவனே ஒப்புயர்வில்லா ஒருபெருங் கடவுள். அவன் திருவடிக்கண் பேரன்பு பூண்டு எம்முதல்வன் இவனே என்று எண்ணுங்கள். இவனே அனைத்துலகினுக்கும் அனைத்துயிர்கட்கும் முழுமுதல்வன் என்று தினைத்தனை ஐயமும் இன்றி மனத்துக்கொள்ளுங்கள். அங்ஙனம் கொள்ளுங்கால் பதினெண்கணத்தவரும் பிறரும் நும்மை வணங்கியெழுந்து மனத்து நினைந்தன பெறலாம் என்று வருவர். இது 'வணக்குறீர் அரனை யொருக்கால் என்றும் வானவர் வணங்கவைப்பன்' எனவும் 'தொழப்படும் தேவர் தம்மால் தொழுவிக்குந் தம் தொண்டரையே' எனவும் அருளிப்போந்த செந்தமிழ்மறையால் உணரலாம்.எனவே சிவபெருமான் திருவடிக்கீழ் அன்புறுதல் தவமாகும்.

பிணங்கவும் - வெகுளவும். பெருநிலம் - ஆஞ்ஞை. வணங்கெழுநாடி - வணங்க விரும்பி வருதலை உணர்ந்து.

## 2476. என்னிலும் என்னுயி ராய இறைவனைப்

2476. என்னிலும் என்னுயி ராய இறைவனைப்
பொன்னிலு மாமணி யாய புனிதனை
மின்னிய வெவ்வுயி ராய விகிர்தனை
உன்னிலும் உன்னும் உறும்வகை யாலன்றே.

என்னிலும் எனக்குச் சிறந்தான் என் உயிர்க்கு உயிராகிய இறைவனாவன். அவனை நீங்காநினைவுடன் தொழுதல் என் தலைக்கடனாகும். பொன்னினும் சிறந்த மாமணிபோன்று என்னுயிரினும் உணர்வின்கண் தன்னைக் குயிற்றும் முழுமுதற் புனிதனை நாயேன் தூய்மையுற நாளும் வாய்மையாற் பணிவேன். விளங்கிய எல்லா வுயிருடனும் கலந்துநிற்கும் முடிவிலாற்றலுடையானைப் படியின்மிசை அடிதொழுது வணங்குவல். விகிர்தன் - முடிவிலாற்றலன். குயிற்றல் - பதித்தல். அவன் அன்புடன் நினைப்பார் நினைவினும் மிகுதியாக நினைப்பன் நினைப்பாரைச் சாரும் வகை நினைந்தென்ப. உன்னிலும் - உன்னைக் காட்டிலும். உன்னும் - நினைக்கும் உறும் வகை - சாரும் வகை.

உன்னினும் உன்னும் - உன்னைப் பார்க்கிலும் அதிகமாக உன்னும்.

## 2477. நின்றும் இருந்துங் கிடந்தும் நிமலனை

2477. நின்றும் இருந்துங் கிடந்தும் நிமலனை
ஒன்றும் பொருள்கள் உரைப்பவ ராகிலும்
வென்றைம் புலனும் விரைந்து பிணக்கறுத்து
ஒன்றா யுணரும் ஒருவனு மாகுமே.

மன்றவாணனாம் சிவபெருமான் அடியிணையினை நின்றும், இருந்தும், கிடந்தும் நன்றாக நினையுங்கள். அவன் இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கிய தூயோன். பொருந்தும் மெய்ப்பொருள்களைத் திருந்த உரைப்பவராகிலும் புலனை வெல்லுதல்வேண்டும். புலனை வெல்லுதல் சிவபெருமான் திருவருளாலன்றி நம்மால் தனித்தாவதொன்றன்று. முழுமுதல் கடவுள் ஒன்றோ பலவோ என்னும் மாறுபாட்டுக் கொள்கையில் புகுதல் நன்றன்று. அப்பிணக்கினை யறுத்து 'ஒன்றே .குலமும் ஒருவனே தேவனும் (2066) என நன்றே நினைமின்'. என்னும் செந்தமிழ் முறையில் முந்துதல் நம் நடன். ஒருமனப்பட்ட உள்ளத்தராய் உணரும் கள்ளமில் செயலைக் கைக்கொண்மின்.

பிணக்கு - மாறுபாடு.

## 2478. நுண்ணறி வாயுல காயுல கேழுக்கும்

2478. நுண்ணறி வாயுல காயுல கேழுக்கும்
எண்ணறி வாய்நின்ற எந்தை பிரான்றன்னைப்
பண்ணறி வாளனைப் பாவித்த மாந்தரை
விண்ணறி வாளர் விரும்புகின் றாரன்றே

உணர்விற்கு உணர்வாம் நுண்ணறிவாக விளங்குபவன் சிவன். ஏழுலகினையும் இயைந்தியக்கும் எண்ணத்தக்க பேரறிவாய் நீக்கமற நின்றவனும் அவனே. அவனே எந்தை பிரானுமாவன். அவனே பண்ணறிவாளனாகிய கானத்தின் எழுபிறப்பின் காழில் கனியாவன். காழ் - வித்து. நிறைந்த பேரன்பால் நீங்காநினைவால் ஓங்கிவழிபட்டார் நீங்கரும் செம்பொருட் செல்வராவர். அத்தகைய மெய்யடியாரைத் தொழுதுய்ய வேண்டுமென்று விண்ணறிவாளரும் விரும்பி நண்ணித்தொழுகின்றனர்.

எண் - கருதப்பட்ட. பண் அறிவாளன்' - இசைஞான வழிவாளன். விண் - மேலான.

## 2479. விண்ணவ ராலும் அறிவறி யான்றன்னைக்

2479. விண்ணவ ராலும் அறிவறி யான்றன்னைக்
கண்ணற வுள்ளே கருதிடிற் காலையில்
எண்ணுற வாகமுப் போது மியற்றிநீ
பண்ணிடில் தன்மை பராபர னாகுமே.

விண்ணவர்களாலும் அவர்தம் முனைப்பறிவாகிய சுட்டறிவாலும் சிற்றறிவாலும் அறியவொண்ணா அன்பு இன்ப அண்ணலை வேறிடங்களில் முனைத்து விளங்குகின்றான் என்னும் பொது எண்ணத்தை விடுத்து நும்முள்ளத்தே செம்மை நினைவால் கருதுங்கள். அங்ஙனம் கருதினால் காலமுண்டாகவே கருதுவார் கருத்தினுள் மிக்கு விளங்கித் தோன்றியருள்வன். அத் தோற்றங்கண்டு எண்ணுதலாகிய தியானத்தைப் புரியுங்கள். அவ் வெண்ணவுறவு என்றும் நண்ணும் பொருட்டு முப்போதும் அகத்தும் புறத்தும் அன்புடன் இன்புறத் தொழுங்கள். அங்ஙனம் தொழுவார் வழுவாது விழுப்பொருட் சிவமாவர்.

கண்ணற - புற இடங்களில் அன்றி. எண்ணுற - உன்ன. இயற்றி - பூசைசெய்து. பண்ணிடின் - தவம்செய்தால்.

## 2480. ஒன்றா யுலகுடன் ஏழும் பரந்தவன்

2480. ஒன்றா யுலகுடன் ஏழும் பரந்தவன்
பின்றா னருள்செய்த பேரரு ளாளவன்
கன்றா மனத்தார்தங் கல்வியுள் நல்லவன்
பொன்றாத போது புனைபுக ழானன்றே.

தான் ஒருவனுமாய் ஒப்பில்லாதவனுமாய்க் கலப்பால் உலகு ஏழுடனும் நீக்கமற நிறைந்துநிற்பவன் சிவபெருமான். அவன் திருவடியைப் புகலென அடைந்த பின்பு அளவிலாப் பேரருள்புரிந்த பேரருளாளனாவன். மாறுபாடில்லாத செம்மை மனத்தார்க்குக் 'கற்ற கல்வியினும் இனியானா'கலின் கல்வியுள் நல்லவனாக நின்றருளும் செல்வனாவன். ஈண்டுக் கல்வி என்பது 'வாலறிவன் நற்றாள்' தொழுங்கல்வி. என்றும் பொன்றாது வாடுதல் எய்தாது திருவடிசூடுதல் செய்து நிலவும் நெஞ்சத் தாமரையாகிய போதின்கண் நிலைத்துநிற்கும் புனைகழலோன் ஆகிய புண்ணியன் சிவபெருமான்.

பின் - அவனை அடைந்தபிறகு. கன்றா - விரோதமில்லாத. பொன்றாதபோது - வாடாத மலர்; உள்ளத்தாமரை.

## 2481. போற்றியென் றேன்எந்தை பொன்னான சேவடி

2481. போற்றியென் றேன்எந்தை பொன்னான சேவடி
ஏற்றியே தென்றும் எறிமணி தானகக்
காற்றின் விளக்கது காய மயக்குறும்
ஆற்றலுங் கேட்டது மன்றுகண் டேனன்றே.

எந்தையாகிய சிவபெருமானின் பொன்னான திருவடியைப் போற்றி என்று வழுத்தினேன். போற்றி - காத்தருள்வாயாக. இஃது இகரஈற்று வியங்கோள் பின்பு திருவடியினை ஏற்றுதலாகிய பரவுதலைச் செய்தேன். செய்யவே அகத்தே ஓர் ஓசை உண்டாயிற்று. அவ்வோசை உயிர்ப்புப் பயிற்சியால் அகத்துத் தொடர்ந்து எழும் அடிக்கும் மணியோசையாகும். அகவிளக்காய்த் தோன்றும் அவ்வோசை உடம்பெங்கணும் கலந்துநிற்கும். அத் தன்மையினையும் அதனால் விளங்கும் அருளாற்றலையும் அந்நாள் கண்டேன் என்க.

அகக்காற்றின் விளக்கது - பிராண வாயுவினால் விளங்கும். கேட்டதும் - மணி ஓசையைக் கேட்டதும்.

## 2482. நேடிக்கொண் டென்னுள்ளே நேர்தரு நந்தியை

2482. நேடிக்கொண் டென்னுள்ளே நேர்தரு நந்தியை
ஊடுபுக் காரும் உணர்ந்தறி வாரில்லை
கூடுபுக் கேறலுற் றேனவன் கோலங்கண்
மூடிக்கண் டேனுல கேழுங்கண் டேனன்றே.

அடியேன் இருக்குமிடந் தேடிக்கொண்டு அடியேன் அகத் தாமரையினுள்ளே நேர்ந்து எழுந்தருளும் நந்தியை உள்ளே புகுந்து யாரும் உணர்ந்தறிவாரில்லை. என்னுடைய நெஞ்சினுள் நினைப்பை யானே அறிவதுபோல் என்னுள் நிற்கும் சிவபெருமானை யானே அறிகுவன். கூடியிருக்கும் உச்சித்துளை சென்று அகத்தவத்தால் ஏறினேன். அங்கு நன்மையே வடிவமான சிவபெருமானைக் கண்டேன். அவன் திருக்கோலங்களையுங் கண்டேன். கண்டு 'சிக்கெனப் பிடித்தேன்' என்பதுபோல் இடையறா நாட்டத்தால் தாள்தளையிடுதலாகிய மூடுதலைச் செய்தேன். அக் காட்சியினால் உலகு ஏழினையும் ஆடிநிழல்போல் என்னுள்ளே நிலவக் கண்டேன்.

நேடி - தேடி. நேர்தரு - எதிர்ப்பட்ட. ஊடு - உள்ளே. கூடு - பிரமரந்திரம். மூடிக் கண்டேன் -என்னுள் அடக்கிக்கண்டேன்.

## 2483. ஆன புகழும் அமைந்ததோர் ஞானமுந்

2483. ஆன புகழும் அமைந்ததோர் ஞானமுந்
தேனு மிருக்குஞ் சிறுவரை யொன்றுகண்டு
ஊனமொன் றின்றி யுணர்வுசெய் வார்கட்கு
வானகஞ் செய்யு மறவனு மாகுமே.

சிவபெருமானின் திருப்புகழ் ஒன்றே இறைவன் பொருள்சேர் புகழ் ஆகும். அவன் திருவடியுணர்வே என்றும் மாறாது பொருந்திய ஒப்பில்லாத சிவஞானமாகும். அவன் திருவடியின்பே 'திருவாசகமென்னும்தேன்' என ஓதுவதனைய வழுவில் செழுந்தேன் ஆகும். இதனையே இனிய அமிழ்தெனவும் கூறுப. இம் மூன்றும் ஒருபுடையொப்பாக உண்மை அறிவு இன்பமென இசைக்கலுமாம். இவை நிலைத்திருக்கும் நிலைக்களம் அகத்துக் காணப்பெறும் சிறு வரையாகும். சிறு வரை: மேரு என்னும் பொன் மலையாகும். அதுவே புருவநடுவென்ப. புருவநடுவினை மேருவென்றும், முதுகெலும்பினை மேருத்தண்டமென்றுங் கூறுப. இவ்வுண்மையினைக் குறைபாடு ஏதுமின்றி உணர்ந்து ஒழுகுதலைச் செய்யும் மெய்யன்பர்களுக்குச் சிவவுலகத்தின்கண் சிறந்த இடத்தை அமைத்துத் தரும் சீரிய ஆண்மையன் சிவபெருமானாவன். ஆண்மையன் எனினும் மறவன் எனினும் வீரன் எனினும் ஒன்றே.

தேன் - அமிழ்தம். சிறுவரை - புருவமத்தி, மேரு. மறவன் - உருத்திரன்.

## 2484. மாமதி யாமதி யாய்நின்ற மாதவர்

2484. மாமதி யாமதி யாய்நின்ற மாதவர்
தூய்மதி யாகுஞ் சுடர்பர மானந்தந்
தாமதி யாகச் சகமுணச் சாந்திபுக்கு
ஆமல மற்றார் அமைவுபெற் றாரன்றே.

மண்டையின் ஆணைக்கண் விளங்கும் திங்களின் மதியிடத்துத் தாம் அறிவாய் நிலைநின்றவர் அகப்பெருந்தவத்தோராவர். தூயமதியாகத் தம் மதிக்கும் மதிகொடுப்பவன் பேரின்பமான சிவபெருமானாவன். அவன் மதியே தம் மதியாக உலகினைத் தம்மிடத்திருப்பதாக நுகர ஒழிவொடுக்கம் புகுந்த நினைவினர் ஒண்மையராவர். ஒழிவு - உபசாந்தம். அவரே மீண்டும் பிறப்புக்கு ஆம் பெருமலம் அற்றோராவர். திருவடிக்கீழ் அமைவுபெற்ற மெய்யன்பருமாவர்.

மாமதியாம் - ஆஞ்ஞையிலுள்ள சந்திரனிடத்துள்ளதாம். மதியாய் - அறிவாய். தா மதியாக - தாம் அறிவுருவாக. சகமுண - உலகம் தம்மிடத்து இருப்பதாக. சாந்தி - உபசாந்த நிலை.

## 2485. பதமுத்தி மூன்றும் பழுதென்று கைவிட்டு

2485. பதமுத்தி மூன்றும் பழுதென்று கைவிட்டு
இதமுற்ற பாச இருளைத் துரந்து
மதமற் றெனதியான் மாற்றிவிட் டாங்கே
திதமுற் றவர்கள் சிவசித்தர் தாமே.

அயன் அரி அரனாகிய மூவர்வாழ் உலகப்பேறுகள் பதமுத்திகள் என்று சொல்லப்படும். அவை துன்பம் தருவன. மீட்டும் பிறப்பினுக்கு ஆளாக்குவன. ஆதலால், அவற்றைக் காணவேண்டு மென்னும் கருத்துக்கூடச் சிவனடியார்கட்குத் தோன்றுவதில்லை. அவற்றைப் பழுதென்று கைவிட்டகல்வர். இஃது என்னும் சுட்டிற்குப் புலனாகக் கூடிய மாயாகாரியப்
பொருள்கள் பாசம். அதற்கு மூலம் ஆணவவல்லிருள் எனவுணர்ந்து அவற்றைத் துரந்து ஆணவத்தால் விளையும் மதமற்று யான் எனதென்னும் செருக்கற்று இவையனைத்தையும் அருள் நினைவால் மாற்றிவிடுதல் அமையும். அங்ஙனம் மாற்றிவிட்டவர் திருவடிக்கீழ் நிலைபெற்ற குடியினராவர். இவரே திருவருளால் சிவத்தை உணர்வில் உணர்ந்த ஒண்மையராவர். இவரே சிவசித்தர்.

பதமுத்தி மூன்றும் - சத்தியலோகம், வைகுந்தம், கயிலாயம். இதமுற்ற - ஞான இன்பத்துக்குப் பொருளாகப் பொருந்திய திதமுற்றவர்கள் - நிலைத்திருப்பவர்கள்.

## 2486. சித்தர் சிவத்தைக் கண்டவர் சீருடன்

2486. சித்தர் சிவத்தைக் கண்டவர் சீருடன்
சுத்தாசுத் தத்துடன் தோய்ந்துந்தோ யாதவர்
முத்தரம் முத்திக்கு மூலத்தர் மூலத்துச்
சத்தர் சதாசிவத் தன்மையர் தாமன்றே.

செந்தமிழ்சேர் முந்திய சித்தராவார் சிவபெருமானை அருளால் உணர்விற் கண்டுணர்ந்த ஒண்மையர். அவன் திருவடி நினைவை விட்டு அகலாத சீரினர். தூமாயை தூவாமாயைகளுடன் தோய்ந்திருப்பினும் தாமரையிலைநீர்போல் ஒட்டுப்பற்றின்றி ஒருவனையே எண்ணும் மட்டில் அருள்சேர் திருவினர். திருவடிப்பேற்றினர். ஏனையாரைத் திருவடிப்பேற்றிற்கு ஆளாக்கும் நம்மூலரும் நால்வரும் (2502) போன்ற வாயிலினர். மூலமாகிய குண்டலிக்கண்ணும் அகத்தவத்தால் ஐந்தெழுத்தால் ஓமஞ்செய்யும் தூயர். இவர் அருளோனாகிய சதாசிவத்தன்மையராவர்.

சித்தர் - சிவத்தைக் கண்டவர். மூலத்துச் சத்தி - குண்டலினி.

# 21. எட்டிதழ்க் கமல முக்குண அவத்தை

21. எட்டிதழ்க் கமல முக்குண அவத்தை 2487. உதிக்கின்ற இந்திரன் அங்கி யமனுந்

2487. உதிக்கின்ற இந்திரன் அங்கி யமனுந்
துதிக்கும் நிருதி வருணன்நல் வாயு
மதிக்குங் குபேரன் வடதிசை யீசன்
நிதித்தெண் டிசையு நிறைந்துநின் றாரே.

புறத்து அமைப்பதுபோல் அகத்து நெஞ்சத் தாமரையின் கண்ணும் எண்புலக் காவலர் அமைக்குமாறு ஓதியருளுகின்றனர். நெஞ்சத் தாமரை இதழை எட்டாக அமைத்தல்வேண்டும். அதன்கண் கீழ்புலத்துத் தோன்றிவரும் ஞாயிறும், தென்கீழ்புலத்துத் தீக்கடவுளும், தென்புலத்து ஞமனும், தென்மேல்புலத்து நிருதியும், மேல் புலத்து மழைக் கடவுளும், வடமேற்புலத்துக் காற்றுக் கடவுளும்,
வடபுலத்துச் செல்வக்கோனும், வடகீழ்புலத்து ஆண்டானும் ஆக நிறைந்துநின்று காவல் புரியுமாறு திருவருளால் ஆணையிடுதல் வேண்டும். செம்பொருளாம் சிவவழிபாட்டினர் சிவமேயாகும் சிறப்பினராதலின் 'என்துரை தனதுரையாக' என்னும் இயல்பினராதலின், அவர்தம் கரணமெல்லாம் சிவநினைவால் சுடரும் சிவகரணமாதலின் ஆணையிடும் உரிமையும் தகுதியும் உடையோர் என்க. அதனால் எண்புலக் காவலரை ஆணையிட்டு நிறுவுவதன்றி அவரை வணங்கி வழிபடுவாரல்லர்;

என்னை? சிவனை வழிபடும் மெய்யடியார்களை அக்காவலர் நாளும் வழிபட்டு வருதலான் என்க. மேலும், "நாரணன் நான்முகன் இந்திரன், வாரணன் குமரன் வணங்குங்கழற் பூரணன்" சிவன் என்பது புனிதத் திருமறை.

இஃது எண்திசை இறைவர்களைப்பற்றிக் கூறியுள்ளது.

## 2488. ஒருங்கிய பூவுமோ ரெட்டித ழாகும்

2488. ஒருங்கிய பூவுமோ ரெட்டித ழாகும்
மருங்கிய மாயா புரியத னுள்ளே
சுருங்கிய தண்டின் சுழுனையி னூடே
ஒருங்கிய சோதியை ஓர்ந்தெழும் உய்ந்தே.

நெஞ்சத் தாமரையானது சேர்ந்து காணப்படும் எட்டிதழ்த் தாமரையென்று இயம்பப்படும். பெருமைமிக்கதாகிய மாயாபுரி என்னும் இவ்வுடம்பகத்து முதுகந்தண்டாகிய சுழுமுனைநாடி மிகவும் நுண்ணிதாய் அமைந்துள்ளது. அத் தண்டினூடே அடங்கிய அறிவுப் பேரொளியினை அகத்தவத்தால், அருளால் ஆய்ந்தெழுங்கள். அதுவே உய்யும் வழியாகும். இனி அப் பேரொளிப் பிழம்பினை நினைந்து உய்ந்து ஆய்ந்து எழுங்கள் என்றலும் ஒன்று.

ஒருங்கிய - சேர்ந்துள்ள. மருங்கிய - பெருமையுடைய. மாயாபுரி - உடம்பு. தண்டு - வீணாத்தண்டு. முதுகுத்தண்டு எலும்பு.

## 2489. மொட்டலர் தாமரை மூன்றுள மூன்றினும்

2489. மொட்டலர் தாமரை மூன்றுள மூன்றினும்
விட்டலர் கின்றனன் சோதி விரிசுடர்
எட்டல ருள்ளே இரண்டலர் உள்ளுறிற்
பட்டலர் கின்றதோர் பண்டங் கனாவன்றே.

நெஞ்சத் தாமரையின் விரிவினைப் பகுக்குங்கால் மூன்றாகப் பகுக்கப்படும். அவை முறையே இதழ், கொட்டை, கொட்டைநடு என்ப. கொட்டை - கர்ணிகை. இம்மூன்றினும் விட்டு நீங்காது தொன்மை உருவாக விளங்கும் மன்னும் ஆவி நிறைந்து நிற்கும் உலகமே உருவமாகக்கொண்டு திகழும் இறைவன் சோதிவிரிசுடர் எனப்படுவன். அவனை விராட்டெனவும் அழைப்பர். எட்டிதழ்த் தாமரையாகிய இதன்கண் கொட்டையும் நடுவும் அகமுள்ளனவாகும் அவ்விரண்டனுள்ளில் விளங்குவது ஆவியாகும்.

விட்டலர்கின்றனன் - விட்டுவிட்டு ஒளி வீசுகின்றான்.
பட்டலர்கின்றது - தோன்றி விளங்குவது.

## 2490. ஆறே யருவி யகங்குளம் ஒன்றுண்டு

2490. ஆறே யருவி யகங்குளம் ஒன்றுண்டு
நூறே சிவகதி நுண்ணிது வண்ணமுங்
கூறே குவிமுலைக் கொம்பனை யாளொடும்
வேறே யிருக்கும் விழுப்பொருள் தானன்றே.

அகத்தின்கண் அமுதப்பெருக்காகிய சிற்றாறு ஒன்றுண்டு. அவ்வாறு அருளால் போய்நிறையும் நெஞ்சக்குளமும் ஒன்றுண்டு. அங்குத் திகழ்வது அளவிடப்படாத சிவநிலை ஆகும். அதன் இயல்பும் நனிமிகு நுண்மையாகும் அங்குக் குவிந்த முலையினையுடைய அருளன்னையை ஒரு கூறாகக்கொண்டு சிறப்பாக வீற்றிருப்பவன் சிவபெருமான். அவனே தவலில் விழுப்பொருளாவன். தவலில் - கெடுதலில்லாத.

அருவி - அமுதப் பெருக்கு. அகம் குளம் - உள்ளமாகிய குளம். நூறே சிவகதி - அளவற்ற ஆனந்தம். கூறே - பாகத்திலுள்ள.

## 2491. திகையெட்டுந் தேரெட்டுந் தேவதை யெட்டும்

2491. திகையெட்டுந் தேரெட்டுந் தேவதை யெட்டும்
வகையெட்டு மாய்நின்ற ஆதிப் பிரானை
வகையெட்டு நான்குமற் றாங்கே நிறைந்து
முகையெட்டும் உள்நின் றுதிக்கின்ற வாறே.

திசைகள் எட்டினையும் ஆண்டு அருளாணையால் காவல் புரியும். காவலர் (2487) ஞாயிறு முதலிய எண்மராவர். அவர்களுக்கு உரிய தேராகிய ஊர்தியும் எட்டாகும். பூதங்கள் ஐந்து, ஞாயிறு திங்கள் உயிர் மூன்று ஆக எண்பெரு வடிவமாக விளங்குபவன் சிவன். இவை எல்லாமாய் நிற்கின்ற ஆதியையுடைய சிவனைக் காணுமாறு காண்க. அஃது அறிதற்பொறி ஐந்து, செய்தற்பொறி ஐந்து, மனம் ஒன்று, புத்தியாகிய இறுப்பு ஒன்று ஆகப் பன்னிரண்டும் புடைபெயராது அசைவற்று நின்றவிடத்து ஆங்கே சிவபெருமான் நிறைந்து தோன்றுவன். இதுவே எட்டிதழ் நெஞ்சத் தாமரையின்கண் உயிர்க்குயிராய்நிற்கும் சிவபெருமான் தோற்றமளித்தருளும் முறைமையாம் என்க. வகை எட்டும் என்பதற்கு எண்புலத்தார் வடிவம் எட்டென்றலும் ஒன்று.

திகை எட்டும் - எட்டுத் திசைகளும். தேர் எட்டும் - எண்திக்கிறைவர்களின் வாகனங்கள் எட்டும். தேவதை எட்டும் - திசைப்பாலகர் எட்டும். வகை எட்டும் - அப் பாலகர் வடிவங்கள் எட்டும். வகை எட்டும் நான்கும் அற்று - கன்மேந்திரியம் 5, ஞானேந்திரியம் 5, மனம் புத்தி 2,

ஆகப் பன்னிரண்டும் ஒழிந்து. முகை எட்டும் - எட்டு இதழ்களையுடைய உள்ளக்கமலம்.

## 2492. ஏழுஞ் சகளம் இயம்புங் கடந்தெட்டில்

2492. ஏழுஞ் சகளம் இயம்புங் கடந்தெட்டில்
வாழும் பரமென் றதுகடந் தொன்பதில்
ஊழி பராபரம் ஓங்கிய பத்தினில்
தாழ்வது வான தனித்தன்மை தானன்றே.
1. புகை எட்டும். அப்பர், 6. 33 - 9.

மேலோதிய எட்டிதழ்த் தாமரையுள் கிழக்குமுதல் வடக்கு ஈறாகவுள்ள ஏழு இதழ் ஆருயிர்வகை ஏழின் நிலைக்களமாகும். வடகீழ்பால் பேருயிராகிய ஆண்டானின் நிலைக்களமாகும். கீழிதழ் சிவபெருமானின் நிலைக்களமாகும். மேலிதழ் ஆருயிரும் பேருயிரும் வேறறப் புணர்ந்து நிற்கும் நிலைக்களமாகும். ஆருயிர் - ஆன்மா. பேருயிர் - பரமான்மா. தாழ்வு - அன்பு. அது சிவஞான சித்தியாரில் வரும் "தாழ்வெனும் தன்மை" என்பது அன்பென்னும் பொருளில் வருதல் காண்க. மேலும் 'கீழோராயினும் தாழவுரை' என்பதில் வரும் தாழ்வு என்பதும் அன்பு என்னும் பொருளையே தருதல் காண்க. இரண்டற்ற நிலைமையினைத் தனித்தன்மை என்ப.

ஏழும் - கிழக்கு முதல் வடக்கு ஈறாக உள்ள ஏழு இதழ்களும். சகளம் - சீவனின் இடங்கள். எட்டில் - வடகிழக்கு இதழாகிய எட்டாவது இதழ் பரனது இடம். ஒன்பதில் - ஒன்பதாவது இதழில். ஊழி பராபரம் - சதாசிவன் இடம். பத்தினில் - பத்தாவது இதழில். தாழ்வது - ஐக்கியத்தானம்.

## 2493. பல்லூழி பண்பன் பகலோன் இறையவன்

2493. பல்லூழி பண்பன் பகலோன் இறையவன்
நல்லூழி ஐந்தினுள் ளேநின்ற வூழிகள்
செல்லூழி யண்டத்துச் சென்றவவ் வூழியுள்
அவ்வூழி யுச்சியு ளொன்றிற் 1பகவனே.

உலகினுக்குப் பல வூழிகளை யமைத்து வளர்ச்சியுறச் செய்பவன் சிவன். அவனே பகலோன் என்றும் இறையவனென்றும் அழைக்கப்படுவன். நல்ல ஊழிகள் ஐந்தென்ப. அவை நீக்கல் முதலிய ஐவகைக் கலைகளின் நிகழும் ஐவகை ஒடுக்கமும் என்ப இவைகள் அண்டத்துச் செல்லும் ஊழிகளாகும். அவ் வூழியுள் ஒன்றுபவனும் சிவனே. ஊழியுச்சியினுள் ஒன்றுபவனும் சிவனே.

பல்லூழி பண்பன் - பல ஊழிகளை உண்டாக்குகிறவன். இறையவன் நல்லூழி ஐந்தினுள் - இறைவனால் உலக வளர்ச்சி கருதி ஏற்பட்ட ஊழிகள் ஐந்தினுள்; (According to geology only 5 delusions have occurred hitherto in this world. This coincides with Thirumoolar.) பகவன் - சிவன்.

## 2494. புரியும் உலகினிற் பூண்டவெட் டானை

2494. புரியும் உலகினிற் பூண்டவெட் டானை
திரியுங் களிற்றொடு தேவர் குழாமும்
எரியு மழையும் இயங்கும் வெளியும்
பரியுமா காசத்திற் பற்றது தானே.

திருவருளால் உண்மை புரியும். உலகத்தினிடத்து எண் பேருருவாய்த் திகழ்பவன் சிவன். சுற்றித்திரியும் களிறுகளும், தேவர் கூட்டமும் தீயும் மழையும் இயங்குதற்கு வழியாகவுள்ள வெளியும், இவையனைத்திற்கும் இடம் தரும் அறிவுப் பெருவெளியும் அருளால் நோக்கு
வார்க்கு அறிவுப் பெருவெளியைப் பற்றாகக் கொண்டு நிகழ்வது புலனாகும்.

எட்டானை - எண்வகை வடிவு உடையவனை.

## 2495. ஊறு மருவி யுயர்வரை யுச்சிமேல்

2495. ஊறு மருவி யுயர்வரை யுச்சிமேல்
ஆறின்றிப் பாயும் அருங்குளம் ஒன்றுண்டு
சேறின்றிப் பூத்த செழுங்கொடித் தாமரைப்
பூவின்றிச் சூடான் புரிசடை யோனன்றே.

உயர்வரையுச்சி என்பது ஆணையிடமாகும். அதுவே நெற்றிப் புருவமாகும். அங்கு ஆறு முதலிய தோற்றரவில்லாமல் இடையறாது நீர் நிரப்பும் குளம் ஒன்றுண்டு. உலகியல் தாமரை சேற்றிற் பூப்பது. ஈண்டுப் பேசப்படும் ஆயிரவிதழ்த் தாமரை அருள் வெளியிற் பூப்பது. அதனால் அது சேற்றிற் பூவாததாகும். மாலையில் தாங்குருவே போன்று காணப்படும் பின்னற் சடையினையுடைய சிவபெருமான் பேருவகையோடும் இப் பூவல்லாமல் வேறு பூச்சூடான் என்ப.

உயர்வரை உச்சி - ஆஞ்ஞை. பாயும் - நீர் நிரம்பும், தாமரை - சகசிர அறை.

## 2496. ஒன்றும் இரண்டும் ஒருங்கிய காலத்து

2496. ஒன்றும் இரண்டும் ஒருங்கிய காலத்து
நின்றும் இருந்தும் நிலம்பல பேசினும்
வென்று மிருந்து விகிர்தனை நாடுவர்
சென்றும் இருந்துந் திருவுடை யோரன்றே.

ஒன்றும் இரண்டும் ஆகிய மூன்றும் முக்கரணங்களாகும். அவை முறையே உள்ளம் உரை உடலென்ப. இவற்றை மனமொழி மெய்களென்ப. இம் மூன்றும் தம்வயப்பட்டு ஒடுங்கிய காலத்து எந்நிலத்து நின்றாலும் இருந்தாலும் புலன் வென்றிருந்து புகழ் மெய்ப் பொருளை நாடுவர். அவர்கள் சென்றும் இருந்தும் சிவத்திருவுடையாரே யாவர்.

ஒன்றுமிரண்டும் - முக்கரணங்களும். வென்று - புலனை அடக்கி ஒருங்கிய - ஒத்திருக்கின்ற.

# 22. ஒன்பான் அவத்தை - ஒன்பான் அபிமானி

22. ஒன்பான் அவத்தை - ஒன்பான் அபிமானி 2497. தொற்பத விசுவன் றைசதன் பிராஞ்ஞன்

2497. தொற்பத விசுவன் றைசதன் பிராஞ்ஞன்
நற்பத விராட்டன்பொன் கர்ப்பனவ் யாகிர்தன்
பிற்பதஞ் சொலிதையன் பிரசா பத்தியன்
பொற்புவி சாந்தன் பொருதபி மானியே.

தொன்மை நிலையாகிய சிவபெருமான் யாண்டும் கலந்து நிற்கும் நிலையினைப் பலவாகக் கூறுதல் உண்டு. அவற்றுள் இதுவும் ஒன்று. அம் முறை விசுவன் முதலாகச் சாந்தன் ஈறாகக் கூறப்படும் நிலை ஒன்பதும் என்ப. அவை வருமாறு: 1. விசுவன் - உலகவுருவினன். 2. தைசதன் - தழல் வண்ணன். 3. பிராஞ்ஞன் - பேரறிவினன். 4. விராட்டன் - உலகமுதல்வன். 5. பொன்கர்ப்பன் - பொன்மேனியன். 6. அவ்யாகிர்தன் - பிரிக்கப்படாதவன். 7. இதையன் - கலப்பையன். 8. பிரசாபத்தியன் -ஆருயிர் முதல்வன். 9. சாந்தன்- தண்ணளியோன். இந் நிலைகள் ஒன்பதும் பொருந்திய பொருவில் பற்று நிலைகளாகும்.

## 2498. நவமா மவத்தை நனவாதி பற்றிற்

2498. நவமா மவத்தை நனவாதி பற்றிற்
பவமா மலங்குணம் பற்றற்றுப் பற்றாத்
தவமான சத்திய ஞானப் பொதுவில்
துவமார் துரியஞ் சொரூபம தாமே.

மூவகையாம் அவத்தைகள் மும்மூன்றாய் ஒன்பதென்ப. அவை, ஆருயிரின் நனவாதி மூன்றும், ஆரருளின் நனவாதி மூன்றும் பேருயிரின் நனவாதி மூன்றும் என ஒன்பதாகும். இவற்றைச் சீவசாக்கிரம், பரசாக்கிரம், சிவசாக்கிரம் முதலாகச் சொல்லுவர். ஆருயிர் நனவு, ஆருயிர்க் கனவு, ஆருயிர் உறக்கம் என மூன்று. ஆரருள் நனவு, ஆரருள் கனவு, ஆரருள் உறக்கம் என மூன்று. பேருயிர் நனவு, பேருயிர்க் கனவு, பேருயிர் உறக்கம் என மூன்று. பிறப்பிற்கு வாயிலாகிய மலம் குணம் முதலியவற்றின் பற்றையறுத்துப் பற்றுதற்கரிய நன்னெறி நான்மை நற்றவமான உண்மை அறிவு இன்ப வழிவாம் ஐம்பெருமன்றாம் பொருவிலாப் பொதுவில் மேன்மைமிக்க செயலறு நிலையாம் துரியம் உணர்விற்கு உணர்வாம் உண்மை நிலையாகும். சொரூபம் - இயற்கை உண்மை.

நவமாமவத்தை - நவ அவத்தை, ஒன்பது அவத்தைகள். நனவு, கனவு, சுழுத்தியை; சீவன், பரம், சிவன் மூன்றுக்கும் சேர்த்த ஒன்பது ஆதல் காண்க. பவமாம் - பிறப்பு உண்டாம். பற்றா - பற்றுதற்கரிய. துவமார் - மேன்மைபொருந்திய.

## 2499. சிவமான சிந்தையிற் சீவன் சிதைய

2499. சிவமான சிந்தையிற் சீவன் சிதைய
பவமான மும்மலம் பாறிப் பறிய
நவமான அந்தத்தின் நற்சிவ போதந்
தவமா மவையாகித் தானல்ல வாமே.

திருவருளால் சிவனையே இடையறாது நாடுவார் சிந்தையின்கண் சிவனுறைவன்; என்னை, "சிந்திப்பார் மனத்தான் சிவன்" எனவும், "சிந்திப் பரியன சிந்திப்பவர்க்குச் சிறந்து செந்தேன், முந்திப் பொழிவன" எனவும் செந்தமிழ்த் திருமாமறை சிறந்தெடுத்து ஓதுதலான் என்க. ஆருயிரின் முனைப்புத்தன்மை யகன்று பேருயிர்க்கு அடிமையாம் நினைப்புத் தன்னை இடையறாது சிந்தித்தலால் கைவரும். வரவே ஆருயிர் முனைப்புத் தன்மை அகலும் பிறப்பிற்கு வாயிலாகிய ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலமும் முற்றும் அற்று ஒழியும். ஒழியவே மேல் (2498)ஒன்பது நிலைகளின் முடிவாகிய சிவபேருயிரின் அந்தத்தின்கண் நன்மை வடிவாம் சிவபோதம் தலைப்படும். தவநிலையாகிய அப் போத வண்ணமாய் ஆருயிர் தன்னை அருளால் ஆக்கிக் கொள்ளும். அப்பொழுது அவ்வுயிர் நன்மையாய்த் திகழும். இதனால் திருவடி யுணர்வுடைய சீரியோர் நல்லார் என நவிலப் பெறுவர்.

சிதைய - ஒடுங்க. பாறிப்பறிய - போயொழிய. நவமான அந்தம் - சிவசுழுத்தி.

## 2500. முன்சொன்ன வொன்பானின் முன்னுறு தத்துவந்

2500. முன்சொன்ன வொன்பானின் முன்னுறு தத்துவந்
தன்சொல்லில் எண்ணத் தகாவொன்பான் வேறுள
பின்சொல்ல லாகுமிவ் வீரொன்பான் பேர்த்திட்டுத்
தன்செய்த வாண்டவன் றான்சிறந் தானன்றே.

முன் (2497) ஓதிய பொருவில் பற்றுச் சேர் ஒன்பதனுள் முன் பொருந்தும் மெய்கள் தன் சொல்லினால் கருதிச் சொல்லத்தகாதன ஒன்பதாகும். பின் சொல்லப்படும் ஒன்பது மெய்களும் வேறுள. இவ்வகையாகச் சொல்லப்படும் பதினெட்டையும் ஒழித்துவிட்டு ஆருயிர்களைத் தானாகச் செய்தருளிய சிவபெருமான் ஒருவனுமே சிறந்தோனாவன். உயிரினும் சிறந்த அச் சிவபெருமானை உள்ளன்புடன் ஓவாது தொழுது உய்வதே சிறப்பென்க. முன்னுறு என்பதற்குக் கருதப்படுகின்ற என்றலும் ஒன்று.

முன்னுறு - கருதப்படுகின்ற. ஒன்பான் - அபிமானி ஒன்பது. பேர்த்திட்டு - ஒழித்துவிட்டு. தன் செய்த - சிவமாகச் செய்த.

## 2501. உதந்தன ஒன்பதும் ஐந்தும் உலகம்

2501. உதந்தன ஒன்பதும் ஐந்தும் உலகம்
பகர்ந்த பிரானென்னும் பண்பினை நாடி
அகந்தெம் பிரானென்பன் அல்லும் பகலும்
இகந்தன வல்வினை யோடறுத் தானே.

தனிமுதல் உயர்வு தமக்கென அமைந்த பதினான்கு நூல்களையும் உலகினர்க்குப் பகர்ந்தருளிய பெருமான் ஆலமர் செல்வனாவன். அப் பெருமானின் பண்பினை நாடி மனமொருங்கி எம்பெருமான் என்று இரவும் பகலும் இடையறாது ஏத்தவன். ஏத்தவே ஆருயிரின் வன்மையினைக் கடந்துள்ள வல்வினையோடு பிறப்பினையும் அறுத்தருளினன் சிவன். செந்தமிழ்த் தெய்வமாம் சிவபெருமான் திருவருளால் இப்பொழுது ஈடும் எடுப்புமில்லாப் பீடுசேர் மெய்கண்ட நூல்கள் நாடுய்ய விளங்குவன பதினான்கு. இப் பதினான்கும் மேலோதிய பதினான்கிற்கும் ஒருபுடை யொப்பாகக்கொள்ள அமைத்தருளிய அருளை யுன்னி யுன்னி அகமகிழ்க.

ஒன்பதும் ஐந்தும் - பதினான்கு அறிவு நூல்களும்.

## 2502. நலம்பல காலந் தொகுத்தன நீளங்

2502. நலம்பல காலந் தொகுத்தன நீளங்
குலம்பல வண்ணங் குறிப்பொடுங் கூடும்
பலம்பல பன்னிரு கால நினையும்
நிலம்பல வாறின னீர்மையன் றானே

தொன்றுதொட்டு நீண்ட நாட்களாக நாம் நலம் பல அடைந்து நல்வாழ்வு எய்துதற் பொருட்டுச் சிவபெருமானை வாழ்த்தி வழிபடப் பல காலங்களைப் பாங்கொடும் அமைத்தருளினர் செம்பொருட் செல்வர். அவை ஆறு எனவும் நான்கு எனவும் கூறுப. ஆறு: சிறுபொழுதாறாகும்; 'மாலையாமம்வைகுறுவிடியல், காலை நண்பகல் ஏற்பாடென்ப.' நான்கு, "காலை கடும்பகல் மாலை வீங்கிருள்" என்பன, இக் காலங்கள் பல வேறுவகையான குடும்பத்தார்களும் குறிக்கோளுடன் வணங்குவதற்கு வாய்ப்பினவாகும். அவற்றுள் நனிமிகு பலனை இனிமையுடனும் எளிமையுடனும் தரத்தக்க சிறந்த வண்மைக்காலம் இரண்டாகும். அவை உழைப்புறு பயனை உண்டு மேலும் உழைப்பதற்காம் உரன் பெறுதற்பொருட்டு இளைப்பாறுவதாகிய உறக்கத்துக்குச் செல்லுங்காலம் ஒன்று. மற்றொன்று உறங்கி விழித்து உன்னிய அனைத்தும் உடையான் நினைவுடன் உழைக்க எழுங்காலம் ஒன்று. ஆக இத்தகைய இரண்டு காலங்களிலும் இன்றியமையாது நினைந்து வழிபடவேண்டுவது நம் கடனாகும். அச் சிவபெருமான் வழிபாட்டிற்குரிய நிலமும் உருவும் கலமும் பலவாகக் கொண்டு வழிபடுவார்க்கும் அவ்வவ்வாறே தோன்ற

அருள்புரியும் செவ்விய நீர்மையனாவன். இனி இருகாலம் என்பதற்கு எச் செயற்கும் முன்னும் பின்னும் ஆகிய இரு காலங்கள் எனலும் ஒன்று. ஒருபுடையாக உழைத்தலே உண்டல் இழைத்த லுணர்தல், தழைத்தலுறங் கல்லிருமுப் போது எனக் கொள்ளுதல் ஏற்புடைத்து. கலம் - கருவிகள்.

"நம்மூல ராற்போற்ற நால்வரால் நாட்டநிலை
செம்பொருட்சித் தாந்தசைவம் தேறுங்கால் -
அம்பொனருள்
'சிந்திப்பார்' 'காலை' 'படைக்கலமா' 'வாழ்க' 'என்றும்'
வந்திப்பார் நாற்போதை வாழ்த்து."

என்னும் வெண்பாவினை நினைவு கூர்க. நாற்போதை: நாற்போது + ஐ. ஐ மேற்குறித்த ஐந்து திருப்பாட்டுக்களைக் குறிக்கும்.

## 2503. ஆதி பராபர மாகும் பராபரை

2503. ஆதி பராபர மாகும் பராபரை
சோதி பரமுயிர் சொல்லுநற் றத்துவம்
ஓதுங் கலைமாயை யோரிரண் டோர்முத்தி
நீதியாம் பேதமொன் பானுடன் ஆதியே.

யாவர்க்கும் யாவைக்கும் வினைமுதற் காரணமாம் சிவபெருமான் ஆதி பராபரம் ஆவன். அவன் கலப்பால் பராபரையாய், சோதியாய், பரமாய், உயிராய், கலையாய், மாயையிரண்டாய், வீடாய், திருவடிப் பேறாய் விளங்குவன். இத்தகைய முறைமையுடன் கூடிய ஒன்பது வேறுபாட்டுடன் விளங்கியருள்பவன் முழுமுதல்வனாகிய சிவபெருமானே.
ஆதி - முழுமுதல்வன்.

## 2504. தேறாத சிந்தை தெளியத் தெளிவித்து

2504. தேறாத சிந்தை தெளியத் தெளிவித்து
வேறா நரக சுவர்க்கமும் மேதினி
ஆறாப் பிறப்பும் உயிர்க்கரு ளால்வைத்தான்
வேறாத் தெளியார் வினையுயிர் பெற்றதே.

ஆருயிர்களின் தெளியாத சிந்தை தெளியும் பொருட்டு மாறுபட்டவற்றைப் படைத்துத் தாந்தாம் உய்த்துணர்ந்து தெளியுமாறு தெளிவித்தருளினன். அவை ஒன்றோடொன்றொவ்வா ஒரே துன்பமாயிருக்கும் இருளுலக நரகமும், ஒரே இன்பமாக இருக்கும் ஒளியுலகமாகிய துறக்கமும் நிலவுலகின்கண் செய்துகொண்ட இருவினைப்பயன் வழியாக எய்துவன. அவ் வுயிர்கள் எஞ்சிய வினைக்கு நிலத்தின்கண் மீண்டும் பிறக்கும். இவற்றைச் சிவபெருமான் அருளால் அமைத்தருளினன். இவற்றைச் சிறப்பாகத் தெளியார் உயிர்நிலைக்களமாம் உடல்பெற்றது மேலும் பிறக்கும் வினைசெய்தற்கேயாம். அவ் வுடல் கொடுத்தது இதன் பொருட்டன்று; சிறக்கும் பணி செய்தற் பொருட்டேயாம். வேறா - சிறப்பாக.

வேறா - மாறுபட்ட.

## 2505. ஒன்பான் அவத்தையுள் ஒன்பான் அபிமானி

2505. ஒன்பான் அவத்தையுள் ஒன்பான் அபிமானி
நன்பாற் பயிலு நவதத் துவமாதி
ஒன்பானில் நிற்பதோர் முத்துரி யத்துறச்
செம்பாற் சிவமாதல் சித்தாந்த சித்தியே.

ஒன்ப (2498) தென்னும் பாடாகிய அவத்தையுள் ஒன்பான் (2497) அபிமானி என்னும் பொருவில் பற்றினர் உளர். இவர்களே அதி தெய்வமாவர். நல்ல முறையாகப் பயிலப் பெறும் ஒன்பது (2503) மெய்களும் உள. இவற்றுடனெல்லாம் ஆருயிர்ச் செயலறல், ஆரருட் செயலறல், பேரருட் செயலறல் என்னும் முத்துரியமும் பொருந்தும். இங்ஙனம் பொருந்து மாறருளிப் பொருந்தி நிற்பவன் சிவன். அவனே செம்பாற் சிவன்: செம்பொருட் சிவன்; இவ் வுண்மையினை மேற்கொண்டு ஒழுகுவோன் செம்பொருட்டுணிவினனாவன் அவனே சித்தாந்தச் செல்வன். அவன் நீங்காச் சிவ நினைவால் ஓங்கும் சிவமாவன். அந் நிலையே சித்தாந்த சித்தியாகும். சித்தாந்த சித்தி எனினும் திருவடிப்பேறு எனினும் ஒன்றே.

அபிமானி - அதிதேவதை. முத்துரியம் - சீவ, பர. சிவதுரியங்கள். செம்பாற் சிவம் - செம்மையுடைய சிவம்.

# 23. சுத்தாசுத்தம்

23. சுத்தாசுத்தம் 2506. நாசி நுனியினின் நான்குமூ விரலிடை

2506. நாசி நுனியினின் நான்குமூ விரலிடை
ஈசன் இருப்பிடம் யாரும் அறிகிலர்
பேசி யிருக்கும் பெருமறை யம்மறை
கூசி யிருக்குங் குணமது வாகுமே.

நாசி நுனியினின்றும் புறப்பட்டு வெளிப் போதரும் உயிர்ப்புப் பன்னிரண்டு விரலளவு வரையில் ஓடும். அங்ஙனம் ஓடும் அவ்
வுயிர்ப்பின் இறுதிக்கண் விளங்கியருள்பவன் சிவபெருமான். அஃது அவன் இருப்பிடம் என்னும் உண்மையினை யாரும் அறியார். அங்ஙனம் இருப்பதாகப் பெருமறை பேசியிருக்கும். எனினும் அறுதியிட்டுக் கூற நாணியிருக்கின்றது. இதுவே அம் மறையின் குணமாகும்.

நாசி நுனியில் - மூக்கு நுனியினின்றும் வெளிப்படும் பிராணவாயுவில். நான்கு மூவிரல் - பன்னிரண்டு விரற்கடையில். கூசி இருக்கும் - கூறமுடியாமல் நாணிஇருக்கும்.

## 2507. கருமங்கள் ஒன்று கருதுங் கருமத்து

2507. கருமங்கள் ஒன்று கருதுங் கருமத்து
உரிமையுங் கன்மமும் முன்னும் பிறவிக்கு
அருவினை யாவது கண்டகன் றன்பிற்
புரிவன கன்மக் கயத்துட் புகுமே.

ஆருயிர் செய்யும் இருவினையாகிய கன்மங்கள் பொருந்தும் கருத்தினால். அங்ஙனம் கருதுகின்ற கருமப் பயனின் உரிமையும், மீண்டும் பிறவிக்கு வித்தாம் கன்மமும் கருதப்படுகின்ற பிறவிக்கு அருவினையாகும். திருவருளால் இவ் வுண்மை கண்டு அகன்ற பின்பு யான் என தென்னும் செருக்காம் தன் முனைப்பற்று ஆண்டானுக்கு அடிமையாம் அருள் முனைப்புடன் செய்வன அனைத்தும் இறைபணியாகும். இப் பணியால் கன்மக் கயமாகிய வினை நீக்கத்துள் அவ் வுயிர் புகும் என்க. கயம் - தேய்வு; குறைவு.

பிறவிக் கருவினை - பிறப்புக்கு மூலத்தை. கன்மக் கயத்துட்புகாமே - கன்மமாகிய குளத்துள் மூழ்காமல்.

## 2508. மாயை மறைக்க மறைந்த மறைப்பொருள்

2508. மாயை மறைக்க மறைந்த மறைப்பொருள்
மாயை மறைய வெளிப்படும் அப்பொருள்
மாயை மறைய மறையவல் லார்கட்குக்
காயமும் இல்லை கருத்தில்லை தானன்றே.

மாயாகாரிய உலகங்களாலும் உலகியற் பொருள்களாலும் உடலாலும் மருள் கொண்டு தெருள் நாடாது உழலும் ஆருயிர் மாயையால் மறைக்கப்பட்ட நிலையினதாகும். அம் மறைப்புக்கு உட்பட்டமையால், செந்தமிழ்த் திருமறையால் சிறந்தெடுத்து ஓதப்பெறும் மறை பொருளாம் 'தென்னாடுடைய சிவனை' உன்னாதிருக்கின்றது. அதனால் அச் சிவன் மறைபொருள் எனப்படுகின்றனன். மாயையின்பாற் கொண்ட மருள் மறையத் திருவருள் நினைவாம் தெருள் தோன்றும். அது தோன்ற அம் மறைபொருளாகிய சிவன் வெளிப்படுவன். மாயையின் மருள் தோன்றாது மறைதலினால் அத்தகையோர் சிவபெருமான் திருவடிக்கீழ் ஒடுங்குதலாகிய மறையவல்லாராவர் அவர்கட்கு இனிப்
பிறப்பதற்கு வருவதோர் உடம்புமில்லை. இப்பொழுது தங்கியிருக்கும் உடம்பும் 'தூயவெண்ணீறு துதைந்த பொன் மேனியும் தாழ்வடமும், நாயகன் சேவடி தைவரு சிந்தையும்' மேயதனால் தூயதாய்ச் சிவன் பணிக்குரிய சிவவுடம்பே யாகும். அதனால் அவ்வுடம்பு அவர்களுக்குரியதாயில்லை. சிவனினைவன்றிச் சேரும் எந் நினைவும் அவர்கள் பாலில்லை. மேலும் 'அன்றே என்றன்

ஆவியும் உடலும் உடைமை எல்லாமுங், குன்றே அனையாய் என்னை ஆட்கொண்ட போதே கொண்டிலையோ' என்னும் செந்தமிழ்த் திருமறை முடிபின்படியும் அவ் வுடம்பு அவர்களுடையதாகவில்லை.

மறைப்பொருள் - சிவம்.

## 2509. மோழை யடைந்து முழைதிறந் துளபுக்குக்

2509. மோழை யடைந்து முழைதிறந் துளபுக்குக்
கோழை யடைக்கின்ற தண்ணற் குறிப்பினில்
ஆழ அடைத்தங் கனலிற் புறஞ்செய்து
தாழ அடைப்பது தன்வலி யாகுமே.

புருவ நடுவண் தோன்றும் அருளமுத ஆற்றினை அடைந்து உச்சித்தொளையினை அருள்நினைவால் திறந்து அகத்தே புகுதல் வேண்டும். புகுந்தபின் அண்ணலாகிய சிவபெருமான் திருவடியிணையினை நீங்கா நினைவுடன் இருத்தல் வேண்டும். அந் நினைவு கோழையாகிய அறியாமையினை அடைக்கின்றதாகும். அவ்வடைப்பினின்றும் வெளிப்படாவாறு ஆழ அடைத்தல் வேண்டும். அடைத்தபின் அகத்தழல் மண்டிலத்தால் வேறு செய்தல் வேண்டும். அஃதாவது திருவைந்தெழுத்தினை உணர்வின்கண் உணர்வதாகிய தழலோம்பு நற்றவத்தினால் வேறு செய்தல் என்பதாகும். இதுவே அருளமுத யாறு தங்குவதற்குச் செய்யும் வழிமுறையாகும். அதுவே ஆருயிர்க் குறுதியாம் வலியுமாகும்.

மோழை - அமுதநதி. முழை - கபாலவாயில். கோழை அஞ்ஞானம். அண்ணற்குறிப்பு - சிவச்சிந்தையால். ஆழ அடைத்து - வெளிப்படாமல் செய்து. அனலிற் புறம்செய்து - தவத்தால் நீக்கி. தாழ - அமுதம் தங்க.

## 2510. ஆசூசம் ஆசூசம் என்பார் அறிவிலார்

2510. ஆசூசம் ஆசூசம் என்பார் அறிவிலார்
ஆசூச மாமிடம் ஆரும் அறிகிலார்
ஆசூச மாமிடம் ஆரும் அறிந்தபின்
ஆசூச மானிடம் ஆசூச மாகுமே.

ஆசூசமாகிய தீட்டுத்தீட்டு என்று செப்புவர் அதன் உண்மை உயர்வறியா எண்மையர். அத் தீட்டு உண்டாகும் இடத்தின் ஒண்மையினை உணரார். அது கருப்பையின்கண் உண்டாகுவதாகும். அதனை அறிந்தபின் அதுவே திருவடிப்பேற்றுக்கு நேர்வாயிலாக வகுத்த மானிடப் பிறவியின் உடம்புக்குக் காரண முதலாகும் என்னும் உண்மை புலனாகும்.

ஆசூசம் - தீண்டல், சூதகம். ஆமிடம் - உண்டாம் இடம். மானிடம் - மனிதசரீரம்.

## 2511. ஆசூச மில்லை அருநிய மத்தருக்கு

2511. ஆசூச மில்லை அருநிய மத்தருக்கு
ஆசூச மில்லை அரனைஅர்ச் சிப்பவர்க்கு
ஆசூச மில்லையாம் அங்கி வளர்ப்போருக்கு
ஆசூச மில்லை அருமறை ஞானிக்கே.

மேலோதிய மெய்ம்மையினை அருளானறிந்தவர் தீண்டாமை என்னும் தீட்டு யாண்டும் உண்டெனக் கூறவும் உளம் கூசுவர். இத் தீட்டுச் செந்நெறி நான்மையின் முதற்படியாம் அருநியமத்தர் என்னும் சீலத்தார்க்கும் கிடையாது. அதுபோல் அரனை அருச்சிப்பாராகிய நோன்பினர்க்கும் இல்லை. அங்கி என்னும் திருவைந்தெழுத்தால் அகத்தழல் ஓம்பும் செறிவினர்க்கும் இல்லை. அருமறையாகிய 'சிவசிவ' என்னும் நான்மறை நவிலும் நல்லாராம் அறிவினர்க்கும் நண்ணும் தீட்டு நாளும் இல்லை. அறிவினர் - திருவடியுணர்வினர்.

## 2512. வழிபட்டு நின்று வணங்கு மவர்க்குச்

2512. வழிபட்டு நின்று வணங்கு மவர்க்குச்
சுழிபட்டு நின்றதோர் தூய்மை தொடங்குங்
குழிபட்டு நின்றவர் கூடார் குறிகள்
கழிபட் டவர்க்கன்றிக் காணவொண் ணாதே.

செந்நெறி முதல்வர் நம்மூலரும், நால்வரும், சித்தாந்த முதல்வர் நால்வரும் அருளிச்செய்த திருமறை திருமுறையாகிய முறையே புகழ்நூல் பொருள் நூல்களை ஓதி வழிபட்டுநின்று விழுமிய முழுமுதல்வனாம் எட்டுவான் குணத்து இறைவனை வணங்குவார்க்கு அம்முறைகள் மறிக்கப்பட்டுச் சுழியில் வீழ்த்துவதொத்த மனம் வழிப்பட்டுச் சிவபெருமான் திருவடியிணையினையே ஒருவாது அருளால் நினையும் தூய்மைக்குத் துணையாகும். அதனால் திருவடியுணர்வு தொடங்குவதாகும். இந் நன்னெறி வாராது பிறவிக்குழியிற் பட்டுழலும் புன்னெறியிற் செல்லும் தின்மையோர் சிறப்பருளும் சிவபெருமானின் திருவெண்ணீறு, சிவமணி, திருவைந்தெழுத்து மூன்றும் முறையே உடல் உள்ளம் உணர்வு எனக் கருதச் செய்யும் திருக்குறியினைக் கைக்கொள்ளார். மனவடக்கம் உடையார்க்கின்றி மற்றவர்கட்குச் சிவபெருமானைக் காணவொண்ணாதென்க.

சுழிபட்டு - மனம் அடங்கி. குழிபட்டு - கருக்குழியை நினைந்து. குறிகள் - சிவக்குறிகள். கழிபட்டவர் - மனம் அடங்கினவர்.

## 2513. தூய்மணி தூயனல் தூய ஒளிவிடுந்

2513. தூய்மணி தூயனல் தூய ஒளிவிடுந்
தூய்மணி தூயனல் தூரறி வாரில்லை
தூய்மணி தூயனல் தூரறி வார்கட்குத்
தூய்மணி தூயனல் தூயவு மாகுமே.

தூய்மணியாகிய செம்மணி சிவபெருமான். தூய அனல் புறத்தனலுக்கு முதலாய் அகத்தனலாய்நிற்கும் ஒளி என்னும் பூத முதலாம் தன்மாத்திரையாகும். புறத்தனல் தீயாகும். இவ் விரண்டின் முதலாகிய பாய அருளையும் தூயமாயையும் அருளால் அறிவார் பலரில்லை. தூர்: மூலம்;
முதல். அவ்விரண்டன் மூலமாகிய அருளையும் தூமாயையும் அருளால் அறிவார்க்கு அவ்விரண்டும் முறையே நன்மையினாலும் தன்மையினாலும் தூயனவேயாகும்.

தூய்மணி - சிவம். தூயனல் - தன்மாத்திரை வடிவம். தூர் - வேர், மூலம்.

## 2514. தூயது வாளாக வைத்தது தூநெறி

2514. தூயது வாளாக வைத்தது தூநெறி
தூயது வாளாக நாதன் திருநாமந்
தூயது வாளாக அட்டமா சித்தியுந்
தூயது வாளாகத் தூயடிச் சொல்லன்றே.

என்றும் பொன்றாத் தன்மைசேர் இயற்கைத் தூய்மை வாய்ந்தவன் செம்பொருளாம் சிவபெருமானாவன். அவன் ஆருயிர்கள் மாட்டுவைத்த நீங்காதோங்கும் பேரருளால் கைம்மாறு கருதாது நன்னெறி நான்மைத் தூநெறி யமைத்தருளினன். இயற்கைத் தூய்மையாய் யாவற்றையும் தூய்மையாக்கும் தூயது ஒளியுடைத் திருவருளாகும். அதுவே சிவபெருமானின் திருமேனியும் திருப்பெயரும் ஆகும். அது செந்தமிழ் திருவைந்தெழுத்தாம் 'சிவயநம' என்ப. திருவைந்தெழுத்தின் பெறுபேறாம் அகம்புறம் இகவாது விளங்கும் சிவ விளக்கமாகிய விழுத்தூய்மை தன்பாலதாக, வாய்க்கப் பெறுவர். அவர் விழைவின் எண்பெரும்பேறும் அவர்க்கு எண்மையாக நண்ணும். யாவற்றையும் தூய்மையாக்கும் திருவைந்தெழுத்தே வாட்படையாகக் கைக்கொண்டு இடையறாது ஒழுகுவது நடைமிகு தூநெறியாகும். அதனால் அத் திருவைந்தெழுத்தினை நெஞ்சே இடையறாது நவில்வாயாக. வாளாக - ஒளியுடையதாக. வாளாக - மெய்யுணர்வு வாட்படையாக.

தூயது - சிவம். வாளாக - ஒளியுடையதாக. தூயது - சுத்தமுடைமை. வாளாம் - சித்து வடிவாம். தூயது

ஆளா(க) பரிசுத்தமுடைமை தன் வசமாக. வாளா(க) - வாட்படையாக. தூயடி - நல்வழி.

## 2515. பொருளது வாய்நின்ற புண்ணியன் எந்தை

2515. பொருளது வாய்நின்ற புண்ணியன் எந்தை
அருளது போற்றும் அடியவ ரன்றிச்
சுருளது வாய்நின்ற துன்பச் சுழியின்
மருளது வாச்சிந்தை மாள்குகின் றாரே.

மெய்ப்பொருளாய் நின்ற விழைதகு புண்ணியன் சிவபெருமானாவன். அவனே எந்தையுமாவன். அவனது திருவருளைத் திருவைந்தெழுத்தால் போற்றுபவர் சீரிய அடியாராவர். அவரைச் சாரும் நாட்டமில்லாத பிறர் மாறிமாறிப் பின்னும் புரிபோன்றதாய் நிலைபெற்று நின்ற துன்பச் சுழியாகிய பிறவியின்கண் வீழ்ந்து துன்புறுதற்கு வாயிலாகிய மருளுடையவராவர். அவர் அம் மருளுக்கு அடிமைப்பட்ட உள்ளத்தவராவர். அதனால் என்றும் நீங்கா மயக்கத்துத் தூங்குவர். தூங்குதல் - தங்குதல். பின்னும்புரி - முறுக்கும் கயிறு.

பொருளதுவாய் - மெய்ப்பொருளாய். சுருளதுவாய் - புரிபோன்றதாய். துன்பச் சுழி - பிறவிச் சுழல். மருள் - மயக்கம்.

## 2516. வினையா மசத்து விளைவ துணரார்

2516. வினையா மசத்து விளைவ துணரார்
வினைஞானந் தன்னில் வீடலுந் தேரார்
வினைவிட வீடென்னும் வேதமும் ஓதார்
வினையாளர் மிக்க விளைவறி யாரே.

ஊழ்வினை காரணமாக ஒரோவழி மெய்யடியார்கட்கும் அசத்து விளையும். அதனையும் உய்த்துணரார். அசத்து வருமாறு: "உம்பின் கண்ணதாகிய பிராரத்தவாசனை உயிர்க்குத் தாக்குவதாயுள்ளளவும் அதனானே வரும் விருப்பு வெறுப்புக்களும், அவை பற்றிக் காட்சிப்படும் மண் முதன் மாயைகளும், அவை பற்றி நிகழும் விபரீதவுணர்வுமாகிய அசத்துக்கள். (12. 4 - 2 சிவஞானபோதப் பேருரை.) அவ்வினை திருவடியுணர்வாகிய சிவஞானத்தால் நீங்குவதும் அருளால் தெரியார். வினை அருளால் அகலத் திருவடிப் பேறெனச் செந்தமிழ்த் திருவைந்தெழுத்தின் விரிவாகிய திருமறை ஓதும் அருமறையினையும் உணர்ந்து ஓதார். அவர் யாரென்னில் இருவினைக்கு அடிமைப்பட்ட கருமத்தராவர். அக்கருமத்தால் மீண்டும் மீண்டும் பல பிறப்புத் துன்பம் மிகும் என்னும் விளைவினையும் அறியார். வினை அகலத் திருவடிப்பேறாம் என்னும் மெய்ம்மை வரும் திருவைந்தெழுத்தின் வேறுபாட்டானுணர்க. 'சிவயநம'. இதன்கண் 'நம' என்பது வினையின் முதன்மையகன்று அவ்வினை கடையில் தடையாகநிற்பது குறிக்கும். 'சிவயசிவ' என்பது அவ் வினையகன்று அவ்வுயிர்

சிவபெருமானுக்கு அடிமையாய் இறைபணியினொழுகும் இயல்பினைக் குறிக்கும் குறிப்பாகும். இவ்வுண்மையினை வரும் தொடர்பால் நினைவுகூர்க. முன்பின் உறுநமவால் முன்பின் மலம் ஆம் சிவத்தால், இன்பின் வழி விழுப்பே றெண்.

வினையாமசத்து - வினையாகிய கன்மம். வீடல் - கெடுதல். வீடென்னும் வேதம் - அறம், பொருள், இன்பம், வீடு என்னும் தமிழ் வேத நான்கினுள் வீடு என்று சொல்லப்படும் வேதம். வினையாளர் - கன்மம் உடையவர்.

## 2517. பரகதி யுண்டென இல்லையென் போர்கள்

2517. பரகதி யுண்டென இல்லையென் போர்கள்
நரகதி செல்வது ஞாலம் அறியும்
இரகதி செய்திடு வார்கடை தோறுந்
துரகதி யுண்ணத் தொடங்குவர் தாமே.

திருவருளால் செம்பொருட்டுணிவினரால் செப்பியருளப்பட்ட முப்பொருள் உண்மை விளக்கும் திருமறை திருமுறை முதலிய நூல்களனைத்தும் திருவடிப்பேறாம் பரகதியுண்டென அறுதியிட்டு உறுதியுடன் மொழியும். அங்ஙனமிருப்பவும் சிலர் இல்லை என இயம்புகின்றனர். இன்னும் சிலர் ஒன்றுமட்டும் உண்டு ஏனைய இல்லை என்கின்றனர். பின்னும் சிலர் 'யாங்களே கடவுளென்றிடும் பாதகத்தவ'ராகின்றனர். மற்றும் சிலர் உண்டுபோல் உரைத்து ஈற்றில் இல்லையென்கின்றனர். இவர்கள் அனைவரும் இல்லையென்போர்களேயாவர். இத்தகையார் இம்மையிலும் மறுமையிலும் துன்பமாகிய இருளில் தங்குவர். இதுவே நரககதியாகும். நரககதி என்பது நரகதி எனக் கடைக்குறைந்து நின்றது. நரககதியில் தங்கும் இன்பிலாத் துன்பினராம் இவர்கள் தன்மையினை நானிலம் அறியும் மேலும் சோற்றாவியற்றுக் கடைதொறும் கைகூப்பி ஏற்றாலும் பிச்சை கிடையாது. ஏக்கற்றிருக்கும் இரவலருமாவர். இரக்கும் கதி இரகதி எனநிற்பது செய்யுட்டிரிபு. உண்ணத் தொடங்கி அங்கும் இங்குமாய்க்

குதிரையோட்டம் ஓடுவர். துரககதி என்பது துரகதி என நின்றது.

நரகதி - நரககதி. இரகதி - இரக்கும் தொழில். கடை தோறும் - வாயில்கடோறும். துரகதி உண்ண - ஓட்டமாய்ச் சென்று அலைய (மோட்சநிந்தை செய்பவர் இரந்து வாழ்வார் என்றது).

# 2518. புறப்பட்டுப் போகும் புகுதுமென் னெஞ்சில்

2518. புறப்பட்டுப் போகும் புகுதுமென் னெஞ்சில்
திறப்பட்ட சிந்தையைத் தெய்வமென் றெண்ணி
அறப்பட்ட மற்றப் பதியென் றழைத்தேன்
இறப்பற்றி னேன்இங் கிதென்னென்கின் றானே.

அகத்தே நின்று புறப்பட்டுப் போவதும் வருவதுமாகிய உயிர்ப்பினையும் நாட்டத்தினையும் திருவருளால் முறைப்படுத்தி ஒருமுகப்பட்ட எண்ணத்தால் முழுமுதற் சிவபெருமானை இறையாகிய பதி என்று எண்ணினேன். பற்றற்றவிடத்துப் பற்றுற்றுநிற்கும் சிவபெருமானைப் பதி என்று அழைத்தேன். சிற்றுணர்வும் சுட்டுணர்வுமாகிய யான் எனதென்னும் செருக்கு இற்றகலச் சிவபெருமான் திருவடியினைப் பற்றினேன். அவனும் இங்குற்றேன்; இஃதென்னென்று அருளுகின்றனன்.

புறப்பட்டுப்போகும் - பன்னிரண்டங்குல அளவுள்ள பிராணவாயுவில் பிரிந்துபோகும் நாலங்குல அளவுள்ள பிராணவாயுவும். புகுதும் - கூடிக்கொள்ளும். அறப்பட்ட - அற்ற இடத்தில் உறுவதான. இற - சீவபோதம் நீங்க.

## 2519. திடரிடை நில்லாத நீர்போல ஆங்கே

2519. திடரிடை நில்லாத நீர்போல ஆங்கே
உடலிடை நில்லா உறுபொருள் காட்டிக்
கடலிடை நில்லாக் கலஞ்சேரு மாபோல்
அடலெரி வண்ணனும் அங்குநின் றானே.

மேடான இடத்தில் தங்கிநில்லாது பள்ளத்தின் வழிப்பாய்ந்தோடும் வெள்ளநீர்போல் உடலிடை நில்லாது அன்புப் பள்ளம் நோக்கி இன்பப் பேறருள் முன்போடிப்பாயும் உறுபொருளாகிய சிவபெருமானை ஆருயிர்க்குக் காட்டி அணைப்பித்தருளுவது திருவருளேயாகும். மரக்கலம் கடலிடையே நின்றுவிடாது கரைசேர்ந்து மக்களுக்கு அரும்பொருள் அளித்துப் பெரும்போகந் தருவதாகும். அதுபோல் அடலெரி வண்ணனும் ஆருயிர் பிறவிப் பெருங்கடல் நீந்திக் கரைசேர்தற் பொருட்டு இணையில் புணையென அங்கு நின்றருளுகின்றனன்.

திடரிடை - மேட்டில். உறுபொருள் - சிவன். கலம் - மரக்கலம். அங்கு - உடலில்.

## 2520. தாமரை நூல்போல் தடுப்பார் பரத்தொடும்

2520. தாமரை நூல்போல் தடுப்பார் பரத்தொடும்
போம்வழி வேண்டிப் புறமே யுழிதர்வர்
காண்வழி காட்டக்கண் காணாக் கலதிகள்
தீநெறி செல்வான் திரிகின்ற வாறன்றே.

தாமரை நூல்போன்ற மிகவும் மென்மைத் தன்மை வாய்ந்த அன்பு நாரால் அஞ்செழுத்தும் நெஞ்சு தொடுத்துச் சிவபெருமான் திருவடியில் மனம் படியுமாறு தடுத்துப் பிணைப்பர். பரமாகிய சிவபெருமான் திருவடியிற்றலைக் கூடும் நன்னெறி நான்மை வழிச்சென்று அனைத்துயிர்க்கும் அரும்பெரும் திருவருட் காவலராய்ப் புறம் புறம் திரிவர். அவர்கள் அருளால் கண்டு சிவபெருமான் திருவடியைக் காணும் வழியை அங்கை நெல்லிக் கனியெனக் காட்டவும் தீவினையாளர்கள் காண்கின்றிலர். கலதிகள் - தீவினையாளர்கள். அவர்கள் பிறப்புக்கு வாயிலாம் தீநெறிக்கண் செல்லுதற்பொருட்டுப் பலவாறு திரிந்து அலையும் பாவவினைஞராவர்.

தடுப்பார் - மனத்தைத் தடுப்பார். புறமே உழிதர்வர் - துறவறத்திலே செல்வர். காண்வழி - அறியத்தக்க நெறி. கலதிகள் - மூடர்.

## 2521. மூடுதல் இன்றி முடியும் மனிதர்கள்

2521. மூடுதல் இன்றி முடியும் மனிதர்கள்
கூடுவர் நந்தி யாவனைக் குறித்துடன்
காடும் மலையுங் கழனி கடந்தோறும்
ஊடும் உருவினை யுன்னகி லாரன்றே.

திருவருளால் அறியாமையும் புலக்கோளறிவும் தம்மை மூடுதலின்றி நன்னெறி நான்மைவழிச் சென்று தலைப்படும் பேரன்பு வாய்ந்த மக்கள் நந்தி திருவடியினைக் கூடுவர். அவனையே இடையறாது குறித்துக் காடாகிய முல்லையும், மலையாகிய குறிஞ்சியும், கழனியாகிய மருதமும், கடமாகிய பாலையும் (இனம்பற்றிக் கடலாகிய நெய்தலும்) ஆகிய எல்லாப் பக்கங்களிலும் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோவில்களையும் மறைந்து நின்றருளும் திருவுருவினையும் காணுமாறு சென்று கண்டு வழிபட்டுக் கனிந்தொழுகுவர். இவையனைத்தையும் கண்டும் கேட்டும் ஒன்றும் நினையாதிருக்கின்றனர் தீவினையாளர். காடு முதலாகிய வைப்புமுறை 'மாயோன் மேய காடுறை யுலகமும்' என்னும் (5) தொல்காப்பியப் பொருள் நூற்பாவை முழுதொத்துப் போதரும் விழுமிது காண்க.

மூடுதல் - அஞ்ஞானம் சேருதல். கடம் - பாலைநிலம். ஊடும் உருவினை - ஊடுருவி நிற்கும் உருவமாகிய சிவத்தை.

## 2522. ஆவது தெற்கும் வடக்கும் அமரர்கள்

2522. ஆவது தெற்கும் வடக்கும் அமரர்கள்
போவர் குடக்குங் குணக்குங் குறிவழி
நாவினின் மந்திர மென்று நடுவங்கி
வேவது செய்து விளங்கிடு வீரன்றே.

சிறப்பினை நல்கும் சீருடைப் புலம் தெற்கும் வடக்கும் ஆகும். ஆவது: சிறப்பு; வீடுபேறு; திருவடியுணர்வு. செந்நெறிச் செல்வர் இப்புலம் சேர்வர். பிறப்பினை நல்கும் பீடுடைப்புலம் மேற்கும் கிழக்குமாகும். நீர்க்குமிழியனைய நிலையில்லா வாழ்வினை ஓர்த்துணராது அமரர்கள் விரும்புவர். அவர்கள் அப் புலஞ்சேர்வர் சிறப்பினர் என்றும் ஓதுங்குறிவழி நாவினிலைந்தெழுத்தை நாளும் நவில்வர். இந்நிலைக்குப் பெருந்துணையாயுள்ள நடுநாடியாகிய அங்கியின்வழி உயிர்ப்பினைச் செம்மைப்படுத்தி விளங்கிடுவீராக. தெற்கும் வடக்கும் செந்தமிழ்ச் செல்வராம் செம்பொருட்டுணிவினர் சென்று வருவது திருமூலர் வரலாற்றாலும் பிறவாற்றாலும் உணரலாம்.

நடுவங்கி வேவது செய்து - சுழுமுனையில் மனதைச் செலுத்தி.

## 2523. மயக்குற நோக்கினும் மாதவஞ் செய்வார்

2523. மயக்குற நோக்கினும் மாதவஞ் செய்வார்
தமக்குறப் பேசின தாரணை கொள்ளார்
சினக்குறப் பேசின தீவினை யாளர்
தமக்குற வல்வினை தாங்கிநின் றாரே.

நன்னெறி நான்மை நற்றவமாகிய அழிவில் மாதவஞ் செய்வார் நன்னெறிக்கண் வந்து கூடுமாறு அருளால் நோக்கினும், தமக்குப் பொருந்துமாறு செவியறிவுறுக்கும் திருவைந்தெழுத்தின் திறத்தினைக் கொள்ளார். அவர் யாரெனின் பகச் சொல்லிக் கேளிர்ப் பிரிக்கும் சினமுடன் பேசும் தீவினையாளர். அவர்க்கு நீங்கா உறவாவது வல்வினையாகும். அதனையே எங்கும் தாங்கி நின்றாராவர்.

பேசின - உபதேசித்த. தாரணை - மந்திரம்.

# 25. இலக்கணாத் திரயம்(மும்மை இலக்கணை)

25. இலக்கணாத் திரயம்(மும்மை இலக்கணை) 2524. விட்ட விலக்கணை தான்போம் வியோமத்துத்

2524. விட்ட விலக்கணை தான்போம் வியோமத்துத்
தொட்டு விடாத துபசாந்தத் தேதொகும்
விட்டு விடாதது மேவுஞ்சத் தாதியிற்
சுட்டு மிலக்கணா தீதஞ் சொரூபமே.

'இலக்கணை என்பது ஒரு பொருளினது இலக்கணத்தை மற்றொரு பொருட்குத் தந்துரைப்பது; அது விட்ட விலக்கணை, விடாத விலக்கணை, விட்டும்விடாத விலக்கணை என மூவகைப்படும், 'நெஞ்சினைச் சென்றது என்று கூறின் விட்ட விலக்கணையாகும். புளித்தின்றான் என்பது விடாத விலக்கணையாகும். 'பாயிருள் பருகிப், பகல்கான் றெழுதரு பல்கதிர்ப் பருதி' விட்டும் விடாதவிலக்கணையாகும். மேலவற்றை வரும் வெண்பாவால் நினைவுகூர்க:

ஒன்றன் இலக்கணமற் றொன்றற்கீந் தீங்குரைத்தல்
நின்ற இலக்கணையாம் நேர்மூன்றாம் - ஒன்றதுதான்
விட்ட விடாதவிட் டும்விடாத சென்றதுகொல்
ஒட்டுபுளி பாயிருள்மூன் றோர்.

ஆருயிர் அறிவுப் பெருவெளியாம் நுண்ணிய வியோமத்துட் போதல் விட்ட விலக்கணையாம். ஆருயிர் என்றும் அறிவுப் பெருவெளியின் தாங்குதலிற்றான் நிற்கின்றது. அது 'போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியன்' சிவபெருமான்

என்னும் செந்தமிழ்மறை முடிபினான் உணரலாம். அவ்வுயிரைப் போதல் போலக் கூறியதனால் விட்ட இலக்கணையாம். அவ்வுயிர் செயலற்றொடுங்குவதாகிய ஒழிவிலொடுக்கம் உபசாந்தம் எனப்படும். அதன்கண் அவ்வுயிர் தொகும் என்றல் விடாத இலக்கணையாகும். புளித்தின்றான் என்பது மரத்தை விட்டு அம்மரத்தின் தொடர்பாய பழத்தைக் குறிப்பதுபோல் செயலற்றொடுங்குவதென்பதும் நிலையிலாப் பொருளாகிய வுலகியற் செயலற்று நிலையுடைப் பொருளாகிய சிவச் செயலுற்று ஒடுங்குவது என்பதைக் குறிப்பதாகும். அதனால் இது விடாத விலக்கணையாகும். ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் என்னும் புலன்களை அவ்வுயிர் செவி, மெய், நோக்கு, நாக்கு, மூக்கு என்னும் பொறிகள் வழியாகக் கொள்ளுவது விட்டும்விடாத இலக்கணையாம் ஞாயிறு இருளைப் போக்குவதும் ஒளியை ஆக்குவதும் செய்கின்றது. ஆனால் இருளைப் பருகுவதும் ஒளியைக் காலுவதும் இல்லை. பருகுவது - குடிப்பது. காலுவது - கக்குவது. அதுபோல் ஆருயிரும் ஓசை முதலிய புலன்களுக்குரிய பொருளையோ, புலனையோ பற்றுவதில்லை. பொருள்கள் வழியாக வரும் புலன்களை இறுப்பு மெய்யாகிய புத்திதத்துவம் ஏற்று ஆருயிரின் உணர்வின்கண் இன்பத்துன்ப நிழலாய்த் தோன்றுமாறு செய்யும். செய்யவே அவ்வுயிர் இன்ப துன்பத்துழலும். உழலும் எனினும் அழுந்தும் எனினும் அனுபவிக்கும் எனினும் ஒன்றே. இஃது 'ஈத்து உவக்கும் இன்பம்' போன்றதாகும். இது விட்டும் விடாத இலக்கணையாகும்.இம்மூன்றற்கும் வேறாய் ஆருயிர் பேருயிராம் சிவபெருமானுக்கு அடிமையாய் அவன் திருவடிக்கீழ் ஒடுங்கி இன்புறுவதே

மாறா இயற்கை உண்மையாகும். இதனையே 'இலக்கணாதீதம் சுட்டும் சொரூபம்' என ஓதியருளினர் சொரூபம் - மாறாவியற்கை.

தொகும் - அடங்கும். சத்தாதி - ஓசை முதலிய. விட்ட இலக்கணை, விடாத இலக்கணை, விட்டுவிடாத இலக்கணை என மூன்றும்.

## 2525. வில்லின் விசைநாணிற் கோத்திலக் கெய்தபின்

2525. வில்லின் விசைநாணிற் கோத்திலக் கெய்தபின்
கொல்லுங் களிறைந்துங் கோலொடு சாய்ந்தன
இல்லு ளிருந்தெறி கூரும் ஒருவற்குக்
கல்கலன் என்னக் கதிரெதி ராகுமே.

ஓங்கார வில்லும் நீங்கா ஒப்பில் திருவைந்தெழுத்து நாணும், பாங்கார் ஆருயிர் அம்புமாகக் கனிந்த திருவருளால் கோத்துச் சிவனாகிய குறி எய்துமாறு எய்தபின் புலனாகிய கொல் யானை ஐந்தும் அக் கோலால் சாய்ந்தன. அஃதாவது ஆருயிரின் முனைப்புத் தன்மை அற்றது என்பதாம். அறவே செயலற்ற நிலையாகிய இல், சமாதி என்ப. அதனுள்ளிருந்து அறிவுப் பெருந்திருவாம். அருளொளி மிகும். அவ்வுயிர்க்குச் செம்மணி ஒளிபோன்று சிவக் கதிர் உணர்விற் குணர்வாய்த் தோன்றியருளி இன்பூட்டும் என்க.

வில் - பிரணவம். விசைநாண் - அஞ்செழுத்து, கோத்து - சீவன் ஆகிய அம்பு கோத்து. இலக்கு - சிவம் ஆகிய குறி. களிறு ஐந்து - இந்திரியங்கள் ஐந்து. கோலொடு - சீவனுடைய பசுத்தன்மையுடன். இல் - சமாதிநிலை எறி கூரும் - எய்யும், கல் கலன் - மணி ஒளி.

# 26. தத்துவமசி வாக்கியம்

26. தத்துவமசி வாக்கியம் 2526. சீவ துரியத்துத் தொம்பதஞ் சீவனார்

2526. சீவ துரியத்துத் தொம்பதஞ் சீவனார்
தாவு பரதுரி யத்தினில் தற்பதம்
மேவு சிவதுரி யத்தசி மெய்ப்பதம்
ஓவி விடுந்தத் துவமசி உண்மையே.

ஆருயிர்ச் செயலறலாகிய சீவ துரியத்து நீ என்னும் தொம்பத நிலையே அவ் வுயிர்க்கு உள்ளது. அப்பாலாகும் அருட்செயலறல் என்னும் பரதுரியத்து அவ் வுயிர்க்கு அதுவாதல் என்னும் தத்பத நிலையே உளதாகும். பொருந்திய சிவச் செயலறலாகிய சிவதுரியத்து சிவத்தழுந்தலாகிய துய்ப்புநிலை. ஆகின்றாய் என்னும் அசிபத நிலையுளதாகும். இம் மூன்றும் செம் பொருளாம் சிவத்துய்ப்பில் அடங்கிவிடும். என்னை? இன்பத்துய்ப்பு மாற்றம் மனம் கழிய நின்ற தொன்றாகலின் என்க. ஆதல் அணைதல் அழுந்தல் சிவனடிக்கன்பு, ஓதுசெறிவோடறிவாம் ஓர் என்றவாறு ஆதல் பரதுரியத்தும், அணைதல் சிவதுரியத்தும் அழுந்தல் ஒவிடும் தத்துவமசி உண்மையினுங் காண்க.

ஓவி விடும் - விட்டு நீங்கும்

## 2527. ஆறா றகன்ற அணுத்தொம் பதஞ்சுத்தம்

2527. ஆறா றகன்ற அணுத்தொம் பதஞ்சுத்தம்
ஈறான தற்பதம் எய்துப சாந்தத்துப்
பேறா கியசீவன் நீங்கிப்பிர சாதத்து
வீறான தொந்தத் தசிதத்வ மசியே.

அருஞ்சைவர் (2139) தத்துவம் ஆறாறும் நாமல்ல நம்முரிமையுமல்ல என வுணர்ந்து பற்றறல் உண்மைகாண் சுத்தமாகும். இந்நிலை தொம்பதச் சுத்தம் என்ப. ஒழிவொடுக்கத்துத் தற்பத உண்மையாகும். திருவடிப் பேற்றினுக்குரிய ஆருயிர் இவற்றினின்றும் அகன்று சிவகுருவின் அருட் கொடையால் சிறப்பான நீ அது ஆகின்றாய் என்பதே தத்துவமசி என்னும் சொல்லுக்குரிய செம்பொருளாகும்.

சீவன் நீங்கி - பசுத்துவம் ஒழிந்து. பிரசாதத்து - குருவின் கருணையால்.

## 2528. துவந்தத் தசியே தொந்தத் தசியும்

2528. துவந்தத் தசியே தொந்தத் தசியும்
அவைமன்னா வந்து வயத்தேக மான
தவமுறு தத்துவ மசிவே தாந்த
சிவமா மதுஞ்சித் தாந்தவே தாந்தமே.

துவந் தத் அசி என்னும் சொல்லே தொந்தத்தசியாம். அவற்றின் பொருள் உண்மைநிலை பெறுதற் பொருட்டு வந்த தன்மையுடையது இவ் வுடம்பாகும். பெருமைமிக்க தவக்குறிப்பாம் தத்துவமசி வேதாந்த விளக்கமாகும். 'சிவயநம' என்பது சித்தாந்த விளக்கமாகும். சித்தாந்த வேதாந்தம் இரண்டும் (2346) செம்பொருளே.

## 2529. தொம்பதந் தற்பதஞ் சொல்லும் அசிபதம்

2529. தொம்பதந் தற்பதஞ் சொல்லும் அசிபதம்
நம்பிய முத்துரி யத்துமே னாடவே
யும்பத மும்பத மாகும் உயிர்பரன்
செம்பொரு ளான சிவமென லாகுமே.

தொம்பதம் தற்பதம் சொல்லப்படும் அசிபதம் மேலோதிய வாறு சீவதுரியம், பரதுரியம், சிவதுரியம் என முத்துரியமாகும். பொருந்தும் முப்பதமும் உயிர் அருள் செம்பொருளான சிவம் எனச் சிறப்புறச் சொல்லலும் ஆகும்.

## 2530. வைத்த துரிய மதிற்சொரு பானந்தத்து

2530. வைத்த துரிய மதிற்சொரு பானந்தத்து
உய்த்த பிரணவ மாமுப தேசத்தை
மெய்த்த விதயத்து விட்டிடு மெய்யுணர்
வைத்த படியே யடைந்துநின் றானன்றே.

மூவகையான் மேலோதி அமைத்த துரியத்தின்கண் உண்மை அறிவின்பமாகிய சொருபானந்தத்து உய்ப்பது ஓமொழி மறை என்க. அம் மறையினை ஏனைய நினைவுகளை விட்டிடப் பயின்ற வுள்ளத்து நிலைநாட்டத் திருவடியுணர்வு கைகூடும். அது கைகூடவே சிவபெருமான் திருவடியின்பம் எய்தும்.

## 2531. நனவாதி ஐந்தையும் நாதாதியில் வைத்துப்

2531. நனவாதி ஐந்தையும் நாதாதியில் வைத்துப்
பினமா மலத்தைப் பின்வைத்துப் பின்சுத்தத்
தனதாஞ் சிவகதி சத்தாதி சாந்தி
மனவா சகங்கெட்ட மன்னனை நாடே.

நனவு கனவு உறக்கம் பேருறக்கம் உயிர்ப்படங்கல் ஐந்தையும் நாதமாகிய ஒலியின் முடியில் தங்கவைத்துவிடுக. அதன்பின் வேறுபாடுற்று நீங்கியமலத்தையும் வைத்திடுக. அதன்பின்பு உண்மையுணர்தலாகிய சுத்த நிலையதாம் சிவனிலை வாய்க்கும். ஒலியாகிய நாதமுடிவின்கண் செயலற்று ஒடுங்குநிலை சாந்த நிலையாகும். அந் நிலையின் நின்று மாற்றம் மனம் கழிய நின்ற மறையோன் சிவபெருமான் ஆதலின் அவனை நாதமுடிவில் வைத்து நாடுக. நாடுதல் - சிந்தித்தல்.

பினமாம்-பின்னமாகிய. மனவாசகம் - மனமும் வாக்கும்.

## 2532. பூரணி யாது புறம்பொன்றி லாமையின்

2532. பூரணி யாது புறம்பொன்றி லாமையின்
பேரணி யாதது பேச்சொன்றி லாமையில்
ஓரணை யாதது வொன்றுமி லாமையில்
காரண மின்றியே காட்டுந் தகைமைத்தே.

ஒப்பில் ஒரு பொருளாம் சிவம் தனக்கும் புறம்பாக வேறொன்றிலாமையால் எல்லாவற்றையும் உள்ளடக்கி நிற்கின்ற இயற்கை அகல் பரப்பினையுடையது. மேலும் பாலனாய் வளர்ந்திராத முழு வளர்ச்சிப்பான்மையினையுடையது. இவற்றால் அது புதுநிறைவோ புது வளர்ச்சியோ கொள்வதில்லை. யாதலால் பூரணியாதது என்றருளினர். அச் சிவம் பேச் சிறந்தது ஒன்றாகலின் ஒரு பேரும் அணியாததாகும். இயல்பாகவே பாசங்களினின்றும் நீங் கினமையால் எவ் வகைத் தொடக்கும் இல்லாததாகையால் அஃது எத்தகையார் நினைவாகிய ஓர்வுக்கும் அப்பாற்பட்டது. தன்னைக் காட்டுதற்குத் தனக்குமேலொரு காரணமின்றித் தானே காரணமாய் ஆருயிரின் செவ்வி நோக்கி வெளிப்பட்டருள்வன். அத்தகைய இயல்பு வாய்ந்தவன் சிவன்.

பூரணி - வளர்ச்சி. பேர் - ஊர் பேர் முதலியன. ஓர் - ஒன்றை. காட்டும் - வெளிப்படும்.

## 2533. நீயது வானா யெனநின்ற பேருரை

2533. நீயது வானா யெனநின்ற பேருரை
ஆயது நானானேன் என்னச் சமைந்தறச்
சேய சிவமாக்குஞ் சீர்நந்தி பேரருள்
ஆயது வாயனந் தானந்தி யாகுமே.

வடமொழியாளர் நீ அதுவானாய் என்னும் தொம் தத்அசி என்னும் உரையே பேருரை என்பர். பேருரை - மாவாக்கியம். மெய்ம்மை நோக்கின் தென்மொழியாளர் கூறும் அது நீ ஆனாய் என்னும் தத்துவம் அசி என்னும் பேருரையே சீர்மையும் முறைமையும் செறிந்து திகழ்வதொன்றாகும். அது - சிவம். நீ - ஆருயிர். அசி - இருக்கின்றாய். 'நும்பின் எம்மை நுழையப் பணியே' என்னும் சீர்மையினாலும், இறைவனை முற்கூற வேண்டும் முறைமையினாலும் தென்னெறியாளர் கூறும் தத்துவமசியே சிறப்புடைத்தென்க. இம் முறைப்படி யொழுகச் சிறந்த பெருநந்தியின் பேரருள் செம்மைச் சிவபெருமானாக ஆருயிர்களை ஆக்குவிக்கும். அந் நிலையில் அவ்வுயிர் அருள் வழிவேயன்றி எல்லையிலாப் பேரின்ப வழிவமாயும் சிறக்கும். பண்டை மறைகள் என்பன தொன்மைத் தண்டமிழ்த் தனிமுதல் மறைகளையே யாம்.

நீ யதுவானாய் - துவம் தத் அசி என்பர் வடமொழியாளர். பேருரை - மகாவாக்கியம் என்பர் வடமொழியாளர். அது நானானேன் என்னச் சமைந்து - "நீ அதுவானாய்" என்ற நிலை. 'அது நான் ஆனேன்" என்று நிற்க. சேய சிவம் - அதுவரை எட்டாமலிருந்த சிவம். அனந்தானந்தி - முடிவிலா ஆனந்தம் எய்துமவன்.

## 2534. உயிர்பர மாக உயர்பர சீவன்

2534. உயிர்பர மாக உயர்பர சீவன்
அரிய சிவமாக அச்சிவ வேதத்
திரியிலுஞ் சீராம் பராபரன் என்ன
உரிய உரையற்ற வோமய மாமே.

ஆருயிர் திருவருள் நினைவால் பரமாகிய திருவருள் நிலையினை எய்தும். அதன்மேல் சிவபெருமான் நிலையினை எய்தும். எய்தும் - சாரும். திரிபோன்று அறிவுக்குப் பற்றுக்கோடாக விளங்கும் வேதத்தின் கண்ணும் சிவபெருமான் நிலையே சிறப்பு நிலையாகும். இந்நிலையினை உரையற்று உரைக்கும் நிலையில் ஓமொழிவண்ணம் என்ப.

வேதத்திரி - அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று வேதங்கள். ஓமயம் - பிரணவ வடிவம்.

## 2535. வாய்நாசி யேபுரு மத்தகம் உச்சியில்

2535. வாய்நாசி யேபுரு மத்தகம் உச்சியில்
ஆய்நாசி யுச்சி முதலவை யாய்நிற்குந்
தாய்நாடி யாதிவாக் காதி சகலாதி
சேய்நா டொளியாச் சிவகதி யைந்துமே.

வாய், நாசி, புருவம், மத்தகம், உச்சி என்னும் ஐந்திடமும் சிவ விளக்கம் தோன்றும் நிலை என்ப. புருவ நடுவிற்கும் உச்சிக்கும் இடையேயுள்ள நெற்றி நடுவினை மத்தகம் என்ப. இவ் வைந்தும் ஒரு புடையொப்பாக முறையே படைப்பாதி ஐந்தொழிலுக்கும் பகரலாம் நெற்றி நடுவாகிய மத்தகத்துச் சமனை உன்மனை என்னும் திருவருள் நிலைகள் உளவென்க. இவையிரண்டனையும் நடப்பாற்றல் வனப்பாற்றல்களாகக் கூறுதலும் ஆம். தாய் நாடியாகிய நடு நாடி முதலாக ஒலி முதலாய அனைத்தும் எளிதின் விளங்குவதுமட்டுமல்லாமல் கழிபெருஞ்சேணொளியும் விழிமுன் தோன்றுவது போல் அகத்துத் தோன்றும். அதுவே சிவநிலை என்க.

சிவகதி - சிவத்துக்கு இருப்பிடம். ஐந்து - வாய், நாசி, புருவம் மத்தகம், உச்சி. (மத்தகம் - நெற்றி நடு) அவ்விடத்துச் சமனை, உன்மனை ஆகிய ஆதாரங்களை உளவாதல் பற்றிக் கூறினார். தாய் நாடி - சுழுமுனைநாடி.

## 2536. அறிவறி யாமை இரண்டு மகற்றிச்

2536. அறிவறி யாமை இரண்டு மகற்றிச்
செறிவறி வாய்எங்கும் நின்ற சிவனைப்
பிறிவறி யாது பிரானென்று பேணுங்
குறியறி யாதவர் கொள்ளறி யாரே.

ஆருயிர்க்குச் சுட்டறிவும் சிற்றறிவும் ஏற்படுவது கட்டு நிலையாகும். இவை யகன்றாலன்றி முற்றறிவாகிய ஒட்டு நிலை வாய்க்காது. ஆணவ மறைப்போடு மட்டும் தங்கி ஏதும் அறியாதிருத்தல் அறியாமையாகும். ஆதலால் அறிவு அறியாமை இரண்டினையும் திருவருள் ஒருங்ககற்றும். இது தூய்மை செய்து தூயவாயிட்ட பொடிக் கோலத்தினை மாண்புமிகு மாக்கோலம் இடுங்கால் அகற்றுவதை யொக்கும். எங்கணும் செறி நிறைவாய் நின்ற பேரறிவாம். சிவனை நம்மை விட்டு என்றும் பிரிவின்றி நீங்காதுறையும் சிவபெருமானை அருளால் அவ்வாறே உணர்ந்து பேணுதல் வேண்டும். அங்ஙனம் பேணும் பீடு குறியாதவர் திருவடிப் பேறு எய்தும் கொள்கை யறியாதவராவர். கொள்கை: கொள், முதனிலைத் தொழிற்பெயர்.
(அ. சி) செறிவறிவாய் - எல்லாம் அறிபவராய். கொள்- கொள்கை.

# 2537. அறிவார் அறிவன அப்பும் அனலும்

2537. அறிவார் அறிவன அப்பும் அனலும்
அறிவார் அறிவன அப்புங் கலப்பும்
அறிவான் இருந்தங் கறிவிக்கி னல்லால்
அறிவான் அறிந்த அறிவறி யோமே.

மெய்ந்நூலுணர்ந்த மேலோர் அருளால் அறிவது அப்பும் அனலும். அப்பு - நீர். அனல் - தீ. அஃதாவது மெய்களாகிய தத்துவங்களின் தோற்றமுறை ஆய்தல். பொருள் நுட்பம் உணர்வார் அவற்றின் பண்பும் கலப்பும் ஒடுக்கமும் ஆய்ந்துணர்வர். இங்ஙனம் அறிவதும் எல்லாம் ஒருங்குணரும் எண் குணமும் முற்றுணர்வும் இயல்பாகவே ஒருங்கமைந்த சிவபெருமானாலே யாம். அஃதாவது அவன் உடங்கியைந்து இடம்பட அறிவித்தாலன்றி ஆருயிர்கள் அறியா. அவனையின்றி அறிவானாகிய ஆருயிர் அறிந்ததென்பதை எவருமறியார். அப்பு என்பது திருவருளையும், அனல் என்பது சிவபெருமானையும் குறிக்கும் குறிப்பாகும். அவற்றின் கலப்பு என்பது அருளும் சிவமுங் கலந்து அருளோன் என நின்று ஆருயிரினையும் அனைத்துலகினையும் தொழிற்படுத்துங் கருத்தினைக் குறிக்கும் குறிப்பாகும். கூடிக் களிக்கும் குணங்குறியானன்றி மற்று, நாடித் தெளிதலெவ்வாறு.

அப்பும் அனலும் - தத்துவக் கூட்டங்கள். அப்பும் கலப்பும் - தத்துவங்கள் உண்டாவதும் ஒடுங்குவதும்.

## 2538. அடிதொழ முன்னின் றமரர்க ளத்தன்

2538. அடிதொழ முன்னின் றமரர்க ளத்தன்
முடிதொழ ஈசனும் முன்னின் றருளிப்
படிதொழ நீபண்டு பாவித்த தெல்லாங்
கடிதொழக் காணென்னுங் கண்ணுத லானே.

வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான் என்பதற்கிணங்க அமரர்கள் சிவபெருமான் திருவடியைத் தொழுதற் பொருட்டு முன்னின்றனர். அவர்கட்கும் அத்தனாய் விளங்கும் சிவபெருமான் அவ்வமரர்கள் மணிமுடி சாய்த்து நிலத்தே வீழ்ந்து தன் திருவடியை வணங்குவது கண்டு அருள் புரிந்தனன். நெஞ்சே நீ பண்டு அச் சிவபெருமான் திருவடியை எட்டுறுப்பும் நிலத்தே படும்படி வீழ்ந்து திருமுறை வழியாகத் தொழுது நினைந்தனவெல்லாம் சிறப்பெய்தி வாழ்தற் பொருட்டேயாம் எனக் கண்ணுதற் கடவுள் கனிந்து உண்ணின்று உணர்த்தியருளினன். இதனைக் காண்பாயாக. கடிதொழ - சிறப்பு எய்துதற் பொருட்டுத் தொழ.

கடி - சிறப்பாக.

## 2539. நின்மல மேனி நிமலன் பிறப்பிலி

2539. நின்மல மேனி நிமலன் பிறப்பிலி
என்னுளம் வந்திவன் என்னடி யானென்று
பொன்வளர் மேனி புகழ்கின்ற வானவன்
நின்மல மாகென்று நீக்கவல் லானன்றே.

முழுமுதற் சிவபெருமான் இயல்பாகவே தூயமேனியன். இயல்பாகவே பாசங்களினின்று நீங்கியவன். என்றும் பிறப்பில்லாதவன். திருவருளால் என் உள்ளத்தே வெளிப்பட்டருளினன். வெளிப்பட்டு இவன் என் அடியானென்று அறிவித்தருளினன். யாவரும் புகழத்தக்க பொன்போலும் திருமேனியையுடைய ஈடும் எடுப்பும் இல்லாப் பீடுசேர் வானவனும் அவனே. வானவன் - உயர்ந்தோன் அவன் அடியானென்று என்று கொண்டது. மட்டுமன்றித் தன் திருவடி நலத்தைப் பெறுக வென்று மல நீக்கியுமருளினன். அத்தகைய வல்லான் முழுமுதற் சிவனே யன்றிப் பிறரொருவரும் இலர் என்க.

நீக்கவல்லான் - ஆணவத்தை ஒழிக்கவல்லான்.

## 2540. துறந்துபுக் கொள்ளொளி சோதியைக் கண்டு

2540. துறந்துபுக் கொள்ளொளி சோதியைக் கண்டு
பறந்ததென் உள்ளம் பணிந்து கிடந்தே
மறந்தறி யாவென்னை வானவர் கோனும்
இறந்து பிறவாமல் ஈங்குவைத் தானே.

உலகியற் பொருள்களின் உண்மையினைத் திருவருளால் உணர்ந்தேன். உணர்தலும் அவற்றின் மாட்டு முன்கொண்டிருந்த நிலைக்கும் என்னும் பற்றும், தனியுடைமை என்னும் துனிதரு உரிமையும், இவற்றால் வரும் தருக்குங்கொண்டு மருள் வயத்தனயாய் இருளில் வீழ்ந்து இடருற்ற நிலைமையினின்று நீங்கினேன். நீக்குதல் - துறத்தல். (நீக்குதல் - துரத்தல்.) நீங்கித் திருவடிப்பற்றிற் புகுந்தேன். புகுந்து அருள் நினைவால் இயற்கை அறிவருள் ஒண்மைப் பேரொளியைக் கண்டு கொண்டனன். கண்டதும் அடியேனுள்ளம் விரைந்து சென்று பற்றிப் பணிந்து கிடந்தது. பணிந்து கிடந்தே மறவா நினைவாய் உறவாயுற்றது. உறுதலும் வானவர் முழுமுதல்வனாய சிவபெருமான் எளியேனை இறந்து பிறவாமல் சிறந்து திருவடியைத் தலைக்கூடும் செந்நெறியில் வைத்தருளினன். வைத்து நன்னெறிக்குய்ப்பதும் 'நமச்சிவாயவே' என்று நவின்றருளினன்.

## 2541. மெய்வாய்கண் மூக்குச் செவியென்னும் மெய்த்தோற்றத்

2541. மெய்வாய்கண் மூக்குச் செவியென்னும் மெய்த்தோற்றத்
தவ்வாய அந்தக் கரணம் அகிலமும்
எவ்வா யுயிரும் இறையாட்ட ஆடலாற்
கைவா யிலாநிறை எங்குமெய் கண்டதே.

மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் நிலையில்லாத தோற்றத்தினையுடைய அறிதற் கருவியாம் ஐம்பெறிகள் போன்று எண்ணம் மனம் எழுச்சி இறுப்பு என்னும் உட்கலன்களும் ஆகும். உட்கலன் - அந்தக்கரணம்.

இவற்றை அருளால் சார்ந்த ஆருயிரும், உலகமும் உலகியற் பொருள்களும் விழுமிய முழுமுதற் சிவபெருமான் திருவுள்ளத்தான் ஆட்ட ஆடுகின்றன. மெய்கண்டானாகிய சிறப்பு ஆருயிர்களும் நாடரிய நன்மைக்கண் உள்ளன. சிறந்த ஒழுக்கத்தினையும் திருநெறியினையும் இடையறாது மேற்கொண்டு ஒழுகினவராய் வாழ்தல் வேண்டும் : வாழவே ஆருயிர் கேடின்றிச் சார்ந்த சிவபெருமான் தன்மையாய் எங்கும் நிறைந்த சிவனுருப் போன்று எங்கும் நீக்கமற அவனுடன் செறிந்து பெரும் சிறப்பாய்க் காணப்படும்.

## 2542. அழிகின்ற சாயா புருடனைப் போலக்

2542. அழிகின்ற சாயா புருடனைப் போலக்
கழிகின்ற நீரிற் குமிழியைக் காணில்
எழுகின்ற தீயிற்கர்ப் பூரத்தை யொக்கப்
பொழிகின்ற இவ்வுடற் போமப் பரத்தே

பளிங்கின் நிழலும் உடல் நிழலும் பிற நிழலும் உச்சிக் காலத்துக் கதிர்ச் சாய்வு இன்மையால் புறத்துப் புலனாவதில்லை. ஆனால் கதிரும் உருவும் கலந்தொன்றாய் விடுகின்றது. அதுபோல் ஆருயிரும் பிறவாநிலை எய்தும் பெற்றிவாய்ந்தபொழுது திருவருளில் கலந்துவிடும். இம்முறையினைச் சாயாபுருடன் அழிகின்றது போல் என அருளினர். வானவெளியை உற்று உற்று ஒரு மனத்துடன் நோக்குவார்க்கு முதற்கண் நிழலுருவம் தோன்றிப் பின் பயிற்சி மிகுதியால் தன்னிற் கரைந்து கலந்துவிடுமெனக் கூறுவாருமுளர். நீரில் தோன்றி நீரில் கழியும் நீர்க்குமிழிபோன்று இவ்வுடலும் அண்டத்தமைந்துள்ள மெய்யாகிய தத்துவங்களின் இனமாய்த் தோன்றுவதால் அவ்வம்மெய்கள் அவ்வம் மெய்களில் அடைந்துவிடும். அடையவே அதனகத்துத் தங்கியிருந்த வுயிர் என்றும் புகலிடமாகவுள்ள திருவருளில் கலந்துவிடும். கருப்பூரம் கொளுத்தப்பட்டு எரியுங்கால் பற்றுக்கோடுள்ள பருப்பொருளாகத் தோன்றுகின்றது. எண்ணெயும் திரியும் கலந்த திருவிளக்கில் திரி பற்றுக்கோடாக எண்ணெய் அதன் சார்பாக எரிகின்றது. அதனால் திரியின் எச்சம் தென்படுகின்றது. ஆனால்

அவ்வெண்ணெயே தனிச் சார்பாக எரியுமானால் எச்சம் காணப்படாமை போன்று கருப்பூர தீபமுமாகும். அதுபோல் உடம்பும் திருவருளால் நுண்தண்மை எய்தி நுண்மெய்க்கண் அடங்கும். அடங்கவே ஆருயிர் திருவருளில் அடங்கிவிடும். இம்மூவகை ஒப்புக்களாலும் திருவருளால் உடல் நுண்மயமாய்ப் பிரிந்து நுண்மெய்க்கண் அடங்குவதும் ஆருயிர் திருவருளில் கலப்பதும் இங்கு ஓதியருளப் பெற்றன. ஒருபுடையொபபாக முறையே ஆளுடைய அரசர், ஆளுடைய பிள்ளையார், ஆளுடைய அடிகளார் முதலாயினார் அருட் கலப்பினைக் கூறுதல் அமையும்.

சாயா - நிழல். போமப்பரத்தே - சிவத்திற் கலக்கும்.

## 2543. உடலும் உயிரும் ஒழிவற ஒன்றிற்

2543. உடலும் உயிரும் ஒழிவற ஒன்றிற்
படருஞ் சிவசத்தி தாமே பரமாம்
உடலைவிட் டிந்த உயிரெங்கு மாகிக்
கடையுந் தலையுங் கரக்குஞ் சிவத்தே.

திருவருளால் உடலும் ஆருயிரும் நீக்கமற ஒன்றியிருந்தன. அதற்குக் காரணம் அவ்வுயிர் சிறப்பாகிய செம்பொருட் சிவபெருமான் திருவடியிணையினை அடையும் நன்மையேயாம். தேனும் இன்னமுதும் தேக்கிலைக் கல்லையில் ஒழிவறநிற்பது வானும் விழையும் மானுடர் பருகுவதற்கேயாம். அவை பருகப்பட்டபின் அக் கல்லைகள் மண்ணொடுமாய்ந்து மறைந்துபோம். அதுபோல் உடம்பகத்துள்ள ஆருயிரும் சிவத்தினையடைந்ததும் அவ்வுடம்பும் நுண்மெய்யுடன் கரைந்துகலக்கும். கலக்கவே அவ்வுயிர்க்குச் சிவமும் சிவசத்தியாகிய சிவையும் புகலிட மெய்யாகும். ஆருயிர் எங்குமாய்ப் பரம்பும் இயல்பிற்று. அஃது உடம்பகத்து வினைக்கீடாகப் புகுந்து ஒருவழிப்பட்டு அமைந்து நின்றது. ஆற்றுநீர் அருவிவீழ்மலைதொட்டுப் பெருகுநீர் அலைவரைப் பரம்பிநிற்கும் தன்மை வாய்ந்தது அணையுயர்த்திச் சிறை செய்யப்படுமானால் அந்நீர் கட்டுப்பட்டு ஒரு வழிப்படுவதைக் காண்கின்றோமன்றோ? அதுபோலவும், அடுப்புப்புகை எங்கும் பரந்துசெல்லும் பான்மையுடையது. ஆனால் புகைக் கூண்டு உள்ளவிடத்தில் அப்புகை அக்கூண்டிற் கட்டுப்பட்டு மேனோக்கிப்போகும்; அதுபோலவும் உடலிற் கட்டுப்பட்டு ஒரு வழிச்செல்லும் ஆருயிர், அருளால் கட்டகன்றதும் அத் திருவருள் எங்குமாய்ச் செறிந்துநிற்பது போன்று அவ்வருளில் கலந்த

அவ்வுயிரும் எங்குமாய்ச் செறிந்து நிற்கும்; அந்தமும் ஆதியும் இல்லா அரும்பெரும் சோதியாம் சிவபெருமான் அடியிணைக்கீழ் ஒடுங்கும். கல்லை : இலைக்கலம்; தொன்னை.

பரமாம் உடலை - சுமையாகிய உடலை. கடையுந் தலையும் - ஆதியும் அந்தமும் இல்லாத. கரக்கும் - ஒடுங்கும்.

## 2544. செவிமெய்வாய் கண்மூக்குச் சேரிந் திரியம்

2544. செவிமெய்வாய் கண்மூக்குச் சேரிந் திரியம்
அவியின் றியமன மாதிகள் ஐந்தும்
குவிவொன் றிலாமல் விரிந்து குவிந்து
தவிர்வொன் றிலாத சராசரந் தானே.

செவி, மெய், வாய், கண், மூக்கு என்று சொல்லப்படும் அறிதற்கருவியாகிய புறப்பொறிகள் ஐந்தனையுங்கொண்டு விளங்கும் பருவுடல் வினைக்கீடாக அமைந்தது. அது காலக்கழிவில் அடுத்தடுத்து அழியுந் தன்மைத்து. மனம், எழுச்சி, இறுப்பு என்னும் அகப்புறக்கலன் மூன்றும், பதமுதற் புலனாகிய ஓசை, ஊறு, சுவை, ஒளி, நாற்றம் என்னும் தன்மாத்திரை ஐந்தும் ஆகிய எட்டுறுப்புக்களான் அமைந்தது நுண் உடல். இவ்வுடல் மலந்தேய்க்க அமைந்தது. அதனால் இவ்வுடல் மலத்தேய்வின்முடிவில் அழியும் தன்மைத்து. அதற்கிடையே ஊழி முடிவு நேருமாயின் அழியும். அதனால் அவ்வுடலை அழியாவுடல் என்று அறைகுவா ஆன்றோர். இவ்விருவுடலாலும் இறைவனைத் தொழுதல் வேண்டும். அதன்பொருட்டு மனம் குவிதல்வேண்டும். அங்ஙனம் குவியாமல் உலகியல் பொருள்களினிடமாக அவர்கள் மனங் கணக்கின்றித் தடுக்கமுடியாதபடி விரிகின்றது. கிடைத்தோ கிடையாமலோ வருந்துவதாற் குவிகின்றது. அதனால் அவ்வுயிர் உலகியலைக் கடக்கும் வழியறியாமல் விழிக்கின்றது. இவ்வுயிர் உயர்ந்த இயங்குதிணைப் பிறந்தும்

வழியறியாமையினால் உயர்வல்லாத ஓரறிவுயிராகிற நிலைத்திணைப் பொருளோடு பேசப்படும்.

அவி - அவிதல், அழிதல். தவிர்வு - உலகத்தைவிட்டு நீங்கும் நெறி.

## 2545. பரனெங்கு மாரப் பரந்துற்று நிற்குந்

2545. பரனெங்கு மாரப் பரந்துற்று நிற்குந்
திரனெங்கு மாகிச் செறிவெங்கு மெய்தும்
உரனெங்கு மாயுல குண்டு உமிழ்க்கும்
வரமிங்ஙன் கண்டியான் வாழ்ந்துற்ற வாறே.

முழுமுதற் சிவபெருமான் யாண்டும் நீக்கமறச் செறிந்து நின்றருள்கின்றனன். செறிவு - நிறைவு. அவன் எங்கணும் நிலைபேறாய் உயிர்க்குயிராகவும் உறைந்தருள்கின்றனன். மேலும் தான் அழிவின்றி நின்று எங்குமாய் நிலவி, காரிய அழிவு பாடாம் உலகினை ஒடுக்கிப் பின் தோற்றுவித்தும் அருள்கின்றனன். திருவருளால் இவ்வுண்மைகளை உணர்ந்து அவன் திருவடிச் சிறப்புற்று அவனருளால் வாழ்ந்தனன் என்க.

திரன் - உறுதி. செறிவு - நிறைவு. வரன் - மேன்மையான செயல்.

# 2546. அளந்து துரியத் தறிவினை வாங்கி

2546. அளந்து துரியத் தறிவினை வாங்கி
உளங்கொள் பரஞ்சகம் உண்ட தொழித்துக்
கிளர்ந்த பரஞ்சிவஞ் சேரக் கிடைத்தால்
விளங்கிய வெட்ட வெளியனு மாமே.

முழுமுதற் சிவபெருமான் ஆருயிரின் செவ்வியினை அளந்தறிந்து செயலற்ற நிலையாம் துரியநிலைக்கண் அவ்வுயிரின் சிற்றறிவினைத் தன் முற்றறிவின்கண் அடங்குமாறு செய்வதாகிய வாங்குதலைச் செய்து, அவ்வுயிரின் தூய்மையும் செவ்வியும் சிவனினைவும் ஒருங்கமைந்த உள்ளத்தின்கண் சிவபெருமான் மேலோங்கித் திகழ்கின்றனன். அதனால் அவ்வுயிர் மன்னன் மனைவி மன்னி என்று அழைக்கப்படுவதுபோல் பரமன்தாள்சேர் அடிமை பரன் என அழைக்கப்படுகிறது. அந்நிலையில் அவ்வுயிர் உலக நுகர்வினை ஒழித்துவிடுகின்றது. பரமாகிய சிவபெருமானும் உரமாகிய ஆருயிரும் இருப்பதும் இருப்புமாய்ப் புணர்ந்து எழில்பெற நிற்றலால் ஆருயிர்க்கிழவன் அறிவு வெளியனாவன். உரம் - அடிமை இருப்பது - ஆண்டான். இருப்பு - அடிமை. அறிவுவெளி: வெட்டவெளி; சிதாகாசம்.

அறிவினை - சீவ அறிவினை. உளங்கொள் பரம் - உள்ளத்தின்கண் ஒளித்திருக்கும் சிவத்துடன் இருக்கும் ஆன்மா. கிளர்ந்த பரம் - தெளிந்த ஆன்மா. வெட்டவெளியன் - சிதாகாய வடிவினன்.

## 2547. இரும்பிடை நீரென என்னையுள் வாங்கிப்

2547. இரும்பிடை நீரென என்னையுள் வாங்கிப்
பரம்பர மான பரமது விட்டே
உரம்பெற முப்பாழ் ஒளியை விழுங்கி
இருந்தஎன் நந்தி இதயத்து ளானே.

முழுமுதற் சிவபெருமான் எரிசேர் இரும்பிடைக் கரந்த நீர்போன்று அடிமையாகிய என்னைத் தன் திருவடிக்கீழ் ஒடுக்கிக் கொண்டனன். தனிப்பெரும் சிறப்புவாய்ந்த விழுப்பொருளாம். பரம்பரமான சிவன் பரமாகிய மேனிலைப்பாடு அல்லது அப்பால் நிலையையும் கடத்தியருளினன். திருவடி அடிமை உரம்பெறுதற் பொருட்டு முப் (2457) பாழ்வெளியையும் ஒடுக்குவித்தருளினன். அஃதாவது முப்பாழ் வெளியையும் கடந்து நின்றருள்தல். அங்ஙனம் நின்றருள்பவன் நந்தி. அவன் என்னுள்ளத்துள் உறைந்து நிறைந்து நின்றருளினன்.

பரமது விட்டு - பராவத்தையைக் கடந்து. முப்பாழ் ஒளி - முப்பாழ் ஒளிக்கும் அதீதப்பட்ட ஒளி.

## 2548. கரியுண் விளவின் கனிபோல் உயிரும்

2548. கரியுண் விளவின் கனிபோல் உயிரும்
உரிய பரமுமுன் னோதுஞ் சிவமும்
அரிய துரியமேல் அண்டமும் எல்லாந்
திரிய விழுங்குஞ் சிவபெரு மானே.

யானை நோயால் பற்றப்பட்ட விளாம்பழம் ஓட்டில் ஒரு கேடுமில்லாதிருக்க, உள்ளே சதைப்பற்று ஏதுமில்லாமலிருக்கும் இயல்பினது. அதுபோல் உயிரும் உயிரைத் தாங்கிநிற்கும் திருவருளும், முன்னோதும் சிவனும், சொல்லுதற்கு அரிய துரியத்தின்மேல் அனைத்துலகங்களும் பின்னோதும் சிவனாம் செம்பொருளினால் மாறுதல் செய்து ஒடுக்கப்படும். ஓதுசிவன் - ஓதப்படும் சிவன். முன்னோதும் சிவன் முப்பத்தாறாமெய்யினைத் தொழிற்படுத்தும் சிவனாகிய அத்தன். பின்னோதும் சிவன் தத்துவங்கடந்த செம்பொருள். ஆருயிர்க்குத் திரிபு மாயையின் சார்பும் பற்றும் அகன்று தாயனைய திருவருளின் சார்பினை எய்துதல். பரமாகிய அருளுக்குத் திரிபு அவ்வுயிரிக்கு முன்பு நடப்பாற்றலாய் நின்று உலகினை உணர்த்திவந்தது மாறி இப்பொழுது வனப்பாற்றலாய்நின்று முன்னோதும். சிவனை உணர்த்துதல். முன்னோதும் சிவனுக்குத் திரிபு ஆருயிர் அருள்களாகிய இவற்றுடன் தானும் செம்பொருளாய் நிற்றல். உலகினுக்குத் திரிபாவது காரியப்பாட்டால் பருமையாகத் தோன்றுவது நுண்மையாய்க் காரணத்தின்கண் ஒடுங்குவது. அச் செம்பொருளாம் சிவன் எவ்வகைத் திரிபும் எய்தாது என்றும் ஒன்றுபோன்று நின்று

நிலவுவன். திரிபனைத்தும் ஆருயிர்க்குச் செம்மை. நலம் எய்தும், அரிய வாய்ப்பாங்கருளவாம் என்பதனை நன்கு நினைவு கூர்க.

கரி - யானை (யானையுண்ட விளங்கனி) - விளாமரத்து நோய்க்கு யானை என்று பெயர். திரிய - மாறுபட.

## 2549. அந்தமும் ஆதியும் ஆகும் பராபரன்

2549. அந்தமும் ஆதியும் ஆகும் பராபரன்
தந்தம் பரம்பரன் தன்னிற் பரமுடன்
நந்தமை யுண்டுமெய்ஞ் ஞானநே யாந்தத்தே
நந்தி யிருந்தனன் நாமறி யோமன்றே.

முழுமுதற் சிவபெருமான் எல்லாவற்றிற்கும் அந்தமும் ஆதியுமாகவுள்ளான். அதுபற்றியே மெய்கண்ட நாயனார் தாம் அருளிய தனித்தமிழ் முழுமுதற் சிவஞானபோத முதனூல் முதனூற்பாவின்கண் "அந்தம் ஆதி என்மனார் புலவர்" என்றருளினர். தம்மினின்றும் வெளிப்படுத்தப்படும் வழிவழியாயுள்ள அருளாற்றல்களையும் அவ்வாற்றல்களுடன் விரவிய நம்மையும் தன் திருவடிக்கீழ் ஒடுக்கியருளினன். ஞானத்தால் அறியப்படும் ஞேயாந்தத்தில் நந்தியிருந்தருளினன். அவ்விருப்பினை நம்மால் நுகரமுடியும். ஆனால் நுவலமுடியாது. மெய்ஞ்ஞானம் - மெய்யுணர்வு. நேயம் - ஞேயம்: மெய்யுணர்வால் உணரப்படும் மெய்ப்பொருள். அதன் அந்தம்: சிவதுரியாதீதம் - அனைத்துங் கடந்த சிவபெருமானின் நினைப்புக்கும் எட்டாநெடுநிலை. உண்ணுதல்: விழுங்குதல்; ஒடுக்குதல் அறிதல் - வேறாய்நின்றறிவது. உணர்தல் - ஒன்றாய் நின்று செறிந்து ஓவாது நுகர்வது.

நந்தமை உண்டு - ஆன்மாவைச் சிவமயமாக்கி. நேய அந்தத்து - சிவதுரிய அதீதத்தில். நாம் - பெத்தர்களாகிய நாம்.

# 28. வாய்மை

## 28. வாய்மை 2550. அற்ற துரைக்கில் அருளுப தேசங்கள்

2550. அற்ற துரைக்கில் அருளுப தேசங்கள்
குற்ற மறுத்தபொன் போலுங் கனலிடை
அற்றற வைத்திறை மாற்றற ஆற்றிடில்
செற்றம் அறுத்த செழுஞ்சுட ராகுமே.

பற்றற்றான் பற்றினைப் பற்றி ஏனைப் பற்றற்றுநின்று ஒழுகும்பெருநெறி திருநெறியேயாகும். அந்நெறிக்கண் பெரும் 'நமசிவய' முதல் 'சிவசிவ' ஈறாகக் கூறப்படும் நான்மைத் திருவைந்தெழுத்தும் செவியறிவுறூஉவாகிய நல்லுபதேசங்களாகும். அம்மறையால் ஆருயிர் கனலிடைப் புடம்போட்டு எடுத்த 'சுடச்சுடரும் பொன்போல்' ஒளிவிடும். ஒளிவிடவே குற்றங்கள் அறுமாறு சிவபெருமானிடத்து நாட்டமாகிய சிந்தையை நாளும் நிறுத்தங்கள். அங்ஙனம் ஒழுகுவதால் மாறுபடு ஏதும் இன்றி உடனாய்ச் செயலற்றொடுங்கும். சமாதிநிலை கைகூடும். மாயைத் தொடக்கு பசைத்தொடக்கு முதலிய எல்லாத் தொடக்கும் அறுத்தருளிய முழுமுதற் செழுஞ்சுடர் சிவபெருமானேயாவன். நான்மைச் சிவமறையே நற்குறிகை பொன்னாக்க மேன்மைச் சிவ சிவவாம் வேண்டு என்பதனை ஈண்டு நினைவுகூர்க. மேலும்,

"நாடும் நமசிவய நல்ல சிவயநம
கூடும் சிவயசிவ கூறிமேல் - நாடும்
சிவசிவஎன் றெண்ணுவர்நற் சீலமுதல் நான்கின்

தவநெறிசார் செந்தமிழர் தாம்."
என்பதையும் நினைகூர்க.

அற்றது - பற்றற்ற நெறி. குற்றமறுத்த பொன் - புடமிட்டு மாசொழிந்த பொன். அற்றற - மாசு நீங்க. வைத்திறை - சிவத்தில் சிந்தையை நிறுத்தி. மாற்றற ஆற்றிடில் - மாறுபாடு ஒழியச் சமாதி எய்தினால். செற்றம் - மலம் நீங்கின. சுடர் - ஒளி பொருந்திய ஆன்மா.

## 2551. எல்லாம் அறியும் அறிவு தனைவிட்டு

2551. எல்லாம் அறியும் அறிவு தனைவிட்டு
எல்லாம் அறிந்தும் இலாபமங் கில்லை
எல்லாம் அறிந்த அறிவினை நானென்னில்
எல்லாம் அறிந்த இறையென லாமே.

சிவபெருமான் திருவடியுணர்வு ஒருவர்க்குத் திருவருளால் கைவருமானால் பகலவன் ஒளியில் தடையின்றி எல்லாவற்றையும் வெளியுறக் காணுமாறுபோன்று அகத்தும் புறத்தும் எல்லாவற்றையும் எளிதில் இருந்த இடத்திலிருந்தே அவர் காண்பர். அவ்வுணர்வினை அடைய முயலாது கைவிட்டுச் சிலர் உலகியற்பொருள்களை நூலுணர்வானும் நுண்ணுணர்வானும் உய்த்துணர்வானும் உணர்கின்றனர். அங்ஙனம் உணர்ந்தும் அடையும்பேறு ஒன்றும் இன்று எல்லாவற்றையும் ஒருங்கே யறிந்து அறிவித்துவரும் முழுமுதற் சிவபெருமான் எல்லாம் அறிந்த அறிவினன் ஆவன். அவனை அவனருளால் நீங்காநினைவால் உளத்தமைத்த உரிமை உறுதிப்பாட்டால் அவனே நானென்னில் திருவடிப்பேறு உண்டாகும். எல்லாம் அறிந்த இறை எனலும் எய்தும். இந்நிலை சாரப்பட்டார்க்குச் சார்பின் பெயரே அமைவது போன்றதோர் மரபாகும். அது சிவனடியாரைச் சிவனெனவே கண்டு வழிபட்டுத் தெளியும் செந்நெறிமுறைமையான் உணரலாம். மெய்கண்ட நாயனாரும் 'ஆலயந்தானும் அரனெனத் தொழுமே' (12) என்றருளியதும் இக்கருத்துப் பற்றியேயாம். மேலும் உலக வழக்கிலும் பூ முதலிய விற்பவரை அப்பண்டப் பெயரால் 'ஏ! பூ!' என அழைப்பதூஉம் காண்க.

எல்லாம் - உலகப்பொருள்களை. எல்லாம் - அறிவு நூற் பொருள்களை எல்லாம். எல்லாம் அறிந்த அறிவனை - சிவனை.

## 2552. தானே யுலகில் தலைவ னெனத்தகுந்

2552. தானே யுலகில் தலைவ னெனத்தகுந்
தானே யுலகுக்கோர் தத்துவ மாய்நிற்கும்
வானே மழைபொழி மாமறை கூர்ந்திடும்
ஊனே யுருகிய வுள்ளமொன் றாகுமே.

திருவடியுணர்வு கைவரப்பட்ட ஒருவர் உலக முதல்வரெனப்படும் தகுதியினராவர். அவரே உலகினுக்கு மெய்ப்பொருளுணர்த்தும் மெய்ம்மையருமாவர். செந்தமிழ் மாமறைகள் வானே பொழிவிக்கும் வன்மை வாய்ந்தது. அம்மறையினால் மிகச் செய்யும் திருவைந்தெழுத்தைக் கணிப்பதால் ஊனே உருகிய உள்ளம் உள்ளத்துள்ளுறையும் ஒப்பிரலாச் சிவபெருமானுடன் ஒன்றாய் ஒடுங்கும்.

## 2553. அருள்பெற்ற காரணம் என்கொல் அமரில்

2553. அருள்பெற்ற காரணம் என்கொல் அமரில்
இருளற்ற சிந்தை இறைவனை நாடி
மருளுற்ற சிந்தையை மாற்றி அருமைப்
பொருளுற்ற சேவடி போற்றுவர் தாமே.

சிவபெருமான் திருவருள் கைவரப்பெற்றதன் காரணம் என் கொல் என ஆராயின், திருவருள் விளக்கால் சிந்தை இருள்கின்ற பின் அவ்வுள்ளத்தின்கண் இறைவனை நாடி அதுவே விருப்பமாக விருப்பதாகும். அமரில் - விருப்பமாகவிருந்தால். அவ்விறைவன் திருவருளால் மருளுற்ற சிந்தையை மாற்றுவர். அருமைப் பொருள் உற்ற திருவடியைப் போற்றுவர். பொருள்: என்றும் பொன்றாதுநின்று நிலவும் மெய்ம்மை. தாமே: ஈற்றசை; எளிதாக இனிதாக என்றலும் ஒன்று.

அமரில் - இருந்தால்.

## 2554. மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்தன்னைப்

2554. மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்தன்னைப்
பொய்கலந் தார்முன் புகுதா ஒருவனை
உய்கலந் தூழித் தலைவனு மாய்நிற்கும்
மெய்கலந் தின்பம் விளைந்திடும் மெய்யர்க்கே.

சிவபெருமான்மாட்டுக் கரவின்றிப் பேரன்பினை மெய்யாகப் பூண்டவர் மெய் கலந்தாராவர். அச் சிவபெருமானும் அவர்களுடன் மெய்யாகக் கலந்து வெளிப்பட்டு வேண்டும். அருள்புரிந்தருள்வன். கரவாடும் வன்னெஞ்சினராய் நிலையாத உலகியற்பொருள்களை நிலைக்கும் எனப் பாழேகழிப்பவர் பொய்ப்பொருளுடன் கலந்த பொய்யராவர். அவர்முன் புகுதவும் கூசுவன் சிவன். அவன் 'பொக்க மிக்கவர் பூவும் நீருங்கண்டு நக்குநிற்கும்' நடுநிலையின் - அதனால் கூசுகின்றனன். அச் சிவன் ஆருயிர்கள் உய்தற்பொருட்டு அவற்றுடன் கலந்து பேரொடுக்கப் பெருமுதல்வனாய் நிற்கின்றனன். மெய்யடியார்களாய் விளங்குகின்றவர்கட்கு அவர்தம் மெய்யன்பில் மெய்யாகக் கலந்து மாளாவின்பம் விளைந்திடச் செய்வன்.

மெய் - வாய்மை. உய் கலந்து - ஆன்மாக்கள் உய்யுமாறு கலந்து.

## 2555. மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்மிகப்

2555. மெய்கலந் தாரொடு மெய்கலந் தான்மிகப்
பொய்கலந் தாருட் புகுதாப் புனிதனைக்
கைகலந் தாவி எழும்பொழு தண்ணலைக்
கைகலந் தார்க்கே கருத்துற லாமன்றே.

மெய்ம்மையன்பினருடன் மிகவும் மெய்கலந்து விளங்குபவன் சிவன். பொய்க்கலப்புடையர்பால் ஒருசிறிதும் புகுதல் செய்யாத ஒப்பில் ஒருவனாம் தூயோனை இடையறாது நினையுங்கள். அப் பயிற்சி மிகுதியால் ஆவி உடம்பினைவிட்டு நீங்கி வெளிமேவுங்காலை அண்ணலாகிய சிவபெருமானைப் பண்ணமை திருவைந்தெழுத்தால் பரவி அவன் திருவடியிற்கலத்தல் செய்யுங்கள். அங்ஙனம் கலப்பாரே அவன் திருவடிக்கருத்தினை எய்தினோராவர். வாய்மைச் சிறப்பினை இதன்கண் காண்க.

## 2556. எய்திய காலத் திருபொழு துஞ்சிவன்

2556. எய்திய காலத் திருபொழு துஞ்சிவன்
மெய்ச்செயின் மேலை விதியது வாய்நிற்கும்
பொய்யும் புலனும் புகலொன்று நீத்திடில்
ஐயனும் அவ்வழி யாகிநின் றானன்றே.

திருவடிக்கண் பேரன்பு செய்தற்கு வாய்த்த இளம் பருவத்தே காலையும் மாலையும் ஆகிய இருபொழுதினும் வஞ்சகமின்றி அன்பு செய்தால் ஊழ்வினையால் விளையும் நிலையாப் பொருள் நுகர்வும் அப் பொருள்களைப் பற்றும் ஐம்புலன் நிகழ்வும் என்றும் நிலைத்த திருவருட்புகலைப் பொருந்தி நீக்கப்பெறும் அவை நீங்கவே ஐயனாகிய சிவபெருமானும் ஆண்டு வெளிப்பட்டு நின்றருள்வன். 'காலமுண்டாகவே காதல் செய்துய்மின்' எனவும், 'வேண்டின் உண்டாகத் துறக்க' எனவும் நிலவும் செந்தமிழ்த் திருமறைகளை ஈண்டு நினைவுகூர்க. காலம் அகவை இளமையும் பொழுதினமையும் குறிப்பதாகும்.

எய்திய காலத்து - அன்புசெய்தற்கு ஏற்ற காலத்தில்.
மெய் செயின் - உண்மையிலேயே அன்புசெயின்.

## 2557. எய்துவ தெய்தா தொழிவ திதுவருள்

2557. எய்துவ தெய்தா தொழிவ திதுவருள்
உய்ய அருள்செய்தான் உத்தமன் சீர்நந்தி
பொய்செய் புலன்நெறி யொன்பதுந் தாட்கொளின்
மெய்யென் புரவியை மேற்கொள்ள லாகுமே.

திருவடிப் பேரன்பு காரணமாகத் திருவருள் வந்தெய்தும். எய்தவே பொய்யும் புலனும் எய்தாதகலும். இம் முறையாகத் தலையாய தண்ணளி வாய்ந்த சிறந்த நந்தி ஆருயிர் உள்ள அருள் செய்தான். அவன் திருவருள் நினைவால் பொய்ப் பொருளை உள்ளுணர்த்தும் புலன்வாயில்களாம் ஒன்பதினையும் அடைத்தல் வேண்டும். அங்ஙனம் அடைத்தால் மெய்யுயிர்ப்பு என்று சொல்லப்படும். புரவியாகிய குதிரையை மேற்கொண்டு செலுத்தும் மேன்மையுண்டாம்; அஃதாவது அகத்தவப் பயிற்சி யுண்டாகும். அகத்தவம் - யோகம்.

புலனெறி ஒன்பது - ஒன்பது வாசல்கள். தாட்கொளின் - அடைத்தால். மெய்யென் புரவியை - தேகத்தில் ஓடும் வாசியை.

## 2558. கைகலந் தானைக் கருத்தினுள் நந்தியை

2558. கைகலந் தானைக் கருத்தினுள் நந்தியை
மெய்கலந் தான்தன்னை வேத முதல்வனைப்
பொய்கலந் தார்முன் புகுதாப் புனிதனைப்
பொய்யொழிந் தார்க்கே புகலிட மாமன்றே.

ஆருயிரின் நல்லொழுக்க நெறியில் உடனாய்க் கலந்து நிற்கும். கடவுளை, அவ்வுயிரின் அன்பு நிறை யுள்ளத்து அவர் நினைந்த வடிவுடன் அப்பொழுதே வெளிபட்டருளும் நந்தியை வணங்குமின். மெய்யன்பின்கண் மேவிக் கலந்த மேலோனைத் தொழுமின். அவனே மறை முதல்வன். அவனே பொய்ப் பொருளாம் உலகியற் பொருள்களை நிலையெனப்பற்றி உலைவுறும் நெஞ்சினராய பொய்கலந்தார் முன்புகுந்தறியாப் புண்ணியன். அவனே இயற்கைத் தூயோனாவன். அவன் பொய்ப் பொருளின் பற்றற்றார்க்கே மெய்ம்மைப் புகலிடமாவன். பொய்ப் பொருள் - நிலையாப்பொருள்; உலகியற்பொருளும் உடலும்.

## 2559. மெய்த்தான் அகம்படி மேவிய நந்தியைக்

2559. மெய்த்தான் அகம்படி மேவிய நந்தியைக்
கைத்தாழ்கொண் டாருந் திறந்தறி வாரில்லை
பொய்த்தாழ் இடும்பையைப் பொய்யற நீவிட்டங்கு
அத்தாழ் திறக்கில் அரும்பேற தாமன்றே.

என்றும் பொன்றா மெய்ம்மை சேர் சிவபெருமானின் திருவடித் தாளிணையைப் பேரன்பு வாய்ந்த உள்ளத்தின்கண் மேவியருளச் செய்தல் யாவர்க்கும் எளிது. அம் முறையில் அன்பருள்ளத்தில் தன் உண்மைத் தாளிணையை மேவியருளியவன் நந்தி. அத்தகைய திருவடியை நன்னெறி நான்மை (2550) நற்றவமாம் கைத்தாழ் கொண்டு ஆருந்திறந்தறிவாரில்லை. நிலையா அழிப்படைமேல் விளையும் பொருள்கள் சேர்ந்து நிறைந்துள்ளனவற்றை இடும்பை உடம்பு. அவ் வுடம்பின்கண் கொண்டுள்ள நிலையாப்பற்றை நீ விட்டகல்வாயாக. விட்டதும் திருவருள் பற்றுப் பெருகும். அதனால் அத்தாழ் திறக்கப்பெறும். பெறவே அதுவே கிடைத்தற்கரிய பெரும் பேறாகும்.

அகம்படி - உள்ளத்திலே கைத்தாள் - கையிலே தாளிருந்தும். கொண்டு - அதைக்கொண்டு. பொய்ந்தாள் இடும்பையை - பொய்யினது மூலம் வைக்கப்பட்டுள்ள உடலை. அத்தாழ் - சுழுமுனை வாயிலில் உள்ள தாள். திறக்கில் - திறந்தால்.

## 2560. உய்யும் வகையால் உணர்வினால் ஏத்துமின்

2560. உய்யும் வகையால் உணர்வினால் ஏத்துமின்
மெய்யன் அரனெறி மேலுண்டு திண்ணெனப்
பொய்யொன்று மின்றிப் புறம்பொலி வார்நடு
ஐயனும் அங்கே அமர்ந்துநின் றானன்றே.

பிறப்பற்றுச் சிறப்புற்று உய்யும் வழி நன்னெறி நான்மையாகும். அந் நான்மையினுள்ளும் அறிவாகிய உணர்வு நெறியே சிறந்தது. அந் நெறியினால் சிவபெருமானை ஏத்துமின்கள். அதன் மேல் மெய்ப்பொருளாகிய அரனார் திருவடியிற்றலைக் கூடிப் பேரின்பம் நுகரும் மேனெறி ஆங்குண்டு. அத்தகைய பேறு பெற்றார் சிவனருள் உறுதிப்பாட்டுடன் பொய்ப்பற்று ஏதுமின்றி அகப் பொலிவொத்துப் புறத்தும் சிவப்பொலிவாகத் திகழ்வர். அவர்தம் அன்புறு நெஞ்சத்து ஐயனாகிய சிவபெருமானும் அங்கு வெளிப்பட்டு விரும்பி நின்றருளினன்.

## 2561. வம்பு பழுத்த மலர்ப்பழம் ஒன்றுண்டு

2561. வம்பு பழுத்த மலர்ப்பழம் ஒன்றுண்டு
தம்பாற் பறவை புகுந்துணத் தானொட்டாது
அம்புகொண் டெய்திட் டகலத் துரத்திடிற்
செம்பொற் சிவகதி சென்றெய்த லாகுமே.

நறுமண முதிர்தலொத்து எங்கும் செறிவாயுறும் திருவருள் மலரின்கண் கற்றவர்களுண்ணும் காழில் கனியாகிய சிவம் ஒன்றுண்டு. அச் சிவப்பழத்தினை (2922) ஆருயிர் உண்ணாவண்ணம் ஊறுசெய்யும் காமம் வெகுளி கடும்பற்றுள்ளம் முதலிய பறவைகளும் ஆங்குள்ளன. அதனை அப் பறவைகள் புகுந்துண்ண வொட்டாது. திருவடியுணர்வாம் நுண்கணையினால் திருவருள் துணைகொண்டு எய்தல் வேண்டும். அங்ஙனம் கணை எய்து துரத்தினால் செம்பொனின் மிக்க சிறந்த சிவனிலையினைச் சென்றெய்தி யின்புறலாம்.
(.அ. சி.) வம்பு பழுத்த - வாசனை மிகுந்த, அஃதாவது எல்லாவற்றையும் அறியும். மலர் - மலராகிய உச்சித்தாமரை. பழம் - ஞானமாகிய பழம். பறவை - காமாதிகள். அம்பு - அம்புபோலும் கூர்மையான மதி.

## 2562. மயக்கிய ஐம்புலப் பாசம் அறுத்துத்

2562. மயக்கிய ஐம்புலப் பாசம் அறுத்துத்
துயக்கறுத் தானைத் தொடர்மின் தொடர்ந்தால்
தியக்கஞ்செய் யாதே சிவனெம் பெருமான்
உயப்போ எனமனம் ஒன்றுவித் தானே.

செந்நெறி யொழுகும் செம்பொருட்டுணிவினரை மயக்கம் செய்தற் பொருட்டு முனைந்தெழும் ஐம்புலப் பாசங்களை அருளால் அறுத்தருளுபவன் சிவன். அவனே ஆருயிரின் தடுமாற்றப் பிறப்பின் கலக்கத்தையும் தவிர்த்தருளினன். அவன் திருவடியினைத் தொடருங்கள். அங்ஙனம் அளவிறந்த காதலுடன் தொடர்ந்தால் ஒரு சிறிதும் மயக்குவதைச் செய்யாமல் எம்பெருமானாகிய சிவன் ஆருயிர் உய்ந்து போமாறு அவ் வுயிர்களின் மனத்தை ஒருமைப்படுத்தி யருள்வன்.

துயக்கு - கலக்கம். தியக்கம் - மயக்கம். உயப்போ - உய்ந்துபோ.

## 2563. மனமது தானே நினையவல் லாருக்கு

2563. மனமது தானே நினையவல் லாருக்கு
இனமெனக் கூறு மிருங்காய மேவல்
தனிவினி னாதன்பால் தக்கன செய்யில்
புனிதன் செயலாகும் போதப் புவிக்கே.

சிவபெருமான் திருவடியிணையினை மனமாறாது பயிற்சி மிகுதியால் தானே நினையும். அத் தன்மை வாய்ந்த திருநெறி வல்லார்க்கு அவர் தம் அரும்பெரும் அறிவுத் தொண்டினுக்குத் துணையாய் இனமாய் நிற்பது அவர் தம் தூய உடம்பே யாகும். அவ் வுடம்பு மேவும் ஒண்மையுடன் தனித்திருந்து சிவபெருமானைத் திருவருளால் உள்ளக் கிழியின் உருவெழுதி அத் தலைவன்பால் ஒப்புவித்தல் வேண்டும். அதுவே தக்கன செய்யும் தவமாகும். அத் தவத்தினைச் செய்யில் தூயோனாகிய சிவன் தன் திருவடியுணர்வாம் அறிவு நிலத்தில் உய்ந்து போமாறு அருளிச் செய்வன்.

இருங்காயம் - பெருமையுள்ள சரீரம் - தனிவினில் தனித்திருந்து. போதப் புவி - ஞானபூமி.

# 29. ஞானி செயல்

29. ஞானி செயல் 2564. முன்னை வினைவரின் முன்னுண்டே நீங்குவர்

2564. முன்னை வினைவரின் முன்னுண்டே நீங்குவர்
பின்னை வினைக்கணார் பேர்ந்தறப் பார்ப்பர்கள்
தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
நன்மையில் ஐம்புலன் நாடலி னாலன்றே.

'ஞான மெய்ந்நெறிதான் யார்க்கும் நமச்சிவாயச் சொல்' ஆதலால் அந்நெறி யொழுகலே ஆருயிர்களின் அருங்கடன். அங்ஙனம் ஒழுகுவார்க்கு வரும் ஊழ்வினை அவர் உடலொடும் ஒட்டியழியும். அதற்குக் காரணம் அப் பெருந்தகையார் உள்ளம் முன்னோன் திருப்பெயராம் திருவைந்தெழுத்தினை இடையறாது உண்டு கொண்டேயிருப்பது. அதனால் அவ் வூழ் அவர் உள்ளத்துச் செல்ல அஞ்சும். அஃதாவது ஊழ்வினையனைத்தும் உடையவனாகிய சிவபெருமானால் ஆருயிர்க்கு நல்குவதாகும். அவன் அவ் வினையினை நல்குவது தன்னை நினைவித்தற்பொருட்டேயாம். அவ் வினையும் அவ் வுயிரை அடைவது நினையுமாறு செய்தற்கேயாம். அவ் வுயிர் திருவடியை இடையறாது நினைப்பின் அவ் வூழுக்கு ஆண்டு வேலை ஏதும் இல்லை. ஆதலால் அவ்வூழ் செயலற்று அழியும். இவ் வுண்மையினைப் புலப்படுத்துவதே 'கூற்றங் குதித்த நோற்றலின் ஆற்றல் சேர்' மார்க்கண்டேயர் திருவரலாறாகும். ஆயின் அவ் வூழ் செயல் செய்ய முனையாமலல்லவா அகலுதல்வேண்டும். முனைந்த

தென்னெனின்? ஊழை வெல்லுதல் எவர்க்கும் முடியாதென்னும் கொள்கை பீழைப் பிழைபாடுடைய தென்பதையுணர்த்துதற்கும், தாளாண்மையிற் றலை நிற்கும் வேளாளராம் சிவனடியார்கட்கு மட்டும் முடியு மென்பதை நாட்டற்கும், கூர்மிகு கணை உளம்புகாது உடலிற்பட்டு மீள்வது போன்று ஊழும் மீளும் என்பது காட்டற்கும் நிகழ்ந்த தென்க. ஊழை வெல்லும் படை முன்னோன் நாமத் தஞ்செழுத்து. சிவனடியார் வேளாளராவது அவர் தம் ஆவியும் உடலும் உடைமையும் சிவபெருமானுக்கு உவந்தளிக்கும் ஒண்மையான் என்க. ஒருபுடையொப்பாக முறையே மெய்ப் பொருள் நாயனார், கண்ணப்பநாயனார். இயற்பகை நாயனார் ஈந்தமை காண்க. மேலும் பாடம் படியாதாரை அச்சுறுத்தியும் அடித்தும் படிக்கச் செய்ய ஆசான் கைக்கொள்ளுங் கருவி பிரப்பங்கோல் அக்கோல் படியாதாரை யன்றிப் படிப்பாரை ஏதுஞ் செய்யாமையும் இதற்கொப்பாகும். எல்லாரையும் நல்லாராயாக்குவதற்கு அமைந்த பாடி காவலரை நல்லார்கண்டு அஞ்சாமையும் ஒப்பாகும். உண்டல் - இடையறாது நினைத்தல். முன்னுண்டே நீங்குவர் - முன்னோனை நினைந்தே நீங்குவர். பின்னை வினையாகிய ஏறுவினைக்கண்ணும் உள்ளம் பொருந்துதற்கு வாயிலின்மை யால் அதனைப் பேர்ந்தறப் பார்ப்பார்கள். இது கட்டுங் கயிறு இற்றொழிந்தால் வேறொன்றற்குப் பயன்படுவதன்றிக் கட்டுவதற்குப் பயன்படாதல்லவா? அதுபோல் ஏறுவினையும் செய்தாரைப் பணிக்கும் வன்மையின்றி செயப்பட்டார் வினை வீறு கொண்டெழ ஊறும் உரமாய் நிற்கும். ஞாயிற்றின் ஒளிகண்டே தன்னைக் காணும் ஞாலத்தார் போன்று திருவடியுணர்வுடையார் தலைவனாகிய சிவபெருமானைக் கண்டே தம்மையும் காண்பர். அவர்தம் ஐம்புலனும் பண்டு

போலன்றி இன்று சிவபெருமானையே அருளால் நாடுகின்றது. அதனால் அவர் தம்மைக் காண்பதும் தலைவனைக் காண்பதுந் தகும் என்க. பாடிகாவலர் - ஊர்காவலர்.

முன்னைவினை - ஊழ். உண்டே - அனுபவித்தே. பின்னை வினை - இந்தப் பிறப்பில் இயற்றும் வினை (ஆகாமியம்; கணார் - செய்யார். போந்தற - கன்மத்தை விட்டு இருக்க - நன்மையில் - நன்மையைச் செய்வதில்.

# 2565. தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்

2565. தன்னை யறிந்திடுந் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை யவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவனரு ளாலன்றே.

ஆருயிர்க்கு இருவினை யொப்பும், மலச் செவ்வியும் வாய்த்த வழித் திருவருள் வீழ்ச்சி எய்தும் அருள் வீழ்ச்சியினைச் சத்திநிபாதம் என்பர். இன் வீழச்சியினையே சென்னியில் வைத்த சிவனருள் என்று ஓதினர். அச்சிவனருள் வலத்தால் தன்னை யறிந்திடுவர் திருவடியுணர்வினராகிய தத்துவ ஞானிகள். அவன் முன்னைவினையாகிய எஞ்சுவினையின் முடிச்சை அவிழ்த்து அகற்றுவர். முடிச்சவிழ்த்தலாவது வறுத்தவித்துப் போல் குருவருள் சார்ந்ததும் பயனில்லாமல் அவர் தம் திருக்கடைக்கண் நோக்கத்தாலாக்குதல். முடிச்சு முடிச்சாக முடிந்தமைத்த கண்ணிவலை முடிச்சு அவிழ்ந்தால் பயன்படாதல்லவா? அதுபோன்றதாகும் இதுவும். பின்னை வினையாகிய ஏறு வினையைப் பிடித்துப் பிசைவர். பிசைதல் - உருவுற்றெழா வண்ணம் உருக்குலைவித்தல். முடியணி பொடியாய் உருக்குலைந்து வடிவிழந்த காலத்து அணியப்படாமை இதற்கொப்பாகும். முடியணி: தலையில் அணியும் அணி; திருமுடி எனினும் ஒக்கும்.

முன்னை வினையின் முடிச்சு - சஞ்சிதம். பின்னைவினை - ஆகாமியம்.

## 2566. மனவாக்குக் காயத்தால் வல்வினை மூளும்

2566. மனவாக்குக் காயத்தால் வல்வினை மூளும்
மனவாக்கு நேர்நிற்கில் வல்வினை மன்னா
மனவாக்குக் கெட்டவர் வாதனை தன்னால்
தனைமாற்றி யாற்றத் தகுஞானி தானே.

உள்ளம், உரை, உடல் என்னும் மூன்றும் மனம், வாக்கு, காயம் எனப்படும், இம் மூன்றும் சிவனினைவின்றித் துய்ப்பினும் தொழிற்படினும் அவர் தமக்குப் பலவினையாகும். பவம் - பிறப்பு. பாவப் பயனாகிய பிறப்புப் பவம் என்றாயிற்று. அதனால் வல்வினை மூளும் என்றருளினர். அம் மூன்றும் சிவனினைவுடன் அவனோடியைந்து தற்செயலற்றுத் தலைவன் செயலாய் நேருற நிற்கில் அவ் வினைகள் வெற்பிற்றோன்றிய வெங்கதிர் கண்டவப், புற்பனிக்கெடு மாறது போல'க் கேடெய்தும் நேருற நிற்றல் - துணையாய் நிற்றல், உள்ளமும் உரையும் பிறப்புக்கு வழியாகாதபடி அவற்றின் முனைப்பைக் கெடுத்தவர் அகத்தவப் பயிற்சியினால் தன்முனைப்பை மாற்றி அருள் முனைப்பாக ஆற்றுவர். அவர் திருவடியுணர்வினர் என்று செப்பப்பெறும் தத்துவ ஞானியாவர். மாற்றியாற்றற்குத் 'தந்ததுன்றன்னைக் கொண்டதென் றன்னைச் சங்கரா' என்றலும் ஒன்று கெட்டவர் என்பது சினைவினை முதன் மேல் நின்றது.

நேர் நிற்கில் - நன்னேறியில் நின்றால். மன்னா - பொருந்தா. வாதனை தன்னால் - அட்டாங்க யோகத்தால். தனைமாற்றி ஆற்ற - தற்போதத்தை அழித்து ஒழிக்க.

## 2567. நிற்ற லிருத்தல் கிடத்தல் நடையோடல்

2567. நிற்ற லிருத்தல் கிடத்தல் நடையோடல்
பெற்றவக் காலுந் திருவருள் பேராமற்
சற்றியன் ஞானந்தந் தானந்தந் தங்கவே
உற்ற பிறப்பற் றொளிர்ஞான நிட்டையே.

நிற்றலும் இருத்தலும், கிடத்தலும் நடத்தலும், ஓடலும் செய்யும் பொழுது திருவருள் நினைவு நீங்காதிருத்தல் வேண்டும் 'சாற்றப்படும் இயற்கை மெய்யுணர்வு அங்ஙனம் நீங்காதார்க்குத் தந்தருளினன். அங்ஙனம் தந்தருளிய பேரொடுக்கப் பெருமான் அந்தம் என்று அழைக்கப்படுவன். அவ் வுயிர் அந்தமாகிய தன்பால் தங்கவே அங்ஙனம் அருளினன். அதனால் அவ் வுயிர் பிறப்பற்று விளக்கமிக்க ஞான நிட்டையினை எய்தும். சாற்றியல் என்பது சற்றியல் எனக் குறைந்து நின்றது.

# 30. அவாவறுத்தல்

30. அவாவறுத்தல் 2568. வாசியு மூசியும் பேசி வகையினால்

2568. வாசியு மூசியும் பேசி வகையினால்
பேசி யிருந்து பிதற்றிப் பயனில்லை
ஆசையும் அன்பும் அறுமின் அறுத்தபின்
ஈசன் இருந்த இடம்எளி தாகுமே.

புகழ்ந்து பேசப் பெறும் வாசியாகிய உயிர்ப்பும், ஊசியாகிய நடுநாடியும் அவற்றின் தன்மைகளும் பயனும் பயிற்சியும் பேசிப் பயன் இல்லை. பிதற்றியும் பயனில்லை. இவை, தாமே வாழவேண்டுமென்னும் ஆசையும், தாமுயரத் தம்மையெல்லாம் தொழ அவை தாழ வேண்டும் என்னும் தம்பாலன்பாகிய செருக்கும் நீங்கா ஒருவர்க்கு ஆகா. அதனால் அவற்றை அறுங்கள். அறுத்தபின் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் இடத்தினை எய்துதல் எளிது. அப் விடம் அன்பினால் தூய்மை எய்தி அருளினால் ஒளிரும் தம் உள்ளமேயாகும். அன்பு ஈண்டுப் பற்றின் மேற்று - பற்று : பத்து; பத்தி.

வாசி - பிராணவாயு. ஊசி - சுழுமுனை.

## 2569. மாடத்து ளானலன் மண்டபத் தானலன்

2569. மாடத்து ளானலன் மண்டபத் தானலன்
கூடத்து ளானலன் கோயிலுள் ளானலன்
வேடத்து ளானலன் வேட்கைவிட் டார்நெஞ்சில்
மூடத்து ளேநின்று முத்திதந் தானன்றே.

முழுமுதற் சிவபெருமான் எவ்வகை வேட்கையும் விட்டவர் எழின் னெஞ்சகத்து உயிர்க்குயிராய் உள் நின்று நீங்கா நிலைமையனாய்ப் பாங்காய் உறைந்து திருவடிப்பேறு அருள்கின்றனன். அங்ஙனம் அருளுவதற்கு வாயில்கள் சிவப் பொலிவுமிக்க மாடங்கள், மண்டபங்கள், கூடங்கள், கோவில்கள். வேடங்களாகும். இவை யயைதும் அவனை நினைவூட்டும் கருவிகளே. இவை மாடிக்குச் செல்லும் படி போன்றனவாகும். கற்பதற்குக் கருவியாம் நூல் போன்றனவுமாகும். அதனால் இவ் விடங்களினெல்லாம் நிலைத்து நிற்பானலன் என்னும் கருத்தால் மாடம் முதலியவற்றுள் உளானலன் என ஓதினர்.

மாடம் - சுவரில் உள்ள மாடத்தில். மூடம் - உள்ளம்.

## 2570. ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்

2570. ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்
ஆசை படப்பட ஆய்வருந் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்த மாகுமே.

அடிமையாகிய ஆருயிர் 'வேண்டத்தக்க தறிவோய் நீ' என நினையாது தன்பால் முதன்மை ஏற்றி வீடும் வேண்டுதல் ஈடில் பெருங்குற்றமே யாம். இதனாலேயே ஆளுடைய அடிகளும் 'காயத்திடுவாய் உன்னுடைய கழற்கீழ் வைப்பாய், கண்ணுதலே என்னதோ இங்கதிகாரம்' என்று ஓதியருளினர். நோயாளி மருத்துவன்பால் ஆணையிடுவதும், கற்பார் கற்பிப்பார்பால் ஆணையிடுவதும் பிழை யாகுமன்றோ? அவையும் இதற்கு ஒப்பாகும். அதனால் ஆண்டவ னோடாயினும் ஆசையறுமின்கள்; ஆசையறுமின்கள். ஆசையுண்டாக உண்டாகப் பெருந்துன்பங்களாய் வந்து வருத்தும். அவ் வாசையினை விடவிட இன்பமே ஈடின்றிப் பெருகும். ஈசனோடாயினும் என்பது திருவடிப் பேற்றின் கண்ணும் என்பதாம். ஈசனோடாயினும்: உம்மை உயர்வு சிறப்பு. திருவடிப்பேறு காரியம்; திருவடியன்பு காரணம். கடமையையும் அடிமையையும் காதலிப்பார்க்குக் காரணத்தை விழைதலே குழைவில் கடனாம். குழைவில் - குற்றமில்லாத.

## 2571. அடுவன பூதங்கள் ஐந்தும் உடனே

2571. அடுவன பூதங்கள் ஐந்தும் உடனே
படுவழி செய்கின்ற பற்றற வீசி
விடுவது வேட்கையை மெய்ந்நின்ற ஞானந்
தொடுவது தம்மைத் தொடர்தலு மாமே.

அன்றும் புலனாயுள்ள பூதங்கள். என்ற விடத்து ஆருயிருடன் மாறுபட்ட புலன்களுக்கு வலியாகவுள்ள பூதம் எனப் பொருள்படும் ஈண்டு. அவை தம்முள் ஒன்றோடொன்று 'மாறுபட்டு ஒன்றனை யொன்று மிக்கு நின்று அழிக்கும் தன்மைய என ஓதினர். அப் பூதங்கள் வாயிலாக விளைவதும் வேறுபடுவதும் ஆகிய ஊண் உடை உறையுள் உறை முதலியவற்றுள் கொண்டுள்ள பற்றுக்களை அறவே மாற்றி எவ்வகை வேட்கையையும் விடுவதே மெய்ந்நெறியாகும். மெய்யாக நிலைபெற்று நின்று நீளின்பந்தரும் திருவடியுணர்வைத் தொடுவதே சிறப்பென்க. அவ் வுணர்வே நம்மை அகலாது தொடர்ந்து ஆண்டவன் அடிக்கீழ் அமர்த்தும். அன்றுதல் - மாறுபடுதல். உறை - மருந்து.

அடுவன - ஒன்றையொன்று பகைத்து அழிக்கும் பூதங்கள். தம்மைத் தொடர்தல் - தத்துவங் களைந்து ஆன்மாவை ஆராய்ந்து அறிதல்.

## 2572. உவாக்கடல் ஒக்கின்ற வூழியும் போன

2572. உவாக்கடல் ஒக்கின்ற வூழியும் போன
துவாக்கட லுட்பட்டுத் துஞ்சினர் வானோர்
அவாக்கட லுட்பட் டழுந்தினர் மண்ணோர்
தவாக்கடல் ஈசன் தரித்துநின் றானே.

பருவ காலத்துப் பொங்கும் கடல் போன்று அளவின்றிப் பொங்கி உலகினை அழித்த நீரூழிகள் பல கழிந்தன. இவற்றினைக் கடலூழி என்ப. வானோர் முதலாயினார்களும் இன்பதுன்பக் கடலிடைப் பட்டு மாண்டு மடிந்து போயினர். மண்ணோர்கள் அவாக் கடலுட்பட்டுப் பிறப்பதற்கே ஆளாகி அழுந்தினர். என்றும் பொன்றாப் பேரின்ப அருளாழியைச் சிவபெருமான் தாங்கி நின்றனன்.

உவாக்கடல் - பவுர்ணமியிற் பொங்குகின்ற கடல். துவாக் கடல் - சுகதுக்க வடிவக் கடல். தவாக்கடல் - நீங்குதல் இல்லாத அருட்கடல்.

## 2573. நின்ற வினையும் பிணியும் நெடுஞ்செயல்

2573. நின்ற வினையும் பிணியும் நெடுஞ்செயல்
உன்தொழி லற்றுச் சுத்தம தாகலும்
பின்றைங் கருமமும் பேர்த்தருள் நேர்பெற்றுத்
துன்ற அழுத்தலும் ஞானிகள் தூய்மையே.

நெடுநாள் நீங்காது நின்ற இருவினையும், மும்மலப் பிணியும், தொடர்வறாது நீண்டு நினைப்பதாகிய தியானமும் அகன்று அருளால் தூய்மை எய்தும் ஆருயிர். அதன்பின் ஐம்புல வரிவும் நீங்கும். நீங்குமாறு செய்தருளிய திருவருள் நேர்பெற வெளிப்படும். அவ் வருள் அவ்வுயிரைத் தன்னில் அழுத்தும். அழுத்தவே ஆருயிர் திருவடியுணர்வினதாகும். அந் நிலையே சிவஞான நிலை; அந் நிலை நிற்பாரே ஞானிகள். அவர்கள் எய்திய அருள் அழுத்தமே மெய்யுணர்வுத் தூய்மை. ஞானிகள் - நல்லார்.

பிணி - பாசம். நெடுஞ்செயல் - தவம். உன் தொழில் - நினைத்தல். ஐங்கருமம் - ஐம்புல வியாபாரம்.

## 2574. உண்மை யுணர்ந்துற ஒண்சித்தி முத்தியாம்

2574. உண்மை யுணர்ந்துற ஒண்சித்தி முத்தியாம்
பெண்மயல் கெட்டறப் பேறட்ட சித்தியாந்
திண்மையின் ஞானி சிவகாயங் கைவிட்டால்
வண்மை யருள்தான் அடைந்தன்பில் ஆறுமே.

திருவடியுணர்வாகிய உண்மையினைத் திருவருளால் உணர்ந்து நன்னெறியிற் செல்ல என்றும் பொன்றா அறிவொளிச் செறிவாய் நிற்கும் சித்தி முத்தி கைகூடும். மாயாகாரிய விருப்பமாகிய பெண் மயக்கம் நீங்கினால் அட்ட சித்தியாகிய பேறு கிடைக்கும். உரன் என்னும் திண்மைசேர் நல்லார் தாம் ஒடுங்கி நிற்பதாகிய சிவ துரியத்தையும் கைவிட்டால் வளமிக்க திருவருள் கைவரும். கைவரவே திருவடியுணர்வில் அழுந்தும். அவ் வன்பிலே இன்புற்றமையும். திண்மை - வைராக்கியம். ஆறும் - அமர்ந்திருக்கும்.

உற நிற்க - பேறு பெறுதற்குரிய. திண்மை - வைராக்கியம். சிவகாயம் - தான் ஒடுங்கி நிற்கும் சிவதுரியம். அன்பில் ஆறும் - அன்புடன் அமரும்.

## 2575. அவனிவன் ஈசனென் றன்புற நாடிச்

2575. அவனிவன் ஈசனென் றன்புற நாடிச்
சிவனிவன் ஈசனென் றுண்மையை யோரார்
பவனிவன் பல்வகை யாமிப் பிறவி
புவனிவன் போவது பொய்கண்ட போதே.

தாம் சிவனாகத் திருவடி யுணர்வால் திருநீறிடுவர். அவரைச் சிவனாகவே உண்மையன்பினர் எண்ணுவர். அம் முறையில் ஆருயிராகிய இவன் அவனாகிய முறையால் இவனை ஆண்டானாகிய ஈசனென்றே அன்புற நாடுவர். நாடுதல் - சிந்தித்தல். அவ் வகையாக நாடிச் சிவனே இவன். இவனே ஆண்டான். இவ் வுண்மையை அருளால் உணர்தல் வேண்டும். இவ் வுண்மையினை உணராதார்க்குப் பல்வகைப் பிறவி யுண்டாகும். உலகியற் பொய்ம்மையை அருளால் உணர்ந்த போது பல்வேறு புவனங்களில் போய்ப் பிறக்க நேரும் வினைகள் அத்தனையும் அகன்றொழியும் புவனம் என்பது புவன் என நின்றது.

பவனிவன் - பாவத்தையுடைய இச் சீவன். புவனிவன் போவது - இவன் போகும் பலவகைப்பட்ட புவனங்கள்.

## 2576. கொதிக்கின்ற வாறுங் குளிர்கின்ற வாறும்

2576. கொதிக்கின்ற வாறுங் குளிர்கின்ற வாறும்
பதிக்கின்ற வாறிந்தப் பாரக முற்றும்
விதிக்கின்ற ஐவரை வேண்டா துலகம்
நொதிக்கின்ற காயத்து நூலொன்று மாமே.

ஆருயிர்க்கு மாயாகாரிய உடம்பு உலகங்களைப் படைத் தளிப்பதைக் கொதிக்கின்றவாறு எனக் கூறுவாராயினர். அப் பொருள்களைக் காத்தருளும் முறையினை குளிர்கின்றவாறென்றனர். துடைத்தருள்வதைப் பதிக்கின்றவாறு என்றனர். பாரக முற்றுக்கும் இம் மூன்று தொழிலும் உள்ளன. ஆருயிர்களின் உணர்வின்மாட்டுச் செய்யப்படும் மறைத்தல் அருளல்களும் கொள்ளப்படும். இவ் வைந்தொழில்களையும் திருவாணை மருவி ஒருவாது செய்யும் கடவுள் நிலையினர் ஐவர். அவர் முறையே அயன், அரி, அரன், ஆண்டான், அருளோன் என அழைக்கப்பெறுவர். திருவடியுணர்வு கைவந்த அருளாளர் இவ்வைவரையும் என்றும் விரும்பார். விரும்பும் ஏனையார்க்குப் படைக்கப் படவேண்டிய உடம்பிற் புகுவதற்குக் காரணமாகிய வினையை நூலென்று உருவகித்தார். அஃதாவது ஒருடம்பினின்று மற்றொருடம்பிற் புகுவதற்குரிய வினைத் தொடர்பு நேர்மை செய்யும் நூல் போன்றிருத்தலின் நூல் என்றருளினர். நொதிக்கின்ற: அருவருக்கின்ற.

## 31. பத்தியுடைமை

31. பத்தியுடைமை 2577. முத்திசெய் ஞானமுங் கேள்வியு மாய்நிற்கும்

2577. முத்திசெய் ஞானமுங் கேள்வியு மாய்நிற்கும்
அத்தனை மாயா அமரர் பிரான்தனைச்
சுத்தனைத் தூய்நெறி யாய்நின்ற சோதியைப்
பத்தர் பரசும் பசுபதி தானென்றே.

வீடுபேற்றினை அளித்தருளும் திருவடியுணர்வாகவும், அவ்வுணர்வினை நல்கும் திருவைந்தெழுத்து மறையாகவும், நிற்பவன் சிவபெருமான். அவனே அனைத்துயிர்க்கும் அத்தனுமாவன். அவனே என்றும் பொன்றா வானவர் தலைவனுமாவன். அவனே இயல்பாகப் பாசங்களினின்றும் நீங்கிய தூயோனுமாவன். அவனே என்றும் மங்கா அறிவுப் பேரொளியுமாவன். அவனே மெய்யன்பர்களால் வழிபட்டுப் போற்றிப் புகழப்படும் பசுபதியாகிய இறைவனுமாவன்.

## 2578. அடியார் அடியார் அடியார்க் கடிமைக்கு

2578. அடியார் அடியார் அடியார்க் கடிமைக்கு
அடியனாய் நல்கிட் டடிமையும் பூண்டேன்
அடியார் அருளால் அவனடி கூட
அடியா னிவனென் றடிமைகொண் டானே.

சீலம், நோன்பு, செறிவென்னும் முத்திறப் பாகுபாட்டின் கண்ணும் உள்ள மெய்யடியார்கட்குத் திருவருளால் அடிமை பூண்டார் அறிவு நெறியினராவர். அவர்க்கும் அடியேன் திருவருளால் அடிமை பூண்டேன். பூணவே அம் மெய்யடியார் பொய்யில் திருவருளால் சிவபெருமான் திருவடியிணையினைக்கூடும் திருப்பேறு பெற்றேன். பெறலும் அச்சிவபெருமான் இவன் நம்மடிமை என ஏன்று கொண்டருளினன். அருளித் தன் திருவடியையும் தந்தளித்தான்.

## 2579. நீரிற் குளிரும் நெருப்பினிற் சுட்டிடும்

2579. நீரிற் குளிரும் நெருப்பினிற் சுட்டிடும்
ஆரிக் கடனந்தி யாமா றறிபவர்
பாரிற் பயனாரைப் பார்க்கிலும் நேரியர்
ஊரில் உமாபதி யாகிநின் றானன்றே.

தம் முனைப்பற்று அருள்வழிச் செல்வார்க்குச் சிவபெருமான் நீரினும் தண்ணியனாய்க் குளிர்ந்து இன்பம் செய்தருள்வன். தம்முனைப்புற்று மருள்வழிச் செல்வார்க்கு நெருப்பைவிட வெய்யனாய்த் தீயினும் மிக்க துன்பத்தை ஈந்தருள்வன். அத் துன்பம் அருளுவதும் திருவடியின்பம் எய்தும் பெருநெறியாம் நன்னெறியிற் செலுத்துவதற்கேயாம். இம் முறையாக நடுநிலை கோடாது கடமையை நிறைவேற்றுபவர் சிவபெருமானை யன்றி வேறு யாவர் உளர்? ஒருவரும் இலர் என்பதாம். அத்தகைய நந்திப் பெருமானை நாமா அறியும் ஆற்றலுடையோம். அனைத்துலகினும் எய்தும் நிறை பயனினும் சிறந்தவர் ஒருகால் அறிவர். உலகனைத்தையும் நன்னெறிச் செலுத்தும் தென்னாடு சிவனுறையும் பொன்னாடாகும். அந்நாடே திருவூர் என்று அழைக்கப்படும். அத்தகைய திருவூரில் அம்மையப்பராகச் செம்மையொடு விளங்குபவன் சிவன். அவன் உமாபதியாகி நின்றருளினன்.

ஆர் இக்கடன் - பொருந்தும் இம் முறைமை. நேரியர் - முறைதவறாதவர். ஊரில் - சித்தத்தில்.

## 2580. ஒத்துல கேழும் அறியா ஒருவனென்று

2580. ஒத்துல கேழும் அறியா ஒருவனென்று
அத்தன் இருந்திடம் ஆரறி வார்சொல்லப்
பத்தர்தம் பத்தியிற் பாற்படில் அல்லது
முத்தினை யார்சொல்ல முந்துகின் றாரன்றே.

ஏழு உலகத்தாரும் ஒருங்கு திரளினும், ஏழுலகத்தின் எல்லா இடங்களின் ஆயினும் அறிதற்கரியவன் சிவன். அவன் ஒப்பில் ஒருவன். அவனே அத்தன். அவன் மறைந்து நின்றருளும் மாண்பினன். அத்தகையானை உள்ளவாறறிந்து தெள்ளிதின் உரைக்கும் வல்லார் யாவர்? ஒருவரும் இலர். அவன் மெய்ப்பத்தர்தம் மையில் பத்தியில் விளங்குபவனாவன். அவ் வுண்மை 'பத்திவலையிற் படுவோன் காண்க' என்னும் தமிழ்மறை முடிபான் உணரலாம். அவ்வாறன்றி முத்தனை யானை எத்திறத்தான் உணர்ந்து எவர் சொல்ல முந்துவர்? ஒருவருமிலர் என்க. மை குற்றம். மையில் - குற்றமில்லாத.

படின் - அகப்படின்.

## 2581. ஆன்கன்று தேடி யழைக்கு மதுபோல்

2581. ஆன்கன்று தேடி யழைக்கு மதுபோல்
நான்கன்றாய் நாடி யழைத்தேனென் நாதனன
வான்கன்றுக் கப்பாலாய் நின்ற மறைப்பொருள்
ஊன்கன்றா னாடிவந் துள்புகுந் தானன்றே.

(ப. இ. ஆன்கன்று தன் தாயை நாடி அம்மா (2407) என்று அழைப்பதுபோன்று அடியேனும் கன்றொத்துச் சார்பொருளாய் நாடிக் கனிந்தழைத்தேன். அங்னம் அழைத்தது யாரை எனின்? என்னைவிட்டு நீங்காது என்னுடன் மன்னி நிற்கும் பன்னரும் பண்பு சேர் என்னரும் நாதனை என்க. அவன் வான்கன்றாய் விளக்கும் மேனிலை யுலகத்து உயிர்களுக்கும் அப்பாற்பட்டவன். அத்தகைய மறைப் பொருளை ஊன் வாடியொழுகும் நிலையில் தவத்தின்கண் நான் புகாமல், தான் தனித்தருளும் நன்னெறி நான்மை நற்றவத்தில் அருளால் புகுந்துள்ளேன். அவனும் அந் நெறிமுறையான் என்னை நாடி வந்து அருள்புரிந்தருளினன்.

வான்கன்று - வானுலகில் உள்ள பசுக்கள் (ஆன்மாக்கள்).

## 2582. பெத்தத்துந் தன்பணி இல்லை பிறத்தலான்

2582. பெத்தத்துந் தன்பணி இல்லை பிறத்தலான்
முத்தத்துந் தன்பணி இல்லை முறைமையால்
அத்தற் கிரண்டும் அருளால் அளித்தலாற்
பத்திப்பட் டோர்க்குப் பணியொன்றும் இல்லையே.

ஆருயிர்கள் கட்டு நிலையில் இறவாத இன்ப அன்பினராய் அடிமை நினைவினராய் தம் முனைப்பற்று அருள்வழியொழுகி ஆர்வமொடு இறைபணி புரிகின்றன. அதனால் கட்டுற்ற காலத்தும் அவ் வுயிர் புரிவது எதுவவயினும் தன் பணியாகாது சிவப் பணியாகவே சிறக்கும். இவ் வுண்மை 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்னும் செந்தமிழ்ச் சிறப்பு மறையின் சீர்மையான் உணரலாம் ஈண்டுக்கிய்பது இன்னும் பணி யாது என அன்பும் பணிவும் இன்பும் உடையராய் எதிர்நோக்கிப் பணி என நிற்பது. அவ் வுண்மை வரங்கிடப்பது, பாடுகிடப்பது என்பனவற்றானுணரலாம். மேலும் கிடப்பது என்பது தற்செயலற்றுத் தலைவன் கற்பிக்கும் பொற்செயல் நோக்கி நிற்பதென்பதுமாகும். பெற்றோர்கள் வழிப் பிள்ளைகளும், கற்பிப்பார்வழிக் கற்பாரும், முதியோர்வழி இளைஞரும், மருத்துவன்வழி நோயாளரும், தெய்வத்தின்வழித் தெய்வமுற்றோனும் இன்னும் இவர் போன்ற பிறரும் இன்புற்றுச் சென்று தொழுது ஒழுகும் செம்மையும் இதனை வலியுறுத்தும். பிறத்தலான் என்பது திருவாணை அகத்தினின்றும் அறிவிற்றொன்று தலான் என்பது ஆகும். ஒட்டு

நிலையாகிய திருவடிப் பேற்றின்கண் ஆருயிர்களின் அறிவு அன்பு ஆற்றல் ஆகிய மூன்றும் விழுமிய முழுமுதற் சிவபெருமானை அவன் திருவருளால் ஆருயிர்கள் முறையே அயரா நினைவோடிருக்கு
மாறு செல்லும் அதுவே ஆண்டு அவ் வுயிர்களின் அறிவு நிகழ்ச்சியாகும். அச் சிவத்தின்பால் நிகழும் அன்பு வாயிலா அழியா இன்பு நிகழும். அவ்வின்பின்கண் அவ் வுயிர்கள் அழுந்தும். அதுவே அவ்வுயிர்களின் அன்பு நிகழ்வாகும். ஆண்டு அவ் வுயிர்கள் அவனையே பற்றி அவன் வண்ணமாய் நிற்கும். அதுவே அவ் வுயிர்களின் ஆற்றல் நிகழ்வாகும். இம் முறையான் ஆண்டுச் செய்யும் பணியும் சிவப்பணியேயாம். மேலும் திருவடிப் பேற்றின்கண் ஆருயிர்களின் அறிவு முற்றறிவாகத் திகழும். அவ்வறிவான் நிகழும் அன்பு ஆற்றல்களும் முற்றுணர்வுடைய சிவச்செயலே யாகும். உயிர்கள் ஒட்டின்கண் ஆண்டான் அடிமை என்னும் முறைமை பூண்டு திகழும். அம் முறைமையால் அடிமையின் செயல் அனைத்தும் ஆண்டான் செயலே யாகும். அதனாலும் தன்பணியில்லை. இத்தகைய இரண்டிடத்தும் செய்யும் பணிகள் திருப்பணிகள் ஆவன மட்டுமன்றித் திருவடிக்கு ஒப்புவித்தலும் உண்டு. அம் முறையே அத்தனாகிய சிவபெருமானுக்கு ஆருயிர்கள் அருள் நிலையில் நிற்பதால் ஈரிடத்துப் பணியையும் ஒப்புவிக்கின்றன. அக் குறிப்பே இரண்டும் அருளாலளித்தலான் என்று ஓதப் பெற்றது. இம் முறையான பெரும்பற்றாகிய பத்திப் பட்டோர்க்கு யாண்டும் அவர் பெயரான் வழங்கும் பணியொன்றும் இல்லை. இதுவே மெய்ப்புணர்ப்பின் மெய்ப் பொருளாகும். கருவியும் கையும் மருவிச் செய்யும் செய்கை கருத்தாவின் பெயரால் வழங்குவதே முறைமையாகும். அங்ஙனமின்றிக் கருவி கை முதலியவற்றின் பெயரால் வழங்கப்படுமாயின் அதனை

ஏற்றுரை என்றே கொள்ளப்படும். இவற்றான் இவ் வுண்மை விளங்கும் இதனைத் திருவள்ளுவ நாயனார்,

"என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலரென்னை
முன்னின்று கலநின் றவர்."

என ஓதியருளினர். இதன்கண் தொல்படை மறவன் தன் பணியைத் தலைவன் பணியாகவே மொழிந்து நிலை நிறுத்தினமை பெறப்படுதல் காண்க ஆகவே அம் மறவன் தன்னைக் கருவியாகக் கொண்டனனேயன்றிக் கருத்தாவாகக் கொண்டனன் அல்லன் என்பது விளங்கும். இதனை, 'உன்னடியேன் செய்பணிகள் உன்தொண்டே உன்னருளே, உன்னடிக்கே ஒப்புவித் தேன்' என்பதனால் நினைவுகூர்க.

இரண்டும் - பெத்தம் முத்திகள் இரண்டும். பணி தாமாகச் செய்யும் பணி. (என்னெனின் அன்புசெய்பவர் பெத்தத்தில் எல்லாம் சிவன்செயல் என்று பணி இயற்றுவதாலும், முத்தியில் சீவபோதம் இழந்து சிவபொதமாய் நிற்றலாலும் என்க).

## 2583. பறவையிற் கற்பமும் பாம்புமெய் யாகக்

2583. பறவையிற் கற்பமும் பாம்புமெய் யாகக்
குறவஞ் சிலம்பக் குளிர்வரை யேறி
நறவார் மலர்கொண்டு நந்தியை யல்லால்
இறைவனென் றென்மனம் ஏத்தகி லாவே.

ஆருயிரின் உடம்பு ஈண்டுப் பறவை என ஓதப்பட்டது. அஃதோர் ஆகுபெயர். அவ் வுடம்பினை நெடுநாள் அழியாது ஓம்ப வேண்டுமென்னும் பேரவாப்பூண்டு காயகற்பந் தெடிச் சில்லோர் அலைவர். இவ் வுண்மை, '....நெடுநா ளிருந்த பேரும், நிலையாக வேயினும் காயகற்பந்தேடி நெஞ்சுபுண் ணாவர்' (பரிபூர. 10) எனத் தாயுமானச் செல்வர் ஓதியவற்றான் உணர்க. பாம்பு என உருவகிக்கப்படும் குண்டலினியும் மெய்யாக அகத்தே எழும் உயிர்ப்புப் பயிற்சியினால், 'மணி கடல் யானை வார்குழல் மேகம், அணிவண்டு, தும்பி வளைபேரிகை யாழ்' (586) என்னும் பத்துவகை இன்னிசை முழக்கமும் அகத்தே முழங்கும் குறவம் - குரல்: செய்யுட்டிரிபு. அம் முழக்கத்தூடே குளிர்வரையாகிய அமிழ்த வூற்றுப் பெருகும் புருவ நடுவின்கண் ஏறுதல் வேண்டும். ஏறி ஆண்டுத் தோன்றுந் திருவடித் தீந்தேனை ஓவாது பருகிக்கொண்டு அவ்வின்பத்தினையே எண்பெரும் மலராகக்கொண்டு நாளும் முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளாம் சிவபெருமானை அவ் வுயிர்கள் அஞ்செழுத்தோதி வழிபடும். அத்தகைய நந்தியை அல்லாமல் ஏனைய வுருவங்களை என் மனம்

மறந்தும் இறைவன் என முறைபிறழ நிறையழிய எண்ணி ஏத்தாது என்க.

பறவை - சரீரம். (பறவை - புள், உயிர்; ஈண்டுப் புள்ளிருக்கும் குடம்பையைக் குறித்தது.) கற்பமும் - காயகற்பமும். பாம்பும் - குண்டலியும். குறவம் சிலம்ப - மணி, கடல், யானை போன்ற பத்துவித நாதங்கள் ஒலிக்கக்கேட்டு, குளிர்வரை - அமிழ்தம் ஒழுகுவதால் குளிர்ந்திருக்கும் மேருவாகிய புருவமத்தி. நறவு - தேன் - அமிழ்தம்.

## 2584. உறுதுணை நந்தியை உம்பர் பிரானைப்

2584. உறுதுணை நந்தியை உம்பர் பிரானைப்
பெறுதுணை செய்து பிறப்பறுத் தும்மின்
செறிதுணை செய்து சிவனடி சிந்தித்து
உறுதுணை யாயங்கி யாகிநின் றானே.

கட்டு ஒட்டு ஆகிய இரண்டின்கண்ணும் மட்டில் பெருந்துணையாய் நின்று அருள் புரிபவன் நந்தி. அவனே தேவர்கள் முதலிய அனைவர்கட்கும் முழுமுதல்வனாவன். அவன் திருவடிப்பேறாகிய ஒட்டு நிலையினை எய்துதற்கு அவன் திருவருளே துணையாகக் கொள்ளுதல் வேண்டும். இது கதிரவனை அவன்றன் கதிரின் துணைகொண்டே காணுதல் வேண்டும் என்பதனையொக்கும் அத் திருவருளைத் துணைக்கொண்டு செம்பொருள் நூல் வழியாக ஒழுகிப் பிறப்பறுத்து உய்யுங்கள். ஆருயிர்க்கு யாண்டும் நெருங்கிய துணை திருவருளே. அத் திருவருளை மேற்கொண்டு சிவனடியைச் சிந்தியுங்கள். அத் திருவடியை நாடி வழிபடுதலான் அவன் சிறந்த பெருந்துணையாக நின்றருள்வன். அவன் தானே இயற்கை அறிவுப் பேரொளியாய் அம்மைச் செறிவுருவாய் விளங்கி நின்றருளினன். கட்டு - பிறப்பு. ஒட்டு - சிறப்பு.

## 2585. வானவர் தம்மை வலிசெய் திருக்கின்ற

2585. வானவர் தம்மை வலிசெய் திருக்கின்ற
தானவர் முப்புரஞ் செற்ற தலைவனைக்
கானவன் என்றுங் கருவரை யானென்றும்
ஊனத னுள்நிறைந் தொன்றுபட் டாரன்றே.

(ப. இ.)அருளால் பெற்ற உயர்ந்த இன்பப் பண்புகளை யுடையவர் வானவர். பொருளால் முனைத்த மருளாம் பண்புகளையுடையவர் தானவர். வான் - உயர்வு. தான் - முனைப்பு வானவர்களைத் துன்புறுத்தும் தானவர்கள் முப்புரத்தாராவர். அவர்கள் வாழும் முப்புரங்களையும் (329) செற்றுச் சிரித் தெரித்தவன் சிவன். அவனே முழுமுதல். அவனைக் கானவனாகிய வேடர் கோனென வழிபடுவோமாக. எஞ்ஞான்றும் பிறப்பாகிய கருவரை யில்லாதான் சிவன் என்று வழிபடுவோமாக அங்ஙனம் வழிபடுவார் உடம்பகத்தும் உயிரகத்தும் திடம்பட வீற்றிருந்தருள்பவன் சிவன். அவனை வழிபடுவார் அவனுடன் ஒன்றுபட்டு இறவா இன்புற்று வாழும் நன்மையராவர்.

வலிசெய்து - துன்பம்செய்து. கானவன் - வேடன்; ஆனந்தமளிப்பவன். கருவரையான் - குறிஞ்சிக்கிழவன் அல்லது பிறப்பை வேர் அறுப்பவன். ஊன் அதனுள் - சரீரத்துள்.

# 2586. நிலைபெறு கேடென்று முன்னே படைத்த

2586. நிலைபெறு கேடென்று முன்னே படைத்த
தலைவனை நாடித் தயங்குமென் உள்ளம்
மலையுளும் வானகத் துள்ளும் புறத்தும்
உலையுளும் உள்ளத்து மூழ்கிநின் றேனே.

ஆருயிர்கள் உய்தற் பொருட்டுக் கருவித் துணையாக உலகக் காரியங்களை உள்ளதாகிய மாயையினின்று படைத்தருளியவன் சிவன். அவன் அவ் வுலகங்களைப் படைத்த ஞான்றே இத்துணைக் காலம் நிலைபெறுக என்றும், பின் நிலைமாறிக் காரணத்தின்கண் உறுக என்றும் திருவாணை ஈந்தருளினன். அவனே முழுமுதற் சிவன். அவனை என் உள்ளம் புறத்து நாடிக் கலக்கம் எய்துகின்றது. மலையுள்ளும் நாடினேன். வானகத்தும் நாடினேன். பிறவிடத்தும் நாடினேன். அவன் அவ்வவ் விடங்களை நம்முள்ளத்து உறையவரும் வழியாகவுள்ளான். ஒருவரை உறைவிடத்தன்றித் துறையாம் வழியிடத்து என்றும் காண்டல் செல்லாது. அதுபோல் ஆண்டவனையும் அன்பார் அகத்துத்தான் உண்மை வடிவிற் காணுதல் கூடும். அங்ஙனம் கண்டு அவன் திருவடியின்பில் முழுகினேன். சிவனைப் புறத்துக்காண்பது அவன்றன் சார்பு வடிவமாகும். அகமாகிய உணர்வில் காண்பதே அவன்றன் உண்மை வடிவமாகும்.

நிலைபெறு(க) கேடு என்று - இருக்க அழிக என.
புறத்தும் - நரக புவனங்களிடத்தும்.

## 32. முத்தியுடைமை

32. முத்தியுடைமை 2587. முத்தியில் அத்தன் முழுத்த அருள்பெற்றுத்

2587. முத்தியில் அத்தன் முழுத்த அருள்பெற்றுத்
தத்துவ சுத்தி தலைப்பட்டுத் தன்பணி
மெய்த்தவஞ் செய்கை வினைவிட்ட மெய்யுண்மைப்
பத்தியி லுற்றோர் பரானந்த போதரே.

(ப. இ.ஒட்டாகிய வீடுபேறு முத்தி எனப்படும். அப் வொட்டின்கண் அத்தனாகிய சிவபெருமானின் முழுத்த திருவருள் பெறுதல் இயல்பகும். அங்ஙனம் பெற்ற திருவருளால் முப்பத்தாறு மெய்களும் நமக்கு வேறெனவும் கருவியெனவும் அவை ஆண்டவன் உரிமை எனவும் மீண்டும் அதன்பால் வருதல் வேண்டத்தக்கதன்றெனவும் அருளால் கண்டு உண்மை யுணர்தல் தத்துவ சுத்தியாகும். அந் நிலையினைத் தலைப்பட்டவர் செய்யும் பணிகளெல்லாம் சிவப்பணியாகும். தன்பணி - சிவப்பணி. அப் பணியே மெய்த்தவமாகும். அச் செய்கையால் இருவினை அகலும். அகலவே உண்மைப் பத்தியுண்டாகும். அத்தகைய பத்தியிலுற்றோர் பேரின்பப் பேரறிவினராவர். தன்-சிவன்.

தத்துவசுத்தி தலைப்பட்டு-தத்துவங்கள் 36-ம் வேறு என்று அறிந்து நீங்கி. தன்பணி-சிவப்பணி.

# 2588. வளங்கனி தேடிய வன்றாட் பறவை

2588. வளங்கனி தேடிய வன்றாட் பறவை
உளங்கனி தேடி யுழிதரும் போது
களங்கனி யங்கியிற் கைவிளக் கேற்றி
நலங்கொண்ட நால்வரும் நாடுகின் றாரே.

ஆருயிர்களை வலிய இருபெருந்தாள்களையுடைய அரிய பறவையாக உருவகஞ் செய்தனர். இருகால்கள் என்பது உழைப்பும் ஒடுக்கமும் ஆகும். வளப்பமிக்க திருவடிப்பேறாகிய (2649) கனியைத் தேடிய ஆருயிர்கள் உள்ளங்கனிந்து ஓவாது திரியும். அங்ஙனம் திரியும்போது கள்ளம் கனிந்த காம வான்சுறவின் வாய்ப்பட்டு விட்டிலுக்கு முன் விழைவினை உண்டாக்கிப் பின் இழவினைத்தரும் விளக்கினைப்போல் வருத்தங் கொடுக்கும் உலகியற்பற்றாம் கைவிளக்கினை ஏற்றி எண்ணம் மனம் இறுப்பு என்னும் நால்வரும் (அந்தக்கரணங்கள்) அவ்வுயிரைத் தன் வழிக்கு இழுக்க நாடுகின்றனர். அங்கி - ஈண்டு விளக்கு.

வளங்கனி - முத்தி. பறவை - சீவன். உளங்கனி - உள்ளங்கனிந்து. களம் கனி - கள்ளம் கனிந்த. அங்கி - தீபோலும் வருத்தம் செய்யும் உலக வியாபாரங்களில். நால்வர் - அந்தக்கரணங்கள்.

# 33. சோதனை

33. சோதனை 2589. பெம்மான் பெருநந்தி பேச்சற்ற பேரின்பத்து

2589. பெம்மான் பெருநந்தி பேச்சற்ற பேரின்பத்து
அம்மா னடிதந் தருட்கடல் ஆடினோம்
எம்மாய மும்விடுத் தெம்மைக் கரந்திட்டுச்
சும்மா திருந்திடஞ் சோதனை யாகுமே.

யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடைப்பெருமான் சிவன். அவனே ஒப்பற்ற பெருமைசேர் நந்தியும் ஆவன். மாற்றமும் மனமும் செல்லா ஏற்றமாம் பேரின்பத்து அம்மானும் அவனே. அவன் திருவருட் கடலில் ஆடினோம். அதனால் அவனருளால் எவ்வகை மாயமருளையும், அதற்கு ஆக்கந்தரும் இருளையும், உழல்விக்கும் அழலனைய இருவினையயும் ஒருங்கு விடுத்தனம். யான் எனது என்னும் பற்றே, யாம் எனப் பெயர்பெறும். அதனையும் அகற்றினம். அதனால் எம்மைக் கரந்திட்டனம் என்றனர். இந்நிலையில் 'அவனருளால் அல்லது ஒன்றையும் செய்யானாகவே அஞ்ஞான கன்மம் பிரவேசியாகலான்' என்னும் மெய்கண்டார் திருவருண் மொழிக்கிணங்க அவ்வுயிர் நிற்கும். அதனால் அவ்வுயிர் சும்மா இருக்கிறது என்னும் பொருளில் சும்மா என ஓதினர். செயலொழிவுபெற்று இருக்கும் இடமே திருந்திய இடமாகும். இதனையே அறுவழி ஆய்வு என்பர். அறுவழி ஆய்வு எனினும் அத்துவ சோதனை எனினும் ஒன்றே.

எம் மாயமும் - எவ்வகைப்பட்ட மாயா சம்பந்தங்களையும். எம்மைக் கரந்திட்டு - தான் என்பது அற்று. திருந்திடம் - திருத்தமுற்று இருக்குமிடம்.

## 2590. அறிவுடை யானரு மாமறை யுள்ளே

2590. அறிவுடை யானரு மாமறை யுள்ளே
செறிவுடை யான்மிகு தேவர்க்குந் தேவன்
பொறியுடை யான்புலன் ஐந்துங் கடந்த
குறியுடை யானொடுங் கூடுவன் நானே.

இயல்பாகவே விளங்கும் உண்மைப் பேரறிபு உடையவன் சிவன். அவனே அருமாமறையாகிய திருவைந்தெழுத்தின் நிறைவாயுள்ளான். பெருந்தேவரென்று பேசப்படும் யாவர்க்கும் பெருந்தேவனாகவுள்ளான். புண்ணிய வடிவானவன். பொறிவாயில் ஐந்தவித்த புலவன். அப்பெருமான் திருவடிக்கண் அவன் திருவருளால் அடியேன் அன்பாற் கூடியின்புறுவன். குறியுடையான் - புலவன்.

பொறியுடையான் புலனைந்தும் கடந்த குறியுடையான் பொறி வாயிலைந்து அவித்தான்.

## 2591. குறியாக் குறியினிற் கூடாத கூட்டத்து

2591. குறியாக் குறியினிற் கூடாத கூட்டத்து
அறியா அறிவில் அவிழ்ந்தேக சித்தமாய்
நெறியாம் பராநந்தி நீடருள் ஒன்றுஞ்
செறியாச் செறிவே சிவமென லாமே.

மறவர்நினைவாய், மலர் மணம்போன்று ஓரிடப்புணர்ப்பாய், ஓய்விலா உணர்வாய், மெய்ப்புணர்ப்பாய், ஒருணர் நினைவாய் நன்னெறியாநிற்கும் பெரும்பொருளாம் நந்தியினை உணர்ந்தேன். உணரவே அவன்றன் அழிவிலாத் திருவருள் அடியேன்பால் பொருந்தும். பொருந்தவே வேறறப்புணரும் புணர்ப்பாய்ப் புணர்ந்தேன். அப் புணர்ப்பின் மணத்தால் சிவம் என்னும் திருப்பெயரைப் பெற்றுய்ந்தேன். செறியாச் செறிவு - இரண்டிணை ஒன்று.

குறியாக் குறி - மறந்து நினையாக் குறி கூடாத கூட்டம் - கடலும் அலையும்போலக் கூடுங் கூட்டம். அறியா அறிவு - மறப்பற்ற மெய்ஞ்ஞானம். அவிழ்ந்து - கலந்துநின்று. ஏக சித்தமாய் - ஒருமனதாய். செறியாச் செறிவு - கூடாத கூட்டம்.

## 2592. காலினில் ஊறுங் கரும்பினிற் கட்டியும்

2592. காலினில் ஊறுங் கரும்பினிற் கட்டியும்
பாலினுள் நெய்யும் பழத்துள் இரதமும்
பூவினுள் நாற்றமும் போலுளன் எம்மிறை
காவலன் எங்குங் கலந்துநின் றானன்றே.

மேலோதிய ஐம்பெருந் தன்மைக்கு ஒருபுடையொப்பு வருமாறு: காற்றினில் உண்டாம் ஊறும், கரும்பினில் உண்டாம் கட்டியும், பாலினுள் உண்டாம் நெய்யும், பழத்தினில் உண்டாம் சுவையும், பூவினில் உண்டாம் மணமும்போன்று பிரிவற நின்றருள்கின்றனன் எம்மிறையாகிய சிவபெருமான். அவனே அனைத்துயிர்க்கும் அனைத்து உலகங்கட்கும் நீங்காக் காவலன் ஆவன். அவன் அகல் நிறைவாகவும் ஆருயிர்கள் அமைநிறைவாகவும், அனைத்துப் பொருளும் அடங்கு நிறைவாகவும் அமையுமாறு கலந்துநிற்கின்றனன். அகல்நிறைவு - வியாபகம். அமைநிறைவு - வியாப்பியம். அடங்குநிறைவு - வியாத்தி.

ஊறும் - பரிசமும். கட்டியும் - வெல்லமும். நெய் - வெண்ணெய்.

## 2593. விருப்பொடு கூடி விகிர்தனை நாடிப்

2593. விருப்பொடு கூடி விகிர்தனை நாடிப்
பொருப்பகஞ் சேர்தரு பொற்கொடி போல
விருப்பர் மனத்திடை எங்கள் பிரானார்
நெருப்புரு வாகி நிகழ்ந்துநின் றாரே.

ஆருயிர்கள் பெண் தன்மை எய்தி எட்டு வான் குணமலை மீது இவர்ந்து மட்டில் விழைவுடன்கூடி ஒருபடித்தல்லா அருட்டொழில்சேர் ஒப்பில் ஒருவனை நற்றவத்தால் நாடல்வேண்டும். நாடி நயனுறக்கூடி என்றும் பொன்றா இன்புற்றிருக்க வழிகாட்டல்வேண்டுமென்று பழியில் தடமலர் விழிசெர் அருளம்மை திருவுள்ளங்கொண்டருளினள். அவளே மேருமலைமீது யாரும் விரும்பத் தனிப்பெரும் பெண்ணாய்த் தோன்றி அருந்தவம் புரிந்தனள். அதனைத் திருவுள்ளங் கொண்டருளிய சேறைச் செந்நெறிச் செல்வனாராகிய சிவபெருமானார் அவளை மாமணம் புணர்ந்தருளினர் தம் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டு கலந்தருளினர். அதுபோல் நற்றவம்புரிந்து அவரையே விரும்பியிருக்கும் நல்லார் நல்லுளத்தினிடத்து எங்கள் பிரானாராகிய சிவபெருமானார் தங்கிநின்றருள்கின்றனர். அவர் பேரறிவுப் பெரும் பிழம்பாம் தீவண்ணத்தராகி ஒன்றாய் வேறாய் உடனாய் நிகழ்ந்து நின்று அருள்கின்றனர். ஆருயிர் பெண்தன்மை எய்துவது ஆண் என்பதினின்றும் ஒரு மாத்திரை குறைவது, அதுவே 'மாத்திரைக்குள் அருளும் மாற்பேறரே' என்பதாம். இதனை 'அன்பின்பு நண்புண்பிங் காயின் அறிவினினான்,

கின்புநிலை மாத்திரை யொவ்வொன்று, என்பதனான் நினைவுகூர்க.

பொருப்பகம் - இமயமலை. பொற்கொடி - உமாதேவி நெருப்புருவாகி - செம்மை வடிவினராகி.

## 2594. நந்தி பெருமான் நடுவுள வியோமத்து

2594. நந்தி பெருமான் நடுவுள வியோமத்து
வந்தென் அகம்படி கோயில்கொண் டான்கொள்ள
எந்தைவந் தானென் றெழுந்தேன் எழுதலுஞ்
சிந்தையி னுள்ளே சிவனிருந் தானன்றே.

நந்திபெருமானாகிய சிவபெருமான் அப்பாலாம் நாப்பண்சேர் உறக்கத்து எழுந்தருளிவந்து அடியேன் அகம்படியினைக் கோவிலாகக் கொண்டருளினன். கொண்டதனால் அடியெனும் திருவிளக்கேற்றியதும் திருமனை புகுவாரிபோன்று எந்தை வந்தானென்று திருவருளால் எழுந்து2 நெல்லுமலரும்தூ உய்த் தொழுதேன். தொழுதலும் அடியேன் உள்ளத்தினுள்ளே அச் சிவபெருமான் திருந்த இருந்தருளினன். அப்பால்உளக்கம் - துரிய சுழுத்தி; அறிதுயில்.

நடுவுள் வியோமம் - பரசுழுத்தி.

## 2595. தன்மைவல் லோனைத் தவத்துள் நலத்தினை

2595. தன்மைவல் லோனைத் தவத்துள் நலத்தினை
நன்மைவல் லோனை நடுவுறை நந்தியைப்
புன்மைபொய் யாதே பினிதனை நாடுமின்
பன்மையில் உம்மைப் பரிசுசெய் வானன்றே.

உண்மை அறிவு இன்பப் பண்பாம் தன்மை வல்லானை, நற்றவத்துள் நடுநின்றருளும் நலத்தினை, அனைத்துயிர்க்கும் அகலாது நின்று ஆரருளால் நன்மை புரிந்துவரும் நல்லோனை, நடுநிலைகுன்றாது நயம்புரிந்தருளும் நந்தியை, புன்மையும் பொய்யும் - இருளும், மருளும்
ஒருசிறிதும் இல்லாத புனிதனை. அன்புடன் நாடுங்கள், அங்ஙனம் நாடினால் அளவில்லாத ஆருயிர்களுள் நும்மைச் சிறப்பாகத் தெரிந்தெடுத்து நுமக்குத் திருவடிப் பரிசினைச் சேர்த்தருள்வன்.

## 2596. தொடர்ந்துநின் றானென்னைச் சோதிக்கும் போது

2596. தொடர்ந்துநின் றானென்னைச் சோதிக்கும் போது
தொடர்ந்துநின் றானல்ல நாதனும் அங்கே
படர்ந்துநின் றாதிப் பராபரன் என்தை
கடந்துநின் றவ்வழி காட்டுகின் றானன்றே.

சிவகுருவாய் எழுந்தருளிவந்து எனக்கெய்திய அறுவழி ஆய்வு செய்தருளும்போது அச் சிவபெருமான் உடனாந் தன்மையால் நல்ல நாதனாகி அங்கே தொடர்ந்துநின்றருளினன். ஒன்றாந் தன்மையில் ஆதிப் பெரும்பொருளாம் அவன் நீக்கமற நிறைந்துநின்றருளினன். எந்தையாகிய அவன் பொருள்தன்மையால் கடந்துநின்று திருவடிசேரும் அருட்பெரும் வழியைக் காட்டியருளுகின்றனன்.

## 2597. அவ்வழி காட்டும் அமரர்க் கரும்பொருள்

2597. அவ்வழி காட்டும் அமரர்க் கரும்பொருள்
இவ்வழி தந்தைதாய் கேளியான் ஒக்குஞ்
செவ்வழி சேர்சிவ லோகத் திருந்திடும்
இவ்வழி நந்தி இயல்பது தானன்றே.

அமரர்களுக்கும் அறியவொண்ணாத அரும்பொருளாம் சிவபெருமான் திருவடிப் பேற்றினுக்காம் அவ்வழியினைக் காட்டியருள்கின்றனன். இவ்வழியாகிய இவ்வுலகத்து எனக்குத் தந்தைதாய் கேள் ஒத்துத்தோன்றாத் துணைபுரிந்தருளுகின்றனன். அவன் செம்பொருள், செம்மை நலம்புரியும் விழுப்பொருள். செவ்வழியாய்ச் சென்று சேர்தற்குரிய சிவலோகமாகிய அம்மைக்கண் திருந்த இருந்திடும் அரும்பொருள். இம்முறையே நந்திப்பெருமானின் நல்லியல்பாகும்.

## 2598. எறிவது ஞானத் துறைவாள் உருவி

2598. எறிவது ஞானத் துறைவாள் உருவி
அறிவது னோடேயவ் வாண்டகை யானைச்
செறிவது தேவர்க்குந் தேவர் பிரானைப்
பறிவது பல்கணப் பற்றுவி டாரே.

மும்மலமாகிய மாயப்படைகளைத் திருவருளாகிய உறையினுள்ளிருக்கும் திருவைந்தெழுத்தாம் ஞானவாட்படையினை வெளிப்பட எடுத்து எறிவது திருவாணைவழி யொழுகும் அடிமையின் முடிவில் கடனாகும். எறியவே அப் படைகள் அஞ்சி அகலும். அங்ஙனம் அஞ்சியகலவே திருவடியுணர்வு திகழ்ந்தோங்கும். ஓங்கவே அதனால் அறிவது அவ்வாண்டகையாகிய சிவபெருமானை. தேவர்பிரானாகிய அச்சிவபெருமானுடன் இரண்டறக்கலந்து செறிந்திருப்பது அவ்வழிப்பேறாகும். அப்பேறு எய்தவே வேறு பலவகையான மாயாகாரியப் பற்றுவிடாச் சிறப்பிலார் சேர்வு பறிவதாகும். பறிவது - ஓட்டெடுப்பது.

## 2599. ஆதிப் பிரான்தந்த வாளங்கைக் கொண்டபின்

2599. ஆதிப் பிரான்தந்த வாளங்கைக் கொண்டபின்
வேதித்து என்னை விலக்கவல் லாரில்லை
சோதிப்பன் அங்கே சுவடு படாவண்ணம்
ஆதிக்கட் டெய்வ மவனிவ னாமன்றே.

சிவகுருவாய் எழுந்தருளிய ஆதிப்பிரான் திருவைந் தெழுத்தாகிய வாளைத் தந்தருளினன் அதனை உயிரினும் சிறந்த ஒழுக் கமாகக் கைக்கொண்டேன். அங்ஙனங் கைக்கொண்டபின் என்னை வேறுபடுத்தி நன்னெறியினின்றும் விலக்கிப் புன்னெறியிற் புகுத்தவல்லார் எவரும் இலர். மாயாகாரியச் சுவடாகிய குற்றப் பசையும் நேராவண்ணம் அவனருளால் குறிக்கொண்டு சோதிப்பன். ஆதிக்கண் தெய்வமாய் அந்த முழுமுதலாய் நிற்பவன் அவனே. அவனருளால் அவன் திருவடிசேர் இவனும் அவனாவன்.

## 2600. அந்தக் கருவை யருவை வினைசெய்தற்

2600. அந்தக் கருவை யருவை வினைசெய்தற்
பந்தம் பணியச்சம் பல்பிறப் பும்வாட்டிச்
சிந்தை திருத்தலுஞ் சேர்ந்தாரச் சோதனை
சந்திக்கத் தற்பர மாகுஞ் சதுரர்க்கே.

தொன்மையேயுள்ள பிறப்பீனும் வித்தாகிய அந்த இருண் மலத்தை, அதுகாரணமாக வரும் அருவுருவாயுள்ள மாயாகாரியங்களை, அவற்றான் ஏற்படும் இருவினைத் தொடக்கினை, அப்பணியால் ஏற்படும் அச்சத்தை, அவ்வச்சத்தால் வரும் பல பிறப்புக்கள் முதலிய எல்லாவற்றையும் சிவகுருவானவர் அருளால் வாட்டினர். வாட்டிச் சிந்தையைத் திருத்தியருளினர். அருளலும் அறுவழி ஆய்வினைப் பொருந்தினர் தக்கோர். பொருந்தவே திருவடியிணையினைச் சேர்ந்தனர். சேரவே சிவமாம் பெருவாழ்வினைப் பெற்றனர். பெற்ற நற்பேற்றால் செயற்கரும் செய்கை செய்யும் தீரராம் சதுரர் ஆயினர், "செயற்கரிய செய்வார் பெரியர் சிறியர், செயற்கரிய செய்கலா தார்" (26) எனவும், "பெருமைக்கும் ஏனைச் சிறுமைக்கும் தத்தம், கருமமே கட்டளைக் கல்" (505) எனவும் நாயனாரருளிய நற்றமிழ்மறையினை ஈண்டு நாடி இன்புறுக. செயற்குரிய செய்வார் மக்கள். செயற்குரிய செய்கலாதார் மாக்களிலும் தாழ்ந்த கயவர். இவரையே "எற்றிற் குரியர் கயவர் ஒன்றுற்றக்கால், விற்றற் குரியர் விரைந்து" (1080) என நாயனார் அருளினர். ஒன்று - கிடைத்தற்கரிய இம் மக்கள் யாக்கை. விற்றல் - தம்மைப்

புலனுக்கு அடிமையாக்கல். விரைந்துகண்ட அளவானே ஆய்ந்தோய்ந்து பாராது முந்திப் புகுந்து. கயவர்-புலனுக்கு அடிமைப்பட்டுப் புன்பிறப்பெய்தும் புல்லியர் கயவர் - மீளா ஆளாய்ப் பள்ளத்து ஆழ்ந்தோர். மக்கள் பிறப்பால் மலர் மிசை ஏகினான் மாணடிசேராது நிலமிசைப் புலனுக்கு அடிமையாய் மீண்டும் மீண்டும் புன்பிறப்பெய்துவோர் போக்கொணாக் கயவராவர்.

எட்டாம் தந்திரம் முற்றும்

ஒன்பதாம் தந்திரம்

(மகுடாகமம்)

1. குருமடதரிசனம்

## 2601. பலியும் அவியும் பரந்து புகையும்

2601. பலியும் அவியும் பரந்து புகையும்
ஒலியும்எம் ஈசன் தனக்கென்றே யுளகிக்
குவியுங் குருமடங் கண்டவர் தாம்போய்த்
தளிரு மலரடி சார்ந்துநின் றாரே.

அன்பால் அமைக்கப்படும் செஞ்சாலியரிசிச் சோறாகிய திருவமுதுப்பலியும், முத்தழற்கண் நத்திச் சொரியும் நெய் அவியும், பரந்து சித்தாந்த சைவத் திருமடங்களினெல்லாம் நறும்புகை கமழா நிற்கும். எனவே மெய்யடியார்கட்கு விருந்தயரச் சமைக்கும் சோறடு பகையும். பொருந்திய சிவ வணக்கத்தின்பொருட்டுச் செய்யப்படும் வேள்வித் தீயில் நெய்பெய் புகையும் எங்கணும் பரந்து உள்ளம் பொங்க உலகும் பொங்கின என்க. திருவருளால் தோன்றிய செந்தமிழ்த் திருமறை திருமுறை முதலிய சிவநூற்களின்கண் பிறப்பறுக்கும் அருமறைகளே பேசப்பட்டுள்ளன. அவைகளே கீதத்தொலி எனப்படும் அவ்வொலிகளே எங்கணும் முழங்குவ. எல்லாம் சிவபெருமான் ஒருவனையே முழுமுதலாகக்கொண்டு நிகழ்வவாயின. அவற்றை நெஞ்ச நெக்குருகி நினைந்து அன்பருளமெலாம் குவியும். அதன் புறவடையாளமாகக் கைகளும் தலைமீதேறிக் குவியும். அத்தகைய சிவகுருமடங்களைக் கண்டவர் செம்மலர் நோன்றாளாம் சிவபெருமான் திருவடியிணையினைச் சார்ந்து இன்பார்ந்து என்றும் சிற்பர்.

பலியும் - அன்னப் பலியும் (ஆரிய வேள்வியில் செய்யும் உயிர்ப்பலி அல்ல). அவியும் - பறப்பையின் மூலம்

ஓமத்தீயில் சொரியும் நெய் அவியும். ஒலி - தமிழ்வேதம் ஓதும் ஒலி. குவியும் - மனம் அடங்கும். தளிரும் - குளிர்ந்து தளிர்ந்த. பறப்பை: நெய் வைக்கும் மரவை.

## 2602. இவனில்ல மல்ல தவனுக்கங் கில்லை

2602. இவனில்ல மல்ல தவனுக்கங் கில்லை
அவனுக்கும் வேறில்லம் உண்டா அறியின்
அவனுக் கிவனில்ல மென்றென் றறிந்தும்
அவனைப் புறம்பென் றரற்றுகின் றாரே.

ஈண்டு இவன் என்பது ஆருயிரைக் குறிக்கும். அஃது அவன் இவன் ஆகின்றான் என்னும் மும்மொழிக்கண் பெறப்படும். அத்தகைய இவன் என்னும் சொல் சிறப்பாக சிவகுருவினைக் குறிப்பதாகும். அவன் என்னும் சொல் முழுமுதற் சிவனைக் குறிப்பதாகும். முழுமுதற் சிவனாகிய அவனுக்குச் சிவகுருவாகிய இவனுடைய நற்றவ உள்ளமே உற்று உறையும் வற்றா அருள்சேர் திருக்கோவில் என்க. அதுவல்லாமல் வேறு திருக்கோவில் சிவனுக்கு அங்கு இல்லை என்க. அங்ஙனமிருந்தும் அவனாகிய சிவனுக்குச் சிவகுருவின் உள்ளத்தையன்றி வேறோர் இல்லம் இருப்பதாக ஆராய்ந்து அறியப்புகின், வழியளவை நூலளவை நுண்ணுணர்வு முதலிய எல்லா வகையானும் பெறப்படுவது சிவகுருவின் திருவுள்ளம் என்பதேயாம். அவ்வுண்மையினை அவ்வாற்றான் அறிந்திருந்தும் அவனாகிய சிவபெருமானைச் சிவகுருவுக்கு வேறாகப் புறம்பு என்று சில்லோர் வீண்முழக்கம் செய்கின்றனர். உண்டா - உண்டாயிருப்பதாக.

இவன் - சீவன்(ஈண்டுக் குரு); அவன் - சிவன். புறம்பு - வேறானவன்.

## 2603. நாடும் பெருந்துறை நான்கண்டு கொண்டபின்

2603. நாடும் பெருந்துறை நான்கண்டு கொண்டபின்
கூடுஞ் சிவனது கொய்மலர்ச் சேவடி
தேட வரியன் சிறப்பிலி எம்மிறை
ஓடும் உலகுயி ராகிநின் றானன்றே.

நன்னெறி நான்மை நற்றவத்தோரால் நாடப்பெறும் 'மிகுசைவத்துறையே பெருந்துறையாகும். அத்துறையினைத் திருவருளால் நான் கண்டுகொண்டேன். அதன்பின் சிவபெருமானுடைய செம்மலர் நோன்றாள் சேர்ந்தின்புறும் பேறு கைகூடிற்று. சிறப்பிலி : சிறப்பு + இல் + இ = சிறப்பாகிய, இல் - சிவகுருவின் திருவுள்ளம், இ - உடைமையாகக்கொண்டு எழுந்தருளியிருப்பவன். இப் பொருள் பயப்பதே ஈண்டுச் சிறப்பிலியாகும். இ: ஒடைமைப் பொருள்ஈறு; வில்லையுடையவன் வில்லி என்பதுபோல். அத்தகைய சிறப்பிலியாகிய எம்மிறையைத் தேடவரியன் என்று செப்புவர். அச் சிவபெருமான் புடைபெயரும் உலகாகவும் உற்றுணரும் உயிராகவும் பிரிப்பின்றி நிறைந்து நின்றியக்குகின்றனன்.

பெருந்துறை சிவனது திருவடிதான் என்பது இம் மந்திரக் கருத்து. சிறப்பு இல் இ - சிறப்பினையுடையன் இல்லமாயிருக்கின்ற குரு.

## 2604. இயம்புவன் ஆசனத் தோடு மலையும்

2604. இயம்புவன் ஆசனத் தோடு மலையும்
இயம்புவன் சித்தக் குகையும் இடமும்
இயம்புவன் ஆதாரத் தோடு வனமும்
இயம்புவன் ஈரா றிருநிலத் தோர்க்கே.

சிவபெருமான் ஆருயிர்கள் உய்தற்பொருட்டு ஆண்டாண்டு எழுந்தருளியிருக்கும் இருக்கையும் மலையும் இவை இவை என இயம்புவன்

பேரன்புவாய்ந்த சிவனடியார் சித்தக் குகையும், திருமடம் திருக்கோவில் தொழுமிடம் முதலிய இடவகைகளும் இயம்புவன். அகநிலை ஆதாரமாகிய ஆறுநிலைகளும், புறநிலை ஆதாரமாகிய சிவகுரு சிவனடியார் முதலிய திருமேனிகளும், காடு முதலிய பீடுசேர் இடங்களும் இயம்புவன். யாவர்க்கு என்றால் பதினான்கு உலகங்களிலும் வாழும் பயன்சேர் பல்லோர்க்கும் என்க. ஈராறு : பன்னிரண்டு. இரு: இரண்டு. ஆகப்பதினான்கு.

ஈராறு இருநிலம் - பதினான்கு உலகங்கள்.

# 2605. முகம்பீட மாமட முன்னிய தேயம்

2605. முகம்பீட மாமட முன்னிய தேயம்
அகம்பர வர்க்கமே யாசில்செய் காட்சி
அகம்பர மாதனம் எண்ணெண் கிரியை
சிதம்பரந் தற்குகை யாதாரந் தானே.

சிவபெருமானுக்குச் சிவகுருவின் திருமுகமே தாமரை இருக்கையாகும். சிவகுருவின் திருமடமே கருதப்படும் சிறந்த இடமாகும் தேயம் - இடம். ஆருயிர்களின் தூயவுள்ளங்களே குற்றமற்ற அருட்காட்சிகளை யருளும் நிலைக்களம். அதனால் அவ்வுள்ளங்களில் இருத்துதலே காட்சியாகும். ஒவ்வொருவரும் தத்தம் உள்ளங்களைச் சிவபெருமானுக்கு உகந்த உவப்பமை இடமாக்குதல்வேண்டும். பதினாறு (1885) வகையான வழிபாட்டுச் செய்கைகளைச் சிறந்த காதலுடன் செய்தல்வேண்டும். அன்புசேர் இன்பவுள்ளம் அறிவுப் பெருவெளியின் நுண்ணிய நிலைக்களமாகும். எண் எண் - பதினாறு. இஃது உம்மைத் தொகை; எட்டும் எட்டும் கூட்டப் பதினாறாகும்.

முகமபீடம்-பதும ஆசனம். மடம் முன்னிய தேயம் - தேயமே மடம். அகம்பர வர்க்கமே - அகத்தில் பரனை இருத்துதலே. அகம்பர மாதனம் - அகத்தைப் பரனுக்கு ஆதனமாக்கி. எண்ணெண் கிரியை - கருதப்படும் எட்டுவித கிரியைகளும். குகை - இருதயம்.

## 2606. அகமுக மாம்பீடம் ஆதார மாகுஞ்

2606. அகமுக மாம்பீடம் ஆதார மாகுஞ்
சகமுக மாஞ்சத்தி யாதன மாகுஞ்
செகமுக மாந்தெய்வ மேசிவ மாகும்
அகமுகம் ஆய்ந்த அறிவுடை யோர்க்கே.

அகமுகம் - நினைவகலாவுள்ளம் சிவபெருமானுக்குப் பீடமாகும். அதுவே நிலைக்களமுமாகும். உலகினைத் தொழிற்படுத்தும் திருவருளாற்றல் சிவபெருமானுக்குத் திருவுருவாகும். திருவுரு - ஆதனம். அத்திருவுருவின்கண் விளங்கித்தோன்றி உலகில் வெளிப்படுபவன் சிவபெருமானே. அவன் ஒருவனே தேவன். திருவருளால் உன்முகமாய்த் தேரும் நல்லறிவாளர்க்கு இவ்வுண்மைகள் நன்கு புலனாகும்.

அகமுகம் - உள் நினைந்திருப்பது. சகமுகம் - உலக வியாபாரங்களில் கலப்பது. செகமுகமாம் - உயிர்களைக் காத்தற் பொருட்டு உலக இன்பங்களைச்செய்த. அகமுக மாய்ந்த - சிந்தையை உள்பக்கம் திருப்பி ஆராய்ந்து திருவடி நினைத்த.

## 2607. மாயை யிரண்டு மறைக்க மறைவுறுங்

2607. மாயை யிரண்டு மறைக்க மறைவுறுங்
காயமோ ரைந்துங் கழியத்தா னாகியே
தூய பரஞ்சுடர் தோன்றச் சொரூபத்துள்
ஆய்பவர் ஞானாதி மோனத்த ராகுமே.

(ப. இ. ஆருயிர்கட்கு அமைந்த உடல்மெய் உணர்வுமெய் என்னும் மெய்கட்கு வேண்டிய மாயை இரண்டு. அவை முறையே பகுதிமாயை தூவாமாயை எனப்படும் இம் மாயா வுடம்புகளால் ஆருயிர்கள் தம் உண்மை இயல்பு அறிய முடியாதபடி மறைக்கப்பட்டுள்ளன. உண்மைத் தன்மை - சொரூபம். காயம் ஐந்து வருமாறு: பருவுடம்பு, நுண் உடம்பு, வளியுடம்பு, மனவுடம்பு, அறிவுடம்பு, இன்பவுடம்பு என்றலும் ஒன்று இவ் ஐ வகை உடம்புகளின் உண்மைகளைச் சிவகுருவருளால் தேர்ந்து தெளிதலே கழிதலாகும். கழியவே தன் உண்மை புலனாகும். புலனாகத் தூய பரஞ்சுடர்ச் சிவபெருமான் தோன்றி யருள்வன். அச் சிவபெருமான் அருளும் தோற்றத்தின்கண் தம்மையும் அறிதல் கூடும். நாம் திருக்குறளைப் பயிலும்கால் திருவள்ளுவ நாயனாரை உணர்கின்றோம். அந் நாயனாரை உணருங்கால் உணர்கின்ற நம்மையும் நாம் உணருகின்றோம் அல்லவா? அதுபோன்றதாகும் ஆருயிர்கள் சிவனை யுணருங்கால் தம்மை யுணர்வதும் 'கண்ணாடி யைக்காண்பான் காணானோ தன்முகமும், உண்ணாடில் ஈதொப்பாம் ஓர்' அங்ஙனம் ஆய்பவர் ஞானம் நிறைந்த மோனத்தராவர்.

மாயை இரண்டு மூலப் பிரகிருதி மாயை, அசுத்தமாயை, காயம் ஓர் ஐந்தும் - அன்னமய கோசம் முதலிய ஐந்து கோசங்களும் அல்லது ஐந்து பூதங்களால் ஆகிய காயம்.

## 2608. ஆறொடு முப்பதும் அங்கே யடங்கிடிற்

2608. ஆறொடு முப்பதும் அங்கே யடங்கிடிற்
கூறக் குருபரன் கும்பிடு தந்திடும்
வேறே சிவபத மேலாய் அளித்திடும்
பேறாக ஆனந்தம் பேணும் பெருகவே.

அருஞ் சைவர் மேற்கொள்ளும் (2139) முப்பத்தாறு மெய்களும் சிவகுருவின் அருள்வழி நிற்றலால் அங்கே அடங்கிடும். அவன் செவியறிவுறுத்திய திருவைந்தெழுத்தின் வழிநிற்கச் சிவபெருமானின் திருவடி தலைப்பெய்தலாகிய கும்பிடுதல் கைகூடும். அது கைகூடவே சிறப்பாகிய பேரின்பப் பெருவாழ்வாம் சிவபதத்தினை மேலாக அளித்தருள்வன். அவன் திருவடியினை மறவா நினைவுடன் பேணிவரவே பேரின்பம் அளவின்றி உளமெலாம் பெருகி ஊறியோடும்.

கும்பிடு - ஐக்கியம்.

## 2609. துரியங்கள் மூன்றுங் கடந்தொளிர் சோதி

2609. துரியங்கள் மூன்றுங் கடந்தொளிர் சோதி
அரிய பரசிவம் யாவையு மாகி
விரிவு குவிவற விட்ட நிலத்தே
பெரிய குருபதம் பேசவொண் ணாதே.

ஆருயிர்ச் செயலறல், அருள் செயலறல், அருளொன் செயலறல் ஆகிய துரியங்கள் மூன்றும் கடந்து அப்பால் திகழும் அறிவுப் பேரொளிப் பிழம்பு சிவபெருமான். அவனே மாற்றம் மனங்கழிய நிற்கும் அருமைசேர் பரசிவம் அவனே யாவையும் ஆகிப் பிரிவின்றி நிற்கும் பெரும் பொருள். நினைப்பும் மறப்புமாகிய விரிவும் குவிவும் என்று பேசப்படும் அவ் விரண்டும் அற அகன்றதாகிய தூய நிலம் விட்ட நிலம் எனப்படும். இதுவே 'வானோர்க்கு உயர்ந்த வுலகம்' அவ்விடமே திருவடிப்பெரும். பேறாகும். அந்நிலை பேச ஒண்ணாப் பெருநிலை என்க. சீவதுரியம், பரதுரியம், சிவதுரியம் எனத் துரியங்கள் மூன்று.

விரிவு குவிவு அற - நினைப்பு மறப்பு ஒழிய. குருபதம் - திருவடிப்பேறு.

# 2610. ஆயன நந்தி யடிக்கென் றலைபெற்றேன்

2610. ஆயன நந்தி யடிக்கென் றலைபெற்றேன்
வாயன நந்தியை வாழ்த்தவென் வாய்பெற்றேன்
காயன நந்தியைக் காணவென் கண்பெற்றேன்
சேயன நந்திக்கென் சிந்தைபெற் றேனன்றே.

ஆயாகிய தாயை யொத்த நந்தியின் திருவடியை வணங்கிச் சுமக்கத் திருவருளால் தலைபெற்றுள்ளேன். அத் தலை அடியேனுக்கு அத்தொண்டின் பொருட்டு அருளால் கொடுக்கப்படும் இரவற் கருவியாகும் கற்பார்க்குக் கொடுத்துதவும் இரவல் ஏடு இதற்கொப்பாகும். அவிச்சுவையினும் செவிச்சுவை ஆற்றச் சிறப்பினதாகும். அவிச்சுவையின்றேல் செவிச்சுவையினைக் கோடலும் ஏலா. எனவே சுவை யுணர்வு சேர் வாயை யொத்த நந்தியை வாழ்த்துதற் பொருட்டே வாய் பெற்றுள்ளேன். இயற்கைப் பேரறிவே யாண்டும் திருமேனியாகக் கொண்டு திகழும் நந்தியை அகத்தும் புறத்தும் காண நான் கண் பெற்றுள்ளேன். மாற்றம். மனம் கழிய நின்ற மறையோனை ஆற்ற உணர்வின்கண் காண்பதற்கு வாயிலாகிய எண்ணம் எனும் சிந்தை பெற்றுள்ளேன். மாற்றம் மனம் கழிய நின்ற மறையோனை மாற்றம் மனம் வழிய வுணர்தற்கு வாயில் சிந்தை என்றலும் ஒன்று. சேயன-எட்டாத் தன்மையை உடைய. அப்பர் பெருமானார் அருளிய 'திருவங்கமாலைத் திருப்பதிகம் முற்றும் ஈண்டு நோக்கி இன்புறுக. அதன்கண் ஒன்று முதல் ஒன்பதும் உறுப்பின் பணியாகும். பத்து : இறை, பதினொன்று : உயிர், பன்னிரண்டு : தளை, ஆகிய மூன்றும் முப்பொருளுண்மையாகும்.

## 2611. கருடன் உருவங் கருதும் அளவிற்

2611. கருடன் உருவங் கருதும் அளவிற்
பருவிடந் தீர்ந்து பயங்கெடு மாபோல்
குருவின் உருவாங் குறித்தஅப் போதே
திரிமலந் தீர்ந்து சிவனவ னாமே.

அரவின் நஞ்சினை அகற்றும் அம் மறையோன் அரவினுக்குப் பகையாம் கருடனின் மறையினைப் பல நாள் உருவேற்றித் திருவாய் நிற்கும் உள்ளத்துடன் கருதிக் கண்ணாற் பார்ப்பன். பார்க்கவே அந்நஞ்சு அப்பொழுதே அகலும். நஞ்சின் பயனும் கெட்டொழியும். அதுபோல் சிவகுருவின் திருவடியிணையினைக் குறிப்பதாகிய சிந்தனை செய்த அப்பொழுதே மும்மலப் பிணிப்பு முற்றும் அகன்றடங்கும். அவ் வுயிரும் சிவனடிப் பேறு பெற்றுச் சிவனவனாக விளங்கும் என்றும் பிறவாயாக்கைப் பெரியோனே பிறவிக்குப் பகையாவன். அவன் திருப்பெயராகிய திருவைந் தெழுத்தே பிறவிப் பெரும் பகையறுக்கும் அருமருந்தாகும். அதனைக் கைக்கொள்வதே சாலச் சிறந்ததென்பது இதனால் விளங்கும்.

கருடபாவனை வருமாறு : "ஆதிபௌதிக கருடன், ஆதி தைவிக கருடன், ஆத்தியான்மிக கருடன் எனக்கருடன் மூவகைப்படும். இவ்வாறு பொருள் தோறும் கண்டுகொள்க அவற்றுள், உலகத்திற் காணப்படும் கருடன் ஆதிபௌதிக கருடன். அதற்கு அதி தெய்வமாய் அது போல வைத்துத் தியானஞ் செய்து கணிக்கப்படும் மந்திரம் ஆதிதைவிக கருடன். அம் மந்திரத்தினிடமாக நின்று மாந்திரிகனுக்குப்

பயன் கொடுப்பதாகிய சிவசத்தி ஆத்தியான்மிக கருடன் எனப்படும் அவற்றுள், ஈண்டுக் கருடனென்றது கருடனுக்கு அதிதெய்வமாய் மாந்திரிகனுளத்திற் காணப்படும் மந்திர ரூபமாகிய ஆதி தைவிக கருடனை. அதனைப் பாவித்தலாவது நாடோறும் பயின்று வந்த பயிற்சி விசேடத்தால் அம் மந்திர ரூபமே தானாக அநந்நிய பாவனை செய்து தன்னறிவு அதன் வசமாம்படி உறைத்துநிற்றல். அங்ஙனம் நின்று அம் மந்திரக்கண் கொண்டு பார்ப்பவே அஃது அவ் விட வேகத்தை மாற்றுதல் ஒருதலையாகலின், அப் பாவனை ஈண்டைக்கு உவமையாயிற்று." (சிவஞான முனிவரர், 9 2-3பேருரை.)

அநந்நியம் - வேறன்மை.

உருவம் உயிர்மறை ஊட்டும்அரு ளாற்றல்
வருபொருள் தோறுண்டாம் வகுப்பின்-தெருளுலகில்
ஆதி பௌதிகம் ஆதிதை வீகமுடன்
ஆதியான் மீகம் அறி.

தைவிகம் - தைவீகம். ஆன்மிகம் - ஆன்மீகம். ஆத்தியான்மிகம் என்பது ஆதியான் மீகம் என நின்றது.

## 2612. தோன்ற அறிதலுந் தோன்றல்தோன் றாமையு

2612. தோன்ற அறிதலுந் தோன்றல்தோன் றாமையு
மான்ற வறிவு மறிநன வாதிகள்
மூன்றவை நீங்குந் துரியங்கள் மூன்றற
ஊன்றிய நந்தி யுயர்மோனத் தானன்றே

சிவகுருவினருளால் திருவடியுணர்வு தோன்ற அறிவர். அறிந்தபின் தோன்றல் தோன்றாமையாகிய நினைப்பும் மறப்பும் நீங்கும். மயக்க அறிவுகளும் அகலும் . அறிகின்ற நனவு கனவு உறககம் முதலிய பாடுகள் மூன்றும் நீங்கும். ஆருயிர்ச் செயலறல் அருட் செயலறல் அருளோன் செயலறல் மூன்றும் அறும். அறவே, சித்தத்தின்கண் திருவடியூன்றிய நந்தி உணர்வின் நேர்பெற எழுந்தருள்வன். அந்நிலையில் அப் பேறு பெற்றவன் உயர்ந்த மோன நிலையினனாவன். மோனம் : மேன்மையாற் பெறப்படும் உணர்வு.

மான்ற - மயக்கமுள்ள. மறி - மாறி வருகிற. நனவாதிகள் மூன்று - நனவு, கனவு, சுழுத்தி . துரியங்கள் மூன்று - சிவ, சீவ, பரதுரியங்கள். ஊன்றிய - நிலைபெற்ற.

## 2613. சந்திர பூமிக் குடன்புரு வத்திடைக்

2613. சந்திர பூமிக் குடன்புரு வத்திடைக்
கந்த மலரில் இரண்டிதழ்க் கன்னியும்
பந்த மிலாத பளிங்கின் உருவினள்
பந்தம் அறுத்த பரங்குரு பற்றன்றே.

திங்கள் மண்டிலத்தினூடு கூடிப் புருவ நடுவாக இருக்கும் நறுமணம் கமழும் இரண்டிதழ்த் தாமரை மலரை நெருங்குதல் வேண்டும். நெருங்கி ஆங்கு வீற்றிருக்கும் திருவருளாற்றலாய் கன்னியைக் காணுதல் வேண்டும். அத் திருவருள் பளிங்கின் (1043) வண்ணத்தளாவள். அத்திருவருளின் பெறலருந்துணையால் சிறந்த சிவஞான மெய்க் குருவின் திருவடியிணையினைப் பற்றுதல் வேண்டும். அதுவே பெரும்பேறென்க புருவநடு-ஆணையிடமாகும். பரங்குருவே பந்தமறுத்த பரம்பொருளாகும்.

சந்திர பூமிக்குடன் - சந்திரமண்டலத்தோடு கூடி. கந்த மலரில் இரண்டிதழ்க் கன்னி - இரண்டிதழ்களையுடைய ஆஞ்ஞையில் இருக்கும் சத்தி. பரம் - மேலான.

## 2614. மனம்புகுந் தானுல கேழு மகிழ

2614. மனம்புகுந் தானுல கேழு மகிழ
நிலம்புகுந் தானெடு வானிலந் தாங்கிச்
சினம்புகுந் தான்திசை எட்டும் நடுங்க
வனம்புகுந் தானூர் வடக்கென்ப தாமே.

மெய்யடியார்களின் தூய திருவுள்ளத்தின்கண் சிவபெருமான் புகுந்தருளினன். அங்ஙனம் புகுந்தருளியது ஏழுலகும் மகிழ்ந்து இன்புறும் பொருட்டேயாம். நீண்ட வானிலத்தைத் தாங்கிக்கொண்டு 'இந்த மாநிலத்தே' புகுந்தருளினன். ஆருயிர்களின் கொடுமை கண்டு எட்டுத்திசையும் நடுங்கும் வண்ணம் சினம் கொண்டருளினன். அவனே பேரொடுக்கப் பெருவனத்தின்கண் புகும் பெரும்பொருளாவன். அவனுக்குரிய சிறந்தவூர் தென்றமிழ் வழங்கும் வடபாலுள்ள திருக்கயிலையாகும். திருக்கயிலையில் தென்றமிழ் வழங்குதல் திருமூல நாயனார் பரஞ்சோதி மாமுனிவர் முதலாயினார் பொதியிலினுக்கு அடுத்தடுத்துத் தமிழ் முனிவர்பால் தனித்தமிழ்க் கேண்மையால் வருவதூஉம், நம்பியாரூரர் நற்றமிழல் விண்ணப்பிப்பதும், சேரர் பெருமானார் திருக்கயிலையின்கண் "ஞானவுலா" மோனத் தமிழால் திருச்செவி கேட்பித்ததும் நடுநின்று நயனார் நல்லுணர்வால் நாடுவார்க்கு நன்கு புலனாகாதிராது.

சினம் புகுந்தான் - வெகுண்டவன். வனம் - தத்துவக் கூட்டம். வடக்கு - கயிலை.

# 2615. தானான வண்ணமுங் கோசமுஞ் சார்தருந்

2615. தானான வண்ணமுங் கோசமுஞ் சார்தருந்
தானாம் பறவை வனமெனத் தக்கன
தானான சோடச மார்க்கந்தான் நின்றிடில்
தானாந் தசாங்கமும் வேறுள்ள தானன்றே.

உணவுடம்பு, வளியுடம்பு, மனவுடம்பு, அறிவுடம்பு, இன்பவுடம்பு என ஐவகையுடம்புகளைத் தானாகவே எண்ணி ஆருயிர் நடக்கும். இவ்வகை யுடம்புக ளைந்தையும் ஐங்கோசம் எனவுங் கூறுப. அவற்றைக் கொண்டு நடக்கும் ஆருயிரைப் பறவை என உருவகிப்பர். அம் மட்டுமன்று; தத்துவக் கூட்டங்களையும் ஆருயிர் தானாகவே கருதி நடக்கின்றது. இவை யனைததும் தனக்கு வேறானவை எனச் சிவகுருவின் அருளால் புலனாகும் புலனாகவே நற்றவ நான்மையின் விரிவு பதினாறும் விளங்கும். விளங்கவே அவற்றை மேற்கொண்டு அவ் வுயிர் தானாகவே நிற்கும். அதன்மேல் பதின் ஆக்கமா1கிய தசகாரியமும் தெளியத் திகழும் நான்மையின் வரிவு பதினாறாவன1:

1.சீலம் : 1. சீலத்திற் சீலம் 2. சீலத்தின்நோன்பு 3. சீலத்திற் செறிவு 4. சீலத்திலறிவு.

2.நோன்பு : 1. நோன்பிற் சீலம் 2. நோன்பின்நோன்பு 3. நோன்பிற் செறிவு 4. நோன்பின் அறிவு.

3.செறிவு : 1. செறிவிற் சீலம் 2. செறிவில் நோன்பு 3. செறிவில் செறிவு 4. செறிவிலறிவு.

4.அறிவு : 1. அறிவிற் சீலம் 2. அறிவில் நோன்பு 3.

அறிவில் செறிவு 4. அறிவில் அறிவு என்ப. இவற்றை, 'அன்பின்பு நண்புண்பிங் காயின் அறி வினினான், கின்புநிலை மாத்திரை யொவ் வொன்று' என்பதனால் நினைவுகூர்க. மேலும்,

"சீல மின்றி நோன்பின்றிச் செறிவே இன்றி அறிவின்றித்
தோலின் பாவைக் கூத்தாட்டாய்ச் சுழன்று விழுந்து கிடப்பேனை
மாலுங் காட்டி வழிகாட்டி வாரா உலக நெறியேறக்
கோலங் காட்டி ஆண்டானைக் கொடியேன் என்றோ கூடுவதே"

அ . ஆனந்தமாலை, 3.

என்னும் செந்தமிழ் மறைமுடிவானும் உணர்க.

பதின் ஆக்கம் :1.மெய் (தத்துவம்) : 1. திரியக்காண்டல் 2. இரட்டுறக் காண்டல். 3. தெளியக்காண்டல்.

## 2.ஆருயிர் : 1. திரியக்காண்டல் 2. இரட்டுறக்காண்டல் 3.

2.ஆருயிர் : 1. திரியக்காண்டல் 2. இரட்டுறக்காண்டல் 3. தெளியக்காண்டல்.

**3.சிவம் : திரியக்காண்டல் 2. இரட்டுறக்காண்டல், 3. சிவத்தோய்வு 4. சிவத்துய்ப்பு என்ப. திரியக்காண்டலை உருவம் எனவும், இரட்டுறக் காண்டலைத் தரிசனம் எனவும், தெளியக்காண்டலைச் சுத்தி எனவும் கூறுப. இதுபோல் சிவத்துக்குக் கூறுங்கால் தெளியக்காண்டலுக்கீடாகச் சிவயோகம் எனவும் அதன்மேல் சிவபோக மெனவும் பிறிதொன்று கூட்டியும் கூறுப. இதன் விரிவுகளெல்லாம் உண்மை நெறி விளக்கம் முதலிய மெய்கண்ட நூல்களில் பரக்கக்காண்க.**

3.சிவம் : திரியக்காண்டல் 2. இரட்டுறக்காண்டல், 3. சிவத்தோய்வு 4. சிவத்துய்ப்பு என்ப. திரியக்காண்டலை உருவம் எனவும், இரட்டுறக் காண்டலைத் தரிசனம் எனவும், தெளியக்காண்டலைச் சுத்தி எனவும் கூறுப. இதுபோல் சிவத்துக்குக் கூறுங்கால் தெளியக்காண்டலுக்கீடாகச் சிவயோகம் எனவும் அதன்மேல் சிவபோக மெனவும் பிறிதொன்று கூட்டியும் கூறுப. இதன் விரிவுகளெல்லாம் உண்மை நெறி விளக்கம் முதலிய மெய்கண்ட நூல்களில் பரக்கக்காண்க.

கோசம் - ஐந்து கோசங்களும். பறவை - சீவன். வனம் - தத்துவக்கூட்டம். சோடசமார்க்கம்- சரியையிற் சரியை முதல் 16. தசாங்கம் - தசகாரியம்; அவை தத்துவரூபம் - தத்துவ தரிசனம் முதல் சிவபோகம் ஈறாகப்பத்து.

## 2616. மருவிப் பிரிவறி யாஎங்கள் மாநந்தி

2616. மருவிப் பிரிவறி யாஎங்கள் மாநந்தி
உருவ நினைக்கநின் றுள்ளே யுருக்குங்
கருவிற் கரந்துள்ளங் காணவல் லார்க்கிங்கு
அருவினை கணசோரும் அற்றார் அகத்தே.

செவ்விவாய்ந்த ஆருயிரைத் திருவருளால் மருவிய எங்கள் மாநந்தி பின்னைப் பிறவியிற் பிரித்தறியான். அவனது திருவருட்டிருவுருவை உணர்வின்கண் நினைக்க ஆருயிரின் தன்முனைப்பாகிய இருளைக் கெடுக்கும். எல்லாவற்றிற்குங் காரணமாயிருக்கிற அச் சிவத்தின்கண் ஒடுங்கிக் காணவல்லார்க்கு இங்குச் சார நிற்கும் அருவினைகள் கண் சோர்ந்து அற்றழியும். இவ் வினைகட்கு அகமாக இருக்கும் மாயையும் அழியும் கருவில் - காரணத்தில்.

மருவிப் பிரிவு - கூடிப்பிரிதல் . உருக்கும் - தற்போதத்தைக் கெடுக்கும்.

## 2617. தலைப்பட லாமெங்கள் தத்துவன் தன்னைப்

2617. தலைப்பட லாமெங்கள் தத்துவன் தன்னைப்
பலப்படு பாசம் அறுத்தறுத் திட்டு
நிலைப்பெற நாடி நினைப்பற வுள்கில்
தலைப்பட லாகுந் தருமமுந் தானே.

சிவஞானத் திருவருளால் மெய்ப்பொருளாம் சிவபெருமானைத் தலைப்படுதல் உண்டாகும். தத்துவன் - மெய்ப்பொருள் அத்தலைப்பாட்டினால் பலவகையாகக் கிளைக்கும் ஆசாபாசங்களை அறுத்து அறுத்திட்டு ஒழிக்கலாம். என்றும் பொன்றா நிலைமையுடன் திருவடிக் கீழ் நிலைபெற நாடுமின். நீங்கா நினைவுடன் இருப்பின் அவன் திருவடியைத் தலைப்படுதலாகும். அவன் போகமின்றருள் புண்ணிய வடிவினன் ஆவன் அறவாழி அந்தணன் ஆவன்.

பலப்படு - பலவகைப்பட்ட . தருமமும் - அறத்தின் வடிவாயுள்ள சிவமும்.

## 2618. நினைக்கின் நினைக்கு நினைப்பவர் தம்மைச்

2618. நினைக்கின் நினைக்கு நினைப்பவர் தம்மைச்
சுனைக்குள் விளைமலர்ச் சோதியி னானைத்
தினைப்பிளந் தன்ன சிறுமைய ரேனுங்
கனத்த மனத்தடைந் தாலுயர்ந் தாரே.

பேரன்புவாய்ந்த மெய்யடியார்கள் காதலுடன் தன்னை நினைப்பார்களானால் அங்ஙனம் நினைப்பவரைச் சிவபெருமானும் திருவருளால் நினைந்தருள்வன். புருவநடுவாகிய சுனையின்கண் திருவாணையாக விளங்கும் அறிவுப் பேரொளியானை நெஞ்சத்தாமரையினிடத்து விளைந்து மலரும் உள்ளொளியாக வுறையும் சிவபெருமானைத் தினையைப் பிளந்தாலொத்த சிறுமையராயுள்ளாரும் திருவைந்தெழுத்தினையே எண்ணி அவ்வெண்ணத்தால் உறுதி எய்தியவுள்ளத்தின்கண் நினைப்பாராயின் அவ்வுள்ளம் உரனுடைய வுள்ளமாகும். உரன்-திண்மை. அத்திண்மை சேர் மனத்துச் சிவபெருமானைப் பொருந்தச் செய்தவா, உயர்வற உயர்ந்த ஒருவராவர். தினை : பண்டு வழங்கியதோர் சிற்றளவை.

சுனை புருவமத்தி. விளைமலர்ச் சோதி - உள்ளக் கமலத்தில் விளங்கும் சிவ ஒளி. தினைப்பிளந்தன்ன - உடைந்த தினையரிசி அளவு கனத்த மனம் - நற்குணங்கள் நிறைந்தமனம்.

## 2619. தலைப்படுங் காலத்துத் தத்துவன் தன்னை

2619. தலைப்படுங் காலத்துத் தத்துவன் தன்னை
விலக்குறின் மேலை விதியென்றுங் கொள்க
அனைத்துல காய்நின்ற ஆதிப் பிரானை
நினைப்புறு வார்பத்தி நேடிக்கொள் வாரே.

மெய்யுணர்வுக் குரவனாம் சிவபெருமானை அவனருளால் தலைப்படுமிடத்துத் திருநாவுக்கரசு நாயனார் திருக்கயிலை சென்ற காலத்தும், ஆறைவடதளியில் வஞ்சமிக்க அமணரால் மறைக்கப்பட்டிருந்த திருக்கோவிலைத் திறப்பிக்க முயன்ற காலத்தும் ஏற்பட்ட இடையூறுகளை விதியென்றே கொண்டு முறையே 'மாளும் இவ் வுடல் கொண்டு மீளேனெனவும்'. 'உண்ணாதிருந்தார் எண்ண முடிப்பாரெனவும்' சேக்கிழார் அடிகள் கூறுவபோன்று உறுதியுடன் கூறி வரும் இடையூறுகளை மேலை விதியெனக் கொண்டு நீக்குவர் மெய்யுணர்ந்தார். எல்லாமாய் அல்லதுமாய் நின்ற காரணகருத்தாவாம ஆதியுடன் கூடிய அழியா அறிவுச் சோதிச் சிவபெருமானை இடையறா நினைப்புக் கொள்வதுஞ் செய்வர் அவர். அவரே சிவபத்தியினைச் சிரத்தினுள்ளும் சிந்தையினுள்ளும் சேர்த்துத் தேடிக் கைக்கொள்ளும் சிவபத்தராவர்.

## 2620. நகழ்வொழிந் தாரவர் நாதனை யுள்கி

2620. நகழ்வொழிந் தாரவர் நாதனை யுள்கி
நிகழ்வொழிந் தாரெம் பிரானொடுங் கூடித்
திகழ்வொழிந் தார்தங்கள் சிந்தையி னுள்ளே
புகழ்வழி காட்டிப் புகுந்துநின் றானே.

மெய்யுணர்ந்தார் நாதனாகிய சிவபெருமானை இடையறாது படர்ந்து விலக்குறும் எத்தகைய இடையூறுகளையும் நீக்கிக் கொள்வர். சிவபெருமானையே அவனருளால் உணர்விற் கூடிக்கொண்டிருப்பர் மெய்யுணர்வினர். அதனால் நிகழ்வாகிய ஏறுவினை ஏற்றம் ஏலாதொழிந்தனர். உலகியல் ஆடம்பரங்கள் தங்கள் உள்ளத்தில் தலைதூக்குவனவாகிய திகழ்வினை யொழிந்தனர். திருவடிப் பேற்றினுக்குரிய செந்நெறி- சித்தாந்த நன்னெறி - செந்தமிழ்ப் பெருநெறியினை நடு நிலையாளர் அனைவரும் மெய்ம்மையோடு புகழ்வர், அதனால் அப் புகழ் வழியினை உலகிடை நாட்டித் திருவடிப் பேறாஞ் 'செல்வன் கழலேத்தும் செல்வ'த்தினைப் புகுந்து நின்றார் என்க.

நகழ்வு - விலகுதல். நிகழ்வு - உலக வியாபாரம். தகழ்வு - வீண் ஆடம்பரம். புகழ்வழி - புகழ்தற்குரிய முத்திநெறி.

## 2621. வந்த மரகத மாணிக்க ரேகைபோற்

2621. வந்த மரகத மாணிக்க ரேகைபோற்
சந்திடு மாமொழிச் சற்குரு சன்மார்க்கம்
இந்த இரேகை யிலாடத்தின் மூலத்தே
சுந்தரச் சோதியுட் சோதியு மாகுமே.

மரகதமாகிய பச்சைமணி, மருள் நிலைக்கு ஒப்பாகும். அப் பச்சைமணியின்கண் செம்மணிக்கதிர் பாய்வது மருளின்கண் அருள்கதிர் பாய்ந்து ஆருயிரின் அறியாமையை அகற்றுவதை யொக்கும். அத்தகைய அருமறை மொழியினை மெய்க்குரவன் அருளும் மெய்ந் நெறிக்கண் அவனருளித் தந்திடுவான். சந்திடும் - தந்திடும். மெய்க்குரவன் திருவருளால் தந்தருளப்பெறும் திருவைந்தெழுத்தாகிய அருமறைக் கதிர் நெற்றியின்கண் மூக்கின் மூலமாகிய புருவ நடுவில் ஊடுருவி ஒளிரும். அதுவே அழகிய ஒளிகட், கெல்லாம் ஒளிகொடுத்துக் கொண்டொளிரும் அருளொளியாகும்.

வந்த...போல் - மரகதத்தில் வந்த மாணிக்க ரேகை, அஞ்ஞானத்திடையில் உண்டான ஞான ஒளி. சந்திடு - தெரிவிக்கும். இலாடம் - நெற்றி. மூலம் - நாசியின் மூலமாகிய புருவநடு.

## 2622. உண்ணும்நன் வாயும் உடலும் உயிருமாய்க்

2622. உண்ணும்நன் வாயும் உடலும் உயிருமாய்க்
கண்ணுமா யோகக் கடவுள் இருப்பது
மண்ணுநன் நீரனல் காலொடு வானுமாய்
விண்ணு மிலதாம் வெளியானோர் மேனியே.

நற்றவ (2615) நான்மையுள்ளும் மூன்றாம் நிலை செறிவு நிலையாகும். அந்நிலையையே சிவயோகம் எனவும் மாயோகம் எனவுங் கூறுப அத்தகைய செறிவுநிலைக்காட்சியர், அறிவுக் கண்ணிற் புலனாகும் கடவுளர் மாயோகக் கடவுளராவர் அவர் கலப்புத் தன்மையால் உண்ணும் வாயின்கண்ணும், அவ்வாயுறுப்பினையுடைய உறுப்பியாகிய உடம்பின் கண்ணும். அவ்வாய்ப்பயன் கொள்ளும் உயிரின்கண்ணும், பயன் விளை புலனாம் மண் நீர் அனல் கால் வானம் ஆகிய ஐம்பூதங்களின் கண்ணும் பிரிப்பின்றிக் கலந்து நின்றருள்கின்றனர். பூதவெளியாகிய விண்ணையும் கடந்து அறிவுப் பெருவெளியில் நிற்கும் செறிவினோர் திருமேனியைத் தனக்குத் திருமேனியாகக்கொண்டு எழுந்தருள்வன் சிவன்.

யோகக் கடவுள் - யோகத்தால் அறியப்படும் கடவுள்.
வெளியானோர் - பசுகரணம் நீங்கிச் சிவகரணமுடையோர்.

## 2623. பரசு பதியென்று பார்முழு தெல்லாம்

2623. பரசு பதியென்று பார்முழு தெல்லாம்
பரசிவ னாணை நடக்கும் பாதியாற்
பெரிய பதிசெய்து பின்னாம் அடியார்க்கு
உரிய பதியும்பா ராக்கிநின் றானே.

பரசு என்று சொல்லப்படும் கோடாலிப் படையைத் தாங்கியுள்ள சிவபெருமான். அனைத்துயிர்கட்கும் அனைத்துலகங்கட்கும் பதியாவன். அவனையே பதியென்று பார் முழுதும் வணங்கும் பார் முழுதும் அவன் திருவாணையே முட்டின்றிச் செல்லும் முழுவாணையாகும் மெய்(தத்துவம்)களைப் பகுத்துணர்வதாகிய தத்துவ ஞானம் கைவந்த செம்பொருட்டுணிவினர்க்குப் பெரிய பதியாகிய திருவடியுலகினை அமைத்தருளினன் சிவன். பின்னாகச் செவ்வி வாய்த்துவரும் அடியவர்கட்கு உரிய பதியும் பாராகிய உலகமென அமைத்தருளினன். அவனே எங்கணும் நீக்கமற நிறைந்துநின்றருளினன். செம்பொருட்டுணிவினர்: சைவசித்தாந்தர்.

பரசும் - புகழப்படும். பாதியால் - தத்துவ ஞானத்தால். பெரிய பதி - முத்தி. பார் ஆக்கி - உலகைப் படைத்து.

## 2624. அம்பர நாதன் அகலிட நீள்பொழில்

2624. அம்பர நாதன் அகலிட நீள்பொழில்
தம்பர மல்லது தாமறி யோம்என்பர்
உம்பருள் வானவர் தானவர் கண்டிலர்
எம்பெரு மானருள் பெற்றிருந் தாரன்றே.

பேரறிவுப் பெருவெளியின் பெருந்தலைவன் சிவபெருமான். அம்பரநாதன் என்பதற்கு அழகிய மேலான முதல்வன் என்றலும் ஒன்று. நீண்ட பெரியவுலகங்கள் அனைத்தும் அவன் திருவாணையாலேயே நடக்கின்றன. இவ்வுண்மையை யன்றி வேறொன்றும் நாமறியோம் என்று மெய்யடியார் கூறுவர். மேலிடத்துள்ள வானவரும் தானவரும் இவ்வுண்மை யினையுணர்ந்திலர் இவ்வுண்மையினை யுணர்ந்த மெய்யடியார்கள் எம்பெருமான் திருவருள்பெற்று இனி திருந்தார்கள்.

நீள் பொழில் - பெரிய உலகம். தம் பரம் - தமது கடவுள். உம்பர் - வானுலகு.

# 2625. கோவணங் கும்படி கோவண மாகிப்பின்

2625. கோவணங் கும்படி கோவண மாகிப்பின்
நாவணங் கும்படி நந்தி யருள்செய்தான்
தேவணங் கோமினிச் சித்தந் தெளிந்தனம்
போய்வணங் கும்பொரு ளாயிருந் தோமன்றே.

தேவர்கோ, மூவர், செழும்பொழிற்கோ மற்றும் யாவரும் கோவென வணங்கும் கோவணன் சிவபெருமான் அங்ஙனம் கோவணம் ஆகிப்பின் மெய்யடியார்கள் தங்கள் நன்னாவால் திருமுறைபாடி வணங்கும்படி எழுந்தருளி இருப்பவனும் அவனே. அவனை வணங்கும்படி ஆரருள்புரிந்தவன் நந்தி. நந்தியின் முந்திய திருவருளால் உள்ளம் தெள்ளத்தெளிந்த வெள்ளரானோம். கள்ளமகன்றோம். கொள்ளோம் கனவிலும் செத்துப் பிறந்து சிறுமையுறும் சிறுதெய்வ வணக்கம். அத்தெய்வங்களெல்லாம் தொழும் தன்மையான் சிவபெருமான். அவன் திருவடிக்கீழ் அவனருளால்புக்கு அவனாகத் திகழ்ந்தனம். இதனைப் 'பிறவாப் பெருந்தெய்வம் பேணுசிவன் ஏனோர். பிறப்பாற் சிறுதெய்வம் பேசு' என்பதனால் நினைவு கூர்க.

கோ - பசு - ஆன்மா. கோவணமாகி - ஆன்மாக்களின் உருவந் தாங்கி. நாவணங்கும்படி - நாவால் துதிக்கும்படி. தேவணங்கோம் - வேறு தேவரை வணங்கோம். சத்தம் - பத்துவித நாதங்கள். வணங்கும் பொருளாய் - சிவமாய்.

# 2626. தூலப் பிரணவஞ் சொரூபானந் தப்பேர்

2626. தூலப் பிரணவஞ் சொரூபானந் தப்பேர்
பாலித்த சூக்கும மேலைச் சொரூபப்பெண்
ஆலித்த முத்திரை யாங்கதிற் காரணம்
மேலைப் பிரணவம் வேதாந்த வீதியே.

பாரிய ஓமொழி தூலப் பிரணவமாகும். அதனால் பெறுவது பருவுடலின்பம். நுண்மை ஓமொழி நுண்ணுடற்குரிய இன்ப வாயிலாகும் மேலைச் சொரூபம் என்னும் இன்ப ஓமொழி காரணப் பிரணவமாகும். அது திருவருள் வீழ்ச்சிக்கு வாயிலாகும். அப் பிரணவம் கைக்குறியாம் முத்திரை வழிவாக விருக்கும். மாமுதல் ஓமொழி மேலைப் பிரணவமாகும். இதுவே மாகாரணமெனவும் சொல்லப்படும். இது திருவடியுணர்வாம் வேதாந்த வீதியில் சேர்ப்பதாகும்.

தூலப் பிரணவம் தூல சரீரத்துக்கு ஆனந்தமும், சூக்குமப் பிரணவம் சூக்கும தேகத்துக்கு (மேலைச் சொரூபம்) ஆனந்தமும், காரணப் பிரணவம் திருவருட்சத்தி பதியச் செய்தலும், மகாகாரணப் பிரணவம் (மேலைப் பிரணவம்) வேதாந்த வீதியில் சேர்த்தலுஞ் செய்யும்.

## 2627. ஓமெனும் ஓங்காரத் துள்ளே யொருமொழி

2627. ஓமெனும் ஓங்காரத் துள்ளே யொருமொழி
ஓமெனும் ஓங்காரத் துள்ளே யுருவரு
ஓமெனும் ஓங்காரத் துள்ளே பலபேதம்
ஓமெனும் ஓங்காரம் ஒண்முத்தி சித்தியே.

ஓமென்று ஓதப்பெறும் ஓங்காரத்துள்ளே ஒப்பில் ஒரு மொழி தோன்றும். ஒரு மொழியெனினும் பெரும்பொருட்கிளவியெனினும் ஒன்று. இதனை மகாவாக்கியம் எனவுங் கூறுப. அவ்வோங்காரத்துள்ளே உருவும் அருவும் தோன்றும். உருவினைச் சகளம் என்ப. அருவினை நிட்களம் என்ப. இவ்வோங்காரத்துள்ளே ஆருயிர் வேறுபாடுகள் பலவும் உண்டாம். அவ் வேறுபாடுகள் மா, மாக்கள், மக்கள், ஆன்றோர், அறிவர், அமரர் (வானவர்) முதற்பலவாம். அவ்வோங்காரத்தாலேயே பிறப்பும் சிறப்பும் உறப்பெறும். பிறப்பு - சித்தி. சிறப்பு - முத்தி.

## 2628. ஓங்காரத் துள்ளே யுதித்தஐம் பூதங்கள்

2628. ஓங்காரத் துள்ளே யுதித்தஐம் பூதங்கள்
ஓங்காரத் துள்ளே யுதித்த சராசரம்
ஓங்கார தீதத் துயிர்மூன்றும் உற்றன
ஓங்கார சீவ பரசிவ ரூபமே.

முப்பத்தாறாவது மெய்ஒலி, ஓங்காரம் ஒலியினின்று தோன்றுவது. வழிவழியாக ஏனையமெய்கள் தோன்றும் அம்முறையினால் ஓங்காரத்தினின்று ஐந்து பூதங்களும் தோன்றின என்று ஓதினர். மேலும் ஓங்காரத்தை இயைந்து இயக்கும் உரிமைத் தெய்வங்கள் அயன், அரி, அரன். ஆண்டான், அருளோன் என்பவராவர். அவர்களே ஐம்பூதங்களையும் முறையே இயக்குகின்றனர். அதனால் அப்பூதங்கள் ஓங்காரத்தினின்று தோன்றின என்றலும் ஒன்று. அவ்வோங்காரத்துள்ளே இயங்குதிணை நிலைத்திணைப் பொருள்கள் அனைத்தும் தோன்றின. இயங்குதிணை - சரம். நிலைத்திணை - அசரம். அப்பாலாம் ஓங்காரத்துள் மூவகை உயிர்களும் சார்ந்தன. மூவகையுயிர்களாவன: ஒருமலம் உடையன, இருமலமுடையன, மும்மலமுடையன என்பன. அப்பால் ஓங்காரம் - ஓங்காராதீதம். இதனை மாகாரண ஓங்காரம் என்ப. அவ்வோங்காரத்துள்ளே ஆருயிர் உரு, அருளுரு, அருளோன் உருத்தோன்றும் என்ப. சரம்: நகர்வது. அசரம் - நகராதது.

ஓங்கார அதீதம் - மகாகாரணப் பிரணவம்.

## 2629. வருக்கஞ் சுகமாம் பிரமமு மாகும்

2629. வருக்கஞ் சுகமாம் பிரமமு மாகும்
அருக்கஞ் சராசர மாகும் உலகில்
தருக்கிய வாதார மெல்லாந்தன் மேனி
சுருக்கமின் ஞானந் தொகுத்துணர்ந் தோரே.

ஓமொழியின் இனமாகிய அகர உகர மகரங்கள் வருக்கம் எனப்படும். இவை இன்ப நிலையுமாகும். இறைவனுமாகும். அம்மூன்றன் தொகுப்பாகிய அருக்கம் சராசரமாகும். ஆண்மை மிக்க ஆதாரநிலைகளின் உருவமெல்லாம் ஓங்காரமாகும். ஓங்காரத்தின் உண்மையுணர்ந்தோர் திருவடியுணர்வாம் நிறைஞானத் தொகுப்புணர்ந்தோராவர்.

வருக்கம் - ஓங்காரத்தின் அம்சங்களாகிய அ - உ-ம்.
சுருக்கமில் - பரந்த.

## 2630. மலையு மனோபவ மருள்வன் வாவன

2630. மலையு மனோபவ மருள்வன் வாவன
நிலையிற் றரிசனம் தீப நெறியாந்
தலமுங் குலமுந் தவஞ்சித்த மாகும்
நலமுஞ்சன் மார்க்கத் துபதேசந் தானே.

நிலைபேறின்றி ஓவாது அலைந்துகொண்டேயிருக்கும் மனமும் உயிர்ப்பு மயங்குவதற்கு இடமாகவுள்ளனவாகும். அந்நிலையில் மயக்கம் ஒழிப்பதற்குச் சிவகுருவின் விளக்கக் காட்சி எய்துதல்வேண்டும். அதுவே ஈண்டுத் தீபநெறி எனப்பட்டது. இவ் விளக்கத்திற்கு இடமும் சார்பும் உள்ளமும் தவமுமம் தூய்மையாதல் வேண்டும். அதுவே வாய்ப்புடையதாகும். சிவமறையாகிய நலம் நன்னெறிக்கண் செவியறிவுறுக்கும் அருமறையாகும். அருமறை-உபதேசம்.

மலையும் - மயங்கும். மருள்வன - மயங்குவன.

## 2631. சோடச மார்க்கமுஞ் சொல்லுஞ்சன் மார்க்கிகட்கு

2631. சோடச மார்க்கமுஞ் சொல்லுஞ்சன் மார்க்கிகட்கு
ஆடிய ஈராறின் அந்தமும் ஈரேழிற்
கூடிய அந்தமுங் கோதண்ட முங்கடந்து
ஏறியே ஞானஞே யாந்தத் திருக்கவே.

நன்னெறி நான்மை நல்லார் சன்மார்க்கர்கள் எனப்படுவர். அவர்கட்கு நான்மை நெறியும் ஒவ்வொன்றும் நான்கு நான்காகப் பகுக்கப்படும். அம்முறையில் அவை (2615) பதினாறு வகைப்படும். அவற்றுள் பன்னிரண்டின் அந்தம் செறிவில் அறிவாகும். பதினான்கின் அந்தம் அறிவில் நோன்பாகும். கோதண்டமெனப்படுவது அறிவிற் செறிவாகும். திருவருளால் இவையனைத்தையும் பயின்று கைவந்தபின், ஒன்றாவுயர்ந்த (பதினாறாவதாகிய) அறிவின் அறிவு வாயிலாகத் திருவடிப் பேறு எய்தும். அறிவின் அறிவு - ஞானத்தின் ஞானம்.

சோடசமார்க்கம்-சரியையிற் சரியை முதல் 16 நெறிகள். ஈராறின் அந்தம்-யோகத்தில் ஞானம். ஈரேழிற் கூடிய அந்தம்-ஞானத்தில் கிரியை. கோதண்டமும்-ஞானத்தில் யோகமும். ஞேயாந்தம்-ஞானத்தில் ஞானம்.

## 4. ஒளி

4. ஒளி 2632. ஒளியை யறியில் உருவும் ஒளியும்

2632. ஒளியை யறியில் உருவும் ஒளியும்
ஒளியும் உருவம் அறியில் உருவாம்
ஒளியின் உருவம் அறியில் ஒளியே
ஒளியும் உருக வுடனிருந் தானே.

ஆருயிரின் இயற்கை நிலை பளிங்கனைய அறிவொளியாகும். அருளால் அதனை நாடின் அவ்வுயிரின் நிலைக்களமாகிய உடம்பின் நாட்டம் மறையும். ஒடுக்கமாகிய மறைவே இயல்பாகவுள்ள உருவமாம். உடம்பினைநாடின் மீண்டும் உடல் உருவெடுக்கும் பிறப்புண்டாகும். ஆருயிரின் அறிவொளித் தன்மையை அறியின் சிவவுருவாம் ஒளியும் வெளியாகும். அருளொளியாம் ஆருயிர் சிவபெருமான் திருவடிக்கண் பேரன்பு பூண்டு உள்ளம் உருகித் தள்ளரிய மெய்ப்பத்தியினோடு நிற்றல் வேண்டும். அங்ஙனநிற்பின் உடனாகவிருக்கும். சிவபெருமான் வெளிப்பட்டு இன்புறுத்தியருள்வன்.

ஒளியை-ஒளி மயமான ஆன்மாவை; உருவும் ஒளியும்-உடம்பு மறையும் [(Vide) மரத்தை மறைத்தது மாமத யானை] ஒளியும் உருவம் அறிவில்-மறைந்த போகும் உடம்பை அறிந்தால். உருவாம்-பிறப்பாம் ஒளியின் உருவம் அறியில்-ஆன்ம தரிசனம் செய்தால். ஒளியே-சிவ ஒளி உதயமாகும். ஒளியும் உருக - ஒளி மயமான ஆன்மாவின் பாசம் களைய.

## 2633. புகலெளி தாகும் புவனங்கள் எட்டும்

2633. புகலெளி தாகும் புவனங்கள் எட்டும்
அகலொளி தாயிரு ளாசற வீசும்
பகலொளி செய்தது மத்தா மரையிலே
இகலொளி செய்தெம் பிரானிருந் தானே.

திருவருளால் சிவஒளி கைவந்த அறிவொளிகண்ட ஆருயிர்க்குப் புவனங்கள் அனைத்தினுமுள்ள நிகழ்ச்சிகளை உள்ளவாறுணர்ந்து உரைத்தல் எளிதாகும் அறிவின் அறிவாம் செறிவொளி எங்கணும் பரந்துநிற்கும். அவ்வொளி எங்கும்நிறைந்த சிவவொளியாகும். அவ்வொளிக்கதிர் வீசவே மலமுதலிய குற்றங்கள் தேய்ந்து மாய்ந்தகலும். ஆருயிரின் நெஞ்சத் தாமரைக்கண் ஞாயிற்றொளியின் மிக்கதாயுள்ள பேரொளி காணப்படும். அத் திருவொளி எம்பெருமானாகிய சிவபெருமானின் செஞ்சுடர் ஒளியாகும். அதனால் அவ்வொளி ஞாயிற்றின் ஒளியின் மாறுபட்ட பேரொளியாம். அதனால் இகலொளி என ஓதினர். அத்தகைய செவ்வொளியருளிச் சிவபெருமான் இருந்தருளினன்.

அகலொளி தாய் - அகண்ட ஒளி பரவி. பகல் ஒளி - சூரிய ஒளி. அத் தாமரை - அந்த உள்ளக் கமலத்தில். இகலொளி - சூரிய ஒளிக்கு மாறுபட்ட ஒளி.

## 2634. விளங்கொளி யங்கி விரிகதிர் சோமன

2634. விளங்கொளி யங்கி விரிகதிர் சோமன
துளங்கொளி பெற்றன சோதி யருள
வளங்கொளி பெற்றதே பேரொளி வேறு
களங்கொளி செய்து கலந்துநின் றானே.

எரிபொருளைப் பற்றிநின்று யாண்டும் ஒளிதரும் தீயும், விரிந்த கதிர்களையுடைய ஞாயிறும், அக்கதிரின் துணையால் ஒளிதரும் திங்களும், இயற்கை உண்மை அறிவு இன்பப்பிழம்பாய் ஒளிரும் சிவபெருமான் ஒளிகொடுத்தருளினமையால் உலகினுக்குக் காலவரையறைக்கு உட்பட்டு ஒளிதந்துகொண்டிருக்கின்றன. வழங்கத் தவா வளத்ததாய் உள்ள பேரொளி வண்ணனாம் சிவபெருமான் படைத்தருளியதே அம்மூன்று ஒளிமண்டிலங்களும், அவற்றிற்கு இயற்கை ஒளி இல்லாமை ஒரு
குறைவாகும். அக்குகுறயினைச் சிவபெருமான் இயற்கையாயுள்ள தன் அளவில் பேரொளியினின்றும் ஒளிகொடுத்தருளிப்போக்கினன் போக்கி வேறறக்கலந்துநின்றனன்.

விரிகதிர் - சூரியன். சோதி அருள - சிவன் கொடுத்தலால். விளங்கு ஒளி பெற்றதே பேரொளி - இல்லை என்னாது கொடுக்கும் புகழ் (ஒளி) பெற்ற தெய்வமாகிய சிவம் தம் இயற்கைப் பேரொளியினின்றும். வேறு களங்கொளி - வேறாகிய களங்கமுள்ள சூரிய - சந்திர - அக்கினி ஒளிகளை உண்டாக்கி. கலந்து

## 2635. இளங்கொளி யீசன் பிறப்பொன்று மில்லி

2635. இளங்கொளி யீசன் பிறப்பொன்று மில்லி
துளங்கொளி ஞாயிறுந் திங்களுங் கண்கள்
வளங்கொளி யங்கியு மற்றைக்கண் நெற்றி
விளங்கொளி செய்கின்ற மெய்காய மாமே.

இலங்கொளி எனற் பாலது இளங்கொளி என நின்றது. இஃது அலமரல் அளமரல் என நிற்பது போன்றாகும். திகழும் இயற்கை யொளியினையுடைய சிவபெருமான் என்றும் பிறப்பொன்றுமிலாப் பெரும்பெற்றியன். உலகினுக்கு ஒளிதரும் ஞாயிறும் திங்களும் சிவபெருமானின் முறையே வலக்கண்ணும் இடக்கண்ணுமாகிய இருகண்களாகச் சொல்லப்படும். ஈண்டுக் கண்ணென்பது கருத்து. அஃதாவது சிவபெருமானின் திருவுள்ளத்தால் இவை ஒளிர்கின்றன என்பதாம். மேலும் அச் சிவபெருமான் உலகமே உருவாகக்கொண்டுள்ளவன். அத் திருமேனிக்கண் கண்போன்று உருவகிக்கத்தக்கன ஞாயிறு திங்கள் தீ என்னும் மூன்றுமேயாம். தீ, சிவபெருமானின் நெற்றிக்கண்ணாகும். இம்மூன்று திருக்கண்களுடனும் அறிவுப் பெருவெளியே திருமேனியாகக்கொண்டு திகழ்ந்தருளுபவன் சிவபெருமான். மெய் - உடம்பு. காயம் - வெளி.

## 2636. மேலொளி கீழதன் மேவிய மாருதம்

2636. மேலொளி கீழதன் மேவிய மாருதம்
பாலொளி யங்கி பரந்தொளி யாகாசம்
நீரொளி செய்து நெடுவிசும் பொன்றிலும்
மேலொளி யைந்தும் ஒருங்கொளி யாமே.

ஐம்பூதங்களுள் மேலாகநிற்கும் ஒளி விசும்பாகும். அவ் விசும்பினைத் தடவிவரும் ஒளிப்பொருள் காற்று. அக் காற்றின்பாலாய் விளங்குமொளி தீ. நீருக்கு இடங்கொடுத்து எங்கணும் பரந்திருப்பது நிலம். அந்நிலத்தின்மேல் விளங்குவது நீர். மேலோதிய பூதங்கள் ஐந்தும் ஓராற்றான் விளங்குவனவற்றை ஒளியென்றருளினர். இவ் விளக்கம் முழுவதும் சிவபெருமான் திருவருளாலேயே யாகும்.

மேலொளி - ஆகாயம். மாருதம் - காற்று. பார் ஒளி - மண். அங்கி - தீ. நீர் - நீர். மேலொளி ஐந்தும். மேன்மை பொருந்திய அல்லது மேலே கூறிய ஐந்து ஒளிகளும்.

## 2637. மின்னிய தூவொளி மேதக்க செவ்வொளி

2637. மின்னிய தூவொளி மேதக்க செவ்வொளி
பன்னிய ஞானம் பரந்த பரத்தொளி
துன்னிய வாறொளி தூய்மொழி நாடொறும்
உன்னிய வாறொளி யொத்தது தானன்றே.

தொன்மைத் தூவெள்ளொளி சிவபெருமான். அவ்வெள்ளொளியினின்று உலகினை இயக்க ஐம்பேரொளியின் மேலதாகக் காணப்படும் செவ்வொளி விளக்கமுற்றது. வெள்ளொளி அறிவுப் பண்பாகும். செவ்வொளி ஆற்றற் பண்பாகும். புகழ்ந்து சொல்லப்படும் அறிவு பரந்த பே.ரொளி மெய்யுணர்வுப் பண்பாகும். பரத்தொளி அருள்நிறைந்த ஆருயிரொளியாகும். சிவபெருமானின் திருவடிக்கு நெருக்கமாகக் காணப்படும் நெறி நன்னெறி. அந்நெறியின் ஒளி ஆறொளியாகும். திருவைந்தெழுத்தெனப்படும் தூமொழி மறையொளியாகும். இவ்வாறும் ஒத்து நிறைந்து விளங்குவது சிவஒளி.

மின்னிய தூவொளி-படைப்புத் துவக்கத்தில் நின்மல சிவத்தினின்றும் தோன்றிய வெள் ஒளி. மேதக்க செவ்வொளி-அவ்வெள் ஒளியினின்றும் தோன்றிய ஐந்து வர்ண அளிகளில் மேலான பராசத்தியின் சிவந்த ஒளி. பரத்தொளியுடன் துன்னிய பரை-ஆதி இச்சை-ஞானம்-கிரியை ஆகிய ஐந்து வர்ண ஒளியுடன் ஆறு ஒளி.

## 2638. விளங்கொளி மின்னொளி யாகிக் கரந்து

2638. விளங்கொளி மின்னொளி யாகிக் கரந்து
துளங்கொளி யீசனைச் சொல்லுமெப் போதும்
உளங்கொளி யூனிடை நின்றுயிர்க் கின்ற
வளங்கொளி எங்கும் மருவிநின் றானே.

சிவபெருமான் மேகத்தின்கண் மறைந்து இடையிடை சிறுவரை தோன்றி விளக்கந்தரும் மின்னொளி போன்று ஆருயிர்களுடன் விரவி வேறற நின்று இடையிடையே அருள் விளக்கம் தந்தருள்கின்றனன். அருள்வழிநிற்கும் ஆருயிர்களின் அன்புநிறை உள்ளத் தாமரையினை இடமாகக்கொண்டருள்பவன் சிவபெருமான். எங்கணும் உயிருக்கு உயிராய், உணர்வுக்கு உணர்வாய் வேறறப் பொருந்திநின்றருள்பவன் சிவபெருமான்.

விளக்கொளி - பரையாதி ஒளிகள். மின்னொளியாகி - மேகத்தில் மின் ஒளி மறைந்து நிற்பதுபோல. கரந்து - ஆன்மாக்களிடத்து ஒளித்து.

## 2639. விளங்கொளி யவ்வொளி யவ்விருள் மன்னுந்

2639. விளங்கொளி யவ்வொளி யவ்விருள் மன்னுந்
துளங்கொளி யான்தொழு வார்க்கும் ஒளியான்
அளங்கொளி யாரமு தாகநஞ் சாருங்
களங்கொளி யீசன் கருத்தது தானே.

பேரொடுக்கப் பேரூழிக் காலத்து மிக்கு விளங்குவது இருள் வண்ணமேயாகும் ஆண்டும் நிலைபெற்று மாறாது மன்னும் பேரொளிப் பெரும்பொருள் சிவபெருமானாவன் அவனே நிலைபெற்று ஒளிரும் பேரொளியான். அளவிலா அன்பால் அகம்புறம் ஒத்துத்தொழும் மெய்யடியார்கட்கு மறையாதுநின்று வெளிப்பட்டருளும் இயற்கைத் தன்மையன் சிவன். விளக்கமிக்க ஒளிசேர் நிறையமுதம் ஆதற்பொருட்டு ஆண்டுத் தோன்றிய பெருநஞ்சினை உண்டு கண்டத்து அடக்கியவன் சிவன். இவையனைத்தும் அவனுடைய திருவுள்ளப் பாங்கின்படியாகும்.

அவ்விருண் மன்னும் - உலக முடிவில் ஏற்படும் இருளில் அடங்கும். ஒளியான் - வெளிப்படுவான் அளங்கொளி - அலங்கு ஒளி - இலங்குகின்ற ஒளி. நஞ்சாரும் களம்கொள் ஈசன் - விடமுண்ட கண்டன்.

## 2640. இலங்கிய தெவ்வொளி யவ்வொளி யீசன்

2640. இலங்கிய தெவ்வொளி யவ்வொளி யீசன்
துலங்கொளி போல்வது தூங்கருட் சத்தி
விளங்கொளி மூன்றே விரிசுடர் தோன்றி
உளங்கொளி யுள்ளே யொருங்குகின் றானே.

இயற்கையாய் என்றும் பொன்றாததாய் விளங்கும் உண்மை அறிவு இன்பப் பேரொளி எது? அதுவே சிவபெருமானின் அழிவில் பேரொளியாகும். அவ்வொளியின் அருட்கதிராய் நின்று ஒளிர்வது அருள் அறிவுப் பேராற்றலாகும். உளங்கொளியாவது அருள் நிறை ஆருயிராகும். விளங்குகின்ற இம்மூன்று ஒளியுமாக விரிந்த சுடரையுடைய சிவபெருமான் தோன்றி ஒளிக்குள்ளொளியாய் ஒருங்கி உடனின்றருள்கின்றனன்.

தூங்கு - நிலைபெற்று. விளங்கு ஒளி மூன்று - சிவ ஒளி - அருட்சத்தி ஒளி - ஆன்ம ஒளி.

## 2641. உளங்கொளி யாவதென் உள்நின்ற சீவன்

2641. உளங்கொளி யாவதென் உள்நின்ற சீவன்
வளங்கொளி யாநின்ற மாமணிச் சோதி
விளங்கொளி யாய்மின்னி விண்ணில் ஒடுங்கி
வளங்கொளி யாயத்து ளாகிநின் றானே.

உள்ளங்கொள்ளும் ஒளியாக நிற்பது ஆருயிர். அவ்வுயிர்க்கு உயிராய் ஒளிக்கு ஒளியாய் விளங்குவது வளப்பமிக்க சிவனொளி. அவ் வொளி மாமணிச் சோதியாகும். விளக்கமிக்க ஒளியாக மின்னி விளங்கும் தூய அறிவு விண்ணில் ஒடுங்கும். ஒடுங்கி வளம்பெற வழங்கும் ஒளிக்கதிர்க் கூட்டத்துள் நின்றருளினன் சிவன்.

## 2642. விளங்கொளி யாய்நின்ற விகிர்தன் இருந்த

2642. விளங்கொளி யாய்நின்ற விகிர்தன் இருந்த
துளங்கொளி பாசத்துள் தூங்கிருள் சேராக்
களங்கிருள் நட்டமே கண்ணுத லாட
விளங்கொளி யுன்மனத் தொன்றிநின் றானே.

யாண்டும் ஒரு பெற்றித்தாய் விளங்கும் ஒளியாய் நிற்பவன் சிவன். அவன்றன் தண்ணளிசேர் திருச்செயல் ஒருபடித்தாயன்றிப் பலபடித்தாய் நிகழ்வன. அதனால் அவன் விகிர்தனென்று அழைக்கப்படுகின்றான். அவன் எழுந்தருளி விளக்கமிக்க ஒளியாக நிற்கும்போது தொன்றுதொட்டே தங்கியுள்ள இருண்மலம் மாயாகாரியப் பாசத்துள் மயக்காது. ஆணவ வல்லிருள் அகலுதற் பொருட்டுச் சிவபெருமான் ஐந்தொழிற்றிருக்கூத்து அம்மை காணச் செம்மையுடன் என்றும் நிகழ்த்துகின்றனன். அச் சிவபெருமான் விளங்கொளியாக உன்மனத்துள் ஒன்றி நின்றருள்கின்றனன்.

இருள் சேரா - ஆணவம் முனைத்து நில்லாமல். கள . . . . . லாட - ஆணவ இருள் இரியக் கூத்தப்பிரான் ஆட. உன்மனத்து - உன்மனாகலையில்.

## 2643. போது கருங்குழற் போனவர் தூதிடை

2643. போது கருங்குழற் போனவர் தூதிடை
ஆதி பரத்தை அமரர் பிரானொடுஞ்
சோதியும் அண்டத்தப் பாலுற்ற தூவொளி
நீதியி னல்லிருள் நீக்கிய வாறன்றே.

பேரரும்பு சூடிய கரிய கூந்தலையுடைய திருவருளம்மையுடன் நிறைந்து நிற்பவர் சிவபெருமானார். அத் திருவருளம்மை ஆருயிர்களை வனப்பாற்றலாக நின்று ஆதி பரத்து ஐயுடன் கூட்டுவிப்பள். ஆதிபரத்து ஐ என்பது அனைத்துக்கும் காரணமாய் அனைத்தையும் கடந்த விழுப்பொருளாய் நீக்கமற நிறைந்து நிற்கும் முதல்வன். அவன் வானவர் கோன் தீ பல்வேறு அண்டங்கள் அனைத்துக்கும் அப்பால் நிற்கும் தூய அறிவொளியாக வுள்ளவன். அவனே முறைமாறாது ஆருயிர்களின் செவ்வி நோக்கி அவ்வவ் வுயிர்களின் ஆணவ வல்லிருளை அகற்றியருள்வன். ஐ - முதல்வன்.

போது.......போனவர்-மாதொரு பாகனார். தூதிடையாதி - சந்து செய்விப்பதில். பரத்துஐ - மேலான கடவுள். அமரர்பிரான் - இந்திரன். நல்லிருள் - ஆணவ இருள்.

# 2644. உண்டில்லை யென்னும் உலகத் தியல்வது

2644. உண்டில்லை யென்னும் உலகத் தியல்வது
பண்டில்லை யென்னும் பரங்கதி யுண்டுகொல்
கண்டில்லை மானிடர் கண்ட கருத்துறில்
விண்டில்லை யுள்ளே விளக்கொளி யாகுமே.

சுட்டியுணரப்படும் இவ் வுலகம் உண்டு என ஒருசாரார் கூறுகின்றனர். அதனை மறுத்து மற்றொருசாரார் உலகம் கானல்நீர் போல் இல்லாதது எனக் கூறுகின்றனர். இத்தகைய வுலகத்துள் இருண் மலத்துடன் கூடிய புலம்பு நிலையில் ஆருயிர்கள் புலம்பு நிலையும் புணர்வு நிலையும் கடந்த புரிவு நிலையாகிய திருவடிப் பேறு இல்லை யென்னும்படி நின்றன.புணர்வு நிலைக்கு வந்தபின் அவ்வுயிர்கட்குப் புரிவு நிலையும் உண்டுகொல் என்று ஐயுறவு ஏற்படுவதாகும். ஏனைப் பொருள்களைப் போன்று சுட்டுணர்வு சிற்றுணர்வுகட்கு எட்டுவதன்று. அத் திருவடிப்பேறு. மானிடர்கள் திருவடிப் பேற்றினைக் கண்ட அறிவு உண்டு எனக் கூறுவராயின் அஃது உண்மைச் சிறப்பியல்பாக இருத்தல் ஒண்ணாது அத் திருவடிப் பேறு சொல்ல ஒண்ணாத ஆருயிர் அகத்தமர்ந்த அறிவுப் பேரொளியாகும்.

உண்டில்லை - உலகம் உண்டு உலகம் இல்லை என்று வாதாடும் உலகத்தில். பண்டு - கேவல நிலை. பரம் கதி - மேலான முத்தி நெறி. கண்டில்லை மனிடர்-இதுவரை காணாத மானிடர். கண்ட கருத்து - அறிந்த அறிவு. விண்டில்லை - உரைக்க வேண்டியதில்லை.

## 2645. சுடருற ஓங்கிய ஒள்ளொளி யாங்கே

2645. சுடருற ஓங்கிய ஒள்ளொளி யாங்கே
படருறு காட்சிப் பகலவன் ஈசன்
அடருறு மாயையி னாரிருள் வீசில்
உடலுறு ஞானத் துறவிய னாமே.

விழுமிய முழுமுதற் சிவபெருமான் ஒளிக்கு ஒளியாய்த் திகழும் அறிவொளியாவன். அவன் அகவொளியாய்த் தொடர்புற்றுக் காட்சியளிக்கும் உணர்வொளிப் பகலவனும் ஆவன். திருவருளால் பல்வேறு பிறப்பினுக்கு வாயிலாக நின்று அடரும் மாயையின் நிறைந்த இருள் நீங்கப்பெறுதல் வேண்டும். அங்ஙனம் நீங்கினால் உடற்கண் பொருந்தியமாறில் மெய்யுணர்வுமேலோன் சிவபெருமானாவன். அவனே திருவடியுணர்வின் உறவுடையோன் ஆவன். ஞானத்துறவியன்-ஞானத்தால் துறவியன் என்றலும் ஒன்று.

பகலவன் ஈசன் - ஞான சூரியனாகிய ஈசன். வீசி - விலக்கி. உடலுறு - மாயா சம்பந்தமான அஞ்ஞானத்தோடு மாறுபடுகின்ற.

## 2646. ஒளிபவ ளத்திரு மேனிவெண் ணீற்றன்

2646. ஒளிபவ ளத்திரு மேனிவெண் ணீற்றன்
அளிபவ ளச்செம்பொன் ஆதிப் பிரானுங்
களிபவ ளத்தினன் காரிருள் நீங்கி
ஒளிபவ ளத்தென்னோ டசன்நின் றானே.

மிக்க ஒளிசேர் பவளத் திருமேனியை உடையவன் சிவபெருமான். மணிகள் ஒன்பதினுள்ளும் முத்தும் பவளமும் நத்தும் கடலகத்துத் தோன்றுவன. நீரில் தோன்றும் தாமரை பூவுட் சிறந்தது போன்று நீரில் தோன்றும் முத்தும் பவளமும் மணியுள் சிறந்தனவாகும். முத்து சிவபெருமானின் ஆரறிவையும் பவளம் அளவி லாற்றலையும் குறிக்கும் குறிப்பினவாகும். ஆற்றலாகிய திருவருளே அவன் திருமேனியாகலின் பவளமேனியன் என்றோதினர். திருவெண்ணீற்றுப் பூச்சினன் முதிர்ந்த பவளத்தையும் செம்பொன்னையும் போன்ற ஆதிப் பிரானாகிய சிவபெருமான் ஆருயிர்கட்கு மிக்க களிப்பினை யுண்டாக்குவன். அங்ஙனம் உண்டாக்குவதில் அவன் மெய்யுணர்வுப் பகலவனாவன்.
பகலவன் - சூரியன். அவன் பிற வொளிகளால் நீங்காத ஆணவ வல்லிருளை அறவே நீக்கியருள்வன். நீக்கி அவன் அடியேனுடைய உள்ளத்தின்கண் ஒளிபவள வண்ணத்தனாய் நிறைந்து நின்றருள்கின்றனன்.

அளி - முதிர்ந்த. பவளச் செம்பொன் - பவளத்தில் சிவந்த பொன்பதித்தாலொத்த நிறத்தையுடைய,

களிபவளத்தினன் - ஆன்மாக்களுக்கு மகிழ்ச்சியை அருளுகின்ற சூரியனைப்போல.

## 2647. ஈசன்நின் றானிமை யோர்கள்நின் றார்நின்ற

2647. ஈசன்நின் றானிமை யோர்கள்நின் றார்நின்ற
தேசமொன் றின்றித் திகைத்திழைக் கின்றனர்
பாசமொன் றாகப் பழவினைப் பற்றற
வாசமொன் றாமலர் போன்றது தானன்றே.

ஈசனாகிய சிவபெருமான் யாண்டும் நீக்கமற நிறைந்து நின்றருளினன். கண்ணிமையாக் காவலராகிய இமையோர்களும் நின்றனர். ஓரிடத்து நீங்காது இருவரும் நிற்பினும் இமையவர்கள் அகம் அகலாமையின் திருவடி காணாது திகைத்து நிற்கின்றனர். பாசமாகிய இருவினை யொப்பு வாய்ந்த பருவம் வந்து எய்தவும் எஞ்சுவினைப் பற்று அஞ்சியகலும். அகலவே ஏறுவினையும் இல்லின்மையால் துச்சில் நச்சிச் செல்லும். ஏன்றவினையும் அவ் வுயிரின் உள்ளத்துப் புகும் வழியின்மையால் குடை நிழல் புகாநடை வெயில்போன்று உடைபட்டழியும். அழியவே அவ் வுயிரும் ஆரருட் சிவபெருமானும் மலர் மணம் போன்று நிலவுவர். அவ் வுயிர் மீளா அடிமையாய் நாளும் பேரின்பப் பெருவாழ்வுற்று இன்புறும். அகம் அகலாமை - செருக்கு நீங்காமை; உள்ளம் அன்பால் விரியாமை. இல்: உரியகுடி. துச்சில்: ஒட்டுக்குடி.

பாசம் ஒன்றாக - இருவினை ஒப்பாக. பழவினை - முன்னீட்டிய வினைகள். வாசம் ஒன்றாம் மலர்-பூவின் மணம்போல் சிவசீவ ஐக்கியம்.

## 2648. தானே யிருக்கும் அவற்றில் தலைவனுந்

2648. தானே யிருக்கும் அவற்றில் தலைவனுந்
தானே யிருக்கும் அவனென நண்ணிடும்
வானா யிருக்குமிம் மாயிரு ஞாலத்துப்
பானா யிருக்கப் பரவலு மாகுமே.

செந்தமிழின்கண் இருக்கு என்று ஓதப்படுவது திரு இருக்கு ஆகும். ஆளுடைய பிள்ளையார் பல திரு இருக்குகளைக் காதலால் ஓதியருளியுள்ளார் தானே யிருக்கும் என்பதற்கு அத்தகைய செந்தமிழ்த் திருமறை இருக்காக இருப்பவனும் சிவனே. அவ் விருக்கின் முதல்வனும் தானே. அவ் விருக்காகிய மறைவழிச் செல்வார் அவனையே நண்ணுவர். அச் சிவபெருமான் தூய அறிவுப் பேரொளிப் பெருவெளியாகத் திகழ்பவனும் ஆவன். விரிந்த பெரிய நிலவுலகத்துப் பரனாக என்றும் நின்றருள்பவனும் சிவனே. அத்தகைய சிவபெருமான் திருவடியிணையினைப் பரவுவோமாக. பரனா என்பது பானா என நின்றது. பானுவாக என்பது பானாக என நின்றது என்றலும் ஒன்று. இதற்குச் சிவஞாயிறாக எனப்பொருள் கொள்க.

இருக்கு - தமிழ் மொழியில் உள்ள இருக்கு முதலிய வேதங்கள். அவற்றின் தலைவன் - சிவன். வானாய் - வியாபகமாய் பானாயிருக்க - பரவி இருக்க.

# 5. தூல பஞ்சாக்கரம்(பரிய ஐந்தெழுத்து)

5. தூல பஞ்சாக்கரம்(பரிய ஐந்தெழுத்து) 2649. ஒன்றுகண் டேனிவ் வுலகுக் கொருகனி

2649. ஒன்றுகண் டேனிவ் வுலகுக் கொருகனி
நன்றுகண் டாயது நமச்சிவா யக்கனி
மென்றுகண் டாலது மெத்தென் றிருக்குந்
தின்றுகண் டாலது தித்திக்குந் தானன்றே.

உலகிடைவாழும் திருவழிப் பேற்றிற்குரிமையுடைய மக்களுயிர்க்குத் திருவருளால் ஒப்பில்லாத அவ்வையுண்ட அருநெல்லியினும் செவ்விதாகவுள்ள ஒப்பில் ஒரு கனியினைத் தப்பின்றிக் கண்டு கொண்டுள்ளேன். அக் கனி தீயதில்லாத நன்றுடையதாகும். அக்கனியின் திருப் பெயர் 'நமசிவய' வாகும். (2588 2993) அத் திருக்கனியினை உணர்வின்கண் கனித்தலாகிய மெல்லுதலைச் செய்வார்க்கு அஃது அனிச்ச மலரினும் மெல்லிதாக அமைந்திருக்கும் அதன்கண் அழுந்தியறிதலாகிய தின்றலைக் கண்டார்க்குத் தெவிட்டா இனிப்பாய்ச் சிறப்பாய் விளைந்து தித்திக்கும் தித்திக்கும் - இனிக்கும். அழுந்தியறிதல் - அனுபவித்தல்.

## 2650. அகார முதலாக ஐம்பத்தொன் றாகி

2650. அகார முதலாக ஐம்பத்தொன் றாகி
உகார முதலாக வோங்கி யுதித்து
மகார இறுதியாய் மாய்ந்துமாய்ந் தேறி
நகார முதலாகும் நந்திதா மம்மே.

உலகிடை உயிர்ப்பாய் வழங்கும் தொன்மை மொழிகள் பலவற்றுள்ளும் நனிமிகத் தொன்மை வாய்ந்தது நம் தாய்மொழியாகிய
இனிமை மிகு தனிச் செம்மொழி யென்னும் தமிழ்மொழியேயாம். அம்மொழிக்கண் வழங்கிய ஒலிக் குறிப்புக்களை ஒரு வரையறைப்படுத்தி ஐம்பத்தொன்று என அமைத்தனர். அதற்குக் தக்கவாறு வரிவடிவங்களையும் அமைத்தனர். அந் நிலையிற்றான் அகர முதலாக ஐம்பத்தொன்று என அறுதியிட்டனர். பின்னும் நுணுகி இயல்பாகப் புணர்நிலைக்கண் தோன்றும் ஒலித்திரிபுகளுக்கு வரிவடிவு தனித்தனியே அமைக்காமல் ஆய்தம் என்னும் முப்பாற் புள்ளியின் கூட்டரவால் உணர்தல் கூடுமெனக் கண்டனர். அக் காலத்து வரிவடிவை முப்பத்துமூன்றென வரைசெய்தனர். அதுவே அன்றுதொட்டு இன்றுகாறும் வழங்கிவருகின்றது. ஒலி முப்பத்தாறாம் மெய்யாகிய நாதத்தினின்றும் தோன்றுவதாகும். அங்ஙனம் தோன்றுங்கால் வாயிலுள்ள பல்லும் இதழும் நாவும் மூக்கும் அண்ணமும் முதலிய உறுப்புக்களின் தொழிலின்றி வாய்திறந்த அளவானே வரும் ஒலி அகரமாகும். அதனான் அவ் வொலி முதற்கண் அமைக்கப்பெற்றது. அவ் அகரம் முதலாக

ஐம்பத்தொன்றென்க. விரிந்தபின் குவிதல்வேண்டுமாதலின் உகர முதலாக உற்றுத் தோன்றியதாகும். பின்பு அவ் வொலி ஒடுங்குதல் வேண்டும். அம் முறையில் மகர இறுதியாய் மாய்ந்து மாய்ந்தேறி என ஓதினர். இம் மூன்றும் ஒருபுடை யொப்பாக முப்பொருளும் குறிப்பனவாகும். அவை முறையே அறிவன், உறைவோர், மறைப்பது என்றாகும். நகர முதலாகிய 'நமசிவய' என்னும் தமிழ்மறை நந்தியின் திருப்பேராகும். அவ் வுண்மை வரும் திருமுறைத் திருப்பாட்டான் உணர்க:

"நந்தி நாம நமச்சிவா யவெனும்
சந்தை யாற்றமிழ் ஞானசம் பந்தன்சொல்
சிந்தை யான்மகிழ்ந் தேத்தவல் லாரெலாம்
பந்த பாசம் அறுக்கவல் லார்களே."

(3. 120 - 11.)

அகார....றாகி-தமிழ்மொழிக்கு வட்டெழுத்துக் காலத்திலும் அதற்கு முந்தியும் உயிர்கள் 16, மெய்கள் 35. ஆக51.

## 2651. அகராதி யீரெண் கலந்த பரையும்

2651. அகராதி யீரெண் கலந்த பரையும்
உகராதி தன்சத்தி யுள்ளொளி யீசன்
சிகராதி தான்சிவ வேதமே கோண
நகராதி தான்மூல மந்திர நண்ம்மே.

திருவருட் கலப்பால் தோன்றும் அகர முதலிய உயிரெழுத்துக்கள் பதினாறு. உகராதி சிவபெருமானின் திருவருளாற்றலாகும். அவ் வாற்றல்களின் உள்ளொளியாய் விளங்குபவனும் சிவனே. சிகர முதலாக ஓதப்பெறும் (2550) 'சிவயநம' சிவவேதம் என்று சொல்லப்படும் திருவடியுணர்வாகும். இவ் வுணர்வினைப் பெறும் உரிமை வாய்ந்த ஆருயிர் கோணம் எனப்படும். நகர முதலாக ஓதப்படும் 'நமசிவய' மூலமந்திர மெனப்படும். இவற்றால் திருவடிப் பேறு எய்தும். இது பற்றியே "நமச்சிவாய வாஅழ்க நாதன்தாள் வாழ்க" எனச் செந்தமிழ் மறைமுடிவும் ஓதுவதாயிற்று. நண்ணுமே என்பது நண்ம்மே என நின்றது.

அகராதி ஈரெண்-அகர முதலிய 16 எழுத்துக்களில் (தமிழில் உள்ள உயிர் எழுத்துக்கள் 16).

## 2652. வாயொடு கண்டம் இதய மருவுந்தி

2652. வாயொடு கண்டம் இதய மருவுந்தி
ஆய இலிங்க மவற்றின்மேலே யவ்வாய்த்
தூயதோர் துண்ட மிருமத் தகஞ்செல்லல்
ஆயதீ றாமைந்தோ டாமெழுத் தஞ்சுமே.

வாய் (புருவநடு), மிடறு, நெஞ்சு, உந்தி (மேல்வயிறு), இலிங்கம் (கொப்பூழ்), மேலாகிய மூலம் ஆகிய ஆறு நிலைக்களமும் இடமாக அகரம் தோன்றும். மூக்கு நுனியாகிய தூயதோர் துண்டத்தினின்று பெருமைமிக்க உச்சித் தொளையாகிய கபாலம் வரை அவ் வொலி பரந்து செல்லும். பின் வெளிப்போதரும். வெளிப் போதருமென்பது எழுத்து வடிவாய்த் தன் செவிக்கும் பிறர் செவிக்கும் புலனாகும் செவியோசை யாகும் என்பதாம். இவ் ஈறாகிய வலிமையுள்ள செவியோசைக்கு உயிராக நிற்பது செந்தமிழ்த் திருவெழுத்தைந்தாகும்.

மூலம் - இலிங்கம் - உந்தி - இதயம் - கண்டம் - துண்டம் என ஆதாரங்கள் ஆறு கூறப்பட்டது காண்க. மத்தகம் செல்லலாய தீறாம்-நாதவடிவமான அக்கரம் மூலத்திற் றோன்றிச் சென்று சகசிர அறையிற்றாக்கி வர்ணவடிவாய் வெளிப்படும் என்பது. ஐந்து - வாய், கண்டம், இதயம், உந்தி - இலிங்கம்.

## 2653. கிரணங்கள் ஏழுங் கிளர்ந்தெரி பொங்கிக்

2653. கிரணங்கள் ஏழுங் கிளர்ந்தெரி பொங்கிக்
கரணங்கள் விட்டுயிர் தானெழும் போதும்
மரணங்கை வைத்துயிர் மாற்றிடும் போதும்
அரணங்கை கூட்டுவ தஞ்செழுத் தாமே.

ஊதா, நீலம், பச்சை, சிவப்பு, மஞ்சள், பழுப்பு, இளநீலம் என்னும் ஏழுநிறக் கதிர்கள் சேர்ந்த நிலையில் எரியொளி யுண்டாகும். அவ் வெரி மிகுதிப்பட்டு நின்றபோது கருவிக்கூட்டங்களினின்றும் ஆருயிர் எழுந்து புறம் செல்லும். அவ் வுயிர் இறப்பினை மேற்கொண்டு உடம்பினைவிட்டு அகலும். அப்பொழுது அவ் வுயிர்க்கு என்றும் பொன்றா அரணப் புகலிடமாக விருப்பது சிவபெருமானின் திருவடி. அத் திருவடியினை ஒருவாது மருவுவிப்பது திருவைந்தெழுத்தாகும்.

கிரணங்கள் ஏழும் கிளர்ந்து எரி - ஒளி ஏழு கிரணங்களால் ஆக்கப்பட்டதால் ஏழும் கிளர்ந்து எரி என்றார். ஏழு கிரணங்களாவன: ஊதா, நீலம், பச்சை, சிவப்பு, மஞ்சள், பழுப்பு, இளநீலம். மரணம் - யமன். அரணம்-உயிர்க்கு அரண் ஆகிய முத்தி.

## 2654. ஞாயிறு திங்கள் நவின்றெழு காலத்தில்

2654. ஞாயிறு திங்கள் நவின்றெழு காலத்தில்
ஆயுறு மந்திர மாரும் அறிகிலர்
சேயுறு கண்ணி திருவெழுத் தஞ்சையும்
வாயுறு வோதி வழுத்தலு மாகுமே.

ஞாயிறாகிய வலப்பால் மூச்சும், திங்கள் ஆகிய இடப்பால் மூச்சும் எடுத்தும், தடுத்தும், விடுத்தும் பயிலுங்காலத்து ஆராய்ந்து மேற்கொள்ளும் மந்திரத்துண்மையினை உள்ளவாறுணர்ந்து ஆரும் அறிகிலர். செவ்வரி பரந்த திருக்கண்களையுடைய திருவருளாற்றலால் வெளிப்படும் ஒலி ஒளிமெய்களாகிய நாதவிந்து தத்துவங்களினின்றும் எழுத்துக்கள் வெளிப்படும். அவ் வெழுத்தானாகிய மந்திரங்களுள் திருவைந்தெழுத்தே முதன்மையாகும். அவ் வைந்தெழுத்தே உயிர்ப்புப் பயிற்சியினுக்கு ஒப்பில் திருமறையாகும். அத் திருமறையினை வாயார வாழ்த்தி வழுத்துவோமாக.

ஞாயிறு - பிங்கலை. திங்கள் - இடகலை.

## 2655. குருவழி யாய குணங்களி னின்று

2655. குருவழி யாய குணங்களி னின்று
கருவழி யாய கணக்கை யறுக்க
வரும்வழி மாள மறுக்கவல் லார்கட்கு
அருள்வழி காட்டுவ தஞ்செழுத் தாமே.

சிவகுருவானவர் அருளிச் செய்த செவியறிவுறூவாகிய திருவைந்தெழுத்தின் மாறாப் பண்பினின்று கருவழிப் புகுவதற்கு வாயிலாகிய எஞ்சு வினையையும் ஏறுவினையையும் அறுத்தகற்றலாகும். அம் முறையான் வரும் வழியினை மாளச் செய்யவும் மறுக்கவும் வல்லார்க்குத் திருவருள் திருவைந்தெழுத்தின் வழியினைக் காட்டும். திருவைந்தெழுத்துப் பொருண்மறையாகும் அவற்றின் விரிவே அனைத்து நூலுமாகும். அவை பன்னிரு திருமுறையும் பதினான்கு மெய்ந்நூற்களும் என்ப.

குணங்கள் - சாதனங்கள். கணக்கை - வகையை. மறுக்க - தடுக்க.

## 2656. வெறிக்க வினைத்துயர் வந்திடும் போது

2656. வெறிக்க வினைத்துயர் வந்திடும் போது
செறிக்கின்ற நந்தி திருவெழுத் தோதுங்
குறிப்பது வுன்னிற் குரைகழல் கூட்டுங்
குறிப்பறி வான்றவங் கோனுரு வாமே.

அஞ்சும்படியாகத் தீவினைத் துன்பம் தொடர்ந்து வந்திடும். அப்பொழுது எங்கும் நீக்கமற நிறைந்து நிற்கின்றவன் நந்தி. அவன் திருப்பெயர் திருவைந்தெழுத்தாகும் அத் திருவைந்தெழுத்தை விதிப்படி யோதும் குறிப்பதை உள்ளத்து உறுதியாக நினைந்து ஓதி வந்தால் அவ்வோதும் தவம் சிவபெருமானின் ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த திருவடியிணையினைக் கூட்டுவிக்கும் வீரக்கழல் - மறைச் சிலம்படி. அத்தகைய இறப்பில் தவத்தின் குறிப்புணர்வான் - சிவனடிக் கீழ் சிவனுருவாய் நிலைத்திருப்பன்.

வெறிக்க - மயங்க. தவம் - தவத்தால்.

## 2657. நெஞ்சு நினைந்துதம் வாயாற் பிரானென்று

2657. நெஞ்சு நினைந்துதம் வாயாற் பிரானென்று
துஞ்சும் பொழுதுன் துணைத்தாள் சரணென்று
மஞ்சு தவழும் வடவரை மீதுறை
அஞ்சில் இறைவன் அருள்பெற லாகுமே.

திருவைந்தெழுத்தின் சிறப்போர்ந்து அப் பெரும் பொருள் மறையினை நீங்கா நினைவுடைய தூயராய்க் கணித்தும் வாயால் முழுமுதற் பெருமான் சிவன் என்று வாழ்த்தியும் வருவோர் செந்நெறிச் செல்வராவர். அவர்கள் துஞ்சும் போழ்து உன் துணைத்தாள் ஒன்றே புகலென்று அடைக்கலம் புகுவர். அதனால் அவர்கள் திருவருள் உருவாகச் செப்பப் பெறும் மேகங்கள் தவழும் திருவெள்ளி மலைமீது உறைந்தருளும் திருவைந்தெழுத்தால் பெறப்படும் முழுமுதற் சிவபெருமானின் திருவருள் பெற்று உய்வர். அஞ்சில் இறை - அஞ்சுதலில்லாமல் செய்தருளும் சிவபெருமான் என்றலும் ஒன்று.

வடவரை - கயிலை. அஞ்சில் - அஞ்சுதல் இல்லாத.

# 2658. பிரான்வைத்த ஐந்தின் பெருமை யுணராது

2658. பிரான்வைத்த ஐந்தின் பெருமை யுணராது
இராமாற்றஞ் செய்வார்கொல் ஏழை மனிதர்
பராமுற்றுங் கீழொடு பல்வகை யாலும்
அராமுற்றுஞ் சூழ்ந்த அகலிடந் தானே.

விழுமிய முழுமுதற் சிவபெருமானின் திருவுள்ளத்தால் காரியப்படும் குண்டலினி என்று சொல்லப்படும் தூமாயை பாம்பென உருவகிக்கப்படும். அத்தகைய அரவினை ஆதிசேடன் என்ப. ஆதிசேடன் என்பது ஆதியாகிய திருவருளால் காரியப்படும் தூமாயை என்ப. அக் குண்டலினியால் சுமக்கப்படும் விரிந்த அகலிடத்துள்ளார் அனைவராலும் பராவப்படும் முழுமுதல் சிவபெருமான் ஆவன். பலவகையாலும் ஆராய்ந்து பார்க்கில் சிவபெருமானே முழுமுதலாவன். அச் சிவபெருமான் ஆருயிர் உய்தற்பொருட்டு அருளிச்செய்த பொருள்மறை திருவைந்தெழுத்தாகும். அத் திருவைந்தெழுத்தின் பெருமை உணராதவர்கள் ஆணவவல்லிருளாகிய இராவினை மாற்றும் வன்மையுடையவர் ஆவரோ? அந்தோ அறிவிலா ஏழை மனிதராக இருக்கின்றனரே! சேடன்: பெருமையுடையவன்; சேடு - பெருமை. ஏனைமந்திரங்களாகிய மறை அனைத்தும் புகழ்மறை என்று சொல்லப்படும்.

ஐந்து - அஞ்செழுத்து. இராமாற்றம் - அஞ்ஞானத்தைக் கெடுத்தல். பரா - பரவு. அராமுற்றும் சூழ்ந்த - ஆதி சேடனால் தாங்கப்படுகின்ற.

# 6. சூக்கும பஞ்சாக்கரம்(நுண்மை ஐந்தெழுத்து)

6. சூக்கும பஞ்சாக்கரம்(நுண்மை ஐந்தெழுத்து) 2659. எளிய வாதுசெய் வாரெங்கள் ஈசனை

2659. எளிய வாதுசெய் வாரெங்கள் ஈசனை
ஒளியை யுன்னி யுருகு மனத்தராய்த்
தெளிய வோதிச் சிவாய நமவென்னுங்
குளிகை யிட்டுப்பொன் னாக்குவன் கூட்டையே.

எங்கள் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானை உண்மை உணர்விலாதவர் எளியானாகக் கருதிச் சொற்போர் செய்வர். அவர் 'சூதும் வாதும் வேதனை செய்யும்' என்னும் ஒழுகலாற்றுமுறையினை முற்றும் மறந்தோராவர். சொற்போர் - வாது. அவன் எல்லா ஒளிக்கும் ஒளி கொடுத்துக்கொண்டு தான் இயல்பாக ஒளிர்ந்துகொண்டிருக்கும் அறிவுப் பேரொளியாவன். அவனைப் பேரன்புடன்நினைத்து இடையறாது உருகு மனத்தராய் இருப்பவர் சிவனடியாராவர். அவர் சிவகுருவின் திருவருளால் தெளிந்து 'சிவயநம' என்னும் நுண்மைத் திருவைந்தெழுத்தை இடையறாது கணிப்பர். அங்ஙனம் கணித்தலால் சிவபெருமான் அப்பொருண் மறையினையே நற்குளிகையாகக்கொண்டு அவ்வுயிரையும் அவ்வுயிரின் உடம்பினையும் மாற்றுயர்ந்த செம்பொன்னாம் வண்ணம் செய்தருள்வன். அஃதாவது அவ்வுயிரையும் உடம்பினையும் சிவமாக்கியருளல். இவ்வுண்மை ஆளுடைய நம்பியார் திருவுடம்பினையும் சண்டீசநாயனார் திரு வுடம்பினையும் முறையே 'ஊனுடம்பு வேறு செய்தான்' எனவும், 'சூழ்ந்த

ஒளியில் தோன்றினார்' எனவும் கூறுமாறு செய்தருளினமையால் விளங்கும். குளிகை: செம்பைப் பொன்னாக்கும் சீரிய கருவி. 'சிவயநம' என (2550) நோன்பு நெறியில் நிற்பார் மேற்கொள்ள வேண்டிய நுண்மறை.

பொன்னாக்குவன் கூட்டை - உடம்பு பொன்போல் ஒளி வீசும். குளிகை - மந்திரம்.

## 2660. சிவன்சத்தி சீவன் செறுமல மாயை

2660. சிவன்சத்தி சீவன் செறுமல மாயை
அவஞ்சேர்த்த பாச மலமைந் தகலச்
சிவன்சத்தி தன்னுடன் சீவனார் சேர
அவஞ்சேர்த்த பாசம் அணுககி லாவே.

செந்தமிழ்த் திருவைந்தெழுத்துச் செம்பொருள் ஐந்தினையும் இம்மையே அறிவிக்கும் செம்மை மறையாகும். அவ்வைந்தெழுத்தும் தனித்தனியே ஒவ்வொரு பொருளையுணர்த்தும் ஒவ்வொரு சொல்லின் முதலெழுத்தாகும். அவை முறையே 'சிறப்பு, வனப்பு, யாப்பு, நடப்பு, மறைப்பு' எனப்படும். இவற்றை முறையே சிவன், சத்தி, சீவன், திரோதாயமலம்' என்ப. மலத்தைச் செறுமலம். மாயை எனவுங் கூறுப.
இவற்றுள் திருவருளால் மலம் அடங்கும். மலம் அடங்கவே சத்தியாகிய திருவருளால் ஆருயிர் கூட்டத் தகுதியுடையதாகும். அப்பொழுது திருவருள் அவ் வுயிரைச் சிவத்துடன் கூட்டுவிக்கும். கூட்டுவிக்கவே வீணாகப் பிறந்திறக்கும் பிழைநெறியிற் புகுவிக்கும் பாசம் (159) அற்றழியும் திருவைந்தெழுத்தின் விரிவினை வரும் வெண்பாவால் நினைவுகூர்க.
சிறப்புவனப் பியாப்பு நடப்பு மறைப்போ
டுறப்பால ஐந்தெழுத்தின் உண்மை-மறப்பில்
சிவய நமஎன்னும் செந்தமிழ்ஐந் தாலாம்
சிவமறையின் மெய்விரியாம் செப்பு.

சிவன்.....மாயை-அஞ்செழுத்துக்கள் ஐம்பொருள்களை உணர்த்துகின்றன. சி - சிவனையும், வ - சத்தியையும், ய - சீவனையும், ந - மலத்தையும், ம-மாயையையும் உணர்த்துகின்றன. அவம் சேர்ந்த பாசம் ஐந்து - பாவத்தை உண்டாக்கும் மலங்கள் ஆணவம், கன்மம், மாயை, மாயேயம், திரோதாயி ஆக ஐந்து.

## 2661. சிவனரு ளாய சிவன்திரு நாமஞ்

2661. சிவனரு ளாய சிவன்திரு நாமஞ்
சிவனரு ளான்மாத் திரோத மலமாயை
சிவன்முத லாகச் சிறந்து நிரோதம்
பவம தகன்று பரசிவ னாமே.

செந்தமிழ்த் திருவைந்தெழுத்துச் சிவபெருமானின் திருமேனியாகும். அதனால் அம்மறை திருவருளேயாகும். அது 'சிவயநம' எனப்படும். இத் திருவெழுத்தைந்தும் முறையே சிவன். அருள், ஆன்மா, திரோதம், மலமாயை என்னும் மெய்ப்பொருள் ஐந்தினையும் தனித் தனியாகக் குறிக்கும் (2660) ஐந்து சொற்களின் முதலெழுத்தாகும். சிவ என்னும் மறைமொழியை முதற்கண்வைத்து 'சிவயநம' எனக் காதலாகி நாளும் கணிக்கப்பெறும் நற்றவம் புரிதல்வேண்டும். அது புரிந்தால் அத்தவப் பயனால் மலமாயைகன்மங்கள் அகன்று அடங்கும் அவை அடங்கவே பிறப்பறும். பிறப்பறவே திருவடிப்பேறாம் சிறப்புறும் சிறப்புறவே அவ்வுயிர் சிவனாகி மீளா அடிமையாய் வாழ்ந்திருக்கும். நிரோதம் - ஒழித்தல்; அடக்கம்.

சிவனருளாய - சிவ சத்தியாகிய. சிவன் திருநாமம் - அஞ்செழுத்து. சிவன் - அருள் - ஆன்மா - திரோதம் - மலமாயை - சி - வா - ய - ந- ம -. சிவன் முதலாக - சி முதலாக. நிரோதம் - ஒழித்தல்.

## 2662. ஓதிய நம்மலம் எல்லாம் ஒழித்திட்டவ்

2662. ஓதிய நம்மலம் எல்லாம் ஒழித்திட்டவ்
வாதி தனைவிட் டிறையருட் சத்தியால்
தீதில் சிவஞான யோகமே சித்திக்கும்
ஓதுஞ் சிவாய மலமற்ற உண்மையே.

மேலோதியவாறு 'சிவயநம' என ஓதிவருங்கால் சொல்லப்படும் நகரமகரமாகிய மலங்கள் இரண்டும் ஒழிந்திடும். ஒழியவே அவ்வாதியருளாகிய நகரமும் அதனால் செலுத்தப்படும் மகரமும் ஆகிய இரண்டினையும் நீக்கிய இடத்து அங்குத் திருவருளாற்றலுடன் கூடிய சிவ என்னும் சிறப்பு எழுத்துக்களை யமைத்தல்வேண்டும். அமைக்கவே 'சிவயசிவ' என அமையும் இம்முறையே கணிக்கில் குற்றமற்ற சிவவுருவ வாயிலாம் சிவச் செறிவு கைகூடும். சிறந்து சொல்லப்படும் 'சிவயசிவ' என்னும் மறை மலம் அகன்று நலமோங்கி நிற்கும் உண்மை நிலையாகும். இது செறிவினர் ஓதும் சீர்மையதாகும்.

நம்மலம் எல்லாம் - நகர - மகரங்களால் குறிக்கப்பட்ட மலங்கள் எல்லாம். அவ்வாதிகளை - அந்த முதலில் உள்ள எழுத்துக்களாய ந-ம என்பவைகளை.

## 2663. தெள்ளமு தூறச் சிவாய நமவென்று

2663. தெள்ளமு தூறச் சிவாய நமவென்று
உள்ளமு தூற வொருகால் உரைத்திடும்
வெள்ளமு தூறல் விரும்பியுண் ணாதவர்
துள்ளிய நீர்போற் சுழல்கின்ற வாறே.

தெளிந்த திருவடியமுது ஓவாது ஊறித் தாவா இன்பந் தலைத்தலைச் சிறக்கும் பொருட்டுச் 'சிவயநம' என்னும் திருமறையினை உள்ளத்துள்ளே திருவடியின்ப அமுதுபெருகி ஊறக் காதலால் ஒருகாலுரைத்தல்வேண்டும். உரைக்கவே புருவநடுவில் தோன்றும் வெள்ள மொத்துவரும் திங்கள் மண்டிலத் திருவமுது அளவின்றி ஊறும் அதனை அருளால் விழைந்து உண்ணுதல்வேண்டும். அங்ஙனம் உண்ணாதவர் பிறப்பு இறப்பிற்பட்டு நீர்த்துளி சுழலுமாறு சுழன்று துன்புறுவர்.

## 2664. நமாதி நனாதி திரோதாயி யாகித்

2664. நமாதி நனாதி திரோதாயி யாகித்
தமாதிய தாய்நிற்கத் தானந்தத் துற்றுச்
சமாதித் துரியந் தமதாக மாகவே
நமாதி சமாதி சிவவாதல் எண்ணே.

நகராதி ஐந்தெழுத்து நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்குதல் ஆகிய ஐம்பாட்டினையும் நிகழ்த்துவிக்கும். திரோதாயி என்று சொல்லப்படும் நடப்பாற்றல் அந்நனவாதிகளைத் தூண்டித் தொழிற்படுத்தும் முதல்வியாகும். அதுவே அவ்வெழுத்துக்களுக்கும் ஆதியாய்நிற்கும். ஆவி அம்முடிபினை எய்தி அகநிலைச் செயலறலாகிய துரியமே தம்உடம்பாக நிற்கும். நிற்கவே நமாதிக்குச் சமமாகச் சிவமுதலாகத் தோன்றும். தோன்றவே 'சிவயசிவ' என எண்ணுவதே சிறப்பாகும் என்ப.

நமாதி - நகரமுதல். தமாதியதாய் - அவ்வக்கரங்களுக்கு ஆதியாய். தான் - ஆன்மா. சமாதித் துரியம் - துரிய அவத்தை தமது ஆகமாக - தமது உடம்பு ஆக. சிவவாதல் - சி - வ முதலெழுத்துக்கள் ஆதல்.

## 2665. அருடரு மாயமும் அத்தனுந் தம்மில்

2665. அருடரு மாயமும் அத்தனுந் தம்மில்
ஒருவனை யீன்றவர் உள்ளுறு மாயை
திரிமல நீங்கிச் சிவாயவென் றோதும்
அருவினை தீர்ப்பதும் அவ்வெழுத் தாமே.

திருவருளைப் புரியும் அம்மையாகிய வனப்பாற்றலும் அவ்வாற்றலின் துணையும் அத்தனாகிய சிறப்பும் தம்மில் ஒன்றுகூடி ஆருயிர்க்குத் துணைபுரிந்து அவ்வுயிரைப் பேணி ஈன்றவராவர். அதனால் உள்ளுறு மாயை, நடப்பாற்றல், ஆணவம், கன்மம், மாயை ஆக்கம் ஆகிய ஐம்மலங்களும் நீங்கும். நீக்கவே 'சிவயசிவ' என்று ஓவாது கணிக்கும் நற்றவம் கைகூடும். அங்ஙனம் கைகூடவே அருவினையகலும். அவ் வருவினையை அகற்றுவதும் அச் 'சிவயசிவ' என்னும் திருவைந்தெழுத்துத் திருமறையேயாகும்.

அருடரு மாயமும் அத்தனும் - அருள்தங்கிய மோகினியும் உருத்திரனும். தம்மில் - தம்முள் கூடி. ஒருவனை - சாத்தனை. அவ்வெழுத்து - அந்தச் சி - வா - ய என்னும் எழுத்துக்கள்.

## 2666. சிவசிவ என்றே தெளிகிலர் ஊமர்

2666. சிவசிவ என்றே தெளிகிலர் ஊமர்
சிவசிவ வாயுவுந் தேர்ந்துள் அடங்கச்
சிவசிவ வாய தெளிவினுள் ளார்கள்
சிவசிவ வாகும் திருவரு ளாமே.

தெளிவறிவில்லாத எளிய ஊமர்கள் இம்மை உம்மை அம்மை என்னும் மூவிடத்துக்கும் துணையாக என்றும் பொன்றாது நிற்பது "சிவசிவ" என்னும் திருநான்மறைத் திருவைந்தெழுத்தாகும் என்னும் மெய்ம்மையினைத் தெளிகிலர். அத்துணைச் சிறந்த திருவெழுத்து மறையாம் 'சிவசிவ' என்று இடையறாது கணித்தல்வேண்டும். கணிக்கவே, அடங்கா மனமும் ஒடுங்கா உயிர்ப்பும் அடங்கி ஒடுங்கும். ஒடுங்கவே, 'சிவசிவ' என்னும் சிறப்பினை யுணர்ந்த தெளிவினராவர். தெளிவினராகவே 'சிவசிவ' வாக நிலைக்கும் திருவருளைப் பெறுவர். இம்மறை அறிவுநெறியினர் (2550) மேற்கொள்ள வேண்டிய அருமறையாகும்.

சிவசிவ வாய - சிவா என்னும் குறில் நெடில் எழுத்துக்களுக்குரிய மாத்திரைப்போது வாயுவை இரேசக பூரக கும்பகம் செய்தல்.

# 2667. சிவசிவ என்கிலர் தீவினை யாளர்

2667. சிவசிவ என்கிலர் தீவினை யாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளுஞ்
சிவசிவ என்றிடத் தேவரு மாவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே.

முன்பும் திருவருளால் ஒருவாது 'சிவசிவ' என்றோதும் பெருஞ்சூழ்வால் தாமும் ஓதும் வாய்ப்புப் பெறாதார் பலருளராவர். அவர்போல் தீவினையாளர் எவருமிலர். அத் தீவினையாளர் அப் பிழையினையுன்னி இப் பிறப்பிலேனும் 'சிவசிவ' என்று செம்மனத்தால் ஓதுதல்வேண்டும். அத் தீவினையாளர், அங்ஙனம் முன்வந்து ஓதுதல் அருமை. அதனால் தீவினையாளர் 'சிவசிவ' என்று ஓதுகின்றிலர். அத் தீவினை வேறொன்றானும் மாளாது. 'சிவசிவ' என்று இடையறாது ஓதுவதனால் மட்டுமே அத் தீவினை மாளும். 'சிவசிவ' என்று அம்மெய்யன்பர் இடையறாது ஓதிவரச் சிவவுலகச் செல்வராந் தேவராவர். 'சிவசிவ' என்று மேலும் ஓதச் சிவநிலை எய்தித் திருவடியின்பந் துய்ப்பர். பண்டை நற்றவத்தால் 'சிவசிவ' என்று ஓதும் சிவனெறியிற்சேரார் தீவினையாளராவர். அதனை ஓதும் சீவநிலையினர்க்குத் தீவினை வெற்பிற்றோன்றிய வெங்கதிர் கண்டவப், புற்பனிக் கெடுமாறுபோற் கெடும். மேலும் ஓதும் மெய்யன்பர்கள் நோன்பு நிலையினராவர். அவர் சிவவுருவினை வழிபடும் தேவராவர். பின்னும் ஓதுவோர் (2460) செறிவு நிலையினராவர். அவர்கள் சிவகதியாகிய திருவுரு

எய்துவர். மேலும், 'இத்திருப்பாட்டை ஈராறுமுறை ஏத்திவரின், ஒத்தவுரு நூற்றெட்டாம் ஓர்.' என்பதனால் திருமுறை பன்னிரண்டின் நினைவாய் இதனைப் பன்னிரண்டுமுறை நாளும் அனைவரும் ஓதுக. ஓதவே நூற்றெட்டுச் சிவம் செய்ததாகும்.

## 2668. நமவென்னு நாமத்தை நாவில் ஒடுக்கிச்

2668. நமவென்னு நாமத்தை நாவில் ஒடுக்கிச்
சிவமென்னு நாமத்தைச் சிந்தையு ளேற்றப்
பவமது தீரும் பரிசும தற்றால்
அவமதி தீரும் அறும்பிறப் பன்றோ.

'சிவயநம' என்னும் செந்தமிழ்த் திருமறையினை ஓதுமுறை ஒருபுடையொப்பாகச் சிவ என்னும் இரண்டு எழுத்தினையும் சிந்தையினுள்ளே அழுத்தமாகப் பதித்தல்வேண்டும். ய என்னும் ஓரெழுத்தினை மிடற்றின்கண் நிறுத்துதல்வேண்டும். நம என்னும் இரண்டு எழுத்தினையும் நாவின்கண் அடங்கி ஒடுங்குமாறு ஒடுக்குதல் வேண்டும். அங்ஙனம் மூவிடப் பயில்வாய் முறைமுறை ஓதுதல் ஓதுமுறையாகும். அங்ஙனம் ஓதிவர இருவினைப் பாவம் மருவாதகலும். இருவினையாவது எஞ்சுவினை ஏறுவினை என்னும் இரண்டுமேயாம். அம் மறையின் மெய்ம்மைத் தன்மையும் அதுவேயாம். அதனால் அறியாமையிருளும் தீரும். அறியாமை நீங்கவே அப்பொழுதே பிறப்பறும். பிறப்பறவே சிறப்புறும்.

அவமதி - அஞ்ஞானம்.

## 2669. சிவயா நமவெனச் சித்தம் ஒருக்கி

2669. சிவயா நமவெனச் சித்தம் ஒருக்கி
அவாயம் அறவே யடிமைய தாக்கிச்
சிவாய சிவசிவ வென்றென்றே சிந்தை
அவாயங் கெடநிற்க ஆனந்த மாமே.

மேலோதியவாறு 'சிவயநம' என ஓதித் தம் சித்தத்தினைச் சிவனார்க்குச் சிறந்த உறையுளாக்குதல்வேண்டும். அஃதாவது நீங்கா நினைவாய்ச் 'சிவசிவ' என்று எண்ணிக்கொண்டிருப்பது. அந்நிலையே சித்தம் ஒருக்கும் நிலையாகும். அங்ஙனம் இருப்பதால் பேரிடர் அறும். பேரிடர் அறவே அடிமைநிலை கைகூடும். கைகூடவே நுண்மைத் திருவைந்தெழுத்தின் மேனிலை மீநுண்மைத் திருவைந்தெழுத்தாகும். அதுவே 'சிவயசிவ' என்ப. இத் திருமறையினை எத்தகைய இடுக்கண்களும் அகலும்பொருட்டு எண்ணிக் கணித்து நண்ணி நவின்று நாளும் வருதல்வேண்டும். இதுவே திருவைந்தெழுத்தின்வழி நிற்குமுறை யாகும். அங்ஙனம் நிற்கவே திருவடிப்பேற்றின் இயற்கை உண்மையறிவு இன்ப எழில்நல நுகர்வு கைகூடும். அதுவே பேரின்பப் பெருவாழ்வு என்ப.

அவாயம் - அபாயம்.

## 2670. செஞ்சுடர் மண்டலத் தூடுசென் றப்புறம்

2670. செஞ்சுடர் மண்டலத் தூடுசென் றப்புறம்
அஞ்சண வும்முறை யேறி வழிக்கொண்டு
துஞ்சு மவன்சொன்ன காலத் திறைவனை
நெஞ்சென நீங்கா நிலைபெற லாகுமே.

செஞ்சுடர் மண்டிலம் ஞாயிற்று மண்டிலமாகும். அகத்தவப் பயிற்சியால் அம் மண்டிலத்தினூடு சென்று நிற்றல்வேண்டும். அதன்மேல் ஐயுணர்வும் 'தம்மை ஐந்து புலனும் பின்செல்லும் தகவாய்' ஒருங்கிக் கைகூடுதல்வேண்டும். கைகூடவே அவ்வழி ஏறிப்போய் அசைவின்றி இருத்தல் வாய்க்கும். சொல்லப்பட்ட அந்நேரத்து முழுமுதற் சிவபெருமான் நம்மைவிட்டு நீங்காச் செம்பொருளாய் நிலைபெற்றருள்வன். 'நெஞ்சென நீங்கா நிலைபே'றென்பதற்கு நம் நெஞ்சு நமக்கு வேறாக நில்லாது நம்முடன் வேறற விரவிநிற்பதுபோன்று புணர்ந்துநிற்பன் எனவும், நெஞ்சு நினைப்பூட்டுவதுபோன்று நினைப்பூட்டுவன் எனவும் கொள்க. இவ் வுண்மை வரும் அப்பர் அருண்மொழியான் உணரலாம்:

"துஞ்சும் போதும் சுடர்விடு சோதியை
நெஞ்சுள் நின்று நினைப்பிக்கும் நீதியை
நஞ்சு கண்டத் தடக்கிய நம்பனை
வஞ்ச னேனினி நான்மறக் கிற்பனே."
(5. 93 - 8.)

அஞ்சணவுமுறை - ஐயறிவும் ஒன்றுபடுமாறு. வழிக் கொண்டு - போய். துஞ்சுமவன் - உலகத்தை

மறந்திருக்கும் அவன். சொன்ன காலத்து - குறித்த காலத்தில்.

# 2671. அங்கமும் ஆகம வேதம தோதினும்

2671. அங்கமும் ஆகம வேதம தோதினும்
எங்கள் பிரானெழுத் தொன்றில் இருப்பது
சங்கைகெட் டவ்வெழுத் தொன்றையுஞ் சாதித்தால்
அங்கரை சேர்ந்த அருங்கல மாகுமே.

கருவி நூற்களும் இறைநூலும் மறைநூலும் முட்டாது ஓதினும் அம்மெய்களனைத்தும் எம்முழுமுதல் தலைவனாகிய சிவபெருமான் திருப்பெயராகிய 'சிவயநம' என்னும் திருவைந்தெழுத்தில் ஒப்பில் ஒன்றாகிய 'சி' கரத்தினுள் அமைந்து கிடக்கின்றன. அவ்வுண்மையினிடத்து ஒருசிறிதும் ஐயுறாது. அதனை மேற்கொண்டொழுகி உறுதியுடன் நிலைநிற்றல்வேண்டும். அங்ஙனம் நின்றால் இவ்வுடம்பாகிய அருங்கலம் அழகிய திருவடிப்பேறாகிய கரையினைச் சேரும். அதனால் 'அங்கரைசேர்ந்த அருங்கலம்' என்றோதினர். 'சி'கரம்பேசாஎழுத்தெனப்படும். எனினும் 'வ'கரத்துடன்கூடிச் 'சிவ' எனப் பேசும் எழுத்தாகவும் நிற்கும். சிகரத்தின்கண் சகரமாகிய மெய்யும், இகரமாகிய உயிரும், அகரமாகிய உயிர்க்கு உயிரும் உடங்கியைந்துள்ளன. சகரம் மாயையினையும், இகரம் ஆருயிரினையும், அகரம் பேருயிரினையும் ஒருபுடையொப்பாகக் குறிப்பனவாகும். அதனால் ஓரெழுத்தின் கண்ணேயே முப்பொருளுண்மை தேறப்படும். இவ் வருமை வேறு எம்மறைக் கண்ணும் காண்டல் அரிது. 'சகார ஞகாரம் இடைநா அண்ணம்' (தொல். எழுத்து - 90) உறப் பிறத்தலினால் இடனாய்

இடை நின்ற மாயைக்கு ஒருபுடையொப்பாகும். இகரமும் 'அ இ உ அம் மூன்றும் சுட்டு' (தொல். எழுத்து - 31) என்பதனால் இடைநிற்பதாகும். அம்முறையில் 'அடியார் நடுவுளிருக்கும்' ஆருயிர்கட்கு ஒருபுடை ஒப்பாகும். அகரம் (2352) தனிப்பெரும் முதன்மையதாய் எல்லாவற்றையும் இவர் தந்தூர்ந்து இயக்குவதாய்த் திரிபில்லதாய் இயற்கையாய் நிற்பதொன்றாகும். அதனால் அது விழுமிய முழுமுதற் சிவபெருமானுக்கு ஒருபுடையொப்பாகும். எல்லாவற்றையும் என்பது உயிரெழுத்துக்கள், மெய்யெழுத்துக்கள், உயிர்மெய்யெழுத்துக்கள் என்பன. அ, இ, உ மூன்றும் அன்பி, இன்பி, உண்பி என ஒருபுடையாகக் கூறலாம். அன்பை வேட்பது அன்பி. இன்பை வேட்பது இன்பி. உண்பிப்பதை வேட்பது உண்பி. இவை முறையே இறை, உயிர், இறையருளாகும்.

அங்கமும் - வேதத்துக்கு அங்கங்களாயுள்ள ஆறு சாத்திர நூல்கள். எழுத்தொன்றில் அதிசூக்கும பஞ்சாக்கரமாகிய ஓர் எழுத்தில். சங்கை கெட்டு - சந்தேகம் கொள்ளாமல். அங்கரை - அழகிய முத்திக்கரை. அருங்கலம் - அழகிய மரக்கலம்.

## 2672. நாயோட்டு மந்திரம் நான்மறை வேதம்

2672. நாயோட்டு மந்திரம் நான்மறை வேதம்
நாயோட்டு மந்திரம் நாத னிருப்பிடம்
நாயோட்டு மந்திரம் நாதாந்த சோதி
நாயோட்டு மந்திரம் நாமறி யோமன்றே.

நயப்பது நாய். நயக்கப்படுவோன் நாயன். நாயானது உயர்ந்த பண்பை உடையது. அவை தலைவனை அறிதல், தலைவன் உடைமையை உயிரினும் சிறப்பாக ஓம்புதல், தலைவன் துன்புறுத்தினும் இன்புறுத்தல், தலைவன் ஏவிய வழிநிற்றல், நன்றி மறவாமை, தலைவன் பொருட்டுத் தன்னுயிரையும் கொடுத்தல், மோப்பம் உணர்தல் முதலிய பலவாம். அத்தகைய நாய் மறந்து பிறரில் புகுமேல் அதனை ஓட்டுதற் பொருட்டு இகழ்ச்சிக் குறிப்பாகச் சொல்லும் சொல். 'சீ' என்பதாகும். இதனையே நாயோட்டு மந்திரம் என நவின்றனர். பழங்காலத்துப் பொதுவாக மந்திரங்களை உய்த்துணருமாறு மாத்திரைகளைக் கூட்டியும் குறைத்தும் (2751) ஓதுவாராயினர். அம் முறையில் ஈண்டுச் சிகரத்தைச் சீ என மாத்திரை கூட்டி ஓதுவாராயினர். எனவே நாயோட்டு மந்திரமாகிய சிகரத்தின்கண் நான்மறைவேதங்கள் அடங்கும். அச் சிகரமே நாதன் இருப்பிடமாகும். அச் சிகரமே அருஞ்சைவர் மெய் ஆறாறுக்கு அப்பாலுள்ள இயற்கை உண்மை அறிவின்பப் பேரொளியாகும். இவ்வுண்மையை அல்லாமல் வெளிப்படையாகக் கூறும்

'சீ' என்பதே நாயோட்டு மந்திரம் எனக்கொண்டு பொருள் காணலுறின் அப்பொருளை நாமறியோம் என்க.

நாயோட்டு மந்திரம் - சீ.

## 2673. பழுத்தன ஐந்தும் பழமறை யுள்ளே

2673. பழுத்தன ஐந்தும் பழமறை யுள்ளே
விழித்தங் குறங்கும் வினையறி வாரில்லை
எழுத்தறி வோமென் றுரைப்பர்கள் ஏதர்
எழுத்தை யழுத்தும் எழுத்தறி யாரே.

செந்தமிழ்ப் பழமறைகளுக்குள்ளே பழுத்து முதிர்ந்தன 'சிவயநம' என்னும் திருவைந்தெழுத்தாகும். அதனை 'நம் செயலற்று நாமற்றுப் பின் நாதன், தன் செயலாகவே நின்று' நாடுதல் வேண்டும். அந் நாட்டத்தினை விழித்துறங்கும் நிலை என்பர். இதனை அறி துயில் எனவும் கூறுப. இத்தகைய ஒன்றாவுயர்ந்த உண்மை நிலையினை அறிவாரில்லை. அறியாமைக் குற்றம் பொருந்திய மூடர்களாகிய ஏதர்கள் 'சிவயநம' என்னும் எழுத்தைந்தும் வன்மை மென்மை இடைமை கலந்தனவேயாம்; இவையனைத்தும் நெடுங்கணக்கிலுள்ளனவே; இவற்றை யாங்கள் அறிவோம் என்று கூறுவர். அவர்கள் அத் திருவைந்தெழுத்தை ஏனைய எழுத்துக்கள் போன்ற எழுத்தாகமட்டும் கருதினர். அது பிறப்பினுக்குரிய எழுத்தை அழுத்தும் படைக்கலமாகிய எழுத்தென. அறியார். அறிவரேல் உண்மையறிந்தாராவர். நடைமுறையொழுக்கிற் கைக்கொண்டு பெரும்பயனும் எய்துவர்.

ஐந்தும் - அஞ்சு எழுத்துக்களும். ஏதர் - மூடர். எழுத்தை அழுத்தும் - விதி எழுத்தை மாற்றும். எழுத்து - சி.

# 8. திருக்கூத்துத் தரிசனம்

8. திருக்கூத்துத் தரிசனம் 2674. எங்குந் திருமேனி எங்குஞ் சிவசத்தி

2674. எங்குந் திருமேனி எங்குஞ் சிவசத்தி
எங்குஞ் சிதம்பரம் எங்குந் திருநட்டம்
எங்குஞ் சிவமா யிருத்தலால் எங்கெங்குந்
தங்குஞ் சிவனருட் டன்விளை யாட்டதே.

சிவபெருமானுக்குத் திருமேனி சிவசத்தியே யாகும். அச் சிவனின் அருளாற்றல் எங்கும் நீக்கமற நிறைந்துள்ளது. அச் சிவபெருமான் தான் செய்யும் திருவருட்டொழில்களனைத்தும் சிவசத்தியின் வாயிலாகவே செய்தருள்கின்றனன். அச் சிவபெருமானும் திருவருளும் நுண்ணறிவு அம்பலமாம் திருச்சிற்றம்பலத்தின்கண் விளங்கியருள்கின்றனர். அதனால் எங்கும் சிதம்பரம் என்றனர். அவன் செய்தருளும் திருக்கூத்தும் எங்கும் நிறைந்தே. எங்கும் சிவமாகவே இருத்தலால் எல்லாவுயிர்களும் எல்லா வுலகங்களும் எல்லா உலகியற் பொருள்களும் சிவனிறைவில் சார்ந்து நிற்கின்றன. அதனால் அனைத்தும் சிவவண்ணமேயாம். அவ்வாற்றால் எங்கும் தங்கும் சிவனருள் திருவிளையாட்டே எல்லாமாகும்.

இம் மந்திரம் உலகமெல்லாம் சிவத்தின் திருக்கூத்தாம் என்பதை விளக்கிற்று.

# 2675. சிற்பரஞ் சோதி சிவனாந்தக் கூத்தனைச்

2675. சிற்பரஞ் சோதி சிவனாந்தக் கூத்தனைச்
சொற்பத மாம்அந்தச் சுந்தரக் கூத்தனைப்
பொற்பதிக் கூத்தனைப் பொற்றில்லைக் கூத்தனை
அற்புதக் கூத்தனை யாரறி வாரன்றே.

விழுமிய முழுமுதற் சிவபெருமான் ஆற்றியருளும் திருத்தொழில்கள் ஐந்து. அதுபோல் திருவருட்டிருக் கூத்தும் ஐந்தாகும். அவை முறையே சிவானந்தக்கூத்து, சுந்தரக்கூத்து, பொற்பதிக் கூத்து, பொற்றில்லைக் கூத்து, அற்புதக்கூத்து என்பனவாகும். அச் சிவபெருமானும் அவ்வக் கூத்தின் அடையால் திருப் பெயர் பெறுவன். அது 'சிவானந்தக் கூத்தன்' என்பது போன்றாகும். இவ் வைந்தும் முறையே அறிவு, ஆற்றல், அன்பு, ஆற்றற் கூடுதல், அறிவுக் கூடுதல் என்பனவற்றால் நிகழும் நிகழ்ச்சிகளாகும். இவற்றை வரும் வெண்பாவால் நினைவு கூர்க:

அறிவாற்றல் அன்போ டறிவாற்றல் தம்மில்
நெறியாற்றல் தான்மிகல் நேரும் - அறிவுமிகல்
இவ்வைந்தா லாம்கூத் தெழிற்பெயரும் எம்மாற்குச்
செவ்வைசிவ இன்பக்கூத் தன்.

சொற்பதம் - சொல்லும்படியான பதங்கள். இம் மந்திரம் (1) சிவானந்தக் கூத்து, (2) சுந்தரக் கூத்து, (3) பொற்பதிக் கூத்து.
(4) பொற்றில்லைக் கூத்து, (5) அற்புதக் கூத்து எனச் சிவநடனம் ஐவகைப்படும் என்பதை உணர்த்திற்று.

# 2676. திருமந் திரமே சிதம்பரந் தானும்

2676. திருமந் திரமே சிதம்பரந் தானும்
திருமந் திரமே சிறந்த உபாங்கந்
திருமந் திரமே திருக்கூத்தின் செய்கை
திருமந் திரமே திருமேனி தானே.

திருவைந்தெழுத்தே அழகிய மந்திரமாகும். அத் திருமந்திரமே தில்லைத் திருச்சிற்றம்பலம். அத் திருமந்திரமே சிறந்த துணையுறுப்பாகும். அத் திருமந்திரமே திருக்கூத்தின் செய்கையாகும். அத் திருமந்திரமே சிவன் திருமேனியாகும். 'எடுத்த பொற்பாதம்' இடப் பாலுள்ளது. அது நகரம்; வயிறு மகரம்; திருத்தோள் சிகரம்; திருமுகம் வகரம்; திருமுடி யகரம். உடுக்கையுள்ள திருக்கை வலப்பாலாகும். அது சிகரம்; நல்லுயிர் நாடும் திருவடியினைச் சுட்டிக்காட்டும் திருவருட் பகுதியாம் இடப்பால் திருக்கை வகரம்; வலப்பால் திரு அஞ்சலிக்கை யகரம்; மழுவேந்திய இடப்பால் திருக்கை நகரம்; ஊன்றிய வலப்பால் திருவடி மகரம். இம் முறையாகத் திருமேனியினைக் கீழிருந்து மேலும் மேலிருந்து கீழுமாக அடைவுபடுத்தித் திருவைந்தெழுத்தின் வைத்துக் காண்க. இனக்கோளாக திருவாசி ஓங்காரம் எனக் (2271) காண்க. உற்ற இத் திருவைந்தெழுத்தும் அன்பறிவாற்றல் இன்ப உடைமைகளின் எழிலாகவும் கொள்க. 'ஆடும்' 'சேர்க்கும்' 'ஓங்காரம்' என்னும் மூன்று வெண்பாவையும் ஓதிப் புகையொளி காட்டி வழிபடுக.

திருமந்திரம் - அழகிய அஞ்செழுத்து மந்திரம்.

## 2677. திருமேனி தானே திருவரு ளாகுந்

2677. திருமேனி தானே திருவரு ளாகுந்
திருமேனி தானே திருஞான மாகுந்
திருமேனி தானே சிவநேய மாகுந்
திருமேனி தானே தெளிந்தார்க்குச் சித்தியே.

மேலோதியவாறு அஞ்செழுத்தால் அமைந்த திருமேனியே திருவருளாகும். அத் திருமேனியே திருவடி யுணர்வாகும். அத் திருமேனியே அறியப்படும் சிவ உண்மையறிவு இன்ப வடிவாகும். திருவருளால் இவ் வுண்மையினைத் தெளிந்தார்க்கு அத் திருமேனியே திருவடிப் பேறாம் சித்தியாகும்.

சிவானந்தக் கூத்து

## 2678. தானந்தம் இல்லாச் சதானந்த சத்திமேல்

2678. தானந்தம் இல்லாச் சதானந்த சத்திமேல்
தேனுந்தும் ஆனந்த மாநடங் கண்டீர்
ஞானங் கடந்து நடஞ்செய்யும் நம்பிக்கங்கு
ஆனந்தக் கூத்தாட ஆடரங் கானதே.

பொன்றும் தன்மையினை என்றும் எய்தாதது திருவருள். அத் திருவருள் எப்பொழுதும் ஒப்பிலா இன்பவடிவமாகவே யிருக்கும்
அத் திருவருளின்மேல் திருவடிச் செந்தேன் முந்திப் பொழியும். அங்குச் சிவபெருமான் இன்பத் திருக்கூத்தியற்றியருளுகின்றனன். சுட்டுணர்வு சிற்றுணர்வு அவற்றான் அறியப்படும் பொருள்நிலை எல்லாங் கடந்த நிலை திருவருள் நிலையாகும். அந் நிலையின்கண் சிவபெருமான் திருக்கூத்தியற்றியருளுகின்றனன். அங்ஙனம் இயற்றியருளும் சிவன் திருப்பேர் நம்பி. அத்தகைய நம்பிக்கு அத் திருவருள் நிலையே ஆனந்தக் கூத்தாடற்குரிய ஆடரங்காகும்.

தேன் உந்தும் - இன்பம் பிறக்கும். நம்பிக்கு - சிவபிரானுக்கு. ஆனந்தம் - ஆனந்த சத்தி.

## 2679. ஆனந்தம் ஆடரங் கானந்தம் பாடல்கள்

2679. ஆனந்தம் ஆடரங் கானந்தம் பாடல்கள்
ஆனந்தம் பல்லியம் ஆனந்த வாச்சியம்
ஆனந்த மாக அகில சராசரம்
ஆனந்தம் ஆனந்தக் கூத்துகந் தானுக்கே.

சிவபெருமான் ஆருயிர்கள் எல்லாமும் பேரின்பம் எய்துதற் பொருட்டே திரு ஐந்தொழில் புரிந்தருள்கின்றனன். அதனால் எல்லாம் இன்பமயமேயாம். நோய்ப்பட்டார் நோய் நீங்கி நலமுற்ற காலத்து முன்நோய் நீங்குதற் பொருட்டு நிகழ்ந்த மருந்து மருத்துணா முதலிய அனைத்தும் இன்பத்திற்கு வாயில் என்னும் உண்மையினை உணர்வர். உணர்ந்ததும் அதனையும் இன்பமாகவே கருதுவர். இது போன்றதாகும் இறைவன் திருவருட் செயலும். அச் சிவன் ஆடும் அரங்கமும் இன்ப நிலையமாகும். ஆண்டு நிகழும் திருமுறைப் பாடல்களும் இன்பமேயாம். குடமுழா முதலிய பலவகை வாழ்த்தியங்களும் இன்பமேயாம். குழல் யாழ் போன்ற வாழ்த்தியங்களும் இன்பமேயாம். அனைத்து உலகத்திலுமுள்ள இயங்கு திணை நிலைத்திணைப் பொருள்கள் எல்லாமும் இன்புறுதற் பொருட்டே சிவபெருமான் திருக்கூத்தியற்றியருள்கின்றனன். அதனால் அவைகளும் நீங்கா இன்பம் உறுகின்றன. இன்பக் கூத்தினை இடையறாது உஞற்றி அதனால் கூத்துக்காணும் சிவபெருமானுக்கும் உகப்பே - உயர்நிலையே உண்டாகின்றது ஆயின் திருக்கூத்து எல்லார்க்கும் எவைக்கும் பேரின்பமேயாம்.

பல்லியம் - பல இசை; கொட்டுக் கருவிகள். வாச்சியம் அபிநயம். அகில....னுக்கே - கூத்தப்பிரானுக்கு ஐந்தொழில் கூத்து. ஆனந்தமே என்னெனின், கேவல நிலையிலுள்ள ஆன்மாக்கள் முத்தி யெய்துவார்கள் என்று எண்ணியே.

## 2680. ஒளியாம் பரமும் உளதாம் பரமும்

2680. ஒளியாம் பரமும் உளதாம் பரமும்
அளியார் சிவகாமி யாகுஞ் சமயக்
களியார் பரமுங் கருத்துறை யந்தத்
தெளிவாஞ் சிவானந்த நட்டத்தின் சித்தியே.

அறிவுப் பேரொளியாய் விளங்கும் முழுமுதலும், என்றும் மாறா உண்மையாகத் திகழும். முழுமுதலும், பேரருள் நிறைந்த சிவகாமியே யாகும். 'சிவகாமி' என்பது சிவனார் விழையும் விருப்பமே தன் விருப்பமாகக் கொண்டொழுகும் 'காமி' என்பதாம். நன்னெறிக்கண் நிற்பார்க்கு அளவிடப்படாத பேரின்பப் பெருவாழ்வை அருளிச் செய்யும் முழுமுதலும்,
பேரன்பர் திருவுள்ளத்தின்கண் வெளிப்பட்டிருந்தருளித் தெளிவினை நல்கும் முழுமுதலும் அச் சிவபெருமானே யாவன். இவையனைத்தும் ஆருயிர்கட்குக் கைவருவது அப் பெருமானார் செய்தருளும் திருக்கூத்தினைக் கண்டு கும்பிட்ட திருப்பேற்றின் பயனாலாகும்.

ஒளியாம் பரம் - ஞானமாகிய பரம். உளதாம் பரம் - சத்தாகிய பரம். அளி - கருணை. சிவகாமி - சிவானந்த சத்தி. களியார் பரம் - ஆனந்தமாகிய பரம். நட்டத்தின் சித்தி - சிவானந்தக் கூத்தின் பயனும்.

## 2681. ஆன நடமைந் தகள சகளத்தர்

2681. ஆன நடமைந் தகள சகளத்தர்
ஆன நடமாடி ஐங்கரு மத்தாக
ஆன தொழிலரு ளாலைந் தொழிற்செய்தே
தேன்மொழி பாகன் திருநட மாடுமே.

தனக்கெனத் திருவுருவம் இல்லாத சிவபெருமான் ஆருயிர்களின் பொருட்டுத் திருவுருக் கொண்டருள்வன். அத் திருவுருவும் மாயாகாரியமாகிய நம்மனோர் பருவுருவம் போன்றதன்று. அவன் மேற்கொள்ளும் திருவுருவம் திருவருளிற் கொள்ளும் திருவுருவம் ஆகும். கல் முதலிய பொருள்களால் அமைக்கப்பட்ட திருவுருவம் நீரில் கலக்குங்கால் கரையாது வேறுபட்டு அடியிற் சென்று விளங்கித் தோன்றும். நனிமிக இனிக்கும் இனியதோர் கற்கண்டால் செய்த திருவுருவம் நீரிற் கரையுங்கால் வேறுபடாது ஒன்றாகிக் கரைந்துவிடும். அதுபோல் மாயாகாரிய வுருக்கள் திருவருள் வெளியில் ஒன்றாய்க் கரையாது வேறுபட்டு நிற்கும். அருளுரு அத் திருவருள் வெளியில் கரைந்து ஒன்றாகிவிடும். அவன் அருட்பெருங் கூத்தினை ஒருவாது இயற்றுகின்றனன். அதுவும் ஆருயிர்களின் நன்மையின் பொருட்டேயாகும். அவன் திருவருளால் புரியும் திருத்தொழில்கள் ஐந்து. அவை முறையே, படைத்தல், காத்தல், துடைத்தல், மறைத்தல், அருளல் என்ப. அவன் தேன்போலும் இனிமையும் நன்மையும் கனிமையும் அமைந்த மொழிகளையுடைய அம்மையைச் செம்பாகமாகவுடைய திருவுருவினன். அவ் வுருவினைக் கொண்டே அவன் திருக்கூத்தியற்றுகின்றனன்.

அகள சகளத்தர் - உருவம் இல்லாதவர் உருவத்தோடு கூடி, ஐங்கருமத்தாக - படைப்பாதி ஐந்து தொழில்களுக்காக. அருளால் - அருட்சத்தியைக்கொண்டு.

## 2682. பூதாண்ட பேதாண்ட போகாண்ட யோகாண்ட

2682. பூதாண்ட பேதாண்ட போகாண்ட யோகாண்ட
மூதாண்ட முத்தாண்ட மோகாண்ட தேகாண்ட
தாகாண்ட மைங்கரு மத்தாண்ட தற்பரத்து
ஏகாந்த மாம்பிர மாண்டத்த என்பவே.

அண்டங்கள் ஒன்பது வகைப்படும். அவை ஐம்பெரும் பூதங்களானாகிய அண்டமும், அவற்றின் வேறுபட்டவையாய்க் காணப்படும் பேத அண்டமும், ஆங்காங்கே இருவினைக் கீடாக இன்ப துன்பம் நுகரும் நுகர்வண்டமும், செறிவினர் சேர்ந்து பயன் துய்க்கும் யோக அண்டமும், இவை யனைத்தையும் பரவி மேலாக நிற்கும் மூதாண்டமும், திருவடிப் பேற்றின் சிறப்பினையருளும் முத்தாண்டமும். இத் திருவடிப்பேற்றின்கண் நீங்காப் பெரு விழைவு கொள்ளும் மோகாண்டமும், நுகர்வுக்குக் கருவியாம் தேகாண்டமும், நுகர்வின்மேன் மிகு விழைவாகிய வேட்கை கொள்ளும் தாகாண்டமும் என்பன. இவ் வண்டங்கள் அனைத்தையும் ஐம்பெரும் தொழிலால் ஆண்டுகொண்டருள்பவன் சிவன். அவனே முழுமுதல்வன். அவன் திருவடிக்கண் வேறற ஒற்றித்து நிற்பதே பிரமாண்டம் என்ப. பிரமாண்டம் - பெரும்பேருலகம்; சிவனார் - திருவண்டம்.

பூதாண்ட பேதாண்ட - ஐம்பூதங்களால் ஆக்கப்பட்ட மாறுபட்ட வெவ்வேறு பல ஆயிர அண்டங்களும்.

## 2683. வேதங்க ளாட மிகுஆ கமமாடக்

2683. வேதங்க ளாட மிகுஆ கமமாடக்
கீதங்க ளாடக் கிளரண்டம் ஏழாடப்
பூதங்க ளாடப் புவன முழுதாட
நாதங்கொண் டாடினான் ஞானானந் தக்கூத்தே.

வேதங்களாகிய மறைநூல்கள் தொழிற்பட என்பதே ஆட என்பதன் பொருளாகும். தொழிற்படுதலாவது உலகோர் ஓதியும் ஓதுவித்தும் அதன்படி ஒழுகலாற்றில் மேற்கொண்டொழுகி உய்யத் துணை நிற்பது. ஆடுதல் - பயன் கொள்ளுதல். உலகவொழுக்கினும் உயர்ந்தது சிவ வொழுக்கம் அதனால் மிகு ஆகமம் ஆட என்றருளினர். ஆகமம் - இறைநூல் வேதத்தை நெறி நூல் எனவும், ஆகமத்தைத் துறைநூல் எனவுங் கூறுப. கீதங்களாகிய பண் நூற்கள் ஆட, விளக்கமிகச் சொல்லப் பெறும் ஏழு அண்டங்களும் ஆட, ஐம்பெரும் பூதங்களும் ஆட, இருநூற்று இருபத்து நான்கு என்னும் எண்ணுட்பட்ட உலகங்கள் முழுவதும் ஆட முப்பத்தாறாம் மெய்யாகிய நாததத்துவத்தை இடனாகக் கொண்டு சிவபெருமான் திருக்கூத்தாடுகின்றனன். அத் திருக்கூத்தே உண்மையறிவின்ப ஒருபெருங் கூத்தாகும். ஆடுதல் - தொழிற்படுதல்; புடைபெயர்தல்.

வேதங்கள் ஐந்தில் - அறம், பொருள், இன்பம், வீடு என நான்கும் ஆகம நூல்களும் சேர்ந்து. ஐந்து ஓதுங் கலை....சித்தனே - பேசப்படுகின்ற கலை, காலம், ஊழி, அண்டம், போதம் ஆக ஐந்திலும் ஆடும் சித்தன்.

## 2684. பூதங்கள் ஐந்திற் பொறியிற் புலனைந்தில்

2684. பூதங்கள் ஐந்திற் பொறியிற் புலனைந்தில்
வேதங்கள் ஐந்தின் மிகுமா கமந்தன்னில்
ஓதுங் கலைகாலம் ஊழி யுடன்அண்டப்
போதங்கள் ஐந்திற் புணர்ந்தாடுஞ் சித்தனே.

புலன்நுகர்வினுக்கு இடமாகக் காணப்படும் ஐம்பெரும் பூதங்களிலும், புலனைக் கொள்ளும் ஐம்பொறிகளிலும், அப் பொறிகட்குப் பொருளாம் ஐம்புலன்களினும், நெறி நூலாம் வேதங்களினும், திருவைந்தெழுத்தின் சிரிப்பான் மிகுந்து சிவ வழிபாட்டினையே கிளர்ந்தெடுத்து ஓதும் துறை நூலாம் ஆகமங்களிலும் ஓதியொழுகும் ஏனைக் கலைகளிலும், காலத்திலும், ஊழியிலும், அண்டத்துணர்வாகிய ஐந்தினும் விழுமிய முழுமுதற் சிவபெருமான் வேறறப் புணர்ந்து திருக்கூத்தாடுவன். அவனே சித்தன் என்னும் செந்தமிழ்ச் சிறப்புத் திருப்பெயரினையுடையன்.

## 2685. தேவர் சுரர்நரர் சித்தர்வித் தியாதரர்

2685. தேவர் சுரர்நரர் சித்தர்வித் தியாதரர்
மூவர்கள் ஆதியின் முப்பத்து மூவர்கள்
தாபதா சத்தர் சமயஞ் சராசரம்
யாவையும் ஆடிடும் எம்மிறை யாடவே.

சிவபெருமான் எங்கணும் நீக்கமற நின்றருளும் சிறப்பினன். அதனால் எவ்வுயிரும் எப்பொருளும் புடைபெயர்வதானால் அவன் திருவுள்ளப் புடைபெயர்வின் திருக்குறிப்பானாகும். அதனால் எல்லாப் புடைபெயர்ச்சியும் அவன் புடைபெயர்ச்சியே எனக் கூறுவர். அதனையே அவன் ஆடல் எனவும் கூறுப. பிறப்புத் தேவரும், சிறப்புத் தேவராகிய சுரரும், நரரும், சித்தரும், வித்தியாதரரும், மூவர்களும், நால்வேறியற்கைப் பதினொரு மூவராகிய முப்பத்து மூவர்களும், தாபதரும், எழுமுனிவரும், சமயத்தாரும், இயங்குதிணைப் பொருள், நிலைத்திணைப் பொருள் ஆகிய அனைத்தும் சிவபெருமான் ஆட ஆடும். பிறப்புத் தேவர் - வானுலகத்தே இயற்கைப் பிறப்பெய்தியவர். சிறப்புத் தேவர் நிலத்திற் பிறந்து புண்ணியப் பேற்றால் தேவராய்ச் சிறப்புற்றவர். நரர் - மக்கள். முப்பத்து மூவர் ஆதித்தர் பன்னிருவர். உருத்திரர் பதினொருவர், வசுக்கள் எண்மர், மருத்துவர் இருவர். தாபதர் - முனிவர். சமயம் சமயத்தோர். நால் வேறியற்கை - ஆதித்தர், உருத்திரர், வசுக்கள், மருத்துவர் என்னும் நால்வகை இயற்பிரிவு.

தேவாசுரர் - தேவர்களும் அசுரர்களும். சித்தர் - வாமிகள்.

சூத்தரக் கூத்து

## 2686. அண்டங்கள் ஏழினுக் கப்புறத் தப்பாலும்

2686. அண்டங்கள் ஏழினுக் கப்புறத் தப்பாலும்
உண்டென்ற சத்தி சதாசிவத் துச்சிமேற்
கண்டங் கரியான் கருணை திருவுருக்
கொண்டங் குமைகாணக் கூத்துகந் தானன்றே.

ஏழண்டங்கட்கு அப்பாலும் அதற்கப்பாலும் உண்டு என்று ஓதப்படும் சத்தியாகிய திருவருள், அருளோன் என்று சொல்லப்படும் சதாசிவ தத்துவத்துச்சியின்மேற் கண்டங்கரியதாய் அருளே திருவுருவாய் நின்று உமையம்மையார் கண்டுகளிக்கத் திருக்கூத்தியற்றும். சிவபெருமான் செய்யும் செயல் அனைத்தும் சிவசத்தியின் செயலே. அதனால் திருவருள் கூத்தியற்றும் என ஓதினர்.

சதாசிவத்துக்கு - சதாசிவ தத்துவம் அல்லது சாதாக்கிய தத்துவத்தின் தலையில்.

## 2687. கொடுகொட்டி பாண்டரங் கோடுசங் கார

2687. கொடுகொட்டி பாண்டரங் கோடுசங் கார
நடமெட்டோ டைந்தாறு நாடியுள் நாடுந்
திடமுற் றெழுந்தேவ தாருவாந் தில்லை
வடமுற்ற மாவன மன்னவன் தானே.

சிவபெருமான் செய்தருளும் திருக்கூத்தின் திருப்பெயர்கள் வருமாறு: கொடுகொட்டி, பாண்டரங்கம், கோடு, ஐவகைச் சங்காரத்துடன் காளிக்கூத்து முனிக்கூத்து இன்பக் கூத்துங் கூடிய எட்டு, ஐந்தொழிற்கூத்து, அறுசமயக்கூத்து என இருபத்திரண்டென்பன. இக்கூத்துக்கள் பல்வேறு காலங்களில் பல்வேறு இடங்களில் நிகழ்த்தியருளப் பெற்றனவாகும். அவற்றுள்ளும் சிறந்தன இரண்டென்ப. அவை முறையே உறுதியின் விழைவு பொருந்த எழுந்த தெய்வத் தன்மை வாய்ந்த தில்லைவனக்காட்டிலும், அதுபோன்று சிறந்த ஆலவனக் காட்டிலும் நிகழ்த்தியன என்ப. தில்லைவனம் உலக நிகழ்வாம் அன்பியற் கூத்தாகும். ஆலவனம் திருவடி நிகழ்வாம். அருளியற் கூத்தாகும். இவற்றால் நிகழ்வன இன்பியல் வாழ்வாகும். ஐவகைச் சங்காரம்: நீக்கல், நிலைப்பித்தல், நுகர்வித்தல், அமைதியாக்கல், அப்பாலாக்கல் முதலிய கலைப் பகுதிகள் ஒடுங்கும் ஒடுக்கமாகும். கலை: நிவிர்த்தி, பிரதிட்டை, வித்தை, சாந்தி, சாந்தியதீதை என ஐவகைப்படும். இவற்றை முறையே நீக்கல் முதலாகக் குறிக்கப் பெற்றுள்ளன. பாண்டரங்கம் என்பது 'பாண்டரங்' எனநின்றது செய்யுளின் திரிபு.

ஆடலினை அல்லிய முதல் கொடுகொட்டியீறாகப் பதினொன்றென்ப. அவற்றை வரும் சிலப்பதிகார அரங்கேற்றுகாதையின் மேற்கோள் செய்யுளான் உணர்க:

"கடையமயி ராணிமரக் கால்விந்தை கந்தன்
குடைதுடிமா லல்லியமல் கும்பம் - சுடர்விழியாற்
பட்டமதன் பேடுதிருப் பாவையரன் பாண்டரங்கம்
கொட்டியிவை காண்பதினோர் கூத்து."

"பாண்டரங்கம் முக்கண்ணா னாடிற் றதற்குறுப்,
பாய்ந்தன வாறா மெனல்."

"கொட்டி கொடுவிடை யோனாடிற் றதற்குறுப்,
பொட்டிய நான்கா மெனல்."

"புரமெரித்தல் சூர்மாத் துளைபடுத்தல் கஞ்ச
னுர னெரித்தல் வாணனைவான் உய்த்தல் - பெரிய
அரன்முத லாகவே லன்முதன் மாயோ
னமர்முத லாடிய வாறு."

இம்மந்திரம் கூத்துக்களின் வகைகளை விளக்குகின்றது :-

(1) கொடு கொட்டி - எல்லாவற்றையும் அழித்து நின்று ஆடும் கூத்து.

(2) பாண்டம் - பாண்டரங்கம் எனவும்படும் முப்புரங்களை எரித்த காலத்தில் அந் நீற்றினை அணிந்து ஆடிய கூத்தின் பெயர்.

(3) கோடு - காபாலக் கூத்து. பிரமனது சிரசைக் கையில் ஏந்திக் கொண்டு ஆடிய கூத்து.

(4) சங்காரம் - நாள்தோறும் நடக்கும் அழித்தற் றொழிலுக்காக ஆடும் கூத்து.

(5) நடம் எட்டு - ஐந்தொழில் நடத்துடன் காளிக்கூத்து, முனி நடனம், ஆனந்த நடனம் ஆக எட்டு.

(6) ஐந்து - குற்றாலம், கூடல், தில்லை, பேரூர், ஆலங்காடு இவைகளில் ஆடிய கூத்துக்கள் ஐந்து.

(7) ஆறு - ஆறு சமயங்களிலும் அவ்வவர் சமயத்துக்கேற்ற கூத்துக்கள் தேவதாருவாம் தில்லை - தெய்வத்தன்மை பொருந்திய தில்லை மரங்கள் உள்ள வனம். வடம் - ஆலமரம். மாவனம் - பெரியகாடு.

## 2688. பரமாண்டத் தூடே பராசத்தி பாதம்

2688. பரமாண்டத் தூடே பராசத்தி பாதம்
பரமாண்டத் தூடே படரொளி ஈசன்
பரமாண்டத் தூடே படர்தரு நாதம்
பரமாண்டத் தூடே பரன்நட மாமே.

பரமாண்டம் எனப்படும் அப்பால் அண்டத்தூடு பராசத்தியாகிய வனப்பாற்றலின் திருவடி காணப்படும். அவ்வண்டத்தூடு நனிமிகு ஒளியுடைய ஆண்டவன் காணப்படுவன் அதனூடு ஓசை மெய்யாகிய நாதம் காணப்படும். அவ்வண்டத்தூடு பரனாகிய சிவபெருமான் நடமாடி யருள்கின்றனன்.

## 2689. அங்குச மென்ன எழுமார்க்கம் போதத்தில்

2689. அங்குச மென்ன எழுமார்க்கம் போதத்தில்
தங்கிய தொந்தி எனுந்தாள ஒத்தினில்
சங்கரன் மூலநா டிக்குள் தரித்தாடல்
பொங்கிய காலம் புகும்போகல் இல்லையே.

செம்பொருட்டுணிவின் நன்னெறியே சன்மார்க்கம் எனப்படும். அந்நன்னெறி அங்குசம் என்னும் தோட்டியை ஒத்தது. அஃதாவது 'உரன் என்னும் தோட்டியான் ஓரைந்துங் காக்கும், வரனென்னும் வைப்பு' நெறியெனக் குறிக்கும் குறிப்பாகும். அந்நன்னெறியின் முழுமுதல்வன் சங்கரன் ஆவன். அவன் நடுநாடியினுள் அறிவினில் தங்கித் தொம்திம் எனத் தாளமிசைத்துத் திருக்கூத்தாடுவன். அக்காலம் திருவருள் பொங்குங் காலமாகும். அத் திருவருள் நம்மாட்டுப் புகும். ஆனால் புறம்போகும் போக்கு இல்லை என்க.

அங்குசம் என்ன எழுமார்க்கம் - பிற சமயங்களை அடக்குவதில் அங்குசம் போன்றுள்ள சன்மார்க்கமாகிய சைவம். போதத்தில் - ஞானத்தில் தொந்தி - தொம்தீம் எனத் தட்டும் தாளம். மூலநாடி - சுழுமுனை நாடி பொங்கிய காலம் நெடுங்காலம் போகல் - அழிதல்.

# 2690. ஆனத்தி யாடிப் பின்னவக் கூத்தாடிக்

2690. ஆனத்தி யாடிப் பின்னவக் கூத்தாடிக்
கானத்தி யாடிக் கருத்தில் தரித்தாடி
மூனச் சுழுனையுள் ஆடி முடிவில்லா
ஞானத்துள் ஆடி முடித்தான்என் நாதனே.

ஆருயிர்களை உய்வித்தற்பொருட்டு அவ்வுயிர்கள்மாட்டு அளவிறந்த அன்பு பூண்டு படைத்தல் முதலிய ஐந்தொழிற் றிருக்கூத் தாடுகின்றனன் சிவன். ஆடியபின்பு அருவம் நாலு, உருவம் நாலு, அருவுருவம் ஒன்று ஆக ஒன்பது திருவுருவங்களிடமாக நின்று ஒன்பது வகையான திருக்கூத்தாடுகின்றனன். பேரொடுக்கப் பெருங்காட்டை விழைந்து பேரூழிப் பெருங்கூத்தாடுகின்றனன். ஆருயிர்களின் கருத்தினிலும் தங்கியாடுகின்றனன். மூன்று நாடிகளும் ஒருங்குகூடும் நடுவிடமாகிய சுழுனையுள்ளும் திருக் கூத்தாடுகின்றனன். எவற்றிற்கும் மேலாய் முடிவு பேறில்லாத மெய் யுணர்வின்கண் படிப்படியாக வந்து திருக்கூத்தாடி நிறைந்துநின்றனன். அவனே அடியேனுடைய ஆருயிர் நாதனாவன்.

இம் மந்திரம் ஆனத்தி, அதாவது ஐந்தொழில் நடன முதல் ஞானக்கூத்து ஈறாக ஆடும் ஆட்டங்களைக் குறித்தது. நவக்கூத்து சிவத்தின் ஒன்பது பேதமான கூத்து. (அருவம் 4, உருவம் 4, அருவுருவம் 1 ஆக 9.)

## 2691. சத்திகள் ஐந்துஞ் சிவபேதந் தானைந்தும்

2691. சத்திகள் ஐந்துஞ் சிவபேதந் தானைந்தும்
முத்திகள் எட்டும் முதலாம் பதமெட்டுஞ்
சித்திகள் எட்டுஞ் சிவபதந் தானெட்டுஞ்
சுத்திகள் எட்டீசன் தொல்நட மாடுமே.

திருவருளாற்றலின் வகை ஐந்தாகும். அவை முறையே வனப்பாற்றல் நடப்பாற்றல் எனவும், நடப்பாற்றலின் வகையாகிய அறிவாற்றல், தொழிலாற்றல், அன்பாற்றல் எனவும் வழங்கப்படும். இத் திருவருளாற்றல் ஐந்தும் முறையே பராசத்தி, ஆதிசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி, இச்சாசத்தி எனப்படும். இவ்வாற்றல் நிலைக்கு ஏற்றவாறு சிவபெருமானும் ஐவகையாக நின்றருள்வன். முத்தியாகிய வீடுபேறு எட்டென்ப. அவை முறையே சீலம், நோன்பு, செறிவு, அறிவு
என்னும் நன்னெறி நான்மையின் பேறுகள் நான்கு. அவை உருவ நிலையிலும் அருவ நிலையினுமாக எட்டாகும். ஆண்டான் மெய்யின்கண் உறையும் அறிவு முதல்வர் எண்மர் நிலையும் பதமெட்டாகும்; எண்பெரும் சித்திகளும் சித்தி எட்டாகும். ஐம்பெரும் பூதங்கள், ஞாயிறு, திங்கள், ஆருயிர் என்னும் எட்டும் சிவனிலை எட்டாகும். இவ்வெட்டின் உண்மை காண்டல் சுத்தியாகிய தூய்மை எட்டாகும். இவையனைத்தினும் முழுமுதற் சிவபெருமான் முடிவு பேறில்லாத தொன்மைத் திருநடம் நடிப்பன். சிவபெருமான் திருநடமே சிறப்பாக உலகுயிர்களை ஆடவும்

பாடவும் கூடவும் செய்கின்றது. இவையே திருநடக் குறிப்பாகும்.

சத்திகள் ஐந்து - பரை, ஆதி, இச்சை, கிரிபை, ஞானம். சிவபேதந்தான் ஐந்து - சிவத்தின் உருவ பேதங்களாகிய அயன், அரி, அரன், ஈசன். அருவுருவ பேதமாகிய சதாசிவமும். முத்திகளெட்டும் - பதமுத்திகள் எட்டும். கணபதி - அயன், அரி, முருகன், உருத்திரன், இந்திரன், சண்டி, ஈசன் கயிலை ஆக எட்டு. பதம் எட்டும் - உருவ அருவ பேதமாயுள்ள சாலோகாதி எட்டும். சித்திகள் எட்டும் - அணிமா முதலிய சித்திகள் எட்டும். சிவபதம் தானெட்டும் - சைவ சம்பந்தமான பதங்கள் எட்டும். சுத்திகள் எட்டும் - (1) பார்த்தல் (நிரீட்சணம்) (2) தெளித்தல் (புரோக்கணம்) (3) தட்டுதல் (தாடனம்) (4) மூடுதல் (அப்யுக்கணம்) (5) முத்தட்டு (தாளத்திரயம்) (6) திசைக்கட்டு (திக்குபந்தனம்) (7) வளைத்தல் (அவகுண்டனம்) (8) அமிர்தம் சொரிதல் (தேனுமுத்திரை).

## 2692. மேகங்கள் ஏழும் விரிகடல் தீவேழுந்

2692. மேகங்கள் ஏழும் விரிகடல் தீவேழுந்
தேகங்கள் ஏழுஞ் சிவபாற் கரன்ஏழுந்
தாகங்கள் ஏழுடன் சாந்திகள் தாம்ஏழும்
ஆகின்ற நந்தி யடிக்கீழ் அடங்குமே.

எழுவகை மேகங்களும், எழுவகைத் தீவுகளும், எழுவகை யுடல்களும், சிவ ஞாயிறு ஏழும், ஏழுநாவினையுடைய தீயும், சாந்தியாகிய எழுவகை அடக்கங்களும் சிவபெருமான் திருவடிக்கீழ் அடங்கும். எழுவகை மேகங்கள் ஆவன: 'சம்வர்த்த மாவர்த்தம் புட்கலாவர்த்தஞ், சங்காரித்தந் துரோணம் காளமுகி, நீலவருணமேழ் மேகப் பெயரே' (பிங்கலம் - 71.) என்பனவாம். எழுவகைத் தீவுகளான: நாவலந் தீவு, சாகத்தீவு, குசத்தீவு, கிரௌஞ்சத்தீவு, சன்மலித்தீவு, கோமேதகத் தீவு, புட்கரத் தீவு என்பனவாம். ஏழுவகை யுடல்கள்: நீர்வாழ்வன, ஊர்வன, பறப்பன, நாற்காலின, நிலைத்திணையன, மக்கள், தேவர் என்பனவாம். சிவஞாயிறு ஏழு. செவி, மெய், நோக்கு, நாக்கு, மூக்கு, மனம், இறுப்பு (புத்தி) என்னும் அறிதற்கருவி ஏழுமாகும். சிவபாற்சுரன் சிவசூரியன். எழுவகையடக்கம் மேற்கூறிய பொறிகள் ஐந்து, மனம், இறுப்பு ஆகிய ஏழும் அடங்குதல். இறுப்பு: புத்தி.

தேகங்கள் ஏழு - எழுவகைத் தோற்றங்கள். சிவபாற்கரன் ஏழும் - சிவசூரியன் என்னும் ஞானேந்திரியங்கள் ஐந்தும் மனமும் புத்தியம் ஆக ஏழு. தாகங்கள் ஏழு - எழுநா.

அக்கினி சாந்திகள் ஏழு - ஐம் பொறிகளையும் மனம், புத்தி இவைகளையும் அடக்கி இருக்கும் நிலை.

பொற்பதிக் கூத்து

## 2693. தெற்கு வடக்குக் கிழக்குமேற் குச்சியில்

2693. தெற்கு வடக்குக் கிழக்குமேற் குச்சியில்
அற்புத மானதோர் அஞ்சு முகத்திலும்
ஒப்பில்பே ரின்பத் துபய உபயத்துள்
தற்பரன் நின்று தனிநடஞ் செய்யுமே.

தெற்கு, வடக்கு, கிழக்கு, மேற்கு, உச்சி ஆகிய வியத்தகு திருமுகங்கள் ஐந்தும் அருளோன் குறியிற் காணப்படும். அருளோன் குறி - சதாசிவலிங்கம். ஒப்பில் பேரின்பத்தினையே வடிவமாகவுடைய சிவபெருமான் அருவம், உருவம், அருவுருவம் என்னும் முத்திறப் பாகுபாட்டினின்று மேலோதிய திருமுகங்களினிடமாகத் தனிநடம் புரிந்தருள்வன். இதுவே பொற்புறு நடமாகும். திருமுகங்கள் ஐந்தும் முறையே நடுக்கம், விளக்கம், ஆட்சி, தோன்றுவித்தல், இயக்கம் என்பன. இவற்றை முறையே அகோரம், வாமதேவம், தற்புருடன், சத்தியோசாதம், ஈசானன் எனவும் கூறுப. இவ்வுண்மை வரும் சிவ தருமோத்திரச் செய்யுளான் உணரலாம்:
"உச்சிமுகம் ஈசானம் ஒளிதெளியப் பளிங்கே
உத்தரபூ ருவதிசையை நோக்கியுறும் உகந்தே
நிச்சயித்த முகத்தின்கீழ்ப் பூர்வதிசை நோக்கி
நிகழுமுகம் தற்புருடம் கோங்கலர்போல் நிறமே
அச்சுறுத்தும் அகோரமும் அறக்கரிது கராளம்
அவிழ்தாடி வலத்தோளில் தென்னோக்கி அமரும்
செச்சைநிறத் தெரிவைமுகம் இடத்தோண்மேல் வாமம்

சிறுபுறத்தின் முகஞ்சத்தி யோசாதந் திகழ்வால்."
ஒப்பில் பேரின்பம் - நிரதிசய இன்பம்.

உபய உபயத்துள் - அருவத்தும் உருவத்தும் அருவுருவத்தும்.

## 2694. அடியார் அரனடி யானந்தங் கண்டோர்

2694. அடியார் அரனடி யானந்தங் கண்டோர்
அடியா ரவரால ரத்தரு ளுற்றோர்
அடியார் பவரே யடியவ ராமால்
அடியார்பொன் னம்பலத் தாடல்கண் டாரே.

சிவபெருமான் திருவடியின்பத்தினைத் திருவருளால் கண்டோர் மெய்யடியாராவர். சிவபெருமானின் திருவருளைப் பெற்றோர் அருளடியாராவர். திருவடியின்பத்தினைச் சிவகுருவினருளால் நுகர்பவரே திருவடியாராவர் திருச்சிற்றம்பலமாகிய பொன்னம்பலத்தின்கண் நிகழும் திருக்கூத்தினைக் கண்டோர் சிவனடியாராவர். இவர்கள் மெய்யே அருட்டிரு மேவுசிவம் நான்மைமுன் பெய்யடியார் நானிலையர் பேச, எனப்படுவர்.

அத்தர் - சிவன். அடி ஆர்பவர் - அடிசேர்ந்தோர்.

## 2695. அடங்காத என்னை அடக்கி அடிவைத்து

2695. அடங்காத என்னை அடக்கி அடிவைத்து
இடங்காண் பரானந்தத் தேஎன்னை இட்டு
நடந்தான் செயும்நந்தி நன்ஞானக் கூத்தன்
படந்தான்செய் துள்ளுட் படிந்திருந் தானே.

பொறிபுலன் அடங்கி நன்னெறிக்கண் செல்லாத என்னைச் சிவகுருவாய் எழுந்தருளித் திருவடிசூட்டி அடங்கியொழுகுமாறு செய்தருளினன். எங்கணும் நிறைந்து என்றும் பொன்றாது ஊறும் பேரின்பப் பெருந்தேனை ஊட்டியருளினன். என் உணர்வின்கண் தன்னிகரில்லாத் திருக்கூத்தைப் புரிந்தருளுகின்றனன். அவன் திருப்பெயர் நந்தி என்ப. அவனே நன்ஞானக்கூத்தன். அடியேனைப் படத்தின்கண் காணப்படும் உயிர் ஓவியம் போன்று அசைவற நிற்றலாகிய நிட்டையில் கூட்டுவித்தனன். அதன்மேல் அடியேன் உணர்வினுள் படிந்திருந்தருளினன்.

இடங்காண் - பரந்த படந்தான். செய்து - சித்திரம் போல் அசைவறச் செய்து.

## 2696. உம்பரிற் கூத்தனை உத்தமக் கூத்தனைச்

2696. உம்பரிற் கூத்தனை உத்தமக் கூத்தனைச்
செம்பொற் றிருமன்றுட் சேவகக் கூத்தனைச்
சம்பந்தக் கூத்தனைத் தற்பரக் கூத்தனை
இன்புற நாடிஎன் அன்பில்வைத் தேனன்றே.

திருக்கயிலையாகிய உம்பரின்கண் ஆருயிர் உய்யத் திருக் கூத்தியற்றும் கூத்தனை, முதல்வனாய்நின்று தலையாய திருக்கூத்தியற்றும் கூத்தனை, அழகிய செம்பொன்னம்பலத்தில் திருக்கூத்தியற்றும் சேவகக் கூத்தனை, ஆருயிரினோடு வேறற விரவிநின்று அவ்வுயிர்களைத் திருவடித் தொடர்வுபடுத்தும் சம்பந்தக் கூத்தனை, தானே முழுமுதலாக இருந்து திருக்கூத்தியற்றும் தற்பரக் கூத்தனை, அடியேன் இன்புறும் வண்ணமாக நாடி அத் திருக்கூத்தினைப் புரிந்தருளுகின்ற சிவனை அடியேன் அன்பினுள் வைத்து வழிபடுகின்றேன்.

## 2697. மாணிக்கக் கூத்தனை வண்தில்லைக் கூத்தனைப்

2697. மாணிக்கக் கூத்தனை வண்தில்லைக் கூத்தனைப்
பூணுற்ற மன்றுட் புரிசடைக் கூத்தனைச்
சேணுற்ற சோதிச் சிவானந்தக் கூத்தனை
ஆணிப்பொற் கூத்தனை யாருரைப் பாரன்றே.

மணிமன்றினுள் நடம்புரியும் மாணிக்கக் கூத்தனை, செந்தமிழும் செந்நெறியும், சித்தாந்தமும் மிக்குப் பயிலும் வண்தில்லைக் கூத்தனை, சிறப்புப் பொருந்திய பெரியோர் வாழும் மூவாச் சீருடைத் திருச்சிற்றம்பலக் கூத்தனை, திருச்சடைக் கூத்தனை, அளவுபடாத சேணுற்ற அறிவுப் பேரொளியோடு நன்மை மிகுமாறு திருக்கூத்தியற்றும் சிவானந்தக்கூத்தனை, ஆணிப்பொன்னம்பலத்தே ஆருயிர்களைப் பேணிக் கூத்தியற்றும் ஆணிப்பொற்கூத்தனை அளவிட்டுரைக்கும் வன்மையர் யாவர்?

## 2698. விம்மும் வெருவும் விழும்எழும் மெய்சோருந்

2698. விம்மும் வெருவும் விழும்எழும் மெய்சோருந்
தம்மையுந் தாமறி யார்கள் சதுர்கெடுஞ்
செம்மை சிறந்த திருஅம் பலக்கூத்துள்
அம்மலர்ப் பொற்பாதத் தன்புவைப் பார்கட்கே.

அழிவில்லாத வியத்தகு செம்மைவாய்ந்த சிறந்த திரு அம்பலத்தின்கண் கூத்தியற்றும் அம்பலக்கூத்தினுள் அழகிய பொன் போலும் திருவடித் தாமரைக்கண் நீங்காப் பேரன்பு பூண்பார்க்குக் காதலான் நினைக்கும் நினைவு மிகுதியான் உயிர்ப்புப் புலனாகும் கிடைக்கப் பெறாமையின் பேரச்சங்கொள்ளும் அச்சந்தோன்றும். தானே எழுந்துவிழும்; பின்னும் மெய் சோரும். திருவைந்தெழுத்தே திருவம்பலத்திற்குக் கொண்டுய்க்கும். காதன்மீக் கூர்தலினால் மேலென நிகழும் என்பதனைக் கண்ணப்ப நாயனார் திருவரலாற்றின்கண் மோகமாயோடிச் சென்றார் தழுவினார் மோந்து நின்றார்' என்பதனால் கண்டு தெளிக.

திருவம்பலக் கூத்தில் அன்பு வைப்பவர்கட்கு ஏற்படும் மெய் அடையாளங்களை இம் மந்திரம் கூறுகிறது.

# 2699. தேட்டறுஞ் சிந்தை திகைப்பறும் பிண்டத்துள்

2699. தேட்டறுஞ் சிந்தை திகைப்பறும் பிண்டத்துள்
வாட்டறுங் கால்புந்தி யாகி வரும்புலன்
ஓட்டறு மாசை அறுமுளத் தானந்த
நாட்ட முறுக்குறு நாடகங் காணவே.

புறஞ்சென்று ஒன்றைத் தேடுதல்வேண்டும் என்னும் எண்ணம் தோன்றாது. நாட்டமாகிய சிந்தை ஒன்றைத் தூக்கியும் எணணாது. அதனால் சிந்தைத் தேட்டறும் என்றனர். நாட்டம் ஈது யாதாகற் பாற்று எனத் தூக்கி எண்ணிய பொருளை மனம் பற்றி முற்பழக்கத்தால் இன்னதாகற் பாற்றென நினைந்தும், ஆமோ அன்றோ என ஐயுற்றும் திகைப்புறும். அத் திகைப்பும் எழுச்சி தூண்டத் தொழிற்படும் இறுப்பால் நீங்கும். எனவே மனம் என ஒருசொல் வருவித்து மனத்திகைப்பறும் என முடிக்க. உடம்பகத்து ஏற்படும் தளர்வு முதலிய வாட்டங்கள் நீங்கும் உயிர்ப்பு, இறுப்பு என்று சொல்லப்படும் புத்தியின் வயப்படும். வயப்படவே, புலன்களிலோடும் உயிர் அறிவின் ஓட்டறும். இவையெல்லாம் அறவே வேட்கையும் அவாவும் அறும். 'வேட்கையாவது பொருள்கள் மேற்செல்லும் பற்றுள்ளம். அவாவாவது அப்பொருள்களைப் பெறவேண்டுமென்று மேன்மேல் நிகழும் ஆசை. ஆருயிரின் உள்ளத்துணர்வின்கண் திருவருட் பேரின்பநாட்டம் முறுகி வளரும். இவையனைத்தும் அம்பலவாணரின் பொற்பதிக் கூத்தினை அன்புறக்கண்டு வழிபட்டு இன்புறுவார்க்கு நிகழ்வனவாகும்.

தேட்டறும் - ஆசைகெடும். வாட்டறும் - தளர்ச்சி நீங்கும். கால் - பிராணவாயு. புந்தியாகி - புத்தியின் வசப்பட்டு. புலன் ஓட்டறும் - புலன்கள் அடங்கும். முறுக்குறும் - முதிரும்.

## 2700. காளியோ டாடிக் கனகா சலத்தாடிக்

2700. காளியோ டாடிக் கனகா சலத்தாடிக்
கூளியோ டாடிக் குவலயத் தேயாடி
நீடிய நீர்தீக்கால் நீள்வா னிடையாடி
நாளுற அம்பலத் தேயாடும் நாதனே.

சிவபெருமான் காளியை அடக்குவதன்பொருட்டுக் காளியுடன் ஆடியருளுகின்றனர். பொன்மலையாகிய மேருநன்மலைக்கண் ஆடியருளுகின்றனர். பேய்க் கூட்டங்களுடன் ஆடியருளுகின்றனர். நிலவுலகத்தே ஆடியருளுகின்றனர். ஐம்பெரும் பூதங்களினிடமாக நின்று ஆடியருளுகின்றனர். எல்லையில் காலமாகத் தில்லைத் திருச்சிற்றம்பலத்தின்கண் சிறப்புற நின்று ஆடியருளுகின்றனர். ஆடுதல்: உலகுயிர் தொழிற்படும் பொருட்டுத் தலைவனாகிய சிவபெருமான் தொழிற்படுதல். அவன் தொழிற்படுதலாவது திருவுள்ளங்கொள்ளுதல். திருவுள்ளங் கொள்ளுதலென்பது இன்னவாறு ஆகுக எனச் சிவன் அறிவிற் கணித்தல்.

# 2701. மேரு நடுநாடி மிக்கிடை பிங்கலை

2701. மேரு நடுநாடி மிக்கிடை பிங்கலை
கூருமிவ் வானின் இலங்கைக் குறியுறுஞ்
சாருந் திலைவனத் தண்மா மலயத்தூ
டேறுஞ் சுழுனை இவைசிவ பூமியே.

அண்டத்தின் நடுவாகப் பொன்மலையாகிய மேரு விளங்குகின்றது. இதுபோல் பிண்டமாகிய உடம்பகத்து நடுநாடி விளங்குகின்றது. நடுநாடியினைச் சுழுமுனை என்ப. மேருவினை நிலத்தின் நடுக்கோடு என்ப. நடுக்கோட்டின் வடபாலும் தென்பாலுமுள்ள கோடுகளை வழிக்கோடுகள் என்ப. அதுபோல் உடம்பகத்து இடப்பால் நாடி வலப்பால் நாடி என்பன உள்ளன. இடப்பால் நாடி இடைகலை எனவும் வலப்பால் நாடி பிங்கலை எனவும் கூறப்படும். சொல்லப்படும் இவ் வான வெளியில் நடுக்கோட்டின் நிலையினை இலங்கை எனக் கூறுப. இவ் விலங்கைக் கோட்டுடன் தில்லைத் திருச்சிற்றம்பலக்கோடும் பொருந்தியிருக்கின்றது. தில்லைக்கும் பொதியின் மலைக்கும் ஊடாகச் செல்லும் நாடி நடுநாடியாகும். இவையே தென்னாட்டுச் சிவபூமியாகும். இம் முறை சிறப்பு முறையாகும். பொதுமுறையான் நோக்கும் வழி இலங்கைக்கும் பொன்மலைக்கும் நடுவின்கண் உள்ளது தில்லை. இவ் விரண்டற்கும் இடைப்பட்டது சிவபூமியாகும். திருத்தொண்டர் புராணத்துள் 'மாதவஞ் செய் தென்றிசையின்' மாண்புரைக்குங்கால் பெரும்பற்றப் புலியூர், திருஆரூர், திருக்காஞ்சி, திருவையாறு, திருத்தோணிபுரம்

முதலிய சிவ வழிபாட்டிடங்கள் பல என அருளியதூஉங் காண்க.

மேரு நடுநாடி - அண்டத்துள் நடுரேகையும் (Equator), பிண்டத்துள் சுழுமுனையும். அண்டத்துள் இதன் வட அயன வரை
களும் பிண்டத்துள் இடைகலை பிங்கலை நாடிகளுமாகும். இலங்கைக் குறியுறும் - இலங்கையில் மேருவின் குறியைப் பார்க்கலாம். (இதனால் மேருமலை திருமூலர் காலத்திலேயே அழிவெய்திவிட்டது என்பது போதருகின்றது.) மேரு - சுமேரு - குமேரு - என மூன்றாம். மேரு - பூமத்தியரேகையும் - பூமியின் அச்சரேகையும் கூடும் இடம்; அதுதான் இலங்கை. சுமேரு -வடதுருவம் (N. pole). குமேரு - தென்துருவம் (S. pole). தில்லைவனம் - மலயம் இவை பூமியின் நடுநாடி (Axis) யில் இருக்கின்றன என்பதை இம் மந்திரம் குறிக்கின்றது.

# 2702. பூதல மேருப் புறத்தான தெக்கணம்

2702. பூதல மேருப் புறத்தான தெக்கணம்
ஓதும் இடைபிங் கலையொண் சுழுனையாம்
பாதி மதியோன் பயில்திரு வம்பலம்
ஏதமில் பூதாண்டத் தெல்லையி னீறன்றே.

பூதமேரு எனப்படும் வடபாலுள்ள பொன்மலையும் தெக்கணப்புறத்ததான இலங்கையும் முறையே இடைகலை பிங்கலை எனப்படும். இவ் விரண்டன் நடுவணதாகக் காணப்படும் திருத்தில்லை நடுநாடியாகிய சுழுனையாகும். பாதிமதியாகிய ஆருயிர் ஐந்தெழுத்தின் நடுவண் நிற்கும் 'ய'கரத்தால் பெறப்படும் ஆவியேயாம். அதனையே சிவபெருமான் சூடியருளினன். அவ் வுண்மை "முடி 'ய'ப்பார்" (2271) என்னும் உண்மை விளக்கத் திருப்பாட்டான் உணரலாம். அப் பாதிமதி சூடிய சிவபெருமான் இத் தில்லையின்கண் (2361) இடையறாது திருக்கூத்தியற்றி யருளுகின்றனன். குற்றமற்ற இந் நிலவுலக அண்டத்து எல்லையும் அவ் வெல்லையிரண்டும் நடுவண் வந்து முற்றுறும் நடுக்கோடு திருத் தில்லையாகும். சிவபெருமானின் திருத்தலை அன்பியலாகும். திருவடி அருளியலாகும். ஆருயிர் அன்பியலின்வழிப் பாதிமதியாக விருக்கும். அருளியலின்வழி முழுமதியாகும். பாதிமதி யாங்கால் ஆருயிர் சுட்டுணர்வும் சிற்றுணர்வுமாக இருக்கும் முழுமதியாங்கால் அவ் வுயிர் முற்றுணர்வாக விருக்கும் சுட்டுணர்வு நிலையில்லாத உலகியல் இன்பமாகும். சிற்றுணர்வு நிலையில்லாத உலகியற் பொருளாகும். இவ்விரண்டின் சார்பாம் வடிவம்

பொருள் வடிவமாகும். முற்றுணர்வு நிலையுடைப் பொருளும் நிலையுடை இன்பமும் பற்றியதாகும். இவ் விரண்டின் சார்பாம் வடிவம் அறிவியல்பால் பெறப்படும் அன்பு வடிவமாகும். பொருள் வடிவினைப் பிறை யெனவும், அறவடிவினை ஆனேறெனவும் உருவகிக்கப்படும். இவ்வடிவங்களெல்லாம் ஆருயிர்களின் உளப்பண்பை முகமெனக் கூறும் உருவகமேயாம். அதனை வரும் வெண்பாவால் நினைவு கூர்க:

'ஆணவ மாமெருமை ஆனைகரி ஆம்மருள்காண்
ஏணஅரி மாவினையாம் ஏர்பரியும் - ஆண்மார்
நற்செறிவாம் வெள்ளானை ஞானமாம் ஆனேறும்
இற்புகலன் பின்புருமேல் எண்.'

அறிவு நிரம்புவதன் முன் பெற்றோர் பிள்ளையினைத் தம் தோளிலோ, இடுப்பிலோ, ஓரோவழித் தலையிலோ தங்கி இருக்குமாறு செய்வர். அறிவு நிரம்பியபின் பெற்றோர்தம் திருவடியிலே அவ்வடிவினைச் சிறந்த அணியெனப்பூண்டு முடிமிசைக் கொண்டு வழிபட்டுத் திருந்திய நன்னெறி சேர் மக்கள் தங்கி யிருக்கும். அது திருவள்ளுவ நாயனாரருளிய,

"குடிதழீஇக் கோலோச்சும் மாநில மன்னன்
அடிதழீஇ நிற்கும் உலகு."

என்னும் செந்தமிழ்ப் பொதுமறையான் நன்குணரலாம். அம் முறை போன்று சிவபெருமான் பிறைக்கு இருப்பிடமாகின்றான். ஆனேற்றை ஊர்பவனாகின்றான். இதனால் யாண்டும் சிவபெருமான் சார்பாகவே ஆருயிர்கள் வாழும். இவ் வுண்மை விளக்கும் குறிப்பு வருமாறு:

'எம்மான் இருப்பும் இருப்பதுவு மாயிருப்பன்
செம்மான் பிறைஏறு சேர்ந்துதமிழ் - அம்மான்பால்

பேணுபிறை ஆருயிராம் பெம்மான் தலையிடத்தாம்
பேணுநிறை முற்றடிக்கீழ்ப் பேசு.'

பூமி நடுரேகை (Equator) அயனரேகைகள் (Tropic of cancer and tropic of capricorn), இவைகளுக்கு இடைநிலையே மூன்றாம் பிறையை அணிந்த சிவபெருமான் ஆடும் எல்லைகளாகும் என்று இம் மந்திரம் குறிக்கின்றது. ஐந்து அம்பலங்களும் இவ் வெல்லையிலேயே இருப்பதை நாம் காண்கின்றோம்.

பொற்றில்லைக் கூத்து

## 2703. அண்டங்கள் ஓரேழும் அம்பொற் பதியாகப்

2703. அண்டங்கள் ஓரேழும் அம்பொற் பதியாகப்
பண்டையா காசங்கள் ஐந்தும் பதியாகத்
தெண்டினிற் சத்தி திருஅம் பலமாகக்
கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானன்றே.

ஏழுவகை அண்டங்களும் விழுமிய முழுமுதற் சிவபெருமானார் தழுவும் அழகிய பொன்போலும் ஊராகவும், அவற்றின் உறுப்பாகக் காணப்படும் ஐம்பெரும் பூதங்களிலும் விரவி நிற்கும் பானங்கள் ஐந்தும் பதியாகவும் கொண்டு அவன் புறத்துத் திருக்கூத்தியற்றுகின்றனன். அதுபோல் அவன் ஆருயிரின் அகத்து நடுநாடிக்கண் திருவருளாற்றலை அம்பலமாகக் கொண்டு திருக்கூத்தியற்றுகின்றனன். அவனே அறிவுப் பேரொளியாம் பரஞ்சோதியாவன். ஆகாசங்கள் ஐந்தனையும் முறையே குணங்கடந்த வெளி, குணவெளி, பெருவெளி, மெய் (தத்துவம்) வெளி, ஞாயிற்று வெளி எனக் கூறலுமொன்று. பதி: தலைநகர்.

ஆகாசங்கள் ஐந்து - மண்ணில் ஆகாயம், நீரில் ஆகாயம், தீயில் ஆகாயம், வாயுவில் ஆகாயம், ஆகாயத்தில் ஆகாயம் ஆக ஐந்து.

## 2704. குரானந்த ரேகையாய்க் கூர்ந்த குணமாஞ்

2704. குரானந்த ரேகையாய்க் கூர்ந்த குணமாஞ்
சிரானந்தம் பூரித்துத் தென்திசை சேர்ந்து
புரானந்த போகனாய்ப் பூவையுந் தானும்
நிரானந்த மாகி நிருத்தஞ்செய் தானே.

சிவகுருவால் அருளப்பட்ட இன்ப நெறியாய், அந் நெறி யொழுக்கால் மேம்பட்ட சிவபெருமானின் எட்டுவான் குணத்தின்பம்
நிறைந்து நிற்றல் வேண்டும். அது மாதவம்செய் தென்திசை சேர்ந்தார்க்கே கைகூடுவதொன்றாம். இன்பமே வடிவாய் ஆருயிர்கட்குப் போகத்தைப் புரிதற் பொருட்டுப் பூவைப் பூப்போலும் திருமேனியையுடைய திருவருளம்மையும் தானுமாகப் புணர்ந்து நின்று சார்பு பற்றாத ஏரின்பமாய்த் திருக் கூத்தியற்றி யருளுகின்றனன். நிரானந்தம் - என்றும் பொன்றா ஏரின்பம். நின்று பொன்றின்பம் - சாரின்பம். பூவைப்பூ - காயாம்பூ.

குரு ஆனந்த ரேகை - குருவால் அருளப்பட்ட ஆனந்த மார்க்கம். சிரம் ஆனந்தம் - மேலான ஆனந்தம். புரானந்தம் - புரி ஆனந்தம் - சரீர ஆனந்தம். பூவை - உமாதேவி. நிரானந்தம் - நித்தியானந்தம்.

## 2705. ஆதி பரன்ஆட அங்கைக் கனலாட

2705. ஆதி பரன்ஆட அங்கைக் கனலாட
ஓதுஞ் சடையாட உன்மத்த முற்றாடப்
பாதி மதியாடப் பாரண்ட மீதாட
நாதமோ டாடினான் நாதாந்த நட்டமே.

ஆதிபரனாகிய சிவபெருமான் ஆடுதலாகிய திருவுள்ளக் குறிப்பு நேர்பட அவன் திரு அங்கையின்கண் விளங்கும் கனலாடிற்று. அனைத்திற்கும் அருட்புகலிடமாக நிலவும் திருச்சடையும் ஆடிற்று. அச்சடை எல்லாராலும் போற்றிப் புகழப்படுவதொன்று அத் திருச்சடையின்கண் காணப்படும் உன்மத்தம் ஆகிய ஊமத்த மலரும் ஆடிற்று. திருச்சடையிற்றிகழும் ஆருயிராகிய பாதிமதியும் ஆடிற்று. நில அண்டங்களும் ஆடின. அருஞ்சைவர் கொள்ளும் (2139) முப்பத்தாறாம் மெய்யாகிய நாதத்தின்கண் திருவருளாற்றலுடன் சிறந்தாடினன். இதனையே நாதாந்த நட்டம் என்ப. நட்டம் - நடனம். ஆட்டம் - புடை பெயர்ச்சி; அசைவு. உன்மத்தம் - மிக்க களிப்பு என்றலும் ஒன்று.

பார் அண்டம் - பூமி அண்டம். நாதமோடு - நாத சத்தியோடு.

# 2706. கும்பிட அம்பலத் தாடிய கோனடம்

2706. கும்பிட அம்பலத் தாடிய கோனடம்
அம்பரன் ஆடும் அகிலாண்ட நட்டமாஞ்
செம்பொரு ளாகுஞ் சிவலோகஞ் சேர்ந்துற்றால்
உம்பர மோனஞா னாந்தத்தில் உண்மையே.

அனைத்துயிர்களும் அன்புடன் வழிபட்டு இன்புற்றுய்ய முழுமுதற் சிவபெருமான் ஆடிய திருநடம் திருச்சிற்றம்பலத்தின்கண்ணாகும். அத் திருக்கூத்து அழகிய சிவபெருமான் புரிந்தருளும் அகிலாண்டத் திருக்கூத்தாகும். சிறப்பென்னும் செம்பொருள் விளங்கும் திருச்சிற்றம்பலம் சிவ வுலகமாகும். அதனைச் சார்ந்தவர் சிவ வுலகத்தவரே யாவர். ஈண்டுப்புரியும் திருக்கூத்தே மேலான ஞானவரம்பின் முடிந்த ஞானத்தின் உண்மைத் திருக்கூத்தாகும். ஞானத்தின் ஞானம் என்பது நன்னெறி நான்மையின் பதினாறாம் பேறாகிய முடிந்த உண்மைப் பேறாகும் அதுவே அறிவில் அறிவாகும். திருத்தில்லையே திருவடிப்
பேற்றைச் (2615) செயன் முறையில் எளிதிற் கூட்டுவிக்கும் திருவூர். திருவாரூரிற் பிறக்கப்பேறெய்தும். திருக்காசியில் இறக்கப் பேறெய்தும். தோன்ற மறையத் தொழப்பேறாரூர்காசி, ஆன்றதில்லை முப்பால் அறி.

கும்பிட - யாவரும் வணங்கும்படி. சிவலோகம் - பொற்றில்லை.

## 2707. மேதினி மூவேழ் மிகுமண்டம் ஓரேழு

2707. மேதினி மூவேழ் மிகுமண்டம் ஓரேழு
சாதக மாகுஞ் சமயங்கள் நூற்றெட்டு
நாதமோ டந்த நடானந்த நாற்பதப்
பாதியோ டாடிப் பரனிரு பாதமே.

நாதத்தையும் நாத அந்தத்தையும் மேற்கொண்டு 'சீலம் நோன்பு செறிவு அறிவு' என்னும் நானிலையும் நாற்பாதம் எனப்படும். அதனை அருள்பவள், திருவருளம்மையாவள். அவள் ஆண்டவனின் செம்பாதியாவள். அவளுடன் சிவபெருமான் திருக்கூத்தாடுகின்றனன். அவன்றன் திருவடியிணையே மூவேழ் உலகினையும் ஆட்டுவிப்பதாகும். ஓரேழண்டத்தையும் ஆட்டுவிப்பதும் அவையே. கைக்கொள்வோர் தகுதிக்கேற்பப் படிமுறை போன்று விரிந்த நெறிகள் நூற்றெட்டு. அவற்றையும் அவன் திருவடியே ஆட்டுவிக்கின்றன.

பாதி - சிவன் பாதிச் சரீரி ஆகிய தேவி.

## 2708. இடைபிங் கலையிம வானோ டிலங்கை

2708. இடைபிங் கலையிம வானோ டிலங்கை
நடுநின்ற மேரு நடுவாஞ் சுழுனை
கடவுந் திலைவனங் கைகண்ட மூலம்
படர்வொன்றி யென்னும் பரமாம் பரமன்றே.

அகத்துக் காணப்படும் இடைகலை பிங்கலை இரண்டும் புறத்து முறையே பொன்மலையாகவும் இலங்கையாகவும் கொள்ளப்படும். நடுநாடியாகிய சுழுனை தில்லைவனம் எனப்படும். நடுநாடியே எல்லாவற்றையும் நடத்துகின்றது. அதுபோல் புறத்துத் தில்லைவனம் பொன்மலை முதல் இலங்கை யீறாகக் கொள்ளப்படும் நிலமனைத்தையும் நடுநின்று நடத்துகின்றது. அதனால் 'கடவும் தில்லைவனம் கைகண்ட மூலம்' என ஓதியருளினர். யாங்கனும் நீக்கமற நிறைந்தொன்றி நிற்பவன் 'படர்வொன்றி' யாவன். அவனே பரமாம் பரமுமாவன். பரமாம்பரம் - மேலாம் விழுப்பொருள்.

## 2709. ஈறான கன்னி குமரியே காவிரி

2709. ஈறான கன்னி குமரியே காவிரி
வேறா நவதீர்த்த மிக்குள்ள வெற்பேழுள்
பேறான வேதா கமமே பிறத்தலான்
மாறாத தென்திசை வையகஞ் சுத்தமே.

தமிழகத்தின் தென்பால் எல்லை கன்னியாகுமரியாகும். (வடபால் எல்லை பொன்மலை.) இது நன்னெறி நான்மையின் நற்பகுப்பாம். இதனகத்துச் சிறப்பாக ஓதப்பெறும் தீர்த்தங்கள் ஒன்பது. அவை முறையே 'காவிரி, யமுனை, கங்கை, சரசுவதி, பொற்றாமரை, புட்கரணி, கோதாவரி, குமரி, தாமிரபரணி' என்பன. ஏழு மலைகளும் ஓதப்படுகின்றன. அவை முறையே கைலை, இமயம், மந்தரம், விந்தம், நிடதம், ஏமகூடம், நீலகிரி என்பனவாகும். இவற்றிற்கிடையே மாதவம் செய் தென்திசைக்கண் செம்பொருளைத் தம் பொருளாகக் கொண்டு திகழும் செந்தமிழ் மொழிப்பால் நெறி நூலாகிய வேதமும், துறை நூலாகிய ஆகமமும் தொன்மைக்காலத்தே தோன்றின வென்க. அவற்றால் நன்னெறிப்படரும் தூயோர் கொலை புலை நீத்த தமிழ் நெறி நின்று நனி நாகரிகராயினர். ஒரு முழுமுதலாம் சிவபெருமானை வழுவின்றித் தொழும் தமிழ்த்துறை நின்று விழுமியராயினர். அம் முறையான் ஒழுகலாற்றில் தலைதடுமாற்றமில்லாத தென்திசைத் தமிழகம் என்றும் பொன்றா இயற்கை உண்மைத் தூய்மையேயாகும். யாறுகள் திருத்தொண்டர் புராணத்து வைப்புமுறைப்படி வருவனவற்றை வரும் வெண்பாவால் உணர்க.
"காவிரியே பெண்ணையம ராவதி பொன்முகலி-

மேவு பொருநை மிளிர்வையை - தாவில்கம்பை
கொள்ளிடம்பா லிக்கெடிலம் கூறுமண்ணி முத்தாறு
வெள்ளாறு கங்கைநிவா மேவு."

ஈறான கன்னி - தமிழ்நாட்டுக்குத் தெற்கு எல்லையாக விளங்கும் கன்னி ஆறு. கன்னி நதியும் - குமரி நதியும்; (2000 வருடங்கள் முன்னரே ஒளிநாடு - பெருவளநாடு - குமரி நாட்டோடு கடல்கொண்டு அழிந்தது.) ஒன்பது தீர்த்தங்களும் ஏழு வெற்புக்களும் தென்னாட்டுக்குள் இருப்பன. இம் மந்திரத்தால் முதல்முதல் வேத ஆகமங்களும் தென்னாட்டில்தான் பிறந்தன என்பது தெளிவாகின்றது.

## 2710. நாதத் தினிலாடி நாற்பதத் தேயாடி

2710. நாதத் தினிலாடி நாற்பதத் தேயாடி
வேதத்தி லாடித் தழலந்த மீதாடி
போதத்தி லாடிப் புவன முழுதாடுந்
தீதற்ற தேவாதி தேவர் பிரானன்றே.

இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கிய இயற்கை உண்மை அறிவு இன்பப் பெருமான் தேவாதி தேவர் பிரானாவன். அவன், திருவருளால் நாதத்தினில் ஆடியருளுகின்றனன். சீலம், நோன்பு, செறிவு, அறிவு என்னும் நாற்பாதத்தினும் ஆடியருளுகின்றனன். நெறிநூலாகிய தமிழ்வேதத்தின்கண் ஆடியருளுகின்றனன். சிவ வேள்வித் தழலுச்சியிலும் ஆடியருளுகின்றனன். சிவஞான போதம் நல்கும் துறைநூலாகிய தமிழாகமத்தின்கண்ணும் ஆடியருளுகின்றனன். இம் முறையான் இரு நூற்றிருபத்து நான்கு புவன முழுவதும் ஆடியருளுகின்றனன். அவன் விழுமிய முழுமுதற் சிவபெருமானாவன்.

நாற்பதம் - சரியையாதி நான்குபதம் தழலந்தம் - ஓமாக்கினி.

## 2711. தேவரோ டாடித் திருவம்பலத் தாடி

2711. தேவரோ டாடித் திருவம்பலத் தாடி
மூவரோ டாடி முனிசனத் தோடாடிப்
பாவினுள் ஆடிப் பராசத் தியிலாடிக்
கோவினுள் ஆடிடுங் கூத்தப் பிரானன்றே.

நால் வேறியற்கைப் பதினொரு மூவர் என்று சொல்லப்படும் தேவரோடு ஆடியருளுகின்றனன் சிவன். அவனே திரு அம்பலத்தின் கண்ணும் ஆடியருளுகின்றனன். இருபத்து நான்காம் மெய்யாகக் கருதப்படும் குணமெய்யின்கண் உள்ளாராகிய, சிவபெருமான் திருவாணையான் முத்தொழிற்குரிய அயன், அரி, அரன் என்னும் மூவருடனும் ஆடியருளுகின்றனன். முனிவர் கூட்டத்துடனும் ஆடியருளுகின்றனன். செந்தமிழ்த் திருமுறைத் திருப்பாட்டுக்களுடனும் ஆடியருளுகின்றனன். திருமுறைப் பாவின் செழும் பொருளாய் விளங்கியருள்பவள் திருவருளம்மை. அவளுடனும் ஆடியருளுகின்றனன். கோ என்று சொல்லப்படும் ஆருயிரின் கண்ணும் ஆடியருள்கின்றனன். கோ - இயமானன்.

மூவர் - அயன், அரி, அரன். முனிசனம் - தவத்தர். கோவினுள் - சீவனுள்.

## 2712. ஆறு முகத்தில் அதிபதி நானென்றுங்

2712. ஆறு முகத்தில் அதிபதி நானென்றுங்
கூறு சமயக் குருபரன் நானென்றுந்
தேறினர் தெற்குத் திருஅம்ப லத்துளே
வேறின்றி யண்ணல் விளங்கிநின் றானன்றே.

ஆறு திருமுகங்களையுடைய அருளார் திருவுருவினுக்குரிய செம்பொருட் செல்வனும் விழுமிய. முழுமுதல்வனாம் சிவபெருமானேயாவன். அவனே அம்பலவாணனாவன். 2693-இல் ஓதப்பெற்ற ஐந்து திருமுகங்களுடன் மறைவாகக் கீழ்நோக்கிய திருமுகம் ஒன்றுங்கூட்டித் திருமுகங்கள் ஆறாகும். மறைமுகம் அருமறை யருளும் துறைமுகமாகும். அருமறை - உபதேசம். ஒருபுடையொப்பாக ஐந்து திருமுகங்களும் ஐந்தொழிலுக்கும் அமைந்தனவாகும். அவை வருமாறு: மேற்குமுகம் படைத்தல், கிழக்குமுகம் காத்தல், தெற்குமுகம் துடைத்தல், வடக்கு முகம் மறைத்தல், உச்சிமுகம் அருளல் என்ப. எனவே ஆறாவது திருமுகம் சிவகுரு. ஆறு திருமுகக் குறிப்பு ஆறு ஆதாரங்களைக் குறிக்கும் உண்மையாகும். அவ் வுரு 'குமரகுருபரன்' என இருவகை வழக்கிலும் பெருக வழங்குவதானானும் உணரலாம். மேலும் அவ் வுண்மை வரும் அப்பர் அருண்மொழியானும் உணரலாம்:

"முன்னை யார்மயில் ஊர்தி முருகவேள்
தன்னை யாரெனில் தானோர் தலைமகன்
என்னை யாளும் இறையவன் எம்பிரான்

பின்னை யாரவர் பேரெயி லாளரே."
(5. 16 - 7.)

திருமுருகனுக்கும் சிவபெருமானுக்கும் திருப்பெயர் முறை வேறுபாடேயன்றிப் பொருள் வேறுபாடின்று. முறையே அகத்து நீரும் ஆற்று நீரும் போன்று ஒன்றேயாம். இவ் வொப்பாலும் உணர்க. அவ் வுண்மை தேற்றவே திருமுருகப் பெருமான், தெய்வ நாச்சியாரையும், வள்ளி நாச்சியாரையும் ஒருங்கு திருமணம் புரிந்துகொண்டனர். ஈண்டுத் திருமணம் என்பது செவியறிவுறுத்து ஆட்கொள்ளுதல். இருவரும் ஆருயிர்களின் இருவேறு நிலைகளைக் குறிக்கும் குறிப்பாகும். ஒருவகை செம்புலத்தேவருள் வளர்தல். மற்றொருவகை ஐம்புல வேடருள் வளர்தல். இருவகையினரையும் சிவகுருவாக வந்து ஆட்கொள்பவன் திருமுருகன் ஒருவனே யாம். இஃதன்றித் திருமுருகனின் தொழிலாற்றல் விழைவாற்றல் எனக் கூறுவது உண்மைக்கு மாறாகும். திருவருளாற்றலின் நிலை பலவாமெனினும் பொருள் ஒன்றேயாம். முழுமுதற் சிவபெருமானின் திருவருளாற்றலையே அவனுக்கு மனைவி மக்களாக உருவகஞ் செய்வர் உண்மையுணர்ந்த நல்லார். அவ் வாற்றலுக்குப் பின்பு வேறோர் மனைவி மக்களாக உருவகிக்கும் மரபு யாண்டுமின்று. இவ் வுண்மை,

'செப்பும் சிவனார் திருவருளே மக்கள் மனை
ஒப்பாம் அவர்க்கவையின் றோர்.'

என்பதனால் நினைவு கூர்க. பழ முறையான் வெவ்வேறு நெறிகளினுள்ளாரனைவர்கட்கும் சிவகுருவாய் - அறுமுகக் குருபரனாய் விளக்கஞ் செய்தருளி அவ்வந் நெறிக்கண் நிற்பவனும் சிவனே. இவ் வுண்மைகளைத் திருவருளால் தேர்ந்து தெளிந்தவர் தென்பால் தில்லைக்கண் திருச்சிற்றம்பலத்தினிடத்தே வேற்றுமையின்றி விரவி

நின்றருள்பவன் சிவனே எனவும் அவனே அண்ணலாகவும் விளங்கியருளுகின்றனன் எனவும் திருமுறைகள் ஓதும் செவ்விய நுட்பத்தினை அருளால் உணர்வர்.

ஆறுமுகம் - ஈசானம், தற்புருடம், அகோரம், வாமம், சத்தியோசாதம், அதோமுகம்.

## 2713. அம்பலம் ஆடரங் காக அதன்மீதே

2713. அம்பலம் ஆடரங் காக அதன்மீதே
எம்பரன் ஆடும் இருதாளி னீரொளி
உம்பர மாம்ஐந்து நாதத்து ரேகையுள்
தம்பத மாய்நின்று தான்வந் தருளுமே.

திருச்சிற்றம்பலமே ஆடும் அரங்கமாகக்கொண்டு அதன் கண் எம்பெருமானாகிய சிவபெருமான் திருக்கூத்தியற்றுகின்றனன். எம்பெருமான் தன் இரண்டு திருவடிகளிலும் இருபெரும் அறிவொளி தோன்றுமாறு திருக்கூத்தியற்றுகின்றனன். இருபெரும் ஒளி நூலுணர்வும் நுண்ணுணர்வுமாகும். மேலோங்கி ஒளிரும் ஐவகை ஓசையின் கோட்டின் கண்ணும் நின்று திருக்கூத்தியற்றுகின்றனன். அம்மட்டோ? அவ்வோசைகள் திகழும் தூமாயையினையே தன் நேர்நிலையாகக் கொண்டு எழுந்தருளிவந்து அருள்கின்றனன். ஐவகை ஓசை: நுண்ணோசை, நினைவோசை, மிடற்றோசை, செவியோசை கேட்பிக்கும் ஓசை. நூலுணர்வு - அபரஞானம். நுண்ணுணர்வு - பரஞானம்.

ஐந்து நாதம் - ஐவகை வாக்குகளாயுள்ள நாதங்கள்.

## 2714. ஆடிய காலும் அதிற்சிலம் போசையும்

2714. ஆடிய காலும் அதிற்சிலம் போசையும்
பாடிய பாட்டும் பலவான நட்டமுங்
கூடிய கோலங் குருபரன் கொண்டாடத்
தேடியு ளேகண்டு தீர்ந்தற்ற வாறன்றே.

திருக்கூத்துப் புரியும் திருவடியும், அத் திருவடிக்கண் கிடந்து ஒலிக்கும் மறைச்சிலம்பொலியும், அச் சிலம்பொலியின் விரிவாகக் காணப்படும் திருமுறைத் திருப்பாட்டுக்களும், அத் திருப்பாட்டுக்களின் மறைப்பொருளாய் விளங்கும் பலவகையான திருநடனங்களும் சிவபெருமான் திருவருளால் புரிந்தருளுகின்றனன். அதன்பொருட்டுக்கொண்டருளிய திருக்கோலமும் பலவாம். அவ்வகை அருட்டிருக் கோலங்களைக் கொண்டு வருபவன் குருபரன். அவ்வாறு வருவதும் மெய்யுணர்வினர் கொண்டாடுதற்பொருட்டும் உய்தற்பொருட்டுமாம். அவனைத் திருவருளால் அடியேன் உணர்வின் உள்ளே தேடிக் கண்டுகொண்டேன். காண்டலும் அற்றது பிறப்பு. உற்றது சிறப்பு. சிறப்பெனினும் திருவடிப் பேறெனினும் ஒன்றே.

அற்றவாறு - பிறப்பு அற்றவாறு.

## 2715. இருதயந் தன்னில் எழுந்த பிராணன்

2715. இருதயந் தன்னில் எழுந்த பிராணன்
கரசர ணாதி கலக்கும் படியே
அரதன மன்றினின் மாணிக்கக் கூத்தன்
குரவனாய் எங்கணுங் கூத்துகந் தானே.

மாணிக்கக் கூத்தன் என்று சொல்லப்படும் ஒப்பில் ஒரு பெரும் முதன்மைக் கூத்தன் சிவபெருமான். அவன் திருவாலங் காட்டின்கண் மணிமன்றம் அணிபெறத் தணியாப் பெருங்கூத்தியற்றுகின்றனன். அவனே அனைவர்க்கும் மெய்க்குரவனாவன். மணிமன்றம் ஐவகை மன்றினும் முதன்மை வாய்ந்தது. ஏனைநான்கு மன்றங்களும் பொன், வெள்ளி, செம்பு, ஓவியம் எனப்படும். இவ்வைந்தும் ஒருபுடை யொப்பாகச் 'சிவயநம' என்னும் திருவைந்தெழுத்தினைக் குறிப்பதாகும். இவ்வுண்மையினை வரும் வெண்பாவால் நினைவுகூர்க:

"மேலாம் 'சிவயநம' மேவுமணி பொன்வெள்ளி
பாலாம்செம் போடுமண் பற்றல்போல் - மேலாம்
அவனாடல் செய்வனகம் ஆல்தில்லை கூடல்
தவநெல்லை குற்றாலந் தான்."

மண் - ஓவியம். ஆல் - திருவாலங்காடு. கூடல் - மதுரை.

மேலும் எல்லா இடங்களிலும் அவன் இடையறாதியற்றும் திருக்கூத்தை உகந்தருளினன். அத் திருக்கூத்தின் திருவாணைத் தொடர்பால் நெஞ்சத்தின் கண்ணெழுந்த உயிர்ப்பு கைகால் முதலிய பொறிகளைக் கலந்து இயக்குவதாயிற்று.

# 2716. குருவுரு வன்றிக் குனிக்கும் உருவம்

2716. குருவுரு வன்றிக் குனிக்கும் உருவம்
அருவுரு வாவதும் அந்த அருவே
திரிபுரை யாகித் திகழ்தரு வாளும்
உருவரு வாகும் உமையவள் தானே.

குருவின் திருவுருவையல்லாமல் இடையறாது நினைத்து இன்புறும் திருவுரு வேறொன்றுமின்று. குனித்தல் - இடையறாது நினைத்தல்; தியானித்தல். கட்புலனாகாத அருவவடிவமாவது அருமை வாய்ந்த அக்குருவேயாகும். திரிபுரை என்னும் திருவருள் திகழ்ந்து விளங்குவதும் அக்குருவடிவே. உருவமாயும், அருவமாயும் உற்று விளங்குபவள் உமையவளாவள்.

குனிக்கும் - நினைக்கும்.

## 2717. திருவழி யாவது சிற்றம் பலத்தே

2717. திருவழி யாவது சிற்றம் பலத்தே
குருவடி வுள்ளாக் குனிக்கும் உருவே
உருவரு வாவது முற்றுணர்ந் தோர்க்கு
அருள்வழி யாவதும் அவ்வழி தானே.

சிவபெருமான் திருவடியினைச் சேர்ந்து இன்புறுதற்கு என்றும் வாய்ப்பான திருவழி நன்னெறி நான்மையாகும். அதுவே சிற்றம்பலத் திருக்கூத்தாகும். சிவகுருவடிவினை அகமுற இடையறாது எண்ணுவார்க்கு அவ்வுருவே சிற்றம்பலத்திற் குனிக்கும் திருவுருவென்பது தெள்ளத்தெளிய வுள்ளத்துப் புலனாம். சிவகுருவின் திருவுருவே அருவுருவாய் நடிக்கும் அம்பலவாணரின் அருளுருவாகும். இவ்வுண்மையினை அருளால் முற்றுமுணர்ந்தோர்க்குத் திருவருள் வழியாவதும் அத் திருச்சிற்றம்பல வழியேயாகும்.

திருவழி - நன்னெறி. உள்ளாக் குனிக்கும் - உள்ளத்தில் நினைக்கும்.

## 2718. நீருஞ் சிரசிடைப் பன்னிரண் டங்குலம்

2718. நீருஞ் சிரசிடைப் பன்னிரண் டங்குலம்
ஓடும் உயிரெழுந் தோங்கி யுதித்திட
நாடுமின் நாதாந்த நம்பெரு மான்உகந்
தாடும் இடந்திரு அம்பலந் தானன்றே.

சிரசின்கண் உச்சிக்குமேல் பன்னிரண்டு விரற்கிடைவரை உயிர்ப்பு எழுந்து ஓடும். ஆண்டு ஓங்கி எழுந்து தோன்றிடுமாறு நீரும்
நாடுமின். நாதமுடிவாகிய நம்பெருமான் மிக்க உகப்புடன் திருக்கூத்தாடும் இடம் அதுவாகும். அதுவே திருவம்பலமாகும். திருவம்பலம் - தில்லைத் திருச்சிற்றம்பலம்.

உயிர் - பிராணவாயு.

## 2719. வளிமேக மின்வில்லு வானக வோசை

2719. வளிமேக மின்வில்லு வானக வோசை
தெளிய விசும்பில் திகழ்தரு வாறுபோல்
களியொளி யாறுங் கலந்துடன் வேறாய்
ஒளியுரு வாகி ஒளித்துநின் றானே.

வானத்தின்கண் காற்று வீசுகின்றது. மேகம் தவழ்கின்றது. மின்னல் மின்னுகின்றது. வானவில் தோன்றுகின்றது. ஓசை எழுகின்றது. இவற்றிற்கெல்லாம் வானம் இடங்கொடுப்பினும் அவ்வானம் இவற்றினால் தொடக்குண்ணாது வேறாகத் தனித்துநின்று திகழ்கின்றது. அதுபோன்று சிவபெருமானும் களிப்பினைத் தரும் ஒளிகள் ஆறுடனும் கலந்து அவற்றிற்கும் ஒளிகொடுத்து நிற்கின்றனன். அங்ஙனம் நிற்பினும் தான் தனிப் பேரறிவொளி வடிவாய், மறைந்து நின்றருள்கின்றனன். அறுவகையொளி: அகநிலை ஆதாரங்கள் ஆறினும் காணப்படும் அருள்விளக்கவொளி, ஓரறிவு முதல் ஆறறிவு ஈறாகக் காணப்படும் அறிவொளி. 'அறுவகைச் சமயத் தோர்க்கும் அவ்வவர் பொருளாய்'த் தோன்றும் சமயவொளி.

களியொளி ஆறும் - மேலான தூவொளி முதலிய ஆறு ஒளிகளும்.

# 2720. தீமுதல் ஐந்துந் திசையெட்டுங் கீழ்மேலும்

2720. தீமுதல் ஐந்துந் திசையெட்டுங் கீழ்மேலும்
ஆயும் அறிவினுக் கப்புறம் ஆனந்தம்
மாயைமா மாயை கடந்துநின் றார்காண
நாயகன் நின்று நடஞ்செய்யும் மாறன்றே.

ஐம்பெரும் பூதங்களினுள் ஒளியுருவாய் நடுநின்று ஓங்கி உயர்ந்து வளர்ந்து ஒளிதருவது தீ. அத் தீ ஒளியால் புறவிருளைப் போக்குகின்றது. சூட்டால் வெப்பத்தையும் உணா முதலியவற்றைப் பதஞ் செய்வதையும் புரிகின்றது. அதுபோல் சிவபெருமான் அறிவொளியையும் அருட்பதத்தையும் புரிந்தருளுகின்றனன். அம்முறையால் தீ அவனுக்கு ஒருபுடையொப்பாகும். அத்தகைய தீ முதலிய பெரும் பூதங்கள் ஐந்தும், திசை எட்டும், கீழும் மேலும் ஆகிய பத்துப்புலனும் நிலைக்களனாகக் கொண்டு ஆயும் ஆருயிரின் அறிவினுக்கு அப்புறமாகக் காணப்படுவது திருவடிப் பேரின்பம் தூவாமாயை தூமாயை என்று சொல்லப்படும் மாயை மாமாயையைக் கடந்துநின்ற மெய்யுணர்வினர் அறிவுக்கண்கொண்டு காணுமாறு நாயகன் நீங்காதுநின்று நடஞ்செய்தருளுகின்றனன். இதுவே அம்பலவாணன் இம்பரிடையும் ஆருயிரின் அகத்திடையும் அறிவிடையும் இடையறாது செய்து போதரும் திருவருட்கூத்தாகும்.

தீ முதல் ஐந்தும் - ஐந்து பூதங்களும்.

## 2721. கூத்தன் கலந்திடுங் கோல்வளை யாளொடுங்

2721. கூத்தன் கலந்திடுங் கோல்வளை யாளொடுங்
கூத்தன் கலந்திடுங் கோதிலா ஆனந்தங்
கூத்தன் கலந்திடுங் கோதிலா ஞானத்துக்
கூத்தனுங் கூத்தியுங் கூத்ததின் மேலன்றே.

கூத்தனாகிய சிவபெருமான் அழகிய புள்ளிகளையுடைய வளையலை யணிந்து கிளையுற விளங்கும் திருவருள் அம்மையுடன் கலந்து ஆருயிர்கட்கு அளவிலாநலம் உளமொடும் புரிகின்றனன். அவன்தன் திருவருட்கலப்பால் குற்றமற்ற பேரின்பம் சீருறப் பெருகும். அவன் திருவடியுணர்வெனப்படும் குற்றமிலாத சிவஞான விளக்கமுண்டாகும். கூத்தனும் கூத்தியும் ஆகிய சிவனும் சிவையும் திருக்கூத்தின்மேல் திருநோக்கம் கொண்டருளுகின்றனர்.

கூத்தி - நடமாடும் சிவகாமி.

## 2722. இடங்கொண்ட சத்தியும் எந்தை பிரானும்

2722. இடங்கொண்ட சத்தியும் எந்தை பிரானும்
நடங்கொண்டு நின்றமை நானும் அறிந்தேன்
படங்கொடு நின்றஇப் பல்லுயிர்க் கெல்லாம்
அடங்கலுந் தாமாய்நின் றாடுகின் றாரே.

சிவபெருமானின் இடப்பாகத்தைத் தனக்கு இடமாகக் கொண்டு திகழ்பவள் திருவருளம்மையாகிய சத்தி. அவளுடன் விட்டுப் பிரிவின்றி இருவேறுருவின் ஒரு பேரியாக்கையாய் ஒட்டித் திகழ்பவன் சிவபெருமான். அவன் திருநடம்புரியும் சீரொடு நின்றமையை அவனருளால் அடியேனும் அறிந்துள்ளேன். படம்போலும் மறைப்பினைச் செய்யும் ஆணவ வல்லிருளைப் பொருந்தியுள்ள பலவேறு உயிர்கட்கெல்லாம் பேரறிவும் பேராற்றலும் பேரின்பும் என்றும் மாறாதியை தற்பொருட்டு அச் சிவபெருமான் அடங்கலும் தாமாகநின்று ஆடியருள்கின்றனன். ஆடுதல் - அனைத்தையும் புடைபெயர்விக்கத் திருவுள்ளங் கொள்ளுதல். படம் - துணி; திரைச்சீலை.

இடங்கொண்ட - இடப்பாகம் கொண்ட. படங்கொடு - ஆணவமல மறைப்புக்கொண்டு.

# 2723. சத்தி வடிவு சகல ஆனந்தமும்

2723. சத்தி வடிவு சகல ஆனந்தமும்
ஒத்தஆ னந்தம் உமையவள் மேனியாஞ்
சத்தி வடிவு சகளத் தெழுந்திரண்டு
ஒத்தஆ னந்தம் ஒருநட மாகுமே.

எப்பொருளால் எவ்விடத்து எவ்வகை இன்பம் காணப்பெறினும் அவ்வனைத்தும் அருளாற்றலாம் சத்தியின் உரிமையே. அதனால் அனைத்தின்பமும் அருளாற்றலின் திருவடிவென்றனர். உண்மை அறிவு, இன்பம் என்னும் ஒப்பில் பொருள் மூன்றனுள் உடைமையாகிய உலகமும், உலகியற் பொருள்களும் அவற்றின் முதலாகிய மாயையும் உண்மை ஒன்றுமட்டும் உள்ளன. அடிமையாகிய ஆருயிர்கள் உண்மையும் அறிவும் உடையன. உடையானாகிய முழுமுதற்சிவன் உண்மையும், அறிவும், இன்பமும்
என்னும் மூன்று முடையன். தனக்குத் தானே ஒத்ததாய் ஈடும் எடுப்பும் இல்லதாய்க் காணப்படும் விழுமிய அழியாப் பேரின்பம் திருவருளின் திருமேனியாகும். சத்தியின் வடிவம் அரிசி மாவொத்து உள்ளது. அம்மாவினின்றும் பல்வேறு உருவம், சமைப்பார் நினைவிற்கேற்றவாறு அமையும். அதுபோல் திருவருளின்கணின்றும் சிவன் திருவுள்ளத்திற்குத் தக்கவாறு சிறந்துதோன்றும். அதனால் சத்தியின்வடிவு சகளமாகிய வடிவ நிலைக்களத்துத் தோன்றி எழும். எழுந்த சிவனும் சிவையுமாகிய இரண்டும் ஒத்துத் திரண்டு ஆருயிர்கட்குப் பேரின்பத்தினை ஊட்டுவதாக வுவந்தநிலை ஒப்பில் திருநடமாகும்.

## 2724. நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி

2724. நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி
உற்றுற்றுப் பார்க்க வொளிவிடு மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரம னிருந்திடஞ்
சிற்றம் பலமென்று தேர்ந்துகொண் டேனன்றே.

நெற்றியின்கண் நேர்நடுவாம் புருவமத்தியில் காணப்படும் இடைவெளி தில்லைத் திருச்சிற்றம்பலமாகும். ஆண்டு உற்று உற்றுப் பார்க்க ஒளிவிடு மந்திரம் 'சிவசிவ' என்னும் செந்தமிழ்த் திருமறையாகும். பற்றற்றார் பற்றுக்குப் பற்றாய் நிற்பவன் சிவபெருமான். அவனே பரமன். அவன் உடனாக இருக்கும் இருப்பிடம் மேலோதிய புருவநடுவாகிய தில்லைத் திருச்சிற்றம்பலமென்று திருவருளால் தேர்ந்து தெளிந்து கொண்டேன் என்க.

## 2725. அண்டங்கள் தத்துவ மாகிச் சதாசிவந்

2725. அண்டங்கள் தத்துவ மாகிச் சதாசிவந்
தண்டினிற் சாத்தவி சாம்பவி யாதனந்
தெண்டினில் ஏழுஞ் சிவாசன மாகவே
கொண்டு பரஞ்சோதி கூத்துகந் தானன்றே.

அண்டங்களும் அவற்றின் அடக்கமாகிய தத்துவங்களாகும், அருளோன், ஆண்டான், அரன், அரி, அயன் என்னும் ஐம்பெரும் நிலைகளும், சத்தியின்வடிவாயுள்ள சாத்தவி, சாம்பவி என்னும் இரண்டும் கூடிய ஏழுநிலைகளும் அடைவுபட - முறைமையாய்ச் சிவன் இருக்கையாகும். அவ்வெழுநிலைகளும் இருக்கையாகக்கொண்டு பரஞ்சோதியாகிய விழுத்திணைச் சிவன் திருக்கூத்துகந்தனன்.

தெண்டினில் - முறைமையில்.

## 2726. மன்று நிறைந்த விளக்கொளி மாமலர்

2726. மன்று நிறைந்த விளக்கொளி மாமலர்
நன்றிது தானிதழ் நாலொடு நூறவை
சென்றது தானொரு பத்திரு நூறுள
நின்றது தானெடு மண்டல மாகுமே.

செம்பொன் அம்பலம் - தில்லைத் திருச்சிற்றம்பலம் முதலிய மன்று நிறைந்த திருவிளக்கொளிபோன்று கதிர் காலும் பெருமலர். இது நன்மைதரும் மென்மை மலராகும். இதன் இதழ்கள் நூற்று நான்கெனவும், இருநூற்றுப்பத்தெனவும் கூறப்படும். இம் மலர்கள் ஆறாதாரத்துக் காணப்படும் என்ப. இவையனைத்தும் சிவபெருமான் நின்றருளும் நெடுமண்டலமாகும்.

நாலொடுநூறு - 104. பத்திருநூறு - இருநூற்றுப் பத்து.

## 2727. அண்டம் எழுகோடி பிண்டம் எழுகோடி

2727. அண்டம் எழுகோடி பிண்டம் எழுகோடி
தெண்டிரை சூழ்ந்த திசைகள் எழுகோடி
எண்டிசை சூழ்ந்த இலிங்கம் எழுகோடி
அண்டன் நடஞ்செயும் ஆலயந் தானன்றே.

அளவில்லாத எழுகோடி அண்டங்களும், அவைபோன்று எழுகோடிப் பிண்டங்களும், தெளிந்த திரையையுடைய கடலாற் சூழப்பட்ட திசைகளும் விளங்கும் எழுகோடித் தீவுகளும், எட்டுத் திசைகளிலும் காணப்படும் அளவில்லாத சிவக்கொழுந்து எனப்படும் சிவலிங்கங்களும் எழுகோடி என்ப. இவ்விடங்களனைத்தும் அண்டனாகிய சிவபெருமான் நடனஞ்செய்யும் திருக்கோவில்களாகும்.

## 2728. ஆகாச மாமுட லங்கார் முயலகன்

2728. ஆகாச மாமுட லங்கார் முயலகன்
ஏகாச மாந்திசை யெட்டுந் திருக்கைகள்
மோகாய முக்கண்கள் மூன்றொளி தானாக
மாகாய மன்றுள் நடஞ்செய்கின் றானன்றே.

வெளியாம் உடலும், காற்கீழ் கரிய நிறமுடைய முயலகனும், மேலாடை போன்று காணப்படும் எட்டுத் திசைகளும் கைகளாகவும் கொண்டு, மிக்க வேட்கையினையுடைய மூன்று கண்களும் மூன்றொளிப் பொருள்களாகவுள்ள ஞாயிறு திங்கள் தீயாகவும் கொண்டு திகழ்வோன் சிவன். அவன் அறிவுப் பேரொளியாகிய பெருவெளியில் அறிவுப் பெருநடஞ்செய்தருளுகின்றனன். 'முயலகன்' என்பது நன்னெறி நான்மையின்கண் முயல்வுறும் நல்லாரை முயலவொட்டாது தடுக்கும் ஆணவம். அதன் சார்பாம் மருள், பிறப்புறுவார்கட்குச் சிறந்த கரும்பு போன்று இனிக்கும். அதனை அரைத்து அடிக்கீழ் அமுக்குவது ஆண்டவன் அருட்செயலாகும். அவ்வுண்மை வரும் பட்டினத்துப் பிள்ளையார் திருப்பாட்டானுணர்க:

"பெறுவது பெற்ற உறுதியுத் தமர்கட்கு
ஆயினும் சிறந்த நேயநெஞ் சினனே
யாகக் கழனியின் யோகத் தபோதனர்
ஆன பேருழவர் மானமோ டாக்கிய

## 5. முய லகனென்னு மியல்பெருங் கரும்பை.

5. முய லகனென்னு மியல்பெருங் கரும்பை.
உதிர மென்னும் முதிர்சா றொழுக
நகையெனு முத்தந் தொகையுறத் தோன்றச்
சுந்தரப் பதமெனும் எந்திர ஆலையிட்டு
அரைத்தக வயிரங் கரைத்தவித் தகனே

. . . . . . . . . . . . . . .
(திருக்கழுமல மும்மணி, 25.)

ஏகாசம் - மேலாடை. மோகாய - விருப்பமுள்ள.
மாகாயமன்று - ஆகாயமன்று.

## 2729. அம்பல மாவ தகில சராசரம்

2729. அம்பல மாவ தகில சராசரம்
அம்பல மாவது ஆதிப் பிரானடி
அம்பல மாவது அப்புத்தீ மண்டலம்
அம்பல மாவது அஞ்செழுத் தாகுமே.

அனைத்துலகின்கண் காணப்படும் இயங்குதிணை நிலைத்திணைப் பொருள்கள் முற்றும் சிவபெருமான் திருக்கூத்தியற்றும் திருவம்பலமாகும். ஆதியாகிய நடப்பாற்றலையுடைய நாயன் திருவடியும் அம்பலமாகும். நீர் மண்டலம், தீ மண்டலம் (இனம்பற்றி ஏனைய பூதங்கள்) ஆகியவைகளும் அம்பலமாகும். மெய்ம்மை அம்பலமாவது செந்தமிழ்த் திருவைந்தெழுத்தேயாம். திருவைந்தெழுத்து அம்பலம் என்பதை 2715 ஆம் திருப்பாட்டின்கண் விளக்கியுள்ளாம்; ஆண்டுக் காண்க.

இம் மந்திரம் எல்லாம் சிவத்தின் நாடகசாலைகள் என்று கூறிற்று.

## 2730. கூடிய திண்முழ வங்குழ லோமென்று

2730. கூடிய திண்முழ வங்குழ லோமென்று
ஆடிய மானுடர் ஆதிப் பிரானென்ன
நாடிய நற்கண மாரம்பல் பூதங்கள்
பாடிய வாறொரு பாண்டரங் காகுமே.

சிவபெருமான் ஆடிய திருக்கூத்தினைக் காணும் பேறு திருவருளால் பெற்ற மானுடர் ஆண்டு முழங்கிய குடமுழாவாகிய திண்ணிய முழவோசையினையும், புல்லாங்குழல் ஓசையினையும் பொலிவு பெறக் கேட்டனர். எல்லாம் ஓம் என்று ஒலிக்கும் நுண்மையினையும் உணர்ந்தனர். ஆதிப்பிரானென்று போற்றினர். சிவபெருமானையே நாடி நிற்கும் வரிசை யமைந்த நற்கணமும், பல்வேறு வகையான பூதகணங்களும் அவன் ஆடும் (2678) பாண்டரங்கக் கூத்தினைக்கண்டு பாடியாடித் தொழுதனர். பாண்டரங்கம் வருமாறு.

"ஏறமர் கடவுண் மூவெயில் எய்வுழிக்
கூறுகூ றாகக் கொடியொடும் படையொடும்
வேறுவே றுருவின் விண்மிசைப் பரத்தர்
அவ்வழி யொளியொடு முருவொடுந் தோன்றித்
தேர்மு னின்று திசைதலை பனிப்பச்
சுவையும் குறிப்பும் ஒழிவில தோன்றி
அவையவை யல்வழி யாடினன் ஆட
மைந்தரு மகளிரும் தந்நிலை யழிய
மெய்ப்படு சுவையொடு கைப்படை மறப்பக்
கடிய காலக் காற்றென ஏற்றவன்

பழிநிலை திரியாப் பாண்டரங் கம்மே."
மானிடர் என்னும் பாடத்திற்கு மானை இடக்கையின்கண் உடைய சிவபெருமான் என்க.

மானிடர் - மான் + இடர் - மானை இடக்கரத்துப்பக்கம் உடையவர். கணம் ஆரம் - வரிசையாக உள்ள கூட்டங்கள்.

## 2731. அண்டத்தில் தேவர்கள் அப்பாலைத் தேவர்கள்

2731. அண்டத்தில் தேவர்கள் அப்பாலைத் தேவர்கள்
தெண்டிரை சூழ்புவிக் குள்ளுள்ள தேவர்கள்
புண்டரி கப்பதப் பொன்னம் பலக்கூத்துக்
கண்டுசே வித்துக் கதிபெறு வார்களே.

வெவ்வேறாகிய அண்டங்களில் உள்ள தேவர்களும், ஏனைப் புற அண்டங்களிலுள்ள தேவர்களும், தெளிந்த அலைகளையுடைய கடலாற் சூழப்பட்ட உலகங்களுக்குள்ளுள்ள தேவர்களும், செந்தாமரை மலரை யொத்த திருவடித் தாமரையைத் தூக்கிப் பொன்னம்பலத்தின் கண்ணே முழுமுதற் சிவபெருமான் புரியும் திருக்கூத்தினைக் கண்டு தொழுது வழிபட்டனர். அதனால் அவர்தம் பெருநிலையினை எய்தியுள்ளார்கள். இன்னும் வழிபடுவதனால் மேனிலையும் அடைவார்கள்.

அப்பாலை - புறவண்டம்.

## 2732. புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோற்

2732. புளிக்கண் டவர்க்குப் புனலூறு மாபோற்
களிக்குந் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்
துளிக்கும் அருட்கண்ணீர் சோர்நெஞ் சுருக்கும்
ஒளிக்குளா னந்தத் தமுதூறும் உள்ளத்தே.

புளியினைக் கண்டவருக்கு நாக்கின்கண் புனலூறுவது இயல்பு. இது காட்சியினாலேயே மீட்சியில் மாட்சியின்பம் உண்டென்பதனை உணர்த்துகின்றது. அதுபோன்று அனைவர்க்கும் தனை நிகர் களிப்பினைத் தரும் தில்லைத் திருச்சிற்றம்பலக் கூத்தனைக் காதலுடன் கண்டவர்கட்கெல்லாம் இன்பக் கண்ணீர் துளித்து முத்து முத்தாக வழியும். நெஞ்சமானது அன்பின் மேலீட்டினால் தழல் கண்ட வெண்ணெய் போன்று உருகா நிற்கும். உள்ளத்தின்கண்ணே உணர்வொளிக்குள் விளைந்த வற்றாப் பேரின்பத்தமுதூறும்.

## 2733. திண்டாடி வீழ்கை சிவானந்த மாவது

2733. திண்டாடி வீழ்கை சிவானந்த மாவது
உண்டார்க் குணவுண்டால் உன்மத்தஞ் சித்திக்குங்
கொண்டாடு மன்றுட் குனிக்குந் திருக்கூத்துக்
கண்டார் வருங்குணங் கேட்டார்க்கும் ஒக்குமே.

கொடும் பிறவிக்கஞ்சிப் பற்றைவிடும் வேட்கையுடன் வரும் மெய்யன்பர்கட்கு விரும்பித் தங்குமிடம் சிவானந்தமாகிய திருவடிப்பேறேயாம். அச் சிவானந்தம் உணர்வினின் உணவு என உண்டார்க்குச் செயலறுதலாகிய உன்மத்தம் கை கூடும். எல்லாராலும் கொண்டாடப்படும் தில்லைச் சிற்றம்பலத்தினுள் சிவபெருமான் புரியும் திருநடனத்தைக் காதலித்துக் கண்டார்க்கு வரும் கணக்கிலாப் பேரின்பப் பண்பு சொல்லக் கேட்டார்க்கும் ஒப்பக்கிடைத்துப் பேரின்புறுத்தும். செயலறுதல் - உலகை மறத்தல்.

உன்மத்தம் - உலகை மறந்திருக்கும் நிலை.

## 2734. அங்கி தமருகம் அக்குமா லைபாசம்

2734. அங்கி தமருகம் அக்குமா லைபாசம்
அங்குசஞ் சூலங் கபால முடன்ஞானந்
தங்கு பயந்தரு நீல மும்முடன்
மங்கையோர் பாகமாய் மாநட மாடுமே.

சிவபெருமான் திருக்கூத்துப் புரியுங்கால் கைக்கொள்ளும் பொருள்களும் துணையும் வருமாறு: மழு, உடுக்கை, சிவமணி, கயிறு, தோட்டி, முத்தலைவேல், நான்முகன் மண்டையோடு முதலியன. துணையாக விட்டுப்பிரியாது திருவடியுணர்வாகிய அழியா விழுப்பயனைத் தந்தருளத் தங்கும் நீலத் திருக்கடைக்கண்ணுடன் எழுந்தருளியிருக்கும் மங்கையினை ஓர் உடம்பின்கண் ஒப்பில் ஒரு கூறாகக்கொண்டு மாநடம் புரிகின்றனன் சிவன்.

நீலமும்முடன் - நீல விழிகளோடுங் கூடிய.

# 2735. ஆடல் பதினோ றுறுப்பும் அடைவாகக்

2735. ஆடல் பதினோ றுறுப்பும் அடைவாகக்
கூடிய பாதஞ் சிலம்புகைக் கொள்துடி
நீடிய பாதம் பராற்பர நேயத்தே
ஆடிய நந்தி புறமகத் தானன்றே.

சிவபெருமான் முறையாக ஆடலுக்கு வேண்டிய பதினொரு உறுப்பும் குறைவில்லாமல் நடித்தருளுகின்றனன்.

திருவடிக்கண் மறைச்சிலம்பும், திருக்கையிற் கொள்ளும் உடுக்கையும் என்றும் பொன்றாது நின்று ஓம் எனும் துன்றிய ஒலியினை நன்றாக ஒலிக்கும். 'மேலோர்க்கும் மேலோர்க்கும் மேலாய' இயற்கை உண்மை அறிவு இன்பவடிவத்தே நின்று திருக்கூத்தருளுகின்றனன். அத் திருக்கூத்துப் புறமாகிய அண்டத்துள்ளும் அகமாகிய உடம்பினுள்ளும் அவனருளால் ஓவாது இயற்றப்படுகின்றன. உடம்பு - பிண்டம்.

"கடையமயி ராணிமரக் கால்விந்தை கந்தன்
குடைதுடிமா லல்லியமல் கும்பம் - சுடர்விழியாற்
பட்டமதன் பேடுதிருப் பாவையரன் பாண்டரங்கம்
கொட்டியிவை காண்பதினோர் கூத்து."

(சிலப்பதிகாரம், 3. அரங்கேற்றுகாதை, மேற்கோள்.)

எக்கூத்து எவரால் ஆடப்படினும் அவை யனைத்தும் சிவபெருமான் திருவருளேயாம்.

## 2736. ஒன்பதும் ஆட ஒருபதி னாறாட

2736. ஒன்பதும் ஆட ஒருபதி னாறாட
அன்புறு மார்க்கங்கள் ஆறும் உடனாட
இன்புறும் ஏழினும் ஏழைம்பத் தாறாட
அன்பது மாடினான் ஆனந்தக் கூத்தன்றே.

'சிவம், சத்தி, நாதம், விந்து, சதாசிவன், திகழும் ஈசன், உவந்தருள் உருத்திரன்றான், மால், அயன்' என்று சொல்லப்படும் சிவபெருமானின் பெருநிலைகள் ஒன்பதும் சிவபெருமான் புரிந்தருளும் திருக்கூத்தால் ஆடுதலாகிய தொழில்நிலை எய்தும். எட்டுத் திசையும், எட்டுத் திருவுருங்களும் ஆகிய பதினாறும் திருக்கூத்தால் ஆடுவனவாகும். இறவாத இன்பவாயிலாம் அன்புசேர் நெறிகள் சமயங்களெனப்படும். அவை தொகையான் அறுவகைப்படும். வகையான் அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என நான்காகும். விரியான் இருபத்து நான்காகும். அவைகளும் ஆடுவனவாகும். இன்பம் எய்தும் நிலைக்களமாகக் காணப்படும் உலகங்கள் ஏழும் ஆடுவனவாகும். ஆருயிர்களின் பிறப்பின்வகை ஏழாகக் காணப்படும். அவ்வேழும் ஆடுவனவாகும். நாடுகள் ஐம்பத்தாறென்று நவிலப்படும். அவைகளும் ஆடுவனவாகும். இவை யனைத்தும் அன்பதுவாகச் சிவபெருமான் ஆடும் ஆனந்தக் கூத்தினான் நிகழ்வனவாகும். அத்தகைய பேரின்பப் பெருங்கூத்தினைச் சிவபெருமானாடியருளினன்.

## 2737. ஏழினில் ஏழாய் இகழ்ந்தெழுந் தேழதாய்

2737. ஏழினில் ஏழாய் இகழ்ந்தெழுந் தேழதாய்
ஏழினில் ஒன்றாய் இழிந்தமைந் தொன்றாகி
ஏழினிற் சன்மார்க்கம் எங்கள் பரஞ்சோதி
ஏழிசை நாடகத் தேஇசைந் தானன்றே.

பண்ணமைவு ஏழென்று கூறப்படும். அவை: குரல், துத்தம், கைக்கிளை, விளரி, தாரம்., உழை, இளி என எழுவகைப்படும். அவ் வேழும் உறழ நாற்பத்தொன்பதாகும். இகழ்ந்தெழுத்து ஆறும் திகழ்ந்தெழுத்து ஒன்றும் ஆகிய ஏழு எழுத்துக்களாகும். அவையாவன: ஆதாரமாகிய நிலைகள் ஆறுக்கும் உரிய எழுத்துக்கள் ஆறு. ஓமொழிப் பிரணவ எழுத்தொன்றும் ஆக ஏழு. இவ் வேழினுள்ளும் முதன்மை வாய்ந்தது ஓமொழியே. அதனால் ஏழினில் ஒன்றாயென்றனர். அறுவகை நெறியும் நடுவாக நன்றிக்கண் தங்கியான் நெறியும் என் நெறிகள் ஏழாம். நடுவாக நன்றிக்கண் தங்கல்: சமரச சன்மார்க்கம். இதனை நடுநெறி எனவும் கூறுப. நடுநெறியினைச் சமயாதீதம் எனவும் கூறுப. சமயாதீதமே சித்தாந்த சைவம். இவ் வுண்மை வரும் தாயுமான அடிகள் திருப்பாட்டான் உணரலாம்.

"சைவ சமய மேசமயஞ் சமயா தீதப் பழம்பொருளைக்
கைவந் திடவே மன்றுள்வெளி காட்டுமிந்தக் கருத்தைவிட்டுப்
பொய்வந் துழலுஞ் சமயநெறி புகுத வேண்டா முத்திதரும்
தெய்வ சபையைக் காண்பதற்குச் சேர வாரும் சகத்தீரே."

(தாயுமானார், 30. காடுங்கரையும், 2)
எங்கள் பரஞ்சோதி நாடகத்து இசைந்து
திருக்கூத்தியற்றியருளுகின்றனன்.

இம் மந்திரம் இசையில் உள்ள பண்கள் வகைகளை நாடகப் பண்புக்கேற்பக் கூறுகிறது.

## 2738. மூன்றினில் அஞ்சாகி முந்நூற் றறுபதாய்

2738. மூன்றினில் அஞ்சாகி முந்நூற் றறுபதாய்
மூன்றினில் ஆறாய் முதற்பன்னீர் மூலமாய்
மூன்றினில் அக்க முடிவாகி முந்தியே
மூன்றிலும் ஆடினான் மோகாந்தக் கூத்தாமே.

ஒருமலமுடையார், இருமலமுடையார், மும்மலமுடையார் என ஆருயிர்கள் மூவகைப்படும். மும்மலமும் ஆணவம் கன்மம் மாயை எனப்படும். இவை விரியுங் காலத்து, ஆணவம், கன்மம் மாயை, மாயையாக்கம், இவற்றைத் தொழிற்படுத்தும் நடப்பாற்றலாம் திருவருள் ஆக ஐந்துமாம். ஆருயிர்களின் மூச்சு முந்நூற்றறுபதுடன் ஆறு உறழ இரண்டாயிரத்தொருநூற்றறுபது உயிர்ப்பாகும். பன்னிரண்டு ஆதாரங்களும் வழியாய் அக்கமாகிய ஆன்மாவின் கண்ணும், மூன்றுலகின்கண்ணும் தொன்மையே சிவன் ஆடிருளினன். மூன்றினில் என்பதற்கு மூன்று மண்டலங்களிலெனவும், ஐந்தினில்: நடுக்கம், விளக்கம், ஆட்சி, தோன்றுவித்தல், இயக்கம் என்று சொல்லப்படும் ஐம்பெரு மந்திரங்களெனவும், மூச்சு வேறுபாடு முந்நூற்றறுபது, ஆறாதாரங்கள் எனவும் கூறலுமொன்று.

மூன்றினில் - ஒருமலமுடையவர். இருமலமுடையவர், மும்மலமுடையவர். அஞ்சாகி - ஐந்து மலங்களாய். முந்நூற்றறுபதாய் மூன்றினில் ஆறாய் - மூன்றுவித உயிர்களிடத்திலும் 360 x 6 = 2160 சுவாசபேதமாய்

முதற்பன்னீர் மூலமாய் - மூலாதாரமாய். அக்கம் - ஆன்மா.

## 2739. தாமுடி வானவர் தம்முடி மேலுறை

2739. தாமுடி வானவர் தம்முடி மேலுறை
மாமணி ஈசன் மலரடித் தாளிணை
வாமணி யன்புடை யார்மனத் துள்ளெழுங்
காமணி ஞாலங் கடந்துநின் றானன்றே.

அழகிய சிறந்த மணிகண்டத்தையுடைய சிவபெருமானின் செங்கமலத் தாளிணைகள் பிறந்திறக்கும் பெற்றிமை வாய்ந்த ஆருயிர் இனத்தராய்ப் புண்ணியப் பேற்றினால் வானவராய்த் திரியும் வானவர் முடிக்கண் உறைந்தருளின. அழகு பொருந்திய சிவ அன்புடையார் மனத்துள் எழுந்தோங்கி நிற்கும் சிவபெருமான் வேண்டக் கொடுக்கும் கற்பகத்தையும், சிந்தித்தது கொடுக்கும் சிந்தாமணியையும் ஒருபுடையொப்பாகவுள்ளவன். அவன் அம் மெய்யன்பர்களைத் தானாக்கித் கொண்டருளினன். அவன் ஞாலங்கடந்து நின்றருளும் மேலோனாயினன்.

முடிவானவர் - ஒருகாலத்தில் இறக்குந் தன்மையுள்ளவானவர். வாமணி - வாமம் + அண்ணி - அழகுபொருந்தி. காமணி - கா + மணி - கற்பக தருவும் சிந்தாமணியும்.

# 2740. புரிந்தவன் ஆடிற் புவனங்க ளாடுந்

2740. புரிந்தவன் ஆடிற் புவனங்க ளாடுந்
தெரிந்தவன் ஆடும் அளவெங்கள் சிந்தை
புரிந்தவ னாடிற்பல் பூதங்கள் ஆடும்
எரிந்தவன் ஆடல்கண் டின்புற்ற வாறே.

சிவபெருமான் புரிதலாகிய திருவுள்ளங்கொண்டு உலகு தொழிற்பட வேண்டுமென நோக்கல் நோக்காகிய ஆடுதலைப் புரிவன். புரியவே புவனங்கள் ஆடும். இயற்கை யுணர்வும் முற்று முணரும் முழுமுதற்றன்மையும் இயல்பாக வாய்ந்த விழுமியோன் சிவன். அதனால் அவன் அனைத்துந் தெரிந்த அருளாளனாவன். அவன் ஆடுமளவும் எங்கள் சிந்தையும் ஆடும். இதற்கு ஒப்புப் பகலும் நிலவும், விளக்கும் உள்ள துணையும் கண்ணும் கருத்தும் அண்ணித் தொழிற்பட்டு இன்பம் நண்ணுவதாகும். புரிந்தவனாகிய சிவபெருமான் ஆடில் பல பூதங்களும் ஆடும். இயற்கைப் பேரறிவுப் பேரொளி வண்ணனன் சிவபெருமான். அதனால் அவன் எரிந்தவன் என ஓதப்பெற்றனன். அல்லதூஉம் மலமாயை கன்மமாகிய முப்புரங்களையும் எரிந்தவன் எனினும் அமையும். இப் பொருட்குப் பிறவினை தன்வினையாக நின்றதெனக் கொள்க. அத்தகைய பெரும் பொருட் கிளவியான்றன் பேரருள் ஆடலைக் கண்டு அனைத்துயிரும் இன்புற்றன என்க.

புரிந்து - விரும்பி. எரிந்தவன் - தீப்பிழம்பாயுள்ள சிவன்.

## 2741. ஆதி நடஞ்செய்தான் என்பர்கள் ஆதர்கள்

2741. ஆதி நடஞ்செய்தான் என்பர்கள் ஆதர்கள்
ஆதி நடஞ்செய்கை யாரும் அறிகிலர்
ஆதி நடமாட லாரும் அறிந்தபின்
ஆதி நடமாட லாமருட் சத்தியே.

மேலோதிய வுண்மையினை உள்ளவாறுணரும் நல்லறி வில்லாத புல்லறிவாளர்கள் ஆதியைப் பாதித் திருமேனியாகவுடைய சிவபெருமான் ஏனையோரைப்போலத் தன் பொருட்டு நடம் புரிகின்றனன் என்பர். அப் பெருமானார் 'அவையே தானேயாய்' நின்று திருவருளாடல் புரியும் உண்மை நுண்மைச் செய்கையினை அவனருளிலார் யாரும் அறிகிலர். அவன்றன் திருவாடலை அவனருளால் அறியும் பேறு பெற்றபின் அவ் வாடல் அருட் சத்தியினால் நிகழ்வதென்னும் உண்மையினையும், அதுவும் ஆருயிர்களின் உய்வின்பொருட்டு என்னும் நன்மையினையும் கண்டு புகழ்வர். தாமும் திருவருள் வண்ணமாகத் திகழ்வர்.

## 2742. ஒன்பதோ டொன்பதாம் உற்ற இருபதத்து

2742. ஒன்பதோ டொன்பதாம் உற்ற இருபதத்து
அன்புறு கோணம் அசிபதத் தாடிடத்
துன்புறு சத்தியுள் தோன்றிநின் றாடவே
அன்புறு எந்தைநின் றாடலுற் றானன்றே.

ஆருயிர்கட்கு அமைந்த நுண்ணுடம்பு புரியட்டகம் எனப்படும். அது புலனாகிய தன்மாத்திரை ஐந்தும், மனம் எழுச்சி இறுப்பு (புத்தி) என்னும் மூன்றும் கூடிய எட்டினாலும் ஆயதாகும். அவ்வுடலே 'பிறப்பொக்கும் எல்லாவுயிர்க்கும்' என்னும் மாறாப் பிறப்புடலாகும். அவ் வுடலும், ஐம்போர்வையும் பொருந்திய விடத்து அமைந்து விளங்கும் ஆள்நிலை ஒன்றுங்கூட்டி மெய் ஒன்பதாகும். அவ் வொன்பது வகையான் பின்னும் ஒன்பதாகும். வகை பொதுமையும் தனிமையும் இவற்றைப் பொதுவும் சிறப்பும் எனவுங் கூறுப. சமட்டி வியட்டி எனினும் பொருந்தும். பருவுடலுடன் கூடித் தொழிற்படு நிலை தனிமை அல்லது சிறப்பு. கூடாது நிற்கும் நிலைமை பொதுமை. 'தத்', 'துவம்' என்னும் இருமொழிக்கண்ணும், அன்பான் இரண்டும் விட்டு நீங்காது ஒட்டியோங்குவது தூங்குவது என்னும் கூட்டத்தினைப் புலப்படுத்தும் 'அசி' மொழிக்கண்ணும் சிவபெருமான் ஆட அவை நிகழும். அஃதாவது ஆருயிரும் பேருயிரும் ஒருயிராய்ச் சேர்வுற்றுப் புணர்ந்து தீர்வரிய இன்பந்திளைத்தல். தேனினை நுகர்வான் தேனும் நாவும் தானும் ஒன்று கூடிய விடத்து நுகரும் இன்ப நுகர்வு இதற்கு ஒப்பாகும். ஆருயிர்களின் சீரில்

நிலைகண்டு துன்புறும் நடப்பாற்றலாகிய ஆதி சத்தியினுள் நின்று ஆடியருள்வன். அச் சத்தி, அதனால் ஆருயிர்களை நடத்தியருள்வள்.

இருபதம் - தத்பதம் - துவம்பதம்.

## 2743. தத்துவம் ஆடச் சதாசிவந் தானாடச்

2743. தத்துவம் ஆடச் சதாசிவந் தானாடச்
சித்தமும் ஆடச் சிவசத்தி தானாட
வைத்த சராசரம் ஆட மறையாட
அத்தனும் ஆடினான் ஆனந்தக் கூத்தன்றே.

விழுமிய முழுமுதற் சிவபெருமான் திருவருள் திருவுள்ளத் திருநோக்கமாகிய திருவாடலைப் புரிவது உலக நன்மையும் உலகோர் நன்மையும் நின்று நிலவுதற் பொருட்டேயாம். அதனால் அவன் ஆடவே அனைத்தும் ஆடுகின்றன என ஓதியருளினர். அவை வருமாறு மெய்களாகிய தத்துவங்களாடின. அவற்றுள்ளும் சிறந்து ஐந்தீ. நாப்பண் நிற்கும் அருளோனாகிய சதாசிவனும் ஆடினன். சிவனார் திருவுள்ளமாகிய சித்தமும் ஆடிற்று. சிவனருளாகிய சத்தியும் ஆடினள். முன்னேறி ஓங்கி உயருமாறு அமைத்த இயங்குதிணைப் பொருள்கள், நிலைத்திணைப் பொருள்களும் ஆடின. அவற்றினுக்கு உறுதிபயக்கும் மறைகளும் ஆடின என்க. அத்தனாகிய அச் சிவபெருமானும் என்றும் பேரின்பப் பெருங்கூத்தாடினன்.

## 2744. இருவருங் காண எழில்அம் பலத்தே

2744. இருவருங் காண எழில்அம் பலத்தே
உருவோ டருவோ டுருபர ரூபமாய்த்
திருவருட் சத்திக்குள் சித்தனா னந்தன்
அருளுரு வாகநின் றாடலுற் றானே.

பதஞ்சலி முனிவர் புலிக்கால் முனிவர் என்னும் இருபெரும் செம்பொருட்டுணிவினராகிய சிவனடியார்களிருவரும் தொன்மைத் தென்னாட்டினர். "தென்னாடுடைய சிவனேபோற்றி" என அன்பால் தொழுது ஆடல் கண்டு இன்புற்று மன்னும் நன்மையர். அப்பெருமுனிவர் காண அழகிய பொன்னம்பலம் மன்னித் திருக்கூத்தியற்றியருளினன். பாதஅஞ்சலியார்: பதஞ்சலியார் என்றாயிற்று. இது சிவபெருமான் திருவடியை வணங்குபவர் என்பதாம். புலிக்காலர்: திருவடியைப் புல்லியவர் என்பதாம். இவை முன்பின்னாகத் தொக்கது. புல்லி என்பது புலியென நின்றது. அத் திருவம்பலம் காண்பார் செவ்விக்கேற்றவாறு விளக்கமுற்றருளும் திருவருளாற்றலின் வண்ணமாயது. அத் திருவருள், உருவாய் அருவாய் உருவருவாய் விளங்கிநிற்பள். சொல்லின் வரிவடிவம் கட்புலனாம் உருவமாகும். சொல்லின் ஒலிவடிவம் செவிப்புலனாம் அருவமாகும். சொல்லின் உள்ளப் பதிவு உருவருவமாகும். திருவருளும் இம் முத்திறப் பாகுபாட்டினுள் நின்று ஆருயிரை இயைந்தியக்கி அருளுகின்றனன். அத் திருவருளுக்குள் சித்தனாகிய சிவபெருமான், பேரின்பமே பெரு வடிவமாகவுள்ளவன். அருளுருவாக நின்று

ஆடல்புரிகின்றனன். திருச்சிற்றம்பலம் திருவருள் உருவம் என்பதனை வரும் சேக்கிழாரடிகளின் திருமொழியான் உணர்க:

"கற்பனை கடந்த சோதி கருணையே யுருவ மாகி
அற்புதக் கோலம் நீடி அருமறைச் சிரத்தின் மேலாம்
சிற்பர வியோம மாகும் திருச்சிற்றம் பலத்துள் நின்று
பொற்புடன் நடஞ்செய் கின்ற பூங்கழல் போற்றி போற்றி."
(12. தில்லைவாழந்தணர், 2.)

இருவரும் - பதஞ்சலி, வியாக்கிரமர்.

## 2745. சிவமாடச் சத்தியும் ஆடச் சகத்தில்

2745. சிவமாடச் சத்தியும் ஆடச் சகத்தில்
அவமாட ஆடாத அம்பரம் ஆட
நவமான தத்துவ நாதாந்த மாடச்
சிவமாடும் வேதாந்த சித்தாந்தத் துள்ளே.

மெய்களாகிய தத்துவங்களை இயக்கும் அத்தனாகிய (36) சிவனும் ஆடியருளுகின்றனன். அன்னையாகிய (35) சத்தியும் ஆடியருளுகின்றனள். இவ்விருவர்தம் திருக்கூத்தால் நிலவுலகத்தில் ஆருயிர்களைப் பிணிக்கும் மலமுதலிய குற்றங்களும் ஆட்டங்கண்டு அகல்வதாயின. தத்துவமாகிய மெய்களுக்கும் சுழற்சி நல்கித் தானும் சுழன்று கொண்டு நிற்கும். ஒலிமுடிவாய்த் தத்துவங்கடந்த வியத்தகு புதுமை சேர் தத்துவமும் ஆடுவதாயிற்று. கடந்த நிலையில் விளங்கும் முழுமுதற் சிவமும் ஆடியருள்வதாயிற்று. இத்திரு ஆடலினாலேயே ஏனையவும் ஆடுவதாயிற்று. இவ்வுண்மையெல்லாம் வேதாந்த சித்தாந்த மெய்ம்மையினுட் காணலாம்.

அவமாட - தீமையெலாம் ஒழிய.

## 2746. நாதத்தின் அந்தமும் நாற்போத அந்தமும்

2746. நாதத்தின் அந்தமும் நாற்போத அந்தமும்
வேதத்தின் அந்தமும் மெய்ச்சிவா னந்தமுந்
தாதற்ற நல்ல சதாசிவா னந்தத்து
நாதப் பிரமஞ் சிவநட மாகுமே.

நாதமாகிய ஒலியின்முடிவும், அவ்வொலியாற் பெறப்படும் நால்வகையான அறிவின்முடிவும், வேதத்தின் முடிவும், என்றும் உலைவின்றி நிலைபெற்று நிற்கும் மெய்ம்மைச் சிவபெருமானின் பேரின்பமும், திருவருள் நடத்தால் வந்தெய்தும். குற்றமற்ற நன்மைக்கொள்கலமாம் அருளோனாகிய சதாசிவப் பேரின்பத்து நாதப்பிரமமாகிய ஓம் மறை சிவநடம்புரியும் தவநிலையமாகும்.

தாது - குற்றம்.

## 2747. சிவமாதி ஐவர்தின் டாட்டமுந் தீரத்

2747. சிவமாதி ஐவர்தின் டாட்டமுந் தீரத்
தவமார் பசுபாசம் ஆங்கே தனித்துத்
தவமாம் பரனெங்குந் தானாக ஆடுந்
தவமாஞ் சிவானந்தத் தோர்ஞானக் கூத்தே.

அத்தன், அன்னை, அருளோன், ஆண்டான், ஆசான் என்று சொல்லப்படும் தூமாயைக் கண்ணுள்ள திருவுருவினர் ஐவர். அவர் முறையே சிவம், சத்தி, சதாசிவம், ஈசுரம், சுத்தவித்தை என்னும் நிலைகளிலுள்ள திருவருட்பேற்றினராவர். அவர் உலகநோக்கிச் செய்யும் உழைப்பாகிய திண்டாட்டமும் மெய்யுணர்வுக் கூத்தால் விலகும். அத் திருக்கூத்தாலேயே நன்னெறி நான்மைநற்றவ மேற்கொண்டார்பால் ஒட்டாது விட்டுநிற்கும் சிற்றுணர்வாகிய உயிரிமையும், சுட்டுணர்வாகிய பிணிமையும் ஆங்குத் தனித்து நீங்கும். தவமே வடிவமாகவுள்ள விழுப்பொருளாம் சிவன் தனது பேரருளால் தானாக ஆடியருள்வன். இத் திருக்கூத்தால் மேலன நிகழும். இதுவே நற்றவமே வடிவமாகச் சிறந்த சிவானந்தத்தோர் அருளால் கண்டு நுகரும் திருவடி ஞானத் திருக்கூத்தென்க. உயிரி: உயிரையுடையது. உயிர் - மூச்சு.

திண்டாட்டம் - உழைப்பு. தவமாம் பரன் - தவ உருவனான சிவன்.

## 2748. கூடிநின் றானொரு காலத்துத் தேவர்கள்

2748. கூடிநின் றானொரு காலத்துத் தேவர்கள்
வீடநின் றான்விகிர் தாவென்னு நாமத்தைத்
தேடநின் றான்திக முஞ்சுடர் மூன்றொளி
ஆடநின் றான்என்னை ஆட்கொண்ட வாறன்றே.

ஆருயிர்களின் அரும்பெரும் நன்மைக்கு இடமாக நிற்பது மாயை. அம்மாயை தொழிற்படும் பொருட்டு அதனுடன் கூடிநின்றருள்பவன் சிவன். ஒருகாலத்துத் தேவர்கள் வினைக்கீடாக மாள்வெய்தினர். அக்காலத்தும் ஆண்டுநின்றருளினன். விண்ணவர்கள் விகிர்தா என்னும் திருப்பெயரை ஓதித் தேடும்படியாக நின்றருளினன். விகிர்தன் - செய்யப்படாதவன்; இயற்கையாகவுள்ளவன்; ஒருவழிப்பட்ட செயலில்லாதவன். விகிர்தன் - ஞாயிறு, திங்கள், தீ என்னும் மூன்று ஒளிப் பொருள்கட்கும் ஒளிகொடுத்து ஆட - தொழிற்பட நிற்பவனும் அவனே. அவனே ஆரருளால் அடியேனை ஆட்கொண்டருளினன்.

கூடி - மாயையோடு கூடி. வீட - அழிய ஒளியாட - ஒளி உண்டாக.

## 2749. நாதத் துவங்கடந் தாதி மறைநம்பி

2749. நாதத் துவங்கடந் தாதி மறைநம்பி
பூதத் துவத்தே பொலிந்தின்பம் எய்தினர்
நேதத் துவமும் அவற்றொடு நேதியும்
பேதப் படாவண்ணம் பின்னிநின் றானன்றே.

நாததத்துவங்கடந்த ஆதியாகிய அம்மையோடுகூடிய சிவபெருமான் வேதப்பொருளாய் விளங்கும் நம்பியாவன். அவனை அருளால் கண்டு அடிபணிந்தோர் அழகிய சிவதத்துவத்தின்கண் சிறந்து எய்தி இன்புற்றனர். நேதத்துவமாகிய தத்துவ நீக்கச் சுத்தியும் நேதி செய்வதாகிய அன்று அன்று என விலக்கும் நேதியும் அம் மெய்யுணர்ந்தார் கைக்கொண்டனர். அவர்கள் அவ்வுண்மையினை எய்தும் பொருட்டுச் சிவபெருமான் திருவருளால் அம்மெய்யுணர்ந்தாருடன் வேறறப் புணர்ந்து நின்றருளினன். புணர்ப்பு, பின்னல் அத்துவிதம் என்னும் பொருளுண்மையினை அறுதியிட்டுக் கூறும் உறுதியுரையாகும்.

நாதத்துவம் - நாத தத்துவம். நேதத்துவமும் பிரிக்கப்படுவன். நேதி - பிரிப்பது.

## 2750. ஆனந்தம் ஆனந்தம் என்பர் அறிவிலர்

2750. ஆனந்தம் ஆனந்தம் என்பர் அறிவிலர்
ஆனந்த மாநட மாரும் அறிகிலர்
ஆனந்த மாநட மாரும் அறிந்தபின்
தானந்தம் அற்றிடம் ஆனந்த மாகுமே.

இன்பம் இன்பம் என்று உண்மை காணாது அறிவிலார் உரைப்பர். ஆனந்தமாகிய இன்பம் மெய்யுணர்வுமாநடத்தின்கண் உள்ளது என்னும் உண்மையை யாரும் அறிகிலர். ஆனந்த மாநடம் அஃதென்னும் உண்மையை யாரும் அறிந்தபின் தன்முனைப்பு அறும். அறவே பசையாகிய பழக்கவாசனையும் அறும். அந்த இடமே திருவடிப் பேரின்பம் அருளால் பொருந்தும் ஒரு பெருநிலைக்களமாகும். ஆனந்தம்: ஆன் + நந்தம். நந்தம் - பெருக்கம். ஆவியின் இன்பப் பெருக்கம்.

தான் - ஆன்மா. அந்தம் - முடிவு.

# 2751. திருந்துநற் சீயென் றுதறிய கையும்

2751. திருந்துநற் சீயென் றுதறிய கையும்
அருந்தவர் வாவென் றணைத்த மலர்க்கையும்
பொருந்தில் இமைப்பிலி யவ்வென்ற பொற்கையுந்
திருந்தத்தீ யாகுந் திருநிலை மவ்வே.

முன் (2672) ஓதியவாறு மந்திரங்களை மறைவாக ஓதும் முறை பற்றி எழுத்துக்களின் மாத்திரைகளைக் கூட்டியும் குறைத்தும் வழங்குவர். அம்முறை பற்றி இத் திருப்பாட்டின்கண் சிகரம் சீகாரமாக ஓதப்பட்டது. இவ்வுண்மை வரும் சித்தியார்த் திருப்பாட்டான் உணரலாம்:

"அவ்வுடன் உவ்வு மவ்வும் மனம்புத்தி யகங்கா ரங்கள்
செவ்விய விந்துநாதம் சித்தமோ டுள்ள மாகும்
ஒவ்வெனும் எழுத்தா மைந்தும் உணர்வுதித் தொடுங்கு மாறும்
பவ்வமுந் திரையும் போலும் பார்க்கிலிப் பண்புந் தோன்றும்."
(4. 1 - 3.)

'பிரணவமாகலின் உள்ளவாறே வெளிப்படக் கூறாது ஒவ்வெனக் கடைக் குறைத்துக் குறுக்கல்விகாரமாக்கிக் கூறினார்.' (சிவஞான முனிவர்.)

திருந்திய நல்ல 'சி' கரத்தின் நீட்டலாகிய சீ என்னும் எழுத்தினைக் குறிப்பது துடிசேர் வலது பொற்கையாகும். உதறிய திருக்கை இடது கையாகும். இதனை வீசுகரம் எனவும் கூறுப. இது 'வ' கரமாகும். நன்னெறிநான்மையின்

நற்றவம்புரிந்த அருந்தவத்தோரை வாவென்று அழைத்து அணைத்துக்கொண்ட பொருந்துமுறையில் இமையாநாட்டம் சேர்முக்கண்ணினானது வலது அஞ்சலிக்கை 'ய' கரமாகும். மழுவேந்திய இடது திருக்கை 'ந' கரமாகும். திரு என்பது ஈண்டு நகரத்தின் மேற்று. நிலையாகிய ஊன்றிய வலது திருவடி 'ம' கரமாகும்.
இவ்வுண்மை வரும் உண்மைவிளக்கத் திருவெண்பாவால் உணரலாம்.

"சேர்க்குந் துடிசிகரம் சிக்கனவா வீசுகரம்
ஆர்க்கும் யகரம் அபயகரம் - பார்க்கிலிறைக்கு
அங்கி நகரம் அடிக்கீழ் முயலகனார்
தங்கும் மகரமது தான்."

திருந்தத் தீயாகுந் திருநிலை - குற்றம் நீங்கத் தீவடிவான தன்மை.

## 2752. மருவுந் துடியுடன் மன்னிய வீச்சு

2752. மருவுந் துடியுடன் மன்னிய வீச்சு
மருவிய அப்பும் அனலுடன் கையுங்
கருவின் மிதித்த கமலப் பதமும்
உருவில் சிவாய நமவென வோதே.

பொருந்திய துடிசேர் வலது திருக்கையால் சிகரமும், நிலைபெற்ற வீசும் இடது திருக்கையால் வகரமும், அப்பு என்னும் திருவருள் நிலைசேர் வல அஞ்சலிக்கையால் யகரமும், அங்கியாகிய மழுவேந்திய இடது திருக்கையால் நகரமும், (கருவினுக்குக் காரண மாகிய ஆணவக் குறிப்பாம் முயலகனை ஆகுபெயரால் கருவென்றே ஓதினர். அம் முயலகன்மேன்மிதித்த) வலது திருவடியால் மகரமும் பெறப்படுதல் காண்க. உருவில் என்பது உருவில்லாத அருவாகிய நுண்மை என்பதாகும். எனவே நுண்மைச் 'சிவயநம' என்னும் செந்தமிழ்த் திருவைந்தெழுத்தின் சிறப்பு மறையினைக் குறிக்கும் குறிப்பாவது காண்க.

துடி - உடுக்கை. கருவில் - முயலகன்மீது. உருவில் - சூக்குமமான.

## 2753. அரன்துடி தோற்றம் அமைத்தல் திதியாம்

2753. அரன்துடி தோற்றம் அமைத்தல் திதியாம்
அரன்அங்கி தன்னில் அறையிற்சங் காரம்
அரனுற் றணைப்பில் அமருந் திரோதாயி
அரனடி யென்றும் அனுக்கிர கம்மே.

பேரொடுக்கப் பெருமானாராகிய அரனார் உடுக்கையால் படைப்பும், அமைவுக் கையால் காப்பும், மழுவேந்திய திருக்கையால் துடைப்பும், ஊன்றிய திருவடியால் மறைப்பும், நான்ற (தூக்கிய) திருவடியால் அருளிப்பாடும் முறையே நிகழ்வனவாகும். அணைப்பில் - ஊன்றிய திருவடியில். அரனடி - எடுத்த பொற்பாதம். இவ்வுண்மை வரும் உண்மை விளக்கத் திருப்பாட்டான் உணர்க:
"தோற்றந் துடியதனில் தோயும் திதி அமைப்பில்
சாற்றியிடும் அங்கியிலே சங்காரம் - ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தே உற்றதிரோ தம்முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு."

அணைப்பில் - ஊன்றிய பாதத்தில். அரனடி - தூக்கிய பாதம்.

## 2754. தீத்திரட் சோதி திகழொளி யுள்ளொளி

2754. தீத்திரட் சோதி திகழொளி யுள்ளொளி
கூத்தனைக் கண்டஅக் கோமளக் கண்ணினள்
மூர்த்திகள் மூவர் முதல்வ னிடைசெல்லப்
பார்த்தனள் வேதங்கள் பாடினள் தானன்றே.

அளவில்லாத தழற்கூட்டங்கள் ஒன்று திரண்டு கொழுந்து விட்டு விளங்கும் திகழொளியாகவுள்ளவன் சிவன். அவன் ஒளிகள் அனைத்தினுக்கும் ஒளிகொடுத்து ஒளிரும் பேரொளி. அவனே பெருங்கூத்தன் அவனை ஆருயிர் உய்ய அகமுறக்கண்ட அழகிய திருக்கண்களையுடையவள் சிவகாமி அம்மை. அயன், அரி, அரன் என்னும் மூவரும் முறையே ஒடுங்குங்காலத்து அருளோன்கண் ஒடுங்குவர். அருளோன் - சதாசிவன். மேலோதப்பட்ட மூவரும் ஆசான் மெய்க்கண் உறைபவர். ஆசான்மெய் - சுத்தவித்தை. அச் சிவகாமியம்மையார் திருவுள்ளங்கொண்டருளினள். அவள்தானே அருமறை பாடியருளினள். பாடியருளுதல்: பாடுவாருள்ளத்துள் நின்று பாடுவித்தல்.

கோமளம் - அழகு. முதல்வன் - சதாசிவம்.

## 2755. நந்தியை எந்தையை ஞானத் தலைவனை

2755. நந்தியை எந்தையை ஞானத் தலைவனை
மந்திர மொன்றுள் மருவி யதுகடந்து
அந்தர வானத்தின் அப்புறத் தப்பர
சுந்தரக் கூத்தனை என்சொல்லும் மாறன்றே.

நந்தியாகிய முழுமுதலை, எந்தையை, எழிலார் மெய்யுணர்வுத் தலைவனை ஒப்பில்லாத ஓமொழி வண்ணமாம் திருவைந்தெழுத் தினுள் 'சிறப்பாம்' சிவத்தினை வழிபடும் மந்திரம் சிகரம். அதனை முன்னாகப் பொருந்தச் 'சிவயநம' என ஓதுக. அங்ஙனம் பயின்று வருவதல்லாமல் அதன்மேல் (2550) 'சிவயசிவ' எனப் பயிலுக. அதற்கு மேல் 'சிவசிவ' எனப் பயிலுக. இதுவே அப்பெரும் பொருளாகும். அவனே சுந்தரக் கூத்தனாவன். இவ்வாறன்றி வேறு என் சொல்வது.

# 2756. சீய குருநந்தி திருஅம்ப லத்திலே

2756. சீய குருநந்தி திருஅம்ப லத்திலே
ஆயுறு மேனியை யாரும் அறிகிலர்
தீயுறு செம்மை வெளுப்பொடு மத்தன்மை
ஆயுறு மேனி அணிபுக லாகுமே.

அரிமா அனைய நந்தி சிவகுருவாவன். அரிமா - சீயம். சிங்கம். அவன் திரு அம்பலத்திலே பெருங்கூத்துப் புரிகின்றனன். ஆராயத்தக்க அவன் திருமேனி உண்மையினை யாரும் அறிகிலர்; ஒருபுடையொப்பாகத் தீயின்கண் காணப்படும் செம்மையும் வெம்மையும் கூறலாகும். அத் தன்மைவாய்ந்த ஆரறிவினுள் அறிவாய் விளங்கும் அவனை அவனருளால் ஆய்வதே வாய்வதாம். அவன் திருவடியே அனைத்துயிர்க்கும் அனைத்துலகினுக்கும் நினைத்தற்கெட்டா நிலைத்த புகலிடமாகும்.

சீயம் - சிங்கம் போன்ற. அணைபுகல் - அணைதற்குரிய புகலிடம்.

## 2757. தானான சத்தியுந் தற்பரை யாய்நிற்குந்

2757. தானான சத்தியுந் தற்பரை யாய்நிற்குந்
தானாம் பரற்கும் உயிர்க்குந் தகுமிச்சை
ஞானாதி பேத நடத்து நடித்தருள்
ஆனால் அரனடி நேயத்த தாகுமே.

சிவம்வேறு சத்திவேறு அல்ல. சிவமும் சத்தியும் மரமும் காழ்ப்பும் போன்றன. காழ்ப்பு - வைரம். அச் சத்தி வனப்பாற்றலாகிய பராசத்தியாய் நிற்கும். மேலும் அவ்வாற்றல் தானாய் விளங்கும் சிவனுக்கும் தன்னை நாடும் ஆருயிர்கட்கும் தொழில் அறிவுகளுக்கு வழியாக நிற்கும் விழைவாகிய இச்சையாக நிற்கும். ஆருயிர்கட்கு நிகழும் அறிவு அறியாமை முதலிய வேறுபாடுகளை உணர்த்தி நடத்தும் நடப்பாற்றலாகவும் நிற்கும். திருவருட்கூத்தையும் திறம்பெற நடிக்கும். ஆனால் அடியிணையினை வழுத்தும் ஆருயிர்களை அவ்வடிக்கண் அழுத்துவிக்கும் அன்புப்பொருளாகவும் நிற்கும். நேயம் - அன்பு.

தருமிச்சை - பொருந்திய இச்சாசத்தி.

## 2758. பத்தி விதையிற் பயிரொன்று நாணத்தைச்

2758. பத்தி விதையிற் பயிரொன்று நாணத்தைச்
சித்தி தருவயி ராக்கத்தாற் செய்தறுத்து
உய்த்த சமாதி சிவானந்த முண்டிடச்
சித்தி திகழ்முத்தி யானந்தஞ் சித்தியே.

திருவடிசேர்ந் தின்புறுதற்குச் சிறந்தவாயில் பத்தியொன்றேயாம். மெய்ம்மையாம் உழவைச் செய்து அப் பத்தியினை விதைத்தல்வேண்டும். அஃது அன்பு நீரால் பயிராகி வளரும் நாணமென்று சொல்லப்படும். களையினைச் சித்தினைப் பயக்கும் வயிராக்கியமாகிய பற்றறுதியினால் அறுத்தல்வேண்டும். களைகட்டவே சிவானந்தத்துச் செலுத்தும். செயலறலாகிய சமாதிக்காவல் காத்தல்வேண்டும். காக்கவே சிவபோகம் விளையும். விளையவே சிவனடி நீங்கா நினைவாகிய அப்போகத்தை அருளால் உண்டிடுதல் வேண்டும். உண்ணவே கைகூடித் திகழும் திருவடிப்பேறு, பேரின்பவிளைவாய்ப் பெருகி நிலைக்கும். வயிராக்கியம் வயிராக்கம் என நின்றது செய்யுட்டிரிபு.

## 2759. உள்ளத்து ளோமென ஈசன் ஒருவனை

2759. உள்ளத்து ளோமென ஈசன் ஒருவனை
உள்ளத்து ளேயங்கி யாய வொருவனை
உள்ளத்து ளேநீதி யாய வொருவனை
உள்ளத்து ளேயுடல் ஆகாய மாகுமே.

திருவருளால் உள்ளத்துள் ஓம் என்று ஓவாது கணிக்க ஒப்பில் இறைவன் அப்பொழுதே எழுந்தருள்வன். அவன் அவ்வோ மொழியுருவாய் நிற்பன் என்றும் உணர்க. அவனை உள்ளத்தின்கண் அறிவொளிப் பிழம்பாய் நிற்கின்றான் எனத் தெளிக. அவனை 'நெஞ்சத்துள்நின்று நினைப்பிக்கும் நீதியை' உடையான் உன நேர்க. அவன் ஒப்பில் ஒருவன். அவன் உள்ளத்துள் திகழ்கின்றமையால் அவ்வுள்ளமமைந்தவுடல் அறிவுவெளியாக விளங்கும்.

உள்ளத்துள் ஓம் என - உள்ளத்தில் ஓம் என்று உணர. உடல் ஆகாயம் - உடல் சிதாகாயமாக விளங்கும்.

## 2760. பெருநில மாயண்ட மாயண்டத் தப்பால்

2760. பெருநில மாயண்ட மாயண்டத் தப்பால்
குருநில மாய்நின்ற கொள்கையன் ஈசன்
பெருநில மாய்நின்று தாங்கிய தாளோன்
அருநிலை யாய்நின்ற ஆதிப் பிரானே.

முழுமுதற் சிவபெருமான் கலப்பினால் பெருநிலமாகவும், அண்டமாகவும், அண்டத்து அப்பாலுள்ள சிறந்த நிலமாம் மாயையாகவும் தோற்றம் அளித்து நிற்கும் தூக்கொள்கையையுடையவன். எல்லாவற்றையும் பெருநிலம்போன்று ஒருங்கு தாங்கி நிற்கும் பெருந்தாளோன் ஆவன். அவனே பொருட்டன்மையில் காண்டற்க அரிய நிலையாக நிற்கும். ஆதிப்பிரானாவன். ஆதிப்பிரான் என்பது ஆதியையுடைய பிரான் என்க. குரு - சிறப்பு. தூ - பற்றுக்கோடு.

அண்டத்தப்பாற் குருநிலம் - மாயை.

## 2761. அண்ட வொளியும் அகண்ட வொளியுடன்

2761. அண்ட வொளியும் அகண்ட வொளியுடன்
பிண்ட வொளியாற் பிதற்றும் பெருமையை
உண்ட வெளிக்குள் ஒளிக்குள் ஒளித்தது
கொண்ட குறியைக் குலைத்தது தானன்றே.

அண்டத்துக்குத் திருவாணையால் ஒளிதரும் ஞாயிற்றின் ஒளியும், எல்லையில்லாது எல்லாவற்றிற்கும் ஒளிகொடுத்தொளிரும் அகண்ட வொளியாகிய சிவவொளியும், பிண்டமென்று சொல்லப்படும் ஆருயிர் உடம்பகத்துக் காணப்படும் அறிவொளியும் அருளால் ஆயுங்கால் நீயே என்ற பேரன்பால் பிதற்றத்தகும். பெருமையையுடையை. உண்டவெளி: உண்டு + அவ்வெளி. ஆருயிரின் உடம்பகத்து ஒளியை அண்டவொளியாகிய ஞாயிற்றின் ஒளி விழுங்கிற்று. அதனால் உடம்பின்நிலை, கட்டுக் குலைவதாயிற்று.

அண்ட ஒளி - சூரிய ஒளி. அகண்ட ஒளி - சிவ ஒளி. பிண்ட ஒளி - சீவ ஒளி. கொண்டகுறி - சரீர அமைப்புக்கள்.

## 2762. பயனுறு கன்னியர் போகத்தி னுள்ளே

2762. பயனுறு கன்னியர் போகத்தி னுள்ளே
பயனுறு மாதி பரஞ்சுடர்ச் சோதி
அயனொடு மாலறி யாவகை நின்றிட்டு
உயர்நெறி யாயொளி யொன்றது வாமே.

அன்பியற் சிற்றின்ப நுகர்வின்கண் கற்புறுகன்னியர் எங்ஙனம் துணையாகின்றார்கள் என்பது யாவரும் அறிந்த இயல்புடைய ஒன்று. அதுபோல் அருளியற் பேரின்பத்தின்கண் ஆதிப்பரஞ்சுடர்ச் சோதியானவன் அம்மைப் பயனுறு துணையாகச் செம்மையாக நிற்பன். அவன் அயனொடு மாலும் அறியாவகைத் துளங்கா எரிசுடராய் நின்றவன். அங்ஙனம் நின்று உயர்நெறியாயவன். அவன் ஒப்பில் ஓரொளியாயவன். அப்பொருள் முழுமுதல் ஒன்றேயாகும்.

பயனுறு....சோதி - சிற்றின்பத்துக்குக் கன்னியர் பயன் படுவர்; பேரின்பத்துக்குச் சிவன் பயன்படுவர்.

## 2763. அறிவுக் கறிவாம் அகண்ட வொளியும்

2763. அறிவுக் கறிவாம் அகண்ட வொளியும்
பிறியா வலத்தினிற் பேரொளி மூன்றும்
அறியா தடங்கிடில் அத்தன் அடிக்குள்
பிறியா திருக்கிற் பெருங்கால மாமே.

அறிவுக்கு அறிவாய் விளங்கும் எல்லையில் பேரொளி அறிதற்கரிய சிவவொளி எனப்படும். அவ்வொளியின் வயப்பட்டு விட்டு நீங்காது நிற்கும் பேரொளி மூன்று. அவை அண்டவொளி அகண்டவொளி, பிண்டவொளி என்ப. இவற்றை எல்லை சேரொளி எல்லை தீரொளி, நல்ல உடலொளி என நவில்ப. இவ்வொளிகள் மூன்றும் ஒன்றும் தோன்றா நிலையாய்ச் சிவன் நினைவாகவே நிற்றல் வேண்டும். நின்று அவன் திருவடிக்கீழ் அடங்குதல்வேண்டும். அடங்கிப் பிரியாதிருக்கப் பெறுதல்வேண்டும். அப்படிப் பெற்றால் எல்லையில் ஊழி நல்லவாறு வாழலாம்.

பிறியா - வேறாய்த் தனித்து இராத பேர்ஒளி மூன்று - அண்ட ஒளி, அகண்ட ஒளி, பிண்ட ஒளி. அறியாது அடங்கிடில் - தெரியாவண்ணம் சிவ ஒளியில் ஒடுங்கினால். பெருங்காலம் - கற்பகோடி காலமாம்.

## 2764. ஆகாச வண்ணன் அமரர் குலக்கொழுந்து

2764. ஆகாச வண்ணன் அமரர் குலக்கொழுந்து
ஏகாச மாசுண மிட்டங் கிருந்தவன்
ஆகாச வண்ணம் அமர்ந்துநின் றப்புறம்
ஆகாச மாயங்கி வண்ணனு மாகுமே.

அறியவொண்ணாத அறிவுப் பெருவெளி வண்ணத்தன் சிவன். அவன் சிவவுலகில் வாழும் நற்றவத்தமரர் குலக்கொழுந்தாவன். தூமாயை என்று சொல்லப்படும் ஐந்தலை அரவினை மேலாடையாகவுடையவன் சிவன். அவன் சிவவுலகின்கண் வீற்றிருந்தருளுகின்றனன். வெளியானது எங்கும் நிறைந்திருப்பது போன்று சிவபெருமான் எங்கும் நீங்காது நிறைந்து நின்றருளுகின்றனன். அப்பால் நிலவும் அறிவுப் பெருவெளியாய்ச் செஞ்சுடர் வண்ணத்தனாய்த் திகழ்பவன் சிவன்.

ஏகாச மாசுணமிட்டு - பாம்பை மேல்வேட்டியாகத் தரித்து.
ஆகாச வண்ணம் அமர்ந்து - எங்கும் நிறைந்து.

## 2765. உயிர்க்கின்ற வாறும் உலகமும் ஒக்க

2765. உயிர்க்கின்ற வாறும் உலகமும் ஒக்க
உயிர்க்கின்ற உள்ளொளி சேர்கின்ற போது
குயிற்கொண்ட பேதை குலாவி யுலாவி
வெயிற்கொண்டென் உள்ளம் வெளியது வாமே.

முழுமுதற் சிவபெருமான் உலகு உடல்களைப் படைத்தருளுகின்றனன். அவைகள் தொழிற்படுமாறு உயிர்க்கு உயிராய் உள்ளொளியாய்நின்று உயிர்த்தலாகிய புடைபெயர்ச்சிக்குத் திருவுள்ளங் கொண்டருள்கின்றனன். அத் திருவுள்ளத் திருநோக்கம் திகழுங்கால் குயில் போலும் இனிய மொழியினையுடைய திருவருளம்மை சிறந்து விளங்கு வெளிப்பட்டருள்வள். வெளிப்பட்டு அருள்ஒளிபுரிவள். அப்பொழுது ஆருயிர் உள்ளம் அறிவுப் பெருவெளியாய்த் திகழும்.

உயிர்க்கின்ற - படைக்கின்ற. உள்ளொளி - சிவம். குயிற் கொண்ட பேதை - உமை. வெயிற்கொண்டு - ஒளியுடையதாகி.

## 2766. நணுகி லகல்கில னாதன் உலகத்து

2766. நணுகி லகல்கில னாதன் உலகத்து
அணுகில் அகன்ற பெரும்பதி நந்தி
நணுகிய மின்னொளி சோதி வெளியைப்
பணியின் அமுதம் பருகலு மாமே.

ஆருயிர்கள் சிவபெருமானை நீங்காநினைவுடன் அடிமைத் தொண்டுபுரிவதே அவனை நணுகுவதாகும். அங்ஙனம் நணுகினால் நாதனாகிய அவன் அவ்வுயிரை விட்டகலாது அவ்வுயிர்களைத் தன்பின் நுழையுமாறு பணித்தருள்வன். அங்ஙனமன்றி ஆருயிர்கள் உலகத்தை நினைந்து அதனை அணுகுமாகில் சிவபெருமானாகிய நந்தி அவ்வுயிர்க்கு அகன்று நிற்கும் பெரும்பதியாவன் நன்னெறி நான்மை நற்றவத்தார்க்கு மிகநெருங்கிய மின்னொளிச் சோதியாய்ச் சிவபெருமான் விளங்குவன். அவன் பேரறிவுப் பேரொளி வெளியாவன். அவனை 'அனுசயப்பட்டு அதுவிது என்னாது, கனிமனத்தொடு கண்களும் நீர்மல்கி'த் தொழுதல் வேண்டும். அங்ஙனம் தொழுதால் அவனுடைய திருவடிப் பேரின்பப் பெருநலத்தை ஓரின்பமாக அவனருளால் நுகரலாம்.

அமுதம் பருகல் - ஆனந்தானுபவம்.

## 2767. புறத்துளா காசம் புவனம் உலகம்

2767. புறத்துளா காசம் புவனம் உலகம்
அகத்துளா காசமெம் மாதி யறிவு
சிவத்துளா காசஞ் செழுஞ்சுடர்ச் சோதி
சகத்துளா காசத்தின் தானஞ் சமாதியே.

புறத்துக் காணப்படும் பூதவெளி இருநூற்று இருபத்து நான்கு புவனங்கட்கும், அப் புவனங்கட்கு உட்பட்ட உலகங்கட்கு இடங்கொடுத்துக் கொண்டு நிற்பதொன்று. ஆருயிர்களின் அகத்துக் காணப்படும் அறிவுவெளி ஆதியாகிய சிவபெருமானினதுவாகும். சிவபெருமானின் உள்வெளியாகக் காணப்படுவது அவன்றன் செழுஞ்சுடர்ச் சோதி வடிவமாகும். இச் சோதி வடிவம் அவன்றன் இயற்கை அறிவொளி வடிவமேயாம். நிலவுலகவெளி செயலறலாகிய சமாதியின் இடமாகும். தானம் சமாதி : சமாதித்தானம்; முன்பின்தொக்க ஆறாம் வேற்றுமைத்தொகை.

தானம் சமாதி - நிட்டை கூடும் இடம்.

## 2768. மனசந் தியிற்கண்ட மன்னன வாகுங்

2768. மனசந் தியிற்கண்ட மன்னன வாகுங்
கனவுற ஆனந்தங் காண்டல் அதனை
வினவுற ஆனந்த மீதொழி வென்ப
இனமுற்றா னந்தியா னந்த மிரண்டே.

மனமானது ஐம்பொறிகளுடன் கலந்து ஐம்புலன்களையும் கண்டு அறிவின்பம் எய்துநிலை நனவாகும். இதற்கு இடம் புருவநடு. இங்ஙனம் கண்ட பொருள்களைக் கண்டவாறே அம் மனத் தொடர்பினால் கனவின்கண் கண்டு அறிவின்பம் எய்துதல் கனவாகும். இதற்கு இடம் கண்டம். இத்தகைய நனவின்பம் கனவின்பம் இரண்டும் ஓரின்பமாகக்
கொண்டு மேல் வினவுவோமானால் இவை இரண்டுங்கடந்த அப்பால் நிலையில் ஓரின்பமுண்டு. அது மீதொழிவின்பம் என்று சொல்லப்படும். இவற்றை இனப்படுத்துக் கூறுங்கால் மனங்கலந்த நனவிடத்துங் கனவிடத்துங் காணும் இன்பம் ஒன்று, மனங்கடந்த அறிவுகலந்த அப்பாலை இன்பம் ஒன்று ஆக இரண்டென்ப.

மன ஒற்றுமையால் பொருள்களை நனவில் கண்டு ஆனந்தித்தல் ஒன்று, அதே பொருள்களைக் கனவில் கண்டு ஆனந்தித்தல் ஒன்று ஆக ஆனந்தங்கள் இரண்டென்ப என்று இம் மந்திரம் கூறுகின்றது.

## 2769. கரியட்ட கையன் கபாலம்கை ஏந்தி

2769. கரியட்ட கையன் கபாலம்கை ஏந்தி
எரியும் இளம்பிறை சூடும்எம் மானை
அரியன் பெரியனென் றாட்பட்ட தல்லால்
கரியன்கொல் சேயன்கொல் காண்கின்றி லேனே.

ஆருயிர்களின் ஆணவமுனைப்பாம் மதம்பொழியானையை அடக்கியவன் சிவபெருமான். அது யானைத்தோலை உரித்துப் போர்த்தவன் என்னும் குறிப்புமொழியால் வழங்குகின்றனர். உலக இயல்பில் ஒருவனையடக்கி நல்வழிப்படுத்தக் கூறுங் குறிப்பில் உன்தோலை உரித்துவிடுவேன் என்று வழங்கிவருகின்றனர். இதனால் அவ்வுண்மை அறியலாம். கல்விச் செருக்குடைய நான்முகனின் செருக்கடங்கத் தலைமை கிள்ளப்பட்டதென்க. அக்குறிப்பு அவன் தலை கிள்ளப்பட்டு, அம் மண்டையோடுங் கையில் கொண்டுள்ளவன் சிவன் என்பதனால் உணரலாம். ஒளிவிடும் அறிவுடைய ஆருயிர்களே இளம்பிறை என வழங்கப்பட்டன. அவற்றின் அறிவு சிவபெருமானின் அறிவுத்துணை கூடினாலன்றி விளங்கா. அம்முறையான் தலையில் இளம்பிறைசூடினன் என்றருளினர். அவன் எம்தலைவனாகிய எம்மானாவன். அவனே எல்லாவுயிர்க்கும் தலைவனாவன். அவன் மாற்றம் மனங்கழியநின்ற மறையோன். மறையோன் - சிவசத்து. அவனைத் தோன்றாத் துணையாகநிற்கும் தன்மையால் அரியனெனவும், பேரின்பப் பெருவாழ்வு தந்தருளுந்தன்மையால் பெரியனெனவும் உளங்கொண்டு ஆட்பட்டோம். அதுவல்லாமல் அவனைக் கருமை நிறம்

வாய்ந்தவன், அல்லது செம்மைநிறம் வாய்ந்தவன் என எவராலுங் காணவொண்ணாது; யாமும் கண்டிலம். நிறமும் வடிவமும் இறைவன்தன் பொதுத் தன்மையாகும். அவை கடந்தநிலையே அவனுடைய சிறப்புத் தன்மையாகும். சிறப்புத் தன்மை சொல்லொண்ணாதது, என்றும் பொன்றாது ஒன்று போலிருப்பது; திரிபில்லது. பொதுத்தன்மை அருளால் ஆருயிர்கள் உய்தற்பொருட்டுக் கொண்டுள்ள ஐயைந்து திருவுருவங்களும் பிறவுமாகும். இவ் வுண்மை அப்பரருளிய "ஐயஞ்சின் அப்புறத்தான்" எனவும் அருமறை யானுணரலாம்."

கரிஅட்ட - யானையை உரித்த. கரியன் கொல் சேயன் கொல் - கருப்போ சிவப்போ.

## 2770. உண்ணல் உறங்கல் உலாவல் உயிர்போதல்

2770. உண்ணல் உறங்கல் உலாவல் உயிர்போதல்
நண்ணல் நரக சுவர்க்கத்து நாட்டிடப்
பண்ணல் அவன்பணி யாலிவன் பாலிடை
திண்ணிதிற் செய்கை சிவன்பணி யாகுமே.

ஆருயிர்களுக்குத் திருவருளால் நிகழும் உண்ணலும், உறங்கலும், உலாவுதலும், அவ்வுயிர்க்கு அன்பறிவாற்றல்களின் நிகழ்ச்சி கைகூடுவதாகிய போதம் பொருந்தல்களும் நிகழ்கின்றன. இவற்றால் இருவினை நிகழ்வு ஏற்படுகின்றது. அவ்வினைப் பயனின் பகுதி நுகர்வை ஒளியுலகத்தும் இருளுலகத்தும் இயைந்து நுகருமாறு நாட்டுதலைச் செய்தலும் நிகழ்கின்றது. அனைத்தும் சிவபெருமான் திருப்பணியேயாகும். அச் செயல்களைச் செய்யும் உயிர் சிவனை மறவாத உறவுள்ளத்துடன் அறம் எனக் கருதிச் செய்தல்வேண்டும். அப்பொழுது அது சிவன் பணியாவதற்கு ஏதும் ஐயுறவுவின்று. உடலை நீங்கியவுயிர் 'இருவிசும்பு ஏறும்.' இருவிசும்பு: ஒளியுலகு, இருளுலகு என்பன.

## 2771. ஓடும் இருக்கும் கிடக்கும் உடனெழுந்து

2771. ஓடும் இருக்கும் கிடக்கும் உடனெழுந்து
ஆடும் பறக்கும் அகண்டமும் பேசிடும்
பாடும் புறத்தெழும் பல்லுயிர் ஆனந்தம்
கூடும் பொழுதிற் குறிப்பிவை தானன்றே.

திருவருளால் பலவுயிர்களுக்கும் சிவபெருமானின் திருவடிப் பேரின்பம் கைகூடும். அது கைகூடிய காலத்து அவ்வின்பம் அருட்கதிராய்ப் புறத்துப் பொசியும். அந்நிலையில் அவ்வுயிர்களின் செய்கைகளை அளவிட்டுக் கூறுதல் முடியாது. எனினும் வருமாறுள்ள குறிப்புக்களால் அவ்வுண்மை புலனாகும். அவ்வுயிர் ஓடும்; இருக்கும்; கிடக்கும்; உடனே எழுந்து ஆடும். வேண்டுமேல் பறக்கவும் செய்யும். இருந்த இடத்தில் இருந்துகொண்டே எல்லையின்றிப் பரந்த உலகங்களின் செய்திகளையெல்லாம் ஒன்றொழியாமல் உரைக்கும். பண்ணொடு பொருந்தப் பாடும் இவையனைத்தும் தற்செயலற்ற நற்றவத்தோர் நற்செயலாகும். இவ்வுண்மை வரும் திருவுந்தியாரானறிக:

"நஞ்செய லற்றிந்த நாமற்ற பின்னாதன்
தன்செயல் தானேயென் றுந்தீபற
தன்னையே தந்தானென் றுந்தீபற." (6)

## 2772. மிக்கா ரமுதுண் ணநஞ்சுண்ட மேலவன்

2772. மிக்கா ரமுதுண் ணநஞ்சுண்ட மேலவன்
தக்கார் உரைத்த தவநெறி யேசென்று
புக்கா லருளும் பொன்னுரை ஞானத்தை
நக்கார் கழல்வழி நாடுமின் நீவிரே.

நல்வினைப்பயன் மிக்காராகிய தேவர்கள் அமுதுண்ணும் பொருட்டு அவர்கள் முன்பு தன்னை (சிவனை) மறந்த தீவினைப் பயனாம்
நஞ்சினை மன்றாடிக்கேட்டுக்கொண்டதற்கு இரங்கிப் பொறுத்தலாகிய உண்டலைச் செய்தவன் சிவபெருமான். அதனால் அவன் மேலோனாயினன். நஞ்சுண்டவன் என்பது பிழைபொறுத்தவன் என்பதாம். செந்நெறிச் செல்வர், செம்பொருட்டுணிவினர், சித்தாந்தச் சைவர் தக்காராவர். அவர்கள் அருளால் உரைத்தருளும் நன்னெறிநான்மையே (2615) நற்றவ நெறியாகும். அந்நெறியே பயின்று ஒழுகினால் சிவகுருவினால் அருளப்பெறும் பொன்போன்றுயர்ந்த திருவைந்தெழுத்தின் அருமறை அடியுணர்வு கைகூடும். கைகூடவே ஒளி மிகுந்த மறைச் சிலம்பாகிய கழல்பூண்டுள்ள திருவடிசேர் திருவழி புலனாகும். அதனை நீங்கள் நாடுங்கள். நக்கார் கழல் - ஒளிமிகுந்த திருவடி.
சிவபெருமான் சாவாமூவாத் தனிமுதற் பொருளென்றும் திருமால் உள்ளிட்ட தேவர் செத்துச் செத்துப் பிறக்கும் உயிரினங்கள் என்றும் உண்மை தெளிவிப்பதே சிவன் நஞ்சுண்டும் சாகாமையும், விண்ணவர்கள் அமுதுண்டும்

இறந்தமையும் ஆகும். இவ்வுண்மை சிலப்பதிகாரத்துக்கண் இளங்கோவடிகள் வேட்டுவவரியில் சாலினி வாய்மொழியாகச் சாற்றுவது காண்க:

"துண்ணெனன் துடியொடு துஞ்சூர் எறிதரு
கண்ணில் எயினர் இடுகடன் உண்குவாய்
விண்ணோர் அமுதுண்டும் சாவ ஒருவரும்
உண்ணாத நஞ்சுண் டிருந்தருள் செய்குவாய்."

(12. 21 - 4.)

மேலும் திருநாவுக்கரசு நாயனாரருளிய திருமுறைத்திருப் பாட்டும் இவ் வுண்மையினை அருளுவது காண்க :

"வெற்புறுத்த திருவடியாற் கூற்றட் டானை
விளக்கினொளி மின்னினொளி முத்தின் சோதி
ஒப்புறுத்த திருவுருவத் தொருவன் தன்னை
யோதாதே வேத முணர்ந்தான் தன்னை
அப்புறுத்த கடனஞ்சம் உண்டான் தன்னை
அமுதுண்டார் உலந்தாலும் உலவா தானை
அப்புறுத்த நீரகத்தே அழலா னானை
ஆரூரிற் கண்டடியேன் அயர்த்த வாறே."

(6. 26 - 2.)

மிக்கார் - தன்னையொழித்து மிகுந்துள்ளவர். பொன்னுரை - பொன்போலும் அருமையான உபதேசம். நக்கார் - நக்கன், சிவன்.

## 2773. விளக்கைப் பிளந்து விளக்கினை யேற்றி

2773. விளக்கைப் பிளந்து விளக்கினை யேற்றி
விளக்கினுக் குள்ளே விளக்கினைத் தூண்டி
விளக்கில் விளக்கை விளக்கவல் லார்க்கு
விளக்குடை யான்கழல் மேவலு மாமே.

திருவருளால் ஆருயிர் அறிவொளியாய் உள்ளத்தின்கண் விளங்குவது. அதனால் அவ்வொளியினை உடல் உறுப்பு முதலிய தத்துவக் கூட்டங்களின் வேறு எனப் பிரித்துக் காட்டுவதும் காண்பதும் அறிவாகும். பிரித்துக் கண்டபின் உள்ளத்துள்ளே சிவவிளக்கினை ஏற்றுவாயாக. சிவவிளக்கினை ஏற்றுவதென்பது அச் சிவனை மறவாது நினைப்பதேயாம். பாடத்தை வரப்படுத்துவதென்பது இதற்கு ஒப்பாகும். அச்சிவ விளக்கினுள் ஆருயிர் விளக்கு ஒட்டியுறுமாறு தூண்டுக. தூண்டுதல் - விடாது அன்பு பூணல். திருவடியுணர்வாம் விளக்கினால் ஆருயிரின் அறிவுவிளக்கை விளங்குமாறு செய்யும் பெருங்காதலாம் பத்திவல்லார்க்கு அனைத்தையும் ஒருங்கு விளக்கும் சிவபெருமான் திருவடியிணையினைப் பொருந்திப் பேரின்பப் பெருவாழ்வு எய்துதலும் உண்டு.

விளக்கைப் பிளந்து-தத்துவங்களினின்றும் ஆன்ம ஒளியை வேறுபடுத்தி. விளக்கினை ஏற்றி-சிவ ஒளி பரவும்படி செய்து, விளக்கினுக்குள்ளே விளக்கினைத் தூண்டி - சிவ ஒளிக்குள் சீவ ஒளி விளங்கும்படிசெய்து. விளக்குடையான் - ஒளிக்கு ஒளியாயுள்ளவன்.

## 2774. தத்துவம் எங்குண்டு தத்துவன் அங்குண்டு

2774. தத்துவம் எங்குண்டு தத்துவன் அங்குண்டு
தத்துவம் எங்கில்லை தத்துவன் அங்கில்லை
தத்துவ ஞானத்தின் தன்மை யறிந்தபின்
தத்துவன் அங்கே தலைப்படுந் தானன்றே.

திருவருளால் மெய்யென்று கூறப்படும் தத்துவங்களின் உண்மையை அறிதல்வேண்டும். தத்துவ உண்மை அறிதலாவது அவைகள் காரியப் பொருள்களென்றும், அறிவில்லன என்றும், ஆண்டானால் உள்ளதாகிய மாயையினின்றும் படைக்கப்பட்ட அவன்றன் உடைமைப் பொருள்களென்றும், தோன்றிமறையும் தன்மைய என்றும், நமக்கு நாயகனளித்துள்ள இரவல் பொருள்களென்றும் உணர்தல். அங்ஙனம் உணருங்கால் அவற்றை உடைமையாகவுடைய உடையானாகிய சிவபெருமானும் அங்குத் தோன்றியருள்வன். அவனே தத்துவனாவன். அவனை அவனருளால் அறியும் ஆருயிர்களனைத்தும் மீளா அடிமைகளாகும். இவ்வகை உண்மையினையுணராதார் தத்துவ உணர்ச்சியிலராவர். தத்துவ உணர்ச்சி எங்கில்லை அங்குத் தத்துவனாகிய சிவபெருமானின் அருள் விளக்கமும் உண்டாவதில்லை. இவ்வகைய தத்துவ ஞானத்தின் தன்மையறிந்தபின் தத்துவனாகிய சிவபெருமானும் அங்கே தலைப்பட்டருள்வன். மெய் - தத்துவம்.

## 2775. விசும்பொன்று தாங்கிய மெய்ஞ்ஞானத் துள்ளே

2775. விசும்பொன்று தாங்கிய மெய்ஞ்ஞானத் துள்ளே
அசும்பினின் றூறிய தாரமு தாகும்
பசும்பொன் திகழும் படர்சடை மீதே
குசும்ப மலர்க்கந்தங் கூடிநின் றானே.

விசும் பொத்து எல்லையின்றி விரிந்த திருவடியுணர்வாகிய மெய்ஞ்ஞானத்தினுள்ளே, திருவடியின்பம் குறைவிலா நிறை வாய்க் கோதிலா அமுதாய் ஊறிப் பெருகும். அப் பெருக்கின் நிலைக்களம் சிவபெருமானாவன். அதனால் சிவக்கேணியினின்றும் பெருகுவது என ஓதினர். பசும்பொன் போன்று திகழ்ந்து விரிந்து விளங்கும் திருச்சடையின்மீது செங்கழுநீர் மலரும் மணமுங் கலந்து பிரிப்பின்றி இரு பொருளும் கெடாது இருப்பும் இருப்பதுமாய் இருப்பதுபோல் சிவனும் அடிமையும் கூடி நிற்பர். குசும்பம் : செந்துருக்கம்; ஈண்டுச் செங்கழுநீர்.

விசும்பொன்று தாங்கிய - விரிந்த.

## 2776. முத்தின் வயிரத்தின் முந்நீர்ப் பவளத்தின்

2776. முத்தின் வயிரத்தின் முந்நீர்ப் பவளத்தின்
கொத்தும் பசும்பொன்னின் தூவொளி மாணிக்கம்
ஒத்துயர் அண்டத் துள்ளமர் சோதியை
எத்தன்மை வேறென்று கூறுசெய் வீரன்றே.

முத்தும், வயிரமும், முந்நீர்ப் பவழக் கொத்தும், பசும் பொன்னும், தூவொளி மாணிக்கமும், அவ்வவற்றின் ஒளியும் வேறு பிரிக்கப்படாமை போன்று சிவபெருமானும் எல்லா அண்டங்களினும் பிரிக்கப்படாத பேரொளியாய் நின்றருள்கின்றனன். அதனால் அவன் உள்ளமர் சோதியாகின்றான். அங்ஙனம் கூறுவதல்லாமல் வேறு எங்ஙனம் பிரித்துக் கூறமுடியும்; சொல்லுவீராக.

## 2777. நானென்றுந் தானென்றும் நாடினேன் நாடலும்

2777. நானென்றுந் தானென்றும் நாடினேன் நாடலும்
நானென்றுந் தானென் றிரண்டில்லை யென்பது
நானென்ற ஞான முதல்வனே நல்கினான்
நானென்று நானும் நினைப்பொழிந் தேனன்றே.

ஒட்டி நின்று உணரும் ஒன்றனை விட்டு எட்டி நின்றுணர்வது என்றும் இயையாத தொன்றாகும். தேனின் சுவையினைத் தேனும் நாவும் உள்ளமும் உயிரும் ஒட்டிநின்றே உணர்தல் வேண்டும். விட்டு எட்டி நின்றால் ஒருகாலமும் உணர ஒண்ணாது. அப்படி ஒட்டி நிற்பதால் இரு பொருளும் ஒரு பொருளாகிவிடாது. அதுபோலவேதான் ஆருயிராகிய அடிமையும் பேருயிராகிய ஆண்டானும் புணர்ப்பால் ஒன்றுபட்டுத் திகழ்வதன்றிப் பொருள் ஒன்றாவதில்லை. ஆயின் திருவருளால் நானென்றும் தானென்றும் நாடினேன். நாடுதலும் நானென்றும் தானென்றும் வேறுபட்டு இரண்டாகக் காண்பதற்கு இல்லையென்னும் மெய்ம்மையினைச் சிவபெருமான் உணர்த்தியருளினன். நானென்ற வுணர்வினை முன்னம் நடப்பாற்றல் வழியாக நல்கிய சிவபெருமானே இப்பொழுது வனப்பாற்றல் வழியாக நானென்னும் எண்ணம் அகலுமாறு செய்தருளினன். ஒருவர் படிக்கத் துவங்குவதன் முன்னம் தாம் படித்தல் வேண்டும் என்னும் நினைப்பும் சொல்லும் அவர்பால் நிகழக் காண்கின்றோம். ஆனால் படிக்கத் துவங்கியதும் அவ் விரண்டினையும் அறவே மறந்து விடுகின்றனர். தன்னையும் மறந்து விடுகின்றனர். படிப்பே தாமாக நிற்கின்றனர். அப்படி நிற்பினும் படிப்பும் அவரும்

இரு பொருளேயாம். (2309) அவ் வுண்மை அவர் பயின்ற திருக்குறளை ஓதுங்கால் அது திருவள்ளுவப்பயன் என்ற அறிந்து விடுகின்றனர், அன்புடன் செறிந்து கேட்போர், இதுவும் ஒப்பாகும். திருவடியுணர்வால் நான் என்னும் எண்ணத்தை நானும் நினையாதொழிந்தேன். நடப்பாற்றல் - திரோதான சத்தி; ஆதி சத்தி. வனப்பாற்றல் - பராசத்தி.

நானென்றும் தானென்றும்-நான்வேறு, சிவன்வேறு என்று. இரண்டில்லை - ஒன்றும் அல்ல இரண்டும் அல்ல என்பது.

## 2778. ஞானத்தின் நன்னெறி நாதாந்த நன்னெறி

2778. ஞானத்தின் நன்னெறி நாதாந்த நன்னெறி
ஞானத்தின் நன்னெறி நானென் றறிவோர்தல்
ஞானத்தின் நல்யோக நன்னிலை யேநிற்றல்
ஞானத்தின் நன்மோன நாதாந்த வேதமே.

திருவடியுணர்வாம் நன்னெறியும், நாதாந்த முடிவாம் நன்னெறியும் என நெறி இருவகைப்படும். அவற்றுள் ஞானத்தின் நன்னெறியாவது நானென்ற முனைப்பற்றுத் திருவடியுணர்வாய் நின்று அத் திருவடியினையுணர்தல். இது நீருள் மூழ்குவான் நீருள் நின்று நீரின் தன்மையால் நீரினை யுணர்வது போன்றாகும். நாதாந்தநெறியென்பது (2615) அறிவிற் செறிவாம் ஞானயோக நெறியாகும். அதன் மேல் அறிவின் அறிவாம் ஞானத்தின் ஞானம் நன் மோன நிலையாகும். மோனம்: மேன்மை என்னும் அடியாகவுள்ளது. மேன்மை யுணர்வு மோனம் எனப்படும். அதுவே நாதமுடிவுங் கடந்த 'சிவசிவ' என்னும் நான்மறையாகும்.

நாதாந்த - நாத தத்துவங்கடந்த.

## 2779. உய்யவல் லார்கட் குயிர்சிவ ஞானமே

2779. உய்யவல் லார்கட் குயிர்சிவ ஞானமே
உய்யவல் லார்கட் குயிர்சிவ தெய்வமே
உய்யவல் லார்கட் கொடுக்கம் பிரணவம்
உய்யவல் லாரறி வுள்ளறி வாகுமே.

பிறப்பு இறப்பாகிய தடுமாற்றத் துன்பத்தினின்றும் விடுமாறு நினைந்து திருவருளால் உய்ய வல்லார்கட்குத் திருவடியுணர்வாகிய சிவஞானமே உயிராகும். அதுபோல் சிவவுலகு சிவனண்மை, சிவவுரு எனப்படும் நிலையினின்றும் உய்யவல்லார்க்குச் சிவ முதலே விழுப்பொருளாகும். உய்யவல்லார்கட்கு ஒடுக்கம் ஓமொழியாகும். உய்யவல்லார் அறிவு உண்மைப் பொருளாம் சிவத்தினைச் சார்ந்தமையால் மாறுதல் இல்லா உள்ளறிவாகும்.

## 2780. காணவல் லார்க்கவன் கண்ணினின் மணியொக்கும்

2780. காணவல் லார்க்கவன் கண்ணினின் மணியொக்கும்
காணவல் லார்க்குக் கடலின் அமுதொக்கும்
பேணவல் லார்க்குப் பிழைப்பிலன் பேர்நந்தி
ஆணவல் லார்க்கே அவன்துணை யாகுமே.

திருவருளால் காணவேண்டுமென்னும் அன்புடன் முயல்வார்கட்குச் சிவபெருமான் கண்ணுக்குள் மணிபோன்று உடனாகவிருந்து தன்னைக் காட்டிக் காண்பன். அதனால் அவன் கருமணி போன்றவனாவன். அவ் வழியாகக் காணும் பேறுடையார்க்கு அவன் கடல் போன்ற எல்லையில்லாத கோதிலா அமுதினை யொப்பான். கடல் உப்புத் தன்மை வாய்ந்ததே என்னுங் கருத்தால் திருப்பாற்கடல் என்னும் அடை புணர்த்திக் கூறுவாராயினர். ஆருயிரனைத்தையும் சிவபெருமான் தொடர்பு கொண்டு வேறுபாடின்றிப் பேண வல்லார்கட்கு அவன் அப்பொழுதே வெளிப்பட்டருள்வன். அம் முறையில் அவன் என்றும் தவிரான். அவன் திருப்பெயர் நந்தி. ஆணமாகிய அன்பு வல்லார்க்கு அச் சிவபெருமான் என்றும் துணையாவன்.

பிழைப்பிலன் - தவறுதல் இலன். ஆணவல்லார்க்கு - அன்புமிக்கார்கட்கு.

## 2781. ஓமெனும் ஓரெழுத் துள்நின்ற ஓசைபோல்

2781. ஓமெனும் ஓரெழுத் துள்நின்ற ஓசைபோல்
மேனின்ற தேவர் விரும்பும் விழுப்பொருள்
சேய்நின்ற செஞ்சுடர் எம்பெரு மானடி
ஆய்நின்ற தேவர் அகம்படி யாகுமே.

ஒப்பில்லாத ஓமென்னும் ஒரு மொழிக்கண் காணப்படும் பிரிவில்லாத ஓசைபோல் விண்ணுறை தேவர்கள் விழையும் விழுப்பொருள் சிவபெருமானாவன். அவன் மாற்றம் மனம் கழிய நின்ற மறையோன். மறையோன் உயிருக்கு உயிராகிய நுண்பொருள் - காரண சிவன். அவன் எட்டா நிலைக்கண் உள்ளவன். அவன் செழுஞ்சுடராகவுள்ளவன். அவனே எம்பெருமான். அவன் திருவடியிணையினை ஆராய்ந்து அன்பு பூண்டு ஒழுகும் தேவர் பலராவர். அவர்தம் உள்ளத்துள் அச் சிவபெருமான் விளக்கமாய் நின்று வேண்டும் துணை புரிந்தருள்வன். அகம்படி - உள்ளத்துள்.

சேய்நின்ற - மனம், வாக்குகளுக்கு எட்டாமல் நின்ற. தேவர் அகம்படி - தேவர் மனத்தின் தன்மை.

## 2782. எப்பாழும் பாழும் யாவுமாய் அன்றாகி

2782. எப்பாழும் பாழும் யாவுமாய் அன்றாகி
முப்பாழுங் கீழுள முப்பாழும் முன்னியே
இப்பாழும் இன்னவா றென்பதி லாவின்பத்
தற்பர ஞானானந்தந் தானது வாமே.

இன்ன நிலைமைத்தென்று எவராலும் கூறவொண்ணாததனைப் பாழ் என்பர். அப்பாழ் மாயைத் தொடர்பாக மூன்று கூறுவர். அவை உடனமெய், உணர்வுமெய், உணர்த்துமெய் எனபன இவற்றைப் பகுதி மாயை, தூவாமாயை, தூமாயை எனவுங் கூறுப. மேலும் உணர்வுத் தொடர்பால்
ஆருயிர்ச் செயலறல், அருட்செயலறல், அருளோன் செயலறல் என முப்பாழ் கூறுவர். இவற்றைச் சீவதுரியம், பரதுரியம், சிவதுரியம் எனவும் கூறுப. இவையனைத்தையும் எப்பாழும் என்று ஓதினர். பின்னர்க்கூறும் பாழ், காரணமாயையைக் கூறுவதாகும். ஆங்காங்குள்ள உயிர்களும் பொருள்களும் ஆகிய அனைத்துடனும் கலந்து கலப்புத் தன்மையால் அவையேயாய் நிற்பன் சிவன். அவனே பொருட்டன்மையால் அன்றாகி நிற்பன். மேலுள்ள முப்பாழ் என்பது அருட் செயலறலாகிய பரதுரியத்தில் நனவு, கனவு, உறக்கம் என்னும் மூன்று பாழாகும். இம் மூன்றும் நிகழாமையே ஈண்டுப் பாழென்ப. அவற்றை அபாவம் என்பர். இவை தொகை என்னும் சமட்டியாகும். கீழுள்ள முப்பாழ்

ஆருயிர்ச் செயலறலாகும். அவை சீவதுரியம். அதன் கண்ணும் நனவு, கனவு, உறக்கம் என்னும் மூன்றும் நிகழாமை பாழென்ப. இவற்றை வகையென்னும் வியட்டி என்ப. இவற்றைப் பொருந்தி இவற்றையும் கடந்து இன்னவாறென்று எவராலும் கூறவொண்ணாதாகியுள்ள நிலையின்பத்தினையுடையதாய்த் தானே முழுமுதலாய் உண்மை அறிவின்ப உருவுடையதாய் விளங்குபவன் சிவபெருமான். அவனே புணர்ப்பால் ஆருயிர் என்னும்படி நின்றருள்வன்.

எப்பாழும்-மாயை சம்பந்தமானவைகளும். பாழ் - மாயை. யாவும்-மாயா சம்பந்தமற்ற பொருள்களும். முப்பாழ்-சுத்தமாயை, அசுத்தமாயை மூலப்பிரகிருதி மாயை. கீழுள்ள முப்பாழ்-பூமியிலுள்ள மண், பெண், பொன் ஆகியவை.

## 2783. மன்னுஞ் சத்தியாதி மணியொளி மாசோபை

2783. மன்னுஞ் சத்தியாதி மணியொளி மாசோபை
அன்னதோ டொப்ப மிடலொன்றா மாறது
இன்னிய வுற்பலம் ஒண்சீர் நிறமணம்
பன்னிய சோபை பகராறு மானதே.

சிவத்துடன் பொருந்திய திருவருளாற்றல் சத்தி யெனப்படும். அது மணியொளி போன்று மிக்க அழகினையுடையதாகும். அச்சத்தி மெய்யுணர்வாகும். அவற்றுடன் ஒப்புரைத்தலாகும் பொருள் ஒன்றும் இன்று. இனிமை பொருந்திய கருங்குவளையாகிய வுற்பல மலருக்குத் தூய்மை, சிறப்பு, நிறம், மணம், அழகு உள்ளன போன்று சிவபெருமானுக்கும் ஐவகையாற்றல்களும் உண்டாகும். அவற்றொடும் கூட அழகிய பொருள்கள் ஆறாகும்.

சத்தியாதி-ஞானமாதி. சோபை-அழகு. ஒப்பமிடல் - ஒப்புரைத்தல். ஒன்றாமாறது - பொருந்தாத தன்மை இன்னிய - இனிய. உற்பலம் - நீலோற்பலம், கருங்குவளை. ஒண் - ஒண்மை, தூய்மை. சீர் - சிறப்பு. ஆறுமானதே - சிவத்தோடு சத்திகள் உற்பலம் என்றும் மலருக்குத் தூய்மை - சிறப்பு, நிறம், மணம், அழகு போல்வதாம். மலருக்கு 5 குணங்கள் உள்ளனபோல சிவத்துக்கு ஐந்து சத்திகள் உண்டு.

## 2784. சத்தி சிவன்பர ஞானமுஞ் சாற்றுங்கால்

2784. சத்தி சிவன்பர ஞானமுஞ் சாற்றுங்கால்
உய்த்த அனந்தஞ் சிவமுயர் ஆனந்தம்
வைத்த சொருபத்த சத்தி வருகுரு
உய்த்த வுடலிவை யுற்பலம் போலுமே.

திருவருளாற்றலாகிய சத்தியும், சிவபெருமானும், திருவடியுணர்வும், சொல்லுமிடத்து உலகுயிர்களைச் செலுத்தும் ஒப்பில் பொருள்கள் ஆம். இவை யனைத்தும் முடிவெய்தாது. சிவத்தின் ஒப்புயர்வில்லாத பேரின்பமுமுடையதாகும். வைத்த திருவருளும் உண்மை நிலைக்கண் சிவகுருவாக வந்தருள்வன். அத் திருவருள் கொள்ளும் திருமேனி நீலோற்பல மலரை யொத்து விளங்கும்.

சத்தி சிவன் பரஞானம்-சத்தியோடு கூடிய சிவத்தைப் பரஞானத்தால் அறியவேண்டும். அபரஞானத்தால் அறியமுடியாது. அனந்த சிவம்-ஆனந்தம் சிவம், சிவானந்தம், (ஆனந்தம் என்பது குறுகிவந்தது.) உயர் ஆனந்தம்-உண்மையறிவு ஆனந்தம். வைத்த . . . . . போலுமே - திருவருட் சத்தி பதிந்து, குரு உபதேசம் பெற்ற ஆன்மாக்கள். ["ஒண் சீர் நிறம் மணம் பன்னிய சோபை" மன்னிய நீலோற்பலம் போலும். உடல் - உடலோடு கூடிய ஆன்மாக்கள்.]

## 2785. உருவுற் பலநிறம் ஒண்மணஞ் சோபை

2785. உருவுற் பலநிறம் ஒண்மணஞ் சோபை
தரநிற்ப போலுயிர் தற்பரந் தன்னின்
மருவச் சிவமென்ற மாமுப் பதத்தின்
சொருபத்தன் சத்தியாதி தோன்றநின் றானே.

அழகிய உற்பல மலரில் நிறம், சிறந்த மணம், அழகு (சிறப்பு, தூய்மை) முதலியன வேறறப் பிரிப்பின்றிக் கலந்திருக்கின்றன. அதுபோல் ஆருயிர் சிவபெருமானிடத்தில் எப்பொழுதும் பிரிப்பின்றி வேறறக் கலந்திருக்கின்றது. சிவபெருமான்பாலுள்ள எண்பெருங்குணங்களும் அவ் வுயிரின்மாட்டும் பதிந்து விளங்கித் தோன்றும். பள்ளி மாணவன் எப்பொழுதும் ஆசானைச் சார்ந்திருக்கின்றான். அதனால் ஆசிரியனின் நற்பண்புகள் மாணவனிடம் பதிகின்றன அல்லவா? இஃது இதற்கு ஒப்பாகும், ஆருயிர்களின்மாட்டுச் சிவபெருமானின் எண்குணங்களும் பதியவே ஆருயிர், அருள், அருளோன் - ஆருயிர், பேரருள், பெருமான் என்ற மூன்று நிலையுமாகச் சிவபெருமான் மறைந்து நின்றருளியவன் இப்பொழுது வெளிப்பட்டு அவ் வுயிரின்மாட்டுத் திருவருள் ஆற்றல்கள் தோற்றநின்றருள்புரிவன். அதனால் அவ் வுயிர் சிவமாகவே நிற்கும் சத்தியாதி என்பது 'சத்தியா' எனநின்றது.

உயிரானது எப்பொழுதும் சிவத்தோடு பொருந்திநிற்க, நீலோற்பலத்துக்கு அஞ்சு குணங்கள் பிரிவற இருப்பதுபோல், உயிருக்கும் சிவத்தின் குணங்கள்

சிவசத்தியால் உடல் உள்ளபோதே தோன்ற நிற்பன என்பது இம் மந்திரம்.

## 2786. நினையும் அளவின் நெகிழ வணங்கிப்

2786. நினையும் அளவின் நெகிழ வணங்கிப்
புனையில் அவனைப் பொதியலு மாகும்
எனையுமெங் கோன்நந்தி தன்னருள் கூட்டி
நினையும் அளவில் நினைப்பித் தனனே.

சிவபெருமானைத் திருவருட்டுணையால் மறவாது நினையுமுறையில் உள்ளம் கள்ளமின்றி வெள்ளமாயுருகித் தாளை வணங்கிப்
'பன்னியநூல் தமிழ்ப்'பாப் பல புனைந்து வழிபட்டு நிற்றல் வேண்டும். அங்ஙனம் வழிபட்டால் அப் பெருமானாரை உள்ளத்தின்கண் பொதிந்து வைத்தலும் வாய்க்கும். இதுவே 'சிக்கெனப் பிடித்தேன் எங்கெழுந்தருளுவது இனியே' என்னும் திருமுறையின் அரும் பண்பாகும். பொதிதல் - வேறறக் கலந்து நிற்றல். தொன்னை நெய்யைப் பொதிந்து கொண்டு வேறற நிற்பது இதற்கொப்பாகும். பாப்புனை பணியால் அடியேனையும் எம் முழுமுதல்வனாகிய சிவபெருமான், நந்தியென்னும் திருப்பெயரை உடைய நாதன் திருவருளுடன் கூட்டுவித்தனன். மறவாது நினைந்துகொண்டேயிருக்குந் துணையாய் என்னை நிலைப்பித்தருளினன். நினைந்த அப்பொழுதே அந் நினைவின்கண் நினைப்பித்தருளினன் என்றலுமொன்று.

நெகிழ - மனம் உருக. புனையில் - பாக்கள் புனைந்து அவன் புகழைப் பாடினால். பொதியலும் ஆகும் - அவனோடு இரண்டறக் கலக்கலாம்.

## 2787. பாலொடு தேனும் பழத்துள் இரதமும்

2787. பாலொடு தேனும் பழத்துள் இரதமும்
வாலிய பேரமு தாகும் மதுரமும்
போலுந் துரியம் பொடிபடி வுள்புகச்
சீல மயிர்க்கால் தொறுந்தேக் கிடுமாமே.

திருவருளால் சிவபெருமான் செயலறலாகிய துரியம் அடங்கிக் கடந்த விடத்துப் பால் போன்ற திருவருள் தட்பமும் தேன் போன்ற சிவனார் வெப்பமும், முப்பழச் சுவையும், தூய 'பாலும் தெளி தேனும் பாகும் பருப்பும் இவை நாலும் கலந்த' தூய திருவமுதின் இனிமையும் போன்ற தென்பதன்றி இன்னதன்மைத் தென்றுகூற வொண்ணாததாகவுள்ள திருவடி நுகர்வொழுக்கம் மயிர்க்கால் தோறும் நிறைந்து நின்று குறைவிலா இன்பத்தை யருளும். பாலும் தேனும் ஏனைய போன்று சுவைப் பொருளாக எண்ணலும் ஒன்று.

வாலிய - பரிசுத்தமான. மதுரம் - சுவை.

# 2788. அமரத் துவங்கடந் தண்டங் கடந்து

2788. அமரத் துவங்கடந் தண்டங் கடந்து
தமரத்து நின்ற தனிமையன் ஈசன்
பவளத்து முத்தும் பனிமொழி மாதர்
துவளற்ற சோதி தொடர்ந்துநின் றானே.

சிவபெருமான் பிறப்பில்லாதவன்; அதுபோல் இறப்புமில்லாதவன் அம் முறையால் கூற்றை வென்ற குணக்கடல் என்றருளினன். அமரத்துவம் ஈண்டுக் கூற்றுத்தன்மை. கடத்தல் - வெல்லுதல். சிவன் பல்வேறு அண்டங்களுக்கும் அப்பாற்பட்டவன். அவன் முப்பத் தாறாம் மெய்யாகிய ஓசையென்னும் நாததத்துவத்தின்கண் திருவடிவைப்பவன். தமரம் - ஓசை, ஈண்டு நாததத்துவம், ஒப்பில்லாதவன், ஆண்டருளும் அருட்செல்வன். ஆற்றலாகிய திருவருட் சத்தியுடன் பெரும்பொருட்சிவன் கூடியருள்கின்றனன். அதனால் மயக்குடையவனே என்னும் மருளினை நீக்கியருளுகின்றனர். பவழம் போன்ற இதழையும், முத்துப்போன்ற பற்களையும், இனிய மொழிகளையும் உடைய சத்தியாகிய பெண்களுடன் கலந்து நின்றும் புலன்வென்றவன் ஆகின்றான். அத்தகைய மயக்கமில்லாத அறிவுப் பேரொளி. ஆருயிர்களின் நன்மையின் பொருட்டு அவ் வுயிர்களுடன் தொடர்ந்து நின்று 'புறம் புறம் திரிந்த' செல்வனாகின்றனன்.

அமரத்துவம் கடந்து - கூற்றுவனை வென்று. தமரத்து - நாத தத்துவத்தில். துவள் - மயக்கம்.

## 2789. மத்திமம் ஆறாறு மாற்றி மலநீக்கிச்

2789. மத்திமம் ஆறாறு மாற்றி மலநீக்கிச்
சுத்தம தாகுந் துரியத் துரிசற்றுப்
பெத்த மறச்சிவ மாகிப் பிறழ்வுற்றுச்
சத்திய ஞா னானந்தஞ் சார்ந்தனன் ஞானியே.

மத்திமமாகிய உண்ணிலைக் கருவிகளையும் முப்பத்தாறு மெய்களையும் திருவருளால் நாமல்ல என்று உணர்வது தத்துவ உண்மையுணர்தல். அங்ஙனம் உணர்ந்து, அவை சிவனுடைமை, அவன் திருவடிசேரத் துணையாகும்படி அவனால் அருளப்பட்ட கருவிப் பொருள்கள் என்று கைக்கொண்டு ஒழுகுதல் மாற்றுதல் என்பதாகும். அவை அங்ஙனம் மாற்றப்படவே தானே நீங்கும். தூய்மையும் தானே வந்து தலைக்கூடும். செயலறலாகிய துரியத் தூவாமையும் நீங்கும். நீங்கவே கட்டு நீங்கும். இக் கட்டு நீங்கவே சிவமாகித் திகழ்வோம். இயற்கையுண்மை அறிவு இன்பவடிவினைச் சார்வோம். சார்ந்து நாமும் அவ்வாறு நிற்பதனால் பொன்றாப் பேரொளிப் பிழம்பாவோம். இது வாயிலாகவே உண்மை அறிவின்பமாகிய ஓங்குயர் விழுச்சீர்த் திருவடியைப் பாங்குற எய்துவோம். இத்தகைய நிலையே ஞான நிலையாகும். இது பெற்றோனே ஞானியாவன். 'சார்' என்பது ஆகுபெயராகச் சார்வோனைக் குறிக்கின்றது.

சத்தியஞான ஆனந்தம் இன்னதென இம் மந்திரம் கூறுகின்றது. மத்திமம் - உண்ணிலைக் கருவிகள். ஆறாறு - 36 தத்துவங்கள். துரியத் துரிசு - துரிய

அவத்தை. பெத்தம் அற - பாசம் நீங்க. பிறழ்வுற்று - விளங்கி.

## 2790. சிவமா யவமான மும்மலந் தீரப்

2790. சிவமா யவமான மும்மலந் தீரப்
பவமான முப்பாழைப் பற்றறப் பற்றத்
தவமான சத்திய ஞானானந் தத்தே
துவமார் துரியஞ் சொரூபம தாமே.

திருவருளால் சிவனிலை எய்திய ஆருயிர்க்குப் பிறப்பினைத் திரும்பத் திரும்பத் தரும், ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்
களும் அறும். அறவே ஆருயிர் திருவடித் தூய்மையை உறும். உறவே பிறப்பினைத் தரும் குற்றமாகிய முப்பாழும் பற்றற அகலும். முப்பாழ் ஆருயிர்த்துரியம், அருட்டுரியம், அருளோன் துரியம் எனவும் கூறப்படும். பாழ் என்பது சொல்லொணா அருவநிலை. அவை அகலவே சிவத்தைப் பேணலாகிய தவத்தால் வரும் இயற்கை உண்மை அறிவின்பப் பற்று வாய்க்கும். அதுவே மேன்மைவாய்ந்த செயலறுதலாகிய துரியமாகும். இந் நிலைமையே உண்மை நிலையாகும்.

அவமான மும்மலம் - பிறப்பைக் கொடுக்கும் ஆணவம், கன்மம், மாயை, பவமான - குற்றமுள்ள. முப்பாழ் - மும்மாயையை. (மாயை - மாமாயை - பிரகிருதி மாயை.) பற்றற - பாசம் நீங்கும்பொருட்டு. துவம் - மேன்மை.

## 2791. பரம குரவன் பரமெங்கு மாகித்

2791. பரம குரவன் பரமெங்கு மாகித்
திரமுற எங்கணுஞ் சேர்ந்தொழி வற்று
நிரவு சொரூபத்துள் நீடுஞ் சொரூபம்
அரிய துரியத் தணைந்துநின் றானே.

திருவைந்தெழுத்தினைச் செவியறிவுறுக்கும் சிவகுரு பரமகுரவனாவன். அவன் எண்ணிலவாய் எங்கும் பெருகியுள்ள பரமாகிய ஆருயிர்கள்மாட்டு நீக்கமற நிறைந்து நிற்கின்றனன். யாவும் உறுதிப் பாடெய்தச் சிவபெருமான் உறுதிப்பாட்டுடன் எங்கணும் நிறைந்து நிற்கின்றனன். எங்கணும் நிறைந்துள்ள சிவத்துடன் கூடியவுயிர் சார்பினால் எங்கணும் நிறைந்தனவாகும். அஃது ஆருயிரின் உண்மை நிலையாகும். உண்மை நிலையினைச் சொரூபநிலை என்ப. அவ்வுண்மை நிலையினுள் நிலைபெற்ற உண்மை நிலையாக நின்றியக்குபவனும் சிவனே. இந் நிலையே அரியதுரிய நிலையாகும். அந் நிலைக்கண்ணும் அவன் அணைந்து நின்றருளினன். நம் பரம குரவரிவரென வருமாறு நினைவு கூர்க: 'நால்வர்நம் மூலர் நயந்தெமையாள் ஐங்குரவர், சால்பாம் 'சிவயசிவ' சார்ந்து.

## 2792. குலைக்கின்ற நீரிற் குவலய நீரும்

2792. குலைக்கின்ற நீரிற் குவலய நீரும்
அலைக்கின்ற காற்றும் அனலொடா காசம்
நிலத்திடை வானிடை நீண்டகன் றானை
வரைத்து வலஞ்செயு மாறறி யேனே.

ஒருநிலைப்படாது ஏனையவற்றின் நிலையினையும் குலைத்துத் தாமும் குலைவுறுவன ஐம்பெரும் பூதங்கள். அவை: மண், நீர், அலைக்கின்ற காற்று, அனல், வெளி என்பன. இவற்றுடனும், இவற்றின் சேர்க்கை யாகிய நிலத்துடனும், வானத்துடனும் நீக்கமற விரவி நின்றருள்பவன் சிவன். அத்தகைய நிலைபெற்றுயர்ந்த சிவபெருமானை இடத்தாலும், காலத்தாலும், படிமத்தாலும் ஓர் எல்லைப்படுத்து அளவிட்டுரைத்து வலம் செய்து வழிபடுமாறு எவ்வாறு என்று உன்னின், அஃது உரைக்கவும் உன்னவும் ஒண்ணாததாகும். அக் குறிப்பே ஆறு அறியேனே என்பதாகும். படிமம் - திருவுருவம்; விக்கிரகம்.

குலைக்கின்ற - நிலையைக் குலைக்கின்ற, தளரச்செய்கின்ற. குவலயம் - மண், பூமி. வரைத்து - ஓர் அளவில் அமைத்து.

## 2793. அங்குநின் றானயன் மால்முதல் தேவர்கள்

2793. அங்குநின் றானயன் மால்முதல் தேவர்கள்
எங்குநின் றாரும் இறைவனென் றேத்துவர்
தங்கிநின் றான்தனி நாயகன் எம்மிறை
பொங்கிநின் றான்புவ னாபதி தானன்றே.

உம்பர் உலகத்துள்ள அயன் மால் அரன் முதலிய தேவர்களும், எங்கும் நிறைந்துள்ள யாவர்களும் உய்யுமாறு இறைவனே என்று பாடிப் பரவிப் பணிவார்கள். ஒப்பில் தனி நாயகனாகிய சிவபெருமான் எங்கணும் தங்கி நின்றருளினன். அவன் தனிப்பெரும் விளக்கமாய் இருநூற்றிருபத்து நான்கு புவனங்களென்று சிறப்பித்துச் சொல்லப்படும் உலகங்கட்கும் ஏனைய அண்டங்கட்கும் ஒரு முதலாய்த் திகழ்கின்றனன்.

பொங்கி-விளங்கி; புவனாபதி - அண்டங்களுக்கெல்லாம் அதிபதி.

## 2794. சமையச் சுவடுந் தனையறி யாமற்

2794. சமையச் சுவடுந் தனையறி யாமற்
கமையற்ற காமாதி காரணம் எட்டுந்
திமிரச் செயலுந் தெளிவுடன் நின்றோர்
அமரர்க் கதிபதி யாகிநிற் பாரே.

நன்னெறித் திருவடையாளங்களையும் தன்னையும் சிறப்பாக அறிந்து முழுமுதலை வழிபட்டு அகவிழி பெற்று உய்யவேண்டுவது ஆருயிரின் கடமையாகும். அக் கடமையை வழுவுமாறு செய்து தடுக்குங் காரணங்கள் எட்டு. அவை முறையே செருக்கு, சினம், சிறுமை, இவறன்மை, மாண்பிறந்த மானம், மாணா உவகை, மண், பொன் என்பனவாகும். இவை பொறுமையை யிழப்பித்துச் சிறுமையுறச் செய்யும் தீமைகளாகும். இவற்றிற்கு அடிப்படைக் காரணமாக வுள்ளது ஆணவவல்லிருளாகும். அதுவே. திமிரம் எனப்படும். திருவருளால் இவையனைத்தையுங்கண்டு உண்மை யோர்ந்து தெளிந்து நிற்பர் மெய்யடியார். அவர்கள் நன்னெறிக்கு நற்றுணாவர். அவர்கள் உம்பர்வாழ் தேவர்கட்கும் முதல்வராவர்.

சுவடு - குறிகள். கமை - பொறுமை. காமாதி எட்டு - பெண்ணாசை, குரோதம், மதம், மோகம், உலோபம், மாச்சரியம், பொன்னாசை, மண்ணாசை ஆக 8.

## 2795. மூவகைத் தெய்வத் தொருவன் முதலுரு

2795. மூவகைத் தெய்வத் தொருவன் முதலுரு
வாயது வேறா மதுபோல் அணுப்பரன்
சேய சிவமுத் துரியத்துச் சீர்பெற
ஏயும் நெறியென் றிறைநூல் இயம்புமே.

உடல் மெய்யாகிய இருபத்து நான்காம் மெய்யுச்சியில் அயன் அரி அரன் என்னும் மூவரும் நின்றனர். இவர்கள் படைப்போன், காப்போன், துடைப்போன் என்னும் பெயரானும் அழைக்கப்படுவர். இம் மூவருள் ஒருவனாகிய அரன் தொழிலால் இவர்கள் வரிசையின் வைத்து எண்ணப்படுவன். ஆயினும் ஏனையிருவகையினரையும்போன்ற பெருமயக்குறுவோனல்லன். அதனால் அவன் வேறுபட்டவனுமாவன். அதுபோல், அணுவாகிய ஆருயிரும், பரனாகிய சிவனும் கலப்பால் ஒன்றாய் விராஅய் நிற்பினும் பொருட்டன்மையால் சிவன் வேறாவன். சிவபெருமான் நினைப்பிற்கும் எட்டா நெடுஞ்சேய்மைக் கண்ணுள்ளவனாவன். ஆருயிர்ச் செயலறல், அருட் செயலறல், அருளோன் செயலறல் ஆகிய மூன்றும் முத்துரியமாகும். இவற்றான் ஆருயிர்கள் சிவபெருமானின் திருவடியிணையினை எய்துதல் கூடும். எய்துதற்குரிய வழிகளும் இவையே என்று இறை நூல் இயம்பும் என்க. இறை நூல் (2358) என்பன செந்தமிழ் நெறி நூலும் துறை நூலுமாகும். நெறி நூல் வேதம், துறை நூல் ஆகமம். இவ்வுண்மை 'வேதநெறி தழைத்தோங்க

மிகுசைவத் துறை விளங்க' என்னும் சேக்கிழாரடிகள் அருண்மொழியான் உணரலாம்.

மூவகைத் தெய்வம் - அயன், அரி. அரன். ஒருவன் முதல் உருவாயது வேறாம் - ஒருவனாகிய அரன் அம் மூவரில் ஒருவனாகியும் வேறாகியும் நிற்பதுபோல. அணு-சீவன். சேய-எண்ணுதற்கரிய. முத்துரியம்-சிவ, சீவ, பரதுரியங்கள். இறைநூல் - தமிழ் வேதங்களும், தமிழ்ச் சிவாகமங்களும்.

## 2796. உருவன்றி யேநின் றுருவம் புணர்க்குந்

2796. உருவன்றி யேநின் றுருவம் புணர்க்குந்
கருவன்றி யேநின்று தான்கரு வாகும்
அருவன்றி யேநின்ற மாயப் பிரானைக்
குருவன்றி யாவர்க்குங் கூடவொண் ணாதே.

(ப. இ.) சிவபெருமான் தனக்கென ஓர் உருவம் இல்லாதவன். அங்ஙனமிருந்தும் ஆருயிர் உய்தற்பொருட்டு அவ் வுயிர்கட்கு மாயையினின்றுங் காரியப் பொருளாக முதலுடம்பு, மீநுண்ணுடம்பு, குணவுடம்பு, நுண்ணுடம்பு, பருவுடம்பு என்னும் ஐவகை உரு வுடலையும் படைத்தருளி நல்குகின்றனன். இதுவே அவன் உயிர்க்கு உருவம் படைத்துப் புணர்க்கும் உண்மையாகும். தனக்கோர் காரணமின்றித் தானே முழுமுதலாய் நிற்பவன் சிவன். ஆயின் அவன் எல்லாவற்றிற்கும் எஞ்ஞான்றும் வினைமுதற் காரணமாக இருப்பவன் ஆவன். அவன் எல்லாவற்றுடனும் விரவி விட்டுப் பிரிவின்றி நிற்பினும் அருவ நிலைகூட எய்துதலில்லாத சிவன் உயிருடனும் உடல் உலகுகளுடனும் புணர்ந்து நிற்கும் மாயப்பெருமானாக விளங்குகின்றனன். அப் பெருமானைக் கண்டு அவனருளால் அவன் திருவடியிற் கூடும் பெருவாழ்வினை எய்துதல் கூடும். அவ் வாழ்வு எய்துவதற்கு அவனே சிவகுருவாக எழுந்தருளி வந்தால் மட்டும் முடிவதாகும். வேறு ஒன்றாலும் முடியாதாகும்.

கருவன்றி - தனக்கு ஒரு காரணம் இன்றி. மருவன்றி - ஒன்றோடும் கூடுதல் இன்றி.

## 2797. உருவ நினைப்பவர்க் குள்ளுறுஞ் சோதி

2797. உருவ நினைப்பவர்க் குள்ளுறுஞ் சோதி
உருவ நினைப்பவர் ஊழியுங் காண்பர்
உருவ நினைப்பவர் உம்பரு மாவர்
உருவ நினைப்பவர் உலகத்தில் யாரே.

சிவபெருமானின் திருவுருவினைக் குறித்து நாடுங் குணமுடையோர் சித்தத்துள் அறிவுப் பேரொளியாய் நின்று அவன் விளங்குவன். நினைத்தல் - தியானித்தல்; தேனித்தல். அம் முறையான் திருவுருவினை அன்புடன் நாடுவார் பலவூழிகளையும் அருளால் காண்பர். அத்திருவுருவினையெப்போதும் நினைப்பவர் சிவ வுலக வாழ்வினராவர். சிவ வுலகம் - திருக்கயிலை. மேலும் அக் குறியா நினைவுடையார் உலகத் தோழுயைந்து நடப்பினும் அவர் உலகங் கடந்தவராவர். இவ் வுண்மையினை உலகிடை உண்மையாலறிவார் எவர்?

## 2798. பரஞ்சோதி யாகும் பதியினைப் பற்றாப்

2798. பரஞ்சோதி யாகும் பதியினைப் பற்றாப்
பரஞ்சோதி என்னுட் படிந்ததற் பின்னைப்
பரஞ்சோதி யுண்ணான் படியப் படியப்
பரஞ்சோதி தன்னைப் பறையக்கண் டேனே.

திருவருளால் பரஞ்சோதியாகிய பேரொளிப் பெரும் பொருளைப் பற்றும் பேறு பெற்றேன். பற்றவே அச் செம்பொருளும் என்னுள் படிந்தருளிற்று. அங்ஙனம் படிந்தருளியபின்னை அப் பேரொளிப் பெரும்பொருளினகத்து அடியேனும் மெள்ள மெள்ளப் படிவிக்கப் பெற்றேன். அங்ஙனம் படியப்படியப் பேரொளிப் பெரும் பொருள் தன்னை யுணர்த்தி உரைத்தருளவும் கண்டேன். பறைதல் - பறைபோல் பலரும் அறிய விளம்பல் 'யுண்ணான்' :யள் + நான்.

## 2799. சொரூபம் உருவங் குணந்தொல் விழுங்கி

2799. சொரூபம் உருவங் குணந்தொல் விழுங்கி
அரியன வுற்பல மாமாறு போல
மருவிய சத்தியாதி நான்கு மதித்த
சொரூபக் குரவன் சுகோதயத் தானே.

அரியனவாகிய செங்கழுநீர் மலரின்கண் சொரூபமாகிய மணமும், உருவமாகிய வடிவழகும், குணமாகிய மென்மையும் பண்டே நிறைந்துள்ளன. அவற்றுடன் அரியனவாகிய தூய்மையும் சேர நான்காகும். அதுபோன்று பொருந்திய சிவம், ஆற்றல், அருள்,. ஆருயிர் நான்கும் கலந்த பேருயிர் வடிவம் சிவகுரவன் ஆவன். அச் சிவகுருவின்பால் பேரின்பப் பெருந்தோற்றம் பெருக்கெடுத்துக் கரைபுரண்டு பொலியும். பொலியும் - மிக்கு விளங்கும். சொரூபம் - இயற்கை உண்மைத் தன்மை.

சத்தியாதி நான்கு - சத்தி, சிவன், பரம், சீவன். மதித்த - கலந்த.

## 2800. உரையற்ற ஆனந்த மோன சொரூபத்தன்

2800. உரையற்ற ஆனந்த மோன சொரூபத்தன்
கரையற்ற சத்தியாதி காணில் அகார
மருவுற் றுகார மகாரம தாக
உரையற்ற தாரத்தில் உள்ளொளி யாமே.

சொல்லொணாப் (2915) பேரின்ப மோன உண்மை வடிவினன் சிவகுரவன். அவன்பால் எல்லையில்லாத அருட் பண்புகள் சேர் சத்தி முதலியவற்றைத் திருவருளால் காணுங்கால், இயற்கை ஒலியாகிய அகரமும், அவற்றொடு கூடும் உகரமகரங்களும் ஆகித் தோன்றும். அத் தோற்றமே ஓமொழி மறையாகும். அம் மறையின்கண் அறிவுப் பேரொளியாய் உள்ளொளியாய் விளங்குவது திருவருளாகும்.

தாரம் - பிரணவம்.

## 2801. தலைநின்ற தாழ்வரை மீது தவஞ்செய்து

2801. தலைநின்ற தாழ்வரை மீது தவஞ்செய்து
முலைநின்ற மாதறி மூர்த்தியை யானும்
புலைநின்ற பொல்லாப் பிறவி கடந்து
கலைநின்ற கள்வனிற் கண்டுகொண் டேனே.

முதன்மையும், சிறப்பும், மூவா மேன்மையும் உடைத்தாய் ஓங்கி யுயர்ந்து தலையாக நின்ற திருவருள் தாழும் திருமலை திருக்கயிலை. தாழ்தல் - தங்குதல். அத் திருக்கயிலையின்கண் ஒப்புயர்வில்லா ஒரு பெரும் நற்றவம் புரிபவள் உலகறி அன்னை. அவளாலறியப்படும் வள்ளல் சிவபெருமான். அத் திருவருளால் அடியேனும் தூயதல்லாதவை நிறைந்துள்ள அழகின்மையும் குற்றமும் பொருந்திய பிறவியைக் கடந்துள்ளேன். அன்பின் பிணிப்பில் கள்வன்போல் கட்டுண்டு நின்ற அச்சிவபெருமானைத் திருவருளால் கண்டுகொண்டேன்.

தலைநின்ற தாழ்வரை-கயிலை (இது காச்சுமீரத்திலிருந்து பார்த்தால் கயிலைக் கொடுமுடி செங்குத்தாக இருப்பது தோன்றும்). முலைநின்ற மாது-வயதுவந்த உமை.

# 2802. ஆமா றறிந்தேன் அகத்தின் அரும்பொருள்

2802. ஆமா றறிந்தேன் அகத்தின் அரும்பொருள்
போமா றறிந்தேன் புகுமாறு மீதென்றே
ஏமாப்ப தில்லை இனியோ ரிடமில்லை
நாமா முதல்வனும் நானென லாகுமே.

திருவருள் துணையால் உயிரினுக்கு உயிராய் அகத்தே நிற்கும் அரும்பொருளாகிய சிவபெருமானைக் கண்டுகொண்டேன். கண்டதும், அவனுடன் கலந்து போமாறும் புகுமாறும் ஈதென்றே அறிந்துள்ளேன். அதனால் செருக்குறுவதில்லை. விட்டு நீங்கி ஒட்டி வாழ்வதற்குச் சிவபெருமான் திருவடியையன்றி வேறோர் இடமில்லை. சிவபெருமான் தண்ணருளால் நம்முடன் கலந்து நம்மையும் அவன் வண்ணமாகச் செய்தருளினன். அதனால் நாமும் அவனென்றே கூறும் அருள் உரிமையையும் பொருளாகப் பெற்றுள்ளோம். பேரருள் கூர்ந்து அறியாமை வயப்பட்டு நிற்கும் மாணவர்களை வலிய அழைத்துக் கற்பித்து அறிவுடையவர்களாக்கித் தன்போல் விளக்கமுறச் செய்கின்றனன் பேராசான். அந்நிலையில் அம் மாணவர்களும் அறிவு விளக்கம் விளங்கப் பெற்றவராய்த் திகழ்கின்றனர். அப்பொழுது அவர்களும் அறிவுடையாசான் என்று அழைக்கப்படுகின்றனர். இந்நிலை மேலதற்கு ஒப்பாகும்.

போமாறு - புகுமாறு, ஊன் உயிர் வேறுபடவும் கூடவும்.

# 13. ஊழ்

## 13. ஊழ் 2803. செற்றிலென் சீவிலென் செஞ்சாந் தணியிலென்

2803. செற்றிலென் சீவிலென் செஞ்சாந் தணியிலென்
மத்தகத் தேயுளி நாட்டி மறிக்கிலென்
வித்தகன் நந்தி விதிவழி யல்லது
தத்துவ ஞானிகள் தன்மைகுன் றாரன்றே.

உள்ளம் திருவருள் வயப்பட்டு ஒழுகும் விழுமிய தொண்டர்கள் தங்கள் உடம்புக்கு என்ன நேர்ந்தாலும் மனங்கொள்ளார். விற்ற வீட்டை வாங்கினவன் இடிக்கும் பொழுதும் புதுப்பிக்கும் பொழுதும் விற்றவனுக்கு முறையே புலம்பலும் மகிழ்வும் ஏற்படாமலிருப்பன இதற்கு ஒப்பாகும். கருமமே கண்ணாயினார்க்கு முயற்சியான் வரும் மெய் வருத்தம் அவர்தம் உள்ளத்தைத் தாக்காமையும் இதற்கு ஒப்பாகும். திருவருளால் மெய்யுணர்ந்து நன்னெறி நான்மைக்கண் நின்று இடையறாது ஒழுகும் ஒழுக்கமுடைய உரவோர்பால் அறியாமையால் பகைமை பூண்டு அவர்தம் உடம்பினைக் கூரிய கருவி கொண்டு செதுக்கினால்தான் என்ன? அல்லது சீவினால்தான் என்ன? உண்மையுணர்ந்து பேரன்பால் அவர் தமக்கு அடிமை பூண்டு செஞ்சாந்தினை நறுமணக் கலவை கூட்டி உறுமகிழ்வுடன் இனிது மொழிந்து கனிமனத்தினராய் நனிமிகப் பூசினால் தான் என்ன? உச்சித்துளையின்கண் வைரமிக்க ஆப்பினையும் பிளக்கும் வன்மை வாய்ந்த கூரிய உளியினையும் நாட்டி அடித்தால்தான் என்ன? வியத்தகும் அருளிப்பாடுடைய நந்தியின் திருவடியினை நினைந்து

நிகழ்ந்தது ஏதும் உணராது அத் திருவடி நினைவு மாறாத ஒழுக்கத்தின் வழியே நிற்பர். அங்ஙனமன்றித் தம் தன்மையில் என்றும் குன்றா இயல்பினராவர். இவர்நிலை அகத்தவத்தோர், ஐந்தாம் உடம்பாகிய இன்பஉடம்பின் கண்ணணிற்கும் எழினிலையாகும்.

செற்றிலென் - செதுக்கினால் என். மறிக்கில் - அடித்தால்.

## 2804. தான்முன்னஞ் செய்த விதிவழி தானல்லால்

2804. தான்முன்னஞ் செய்த விதிவழி தானல்லால்
வான்முன்னஞ் செய்தங்கு வைத்ததோர் மாட்டில்லை
கோன்முன்னஞ் சென்னி குறிவழி யேசென்று
நான்முன்னஞ் செய்ததே நன்னில மானதே.

உயிர் தான் முன் செய்த வினைக்கீடாகப் பயனைச் சிவபெருமான் வரையறுப்பான் என்பதை உணர்தல் வேண்டும். அதுவே விதி என்றும் ஊழ் என்றும் உரைக்கப்படும். அம் முறையானன்றி மேன்மை மிக்க சிவபெருமான் தானாகவே செய்தமைத்ததோர் விதித் தொடர்பு ஏதும் இன்று கோனாகிய சிவபெருமான் திருமுன் நன்னெறி நான்மைக் குறிவழியே சென்று சென்னிவணங்கித் திருவடி பணிந்தேன். அப் பணிவினால் நான் கருதிச் செய்தது திருத்தொண்டாயது. அதனால் என் உள்ளம் சிவன் தங்கும் நன்னிலமாயது. ஊழின் தன்மையினை வருமாறு நினைவுகூர்க: 'நீங்கா வினைப்பயனே நேரும்ஊழ் மற்றுவினை, ஈங்கறிவால் நாமாக்கல்எண்.'

முன்னம் - முன் பிறப்புக்களில். விதி - கன்மபலனை அனுபவிக்க ஈசனால் விதிக்கப்பட்ட. வான் - மேன்மை உள்ளதாக. மாட்டு - சம்பந்தம். கோன் - சிவன். முன்னம் - சந்நிதானத்தில்.

## 2805. ஆறிட்ட நுண்மணல் ஆறே சுமவாதே

2805. ஆறிட்ட நுண்மணல் ஆறே சுமவாதே
கூறிட்டுக் கொண்டு சுமந்தறி வாரில்லை
நீறிட்ட மேனி நிமிர்சடை நந்தியைப்
பேறிட்டென் னுள்ளம் பிரியகி லாவன்றே.

திருவாணையின் வழி அவரவர் செய்த வினைப்பயனை அவரவரே நுகர்வர். அப் பயனைக் கூறிட்டுக்கொண்டு நுகர்வார் எவருமிலர். அங்ஙனம் நுகர்விப்பதும் நடுநிலை முறைமையாகாது. வெள்ளப் பெருக்கினால் ஆற்றின்கண் மேடுபள்ளங்கள் உண்டாகின்றன. அவற்றைத் தாங்கி நிற்பது அவ்வாறே யன்றிப் பிறிதன்று என்க.
ஆறொக்கும்உயிர், ஆற்றின் நீரொக்கும் வினை, வினையின்வகையொக்கும் மேடுபள்ளங்கள். அவற்றை அவ் ஆறு சுமத்தல் அவ் வுயிர் வினைப்பயன்களை நுகர்வ தொக்கும். முழுநீறு சண்ணித்த திருமேனியும், நீண்ட திருச்சடையும் உடைய நந்தியை வழிபட்டு அவன் திருவடியே பெரும் பேறெனக் கொண்டு என்னுள்ளம் இமைப்பொழுதும் வேறெதற்கும் விலகாதென்க.

ஆறிட்ட நுண்மணலாறு - ஆற்றில் உள்ள நுண்ணிய மணல்போல் அளவற்ற கன்மபலனை. பேறிட்டு - அடையும் பொருட்டு.

## 2806. வானின் றிடிக்கிலென் மாகடல் பொங்கிலென்

2806. வானின் றிடிக்கிலென் மாகடல் பொங்கிலென்
கானின்ற செந்தீக் கலந்துடன் வேகிலென்
தானொன்றி மாருதஞ் சண்டம் அடிக்கிலென்
நானொன்றி நாதனை நாடுவன் நானன்றே.

உண்மைச் சிவனடியார்கள் எஃது எவ்வாறு நிகழினும் தங்கள் உண்மை அன்புள்ளம் சிவன் திருவடியினின்று மொருகாலும் நிலைபெயரவொட்டார். செருமுகம் நோக்கிச் செல்லும் மறவன் உள்ளம் போன்று மெய்யடியார் உள்ளம் ஒருமுகப்பட்டுத் திருவடியினையே நோக்கிநிற்கும். வானம் விழும்போல் பேரிடிமுழங்கினால்தான் என்ன? பெருங்கடல் பொங்கிப் பெருவெள்ள ஊழி நேர்ந்தாற்றான் என்ன? பெருங்காட்டுத்தீ முறுகி நாடெலாம் வெந்து நண்ணரிய உலகங்களும், பிற அண்டங்களும் வெந்தாற்றான் என்ன? காற்று, பெருங்காற்று, ஊழிக்காற்று முதலியன தோன்றி எல்லாம் அழியநேர்ந்தாற்றான் என்ன? நெஞ்சே! நான் ஒன்றுதலாகிய ஒருமுகப்பட்டு என்னுள்ளே நாதனை நாடுவன்.

## 2807. ஆனை துரக்கிலென் அம்பூ டறுக்கிலென்

2807. ஆனை துரக்கிலென் அம்பூ டறுக்கிலென்
கானத் துழுவை கலந்து வளைக்கிலென்
ஏனைப் பதியினில் எம்பெரு மான்வைத்த
ஞானத் துழவினை நானுழு வேனன்றே.

ஆனை மதம்பொழிந்து நெறியல்லாநெறிச் சென்று என்னைத் துரத்தினாலென்ன? கண்ணேரனைய கூர்ங்கணை நெஞ்சூடு சென்று அறுத்தாற்றானென்ன? காட்டில் வாழும் வலியும் ஆண்மையும் ஊக்கமும் மிக்க புலிவந்து வளைத்துக் கொண்டாற்றானென்ன? சிவவுலகத்தின்கண் திருவடிப்பேறு எய்துமாறு எம்பெருமான் அமைத்தருளிய மெய்யுணர்வு உழவாம் 'ஞானநூல்தனை ஓதல் ஓதுவித்தல்' முதலிய அறிவினில் அறிவாம் (2615) தொண்டினை அடியேன் ஆற்றுவேன் என்க. உழுவென்பது ஈண்டு ஞானவழிபாட்டின்மேற்று. அது ஞானத்துழவு என்பதனாலும் விளங்கும்.

அம்பு ஊடு அறுக்கிலென் - அம்பு ஊடுருவிப் பாய்ந்தாலென். உழுவை - புலி. ஏனைப் பதி - ஞானபூமி. ஞானத்துழவு - ஞானம் அடைவதற்கு உரிய ஆராய்ச்சி.

## 2808. கூடு கெடின்மற்றோர் கூடுசெய் வானுளன்

2808. கூடு கெடின்மற்றோர் கூடுசெய் வானுளன்
நாடு கெடினும் நமர்கெடு வாரில்லை
வீடு கெடின்மற்றோர் வீடுபுக் கால்ஒக்கும்
பாடது நந்தி பரிசறி வார்கட்கே.

கூடு பழுதுற்றால் மற்றோர் கூடு அமைப்பது உலகியல் வழக்கல்லவா? அதுபோல் இவ்வுடம்பு கேடெய்துமானால் வினைக்கீடாக மற்றோர் உடம்பினைச் சிவபெருமான் படைத்தளிக்கின்றனன். அங்ஙனம் புத்துடல் படைத்தளிக்கப்படினும் ஆருயிர் முன்னியைந்துள்ள பழைய உயிரேயாகும், என்னை? உயிர் படைக்கப்படுவதொன்றன்றாகலானென்க. ஒருநாடு மழையின்மை முதலியவற்றான் கேடெய்தின், அந்நாட்டவர் வேற்றுநாடு புக்குக் குடியேறி வீற்றிருப்பரன்றோ? அந்நிலை இதற்கொப்பாகும். அக்குறிப்பு 'நாடுகெடினும் நமர்கெடுவாரில்லை' என ஓதியதனால் விளங்கும். மேலும் எவ்வகையாலேனும் குடியிருக்கும் வீட்டினுக்குக் கேடெய்துமானால் அவ்வீட்டவர் புதுவீடு குடிபுகுந்து பீடுற வாழ்வதும் இதற்கொப்பாகும். பெருமைமிக்க நந்தியின் பேரருட்டன்மையினை அறியம் மெய்யுணர்வினர்க்கு இத் தன்மை எளிதின் விளங்கும்.

நமர் - நாட்டில் வாழும் நம்மவர்.

## 2809. சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை

2809. சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை
சிந்தையி னுள்ளே சிவனும் வெளிப்படுஞ்
சிந்தை தெளியத் தெளியவல் லார்கட்குச்
சிந்தையி னுள்ளே சிவனிருந் தானன்றே.

அரசனைத் தாங்கும் அரசு கட்டில் அரசனெனவே மதிக்கப்படும். அதுபோல் கொற்றந்தரும் முரசுகட்டில் கொற்றவை எனவே மதிக்கப்படும். இம்முறையே சிவபெருமான் எழுந்தருளியுள்ள சிந்தை சிவனெனவே மதிக்கப்படும். அக்குறிப்புத் தோன்றச் 'சிந்தைய தென்னச் சிவனென்ன வேறில்லை,' என ஓதினர். பாற்கலமும் பால் போல் மதிக்கப்படும். மேலும் உயிருள்ள உடலும் உயிர்போன்றே
மதிக்கப்படுமல்லவா? அஃதும் ஒப்பாகும். நீங்காநினைவுடன் திருவைந் தெழுத்தினை நினைவார் ஓங்கும் செந்நெறிச் செல்வராவர். அத்தகையார் திருவுள்ளத்தின்கண் சிவனும் வெளிப்பட்டருள்வன். திருவருளால் உள்ளந்தெளியக் 'கேட்டலுடன் சிந்தித்தல் தெளிதல் நிட்டைகிளத்தல்' என்னும் முறையான் தெளியவல்ல நற்றவத்தார்க்குச் 'சிந்தையினுள்ளே சிவன்' எழுந்தருளி வெளிப்பட்டு வீற்றிருந்தருள்கின்றனன்.

## 2810. வாக்கு மனமு மறைந்த மறைப்பொருள்

2810. வாக்கு மனமு மறைந்த மறைப்பொருள்
நோக்குமின் நோக்கப் படும்பொருள் நுண்ணிது
போக்கொன்று மில்லை வரவில்லை கேடில்லை
ஆக்கமும் அத்தனை ஆய்ந்துகொள் வார்கட்கே.

மாற்றம் மனம் கழியநின்ற மறையோனாகிய சிவபெருமானை வாக்கும் மனமும் மறைந்த மறைப்பொருள் என்றோதினர். திருவருளால் அவனை நோக்குங்கள். அவன் நோக்கப்படும் நுண்ணிய பொருளாவன். அவன் இடம்விட்டு இடம்பெயரும் போக்குவரவுகள் இல்லாதவன். அவன் என்றும் ஒன்றுபோல் நின்றுநிலவும் மன்றவாணன். பிறப்பும் இறப்புமில்லாச் சிறப்பினன். அதனால் கேடில்லாதவன் என ஓதினர். அத்தகைய அத்தனைத் திருவருளால் ஆய்ந்து உளங்கொண்டு திருவடியுணர்வில் திளைப்பார்க்கு அதுவே ஆக்கமாகிய பிறவிப் பயனாகும்.

## 2811. பரனாய்ப் பராபர னாகியப் பாற்சென்று

2811. பரனாய்ப் பராபர னாகியப் பாற்சென்று
உரனாய் வழக்கற வொண்சுடர் தானாய்த்
தரனாய்த் தனாதென வாறறி வொண்ணா
அரனா யுலகில் அருள்புரிந் தானே.

விழுமிய முழுமுதற் சிவபெருமான் மேலோனாயுள்ளான். மேலோர்க்கும் மேலோனாயுள்ளான். மெய்களனைத்திற்கும் மேற்சென்றவன். இயற்கைப் பேரறிவும் பேராற்றலும் வாய்ந்த உரனாய் உள்ளவன். ஏனைய வொளிகளெல்லாம் வழக்கற்று ஒழிந்து மங்கிய காலத்தும் வழக்கறுதலும் மங்குதலும் இன்றி என்றும் ஒன்றுபோல் வழக்கறா ஒண்சுடர் தானாய் உள்ளவன். தானாய் என்பது இயற்கையாய் என்பது பொருள். எல்லாவற்றையும் ஒருங்குதாங்கும் ஆறறிவுகளாலும் அறியவொண்ணா அரனாகவுள்ளவன். இவ்வகையாக இயைந்துநின்று இன்னருள்புரிந்து இடையறாது ஓம்புகின்றனன். ஆறறிவு: ஐம்புலனும் இறுப்புமெய்யும் கருவியாகக் கொண்டறிவது. இறுப்பு - புத்தி.

"ஒன்றறி வதுவே உற்றறி வதுவே
இரண்டறி வதுவே யதனொடு நாவே
மூன்றறி வதுவே யவற்றொடு மூக்கே
நான்கறி வதுவே யவற்றொடு கண்ணே
ஐந்தறி வதுவே யவற்றொடு செவியே
ஆறறி வதுவே யவற்றொடு மனனே
நேரிதி னுணர்ந்தோர் நெறிப்படுத் தினரே."
(தொல். பொருள்-மரபு - 27.)

ஈண்டு மனம் என்பது இறுப்பு மெய்யாகிய புத்தியினைக் குறிக்கும். அது புத்திக் காட்சியினை மானதக் காட்சியென்று வழங்குவதனான் உணரலாம். 'காண்டல் வாயின் மனந்தன் வேதனையோ டியோகக் காட்சி' (சிவஞானசித்தியார் அளவையிலக்கணம்-4) என்பதனான் உணர்க. மெய்கள் - தத்துவங்கள். ஆறு: நன்னெறி எனலுமொன்று.

தானாய் - யாவற்றிற்கும் ஆதாரமாய். ஆறு அறிவு - ஐந்து புலனறிவும் மன அறிவும்.

## 2812. ஓதும் மயிர்க்கால் தொறுமமு தூறிய

2812. ஓதும் மயிர்க்கால் தொறுமமு தூறிய
பேதம் அபேதம் பிறழாத ஆனந்தம்
ஆதி சொரூபங்கள் மூன்றகன் றப்பாலை
வேதம தோதுஞ் சொரூபிதன் மேன்மையே.

விழுமிய முழுமுதற் சிவபெருமான் அளித்தருளும் திருவடிப்பேரின்பம் வேறுபட்டே யிருக்குமெனவும், ஒன்றாய்க் கலந்து ஒழிந்துவிடும் எனவும் கூறுவதற்கு ஓர் இயையுமின்று. மாறுபடாது என்றும் ஒன்றுபோல் வேறற ஆருயிர்களுடன் கலந்துநிற்கும் இயல்பினது. அதனால் சிறப்பித்துச் சொல்லப்படும் மயிர்க்கால்தோறும் அப்பேரின்ப அமுது அளவிறந்தூறித் தெவிட்டா இன்பம் தேக்கிடச் செய்யும். உருவம் அருவம் உருஅருவம் என்று கொள்ளப்படும் பொது நிலைத் திருவுருவங்கள் மூன்றும் கடந்து இன்ன தன்மைத்தென எவராலும் சொல்லவொண்ணாத இயற்கை உண்மை அறிவு இன்ப வடிவினனாக என்றும் விளங்குபவன் சிவன். இதுவே செந்தமிழத் திருமறையோதும் சிவன்றன் சிறந்த திருவுருவ மேன்மையாகும்.

பிறழாத ஆனந்தம் - தவறுபடாத ஆனந்தம். வேதம தோதும் - தமிழ் வேதத்திலே கூறப்படும்.

## 2813. உணர்வும் அவனே உயிரும் அவனே

2813. உணர்வும் அவனே உயிரும் அவனே
புணர்வும் அவனே புலவி யவனே
இணரும் அவன்தன்னை என்னலு மாகான்
துணரின் மலர்க்கந்தந் துன்னிநின் றானே.

விழுமிய முழுமுதற் சிவபெருமானும், கெழுமிய அடிமையாம் ஆருயிரும் மலர்மணம்போன்று வேறற விரவி என்றும் அழியாது ஒழியாது வழிநிற்கும் பழியில் பொருள்கள். அதனால் ஆருயிர்களின் உணர்வும் அவனே, உயிரும் அவனே, புணரும் புணர்வும் அவனே, புலப்பும் அவனே, நெஞ்சத்தாமரையாகிய இணரின்கண் அவன் இடையறாது கலந்திருந்தருள்கின்றனன். எனினும் அழுந்தி அறிவதாகிய அனுபவத்தானன்றி எழுந்து மொழிவதாகிய சொல்லாற் கூறுவதற்கு முன்னிலையாகிய எண்ணத்தான் எண்ணவும் ஆகான். புலப்பு - புலத்தல்; புலவி. துணர் - இணர்; பூங்கொத்து.

புலவி - பிணக்கு. இணரும் - இதயத்துள் கலந்திருக்கும். துணர் - கொத்து.

# 2814. இணங்க வேண்டா இனியுல கோருடன்

2814. இணங்க வேண்டா இனியுல கோருடன்
நுணங்கு கல்வியும் நூல்களும் என்செயும்
வணங்க வேண்டா வடிவை யறிந்தபின்
பிணங்க வேண்டா பிதற்றை யொழியுமே.

உண்மைச் சிவனுடன்கலந்த திருவடியுணர்வுடையார், 'மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும் சிறப்பிலாரா'கிய உலகோருடன் சேரார். அதனால் இனி உலகோருடன் இணங்க வேண்டாவென்று ஓதினர். இது நல்லார் பொல்லாருடன் இணங்கா இயல்பினையொக்கும். நுணங்கிய கல்வியும் நூல்களும் புணர்ந்தார்க்கு என்ன பயனைச் செய்யும். வழி நடப்பார்க்கு வழிகாட்டும் நூலும் பொருளும், வழியும், மொழித் துணையாலும், விழித் துணையாலும், அழிவில் காற்றுணையாலும் கற்றும் கண்டும் நடந்தும் பேரூர் சென்ற பெருமக்களுக்குப் பின் அவை பயன்படாமை இதற்கு ஒப்பாகும். திவருடிக் கலப்பு எய்தியபின் வேறு நில்லாமையின் வேறு நின்ற காலத்துச் செய்து போந்த வணக்கங்கள் இப்பொழுது அந்த முறையில் செய்யவேண்டாவென்க. இஃது ஒருவர் கையினை மற்றொருவர் வேறு நின்றுதொட்டு இரண்டு கையும் கூடிய கூட்டம் பின் கூடவேண்டா என்பதும், பெருவிரலும் ஆட்காட்டி விரலும் ஒன்றாய்ப் புணர்ந்து வேறற நின்றபின் புணரவேண்டா என்பதும் எப்படியோ அப்படியாகும். மேலும் "தெய்வம் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள், பெய்யெனப் பெய்யும் மழை" (55)

என்பதன்கண் சிவபெருமானுக்குரிய எட்டுத் திருவுருவங்களுள் ஆருயிர்த் திருவுரு நீங்கலாகிய ஏனைய ஏழு திருவுருவங்களையும் 'தெய்வம்' என ஓதினர். தெய்வம் ஆகுபெயராகத் தெய்வவுருவினைக் குறிக்கும். அவ்வுருவங்களை வணங்கிக்கடந்தவர் மீண்டும் வணங்கவேண்டாவென்பதும் இதற்கு ஒப்பாகும். இவ்வுண்மைப் பொருளினைத் திண்மையுற உணராது பிணங்குவார் பலர்; பிதற்றுவாரும் பலர். அவரைநோக்கிப் பிணக்கத்தையும் பிதற்றையும் ஒழிமின் என்று ஓதினர்.

## 2815. துன்னிநின் றான்தன்னை யுன்னிமுன் னாவிரு

2815. துன்னிநின் றான்தன்னை யுன்னிமுன் னாவிரு
முன்னி யவர்தங் குறையை முடித்திடும்
மன்னிய கேள்வி மறையவன் மாதவன்
சென்னியுள் நின்றதோர் தேற்றத்த னாமன்றே.

திருவருளால். உன்னுடன் விட்டுநீங்காது ஒட்டிநிற்கும் சிவபெருமானைக் கனிமனத்தான் நினைந்து அவன் திருவருளை மறவா
நினைவாய் அவன் திருமுன் இருப்பாயாக. முன்னிருப்பதென்பது சிவபெருமான் எப்பொழுதும் நம்மகத் திருப்பதுபோல் புறத்தும் இருக்கின்றான் என்னும் எண்ணம் திண்ணமாகக்கொண்டு ஒழுகுதல். அவ்வாறு நினைப்பவர்தம் குறையாகிய இன்றியமையாமையுள்ள வேண்டுகோளை முடித்திட்டருள்வன். நினைப்பார் குறையை முடிப்பான் என்பதற்கு ஒப்பு, பக்கமிருக்கும் கைக்குடையை விரிப்பார்க்குத் தக்க நிழல்தரும் தன்மையாகும். அச் சிவபெருமான் நிலைபெற்ற கேட்டுய்வதற்கு வாயிலாகிய திருவைந் தெழுத்தாவன். விதிப்படி கணிக்கும் அவ்வெழுத்தின் பெறுபேறாம் பெருந்தவத் தோனும் ஆவன். ஆருயிர்களின் உச்சிக்கணின்று தெளிவிக்கும் தேற்றத்தனும் ஆவன்.

# 2816. மின்னுற்ற சிந்தை விழித்தேன் விழித்தலுந்

2816. மின்னுற்ற சிந்தை விழித்தேன் விழித்தலுந்
தன்னுற்ற சோதித் தலைவன் இணையிலி
பொன்னுற்ற மேனிப் புரிசடை நந்தியும்
என்னுற் றறிபவன் என்விழித் தானன்றே.

திருவருளால் விளக்கமிக்க என் சிந்தையாகிய அகக்கண் திறக்கப்பட்டது. நான் விழித்து நோக்கினேன். நோக்கலும், தானே இயற்கை உண்மை அறிவுப் பிழம்பாயுள்ள சிவன் அடியேனைச் சிறப்பாக அறிவானாயினன். இது கற்பிப்பாரால் கற்பிக்கப்பட்ட மாணவரைத் தேர்வாளர் வந்து தேர்தல் புரிதலை யொக்கும். அச் சிவபெருமானே தலைவனாவன். அவன் ஒப்பில்லாதவன். செம்பொன் போலும் திருமேனியினையும், பின்னல் வாய்ந்த திருச்சடையினையும் உடையவன். அவன் என்னைச் சிறப்பாக உற்றறிபவனாவன். என்னையும் அவன் திருக்கடைக் கண்ணோக்கம் செய்தருளினன். அவன் நந்தி என்னும் திருப்பெயருடையவன். நந்தி நாமம் 'நமசிவய' என்பதனால், எல்லாம் அவனுடைமை என்பது விளங்கும். உற்று - நோக்கி.

மின்னுற்ற - விளக்கம் பொருந்திய. தன்னுற்ற - தானே விளங்குகின்ற. என் உற்று அறிபவன் - என்னையே உற்று நோக்குபவன்.

## 2817. சத்திய ஞானத் தனிப்பொருள் ஆனந்தஞ்

2817. சத்திய ஞானத் தனிப்பொருள் ஆனந்தஞ்
சித்தத்தி னில்லாச் சிவானந்தப் பேரொளி
சுத்தப் பிரம துரியந் துரியத்துள்
உய்த்த துரியத் துறுபே ரொளியன்றே.

தனிமுதற் பெரும்பொருள் சிவன். அவன் இயற்கை உண்மை அறிவு இன்பவழிவினன். சித்தமெனப்படும் இறுப்பின்கண் நில்லாத சிவப்பேரின்பப் பேரொளி. திருவருட் செயலறலாகிய துரியம் சுத்தப் பிரமத்துரியம் எனப்படும். அத் துரியத்துள் செலுத்திய மற்றோர் செயலறல் உய்த்த துரியமாகும். அத் துரியத்துள் மிக்க பேரொளியாக இருப்பவனும் அவனே. இத் துரியம் அருளோன் செயலறல் எனப்படும்.

## 2818. பரனல்ல நீடும் பராபர னல்ல

2818. பரனல்ல நீடும் பராபர னல்ல
உரனல்ல மீதுணர் ஒண்சுட ரல்ல
தரனல்ல தானவை யாயல்ல வாகும்
அரனல்ல ஆனந்தத் தப்புறத் தானே.

"சிவனெனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மானாம்" செம்பொருள் பரன் அல்லன், அதனினும் சிறந்த நிலை பேறுள்ள பராபரனும் அல்லன், பேரறிவுப் பேராற்றல் வாய்ந்த பெரும் பொருளும் அல்லன், புணர்ப்பாய்நின்று மேலுணரும் ஒண்சுடரும் அல்லன். அனைத்தையும் தாங்கும் அரும்பொருளும் அல்லன். அவையனைத்தும் அல்லவாகும். அரனல்லன். திருவருளின்பமும் அல்லன். அவன் எல்லாவற்றுக்கும் அப்புறத்தாகநிற்கும் செப்பம்சேர் ஒப்பில் ஒருபெரும் பொருளாவன். அல்லன் என்பன அல்ல எனக் கடை குறைந்து நின்றன.

## 2819. முத்தியுஞ் சித்தியும் முற்றிய ஞானத்தோன்

2819. முத்தியுஞ் சித்தியும் முற்றிய ஞானத்தோன்
பத்தியுள் நின்று பரந்தன்னுள் நின்றுமா
சத்தியுள் நின்றோர்க்குத் தத்துவங் கூடலாற்
சுத்தி யகன்றோர் சுகானந்த போதரே.

முத்தியாகிய வீடும் சித்தியாகிய பேறும் கைகூடிய ஆருயிர்க்கிழவன் ஞானத்தோனாவன். ஞானம் - திருவடியுணர்வு. ஞானத்தோன் - திருவடிசேர் அடிமை; நாயன்மார். அத் திருவடியுணர்வு கைவந்தபின் பேரன்பாம் பத்திநிலை கைகூடும். அப் பத்தியுள் நின்றபின் பரத்தினுள் நிற்பன். பின் திருவருட் பெருந்திருவுள் நிற்பன். அவ்வாறு நிற்கும் நல்லோர்க்கு இயற்கை யுண்மைச் சிவன் கைகூடுவன். அதனால் பொருள் அருள் தூய்மையும் அகன்றோராவர். அவரே பேரின்பப் பேரறிவினராவர்.

மாசத்தி - திருவருட்சத்தி. தத்துவம் - மெய்யறிவு. சுத்தி அகன்றோர் - சுத்தாவத்தையைக் கடந்து சென்றவர்.

## 2820. துரிய அதீதஞ் சொல்லறும் பாழாம்

2820. துரிய அதீதஞ் சொல்லறும் பாழாம்
அரிய துரியம் அதீதம் புரியில்
விரியுங் குவியும் விள்ளா மிளிருந்தன்
உருவுந் திரியும் உரைப்பதெவ் வாறே.

செயல்நுதலாகிய துரியமும், நினைவு அறுதலாகிய துரியா தீதமும் இத் தன்மைய என்று எவராலும் சொல்லொணாப் பாழாகும். அப்பால் நிலையாகிய துரியாதீதம் உயிர்ப்படங்கலாகும். அந்நிலையை எய்தினால், விரிதலாகிய நினைப்பும் குவிதலாகிய மறப்பும் உண்டாகா. ஆருயிர்களின் சுட்டறிவும் சிற்றறிவும் பேரறிவாகத் திரிந்துவிளங்கும். அவ் விளக்கத்தின்கண் சிவபெருமான் அவ்வுயிரைத் தானாக்கி நின்றருள்வன். அந்நிலையினைச் சொல்லால் சொல்லுவதெவ்வண்ணம்.

சொல்லறும் - மோனம் உண்டாம். பாழாம் - வேறுபாடு இன்றாம். விள்ளா - உண்டாகா. தன்னுருவு - சீவபோதம்.

## 2821. ஓதிய முத்தி யடைவே உயிர்பர

2821. ஓதிய முத்தி யடைவே உயிர்பர
பேதமி லச்சிவம் எய்துந் துரியமோடு
ஆதி சொரூபஞ் சொரூபத்த தாகவே
ஏதமி லாநிரு வாணம் பிறந்ததே.

சிறப்பித்துச் சொல்லப்படும் வீடாவது முறையாக ஆருயிரும், பேரருளும், பெரும்பொருளும் என்னும் செயலறலாகிய துரியத்தின்கண் எய்தும். ஆருயிர் - சீவன். பேரருள் - பரம். பெரும்பொருள் - சிவம். இவற்றை ஆருயிர், அருள், அருளோன் எனவுங் கூறுப. இம் மும்மை வேறுபாடுமின்றிச் செம்மை ஒருமையாய் நிற்குங்கால் ஆருயிரின் நீங்கா இயற்கை உண்மை தோன்றும். அஃது இயற்கை உண்மை அறிவின்ப வழிவினனாகிய சிவத்துடன் கூடுவதாகும். இந்நிலையே குற்றமில்லாத பேற்றுநிலையாகும். நிருவாணம் - பேறு. பேற்றிலெய்தும் குற்றம் வழிப்பேறாய் மீண்டும் பிறத்தல்; விழுப்பேறெய்தாமை.

அடைவே - முறையாக. நிருவாணம் - முத்தி.

## 2822. பற்றற் றவர்பற்றி நின்ற பரம்பொருள்

2822. பற்றற் றவர்பற்றி நின்ற பரம்பொருள்
கற்றற் றவர்கற்றுக் கருதிய கண்ணுதல்
சுற்றற் றவர்சுற்றி நின்றஎன் சோதியைப்
பெற்றுற் றவர்கள் பிதற்றொழிந் தாரன்றே.

பற்றற்றான் பற்றினைப் பற்றுவதே பற்றறும் வாயில்: அதனால் பற்றற்றவர் பற்றி மீளாவடிமையாய் நிலைத்துநிற்கும் நிலைக்களப் பொருள் சிவபெருமானாகிய பரம்பொருள் என்றனர். அவனே ஓதியுணர்ந் தடங்கிய ஓங்குயர் விழுச்சீர் நல்லார் வல்லவாக் கருதும் கண்ணுதலாவன். கண்ணுதல்: நுதற்கண்; நெற்றிக்கண். மெய்யடியார் திருக்கூட்டம் மிளிர்ந்து சூழ்ந்து சிவ ஒளியுடன் நிற்குமாறருளும் பேரறிவுப் பேரொளிப் பிழம்பும் அவனே. அவன் திருவடியை அருளால் பெற்றவர்கள் மாறுபாட்டுரையாகிய பிதற்றுதலை ஒழிந்தனார்.

கற்று அற்றவர் - கற்று அறிந்து அடங்கினவர். சுற்று - சுற்றம். பெற்று உற்றவர் - அடைந்து அனுபவிப்பவர். பிதற்று - பேசுதல்.

## 2823. சித்தஞ் சிவமாம் சிவஞானி சேர்விடம்

2823. சித்தஞ் சிவமாம் சிவஞானி சேர்விடம்
சத்தச் சிவாலயம் தொல்பாச நாசமாம்
அத்த மழையகம் அனந்த மேலிடும்
முத்தம் பெருகும் முழுப்பொரு ளாகுமே.

மறவா நினைவால் சிவநாட்டமே மிக்குடையார் சிவஞானியாவர். அவர் சேரும் திருவிடம் இயற்கை உண்மை அறிவுப் பெருங்கோவிலாகும். அத் திருக் கோவிலினைக் கேட்டாலும் கண்டாலும் நாட்டமுற்று வழிபட்டாலும் வாட்டமுறச் செய்யும் பழமலங்களெல்லாம் அழிந்தடங்கும். பேரூழிக்கால எல்லையில் மழைபோன்று உள்ள முழுவதும் திருவடிப் பேரின்பப் பெருவெள்ளம் மிகும். அளவிலா அழிவிலா உளமகிழ் பேரின்பம் முத்தம் போன்று பெருகும். அவ் வுயிரும் முழுப் பொருளாகிய சிவனாம் விழுப் பொருளைச் சார்ந்தமையால் முழுப் பொருளாம் விழுப்பொருளாகும். இந் நிலையினையே "சிவமாக்கி எனையாண்ட அத்தன்" எனச் செந்தமிழ்த் திருமறை முடிவு ஓதியருளிச் செப்பா நிற்கும். முத்தம் - முத்து.

## 2824. ஆணவ மூலத் தகார முதித்திடப்

2824. ஆணவ மூலத் தகார முதித்திடப்
பேணி யுகாரங் கலாதி பிறிவிக்கத்
தாணு மகாரஞ் சதாசிவ மாகவே
ஆணவ பாச மடர்தல்செய் யாவன்றே.

மூலாதாரத்தினிடத்து அகரந் தோன்றுகின்றது. அங்கு நின்றே ஆணவ மூலமும் தோன்றுகின்றது. ஆருயிர் அகர நிலையில் நிற்குங்கால் ஆணவம் அடங்கிவிடும். உகாரம் பேணி ஒன்றாம் கலாதியினைப் பிறிவித்திடும். மகரம் தாணுவாகக் காணப்படும் சதாசிவமாக நின்று எல்லாவற்றையும் ஒடுக்கி அருள் புரியும். மகரம் இனம்பற்றி மாயையின் மூலப்பகுதி யொடுக்கமாகக் கொள்க. இம் முறையால் ஆணவமாகிய கட்டு அடர்தல் செய்யாது.

## 2825. நெற்றி நடுவுள் நினைவெழு கண்டமும்

2825. நெற்றி நடுவுள் நினைவெழு கண்டமும்
உற்ற விதையமு மோதிய நாபிக்கீழ்ப்
பெற்ற துரியமும் பேசிய மூலத்தே
உற்ற அதீதம் ஒடுங்கும் உடனன்றே.

நெற்றியின் நடுவுள் வெளிப்படும் நினைவு உண்டாம். இதுவே நனவாகிய சாக்கிரமாகும். கண்டமாகிய கழுத்தின்கண் எழு நினைவு ஆகிய கனவுண்டாம். இது சொப்பனம் எனப்படும். பொருந்திய நெஞ்சத்தினிடத்து உறக்கம் எனப்படும் சுழுத்திநிலை உண்டாம். கொப்பூழின் கீழ்ப் பேருறக்கமாகிய துரியநிலை உண்டாகும். சொல்லப்படும் மூலத்திடத்து உயிர்ப்படங்குதலாகிய துரியாதீத நிலை உண்டாகும்.

# 17. மறைபொருட்கூற்று

17. மறைபொருட்கூற்று 2826. காயம் பலகை கவறைந்து கண்மூன்றாய்

2826. காயம் பலகை கவறைந்து கண்மூன்றாய்
ஆயம் பொருவதோர் ஐம்பத்தோ ரக்கரம்
ஏய பெருமா னிருந்து பொருகின்ற
மாயக் கவற்றின் மறைப்பறி யேனன்றே.

உடம்புடன் கூடிய ஆருயிர்களின் வாழ்க்கை ஒரு கவறாட்டம் போன்றது. கவறு - சூது. உடம்பு பலகையாகவும், ஐம்புலன்களும் கவறாடு கருவியாகவும், வலம் இடம் புருவநடு என்னும் மூன்றும் இடமாகவும், ஐம்பத்தோ ரெழுத்தும் சூதாடும் காய்கள் நிரப்பும் அறையாகவும் கொண்டு என்றும் ஆருயிருடன் பிரிப்பின்றி நின்று பொருந்தி அருள் செய்யும் சிவபெருமான் ஆருயிர்களைக் கையாளாக வைத்து கவறாடாநிற்கின்றான். இத்தகைய மாயக் கவற்றின்வழிச் செய்யும் அவன்றன் மறைப்பாற்றலின் பண்பை அறியேன் என்க. கண் மூன்றாய் என்பதற்கு நெஞ்சம் கண்டம் புருவமத்தி என்றலும் ஒன்று.

காயம் பலகை - உடம்பானது சூதாடு பலகை போன்றது. கவறு ஐந்து - ஐம்பொறிகளும் சூதாடு கருவிபோன்றது. கண்மூன்றா - வலம், இடம், புருவமத்தி ஆகிய மூன்றும் மூன்றிடங்களாக. ஆயம் - சூதாடு கருவியிலுள்ள அறை. மாயம் - வஞ்சகம்.

## 2827. தூறு படர்ந்து கிடந்தது தூநெறி

2827. தூறு படர்ந்து கிடந்தது தூநெறி
மாறிக் கிடக்கும் வகையறி வாரில்லை
மாறிக் கிடக்கும் வகையறி வாளர்க்கு
ஊறிக் கிடந்ததென் உள்ளன்பு தானன்றே.

காமம் வெகுளி மயக்கமென்று சொல்லப்படும் தடைகளாகிய சின்னஞ்சிறு செடிகள் முளைத்து உடம்பகத்துக் காணப்படுகின்றன. அருளால் அவற்றினின்றும் நீங்கித் தூய சிவ நன்னெறிக்கண் நிற்கும் வகையறிவாரில்லை. அங்ஙனம் நீங்கி நிற்கும் வகையறிந்து ஒழுகும் வாய்மையாளர்க்குச் சிவன் வெளிப்பட்டருள்வன். அவர்பால் என் உள்ளம் அன்பூறி ஆர்வம் பெருகிக்கிடந்தது என்க.

தூறு - சிறுசெடி (காமாதி). தூநெறி மாறி - நீங்கித் தூய்மையான நெறியில். ஊறி - சுரந்து.

## 2828. ஆறு தெருவில் அகப்பட்ட சந்தியிற்

2828. ஆறு தெருவில் அகப்பட்ட சந்தியிற்
சாறு படுவன நான்கு பனையுள
ஏறற் கரியதோர் ஏணியிட் டப்பனை
ஏறலுற் றேன்கடல் ஏழுங்கண் டேனன்றே.

உடம்பினகத்து ஆறு நிலைகள் உள்ளன. இவற்றை ஆறு ஆதாரங்கள் என்ப. அவை, மூலம், கொப்பூழ், மேல்வயிறு, நெஞ்சம், மிடறு, புருவநடு என்பன. இத்தகைய ஆறு தெருவில் அகப்பாட்டுச் சந்தி என்று சொல்லப்படும் மூலாதாரத்தில் தேன்போல் இனிமை தரும் சாறுமிக்க நான்கு பனைகள் உள்ளன. ஈண்டுப் பனையென்றது மூலாதாரத்தில் காணப்படும் நான்கிதழ்த் தாமரையை. புறக்காலால் ஏணி வைத்து எட்ட முடியாத வொன்றென்க. ஆனால் அகக்காலால் எட்ட முடியும். அகக்கால்: உயிர்ப்பு; பிராணவாயு. ஏணி என்பது சுழுமுனையாகிய நடுநாடி என்ப. அவ் வேணியினை அருளால் அமைத்து அப்பன் திருவடிக்கண் பொருந்தலுற்றேன். அதனால் எல்லையில் கடல் ஏழ்போல் காணப்படும் பிறவியேழும் நீங்கக் கண்டேன்.

ஆறுதெரு - ஆறு ஆதாரங்கள். அகப்பட்ட சந்தி - மூலாதாரம். சாறுபடுவன - இனிமை உண்டாவதான. நான்குபனை-நான்கு இதழ்களையுடைய பனைபோன்ற மலர். ஏணி - சுழுமுனை. கடலேழ் - எழுவகைப் பிறப்பு.

## 2829. வழுதலை வித்திடப் பாகன் முளைத்தது

2829. வழுதலை வித்திடப் பாகன் முளைத்தது
புழுதியைத் தோண்டினேன் பூசனி பூத்தது
தொழுதுகொண் டோடினார் தோட்டக் குடிகள்
முழுதும் பழுத்தது வாழைக் கனியே.

அருளால் வழுதலங் கத்தரிக்காயை விதைத்தேன். அஃதாவது அகத்தவமாகிய யோகப்பயிற்சியினை மேற்கொண்டேன். அவ் வித்தின்கண் விளைவாகப் பற்றறுதி என்று சொல்லப்படும் வைராக்கியம் வளர்ந்தது. இப் பற்றறுதியினைப் பாகல் என்று ஓதினர். தத்துவங்களாகிய மெய்யினை ஆராயத் தொடங்கினேன். ஈண்டுப் புழுதியைத் தோண்டினேன் என்பது தத்துவ ஆராய்ச்சி செய்தேன் என்பதாம். இவ் வாராய்வின் பயனாகப் பூசணியாகிய சிவம் பூத்தது. தோட்டக் குடிகளாகிய ஐவரும் தொண்ணூற்றறுவரும் அதனைக் கண்டு தொழுதுகொண்டோடினர். திருவடிப் பேறாகிய வாழைக்கனி முழுதும் பழுத்து விழுப்பயனாயது. வாழ்வைத் தருங்கனி வாழைக்கனி. நெடு வாழ்வைத்தரும் ஈடும் எடுப்புமில் பீடு சேர் திருவடிப்பேற்றினுக்கு வாழைக்கனியே ஒருபுடை யொப்பாம் என்க. வாழை மா பலா மூன்றும் முறையே அறம் பொருள் இன்பம் என்னும் மூன்றுங் குறிக்கும் குறிப்பாகும்.

வழுதலை வித்து-யோகப்பயிற்சி. பாகல்-வைராக்கியம். புழுதியைத் தோண்டினேன் - தத்துவ ஆராய்ச்சி செய்தேன். பூசணி பூத்தது - சிவம் வெளிப்பட்டது.

தோட்டக் குடிகள் - இந்திரியாதி விடயங்கள். பழுத்தது - கிடைத்தது. வாழைக்கனி - ஆன்மலாபம்.

## 2830. ஐயென்னும் வித்தினில் ஆனை விளைப்பதோர்

2830. ஐயென்னும் வித்தினில் ஆனை விளைப்பதோர்
செய்யுண்டு செய்யின் தெளிவறி வாரில்லை
மையணி கண்டன் மனம்பெறின் அந்நிலம்
பொய்யொன்று மின்றிப் பகளளி தாகுமே.

ஐம்பூதக் கூட்டரவால் அமைந்த இவ் வுடம்பாகிய வித்தினை விதைக்கும் செய் நடப்பாகிய மறைப்பாற்ற லென்க. அவ் வித்தினிடமாக விருந்து ஆனை யென்று சொல்லப்படும் ஆருயிர்த் தொழில் தோற்றம் உறுவதாயிற்று. அச் செய்யாகிய நடப்பாற்றலின் உண்மைத் தெளிவை அறிவாரில்லை. உண்மைத் தெளிவாவது ஆருயிர்கள் அவ் வித்தினிடத்துக் கொள்ளும் மயக்கம் நீங்கிச் சத்தாகிய சிவத்தினிடத்துக் கொள்ளும் முயக்கம் ஓங்கி வாழுமாறு செய்வதே அதன் தொழிலென்பது. அவ் வாற்றல் மையணி கண்டனின் வழிநிலையாகும். அந் நிலையினைக் குறிக்கொண்டு நாடுவதாகிய மனம் பெறுதல் வேண்டும். அதுவே தியானம் என்ப. ஈண்டுத் தெளிவென்பது உண்மை யுணர்வதாகிய தூய்மையின் மேற்று. அப்பொழுது அந் நடப்பாற்றலாகிய அந்நிலம் மெய்யாகவே ஆருயிர் புகத்தகும் உலையா நிலைசேர் சீரிடமாகும் புகுதலும் எளிதாகும்.

ஐயெனும் வித்து - ஐம்பூதங்களாகிய வித்து. ஆனை - சீவனை. செய் - திரோதாயி, திருவருட்சத்தி.

## 2831. பள்ளச்செய் ஒன்றுண்டு பாழ்ச்செய் இரண்டுள

2831. பள்ளச்செய் ஒன்றுண்டு பாழ்ச்செய் இரண்டுள
கள்ளச்செய் யங்கே கலந்து கிடந்தது
உள்ளச்செய் யங்கே உழவுசெய் வார்கட்கு
வெள்ளச்செய் யாகி விளைந்தது தானன்றே.

பள்ளச் செய் என்று சொல்லப்படும் செயலறலாகிய உறக்கநிலை ஒன்றுண்டு. அதன்மேல் பாழ்ச் செய்யாகிய இன்பமில்லாத கனவும் நனவும் இரண்டுண்டு. அவற்றூடு உயிர்க்குயிராய் யாண்டும் கரந்து நிற்கும் கள்ளச் செய்யாகிய சிவபெருமானும் அங்குக் கலந்து நிற்கின்றனன். இம் மூன்று நிலையினும் ஆருயிர்களின் மனமாகிய வயலின்கண் மெய்யாகிய தத்துவ ஆராய்ச்சி என்னும் உழவினைச் செய்தல்வேண்டும். அவ் வுழவு செய்தார்க்கு வெள்ளச் செய் என்று சொல்லப்படும். திருவருளின்ப விளை நிலம் விளைந்து கைகூடிற்று. வெள்ளச் செய் : அருள் வெள்ளம் - பேரின்பப் பெருவெள்ளம் பெருக்கெடுத்து உருக்கொடு நிலையும் நிலைக்களம்.

பள்ளச்செய் - சுழுத்தி. பாழ்ச்செய் இரண்டு-இன்பம் இல்லாத நனவு - கனவு. கள்ளச்செய் - கரந்திருக்கும் சிவம். உள்ளச் செய் - மனமாகிய வயல். உழவு-தத்துவ ஆராய்ச்சி. வெள்ளச்செய் - சிவானந்த வெள்ளம்.

## 2832. மூவணை யேரு முழுவது முக்காணி

2832. மூவணை யேரு முழுவது முக்காணி
தாமணி கோலித் தறியுறப் பாய்ந்திடும்
நாவணை கோலி நடுவிற் செறுவுழார்
காலணை கோலிக் களருழு வாரன்றே.

(.ப. இ.) இடப்பால்நாடி வலப்பால்நாடி நடுநாடி என்று சொல்லப்படுவன மூவணையாகும். அவற்றின்கண் பயிலப்படும் உயிர்ப்பு ஏராகும். அவ் ஏரினால் உழப்படும் நிலம் மூலாதாரமாகும் அம் மூலாதாரம் முக்கோண வடிவிற்று. அதனால் அதனை முக்காணி என்று ஓதினர். அவ் வுயிர்ப்பினை முறையாக நிறுத்தியமைத்தால் நடுநாடியாகிய தறியுறப் பாய்ந்திடும். தறி - வீணாத்தண்டு. நெற்றியமிழ்தினை வற்றா வூற்றினை நெறிப்பட வுண்ணுவார், நாவினை மேலோக்கி எழுப்பி உண்ணாக்கை யொட்டிச் சிறு தொளையினை அழுத்தி அடைப்பர். அம் முறையால் நாக்கை அணையாகச் செய்தென்றோதினர். அறுபகையாகிய செருக்குச் சினம் சிறுமை, இவறல், மாண்பிறந்தமானம், மாணா வுவகை என்னும் அறு பகையும் நடுதல் இல்லாத அகத்தவம் எனப்படும் யோக வயலைச் சிலர் பயிலுவதாகிய உழவினைச் செய்கின்றிலர். வயல் - செறு. ஈண்டு உயிர்ப்பினைச் செறுத்தலால் செறு வென்னும் பெயர் அமைவதாயிற்று. இங்ஙனம் நன்னெறிப்படாதார் பிறப்பு இறப்புக்களாகிய பிணிப்பாம் விலங்குகளைக் காலில் பிணித்துக்கொண்டு பயனில் களராம் பிறவி நிலத்தில் உழுவார் என்க. கால் என்பது வழியென்னும் பொருளுமுடையது. அதனால் மீண்டும்

**மீண்டும் பிறக்கும் முயற்சியில் பிணிக்கப்படுவர் என்பதும் ஒன்று.**

மூவணை ஏர் - முந்நாடிக்குரிய வாயு. முக்காணி - மூலாதாரத்துள்ள முக்கோணம். அணிகோலி - வாயுவை முறையாகக் கட்டி. தறி - வீணாத்தண்டு. நாவணை கோலி - நாவை அணையாகச் செய்து. நடுவிற்செறு - காமாதியாகிய களைகள் இல்லாத யோகமாகிய வயல். கால் அணைகோலி - காலில் விலங்கிட்டு, அதாவது பாசவயப் பட்டு. களர் உழுவார் - களர் நிலத்தை உழுவார், அதாவது பயனற்ற காரியம் செய்வார்.

## 2833. ஏற்றம் இரண்டுள ஏழு துரவுள

2833. ஏற்றம் இரண்டுள ஏழு துரவுள
மூத்தான் இறைக்க இளையான் படுத்தநீர்
பாத்தியிற் பாயாது பாழ்ப்பாய்ந்து போயிடிற்
கூத்தி வளர்த்ததோர் கோழிப்புள் ளாகுமே.

இடப்பால் நாடியாகிய இடைகலையும், வலப்பால் நாடியாகிய பிங்கலையும் ஆகிய இரண்டும் ஏற்றம் என ஓதப்பட்டன. அதனால் ஏற்றம் இரண்டுள என்றனர். நீர்நிலை யொத்த மூல முதலாய நிலைக்களம் ஆறும், ஆயிரவிதழ்த்தாமரையாகிய உச்சித்துளை ஒன்றும் ஆகிய ஏழும் துரவுகள் எனப்பட்டன. மூத்தான் என்று சொல்லப்படும் இடப்பால் நாடியாகிய சந்திரகலை வாயிலாக விடுத்தலைச் செய்யும் மூச்சு இறைத்த நீர் எனப்பட்டது. இளையான் என்று சொல்லப்படும் வலப்பால் நாடியாகிய பிங்கலை வாயிலாக எடுத்தலைச் செய்யும் மூச்சு படுத்த நீர் எனப்பட்டது அவ் வுயிர்ப்பு நடுநாடியின்கண் தடுத்தலைச் செய்து நிறுத்துதல் வேண்டும். அங்ஙனம் செய்யும் வழிவகைகளை அறியாது மீட்டும் விடுத்தலையே புரிவாராயின் அது வீணாகப் பாய்ந்து போகும். அங்ஙனம் போனால் அச் செயல் 'கூத்தி வளர்த்ததோர் கோழிப் புள்ளாமே' என்னும் வாய்மைக்கு ஒப்பாகும். கூத்தியாவாள் விலைமகள். கோழிப்புள் என்பது அவளீன்ற செழுமை வாய்ந்த மக்கள் என்பதாம். அம் மக்கள் குலமக்கள் போன்று தந்தையார் இன்னார் என வரை செய்ய முடியாமையான் தமக்கும் வீட்டிற்கும் நாட்டிற்கும் பயன்படும் செம்மையராகார் என்பது துணிபு. அம் முறையான் ஈண்டுக் கொள்ளப்படுதலுமாகும். மேலும்,

ஆடவரால் வெளிப்படுத்தப்படும் வித்து ஆருயிர் வித்து. அது விலை வரம்பில்லா அருமுதலாகும் அறியாமை மேலிட்டால் சில்லோர் நெல் வித்தினும் புல்லிதாக அவ் வுயிர்வித்தினை எண்ணிப் புறக்கணிக்கின்றனர். காலமும் இடமும் நோக்காது, பருவமும் மனமும் பாராது, விளைவின் விழுப்பயன் தூக்காது மருவி வீணாக்குகின்றனர். ஒருகால் அப் பொருள் விளைந்து வளர்க்கப்பட்டு வாழினும் பயன்பெறாது என்பது இருவகை வழக்கினும் பயிலப்படுவதொன்றாகும். அது கூத்திபிள்ளை ஏத்துங்கொள்ளிக்காகா என்பதாம். வித்து - விந்து.

ஏற்றம் இரண்டு - இடைகலை, பிங்கலை. ஏழுதுரவு - ஆதாரமாறும் - அமுது ஊறும் சகசிர அறை. மூத்தான்- சந்திரகலை. இளையான் - சூரியகலை. படுத்த - பாய்ச்சிய. பாத்தி -- நாடிகள். பாழ்ப் பாய்ந்து - வீணாக.

# 2834. பட்டிப் பசுக்கள் இருபத்து நாலுள

2834. பட்டிப் பசுக்கள் இருபத்து நாலுள
குட்டிப் பசுக்களோ ரேழுள ஐந்துள
குட்டிப் பசுக்கள் குடப்பால் சொரியினும்
பட்டிப் பசுவே பனவற்கு வாய்த்ததே.

ஆருயிர்கள் சீர்பெற்றுய்ய உடன்மெய் இருபத்து நான்கும் முழுமுதலால் படைத்தளிக்கப்பட்டன. அவற்றை ஆன்மதத்துவம் என்ப. பட்டிப் பசுக்கள் இருபத்து நாலுள என்பதும் அவையே. உணர்வு மெய்யாகிய ஏழும் குட்டிப் பசுக்கள் என்று கூறப்பட்டன. மேலும் உணர்த்து மெய்யாகிய ஐந்தும் குட்டிப் பசுக்கள் என்றே கூறப்படும். உணர்வுமெய் - வித்தியா தத்துவம். உணர்த்துமெய்-சிவ தத்துவம். குட்டிப் பசுக்கள் அளவில்லாத பால் சொரியினும் என்பார் குடப் பால் சொரியினும் என்றனர். இவ் வொப்பால் உணர்வுமெய் உணர்த்து மெய்கள் வாயிலாக வரும் அகமுக இன்பம் அளவில்லனவாகும். அங்ஙன மிருப்பினும் ஆருயிர்கட்கு அவற்றின்கண் நாட்டமின்று. புறமுக நாட்டமே மிக்குப் பொலிகின்றது. அக் குறிப்புத் தோன்றப் 'பட்டிப் பசுவே பனவற்கு வாய்த்த 'தென்றனர். பனவன் - அறிவுடை ஆருயிர்.

இருபத்து நாலு-ஆன்மதத்துவங்கள் 24. ஏழு-வித்தியா தத்துவங்கள் 7, ஐந்து-சிவ தத்துவங்கள் 5. பனவற்கு-ஆன்மாவுக்கு.

## 2835. ஈற்றுப் பசுக்கள் இருபத்து நாலுள

2835. ஈற்றுப் பசுக்கள் இருபத்து நாலுள
ஊற்றுப் பசுக்கள் ஒருகுடம் பால்போதும்
காற்றுப் பசுக்கள் கறந்துண்ணுங் காலத்து
மாற்றுப் பசுக்கள் வரவறி யோமன்றே.

ஆருயிர்கட்குப் புறமுகப் புலன் இன்பங் கொள்ளுதற்கு வாயிலாகிய உடன்மெய் இருபத்து நான்கும் ஈற்றுப் பசுக்கள் எனப்பட்டன. வற்றா ஊற்றாக வளமிகத் தரும் அறிவமிழ்திற்கு வாயிலாக வுள்ள உணர்வுமெய் ஏழும் ஊற்றுப் பசுக்கள் எனப்பட்டன. அவை தரும் புலன் அளவிடற்கரிய விழுப்பம் வாய்ந்தது. புலன் - அறிவு. அதனால் ஒருகுடம் பால் போதும் என ஓதினர். காற்றுப் பசுக்கள் என்பது இடப்பால் வலப்பால் நாடிகள் வாயிலாகப் பெறும் உயிர்ப்புக்களாகும். உயிர்ப்பு மூச்செனவும், காலெனவும் ஓதப்படும். கால் - காற்று எனவும் கூறப்படும். அதனால் காற்றுப் பசுக்கள் என்றனர். எனவே அகத்தவ வாயிலாகச் செறிவினை எய்தி ஆருயிர் இன்புறும். அங்ஙனம் அக இன்பத்தைத் துய்த்துக் கொண்டிருக்குங்கால், ஐம்புல இன்பங்கள் வந்து தொடரா. அக் குறிப்பு, 'மாற்றுப் பசுக்கள் வரவறியோமே' என்றோதினர்.

ஊற்றுப் பசுக்கள் - வித்தியா தத்துவங்கள். காற்றுப் பசுக்கள். பத்துவித வாயுக்கள். மாற்றுப் பசுக்கள் - புலன்கள்.

# 2836. தட்டான் அகத்தில் தலையான மச்சின்மேல்

2836. தட்டான் அகத்தில் தலையான மச்சின்மேல்
மொட்டா யெழுந்தது செம்பால் மலர்ந்தது
வட்டம் படவேண்டி வாய்மை மடித்திட்டுத்
தட்டான் அதனைத் தகைந்துகொண் டானன்றே.

ஆருயிர் தட்டான் என்று அழைக்கப்படும். தட்டான் - சார்பாய்ப் பொருந்துபவன். தட்டல் - பொருந்துதல். ஆருயிர் அகத்தில் தோன்றுவதற்கு நிலைக்களமாகவுள்ளது உடல். அவ் வுடலின்கண் மச்சுப் போன்று உயர்ந்த இடத்திலுள்ளது உச்சித்துளையாகும். அதுவே முதன்மையான இடமாகும். அவ் விடத்து அரும்புபோன்று பொருந்தியிருப்பது அமிழ்தூற்றத் தோற்றமாகும். பின் அது விளைந்து செவ்விய அமிழ்தப்பாலாய்ச் செறிந்தது. அதுவே ஆயிர விதழ்த் தாமரையாகும். வட்டமாகிய ஓங்காரம் உள்ளடங்க வாய்மையாகிய திருவைந்தெழுத்துத் தன்னகத்ததாக அருளால் அவ் வுயிர் அமைத்துக்கொண்டது. தகைந்து கொண்டான் - தனதாக்கிக் கொண்டான்.

தட்டான் - சீவன். அகத்தில் - உடம்பின்கண். மச்சின் மேல் - கபாலத்தில். செம்பால் - செம்மைத்தன்மை. வட்டம் - பிரணவம். வாய்மை - அஞ்செழுத்து. அதனை - அந்த அமுதை. தகைந்து - தடுத்துத் தன்னுடையதாக ஆக்கி.

## 2837. அரிக்கின்ற நாற்றங்கால் அல்லற் கழனி

2837. அரிக்கின்ற நாற்றங்கால் அல்லற் கழனி
திரிக்கின்ற வொட்டஞ் சிக்கெனக் கட்டி
வரிக்கின்ற நல்லான் கறவையைப் பூட்டில்
விரிக்கின்ற வெள்ளரி வித்துவித் தாமே.

சூல அரிக்கட்டுக்கள் நிறைந்துள்ள நாற்றங்காலாகிய துன்பவயல் உடலாகும். அவ் வுடலின்கண் உயிர்ப்பு விடுக்கும்போது பன்னிரண்டு விரல் அளவு வெளியிற் செல்லும். அதனை எடுத்தலாகிய பூரகம் செய்யுங்கால் எட்டு விரல்தான் உள்ளே தடுத்தலாகிய கும்பகத்தின்கண் அடங்குகின்றது. எஞ்சிய நான்குவிரல் உயிர்ப்பு வெளியே நின்று விடுகின்றது. அங்ஙனம் அவற்றை வெளியில் நிறுத்திவிடாமல் உள்ளே இழுத்து நிறுத்தி விடுதல் வேண்டும். அதுவே சிக்கெனப் பிடித்தலென்ப. அந் நான்கு விரல் உயிர்ப்பும் உள்ளே தங்கச் செய்யும் மனம் நல்லான் கறவை எனப்படும். அம் மனத்தினை உயிர்ப்புடன் பூட்டுதல் வேண்டும். அங்ஙனம் பூட்டினால் விரிந்து விளைந்து வெண்மையாகக் காணப்படும் உயிர்வித்து வீடுபேற்றின் வித்தாய் அருள் நினைவாய் அழியின்பாய்த் திகழும். வெள்ளரி - வெண்மை.

அரிக்கின்ற - தானிய அரிக்கட்டுக்கள் உண்டாதற்கு உரிய. நாற்றங்கால் அல்லற்கழனி - நாற்றங்கால் ஆகிய வயல்போலும் துன்பம் நிறைந்த உடல். திரிக்கின்ற ஓட்டம் - வெளியில் திரியும் நாலு விரல் அளவுள்ள சுவாசம் (இது பன்னிரண்டங்குலமுள்ள சுவாசம் பூரகம்

செய்யும்போது எண் விரல்தான் திரும்பி வருகின்றது. நால் விரல் வெளியே நின்றுவிடுகிறது என்பதைக் குறிக்கின்றது.) சிக்கெனக் கட்டி - அந்த நான்கு விரல் அளவு உள்ள சுவாசத்தையும் கூடிக் கொள்ளும்படி செய்து. வரிக்கின்ற - கொள்ளத்தக்க. நல்லான் கறவை - மனம். பூட்டில் - பிராணவாயுவாகிய சுவாசத்துடன் கூட்டினால். வெள்ளரி வித்து - சுக்கிலம். வித்தாமே - முத்திக்கு வித்தாமே.

# 2838. இடாக்கொண்டு தூவி எருவிட்டு வித்திக்

2838. இடாக்கொண்டு தூவி எருவிட்டு வித்திக்
கிடாக்கொண்டு பூட்டிக் கிளறி முளையை
மிடாக்கொண்டு சோறட்டு மெள்ள விழுங்கார்
கிடாக்கொண்டு செந்நெல் அறுக்கின்ற வாறே.

தாளாண்மையை முன்னிட்டுக்கொண்டு தூவுதலாகிய மனத்தைப் பண்படுத்தி, திருவடிநினைப்பாகிய தூய பயிற்சியை எருவாக இட்டு, மேன்மையுணர்வாம் மோனமாகிய விதையினை விதைத்து, முயற்சியாகிய இடையறாத் தொண்டினைக் கிடாவாகப் பூட்டி, திருவடிப் பேரின்பத்தினை வெளிப்படுமாறு கிளறி, மோனத்தினின்றும் தோன்றும் தேனனைய திருவடியுணர்வின்பத்தினை விசுத்தி எனப்படும் மிடற்றின்கண் திருவருள் நினைவாம் மிடாக்கொண்டு அமைத்தல்வேண்டும். அதன்கண் திருவடிப்பேரின்ப அமிழ்தாம் சோற்றினைச் சமைத்துப் 'பப்பற வீட்டிருந்துணர்தலாகிய' மெல்ல விழுங்குதலைச் செய்யார். விளை வறுத்துக்கொண்டுவர வேண்டுவதாய முயற்சியுடன் சென்று விளைவு ஏதும் இன்மையால் அவர் அறுக்கின்றது ஏதும் இன்றென்க.

இடர்கொண்டு - வருந்தி முயன்று. தூவி - மனதைப் பண்செய்து. எருவிட்டு - சுத்தவாதனையாகிய எருவினை இட்டு. வித்தி - மோனமாம் வித்தைப் பதித்து. கிடர்க்கொண்டு பூட்டி - முயற்சியினால். கிளறி - வெளிப்படச்செய்து. முளையை மவுனத்தினின்றும்

முளைக்கும் ஞானத்தை. மிடர்கொண்டு - விசுத்தி ஆதாரத்திலுள்ள ஈசன் அருளினால். சோறட்டு - அமுதம் வரச்செய்து. அடர்க்கொண்டு - துன்பம் எய்தி. செந்நெல் - சிவானுபவம்.

# 2839. விளைந்து கிடந்தது மேலைக்கு வித்தது

2839. விளைந்து கிடந்தது மேலைக்கு வித்தது
விளைந்து கிடந்தது மேலைக்குக் காதம்
விளைந்து விளைந்து விளைந்துகொள் வார்க்கு
விளைந்து கிடந்தது மேவுமுக் காதே.

திருவடிப் பேற்றிற்கு வேண்டும் நன்னெறிநான்மைத் தவமுயற்சி விளைந்துகிடந்தது. அதுவே வீடுபேற்றிற்கு வித்தாகும். அமிழ்த நிறைவாகிய அமுதக்கேணி காதம் எனப்படும். அதுவும் மேலைக்கு வேண்டும் திருவடிநினைவாம் அமுதம் விளைந்துகிடந்தது. அவ்விளைவினை நனிமிகு விழைவுடன் கொள்வார்க்கு உடம்பகத்துக் காணப்படும் ஞாயிறு திங்கள் தீ என்னும் முக்காதமாகிய மூன்று மண்டலங்களிலும் விளைந்துகிடந்ததென்க. நன்னெறிநான்மை: (2615) சீலம், நோன்பு, செறிவு, அறிவு. காதம் என்பது செய்யுட்டிரிபால் காதெனக் கடை குறைந்து நின்றது.

மேலைக்கு - மோட்சத்துக்கு. காதம் - அமுத கேணி. விளைந்து என்னும் அடுக்கு அளவின்மையைக் குறித்தது. முக்காதம் - மூன்று மண்டலம். சோமன் - சூரியன் அக்கினி.

## 2840. களருழு வார்கள் கருத்தை யறியோங்

2840. களருழு வார்கள் கருத்தை யறியோங்
களருழு வார்கள் கருதலு மில்லை
களருழு வார்கள் களரின் முளைத்த
வளரிள வஞ்சியின் மாய்தலு மாமே.

களராகிய உவர்நிலத்தை உழுவார்கள் என்ன எண்ணத்துடன் உழுகின்றார்கள் என்பதை யாம் அறிவதற்கில்லை. அங்ஙனம் உழுவார் என்ன குறிக்கொண்டு உழுகின்றார் என்பதும் தெரியவில்லை. அதுபோல் தவமுயற்சியின்றி மீண்டும் பிறப்பதற்கே ஆளாகி இறக்கின்றார்கள். இவர்தம் செயல் வீண்செயலாகின்றது. அதற்கு ஒப்புக்களரின் முளைத்த வளருந் தகுதிவாய்ந்த இளவஞ்சிக் கொடியானது சார்ந்த நிலத்தின் புன்மையால் பட்டுமாய்வதாகும்.

வஞ்சி - வஞ்சிக்கொடி. மாய்தல் - கேடு அடைதல்.

## 2841. சுவப்பிடு கொள்ளாக் குறுநரிக் கொட்டகத்து

2841. சுவப்பிடு கொள்ளாக் குறுநரிக் கொட்டகத்து
ஆப்பிடு பாசத்தை அங்கியுள் வைத்திட்டு
நாட்பட நின்று நலம்புகுந் தாயிழை
ஏற்பட இல்லத் தனிதிருந் தானன்றே.

மிகவும் நுண்மைவாய்ந்த அசைவில் கொட்டகமாகிய நெஞ்சத்திடத்து, திருவைந்தெழுத்தால் செய்யப்படும் தண்சுடர்த் தழலினுள் ஆருயிரைக் கட்டுறுத்தும் ஆப்பினை வைத்திடுதல்வேண்டும். திருவருள் பிறைபோன்று ஆருயிர்களுடன் நாட்படநின்று நிலைபெற்று நலம்புரிந்து அருள் வீழ்ச்சியாகிய சத்திநிபாதமும் எய்தும். எய்தவே திருவடிப்பேரின்பப் பேரில்லத்தின்கண் அவ்வுயிர் இனிது வீற்றிருந்து இன்புறும்.

குறுநரிக் கொட்டகம் - அணு அளவு ஆய மனம் இருக்கும் உடல். ஆப்பிடு - கட்டப்பட்ட. அங்கியுள் - சிவாக்கினியில் ஆயிழை ஏற்பட - சத்தி பதிய.

## 2842. மலைமேல் மழைபெய்ய மான்கன்று துள்ளக்

2842. மலைமேல் மழைபெய்ய மான்கன்று துள்ளக்
குலைமேல் இருந்த கொழுங்கனி வீழ
உலைமேல் இருந்த உறுப்பெனக் கொல்லன்
முலைமேல் அமிர்தம் பொழியவைத் தானே.

மலையாகிய புருவநடுவின்மேல் மழையாகிய உச்சித்துளை யமிழ்து இடையறாது ஒழுகுகின்றது. மான்கன்றாகிய ஆருயிர் அமிழ்த நுகர்வால் சிவப்பேரின்பந் திளைத்துத் துள்ளுகின்றது. குலையாகிய கரையின்மேலிருந்த உணர்வுக்கு உணர்வாம் கொழுங்கனி ஆருயிரின் மேல் விழுகின்றது. அவ்வுயிர் அதனை யுண்டு மகிழ்கின்றது. கனி: திருவைந்தெழுத்து; (2922, 2561) கொப்பூழின்கண் திருவைந்தெழுத்தால் செய்யப்படும் வேள்விக்குழி உலை என்று ஓதப்பட்டது. அவ் வேள்விக்கு உறுப்பாகச் சிறந்துநிற்கும் கொல்லன் சிவபெருமானாவன். அவன் திருவருளாற்றலாம் உலக அன்னையின் முலையினின்றும் வழிந்தொழுகும் மேலாகிய திருவடியுணர்வென்னும் அமிழ்தினை இடையறாது பொழியவைத்தருளினன்.

மலை - புருவமத்தி. மழை - அமுத தாரை. மான் கன்று - சீவன். குலைமேல் - அம் மலையிலுள்ள மாமரக்கொத்து ஆகிய அறிவில் இருந்து. கொழுங்கனி - ஆன்ம அனுபவம். வீழ - உண்டாக. உலை - தவம். கொல்லன் - சிவன். முலைமேல் அமிர்தம் பொழிய - சத்தியபதிய.

## 2843. பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு

2843. பார்ப்பான் அகத்திலே பாற்பசு ஐந்துண்டு
மேய்ப்பாரும் இன்றி வெறித்துத் திரிவன
மேய்ப்பாரும் உண்டாய் வெறியும் அடங்கினாற்
பார்ப்பான் பசுஐந்தும் பாலாச் சொரியுமே.

பார்ப்பானாகிய ஆருயிர்களின் அகமாகிய உடம்பின்கண் பால்தருந் துணையாம் பசுக்கள் ஐந்துள்ளன. அவை அறிபுலனாம் மெய், வாய், கண், மூக்கு, செவி என்ப. அப் பசுக்களை மேய்த்தருள்பவன் சிவன். அச் சிவபெருமானை ஆருயிர்கள் திருவைந்தெழுத்தாகிய தனித் தமிழ்ச் சிறப்பு மறையான (2460) திருவைந்தெழுத்தினை இடையறாது எண்ணுதல் வேண்டும். அங்ஙனம் எண்ணினால் அவன் திருவருள் அப் பசுக்களை மேய்க்கும். உயிர்கள் அச் சிவபெருமானை எண்ணாவிட்டால் அவன் மேய்க்காதுவிட்டு விடுகின்றனன். மேய்த்தல் - அடக்குதல். மேய்ப்பாரின்மையாலே அப் பசுக்கள் வெறித்துத் திரிகின்றன. வெறித்துத் திரிவன என்பது உலகியற் புலன்களில் ஆருயிர்களை ஈர்த்துச் செல்வன என்பதாம். அப் பசுக்களை மேய்ப்பானாகிய சிவ பெருமான் வெளிப்பட்டால் அப் பசுக்களுக்கு வெறியடங்கும். வெறி யடங்கினால் அப் பசுக்கள் அவ் வுயிர் சிவப்புலனை நுகருமாறு துணை நிற்கும். அப் பசுக்கள் பாலாகச் சொரியுமென்பது பாலை முகந்து வாக்கும் வெண்பொற்கரண்டியே பாலைச் சொரிகின்ற தென்பதனை யொக்கும். அப் புலன்கள் திருவடியின்பத்தினை நுகரத் துணைநிற்கும். துணைநிற்பதால் பாலுடன் விரவிநிற்கும்

கரண்டி பால்வண்ணமாவது போன்று அப்புலன்களும் சிவவண்ணமாகும். இதுவே பசு கரணங்கள் பதிகரணங்களாகத் திரியுமென்பதாகும்.

பார்ப்பான் அகம் - பிரமனால் படைக்கப்பட்ட சரீரம். பாற்பசு ஐந்து - ஐம்பொறிகள். பால் - ஆனந்தம்.

## 2844. ஆமாக்கள் ஐந்தும் அரியேறு முப்பதுந்

2844. ஆமாக்கள் ஐந்தும் அரியேறு முப்பதுந்
தேமா இரண்டொடு திப்பிலி யொன்பதுந்
தாமாக் குரங்கொளிற் றம்மனத் துள்ளன
மூவாக் கடாவிடின் மூட்டுகின் றாரன்றே.

உயிர்க்காற்று, மலக்காற்று, ஒலிக்காற்று, நிரவுகாற்று, தொழிற்காற்று ஆகிய ஐந்தும் ஆமாக்களையொக்கும். ஆமா - காட்டுப்பசு, அறிதற்கருவியாகிய செவி, மெய், நோக்கு, நாக்கு, மூக்கு என்னும் ஐந்தும், செய்தற்கருவியாகிய, வாய், கால், கை, எருவாய், கருவாய் என்னும் ஐந்தும்; எண்ணம், எழுச்சி, இறப்பு என்னும் மூன்றம் ஆகிய பதின்மூன்றும் அரியேறு ஒக்கும். தேமா என்பது தே + மா எனப் பிரிந்து முறையே இனிப்பும் புளிப்பும் எனவும் பொருள்தரும். இனிப்பு, இன்பத்தினையும், புளிப்பு, துன்பத்தினையும் குறிக்கும் குறிப்பாகும். அவ் விரண்டனையும் திருவடியுணர்வால் ஒப்பக் கருதுதல் இருவினையொப்பாகும். வாய் பூசுதலும் கால் கழுவுதலும் மணத்தால் நேர்மாறானவையாகும். எனினும் ஒப்பக்கருதிச் செய்யும் கடமைச் செயலாவதன்றிப் பிறிதுண்டோ? அம்மட்டோ, இரண்டனையும் கழுவியகற்றுவதன்றி வேறென்செய்குவம். இரண்டனையும் வழுவென்று ஒப்பக்கொள்ளாது முரண்படுவாருண்டோ? உயிர்வாழ வேண்டுமென்னும் ஒருநோக்கத்தால் இரண்டையும் இயற்றிவருகின்றனம். அதுபோல் திருவடி சேரவேண்டுமென்னும் ஒருபெரு நோக்கத்தால் 'சித்தம்

சிவனொடும் ஆட ஆட....பிறவி பிறரொடும் ஆட ஆட' நிற்கும் நல்லார் உடலூழாய்க் கொண்டு இருவினையொப்பு எய்துவர் திப்பிலி திப்பி-கோது. இலி - இல்லாதது. எனவே கோதற்றது. குற்றமற்றது என்றாகும். சுக்கு மிளகு திப்பிலி மூன்றும் முறையே வாதம், பித்தம், கோழை மூன்றற்கும் மாற்று மருந்தாகும். இம் மூன்றனுள் கோழையே மிகக் கொடுமை வாய்ந்தது. அதுவே இறப்பினைத் தருவது. அதனை நீக்குவது திப்பிலி. இவ்வொப்பையொத்த பண்புகள் வருமாறு: நினைத்தல், கற்றல், நெடும் புகழ் உரைத்தல், தொண்டுபுரிதல், மலர்தூவிப் போற்றல், நட்டம், வணங்கல், நாடியின்புறல், முனைப்பறல் என்னும் ஒன்பதும் அரும்பெரும் பண்புகளாகும். இவையே திப்பிலி என்ப. இவை நம்மனத்து நினைத்து எல்லைப்பட்டு நம்வயப்படுதல்வேண்டும். அப்பொழுது செருக்கு முதலிய அறுபகையும் அகன்று அறும். என்றும் கெடாத பற்றறுதி என்னும் வைராக்கியம் கடா எனப்பட்டது. விடின் - அதனைக் கைவிட்டால் அறுபகையும் மூளச் செய்கின்றவராவர்.

ஆமாக்கள் ஐந்து-பஞ்சப் பிராணன். அஃதாவது அபானன், உதானன், சமானன், பிராணன், வியானன். அரியேறு - ஆண்சிங்கத்தின் தன்மை வாய்ந்த முப்பது-மூன்று+பத்து. ie. கன்மேந்திரியம் 5, ஞானேந்திரியம் 5 ஆக 10. புத்தி, சித்தம், அகங்காரம் 3. தேமா இரண்டு - சுகம், துக்கம். திப்பிலி ஒன்பது- நினைத்தல், படித்தல், புகழ்தல், தொண்டு செய்தல், அருச்சனை, நட்டல், வந்தித்தல், பார்த்து ஆனந்தித்தல், தற்போதம் இழத்தல் ஆக 9. தாமா - தமக்கு உரியனவாக குரங்கொளின்-வசப்படுமாயின்.

மனத்துள்ளன - மனத்துள்ள காமக் குரோத ஆதிகள். மூவா-வளர்ச்சி அடையா. கடாவிடின் - வைராக்கியம் வளர்ச்சி அடைதலின். மூட்டுகின்றார் - காமாதிகளைக் கொடுக்கின்றார்.

## 2845. எழுதாத புத்தகத் தேட்டின் பொருளைத்

2845. எழுதாத புத்தகத் தேட்டின் பொருளைத்
தெருளத கன்னி தெளிந்திருந்த தோத
மலராக பூவின் மணத்தின் மதுவைப்
பிறவாத வண்டு மணமுண்ட வாறே.

அருளோன் ஆகிய சதாசிவநாயனார் செவ்வி வாய்ந்த நல்லார் உள்ளத்து வெளிப்பட்டு நின்று நெறி நூலாகிய மறையினையும், துறை நூலாகிய முறையினையும் உணர்வு அளவான் எழுப்பியருள்வன், பின்னர் அந்நல்லார் நூல்வழிவாக ஆக்கியருள்வர். அதனால் மறைகள் எழுதாக்கிளவி என்றழைக்கப்படுகின்றன. அவ்வெழுதாத உள்ளுணர் புத்தக ஏட்டின் (1043) பொருளைத் திருவருளின் அறிவாற்றற் பெருந்திரு தெளிந்திருந்து ஓதினள். அவள் தானே தெளிந்து கொண்டது அன்றி ஒருவர் தேளிவிக்கத் தெளிந்தாளல்லள். பிறப்பு இறப்பு இல்லாத பெருமானென்பார் மலராத பூ என்றனர். மலர்தல் என்னும் சொல்லே முன் மலராமையையும், பின் வாடுதலையும் குறிக்கும். மேலும் மலர்தல் என்பது துணைக் காரணங்கள் கூடிய வழிச் செயற்கையான் மலர்வது என்றாகும். ஆகவே இயற்கை இறைவன் என்பதனைக் குறிப்பதற்கு இயற்கைப் பூவே குறித்தல்வேண்டும். அதனால் செயற்கையான் மலராத மலர் என்றனர். அளவிடப்படாத அம் மலராகிய இறைவன் திருவடிக்கண் உள்ள எல்லையில்லாத நல்ல மணமாகிய தேனைத் திருவருளா லுண்ணும் தொன்மைக்கணுள்ள

ஆருயிர் பிறவாத வண்டு என உருவகிக்கப்பட்டது. அவ் வண்டு திருவழிப் பெருந்தேன். இன்பத்தினை உணர்விலழுந்தி ஒப்பில் இன்பம் எய்துகின்றது.

எழுதாத புத்தகத்து எட்டின் பொருளை - சதாசிவ நாயனாரைத் தவிர வேறு எவராலும் எழுதப்படாத புத்தகத்தால் (மயிலிறகால்) தாழை மடலில் (ஏடு) வர்ணத்தைக் குழைத்து எழுதப்பட்ட தமிழ் வேதப்பொருளை தெருளாத - இருதுவென்பதே இல்லாத கன்னி - மனோன்மணி (மனோன்மனி கையில்தான் வேதபுத்தகம் உள்ளது என்பதை, "ஏடங்கை நங்கை" என்ற திருமந்திரப் பாட்டாலும் அறிக). மலராத பூ - சிவம். பிறவாத வண்டு - பிறப்பற்ற சீவன். மணம் - சிவானந்தம்.

## 2846. போகின்ற பொய்யும் புகுகின்ற பொய்வித்துங்

2846. போகின்ற பொய்யும் புகுகின்ற பொய்வித்துங்
கூகின்ற நாவலின் கூழைத் தருங்கனி
ஆகின்ற பைங்கூழ் அவையுண்ணும் ஐவரும்
வேகின்ற வரை விருத்திபெற் றாரன்றே.

போகின்ற பொய்யாகிய விடுத்தல் மூச்சும், புகுகின்ற பொய்யாகிய எடுத்தல் மூச்சும், ஓவாது பயிலப்படுதலால் வீணாகக்கழியும் நால்விரல் மூச்சு கூகின்ற வித்தெனப்படும். கூகின்ற-அழைக்கின்ற வெளியிற் செல்லும் உயிர்ப்பினை உள்ளிழுத்தலால் அழைக்கின்ற என ஓதப்பட்டது. வித்து நிலையாகநிற்பது. தடுத்தல் மூச்சினைக் கும்பகம் என்ப. அம்முறை உயிர்ப்புப் பயிற்சியான் நாவலனைய உடம்பகத்து இருவினைப் பயனாகிய பைங்கூழை ஆருயிர் உண்ணும். ஐவராகிய அறிதற்கருவி ஐந்தும் அழியும் தன்மைத்தாகிய இவ்வுடம்பினின்றும் நுகர்வு பெற்றார் என்க. விருத்தி - ஆக்கம்; நுகர்வு.

போகின்ற பொய் - இரேசக வாயு. புகுகின்ற பொய்வித்து - பூரக வாயு. கூகின்ற (பொய்) - கூடுகின்ற வாயு, அஃதாவது நான்கு விரற்கடையுள்ள வாயு. நாவலின் கூழை - சரீரம். பைங்கூழ் - இரு வினைப்பயன். ஐவர் - ஞானேந்திரியங்கள். வேகின்ற கூரை - சரீரம்.

# 2847. மூங்கின் முளையில் எழுந்ததோர் வேம்புண்டு

2847. மூங்கின் முளையில் எழுந்ததோர் வேம்புண்டு
வேம்பினிற் சார்ந்து கிடந்த பனையிலோர்
பாம்புண்டு பாம்பைத் துரத்தித்தின் பாரின்றி
வேம்பு கிடந்து வெடிக்கின்ற வாறன்றே.

மூங்கில் முளையாகிய மனத்தின்கண் திருவருளால் ஆருயிர்களை உயிர்விக்கவேண்டி எழுந்ததோர் வேம்பாகிய சிவன் உண்டு. சிவனார் வேம்பென்னும் மருந்தொன்றுண்டு. அது பூண்டு வகையைச் சார்ந்தது. அச் சிவனார் வேம்பினைச் சார்ந்துகிடந்தது. ஒப்பில்லாத பனையொன்று. பனையென்பது கற்பகத்தருவாகும். பனையென்பது நடப்பாகிய மறைப்பாற்றலாகும். அந்நடப்பாற்றலாற் செலுத்தப்படுவது அறியாமையாகிய பாம்பென்ப. அப் பாம்பாகிய அறியாமையைத் திருவருட்டுணையால் துரத்தித் தின்பா ரரியராகின்றனர். துரத்தித் தின்றல் - நீக்குதல். அருளால் அறியாமையை நீக்குவாரின்மையால் சிவம் என்னும் வேம்பு கூடுதலின்றிப் பிரிந்துகிடக்கின்றது. வெடிக்கின்றது - பிரிகின்றது. அறியாமையாகிய ஆணவம் பாம்பாகிய மாயையின் வழித் தொழிற்படுதலால் காரணத்தைக் காரியமாக ஏற்றிக் கூறப்பட்டது.

மூங்கில் - மனம். வேம்பு - சிவம். பனை - திரோதானம். பாம்பு - அஞ்ஞானம். வெடிக்கின்றவாறு - அறியப்படாத தன்மை.

## 2848. பத்துப் பரும்புலி யானை பதினைந்து

2848. பத்துப் பரும்புலி யானை பதினைந்து
வித்தகர் ஐவர் வினோதகர் ஈரெண்மர்
அத்தகு மூவர் அறுவர் மருத்துவர்
அத்தலை ஐவர் அமர்ந்துநின் றாரன்றே.

பத்துநாடிகளும் பத்துப் பெரும்புலி எனப்பட்டன. பூதம் ஐந்து, பூதமுதலைந்து, புலனைந்து ஆகிய பதினைந்தும் யானை என்று உருவகிக்கப்பட்டன. பூதமுதல் - தன்மாத்திரை. புலன் - ஓசை முதலிய நுகரப்படும் பொருள்கள். அறிதற்கருவி ஐந்தும் வித்தகர் எனப்பட்டன. காற்றுக்கள் பத்தும் வினோதகர் எனப்பட்டன. ஈரெண்மர்: இரண்டு + எட்டு - இருவர் எண்மர் = பதின்மர். அமைதி, ஆற்றல், அபந்தல் என்னும் குணம் மூன்றும் மூவர் எனக் கூறப்பட்டது. பிறத்தல், கற்றல், தேடல், கூடல், வாழ்வு, தாழ்வு என்னும் அறுவகை நிலையினையும் மருத்துவராகக் கூறினர். அவ்விடத்து ஐம்பாடுகள் உண்டு. அவை நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் என்பன. பத்துநாடிகள்: இடப்பால் நரம்பு, வலப்பால் நரம்பு, நடுநரம்பு, உள்நாக்கு நரம்பு, வலக்கண் நரம்பு, இடக்கண் நரம்பு, வலச் செவி நரம்பு, இடச்செவி நரம்பு, கருவாய் நரம்பு, எருவாய் நரம்பு, என்பன. இவற்றை முறையே இடைகலை. பிங்கலை, சுழுமுனை, சிகுவை, புருடன், காந்தாரி, அத்தி, அலம்புடை, சங்கினி, குகு எனவும் கூறுப. காற்றுக்கள் பத்து: உயிர்க்காற்று, மலக்காற்று,

தொழிற்காற்று, ஒலிக்காற்று, நிரவுகாற்று, தும்மற்காற்று, விழிக்காற்று, கொட்டாவிக்காற்று, இமைக்காற்று, வீங்கற்காற்று என்ப. இவற்றை முறையே, பிராணன், அபானன், வியானன், உதானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயன் எனவும் கூறுப.

பத்துப் பெரும்புலி - தசநாடி. யானை பதினைந்து - மண் முதலைந்து, சுவை முதலைந்து, வாக்காதி - ஐந்து. வித்தகர் ஐவர் - ஞானேந்திரியங்கள். வினோதகர் - உடலின்கண் ஊழியம் செய்பவர். ஈரெண்மர் - பத்து வாயுக்கள். மூவர் - முக்குணம். அறுவர் - பிறத்தல் முதலிய விகாரங்கள். அத்தலை - அவ் வுடம்பில். ஐவர் - ஐந்து அவஸ்தைகள்.

## 2849. இரண்டு கடாவுண்டு இவ்வூரி னுள்ளே

2849. இரண்டு கடாவுண்டு இவ்வூரி னுள்ளே
இரண்டு கடாவுக்கும் ஒன்றே தொழும்பன்
இரண்டு கடாவும் இருத்திப் பிடிக்கில்
இரண்டு கடாவும் ஒருகடா வாமே.

இவ்வூராகிய உடம்பகத்து விடுத்தல் எடுத்தலாகிய உயிர்ப்புப் பயிற்சிக்குரிய இருதொழிலும் கடாக்கள் எனப்பட்டன. இவ்விரண்டினையும் மேய்த்து நடத்தும் உயிர் ஒன்றுண்டு. அவ்வுயிர் தொழும்பன் எனப்பட்டது. விடுத்தல் எடுத்தல்களாகிய மூச்சினை இருத்திப் பிடித்துத் தடுத்தலைச் செய்யின் அவ்விரண்டு கடாவும் ஒரு கடாவாகும். தடுத்தல் - கும்பகம்.

இரண்டு கடா - இரேசகம், பூரகம். இவ்வூர் - இவ் வுடம்பு. தொழும்பன் - சீவன். ஒருகடா - கும்பகம்.

## 2850. ஒத்த மனக்கொல்லை யுள்ளே சமன்கட்டிப்

2850. ஒத்த மனக்கொல்லை யுள்ளே சமன்கட்டிப்
பத்தி வலையிற் பருத்தி நிறுத்தலால்
முத்தக் கயிறாக மூவர்கள் ஊரினுள்
நித்தம் பொருது நிரம்பநின் றாரன்றே.

நேர்மையான மனக்கொலையினைச் செம்மைப்படுத்திப் பத்திவலையினைப் பரப்பினால் பருத்தியாகிய சிவன் ஆண்டு வெளிப்பட்டு நிற்பன். அளவின்றி முறுக்கேறிய கயிறு அறந்து அழிவதுபோல் முக்குணங்களும் அழிந்தன. ஊராகிய எண்ணத்தினுள் தன்னைச் சார்ந்த மெய்யடியார்களைக் காத்தல் தலைவராகிய சிவபெருமானார் தனிக் கடனாதலின் 'நித்தம் பொருதென்றனர்.' முக்குணம் அகலவே எக்காலுமுள்ள மிக்க சிவபெருமான் நிரம்ப நின்றருளினன். முக்குணத்தையும் ஒருபுடையொப்பாக மும்மலகாரியம் எனல் அமையும். அமைதிக் குணம் மாயையின் காரியம். ஆட்சிக்குணம் கன்மத்தின் காரியம், அழுந்தற்குணம் மலத்தின் காரியம்.

சமன்கட்டி - செவ்விதாக அமைத்து. பருத்தி - சிவம். முத்தக்கயிறு - முறுக்கு அதிகப்பட்டு அறுபட்ட கயிறுபோல. மூவர் - முக்குணங்கள். ஊரினுள் - சித்தத்தில். நிரம்ப - பூரண சிவமாக.

## 2851. கூகையுங் பாம்புங் கிளியொடு பூஜையும்

2851. கூகையுங் பாம்புங் கிளியொடு பூஜையும்
நாகையும் பூழும் நடுவில் உறைவன
நாகையைக் கூகை நணுக லுறுதலுங்
கூகையைக் கண்டெலி கூப்பிடு மாறன்றே.

கூகையாகிய அறியாமையும், பாம்பாகிய சுட்டறிவும், கிளியாகிய அறமும், பூஜையாகிய பாவமும், நாகையாகிய சிற்றறிவும், பூழாகிய அறுபகையும், உடம்பின் நடுவாகிய எண்ணம் என்னும் சித்தத்தின்கண் உறைவன. உறைதல் - தங்கியிருத்தல். நாகையாகிய சிற்றறி வினைக் கூகையாகிய அறியாமை நணுகமுயலும். அப்பொழுது அருள் ஒளிபெற்ற வெள் எலியாகிய ஆருயிர் சிவனை நினைந்து கூவும். சிவனும் வெளிப்பட்டுக் கூகையை அடக்கியருளவன்.

கூகை - அஞ்ஞானம். பாம்பு - காமம். கிளி - அறம். பூஜை - மறம். நாகை - சிற்றறிவு. பூழும் - குரோதமும். நடுவில் - சித்தத்துள். எலி - சீவன்.

## 2852. குலைக்கின்ற நன்னகை யாங்கொங் குழக்கின்

2852. குலைக்கின்ற நன்னகை யாங்கொங் குழக்கின்
நிலைக்கின்ற வெள்ளெலி மூன்று கொணர்ந்தான்
உலைக்குப் புறமெனில் ஓடு மிருக்கும்
புலைக்குப் பிறந்தவை போகின்ற வாறே.

மனத்தகத்து எழும் நன்மைகளைக் குலைத்தலைச் செய்வது தீய எண்ணங்கள். அவற்றைத் திருவருள் நன்னகை என்று சொல்லப் படும்அருயொளியாம் பூந்தூளால் விலக்குதல்வேண்டும். சார்ந்ததன் வண்ணமாக இருக்கும் தன்மை வெண்ணிறத்திற்கே உண்டு. அதனால் ஆருயிரை வெள்ளெலி என உருவகித்தனர். நிலைபெற்று நிற்கின்ற வெள்ளெலியாகி உயிர் அமைதி, ஆட்சி, அழுந்தல் என்னும் முக்குணங்களையும் உடன்கொண்டு வந்தது. உலையாகிய உடம்புக்குப் புறமாக அவ்வுயிர் செல்லுமானால் அக்குணங்கள் மூன்றும் கெடும். புறம்பாகச் செல்லுதல் என்பது உயிரின் உள்ளம் சிவத்தின் பேரிலேயே பதிந்து கிடத்தல். அவ்வுயிர் உடம்பின்கண் பற்றுக்கொண்டிருக்குமானால் அம் முக்குணங்களும் முனைத்து நிற்கும். புலையாகிய மாயைக்குப் பிறந்த அக் குணங்கள் அகலும்வழி இவையாகும். பிறத்தல் என்பது மாயையின் காரியமாகத் தோன்றுதல்.

குலை.....உழக்கின் - எழுகின்ற கெட்ட எண்ணங்களை அடக்கினால். வெள்ளெலி - சார்ந்ததன்வண்ணம் ஆகும் சீவன். உலை - உடம்பு. ஓடும் - முக்குணங்கள் கெடும்.

## 2853. காடுபுக் காரினிக் காணார்கடுவெளி

2853. காடுபுக் காரினிக் காணார்கடுவெளி
கூடுபுக் கானவை ஐந்து குதிரையும்
மூடுபுக் கானவை ஆறுள ஒட்டகம்
மூடுபு காவிடின் மூவணை யாகுமே.

மாயையின் பேரொடுக்கப் பெரு வெளி சிவமாகும். அதனைக் காடென ஓதினர். அக் காட்டின்கண் அருளாற் சேர்ந்து நிலைபெற்றன ஆருயிர்கள். கடுவெளியாகிய பாழினைச் சிறிதும் காணார். கூடாகிய உடம்பின்கண் ஐந்து குதிரையாகிய அறிதற் கருவிகள் புகுந்தன. செருக்கு, சினம், சிறுமை, இவறல், மாண்பிறந்த மானம், மாணாவுவகை என்னும் ஆறும் பெரும்பகையாகும். இவற்றை ஒட்டகம் என உருவகித்தோதினர். ஆருயிர்கள் அருட்டுணையால் இவ் வொட்டகங்களை அடக்கி மேற்செல்லுதல் வேண்டும். அங்ஙனம் சென்றால் அவ்வுயிர்கள் மூவணை எய்தும். மூவணையாவது ஆருயிர்ச் செயலறல், அருட் செயலறல், அருளோன் செயலறல் என்ப. இவற்றைச் சீவதுரியம், பரதுரியம், சிவதுரியம் எனவும் கூறுப. ஒட்டகம் பாலைநிலக் கருப்பொருள்.

காடு - மாயையாகிய காடு. கடுவெளி - சூனியம். கூடு - உடல் ஐந்து. குதிரை - ஞானேந்திரியம் ஐந்து. மூடு புக்கானது அடங்கி ஒழிந்தது. ஆறுள ஒட்டகம் - காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம். மூடுபு -

## 2854. கூறையுஞ் சோறுங் குழாயகத் தெண்ணெயுங்

2854. கூறையுஞ் சோறுங் குழாயகத் தெண்ணெயுங்
காறையும் நாணும் வளையலுங் கண்டவர்
பாறையி லுற்ற பறக்கின்ற சீலைபோல்
ஆறைக் குழியில் அழுந்துகின் றாரன்றே.

உடுக்கும் உடையும், உண்ணும் சோறும், குழாய்க் கலத்து எண்ணெயும், கழுத்தணியாகிய காறையும், அரைஞாணும், கைவளையலும் கண்டவர் அவற்றின்கண் பெருமயக்குக் கொள்கின்றனர். இவையனைத்தும் நிலையில்லாத மாயாகாரியப் பொருள்களாகும். இவற்றின் உண்மையினை உணராது இவை நிலைக்குமென மயங்கித் தடுமாற்றம் எய்துகின்றனர். அவர்கள் உள்ளம் அப் பொருள்களினிடத்து விரைந்து பறந்து செல்கின்றது. அதற்கு ஒப்புப் பாறையில் உலரும்படி விரித்த சீலை பெருங்காற்றால் பறந்து செல்வதாகும். அவ் வுயிர்கள், ஆறைக்குழியில் வீழ்ந்து அழுந்தும். ஆறைக்குழி என்பது செருக்குச் சினம் முதலாகிய (2853) ஆறுபகையுமாகும். ஆறு என்பது ஆறை என ஐகாரச் சாரியை பெற்றதாகும்.

கூறை - ஆடை. குழாய் - பாத்திரம்; (முன் காலத்தில் மூங்கில் குழாய்கள் பாத்திரமாக உபயோகப்படுத்தப்பட்டபடியால் அவ் வழக்கு இலக்கியங்களில் பயின்றது). காறை - கழுத்தணி. நாணும் - அரை நாண். ஆறைக்குழி - உபத்தம்.

## 2855. துருத்தியுள் ளக்கரை தோன்று மலைமேல்

2855. துருத்தியுள் ளக்கரை தோன்று மலைமேல்
விருத்திகண் காணிக்கப் போவார்முப் போதும்
வருத்தியுள் நின்ற மலையைத் தவிர்ப்பாள்
ஒருத்தியுள் ளாளவர் ஊரறி யோமே.

நோக்கமும் நீக்கமும் என்பன முறையே பிரவிருத்தி நிவிர்த்தி என்று பேசப்படும். இவை இரண்டும் ஒருங்கு நிகழ்வனவாகும். ஊதுந் துருத்தி காற்றை வாங்கி வெளிவிடும் கருவி. அக் கருவியே இவற்றிற்கு ஒப்பாகும். நோக்கமும் நீக்கமும் ஆகிய இச் செயல்களுள் விருத்தியாகிய நோக்கத்தினைக் கண்காணித்தற் பொருட்டு ஆருயிர்க் கிழவர் முபோதும் போவர். திருவருளம்மை உடனின்று சித்தவிருத்தியாகிய நோக்கத்தினைத் தவிர்த்தலாகிய நீக்கத்தினைப் புரிந்தருள்வள். இந் நோக்கத்தினை மலையென உருவகித்தனர். அவள் ஒப்பில்லாத பேரறிவுப் பேராற்றற் பேரருட் பெருந்திருவினளாவள். அவள் இணை பிரியாது துணையாக ஒட்டி வாழும் ஊராகிய சிவபெருமானாரை நாமாக அறியவல்லோம் அல்லோம். திருவருள் காட்டச் சேர்ந்து காண்போம் என்க. இதுவே "தாயுடன் சென்றுபின் தாதையைக்கூடி" என்பதன் பொருளாகும்.

துருத்தி - பிரவிருத்தி, நிவிர்த்தி. அக்கரை - எல்லை. மலைமேல் விருத்தி - சித்தவிருத்தி; காமாதிகள். ஒருத்தி - சிவசத்தி. ஊர் - இருப்பிடம்.

## 2856. பருந்துங் கிளியும் படுபறை கொட்டத்

2856. பருந்துங் கிளியும் படுபறை கொட்டத்
திருந்திய மாதர் திருமணப் பட்டார்
பெருந்தவப் பூதம் பெறலுரு வாகும்
இருந்திய பேற்றினில் இ,ன்புறு வாரே.

ஆருயிர் செய்துகொண்ட வினைப் பயனுக்குத் தக்கவாறு திருவாணையால் இன்பத்துன்பங்கள் வருகின்றன. இவற்றை இன்பந் தருங் கிளியாகவும் துன்பந்தரும் பருந்தாகவும் உருவகித்தனர். மேலும் கிளியைக்கண்டு மகிழ்கின்றோம். பருந்தைக் கண்டு நடுங்கின்றோம். பறைகொட்ட என்பது பலரறியக் கொடுப்பதெனவும், மலந்தேயக் கொடுப்பதெனவும் பொருள்படும். எனவே துன்பமும் இன்பமும் மலந்தேயக் கொடுக்கப்படுவன. அவற்றை நுகர்விப்பதன் பொருட்டு எண்ணம், மனம், எழுச்சி, இறப்புகளாகிய உட்கரணங்கள் ஆருயிர்களுடன் திருந்தப்பொருந்தின. இதனைத் திருந்திய மாதர் திருமணம் பட்டார் (2868) என்றனர். முதற்கண் தோன்றும் எண்ணம் பூதம் எனப்பட்டது. எண்ணமென்றாலும், நாட்டமென்றாலும், சித்தமென்றாலும் ஒன்றே. அவ் வெண்ணம் சிவத்தைப் பேணுதலாகிய தவத்தான் நன்மை எய்தும். அது கைகூடவே பெறதற்கரிய திருவடிப் பேற்றின் இன்ப வுரு வெளிப்பட்டிருக்கும். அதுவே திருந்திய பேறெனப்பட்டது. அப் பேற்றின்கண் இருந்து இன்புறுவா ரென்க.

'ஊண்பேறாம் பிள்ளை உறுபுணர்வாம் நாச்சுவையும்,

காண்பரறிவோர்மணத்தாற் காண' என்பதனை நினைவு கூர்க.

பருந்தும் கிளியும் - அறமும் மறமும். படுபறை கொட்ட சுகதுக்கங்களை உண்டாக்க. மாதர் - மனம் முதலிய உட்கரணங்கள் திருமணப்பட்டார் - ஒருமை அடைந்தோர். பெருந்தவப்பூதம் பெறல் - பெருந்தவத்தினைச் சித்தம் அடைதலால். உருவாகும் இருந்திய பேறு - உண்டாகும் முதிப்பேறு.

# 2857. கூடும் பறவை இரைகொத்தி மற்றதன்

2857. கூடும் பறவை இரைகொத்தி மற்றதன்
ஊடுபுக் குண்டி யறுக்குறில் என்னொக்குஞ்
சூடெறி நெய்யுண்டு மைகான் றிடுகின்ற
பாடறி வார்க்குப் பயனெளி தாகுமே.

ஆருயிரின் உடம்பகத்து திடம்படவிருக்கும் மெய், வாய், கண், மூக்குச், செவியென்னும் அறிதற்கருவி ஐந்தும் கூடும் பறவை (1987) என உருவகிக்கப்பட்டன. இக் கருவிகள் முறையே தத்தமக்குரிய ஊறு, சுவையொளி, நாற்றம், ஓசை என்னும் புலப் பொருள்களுடன் கூடும். கூடி நுகர்ந்து கொண்டிருக்கும். அதனையே இரை கொத்தி என்றனர். கொத்தி என்பதன்பின் இருக்கும் என்னும் ஒரு சொல் சொல்லெச்சமாக வந்து பொருந்திற்று. திருவருள் வலத்தால் ஆருயிர் அதனூடு புகுந்து உண்டியாகிய அந் நுகர்வினை அறத்தல் வேண்டும். அங்ஙனம் அறுத்தால் கைகூடுவது என்னெனில் கூறுதும். சூடாகிய மெய்யுணர்வுத் தழலால் எறிதலாகிய நெய் திருவடிப் பேரின்பமாகும். அவ் வழியா வின்பத்தினை நுகர்தல் வேண்டும். நுகர்வார்க்கு மைபோலும் அறியாமையைக் கக்கும் புல்லுமலமாகிய இருளையொழிக்கும் தன்மை ஏற்படும். அங்ஙனம் அம்மலம் ஒழிக்கப்படவே திருவடிப்பேறு எளிதாகக் கைகூடும். அறுத்தல் - கொள்ளாது தள்ளுதல்.

பறவை - இந்திரியம். இரை - சுவை முதுலிய ஐந்து. அதனூடுபுக்கு - அவ் விந்திரியவழிச் சென்று. உண்டி

அறுக்குறில் - சுவை முதுலிய விஷயாதிகளை நீக்கில். என்னொக்கும் என்ன கிடைக்கும். சூடு ஏறி - தவத்தால் உண்டாகும். நெய் - சிவானந்தம். மை கான்றிடும் - அவிச்சையை ஒழிக்கின்ற. பாடு - தன்மை.

## 2858. இலையில்லை பூவுண் டினவண் டிங்கில்லை

2858. இலையில்லை பூவுண் டினவண் டிங்கில்லை
தலையில்லை வேருண்டு தாளில்லை பூவின்
குலையில்லை கொய்யும் மலருண்டு சூடுந்
தலையில்லை தாழ்ந்த கிளைபுல ராதே.

இலையாகிய இறைநூற் பயிற்சி யில்லை. பூவாகிய நோக்கமுண்டு. நோக்கம் - பிரவிருத்தி. வண்டின் கூட்டம் என்று சொல்லப்படுகிற தொண்ணூற்றாறு (2139) மெய்களின் ஆராய்வு இங்கில்லை. தலையாகிய பயிற்சிப் பயனாம் பேறு இல்லை. வேராகிய காரணப் பயிற்சியுண்டு. தாளாகிய முயற்சியில்லை. பூங்கொத்தாகிய புலப்பொருட்சுவைச் சேர்க்கை இங்கில்லை. ஆனால் உடலூழாம் கொய்யும் மலருண்டு. அம் மலர் உடலூழாகக் கழிதலின் அம் மலரினைச் சூடும் தலையாகிய ஆருயிர் முனைப்பு இங்கில்லை. அம் முனைப்பு கிளைத்துத் தோன்றுதலுமின்று. புலர்தல் - தோன்றுதல். நான்முகன் தலைகிள்ளப்பட்டதென்பது முனைப்பதற்றப்பட்டதென்னு மெய்ம்மையினை ஈண்டுன்னுக.

இலை - நூற்பயிற்சி. பூ - பிரவிருத்தி. வண்டு - தத்துவ ஆராய்ச்சி. தலை - சாத்தியம். வேர் - சாதகம். தான் - சாதக முயற்சி. பூவின் குலை - சவை முதலிய விசயக் கூட்டம். கொய்யும் மலர் - சுகதுக்க அனுபவம். கொய்யும் தலை - ஆன்ம அனுபவம். கிளை - சீவபோதம்.

## 2859. அக்கரை நின்றதோர் ஆல மரங்கண்டு

2859. அக்கரை நின்றதோர் ஆல மரங்கண்டு
நக்கரை வாழ்த்தி நடுவே பயன்கொள்வர்
மிக்கவ ரஞ்சு துயரமுங் கண்டுபோய்த்
தக்கவர் தாழ்ந்து கிடக்கின்ற வாறன்றே.

திருவடிப் பேறாகிய அக்கரைக்கண் சீர்மிகு சிறப்பினனாகிய சிவபெருமான் ஆருயிர்கள் உய்தற் பொருட்டு நெறி நூலும் துறை நூலும் (தமிழ் வேதாகமங்கள்) ஆக்கவிக்கத் திருவுள்ளங்கொண்டருளினன். அதன்பொருட்டு ஆலமரத்தடியில் தென்முகச் செல்வராய் வீற்றிருந்தருளினன். நூலும் தோற்றுவித்தருளினன். அக் குறிப்பே ஆல் + அமர் + அம் = ஆலமரம் கண்டு என ஓதப்பட்டது. உள்குவார் உள்கிற்றெல்லாம் உடனிருந்துணர்ந்து அப்பொழுதே தோன்றும் அருளாளர் நக்கர். நக்கர் - தோன்றுபவர். அவர் சிவபெருமானாவர். அவரைத் திருமுறை வாயிலாக வழிபட்டு அடியார் நடுவே யிருக்கும் பயன் கொள்வார் மிக்கவராவர். ஐவகைத்துன்பமாவன: தொன்மை இருள், செருக்கு, அவா, ஆசை, சினம் என்பன. இவை காரியத்தைக் காரணமாக மொழியப்பெற்றன. இவ்ஐவகைத் துன்பத்தினுக்கே தக்கவராய் அவற்றுள் ஆழ்ந்து கண்டதே கண்டு கொண்டதே கொண்டு செல்வார் பிறப்புச் சூழலில் தாழ்ந்து கிடக்கும். முறையினராவர்.

அக்கணம் நின்றதோர் - ஆன்மாவிற் பொருந்தியதோர். ஆலமரம் கண்டு - ஆல் அமர் அம் கண்டு - சிவத்தைக்

கண்டு. நக்கண - வெளிப்படையாக. நடுவே - நடுநிலையுடன். அஞ்சு துயரம் - அஞ்சு துன்பம்: (அவித்தை, அஸ்மிதை, இராகம், துவேஷம், அபினிவேசம.◌)

## 2860. கூப்பிடு மாற்றிலே வன்கா டிருகாதங்

2860. கூப்பிடு மாற்றிலே வன்கா டிருகாதங்
காப்பிடு கள்ளர் கலந்துநின் றாருளர்
காப்பிடு கள்ளரை வெள்ளர் தொடர்ந்திட்டுக்
கூப்பிடு மீண்டதோர் கூரைகொண் டாரன்றே.

சிவனோ டொருங்கும் பாவனை முறையில் உலகக் கட்டுகள் நீங்கும். கூப்பிடும்: கூம்பிடுமென்பதன் திரிபு. மிகவும் வன்மையான காடுகள் இரண்டுள. அவை நினைப்பும் ஐயமும் ஆகிய சங்கற்ப விகற்பங்கள் என்ப. இவை அறியாமையால் விளைவன. மேற்போக வொட்டாது தடுக்கும் கள்வர் பலர் கலந்து நின்றனர். இவர்களையே ஐம்புலக் கள்வரெனவும், ஐம்புலவேடரெனவும் கூறுப. அங்ஙனம் காப்பிடுங் கள்ளரை நீக்கி நிறுத்தும் வெள்ளராகிய சிவனடியார் தொடர்ந்து நிற்கின்றனர். அருளால் அக்கள்வரைக் கூப்பிடச் செய்தனர். இவர்கள் திருவடிப் பேரின்ப வெள்ளப் பெருக்குடையராவர். வாவா என்று கூப்பிடும் பெரியதோர் கூரையாகிய வீடு கொண்டாரென்க.

கூப்பிடும் - உலகபந்தம் நீக்கும். ஆற்றில் - சிவோகம் பாவனா முயற்சியில். வன்காடு இருகாதம் - சங்கற்ப விகற்பத்தோடு கூடிய இருவிதக் காடு ஆகிய அஞ்ஞானம். காப்பிடு கள்ளர் - காவல் செய்யும் இந்திரியக் கள்வர். வெள்வர் - சிவானந்த வெள்ளப்பெருக்கு உடைய அடியவர். கூப்பிடும் - வாக்கு வியாபாரமும். கூரை - வீடு, சீவன்முத்தி.

## 2861. கொட்டியும் ஆம்பலும் பூத்த குளத்திடை

2861. கொட்டியும் ஆம்பலும் பூத்த குளத்திடை
எட்டியும் வேம்பும் இனியதோர் வாழையுங்
கட்டியுந் தேனுங் கலந்துண்ண மாட்டாதார்
எட்டிப் பழத்துக் கிளைக்கின்ற வாறன்றே.

குளமாகிய ஆருயிரின்கண் புணர்வும் புலம்புமாகிய கொட்டியும் ஆம்பலும் பூத்துக்கிடந்தன. சுட்டியுணரப்படுவதாகிய பெயரும் வடிவும் விடத்தக்கன. ஆதலின் அவற்றை எட்டியும் வேம்பும் என உருவகித்தனர். இவையகலவே இனியதோர் வாழையும், கட்டியும், தேனும் கலந்துண்ணலாகும். இம் மூன்றும் முறையே உண்மை அறிவு, இன்ப, வடிவ உருவமாகும். திருவருளால் இவற்றைக் கலந்து நுகரும் நன்னெறி அறியமாட்டாதார் எட்டிப்பழம் போன்று வடிவும் தோற்றமும் வனப்பும் கண்டு மயங்குவதற்கு வாயிலாகிய நிலையாத உலக இன்பத்தினையே பெரிதென நினைத்து நுகர்ந்து பின் இனைதலாகிய துன்புற்று இளைத்தொழிகின்றனர். எட்டிப் பழம் காட்சி இன்பமும் நுகர்ந்தால் மீட்சியில் இறப்புத்துன்பமும் தரும் தன்மைத்து. அதனால் அவ் வொப்பு உலகவின்பத்துக்குப் பொருந்திய ஒப்பாகும். எட்டிப்பழம்: எட்டு + இப் பழம் எனப் பிரித்து மிகவும் எளிதாக எட்டக்கூடிய இவ் வுலக இன்பமாகிய பழம் என்றலும் ஒன்று.

கொட்டியும் ஆம்பலும் - சகல, கேவலம். குளம் - ஆன்மா. எட்டி - வேம்பு; நாமமும் - உருவமும் (விடத்தக்கன

ஆதலின்). வாழை - கட்டி, தேன்; சத்து - சித்து, ஆனந்தம். எட்டிப்பழம் எட்டு + இப் பழம் - எளிதிற் சித்திக்கும் இவ் வுலகபோகம். or எட்டிப்பழம் - கண்கவர் வனப்பினதாகிய எட்டிப்பழம் விசத்தன்மையுடையபோல, இன்பம் போலத் தோன்றும் உலக இன்பங்களாகிய துன்பங்கள்.

## 2862. பெடைவண்டும் ஆண்வண்டும் பீடிகை வண்ணக்

2862. பெடைவண்டும் ஆண்வண்டும் பீடிகை வண்ணக்
குடைகொண்ட பாசத்துக் கோலமுண் டானுங்
கடைவண்டு தானுண்ணுங் கண்கலந் திட்ட
பெடைவண்டு தான்பெற்ற தின்பமு மாமே.

ஆருயிர்கள் மல நீக்கத்தின் பொருட்டு அருளால் உடல் கொண்டு உலகிடை உலாவவேண்டிய இன்றியமையாக் கடப்பாடுடையனவாகின்றன. அதன் பொருட்டு உலக அன்னையாகிய பெடைவண்டும் உலக அத்தனாகிய ஆண் வணடும் ஒன்று கலந்து திருவுள்ளக் குறிப்பான் ஏவுதலை மேற்கொள்கின்றனர். அதனால் மாயாகாரியமாகப் பீடிகை வண்ணமாக மண் தோன்றுகின்றது. குடைபோன்று வானம் தோன்றுகின்றது. ஏனையவும் முறையாகத் தோன்றுகின்றன. அவ் வுயிர்கள் வினைக்கீடாக நால்வகைத் தோற்றத்து எழுவகைப் பிறப்பினுள் ஏற்ற கோலஞ்சேர் உடல் கொண்டு பிறக்கின்றன. அதுவே கோலமுண்டான் எனக் கூறப்பட்டது. கடைவண்டு எனப்படும் இழிந்த மனத்தால் வினைக்கீடாக விளையும் இன்பத்துன்பங்களை ஆருயிர்கள் நுகரும். கண்போல் எங்கும் செறிந்து எவற்றினும் நிறைந்து நீக்கமற நிற்கும். திருவருளாற்றல் பெடை வண்டு எனப்பட்டது. அத் திருவருளாற்றலால் அவ் வுயிர்கள் பெற்று நுகர்வது பேரின்பப் பெருவாழ்வேயாம்.

பெடைவண்டும் ஆண்வண்டும் - சத்தியும் சிவனும் ஏவ. பீடிகை வண்ணக் குடைகொண்ட - பூமியில் பிறந்த. பாசத்துக் கோலமுண்டான் - சீவன். கடைவண்டு -

மனத்தால். தான் உண்ணும் - சுகதுக்கங்களை அனுபவிக்கும். கண்கலந்திட்ட பெடைவண்டு - அருட்சத்தியால்.

## 2863. தட்டத்து நீரிலே தாமரை பூத்தது

2863. தட்டத்து நீரிலே தாமரை பூத்தது
குடடத்து நீரிற் குவளை எழுந்தது
விட்டத்தி னுள்ளே விளங்கவல் லார்கட்குக்
குட்டத்தி லிட்டதோர் கொம்மட்டி யாகுமே.

தட்டத்து நீராகிய வலது மூக்கின்வழி எடுத்தலைச் செய்யும் இரேசக மூச்செனப்படும் தாமரை பூத்துளது. குட்டத்து நீராகிய இடது மூக்கில் விடுத்தலைச் செய்யும் பூரக மூச்செனப்படும் குவளை எழுந்துளது. வலது மூக்கைப் பிங்கலை யென்றும், இடது மூக்கை இடைகலை யென்றும் கூறுப. விட்டமாகிய நடுநாடியினுள் தடுத்தலெனப்படும் கும்பகஞ் செய்து அவ் வுயிர்ப்பினை அருளால் அகத்தே விளங்கிக் காண வல்லார்க்குச் சிவபெருமான் அல்லது திருவடிப்பேறு மிகஎளிதாகக் கிடைக்கும். இடையறாப் பேற்றின் பேரின்பம் எய்துவர். இதற்கு ஒப்பு கொல்லையில் தானாகவே காய்த்து அளவின்றிப் பல்கிக்
கிடக்கும் கொம்மட்டிப் பழமாகும். அதுவே 'குட்டத்திலிட்டதோர் கொம்மட்டி யாமே' என்றருளினா.

தட்டத்துநீர் - வலதுமூக்கு, பிங்கலை, தாமரை - இரேசக வாயு. குட்டத்து நீர் - இடதுமூக்கு, இடைகலை. குவளை - பூரகவாயு. விட்டம் - சுழுமுனை. விளங்க - கும்பகம் செய்ய.

## 2864. ஆறு பறவைகள் ஐந்தகத் துள்ளன

2864. ஆறு பறவைகள் ஐந்தகத் துள்ளன
நூறு பறவை நுனிக்கொம்பின் மேலன
ஏறும் பெரும்பதி ஏழுங் கடந்தபின்
மாறுத லின்றி மனைபுக லாகுமே.

ஐந்தகம் என்று சொல்லப்படுகின்ற ஐம்பூதக் கூட்டரவாலாகிய இவ் வுடலகத்துச் செருக்கு, சினம், சிறுமை, இவறல், மாண் பிறந்தமானம், மாணாவுவகை என்று சொல்லப்படும். அறுபகையாகிய பறவைகள் ஆறும் உள்ளன. நுனிக்கொம்பாகிய எழுச்சியின்கண் எண்ணிலா எண்ணங்களாகிய நூறு பறவைகள் உள்ளன. ஏறும் பெரும்பதியாகிய புலம்பு, புணர்வு, நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் என்று சொல்லப்படும் ஏழினையும் கடந்தபின் ஏவ்வகை மாறதல்களுமில்லாமல் திருவடிப் பேற்றின்பமாகிய மனை புகுதலாகும். நூறு : அளவின்மைக்கோர் காட்டு. இயற்கைப் புலம்பினைச் செயற்கைப் புணர்வு முதலியவற்றுடன் ஒருங்கு வைத்துச் செயற்கைபோன்று உருவகித்து ஓதினார்; இஃது ஏனைய வேற்றுமைகட்டு இடனாகிய எழுவாயினையும் எழுவாய் வேற்றுமை எனக் கூறுவது போன்றாகும்.

ஆறு பறவைகள் - காமாதி ஆறு. ஐந்தகத்து ஐம்பூதங்களால் ஆகிய உடலகத்து.

## 2865. கொட்டனஞ் செய்து குளிக்கின்ற கூவலுள்

2865. கொட்டனஞ் செய்து குளிக்கின்ற கூவலுள்
வட்டனப் பூமி மருவிவந் தூறிடுங்
கட்டனஞ் செய்து கயிற்றால் தொழுமியுள்
ஒட்டனஞ் செய்தொளி யாவர்க்கு மாகுமே.

ஆருயிர்களின் நோக்கமாகிய விருத்திகளையும், முனைப்பையும் அடக்குவதே கொட்டனம் செய்தல் எனப்படும். அங்ஙனம் அருளால் அடக்கித் திருவடிப் பேரின்பமாகிய பெரு வெள்ளத்தில் மூழ்குதல் வேண்டும். அக் குறிப்பே குளிக்கின்ற கூவலுள் என ஓதப்பெற்றது. வட்டனப் பூமியாகிய நீங்காப் பேரின்ப நிலை ஓங்கிப் பெருகும். வட்டனப் பூமி: வட்டு + அல் + ந + பூமி எனப் பிரிந்து சூதாடு காய்போன்று மாறுதல் எய்தாத சிறந்த பூமியாகிய பேரின்ப நிலை எனப் பொருள்படும். அப் பேரின்ப நிலையைத் தங்கச் செய்வதாகிய கட்டுப்பாட்டினைப் பத்தி யென்னும் பருங்கயிற்றால் கட்டுதல் வேண்டும். உள்ளத்தினுள்ளே சிவபெருமானின் பெரும் பேரொளி யாவர்க்கும் ஒட்டுதலைப் பொருந்தி விளக்கமுறும் என்க. கட்டணம் என்பதற்குக் கட்டுச்சோறு என்றலும் ஒன்று. உள் ஒட்டனம் என்பதற்கு உணர்வினுள் ஒட்டியுறும் சோறாகிய பேரின்பம் என்றலும் ஒன்று.

கொட்டனம் செய்து குளிக்கின்ற கூவல் - சீவபோதத்தை அடக்கிச் சிவபோதத்தில் திளைக்கில். வட்டனப்பூமி - சுகநிலை. கட்டனம் செய்து கயிற்றாற் றொழுமி - அந் நிலையைக் கட்டுப்படுத்தி நிலைக்கச் செய்து. உள்

ஒட்டனம் செய்து - உள்ளத்துள்ளே ஓங்கவைத்தால். ஒளி - சிவத்தின் ஒளி.

## 2866. ஏழு வளைகடல் எட்டுக் குலவரை

2866. ஏழு வளைகடல் எட்டுக் குலவரை
ஆழும் விசும்பினில் அங்கி மழைவளி
தாழு மிருநிலந் தன்மை யதுகண்டு
வாழ நினைக்கில தாலய மாகுமே.

உலகங்கள் ஏழையும் தனித்தனி எழுந்து வளைவாகச் சூழ்ந்திருக்கும் கடல்கள் ஏழு. நிலத்தினை அழுத்திக்கொண்டிருக்கும் ஓங்கி உயர்ந்த சிறந்த மலைகள் எட்டு. இவை ஆழ்ந்திருக்கும். விசும்பாகிய வானமும், வளியாகிய காற்றும், அங்கியாகிய தீயும் மழையாகிய நீரும், இவற்றைத் தாங்கித் தாழ்ந்திருக்கம் நிலமும் என்னும் ஐம்பூதச் சேர்க்கையாலாகிய இவ் வுலகமும் இவ் வுடலும் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருக்கோவில்களாகும் (1792). இவ் வுண்மையினை அருளால் பொருளாய்வின்வழிக் காணுதல் வேண்டும். உலகைச்

"சுவை யொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகை தெரிவான் கட்டே யுலகு."

என்னும் தமிழ்மறையின்படி ஆய்தல் வேண்டும். இத்திருப்பாட்டினிற்கு எல்லாரும் நிலையாமை யொன்றே குறிக்கோளாகக் கொண்டனர். இந்நிலையாமை புற ஆய்வாகும். அக ஆய்வாகக் கொள்ளுங்கால் 'இருதிறன் அல்லதாய் சிவசத்தாய்'க் காணப்படும் மெய்ப்பொருட்டெளிவு தோன்றும் தோன்றவே அம் மெய்ப்பொருட்சிவத்தை அடைதற்கு இவ்வுடலும் உலகமும் துணைக் கருவிகளென்னும் துணிவு தோன்றும். தோன்றவே,

இவற்றைத் திருக்கோவிலெனக் கொண்டு 'உடல்பினை நானிருந் தோம்புகின்றேனே' (705) என்னும் முறைமைப்படி ஒம்பப்படும். அதுவே வாழ நினைக்கின்றதாகும். இதுவே 'அற்குப ஆங்கே செயல்' என்னும் செந்தமிழ்ப் பொதுமறையின் செம்பொருளாகும்.

ஏழு வளைகடல் - அக்காலத்துக் குறிப்பிட்ட பூமி அண்டத்து ஏழு கடல். எட்டுக் குலவரை - சிறந்த எட்டு மலை. ஆழும் - இருக்கும். விசும்....இருநிலம் - நிலம், நீர், தீ, வளி, வெளி. அது ஆலயமாமே - அந் நிலம் ஆலயம் போன்றது. ஆ + லயம் - ஆன்மா சிவத்தோடு இலயிக்கும் இடம்.

## 2867. ஆலிங் கனஞ்செய் தகஞ்சுடக் சூலத்துச்

2867. ஆலிங் கனஞ்செய் தகஞ்சுடக் சூலத்துச்
சாலிங் கமைத்துத் தலைமை தவிர்த்தனர்
கோலிங் கமைத்தபின் கூபப் பறவைகண்
மாலிங்கன் வைத்தது முன்பின் வழியன்றே.

பெருங்காதலுடன் கவவுக்கை நெகிழாமல் காற்றூடறுக்காமல் கட்டித்தழுவி அகம்சூடுண்டாக இருவரும் மருவினர். அதனால் அருஞ்சூல் உண்டாயிற்று. 'அன்புநாண் ஒப்புரவு கண்ணோட்டம் வாய்மை' என்னும் ஐம்பெரும் சால்பினையும் அச் சூலுற்ற மகவின்பால் வைத்துத் தம்முனைப்பாம் தலைமை தவிர்த்தனர். இல்லொழுக்க முறையாகிய கோலினை அமைத்தனர். அஃதாவது குடும்பவாழக்கையினை முறையுறச் செய்தனர் என்பதாகும். செய்யவே கிணற்றகத்துள்ள பறவைகளையொப்பப் பொறிபுலன்கள் மயங்கி நெறியல்லா நெறிச் செல்லாவாயின. எனினும் ஒரோவழி அங்ஙனம் செல்லநேரின் அஃது அவ்வுயிர்கள் முன்செய்து கொண்ட வினைக்கீடாக நேர்வதாகும். அங்ஙனம் நேரின் அருளால் அவ்வுயிர்கள் அவற்றின்பின் செல்லாது நெறிமுறையே சென்று நிலைபெறும்.

ஆலிங்கனம் செய்து - மோகத்துடன் கூடி. அகம் சுட உள் வருந்த. சூலத்து - கருப்பையில். சால் இங்கு - உடம்பை இவ் வுலகத்தில். கோல் - ஆட்சி, ஈண்டு வாழ்க்கை. கூபப் பறவைகள் - உடம்பின்கண் அமைந்த இந்திரியங்கள். மால் மயக்கம். முன்பின் முன்னர் (முன்

## 2868. கொட்டுக்குந் தாலி இரண்டே இரண்டுக்குந்

2868. கொட்டுக்குந் தாலி இரண்டே இரண்டுக்குங்
கொட்டுக்குந் தாலிக்கும் பாரை வலிதென்பர்
கொட்டுக்குந் தாலிக்கும் பாரைக்கும் மூன்றுக்கும்
இட்டம் வலிதென்பர் ஈசன் அருளன்றே.

புலன் நுகர்ச்சியின் பொருட்டு இருவரும் தெய்வ அடையாளமாகிய தீ, ஆசான், சான்றவர், ஊரவர், உறவினர் முதலிய பலரும் சான்றாகத் திருமணம் செய்துகொள்கின்றனர். அங்ஙனம் செய்த உரிமையின் அடையாளமாகத் தாலி காணப்படுகிறது. ஒருவர்பால் காணப்படும் தாலி இருவர் உரிமையினையும் எடுத்தியம்புகின்றது. புலன் நுகர்ச்சியென்பது புலன்கள் தீநெறிக்கட் செல்லாது நன்னெறிக்கட் செல்லுமாறு ஒருவருக்கொருவர் துணையாகச் செலுத்தும் உரிமையை மாற்றிக் கொள்ளுதல். இது, 'கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியும் ஐம்புலனும், ஒண்தொடி கண்ணே யுள.' (1101) என்னும் செந்தமிழ்ப் பொது மறையான் உணரலாம். ஒண்தொடிக்கு உரிமையாக்கப் பெற்ற இப்பொறிகள் என்பால் அவள் உடைமையாக இருக்கின்றன. இவற்றிற்கு உரிய முதன்மையும் உரிமையும் அவள் பாலுள்ளன. என் விழைவுபோல் பிழைபாடேதும் செய்ய இயலாது. அவள் விழைதக்கனவே யான் செய்ய இயலும். அதனாலேயே அவள் வாழ்க்கைத்துணை எனப்பட்டாள். வாழ்க்கை இம்மை, உம்மை, அம்மை என மூவகைப்படும். இம்மை - இப்பிறப்பு. உம்மை - மேற்

பிறப்பு. அம்மை - பிறவாச் சிறப்பு. இவையே உரிமைத் தாலியின் அருமை பெருமையாகும். இறை நினைவு நீங்கிய உரிமைப் புலனுகர்ச்சி தோறும் விளையும் பயன் இரண்டே. அவை இன்ப துன்பம் என்பன. புலனுகர்வாகிய கொட்டுக்கும் அதன் உரிமையாகிய தாலிக்கும் மேலாகிய வன்மையுடையது பாரையாகிய விழைவென்ப புலனுகர்வு, அதன் உரிமை. வலனாம் விழைவு இம் மூன்றற்கும் வலிது திருவடிக்கண் வைக்கும் அன்பு. அவ்வன்பே சிவபெருமான் திருவருள் இன்பினைத் தரவல்லது. பொற்றாலியின் சிறப்பினை வருமாறு நினைவுகூர்க:

"பெண்ணே அணிபூணும் பெய்வர்பிற எல்லாரும்
கண்ணேய்நற் காதலன்றான் கட்டுவனால் - கண்ணேயாம்
நற்றாலி என்னும் நழுவா நகையாகும்
பொற்றாலி பூணல்முறை போற்று."

கொட்டு - இந்திரிய நுகர்ச்சி. தாலி - சுகதுக்க அனுபவம். பாரை - பொருள்களை அனுபவிக்கும் ஆசை. இட்டம் - திருவருட்சத்தியின் சம்பந்தம்.

## 2869. கயலொன்று கண்டவர் கண்டே இருப்பர்

2869. கயலொன்று கண்டவர் கண்டே இருப்பர்
முயலொன்று கண்டவர் மூவரும் உய்வர்
பறையொன்று பூசல் பிடிப்பா னொருவன்
மறையொன்று கண்ட துருவம்பொன் னாமே.

கயல்போல் மாறிமாறிப் பிறழும் இவ்வுலகியல்பினை நிலையும் உறுதியும் உலைவில் தலைமையும் உடைய ஒன்றென மாறான எண்ணங்கொண்டு கண்டவர், பிறப்பு இறப்பு என்னும் பெரும் பிறழ்வுத்துன்பினைக் கண்டுகொண்டேயிருப்பர். அழிவில் முயல்வாம் நற்றவமாகிய சீலம், நோன்பு, செறிவு என்னும் முந்நிலையும் கண்ட மூவரும் செந்நெறிச் சென்று 'நடுவாக நன்றிக்கண் தங்கியான்' எய்தும் வாழ்வினராய் வாழ்வுறுவர். நடுவாக நன்றிக்கண் தங்கியான் வாழ்வு சமரச சன்மார்க்க வாழ்வு. இதனையே பொதுநெறி வாழ்வெனக் கூறுப. இதுவே திருவள்ளுவர் உள்ளிட்ட செம்பொருட்டுணிவினராம் தென்புலச் செல்வர் வாழ்வு. போர்ப் பறையனையவாய் வாய்ப்பறை கொட்டும் சமயக்கணக்கர் தரும் பூசலை நேகமெனப் பிடித்து நிற்பானொருவன் பாசவலைப்பட்டு ஆசைமிக்குற்றுப் பிறப்பன். செந்தமிழ் நெறிநூல் துறைநூல்களாகிய வேதாகம மறையொன்று உறுதியாகப் பற்றி வாழ்பவன் அசையா நிலையென்னும் துருவம் போன்றவன் ஆவன். அவன் சுடச்சுடரும் பொன்போல் மலம்நீங்கி ஒளிவிட்டுத் திருவருட்டுணையால் சிவனடி எய்திச் செம்பு செழும் பொன்னாம் விழுமிய சிறப்பு

நிலையினை எய்துவன். செங்கல் செழும் பொன்னாக்கும் விழுமியோன் சிவனல்லவா? அவன் ஆருயிரைத் தன் வண்ணம் ஆக்கியருளும் உண்மை வண்மை அருளுக்கு அடையாளம் அல்லவா அது? அங்ஙனமே அருள்வன். துருவம் - அசையாநிலை.

கயல் - மாறி மாறி வருகின்ற உலகம். முயல் - தவ முயற்சியால் அடையக்கூடிய சிவம். மூவர் - சரியை, கிரியை, யோகவான்கள் (ஞானவான்கள் அடைதல் நிச்சயமாதலால் அதைக் கூறாமல் விட்டார்). பறையொன்று பூசல் - ஆரவாரமுடைய சண்டை. மறையொன்று கண்ட - தமிழ் வேதப் பொருளாயுள்ள ஒன்றைக் கண்ட. துருவம் - ஆன்மா. பொன்னாமே - மலம் நீங்கிச் சிவத்தோடு கலக்கும்.

## 2870. கோரை எழுந்து கிடந்த குளத்தினில்

2870. கோரை எழுந்து கிடந்த குளத்தினில்
ஆரை படர்ந்து தொடர்ந்து கிடந்தது
நாரை படுகின்றாற் போலல்ல நாதனார்
பாரை கிடக்கப் படிகின்ற வாறன்றே.

ஆருயிர்களின் எண்ணமாகிய சித்தம் குளம் என்பபடும். அக் குளத்தின்கண் விரிந்த அறிவாகிய கோரை எழுந்து கிடந்தது. ஆரைச் செடிபோன்று பின்னிக்கிடக்கும் ஆசை அவ் விரிந்த அறிவினை மறைத்துப் படர்ந்து மூடிக்கிடந்தது. குளத்தினிலுள்ள மீன்களைத் தனக்கு இரையாகத் தன் நன்மையின் பொருட்டு நாரையாகிய கொக்கு கவரக் கருதுகின்றது. அதற்குரிய செவ்வி பார்த்து அக்குளத்தில் தங்கியிருக்கின்றது. அதுபோன்று அல்லாமல் விழுமிய முழுமுதற் சிவன் ஆருயிர்களின் நன்மையின்பொருட்டே அவ்வுயிர்களின் உள்ளமாகிய வன்பாறையிடத்துச் செவ்விநோக்கிக் காத்திருக்கின்றனன். இவ்வுண்மை தெரிந்தால் அவரை அப்பொழுதே கூடி யின்புறலாம். நாரை உவமை மறுதலைப் பொருளின்கண் வந்தது; "மற்றாங்கே" 2 என்பது போன்று.

## 2871. கொல்லையுழக் காதமுங் காடரைக் காதமும்

2871. கொல்லையுழக் காதமுங் காடரைக் காதமும்
எல்லை மயங்கிக் கிடந்த இருநெறி
எல்லை மயங்கா தியங்கவல் லார்கட்கு
ஒல்லை கடந்துசென் றூர்புக லாகுமே.

பிறப்பினைக் கொல்லும் தலைமைப் பாடமைந்த 'ஓ' மொழி கொல்லை எனப்பட்டது. அவ் ஓ மொழிக்கண் அகர உகர மகரமாகிய மூன்றெழுத்தும் கூடியுள்ளன. அ + உ + ம் என்பது இரண்டரை மாத்திரைகளைக் கொண்டதாகும். அகர உகரம் குற்றெழுத்துக்கள். அவை இரண்டும் மூன்றும் மாத்திரை பெற்ற எழுத்தாகவேண்டுமாயின் ஒன்று நெடிலாதல்வேண்டும். எனவே உகரம் ஊகாரமாகக் கொள்ளுதலமையும். குற்றெழுத்தாகிய அ, இ, உ, எ, ஒ என்னும் ஐந்தும் ஒரு புடையொப்பாக முறையே வனப்பாற்றல், நடப்பாற்றல், அன்பாற்றல், அறிவாற்றல், உழைப்பாற்றல் எனக் கொள்க. இவ்வைவகையாற்றல்களும் ஆருயிர்களுடன் கலந்து தொழிற்படுத்து முறையினை நெட்டெழுத்தாகக் கொள்ளுதல்வேண்டும். அந்த முறையில் அ + ஊ + ம் = ஓம் என்றாகும். மந்திரமாதலின் (2751) மறைத்தும் குறைத்தும் கூட்டியும் கூறுதன் மரபு. இதன்கண் குறைத்துக் கூறப்பட்டது. 'சிவாயநம' என்பதன்கண் 'வா' கூட்டிக் கூறப்பட்டது. எனவே ஓ என்பது இருமாத்திரையாக இருப்பினும் மூன்று மாத்திரையாக அளபெடுத்து ஒலித்தல்வேண்டும். அப்பொழுது 'ஓஓ' என்றாகும.ு

இதுவே 'முக்காதம்' என மொழியப்பட்டது. காடாம் 'ம'கரம் அரைமாத்திரையாகும். திருவடி எல்லை காணவொட்டாது நன்னெறியும் புன்னெறியுமாகிய இருநெறிகள் மயங்கிக் கிடந்தன. இவ்விருநெறிகளையும் முறையே அருள் நெறியும் மருள்நெறியுமென்று கூறலாம். எல்லை மயங்காது அருள் நெறியில் ஒழுகவல்லார்கட்குத் திருவருட் பெருந்துணையால் நனிமிக
விரைந்து சென்று தனிப்பெருவாழ்வாம் திருவடிப்பேரூர் புகுந்து பேரின்புறலாம்.

கொல்லை - பிரணவம் (அ - உ) முக்காதம் - அகரமும் உகரமும் மூன்று மாத்திரை அளவின. காடு அரைக்காதம் - மலக் காடாகியம் அரைமாத்திரை அளவினது. எல்லை - அளவு. ஒல்லை - விரைவாக. ஊர் - முத்தி உலகம்.

## 2872. உழவொன்று வித்து ஒருங்கின காலத்து

2872. உழவொன்று வித்து ஒருங்கின காலத்து
எழுமழை பெய்யாத் திருநிலச் செல்வி
தழுவி வினைசென்று தான்பய வாது
வழுவாது போவன் வளர்சடை யோனே.

நன்னெறிநான்மை (2615) நற்றவமாம். உழவினை அருளால் ஒருங்கிய மனத்துடன் நெருங்கித் திருந்தச் செய்தால், இருவினையொப்பு வாய்ந்த செவ்விநேர்ந்த காலத்துத் திருவருண்மழை எழுந்து பெய்யும். பெய்யா: செய்யா என்னும் வாய்பாட்டு வினைஎச்சம். திருவருள் வீழ்ச்சியாகிய திருநிலச் செல்வி தழுவுவள். தழுவவே எஞ்சுவினை, ஏன்றவினை, ஏறு வினையாகிய முத்திறவினைகளும் மூளா. வளர் சடையோன் ஆகிய சிவபெருமான் கன்றின்பின் அனையும் ஆன்போல் தவறாது வந்து திருவருள்புரிவன்.

உழ........காலத்து - தவம் கைகூடிய காலத்து. எழுமழை பெய்யா - ஞானத்தை எழுப்புகின்ற அருள்மழையைப் பெய்து. திருநிலச் செல்வி தழுவி - திருவருட்சத்தி பதிந்து. வினை சென்று தான் பயவாது மூவகை வினைகளும் இன்பதுன்பங்களைத் தராது. வழுவாது போவன் - தவறாமல் அருள்செய்வான்.

# 2873. பதுங்கிலும் பாய்புலி பன்னிரு காதம்

2873. பதுங்கிலும் பாய்புலி பன்னிரு காதம்
ஒதுங்கிய தண்கடல் ஓதம் உலவ
மதுங்கிய வார்களி யாதமு தூறப்
பொதுங்கிய ஐவரைப் போய்வளைத் தானே.

ஏதும் முயற்சியின்றி வாளா ஓரிடத்தில் நாம் அடங்கியிருந்தாலும், நம்முடைய வாழ்நாளை வரைசெய்யும் உயிர்ப்பு கண்ணிமைப் பொழுதினும் குறைந்த காலநுட்பமுடைய இறைப்பொழுதும் வாளாயிராது விடுத்தலும் எடுத்தலுமாகிய வேலையினைத் தொடுத்துச் செய்துகொண்டேயிருக்கிறது. அதனால் அவ்வுயிர்ப்பினை உவம ஆகுபெயராகப் பாய்புலி என்றனர். வாழ்நாளைப் பெருக்குவதென்பது ஓர் அரும்பெறற்றந்தை சீர்சால் மக்கள் ஏர்பெறவேண்டிக் கைமுதல் கொடுப்பது போன்று 'முதலிலார்க்கு ஊதியமில்லை' ஆதலின் மதலையாஞ் சார்பாக உயிர்ப்பினை நல்கியருளினன். அவ்வுயிர்ப்பு இத்துணைத்து நம் வாழ் நாட்கு அலகாய் - எண்ணிக்கையாய் அமைந்ததென்பது நம்மனோரால் அறிய வாராது. தந்தை ஈந்த கைமுதல் பெருகுவதாகிய வளர்ச்சியின்றிச் செலவே செய்துகொண்டிருந்தால் பின் அருகி உள்ளதுபோன்று தோன்றிய தோற்றமுமின்றிக் கெட்டுவிடுமல்லவா? பணம் முற்றும் அற்றவிடத்து அவன் நற்றந்தையை உற்றுக் குறையிரந்து சற்றும் பேறின்றி நிற்பன். முயன்றுதொழில் செய்துவளர்த்தவன், தந்தை முந்திவந்தணுக மைந்துடன் நிற்பன். வந்த தந்தையும்

மனமகிழ்ந்து பாராட்டித் தன்னுடன் அணைத்துக்கொள்வன். அளவறிந்து வாழவேண்டுமென்பதே திருவள்ளுவநாயனார் அருளிய பொதுமறை; அதுவருமாறு:

"அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகித் தோன்றாக் கெடும்.

நம்முடைய உயிர்ப்பு ஓய்வின்றி விடுத்தல் பதினாறு விரலளவும் செல்கின்றது. அதனை அவ்வளவில் எடுக்காமல் நான்கு விரலளவை வெளியில் வீணாக்கி விட்டுவிட்டுப் பன்னிரண்டு விரலளவே பற்றிக் கொள்கின்றோம். இங்ஙனம் செல்லும் நான்கு விலளவையையும் வீணாக்காமல் அப்படியே முற்றாக எடுத்தல் வேண்டும். முற்றாக எடுத்து விட்டால் செலவில்லையேயன்றி வளர்ச்சியுண்டாகாது. வளரவேண்டுமாயின் அவ்வுயிர்ப்பினைத் தடுத்தலாகிய கும்பகம் செய்தல்வேண்டும். இப்பயிற்சியை இறைப்பொழுதாய்க் கண்ணிமைப்பொழுதாய், நாழிகையாய், நாளாய், திங்களாய், ஆண்டாய், ஊழியாய்ப் புரிந்து வளர்தல் வேண்டும். புலி வீணாய் ஆசைப்பட்டு உணவினைத் தொகுக்கப் பாய்வதும், அரிமா ஆசைப்படாது வேண்டும் வேளை பசிக்கு உண்டு அடங்குவதும் கண்கூடு ஆசையை வென்றானைச் சிங்கம் என்பது மரபு. எனவே அரிமா யோகநிலை எல்லையாகும். ஆனேறு ஞானநிலையாகும். ஒரு நூற்கயிற்றுச் சுருளினைப் பதினாறு விரலளவு வெளிவிட்டுப் பன்னிரண்டு விரலளவு உள்ளிழுத்தால் நான்குவிரல் வெட்டப்பட்டுப் போகின்றது. அங்ஙனமே போய்க்கொணடிருந்தால் நாளடைவில் அச் சுருள் ஒன்றுமில்லாது போய்விடுமன்றோ? அங்ஙனமின்றி நான்குவிரலளவையும் உள்ளே கூட்டிக்கொண்டால் நம்முடன் ஒன்றாய் வேறாய் உடனாய் ஒதுங்கியிருக்கும்

தண்கடலனைய திருவடிப்பேரின்பப் பெருங்கடல் நம்மாட்டு மேலோங்கி நிறைந்து கசிந்து எங்கணும் உலவும். இஃது அளவின்றி ஊறும் கிணற்றுநீர் மண் முதலியவற்றால் மூடப்பட்டு மறைந்து இல்லையெனும்படி சொல்லிறந்து கிடக்கும். உரனுடை நல்லாரிணக்கத்தால் அம்மூடிய மண் முதலியவற்றை அகற்றிவிட்டால் அவ்வூற்றுப் பெருக்கெடுத்து எங்கணும் பாய்வதனையொக்கும். மதுக்களி மிக்க தேன்நிறை அழிவிலாக் காழில் கனியாகிய நிறைந்த துன்பில் இன்பமிழ்து. நுகர நுகரப் பெருகி ஊறும். அங்ஙனம் ஊறலால் முன் நம்மைப் பொசுங்கும்படி வருத்திய ஐம்புலன்களை இன்று நாம் பொசுங்கும்படி வளைத்து வெல்வோம். இதுவே "நேரிழையைக் கலந்திருந்தே புலன்களைந்தும் வென்றானை" யென்னும் மெய்ம்மறையினை ஐயமில் உய்யும் குறிப்பாகும். புலன் வென்றான் அன்றாலின் கீழிருந்து அறஞ்சொன்னான்; அதூஉம் நால்வர்க்கெனவும் நவில்ப. நால்வர் நாற்பொருளாளர். நானெறியாளர் எனவும் கூறுப உண்மையான் நோக்குவார்க்கு எண்ணம், மனம், எழுச்சி, இறுப்பு என்னும் நாற்பாலாரேயாவர். எனவே அறம் சொல்லுதல் பிறர்க்கன்று நமக்கேயாம். பிறர்க்கு நடைமுறையில் நடந்து திடம்பெறக் காட்டல் நன்றாம். இதனை வரும் வெண்பாவால் நினைவுகூர்க.

"ஆலாம் அடிநினைவு அந்நால்வர் உட்கரணம்
மேலாம் அறமவர்க்கே மேவுவித்தல் - நூலாம்
அடையாளத் தன்கைபோன் றாண்டாண்டுள் ளார்க்கு
நடையாலே தாம்காட்டல் நன்று."

பதுங்கிய.......காதம் - பன்னிரண்டங்குலம் பரிந்திடும் பிராணன். ஓது . . . . . . . உலவ - சிவானந்தக் கடலின்

உணர்ச்சி தோன்ற நாலங்குலம் கூழிக்கொளின். மது . . . . . . ஊற - தேன் துளிக்கும் சிவக்கனியின் இன்பம் பெருக. பொது......வளைத்தான் - இதுவரை வருத்திய ஐந்து இந்திரியங்களை வென்றவன் ஆவன்.

## 2874. தோணியொன் றேறித் தொடர்ந்து கடல்புக்கு

2874. தோணியொன் றேறித் தொடர்ந்து கடல்புக்கு
வாணிபஞ் செய்து வழங்கி வளர்மகன்
நீலிக் கிறையுமே நெஞ்சின் நிலைதளர்ந்து
ஆலிப் பழம்போல் அளிக்கின்ற அப்பன்றே.

பிறவிப் பெருங்கடலிலே மிதந்து கரை ஏறும்படி சிவனருளால் தரப்பட்ட அறிவித்தோணி இவ்வாறறிவுசேர் ஏறனைய சீருடல். இதன்கண் ஆருயிர்கள் ஏறித்தொடர்ந்து வினைக்கீடாகப் பிறந்தும் இறந்தும் இக்கரையும் அக்கரையுமாக அலைகின்றன. காலினும் கலத்தினும் வாணிகம் புரிவது நூலின் வழிவந்தார் நுண்செயலாகும். அதுபோல் நூன்முறையும் கோன்முறையும் கைக்கொண்டு மறப்பினைக் கொடுத்தும் நினைபபினைக் கொண்டும் பண்டமாற்றுதலாகிய கொண்டு விலையினைச் செய்து வளர்ந்துவருமகன், நீலியாகிய மாயாகாரியப் பொருள்களினிடத்துத் தினையினும் சிறிதளவாகவேனும் பற்றுள்ளம் கொள்ளுதல் ஆகாது. கொள்ளின் நிலைதளரும். நிலைதளரின் 'தலையினிழிந்த மயிரனையராவர்.' சலிக்குந் தன்மைவாய்ந்தது நீர். அதனால் அது சலம் எனப்பட்டது. சலம், தமிழ்ச் சொல. அலைதல் - ஓய்வின்றி எழுந்து மடங்கிவருதல். அதனால் அலை நீரின் உறப்பாயிற்று. பசை போன்று அப்புதலால் அப்பென்பதும் தண்ணீருக்குப் பெயராயிற்று. அத்தகைய அப்புப்போன்ற ஓயா அலைவுசேர் எண்ணமாகிய சித்தத்தின்கண் அம் மாயாகாரியப்

பொருள்கள். நச்சுக் கனியாகிய ஆலிப்பழம் போன்று அருளால் அகற்றப்படுதல்வேண்டும். அறவி: அறநெறி; அறம்.

தோணி - உடல். கடல் - உலகமாய குடும்பக்கடல். வாணிபம் செய்து - நினைத்தல் மறத்தலாகிய வியாபாரங்களைச் செய்து. வழங்கி - ஒழுகி. நீலிக்கு - பெண்ணின்பொருட்டு. இறையும் - சிறிதேனும். நெஞ்சின் நிலைதளரின் - மனம் நிலைகுலைந்தால். அப்பு - சலிக்கும் தன்மையுள்ள நீரைப்போன்ற மனம். ஆலிப்பழம் - நச்சுக்கனி.

## 2875. முக்காத மாற்றிலே மூன்றுள வாழைகள்

2875. முக்காத மாற்றிலே மூன்றுள வாழைகள்
செக்குப் பழுத்த திரிமலங் காய்த்தன
பக்கனார் மிக்கார் படங்கினார் கன்னியர்
நக்கு மலருண்டு நடுவுநின் றாரே.

அமைதி, ஆட்சி, அழுந்தல் என்னும் முக்குணம் விரவிய வழியிலே புக்கு ஓய்வின்றி வழிவழியாய் வருகின்ற வாழைகளாகிய நனவு கனவு உறக்கமென்னும் மூன்றும் நன்னெறிநான்மை நற்றவச் செக்கால் செம்மையுறும். ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களும் காய்த்துப் பழுத்து வீழ்ந்து அடங்கின திருவருளால் திருவடி யுணர்வின் பக்கமானார் பக்கனார் எனப்படுவர். அவர் அறிவினுள் அறிவினராவர். அஃதாவது பதினாறாம் (2615) நிலையாகிய ஞானத்தின் ஞானமாகிய நன்னெறியின் நிற்போர். அதனால் அவரே எல்லாரினும் மிக்காராவர். அவர் ஆடல், பாடல், அழகு, அணி, உடை, பூச்சு, நடை, ஊடல், கூடல், மிலைதல், மலைதல், முதலியவற்றால் ஆடவரை மயக்கும் படங்காகிய படாமுலைமேல் துகிலணிந்து நகிலுடன் வரும் பொலமகளிரைச் சிரித்து ஒதுக்குவர். அத்தகைய பிறன்மனை நோக்காத பேராண்மை என்னும் நல்லொழுக்கால் செங்கமலத் திருவடித்தேனை இடையறாது நுகர்ந்து அடியார் நடுவுள் படியிலாப் பரிவுடன் இருப்பர். இதுவே முடியாப் பிறவியின் முடிவு மருந்தாம்

என்க. மலர்: செம்மலர் நோன்றாள். வாழ்க்கைத் துணைநலமாகிய நல்லாரிணக்கம் என்றும் வேண்டத்தக்கதே. வீழ்க்கைப் பிணிப்பொலமாகிய அல்லார் இணக்கம் வேண்டத்தகாதென்க. ஆனால் அவ் அல்லார் பிணக்கம் வேண்டத்தக்கதே.

முக்காதம் ஆற்றில் - முக்குண வழியில் மூன்றுள வாழைகள் - நனவு, கனவு, சுழுத்தி நிலைகள். செக்கு . . . . . . . . காய்த்தன தவத்தால் ஆணவம், கன்மம், மாயை ஆகிய மலங்கள் பக்குவப்பட்டன. பக்கனார் - பக்குவப்பட்ட ஆன்மாக்கள். மிக்கார் மேம்பட்டார். படங்கினார் கன்னியர். நக்கு - மேகலை அணிந்த கன்னியர் மோகத்தை வென்று. மலருண்டு - சிவனாந்தபோகத்தைப் பருகி.

# 2876. அடியும் முடியும் அமைந்ததோர் ஆத்தி

2876. அடியும் முடியும் அமைந்ததோர் ஆத்தி
முடியும் நுனியின்கண் முத்தலை மூங்கில்
கொடியும் படையுங் கோட்சரன் ஐயைந்து
மடியும் வலம்புரி வாய்த்ததவ் வாறே.

தோற்றமும் மறைவும் பொருந்தியுள்ள இவ்வுலகம் ஓர் ஆத்தி என்று உருவகிக்கப்பட்டது. ஒருபுடையொப்பாக ஆத்திமலர் வெண்மை நிறம்பற்றி மாயையாகக் கொள்ளலுமாம். அம்மாயையின் மாட்டுள்ள பற்று அருளால் அற்று அகலும். அகலவே சுற்றந்தழுவும் காட்டாகிய முற்றிய மூங்கிலின்முத்து வீழ்ந்தனைய திருவடிப் பேற்றின்பம் கைகூடும். முத்தலையென்பதற்கு மூன்று திருக்கண்களையுடைய சிவபெருமான் எனவும் முத்தலை வேற்படை தாங்கும் முக்கண்ணன் எனவும் கூறலுமாம். கொடியாகிய திருவடிநினைப்பும், படையாகிய திருவடி மறப்பும் இல்லாமல் அதுவே தானாய்நிற்கும் நிலையில் குற்றல் பொருந்திய அறிதற்கருவி ஐந்தும் செய்தற்கருவி ஐந்தும் தாமே அகலும். ஐ + ஐந்து = ஐயைந்து; ஐந்தும் ஐந்தும், உம்மைத்தொகை. ஐயைந்து என்பதற்கு இருபத்தைந்து எனக்கொண்டு உடன்மெய் இருபத்துநாலும் சிறப்புத் தன்மைசேர் ஆள் ஒன்றும் ஆக இருபத்தைந்து என்றலும் ஒன்று. அவ்விடத்து அருள் துணையால் "ஞானவாள், ஏந்தி நாதப் பறையறைந்து, மானமா ஏறி, மதிவெண்குடைகவித்து, நீற்றுக் கவசம் பூண்டு" மாயப்படையினை வெல்லுவர். தூய இவ்வெற்றியின்

அடையாளமாகத்தூவெண் வலம்புரிச் சங்கு நலம்புணர முழங்கும்.

அடியும் முடியும் - தோற்றமும் சிறப்பும். ஆத்தி - உலக சம்பந்தம். முடிய - கெட. முத்தலை மூங்கில் - முத்தியை அளிக்கும்
மூன்று கண்களுடைய சிவம். கொடியும், படையும் - நினைப்பும் மறப்பும். கோட்சரன் ஐ ஐந்து - குற்றம் பொருந்திய ஞானேந்திரியம் ஐந்து. கன்மேந்திரியம் ஐந்து. மடியும் - கெடும். வலம்புரி - வெற்றிநாதமாகிய சங்கொலி.

## 2877. பன்றியும் பாம்பும் பசுமுசு வானரந்

2877. பன்றியும் பாம்பும் பசுமுசு வானரந்
தென்றிக் கிடந்த சிறுநரிக் கூட்டத்துக்
குன்றாமை கூடித் தராசின் நிறுத்தபின்
குன்றி நிறையைக் குறைக்கின்ற வாறன்றே.

பதுங்கிக் கிடக்கும் பன்றியனைய தோல்வியும், பாம்பின் சீற்றமனைய வெற்றியும், பசுவாகிய ஆடனைய அடக்கமும், முசுவானர மனைய அடங்காமையும் எங்கணும் விரவிக்கிடந்தன. தென் + திக்கு + இடந்த எனப்பிரித்து நன்றாக எல்லாப் புலங்களிலும் இடம் கொண்டிருந்தன என்றலும் ஒன்று. இப் பொருட்கு இடத்த என்பது மெலிந்து நின்றதெனக் கொள்க. சிறுநரிக் கூட்டமாகிய பயனில்லாத நினைப்புகளுள், ஒருவன் சோர்வடையாது திருவடி நினைப்பிற் கூடித், தராசின் நாநுனிபோன்று எண்ணத்தால் உணரும் உணர்ச்சியினைச் சிவபெருமான் மாட்டு மாறின்றி நிறுத்தினால் பன்றியனைய இருள்மலமிகுதியை நாளும் ஒளிவரக் குன்றிமணியொப்பச் சிறிது சிறிதாகக் குன்றவைத்தல் கூடும். இருண்மலம் பன்றியாகவும் மருண்மலம் அன்னமாகவும் உருவகிக்கப்படும். இருண்மலம் ஆணவமலம். மருண்மலம் - மாயாமலம் இக்குறிப்பு முறைமே மாலும் அயனும்கொண்ட வழிவாற்புலனாம்.

குன்றியும் பாம்பும் - தோல்வியும் வெற்றியும். பசு - முசுவானரம்; அடக்கமும் அடங்காமையும். தென்றி . . . . . . . கூட்டத்து செறிந்த புன் மன எண்ணங்களில். குன் . . . . . . . . . பின் - ஈடுபடாது சிவத்திடை மனதை

## 2878. மொட்டித் தெழுந்ததோர் மொட்டுண்டு மொட்டினைக்

2878. மொட்டித் தெழுந்ததோர் மொட்டுண்டு மொட்டினைக்
கட்டுவிட் டோடின் மலர்தலுங் காணலாம்
பற்றுவிட் டம்மனை பாழ்பட நோக்கினாற்
கட்டுவிட் டார்க்கன்றிக் காணவொண் ணாதன்றே.

திருவருளால் திருவடிப் பேரின்பம் சிற்றரும்பாய் எழுந்து ஒப்பில் பேரரும்பாய் மொட்டிக்கும். அம் மொட்டினைக் கட்டாகிய பற்றினைவிட்டு ஆருயிர் ஓடிச்சென்று உணர்வினிற் கைக்கொண்டால் அம் மொட்டுப் பேரின்ப மலராக மலரும். மலரவே அதனை நுகர்ந்து பேரின்பங் கொள்ளலுமாம். மருள் நிலையாகிய உலக வியல்பிற் பற்றினைச் செலுத்தி நின்றால் அம் மனையாகிய திருவடிப் பேறு எய்தாது பாழ்பட நோக்கும். திருவடிப் பேரின்பம் கட்டுவிட்டார்க்கே உணர்வினிற் கண்டு நுகரும் உண்மையாகும். ஏனையார்க்குக் காணவொண்ணாதென்க. பற்றுவிட்டு - பற்றினைச் செலுத்தி. கைவிட்டு எடுத்தான் என்பது போலாகும். அல்லது பற்று + இட்டு என்பது வகர உடம்படு மெய் பெற்றுப் பற்றுவிட்டு என்றாயிற்று எனலும் ஒன்று. 'உயிர்வரின்'
உக்குறள் மெய்விட்டோடும்' என்பதன்கண் 'ஓடும்' என்றமையால் ஒரோவழிக் குற்றுகரமும் முற்றுகரம்போற் புணரும் என்பது காண்க.

மொட்டித்து - தவத்தால். வெளிப்பட்டு. மொட்டு = சிவானந்தம். கட்டுவிட்டு - யான், எனது என்னும் கட்டை

நீக்கி. மலர்தல் - சிவானந்தம் வெளிப்படுதல். பற்றுவிட்டு - மனதைப் பற்றில்விட்டு. மனை - முத்திவீடு.

# 2879. நீரின்றிப் பாயும் நிலத்தினிற் பச்சையாம்

2879. நீரின்றிப் பாயும் நிலத்தினிற் பச்சையாம்
யாவரும் என்றும் அறியவல் லாரில்லை
கூரு மழைபொழி யாது பொழிபுனல்
தேரினிந் நீர்மை திடரினில் லாதன்றே.

எண்ணமாகிய சித்தச் செலவு நீரெனப்பட்டது. சிவன் 'சித்தமும் செல்லாச் சேட்சியன்'; ஆதலின் அவன் சித்தம் ஒடுங்கிய விடத்துத் தானே பாய்ந்து வெளிப்படுவன். அதனால் நீரின்றிப் பாய்வன் என்றனர். நிலமாகி உணர்வெண்ணத்துள் சிவப்பெரின்பம் வெளிப்பட்டு விளங்கும். பச்சை யென்பது அவ் வின்பம் என்றும் பொன்றாது ஒன்றுபோல் விளங்குவது பற்றிக் கூறப்பட்டதொன்றாகும். இவ்வுண்மையினைத் திருவருள் எய்தாத எவரும் யாண்டும் அறியவல்லாரல்லர். மிக்கோங்கும் பொறிபுலனின்பம் பொழியாது. பொழியாதாகவே சிவப் பேரின்பம் கழியா அழியாப் பெருவெள்ளமாகச் சுரந்து நிற்கும். ஆராய்ந்துணரின் இத் தன்மையனாகிய அவன் 'கள்ளமுள்வழிக் கசிவானலன்'. அஃதாவது சிவன் திருவடியைப் பற்றாது நிற்கும் பாவிகள் உள்ளம் தூர்ந்த கிணறுபோல் திடராகும். திடரில் நீர் நில்லாமை யாவரும் தெரிந்ததே. அம்முறையில் சிவனும் நில்லான் பொல்லார் எண்ணத்தின்கண்.

நீர் - நினைந்து எண்ணும் எண்ணங்கள். பாயும் சிவானந்த வெள்ளம் பாயும். நிலம் - சித்தம். பச்சையாம் - சிவம் வெளியாம். கூரும் மழை பொழியாது -

இந்திரியச் சேட்டைகள் இல்லாது. பொழிபுனல் - சிவானந்த வெள்ளம். இந் நீர்மை - இத் தன்மை. திடர் - இந்திரிய வயப்பட்ட சித்தம்.

## 2880. கூகை குருந்தம தேறிக் குணம்பயில்

2880. கூகை குருந்தம தேறிக் குணம்பயில்
மோகம் உலகுக் குணர்கின்ற காலத்து
நாகமும் ஒன்று நடுவுரை செய்திடும்
பாகனு மாகின்ற பண்பனு மாகுமே.

அருட்கண்ணாகிய அகக்கண் திறப்பிக்கும் வரை ஆருயிர்க்கிழவர் 'பொருட் கண்ணிழந்து உண்பொருள் நாடிப் புகலிழந்த' பகல் குருடராவர். அதனால் அவர் கூகை என உருவகிக்கப்பட்டனர். சிவகுரு வீற்றிருக்கும் தவநிறை திருமரம் குருந்தம் என்பது பொருந்தும் இயற்கையன்றோ! அதனால் சிவகுருவின் திருவடியிணையினைச் சேர்வதைக் 'குருந்தம தேறி' என உருவகித்தனர். அஃது ஆளுடைய அடிகட்குத் 'திருப்பெருந்துறையில் செழுமலர்க் குருந்த மேவி' ஆட்கொண்டருளினமையான் உணரலாம். சிவகுருவின் திருவருளால் சுட்டியுணரப்படும் உடலும், உலகும், உலகியற் பொருள்களும் முக்குண விரிவாயுள்ளன; மயக்கும் தன்மையன என்னும் உண்மையினை உணர்தல் வேண்டும். உணரவே நாகமாகிய (2877) மனக்குரங்கு பாகம் எய்தி அடங்கும். 'காடுங் கரையும் மனக்குரங்கு கால்விட்டோட' எனத் தாயுமானச் செல்வர் (30 - 1) அருளியவாற்றான் உணர்க. மனமடங்கவே நடுவுரையாகிய திருவைந் தெழுத்தைச் சிவதீக்கை பெற்று ஓவாது ஓதிவரும் தாவாச் செவ்வியராவர். எண்குணம் நிறைந்த சிவப் பண்பருமாவர்.

கூகை . . . . . . ஏறி - அஞ்ஞானமுள்ள சீவன் சிவமாகிய குருவை அடைந்து குணம் . . . . . . காலத்து - உலகுக்கு முக்குணமாயை காரணம் என்று அறிகின்றபோது நாக. . . . .டும் - குரங்கையொத்த மனமும் அடங்கும். பாக . . . . பண்பறும் ஆமே - மனத்தை அடக்கி நடத்துகின்ற தன்மையுடையவன் அவன்.

## 2881. வாழையுஞ் சூரையும் வந்திடங் கொண்டன

2881. வாழையுஞ் சூரையும் வந்திடங் கொண்டன
வாழைக்குச் சூரை வலிது வலிதென்பர்
வாழையுஞ் சூரையும் வன்துண்டஞ் செய்திட்டு
வாழை யிடங்கொண்டு வாழ்கின்ற வாறன்றே.

வாழையாகிய இன்பமும், சூரையாகிய துன்பமும் இருவினைக்கீடாக வந்து அகப்புறக்கலனாம் எண்ணம், மனம், எழுச்சி, இறுப்பு என்னும் நான்கனுள் சிறப்பாக இறுப்பு மெய்யென்னும் புத்தி தத்துவத்தை உறைவிடமாகக் கொண்டன. இன்பத்தினும் துன்பம் மிக்க வலியுடையது என்று கூறுவர். என்னை, இன்பமும் துன்பமும் தாமே வருவன அல்ல. பெரும்பாலும் வேறொரு வாயிலாகவே வருவன. அவ்வாயிலை மூன்றாகப் பகுத்தனர். அவை தன்னைப்பற்றி வருவன, பிறவுயிர்களைப்பற்றி வருவன, இயற்கையாகிய தெய்வத் தூண்டுதலான் வருவன என்பன. ஆயின் ஒருவர் வாயிலாக நமக்கு இன்பம் வரும்போது நாம் மகிழ்ந்து அவர்க்கு இன்புறத் தக்க நன்றி பாராட்டுதலைச் செய்வோம். அல்லது வாளா மறந்திருப்போம். அனால் துன்பம் வருமேல் அத் துன்பம் வருதற்கு வாயிலாக வுள்ளாரைத் துன்பம் பலவுறுத்தி மகிழ்வோம். இயலவில்லையேல் மறவாது நினைந்து நெஞ்சம் புண்ணாவோம். அதனால் பாவமும் பெருகும். இம் முறையான் என்க. தெய்வம் ஈண்டு ஊழ். வாழையும் சூரையும் ஆகிய இன்பத் துன்பங்களைத் திருவருட்டுணையால், இருவினையொப்பால் வன்மையாக

வேறுபடுத்துதல் வேண்டும். வேறுபடுத்தலாவது 'நாமல்ல இந்திரியம், நம் வழியின் அல்ல, வழி நாமல்ல' என்று உண்மை கண்டிருத்தல். அங்ஙனமிருந்தால் என்றும் ஒன்றுபோல் வாழும் தலைமைப்பாடமைந்த சிவபெருமான் நம்முடைய வுள்ளத்தை விட்டகலாது மேலோங்கி விளங்கி இடங்கொண்டருள்வன். கொள்ளவே நாமும் நன்றாக வாழ்ந்து இன்புற்றிருப்போம்.

வாழையும் சூரையும் - இன்பமும் துன்பமும் வந்து இருவினையால் வந்து. வன் துண்டம் செய்திட்டு - இன்ப துன்பங்களில்
மனம் வையாது இரண்டினையும் ஒப்ப நோக்கினால். வாழ் + ஐ இடங்கொண்டு - என்றும் உள்ள சிவம். மனத்தின்கண் இடம் கொண்டு.

## 2882. நிலத்தைப் பிளந்து நெடுங்கடல் ஓட்டிப்

2882. நிலத்தைப் பிளந்து நெடுங்கடல் ஓட்டிப்
புனத்துக் குறவன் புணர்ந்த கொழுமீன்
விலக்குமின் யாவர்க்கும் வேண்டிற் குறையாது
அருத்தமு மின்றி யடுவது மாமே.

ஆருயிர் திருவருள் வலத்தாலும் நல்லாரிணக்க நலத்தாலும் சிவபெருமானின் திருவடியுணர்வை எய்துதல் வேண்டும். அந் நெறிச் செல்லாது நிலத்தை உழுதலானும், நிலத்தைப் பிளந்தும் காலிற் போதலானும், கலத்திற் சென்று கடல்கடந்து மிடலொடும் பெரும் பொருள் ஈட்டலானும் கொன்னே காலம் போக்குவர். நில ஒப்பினால் உடலைப் பெரிதெனச் செருக்கலும், காலினும் கலத்தினும் புகுதலான் உடைமையைப் பெரிதெனச் செருக்கலும் ஆகிய தம் முனைப்புடையாராயிருப்பர். முனைப்புடையராகவே ஐம்புல வேடருட்படுவர். அதனால் அறிவு திரிந்து வேடராவர். புணர்ந்த கொழுமீன் என்றதனால் இருவினைத் துடக்குட்பட்டுப் பிறப்பு இறப்புக்குட்படும் சிறப்பிலராவர். அருள் நாட்டத்தால் இவற்றை யகற்றுதல் வேண்டும். அகற்றாதொழியின் குறைவிலா நிறைவாய் வளரும் திருவடியின்பமாகிய அருத்தம் எய்தாது. அதுமட்டுமன்றி ஆருயிர்களை மீண்டும் மீண்டும் பிறப்பு இறப்பினுக்குட்படுத்தி அளவில் துன்பத்தினையும் எய்துவிக்கும்.

நிலத்தைப் பிளந்து - பூமியின்கண் சகலபோகத்தையும். நெடுங்கடலோட்டி - கடல் யாத்திரை செய்து வேண்டிய

செல்வங்களை ஈட்டியும் புனத்துக் குறவன் - ஐம்புல அனுபவியாகிய சீவன். புணர்ந்த கொழுமீன் - அடைந்த தேக உலக பாசங்கள். அருத்தம் - நற்பயன். அடுவது - பிறந்து இறந்து உழல்வதுமாம்.

## 2883. தளிர்க்கும் ஒருபிள்ளை தட்டா னகத்தில்

2883. தளிர்க்கும் ஒருபிள்ளை தட்டா னகத்தில்
விளிப்பதோர் சங்குண்டு வேந்தனை நாடிக்
களிக்குங் குசவர்க்குங் காவிதி யார்க்கும்
அளிக்கும் பதத்தொன்றிங் காய்ந்துகொள் வார்க்கே.

சிவபெருமான் திருவடியையன்றி எண்ணத்தின்கண் வேறொன்றும் மருவுவதற்கு இடங்கொடாதவன் தட்டானாவன். தட்டுதல் - மருவுதல். தளைதட்டுதல் - தளைபொருந்துதல் என்பதனான் உணர்க. பற்றற்று நிற்பார் தம் உள்ளத்துப் பிளவுபடாத ஒப்பில் தலைமைத் திருவடியின்பம் பெருகும். பிள்ளை: பிள் + ஐ - பிள்- பிளவுபடுதல். ஐ - தலைமைத் திருவடியின்பம் வெற்றி முழக்கம் செய்வதோர் சங்கொலியுண்டு. வேந்தனாகிய ஆருயிர்களை நாடிக் களிக்கும் குசவராகிய விடுத்தல் மூச்சும், காவிதியாகிய எடுத்தல் மூச்சும் என்னும் இரண்டன் பாலும் மனத்தைச் செலுத்தினால் அம் மனம் அவற்றிற்கு இரையாகும். விடுத்தல் - இரேசகம். எடுத்தல் - பூரகம். அப்பொழுது அகத்தவப் பயிற்சி ஆசான் வாயிலாக ஒப்பற்ற தடுத்தல் மூச்சாகிய கும்பகத்தை ஆய்ந்து கொண்டு அதன்வழி யொழுகுவார்க்கு அழியாப் பேரின்பம் உண்டாம்.

தளிர்......அகத்து - பற்று அற்றவனது உள்ளத்தில் சுகம் உண்டாகும். விளிப்பதோர் சங்குண்டு - அது பத்துவித நாதங்களில் சங்கோசை கேட்கும்போது. வேந்தன் -

## 2884. குடைவிட்டுப் போந்தது கோயில் எருமை

2884. குடைவிட்டுப் போந்தது கோயில் எருமை
படைகண்டு மீண்டது பாதி வழியில்
உடையவன் மந்திரி யுள்ளலும் ஊரார்
அடையார் நெடுங்கடை ஐந்தொடு நான்கே.

உள்ளங் கவிந்து கள்ளப் புலன்வழிச் செல்லும் பற்றுதலினின்றும் நீங்குதல் வேண்டும். அங்ஙனம் நீங்கிய எண்ணமாகிய சித்தத்தைக் கோவில் எருமை என்றனர். கோவில் எருமை: ஆருயிரின் நிலைக்களமாகிய எண்ண வளர்ச்சி. உயிர்ப்புப் பயிற்சிக்குத் தடையாகிய காம முதலிய அறுபகையும் படைபோல் வருவதைக் கண்டு பாதி வழியில் அவ்வெண்ணம் மீண்டது. அவ் வுயிர்க்கு நெருங்கிய உடையவனாகிய வலிய அமைச்சனாம் இறுப்புமெய் உண்மையை நினைக்கும் நினைக்கவே அவ்வுயிர் ஐந்தும் நான்கும் கூடிய தொகை ஒன்பது; இவை உடம்பகத்துள்ள ஒன்பது வாயில்களாகும். இத்தகைய உடம்பினுள் புகார் என்க.

குடைவிட்டு - கவிந்துள்ள ஆசை நீங்கி. போந்தது - சிவத்திடம் சென்றது. கோவில் எழுமை - மனக்கோவிலில் உள்ள சித்தம் படைகண்டு - காமாதி சேனைகளைக் கண்டு. பாதி வழியில் - யோக அப்பியாசத்தின' நடுவில். மீண்டது - தப்பித்துக் கொண்டது. உடையவன் மந்திரி - புத்தி. உள்ளலும் - விசாரித்தால் ஊரார் - தேகியாராகிய சீவனார். அடையார் நெடுங் . . . . கே ஒன்பது வாயிலையுடைய தேகத்தில். புகார் - பிறவார்.

## 2885. போகின்ற எட்டும் புகுகின்ற பத்தெட்டும்

2885. போகின்ற எட்டும் புகுகின்ற பத்தெட்டும்
ஆகிப் படைத்தன ஒன்பது வாய்தலும்
நாகமும் எட்டொடு நாலு புரவியும்
பாகன் விடாவிடிற் பன்றியு மாகுமே.

புலன்களிற் செல்லும் நலமில் விருப்பமும், உள்ளே புகுந்து பற்றக்கூடிய உயிர்ப்பின் மாத்திரை அளவு எட்டும், ஆகிச் சமைந்தன கண் முதலாகிய ஒன்பது துளையுள்ள வாயில்கள். நிலையான எண் விரல் மூச்சும் நால்விரல் மூச்சும் முறையே நாகம் (2880) எனவும் புரவி எனவும் கூறப்பட்டன. இவற்றைச் செலுத்தும் ஆருயிரான பாகன் செலுத்தாது அடக்குதல் வேண்டும். அங்ஙனம் அடக்கினால் மெய்யுணர்வு வெற்றியுண்டாகும். பன்றி - வென்றி.

போகின்ற வெட்டும் - இந்திரியங்களில் செல்லும் விருப்பமும். புகுகின்ற.........பத்தெட்டு - உள்ளே புகுகின்ற பற்றக்கூடிய எட்டு மாத்திரையான பிராணன். நாக.........புரவியும் - நிலையான எண்விரல் பிராணனோடு நால்விரல் பிராணனையும் பன்றி - வெற்றி.

## 2886. பாசி படர்ந்து கிடந்த குளத்திடைக்

2886. பாசி படர்ந்து கிடந்த குளத்திடைக்
கூசி யிருக்குங் குருகிரை தேர்ந்துண்ணுந்
தூசி மறவன் துணைவழி எய்திடப்
பாசங் கிடந்து பதைக்கின்ற வாறன்றே.

குளமாகிய ஆருயிர்களின் உள்ளத்தினிடத்துப் 'பாசியாகிய காமம் வெகுளி மயக்கங்கள் படர்ந்து கிடந்தன. அவ் வுள்ளத்துடன் கூடியிருக்கும் குருகாகிய ஆருயிர் இரையாகிய ஐம்புல நுகர்ச்சிகளை நலம் பொலம் ஆய்ந்து நுகரும் உய்யவேண்டும் துணைக்கருவிக் கூட்டங்களுள் ஒன்றாகிய பற்றறுதி என்னும் கொடிப்படை தாங்கி முற்செல்லும் ஆண்மை மறவன் துணைவழிச் செல்வன். செல்லவே காமம் வெகுளி மயக்கமென்னும் பாசங்கள் நிலையின்றி மெலிந்து பதைபதைத்து அடங்கி யழியும். அதுவே அவற்றை வெல்லும் வழியுமாகும். பற்றறுதி - வெறுப்பு; வைராக்கியம். தூசி - கொடிப்படை; முற்படை.

பாசி - ஆசை. குளம் - சித்தம். குருகு - சீவன். இரை - இந்திரிய விடயங்களை தூசி மறவன் - வைராக்கியம் பதைக்கின்றவாறு - கெடும்.

## 2887. கும்ப மலைமேல் எழுத்தோர் கொம்புண்டு

2887. கும்ப மலைமேல் எழுத்தோர் கொம்புண்டு
கொம்புக்கும் அப்பால் அடிப்பதோர் காற்றுண்டு
வம்பாய் மலர்ந்ததோர் பூவுண்டப் பூவுக்குள்
வண்டாய்க் கிடந்து மணங்கொள்வன் ஈசனே.

(ப. இ) புலன் நோக்கம் அடங்கிய சித்தம் கும்பமலை எனப்பட்டது. அதன்கண் உண்டாகிய திருவடிப் பேரின்பம் என்னும் கிளையொன்று உண்டு. அப் பகுதியாகிய பேரின்பம் தொடர்ந்து வருமாறு திருவருளால் வீசுவதோர் தென்றலாகிய தமிழ் மென்காற்று ஒன்று உண்டு. இயற்கை நறுமணங் கமழும் மெய்யுணர்வு வடிவாய் விளங்கும் அழியா ஆருயிர் மலர் ஒன்றுண்டு. அப் பூவினுள் விழுமிய முழுமுதற் சிவன் வண்டாகப் பின்னிக்கிடந்து மணங்கொண்டு இன்புறுத்துவன். மணங்கொள்ளுதல்: கலத்தல்.

கும்பம் - இந்திரியச் சேட்டைகள், அடங்கிய மனம். கொம்பு - இன்பம். காற்று - இன்ப உணர்ச்சி. வம்......பூ - ஞான மயமான ஆன்மா.

## 2888. வீணையுந் தண்டும் விரவி யிசைமுரல்

2888. வீணையுந் தண்டும் விரவி யிசைமுரல்
தாணுவும் மேவித் தகுதலைப் பெய்தது
வாணிபஞ் சிக்கென் றதுவடை யாமுன்னங்
காணியும் அங்கே கலக்கின்ற வாறன்றே.

அகத்தவம் என்று சொல்லப்படும் உயிர்ப்புப் பயிற்சியால் பத்துவகையான முழக்கம் (586) அகத்தே எழும். அவற்றுள் யாழொலி யும், தண்டு என்று சொல்லப்படும் புல்லாங்குழலொலியும் உள்ளன. இவ்விரண்டும் ஒன்றுகூடி இசையொத்து முரல் உயிர்ப்பானது நிலைபெற்ற பொருளாதலின் தாணு எனப்பட்டது. அவ் வுயிர்ப்புப் பயில்வார்க்கு வயமாகப் பொருந்தித் தடுத்தலாகிய கும்பகத்தைச் செய்ய வாய்த்தது. வாணிகமாகிய புலனுகர்வு விரைந்து வந்து அதனைக் கெடுத்தற் பொருட்டுச் சேருவதற்கு முன்னர், யாவற்றையும் ஒரு காலத்து ஓரிடத்திருந்து ஒருங்கு அறியும் காட்சி யோகக் காட்சி. அத்தகைய யோகக் காட்சியால் எல்லாவற்றையும் இருந்த இடத்திருந்தே காணுவதாகிய அறியும் தன்மை உண்டாம். அவ் வறியும் தன்மையும் அவ் வுயிர்ப்புப் பயிற்சியின் கண்ணே வந்து கலந்து கொள்ளும் முறைமையுண்டாகும். ஆங்கு - அவ் வுயிர்ப்புப் பயிற்சியில். யோகக் காட்சி நீருள் மூழ்கினான் நிலையினை ஒக்கும். நீருள் மூழ்கினானுக்கு நீரால் நனையப்படாத இடம் உடம்பில் ஒன்றும் இன்றல்லவா? அதுபோல் யோகக் காட்சியினர் எல்லாப் பொருள்களையும் ஓரிடத்தே இருந்து

காண்பர். இஃது அவர்தம் அறிவு சிவனையே நோக்குவதால் அவர்களுடைய அறிவுக் காட்சிக்குக் கருவியாக இருப்பது சிவனுடைய எங்கு நிறைந்த மங்கா அறிவு. அதனால் எங்கு நிறைந்த பொருள்கள் எல்லாவற்றையும் அறிதல் கூடும். நீருள் பரட்டளவு நின்றார், முட்டுக்காலளவு நின்றார், இடுப்பளவு நின்றார் அவ்வவ் வெல்லை வரையுமே நீரின் நனைவினைப் பெற்றிருப்பர். அதுபோல் ஆருயிரும் கண் முதலிய புலனால், இறுப்புமெய்யாகிய புத்தியினால், உணர்வு மெய்யாகிய உழைப்பு உணர்வு உவப்பு (அராகம்) என்னும் கருவிகளால் அறியும் அறிவு அவ் வவ்வெல்லை வரையுமே அறியும்.

வீணை - யாழ். தண்டு - புல்லாங்குழல். தாணு - சிவம். தகுதலை - இன்பத்தை. வாணிபம் - இந்திரியச் சேட்டை. காணி - முத்தி உலகம்.

## 2889. கொங்குபுக் காரொடு வாணிபஞ் செய்தது

2889. கொங்குபுக் காரொடு வாணிபஞ் செய்தது
அங்குபுக் காலன்றி ஆய்ந்தறி வாரில்லை
திங்கள்புக் கால்இரு ளாவ தறிந்திலர்
தங்குபுக் கார்சிலர் தாபதர் தாமன்றே.

புலப்பசையாகிய விசயவாசனையில் வெளிவந்து மனம் புகுவரே வாணிகம் செய்வதென்பதாம் கொங்கு, மணம் என்னும் பொருளையும் உடையது. மணம், அடங்கிய மனத்தைப் புறத்து ஈர்ப்பது. அதனால் ஆருயிரின் அறிவு புறத்துவர வாயிலாக இருப்பவர் சிறப்பிலாச் சிறியோராவர் அவர் தம் சேர்க்கையினையே கொங்கு என்றனர். இச் சிறியாருடன் பயின்று சிறப்பிலாத் தொழிலை, பிறப்புலாந் தொழிலைப் புரிகின்றோ மென்னும் எண்ணம் இவரைவிட்டு நீங்கிச் சிறப்புளார்பால் சேர்ந்து செயலற்றிருக்குமிடத்தே புலனாவதாகும். அதுபோல் அங்கென்று சொல்லப்படும் செயலறும் இடமாகிய நன்னிலத்துப் போனாலல்லாமல் சிறப்பில்லாத் தொழில் புலனாகமாட்டாது. நன்னிலம் தூரியநலம். நிலவு வெளிப்பட்டால் இருளையறிய முடியாதல்லவா? அதுபோல் நன்னிலமாகிய தூரியம் புகுந்தாரும் புலப் பொருள்களை யறியார். புலப்பொருள் கண் முதலிய பொறிகட்குப் புலனாகும் பொருள். தங்குமிடமாகிய நன்னிலம் சில அகத்தவத்தோர் - தாபதர் புகுந்தனர்.

கொங்கு புக்காரொடு - இந்திரிய வழிச்சென்றவரோடு. அங்கு - துரிய அவத்தையில். திங்கள் புக்கால் -

தண்ணிய ஒளி வெளிப்படுமாகில். தங்கு புக்கார் - துரியத்தில் நின்றார்.

## 2890. போதும் புலர்ந்தது பொன்னிறங் கொண்டது

2890. போதும் புலர்ந்தது பொன்னிறங் கொண்டது
தாதவிழ் புன்னை தயங்கு மிருகரை
ஏதமில் ஈசன் இயங்கு நெறியிது
மாத ரிருந்ததோர் மண்டலந் தானன்றே.

திருவருள் நினைவால் அறியாமையாகிய இருட்பொழுதும் விடிந்தது. பேரறிவாகிய சிவஞாயிறு எழுந்தது. பொன்னிறம் பேரறிவு. பூந்தூள் சிந்தும் புன்னை மரங்கள் என்பது திருவருளைப் பொழியும் பெரும் பொருளாம் சிவம் என்பதாகும். அச் சிவன் அகமும் புறமுமாகிய இரு கரைகளிலும் வெளிப்பட்டு நின்றருள்வன். எக்குற்றமுமில்லாத முக்கணானாகிய சிவபெருமான் செவ்வியுயிர்க்கு உடனாய் நின்று உதவும் ஒப்பிலாவுதவி இதுவாகும். நெறி ஈண்டு நெறியின் பயனாகிய உதவி. அது காரியத்தைக் காரணமாக ஏற்றிக் கூறினார். மாதர் - அழகு. சிவத்தைப் பேணில் தவத்திற்கு அழகாகும். அத்தகைய அழகு நிறைந்த நிலவுலகம் இத்தகைய நற்றவர் வாழுமிடம்.

போது - அஞ்ஞான இருள். புலர்ந்தது - நீங்கிற்று. பொன்னிறம் - ஞான ஒளி. தாதவிழ்புன்னை - அருளைப் பொழியும் சிவம். இருகரை தங்கும் - உள்ளும் புறமும் விளங்கும். மாதர் - அழகு. மண்தலம் - பூமி.

# 2891. கோமுற் றமருங் குடிகளுந் தம்மிலே

2891. கோமுற் றமருங் குடிகளுந் தம்மிலே
காமுற்ற கத்தி இடுவர் கடைதொறு
மீவற்ற வெல்லை விடாது வழிகாட்டி
யாமுற்ற தட்டினால் ஐந்துண்ண லாகுமே.

கோபமுற்றென்பது கோமுற்றென நின்றது. எனவே வெறுப்புற்றென்பதாகும். இனம்பற்றி விருப்பும் கொள்ளப்படும். வெறுப்பு விருப்புக்கள் காரணமாக ஆருயிராகிய குடிகள் தாங்கள் விரும்பிய புலப்பொருள்களை அடைய முயன்று அப் பொருள்கள் உள்ள இடங்களின் வாயில்கள்தோறும் சென்று உரத்தகுரலில் குறையிரந்து நிற்கும். அங்ஙனம் நிற்கும் அவ் வுயிரைத் திருவருட் சிவகுரு மீ ஆகிய மேற்பிறப்பு வற்றுதற்பொருட்டு உள்ளத்தை உலக வியல்புகளிலே செல்லவொட்டாது நன்னெறிக்கு உய்க்கும் நாதன் திருப்பெயராகிய திருவைந்தெழுத்தைச் செவியறிவுறுத்தியருள்வன். ஆருயிர் முனைப்பையும் நீக்கியருள்வன். நீக்கினால் என்பது தட்டினாலென்னும் சொல்லாற்றலாற் பெற்றாம். அம் முனைப்பு நீங்கவே திருவைந்தெழுத்தாற் பெறப்படும் திருவடிப்பேரின்பம் நுகரலாம். இதற்கமை திருவைந்தெழுத்துச் 'சிவய சிவ' (2560) என்ப இது 'நால்வர்நம் மூலர் நயந்தெமையாள் ஐங்குரவர், சால்பாம் 'சிவயசிவ' சார்ந்து' என்பதனாற் காண்க.

கோமுற்று - வெறுப்பு விருப்பு உற்று குடிகள் - சீவர்கள். காமுற்று அகத்தி - (அகற்றி - அகத்தி) விருப்பு வெறுப்புக்களை மகிழ்ந்து நீக்கி. கடைதோறும் - நேர்ந்த இடந்தோறும். மீவற்ற - பிறவி கெட எல்லை விடாது வழிகாட்டி - ஆகம மார்க்கம் தவறாமல் உபதேசித்து.

## 2892. தோட்டத்தில் மாம்பழந் தொண்டி விழுந்தக்கால்

2892. தோட்டத்தில் மாம்பழந் தொண்டி விழுந்தக்கால்
நாட்டின் புறத்தில் நரியழைத் தென்செயும்
மூட்டிக் கொடுத்து முதல்வனை முன்னிட்டுக்
காட்டிக் கொடுத்தவர் கைவிட்ட வாறன்றே.

தோட்டத்தில் மம்பழம் தொண்டி விழுந்தக்கால் என்பது ஆருயிரின் செயலறலாகிய நிட்டை கலைந்தவிடத்தென்பதாம். தோட்டம் நற்றவம்புரியும் சுற்றிடம். மாம்பழம் நிட்டை. தொண்டி விழுதல் உள்ளே வண்டிருந்து குடைந்து தொளையாக்குதல். அதுபோல் ஆருயிரின் நாட்டத்தின்கண் பண்டைப் பயிற்சிப் பசையினால் மாற்றம் ஏற்படும். ஏற்படவே நிட்டை கலையும். நிட்டை கலைந்தால் உள்ளம் புறத்துச் செல்லும். செல்லவே நோன்பு என்னும் பூசை முறையை மேற்கொள்வர். அதனால் அடையும் பெரும்பயன் யாது? ஒன்றுமின்றென்பதாம். நரி யழைத்தல் - செயல்செய்தல். திருவருளால் சிவகுருவானவர் நிட்டைபுரியுமாறு தூண்டித் துணைசெய்து, முதல்வனாகிய ஆலமர் செல்வனை முன் நிறீஇத் திருவைந்தெழுத்தைச் செவியறிவுறீஇச் சிவபெருமான் திருவடியிணையினைச் காட்டிக்கொடுத்தனர். அங்ஙனம் காட்டிக்கொடுத்தவரை நாம் நினையாது தினைப்பெழுது இருப்பினும் அவரும் நினையாமையாகிய கையினைச் சோரவிடுவர். இவையெல்லாம் அவர் சோரவிட்டமையால் நேர்வன. அங்ஙனம் நேராவண்ணம் அச் சிவகுருவினை இடையறாது நாடுதல் வேண்டும். நாடுதல் - சிந்தித்தல். முன்நிறீஇ - முன்நிறுத்து.

செவியறிவுறீஇ: சொல்லொணா அருமறைத் திருவைந்தெழுத்தை உபதேசித்து. சிவகுருவை யன்புடன் ஓவாது எண்ணிக்கொண்டிருப்பதே நம் கடமை என்னும் உண்மை வரும் திருமூலர் திருப்பாட்டான் உணர்க.

"தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருவுருச் சிந்தித்தல் தானே."

தோட்......கால் - சுகசமாதி கலைந்தால் நாட்........செயும் - உலகத்தில் கிரியா மார்க்கத்தைக் கைக்கொண்டு என்செய்ய முடியும். மூட்டிக் கொடுத்து - சமாதிக்கு ஏற்பாடு செய்து. முதல்வனை - தென்முகக் கடவுளை. முன்னிட்டு - முன்னிலையாக வைத்து.

## 2893. புலர்ந்தது போதென்று புட்கள் சிலம்பப்

2893. புலர்ந்தது போதென்று புட்கள் சிலம்பப்
புலர்ந்தது போதென்று பூங்கொடி புல்லிப்
புலம்பி னவளோடும் போக நுகரும்
புலம்பனுக் கென்றும் புலர்ந்திலை போதே.

நெறி நூலும் துறைநூலுமாகிய செந்தமிழ் வேதாகமங்களும், அந் நூல்கள் ஓதியும் ஓதுவித்தும் வரும் ஒண்மைக் குருமாரும், நுண்ணுணர்வாகிய தன் நுகர்வும் ஆகியவற்றைப் புட்கள் என்று ஓதினர். அப்புட்கள் அறியாமையாகிய இருள் அருளால் கெட்டதென்று ஒலித்தன. அங்ஙனம் ஒலித்துக்கொண்டிருப்பவும் அதனை உறுதி என்றுணர்ந்து அவ்வழியொழுகாது பலர் பொழுதுவிடிந்தது என்று வந்து கண்டுங், கேட்டும், கொண்டும், கூடியும், 'உண்டும், உறங்கியும் இன்புறலாமென்று பூங்கொடியாகிய மாயாகாரியப் பொருள்களையும், இணைவிழைச்சையும் நாடியலைகின்றனர். இணைவிழைச்சை விடாது பற்றி ஒருவுவதின்றி மருவுகின்றனர். நல்லாரிணக்கமில்லாத அல்லார் நிலை புலம்புநிலையேயாகும். புலம்புநிலை - இருள்நிலை. அஃதாவது அறியாமை நிலையுடன் ஐம்புலனுகர்வுச் சிறப்பாகிய பெண்களுடன் கூடும் கூட்டத்தையே பெரிதென்று நாடிப்போக நுகர்கின்றனர். அப்போகம் சிவபோகமாக வேண்டுமென்பது நல்லோர் குறிக்கோள். அஃதாவது சிவனடியை மறவா நினைவுடன் ஆண்டான் அடிமைமுறை பூண்டு நுகர்தல்.

அங்ஙனமின்றித் தன் முனைப்புடன் இறையை மறந்து எந் நுகர்வு நுகரினும் அது பிறவிக்கு வித்தாம். அறமுறை திறம்பிய பாவமுமாகும். அறக்கூழ்ச் சாலையில் அமைக்கப்பட்ட உணவினை அவர்கள் அருளுடன் வாக்க உண்பார் நன்றிமறவா நினைவும் அன்புங் கொண்டு உண்ணின் அஃது அறமாகும். அங்ஙனமின்றி நன்றி மறத்தலும் கட்டுண்டலும் செய்வரேல் அது பாவமாகும். இவையே மேலனவற்றிற்கு ஒப்பாவன கட்டுண்டல் - களவுசெய் துண்டல். அறியாமை வயப்பட்ட ஆருயிர்க்கிழவன் புலம்பனெனப்படும். அத்தகைய புலம்பனுக்கு எந்தநாளிலும் அறியாமையாகிய அகவிருள் விழந்த தில்லை என்க. ஆருயிர்க்கிழவன்: ஆன்மா.

புலர்ந்தது போது - அஞ்ஞான இருள் கெட்டது புட்கள் - அனுபவங்கள். பூங்கொடி - பெண்.

## 2894. போதிரண் டோதிப் புரிந்தருள் செய்திட்டு

2894. போதிரண் டோதிப் புரிந்தருள் செய்திட்டு
மாதிரண் டாகி மகிழ்ந்துட னேநிற்குந்
தாதிரண் டாகிய தண்ணம் பறவைகள்
வேதிரண் டாகி வெறிக்கின்ற வாறன்றே.

காலை மாலை என்று சொல்லப்படும் இருவேளைகளிலும் நெறிநூல் துறைநூல்களாகிய வேதாகமங்களை முறையுற ஓதுதல் வேண்டும். அங்ஙனம் ஓதவே அகம் புறமாகிய இரண்டிடத்தும் திருமகள், ஒத்துத் துணைசெய்தருள்புரிவள்; மகிழ்ந்துடனாகி நிற்பள். தாதாகிய வெண்ணீர் செந்நீர் என்னும இரண்டன் கலப்பால் கருவுட்புகுந்து ஆருயிர் பிறக்கும். அவ் வுயிர்களைப் பறவைகள் என்று உருவகித்தனர். 'இலக்கம் உடம்பு இடும்பைக்கு' ஆதலின் உடம்பினை வேதென்றனர். அஃது ஆண் பெண் என இரண்டென்றனர். வேது - துன்பம். அவ் வுடலைக்கண்டு அவ் வுயிர் செய்வதறியாது நடுங்குகின்றது.

மாது - இலக்குமி. தாது இரண்டு - சுக்கில சுரோணிதம். பறவைகள் - சீவர்கள். வேதிரண்டு - ஆண் பெண் சரீரங்கள்.

## 2895. தோணியொன் றுண்டு துறையில் விடுவது

2895. தோணியொன் றுண்டு துறையில் விடுவது
ஆணி மிதித்துநின் றைவர்கோ லூன்றலும்
வாணிபஞ் செய்வார் வழியிடை யாற்றிடை
ஆணி கலங்கில் அதுவிது வாகுமே.

ஆருயிர்கள் பிறவிப்பெருங்கடலைக் கடந்தாகவேண்டும். அதற்கு மக்கட்பிறப்பே தக்கதும் மிக்கதும் ஆகும். அத்தகைய பிறப்பைத் தோணியென்றுருவகித்தனர். தோணியாகிய வுடம்பு மெய்யுணர்ந்தாரைத் திருவடிக்கரையாகிய பெருந்துறையிற் கொண்டுய்க்கும். தோணியின் பக்கஇடம் ஆணி எனப்படும். அவ் வாணியிணை மிதித்தேறுதல் வேண்டும். ஏறி நெறிநின்று ஐம்புலத் தொழில்களைக் கோலூன்றி யகற்றுதல்வேண்டும். அருளால் அகற்றவே சிவகுரு வந்தருள்வர். அவரொரு பெருவணிகர். முதலிலா வணிகர். ஊதியமே தருவணிகர். அவர் எழுந்தருளி நம்முடைய அறியாமையாகிய இருட்டை வாங்கிக்கொண்டு, தனது முற்றுணர்வாகிய ஒளியைத் தந்தருள்வர். இது 'தந்ததுன் தன்னைக் கொண்டதென் தன்னைச் சங்கரா யார் கொலோ சதுரர்' என்னு மறைமுடிவான் நன்குணரலாம். ஒருபுடையொப்பாகத் திருநீலகண்டத் துள்ளுறையும் இதனை விளக்குவதாகும். மேலும் ஆற்றின் இடைநடுவில் உடம்பாகிய தோணியின் இருப்புக்கு ஆணியென்னும் அறியாமை நீங்குமானால் அதுவாகிய சிவன் இதுவாகிய ஆருயிராகும்.

தோணி - சரீரம். துறை - முத்தித் துறை. வாணி - மனத்தை ஐவர் கோல் ஊன்றலும் - இந்திரியங்கள் வேலைக்கு ஆரம்பித்ததும். வாணிபம் செய்வார் அஞ்ஞானத்தை வாங்கிக்கொண்டு ஞானத்தைக் கொடுக்கும் குரு. ஆணி கலங்கின் - பிறவிக்கு ஏதுவாகிய அஞ்ஞானம் கெட்டால். அது விதுவாகும் - சீவன் சிவனாகும்.

## 2896. நின்றார் இருந்தார் கிடந்தார் எனவில்லை

2896. நின்றார் இருந்தார் கிடந்தார் எனவில்லை
சென்றார் தருஞ்சித்த மோனச மாதியாம்
மன்றேயு மங்கே மறைப்பொரு ளொன்றுண்டு
சென்றாங் கணைந்தவர் சேர்கின்ற வாறன்றே.

மேன்மையான சமாதி மோனசமாதி எனப்படும். அதனை அருளால் அடையல்வேண்டி முயற்சிப்பார் காலத்தாழ்ப்பின்றி உடனே பயில்வர். அவர்கள் அப் பயிற்சிக்கண் நின்றார் சிலகாலம், பின் சிறிது பயின்று இருந்தார் சிலகாலம், பின் தோய்ந்துகிடந்தார் சிலகாலம் எனக்
கால இடையீடு கூறுவார் எவருமிலர். புறத்துக் காணப்படும் (2715) ஐவகை மன்றங்களினும் மிக்கதாய் அகத்துக் காணப்படும் நெஞ்சக மன்றத்து உயிர்க்கு உயிராய் நுண்பொருளாய் நிற்கும் மறைபொருள் ஒன்றுண்டு. அப்பொருளே சிவபெருமான். நெஞ்சக மன்றத்தின்கண் நிகழ்த்தும் நடிப்பே முதற்கண் நடித்த நடிப்பகும். மறவா வுணர்வாற் சென்று அச் சிவபெருமான் திருவடிக்கீழ் உறைபவர் அவனுடன் பின்னிப் புணர்ந்து மன்னி யின்புறும் அணைந்தோராவர். அணைந்தவர் திருவடியினைச் சேரும் ஆறு இதுவாம். ஆறு: வாயில்; வழி.

என இல்லை - என இல்லாமல். சென்றார் - சமாதியை அடையப் பயிற்சி செய்பவர். அங்கே - மோன சமாதியில். மறைப் பொருள் - பரமசிவம். ஆங்கணைந்தவர் - சமாதி கூடியவர்.

## 2897. காட்டுங் குறியுங் கடந்தவர் காரணம்

2897. காட்டுங் குறியுங் கடந்தவர் காரணம்
ஏட்டின் புறத்தில் எழுதிவைத் தென்பயன்
கூட்டுங் குருநந்தி கூட்டிடி னல்லது
ஆட்டின் கழுத்தில் அதர்கிடந் தற்றே.

ஆருயிர்களின் செவ்வி பார்த்துத் திருவருளே திருமேனியாகக்கொண்டு வெளிப்பட்டு வந்தருளும் சிவபெருமான் சிவகுருவாவன். அவனும் ஒருபுடையொப்பாகக் காட்டுவதன்றி நுகர்வினை முற்றவுணர்த்தலாகாமையின் காட்டுங் குறியும் கடந்தவன் சிவபெருமான் என்றருளினர். அவனே அடையும் காரணமாகிய பயிற்சிகளைக் கூறியுணர்த்தியவாறே இடையறாது பயிலுதல் வேண்டும். அங்ஙனமன்றி ஏட்டின் புறத்து எழுதிவைத்துக் கொண்டமையால் விளையும் பயன் யாது? திருவடியிணைக்கீழ் கூட்டுவித்தருளும் குருநந்தி கூட்டினால் அல்லாமல் வேறு நன்னெறிக்கு உய்க்கும் வாயில் இல்லை. மற்றுள்ள நூற்பயிற்சி முதலன அத்தனையும் ஆட்டின் கழுத்தில் பயனின்றித் தொங்கும் மடியோ டொக்கும். அதர்போன்று பயனிலவாம் என்க. வாயில் - வழி. மடி - முலை.

காட் . . . . பயன் - அடையாளத்துக் கொண்டு அப்பாற்பட்ட சிவத்தை அடையும் நெறியை ஏட்டில் எழுதிவைத்துக் கொண்டால் மாத்திரம் பயன் இல்லை. கூட்டும் . . . . . ல்லது - குரு உபதேசித்த நெறியில் நின்றால் அல்லது. ஆட்டி . . . . . தற்றே -

வெள்ளாட்டின் கழுத்தில் தொங்கும் பயனற்ற அதர்போல முடியும்.

## 2898. மறப்பது வாய்நின்ற மாயநன் நாடன்

2898. மறப்பது வாய்நின்ற மாயநன் நாடன்
பிறப்பினை நீங்கிய பேரரு ளாளன்
சிறப்புடை யான்திரு மங்கையுந் தானும்
உறக்கமில் போகத் துறங்கிடுந் தானே.

ஆருயிர்கள் அறியாமை வயப்பட்டுப் புலம்பு எய்தின. புலம்பு - கேவலம். பின்னர் அருளால் அவ் வறியாமையைத் தேய்த்து
மாய்த்தற்பொருட்டு மாயாகாரிய உடம்பினை எய்தின. எய்திப் புணர்வு நிலையையடைந்தன. அடைந்து மயக்கமுற்றன. புணர்வு - சகலம். இம் முறையால் அவ் வுயிர்கள் தம்மையும் தம்மைவிட்டுப் பிரியாது உடனின்று செலுத்தும் தலைவனையும் மறப்பதுவே தொழிலாகி உழல்கின்றன. அத்தகைய மறப்பிற்கு ஏதுவாய மாயாகாரிய உடம்பினையே அவ்வுயிர்கள் பெற்றிருக்கின்றன. அதனால் 'மாயநன் நாடன்' என்றனர். என்றும் பிறவாப் பெருமைசேர் முழுமுதல்வன் சிவன். அவன் பேரருளையும் உடையவன். பேரின்பப்பெருவாழ்வாம் சிறப்பினையுடையவனும் அவனே. பேரறிவுப் பெருந்திருவாம் திருவருளம்மையையுமுடையவன். அம் மங்கையும் தானுமாய் ஆருயிர்களின் யோகநிலையில் ஏற்படும் உறக்கமில்லாத பேரின்ப நுகர்வில் அச் சிவபெருமானும் அவ் வுயிர்களுடன் உடனாய் நின்று கண்டு காட்டும் பண்டைப் பண்பாளனாகலின் தானும் உடன் உறங்கிடுவன் என்க. ஈண்டு உறங்கிடுதல் நன்றாகத் தங்கிடுதல்.
"பிறவாப் பெருந்தெய்வம் பேணுசிவன் ஏனோர்

பிறப்பால் சிறுதெய்வம் பேசு"

என்பதனை நினைவுகூர்க. மேலும்,

"கரும்பினும் இனியான் தன்னைக் காய்கதிர்ச் சோதி யானை
இருங்கட லமுதந் தன்னை இறப்பொடு பிறப்பி லானை
பெரும்பொருட் கிளவி யானைப் பெருந்தவ முனிவ ரேத்தும்
அரும்பொனை நினைந்த நெஞ்சம் அழகிதா நினைந்த வாறே."

(4. 74 - 3)

என அப்பரருண் மொழியினையும் நினைந்தின்புறுக.

மறப்பது வாய் - மறப்பதுவே தொழிலாய். மாய நன்னாடன் - மாயா சரீரத்தை உடையவன். திருமங்கை - திருவருட் சத்தி. உறக்கமில் போகம் - சிவயோக சமாதி. உறங்கிடும் - அமைந்திருப்பான்.

## 2899. துரியங்கள் மூன்றும் கடந்தொளிர் சோதி

2899. துரியங்கள் மூன்றும் கடந்தொளிர் சோதி
அரிய துரியம் அதில்மீது மூன்றாய்
விரிவு குவிவு விழுங்கி யுமிழ்ந்தே
உரையில் அநுபூ திகத்தினுள் ளானே.

ஆருயிர்ச் செயலறல், அருட்செயலறல், அருளோன் செயலறல் என்னும் மூன்றும் முத்துரியம் என்ப. இம் மூன்று நிலையினையும் கடந்து ஒளிவிட்டுக்கொண்டிருக்கும் பேரொளிப்பிழம்பு சிவன். அம் மூன்றன் அப்பால் நிலையாகிய துரியாதீதமும் மூன்றாம் என்ப. அந்நிலைக்கண் ஆருயிர்க்கு விரிவு குவிவாகிய நினைப்பும் மறப்புமுண்டாகா. விழுங்கி உமிழ்தல் என்பது கொண்டும் ஒழிந்தும் வருதலில்லாத சொற்கழிவாகிய பேரின்பநுகர்வு நல்லார்தம் நுகர்வுணர் வாகுமேயன்றி வேறன்று. நுகர்வுணர்வு - அனுபவம். அந் நுகர்வுணர் வின்கண் நுகரின்பமாய்ச் சிவபெருமான் நீங்காதுறைந்தருள்வன்.

துரியங்கண் மூன்றும் - சீவதுரியம். சீவதுரியம் - பரதுரியம். அதன்மீது மூன்றாய் - சீவ, சிவ, பரதுரிய அதீதங்கள். விரிவு குவிவு - நினைப்பு மறப்பு. விழுங்கி உமிழ்ந்து - ஒழித்து. உரையில் - சொல்ல இயலாத. அநுபூதிகம் - அனுபவம்.

## 2900. உருவிலி யூனிலி யூனமொன் றில்லி

2900. உருவிலி யூனிலி யூனமொன் றில்லி
திருவிலி தீதிலி தேவர்க்குந் தேவன்
பொருவிலி பூதப் படையுடை யாளி
மருவிலி வந்தென் மனம்புகுந் தானே.

விழுமிய முழுமுதற் சிவபெருமான் மலம் வினைகளுக்கு ஈடாக வரும் உருவினையுடையவன் அல்லன். பிறப்பில்லாதவன். இயல்பாகவே மலமில்லாதவன். சென்றடையுந் திருவில்லாதவன். குற்ற மற்றவன். தேவர்கட்கும் தேவனாயுள்ளவன். ஒப்பில்லாதவன். பூதப் படைகளை யுடைமையாகக் கொண்டாள்பவன். தான் எல்லாப் பொருட்கும் சார்பாக இருப்பதல்லாமல் தான் ஒன்றையும் சார்ந்திருக்குந் தன்மையனல்லாதவன். இத் தன்மையாவன ஒன்பது ஒப்பில்பண்புகள் வாய்ந்த அவன் வலியவந்து அடியேன் உள்ளம் புகுந்தருளினன். திருவிலி: திரு + வில்லி = அழகிய பொன்மலையை வில்லாக வுடையவன் என்றலும் ஒன்று. மருவிலி என்பதற்குத் தொடக்குண்ணாதவன் என்றலும் ஒன்று. பூதம் என்பது ஆருயிர்களையே. இத் திருப்பாட்டு ஒருபுடையொப்பாக 'சிவஞ்சத்தி' என்னும் திருப்பாட்டின் பொருளின் கருவாகத் திகழும். 'வில்லி', 'விலி' என இடை குறைந்ததெனக் கொள்க.

ஊனிலி - மாயை இல்லாதவன். திருவிலி - திரு + வில்லி மேருவில்லி. மரு - குற்றம்.

## 2901. கண்டறி வாரில்லைக் காயத்தின் நந்தியை

2901. கண்டறி வாரில்லைக் காயத்தின் நந்தியை
எண்டிசை யோரும் இறைவனென் றேத்துவர்
அண்டங் கடந்த அளவிலா ஆனந்தத்
தொண்டர் முகந்த துறையறி யோமன்றே.

சிவபெருமான் ஆருயிர்களின் தவமார் உள்ளத்திடைப் பள்ளஞ்சேர் வெள்ளமென நீங்காது நின்றருள்வன். ஏனைப் புறத்துக் காணப்படும் திருக்கோவில் முதலியனவெல்லாம் உள்ளத்துள்ள நீங்கா இறைவனை நினைப்பூட்டும் வழியடையாளங்களாகும். இவ் வுண்மையினையுணர்ந்து உள்ளம் பெருங்கோவிலாக்கொண்டு நந்தி எழுந்தருளியுள்ள மெய்ம்மையினைத் திருவருள் நினைவால் கண்டறிவாரில்லை. எட்டுத் திசையினுமுள்ள மட்டிலன்பர் அனைவர்களும் சிவபெருமானையே முழுமுதல் இறைவனென்று தொழுது வணங்குகின்றனர். அண்டங்கள் அனைத்தையும் கடந்த அளவிடப்படாத பேரின்பத் திருத்தொண்டர்கள் தம் உணர்வுறு நுகர்வாய் உண்ணும் திருவடிப் பேரின்பத் துறையினை முறையுற அறவேயுணர நாம் அறியோம். அறவே - முற்றாக.

காயத்தின் - உடம்பினுள். முகந்த - அனுபவித்த.

## 2902. உடலாங் குகையில் உணர்வாகும் பீடத்து

2902. உடலாங் குகையில் உணர்வாகும் பீடத்து
அடலார் சமாதி இதயத்த தாக
நடமா டியகுகை நாடிய யோகி
மிடையாகா வண்ணம்சா திக்குமெல் வல்வே.

உடலென்னும் குகையில், உணர்வென்னும் இருக்கையில் மல முதலியவற்றை வெல்லும் திண்மைவாய்ந்த நிட்டைகூடும் நிலையம் நெஞ்சமாகும். இந் நெஞ்சத்தை இடமாகக்கொண்டு இறைவன் நடமாடு கின்றனன். யோகியர் அவனையே நாடிநிற்கின்றனர். திருவருள் நினைவால் இடையூறு ஒருசிறிதும் நேராவண்ணம் நிட்டையினை நிலைபெறச் செய்தின்புறுவர்.

உணர்வாகும் பீடம் - உள்ளம் மிடையாகா வண்ணம் - இடறு இல்லாமல்.

# 2903. தற்பர மல்ல சதாசிவன் தானல்ல

2903. தற்பர மல்ல சதாசிவன் தானல்ல
நிட்கள மல்ல சகள நிலையல்ல
அற்புத மாகி யநுபோகக் காமம்போற்
கற்பனை யின்றிக் கலந்துநின் றானன்றே.

முழுமுதற் சிவபெருமான் தற்பரத் திருவுருவாம் ஆண்டானு மல்லன். அதன்மேலுள்ள அருளோனுமல்லன். உருஉறுப்புக்கள் உடையனுமல்லன். அவை இல்லானுமல்லன். இன்னவாறுள்ளான் என்று எவராலும் கூறவொண்ணாததோர் வியத்தகு நிலையனாக வுள்ளவன் அவன். கருத்தொத்த காதலர் மருவி நுகர்ந்த அக் காமவின்பம்போல் அவன் நிலையும் அவன் திருவடியின்பமும் நுகர்வாம் நுண்ணுணர்வால் உணர்வனவாகும். நொடிப்பாம் கருவியுணர்வான் உணர வாராவென்க. அதனால் பொய்யெனப் புகலும் கற்பனையுமன்று மெய்யெனக் காணுமாறு கலந்து நின்றருளினன்.

## 2904. முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்

2904. முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்காள்
அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்
மகட்குத் தாய்தன் மணாளனோ டாடிய
சுகத்தைச் சொல்லென்றாற் சொல்லுமா றெங்ஙனே.

பொருளின் வடிவினை முகக்கண் கொண்டு பார்க்க முடியும் ஆனால் அப்பொருளின் முடியாப் பண்பினை அகக்கண்ணாகிய அறிவுக் கண்ணால் மட்டும் காணுதல்கூடும். அறிவுக் கண்ணால் காணப்படும் அம்மெய்ப்பொருளை முகக்கண்ணால் காணலாம் என்று நாடியும் நவின்றும் வருவார் மூடராவர். அவர்களையே நோக்கி முகத்திற்கண் கொண்டு காண்கின்ற மூடர்காள் என்றனர். மேலும் முகக்கண் பொருள்களைக் காணுங்கால் பொருட்கண்ணாகும். புலமை பெறுங்கால் புலமைக் கண்ணாகும்; நலம்புரியுங்கால் நாகரிகக்கண்ணாகும்; குறிப்புணருங்கால் அறிவுக் கண்ணாகும்; சிவத்தினையுணரத் துணை செய்யுங்கால் புண்ணியக் கண்ணாகும். திருவடிப் பேரின்பம் அகத்துக் கண்ணாகிய அறிவுக்
கண்ணான் நேரும். அதுவே அழிவில் பேரின்பம் எல்லையிலா நல்லின்பம். அத்தகைய பொய்யில்லாத - மெய்யான இன்பத்தினைத் தாந்தாமே தம் முணர்வான் நுகர்ந்தருந்தியுணர்வதன்றி நுவல்வது எவர்க்கும் ஒல்லாது. அதனை நுவல்க என நொடிவது பழியில் நகையே. நுவல்வது - சொல்லுவது. நொடிவது - சொல்லுவது. சொல்லொணாமையாற் பொய்யுமன்று. நல்லறிவும்,

மனைமாண்பும், புனையணியும், வினைத்திறனும், மக்கட்பேறும் உடைய ஒரு பெருங்குடித்தாயானவள் தன் காதற் கணவனுடன் மருவி ஓதற்கரிய இன்பமுற்றனள். இவ்வின்பினை உருவும், திருவும், பருவமும், குணனும், அறிவும், அன்பும், செறிவும் சேரப் பெற்ற தன்மகள் - தவப் பேற்றால் வந்த செல்வி உணர வினவின் அவட்கு உணர்த்துமாறெங்ஙனம்? உணருமாறு சூழ்வுண்டாக்கி எல்லா நலனும் ஒருங்குவாய்ந்த நல்லான் நம்பி ஒருவனுக்கு அவளைத் திருமணம் புரிவித்து அவன்றன் வாழ்க்கைத் துணையாய் வாழ்வித்த காலத்துத் தானே உணர்வள். இம்முறையே செவ்விவாய்ந்த ஆருயிர்கள் சிவகுருவின் திருவருளால் திருவடிக்கண் கூட்டப்பெற்றதும் அப்பேரின்பத்தினைத் தாமே நுகரும் முகக்கண்ணால் காணும் புறப்பொருள்கள் வாயிலாக நீங்கள் அடையுமின்பம் நிலையில் சிற்றின்பம். அத்துடன் அமைந்து விட்டால் மூடராவீர். அகக்கண்ணாகிய திருவருட்கண்ணால் உணர்வினின் நுகர்வாகக்காண்பதே நிலையுடைய பேரின்பம் என்றலும் ஒன்று.

# 2905. அப்பினில் உப்பென அத்தன் அணைந்திட்டுச்

2905. அப்பினில் உப்பென அத்தன் அணைந்திட்டுச்
செப்பு பராபரஞ் சேர்பர மும்விட்டுக்
கப்புறு சொற்பத மாளக் கலந்தமை
எப்படி யப்படி என்னுமவ் வாறன்றே.

வேறாய் நின்ற இருபொருள் பிரிக்கமுடியாவாறு ஒன்றாய்க் கலந்து இரண்டும் அழியாது ஒன்றாய்நிற்பதற்கு ஒப்பு உப்பும் அப்பும். ஆதலால் நீரிற்கலந்து கரைந்து ஒன்றாய்நிற்கும் உப்பென்று சொல்லும்படி அத்தனாகிய சிவபெருமான் ஆருயிருடன் அணைந்தருள்வன். அணையவே பொருளாகப் பராபரமாகிய பேருயிரென்றும் பரமாகிய ஆருயிரென்றும் பேசப்படும் ஆண்டானும் அடிமையும் ஆகிய இரண்டும் புணர்ப்பல் ஒன்றாகும். ஒன்றாங்கால் இறவா இன்பம் என்னும் ஒரு பெயரே பெறப்படும். கவர்பட்டுச் சொல்லும் நிலையும் மாறும். கவர்பட்டுச் சொல்வதாவது அவன் நான், அல்லது ஆண்டான் அடிமை, இன்பு அன்பு எனக் கூறுவன. திருக்கோவில் செல்வார் பலராய்ப் பல பெயருடையராய்க் காணப்படினும் அத் திருக்கோவிற் சார்பால் எல்லாரும் 'கோயிற் பிணாப்பிள்ளைகாள்' என்பது போன்று கோவிலார் என்றே பெயர் பெறுவர். இதுபோல், கல்லூரி, வகுப்பு, அலுவலகம், மணமனை முதலியனவும் சார்புநிலையால் ஒருபெயரே பெறுதல் காண்க. இதனைத் 'தன்நாமங் கெட்டாள்' என்னும் அப்பர்மொழியும் வலியுறுத்தும். கோப்பெருஞ் சோழன் தனக்கும் பிசிராந்தையார்க்கும்

உள்ள வேறன்மையைக் கூறப்போந்தபோது பிசிராந்தையார் 'தன்பெயர் கிளக்கும் காலை என்பெயர், பேதைச் சோழன் என்னும் சிறந்த, காதற் கிழமையும் உடையன்' என்பதும் இந்நிலையினை உணர்த்தும். மேலும் பின்னல், புணர்ப்பு, கலப்பு என மன்னும் பெயர்களும் அவ்வாறேயாம்.

# 2906. கண்டார்க் கழகிதாங் காஞ்சிரத் தின்பழந்

2906. கண்டார்க் கழகிதாங் காஞ்சிரத் தின்பழந்
தின்றார்க் கறியலாம் அப்பழத் தின்சுவை
பெண்டா னிரம்பி மடவிய ளானாற்
கொண்டான் அறிவன் குணம்பல தானே.

எட்டிப்பழம் தின்பாரைக் கொல்லும் தன்மைத்து. ஆனால் பார்ப்பாரைத் தன் வனப்பினால் ஈர்க்கும் தன்மைத்து. அதுபோல் மாயாகாரியமாகிய வுலகமும் தன்பாற் பற்றுக்கொண்டாரை மருட்டிப் பிறப்பில் புகுவிக்கும் தன்மைத்து. ஆனால் அது காண்பார்க்குக் கடல், மலை, கான்யாறு, நானிலப்பகுப்பு, நல்லுயிர் வாழ்க்கை முதலாக வுள்ளனவற்றால் மிக்கவனப்பினைக் காட்டி ஈர்க்கும் தன்மைத்தாக இருக்கிறது. எட்டிப்பழத்தை அறிவால் மருண்டு தின்றவர் உண்மை யறியுமாறுபோன்று உலகிடைச் சிக்குண்டவர் தாமே உண்மையறிவர். உருவும் திருவும் பருவமும் எய்திய ஒரு பெண்ணை அவை முற்றவும் உடையனாய் மணந்தவன் மட்டுமே அப் பெண்ணின் இன்பினை நுகர்ந்துணைர்ந்து எழிலுறுவன். அதுபோல் ஆருயிர்கள் சிவத்தைப் பேணிப் பேரின்பம் பெறுதல் வேண்டும். அம்முறையால் அவைகள் பெண்ணெனப்படும். பெண் நிலையில் ஆருயிர்கள் ஆண்டான் திருவடியின்கண் வேறறக் கூடும். அப்பொழுது திருவடியின்பத்தினை எய்தும் இவ்வுண்மை வரும் திருச்சிற்றம்பலக் கோவையாரின் திருப்பாட்டானும் உணர்க:

"சங்கந் தருமுத்தி யாம்பெற வான்கழி தான்கெழுமிப்
பொங்கும் புனற்கங்கை தாங்கிப் பொலிகலிப் பாறுலவு

துங்க மலிதலை யேந்தலின் ஏந்திழை தொல்லைப்பன்மா
வங்கம் மலிகலி நீர்தில்லை வானவன் நேர்வருமே."

காஞ்சிரம் - எட்டி. மடவியள் - மடந்தைப் பருவத்தினள்.
கொண்டான் - கணவன்.

## 2907. நந்தி யிருந்தான் நடுவுள் தெருவிலே

2907. நந்தி யிருந்தான் நடுவுள் தெருவிலே
சந்தி சமாதிகள் தாமே யொழிந்தன
உந்தியி னுள்ளே யுதித்தெழுஞ் சோதியைப்
புந்தியி னாலே புணர்ந்துகொண் டேனன்றே.

திருவருள் நினைவால், சிவகுருவருளால் அகத்தவப் பயிற்சியால் உள்ளத்தின் நடுவில் நந்தி எழுந்தருளியிருந்தனன். தாலி (2868) கட்டி முடிந்தபின் மணச் சடங்குப் பொருள்கள் தாமே கழிவன போன்று நந்தி எழுந்தருளினமையால் சந்தி சமாதிகள் தாமே அகன்றன. உள்ளத்தின்நடு - சித்தத்தின் மத்தி. மேல் வயிறாகிய மணி பூரகத்தினிடத்துத் தோன்றி மிக்கு எழும் திருவருள் பேரொளிப்பிழம்பாகிய சிவபெருமானை 'உயிராவணமிருந்து உற்றுநோக்' குதலாகிய உள்ளத்தினால் தள்ளரிய அடிமையாய்ப் புணர்ந்துகொண்டேன். புந்தி - உள்ளம்.

நடு உட்டெரு - சித்தத்தின் மத்தியில், அஃதாவது உள்ளத்தில். சந்தி - சமாதி; யோகமும் சமாதியும்.

## 2908. விதறு படாவண்ணம் வேறிருந் தாய்ந்து

2908. விதறு படாவண்ணம் வேறிருந் தாய்ந்து
பதறு படாதே பழமறை பார்த்துக்
கதறிய பாழைக் கடந்தந்தக் கற்பனை
உதறிய பாழில் ஒடுங்குகின் றேனே.

திருவருள் நினைவால் சோர்வுண்டாகாமல் தனித்திருந்து ஆராய்தல்வேண்டும். பழமறையாகிய 'சிவசிவ' என்னும் (2550) செந்தமிழ்த் திருமறையினை உணர்விற்கணித்து ஓவாவுறுதியுடன் நிற்றல்வேண்டும். இவ்விரண்டும் முறையே கைக்கூடினால் நம்மை மயக்கிக் கட்டுறுத்துக் கதறவைக்கும் பாழாகிய மாயை அடங்கியொடுங்கும்.
மாயை அடங்கி யொடுங்கவே, அப்பாற்பட்ட கற்பனைக்கு எட்டாத நனிமிகு வியப்பாய்த் தனிநிலைப் பொருளாய்த் தோன்றும் முழுமுதற் சிவத்தில் ஒடுங்குகின்றேன்.

விதறு - சோர்வு. வேறிருந்து - தனித்திருந்து. பதறுபடாது - பதையாது. கதறிய பாழ் - ஓட்டெடுக்கும் மாயை. அந்தக் கற்.........பாழில் - சிவத்தில்.

# 2909. வாடா மலர்புனை சேவடி வானவர்

2909. வாடா மலர்புனை சேவடி வானவர்
கூடார் அறநெறி நாடொறு மின்புறச்
சேடார் கமலச் செழுஞ்சுட ருட்சென்று
நாடார் அமுதுற நாடார் அமுதமே.

சிவவுலகினர் நறுமனம் கமழும் வாடாமாலையினைக் கொண்டு நாடொறும் முக்கணப்பனாம் சிவபெருமான் திருவடியிணையினைத் தொழுவர். அத்தகைய சேவடியினையுடைய சிவனை மனத்தால் ஓவாது உன்னி உழைத்தல்வேண்டும். அங்ஙனம் உழைப்பார் அறநெறியினைக் கூடுவர்; ஏனையார் கூடார் ஆருயிர்கள் நாடொறும் நிறையின்பம் முறையுற எய்துதற்பொருட்டுச் சிவபெருமான் அழகிய தாமரை மலரை யொத்த அவ்வுயிர்களின் நெஞ்சகத்தினுள் செழுஞ்சுடராய்ச் சென்று திகழ்கின்றனன். ஒன்றிய பெருஞ்சுடராய் நின்றும் அதனை இனிமையுற நாடார். அதனால் அவன் திருவடித் தேனமிழ்தினைத் தினைத்தனையும் நாடார்.

வாடா.........ஆனவர் - பரமசிவம். கூடார் - தம்மை அடையாதவர். கேடார் கமலம் - உள்ளக் கமலம். நாடார் - விரும்பார்.

## 2910. அதுக்கென் றிருவர் அமர்ந்தசொற் கேட்டும்

2910. அதுக்கென் றிருவர் அமர்ந்தசொற் கேட்டும்
பொதுக்கெனக் காமம் புலப்படு மாபோல்
சதுக்கென்று வேறே சமைந்தாரைக் காண
மதுக்கொன்றைத் தாரான் வளந்தரு மன்றே.

வாழ்க்கைத் துணைநலம் பெற்றச் சிறந்தது1 பெற வாழும் சீரியோர் காதலராவர். அவ்விருவரும் 'மனையறத்திலின்பமுறும் மகப் பெறுவான்வேண்டி' உடனுறைவின்பம் பெற்றுத் திடனுற வாழுதற் பொருட்டே திருமணம் புணர்ந்து மனையறம் புக்கனர். அவ்விருவரும் சிவனடி மறவாச் சிந்தையராய்க் குடும்ப வாழ்க்கையினையே தவநெறியாகக் கொண்டு ஒழுகுபவர் ஆவர். அவ்விருவரும் மகவுவேண்டுமென்று விரும்பி ஒருவரோ டொருவர் உரையாடுவர். அவ்வுரையினைக் கேட்டதும் காரணமுள்வழி அன்பு வெளிப்படுமாறு போன்று விரைவாக அவர்களிடையே காமம் வெளிப்படும். இவையனைத்தும் சிவபெருமான் திருவாணை என்று சிரமேற்கொள்ளும் வரத்தினர். அதுபோல் அகப்புறக்கலன்கள் நான்கும் மிக்பெரும் செவ்விவாய்த்து நனிமிகு விரைவில் உலகியலைத் துனியெனக் கொள்வர். கொண்டு திருவடி பூண்டு வாழச் சமைவர். அத்தகையாரைத் திருவுள்ளத்தாற் காண்பன் சிவன். கண்ட அப்பொழுதே தேன் துளிக்கும் கொன்றை மாலையினைத் திருவடையாள மாலையாகப் பூண்டு திகழும் சிவபெருமான் தன் திருவடிவளப் பேரின்பமுற்றும் ஈந்தருள்வன். சிவன்பெருமானுக்குக் 'கண்ணியும் தாரும் கார்நறுங்

கொன்றையே.' கண்ணி தலைமாலை. கொன்றையின் சிறப்பை வருமாறு நிறைவுகூர்க: ஆருயிர்கள் தம்முனைப்பை ஆண்டான்கொன் றையானான், ஏர்கொன்றை அக்குறிப்பாம் எண்.'

அதுக்கென்று இருந்தார் - காம இன்பத்தை அனுபவிப்பதற்கே இருந்தவர்களாகிய மங்கையருடைய. பொதுக்கென - விரைவாக.

## 2911. தானும் அழிந்து தனமும் அழிந்துநீ

2911. தானும் அழிந்து தனமும் அழிந்துநீ
டூனும் அழிந்து உயிரும் அழிந்துடன்
வானும் அழிந்து மனமும் அழிந்தபின்
நானும் அழிந்தமை நானறி யேனன்றே.

திருவருள் நினைவால் எழுந்தருளிய சிவகுருவின் மறையால் தானாகிய உடம்பு அழிந்தது. அழிந்தது என்பது பற்றகன்றது என்பதாம். ஈட்டும் பொருளும் அழிந்தது. வளமுள்ள ஊனும் அழிந்தது. உயிர்ப்பும் அழிந்தது. வான்முதலிய பூதங்களும் அழிந்தன. மனமும் அழிந்தது. இவையனைத்தும் பற்றற்றான் திருவடிக்கே பற்றுக்கொள்ளத் துணையாயினவென்பதே யழிந்ததென்பதாம். அங்ஙனமாகவே தன்முனைப்பாகிய நான் என்பதும் அழிந்தது. கதிர்வரவால் இருள் நீங்குதலும், மருந்துண்ண நோய் நீங்குதலும், திருத்துங்கல்வி கற்க அறியாமை நீங்குதலும், பொருள்வர வறுமை நீங்கலும், அருள்வர அகவிருள் நீங்கலும், மழைவரப் பீழை நீங்கலும் முதலியன இதற்கொப்பாகும். ஆனால் அவை எங்ஙனம் நீங்கின என அறியவாராமை போன்று இவையனைத்தும் அகன்றமை நானறியேனே என ஓதினர். இவற்றை அடியொற்றி எழுந்த திருவாசகச் செழும்பாட்டு வருமாறு:

"வான்கெட்டு மாருத மாய்ந்தழல்நீர் மண்கெடினும்
தான்கெட்ட லின்றிச் சலிப்பறியாத் தன்மையனுக்கு

ஊன்கெட்டு உயிர்கெட்டு உணர்வுகெட்டென் உள்ளமும்போய் நான்கெட்ட வாபாடித் தெள்ளேணங் கொட்டாமோ."

தான் - உடம்பு. தனம் - பொருள். ஊன் - மாமிசம். வான் - ஆகாயம். மனம் - நினைப்பு, மறப்பு. நான் - சீவபோதம்.

# 2912. இருளும் வெளியும் இரண்டையும் மாற்றிப்

2912. இருளும் வெளியும் இரண்டையும் மாற்றிப்
பொருளிற் பொருளாய்ப் பொருந்தவுள் ளாகி
அருளால் அழிந்திடும் அத்தன் அடிக்கே
உருளாத கன்மன முற்றுநின் றேனே.

இருளாகிய மறப்பும், வெளியாகிய நினைப்பும் என்னும் இரண்டினையும் திருவருள் நினைவால் மாற்றுதல்வேண்டும். மாற்றவே பொருள்கள் அனைத்தினும் சிறந்து செம்பொருளாய்த்திகழும் சிவத்துடன் பொருந்துதல் வாய்க்கும். வாய்க்கவே அச் சிவன் நாட்டத்தினுள்ளே எழுந்தருளி ஆட்கொண்டருள்வன். ஆட்கொள்ளவே காமம் வெகுளி மயக்கம் கையகன்றழியும். அழியவே அத்தனாகிய சிவபெருமான் திருவடிக்கண் முன் உருகாத மனம் உருகி நன்மனம் பொருந்தித் திருந்தநின்றேன். அதுவே அந்தமில் இன்பத்து அழிவில் வீடாகும். நாட்டம் - சித்தம்.

இருளும் வெளியும் - நினைப்பும் மறப்பும். பொரு . . . . . . பொருந்த பொருள்களுள் சத்துப்பொருளாய் அமைய. உள்ளாகி - உள்ளத்தில் எழுந்தருளி. அழித்திடும் - மோகத்தைக் கெடுத்த உருளாத - சென்று உருகாத.

## 2913. ஒன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன் பரபாரம்

2913. ஒன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன் பரபாரம்
ஒன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன் சிவகதி
ஒன்றிநின் றுள்ளே யுணர்ந்தேன் உணர்வினை
ஒன்றிநின் றேபல வூழிகண் டேனன்றே.

திருவருள் நினைவால் உள்ளம் ஒருங்கி உன்னினேன். உன்னலும், பராபரமாகிய பெரும்பொருளை யுணர்ந்தேன். அதுபோன்று சிவகதியினையும் உணர்ந்தேன். அதுபோன்று திருவடியுணர்வினையு முணர்ந்தேன். அதுபோன்று பலவூழிகளையும் கண்டுணர்ந்தேன். ஊழி - யுகமுடிவு. சிவகதி நிலையினை அப்பர் பெருமான் ஓதியருளும் வரும் அருமறையானும் உணர்க:

"கேடு மூடிக் கிடந்துண்ணு நாடது
தேடி நீர்திரி யாதே சிவகதி
கூட லாந்திருக் கோளிலி யீசனைப்
பாடு மின்இர வோடு பகலுமே."
(5. 56 - 9.)

ஒன்றிநின்று - ஒருமுகப்பட்டு. உணர்வினை - தத்துவ அறிவை. பல ஊழி - பல யுகங்கள்.

# 19. வரையுரை மாட்சி

19. வரையுரை மாட்சி 2914. தான்வரை வற்றபி னாரை வரைவது

2914. தான்வரை வற்றபி னாரை வரைவது
தானவ னானபி னாரை நினைவது
காமனை வென்றகண் ணாரை யுகப்பது
தூமொழி வாசகஞ் சொல்லுமின் நீரன்றே.

ஒருவன் ஒன்றிலும் பற்றில்லாமல் இருக்கவேண்டுமானால் பற்றற்றான் பற்றினைப் பற்றுதல்வேண்டும். நிலையிலா ஊசலில் இருப்பவன் நிலையாக நிற்கவேண்டுமானால் தரையில் நிற்றல்வேண்டும். இவ்வுண்மை மெய்கண்டார் அருளிய செந்தமிழ்ச் சிவஞானபோதத் தனி முழுமுதல் நூற்கண் "ஊசல் கயிறற்றால் தாய் தரையேயாந்துணையான்" எனவரும் ஏதுவான் உணர்க. தான் சிவபெருமானைப் பற்றியே ஏனைப் பற்றுக்களை விட்டமையால் பின்பு ஒன்றனையும் பற்றவேண்டுவது இன்று. அதனால் யாரை வரைவது என்று இயம்பினர். நிலத்தைப் பற்றிய பின்பே ஊர்தியை விலக்குவதும் நாடுக. அதுபோல் தான் திருவருளால் சிவனுடன்கூடிச் சிவனானபின் நினைப்பதற்கு ஒன்றும் இன்மையான் யாரை நினைப்பது என்றனர். ஒருவன் திருமந்திர ஏடு வாங்குவதன்முன் அதனை வாங்கவேண்டும் என்று பெருங்காதலொடு நினைப்பான். அதனை வாங்கிய பின்பு வாங்கவேண்டுமென்னும் நினைப்பு நீங்குவது இதற்கு ஒப்பாகும். ஆனால் பின் அவ்வேட்டினை ஓதியின்புறுவன். அதுபோல் திருவடியிணையினைச் சார்ந்த ஆருயிர்கள்

அதனை மட்டும் அறிந்து, பற்றி, அழுந்தி இன்புறும். அதனால் திருவடிசேர்ந்த ஆருயிர்க்குச் செயல் இல்லையென்பது மெய்யுணராதார் சொல்லும் பொய்யுரை என்க. காமம் வெகுளி மயக்கமாகிய முக்குற்றமும் நீங்கிய திருவடியுணர்வுக்கண் பெற்றாரை யுகப்பதும், அவர் பாடியருளிய திருநெறிய தமிழ்வாசகஞ் செப்புவதும் சிறப்பினுக்கு வாயில்களாகும். அதனைத் தெளிந்து கூறுவீராக. திருவடியுணர்வுக்கண்: திருவருட்கண்.

தான் - ஆன்மா. வரைவற்றபின் - பற்றுதல் அற்றபின். காமனை - மாதர் போகத்தை. வென்றகண் - வெற்றிகொண்ட அறிவினால்.

## 2915. உரையற்ற தொன்றை யுரைசெய்யு மூமர்காள்

2915. உரையற்ற தொன்றை யுரைசெய்யு மூமர்காள்
கரையற்ற தொன்றைக் கரைகாண லாகுமோ
திரையற்ற நீர்போல் சிந்தை தெளிவார்க்குப்
புரையற் றிருந்தான் புரிசடை யோனே.

மாற்றம் மனம் கழிய நின்ற மறையோன் சிவன். மாற்றம் - உரை. மறையோன் - நுண்ணியோன். சொல்லிறந்து நின்ற தொன்மைப் பொருளாம் ஒன்றைச் (1567) சொல்லுவேனென்று மடிதற்றுத் தான் முந்துறும்வாயிலாப் பேதையர்களே! எல்லையில்லாத ஒன்றை எல்லை கண்டுள்ளவாறு சொல்லுவார் யார்? நுகர்வுப் பொருளை நுவலவும் ஒண்ணுமோ! 'ஈறிலாப் பதங்கள் யாவையும் கடந்த இன்பமே என்னுடை அன்பே' என அடிகளும் அருளி அவனை நுகர்வுப் பொருளென நுவன்றனர். காற்றிலாவிடத்து அலையின் தோற்றம் இன்மையால் முந்நீர் தெளிந்திருக்கும். அதுபோல் சிவனைமறவா நாட்டத்தால் சிந்தை தெளிவார்க்குச் சிவபெருமான் மறைவின்றி அச் சிந்தையினுள்ளே வெளிப்பட்டருள்வன். அவன் பின்னல் திருச்சடையை உடையவன். பின்னல்: புணர்ப்பு; அத்துவிதம். சிவபெருமான் அகல் நிறைவு; ஆருயிர் அமைநிறைவு; மாறுலகு அடக்க நிறைவு. இவை முறையே வியாபகம், வியாப்பியம், வியாத்தி எனப்படும். சடைப் பின்னலும் பெரும்பாலும் தலைமுடியினை மூன்றாய் வகுத்து ஒன்றின்மேல் ஒன்றாய்ப் பின்னல். இதுவே சடை.

திருச்சடையின்கண் உள்ள சலமகள் நடப்பாற்றல்.
வளர்மதி ஆருயிர் ஐவாயரவு மாறுலகு.

## 2916. மனமாயை மாயைஇம் மாயை மயக்க

2916. மனமாயை மாயைஇம் மாயை மயக்க
மனமாயை தான்மாய மற்றொன்று மில்லை
பினைமாய்வ தில்லை பிதற்றவும் வேண்டா
தனையாய்ந் திருப்பது தத்துவந் தானே.

மாயையின் தொடக்கு அம் மாயைக்கண் மனம் பற்றினார்க்கே உண்டாம். பற்றாதார்க்கு இன்று. வளர்த்த விலங்கினம் வழிப்படுமாறு போல் சிவனை மறவா மனத்தினர்க்கு மாயையும் வழிப்படும் மனம் சிவத்தில் ஒடுங்கினால் மாயையும் ஒடுங்கி மாயும். மாயை மாயவே வினையும் செருக்கும் நினையாமுன் மாயும், வீடு அழிந்தால் வீட்டுறுப்புக்களும், புழங்கிய பண்டங்களும் பிறவும் உடன் மாயும்; இதற்கிவை ஒப்பாகும். அதுவேயன்றி மாயை இல்பொருள் என்று கூறுவது அடாது. அங்ஙனம் பிதற்றவும் வேண்டா? திருவருள் நினைவால் தனை ஆய்ந்திருப்பதே தத்துவ உண்மையாகும். தத்துவ ஆராய்ச்சி, சோதனை என்பனவும் இதுவே. ஆருயிர்களின் சிவனுக் கடிமை என்னும் உண்மையுணர்தலே தத்துவ வுணர்வால் தன்னை யுணர்தல். இதுவே சாலச் சிறந்ததாகும்.

மயக்க - சங்கற்பத்தை ஒழிக்க. மற்றொன்றுமில்லை - வேறு சாதனம் வேண்டாம். பினை மாய்வதில்லை - அதற்குமேல் மாள்வதற்கு வேறொன்று இல்லை.

# 20. அணைந்தோர் தன்மை

20. அணைந்தோர் தன்மை 2917. மலமில்லை மாசில்லை மானாபி மானங்

2917. மலமில்லை மாசில்லை மானாபி மானங்
குலமில்லை கொள்ளுங் குணங்களு மில்லை
நலமில்லை நந்தியை ஞானத்தி னாலே
பலமன்னி யன்பிற் பதித்துவைப் போர்க்கே.

விழுமிய முழுமுதற் சிவபெருமானை நந்தி யெனவும் அழைப்பர். அவனை அவனுடைய திருவடி ஞானத்தினாலே பேரன்பு பெருகி அவ் அன்பும் எத்திறத்தானும் மாற்றொணா உறுதியுடைத்தாய்க் கொண்டு மனத்தில் பதித்தல் வேண்டும். அப்படிப் பதித்து வைப்பார் சித்தாந்த சைவச் செந்நெறி யுலகத்துச் சீரியோராவர். அவர்கள் ஏனை யுலகோர் கட்டிக் கூறும் பொய்ந்நூல் = ஒழுக்கங்களைப் பெரிதெனக் கொள்ளார். அந்நிலையே, 'அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தை' என்னும் நிலையாகும். அவர்களுக்கு 1. ஒன்றாய் மூன்றாய் ஐந்தாய் விரிந்து பிணிக்கும் மலமில்லை. 2. அகம்புறம் தூயராதலின் மாசில்லை. அகத்தே ஐந்தெழுத்தும் புறத்தே திருவெண்ணீறும் சிவமணியும் கொள்ளுதலால் அகம்புறம் தூய்மையாகும். 3. ஒழுக்கம் பற்றாது கட்டுப்பாடு பற்றித் தோன்றும் மானாபிமானமில்லை. 4. உலகோர் வகுத்த ஒவ்வாக் குலமில்லை. 5. ஏனையோர் கொள்ளும் முக்குணங்களும் இல்லை. 6. தந்நலமில்லை. இவை யாறும் அற்றவரே அற்றவராவர். 'அகனமர்ந்த அன்பினராய்

அறுபகை செற்'றாரும் ஆவர். அபிமானம் - பற்று.
சிவமணி: கடவுட் கண்மணி; உருத்திராக்கம்.

பலமன்னி - உறுதியாக அடைந்து.

## 2918. ஒழிந்தேன் பிறவி யுறவென்னும் பாசங்

2918. ஒழிந்தேன் பிறவி யுறவென்னும் பாசங்
கழிந்தேன் கடவுளும் நானுமொன் றானேன்
அழிந்தாங் கினிவரு மாக்கமும் வேண்டேன்
செழுஞ்சார் புடைய சிவனைக்கண் டேனே.

'சார்பினால் தோன்றாது தானருவாய் எப்பொருட்கும், சார்பென நின் றெஞ்ஞான்றும் இன்பந்தகைத்'தாக விருப்பவன் சிவபெருமான். அன்பு நாவாகவும் இன்பு தேனாகவும் கொள்ளுதல் வேண்டும். அன்பும் இன்பும் ஒன்றானால் ஆரா அருஞ்சுவை உண்பாம். உண்பே அனுபவம். அனுபவம் - அழுந்தியறிதல். அத்தகைய செழுஞ்சார் புடைய சிவனை அவன் திருவடியுணர்வரல் திருவருள் தர உணர்வினுள் உணர்வாய்ப் புணர்ந்து நின்றுணர்ந்து ஓவா இன்புற்றேன். அதனால் ஒன்றாலும் ஒழிக்க வொண்ணாத எல்லையில் பிறவித் தொல்லையை ஒரு
வாறு ஒழிந்தேன். உறவென்று சொல்லப்படும் பாசம் அறவே கழிந்தது. கடவுளும் நானும் ஒன்றானோம். ஒன்றாதல் என்பது தெளிந்த பளிங்கிற் பதித்த மணிபோன்றும், மலரின் மருவும் மணம் போன்றும் அகல்வும் அமைவுமாய் ஒன்றாதல். மணி - செம்மணி; மாணிக்கம். அகல்வு - வியாபகம். அமைவு - வியாப்பியம். பிறந்திறந்துழலும் இளிவு வரும்வழி வேண்டேன். அழிந்தாங்கு என்பது இறந்தது போன்று மீண்டும் பிறந்திறந்துழலுதல். மேலும் நாரும் நறுமணப் பூவும்

கண்ணியாய்ச் சூடிமகிழ்கின்றோம். கண்ணியாக்கும்போது வேறாக இருந்த இரு பொருளும் புணர்ந்து ஒன்றாகின்றது. அம் முறையே புனிதப் புணர்ப்பிற்கு நனிமிகப் பொருந்திய துனியில் ஒப்பாகும். மாலை கட்டும்போது முதலில் நாரைக் கையில் வைத்து நார் தோன்ற அதனுடன் பூவைத்துக் கட்டுகின்றோம். இது கட்டு நிலை. நார் உயிராகும்; பூ உயிருக்கு உயிராகும். பூ ஒட்ட ஒட்ட நார் மறைந்து பூத்தோன்றுகின்றது. அப்பொழுது அது பூமாலை எனப் பெயர் பெறுகின்றது. நார் உள்ளடங்கிவிடுகின்றது. இஃது ஒட்டுநிலை. இதுவே ஒன்றாம் உண்மைக்கு ஒன்றாம் ஒப்பு. 'கட்டுங்கால் நார்முன்னாம் கண்ணியாங் காற்பூமுன், ஒட்டிலிறை முன்னுயிர்பின் ஓது' என்பதனை நினைவு கூர்க. மேலும், "ஆணவத்தோ டத்துவிதம் ஆணபடி மெய்ஞ்ஞானத் தாணுவினோ டத்துவிதம் சாரும்நாள் எந்நாளோ." என்பதுங் காண்க.

## 2919. ஆலைக் கரும்பும் அமுதும்அக் காரமுஞ்

2919. ஆலைக் கரும்பும் அமுதும்அக் காரமுஞ்
சோலைத்தண் ணீரும் உடைத்தெங்கள் நாட்டிடைப்
பீலிக்கண் ணன்ன வடிவுசெய் வாளொரு
கோலப்பெண் ணாட்குக் குறைவொன்று மில்லையே.

திருவருள் நினைவால் திருவடியுணர்வால் அத் திருவடிக்கண் அழுந்தியறிதலாகிய தன்னுகர்வு நாட்டில், ஆலையிலிட்டு எடுத்த கரும்பின்சாறும், அமுதாகிய நல்லாவின் தூய பாலும், வெல்லக் கட்டியும், வானாளவும் வண்தருக்கள் நிறைந்துள்ள சோலை நாப்பண் வற்றா ஊற்றாய் முற்றப்பருக உற்று நிற்கும் இனிய தண்ணீரும் உண்டு. மயிற்பீலி போலும் நனிமிகு வியத்தகு வடிவுகளை அவ்வப்பொழுது படைத்தளித்தருளும் செல்வி அருட்பெருந் திருவாகும். அவளே கோலப் பெண்ணாவாள். அவளே வனப்பாற்றலினளாவள். அத்தகைய உலக அன்னையைச் சார்ந்த மெய்யடியார்கட்குக் குறை வொன்றும் இல்லை என்க. ஆருயிர்களைக் கோலஞ் செய்யும் அன்னை கோலப் பெண்ணாள் என்று கூறைப்பட்டாள். கோலஞ் செய்தல் - வனப்புறுத்தல்; அழகு படுத்தல்; ஒப்பனை செய்தல். சீலத்தார் பெறுபயன் ஆலைக் கரும்பு. நோன்பினர் பெருபயன் அமுது. செறிவினர் பெறுபயன் செறிந்தகட்டி. அறிவினர் பெறுபயன், சோலைத் தண்ணீர். சோலைத்தண்ணீர்; உம்மைத் தொகையாய்ச் சோலையும் தண்ணீரும் எனப் பொருள் தந்து சோலை திருவடி

நீழலையும், தண்ணீர் திருவடிப் பேரின்பத்தையும் குறிப்பனவாகும்.

## 2920. ஆராலும் என்னை அமட்டவொண் ணாதினிச்

2920. ஆராலும் என்னை அமட்டவொண் ணாதினிச்
சீரார் பிரான்வந்தென் சிந்தை புகுந்தனன்
சீராடி யங்கே திரிவதல் லால்இனி
யார்பாடுஞ் சாரா அறிவறிந் தேனன்றே.

பொறிபுலன் கரணம் ஆகிய இவை பெறும் உயிர்க் கிழவர் யாராலும் என்னை இனிமேலும் கட்டுறுத்த ஒண்ணாது. காரணம், சீரார் பிரானாகிய சிவபெருமானும் எளியேன் நாட்டத்தினுள் புகுந்து நிறைந்து நின்றருளினன்; அதனான் என்க. சிவனடியார் என்னும் சிறப்புநிலை உறப்பெற்று நீங்கா வாழ்வுற்று ஆங்குந் தூங்குகின்றேன். இனி என்ன நேரினும் சிவனை நினையாச் சிறப்பிலார் எவர் பாலும் சேர்வதில்லை. அங்ஙனம் சாராதிருக்கும் அறிவினைத் திருவருளால் ஒருவா வண்ணம் பெற்றனன். அதனால் இனி யார் பாடும் அணுகேன் என்றோதினர். அமட்டுதல் - கட்டுறுத்தல். சிந்தை - நட்டம்.

## 2921. பிரிந்தேன் பிரமன் பிணித்ததோர் பாசந்

2921. பிரிந்தேன் பிரமன் பிணித்ததோர் பாசந்
தெரிந்தேன் சிவகதி செல்லு நிலையை
அரிந்தேன் வினையை அயில்மன வாளால்
முரிந்தேன் புரத்தினை முந்துகின் றேனே.

பண்டே புல்லிய மலநோய் நீங்குதற் பொருட்டுப் படைப் போனால் கூட்டிப் பிணிக்கப்பட்ட வினைமாயைகளைப் பாசம் என அருளால் தெரிந்தேன். அதனால் மும்மலப் பிணிப்பினின்றும் பிரிந்தேன். என்றும் பொன்றாச் சிவநிலையினை (2913) அவ் வருளாலே தெரிந்தேன். அந் நிலையினை எய்தும் நெறியினையு முணர்ந்தேன். திருவைந்தெழுத்தை இடையறாது மருவும் = மனம் ஞான அயில்வாளாகத் திகழும். அதனால் வினைப் பிணிப்பினை அறுத்தேன். வினைப் பிணிப்பறலால் முப்புரமனைய இவ் வுடல் இடை முரிந்து இற்றொழியுமாறு செய்தேன். திருவடிப் பேற்றினை எய்துமாறு முந்துகின்றேன்.

முரிந்தேன் - கெடுத்தேன். புரத்தினை - உடம்பினை.

# 2922. ஒன்றுகண் டீர்உல குக்கொரு தெய்வமும்

2922. ஒன்றுகண் டீர்உல குக்கொரு தெய்வமும்
ஒன்றுகண் டீர்உல குக்குயி ராவதும்
நன்றுகண் டீர்இனி நமச்சிவா யப்பழந்
தின்றுகண் டேற்கிது தித்தித்த வாறன்றே.

காரியவுலகம் பலவாயினும் காரணமாயை ஒன்றே. அப்பொருண் முதற் காரணத்தினின்றும் பல காரியத்தையும் உண்டாக்கி உதவும் வினைமுதலாகிய நிமித்த காரணமும் ஒன்றே. அக் காரிய ஆக்கப்பாட்டைப் பெற்றுப் பயன் எய்துவதும் உண்பதும் பலவாம். ஆக்கப்பாடெய்துவதற்குத் துணை நிற்கும் துணைக்காரணமாகிய அறிவாற்றலும் ஒன்றே. அவ் வறிவாற்றலுக்குத் துணை அறிவில் ஆற்றலாம் கருவிகள் பல. இக் கருவிகளும் ஆக்கப்பாடுகளே. எனவே ஆக்குவோன் ஆக்க முதல் ஆக்கத்துணை ஆகிய காரணங்கள் ஒவ்வொன்றே. ஆக்கப்பாடுகளும் அவ் வாக்கப்பாட்டைப் பெறறுப் பயன் துய்க்கும் ஆக்கப்பாடும் ஆக்கமுதலும் இல்லாத ஆருயிர்களும் பல என்க. ஆக்குவோன், ஆக்க முதல், ஆக்கப்பாடு, ஆக்கத்துணை, ஆக்கக்கோள் எனப்பொருள் ஐந்தாம். இவை திருவைந்தெழுத்தால் பெறப்படுவனவுமாம். ஆக்குவோன் சிறப்பு, ஆக்கமுதல் ஆக்கப்பாடுகள் மறைப்பு, ஆக்கத்துணை வனப்பும், நடப்பும், ஆக்கக்கோள் யாப்பு. இம் முறையான் பல்வேறு உலகங்கட்கும் தெய்வம் ஒன்றே காண்மின். அது நடப்பென்னும் ஆதியாகும். எனவே உடம்பொடு புணர்த்தலென்னும் உத்தியால் மறைப்பும்

ஈண்டே பெறப்படும். உலகையும் ஆருயிர்களையும் கட்டு நிலையில் நடத்தும் திருவருள் நடப்பு. ஒட்டு நிலையில் நடத்தும் திருவருள் வனப்பு இவ் விரண்டும் ஈண்டு உலகென ஓதப்பெற்றன. இவ் வுலகுக்கு உயிராவது சிறப்பு. ஆருயிரையும் அவ் ஆருயிர்க்குப் பேரின்பம் அருளும் பேருயிராம் சிவபெருமானையும் பழுக்கச் செய்வது வனப்பு. அப் பழத்தை யுண்டு என்றும் பொன்றாது இயைந்து நின்று இன்புறுவது யாப்பு. அதுவே 'நன்று கண்டீர் இனி நமச்சிவாயப் பழம்' என்று ஓதப்பெற்றதை நுகரும் உரிமையுடையது. இனி என்பது இனிப்பு என்பதன் முதனிலை இனிப்பையுடைய பழம் என்றாகும். திருவருளால் அதனைச் சார்ந்து அஃதூட்டத் தின்று கண்ட அடியேனுக்கு அது தெவிட்டா இனிப்பாய் இன்பாய்த் திகழ்கின்றது. சிவபெருமான் நால்வேறு நிலையினனாய் நின்று உலகு உயிர்களை நடத்துகின்றனன். அவை கடந்தநிலை, காரணநிலை, கடத்துநிலை, கலப்புநிலை என்பன. இவை முறையே சிறப்பு, நடப்பு, வனப்பு, மறைப்பு, யாப்பு என்பனவற்றைக் குறிப்பனவாம். கலப்பு நிலையின்கண் மறைப்பும் யாப்பும் அடங்கும். இவ் வுண்மை யனைத்தும் அங்கை நெல்லிக்கனியென விளக்கும் மங்காச் சிவஞானசித்தியாரின் திருப்பாட்டு வருமாறு:

"உலகினை யிறந்து நின்ற தரனுரு வென்ப தோரார்
உலகவ னுருவிற் றோன்றி யொடுங்கிடு மென்று மோரார்
உலகினுக் குயிரு மாகி யுலகுமாய் நின்ற தோரார்
உலகினில் ஒருவன் என்பர் உருவினை யுணரா ரெல்லாம்."

(1. 2 - 21.)

இந் நிலை நான்கும் வருமாறு நினைவு கூர்க: கடந்தகா ரண்ணம் கடத்தல் கலப்பாம், உடலின்பம் வேறுடனாய்

ஒன்று. கடந்தநிலை பேரின்பப் பெருவடினனாகிய சிவபெருமானைக் குறிக்கும் குறிப்பாகும். அஃது உடலின்பம் எனக் குறிக்கப்பட்டது. இன்பவுடல் என மாறுக. அவன் ஐயஞ்சின் அப் புறத்தான் என்றும் ஓதப் பெறுவன். ஐயஞ்சாவன: ஐவகையஞ்சு: அவை பூதம் 5 பொறி 5, எண்ணம், மனம், எழுச்சி, இறுப்பு, குணம் 5, ஊழி, ஊழ், உழைப்பு, உணர்வு உவப்பு (அராகம்) 5, அத்தன், அன்னை, அருளோன், ஆண்டான், ஆசான் 5. என்பன.

## 2923. சந்திரன் பாம்பொடுஞ் சூடுஞ் சடாதரன்

2923. சந்திரன் பாம்பொடுஞ் சூடுஞ் சடாதரன்
வந்தென்னை யாண்ட மணிவிளக் கானவன்
அந்தமும் ஆதியும் இல்லா அரும்பொருள்
சிந்தையின் மேவித் தியக்கறுத் தானன்றே.

ஆருயிர் நினைவாம் திங்களும், ஐம்புலன் நினைவாம் பாம்பும்,திருவருள் வெளியாம் சடைக்கண் அவற்றின் பிறப்புப் பகையை அகற்றி ஆருயிர் சிறப்புற ஐம்புலனும் துணையாக நிற்குமாறு பணித்தருளுபவன் சிவன். அக் குறிப்பே திங்களும் அரவும் சூடும் திருக்குறிப்பாகும். அத்தகைய திங்களும் பாம்பும் சூடும் திருச்சடையினைடையவன் சிவன். வலிய வந்து எளியேனை ஆட்கொண்டருளும் வரம்பிலா இயற்கைப் பெரும் பேரறிவுடைய மணி விளக்கானவன் சிவன். முடிவும் முதலுமில்லாத 'மாற்றம் மனம் கழிய நின்ற மறையோ' னானவன் சிவன். அத்தகைய அரும் பெரும் பொருளாகிய அவன் 'யாவர்க்கும் மேலாம் அளவிலாச் சீருடையான்' 'யாவர்க்குங் கீழாம் அடியேனை' ஆட்கொண்டு அடியேன் எண்ணத்தின்கண் வண்ணமுற வீற்றிருந்தருளினன். அதனால் அடியேன் யான் எனது என்னும் செருக்காகிய தியக்கை அறுத்தனன். திருவடி முயக்கை உறுதல் உற்றேன்.

## 2924. பண்டெங்கள் ஈசன் நெடுமால் பிரமனைக்

2924. பண்டெங்கள் ஈசன் நெடுமால் பிரமனைக்
கண்டங் கிருக்குங் கருத்தறி வாரில்லை
விண்டங்கே தோன்றி வெறுமன மாயிடில்
துண்டங் கிருந்ததோர் தூறது வாகுமே.

(ப. இ .) சிவபெருமான் தொன்மைக்கண் படைப்பாதி ஐந்தொழிலைக் கூட்டொருவரை வேண்டாக் கொற்றவனாய் நின்று திருவருள் வழியாகத் திருவுள்ளத்தளவானே புரிந்தருள்வன். அக் காலத்து நெடுமால் பிரமனையும் வடுவிலா அவனே படைத்துக் காத்தருள்வன். ஊழிக்காலத்து அவர்களையும் ஒடுக்கி மீண்டும் படைத்தருள்வன். இவ் வுண்மையினை அறிவார் அரியர். அங்கு விண்டுவாகிய மேகம்போற்றோன்றும் திருவடிப் பேரின்பப் பெரு வெள்ளத்தின்கண் உள்ளம் பதிதல் வேண்டும். அங்ஙனம் பதிதற்கு வேறு எதனையும் எண்ணாத திண்ணஞ் சேர் எண்ணம் வேண்டும். அதுவே வெறுமனம். அதுவே தூயவிருக்கை. அந் நிலை எய்தினால் அனைத்துலகினுக்கும் அப்பாலாய்ப் பொருள் தன்மையில் துண்டாக நிற்கும் சிவபெருமான் கலப்புத் தன்மையில் ஒன்றாய் உடனாய் ஒருங்கிருப்பன். அத்தகைய தூய வுள்ளப் பள்ளியறை அவனுக்குத் தூறாகிய இருக்கையாகும்.

கண்டு - படைத்து. விண்டு - சிவானந்தம்.

## 2925. அன்னையும் அத்தனும் அன்புற்ற தல்லது

2925. அன்னையும் அத்தனும் அன்புற்ற தல்லது
அன்னையும் அத்தனு மாரறி வாரென்னை
அன்னையும் அத்தனும் யானும் உடனிருந்து
அன்னையும் அத்தனை யான்புரந் தேனன்றே.

ஈன்ற தாய் தந்தையரை அன்பு ஒன்றே காரணமாகக் கொண்டு அறிவதன்றி வேறு எதனைக் காரணமாகக் கொண்டு அறிய முடியும்? முடியாதென்பதாம். அக் குறிப்பு 'என்னை' என்பதனால் பெறப்படும். அன்னையாகிய திருவருளோடும், அத்தனாகிய பெரும் பொருளோடும் அடியேனும் உடனிருந்தேன். கூடியிருந்து அவர்கள் மாட்டு அளவிலாப் பேரன்பாம் பெருங்காதல் கொண்டமையால் அவர்களுக்கு அடிமையாய் நின்று அவர்தம் நிறைவிலடங்கி அவர்களை உணர்வின்கண் உணர்ந்தேன். உணரவே நொசிப்பாகிய சமாதியால் என்னுள் நீங்காவாறு மன்ன அமைத்தேன். இதுவே சமாதி என்னும் மயலுறுஞ் செயலறு நிலை; உயலுறுஞ் செயலுறும் நிலை.

அன்னை - திருவருள் சத்தி. அத்தன் - சிவன். யான் - உயிர்.

## 2926. கொண்ட சுழியுங் குலவரை யுச்சியும்

2926. கொண்ட சுழியுங் குலவரை யுச்சியும்
அண்டரும் அண்டத் தலைவரும் ஆதியும்
எண்டிசை யோரும்வந் தென்கைத் தலத்துளே
உண்டனர் நானினி உய்ந்தொழிந் தேனன்றே.

எங்குமாய் நீக்கமற நிறைந்து நிற்கும் சிவபெருமான் 'தானே உலகாம்' தன்மையன். அவன் 'தமியேன் உளம் புகுந்'தருளினன். அதனால் 'இன்று யானே உலகென்பன்' என்பதற்கிணங்கக் கடல், சிறந்த பனிமலையுச்சி, அண்டர்கள், அண்டத் தலைவர்கள், ஆதியாகிய அரன், எண்புலக் காவலர் முதலாகிய அனைவரும் என் வயப்பட்டனர். என்னை யெனின்? சிவபெருமான் என் வயப்பட்டதால் என்க. வேந்தற்கு வயப்பட்டார் அனைவரும் வேந்தன் உரிமைக்கும் வயப்படுவதிதற் கொப்பாகும். இவ் வுண்மை "தொழப்படும் தேவர்தம் மால் தொழுவிக்குந்தன் தொண்டரையே" என்னும் அப்பர் அருண்மொழியான் உணர்க. வயப்படவே அடியேனும் உய்ந்தொழிந்தேன். உரிமை - மனைவி.

சுழி - கடல். அண்டத் தலைவர் - இந்திரர். ஆதியும் மாயையும் உண்டனர் - வசப்பட்டனர்.

## 2927. நமன்வரின் ஞானவாள் கொண்டே எறிவன்

2927. நமன்வரின் ஞானவாள் கொண்டே எறிவன்
சிவன்வரின் நானுடன் போவது திண்ணம்
பவம்வரும் வல்வினை பண்டே யறுத்தேன்
தவம்வருஞ் சிந்தைக்குத் தானெதி ராரே.

பிறப்பு இறப்புகட்கு உட்படும் ஆருயிர் சிவனை மறந்தவுயிர். அவ்வுயிர் சிவனை நினைப்பதற்கும் பிறவாமையிற்றிளைப் பதற்குமாக நமன்முன் செல்லும். இவ்வுண்மை வரும் போற்றிப் பஃறொடையடிகளான் உணர்க:

## 41."வானாடர் கோமுதலாய் வந்த பெரும்பதத்து

41."வானாடர் கோமுதலாய் வந்த பெரும்பதத்து
நானா விதத்தால் நலம்பெறுநாள் - தான்மாள
வெற்றிக் கடுந்தூதர் வேகத் துடன்வந்து
பற்றித்தம் வெங்குருவின் பாற்காட்ட - இற்றைக்கும்
இல்லையோ பாவி பிறவாமை என்றெடுத்து
நல்லதோர் இன்சொல் நடுவாகச் - சொல்லியிவர்
செய்திக்குத் தக்க செயலுறுத்து வீரென்று
வெய்துற் றுரைக்க விடைகொண்டு. . . . ."

அத்தகைய நமன்றன் வெந்தூதுவர் சிவனைமறவா நமக்கு உறவாவர். மறந்து வருவரேல் அடியேன் சிவன்றன் மீளாவடிமை என்று தாமே உணருமாறு அவன்றன் அடையாளமாகிய திருவைந்தெழுத்துப் படைக் கலத்தை வெளிப்பட வழுத்துவேன். இதுவே ஞானவாள். 'ஞானவாள் ஏந்துமையர்' என்பதும் இப்பொருட்டு. சிவபெருமான்றன் தூதுவர் வருவராயின் அடியேன் வணங்கி உடன்செல்வது மாறா உறுதியாகும். பிறப்பிற்கு ஏதுவாகிய இருள்சேர் இருவினைகளையும் திருவருளால் பண்டே அறுப்பித்துள்ளேன். 'சிவத்தைப் பேணில் தவத்திற்கு அழகு' என்பது செந்தமிழ் முதுமொழி அத்தகைய சிவத்தைப் பேணும் சிந்தையர்க்கு எதிராவர் யாரே? ஒருவரும் இலர் என்பதாம். 'எதிராமே ' என்னும் பாடத்திற்குத் தவம் வரும் சிந்தையர்க்குச் சிவபெருமான் வெளியாவர் எனக் கூறுக.

## 2928. சித்தஞ் சிவமாய் மலமூன்றுஞ் செற்றவர்

2928. சித்தஞ் சிவமாய் மலமூன்றுஞ் செற்றவர்
சுத்தச் சிவமாவர் தோயார் மலபந்தங்
கத்துஞ் சிலுகுங் கலகமுங் கைகாணார்
சத்தம் பரவிந்து தானாமென் றெண்ணியே.

இடையறாது திருவைந்தெழுத்தையே கணிக்கும் நற்றவப் பேற்றால் கணிப்போர் நெஞ்சகம் சிவனிருக்கையாய் சிவவடிவாய்த் திகழும். அச் சிவபுண்ணியப் பேற்றினர் மும்மலப் பிணிப்பும் அற்றவ ராவர். அத்தகையோர் இயல்பாகவே முக்குணமற்றவராய், மிக்க எண்குணம் உற்றவராய் உள்ள சிவபெருமான் அடியவராவர். சிவனடியாராதலே சிவனாதல். அது, "பெருமையால் தம்மையொப்பார் பேணலால் எம்மைப் பெற்றார்" என்னும் சேக்கிழார் திருமொழியால் உணரலாம். முக்குணம் மாயாகாரியம். எண்குணம் மாயாத திருவருட் காரியம். மலப்பசையாகிய வாசனைப் பிணிப்பிலும் தொடக்குறார். எனவே அவர்கள்பால் பிதற்றுரையும், சிறு சண்டையும், பெரும் பெரும் பூசலும் உண்டாகா. சொல்லும் பொருளும் பரவிந்துவாகிய மாயாகாரிய மென்று விட்டொழிவர். பரவிந்து: நாதவிந்துக்களைப் பயக்கும் மாமாயை.

## 2929. நினைப்பும் மறப்பும் இலாதவர் நெஞ்சம்

2929. நினைப்பும் மறப்பும் இலாதவர் நெஞ்சம்
வினைப்பற் றறுக்கும் விமலன் இருக்கும்
வினைப்பற் றறுக்கும் விமலனைத் தேடி
நினைக்கப் பெறிலவன் நீளிய னாமே.

நினைப்பும் மறப்பும் சிவனைக் கலவாது வேறிருக்கும் நிலையில் நிலவுவன. இவ்விரண்டும் இல்லாதவர் நெஞ்சம் வினைப் பற்றறுக்கும் விழுமிய நெஞ்சமாகும். படிக்கவேண்டுமென்னும் நினைப்பும் படித்தபின் மறப்பும் பாடம் கைவரப்பெறாத முற்றாநிலையின்கண் உண்டாம். பாடம் கைவந்தபின் அவை இரண்டும் உளவாகா. அதுபோல் இறைவன் திருவடிக்கலப்பு எய்தியபின் நினைப்பும் மறப்பும் தாமாகவே அகலும். கற்புறுநல்லார் சொல்லரும் கழுத்தில் மாண்கலமாம் திருத்தாலி (2868) பூட்டப்படுவதன் முன்பூட்ட வேண்டுமே என்னும் நினைப்பும் கால இடையீட்டால் அதன்கண் மறப்பும் உண்டாவன இயற்கையேயாம். திருத்தாலி கழுத்தில் பூட்டப்பட்டதன்பின் அத் திருத்தாலி தாமாகவே அந்நல்லார் திகழ்வர். அதுபோன்றதே சிவபெருமானாகவே நிற்றல். அங்ஙனம் நிற்பார்தம் வினைப்பற்றுத் தாமே அறுபடும். வினைப்பற்றறவே விமலன் மேலோங்கி விளங்குவன். வினைப்பற்றறுக்கும் விமலனை நாடி இடையறாது ஒழுகப்பெறின் என்றும் ஒன்றுபோல் நின்று இயலும் இயல்பினனாவன்.

## 2930. சிவபெரு மானென்று நானழைத் தேத்தத்

2930. சிவபெரு மானென்று நானழைத் தேத்தத்
தவபெரு மானென்று தான்வந்து நின்றான்
அவபெரு மானென்னை யாளுடை நாதன்
பவபெரு மானைப் பணிந்துநின் றேனே.

திருவருட்டுணையால் சிறப்பும் வனப்பும் பெருமையும் இயல்பாகவே ஒருங்குடைய சிவபெருமானென்று அடியேன் காதலால் கசிந்துருகிக் கண்ணீர் மல்கநின்று மெல்லிய இனிய தமிழால் வல்லை அழைத்தேன். அழைத்தலும் அவன் தாழ்சடைப் பொலிந்த அருந்தவத் தோனாதலின் முழுநீறு பூசிய முனிவனாய்த் தவக்கோலத்துடன் தவப் பெருமானாக எழுந்தருளிவந்து காட்சி தந்தருளினன். அவமாகிய பற்று அற்ற பெருமானும் அவனே. அதனால் அவன் பற்றற்றான் என்று பரவப்படுகின்றனன். அவனே அடியேனை ஆளுடைய நாதன். உண்மைப் பெருமானாய் உலக முழுமுதல்வனாய் என்றும் பொன்றாதுநின்று நன்றருளும் நம்பனை 'நமசிவய' என நற்றமிழால் பற்பல்காலம் வாழ்த்திப் பணிந்து நின்றேன்.

## 2931. பணிந்துநின் றேன்பர மாதி பதியைத்

2931. பணிந்துநின் றேன்பர மாதி பதியைத்
துணிந்துநின் றேன்இனி மற்றொன்றும் வேண்டேன்
அணிந்துநின் றேனுடல் ஆதிப் பிரானைத்
தணிந்துநின் றேன்சிவன் தன்மைகண் டேனே.

யாவர்க்கும் எவைக்கும் யாண்டும் மேலாகவும் முழுமுதற் காரணமாகவும் விளங்கும் சிவபெருமானைத் திருஅருளால் பணிந்து நின்றேன். 'பணிதல் எல்லார்க்கும் நன்றாம்' என்னும் பண்பினை மறவாது துணிந்து பணிந்து நின்றேன். அச் சிவபெருமான் புகலே மாறாப் புகலெனத் துணிந்து நின்றேன். அதனால் இனி மற்றொன்றும் வேண்டேன். உடலாகிய உள்ளத்தின்கண் அவனை அணியாக அணிந்து சேர்ந்து நின்றேன். ஆதிப்பிரான் அடியிணைக்கீழ் அடங்கினமையால் எல்லா அல்லலும்போய் அமைதிபெற்று நின்றேன். சிவனே விழுமிய முழுமுதல் என்றும், இறப்புப் பிறப்பில்லா இறைவனென்றும், எட்டுவான் குணத்து எம்மான் என்றும், பிழைபொறுக்கும் விழைதகு பெரியோனென்றும், ஆருயிர்கட்கு இறவா இன்பப் பெருவாழ்வாம் சிறப்பருளும் செம்பொருளென்றும், இயற்கை உண்மை அறிவு இன்பப் பண்ணவனென்றும், இயற்கை அன்பு அறிவு ஆற்றல்சேர் 'வினையினீங்கி விளங்கிய அறிவுசேர் முனைவன்' என்றும், ஒன்றாய் வேறாய் உடனாய் நிற்கும் என்றும், பொன்றா இனியன் என்றும், 'போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணிய' னென்றும், ஐந்தொழில்

அருளால் புரியும் மைந்துசேர் மன்றவாணனென்றும், 'சிவனெனும் நாமம் தனக்கே உடைய செம்மேனி எம்மான்' என்றும், செம்பொருட்டுணிவினர்தம் சீருடைநெஞ்சகம் அகலா ஏருடை ஏறோனென்றும், 'பொக்கமிலாதவர் நெஞ்சில் புக்குநிற்கும் பொன்னார் சடைப்புண்ணிய' முக்கணனென்றும், 'தென்னா டுடைய சிவனே போற்றி' எனவும் 'எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி' எனவும் இயம்பப்படும் இயவுள் என்றும், 'கல்லார் நெஞ்சில் நில்லாக் கடவு'ளென்றும், இவை முதலாகிய பிறவும் பெம்மான் சிவன் தன்மைகளை விளக்கும் செந்தமிழ் மறைமொழிகளை அவனருளால் கண்டுகொண்டேன். "கண்டேன் அவர் திருப்பாதம் கண்டறியாதன கண்டேன்" என்னும் அப்பர் அருளிய செந்தமிழ்ச் செழுமறையும் காண்க.

## 2932. என்னெஞ்சம் ஈசன் இணையடி தாஞ்சேர்ந்து

2932. என்னெஞ்சம் ஈசன் இணையடி தாஞ்சேர்ந்து
முன்னஞ்செய் தேத்த முழுதும் பிறப்பறுந்
தன்னெஞ்சம் இல்லாத் தலைவன் தலைவிதி
பின்னஞ்செய் தென்னைப் பிணக்கறுத் தானன்றே.

அடிமையாகிய என்னுடைய எளிய நெஞ்சம் சிவபெருமானின் அறிவு ஆற்றல்களாக விளங்கும் எங்கும் பங்கமில் செறிவாகத்தங்கும் திருவள்ளுவநாயனார் அருளிச்செய்த பெருவாழ்வாம் திருக்குறளின் இணையடிகள் நேர் இணையடிகளைப் புணையென அருளால் சேர்ந்தது. சேர்தல் - இடைவிடாது நினைத்தல். ஆதலால் அங்ஙனம் நினைக்கும் குறிப்பாகிய முன்னஞ்செய்து 'பாடிப் பரவிப் பணிந்தது'. பணியவே பிறப்பு முழுவதும் அறுந்தது. முழுவதும் அறுவது வழிப்பேறும் ஒழிந்து விழுப்பேறு ஒன்றே எய்துவது. வழிப்பேறு பதமுத்திகளும் அபரமுத்திகளும் விழுப்பேறு இரண்டறக்கலந்து எங்குமிலாத திரண்ட இன்பத்தினை அன்புடன் நுகர்ந்து அழுந்தல். ஆருயிர்கள் தம்முனைப்போடுள்ளவரையும் அவர்தம் நெஞ்சம் சிவனெஞ்சமாகாது. அஃதாவது சிவனை இடைவிடாது நினைப்பதால் சிவன் மேலோங்கித்திகழும் நெஞ்சம் சிவனெஞ்சம். அஃது ஆகாது என்பதாம். சிவனெஞ்சம் ஆகாதெனவே அம்முனைப்புள்ள நெஞ்சத்தில் சிவன் விளங்காத தலைவனாக இருக்கின்றான். இது "துஞ்சுங்கால் தோண்மேலராகி விழிக்குங்கால், நெஞ்சத்த ராவர் விரைந்து" (1218) என்னும் திருவள்ளுவப்பயனை

மெய்ப்பிக்கின்றது. துஞ்சுதல்: சிவனை மறத்தல். விழித்தல்: அவனை நினைத்தல். தோண்மேலாதல்: பிறப்பினிற் செலுத்தல். நெஞ்சத்தராதல் சிறப்பினிற் செலுத்தல். மேலும் "நெஞ்சத்தார் காதலவராக வெய்துண்டல், அஞ்சுதும் வேபாக் கறிந்து" (1128) என்னும் செந்தமிழ்ப் பொதுமறைக்கண் மேல்நோக்காக நோக்கின் அன்பியற் பொருளும், நுணுகிநோக்கின் அருளியற் பொருளும், நுகர்ந்து நோக்கின் அடியியற் பொருளும் விளங்க அருளிய வற்றானும் உணரலாம். அன்பியல் - உலகியல். அருளியல் - வீட்டியல். அடியியல் - பேற்றியல். முதற்கண் அன்பியலாக நோக்கின் உடலுறவாங் காதலர் நெஞ்சத்தாராயுளர். அதனால் வெப்பமான பொருள்களை உண்ண நினைக்கவும். அஞ்சுகின்றேன்; அவர்தம்மைச் சுட்டுவிடுமெனக் கொள்ளலான். அருளியலாக நோக்கின் ஆருயிர்க் காதலானாகிய சிவபெருமான் நெஞ்சத்து என்றும் துஞ்சாது வஞ்சித்து நிற்கும் என் உள்ளங்கவர்கள்வன்: ஆதலால் தீய நினைவுகளாகிய வெப்பமானவற்றை நினைக்க அஞ்சுகின்றேன்; அவர்க்கு வெறுப்பினைத் தருமாகலான். அடியியலாக நோக்கின், என்னெஞ்சம் அவர்க்கு அடிமைப்பட்ட ஞான்றே அவருடைமை எனப் புதுப்பிக்கப்பட்டது. எனவே அவர் நினைப்பித்தாலன்றி ஏதும் நினைக்கும் நினைப்பினேன் அல்லேன். இது 'மறக்குமாறிலாதவென்னை மறப்பித்துப், பிறக்குமாறு காட்டினாய்' என்னும் திருநெறிய தமிழால் விளங்கும். ஆதலால் ஏனையார் நன்னெறி நான்மையிற் புகாது புன்னெறிபுக்குப் பிறப்புக்கு வித்தாம் தீயன அவர் எண்ண அஞ்சுகின்றேன் அவர்க்கு வெறுப்பினைத் தருமாகலான். இப் பொருட்கு வெய்துண்டலென்பதை உண்ண எனத்

திரிக்க. ஆயின் என்னெஞ்சம் அவர் தன்னெஞ்சமாயது. "நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே" என்றிருப்பதல்லால் ஏதுமிலேன். தலைவிதியாகிய ஊழ் ஏன்ற வினை எனப்படும். அதுகாரணமாக நிகழ்வது ஏறு வினையாகும். அவற்றைத் தன்னடிநினைவால் முறையே உடலூழாய், பிறர் ஊழுக்கு உரமாய்க் கழித்தொழிப்பன். ஆதலால் பின்னஞ்செய்தலாகிய வேறுபடுத்தினன். படுத்தவே என்னைப் பிணக்கினின்றும் விடுவித்தனன் 'என்னைப் பிணக்கறுத்தான்' என்பதை 'என் பிணக்கு ஐ அறுத்தான்' எனக்கொண்டு என்னைச் சார்ந்த ஐவகை மலங்களையும் அறுத்தான் என்பதனை ஆய்ந்தாய்ந்துணர்ந்தின்புறுக.

## 2933. பிணக்கறுத் தான்பிணி மூப்பறுத் தெண்ணுங்

2933. பிணக்கறுத் தான்பிணி மூப்பறுத் தெண்ணுங்
கணக்கறுத் தாண்டனன் காணந்தி என்னைப்
பிணக்கறுத் தென்னுடன் முன்வந்த துன்பம்
வணக்கலுற் றேன்சிவம் வந்தது தானே.

அடியேனை நந்தியாகிய சிவபெருமான் உலகியற் பிணக்குகளினின்றும் விடுவித்தான். மூப்பினையகற்றினான். வாழ்நாட்கணக்கை எண்ணி ஆண்டு முடிந்தது மாண்டு மடியவேண்டு என்னும் உலகோர் சொல்லும் கணக்கினையும் அறுத்து ஆண்டுகொண்டனன். அதனால் அடியேன் முன்வந்து தோன்றும் துன்பங்களை அகப்புறக்கலன்களாகிய எண்ணம், எழுச்சி, இறுப்பு என்னும் கருவிகளின் தன்மைகள் எனக் கண்டு கெடுத்தொழிந்தேன். ஒழியவே முழுமுதற் சிவபெருமான் வெளிப்பட்டுத் திருவருள்புரிந்தனன்.

## 2934. சிவன்வந்து தேவர் குழாமுடன் கூடப்

2934. சிவன்வந்து தேவர் குழாமுடன் கூடப்
பவம்வந் திடநின்ற பாசம் அறுத்திட்டு
அவனெந்தை யாண்டருள் ஆதிப் பெருமான்
அவன்வந்தென் னுள்ளே யகப்பட்ட வாறே.

விழுமிய முழுமுதற் சிவபெருமான் பேரருளால் நந்தி முதலிய தேவர் குழாத்துடன் எழுந்தருளி வந்தனன். வந்து அடியேனுக்குப் பிறப்பு இறப்புக்களைத் தந்து பேராப் பெரும் துன்பந்தரும் சிற்றறிவு சுட்டறிவுகளாகிய உயிர்மை, உடைமை என்னும் பசு பாசத் தன்மைகளை அறுத்தருளினன். அவனே அடியேனைப் பழுதின்றி எழுமையும் புரக்கும் எந்தையாவன். அடியேனை ஆண்டுகொண்டருளிய ஆதிப் பெருமானும் அவனே. அவன் தன்னருளால் அடியேன் உள்ளத்துள் வந்துற்றனன்.

## 2935. கரும்புந் தேனுங் கலந்ததோர் காயத்தில்

2935. கரும்புந் தேனுங் கலந்ததோர் காயத்தில்
அரும்புங் கந்தமு மாகிய ஆனந்தம்
விரும்பியே உள்ளம் வெளியுறக் கண்டபின்
கரும்புங் கைத்தது தேனும் புளித்ததே.

கரும்பாகிய உண்டலும் தேனாகிய உறங்கலும் மாறிமாறி வந்துகொண்டிருக்கும் சரக்குநிறை காயப்பையாகிய இவ்வுடம்பகத்து முளையும் கிழங்கும்போன்று தோன்றுதலும் நிலைத்தலும் போன்றுள்ள நிலையிலாச் சிற்றின்பத்தினை உள்ளம் விரும்பி நுகர்ந்தது. அவ்வுள்ளம் அவ்வின்பங்கள் நிலையா என அருளால் வெளிப்படக் கண்டது. கண்டதும் கரும்பாகிய உண்டலினும் தேனாகிய உறங்கலினும் உள்ளம் செல்லவில்லை. உள்ளம் வலிய ஆண்டுகொண்ட வள்ளலிடமே ஓவாது செல்லுகின்றது.

கரும்பும் தேனும் - உண்டலும் உறங்கலும். அரும்பும் கந்தமும் - தோன்றுதலும் நிலைத்தலும். வெளியுறக் கண்டபின் நன்றாய் அனுபவித்த பின். கரும். . . . . . . . புளித்ததே - உண்டலும் உறங்கலும் ஒழிந்தன.

## 2936. உள்ள சரியாதி ஒட்டியே மீட்டென்பால்

2936. உள்ள சரியாதி ஒட்டியே மீட்டென்பால்
வள்ளல் அருத்தியே வைத்த வளம்பாடிச்
செய்வன எல்லாஞ் சிவமாகக் காண்டலாற்
கைவள மின்றிக் கருக்கடந் தேனன்றே.

என்றும் உள்ளதாய் நின்று பயன் அருளுவதாய் உள்ள 'சீலம், நோன்பு, செறிவு, அறிவு' என்னும் நன்னெறி நான்மையின் வாயிலாக (2615) அடியேனைப் பயிற்றுவித்து அவற்றினின்று மீட்டுவித்தருளினன். பின்பு வள்ளலாகிய சிவபெருமான் தன் திருவடியின்பத்தினை உண்பித்தருளினன். அவனருளால் அச்சிறப்பினைப் பாடிக்கொண்டிருக்கின்றேன். பாடுதல் என்பது படர்தலும் பாடலும் ஆடலும் ஆகிய முத்திற வினைகளும் நத்தும் அவனடிக்கே ஆக்குவித்து அன்பின் விளைவாம் இன்பமொன்றே துய்த்துக்கொண்டிருத்தல். ஆண்டான் கருவியாகப்பூண்ட அடியேன் வாயிலாக ஈண்டு நிகழ்த்தப்பெறும் செயலெல்லாம் சிவச் செயலெனவும், காண்பனவெல்லாம் உள்ளுறையும் அவன் திருவருளெனவும் உணர்வின்கண் உணர்த்திக் கண்டுகொண்டிருக்கப் பணித்தருளினன். எஞ்சுவினையாகிய கைவளம் எரிசேர் வித்தென மாய்ந்தமையானும், ஏறுவினை 'உணக்கிலா வித்தென' ஓய்ந்தமை யானும், ஏன்றவினை உடலூழாய்த் தேய்ந்தமையானும் இன்னமோர் அன்னைவயிற்றில் புக்குப் பின்னைப் பேதுறுவிக்கும் கருநிலை கடந்து அருநிலையாம் சிவனிலை எய்தினேன்.

## 2937. மீண்டார் கமலத்துள் அங்கி மிகச்சென்று

2937. மீண்டார் கமலத்துள் அங்கி மிகச்சென்று
தூண்டா விளக்கின் றகளிநெய் சோர்தலும்
பூண்டாள் ஒருத்தி புவனசூ டாமணி
மாண்டா னொருவன்கை வந்தது தானன்றே.

புலன்வழிவாகச் செல்லும் உள்ளத்தாமரையினைத் திருவருளால் திருப்பிச் சிவபெருமான் திருவடிக்கண் வைத்தல்வேண்டும். வைக்கவே அங்கியாகிய திருவடிமெய்யுணர்வு மேன்மேன் முறுகிவளரும். தூண்டாவிளக்கின் தகளித்தன்மை தொன்மையே வாய்ந்த நன்மைக்குரிய ஆருயிரினிடத்து நெய்யாகிய திருவடிப் பேரின்பத்தைத் திருவருளால் சேர்த்தல்வேண்டும். சேர்க்கவே அவ் வுள்ளமாகிய அமைதிமிக்க அருள்நிறை ஒருத்தி ஏற்றுக்கொண்டனள். அவளே நல்லாள். அவளே பழியிலா முடிமணியனையாள். அந்நிலை அருளால் கைவந்துறவும் அறியாமையைச் செய்யும் ஆணவவல்லிருளென்னும் கொடியோன் செயலற்று மாண்டு மடிந்து ஒடுங்கினன்.

மீண்டார் - இந்திரியப் போக்கினின்றும் மீண்டார். கமலம் - உள்ளக்கமலம் தூண்டாவிளக்கு - சீவன். தகளி - உள்ளம்.

## 2938. அன்புள் உருகி அழுவன் அரற்றுவன்

2938. அன்புள் உருகி அழுவன் அரற்றுவன்
என்பும் உருவ இராப்பகல் ஏத்துவன்
என்பொன் மணியை இறைவனை ஈசனைத்
தின்பன் கடிப்பன் திருத்துவன் தானன்றே.

திருவருள் நினைவால் நீங்காதோங்கும் பேரன்பால் உள்ளுருகி இன்பவேட்கைப் பெருக்க இயல்பாம் இனிய அழுகையினைப் புரிவேன். அழுது குறையிரந்து முறையிடுதலாகிய அரற்றுதலைச் செய்வேன். எலும்பும் உருகுமாறு இரவும் பகலும் இடைவிடாது 'தொழுது தூமலர் தூவித் துதித்துநின்று அழுது காமுற்று அரற்றி' வணங்குவேன். என் உணர்வாகிய பொன்னின்கண் அருளால் அழுத்திய விலைவரம்பில்லா இயற்கைநிலைசேர் செம்மணியை, தென்னாட்டார்க்குரிய சிவனே. எந்நாட்டவர்க்கும் இறைவனாகலின் அத்தகைய இறைவனை, 'என்னொப்பில் என்னையும் ஆட்கொண்டருளிய' ஆண்டவனை அவன் திருவடியுணர்வால் காணப்பெறுவேன். காணப்பெறின் தின்பதாகிய ஊடுதலைப் புரிவேன். கடிப்பதாகிய உணர்தலை ஆற்றுவேன். திருத்துவதாகிய புணர்தலைப் பூணுவேன். தான் - அசை.

# 2939. மனம்தான் விரிந்து குவிந்தமா தவ்வம்

2939. மனம்தான் விரிந்து குவிந்தமா தவ்வம்
மனம்தான் விரிந்து குவிந்தது வாயு
மனம்தான் விரிந்து குவிந்தமன் னாவி
மனம்தான் விரிந்துரை மாண்டது வீடே

நன்னெறிநான்மை (2615) நற்றவத்தால் திருவருள் வீழ்ச்சி எய்தப்பெறுவர். அங்ஙனம் பெற்றவர் மனம் திருவருளியிலில் விரியும். பின்பு திருவடியியலின்கண் வேட்கையுண்டாகும். வேட்கையுண்டாகவே அடியேனைப் 'போக்கருளீர்' என்று முறையிட நேரும். நேரவே திருவடிப் பெருவாழ்வின்கண் உள்ளம் குவிதலாகிய ஒடுங்குதலை எய்தும். இவ் வுண்மை வரும் திருநெறிய தமிழான் உணர்க.

"தக்கிருந் தீரன்று தாளா லரக்கனை
உக்கிருந் தொல்க வுயர்வரைக் கீழிட்டு
நக்கிருந் தீரின்று நல்லூர்ப் பெருமணம்
புக்கிருந் தீரெமைப் போக்கரு ளீரே."
(3 - 125. 8)

"பாடிப் பலநாள் பயின்றதற்பின் மூவரடி
நாடினரே நம்மடிகள் நாயனருள்-கூடியதும்
வீடே விழைந்துள்ளார் வேண்ட இருந்தஅவர்
ஏடே முழுக்கனிவாம் இங்கு."
என்பதனையும் நினைவு கூர்க.

அந் நிலையின்கண் உறைத்து நின்றார்க்கு இயல்பாகவே உரை மாண்டகலும். அதனால் உயிர்ப்பு ஒடுங்கும். முன் உயிர்ப்பின்கண் விரிந்தமனம் இப்பொழுது குவிந்து

ஒடுங்கும் திருவடியின்பின்கண் நிலைபெற்ற ஆருயிரின் மனம் திருவருளியலில் விரிந்தநிலை நீங்கி திருவடியியலின்கண் ஒடுங்கும். உரைமாண்டதொன்றை உரைமாண்ட நிலையிலேயே எய்துதல் ஏற்புடைத்தாகும். உடைமாண்டதொன்று - மாற்றம் மனங்கழிய நிறை மறையோன். உரைமாண்ட நிலை-மேன்மை ஞானமாகிய மோனநிலை.

## 2940. மாயனை நாடி மனநெடுந் தேரேறிப்

2940. மாயனை நாடி மனநெடுந் தேரேறிப்
போயின நாடறி யாதே புலம்புவர்
தேயமும் நாடுந் திரிந்தெங்கள் செல்வனைக்
காயமின் னாட்டிடைக் கண்டுகொண் டேனன்றே.

மாயை நிலைப்பதற்குத் தாரகமாகிய நிலைக்களமாக இருப்பவன் சிவபெருமான். அவன் அந் நிலையின்கண் மாயன் என்று அழைக்கப்படும். ஆருயிர்கள் அவனை அடைய நாடி மனமாகிய நெடிய தேரேறி ஓடும். ஓடுவதென்பது எல்லையிலா எண்ணத்தை அல்லும் பகலும் ஓயாது எண்ணுதல். அவ் வெண்ணத்தினையே நாடு என நவின்றனர். அவ் வெண்ணத்தினுக்கோர் எல்லை காணாமையால் புலம்புறுவர். இதுவே 'போயின நாடறியாது புலம்புவர்' என்பதாம். தேயமும் நாடும் நேயமிக்கு ஓயாது ஓடிச்சென்று நாடுவர். அடியேனும் புகுவார் பின் புக்குப் பன்னாள் அலைந்தேன். பொன்னான இவ் வுடம்பெனும் நாட்டின்கண் நல்லருளால் நாடிக் கண்டுகொண்டேன்.

மாயனை - மாயையோடு கூடிய சிவபிரானை. போயின நாடு - சங்கற்பத்தின் எல்லை. காயமின்னாட்டிடை - உடம்பினுள்.

## 2941. மன்னு மலைபோல் மதவா ரணத்தின்மேல்

2941. மன்னு மலைபோல் மதவா ரணத்தின்மேல்
இன்னிசை பாட இருந்தவ ராரெனில்
முன்னியல் கால முதல்வனார் நாமத்தைப்
பன்னினர் என்றேமெய்ப் பாடறி வீரன்றே.

நிலைபெற்ற கைலாயமலை என்று சொல்லப்படும் அகப் புறக்கலனாம் அந்தக் கரணங்களுள், அம் மலைபோல் காணப்படும் மதயானையாகிய உணர்வெழுச்சியில் தோன்றும் தூயமனத்தின்மேல் மெய்யடியார்கள் செந்தமிழ் இன்னிசை வந்தவர் பாட எழுந்தருளி இருந்தவர் யாரெனில் காலமெய்க்குக் காலமாக விளங்கும் காலகாலனாகிய விழுமிய முழுமுதற் சிவபெருமான் என்க. அவர்தம் திருப்பெயராம் செந்தமிழ்த் திருவைந்தெழுத்தைப் பலகால் எடுத்து ஓதினர் என்க. அவர்கள் யாரெனில் பெருமைசேர் திருநீலகண்டப் பெருமானாகிய சீகண்டவுருத்திரன், திருநந்திதேவர் முதலியோர் என்க.

மன்னுமலை - உடம்பு. மதவாரணம் - மனம். கால முதல்வனார் - தத்துவங்களைப் படைத்தவன். பாடு - பெருமை.

# 2942. முத்தினின் முத்தை முகிழிள ஞாயிற்றை

2942. முத்தினின் முத்தை முகிழிள ஞாயிற்றை
எத்தனை வானோரும் ஏத்தும் இறைவனை
அத்தனைக் காணா தரற்றுகின் றேனையோர்
பித்தன் இவனென்று பேசுகின் றாரன்றே.

தென்றலும் தமிழும் என்றும் நின்று நிலவும் தென்கடல் பிறந்த வான்பெரும் முத்தினுள் சிறந்த முத்து ஆணிமுத்து எனப்படும். அம் முத்தினும் சிறந்தவன் சிவபெருமானாவன். ஆருயிர் உள்ளத்தினுள் பேரறிவுப் பேரொளிப்பிழம்பாய்த் தோன்றுபவனும் அவனே. அந் நிலையில் அவன் முகிழிள ஞாயிறெனப்படுவன். அவன் திருவடி இணையினை எல்லாத் தேவரும் வல்லவாறு தொழுவர். அத்தகைய சிவபெருமானை உண்மைநிலையில் - உணர்வுநிலையில் அருளால் கண்டு தன்னைக் காணாக்கண், கண்ணாடியைக் காணுங்கால் தன்னை அகக் கண்ணாடியினகத்துக் காணுமாறு போன்று காணப்பெற்றிலேனே என அல்லும் பகலும் ஒல்லும் வாயெல்லாம் ஓவாதரற்றினன். அதனைக் கண்ட பிறர் அடியேனைப் பித்தனென்று முடிவுசெய்து பழியின்மிசைத் தூற்றுகின்றனர். கண் தன்னைக் காணுமாற்றைப் பின்வருமாறு நினைவு கூர்க:

"கண்ணா டியைக்காணும் கண்ணே தனைக்காணும்
பெண்ணார்தாள் காணவுயிர் பேசுங்கால்-கண்ணாடி
உள்தோன்றும் பல்பொருளும் ஓர்வாம் திருவடியின்
உள்தோன்றும் பல்லுயிரும் ஓர்.

## 2943. புகுந்துநின் றானெங்கள் புண்ணிய மூர்த்தி

2943. புகுந்துநின் றானெங்கள் புண்ணிய மூர்த்தி
புகுந்துநின் றானெங்கள் போதறி வாளன்
புகுந்துநின் றானடி யார்தங்கள் நெஞ்சம்
புகுந்துநின் றானையே போற்றுகின் றேனே.

திருவருள் நினைவால் பொருவரும் பெண்ணொரு கூறனாம் பண்ணமர் புண்ணியன் அடியேன் நெஞ்சகத்துப் புகுந்து நின்றனன். அவனே அறவாழி அந்தணன். அடியேங்களுக்குச் செவ்வி வருவித்துத் திருவடியுணர்வினைப் போதிக்கும் முற்றுணர்வினனும் அவனே. அத்தகைய போதறிவாளன் என்னுள்ளம் புகுந்துநின்றனன். மெய்யடியார்கள்தம் திருவுள்ளத்தை 'நெஞ்சினைத் தூய்மை செய்து நினைக்குமா நினைப்பித்து'ப் புகுந்து நின்றவனும் அவனே. அத்தகைய பெரும்பொருட்கிளவியானை அவன் என்னகம் புகுந்தமையால் போற்றுகின்றேன். இது, பாடப் பயிற்றியான் பண்பதனைப் பாடலொக்கும், கூடச்செய் தான்தாள் கூறல், என்பதனையொக்கும்.

போதறிவாளன் - எல்லாம் அறிபவன்.

## 2944. பூதக்கண் ணாடியிற் புகுந்திலன் போதுளன்

2944. பூதக்கண் ணாடியிற் புகுந்திலன் போதுளன்
வேதக்கண் ணாடியில் வேறே வெளிப்படும்
நீதிக்கண் ணாடி நினைவார் மனத்துளன்
கீதக்கண் ணாடியிற் கேட்டுநின் றேனன்றே.

பூதக் கண்ணாடி யென்பது முகத்துக் காணும் கட்பொறியாகும். அக்கண்ணுக்குப் புலனாம் வண்ணம் அமைந்த நிலைமையன்
அல்லன் சிவன். சிவன் காட்சிப் புலனாம் தோற்றம் அனைத்தும் அவன்றன் திருவருளுருவே. இவ்வுரு அவனுக்குச் சார்புருவாகும். இஃது, "ஈசன சாந்தும் எருக்கும் அணிந்தோர் கிழிபிடித்துப், பாய்சின மாவென ஏறுவர் சீறூரர்ப் பனைமடலே" என்னும் திருக்கோவைக் கிளவி தலைவன் கொள்ளும் சார்புருவையொக்கும். மேலும் ஆருயிர்கள் அருவாய் நின்றே சார்ந்த சிறப்புடலாகிய பருவுடலின் தன்மையால் ஆண் பெண் எனப்பெயர் பூண்பதும் இதற்கொப்பாகும். நுண்ணுடல் பிறப்புடல் ஆகும். பிறப்புடல் கைபோன்றது சிறப்புடல் கருவிபோன்றது. கை எல்லாத் தொழிலுக்குமாகும். கருவி குறித்த தொழிலுக்கு மட்டுமாகும். கையில் வேறுபாடில்லை. கருவியில் வேறுபாடு உண்டு இவ்வுண்மை 'பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா, செய்தொழில் வேற்றுமையான்." (972) என்னும் திருக்குறளான் உணர்க. பிறப்பு: திருவருளால் கொடுக்கப்படும் வினை முயற்சிக்கேதுவாம் கருவுறா நுண்ணுடல்.

பூதக்கண்ணாடி - தூலக்கண். போதுளன் - உள்ளத் தாமரையில் இருப்பவன். வேதக்கண்ணாடி - ஞானக்கண். நீதிக்கண்ணாடி - தத்துவஞானம். கீதக்கண்ணாடி - இசை.

## 2945. நாமமோ ராயிரம் ஓதுமின் நாதனை

2945. நாமமோ ராயிரம் ஓதுமின் நாதனை
ஏமமோ ராயிரத் துள்ளே இசைவீர்கள்
ஓமமோ ராயிரம் ஓதவல் லாரவர்
காமமோ ராயிரங் கண்டொழிந் தாரன்றே.

'நந்தி நாமம் நமசிவய' என்பது பொருள்மறை ஆதலின் அதனை அகம்புறம் தூயராய்க் கணித்தும் ஓதியும் சிவபெருமானை வழிபடுங்கள். அங்ஙனம் வழிபட்டால் ஏமமாகிய இன்பம் அளவின்றிப் பெருகும். ஈண்டு ஆயிரம் என்பது அளவின்மையாகும். அதுவும் நும் உள்ளத்துள்ளே ஊற்றெடுத்து வெள்ளம்போன்று மேன்மேலும் பெருகும். அத் திருவைந்தெழுத்தால் சிவவேள்வியினையும் அளவின்றிப் புரியுங்கள். அங்ஙனம் புரிந்தோர் 'வேண்ட முழுவதும்' பெற்று வேட்கையடங்கினர்.

ஆயிரம் என்பது ஈண்டு அளவின்மை. ஏமம் - சுகம். ஓமம் - ஐம்பெரும் வேள்விகள். காமம் - சுகதுக்கங்களை அனுபவிக்கும் உடல்.

## 2946. நானா விதஞ்செய்து நாடுமின் நந்தியை

2946. நானா விதஞ்செய்து நாடுமின் நந்தியை
ஊனார் கமலத்தி னூடுசென் றப்புறம்
வானோர் உலகம் வழிப்பட மீண்டபின்
தேனார வுண்டு தெவிட்டலு மாகுமே.

செம்பொருட்டுணிவின் சிறப்பினை எய்துதல்வேண்டும். அதற்கு நன்னெறி (2615) நான்மையினை நாடொறும் விடாது நயனுறச் செய்தல்வேண்டும். நானெறி 'சீலம், நோன்பு, செறிவு, அறிவு.' இவை ஒவ்வொன்றும் நந்நான்காக விரியும் எனவே அவை பதினாறாகும். இவையே 'நானாவிதம்' என ஓதப்பட்டன. இவ்வகைத் திருத்தொண்டினை அருளால் நாடொறும்புரிந்து நந்தியை நாடுங்கள். உடம்பகத்துக் காணப்படும் மூலாதாரம் முதலாகச் சொல்லப்படும் ஆறு நிலைகளும் தனித்தனித் தாமரை வடிவாக இருப்பன என்ப. இத் தாமரைகளின் ஊடு முறையாக உயிர்ப்பின்வழிச் சென்று உணர்தல் வேண்டும். உணர்ந்தபின் அவ்வாதாரங்களினின்று இயைந்து இயக்கும் தெய்வங்கள் புலனாகும். இயைந்தியக்கும் தெய்வம் அதிட்டான தெய்வம். அவை, 'பிள்ளையார், அயன், அரி, அரன், ஆண்டாள், அருளோன்' என்ப. புலனாகியதும் அத் தெய்வங்கள் வழிபடுவார்க்கு வயப்பட்டருளும். இந்நிலையில் திருவடியின்பத் தெவிட்டாச். செழுந்தேனை ஆரப்பருகி அளவிலா இன்பத்தழுந்துதல் உண்டாம்.

நானாவிதம் - சரியையிற் சரியை முதல். ஊனார் கமலம்- ஆறு ஆதாரங்கள். வானோர் உலகம் - நிராதாரங்கள். தேன் - சிவானந்தம்.

## 2947. வந்துநின் றானடி யார்கட் கரும்பொருள்

2947. வந்துநின் றானடி யார்கட் கரும்பொருள்
இந்திர னாதி இமையவர் வேண்டினுஞ்
சுந்தர மாதர் துழனியொன் றல்லது
அந்தர வானத்தின் அப்புற மாகுமே.

விழுமிய முழுமுதற் சிவபெருமானைக் கெழுமிய செந்தமிழ்த் திருமுறை மறையினால் வழிபடுவோர் சிவனடியாராவர். அவ் வழிபாட்டின் பெறுபேறாக எல்லா நிலைகட்கும் அப்பாலாகி நின்றினிதருளும் அவன் அரும்பொருள் எனப்படுவன். அவன் அகம்புறமாய் ஈரிடத்தும் முன்னேவந்து எதிர்தோன்றியருளினன். அருளவே 'செங்கணவன்பால் திசைமுகன்பால் தேவர்கள்பால். எங்கும் இலாததோர் இன்பம் நம்பாலதாக' என்பது போன்று பேரின்பம் பெருகுவதாயிற்று. இந்திரன் முதலாகச் சொல்லப்படும் தேவர்கள் விரும்பினும் ஆண்டெல்லாம் மாண்டு மடிவதும், மீண்டும் பிறப்பினைத்தருவதுமாய பெண்ணின்பமே உண்டாகும். கண்ணுதலோன் காட்டிக் காணும் திருவடியின்பம் அவ்விண்ணுலகில் கனவு காண்டற்கும் ஒண்ணாத தொன்றென்க: 'அண்டர் வாழ்வும் அமரர் இருக்கையும் கண்டு வீற்றிருக்கும் கருத்தொன்றிலோம்' எனவும், 'கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு' எனவும் முறையே அருளான் எழுந்த மறையும் மறை முடிவும் மேலதனை வலியுறுத்தும் என்க.

சுந்தர மாதர் - அழகு பொருந்திய மாதர். துழனி - போகம். அந்தரவானம் - ஒளிஉலகம்.

## 2948. மண்ணிற் கலங்கிய நீர்போல் மனிதர்கள்

2948. மண்ணிற் கலங்கிய நீர்போல் மனிதர்கள்
எண்ணிற் கலங்கி இறைவன் இவனென்னார்
உண்ணிற் குளத்தின் முகந்தொரு பால்வைத்துத்
தெண்ணிற் படுத்தச் சிவனவ னாகுமே.

விண்ணின்கண் நீருக்கு வெண்மையும் இன்சுவையும் தன்னியல்பான் உள்ளன. ஆனால் அந்நீர் மண்ணின்கண் வந்தபின், தான் சேர்ந்த மண்ணினுக்கேற்றவாறு வண்ணமும் சுவையும் எண்ணமின்றித் திரிந்து நண்ணுகின்றது. இதுவே சார்ந்ததன் வண்ணமாய் விளங்கும் இயல்பும் உரிமையும் உள்ள ஆருயிர்கட்கு ஒப்பாகும். மண்ணிற்சார்ந்து எண்ணமின்றித் திரிந்த நீர்போல் மாக்களும் சார்ந்த இடத்துக்கு ஏற்றவாறு உள்ளந் திரிபுறுவர். அத் திரிபுணர்ச்சியினால் அறியாமையான் மூடப் பெறுவர். உண்மைத் தன்மைத் தெய்வம் இதுவென வுணரார். இறைவன் இவன் என மெய்ம்மை யுணரார். எண்ணித்திற் கலங்குவர். நல்லார் அத் தண்ணீரை வீட்டிற்குக் கொண்டுவந்து தேற்றுவித்தினால் தெளித்து இன்சுவைத்தாய் விடாய் தணியப் பருகுவர். அதுபோல் 'முத்திநெறியாத மூர்க்கரொடு முயலும்' ஆருயிர்களைப் 'பத்திநெறி யறிவித்துப் பழவினைகள் பாறும் வண்ணம்' சித்தமலம் அறுவித்துச் சிவமாக்குவன்' செம்பொருட் செல்வன். அதனால் அவ்வுயிரும் கலக்கத்தினின்றும் நீங்கி நலக்க நலமருளும் சிவனாகும்.

கலங்கிய நீரின் தன்மை தெரியாததுபோல, எண்ணங்களால் கலக்குண்ட மனத்தையுடையார் சிவத்தின் தன்மையை அறியமாட்டார். சித்தத்தைக் கலங்கவிடாமல் தெளியவைத்தால் சிவம் வெளிப்படும் என்பது இம் மந்திரக் கருத்து.

## 2949. மெய்த்தவத் தானை விரும்பும் ஒருவர்க்குக்

2949. மெய்த்தவத் தானை விரும்பும் ஒருவர்க்குக்
கைத்தலஞ் சேர்தரு நெல்லிக் கனியொக்குஞ்
சுத்தனைத் தூய்நெறி யாய்நின்ற தேவர்கள்
அத்தனை நாடி அமைந்தொழிந் தேனன்றே.

நன்னெறிநான்மை (2615) நற்றவமாம் மெய்த்தவப் பயனருளும் மெய்ப்பொருளாம் ஒருவன் சிவபெருமான். அவன் திருவடியிணையினைப் பத்திமேலீட்டினால் விழையும் மெய்யடியார்கட்கு 'தடக்கை நெல்லிக்கனி யெனக்காயினன்' என்பது போன்று அவன் 'கைத்தலஞ் சேர்நெல்லிக்கனி' யொத்து விளங்குவன். அவன் இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கிய தூயோன். சிவவுலகத்தின்கண் நின்று வழி பாடாற்றித் தூநெறிக்கண் நிற்கும் தேவர்களுக்குச் சிறந்த அத்தன். அத்தகையோனை நாடிநாளும் தொழுதேன். அதனால் என்செயல் மாண்டு அவன் வழிநின்று அடிமையாயினேன். நெல்லிக்கனியின் தன்மையை வருமாறு நினைவுகூர்க: 'நெல்லிக் கனிவிடாய் நீக்குமுடன் நீர்பருகச், சொல்லொணா இன்சுவைத்தாம் சொல்.' இதுபோல் திருவடிப்பேற்றால் பிறவிப்பிணி உடன் நீங்குதலும், பேரின்பநுகர்வு என்றும் ஓங்குதலும் உண்டென்பது தெளிக. 'மெய்த்தவம்' எனினும் 'இறப்பில் தவம்' எனினும் ஒன்றே. தவப்பயன் என்றும் பொன்றாதிருப்பது மெய்த்தவம்.

மெய்த்தவத்தான் - சிவன். அமைந்து ஒழிந்தேன் - செயல் மாளப்பெற்றேன்.

# 2950. அமைந்தொழிந் தேன்அள வில்புகழ் ஞானஞ்

2950. அமைந்தொழிந் தேன்அள வில்புகழ் ஞானஞ்
சமைந்தொழிந் தேன்தடு மாற்றமொன் றில்லை
புகைந்தெழும் பூதலம் புண்ணியன் நண்ணி
வகைந்து கொடுக்கின்ற வள்ளலு மாமே.

திருவருள் நாட்டத்தால் அளவில்லாத புகழை உடைய திருவடியுணர்வின்கண் அமைந்து அடங்கியுள்ளேன். அதனால் திரிபுணர்வாகிய தடுமாற்றம் ஏதும் இன்றி நன்னெறி நான்மையின்கண் (2615) ஒழுகிச் செம்பொருட்டுணிவின்கண் ஆளாய்ச் சமைந்தொழிந்தேன். அதனால் அடியேற்குப் பிறப்பு இறப்புக்களாகிய தடுமாற்றமின்று. 'காமம் வெகுளி மயக்கம்' ஆகிய மூன்றும் புகைந்து அகப்பகையாய் ஆருயிர்கள் மாட்டு எழுகின்றன. அத்தகைய வுயிர்கள் நிறைந்துள்ள இந்நிலவுலகத்தின்கண் புண்ணியத் திருவுருவினனாகிய சிவபெருமான் சிவகுருவாக நண்ணியருளினன். அவன் முப்பொருளுண்மையினையும் அருஞ்சைவர் மெய் முப்பத்தாறினையும் திட்பமுற வகைப்படுத்தி உணர்த்தியருளினன். அப்பெருமான் இயல்பாகவே ஆருயிர்க்கு வேண்டுவன நல்கும் யாண்டும் உயர்வொப்பில்லா ஒருபெரும் வள்ளலாவன்.

தடுமாற்றம் - மயக்க உணர்ச்சி, புகைந்து எழுபூதலம் - காமாதிகளால் பதைப்புண்டு திரிகின்ற மக்களை. புண்ணியன் - சிவன். வகைந்து - தத்துவ உபதேசம் செய்து உண்மை காட்டி.

# 2951. வள்ளற் றலைவனை வானநன் னாடனை

2951. வள்ளற் றலைவனை வானநன் னாடனை
வெள்ளப் புனற்சடை வேத முதல்வனைக்
கள்ளப் பெருமக்கள் காண்பர்கொ லோஎன்று
உள்ளத்தி னுள்ளே ஒளித்திருந் தானுமே.

வள்ளல் தலைவனாக யாண்டும் விளங்குபவன் சிவபெருமான். அவனே சிவ வுலக முதல்வன். சலமகள் என்று சொல்லப்படும். நடப்பாற்றலின் உருவகமாம் வெள்ளப் புனல்மகளைத் திருச்சடையில் வைத்துள்ளான். அங்ஙனம் வைத்தருளியது ஆருயிர்களின் அகங்காரமாகிய முனைப்பெழுச்சியை அகற்றுதற் பொருட்டேயாம். இக் குறிப்புத் 'தரணியெல்லாம், பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாஞ் சாழலோ' என்னும் செந்தமிழ்த் திருமுறை முடிவினால் விளங்கும். (இதன் பொருள்: ஆருயிர் ஆதியாகிய நடப்பாற்றலின் வழிப்படா விட்டால் ஆணவ முனைப்பால் மீண்டும் பிறப்பாகிய கருநிலை என்று சொல்லப்படும் பில முகத்தே பாய்ந்து பெருங்கே டெய்தும் என்பதாம்.) அவன் வாலறிவனாதலின் அவனே மறைமுதல்வனாவன். அவன் அடியேன் உள்ளத்துள் மறைந்து நின்றருளினன். செவ்வி வருதலும் 'தம் முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்தல்' தமிழ்த்தகவாதலால் வெளிப்பட்டு வந்து தலையளி புரிந்தருளினன். அவன் அவ்வாறு மறைந்து நிற்பதற்குக் காரணம் பிறப்பு இறப்பில் மீண்டும் மீண்டும் உட்படுவார் கள்ளப் பெருமக்கள் ஆவர். சொல்லுறுதி

யின்மையும் சொல்வழி வாராமையும் உடையாரைக் கள்ளரென்பது உலகியல் வழக்கு. இது மேலதனை வலியுறுத்தும். அத்தகைய கள்ளர்கள் காண்பார்களோ என்று ஒளித்து நிற்பன் ஒளிக்கெலாம் ஒளிகொடுத்து உலப்பின்றி ஒளிரும் ஒண்மையோனாகிய சிவபெருமான். இக் குறிப்பு 'விண்ணோர்கள் ஏத்துதற்குக் கூசு மலர்ப்பாதம்' என்னும் செந்தமிழ்த் திருமறை முடிவான் உணர்க.

## 2952. ஆளும் மலர்ப்பதந் தந்த கடவுளை

2952. ஆளும் மலர்ப்பதந் தந்த கடவுளை
நாளும் வழிபட்டு நன்மையுள் நின்றவர்
கோளும் வினையும் அறுக்குங் குரிசிலின்
வாளு மனத்தோடும் வைத்தொழிந் தேனன்றே.

மெய்யடியார்களையும் வையத்தாரையும் திருவுள்ளத் திருக்குறிப்பான் நோக்கி ஆண்டருள்பவன் சிவபெருமான். அத்தகைய கடவுள் திருவடித் தாமரையைத் தந்தருள்வன்: அவனை அகனமர்ந்த அன்பினராய் முகனமர்ந்த மொழியினராய் நற்றமிழ் மறையால் நாளும் வழிபடுதல் வேண்டும். அங்ஙனம் வழிபடுவோர் நன்மையுள் நின்றவராவர். அவர்தம் தீப் பண்பையும், தீத் தொழிலையும் அகற்றி யருளும் குரிசிலாகிய அண்ணல் சிவபெருமானே. அவன் வாளாகிய கண்ணினுள்ளும் மனமாகிய கருத்தினுள்ளும் வாளாது வந்தருள்வன். அங்ஙனம் வந்தருளுமாறு உறுதியுடன் ஓவாதுளத்தமைத்துவைத் தடங்கினன். இனிக் கோளும் வினையும் என்பதற்கு நாளும் கோளும் எனவும், பகைவரான் வரும் வினை எனவுங்கொண்டு வழிபாட்டு மெய்யடியார்க் கடியாரையும் அவை துன்புறுத்தா என்றலும் ஒன்று. இவ் வுண்மை வரும் ஆளுடைய அடிகள் திருநெறிய தமிழானும் உணர்க:

"காளமேகந் நிறக்கால னோடந்தகன் கருடனும்
நீளமாய்நின் றெய்த காமனும் பட்டன நினைவுறின்
நாளுநாதன் னமர்கின்ற நாகேச்சர நண்ணுவார்

கோளும்நாளும் தீயவேனு நன்காங் குறிக்கொண்மினோ."
(2. 119 - 6.)

நன்மையுள் - சன்மார்க்கத்தில். கோளும் வினையும் - தீக் குணத்தையும், தீத்தொழிலையும். குருசில் - சிவன். வாளும் மனத்தொடும் - கண்ணையும் மனத்தையும்.

## 2953. விரும்பில் அவனடி வீர சுவர்க்கம்

2953. விரும்பில் அவனடி வீர சுவர்க்கம்
பொருந்தில் அவனடி புண்ணிய லோகந்
திருந்தில் அவனடி தீர்த்தமு மாகும்
வருந்தி யவனடி வாழ்த்தவல் லார்க்கே.

நன்னெறி நான்மை நற்றவத்தின் வழி நின்று வாய்த் தொண்டும் கைத்தொண்டும் வருந்தி வழாது புரியும் திருந்து சீரடியார் விரும்பில் சிவபெருமான் திருவடியே மறமாணுலகமுமாகும். அடியார் உள்ளம் பொருந்தில் அவன் திருவடியே புண்ணியப்பேற்றின் பொருவிலாவுலகமுமாகும். அவனருளால் உள்ளம் உரை உடல் மூன்றும் கள்ளமின்றித் திருந்துமே யானால் அவர்க்கு அச் சிவபெருமான் திருவடியே தீர்த்தமுமாகும். சிவனடியார் வேண்டுவன எல்லாம் சிவபெருமான் திருவடிக் கீழே பெறுவர். வேறு வேறு உலகங்களில் வேறு வேறு காலங்களில் பெறுவன அனைத்தும் ஒருவர் சிவபெருமான் திருவடிக்கீழ் ஒருகாலத்து ஒருங்கு பெறுவர். விரும்பில் என்பதற்கு விரும்புதலில்லாத என்றலும் ஒன்று. மறமாணுலகம்: வீரசுவர்க்கம்.

திருந்தில் - சன்மார்க்கத்தில் நின்றால்.

## 2954. வானக மூடறுத் தானிவ் வுலகினில்

2954. வானக மூடறுத் தானிவ் வுலகினில்
தானக மில்லாத் தனியாகும் போதகன்
கானக வாழைக் கனிநுகர்ந் துள்ளூறும்
பானகச் சோதியைப் பற்றிநின் றேனன்றே.

சிவபெருமான் தன்மெய்யடியார்க்குத் தன் எண்பெருங் குணங்களைப் பதிவித்தருள உன்னுவன். உன்னலும் ஆருயிர்கட்கு உடற்சார்பால் ஏற்படும் முக்குணமும் அக்கணமே நீங்கும். அதுவே இவ் வுலகில் வானகம் ஊடறுத்தல் எனக் கூறினர். கானக வாழையாகிய திருநெறிய திருத்தமிழின் செவ்விய பண்ணினை அன்புடன் பாடி அவனடிக்கீழ் அழுந்தி நிற்பார்க்குத் திருவடியின்பம் எளிதின் வந்துறும். அவன் இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கிய பண்பினனாதலின் அவன் தனிப்பெரும் உண்மை யறிவின்ப வடிவினனாவன். அவன் திருவடி இன்பத்தேனினைப் பானகமாகப் பருகாநின்றேன். அவன் அருளறிவுப் பேரொளிப் பொருளாவன். அப் பொருளினை அருளால்பற்றி எங்கு மிலாததோர் ஈறில் இன்பம் வீறுபெற எய்தினேன். அதனையே பற்றி நின்றேன். கானக வாழை என்பதற்குக் குறிஞ்சி நிலத்து வாழை என்றலும் ஒன்று. இஃது உலகினைப்பற்றாது உடையானைப் பற்றுகின்ற உள்ளத்தூறும் தெள்ளத் தெளிந்த சிவனார் திருவடியின்பத்தேன் பற்றி நின்றேன்.

வானகம் - முக்குணம். தானகம் - அகம்பாவம். கானகம்... உள்ளூறும் - இசைக்கு வயப்பட்டு உள்ளத்தில் தோன்றும். பானகச் சோதி - ஆனந்த சொரூபனாகிய சிவன்.

## 2955. விதியது மேலை யமரர் உறையும்

2955. விதியது மேலை யமரர் உறையும்
பதியது பாய்புனற் கங்கையும் உண்டு
துதியது தொல்வினைப் பற்றறு விக்கும்
பதியது வவ்விட்ட தந்தமு மாமே.

தேவர், மூவர், மற்று யாவர்க்கும் அவரவர்தம் வினைக்கீடாகத் தன் திருவாணைவழி விதியமைக்கும் விதிப் பொருளாகவுள்ள விழுமியோன் சிவன். தூமாயைக் கண்ணுள்ளார் உறையும் சிவவுலகமாக வுள்ளவனும் அவனே. அவன் வளர்சடைமேல் பாய்ந்தோடும் பெருவெள்ளம் மிக்க கங்கையும் உண்டு. அனைவரும் புகழும் பொன்றாப் பொருள் சேர் புகழுக்கு என்றும் உரிய முதல்வனும் அவனே. அவனைப் போற்றும் செந்தமிழ்ப் பாமாலைகளே அவன் விழையும் சிறந்த படிமக்கலமாகும். அவன் அப் பாமாலைகளை ஏற்றருளிப் பண்டைப் பழவினைப் பற்றை அறுத்தருளினன். பழவினைப் பற்றறுக்கும் பான்மையால் அவன் பதியாகிய இறைவனாவன். 'சிவயநம' என்னும் திருவைந்தெழுத்தில் காணப்படும் 'வ'கரமாகிய வனப்பாற்றல் திருவருளை நமக்கருள்பவனுமவனே. அவனை அனைத்திற்கும் அந்தமுமாவன். படிமக் கலத்துண்மை வரும் அப்பர் திருமுறையான் உணர்க:

"பூம்படி மக்கலம் பொறபடி மக்கல மென்றிவற்றால்
ஆம்படி மக்கல மாகிலும் ஆரூ ரினிதமர்ந்தார்
தாம்படி மக்கலம்வேண்டுவ ரேல் தமிழ் மாலைகளால்
நாம்படி மக்கலம் செய்து தொழுது மடநெஞ்சமே."
(4. 103 - 3.)

விதி - பிரமனுக்குப் பிரமனானவன். பதி - ஒளி உலகங்கள். துதியது - தோத்திரத்திற்கு உரியது. வவ்விட்டது - அருளைத் தருவது. அந்தமும் ஆம் - முடிவானதும் ஆம்.

## 2956. மேலது வானவர் கீழது மாதவர்

2956. மேலது வானவர் கீழது மாதவர்
தானிடர் மானுடர் கீழது மாதனங்
கானது கூவிள மாலை கமழ்சடை
ஆனது செய்யுமெம் ஆருயிர் தானன்றே.

எத்தகைய வானவர்க்கும் மேலாய் அவர்களால் நத்தப் படும் அத்தனாய் விளங்குபவன் சிவன். மாதவஞ் சேர் மாதவர் மனத்தகத்தானும் அவனே. நன்னெறி நான்மை (2615) நற்றவஞ்சேர் மானிடர்தம் பிறவி இடரை நீக்கி அவர்தம் தூயவுள்ளமே கோயிலாகக் கொண்டருள்பவன் சிவன். வாராத செல்வமும் செல்வாய செல்வமுமாகத் திகழ்பவனும் அவனே. இதனையே எய்ப்பில் வைப்பென இயம்புவர். மணமிக்க கூவிளமாகிய வில்வமாலை அச் சிவபெருமானுடைய திருச்சடைக்கண் கமழாநிற்கும். அடியேன் ஆருயிர்க்கு உயிராய் எழுந்தருளி ஆவன செய்யும் தாவில் தனி முதல்வனும் அவனே. ஐந்தொழிற் றலைவனும் அவனே. 'மாதனங்கானது' என்பதனை அனங்கு மாது ஆனது என மாறி உண்மை அறிவின்ப வடிவினது என்றலும் ஒன்று.

மேலது வானவர்-தேவர்களுக்கு மேலானவர். கீழது மாதவர் - தவசிகள் உள்ளத்தவர். தானிடர் மானிடர் கீழது - தான் ஆட்கொண்ட அடியார் உள்ளத்தவர். மா தனம் - பெரிய வைப்பு. கானது கூவிளம் - காட்டில் உள்ள வில்வம். செய்யும் - ஐந்தொழில் நடத்தும். உயிர் - உயிர்போன்ற சிவன் அல்லது உயிரில் இருக்கும் சிவன்.

# 2957. சூழுங் கருங்கடல் நஞ்சுண்ட கண்டனை

2957. சூழுங் கருங்கடல் நஞ்சுண்ட கண்டனை
ஏழும் இரண்டிலும் ஈசன் பிறப்பிலி
ஆழுஞ் சுனையும் அடவியும் அங்குளன்
வாழும் எழுத்தைந்து மன்னனு மாகுமே.

ஆணவ வல்லிருள் சூழ்ந்துள்ள தன் முனைப்பாகிய கருங்கடற்கண் சிவனை மறத்தலாகிய தவாப் பெருங்குற்றப் பெருநஞ்சு தோன்றிற்று. அதனைக் கண்டஞ்சிய மாலுள்ளிட்ட தேவர்கள் சிவபெருமான்பால் முறையிட்டனர். சிவபெருமான் மன்னித்தருளலாகிய உண்டலைப் புரிந்தருளினன். உண்டதுமட்டுமன்றிக் கண்டத்தும் நிறுத்தருளினன். மாப்பெருங் குற்றம் மன்னிக்கப்பட்டமையால் அக் குற்றம் இடர்ப்பாடாகிய கண்டத்துட்பட்டது. அதுவே நஞ்சு கண்டத்து நிற்பதென்பதாகும். அத்தகைய நஞ்சுண்ட கண்டன். அவனே பதினான்கு உலகங்களுக்கும் பதியாவன். அவனே பிறவாயாக்கைப் பெரியோன். அவன் வீற்றிருந்து அருளும் திருமலை திருக்கயிலைத் திருமலை. அங்கு என்றும் நின்று நிலவுந் திருவருள்போல் நீரறவறியா ஆழமான சுனையும், மந்தியுமறியா மரன்பயில் காடும் உள்ளன. அதன்கண் உள்ளவன் சிவபெருமான். அவன் என்றும் நிலைபெற்றுள்ள செந்தமிழ்த் திருமறைத் திருவைந்தெழுத்தால் நன்று பெறப்படும் வேந்தனுமாவன். அதனாலேயே 'நந்தி நாமம் நமசிவய' (959) என்ற அருள் நூல்கள் நவில்வவாயின.

ஏழுமிரண்டிலும் - பதினான்கு உலகங்களிலும். யாழும் . . . . . அங்குளன்-யாழ்ப்பாணர்களும் சுனைகளும் காடுகளும் நிறைந்த கயிலையில். எழுத்தைந்து - நமசிவாய.

## 2958. உலகம தொத்துமண் ணொத்துயர் காற்றை

2958. உலகம தொத்துமண் ணொத்துயர் காற்றை
அலர்கதிர் அங்கியொத் தாதிப் பிரானும்
நிலவிய மாமுகில் நீரொத்து மீண்டச்
செலவொத் தமர்திகைத் தேவர்பி ரானே.

யாண்டும் செறிந்து வேண்டுவார்க்கு வேண்டுவ வேண்டி யாங்கீயும் பெரு வள்ளல் சிவபெருமான். அவன் ஒன்றாம் கலப்புத் தன்மையால் உலகத்துயிராய், மண்ணாய், உயர் காற்றாய், விளங்கா நின்ற கதிர்களையுடைய ஞாயிறு திங்கள் (தீ) என்னும் ஒளிப் பொருள்களாய், யாவற்றுக்கும் இடங்கொடுத்து நிற்கும் மாகம் ஆகிய விசும்பாய், மழை நீராய்த் திகழும் எண்பேருருவத்தனாய் விளங்குகின்றனன். இப் பொருள்களுடன் உடனாந் தன்மையில் இயைந்தியக்கி அவற்றைத் தொழிற்படுத்தியருள்கின்றனன். பொருள் தன்மையால் அவனே அனைத்திற்கும் முழுமுதல்வனாவன். எண்புலக் காவலர்க்கும் அவனே முதல்வன். அதனால் அவனே தேவர்பிரானாவன். (மா+கம்) மா என்பது மாகம் என்பதன் கடைக்குறை. அன்றி மாமுகில் என முகிலுக்கு அடையாக்கி, விசும்பை இனம்பற்றிக் கூறலும் ஒன்று.

திகைத்தேவர் - திக்குப்பாலகர்.

## 2959. பரிசறிந் தங்குளன் அங்கி அருக்கன்

2959. பரிசறிந் தங்குளன் அங்கி அருக்கன்
பரிசறிந் தங்குளன் மாருதத் தீசன்
பரிசறிந் தங்குளன் மாமதி ஞானப்
பரிசறிந் தன்னிலம் பாரிக்கு மாறே.

தீயின் தன்மையினையும் ஞாயிற்றின் தன்மையினையும் அறிந்தாக்கி யருள்பவன் சிவன். அதுபோல் காற்றினும் உள்ளான்.
அதுபோல் திங்களின்கண்ணும் உளன். பேரறிவின்கண்ணும் உளன். அல்லாகிய ஆணவச் சார்பால் மாசடர்ந்த நிலம் அல்+நிலம் - அன்னிலம் எனப்பட்டது. அத்தகைய நிலத்தைக் காத்தருள்பவனும் சிவனே.

பரிசறிந்து - நன்மை அறிந்து. அன்னிலம் - மயக்கமுடைய உலகினரை. பாரிக்குமாறு - காத்து அருளும்படி.

## 2960. அந்தங் கடந்தும் அதுவது வாய்நிற்கும்

2960. அந்தங் கடந்தும் அதுவது வாய்நிற்கும்
பந்த வுலகினிற் கீழோர் பெரும்பொருள்
தந்த வுலகெங்குந் தானே பராபரன்
வந்து படைக்கின்ற மாண்பது வாகுமே.

எல்லாப்பொருண் முடிவாகிய அந்தங்கடந்து நிற்கும் விழுமிய விழுப் பொருள் சிவபெருமான். அவன் அந்தங்கடந்து நின்றும் கலப்பால் அது வதுவாய் நிற்பன். பிணிப்புற்றுத் துணிவின்றி வருந்தும் இவ்வுலகினில் திருவருளால் பிணிப்பற்றுத் திருவடிக்கு மீளா ஆளாயினார் அடியாராவர். அவர், திருவடிக்கீழ் நீங்கா நினைவினராய் இருப்பதால் கீழோர் எனப்படுவர். அவர்க்கு என்றும் வேண்டுவ பிரிவின்றி நின்று நிரப்பும் பெரும்பொருள் சிவன். அவன்றன் திருவருட்டிருக் குறிப்பால் ஆயது இவ் வுலகம். இவ் வுலகெங்கும் நிறைந்திருக்கும் பெரும்பொருளும் அவனே. அவன், தானே சிவகுருவாக எழுந்தருளி வந்து அவ்வப்போது நன்னெறி நான்மை நல்லியல்சேர் நல்லாரை ஆட்கொண்டருள்வன். இவையனைத்தும் அவன்றன் திருவருள் மாண்பாகும்.

அந்தங்கடந்து - முடிவிறந்து. கீழோர் பெரும் பொருள் - தனக்கு அடியார் ஆனோருடைய வைப்பு. தந்த - தான் படைத்த. வந்து படைக்கின்ற - தான் குருவாய் வந்து நன்னெறியை அருளுகின்ற.

## 2961. முத்தண்ட வீரண்ட மேமுடி யாயினும்

2961. முத்தண்ட வீரண்ட மேமுடி யாயினும்
அத்தன் உருவம் உலகே ழெனப்படும்
அத்தன்பா தாளம் அளவுள்ள சேவடி
மத்தர் அதனை மகிழ்ந்துண ராரன்றே.

வழிப்பேற்றின் நிலைக்களமாகிய முத்தியண்டம் பெருமை மிக்க அண்டமாகும். அதுவே அவன்றன் றிருமுடியாகும். ஆயினும் அச் சிவபெருமானின் திருவுருவம் ஏழுலகமுமாகும். அதுபற்றியே 'உலகமே உருவமாக' (1694) எனத் தமிழ்ப்பொருள் நூலும் ஓதுவதாயிற்று. அவன் திருவடி பாதாளம் ஏழினுக்கும் அப்பாற்பட்டது. உன்மத்தமாகவுள்ளார் அறிவும் செயலும் திரிபுற்று நெறியல்லா நெறிச் சென்றுழலும் நீரர். இத்தகைய தெளிவில்லாதவர் மேலோதியவற்றை விரும்பி உணரார் என்க.

முத்தண்ட வீரண்டம் - சிவலோகம். மத்தர் - தெளிவு இல்லாதவர்.

## 2962. ஆதிப் பிரான்நம் பிரானவ் வகலிடச்

2962. ஆதிப் பிரான்நம் பிரானவ் வகலிடச்
சோதிப் பிரான்சுடர் மூன்றொளி யாய்நிற்கும்
ஆதிப் பிரான்அண்டத் தப்புறங் கீழவன்
ஆதிப் பிரான்நடு வாகிநின் றானன்றே.

அனைத்திற்கும் காரணமாவுள்ள ஆதிப்பிரானும் சிவனே. அவனே நம் பெருமானுமாவன். அவனே விரிந்த வெவ்வேறுலகம் அனைத்தினுக்கும் பேரொளிப் பிழம்பாகவுள்ளான். ஞாயிறு, திங்கள், தீ என்னும் முச்சுடருக்கும் உள்ளொளியாக நின்று ஒளி யருள்பவனும் அவனே. ஆதியாகிய நடப்பாற்றலை யுடையவனும் அவனே. அவனே கீழ்மேல் அண்டங்கள் அனைத்திற்கும் அப்பாலுள்ளவன். அவன் 'சிவசிவ' என்னும் ஒப்பில் பெருமறையுள் நடுவாகி நிற்பது போலவும், ஆருயிர்களின் நெஞ்சகத்து நிற்பது போலவும், தில்லைப் பொன்னம்பலத்து நிற்பது போலவும் எங்கும் நடுவாகி நின்றருள்கின்றனன். இனி நடுவுநிலை குன்றாது நின்றருள்கின்றனன் என்பதூஉம் ஒன்று.

சுடர் மூன்று - இரவி, மதி, தீ. அண்டத்தப்புறம் - இப்பூமி சுற்றிவரும் அண்டத்துக்கு அப்பாற்பட்ட. நாம் பார்க்கும் சூரியனும் சூரியனைச் சுற்றி ஓடுகின்ற கிரகங்களும் சேர்ந்தது ஒரு அண்டம். இப்படிப் பல அண்டங்கள் இவ் வண்டத்துக்கு மேலும் கீழும் பக்கங்களிலும் உள்ளன.

## 2963. அண்டங் கடந்துயர்ந் தோங்கும் பெருமையன்

2963. அண்டங் கடந்துயர்ந் தோங்கும் பெருமையன்
பிண்டங் கடந்த பிறவிச் சிறுமையன்
தொண்டர் நடந்த கனைகழல் காண்டொறுந்
தொண்டர்கள் தூய்நெறி தூங்கிநின் றானன்றே.

அண்டங்கள் அனைத்தையும் கடந்து அப்பாலாய் உயர்ந்தோங்கும் பெருமையுடையவன் சிவன். இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கிப் பிறப்புக்கு உட்படாத நுண்மையனும் அவனே. மேலும் மால் முதலான தெய்வங்கள் பிறந்திறந்துழலும் பெற்றியன.

அச்சிறுதெய்வங்களை மயக்கத்தால் தொழும் அவர்கள், தம் கடவுளர் பிறப்பதினாலேயே பேராப் பெருமையுடையவரென்கின்றனர். இவ்வுண்மை "உடல்சுமந்துழலுமக் கடவுளர்க் கல்லதை. பிறவியின் துயர்நினக் கறிவரிதாகலின் அருளாதொழிந்தனை போலும் கருணையிற் பொலிந்த கண்ணுதலேயோ" என்பதனாற் பெறப்படும். அத்தகைய பிறவி எடுக்கும் பிணிப்பு இல்லாதவன் சிவனாகலின் நகைச்சுவை தோன்ற பிறப்பில்லாச் சிறுமையன் என்றனர். தொண்டர் அருளால் நடந்து கண்ட ஆண்மைக் கழலணிந்த ஆண்டவன் சிவன். அவ் வொலிக்கும் கழலிணையைக் கொண்டாறும் தொண்டர் அளவிலா இன்பம் எய்துவர். அத்தொண்டர்க்குத் தூநெறியாக நிற்பவனும் அவனே. அத் தூநெறிக்கண் தங்கி அருள்பவனும் தானே.

## 2964. உலவுசெய் நோக்கம் பெருங்கடல் சூழ

2964. உலவுசெய் நோக்கம் பெருங்கடல் சூழ
நிலமுழு தெல்லா நிறைந்தனன் ஈசன்
பலமுழு தெல்லாம் படைத்தனன் முன்னே
புலமுழு பொன்னிற மாகிநின் றானே.

எங்கணும் இடைவிடாது சென்று மீள்வதாகிய உலாவுதலைச் செய்வது சிவபெருமானின், திருவருட்கண்கள். அக்கண்களையுடைய சிவபெருமான் பெருநீர்க்கடலாற் சூழப்பட்ட நிலவுலக முழுவதும் நீக்கமற எங்கணும் நிறைந்த நின்றனன். அவனே முதன்மைசேர் ஆண்டான். வேண்டும் பயனுடைப் பொருள்கள் முழுவதையும் படைத்தருளியவனும் அவனே. மெய்யடியார்களைக் காத்தருளும்படி பொன்மேனியுடன் பொலிந்திலங்குபவனும் அவனே.

உலவு செய் - எல்லா இடத்தையும் கடைக்கணிப்பதின். பலம் - பயனுள்ளவை. புலம் - உலகத்தில். பொன்னிறமாகி - ஞான குருவாகி.

## 2965. பராபர னாகிப்பல் லூழிகள் தோறும்

2965. பராபர னாகிப்பல் லூழிகள் தோறும்
பராபர னாயிவ் வகலிடந் தாங்கித்
தராபர னாய்நின்ற தன்மை யுணரார்
நிராபர னாகி நிறைந்துநின் றானே.

பேருலகனைத்தும் ஒருங்கு முடியுங்காலம் ஓர் ஊழி என்ப. அத்தகைய பல்லூழிகளைப் புரிந்து நிற்கும் பராபரன் சிவபெருமான். அவனே முழுமுதல்வனாய் இவ்வுலகங்களைத் தாங்கிக் காத்தருள்பவன் ஆவன். அவனே தாங்கி நிற்பதுடன் தலைவனுமாகி நிற்கின்றனன். திருவருளால் தனக்கோர் பற்றுக்கோடின்றிச் சிவபெருமானையே பற்றி அவனைத் தாங்கும் ஆண்மை மிக்கது ஆனேறு. அவ்வானேற்றை ஊர்ந்து வருபவனும் சிவனே. அவன் எங்கணும் நீக்கமற நிறைந்து நின்றருளினன்.

பராபரன் - கடவுள். தராபரன் - உலகில் தலைவன். நிராபரன் - நிர் + ஆ + பரன் ஆண்மையுள்ள இடபத்தை உடையவன்.

## 2966. போற்றும் பெருந்தெய்வந் தானே பிறரில்லை

2966. போற்றும் பெருந்தெய்வந் தானே பிறரில்லை
ஊற்றமும் ஓசையும் ஓசை யொடுக்கமும்
வேற்றுடல் தானென் றதுபெருந் தெய்வமாங்
காற்றது ஈசன் கலந்துநின் றானன்றே.

மண்ணவர் விண்ணவர் மற்றுமுள்ளார் அனைவர்களாலும் போற்றப்படும் அன்பறிவாற்றல்சேர் இன்பப் பெரும் பொருள் சிவபெருமான். அவனே கலப்புத் தன்மையால் அனைத்தையும் ஊற்றமாகத் தாங்குகின்றவன் ஆவன். ஓசை தோன்றுமிடமாகிய நாதமெய்யின் நிலைக்களனும் அவனே. அஃதொடுங்கும் ஒடுக்கச் சிவனும் அவனே. தனக்கு வேறாக ஏதும் இன்மையால் வேற்றுடல்களென்று கூறப்படுவதனைத்தும் அவனே யாகும். படிப்போர் பள்ளிக்கூடத்தையும், குடியிருப்போர் வாடகை வீட்டையும், ஊர்ந்து செல்வோர் கூலி ஊர்தியையும் தம்முடைய என்று பேசுந் தன்மை இதற்கொப்பாகும். உண்மையான் நோக்கினால் இவ்வுடைமைகளுக்குரிய உடையார் வேறென்பது புலனாகும். அதுபோல் எல்லாப் பொருளுக்கும் உடையவன் சிவனே. அவனே பெருந்தெய்வம். எல்லாவற்றையும் இயைந்தியக்கும் காற்றுப் போல் தோற்றமின்றித் தொழிலால் தோன்றுபவனும் அவனே. அவனே ஈசன் எனப்படுவன். அவன் விண்போல் எங்கணும் கலந்து நின்றருளினன். சிவபெருமான் விண்போல் இடங்கொடுத்தும், காற்றுப் போன்றியைந்தியக்கியும், தீப்போல்

ஒளிகொடுத்தும், நீர்போல் துப்பருளியும், நிலம்போல் நலமுறத் தாங்கியும் நின்றருள்கின்றனன். துப்பு - உணவு.

ஊற்றமும்- ஆதாரமும். ஓசை - நாதம். வேற்றுடல் - உயிர்க்கு வேறாகிய உடலும். காற்றது - காற்றுப்போல.

## 2967. திகையனைத் துஞ்சிவ னேயவ னாகின்

2967. திகையனைத் துஞ்சிவ னேயவ னாகின்
மிகையனைத் துஞ்சொல்ல வேண்டா மனிதரே
புகையனைத் தும்புறம் அங்கியிற் கூடு
முகையனைத் தும்எங்கள் ஆதிப் பிரானன்றே.

உற்றுணரும் நற்றிறமில்லா மனிதரே! எல்லாத் திசைகளிலும் சிவபெருமான் நீக்கமற நிறைந்து நின்றருள்கின்றனன். அங்ஙனமிருப்பவும் அவனுக்குப் புறம்பாக ஓரிடத்து ஓரிறைவன் உண்டெனக் கூறுவது உண்மைக்கு மாறாகும். எப்பெயரிட்டு எவ்வுருவமைத்து எங்ஙனங் கூறி வழிபடினும் அவையனைத்தும் சிவபெருமானையே சாரும். நீரனைத்தும் ஒன்றாய், மின்சாரம் அனைத்தும் ஒன்றாயிருப்பினும் வெளிப்பட்டுப் பயன்தரும் காலமும் இடமும் கோலமும் பெயரும் வெவ்வேறாதலின் வேறுபடுத்தி வழங்குகின்றோம். அங்ஙனம் வழங்கற் பெயரான் வேறுபடினும் பொருள் ஒன்றேயாம் உண்மை இதற்கொப்பாகும். மேலோங்கிக் காணப்படும் புகையெல்லாம் தீயின்கண் ஒடுங்கி நின்று தோன்றுவனவே. அதுபோல் வெளித்தோன்றும் உலகப் பொருள்கள் அனைத்தும் எங்க ஆதிப்பிரானாகிய சிவபெருமானின்கண் ஒடுங்கி நின்று தோன்றும் முகை-தோற்றம்.

திகை-திக்குகள். புகை . . . . . முகையனைத்தும் - புகை மண்டிய வேள்வித்தீயில் சேரும் பொருள்கள் எல்லாம்.

# 2968. கலையொரு மூன்றுங் கடந்தப்பால் நின்ற

2968. கலையொரு மூன்றுங் கடந்தப்பால் நின்ற
தலைவனை நாடுமின் தத்துவ நாதன்
விலையில்லை விண்ணவ ரோடும் உரைப்பன்
நரையில்லை யுள்ளுறு முள்ளவன் தானே.

இடப்பால் நாடி, வலப்பால் நாடி, நடுநாடி ஆகிய முக்கலைகளையும் கடந்து அப்பால் நின்றருள்கின்றவன் சிவபெருமான். அவனே அனைத்துலகினுக்கும் அனைத்துயிர்கட்கும் அரும்பெறற் றலைவனாவன். அவனை அகனமர்ந்த அன்பினராய்ப் படர்ந்து பரவிப் பணிந்து நினைமின்கள். படர்ந்து - நினைந்து. அவனே மெய்க்கடவுள். தத்துவம் - மெய். பிறப்பு ஆணவமலத்தேய்வின் பொருட்டு நல்கியருளப்பட்ட பெருங்கொடை. அப் பிறப்பின் விலையே வினையாகும். விலையில்லை எனவே வினையில்லை. வினையின் விளைவாம் பிறப்பும் இல்லை என்பது தாமே போதரும். விண்ணவரனைவர்களாலும் 'ஊற லாயரு ளா' யென்று உரைக்கப்பட்டு ஓவாது வழிபடப்பெறும் பெரும் பொருளும் சிவனே. நரை - வெண்மையாகிய வெள்ளறிவெனப்படும் அறியாமையில்லை. இந்நிலைக்கண் உம்மைவிட்டு என்றும் பிரிப்பின்றி நிற்கும் சிவபெருமான் உமக்குள் வேறறநின்று வெளிப்பட்டருள்வன். வேறறநிற்றல் - ஏகமாய் நிற்றல் மூன்று கலையென்பதற்குத் தந்திரம், மந்திரம், செவியறிவுறூஉ எனலும் ஒன்று.

கலை ஒரு மூன்றும் - இடகலை, பிங்கலை, சுழுமுனை. விலை இல்லை - பிறக்கும் வினை இல்லை. உரைப்பன் - துதிக்கப்படுவான். நரையில்லை - சிறப்பில்லை.

## 2969. படிகால் பிரமன்செய் பாசம் அறுத்து

2969. படிகால் பிரமன்செய் பாசம் அறுத்து
நெடியான் குறுமைசெய் நேசம் அறுத்துச்
செடியார் தவத்தினிற் செய்தொழில் நீக்கி
அடியேனை உய்யவைத் தன்புகொண் டானே.

படைப்போன் ஆருயிர்களைப் பூமிக்கண் பிறக்குமாறு படைத்தற்றொழிலைப் புரிவதற்கு அவ்வுயிர்கள் செய்யும் இருவினையே காரணமாகும். அவ்வினை எஞ்சுவினை எனப்படும். அதுவே ஈண்டுப் பாசம் எனக் குறிக்கப்பட்டது. அப் பாசத்தை அறுத்தருளியவன் சிவன். நெடியானாகிய காப்போன் செய்யும் இழிவு குறுமை எனப்படும். அதற்குரிய வாயில் நேசம். அதுவே ஏறுவினை எனப்படும். அவ் ஏறு வினையையும் சிவபெருமானே (2932) அறுத்தருளினன். நன்னெறிநான்மை (2615) நற்றவப் பேரொளி செடி எனப்படும். அத்தகைய பெருந்தவத்தால் ஊழ் வினையுந்த உஞற்றும் தொழிலினையும் ஒழித்தருளினன். இவ்வாற்றால் அடியேன் அன்பினைக் கைக்கொண்டருளி உய்யவைத்தனன். சிவமாகச் செய்தருளித் திருவடிப்பேரின்பில் திளைப்பித்தருளினன்.

படிகால் - பிறக்குமாறு. பாசம் - சஞ்சிதம். நெடியான் - மால். குறுமை செய் - இழிவைச் செய்வதற்கு ஏதுவாகிய. நேசம் - ஆகாமியம். செடியார் தவம் - கடுந்தவம். செய்தொழில் - பிராரத்துவத்தின் வன்மையை.

## 2970. ஈசனென் றெட்டுத் திசையும் இயங்கின

2970. ஈசனென் றெட்டுத் திசையும் இயங்கின
ஓசையி னின்றெழு சத்தம் உலப்பிலி
தேசமொன் றாங்கே செழுங்கண்டம் ஒன்பதும்
வாச மலர்போல் மருவிநின் றானன்றே.

எண்பாற் புலத்தினும் சிவபெருமானின் திருவடிவமே விளங்கி ஒளிதருவதாயிற்று. முப்பத்தாறாம் மெய்யாம் ஓசையினின்று எழும் சத்தமாகிய எழுத்துக்கள் என்றும் உள்ளன. அதுபோல் விழுமிய முழுமுதல்வனாம் சிவபெருமானும் என்றும் பொன்றா இயல்பினன். தேசம் ஒன்றாகக் கண்டமாகிய பிரிவு ஒன்பது என்ப. யாண்டும் அச் சிவபெருமான் 'உற்ற ஆக்கையின் உறுபொருள் நறுமலர் எழுதரு நாற்றம் போற், பற்ற லாவதோர் நிலையிலாப் பரம்பொருள்' (8. அதிசயப்பத்து, 9) என்னும் செந்தமிழ் மறைமுடிபினுக்கு ஏற்ப மலர்மணம் போன்று மன்னிநின்றருள்வன்.

ஈசன் . . . . . இயங்கின-எல்லாத் திக்குகளிலும் சிவமே விளங்கின. ஓசையில்.....சத்தம்-நாத தத்துவத்தினின்றும் எழும் அக்கரங்கள் போல. உலப்பிலி - கெடுதல் இல்லாதவன். தேசம்-உலகம். செழுங்கண்டம் ஒன்பதும் - திருமூலர் காலத்தில் இப் பூமி அண்டம் ஒன்பது கண்டங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது. இப்போது 5 கண்டங்களாக இருக்கிறது.

## 2971. இல்லனு மல்லன் உளனல்லன் எம்மிறை

2971. இல்லனு மல்லன் உளனல்லன் எம்மிறை
கல்லது நெஞ்சம் பிளந்திடுங் காட்சியன்
தொல்லையன் தூயன் துளக்கிலன் தூய்மணி
சொல்லருஞ் சோதி தொடர்ந்துநின் றானன்றே.

விழுமிய முழுமுதற் சிவபெருமான் பழுதில் திருவடியுணர்வு கைவந்த நாயன்மார்பால் அவர்தம் உணர்வுக்கு உணர்வாய் நின்று தன் இயற்கை உண்மையறிவின்ப வடிவினை உணர்த்தியருள்வன். அதனால் அவன் அவர்கட்கு இல்லாதவனும் அல்லன். உணர்வினில் உள்ளவனாகவே என்றும் காணப்படுவன். அத்தகைய தவப்பேறு ஒரு சிறிதும் கிட்டாத அறியாமை மிக்க புல்லறிவினர்க்கு முனைப்பு முன்னிற்கும். அந்நிலையில் கல்லாதார்க்கு வரிவடிவம் புலனாதல் இல்லாமை போன்று அவர்தம் உணர்வுக் காட்சிக்குச் சிவபெருமானும் புலனாகான். அதனால் அவன் அவர்கட்கு உள்ளவனும் அல்லன். அவன் நம் நெஞ்சகத்துக் காணப்படும் 'காராரும் ஆணவக் காட்டைக் களைந்து அறக்கண்டு அகங்கார மென்னும், கல்லைப் பிளந்தருள்வன்' மேலும் அவன் 'கல்லைப் பிசைந்து கனியாக்கும் வல்லானு'மாவன். அம்முறையின் எளியேன் நெஞ்சினை உருகுவித்தருளினன். அதன்மேல் அவனே உணர்வினுக்குணர்வாக வெளிப்படும் காட்சியனுமாவன். காட்சியன்-உணருருவாவோன். அவன் தொன்மையிலேயுள்ள நன்மையன். இயல்பாகவே பாசங்களினின்றும் நீங்கிய தூயோனும் அவனே. என்றும் ஒன்றுபோல் நிற்கும் திரிபிலாத் தன்மையனும் அவனே.

அவனே மாசிலாச் செம்மணி. சொல்லுதற்கரிய அருட்பேரொளி. அவன் நம்மையெல்லாம் அன்றுதொட்டு இன்றுகாறும் தொடர்ந்து நின்றருளும் தடங்கடலந்தணன் ஆவன்.

இல்லனுமல்லன் - ஞானிகளுக்குத் தெரிபவன் ஆனதால் இல்லாதவனுமல்லன். உளனல்லன் - அஞ்ஞானிகட்குத் தெரியாதவன்
ஆனதால் உள்ளவனும் அல்லன். கல்லது நெஞ்சம் - கல்போன்ற வலிய நெஞ்சத்தாரையும். பிளந்திடும் - உருகச்செய்யும். காட்சியான் - உருவமுடையவன்.

## 2972. உள்ளத் தொடுங்கும் புறத்துளும் நானெனுங்

2972. உள்ளத் தொடுங்கும் புறத்துளும் நானெனுங்
கள்ளத் தலைவன் கமழ்சடை நந்தியும்
வள்ளற் பெருமை வழக்கஞ்செய் வார்கள்தம்
அள்ளற் கடலை அறுத்துநின் றானன்றே.

சிவபெருமான் 'நும்பின் எம்மை நுழையப் பணியே' என்னும் நற்றவநிலை பெற்றிலாதார்க்கு அவர்தம் உள்ளத்து அடங்கிப் புலனாகாதிருப்பன். இஃது 'அருக்கன் நேர் நிற்பினும் அல்லிருளே காணார்க்கு, இருட்கண்ணே பாசத்தார்க்கு ஈசன்' என்னும் பொருள் நூல் அருள்மொழியினை யொக்கும். புறத்தேயும் அவ்வுயிர்கள் நான் என முனைத்திடுமாறு 'அவையே தானேயாய்' நிற்பன். அவன் 'கரவாடும் வன்நெஞ்சர்க்க அரியான். கரவார்பால் விரவாடும் பெருமான்' ஆதலால் 'கள்ளத் தலைவன்' என அழைக்கப்படுவன். அவன் நறுமணம் கமழும் கொன்றை மாலையணிந்த பின்னுதலமைந்த திருச்சடையினையுடையவன். நந்தியென்னும் திருப்பெயரினையுமுடையவன். அவனே 'பொன்னும் மெய்ப் பொருளும் தருவானாகிய' பெருவள்ளல். அவனை நீங்காநினைவுடன் அவன் திருவருட்பாங்காய் ஒழுகவல்லார்க்கு வழுவிலா வாய்மைப் பெருமானாவன். அவர்தம் 'அவாவெனும் தவாப் பிறப்பீனும் வித்து' முளைத்தற்குத் தக்கதாகிய அள்ளலாம் சேறுசேர் பிறவிப் பெருங்கடலை ஒருங்கறுத்தருளினன். விரவாடும் பெருமான்: விரவியாடும் பெருமான்.

வழக்கம் செய்வார்கள்தம் - சிந்திக்கின்றவர்களுடைய
அள்ளல் கடல் - துன்பக்கடல்.

# 2973. மாறெதிர் வானவர் தானவர் நாடொறுங்

2973. மாறெதிர் வானவர் தானவர் நாடொறுங்
கூறுதல் செய்து குரைகழல் நாடுவர்
ஊறுவர் உள்ளத் தகத்தும் புறத்துளும்
வேறுசெய் தாங்கே விளக்கொளி யாகுமே.

இன்ப வேட்கையராகிய வானவரும் பொருள் வேட்கையராகிய தானவரும் என்றும் தம்முண் மாறுபட்டு ஒருவரோடொருவர் மாறாப் போரிடுவர். அப் போரின்கண் வெற்றியுற்றார் திளைப்பர். தோல்வியுற்றார் இளைப்பர். இளைத்தவர் மீண்டும் வென்று திளைத்தற் பொருட்டுச் சிவபெருமான் திருவடியிணையினை நாளும் வழிபடுவர். இவ்வுண்மை, 'வாழ்த்துவதும் வானவர்கள் தாம் வாழ்வான், மனம் நின்பால் தாழ்த்துவதும் தாமுயர்ந்து தம்மையெல்லாம் தொழவேண்டி' என்னும் செந்தமிழ் மறைமுடிவான உணரலாம். இவ்விரு திறத்தாரும் ஒழிந்த அறநெறிப் பேற்றினராகிய மனிதர் உள்ளங்கனிந்து ஊற்றெடுத்து வாழ்த்தி வணங்குவர். அவர் உள்ளத்தகத்தும் புறத்தும் சிவபெருமான் வெளிப்பட்டருள்வன். அவ்வெளிப் பாட்டால் அவை சிறந்தனவாகத்
தோன்றும். இது 'புகழ்ந்த கோமயத்து நீரால் பூமியைப் பொலிய நீவித் திகழ்ந்த வான்சுதையும் போக்கிச் சிறப்புடையத் தீபம் ஏற்றி' விளங்குந் திருமனையின் சிறப்பினை யொக்கும். சிவபெருமான் தூண்டாமணி விளக்காய் அவர்தம் உள்ளத்துப் பூண்டு நின்றருள்வன்.

மாறெதிர் வானவர் தானவர் - மாறுபட்டுள தேவர்களும் அசுரர்களும் கூறுதல். செய்து - துதித்து. ஊறுவர் - இன்பப் பெருக்குடையவர். வேறுசெய்து - ஊன் உயிர் வேறுபாடு செய்து; "ஊன் உயிர் வேறு செய்தான் நொடித்தான் மலை உத்தமனே." சுந்தரர்.

## 2974. விண்ணிலும் வந்த வெளியிலன் மேனியன்

2974. விண்ணிலும் வந்த வெளியிலன் மேனியன்
கண்ணிலும் வந்த புலனல்லன் காட்சியன்
பண்ணினில் வந்த பயனல்லன் பான்மையன்
எண்ணிலா னந்தமும் எங்கள் பிரானன்றே.

சிவபெருமான் 'உலகமே உருவமாகக்' கொண்டு இடைவெளி ஒருசிறிதுமின்றி எங்கணும் நிறைந்துள்ள திருமேனியையுடையவன். 'கண்முதற் புலனாற் காட்சிக்கும்' அப்பாற்பட்டவன். ஆனால் அவன் திருவடியுணர்வால் கண்டு மீண்டுவாராவழி பூண்டு பேரின்பம் எய்தும் பெருங் காட்சிக்குப் புலனாம் தன்மையும் உள்ளவன். காட்சி - அறிவு. நம் உள்ளப் பண்பால் கொள்ளத்தகும் பான்மைப் பயனுடையவனல்லன். உணர்வினுக்கு உணர்வாய் உண்ணின்று எண்ணில்லாத பேரின்பப் பெருவாழ்வைத் துய்ப்பிக்கும் பான்மைப் பண்ணவன். அவனே நம்முடைய பெருமானாவன்.

# 2975. உத்தமன் எங்கும் உகக்கும் பெருங்கடல்

2975. உத்தமன் எங்கும் உகக்கும் பெருங்கடல்
நித்திலச் சோதியின் நிலக் கருமையன்
எத்தனை காலமும் எண்ணுவர் ஈசனைச்
சித்தர் அமரர்கள் தேர்ந்தறி யாரன்றே

'சார்ந்தாரைக் காக்கும்' தலைமைப்பாடுடைய தனி முதல்வன் சிவபெருமான். யாண்டும் எல்லாரும் வேண்டி உகக்கும் பேரின்பப் பெருங்கடலும் அவனே. தெண்ணீர் வண்ணமுத்தின் தண்ணளிசேர் பேரொளியுடையவன் சிவன். திருநீலகண்டப் பெருமை சேர் கருமையனும் அவனே. அவன் திருவடியிணையினை அவன் திருவருளால் தொழுதலே அமைவுடைத்து. அங்ஙனமின்றித் தம்முனைப்பால் சித்தரும் அமரரும் எத்தனை காலமும் எண்ணாநிற்பர். அங்ஙனம் எண்ணினும் அச் சிவபெருமானாகிய ஈசனை உள்ளவாறு ஆய்ந்தறியார். அவன் "சோதித்தார் காணாமை நின்றாய் போற்றி" என்னும் சொல்லரும் திருமுறைப் பண்பின் தொடர்பினன். அதனால் அவனை அவன் திருவடியுணர்வாலேயே காணுதல்வேண்டும்.

பெருங்கடல் - ஆனந்தக்கடல் போன்றவன்.
நீலக்கருமையன் - நீலமிடற்றன்.

## 2976. நிறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் ஈசன்

2976. நிறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் ஈசன்
அறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் இன்பம்
மறம்பல எவ்வண்ணம் அவ்வண்ணம் பாவம்
புறம்பல காணினும் போற்றகி லாரே.

முழுமுதற் சிவபெருமானின் திருநிறம் மெய்யடியார்கள் எவ்வண்ணம் நினைக்கின்றார்களோ அவ்வண்ணம் காணப்படும். அவன் எல்லாங் கடந்தவன் ஆதலினானும் அவன் எல்லாங் கொள்பவன் ஆதலினாலும் அடியவர் நினைத்தவண்ணத்தை அப்படியே கொண்டருள்கின்றனன். அவன் 'அறவாழி அந்தண'னாதலின் அவன் புரிந்தருளும் அறப்பாங்காம் தலையளியும் பலவாகும். தலையளி - கருணை. மெய்யடியார்களின் தலையன்பு எவ்வண்ணமாக விளங்குகின்றதோ அவ்வண்ணமாகும் அவன் புரிந்தருளும் இன்பம். மேலும் அவன் புரிந்தருளும் மறத்தலையளி நெறியல்லா நெறிச் சென்று வெறியராய், பறிதலையராய், கிறியராய்க் கொடுமை பல செய்து வடுவுடன் மாண்டழிந்த கொடியோர் பாவம் எவ்வண்ணம் அவ் வண்ணமாகும். இவையனைத்தும் வெளிப்படுமாறு உலகிடைப் புறத்தே நூல் வழக்காகவும் உலக வழக்காகவும் காட்டியருள்கின்றனன். அங்ஙனமிருந்தும் நற்றவஞ்சேர் பொறியிலார் போற்றாதகலுகின்றனர். பொறி - புண்ணியம்; நல்லூழ்.

நிறம்பல - சிவத்தின் ஒளி பலவாம். எவ்.....ஈசன் - அன்பரது மனஒளி எவ்வண்ணம் அவ்வண்ணம் ஈசன்;

"தன்னைக்கண்ட என்வண்ணம் எவ்வண்ணம் அவ்வண்ணமாகிய ஈசனுக்கே."

சேரமான் பெருமாள்.

அறம்பல-அறக்கருணை பல. எவ்.....இன்பம் - அடியாரது அன்பு எவ்வண்ணமோ அவ்வண்ணம். மறம் பல - மறக்கருணை பல. எவ் . . . . . . பாவம் - கொடியரது பாவம் எவ்வண்ணமோ அவ்வண்ணம் புறம்பல காணினும் போற்றகிலார் - இம்மாதிரி உலகில் கண்டாலும் மக்கள் வழிப்படுவதில்லை.

## 2977. இங்குநின் றானங்கு நின்றனன் எங்குளன்

2977. இங்குநின் றானங்கு நின்றனன் எங்குளன்
பொங்கிநின் றான்புவ னாபதி புண்ணியன்
கங்குல்நின் றான்கதிர் மாமதி ஞாயிறு
எங்குநின் றான்மழை போலிறை தானன்றே.

விழுமிய முழுமுதற் சிவபெருமான் என்றும் எங்கனும் நீக்கமின்றி நின்றருள்கின்றனன். அதனால் அவனை இங்கு நின்றான் அங்கு நின்றான் என்றோ, இவ் வுலகத்துள்ளான் அவ் வுலகத்துள்ளான் என்றோ சுட்டிக்கூற வொண்ணாது. அன்றியும் எங்குளன் என வினவவும்
ஒண்ணாது. என்னை, அவன் இல்லாதவிடம் இருந்தாலன்றோ, வினவுதலுண்டாகும் என்க. அவன் மெய்யன்பர்தம் அகக்கண்ணிற்கும் புறக்கண்ணிற்கும் பொங்கி விளங்கி அருள்கின்றனன். அவனே உலக முழுமுதல்வன். அவனே புண்ணிய வடிவினன். அவன் இரவின் கண்ணும் நின்றருள்கின்றனன். இது "நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதன்" என்பதனால் விளங்கும். நிலவுக்கதிர் சேர் திங்களாகவும் நின்றருள்கின்றனன். வெம்மைக் கதிர் சேர் செம்மை ஞாயிறாகவும் நின்றருள்கின்றனன். எங்கும் மழைபோல் பேரருள் பொழியும் பெரும் பொருளாகவும் நின்றருள்கின்றனன். அவனே எல்லாம் வல்ல இறைவனாவன்.

புவனாபதி - உலகநாயகன். கங்குல் - இரவு. மழைபோல் - மேகம்போல்.

## 2978. உணர்வது வாயுமே யுத்தம மாயும்

2978. உணர்வது வாயுமே யுத்தம மாயும்
உணர்வது நுண்ணறி வெம்பெரு மானைப்
புணர்வது வாயும் புல்லிய தாயும்
உணர்வுடல் அண்டமு மாகிநின் றானே.

சிவபெருமான் ஆருயிர்கட்கு அறிவை விளக்குந் தன்மையில் அவ் வுயிர்களின் அறிவிற்கு அறிவாய் நிற்கின்றனன். ஆதலின் உணர்வதுவாயும் என்றனர். மேலும் இயற்கை யுணர்வு, முற்றுணர்வு முதலியன உடையனாதலின் சார்ந்தாரைக் காக்கும் தலைவனும் ஆகின்றனன். பொருள்களைத் திரிபின்றி யுணர்வது நுண்ணறிவாகும். எம்பெருமான் எல்லாவற்றுடனும் வேற்றுமையின்றிப் புணர்ந்து நிற்கின்றனன். அங்ஙனம் பின்னற்புணர்ப்பாய்ப் புணர்ந்து நிற்பினும் அவன்றன் அருட்கண்ணால் மட்டுமே அவனை உணர்தல் முடியும். ஆருயிர்களின் கண்ணாலும் கருத்தாலும் அறிய வொண்ணா நுண்மையன். இவ்வுண்மை 'நூலுணர்வு உணரா நுண்ணியோன் காண்க'. என்னும் செந்தமிழ் மறைமுடிவினால் உணரப்படும். உணர்வு உடல் உலகம் அண்டம் எல்லாமாய் நிறைந்து நின்று அருள்பவனும் அவனே.

உணர்வதுவாய்-அறிவாய் நுண்ணறிவு - மெய்ப்பொருள் காணும் ஆராய்ச்சி அறிவு. புணர்வதுவாய் - எல்லாவற்றோடும் கூடியதாய். புல்லியதாய் - அறிதற்கு நுண்ணியதாய்.

## 2979. தன்வலி யாலுல கேழுந் தரித்தவன்

2979. தன்வலி யாலுல கேழுந் தரித்தவன்
தன்வலி யாலே அணுவினுந் தானொய்யன்
தன்வலி யான்மலை எட்டினுந் தான்சாரான்
தன்வலி யாலே தடங்கட லாகுமே.

சிவபெருமான் தன்னுடைய முடிவிலாற்றலால் எழுவகை உலகங்களையும் தாங்குகின்றனன். தன் ஆற்றலாலேயே 'அணுவோர் அண்டமாம் சிறுமை கொள்' நுண்ணியனும் அவனே. 'அண்டமோர் அணுவாம் பெருமை கொள்' பரியனும் அவனே. தன் ஆற்றலாலேயே எண் பெரும் மலையும் ஒருங்கு கூடினும் ஒப்பாகாப் பெருமையுமுடையன். அவன்றன் பேராற்றலுக்கு அளப்பருங் கடலும் ஒப்பாகா என்க.

## 2980. ஏனோர் பெருமைய னாகிலும் எம்மிறை

2980. ஏனோர் பெருமைய னாகிலும் எம்மிறை
ஊனே சிறுமையுள் உட்கலந் தங்குளன்
வானோர் அறியும் அளவல்லன் மாதேவன்
தானே யறியுந் தவத்தின் அளவன்றே.

சிவன் மண்ணவர் விண்ணவர் மற்றுமுள்ளவர் எல்லாரினும் மேம்பட்ட பெருமையை உடையவன். ஆயினும் மெய்யன்பர்தம் ஊனார் சிறுமை உடலுட் கலந்து அங்கு நின்றருள்கின்றனன். அவனே எம் இறையாகிய சிவன். உட்கலந்து - உள் கலந்து; உள்ளம் கலந்து என விரிந்து உள்ளமாகிய ஆருயிர்களுடன் கலந்து எனப் பொருள்படும். அவன் காப்போனுள்ளிட்ட எத்தகைய வானவராலும் அளந்தறிய வொண்ணா அளப்பருங் காட்சியன். அவனே எல்லாத் தெய்வங்கட்கும் அவர் தம் தவத்துக்கு ஈடாக அருளாற்றல் நல்கும் திருவாணையன். அதனால் அவனே மாதேவன். நன்னெறி நான்மை நற்றவத்தின் அளவாகத் தன்னைத்தானே ஆருயிர்கட்கு அறியப்படுத்தும் தண்ணளியோன். மாதேவன் - பெரும்பொருட்டெய்வம்.

ஏனோர் - எத்தன்மை உடையவரினும். ஊனே சிறுமையுள் - அற்ப சரீரத்திலும். உட்கலந்து - ஆன்மாவோடு கூடி.

## 2981. பிண்டாலம் வித்தில் எழுந்த பெருமுளைக்

2981. பிண்டாலம் வித்தில் எழுந்த பெருமுளைக்
குண்டாலங் காயத்துக் குதிரை பழுத்தது
உண்டனர் உண்டார் உணர்விலா மூடர்கள்
பிண்டத்துட் பட்டுப் பிணங்குகின் றார்களே.

ஆருயிர்களின் உடம்பு ஆலமரத்திற்கு ஒப்பாகும். அம்மரத்தை அதன்கட் டோன்றிய விழுது மதலையாய்த் தாங்குவது போன்று மக்களும் பெற்றோரைத் தாங்குகின்றனரல்லவா? அதனால் அஃதோர் அரிய ஒப்பாகும். அத்தகைய உடம்பாகிய ஆலவிதையினின்று ஒரு பெரு முளை எழுந்தது. அதுவே உள்ளத் துறவாகிய உறுதியென்னும் வைராக்கியமாகும். அம் முளை வளர்ந்து மரமாகி அதனினின்று உருள்வடிவாகிய நிறை பேரின்பமாம் ஆலங்காய் காய்த்தது. அக் காய் சிவனுகர்வாகிய மாங்கனியாகப் பழுத்தது. குதிரை - மா. திருவருளால் அச் சிவப்பெருங்கனியினை உணர்வின்கண் நுகர்ந்தவர் உண்டவராவர். அவர்களே திருவடியுணர்வு கைவந்த பெருந்தவத்தோர்; அவ் வுணர்வு பெறும் நற்றவப் பேறு இல்லார் முழு மூடர்களாவர். அவர்கள் பிண்டமாகிய உடம்பிற் புகுந்து பிறப்பு இறப்புகளுக்கு உட்பட்டு நிங்காப் பெருந்துன்பிற் றூங்குவர். அவர்கள் நன்னெறிக்கு வாராது புன்னெறிப்பட்டு மாறுபடுகின்றனர்.

பிண்டாலம் வித்து - ஆலமரத்துக்கு ஒப்பாகிய உடம்பில் பெருமுளை - சித்த வைராக்கியம். குண்டாலம் - ஆனந்தம்.

## 2982. ஏயுஞ் சிவபோக மீதன்றி யோரொளி

2982. ஏயுஞ் சிவபோக மீதன்றி யோரொளி
ஆயும் அறிவையும் ஆயா உபாதியால்
ஏய பரிய புரியுந் தனதெய்துஞ்
சாயுந் தனது வியாபகந் தானன்றே.

நன்னெறி நான்மை நற்றவப்பேற்றால் சிவக்களிப்பாகிய சிவபோகம் பொருந்தும். அதுவல்லாமலும் திருவருட் பேரொளியால் ஆயும் அறிவு உண்டாகும். நிலைப்பதும் நிலையாததுமாகிய பொருள்களின் வேறுபாடுகளை அறியும் அறிவே ஆயும் அறிவெனப்பட்டது. இவற்றை உள்ளவாறு ஆராயவொட்டாது தடைசெய்து நிற்கும் அறியாமையால் பொருள்களில் பசை யென்னும் பரிவுண்டாகும். பசை - வாசனா மலம். அதனால் பருவுடல் உண்டாகும். பரியபுரி - பருவுடல். அவ் வுடம்பையும் அருந்தவப் பேற்றால் தன் வயமாக்கும் தன்மையுண்டாகும். சிவபெருமானின் அகல் நிறைவுள் ஆருயிர்கள் அமை நிறைவாக அடங்கியிருக்கும். அதனால் அவ் வுயிர்களின் முனைப்புச் சாய்ந்து கெடும். நிறைவு - வியாபகம். அவை மூன்றுவகைப்படும். 1. அகல் நிறைவு. 2. அமை நிறைவு. 3. அடங்கு நிறைவு. இவற்றை முறையே வியாபகம், வியாப்பியம், வியாத்தி எனவும் வழங்குப.

ஏயும் சிவபோகம் - சிவானந்தம் உண்டாம். ஆயும் அறிவு - ஆராய்ச்சி அறிவு. ஆயாவுபாதி - அவிச்சை. பரியபுரி -

பூரித்துள்ள உடம்பு. தனதெய்தும் - தன் வசமாக அடையும். சாயும் - கெடும்.

# 2983. நானறிந் தப்பொருள் நாடவிட மில்லை

2983. நானறிந் தப்பொருள் நாடவிட மில்லை
வானறிந் தங்கே வழியுற விம்மிடும்
ஊனறிந் துள்ளே உயிர்க்கின்ற ஒண்சுடர்
தானறிந் தெங்குந் தலைப்பட லாகுமே.

அடியேனுடைய சுட்டறிவினாலேனும் சிற்றறிவினாலேனும் அச் சிவபெருமானை, நாடியறிவதற்குரிய இடமில்லை. வானாகிய திருவடியுணர்வு கை வந்த மேலோர் அவனருளாலே அவன்தாள் வணங்கும் பேரன்பு வாய்ந்த சீர்மிகு நாயன்மாராவர். அவர்வழியே சென்று நாமும் தொழுதல் வேண்டும். அப்பொழுது அச் சிவபெருமான் விளங்கி வெளிப்படுவன். வான்: ஆகுபெயர், நாயன்மார். விம்மிடும் - விளங்கி வெளிப்படும். அருளால் உயிர் அறிந்து உய்யுமாறு நின்று ஒளிரும் ஒண்சுடர் அச் சிவன். அவ் வுண்மை கைவரப் பெற்றால் 'தமியேன் உளம் புகுதல் யானே யுலகென்பன் இன்று' என்பதற்கிணங்க அவ் வுயிர் எங்கணும் செறிவாய் நிற்கும். பாலுட் கரந்த தேனும், சோறுட் கரந்த நெய்யும் முறையே அப் பால் முழுவதினும் நிறைந்தும், அச் சோறு முழுவதினும் நிறைந்தும் விளங்குவன இதற்கு ஒப்பாகும்.

வான் - மேலோர். வழியுற - ஞானயோக வழியேசெல்ல. விம்மிடும் - பூரணம் ஆவர். ஊனறிந்து - உயிர்ச்சாட்சியாகி.

## 2984. கடலிடை வாழ்கின்ற கவ்வை யுலகத்து

2984. கடலிடை வாழ்கின்ற கவ்வை யுலகத்து
உடலிடை வாழ்வுகொண் டுள்ளொளி நாடி
உடலிடை வைகின்ற உள்ளுறு தேவனைக்
கடலின் மலிதிரை காணலு மாமே.

ஆருயிர்கள் கடலிடைக் காணும் கலத்து நாப்பண் வாழ்வார் படும் பெரும் துன்பம் போன்று துன்புடனே வாழ்கின்றன. இதுவே உலக வியல்பின் உண்மை. இவ் வுலகில் உடம்பிடை வாழும் ஆருயிர்கள் தம் அறிவு வடிவத் தன்மையை ஆராய்தல் வேண்டும். அங்ஙனம் ஆராயின் அருளால் உயிருக்கு உயிராய் விளங்கும் இயற்கைப் பேரறிவுத் தெய்வமாகிய சிவபெருமானைக் காணுதல் அமையும் அக்காட்சி கடலின் கண்ணுள்ள நீர் தன்பால் தோன்றும் பேரலையைக் காண்பதனோடொக்கும். இதனால் நீரே நீரைக் காண்கின்றதாம் என மயங்கிப் பொருள் ஒன்றெனு மாறுபடக் கூறுவாருமுளர். அது பொருந்தாது. ஈண்டுக் கடல் என்பது நீருக்கு இடங்கொடுத்து விரவி நிற்கும் வெளி. இது சிவபெருமானுக்கு ஒருபுடையொப்பாகும். நீர் ஆருயிர்கட்கு ஒப்பாகும் நீரின்கண் அலை யெழுந்து தோன்றுமாறு துணை புரியும் காற்று திருவருளுக்கு ஒப்பாகும். அலை ஆருயிர்களின் புடை பெயர்ச்சிக்கு ஒப்பாகும். இந்நான்கு பொருளும் கெடாது. ஒரு பொருளுமாகாது, பின்னிப் புணர்ந்து வேறற நிற்கும் நிலையிற்றான் இக்காட்சி புலனாகின்றது. இதனைத் தெளியவுணர்வரேல் மயங்காரென்க.

கவ்வை - துன்பம். உள்ளொளி - ஆன்ம சித்தொளி உள்ளூறு தேவன் - சிவன். கடலின் மலிதிரை - ஓயாமல் வரும் கடல் அலைபோல எப்போதும் தவறாமல்.

## 2985. பெருஞ்சுடர் மூன்றிலும் உள்ளொளி யாகித்

2985. பெருஞ்சுடர் மூன்றிலும் உள்ளொளி யாகித்
தெரிந்துட லாய்நிற்குந் தேவர் பிரானும்
இருஞ்சுடர் விட்டிட டிகலிட மெல்லாம்
பரிந்துடன் போகின்ற பல்கோரை யாமே.

ஞாயிறு திங்கள் தீ என்று சொல்லப்படும் பெருஞ்சுடர் மூன்றும சிவபெருமானுக்குரிய எண்பெரும் வடிவங்களைச் சார்ந்தனவாகும். ஏனைய ஐந்தும் முறையே நிலம், நீர், காற்று, விசும்பு, ஆருயிர்கள் என்று சொல்லப்படும். சிவபெருமான் அம் முச்சுடர்களையும் வடிவாகக் கொண்டிருப்பது போன்று அவற்றை ஒளிரச் செய்து அவற்றிற்கு உள்ளொளியாக நிற்பவனும் ஆகின்றான். அவனே தேவர் பிரானுமாவன். உலகிடை எங்கணும் எக்காலத்தும், பிறப்பால், சிறப்பால், பேசும் மொழியால், குறிக்கோளால் ஒருவரோடொருவர் மாறுபடு கின்றனர். அவரிடையே சிவபெருமான் கலந்து நின்றருள்கின்றனன். ஆயினும் மெய்யன்பர்கட்கு அவர்தம் அழியா அன்பிற்கிணங்கி அவரவர் பால் மிக எளிமையனாய் எழுந்தருள்கின்றனன். அவன் பல்வேறு வகையாகக் காணப்படும் சிறிய கோரைப் புற்போன்ற மிக நுண்ணியனாய்க் கலந்தருள்கின்றனன்.

தெரிந்து உடலாய் நிற்கும் - அம் முச்சுடரையும் ஆராய்ந்து உணர உடம்பாகக்கொண்டு இருக்கின்ற. இகலிடம் எல்லாம் - மாறுபாடுடைய தேசங்கள் முற்றும். பரிந்து

# 2986. உறுதியி னுள்வந்த வுள்வினைப் பட்டும்

2986. உறுதியி னுள்வந்த வுள்வினைப் பட்டும்
இறுதியின் வீழ்ந்தார் இரணம தாகுஞ்
சிறுதியின் உள்ளொளி திப்பிய மூர்த்தி
பெறுதியின் மேலோர் பெருஞ்சுட ராமே.

ஆருயிர்க்கிழவர்கள் உடம்பின்மாட்டுக் கொண்டுள்ள அளவிறந்த பற்றினால் இருவினைக் குட்பட்டு உழல்வர். அவ் விருவினையும் மிக நுண்மையவாய் வந்து கூடும். கூடவே பொறுக்கலாற்றாத் துன்பம் எய்துவர். அத் துன்பத்தைப் போக்கும் புகலிடம் நாடிவிரைகுவர். அப் புகலிடம் வேறு எங்கும் இலாமையால் சிவன்பால் வந்து சார்வர். அச் சிவபெருமான் தன்னை அடைந்தார் வினை தீர்க்கும் தலைமைப் பண்பாடுடையன். அதனால், வந்தடைந்தார் வினையை வாட்டி யகற்றுவன். ஈண்டுவினை என்பது எஞ்சுவினையாகும். அதுவே எரி சேர்ந்த வித்துப் போன்றிறுவதுமாகும். அதுவே மன்னிக்கப்படுவதுமாகும். சிவர் தப்பாக எண்ணுகின்றனர், பாவம் செய்யச் செய்ய மன்னிப்பன் பரமன் என. பரமனையடைந்தார் மீண்டும் பாவஞ் செய்வரேல் யாண்டும் மன்னிப்பு எய்தார். 'இதுவே பின்னை மறத்தல் பிழை' என்பதாகும். மேலும் 'செய்ந்நன்றி கொன்ற மகற்கு' என்னும் செந்தமிழ்ப் பொதுமறையின் செம்பொருளும் இதுவேயாம். சார்ந்தார் சிவப்பணிக்கண் சாரார் இருவினையை, நோந்தார்க்காம் எஞ்சகலல் நேர் என்பதே வாய்மையாகும். அவரைப் பொன்போற் பொலியச் செய்வன்.

சிறுதியாகிய ஒடுங்கிய உள்ளத்தின்கண் உள்ளொளியாக விளங்குவன். அவனே உயர்வற உயர்ந்த ஒரு பெரும் ஒண்மைக் கடவுள். 'அன்பறாது என்னெஞ்சு அவர்க்கு' எனவும், 'வீடும் வேண்டா விறலின் விளங்கினார்' எனவும் காதலர் தன்மை கட்டுரைப்பதற்கிணங்க வேறு எதன்கண்ணும் பெறுமாறுள்ள சிறு வேட்கையும் இல்லாதார் மேலோராவர். அவரே நாயன்மாராவர். அவர்க்குச் சிவபெருமான் உணர்வினுள் உணர்வாய் ஒளிரும் பெருஞ்சுடராவன்.

உறுதியினுள் - தேக அபிமானத்தால் உள்வினைப்பட்டு - இருவினையின் வசமாய். வீழ்ந்தார் - தன்னை விரும்பி வந்தடைந்தவர்க்கு இரணமதாகும் - பொன்போல் உதவுவன். இறுதியினுள் - ஒடுங்கிய சித்தத்தில். ஒளி - விளங்கும். பெறுதி இல் மேலோர் - விருப்பு வெறுப்பு இல்லாத தவசிகளுக்கு.

## 2987. பற்றினுள் ளேபர மாய பரஞ்சுடர்

2987. பற்றினுள் ளேபர மாய பரஞ்சுடர்
முற்றினு முற்றி முளைக்கின்ற மூன்றொளி
நெற்றியி னுள்ளே நினைவாய் நிலைதரு
மற்றவ னாய்நின்ற மாதவன தானன்றே.

'பற்றுக பற்றற்றான் பற்றினை' என்பதனால் பற்றப்படும் பொருள்கள் பலவற்றுள்ளும் மாறாததும், சிறந்ததும், வேறாகாததும், கூறாகாததும் ஆகிய மெய்ப்பொருள் சிவபெருமான் ஒருவனே. அவனையே பற்றுதல்வேண்டும். அவன் யாண்டும் நீக்கமற நிறைந்து விளங்கியருள்கின்ற அன்பறிவு ஆற்றலாகிய மூன்றொளி. அவன் ஆருயிர்களின் புருவநடுவின்கண் அவ் வுயிர்களுக்கு நினைப்பிக்கும் நினைவாய் நிலைத்தருள்வன். அவன் 'உள்குவார் உள்ளத்துள்ளே அவ் வுருவாய் நிற்கின்ற அருளுடையவன்' ஆதலின் அத்தகைய வடிவுசேர் பெருந்தவத்தோனும் அவனே. மாதவன் - மாதோடு கூடிய தவன் என்றலும் ஒன்று.

பற்றினுள் - பற்றப்படும் பொருள்களுள். பரமாய - மேலாய. முற்றினுமுற்றி - எங்கும் நிறைந்து. மூன்றொளி - இரவி, மதி, தீ. நெற்றியினுள்ளே - ஆஞ்ஞையில். நினைவாய் - கருதியவண்ணமாய். மற்று அவனாய் - அக்கருதியவன் வடிவமாய்.

## 2988. தேவனு மாகுந் திசைதிசை பத்துளும்

2988. தேவனு மாகுந் திசைதிசை பத்துளும்
ஏவனு மாம்விரி நீருல கேழையும்
ஆவனு மாமமர்ந் தெங்கு முலகினும்
நாவனு மாகி நவிற்றுகின் றானன்றே.

சிவபெருமான் பதின் புலமாகிய பத்துத் திசையுள்ளும் தானே விழுமிய முழுமுதற் கடவுளாய் விளங்குவன். அவன் எல்லாரினும் மேம்பட்ட 'வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவனும்' ஆவன். விரி நீர் வியனுலகம் ஏழினும் நிறைந்து நிற்குமவனும் ஆவன். அவன் எங்கணும் விரும்பி இயைந்தியக்கும் இயவுளுமாவன். அவன் எல்லாவுலகிடை வாழும் உயிர்கள் அனைத்திற்கும் நாவில் நின்று நவிற்றுவிக்கும் நன்மொழியுமாவன். எனவே எல்லா நிகழ்வுகளும் சிவபெருமானின் திருவருள் நிகழ்வின் ஏரினாலேயே ஆகும். அச் சிவபெருமான் நாயன்மார் நாவின்நின்று அவர்களும் உலகமும் உய்தற்பொருட்டுத் தன்னைப் பாடுவித்தருள்கின்றனன். இது சிவபெருமான் உடனாய் நின்று செய்து போதரும் காட்டும் உதவியாகும். நம்பியாரூரருக்குப் பித்தனென்று பாடுகவென்று பணித்தருளியதும், 'தில்லை வாழந்தணர்த மடியார்க்கு மடியேன்' என்று பாடப் பணித்தருளியதும், சேக்கிழாரடிகளுக்கு 'உலகெலாம்' என அடியெடுத்துக் கொடுத்தருளியதும் 'காட்டிக் காண்டல்' கடனாதலின் காணும் உதவியாகும். அம் மட்டுமன்றி முழுவதும் தானே

கண்டது 'மதிமலி புரிசை' எனத் தொடங்கும் திருமுகப் பாசுரமாகும். இத் திருப்பாசுரம் திகழும் பதினொராம் திருமுறையும், சிவஞானபோதப் பதினொராம் நூற்பாவும் முறையே இலக்கிய இலக்கண முறையாய்த் திகழ்வன காண்க.,

ஏவனும் ஆம்-எம் மேம்பாடு உடையவனும் ஆம். ஆவனும்-வியாபித்திருப்பவனும். நாவனும்-நாக்கு வல்லவனும் ஆகி.

## 2989. நோக்குங் கருடன் நொடியே மூலகையும்

2989. நோக்குங் கருடன் நொடியே மூலகையும்
காக்கு மவனித் தலைவனு மங்குள
நீக்கும் வினையென் நிமலன் பிறப்பிலி
போக்கும் வரவும் புணரவல் லானன்றே.

விண்ணிடை மிகச் சேய்மையினின்றும் மண்ணிடை மிக நுண்ணிய பொருளையும் குறிக்கொண்டு நோக்கி எண்ணியவாறு நண்ணிக்கைக் கொள்ளும் திண்மைப் பண்பு கருடன் பாலுளது. அதனால் சிவபெருமானைக் கருடனை ஒத்தவன் என்று ஓதினர். அச் சிவபெருமான் நொடிப்பொழுதினுள் ஏழுலக முதலிய அனைத்துலகங்களையும் காக்கும் முழுமுதல்வனாவன். ஆங்காங்குள்ள மெய்யடியார்களது வினைகளை நீக்கியருள்வன். அவன் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கியவன்; அதனால் நின்மலன் எனப்படுவன். அழியாப் பொருள்களினின்றும் அகல்வதே அமைவுடைத்து. அவற்றை அகற்றுவது அமையாது. ஆதலின் நீக்குவதென்று ஓதாது நீங்கியதென ஓதுகின்றனர். 'ஏலா இயற்கையினில் நீங்கல் எவர்க்குமாம், ஏலா அவை நீக்கல் இங்கு' என்பதனை நினைவு கூர்க. அவன் 'பிறவா யாக்கைப் பெரியோ'னாதலின் பிறப்பிலி. போக்கும் வரவும் புணர்வும் இன்றிப் புணரவல்லான். உடலின் உறுப்பு உறுப்பியாகிய உடலோடும், பாலுண் குழவி ஈன்ற மாலுண் தாயோடும் போக்கும் வரவும் புணர்வுமிலாப் புணர்ப்பாய்

அமைவன இதற்கு ஒப்பாகும். கருடன் உவம ஆகுபெயராகச் சிவனைக் குறித்தது.

நோக்குங் கருடன்-எப்பொருளையும் எளிதில் காணும் கருடன் ஒத்தவன். அங்குள - எவ்விடத்தும் உள்ள அடியார்களது.

## 2990. செழுஞ்சடை யன்செம்பொ னேயொக்கு மேனி

2990. செழுஞ்சடை யன்செம்பொ னேயொக்கு மேனி
ஒழிந்தன வாயும் ஒருங்குடன் கூடுங்
கழிந்திலன் எங்கும் பிறப்பிலன் ஈசன்
ஒழிந்தில கேழுல கொத்துநின் றானே.

முழுமுதற் சிவபெருமான் செழுமைவாய்ந்த பின்னல்வார்சடையன். அவன் செம்பொனேயொக்கும் திருமேனியன். அவன் ஆக்கப்பாடாகிய காரிய நிலை ஏதும் எய்தாதவன். அங்ஙனமிருந்தும் முழுமுதற் சார்புத் தன்மையினால் சாரப்படும் காரியப்பாடுகள் அனைத்துடனும் ஒருங்குடன் கூடி உறையும் ஒப்பில்லாதவன். அவன் யாண்டும் எவற்றையும் விட்டு நீங்கும் நிலைமையனல்லன். பிறப்பிலன். எல்லாவற்றையும் இறைந்தியக்கி ஆளும் ஆண்டானுமாவன். தன்பொருட்டு ஒன்றும் வேண்டாது ஆருயிர்களின் பொருட்டே அனைத்தும் வேண்டி அவற்றுடன்கலந்து விளங்கிநிற்கும் அம்மானும் அவனே. இவ்வாறே ஏழுலகங்களுடனும் கலந்துநின்றருள்பவன் சிவன்.

ஒழிந்தனனாயும் - ஒன்றும் ஆகாதவனாயிருந்தும். ஒருங்குடன் கூடும் - எல்லாவற்றோடும் கூடியிருப்பன். கழிந்திலன்-நீங்கான். ஒழிந்திலகு - தனக்கெனப் பொருள் இன்றி விளங்கும்.

## 2991. புலமையின் நாற்றமில் புண்ணியன் எந்தை

2991. புலமையின் நாற்றமில் புண்ணியன் எந்தை
நலமையின் ஞான வழக்கமு மாகும்
விலமையில் வைத்துள வேதியர் கூறும்
பலமையில் எங்கும் பரந்துநின் றானே.

சிவபெருமான் இயற்கையுணர்வும் முற்றுணர்வும் ஒருங்குடையவன். அதனால் செயற்கைப் புலமையின் நாற்றமும் இல்லாதவன். அவன் புண்ணியவடிவினன். அவனே எந்தையாவன். நன்மைப் பாடமைந்த மெய்யுணர்வு வடிவினன். ஆருயிர்களை விட்டுநீங்காப் பெரு வழக்குள்ளவனும் அவனே. வேதியர் தாங்கற்ற வேதங்களைக் கூறிவிற்கின்றனர். அதனால் அச் சிவபெருமான் அவர்கள்பால் பாலின் நெய் போல் மறைந்து பரந்துநிற்கின்றனன்.

புலமை.......புண்ணியன் - செயற்கை அறிவு சிறிதும் இல்லாத புண்ணியன். நலமை.......பலமையில் - நன்மையைத் தாராத ஞானாப்பியாசத்தைக் காசு கொடுப்பவருக்கு விற்கும் ஆரிய வேதத்தை ஓதும் வேதியர் கூறும் பல பொருள்களில் ஒன்றிலும் சேராதவன்.

## 2992. விண்ணவ னாயுல கேழுக்கு மேலுளன்

2992. விண்ணவ னாயுல கேழுக்கு மேலுளன்
மணணவ னாய்வலஞ் சூழ்கடல் ஏழுக்குந்
தண்ணவ னாயது தன்மையின் நிற்பதோர்
கண்ணவ னாகிக் கலந்துநின் றானன்றே.

சிவபெருமான் தூய விண்ணின்கண் உறைபவனாய் ஏழுலகங்களுக்கும் அப்பாலுள்ளான். மண்ணுலகத்துள் உறைபவனாய் கடல் ஏழுக்கும் இப்பாலுள்ளான். அவன் 'அறவாழியந்தணன்' ஆதலின் மிக்க தண்ணளியை உடையவன். தண்ணளி - திருவருட்குளிர்ச்சி. இதுவே அவனுக்குரிய என்றும் பொன்றாவியற்கைத் தன்மையாகும். அவனே ஆருயிர்கட்குக் கண்போன்ற நனிமிகு பெருமையை உடையவன். அவன் அனைத்துயிருடனும் அனைத்துலகுடனும் பிரிப்பின்றிக் கலந்து நிற்கும் பேரருட் பெருமையன்.

கண்ணவனாகி - பெருமையுடையவனாய்.

## 2993. நின்றனன் மாலொடு நான்முகன் தானாகி

2993. நின்றனன் மாலொடு நான்முகன் தானாகி
நின்றனன் தான்நிலங் கீழொடு மேலென
நின்றனன் தான்நெடு மால்வரை ஏழ்கடல்
நின்றனன் தானே வளங்கனி யாயன்றே.

சிவபெருமான் மாலொடு நான்முகன் தானாகவும் நின்றனன். அஃதாவது அவர்களுடன் விரவி அவர்களைக்கொண்டு காப்புப் படைப்பு ஆகிய தொழில்களைப் புரிவிக்குங்கால் நிற்பது மேலும் பேரூழிக்குப்பின் தானே நேரில் படைத்தலும் காத்தலும் புரிந்தருள்வனாதலின் அப்பொழுது நேரே அவ்வப் பெயர்களுடன் விளங்குவன். அவன் எங்கணும் பரம்பியிருக்குந் தன்மையில் நிலத்தின்மேலும், கீழும், நிலத்திலும் நிறைந்துநிற்கின்றனன். மேலும் பெருமலையாய், ஏழுகடலாய் நின்றவனும் அவனே. அவன் மெய்யடியார்தம் உணர்வுள்ளத்து வளமிக்க சிவமாம் மாணிக்கத் தீங்கனியாய் விளங்கி இன்புற்றிருந்தனன்.

வளங்கனி - அன்பர்க்கு வளப்பம் பொருந்திய மாங்கனி ஒத்து.

## 2994. புவனா பதிமிகு புண்ணியன் எந்தை

2994. புவனா பதிமிகு புண்ணியன் எந்தை
அவனே உலகில் அடர்பெரும் பாகன்
அவனே அரும்பல சீவனு மாகும்
அவனே இறையென மாலுற்ற வாறே.

சிவபெருமான் இருநூற்று இருபத்துநான்கெனும் எண்ணுட்பட்ட புவனங்கள் முற்றிற்கும் ஒரே ஒப்பில்லாத முழுமுதல் தலைவன். அவன் புண்ணியந் திரண்டு நண்ணிய புண்ணிய வடிவினன். எம்மனோர்க்கு ஆர் உயிர்த் தந்தையாவன். அவனே உயிர்க்குயிராய் அண்ணித்துநின்று அவ்வுயிர்களைத் திருவடிப் பெருமை எய்துமாறு இடையறாது இயக்கும் பாக இயவுளும் ஆவன். அவனே ஆருயிர்கள் அனைத்துடனும் நேர்நிற்றலால் அவ்வுயிர்களுமாவன். இஃது உயிர் உடலாயிருப்பது போன்றதோர் ஒப்பாகும். அவனையே இறையென்று அருளால் உணர்ந்த தெருளாளர் மாலுற்று நீங்காநினைவினராய் ஓங்கும் இன்பம் எய்தினர். பாகஇயவுள்: செவ்விவரச் செய்யும் சிவபெருமான் மால் - பெருங்காதல்.

அவனே.....சீவனும் ஆம்-பூமியிலுள்ள உயிர் வருக்கங்களை நடத்துபவன். மால் - விருப்பம்.

## 2995. உண்ணின் றொளிரும் உலவாப் பிராணனும்

2995. உண்ணின் றொளிரும் உலவாப் பிராணனும்
விண்ணின் றியங்கும் விரிகதிர்ச் செல்வனும்
மண்ணின் றியங்கும் வாயுவு மாய்நிற்குங்
கண்ணின் றிலங்குங் கருத்தவன் தானன்றே.

ஆருயிரின் உள்ளத்துள் நின்று ஓவாது இயங்கும் கேழல் உயிர்ப்பும் அவன் அருள் துணையால் இயங்குகின்றது. அதனால் அவ் வுயிர்ப்பும் சிவனே எனப்படும். வானத்தியங்கும் விரிந்த கதிர்களையுடைய பகலவனும் அவனே. பகலவன் - ஞாயிறு. மண்ணுலகினின்று ஒலித்தசைத்துத் திரட்டும் காற்றும் அவனே. ஆருயிர்களின் நெஞ்சகத்து நின்றியக்கும் கருத்தாகின்றவனும் அவனே.

கண்ணின்று - அன்பர் உள்ளத்தின்கண் இருந்து.
கருத்தவன் - கருதும் பொருளவன்.

# 2996. எண்ணும் எழுத்தும் இனஞ்செயல் அவ்வழிப்

2996. எண்ணும் எழுத்தும் இனஞ்செயல் அவ்வழிப்
பண்ணுந் திறனும் படைத்த பரமனைக்
கண்ணிற் கவருங் கருத்தில் அதுவிது
உண்ணின் றுருக்கியோர் ஆயமு மாகுமே.

விழுமிய முழுமுதற் சிவபெருமானை இடையறாது எண்ணி ஈடேறுவதற்குரிய செந்தமிழ்த் திருமறை (2550) திருவைந்தெழுத்தாகும். அதனை ஓதுதற்குரிய திருவெண்ணீறணிதல் சிவமணி பூணுதல் சிவனடியாரையும் திருக்கோவிலையும் சிவனெனவே வழிபடுதல் முதலிய இனச் செயல்களுடன் கணித்தல்வேண்டும். அவற்றின் தொடர்பாய் திருமுறைத் திருப்பாட்டுக்களைப் பண்ணொடும் திறனொடும் பாடுதல் வேண்டும். அவ்வைந்தெழுத்தாய் இமைப்பி, பண்ணாய்த் திறனாய்த் திகழ்பவனும் அவனே. அவற்றைப் படைத்தருளிய பரமனும் அவனே. அவனை அவனருளால் உணர்வின்கண் உணருங்கள். உணர்ந்தால் அது இது எனச் சுட்டறிவால் தோன்றும் வேறுபாட்டை நீக்கியருள்வன். உள்நின்று உருக்கி அன்பைப் பெருக்குவிப்பன். அதன் வாயிலாகத் திருவடிப் பேரின்பமாகிய ஊதியத்தை ஈந்தருள்வன்.

எண்ணும் - கணிக்கும். எழுத்தும் - ஐந்தெழுத்தும். இனம் செயல் - முறைப்படி கணித்தல் அவ்வழிப் பண்ணும் திறனும் - அம்மாதிரி சாதனம் செய்யும் முறையும். கண்ணிற் கவரும் - அறிவினால் அறியுங்கள்.

கருத்தில். . . . .ஆமே - அறிந்தால் சித்தத்தில் விகற்பத்தை நீக்கி ஒப்பற்ற ஊதியம் ஆவான்.

## 2997. இருக்கின்ற எண்டிசை அண்டம்பா தாளம்

2997. இருக்கின்ற எண்டிசை அண்டம்பா தாளம்
உருக்கொண்டு தன்னடு வோங்கவிவ் வண்ணங்
கருக்கொண்டு எங்குங் கலந்திருந் தானே
திருக்கொன்றை வைத்த செழுஞ்சடை யானே.

யாண்டும் காரியமாய் நிலைபெற்றிருக்கின்ற எண்புலத் தோடும், அவ்வப் புலங்களில் காணப்படும் பல்வேறு அண்டங்களோடும், பாதாளத்தோடும் கலப்பால் 'உலகமே உருவமாகத்' திருவுருக்கொண்டுள்ளான். அவையனைத்தும் நெறிமுறையான் இயங்குதற் பொருட்டுத் தன்னிடத்து ஓங்கத் தான் நடுவாய்க்காரணமாய் நின்றுள்ளான். இம்முறையான் செம்மையுற எங்கணும் கலந்துள்ளான். அவனே திருக்கொன்றை மாலையினைப் பின்னல் திருச்சடைக்கண் சூடியருளிய சிவபெருமானாவன்.

உருக்கொடு - தோன்றி. தன்னடுவோங்க - தன்னிடத்து ஓங்க. இவ்வண்ணம் கருக்கொண்டு - இவ்வகையாய ஏதுவினால்.

## 2998. பலவுடன் சென்றஅப் பார்முழு தீசன்

2998. பலவுடன் சென்றஅப் பார்முழு தீசன்
செலவறி வாரில்லை சேயன் அணியன்
அலைவிலன் சங்கரன் ஆதிஎம் ஆதி
பலவில தாய்நிற்கும் பான்மைவல் லானே.

இயங்குதிணையும் நிலைத்திணையுமாகவுள்ள அளவில்லாத பல பொருள்களுடன் கூடியது அழகினையுடைய இந்நிலவுலகம். இவ்வுலக முழுவதும் கலப்புத் தன்மையால் ஒன்றாய்ப் பிரிப்பின்றி விரவி நிற்கும் முழுமுதற் பரம்பொருள் சிவபெருமான் ஒருவனே. அவனே ஈசன். அவன் இவ்வுலகுடன் இயைந்து இவ்வுலகை நடத்தும் இயல்பின் மெய்ம்மைத் தன்மையை உள்ளவாறுணர்வாரில்லை. அவன் அன்பர்க்கு மிகவும் அணியனாகவுள்ளான். அல்லாதார்க்கு மிகவும் சேயனாகவுள்ளான். அணிமை - கிட்டம் சேய்மை - எட்டம். அவன் எவ்வகை மாறுபாடும் இல்லாதவன். எல்லாவுயிர்க்கும் யாண்டும் இன்பஞ் செய்தலின் அவன் திருப்பெயர் சங்கரன். அவன் ஆதியாகிய நடப்பாற்றலோடு கூடியவன். எம்முடைய அன்பறிவாற்றல் யாண்டும் செம்மையாக நிகழ்வதற்கு என்றும் காரணமாகவுள்ளவனும் அவனே. அவன் ஒன்றாய் வேறாய் உடனாக என்றுரைக்கப்படும் பலவாகக் கலப்புற்றிருப்பினும் அவன் ஒத்தாரும் மிக்காரும் இல்லாத ஒரு முதல்வனேயாவன். மேலும் பலவாய்க் காணப்படும் பான்மையனும் அல்லன். அவன் எவ்வகையா நோக்கினும் 'ஒன்றே குலமும், ஒருவனே தேவனும்' (2066) என்னும் செந்தமிழ்த்

**திருமறையின் வண்ணம் ஒழுகுவதே சாலச் சிறந்ததாகும் 'ஆதி' இரண்டனுள் முன்னது நடப்பாற்றல்; பின்னது காரணம்.**

பரிவுடன் - இயங்குவன நிற்பன முதலிய பல பொருள்களுடன். செலவு - ஆணை. அலைவிலன் - மாறாதவன். பல இலவாய் - பல என்பது இல்லாது நிறைந்து.

## 2999. அதுவறி வானவன் ஆதிப் புராணன்

2999. அதுவறி வானவன் ஆதிப் புராணன்
எதுவறி யாவகை நின்றவன் ஈசன்
பொதுவது வான புவனங்கள் எட்டும்
இதுவறி வான்நந்தி எங்கள் பிரானே.

ஆருயிர்களின் அறிவை விளக்கி அவற்றின் அறிவினுக்கு அறிவாக நிற்பவன் சிவன். இது மோர் பாலுடன்கூடி அப் பாலினைத் தயிராக்குவது போன்றாகும். ஆசிரியன் அறிவு மாணாக்கன் அறிவுடன் கூடி மாணாக்கண் அறிவை விளக்குவதும், ஞாயிற்றின் ஒளி கண்ணொளியுடன்கூடி கண்ணை விளக்குவதும் இதற்கு ஒப்பாவன. எல்லாவற்றினுக்கும் காரணமான ஆதியாற்றலையுடைய பழையோன். எவ்வகை அளவைகளானும் அறியவொண்ணா நிலைமையில் என்றும் பொன்றாது இயற்கையாக நின்றோன். அவனே அருளாட்சிச் செல்வன். அவனே ஆருயிர் அனைத்திற்கும் பொதுவுடைமையாகப் புகலப்படும் பேருலகங்களாகிய புவனங்களெங்கணும் நிறைந்துநிற்கும் பொருவில் பெரும் பொருள். எட்டும் - நிறைந்துநிற்கும். என்னுடன் முப்பாலாயிருந்து 'என்னைப் படைத்துத் தன்னை நன்றாகத் தமிழ்செய்யுமாறு' பாடுவித்த (152, 148) இத் தனிப்பெரும் செந்தமிழ்த் திருவாகமம் என்னும் இத் 'திருமந்திர மாலையினை' அறிபவன் அச் சிவபெருமானே. அவனே திருநந்தி. அவனே எங்கள் ஆருயிர் இன்றமிழ்ப்பெருமான்.

இத் திருப்பாட்டுக் கேட்பித்தல் அருளுகின்றது. முப்பால்: ஒன்றாய், வேறாய், உடனாய் நிற்கும் மூன்று நிலை.,

அதுவறிவானவன் - அச் சீவர்களின் அறிவுருவானவன். ஆதிப் புராணன் - தலைமையுடைய பழையோன். எது அறியா வகை - எப் பிரமாணத்தாலும் அறியாவகை. பொதுவதுவான - பொதுவான. புவனங்கள் - உலகங்களில். எட்டும் - வியாபித்தவன். இது அறிவான் - யான் கூறும் இதனை அறிபவன்.

# 3000. நீரும் நிலனும் விசும்பங்கி மாருதந்

3000. நீரும் நிலனும் விசும்பங்கி மாருதந்
தூரும் உடம்புறு சோதியு மாயுளன்
பேரும் பராபரன் பிஞ்ஞகன் எம்மிறை
ஊருஞ் சகலன் உலப்பிலி தானன்றே.

விழுமிய முழுமுதற் சிவபெருமான் நீரும் நிலனும் விசும்பும் தீயும் காற்றுமாய் விரவி விளங்குகின்றனன். அவன் எங்கணும் தூருபோன்று வெளிப்பட்டுத் தோன்றும் காரணமுமாய் நிற்கும் மெய்ப்பொருள் மேலோன். வேர் மறைந்த காரணம். மரமாகிய காரியத்தைத் தாங்கிநிற்கும் காரணங்கள் இரண்டுள. அவற்றுள் ஒன்று வெளிப்படாக் காரணம் அதுவேர். மற்றொன்று வெளிப்படுகாரணம், அது தூர். அதுபோல் ஆருயிர்கட்கு வெளிப்படுகாரணம் ஈன்றார். வெளிப்படாக் காரணம் ஆன்ற சிவபெருமான். இவற்றை ஒருபுடையொப்பாக முறையே பொருண்முதற் காரணம் வினைமுதற் காரணம் எனவுங் கூறலாம். உடம்பகத்து அறிவொளியாய் விளங்கும் ஆருயிர்களுடன் தனிப்பெருந் தலையளியாற் கலந்து அவ்வுயிர்களாகவே நிற்பவனும் அவனே. எல்லாவற்றுடனும் இவர்தந்தூரும் எழில்சேர் விழுமியானும் அவனே. என்றும் பொன்றா உலப்பிலா ஒருவனும் அவனே. பெரும்பூதங்களின் முறைவைப்பு ஒருபுடை யொப்பாக 'நமசிவய' என்னும் நற்றமிழ்த் திருவைந்தெழுத்துத் திருமந்திரத் திருக்குறிப்பாகும். "நாட்டும் 'நமசிவய' நன்னீர்மண் விண்தீகால், கூட்டும்

'சிவயசிவ' கூர்ந்து" (2550) என்பதனை இதனுடன் நினைவுகூர்ந்து இன்புறுக.

தூரும் உடம்பு - பஞ்சபூத காரியமாயுள்ள உடம்பு. உறும் சோதி - சீவனில் உறும் சோதி. ஊறும் சகலன் - எவற்றிலும் வியாபித்தவன். உலப்பிலி - நித்தியன்.

வாழ்த்து

வாழ்கவே வாழ்கஎன் நந்தி திருவடி
வாழ்கவே வாழ்க மலமறுத் தான்பதம்
வாழ்கவே வாழ்கமெய்ஞ் ஞானத் தவன்தாள்
வாழ்கவே வாழ்க மலமிலான் 1பாதமே.

சிவகுருவே சிவனாதலின் வாழ்கவே வாழ்க என் நந்தி திருவடி என்று ஓதியருளினர். அவன் செய்தருளிய சிறப்புத் திருவருவருள் மலமறுத்தலே. அதனால் மலமறுத்தான் பதம் வாழ்க என்றனர். மலமறுத்து நலமுற மன்னுவித்தது திருவடியுணர்வு. அதனால் மெய்ஞ்ஞானத்தவன்தாள் வாழ்க என்றனர். அவன் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கியவனாதலின் மலமிலான் பாதம் வாழ்க என்று ஓதியருளினர். திருவடி, பதம், தாள், பாதம் நான்கும் ஒருபுடையொப்பாக நன்னெறிநான்மை நற்றவப்பேற்றினைக் குறிக்கும். இதனை, 'சீலமடி நோன்புபதம் தாள்செறிவு பாதமே, ஏலுமறி வாமால் இசை' என நினைவுகூர்க. இதன்கண் காணப்படும் வாழ்த்து எட்டினாலும் சிவபெருமானின் வான்குணம் எட்டும் குறிப்பாகக் குறிக்கப்படும் தனித் தமிழ் மாண்பின் இனித்த மாறா வனப்போர்க. இதனை, 'வாழ்த்தெட்டால் வள்ளல் சிவபெருமான் எண்குணமும், வாழ்த்து தமிழ் தாடலைவாழ் மாண்பு' என நினைவுகூர்க.

திருச்சிற்றம்பலம்.

ஒன்பதாம் தந்திரம் முற்றும்.

தமிழ் மூவாயிர மூலமும்,

ஆசிரியர், ப. இராமநாதபிள்ளையவர்கள் விளக்கவுரையும்,

ஆசிரியர், அ. சிதம்பரனார் அவர்கள் குறிப்புரையும்

முற்றுப்பெற்றன.

உரையாசிரியன் சொல்

"நால்வர்நம் மூலர் நயந்தெமையாள் ஐங்குரவர்
சால்பாம் சிவயசிவ சார்ந்து."

"நம்பிரான் மூலர் நவின்றதிரு மந்திரம்
நம்பெருவாழ் வைந்தெழுத்தாம் நாடுங்கால் -
செம்பொருளாம்
வாழ்கதிரு மூலர்சொல் வாழ்கநம்பி ரான்மூலர்
வாழ்கதமிழ் சைவம்வாழ்க."